# ஹரிதாச விஜயம்

மாத இதழ்

Haridasa Vijayam - Monthly

மலர் 1 ** அக்டோபர் 2019 ** இதழ் 1



# ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ், பெங்களூரு

## இதுவரை வெளியாகியுள்ள புத்தகங்கள்

1. ஸ்ரீஹரியின் 40 அவதாரங்கள். 352 பக்கங்கள். ரூ.200
2. பஞ்ச பரிசுத்த தேவதைகள்(பரசுக்ல த்ரயர்கள்) 290 பக். ரூ150
3. தந்தெமுத்து மோகனதாசர் (பரமப்ரிய சுப்பராய தாசர்). 270 பக்கங்கள். ரூ.150
4. ஸ்ரீசத்யவீர தீர்த்தர். 64 பக்கங்கள். ரூ.40
5. ஸ்ரீசத்யபோத தீர்த்தர். 164 பக்கங்கள். ரூ.70
6. ஸ்ரீசத்யத்யான தீர்த்தர். 216 பக்கங்கள். ரூ.110
7. மத்வகதாம்ருதம். 200 பக்கங்கள். ரூ.100
8. இந்தா குருகள காணேனோ. 48 பக்கங்கள். ரூ.30

## e-books (மின் புத்தகங்கள்)

இன்னும் அச்சிற்கு வராத நமது 24 தமிழ்ப் புத்தகங்கள், மின் புத்தகங்களாக அமேசான் தளத்தில் கிடைக்கின்றன. Amazon Kindle கருவியிலோ, Kindle செயலியிலோ இவற்றை தரவிறக்கி படிக்கலாம்.

## எமது Android app - வேதநிதி - VEDHANIDHI

* மத்வ சித்தாந்தத்தைப் பற்றி அறிய உதவும் செயலி
* 35 தலைப்புகளில் 5,000 Objective type கேள்வி பதில்கள்.
* தமிழ், ஆங்கிலம் மற்றும் கன்னடத்தில் கேள்வி பதில்கள்
* Google Play Store சென்று VEDHANIDHI என்று தேடவும்.
* செயலி தரவிறக்கக் கட்டணம் ரூ.150.
* தரவிறக்கினால் உடனடி புத்தகப் பரிசு உண்டு.
* செயலியில் சரியான விடைகளைக் கொடுத்தாலும் பரிசு.
* இன்றே VEDHANIDHIஐ தரவிறக்கி, பயன்பெறவும்.

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா



நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# **“ஹரிதாச விஜயம்”**

சிரி நிலயன குணகள ‘**திளிது**’ பஜிசுவுதே

மலர் : 1 இதழ் : 1

**நிர்வாக ஆசிரியர்**

‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross,
JP Nagar 4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276. haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**

’தாச சாகித்ய சேவா ரத்ன’
திரு. குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**

திரு. முரளிதர தாசரு, திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா, திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

# ஆசிரியர் பக்கம்

பாரத, பாகவத, புராண, பிரம்மசூத்திரங்களை நிர்ணயம் செய்து நமது ஸ்ரீமதாசார்யர் நமக்காக சர்வமூல கிரந்தங்களை இயற் றிக் கொடுத்தார். அவை கற்றறிந்த பண்டிதர்களுக்கும், சர்வ மூல கிரந்தங்களைப் படிக்கும் தகுதி உடையவர்களுக்குமே புரிந்தன. எளிய பாமர மக்களுக்கும் நமது சித்தாந்தம், அதன் தத்வங்கள், சிறப்புகள் போய்ச் சேரவேண்டும் என்ற உயரிய கருத்தில், ஸ்ரீபாதராஜர் இவற்றை கன்னடக் கிருதிகளில் இயற் றினார். இவர் தொடங்கி வைத்த அரும் செயலை ஸ்ரீவியாச ராஜர் முன்னெடுத்து, தாச பரம்பரையையே தோற்றுவித்து, ஸ்ரீ புரந்தரதாசர் மற்றும் ஸ்ரீகனகதாசர் மூலமாக நமது சித்தாந்தத் தின் கருத்துகளை எளிய கன்னடத்தில் மக்களிடையே பரவ வைத்தார். ஸ்ரீபுரந்தரதாசரின் கிருதிகளை அங்கீகரித்து அதற்கு 'புரந்தரோபநிஷத்' என்றே பெயர் வைத்தார்.

அன்றிலிருந்து தொடங்கிய ஹரிதாச பரம்பரை, 21ம் நூற்றாண் டான இன்றுவரை தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது. இந்த பரம்பரையில் வந்த நூற்றுக்கணக்கான ஹரிதாசர்கள், தமது கிருதிகளால் மக்களிடையே பக்தியையும், சித்தாந்தத்தையும் பரப்பி வருகின்றனர். ஆனால், இன்றைய கால கட்டத்தில் நாம் (மாத்வர்கள்), நாட்டின் பல்வேறு மாநிலங்களில் வாழ்வதால், நம் கிருதிகளை அந்தந்த மாநில மொழியில் மொழி பெயர்த்து, அதன் மூலம், சாகித்யத்தில் சொல்லியிருக்கும் உண்மையான கருத்துகளை அறிய வேண்டிய கட்டாயத்தில் உள்ளோம்.

ஹரிதாச சாகித்யம் ஹரிதாசர்களில் அனுபவத்திலிருந்து வெளிவந்தவை. மந்திர துல்யமானவை. த்வைத சித்தாந்த த்தின் கருத்துகள், ஸ்ரீமதாசார்யர் நிர்ணயம் செய்த விஷயங்கள் ஆகியன இந்த சாகித்யத்தில் மிகவும் எளிமையாக சொல்லப் பட்டுள்ளன. அத்தகைய அற்புதமான கிருதிகளை, அதில் இருக் கும் ஆழ்ந்த கருத்துக்களை, தமிழில் தொடர்ந்து கொடு க்கும்

ஒரு சிறிய சேவையில் ஈடுபடவேண்டி ஒரு மாதப் பத்திரிக்கையை துவக்க முற்பட்டோம். ஸ்ரீஹரி வாயு குருகளின் ஆசியோடும், ஆன்றோர்களின் உதவியுடன் இதை துவக்கியதுடன் நம் செயல் முடிவுற்றது. 'ந அஹம் கர்த்தா ஹரி: கர்த்தா' - இனி இதை முன்னெடுத்து நடத்துவது ஸ்ரீஹரியின் விருப்பமே. ஹரிபக்தர்களின் ஆதரவு இல்லாமல் இந்த இதழின் நோக்கமானது நிறைவேறாது. ஆகவே, தயவு செய்து நீங்கள் இதை படித்து, புரிந்துகொண்டு, புரியாவிட்டால் கேட்டு, இந்தப் பத்திரிக்கையை மற்றவர்களுக்கும் அறிமுகப்படுத்துமாறு கேட்டுக்கொள்கிறேன். இந்த இதழில் வரும் கட்டுரைகளைப் பற்றிய உங்கள் கருத்துகளை எங்களுக்கு கட்டாயம் தெரிவிக்கவும்.

இந்தப் பத்திரிக்கை பற்றிய சிந்தனையை திரு. க்ரோம்பேட்டை R. ஸ்ரீதரன் அவர்களிடம் சொன்னபோது, அவரும் கட்டாயம் செய்வோம் என்று பல்வேறு யோசனைகளைச் சொல்லி, இதற்காக ஒரு குழுவினரையும் தயார் செய்தார். தமிழ் மாத்வர்களுக்கு மிகவும் அறிமுகமானவர்களான - திருமதி. நிர்மலா நரசிம்மன், திரு.லட்சுமிபதிராஜா மற்றும் திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ் அவர்கள் தங்களின் ஆதரவினைத் தெரிவிக்க, இதோ முதல் இதழ் தங்களின் கரங்களில்.

ஸ்ரீஹரிவாயுகுருகளின் ப்ரேரணையாலும், விஜயதாசரின் தாச பரம்பரையில் வந்த எமது பரமகுருகளான பரமப்ரிய சுப்பராய தாசர் மற்றும் குருகோவிந்தவிட்டல தாசரின் ஆசிகளாலும், எனது குருவான ஜாம்பவதிப்ரியவிட்டல தாசரின் வழிகாட்டுதலாலும் வெளிவந்துள்ள இந்தப் பத்திரிக்கையில் சில தொடர்கள், போட்டிகள் என தொடக்கியுள்ளோம். விவரங்கள் உள்ளே. மேலும் பல விஷயங்களை தொடர்ந்து பேசுவோம். ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

# துணை ஆசிரியர் பக்கம்

‘ஹரிதாச விஜயம்’ தமிழ் மாத சஞ்சிகை உங்கள் கைகளில் தவழ்கிறது. இது, தாச சாகித்யத்திற்காகவே, தமிழில் வெளி யிடப்படுகிற முதல் சஞ்சிகையாகும். ‘மாத்வ இலக்கியம்’ என் னும் பெரும் கடலின் ஒரு சிறு பாகமே ‘ஹரிதாச சாகித்யம்’. ஆனால், உற்று நோக்கினால், அதுவும் ஒரு பெரும் கடலே. இந்தக் கடலின் அக்கரையை நம்மால் காண இயலாது, இப் பிறவியில் மட்டுமல்லாது, எப்பிறவியிலும்!. ஏதோ ஒரு கை அள்ளிப் பருக முயற்சிப்போம். இக்கடல் நீர் உப்பல்ல. அமிர் தம். குடிக்கக் குடிக்க, திகட்டாமல், இன்னும் பருக வேண்டும் என்று ஆசையைத் தூண்டிவிடும். உங்களைப் போன்ற வாசகர் கள் ஆதரவுக்கரம் நீட்டினால், அந்த அமிர்தத்தைக் கொட்டத் தயாராக உள்ளோம்.

ஸ்ரீமன் நாராயணான ஸ்ரீஹரி ஒருவரே இந்த பிரபஞ்சத்திற்கு ஈசன். மற்ற அனைவரும் அவரின் தாசர்களே. அதாவது தொண்டர்களே. அவரது பிரதி பிம்பர்களே. இதை உலகிற்கு பளிச்சென்று பறைசாற்றியவர், ஜகத்குரு ஸ்ரீமன் மத்வாசார்யர்.

அவரே அனுமத் அவதாரத்தில், இராவணனின் சபையில் தைரியமாக ‘தாஸோஹம் கோஸலேந்த்ரஸ்ய’ (தொண்டன் யான், கோசலையின் அதிபதிக்கு) என்று பறைசாற்றியவர். அவரே ‘மத்வ’ அவதாரத்தில், ‘ஈஸ ஒந்து, தாச அநேக’ (கடவுள் ஒருவரே, அடியாட்கள் பலர்) என்று இயம்பியுள்ளார்.

அவரின் சாத்திரத்தின்படி, இலக்குமி முதற்கொண்டு த்ருண ஜீவர்கள் பரியந்தம் அனைவரும் தாசர்கள். நாமும் அவரின் அடியாட்களே. ஆனால் இதைப் பற்றி புரியாமல் இருக்கி றோம். இன்றைய நாட்களில் ‘தாசர்கள்’ என்று குறிப்பிடப்படு வது, கன்னட மொழியில் பல இனிய கிருதிகளை இயற்றி, அதன்மூலம் விட்டல பக்தியை பரப்பிய குறிப்பிட்ட தொண்டர்

களே. மாத்வ சம்பிரதாயத்தில், ஸ்ரீவியாசராஜர் காலத்தில் ‘வியாசகூடம்’ மற்றும் ‘தாசகூடம்’ ஏற்பட்டன என்று கூறு வார்கள்.

சம்ஸ்கிருத மொழியில் வேதாந்த நூல்களைக் கற்று, அதில் புலமை பெற்றவர்களை ‘வியாச கூடத்தவர்’ என்றும், அதே கருத்துக்களை கன்னட மொழியில் கிருதி வடிவில் பாடி, இறை பக்தியைப் பரப்பியவர்களை ‘தாச கூடத்தவர்’ என்று அழைக்கும் பழக்கம் வந்தது. ஆரம்ப கால தாசர்கள், வியாச, தாச சாகித்யம் இரண்டிலும் வல்லமை படைத்தவர்களாக இருந்தார்கள்.

இந்த தாச பரம்பரையையும், ஸ்ரீமத்வாசார்யரே தமது ‘துவாதச ஸ்தோத்திரம்’ மூலம் தொடங்கினார் என்பார்கள். அவருக்குப் பிறகு, பல யதிகள் இதை வளர்த்தார்கள். அவர்களில் முக்கிய மானவர்கள் - ஸ்ரீநரஹரி தீர்த்தர், ஸ்ரீஸ்ரீபாதராஜ தீர்த்தர், ஸ்ரீவியாசராஜ தீர்த்தர், ஸ்ரீவாதிராஜ தீர்த்தர், ஸ்ரீவிஜயீந்திர தீர்த்தர், ஸ்ரீராகவேந்திர தீர்த்தர் போன்றோர். ஸ்ரீவியாசராஜர் காலத்திலிருந்துதான், ஸ்ரீபுரந்தரதாசர், ஸ்ரீவைகுண்டதாசர், ஸ்ரீகனகதாசர் போன்ற பல கிருஹஸ்தர்கள் இந்த மார்க்கத்தை அனுசரிக்க ஆரம்பித்தார்கள். இலட்சக்கணக்கில் கிருதிகளை இயற்றினார்கள். அதன் பிறகு வந்த ஸ்ரீவிஜயதாசர், இந்த தாச மார்க்கத்திற்கு என்று சில வழிமுறைகளையும், நெறிமுறை களையும் வகுத்துக் கொடுத்தார்.

அந்த பரம்பரை இன்றைய வரையில் நீண்டு வளர்ந்துள்ளது. 250க்கும் மேற்பட்ட தாசர்களின் படைப்புகள் இன்று நம்மி டையே நிலவி வருகின்றன. இதில் பல, பலரின் அறிவிற்கு வராமலேயே மறைமுகமாக உள்ளது. கர்நாடக தேசத்தில், இந்த சாகித்ய பிரசாரத்திற்காகவே கடந்த ஒரு நூற்றாண்டு காலத்தில், பல சஞ்சிகைகள் வந்துள்ளன. தமிழ்நாட்டில், பல பேர் ‘தாசர் கீர்த்தனைகள்’, பஜனைப் பாடினாலும், அவற்றைப் பற்றிய தெளிவான அறிவைப் பெற, எவ்விதமான சஞ்சிகையும் இல்லாமல் இருந்தது. அடியேனின் தந்தை காலம்சென்ற

'ஹரிதாச ரத்ன' திரு.K.V.ரங்கராவ் அவர்கள் 1978ம் ஆண்டில், முதன்முதலில், தமிழில் ஹரிதாச பத்ததியின்படி, பஜனைப் பாடல்களை வெளியிட்டார். அதன்பிறகு, பல ஆண்டுகள் கழித்து, அடியேனும் சிலபல புத்தகங்கள் வெளியிட்டேன். ஆனால், முழுமையான அறிவைப் பெற அவை போதாது.

இந்த சமயத்தில்தான் என் நண்பர், ஸ்ரீகுருகோவிந்த விட்டல தாசரின் பிரசிஷ்யர், ஸ்ரீமான் ஸ்ரீசத்ய நாராயண 'ஜகன்னாத கேசவ' தாசர், ஒரு சஞ்சிகையை வெளியிட முன்வந்துள்ளார். என்னையும் அதில் பங்கேற்கும்படி கேட்டுக்கொண்டார். நானும் அந்த அமிர்தத்தைப் பருக ஆவலாக வந்துள்ளேன். நாம் அனைவரும் சேர்ந்து பருகுவோம். இந்த 'பானத்திற்கு' இன்னும் என்னென்ன சேர்க்க வேண்டும் என்று நீங்கள் கூறுகிறீர்களோ, அதையும் சேர்க்கத் தயாராக உள்ளோம்.

ஸ்ரீஹரியின் அருள் ஹரிதாசர்கள் மேல் ஆகட்டும்! ஹரிதாச விஜயம் நடக்கட்டும்!!.

இப்படிக்கு

'ஹரிதாச பாத பாம்ஸு'
**க்ரோம்பேட்டை R. ஸ்ரீதரன்**

31/8/2019

தொடர்

## ஹரிதாச சாகித்யம்

## ஹரிதாச சாகித்யத்தின் பின்னணி

ஸ்ரீமன் மத்வாசார்யர், வேதங்கள், உபநிஷத்கள், பகவத்கீதை, இதிகாசங்கள், புராணங்கள் மற்றும் பிரம்மசூத்திரங்கள் ஆகிய மூலகிரந்தங்களை ஆதாரமாகக் கொண்டு இயற்றிய 37 கிருதிகளே 'சர்வமூல கிரந்தங்கள்' எனப்படுகின்றன.

ஸ்ரீமத்வரின் நான்கு சிஷ்யர்கள் ஸ்ரீபத்பனாப தீர்த்தர், ஸ்ரீநரஹரி தீர்த்தர், ஸ்ரீமாதவ தீர்த்தர் மற்றும் ஸ்ரீஅக்ஷோப்ய தீர்த்தர். ஸ்ரீபத்பனாப தீர்த்தர் அவரின் கருத்துகளை டீகா கிரந்தங்களாக விவரித்து, மூத்த டீகாகாரர் என்று அழைக்கப்படுகிறார். மேற்கண்ட நால்வரில், ஸ்ரீநரஹரி தீர்த்தரைத் தவிர, மற்ற மூவரும் தமதேயான மூல மடங்களை நிறுவினர். ஸ்ரீபத்பனாப தீர்த்தர், ஸ்ரீநரஹரி தீர்த்தருக்கும், அவர் ஸ்ரீமாதவ தீர்த்தருக்கும் அவர் ஸ்ரீஅக்ஷோப்ய தீர்த்தருக்குமாக யதி பரம்பரை வளர, இவர்களிலிருந்து பல மடங்கள் பின்னர் தோன்றின.

சென்னபட்டண தாலுகா, அப்பூரின் ஸ்ரீபுருஷோத்தம தீர்த்தரின் விருப்பத்தின் பேரில், ஸ்ரீரங்கத்தின் ஸ்வர்ணவர்ண தீர்த்தரின் சிஷ்யராகி, சன்யாச தீக்ஷையைப் பெற்று லட்சுமி நாராயண முனிகள் என்று பெயர் பெற்று ஸ்ரீரங்கத்தில் வசித்தவரே, பின்னர் ஸ்ரீஸ்ரீபாதராஜர் என்ற பெயரில் புகழ்பெற்றார்.

ஸ்ரீலட்சுமி நாராயண முனிகள் அவரது பூஜையை மிகவும் விஸ்தாரமாக செய்து முடித்து பின்னர் கன்னடத்தில் கீர்த்தனைகளை இயற்றி, அவற்றை பகவந்தனுக்கு சமர்ப்பித்து பாடினார். இந்த வேலையானது அன்றைய காலகட்டத்திற்கு பெரிய புரட்சி என்றே சொல்லலாம். சன்யாசியானவர், காலில் கெஜ்ஜெ (சலங்கை) கட்டிக் கொண்டு, தம்பூரி மீட்டியவாறு, சேவாரூபமாக கீர்த்தனைகளை ஆடிப்பாடியவாறு இருந்தார் என்பதற்கு ஆதாரங்கள் உள்ளன. தூய்மையான இந்த ஹரி

பக்தியின் வெளிப்பாடே, கன்னட ஹரிதாச சாகித்யம் நன்கு வளர்வதற்கு முதற்படியாயிற்று எனலாம்.

'வியாச சாகித்யம்' என்பது அனைவருக்கும் சுலபமாக கிடைக் கக்கூடியதோ / புரியக்கூடியதோ அல்ல. செல்வந்தர்கள், சாதா ரண மக்கள், பண்டிதர்கள், பாமரர்கள், ஆண்கள், பெண்கள் ஆகிய அனைவருமே சமூகத்தின் அங்கத்தினர்களே. எல்லா காலங்க ளிலும் சமூகத்தில் பாமரர்களின் எண்ணிக்கையே அதிகமாக இருந்திருக்கின்றது. அவர்களுக்கும் சாஸ்திர தத்வங்கள் போய் சேரவேண்டும். தினப்படி வாழ்க்கையில் அவர்கள் அதனை பயன்படுத்தி தங்களை மேம்படுத்திக் கொள்ள வேண் டும்.

அச்சிடப்பட்ட புத்தகங்களோ, பயண சௌகர்யங்களோ இல் லாத அந்த காலத்தில், மக்களுக்கு, நமது புராணங்கள் என்ன சொல்கின்றன, நம் சாஸ்திரங்களின் சாரம் என்ன, நம் தினப்படி நடவடிக்கைகள் எப்படி இருக்கவேண்டும் என்னும் பல விஷய ங்களை அறிந்து கொள்ள வேண்டுமென்றால், அருகில் இருந்த பண்டிதர்களின் மூலமாக அறிந்து கொள்ள வேண்டி யிருந்தது.

கன்னட சாகித்யம் என்றாலே அது விழுப்பு என்னும் காலம் அது. கீர்த்தனை இயற்றினாலும் அதை சம்ஸ்கிருதத்திலேயே பாடவேண்டியிருந்தது. கன்னட கீர்த்தனைகளை இயற்றிப் பாடும் தைரியம் யாருக்கும் வந்திருக்கவில்லை. இத்தகைய காலகட்டத்தில், ஸ்ரீபாதராஜர், தமது சம்ஸ்தான பூஜையை முடித்தபிறகு, வைதிக பண்டிதர்கள் மூலமாக வேத பாரா யணம் செய்விப்பது போல, பாகவதர்கள் மூலமாக கன்னட கீர்த்தனைகளை இயற்றச் செய்தார். மகாபண்டிதரும் சம்ஸ்தா னாபதியுமான அவரே கன்னடத்தில் கீர்த்தனைகளை இயற்றி பாடிய அவரது செயல் சாதாரணமானதல்ல.

வைஷ்ண பக்தியை விளக்கும் வண்ணம் ஆழ்வார்கள் தமிழில் பாடிய கிருதிகள் அன்று புகழ்பெற்றிருந்தன. ராமானுஜாசா

ர்யர் அவற்றை சம்ஸ்கிருத கிரந்தங்களுக்கு இணையாக கௌரவித்தார். இதேபோல, சைவ பக்தி கிரந்தங்களும் நாயன் மார்கள் மூலமாக தமிழில் வந்திருந்தன. இவற்றைப் பார்த்து, கன்னட நாட்டிலும் கன்னட கிருதிகள் இயற்றும் வேலைகள் துவங்கின. தெலுங்கில் அன்னமாசார்யரின் கீர்த்தனைகள் பரவத் துவங்கின.

பல ஆண்டுகள் தமிழ்நாட்டிலேயே வசித்திருந்த ஸ்ரீபாதராஜர், ஆழ்வார்களின் பிரபந்தங்களில் இருந்த வைஷ்ணவ பக்தி, தமிழ் மேல் இருந்த அவர்களின் பற்று ஆகியவற்றைக் கண்டு, அதைப்போலவே தமது சரளமான மொழியான கன்னட த்தில், மத்வாசார்யரின் சித்தாந்தத்தை, சம்ஸ்கிருதத்தை அறியாத மாத்வ மதத்தை சேர்ந்தவர்களுக்கு தெரியப்படுத்தும் வேலை யைத் துவக்கினார். பண்டிதர்களிடம் மட்டுமே இருந்த தத்வ ஞானத்தை, சாதாரண பாமர மக்களுக்குக் கொண்டு போய் சேர்க்க முயன்ற ஸ்ரீபாதராஜரை, தாச சாகித்யத்தின் ஆணிவேர் / வழிகாட்டி எனலாம்.

ஹரிதாச சாகித்யம்

1. தா$^3$சன மாடிகோ$^1$ என்ன ஸ்வாமி சாசிர நாமத வெங்கடரமண
2. தா$^3$சதா$^3$சர மனெய தா$^3$சியர மக$^3$ நானு
3. தா$^3$ச தா$^3$ச தா$^3$சர தா$^3$ஸ்யவ கொடு, தோஷராஷியளிது
4. தா$^3$சனாகோ, விசேஷனாகோ, ப$^4$வபா$^1$ஷ நீகோ$^3$
5. தா$^3$சனெந்தாகு$^3$வேனு த$^3$ரெயொளகெ நானு

ஸ்ரீஹரியை ஈசன் / தலைவன் என்று அறிந்தவர்கள் அனை வருமே அவனது தாசர்களே. தாச - என்றால் சேவகன் என்று பொருள் சொல்லலாம். தாசர்களால் இயற்றப்பட்ட சாகித்யம் அது சம்ஸ்கிருதமாகட்டும், கன்னடமாகட்டும் அது ‘தாச சாகித் யம்’ என்றே அழைக்கப்படுகிறது. கன்னடத்தில் இயற்றப்பட்ட தேவர நாமாக்கள், உகாபோக, சுளாதிகள், தாச சாகித்யம் என்று பெயர் பெற்றிருக்கின்றன. ஹரிதாசர்கள் அனைவரும்

ஸ்ரீமன்மத்வாசார்யரையே குருகள் என்று அறிந்து, மத்வரின் சித்தாந்தத்தையே தமது பிரசாரத்திற்காக பயன்படுத்தினர்.

ஸ்ரீமன் மத்வாசார்யர், த்வாதச ஸ்தோத்திரத்தை ராக தாளத்துடன் மனதிற்கு ஆனந்தமூட்டுமாறு இயற்றிப் பாடியதே தாச சாகித்யத்திற்கு அச்சாரம் எனலாம். ஸ்ரீ நரஹரி தீர்த்தர் பல கன்னட தேவர நாமாக்களை இயற்றி, அவற்றை மற்றவர்களுக்கு உபதேசம் அளித்து வந்தார். தற்போது கிடைத்துள்ள இவரது தேவர நாமாக்கள் விரல்விட்டு எண்ணும் அளவுக்கே உள்ளன.

'ஹரிதாச சாகித்யம்' - பெயரே சொல்வதைப் போல, இது ஹரிதாசர்கள் இயற்றப்பட்ட சாகித்யங்கள். பாரத, பாகவதாதி கிரந்தங்களுடன், மத்வ மதத்து தத்வங்களும் இதில் இருக்கின்றன. இந்த சாகித்யத்தில் பகவந்தனின் பற்பல ரூபங்களின் சிறப்புகள், அவற்றின் வர்ணனை, பக்தனின் அக ஆராய்ச்சி, பகவந்தனிடம் சரணாகதி அடைதல் போன்றவற்றுடன் மத்வ மதத்தின் தத்வ நிரூபணங்களும் இதில் அடங்கியிருக்கின்றன.

பற்பல தாசர்களின் கிருதிகள் அன்றைய சமூகத்தின் நலன், வாழ்க்கைத் தத்துவங்கள் ஆகியன காணப்படுகின்றன. சமூக முன்னேற்றத்திற்கும் பாடுபட்டது தாச சாகித்யம். தாசர்களின் கிருதிகளில் வேதம், வேதாங்கங்கள், உபநிஷத்கள் சொல்லும் தத்வங்களே காணப்படுகின்றன. புராணங்களில் அங்கங்கு விவரிக்கப்பட்ட படைப்பின் கூறுகளை, தேகத்தின் ரசனையையும் இவை இரண்டின் பின்னணியில் அடங்கியிருக்கும் தத்வ ரகசியங்களையும், மிக எளிமையான வாக்கியங்களில், அனைவருக்கும் சுலபமாக புரியுமாறு ஹரிதாசர்கள் தங்கள் கிருதிகளில் விளக்கியிருக்கின்றனர்.

கடித்தால் கரும்பு, பிழிந்தால் தேன் என்பதுபோல் ஹரிதாச கீர்த்தனைகள் அனைத்தும் இனிமையானவை. அந்த பகவந்த னுக்கு அருகில் பக்தர்களைக் கொண்டு போய் சேர்ப்பவர்கள் ஹரிதாசர்கள். எதுகை மோனைக்காக அடித்து திருத்தி இயற்ற ப்பட்ட கிருதிகள் அல்ல இவை. ஹரிதாசர்களின் வாயிலிரு ந்து அனுபவ பூர்வமாக வெளிவந்த வாக்குகளே இவை. அவர் களது ஞானத்தின் வெளிப்பாடே அவர்களது கிருதிகள். ஹரி தாசர்களின் மனது ஆகாயத்தைப் போல பரந்து விரிந்ததாகும்.

பகவத்பக்தர்கள் எங்கு பாடுகின்றனரோ, அங்கு ஸ்வாமி ஸ்ரீ ஹரி விசேஷ சன்னிதானத்தினால் வசிக்கிறான். பக்தர்கள் அந்த பரமாத்மனை கொண்டாடி பாடிய கானாம்ருதங்களே 'ஹரிதாச சாகித்யம்'. வேத, உபநிஷத், 18 புராணங்கள், ராமா யண, மகாபாரத, பாகவதம் முதலானவையே ஹரிதாசர் களுக்கு ஆதாரமானவை. (தொடரும்).

****கன்னட மூலம்: திருமதி. ஜெயம்மா, பெங்களூரு**

## பேச்சுப் போட்டி

நிறைய விஷயங்களை அறிந்திருப்போம்,. ஆனால், அதைப் பற்றி பேச முற்படும்போதுதான் தடுமாற்றம், இது பெரும் பாலும் அனைவருக்கும் பொருந்தும். ஆனால், நமது ஹரிதாசர் களைப் பற்றி நாம் தெளிவாக அறிந்திருக்க வேண்டியது கட்டாயம்.

இதற்காக மாதந்தோறும் ஒரு தலைப்பில் பேச்சுப் போட்டி நடத்துவதாக திட்டமிட்டுள்ளோம். ஆண், பெண் - எந்த வயதி னரும் இதில் கலந்து கொள்ளலாம். நமது பத்திரிக்கை உறுப்பி னர்கள் அனைவரும் இந்தப் போட்டியில் பங்கேற்குமாறு கேட்டுக் கொள்கிறோம். மேலும் விவரங்கள் உள்ளே.

தொடர்

## ஹரிதாசர்களின் வாழ்க்கை வரலாறு

## ஸ்ரீகுருகோவிந்தவிட்டல தாசர்

### அத்தியாயம் 1 - **தாசரின் பிறப்பும், இளமைப் பருவமும்**

ஸ்ரீகுருகோவிந்தவிட்டல தாசரின் முன்னோர்கள் வசித்த ஊர் மகாராஷ்டிரத்தை சேர்ந்த புனா நகரத்துக்கு அருகில் உள்ள ஒரு சிற்றூர் ஆகும். பின்பு அங்கிருந்து அவர்கள் கிளம்பி, ஆந்திர பிரதேசத்து சித்தூர் என்கிற ஊருக்கு வந்து, பின்பு அங்கிருந்து கிளம்பி மைசூரை அடைந்தார்கள். பின்னார் மைசூரே அவர்களது சொந்த ஊர் ஆகியது.

ஸ்ரீகுருகோவிந்தவிட்டல தாசரின் வம்சத்தின் மூல புருஷரின் பெயர் ’கோடுபாள’ கோவிந்த ராயர் என்பதாகும். ’கோடுபாள’ கோவிந்த ராயர் வம்சத்தில் வந்தவர்களே ஸ்ரீரகுநாதராவ் - லட்சுமிபாய் தம்பதிகள். ஸ்ரீரகுநாதராவ் வேலை நிமித்தம் சிக்மகளூரில் வாசம் புரிந்து வந்தார். இவருக்கு ஒரே மகனாக ஸ்ரீகுருகோவிந்தவிட்டல தாசர், 1816ம் ஆண்டு ஜய நாம சம்வத்ஸரம் ஸ்ராவண பகுள த்வாதசியன்று பிறந்தார். (28-08-1894). தம் குலத்தின் மூல புருஷராகிய ’ஸ்ரீகோடுபாள’ கோவிந்த ராயரின் நினைவாக குழந்தைக்கு ‘கோவிந்த’ என்று பெயர் வைத்தனர் பெற்றோர். இவரே நம்முடைய கதாநாயகர் பக்த மைசூர் குருகோவிந்தவிட்டல தாசர் ஆவார்.

லட்சுமிபாய் கர்ப்பிணியாக இருக்கும்போதே மகாஞானியான இபராமபுர ஸ்ரீகிருஷ்ணாச்சார் என்பவரின் மகனாகிய ஸ்ரீஓபளாசார்யர் சிக்மகளூருக்கு வந்து, லட்சுமிபாய் அவர்களை அனுகிரகித்து, ‘உனக்கு சத்புத்திரன் பிறக்கப் போகிறான்’ என்று ஆசிர்வாதம் செய்து மந்திராட்சதை கொடுத்தார். அதேபோல, அவருக்கு சத்புத்திரன் அவதரித்தே விட்டான்.

கோவிந்தன் நான்கு வயது சிறுவனாக இருக்கும்போது ‘மாரி கணிவெ’ என்ற ஊரில் வேலையில் இருந்த ரகுநாத ராயர், அம்மை நோயினால் தாக்குண்டு அகால ம்ருத்யு அடைந்தார். கணவனை இழந்த கைம்பெண்ணான லட்சுமிபாய் தம் சிறு குழந்தையை அழைத்துக்கொண்டு தம் தாய்வீடு வந்தார். பின்பு அவர் பங்காளிகள் (தாயாதிகள்) வீட்டில் சிலகாலம் இருந்து பல அல்லல்களை அனுபவித்தார். தீரவொண்ணாத் துயரங்களை அனுபவித்தார். ஆனாலும், மகனுக்காக பல்லைக் கடித்துக்கொண்டு கஷ்ட ஜீவனத்தை நடத்திவந்தார்.

‘ஹெக்கடதேவன கோடெ’ என்கிற ஊரில் தம்முடைய பெரியப்பா வீட்டில் இருக்கும்போது கோவிந்தனுக்கு உப நயனம் (பூணூல் கல்யாணம்) நடந்தேறியது. ஆனாலும் அவரு டைய தாயாதிகளின் கொடூரமான சொல் அம்புகள் லட்சுமி பாயின் உடலைத் துளைத்தன. அவளுக்கு பலத்த மன சங்கட த்தை உண்டாக்கின. இந்தப் பந்துக்கள் வீட்டில் அடிமையைப் போல லட்சுமிபாய் எல்லா வேலைகளையும் செய்தார். சிறுவன் கோவிந்தனும் படிப்புடன் எல்லா வீட்டு வேலை களையும் செய்ய வேண்டியதாயிற்று.

வீட்டுக்கு நீர் கொண்டு வருதல், கடைக்குப் போய் வருதல், பளுவான சாமான்களைத் தூக்கி வருதல் போன்ற வயதுக்கு மீறிய வேலைகளை செய்யவேண்டிய கட்டாயம் கோவிந்த னுக்கு ஏற்பட்டது. தாயார் லட்சுமிபாய்க்கு இவையெல்லாம் கொஞ்சம்கூட பிடிக்கவில்லை. என்ன செய்வது? தினமும் மகனுக்கு பழைய சோறே போடவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட் டது. இப்படி இருக்கையில் ஒரு நாள் ஒரு சம்பவம் நடந்தது. அதுவே கோவிந்தனின் வாழ்க்கையில் திருப்புமுனை அல்லது படியாக இருந்தது. விதியின் விளையாட்டு விசித்திரமானது.
(தொடரும்).

**** க்ரோம்பேட்டை R. ஸ்ரீதரன்**

தொடர்

## ஹரிதாசர்களின் சிந்தனை முத்துக்கள்

## சுரர்கள் நட்பு கிடைக்கட்டும்

ஸ்ரீபதியு நமகெ ஸம்பத$^3$வீயலி வா
ணி பதியு நமகெ தீ$^3$ர்க்கா$^4$யு கொட$^3$லி ||ப||

சுரரக$^3$ணவனு பொரெயெ விஷவ கண்ட$^2$த$^3$லிட்ட
ஹர நித்ய நமகெ சஹாயகவாக$^3$லி
நரரொளுண்ணதவாத நித்யபோ$^4$கங்களனு
புருஹூத பூர்ண மாடிஸலி நமகெ ||1||

வினுதசித்தி ப்ரத$^3$னு விக்$^4$னேஷ த$^3$யதி$^3$ந்த
நெனெத கார்யகளெல்ல நெரவேரிஸலி
தினதினதி ஆஸ்வினிக$^3$ளாபத்துகள களெது
மனகெ ஹருஷவனித்து மன்னிஸலி பிட$^3$தெ$^3$ ||2||

நிருத சுக்ஞானவன்னு ஈவ மத்வராய
குருகளாஷீர்வாத நமகாகலி
புரந்தரவிட்டலன கருணதிந்தலி சகல
சுரரொலுமெ நமகெ சுஸ்திரவாகலி ||3||

இந்த கிருதியில் மத்வ மதத்தின் முக்கிய தத்வமான தேவதா தாரதம்யத்தை விளக்கியிருக்கிறார் தாசர். அவரோஹண கிரமத்தைப் பின்பற்றி, ஆசார்ய மத்வரை குருவாக நிறுத்தி, பிறகு தாரதம்யத்தில் வரும் அனைத்து தேவதைகளின் அருளையும் வேண்டுகிறார். தினமும் பாராயணம் செய்வதற்கு ஏற்றவாறு இருக்கும் இந்தப் பாடல், சஜ்ஜனர்களுக்கு தாசர் செய்த மிகப் பெரிய உதவியாகும். பகவந்தனிடம் துவங்கி அனைவரின் கருணையும் நமக்கு இருக்கவேண்டும் என்று நினைப்போம்.

****கன்னட மூலம்: திரு.ஏ.பி.ஷாமாச்சார், பெங்களூரு**

தொடர்

## கேசவ நாமா

## ஷரணு ஷரணு - ஸ்ரீவியாசராஜர்

ஸ்ரீஹரியின் ரூபங்கள் / அவதாரங்கள் எவ்வளவு? 1? 2? 10? 24? 51? 100? 1000?. அவற்றை எண்ணி முடிப்பதற்கு சாத்தியமே யில்லை. அந்த ரூபங்களை நான் எண்ணிக் காட்டுகிறேன் என்று யாராவது கிளம்பினால், கடலில் இருக்கும் நீர்த்துளி களை எண்ணி முடிக்கிறேன் என்று கிளம்புவதைப் போலவே இருக்கும்.

வழிபாட்டிற்கு வசதியாக ஸ்ரீஹரியின் ரூபங்களை நாம் தசா வதாரங்கள், கேசவாதி 24 ரூபங்கள், அஜாதி 51 ரூபங்கள் என வகைப்படுத்தி வைத்திருக்கிறோம். இந்த வகை / ரூபங்க ளைப் பற்றி, அவற்றின் சிறப்புகளைப் பற்றி அனைத்து வேத இதிகாச கிரந்தங்களில் சொல்லியிருப்பதைப் போல, கன்னட ஹரிதாசர்களும் நிறைய பாடியிருக்கின்றனர்.

இந்தத் தொடரில் நாம் பார்க்கப்போவது கேசவாதி 24 நாமங் களைப் பற்றி ஹரிதாசர்கள் பாடிய பாடல்களை மட்டுமே. கேசவாதி 24 நாமங்கள் என நாம் சொல்வது - கேசவ, நாரா யண, மாதவ, கோவிந்த, விஷ்ணு, மதுசூதன, த்ரிவிக்ரம, வா மன, ஸ்ரீதர, ஹ்ருஷிகேச, பத்பனாப, தாமோதர, சங்கர்ஷண, வாசுதேவ, பிரத்யும்ன, அனிருத்த, புருஷோத்தம, அதோக்ஷஜ, நரசிம்ம, அச்யுத, ஜனார்த்தன, உபேந்திர, ஹரி, ஸ்ரீகிருஷ்ணா - இந்த ரூபங்களையே. இந்த ரூபங்களைப் பற்றி பாடும் பாடல் களையே ‘கேசவ நாமா’ என்கிறோம்.

பொதுவாக அனைவருக்கும் தெரிந்த கேசவ நாமாவான கனக தாசரின் பாடலின் முதல் வரி ‘ஈச நின்ன சரண பஜனெ ஆசெ யிந்த மாடுவேனு தோஷராஷி நாஷமாடோ ஸ்ரீஷ கேசவ’ என்பது. ’கேசவனே, ஈசனே, உன் தாசனாகிய நான் உன் பாத கமலங்களைப் பற்றி மிகுந்த ஆசையுடன் பாடுவேன், என்

வினைப்பயன்களால் வரும் துன்பங்களை அகற்றுவாயாக' என்று சொல்கிறார் கனகதாசர். இப்படியாக, ஒவ்வொரு ஹரி தாசர்களும், ஒவ்வொரு கேசவ நாமங்களை, அந்தந்த ஹரி ரூபங்களை வணங்குவதால் என்ன பயன் / பலன் கிடைக்கும் என்பதையும் தங்கள் பாடல்களில் விளக்கியிருக்கிறார்கள்.

ஸ்ரீவியாசராஜர், ஸ்ரீவாதிராஜர் முதலான யதிகளும், பின்னர் வந்த ஹரிதாசர்களில் பலரும் இந்த கேசவ நாமங்களைப் பற்றி கீர்த்தனைகள், சுளாதிகள், உகாபோகங்கள் ஆகியவற்றை இயற்றியிருக்கின்றனர். இந்தத் தொடரில் அவ்வாறான சுமார் 48 கேசவ நாம கீர்த்தனைகளை, அதன் அர்த்தங்களோடு பார்க்கப் போகிறோம். ஹரிபக்தர்கள் இந்த அனைத்து கேசவ நாமங்களையும் பொருளோடு புரிந்து படித்து, கேசவாதி 24 ரூபங்களின் அருளைப் பெறவேண்டும் என்று அந்த ஸ்ரீஹரி யை வணங்குகிறோம்.

**<u>1. ஷரணு ஷரணு - இயற்றியவர்: ஸ்ரீவியாஸராஜர்</u>**

ஷரணு ஷரணு ||ப||

ஷரணு மத்ஸ்ய கூர்ம வராஹ
நரஹரி வாமன பா⁴ர்கவ
ஷரணு ராக⁴வ கிருஷ்ண புத்தனெ
ஷரணு கல்கி ரூபனே ||1||

நம்பிதெ நா நின்ன கேசவ
நம்பிதெ நாராயண மாதவ
அம்புஜாக்ஷ கோவிந்த விஷ்ணு
சம்ப்ரமதி மதுசூதன ||2||

கருணதலி ரக்ஷிஸு த்ரிவிக்ரம

வரத வாமன ஶ்ரீதர
பரமபாவன ஹ்ருஷிகேஷனெ
வரபத்மனாப தாமோதர ||3||

வாஸவார்ஜித சங்கருஷண
வாசுதேவ ப்ரத்யும்னனெ
ஶ்ரீஷ அனிருத்த புருஷோத்தம
நீ ஸலஹுவுத தோக்ஷஜ ||4||

ஸ்ருதிக[3]கோ[3]சர நாரசிம்ஹ
ச்யுத ஜனார்த்தனு பேந்த்ரனே
சதுரவிம்ஷதி நாமதல்லிஹ
சதுர ஹரி ஶ்ரீகிருஷ்ணனே ||5||

'ஷரணு' என்றால் காப்பாற்றுபவன், காப்பாற்றுவதற்கு தகுதி உள்ளவன் என்று பொருள். 'ஷரணாகத' என்றால் தோல்வியை ஒப்புக்கொண்டு, தஞ்சம் தேடி, அடைக்கலம் போகிறவர் என்று பொருள்.

'ஷரணு' என்பதற்கு வந்தனம் என்று கொண்டால், அது நவ வித பக்தியில் வரும் வந்தனம் என்று பொருள் வருகிறது. தாஸ்யபாவம் வேண்டும் என்பது ஶ்ரீவியாசராயரின் அபிப்பி ராயம். 'ஏசு காயங்கள களெது எம்பத்து நால்கு லக்ஷ ஜீவ ராஷியன்னு தாடி பந்த ஈ ஷரீர' என்கிறார் கனகதாசர். பற்பல பிறவிகளில் நாம் செய்த பல செயல்களைக் கடந்து, இறுதி யாக முக்திக்கு சாதனை செய்யக்கூடிய மனிதப்பிறவியை எடுத்திருக்கிறோம். இத்தகைய சாதன-சரீரத்தை கொடுத்த வரான ஶ்ரீஹரிக்கு நாம் எப்போதும் நன்றியுடன் சரணாகதராக இருக்கவேண்டும் என்று குறிப்பிடுகிறார்.

1. ஶ்ரீஹரியின் தசாவதாரங்களான மத்ஸ்ய, கூர்ம, வராக, நரசிம்ம, வாமன, பரசுராம, ராம, கிருஷ்ண, புத்த, கல்கி ரூபங்

களின் ஐக்கிய சிந்தனையை செய்து அவரை வணங்க வேண்டும்.

2. பிரம்ம-ருத்ராதிகளின் தலைவனான கேசவ, தோஷங்களை போக்குபவரான நாராயண, லட்சுமிபதியான மாதவ, தாமரைக் கண்களையுடைய கோவிந்த, மது தைத்யனைக் கொன்ற விஷ்ணு மதுசூதனனே, உன்னை நன்றாக அறிந்து, நம்புகிறேன்.

3. த்ரிவிக்ரமனாக வளர்ந்த வாமனான நீ, ஸ்ரீதர மிகவும் பவித்ரமான ஹ்ருஷிகேசன், பத்பனாப, தாமோதரனான நீ, என்னை கருணையுடன் காப்பாற்று.

4. இந்திரனால் வணங்கப்படும் சங்கர்ஷணன், மோட்சத்தைக் கொடுக்கக்கூடிய வாசுதேவன், பலசாலியான பிரத்யும்னன், ஸ்ரீதேவிக்கு தலைவனான அனிருத்த, அனைவரிலும் உத்தம மான புருஷோத்தமா, நித்யமுக்தனான அதோக்ஷஜ, என் னைக் காப்பாற்று.

5. வேத வாக்கியங்களுக்கே சிக்காத நரசிம்ம, அழிவில்லாத அச்யுத, துர்ஜனர்களின் எதிரி ஜனார்த்தன, உபேந்திர, 24 தத்வ ங்களுக்கு ஆதாரபூதனான 24 நாமங்களுடைய ஸ்ரீகிருஷ்ணனே, உன்னை சரணடைகிறேன் என்கிறார்.

பிரம்மாண்டம் மற்றும் பிண்டாண்டத்தில் இருக்கும் 24 ரூப ங்களின் ஐக்கிய சிந்தனை, தசாவதார ரூபங்களுக்கும் கேச வாதி ரூபங்களுக்கும் அபேத சிந்தனை (இரண்டும் ஒன்றே என்று அறிவது) செய்யவேண்டும் என்று கூறுகிறார் ஸ்ரீவியாச ராயர். (தொடரும்).

****கன்னட மூலம்: திருமதி. ஜெயம்மா, பெங்களூரு**

போட்டி

## மாதாந்திர குறும்போட்டி

## யதி-த்ரயர்கள்

* கீழ்க்கண்ட 10 கேள்விகளுக்கான விடைகளை எங்களுக்கு வாட்சப் அல்லது ஈமெயில் மூலமாக தெரியப்படுத்தவும்.
* தேர்ந்தெடுக்கப்படும் இருவருக்கு புத்தகப் பரிசு வழங்கப்படும்.
* விடைகள் வந்து சேர கடைசி தேதி: நவம்பர் 1.

1. ஸ்ரீபாதராஜரின் ஏதேனும் மூன்று கன்னட கிருதிகளின் பெயர்களைக் கூறவும்.
2. ஸ்ரீபாதராஜரின் வித்யா சிஷ்யரின் பெயர்?
3. தன் பிருந்தாவனத்திற்காக முளபாகிலுவை ஸ்ரீபாதராஜர் தேர்ந்தெடுக்கக் காரணம் என்ன?
4. ஸ்ரீவியாசராஜரின் மூன்று சம்ஸ்கிருத கிரந்தங்களின் பெயர்களைக் கூறவும்.
5. ஸ்ரீவியாசராஜர் முக்யபிராண தேவரின் சிலைகளை நிறுவக் காரணம் என்ன?
6. ஸ்ரீவியாசராஜரின் முந்தைய அவதாரங்களாக் கருதப்படுபவை எவை?
7. ஸ்ரீவியாசராஜரின் உபாசனா மூர்த்தி எது?
8. ஸ்ரீவாதிராஜரின் ஏதேனும் மூன்று கன்னட கிருதிகளின் பெயர்களைக் கூறவும்.
9. ஸ்ரீவாதிராஜரின் ஏதேனும் மூன்று சம்ஸ்கிருத கிரந்தங்களின் பெயர்களைக் கூறவும்.
10. ஸ்ரீவாதிராஜர் பிருந்தாவனத்தில் எவ்வளவு பிருந்தாவனங்கள் உள்ளன?

ஹரிதாச விஜயத்தைப் பற்றி தயவு செய்து உங்கள் நண்பர் / உறவினர்களிடம் அறிமுகம் செய்யவும்.

தொடர்

## ஹரிதாசர்களின் புதிர் கவிதைகள்

## முன்னுரை

ஹரிதாசர்களின் படைப்புகளின் ஒன்றான ‘முண்டி3கெ3’ என்பதைப் பற்றிதான் இந்தத் தொடரில் பார்க்கப் போகிறோம். ஹரிதாச சாகித்யத்தில் ‘முண்டிகெ’ பதம் என்பது ஒரு வகை. அதை ‘புதிர்க்கவிதை’ என்றும் தோராயமாக கூறலாம். ஒரு பொருளை நேரடியாகக் கூறாமல், மறைமுகமாக சில சங்கேதங்கள் மூலம் கூறும் முறையே ‘முண்டிகெ’ ஆகும். இதற்கு நிறைய அறிவுத் திறமையும், புராண ஞானமும், சாதுர் யமும் தேவை. தாசர்கள் ஏன் அந்த உத்தியை உபயோகி த்தார்கள் என்றால் ‘பரோக்ஷோ ப்ரியோ ஹி தே3வா: ப்ரத்ய க்ஷ த்3விஷா:’ என்கிற வேத வாக்கியத்தை அனுசரித்தே. அதன் பொருள் : ‘தேவதைகள் மறைமுகமாக துதிப்பதையே விரும்புகிறார்கள். நேரிடையாகக் கூறுவதையல்ல’. எப்படி கற் புள்ள மனைவி, தன் கணவனுடைய பெயரை நேரிடையாகக் கூறாமல், மறைமுகமாகக் கூறுவாளோ, அது போல.

எடுத்துக்காட்டாக, கணவரின் பெயர் ‘நாகராஜன்’ என்று இருந்தால், ‘அரவரசன்’ என்று மனைவி விளிம்புவாள். அது போல, ஒரு யுக்தியை தாசர்கள் சில கிருதிகளில் கையாண்டு உள்ளார்கள். பண்டிதர்களுக்கு அந்த கிருதிகள் சவாலாக அமையும். மண்டைக்கு (மூளைக்கு) வேலை கொடுப்பதால் அவற்றிற்கு ‘முண்டிகெ’ என்று பெயர் வந்ததாகக் கூறுவார்கள். ஆங்கிலத்தில் இதை Quiz அல்லது Puzzle என்று அழைக்கலாம். முண்டிகையை 'ஒகடு' என்றும் 'ஹளெகன்னட' என்றும் சிலர் கூறுவார்கள்.

எல்லா ஹரிதாசர்களும் இந்த முண்டிகெயை தங்கள் படைப்பு களில் படைத்துள்ளார்கள். ஆனால், இதை ஸ்ரீபுரந்தரதாசரும், ஸ்ரீகனகதாசரும் மிகவும் அதிகமாக கையாண்டு உள்ளார்கள்.

ஸ்ரீகனகதாசரின் முண்டிகைகள் மிகவும் பிரசித்தம். அந்தக் காலத்தில் இருந்த பண்டிதர்களுக்கு அவர் சிம்ம சொப்பன மாகவே விளங்கினார். 'கனகன கெணகப் பேடா, கெனகி திணு கப் பேடா' (கனகதாசரை கிளற வேண்டாம். கிளரி திண்டாட வேண்டாம்) என்று ஒரு வழக்கு மொழியே உண்டு. ஸ்ரீகனக தாசரின் பல புதிர் கவிதைகளுக்கு இன்றளவுகூட பதில் கிடைக்கவில்லை. அவ்வளவு இரகசிய விஷயங்கள் அதில் பொதிந்துள்ளன.

அந்த புதிர் கவிதைகளில் சிலவற்றை இந்த தொடரில் பார்க்க லாம். என் அறிவிற்கு தோன்றிய பொருட்களை மட்டும் கூறி யுள்ளேன். அவைகளையே முடிவானது என்று கருதக்கூடாது. அவற்றில் இன்னும் பல பொருட்கள் இரகசியமாகப் பொதிந்து இருக்கின்றன. அவை வெட்ட வெட்ட வற்றாத தங்க சுரங்க ங்களைப் போன்றதாகும். 'யதா மதி'தான் நம்மால் கூற முடியும்.

முதலில் தாசர்களின் கிருதிகள் மூலம் (கன்னட மொழி) தமிழில் கொடுத்திருக்கிறேன். அடுத்து, அதன் மேலோட்டப் பொருள் மட்டும் கொடுத்துவிட்டு, அதற்கு அடுத்து, விளக்க மான பொருள், இரகசிய அர்த்தங்கள் என எனக்குத் தெரிந்த வற்றை சொல்கிறேன். அடுத்த இதழிலிருந்து ஒவ்வொன்றாகப் பார்க்கலாம். (தொடரும்). **க்ரோம்பேட்டை R. ஸ்ரீதரன்

தொடர்

## ஹரிகதாம்ருதசாரக் கட்டுரைகள்

## ஜகன்னாத்தாசர்

கன்னட சாகித்யத்தின் 1500 நீண்ட ஆண்டு வரலாற்றில், ஹரி தாச சாகித்யத்தின் பங்கு அளப்பரியது. சுமார் 100க்கும் மேற் பட்ட ஹரிதாசர்கள், பாடல்கள் மூலமாக பக்தியை பரப்பியிரு க்கின்றனர். இவர்கள் பாடிய பாடல்கள் இன்று வரைக்கும் பக்தியை பரப்பிக்கொண்டிருப்பது மட்டுமல்லாமல், அதனுடன் மத்வ சாஸ்திரத்தையும் (தத்வவாத) கன்னடத்தில் மொழி பெயர்த்து வழங்கி வந்துள்ளது ஒரு சிறந்த செயலாகும்.

கர்னாடக சங்கீதத்திற்கு ஹரிதாசர்களின் பாடல்களின் பங்கு மகத்தானது. அசாதாரணமானது. தாசர்களின் பரம்பரை பெரும் பாலும் ஆவணப்படுத்தப்படவில்லை. அவர்களின் பாடல்கள் பொதுவாக வாய்வழியாகவே பரப்பப்பட்டு வந்தன. தலை முறை தலைமுறையாக கற்பிக்கப்பட்டு வந்துள்ளது.

தா3ஸவர்யம் த3யாயுக்த1ம் து3ரீக்1ருத1 து3ராஷிஷம் ।
ஹரிகதாம்ருதவக்தா1ரம் ஜகன்னாத1ம் கு3ரும்ப4ஜே ॥
ஜலஜேஷ்ட நிபா4கா1ரம் ஜக3தீ3ஷ ப1தா3ஷ்ரயம் ।
ஜக3தீ3த1ல விக்2யாத1ம் ஜகன்னாத1 கு3ரும்ப4ஜே ॥

மத்வமத சித்தாந்தங்களை கன்னடத்தில் மொழிபெயர்த்தவர் களில் மிகச் சிறந்தவர் ஜகன்னாததாசர், அவற்றை மிகச் சரள மான மொழியில் நமக்குக் கொடுத்தவர், அப்படிச் செய்ததில் பெரும் வெற்றி கண்டவர்களில், இவரது கீர்த்தி மிகப் பெரி யது.

ஸ்ரீபாதராஜரிடமிருந்து பிறந்து வளர்ந்த ஹரிதாச சாகித்யம், வேகமெடுத்து புகழடைந்தது புரந்தரதாசர் காலத்தில். பிறகு சிறிது தேக்கம். மறுபடி விஜயதாசர் காலத்தில் ஓடத் துவங்கி.

ஜகன்னாததாசர் மூலமாக பெரும் உச்சிக்குச் சென்றது. புரந்தரர் காலத்தில் காவிய ரூபத்தில் திகழ்ந்த கீர்த்தனைகள் பின்னர் சாஸ்திரங்களின் மொழிபெயர்ப்பாக மாறியது.

சிகலபரவியில் விஜயதாசர், உத்தனூரில் கோபாலதாசர், கல் லூரில் சுப்பண்ணதாசர், அதவானியில் திவான் தம்மண்ண தாசர், வேணிசோமபுரத்தில் வியாஸதத்வக்ஞர் ஆகியோர் அப ரோக்ஷ ஞானிகளாகி, பெரும் கௌரவம் / மரியாதையைப் பெற்று, பெரும் புகழுடன் திகழ்ந்த பொற்காலம். தாச சதுஷ்ட யர்களில் புரந்தரதாசர், விஜயதாசர், கோபாலதாசருடன் நான் காமவராக இருப்பவர் ஜகன்னாததாசர்.

லிங்கசூரின் பிராணேஷதாசர் (பிராணேசவிட்டலா), கர்ஜகி தாசப்பா (ஸ்ரீதவிட்டலா), ஹுண்டேகாரதாசர் (ஸ்ரீசவிட்டலா), மானாமதுரேதாசர் (வெங்கடேசவிட்டலா), சிக்கோடி ஆசார்யரு (சிரிவத்ஸ அங்கிதத்தைப் பெற்றவர்) என ஜகன்னாததாசருக்கு 27 பேர் சிஷ்யர்களாக இருந்தனர்.

இவரைப் பற்றிய அதிக தகவல்கள் இவரின் சிஷ்யர்களின் பாடல்கள் / புத்தகங்களிலிருந்து கிடைக்கின்றன. தொட்ட பெல்லாபுரத்துக் கவி ராகவேந்திர தாசர் சொல்லியதைப் போல, ஜகன்னாததாசர் தம் தந்தை நரசிம்மதாசரை இரு பாடல்களில் புகழ்ந்து பாடியுள்ளார். தாய், தாத்தா அவர்களின் பெயர்களையும் சொல்லியிருக்கிறார்.

புரந்தரதாசரிடமிருந்து கனவில் அங்கிதம் பெற்று, நரசிம்ம தாசர் (ஜகன்னாததாசரின் தந்தை) என்று புகழ்பெற்றார். ஹரி பக்தியில் தன்னை அர்ப்பணித்துக்கொண்டவர், சங்கீதத்தில் விற்பன்னர், ஸ்ரீராகவேந்திர மடத்தின் ஸ்ரீசுமதீந்திர தீர்த்தரிடம் (இவர் கந்தர்வ அம்சம் கொண்டவர் எனக் கருதப்படுகிறது) பாடம் படித்தவர். 50 ஆண்டுகள் இடைவிடாமல் திருப்பதி யாத்திரையைச் செய்தவர். சாத்விக நடையைக் கொண்ட வரான இவருக்கு, ஸ்வாமிகள், கருடவாகன ஸ்ரீலட்சுமி

நரசிம்ம பிரதிமையை அருளினார். அவருக்குக் கிடைத்த மரியாதை, படித்த அறிஞர்களின் புகழ்மாலைகள் ஆகியவை ஜகன்னாததாசரின் பாடல்களிலிருந்து தெரிகின்றது. ராய்ச்சூர், மான்வி தாலுகா, ப்யாகவாட கிராமம், ஹரிபக்தரான தந்தை நரசிம்மாச்சார், தாய் லட்சுமிபாய் 1659ல் கீலக நாம சம்வத் ஸரம் சிராவண மாதம் திவிதியை (கிபி 1728 ஜுலை 27ம் தேதி) அன்று ஜகன்னாததாசர் பிறந்தார். இயற்பெயர் ஸ்ரீ னிவாசன். ஹரிமயம் நிறைந்த சூழலில் வளர்ந்தார். வரதேந்திர தீர்த்தரிடம் வேதாந்தம், வியாகரணம், தர்க்கம், மீமாம்சம் ஆகியவற்றைக் கற்றுத் தேர்ந்தார்.

அனைத்து சாஸ்திரங்களையும் கற்றவர், சாஸ்திரங்கள் சொல் வதை பின்பற்றுபவர், பரம வைஷ்ணவர், தேவையற்ற அரட்டைகளை விட்டவர், எப்போதும் ஹரிதியானத்தில் இருப்பவர் என்று ஜனார்த்தன விட்டலர் கூறுகிறார். தாசரின் கல்வியறிவு, பாண்டித்யம் மிகவும் அசாதாரணமானது. வியாச ராஜர், ராகவேந்திரர் ஆகியோர் மரியாதை பெற்ற சபைகளில் இவரும் நற்பெயர் பெற்று ராஜமரியாதையைப் பெற்றார். பல விருதுகளையும் பெற்றார்.

சாஸ்திர மீமாம்சங்களை எந்நேரமும் படித்துக் கொண்டே யிருந்து அதன்மூலம் மிகப்பெரிய பண்டிதர் ஆனார். யஜு சாகா, விஸ்வாமித்ர கோத்திரத்தில் ராமாசார்யரின் மகளான தாமரசம்மா என்பவருடன் மணம் புரிந்தார். தாமோதர தாசர், திம்மண்ண தாசர் என்று இரு மகன்கள். அவரது வீடே குரு குலமாக இருந்தது. பற்பல சிஷ்யர்களுக்கு சாப்பாடு, தங்கும் இடம் என அனைத்து வசதிகளுடன் கல்வி புகட்டலைச் செய்த சிறந்த குலத்தவர். எவ்வளவோ விருதுகளைப் பெற்று என்ன பயன்? ஒரு சிறிய பொய் சொன்னதில், க்ஷயரோகம் (வயிற்றுவலி) துவங்கியது. ஸ்ரீஹரியிடம், ஜீவோத்தமரிடம் முறையிட்டார். பின் விஜயதாசரிடம் சரணடைந்தார். தன்

வலியைத் தீர்க்குமாறு வேண்டினார். உத்தனூரில் கோபால தாசரிடம் போகுமாறு உத்தரவு கிடைத்தது. அங்கு அவருக்கு பிரச்னைக்கான தீர்வும் கிடைத்தது.

கணபதியின் அம்சம் என்று கருதப்படும் கோபாலதாசர், மிக வும் இளகிய மனதுடன் இரண்டு சோளரொட்டியை தன்வந்திரி மந்திரத்தால் ஜெபித்து பிரசாதமாகக் கொடுத்தார். 'என்ன பின் னப கேளோ தன்வந்திரி தயமாடோ' என்று தன்வந்திரியிடம் வேண்டினார். 'சன்னவனு இவ கேவல, பன்ன படிசுவ ரோகவன்னு மோசன மாடி சென்னாகி பாலிசுவரோ, கருணி. ஆதரிஸி இவகெ தவபாத தியாவனித்து சாதுகளொளகிட்டு மோத கொடு சர்வதா' என்று வேண்டினார். அவரது 40வது வயதில் வந்த அப-ம்ருத்யுவைப் (தீராத வயிற்றுவலியை) போக்கி, தனது ஆயுளிலிருந்து 40 ஆண்டுகள் & 10 நாட்களை தானம் செய்த மகானுபாவர், கோபாலதாசர். 'அபம்ருத்யு வன்னுதரிதெ' என்று விஜய தாசரைக் கொண்டாடுகிறார். 'ரதுன தொரகிதல்லா எனகொந்து ரதுன தொரகிதல்லா, என்ன ஜென்ம பவித்ரவாயிது'. குருவின் கருணையைப் பெற்று இவர் ஜகன்னாததாசர் ஆனதற்கு இந்த சம்பவமே காரணம். பண்டரிபுரத்தில் சந்திரபாகா நதியில் குளிக்குமாறு ஆணை வந்தது. அப்படி குளிக்கும்போது, வந்த ஒரு கட்டையில் தேவ நாகரி எழுத்தில் ஜகன்னாதவிட்டலா என்று எழுதியிருந்தது. அதையே தனது அங்கிதமாக ஏற்று உடனே 'விட்டலய்யா விட்டலய்யா தடிகோடி நிபகாய ஜகன்னாத விட்டலய்யா' என்றவாறு பாடி ஆடினார்.

சாட்சாத் ஜகன்னாதவிட்டலனிடமிருந்தே அங்கிதத்தைப் பெற்று, அந்த விட்டலனை நகத்திலிருந்து துவங்கி முழுவது மாக அற்புதமாக வர்ணித்து பாடல்களைப் பாடினார். 'அபரோக் ஷானுபூதி'யைக் (அவருள் நிலைத்திருக்கும் பிம்பரூபி பரமா த்மா) குறித்து பாடல்கள் பற்பல மழைபோல வரத்துவங்கின. பிறகு ஸ்ரீனிவாசாச்சார் 80 ஆண்டு கால முழு வாழ்க்கையை வாழ்ந்தார். 81 ஆண்டுகள் மற்றும் 10 நாட்கள் ஆயிற்று. பிறகு

இறைவனடி சேர்ந்தார். ஸ்ரீதவிட்டலரின் பாடலே இதற்கு சாட்சி.

‘சிரிபதிய ஸ்மரிஸி ஹரிபுரகெ ஹருஷதலி ஹரிஹர நவமி யந்து ஹரியெ பரனெந்தெனுதலி’ என்று வர்ணிக்கிறார். மூலா நட்சத்திரம், பாத்ரபத சுத்த நவமி, ஞாயிற்றுக் கிழமையன்று ஜகன்னாததாசர் இறைவனடி சேர்ந்தார் என்று அபினவ ஜனார்த்தன விட்டலர் சொல்கிறார். இன்றும் அவர் வீட்டில் இருக்கும் கம்பத்தில் (தூணில்) நிலைத்திருந்து, தன் பக்தர்கள் அனைவருக்கும் அருள் பாலிக்கிறார் என்பது அனைவரின் நம்பிக்கை.

தாசரின் வீடு இன்றும் கோயிலாக இருக்கிறது. அவரது வம்ச த்தினர் அங்கேயே இன்னும் இருக்கின்றனர். தாசர் பூஜித்து வந்த சாலிக்கிராமம், துளசி பிருந்தாவனம், அவர் பயன் படுத்திய பாதுகை ஆகியவை இன்றும் உள்ளன. வரதா நதி தீரத்தில் இருக்கும் ஹொஸரித்தியில் ஹரிகதாம்ருதசார த்தை எழுதி முடித்தார் என்று சொல்கின்றனர்.

ராணி லட்சுமம்மா இவரை கௌரவப்படுத்தி பல்லக்கு ஒன்றைக் கொடுத்தார். அது இன்றும் இருக்கிறது. ஷிவமொ க்கா கும்ஸி தாசர் கொடுத்த கோர்க்கல்லு (தாசரு கட்டே) இன்றும் பூஜிக்கப்பட்டு வருகிறது. அவர் அங்கு தங்கிய இடம் / வீடு இன்றும் இருக்கிறது. தொட்டபெல்லாபுரத்தில் அவ்வப் போது வந்து போய்க்கொண்டிருந்த கிருஷ்ணராயரின் வீட்டில், முத்துமோகனவிட்டலா என்ற பாண்டுரங்கனை நிறுவி யிருக்கிறார்கள். (தொடரும்)

**கன்னட மூலம்: ககவரத்வஜ விட்டலதாசர், பெங்களூரு**

**ஹரிதாச சாகித்யத்தைப் பற்றி ஏதேனும் கேள்விகள் / சந்தேகங்கள் இருந்தால் தெரியப்படுத்தவும். தகுந்த பதில்களைத் தர முயல்வோம்.**

ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்
## ஆஸ்விஜ & கார்த்திக மாதங்களில்

* ஆஸ்விஜ சுத்த சப்தமி - ஶ்ரீபிராணேஷ தாசர் - லிங்கசுகூர்
* ஆஸ்விஜ பகுள ப்ரதமை - ஶ்ரீகுருஜகன்னாத தாசர் - கௌதலம், ராய்ச்சூர்
* கார்த்திக சுத்த தசமி - ஶ்ரீவிஜயதாசர் - சிப்பகிரி / சிக்கலபரவி
* கார்த்திக பகுள சதுர்தசி - ஶ்ரீமுத்துமோகனதாசர் - தொட்டபல்லாபுர
* கார்த்திக அமாவாசை - ஶ்ரீமஹிபதி தாசர் - காகிண்டிகி

## ஹரிதாச விஜயம்
## சந்தா விவரம் (36 பக்கங்கள்)

1 ஆண்டுக்கு ரூ.200/- 3 ஆண்டுகளுக்கு ரூ.500/-
5 ஆண்டுகளுக்கு ரூ.900/- 10 ஆண்டுகளுக்கு ரூ.1700/-

வங்கியில் சந்தா செலுத்தினால், அதன் விவரத்துடன், உங்கள் முகவரியை, மின்னஞ்சல் செய்யவும்

## வங்கி விபரம்:

Sathya Narayanan

ICICI Bank - Savings account

A/c. No. 000101043177. IFSC: ICIC0000001

Cenotaph Road Branch, Chennai 18

ஹரிதாச விஜயம் சந்தா செலுத்துபவர்களுக்கு ஒரு புத்தகம் இலவசமாக அனுப்புகிறோம். இப்புத்தகம் கிடைக்காதவர்கள் எம்மைத் தொடர்பு கொள்ளவும்.

தொடர்

## மனப்பாடப் பகுதி

## பகவந்தனின் ரூபங்கள்

* இந்தப் பகுதியில் வரும் விஷயங்களை அனைத்து ஹரி பக்தர்களும் கண்டிப்பாக நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

* இதற்கான விளக்கங்கள் / ஆதாரங்கள் வேறு பகுதியில் வந்தாலும், இங்கு இவை சுருக்கமாக சொல்லப்பட்டுள்ளன.

* சாலிகிராம பூஜையின்போது /பிற சமயங்களிலும்கூட, இந்த பொருட்களில் இவ்வளவு ஸ்ரீஹரியின் ரூபங்கள் இருக்கின்றன என்று நினைத்து அவரை வணங்க வேண்டும்.

| | |
|---|---|
| சாலிகிராமம் | 5535 ரூபங்கள் |
| பிரதிமைகள் / கடவுளர் சிலைகள் | 513 |
| பூஜையில் பயன்படுத்தப்படும் உபகரணங்கள் (பாத்திரங்கள்) | 52114 |
| தண்ணீர் | 24 |
| ஒவ்வொரு துளசி இதழிலும் | 5317 |
| பூக்களில் | 161 |
| விளக்குகளில் | 13 |
| சந்தனம் | 403 |
| பால் | 354 |
| நெய் | 21 |
| வெல்லம் | 5101 |
| பழங்களில் | 2825 |

** ஆதாரம் : ஹரிகதாம்ருதசாரம்

இந்த இதழைப் பற்றிய தங்களது மேலான கருத்துகளை வாட்சப், SMS, மின்னஞ்சல் மூலமாகவோ அல்லது தொலைபேசியில் அழைத்தோ கட்டாயம் சொல்லுங்கள்.

தொடர்

## பகவத்கீதை

## கீதா சாரம் - ஸ்ரீவியாசராஜர்

ஆசார்யரின் பிரம்மசூத்ர பிரஸ்தானத்திற்கு வியாசராஜர் இயற்றிக் கொடுத்த பரிசு - தாத்பர்ய சந்திரிகா. அதேபோல, கீதா பிரஸ்தானத்திற்கு கீதாசாரம் - 18 நுடிகளைக் கொண்ட ஒரு சிறிய கிருதி. கிருஷ்ண கீதையின் 700 ஸ்லோகங்கள் இருந்தால், கீதா சாரத்தில் ஒன்பது ஸ்லோகம், ஒன்பது நுடி மற்றும் ஒரு பல்லவி அவ்வளவே. ஹரிதாச சாகித்யத்தில் ஒன்றான வ்ருத்த நாமாவில், கீதோபதேசத்தை கன்னடத்தில் மொழி பெயர்த்துக் கொடுத்திருக்கிறார் ஸ்ரீவியாசராஜர்.

**கேளய்யா என மாது பார்த்த2னே, கீததர்த்த2னே** (ப)
சொல்வதே கேட்பதற்காகத்தான் என்றால், ஒவ்வொரு நுடியிலும் சொல்லப்பட்டிருப்பதை கவனத்துடன் கேட்க வேண்டும் என்பது வியாசராஜரின் அபிப்பிராயம். பார்த்தனே என்றால் பொதுவாக அர்ஜுனன் எனலாம். ஆனால் இங்கு, ஸ்ரவண, மனன, நிதித்யாஸன என்று மூன்று வழிகளிலும் நல்லவற்றை அறிந்துகொள்பவர்கள் அனைவருமே பார்த்தன் எனப்படுகின்றனர். கீதார்த்தவ என்றால் பகவத்கீதை. மற்ற அனைத்து கீதைகளைவிட, பகவத்கீதை, முக்திக்கு வழிகாட்டியாக இருக்கிறது என்று பொருள்.

**ஸ்லோகம்:**
**கு1ருக்ஷேத்ரதி3 என்னவரு பாண்டவரு**
**பேளோ சஞ்சய ஏனு மாடுவரு கூ1டி3**
**கேளய்ய அரசனே நோடி3 பாண்டவர**
**சேனா மாதாடித நின்ன சுத த்3ரோணகி3ந்து1 ||1**

**பத:**
**கே1ளி தா1 பார்த்த2னு கு1ருத3ண்ட3 | ரணத3லி சந்த3 | கா3ண்டீ3வ கரத3ண்ட3 |**

**அச்யுத1 பிடி ரத2 நடெ3முந்தா3 | பஹூத்1வரதி3ந்த3 நோடு3வெ | நேத்ரதி3ந்த3 ||**
**கு3ருஹிரியர கூட3 யாகெந்தா3 | யுத்த4 ஸாகெந்த3 |**
**பிக்ஷெவெ சுக2வெந்தா3 |**
**குந்திஸுத1 ஈ மாது உசித1ல்ல | நினகிது3 ஸல்ல |**
**பிடி கா3ண்டீ3வ பி3ல்ல ||1**

வேதவியாஸர் மற்றும் ஸ்ரீகிருஷ்னனின் அருளால் திவ்ய த்ருஷ்டியைப் பெற்ற சஞ்சயன், மகாபாரத யுத்தத்தின் மொத்த விஷயங்களையும் திருதராஷ்டிரனுக்கு விளக்குகிறான். பகவத் கீதையின் முதல் ஸ்லோகத்தின் விளக்கத்தைப் போலவே இருக்கிறது, கீதா சாரத்தின் முதல் ஸ்லோகமும்.

அர்ஜூனன் கேட்டுக் கொண்டதால், ஸ்ரீகிருஷ்ணன் ரதத்தை இரு சேனைகளுக்கு நடுவே கொண்டு நிறுத்தினான். தன் உற வினர்களை எதிர்ப்படையில் கண்ட அர்ஜூனன் கவலை கொள் கிறான். 'போர் வேண்டாம். நான் சன்யாசம் பெற்று, பிட்சை பெற்று வாழ்ந்து விடுகிறேன்' என்றான். 'மகா பாரதப் போரில் இறந்து போகவேண்டியவர்களை, (பிறகு வேறொரு நாளில்) நான் எப்படியும் கொல்லப் போகிறேன். நீ ஒரு காரணம் மட்டுமே. ஆகையால், நீ இப்படி சொல்வது உன க்கு சரியல்ல. உன் காண்டீபத்தைப் பிடி. போர் செய்' - என்றார் ஸ்ரீகிருஷ்ணர்.

**ஸ்லோகம்:**
**பா3ல்ய யௌவன முப்பு1த1ன தே3ஹத3ல்லி |**
**இந்தா2 தே3ஹகெ1 மோஹ மத்யாகி1ல்லி ||**
**காய்து கொல்லுவ நானு இருதிரலு இல்லி |**
**பி3ல்லு பிடி3து3 கீர்த்தி ப1டெ3 லோகத3ல்லி ||2**

**பத:**
**ஷஸ்த்ரதிந்தஞ்ஜிகெயில்ல ஜீவக்கெ | ஈ தே3ஹக்கெ | பாவக1ன தா3ஹக்கெ |**

**உத$^{3}$கக$^{3}$ளிந்த வேதனெயாகெ | ஈ ஜீவக்கெ | மாருதன ஷோஷக்கெ |**
**நித்ய அபே$^{4}$த்$^{4}$ய தா ஜீவன | ஸனாதன | வஸ்த்ரத்ஹாங்கெ$^{3}$ ஈ த$^{1}$னுவு |**
**ஆதா$^{3}$வு போதா$^{3}$வு நினக$^{3}$ய்யா | நனகி$^{3}$ல்லய்யா | அத நா பல்லெனய்யா ||2**

பால்யம், யௌவனம், மூப்பு ஆகியவற்றை அனுபவிப்பது ஜீவன் மட்டுமே. ஜடமான இந்த தேகமல்ல. அதற்கே ‘தேஹக்கெ’ என்று சொல்லாமல் ‘தேஹதல்லி’ என்று சொல்லியிருக்கிறார். தற்காலிகமான இந்த தேகத்தின் மேல் மோகம் / ஆசை வைக்கக்கூடாது. சர்வதந்த்ர ஸ்வதந்த்ரனான ஸ்ரீஹரியே அனைவரையும் கொல்பவன் ஆகையால், அர்ஜு னன் ஒரு காரணம் மட்டுமே. அவரின் சொல்படி, காண்டீபத்தைப் பிடித்து போர் புரிந்து உலகத்தில் புகழைப் பெற்றான். முக்கிய கதாபாத்திரமான பகவந்தனே அனைத்தையும் நடத்துபவன், அனைத்திற்கும் காரணமானவன் என்று இந்த ஸ்லோகம் உணர்த்துகிறது.

அனைத்து வேதனைகளும் பஞ்சபூதங்களால் ஆன இந்த சரீரத்திற்கு மட்டுமே. ஜீவனின் ஸ்வரூபத்திற்கு அழித்தல், உடைத்தல், எரித்தல் என்று எதுவும் பொருந்துவதில்லை. ஜீவனின் ஸ்வரூபம் நித்யமானது. அதற்கு மரணத்தால் எதுவும் ஆவதில்லை. ஆகையால், இந்த தேகமானது பழைய ஆடையை துறந்து புதிய ஆடையை அணிவதுபோல, வரும், போகும். இந்த நிலை ஜீவராசிகளுக்கு மட்டுமே தவிர, பகவந்தனுக்கு இல்லை. ’அத நா பல்லேனய்யா’ என்று சொல்வது, ஜீவ-ஈச பேதத்தை வெளிப்படுத்துகிறது. 84 லட்ச ஜீவராசிகளைத் தாண்டி வந்த இந்த தேகத்தைப் பற்றி பகவந்தன் முழுவதுமாக அறிந்திருக்கிறான். ஆனால், ஜீவனுக்கு அதைப் பற்றிய அறிவு இருப்பதில்லை. (தொடரும்)

**ப்ராணேஷ கேசவ தாசர், பெங்களூரு

போட்டி

## மாதாந்திர பேச்சுப்போட்டி

## ஸ்ரீபுரந்தரதாசர்

**இந்த மாத பேச்சுப் போட்டிக்கான தலைப்பு**

ஸ்ரீபுரந்தரதாசரின் வாழ்க்கை, மகிமைகள் மற்றும் கிருதிகள்.

* 8 முதல் 10 நிமிடங்கள் வரை, எந்தக் குறிப்பையும் பார்க்காமல் பேசவேண்டும். தமிழ், ஆங்கிலம், மராத்தி, கன்னடம் - இதில் ஏதாவது ஒரு மொழியில் பேசலாம்.
* நீங்கள் பேசுவதை வீடியோ எடுத்து:
 - வாட்சப்பில் நேரடியாக எங்களுக்கு அனுப்பலாம், அல்லது
 - யூட்யூப் அல்லது ஃபேஸ்புக்கில் ஏற்றி, அதற்கான இணைப்பை எங்களுக்கு அனுப்பலாம், அல்லது
 - வாட்சப் வீடியோ கால் செய்து நேரடியாக பேசலாம்.
* இந்த வீடியோ எங்களால் வேறு யாருக்கும் / வேறு எங்கும் பகிரப்படாது.
* பேசுபவர் பெயர், இதழ் உறுப்பினர் எண் ஆகிய தகவல்களுடன், நவம்பர்1ம் தேதிக்குள் அனுப்பவேண்டும்.
* தேர்ந்தெடுக்கப்படும் இருவருக்கு புத்தகப் பரிசு வழங்கப்படும்.

ஹரிதாச விஜயத்திற்கு அதிக உறுப்பினர்களை சேர்க்கும் எண்ணத்தில், இந்தப் பத்திரிக்கையின் முதல் இதழை மட்டும் இலவச PDF வடிவில் கொடுக்கத் திட்டமிட்டுள்ளோம். வாட்சப் / ஃபேஸ்புக்கில் கிடைக்கப் பெறாதவர்கள் தொடர்பு கொள்ளவும். அந்த PDFஐ உங்கள் நண்பர்கள் / ஹரிபக்தர்களுக்கு அனுப்பி, அவர்களையும் தமிழில் நடக்கும் இந்த தத்வ பிரசாரத்தில் பங்கேற்கச் சொல்லுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

'Jagannatha Kesava' Youtube Channelக்கு Subscribe செய்து, ஹரிதாச விஜயம் குறித்த மேலும் பல தகவல்களைப் பெறவும்.

**ஆசிரியர் 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணனின் குரு பரம்பரை**

- ஸ்ரீமன் மத்வாசார்யர்
- ஸ்ரீவியாசராயர்
- ஸ்ரீபுரந்தரதாசர்
- ஸ்ரீவிஜயதாசர்
- ஸ்ரீவேணுகோபாலவிட்டலதாசர் (பங்கநாமத திம்மண்ண தாசர்)
- ஸ்ரீவியாசவிட்டலர் (கல்லூர் சுப்பண்ணாச்சார்)
- ஸ்ரீரகுபதிவிட்டலதாசர் (வைராக்யசாலி திம்மண்ணதாசர்)
- ஸ்ரீபூவராகரகுபதிவிட்டலதாசர் (கெம்பாலி தாசாசார்யர்)
- ஸ்ரீஸ்ரீபதிவிட்டலதாசர் (கத்வலி ஸ்ரீபதிதாசர்)
- ஸ்ரீதந்தெஸ்ரீபதிவிட்டலதாசர் (ஹரபனஹல்லி வெங்கட்தாசர்)
- ஸ்ரீநிதிவிட்டலதாசர் (தீபத அண்ணய்யாச்சார்)
- ஸ்ரீவரவிட்டலதாசர் (சௌதி ராமசந்திரப்பா)
- ஸ்ரீமுத்துமோகனவிட்டலதாசர் (தொட்டபெல்லாபுர ராகவேந்திர தாசர்)
- ஸ்ரீதந்தெமுத்துமோகனவிட்டலதாசர் (பரமப்ரிய சுப்பராய தாசர், தேவராயனதுர்கா, தும்கூர்)
- ஸ்ரீகுருகோவிந்தவிட்டலதாசர் (திரு M.R.கோவிந்த ராவ், மைசூரு)
- ஸ்ரீஜாம்பவதிப்ரியவிட்டலதாசர் (திரு.ஹரதி பிரகலாதாச்சார், பெங்களூரு)
- ஜகன்னாதகேசவ (சத்ய நாராயணன்)

** ஸ்ரீவிஜயதாசரின் காலத்திலிருந்து தடையின்றி தொடர்ந்து வரும் ஹரிதாச பரம்பரை இது.



ஸ்ரீ புரந்தரதாசர்

| | |
|---|---|
| **If Undelivered, please return to:**<br>**Sathya Narayanan,**<br>**380, 2A Main,16th Cross**<br>**JP Nagar 4th Phase**<br>**Bengaluru 560078** | To: |

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்

Haridasa Vijayam - Monthly

மலர் 1 ** நவம்பர் 2019 ** இதழ் 2



ஸ்ரீகனகதாசர்

# ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ், பெங்களூரு

## இதுவரை வெளியாகியுள்ள புத்தகங்கள்

1. ஸ்ரீஹரியின் 40 அவதாரங்கள். 352 பக்கங்கள். ரூ.200
2. பஞ்ச பரிசுத்த தேவதைகள்(பரசுக்ல த்ரயர்கள்) 290 பக். ரூ150
3. தந்தெமுத்து மோகனதாசர் (பரமப்ரிய சுப்பராய தாசர்). 270 பக்கங்கள். ரூ.150
4. ஸ்ரீசத்யவீர தீர்த்தர். 64 பக்கங்கள். ரூ.40
5. ஸ்ரீசத்யபோத தீர்த்தர். 164 பக்கங்கள். ரூ.70
6. ஸ்ரீசத்யத்யான தீர்த்தர். 216 பக்கங்கள். ரூ.110
7. மத்வகதாம்ருதம். 200 பக்கங்கள். ரூ.100
8. இந்தா குருகள காணேனோ. 48 பக்கங்கள். ரூ.30

## e-books (மின் புத்தகங்கள்)

இன்னும் அச்சிற்கு வராத நமது 24 தமிழ்ப் புத்தகங்கள், மின் புத்தகங்களாக அமேசான் தளத்தில் கிடைக்கின்றன. Amazon Kindle கருவியிலோ, Kindle செயலியிலோ இவற்றை தரவிறக்கி படிக்கலாம்.

## எமது Android app - வேதநிதி - VEDHANIDHI

* மத்வ சித்தாந்தத்தைப் பற்றி அறிய உதவும் செயலி
* 35 தலைப்புகளில் 5,000 Objective type கேள்வி பதில்கள்.
* தமிழ், ஆங்கிலம் மற்றும் கன்னடத்தில் கேள்வி பதில்கள்
* Google Play Store சென்று VEDHANIDHI என்று தேடவும்.
* செயலி தரவிறக்கக் கட்டணம் ரூ.150.
* தரவிறக்கினால் உடனடி புத்தகப் பரிசு உண்டு.
* செயலியில் சரியான விடைகளைக் கொடுத்தாலும் பரிசு.
* இன்றே VEDHANIDHIஐ தரவிறக்கி, பயன்பெறவும்.

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா



நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# **“ஹரிதாச விஜயம்”**

சிரி நிலயன குணகள ‘**திளிது**’ பஜிசுவுதே

மலர் : 1 இதழ் : 2


**<u>நிர்வாக ஆசிரியர்</u>**

‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்

ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,

380, 2A Main, 16th Cross,

JP Nagar 4th Phase, பெங்களூரு 560078

Ph.: 89044-58276. haridasa.vijayam@gmail.com

jagannathakesava.blogspot.com

**<u>துணை ஆசிரியர்</u>**

’தாச சாகித்ய சேவா ரத்ன’

திரு. குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்

**<u>ஆசிரியர் குழு உறுப்பினர்கள்</u>**

திரு. முரளிதர தாசரு, திருமதி. நிர்மலா நரசிம்மன்,

திரு. லட்சுமிபதிராஜா, திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

## ஆசிரியர் பக்கம்

ஸ்ரீஹரியின் கருணையால், குருகளின் அருளால் வெளிவந்த 'ஹரிதாச விஜயம்' முதல் இதழை அனைவரும் பார்த்திருப்பீர் கள். பலர் தொடர்பு கொண்டு, இதழின் உள்ளடக்கம், நோக்கம், வரவேண்டிய விஷயங்கள் என பலதைப் பற்றியும் கருத்து தெரிவித்துள்ளனர். ஸ்ரீஹரியின் சேவையில் தங்களையும் சேர் த்துக்கொள்ளுமாறு சிலர் இங்கு வெளியிடுவதற்கு விஷயங் க ளை அனுப்புகிறோம் என்றும் சொல்லியிருக்கின்றனர். அனை வருக்கும் நன்றி.

மத்வ சித்தாந்தத்தை, அதன் தத்வங்களை மக்களிடையே கொண்டு சேர்ந்ததில் ஹரிதாசர்களின் பங்கு அளப்பரியது. ஸ்ரீ வியாசராயர் காலத்திலிருந்து இன்றுவரை, நூற்றுக்கணக்கான ஹரிதாசர்கள் நம்மிடையே தோன்றி, பல அரிய, புரிந்து கொள் வதற்கு கஷ்டமான சித்தாந்த விஷயங்களை, மிகவும் எளிமை யாக, அனைவரும் புரிந்து ஏற்றுக்கொள்ளத்தக்க கன்னட மொழியில் நமக்குக் கொடுத்துச் சென்றுள்ளனர். அதையே நாம் நம் தமிழ் பேசும் மாத்வர்களுக்காக, இந்தப் பத்திரிக்கை யில் கொடுக்க முயல்கிறோம்.

’கலியுகதொளு ஹரி நாமவ நெனெதரெ, குலகோடிகளு உத்தரி ஸுவுவு ரங்கா’ - கலியுகத்தில் பகவத் நாமஸ்மரணைக்கு அதிக சிறப்பு. அனைத்திற்கும் ஊக்கமாக, அனைவருக்குள்ளும் நின்று, அனைத்தையும் செய்து, அதன் பலன்களைப் பெற் றுத் தருபவராக, ஸ்ரீஹரி எங்கும் நீக்கமற நிறைந்திரு க்கிறார். அவர் நம் இதயத்திலும் நின்று நம்மை நல்வழியில் நடத்திச் செல் லுமாறு பிரார்த்திப்போம். ஹரிதாசர்கள் கடை பிடித்த பாதை யில் நாமும் சென்று, புண்ணியம் பெறுவோம். ஹரிதாச சாகித் யத்தில் உள்ள அமுதத்தை அனைவரும் ருசித்து ஆனந்தம் பெறுவோம். ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்**

தொடர்

# ஹரிதாச சாகித்யம்

## ஹரிதாச சாகித்யத்தின் நோக்கம்

சாதாரணமான பாமர மக்களுக்கு வேதம், சாஸ்திரம், புராணங் களில் அடங்கியிருக்கும் நீதி, தத்வங்களை எளிமையாக புரிய வைப்பது மட்டுமல்லாமல், மனித ஜீவர்களை தெய்வ தத்வங் களுக்கு ஏற்றுவதே ஹரிதாச கீர்த்தனைகளின் நோக்கம் .

செவிவழியாகவே ஒருவரிடமிருந்து ஒருவருக்கு பரவி, அனை வரின் வதனங்களிலும் நிலைத்திருக்கும் சாகித்யம் இது. ஆண் கள், பெண்கள் என அனைவரும் வாய் விட்டுப் பாட, அவர்க ளுக்கு குரல் கொடுத்த சாகித்யம் இது. தினந்தோறும் புதுப்புது மொழி, நுடி ஆகியவற்றில் மக்களுக்கு நிரந்தரமாக ஞான த்தை வழங்கி வருவதே ஹரிதாச சாகித்யம் .

ஆத்யாத்ம அனுபவத்தை, அதனால் ஏற்பட்ட பலன்களை, மக்களின் முன் வைத்து, அவர்களுக்கு நன்கு புரியுமாறு சொல் வதே ஹரிதாச சாகித்யம். வைஷ்ணவ சித்தாந்தத்திற்கு, வைதிக மதத்திற்கு, கன்னட சாகித்யத்திற்கு, மக்களின் நிகழ் கால பிரச்னைகளுக்கான தீர்வுகளுக்கு, சங்கீதத்தின் ராக, தாள, லயங்களுடன் ஒரு வடிவம் கொடுத்ததே ஹரிதாச சாகித் யம். வாழ்வின் அனைத்து நீதி, வழிமுறைகளையும் விளக்கும் சாகித்யம்.

சாகித்யம், சங்கீதம், தாளம், லயம் ஆகியவற்றினால் ஆன ஹரி தாச சாகித்யம், பக்தியின் வளர்ச்சிக்கு உருவான கன்னட த்தின் சாமகானம் எனப்படுகிறது. பற்பல ஆண்டுகளின் அனுபவம், வாழ்க்கை வாழ்வதற்கான நீதிநெறிகள் ஆகியவற்றை மக்களி டம் கொண்டு சேர்ப்பதற்கு, சம்ஸ்கிருத மற்றும் பண்பாட்டின் ரகசியங்கள் மக்களுக்குப் போய் சேரவேண்டும் என்பதே ஹரி தாச சாகித்யத்தின் நோக்கமாக இருந்திருக்கிறது.

தத்வஞானமானது சம்ஸ்கிருதம் அறிந்த பண்டிதர்களுக்கு மட் டுமே ஆனதல்ல - அனைவருக்கும் போய் சேரவேண்டும்

என்ற நோக்கத்தில், ஞான பக்தி யோகங்களை அனைவருக்கும் புரியுமாறு செய்து, ஜீவர்களுக்கு அவரவர்களின் தகுதிக்கேற்ப ஆத்யாத்ம அர்த்தங்களை புரிய வைத்து, வழிவழியாக மக்களி டையே பரவி வந்திருப்பதே ஹரிதாச சாகித்யம்.

அனுசந்தானம் மற்றும் உபாசனா வழிமுறைகளை எப்படி செய்வது என்று ஹரிதாசர்கள் மக்களுக்கு புரியவைத்தனர். தெரிந்த விஷயங்களை, கேட்ட தத்வங்களை, அறிந்த ஆதார ங்களை, வாழ்க்கையில் எப்படி பயன்படுத்திக் கொள்வது என்னும் ரகசியங்களை ஹரிதாச சாகித்யம் தெரிவிக்கிறது. சாஸ்திரங்களில் நிரூபிக்கப்பட்ட, விவரிக்கப்பட்ட தத்வங்களை நன்றாக புரியுமாறு, மனதிற்கு பக்கத்தில் இருக்குமாறு செய்து, சம்ஸ்கிருதத்திலிருந்து தூர விலகியிருந்தாலும், யாரும் தத்வ ஞானத்திலிருந்து தூர விலகாதவாறு பார்த்துக் கொண்டதே ஹரிதாச சாகித்யம்.

இந்த சாகித்யத்தை வெறும் ஆத்யாத்மிக பார்வையிருந்து பார்த்தால் போதாது. சாகித்ய, சமூக, பக்தி ஆகிய கோணங்களி லிருந்து பார்த்தால் போதாது, வாழ்க்கையின் / சமூகத்தின் மேம்பாட்டிற்கு இந்த சாகித்யம் எப்படி பயன்படுகிறது என் பதை பார்க்கவேண்டும்.

வேத, உபநிஷத், கீதை, சூத்திரம், ராமாயண, பாரதம், பாகவதம் ஆகியவற்றின் சிறப்பான கருத்துக்களை ஹரிதாசர்கள் தங்களின் கிருதிகளில் நிரூபித்திருக்கின்றனர்.

'சம்சாரதல்லித்து[3] க[3]ம்சாரியன்னு நெனெ' சம்சாரத்தில் (குடும்ப த்தில்) இருந்து கொண்டே கம்சனைக் கொன்றவனை நினை - என்னும் பழமொழியை நிரூபிக்கின்றனர் ஹரிதாசர்கள். 'மானவ ஜென்ம தொ[3]ட்டது, ஹானி மாடலு பே[3]டி' என்று எச்ச ரிக்கின்றனர். 'ஈசபேகு[1] இத்து[3] ஜெயிஸ பேகு[1]' என்று தைரியம் கொடுக்கின்றனர். 'ஸ்னானவ மாடிரோ ஞான தீர்த்ததலி' என்று

போதிக்கின்றனர். ‘பக்தி பேகு[1], விரக்தி பேகு[1], சர்வ சக்தி பேகு[1], முந்தே முக்திய ப[3]யசுவவரிகெ’ என்று முக்திக்கு உண்டான வழியைக் காட்டுகின்றனர் ஹரிதாசர்கள். அப்படியெனில், ஹரி தாசர்கள் யார்? அவர்கள் எப்படி இருக்கவேண்டும்? அவர்களின் நடை உடை ஆடைகள் எப்படி இருக்கவேண்டும்? ஹரிதாசர் களின் லட்சணம் என்ன? இவற்றை ஹரிதாச சாகித்யத்தைப் படித்தே தெரிந்து கொள்ளவேண்டும்.

’தாச’ - என்றால் சேவகன். ’தாஸ்ய’ - என்றால் சேவகம். தத்வ ஞான சம்பிரதாயத்தில் ’தாச’ என்றால் யார் தன்னை முழு வதுமாக பகவந்தனிடம் அர்ப்பித்துக் கொண்டிருக்கிறாரோ, அவரே ’தாச’. பகவந்தனின் சேவைக்காகவே தன் வாழ்க்கை யை ஒப்படைத்தவர்களே ’தாச’ என்று அழைக்கப்படுகின்றனர். பூஜை நேரத்தில், விதிப்படி செய்யவேண்டிய பூஜையை செய்து முடித்தபிறகு, பகவந்தனிடம் தமது பக்தியை சமர்ப்பித்துக் கொள்ளும் வழியாக கீர்த்தனைகளை இயற்றி அல்லது பாடி, அவற்றை ஸ்ரீஹரிக்கு சமர்ப்பிப்பவரே ’தாச’ எனப்படுகிறார்.

‘ஹரிதாசர்’ என்றால் யார் என்னும் கேள்விக்கு பொதுவான பதில் ‘ஸ்ரீஹரி பக்தர்கள்’. இந்த அர்த்தத்தில் ஹரியின் பக்தர் கள் அனைவருமே ‘ஹரிதாசர்’ என்று சொல்ல முயன்றாலும், இந்த சொல்லிற்கு விசேஷ அர்த்தம் ஒன்று இருக்கிறது. ஸ்ரீநரஹரிதீர்த்தர், ஸ்ரீபாதராஜரில் துவங்கி, ஹரிதாச பரம்பரை யில் சேர்ந்து, குருகளிடமிருந்து தாச தீக்ஷையைப் பெற்று, அங்கித உபதேசத்தைப் பெற்று, தகுதிக்கேற்ப அதன் நியம ங்களை பக்தியுடன் பின்பற்றி, அதை தன் வாழ்க்கையின் நடைமுறையாக வைத்துக் கொண்டிருப்பவரே ‘ஹரிதாசர்’ எனப்படுகிறார்.

பிரம்மசாரி முதலான ஆசிரமங்களுக்கு (நிலைகளுக்கு) தக்க கடமைகள் இருப்பதைப் போன்று, ஹரிதாசத்வத்திலும் தர்ம தீக்ஷைகள் உள்ளன. விஜயதாசர் தமது ‘ஹரிதாச லட்சண சுளாதி’யில் தெரிவித்திருப்பதைப் போல வாழ்ந்தால் அதுவே தீக்ஷை எனப்படுகிறது. இந்த தீக்ஷையைவிட இதற்கு அரு

கதை/தகுதி என்னவென்று பார்த்தால், தாசன் ஆகுபவருக்கு குறைந்த பட்சம் 'ப்ரஸ்தான த்ரய' எனப்படும் கீதை, உபநிஷத், மற்றும் பிரம்மசூத்திரங்களின் பாடமாவது ஆகியிருக்கவேண் டும். பிரஸ்தான-த்ரய மற்றும் சம்ஸ்கிருத பாண்டித்யமும் இருக்கவேண்டும் என்பது ஸ்ரீவிஜயதாசரின் அபிப்பி ராயம்.

ஹரிதாசர் ஆகவேண்டும் என்று விருப்பம் கொண்டவர்கள், 'தீக்ஷை'யை பெறவேண்டும். பெரும்பாலான தாசர்கள், தமக்கு தீக்ஷையைக் கொடுத்த குருவிடமிருந்தே அங்கிதத்தையும் பெறுவது வழக்கம். ஹரிதாச பரம்பரையில் தீக்ஷையைப் பெற்றவர்களுக்கு பின்பற்றவேண்டிய சில விதிகள் / கடமை கள் உண்டு. சாதாரணமான உணவு, வர்ணாசிரம தர்மம், நித்ய நைமித்திக காரியங்களை செய்வது, வைதிக ஸ்வதர்மத்துடன் சில கட்டுப்பாடுகளையும் மதித்து பின்பற்ற வேண்டும்.

**ஹரிதாசரின் பொதுவான கடமைகள் / விதிகள்:**

1. ஸ்ருதி, ஸ்ம்ருதி, புராண, இதிகாசங்களில் முழுமையான நம்பிக்கை வைப்பேன் என்று சத்தியம் செய்யவேண்டும்.
2. கடன் வாங்குவதில்லை, போதாது என்று சொல்வதில்லை, நாளைக்கு என்று எதுவும் வைப்பதில்லை என்ற மூன்று வாக்குளை கொடுக்கவேண்டும்.
3. தவிர்க்கவே முடியாத காரணங்கள் இல்லாதவரை, தர்ம ஆசரணகளை பின்பற்றுவேன் என்று சூளுரைக்க வேண்டும்.
4. ஹரியை திட்டுவது, ஹரிபக்தர்களை திட்டுவது, குருவை திட்டுவது ஆகியவற்றை யார் மூலமாகவாவது கேட்டால், அதற்கு வருந்தி, ஆத்ம சுத்திக்காக உபவாசம் செய்யவேண்டும்.
5. ஹரி நாமஸ்மரணையுடன், கிடைத்த தூய்மையான உணவையே (நைவேத்தியம்) உட்கொள்ள வேண்டும்.
6. ஹரிசேவைக்காகவே தம் வாழ்க்கையை செலவழிக்க வேண்டும். (தொடரும்).

** **கன்னட மூலம் : திருமதி. ஜெயம்மா, பெங்களூரு**

தொடர்

## ஹரிதாசர்களின் வாழ்க்கை வரலாறு

## ஸ்ரீகுருகோவிந்தவிட்டல தாசர்

அந்தக் காலத்தில் பள்ளிக்கூடங்களில் படிக்கும் மாணாக்கர்கள் தலையில் தொப்பி அணிந்து செல்வது வழக்கம். கோவிந்தன், அவன் பெரியப்பா வீட்டில் தங்கி, பள்ளிக்கூடத்தில் படிக்கும் போது அவனை பள்ளி நிர்வாகிகள் 'தலையில் தொப்பி இல் லாமல் நீ பள்ளிக்கு வரக்கூடாது' என்று ஆணையிட்டனர். கோவிந்தன் வீடு திரும்பி, தன் தாயிடம் தொப்பி வாங்கித் தரும்படி கேட்டான்.

தாயானவள் 'நீ உன் பெரியப்பாவிடம் தொப்பியை கேள்' என்றாள். உடனே கோவிந்தனும் பெரியப்பாவிடம் சென்று 'பெரியப்பா அவர்களே. எனக்கு தொப்பி வாங்கிக் கொடுங்கள். தொப்பி இல்லாமல் நாளையிலிருந்து பள்ளிக்கு வரக்கூடாது என்று சொல்லிவிட்டார்கள்' என்றான். பெரியப்பா உடனே கோபம் அடைந்து, முகத்தை சிணுங்கிக் கொண்டு 'உன் முகர க்கட்டைக்கு தொப்பி ஒரு கேடா?' என்று கர்ஜித்தார். தொப்பி வாங்கித்தர முடியாது என்றார் மற்றும் அவனை பலவாறாக திட்டினார்.

ஆசை வெட்கமறியாது அல்லவா? மறுபடியும் கோவிந்தனின் அம்மா, கொழுந்தனிடம் சென்று தொப்பி விவகாரத்தை ஆரம் பித்தாள். உடனே கோவிந்தனின் பெரியப்பாவிற்கு பயங்கரக் கோபம் வந்துவிட்டது. 'முன்னாலேயே சொன்னேனே! மறுபடி தொப்பி கிப்பி எதுவும் கிடையாது என்று. மறுபடி மறுபடி ஏன் கேட்கிறாய்? யார் தொப்பி வாங்கித் தருகிறார்களோ, அவர்கள் வீட்டுக்கு நீங்கள் போகலாம். இனி இங்கு இருக்கவேண்டிய அவசியம் இல்லை' என்று கடுமொழி மழை பொழிந்தார்.

கோவிந்தனுக்கும் அவன் தாயாருக்கும் மிகவும் வேதனை யாயிற்று. 'கதி இல்லாமல் இன்னொருவரிடம் இருக்கக்

கூடாது. என்ன செய்வது?’ என்று கூறிக்கொண்டு அவர்கள் அந்த வீட்டை விட்டுக் கிளம்பினர்கள்.

திக்கற்றவர்களுக்கு தெய்வமே துணை என்கிறபடி நாதியற்ற இவர்களுக்கு தெய்வ சங்கல்பத்தினால் ஸ்ரீநவரத்ன ராமராயர் என்பவரின் துணை கிடைத்தது. பொறியாளரான ஸ்ரீநவரத்ன ராமராயரும் அவர் மனைவி கங்காபாய் அவர்களும், கோவிந்தனையும் அவன் தாயாரையும் தங்களுடனேயே இருக்கும்படி கேட்டுக் கொண்டார்கள். அவர் வீட்டிலேயே தங்கி கோவிந்தன் படிக்க ஆரம்பித்தான்.

நவரத்ன ராமராயர் ஆசார சீலர். சம்பிரதாய அனுசாரி. அவர் வீட்டில் எப்போதும் பஜனை, பிரவசனம் போன்ற சத்காரியங்கள் நடந்துகொண்டே இருக்கும். கோவிந்தனுக்கும் அவற்றில் கலந்துகொள்ளும் வாய்ப்பு கிடைத்தது. விளையும் பயிர் முளையிலே என்கிற ரீதியில் கோவிந்தனுக்கு பஜனையில் ஈடுபாடு உண்டாயிற்று. பள்ளிக்கூடத்தில் கோவிந்தன் நன்றாகப் படித்தான். அது மட்டுமன்றி, பள்ளிக்கூட விளையாட்டுகளில் கோவிந்தன் பங்கு கொண்டு வெற்றியடைந்தான். கால்பந்து, ஓட்டப்பந்தயம், உயரம் தாண்டுதல் போன்ற போட்டிகளில் பரிசுகள் பல பெற்றான். மற்றும் பள்ளிக்கூட நாடகங்களில் பாத்திரம் வகித்து, நன்றாக நடிக்கவும் செய்தான். படிப்பிலும் முதல் மதிப்பெண் வாங்கினான். ஆகையால் கோவிந்தன் SSLC யில் நிறைய மதிப்பெண் பெற்று தேர்வடைந்தான்.

அடுத்து கோவிந்தனுக்கு இன்ஜினியரிங் படிக்கவேண்டும் என்ற ஆவல் ஏற்பட்டது. ஆகையால், கோவிந்தன், மதராஸ் இன்ஜினியரிங் கல்லூரிக்கு விண்ணப்பிக்க, உடனே வந்து சேரும்படி அங்கிருந்து தகவல் வந்தது. ஆனால், மகனை அந்த நாள் வரையில் காத்துவந்த தாய்க்கு, அவனை விட்டு பிரிய மனமே இல்லை. ஆகையால் ’மிகவும் தூரமான சென்னைக்கு நீ போகக்கூடாது’ என்று மகனுக்கு தாய் கட்டளையிட்டாள்.

தாய் சொல்லை தட்டாத கோவிந்தனும் சரியென்று கூறி, தான் இருந்த ஊரிலேயே இன்ஜினியரிங் டிப்ளமா வகுப்பில் சேர்ந் தான். அதில் நன்றாகப் படித்து, பட்டமும் பெற்றான்.

பிறகு அவனுக்கு அரசில் PWDல் சப்-ஓவர்சியர் என்ற பதவி கிடைத்தது. அந்த வேலையில் சேர்ந்து, பணம் சம்பாதித்து, தன் னை காப்பாற்றிய தாயை மகிழ்ச்சியில் ஆழ்த்தினான் கோவிந்தன்.

## கோவிந்தனின் திருமணமும் இல்லற வாழ்வும்

கோவிந்தன் சப்-ஓவர்சியராக வேலைக்கு சேர்ந்தபின், ஒரே ஊரில் இருக்கவில்லை. அவ்வப்போது மாற்றலாகிக் கொண் டே இருந்தார். பல ஊர்களில் வேலை செய்தார். தாயும் அவரு டன் எல்லா ஊர்களுக்கும் சென்றார். இப்பொழுது, தாய் தன் மகனுக்கு திருமணம் செய்ய வேண்டும் என்று ஆசைப்பட் டார். மகனும் திருமணம் செய்து கொள்ள ஒத்துக் கொண்டார். பின்பு, கோவிந்தராயர், ஸ்ரீ சி.என். யாதவமூர்த்தி என்பவரின் மகளான துளசம்ம என்கிற கிருஷ்ணவேணி என்கிற கன்யா மணியை திருமணம் செய்துகொண்டார். நன்றாக இல்லறம் நடத்தினார். தம்பதிகள் மிகவும் அனுகூலமாக வாழ்க்கை நடத்தினார்கள். துளசம்மாவும் மிகவும் ஆசாரத்துடன் வாழ்வை நடத்தினாள். இருவரும் சேர்ந்து பாலும் தேனும் கலந்தாற்போன்ற வாழ்வை நடத்தினார்கள்.

கோவிந்தராயர் நாகமங்கலம் என்கிற ஊரில் வாசம் செய்த போது, அங்கிருந்த ராமண்ணன் என்பவர் இவரின் தெய்வ பக்தி யைக் கண்டு மெச்சி, தம் வீட்டில் உபயோகப்படுத்தாமல் வைத்திருந்த சத்சாஸ்திர புத்தகங்களின் கட்டை, தட்சிணை யுடன் தானமாகக் கொடுத்தார். அந்தக் கட்டில் ஸ்ரீமத்வராய ரின் சர்வமூலகிரந்தங்கள் இருந்தன. இதைக் கண்டு கோவிந்த ராயர் ஆச்சரியம் அடைந்தார். அவர் இதுகாறும் சாஸ்திர அப்பியாசம் பண்ணியதே இல்லை. சம்ஸ்கிருதத்தில் பரிச்சய மும் இதுவரை அவரிடம் இல்லை. ராயர், 'ஹே ராமண்ண!

இந்தப் புத்தகங்களை தானம் வாங்க எனக்கு யோக்யதை இல்லை. நான் படித்தவன் அல்லன். ஆகையால் இந்த சர்வ மூலகிரந்தங்களை வேறு யாருக்கேனும் கொடுங்கள்' என்றார். அதற்கு ராமண்ணன், 'ராயரே, இவற்றை தங்களுக்கு தரச் சொல்லி எனக்கு பிரேரணை ஆகியுள்ளது. இப்போது படிக்கா விட்டாலும் எப்போதாவது நீங்கள் கட்டயம் இவற்றை படிப்பீர் கள்' நீங்கள் இவற்றை தானமாக ஏற்றுக் கொள்ளுங்கள்' என்று கூறி கெஞ்சினார். ராயரும் அப்புத்தகங்களை ஸ்வீகரித்தார்.

ராமண்ணனின் வார்த்தைகள் நிஜமாயின. பின்னால், ராயர் எல்லா சர்வமூல கிரந்தங்களையும் படித்ததுடன் அல்லாமல், பத்து உபநிடதங்களை, ஆசார்ய மத்வரின் பாஷ்யத்துடன் கன்னடத்தில் மொழிபெயர்த்தார். 'கவன' ரூபத்தில் பாடல்களை இயற்றினார். மற்றும் சம்ஸ்கிருத மொழியில் ஒரு பெரிய பண்டிதராகவும் ஆனார். மத்வரின் அத்யந்த தாசர் ஆனார்.

ராமண்ணாவிடம் புத்தகங்களைப் பெற்றபிறகு கோவிந்த ராயரு க்கு சர்வமூல கிரந்தங்களை சம்பூர்ணமாக படிக்க வேண்டு மென்று ஆர்வம் ஏற்பட்டது. 1938ல் மொளகால்மூரு சிக்கேர ஹள்ளி ஸ்ரீமத்வேச தாசர் என்பவரிடம் சாந்தி பாடம் பெற்று, அவரிடம் சிரத்தையுடன் சர்வமூல கிரந்தங்களை கற்க ஆரம் பித்தார். பின்பு, மைசூரில் வாழ்ந்த நந்தகுடி நரசிம்ம மூர்த்தி ராயரின் சூத்ரபாஷ்யத்தை அப்பியாசம் செய்தார். கோவிந்த ராயருக்கு நல்ல மனோபலம் இருந்தது. நினைத்ததை முடிக்கவல்ல திறமை இருந்தது. அவா இருந்தது.

(தொடரும்). ** **திரு. கிரோம்பேட்டை R. ஸ்ரீதரன்**

வங்கிக் கணக்கில் சந்தா செலுத்தினால், மறக்காமல் உங்கள் முகவரியை 89044 58276 எண்ணுக்கு வாட்சப் / SMS அல்லது haridasa.vijayam@gmail.comக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.



## மாதாந்திர குறும்போட்டி

## அக்டோபர் 2019ன் விடைகள்

1. மத்வ நாமா, நரசிம்ம தண்டக, ப்ரமர கீதே
2. ஸ்ரீவியாசராஜர்
3. ஸ்ரீஅக்ஷோப்ய தீர்த்தர் அங்காரத்தினால் வரைந்த ஸ்ரீ நரசிம்ம உருவம் இருக்கும் தலம்
4. நியாயாம்ருத, தர்க்க தாண்டவ, தாத்பர்ய சந்திரிகா
5. ஜீவோத்தமத்வ சாதனைக்காக, நாம் வாயுதேவரின் ஆராதனை செய்யவேண்டும். அதை நினைவுபடுத்துவதற்காக.
6. ஷங்கு கர்ணன், பால்ஹிக ராஜன், பிரகலாத ராஜன்
7. ஸ்ரீகோபால கிருஷ்ணன்
8. வைகுண்ட வர்ணனே, லட்சுமி சோபானெ, ஸ்வப்னபத,
9. தீர்த்த ப்ரபந்த, ருக்மிணீச விஜய, லட்சாலங்கார டீகா
10. ஐந்து

** மொத்தம் 7 பேர் பதில் அளித்திருந்தாலும், கிருதிகள் என்றால் தேவரநாமா என்றே அறிந்து பதில் அளித்திருக்கின்றனர். இருந்தாலும் மற்ற கேள்விகளுக்கு சரியான பதில் கொடுத்திருப்பதால், அவற்றை ஏற்றுக்கொண்டு, அவர்களில் 2 பேருக்கு புத்தகப்பரிசு அனுப்புகிறோம்.

** பரிசு பெறுவோர்: திரு.விஜயீந்திரன், மடிப்பாக்கம், சென்னை & திரு. வாசுதேவ பிரபு, அம்பத்தூர், சென்னை.

** மேலும் பலர் இப்போட்டிகளில் கலந்து கொண்டு பதிலளிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இந்த இதழைப் பற்றி தங்களின் பிற வாட்சப், மின்னஞ்சல் க்ரூப்களில் சொல்லி, மேலும் பல ஹரிபக்தர்கள் இந்த பயனுள்ள தகவல்களைப் பெறுவதற்கு உதவவும்.

தொடர்

# ஹரிதாசர்களின் சிந்தனை முத்துக்கள்

## ஹம்ஸ பரம்பரை

ஸ்ரீபதியு நாபி கமலதி அஜ ஜனிஸிதனு
அஜன மானசபுத்ரரே சனகாதிகளு
சனகாதிகள சிஷ்யரே துர்வாசரு
துர்வாசர சிஷ்யரே பரதீர்த்தரு
பரதீர்த்தர சிஷ்யரே சத்யப்ரக்ஞரு
சத்யப்ரக்ஞர சிஷ்யரே ப்ராக்ஞதீர்த்தரு
ப்ராக்ஞதீர்த்தர சிஷ்யரே அச்யுதப்ரேக்ஷரு
அச்யுதப்ரேக்ஷர கரசஞ்சாதரே மஹாபாஷ்யகாரரு
மஹாபாஷ்யகாரரே குருமுக்யப்ராணரு
குருமுக்யபிராணபதி நம்ம புரந்தரவிட்டலா ||

பாரதத்தின் தத்வ சாஸ்திர உலகத்தில், ஆசார்ய மத்வரின் தத்வவாதத்திற்கு உயர்ந்த இடம் உள்ளது. ஆனால் இதன் மூலம் எங்கிருந்து துவங்கியது என்பதை நாம் அறிந்திருக்க வேண்டும் என்று ஸ்ரீமதாசார்யர் சொல்கிறார்.

ஸ்ரீமதாசார்யரின் முன்னர் மற்றும் பிறகான பரம்பரையை அறிந்து, அவர்களை தினமும் நினைத்தால் மட்டுமே படித்த கல்வி நமக்கு பயன்படும் என்கிறார். இங்கு தாசர், ஆசார்ய மத்வரின் பூர்வபரம்பரையை தொகுத்துக் கொடுக்கிறார். இந்த பரம்பரை, பரமஹம்ஸ நாமக நாராயணனிலிருந்து துவங்கி அச்யுதப்ரக்ஷர் வரை வந்து, அந்த சமயத்தில் த்வைத சித்தாந்தம் மறையத் துவங்கிய போது, வாயு தேவரே மத்வராக அவதரித்து வந்து மறுபடி அந்த சத்-சித்தாந்தத்தை நிறுவினார் என்று முடிகிறது. 'குருஸ்மரணெயிந்த சகல விபத்து பரிஹார' ஆகையால் இங்கு சொல்லியபடி தினமும் ஆதிகுருகளின் ஸ்மரணை செய்ய வேண்டும்.

****கன்னடத்தில்: திரு.ஏ.பி.ஷாமாச்சார், பெங்களூரு**

.


தொடர்

## கேசவ நாமா

## கிருஷ்ணா முராரி - ஸ்ரீவாதிராஜர்

இந்தக் கிருதியில் ஒவ்வொரு வரியிலும் முராரி என்று கூறு கிறார் ஸ்ரீவாதிராஜர். முர அசுரனைக் கொன்ற கிருஷ்ண ரூபம் முராரி. இந்த முராரி, என் நாக்கில் எப்போதும் நிலைத்திருக் கட்டும் என்று வாதிராஜர் கூறுகிறார். முரதைத்யர்கள் என் னும் 24 அதத்வாபிமானிகள், தத்வாபிமானிகளுடன் இருந்து அவர்களை ஸ்ரீஹரியை நினைப்பதற்கு விடுவதில்லை. ஆக வே, அத்தகைய தைத்யர்கள் நம் உடலை விட்டுப் போக வேண்டும் என்று சம்சாரியான முராரியை, 24 ரூபங்களால் பாடியிருக்கிறார் ஸ்ரீவாதிராஜர்.

கிருஷ்ணா முராரி கேசவ முராரி
அச்யுதா[1]னந்த[1] கோவிந்த முராரி ||ப||

பல்லவியின் தொடக்கத்தில் ‘கிருஷ்ணா முராரி’ என்று தொட ங்கியவர், 24வது நுடியின் இறுதியில் ‘கிருஷ்ணா முராரி’ என்று முடித்திருக்கிறார். ’அச்யுதானந்த கோவிந்த’ என்னும் மூன்று ரூபங்களில் ஸ்ரீஹரி, ஆதிபூத, ஆத்யாத்ம, ஆதி தெய் வங்களாக நிலைத்திருக்கிறார். அதற்கே இந்த மூன்று நாமங் களை ‘பிராயச்சித நாமங்கள்’ என்று ஞானிகள் கூறுகின்றனர்.

வேஷதா[4]ரியாகி ப[3]ந்து[3] அசுரர சம்ஹரிஸி
பூ[4]சுரரிக்[3]வரவனித்தே[1]யோ கேசவ முராரி ||1||

மத்ஸ்ய வேடத்தில் (சோமக), வராக வேடத்தில் (ஹிரண் யாக்ஷ), நரசிம்ம (ஹிரண்யகசிபு), வடு வேடத்தில் (பலி), பிராமண வேடத்தில் (ஜராசந்தன்) வந்து அந்தந்த அசுரர்களைக் கொன்று, பூசுர (பிராம்மணர்களுக்கு) வரங்களை வழங்கி அவர்களை மேம்படுத்திய முராரியே, கேசவனே.

நா தா[1]ளலாரேனோ லோகாதி[4]பதி[1]யே கா[1]யோ
அனாத[2]ரக்ஷக நாராயணனே முராரி ||2||
பதினான்கு உலகங்களுக்கும் தலைவனே, அனாதரக்ஷகனே நாராயணனே, எனக்கு வந்த கஷ்டங்களை என்னால் தாங்கிக் கொள்ள முடியவில்லை, என்னைக் காப்பாற்று.

மனசு நில்லது[3] தேவ மாரனட்டுளிகெ[3]ன்ன
மனகா[1]கி[3] நீனே பாரோ மாதவ முராரி ||3||
மன்மதன் கொடுக்கும் பிரச்னைகளால் என் மனம் கலங்கு கிறது. ஹே மாதவனே, என் கெட்ட மனதினை திருத்தி காப்பாற்று.

அனேக கோ[3]வுகள காய்த[3] கோபால மூர்த்தி
கோபியரரஸ கோவிந்த முராரி ||4||
கோபியர்களின் அரசனான கோவிந்தனே, கோபாலகனாக பசு க்களையெல்லாம் காத்தவன் நீயே.

கட்ட[1]த[3] காமனெய பிட்டு க[1]ளசி[1] மன
தி[3]ஷ்டார்த்த[1]வனீவ விஷ்ணு முராரி ||5||
பொருட்களின் மீதான ஆசையைப் போக்கி, மனதின் இஷ்டா ர்த்தங்களை பூர்த்தி செய்யும் விஷ்ணுவே;

மதுரவாக்யகளிந்த மந்திரக்கா[1]கி[3] பாரோ
மனசிஜனய்ய மது[4]சூதன முராரி ||6||
மன்மதனின் தந்தையான மதுசூதனனே, என் இதயக் கோயி லுக்கு வந்து, நீ சொன்னதைப் போலவே, உன்னை வணங்கு மாறு என் மனதை மாற்றுவாயாக.

தி[1]த்தி[3]த[3] கஸ்தூரிதிலக தி[1]ருகித பரிமளகந்த[4]
முத்து[3] நசுனகெ[3]ய த்ரிவிக்ரம முராரி ||7||

நெற்றியில் கஸ்தூரி திலகம், அப்ராக்ருத (அழிவில்லாத) சரீர த்தில் சுகந்தமான சந்தனம் மற்றும் முகத்தில் அழகான புன்னகையுடன் இருக்கிறாய்.

கா[1]மினி ஆக[3]லி ப[3]ந்து[3] ஸீமெனாளுவேனெந்து
நேமவாக்யதி நிந்த[3] வாமன முராரி ||8||
ராமாவதாரத்தில், சீதையை முனிவரின் ஆசிரமத்தில் விட்டு வந்து அரசாண்டு, உன் கட்டளையை நீயே சரியாக பின்பற் றிய வாமனனே முராரி.

ஸ்ரீயரஸ மேளதி ரமிஸி பஹுகாலதி
சிந்துஷயன ஸ்ரீதரனே முராரி ||9||
ஸ்ரீபூதுர்கையருடன் பாற்கடலில் இருந்துவரும் பிரபுவே, ஸ்ரீதரனே முராரி.

ரிஷிகளிக் வரவித்து ப்ருந்தாவனதலி நிந்து[3]
ஹருஷவாரிதி ஹ்ருஷிகேஷ முராரி ||10||
பிருந்தாவனத்தில் நின்று, முனிவர்களுக்கு அபயத்தைக் கொடு த்து, அவர்களின் மனதில் மகிழ்ச்சியைக் கொடுத்த ஹ்ருஷி கேசனாக இருக்கிறாய்.

பாவன்ன மூருதி பரமதயாளு நீனே
பாலிஸு ஸ்ரீபத்மனாப முராரி ||11||
பரம தயாளுவே, உன் பவித்ரமான பத்பனாப ரூபத்தினால் என்னை காப்பாற்றுவாய்.

தா[3]னவர மர்த்தி[3]ஸி சுமனசரிகொ[3]லித
தா[3]னத[3]த்த[1]னே தாமோதரனே முராரி ||12||
அசுரர்களைக் கொன்று, தேவதைகளுக்கு அருளி, அவர்களுக்கு அமிர்தத்தைக் கொடுத்த தாமோதரனே முராரி.

ஷங்கேயில்லதெ கெ[3]லிஸு ஷங்க[2] சக்ரவ தரிஸி அ
லங்காரவாத சங்கர்ஷணனே முராரி ||13||

சங்கு சக்கரத்தினால் அலங்கரித்துக் கொண்ட சங்கர்ஷணனே, எந்தவொரு சந்தேகமும் இல்லாமல் என்னை வெல்லும்படி செய்வாயாக.

சேஷசயன சாதுசஜ்ஜனர போஷ
நீ சலஹோ வாசுதேவ முராரி ||14||
நீயே ஈசன் என்னும் அறிவை சாது சஜ்ஜனர்களுக்கு வழங்கு. சேஷசயனனான வாசுதேவனே என்னை காப்பாற்று.

இத்த[3] கோ[3]பியர மனெய கத்து[3] பெண்ணெய மெத்த[3]
பத்மதளாக்ஷ ப்ரத்யும்ன முராரி ||15||
கோபிகா ஸ்த்ரீயரின் வீடுகளில் வெண்ணைய்யை திருடித் தின்று, அவர்களின் மனதை வென்ற, தாமரைக் கண்ணனான ப்ரத்யும்ன முராரியே, என் மனதை திருத்தி, ஞானபக்தி என்னும் வெண்ணைய் தோன்றுமாறு அருள்வாயாக.

அனிமிஷனாகி பந்து யாதவரனெல்ல கெ[3]லித[3]
ஆ மஹாமஹிம அனிருத்த முராரி ||16||
யாதவ குலத்தையே வென்று, அவர்களின் இதயங்களில் நின்ற மகாமகிமனான அனிருத்த மூர்த்தியே, முராரி.

புனுகு கஸ்தூரிகந்த பரிமள புஷ்பதிந்த
புண்யமூர்த்தி புருஷோத்தமனே முராரி ||17||
புனுகு, கஸ்தூரி, சந்தனம், மணம் தரும் பூக்கள் போன்ற வற்றால் அலங்கரித்துக் கொள்ளும் புண்ணியமூர்த்தி புருஷோ த்தமனே. (தொடரும்).

**** திருமதி. ஜெயம்மா, பெங்களூரு**

இந்த இதழைப் பற்றிய தங்களது மேலான கருத்துகளை வாட்சப், SMS, மின்னஞ்சல் மூலமாகவோ அல்லது தொலைபேசியில் அழைத்தோ கட்டாயம் சொல்லுங்கள்.

போட்டி

## மாதாந்திர குறும்போட்டி

## ஸ்ரீபுரந்தரதாசர்

* இம்மாத கேள்விகள் அனைத்தும் ஸ்ரீபுரந்தரதாசருக்கு சம்மந்தப்பட்டவை.
* விடைகளை வாட்சப் அல்லது மின்னஞ்சல் மூலமாக டிசம்பர் 1ம் தேதிக்குள் எங்களுக்கு அனுப்பவும்.

1. ஸ்ரீனிவாச நாயக் கடைக்கு ஸ்ரீஹரி வந்ததன் உண்மையான நோக்கம் என்ன?
2. ஸ்ரீனிவாச நாயக் அனைத்து செல்வங்களையும் துறப்பதற்கு எந்த குணம் காரணம்?
3. மூக்குத்தி சம்பவத்தால் தனக்கு ஏற்பட்ட மாறுதலுக்கு, நாயக் யாருக்கு நன்றி தெரிவித்தார்?
4. தாசரின் சமகாலத்திய ஹரிதாசர்கள் இருவர் பெயர்கள் சொல்லவும்.
5. தாசர் இயற்றிய முதல் பாடல் எது?
6. தாசரின் கிருதிகளை ஸ்ரீவியாசராஜர் __ என்று அழைத்தார்.
7. சங்கீதப் பாடங்களைக் கற்பவர்களுக்காக, துவக்கப் பாடல்களாக, தாசர் __ இயற்றினார்.
8. தாசரின் புண்ணிய தினம்?
9. __ அவதாரமாக தாசர் கருதப்படுகிறார்.
10. தாசர் இயற்றிய மூன்று காவியங்கள் அல்லது தீர்க்க கிருதிகள் பெயர்களைச் சொல்லவும்.

தொடர்

## ஹரிதாசர்களின் புதிர் கவிதைகள்

## கனகதாசரின் கணபதி ஸ்துதி

பெ$^{3}$ட்டவனு தன்ன பொட்டெயலிட்டு
கு$^{3}$ட்டாகி$^{3}$ சலஹித$^{3}$ன ஹொட்டெயலி
புட்டித$^{3}$ள இஷ்ட தேவன நட்ட நடு$^{3}$வினலி
புட்டித$^{3}$ன நெத்திய நொந்த$^{3}$னு
கித்தித$^{3}$ன சதி ஸ்ருஷ்டியலி புட்டி
லோகதொ$^{3}$ளு மொட்ட மொத$^{3}$லநெய
பூஜெ கொ$^{3}$ம்ப$^{3}$ ஆதி கேசவனினகெ$^{3}$ சரணு

மேலோட்டப் பொருள்:

மலையை தன் வயிற்றில் வைத்து இரகசியமாகப் பாதுகாத்து வந்தவரின் வயிற்றில் பிறந்தவரின் இஷ்டமானவரின் நடு வயிற்றில் பிறந்தவரின் தலையொன்றை கிள்ளியவரின் மனைவியின் பூஜையை எடுத்துக் கொள்பவரின் உள்ளுறை வாழும் ஆதி கேசவனுக்கு சரணங்கள். நமஸ்காரங்கள் .

உட்கருத்து:

முண்டிகெ பதங்களை புரிந்து கொள்வதற்கு சரியான இதிகாச புராண அறிவு மிகவும் தேவைப்படுகிறது. அதிலும் கனகதாசர் பதங்களை புரிந்து கொள்ள அபார ஞானம் தேவை. இப்போது இந்த பதத்தை பார்ப்போம்.

ஒரு காலத்தில், எல்லா மலைகளுக்கும், பறவைகள் போல இறக்கைகள் இருந்தனவாம். அவை பறந்து, பல ஊர்களின் மேல் அமர்ந்து, அங்குள்ளவர்களை கொன்றனவாம். அப்போது, தேவேந்திரன் சினம் கொண்டு, மலைகளில் இறக்கைகளை தன் வஜ்ராயுதத்தால் வெட்டினாராம். அப்போது வாயு பகவானிடம்

தஞ்சமடைந்த இமாலய மலையின் புதல்வரான மைநாக பர்வதத்தை மட்டும் பத்திரமாக காப்பாற்றி, அதை கடலுக்கு அடியில் கொண்டு வைத்து, இரகசியமாகக் காத்து வரும்படி வருணனுக்கு கூறினாராம். அந்த வருணனின் மகளே இலக்குமி தேவி (பாற்கடலில் தோன்றியவள்). அவருக்குப் பிரியமானவரே விஷ்ணு. அவர் மகன் நான்முகக் கடவுள் பிரம்மா.

அந்த பிரம்மாவுக்கு ஒரு காலத்தில் ஐந்து தலைகள் இருந் தன. அதேபோல், அவர் மகன் சிவனுக்கும் ஐந்து தலைகள் இருந்தன. ஒரு நாள் சிவன் கோபம் கொண்டு, பிரம்மாவின் ஒரு தலையை கிள்ளி எறிந்துவிட்டாராம். அப்பேர்ப்பட்ட சிவ னின் பத்னியே பார்வதி. அந்த பார்வதி, தன் உடலிலுள்ள அழுக்கால் (மண்ணால்) விநாயகரை ஸ்ருஷ்டித்தாராம். அந்த கணபதியின் உள்ளுறை இறைவனே ஆதிகேசவ பெருமாள் ஆகும்.

இதையே இந்த உகாபோகத்தில் கனகதாசர் சொல்கிறார்.

பெ3ட்டவனு (மலையை) தன்ன பொட்டெயலிட்டு (வயிற்றில் வைத்து), கு3ட்டாகி (இரகசியமாக) சலஹித3ன ஹொட்டெயலி (வயிற்றில்) புட்டித3ள (லட்சுமியை) இஷ்ட தேவன (விஷ்ணு வின்) - என்னும் சொற்றொடரால் 'மைநாக பர்வதத்தை தன்னுள் வைத்து காப்பாற்றிய சமுத்திர ராஜா வருணனின் மகளாகிய விஷ்ணுவின் பதியான இலக்குமியை' என்கிற பொருள் அறிய வருகிறது.

'நட்ட நடு3வினலி புட்டித3ன' என்பதன் மூலம், விஷ்ணுவின் நாபியில் உதித்த பிரம்மன் குறிக்கப்படுகிறார். 'நெத்திய நொந்தனு கித்தித3ன' என்பதன் மூலம் பிரம்மன் தலையைக் கொய்த சிவன் குறிக்கப்படுகிறார். 'சதி ஸ்ருஷ்டியலி புட்டி' என்பதன் மூலம் பார்வதி தன் உடல் மண்ணால் செய்த விக் னேஷ்வரன் குறிக்கப்படுகிறார்.

அந்தப் பிள்ளையாரையே அனைவரும் முதலில் வணங்க வேண்டும் என்பது விதி. அதையே 'லோகதொ³ளு மொட்ட மொத³லநெய பூஜெ கொ³ம்ப³' என்பதன் மூலம் கவி சுட்டிக் காட்டுகிறார். அவருக்கு உள்ளே இறைவன் விஸ்வம்பர ரூபத்தில் உள்ளார். இது சாஸ்திர வாக்கியம். அந்த விஸ்வ ம்பரனே, ஆதி கேசவ விஷ்ணு.

இவ்வளவு அர்த்தங்கள் இந்த உகாபோகத்தில் பொதிந்துள்ளன. (தொடரும்).

**** க்ரோம்பேட்டை திரு.R.ஸ்ரீதரன்.**

1947ல் இந்திய சுதந்திர நாளில், பீடத்தை அலங்கரித்திருந்த மத்வ யதி யார்?
அ. ஸ்ரீசத்யாபிக்ஞ தீர்த்தர்
ஆ. ஸ்ரீசுயமீந்திர தீர்த்தர்
இ. ஸ்ரீவித்யாபிரசன்ன தீர்த்தர்
ஈ. இவர்கள் அனைவரும்

தினப்படி அனுஷ்டானங்களான சந்தியாவந்தனம், தேவரபூஜை, ஸ்லோகங்கள், மடங்கள், யதிகள், ஹரிதாசர்கள், கன்னட / சம்ஸ்கிருத கிரந்தங்கள் என இவற்றுடன் மேற்கண்ட பல சுவாரசியமான கேள்வி பதில்களைக் கொண்டுள்ளது எமது **vedhanidhi Android app**.

* தரவிறக்கினால் உடனடி புத்தகப் பரிசு
* Test modeல் கொடுக்கப்படும் ஒவ்வொரு 1,000 சரியான பதில்களுக்கும் ஒரு புத்தகம் பரிசு.
* Google Playstoreல் 'VEDHANIDHI' என்று தேடி, உடனே தரவிறக்கி பயன்பெறவும்.

தொடர்

## கன்னட கிரந்தங்களின் அறிமுகம்

## ஹரிகதாம்ருதசாரம்

ஸ்ரீஜகன்னாததாசரால் ரசனை செய்யப்பட்ட ‘கன்னட நியாய சுதா’ எனப் போற்றப்படும் மேரு க்ருதியே ‘ஹரிகதாம்ருத சாரம்’ ஆகும். விஜயதாசரின் ஆணைக்கிணங்க கோபாலதாசர் மூலம் தானமாகப் பெறப்பட்ட 40 வருட ஆயுட்காலத்தை முழுவதுமாக தாசமார்க்கத்தில் அர்ப்பணித்து, ஜகன்னாத தாசரால் படைக்கப்பட்ட அற்புத படைப்பு இது. ஹரிகதாம்ருத சாரம் என்றால் பகவான் ஸ்ரீஹரியின் மகிமையை உரைக்கும் சார கிரந்தமாகும். பகவானிடம் வினயம், பக்தி, சலுகை, ஹாஸ்யம், சரணாகதி, த்ருட நம்பிக்கை முதலான நவ ரசங்களில் மூழ்கி, நிறைந்த மனத்தினராய், மெய் மறந்த நிலையில் தானாகவே தாசரின் மூலம் வெளிவந்த ஆசு கவிதையே இந்த ஹரிகதாம்ருதசாரம்.

பாற்கடலில் கிடைத்தது அமிர்தம் எனில், பக்திக்கடலில் கிடை த்தது ஹரிகதாம்ருதம். அந்த அமிருதத்தினால் ரோகம், மரண பயம் நீங்கும் எனில், இந்த அமிர்தத்தினால் பவரோகமே நீங்கி, மோட்ச மார்க்கம் சித்திக்கும்.

சாதாரணமாக ஒவ்வொரு கிரந்தத்திலும் ஒவ்வொரு விஷயம் கூறப்பட்டிருக்கும். இந்த ஹரிகதாம்ருத சாரத்தில் பகவத் விஷயமான சகல தத்வங்களும், ரகசியமான பிரமேயங்களும், பகவத் மகிமைகளும், மிகவும் ஸ்பஷ்டமாக ஸ்ருதி, ஸ்ம்ருதி களுக்கு அனுகூலமாக கூறப்பட்டுள்ளது. சகல வேத, உப நிஷத்கள், புராண, இதிகாசங்கள் முதலான மூல பிரமாண கிரந்தங்களை ஹரிகதா எனக்கொண்டால், சர்வமூல கிரந்த ங்கள், டீகா, டிப்பணி, கிரந்தங்களை அதன் அர்த்தங்களை அளிக்கும் கிரந்தங்கள் எனக் கொண்டால், ‘ஹரிகதாம்ருத

சாரம்' மேற்கூறிய அனைத்து கிரந்தங்களின் சாரமாக திகழ்கிறது.

32 சந்திகளில், பாமினி ஷட்பதி அமைப்பில் இயற்றப்பட்ட கிரந்தம் இது. ஸ்ரீஸ்ரீபாதராஜர், ஸ்ரீவியாசராஜர், ஸ்ரீவாதிராஜர் மற்றும் ஸ்ரீபுரந்தரதாசர் ஆகியோர் இவரது கனவில் தோன்றி அளித்த ஆசிர்வாதத்தால் இயற்றப்பட்ட கன்னட மேரு கிருதி இது. ஜகன்னாததாசர் கிரந்தத்தை இயற்றியபோது, வர்ணா பிமானி தேவதைகள், இவர் முன்னே 'நான், நீ' என்று போட்டி யிட்டு நர்த்தனமாடி, நின்று அருளிய கிரந்தம் இது.

தாசரே ஓரிடத்தில் ஸ்பஷ்டமாக 'லௌகிக வார்த்தை அல்ல, பரலோக நாதனின் வார்த்தை' என்று பொருள்படும்படியாக 'லோக வார்த்தெ இதல்ல, பரலோகைக நாதன வார்த்தெ' என உரைத்துள்ளார். எனவே, இந்த கிரந்தம் 'சகல வேத, புராண, இதிகாச, உபநிஷத் ஆகியவற்றின் சாரமாக ரகசிய பிரமேய ங்களுடன் உள்ளது என்று தெரிகிறது. எளிமையான நடை, அனைவரும் புரிந்து கொள்ளும் வண்ணம் உதாரணங்கள், ஆழ மான பகவத் விஷயங்கள் இதில் நிரம்பியுள்ளன. அங்கங்கு சம்ஸ்கிருத பதங்கள் இருப்பினும், அது கன்னடத்தில் நிழலில் அனுசரித்து இருக்கும்படி தாசர், தன் கவித்துவத்தையும் நிரூபணம் செய்துள்ளார்.

மனிதன் எப்படி இருக்க வேண்டும்? பகவானின் கருணைக்கு பாத்திரராவது எவ்விதம்? பகவானின் கருணை எத்தகையது? பித்ரு காரியங்களை செய்வது எப்படி? எதுவும் அறியாத பாம ரன் எவ்விதம் சாதனை செய்யவேண்டும்? எப்படி அனு சந்தானம் செய்வது? இவ்வளவு ஏன்? எப்படி போஜனம் செய்ய வேண்டும் என்பதுகூட இதில் விவரிக்கப்பட்டுள்ளது.

32 சந்திகளில் முறையே, மங்களாசரண சந்தி, கருணா சந்தி, வியாப்தி சந்தி, போஜன ரசவிபாக சந்தி, விபூதி சந்தி, பஞ்ச மஹாயக்ஞ சந்தி, பஞ்ச தன்மாத்ர சந்தி, மாத்ருகா சந்தி, ஜீவப்ரகரண சந்தி, சர்வ ப்ரதீக சந்தி (அல்லது) சர்வ சமர்ப்பண சந்தி, தியான க்ரியா (அல்லது) தியான ப்ரக்ரியா சந்தி, நாடி பிரகரண சந்தி, நாமஸ்மரண சந்தி, பித்ருகண சந்தி, ஸ்வாஸ சந்தி, தத்த ஸ்வாதந்த்ர்ய சந்தி, ஸ்வகத ஸ்வாதந்த்ர்ய சந்தி, க்ரீடா விலாச சந்தி, கர்ம விமோசன சந்தி, குணதாரதம்ய சந்தி, ப்ருஹத் தாரதம்ய சந்தி, பக்தாபராத சஹிஷ்ணு சந்தி, கல்ப சாதன சந்தி, பிம்பாபரோக்ஷ சந்தி, ஆரோகண தாரதம்ய சந்தி, அவரோகண தாரதம்ய சந்தி, அனுக்ரமணிகா சந்தி, கணபதி ஸ்தோத்திர சந்தி (அல்லது) விக்னேஷ்வர சந்தி, அணுதாரதம்ய சந்தி, தைத்ய தாரதம்ய சந்தி என பிரித்து, பகவத் விஷயங்களை கொடுத்துள்ளார் தாசர். கிரந்தத்தின் சந்தி விபாக கர்மங்களை, ஸ்ரீபீமேச தாசர், ‘சந்தி மாலா சந்தி’ என்ற கிருதியில் தனியாக விளக்கியுள்ளார்.

இத்தகைய உயரிய கிரந்தத்தின் பலஸ்ருதியை ஸ்ரீஜகன்னாத தாசரின் சிஷ்யர் ஸ்ரீதவிட்டல தாசர், விசேஷமாக 33-வது சந்தியாக கொடுத்துள்ளார். அதில், இந்த நூலின் ஒரு எழுத் தைக்கூட எழுதி, படித்தாலும், ஒருவன் தேவதைகளால் வேண்டப்பட்டவனாய், ஸ்ரீஹரியின் பக்தி என்னும் உயர்வான செல்வத்தைப் பெறுவான். இதைப் படிப்பவர்களுக்கு அகால மரணம் இல்லை, யம பயம் விலகும், சர்வ மனோ பீஷ்டங்களும் நிறைவேறும் எனக்கூறி, மேலும் இந்த கிரந்தத்தின் ஒரு சந்தியாவது பாராயணம் செய்வதால்கூட, ஆயுள், ஆரோக்யம், புகழ், வலிமை, விசேஷ ஞானம், வீரம் மற்றும் நல்ல குணங்கள் சித்திக்கும் என விவரித்துள்ளார். ஸ்ரீதவிட்டல தாசர் மேலும் விவரிக்கும்படியான இந்த கிரந்தத்தை கேட்டாலே, குருடன் கண் பார்வை பெறுவான், செவிடனுக்கு காதுகள் கேட்கும், வளர்ச்சி குறைபாடு உள்ள வர்கள், மன்மதனைப் போல ரூப சௌந்தர்யம் அடைவார்கள், மலட்டுப் பசுக்கள் கூட ஈன்றெடுக்கும் பாக்கியம் பெறும்,

பட்டம் மரம் கூட துளிர்க்கும் என பலன்களை வரிசைப் படுத்துகிறார்.

இந்த கிரந்தத்தின் பாராயணத்தால் காம, க்ரோதங்கள் முத லான கெட்ட சிந்தனைகள் நீங்கும், நித்ய தீர்த்த ஸ்னானம் மற்றும் தானங்கள் அளிக்கும் பலன்கள் கிட்டும். பத்னியரிடம் பதிபக்தியும், கணவனிடத்தில் ஏகபத்னி விரதமும், தம்பதி களிடையே அன்யோன்ய பாவமும் அதிகரித்து, சந்தோஷ த்துடன் நல்வாழ்வு வாழ்வர், நற்கதியைப் பெறுவர் என தாசர் பலஸ்ருதியில் விளக்குகிறார்.

எல்லாவற்றிற்கும் மேலாக, ஸ்ரீஜகன்னாததாசர், வைகுண்ட யாத்திரைக்குக் கிளம்ப எத்தனித்தபோது, சூக்ஷ்ம ரூபத்தில் தன்னை காண்பித்து, தன்னுடைய ஒரு அம்சம் தான் வாழ்ந்த மானவியில் உள்ள தன் கிருஹத்தில் ஒரு கம்பத்திலும், தான் மீட்டிவந்த வீணையிலும், விசேஷமாக தான் இயற்றிய ஹரிகதாம்ருத சாரத்திலும் இருப்பதாக உரைத்து, ஹரிவாயு மற்றும் குருகளின் அருள் இதில் பரிபூர்ணமாக உள்ளது என்பதை காட்டியுள்ளார்.

கன்னடத்தில் இயற்றப்பட்ட ஹரிகதாம்ருத சாரத்திற்கு அனேக பண்டிதர்களும், தாசர்களும், ஸ்ரீசங்கர்ஷண ஒடெயரு போன்ற யதி ஸ்ரேஷ்டர்களும் வெவ்வேறு காலங்களில், அனேக வியாக்யானங்களை அளிப்பத்திருப்பதனாலேயே, இந்த கிரந்தத்தின் மகிமை மற்றும் கருத்துக்களின் ஆழம் புலப்படு கின்றது. இத்தகைய மேரு கிருதியான ஹரிகதாம்ருதசார கிரந்தத்தை படித்து, எழுதி, கேட்டு, பாராயணம் செய்து, பிறரு க்கும் கற்பித்து ஸ்ரீஜகன்னாத விட்டலனின் அருளுக்கு பாத்தி ரர் ஆவோமாக என பிரார்த்திக்கின்றோம்.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**** திரு.லட்சுமிபதிராஜா, சென்னை**

தொடர்

## பகவத்கீதை

## கீதா சாரம் - ஸ்ரீவியாசராஜர்

**ஸ்லோகம்:**

**ஞான தொா$^{3}$ட்ட$^{3}$து கர்மப$^{3}$ந்த$^{4}$வன பி$^{3}$ட்டு$^{1}$ |**
**கர்ம பி$^{3}$ட்டரெ ப்ரத்வாயவெஷ்டு ||**
**ப$^{2}$ல பி$^{3}$ட்டு நீ மாடு$^{3}$ சத்கர்மகள**
**ஸமதேஹகெ ப$^{2}$ல கர்ம காரணவல்ல ||3**

**பத:**

**கர்மதல்லெ நினகதி$^{4}$கார | ப$^{2}$ல தா தூ$^{3}$ர |**
**த$^{4}$னஞ்சயகோ$^{3}$ஸ்கர |**
**ஞான தொா$^{3}$ட்ட$^{3}$து கர்ம தூ$^{3}$ரய்யா | இத்த பா$^{3}$ரய்ய |**
**யோகபு$^{3}$த்தி$^{4}$ மாட$^{3}$ய்யா |**
**ஜீதபு$^{3}$த்தி$^{3}$ யாவதை$^{3}$ கேஷவ | ஜக$^{3}$த்பா$^{1}$ஷவ | நோடிதெ$^{3}$ பரமேஷ |**
**கோவிந்தனல்லி மனஸிட்டவ | காமபி$^{3}$ட்டவ | ஜிததே$^{3}$ஹ தா$^{1}$னாவ ||3**

எல்லா யக்ஞங்களை விடவும் ஞான யக்ஞம் சிறந்தது. அதாவது, பகவந்தனின் சர்வோத்தமத்வ ஞானத்தைப் பெறுவதே சிறந்த ஞான யக்ஞம். 'நஹி ஞானேன சத்ருசம் பவித்ர மிஹ வித்யதே' என்பதே இதற்கு சான்று. 'பலபிட்டு நீ மாடு கர்மங்கள' (கடமைகளைச் செய். பலனை எதிர்பாராதே) என்பது ஸ்ரீகிருஷ்ணர் தரும் அறிவுரை. 'கர்மண்யேவாதிகாரஸ்தே மாப லேஷு கதாசன' அதாவது, ஒருவரின் வர்ணாசிரம தர்மங்களுக்கு ஏற்ப கர்மங்களை செய்யவேண்டும் என்பதே இங்கு சொல்லப்பட்டிருக்கிறது.

பலனை எதிர்பார்த்து கர்மங்களை செய்யக்கூடாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. பகவந்தனிடம் பக்தி, ஞானம், அருள்

ஆகிய பலன்களை எதிர்பார்ப்பது முக்கியம். ’தனஞ்சய கோஸ் கர பல தா தூர’ என்றால், சுயநலத்திற்கான பலன்கள். தனம்+ ஜய = தனஞ்சய. பணம் மற்றும் இதர விஷயங்களில் வெற்றி என்னும் பலன்கள். ‘ஜகத்பாஷவ நோடதெ பரமேஷ கோவிந்த னல்லி மனவிட்டவ’. ஜகத்பாஷ என்றால், உலகத்தைக் கட்டுவது. பஞ்ச பூதங்களைக் கட்டுவது. பரமேஷ என்றால், லட்சுமிதேவியிடமிருந்து துவங்கி, அனைவருக்கும் தலைவன். ‘கோவிந்தனல்லி மனவிட்டவ’ என்று ஆகவேண்டுமென்றால், பலன்களை விரும்புவதை விடவேண்டும். ’ஜிதபுத்தி’ என்றால், ஸ்திதப்ரக்ஞன், இந்திரியம், மனது, புத்தி ஆகியவற்றை வென்ற தேகமே ‘ஜிததேஹ’. வேதங்களால் புகழப்பட்டுள்ள, சர்வ ஸ்ரேஷ்ட ஸ்வாமியான கோவிந்தனை தெரிந்துகொள்ள வேண்டுமெனில், நம்மை துஷ்ட காரியங்களில் ஈடுபடுத்தும் இந்திரியங்களை கட்டுப்படுத்த வேண்டும்.

**ஸ்லோகம்:**

**ஞான தொ3ட்ட3து3 கர்மத3ல்யாகெ என்ன ।**
**புத்தீ மோஹிஸீ கிருஷ்ண கேளய்ய பி3ன்ன ।।**
**கர்மவில்லதெ மோக்ஷப2லவுண்டெ இன்னா ।**
**கர்ம மோக்ஷத புத்தி4கெ3 பீ3ஜவல்லெ ।।4**

**பத:**

**யுத்த4 கர்மவ மாடோ3 பாண்டவ । ரணதாண்ட3வ । வைரி ஷண்ட3னெம்புவா ।**
**ஜனரெல்ல மாள்பரோ நின்ன நோடி । மத்தென நோடி । நோடிதர நீ பே3டி3 ।**
**எனக்யாகெ1 பேளய்ய ஜனகர்ம । க்ஷத்ரிய த4ர்ம । நஷ்டவாகு3வுது3 த4ர்ம ।**
**அர்ப்பிஸூ என்னல்லி சர்வவு । பி3ட்டு க3ர்வவு । திளி என்னொளு சர்வவு ।।4**

’ஹே கிருஷ்ணா! இந்த போர்க்களத்தில், மிகவும் கொடியதான இந்த போரின் நடுவே, என்னை ஏன் சோதிக்கிறாய்?’ என்று கேட்கிறான் அர்ஜுனன். இதற்கு கிருஷ்ணன், ‘கர்மவில்லதே மோட்சபலவுண்டே?’ என்று கேட்கிறான். க்ஷத்ரியனின் கடமை, தர்ம பரிபாலனம். பிரஜா (மக்கள்) பரிபாலனம். வீரம். வலிமை. எதிரிகளை வெல்வது - ஆகியன. இந்த கடமைகளி லிருந்து ஒருவன் தவறினால், மோட்சபலன் அவனுக்கு எப்படி கிடைக்கும்? க்ஷத்ரியனின் கடமை மற்றும் தர்மம், போர் செய் வதே. நீ இப்போது போர் செய்யமாட்டேன் என்று சொல்வது, அதர்மம் ஆகும் என்பதே இங்கு குறிப்பிடப்படுகிறது.

’யதா ராஜா ததா ப்ரஜா’ - பெரியவர்கள் சனாதன தர்மம் மற்றும் ஆசாரங்களை சரியாக பின்பற்றவில்லையெனில், சிறி யவர்களும் அதை பின்பற்ற மாட்டார்கள். அப்படியே படிப்படி யாக தர்மம் அழிந்துவிடும். ஆகையால், ‘ஜனரெல்ல மாள்பரோ நின்ன நோடி, மத்தென்ன நோடி’ என்கிறார் ஸ்ரீகிருஷ்ணர். சாதா ரண மக்களின் தர்மம் மற்றும் க்ஷத்ரியனின் தர்மம் ஆகிய இந்த இரு வகையான தர்மங்களினாலும் கிருஷ்ணனுக்கு எவ்வித பிரயோஜனமும் இல்லை. ‘நுடிதந்தெ நடெ. நடெ தந்தெ நுடியுவுதெ’ என்பதே அவன் செய்தி. (நான் சொல் வதைப் போல செய்; நான் செய்வதைப் போலவே செய்யாதே). ’அர்ப்பிஸூ என்னல்லி சர்வவு, பிட்டு கர்வரு’ (உன் கர்வத்தை விட்டுவிட்டு, அனைத்தையும் எனக்கு சமர்ப்பணம் செய்). இந்த செய்தியே, ‘நாஹம் கர்த்தா ஹரி: கர்த்தா, தத்பூஜா கர்ம சாகிலம்’ (எதையும் நான் செய்வதில்லை. அனைத்தையும் ஸ்ரீஹரியே செய்கிறான்) என்று சிந்திக்கும் மனோநிலை.

**ஸ்லோகம்:**

**யோக³ சன்யாஸவெரடு முக்திகெ த்³ருட⁴வு |**
**போ⁴க³ வர்ஜித கேளு சன்யாஸியிரவு ||**
**ஹ்யாகெ³ பத்³மகெ¹ பாணிய லேபவில்ல |**
**ஹாகெ ப⁴க்திகெ³ சம்ஸ்க்ருதியு இல்லா ||5**

**பத:**

**அஜனல்லி த்³விஜனல்லி க³ஜனல்லி | ஸம நானல்லி |**
**ப⁴ஜிபர மனதல்லி |**
**மனஸு யார ஜீவக்கெ ப³ந்து³ | இத்த பா³ரெந்து³ | மத்தெ வைரிதா³ரெந்து³ |**
**லோஷ்டகாஞ்சன நோடு ஸமமாடி | ஆஸன ஹூடி | நாஸிகதுதி³ நோடி³ |**
**த்யானமாடு ஹரி அல்லிஹ | அவனல்லிஹ | யோக³ சன்னிஹிதனவனே ||5**

பொதுவாக, யோக என்றால் கிருஹஸ்த தர்மம் என்றும், சன்யாஸ என்றால் யதி தர்மம் என்றும் சொல்வதுண்டு. ஆனால், 'பகவத்பூஜா ரூபதல்லி விஹித கர்மானுஷ்டானவே யோக'. காம கிரோதம் ஆகிய தோஷங்களை தொலைப்பதே சன்யாசம் எனப்படும். முக்தி கிடைக்க வேண்டுமெனில் யோக மும் வேண்டும். சன்யாசமும் வேண்டும். 'எலெய மேலிருவ பத்மக்கெ நீரின லேபவில்ல' (தாமரை மலர் நீரில் இருந்தாலும் அவ்விரண்டிற்கும் சம்பந்தம் இல்லை). இது எப்படியோ அதைப் போலவே 'பக்திகெ சம்ஸ்க்ருதியு இல்ல'. அதாவது பகவத் பக்தனுக்கு, சம்ஸ்க்ருதி என்றால், பிறப்பு, இறப்பு போன்ற சுழற்சிகள் இல்லை.

'அஜனல்லி த்விஜனல்லி, ஜகதல்லி ஸம' என்னும் நுடி 'வித்யா வினய சம்பன்னே பிரம்மணே கவி ஹஸ்தினி | ஷுனி ச்யைவ ஷ்வபாகே ச பண்டிதா: சமதர்ஷின:' என்னும் ஸ்லோக த்தின் பொருளைப் போலவே இருக்கிறது. இதில் பகவத்கீதை யின் ஆறாவது அத்தியாயத்தின் சாரமும் அடங்கியிருக்கிறது.

****ப்ராணேஷ கேசவ தாசர். பெங்களூரு**

தொடர்

## மனப்பாடப் பகுதி

## தேவதா தாரதம்யம்

| | | | |
|---|---|---|---|
| 1 | ஸ்ரீமன் நாராயணன் | 14 | நாரதர் |
| 2 | ஸ்ரீமகாலட்சுமி | 15 | அக்னி, ப்ருகு, ப்ரஸூதி தேவி |
| 3 | பிரம்மா & வாயு | 16 | 7ரிஷிகள், வைவஸ்வத மனு, விஸ்வாமித்ர |
| 4 | சரஸ்வதி & பாரதி | 17 | மித்ர, நிர்ருதி, தாராதேவி, ப்ரவாஹி |
| 5 | கருட, சேஷ, ருத்ர | 18 | குபேர, விஷ்வக்சேன, கணபதி, சேஷ ஷதரு (85 பேர்) |
| 6 | ஷண்மஹிஷியரு | 19 | கர்மஜ தேவதைகள் |
| 7 | சௌபர்ணி, வாருணி & பார்வதி | 20 | கங்கா, பர்ஜன்ய, சூர்ய, சங்க்யா, ஷசி, ஷாமளா, விராட்தேவி |
| 8 | இந்திர, காம | 21 | ஸ்வாஹாதேவி |
| 9 | அஹங்காரிக ப்ராண | 22 | புத |
| 10 | குரு பிருஹஸ்பதி, அனிருத்த, ரதி, ஸ்வாயம்பு மனு, சசிதேவி, தக்ஷ பிரஜாபதி | 23 | உஷாதேவி |
| 11 | ப்ரவாஹ வாயு | 24 | தரணிதேவி |
| 12 | சூர்ய, சந்திர, யம, ஷதரூபா தேவி | 25 | சனீஸ்வரன் |
| 13 | வருண | 26 | புஷ்கர |

* 1 முதல் 26 வரை படித்தால் - அவரோகண தாரதம்யம்.
* 26 முதல் 1 வரை படித்தால் - ஆரோகண தாரதம்யம்.
* த்வைதத்தின் முக்கிய கோட்பாடுகளில் ஒன்றான தாரதம்யத்தை அனைவரும் அறிந்திருக்க வேண்டும்.
* ஆதாரம் - ஹரிகதாம்ருதசாரம்.

தொடர்

# ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

## சர்வ பிரதீக சந்தி

** சர்வ பிரதீக சந்தியில் மொத்தம் 25 பத்யங்கள் உள்ளன. அந்த சந்தியைப் பற்றிய ஒரு சுருக்கமான கட்டுரை இது.

அனைத்துமே ஸ்ரீஹரியின் பிரதீக (பிரதிபிம்பம் / reflection) என்று இந்த சந்தியின் பெயரிலிருந்தே தெரியவருகிறது). இந்த உலகத்தில் இருக்கும் அனைத்து ஜீவராசிகளும் அவருக்கு பிரதிபிம்பமே. ஜடப்பொருட்கள் அனைத்திலும் அவர் வசிக் கிறார். அவரை விட்டு எந்தவொரு பொருளும் தனியாக இருப் பதற்கு சாத்தியமே இல்லை. ஒரு குழந்தையாக ஆல இலை யின்மேல் படுத்திருக்கும்போது, மொத்த பிரம்மாண்டத்தையும் தன் வயிற்றில் வைத்துக்கொண்டு படுத்தார். தன் மனைவி யான ரமாதேவியை தன் மார்பில் இடம் கொடுத்து வைத்துக் கொண்டார். தன் மனைவியில் ஸ்த்ரீ ரூபத்தினை ஆல-இலை யாக மாற்றிக்கொண்டார். பூ (Bhoo) ரூபத்தை தண்ணீராக மாற்றிக்கொண்டார். தண்ணீரில் ஆல-இலையைப் போட்டு அதன்மேல் படுத்தார். அதிக வெளிச்சம் இருந்தால் தூக்கம் வருவதில்லை என்று, துர்கா ரூபத்தை இருட்டாக மாற்றி, காலத்தை தன் கண் இமைகளில் இருத்திக் கொண்டார். தண்ணீரில் இலை மிதந்ததை, ஒரு தொட்டிலாக நினைத்து, அதில் படுத்திருந்தார். அப்போது 'அஹ: அஸ்மீ' என்றார். இதன் பொருள் - நான் ஒருவன் மட்டுமே இருக்கிறேன், நான் அனைத்திலும் இருக்கிறேன், என்னிடம் அனைத்தும் இருக்கின்றன - ஆகியவற்றை சொல்கிறார். தனக்குத் தானே பிரதிபிம்பன். இந்த விஷயங்களைப் பற்றி எழுதப்பட்ட சந்தியே - சர்வப்ரதீக சந்தியாகும்.

நம் வாழ்க்கையில் தினந்தோறும் ஸ்ரீஹரியை எப்படி நினைக்கவேண்டும் என்பதை, ஸ்ரீஜகன்னாததாசர் பற்பல உவமை உவமேயங்களுடன் ஹரிகதாம்ருதசார கிரந்தம் சர்வப்ரதீக சந்தியில் விளக்கியுள்ளார்.

மொத்த பிரம்மாண்டத்தை படைத்தவர் ஸ்ரீஹரி. இதை அழிப்ப வரும் ஸ்ரீஹரியே. பிரளய காலத்தில் ஸ்தூல சரீரங்களை அழித்து அவற்றை சூக்ஷ்ம ரூபமாக மாற்றுகிறார். படைப்பு காலத்தில் சூக்ஷ்ம ரூபங்களை ஸ்தூல சரீரமாக மாற்றி பிரம்மாண்டத்தை படைக்கிறார். ஸ்தூல தேகத்தை சூக்ஷ்ம ஜீவருக்குக் கொடுத்து சாதனை செய்வித்து அந்த ஸ்தூல சரீரத்தை அழித்து, அவரவர்களின் தகுதிக்கேற்ப ஆனந்தத்தைக் கொடுக்கிறார். ஸ்தூல சரீரத்தை அழித்து, அவர்களின் சூக்ஷ்ம-அம்சத்தை மூல-பிரக்ருதியில் இருத்தி படுக்கிறார். இந்த செயல்களினால் அவருக்கு எந்தவொரு பிரயோஜனமும் இல்லை. இது அவருக்கு ஒரு அனாயாசமான விளை யாட்டாகும்.

இப்படி படைக்கப்பட்ட ஜீவர்கள், அ-ஸ்வதந்திரர்கள் (சுயமாக முடிவெடுக்க முடியாதவர்கள்), அல்பர்கள், ஆகையால் இவர் களால் ஸ்ரீஹரியின் உதவி இல்லாமல் சாதனைகள் செய்ய முடியாது. புருஷ ரூபத்தினால், ஜீவர்களின் ஸ்தூல சரீரத்தில் வியாபித்து, அவர்களின் அனைத்து செயல்களுக்கும் காரண னாகி தன்னுடைய இஷ்டப்படி செயல்களை செய்து, அவர் களை சம்சாரத்திலிருந்து விடுதலையளித்து தன்னுடனே வைத்துக்கொண்டு அவரவர்களுக்கு நிச்சயிக்கப்பட்ட சுகத் தினைக் கொடுத்து அருள்கிறார்.

பிரம்மாதி தேவதைகளிலிருந்து துவங்கி, சிறு கிருமிவரை, தைத்யர்கள் ஆகியோரையும், பஞ்சபூத, மூன்று குணங்களைக் கொண்ட உலகத்தைப் படைத்து, ஜீவர்களுக்குத் தேவையான காற்று, நீர், வெளிச்சம், உணவுகளை முதலிலேயே உருவாக்கி, பிறகு சூக்ஷ்ம சரீரமுள்ள ஜீவர்களுக்கு ஸ்தூல சரீரத்தைக் கொடுத்து, அந்த தேகத்தில் தானே நிலைபெற்று, அவர்கள்

செய்யும் செயல்களில் தானே நின்று, அவரவர்களின் தகுதிக்குத் தக்கவாறு, தன் இஷ்டப்படி சாதனை செய்விக்கிறார். பற்பல ஜீவர்களில் பற்பல ரூபங்களை எடுத்து, அனைத்து காலங்களில் வியாப்தனாகிருக்கிறார். தன் மனைவி ரமாதேவியுடன், தானே படைத்த பிரம்மாண்டமே அவரது பிரதிபலிப்பு ஆகும். அதற்கே கனகதாசர் ஸ்ரீஹரியின் விளையாட்டினை பின்வருமாறு பாடினார்.

' நீ மாயெயொளகோ நின்னொளு மாயெயோ | நீ தேஹதொளகோ நின்னொளு தேகவோ' என்று ஸ்ரீஹரி தானே உருவாக்கிய பிரம்மாண்டத்தில் ஓதப்ரோதனாகி (குறுக்குசால்) வியாபித்திருக்கிறார்.

வியாப்த ரூபத்தினாலேயே அவரால் அனைத்து செயல்களையும் செய்யமுடியும் என்றாலும், பற்பல ரூபங்களை எடுத்து அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கிறார். தன் உடலிலிருந்து தத்வாபிமானி தேவதைகளை படைத்து, ரஜோ-தமோ குண ஜீவர்களின் ஸ்தூல சரீரத்தில் வியாபித்து, அவரவர்களின் சாதனையை செய்விக்கிறார்.

**** கன்னட மூலம்: திரு. சி.எஸ்.ஹுச்சுராவ்**

| ஆராதனை | ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள் |
| --- | --- |
| | கார்த்திக & மார்கசிர மாதங்களில் |

கார்த்திக பகுள சதுர்தசி - ஸ்ரீமுத்துமோகனதாசர் (தொட்டபல்லாபுர)
கார்த்திக அமாவாசை - ஸ்ரீமஹிபதி தாசர் (காகிண்டிகி)
மார்கசிர பௌர்ணமி - ஸ்ரீவித்யா பிரசன்ன தீர்த்தர் (சோசலே)
மார்கசிர பகுள த்வாதசி - ஸ்ரீகுருகோவிந்தவிட்டல தாசர் (மைசூரு)
மார்கசிர அமாவாசை - ஸ்ரீகுருஸ்ரீஷவிட்டல தாசர் (கனககிரி

# ஹரிதாச விஜயம்

## சந்தா விவரம் (36 பக்கங்கள்)

1 ஆண்டுக்கு ரூ.200/- 3 ஆண்டுகளுக்கு ரூ.500/-
5 ஆண்டுகளுக்கு ரூ.900/- 10 ஆண்டுகளுக்கு ரூ.1700/-

வங்கியில் சந்தா செலுத்தினால், அதன் விவரத்துடன், உங்கள் முகவரியை, மின்னஞ்சல் செய்யவும்

## வங்கி விபரம்:

Sathya Narayanan

ICICI Bank - Savings account

A/c. No. 000101043177. IFSC: ICIC0000001

Cenotaph Road Branch, Chennai 18

ஹரிதாச விஜயம் சந்தா செலுத்துபவர்களுக்கு ஒரு புத்தகம் இலவசமாக அனுப்புகிறோம். இப்புத்தகம் கிடைக்காதவர்கள் எம்மைத் தொடர்பு கொள்ளவும்.

Amazon Kindleல் உள்ள நமது தமிழ் மின்புத்தகங்களில் சில:

1. ஸ்ரீவாதிராஜரின் ஸ்வப்னபத (விளக்கத்துடன்)
2. ஸ்ரீவித்யாபிரசன்ன தீர்த்தர் எழுதியுள்ள நாடகங்கள்
3. ஸ்ரீமோகனதாசரின் கோலு ஹாடு (விளக்கத்துடன்)
4. ஸ்ரீபிரசன்னவெங்கட தாசரின் நாராயண பஞ்ஜர
5. ஸ்ரீஜகன்னாத தாசரின் பலவிது பாளுதுதக்கெ
6. ஸ்ரீஜகன்னாத தாசர் கட்டுரைகள் (60 கட்டுரைகள்)
7. ஸ்ரீகுருகோவிந்த தாசரின் கோவிந்தாஷ்டகம்

& மேலும் பல புத்தகங்கள், கன்னட கிரந்தங்களை தொடர்ந்து மின்புத்தகங்களாக்க் கொண்டு வர முயல்கிறோம்.



ஸ்ரீவிஜயதாசர்

| | |
|---|---|
| **If Undelivered, please return to:**<br>**Sathya Narayanan,**<br>**380, 2A Main,16th Cross**<br>**JP Nagar 4th Phase**<br>**Bengaluru 560078** | To: |

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா



நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

**"ஹரிதாச விஜயம்"**

சிரி நிலயன குணகள '**திளிது**' பஜிசுவுதே

மலர் : 1 இதழ் : 3


**நிர்வாக ஆசிரியர்**

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross,
JP Nagar 4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276. haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**

'தாச சாகித்ய சேவா ரத்ன'
திரு. குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**

திரு. முரளிதர தாசரு, திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா, திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

## ஆசிரியர் பக்கம்

'ஸ்மர்தவ்ய ஸததம் விஷ்ணு: விஸ்மர்தவ்யோ ந ஜாதுசித்' என்னும் புராண வசனத்தையே 'ஹரி ஸ்மரணெ மாடோ நிரந்தர' என்றும், இன்னும் பல்வேறு கீர்த்தனைகள், கிருதிகள் மூலமாக, ஸ்ரீஹரியின் சிந்தனையை நாம் எப்போதும், நிரந்தரமாக, இடை விடாமல் செய்யவேண்டும் என்று ஹரிதாசர்கள் சொல்லியிருக் கிறார்கள். இப்படி அவர்களின் வாக்குகளில் ஸ்ரீஹரியை, அவரது நற்குணங்களை, மகிமைகளை நினைப்பதால், நமக்கு சிறப்பு பலன்கள் கிடைக்கின்றன.

வேத சாஸ்திரங்கள், இதிகாச, புராண, சர்வமூல கிரந்தங்கள் என இவை அனைத்தின் சாரத்தையும் எளிமையான கன்னடத்தில் கொடுத்ததே ஹரிதாச சாகித்யம். ஹரிதாசர்கள், தங்களது சாத்விக சிந்தனை, தொடர்ந்த படிப்பு, உபாசனை, ஆத்யாத்மிக அனுபவம், நற்சிந்தனை ஆகியவற்றை எழுத்து வடிவமாகக் கொடுத்ததே ஹரிதாச சாகித்யம். தத்வஞானத்தை சங்கீதம், ராகம், தாளம், லயம் ஆகியவற்றின் உதவியுடன் விளக்கினர். தேவரநாமம், சுளாதி, உகாபோகம், விருத்த நாமா, தீர்க்க கிருதி, காவிய, கிரந்த - என்று இன்னும் பல வகைகளில் சித்தாந்தத்தை, அதன் தத்வங்களை பரப்பினர்.

இந்த அனைத்து விதங்களையும், அதில் உள்ள அனைத்து படைப்புகளையும் ஒருவரால் தன் வாழ்நாளில் படித்துவிட முடியாது. ஆனாலும், ஒரு சிறு முயற்சியாவது செய்யவேண்டும் என்பதற்காகவே அத்தகைய மதிப்புமிக்க பொக்கிஷங்களை இந்தப் பத்திரிக்கையில் தமிழில் கொடுக்க முயல்கிறோம். இந்த வாய்ப்பினை ஹரிபக்தர்கள் தாமும் பெற்று, மற்றவர்களுக்கும் தெரியப்படுத்தி அறிமுகப்படுத்தினால், எங்களின் இந்த முயற்சிக்கு சிறு பலன் கிடைத்தது என்று மகிழ்வோம்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

## துணை ஆசிரியர் பக்கம்

இரண்டு மாத காலமாக 'ஹரிதாச விஜயம்' உங்கள் ஆதரவுடன் வெளிவந்து, எதிர்பார்த்த வரவேற்பைப் பெற்று வந்துள்ளது. மேலும் நிறைய வாசகர்கள் சேரவேண்டும் என்று விரும்பு கிறோம். இந்தப் பத்திரிக்கையில் காணும் குறை நிறைகளை தைரியமாக எங்களுக்குத் தெரியப்படுத்துங்கள். என்னென்ன விதத்தில், இந்தப் பத்திரிக்கையை சீராக்கலாம் என்று கூறுங்கள்.

தாச சாகித்யம் என்பது ஒரு பெருங்கடல். அதை ஒரு சிறு குடத்துக்குள் நிரப்ப இயலாது. உங்கள் உற்சாகத்தைப் பொறுத்து, இன்னும் சில பக்கங்களை அதிகப்படுத்தினால் மேலும் சில விஷயங்களை சேர்க்கலாம். ஹரிபக்தர்கள், தனியாகவோ, கூட்டாகவோ 'Sponsor' செய்தால், சில தாசர்களின் படைப்புகளை தனி நூல்களாக வெளியிடலாம். வாசகர்களுக்கு சலுகை விலையில் அப்புத்தகங்களை கொடுக்கலாம். எல்லாவற்றிற்கும் உங்கள் பதில் (feedback) தேவை.

இந்த மாதம், சமீபகாலத்து ஹரிதாசர்களான ஸ்ரீவித்யா பிரசன்ன தீர்த்தர், ஸ்ரீகுருகோவிந்த விட்டல தாசர் ஆகியோரின் ஆராதனைகள் வருகின்றன. ஸ்ரீவித்யா பிரசன்ன தீர்த்தரின் ஒரு பாடல் இந்த இதழில் கொடுக்கப்பட்டுள்ளது.

அடுத்த மாதம் பெரும் ஹரிதாசர்களான ஸ்ரீ நரஹரி தீர்த்தர், ஸ்ரீ கோபாலதாசர் மற்றும் ஸ்ரீபுரந்தரதாசர் ஆகியோர்களின் புண்ணிய தினங்கள் வருகின்றன. அவைகளை முடிந்த அளவு கொண்டாடலாம். மறுபடியும், அடுத்த மாதம் சந்திக்கலாம்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்**

தொடர்

## ஹரிதாச சாகித்யம்

## ஹரிதாசர்களின் வேஷபூஷணங்கள்

ஹரிதாசர்களுக்கென்று சில விதிகள் இருக்கின்றன. தூய்மை யான பஞ்சகச்சத்தை அவர் அணியவேண்டும். மேலே காவி வஸ்திரம், தலைக்கு காவி சேஷவஸ்திரம், காலில் கெஜ்ஜெ (சலங்கை), கழுத்தில் துளசிமாலை, நெற்றியில் கோபிசந்தன நாமம், உடலில் 12 நாமங்கள் முத்திரைகளுடன், கையில் தண்டிகெ பெத்த (தம்பூரி), தாளக்கட்டை, கோபாள புட்டி (ஜோல்னா பை என்று சொல்லலாம்) ஆகியவற்றைப் பிடித்து, ஹரிநாம சங்கீர்த்தனையை செய்தவாறு, மதுகர (பிக்ஷை) வாழ்வை வாழவேண்டும்.

கோபாலதாசர் தமது ஒரு கீர்த்தனையில் சொல்வது போல - 'கெ[3]ஜ்ஜெய கா[1]லல்லி கட்டி, லஜ்ஜெ பிட்டு, ஹரிய நாம க[4]ர்ஜனெ மாடுத்தா, தம்பூரி மீடு[1]த்தா, ஹ்ருதய அம்பக[1]திந்த ஆனந்த கரெயுத்தா, பலு சம்பிரமதிந்த இருவவர சங்க, ஏனு சுக[2]வோ எந்தா சுக[2]வோ' - இருக்கவேண்டும்.

மேலே சொன்ன வேஷ பூஷணங்களுக்கும் சரியான அர்த்தம் உண்டு.

1. தூய்மையான பஞ்சகச்சம் : வெள்ளை அமைதியின் அடையாளம். வெள்ளை உடுத்தியவர்கள் சன்யாசிகள் அல்ல. சம்சாரிகளே என்று தெரிவிக்கிறது.

2. தலையில் கட்டிய சேஷ வஸ்திரம்: காவி என்பது விரக்தர்களான சன்யாசிகள் பயன்படுத்தும் வண்ணம். ஆகையால், அவர்களால் அருளப்பட்ட காவி வஸ்திரமே சேஷ வஸ்திரம். ஹரிதாசர்கள் கோபாளத்திற்கு (யாயிவார / பிக்ஷை) செல்லும் போது, தலைக்கு அலங்காரமாக சுற்றிக்கொள்கிறார்கள் மற்றும் மேலுடலையும் மூடிக்கொள்கிறார்கள். காவி சேஷ வஸ்திரம் - தியாகத்தின் அடையாளம். மனதின் தூய்மையையும் அது வெளிப் படுத்துகிறது.

3. காவி வண்ண மேலாடை: இது தாஸ்யத்தின் அடையாளம். தாம் ஹரிதாசர் என்பதை தெரிவிப்பதற்காகவும், பக்தர்களின் சேவைக்குக் கட்டுப்பட்டவர் என்றும் தெரிவிக்கிறது.

4. கோபிசந்தனம் : கோபிசந்தனத்தால் 12 நாமங்கள் மற்றும் முத்திரைகளை அந்தந்த இடங்களில் தரித்து, துளசிமாலையை அணிந்து, தாசரின் உடலில் அந்தர்யாமியாக இருக்கும் ஸ்ரீஹரிக்கு இவை அனைத்தும் அலங்காரம் என்னும் அறிவைக் கொடுக்கிறார்.

5. கெஜ்ஜெ (சலங்கை): 108 கந்தர்வர்களின் அடையாளம். லெஜ்ஜெ (வெட்கம்) விடுவிப்பதே கெஜ்ஜெ. தேகாபிமானத்தை விடுவிப் பதற்காகவும் கெஜ்ஜெ கட்டுகிறார்கள். ‘கெ3ஜ்ஜெய கட்டிதவ க1ளரெதெ மெட்டிதவ’.

6. தம்பூரி : தம்பூரியை உடலுக்கு ஒப்பிடுகிறார்கள். தம்பூரியின் கீழ்ப்பாகம் நம் தலைக்கும், தண்டத்தை கழுத்திற்கும், நான்கு தந்திகளை நம் நரம்புகளுக்கும் ஒப்பிடுகிறார்கள். நான்கு தந்திகள் நான்கு வேதங்களை பிரதிபலிக்கின்றன. தம்புரியின் நாதமே ஸ்ருதி. தம்புரியின் நாதம் சரியாக இருந்தால், பாடுவதற்கு சரியான சூழ்நிலை வருகிறது. இதையே ‘த1ம்புரி மீட்டிதவ, ப4வாப்தி தா4டித3வ’ என்கின்றனர். அதாவது, பகவந்தனின் ஞானம் பெற்றவன், சம்சார சாகரத்தை கடக்க வல்லவன் என்பது அபிப்பிராயம்.

7. சிகை : கிருஹஸ்தரின் தர்மம்.

8. தண்டிகெ பெத்த : தண்டிகெ பெத்த என்றால் தாசர் வாசிக்கும் தந்தி வாத்தியம். சமூகத்தின் கேடுகளை திருத்துவதற்காக இதை பயன்படுத்துகின்றனர். தாசர்கள் வைராக்ய ஜீவர்கள். ‘த3ண்டிகெ3 பெ3த்த1 ஹிடியுவுத3க்கெ1, மண்டெ பா3கி3 நாசு1த1லித்தெ3, ஹெண்டதி1 ஸந்த1தி1 ஸாவிரவாக3லி, த3ண்டி3கெ3 பெ3த்த1 ஹிடிஸித3ளய்யா’ என்றார் புரந்தரதாசர்.

9. துளசிமாலை : 54 அல்லது 108 துளசிமணிகளால் ஆன மாலையை அணிந்திருக்கின்றனர். இது ஹரிதாச தீக்ஷையின் அடையாளமாக இருக்கிறது. 'துளசிமாலே ஹாகு[1]வுதக்கெ அரச னெந்து தி[1]ருகு[3]தலித்தெ[3], சரசிஜாக்ஷ புரந்தர விட்டலனு துளசி மாலெ ஹாகி[1]சிதனு' என்று புரந்தரதாசர் தாம் ஹரிதாசர் ஆன கதையை விளக்குகிறார்.

10. தாளக்கட்டை / ஜால்ரா : தாள ஞானம் என்றால் லயத்திற் கேற்ப பாட வேண்டும் என்று பொருள். 'தா[1]ளவ த[1]ட்டித[3]வ சுர ரொளு சேரித[3]வ' என்றால் சரியான தாளம் இருப்பவன் தேவதா புருஷனோ அல்லது தேவதா சன்னிதானம் உள்ளவனாகவோ இருக்கிறான் என்று பொருள்.

11. கோபாளபுட்டி (ஜோளி / ஜோல்னா பை) : இது விரக்தியின் அடையாளம். சமுதாயத்திற்கு பாரமாக இல்லாமல் வாழ வேண்டும் என்பதே இதன் பொருள். கோபாளபுட்டியை 'ப[4]வநாஷி' என்றும் அழைக்கின்றனர். வினைப்பயன்களை தீர்க்கும் புட்டி என்று சொல்லலாம். இடது தோளில் தரித்த இதை பிக்ஷா பாத்திரம் எனலாம்.

ஸ்ரீஹரிவாயுகளின் ப்ரீத்யர்த்தமாக யார் இந்த கோபாளபுட்டியில் பொருட்களை இடுகின்றனரோ, அவர் இந்த சம்சார சாகரத் திலிருந்து விடுதலை பெறுகின்றனர். கோபாளபுட்டியில் இடப்பட்ட பொருட்கள் அக்ஷயமாகட்டும் என்ற வசனம் உண்டு. 'கோ[3]பாள பு[3]ட்டி[1] ஹிடியுவுத[3]க்கெ[1] பூ[4]ப[1]தி[1]யெந்து[3] க[3]ர்விசுதி[1]த்தே[3], ஆ ப[1]த்னி கு[1]ல ஸாவிரவாக[3]லி, கோ[3]பாளபு[3]ட்டி[1] ஹிடிஸிதளய்யா' என்று புரந்தரதாசர் தம் மனைவியின் மூலம் தனக்கு நடந்த மாற்றத்தை தெரிவிக்கிறார். அதாவது தாம் ஹரிதாசனாக மாறியதை கூறுகிறார். 'பி[4]க்[1]ஷெய ஹாகிரி ஜோளிகெ[1]கெ[3], அக்ஷயவாகு[3]வுது நிமகெ[3]'.

**<u>கோபாள செய்யும் முறை</u>**

ஹரிதாசர் காலையில் எழுந்து, ஆன்ஹிக, பூஜைகளை முடித்து, ஒரு சாலிகிராமத்தை சம்புடத்தில் வைத்து, அதனை பவநாஷியில் வைத்து, கோபாளத்திற்கு புறப்பட வேண்டும். ஹரிநாம

ஸ்மரணையுடன், தேவரநாமாக்களை பாடியவாறு, தம்பூரியை மீட்டியவாறு, வழியில் போகும்போது வீட்டு வாசல்களில் நின்று, அந்த வீட்டினர் கொடுத்த தன, தான்யங்களை கோபாள-புட்டியில் நிரப்பிக் கொள்ள வேண்டும். அதனை ஸ்ரீஹரி கொடுத்த பாக்கியம் என்று நினைத்து வீட்டிற்குக் கொண்டுவந்து, ஸ்ரீஹரிக்கு சமர்ப்பணம் செய்து, பிராமணருக்கு, அதிதிகளுக்கு உணவிட்டு, கிருஷ்ணார்ப்பணம் என்று சொல்லவேண்டும். ஏழ்மையிலேயே இருந்து, அன்றைக்கான உணவை மட்டும் தயாரித்து, நாளைக் கென்று எதையும் சேர்த்து வைக்காமல், இருப்பதை வைத்து திருப்தியடைந்து, மகிழ்ச்சியுடன் ஹரி பஜனை செய்தவாறு, மதுகர (பிக்ஷை) எடுத்து வாழ்க்கையை நடத்துவதே ஹரிதாச தீக்ஷை. 'கா$^{1}$லிகெ$^{3}$ கெ$^{3}$ஜ்ஜெ க$^{1}$ட்டி நீலவர்ணன குண, ஆலாபிசுத பலு ஒலக$^{3}$ மாடு$^{3}$வந்த, மதுக$^{1}$ர வ்ருத்தி$^{3}$ என்னது$^{3}$, ப$^{3}$லு சென்னது' என்னும் புரந்தரதாசரின் கிருதியும் இதையே சொல்கிறது

**** கன்னட மூலம் : திருமதி. ஜெயம்மா, பெங்களூரு**

ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்
## மார்கசிர & புஷ்ய மாதங்களில்

* மார்கசிர பௌர்ணமி - ஸ்ரீவித்யா பிரசன்ன தீர்த்தர் (சோசலே)
* மார்கசிர பகுள த்வாதசி - ஸ்ரீகுருகோவிந்தவிட்டல தாசர் (மைசூரு)
* மார்கசிர அமாவாசை - ஸ்ரீகுருஸ்ரீஷவிட்டல தாசர் (கனககிரி)
* புஷ்ய பகுள சப்தமி - ஸ்ரீநரஹரி தீர்த்தர் (ஹம்பி)
* புஷ்ய பகுள அஷ்டமி - ஸ்ரீகோபாலதாசர் (உத்தனூர்)
* புஷ்ய அமாவாசை - ஸ்ரீபுரந்தரதாசர் (ஹம்பி)

**வங்கிக் கணக்கில் சந்தா செலுத்தினால், மறக்காமல் உங்கள் முகவரியை 89044 58276 எண்ணுக்கு வாட்சப் அல்லது SMS அல்லது haridasa.vijayam@gmail.comக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.**

தொடர்

## ஹரிதாசர்களின் வாழ்க்கை வரலாறு

## ஸ்ரீகுருகோவிந்தவிட்டல தாசர்

ஒரு முறை கோலாரில் இருக்கும்போது கோவிந்த ராயருக்கு ப்ராரப்த வசமாக, மூச்சிழப்பு நோய் வந்தது. பல சிகிச்சை செய்தும் நோய் குறையவே இல்லை. பணம்தான் செலவாயிற்று. அவர் மிகவும் துன்பப்பட்டு வியாதியினால் தத்தளித்தார். அப்பொழுது அவர் மந்திராலய பிரபு ஸ்ரீராகவேந்திர ஸ்வாமி களிடம் சரண்புக சங்கல்பம் புரிந்தார். மந்திராலயம் சென்று, ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிக்கு சேவை செய்து, தன் உடல் பாதையை குறைக்குமாறு வேண்டத் தீர்மானித்தார்.

அப்பொழுது ராயரின் முதல் மகளான பத்மாவதிக்கு உடல் நலம் சரியில்லை. ஜுரம் கண்டு கண் திறவாமல் படுத்த படுக்கையாகி இருந்தாள். அப்பொழுது தாய் லட்சுமிபாய் 'கோவிந்தா! இன்னும் டிக்கெட் வாங்கவில்லை. பேசாமல் மந்திராலயம் போவதை ரத்து செய்துவிடு' என்றார். கோவிந்தனோ 'நாம் ராயரை நம்பி அவர் ஆலயம் செல்லத் தீர்மானித்துள்ளோம். முன் வைத்த காலை பின் வைக்கலாகாது. அவர் மேல் பாரம் போட்டு இன்றே கிளம்பி விடலாம்' என்று கூறினார். அதே போல த்ருடமான நம்பிக்கை யுடன் கோவிந்தராயர், தாய், மனைவி, மகளுடன் மந்திராலயம் கிளம்பியே விட்டார். குடும்பத்துடன் ரயில் பிரயாணமும் செய்தார்.

ரயில் பயணத்தின்போது, இன்னொரு குழந்தைக்கும் ஜுரம் வந்துவிட்டது. மறுபடியும் லட்சுமிபாய் வீடு திரும்பிவிடலாம் என்றார். ஆனால், கோவிந்தராயர் மறுத்துவிட்டார். கோவிந்த ராயருக்கு அசாத்திய மனோபலம். எப்படியோ அவர்கள் மந்திராலயம் சென்று அடைந்தனர். ராயர், மிகவும் கடினமாக மந்திராலய மகானின் சேவை செய்தார். அங்கிருந்த பல வசதி யின்மைகளைப் பொருட்படுத்தாது, சிரத்தையாக சேவை செய்தார். மிகவும் ஆச்சரியமாக, ஓரிரு நாட்களிலேயே அவருடைய இரு குழந்தைகளுக்கும் ஜுரம் இருந்த இடம் தெரியாமல் போய்விட்டது. கோவிந்தராயர், 20 நாட்கள் சேவை புரிந்தார்.

அவருக்கு வந்த மூச்சிழப்பு நோய் வந்த சுவடே இல்லாமல் மறைந்துவிட்டது. ராகவேந்திர ஸ்வாமிகளின் பூரண அருளால் எல்லோரும் நலமாயினர். கோவிந்தராயருக்கும் உடல் பலம் வந்தது. அசதி மறைந்தது. 19வது நாள் இரவு கோவிந்த ராயரின் அம்மா லட்சுமிபாயின் கனவில் ராயர் வந்து 'யோசனை செய்ய வேண்டாம். உன் மகனுக்கு ஆரோக்கியம் உண்டாகும். அது மட்டுமல்ல. நல்ல புத்திர சந்தானமும் உண்டாகப் போகிறது' என்றார். கோவிந்த ராயருக்கு மறுபடியும் இந்த வியாதி வரவேயில்லை. மந்திராலய ஸ்வாமிகள் கோவிந்த ராயருக்கு புனர்ஜீவனமே அளித்தார்.

பிறகு மந்திராலயத்திலிருந்து ஊர் திரும்பினர். ஒரு வருட காலத்தில், கோவிந்த ராயருக்கு ஓர் ஆண் மகவு பிறந்தது. அதற்கு 'குருராஜன்' என்று பெயரிட்டார். காலகிரமத்தில் ராயருக்கு 4பெண்களுக்கும், 5ஆண்களுக்கும் தந்தையானார். ஒரு பெரிய குடும்பஸ்தர் ஆனார். ஆனாலும், தர்ம நெறி வாழ்க்கையை அவர் விடவேயில்லை. பல க்ஷேத்திரங்களுக்கு விஜயம் செய்து, அங்குள்ள இறைவனின் மூர்த்திகளை தரிசித்தார். அவர் வேலை நிமித்தம் வெவ்வேறு ஊர்களுக்குப் போகும்போது அங்குள்ள வைஷ்ணவர்களையெல்லாம் சேர்த்து, மத்வ நவமி, ராயர் ஆராதனை ஆகியவற்றை நடத்தினார். தம் வீட்டிலேயே எல்லோரையும் அழைத்து, புராண பிரவசனங்களை செய்தார். ஒரு நொடியைக் கூட வீணாகக் கழிக்காமல், மிகவும் ஒழுங்கான நெறிமுறைகளுடன் கூடிய வாழ்க்கையை நடத்திக் காண்பித்தார். பல நூல்களைப் படித்தார். தினமும் ஆபீசுக்கு சைக்கிளில் போகும்போது, சைக்கிளின் ஹாண்டில்பாரில் ஹரி கதாம்ருதசாரத்தை எழுதி சொருகி வைத்துக்கொண்டு, படித்துக் கொண்டே செல்வார். அதாவது, ஒரு நிமிடமும் அவர் வீணாக்காது பல விஷயங்களைக் கற்றார்.

கோவிந்தராயர், சள்ளகெரெ என்கிற ஊரில் இருக்கும்போது, அவர் ஆபீஸ் அதிகாரிகள், அவர் மேல் அபவாதம் பரப்பினார்கள். ஒரு முறை இதனால் கோவிந்தராயருக்கு சங்கடம் உண்டாயிற்று.

பின்பு அந்த ஊரில் இருக்கலாகாது என்று ராயர் தீர்மானித்தார். வேறு ஊருக்கு மாற்றும்படி மேல் அதிகாரிகளுக்கு ஒரு விண்ணப்பம் அனுப்பினார். மாறுதல் வேண்டினார். ஒரு மாதம் விடுமுறை எடுத்துக்கொண்டு, மிகவும் சிரத்தையுடன் சுந்தர காண்டம் பாராயணம் செய்தார். சுந்தரகாண்ட பாராயணம் பலம் அளித்தது. 25 நாட்களுக்குள்ளாக அவருக்கு ஹாசன் என்கிற ஊருக்கு வேலை மாற்றம் கிடைத்தது.

கோவிந்தராயர் 1939ம் ஆண்டு ஹாசனுக்கு வந்து, தம் வேலையில் சேர்ந்தார். அங்கு ராயரின் வாழ்வில் ஒரு புது மலர்ச்சி ஏற்பட்டது. அவர் கொஞ்சம் கொஞ்சமாக 'ஹரிதாச தீட்சை'யின் பால் இழுக்கப்பட்டார். ஹாசனில் கல்வி இலாகாவில் அதிகாரியாக இருந்த ஸ்ரீ ஆர். ராமசந்திர ராவ் என்பவரின் சினேகம் இவருக்குக் கிடைத்தது. ஸ்ரீ ராமசந்திர ராவ், சித்ரதுர்காவை சேர்ந்த 'உரகாத்ரிவாச விட்டல' தாசரின் சிஷ்யர் ஆவார். உரகாத்ரிவாச விட்டல தாசரோ, தேவராயனதுர்காவைச் சேர்ந்த 'ஸ்ரீசுப்பராய தாசரின்' அத்யந்த சிஷ்யர். ஸ்ரீ ஆர். ராமசந்திர ராவ் 'தந்தெ வெங்கடேசவிட்டல' என்னும் அங்கிதத்தில் மிகவும் ஆழமான, ஆத்யாத்ம அர்த்தங்களைக் கொண்ட, உத்தமமான தேவர நாம கீர்த்தனைகளை இயற்றினார். ஸ்ரீராமசந்திர ராயரின் நட்பு, ஸ்ரீகோவிந்த ராயரை 'ஹரிதாச சாகித்யம்' பக்கம் இழுத்தது. கோவிந்தராயர், ராமசந்திர ராயருடன் சேர்ந்துகொண்டு, ஹரிதாச சாகித்ய பாராயணம், நித்ய பஜனை, ஏகாதசி சுத்த உபவாசம், ஏகாதசி ஜாகரணை ஆகியவற்றை செய்ய ஆரம்பித்தார். அவரும் ஹரிதாசர் ஆவதற்கு வேண்டிய அனைத்து முயற்சிகளையும் கைகொண்டார்.

**கோவிந்த ராயர், தாசர் ஆனது & அங்கிதத்தை ஸ்வீகரித்தது**

ஹாசனில், ராமசந்திர ராயரின் சினேகத்தால், ராயர், தாச மார்க்கத்தில் செல்லத் தொடங்கினார். கோவிந்தராயர், சுப்பராய தாசர் பிரசுரம் செய்துவந்த 'பரமார்த்த சந்திரோதய' என்கிற ஆன்மிக மாத இதழைத் தவறாது வாசிக்கத் தொடங்கினார். இதன் மூலமாக பல தேவர நாம பதங்கள், சுளாதிகளைக் கற்றார். 'அங்கிதவில்லத தேஹ நிஷித்த' (அங்கிதம் இல்லாத உடல் வீண்)

என்கிற புரந்தரதாசரின் வாக்கியத்தை அறிந்த கோவிந்தராயர், தானும் தாசன் ஆக வேண்டும் என்றும், அங்கிதம் பெறவேண்டும் என்றும் துடித்தார். தினமும் பித்தனைப் போல அங்கிதம் பெற ஏங்கினார்.

ஸ்ரீவிஜயதாசரின் சிஷ்யர் ஸ்ரீவேணுகோபாலதாசர். அவருடைய பரம்பரையில் வந்தவர் தந்தெமுத்துமோகனவிட்டலா என்னும் அங்கிதத்தைப் பெற்ற தேவராயனதுர்காவைச் சேர்ந்த பரமப்ரிய ஸ்ரீசுப்பராயதாசர். இவரது தாச பரம்பரையை இப்போது பார்ப்போம்.

தாச சிரேஷ்டரான ஸ்ரீபுரந்தரதாசரின் சிஷ்யர் ஸ்ரீவிஜயதாசர். இவரது சிஷ்யர் ஸ்ரீவேணுகோபாலவிட்டல அங்கித பங்கநாம திம்மண்ண தாசர். அவருடைய சிஷ்யர் வியாசவிட்டல அங்கித கல்லூர் சுப்பண்ணதாசர். அவருடைய சிஷ்ய பரம்பரை இப்படியாக வளர்ந்தது. ரகுபதி விட்டலதாசர், பூவராக ரகுபதி விட்டல தாசர், ஸ்ரீபதி விட்டலதாசர், தந்தெஸ்ரீபதி விட்டல தாசர், ஸ்ரீநிதி விட்டல தாசர், ஸ்ரீவர விட்டலதாசர், ஸ்ரீமுத்துமோகன விட்டலதாசர். அவருடைய சிஷ்யரே ஸ்ரீதந்தெமுத்துமோகன விட்டலதாசர். அவருடைய சிஷ்யர்தான் நம் கதாநாயகர் குரு கோவிந்த விட்டலதாசர். இனிமேல் கோவிந்தராயர், 'குருகோவிந்த விட்டலதாசர்' என்று அழைக்கப்படுவார். (தொடரும்).

**** திரு. குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்**

எங்களது இதர புத்தகங்களை வாங்கிப் படித்தோ, இணையத்தில் மின் புத்தகங்களைப் படித்தோ ஆதரவளித்தால், தமிழில் மேலும் புத்தகங்களைக் கொண்டு வர எங்களுக்கு உதவியாக இருக்கும்.

தொடர்

## ஹரிதாசர்களின் சிந்தனை முத்துக்கள்

## அனைத்தும் நல்லவைகளே

பகவந்தனின் தரிசனத்தைப் பெற விரும்பும் பக்தனுக்கு எவ்வித தடைகளும் வராது. இத்தகைய பக்தர்கள் நேர காலங்களை எப்படி பயன்படுத்துவர், அந்த நேரங்களில் ஸ்ரீஹரியின் சிந்தனையை எப்படி செய்வர், தியானங்களை எப்படி செய்வர் என்பதை ஸ்ரீஜகன்னாததாசர் இவ்வாறு சொல்கிறார்.

:

சர்வதேசவு புண்யதேசவு
சர்வகாலவு பர்வகாலவு
சர்வஜீவரு தானபாத்ரரு மூரு லோகதலி ।
சர்வ மாதுகளெல்ல மந்த்ரவு
சர்வகெலசகளெல்ல பூஜெயு
சர்வவந்த்யன விமல மூர்த்தி த்யான உள்ளவகெ ॥ (10-4)

இது ஒரு அற்புதமான சிந்தனை. சாதனைக்கான வழியை சொல்கிறார். ஸ்ரீமதாசார்யர் தமது கிரந்தத்தில்:

தேசகாலாதஸ்தாதிஷு யத்யைகாக்ரதா பவதி தத்யைவ ஸ்தாதவ்யம் ।
தமேவ தேஷம் சேவேத தம் காலம் தாமவஸ்திதிம் ।
தானேவ போகான் சேவேத மனோ யத்ர ப்ரஸீததி ॥

எந்த நேரத்தில் மனது அமைதியாக தியானாதிகளில் ஈடு படுகிறதோ, அந்த நேரத்தில் ஸ்ரீஹரியை வணங்கவேண்டும். இந்த நோக்கத்தில் சாதனை செய்ய விரும்பும் சாதகனுக்கு, அனைத்து நேரம், காலங்களும் மதிப்பானவையே. அதாவது, இங்கு ஸ்ரீ ஹரிக்கு செய்யப்படும் தியானமே முக்கியம். சாமான்யர் ஒதுக்கும் நேரம், காலத்தையெல்லாம், எப்போதும் ஸ்ரீஹரியிடம் மனதைக் கொடுத்திருப்பவனுக்கு பிரச்னையில்லை..

நற்சிந்தனையுடன் செய்யும் தானத்திற்கு அனைவரும் சத்பாத்ரர், ஸ்ரீஹரியைக் குறித்து சொல்லப்படும் அனைத்து சொற்களும்

மந்திரங்கள், அனைத்து செயல்களும் ஸ்ரீஹரி பூஜையே ஆகும். தூய்மையான மனதிலேயே தூய்மையான சிந்தனை சாத்தியம். அதனால் தூய்மையான புண்ணியம் கிடைக்கும். இதிலிருந்து ஸ்ரீஹரியின் தரிசனம் மற்றும் இஹ பரங்களில் சுகம் கிடைக்கும்.

****கன்னடத்தில்: திரு.ஏ.பி.ஷாமாச்சார், பெங்களூரு**

போட்டி

## மாதாந்திர குறும்போட்டி

## டிசம்பர் 2019 - ஸ்ரீகனகதாசர்

* இம்மாத கேள்விகள் ஸ்ரீகனகதாசருக்கு சம்மந்தப்பட்டவை.
* விடைகளை வாட்சப் அல்லது மின்னஞ்சல் மூலமாக டிசம்பர் 25ம் தேதிக்குள் எங்களுக்கு அனுப்பவும்.

1. தாசருக்கு ஸ்ரீவியாசராயர் உபதேசம் செய்த மந்திரம் என்ன?
2. தாசருக்கு அங்கிதத்தைக் கொடுத்த குரு யார்?
3. மோட்சத்திற்கு யார் போவீர்கள் என்று குரு கேட்டதற்கு தாசரின் பதில் என்ன?
4. தாசரின் இயற்பெயர்?
5. தாசரால் உடுப்பி கிருஷ்ணர் சிலை திரும்பியது என்று கூறப்படுவது - சரியா தவறா?
6. தனக்குக் கிடைத்த புதையல் செல்வத்தை தாசர் என்ன செய்தார்?
7. தாசர் யாருடைய அம்சமாகக் கருதப்படுகிறார்?
8. தாசர் நிகழ்த்திய ஏதேனும் இரு பவாடங்களை (அற்புதங்கள் / மகிமைகள்) சுருக்கமாகச் சொல்லவும்.
9. ராமதான்ய சரிதையில் வரும் இரு முக்கிய கதாபாத்திரங்கள் யார் / எவை?
10. மோகன தரங்கிணி காவியத்தை இப்படியும் அழைக்கலாம். ஸ்ரீ ___ சரித்ரெ. ***

தொடர்

கேசவ நாமா

## கிருஷ்ணா முராரி - ஸ்ரீவாதிராஜர்

ரக்ஷிஸோ நீ என்ன அக்ஷதிந்தலி
ரக்ஷிஸோ அவனி அதோக்ஷஜ முராரி ||18||

பூமியின் தலைவனே, ஹே அதோக்ஷஜனே, உன் முடிவற்ற கருணைப் பார்வையால் என்னை காப்பாற்று.

நானேன பேளலி நகெனகெயல்லி அக்ஷி
க்ரூரவாயிது நாரசிம்ஹ முராரி ||19||

அழிவில்லாத நீ, அழிவுள்ள ஜீவ, ஜடர்களில் அந்தர்யாமியாக இருந்து, ஜடமான கம்பத்திலிருந்து தோன்றி, மனித உடல், சிம்ம முகத்துடன் சிரித்தவாறு வந்து, உன் எதிரியை அழித்து, பக்தனை காப்பாற்றிய நாரசிம்மனே, முராரி.

அசுரகுலத்தில் பிறந்த இரு சேதனர்களின் முரண்பாடே 'நகெ நகெ'. தந்தையிடம் ஹரித்வேஷம், மகனிடம் ஹரிபக்தியின் உச்சம். ஆக, ஹரிபக்தி- ஹரித்வேஷத்தின் சண்டை, சாத்விக-தாமஸ குணங்களின் சண்டை, ஜீவ ஜீவ பேத, ஜீவ ஜட பேத, ஜீவ ஜட ஈஷ பேத - ஆகிய அனைத்தின் காட்சியே இந்த அவதாரம்.

மனிதரூபம் மற்றும் சிம்ம ரூபம் ஆகிய இரு எதிரெதிர் தர்மங்களை கொண்டிருப்பதன் மூலம் தான் அபரிமித சக்தியைக் கொண்டவன் என்றும், கம்பத்திலிருந்து வந்ததன் மூலம், தான் அனைத்து இடங்களிலும் இருப்பவன் என்றும் காட்டியிருக்கிறார்.

மெச்சிதெ நா நின்ன பக்ஷிவாஹன ஸ்வாமி
முச்சுமரெக[3]ள்யாகோ அச்யுத முராரி ||20||

விஷ்ணுவின் வாகனனான கருடன், சிறந்த பறவை என்று பெயர் பெற்றதாகும். கருடவாகனான முராரியே, நான் உன்னை

வணங்கினேன் (உன்னைக் கண்டால் பிரியம், உன்னிடம் அன்பு, பக்தி இருக்கிறது). அழிவில்லாதவனான ஸ்வாமியே, எனக்கும் உனக்கும் நடுவே மறைப்பதற்கு எதுவுமில்லை.

ஜாணத[1]னதி போகி[3] ஜாரஸ்த்ரீயரன்னு
ஒடகூ[3]டி[3] ஆடி[3]த ஜனார்த்தன முராரி ||21||

கோபிகா ஸ்த்ரீயர்களுடன் ராசக்கிரீடை ஆடிய முராரியே, நீயே ஜனார்த்தனன். கோபிகா ஸ்த்ரீகள் கிருஷ்ணனை கடவுளாகவே கண்டவர்கள். அவனே அவர்களின் கணவன் மற்றும் தலைவன் என்று நினைத்தவர்கள். அவர்களின் பக்திக்கு மனமிரங்கியவன் முராரி.

உகு[3]ரல்லி ஹிரண்யகன ஸீளி உரதல்லி மாலெய த[4]ரிஸி
உப்ப[3]ல்லி மெரெத உபேந்திர முராரி ||22||

தன் நகங்களினால் ஹிரண்யகசிபுவின் இதயத்தைக் கிழித்து, அதை தன் கழுத்தில் மாலையாக அணிந்தவன் நரஹரி. தேவதைகளின் ஸ்தோத்திரங்களால் மகிழ்ந்து, உபேந்திரனாக இருக்கிறாய் நீ, முராரி.

ஹிரண்யாக்ஷ த[1]னயனந்து[3] க[1]ரெயெ க[3]ம்பதி பந்த[3]
க[1]ருவதிந்தலெ நரஹரியே முராரி ||23||

வராக ரூபத்தினால் ஹிரண்யாக்ஷனைக் கொன்று, மகனான பிரகலாதன் கூப்பிட்டவுடன், கர்வத்துடன் கம்பத்திலிருந்து வந்த நரஹரி நீ. ஹிரண்யாக்ஷனுக்காக வராக அவதாரம், ஹிரண்ய கசிபுவுக்காக நரசிம்ம அவதாரம் என்று இரண்டையும் ஸ்ரீவாதிராஜர் இந்த நுடியில் சொல்கிறார்.

அட்ட[1]ட[3]விய தபஸ்ஸு எஷ்டு தினவோ ஸ்வாமி
பட்டணகா[1]கி[3] பாரோ கிருஷ்ண முராரி ||24||

அஞ்ஞானம் என்னும் காட்டில் பல நாட்கள் தவம் (தியானம்) செய்தேன். என் அஞ்ஞானத்தைப் போக்க, இந்த தேகம் என்னும் பட்டணத்திற்கு ஸ்ரீகிருஷ்ணனே, நீ வாராய்.

எல்லர சலஹித புல்லலோசன ஸ்வாமி
பாலிஸோ ஸ்ரீஹயவதன முராரி ||25||

தாமரைக் கண்களையுடைய ஹயவதன முராரியே, அனைவரையும் காப்பாற்றியதைப் போல, என்னையும் காப்பாற்று என்கிறார் ஸ்ரீவாதிராஜர்.

(இந்த கேசவ நாமா பாடல் முடிவுற்றது. தொடர்வது, இந்தத் தொடரில் அடுத்த கேசவ நாமா பாடல்).

**<u>3. ரங்க பாரோ - இயற்றியவர் ஸ்ரீவாதிராஜர்</u>**

ரங்க$^{3}$ பா$^{3}$ரோ நரசிங்க$^{3}$ பா$^{3}$ரோ ||ப||
அங்க$^{3}$ஜனய்ய கோ$^{1}$னேரி தி$^{1}$ம்ம ரங்க$^{3}$ பா3ரோ ||அப||

காவேரியின் ஆதி, மத்யாந்த ரங்க, அஹோபல நரசிம்ம, அங்க ஜனய்யனான விஷ்ணு, கோனேரி (புஷ்கரிணி) திம்மனான ஸ்ரீனிவாசனை வாராய் என்று அழைக்கிறார்.

ஸாஸிர மூர்த்தி வாஸவ வந்த்$^{3}$யனெ
ஸாஸிர நாமதொ$^{3}$டெ$^{3}$யனெ
ஸாஸிர நாமதொ$^{3}$டெ$^{3}$யனெ நரஹரி
கே$^{1}$ஷவ நம்ம மனெதெ$^{3}$ய்வ ||1||

இந்திரனால் வணங்கப்படும், ஆயிரம் ரூபங்களைக் கொண்ட, ஆயிரம் பெயர்களைக் கொண்டவனான நரஹரி கேசவனே நம் குலதெய்வம்.

வாரணவந்த்$^{3}$யனெ கா$^{1}$ருண்யரூப$^{1}$னெ
பு$^{1}$ராணக$^{3}$ளல்லி பொ$^{1}$க$^{3}$ளுவ

பு1ராணக3ளல்லி பொ1க3ளுவ நரஹரி
நாராயண நம்ம மனெதெய்வ ||2||

கஜேந்திரனால் வணங்கப்பட்ட, கருணாமயி, புராணங்களில் வணங்கப்படுபவனான நரஹரி, நாராயணனே நம் குலதெய்வம்.

யாத3வகு1லத3ல்லி ஸாது3க3ளரஸனெ
பே4தி3ஸி த3னுஜர கெ3லித3னெ
பே4தி3ஸி த3னுஜர கெ3லித3னெ நரஹரி
மாத4வ நம்ம மனெதெ3ய்வ ||3||

யாதவர்களை காப்பாற்றிய நரஹரி, மிகச்சாதாரணமாக அசுரர் களைக் கொன்ற, மாதவனே நம் குலதெய்வம்.

தே3வேந்த்3ர மளெகெ3ரெயெ கோ3வர்த்த4ன கி3ரியெத்தி1
ஆ கி3ரிய ஸ்ரீகிருஷ்ண கொ1டெ3 மாடி3
ஆ கி3ரிய ஸ்ரீகிருஷ்ண கொ1டெ3 மாடி3 கா1ய்த3னெ
கோவிந்த நம்ம மனெதெய்வ ||4||

மக்கள் இந்திரபூஜை செய்யாத காரணத்தால், கோபமடைந்த இந்திரன் அடைமழையை வரவழைக்க, கோவர்த்தன மலை யையே தூக்கிப் பிடித்து, பசு, மக்களைக் காத்த கோவிந்தனே நம் குலதெய்வம்.

ஸ்ருஷ்டிகெ3 க1ர்த்த1னெ து3ஷ்ட க1ம்ஸன கெ3லிது3
சிஷ்ய பரிபாலனெனிஸி
சிஷ்ய பரிபாலனெனிஸித நரஹரி
விஷ்ணுவெ நம்ம மனெதெய்வ ||5||

துஷ்டர்களைக் கொன்று (கம்சன்), சிஷ்டர்களைக் காத்த (உக்ரசேன) நரஹரி, ஸ்ருஷ்டிக்கு காரணமான விஷ்ணுவே நம் குலதெய்வம்.

**** திருமதி. ஜெயம்மா, பெங்களூரு**

தொடர்

## ஹரிதாசர்களின் புதிர் கவிதைகள்

## மஹிபதி தாசரின் ஸ்ரீசிவ ஸ்துதி

நக்ஷத்ர ரமணநய்யனி கொ3லிதுஸர வனித்தெ
நக்ஷத்ர தொ3ல்லப4ன தம்மனஸுதனஸுட்டெ
நக்ஷத்ர இல்லத3வன வைரி க3மனன தாத
நக்ஷத்ர காந்த தரனே !
நக்ஷத்ர ஜாதனக்3ரஜன மஸ்தகவ தரி தெ3
நக்ஷத்ர சஹஸ்ரவுள்ளவன த்3வாரவகாய்தெ3
நக்ஷத்ர நீனே இந்த்3ரா3தி தே3வதெக3ளிகெ3
கு3ரு மஹிபதி பிரவு4 நக்ஷத்ர பூ4ஷ ஸலஹோ !

மேலோட்டப் பொருள்:

நட்சத்திர கணவனின் அப்பாவுக்கு அருளி அம்பைக் கொடுத்தவனே. நட்சத்திர கணவரின் தம்பியின் மகனை சுட்டவனே. நட்சத்திர மற்றவனின் எதிரியின் மேல் செல்பவனின் அப்பாவே. நட்சத்திர கணவனை தரித்தவனே.

நட்சத்திரத்தில் பிறந்தவனின் அண்ணனின் தலையை வெட்டியவனே. நட்சத்திரம் ஆயிரமுள்ளவனின் வீட்டின் வாயில் காத்தவனே. இந்திரன் முதலான தேவதைகளுக்கு நட்சத்திர மானவனே. குருமஹிபதியை பிரபுவாகக் கொண்ட நட்சத்திர ஆபரணம் தரித்தவனே. என்னைக் காப்பாற்று.

உள் அர்த்தம்:

கவியானவர், நட்சத்திரம் என்கிற ஒரு சொல்லை வைத்துக் கொண்டே சொற்சிலம்பம் ஆடியுள்ளார். காகண்டகி மஹிபதி தாசர் (1680-1705AD) ஒரு சிறந்த ஹரிதாசர். யோகி. அனுபவ கவி. அவர் ஆயிரக்கணக்கான தேவர நாமாக்களை புனைந்துள்ளார். அவர் மகன், ஸ்ரீகிருஷ்ண தாசரும், தந்தையின் வழியைப் பின் பற்றி, பல பாடல்களைப் புனைத்துள்ளார். மஹிபதி தாசரின் ஒரு படைப்பே இது. இதில் அவர் சிவனை விளித்துத் துதிக்கிறார்.

சிவனை விளித்துக் கூறும் பல அடைமொழிகளை நட்சத்திரம் என்னும் ஒரு சொல்லை வைத்தே அவர் விளம்புகிறார். நட்சத்திரம் என்கிற ஒரு சொல்லானது, அஸ்வினி, பரணி முதலான 27 நட்சத்திரங்களில் ஒன்றைக் குறிக்கிறது. அதை சமத்காரமாக சாதுர்யமாக கவி இங்கே உபயோகித்துள்ளார். இப்போது ஒவ்வொரு வரியின் இலக்கிய நயத்தை, உட்கருத்தைப் பார்க்கலாம்.

முதல் வரியில் 'நக்ஷத்ர' என்பது உத்தர நட்சத்திரத்தைக் குறிக்கிறது. உத்தர என்பவள் விராட ராஜனின் மகள். அவளை தமிழில் உத்தரை என்பார்கள். அவள் கணவனே அபிமன்யு. அபிமன்யுவின் அப்பா அர்ஜுனன். அர்ஜுனன், சிவனைக் குறித்து தவம் செய்து, அவர் அருளால் பாசுபதம் என்கிற அஸ்திரத்தைப் பெற்றான். அதையே தாசர் 'நக்ஷத்ர ரமணநய்யனி கொ$^3$லிதுஸர வனித்தெ' என்று குறிப்பிடுகிறார்.

இரண்டாவது வரியில் வரும் 'நக்ஷத்ர' என்கிற சொல், ரேவதி நட்சத்திரத்தைக் குறிக்கிறது. ரேவதி, பலராமனின் மனைவி. பல ராமனின் தம்பியாக பிறந்தவனே கண்ணன். கண்ணனின் மகனே பிரத்யும்னன். அந்த பிரத்யும்னன், மன்மதனின் இன்னொரு அவதாரம். அந்த மன்மதனை நெற்றிக்கண்ணால் சுட்டெறித்தவர் சிவன். அதையே தாசர் இங்கு 'நக்ஷத்ர தொ$^3$ல்லப$^4$ன தம்மன ஸுதனஸுட்டெ' என்கிறார்.

மூன்றாவது வரியில் வரும் 'நக்ஷத்ர' என்னும் சொல் சிரவண (திருவோணம்) நட்சத்திரத்தைக் குறிக்கிறது. சிரவணம் என்றால் வடமொழியில் காது - செவி என்று பொருள். 'நக்ஷத்ர இல்லதவன' என்றால் பாம்பு என்று பொருள். பாம்புக்கு காது கிடையாது. அதை 'கட்செவி' என்பார்கள். வைரி என்றால் எதிரி. பாம்புக்கு எதிரி மயில். மயில் மேல் செல்பவன் முருகன் அல்லது ஷண்முகன். அவன் தந்தையே சிவன்.

நான்காம் வரியில் வரும் 'நக்ஷத்ர', ரோகிணி நட்சத்திரத்தைக் குறிக்கிறது. ரோகிணியின் கணவனே சந்திரன். சந்திரனை தன்

தலையில் அணிந்தவன் சிவன். அதையே கவி 'நக்ஷத்ர காந்த தரனே' என்று சொல்கிறார்.

ஐந்தாம் வரியில் வரும் 'நக்ஷத்ர', புஷ்ய நட்சத்திரத்தைக் குறிக்கிறது. நக்ஷத்ர ஜாதன என்றால் புஷ்ய நட்சத்திரத்தில் பிறந்தவன் என்று பொருள். முன்பொரு சமயம், த்ரிபுராசுரர்கள் என்பவர்கள் இருந்தார்கள். தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுன் மாலி என்பவர்களே த்ரிபுராசுரர்கள். இவர்களில் மூத்தவனான தாரகாக்ஷன், புஷ்ய நட்சத்திரத்தில் பிறந்தான் என்று புராணம் கூறுகிறது. இவர்களை சிவன் சம்ஹரித்தார்.

அடுத்த வரியில் வரும் 'நக்ஷத்ர', ஹஸ்த நட்சத்திரத்தைக் குறிக்கிறது. ஹஸ்த என்றால் கை. நக்ஷத்ர சஹஸ்ரயுள்ளவன என்றால் ஆயிரம் கைகளை உடையவன் என்று பொருள். அவனே பாணாசுரன். இந்த பாணாசுரனின் வாயிலைக் காப்பவர் சிவன் என்று புராணம் கூறுகிறது.

ஏழாவது வரியில் வரும் 'நக்ஷத்ர', ஜ்யேஷ்டா (கேட்டை) நட்சத்திரத்தைக் குறிக்கிறது. ஜ்யேஷ்டா என்றால் மூத்தவன் / தலைவன் என்று பொருள். இந்திரன் போன்ற தேவதைகளுக்கு தலைவன் சிவன். தாரதம்யப்படி பார்த்தால், சிவன் ஐந்தாம் வகுப்பில் வருகிறார். இந்திராதி தேவதைகள் எட்டாம் வகுப்பில் வருகிறார்கள். ஆகவே, சிவன் அவர்களுக்கு தலைவன்.

எட்டாம் வரியில் வரும் 'நக்ஷத்ர', ஆஸ்லேஷ (ஆயில்யம்) நட்சத்திரத்தைக் குறிக்கிறது. ஆஸ்லேஷ என்றால் நாகம் என்று பொருள் உண்டு. நக்ஷத்ர பூஷ என்றால் பாம்பை ஆபரணமாகக் கொண்டவன் என்று பொருள். சிவனுக்கு 'நாகபூஷணன்' என்று பொருள் உண்டு. சிவன் தன் பிரபுவாக (ஸ்வாமியாக), மஹி பதியை (லட்சுமிபதி விஷ்ணுவை) வழிப்படுகிறார். அதையே தாசர் 'கு3ரு மஹிபதி பிரவு4 நக்ஷத்ர பூ4ஷ; என்று குறிப்பிடுகிறார். அப்பேர்ப்பட்ட சிவன் நம்மைக் காப்பாற்றட்டும் என்று 'சலஹோ' என்று பிரார்த்திக்கிறார் தாசர். (தொடரும்).

**** திரு. குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்.**

| சிறப்புக் கட்டுரை | **ஸ்ரீவித்யா பிரசன்ன தீர்த்தர்** |
|---|---|
| | **** திரு. குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்** |

இந்த ஆண்டு 2019, ஸ்ரீ வித்யா பிரசன்ன தீர்த்தரின் 120வது ஜயந்தி ஆண்டு மற்றும் 50வது ஆண்டு ஆராதனை ஆண்டு. அவர் சோஸலே வியாசராஜ மடத்து பீடாதிபதியாக இருந்து, 350க்கு மேற்பட்ட தேவர நாமாக்களை இயற்றியுள்ளார். அவரின் ஆராதனை டிசம்பர் 11ம் தேதி வருகிறது. அவரின் நினைவாக இந்த தேவர நாமம் வெளியிடப்படுகிறது.

ஸ்ரீவியாசராஜ ஸ்வாமிகள் '**பிரமேய நவ மாலிகா**' என்கிற இந்த ஸ்லோகத்தை இயற்றியுள்ளார்.

ஸ்ரீமன் மத்[4]வ மதே ஹரி: பரதர: சத்யம் ஜக[3]த் தத்வதோ |
பே[4]தோ[3] ஜீவ க[3]ணா ஹரேரனுசரா: நீசோச்ச பா[4]வம் க[3]தா: |
முக்திர் நைஜ சுகா[2]னுபூ[4]திரமலா ப[4]க்திஸ்ச தத் சாதனம் |
ஹ்யக்ஷாதி[3] த்ரிதயம் பிரமாணமகி[2]லாம்னாயைக வேத்[3]யோ ஹரி: ||

இந்த ஸ்லோகத்தில் மத்வ சாஸ்திர பிரமேயங்கள் சொல்லப் பட்டுள்ளன. 1. ஹரி சர்வோத்தமத்வம். 2. ஜகத் சத்யத்வம். 3. பேதம் என்பது தாத்விக உண்மை. 4. ஜீவர்கள் ஹரி தாசர்கள். 5. ஜீவர்களுள் தாரதம்யம் உண்டு. 6. முக்தி என்பது ஜீவனின் ஸ்வரூப ஆனந்தத்தை அனுபவிப்பதுதான். 7. தூய்மையான பக்தியே முக்திக்கு காரணம். 8. ப்ரத்யக்ஷம் முதலிய மூன்றுதான் பிரமாணம். 9. எல்லா வேதங்கள் மூலமாகத்தான் ஹரியை அறிய முடியும்.

இதை ஸ்ரீவித்யா பிரசன்ன தீர்த்தர், இப்படியாக பாடியுள்ளார்.

ராகம்: தேசிய தோடி. தாளம்: ஆதி

ஹனுமன மதத[3]லி அனுமான பே[3]ட[3]வோ |
மனமுட்டி ப[4]ஜிஸெலொ எலெ மனவே ||ப||

சனகாதி3 வந்தி3த மனஸிஜ ஜனக |
வனஜ நயன ஹரிக3னுமத வாத3ந்த2 ||அனுபல்லவி||

ஹரியே சர்வோத்தம விதி3ப4வாதி3க3ளெல்ல
அனுசரரிவனிகெ3 பரதந்த்ரரு |
விவித4 தாரதம்ய நிருத பொந்தி3ருவரு
சகல ஜக3ங்களு நிஜாவந்து3 போ3தி4ப ||1||

முகுதி யெம்பு3து3 நிஜானந்த3த3 அனுப4வ
ப4குதி பாட3யலு சாத4னவு |
ப்ரக்ருதி சம்யுதவாத3 தே3ஹவ களெயலு
யுகுதி பே3ரில்லவெந்து3 ப4ரதி சாருவந்த2 ||2||

நயனகெ கோ3சர ஒண ஊஹெயிந்த3லி
திளியலு அரியனு அளவல்லவு |
நிக3மக3ளிந்த3லே அரித ஞானிக ப்ர
சன்ன நாகு3வானெந்து த்4ருடதி3ந்தருஹீவ ||3||

[பல வாசகர்கள், கன்னட தேவர நாமாவிற்கு தமிழாக்கம் அல்லது தமிழ்மொழிபெயர்ப்பு செய்து வெளியிடுங்கள் என்று கேட்டுக் கொண்டதால், இதை தமிழாக்கம் செய்துள்ளேன்].

[பல்லவி]
அனுமனின் மதத்தில் ஐயம் வேண்டாம்
மனமுருகி பஜியுங்கள் ஹே மனமே.

[அனுபல்லவி]
சனகர் போன்றோரால் வணங்கப்பட்ட மன்மதனின் தந்தை.
தாமரைக்கண்ணன் ஸ்ரீஹரிக்கு சம்மதமாக இருக்கக்கூடிய...

[சரணங்கள்]
ஸ்ரீஹரிதான் எல்லோரைவிட மேலானவர். பிரம்மன், சிவன் இவர்களெல்லாம் ஸ்ரீஹரிக்கு தொண்டர்கள் மற்றும் அவரின் ஆளுகைக்கு உட்பட்டவர்கள். அவர்களிடம் இயற்கையாக எப்போதும் ஏற்றத்தாழ்வுகள் உண்டு. எல்லா பிரபஞ்சமும் எப்போதும் உண்மையானவை என்று போதிக்கும்..

முக்தி என்பது இயல்பு நிலையின் மகிழ்வு அனுபவமே. பக்தி ஒன்றே அதைப் பெறும் வழியாகும். ப்ரக்ருதி சம்பந்தமுள்ள (லிங்க) தேகத்தை விடுவதே முக்திக்கு படி. இவற்றையெல்லாம் தர்க்க ரீதியில் கூறுகின்ற...

கண்ணுக்கு புலப்படாதவன். வரட்டு ஊகத்தால் அறியப்படாதவன் ஸ்ரீஹரி. அவனின் மகிமை அளவற்றது. மறைகள் மூலமாகவே அவனை அறியக்கூடிய ஞானிக்குதான் அவன் தோன்றுவான் என்று உறுதியாக விளம்புகின்ற...

***

தொடர்

**மனப்பாடப்பகுதி**

**ஐந்து - எண்ணாலான தகவல்கள்**

| பஞ்ச பூதங்கள் | பஞ்ச அக்னிகள் | பஞ்ச தன்மாத்ர |
|---|---|---|
| ப்ருத்வி (நிலம்) | ஜனனி | கந்த (முகர்தல்) |
| அபு (நீர்) | பித | ரஸ (சுவை) |
| தேஜஸ் (நெருப்பு) | பூ (பூமி) | ரூப (பார்வை) |
| வாயு (காற்று) | வாரித (மேகம்) | ஷப்த (சத்தம்) |
| ஆகாச (ஆகாயம்) | அம்பர (ஆகாயம்) | ஸ்பர்ஷ (தொடுதல்) |

| ஸ்ரீஹரியின் பஞ்ச ரூபங்கள் | அந்த ரூபங்களுக்கேற்ற ஸ்ரீலட்சுமிதேவியின் ரூபம் |
|---|---|
| அனிருத்த | ஷாந்தி |
| பிரத்யும்ன | க்ருதி |
| சங்கர்ஷண | ஜெயா |
| வாசுதேவ | மாயா |
| நாராயண | லட்சுமி |

| பஞ்ச கோஷங்கள் (Koshas) |
|---|
| அன்னமய |
| பிராணமய |
| மனோமய |
| விக்ஞானமய |
| ஆனந்தமய |

* ஆதாரம் - ஹரிகதாம்ருதசாரம்.

தொடர்

**பகவத்கீதை**

**கீதா சாரம் - ஸ்ரீவியாசராஜர்**

**ஸ்லோகம்:**
**யார ப$^4$க்தியு என்ன பாதா$^3$ப்ஜத$^3$ல்லி |**
**கோ$^4$ர சம்ஸாரயாதனெ அவரிகில்லா |**
**ஷரீரவே க்ஷேத்ரவெந்தெந்து$^3$ திளியோ |**
**மரெயதே க்ஷேத்ரக்ஞனெந்தென்ன திளியோ ||6**

**பத:**
**ஷரீரதொளகி$^3$த்து$^3$ பா$^1$பி$^1$ல்ல | துக்க$^2$லேபி$^1$ல்ல | ஆகாஷவு எல்லா |**
**யாதரிந்து$^3$ட்டி$^1$த்து$^1$ ஈகுண | மூருசத்$^3$கு$^3$ண கேளய்ய ப$^2$ல்கு$^3$ண |**
**சுக$^2$து$^3$க்க$^2$ ஸமமாடி நோடு$^3$ நீ | ஈட்$^3$யாடு$^3$ நீ |**
**பி$^3$ரம்மான நோடோ$^3$ நீ |**
**சந்த்ர சூர்யர தேஜ நனதய்யா | கு$^3$டா$^3$கேஷய்ய |**
**அன்னபசன வெனத$^3$ய்யா ||6**

25 தத்வங்களால் ஆன இந்த தேகத்தை ஒரு க்ஷேத்திரம் என்று அறிய வேண்டும். இந்த தத்வங்கள் அனைத்தும் ஸ்ரீஹரியின் கட்டுப்பாட்டில் உள்ளவையே. இந்த தத்வங்களில் பகவந்தன் நிலைத்திருப்பதால், அவனுக்கு க்ஷேத்ரக்ஞன் என்ற பெயர் உண்டு. ஸ்ரீஹரியின் சரணங்களில் யாருக்கு பக்தி இருக்கிறதோ, அவருக்கு வாழ்க்கையின் பிரச்னைகள் (பிறப்பு இறப்பு சுழற்சி) இருப்பதில்லை.

த்ரிகுணமானி (மூன்று குணங்களுக்கும் அதிபதியான) மகாலட்சுமி யைவிட சிறந்தவனான பகவந்தன், அ-ஸ்வதந்த்ரனான ஜீவனுக்கு மட்டும் பாவ- புண்ணியங்கள், சுக- துக்கங்களின் பலன்களைக் கொடுக்கிறான். இதனால், அந்த பகவந்தனுக்கு எவ்வித பலன்களும் / பிரயோஜனமும் இருப்பதில்லை. புருஷோத்தம யோகத்தின் சாராம்சத்தை இந்த நுடி சொல்கிறது.

**ஸ்லோகம்:**
**நானெ உத்தம மனஸு என்னல்லி மாடோ |**

**ஞான அஞ்ஞான பேளுவெ திளிது$^{3}$னோடோ ||**
**ஞான துர்லப$^{4}$ அவரவர ப$^{4}$க்திக$^{3}$ளந்தெ |**
**நானு கொடுவேனு ப$^{2}$லவ மனஸு ப$^{3}$ந்த$^{3}$ந்தெ ||7**

**பத:**
**ஸ்மரணெ மாடு$^{3}$த தே$^{3}$ஹ பி$^{3}$டு$^{3}$வரோ | என்ன படெ$^{3}$த$^{3}$வரு |**
**ப$^{3}$லுப$^{4}$க்தி மாடு$^{3}$வரோ |**
**அனந்தசேதன ஸுளிவேனு | ஹரி சுலப$^{4}$னு | மத்தெ ஜனனவில்லவகெ$^{3}$ |**
**என்ன ப$^{4}$க்தரிகில்ல நாஷவு | ஸ்வர்க்க தா$^{3}$ஷவு |**
**பிட்டு சரணப$^{4}$குதீயு ||7**

க்ஷர மற்றும் அக்ஷர புருஷர்களைவிட உத்தமனான காரணத்தால் அவன் புருஷோத்தமன். பகவத்கீதையின் வரும் 'மன்மனாபவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்கரு" வசனத்தையே இங்கு 'மனசு என்னல்லி மாடோ' என்று கூறியிருக்கிறார். 'ஞான விக்ஞான பேளுவெ' - அதாவது, விஷ்ணு சர்வோத்தமத்வத்தை விளக்கும் சாஸ்திரங்களைப் படிப்பதே ஞானம். பகவந்தனின் குண பூர்ணத்வம், தோஷங்கள் அற்ற தன்மை, அஷ்டகர்த்ருத்வ மற்றும் மகிமைகளை அறிந்துகொள்வதே விசேஷ ஞானம்.

ஏழாம் அத்தியாயம், 3லிருந்து 19வரையிலான ஸ்லோகத்தின் சாரமே 'ஞான துர்லப'. 'அவர பக்திகளந்தெ, நானு கொடுவெனு பலவ, மனசு பந்தந்தெ' என்றால், நான்கு விதமான பகவத் பக்தரின் மற்றும் பிற தேவதைகளை வழிபடும் பக்தர்களின் பக்திக்கு தக்கவாறு பலன்களைக் கொடுக்கிறேன். பலன்களைக் கொடுப்பதில், பகவந்தனுக்கு இருக்கும் பூர்ண ஸ்வாதந்த்ரயத்தை 'மனசு பந்தந்தெ' என்பதில் தெளிவுபடுத்துகிறார்.

தேகத்தை விடும் இறுதிக்காலத்தில், யார் பகவந்தனை நினைக் கிறார்களோ, அவர்கள் அவனையே அடைகிறார்கள். இந்த நிலையை அடைய வேண்டுமெனில், நிரந்தரமான சிரவணம் (பகவந்தனின் சிறப்புகளை / குணங்களைக் கேட்டல்), ஸ்மரணம்

(பகவந்தனின் சிறப்புகளை / குணங்களை நினைத்தல்), கீர்த்தனைகளை பக்தியுடன் செய்யவேண்டும்.

* 'அந்தகாலே ச மாமேவ' (8-5).
* 'தஸ்மாத் சர்வேஷு காலேஷு மாமனுஸ்மர' (8-7)
* 'ஸததம் கீர்த்தயந்தோ மாம்' (9-14).

மோட்சத்தை அடையவேண்டுமெனில், ஸ்ரீமதாசார்யர் சொல்வது இது. 'சந்ததம் சிந்தயேனந்தம் அந்தகாலே விசேஷத:'. இப்படி செய்தால், மறுபிறவி வாய்ப்பதில்லை. 'என்ன பக்தரிகில்லனாஷவு' என்றால், அவனின் பக்தர்களுக்கு நரக அவஸ்தைகள் இருப்பதில்லை என்று பொருள். 'ஸ்வர்க்கதாஷவு பிட்டு சரண பகுதிய' என்றால், பகவத் பக்தர்களுக்கு, எப்போதும் பரமாத்மனின் பாதாரவிந்தங்களையே நினைத்து பூஜிக்கும் ஆசை மட்டுமே இருக்கும். அதைத்தவிர, வேறு எந்த பலன்களையும் அவர்கள் எதிர்பார்ப்பதில்லை.

**ஸ்லோகம்:**
**கிருஷ்ண தோரிஸு நின்ன விபூ[4]தி ரூப |**
**இஷ்ட பூர்த்திய ஆகெ[3]லோ எனகெ[3] ஸ்ரீப |**
**ராமனானய்ய ராஜர கு[3]ம்பினல்லி |**
**ஸோம நானய்ய தாரக[1]ர மண்டலத[3]ல்லி ||8**

**பத:**
**அக்ஷரதொ[3]ளகெ[3] அகாரனு | குணஸாரனு | பக்ஷிகளல்லி நானு |**
**கருடனு சகல ஜாதிக[3]ளல்லி | ஸ்ரேஷ்ட தனத[3]ல்லி | என்னரூப திளியல்லி |**
**தோரிஸோ ஸ்ரீகிருஷ்ண நின்ன ரூப | நானா ரூப | அர்ஜுனனோடோரூப**
**கண்டனு தன்னனு ஸஹிதாதி[3] | ஹரி தே[3]ஹதி[3] | பிரம்மாண்ட[3]க[3]ளல்லி ||8**

பகவத்கீதையின் 10வது அத்தியாயமே விபூதி யோகம். இதில் சுமார் 20 ஸ்லோகங்களில், தனது பல்வேறு விபூதி ரூபங்களை நிரூபிக்கிறான் ஸ்ரீகிருஷ்ணன்.

வியாசராஜரின் கீதாசாரத்தின்படி, அர்ஜுனன் கிருஷ்ணனிடம் இவ்வாறு கேட்டுக் கொள்கிறான். 'கிருஷ்ண தோரிஸு நின்ன விபூதி ரூப'. தோரிஸு என்றால், என் கண்களுக்கும் தெரியும்படி காட்டு என்று பொருள். பகவந்தன், அனைத்து உலகங்களையும் நிர்மாணித்து, அதனை தன்னில் அடக்கிக்கொண்டிருப்பதால் 'கிருஷ்ணா' என்று அழைக்கப்படுகிறான். பகவந்தன், வெவ்வேறு ஜீவர்களில், பொருட்களில், தனதே ஆன விபூதி ரூபங்களில் அவற்றில் இருந்து, அவர்களை / அவற்றை நிர்வகித்து, நடத்துகிறான்.

கிருஷ்ண நாமத்தின் சிறப்புகளை விளக்குகிறார். 'ராம நானய்யா ராஜர கும்பினல்லி'. சூர்ய வம்சத்தில் அவதரித்த ராமாவதாரத்தின் சாட்சாத் விபூதி ரூபத்தை விளக்குகிறது. 'சோம நானய்யா தாரக மண்டலதல்லி' - சந்திர வம்சத்தில் அவதரித்த கிருஷ்ண அவதாரத்தையும், சந்திரனில் இருக்கும் விஜாதிய விபூதி ரூபத்தையும் குறிக்கிறது. அர்ஜுனனுக்குக் காட்டிய விஸ்வ ரூபத்தை 'நானா ரூப' என்கிறார். - அதாவது அந்த விஸ்வ ரூபத்தில் பிரம்மாண்டம், அனைத்து ஜீவராசிகள், பிரக்ருதி, தேவதைகள், கௌரவ பாண்டவர்கள் மற்றும் தன்னையும் (அர்ஜுனன்) ஸ்ரீஹரியின் உதரத்தில் கண்டு அர்ஜுனன் மெய் மறந்து நிற்கிறான்.

****ப்ராணேஷ கேசவ தாசர். பெங்களூரு**

தற்போதைய தொடர்கள் முடிந்தபிறகு, உங்கள் ஆதரவுடன் அடுத்து நம் பத்திரிக்கையில் வரவிருக்கும் தொடர்கள்: சுளாதி பக்கங்கள், அரிய தேவர நாமாக்கள், ஹரிகதாம்ருதசார சிறப்பு குறுக்கெழுத்துப் போட்டி, ஹரிதாச சாகித்யத்தில் வரும் அரிய கன்னட பதங்களுக்கு தமிழ் அர்த்தங்கள் & மேலும் பல.

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

## கிரந்தத்தின் உட்பொருள்

**** கன்னட மூலம்: திரு. சி.எஸ்.ஹுச்சுராவ்**

ஹரிகதாம்ருதசாரம் - ஸ்ரீஜகன்னாததாசரின் சிறந்த கிரந்தம். தாச சாகித்யத்தில் இயற்றப்பட்ட மிகவும் அபூர்வமான காவியம். க்ருதி ரூபியான ஸ்ரீஹரி, பக்தரின் மனதில், நாக்கில், எண்ணங்களில் நிலைகொண்டு தினம்தோறும் நல்அதிர்வினைத் தரும் சப்த-பிரம்மன். இந்த காவியத்தின் 32 சந்திகளையும் பக்தர்கள் பாராயணம் செய்யும் விதத்தில், இந்த க்ருதி-பிரம்மன் கண்டிப்பாக தரிசனம் தருவார். இதை கற்றுத்தரும், படிக்கும், பாடும் பக்தர்களுக்கு வாழ்க்கையின் சவால்களை எதிர்கொள்ளும் தைரியம் மற்றும் உற்சாகத்தை இந்த கிரந்தம் தருகிறது.

மருத்துவர் ஒரு நோயாளிக்குத் தேவையான மருந்துகளை ஒரு சீட்டில் எழுதித் தருவதைப் போல, நமது பவ-ரோகத்தை (பிறப்பு இறப்பு சுழற்சி) தீர்ப்பதற்கான மருந்தினை, இந்த காவியத்தின் வடிவில் எழுதித் தந்திருக்கிறார்கள். இதை பலமுறை படிக்குமாறு சொல்கிறார்கள். அப்படி இதை பலமுறை படித்து, பவ-ரோகத்தை தீர்த்துக்கொண்டவர்கள் பலர் உள்ளனர். மேலும் இதை பாராயணம் செய்பவர்களுக்கு, இந்த ஸ்லோகங்கள், அவை சொல்லும் உள் அர்த்தங்கள் ஆகியவற்றால் அவர்களின் உள்மனதிற்கு ஸ்ரீஹரியின் தரிசனம் கிடைக்கத் துவங்குகிறது. மனது தெளிவடைகிறது. வாழும் வாழ்க்கையை பார்க்கும் விதத்தில் மாறுபாடு வருகிறது. இதைப் படிப்பவர்கள், ஸ்ரீஹரியின் சர்வோத்தமத்வத்தை அறிந்து, அவரிடம் நெருங்கிப் போகின்றனர். இப்படிப்பட்ட சிறப்புகளைப் பெற்ற கிரந்தமே 'ஸ்ரீஹரிகதாம்ருத சாரம்'.

ஸ்ரீஹரியின் கதையே ஜீவனுக்கு அமிர்தம். மரணத்தை வென்று, மகிழ்ச்சியைத் தரும் அமிர்தம். அத்தகைய அமிர்த தத்வத்தின் சாரமே 'ஸ்ரீஹரிகதாம்ருதசாரம்'. 'மத்வமதத்தில் சொல்லப்பட்டி ருக்கும் ஸ்ரீஹரிபக்தி தத்வங்கள், தந்திரங்கள் ஆகியவை இங்கு சொல்லப்பட்டிருக்கின்றன. வேத புராணங்கள், உபநிஷத்கள், யோக சாஸ்திரங்கள், ஸ்ம்ருதிகள், இதிகாசங்கள் ஸ்ரீமதாசார்யரின் தத்வ கிரந்தங்கள் என இவை அனைத்தையும் முழுவதுமாகப் படித்து

அறிந்து, அவற்றிலிருக்கும் விஷயங்களை கிரகித்து, அதிலிருந்து வெளிவந்த பக்தரச அமிர்தமே, ஹரிகதாம்ருதசாரம்.

ஹரிகதாம்ருதசாரத்தின் பின் இவ்வளவு விஷயங்கள் / பொக்கிஷங்கள் உள்ளன. மத்வரின் சித்தாந்தத்தை விவரிக்கும் நூல் என்று இந்த கிரந்தத்தின் எல்லையை வரையறுத்துவிட முடியாது. சாஸ்திரங்களில், வேத உபநிஷத்களில் மறைந் திருக்கும் அரும் தத்வங்களை, சாதாரண மக்களுக்கு எட்டாமல் இருந்த, சமஸ்கிருத மொழியில் சொல்லப்பட்டிருந்த கருத்துகளை, கன்னட மொழியில் சரளமான நடையில் அனைவருக்கும் புரியுமாறு இயற்றியிருக்கிறார் தாசர். ஆனால் சமஸ்கிருத கிரந்தங்களுக்கு நடுவே கன்னடத்தில் இயற்றப்பட்ட இந்த ஹரி கதாம்ருதசாரம் பக்தர்களை நெருங்காமல் போய்விடும் அபாயம் இருந்தது. தாச சாகித்யத்தின் மிகச்சிறந்த கிரந்தமானது யாருக்கும் எட்டாமல் போய்விடக்கூடிய சூழல் இருந்தது. ஆனால் அப்படி நடக்கவில்லை. பக்தர்கள் இந்தக் கிரந்தத்தை ஏற்றுக் கொண்டு, இதிலுள்ள கருத்துகளை கற்றறிந்து அமரர் ஆகியிருக்கின்றனர். இதுவே மிகவும் மகிழ்ச்சிகரமான விஷயமாகும்.

நம் வாழ்க்கையை சுத்தப்படுத்தும், தரம் உயர்த்தும் ஒரு அரு மருந்தாக ஹரிகதாம்ருதசாரம் இருக்கிறது. இந்த மாற்றம் சுலபமான செயல் அல்ல. எப்போதும் கெட்ட / தேவையற்ற விஷயங்களைப் பற்றி சிந்தித்திருக்கும் மனதை வெல்லும் செயலாகட்டும், கோபம்-த்வேஷம் ஆகியவற்றிலிருந்து வெளி வருவதாகட்டும் மனிதனுக்கு மிகவும் கடினமான செயலாகும். ஆகையால், நாம் செய்யும் ஒவ்வொரு செயல்களின்போதும் ஸ்ரீஹரியை நினைத்துக்கொண்டே இருந்தால், மேற்சொன்ன மாற்றமானது மெதுவாக சாத்தியப்படும். தினமும் செய்யும் குளியலிலிருந்து, முத்ரா-தாரணம், பூஜை, பிம்போபாசனை, சிரார்த்தம் முதலானவை, சாப்பிடும்போது இப்படி ஒவ்வொரு செயல்களின்போதும், ஸ்ரீஹரியை நினைத்து, சாதனை வழியைப் பிடிக்கவேண்டும் என்று ஹரிகதாம்ருதசாரம் சொல்கிறது.

ஒரு ஸ்லோகத்தில் ஜகன்னாததாசர் இவ்வாறு சொல்கிறார்.

மூரு கா1லங்க3ளலி து1தி1ஸே ஷ
ரீர வாங்மன ஷுத்தி3மாள்பு1து3
தூ3ரகை3ஸுவுத1கி1ள பா1ப1ஸமூஹ ப்ரதி1தி3னவு |
[சந்தி 32. ஸ்லோகம் 55]

இது பக்தர்களின் மனதில் அமைதியை நிரப்புகிறது. இதுவே வாழ்க்கையில் நமக்குத் தேவையான ஒன்றாகும்.

மளே பி3ஸிலு ஹஸி த்1ருஷே ஜயாஜய
க2ளர நிந்தா3னிந்தே3 ப4யக3ளி
க3ளுக1த3லெ மத்தா3னெயந்த3தி3 சரிஸு த4ரெயொளகெ3 ||
[சந்தி 12 ஸ்லோகம் 18]

ஸ்ரீஹரியின் நற்குணங்களை நன்கு அறிபவர்கள், இந்த வாழ்க்கை என்னும் கடலை பிரச்னையில்லாமல் கடப்பார்கள். எனவே, தர்ம, அர்த்த, காமம் ஆகியவற்றைக் குறித்து எண்ணாமல், அந்த விஷ்வ குடும்பி (ஸ்ரீஹரி) கொடுத்த கணான்ன (ஒரு பருக்கை அரிசி) மற்றும் குத்ஸித (சிறிய கம்பளித் துண்டு) ஆகியவற்றையே பெரும் வரமாக / உதவியாகக் கருதி அவரின் சரணார விந்தங்களை வணங்கவேண்டும். (சந்தி 5 ஸ்லோகம் 7)

ஹரிகதாம்ருதசாரத்தில் வர்ணிக்கப்பட்டிருக்கும் ஸ்ரீஹரியானவர் மிகவும் கருணை மிக்கவர். 'பாலகன கலபாஷெ ஜனனியு கேளி சுகபடுவந்தே' (ஒரு மழலையின் பேச்சுகளைக் கேட்கும் தாய் எப்படி மகிழ்வாளோ அப்படி ஸ்ரீஹரியும் தன் பக்தர்களின் பிரார்த்தனைகளை மகிழ்ச்சியுடன் ஏற்கிறார்) என்று பக்தர்களின் ஸ்தோத்திரங்களுக்கு செவிசாய்க்கிறார். 'ஒந்தக்ஷர தப்பாகி உச்சரிசிதரு பாப' (ஒரு எழுத்து தவறாக உச்சரித்தாலும் அது பாவம்) என்று முன்னர் சொன்னதை, இந்த ஸ்தோத்திரமானது மறுத்திருக்கிறது. ஒரு தாயைப் போல பக்தர்களின் விண்ணப்பங்களைக் கேட்டு மகிழ்கிறார் ஸ்ரீஹரி என்று தைரியம் கொடுக்கிறது.

தனக்குக் கிடைத்த செல்வத்தை யாருக்கும் கொடுக்காமல் தானும் எதுவும் செய்யமுடியாமல் ஒரு பாம்பு எப்படி அதை பாதுகாத்து வருமோ, அதைப்போல ஶ்ரீஹரியும் தன் பக்தர்களை அரவணைத்து பார்த்து மகிழ்ந்திருப்பார் என்கிறார் தாசர். பெற்றோர் தன் குழந்தைகளுக்கு வந்த பிரச்னைகளைத் தீர்த்து, அவர்கள் கேட்டவற்றை எல்லாம் வாங்கிக்கொடுத்து, பார்த்துக் கொள்வதைப்போல, ஶ்ரீஹரியும் தன் பக்தர்களைக் காப்பாற்றுகிறார். எப்போதும் நம்கூடவே வரும் நிழலைப் போலவே ஶ்ரீஹரியும் தன் பக்தர்களுடன் இருக்கிறார். கண்களை இமை காப்பதுபோல, பற்கள் பழங்களை நன்கு கடித்து, அவற்றின் சாறினை மட்டும் நமக்கு அனுப்புவதைப்போல, ஶ்ரீஹரியும் நம்மை காப்பாற்றுவதற்கு ஓடி வருகிறார்.

ஒரு இருட்டறையில் ஒளிந்திருந்து, தன் குழந்தை தன்னைக் காணாமல் அழுவதைக் காணும் தாய், எப்படி நமுட்டுச் சிரிப்புடன் வெளியில் ஓடோடி வந்து அந்தக் குழந்தையை வாரி அணைத்துக் கொஞ்சுவாளோ, மதுசூதனனும் பக்தர்களைக் காப்பாற்றுகிறார். ஶ்ரீஹரியின் இந்த கருணையை விளக்குவதே ஹரிகதாம்ருதசாரத்தின் உட்பொருளாகும்.

பக்தர்களின் மனங்களுக்கும், வேதங்களில் சொன்னவற்றிற்கும் ஶ்ரீஹரியானவர் மிகவும் தூரமானவர் (அவற்றினால் தொடர்பு கொள்ளமுடியாதவர்) என்று சொன்னால், பிறகு அவரை நம்மால் மகிழ்ச்சிப்படுத்தவே முடியாதா என்னும் பக்தனின் கேள்விக்கு, அப்படியில்லை என்று சமாதானப்படுத்துகிறார் ஜகன்னாததாசர். ஶ்ரீஹரியானவர், பக்தர்களின் தூய்மையான பக்திக்கு கண்டிப்பாக செவிசாய்க்கிறார், தன்னை நினைப்பவர்களின் அருகிலேயே எப்போதும் இருக்கிறார், அவர்களின் பாடல்களுக்கு தன்னை வெளிப்படுத்துகிறார் என்கிறார் தாசர்.

ஜகத்-சத்யம் என்னும் பல தத்வங்களை உள்ளடக்கிய மஹா-அமிர்தமே ஹரிகதாம்ருதசாரம். அதுவே இந்த கிரந்தத்தின் உட் பொருளாகும். இந்த கிரந்தம் சாதகர்களின், அறிஞர்களின் கை

விளக்காகும். மத்வ தத்வங்களுக்கு காவிய நடையில் எழுதப்பட்ட உரை என்றும் இந்த கிரந்தத்தைச் சொல்லலாம். ***

## போட்டி

## மாதாந்திர குறும்போட்டி
## நவம்பர் 2019ன் விடைகள்

1. அவருக்கு தாச தீக்ஷையை பெற்றுத்தர.
2. வைராக்ய. 3. மனைவிக்கு.
4. கனகதாசர், வைகுண்ட தாசர்.
5. ஆதத்தெல்ல ஒலிதே ஆயித்து.
6. புரந்தரோபநிஷத்.
7. பிள்ளரி (பிள்ளாரி) கீதே.
8. புஷ்ய அமாவாசை.
9. நாரதர்.
10. சுதாமா சரித்ரெ, கஜேந்திர மோக்ஷ, திரௌபதி வஸ்திராபஹரண, சர்வோத்தம கத்யா.

* சில கேள்விகளுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட சரியான பதில்களும் இருக்கலாம். அவற்றில் ஒன்றை மட்டுமே இங்கு குறிப்பிட்டுள்ளோம்.

* விடையளித்த 9 பக்தர்களின் பெயர்களையும் இங்கு பட்டியலிட முடியாததற்கு மன்னிக்கவும்.

* இந்த மாதம் இப்போட்டியில் புத்தகப் பரிசினைப் பெறும் இருவர்

- திரு.ரகூத்தமன், பெங்களூரு (134)
- திருமதி.கிரிஜா ஸ்ரீனிவாஸ், சென்னை (171)

* இதனால் மற்றவர்களின் விடைகள் தவறு என்று இல்லை.

* ஹரிபக்தர்கள் அனைவரும் இப்போட்டியில் பங்கேற்குமாறு கேட்டுக் கொள்கிறோம். ***

ஹரிதாச விஜயம் பத்திரிக்கையை உங்கள் நண்பர்கள் / உறவினர்கள் / குழுவினர்களிடம் அறிமுகம் செய்து, அவர்களும் நமது சாகித்யத்தைப் பற்றி அறிவதற்கு உதவவும்.

BOOK POST

ஸ்ரீ குருகோவிந்தவிட்டல தாசர்

If Undelivered, please return to:
Sathya Narayanan,
380, 2A Main,16th Cross
JP Nagar 4th Phase
Bengaluru 560078

To:

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்

Haridasa Vijayam - Monthly

*மலர் 1 ** டிசம்பர் 2019 ** இதழ் 3*

ஸ்ரீவித்யா பிரசன்ன தீர்த்தர்

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்

Haridasa Vijayam - Monthly

மலர் 1 ** ஜனவரி 2020 ** இதழ் 4



ஸ்ரீபுரந்தரதாசர்

# ஹரிதாச விஜயம்

## சந்தா விவரம் (36 பக்கங்கள்)

1 ஆண்டுக்கு ரூ.200/- 3 ஆண்டுகளுக்கு ரூ.500/-

5 ஆண்டுகளுக்கு ரூ.900/- 10 ஆண்டுகளுக்கு ரூ.1700/-

புதிய சந்தாக்கள் அந்தந்த மாதத்திலிருந்து துவங்கும். பழைய இதழ்கள் வேண்டுமெனில், இதழுக்கு ரூ.20/- என சேர்த்து அனுப்பவும்.

## வங்கி விபரம்:

Sathya Narayanan, ICICI Bank - Savings account

A/c. No. 000101043177. IFSC: ICIC0000001

Cenotaph Road Branch, Chennai 18

போட்டி

மாதாந்திர குறும்போட்டி

டிசம்பர் 2019ன் விடைகள்

1. கோண 2. அங்கிதத்தை தானே வைத்துக் கொண்டார்.
3. நானு ஹோதரே ஹோதேனு
4. ஹரிபக்திசார, ராமதான்ய சரிதெ, மோகன தரங்கிணி 5. தவறு
6. கேசவ & நரசிம்ம கோயில்களுக்கு ஜீர்ணோத்தாரணம் செய்தார்
7. யம
8. தேங்காயில் துளசி காண்பித்தார். அரிசி கஞ்சியை நைவேத்தியம் செய்தார்
9. அரிசி / ராகி 10. கிருஷ்ண

* சில கேள்விகளுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட சரியான பதில்களும் இருக்கலாம். அவற்றில் ஒன்றை மட்டுமே இங்கு குறிப்பிட்டுள்ளோம்.

* விடையளித்த 5 பக்தர்களின் பெயர்களையும் இங்கு பட்டியலிட முடியாததற்கு மன்னிக்கவும்.

** தொடர்ச்சி பின் அட்டையில்....

போட்டி

## மாதாந்திர குறும்போட்டி
## ஜனவரி 2020 - பகவத்கீதா சாரம்

இந்த இதழுடன் முடிவடையும் பகவத்கீதா சாரத்தைப் பற்றிய கேள்விகள் இவை.

1. ஹரிதாச சாகித்யத்தில் இது எந்த வகையைச் சேர்ந்ததாகும்?
2. இதில் மொத்தம் எவ்வளவு ஸ்லோகங்கள் உள்ளன?
3. __ செய்யவில்லையெனில் மோட்சம் எப்படி கிடைக்கும் என்று ஸ்ரீகிருஷ்ணர் கேட்கிறார்.
4. சிறந்த யக்ஞம் எது?
5. ஸ்ரீஹரியிடம் பக்தி செய்பவனுக்கு எது இல்லை (எதிர்காலத்தில் வராது?).
6. ஸ்ரீகிருஷ்ணன் ஏன் க்ஷேத்ரக்ஞன்?
7. கிருஷ்ணா, உன்னுடைய __ ரூபத்தைக் காட்டு என்கிறான் அர்ஜுனன்.
8. க்ஷர-அக்ஷர இரடக்கு உத்தமனு. க்ஷர என்றால் யார்?
9. முக்திக்கு யோகமும் ____ம் வேண்டும்.
10. கடமையை செய்வதில் மட்டுமே உனக்கு அதிகாரம். ___ என் இஷ்டம் - ஸ்ரீகிருஷ்ணர்.

* தயவு செய்து அனைவரும் இதில் பங்கேற்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.
* இருவருக்கு புத்தகப் பரிசு கிடைக்கும்.
* ஜனவரி 20க்குள் உங்கள் விடைகளை அனுப்பவும்.

*****

(முன் அட்டையிலிருந்து தொடர்ச்சி)

* இந்த மாதம் இப்போட்டியில் புத்தகப் பரிசினைப் பெறும் இருவர்
  * திரு. நாகராஜன், சென்னை & திரு.ஸ்ரீதர், பெங்களூரு.
* இதனால் மற்றவர்களின் விடைகள் தவறு என்று இல்லை.
* ஹரிபக்தர்கள் அனைவரும் இப்போட்டியில் பங்கேற்குமாறு கேட்டுக் கொள்கிறோம். ***

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா



நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

சிரி நிலயன குணகள '**திளிது**' பஜிசுவுதே

மலர் : 1 இதழ் : 4

**நிர்வாக ஆசிரியர்**

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross,
JP Nagar 4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276. haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**

'தாச சாகித்ய சேவா ரத்ன'
திரு. குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**

திரு. முரளிதர தாசரு, திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா, திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

## ஆசிரியர் பக்கம்

இந்த மாதம் நம் அனைவருக்கும் மிகவும் முக்கியமான மாதம் ஆகும். ஹரிதாச சாகித்யத்தில் இரு பெரும் ஆளுமைகளின் புண்ணிய தினம் வரும் மாதம். புரந்தரோபனிஷத் என்று தம் கிருதிகளுக்கு பெருமை சேர்த்த ஸ்ரீபுரந்தரதாசர் மற்றும் ஹரிகதாம்ருதசாரம் என்னும் மேரு-கிருதியை இயற்றிய ஸ்ரீஜகன்னாத தாசருக்கு ஆயுள் தானம் கொடுத்த ஸ்ரீகோபாலதாசரின் புண்ணிய தினங்களே அவை. அவரவர்களின் புண்ணிய தினங்களில் மட்டுமே அவர்களை நினைக்க வேண்டும் என்று இல்லை. அன்று விசேஷமாக நினைவு கூறவேண்டிய நாள் என்று வேண்டுமானால் சொல்லலாம்.

ஸ்ரீபுரந்தரதாசரைப் பற்றி பிற ஹரிதாசர்கள் பாடிய குறிப்புகள் மற்றும் ஸ்ரீகோபாலதாசரின் ஒரு பாடல் அதன் அர்த்தத்துடன் இந்த இதழில் கொடுக்கப்பட்டுள்ளது. ஸ்ரீபுரந்தரதாசர், ஸ்ரீகோபாலதாசர் இவர்களின் கிருதிகளைப் பாடி, கேட்டு, புரிந்துகொண்டு, முறையே அவர்களின் அந்தர்யாமியான புரந்தரவிட்டலன் மற்றும் கோபாலவிட்டலனின் (இருவரும் ஒருவரே என்னும் ஐக்கிய சிந்தனையுடன்) அருளைப் பெற முயல்வோம்.

இந்த இதழுடன் முடிவடையும் பகவத்கீதாசாரத்தைப் பற்றி கேள்வி-பதில் பகுதியில் கேள்விகள் கேட்கப்பட்டுள்ளன. பகவத் கீதை தொடரில் அடுத்தபடியாக கீதையின் கருத்துகள் ஹரிகதாம்ருதசாரத்தில் எப்படி வந்திருக்கின்றன என்பதை அடுத்த இதழிலிருந்து பார்ப்போம்.

உங்களின் தொலைபேசி எண் & ஈமெயில் முகவரி (இருந்தால்), இதுவரை தெரிவிக்காதவர்கள், எங்களுக்குத் தெரிவிக்கவும். ஹரிதாச விஜயம் குறித்த மேலதிக தகவல்களை அனுப்புவதற்கு இவை உதவும்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

**‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்**

தொடர்

## ஹரிதாச சாகித்யம்

## ஹரிதாசர்களின் சாதனை க்ஷேத்திரங்கள்

பொதுமக்கள் வெவ்வேறு ஊர்களில், தத்தம் வேலைகளில், வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும்போதே, அவர்களிடத்தில் பக்தியை, அதன் சுவாரஸ்யத்தை உண்டு பண்ணுவதே / வளர்ப்பதே ஹரி தாசர்களின் வேலை. மக்களின் தினப்படி வாழ்க்கையில் பிரச்னைகள் வந்தபோது, இந்த வாழ்க்கையின் நிலை, அர்த்தம் குறித்து சந்தேகம் வந்தபோது, பக்தியை ஊன்றுகோலாக பிடித்துக் கொண்டு, நிம்மதியாக அவர்கள் வாழட்டும் என்ற யோசனையை வழங்கும் வேலை ஹரிதாசர்களுடையது.

ஹரிதாசர்கள் பாடியதெல்லாம் நாராயணனின் கீர்த்தனைகள். நடந்ததெல்லாம் தீர்த்த யாத்திரைகள். செய்யும் அனைத்து செயல் களும் ஹரிசேவை. ஹரிதாசர்களுக்கு பகவந்தனே கதி. ஸ்ரீ ஹரியே அவர்களின் புத்தி. பகவந்தனின் ப்ரீதிக்காகவே அவர்கள் செய்வது அனைத்தும். கர்வம், பொறாமை ஆகியவற்றை விட்டு, ஹரிஸ்மரணையுடன் வாழ்வதே சிறந்தது என்பதே தாசர்களின் முடிவு.

சாதனையின் நோக்கம் - பகவந்தனிடம் பக்தி. ஹரிதாசர்கள் விட்டலனின் பக்தர்கள். ஞானத்தை சம்பாதிக்க வேண்டுமென்று உபதேசிப்பவர்கள். ஞானமானது வெறும் சொற்களுக்கான பொருளாக இல்லாமல், அது பக்தியாக மாற்றம் கொள்ள வேண்டும் என்று உபதேசம் செய்பவர்கள். ஸ்ரீஹரி தரிசனம் கொடுப்பது பக்திக்கு மட்டுமே. வயதிற்கோ, கல்விக்கோ, ஜாதிக்கோ, திறமைக்கோ, செல்வத்திற்கோ, வடிவத்திற்கோ அவன் தரிசனம் கொடுப்பவன் அல்ல.

மக்களின் தவறுகளை சுட்டிக்காட்டி திருத்துபவர்கள் ஹரி தாசர்கள். சரீரத்தின் அனைத்து உறுப்புகளும் ஸ்ரீஹரியின் சேவை க்காகவே இருக்கிறது என்று முடிவு செய்தவர்கள். தற்காலிக விஷயங்களில் ஆசை வைக்காமல், விரக்தராக இருந்து, பகவந்தனிடம் பக்தி செய்பவர்கள். நரலோகத்தின் பயத்தை விட்டு நரசிம்மனை வழிபடுபவர்கள். அன்னம், பானம் (சாப்பிடுவது,

குடிப்பது) ஆகியவற்றில் ஆசை வைக்காமல், அன்னபிரம்மனை காண்பதில் ஆசைப்படுபவர்கள்.

இன்று, நாளை என்ற யோசனையை விட்டு, இந்திரேசனின் வியாபாரத்தை நினைப்பவர்கள். பகவந்தனுக்கு அர்ப்பணம் செய்யாதவற்றை என்றும் உட்கொள்ளாதவர்கள். ஸ்வதர்மத்தை விட்டுக் கொடுக்காமல், அனைத்து இடங்களிலும் விஸ்வ ரூபத்தைக் கண்டு, உண்டது / உடுத்தியது எல்லாம் யக்ஞும் என்று நினைத்து, பகவந்தனின் கதையில் மெய்மறந்து பாடி, ஆடி, ஆனந்த மய வசமாகுபவர்கள். வெட்கத்தை விட்டு கெஜ்ஜெயைக் கட்டி, மூன்று உலகத்திற்கும் தலைவனானவனை, ஒவ்வொரு காலடி யிலும் நினைத்தவாறு இருப்பவர்கள். பிம்போபாசனையே ஹரி தாசர்களின் முக்கிய சாதனா மார்க்கமாகும்.

ஸ்ரீஹரியின் தாசராக வாழ்ந்து, அவனின் மகாமகிமைகளை நன்றாக அறிந்து, கிடைத்ததில் / இருப்பதில் மகிழ்ச்சியடைந்து, காலில் கெஜ்ஜெயைக் கட்டி, வெட்கத்தை விட்டு, ஹரியின் நாமத்தையே பாடியவாறு, பிக்ஷை பெற்று வாழ்ந்து, ஸ்ரீஹரியின் கருணையை சம்பாதித்து, நிரந்தரமான ஸ்ரீஹரி லோகத்தின் வழியை அனைவருக்கும் காட்டிக் கொடுத்த தாசஸ்ரேஷ்டரான புரந்தரதாசரை, ஸ்ரீவியாசராஜர் இவ்வாறு வர்ணிக்கிறார்.

நீதி[1] எல்லவனரிது[1] நிக[3]மவேத்[3]யன நித்[1]ய
வாத[1]சுத[1]னல்லிஹன வர்ணிசுதலி
கீ[3]தா நர்த்த[1]னதிந்த[3] கிருஷ்ணன பூஜிசுவ
பூ[1]தா[1]த்ம புரந்தரதாசரிவரய்யா

என்று ஸ்ரீவியாசராயர் சொன்னது, அவரை புகழ்ந்ததாகவும் சரி; ஹரிதாசர்கள் இப்படிதான் இருக்கவேண்டும் என்று சொன்னதாகவும் எடுத்துக் கொள்ளலாம்.

## ஹரிதாசரின் அங்கிதம்

ஒரு தங்க வியாபாரியாக தன் வாழ்க்கையை நடத்தி வந்த கஞ்சனான சீனப்ப நாயக்கர், தன் மனைவியின் மூக்குத்தி

சம்பந்தப்பட்ட ஒரு சம்பவத்தால் விரக்தனானார். வீடு, வாசல், செல்வம் அனைத்தையும் தானம் செய்து, தன் மனைவி மற்றும் மக்களுடன், குருவைத் தேடிச் சென்றார். ‘கு3ருவின கு3லாம னாகு3வ தனக1 தொ3ரெயதண்ண முகு1தி1’ என்றார்.

குரு உபதேசம் இல்லாத ஞானம், ஸ்னானம், தியானம், ஜப தபம், தந்த்ர மந்திரங்கள் என அனைத்தும் பயனற்றவை என்பதை அறிந்த சீனப்ப நாயக்கருக்கு, குரு வியாசராஜர் மிகுந்த கருணை யுடன் புரந்தரவிட்டல என்னும் அங்கிதத்தைக் கொடுத்தார்.

அங்கி1த1வில்லத3 தே3ஹ நிஷித்த4
அங்கித1வில்லத3 கா1வ்ய ஸோபிசது
அங்கித1வில்லதெ3 இரபாரதெ3ந்து ச
க்1ராங்கி1த1வனு மாடி என்னங்க3க்கெ1
பங்க1ஜனாப ஸ்ரீபுரந்தரவிட்டலன
அங்கி1த1வனகித்த3 குரு வ்யாசமுனிராயா

என்று குரு வியாசராஜரால் கொடுக்கப்பட்ட தப்த முத்ராவை தன் தேகத்தில் தரித்து, புரந்தரவிட்டலா என்னும் அங்கிதத்தைப் பெற்று, தாசதீக்ஷையைப் பெற்றதாக தெரிவிக்கிறார்.

வியாசராயர சரண க1மல த3ர்ஷனவென
கே3ஸு ஜன்மத3 சுக்ருத1 ப4லதி தொ3ரகி1து1, என்ன
சாஸிர கு1லகோ1டி பா1வனவாயிது
ஸ்ரீஷன ப4ஜிசுவத3க1தி3கா1ரி நானாதே3
தோ3ஷ ரஹித1னாத3 புரந்தரவிட்டலன
தாசர க1ருணவு என்ன மேலே இரலாகி3

தன் பிறவிப்பயனால், இந்தப் பிறவியில் வியாசராஜரின் தரிசனத்தால், தமது மட்டுமல்ல தம் ஆயிரக்கணக்கான குலமும் (பரம்பரை) பவித்ரமடைந்தது என்கிறார். குரு உபதேசத்தினால் தாம் ஸ்ரீஹரியை பஜிப்பதற்கு தகுதி பெற்றேன் என்றும் கூறுகிறார். மேற்கண்ட இந்த இரு பத்யங்களினால் அங்கிதத்தின் மகத்துவம் புரிகிறது. அங்கிதம் இல்லாத தேகம் வீண். அங்கிதம் இல்லாத காவியம் புகழடையாது என்று தெரிவித்திருக்கிறார்.

** **கன்னட மூலம் : திருமதி. ஜெயம்மா, பெங்களூரு**

தொடர்

# ஹரிதாசர்களின் வாழ்க்கை வரலாறு

## ஸ்ரீகுருகோவிந்தவிட்டல தாசர்

பரமப்ரிய ஸ்ரீசுப்பராய தாசர் தேவராயன துர்காவில் ஸ்ரீ நரசிம்மர் சன்னிதியில் தாசகூட சபா மந்திர என்கிற அமைப்பை நிறுவி, ஆயிரத்துக்கும் மீறிய உத்தம ஜீவர்களுக்கு அங்கிதம் அளித்து சத் உபதேசங்கள் செய்து க்ருதக்ருத்யரானார். ஹரிதாச பரம்பரையை வளர்த்த ஓர் உத்தம புருஷர் இவர். அது மட்டுமின்றி, ஒவ்வொரு மாதமும் 'பரமார்த்த சந்திரோதய' என்னும் ஆன்மிக மாத இதழை நடத்தி தாச சாகித்யங்களின் மேன்மையை விவரித்தும் வந்தார். அவருடைய அருமை பெருமைகளை அறிந்த அன்றைய அரசு, அவரை ஒவ்வொரு வாரமும் பெங்களூர் ஜெயிலுக்கு வந்து கைதிகளுக்கு தர்மோபதேசம் செய்யும்படி வேண்டிக்கொண்டது. அவ்வாறே, அவரும் செய்து பல சிறைக் கைதிகளின் மன நிலையை மாற்றினார். பல கைதிகள் பின்னால் நல்ல வழியில் செல்ல வழி வகுத்தார்.

கோவிந்த ராயருக்கு சுப்பராய தாசரிடம் அங்கிதம் பெறவேண்டும் என்ற தீவிர வேட்கை ஏற்பட்டது. ஸ்ரீராமசந்திர ராயரின் ஆணைப் படி ஸ்ரீகோவிந்த ராயர் 1940ம் ஆண்டு சுப்பராய தாசரைக் காண தேவராயனதுர்கா சென்றார். அப்போது அங்கு ரதோத்ஸவம் நடக்கும் சமயம். கூடவே முக்யபிராணரின் பிரதிஷ்டையும் நடை பெற இருந்தது. அங்கு தாசகூட சபா மண்டபத்தில் கோவிந்த ராயர், சுப்பராய தாசரைக் கண்டார். அவர் திருவடிகளில் சாஷ்டாங்கமாக விழுந்தார். அவருடைய அருளை வேண்டி மனமுருக வேண்டினார்.

சுப்பராய தாசரின் அருள் கோவிந்த ராயர் மேல் விழுந்தது. அவரைத் தழுவி, எழுப்பினார். அவரது நலனை விசாரித்தார். வாத்சல்ய பாவத்துடன் வார்த்தைகளை அளாவினார். குளிர்ந்த பார்வையால் பார்த்தார். கருணைக் கடாட்சம் கிடைத்தது. கோவிந்த ராயர், குருகோவிந்தவிட்டல தாசர் ஆனார்.

பிரமாதி ஆண்டு பால்குண மாதம் பகுள பிரதிபதா திதி, தேதி 24.3.1940 அன்று சுப்பராய தாசர், கோவிந்தராயருக்கு மந்திரோபதேசம் அளித்து அங்கிதம் கொடுத்தார். பரம பாவன தினம். குரு கோவிந்த தாசர் அவதாரம் ஆனார். சுப்பராய தாசர் எழுதிய அங்கித பதம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது. மிகவும் உயர்ந்த பதம் இது.

'குரு கோவிந்த விட்டலனே' நீனிவர
கருணா கடாக்ஷ திந்தீக்ஷிஸூத காபாடோ ஹரியே (ப)

கருட கமனனே தேவ கர்வகள பரிஹரிஸி
சர்வாந்தராத்மகனே ! காபாடோ ஹரியே !! (அனுபல்லவி)

ஸ்ருஷ்ட்யாதி கர்த்தனே சுகுண மூருதி தேவ
கஷ்டகள பரிஹரிஸி காபாடோ ஹரியே
கிருஷ்ணமூர்த்தி ஹ்ருதய அஷ்டதள மத்யதலி
த்ருஷ்டி கோசரராகி காபாடோ ஹரியே (1)

அபார மஹிமனே ஆபத்பாந்தவனாகி
தாபத்ரயகள கடிது காபாடோ ஹரியே
கோப-தாபாதி துர்க்ககளளெ பரிஹரிஸி பவ
கூபதிந்தெந்தி நீ காபாடோ ஹரியே (2)

ஹரியே சர்வோத்தமனு சிரிவாயு மொதலாத
சுரரெல்ல கிங்கரரெம்ப
பரமபுருஷனே தந்தெமுத்துமோகன விட்டலனே நின்ன
பரதராத்மக பாத திவ்யரூபவ தோரி காபாடோ ஹரியே (3)

தந்தெமுத்துமோகன விட்டலா என்பது சுப்பராய தாசரின் அங்கிதமாகும். அங்கிதம் கொடுத்தபோது குருகோவிந்தவிட்டல தாசருக்கு அந்தரங்கத்தில் கதவு திறந்தது. பிம்பமூர்த்தியின் தரிசனம் கிடைத்தது. ஹரிதாச பதவி அற்புதமாகக் கிடைத்தது. சுப்பராய தாசரின் கடைசி சிஷ்யர் குருகோவிந்தவிட்டல தாசர்

தான். இவருக்குப் பிறகு சுப்பராய தாசர் யாருக்கும் அங்கிதம் கொடுக்கவில்லை.

குருகோவிந்தவிட்டல தாசருக்கு அங்கிதம் அளித்தபின், சரியாக 20 நாட்களில் சுப்பராய தாசர் தம்முடைய 75ம் வயதில் வைகுண்ட பிராப்தியடைந்தார். அப்போது மிகவும் துக்கத்துடன் குருகோவிந்தவிட்டல தாசர், 'தெரளிதரோ தந்தெ முத்து மோகனரோ மரளி பாரத புரி நரஹரிபுரக்கெ' என்னும் கீர்த்தனையில் தம் குருகளின் மகிமையை மிகவும் அழகாக வர்ணித்திருக்கிறார்.

வர சைத்ர பஞ்சமி வருஷவு விக்ரம
ஷரணர பொரெயலு கரிகிரியல்லே |
குருமுக்ய பிராண ப்ரதீகவ நிலிஸுத
ஆரு மூரனே தின ஹரிய சேருவெனெனுதா ||

இதன் பின், தாசரின் வாழ்க்கை முறையே மாறியது. தாசர் தினந்தோறும் ஆன்ஹிகத்துடன் மகாமந்திரம் போல, குருவினால் வழங்கப்பட்ட அங்கித பதத்தைப் பாடிவரலானார். தினமும் குருவின் கருணையை வியந்து ஆனந்தப்பட்டார். ஆனந்தக் கண்ணீர் விட்டார். குருவின் மீது பதங்களைப் பாடினார். அந்தப் பதங்களை குருவின் பாதங்களில் அர்ப்பணித்தார்.

பரமப்ரிய சுப்பராய தாசரின் சிஷ்யர்களில் ஒருவரான மாகடி ரங்கப்பனிடம், குருவானவர், தன்னிடம் அங்கிதம் வாங்கும் அனைவருக்கும் ஒரு தம்புரா கிடைக்கும்படி செய்வது அவர் வேலை என்று சொல்லியிருந்தார். அதை ரங்கப்பன் அப்படியே கடைப்பிடித்தார். சுப்பராய தாசர், வைகுண்ட யாத்திரை செய்வதற்குமுன், ரங்கப்பனிடம், நம் தாசருக்கும் ஒரு தம்புரா செய்து கொடுக்கும்படி சொல்லிவிட்டுச் சென்றார். அதன்படியே, தன்னுடைய கடைசி தம்புராவை செய்த ரங்கப்பன், அதை குருவின் ஆணைப்படி, தாசரிடம் கொடுத்தார். தாசருக்கு அந்தத் தம்புரா, தன் குருவின் பிரதிபிம்பம் போல தெரிந்தது.

தாசர் பஜனை, ஏகாதசி ஜாகரணை, ஹரிதாச சாகித்ய சர்ச்சை இவைகளை ஆராதிக்கத் தொடங்கினார். பல தீர்த்தங்களுக்கு, க்ஷேத்திரங்களுக்கு விஜயம் செய்ய ஆரம்பித்தார். பல குருகளின் ஆராதனை விழாக்களில் கலந்து கொள்ளவும் துவங்கினார்.

** **திரு. குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்**

தொடர்

## மனப்பாடப்பகுதி

## உணவுப் பொருட்களில் ஸ்ரீஹரி ரூபங்கள்

| உணவு வகைகள் | அபிமானி தேவதைகள் | இவற்றில் உள்ள ஸ்ரீஹரியின் ரூபம் |
|---|---|---|
| அன்னம் | சந்திரன் | கேசவன் |
| பாயசம் | பாரதி | நாராயணன் |
| பட்சணங்கள் | சூரியன் | மாதவன் |
| நெய் | லட்சுமி | கோவிந்தன் |
| பால் | சரஸ்வதி | விஷ்ணு |
| மண்டிகை (இனிப்புகள்) | பிரம்மன் | மதுசூதனன் |
| வெண்ணெய் | வாயுதேவர் | த்ரிவிக்ரமன் |
| தயிர் | வருண, சந்திரன் | வாமனன் |
| வேகவைத்த பருப்புகள் | கருடன் | ஸ்ரீதரன் |
| கீரைகள் | மித்ர நாமக சூரியன் | ஹ்ருஷிகேஷன் |
| வாழை போன்ற காய்கறிகள் | சேஷன் | பத்பநாபன் |
| புளிப்பு வகைகள் | பார்வதி | தாமோதரன் |

*இதன் தொடர்ச்சி அடுத்த பகுதியில் வரும்.

* ஆதாரம் - ஹரிகதாம்ருதசாரம்.

வங்கிக் கணக்கில் சந்தா செலுத்தினால், மறக்காமல் உங்கள் முகவரியை 89044 58276 எண்ணுக்கு வாட்சப் / SMS அல்லது haridasa.vijayam@gmail.comக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

தொடர்

## ஹரிதாசர்களின் சிந்தனை முத்துக்கள்

## புரந்தரதாசர் பற்றிய சிந்தனை

மன்மனோ பீஷ்டவரதம் சர்வாபீஷ்ட பலப்ரதம் |
புரந்தர குரும்வந்தே தாசஸ்ரேஷ்டம் தயாநிதிம் ||

பக்தி சாகித்யம் என்று அழைக்கப்பட்ட கன்னட ஹரிதாச சாகித்ய உலகில் முதல் இடம் இவரது ஆகும். இத்தகைய உலகில் த்ருவ நட்சத்திரமாக விளங்குபவர் ஸ்ரீபுரந்தரதாசர். கோடியில் ஒருவராக, லட்ச ஆண்டுகளில் ஒருவராக அவதரித்து வந்த யுகபுருஷர் இவர். சித்தாந்தம், சம்ஸ்க்ருதி, சாஹித்யம், சங்கீதம், கலைகள் என அனைத்தையும் வளர்த்த மஹானுபாவர். ஹரிதாச பரம்பரையே இவரை புகழ்ந்து பாடிப்பாடி கொண்டாடியிருக்கிறது.

ஸ்ரீனிவாச நாயகரு, புரந்தரதாசர் ஆனது ஒரு அற்புத சம்பவம். இறைவனின் விளையாட்டு. இவரின் வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டமும் நமக்கு ஒரு பாடம். அவரின் அனைத்தையும் சர்வோத்தமனுக்கே அர்ப்பித்தார். மனைவி, மக்களுடன் இறைவனைத் தேடியவாறு புறப்பட்டார். ஸ்ரீவியாசராஜர் போன்ற குருகளின் அருள், ஸ்ரீஹரியின் பரமானுக்கிரகம் இவருக்கு காப்பாக இருந்தது. பாடல்கள், பத்யங்களை இயற்றுவதுடன், தீர்த்தயாத்திரைகளை செய்தார். சமூகத்தின் நடவடிக்கைகளை திருத்துவதில் புகழ்பெற்றார். கர்னாடக சங்கீதத்தின் பிதாமகர் என்று அழைக்கப்பட்டார். ‘தாசரெந்தரெ புரந்தரதாசரய்யா’ என்று பெயர்பெற்று, குருவின் மூலமாகவே இவரது கிரந்தங்கள் ‘புரந்தரோபநிஷத்’ என்றும் புகழ் பெற்றது.

குருவின் மூலமாக கனவில் அங்கிதம் பெற்ற தாசவரேண்யரான ஸ்ரீவிஜயதாசர், இவரின் சரித்திரத்தை இயற்றினார். அதிலேயே, புரந்தரதாசரின் கீர்த்தனைகளை தொகுக்கும் வேலையும் நடந்தது. சிறந்த பக்தியினைக் கொண்டிருந்த விஜயதாசரின் சில வாக்குகளைப் பார்ப்போம்.

குருபுரந்தரதாசர நெரெனம்ப[3]லு ।
நிருதகலிது விஜயவிட்டல ஒலிவ ॥ என்றார்

'குருபிரசாதோ[3] ப[4]லவான் ந தஸ்மாத் ப[4]லவத்தரம்' என்றது போல தாசரின் வாக்கு இவ்வாறாக இருக்கிறது:

ஏனு ப[2]லவித்தரேனு தன்ன குருகள ப[2]ல
லேசாகி இல்லதிரெ ஒந்தூ ப[2]லவீயது ॥

ஆகவே, குருகளின் கருணை பலம் மிகவும் அவசியம். இதனைப் பெற்றிருந்த நம் தாசர் - ஏனு கருணிகளோ நம்ம ஈ குருகளு - என்று பாடினார்.

இந்திகாகுரு ஷிரோமணி என்ன துரிததிந்த செளெது
பரமார்த்தர மார்க அரிவு மாடி
கருணாசாகர நம்ம விஜயவிட்டலன
ஸ்மரிசுவுதக்கெ ஞானவன்னெ தோரிதரு ॥ -- ஸ்ரீவிஜயதாசர்

தாசரெந்தரெ புரந்தரதாசரய்யா ।
வாசுதேவ கிருஷ்ணன்ன சூசி பூஜிசுவந்த ॥

ஸ்ரீவியாசராஜர், சிஷ்யனின் நடவடிக்கைகளை கவனித்து பாடியது: இறுதியில் இவரை 'பூதாத்ம புரந்தரதாசர் இவரய்யா' என்று பாடி புகழ்ந்தார்.

விஜயதாசருக்கு தம் குருகளை எவ்வளவு புகழ்ந்தாலும் போதாது.

ஷரணு வியாசமுனி சரணாப்ஜ ப்[3]ருங்க[3] ஜய
சரணு ஞான ப[4]குதிவைராக்[3]யபரனெ ஜய
சரணு தாசோத்தமர மணியெ
நினகா[3]ர்யணியெ குருபுரந்தர தாசரே ॥ என்றார்.

பிரசன்ன வேங்கடதாசர் புரந்தரதாசரைப் பற்றி பாடியது:
தந்தெ புரந்தரதாசர ஸ்மரிசுவெ என்ன
மந்த[3]மதிக[1]ளெது ஹரிபடனெனிசுவெ ॥

கீதடாயி சுளாத்யகாபோக பதபத்யவ்ராத ப்ரபந்த ரசிஸி விடலன ।
ப்ரீதி படிஸி கண்டு நலிவ வைஷ்ணவாக்ர நாத ப்ரசன்னவேங்கட
கிருஷ்ணப்ரியன ॥

ஸ்ரீஜகன்னாததாசர்:
தாசராய ப்ரதிவாசரதலி ஸ்ரீனி
வாசன்ன தோரொ தயாசாந்த்ர புரந்தர ॥

ஸ்ரீஅபினவ ஜனார்த்தனர்:
புரந்தரதாசர கருணவ சம்பாதிஸி
தரெய மேலே சரிஸி ஸ்ரீஹரிய
கருணவ சம்பாதிஸி சிரிய தூரனாகி
வரசத்கதி சேருவ மனெமாடெலோ ॥

ஸ்ரீரகுபதிவிட்டலர்:
புரந்தரதாசர பாத³ பது³மவ கண்டே
ஹரிது ஹோயிது என்னந்த ஜனுமவ ஆக³ ॥

தாம் சாதனை செய்து, மற்றவர்களையும் தம்முடன் இழுத்து, கோடிக்கணக்கான மக்களின் மனதில் இருந்து, அவர்களுக்கு அருளி, ஸ்ரீஹரியின் கிருபைக்கு பாத்திரராகுமாறு செய்த, மகா விபூதி புருஷரான ஸ்ரீபுரந்தரதாசருக்கு கோடிகோடி நமஸ்காரங்கள்.

****கன்னடத்தில்: திரு.ஏ.பி.ஷாமாச்சார், பெங்களூரு**

சிறப்புக் கட்டுரை



## ஸ்ரீகோபாலதாசர்

** திரு.குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்

ஆகதாதி த்ரிகாலக்ஞும் ஆகமார்த்த விஸாரதம் |
த்யாக போக ஸமாயுக்தம் பாகண்ணார்யம் குரும்பஜே ||

ஸ்ரீகோபாலதாசர் (1722-1762AD). தாச சதுஷ்டயர்களில் மூன்றாமவர். அவருடைய ஆராதனை புஷ்ய கிருஷ்ண அஷ்டமியன்று வருகிறது. அவர் உத்தனூரில் முக்தி அடைந்தார். அவரின் ஒரு தேவர நாமம் கீழே தரப்படுகிறது.

இது3 ஏனோ சரித யந்த்ரோத்3தா4ர || ப

இது ஏனோ சரித ஸ்ரீபது3மனாப4ன தூ3த |
ஸதா காலதலி ஸர்வர ஹ்ருத3யாந்தர்க3த ||அனுபல்லவி

வாரிதி4 கோ3ஷ்பாத3 நீரந்தெ தா3டித3 |
தீ4ர யோகா3ஸன தா4ரியாகி3ப்போது3 ||1

து3ருள கௌரவரன்னு வர க3தெயலி கொந்த3 |
கரதல்லி ஜபமாலெ த4ரிஸி எணிஸுவுது3 ||2

ஹீன மதக3ளன்னு வாணிஸி தரித3ந்த4 |
ஞான வந்தனெ ஹீகெ மௌனவ த3ரிசுத்து3 ||3

கோபாலவிட்டலகெ3 நீ ப்ரீதி மந்த்ரியு
வியாபார மாட3தெ3 ஈ பரி குளிதத்து3 ||4

இந்த கீர்த்தனையின் தமிழ் வடிவம் பின்வருமாறு.

இது என்ன நடத்தை யந்திரத்தில் உறைபவனே ||

இது என்ன நடத்தை திரு தாமரை நாபனின் தூதனே |
எக்காலத்திலும் எல்லோரின் இதயத்தினுள் உறைபவனே ||

பெருங்கடலை பசுகுளம்பில் தங்கிய நீரைப் போன்று தாண்டிய வீரனே |
(இப்போது) யோகாசனத்தில் அமர்ந்திருப்பது ||

கொடிய கௌரவர்களை சிறந்த கதையினால் கொன்றவனே |
கையில் ஜபமாலை பிடித்து எண்ணிக் கொண்டிருப்பது ||

கெட்ட மதங்களை வாக்கினால் வெட்டி வீழ்த்தியவனே |
அறிவுக் கொழுந்தே | இப்போது மௌனம் சாதித்துக் கொண்டிருப்பது ||

எங்கும் பரவியுள்ளவன் நீ | அரக்கர்களை ஒழித்தவன் நீ |
உமையவன் தந்தை உற்றார் மலையில் இப்போது சேர்ந்திருப்பது||

கோபாலவிட்டலனுக்கு நீ அன்புக்குரிய அமைச்சராவாய் |
(இப்போது) செயல் எதுவும் புரியாமல் இவ்வாறு அமர்ந்திருப்பது ||

குறிப்பு: உமையவளின் தந்தை இமாலய பர்வதராஜன். அவர் உறவினர்தான் கிஷ்கிந்தையில் உள்ள மால்யவந்த பர்வதம். இங்கேதான் அனுமன் இருக்கிறார். இடம் கருதி, விரிவான விளக்கங்கள் கொடுக்கப்படவில்லை.

**ஆராதனை**

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்
## புஷ்ய & மாக மாதங்களில்

புஷ்ய பகுள சப்தமி - ஸ்ரீநரஹரி தீர்த்தர் (ஹம்பி)
புஷ்ய பகுள அஷ்டமி - ஸ்ரீகோபாலதாசர் (உத்தனூர்)
புஷ்ய அமாவாசை - ஸ்ரீபுரந்தரதாசர் (ஹம்பி)
மாக அமாவாசை - ஸ்ரீகுரு பிராணேசதாசர் (லிங்கசுகூர்)

இந்த இதழைப் பற்றி தங்களின் பிற வாட்சப், மின்னஞ்சல் க்ரூப்களில் சொல்லி, மேலும் பல ஹரிபக்தர்கள் இந்த பயனுள்ள தகவல்களைப் பெறுவதற்கு உதவவும்.

தொடர்

## கேசவ நாமா

## கிருஷ்ணா முராரி - ஸ்ரீவாதிராஜர்

மது3வெம்போ3 தை3த்1யன முத3தி3ந்த3 கெ3லித3னெ
விது3ரன மனெயலி நலிது3ண்ட
விது3ரன மனெயலி நலிது3ண்ட நரஹரி
மது4சூத3ன நம்ம மனெதெய்வ ||6||

மது தைத்யனைக் கொன்று மதுசூதனன் என்று பெயர் பெற்று, பரமபக்தனான விதுரனின் வீட்டில் பால் குடித்த நரஹரியே நம் குலதெய்வம்.

சக்1ரவ பிடித3னெ பூ4சக்ரவகெ3லித3னெ
அக்ரூரனொடனெ மது3ரெகெ3
அக்ரூரனொடனெ மது3ரெகெ3 போத3 த்ரி
விக்ரம நம்ம மனெதெய்வ ||7||

சுதர்சன சக்கரத்தால் சிசுபாலனைக் கொன்று, பரசுவைப் (கோடலி) பிடித்து, 21 முறை பூமியை சுற்றிவந்து, க்ஷத்ரியர்களைக் கொன்று (பரசுராமன்), மதுராவிற்கு அக்ரூரருடன் வந்து கம்சனைக் கொன்ற த்ரிவிக்ரமா, நீயே எம் குலதெய்வம்.

ஸாமவ நோடுத்த தா3னவ பே3டுத்த
நாமவ மஹிமெ பொக3ளுத்த
நாமவ மஹிமெ பொக3ளுத்த நரஹரி
வாமன நம்ம மனெதெய்வ ||8||

ஹரி நாமத்தின் மகிமையை புகழ்ந்தவாறு, சாம வேதத்தைப் பாடியவாறு, தானத்தை வேண்டிய, பிரம்மசாரி ரூபமான வாமனனே நம் குலதெய்வம்.

ஸ்ரீத4ர எனிஸித ஸ்ரீவத்ஸலாஞ்சன
ஸ்ரீத4ர கோ3பித1னயனெ
ஸ்ரீத4ர கோ3பித1னயனெ நரஹரி
ஸ்ரீத4ர நம்ம மனெதெய்வ ||9||

ஸ்ரீதேவியை தன் மார்பில் வைத்துக் கொண்டவனே, இதயத்தில் ஸ்ரீவத்ஸலாஞ்சனத்தை தரித்தவனே, கோபிகையின் புதல்வனே, நரஹரி ஸ்ரீதரனே, நீயே நம் குலதெய்வம்.

ரிஷி ஜனவந்த்3யனே பி3ஸஜனாப4னே தே3வ
ரிஷி ஜனரிகெ3ல்ல அப4யவ
ரிஷி ஜனரிகெ3ல்ல அப4யவ கொடுவோனெ
ஹ்ருஷிகேஷனெ நம்ம மனெதெய்வ ||10||

முனிவர்களால் வணங்கப்படும் மற்றும் அவர்களுக்கு அபயம் அளிக்கும் பத்பனாப, ஹ்ருஷிகேசனே நம் குலதெய்வம்.

பது3ம ஸம்ப4வபித பதுமதா3மோத3ர
(பது3ம) தி3ந்த3ப4யவ கொடுவோனெ
(பது3ம) தி3ந்த3ப4யவ கொடுவோனெ நரஹரி
பது3மனாப4னே நம்ம மனெதெய்வ ||11||

பரமாத்மனின் நாபி-கமலத்தில் பிறந்த பிரம்மனின் தந்தையே, உன் கைகளில் இருக்கும் தாமரையின் திசையில் இருக்கும் ரமா தேவி மூலமாக அபயத்தைக் கொடுக்கும் நரஹரி பத்பனாபனே நம் குலதெய்வம்.

நாமத3 மஹிமெய ப்ரேமதி3 பொக3ளலு
கா1மிதார்த்தக3ள கொ1டுவோனெ
கா1மிதார்த்தக3ள கொ1டுவோனெ நரஹரி
தா3மோத3ர நம்ம மனெதெய்வ ||12||

ஸ்ரீஹரி நாமத்தின் மகிமைகளை பக்தியுடன் ஜெபிக்க, காமிதார்த்தங்களைக் கொடுக்கும் நரஹரி தாமோதரனே நம் குலதெய்வம்.

ஸங்கடக3ள த3ரிவோனெ பங்க3ஜநாப4னெ
ஷங்கெ1யில்லதெ3 அஸுரர
ஷங்கெ1யில்லதெ அஸுரர ஸம்ஹரிஸித3
ஸங்கர்ஷண நம்ம மனெதெய்வ ||13||

சந்தேகமில்லாமல் அசுரர்களைக் (அரிஷட்-வர்கங்களை) கொன்று, துக்கங்களை போக்கும் பத்பனாப சங்கர்ஷணனே நம் குலதெய்வம்.

வசுதே$^{3}$வ த$^{1}$னயனெ ஷிஷுபா$^{1}$லன கெ$^{3}$லித$^{3}$னெ
வஷவ மாடிதெயோ த்ரிபுரர
வஷவ மாடிதெயோ த்ரிபுரர நரஹரி
வாசுதேவ நம்ம மனெதெய்வ ||14||

த்ரிபுரர்களைக் கொன்று, வசுதேவனின் மகனாக வந்து சிசுபாலனை வென்ற வாசுதேவ நரஹரியே நம் குலதெய்வம்.

ஷுத்த$^{3}$ ஸ்வரூப$^{1}$னெ ஷுத்த$^{3}$ ப$^{4}$க்தரன்னு ஸலஹய்ய
ஹத்து$^{1}$ வாஹனனாத தேவனெ
ஹத்து$^{1}$ வாஹனனாத தேவனெ நரஹரி
ப்ரத்யும்ன நம்ம மனெதெய்வ ||15||

களங்கமில்லாத பக்தர்களைக் காப்பாற்றும், சச்சிதானந்த ஸ்வரூப, கருடவாகனனான நரஹரி ப்ரத்யும்னனே நம் குலதெய்வம்.

வனஜலோசன ஹரி வினய உள்ளவனெ
த்$^{3}$வனி கே$^{1}$ளி ப$^{3}$ந்த$^{3}$ கு$^{1}$புஜெய
த்$^{3}$வனி கே$^{1}$ளி ப$^{3}$ந்த$^{3}$ கு$^{1}$புஜெய நரஹரி
அனிருத்த நம்ம மனெதெய்வ ||16||

தாமரைக் கண்ணனான ஸ்ரீஹரியின் குரல் கேட்டு வந்தவளான குபுஜெயுடைய நோயினை தீர்த்து வைத்த நரஹரி அனிருத்தனே நம் குலதெய்வம்.

** **திருமதி. ஜெயம்மா, பெங்களூரு**

தொடர்

## ஹரிதாசர்களின் புதிர் கவிதைகள்

## கனகதாசரின் கிருதி

எந்தெ3ந்து இந்த சோத்3ய கண்டித்3தி3ல்லவோ (ப)

அங்க3ட்3 பீ3தியொளிந்து3 ஆகள கரு நுங்கி3து |
லங்கி4சுவ ஹுலிய கண்டு நரிய நுங்கி3து ||

ஹுத்ததொ3ளாடு3வ சர்ப்ப மத்த க3ஜவ நுங்கி3து |
உத்தர தி3செயொளு பெ3ளு3திங்3ளாயிதம்ம ||

யோக3 மார்3கி கா3கிநெலெயாதி கேசவராய |
பா4க3வதர பெ3டகி3து பெ3ளு3திங்க3ளாயிதம்ம ||

மேலோட்டப் பொருள்:

(பல்லவி) என்றைன்னைக்கும் இப்பேர்ப்பட்ட அதிசயத்தை கண்டதேயில்லையம்ம.

1. கடைவீதியில் ஒரு பசுவை கன்று முழுங்கியது.
பாயும் புலியைக் கண்டு ஒரு நரி விழுங்கியது.

2. புற்றில் ஓடாடும் பாம்பு மதம் கொண்ட யானையை விழுங்கியது.
வடக்கு திக்குதன்னில் மதிவெள்ளம் ஆயிற்று அம்மா.

3. யோகமார்க்கம் இது காகிநெலெயாதி கேசவன் அறிவான்.
பாகவதர்களுக்கு புதிர் இது நிலவொளி ஆயிற்று அம்மா.

உட்பொருள்:

ஞான யோகத்தின் வலிமையால் இறைவனின் சான்னித்யத்தின் அம்ருத மழை பானம் செய்யும் பாக்கியம் ஜீவாத்மாவுக்கு எப்படி கிடைக்கிறது என்று தாசர் இப்பாடலில் கூறுகிறார்.

அங்கடி பீதியொளு ஒந்து ஆகள கரு நுங்கிது: இது யோக சாதனையின் ஒரு பாகத்தைக் குறிக்கிறது. தியான யோக க்ரியையில் நமக்கு முதலில் சித்திப்பது கண்ட ஸ்ம்ருதி மற்றும் கண்ட ஞானம். தியானம் செய்யும்போது நம் மன ஒரு முனைப்பாடு (concentration) சிறிது நேரத்தில் சிதறிப் போய்விடும். இதற்கு தாரண என்று பெயர். மறுபடி, பழையபடி மனதை ஒருமுகப்படுத்த முயற்சி எடுக்க வேண்டும். இப்படி செய்தால், தியானம் கிடைக்கும். அப்போது நிலையான ஒருமுகப்பாடும் கிடைக்கும். அப்போது ஆத்ம ஜ்யோதியை ஓரளவு காணலாம். அதையே இன்னும் அதிகப்படுத்தினால், சமாதி நிலை கிடைக்கும். அதில் இறைவனை காணமுடியும். ஆகள = பசு, என்பது தாரண, தியான நிலைகளைக் குறிக்கிறது. சமாதி என்பது கன்றைக் குறிக்கிறது. அதையே உருவகமாக, பசுவை கன்று விழுங்கியது என்கிறார் கவி. சமாதி நிலையில் கண்ட ஞானம் புத்தக அறிவெல்லாம் மறைந்து, அகண்ட ஞானமான அபரோக்ஷ ஞானம் ஏற்படும். இது சாஸ்திர சம்மதமானது.

லங்கிசுவ ஹுலிய கண்டு நரி நுங்கிது: அரிஷட்வர்கம் என்னும் ஆறு எதிரிகளான காம, க்ரோத, லோப, மோஹ, மத மற்றும் மாத்ஸர்யம் ஆகியவை, யோக மார்க்கத்திற்கு குந்தகம் விளை விப்பவை. நரி என்பது ஞான புத்தி யுக்தியாகும். இது எப்படி நரியானது தந்திரத்தினால், புலி போன்ற கொடிய விலங்குகளை கொல்லுமோ, அப்படி, நம் புத்தி யுக்திகளினால் ஆறு மன எதிரிகளை அடக்கிவிடலாம் என்கிறார் தாசர். இதுவே முதல் சரணத்தின் திரண்ட கருத்து.

ஹுத்ததொளாடுவ சர்ப்ப மத்த கஜவ நுங்கிது: நாம் யோக சாதனையில் மூலாதாரத்தில் படுத்துள்ள குண்டலினி சக்தியை ஆறு சக்கரம் அல்லது பத்மங்கள் வழியாக தலையின் மேலுள்ள சஹஸ்ராரத்தை அடையச் செய்து, அங்குள்ள அமிர்தத்தை மறையச் செய்ய வேண்டும். அப்போது ஆத்ம ஜ்யோதி பிரகாசிக்கும். இதுவே சாதனா மார்க்கம்.

இதுதான் சிறந்த மார்க்கம், யோக மார்க்கம். இதை பகவான் அறிவார். அவன் அருள் பெற்றவர்கள் அறிவார்கள்.

மற்றவர்களுக்கு இது புரியாது. புதிராக இருக்கும். அபரோக்ஷ ஞானிகளுக்கு இதன் மூலம் பிம்ப தரிசனம். அதுவே நிலவொளி. அது கிடைக்கும்.

இந்தப் பாடலின் திரண்ட கருத்தைத்தான் பல்லவியில் தாசர், சோத்ய = பெரும் ஆச்சரியம் என்று கூறுகிறார். யோக சாதனை ஓர் ஆச்சரியம்தான் நம் போன்ற பாமரர்களுக்கு.

** **திரு. குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்.**

தொடர்

## ஹரிகதாம்ருதசார ஸ்லோக அர்த்தங்கள்

## பல்லவி நுடி

ஸ்ரீமத் பாகவத மகா புராணத்தில் அதிபக்திமானாக போற்றப் பட்டிருக்கும் ஸ்ரீபிரகலாதரின் தம்பியாக சிறந்து விளங்கிய ஸ்ரீசஹ்லாதரின் கலியுக அவதார புருஷரான ஸ்ரீஜகன்னாததாசர் என்ற அபரோக்ஷ ஞானியாக, ராய்ச்சூர் ஜில்லா மானவி க்ஷேத்திரத்தில் ஒரு தூணில், சிறந்த சன்னிதானத்தில் விளங்கி ஏராளமான பக்த கோடிகளுக்கு அருள்பாலித்து வருபவரான ஸ்ரீரங்கஒலித தாசர், ஸ்ரீமானவிராயர் என்று செல்லமாக அழைக்கப் பட்டு போற்றப்பட்டு வரும் ஸ்ரீஸ்ரீஜகன்னாததாசர் அவர்களால் இயற்றப்பட்ட ஸ்ரீஹரிகதாம்ருதசாரம் என்ற ‘கன்னட சுதா’, ‘மேரு க்ருதி’ அதாவது ‘பொன் ரசனை’ என்ற சிறந்த நூலின் தொடரை இந்த ஹரிதாச விஜய மாத இதழில் அடியேன் ஸ்ரீராகவேந்திர குரு அந்தர்கத பாரதிரமண முக்யபிராணாந்தர்கத ஸ்ரீலட்சுமி நரசிம்ம ஸ்வாமி திருப்பாதங்களில் சமர்ப்பிக்க முயல்கிறேன்.

ஸ்ரீஹரிகதாம்ருதசாரம்

லட்சுமி கடாக்ஷத்தை அளிக்கவல்ல சகல சாதன பூர்ணமாக விளங்கக்கூடிய, ஸ்ரீஹரியின் மகிமை பொருந்திய ’அம்ருதம்’; போட்சத்தை அளிக்கவல்ல ’சாரம்’. மிகச்சிறந்த மேன்மை பொருந்திய நூல்.

ஹரிகதாம்ருத சார குருகள
கருண திந்தா பனிது பேளுவே
பரம பகவத் பக்தரிதனாதரதி கேளுவுது

ஹரி - ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவின் திருவாயில் எழுந்தருளிய ’ஸ்ரீமத் பகவத்கீதை’ இதில் அடங்கியுள்ளது. ஹரி சப்தத்தின் சிறப்பு - இதை பாராயணம் செய்வதால் - ‘ஹரி: ஹரதி பாபானி’, நமது அனைத்து பாவங்களும் போக்கப்படும்.

கதா - ஸ்ரீலட்சுமிதேவி அபிமானியான அனைத்து வேதங்களும் இதில் அடங்கியுள்ளது. இதை பாராயணம் செய்வதால் (கதா) லட்சுமி தேவியினால் சகல சாதனம் புரிந்து லிங்க தேக பங்கமாகி, அதாவது நம்மை ஜீவனைச் சுற்றியுள்ள நிரந்தரமற்ற, அழிவுடைய ஸ்தூல, அனிருத்த, லிங்க தேகம் போக்கப்பட்டு சூக்ஷ்ம சரீரத்துடன் மோட்ச ஸ்தானம் கிடைக்கும்.

’புருஷ நாமகன சுப ஸ்வேத ஆபளெனிஸி ரமாம்ப தா ப்ரம்ஹாபரோக்ஷிகளாதவர லிங்காங்க கெடிசுவனு (ஹரிகதா ம்ருதசார). ஸ்ரீபகவானின் அப்ராக்ருத சரீரத்திலிருந்து சுத்தமான வெண்மையான நீராக வெளியேறி ஸ்ரீலட்சுமி தேவியான தான், பிரம்மனின் (பகவானின்) அபரோக்ஷ ஞானிகளின் லிங்க தேகத்தினைப் போக்குகிறாள்.

அபரோக்ஷ ஞானம் - ஞான பக்தியுடன் வேதத்தில் சிறந்த கர்மாக்களை ஓராயிரம் பிறவி எடுத்து குறைவின்றி செய்து, மேலும் 100+10+3 பிறவிகள் எடுத்து ஞான, பக்தி, வைராக்கியம், ஸ்ரீவாயு பகவானால் பெறப்படுவதே அபரோக்ஷ ஞானம்.

அம்ருதம் - பாரதிரமண முக்யபிராணரின் சீடரான, மனோ நியாமகரான, ஸ்ரீமஹ ருத்ரதேவரின் அருள் கிடைக்கும். ஸ்ரீமத்வாசார்யரின் (37) சர்வமூல கிரந்தங்கள் இதில் அடங்கியுள்ளது.

சாரம் - கீதை, வேதம், சர்வ மூலங்கள் இவற்றை சிறந்த குருக்களான (வேதவியாசர், லட்சுமி, ஆசார்யரான) அனைத்து சிறந்த குருக்களின் கருணையுடன்.

ஆபனிது பேளுவெ - தனது யோக்யதையளவு சொல்கிறேன் என்று சொல்கிறார்.

எந்தச் செயல்? - அதாவது 11 புலன்கள். கண் - பார்ப்பது; காது - கேட்பது; மூக்கு - நுகர்வது; வாய் - பேசுவது; நாக்கு - சுவைப்பது; கை - செயலாற்றுவது; கால் - நடப்பது; குத, உபஸ்தம் - மல மூத்ர விசர்ஜிப்பது; த்வக் (தோல்) - உணர்வது; மனஸ் - தோன்றுவது. ஆக, 11 புலன்களால் நிகழப்படும் அனைத்தும் ஸ்ரீவாயுதேவரின், தத்வாபிமானி தேவதைகளின் உதவியுடன் (நான்) அதாவது (எனது) ஜீவனின் பின் பிறவிப் பயனின் (திறமை) யோக்யதைக்கேற்ப செய்வேன் என்று பொருள்.

பரம பகவத்பக்தரிதனாதரதி கேளுவுது - பக்தர்களை மூன்று வகையாக பிரித்து தாசர் சொல்லியிருக்கிறார். 1. பக்தர் - பூஜை செய்பவர்கள். 2. பகவத்பக்தர் - ஸ்ரீபகவான் விஷ்ணுவையே பூஜை செய்பவர்கள். 3. பரம பகவத்பக்தர் - பூஜை, பகவான் ஸ்ரீவிஷ்ணுவை - எக்காரணத்தைக் கொண்டும் - பலன் எதிர்பார்க்காமல் (நிர்நிமித்தாம்) - தனது பூஜையை எதிர்நோக்கி பலன் நிபந்தனையும் - நிர்வ்யாஜாம் (பலன் அளித்தால் பூஜை) - மன சஞ்சலம் (ஏராளமான மன அலைச்சல்), எந்த மன அலைச்சலும் இன்றி ஏகாந்தமாக த்ருட தியான பக்தியுடன்) நிஸ்சலாம் நிர்நிமித்தாம் நிர்வ்யாஜாம் நிஸ்சலாம் - யார் தொண்டு புரிகிறார்களோ, அதாவது, நாஹம் கர்த்தா ஹரி: கர்த்தா - ஸ்ரீவிஷ்ணு ப்ரேரணயா ஸ்ரீவிஷ்ணு ப்ரீத்யர்த்தம் - என்று பரம பகவத் பக்தர்கள் - இதனை - ஹரிகதாம்ருத சாரத்தினை - கேளுவுது - கேட்கப் படுவீர்களாக.

பல்லவியில் இவ்வளவு பொருள் விளங்கியுள்ளது. இன்னும் ஏராளமாக உள்ளது. எனக்கு ஸ்ரீவாயுபகவான் பிரேரணை, எனது யோக்யதைக்கேற்ப எழுதப்பட்டிருப்பதை கொடுத்திருக்கிறேன். அடுத்த இதழில் ‘ஸ்ரீரமணி கரகமல பூஜித’ பத்யத்தைத் தொடர்வோம்.

** **திரு.முரளிதர தாசரு, பெங்களூரு.**

தொடர்

## பகவத்கீதை

## கீதா சாரம் - ஸ்ரீவியாசராஜர்

**ஸ்லோகம்:**

**க்ஷர அக்ஷர எரட$^{3}$க்கு உத்தமனு**
**கோ$^{4}$ர நரக$^{1}$க்கெ லோப$^{4}$கா$^{1}$மனு நானு ||**
**ஸாராதா$^{3}$னவு சஜ்ஜனர ஹஸ்தத$^{3}$ல்லி**
**பூ$^{4}$ரிதக்ஷிணெ நீடோ ஸத்பாத்ரரல்லி ||9**

**பத:**

**ஸர்வதானதக்கிந்த எனப$^{4}$க்தி | கேளோ பூ$^{4}$ஷக்தி | மாட$^{3}$ய்ய விரக்தி |**
**கிருஷ்ணஹரணவாயித்து நின்னிந்த | மோஹ என்னிந்த | பஹு ஸுவாக்யதிந்த |**
**கிருஷ்ண பீமாஜுனர சம்வாத$^{3}$ | மஹாஸுக$^{2}$ப்ரத | த்ருதராஷ்ட கேளீத |**
**ப$^{3}$ல்லேனு வ்யாஸர த$^{3}$யதி$^{3}$ந்த$^{3}$ | மனஸ்ஸினிந்த |**
**கிருஷ்ணனல்லெ ஜயவெந்த$^{3}$ ||9**

க்ஷர-அக்ஷர இருவரைவிட உத்தமோத்தமன் பகவந்தன். பகவத் கீதையின் உபதேசமே சிறந்த தானம். ‘தக்ஷிணா தான சந்தேஷ:’ பகவத் விஷயங்களைப் பற்றி பெறும் ஞானமே தட்சிணை. இந்த தான- தட்சிணையை, சஜ்ஜனர்களின் கரங்களில், சத்பாத்ரர்களில் (சிறந்தவர்களில்) கொடுக்க வேண்டும் என்பதே இங்கு சொல்லப் படும் செய்தி. தானம் கொடுப்பவரின் கைகளில் ராமதேவரின் சிந்தனை, பெறுபவரின் கைகளில் வாமன தேவரின் அனுசந்தானம் இருக்கவேண்டும்). சத்பாத்ரர் என்றால் பகவந்தனின் அந்தரங்க (சிறந்த) பக்தர்கள்.

’கிருஷ்ண ஹரணவாய்த்து நின்னிந்த மோஹ என்னிந்த’ - இந்த வாக்கியத்தை இப்படியும் சொல்லலாம். ‘கிருஷ்ண நின்னிந்த மோஹ ஹரணவாய்த்து’ மற்றும் ‘என்னிந்த மோஹ ஹரண வாய்த்து’. ஸ்ரீகிருஷ்ணனாலேயே மோகங்கள் விலகுகின்றன / நாச மடைகின்றன. அதற்கு ஸ்ரீகிருஷ்ணனின் அருளே காரணம் ஆகையால் ‘நின்னிந்த மோஹ ஹரணவாய்த்து’ என்கிறார்.

‘என்னமோஹ’ (என் மோகம்) என்பதற்கு பதில் ‘என்னிந்த மோஹ’ (என்னிடமிருந்து மோகம்) என்று சொல்வதற்கு என்ன காரணம்?. இந்திரனின் அவதாரமான, ஞானியான அர்ஜுனனின் சுபாவத்திற்கு, மோகம் மற்றும் சந்தேகம் இருக்கக்கூடாது. ஆனாலும், அசுர சக்தியின் (நான் என்னும் கர்வம்) காரணத்தாலேயே மோகம் அழிந்தது. அதனால், என்னிந்த மோஹ ஹரணவாய்த்து கிருஷ்ணா என்கிறான் அர்ஜுனன்.

பீமசேனரின் அனுஜனான (தம்பி) காரணத்தால், அர்ஜுனனுக்கு பீமானுஜ என்ற பெயர் இருக்கிறது. அர்ஜுனனிடம் வாயுதேவரின் விசேஷ ஆவேசம் இருந்தபடியால், ஸ்ரீகிருஷ்ணனிடமிருந்து நேரடியாக கீதோபதேசம் பெறும் அருகதையைப் பெற்றார். பீமானுஜ என்னும் பெயரால், பீமசேனரின் மூலரூபம் மற்றும் வாயுதேவரின் ஆவேச ரூபமான சம்பந்தமும் அவரில் இருக்கிறது என்று சொல்வது போலாயிற்று. தேவேந்திரனுக்கு, ஸ்ரீஹரி யிடமிருந்தோ, பிரம்ம ருத்ரர்களிடமிருந்தோ, நேரடியாக உபதேசம் பெறும் தகுதி இல்லையென்பதால், உமாதேவியை (பார்வதி) அனுப்பி, அவள் மூலமாக உபதேசம் ஆயிற்று என்று தலவகாரோ பநிஷத் சொல்கிறது.

18-76ம் ஸ்லோகத்தில், ‘கேஷவார்ஜுன யோ: புண்யம் ஹ்ருஷ்யாமி ச முஹுர்முஹு:’. ஸ்ரீகிருஷ்ண அர்ஜுனர்களின் ரகசியமான, அற்புதமான இந்த சம்பாஷணையை (பேச்சினை), மறுபடி மறுபடி நினைவுபடுத்திக்கொண்டு நான் மகிழ்ச்சி யடைகிறேன் என்கிறார் சஞ்சயன். ’கிருஷ்ண பீமானுஜர சம்வாதவே சுகப்ரத’ - கிருஷ்ண பீமானுஜரின் பேச்சைக் கேட்பதே / படிப்பதே மோட்சத்திற்கான வழி என்கிறார் வியாசராஜர்.

மகாபாரதப் போரினைப் பார்க்கவேண்டுமென்று ஆசை இருந்தால், உனக்கு திவ்யதிருஷ்டியினை தருகிறேன் என்று ஸ்ரீவேதவியாசர், திருதராஷ்டிரனுக்கு சொல்கிறார். ஆனால், அவரோ போரினைப் பார்க்க ஆசை இல்லையென்றும், அதைப் பற்றிய விவரங்களை கேட்டால் மட்டும் போதும் என்றும் சொல்கிறார். அப்படியே, திவ்ய

திருஷ்டியைப் பெற்ற சஞ்சயன், போரின் விவரங்களை சொன்னதுடன், கீதோபதேசத்தையும் திருதராஷ்டிரனுக்குத் தெரிவித்தார். 'த்ருதராஷ்டிர கேளித, வ்யாஸர தயெயிந்த பல்லேனு' என்கிறது கீதாசாரம்.

18-78ம் ஸ்லோகத்தின் சாரமே 'கிருஷ்ணனல்லெ ஜயவெந்த' என்னும் வாக்கியம். கிருஷ்ணனுக்கும் வெற்றிக்கும் எப்போதும் சம்பந்தம் இருக்கிறதே தவிர, அர்ஜுனனுக்கும் வெற்றிக்கும் இல்லை. 'தர்ம இத்தல்லி கிருஷ்ண. கிருஷ்ண இத்தல்லி ஜய'. வெற்றி எப்போதும் ஸ்ரீகிருஷ்ணனின் கட்டுப்பாட்டிலேயே இருக்கிறது. ஆகையால், யாருக்கு வெற்றி கிட்டவேண்டும் என்று அவர் நினைக்கிறாரோ (முடிவு செய்கிறாரோ), அவருக்கு வெற்றி கிடைக்கிறது. ஜய என்னும் சொல்லுக்கு வெற்றி என்னும் பொருளுடன், செல்வம், வளர்ச்சி என்று பல அர்த்தங்களும் உண்டு. ஆகையால், இவை அனைத்தையும் கொடுப்பவன் நானே என்று கீதாசார்யன் சொல்கிறான்.

வாசுதேவன் ஸ்வதந்த்ரன் ஆனாலும், ஒருவரின் முயற்சி இல்லாமல் அவருக்கு பலனைக் கொடுப்பதற்கு சாத்தியமில்லை. பாண்டவர்களுக்கு மகாபாரதப் போரில் வெற்றி கிட்டவேண்டு மெனில், அவர்கள் அந்தப் போரினை செய்தே ஆகவேண்டும். அவரவரின் வர்ணாசிரம தர்மத்திற்கு ஏற்ப அனைவரும் தத்தம் கடமைகளை செய்யவேண்டும் என்று இதிலிருந்து தெரிகிறது.

அனைத்து உபநிஷத்களும் பசுக்கள் என்றால், ஸ்ரீகிருஷ்ணனே பால் கறப்பவனாகிறான். அர்ஜுனன் - கன்றுக்குட்டி. ஞானிகளே அந்தப் பாலைக் குடிப்பவர்கள். உத்தமமான கீதாம்ருதமே அந்தப் பால். - இப்படியாக வர்ணிக்கப்படும் பகவத்கீதை மிகவும் விலை மதிப்பற்றது. குழந்தை முதல் பெரியவர் வரை அனைவரும் இந்தப் பாலை குடிக்க முடியும் (குடிக்க வேண்டும்) என்று வியாசராஜர், கீதையின் சாரத்தை எளிய கன்னடத்தில் இயற்றிக் கொடுத்திருக்கிறார்.

**ப்ராணேஷ கேசவ தாசர். பெங்களூரு**

தொடர்

## ஹறிகதாம்ருதசார கட்டுரைகள்

### உடற்கூறியல் (Anatomy)

உடற்கூறியல் துறையானது (Anatomy) இன்று பற்பல ஆராய்ச்சிகளின் உதவியால் மிகவும் முன்னேறியுள்ளது. கல்லூரியில் நாங்கள் படித்த Grey's anatomy புத்தகமானது சுமார் 2500 பக்கங்களைக் கொண்டது. பலர் செய்த ஆராய்ச்சியினாலும், இறந்தவர்களின் உடல்களை படித்தும் (Dissection) எழுதப்பட்ட புத்தகம் அது. ஆனால் இது எதையும் படிக்காமல் ஜகன்னாததாசர், விவரித்திருக்கும் நம் உடற் பாகங்களைப் பற்றிய விஷயங்கள், இன்றைய அறிவியலுக்கு அப்படியே பொருந்தி வருகிறது என்பதை நாம் அறியவேண்டும்.

ஸ்ரீஜகன்னாததாசர் தமது ஹறிகதாம்ருதசாரத்தில், நாடிப்ரகரண சந்தியில், 45 ஸ்லோகங்களில் நமது உடற்கட்டினைப் பற்றி மிகவும் விளக்கமாகப் பாடியிருக்கிறார். அதை படித்தோமானால் மிகவும் ஆச்சரியமே ஏற்படுகிறது. சந்தியின் முதல் ஸ்லோகத் திலேயே உடற்கூறினைப் பற்றி இப்படியாகச் சொல்கிறார்.

வாசுதேவனு பிராண முக[1]த[1]
த்வேஷரிந்த[3]லி சேவெ கை[1]கொ[1]ளு
தீஷரீரதொளிப்ப மூவத்தா[1]ரு ஸாஹஸ்ர |
ஈ சுநாடிக[3]ளொளகெ[3] ஸ்ரீ பூ[4]
மி ஸமேத விஹார கை[3]வ ப[1]
ரேஷனமல ஸுமூர்த்திக[3]ள சிந்திஸுத ஹிக்கு[3]தி[1]ரு || (12-1)

ஸ்ரீதேவி, பூதேவியுடன் கூடிய ஸ்ரீவாசுதேவன், பிராணதேவரையும் கூட சேர்த்துக்கொண்டு, அவர்களின் சேவையைப் பெற்றுக் கொண்டு இருக்கிறார். இந்த உடலை இரண்டாகப் பிரிக்கலாம். அதில் ஒரு பாகத்தில் 36,000 நாடிகள் ஓடிக்கொண்டிருக்கும், சுதந்திரமில்லாத இந்த உடலில், ரமாதேவியின் தலைவனான ஸ்ரீஹறி மகிழ்ச்சியுடன் நிலைகொண்டிருக்கிறார். நாடி பிரகரண சந்தியை விளக்கியவாறு, அறிஞரான ஜகன்னாததாசர், நமது

உடலின் இடது பக்கத்தில் 36,000 நாடிகளிலும், வலது பாகத்தில் 36,000 நாடிகளிலும், ஸ்ரீஹரி தனது தத்வாபிமானி தேவதைகளுடன் கூடி மகிழ்ச்சியுடன் நிலைகொண்டும் / பயணித்துக்கொண்டும் இருக்கிறார் என்று தெரிவிக்கிறார்.

இந்த விஷயங்கள் இன்றைய Anatomyக்கு எப்படி பொருந்தி வருகிறது என்று பார்ப்போம். நமது உடலின் pulse rate ஒரு நிமிடத் திற்கு 60-70 ஆகும். 1 நாளைக்கு 50x60x24=72,000 என வருகிறது. பகலில் 36,000 & இரவில் 36,000 நாடிகள் என்று சொல்லலாம்.

இதையே ஒரு மனிதனின் ஆயுளுக்குப் பொருத்தினால் அதுகூட சரியாகவே பொருந்துகிறது என்பதையும் பார்ப்போம். அதை இந்த கீழ்வரும் ஸ்லோகத்தில் சொல்லியிருக்கிறார்.

நூறு வர்ஷகெ[1] தி[3]வஸ மூவ
த்தா[1]ரு ஸாவிரவஹவு நாடி ஷ
ரீரதொளகி[3]னிதி[1]ஹவு எந்த[3]ரிந்தொ[1]ந்து தி[3]வசத[3]லி |
ஸூரிக[3]ள சத்க[1]ரிசிதவ ப்ரதி[1]
வாரத[3]லி த[1]ன்ப[1]தி[1]க[3]ளர்ச்சனே
தா[1] ரசிஸித[3]வ, ஸத்ய, சம்சயவில்ல வெந்தெ[3]ந்து || (12-4)

இதன் பொருள் என்னவென்றால், பிரம்மஞானிகளை வீட்டிற்கு அழைத்து ஒரே ஒருவருக்கு மட்டும் உணவளித்தால், அது 36,000 சஜ்ஜன தம்பதிகளுக்கு உணவளித்ததற்கான புண்ணியத்தை நமக்குத் தரும். மனிதனின் ஆயுளை சுமாராக நூறு ஆண்டுகள் என்று எடுத்துக்கொண்டால், அதில் 360 x 100 = 36,000 பகல்கள் + 36,000 இரவுகள். இவை இரண்டையும் கூட்டினால், 72,000 வருகிறது. மனிதனின் ஸ்தூலசரீரத்தில் ஓடிக்கொண்டிருக்கும் நாடிகளின் எண்ணிக்கையும் மொத்தம் 72,000 ஆகும்.

சரணக[3]ளொளிஹ நாடிக[3]ளு ஹ
ன்னெரடு ஸாவிர, மத்[4]ய தே[3]ஹதொ[3]
ளிருதி[1]ஹவு ஹதி[3]னால்கு[1] பா[4]ஹுக[3]ளொளகெ[3] ஈரெரடு |
ஷிரதொளாரு சஹஸ்ர சிந்திஸி
இருளு ஹக[3]லபிமானி தி[3]விஜர
நரிதுபாஸனெ கை[1]வரிளெயுளு ஸ்வர்க[3]வாஸிக[3]ளு || (12-2)

நம் உடலின் முக்கிய பாகங்களில் இருக்கும் நாடிகளின் எண்ணிக்கை: கால்களில் - 12,000; உடலின் நடுப்பாகத்தில் - 14,000 ; கைகளில் - 4,000 ; தலையில் - 6,000 ; மொத்தம் 36,000 ஆகிறது.

ஸ்தூ2ல தே3ஹதொ3ளித்து3 வர்ஷக்கெ1
ஏளதிக1 எப்பத்து1 லக்ஷத3
மேலே எப்பத்தா1ரு ஸாவிர ஸ்வாஸ ஜபக3ளனு |
கா3ளி தே3வனு க1ருணத3ல்லி ஈ
ரேளு லோக1தொ3ளுள்ள சேத1ன
ஜாலதொ3ளு மாடு3வனு த்ரிஜக3த்வியாப்த1 பரமாப்த1 || (12-43)

ஜீவோத்தமரான வாயுதேவர் நம் சரீரத்தில் நிலைகொண்டு, ஒரு நாளைக்கு 21,600 மூச்சு-ஜெபத்தை செய்து, அதுவே 360 நாட்களுக்கு (ஒரு ஆண்டிற்கு) 77,76,000 ஜெபமாக, ஸ்ரீஹரியின் அருளுடன் செய்கிறார். இதையே பதினான்கு லோகத்தில் உள்ள அனைவருக்கும், மூன்றுவித குணங்களைக் கொண்ட ஜீவர்களின் உடல்களில் இருந்தும், அவரவர்களின் தகுதிக்கேற்ப இந்த மூச்சு-ஜெபத்தை செய்துவருகிறார்.

இதையே தற்போதைய Modern Physiologyக்கு ஒப்பிட்டுப் பார்த்தால், இரண்டும் எவ்வளவு துல்லியமாக / சரியாக பொருந்தி வருகிறது என்பதைப் பார்ப்போம். முதலில் பார்த்தாற்போல், நம் உடலின் pulse-rate ஒரு நிமிடத்திற்கு 60-70ஆக இருக்கிறது. Recipiratory rate ஒரு நிமிடத்திற்கு 15-18ஆக இருக்கிறது. ஆக ஒரு நாளைக்கு நாம் விடும் மூச்சின் அளவு - 15 x 60 x 24 = 21,600 ஆகிறது.

இவை எவ்வளவு சரியாக பொருந்துகிறது என்று பாருங்கள். ஒரு ஆண்டிற்கு 21,600 x 360; அதையே ஒரு மனிதனின் ஆயுள் காலத் திற்குப் பொருத்தினால், 21600 x 360 x 100 = 77,76,000 என்று வருகிறது.

இதைப்போலவே 12ம் ஸ்லோகத்தில் நமது உடலில் இருக்கும் நரம்பு மண்டலத்தைப் பற்றி விளக்குகிறார் ஸ்ரீஜகன்னாததாசர்.

து1ந்தி3 விடி3தா3ஷிரத3 ப1ர்ய

ந்த்தொ1ந்தெ3 வியாபி1ஸி இஹூது3 தா1வரெ
க1ந்த3 நிஹனத3ரொளகெ3 அதக்கீ1ரைது3 ஷாகெ2க3ளு |
ஒந்த3தி3க1 தஷக1ரணதொ3ளு சம்
பந்த4கை3தி3ஹவல்லி ரவி ஷஷி
சிந்து4 நாசத்1யாதி3க3ளு நெலெகொ1ண்டி3த3ரு சத1த1 || (12-12)

வயிற்றிலிருந்து புறப்பட்டு தலை வரை போய்ச்சேரும் ஒரு முக்கிய நாடி நம் உடலில் இருக்கிறது. அதனுள் கமலோத் பவனான பிரம்மன் இருக்கிறார். அந்த நாடிக்கு 10 கிளை நாடிகள் உள்ளன. அவை, நம் உடலின் 11 இந்திரியங்களை தொட்டுக் கொண்டிருக்கின்றன. அவைகளில், சூரியன், சந்திரன், வருணன், அஸ்வினி தேவதைகள் முதலானவர்கள் எப்போதும் நிலைத்திரு க்கின்றனர். இது இன்றைய அறிவியலின்படி மண்டையோடு, முதுகெலும்பு மற்றும் நரம்புகளை ஒத்திருக்கிறது என்று சொல்லலாம்.

புரந்தரதாசர் மற்றும் விஜயதாசரும் தமது சூளாதிகளில் மனித உடற்கட்டினைப்பற்றி நிறைய பாடியிருக்கின்றனர். ஆனால், ஸ்ரீஜகன்னாததாசர் தமது ஹரிகதாம்ருதசாரத்தில், நாடிப்ரகரண சந்தியில், 45 ஸ்லோகங்களில் நமது உடற்கட்டினைப் பற்றி மிகவும் விளக்கமாகப் பாடியிருக்கிறார். இந்த சிறிய கட்டுரையில் சில முக்கிய விஷயங்களை மட்டும் பார்த்திருக்கிறோம். அந்த சந்தியின் முடிவில் ஸ்ரீஜகன்னாததாசர் இப்படியாக சொல்கிறார்.

ஸ்ரீத4வ ஜகன்னாதவிட்டலனு
தா1த3யதி3 வத3னதொ3ளு நுடிதொ3
பா1தி3யல்லி நா நுடிதெ3னல்லதெ3 கே1ளி புத4 ஜனரு | (12-45)

ஸ்ரீபரமாத்மன் எனக்குள் நின்று, அவனது விருப்பப்படி சொல்லியிருப்பதை எழுதியிருக்கிறேனே தவிர, நானாக எதையும் எழுதவில்லை என்கிறார் தாசர். ஞானிகளான ஸ்ரீஹரியின் பக்தர்கள் இதைக் கேளுங்கள் என்று வேண்டுகிறார்.

**** Dr.ஷ்யாம சுந்தர்ராவ் மான்விகர்**

உங்கள் வீட்டு முகவரி மாறினால், எங்களுக்குத் தெரியப்படுத்த மறக்கவேண்டாம்.

தொடர்

## கன்னட கிரந்த அறிமுகம்

## ஸ்ரீமன் மத்வநாம

ஸ்ரீமன் மத்வநாம, ஸ்ரீஸ்ரீபாதராஜரால் வாயு பகவானைக் குறித்து இயற்றப்பட்ட கன்னட க்ருதி ஆகும். ஹரி சர்வோத்தம. வாயு ஜீவோத்தம. இதுவே மத்வ சித்தாந்தம். வாயுதேவர் மூலம்தான் நாம் விஷ்ணுவை அடையமுடியும். நாம் செய்யும் அனைத்து கர்மங்களையும் ஸ்ரீமுக்ய பிராணர் மூலமே ஸ்ரீஹரிக்கு அர்ப்பணிக்கிறோம்.

சகல வேதங்களிலும், ஸ்ரீஹரி மற்றும் லட்சுமியைக் குறித்து பிரத்யேகமாக ஸ்தோத்திரம் செய்யும் பாகங்களை விடுத்து, மீதமுள்ள அனைத்து வேத பாகங்களுமே ஸ்ரீஹரி மற்றும் லட்சுமி தேவிக்குப் பிறகு வாயுதேவரையே ஸ்தோத்திரம் செய்கின்றன. ஸ்ரீஹரியின் முக்ய பிரதிபிம்பம், ஸ்ரீமுக்யபிராண வாயுதேவரே ஆகும். இதுவே வேத சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள முக்கிய பிரமேயம்.

ஸ்ரீவாயுபகவான் த்ரேதா யுகத்தில் ஸ்ரீராமனுக்கு சேவை செய்ய ஸ்ரீஹனுமனாகவும், த்வாபர யுகத்தில் ஸ்ரீகிருஷ்ணனுக்கு சேவை செய்ய ஸ்ரீபீமனாகவும், இக்கலியுகத்தில் ஸ்ரீவேதவியாசருக்கு கிரந்த ரசனை மற்றும் தத்வ பிரசாரம் மூலம் சேவை செய்ய ஸ்ரீமத்வராகவும் அவதாரம் செய்துள்ளார். வேத உபநிஷத்களில் மூலவாயுவின் மகிமைகள் கூறப்பட்டுள்ளதைப் போல இதிகாச புராணங்களில் அவதார வாயு பகவானின் மகிமைகள் கூறப் பட்டுள்ளன. சுமத்வ விஜயம் முதலான கிரந்தங்களில் வாயு தேவரின் மூன்றாவது அவதாரமான ஆசார்யர் ஸ்ரீமத்வரைப் பற்றி விஸ்தாரமாகக் கூறப்பட்டுள்ளது. மேலும் வாயுதத்வத்தை அனைவரும் புரிந்து கொள்ளும் வகையில் இயற்றப்பட்ட ஸ்தோத்திர கிரந்தமே ஸ்ரீஹரிவாயுஸ்துதி ஆகும்.

ஆசார்ய ஸ்ரீமத்வரின் சீடரான ஸ்ரீத்ரிவிக்ரம பண்டிதாசார்யர், தாம் உணர்ந்ததை, ஸ்ரீஹனும, பீம, மத்வ ரூபங்களில் ஸ்ரீவாயு பகவான்

முறையே ஸ்ரீராம, கிருஷ்ண, வேதவியாசரை பூஜிப்பதைக் கண்டதை, 41 ஸ்லோகங்களில் வாயுஸ்துதியாக இயற்றி, அதை ஆசார்யர் மத்வரிடம் சமர்ப்பித்தார். அதற்கு ஆசார்யர், தனது மகிமைகளை மட்டும் கூறாது, முதலில் ஸ்ரீஹரியையும் துதிக்க வேண்டும் என்று சொல்லி, நரசிம்ம நகஸ்துதியை இயற்றி, அதனை வாயுஸ்துதிக்கு முன்னும் பின்னும் சம்புட கரணமாக பாடும்படி அருளினார். ஆகையால் வாயுஸ்துதி, ஹரிவாயுஸ்துதி என வழங்கப்பட்டது.

இதேபோல, ஸ்ரீத்ரிவிக்ரம பண்டிதாசார்யரின் குமாரரான ஸ்ரீ நாராயண பண்டிதாசார்யர், ஸ்ரீசுமத்வ விஜயம் என்னும் கிரந்த த்தை இயற்றி, அதனை ஆசார்யர் ஸ்ரீமத்வரிடமே சமர்ப்பணம் செய்து அங்கிகாரம் பெற்றார். இந்த இரு கிரந்தங்களுமே மந்திர துல்யமானவை.

இதிகாச புராணங்கள், ஸ்ரீஹரிவாயுஸ்துதி மற்றும் சுமத்வ விஜயம் முதலான கிரந்தங்கள் சமஸ்கிருத மொழியில் இருப்பதாலும், உயரிய வேதாந்தக் கருத்துகள், படித்த பண்டிதர்களுக்கு மட்டுமே புரியும் என்பதாலும், இந்த விஷயங்கள் சாதாரண பாமரர் களுக்கும், வேத அதிகாரம் இல்லாத ஸ்த்ரீயர்களுக்கும் சேர வேண்டும் என்கிற உயரிய நோக்கில், இவை அந்தந்த பிராந்திய மொழியிலேயே கிடைக்க வேண்டும் என்று எண்ணி, ஸ்ரீஸ்ரீ பாதராயர், மூல வாயு ரூபம் மற்றும் ஹனும, பீம, மத்வ அவதார ரூபங்களை, மகிமைகளை எளிய கன்னட மொழியில் ஸ்ரீமன் மத்வ நாமாவாக இயற்றி அருளியுள்ளார். ஆதலால் இது ‘கன்னட ஹரி வாயுஸ்துதி’ என அழைக்கப்படுகிறது. மேலும் இந்த உயரிய மத்வ நாமாவும் கூட மந்திர துல்யமாகவே விளங்குகிறது.

ஸ்ரீமன் மத்வ நாமா, ஒரு பல்லவியுடனும், 32 சரணங்களுடனும் அமைந்துள்ளது. இவற்றில் 29 பத்யங்கள் மூல வாயுதேவரின் மற்றும் ஹனும, பீம, மத்வ அவதாரர்களைப் பற்றி வர்ணிக்கும் படியும், கடைசி 3 பத்யங்கள் மத்வ நாமாவின் பல-ஸ்ருதியாகவும் உள்ளன.

ஸ்ரீமன் மத்வ நாமா ‘ஜயஜய ஜகத்ராண’ எனும் பல்லவியுடன் தொடங்கி முதல் 4 பத்யங்களில் - வேதங்களில், உபநிஷத்களில்

கூறப்பட்டுள்ள மூல வாயுரூபத்தின் மகிமைகளையும், 5 முதல் 11 வரையுள்ள பத்யங்களில், வாயுபகவானின் முதலாவது அவதார ரான ஸ்ரீஹனுமந்தனின் பிரபாவங்களைப் பற்றியும், 12 முதல் 22 வரையுள்ள பத்யங்களில் இரண்டாவது அவதாரமான பீம சேனனைப் பற்றியும், 23 முதல் 29 வரையுள்ள பத்யங்களில் ஆசார்ய ஸ்ரீமத்வரைப் பற்றியும், மிக அழகாக வர்ணிக்கிறது. 30 முதல் 32 வரையிலான பத்யங்களில் மத்வ நாமாவின் பாராயண பலன்கள் விளக்கப்பட்டுள்ளன.

பொதுவாக, மூல கிரந்தகாரரே, பலஸ்ருதியையும் இயற்றுவது வழக்கம். ஆனால், ஸ்ரீஸ்ரீபாதராஜர் இயற்றிய மத்வ நாமாவிற்கு சுமார் 265 ஆண்டுகள் கழித்து, ஸ்ரீஜகன்னாத தாசர், பலஸ்ருதியை இயற்றியுள்ளார் என்பது விசேஷம். தாசர், தனது பலஸ்ருதியால், இந்த கிரந்தத்தின் பாராயண பலனை 3 பத்யங்களில் விவரித்துள் ளார். சூர்ய சந்திர கிரகண காலத்தில், கங்கைக் கரையில், ஆயிரக் கணக்கான பசுக்களை உத்தமமான சஜ்ஜனர்களுக்கு தானம் அளித்து, ‘கிருஷ்ணார்ப்பணம்’ என அதனை பகவானுக்கு சமர்ப்பணம் செய்தால் என்ன பலன் கிட்டுமோ, அப்பலனை ஸ்ரீமன் மத்வநாமாவை எழுதிப் படித்தாலே கிட்டும் என்கிறார் தாசர்.

தாசர் மேலும் அதன் பலன்களை விளக்கும்படியாக, புத்ரர் இல்லாதோருக்கு சத்புத்ரர்கள் பிறப்பர், எங்கும் எதிலும் வெற்றியே உண்டாகும், எல்லாவிதமான சத்ருக்களும் நாசமடைவர், அகால மரணம் சம்பவிக்காது என விவரிக்கிறார்.

இதனை பாராயணம் செய்வதால், நமது துன்பங்கள் எல்லாம் விலகி இன்பங்கள் வந்து சேரும். சகல செளபாக்யங்களும் கிட்டும். இஹத்தில் எல்லா நலன்களும் பெற்று, சம்சாரத்தில் இருந்து விடுபட்டு, ஜகன்னாத விட்டலனின் தரிசனம் பெற்று, மோட்சமும் சித்திக்கும் என எடுத்துரைக்கிறார் தாசர்.

இத்தகைய உயரிய கிரந்தமான ஸ்ரீமன் மத்வ நாமாவை நாமும் அர்த்த அனுசந்தானத்துடன் பாராயணம் செய்து பயன் பெறுவோமாக. *** **திரு. லட்சுமிபதிராஜா, சென்னை**

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்
Haridasa Vijayam - Monthly

மலர் 1 ** பிப்ரவரி 2020 ** இதழ் 5



ஸ்ரீவிஸ்வேஸ தீர்த்தர்
(1931 - 2019)

## ஹரிதாச விஜயம்

## சந்தா விவரம் (36 பக்கங்கள்)

1 ஆண்டுக்கு ரூ.200/- 3 ஆண்டுகளுக்கு ரூ.500/-

5 ஆண்டுகளுக்கு ரூ.900/- 10 ஆண்டுகளுக்கு ரூ.1700/-

புதிய சந்தாக்கள் அந்தந்த மாதத்திலிருந்து துவங்கும். பழைய இதழ்கள் வேண்டுமெனில், இதழுக்கு ரூ.20/- என சேர்த்து அனுப்பவும்.

## வங்கி விபரம்:

Sathya Narayanan, ICICI Bank - Savings account

A/c. No. 000101043177. IFSC: ICIC0000001

Cenotaph Road Branch, Chennai 18

போட்டி

மாதாந்திர குறும்போட்டி

ஜனவரி 2020ன் விடைகள்

1. விருத்த நாமா
2. 9 ஸ்லோகங்கள், 9 நுடிகள் மற்றும் 1 பல்லவி
3. கர்மம் 4. ஞான யக்ஞும்
5. சம்ஸ்க்ருதி (பிறப்பு இறப்பு சுழற்சி)
6. க்ஷேத்ர என்னும் இந்த தேகத்தில் வசிப்பதால் 7. விபூதி
8. தேக நாசம் உடையவர்கள் (பிரம்மாவில் துவங்கி அனைவரும்)
9. சன்யாச 10. பலன்

* சில கேள்விகளுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட சரியான பதில்களும் இருக்கலாம். அவற்றில் ஒன்றை மட்டுமே இங்கு குறிப்பிட்டுள்ளோம்.

* ஹரிபக்தர்கள் அனைவரும் இப்போட்டியில் பங்கேற்குமாறு கேட்டுக் கொள்கிறோம். ***

போட்டி

**மாதாந்திர குறும்போட்டி**

**பிப்ரவரி 2020 - மனப்பாடப் பகுதி**

இந்த இதழோடு முடியும் மனப்பாடப் பகுதியிலிருந்து வரும் கேள்விகள் இவை. கடந்த இதழ்களின் உதவியுடன் இந்தக் கேள்விகளுக்கு பதிலளிக்க முயலவும்.

1. அபிஷேகம் செய்யப் பயன்படுத்தும் கோமுகத்தில் உள்ள ஸ்ரீஹரியின் ரூபங்கள் எவ்வளவு?
2. வாழைப்பழத்தில் உள்ள ஸ்ரீஹரியின் ரூபங்கள் எவ்வளவு?
3. ஸ்ரீகிருஷ்ணனின் பத்னியான ஜாம்பவதி, தாரதம்யத்தில் எந்த கக்ஷ (வகுப்பை) சேர்ந்தவர்)?
4. கணபதி, தாரதம்யத்தில் எந்த கக்ஷத்தை சேர்ந்தவர்?
5. ஜெயா-பதி யார்?
6. பால் பாயசத்தின் அபிமானி தேவதை யார்?
7. தயிர் சாதத்தில் உள்ள ஸ்ரீஹரியின் ரூபம்?
8. குடிநீரில் இருக்கும் ஸ்ரீஹரி ரூபம் எது?

* தயவு செய்து அனைவரும் இதில் பங்கேற்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.
* இருவருக்கு புத்தகப் பரிசு கிடைக்கும்.
* பிப்ரவரி 15க்குள் உங்கள் விடைகளை அனுப்பவும்.

*****

## முக்கிய அறிவிப்பு

https://hks-bhavaprakashike.blogspot.in என்னும் இணைய தளத்தில் 'பாவபிரகாசிகை' என்னும் (ஹரிகதாம்ருதசாரத்தின்) கன்னட உரையின் தமிழாக்கம் - தினம் ஒரு பத்யம் - என்று வெளியிடப்பட்டு வருகிறது. அனைவரும் அந்த தளத்தில் முதல் பதிவிலிருந்து - தொடர்ந்து - தினந்தோறும் படிக்க வேண்டும் என்பது எங்களின் வேண்டுகோள். ஹரிகதாம்ருத சாரத்தில் ஈடுபாடுள்ள அனைத்து தமிழ் மாத்வர்களுக்கும் இதனை தயவு செய்து தெரிவிக்கவும்.***

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா



நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

சிரி நிலயன குணகள '**திளிது**' பஜிசுவுதே

மலர் : 1 இதழ் : 5

**நிர்வாக ஆசிரியர்**

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross,
JP Nagar 4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276. haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**

'தாச சாகித்ய சேவா ரத்ன'
திரு. குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**

திரு. முரளிதர தாசரு, திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா, திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

# ஆசிரியர் பக்கம்

பேஜாவர் ஸ்ரீகளான ஸ்ரீவிஸ்வேஸ தீர்த்தர், நம்மை விட்டு நீங்கினார் என்னும் துயரச்செய்தி, கடந்த ஆண்டின் இறுதியில் நம் அனைவரையும் துயரத்தில் ஆழ்த்தியது. ஸ்ரீகிருஷ்ணனின் மிகச்சிறந்த பக்தராக விளங்கிய அவர், கடந்த பல தசாப்தங்களாக மாத்வர்களுக்காக மட்டுமல்லாமல், நாட்டின் நலனுக்காக பல் வேறு அரும்பெரும் செயல்களைச் செய்த மகானுபாவர். அத்தகைய துறவி வாழ்ந்த காலத்தில் நாமும் வாழ்ந்தி ருக்கிறோம் என்று மகிழ்ச்சியடையும் அதே நேரத்தில், அவருடைய சொற்பொழிவுகளைக் கேட்டு, அவர் கூறியுள்ள உபதேசங்களின்படி நடப்பதே, நாம் அவருக்குச் செய்யும் தக்க மரியாதையாகும். அவரைக் குறித்து மடாதீசர்கள் இயற்றியுள்ள சரம ஸ்லோகங்கள் இந்த இதழில் கொடுக்கப்பட்டுள்ளன.

ஜகத்குரு ஸ்ரீமன் மத்வாசார்யர் நம் கண்களிலிருந்து மறைந்த தினமான ஸ்ரீமன் மத்வநவமி (மாக சுத்த நவமி) வரவிருக்கிறது. 21 குபாஷ்யங்களைக் கண்டித்து, தத்வவாதத்தை நிறுவிய நமது ஆசார்யரைப் பற்றி ஹரிதாசர்கள் பாடிய குறிப்புகள், சிறப்புப் பதிவாக இந்த இதழில் வந்திருக்கிறது.

ஹரிகதாம்ருதசாரத்திற்கு கன்னடத்தில் 'பாவபிரகாசிகை' என்னும் உரையை, ஸ்ரீபத்பனாப தாசர் எழுதியுள்ளார். மிகச்சிறந்த உரை களில் ஒன்றாக விளங்கக்கூடிய அந்த உரையின் மொழி பெயர்ப்பினை, தினம் ஒரு பத்யம் என்ற முறையில் ஒரு இணைய தளத்தில் வெளியிட்டு வருகிறோம். விவரங்கள் இந்த இதழின் உள்ளே.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

தொடர்

## ஹரிதாச சாகித்யம்

## அங்கிதத்தின் சிறப்பு

ஹரிதாச சாகித்யத்தில் அங்கிதத்திற்கென ஒரு சிறப்பு இருக்கிறது. ஸ்ரீமத்வாசார்யர் தமது த்வாதச ஸ்தோத்திரத்தில், ஒவ்வொரு அத்தியாயத்தின் இறுதியிலும், 'ஆனந்ததீர்த்த' என்னும் அங்கிதத்தை சொல்லியிருக்கிறார். ஹரிதாசர்களுக்கு அங்கிதம் கட்டாயம். ஹரிதாசரின் காவியங்கள் அவர்களது அங்கிதங் களினால் புகழடைகிறது.

ஹரிதாச தீக்ஷை பெற்ற ஹரிதாசர்கள், எப்போதும் ஹரிநாம ஸ்மரணை செய்தவாறே இருக்கவேண்டும் என்பதால், தாம் எப்போதும் நினைக்கும் பகவந்தனின் ரூபத்திற்கு ஒரு அங்கிதத்தை குருவின் கருணையால் பெற்றுக் கொள்கின்றனர். பல ஹரிதாசர்களின் அங்கிதம் 'விட்டல' என்று முடிகிறது. பண்டரிபுரத்து விட்டலன், ஹரிதாச பரம்பரையின் ஆதார தெய்வம். விட்டலா என்றால் விஷ்ணு. விட் = ஞானத்தை, ல = கொடுப்பவன், ட என்றால் ஞானசூன்யம் என்று பொருள். 'ஞானத்தினால் சூன்யரானவர்களை மேம்படுத்துபவன் விட்டலா'. அனைத்து ஹரிதாசர்களும், விட்டலா அல்லது வேறொரு பெயரை தமது அங்கிதமாக வைத்துக் கொள்கின்றனர்.

### அங்கிதத்தின் முக்கியத்துவம்

குருகளின் மந்திரோபதேசம் இல்லாமல் பக்தியின் சரியான வழி தெரிவதில்லை. குருவின் கருணை இல்லாமல் ஹரியின் பிரசாதம் கிடைப்பதில்லை என்பது பாகவத சம்பிரதாயம். குரு விடமிருந்து மூல மந்திரோபதேசம் கிடைப்பதால், ஸ்ரீஹரியை வணங்குவதற்கான அதிகாரம் கிடைக்கிறது. மந்திரம் என்றால் வெறும் சொல் அல்ல. அதில் ஒரு ஆன்மிக சக்தி அடங்கி யிருக்கிறது. மந்திரத்தை உபதேசிக்கும்போது அந்த ஆன்மிக சக்தியை குருவானவர் சிஷ்யருக்கு வழங்குகிறார். இதையே 'தீக்ஷை' என்கிறோம்.

ஹரிதாசர் ஆகவேண்டும் என்று நினைப்பவர்கள், குருகள் நினைத் திருக்கும் தகுதியைப் பெற்று, கடினமான விரதங்களை மேற் கொண்டு, குருகளால் புகழப்பட்டு, அங்கிதத்தைப் பெறுகிறார்கள் மற்றும் கிருதிகளை இயற்றுகிறார்கள்.

குருகளிடமிருந்து அங்கிதம் கிடைக்கவேண்டுமெனில், பல்வேறு பிறவிகளில் த்யான, ஜப, தப, புண்யராசிகள் செய்திருக்க வேண்டும். இவற்றைவிட முக்கியமாக, பரமாத்மனின் கருணை இருக்க வேண்டும். ஹரிதாச தீக்ஷையைப் பெற்று, சாதனை செய்ய வேண்டும் என்னும் சிந்தனை வருவதே சுஜீவியின் லட்சண மாகும்.

ஹரிதாசர்கள், நிரக்தராகி, தன்னலமற்ற மனோபாவத்துடன் தம்மை பிம்பரூபி பரமாத்மனிடம் அர்ப்பித்துக் கொள்கிறார்கள். 'நாஹம் கர்தா, ஹரி: கர்தா' என்னும் சிந்தனையுடன், அவனின் தூண்டு தலால் இயற்றப்பட்ட கீர்த்தனைகளை அவனுக்கே சமர்ப்பணம் செய்கிறார்கள். கீர்த்தனையுடன், பகவந்தனின் நாமஸ்மரணையும் ஆகிறது. ஹரிதாசனானவன் எப்போதும் ஹரிசங்கீர்த்தனை செய்தவாறே இருக்க வேண்டும் ஆகையால் அங்கிதத்தை குருவிடமிருந்து பெற்றுக் கொள்கிறார்கள்.

அங்கிதத்தின் பயன்கள் பல உண்டு. நூற்றுக்கணக்கான ஆண்டுகள் ஆனபிறகும் கிடைக்கும் தேவர நாமாக்கள், உகாபோக, சுளாதி, முண்டிகெ ஆகியவற்றை இயற்றியவர் யார் என்று அங்கிதத்தின் மூலமாக சுலபமாக தெரிந்து கொள்ளலாம்.

**<u>அங்கித பதத்தின் பொருள்:</u>**

1. பகவந்தனுக்கு பல பெயர்கள் உண்டு. அவற்றில் ஒரு பெயரை பிம்பன் என்று சிந்தித்து உபாசனை செய்வதே அங்கிதம்.
2. பகவந்தனின் நாமஸ்மரணைக்கான வழியே அங்கித உபதேசம்.
3. சாதனைக்காக குருவானவர் உபதேசம் செய்யும் நாமமே தாச தீக்ஷை. அதுவே அங்கிதம்.

4. சிஷ்யன், குருவிடம் பிரார்த்தனை செய்து, குரு பகவந்தனிடம் பிரார்த்தனை செய்து, கருணை காட்டும் நாமமே அங்கிதம்.
5. சிஷ்யன் மற்றும் குருவிடம் இருக்கும் பிம்பரூபி பரமாத்மனின் ஐக்யம், இதைக் குறிக்கும் நாமமே அங்கிதம்.
6. ஜீவர்களின் அந்தரங்கத்தில் இருக்கும் பிம்பனின் நாமத்தை குறிப்பதே அங்கிதம்.

அங்கிதத்தைக் கொடுப்பவர் குரு. அவரை ஸ்வரூபோத்தாரகர் என்கிறார்கள். குருகள், சிஷ்யனின் அங்கிதத்தை துவக்கத்தில் வைத்து, குருவின் அங்கிதத்தை இறுதியில் வைத்து, (பொதுவாக) மூன்று நுடிகள் கொண்ட ஒரு கிருதியை இயற்றுகிறார். அதை 'பத நாமா' என்கிறார்கள். இந்த அங்கித நாமம் சாதனைக்கான முதல் படியாகும்.

## அங்கிதம் பெறும் வழிமுறைகள்

அங்கிதத்தைப் பெறுவதில் நான்கு வழிகள் உள்ளன. 1. கனவில் பெறுவது. 2. பகவந்தனிடமிருந்து பெறுவது. 3. குருவிடமிருந்து பெறுவது. 4. சொந்தமாக வைத்துக் கொள்வது.

## சொந்தமாக வைத்துக் கொள்ளும் அங்கிதம்.

இதில் இரு விதங்கள். தன் பெயரையே அங்கிதமாக வைத்துக் கொண்டு கிருதிகளை இயற்றுவதோ அல்லது, குலதெய்வம், இஷ்டதெய்வம், ஆராத்ய தெய்வம் இவற்றில் ஒருவரின் பெயரை வைத்துக்கொண்டு கிருதிகளை இயற்றுவதோ செய்யலாம்.

ஸ்ரீநரஹரி தீர்த்தர் - நரஹரி
ஸ்ரீஸ்ரீபாதராஜர் - ரங்கவிட்டல
ஸ்ரீவியாசராஜர் - கிருஷ்ண
ஸ்ரீவாதிராஜர் - ஹயவதன
ஸ்ரீவிஜயீந்திர தீர்த்தர் - விஜயீந்திர ராமா
ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள் - தீர வேணுகோபால
ஸ்ரீவிஸ்வேந்திர தீர்த்தர் - ராஜேஷ ஹயமுக
ஸ்ரீப்ரத்யும்ன தீர்த்தர் (சாகரகட்டெ) - நரஹரி
ஸ்ரீவித்யாரத்னாகர தீர்த்தர் - நாமகிரீஷ

**<u>பகவந்தனிடமிருந்தே கிடைத்த அங்கிதம்</u>**

பண்டரிபுரத்து சந்திரபாகா நதியில் குளிக்கும்போது ஸ்ரீனிவாசா சார்யருக்கு, பாண்டு ரங்க விட்டலனின் கிருபையினால் 'ஜகன்னாத' என்னும் அங்கிதம் கிடைத்தது என்று தெரிகிறது. அதையே தனது அங்கிதமாக வைத்துக்கொண்ட ஸ்ரீனிவாசா சார்யர், அன்றிலிருந்து ஜகன்னாதவிட்டலனின் தாசன் ஆனார்.

**<u>கனவில் கிடைத்த அங்கிதம்:</u>**

தைஜஸரூபி பகவந்தனின் அருளால் கனவில் கிடைத்த அங்கிதம்.

1. ஸ்ரீனிவாச ரூபத்தினால் வெங்கடப்பாவிற்கு 'ப்ரசன்ன வெங்கட' என்னும் அங்கிதம் கிடைத்தது.
2. பிராணதேவரால் வ்யாசதத்வக்ஞருக்கு 'வாசுதேவ விட்டலா' என்னும் அங்கிதம் கிடைத்தது.
3. காசியில் புரந்தரதாசரின் ரூபத்தில் தாசப்பனுக்கு 'விஜய விட்டலா' என்னும் அங்கிதம் கிடைத்தது.
4. மொதலகல்லு சேஷதாசருக்கு விஜயதாசரின் ரூபத்தில் 'குரு விஜயவிட்டலா' என்னும் அங்கிதம் கிடைத்தது.
5. கிரியம்மாவிற்கு கனவில் ரங்கனாதனின் மூலமாக 'ஹௌவன கட்டெ ரங்கா' என்னும் அங்கிதம் கிடைத்தது.
6. நாரதர் மூலமாக கமலாக்ஷிக்கு 'பீமேஷ கிருஷ்ண' என்னும் அங்கிதம் கிடைத்தது.
7. ஹுச்சாசார்யருக்கு கனவில் நாரதர் மூலமாக 'இந்திரேஷ விட்டலா' என்னும் அங்கிதம் கிடைத்தது.

** **கன்னட மூலம் : திருமதி. ஜெயம்மா, பெங்களூரு**

இந்த இதழைப் பற்றி தங்களின் பிற வாட்சப், மின்னஞ்சல் க்ரூப்களில் சொல்லி, மேலும் பல ஹரிபக்தர்கள் இந்த பயனுள்ள தகவல்களைப் பெறுவதற்கு உதவவும்.

ஸ்லோகம்

## ஸ்ரீவிஸ்வேஸ தீர்த்தர்
## சரம ஸ்லோகங்கள்

ஸ்ரீவிஸ்வேஸ தீர்த்தரைக் குறித்து இயற்றப்பட்டுள்ள சரம ஸ்லோகங்கள்:

விஸ்வவந்தி3த பாதா3ப்ஜம் விஸ்வ சம்ஸ்துத சத்3கு3ண |
நமஸ்தே விஸ்வவித்3யாய விஸ்வதீ3ன ஸுவ்ருந்தவே ||
(ஸ்ரீவித்யாதீச தீர்த்தர் இயற்றியது)

விஸ்வபோ3த சுதா3விஸ்வா வித்யாமான்ய கு3ருப்ரியம் |
விஸ்வவந்தி3த பாதா3ப்3ஜம் வந்தே3 விஸ்வேஸ யோகி3னம் ||

தப:ஸ்வாத்4யாய சுஸ்ரூஷா கிருஷ்ண பூஜாரதம் முனிம் |
விஸ்வேஷமிஷ்டத3ம் வந்தே3 பரிவ்ராட் சக்ரவர்த்தினம் ||
(ஸ்ரீவிஸ்வபிரசன்ன தீர்த்தர் இயற்றியது)

வித்யாமான்ய ராஜசிஷ்யம் ராஷ்ட்ரமான்ய யதீஷ்வரம் |
ப்ரபஞ்சமானித1ம் வந்தே3 விஸ்வேஸ குருஷேக2ரம் ||
(ஸ்ரீவித்யேஷ தீர்த்தர் இயற்றியது)

சாஸ்த்ரே தே3ஷே ச சஞ்சார: யஸ்யா சாமான்ய பூ4ஷணம் |
தம் தீ3னஜன சுஸ்ரூஷம் நௌமி விஸ்வேஸ சத்கு3ரும் ||
(ஸ்ரீவித்யா பிரசன்ன தீர்த்தர் இயற்றியது)

ப்ரக்3ஞா பவித்ரித ஸ்வாந்தான் லோககல்யாண தீ3க்ஷிதான் |
வாத்ஸல்ய ப்ரதிரூபான் தான் விஸ்வேஸான் நௌமி
மத்கு3ரூன்||
(ஸ்ரீவித்யாஸ்ரீஷ தீர்த்தர் இயற்றியது)

சுதா4 ஸ்வாதே3ன தருணம் விஸ்வேஸம் க்ருஷ்ணபூஜகம்|
விஸ்வஸ்ய வல்லப4ம் விஸ்வவல்லபோ4 நௌமி மே ப்ரியம் ||
(ஸ்ரீவிஸ்வவல்லப தீர்த்தர் இயற்றியது)

**(இணையத்திலிருந்து தொகுக்கப்பட்டவை).

தொடர்

## ஹரிதாசர்களின் வாழ்க்கை வரலாறு

## ஸ்ரீகுருகோவிந்தவிட்டல தாசர்

குருகோவிந்த விட்டல தாசர் ஒரு முறை தொட்டபள்ளாபுர் என்கிற ஊருக்குச் சென்றார். அவருடைய குருவாகிய ஸ்ரீமுத்து மோகன தாசரின் இல்லத்துக்கு சென்று பரமகுருவை ஸ்மரித்தார். அப்போது அங்கு தாசருக்கு அவர் பரமகுரு பயன்படுத்திய தம்பூரா கிடைத்தது. பரமகுருவின் அருள் தனக்குக் கிடைத்த மாதிரி தாசர் இதை பாவித்தார். பின்பு பக்திப் பரவசத்தினால் ‘முத்து மோகன தாசரே, நிம்ம ஸூத்த பாதவ நம்பிதே, தித்தி என்னய நாத்திய வித்யெய புத்தி நிலிஸிரி ஹரியலி’ என்று பரமகுரு முத்து மோகனதாசரின் மேல் ஒரு பாடல் இயற்றினார்.

1949ம் ஆண்டு தாசர், பப்ளிக் ஒர்க்ஸ் டிபார்ட்மெண்டிலிருந்து ஓய்வு பெற்றார். இப்போழுது முழுமூச்சுடன் தாசமார்க்கத்தில் செல்ல அவகாசம் கிடைத்தது. நிஜமான ஹரிதாசர் வாழ்வை நடத்தினார்.

குருகோவிந்த தாசரின் மாத்ரு பக்தி அபாரமானது. உவமை யற்றது. அவர் வாழ்வில் கற்ற முதல் மந்திரமான ‘மாத்ரு தேவோ பவ’ என்கிற மந்திரத்தை கடைசி வரையிலும் கடை பிடித்தார். ‘தாயைவிட உயர்ந்த தெய்வமில்லை’ என்கிற தத்துவத்தின்படி நடந்துகொண்டார் தாசர். தம் சிறிய வயதில் தாம் பட்ட கஷ்டங்களை நினைத்து வருந்தினார். அப்பொழுது தம்மை வளர்ந்து ஆளாக்கிய தாயின் அன்பினை நினைத்து உருகினார். தாயின்மீது உள்ள அன்பினால் தாயின்மேல் பல பதங்களைப் பாடினார். மாத்ரு பக்திக்கு இலக்கணமாக திகழ்ந்தார் தாசர்.

1950ம் ஆண்டு தாசரின் தாய் லட்சுமிபாயின் உடல் நலம் குன்றியது. வைத்தியர்கள் வந்து பரிட்சை செய்து தாயின் கடைசி காலம் நெருங்கிவிட்டது என்றார்கள். தாயார் கடைசிக் காலத்தில்

சத்கதியடைய வேண்டும் என்னும் நோக்கத்துடன் தம் வீட்டில் 'பாகவத சப்தாஹம்' பிரவசனத்தி ஏற்பாடு செய்தார். விக்ருதி ஆண்டு ஜ்யேஷ்ட மாதம் பகுள த்ருதியா அன்று தாசரின் தாய் லட்சுமிபாய் ஸ்ரீஹரியின் திருவடிகளை அடைந்தார்.

தாயின் மறைவுக்குப் பிறகு தாசர் லௌகீக வாழ்வில் பற்றை அதிகமாக விட்டுவிட்டார். ஆன்மீகப் பயணத்தை தொடர்ந்தார். எப்பொழுதும் தர்ம காரியங்களில் மனதை செலுத்தினார். தீர்த்த யாத்திரை செய்து பல மூர்த்திகளை தரிசித்தார். தாம் செய்த நல்ல காரியங்களின் பலனை தன் தாயின் நினைவாக, அவருக்கே அர்ப்பணித்தார்.

ஒரு முறை தம் தாயின் காரியதை கடிகாசல க்ஷேத்திரத்தில் (சோளிங்கர்) செய்ய வேண்டும் என்று நினைத்து, தம் தாச பந்து களுடன் கடிகாசலம் சென்றார். ஸ்ரீதந்தெ வெங்கட விட்டலதாசர் போன்றவர்கள், அவர்கூட சென்றனர். தம் தாயின் காரியத்தை கடிகாசலம் பிராண தேவரின் சன்னிதியில் நடத்தத் தீர்மானித்தார். பிராணதேவர் மலையின் எதிரிலுள்ள நரசிம்ம ஸ்வாமி மலைக்கு தாசர் தம் சிஷ்யர்களுடன் தாசவேடம் அணிந்து பக்திப் பரவசமாக பாடிக்கொண்டும், ஆடிக்கொண்டும் மலையேறிச் சென்றார். கண்கொள்ளாக் காட்சியாக அமைந்தது அது. மலையின் மேல் சென்ற பிறகுதான் ஸ்ரீ நரசிம்ம ஸ்வாமியின் சன்னிதி இன்னும் திறக்கப்படவில்லை என்று அவர்களுக்கு தெரிந்தது. முக்கிய கதவில் பெரிய பூட்டு தொங்கியது. அர்ச்சகர்கள் வந்து கதவைத் திறக்கும்வரை பஜனை செய்யலாம் என்று தீர்மானித்து, பக்தி பூர்வமாக பஜனை செய்யத் தொடங்கினர். விசேஷமாக நரசிம்ம சுளாதி ஆகியவற்றைப் பாடினார்கள். குருகோவிந்த விட்டலதாசரோ மெய்மறந்து, தியானத்தில் இருந்தவாறு பாடினார்.

கோயில் அர்ச்சகர் வந்து கோயில் கதவைத் திறக்க, அங்கு பூட்டு திறந்தே இருந்தது. அர்ச்சகர் பயந்தார். தாசர்களைக் கேட்டார். தாசர்களோ தங்களுக்கு எதுவும் தெரியாது என்றனர். பக்த கனக தாசர், புரந்தரதாசர் ஆகியோருக்கு இறைவன் கதவைத் திறந்து தரிசனம் கொடுத்ததைப் போல, குருகோவிந்த விட்டல

தாசருக்கும், இறைவன் கதவைத் திறந்து தரிசனம் கொடுத்திருக்கிறான் என்று பக்தர்கள் கூறினார்கள். அர்ச்சகர்கள் அதனை ஆமோதித்து தாசருக்கு திவ்ய தரிசனம் செய்வித்தார்கள். பின்பு, தாசர் கடிகாசலத்தில் தாயின் காரியங்களை விமரிசையாக செய்துவிட்டு ஊர் திரும்பினார்.

இவ்வாறு தீர்த்த யாத்திரை பல புரிந்த தாசருக்கு, 1952ம் ஆண்டு தன் மனைவியுடன், 'ஹரிதாச வேடத்திலேயே' பதரி யாத்திரை செய்யவேண்டுமென்று ஆசை வந்தது. ஒரு பத்ததிப் பிரகாரம் திட்டவட்டமாக யாத்திரை செய்ய திட்டங்களை தீர்மானித்தார். பாரதத்தின் வரைபடத்தை வைத்துக்கொண்டு எல்லா க்ஷேத்திரங் களையும் சேர்த்து யாத்திரை செய்வதற்கு திட்டமிட்டார். ஒரு ஐந்து மாத கால பயணத்திற்கு வேண்டிய யோசனைகளை மிகவும் முன் எச்சரிக்கையுடனும் தீர்க்க ஆலோசனைகளுடனும் தாசர் கைகொண்டார். வேண்டிய சாமான்களை சேகரித்து அவற்றை இரு துணிமூட்டைகளில் கட்டிக்கொண்டு தாச தம்பதிகள் புறப்படத் தயார் ஆனார்கள்.

முதலில் மைசூரிலிருந்து, ஸ்ரீரங்கப் பட்டணத்திற்குச் சென்று ஸ்ரீரங்கநாதனின் தரிசனம் செய்தார் தாசர். பின்பு தம் நண்பர்களுடன் ஹரிதாசர்களுடன் பஜனை செய்தவாறு தம் குருநாதரான தந்தெ முத்துமோகன தாசரின் ஊரான தேவராயன துர்காவிற்கு பயணம் செய்தார். அங்கு குருவின் ஆராதனை விமரிசையுடன் நடந்தது. அங்கு நரசிம்ம தீர்த்தத்தில் ஸ்னானம் செய்தார். மற்றும் ஸ்ரீயோகா மற்றும் ஸ்ரீபோகா நரசிம்ம மூர்த்திகளை தரிசனம் செய்தார்.

பின் அங்கிருந்து கிளம்பிய தாசர் வரிசையாக ஹரிஹர க்ஷேத்திரம், ஹம்பி, நவபிருந்தாவனம், கதக், கொல்லாபுரம், பண்டரிபுரம், புனா, பம்பாய், நாசிக், திரியம்பகம், கோதாவரி மூல ஸ்நானம், புஸாவல், தபதி நதி, உஜ்ஜயினி, போபால், நர்மதா, இடார்ஸி, மணிபுர, சித்ரகூட என பல க்ஷேத்திரங்களை தரிசித்து பதரிக்கு சென்று சேர்ந்தார். அங்கு பதரி நாராயண மூர்த்தியைக்

கண்டு பரவசம் அடைந்தார். தன்னிலை மறந்தார். தாசர் ஐந்து நாட்கள் பதரியிலேயே இருந்து பஜைகள், தேவதார்ச்சனை, பித்ரு சிரார்த்தங்கள் ஆகியவற்றை செய்தார்.

பின் அங்கிருந்து புறப்பட்டு வழியில் மேலும் பல க்ஷேத்திரங்களை தரிசித்து, தென்னிந்தியாவிற்கு வந்து அங்கு திருப்பதி, காஞ்சி, திருக்கோயிலூர், ஸ்ரீமுஷ்ணம், ஸ்ரீரங்கம் போன்ற க்ஷேத்திரங்களில் அந்தந்த மூர்த்திகளை தரிசித்து தாச தம்பதிகள் மைசூருக்கு திரும்பினர். இவ்வாறு யாத்திரை முடிக்க ஐந்து மாதங்கள் ஆயின. எட்டாயிரம் மைல் தூரம், ரெயில், பஸ், கால்நடை பயணங்கள் நடந்தன. மறுபடி 1961ம் ஆண்டு தாசர் இரண்டாவது பதரி யாத்திரையை செய்தார். யாத்திரைகளின் புண்ணிய பலன்களை தம் தாய்க்கு அர்ப்பணித்தார் தாசர்.

பல தீர்த்த க்ஷேத்திர தரிசனங்கள் ஆனபிறகு தாசர் அனேக கிரந்தங்களை இயற்றினார். பல பதங்களைப் புனைந்தார். ஹரி தாச சாகித்யத்திற்கு அபரிமிதமான சேவை சாதித்தார். ஹரிதாச வாழ்வை நடத்தினார். அபரோக்ஷ ஞானியானார். பரமாத்மாவின் பிம்பமூர்த்தியைப் பார்த்து புளகாங்கிதம் அடைந்தார். உத்தம ஜீவரானார்.

ஒரு முறை தாசருக்கு கனவில் ஹயக்ரீவ ஸ்வாமி தம் வீட்டுக்கு வந்த மாதிரி ஒரு கனவு வந்தது. அதற்கேற்ப, ஸ்ரீஜகன்னாததாசர் ஆராதித்த ஹயக்ரீவ தேவரின் விக்ரகமானது, மானமதுரெ ஸ்ரீபாண்டுரங்க தாசர் என்பவரிடம் இருந்தது. அதனை அவர் நமது தாசருக்குக் கொடுத்து, ஸ்ரீகிருஷ்ணார்ப்பணம் என்றார்.

பாண்டுரங்க விட்டலனுக்கு நிரந்தரமான சேவை செய்யவேண்டும் என்று நினைத்த தாசர், மைசூரில் உள்ள தமது இல்லத்தையே கோவிலாக்கத் தீர்மானித்தார். அதற்கான வேலைகளையும் துவக்கினார்.

** **திரு. குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்**

தொடர்

## மனப்பாடப்பகுதி

## உணவுப் பொருட்களில் ஸ்ரீஹரி ரூபங்கள்

| உணவு வகைகள் | அபிமானி தேவதைகள் | இவற்றில் உள்ள ஸ்ரீஹரியின் ரூபம் |
|---|---|---|
| புளிப்பு இல்லாதவை | ருத்ரர் | சங்கர்ஷண |
| இனிப்பு வகைகள் | இந்திரன் | வாசுதேவ |
| கோசம்பரி, சட்னி முதலியன | குருபிரகஸ்பதி | பிரத்யும்ன |
| கசப்பான பதார்த்தங்கள் | யமதர்மன் | அனிருத்த |
| கடுகு, பெருங்காயம், ஏலக்காய், பச்சை கற்பூரம் | மன்மதன் | புருஷோத்தம |
| தேன், பால், பானகம், நெய் / எண்ணெய் பட்சணங்கள் | புதன் | அதோக்ஷஜ |
| பூசணி, எள், உளுந்து கலந்த அப்பளம், வடாம் போன்றவை | தக்ஷபிரஜாபதி | நாரசிம்ம |
| உளுத்தம் பருப்பில் செய்யப்பட்டவை | ஸ்வயம்புவமனு | அச்யுத |
| உப்பு | நிர்ருதி | ஜனார்த்தன |
| பழரசம் | பிராணன் | உபேந்திர |
| வெற்றிலை | பாகீரதி | ஸ்ரீஹரி |
| குடிநீர், சுத்தோதகம் | புதன் | கிருஷ்ண |
| உணவினை புனிதமாக்க | புஷ்கரன் | ஹம்ஸ நாமகன் |

* ஆதாரம் - ஹரிகதாம்ருதசாரம்

தொடர்

# ஹரிதாசர்களின் சிந்தனை முத்துக்கள்

## ஸ்ரீமத்வ நவமி

உலகத்தில் மக்களுக்கு உண்மையான ஞானத்தைக் கொடுக்க வென்றே அவதரித்து வந்தவர், ஸ்ரீமதாசார்யர்ஜீவோத்தமரான . வாயுதேவரின் மூன்றாவது அவதாரமாக, ஸ்ரீஹரியின் ஆணைக் கேற்ப அவதரித்து வந்தவர் .

ஸ்ரீவியாசராஜரின் வாக்கு இது:
த$^{3}$ரணி மண்ட$^{3}$லதொ$^{3}$ளகெ$^{3}$ பூ$^{4}$மி சுரக$^{3}$ணகெ சாஸ்த்ராம்ருதவ
எரெது$^{3}$ ஸ்ரீகிருஷ்ணன இருவ தோ$^{1}$ரி வரபத$^{3}$ரியொளு நிந்த தீ$^{4}$ர ||

மத்வரின் ஸ்வரூபத்தை, ஸ்ரீவாதிராஜர் சொல்வது இவ்வாறு:
மருதம்ஷ மத்வமுனிரன்ன நினகெ$^{3}$
சரிகா$^{1}$ணே ஜக$^{3}$தொ$^{3}$ளகெ$^{3}$ சர்வரொளு பூர்ண ||

ஹனுமபீ$^{4}$ம மத்$^{4}$வமுனிராய
கு$^{3}$ணராம ஹரிபாத$^{3}$ சேவெயொளக$^{3}$தி$^{4}$க ப்ரேம ||

'ஈதனெ காணிரோ மத்வமுனி' என்னும் உகாபோகத்தில் ராஜர், மத்வரின் காருண்யத்தைப் பற்றி சொல்வது இப்படி:
சகல ஆக$^{3}$மக$^{3}$ளெம்ப$^{3}$ ஷரதி$^{3}$யொளகெ$^{3}$
யுகுதியிந்த$^{3}$லி முதிஸி
அகளங்க ஸ்ரீஹரியெம்ப ரத்னவ கண்டு$^{3}$
முகு$^{1}$ட தொ$^{3}$ளிட்டு லோகதி$^{3}$ மெரெதாத || -- ஸ்ரீவாதிராஜர்

மத்வ மதத்தைப் பின்பற்றுபவர்களான ஹரிதாசர்கள், ஸ்ரீஸ்ரீபாத ராஜரிலிருந்து துவங்கி, பற்பல பத, பாடல்களினால், ஸ்ரீமன் மத்வாசார்யரைப் போற்றி, புகழ்ந்து பாடியிருக்கும் பரம்பரை இருக்கிறதுஇதற்கு .மத்வரை பாடிப் புகழாத தாசர் இல்லை . .முக்கிய காரணம் ஸ்ரீபாதராஜர்

ஜயஜய ஜக$^{3}$த்ராண ஜக$^{3}$தொ$^{3}$ளகெ$^{3}$ சுத்ராண
அகி$^{2}$லகு$^{3}$ண சத்தா$^{4}$ம மத்$^{4}$வ நாம ||

ஆஸ்விஜ சுத்த தசமி அன்று அவதரித்த (விஜயதசமி) சர்வக்ஞாசார்யர், மாக சுத்த நவமியன்று நம் கண்களிலிருந்து மறைந்து, ஸ்ரீவேதவியாசரின் சேவையில் இருக்கிறார்தம் சர்வ . மூல கிரந்தங்களில் மற்றும் சஜ்ஜனர்களின் இதயமண்டபத்தில் - எப்போதும் நிலைத்திருந்து, முக்திக்கு வழியான தத்வ வாதங்களை பரப்பி வருகிறார்இவரின் வாதங்களின் சாரத்தை . .இப்படியாக வர்ணிக்கிறார் ஸ்ரீஸ்ரீபாதராஜர்

சர்வேஷ ஹரி விஷ்வவெல்ல தா புசியெம்ப
துர்வாதிகள மதவ நெரெ கண்டிஸி ||
சர்வேஷ ஹரி விஷ்வ சத்யவெந்தருஹித
சர்வாதி கீர்வாண சந்ததியலி ||

'மததொளு ஒள்ளே மதவு மத்வமதவு' என்ற புரந்தரதாசர், 'ஹரிய மதவே ஹனுமன மதவு' என்று கூறினார்:மேலும் .

மத்வராயர நெனெது3 ஷுத்த4ராகி3ரோ
ஹொத்தி வைஷ்ணவ மதத ப4வாப்தி தா4டிரோ || என்று போதித்தார் .

இதிர்யாரோ குருவெ சமர்யாரோ |
வேதசாஸ்திரகளிந்த மாயிகள கண்டி3ஸி
சாதிஸி ஹரிய சர்வோத்தமனெந்தெந்து
மோதபரிதராத திவ்யசாஸ்த்ரவ மாடித
மோததீர்த்த புரந்தரவிட்டலன தாச || -- ஸ்ரீபுரந்தரதாசர்

கலியுகதலி துரீயாஷ்ரமவனெ தரிஸி
கலுஷத மாயிகளனெ சோலிஸி
கிலவாத மத்வமதவனு பலிதெசனிஸி காகி
நெலெ ஆதிகேசவனெ பரதெய்வனெந்தவன || -- ஸ்ரீகனகதாசர்

விஜயதாசர் நிர்ணயித்து சொன்ன வார்த்தை இப்படி:

மத்வராயர கருண படெயதவ
தரெயொளகெ இத்தரேனு இல்லதித்தரேனு ||

மத்வமதவே மதவு சகல ஸ்ருதி சம்மதவு
மத்வராயர த்யான அம்ருதபான
மத்வராயர கதெயு கேளலது துரிதஹரத
மத்வராயர பகுதி மாடே முகுதி
மத்வராயர ஸ்தோத்ர மாடிதவ சத்பாத்ர
மத்வராயர பஜனெ துஷ்கர்மத்யஜனெ
மத்வராயர பண்ட ஜகக்கெ நண்ட
மத்வேஷனா கருண படெதவனெ ஷரணா || -- ஸ்ரீ விஜயதாசர்

ஆசார்ய மத்வரிடம் இதை வேண்டுங்கள் என்றார் ஸ்ரீகோபாலதாசர்.

சதத சன்மார்கத பதவனு தோரிஸி |
கதியாகு தஷப்ரமதி முனிராய ||

****கன்னடத்தில்: திரு.ஏ.பி.ஷாமாச்சார், பெங்களூரு**

| ஆராதனை | **ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்** |
|---|---|
| | **மாக & பால்குண மாதங்களில்** |

மாக அமாவாசை - ஸ்ரீகுருபிராணேச தாசர்
பால்குண பகுள த்ருதியை - ஸ்ரீவாதிராஜர் (சோதே)
பால்குண பகுள சதுர்த்தி - ஸ்ரீவியாசராஜர் (நவபிருந்தாவனம்)

தொடர்

## கேசவ நாமா

## **கிருஷ்ணா முராரி - ஸ்ரீவாதிராஜர்**

பாரிஜாதத[3] ஹூவ நாரிகெ[3] இத்த[1]னெ
வீரதா[3]னவர கெ[3]லித[3]னெ
வீரதா[3]னவர கெ[3]லித[3]னெ நரஹரி
புருஷோத்தம நம்ம மனெதெய்வ ||17||

அசுரர்களைக் கொன்று, பாரிஜாத பூவை தன் மனைவிக்கு (ருக்மிணி) கொண்டு வந்த நரஹரி புருஷோத்தமனே நம் குல தெய்வம்.

அக்ஷய பத[3]வீய பக்ஷிவாஹன ஸ்வாமி
கு[1]க்ஷியொளீரேளு பு[4]வனவ
கு[1]க்ஷியொளீரேளு பு[4]வனவனாளித நரஹரி அ
தோக்ஷஜ நம்ம மனெதெய்வ ||18||

14 உலகங்களையும் ஆளும், கருடவாகனான நரஹரி, அக்ஷய பதவியைக் கொடுக்கும் அதோக்ஷஜனே நம் குலதெய்வம்.

நரகாசுரன கொந்து ஹிரண்யன மர்த்தி[3]ஸி
க[1]ருள ப[3]கெ[3]து வனமாலெ ஹாகி[1]
க[1]ருள ப[3]கெ3து வனமாலெ ஹாகி[1]த ஹரி
நரசிம்மனே நம்ம குலதெய்வ ||19||

நரகாசுரன் மற்றும் ஹிரண்யகசிபுவைக் கொன்று, அவன் குடலை உருவி மாலையாக அணிந்த நரசிம்ம நரஹரியே நம் குல தெய்வம்.

அச்யுதானந்தனே சச்சிதானந்தனெ
மச்சாவதாரதி நலித[3]னெ
மச்சாவதாரதி நலித[3]னெ நரஹரி

அச்யுத நம்ம மனெதெய்வ ||20||

மத்ஸ்யாவதாரம் எடுத்த, அழிவில்லாதவனான, சச்சிதானந்த ரூபியான, நரஹரி அச்யுதனே நம் குலதெய்வம்.

ஜானகி ரமணனெ தா[3]னவாந்த[1]க[1]னெ
தீ[3]னரக்ஷக[1]னெ ஸலஹய்ய
தீ[3]னரக்ஷக[1]னெ ஸலஹய்ய நரஹரி
ஜனார்த்தன நம்ம மனெதெய்வ ||21||

அசுரர்களைக் கொல்பவன், பக்தர்களை ரக்ஷிப்பவன், ஜானகி ரமணனான ஸ்ரீராமன் - அவனே நரஹரி ஜனார்த்தனனான நம் குலதெய்வம்.

அபரிமித மஹிமனெ விபரீத சரிதனெ
கு[3]பித[1] வேஷகள தாளித[3]னெ
கு[3]பித[1] வேஷகள தாளித[3] நரஹரி
உபேந்த்ர நம்ம மனெதெய்வ ||22||

பற்பல ரகசிய அவதாரங்களின் மூலம், அபரிமித மகிமைகளை காட்டிய, அற்புத சரித்திரத்தைக் கொண்ட நரஹரி உபேந்திரனே நம் குலதெய்வம்.

ஹரன ப[4]ஸ்மாசுரனு மரளி பெ[3]ன்னத்த[1]லு
த[1]ருணி ரூபவனு தாளித[3]னெ
த[1]ருணி ரூபவனு தாளித[3] நரஹரி ஸ்ரீ
ஹரியெ நம்ம மனெதெய்வ ||23||

சிவனைக் கொல்ல வந்த பஸ்மாசுரனைக் கொல்வதற்காக மோகினி அவதாரத்தை எடுத்த நரஹரியான ஸ்ரீஹரியே நம் குலதெய்வம்.

கிருஷ்ணாவதாரதலி து[3]ஷ்ட[1]ர கெ[3]லித[3]னெ
வ்ருஷ்ணியர குலதிலகனெ
வ்ருஷ்ணியர குலதிலகனெ நரஹரி ஸ்ரீ

க்ருஷ்ணனே நம்ம குலதெய்வ ||24||

யாதவ குலத்தின் தலைவன், துஷ்டர்களை வென்று தர்மத்தை நிலைநாட்டிய ஸ்ரீகிருஷ்ண நரஹரியே நம் குலதெய்வம்.

இப்பத்து நால்கு நாமங்கள பாடுவெனு
அப்ப[1] கேஷவன ச[1]ரிதெயனு
அப்ப[1] கேஷவன ச[1]ரிதெயனு பாடலு
ஒப்பிஸிகொள்ளுவ ஹயவதன ||25||

அனைத்து உலகங்களுக்கும் தலைவனான ஸ்ரீஹரியின், கேசவாதி 24 நாமங்களின் கதையை பாடுவதற்கு பிம்பரூபி ஹயவதனன் அருளட்டும்.

ரங்க, நரசிங்க, வராக, ஸ்ரீனிவாச, மத்ஸ்ய, பரசுராம, ஸ்ரீராம, அச்யுத, அனந்த, மோகினி, கேசவாதி ரூபங்கள் என அனைத்தையும் தம் குலதெய்வங்கள் என்று சொல்லி, அந்த குல தெய்வத்தை பக்தியுடன் பாடினால், அதை ஹயவதனன் ஏற்றுக் கொள்வான்.

நம் இந்த உடலில் 80,725 நரசிம்ம ரூபங்கள் இருக்கிறதென்று ஹரிகதாம்ருதசாரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அவனின் அனந்த ரூபங்கள் அனைத்தும் கேசவரூபி பிம்பனான ஹயவதனனே ஆகும். ரூபரூபங்களில் ஐக்கியம் உள்ள ஸ்வ பிம்பனான ஸ்ரீஹரியின் ஸ்தோத்திரமே இதுவாகும். ஸ்ரீஹரி நம் இதயத்தில் அந்தர்யாமியாக இருக்கிறான் என்று திடமாக நம்ப வேண்டும் என்பதே ஸ்ரீவாதிராஜரின் விருப்பம்.

* இதன் தொடர்ச்சி 25ம் பக்கத்தில்.

தொடர்

## ஹரிதாசர்களின் புதிர் கவிதைகள்

## ஸ்ரீவியாசராஜரின் கிருதி

### ஸ்ரீமுக்யபிராணர் ஸ்துதி

ஆரு நின3கி3தி ரதி4க தா4ருணியொளகெ3
ஸார சாஸ்திரவ நொரெத3 சர்வக்ஞுமுனிராய ||

ஆரொந்து3 வைரிகள தரிது3 வைஷ்ணவரிகெ3
ஆரெரடு ஊர்த்4வ புண்ட்3ரகள நிடி3ஸி
ஆரு மூரர மேலே மூரதி4க குமதகள
பே3ரொரஸெ கித்தொம்மெ பி3ஸுடந்த2 தீ4ர ||

ஆரு நால்கு தத்வத3பி4மானிக3ள ஒடெ3ய
மாருதன மூரநெய அவதாரனெ
ஆரைது3 மேலெரடு3 அதி4கலக்ஷணவுள்ள
மூருதியொளொப்புதிஹ யதி வரேண்ய ||

ஆராரு மேலொந்து3 அதி4 கலெக்க த3க்3ரந்த2
சாரவனு ரசிஸி சஜ்ஜனரிகி3த்து
பாரமார்தி2க பே4த3 பஞ்சக வஸ்தா2பிஸிதெ3
தீ4ர ஸ்ரீகிருஷ்ணன தா3சரொளு தொ3ரெயெ ||

முக்யபிராண வாயுதேவர்தான் ஜீவர்களில் மிகச் சிறந்தவர். அவர் தான் ஜீவோத்தமர். பரமாத்மாவுக்கும், இலக்குமிக்கும் அடுத்த படியாக விளங்குபவர். அவருக்கு ஈடுஇணை மற்றும் அதிகம் ஜீவர்கள் கூட்டத்தில் யாருமில்லை. அவர் எல்லாம் அறிந்தவர். சர்வக்ஞர். அவரே பூமியில் ஹனுமந்தனாகவும் பீமனாகவும் மத்வராகவும் அவதரித்தார். அவர் மத்வராக அவதரித்தபோது, சர்வமூல கிரந்தங்கள் என்பதன் மூலம் எல்லா சாஸ்திரங் களையும் விவரித்தார். இதையே ஸ்ரீவியாசராஜர் பல்லவியில் கூறியுள்ளார். இப்போது சரணங்களைப் பார்ப்போம்.

ஆறு எண்ணை மையமாக வைத்து அதன் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு மடங்குகளை கணக்கில் வைத்து சொற்சிலம்பம் ஆடியுள்ளார் ஸ்ரீவியாசராஜர்.

முதல் சரணம்: முதல் வரியில், ஆரொந்து வைரிகள் என்று மனிதனுக்கு ஆறு எதிரிகள். காமம், குரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் உள்ளனர் என்கிறார். இரண்டாம் வரியில், ஆரெரடு ஊர்த்வ என்று நாம் தேகத்தில் தரிக்கும் 12 ஊர்த்வ புண்ட்ர நாமங்களைப் பற்றி குறிப்பிடுகிறார். மூன்றாம் வரியில், மத்வர் தமக்கு முன்பிருந்த 21 குமதங்களை கண்டித்ததைப் பற்றி சொல்கிறார். ஆரு மூரர மேலெ மூரு =(6x3)+3=21.

இரண்டாம் சரணம்: முதல் வரியில், ஆரு நால்கு தத்வதபிமானி என்று 24 தத்வங்களைப் பற்றியும், அவற்றின் தத்வாபிமானி தேவதைகளைப் பற்றியும் சொல்கிறார். அவற்றின் தலைவனாக ஸ்ரீவாயுதேவர் உள்ளார் என்று ஸ்ரீவியாசராஜர் கூறுகிறார். மூன்றாம் வரியில், ஆரைது மேலெரடு = (6x5)+2=32. முக்ய பிராணருக்கு இருக்கும் 32 சு-லட்சணங்களைக் கூறுகிறார்.

மூன்றாம் சரணம்: முதல் வரியில், ஆராரு மேலொந்து = (6x6)+1=37, ஸ்ரீமுக்யபிராணர், மத்வராக அவதரித்தபோது இயற்றிய 37 சர்வ மூல கிரந்தங்களைப் பற்றி குறிப்பிடுகிறார்.

**** திரு. குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்.**

தொடர்

## ஹரிகதாம்ருதசார ஸ்லோக அர்த்தங்கள்

## பல்லவி நுடி

ஸ்ரீரமணி க1ர க1மல பூஜித
சாருசரண சரோஜ பி3ரம்ம ச
மீர வாணி ப2ணீந்த்3ர வீந்த்3ர ப4வேந்த்3ர முக2 வினுத |
நீரஜ ப4வாண்டோ3த3ய ஸ்தி2தி
காரணனே கை1வல்ய தா3யக
நாரசிம்மனே நமிபே1 க1ருணிபுதெ3மகெ3 மங்க3ளவ ||1

ஸ்ரீரமணிகரகமலபூஜித - ஸ்ரீலட்சுமிதேவியின் கரகமலங்களால் பூஜிக்கப்படுபவனான

சாரு சரண சரோஜ - தேவதைகளால் போற்றப்படும் திருவடிகளைக் கொண்டவனான
பிரம்ம சமீர ... வினுத - ஸ்ரீபிரம்மா, வாயு, சரஸ்வதி, பாரதி, சேஷ, கருட, இந்திர ஆகியோர்களால் துதிக்கப்பட்ட
நீரஜ ... மங்களவ - லட்சுமி தேவியால், தேவதைகளால், பிரம்மாதிகளால் துதிக்கப்பட்ட, பிரம்மாண்டத்தின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய காரணனான, மோட்சத்தை அளிக்கவல்ல நாரசிம்மனே உன்னை வணங்குகிறேன். கருணை கூர்ந்து மங்களத்தை அளிப்பாயாக.

ராமகிருஷ்ணாதி ரூபங்கள் என்று ஸ்ரீஹரிக்கு அனந்த ரூபங்கள் இருந்தாலும், ஸ்ரீஜகன்னாததாசர் இங்கு விசேஷமாக, பிரம்மாண்டத்தின் லய காரணனே என்று நரசிம்ம ரூபத்தை மட்டும் வணங்க காரணம் என்னவென்றால், நீரஜ - நீரில் பிறந்த தாமரை. பவ - அதில் பிறந்த பிரம்மா. அண்ட - சரீரம்.

ஹிரண்யகசிபு பல ஆயிரக்கணக்கான ஆண்டுகள் கடுந்தவம் புரிந்து, தன் மேல் புற்று வளர்ந்து, அதனுள் வெறும் தோல் அஸ்தி மட்டும் இருக்க (அஸ்தி பஞ்சரனாக), அவனுடைய தவ வலிமையால் புற்றின் ஒவ்வொரு துளையிலும் அக்னி ஜ்வாலை வர, தேவதைகள் பிரம்மனிடம் சென்று முறையிட, பிரம்மதேவன் ஹிரண்யகசிபு தவம் செய்யும் புற்றின் அருகில் வந்து, தன் கையில் இருந்த தங்கமயமான கமண்டலத்திலிருந்து நீரை புற்றின் மேல் ப்ரோக்ஷணம் செய்ய, புற்றினுள் இருந்த அஸ்தி பஞ்சரனான ஹிரண்யகசிபு சுத்தமான, புஷ்டியான, பலம் பொருந்திய புதிய தேகத்துடன் வெளிவந்தான். எனவே, நீரஜ பவாண்ட என்றால் ஹிரண்யகசிபு, அவனில் உதித்த ஸ்ரீபிரகலாதன். அந்த ஹிரண்யகசிபுவின் ஸ்திதிக்கு காரணமான ஸ்ரீ நரசிம்ம பகவானையே, விசேஷமாக ஸ்ரீதாசர் இங்கு குறிப்பிட்டுள்ளது சிறப்பு.

கைவல்யதாயக - நரசிம்ம பகவானின் அவதாரம் முடியும் தருணத்தில் அவர் பிரகலாதனை வைகுண்டத்திற்கு அழைத்த போது, பூலோகத்தில் இருக்கும் அனைத்து பாமர மக்களையும் அழைத்து வருகிறேன், அவர்களுக்கும் மோட்சம் அளிக்கவேண்டும் என்று அவர்கள் மேல் கருணை கூர்ந்து வேண்டிக்கொள்ள,

நரசிம்மரும், அனைத்து பாமர மக்களுக்கும் நான் மோட்சம் அளிக்கிறேன் என்று உறுதி கூறியதை, ஸ்ரீதாசர் 'கைவல்ய தாயக நாரசிம்மனே' என்று கூறியுள்ளார். நாம் யாரை, எதற்காக வணங்க வேண்டும், என்பதை தாசர் இங்கு குறிப்பிட்டுள்ளது சிறந்த அம்சமாகும்.

ஸ்ரீலட்சுமிதேவியின் திருக்கரங்களால் பூஜிக்கப்படுபவனும், தேவதைகளால், பிரம்மாதிகளால் துதிக்கப்படுபவனும், ஹிரண்ய கசிபுவைக் கொன்று, பிரகலாதனுக்கு வரமளித்தவனான, பாமர மக்களுக்கு மோட்சத்தை அளிப்பவனான, சர்வோத்தமனான, அனந்தகல்யாண குணபரிபூர்ணனான சகலதோஷ விதூரனான லட்சுமிபதியான ஸ்ரீமன் நாராயணனையே வணங்கவேண்டும்.

மேலும், கருணிபுதெமகெ மங்களவா. மங்கள என்றால் ஸ்ரீமதானந்த தீர்த்த பகவத்பாதரால் அளிக்கப்பட்ட 37 சர்வமூல கிரந்தங்கள் என்று பொருள். உதாரணம்:

பாரதிரமணன மங்கள சாஸ்திர விசார இதக்கெ
மூல பகுதி ஜன பிரசன்ன லகுமிரமண இன்னு
தகிடதகிட எந்து குணிகுணியெலோ பால கோபால

என்று பாடிய ஸ்ரீவித்யாபிரசன்ன தீர்த்தர் வாக்கிற்கிணங்க, மத்வ சாஸ்திரத்திற்கு மட்டுமே பகவான் இசைகிறான். இன்னொரு உதாரணம்:

ஈதனு பேளித மாதுகளனு ஹரி கூது கேள்வனெம்போது கரே - ஸ்ரீ ஹஸிக்யாளு கோவிந்த தாசரின் உரையின்படி, பாமர மக்களுக்கு சாதன மார்க்கத்தின் வழி நடந்து செல்ல, மோட்சமடைய, மத்வ சாஸ்திரமே முக்கிய குறிக்கோள். எனவே, ஸ்ரீதாசர், மத்வ சாஸ்திர ஞானத்தினை கருணை கூர்ந்து அளிப்பாயாக என்று வேண்டியுள்ளார்.

** **திரு.முரளிதர தாசரு, பெங்களூரு.**

தொடர்

## பகவத்கீதை

### பகவத்கீதை Vs ஹரிகதாம்ருதசாரம்

ஸ்ரீஜகன்னாததாசர் இயற்றிய கன்னட ஹரிதாச சாகித்யத்தின் மேருகிருதியான ஹரிகதாம்ருதசாரம் - பாகவதம், பகவத்கீதை, மகாபாரதம், ராமாயணம், உபநிஷத்கள், புராணங்கள், பிரம்மசூத்திர பாஷ்யங்கள் என அனைத்தின் சாரத்தையும் தனக்குள் அடக்கியுள்ளது. விசேஷமாக ஸ்ரீமத் ஆனந்த தீர்த்தரின் கீதா பாஷ்யம், கீதா தாத்பர்யம், பாகவத தாத்பர்யம் மற்றும் தந்திர சாரத்தின் பல்வேறு கருத்துகளை அப்படியே மொழிபெயர்த்து இதில் தந்துள்ளார் தாசர். இந்தக் கட்டுரைத் தொடரில் ஹரி கதாம்ருதசாரத்தில், பகவத்கீதையின் சாரம் எப்படி வந்துள்ளது என்பதை மட்டும் பார்ப்போம்.

1. சுக2 துக்கே2 ஸமே க்ருத்வா லாபா4 லாபௌ4 ஜயா ஜயௌ |
ததோ யத்3தா4ய யுஜ்யஸ்வ நைவம் பாபமவாப்ஸ்யஸி ||
(கீதை 2-38)

சுகம் துக்கம், லாபம் நஷ்டம், வெற்றி தோல்வி இவற்றை சமமான மனநிலையிலேயே பார். உன் கடமைகளை இப்படி சமநிலையில் பார்த்தவாறு செய்தால், உன்னை பாவம் அணுகாது.

ஹரியெ முக்2ய நியாமகனு எ
ந்த3ரிது புண்யாபுண்ய ஹருஷா
மருஷ லாபா4லாப4 சுக2துக்கா2தி த்வந்த்3வக3ள |
நிருத அவனங்க்ரிகெ3 சமர்ப்பிசு
நரக பூ4 ஸ்வர்க்கா3 பவர்க3தி
கரண நியாமகன சர்வத்ரதலி நெனெவுதிரு ||
ஸ்தாவர ஜங்கம சந்தி (தியான ப்ரக்ரிய சந்தி) #14

புண்ணியம், பாவம், மகிழ்ச்சி, விரோதம், லாபம், நஷ்டம், சுகம், துக்கம் ஆகிய அனைத்திற்கும் ஸ்ரீஹரியே நியாமகன் (பொறுப்பு) மற்றும் அதிபதி என்று அறிந்து அவற்றை அவன் பாதங்களுக்கு சமர்ப்பிக்கவேண்டும். நரக, பூமி, ஸ்வர்க்கம் மற்றும் மோட்சத்தில் கரண- நியாமகனாக (அனைத்திற்கும் அதிபதியாக /

அனைத்தையும் நடத்துபவனாக) இருக்கும் ஸ்ரீஹரியை எப்போதும் நினைத்திரு.

2. யக்[3]ஞசிஷ்டாஷின: ஸந்தோ முச்யந்தே சர்வ கில்பி[3]ஷை: |
பு[4]ஞ்சதே தே த்வக[4]ம் பா[1]பா[1] மே பசந்த்யாத்ம காரணாத் ||
(கீதை 3-13)

யக்ஞத்தை செய்து, தேவதைகளுக்கு ஆஹுதி கொடுத்து, மிச்சமிருப்பதை உண்ணும் சஜ்ஜனர்கள் அனைத்து பாவங்களிலிருந்தும் விடுபடுகின்றனர். தனக்கு மட்டுமாக சமைத்து சாப்பிடுபவனின் உணவு பாவத்திற்கு காரணமாகிறது. 'தேவயக்ஞ, பிரம்மயக்ஞ, பித்ருயக்ஞ, பூதயக்ஞ, மனுஷ்யயக்ஞ' என்னும் பஞ்ச-மஹா யக்ஞங்களை செய்து, உறவினர், விருந்தினர்களை உபசரித்து, பின் சாப்பிடுவது சாலச் சிறந்தது. உண்பருக்கு ஏற்படும் 'பஞ்ச-ஸூன' தோஷங்களை போக்குவதற்கு இந்த பஞ்ச மஹா யக்ஞங்கள் உதவுகின்றன.

கு[1]ட்டி[1] கொயிது[3]த[3]னட்டு இட்டுத[3]
ஸூட்டு கொட்டுத முட்டலக[4] ஹி
ட்டிட்டு மாள்புது[3] விட்டலுண்டுச்சிஷ்ட சஜ்ஜனர
பி[3]ட்டு தன்னய ஹொட்டெகோ[3]சுக[3]
த[2]ட்டனுணுதிஹ கெட்ட மனுஜர
கட்டி ஒய்தெ[3]ம பட்டண தொளொத்தட்டி லிடு[3]திஹரு ||
(சகல துரித நிவாரண சந்தி / பக்தாபராத சஹிஷ்ணு சந்தி) #28

'அட்டு இட்டுத சுட்டு கொட்டுத முட்டலு'. அட்டு என்றால் சமைத்து. இட்டுத என்றால் பிரதிமா / சாலிகிராமத்தில் இருக்கும் ஸ்ரீஹரியின் முன் வைத்து நைவேத்தியம் செய்ததை. சுட்டு என்றால் அக்னி அந்தர்கதனான பரசுராமனுக்கு அர்ப்பணம் செய்து. அந்த வைஸ்வதேவ மிச்சத்தை. முட்டலு என்றால் சஜ்ஜனர்கள் சகிதமாக உண்ணவேண்டும். ஸ்ரீஹரியானவர், ஸ்வாக்யரசத்தை ஸ்வீகரித்த பிறகே, நைவேத்தியம் பிரசாதம் எனப்படுகிறது. இத்தகைய பிரசாதத்தை உண்பதால் சஜ்ஜனர் களின் பாவங்கள் ஹிட்டித்து (பொடி செய்து) - பொடிப் பொடியாக

ஆகின்றன. இப்படி செய்யாமல், சமையல் செய்தவுடனேயே அப்படியே அதை உண்பவனை, கயிறால் கட்டி, யம பட்டணமான நரகத்திற்கு அழைத்துச் செல்வார்கள். 'ஹரிகெ சமர்ப்பிதவல்லத போஜன சூகர போஜனவோ', 'நாலிகெ சாபல்யக்கெ ஜனர அன்ன உண்ணபேட', 'பரர அன்னவன்னுண்டு பரர தனத கண்டு பரிபரி க்லேஷகளுண்டே' என்று பாடுகின்றனர் ஹரிதாசர்கள்.

பகவந்தனின் விருப்பத்தின்படி செய்யப்படும் சத்கர்மமே யக்ஞும். தேவதைகளுக்கு நன்றிக்கடன் பட்டிருக்கும் நாம், அவர்களுக்கு இஷ்டமான உணவினை சமர்ப்பிப்பதே நம் கடமையாகும்.

****ப்ராணேஷ கேசவ தாசர். பெங்களூரு**

****18ம் பக்கத்திலிருந்து தொடர்ச்சி.**

## 4. கேசவ ஜகதீஷ - இயற்றியவர் : ஸ்ரீவாதிராஜர்

இந்த கேசவ நாமாவில் பல்லவி, அனுபல்லவி, பலஸ்துதி என்று எதுவும் இல்லை. 24 நுடிகளிலும் 'சீதாபதே' என்னும் சொல் தொடர்ந்து வருகிறது. அனைத்து யதிகளின் அந்தர்யாமி ஸ்ரீராமனே என்ற சிந்தனையுடன் இதை சொல்லியிருக்கலாம்.

கேஷவ ஜகதீ[3]ஷ ஸாஸிரபா[4]ஸுர கோ[1]டி[1] ஸங்கா1ஷ
வாஸவாதி[3]கள வந்த்[3]ய சீதாபதே ||1||

சீதாபதியான, இந்திரன் முதலானவர்களால் வணங்கப்படும், 1000 கோடி சூரியன் போன்ற ஒளியைக் கொண்டவனாகிய ஜகதீசன் - கேசவன்.
(தொடரும்).

**** திருமதி. ஜெயம்மா, பெங்களூரு**

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

## உவமைகளின் அழகு

ஸ்ரீஜகன்னாததாசரின் சிறந்த கிருதியான ஹரிகதாம்ருதசாரத்தில் இருக்கும் உவமைகளை, அவற்றின் அழகினை, ஸ்ரீசங்கர்ஷண ஒடெயரின் உரையில் விளக்கியவாறு, இங்கு பார்ப்போம்.

அனைத்து கவிஞர்களும் தமது காவியங்களை தக்க அலங்காரங் களினால் அலங்கரிக்கின்றனர். ஆனால் மாத்வ கிரந்தகாரர்களின் அலங்காரத்தின் அழகே ஒரு தனி விதமாக இருக்கிறது. ஜகன்னாததாசரின் உவமைகளும் மனதிற்கு மிகவும் மகிழ்வைத் தருகின்றன. அதிலிருந்து ஓரிரு உதாரணங்களைப் பார்ப்போம்.

ப1ரிமளவு சுமனக3ளொள்க3னல
நரணியொளகி3ப்ப1ந்தெ1 தா3மோ
த3ரனு பிரம்மாதி3க3ள மனத3லி தோ1ரி தோ1ரத3லெ |
இருதி1ஹ ஜகன்னாத1விட்டலன
கருண படெவ முமுக்ஷு ஜீவரு
பரமபா4க3வத1ரனு கொ1ண்டா3டு3வுது பிரதி1தி3னவு || (1-13)

ஸ்ரீஹரியின் வியாப்தி, இந்த உலகில் இருக்கும் நடக்கும் / நடக்கா உயிரினங்களில் எப்படி இருக்கிறது என்று சொல்கிறார். பூவிற்குள் நறுமணம் மறைந்திருப்பதைப் போல, விறகுக்கட்டையில் நெருப்பு மறைந்திருப்பதைப் போல, நற்குணங்கள் நிரம்பிய ஸ்ரீமன் நாராயணன், பிரம்மனே முதலான ஜீவர்களின் மனதில் - பூ மலர்ந்தால் அதிலிருந்து நறுமணம் வருவதைப் போல; கட்டை எரிந்தால் அதிலிருந்து நெருப்பு வருவதைப் போல - இருந்தும் இல்லாமல் மறைந்திருப்பான் என்கிறார். மோட்சத்தை விரும்பும் ஜீவர்கள், இப்படிப்பட்ட ஸ்ரீஹரியை தினந்தோறும் வணங்க வேண்டும் என்றும் சொல்கிறார் தாசர்.

இந்த ஸ்லோகத்தில், பூவினை மனதிற்கும், நறுமணத்தை ஸ்ரீஹரிக்கும் பொருத்துகிறார். பூ மலர்ந்தால் அதிலிருக்கும் நறு மணம் நன்றாக வீசுகிறது. அதுபோலவே நான், எனது என்ற

கர்வத்துடன் இருக்கும் மனது, ஞான, பக்தி, வைராக்கியம் இவைகளினால் நிரம்பினால், நறுமணத்திற்கு சமமான ஸ்ரீஹரி தன் ரூபத்தைக் காட்டி நமக்கு அருள்கிறார். அதற்காக கர்வம், பொறாமை இவற்றை முதலில் நீக்கவேண்டும். பிறகு ஞான, பக்தி, வைராக்கியம் ஆகியவற்றால் மனம் என்னும் புஷ்பத்தை பூக்க வேண்டும். பிறகு ஸ்ரீஹரியின் நற்குணங்களின் சிந்தனையை செய்தால், கட்டையிலிருந்து நெருப்பு வெளி வருவதைப் போல, ஸ்ரீஹரி நம் கண்ணிற்குத் தெரிந்து நமக்கு அருள்வார்.

பிரம்மனுக்கு எப்போதும் கர்வம், பொறாமை ஆகியவை இல்லை. அவர் எப்போதும் ஸ்ரீஹரியின் குணங்களையே நினைத்துக் கொண்டிருக்கிறார். பிறகு தாரதம்யத்தில் வரும் தேவதைகளுக்கு சிறிதளவு கர்வம், பொறாமை ஆகியன இருந்தாலும், அவர்கள் ஞான, பக்தி, வைராக்கியம் இவற்றினால் அவற்றை போக்கிக் கொண்டு ஸ்ரீஹரியை நினைத்து, அவரின் தரிசனத்தைப் பெறுகின்றனர். 'பிரம்மாதி மனதலி தோரி' என்று இந்த விஷயத்தை தாசர் விளக்குகிறார்.

ஞான, பக்தி, வைராக்கியத்தினால் யார் இந்த கர்வம், பொறாமை ஆகியவற்றை தூர விலக்குவதில்லையோ, அவர்களின் மனதில் ஸ்ரீஹரியானவர், பூவில் மறைந்திருக்கும் வாசத்தைப் போல, கட்டையில் மறைந்திருக்கும் நெருப்பைப் போல மறைந்தே இருக்கிறார். இதை 'தோரதலே' என்று விளக்குகிறார் தாசராயர்.

அரணியிலிருந்து நெருப்பை வரவழைக்க அதை கடைவதைப் போல, நாமும் குரு-சேவை, சாஸ்திரங்களைப் படித்தல் ஆகியன செய்தால் ஸ்ரீஹரி நமக்குக் காட்டியளிப்பார் என்று தெரிவிப் பதற்காக கட்டையின் உதாரணத்தைக் கொடுக்கிறார் தாசர். இந்த விளக்கங்களினால் ஸ்ரீதாசர் 'ஓம் அக்னிர்வைதேவானாம நமோ விஷ்ணு: பரம:' 'ஸாகாஷ்டா ஸா பராகதி:' ஆகிய ஸ்ருதி ஸ்ம்ருதிகளின் வாக்கியங்களை நமது நினைவிற்குக் கொண்டு வருகிறார்.

இங்கு இன்னொரு உதாரணத்தையும் பார்ப்போம்.

வாரித³னு மளெகெ³ரெயெ பெளெதி³ஹ
பூ⁴ருஹங்க³ள சித்ரப2லரஸ
பே³ரே பே³ரிப்ப¹ந்தெ¹ ப³ஹுவித⁴ ஜீவரொளகி³த்து¹ |
மாரமணனவரவர யோக்³யதெ
மீரத³லெ கு³ண க¹ர்மக³ள அனு
ஸார நடெ³சுவ தே³வனிகெ³ வைஷம்யவெல்லுஹுதோ³ || (3-23)

மூன்று வித ஜீவர்களிடமும் ஸ்ரீஹரியானவர் ஒரே மாதிரியே இருக்கிறார் என்று இந்த ஸ்லோகத்தில் சொல்கிறார். மேகமானது மழையை கொடுக்கிறது. அதிலிருந்து வளரும் விதவிதமான மரங்கள், அவற்றின் வெவ்வேறு சுவைகள் இருப்பதைப்போல, லட்சுமி வல்லபனான நாராயணன் தன் கருணையை அனைத்து வித ஜீவர்களின் மேலும் சொரிந்து, கருணாகரனாக இருந்து, அவர்களின் தகுதியை மீறாமல், அவர்களின் கர்மங்களுக்கேற்ப அவர்களின் செயல்களை செய்விக்கிறார். நிலைமை இப்படியாக இருக்கையில் ஸ்ரீஹரிக்கு பாரபட்சம் இருக்கிறது என்று சொல்ல முடியாது.

இங்கு மேகத்திற்கு ஸ்ரீஹரியையும், மழைக்கு ஸ்ரீஹரியின் கருணையையும், விதைகளுக்கு ஜீவர்களையும், பழங்களின் சுவைக்கு ஜீவர்கள் செய்யும் பல செயல்களையும் ஒப்பிட்டு விளக்குகிறார் தாசர்.

மேகத்திற்கு அபிமானியான பர்ஜன்ய நாமக சூரியன், சுத்தமான நீரினை ஒரே மாதிரியாக அனைத்து இடங்களிலும் மழையாக பெய்விக்கிறார். வெவ்வேறு விதமாக பெய்யவேண்டும் என்று பர்ஜன்யனும் செய்வதில்லை; அந்த நீரும் விழுவதில்லை. ஆனால் விதைகளின் தன்மைக்கேற்ப, அவை வெவ்வேறு விதங்களாக வளர்கின்றன. அதுபோலவே, ஸ்ரீஹரியின் மனதும், கருணையும் அனைத்து ஜீவர்களிடத்தும் ஒரே மாதிரியாக இருக்கிறது. பற்பல விதமான விதைகள், நீரின் சம்பந்தம் கிடைத்ததும், அவரவர்களின் தன்மைக்கேற்ப எப்படி வளர்கின்றனவோ, அது போல, ஸ்ரீஹரி மற்றும் ஜீவர்களின் சம்பந்தம் கிடைத்ததும், மூன்று வித ஜீவர்களும், அவரவர்களின்

தகுதிக்கேற்ப அவரவர்களுக்கு பலன்கள் கிடைக்கின்றன. ஆகையால் இதன் தோஷமானது ஜீவர்களுடையதே ஆகுமே தவிர, ஸ்ரீஹரியின் கருணைக்கு எந்தவித வித்தியாசமும் இல்லை என்று தெரிவிக்கிறார் தாசர்.

புண்ய பாபாதிகம் விஷ்ணு: காரமேத் பூர்வ கர்மணா |
அனாதித்வாத் கர்மணஷ்ச நவிரோத கதஞ்சன || (சூத்ரபாஷ்ய)

அனாதி யோக்யதா கர்மஸாபேக்ஷோஹி கதோத்யஜ
-- சத்தத்வரத்ன மாலா

இன்னும் இதைப் போல பற்பல உதாரணங்கள், வியாப்தி சந்தி முழுவதுமாக நிரம்பியிருக்கிறது. அதனாலேயே, ஸ்ரீகர்ஜிகி தாசர், தமது ஹரிகதாம்ருதசார பல-ஸ்ருதியில் ஸ்ரீஜகன்னாததாசரை 'ஆஷு கவிகுல கல்பதரு' என்று புகழ்ந்திருக்கிறார்.

ஹரிகதாம்ருதசாரத்தின் சில ஸ்லோகங்களையே பார்த்தாலும், ஸ்ரீகர்ஜிகி தாசர் சொல்லியிருப்பது எவ்வளவு சரியான விஷயம் என்று அறிந்து கொள்ளமுடியும்.

ஹரிகதாம்ருதசார நவரஸ
ப4ரித1 ப3ஹுக3ம்பீ4ரத்னா
க1ர ருசிர ஸ்ருங்கா3ர ஸாலங்கா1ர விஸ்தா1ர |
ஸரஸனரக1ண்டீர வாசா
ர்யர ஜனித1 ஸுகு1மார ஸாத்1வீ
க1ரிகெ3 பரமோதா3ரமாடித3 மரெயது3பகா1ர ||

இப்படிப்பட்ட ஞானிகளான ஜகன்னாததாசரை குருவாக அடைந்த மாத்வ சமூகமே மிகவும் பெருமை வாய்ந்ததாகும்.

*** கம்பாலூர் கோபாலகிருஷ்ண

எங்களது இதர புத்தகங்களை வாங்கிப் படித்து, மற்றவர்களுக்கு பரிசளித்து ஆதரவளித்தால், தமிழில் மேலும் புத்தகங்களைக் கொண்டு வர எங்களுக்கு உதவியாக இருக்கும்.

தொடர்

## கன்னட கிரந்த அறிமுகம்
## ஶ்ரீலட்சுமி ஷோபானெ

ஶ்ரீமத்வ மதப் பரம்பரையில், உடுப்பியின் அஷ்டமடங்களில் ஒன்றான ஸோதெ மடத்தின் பீடாதிபதியாக அலங்கரித்தவர் ஶ்ரீவாதிராஜர். மத்வ சித்தாந்தத்தில் வியாச மற்றும் தாச சாகித்யம் என இரண்டுக்குமே தமது பங்களிப்பை அளித்த இவர் ‘ஹயவதன’ என்னும் முத்திரையில் பல கன்னட கிரந்தங்களை, கிருதிகளை, உகாபோகங்களை அருளியவர். 120 ஆண்டுகள் பூத உடலுடன் இருந்ததுடன், அதில் 112 ஆண்டுகள் சன்யாச வாழ்க்கையிலேயே கழித்து, ச-சரீரமாக பிருந்தாவன பிரவேசம் செய்தவர்.

லட்சுமி ஷோபானெ என்பது ஶ்ரீவாதிராஜர் அருளிய கன்னட கிரந்தமாகும். இது ஶ்ரீஸ்துதி என்றும், ஜகன்மாதாவான ஶ்ரீலட்சுமி தேவியின் ஸ்துதி எனப் போற்றப்பட்டாலும், இந்த கிரந்தம் முழுவதுமே ஶ்ரீஹரியின் ஸ்மரணையே நிரம்பியுள்ளது. இதில் லட்சுமிபதியான ஶ்ரீமன் நாராயணனின் சர்வோத்தமத்வமே கூறப் பட்டுள்ளது. இது ஆதிதம்பதிகளான லட்சுமி நாராயணரின் பாடல். வேதாந்த கிரந்தங்களைப் போல ஞானம் தரும் ஒரு கன்னடப் படைப்பு. முக்கியமாக ‘ஶ்ரீஹரியே சர்வோத்தமன், அனந்தானந்த கல்யாண குண பரிபூர்ணன், சர்வதோஷதூரன் என சாதிக்கும் கிரந்தமே ஶ்ரீலட்சுமி ஷோபானம் ஆகும். இது சர்வ அமங்கலங் களையும் பரிகாரம் செய்து மங்கள பிராப்தியை அருளக் கூடியது.

ஶ்ரீவாதிராஜர், அனேக கிரந்தங்களை இயற்றியிருக்கிறார். வேறெந்த கிரந்தங்களுக்கும் இல்லாத தனிச்சிறப்புகள் இந்த லட்சுமி ஷோபானத்திற்கு உண்டு. அந்தச் சிறப்புகளில் ஒன்று, இது பகவானின் உத்தரவின்படி எழுதப்பட்டது என்பதுதான். ஶ்ரீவாதிராஜரின் கனவில் தோன்றிய ஶ்ரீஹயக்ரீவர், தனது கல்யாண குணங்களை பாடும்படி ஆணையிட, உருவான

கிரந்தமே இது. இதை லட்சுமி ஷோபானெவின் 109வது பத்யத்தில் விளக்கியிருக்கிறார் ஸ்ரீவாதிராஜர்.

மற்றொரு சிறப்பு என்னவெனில், ஸ்ரீவாதிராஜரின் 112 ஆண்டு சன்யாச வாழ்க்கையின் தபோசக்தி, மந்திர சித்தி, தத்வ ஞானத்தின் பலனை நமக்கு அருளும் விதமாக, 112 பத்யங்களில் இந்த கிரந்தத்தை இயற்றியிருக்கிறார். ஸ்ரீமத் பாகவதத்தின் அஷ்டம ஸ்கந்தத்தில் கூறப்பட்டுள்ள விஷயங்களை, முக்கியமாக பாற்கடலைக் கடைந்தபோது ஸ்ரீலட்சுமிதேவி அதிலிருந்து ஆவிர்பவித்து, ஸ்ரீமன் நாராயணனை மணந்து கொண்ட வைபவத்தைப் பற்றி ஸ்ரீவாதிராஜர் விளக்கும் விதமாக இந்த கிரந்தம் அமைந்துள்ளது.

முக்கியமாக ஸ்ரீவாதிராஜர், இங்கு பாற்கடலைக் கடைந்தபோது ஆவிர்பவித்த ஸ்ரீலட்சுமிதேவியின் ரூப சௌந்தர்யத்தைப் பற்றி விளக்கி ஸ்வயம்வரத்தின்போது, ஸ்ரீலட்சுமிதேவி எல்லா தேவதைகளிடத்திலும் ஒவ்வொரு தோஷங்கள் இருக்க, தோஷங்களே இல்லாதவன் ஸ்ரீஹரி ஒருவனே என நிச்சயித்து, அவனுக்கு மாலையிடும் கட்டத்தை விளக்குகிறார். மேலும் பகவானின் விசேஷ குணங்களை விவரித்து, விவாகத்தின் அங்கமாக தேவதைகள் அளிக்கும் காணிக்கைகளையும், பகவானை மனைக்கு அழைக்கும் விதத்தையும் எடுத்துக்கூறி, முடிவில் பல- ஸ்ருதியுடன் நிறைவு செய்கிறார் ஸ்ரீவாதிராஜர்.

இங்கு பகவானின் விசேஷ குணங்களையும், சகலவிதமான தோஷங்களிலிருந்து விடுபட்டவன் என்பதையும், பகவானுக்கு தாய், தந்தை, கர்ப்பவாசம் துக்கம் இல்லை, பசி, தாகம், மூப்பு, ரோகம், மரணம் துக்கம் இல்லை என்பதையும், பிறப்பு, இறப்பு, நரகவாச துக்கம் இல்லை என்பதையும் எடுத்துக் கூறியதுடன், அவனுக்கு பாவ, புண்யங்கள் சேர்வதில்லை என்பதையும் ஸ்பஷ்டமாக முறையே பிரளய காலத்தில் பகவான் பிரம்மாண்டத்தை, தன்னுடைய உதரத்தில் தாங்குவதன் மூலமும், நரசிம்ம மற்றும் கூர்வ அவதாரங்களை உதாரணமாகக் கொண்ட, பகவானின் கால் கட்டை விரல் நுனியில் உதித்த கங்கை, ஸ்மரணை மாத்திரத்திலேயே நம்முடைய பாவங்களைக்

களையும் சக்தியை பெற்றதன் விதத்தை மிகவும் அழகாகவும், தெளிவாகவும் மிகச் சுலபமாகவும் விளக்கியுள்ளார்.

முடிவில் ஸ்ரீவாதிராஜர், 110 மற்றும் 112 பதங்களை பல-ஸ்ருதியாக, இந்த உயரிய கிரந்தத்தை பாராயணம் செய்வதனால், ஆயுள், ஆரோக்கியம் மற்றும் ஐஸ்வர்யத்தை அடைவர், கஷ்டங்கள் எல்லாம் நீங்கி சுகமாக வாழ்வர் என்பதையும் குறிப்பாக திருமணம் வேண்டும் இல்லங்களில் இதனைப் படிப்பதனால், சீக்கிரமே திருமணம் ஆகும், திருமணமான தம்பதிகளுக்கு தீர்க்க சுமங்கலித்துவம், அன்யோன்யம் தினம் தினம் அதிகரித்து சுகமாக வாழ்வர் என்பதையும் விளக்குகிறார். இது எல்லாவற்றிற்கும் மேலாக, மோட்சத்தையும் அளிக்க வல்லது இந்த கிரந்தம் என்பது உண்மை.

ஸ்ரீவாதிராஜர், இந்த கிரந்தத்தின் பாராயண மகிமையை நம் கண் முன்னே காட்டும் விதமாக, ஒரு திருமண வீட்டில் பாம்பு கடித்து இறந்த மணமகனை, ஸ்ரீலட்சுமி ஷோபானெ பாராயணம் செய்ததன் மூலமாக பிழைக்க வைத்து, நிரூபணம் செய்துள்ளார்.

இந்த உயரிய கிரந்தமான ஸ்ரீலட்சுமி ஷோபானெ என்பது பெண்கள்தான் படிக்க வேண்டும், திருமண வீட்டில்தான் பாட வேண்டும் என்பதல்லாமல், எல்லோரும், எங்கேயும், எப்போதும் பாராயணம் செய்யவேண்டிய உத்தம கிரந்தம் ஆகும். இதை விடாமல் அர்த்த அனுசந்தானத்துடனும், பக்தியுடனும் பாராயணம் செய்து பயனடைவோமாக.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

*** **திரு. லட்சுமிபதிராஜா, சென்னை**

வங்கிக் கணக்கில் சந்தா செலுத்தினால், மறக்காமல் உங்கள் முகவரியை 89044 58276 எண்ணுக்கு வாட்சப் / SMS அல்லது haridasa.vijayam@gmail.comக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

## ஹரிதாச விஜயம்

## சந்தா விவரம் (36 பக்கங்கள்)

1 ஆண்டுக்கு ரூ.200/- 3 ஆண்டுகளுக்கு ரூ.500/-
5 ஆண்டுகளுக்கு ரூ.900/- 10 ஆண்டுகளுக்கு ரூ.1700/-

புதிய சந்தாக்கள் அந்தந்த மாதத்திலிருந்து துவங்கும். பழைய இதழ்கள் வேண்டுமெனில், இதழுக்கு ரூ.20/- என சேர்த்து அனுப்பவும்.

## வங்கி விபரம்:

Sathya Narayanan, ICICI Bank - Savings account
A/c. No. 000101043177. IFSC: ICIC0000001
Cenotaph Road Branch, Chennai 18

போட்டி

மாதாந்திர குறும்போட்டி

பிப்ரவரி 2020ன் விடைகள்

1. 52114 2. 2825 3. ஆறு 4.18 5. சங்கர்ஷண
6. சரஸ்வதி + பாரதி 7. வாமன + கேசவ 8.ஸ்ரீகிருஷ்ண

* இந்த மாதம் புத்தகப்பரிசு பெறுபவர்கள்:
1. திருமதி. உஷா ராமசந்திரன், சென்னை &
2. திருமதி. பிரேமா குருராஜன், பொள்ளாச்சி.

* சில கேள்விகளுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட சரியான பதில்களும் இருக்கலாம். அவற்றில் ஒன்றை மட்டுமே இங்கு குறிப்பிட்டுள்ளோம்.

* ஹரிபக்தர்கள் அனைவரும் இப்போட்டியில் பங்கேற்குமாறு கேட்டுக் கொள்கிறோம். ***

போட்டி

## மாதாந்திர குறும்போட்டி

**மார்ச் 2020**

இந்த இதழோடு முடியும் 'முண்டிகெ பாடல்' தொடரைப் பற்றிய கேள்விகள் இவை. கடந்த இதழ்களின் உதவியுடன் இந்தக் கேள்விகளுக்கு பதிலளிக்க முயலவும்.

1. முண்டிகெ தாசர் எனப்படுபவர் யார்?
2. மலைகளின் இறக்கைகளை தன் வஜ்ராயுதத்தால் வெட்டியவர் யார்?
3. ஐந்து தலைகள் கொண்ட தேவர்கள் யார்?
4. விக்னேஸ்வரனின் அந்தர்யாமியாக இருக்கும் ஸ்ரீஹரியின் ரூபம் எது?
5. மஹிபதி தாசரின் சிவ ஸ்துதியில் எந்தச் சொல் திரும்பத்திரும்ப வருகிறது என்று பார்த்தோம்?
6. அர்ஜுனன் சிவனிடமிருந்து பெற்ற அஸ்திரம் எது?
7. முக்யபிராணரின் கிருதியில் ஸ்ரீவியாஸராஜர் முக்கியமாக பயன்படுத்திய எண் எது?
8. மனிதருக்கு இருக்கும் ஆறு வைரிகள் யாவை?
9. முக்யபிராணருக்கு இருக்கும் சு-லட்சணங்கள் எவ்வளவு?
10. மங்கள ஸ்துதியில் அந்தகன் என்று யாரைக் குறிப்பிடுகிறார் கனகதாசர்?

* தயவு செய்து அனைவரும் இதில் பங்கேற்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

* இருவருக்கு புத்தகப் பரிசு கிடைக்கும்.

* மார்ச் 20க்குள் உங்கள் விடைகளை அனுப்பவும்.

*****

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா



நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

**"ஹரிதாச விஜயம்"**

சிரி நிலயன குணகள '**திளிது**' பஜிசுவுதே

மலர் : 1 இதழ் : 6

**நிர்வாக ஆசிரியர்**

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்

ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,

380, 2A Main, 16th Cross,

JP Nagar 4th Phase, பெங்களூரு 560078

Ph.: 89044-58276. haridasa.vijayam@gmail.com

jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**

'தாச சாகித்ய சேவா ரத்ன'

திரு. குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**

திரு. முரளிதர தாசரு, திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா, திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

# ஆசிரியர் பக்கம்

ஸ்ரீவியாசராஜர், ஸ்ரீவாதிராஜர் இவர்களது ஆராதனை தினங்கள் வருகின்றன. பக்தி சாகித்யமான ஹரிதாச சாகித்யத்திற்கு வித்திட்ட, முக்கிய காரணகர்த்தர்களாகிய இவர்களின் கிரந்தங்கள், கிருதிகள் ஆகியவற்றைப் படித்து, பாடி, குருகளை நினைத்து, பூஜித்து அவர்களின் அந்தர்யாமியான ஸ்ரீகிருஷ்ணன் மற்றும் ஸ்ரீஹயவதனனின் அருளுக்கு பாத்திரராவோமாக.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

# இரு புதிய தமிழ்ப் புத்தகங்கள் வெளியீடு

1. **ஸ்ரீவாதிராஜரின் ஸ்வப்னபத (அர்த்தங்களுடன்)** : ஷட்பதியில் 45 பத்யங்களைக் கொண்ட இந்த அற்புத கிரந்தம், ஸ்ரீவாதிராஜருக்கு, ஹயவதன நாமக பரமாத்மன் அவரது கனவில் உபதேசித்த கிரந்தமாகும். பக்கங்கள்: 120 விலை: ரூ.70

2. **ஸ்ரீமோகனதாசரின் கோலுஹாடு (அர்த்தங்களுடன்)** : நான்கு வரிகளைக் கொண்ட 217 பத்யங்களாலான அருமையான கிரந்தம், இந்த கிரந்தத்தின் அறிமுகத்தை இந்த இதழில் பார்க்கவும். பக்கங்கள்:120 விலை: ரூ.70

இந்த இரு புத்தகங்களையும், மார்ச் 5க்குள் முன்பதிவு செய்தால், தபால் செலவு இலவசம். ரூ.140 மட்டுமே. புத்தக வெளியீடு - மார்ச் 7, 2020. பணம் செலுத்தியவர்களுக்கு மார்ச் 9ம் தேதி புத்தகங்கள் தபாலில் அனுப்பப்படும். புத்தகங்கள் வேண்டுவோர் அதற்கான தொகையை வங்கிக் கணக்கில் கட்டிவிட்டு, haridasa.vijayam@gmail.com அல்லது 8904458276 தெரியப்படுத்தவும்.

ஹரிதாச விஜயம் பழைய இதழ்கள் தேவைப்படுவோர் எங்களை தொடர்பு கொள்ளவும்.

தொடர்

# ஹரிதாச சாகித்யம்

## அங்கிதம் வாங்கும் வழிமுறைகள்

**குருவிடமிருந்து அங்கிதம்**

ஸ்ரீவியாசராஜர், தமது இரு கண்களாக இருந்தவர்களான புரந்தரதாசர் மற்றும் கனகதாசர் இருவருக்கும் அங்கிதத்தைக் கொடுத்து, (கனகருக்கு) கோண மந்திரத்தை உபதேசித்து, ஹரிதாச பரம்பரைக்கு மூலகாரணராக இருந்தார். ஒருவர் வர்ணாசிரம தர்மத்தை பின்பற்றும் பிராமணர்; மற்றொருவர் பிராமணர் அல்லாதவர். சீனப்பருக்கு புரந்தர விட்டலா என்றும், கனகருக்கு ஆதிகேசவ என்றும் அங்கிதத்தை அருளினார்.

குருபரம்பரை மற்றும் அங்கித பரம்பரைக்கு சிறப்பான அர்த்தம் இருக்கிறது. மத்வ விஜயத்தில் சொல்லப்பட்டிருப்பதைப் போல 'முகுந்த பக்த்யை, குருபக்தி ஜாயை' அதாவது குருபக்தியால் மட்டுமே ஹரிபக்தி கிடைக்கிறது. அந்த ஹரிபக்தியினாலேயே முக்தி சாத்தியம். ஹரிபக்தி பிறப்பதற்கு குருபக்தி மிகவும் முக்கியம். வாயு தேவரிடம் பக்தி - அதன்மூலம் ஸ்ரீஹரியிடம் பக்தி & ஞானம் - ஆக, இவற்றை அடைவதற்கு ஒரு நியத குரு தேவை. இதுவே குரு பரம்பரை.

ஸ்ரீவியாசராஜர் எதிர்காலத்தில் நடைபெறப்போவதை கணித்தார். பின்னர் வருபவர்கள், ஸ்ரீபாதராஜர், ஸ்ரீவியாசராஜர் மற்றும் யதிகள் இயற்றிய தேவர நாமாக்கள் மட்டுமே பாடவேண்டும் என்று சட்டம் போட்டாலும் போட்டுவிடுவர் என்று நினைத்தார். அதற்காகவே, சாத்விக ஜீவியான ஸ்ரீனிவாச நாயகருக்கு புரந்தர விட்டலா என்னும் அங்கிதத்தைக் கொடுத்து பாகவத தீக்ஷையை வழங்கினார். அவரும் தாம் இயற்றிய கீர்த்தனைகளை புரந்தர விட்டலனுக்கு சமர்ப்பித்தார்.

ஸ்ரீஹரியை வணங்குவதற்கு குலம் முக்கியமல்ல. ஆகவே, இதர ஜாதியரான கனகருக்கு அங்கிதம் கொடுத்து, அவர் இயற்றிய கிருதிகளை ஆதிகேசவனுக்கு சமர்ப்பித்தார்.

புரந்தரர் மற்றும் கனகரிடமிருந்து துவங்கிய தாச பரம்பரை, நின்ற நீர் போல அல்லாமல், கங்கையைப் போல ஓடி, பற்பல சுஜீவிகளை மேம்படுத்தியது என்பது நாம் கண்ட உண்மை.

புரந்தரதாசர் தமது மனைவி மற்றும் புதல்வர்களுக்கு அங்கிதத்தை வழங்கினார். விஜயதாசருக்கு அவரது கனவில் அங்கிதம் வழங்கினார். ஹரிதாச பரம்பரையானது, விஜயதாசரிடமிருந்து 20ம் நூற்றாண்டின் குருகோவிந்தவிட்டல தாசர் வரை தடையின்றி வளர்ந்து வந்துள்ளது. குருகோவிந்தவிட்டல தாசர் 265 பேருக்கு அங்கிதம் வழங்கியிருக்கிறார். அவரது சிஷ்யர்களில் பலரும், மேலும் பலருக்கு அங்கிதங்களைக் கொடுத்து பரம்பரயை வளர்த்திருக் கின்றனர்.

## பர்யாய அங்கிதம்

ஹரிதாசர்கள் தாங்கள் இயற்றிய கிருதிகளில் அங்கிதத்தை எழுதும் போது, சிறிது மாற்றத்துடன் (ஆனால் அதே அர்த்தத்துடன்) எழுதுவதை பர்யாய அங்கிதம் என்று அழைக்கிறார்கள். உதாரணம்: வியாசராஜர் - கிருஷ்ண, ஸ்ரீகிருஷ்ண, சிரிகிருஷ்ண மற்றும் கனகதாசர் - கேசவ, சென்னகேசவ, ஆதிகேசவ, படதாதி கேசவ.

## அங்கித பதம்

குருவானவர், அங்கிதத்தைக் கொடுக்கும்போது ஒரு அங்கித பதத்தை இயற்றி கொடுக்கிறார். இதை ‘பதநாம’ என்று சொல்கின்றனர்.

கோ3பாலவிட்டலா நின்ன பூ1ஜெ மாடு3வேனோ கா1பா1டு3ஈமாத1னு ||ப

அபா1ர ஜனுமத3லி கூ1டித3வன ம்யாலெ
நீ ப்ரீதி1யனு மாடி நிஜதா3ஸகொ3ளகி3டு ||அப||

அங்கி1த1வ நானித்தெ3 நின்ன ப்ரேரணெயிந்த3
கி1ங்க1ரகெ3 லௌகி1க1த3
டொ3ங்கு1 நடதி1ய பிடிஸி ஜனும ஜனுமதல்லித்து3
ப4ந்தனிக1ரவ தொலகிஸி
ஷங்கெ1 புட்டத3ந்தெ1 கா1வ்யகள பே1ளிபு1து3
சங்க1டக3ளட்டத்ஹங்கெ3
வெங்க1டகி1ருஷ்ணனு நீனெ விஜயவிட்டல இந்து3
அங்கு1ரவு பலிஸி ப4ல ப்1ராப்1தியாக3லோ தே3வ

இது விஜயதாசர், கோபாலதாசருக்கு அங்கிதம் வழங்கியபோது இயற்றிய பாடல்.

கோபாலவிட்டலா, என் இந்த வாக்கினை நிறைவேற்று. சுஜீவியான பாகண்ணன், பற்பல பிறவிகளில் என்னுடன் இருந்து, என் அந்தர்யாமி யான விஜயவிட்டலனை வணங்கியிருக்கிறான். இவன் மேல் உன் கிருபையைக் காட்டி, உன் உண்மையான தாசர்களின் அருகில் இவனை இருக்க வை.

உன் பிரேரணையின் பேரில் அங்கிதம் வழங்கியிருக்கிறேன். பிறவிப் பயன் காரணமாக இந்த பிறவியில் இவனுக்கு துன்பங்கள் எதுவும் வராமல் காப்பாற்று. உன் மகிமைகளை எப்போதும், எந்தவித சந்தேகமும் இன்றி, காவிய ரூபத்தில் இயற்றுமாறு இவனுக்கு அருள் செய். சம்சாரத்தில் வரும் துன்பங்களிலிருந்து விடுதலை அளிப்பாயாக. (பாகண்ணன் வெங்கடகிருஷ்ணா என்னும் அங்கிதத்தில் ஏற்கனவே பாடல்களை இயற்றியிருந்தார்). வெங்கடகிருஷ்ணனும் நீயே. விஜயவிட்டலனின் ப்ரேரணையின்படி, கோபாலவிட்டலா என்னும் அங்கிதத்தை வழங்குகிறேன். இவனின் பக்தியை வளர்த்து, உன்னுடைய ரூபம் காணுமாறு அருள்புரி. இந்த என்னுடைய வாக்கினை நிறைவேற்றிக் கொடு என்கிறார் விஜயதாசர். இதன்படியே பாகண்ணனும் ‘பக்தியலி பாகண்ணா’ என்று அழைக்கப்படுகிறார்.

**வசன சாகித்யத்தில் அங்கிதம்**

12ம் நூற்றாண்டில் துவங்கிய சிவசரண சாகித்யமான வசன சாகித்யத்திலும் அங்கிதத்தைக் காணமுடியும்.

பசவண்ணா - கூடல சங்கம தேவ
அக்கமகாதேவி - சென்னமல்லிகார்ஜுன
நிஜகுண சிவயோகி - ஷம்புலிங்க

**சங்கீத சாகித்யத்தில் அங்கிதம்**

சங்கீத கிருதிகளிலும் அங்கிதத்தைக் காணமுடியும். கிருதியை இயற்றுபவர்கள், தங்களின் குலதெய்வத்தையோ அல்லது தமது இஷ்ட தெய்வத்தையோ வணங்கி, அவர்களுக்கு அந்த கிருதியை சமர்ப்பிக்கிறார்கள். இவர்களிலும் பர்யாய அங்கிதம் வழக்கத்தில் இருந்திருக்கிறது. உதாரணத்திற்கு: ஸ்வாதி திருநாள் மகாராஜா,

பத்பனாப, கமலனாப, சரசிஜனாப என்று அங்கிதங்களை வைத்துக் கொண்டிருக்கிறார்.

தன்னுடைய பெயரையே அங்கிதமாக வைத்துக்கொண்டவர் தியாகராஜர் - அங்கிதம் தியாகராஜா.
வாசுதேவாசார்யரின் அங்கிதம் வாசுதேவ.
சாமராஜ ஒடெயரின் அங்கிதம் ஸ்ரீவித்யா.
முத்துஸ்வாமி தீக்ஷிதர் குருகுஹ என்னும் அங்கிதத்தால் சுப்ரமண்ய ஸ்வாமிக்கும்,
ஷ்யாமா சாஸ்திரிகள் ஷ்யாமகிருஷ்ண என்னும் அங்கிதத்தால் பங்காரு காமாட்சிக்கும் தமது கிருதிகளை சமர்ப்பித்தனர்.

**7. ஹரிதாச சாகித்யத்தின் பல வகைகள்**

ஹரிதாச சாகித்யத்தில் உகாபோகம், சுளாதி, கீர்த்தனை, வ்ருத்த நாமா, தண்டகம், கோலுஹாடு, கேசவ நாமா, ஷோபானே, உருட்டாணி, லாலி, லாவணி என்று பல்வேறு வகைகள் உள்ளன. இவற்றில் அதிகமாக நாம் காண்பது கீர்த்தனை, சுளாதி மற்றும் உகாபோக வகைகளையே. இதிலும் கீர்த்தனைக்கு முதலிடம், பின் சுளாதி மற்றும் உகா போகங்கள் வருகின்றன என்று சொல்லலாம்.

** **கன்னட மூலம் : திருமதி. ஜெயம்மா, பெங்களூரு**

https://hks-bhavaprakashike.blogspot.in என்னும் இணைய தளத்தில் 'பாவபிரகாசிகை' என்னும் (ஹரிகதாம்ருதசாரத்தின்) கன்னட உரையின் மொழிபெயர்ப்பு - தினம் ஒரு பத்யம் - என்று வெளியிடப் பட்டு வருகிறது. அனைவரும் அந்த தளத்தில் முதல் பதிவிலிருந்து - தொடர்ந்து - தினந்தோறும் படிக்க வேண்டும் என்பது எங்களின் வேண்டுகோள். ஹரிகதாம்ருத சாரத்தில் ஈடுபாடுள்ள அனைத்து தமிழ் மாத்வர்களுக்கும் இதனை தயவு செய்து தெரிவிக்கவும்.***

இந்த இதழைப் பற்றி தங்களின் பிற வாட்சப், மின்னஞ்சல் க்ரூப்களில் சொல்லி, மேலும் பல ஹரிபக்தர்கள் இந்த பயனுள்ள தகவல்களைப் பெறுவதற்கு உதவவும்

தொடர்

# ஹரிதாசர்களின் வாழ்க்கை வரலாறு

## ஸ்ரீகுருகோவிந்தவிட்டல தாசர்

தம் வீட்டையே பாண்டுரங்க விட்டலனின் கோயிலாக மாற்றத் திட்டமிட்ட ஸ்ரீகுருகோவிந்தவிட்டல தாசர், அங்கு கலிமர்த்தன முக்ய பிராணதேவரையும் பிரதிஷ்டை செய்ய சங்கல்பித்தார். ஆலய நிர்மாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளை செய்தார். கதக் என்கிற ஊரிலுள்ள பிரசித்திபெற்ற சிற்பி சோமண்ணா என்பவரை வரவழைத்து கருங்கல்லில் பாண்டுரங்க மூர்த்தியை வடிக்குமாறு கேட்டுக்கொண்டார். செகந்திராபாத் ஊரிலுள்ள ஓண்டீலு வம்சத்தை சேர்ந்த ஸ்ரீரங்கனாத ராயர் தம் வீட்டில் பூஜித்து வந்த மிகவும் புராதமான பிராணதேவரை தாசருக்குக் கொடுத்தார்.

தம் வீட்டை நன்றாக மாற்றியமைத்து அதை கோயிலாக்கி அந்த ஆலயத்திற்கு 'குருகோவிந்த நிவாஸ' என்கிற பெயரையும் வைத்தார். மூன்று நாட்கள் மிகச்சிறப்பாக, விதிபூர்வமாக, ஸ்ரீரங்கத்திலிருந்து வந்திருந்த புரோகிதர்கள் மூலமாக பிரதிஷ்டாபனம் நடந்தேறியது. ஸ்ரீபிரமாதி ஆண்டு வைசாக மாதம் பகுள சப்தமி குருவாரம் (24-5-1973) காலையில் சிம்ம லக்னத்தில், பரமபூஜ்ய சாகரகட்டெ மடாதீசரான ஸ்ரீஸ்ரீபிரத்யும்ன தீர்த்த ஸ்ரீபாதங்களவரின் திருக்கரங்களால், பாண்டுரங்க மூர்த்தி, முக்யபிராண மூர்த்தி ஆகியோரின் பிரதிஷ்டை நடந்தது. பாரதத்தின் பல இடங்களிலிருந்து வந்திருந்த ஆயிரக் கணக்கான பக்தர்கள் இந்த கண்கொள்ளா காட்சியினைக் கண்டு தன்யர்கள் ஆனார்கள். தம் வீட்டையே பகவானுக்காக அர்ப்பணித்த உத்தம ஹரிதாசர், இந்த இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த குரு கோவிந்த விட்டல தாசர்.

இன்று குருகோவிந்தவிட்டல தாசர், நம்மிடையே இல்லையென்றாலும், அவர் மைசூரில் கட்டிய 'குருகோவிந்த நிவாஸ' என்னும் கோயிலும் அங்குள்ள பாண்டுரங்க, முக்யபிராண மூர்த்திகளும், தாசரை நினைவுறுத்துகின்றன. தாசரால் ஸ்தாபிக்கப்பட்ட தர்மதர்சி மண்டலி நிர்வாகத்தினர்கள் மூலமாக இன்றும் பூஜை ஆராதனைகள் விதிபூர்வமாக விமரிசையாக நடந்து வருகின்றன. தாசர் நாமம் வாழ்க. நாமும் மைசூர் சென்று குருகோவிந்த நிவாஸத்தை ஒருமுறையாவது காண்போமாக.

**குருக்ருபா கிரந்த மாலா மற்றும் தாசரின் கடைசி யாத்திரை**

ஸ்ரீகுருகோவிந்த விட்டலதாசர் மிகவும் உயர்ந்த கவி. அனேக பாடல் களைப் புனைந்தவர். ஹரிதாச பரம்பரையை வளர்த்த மேதாவி. பல வடமொழி நூல்களை கன்னடத்தில் பாடல்களாக வடித்துத் தந்தவர். சிறந்த சாகித்ய கர்த்தா. பரம பக்தர். எளியவர். அவருடைய சில படைப்புகளை மிகவும் சுருக்கமாக இங்கு காண்போம்.

குருக்ருபா கிரந்த மாலா என்னும் ஒரு நிறுவனத்தை நிறுவி, அதன் மூலம் பற்பல நற்கிரந்தங்களை வெளியிட்டு, தாச வாணியை பரப்பினார் தாசர். ஒரு பல்கலைக்கழகம் செய்ய வேண்டிய வேலைகளை, ஒரு தனி மனிதராக நின்று சாதனை புரிந்தார் நம் தாசர். 1965ம் ஆண்டு, தம் குருவான தந்தெமுத்து மோகன விட்டல தாசரின் ஜென்ம நூற்றாண்டு விழா சமயத்தில், குருவின் விசேஷ சரித்திரத்தை, தம் நண்பர் ரமாகாந்த விட்டல தாசருடன் இணைந்து வெளியிட்டார். 1978ம் ஆண்டு இப்புத்தகம் மறுபதிப்பு கண்டது. இந்த நூல் ஒரு விலை மதிப்பற்ற பொக்கிஷம். தாச சாகித்யத்திற்கு ஓர் அணிகலன்.

தாசர் தம்முடைய பரமகுருவான ஸ்ரீமுத்துமோகன விட்டல தாசரின் ஜீவன சரித்திரத்தை 1965ம் ஆண்டு வெளியிட்டார். இதில் தாசரின் எழுத்துத் திறமையைக் காணலாம். சரித்திர விமர்சன நுட்பத்தையும் காணலாம். இது பல பேர்களிடம் விஷயங்களை சேகரித்து, ஆய்வு செய்து எழுதப்பட்ட திறனாய்வு நூல் ஆகும். தாசர் இந்த நூலை வெளிக்கொணர எடுத்துக் கொண்ட கஷ்டம் கொஞ்ச நஞ்சம் அல்ல.

தாசர் செய்த மிகவும் அற்புதமான காரியம் 'ஹரிபக்தி விஜயம்' என்னும் மிகச்சிறந்த கிரந்தத்தை இயற்றியதே. தாசமார்க்கத்தில் வந்த யாருமே மறுக்க முடியாத, மறக்கமுடியாத உயர்ந்த நூல் இது. இந்த நூல் 7 பாகங்களில் வெளிவந்தது. இந்நூலில் கர்னாடகத்தில் இருந்த புகழ்பெற்ற / புகழ்பெறாத ஹரிதாசர்கள், என அனைவரின் சரித்திரங்களும், மிகவும் விளக்கமாக விமரிசையாக எழுதப் பட்டுள்ளன. இதைப் படித்தால் தாச கூடத்தின் பிரபாவத்தை நன்றாக உணரலாம். இதில் ஹரிதாசர்களின் வாழ்க்கை வரலாற்றினைக் கூறியதோடு மட்டுமல்லாமல், அவர்கள் இயற்றிய கிருதிகள்,

கிரந்தங்கள், அவற்றின் விசேஷங்கள் ஆகிய அனைத்தும் கூறப்பட்டுள்ளன. இந்நூல் ஹரி தாச கூடத்தின் தலையாய நூலாகும்.

தாசர் செய்த மற்றொரு மத்வமத இலக்கியச் சேவை என்ன வென்றால் வேதத்திலுள்ள 10 உயர்ந்த உபநிஷதங்களை மத்வ பாஷ்ய ரீதியாக கன்னடத்தில் 'த்ரிபதி' அல்லது 'ஷட்பதி' என்கிற கவிதை வடிவில் மொழிபெயர்த்துச் செய்ததாகும். இதை பண்டிதர் களும், பாமரர்களும் பாராட்டியுள்ளனர். மூலபாடத்திற்கு விரோத மில்லாமல், செய்த மொழிபெயர்ப்புகள் இந்த உபநிஷத் பாஷ்யங்கள்.

தாசருக்கு இருந்த அபாரமான சம்ஸ்கிருத, கன்னட மொழிப் புலமைகளினால் இந்த கிரந்தங்களை இயற்ற முடிந்தது. இவற்றில் காவிய ரசங்கள் தளும்பி வழிந்தன. ஒவ்வொரு கிரந்த ஆரம்பத்திலும் விஸ்தாரமான, முன்னுரைகளை எழுதி, அந்த நூலின் சாரத்தை தருவது தாசரின் வழக்கமாகும். மாத்வ கொள்கைகளைப் பரப்புவது தாசரின் குறியாகும். மங்கள ஸ்லோகங்களை விசேஷமாக செய்வது தாசரின் வழக்கமாகும். கன்னட சாகித்யத்திற்கு இவ்வாறாக உயர்ந்த தொண்டாற்றினார் தாசர்.

குருகோவிந்தவிட்டல தாசர் ஹரிதாச பத்ததியின் பிரகாரம், பற்பல கிருதிகளை இயற்றியுள்ளார். சுமார் 700 பதங்கள் இப்பொழுது கிடைத்துள்ளன. தம் சிஷ்யர்களுக்கு அங்கிதம் அளிக்கும்போது இயற்றிய பதங்களே 250க்கு மேல் இருக்கும். பல பதங்கள், பிரார்த்தனை வடிவில் உள்ளன. இந்த கீர்த்தனைகள், 2 பாகங்களாக பிரசுரிக்கப்பட்டுள்ளன. தாச வகுப்பு, யதி வகுப்பு, தேவதா வகுப்பு என்று பிரிக்கப்பட்டு இவை வெளியிடப் பட்டுள்ளன.

'ஆ நமிபெ மாதா பிரர்கெ' என்னும் கிருதியில், தம்முடைய பெற்றோர் பக்திகளை தாசர் நமக்காகக் காட்டியுள்ளார். இந்நூலில், தாசர் தம்முடைய இணையில்லா குருபக்தியையும் காட்டியுள்ளார்.

தம்முடைய குருவான பரமப்ரிய சுப்பராய தாசர் என்கிற தந்தெ முத்து மோகனவிட்டல தாசரின் மேல் 43 கீர்த்தனைகளை நம் தாசர் இயற்றியிருக்கிறார். பரமகுருவான தொட்டபள்ளாபுர முத்து மோகன தாசரின் மேல் 5 கீர்த்தனைகளை இயற்றியுள்ளார். ப்ராசீன ஹரி தாசர்களான புரந்தரதாசர், விஜயதாசர், கோபாலதாசர், ஜகன்னாத

தாசர், மோகனதாசர் மேல் பல பதங்கள் பாடியுள்ளார். மோகன தாசரின் மேல் 6 கீர்த்தனைகளைப் பாடியுள்ளார். ஒவ்வொரு கீர்த்தனைகளிலும் அந்தந்த பெரியவர்களின் சிறப்புகளையும், அவர்கள் வாழ்க்கையில் நடந்த சம்பவங்களையும் அழகாக வர்ணித்துள்ளார் தாசர். அதேபோல மாத்வ யதிகளின் பேரிலும் பல கீர்த்தனைகளை இயற்றியுள்ளார்.

**** திரு. குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்**

தொடர்

## ஹரிதாசர்களின் சிந்தனை முத்துக்கள்

## ஸ்ரீவியாசராஜரின் ஆராதனை

அர்த்திகல்பித கல்போயம் ப்ரத்யர்த்தி கஜகேசரி ।
வியாசதீர்த்த குருர்பூயாத் அஸ்மதிஷ்டார்த்த சித்தயே ॥

த்வைத சித்தாந்த இதிகாசத்தில் முனித்ரயர் என்று அழைக்கப்பட்ட ஸ்ரீமதாசார்யர், ஸ்ரீஜயதீர்த்தருக்குப் பிறகான இடத்தைப் பிடித்த, விபூதி புருஷர் ஸ்ரீவியாசராஜர். ஸ்ரீவியாசராஜரின் அவதாரத்திலிருந்து துவங்கி, அவரது வாழ்க்கை முழுவதுமே ஒரு அற்புதம், சுவாரசியம் ஆகும். அன்றிலிருந்து இன்று வரையிலான பரம்பரையே இவருக்கு தலைவணங்கியிருக்கிறது. மிகுந்த மரியாதையுடன், பணிவு, பக்தியுடன் அவருக்கு கடமைப்பட்டிருக்கிறது. சித்தாந்தத்தின் வியாச தாச கூடத்திற்கு ஸ்ரீராஜர் செய்த அருள் பற்பல. எண்ணிக்கையில் அடங்காதது. ஸ்ரீபுரந்தரதாசரின் வாக்கு, அனைத்து பக்தர்களின் வாக்காகவே உள்ளது.

குருவியாசராயர சரணவெனகெ கதி ।
புரந்தரவிட்டலன அரிதெ இவரிந்த ॥

ஸ்ரீவியாசராஜரின் அற்புத ஆளுமையை சாதாரண மனிதரால் ஊகிப்பதும் அசாத்தியம். ஸ்ரீபிரம்மண்ய தீர்த்தர் போன்ற குரு, ஸ்ரீஸ்ரீபாதராஜர் போன்ற வித்யாகுருவைப் பெற்ற மகாத்மர். 12 ஆண்டுகள் திருப்பதியில் வெங்கடேசனை பூஜித்த தன்யாத்மர். சக்ரவர்த்திகளினால் போற்றப்பட்ட ராஜகுரு. கல்வியறிவின் சிகரம் என்று அழைக்கப்படும் வியாசத்ரய கிரந்தத்தை இயற்றியவர்.

விஜயீந்த்ர, வாதிராஜ போன்ற திமிங்கிலங்களை தயார் செய்தவர். தத்வவாதத்தின் மொழிபெயர்ப்பான ஹரிதாச சாகித்யத்திற்கு தலைவராக ஓம்காரம் போட்டவர். புரந்தரதாசர், கனகதாசர் ஆகியோருக்கு தாசதீக்ஷை அளித்து, சாகித்ய சங்கீத உலகிற்கு மறு பிறவி அளித்த மகாபுருஷர். ஸ்ரீஜயதீர்த்தருக்குப் பிறகு சித்தாந்தத்தை மறுபடி நிறுவிய சர்வக்ஞர்.

வாதம் செய்ய வந்தவர்களாலும் புகழப்பட்ட அறிஞர். யந்த்ரோத்தாரக பிராணனை நிறுவியவர். இவரைப் போலவே பற்பல பிராணரை நிறுவி பரம்பரையின் மகிமைகளை, ஆசார விசாரங்களை பரப்பி, வளர்த்த வணங்கத்தக்கவர். கர்னாடக சாம்ராஜ்யத்தின் ரத்ன சிம்மாசனத்தில் ஏறி, சக்ரவர்த்திகளினால் ரத்ன-அபிஷேகங்களை பெற்றவர். பேசுமொழியில் பல்வேறு கிருதிகளை இயற்றி, சாதாரணர்களும் சாதனை செய்யுமாறு அருளியவர். பாரதத்தின் நீள அகலத்திற்கும் த்வைத மதத்தை பிரசாரம் செய்து மக்களை ஆசிர்வதித்தவர். குருசார்வபௌம என்று அழைக்கப்பட்ட ஸ்ரீவியாச ராயரை, பரம்பரையே பாடி கொண்டாடியிருப்பதை பார்க்கிறோம். புரந்தரதாசர் கூறியது இவ்வாறு:

வியாசராயர சரணகமல தருஷனவெனகெ
ஏசுஜனுமத சுக்ருத பல தொரகிதோ என்ன
சாசிர குலகோடி பாவன்னவாயிது
ஸ்ரீஷன்ன பஜிசுவுதகதிகாரி நானாதே
தோஷரஹிதனாத புரந்தரவிட்டலன
தாசர கருணவென்ன மேலே இரலாகி ||

ஸ்ரீவியாசராஜரின் வித்யாகுருவான ஸ்ரீஸ்ரீபாதராஜர், தம் சிஷ்யரைப் பற்றி கூறியதாவது:

சாசிர ஜிஹ்வெகளுள்ள சேஷனே கொண்டாடபேகு |
வியாசமுனிராயர சன்யாசதிரவ ||

துர்மதங்களை கண்டித்த ஸ்ரீவியாசராஜரைப் பற்றி குருவின் வாக்கு.

இதிரதாவுது நிமகெ வ்யாசமுனிராய |
பதுமனாபன தாச பரம உல்லாஸ ||
வாதிதிமிரமார்த்தாண்ட நெந்தெனிஸிதெ

யதிகளொளு நிம்மந்ததவருகள நா காணே ||
ஸ்ரீராஜரின் சன்யாசம், பாண்டித்யம் மற்றும் மகிமைகளைப் பற்றி ஸ்ரீபுரந்தரதாசர் கூறியது:

வாசுதேவன சரணவனஜவந்திதனெ சன்
நியாச ரத்னாகரனே துர்வாதிம்ருகபேருண்ட
வாதி பயங்கர துர்வாதிகோலாஹல
வைஷ்ணவோத்தமனே சத்வைஷ்ணவ ப்ரஜானந்த
வைஷ்ணவாகம பரித வைஷ்ணவ சுப்ரீத
வைஷ்ணவ கமல சூர்ய வைஷ்ணவகுமுத சந்த்ர
வைஷ்ணவ குலோத்துஷ்ட வைஷ்ணவ விசிஷ்ட ||

ஸ்ரீவியாசராஜரைப் பற்றி விஜயதாசர் தமது ஒரு கிருதியில் பாடியது இவ்வாறு:

வியாசராயர ஸ்மரிஸிரோ
வியாசராயர ஸ்மரிஸி ஏசு ஜன்மத பாப
நாஷவாகுவுது நிம்மாஸெ சித்திசுவுது
லேசாகி சுகிசி அனந்த வைகுண்டதலி
வாசவாகுவுது நிஜபகுதியலி ||
யந்த்ரோத்தாரகன ப்ரதிஷ்டிஸி விஜயீந்த்ர
சந்தவாதிராஜகொலிது, புரந்தர
இந்து சிஷ்யரன்னுபடெது உபதேஷிஸிமந்த்ரசித்தியனெ கொட்டு |
மத்வமதவெம்ப துக்தாப்திகெ புர்ணேந்து
மத்வவல்லப நம்ம விஜயவிட்டலன பாதத்வயவபஜிசுவரு கேளி||

****கன்னடத்தில்: திரு.ஏ.பி.ஷாமாச்சார், பெங்களூரு**

தொடர்

## கேசவ நாமா

## கேசவ ஜகதீஷ - ஸ்ரீவாதிராஜர்

**நாராயண சகலவேத[3] பாராயண கிருஷ்ண**
**நாரதாதிகள வந்த்ய சீதாபதே** ||2||

நாரதர் முதலானவர்களால் வணங்கப்படும் சீதாபதியான கிருஷ்ணன் அனைத்து வேதங்களால் மட்டுமே அறிந்து கொள்ளப்படுபவனாக இருக்கிறான் - அவனே நாராயணன்.

**மாத[4]வ மங்களகா[3]த்[1]ர வேதவன்னே கத்து[3] ஒய்து[3]**
**ஆ க[2]ளனெ கொ[1]ந்தே[3] சீதாபதே** ||3||

வேதங்களை திருடிச்சென்ற சோமன் என்னும் அசுரனைக் கொன்ற மத்ஸ்யாவதாரியான சீதாபதி நீயே மங்களஸ்வரூபனான மாதவன்.

**கோவிந்த கோகுலபா[3]ல கோபியர மனோஹர**
**ஆதி கூர்மாவதார சீதாபதே** ||4||

ஆதி கூர்மாவதாரி, கோகுலத்தில் பிறந்தவன், மற்றும் கோபியரின் மனம் கவர்ந்தவனுமான சீதாபதியான நீயே கோவிந்தன்.

**விஷ்ணுவே யதிகள வந்த்ய அஷ்டலட்சுமியர நாத[2]**
**தி[3]ட்டு[1] வராஹரூபனாத சீதாபதே** ||5||

வராக ரூபனான, அஷ்ட லட்சுமிகளின் பதியான, யதிகளால் வணங்கப்படுபவனான சீதாபதியான நீயே - விஷ்ணு.

**மதுசூதன வாமன வைரி யதுகுலக்கெ திலகனாத**
**செலுவனாத ஹரி நீனே சீதாபதே** ||6||

ஹே சீதாபதியே, நீ கம்சனின் எதிரி, யதுகுல தலைவன், பாவங்களைப் போக்குபவனான ஹரி, மது என்னும் தைத்யனை அழித்த மதுசூதனன்.

**த்ரிவிக்ரமரூபனாகி த்ரிஜக[3]வன்னே பாலிஸித**
**வாமனரூபி நீனே சீதாபதே** ||7||

சீதாபதி, நீ வாமனனாகி வந்து மூன்று உலகங்களுக்கும் தலைவனான த்ரிவிக்ரமன்.

**வாமனரூபவ தாளி ஆ மஹாபலியன்னெ து[1]ளிது[3]**
**நேமதி க்ஷத்ரேர கொந்த[3] சீதாபதே** ||8||
சீதாபதி, நீ பரசுராமனாகி க்ஷத்ரியர்களைக் கொன்றாய், பிரம்ம சாரியாக வந்து த்ரிவிக்ரமனாக வளர்ந்து, பலி சக்ரவர்த்தியைக் கொன்ற வாமனன்.

**ஸ்ரீதர நீனெந்தெனிஸி ஸோஷிஸி க[2]ளரனெல்ல**
**ஜானகிய தந்த ராம சீதாபதே** ||9||
சீதாபதியாகிய நீ அசுரர்களைக் கொன்று, ஜானகியை திரும்ப அழைத்து வந்த ராமனான ஸ்ரீதரன்.

**ஹ்ருஷிகேஷ நீனெந்து ரிஷிகளு ஸ்துதிய மாடி**
**வசுதேவ சுத கிருஷ்ண சீதாபதே** ||10||
ஹே சீதாபதியான நீ, வசுதேவனின் மகனாக கிருஷ்ணனாக வந்து முனிவர்களால் வணங்கப்பெற்ற ஹ்ருஷிகேசன்.

**பத்பனாபனெம்ப வேத ஸித்த[3]வாகி[3] பொக[3]ளுதிதெ[3]**
**புத்தாவதார கிருஷ்ண சீதாபதே** ||11||
ஹே சீதாபதியான நீ, கிருஷ்ணாவதாரியாக வந்து, புத்தாவதாரத்தை எடுத்து, வேதங்களால் புகழப்பட்ட பத்பனாபனாக இருக்கிறாய்.

**தாமோதரனெந்து நிம்ம தேவதெகளெல்ல கரெயெ**
**ஆ மஹாகல்க்யனாத சீதாபதே** ||12
கல்கி அவதாரியான சீதாபதியான உன்னை தேவதைகள் தாமோதரன் என்று வணங்குகின்றனர்.

**சங்கருஷண தேவ நிம்ம கிங்கரரு நாவெல்லரய்ய**
**பங்கஜாஸன வந்த்ய ராம சீதாபதே** ||13
பிரம்மனால் வணங்கப்படும் சீதாபதி ஸ்ரீராமனே, நாங்கள் அனைவரும் சங்கர்ஷணனான உனக்கு தாசர்கள்.

**வாசுதேவ நிம்ம பாதக்கெ வந்தனெய மாடுவெனய்ய**
**தோஷராஷி நாஷமாடு சீதாபதே** ||14
சீதாபதியே உன் பாதங்களை வணங்குகிறேன். என் வினைப் பயன்களை பரிகாரம் செய்யும் வாசுதேவன் நீயே.

**ப்ரத்யும்னனெந்து சுரரு எத்து[3] நின்ன பொகளுத்திரெ**
**உத்தா[4]ர மாடித தேவ சீதாபதே ||15**

ஞானத்தைக் கொடுக்கக்கூடிய சீதாபதி, அறிஞர்கள் உன்னை வணங்கினால், நீ பிரத்யும்ன ரூபத்தினால் அவர்களை காப்பாற்றுகிறாய்.

**அனிருத்தனே க[3]தியெந்து அனுதின நின்ன க[1]ரெயெ**
**அனிமித்த ப[3]ந்து[4] கிருஷ்ண சீதாபதே ||16**

எதையும் எதிர்பாராமல் உதவி செய்யும் சீதாபதியே, நீயே கதி யென்று உன்னை வணங்குபவரை காப்பாற்றும் ஸ்ரீகிருஷ்ண அனிருத்தனாக இருக்கிறாய்.

**புருஷோத்தம புண்யநாம ஸ்மரிசுவ ஜனர**
**மனோஹருஷ நீடித[3] ராம சீதாபதே ||17**

சீதாபதியான ஸ்ரீராமனின் புண்ணிய நாமத்தை நினைப்பவர்களுக்கு பேரானந்தத்தைக் கொடுக்கக்கூடிய புருஷோத்தமனாக நீ இருக்கிறாய்.

**அதோக்ஷஜ லோககளிகெ ஆதாரபூ[4]த[1]னாகி[3]ருவெ**
**வேதவேத்யராம சீதாபதே ||18**

வேதங்களில் புகழப்படும் ஹே சீதாபதியே, உலகத்தில் உள்ள அனைவருக்கும் ஆதாரமாக விளங்கும் அதோக்ஷஜனாக நீ இருக்கிறாய்.

**நாரசிம்ஹ நரனிகெ வேதகீதெகளனெல்ல**
**போ[3]தனெயன்னு மாடித சீதாபதே ||19**

ஹே சீதாபதியே, நீ கிருஷ்ணாவதாரத்தில் அர்ஜுனனுக்கு வேதத்தின் சாரமான பகவத்கீதையை போதித்து, நரசிம்மனாக இருக்கிறாய்.

**அச்யுத விஷ்வாமித்ர அதிஷய யாகவ காய்த**
**பக்தவத்ஸல ராம சீதாபதே ||20**

சீதாபதியான ஸ்ரீராமனே, பக்தவத்ஸலனான நீ விஸ்வாமித்ரர் நடத்திய யாகத்தை தடையில்லாமல் நடத்தி காப்பாற்றிய அச்யுதனாக இருக்கிறாய்.

** திருமதி. ஜெயம்மா, பெங்களூரு

தொடர்

## ஹரிதாசர்களின் புதிர் கவிதைகள்

## மங்கள கீதம் - இயற்றியவர் : கனகதாசர்

மங்க3ளம் ஜய மங்க3ளம் ||ப

மங்க3ளாருதிய பாடி3ரெ மானினியரு ||அப

அந்த4கனனு ஜன கந்த3ன தந்தெ3ய
கொந்த3ன ஸிரத3லி நிந்த3வன
சந்த3தி படெ3த3வன நந்த3னெயள நல
விந்த3 த4ரிஸித3 முகுந்த3னிகெ3 ||1

ரத2வ நட3ரி ஸூர பத2த3லி திருகு3வன
ஸூதனிகெ3 ஸாபவனித்தவன
க3தியனு தடெ3தன ஸதிய ஜனனி ஸூதன
ஸதியர நாளித3 சதுரனிகெ3 ||2

ஹரிய மக3ன ஸிர தரித3ன தந்தெ3ய
ஹிரிய மக3ன தம்மன பிதன
ப4ரதி3 பு4ஜிஸித3வன ஸிரத3லி நடிஸித3
வர காகி3நெலெயாதி கேசவகெ3 ||3

பொருள்:
இந்த மங்களப் பாடலில் கனகதாசர் பல உறவு முறைகளைக் கூறி, புராண அறிவைப் பயன்படுத்தி, பகவந்தனின் மங்களா குணங்களைப் பாடி, அப்பேர்ப்பட்ட பகவானுக்கு மங்களங்கள் என்று முடிக்கிறார். சரணங்களில் மட்டும் புதிர்கள் இருப்பதால், அவற்றைப் பார்ப்போம்.

#1: அந்த4கன் என்றால் பிறவிக்குருடன். இங்கு அது திருதராஷ்டிரனைக் குறிக்கிறது. அவர் அனுஜன் (தம்பி) பாண்டு மகாராஜா. அவர் கந்தன் (மகன்) தர்மராஜன். அவர் தந்தை யம தர்மன். அவரைக் கொன்றவர் பரமசிவன். இது மார்க்கண்டேயனைக் காக்கும் போது நடந்தது. சிவன் தலையில் நின்றவர் சந்திரன். சந்திரனைப் பெற்றவர் சமுத்திராஜன் (வருணன்). அவன் மகள் லட்சுமிதேவி. அவரை மார்பில் தரித்தவன், முக்தி கொடுக்கும் முகுந்தன். அந்த முகுந்தனுக்கு மங்களம் என்கிறார் கவி.

#2: வான்வெளியில் ரதத்தில் திரிபவர் - சூரியன். அவர் மகன் கர்ணன். அவருக்கு சாபம் கொடுத்தவர் பரசுராமர். அவரின் வேகத்தைத் தடுத்தவர் சீதை. சீதையின் அம்மா பூமாதேவி. அவரின் மகன் நரகாசுரன். அவருடைய அரண்மனையில் சிறைப்பட்டிருந்த 16,100 பெண்களை, ஸ்ரீகிருஷ்ணன் காப்பாற்றி, துவாரகைக்குக் கொண்டு வந்து மணந்தான். அப்படிப்பட்ட கண்ணனுக்கு மங்களம் என்கிறார் தாசர்.

#3: ஹரிய மக என்றால் சூர்யனின் மகன் கர்ணன். கர்ணனின் தலையை அறுத்தவன் அர்ஜுனன். அவனின் அப்பா பாண்டுராஜா. பாண்டுவின் பெரிய பையன் தர்மராஜன். அவரின் தம்மன (தம்பி பீமனின்) அப்பா வாயுதேவர். வாயுவை சாப்பிடும் பிராணி பாம்பு. அதாவது காளிங்கன். காளிங்கனின் மேல் நடனம் ஆடியவன் ஸ்ரீகிருஷ்ணன். அவனே காகிநெலெ ஆதிகேசவன். அத்தகைய ஆதி கேசவனுக்கு மங்களம் என்கிறார் கனகதாசர்.

**** திரு. குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்.**

தொடர்

## ஹரிகதாம்ருதசார ஸ்லோக அர்த்தங்கள்

## ஸ்ரீலட்சுமிதேவி

ஜக3து3த3ரனதி1விமல கு3ண ரூ
ப1களனாலோசனதி3 பா4ரத
நிக3மத1திகளதிக்ரமிஸி க்ரியாவிசேஷக3ள |
ப3கெ3ப3கெ3ய நூத1னவ கா1ணுத1
மிகெ3 ஹருஷதி3ம் பொ1க3ளி ஹிக்கு3வ
த்ரிகு3ணமானி மஹாலகுமி சந்தெய்சலு அனுதினவு ||2

முதல் பத்யத்தில் ஸ்ரீநரசிம்மனை வணங்கிய ஜகன்னாததாசர், அடுத்து தாரதம்யத்தில் இரண்டாவதாக இருக்கும் ஸ்ரீலட்சுமிதேவியை வணங்குகிறார். இந்த கிரந்தத்தில், 32 சந்திகளில் உள்ள அனைத்து (988) பத்யங்களிலும் பகவான் சர்வோத்தமன் என்பதை சொல்லி யிருப்பதோடு, அனைத்து தேவதைகளும் பகவானின் ஆதீனமே என்பதைக் குறிப்பிடுகிறார்.

இதில், ஜகதுதரன - உலகை தன் வயிற்றில் தரித்திருப்பவன் என்று சொல்வதால், லட்சுமிதேவியைவிட பகவான் உத்தமன் என்பதை சொல்கிறார். இதற்கு உதாரணம்: ஸ்ரீபுரந்தரதாசர், ஸ்ரீகிருஷ்ணனை

‘ஜகதோத்தாரன’ என்று பாடியிருப்பது. இப்பேற்பட்ட 14 உலகங்களையும், தன்னுள் தரித்திருக்கும்படியான பகவானின், அதி விமல = மிகமிக, சற்றும் தோஷமில்லாத அனந்த கல்யாண குணங்களை, மகாபாரதம், வேத ராசிகள் ஆகியவற்றில் சொல்லி யிருக்கும்படியான, க்ரியா விசேஷகள - பகவானின் சிறந்த செயல்களை, ஒவ்வொரு முறையும் வெவ்வேறு, புத்தம் புதிதான ரூபம் மற்றும் குணங்களையும் பார்த்து ஸ்ரீலட்சுமிதேவி ஆனந்தித்துக் கொண்டிருக்கிறாள். அத்துடன், பகவந்தனை துதித்தவாறு, அபரிமிதமான மற்றும் இதுவரை யாரும் அடையாத ஆனந்தத்துடன் இருக்கிறாள் ஸ்ரீலட்சுமிதேவி.

த்ரிகுணமானியான (சத்வ, ரஜஸ், தமோ குணங்கள்), இந்த மூன்று குணங்களுக்கும் அபிமானியான ஸ்ரீலட்சுமிதேவி நம்மை காப்பாற்றட்டும். காப்பாற்றட்டும் என்றால், பணம், வெள்ளி, தங்கம், செல்வம் ஆகியவற்றை அளிப்பது அல்ல. சான்றோர்களின், பகவத் பக்தர்களின் சங்கத்தை அளித்து, நம்மை அருஞ்சாதனையில் ஈடுபடுத்துவதே ஆகும்.
இத்தகைய லட்சுமிதேவியின் பேரருளினால் நமக்குக் கிடைக்கும் பகவத் பக்தர்களின் தொடர்பினால், 1,000 பிறவிகளில் ஞான பக்தியுடன், வேதத்தில் சொல்லப்பட்ட கர்மங்களை குறைவில்லாமல் செய்வதற்கு, ஸ்ரீலட்சுமிதேவியின் அருள் தேவை. மேலும், நமக்கு விரஜா நதி ஸ்னானம் செய்விப்பதுடன், லிங்க தேகம் பங்கமாகக் கூடிய மிகப்பெரிய சாதனையை செய்வதற்கு ஸ்ரீலட்சுமிதேவி நமக்கு அருள்புரிவாளாக.

ஈ புருஷநாமகன ஷுபஸ்வே
தாபளெனிப ரமாம்ப³ தா பிர
ம்மாபரோக்ஷிகளாதவர லிங்காங்க கெடிசுவளு ||

பகவானின் சச்சிதானந்த, அப்ராக்ருத சரீரத்திலிருந்து வெண்மை நிற நீராக, வியர்வையின் வடிவில் வெளிவந்து ஓடிக்கொண்டிருக்கும் விரஜா நதியில், முழுவதும் சாதனையடைந்த ஜீவர்களைக் குளிப்பாட்டி ஸ்வரூப தேகத்துடன் முக்தியடைய ஸ்ரீலட்சுமிதேவி நமக்கு உதவி புரிகிறாள்.

** **திரு.முரளிதர தாசரு, பெங்களூரு.**

தொடர்

## பகவத்கீதை

## பகவத்கீதை Vs ஹரிகதாம்ருதசாரம்

3. யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாதாத்மத்ருப்தஸ்ச மானவ: |
ஆத்மன்யேவ ச சந்துஷ்டஸ்தஸ்ய கார்யம் ந வித்யதே || (கீதை 3-17)

எந்த மனிதன் ஆத்மதிருப்தி உள்ளவனோ, ஆத்மனிலேயே திருப்தியைப் பெற்றிருக்கிறானோ, அவனுக்கு செய்யவேண்டிய கடமைகள் என்று எதுவும் இல்லை. ரதி என்றால் பரமாத்மனின் தரிசனத்தைப் பெறும் சுகம், சித்த சுத்தத்திற்காக கர்மங்களை செய்தவாறு அதன் மூலம் ஞானத்தை சம்பாதிப்பதாகும்.

நத$^{3}$ நதி$^{3}$க$^{3}$ளிளெயொளகெ$^{3}$ பரிவுவு
உத$^{3}$தி$^{4}$பர்யந்தரதி$^{3}$ தருவா
யத$^{3}$லி ரமிஸுவுவல்லி தன்மயவாகி$^{3}$ தோரத$^{3}$லெ |
விதி$^{4}$ நிஷேத$^{3}$க$^{3}$ளா சரிஸுவரு
பு$^{3}$த$^{4}$ரு ப$^{4}$கவத்$^{3}$ரூப சர்வ
த்ரத$^{3}$லி சிந்த$^{1}$னெ ப$^{3}$ரலு த்யஜிஸுவரகி2ல கர்மக$^{3}$ள || (சந்தி 10-8)

பகவத்ரூப சிந்தனையானது அனைத்து இடங்களிலும் வரும் வரைக்கும், ஞானிகள் விதி/விதிவிலக்குகளை பின்பற்றுவர். சந்தியா முதலான கர்மங்களை செய்தவாறு அனைத்து இடங்களிலும், ஸ்ரீஹரியின் ரூபசிந்தனையை செய்து, தக்க சிந்தனை வந்தபிறகு, அனைத்து கர்மங்களையும் விட்டு தியானத்தில் ஆழ்ந்துவிடுவர். நதிகள் பாய்ந்து கடலில் சேர்கின்றன. அப்படி அது சேர்வது, நம் கண்களுக்குத் தெரிவதில்லை. ஞானிகள் பிம்ப சாட்சாத்காரம் ஆகும் வரை விதி / விதிவிலக்குகளை பின்பற்றுவர். கிழக்கிலிருந்து மேற்கு நோக்கி பாயும் நதிகளே 'நதகள்'. மேற்கிலிருந்து கிழக்கு நோக்கி பாய்பவை 'நதிகள்'. இவை இரண்டுமே கடலில் சென்று கலக்கின்றன.

4.ஸ்ரேன்சர்வதர்மோ விகுண: பரதர்மாத் ஸ்வனுஷ்டிதாத் |
ஸ்வதர்மே நிதனம் ஸ்ரேய: பரதர்மோ பயாவஹ: || (கீதை 3-35)

தத்தம் வர்ணாசிரம தர்மங்களுக்கேற்ற கடமைகளையே செய்ய வேண்டும். அப்படி செய்யும்போது அதில் சிறிதளவு குறைவு ஏற்பட்டாலும், அது பிற தர்மங்களைவிட சிறந்ததேயாகும். ஸ்வ

தர்மமான போரில் மரணம் வந்தாலும் அது சிறந்ததே. பரதர்மம், நரகாதி பயங்களைக் கொடுக்கிறது. இது அனைத்து வர்ணாசிரமங்களுக்கும் பொருந்தும்.

சஹஜம் கர்ம கௌந்தேய சதோஷமபி ந த்யஜேத் ।
சர்வாரம்பா ஹி தோஷேண தூமேனாக்னிரிவாவ்ருதா: ॥ (கீதை 18-48)

விதிக்கப்பட்ட கர்மங்களை அதில் தோஷங்கள் இருந்தாலும் விடக் கூடாது. நெருப்பில்லாமல் புகையாது என்பதற்கேற்ப அனைத்து கர்மங்களிலும் தோஷங்கள் இருந்தே இருக்கின்றன.

லோபவாத[3]ரு சரியெ கர்மஜ
பாப புண்யக[3]ளெரடு[3] நின்னனு
லேபிஸவு நிஷ்காமகனு நீனாகி மாடு[3]திரெ ।
சௌபரணி வரவஹன நின்ன ம
ஹாப[1]ராத4களெணிஸத[3]லெ ஸ்வ
ர்க்கா[3]பவர்கதொ[3]ளிட்டு ஸலஹுவ ஸத[1]த[1] சுக[2]சாந்த்[3]ர ॥ (19-11)

பிரதிபலன் எதிர்பார்க்காமல் செயல்களை செய்வது உத்தமம். அப்படி செய்யும்போது, சில குறைகள் வந்தாலும், அதனால் தோஷங்கள் வராது. பிரதிபலன் எதிர்பார்த்து செய்யப்படும் செயல்கள் நம்மை கட்டுப்படுத்தும். ஆனால், எதையும் எதிர்பார்க்காமல் செய்யப் படுபவை அப்படி அல்ல. ஆனந்தமயனும், கருடவாகனனுமான ஸ்ரீஹரி, நம் தோஷங்களை பொருட்படுத்தாமல் ஸ்வர்க்க, மோட்சாதிகளைக் கொடுத்து எப்போதும் நமக்கு அருள்வான்.

****ப்ராணேஷ கேசவ தாசர். பெங்களூரு**

ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்
## பால்குண & சைத்ர மாதங்களில்

பால்குண பகுள த்ருதியை - ஸ்ரீவாதிராஜர் (சோதே)
பால்குண பகுள சதுர்த்தி - ஸ்ரீவியாசராஜர் (நவபிருந்தாவனம்)
சைத்ர சுத்த நவமி - ஸ்ரீதந்தெமுத்துமோகன தாசர், (தேவராயனதுர்கா)

தொடர்

## சுளாதி பக்கங்கள்

## ஓர் அறிமுகம் + ஸ்ரீராகவேந்திர சுளாதி

கர்னாடக சங்கீத சம்பிரதாயத்தில் பாடத்திற்கு உரிய வரிசையாக சொன்னால், சரளி வரிசை, ஜண்டை வரிசை, ஹெச்சு ஸ்தாயி, தக்கு ஸ்தாயி வரிசைகள், சப்த தாள அலங்காரங்கள், கீதங்கள், ஸ்வரஜதி, வர்ணங்கள், க்ருதிகள், கீர்த்தனைகள், பதம், ஜாவளி, வரிசைகள், சுளாதிகள், உகாபோகங்கள், விருத்த நாமா முதலியவை வருகின்றன.

ஒரு சரித்திரத்தையோ, ஒரு க்ஷேத்திரத்தின் வர்ணனையோ, கடவுளின் பெருமையையோ, குருவின் மகிமையையோ, மற்றும் நீதிகள், தர்மங்கள் ஆகியவற்றையும் சுளாதிகளில் விரிவாக அமைத்துப் பாடுவதுண்டு. சுளாதி - சுளுவின ஹாதி (சுலபமான வழி).

பல ராகங்களை பாடல்களில் அமைத்துப் பாடுவதை 'ராக மாலிகை' என்று சொல்வர். ஐந்து அல்லது ஏழு தாளங்களில் பாடல்களை அமைத்துப் பாடுவதுண்டு. முதலகல்லு சேஷதாசர் 18 தாளங்களில் சுளாதி இயற்றியிருக்கிறார். சுளாதிகளில் பஞ்ச நடைகளும் இருக்கும் (கண்ட, மிஸ்ர, திஸ்ர, சதுஸ்ர, சங்கீர்ண). கீர்த்தனைகளில் பல்லவி போல சுளாதிகளில் கடைதில் 'ஜதே' என்ற இரண்டு வரி அமைப்பு இருக்கும். அதில் பாடலின் சாராம்சம் இருக்கும். ஸ்ரீபுரந்தரதாசர் முதல் பல ஸ்ரீஹரி தாசர்கள் கன்னடத்தில் நிறைய சுளாதிகளை இயற்றியுள்ளனர். அதில் ஸ்ரீவிஜயதாசர் 800 சுளாதிகள் இயற்றி யிருக்கிறார். அவருக்கு 'சுளாதி தாசர்' என்றே பெயர் உண்டு. ஒரு சுளாதி சொன்னால், 100 தேவர நாமாக்கள் சொன்ன பலன் உண்டு. தாசர்கள் அருளிய சுளாதிகளை அனுபவித்துப் பாடி பரமன் அருள் பெறுவோம். ஸ்ரீகோபாலதாசர் இயற்றிய ஸ்ரீராகவேந்திர சுளாதியை இந்த இதழில் துவக்கி, தொடர்ச்சியை அடுத்த இதழ்களில் தொடர்வோம்.

ஸ்ரீகோபால தாசர். கணேச அம்ச சம்பூதர். இயற்பெயர் பாகண்ணா. மொசருகல்லில் பிறந்து உத்தனூரில் மறைந்த மகான். இவரின் குரு ஸ்ரீவிஜயதாசர். குருவின் ஆணைக்கேற்ப தன் ஆயுளில் 40 ஆண்டுகளை ஸ்ரீனிவாசாசார்யருக்கு (ஸ்ரீஜகன்னாத தாசர்) தானமளித்த கலியுகக் கர்ணன். பரம வைராக்யசாலி. மந்திராலயத்தில்

ஸ்ரீராகவேந்திரரை பிரத்யட்சமாகக் கண்டவர். காயத்ரி ஜபத்தால் மந்திர சித்தி, வாக்சித்தி பெற்றவர். மகா தபஸ்வி.

குரு ராகவேந்திர சுளாதி

த்ருவதாள

தரெயொளகெ நம்ம குரு ராகவேந்திரரின்னு
இருதிப்ப விவரவ அரிதஷ்டு வர்ணிஸுவெ
ஸ்திரவாகி மந்த்ராலயபுர துங்காதீரதி
ஹரிபக்தப்ரஹ்லாத வரயாக இல்லி மாடி
ஸுரரிகம்ருத உணிஸி பரிபரி க்ரியெமாடி
பரிஷுத்த ஆதனெந்து அரிது ஈ ஸ்தளதல்லி
குரு ராகவேந்திரராய ஷரீர போகாடிஸில்லி
பரலோகஸாதன பரிபூர்த்தி மாடிகொண்டு
சிரிகிருஷ்ணன சரணக்கெரகி சந்தோஷதல்லி
தரெய மேலித்து ஜனர பொரெயபேகெந்தெனலு
ஹரி நோடிதனிவர பரமதயாளுதனவ
குருவந்தர்யாமியாகி வரவ நீடலு ஜனகெ
நரஹரி தானெ நிந்து நிருத பூஜெயகொண்டு
சிரிவுள்ள கீருதிய சுரர பாலக சக்ர
தர நாராயண தானிவர சன்னிதானனாகி
வரிகெ பல தந்தீவ இஹபரதல்லி இன்னு
கருணாகர ரங்க கோபாலவிட்டல தன்ன
ஷரணர பொரெவந்த சரிய பரிபருவுண்டே ||

இப்பூவலகில் நம்முடைய குருகளான ஸ்ரீராகவேந்திரர் இன்னமும் சிரஞ்சீவியாக இருக்கும் விவரங்களை அறிந்தவரை சொல்வேன்.

துங்கா தீரத்தில் மந்திராலயம் என்னும் இடத்தில் ஸ்திரமாக இருக்கிறார். ஸ்ரீராகவேந்திரரின் முந்தைய பிறவி ஸ்ரீவியாசராஜர். சத்ய லோகத்தில் பிரம்மாவின் ஸ்வாமி பூஜைக்கு உதவியாக இருந்த சங்கு கர்ணன் என்னும் தேவர், பிரம்மாவின் உத்தரவுக்கு இணங்கி, பூவுலகில் அவதரிக்க நேர்ந்தது. சங்கு கர்ண தேவதை, பிரகலாதனாகவும், மகாபாரத சமயத்தில் அரசன் பாஹ்லீகனாகவும்,

கலியுகத்தில் தர்ம பிரசாரத்திற்காக ஸ்ரீவியாசராஜராகவும் பிறகு ஸ்ரீராகவேந்திரராகவும் அவதரித்தார்.

அரசனான ஸ்ரீபிரகலாதன் மிகவும் சிறந்த ஹரிபக்தன். துங்கா நதி தீரத்தில் யாகங்கள் செய்தார். தேவாதி தேவர்களுக்கு யாகங்களில் ஹவிஸ்ஸைக் கொடுத்து மகிழ்வித்து மிக நல்ல காரியங்களை, சிறந்த சாதனைகளை செய்து, அபரிமிதமான புண்யங்களை அடைந்தார். ஸ்ரீராகவேந்திரர் இதனை அறிந்து, இந்த ஸ்தலத்தில் (மந்த்ஸால கிராமம்) பிருந்தாவன பிரவேசம் சரீரத்துடன் (ஜீவ சமாதி, உடலோடு கூட) செய்தார். பவித்ரமான இடம் மந்திராலயம். பரலோக சாதனைகளை பரிபூர்ணமாக செய்துகொண்டு, ஸ்ரீலட்சுமி நாராயணனின் சரணத்தை அடைந்து, பூவுலகில் இருக்கும் ஜனங்களை உத்தாரம் செய்யவேண்டும் என்று வேண்டினார்.

சந்தோஷமாக ஸ்ரீஹரியும் இதைக் கேட்டு ஸ்ரீராகவேந்திரரில் அந்தர்யாமியாக விளங்கும் பரம தயாளுவான பரமாத்மா, உலகினர்க்கு வரங்களை வழங்குகிறார்.

ஸ்ரீ நரஹரி, பிருந்தாவனத்தில் ஸ்வயம் தானே இருந்து, அந்த பூஜைகளை ஏற்றுக்கொள்கிறார். தேவர்களின் எஜமானனான, ஸ்ரீசக்ர தரன், கீர்த்திகளைக் கொண்டுள்ள ஸ்ரீமன் நாராயணன், தான் இந்த பிருந்தாவனத்தில் சன்னிதானனாக இருந்துகொண்டு, இவருக்கு (ஸ்ரீகுரு ராகவேந்திரருக்கு) பலன் கொடுக்கிறான். இஹத்திலும், பரத்திலும் கருணாகரனான ஸ்ரீகோபாலவிட்டலன் தன்னுடைய சரண சேவகரை அபிமானித்து செய்யும் வினோதங்கள், விசித்திரங்கள் விதவிதமானவை அல்லவா? எடுத்துச் சொன்னாலும் அளவிட முடியுமா? (ஸ்ரீஹரியே ஸ்ரீராகவேந்திரர் மூலமாக எல்லா வரங்களையும் பக்தர்களுக்கு நல்குகிறார் என்பதே கருத்து. இதையே 'முகுந்த பிரசாதோ தயாத்' என்று அப்பண்ணாசார்யரும் ஸ்ரீராகவேந்திர ஸ்தோத்திரத்தில் கூறியுள்ளார்). (தொடரும்).

*** **திருமதி. பத்மினி ஸ்ரீனிவாசன், பெங்களூரு**

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

## பக்தியின் சிறப்பு

ஸ்ரீஹரி மகிழ்வது வெறும் பக்திக்கு மட்டுமே. 'ப4க்த்1யைவ து1ஷ்டிமப்1யேதி விஷ்ணு: நான்யேன கே1னசித்' என்று புராணம் சொல்கிறது. பக்தி என்பது மானசிக நிர்மால்யத்தைக் கொண்டு வருகிறது. அனைத்து நோய்களுக்கும் மனதில் இருக்கும் அழுக்கே மூலகாரணம் ஆகும். அந்த மனதை தூய்மையாக்கிக் கொண்டால், அனைத்து நோய்களும் விலகிப் போகின்றன என்பது மனவியலாளர் களின் கருத்து. ஒரு சிறந்த பக்தனின் மனது சுத்தமாக இருக்கும் என்பதில் எந்தவொரு சந்தேகமுமில்லை.

'பக்த்யர்த்யம் பகவன்மஹி மேக்தி:' என்பது ஸ்ரீமதாசார்யரின் வாக்கு. பக்தியை வார்த்தைகளால் விவரிப்பது சாத்தியமில்லை. அது மனதில் தோன்றி வளர்வதாகும். ஸ்ரீஹரியின் மகிமைகளைக் கேட்கும்போது பக்தி வளர்கிறது. ஆகையினாலேயே வேத புராணங்கள் அனைத்தும் ஸ்ரீஹரியின் மகிமைகளைப் புகழ்கின்றன.

ஸ்ரீஜகன்னாததாசரின் ஹரிகதாம்ருதசாரம் பக்திரசம் ததும்பும் ஒரு உன்னத காவியம் என்று சொன்னால் அது தவறாகாது. ரச, குண, த்வனி, அலங்காரம் இப்படி ஒரு காவியத்திற்கு இருக்கவேண்டிய அனைத்து குணங்களையும் கொண்டிருக்கும் காவியம் இது. ஒவ்வொரு வரி, ஒவ்வொரு சொல்லிலும் விசேஷமான பொருளைக் கொண்டும், ஸ்ரீஹரியின் பற்பல மகிமைகளையும் விளக்குவதாகவும் இருக்கிறது.

ஜக3வனெல்லவ நிர்மிஸுவ நா
ந்முக3னொளகெ3 தா1னித்து3 ஸலஹுவ
க3க3ன கே1ஷனொளித்து3 ஸம்ஹரிஸுவனு லோக1தொ3ளு |
ஸ்வக3த பே4த3விவர்ஜித1னு ஸ
ர்வக ஸதானந்தை3க1 தே3ஹனு
ப3கெ3ப3கெ3ய ரூபத3லி க1ரெஸுவ ப4கு1த1ரனு பொரெவ || (2-8)

நான்முக பிரம்மனில் இருந்து ஸ்ரீஹரியானவர் இந்த உலகத்தை படைக்கிறார். தானே விஷ்ணு ரூபத்தில் இந்த உலகத்தில் அவதாரம்

செய்து காக்கவும் செய்கிறார். ருத்ரதேவருக்குள் நின்று அழித்தல் வேலையையும் தானே செய்கிறார். அவரின் வெவ்வேறு ரூபங்களுக்கு இடையில் எந்தவித வேறுபாடும் இல்லை; அவரது உறுப்புகளுக்கிடையேயும் வேறுபாடுகள் இல்லை. எல்லா இடத்திலும் வியாபித்திருக்கும் அவருக்கு ஆனந்தமயமான உடலே அன்றி நம்மைப்போன்ற அழியக்கூடிய உடல் இல்லை. அனைத்து எழுத்திற்கும் அவரே அதிபதியாக இருக்கிறார்.

இந்த ஸ்லோகத்தில் அனைத்து சாஸ்திரங்களின் சாரத்தையும் மற்றும் ஸ்ரீஹரியின் மகிமையையும் விவரிக்கிறார். நான்முகப் பிரம்மன் படைப்புத் தொழிலை செய்கிறார், ருத்ரதேவர் அழிக்கும் தொழிலை செய்கிறார், விஷ்ணு காக்கிறார் என்று பொதுவாக இவர்களை உலகில் மும்மூர்த்திகள் என்று சொல்கின்றனர். ஆனால் இவை ஸ்ரீஹரியின் மூன்று ரூபங்களே என்றும் மூன்று வெவ்வேறு தேவதைகள் அல்ல என்பதையும் மிக அழகாக தெரிவிக்கிறார் தாசர்.

ஜாக3ர ஸ்வப்1னங்க3ளொளு வர
போ4கி3ஸயன ப3ஹுப்1ரகா1ர வி
பா4க3கை3ஸி நிரம்ஷஜீவர சிச்சரீரவனு |
போ4க3வித்து1 சுஷுப்தி1கா1லதி3
ஸாக3ரவ நதி3 கூ1டுவந்தெ1 வி
யோக3 ரஹித1னு அம்ஷக3ளனேக1த்1ரவைதி3ஸுவ || (3-8)

ஸ்ரீஹரியின் மிகச் சிறந்த சக்தியினை இங்கே விவரிக்கிறார் தாசர். ஜீவர்களில் இரு விதங்கள். 1. ஸாம்ஷரு. 2. நிரம்ஷரு.

தேவதைகள் மற்றும் சில அசுரர்கள் சாம்ஷர்கள். மற்ற அனைவரும் நிரம்ஷர்கள் ஆவர். தேவதைகள் நம் தேகத்தில் இருக்கும் தத்வங்களுக்கு அபிமானியாக இருக்கின்றனர். மற்ற இடங்களிலும் அந்தந்த ரூபங்களை தரித்து இருக்கின்றனர். ஸ்ரீஹரியானவர், விஸ்வ-தைஜச என்னும் ரூபத்தில், ஜாக்ருத - ஸ்வப்ன (முழித்தல், கனவு) ஆகிய நிலைகளில் நின்று பரிபாலிக்கிறார்.

அப்பேத்யஸ்யாபி ஜீவஸ்ய விபாகம் பஹுதா ஹரி:
க்ருத்வா போகான் ப்ரதாயைவ சைத்யமாபாதயோத்புன:
[அனுவியாக்யானம்]

ஜீவன் நிரம்சன். இந்த ஜீவனை ஸ்ரீஹரியானவர் தன் திறமையால் பல விதமாகப் பிரித்து, போகங்களைக் கொடுக்கிறார். மறுபடி சுஷுப்தி (தூக்க நிலை) காலத்தில் அந்த ஜீவனை ஒன்று சேர்க்கிறார். 'சாகரவு நதி கூடுவந்தே' என்று ஜகன்னாததாசர் இதற்கான உதாரணத்தைத் தருகிறார். ஹரிமயமான ஆறானது, கடலைப் போய் சேரவேண்டும். இப்படியாக, ஸ்ரீஹரி அனைத்து ஜீவர்களுக்கும், அவரவர்களின் யோக்கியத்தைப் பொறுத்து, பிரித்து போகங்களைக் கொடுக்கிறார் - என்று ஸ்ரீஹரியின் மகிமையை தெரிவிக்கிறார்.

ப4க்தி1பூ1ர்வக1வாகி3 முக்தா1
முக்த1னியமக3ன ஸர்வோ
த்3ரிக்த1 மஹிமெக3ளனவரத கொ1ண்டாடு மரெயத3லெ |
ஸக்த1னாக3தெ3 லோக1வார்தெ1 ப்ர
ஸக்1திக3ளனீடாடி ஸ்ருதி ஸ்ம்ரு
த்யைக1 க1ர்மவ மாடுதி1ரு ஹரியாக்3ஞேயெந்த3ரிது1 ||
[கர்ம விபாக சந்தி ஸ்லோகம் 10]

ஸ்ரீஹரியின் மகிமைகளை மறக்காமல் எந்நேரமும் கொண்டாட வேண்டும். முக்தர்கள், அமுக்தர்கள் என அனைவரையுமே அவர்தான் கட்டுப்படுத்துகிறார் என்பதை மறக்கக்கூடாது.

ஸ்மர்த்தவ்ய சததம் விஷ்ணு: விஸ்மர்தவ்யோன ஜாதுஜித் | என்று புராணங்கள் சொல்லும் வழிமுறைகளை மறக்காமல் பின்பற்றுங்கள் என்று சொல்கிறார்.

சம்சார / தற்காலிக விஷயங்களில் கவனம் செலுத்தினால் பக்தி என்பது குறைகின்றது. ஸ்ரீஹரியை மனம் சிறிது மறக்கிறது. ஸ்ரீஹரியை நினைப்பதென்றால், சம்சாரத்தை விட்டு ஓடுவது என்று பொருள் அல்ல. சம்சாரத்தில் இருந்தாலும், எதற்கும் பேராசைப் படாமல், தாமரை இலைத் தண்ணீர் போல பற்றற்று இருக்கவேண்டும் என்று வாழ்க்கையை வாழும் வழியை தெரிவிக்கிறார்.

கா1லத்3ரவ்ய சுக1ர்ம சுத்தி3ய
பே1ளுவரு அல்பரிகெ3 அவு நி
ர்மூலகை3ஸவுவல்ல பா1ப1க3ளெல்ல கா1லத3லி |
தை1லதா3ரெயந்த3வன ப1த3

ஒலயிஸி ஸ்து1தி1ஸத3லெ நித்1யதி3
பா1லிஷெரு க1ர்மாதி3க3ளெ தா1ரக1வெனுதி1ஹரு ||
[கர்ம விமோசன சந்தி 19, ஸ்லோகம் 23]

கால-சுத்தியை (செய்யவேண்டிய காலத்தில் செய்யவேண்டிய செயல்களைச் செய்தல்), திரவ்ய-சுத்தியை (சம்பாதிக்கும் பணமானது நல்ல முறையில் இருக்கவேண்டும்) சிலர் சொல்கின்றனர். நல்ல வழியில் வந்த பணத்தால், நற்காரியங்களைச் செய்தால், பாவங்கள் தீர்கின்றன என்று சிலர் சொல்கின்றனர். ஆனால் இதனால் அனைத்து பாவங்களும் தீர்கின்றனவா என்றால் இல்லை. கர்மங்கள் நம்மை நம் வாழ்க்கைச் சுழற்சியிலிருந்து மீட்பதில்லை. அதற்கு மேல் நாம் ஸ்ரீஹரியிடம் காட்டும் பக்தியே நம்மை இச்சுழற்சியிலிருந்தும், பாவங்களிலிருந்தும் மீட்கின்றன. எண்ணையை கீழே ஊற்றும்போது அது எப்படி தடையில்லாமல் விழுகின்றதோ அதேபோல் நம் பக்தியும் தடையில்லாமல் இருக்கவேண்டும்.

ஸ்வாத்மாத்மீய ஸமஸ்த வஸ்துப்யே
அனந்தகுணாதிக: நிரந்தர ப்ரேமப்ரவாஹ:

அன்பு / காதலின் வெள்ளத்தை பக்தி என்று சொல்கின்றனர்.

சித்1ஸுக2ப்ரத3 ஸலஹெனலு கோ3
வத்ஸ த்3வனிகொ3த3கு3வ தெ1ரதி3பர
மோத்ஸவதி பந்தொ3த3கு3வனு நிர்மத்ஸரர ப3ளிகெ3 |[கர்ம விபாக]

ஸ்வரூப சுகத்தைக் கொடுப்பவர் ஸ்ரீஹரி. அவரின் காருண்யத்தை மிகவும் அழகான உதாரணங்களுடன் நிரூபிக்கிறார் தாசர். கன்றுக்குட்டியின் குரலைக் கேட்ட பசு, தான் மேய்ந்து கொண்டிருக்கும் புல்லை விட்டு, கன்று இருக்கும் இடத்திற்கு ஓடி வந்து, அதை தடவிக் கொடுக்கிறது. அதைப்போலவே ஸ்ரீஹரியும் பக்தர்கள் இருக்கும் இடத்திற்கு வந்து அவர்களுக்கு அருள்கிறார். இதை 'நிர்மத்ஸர பளிகெ' என்கிறார் தாசர்.

இப்படியாக ஹரிகதாம்ருதசாரத்தின் ஒவ்வொரு ஸ்லோகங்களிலும், பக்தியைக் கண்டு மகிழும் ஸ்ரீஹரியின் மகிமைகளை பாடிப் புகழ்ந்திருக்கிறார் ஜகன்னாததாசர். ஆகவே இந்த கிரந்தத்தை 'பக்தி ரசம் ததும்பும் கிரந்தம்' என்று சொல்வது மிகப் பொருத்தமானதாகும்.

*** **வித்வான் திரு.விஷ்வாஸாசார்யர்**.

ஆராதனை

# ஸ்ரீவாதிராஜரின் கிருதி

** குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்

பா⁴வி விரிஞ்சி லாதவ்ய அவதாரபூ⁴த ஸ்ரீவாதிராஜ குருசார்வ பௌமரின் ஆராதனா புண்ய தினம் 12-03-2020 அன்று வருகிறது. அன்று அவர் இயற்றிய ஒரு பாடலைப் பாடி இன்பம் உய்வோமாக. மற்றும் ஸ்ரீஹரி ப்ரீதியை சம்பாதிப்போமாக.

[குறிப்பு: ஆண்டு 2020-21 ஸார்வரி ஆண்டு குருசார்வபௌமரின் 540வது வர்தந்தி வருடம் மற்றும் 420வது திரோதான வருடம் ஆகும். அவர் காலம் 1480-1600AD. ஸார்வரி முதல் ஸார்வரி வரை (இரண்டு சுற்று), அவரின் பெருமையை யாராலும் வர்ணிக்க இயலாது].

ராகம்: சங்கராபரணம். தாளம்: ஆதி
நாராயண நாராயண நாராயண நாராயண || [ப]

ப⁴க்தி பே³கு விரக்தி பே³கு ஹரி சர்
வோத்தமனெம்பொ நெனெபிர பே³கு ||1

அரிஷட்³வர்க்க³த³ விஜய பே³கு கு³ருகுல திலக
கு³ரு மத்⁴வ மத பே³கு கு³ருப⁴க்தி பே³கு ||2

அரிய டி³ங்க³ரிக³ர சங்க³பே³கு சங்க² சக்ர
த⁴ரனாகி இரபே³கு ஸ்வரூப யோக்யதெ பே³கு ||3

வேத³த³ப்⁴யாஸவு பே³கு அத³ரர்த² ஹரியெம்ப³
போ³த⁴விரலு பே³கு க²ளரளியலு பே³கு ||4

வாதி³ராஜனொடெ³ய ஹயவத³னன்ன தி³வ்ய
பாத³ நம்பி³யிரபே³கு வராதி³க³ள ப³யஸுவோரு ||5

[இதன் தமிழ் வடிவம்]

நாராயண நாராயண நாராயண நாராயண || [ப]
பக்தி வேண்டும் விரக்தி வேண்டும் ஸ்ரீஹரிதான் உயர்நிலை இறைவன் என்கிற நினைவு இருக்கவேண்டும். ||1

ஆறு எதிரி கும்பலை ஜெயிக்க வேண்டும். ஆசான், குலவிளக்கு, ஸ்ரீமத்வரின் மதமே வேண்டும் மற்றும் குருபக்தி வேண்டும் ||2

திருமால் தொண்டரின் கூட்டு வேண்டும், சங்கு சக்கரம் இவைகளை தாங்க வேண்டும், தன் இயல்பு நிலையை அறிய வேண்டும் ||3

மறைகளை பயிலவேண்டும், மறைப்பொருள் மாலே என்னும் தெளிவு இருக்கவேண்டும், துஷ்டர்களை எதிர்க்க வேண்டும் ||4

வாதிராஜரின் அரசன் பரிமுக கடவுளின் திவ்ய திருவடிகளை நம்பி வாழவேண்டும், வரங்களை வேண்டுவோர் ||5

குறிப்பு: ஆறு எதிரி கும்பல்: காமம் (ஆசை), குரோதம் (சினம்), லோபம் (ஈயாதன்மை), மோகம் (மதிமயக்கம்), மதம் (கொழுப்பு) மற்றும் மாத்ஸர்யம் (பொறாமை).

தொடர்

## கன்னட கிரந்த அறிமுகம்

## கோலு ஹாடு - ஸ்ரீமோகனதாசர்

கோலு ஹாடு - ஸ்ரீமோகனதாசரால் இயற்றப்பட்ட, மத்வ சித்தாந்தத்தை சுலபமான முறையில் விளக்குகிற கன்னட கிரந்தம் ஆகும். ஸ்ரீமோகனதாசர், ஸ்ரீவிஜயதாசரின் பரிபூர்ண அருளுக்குப் பாத்திரரானவர். ஸ்ரீவிஜயதாசரின் சிஷ்யர். அவரின் வளர்ப்பு மகன் ஆவார். ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீமோகனதாசருக்கு சிறு குழந்தையாக இருக்கும் போது அவருக்கு இருந்த வியாதியை பரிகாரம் செய்து, வளர்த்து, ஞானத்தை ஊட்டி, தாசதீட்சை அளித்து, யமலோகம் வரை சென்று அவருக்கு நேர இருந்த அபம்ருத்யுவை பரிகாரம் செய்து அருள் புரிந்துள்ளார். இவ்விதம் ஸ்ரீவிஜயதாசரின் பரிபூர்ண அருளுக்குப் பாத்திரரான ஸ்ரீமோகனதாசர், பலதரப்பட்ட கிருதிகளை கன்னடத்தில் இயற்றியுள்ளார்.

தாசர் இயற்றியுள்ள இந்த 'கோலு ஹாடு' 217 பத்யங்களைக் கொண்டதாகும். இதில் தாசர், ஸ்ரீவிக்னேஸ்வரனை பிரார்த்தனை செய்து தொடங்கி, பகவான் ஸ்ரீஹரியின் கேசவாதி 24 ரூபங்களையும், தசாவதார ரூபங்கள், இன்னும் பலதரப்பட்ட அவதார ரூபங்களையும் வர்ணித்து, தாரதம்ய கிரமமாக ஸ்ரீமகாலட்சுமியில் இருந்து துவங்கி, எல்லா தேவதைகளையும், குரு மஹனீயர்களையும் வணங்கித்

துதித்து, முக்கியமாக பகவான் ஸ்ரீகிருஷ்ணனின் மகிமைகளைக் கொண்டாடி, விசேஷமாக மகாபாரதத்தின் அஸ்வமேத பர்வத்தின் கட்டமாக வரும் ஸ்ரீகிருஷ்ணன், ருக்மிணி, அர்ஜுனன் மற்றும் சுபத்திரை இவர்களின் சம்வாத ரூபத்தில் கூறப்பட்டுள்ள ஸ்ரீகிருஷ்ணனின் குணங்களைப் பாடி, இறுதியில் இந்த பதத்தில் ஸ்ரவணம் மற்றும் கீர்த்தனை செய்வதன் பலனை எடுத்துக்கூறும் விதமாக, பிரார்த்தனை ரூபத்தில் பகவானிடம் சமர்ப்பணம் செய்து முடித்துள்ளார்.

'கோலு ஹாடு' என்று பிரசித்தியான இந்த பதத்தில், தாளத்திற்கு ஏற்றவாறு தட்டும் கோலாட்டத்தின் சப்தத்தைக் குறிக்கும் வண்ணம், 'கோலே' என்னும் சொல்லை, பகவானின் மகிமைகளைக் கூறி, இன்னும் பிற தேவதைகளையும், குரு மஹனீயர்களியும் துதிக்கும் தாசர், அவர்கள் அனைவரையும், 'வணங்குகிறேன், சிந்தனை செய்கிறேன்' என்பதைக் கூறும் விதமாக 'பலகொம்பெ' என்னும் பதத்துடன் இணைத்து 'பலகொம்பெ கோலே' என்னும் பதத்தை மீண்டும் மீண்டும் ஒவ்வொரு பத்யங்களிலும் பயன்படுத்தியுள்ளார்.

மோகனதாசரின் 217 பத்ய்ங்களில் அமைந்த இந்த 'கோலு ஹாடு' மத்வமத சித்தாந்தக் கருத்துகளையும், பகவான் ஸ்ரீவிஷ்ணுவின் நற்குணங்களை பறைசாற்றும் விதத்திலும் அமைந்துள்ளது. தாசர் முதலிரண்டு பத்யங்களில் ஸ்ரீவிக்னேஸ்வரனை வணங்கி, பல தரப்பட்ட நைவேத்ய பதார்த்தங்களை படைப்பதாக பிரார்த்தனை செய்து, சகல விதமான விக்னங்களையும் பரிகாரம் செய்யும்படி வேண்டுகிறார்.

3 முதல் 32 பத்யங்களில், பகவான் ஸ்ரீமன் நாராயணனை வணங்கி, விசேஷமாக பகவானின் கேசவாதி 24 ரூபங்களையும், தசாவதாரங் களையும், அனிருத்தாதி பஞ்சரூபங்களையும், விஸ்வாதி 8 ரூபங் களையும், ஹயக்ரீவர், வேதவியாசர், ரிஷபர், தத்தாத்ரேயர் முதலான ஞானத்தை அளிக்கும் ரூபங்களையும் வாசுதேவாதி 4 ரூபங்களையும், அஜாதி 51 மாத்ருகா ரூபங்களையும், ஆத்மாதி 8 ரூபங்களையும் வர்ணிக்கிறார் தாசர்.

33 முதல் 43 பத்யங்களில், தாரதம்ய கிரமத்தில் மகாலட்சுமியில் இருந்து துவங்கி, முறையே பிரம்ம தேவரையும், முக்ய பிராணர், வாணி, பாரதி, கருட, சேஷ மற்றும் ருத்ர பகவானையும், ஜாம்பவதி முதலான ஷண்மஹிஷிகளையும், இந்திரன் மற்றும் காமன் முதலானவர்களையும் துதிக்கிறார் தாசர்.

44 முதல் 57 வரையிலான பத்யங்களில், குருமஹனீயர்களை துதிக்கிறார் தாசர். முறையே ஆசார்யர் ஸ்ரீமத்வர், அவரின் நேரடி சிஷ்யர்களான ஸ்ரீபத்பனாப தீர்த்தர், ஸ்ரீநரஹரி தீர்த்தர், ஸ்ரீமாதவ தீர்த்தர் மற்றும் ஸ்ரீஅக்ஷோப தீர்த்தர் முதலானவர்களையும், ஸ்ரீஜய தீர்த்தரையும் ஸ்தோத்திரம் செய்து, ஸ்ரீவியாசராஜரையும், ஸ்ரீராகவேந்திர குருசார்வ பௌமரையும், ஸ்துதி செய்து, அவர்கள் இருவரின் சரித்திரம், மகிமை மற்றும் கிரந்தங்களைப் பற்றி சுருக்கமாக விவரிக்கிறார் தாசர். கடைசியாக அபரோக்ஷ ஞானி களான ஸ்ரீபுரந்தரதாசரையும், தம் குருவான ஸ்ரீவிஜயதாசரையும் வேண்டித் துதித்து, கிரந்தத்தை முன் கொண்டு செல்கிறார் தாசர்.

58 முதல் 75 வரையிலான பத்யங்களில், பகவானின் மகிமையைக் கூற விளையும் தாசர், முக்கியமாக பகவான் ஸ்ரீகிருஷ்ணனின் அவதார நோக்கம், அவதரித்த விதம், பூதனை, கம்சன் முதலான வர்களின் வதம், ஜராசந்தனை மீண்டும் மீண்டும் தோற்கடித்து, காலயவனனை தண்டித்து, த்வாரகாபுரியை நிர்மாணம் செய்த விதத்தை வர்ணித்து, 16,108 பத்னிகளுடன் த்வாரகையில் பகவான் வாசம் செய்த விதத்தையும், லீலைகளையும், இந்திராதி தேவதைகள், அஷ்டதிக் பாலகர்கள் தத்தம் ஆயுதங்களுடன், பத்னியர் சமேதமாக, த்வாரகைக்கு விஜயம் செய்து பகவானை தரிசித்து வணங்கியதை தாசர் மிக அழகாக விவரித்துள்ளார்.

76 முதல் 94 வரையிலான பத்யங்களில் முறையே ஹரிசர்வோத்த மத்வம், வாயுஜீவோத்தமத்வம், இதனை தேவதைகள் கோஷம் செய்யும் விதம், ஏகாதசி உபவாசம், பாகவத சிரவணம், சஜ்ஜனர்களின் சங்கம் முதலானவைகளின் முக்கியத்துவத்தையும், பஞ்சபேதம், தாரதம்யம் முதலான தத்துவங்களையும் விளக்கி, பலதரப்பட்ட எளிமையான உதாரணங்களுடன் கேள்விகளை எழுப்பி, ஜீவ ஈஸ்வர ஐக்கிய சித்தாந்தத்தைக் கண்டனம் செய்கிறார் தாசர்.

94 முதல் 120 வரையிலான பத்யங்களில், பகவான் விசேஷமாக வாசம் புரியும் ஸ்வேதத்வீபம், அனந்தாசனம் மற்றும் வைகுண்டம்

முதலான 3 லோகங்களையும், சாரூப்ய, சாலோக்ய, சாமீப்ய மற்றும் சாயுஜ்ய முதலான முக்தர்களின் நான்கு நிலைகளையும் கூறி, அங்கு வாசம் செய்யும் முக்தர்களின் லட்சணம், அவர்கள் செய்யும் பகவத் ஆராதனை மற்றும் பகவான் அவர்களுக்கு புரியும் அருள், இவற்றைப் பற்றி வர்ணிக்கிறார் தாசர்.

121 முதல் 208 வரையிலான பத்யங்களில், பாரதத்தின் அஸ்வமேத பர்வத்தில் வரும் ஸ்ரீகிருஷ்ணன், ருக்மிணி, அர்ஜுனன் மற்றும் சுபத்திரை ஆகியோரிடையே நடக்கும் சம்பாஷணைகளின் மூலமாக ஸ்ரீஹரியின் குணங்களை விளக்குகிறார் தாசர். நிந்தா ஸ்துதியில் பாடப்பட்ட அழகான இந்த பத்யங்களில் ஸ்ரீகிருஷ்ணனின் சர்வோத்த மத்வம், காருண்யம், முதலான குணங்களை, அவன் சகலவிதமான தோஷங்களுக்கும் அப்பாற்பட்டவன் என்பதையும் சகஜமாக, எளிமையாக, உதாரணங்களுடன் தாசர் விளக்குகிறார். இறுதியாக அர்ஜுனனும், சுபத்திரையும், ஸ்ரீருக்மிணி ஸ்ரீகிருஷ்ணரை வணங்கி, பிரார்த்தனை செய்து, பரஸ்பரம் பரிசுகளை பரிமாறிக் கொள்ளும் கட்டத்துடன் இந்தப் பகுதி முடிவடைகிறது

208 முதல் 212 வரையிலான பத்யங்களில், தாசர், இந்த கிரந்தத்தின் பல-ஸ்ருதியை உரைக்கும் விதமாக நம் அனைவரின் சார்பிலும் பகவானிடத்தில் பிரார்த்தனை செய்து, இதை படிப்பவர்களுக்கும், கேட்பவர்களுக்கும் பிறப்பு இறப்பு துன்பங்களிலிருந்து விடுதலை கிடைக்கட்டும் என்பதையும், சஜ்ஜனர்களுக்கு கஷ்டங்கள் எல்லாம் விலகி, நன்மைகள் பயக்கட்டும் என்பதையும் உரைக்கிறார்.

215ம் பத்யத்தில் உத்திராதி மடத்து அப்போதைய பீடாதீசரான ஸ்ரீசத்ய பூர்ண தீர்த்தரின் கருணையாலே இந்த கிரந்தம் முழுமையடைந்தது எனக்கூறி அவரை பிரார்த்தித்து, 216ம் பத்யத்தில் மீண்டும் தனக்கு தீட்சை, ஞானம் அளித்த ஸ்ரீவிஜயதாசரை வேண்டி, முடிவில் கடைசி பத்யத்தில் ஸ்ரீவேங்கடேசனிடத்தில் சஜ்ஜனர்களுக்காக பிரார்த்தனை செய்து, மங்களம் அருளச்செய்ய வேண்டி பூர்த்தி செய்கிறார் தாசர்.

ஸ்ரீமோகனதாசரின் இப்பேற்பட்ட அற்புதப் படைப்பினை படித்து, கேட்டு, பாராயணம் செய்து, அதன் விசேஷ அர்த்தங்களை தெரிந்து கொண்டு ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளுக்கு பாத்திரராவோமாக.

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து** **** திரு.லட்சுமிபதிராஜா, சென்னை**

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்

Haridasa Vijayam - Monthly

மலர் 1 ** ஏப்ரல் 2020 ** இதழ் 7



'பரமப்ரிய' சுப்பராய தாசர்/
தந்தெழுத்துமோகன தாசர்

# ஹரிதாச விஜயம்

## சந்தா விவரம் (36 பக்கங்கள்)

1 ஆண்டுக்கு ரூ.200/-
3 ஆண்டுகளுக்கு ரூ.500/-
5 ஆண்டுகளுக்கு ரூ.900/-
10 ஆண்டுகளுக்கு ரூ.1700/-

புதிய சந்தாக்கள் அந்தந்த மாதத்திலிருந்து துவங்கும். பழைய இதழ்கள் வேண்டுமெனில், இதழுக்கு ரூ.20/- என சேர்த்து அனுப்பவும்.

## வங்கி விவரம்:

Sathya Narayanan, ICICI Bank - Savings account

A/c. No. 000101043177. IFSC: ICIC0000001

Cenotaph Road Branch, Chennai 18

போட்டி

மாதாந்திர குறும்போட்டி

மார்ச் 2020ன் விடைகள்

1. கனகதாசர் 2. இந்திரன் 3. பிரம்மா & ருத்ரர் 4. விஸ்வம்பர
5. நட்சத்திரம் 6. பாசுபதம் 7. ஆறு
8. காம, கிரோத, லோப, மோஹ, மத, மாத்ஸர்ய
9. 32 10. திருதராஷ்டிரன்

* இந்த இதழுக்கான புத்தகப்பரிசு பெறும் இருவர்.
திரு.ஸ்ரீனிவாசன், குரோம்பேட்டை & திரு.ஜனார்த்தனன், மேடவாக்கம், சென்னை.

* சில கேள்விகளுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட சரியான பதில்களும் இருக்கலாம். அவற்றில் ஒன்றை மட்டுமே இங்கு குறிப்பிட்டுள்ளோம். ஹரிபக்தர்கள் அனைவரும் இப்போட்டியில் பங்கேற்குமாறு கேட்டுக் கொள்கிறோம். ***

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா



நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# **“ஹரிதாச விஜயம்”**

சிரி நிலயன குணகள ‘**திளிது**’ பஜிசுவுதே

மலர் : 1 இதழ் : 7

**நிர்வாக ஆசிரியர்**

‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross,
JP Nagar 4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276. haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**

’தாச சாகித்ய சேவா ரத்ன’
திரு. குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**

திரு. முரளிதர தாசரு, திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா, திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

# ஆசிரியர் பக்கம்

அனைவருக்கும் ஷார்வரி நாம சம்வத்ஸரத்தின் நல்வாழ்த்துகள். இந்த ஆண்டில் நம் அனைவருக்கும் ஞான, பக்தி, வைராக்கியம் மேம்பட வேண்டுமென்று ஹரிவாயுகுருகளில் பிரார்த்தித்தவாறு, சைத்ர மாதத்தில், ஸ்ரீராமநவமியன்று வரும் 'பரமப்ரிய' சுப்பராய தாசரின் ஆராதனையை நினைவு கூர்வோம். சென்ற நூற்றாண்டின் முதல் பாகத்தில் வந்த மிகமுக்கியமான ஹரிதாசரான இவரைப் பற்றி இந்த இதழில், குரோம்பேட்டை திரு ஸ்ரீதரன் அவர்கள் ஒரு சிறப்புப் பதிவை எழுதியிருக்கிறார்.

'குரு ஸ்மரணெயிந்த சகல ஆபத்து பரிஹார' என்று சொல்லி யிருக்கிறார்கள். அதற்கேற்ப, தந்தெமுத்துமோகனதாசர் என்றும் அழைக்கப்படும் இவரைப் பற்றி நாம் வெளியிட்டுள்ள புத்தகத்தை வைத்திருப்பவர்கள் அவரது சரித்திரத்தை, மகிமைகளை, தாசர் இயற்றிய பாடல்களை, தாசரைப் பற்றி அவரது சிஷ்யர்கள் இயற்றிய பாடல்களை, அவர் கொடுத்த 1165 அங்கிதப் பட்டியல் ஆகியவற்றைப் படித்து குருகளை நினைத்துக் கொள்ளவும்.

நம் பத்திரிக்கையில், சுளாதி பக்கங்களை எழுதுபவர், திருமதி. பத்மா ஸ்ரீனிவாசன். சென்ற இதழில் இவரது பெயர் தவறாக அச்சிடப் பட்டதற்கு வருந்துகிறோம்.

இந்த இதழிலிருந்து ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி துவங்குகிறது. இதனை சிந்தித்து, வடிவமைத்தவர் - திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி. ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு சந்தியைப் பற்றி வரும் இந்தப் போட்டியில் தயவு செய்து அனைவரும் பங்கேற்கவும். இதிலும் தேர்ந்தெடுக்கப்படும் இருவருக்கு புத்தகப்பரிசு கிடைக்கும்.

ஸ்ரீவாதிராஜரின் ஸ்வப்னபத & ஸ்ரீமோகனதாசரின் கோலுஹாடு என்ற இரு புத்தகங்களும் நம் குரு திரு. ஹரதி பிரகலாதாச்சார் மூலமாக, பாப்பாரப்பட்டி ஸ்ரீராகவேந்திர மடத்தில் 9/3/20 அன்று வெளியிடப்பட்டன. புத்தகங்கள் வேண்டுவோர் தொடர்பு கொள்ளவும். ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து. **'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

தொடர்

## ஹரிதாச சாகித்யம்

### பல வகைகள்

**கீர்த்தனைகள்**

ஹரிதாசரின் கீர்த்தனைகளை தாசர பதங்கள் அல்லது தேவர நாமாக்கள் என்று சொல்வர். எளிமையான கன்னடத்தில், நவ வித பக்தியில், சாந்தம், வாத்ஸல்யம், தாஸ்யம், ஆத்ம நிவேதனம் ஆகியாற்றால் பகவந்தனை வணங்கி பாடியிருக்கின்றனர்.

தேவர நாமாவில் மூன்று பாகங்கள் இருக்கின்றன. பொதுவாக, பல்லவி, அனுபல்லவி மற்றும் சரணம் அல்லது நுடிகள் என்று இருக்கின்றன. பல்லவியில் தாம் சொல்லவந்த முக்கிய விஷயத்தை தெரிவிக்கின்றனர். அனுபல்லவியில் அந்த விஷயத்தைப் பற்றி ஒரு சுருக்கத்தை தெரிவிக்கின்றனர். சரணத்தில் அந்த விஷயத்தை அல்லது கதையை விவரமாக விளக்குகின்றனர்.

தேவர நாமாவில் பொதுவாக 3,5,7,9 என்று ஒற்றைப்படை எண்களில் இருக்கும். ஒவ்வொரு சரணத்திற்குப் பிறகும் பல்லவியை மறுபடி சொல்வார்கள் (பாடுவார்கள்). சில தேவர நாமாவில் அனுபல்லவி இல்லாமல் போவதும் உண்டு. இறுதி சரணத்தில் பாடல் இயற்றுபவரின் அங்கித நாமம் வரும்.

உதயராகம், தசாவதார வர்ணனை, ஸ்தோத்திரம், பிரார்த்தனை, கேசவ நாமா, ஆரத்தி, ஹரிவாண சேவெ, லாலி, நிந்தா ஸ்துதி, மங்கள என்று பல வகை கீர்த்தனைகள் உண்டு.

**சுளாதி**

பரமாத்மனை அடைவதற்கான சுலபமான வழி (சுளுவின ஹாதி) சுளாதி. ஹரிதாச சாகித்யத்தில், ஸ்ரீபாதராஜர், சுளாதி இயற்றுவதை துவக்கி வைத்தார். விஜயதாசரின் காலத்தை சுளாதிகளின் பொற்காலம் எனலாம். சுளாதியில் தாளம் முக்கியம். சங்கீதம், சாகித்யம் இவ்விரண்டும் சமமாக வருகின்றன. இதை தாளமாலிகா அல்லது ராகமாலிகா என்று சொல்லலாம். இதில் த்ருவ, மட்ய, ரூபக, ஜம்பெ, த்ரிபுட, அட்ட, ஏக என்னும் ஏழு தாளங்கள் வருகின்றன. 5,7,9,11,13 நுடிகளைக் கொண்டிருப்பவை சுளாதிகள். சுளாதியின் நுடிகளில் இவ்வளவே வரிகள் இருக்கவேண்டும் என்ற விதி இல்லை.

இவ்வளவே எழுத்துக்கள் இருக்கவேண்டும் என்ற விதி இல்லை. ஒவ்வொரு நுடியின் இறுதியிலும் அங்கிதம் வருகிறது. முதல் எழுத்து, இரண்டாம் எழுத்து இவற்றில் எதுகை, மோனைகள் வருகின்றன. ஒரே சுளாதியில் எல்லா ஏழு தாளங்களும் இருக்கவேண்டும் என்ற விதியும் இல்லை. ஆனால் த்ருவ மற்றும் மட்ய தாளங்கள் மட்டும் அனைத்து சுளாதிகளிலும் வருகின்றன. சுளாதியின் இறுதியில், இரு வரிகளைக் கொண்ட பத்தி ஒன்று வருகிறது. அதற்கு 'ஜொதெ' என்று பெயர்.

ஹரிகுரு தேவதாஸ்துதி, ஆராதனை வழிவகைகள், க்ஷேத்திர தரிசனம், உலக நியதி, த்வைத சித்தாந்த தரிசனம், ஹரிபக்தி, ஹரி நாமஸ்மரணையின் மகிமை, தசாவதாரம், தாரதம்யம் - என்று பல்வேறு விஷயங்களை சுளாதியின் மூலமாக விளக்கியிருக்கின்றனர் ஹரிதாசர்கள்.

**உகாபோகம்**

உ = ஊர்த்வ லோகத்திற்கு (மேலுலகத்திற்கு)
கா = கொண்டு போகும் (அழைத்துப் போகும்)
பாக = பாகம் (வழிமுறை) எதுவோ, அதுவே உகாபோகம்.

உகாபோகங்கள் இரண்டு வரிகள் முதல் இருபது வரிகள் வரைக்கும்கூட இருக்கின்றன. உகாபோகங்கள் வசன சாகித்யம் மற்றும் சுளாதியைப் போலவே இருக்கின்றன. சுளாதியின் கில பாகம் (இணைப்பு) என்றும் இதை சொல்வார்கள்.

தேவர நாமத்திற்கு இருப்பதைப் போல இங்கு பல்லவி, அனுபல்லவி, சரணங்கள் இருப்பதில்லை. சுளாதியில் இருப்பதைப் போல தாள, ராகங்கள் இருப்பதில்லை. ****தொடர் முடிந்தது.*****

** **கன்னட மூலம் : திருமதி. ஜெயம்மா, பெங்களூரு**

வங்கிக் கணக்கில் சந்தா செலுத்தினால், மறக்காமல் உங்கள் முகவரியை **89044 58276** எண்ணுக்கு வாட்சப் / SMS அல்லது **haridasa.vijayam@gmail.com**க்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

தொடர்

## ஹரிதாசர்களின் வாழ்க்கை வரலாறு

## ஸ்ரீகுருகோவிந்தவிட்டல தாசர்

உத்தராதி மடத்தின் அனைத்து யதிகளின் பேரிலும் பல பதங்களைப் புனைந்துள்ளார். உடுப்பி பேஜாவர மடாதீசரான ஸ்ரீவிஸ்வேச தீர்த்தர், பலிமார்- பண்டாரகேரி மடாதிபதி ஸ்ரீவித்யாமான்ய தீர்த்தர், உத்தராதி மடாதிபதி ஸ்ரீசத்யபிரமோத தீர்த்தர், இவர்கள் மேலும் பல பதங்கள் கவனம் செய்துள்ளார். ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள் மீது 31 கிருதுகள் பாடியுள்ளார். ஸ்ரீவாதிராஜ ஸ்வாமிகள் மேல் அனேக பதங்கள் இயற்றியுள்ளார். அவருடைய சரித்திரத்தை பாடலாக எழுதியுள்ளார். சம்ஸ்கிருத மொழியில் 'வாதிராஜ குரு மானதோஸ்மி ஸததம் கல்யாதி தைத்ய நிராவண நிபுணம்' என்கிற கீர்த்தனையை இயற்றியுள்ளார். அதில் தாசரின் மொழிப்புலமை, கவிதா சாமர்த்தியம், சங்கீத ஞானம் ஆகியவற்றை சிறப்பாகக் காணலாம். அதே மாதிரி ஸ்ரீவியாசராஜ ஸ்வாமிகள் மீதம் பல கிருதிகளை இயற்றியுள்ளார். ஸ்ரீபாதராஜர் மீதி 8 கீர்த்தனைகள் செய்துள்ளார். டீகாசார்யரையும் துதித்துள்ளார். ஸ்ரீமத்வராயர் மீது அனேக கீர்த்தனைகளை இயற்றியுள்ளார். அவற்றில் மத்வமத பிரமேயங்களை தெளிவாக அனைவருக்கும் புரியும்படி வர்ணித்துள்ளார் தாசர்.

புண்ணிய நதிகளான நர்மதா, காவேரி, கோதாவரி, கங்கா இவற்றின் மேலும் பதங்கள் கவனம் செய்துள்ளார். பின்பு, சமஸ்த தேவதா வர்க்கத்தின் தேவர்கள் மேலும் தாரதம்ய ரீதியாக, சித்தாந்தத்திற்கு விரோதமில்லாமல் அனேக கிருதிகளை இயற்றியுள்ளார். எல்லா கவிதைகளிலும் காவிய ரசம் தளும்பி வழிகின்றன. விநாயகர் மீது 7 கிருதிகள், ருத்ரதேவர் மேல் 28 கீர்த்தனைகள், முக்யபிராணர் மேல் 29 கீர்த்தனைகளை இயற்றியுள்ளார். எல்லா பதங்களிலும் ஹனும பீம மத்வ என்னும் மூன்று அவதாரங்களின் மகிமைகளை வர்ணித்துள்ளார். அஸ்வாடி என்கிற விருத்தத்தில் சம்பூர்ண சுந்தர காண்ட சாராம்சத்தை தாசர் கன்னடத்தில் எழுதியுள்ளார். பிரம்மதேவரை 1 கீர்த்தனை மூலமாகவும், ஸ்ரீமகாலட்சுமி தேவியை 13 கீர்த்தனைகள் மூலமும் துதித்துள்ளார். பகவான் ஸ்ரீஹரியின் மீது இயற்றிய கீர்த்தனைகளோ அளவற்றவை. எண்ணில் அடங்காதவை. அவற்றை விஸ்தாரமாக வர்ணிக்க இங்கு இடம் இல்லை.

அவருடைய பக்தி பாவத்தை இந்தக் கீர்த்தனைகளில் நன்றாகத் தெரிந்து கொள்ளலாம்.

கோவிந்தாஷ்டோத்தர நாமாவளி அக்ஷரமாலை - ஒரு சிறப்பான காவிய நயம், சொல் எளிமை கொண்ட கிருதியாகும். கேசவாதி நாம, கஜேந்திர மோக்ஷ, பரிக்ஷித்ராஜ சரித்ரெ, வெங்கடேச கல்யாணம் - போன்ற பெரிய பெரிய கிருதிகளை இயற்றியுள்ளார். எல்லா தீர்த்த க்ஷேத்திர மூர்த்திகளின் மீதும் பதங்கள் இயற்றியுள்ளார். ஸ்ரீபுரந்தரதாசரின் வழியைப் பின்பற்றியுள்ளார் தாசர். ஸ்ரீகிருஷ்ணனின் பாலலீலைகளை பல பதங்களில் வர்ணித்துள்ளார். இவற்றைத் தவிர வைராக்ய பதங்கள், ஹிதோபதேச பதங்கள், ஸ்வாத்மா விமரிசன பதங்கள், நிந்தா ஸ்துதி போன்றவற்றையும் இயற்றியுள்ளார், மகாகவியான தாசர்வாள்.

ஸ்ரீவாதிராஜர் மீது - ஸ்ரீவாதிராஜ ருஜூத்வ பிரகாசிகா, ஸ்வப்ன வ்ருந்தாவனாக்யன - மூல மத்து தாத்பர்ய சஹித, மற்றும் பஞ்சிகரண என்கிற நூல்களை இயற்றியுள்ளார். மற்றும் ஸ்ரீவிஷ்ணு தீர்த்திய ஷோடசி சதுர்தசி, ஆத்யாத்ம ரசரஞ்சனி, சுந்தரகாண்ட, மானச ஸ்ம்ருதி, ஸ்ரீமன் மத்வ சஹஸ்ர நாமாவளி ஆகியவற்றை இயற்றியுள்ளார். அன்னபிரம்ம என்கிற மிகவும் அபூர்வமான நூலை இயற்றியுள்ளார். அதில் தாசரின் பாண்டித்யம், சாஸ்திர ஞானம், இவை நிரம்பி இருப்பதைக் காணலாம். ஸ்ரீராமசந்திர விட்டலாங்கித சுளாதிகள் என்கிற பழைய நூலை கண்டுபிடித்து அதை பிரசுரம் செய்தார் தாசர். தாச சாகித்யத்திற்காக உயிரையே பணயம் வைத்தார் தாசர். தாசர் தாச சாகித்யத்தில் செய்த ஆராய்ச்சியைப் போல எந்த ஒரு பல்கலைக்கழகம்கூட செய்யவில்லை.

ஹரிதாச தீபிகா என்கிற மாதப் பத்திரிக்கையை தாசர் தம் கடைசி வாழ்நாட்கள் முழுவதும் நடத்தி, ஹரிதாச சாகித்யத்தை பிரசாரம் செய்தார். லாப நஷ்டம் பாராமல், பத்திரிக்கை ஒரே ஆளாக நடத்தி வந்தார் மகானுபாவ தாசர். வருடா வருடம் விசேஷமாக புரந்தரதாசரின் ஆராதனையை நடத்தி வந்தார். மைசூர், பண்டராபுரம், திருப்பதி, ஹைதராபாத், விசாகப்பட்டினம் போன்ற ஊர்களில் புரந்தரதாசரின் ஆராதனையை சிறப்பாக நடத்தி முடித்தார். ஆராதனை பிரமாதமாக நடத்த, ஒவ்வொரு ஆண்டும் 3

மாதங்களுக்கு முன்பே பல இடங்களுக்குச் சென்று உஞ்ச விருத்தி நடத்தி அரிசியை சேகரித்து, அந்த அரிசியின் மூலம் சந்தர்ப்பணை செய்தார். ஆராதனை தினத்தன்று மற்றும் ஒவ்வொரு ஆராதனையன்றும் அனேக நூல்களை கன்னடத்தில் பிரசுரம் செய்தார். இலவச வினியோகமும் செய்தார். பல ஹோமங்களையும், ஆராதனை மையத்தில் தாசர்கள் செய்து வந்தனர். பணத்தைப் பற்றி கவலைப்படாமல், ஒவ்வொரு ஆண்டும் ஒவ்வொரு இடத்தில் ஸ்ரீபுரந்தரதாசர் ஆராதனையை தாசரின் ஆயிரக்கணக்கான சிஷ்யர்கள் மற்றும் ஹரிதாசர்கள் மிகவும் விமரிசையாக செய்து வந்தார்கள். இந்த ஆராதனை விழாக்களில், வேத காலத்தையே இந்த 20ம் நூற்றாண்டிற்குக் கொண்டு வந்தார் தாசர்.

**** திரு. குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்**

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### மங்களாசரண சந்தி

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | | | | | | | | | |
| | | | | | | | | 2 | | 24 | | |
| 3 | | | | | | | | | | | | |
| | | | | | | | | | | 17 | | |
| | | | | | | | | | | | 18 | |
| | 25 | | | | | 19 | | | 4 | | | |
| | | | 5 | | 29 | | | | | | | |
| | | | | | | | | 6 | 26 | | | |
| | | | | | | 20 | | 7 | | | | |
| | 8 | | | | 9 | | | 10 | | | | |
| | | | | 27 | | | | 21 | | | | |
| | | 11 | | | | | | | | | | |
| | 12 | | | | | | | | | | | |
| | | | | | | | 13 | | | | | |
| | | | | | | | 14 | | 28 | | | |
| 15 | | | | | | | | | | | | |
| | 30 | | | 22 | | | | | | | | |
| | | | | 16 | | | | | | | | |
| | | | | 23 | | | | | | | | |

* வடிவமைத்தவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி.
* இதற்கான விடைகளை ஏப்ரல் 15ம் தேதிக்குள் வாட்சப்பிலோ, மெயிலிலோ அனுப்பலாம்.
* சரியான விடைகள் தரும் இருவருக்கு புத்தகப் பரிசு கிடைக்கும்.

இடமிருந்து வலம்

1.ஜகன்னாத தாசர் இயற்றிய கிரந்தம்(10). 2.பஞ்ச தன்மாத்ரங்களில் ஒன்று(4). 3.சதுரவதனின் ராணி- கலைமகள் என்றும் கூறுவர்.(5). 4.அஹங்கார தத்துவத்தின் அபிமானி தேவதை. பரந்தாமன் இவர் மேல் துயில் கொண்டிருக்கிறார்.(2). 5.தமோ குணத்தின் அபிமானி தேவதை.(3). 6.மஹாலட்சுமியை தாசர் இப்படி அழைக்கிறார்.(2). 7.முதல் சந்தியின் முதல் பத்யத்தின் கதாநாயகர்.(5). 8.ருத்ரரை -------- பதி என்றும் கூறுவர்.(2). 9.பஞ்ச பூதங்களில் ஒன்று. உயிர் வாழ்வதற்கு மிகவும் அவசியமானதும்கூட.(2). 10.வேதவ்யாஸரை இப்படியும் அழைப்பர்.கடைசி எழுத்து இல்லை.(5). 11.க்ருதிபதி(6) 12.தேவர்களின் தலைவன்.(5). 13.மூவகை குணங்களில் ஒன்று.(3) 14.பஞ்ச பூதங்களை உள்ளடக்கியது.(6). 15.வேதங்களை விபாகம் செய்தவர்.(6). 16. பாரதிதேவி - வேறு பெயர்.(4)

வலமிருந்து இடம்

17.சிவனின் ஆடை(5). 18.விஷ்ணுவின் வாகனம். கடைசி எழுத்து முற்றுப் பெறவில்லை.(3). 19.இருபத்து நான்கு தத்துவங்கள்.(7). 20.ஸர்ப்ப ஜாதியில் ஸ்ரேஷ்டமானவன்.(5). 21.ப்ரஹ்மாவை தாசர் இப்படி வர்ணிக்கிறார்.(5). 22.பஞ்ச கர்மேந்திரியங்களில் ஒன்று.(2) 23.வேதங்களை -----------கள என்றும் கூறலாம்.(5)

மேலிருந்து கீழ்

1.வாயு பகவான் ஜீவர்களின் உள்ளிருந்து ஜபிக்கும் மந்திரம்.(8). 10.மத்வாச்சாரியார் பிறந்த ஊர்.(7). 15.மத்வாச்சாரியாரின் தாய்.(4) 18.ஸரஸ்வதியின் கையில் உள்ள வீணையின் பெயர்.(4) 24.ஸிவனின் ஐந்து முகங்களில் ஒன்று.(5). 25.தாமரை - வேறு பெயர்(3). 26.தாசர் முதல் சந்தியை இந்த முறைப்படி எழுதியுள்ளார்.(5) 27.லவண ஸமுத்திரத்தில் தவம் செய்து சேஷ பதவியை அடைந்தவர்.(4) 28.முதல் ஸந்தியின் பத்யங்கள்.(5)

கீழிருந்துமேல்

9.சதுர்முக தேவனின் மனைவி(2). 11.படைக்கும் தொழிலை செய்பவர். கலைந்துள்ளது.(4). 23.தேஹத்தின் உள் இருக்கும் காற்றை வெளியே விடுவது.(4). 29.பஞ்ச க்ஞானேந்திரியங்களில் ஒன்று.(2) 30.இலந்தை மரம் - வேறு பெயர்.(3) ***

தொடர்

# ஹரிதாசர்களின் சிந்தனை முத்துக்கள்

## ஸ்ரவணமே முதற் படி

அனைத்து ஹரிதாசர்களின் ஒருமித்த குரல் - ஸ்ரவணமே அனைத்திற்குமான முதற்படி என்று. பகவந்தனின் மகிமையை அறிவதற்கு, சத்கர்மங்களை செய்வதற்கு, நித்ய - நைமித்திக சாதனைகளை செய்வதற்கு, மற்றவரை ஞானாதிகாரியாக மாற்றுவதற்கு - இப்படி பல செயல்களுக்கு முதல் படி ஸ்ரவணமே ஆகும். இதையே தொகுத்து விஜயதாசர் சொன்னது:

ஸ்ரவணவே மஹா முக்ய கர்ம ஞானிகளிகெ
ஸ்ரவணவில்லத தனக ஆவது தொரகது
ஸ்ரவணதிந்தலி சதத ஞான பகுதி விரகுதி
ஸ்ரவணவெ சகலக்கு காரண காரணவோ
ஸ்ரவணவெ ஸ்ரீஹரிய தாத்விக ப்ரஸா
தவனு மாடிகொட்டு முக்திகெ ஐதிபரோ
ஸ்ரவணவெ மங்களவோ மூரு லோகக்கெ நித்ய
ஸ்ரவண மாடித மனுஜ சர்வத பவித்ர
ஸ்ரவணாசக்தனிகெ பயஷோககளில்ல
ஸ்ரவணானந்தக்காகாத கர்மங்களு
இவு சரியாகவு மரளி மரளி மரளி எணிஸெ
ஸ்ரவணக்கெ ஒலிவ விஜயவிட்டலனங்க்ரி
நவநவ நாமகள ஸ்ரவண மாடோ மனுஜ ||

தாசர் மேலும் சொல்வது:

ஸ்ரவண கேளதவனு ஜீவச்சவவென்னி |
பவனஸ்வாமி நம்ம விஜயவிட்டல மெச்ச ||

நவவித பக்தியில் முதலில் வருவது ஸ்ரவண பக்தியே ஆகும். பகவந்தனின் மகிமையை அறிவதற்கு முக்கிய வழி ஸ்ரவணம். இதனால் கிடைக்கும் பலன்களைப் பற்றி ஜகன்னாததாசர் சொல்வது:

(தொடர்ச்சி 20ம் பக்கத்தில்)...

தொடர்

## கேசவ நாமா

# கேசவ ஜகதீஷ & ஆரத்தி எத்திரே

ஜனார்த்தன ரூபனாகி ஜானகிய தந்த
ஜான்ஹவி ஜனக ராம சீதாபதே ||21

ஹே சீதாபதியே, நீயே ஜானகி ஜனகனாகி சீதையைக் கொடுத்த ஜனார்த்தனனாக இருக்கிறாய்.

உபேந்திரனே உத்தவகெ உபதேஷவனெ மாடி
அபரிமித பதவி கொட்ட சீதாபதே ||22

கிருஷ்ணாவதாரத்தில் உத்தவருக்கு ஞானோபதேசம் செய்து, இணையற்ற பதவியை வழங்கிய உபேந்திரன் நீயே.

ஹரிஹரியே ரக்ஷிஸெந்து ஹலவு கா[1]ல த[1]பவ மாடி
சரிசுவரிகெ மோக்ஷவித்த சீதாபதே ||23

அனைத்து தோஷங்களையும் பரிகரிப்பவனாகிய, சுத்த தத்வஞானத்தைக் கொடுப்பவனான உன்னைக் குறித்து நெடுங்காலம் தவம் செய்தால் மோட்சத்தைக் கொடுத்து காப்பாற்றும் ஹரி நீயே.

ரக்ஷிஸய்ய கிருஷ்ண ராம ரக்ஷிஸய்ய ஹயவதன
பக்ஷிவாஹன ராம சீதாபதே ||24

கருடவாகனான சீதாபதி ஸ்ரீராமனிடம், ருக்மிணிரமண ஸ்ரீகிருஷ்ணனான ஹயவதனனிடம் தன்னை காப்பாற்றுமாறு ஸ்ரீவாதிராஜர் வேண்டுகிறார். (த்ரேதா யுகத்து ராமாவதாரத்திற்கும், த்வாபர யுகத்து கிருஷ்ணாவதாரத்திற்கும் அதிக மதிப்பினைக் கொடுத்து வணங்கியிருக்கிறார்).

அனைத்து யதிகளின் அந்தர்யாமியாக ஸ்ரீராமன் இருக்கிறான் என்று அனைத்து அறிஞர்களும் கூறுகின்றனர். அப்படியே, ஸ்ரீவாதிராஜரும் தனது ஒவ்வொரு நுடியிலும் சீதாபதியான ஸ்ரீராமனை வணங்கியிருப்பது சிறப்பு.

## அடுத்த கேசவ நாமா பாடல் : ஆரத்தி எத்திரே - ஸ்ரீவாதிராஜர்

ஹரிதாசர்களால் புகழ்பெற்ற பாடல்கள் என்றால் அவை ஆரத்தி பாடல், மங்கள பாடல், (பூஜைக்கு) அழைக்கும் பாடல், லாலி, உருட்டாணி, ஷோபானே முதலான பாடல்கள் ஆகும்.

ஸ்ரீஹரிக்கு செய்யப்படும் 16 விதமான உபசாரங்களில் நீராஜனமும் (ஆரத்தி) ஒன்று. நீராஜனம் என்றால் பொதுவாக திருஷ்டி கழிவதற்காக நீர், குங்குமம், மஞ்சள், சுண்ணாம்பு ஆகியவற்றை கலந்து தயாரிக்கின்றனர். ஆனால், ஸ்ரீஹரிக்கு அருகில் எப்போதும் எரிந்துகொண்டிருக்கும் விளக்கே நீராஜனம் எனப்படுகிறது. பவமான சூக்தமே ஸ்ரீஹரிக்கு நீராஜனம் என்றும் சொல்லப்படுகிறது. நீராஜனத்தில் ஸ்ரீஹரியின் 5325 ரூபங்கள் இருக்கின்றன. (நீ=5 ரா=2 ஜ=3 ந=5).

கன்னடத்தில் இதையே ஆரத்தி என்கின்றனர். கற்பூர ஆரத்தி, ஏகாரத்தி, பஞ்ச ஆரத்தி, தூபாரத்தி, தீபாரத்தி, கதலாரத்தி, கும்பாரத்தி, தட்டெயாரத்தி, மகாமங்களாரத்தி என்று பலவிதங்களில் ஸ்ரீஹரிக்கு ஆரத்தி எடுக்கின்றனர். ஸ்ரீஹரிக்கு திருஷ்டி தாக்காமல் இருக்கட்டும் என்கிற சிந்தனையே இது.

நீராஜத்தின் பலன் = அஞ்ஞானம் விலகுகிறது. ஷோடஷோபசார பூஜை சமயத்தில் செய்யப்படும் மங்கள நீராஜனத்தினால், மந்திர, தந்த்ர, த்ரவ்யங்களில் ஏற்பட்ட குறைகள் பரிகாரம் ஆகின்றன.

நீராஜனத்தின் சிந்தனை:

ஆரத்தி, மங்களாரத்தியை வலது கையில் வாங்கி, தலை, இதயம், நாபியை தொடவேண்டும். தலையில் இருக்கும் அமிர்தத்தை இதயத்திற்கு கொண்டுவந்து, இதயத்திலிருக்கும் அக்னியை நாபிக்குக் கொண்டு வந்து, நாபியின் இடது பக்கத்திலிருக்கும் பாபரூபியை சுட்டு, நாபியின் மூலமாக வெளியே சென்றான் என்று நினைக்க வேண்டும்.

குழந்தையை தொட்டிலில் போடும்போது, திருமணம் முதலான சுப நிகழ்ச்சிகளின்போது, சுமங்கலிகள் ஆசீர்வாதம் செய்து, திருஷ்டி தாக்கியிருக்கிறது என்று கதலாரத்தி எடுப்பது தொன்றுதொட்டு வரும் சம்பிரதாயம். லட்சுமி நாராயணரின் சிந்தனையுடன் பக்தி பாடல்களைப் பாடினால், அந்த இடமே தெய்வீக மணம் சூழ்ந்து காணப்படும் என்பது அனுபவத்திற்கு வந்தது.

த்வாதச ஸ்தோத்திரம் எட்டாம் அத்தியாத்தின் முதல் நுடியில் 'இந்திரா சஞ்சலாபாங்க நீராஜிதம்' என்று ஸ்ரீமதாசார்யர் வர்ணித்திருக்கிறார். லட்சுமிதேவியின் இரு கண்களே இரு ஜ்யோதிகள் (விளக்குகள்) போல இருக்கிறதாம். அவர், ஸ்ரீஹரியை பக்தியுடன் கூடிய கண்களால் அடியிலிருந்து முடிவரை பார்த்தால், அதுவே ஆரத்தி என்கின்றனர் ஞானிகள்.

'நேத்ரகளே மகாதீப' என்கிறார் ஸ்ரீவியாசராஜர். 'இருளு ஹச்சுவ தீப ஹரிகெ நீராஜனவு' என்கிறார் புரந்தரதாசர். 'சோம சூர்யரே தீப, நக்ஷத்ரமண்டலவே லக்ஷ தீபாவளி' என்கிறார் ஜகன்னாததாசர்.

ஆரத்தி எத்தி[1]ரே கேசவ நாராயணனிகெ ||ப||

பிரம்ம ருத்ராதிகள் வணங்கும் கேசவனுக்கு, குணபரிபூர்ணனான நாராயணனுக்கு ஆரத்தி. கேசி என்னும் அசுரனை கொன்றவனான கேசவ ரூபத்திற்கும், நாராயண ரூபத்திற்கும் ஐக்கிய சிந்தனை செய்கிறார்.

ஷாஸ்வத[1]வீவ மாத[4]வ
வாஸவ வந்த்[3]ய கோவிந்தகா[3]ரதியன்னெத்திரெ ||அப||

நாமஸ்மரணை செய்தால், நிரந்தரமான மோட்சத்தையே கொடுக்கும் மாதவனுக்கு, கோபாலகர்களைக் காப்பாற்றிய, இந்திரனால் வணங்கப்படும் கோவிந்தனுக்கு ஆரத்தி.

த்[3]வாபர ரஹித ஸ்ரீவிஷ்ணுவிகெ அபா[1]ர மதுசூதனகெ
பாபரஹித த்ரிவிக்ரமகெ ஆரத்தியனெத்திரெ ||1

சர்வாந்தர்யாமி, சர்வதேவோத்தம, சர்வதந்த்ர ஸ்வதந்த்ர, சர்வத்ர வ்யாப்தி, சாஸ்வதனான ஸ்ரீவிஷ்ணுவிற்கு ஆரத்தி, மது என்னும்

அரக்கன் அபகரித்த வேதங்களை காப்பாற்றுவதற்கு ஹயக்ரீவ ரூபியாக வந்து அந்த தைத்யனைக் கொன்றவனான மதுசூதனனுக்கு ஆரத்தி. சத்வ- ரஜ- தமோ குணங்களைப் பெற்றவன், தேவ, மானுஷ, தானவர்களுக்கெல்லாம் தலைவன், பூ: புவ: ஸ்வ: லோகங்களின் அதிபதி, இறந்த, நிகழ், வருங்காலங்களை நியமிப்பவன், த்ரிதாமங்களில் வசிப்பவனான த்ரிவிக்ரமனுக்கு ஆரத்தி.

ஸாது[4] ஸேவித[1] வாமனகெ ஸ்ரீதர ஹ்ருஷிகேஷனிகெ
ஆதி மூருத்தி பத்பனாபகெ ஆரத்தியனெத்திரெ ||2

சாது சஜ்ஜனர்களினால், ரிஷி முனிவர்களினால் வணங்கப்படுபவனான பகவத்ரூபம் வாமனன். லட்சுமிதேவியை தனது மார்பில் தரித்தவனாகையால் அவன் ஸ்ரீதரன். இந்திரியங்களின் தலைவனாகையால் அவன் ஹ்ருஷிகேசன். நாபியில் கமலத்தை தரித்த ரூபமே பத்பனாப ரூபம். இந்த அனைத்து ரூபங்களையும் சிந்தித்து ஆரத்தி எடுங்கள்.

தா[3]மோத[3]ரவா உள்ளவகெ[3] ப்ரேமதி[3] சங்கர்ஷணகெ[3]
காமிதார்த்தவனீவ வாசுதேவகெ ஆரத்தியனெத்திரெ ||3

இந்திரியங்களை கட்டுப்படுத்தியவன், பக்தி என்னும் கயிறால் கட்டுப்படுபவனான தாமோதரன், பக்தர்களின் விருப்பங்களை நிறைவேற்றுபவனான சங்கர்ஷணன், நிரந்தர சுகமான மோட்சத்தைக் கொடுக்கக்கூடிய வாசுதேவனுக்கு ஆரத்தி எடுங்கள்.

க[4]னமஹிமெ ப்ரத்யும்னனிகெ[3] அனிருத்த[3] புருஷோத்தமகெ
வினயதிந்தலி அதோக்ஷஜகெ ஆரத்தியனெத்திரெ ||4

வாசுதேவன் முக்தியை கொடுப்பவன். சங்கர்ஷணன் லயத்திற்கு அதிகாரி. பிரத்யும்னன் படைப்புக்கு பொறுப்பானவன். அனிருத்தன் ஸ்திதி - அனைவரையும் காப்பாற்றுபவன். சாத்விகர்களுக்கு தத்வஞானம், தகுதி உள்ளவர்களுக்கு பிரம்மஞானம் அளித்து, அவர்களை உத்தமர்களாக மாற்றுவது - புருஷோத்தமன். கண்களுக்கு புலப்படாமல் இருப்பதால் அவன் அதோக்ஷஜன் எனப்படுகிறான். இவர்களுக்கு ஆரத்தி எடுங்கள்.

நரசிம்ம ரூபனாதவகெ வரத மூருத்தி அச்யுதகெ
அதிபயங்கர ஜனார்த்தனகெ ஆரத்தியனெத்திரெ ||5

அத்யந்த பக்தனுக்காகவே அவதாரம் எடுத்த நரசிம்ம ரூபத்திற்கு; தடை வராமல் அருளும் அச்யுதனுக்கு; அரிஷட்வர்க என்னும் எதிரிகளை அழித்து நம்மை காப்பாற்றும் ஜனார்த்தனனுக்கு ஆரத்தி எடுங்கள்.

உபேந்திர எந்தெனிஸி கொண்டவகெ அபார மஹிமெ ஸ்ரீஹரிகெ
கோபாலமூர்த்தி ஸ்ரீகிருஷ்ணகெ ஆரத்தியனெத்திரெ ||6

தன் ஸ்வரூபத்தை பக்தர்களுக்கு காட்டி அவர்களை மேம்படுத்தும் உபேந்திரனுக்கு; தன்னை நினைப்பவர்களின் பாவங்களைப் போக்கும் ஸ்ரீஹரிக்கு; துஷ்டர்களை அழிக்க, பக்தர்களை காப்பாற்ற அவதாரம் எடுத்த கோபாலனுக்கு ஆரத்தி எடுங்கள்.

சதுரவிம்ஷதி மூருதிகளா அதி[1]ஷய த[4]வளவ பா[1]டெ[3]
சத் புருஷரிகி[3]ஷ்டார்த்தவீவனு சிரிஹயவதனனு ||7

24 பகவத்ரூபங்கள் மிகவும் அசாதாரணமானவை. அவற்றிலிருந்து வேறுபடாமல் இருக்கும் (அபின்னனாக) ஸ்ரீஹயவதனனை நினைத்தவாறு, இஷ்டார்த்தங்களை நிறைவேற்றுங்கள் என்று வேண்டுகிறார் ஸ்ரீவாதிராஜர். ** இந்தப் பாடல் முடிந்தது***

** திருமதி. ஜெயம்மா, பெங்களூரு

## ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்
## சைத்ர & வைசாக மாதங்களில்

சைத்ர சுத்த நவமி - ஸ்ரீதந்தெமுத்துமோகன தாசர், (தேவராயனதுர்கா)
வைசாக சுத்த த்ருதியை - ஸ்ரீவேணுகோபாலவிட்டலதாசர் (ஆதோனி)
வைசாக சுத்த அஷ்டமி- ஸ்ரீமொதலகல்லு சேஷதாசர் (மொதலகல்லு)
வைசாக சுத்த நவமி - ஸ்ரீஷ்யாமசுந்தர தாசர் (மானவி)

தொடர்

# ஹரிகதாம்ருதசார ஸ்லோக அர்த்தங்கள்

## பிரம்மா & வாயுதேவர்

நிருபமானந்தா[3]த்ம ப[4]வ நி
ர்ஜர சபா[4]சம்சேவ்ய ருஜுக[3]ண
த[3]ரஸெ சத்வப்ரசுர வாணிமுக[2]சரோஜேன |
கருட சேஷ ஷஷாங்கத[3]ல சே
கரர ஜனக ஜகத்குரவே த்வ
ச்சரணகளிக[3]பி[4] வந்திசுவே பா[1]லிபு[1]து சன்மதிய ||3

முதல் இரண்டு பத்யத்தில் ஸ்ரீஜகன்னாததாசர், ஸ்ரீலட்சுமி நரசிம்மரையும், மகாலட்சுமிதேவியையும் வணங்கிவிட்டு, இந்த மூன்றாம் பத்யத்தில், பிரம்மதேவரை வழிபடுகிறார். தாசர் இயற்றியிருக்கும் 988 பத்யங்களிலும் ஹரியே சர்வோத்தமன், அனைத்து தேவதைகளும் அவனுடைய அதீனத்திலேயே இருக்கின்றனர் என்பதை தெளிவாக விளக்குகிறார்.

இந்த பத்யத்தில், நிருபமானந்தாத்மபவ = ஈடு இணையற்ற ஆனந்தத்தை உடையவரான, ஆனந்த ஸ்வரூபனான பகவந்தனின் நாபி கமலத்திலிருந்து பிறந்தவன் என்பதில் விஷ்ணு சர்வோத்தம த்வத்தை தெரிவித்து, அத்தகைய பகவந்தனின் அதீனத்தில் இவர் வருகிறார் என்பதையும் தெரிவித்து, நிர்ஜரசபா சம்சேவ்ய = சத்ய லோகத்தில், அனைத்து தேவதைகளின் சபையில் பூஜிக்கப்படுபவரான. உதாரணத்திற்கு இன்றைய நாடாளுமன்ற அவையின் சபாநாயகர் எப்படி அவர்களுக்கெல்லாம் தலைவர் ஆகிறாரோ, அதுபோல, அனைத்து தேவதைகளுக்கும் தலைவனான, அவர்களால் பூஜிக்கப் படுபவரான, அனைத்து தேவதைகளைவிட உத்தமனான பிரம்மன்.

ருஜுகணதரஸெ = ருஜுகண என்பது ஒரு குழு. அந்தக் குழுவில் 100 பேர் இருக்கிறார்கள். கல்பசாதன சந்தியில் ‘பாஹி கல்கி சுதேஜ தாசனே’ என்னும் 6 பத்யங்களில் தாசர், இந்தக் குழுவினர் பெயரைக் குறிப்பிட்டு, தினமும் யார் இந்த 100 பெயர்களை பாராயணம் செய்கிறார்களோ, அவர்களுக்கு, ஆரோக்கிய பாக்யம் கிடைக்கும் என்று கூறுகிறார். இந்த 100 பேர் அடங்கிய ருஜுகணத்திற்கு அரசனான, தலைவனான, பிரம்மனே.

சத்வபிரசுர = தன்னுடைய நான்கு முகங்களால் தொடர்ந்து வேதங்களை சொல்வதன் மூலம். சூரியனைக் கண்ட தாமரை மலர் எப்படி மலருமோ, அது போல பிரம்மனின் வாயிலிருந்து வரும் வேதங்களால், சரஸ்வதிதேவியின் முகம் மலர்கிறது என்கிறார்.

கருடசேஷ, ஷஷாங்கதல சேகரர ஜனக = ஷஷ என்றால் முயல். முயலின் தேகமானது மூன்றாம் பிறை சந்திரனைப் போல வெண்மையானது. அத்தகைய வெண்மையான சந்திரனை தலையில் தரித்திருப்பவர் ருத்ரதேவர். கருட, சேஷ, ருத்ர என்னும் இந்த மூவரின் தந்தையானவர், பிரம்மன்.

ஜகத்குருவே, த்வத் = உங்களுடைய பாத கமலங்களுக்கு அபினமிபே = வணங்குகிறேன். நிரந்தரமான தியானமும், இடையறாத பக்தியையும் கொடு என்று பிரம்மனிடம் பிரார்த்திக்கிறார்.

ஆரு மூரெரடொ3ந்து சாவிர
மூரெரடு ஷத ஷ்வாஸ ஜபகள
மூருவித ஜீவரொளக3ப்ஜஜ கல்பபரியந்த |
தா1 ரசிஸி சாத்வரிகெ3 சுக2 சம்
சார மிஸ்ரரிக3த4ம ஜனரிக
பார து3க்க2க3ளீவ கு3ருபவமான சலஹெம்ம ||4

பிரம்மன், வாயு இருவரும் சம கக்ஷையை (ஒரே வகுப்பை) சேர்ந்தவர்கள். ஆனால், பதவி பிரயுக்த கிஞ்சித் ந்யூன (வாயுபகவான் பதவியில் சிறிதளவு குறைவானவர்). ஆகவே, பிரம்மனுக்கு அடுத்த பத்யத்தில் வாயுபகவானை தாசர் இவ்வாறு பாடுகிறார்.

ஆரு = காம, கிரோத, லோப, மோஹ, மத, மாத்ஸர்ய என்பவை ஆறு அரிஷட்வர்கங்கள்.
மூரு = சாத்விக, ராஜஸ, தாமஸ ஜீவர்களுக்கு
ஈரு = ஈச, தாச பாவங்கள் என்னும் ஞானத்தை
ஒந்து = ஹரி ஒருவன்தான். ஹரி சர்வோத்தமன் என்னும் அறிவைக் கொடுக்கும்
சாவிர = 1000 பிறவிகள் எடுத்து குறைவில்லாமல் செய்ய வேண்டும்.

*** தொடர்ச்சி 28ம் பக்கத்தில்...

ஆராதனை

# தந்தெமுத்துமோகன தாசர்

By: குரோம்பேட்டை திரு. R.ஸ்ரீதரன்

## ஸ்ரீபரமப்ரிய சுப்பராய தாசர் அல்லது தந்தெமுத்துமோகன விட்டலதாசர் (1865-1940AD)

சேஷாம்ஸ சுப்ப3ராயாக்2யம் தா3சார்யம் ஞானி சேவிதம் |
பூ4ஸுரோத்3த4ரனே நித்யம் தா3சார்யாம் சமஹம் ப4ஜே ||

தும்கூர் அருகில் இருக்கும் கரிகிரி நரசிம்ம க்ஷேத்திரத்தில் தேவராயனதுர்கா நரசிபுர என்னும் சிறிய கிராமம் உள்ளது. இங்கிருந்த சேஷப்ப லட்சுமிதேவி தம்பதிகளுக்கு, 1865ம் ஆண்டு க்ரோதன சிராவண சுத்த சதுர்தசியன்று சுப்பராய தாசர் அவதரித்தார். சுப்ரமண்ய சேஷ அம்சத்துடன் தோன்றிய மகான் இவர்.

எட்டாவது வயதில், இவர் குந்தாபுர வியாசராய மடம் ஸ்ரீலட்சுமிப்ரிய தீர்த்தர் முன்னிலையில் உபநீதரானார். பிரம்மோபதேசம் பெற்றார். பிறகு சாஸ்திர அப்யாசம் பெற்றார். 15 வயதிலேயே 8 வயது அச்சம்மாவை மணந்தார். பின்பு, பெங்களூரில் சிஞ்சோளி வெங்கண்ணாசார்யரிடம் மத்வ சாஸ்திரம் படித்தார். அப்போதே, அவருக்கு தாச சாகித்யத்தின் மேல் பக்தி ஏற்பட்டது. சிறிது காலத்திலேயே 'ஸ்ரீஹரிகதாம்ருதசாரம்' மனப்பாடம் ஆனது. அவர் இனிமையாக பாடவும் செய்தார்.

அவர் சம்சாரத்தில் ஈடுபாடு காண்பிக்காமல், காடு மலைகளில் அவதூதராக திரிந்தார். அங்கிதம் பெற்று ஒரு ஹரிதாசர் ஆகவேண்டும் என்று துடித்தார். அப்போது அவருக்கு 'தொட்டபள்ளாபுர ஸ்ரீராகவேந்திர தாசர்' என்கிற முத்துமோகன விட்டலதாசரின் அறிமுகம் கிடைத்தது. குருவருள் கிடைத்தது. பிறகு, தும்கூரில் அங்கிதோபதேசம் பெற்றார். 'தந்தெமுத்துமோகன விட்டலா' என்கிற அங்கிதத்தைப் பெற்றார்.

ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீவேணுகோபாலவிட்டலதாசரின் பரம்பரையில் வந்த ஸ்ரீவரவிட்டல தாசரின் சீடரே முத்துமோகன தாசர். இவரது சிஷ்யர்தான் நம் கதாநாயகர் 'தந்தெமுத்துமோகன விட்டலதாசர்'.

பிறகு தாசர், மௌனவிரதம் தரித்து, நர்சிபுர மலை குகைகளில் கடுந்தவம் புரிந்தார். அந்த தவத்தின் வலிமையால் அவருக்கு அபரோக்ஷ ஞானம், அபரோக்ஷ தரிசனம் கிடைத்தது. அவருக்கு தன்னையும் அறியாமல் கவிதை, தேவர நாமா இயற்றும் திறன் வந்தது. ஆனால், பகவந்தனின் பந்தக சக்தி விசித்திரமானது.

தாசரின் தந்தை மறைந்தபிறகு, இவர் ஜீவனத்திற்காக வியாபாரம் செய்யத் துவங்கினார். வியாபாரத்தில் மிகவும் நஷ்டம் ஏற்பட்டு, எல்லா சொத்தும் நாசமானது. இந்த சமயத்தில் தாசர் தமது இரண்டு பெண்களுக்கும் திருமணம் செய்து, ஓட்டாண்டி ஆகிவிட்டார். ஆனால், தாசர் மனம் தளராமல், வியாச தாச சாகித்யங்களை அத்யயனம் செய்தார். கரிகிரி யாத்திரயை செய்தார். மதுகர வ்ருத்தியை செய்தார். ஹரி நாம சங்கீர்த்தனைகளை பாடினார். தத்வ போதனைகளை செய்தார். கரிகிரியில் அனேக யாத்ரிகர்களுக்கு அன்னதானம் செய்தார்.

அந்த சமயத்தில் பாகேபள்ளி சேஷதாசர் இவரிடம் அங்கிதம் யாசித்தார். பகவானின் ஆணைப்படி 1902ம் ஆண்டு அவருக்கு பிராண நாத விட்டலா என்று அங்கிதம் கொடுத்து, தன் முதல் சிஷ்யராக ஆக்கினார். அதன்பிறகு 1165 அங்கிதங்களை அளித்தார். கடைசியாக அவரிடம் அங்கிதம் பெற்றவர், குருகோவிந்த விட்டலதாசர் ஆவார்.

ஸ்ரீதாசர், தேவராயனதுர்கத தாசகூட சபாவை நிறுவினார். பல இடங்களில் ஹரிகீர்த்தனையை பரப்பினார். பெங்களூரு சிறைச்சாலைகளில் கைதிகளுக்கு நாம மகிமையை போதித்து, அவர்களின் வாழ்க்கை முறையையே மாற்றினார். ஹரிதாச சாகித்யத்தைப் பரப்ப ‘பரமார்த்த சந்திரோதய’ என்னும் சஞ்சிகையை நடத்தி, வீடுவீடாகச் சென்று விநியோகம் செய்தார். மஹத் சேவை. அது மாத பத்திரிக்கை. ஒரே ஆளாக அதை பிரசுரம் செய்து, விற்றார்.

உரகாத்ரிவாச விட்டலதாசர், ரமாகாந்த விட்டலதாசர் போன்றோர் அவரது முக்கிய சிஷ்யர்கள் ஆவர். ஹரிதாச தர்பண என்னும் உயர்ந்த காவியத்தை பாமினி ஷட்பதியில் இயற்றியுள்ளார். கன்னடத்தில் பல தேவர நாமாக்கள், உகாபோகங்கள், 1165 அங்கித பதங்கள் ஆகியவற்றை இயற்றியுள்ளார். கடைசி காலத்தில், மைசூர் கோவிந்த ராயருக்கு அங்கிதம் கொடுத்து ‘குருகோவிந்த விட்டல’

தாசர் ஆக்கினார். அவரே பின்பு 265 பேருக்கு அங்கித உபதேசம் செய்தார்.

இப்பேர்ப்பட்ட சேஷாம்ஷ சம்பூததாசர், 16-4-1940 விக்ரம சைத்ர சுத்த நவமி - ஸ்ரீராம நவமியன்று வைகுண்ட லோகம் ஏகினார். அப்போது குருகோவிந்த விட்டலதாசர் கண்ணீர் விட்டு, கதறீ, இப்படிப் பாடினார்.

தெரளித3ரோ தந்தேமுத்து மோகனரு
மரளி பா3ரத3 ஸிரி நரஹரி புரகே ||பல்லவி

நரலீலெ கொனெகை3ய்து பரம புருஷ ஹரி
ஸ்ரீயரசகெ3 ப்ரீதிபாத்ர நெனிபானோ
வர குருகோவிந்தவிட்டலன சரணவ
ஸ்மரிஸி ஹிக்3கு3த பூரட நிரீக்ஷிசுத்தா (கடைசி சரணம்)

இவருடைய ஒரு சிறிய உகாபோகத்தை மட்டும் பார்ப்போம்.

ஸ்ரீராம நாமக்கே சரி இல்லா
ஸ்ரீகிருஷ்ண நாமக்கே பெ3லெ இல்லா
ஸ்ரீ நரஹரி நாமக்கே மிகெ3 இல்லா
ஸ்ரீ தந்தேமுத்துமோகன விட்டலன
தாசர தாசரிகெ ப4யவில்லா

ஹரிதாசர ஸங்க3தி3ந்த3
ஹரி நின்ன ஸங்க3வாயிதோ எனகெ3
தந்தேமுத்துமோகனவிட்டலா

இவை எளிமையாக இருப்பது போல தோன்றினாலும், பொருள் பொதிந்ததாகவே உள்ளன. இவரது சரித்திரம் மிகப்பெரியது. பெரும் புத்தகமே அவரைப் பற்றி உள்ளது. இடம் கருத்தில் கொண்டு மிகவும் சுருக்கி எழுதியுள்ளேன். அவரது மகிமை அபாரமானது. இப்பேர்ப்பட்ட மஹனீயரை நாமும் ஸ்ரீராம நவமியன்று கொண்டாடித் தொழுவோமாக.

ஸ்ரீகிருஷ்ணார்பணமஸ்து..

தொடர்

## சுளாதி பக்கங்கள்

## ஸ்ரீராகவேந்திர சுளாதி (தொடர்ச்சி)

மட்ய தாள

நரஹரிகிருஷ்ணராம சிரி வேதவியாஸ
வரடெ$^{3}$ரடு$^{3}$ நால்கு ஹரிமூர்த்திக$^{3}$ளு
பரிவார ஸஹிதாகி$^{3}$ சிரி ஸஹிதனிந்து$^{3}$
ஸுருகு$^{3}$ரு மத்வாசார்யரெ மொத$^{3}$லாகி$^{3}$
தருவாயத$^{3}$ல்லின்னு தாரதம்யானுஸார
பரிபரியதிகளு இருதிப்பரு இல்லி
ஹருஷதி$^{3}$ந்த$^{3}$லி வேத$^{3}$ ப$^{3}$ரெது$^{3}$ சாஸ்த்ரக$^{3}$ளன்னு
பரிபரி புராண பா$^{4}$ரதாக$^{3}$மத$^{3}$ல்லி
ஸரிஸரி ப$^{3}$ந்த$^{3}$ந்தெ ஸரிக$^{3}$மவெனுதலி
ப$^{4}$ரதிந்தலி குணிது ப$^{4}$குதியிந்த$^{3}$லி இன்னு
ஹரிய பூஜிஸுத இருளு ஹக$^{3}$லு பி$^{3}$ட$^{3}$தெ$^{3}$
பரிபரி விவரவ பரிபரி கேள்வரு
க$^{3}$ருடவாஹன ரங்க$^{3}$ கோ$^{3}$பாலவிட்டல தன்ன
ஷரணர பாலிசுதிருதிப்பனில்லி

ஸ்ரீநரஹரி, தன் பத்னி ஸ்ரீமகாலட்சுமியுடனும், ஸ்ரீகிருஷ்ணன் தன் பத்னி ருக்மிணி தேவியுடனும், ஸ்ரீராமர் தம் பத்னி சீதாதேவியுடனும், ஸ்ரீவேதவியாசர் தம் பத்னி அம்ப்ருணியுடனும் மற்றும் அவரவர் தம் பரிவாரங்களுடனும் பிருந்தாவனத்தின் உள்ளிருந்து அருள் புரிகின்றனர். சுரகுரு ப்ருகஸ்பதியின் குருவான ஸ்ரீமத்வாசார்யர் முதலானவர்கள் தாரதம்யானுசாரமாகி, இங்கு இருந்து கிருபை புரிகின்றனர். ஸ்ரீமத்வாசார்யர் முதற்கொண்டு எல்லா யதிகளும் ஓர் அம்சத்தில் பிருந்தாவனத்தில் இருக்கிறார்கள். இதை ஸ்ரீவிஜயதாசர் கண்கூடாகக் கண்டார்.

பக்தர்கள் மிகவும் சந்தோஷமாக இங்கு வேதங்கள், உபநிஷத்கள், சாஸ்திரங்கள், பல புராணங்கள், பாரதம் ஆகியவற்றை சொல்லியும், கேட்டும் நல்ல ஞானம் அடைகிறார்கள். சங்கீத சாஸ்திரங்களையும், உபன்யாசங்களையும் கேட்டு சந்தோஷம் அடைகிறார்கள். இரவும் பகலும் விடாமல் ஸ்ரீஹரியை பூஜித்து இறைவனைப் பற்றிய பரதத்வ விவரங்களை இங்கு சம்பாஷித்து ஆனந்தம் அடைகின்றனர். கருட

வாகனனான ஸ்ரீஹரி கோபாலவிட்டலன் பக்தியுடன் சரணடைந்தவர்களைக் காப்பாற்றி தயை புரிவான்.

த்ரிபுட தாள

நரஹரி ரூபனாகி[3] வாஸவாகி[3] இல்லி
து[3]ரிதது[3]ஷ்க்ருத பிரம்மத்யகள தூ[3]ரோடி[3]ஸுவ
ஸிரிராமனாகி வாஸவாகி[3] இல்லி
பரிபரியிந்த[3] தே[3]ஷாந்தர அன்னக[3]ளகொண்டு
நரரில்லி பந்த[3]ரெ ஸ்திரபட்டகட்டுவ
ஸிரிகிருஷ்ணனாகி[3] வாஸவாகி[3] இல்லி
பரிபரியல்லி ப[3]ந்த பரமாதுரரிகெ[3]
வரவீவ புத்ரோத்ஸவ மது[3]வெ முஞ்சி
ஹரகெக[3]ள கைகொண்டு ஹருஷபடிஸுவ
வர வேதவ்யாஸனாகி வாஸவாகி[3] இல்லி
பரதி[3]ந்த[3]லி ப[3]ந்த[3] து[3]ர்வாதி[3]க[3]ளன்னெல்ல
தூ[3]ர ஓடிஸி முரிது அவர கு[1]ஷாஸ்த்ரவ
ஹரி சர்வோத்தமனெந்து இருவனெல்லி தோரி
ஷரணஜனகெ இன்னு வரஞானஸுதெய
கரெது[3]கொடு[3]த இருதிப்புவனல்லி
ஸிரிவந்தி[3]தபாத கோ[3]பாலவிட்டல
பரிபரியலி ஒலக கைகொளுதிப்ப

ஸ்ரீமன் நாராயணன், ஸ்ரீநரஹரி ரூபனாகி, இங்கு (பிருந்தாவனத்தில் வாசம் செய்து, துஷ்ட கர்மங்களை, பிரம்மஹத்தி பாபங்களை ஓட்டுவிப்பார்.

ஸ்ரீராமனாகி இங்கு வாசம் செய்யும் ஸ்ரீஹரி, மிகுந்த சிரமதசையில் போஜனாதிகளுக்குக்கூட சிரமப்பட்டு சரணம் என்று பக்தர்கள் வந்தால், மிகுந்த கருணையுடன் ரட்சித்து அவர்களை பெரிய அந்தஸ்தில் வைப்பான்.

சுக்ரீவனையும், விபீஷணனையும் காப்பாற்றி அருள்செய்த வள்ளல் அல்லவா ஸ்ரீராமன். ஸ்ரீகிருஷ்ணனாகி இங்கு வாசம் செய்யும் ஸ்ரீஹரி, வரம் வேண்டி வந்து தொழுவோர்க்கு, நற்புத்திரப் பேறு, உபநயனம்,

திருமணம் முதலிய வேண்டுதல்களை அங்கீகரித்து, நிறைவேற்றி, அவற்றை பக்தர்களுக்கு நிறைவேற்றிக் கொடுப்பான். அவர்களை மகிழ்ச்சியுடன் இருக்கச் செய்வான்.

ஸ்ரீவேதவியாச தேவர், இங்கு வாசம் செய்துகொண்டு, வேறு மதத்தினரின் சாஸ்திரங்களை முறியடித்து, துர்வாதிகளை எல்லாம் அருகிலேயே வர ஒட்டாமல் செய்து, மத்வ சாஸ்திரத்தின் ஆணிவேர் கருத்தான ஸ்ரீஹரியே சர்வோத்தமன் என்று நிரூபித்து இங்கு இருக்கிறார்.

ஸ்ரீஹரியை சரணடைந்தவர்களுக்கு (பக்தர்களுக்கு) அமிர்தம் போன்று நல்ல வரன்களை அழைத்தே கொடுப்பான். ஸ்ரீமகாலட்சுமியும் தொழும் கோபால விட்டலன், விதவிதமான நம் கோரிக்கைகளை நிறைவேற்றி, மனதிற்கு மகிழ்ச்சியையும் அமைதியையும் கொடுப்பான் (பிருந்தாவனத்தில் ஸ்ரீஹரி, நரசிம்ம, ராம, கிருஷ்ண, வேதவியாஸ ரூபங்களில் பல வரங்களை அருள்கிறார் என்பதே கருத்து).

*** **திருமதி. பத்மா ஸ்ரீனிவாசன், பெங்களூரு**

இந்த இதழைப் பற்றி தங்களின் பிற வாட்சப், மின்னஞ்சல் க்ரூப்களில் சொல்லி, மேலும் பல ஹரிபக்தர்கள் இந்த பயனுள்ள தகவல்களைப் பெறுவதற்கு உதவவும்.

**10ம் பக்கத்திலிருந்து தொடர்ச்சி...**

ஸ்ரவண மனகானந்தவீவுது
பவஜனித துக்ககள களெவுது
விவித போககளிஹபரங்களலித்து சலஹுவுது |
புவன பாவனனெனிப லகுமி
தவன மங்களகதெய பரமோ
த்ஸஹதி கிவிகொட்டாலிபுது பூசுரரு தினதினதி || (2-1)

****கன்னடத்தில்: திரு.ஏ.பி.ஷாமாச்சார், பெங்களூரு**

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

By : ஸ்ரீபத்ரகிரி கேசவதாசர்

ஸ்ரீமதானந்ததீர்த்தரின் த்வைதமத சித்தாந்தத்தின் கோட்பாடுகளை சரளமான கன்னட மொழியில் மொழிபெயர்த்துத் தந்தவர் ஸ்ரீஜகன்னாததாசர். அவரின் இந்த தத்வ கிரந்தம் ‘ஹரிகதாம்ருதசாரம்’ என்று அழைக்கப்படுகிறது. ஸ்ரீஜகன்னாததாசரின் சிஷ்யரான ஸ்ரீதவிட்டலர் தனது ஹரிகதாம்ருதசாரத்தின் பல-ஸ்ருதியில் இவ்வாறு தெரிவிக்கிறார்.

ஹரிகதாம்ருதசார நவரஸ
ப$^{4}$ரித$^{1}$ ப$^{3}$ஹுக$^{3}$ம்பீ$^{4}$ரத்னா
க$^{1}$ர ருசிர ஸ்ருங்கா$^{3}$ர ஸாலங்கா$^{1}$ர விஸ்தா$^{1}$ர |
ஸரஸனரக$^{1}$ண்டீர வாசா
ர்யர ஜனித$^{1}$ ஸுகு$^{1}$மார ஸாத்$^{1}$வீ
க$^{1}$ரிகெ$^{3}$ பரமோதா$^{3}$ரமாடித$^{3}$ மரெயது$^{3}$பகா$^{1}$ர ||
(ஸ்ரீதவிட்டலரின் பலஸ்ருதி #14)

முதல் சந்தியான மங்களாசரண சந்தியில் ‘ஸ்ரீரமணிகரகமலபூஜித’னான நரசிம்மனை, த்ரிகுணமானி மகாலட்சுமியை, பிரம்மதேவரை, வாயுதேவரை, சரஸ்வதிதேவியை, பாரதிதேவியை, பாதராயணரை, ஸ்ரீமத்வாசாரியரை, மகாதேவரை, இந்திரன் முதலான தேவர்களை, ரிஷிகளை, பித்ரு தேவதைகளை, கந்தர்வர்களை மற்றும் உத்தம பக்தர்களை வணங்கி பின் அடுத்த சந்தியான கருணா சந்தியிலிருந்து கிரந்தத்தைத் துவக்குகிறார்.

கருணா சந்தியில் ஸ்ரீஹரி பக்தப்ரியன் என்றும், கானபிரியன் என்று பீஷ்மரைப் போல - மலகி பரமாதரதி பாடலு குளிது கேளுவ - என்றும், சுகமுனிகளைப் போல - குளிது பாடலு நிலுவ - என்றும், பக்தர்களுக்கு - சுலபனோ ஹரி தன்னவரனரெகளிகெ பிட்டகலனோ ரமாதவன ஒலிஸலரியதே பாமரரு பளலுவரு பவதொளகெ - என்றும் ஸ்ரீஹரியின் மகிமைகளை விவரிக்கிறார். சாத்விக, ராஜஸ, தாமஸ என்னும் மூன்று வித ஜீவர்களுக்கும், அவரவர்களின் தகுதிக்கேற்ப போகங்களை அளிக்கிறார் ஸ்ரீஹரி. ‘மனவனித்தரெ தன்னனீவனு’ என்று இந்த குணத்தை விளக்குகிறார்.

நான்முக பிரம்மனிடம் நிலைகொண்டு இந்த உலகத்தைப் படைத்து, விஷ்ணு ரூபத்தில் காத்து, ருத்ரரிடம் நிலைகொண்டு உலகத்தை அழிக்கிறார். இப்படி அனைத்தையும் செய்து ஸ்ரீஹரியே. 'ஸ்வகதபேத விவர்ஜித' என்று அழைக்கப்படுகிறார். இதையே ஜகன்னாததாசர் மிகவும் அழகாக வர்ணிக்கிறார்.

ஒப்ப3னலி நிந்தா1டு3வனு ம
த்தொ1ப்ப3னலி நோடு3வனு பே3டு3வ
னொப்ப3னலி நீடு3வனு மாதா1டு3வனு பெ3ரகா3கி3 ।
(சந்தி 2 ஸ்லோகம் 9).

அனைத்து இடங்களிலும் நீக்கமற நிறைந்திருக்கும் ஸ்ரீஹரி, நிஜபக்தியுடன் பக்தர்கள் வேண்டினால், உடனடியாக ஓடிவந்து காப்பாற்றுகிறான் என்று தாசர் கீழ்வரும் ஸ்லோகத்தில் சொல்கிறார்.

ஜனனியனு கா1ணதி3ஹ பா3லக1
நெனெ நெனெது ஹலுபு3திரெ க1த்த1லெ
மனெயொளட3கி3த்த3வன நோடு3த1 நகு3த1 ஹருஷத3லி ।
த1னயனம் பி3கி3த3ப்பி1 ரம்பி3ஸி
க1னலிக1ய க1ளெவந்தெ1 மதுசூத3னனு
த1ன்னவரித்தெ3டெகெ3 ப3ந்தொ3த3கி3 ஸலஹுவனு ।।
(சந்தி 2 ஸ்லோகம் 13)

எவ்வளவு அருமையான உதாரணங்கள்?

எதையும் தானாக செய்வதற்கு சுதந்திரம் இல்லாத ஜீவன் ஸ்ரீஹரியை பக்தியுடன் வேண்டினால்,

பா3லக1ன க1லபா4ஷெ ஜனனியு
கே1ளி ஸுக2ப1டுவந்தே1 லகு1மிலோல ப4கு1த1ரு
மாடு3தி1ஹ ஸம்ஸ்து1தி1கெ3 ஹிக்கு3வனு ।
என்று சொல்லி, ஸ்ரீஹரியானவர் தன்னை வணங்கும் பக்தர்களின் தவறுகளை நினைக்காமல் மன்னித்து, அவர்களை ஏற்கிறார். தன்னவர்களை ஸ்ரீஹரி எப்படி காப்பாற்றுகிறார் என்பதை தாசர் மிகவும் அழகான உதாரணங்களுடன் விவரிக்கிறார்.

த1ந்தே3தா1ய்க3ளு த1ம்ம ஸிஶுவிகெ3
ப3ந்த3 ப4யக3ள ப1ரிஹரிஸி
நிஜ மந்தி3ரதி3 பே3டிது3த3னித்தா1த3ரிஸு வந்த3த3லி ।

ஹிந்தே[3] முந்தெ[3]டப[3]லதி ஔள ஹொரகி[3]ந்திரேஷனு
த[1]ன்னவர நெந்தெ[3]ந்து[3] ஸலஹுவ
நாக[3] ஸத[3]வோலித்த[1] நோடித[3]ரு ||

இதுமட்டுமல்ல, ‘ஒடல நெளலந்ததலி ஹரி’ - உடலை விட்டுப் பிரியாத நிழல் போல, ஶ்ரீஹரி - எப்போதும் பக்தர்களுடன் இருந்து அவர்களைக் காப்பதுபோல, நாம் ஏதேனும் ஒரு தவறான காரணத்தால் அவரின் சரண கமலங்களை பிடிக்காமல் விட்டாலும், ‘பிட்டவர பவபாஷதிந்தலி கட்டுவனு பஹு கடினனிவ’ (தன்னை நினைக்காமல் விட்டவரை, தன்னுடைய பவ-பாசக்கயிற்றால் கட்டுவார்) என்கிறார். யாருக்குக் கஷ்டம்? அவரை நினைக்காமல் விட்டவர்களுக்கு. ஆனால், ‘சத்பக்தி பாஷதலி கட்டுவர பவ கட்டுபிடிஸுவ ஸிட்டினவனிவனல்ல’ (தன்னை பக்தி என்னும் பாசத்தால் கட்டுபவர்களை, அவர்களது சம்சாரம் என்னும் கட்டினை அவிழ்ப்பவர், கோபப்பட மாட்டார்) என்று தன்னை நம்பியவர்களுக்கு என்றும் கருணை காட்டாமல் விடமாட்டார் என்று சொல்கிறார் தாசர். தன் பக்தர்களை தன்னுடையவர்கள் என்று ஶ்ரீஹரி எப்போதும் காப்பார் என்பதை ‘கண்ணிகெவெயந்ததலி’ - கண்ணை இமை காப்பது போல என்னும் மிகச்சிறந்த உதாரணத்துடன் விளக்குகிறார் தாசர்.

பக்தர்கள் மிகுந்த பக்தியுடன் தனக்கு எதை சமர்ப்பித்தாலும், ‘கொட்டுதனு கைகொம்பரக்ஷண பிட்டகல’ - அதை இரு கைகொண்டு ஏற்றுக் கொள்வார்; அரைக் கணம் கூட அவரை விட்டுப் பிரியமாட்டார் என்கிறார். மேலும், தன்னை சரண் அடைந்தவர்கள், தன் மேல் எத்தகைய பாரத்தை ஏற்றினாலும் அதைப் பற்றி கவலைப்படமாட்டார். தேவதைகள் தன் முதுகின் மேல் மந்தர மலையை ஏற்றிய, பாற்கடல் கடையும் சந்தர்ப்பத்தில் - பிட்டு பென்னலி பொரிஸிதவரொளு சிட்டு மாடிதரேனு?’ - ஶ்ரீஹரி கோபம் கொண்டாரா? (இல்லை) என்று கேட்கிறார் தாசர். இப்படியாக, ஶ்ரீஜகன்னாதவிட்டலன் தன் பக்தர்களை என்றென்றும் கோபம் கொள்ளாமல் காப்பாற்றுவார் என்று சொல்கிறார்.

ஒரு குடிசையில் தீ பற்றிக்கொண்டால், அந்த குடிசையின் ஒவ்வொரு கீற்றுகளின் மூலமும் அந்தப் புகையானது வெளியில் வரும். அதைப் பார்ப்பவர்களுக்கு அந்தக் குடிசையில் தீ இருக்கிறது என்று தெரியவரும். அதைப் போலவே, ஶ்ரீஹரியும் அனைத்து

ஜீவர்களுக்குள்ளும் நிலைத்திருந்து, அனைத்து செயல்களையும் - தன்னை வெளிக்காட்டிக்கொள்ளாமல் அவர்கள் மூலமாக செய்கிறார். இதை ஸ்ரீதாசர் மிகவும் அழகாக கீழ்க்கண்ட ஸ்லோகத்தில் சொல்கிறார்.

த்1ருண க்1ருதா1லயதொ3ளகெ3 பொ1கெ3 ஸம்
த3ணிஸி ப்1ரதி1சித்1ரத3லி பொ1ரம
ட்ட1லனனெரவனு தோ1ரிதோ1ரத3லிப்ப தெ1ரனந்தே1 |
வனஜஜாண்டதொ3ளகி1ள ஜீவர
த1னுவினொளஹொரகி3ப்ப கா1ணிஸ
த3னிமிசேஷனு ஸக1லக1ர்மவ மாள்ப1னவரந்தே1 || [3-12]

என்று வியாப்தி சந்தியில் தெரிவிக்கிறார்.

அனைத்து தேவதைகளிலும் வெவ்வேறு சக்திகளை வைத்து, அவர்களில் தானே இருந்து, அவர்களுக்கு செய்யும் சேவையை தானே ஏற்றுக்கொண்டு, அவர்களின் மூலம் பக்தர்களுக்கு பலன்களைக் கொடுக்கிறார் - ஆனால் அதில் தன் பெயர் எங்கேயும் வெளியில் வராமல் இதையெல்லாம் செய்கிறார் - என்று விளக்குகிறார்.

ஸ்ரீஹரி அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கிறார் என்பதை விளக்கியபடி,

எல்லி கே1ளித3ரல்லி நோடித3ரல்லி பே3டித3ரல்லி
நீடி3த3ரல்லி ஓடித3ரல்லி ஆடித3ரல்லி இருதி1ஹனு [3-21]

என்று விவரிக்கிறார். அனைத்தையும் அனைவருக்கும் கொடுக்கக்கூடிய சக்தியை வைத்திருந்தாலும், அந்தந்த ஜீவர்களின் யோக்யதைக்கேற்பவே ஸ்ரீஹரி அவர்களுக்கான பலனைக் கொடுக்கிறாராம். மழையானது அனைத்து மரங்களின் மேலும் ஒரே மாதிரியே பெய்தாலும், அந்தந்த மரங்களின் தன்மைக்கேற்ப அந்தந்த காய், பழம், சாறு, ருசி என்று கிடைக்கிறது. அப்படி ஆவது அவைகளின் யோக்யதை, ஜாதி மற்றும் தன்மையைப் பொறுத்தே தவிர மழைக்கு எந்தவித பாரபட்சமும் இல்லை. இந்த அபிப்பிராயத்தை ஜகன்னாததாசர் எவ்வளவு அழகாக விவரித்துள்ளார் அல்லவா?

இப்படி ஸ்ரீஜகன்னாததாசர் தனது ஹரிகதாம்ருதசாரத்தில், பற்பல உதாரணங்களுடன் ஸ்ரீஹரி மற்றும் அவரது பக்தர்களின் சம்மந்தம், ஜீவ மற்றும் பிரக்ருதிக்கான சம்மந்தம் ஆகியவற்றை விவரித்து அனைவருக்கும் பெரிய உதவி புரிந்துள்ளார். இந்த அற்புதமான கிரந்தத்தை அனைவரும் தினந்தோறும் படித்து ஸ்ரீ ஹரிவாயுகளின் கிருபைக்கு பாத்திரர் ஆகும்படி கேட்டுக்கொள்கிறோம்.

*** **வித்வான் திரு.விஷ்வாஸாசார்யர்**.

17ம் பக்கத்திலிருந்து தொடர்ச்சி...

அதாவது, சாத்விக ராஜஸ தாமஸ ஆகிய ஜீவர்களுக்கு, அவரவர் களின் யோக்யதைக்கேற்ப (தகுதிக்கேற்ப), அவர்களின் அரிஷெட்வர்கங் களை அழித்து, ஈச தாச பாவங்களையும், ஹரிசர்வோத்தமத்வ ஞானத்தையும் வாயுதேவர் கொடுக்கிறார் என்று தாசர் சொல்கிறார்.

இதன் இன்னொரு அர்த்தம். 6*3=18. 2+1=3. 18+3=21. 21*1000 = 21000. 3*200= 600. ஆக மொத்தம் 21,600 ஹம்ஸ மந்திரங்களை மூன்று வித ஜீவர்களிலும்.

அப்ஜஜ கல்ப பர்யந்த = அப் என்றால் நீர். ஜ = தாமரை. இன்னொரு ஜ = பிரம்ம. தண்ணீரில் இருக்கும் தாமரையிலிருந்து பிறந்தவர் பிரம்மன். அவருடைய கல்பம் முடியும்வரைக்கும் 14 உலகங்களில் இருக்கும் 84,00,000 ஜீவராசிகளில் இருந்து, 1 நாளுக்கு 21,600 ஹம்ஸ மந்திரத்தை, ஸ்வாச உஸ்வாசத்தின் மூலம் ஜெபிப்பவரான வாயுதேவர்.

சாத்வர்களுக்கு மோட்சத்தையும், ராஜஸர்களுக்கு சுகதுக்கம் கலந்த சம்சாரத்தையும், தாமஸர்களுக்கு அபாரமான துக்கத்தையும், அவரவர் களின் உபாசனைகளுக்கேற்ப கொடுக்கிறார்.

குரு பவமானரே, பவித்ரமானவரே, எம்மை காப்பாற்றுவீராக என்று பிரம்மவாயுகளை இரு பத்யங்களில் அவர்கள் சமம் என்பதையும், பதவியில் மட்டும் வாயுதேவர் சிறிது குறைவு என்பதையும் விளக்குகிறார் தாசர். *** அடுத்த இதழில் தொடரும்.

தொடர்

## கன்னட கிரந்த அறிமுகம்

## ஸ்வப்னத - ஸ்ரீவாதிராஜர்

மத்வ மதப் பரம்பரையில் உடுப்பி அஷ்டமடங்களில் ஸோதே மடத்தின் பீடாதீசராக அலங்கரித்தவர் ஸ்ரீவாதிராஜர். மத்வ சித்தாந்தத்தில் வியாச சாகித்யம் மற்றும் தாச சாகித்யம் என இரண்டுக்குமே தமது பங்களிப்பை அளித்த மஹனீயர் இவர். பகவான் வேதவியாசரின் மூல கிரந்தங்களுக்கும், ஆசார்யர் மத்வரின் சர்வமூல கிரந்தங்களுக்கும் வியாக்யானங்களையும், பலதரப்பட்ட காவ்ய, ஸ்தோத்திர கிரந்தங்களையும் வழங்கியவர். ஸ்ரீவாதிராஜர் இவ்வாறாக அனேக கிரந்தங்களை இயற்றியிருப்பினும், வேறெந்த கிரந்தங்களுக்கும் இல்லாத தனிச்சிறப்பு அவருடைய 'ஸ்ரீலட்சுமி சோபான' பதத்திற்கும், 'ஸ்வப்ன பத' கிரந்தத்திற்கும் உண்டு. இவ்விரு கிரந்தங்களும், பகவான் ஸ்ரீஹயக்ரீவன் ஸ்ரீவாதிராஜரின் கனவில் தோன்றி அருளிய கிரந்தங்கள் ஆகும்.

'ஸ்வப்னபத' என்பது ஸ்ரீவாதிராஜருக்கு அவருடைய கனவில் பகவான் ஸ்ரீஹயக்ரீவன் தோன்றி தன்னுடைய குணங்களை, மகிமைகளை சஜ்ஜனர்களுக்கு தெரிவிக்க வேண்டி உதிர்த்த நல் முத்துக்களால் கோர்த்த மாலை ஆகும். இது ஸ்ரீவாதிராஜருக்கு அவரின் ஸ்வப்ன அவஸ்தையில் அருளிய பதம் என்று கூறப்பட்டாலும், உண்மையில் ஸ்வப்ன அவஸ்தைக்கு நியாமகனான தைஜஸ நாமக பகவான், ஸ்ரீவாதிராஜருக்கு உரைத்த பதங்கள் என்று அறியவேண்டும்.

தன்னுடைய குணங்கள், தன் மகிமைகள், தான் பக்தர்களை ரட்சணை செய்யும் விதங்கள், பக்தர்களின் சாதனம் மார்க்கம், ஜீவ-ஈஸ்வர பேத தத்துவம், தாரதம்யம், தம்முடைய ஆராதனையால் சஜ்ஜனர்கள் அடையும் பலன்கள், முதலியவற்றைக் கூறும் விதமாக ஸ்வப்னபத அமைந்து, முடிவில் ஸ்ரீவாதிராஜர் பல-ஸ்ருதியை இணைத்து, 45 பத்யங்களில் அமைந்த கிரந்தம் இது.

'நெனெவெ நாராயணன பாதவ' - என்று ஸ்ரீமன் நாராயணனை வேண்டித் தொடங்கி பின் முறையே, முக்யபிராணர் மற்றும் பாரதி தேவியை தியானித்து, - 'ஸ்ரீஹயவதன ஸ்வப்னதொளனகெ பேளித பதவ லோகத ஜனரிகித சங்க்ரஹவ மாடுவெனவன கிருபெயிந்த' - எனக்கூறி மங்களாசரண பத்யத்தில், இக்கிரந்தத்தை பகவான் தமக்கு

அருளிய விதத்தையும், அதனுடைய சாரத்தை சஜ்ஜனர்களுக்கு அருளும் தமது எண்ணத்தையும் வெளிப்படுத்தி தொடங்கியுள்ளார்.

முக்கியமாக இந்த பத்யம் முழுவதுமே, பகவான் தன்னுடைய மகிமைகளை தானே கூறும் விதமாக, தான் அனந்தானந்த கல்யாண குணங்கள் நிரம்பியவன் மற்றும் சகலவிதமான தோஷங்களுக்கும் அப்பாற்பட்டவன் என நிரூபிக்கும் வண்ணம் அமைந்துள்ளது. பகவான், சஜ்ஜனர்கள் பக்தி செய்யும் விதத்தையும், அவர்களின் சாதனை மார்க்கத்தையும் விளக்கும்படி செய்யும் காரியங்கள் அனைத்தும் பகவத்பூஜை, மற்றும் பேசும் வார்த்தைகள் அனைத்தும் பகவானின் ஸ்தோத்திரம் என்ற உயரிய அனுசந்தானத்துடன் செய்ய வேண்டும் என உரைக்கிறான். மேலும், பகவத்பக்தர்கள் ஸ்னானம், தியானம், நாம சங்கீர்த்தனம், பாத ஸ்மரணை, க்ஷேத்திர யாத்திரை, சஜ்ஜனர்களுக்கு நல்விஷயங்களைக் கூறுதல் முதலான நற்காரியங்களை நம்பிக்கையுடன், பலன்களின் மேல் ஈடுபாடு கொள்ளாமல் செய்யவேண்டும் எனவும் அதற்குத் தக்க பலன்கள் கண்டிப்பாக உண்டு என்பதையும் ஸ்பஷ்டமாக கூறுகிறான் பகவான்.

பகவானின் தரிசனம், நாமஸ்மரணை, தியானம் முதலானவை காட்டுத்தீ போல நம் பாவங்களையும் பொசுக்கக்கூடியவை என்பதையும் எடுத்துக்கூறி விசேஷமாக சாதனை மார்க்கத்தை விவரிக்கிறான் பகவான். இவ்விதம் பக்திமார்க்கத்தில் செல்லும் சஜ்ஜனர்களை தான் ரட்சணை செய்யும் விதத்தை கஜேந்திர மோட்சம், திரௌபதி மான சம்ரக்ஷணம், அர்ச்சுனனை போர்க்களத்தில் தான் காத்த விதம் முதலான உதாரணங்களால் விளக்குகிறான் பகவான்.

ஸ்ரீஹயக்ரீவரூபி பரமாத்மா மேலும், தன்னுடைய தசாவதார ரூபங்களையும், தான் சகலவிதமான தோஷங்களுக்கும் அப்பாற்பட்டவன், அனந்தானந்த கல்யாண குணங்கள் நிரம்பியவன், ஸ்வதந்திரன், சர்வோத்தமன் என்பதை ரிக்வேதம், மாண்டுகோபநிஷத், காண்வருபநிஷத் முதலானவைகளில் கூறப்பட்டுள்ள பிரமாண, பிரமேயங்களைக் கூறி விளக்குகிறான். மேலும் லட்சுமி முதற்கொண்டு, பிரம்மா, ருத்ரன் மற்றும் இந்திராதி தேவதைகள், தன்னுடைய பக்தர்கள், தாசர்கள் மற்றும் சேவகர்கள் என்பதை

ஸ்பஷ்டமாக, ஸ்ரீலட்சுமி தன் பத்னி, தன்னிடமிருந்து சகலவிதமான நற்குணங்களையும் பெறுபவன் என்பதையும், பிரம்மா தன் மகன், தன்னிடமிருந்து சகலவிதமான வேதங்களையும் கற்றவன் என்பதையும், ருத்ரன் தன் பேரன், தனது பாதோதகத்தை சிரசில் தரித்து பவித்ரம் ஆனவன் என்பதையும், இந்திராதி தேவதைகளுக்கு அமிர்தத்தை ஊட்டியவன் தானே என்று கூறுகிறார்.

இவ்விதமாக அனைத்து தேவதைகளிலும் இருந்து, தானே படைத்தல், காத்தல், அழித்தல் முதலான காரியங்களை செய்வதையும், சகலவிதமான ஜீவராசிகளிலும் அந்தர்யாமியாக இருந்து, அவர்களின் யோக்யதைக்குத் தகுந்தபடி சாதனை செய்வித்து. ஸ்வர்க்கம், நரகம் முதலான லோகங்களையும், மோட்சத்தையும் அருள்வதாக பகவான் விவரிக்கிறான். இதனை விளக்கும் விதமாக, ராமாவதார காலத்தில் அனைத்து தேவதைகளும் கபி ரூபத்தில் அவதரித்து பகவானுக்கு சேவை செய்ததையும், உதாரணத்துடன் வர்ணிக்கிறான்.

மேலும், பகவான், தான் பிறப்பு இறப்புகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவன், கர்ப்பவாசம் முதலான தோஷங்கள் இல்லை என்பதை நரசிம்ம மற்றும் கூர்ம அவதாரங்களைக் கொண்டும், தன்னுடைய மூல மற்றும் அவதார ரூபங்களுக்குள் பேதங்கள் இல்லை என்பதை தேவகிக்கு தான் அவதரித்தபோது காட்டிய ரூபத்திலும், யசோதைக்கு பிரம்மாண்டத்தையும் காட்டிய விதத்திலும் எடுத்துக்கூறி விளக்குகிறார்.

ஜீவ ஈஸ்வர ஐக்யத்தைக் கண்டித்து, பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் உள்ள பேதங்களை வரிசைப்படுத்தி, முறையே பரமாத்மா சர்வக்ஞன், நித்யமுக்தன், சர்வதோஷ தூரன், பிறப்பு இறப்பு அற்றவன், லட்சுமி பிரம்ம ருத்ராதிகளால் வணங்கப்படுபவன், ஸ்வதந்திரன் என்பதையும், ஜீவன் அல்பஞானம் உள்ளவன், நித்யபத்தன், பாவங்கள் முதலான தோஷங்கள் உள்ளவன், பலவித யோனிகளில் பிறந்து துக்கங்களை அனுபவிப்பவன் என்பதையும், மீண்டும் மீண்டும் பலவித மேற்கோள்களையும், உதாரணங்களையும் எடுத்துக்காட்டி ஸ்பஷ்டமாக உரைக்கிறான் பகவான்.

ஜகத்தானது பொய், எல்லாம் மாயை என்று சொல்லும் மாயாவாதிகளின் தத்வங்களைக் கண்டித்து, தன்னுடைய மகிமைகளை சரியாகக்கூறும் மத்வ மதமே தனக்குச் சம்மதமான

மதம் எனவும், சம்சாரத்தில் இருந்து விடுபட சரியான மார்க்கம் எனவும், மத்வரின் சாஸ்திரம் சஜ்ஜனர்களுக்கு ஆனந்தத்தை அளிக்கும் அமிர்தம் போன்றது என்றும் கூறி, இதனை கௌரவத்துடன் ஏற்பவரை தான் ரட்சணை செய்வதாகக் கூறுகிறான் பகவான். இவ்விதம் தாரதம்ய கிரமத்தில் பிற தேவதைகளை வணங்கி, தன்னையே சர்வோத்தமன் என உணர்ந்து வணங்குபவர்களை ரட்சித்து, தரிசனம் அளித்து, சம்சாரத்திற்கு மீண்டும் திரும்பி வராமல் அருள் புரிந்து, மோட்சத்தையே அளிப்பதாக பகவான் பல-ஸ்ருதியைக் கூறி முடிக்கிறான்.

பகவானின் வசனங்களை பத்யங்களில் தொகுத்த ஸ்ரீவாதிராஜர், முடிவில் இந்த கிரந்தம் தனது உபாசனா மூர்த்தியான ஸ்ரீஹயக்ரீவன் கருணை கூர்ந்து சஜ்ஜனர்களுக்காக உரைத்த பதம் எனவும், இத்தகைய ரகசிய பிரமாணங்களைக் கூறும் இதனை எழுதி, படித்து, பாடும் சஜ்ஜனர்களுக்கு மோட்ச மார்க்கம் கிட்டும், சரியான தத்வங்களைக் கூறும் மதத்தை நிறுவக்கூடிய (பிரசார) பலத்தையும், வாதம் செய்யும் சாமர்த்தியத்தையும், தன் சரண கமலங்களை எப்போதும் தியானம் செய்யும் பாக்கியத்தையும், பகவான் அருள்கிறான் எனவும், பலஸ்ருதியைக் கூறி, இந்த கிரந்தத்தை பூர்த்தி செய்கிறார் ஸ்ரீவாதிராஜர்.

இத்தகைய உயரிய கிரந்தத்தை அனுதினமும் பக்தியுடன், விசேஷ அர்த்தங்களை தெரிந்து கொண்டு, பாராயணம் செய்து, ஸ்ரீஹயக்ரீவரூபி பரமாத்மாவின் அருளிக்கு பாத்திரராவோமாக.

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**

**** திரு.லட்சுமிபதிராஜா, சென்னை**

போட்டி

## மாதாந்திர குறும்போட்டி

### ஏப்ரல் 2020

இந்த இதழோடு முடியும் 'ஹரிதாச சாகித்ய பின்னணி' தொடரைப் பற்றிய கேள்விகள் இவை. கடந்த இதழ்களின் உதவியுடன் இந்தக் கேள்விகளுக்கு பதிலளிக்க முயலவும்.

1. தாஸ என்றால் என்ன பொருள்?
2. ஹரிதாசர்களின் கடமைகள் / தீக்ஷைகளைப் பற்றிய ஸ்ரீவிஜயதாசரின் சுளாதி எது?
3. கோபாள புட்டி என்றால் என்ன?
4. கோபாள புட்டியின் இன்னொரு பெயர்?
5. ___ இல்லத தேஹ நிஷித்த - என்கிறார் ஸ்ரீபுரந்தரதாசர்
6. நமக்குள் இருக்கும் ___ ரூபியின் பெயரைக் குறிப்பதே அங்கிதமாகும்.
7. ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசருக்கு அங்கிதம் கொடுத்த குரு யார்?
8. முத்துஸ்வாமி தீக்ஷித்ரின் அங்கிதம்?

* தயவு செய்து அனைவரும் இதில் பங்கேற்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.
* இருவருக்கு புத்தகப் பரிசு கிடைக்கும்.
* ஏப்ரல் 20க்குள் உங்கள் விடைகளை அனுப்பவும்.

*****

## ஹரிதாச விஜயம் - ஆன்லைனில் படிக்க

* 'Readwhere' Android/iPhone appனை Download செய்யவும்
* Search Boxல் 'Haridasa Vijayam' என்று தேடவும்.
* 1 ஆண்டு மின்னிதழ் சந்தா : ரூ.100
* அங்கேயே 'Subscribe' க்ளிக் செய்து, பணத்தைக் கட்டவும்.
* மாதாமாதம் Readwhere appல் 'Shelf'ல் புது இதழ், பிரதி 25ம் தேதி வெளியாகும்.
* eBook சந்தா பணத்தை எங்களுக்கு அனுப்பக்கூடாது.

# ஹரிதாச விஜயம்

## மாத இதழ்

Haridasa Vijayam - Monthly

மலர் 1 ** ஜூன் 2020 ** இதழ் 8



ஸ்ரீ ஸ்ரீபாதராஜ தீர்த்தர்

# ஹரிதாச விஜயம்

## சந்தா விவரம் (36 பக்கங்கள்)

1 ஆண்டுக்கு ரூ.200/-
3 ஆண்டுகளுக்கு ரூ.500/-
5 ஆண்டுகளுக்கு ரூ.900/-
10 ஆண்டுகளுக்கு ரூ.1700/-

புதிய சந்தாக்கள் அந்தந்த மாதத்திலிருந்து துவங்கும். பழைய இதழ்கள் வேண்டுமெனில், இதழுக்கு ரூ.20/- என சேர்த்து அனுப்பவும்.

## வங்கி விபரம்:

Sathya Narayanan, ICICI Bank - Savings account

A/c. No. 000101043177. IFSC: ICIC0000001

Cenotaph Road Branch, Chennai 18

| போட்டி | மாதாந்திர குறும்போட்டி |
|---|---|
| | ஏப்ரல் 2020ன் விடைகள் |

1. சேவகன் 2. ஹரிதாச லட்சண சுளாதி
3. ஜோல்னா பை (தோளில் தொங்கும் பிக்ஷை வாங்கும் பை / பாத்திரம்) 4. பவநாஷி 5. அங்கித 6. பிம்ப
7. ஸ்ரீனிவாசனே கனவில் வந்து கொடுத்தார். 8. குருகுஹ
* இந்த இதழுக்கான புத்தகப்பரிசு பெறும் இருவர்.

* சில கேள்விகளுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட சரியான பதில்களும் இருக்கலாம். அவற்றில் ஒன்றை மட்டுமே இங்கு குறிப்பிட்டுள்ளோம். ஹரிபக்தர்கள் அனைவரும் இப்போட்டியில் பங்கேற்குமாறு கேட்டுக் கொள்கிறோம். ***

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா



நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# **"ஹரிதாச விஜயம்"**

சிரி நிலயன குணகள '**திளிது**' பஜிசுவுதே

மலர் : 1 இதழ் : 8

**நிர்வாக ஆசிரியர்**

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross,
JP Nagar 4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276. haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**

'தாச சாகித்ய சேவா ரத்ன'
திரு. குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**

திரு. முரளிதர தாசரு, திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா, திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

# ஆசிரியர் பக்கம்

என்ன பின்னப கேளோ தன்வந்த்ரி தய மாடோ
சண்ணவனு இவ கேவல ।
பன்ன படிஸுவ ரோகவன்னு யோசனெ மாடி
சென்னாகி பாலிஸுவுது கருணி ॥

நடப்பு கொரோனா பிரச்னையில் உலகம் முழுவதும் சிக்கித் தவிக்கும் இந்த இக்கட்டான நேரத்தில் நாம் என்ன செய்ய வேண்டும் என்பதை நமது அனேக மாத்வ மத யதிகள் சொல்லிக் கொடுத்திரு க்கிறார்கள். ஜபம், பாராயணம், பூஜைகள் செய்வது, இணையத்தில் சிறப்பு வகுப்புகள் என பலவற்றையும் ஏற்பாடு செய்து கொடுத் திருக்கிறார்கள். அதன்படியே, வீட்டில் இருக்கும் இந்த சமயத்தில், 'சாதன ஷரீரவிது நீ தயதி கொட்டத்து' என்பதற்கேற்ப, தக்க சாதனை களை செய்து, ஸ்ரீஹரியின் அருளைப் பெறுவோம்.

ஹரிதாச விஜயம் ஏப்ரல் இதழ், மே 30ம் தேதி அனைவருக்கும் அனுப்பப்பட்டிருக்கிறது. வரவில்லை என்போர் தெரிவிக்கவும். மே இதழ் வெளியிடப்படவில்லை. ஆகவே சந்தாக்களை ஒரு மாதம் நீட்டி அப்டேட் செய்து விடுகிறோம். தொடர்ந்து இதில் வரும் தொடர்களைப் படித்து, மற்றவர்களுக்கும் தெரிவித்து, ஆதரவு தரவும்.

இந்த ஜூன் இதழ் உங்கள் கையில் வரும் முன்னர், ஸ்ரீஸ்ரீபாதராஜரின் ஆராதனை முடிந்திருக்கும். ஹரிதாச சாகித்யத்தின் முன்னோடியான, ப்ராத: ஸ்மரணீயரான அவரைப் பற்றி இந்த இதழில் ஒரு பதிவும், பாடலும் வந்திருக்கின்றன. அவர் அந்தர்யாமியான ரங்கவிட்டலன் அனைவரையும் அருளுமாறு வேண்டிக் கொள்கிறோம்.

ஸ்ரீகுருகோவிந்த விட்டலதாசரின் வாழ்க்கை சரிதம் இந்த இதழுடன் முடிவடைந்தது. அதற்கான கேள்வி பதில் போட்டியிலும் பங்கேற்கு மாறும், ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டியிலும் பங்கேற்கு மாறும் அனைவரையும் கேட்டுக் கொள்கிறோம்.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

தொடர்

# ஹரிதாசர்களின் வாழ்க்கை வரலாறு

## ஸ்ரீகுருகோவிந்தவிட்டல தாசர்

இப்போது தாசரின் சிஷ்ய சம்பத்தை சிறிது காண்போம். அவரிடம் வந்து பிரார்த்தித்த அனைவருக்கும் இல்லையென்று கூறாமல் அங்கிதத்தை அளிக்கும் ஓர் உயர்ந்த குணத்தைக் கொண்டிருந்தார். தாசர் கேட்டவுடனேயே தத்க்ஷணமே அங்கிதம் கொடுக்க மாட்டார். இறைவனிடம் பிரார்த்தனை செய்துகொள்வார். 'இவனுக்கு அங்கிதம் கொடுக்க உனது ஆணையைக் கொடு' என்று வீட்டு தெய்வத்திடம் பிரார்த்திப்பார். தம் பிம்பமூர்த்தியையும் பிரார்த்திப்பார். அன்று இரவு அல்லது மற்றொரு நாள், ஸ்வப்னம் மூலமாகவோ அல்லது வேறு விதமாகவோ இறைவன் ஆணை கிடைத்தால், உடனே சிஷ்யர்களை அழைத்து, அவர்களுக்கு அங்கித உபதேசம் அருளுவார். அங்கித பதம் செய்து கொடுப்பார்.

இவ்வாறாக தாசர் தம்முடைய ஜீவித காலத்தில் சுமார் 250 பேருக்கு அங்கிதம் அளித்துள்ளார். அவ்வளவு அங்கித பதத்தையும் இயற்றியுள்ளார். தாசரின் சிஷ்யர்கள், இந்தியாவின் பல பாகங்களிலிருந்து வந்தவர்கள். முக்கியமாக பெங்களூர், மைசூர், பல்லாரி, ஹைதராபாத், ஹுப்பள்ளி, பிஜாப்புர் என்னும் ஊரில் தாசரின் சிஷ்யர்கள் இன்னமும் இருக்கிறார்கள். அவருடைய சிஷ்யர்களும் விமரிசையாக ஸ்ரீபுரந்தரதாசரின் ஆராதனையை நடத்தி வருகிறார்கள். அனேக கிருதிகளை இயற்றிக்கொண்டு ஹரிதாச இயக்கத்தை சிறப்பாக நடத்தி வருகிறார்கள்.

தாசரின் குணங்கள் வர்ணிக்க இயலாதவை. தம் சொந்த வீட்டையே ஆலயமாக்கி பொதுவுடமையாக்கியவர். தமக்குக் கிடைத்த ஓய்வூதியத்தை அப்படியே தர்ம கிரந்தங்களை பிரசுரிக்க செலவழித்து வந்தார். தமக்காக எதையும் சேர்த்து வைக்கவில்லை. தம் மனைவி இறந்தபோதும் தாசர் நிதானத்தை இழக்காமல், ஹரி, குரு, தாச வேலைகளை செம்மையாக செய்து வந்தார். தாசர் ஒரு கட்டுப்பாடுடன் மிகவும் உத்தமமான ஒழுக்க வாழ்வை நடத்தி வந்தார். இந்தக் காரியம் செய்யவேண்டும் என்று தீர்மானித்தால், அந்தக் காரியத்தை எவ்வளவு நஷ்டம் வந்தாலும் செய்து முடித்து விடுவார். முன் வைத்த காலை பின்வைக்க மாட்டார். தாசருக்கு மனோ தைரியம் அதிகம். உற்சாகத்துடன் காரியங்களை செய்வார்.

தாசர் யாருடைய மனமும் நோகாமல், மிருதுவாக பேசுவார். அதே சமயம் எல்லார் மூலமும் தாம் நினைத்த காரியத்தை நிறைவேற்றுவார். மிகவும் சாமர்த்தியசாலி. கடிதம் எழுதுவதில் (Letter writing) அவர் நிபுணர். கடிதங்களில் அனாவசியமாக ஒரு வார்த்தையும் உபயோகிக்க மாட்டார். விஷயங்களை சுருக்கமாகவும், நேருக்கு நேராகவும், எளிமையாகவும் எழுதுவார். கடிதம் வந்த அன்றே பதில் போட்டுவிடுவார்.

தாசர் என்றும் எக்காரணத்தைக் கொண்டு பிறரை இகழ்ந்ததே இல்லை. பரதூஷணம் தாசருக்குப் பிடிக்கவே பிடிக்காது. பகைவனுக்கும் அருளும் நன்னெஞ்சம் உள்ளவர். அவருக்கு ஆடம்பரம், வெளிவேஷம், ஆஷாடபூதித்தனம் இவை பிடிக்கவே பிடிக்காது. என்றைக்கும் நித்யகர்மங்களான சந்தியாவந்தனம், தேவரபூஜை, சாஸ்திர வியாசங்கம் இவற்றை விட்டதே கிடையாது. தேவரபூஜை முடியும் வரையில் தாசர் காபி முதலிய வஸ்துக்கலை சாப்பிட்டதெ கிடையாது. உடலால், உள்ளத்தால், வாக்கினால் உண்மையான மாத்வராக விளங்கியவர் தாசர். ஜாதி, மத, மட பேதங்களை இவர் பார்த்ததே கிடையாது. யாரையும் மட்டமாக பார்த்ததேயில்லை.

ஸ்ரீபேஜாவர மடாதீசரான ஸ்ரீவிஸ்வேச தீர்த்தர், 1978ம் ஆண்டில், பெங்களூர் ஸ்ரீநகரத்தில், பரிமள கௌயர பளக என்ற சங்கத்தவர் ஏற்பாடு செய்த ஸ்ரீராகவேந்திர ஸ்வாமி ஆராதனையன்று தாசருக்கு, 'ஹரிதாச குலதிலக' என்ற விருதை வழங்கினார். 1980ம் ஆண்டு, புரந்தரதாசர் ஆராதனையன்று ஹைதராபாத் நகரவாசிகள் 'தாசதர்ம பிரவர்த்தக' என்னும் விருதை வழங்கினர். அந்த விருதை சோதே வாதிராஜ மடாதீசரான ஸ்ரீவிஸ்வோத்தம தீர்த்தர் தாசருக்கு வழங்கினார். அனைத்து விருதுகளையும் தாசர் தம் குருவிற்கே அர்ப்பணித்தார். தாசர் தம் வாழ்நாளின் கடைசி நிமிடம் வரையில் 'ஹரிதாச கைங்கர்யம்' மிகவும் தீவிரத்துடன் செய்தார். சம்சார அவஸ்தையில் இருந்தாலும், அதற்கு அடிமையாகாமல், ஹரிசேவை செய்தே வாழ்ந்து வந்தார். ஆன்மிக வாழ்வை செவ்வனே நடத்தினார் தாசர்.

குருகோவிந்த விட்டலதாசரின் இறுதி யாத்திரை அவருடைய 89வது வயதில், அனந்தபூரில், அவருடைய மகன் வீட்டில் நடந்தேறியது. 11-01-1983யன்று, மார்கசிர பகுள த்வாதசியன்று தமது பரமபத யாத்திரையை மேற்கொண்டார். குருகோவித்த விட்டலமூர்த்தியை காண்பதற்கு வைகுண்டத்திற்கு ஓடியே போய்விட்டார் தாசர். உலகம் அழுதது. ஆனால், அவர் ஆனந்தத்துடன் ஹரியின் தரிசனம் செய்ய சென்றே விட்டார்.

சென்ற 20ம் நூற்றாண்டை ‘குருகோவிந்த விட்டலதாசரின்’ சாதனை யுகம் என்றே அழைக்கலாம். தாசோத்தம ஸ்ரீகுருகோவிந்த விட்டலதாசரின் திருவடித் தாமரைகளில் சிரம் தாழ்த்தி கரம்கூப்பி, விடை பெறலாம். வாரீர். சுபமஸ்து.

குருகோவிந்த விட்டல தாசர நெனெதரெ
துரிதகளெல்லவு பரிஹரவு ।
பாரதீச குரு மருதாந்தர்கத
திருமலேச ஹரி விட்டல ஹொளெயுவ ॥

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

** இத்துடன் இந்த தொடர் முடிவுற்றது**

**** திரு. குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்**

https://hks-bhavaprakashike.blogspot.in என்னும் இணைய தளத்தில் ‘பாவபிரகாசிகை’ என்னும் (ஹரிகதாம்ருதசாரத்தின்) கன்னட உரையின் தமிழாக்கம் - தினமும் 3 பத்யங்கள் - என்று வெளியிடப்பட்டு வருகிறது. அனைவரும் அந்த தளத்தில் முதல் பதிவிலிருந்து - தொடர்ந்து - தினந்தோறும் படிக்க வேண்டும் என்பது எங்களின் வேண்டுகோள். ஹரிகதாம்ருத சாரத்தில் ஈடுபாடுள்ள அனைத்து தமிழ் மாத்வர்களுக்கும் இதனை தயவு செய்து தெரிவிக்கவும்.***

தொடர்



## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி
## மங்களாசரண சந்தி - விடைகள்

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| [1]ஹ | ரி | க | தா | ம் | ரு | த | ஸா | ர | ம் | | | |
| ம் | | | | | | | | [2]ஸ | ப் | [24]த | ம் | |
| [3]ஸ | ர | ஸ் | வ | தி | | | | | | த் | | |
| ம | | | | | | ல் | தோ | த் | லி | [17]பு | | |
| ந் | | | | | | | | | ட | ரு | [18]க | |
| தி | [25]ஸ | ம் | வி | ர | து | [19]ச | | | [4]சே | ஷ | ச் | |
| ர | ரோ | | [5]து | ர் | [29]கா | | | | | | ச | |
| ம் | ஜ | | | | | | | [6]க | [26]தா | | பீ | |
| | | ர | த் | ந் | ணீ | [20]ப | | [7]ந | ர | ஸி | ம் | ஹ |
| | [8]உ | மா | | | [9]வா | யு | | [10]பா | த | ரா | ய | ண |
| | | ஹ் | | [27]ரு | கு | த் | க | [21]ஜ | ம் | | | |
| | | [11]ப் | ர | த் | யு | ம் | ன | க | யா | | | |
| | [12]இ | ந் | த் | ர | ன் | | | க்ஷே | | | | |
| | | | | ன் | | | [13]ஸ | த் | வ | | | |
| | ரி | | | | | | [14]ப் | ர | [28]ப | ஞ் | ச | ம் |
| [15]வே | த | வ் | யா | ஸ | ர் | | | ம் | தி | | | |
| த | [30]ப | | க் | [22]வா | | | | | மூ | | | |
| வ | | | | [16]ஸ் | ர | த் | தா | | ன் | | | |
| தி | த | ம | க | [23]நி | | | | | று | | | |

* இதற்கான பதிலை எழுதி புத்தகப் பரிசு பெறுபவர்:

** திருமதி. ப்ரமிளா சாந்தி, திருநெல்வேலி டவுன்.

தொடர்

## ஹரிதாசர்களின் சிந்தனை முத்துக்கள்

## ஸ்ரீஸ்ரீபாதராஜர்

யத்ப்ருந்தாவன சேவயா சுவிமலாம் வித்யாம் பஷூன் சந்ததிம்
த்யானம் ஞானமனல்ப கீர்த்தினிவஹம் ப்ராப்னோதி ஸ்ரீக்ரம் ஜன :|
தம் வந்தே நரசிம்மதீர்த்த நிலயம் ஸ்ரீவியாசராட் பூஜிதம் |
த்யாயந்தம் மனஸா ந்ருசிம்ஹசரணம் ஸ்ரீபாதராஜம் குரும் ||

ஸ்ரீமதாசார்ய மத்வரின் சித்தாந்தம் மற்றும் ஹரிதாச சாகித்ய பரம்பரைக்கு பிதாமகர் நிலையில் இருப்பவர் ஸ்ரீபாதராஜர். இவரது தலைமை மற்றும் வழிகாட்டுதலில் ஹரிதாச சாகித்யம் வளர்ந்து தற்போதைய பிரம்மாண்ட நிலைக்கு வந்துள்ளது. வியாச & தாச சாகித்யங்களில் திறன் பெற்ற ஸ்ரீபாதராஜர், ஸ்ரீவியாசராஜர் போன்ற மகான்களை தயார் செய்தாலும், கூடவே ரங்கவிட்டலா என்னும் அங்கிதத்துடன் ஹரிதாச சாகித்யத்திற்கு சுழி போட்டதைப் போல, பல பாடல்களை இயற்றி இந்த சாகித்யத்தை சிரஞ்சீவி யாக்கியிருக்கிறார். இத்தகைய மகானை நினைத்த மாத்திரத்தில் சுவையான உணவும், வணங்கினால் நன்மையும், இஷ்டார்த்தங்களும், பூஜித்தால் சுக்ஞானமும் கிடைக்கும்.

ஸ்ரீமதானந்த தீர்த்தரின் சாட்சாத் சிஷ்யரான பத்பனாப தீர்த்தரின் பரம்பரையில் வந்த எட்டாவது யதிகளான ஸ்ரீசுவர்ணவர்ண தீர்த்தரின் சிஷ்யர் ஸ்ரீலட்சுமிநாராயணமுனிகள். கிபி 1406 பிறந்த இவர் சுமார் 1412ல் ஸ்ரீரங்கத்தில் சன்யாசம் பெற்றார். ஒருமுறை கொப்பர க்ஷேத்திரத்தில் சுதா பாடம் படிக்கும் சந்தர்ப்பத்தில் அங்கு வந்த அன்றைய உத்தராதி மடாதீசரான ஸ்ரீரகுனாத தீர்த்தரால் புகழப்பட்டு ஸ்ரீபாதராஜர் என்று பெயர் பெற்றார். முளபாகிலில் வித்யாபீடத்தை நிறுவி சன்யாசிகளுக்கு, பல கிருஹஸ்தர்களுக்கு பாட பிரவசனங்களை நிரந்தரமாக நடத்திய புண்யாத்மர். சம்ஸ்கிருதம் மற்றும் கன்னடம் என இரு மொழிகளிலும் சித்தாந்த பிரசாரம் செய்வதை மிகவும் விரும்பினார். சம்ஸ்கிருதத்தில் வாக்வஜ்ர என்னும் மிகச்சிறந்த கிரந்தத்தை இயற்றினார். கன்னடத்தில் பல கீர்த்தனைகள், உகாபோகங்கள், நரசிம்ம தண்டகம், மத்வ நாமா, பிரமர கீதே, வேணுகீதே ஆகிய கிருதிகளை இயற்றினார். விஜய நகரத்தின் சாளுவ நரசிம்மனிடமிருந்து ரத்னாபிஷேகம், ராஜனுக்கு வந்த பிரம்மஹத்யா தோஷத்தை நிவர்த்தி செய்தல், நரசிம்ம

தீர்த்தத்தில் பாகீரதியை தருவித்தது - என பல அற்புதங்களை செய்தார். ஸ்ரீஹயக்ரீவதீர்த்தருக்கு பீடத்தைக் கொடுத்து 1504 ஜ்யேஷ்ட சுத்த சதுர்தசி முளபாகிலில் பிருந்தாவனத்தில் பிரவேசித்தார். அன்றிலிருந்து அவரை நம்பி வந்த பக்தர்களுக்கு அருள் பாலித்து வருகிறார்.

ஹரிதாச பரம்பரையே ஸ்ரீபாதராயர் மேல் பற்பல கிருதிகளை இயற்றியிருக்கிறது:இவரது வித்யா சிஷ்யரான ஸ்ரீவியாசராஜர் .

மஹிமே சாலதே இஷ்டே மஹிமே சாலதே ||ப||
அஹிஷயனன ஒலுமெயிந்த மஹியொளெம்ம ஸ்ரீபாதராயர ||அப||

முத்தின கவச மேல்துராயி ரத்ன கெத்தித கர்ண குண்டல |
கஸ்தூரி திலக ஸ்ரீகந்த லேபன விஸ்தாரந்திந்த மெரெது பருவ ||1||

விப்ரகெ பிரம்மஹத்ய தோஷ பரலு க்ஷிபர சங்கோதகதி களெய |
அப்ரபுத்தரு தூஷிஸே கெரெண்ணெ கப்பு வசன ஹஸன மாடித ||2||

ஹரிகெ சமர்ப்பிஸித நானா பரிய சாகங்களனு புன்ஞிஸே |
நரரு நகலு ஸ்ரீச கிருஷ்ணன கருணதிந்த ஹசெய மாடித ||3||

ஸ்ரீபாதராஜரின் அருள் அனைவருக்கும் கண்டிப்பாகத் தேவை என்கிறார் ஸ்ரீவிஜயதாசர்.

இவர பிரசாதவாதரெ வியாஸமுனிராயா
கவிராய புரந்தரதாசரு மிகிலா
தவர கருணவின்னு ஸித்திசுவுது கேளி
நவபகுதி புட்டுவுது வ்யக்தவாகி
தவகதிந்தலி சரமதேஹவெ பருவுது
திவிஜரு ஒலிது சத்கர்ம மாடிசுவரு
கவினுத நம்ம விஜயவிட்டலரேய
திவாராத்ரிகளலி அவர கூடாடுவே ||

**** திரு.ஏ.பி.ஷ்யாமாச்சார், பெங்களூரு**

தொடர்

## கேசவ நாமா

## 6. குப்பியாளோ - ஸ்ரீவாதிராஜர் கிருதி

குப்பியாளோ கோவிந்தா கோவிந்தா
கோவிந்த கோவிந்தனெந்து நெனெயிரோ குப்பியாளோ ||ப||

குப்பியாளோ என்னும் சொல்லை ஒவ்வொரு வரியிலும் பயன்படுத்தி, அதன் மூலம் ஸ்ரீஹரியின் நாமங்களைப் பாடும், அந்த நாமங்களை நினைத்தால் வரும் பலன்களை சொல்லும் கேசவ நாம இது. நாட்டுப்புற பண்ணில் பாடப்படுகிறது. கோ - என்றால் பசு, ஆகாயம், பூமி, வேதம். இவற்றைக் காப்பவன் மற்றும் இவற்றின் தலைவன் - கோவிந்தன்.

குப்பியாளோ - பறவைகளில் மிகச்சிறியது குருவி. பெரியது கருடன். அந்தக் குருவியை ஜீவனுக்கு ஒப்பிடுகிறார். குருவியானது ஒரு நிமிடமும் ஓரிடத்தில் தங்காது, தன் உணவுக்காக அலைந்து / பறந்துகொண்டே இருப்பதைப் போல, ஜீவர்களும் தங்களின் வினைப்பயனுக்கேற்ப பற்பல யோனிகளில் பிறந்து அந்தந்த சரீரத்தைப் பெற்று வாழ்கின்றனர். இந்த குருவியைப் போல இருக்கும் ஜீவனை ஆள்பவன் கோவிந்தன்.

கேசவன்ன நெனெதரெ க்[1]லேஷ பரிஹாரவு குப்பியாளோ
நாராயணன தியானதிந்த நரகப[4]ய இல்லவோ குப்பியாளோ ||1

மாதவன நெனெதரெ மனோபீஷ்ட கொடுவொனு குப்பியாளோ
கோவிந்தன தயதிந்த கோ[4]ரது[3]ரித[1] நாஷனவு குப்பியாளோ ||2

விஷ்ணு பஜனெயில்லாதவகெ வைஷ்ணவர ஜென்மவுண்டே குப்பியாளோ
மதுசூதனன த்யானதிந்த அதி[1]ஷயவு இஹுதோ[3] குப்பியாளோ ||3

த்ரிவிக்ரமன நெனெதரெ சாவித்ரியாகி[3]ஹரோ குப்பியாளோ
வாமனதேவரு நமகெ வரகள கொடுவோரு குப்பியாளோ ||4

ஸ்ரீதரன்னு நெனெதரெ சிரி நமகெ ஒலிவளு குப்பியாளோ
ஹ்ருஷிகேஷன த்யானதிந்த ஹ்ருதய பரிசுத்தவோ குப்பியாளோ ||5

பத்பனாப நம்மெல்லர பாலிஸி ரக்ஷிபனு குப்பியாளோ
தாமோதரன நெனெதரெ பாமரத்வ பிடிசுவனொ குப்பியாளோ ||6

சங்கர்ஷணன தியானதிந்த சந்தா1ன அபிவ்ருத்தியு குப்பியாளோ
வாசுதேவன தயதிந்த வம்ஷ உத்தா4ரவோ குப்பியாளோ ||7

ப்ரத்யும்னன நெனெதரெ பூ4ப்ரதக்ஷிணெ ப2லவு குப்பியாளோ
அனிருத்தன சேவிஸி புனீதராஹரோ குப்பியாளோ ||8

புருஷோத்தமன்ன புராண புருஷனெந்து தி1ளியிரோ குப்பியாளோ
அதோக்ஷஜ நம்மெல்லர ஆதா3ரவாகிஹனோ குப்பியாளோ ||9

நரசிம்ஹதேவரு நம்ம குலதெய்வரு குப்பியாளோ
அச்யுத லக்ஷ்மியு கூடி சச்சிதானந்தனோ குப்பியாளோ ||10

ஜனார்த்தன தேவரு ஜக3க்கெ1ல்ல ஸ்ரேஷ்டரு குப்பியாளோ
உபேந்த்ரனு நம்ம அபராத3வ க்ஷமிசுவனோ குப்பியாளோ ||11

ஹரி நாமாம்ருதக்கெ சரி த4ரெயொளகெ இல்லவோ குப்பியாளோ
ஸ்ரீகிருஷ்ண ரங்கே3ஷயெம்போ சித்த3க்1ரியபல்லரெ குப்பியாளோ ||12

ஈ கு3ப்பி3 பாடுவரிகெ இஹபரவு ஸந்த1த1வு குப்பியாளோ
த4ரணியொளு அச1ந்திரார்க்க தா1ரக1வாகி3ஹவு குப்பியாளோ ||13

ஹயவதனன்னு பாதத்யான நித்ய மரெயதெ நீ நெனெ மனவெ
நம்ம ஹயவதனன்ன பாதவே நித்ய மனவெ குப்பியாளோ ||14

ஒரே நாமத்தினாலேயே அனைத்தும் கிடைக்கும். இப்படி பற்பல நாமங்களைக் கூறினாலும் அனைத்தும் கிடைக்கும். ஆனால் அந்த நாமங்கள் வெவ்வேறாக இருந்தாலும், அவற்றில் ஐக்கியத்தை சிந்திக்க வேண்டும் என்கிறார் ஸ்ரீவாதிராஜர்.

பகவந்தனை நினைத்தால், தியானித்தால், பஜித்தால் ஜீவனுக்கு கிடைக்கும் பலன்களை இந்த கேசவ நாமாவில் விளக்கியிருக்கிறார் ஸ்ரீவாதிராஜர்.

1. கேசவனை நினைத்தால் துக்கங்கள் போகும்.
2. நாராயணனை தியானித்தால் நரக பயம் இருக்காது.
3. மாதவனை நினைத்தால் மனதில் நினைத்தவை நடக்கும்.
4. கோவிந்தனின் தயவால் வினைப்பயன்கள் அகலும்.
5. விஷ்ணு பஜனையினால் வைஷ்ணவ பிறவி கிடைக்கும்.
6. மதுசூதனனை தியானித்தால் சுகங்கள் கிடைக்கும்.
7. த்ரிவிக்ரமனை நினைத்தால் (நித்ய சுமங்கலியான) சாவித்ரியின் அருள் கிடைக்கும்.
8. வாமனன் அருளி வரங்களைக் கொடுப்பான்.
9. ஸ்ரீதரனை நினைத்தால் ஸ்ரீ (லட்சுமிதேவி) கருணை காட்டுவாள்.
10. ஹ்ருஷிகேசனை தியானித்தால் இதயம் சுத்தமாகும்.
11. பத்பனாபன் அனைவரையும் காப்பாற்றுவான்.
12. தாமோதரனை நினைத்தால் நற்புத்தி கிடைக்கும்.
13. சங்கர்ஷணனின் தியானத்தால் நம் பரம்பரை வளரும்.
14. வாசுதேவனின் தயவால் வம்சம் செழிக்கும்.
15. ப்ரத்யும்னனை நினைத்தால் புவியை சுற்றி வந்த பலன் கிடைக்கும்.
16. அனிருத்தனை நினைத்தால் புனிதமடைவோம்.
17. புருஷோத்தமனே புராணங்களில் வணங்கப்படுபவன் என்று அறிவோம்.
18. அதோக்ஷஜனே நம் அனைவருக்கும் ஆதாரமானவன்.
19. நரசிம்மனே நம் குலதெய்வம்.
20. அச்யுதன், லட்சுமிதேவியுடன் சச்சிதானந்த ரூபமாக இருக்கிறான்.
21. ஜனார்த்தனனே அனைவரிலும் மிகச் சிறந்தவர்.
22. உபேந்திரன், நம் தவறுகள் அனைத்தையும் மன்னிப்பவர்.
23. ஹரிதாமம் என்னும் அமிர்தத்திற்கு சமமானது இந்த உலகிலேயே இல்லை.
24. ஸ்ரீகிருஷ்ணனே (விஷ்ணு) அனைத்து ஜீவர்களுக்கும் தலைவன்.

இப்படியான பலன்களை அறிந்து, சாதனைகளை செய்து, ஹயவதனின் பாத தியானத்தை தினந்தோறும் செய்தால், இந்த கேசவ நாமத்தை பாடுபவர்களுக்கு இஹ-பரங்களில் ஆனந்தம் கிடைக்கும் மற்றும் சூரிய சந்திரர்கள் இருக்கும்வரை கோவிந்தன் அவர்களை காப்பாற்றுவான்.

**7. அச்யுதானந்த கோவிந்த-** இயற்றியவர் : ஸ்ரீபுரந்தரதாசர்

அச்யுதானந்த கோவிந்த ஹரி
சச்சிதானந்த ஸ்வரூப முகுந்த ||ப

நாம-த்ரயங்களான அச்யுத, அனந்த, நாராயண என்னும் பெயர்களைக் கொண்டவனான, மூன்று உலகங்களுக்கும் தலைவனான, ஸ்ரீஹரி, சச்சிதானந்த ஸ்வரூபனான முகுந்தன். ('சத்' என்றால் தோஷங்கள் அற்ற. 'சித்' என்றால் ஞானபூர்ணன். 'ஆனந்த' என்றால் ஆனந்தபூர்ணன்). சாதகர்கள் அவனின் குணங்களை அறிந்து, உபாசனை செய்யவேண்டும் என்பது தாசரின் அபிப்பிராயம்.

கேசவ கிருஷ்ண முகுந்த ஹரி
வாசுதேவ குரு ஜக$^{3}$தா$^{3}$தி$^{3}$ வந்த்$^{3}$ய
யஷோதெய சுக்ருத$^{1}$த$^{3}$ க$^{1}$ந்த$^{3}$ ஸ்வாமி
சேஷசயன பக்த ஹ்ருதயானந்த ||1

கேசவ, கிருஷ்ண, முகுந்த, ஹரி, வாசுதேவ என்னும் பெயர்களையுடையவன், இந்த உலகத்திற்கே குருவாகி, வணங்கத்தக்கவனாக இருக்கிறான். (குருவுதனதலி நோடெ ஜகதாதி குருவு - வேறொரு பாடலில் வரும் வரி). தேவகி வசுதேவனின் குழந்தை வாசுதேவன், யசோதையின் புண்ணியத்தின் பலனாக அவளுக்கு மகனாகி பிறந்து, சேஷ சயனனாக, பக்தர்களின் இதயத்தில் வாசம் செய்து அவர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிறான்.

நாராயண நிம்ம நாமவென்ன
நாலிகெ$^{3}$ மேலிரபே$^{3}$கெ$^{1}$ந்து நேம
நானு பே$^{3}$டு$^{3}$வெ நிம்ம நாம ப்1ராண
பயண சமயகொ$^{1}$த$^{3}$க$^{3}$லி கு$^{3}$ணதா$^{4}$ம ||2

'நாராயண, நின்ன நாமத ஸ்மரணெ என்ன நாலிகெகெ பரலி' என்று சொன்னாலும், என் மரண சமயத்தில் அந்த உன் நாமமானது என் நாக்கில் வந்து நின்று என்னை காப்பாற்றுமாறு அருள் செய். (ஜகன்னாததாசரின் அபிப்பிராயத்தில், நாமஸ்மரணையும்கூட ஒரு நற்குணமாகும்).

** திருமதி. ஜெயம்மா, பெங்களூரு

**ஆராதனை**

## ஸ்ரீபாதராஜர்

## இக்கோ நோடே ரங்கனாதன

இந்தப் பிறப்பில் செய்யும் விதவிதமான பாவங்கள், மற்றவர்களுக்கு / உடன் இருப்போருக்கு நான் கொடுக்கும் தொந்தரவுகள் / துன்புறுத்தல்கள், இவை எதுவும் வேண்டாம், ஏன் என்னை மறுபடி மறுபடி பிறக்க வைக்கிறாய்? உன் பக்தர்கள் அனைவரையும் நீ காப்பாற்றியதைப் போல், என்னையும் காப்பாற்று. இப்போதைக்கு, இந்தப் பிறவியில், நான் எப்போதும் உத்தமர்களுடன் இருக்கச் செய், மேன்மேலும் பாவங்களைச் செய்ய வைக்காதே - என்றெல்லாம் மனமுருகி பகவந்தனிடம் வேண்டுகிறார் ஸ்ரீபாதராயர்.

ஞான, பக்தி, வைராக்கியத்தை அடைந்து, இறைவனை தொடர்ந்து வழிபட்டு, அவனை அடைந்த ஸ்ரீபாதராயரே இப்படியெல்லாம் பாடினால், ஸ்ரீஜகன்னாததாசர் ஹரிகதாம்ருதசாரத்தில் சொல்வதைப் போல, ‘நரர பாடேனு?’ - நம் போன்ற சாதாரண பாமர மக்களின் கதிதான் என்ன?

ஆனால், குருகளான ஸ்ரீபாதராஜர் பாடுவது நமக்கான பாடங்கள் என்று எண்ண வேண்டும். அவர் சொன்னதைப் போல, பின்பற்றி நாமும் பகவந்தனிடம் வேண்டிக் கொள்வோம்.

உத்தமர சங்க எனகித்து சலஹோ
சித்த ஜனக சர்வோத்தம முகுந்தா (உத்தமர)

உத்தமர்கள் உடனே என்னை எப்போதும் இருக்கச் செய்
அனைவரில் உத்தமரே, முகுந்தனே, (உத்தமர)

திருதிருகி புட்டலாரே பரர பாதிசலாரே
பரிபரிய பாபகள மாடலாரே
மரண ஜனனகளெரடு பரிஹார மாடய்யா
கருணா சமுத்ரா முரவைரி கிருஷ்ணா (உத்தமர)

*** தொடர்ச்சி 18ம் பக்கத்தில்...

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

**கருணா சந்தி**

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | | 21 | | | | | | 22 | | 23 |
| | | | | | | | | | | | | | |
| | | | 16 | | | | | | | | | | 17 |
| | | | | | 2 | | | 33 | | | | | |
| 3 | 24 | | | 4 | | | | | | 25 | | | |
| | | 18 | | | | | | | | 5 | | | |
| | | | | | | 6 | | | | | | | |
| | | | | | | | | | | | | | 34 |
| | | | | | 26 | | | | | | | | |
| | 7 | | | | | | | | | 27 | 28 | | |
| | | | | | | | | | 8 | | | | |
| | 29 | | | | | | | | | | | | |
| | | 30 | 19 | | | 9 | | | | | | | |
| | | | | | 10 | | | | | | | | |
| | | | | | | 11 | | | | | | | |
| | | | | | | | | 12 | | 31 | | | |
| | | | | | | | | | 13 | | | | |
| | | 32 | 20 | | | 14 | | | | | | | |
| | | | | | | | | | | | | | |
| | | 15 | | | | | | 35 | | | | | |

* வடிவமைத்தவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி.
* இதற்கான விடைகளை மே 15ம் தேதிக்குள் வாட்சப்பிலோ, மெயிலிலோ அனுப்பலாம்.
* சரியான விடைகள் தரும் இருவருக்கு புத்தகப் பரிசு கிடைக்கும்.

வலமிருந்து இடம்:

1.ஹரிகதாம்ருதஸாரத்தின் இரண்டாம் ஸந்தியின் பெயர்.(6) 2.ஸிவனின் தொழில் (5) 3. தேகம் இருக்கும் ப்ராணிகளை இப்படி அழைப்பர். ஆண்களை இப்படியும் அழைப்பர். (3) 4.படைத்தல் - வேறு சொல் (4) 5. கிருஷ்ணனுக்கு அவல் கொடுத்த நண்பன். (3) 6. தேவகங்கையின் வேறு பெயர். (8) 7. பரமாத்வாவின் மூன்று வீடுகளில் முதன்மையானது. (7) 8. கிருஷ்ணனை இந்த வர்ணத்துடன் ஒப்பிடுவர். கடலின் நிறமும் கூட. (5) 9. கேட்டதை கொடுக்கும் பசு. (4) 10. பாற்கடல் - வேறு பெயர் (5) 11. தாஸர் துக்கத்தை இந்த சொல்லால் விவரிக்கிறார். (2) 12. குழந்தைகளின் மழலை சொல் (4) 13. ஸமுத்திரம் - வேறு சொல் (4) 14. ருத்ர தேவனை பரமாத்மா இந்த ரூபத்தில் மோஹித்தான். (3) 15. உடம்பில் ஏற்படும் அரிப்பு (3)

இடமிருந்து வலம்:

16. துர்யோதன - வேறு பெயர் (4) 17. கேட்டதை கொடுக்கும் மரம் (6) 18. கஷ்டப்படும் ஜீவன் (3) 19. த்ருதராஷ்டிரன், பாண்டுவின் தம்பி. கிருஷ்ணனின் பக்தன் (4) 20. எல்லை அற்றவன் (4)

மேலிருந்து கீழ்:

1.ஆகாயம் (3) 4. உத்தமமானவன் (4) 6. உயிரற்றவை (4) 9. கங்காபுத்ரரான பீஷ்மர் (4) 10. செங்கல் (5) 14. ஸந்தோஷம் (2) 18. இதற்கு அபிமான தேவதை ஜயந்தன். நம் உடல் உறுப்பும்கூட. (3) 19. ஆபரணம் (4) 21. தேவதைகள் (5) 22. அரசன். (3) 23. பிச்சை எடுத்தல் (4) 24 அழித்தல் தொழிலை செய்பவர் (4) 25. பூமியின் தேவதைகள் எனக்கருதப்படும் ப்ராஹ்மணர்கள் (4) 26. உடை அல்லது வஸ்த்திரம் (3) 27. வீடு (3) 28. பெண் (3) 29. நாராயணனின் நாபிக்கமலத்தில் உதித்தவர். (4) 30. துன்பம் (3) 31. ஆகாயகங்கை (4) 32. வேதம் (3)

கீழிருந்து மேல்:

33. விஷ்ணுவின் காத்தல் தொழிலை இப்படியும் அழைக்கலாம். (3) 34. ஸர்ப்பம் (2) 35. தாய் (3). ***

வங்கிக் கணக்கில் சந்தா செலுத்தினால், மறக்காமல் உங்கள் முகவரியை **89044 58276** எண்ணுக்கு வாட்சப் / SMS அல்லது **haridasa.vijayam@gmail.com**க்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

தொடர்

**சுளாதி பக்கங்கள்**

**ஸ்ரீராகவேந்திர சுளாதி (தொடர்ச்சி)**

**அட்ட தாள**

**ராக4வேந்தி3ரனெம்ப ரூப தானெயாகி3**
**ராக4வேந்த்3ரனெம்ப நாம இடி3ஸிகொண்டு3**
**ராக4வேந்த்3ரரின்னு மாடி3த3ந்த2 புண்ய**
**போ4க3வரிது தன்ன பா4க3வதர கீர்த்தி**
**ஸாதி4ஸி ஸலஹலு ஜக3தொ3ளகெ3ல்ல**
**மேக4 ஸூர்யனந்தெ அமோக4 கீருதியனு**
**ராகவ4 இவரிகெ3 ராஜ்யதி3 தந்தி3த்த**
**ராக4வேந்த்ர மூருதி கோ3பாலவிட்ட2ல**
**பா4க3வதரல்லி பஹுபூஜெயனுகொ3ம்ப3**

**ஸ்ரீஹரி எவ்வளவு விசித்திரங்களை செய்கிறான் பாருங்கள். ராகவேந்திர என்னும் ரூபம் அவனே ஆகிறான். ராகவேந்திர என்னும் பெயரும் அவனே தரித்துக் கொள்கிறான். ஸ்ரீராகவேந்திர குரு செய்த புண்ணியங்களை முறையாக பக்தர்களுக்கு வாரி வழங்குகிறான். மூன்று லோகங்களிலும் மழை பொழிவது போல கீர்த்தி, புகழ் இவற்றை குரு ஸ்ரீ ராகவேந்திரருக்கு ஸ்ரீராமன் பொழிகிறான்.**

**பக்தி சம்ராஜ்யத்திற்கு அதிபதி ஆக்குகிறான். ஸ்ரீகுரு ராகவேந்திரரின் மன தெய்வமான ஸ்ரீஹரி கோபால விட்டலன், பாகவதர்களிடமும் பக்தர்களிடமும் பூஜையை ஏற்றுக் கொள்கிறான். (ஸ்ரீஹரி, ராகவேந்திர என்ற பெயரில் ராகவேந்திரரிடம் விளங்கி, எல்லா அபீஷ்டங்களையும் கருணிக்கிறார் என்பதே கருத்து).**

**ஆதி தாள**

**தி3னதி3னகில்லி நூதன பூஜெக3ளாகு3வுவு**
**தி3னதி3னகில்லி நூதன உத்ஸவவாகு3வுவு**

**தி3னதி3னகில்லி நூதன வார்தெக3ளாகு3வுவு**
**ஜனர ஸந்த3ணி ப்ரதிதி3ன விப்ரபோ4ஜன**
**ஜனர கையிந்த3 ப்ரதிஜனரீப்ஸித தும்பு3வரு**
**ஜனும ஸப2ல தம்ம ஜனனவ நீகு3வரு**
**தி3னஸப்த ஷத வருஷதி3ன பரியந்தர**
**தி3னகரஷததேஜ ஜகன்னாத2 தானில்லி**
**அனுவாகி3 தா நிந்து3 ஜனர பாலிபுத3**
**க்கனுமான ஸல்லது கு3ணக3ண பரி**
**பூர்ண கோ3பாலவிட்டல அணோ**
**ரணேணு எம்பு3வகெ3 எணெயாரோ ஜக3தொளகெ3**

**ஸ்ரீகுரு ராகவேந்திரரின் பிருந்தாவனத்தில் தினம் தினம் நூதன (புதிய) பூஜைகள் ஆகின்றன. தினம் தினம் நூதன வார்த்தைகள் (புதிய ஸ்தோத்திரங்கள், கவிதைகள், பாடல்கள், ஸ்லோகங்கள்) முதலியவை சொல்லப்படுகின்றன. ஜனங்கள் (பக்தர்கள்) இங்கு வந்து முறையாக சேவித்து நல்ல பலன்களை அடைகின்றனர். தினந்தோறும் நூதன உற்சவங்கள் நடக்கின்றன. ரத உற்சவம், பல்லக்கு சேவை, கஜவாகனம், ஸ்ரீமூலராம தேவரின் பூஜைகள் குறைவின்றி நடக்கின்றன.**

**சங்கீதம், புராண உபன்யாசங்கள், தர்ம சாஸ்திரங்கள், வேதபடனம், நித்ய அன்னதானம் முதலியவையும் இங்கு நித்யமும் விமரிசையாக நடக்கின்றன. தினந்தோறும் பக்தர்கள் கூட்டம் கூடுகிறது. இங்கு வந்து ஸ்ரீகுருவே சரணம் என்று திரிகரண சுத்தியுடன் சேவித்தால் தம் ஜன்மம் சாபல்யம் என்று பக்தர்கள் உற்சாகத்துடன் கூறுகின்றனர். (தின சத சப்த வருடங்கள்) 700 வருடங்கள் ஸ்ரீஹரியான ஜகன்னாதன் நூறுகோடி சூர்ய பிரகாசமான பரமாத்மாவே தாமே இங்கிருந்து மகிமை பொருந்திய பிருந்தாவனத்தில் வாசம் செய்து மக்களை பரிபாலிப்பான். அருள் புரிவான். இதில் சந்தேகமே வேண்டாம்.**

**அணோ ரணீயான், மஹதோ மஹீயான், பரிபூர்ண குணங்கள் பொருந்திய ஸ்ரீஹரி கோபால விட்டலனுக்கு இணை இந்த ஜகத்தில் யார் இருக்க முடியும்? இணை ஈடு இல்லை என்பதே உண்மை. (ஸ்ரீராகவேந்திரரின் பிருந்தாவனத்தில் ஸ்ரீஹரி, 700 வருடங்கள், ராகவேந்திரர் உள்ளிருந்து அருள்பாலிக்கிறார் என்பதே கருத்து).**

**ஜதெ**
**மந்த்ரஸித்தி3யக்ஷேத்ர இது3 நோடி3 கோவித3ரு**
**மந்த்ர ப்ரதிபாத்ய கோ3பாலவிட்டலநிந்த3**

**மந்திரங்கள் சித்தியாகும் இந்த மந்திராலய க்ஷேத்திரம் மந்திரங்களின் பிரதிபாத்யனான பண்டித ஸ்ரீகோபால விட்டலன் இங்கேயே வாசம் செய்கிறான். அப்படிப்பட்ட க்ஷேத்திரம் மந்திராலயம். இந்த மந்திராலய க்ஷேத்திரத்தை கட்டாயம் தரிசித்து குரு ஸ்ரீராகவேந்திரரின் அந்தர்யாமியான ஸ்ரீஹரியை வணங்க வேண்டும்.** *** **திருமதி. பத்மா ஸ்ரீனிவாசன், பெங்களூரு**

****ராகவேந்திர சுளாதி முடிவுற்றது****

13ம் பக்கத்திலிருந்து தொடர்கிறது...
திரும்பத் திரும்பப் பிறக்க மாட்டேன்; (அப்படிப் பிறந்து) மற்றவரை துன்புறுத்த மாட்டேன்
விதவிதமான பாவங்களை செய்ய மாட்டேன்
மரணம், பிறப்பு இவ்விரண்டையும் (இந்த சுழற்சியை) எனக்குக் கொடுக்காதே
கருணைக்கடலே, முர (என்னும்) அரக்கனின் எதிரியான கிருஷ்ணனே (உத்தமர)

ஏன பேளலி தேவ நா மாடித கர்ம
நானா விசித்ரவை ஸ்ரீனிவாசா
ஹீனஜனரொளகாடா ஷ்வானிதகள கூடா
ஞானவந்தன மாடோ ஜானகிரமணா (உத்தமர)

என்ன சொல்வேன் தேவனே, நான் செய்த பாவங்கள்
விதவிதமானவை, ஸ்ரீனிவாசனே
கீழ்த்தரமானவர்களுடனான என் சேர்க்கை, அவர்களுடனான என் நட்பு (இவைகளை விடுவித்து)
(என்னை) ஞானியாக்குவிடு ஜானகி ரமணனே (உத்தமர)

நின்ன நம்பித மேலே இன்னுபய(வ்) யாதகே
பன்னகாதிப சயன மன்னிசய்யா
முன்ன பகுதரனெல்லா சென்னாகி பாலிசித

ஒடெய ரங்கவிட்டலா என்ன தொரெயே (உத்தமர)

உன்னை நம்பிய பிறகு, எனக்கு பயம் எதற்கு
பாம்புப் படுக்கையில் படுத்திருப்பவனே, என்னை மன்னித்துவிடு
முந்தைய பக்தர்களையெல்லாம் நன்றாக காப்பாற்றிய
ரங்க விட்டலனே, என் தலைவனே (உத்தமர)

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

## நாமஸ்மரணையின் மகிமை

பக்தி பரம்பரைக்கு முன்னோடியானவர் நாரதர். பக்தி என்னும் மரத்தின் ஆணிவேர் அவரே. நவவித பக்தியின் நாமஸ்மரணைக்கு விசேஷ இடம் உண்டு. நவவித பக்தியை எப்படி செய்யவேண்டும் என்று த்ருவ ராஜனுக்குக் கற்றுக்கொடுத்த நாரதர், புரந்தரதாசராகி அவதரித்து பக்தி மார்க்கத்திற்கு ஒரு புதிய உத்வேகத்தைக் கொடுத்தார். அவர் காட்டிய வழியிலேயே நடந்த ஜகன்னாததாசர், ஹரிகதாம்ருதசார என்னும் அமிர்தத்தையே உலகத்திற்கு அளித்தார். 'ஹரிய நெனெயிரோ நம்ம ஹரிய நெனெயிரோ' என்று புரந்தரதாசர் சொன்னதைப் போல, ஸ்ரீஹரியை எப்போதும் நினைக்கவேண்டும். எதையும் எதிர்பாராமல் நமக்கு அருளும் ஸ்ரீஹரியை எப்போதும் நினைப்பது நம் கடமையே ஆகும் என்று தெரிவித்தார்.

ஹரி ஸ்ம்ருதி: சர்வ விபத்விதோக்ஷிணி -- ஹரி நாமஸ்மரணை நம்மை அனைத்து விபத்துகளிலிருந்தும் காக்கின்றது என்று பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

சக்ருதுச்சாரிதம் யோன ஹரிரித்ய க்ஷரத்வயம் |
பத்த: பரிகரஸ்தேன மோக்ஷாய கமனம் ப்ரதி ||
(ஸ்ரீமன் மத்வாசாரியர் - கிருஷ்ணாம்ருத மஹார்ணவம் - ஸ்லோகம் 202).

ஹரி என்னும் இரு எழுத்துகளை யார் எப்போதும் உச்சரிக்கின்றாரோ, அவர் மோட்சத்தின் பாதையைப் பிடிக்கிறார் என்று ஸ்ரீமன் மத்வாசாரியர் கூறுகிறார். தியானம், நாடி உபாசனை என்பவை அனைவராலும் முடியாதது. ஹரி நாமஸ்மரணை மூலமாகவே சாதாரண மக்கள் கடைத்தேறுவது சாத்தியம் என்று ஜகன்னாததாசர் மறுபடி மறுபடி வலியுறுத்துகிறார். ஹரி நாமஸ்மரணைக்கு பக்தி

மிகவும் முக்கியமானதாகும். பக்தி இல்லாமல் செய்யப்படும் நாமஸ்மரணையானது வீண். ஹரி நாமஸ்மரணைக்கு இடம் பொருள் ஆகியவை முக்கியம் இல்லை. ஹரி நாமஸ்மரணை செய்பவருக்கு யமதூதர்களின் பயம் இல்லை என்று ஜகன்னாததாசர் தெரிவிக்கிறார்.

மக்களாடிசுவாக3 மட3தி3யொ
ளக்கரதி3 நலிவாக3 ஹய ப
ல்லக்கி1 க3ஜமொத3லாத3 வாஹனவேரி மெரவாக3 |
பி3க்கு1வாக3 ஆக1ளிஸூத1லி தே3
வக்கி1த1னயன நெனவுதி1ஹ நர
சிக்க1னெமதூ3த1ரிகெ3 ஆவாவல்லி நோடித3ரு ||
(நாமஸ்மரண சந்தி ஸ்லோகம் 1)

’கலௌ கிருஷ்ணஸ்ய கீர்த்தனம்’ - ‘கலியுகதி கானதி கேசவ எந்தரெ கைகொடுவனு ரங்கவிட்டலா’ என்று ஹரி நாமஸ்மரணையைப் பற்றி புராணங்களில் சொல்லியிருக்கின்றனர். மக்களைக் கொஞ்சும்போது, வேணுகோபாலனை நினையுங்கள். மனைவியுடன் பேசும்போது கோபிகா ஸ்த்ரீகளுடன் இருக்கும் கிருஷ்ணனை நினையுங்கள் என்று கருட புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஹரி நாமஸ்மரணை யார் செய்யவேண்டும்? எப்படி செய்யவேண்டும்? எப்போது செய்யவேண்டும்? என்ற கேள்விகளுக்கு விடைகளைப் பார்ப்போம்.

மலகு3வாக3லி ஏளுவாக3லி
கு1ளிது1 மாதா1டுத1லி மனெயொளு
கெ1லசக3ள மாடு3த1லி மைதொ1ளெவாக3 மெலுவாக3 |
க1லுஷதூ3ரன ஸக1லடா2விலி
தி1ளியே த1த்த1ன்னாம ரூபதி3
ப3ளியலிப்பனு ஒந்த3ரேக்ஷண பி3ட்ட1க3லனவர ||
(நாமஸ்மரண சந்தி ஸ்லோகம் 3)

எல்லா காலங்களிலும், எல்லா இடங்களிலும் ஸ்ரீஹரியைப் பற்றி நினைத்தால், அத்தகைய பக்தரை, எந்த காலத்திலும் கைவிடாமல் ஸ்ரீஹரி காப்பாற்றுகிறார். எல்லா நேரம், காலம், இடம், செயல்களிலும் ஸ்ரீஹரி இருக்கிறார். ஸ்ரீஹரியின் நற்குணங்களைப் பாடுபவர்கள் இந்த சம்சார சாகரத்தை சுலபமாகக் கடக்கின்றனர். மனைவி, மக்கள், வீடு ஆகியவற்றில் ஈடுபாடு உள்ளவர்கள் பக்தி மார்க்கத்திலிருந்து

தூர விலகுகின்றனர். ஸ்ரீஹரியிடம் பக்தி கொள்வது என்பது ஒரு சுகமான வழி. இந்த வழி தெரியாமல் அல்லது நாமஸ்மரணை செய்வதற்கு சோம்பல்பட்டால், அவர்களுக்கு கல், முட்களால் நிறைந்த துக்க வழியே கிட்டும்.

ஆவ குலத3வனாத3டேனி
ந்னாவ தே3ஷதொ3ளித்த3டேனி
ந்னாவ க1ர்மவ மாடலேனின்னாவ காலத3லி |
ஸ்ரீவரன ஸர்வத்1ரத3லி ச
ம்பாவிசுத1 பூஜிசுத1 மோதி3ப
கோ1வித3ரிகு3ண்டேனு பய து3க்கா2தி தோ3ஷக3ளு ||
(நாமஸ்மரண சந்தி ஸ்லோகம் 4)

ஸ்ரீஹரியின் பக்தனுக்கு குலம், தேசம், காலம், செயல் ஆகிய எந்தவொரு நிர்ப்பந்தங்களும் இல்லை.

நவித்யா நகுலம் ரூபம் தனம் ச
பஹூஸ்ருதம் ந ஹரே: ப்ரேணயானஸ்ய
பக்திமாத்ர ப்ரியோ ஹரிரிதி ||
(ஆக்னேய புராணம்)

பக்திக்கு மட்டுமே ஸ்ரீஹரி இணங்குவார். எண்ணிக்கையற்ற கல்யாண குணங்களைக் கொண்டவரான, எந்தவொரு தோஷமும் இல்லாதவரான ஸ்ரீஹரி என் ஸ்வாமி, அனைவருக்கும் ஸ்வாமி என்று அறிந்து பக்தியுடன் ஹரி நாமஸ்மரணை செய்தால், பயம் துக்கம் ஆகிய தோஷங்கள் ஓடிப் போகின்றன. கங்கையில் குளிப்பவர்களுக்கு பாவங்கள் போகின்றன. கருடனின் வீட்டில் பாம்பின் பயம் இல்லை. ஸ்ரீஹரியின் சுதந்திரத்தை அறிந்தவருக்கு எந்தவொரு தடையும் வருவதில்லை.

தேனவினாத்ருணமபி நசலதி & நாஹம் கர்தா ஹரி: கர்தா

ஸ்ரீஹரி இல்லாமல் எந்தவொரு செயலும் நடப்பதில்லை. உலகத்தைப் படைத்தவரும், அனைத்தையும் தீர்மானிப்பவரும் அவரே என்று அறிந்து, ஹரிசர்வோத்தம தத்வத்தை அறிந்தவரே சாத்விக பக்தர். ஜீவனுக்கு தாய், தந்தை, மக்கள் ஆகியோர் சாதனைக்கு மட்டுமே. சொந்தங்கள் சாதனைக்கு மட்டுமே வருகின்றனர். போகின்றனர். இவர்கள் அனைவரும் என்னுடையவர்கள் என்று

நினைத்தால், அது வெறும் பிரமை மட்டுமே. ஆகையால் மனைவி / கணவன், மக்கள், வீடு என்னும் பந்தம் இருக்கக்கூடாது. அது நமது சாதனைக்கு ஒரு தடையாக இருக்கிறது. அனைவரிடமும் ஸ்ரீஹரியின் இருப்பை சிந்தித்துவிட்டால் பிரச்னையில்லை.

இடம் பொருள் நேரம் இவை எதுவும் ஸ்ரீஹரியைப் பற்றி நினைப்பதற்கு தடையாக இருப்பதில்லை. அனைவரும் அனைத்து நேரங்களிலும், செய்யக்கூடிய சுலபமான பூஜை ஹரி நாமஸ்மரணையே ஆகும்.

கெ$^{1}$ண்ட$^{3}$ கா$^{1}$ணதெ$^{3}$ முட்டி$^{1}$த$^{3}$ரு ஸரி
க$^{1}$ண்டு$^{3}$ முட்ட$^{1}$லு த$^{3}$ஹிசதி$^{3}$ப்புதே$^{3}$
பு$^{1}$ண்ட$^{3}$ரிக$^{1}$த$^{3}$லாயதா$^{3}$க்ஷன விமலப$^{1}$த$^{3}$ப$^{1}$த்$^{3}$ம |
ப$^{3}$ண்டுணிக$^{3}$ளெந்தெனிப ப$^{4}$கு$^{1}$த$^{1}$ர
ஹிண்டு நோடித$^{3}$ மாத்$^{1}$ரத$^{3}$லி த$^{1}$னு
தி$^{3}$ண்டு$^{3}$கெ$^{3}$ட$^{3}$ஹித நரன பா$^{1}$வன மாள்புதா$^{3}$க்ஷணதி$^{3}$ ||
(நாமஸ்மரண சந்தி ஸ்லோகம் 12)

தெரிந்தோ தெரியாமலோ எப்படி நெருப்பில் கைபட்டாலும், அது நம்மை கண்டிப்பாக சுடும். அப்படி, ஹரிபாதங்களில் தங்களை சமர்ப்பித்த பக்தர்களின் நட்பு / அவர்களின் தரிசனம், நம் பாவங்களை நீக்கும். சாதாரண அறிவு இருந்தாலும், இல்லாவிட்டாலும், சஜ்ஜனர்களின் தரிசனத்தாலேயே, அவர்கள் புனிதர் ஆகின்றனர். அது எப்படியென்றால், அவர்களின் உபதேசத்தாலும், அவர்களின் அருகில் இருப்பதாலுமே நமது லிங்க-தேகம் நாசமடைகிறது என்று தாசர் தெரிவிக்கிறார். பாகவதத்தின் பத்தாவது ஸ்கந்தத்தில், ஸ்னான, பிரதிமைகளின் பூஜை, சஜ்ஜனர்களின் தரிசனம், நட்பு - ஆகியவை புண்ணியத்தை தரும் செயல்கள் என்று அறிவுறுத்துகிறார்.

ந ஹ்யம்மயானி தீர்தாஇனதேவாம்ருச்சேலாமயா:தே
புனந்த்யுரு காலேன தர்ஷனா தேவஸாதவ: ||

இதற்காகவே ஞானிகளின் நட்பை அடிக்கடி பெறவேண்டும் என்று தாசர் விளக்குகிறார். அனைவரிடமும் இருந்து, அனைத்து செயல்களையும் செய்துகொண்டிருக்கும் ஸ்ரீஹரியை அறியாமல், அனைத்தையும் தானே செய்கிறேன் என்று அஞ்ஞானிகள்

புரிந்துகொள்கிறார்கள். ஸ்ரீஹரியின் நாமஸ்மரணை செய்யும்போது, ஹரியின் நற்குணங்களைப் பற்றி தெரிந்துகொள்வது அவசியமாகிறது.

நிர்கு3ணோபாஸக1கெ3 கு3ணஸம்
ஸர்க3தோ3ஷக3ளீயத3லெ அப1
வர்க3த3லி சுக2வித்து1 பாலிஸுவனு க்ருபாஸாந்த்3ர |
து3ர்க3மனு எந்தெ3னிப1 த்1ரைவி
த்யர்கெ3 த்ரிகு3ணாதீத1 ஸந்த1த1
ஸ்வர்க3 பூ4 நரக1த3லி ஸஞ்சாரவனெ மாடி3சுவ ||
(நாமஸ்மரண சந்தி ஸ்லோகம் 18)

சாஸ்திரங்களைப் படிப்பதால் வரும் ஞானம் சாத்விக ஞானம். அப்படிப் பெற்ற ஞானத்திற்கு மேல், தான் கண்டிராத குணங்களையும், ஸ்ரீஹரியிடம் நினைத்து பக்தியுடன் சிந்திக்கும் ஞானத்திற்கு நிர்குண ஞானம் என்று பெயர். இப்படி ஸ்ரீஹரியின் உண்மையான ஸ்வரூபத்தை புரிந்துகொள்பவர்களுக்கு ஸ்ரீஹரி கிடைப்பதேயில்லை என்கின்றனர்.

ஏதோ ஒரு பலனை எதிர்பார்த்து செய்யும் பூஜை, நாமஸ்மரணை ஆகியவற்றினால் ஸ்ரீஹரி மகிழ்ச்சியடைவதில்லை. பூமியில், காடு, மலைகளில், உணவு, நீர், ஆகாயம் ஆகியவற்றில் ஸ்ரீஹரியின் இருப்பை தெரிந்துகொண்டு பூஜித்தால், ஸ்ரீஹரியின் அருள் கிடைக்கும்.

ஸத்யஸங்க1ல்பனு ஸதா ஏ
நித்து1தெ3 புருஷார்த1வெந்த3ரி
த3த்1யதி4க1 சந்தோஷதி3ம் நெனெவுத்த1 பு4ஞ்சிபு1து3 |
நித்ய ஸுக2சம்பூ1ர்ண பரமசு
ஹ்ருத்த1ம ஜகன்னாதவிட்டல
ப3த்தி1ஸி ப4வாம்பு3தி4ய சித்சுக2வியக்தி1 கொடுதி1ப்ப ||
(நாமஸ்மரண சந்தி ஸ்லோகம் 33)

வாழ்க்கையில் சுகதுக்கங்கள் மாறிமாறி வருகின்றன. சாத்விகர்கள் ஸ்ரீஹரியின் நாமஸ்மரணை செய்து அவனைப் பற்றியே சிந்தித்திருந்தாலும் கஷ்டங்கள் வருகின்றன. அத்தகைய நேரத்தில் மனதை அலைபாயவிடாமல், கவலைப்படாமல், எந்தெந்த காலத்தில் ஸ்ரீஹரி எதை கொடுக்கிறாரோ, அதை திடமான மனதோடு, பக்தியுடன், ஸ்ரீஹரியிடம் மிகுந்த விசுவாசத்துடன் அனுபவிக்கவேண்டும். நாம்

நினைத்ததற்கு மாறாக நடந்துவிட்டதே என்று கவலைப்படக்கூடாது. நடந்தவை அனைத்தும் ஸ்ரீஹரியின் விருப்பமே என்று அறிந்தால் அதுவே பெரிய சாதனையாகும்.

ஜீவன் சுதந்திரமானவன் அல்லன். அனைத்தையும் நடத்தக்கூடியவனும் அல்லன். வினைப்பயன்களையே ஜீவன் அனுபவிக்கிறான். ஸ்ரீஹரியானவர் நித்ய சுகத்தை அனுபவிப்பவர், முழுமையானவர் என்றும், நம் இதய-கமலத்திலேயே இருக்கிறார் என்றும் அறிந்து, ஹரி நாமஸ்மரணை செய்தால், இந்த சம்சார-சாகரத்தை சுகமாக தாண்டிவிடலாம்.

யமமார்க்கம் மஹாகோரம் நரகாணியமம் ததா |
ஸ்வப்னேபி நைவபஷ்யேர்த்ய ஸ்மரேத் கருடத்வஜம் ||
(ஸ்ரீமன் மத்வாசாரியர் - கிருஷ்ணாம்ருத மஹார்ணவம்).

யாரொருவர் கருடவாகனான ஸ்ரீஹரியை நினைக்கிறாரோ அவர் மிக பயங்கரமான யமலோகத்தை / நரகத்தை அதுபோலவே யமனின் பயங்கரமான ரூபத்தை கனவிலும்கூட காணமாட்டார்கள்.

**** டாக்டர் சுமித்ரா S. கால்டோர்**

**ஆராதனை**

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்
## ஜ்யேஷ்ட & ஆஷாட மாதங்களில்

ஜ்யேஷ்ட சுத்த சதுர்தசி - ஸ்ரீஸ்ரீபாதராஜர் (முளபாகிலு)
ஜ்யேஷ்ட கிருஷ்ண த்ரயோதசி - ஸ்ரீவிஜயீந்திரர் (கும்பகோணம்)
ஆஷாட சுத்த ஷஷ்டி - ஸ்ரீவரதேந்திர தீர்த்தர் (புனே)
ஆஷாட சுத்த ஏகாதசி - ஸ்ரீத விட்டலர் (கர்ஜிகி)
ஆஷாட கிருஷ்ண அஷ்டமி - தந்தெ வெங்கடேச விட்டல தாசர் (சித்ரதுர்கா)
ஆஷாட கிருஷ்ண த்ரயோதசி - ஸ்ரீகர்பர நரஹரி தாசர்

இந்த இதழைப் பற்றி தங்களின் பிற வாட்சப், மின்னஞ்சல் க்ரூப்களில் சொல்லி, மேலும் பல ஹரிபக்தர்கள் இந்த பயனுள்ள தகவல்களைப் பெறுவதற்கு உதவவும்.

தொடர்

# ஹரிகதாம்ருதசார ஸ்லோக அர்த்தங்கள்

## சரஸ்வதி & பாரதி

**சரஸ்வதிதேவி**

சதுரவத3னராணி அதிரோ
ஹித விமலவிக்ஞானி நிக3ம
ப்ரததிக3ளிக3பி4மானி வீணாபாணி பி3ரம்மாணி |
நதிஸி பே3டு3வெ4 ஜனனி லகுமி
ப1திய கு3ணகள துதிபுதகெ சன்
மதி1ய பாலிஸி நெலெஸு நீ மத்வத3ன ஸதனதலி ||5

சதுரவதனன ராணி = நான்முக பிரம்மனின் மனைவி
அதிரோஹித விமலவிக்ஞானி = பரசுக்ல த்ரயர்களில் ஒருவர்; பகவத் விஷயங்களில் இவருக்கு எப்போதும் அஞ்ஞானமே இருப்பதில்லை. அவரைப் பற்றிய தெளிவான ஞானத்தைக் கொண்டவர். கலிபிரவேசம் இல்லாதவர்.
நிகம ப்ரததிகளிகபிமானி = வேதராசிகளுக்கு அபிமானி
வீணா பாணி பிரம்மாணி = வீணையை தரித்தவள்
நதிஸி பேடுவே ஜனனி = உன் தாசத்வத்தில் இருந்து, எப்போதும் உன்னை நமஸ்கரித்து வேண்டுகிறேன்.

லகுமிபதிய குணகள துதிபுதகெ = லட்சுமிபதியான, சர்வோத்தமனான, அனந்த கல்யாண குண பரிபூர்ணனான, ஷட்குணைஸ்வர்ய சம்பன்னனான, ஜகத் கல்யாண குணங்களைக் கொடுக்கக்கூடிய, ஜகத்ஜன்மாதி காரணனான, லட்சுமிதேவியால் வணங்கப்படுபவனான, ஸ்ரீமன் நாராயணனின், நற்குணங்களை ஸ்தோத்திரம் செய்வதற்கு

சன்மதிய பாலிஸி = நற்புத்தியைக் கொடு. ஸ்ரீமன் மத்வாசார்யர் தமது சர்வமூல கிரந்தங்களில் உபதேசம் செய்துள்ள அனைத்தும் சன்மதிகள். வேத வாக்கியங்கள், சர்வமூலங்கள், மத்வ மத யதிகள், ஹரிதாசர்கள் ஆகிய அனைவரின் வாக்குகளும் சன்மதிகள். இவற்றைப் படிப்பதற்கு எனக்கு நற்புத்தியைக் கொடு. இக்கிரந்தங்களைப் படித்து, அதில் சொன்னபடி பூஜைகளை, பாரயணத்தை, தீர்த்த யாத்திரையை செய்வதற்கு நற்புத்தியைக் கொடு.

நெலெஸு நீ மத்வதன ஸதனதலி = என் நாக்கில் நின்று, அருள் செய்வாயாக.

இப்படிப்பட்ட மகிமைகளைக் கொண்ட சரஸ்வதிதேவியை புறக்கணித்தால், வணங்கினால் என்ன ஆகும் என்பதை இரு வேறு உதாரணங்கள் மூலம் பார்க்கலாம்.

ராமாயணத்தில், கும்பகர்ணன் ஒரு முறை, அனைத்து தேவதைகளையும் தான் வெல்ல வேண்டும் என்ற வரம் கேட்பதற்காக, பிரம்மனைக் குறித்து தவம் செய்யச் சென்றான். அப்போது நாரதர் அங்கு வந்து விவரத்தைக் கேட்டு, 'இன்று சரஸ்வதி பூஜை. ஆகவே, நீ பூஜையை செய்துவிட்டு, பின் தவம் செய்யப் போ' என்றார். ஆனால் கும்பகர்ணனோ, 'கணவனைக் குறித்து தவம் செய்து வரம் பெறப்போகும் எனக்கு, அவர் மனைவியின் பூஜை எதற்கு?' என்று சொல்லி, அவரின் பேச்சினைக் கேட்காமல் தவம் செய்யச் சென்றான்.

அங்கிருந்து நேராக சத்யலோகம் சென்ற நாரதர், சரஸ்வதிதேவியிடம் கும்பகர்ணனின் தவத்தைப் பற்றி சொல்லிவிட்டு, 'உன் பூஜையை இவன் உதாசீனம் செய்திருக்கிறான்' என்றார். சரஸ்வதிதேவி பிரம்மனிடம் - 'நாம் இந்த உலகிற்கு ஒரு பாடம் கற்பிக்க வேண்டும். ஆகவே நீங்கள் கும்பகர்ணனுக்கு வரம் கொடுங்கள். அவன் என்ன கேட்கிறானோ, நீங்கள் உடனே அதற்கு ததாஸ்து என்று சொல்ல வேண்டும்' என்று வேண்டினார். சரஸ்வதிதேவி கும்பகர்ணனின் நாக்கில் சென்று அமர்ந்து, 'நிர்தேவத்வம்' என்று வரம் கேட்க வந்த கும்பகர்ணனை 'நித்ரேவத்வம்' என்று கேட்கச் செய்தாள். பிரம்மனும் உடனடியாக ததாஸ்து என, அவனுக்கு தூக்கமே வரமாக வந்தது.

இதையே ஸ்ரீபுரந்தரதாசர் தமது பாடலில்:

அந்து தஷமுகனனுஜா வந்திஸதே வாணியன்னு நிந்து தபகைஹி பஹுகாலவு
அந்தவிந்தஜ மெச்சி வரவொதிக பேடனலு நிந்து ஜிஹ்வெயல்லி நித்ரே பேடிஸிதளு
ஒந்தே மனதி பஜிரோ வாக்தேவிய

மேலும்:

பாலிஸம்ம முத்து சாரதே
என்ன நாலிகெயல்லி தப்பு பாரதே,

என்றும் பாடினார்.

நம் நாக்கினில் தவறான சொற்கள் வராதவாறு, நற்புத்தி வருவதற்கு சரஸ்வதிதேவியின் அருள் வேண்டும் என்பதை ஜகன்னாததாசர் இந்த பத்யத்தின் மூலம் விளக்கியிருக்கிறார்.

ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள், தமது பூர்வாசிரமத்தில் தாம் இயற்றிய பரிமள கிரந்தத்திற்கு பெயர் வைக்க வேண்டி, அந்த கிரந்தத்தை இயற்றுவதற்கு ஞானத்தைக் கொடுத்த சரஸ்வதிதேவியை ஸ்தோத்திரம் செய்கிறார். சரஸ்வதிதேவியும் உடனடியாக அவருக்கு தரிசனம் கொடுத்து 'வெங்கடநாதா, உனக்கு என்ன வேண்டும்?' என்கிறாள். ஸ்ரீராயரும் 'தாயே, உன் அருளால் இந்த சிறிய கிரந்தத்தை எழுதியிருக்கிறேன். நீ எனக்கு அருளவேண்டும்' என்று கேட்டபோது, சரஸ்வதிதேவியும் அதைப் பார்த்து மகிழ்ந்து, 'வெங்கடநாதா, நீ இதைப் படி, அதற்கேற்ப நான் நர்த்தனம் செய்கிறேன்' என்றாள்.

நலிதாடென்ன நாலிகெய ம்யாலே, சரஸ்வதிதேவி குணிதாடென்ன நாலிகெய ம்யாலே - என்று ஸ்ரீராயர் பாட, சரஸ்வதிதேவி நடனமாட, தேவலோகத்திலிருந்து அவள் சூடிக்கொண்டு வந்த பூக்கள் கீழே உதிர்ந்து, அதுவே பரிமளமாயிற்று.

நாமும் சரஸ்வதிதேவியை நம் நாக்கினில் நின்று நர்த்தனம் செய்யுமாறு, ராயருக்கு அருளிய சரஸ்வதிதேவியை பிரார்த்திப்போமாக.

பாரதிதேவி

க்$^{1}$ருதிரமண ப்ரத்$^{3}$யும்ன நந்த$^{3}$னெ
சதுரவிம்ஷதி த$^{1}$த்$^{1}$வப$^{1}$தி தே
வதெக$^{3}$ளிகெ$^{3}$ கு$^{3}$ருவெனிசுதிஹ மாருதன நிஜபத்னி |
சத$^{1}$த$^{1}$ ஹரியலி கு$^{3}$ருகளலி ச
த்ரதிய பாலிஸி பா$^{4}$க$^{3}$வத பா$^{4}$
ரத$^{1}$ புராண ரஹஸ்ய த$^{1}$த்வக$^{3}$ளருபு$^{1}$ கருணதலி ||6

க்ருதிரமண பிரத்யும்ன நந்தனெ = க்ருதியின் கணவனான பிரத்யும்னனிடம், அவதரித்தவள் பாரதிதேவி

சதுரவிம்ஷதி தத்வபதி தேவதெகளிகெ குருவெனிஸுதிஹ மாருதன நிஜபத்னி = 24 தத்வாபிமானி தேவதைகளின் தலைவனான ஸ்ரீஸ்ரீமுக்யபிராணரின் நிஜபத்னி

சதத ஹரியலி குருகளலி சத்ரதிய பாலிஸி = குருகளில், ஸ்ரீஹரியில் நிரந்தரமான சிறந்த பக்தி, ஞானத்தைக் கொடு

பாகவத பாரத புராண ரஹஸ்ய தத்வகளருபு கருணதலி = பாகவத, பாரத, புராணங்களில் மறைந்திருக்கும் பகவத் தத்வங்களைப் பற்றிய உண்மையான ஞானம் வரவேண்டுமெனில் பாரதிதேவியின் அருள் தேவை. அதையே எனக்குக் கொடு என்று ஜகன்னாத்தாசர் இங்கு வேண்டுகிறார்.

*** திரு.முரளிதரதாசர், பெங்களூரு

தொடர்

## பலவிது பாள்துதக்கெ-ஸ்ரீஜகன்னாத்தாசர்

**கன்னட உரை: திரு.தாவண்கெரெ பீமராவ்**

ஸ்ரீஜகன்னாததாசர் இயற்றிய ஹரிகதாம்ருதசாரம் என்னும் கிரந்தம் தாசசாகித்யத்தின் உச்ச கிரந்தம் என்ற பெயர் பெற்றிருக்கிறது. அந்த ஹரிகதாம்ருதசாரத்திற்கு சாரம் என்று அழைக்கப்படும் 'பலவிது பாள்துதக்கே' என்னும் பாடல், அணுஹரிகதாம்ருதசாரம் என்று புகழ் பெற்றிருக்கிறது. 27 பத்திகளைக் கொண்ட, நட்சத்திரப் பாடல் என்று அழைக்கப்படும் இந்த பாடலில் சொல்லப்பட்டிருக்கும் விஷயங்கள் ஏராளமானது.

ப$^{2}$லவிது$^{3}$ பா$^{3}$ள்து$^{3}$த$^{3}$க்கே$^{1}$
ஸிரி நிலயன கு$^{3}$ணக$^{3}$ள தி$^{1}$ளிது$^{3}$ ப$^{4}$ஜிஸுவதே |ப|

ஸிரி நிலயன = ஸ்ரீனிவாசனின். குணகள = மகிமைகளை. திளிது = ஒவ்வொரு குணமும் அனந்த மற்றும் அசிந்திய என்று அறிந்து. பஜிசுவுதே = (அவனை நிரந்தரமாக) வணங்குவதே. பாள்துதக்கெ = வாழ்வதற்கு. பலவிது = முக்கிய பலன். வாழ்க்கை அர்த்தமாக்கிக் கொள்வது என்று பொருள். இப்படி செய்யவில்லை எனில், அந்த வாழ்க்கையே வீண் என்று பொருள்.

ஸ்ரீஹரியின் மகிமைகளை அறிந்து, அதனால் உண்டாகும் அன்பே, பக்தி. பக்தியினால் வேண்டுவதே, இந்த மனிதப்பிறவியை அர்த்தமுள்ளதாக்குகிறது. ஆகையால், நம் தகுதிக்கேற்ப ஸ்ரீஹரியின் குணங்களை அறிவதற்கு முயலவேண்டும். ஸ்ரீஹரியின் செயல்கள் ஏராளம். அவற்றில் அஷ்ட-கர்த்ருத்வ என்று பெயர் பெற்றவை - ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய, நியமன, ஞான, அஞ்ஞான, பந்த மற்றும் மோட்ச. இவற்றைப் பற்றி நாம் தொடர்ந்து தெரிந்து கொள்ள முயலவேண்டும். ஸ்ரீஹரியின் நற்குணங்களை தெரிந்துகொள்வதே அவருக்கு நான் செய்யும் பஜனை எனலாம்.

ஸ்வோசித$^{1}$ கர்மக$^{3}$ளாசரிஸுத ப$^{3}$லு நீசரல்லிகெ$^{3}$ போ$^{1}$கி$^{3}$ யாசிஸதெ$^{3}$
கே$^{1}$சரவாஹ சராசர பந்த$^{4}$க$^{1}$ மோசக$^{1}$னஹுதெந்து$^{3}$ யோசிஸுதிப்புதே$^{3}$
|1|

ஸ்வோசித கர்மகள = தனது வர்ணம் மற்றும் ஆசிரமத்திற்கேற்ப செய்யவேண்டிய கர்மங்களை (சாஸ்திரத்தில் சொல்லியபடி). பலு = அதிகமாக. ஆசரிஸுத = பின்பற்றியவாறு / செய்தவாறு (லௌகிக

கர்மங்களில் ஈடுபடாமல்). நீசரல்லி = துர்ஜனர்களிடம். போகி = போய். யாசிஸதெ = வேண்டாமல். கேசரவாஹ = கருட வாகனான. சராசர பந்தக = ஜீவர்களை சம்சாரத்தில் ஈடுபடுத்தும் ஸ்ரீஹரி. மோசகனு அஹுதெந்து = (சம்சாரத்திலிருந்து) காப்பாற்றுபவன் அவனே என்று அறிந்து. யோசிஸுதிப்புதே = (எப்போதும்) நினைத்திருப்பதே. இந்த வாழ்க்கைக்கான உண்மையான அர்த்தம்.

ஓம் விஹிதத்வாச்சாஸ்ரமகர்மாபி ஓம் (பிரம்மசூத்திரம்). வர்ணாசிரமத்திற்கேற்ப கர்மானுஷ்டானங்களை, விதிகளுக்கேற்ப பிரம்மஞானிகளுக்கும் உண்டு என்று சொல்லியிருக்கின்றனர். ஸ்வயோக்ய கர்மங்களை பக்தியுடன் பின்பற்றி அவற்றை அர்ப்பணம் செய்வதே சிறந்த பகவத்பூஜை என்றும், அதுவே பரம தர்மம் என்றும், அதற்கு எதிரான நடவடிக்கைகள் அனைத்தும் அதர்மமே என்றே, கீதாசார்யனான ஸ்ரீகிருஷ்ணன் உபதேசம் செய்தான் என்று ஸ்ரீமன் மத்வாசார்யர் நிர்ணயம் செய்திருக்கிறார்.

நீசரன்னு என்றதில், துர்ஜனர்களை கேட்கக்கூடாது என்பது மட்டுமல்ல, நம் அனைத்து விருப்பங்களையும் வேண்டுதல்களையும் நிறைவேற்றக்கூடிய ஸ்ரீமன் நாராயணனைத் தவிர்த்து, அல்ப பலன்களைக் கொடுக்கக்கூடிய கீழ் மட்ட (அதமரான) பிற தேவதைகளை யாசிக்கக்கூடாது. அது ஒரு விஷ்ணு பக்தனுக்கு அழகில்லை. இதையே பாகவதத்தில் பக்தன் அக்ரூரர் சொல்கிறார்.

ஜீவர்களை சம்சாரத்தில் ஈடுபடுத்துவதும், பிறப்பு இறப்பிலிருந்து விடுவிப்பதுமான அனைத்து செயல்களையும் செய்பவன் ஸ்ரீஹரியே என்று விஷ்ணு தத்வ நிர்ணயத்தில் ஸ்ரீமதாசார்யர் நிர்ணயித்திருக்கிறார்.

நிச்சஸுப4குதி1யொள் அச்சுத1னங்க்ரிக3ளர்ச்சிஸி
மெச்சிஸு தெ1ச்சரதி3
து1ச்ச விஷயக3ள இச்செயிஸதே3
யத்3ருச்சா லாப4தி3ம் ப்ரோச்சனாகு3வுதே3 |2|

நிச்ச சுபகுதியொளு = மிகத் தூய்மையான (பலனை எதிர்பாராமல்), தாரதம்யத்தை சரியாக அறிந்து, குருவினால் உபதேசிக்கப்பட்டு கிடைத்த சர்வோத்தமத்வ ஞானத்தினால் கிடைத்த பக்தியால்,

அச்யுதனங்க்ரி = ஸ்ரீஹரியின் சரணங்களை, அர்ச்சிஸி = பூஜித்து, மெச்சிஸுத = ஸ்ரீஹரியின் அன்பினை (திருப்தியை) மட்டும் வேண்டி, எச்சரதி = விழிப்புடன் இருந்து, துச்சவிஷயகளிகெ = காமம் முதலான தற்காலிக சுகங்களுக்கு, இச்சயிஸதெ = மனம் கொடுக்காமல் (அவற்றின் வசமாகாமல்), யத்ருச்சா லாபதி = ஸ்ரீஹரியின் இச்சையால் நமக்கு கிடைத்தவற்றை மட்டும், ப்ரோச்சனாகுவுதே = திருப்தியடைந்து (வாழ்வதே, இந்த வாழ்க்கைக்கான சரியான அர்த்தம்).

சுபக்தி = சுத்தமான பக்தி என்றால், ஸ்ரீவிஷ்ணு சர்வோத்தமத்வ ஞானத்தைக் கொண்டவன். தாரதம்ய ஞானத்தைக் கொண்டவன். குரு உபதேசத்தினால் இத்தகைய ஞானத்தைப் பெற்றவன் என்று பொருள்.

ஸ்ரீஹரியின் அங்கங்களில் அனைத்தும் சமமே. உயர்ந்தவை தாழ்ந்தவை என்னும் தாரதம்யமே இல்லை (ஸ்வகதபேத விவர்ஜித) என்றாலும், தாஸ்ய பாவத்தைக் காட்டுவதற்கு, அங்க்ரிகளை (பாதங்களை) வணங்கு என்கின்றனர் தாசர்கள். 'பாதாரவிந்தவ தோரோ' என்றும், 'சஞ்சிந்தயேத் பகவதஸ் சரணாரவிந்தம்' என்றும் சொல்வதிலிருந்து, ஸ்ரீஹரியை தியானம் செய்வதில், அவன் பாதங்களே முக்கியத்துவம் பெறுகின்றன. அவற்றின் சிறப்பும் விளங்குகின்றன.

எவ்வித பலன்களையும் எதிர்பார்க்காமல், ஸ்ரீஹரி திருப்தியடைந்தால் மட்டும் போதும் என்று செய்யப்படும் செயல்களே / பூஜைகளே, 'மெச்சிஸுவ அர்ச்சனே' ஆகின்றன.

தற்காலிக விஷயங்களில் மனதை செலுத்துவதே சம்சார பந்தனத்திற்கு முக்கிய காரணம். 'காமானம் ஹ்ருத்யசம்ரோஹம்' - மனதில் எவ்வித தற்காலிக ஆசையும் வராமலிக்க எனக்கு வரம் அருளவேண்டும் என்று பிரகலாதன் ஸ்ரீநரசிம்மனிடம் வேண்டிக் கொள்கிறான். மனம் நம் வசத்தில் இருக்கிறது என்று நினைத்தாலும், இத்தகைய சிற்றின்பத்தின் மேலான ஆசையானது நிர்மூலமாவது ஸ்ரீஹரியின் விருப்பப்படியே என்பதை அறிய வேண்டும்.

'சந்துஷ்டோ யேன கேனசித்' என்பது பாகவத தர்மங்களில் முக்கியமானது. சாதனை செய்வதற்கான இந்திரியங்களைக் கொடுத்து, நம்மை மனித உருவில் அனுப்பியிருப்பதால், வினைப்பயன்களால் ஸ்ரீஹரியாலேயே நமக்குக் கொடுக்கப்படும்

பலன்களை அனுபவிப்பதற்கு, சாதனைகளை செய்ய நாமே முயலவேண்டும். ஆனாலும் (இவற்றை செய்யாமல்), மிகவும் அவசியம் என்று (தவறாக) நினைத்து, தேவையில்லாத பொருட்களை சேகரிப்பதிலேயே காலம் போய்விடுகிறது.

மனோவாக் கா[1]யத[3]னுப[4]விஸுவ
தி[3]னதி[3]னத விஷய ஸாதனக[3]ளனு
அனிலாந்த[1]ர்க[3]த[1] வனருஹ த[3]ளலோசனக[3]ர்ப்பி[1]ஸி
தா[3]ஸனு நானெம்புதே[3] |3|

மனோவாக் காயதொளு = மனம், வாக்கு மற்றும் செயல்களினால், அனுபவிசுவ தினதினத விஷய ஸாதனகளன்னு = தினப்படி அனுபவிக்கும் விஷயங்களை, அனிலாந்தர்கத = (பாரதி ரமண) முக்யபிராணாந்தர்கதனான, வனருஹதளலோசனகெ = தாமரைக் கண்ணனான ஸ்ரீஹரிக்கு, அர்ப்பிஸி = சமர்ப்பித்து, நா = நான், தாஸனெம்புதே = (உன்னுடைய) தாசன் என்று தெரிவித்து (வாழ்வதே இந்த வாழ்க்கைக்கான உண்மையான அர்த்தம்).

தினப்படி வாழ்க்கையில் நாம் மனதால், வாக்கினால், செயல்களினால் செய்யும் அனைத்து செயல்களையும், முக்யபிராணாந்தர்கத தாமரைக் கண்ணனாகிய ஸ்ரீஹரிக்கு சமர்ப்பிக்க வேண்டும்.

ஸ்ரீஹரிக்கு சமர்ப்பிக்க வேண்டும் என்றால், தான் மற்றும் தனது என்று நாம் அறியும் விஷயங்கள் அனைத்தும் ஸ்ரீஹரிக்கு கட்டுப்பட்டவை என்று அறிந்து, தான் என்றும் அஸ்வதந்திரன் என்று உணர்ந்து, தான் செய்யவேண்டிய செயல்களுக்காக ஸ்ரீஹரி கொடுத்த அனைத்து பொருட்களும் அவனுடையதே என்று நினைத்து, அவற்றை பயன்படுத்த வேண்டும்.

தான் எப்போதும் ஸ்ரீஹரிக்கு கட்டுப்பட்டவன் என்று அறிவதே, தாஸ்ய பாவம். ஸ்ரீஹரியின் வசமானதால், முக்தர்களும் அவனுக்கு கட்டுப்பட்டவர்களே. ***

போட்டி

## மாதாந்திர குறும்போட்டி

**ஜூன் 2020**

இந்த இதழோடு முடியும் ‘குருகோவிந்த விட்டல தாசர் வாழ்க்கை வரலாறு’ தொடரைப் பற்றிய கேள்விகள் இவை. கடந்த இதழ்களின் உதவியுடன் இந்தக் கேள்விகளுக்கு பதிலளிக்க முயலவும்.

1. தாசர் பிறந்த நாள்?
2. தாசருக்கு கிடைத்த அரசு பதவி எது?
3. தாசரின் மனைவி பெயர்?
4. தாசருக்கு சர்வமூல கிரந்தங்களை கற்பித்த குரு யார்?
5. தாசருக்கு அங்கிதம் அளித்த குரு யார்? பெற்ற ஆண்டு?
6. தாசர் தம் வீட்டை யாருடைய கோயிலாக மாற்றினார்?
7. தாசர் தம் கிரந்தங்களை வெளியிட்ட நிறுவனத்தின் பெயர்?
8. தாசர் நடத்திய மாதப் பத்திரிக்கையின் பெயர்?
9. தாசருக்கு ஸ்ரீவிஸ்வேஸ தீர்த்தர் அளித்த விருதின் பெயர்?
10. தாசரின் ஆராதனை என்று?

* தயவு செய்து அனைவரும் இதில் பங்கேற்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.
* இருவருக்கு புத்தகப் பரிசு கிடைக்கும்.
* ஜூன் 20க்குள் உங்கள் விடைகளை அனுப்பவும்.

*****

# ஹரிதாச விஜயம்

## சந்தா விவரம் (36 பக்கங்கள்)

1 ஆண்டுக்கு ரூ.200/- 3 ஆண்டுகளுக்கு ரூ.500/-
5 ஆண்டுகளுக்கு ரூ.900/- 10 ஆண்டுகளுக்கு ரூ.1700/-

புதிய சந்தாக்கள் அந்தந்த மாதத்திலிருந்து துவங்கும். பழைய இதழ்கள் வேண்டுமெனில், இதழுக்கு ரூ.20/- என சேர்த்து அனுப்பவும்.

## வங்கி விபரம்:

Sathya Narayanan, ICICI Bank - Savings account
A/c. No. 000101043177. IFSC: ICIC0000001
Cenotaph Road Branch, Chennai 18

| போட்டி | மாதாந்திர குறும்போட்டி |
|---|---|
| | ஜூன் 2020ன் விடைகள் |

1. ஜய நாம சம்வத்ஸரம் சிராவண பகுள த்வாதசி (28.8.1894) 2. PWDல் Sub overseer 3. துளசம்மா என்கிற கிருஷ்ணவேணி 4. சிக்கேரஹள்ளி ஸ்ரீமத்வேச தாசர் 5. பரமப்ரிய சுப்பராய தாசர் / தந்தெமுத்துமோகன தாசர் - 1940 6. பாண்டுரங்க விட்டல & முக்யபிராணர் 7. குருக்ருபா கிரந்த மாலா 8. ஹரிதாச தீபிகா 9. ஹரிதாச குலதிலக 10. மார்கசிர பகுள த்வாதசி

* இந்த இதழுக்கான புத்தகப்பரிசு பெறுபவர்:
* திரு.R. நாராயணன், பெங்களூரு.

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா



நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

**"ஹரிதாச விஜயம்"**

சிரி நிலயன குணகள '**திளிது**' பஜிசுவுதே

மலர் : 1 இதழ் : 9


**நிர்வாக ஆசிரியர்**

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்

ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,

380, 2A Main, 16th Cross,

JP Nagar 4th Phase, பெங்களூரு 560078

Ph.: 89044-58276. haridasa.vijayam@gmail.com

jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**

'தாச சாகித்ய சேவா ரத்ன'

திரு. குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**

திரு. முரளிதர தாசரு, திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா, திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

# ஆசிரியர் பக்கம்

கடந்த சில மாதங்களாக, கொரோனா காரணமாக பத்திரிக்கை அச்சிடுவதும், தபாலில் அனுப்பவதும், அப்படி அனுப்பினாலும் அவை மிகவும் தாமதமாக வருவதும் அனைவரும் அறிந்ததே. இத்தகைய தகவல்களை அனைவருக்கும் தெரிவிப்பதற்காக ஒரு வாட்சப் க்ரூப் துவக்கியுள்ளோம். Admin மட்டுமே தகவல் அளிக்குமாறு உள்ள அந்த க்ரூப்பில் இணைய விருப்பம் உள்ளோர் இணைந்து கொள்ளவும்.

https://tinyurl.com/yckgdy4u

இந்த இதழிலிருந்து, ஸ்ரீஜகன்னாத தாசரின் நேரடி சிஷ்யரான ஸ்ரீதவிட்டலரின் வாழ்க்கை வரலாறு துவங்குகிறது. அவருடைய புண்ய தினம் : ஆஷாட சுத்த ஏகாதசி. ஆஷாட கிருஷ்ண அஷ்டமி யன்று முக்தியடைந்த தந்தெ வெங்கடேச விட்டலதாசரைப் பற்றிய ஒரு சிறப்புப் பதிவு இந்த இதழில் வந்திருக்கிறது.

இந்த ஆண்டு, சாதுர்மாத விரதம், அதிக மாதத்துடன் சேர்ந்து ஐந்து மாதங்களாக வந்திருக்கிறது. சாதனை செய்வதற்கான விசேஷ காலமாக இருப்பதால், குர்வந்தர்யாமியான பகவந்தனின் ப்ரீத்யர்த்தம், இதனை தகுந்த முறையில் பயன்படுத்திக் கொள்ள முயல்வோம்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

| ஆராதனை | ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள் |
|---|---|
| | ஆஷாட & சிராவண மாதங்களில் |

ஆஷாட சுத்த ஷஷ்டி - ஸ்ரீவரதேந்திர தீர்த்தர் (புனே)
ஆஷாட சுத்த ஏகாதசி - ஸ்ரீத விட்டலர் (கர்ஜிகி)
ஆஷாட கிருஷ்ண அஷ்டமி - தந்தெ வெங்கடேச விட்டல தாசர் (சித்ரதுர்கா)
ஆஷாட கிருஷ்ண த்ரயோதசி - ஸ்ரீகர்பர நரஹரி தாசர்

தொடர்

# ஹரிதாசர்களின் வாழ்க்கை வரலாறு

## ஸ்ரீதவிட்டல தாசர்

அனேக மக்கள் ஸ்ரீபுரந்தரதாசர், கனகதாசர் பெயரை அறிந்திருப்பார்கள். மற்றும் பலர் விஜயதாசர், அவரது சிஷ்யரான கோபாலதாசர் ஆகியோரை அறிந்திருக்கலாம். உலகப்புகழ் பெற்ற ஸ்ரீஹரிகதாம்ருதசாரத்தை இயற்றியவரான ஸ்ரீஜகன்னாததாசரை அறியாதோர் இருக்கமுடியாது. அடுத்து, லிங்கசுகூர் பிராந்தியத்தில் ஹரிதாச சாகித்ய சேவையை, ஒரு தீக்ஷையைப் போலவே செய்து, நூற்றுக்கணக்கான கிருதிகளை இயற்றி, கீர்த்தனைகளை பாடி, யுக ப்ரவர்த்தகர் என்றே அறியப்படுபவரான பிராணேஷ தாசர் பற்றியும் சிலர் அறிந்திருக்கலாம். ஆனால், ஸ்ரீதவிட்டல தாசரின் ஹரிதாச சாகித்யத்தின் விசேஷ பரிச்சயத்தை அறியாதோர் பலர் உள்ளனர்.

ஸ்ரீராகவேந்திர குருராயர சேவிஸிரோ, சௌக்யதி ஜீவிஸிரோ - சாதாரணமான ஹரிதாச சாகித்ய கீர்த்தனைகளை பாடுவோர் காதுகளில் இந்தப் பாடல் விழுந்தே இருக்கும். ராயரின் பக்தர்களுக்கு மிகவும் பிடித்த பாடல் இது. ஸ்ரீராகவேந்திர குருகளின் மகிமைகளை விவரமாகச் சொல்லும் இந்தப் பாடல் அனைவருக்கும் பிடித்ததே ஆகும். இந்த கீர்த்தனையில் வரும் 'ப்ருந்தாவனகத ம்ருத்திகெ ஜல பான முகுதிகெ ஸோபான', 'மந்தபாக்யரிகெ தொரெயதிருவ சேவா ஷரனர சஞ்சீவ', 'மேதினியொளகின்னரஸலு நா காணே புசியல் லாணே, பாதஸ்மரணெய மாடதவனெ பாபி, நா பேளுவே ஸ்தாபி' ஆகிய வேத துல்யமான வரிகளைப் படிக்கையில், குருபக்தரின் இதயங்கள் அப்படியே கரைகின்றன.

இதைப்போலவே, ஸ்ரீராயரைக் குறித்து ஸ்ரீதவிட்டலர் இயற்றியுள்ள இன்னொரு பாடலில் 'ராயபாரோ ராகவேந்திர பாரோ' என்பதும் அனைவருக்கும் பிடித்தமான பாடலேயாகும். 'ஸஹ்லாத அண்ணனே பாரோ, பிரஹ்லாதராய பாரோ, பால்ஹீக வ்யாஸனாகி, உல்லாஸ திந்த பாரோ', 'நீ கருணாஸிந்து பாரோ, ஸாகபேந்து பாரோ, ஸ்ரீகர ஸ்ரீதவிட்டலேகாந்த பக்த பாரோ', போன்ற வரிகள் பக்தர்களின் இதய ங்களை நடனமாடச் செய்கின்றன. இத்தகைய அழகிய கீர்த்தனை களை இயற்றியவரே, ஹரிதாஸ வரேண்யரான ஸ்ரீதவிட்டலதாசர். மானவியின் ஜகன்னாததாசரின் நேரடி சிஷ்யரான இவர், 'கன்னட

சுதா' என்று அழைக்கப்படும் ஹரிகதாம்ருதசாரத்திற்கு பலஸ்ருதி இயற்றி, சாதகர்களுக்கு உதவிய மஹானுபாவர்.

ஸ்ரீதவிட்டலரின் ராகவேந்திர தீக்ஷை அபூர்வமானது. குருராஜரில் அகண்டமான ஸ்ரத்தா, பக்தியை தம் வாழ்க்கை முழுக்க கொண்டிருந்த தாசர், ராயரின் திவ்ய நாமத்தை, தன் உயிர்மூச்சாக நினைத்து, இடைவிடாது ஜெபித்துக் கொண்டிருந்தார். ஸ்ரீத விட்டல ருக்கு குருராஜரிடம் இத்தகைய அபூர்வ தீக்ஷை மற்றும் அபாரமான குருபக்தி வருவதற்கு, ஒரு புகழ்பெற்ற காரணம் இருக்கிறது.

ஸ்ரீதவிட்டலதாசர், தனது முந்தைய அவதாரத்தில், குருராஜரின் நேரடி சிஷ்யரும், குருவின் எல்லையில்லா மகிமை என்னும் கடலின் ஒவ்வொரு துளியின் பரிச்சயமும் ஆகியிருந்து, அவரது அருகிலேயே இருந்து சேவையை செய்த ஸ்ரீஅப்பண்ணாசார்யராக இருந்தார். குருராஜரின் ஆளுமை மற்றும் குண ஸ்வபாவங்களை நேரடியாக கண்ட அனுபவசாலி. குரு காயத்ரி என்று அழைக்கப்படும் 'ஸ்ரீபூர்ண போத குருதீர்த்த பயோப்திபாரா' என்னும் குருஸ்தோத்திரத்தை இயற்றுவதற்கு அப்பண்ணாசார்யருக்கே சாத்தியம் ஆயிற்று. குருகளின் மகிமை மற்றும் குணங்களை மாலையாகத் தொடுத்து ஸ்தோத்திர ரூபமாகக் கொடுக்க அவரால் முடிந்தது.

இதைப் போலவே, ஸ்ரீதவிட்டலதாசர், அப்பண்ணாசார்யரின் அவதாரமே ஆனதால், 'ஸ்ரீராகவேந்திர குருராயர ஸேவிஸிரோ, ஸௌக்யதி ஜீவிஸிரோ' என்றும் 'ஜீய நீனல்லதின்னாரு காய்வரோ' என்றும், குரு மகிமைகளை தொகுத்து அழகான கீர்த்தனைகளாக அவரிடமிருந்து வந்தன.

ஸ்ரீதவிட்டலதாசர், அப்பண்ணாசார்யரின் அவதாரம் என்பதற்கு ஏகப்பட்ட ஆதாரங்கள் உள்ளன. அனேக ஞானிகளின் வசனங்களும் இதனை ஒப்புக் கொள்கின்றன.

**அவதாரத்தின் பின்புலம்**

பல்வேறு அபரோக்ஷ ஞானிகள் தங்களின் கிருதி, கீர்த்தனைகளில் சொல்லியிருப்பதைப் போல, ஸ்ரீராகவேந்திர குருசார்வபௌமர், பரம

பாகவதோத்தமரான ஸ்ரீபிரகலாத ராஜரின் அம்சத்தைக் கொண்டவர். சேஷாம்சர். இந்த பிரகலாத ராஜரின் அவதாரமே சந்திரகாசார்யர் என்று அழைக்கப்படும் ஸ்ரீவியாசராஜ யதிசக்ரவர்த்திகள். ஸ்ரீவியாச ராயரின் அவதாரமே ஸ்ரீராகவேந்திர குருவர்யர்.

பிரகலாதனே வியாஸமுனி ராகவேந்திரரு ।
அஹதெந்து பஜிஸிரோ விஜய விட்டல ஒலிவ ॥
என்று ஹரிதாச ஸ்ரேஷ்டரான ஸ்ரீவிஜயதாசர் கூறினால், அவரது ப்ரிய சிஷ்யரான ஸ்ரீகோபாலதாசர்

தோஷகள தரிது உபதேஷ மாடுவரு ஸுதத்வ
சேஷாம்ஷ ப்ரஹ்லாத வியாஸமுனியெ ராகவேந்திர ॥
என்று சொல்கிறார்.

பிரஹ்லாத லக்ஷ்ம்னண பால்ஹிக வியாஸனு ।
இல்லீக ராகவேந்திர உல்லாஸ படுவனு ॥
என்று குரு ஜகன்னாததாசர் குறிப்பிடுகிறார்.

பிரஹ்லாத வியாஸமுனீந்திர ராகவேந்திர ॥
என்று மத்வபதி விட்டலர் பாடுகிறார்.

இதனை விளக்கும் இன்னும் பல்வேறு சாகித்யங்கள் வியாஸ, தாஸ சாகித்யத்தில் காணப்படுகின்றன. பிரகலாத ராஜரின் சாட்சாத் தம்பி யான ஸஹ்லாதர், ஸ்ரீஜகன்னாததாசராக அவதரித்தால், அஹ்லாதர் அப்பண்ணாசார்யராக பிறந்தார். இந்த இருவரின் நோக்கமும் ஒன்றே. தம் அண்ணனான பிரகலாதனை 'குரு'வாக நினைத்து, அவர் போதித்த சத்மதத்தை தாங்கிப் பிடிப்பது. மஹா ஹரிபக்தனான அவனின் மகிமையை பரப்புவது.

இந்த காரணங்களுக்காகவே, ஸ்ரீராகவேந்திர குருசார்வபௌமரின் காலத்தில் வாழ்ந்த ஸ்ரீஅப்பண்ணாசார்யர், அடுத்து ஸ்ரீதவிட்டல தாசராக அவதரித்து, முந்தைய பிறவிகளில் தாம் பின்பற்றிய ஹரி குரு சேவையை முன்னெடுத்தார். பிரகலாதனின் அம்சரான ஸ்ரீராகவேந்திர குருவர்யரின் சேவையை ஒரு தீக்ஷையைப் போலவே செய்து வந்தார். இதற்கு ஆதாரமாக, பல்வேறு ஹரிதாசர் களின் வசனங்கள் உள்ளன.

ஸ்ரீகுரு ஜகன்னாததாசர் ஸ்ரீராகவேந்திரரைக் குறித்து இயற்றிய சுளாதி ஒன்றில்:

ஆதியுகதி மஹ ஆதிதைதேயனொப்ப
மேதினியோள் ஸ்வர்ணகஷ்யபு நாமதி
ஸாதிஸி பந்தவகொப்ப ஸோதர ஸ்வர்ணாம்பகனெனிஸி
மேதினி சோரனாகி ஹதனாதனு
ஆதி சேஷனெ விஷ்வக்ஸேன தா
நாத ப்ரஹ்லாத ப்ராணாவேஷதிந்த
ஸோதர ஜீவாம்ஷாபானாவிஷ்ட ஸ
ஹ்லாத நாமக மித்ரனாத அ
ஹ்லாத வ்யானாவேஷதிந்த
மோததி ஸோமாம்ஸோதானாயஹதனு
ஹ்லாத நாமக ஸம்பூதனாத
ஆதி கணப ஸமானாவேஷதிந்த
மேதினி ஸூரருத்தாரகோஸுக ||

என்று பாடினால், ஸ்ரீகுரு ஜகன்னாததாசரின் சிஷ்யரான ஸ்ரீவர விட்டலர் குருகளைக் குறித்து தம் கீர்த்தனை ஒன்றில், ஸ்ரீஅப்பண்ணாசார்யர், பிரகலாதனின் தம்பியான அஹ்லாதனின் அவதாரம் என்று கூறுகிறார்.

ஸூராம்ஷதி தா பூமிகெ பந்த அஹ்லாத ஜககிது மோத |
தோரித அண்ண பிரஹ்லாத இவரிகெ தாரி |
மாரமணன நரஹரிய ரூப முததிந்த | கண்ட ஆனந்த ||

** **கன்னடத்தில்: ஸ்ரீதிருமலேஷஹரி விட்டலதாசர்,பெங்களூரு.**

https://hks-bhavaprakashike.blogspot.in என்னும் இணைய தளத்தில் 'பாவபிரகாசிகை' என்னும் (ஹரிகதாம்ருதசாரத்தின்) கன்னட உரையின் தமிழாக்கம் - தினமும் 5 பத்யங்கள் - என்று வெளியிடப்பட்டு வருகிறது. அனைவரும் அந்த தளத்திற்குச் சென்று படித்து பயன் பெறவும் என்று கேட்டுக் கொள்கிறோம்.

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## கருணா சந்தி - விடைகள்

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 க | ரு | ணா | ஸ | ந் | தி 21 | | | | | | ஜ 22 | | யா 23 |
| க | | | | | வெள | | | ணை | | | ன | | ச |
| ன | த | யோ | ஸு 16 | | க | | | க்ஷ | ரு | வ் | ப | ல் | க 17 |
| | | | | | 2 ஸ | ம் | ஹா | 33 ர | ம் | | | | ம் |
| 3 பு | ரு 24 | ஷ | | 4 ஸ் | ரு | ஷ் | டி | | | பூ 25 | | | |
| யா | த் | பா 18 | | ரே | | | | | | 5 ஸு | தா | மா | |
| | ர | த | | ஷ் | | 6 அ | ம | ர | த | ர | ங் | கி | ணி |
| | ர் | ம் | | ட | | சே | | | | ரு | | | 34 ப |
| | | | | | வ 26 | த | | | | | | | |
| | 7 அ | ன | ந் | தா | ஸ | ன | ம் | | | ஆ 27 | யு 28 | | |
| | | | | | ன | | | | 8 நீ | ல | வ | ர் | ண |
| | ப் 29 | | | | | | | | | ய | தி | | |
| ன் | ர | து 30 | வி 19 | | | 9 கா | ம | தே | னு | | | | |
| | ஹ்ர | ரி | பூ | | 10 இ | ங் | க | ட | ல | | | | |
| | மா | த | ஷ | | ட் | 11 கே | த | | | | | | |
| | | | ண | | டி | ய | | 12 க | ல | பா 31 | ஷை | | |
| | | | | | க | | | | 13 அ | ம் | பு | தி | |
| ம | ஸீ | ஸ் 32 | நி 20 | | ல் | 14 மோ | கி | னி | | பொ | | | |
| | | ரு | | | | த | | ன | | ளெ | | | |
| | | 15 தி | ண் | ணி | | | | 35 ஜ | | | | | |

சரியான விடைகள் எழுதி புத்தகப் பரிசு பெறுவோர்:

* திருமதி. உமா குருராஜன், திருநெல்வேலி
* திரு. சேதுமாதவன், கோயம்புத்தூர்
* திரு. பத்பனாபன், திருநெல்வேலி

தொடர்

## கேசவ நாமா

## 7. அச்யுதானந்த கோவிந்த-ஸ்ரீபுரந்தரதாசர்

**மாதவ மங்களகா3த்1ர ஸ்வாமி**
**யாதவ கைலாஸவாஸன மித்ர**
**மஹிமெ கேளித3ரெ விசித்1ர நின்ன**
**மன மெச்சலி சத்யபாமாக1ளத்ர** ||3

மாதவனே, மங்களமான சரீரத்தை உடையவனே, கைலாசத்தில் வசிப்பரின் நண்பனே, உன் மகிமைகள் விசித்திரமானவை. உன் உள்ளம் குளிருமாறு நீ என்னில் இருந்து, உன் நாமங்களை என்னை சொல்ல வை, சத்யபாமாவின் பதியே.

**கோவிந்த கோபா1லபா3ல ஸோள**
**ஸாஸிர கோ3பே1ர ஆனந்தலீல**
**நீலமணி முக்1தாமால நிம்ம**
**நீனெந்து கரெயலி சுக்ரீவபா1ல** ||4

கோவிந்த, பசுக்களை காப்பவனே, கோபாலகர்களின் நண்பனே, 16,000 கோபியர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுத்தவனே, நீலமணி மாலையை தரித்தவனே, சுக்ரீவனை காப்பாற்றிய ஸ்ரீராமனே, உன்னை நான் எப்படி வணங்குவேன்?

**விஷ்ணுசக்ரவு ப3ந்து3 ஸுத்தி மூரு**
**ஸ்ருஷ்டியனெல்ல தி1ருகி3 பெ3ன்னட்டி1**
**கிருஷ்ண ஸலஹெந்து மொரெயிட்டு முனி**
**ஸ்ரேஷ்டரிஷ்டவ மேலெ அப4யவ கொ1ட்டெ1** ||5

ஹே விஷ்ணு! ஏகாதசி மற்றும் த்வாதசி விரதங்களை சிரத்தையுடன் செய்த அம்பரீஷ சக்ரவர்த்தியை, துர்வாச முனிவர் சோதிப்பதற்காக செல்ல, அவரே சுதர்சன சக்கரத்தினால் துரத்தப்பட்டு, ஹரி, ஹர, பிரம்மபுரங்களை சுற்றி பின் கிருஷ்ணா, என்னைக் காப்பாற்று என்று உன்னை முறையிட, அம்பரீஷன் மூலமாகவே துர்வாசரை காப்பாற்றினாய்.

**மதுசூதன மாரஜனக மத$^{3}$**
**க$^{3}$ஜ ஸீளி மல்லர கெ$^{3}$லிதெ$^{3}$ த$^{1}$வக$^{1}$**
**ஒத$^{3}$கி$^{3}$ கம்ஸன கொ$^{1}$ந்த$^{3}$ ப$^{3}$ளிக$^{1}$ நீ**
**முது$^{3}$க$^{1}$கெ$^{3}$ பட்டவ கட்டித்$^{3}$யோ த$^{4}$னிக$^{1}$ ||6**

மதுசூதன! மன்மதனின் தந்தையே! மதம் பிடித்த யானையைக் கொன்று, மல்லர்களை வென்று, கம்சனைக் கொன்று, அவனின் தந்தையான உக்ரசேனனுக்கு பட்டம் கட்டிய ஸ்ரீமந்தன் நீ.

**த்ரிவிக்ரம த்ரைலோக்யநாத தேவ**
**த்ரிபுரர சதி$^{1}$யர வ்ரதக்கெ விகா$^{4}$த$^{1}$**
**யதுவம்ஷ பாண்டவ ப்ரீத என்ன**
**ஹ்ருதயதொளடகிரோ ஸ்ரீஜகன்னாத ||7**

த்ரிவிக்ரமனே, மூன்று லோகங்களுக்கும் அதிபதியே, யது குலத்தவனே, பாண்டவர்களின் அன்பைப் பெற்றவனே, த்ரிபுராசுரர்களைக் கொன்று த்ரிபுராரி என்று பெயர் பெற்றவனே, ஜகன்னாதனே, நீ என் இதயத்தில் வசித்திருப்பாயாக.

**வாமனரூபிலி ப$^{3}$ந்து$^{3}$ ப$^{3}$லிய**
**தா$^{3}$னவ பே$^{3}$ட$^{3}$லு உசித$^{1}$வு எந்து$^{3}$**
**தா$^{4}$ரெயனெரெயலு அந்து$^{3}$ பெ$^{3}$ளெது$^{3}$**
**தா$^{4}$ரிணியெல்லவ னளெத்$^{3}$யோ நீனந்து$^{3}$ ||8**

பலி சக்ரவர்த்தியிடம் மூன்றடி நிலம் தானம் கேட்டு வந்த வாமனன், அந்த தானத்தைப் பெறும்போது இந்த உலகத்தையே அளந்து, இந்த பிரம்மாண்டத்தையே உன் வசமாக்கிக் கொண்டாய்.

**ஸ்ரீதர ஸ்ருங்காரஹார திவ்ய**
**ஸ்ரீவத்ஸலாஞ்சன ஸ்ரீரகுவீர**
**வாரிதி$^{4}$ சமகம்பீ$^{4}$ர தீ$^{4}$ர**
**க்$^{1}$ரூர ரக்கஸரனெல்லர ஸம்ஹார ||9**

ஸ்ரீதரா! லட்சுமிதேவியை உன் மார்பில் வைத்திருப்பவனே, ரகுவீரனே, க்ரூர ராட்சரர்களையெல்லாம் அழித்தாலும் நீ 'வாரிதி சமகம்பீர'னாக இருக்கிறாய். கடலின் ஆழம், நீளம், அகலங்களை எப்படி கரையில்

நின்றவாறு சொல்லமுடியாதோ அப்படி கம்பீரமாக இருக்கும் ஸ்ரீதரனே.

**ஹ்ருஷிகேஷ வ்ருந்தாவனதலி நீ**
**ஹருஷதி கொளலனூது3த1 யமுனெயலி**
**ஸதியர ஸம்மேளதலி நீ**
**த4ரிஸித்3யோ மந்தா3ரமாலெ கொ1ரளலி ||10**

ஹ்ருஷிகேசனே, வ்ருந்தாவனத்தில், யமுனா நதியில், உன் மனைவிகளுடன் ஆனந்தத்தில் குழலை ஊதியவாறு, கழுத்தில் மந்தார மாலையை (பாரிஜாத) அணிந்து, ராசலீலையை நீ ஆடினாய்.

**பத்பனாப கேளோ க4ன்ன பா1த3**
**பத்மவ தோரிஸோ பே3க3னே நின்ன**
**முத்து3முக2வ தோரியென்ன பே3க3**
**உத்தா3ர மாடெ3ந்து3 பே3டு3வெ நின்ன ||11**

பத்பனாபரூபி பரமாத்மனே, உன் பாத கமலங்களை, உன் அழகான முகத்தைக் காட்டி, என்னை மேம்படுத்த வேண்டுமென்று வேண்டிக் கொள்கிறேன்.

**தாமோதர குணதா4ம ஸ்வாமி**
**தா3னவாந்தக யதுகுல சார்வபௌம**
**நீலமேக4னிப4ஷ்யாம க்ருஷ்ண**
**நீலாபதியெம்ப பஹு புண்யநாம ||12**

தாமோதரனே, நீ அனைத்து குணங்களையும் பெற்றவன், யதுகுலத்தவன், சிறந்தவன், நீலமேக ஸ்யாமன் - அஷ்ட மஹிஷியர்களில் ஒருவரான நீலாவின் கணவன், கிருஷ்ணன் இதுவே உன் புண்ணிய நாமம்.

**சங்கர்ஷண த3னுஹரண தேவ**
**பங்கஜமுகி த்ரௌபதி மேலெ கருண**
**குங்குமாங்கித ரேகா2ச1ரண நிஜ**
**கங்கண கேயூர கௌஸ்துபா4ப4ரண ||13**

சங்கர்ஷணனே, உன் கருணையால் திரௌபதியை காப்பாற்றினாய். கங்கணம், வளை, கௌஸ்துப போன்ற ஆபரணங்களால் அலங்கரித்தவனே, உன் செம்மையான பாதங்களை நான் வணங்குகிறேன்.

**வாசுதேவ கேளோ நின்ன திவ்ய**
**ஸாஸிர நாமவ நெனெவனெ தன்ய**
**பே[3]ஸரதெ[3] ஸலஹபேகென்ன து[1]ஸ**
**கா[4]ஸிய மாடதெ கருணாசம்பன்ன ||14**

வாசுதேவனே, உன் ஆயிர நாமங்களை நினைப்பவனே தன்யன். ஆகையால், எவ்வித சந்தேகமும் இல்லாமல், கட்டாயமாக எனக்கு கருணை காட்டி காப்பாற்று.

**ப்ரத்யும்னனெந்து நா கரெதெ என்ன**
**ப[3]த்த[3]வாத[3] துஷ்கர்மவ களெதெ**
**துர்புத்தி துர்வாக்ய மரெதெ[3] ஸாது[4]**
**சஜ்ஜனர சங்க[3] நின்னிந்த பெ[3]ரெதெ[3] ||15**

க்ருதிதேவியின் கணவனான ப்ரத்யும்னனே, உன் நாமஸ்மரணையானது, துஷ்கர்மங்களை போக்குகிறது. துர்புத்தி, துர்வாக்கியங்கள் களைந்து, சஜ்ஜனரின் நட்பில் சேருமாறு எனக்கு கருணை காட்டுவாயாக.

**அனிருத்த அனுதினதல்லி நீ**
**வினயதி[3]ந்தி[3]த்தெ[3] கோபியர மனெயல்லி**
**ஸனகாதிவந்த்ய நின்னக[3]லி ஒந்து**
**க்ஷண பி[3]ட்டி[1]ரலாரெ நில்லோ மனதல்லி ||16**

சாந்திபதியான அனிருத்தனே, சனகாதி முனிவர்களால் வணங்கப்படுபவனே, கோபியரின் மனங்களில் / வீடுகளில் வசிப்பவனே, உன்னை ஒரு கணமும் விட்டு இருக்கமாட்டேன். என் மனதில் வந்து நிற்பாயாக.

** திருமதி. ஜெயம்மா, பெங்களூரு

* வடிவமைத்தவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி.
* இதற்கான விடைகளை ஜூலை 15ம் தேதிக்குள் வாட்சப்பிலோ, மெயிலிலோ அனுப்பலாம்.
* சரியான விடைகள் தரும் இருவருக்கு புத்தகப் பரிசு கிடைக்கும்.

**வலமிருந்து இடம்**

1. ஸரீரம் நாஸம் அடையாத ஜீவர்கள்(3); 2. புருஷ ஸூக்தத்தினால் நன்றாக அறியப்பட்டவன்(3); 3. எதிலும் ஸம்பந்தமில்லாமல் இருக்கிறான். ஜகத் விலக்ஷணன்.(5); 4. கட்டளை இடுபவன்(4); 5. ப்ரகாஸம் அல்லது வெளிச்சம்(4); 6. மது அருந்தியவன்(4); 7.வாசனை(3); 8.வேதம்(3) 9.இந்த்ர நீலமணி(5); 10.கேட்கும் திறன் உடைய உறுப்பு(4); 11.இந்திரன்(3) 12.நான்கு விதமான தேஹங்களில் முதலானது(3); 13.ஸர்ப்பம்(4); 14.மிகச் சிறிய பொருள்(2); 15.தோஷம்(3); 16.மேல் வேஷ்டி(3); 17.வ்ருக்ஷம்(3); 18.நாழிகை கிண்ணம்(7); 19.க்ஞானம்(2)

**இடமிருந்து வலம்**

11.ஆகாயத்தின் தன்மாந்திர குணம்.(4); 20.தொடும் உணர்வு(4); 21.கண்(3) 22.வாயு தேவர்(3); 23.நல்லது கெட்டது தீர்மானித்து ஸந்தேஹ க்ஞானத்தை போக்குவது.(3); 24.தோல்(3); 25.வயிறு(3); 26.மனைவிகள்(4)

**மேலிருந்து கீழ்**

1.அக்னி(3); 2.ஆழ்ந்த தூக்கம்(4); 13.காற்று(3); 27.பூமி(3); 28.மண்பானை(7) 29.பவழம்(4); 30.பாபங்கள்(4); 31.நாக்கு இந்த உணர்வை அறியும் (2). 32.ஆறிப்போன அக்னி(6); 33.மனுஷ்யர்(5)

**கீழிருந்து மேல்**

14.மீறிய செயல்(3); 19.க்ஞானனந்த ஸ்வரூபம்(4); 25.மூத்ர விஸர்ஜனம்(4) 34.மூக்கு(3); 35.நீரில் தோன்றிய தாமரை(4); 36.ஓட்டை(3); 37.மணல்(3); 38.குணங்கள் உடையவன்(2); 39.க்ஞானிகள்(5); 40.துணியிலுள்ள இழை(5) 41.புகை.(2)

ஆராதனை

# ஸ்ரீதந்தெ வெங்கடேச விட்டலதாசர்

By குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்

ஸ்ரீதந்தெ வேங்கடேஸ விட்டல தாசர்
(1907-1982AD) (சித்ரதுர்கா R.ராமசந்திர ராயர்)

இந்த அப்ரசித்த ஹரிதாசரின் புண்ய தினம் ஆஷாட பகுள அஷ்டமி (14.7.1982). இவரைப் பற்றிய ஒரு சிறு அறிமுகத்தைப் பார்ப்போம்.

ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீவேணுகோபாலதாசர் பரம்பரையில் வந்தவர் ஸ்ரீதந்தெமுத்துமோகன விட்டலதாசர் என்கிற தேவராயனதுர்க 'பரமப்ரிய' சுப்பராய தாசர். அவருடைய சிஷ்யரே ஸ்ரீஉரகாத்ரிவாச விட்டல தாசர் என்கிற சித்ரதுர்கா தாசர். அவரின் சிஷ்யரே ஸ்ரீதந்தெ வேங்கடேச விட்டல தாசர் என்கிற சித்ரதுர்கா ராமசந்திர ராயர். சமீப காலத்தில் இருந்த ஒரு பெரும் அபரோக்ஷஞானி தாசர்.

அவர் கல்வித் துறையில் பணியாற்றி வந்தார். சித்ரதுர்கா உயர் நிலைப் பள்ளியில் ஆங்கில பேராசிரியராக இருந்தார். ஸ்வபாவத்தில் பரம சாத்வீகர், வித்வத்மணி. ஸ்ரீஉரகாத்ரிவாச விட்டலதாசரிடமிருந்து 'தந்தெ வேங்கடேச விட்டலா' என்னும் அங்கிதத்தைப் பெற்றார். அவரின் கவிதைத் திறன் வெளியுலகத்திற்கு தெரிய வந்தது. ப்ரமேய ங்கள் நிரம்பிய, பக்தி ரசமான நூற்றுக்கணக்கான கிரந்தங்களை இவர் இயற்றியுள்ளார். 'பரமார்த்த சந்திரோதய' என்னும் மாதப் பத்திரிக்கை யில், பல தாச சாகித்ய விஷயங்கள் எழுதியுள்ளார். இவருடைய சாகித்ய பாணி, ஸ்ரீஜகன்னாததாசரைப் போன்று சிறிது கடினமான சாஸ்திர பிரமேயங்களால் நிரம்பியதாகும்.

ஒரு முறை, ஸ்ரீஉரகாத்ரிவாச விட்டலதாசர், திருப்பதி யாத்திரைக்குப் புறப்பட, ஸ்ரீராமசந்திர ராயரும் அவருடன் செல்வதற்கு தயாரானார். ஏதோ காரணத்தால், குருவானவர் இவரை விட்டுச் சென்றுவிட, இவரும் ஆனெகொந்தியில் நடந்த ஸ்ரீபுரந்தரதாசர் ஆராதனைக்குச் சென்றார். அங்கு பரமகுரு ஸ்ரீதந்தெமுத்துமோகன தாசரின் தரிசனம் கிடைத்தது. பரமகுரு இவரை ஆலிங்கனம் செய்துகொண்டார். குரு வின் தரிசனத்திற்குப் பதில் பரமகுருவில் தரிசனமே இவருக்கு

கிடைத்தது. 'இதுவே உன் திருப்பதி' என்று பரமகுருவின் விசித்திர ஆசியும் கிடைத்தது.

1939ல் இவருக்கு மைசூர் கோவிந்த ராயரின் பரிச்சயம் கிடைத்தது. கோவிந்த ராயருக்கு பரமார்த்த சந்திரோதயவும், அதில் ராமசந்திர ராயரின் கட்டுரைகளை படிக்கும் பாக்கியமும் கிடைத்தது. பின்பு ராமசந்திர ராயர் மூலமாக, 1940ம் ஆண்டு, தேவராயன துர்காவில், தந்தெமுத்து மோகனவிட்டல தாசரின் பரிச்சயம் கிடைத்தது. அப்போது குருவிற்கு ஹரிப்ரேரணை கிடைத்து, தாசருக்கு 'குரு கோவிந்த விட்டலா' என்னும் அங்கிதம் கிடைத்தது. அதுவே 1165 பேருக்கு அங்கிதம் கொடுத்த குருவின் கடைசி அங்கிதமும் ஆயிற்று. அதன்பின் வந்த ஸ்ரீராம நவமியன்று, தந்தெமுத்து மோகனவிட்டல தாசர் மோட்சம் அடைந்துவிட்டார். அதன்பின், குருகோவிந்த விட்டல தாசர் 285 பேருக்கு அங்கிதம் அளித்தார். என்னுடைய குரு ஜாம்பவதி ப்ரிய விட்டலதாசரும் அவர்களில் ஒருவர். அந்த தாசபரம்பரை அத்யாபி அவிச்சின்னமாகி உள்ளது.

தந்தெ வேங்கடேச விட்டலதாசர் அனேக பதங்களை அளித்துள்ளார். அவர் குருவான உரகாத்ரிவாச விட்டல தாசர் அருளிய அங்கித பதங்களைக் கொண்ட 52 சரணங்களைக் கொண்ட ஒரு தீர்க்க கிருதி யை எழுதியுள்ளார். ஆங்கில மொழியில் 'Significance of Ankitha Nama and its Upadesa' என்கிற புத்தகத்தை எழுதியுள்ளார். திரு.A.R.அனந்தஸ்வாமி ராவ் என்கிற ஆனந்தவிட்டல தாசர் அதையே கன்னடத்தில் எழுதி யுள்ளார். தாசரின் பாடல்கள், சித்ரதுர்கா பிராந்தியத்தில் பிரசித்த மானவை. அவர், 14-7-1982 துந்துபி ஆண்டில் ஆஷாட பகுள அஷ்டமி யன்று ஸ்ரீஹரிபாதம் எய்தினார். அப்போது குருகோவிந்தவிட்டல தாசர் இயற்றிய பாடலை இங்கு கொடுத்து, கட்டுரையை நிறைவு செய்கிறேன்.

மித்ரவர்யனு தாஸ । ஹரிபுரகெ ஹொரடா ।
காத்ரதல்லி ஸுப்ரக்ஞரு கொரளி வாரரு தாளி ॥

தனுமனவ ஹரியல்லி மானதலெ அர்ப்பிஸுவ
ஞான சாதன புண்யாத்மரோ

*** இதன் தொடர்ச்சி 32ம் பக்கத்தில்

தொடர்

# ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

## கருணை வெள்ளம்

ஸ்ரீஜகன்னாததாசர் இயற்றியுள்ள ஹரிகதாம்ருதசாரமானது, வேதாந்த சாஸ்திரங்களின் கருப்பொருட்களை தன்னுள்ளே அடக்கிக் கொண்டிருக்கும் ஒரு அற்புத கிரந்தம். இதில் நிரூபிக்கப்படாத சாஸ்திர விஷயங்களே இல்லை எனலாம். நமக்குத் தேவையான அனைத்து விஷயங்களும் இங்கே விவாதிக்கப்பட்டுள்ளன.

ஸ்ரீஹரியை கருணாமூர்த்தி, கருணாநிதி என்றெல்லாம் போற்றுகிறோம். நற்குணங்களில் சிறந்தது கருணையே ஆகும். அடுத்தவர்களின் துக்கங்களை அறிந்து மனமிரங்கி அவர்களுக்கு உதவுவதற்காக ஓடோடி வருவதே காருண்யம் ஆகும்.

துஷ்டர்களுக்கு காட்டும் கருணையை காருண்யம் என்று சொல்ல முடியாது. அது தவறாகும். நீதிபதியானவர் ஒரு குற்றவாளிக்குத் தரும் தண்டனையானது அவரைப் பொறுத்தவரை சரியே. குற்றவாளிகளுக்கு கருணை காட்டுவது தவறு, ஒரு ஜீவனின் பற்பல பிறவிகளின் வினைப்பயன் அனைத்தும் ஸ்ரீஹரிக்கு தெள்ளத் தெளிவாகத் தெரியும். ஆகவே, ஸ்ரீஹரி அந்த ஜீவனின் பின்புலத்தைப் பார்த்து, அவனின் தவறுகளை மன்னித்து அவனுக்கு நல்வழியைக் காட்டுகிறார். இதற்காகவே ஸ்ரீஹரியை கருணைக்கடல் என்று வர்ணிக்கின்றனர். ஸ்ரீஹரியின் கருணையை ஜகன்னாததாசர் பல ஸ்லோகங்களில் விளக்கியிருக்கிறார். ஒரு சந்தியையே இதற்காக ஒதுக்கியுள்ளார்.

இட்டி[1]க[1]ல்லனு ப[4]கு[1]தியிந்த[3]லி
கொ[1]ட்ட[1] ப[4]கு[1]த[1]கெ[3] மெச்சி த[1]ன்னனெ
கொ[1]ட்ட[1] ப[3]ட[3]பி[3]ராமணன ஒப்பி[1]டி[3] அவலிக[3]கி[2]லார்த்த[1] |
கெ[1]ட்ட[1] மாது[1]க[3]ளிந்த[3] சைத்[1]யன
பொ[1]ட்டெ[1]யொளகி[3]ம்பி[3]ட்ட[1] பா[3]ணத[3]
லிட்ட பீ[4]ஷ்மன அவகு[3]ணக[3]ளெணிஸித[3]னெ க[1]ருணாளு ||
(கருணா சந்தி ஸ்லோகம் 11)

கிருஷ்ண பக்தரான புண்டலீகன், தன்னைக் காண வந்த கிருஷ்ணன் நிற்பதற்கு ஒரு செங்கல்லைத் தூக்கிப் போட்டார். தன் பெற்றோரின் சேவையை முடித்து அவர் திரும்பி வரும்வரை, ஸ்ரீகிருஷ்ணன் அந்த செங்கல் மீது, தன் இடுப்பில் கை வைத்தவாறு காத்திருந்தார். திரும்பி வந்த புண்டலீகனிடம் - உனக்கு தரிசனம் தருவதற்காக நான் எப்போதும் இங்கேயே இருக்கிறேன் - என்றார் ஸ்ரீகிருஷ்ணன்.

ஏழை பிராமணன் சுதாமன். ஸ்ரீகிருஷ்ணனைப் பார்க்க வந்தவன், கைவீசி வரக் கஷ்டப்பட்டு, ஒரு பிடி அவலைக் கொண்டுவந்திருந்தார். அவனின் ஆசைகள் அனைத்தையும் ஸ்ரீகிருஷ்ணன் நிறைவேற்றினார். தர்மராஜரின் ராஜசூய யாகத்தின்போது சிசுபாலன், ஸ்ரீகிருஷ்ணனை தகாத வார்த்தைகளால் திட்டினான். ஆனாலும் அவனுக்கு ஸ்ரீகிருஷ்ணன் தன் தேகத்திலேயே இடம் கொடுத்தார். பீஷ்மாச் சாரியர் ஸ்ரீகிருஷ்ணனை போரில் தன் கூரிய அம்புகளால் துளைத் தாலும், அதை பொருட்படுத்தாமல் அவருக்கு அருளினார். கௌரவர் களுக்காக அவர் போர் புரிந்தாலும், அவரின் துர்குணங்களை கணக் கில் எடுக்கவில்லை. இவை அனைத்தும் ஸ்ரீஹரியின் கருணை தானே?

ஸ்மரிசுவ வரப[1]ராத[3]க[3]ள தா[1] ஸ்மரிஸ

பக்தர்கள் செய்த தவறுகளை ஸ்ரீஹரி எப்போதும் பொருட் படுத்துவதில்லை. அவர்களுக்கு எப்போதும் தன் கருணைப் பார்வை யையே கொடுக்கிறார். மனிதன், பிராணிகள் என எந்த வேறுபாடு களையும் அவர் பார்ப்பதில்லை. அனைவரின் மேலும் அவர் கருணையைக் காட்டுகிறார்.

காளிங்க பாம்பினை ஸ்ரீகிருஷ்ணன் கொன்றார். 'நியாயோஹி தண்ட: க்ருத கில்பிஷேஸ்மின்'. தவறு செய்த இவனுக்கு நீ கொடுத்த தண்டனை சரியே. இந்த தண்டனையும் அவனுக்கு அருளியதாகவே ஆகிறது. சஜ்ஜனர்கள் எந்த காரணத்தால் செய்த தவறு செய்தாலும், அவர்களுக்குக் கிடைக்கும் தண்டனையானது, அந்த தவறினால் வரும் பாவத்தைப் போக்குகின்றது.

ஸ்ரீஹரி கொடுக்கும் தண்டனையை மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்ள வேண்டும். அது நமக்கு நல்லதாகவே முடியும். சஜ்ஜனர்கள் இப்படியே எண்ணுகிறார்கள். துர்ஜனர்கள் மேலும் விரோதம் / கோபம் கொண்டு தமஸ்ஸினை அடைகிறார்கள்.

20 - ஹரிதாச விஜயம் -ஜூலை 2020

'க்ரோதோபி தேனுக்ரஹ ஏவ சம்மத:' உன் கோபமும் எங்களுக்கு அருள்வதைப் போலவே ஆகிறது - என்று நாகபத்னியர்கள் ஶ்ரீகிருஷ்ணனின் வேண்டுகிறார்கள்.

ப்ருகு ரிஷி ஶ்ரீஹரியின் இதயத்தில் மிதித்தார். ஒரு வேடன் ஶ்ரீகிருஷ்ணனின் பாதங்களில் அம்பு விட்டான். ஆனாலும் ஶ்ரீஹரி இந்தத் தவறுகளை பொருட்படுத்தாமல், அவர்களுக்கு அருளினார். இது ஶ்ரீகிருஷ்ணனின் கருணைதானே?

பல பக்தர்களின் கதையை இங்கே சொல்கிறார் தாசர். ஶ்ரீஹரியின் கருணையினாலேயே அனைத்தும் கிடைக்கும். பாவங்கள் போகும். தேவதைகளுக்கு பாவங்கள் இருப்பதில்லை.

ஓம் தததிகம உத்தர பூர்வாகம்யோர ஸ்லேஷவினாஷௌ தத்வ்யபதேஷாத் (4-1-13)

அபரோக்ஷ ஞானம் வந்தபிறகு, புண்ய பாவங்கள் வந்து சேர்வதில்லை என்று இந்த சூத்திரத்தில் விளக்கியிருக்கிறார்.

கா1வனய்யன பரமசத்க1ரு
நாவலோக1ன ப3லதி சலிசுவ
தே3வதெ1க3ளனு முட்ட1லாப4வெ பாபகர்மக3ளு ||
(சர்வபிரதீக சந்தி ஸ்லோகம் 10)

ஶ்ரீஹரியின் கருணைப் பார்வையிலேயே தேவதைகள் இருக்கின்றனர். ஆகையால் அவர்களை புண்ணிய பாவங்கள் நெருங்குவதில்லை.

அனக3னஜித1னனந்த1 நிஷ்கி1
ஞ்சனஜனப்1ரிய நிர்விகா1ர நிராஸ்ரயாவ்யக்1த1 ||
(பிம்பாபரோக்ஷ சந்தி ஸ்லோகம் 30)

'நிஷ்கிஞ்சன ஜனப்ரிய' என்று ஶ்ரீஹரியை தாசர் வர்ணிக்கிறார். பாகவதாதி புராணங்களில் இந்தப் பெயர் பல முறை வந்திருக்கிறது.

நாயமாத்மா ப்ரவசனேன லப்யோ
நமேதமா ந பஹுனா ஷ்ருதேன ||

கல்வியறிவு, செல்வம் ஆகியவற்றிற்கு ஸ்ரீஹரி வருவதில்லை. நிஷ்கிஞ்சினர் என்றால் ஏழைகள். காட்டினில் தவம் செய்பவர்களுக்கு என்ன செல்வம் இருக்கிறது? அவர்களுக்கு தரிசனம் கொடுப்பதில்லையா ஸ்ரீஹரி? இது அவனது கருணைதானே?

ஸ்ரீனிவாசன போ1ல்வ க1ருணிக3
ஙீனனிலஜாண்டதொ3ளு கா1ணே ப்1ர
வீணராதவரரசி நோள்பு1து3 ஸ்ருதி பு1ராணதொ3ளு |
த்3ரோண பீஷ்ம க்1ருபாதிக3ளு கு1ரு
சேனெயொளகி3ரெ அவரவகு3ணக3
ளேனு நோடதெ பாலிசித பரமாத்ம பரக3திய ||
(பக்தாபராத சஹிஷ்ணு சந்தி ஸ்லோகம் 3)

ஸ்ரீஹரியைப் போல கருணாமயி வேறு யாருமே இல்லை என்று பற்பல ஸ்லோகங்களில் விவரித்திருக்கிறார் ஜகன்னாததாசர். வேத புராண வாக்கியங்களைப் பார்த்தால் இது சரியாக விளங்கும். துரோணாசாரியர், பீஷ்மாசாரியர், கிருபாசாரியர் இவர்கள் அனைவரும் ஸ்ரீகிருஷ்ணனின் எதிரான கௌரவர்களின் படையில் இருந்து போர் புரிந்தனர். ஆனாலும் ஸ்ரீகிருஷ்ணன் அவர்களின் துர்குணங்களைப் பார்க்காமல் அவர்களுக்கு உத்தமமான நிலையைக் கொடுத்தான். இதுவே ஸ்ரீஹரிக்கு தன் பக்தர்களின் மேல் இருக்கும் கருணையைக் காட்டுகிறது.

து3ர்மதிக3ளனு கொ1டதெ3 த1ன்னய
ஹர்ம்யதொ3ளகி3ட்டெல்லகா1லதி3 கா1வ க்1ருபெயிந்த3 ||
(கர்மவிமோசன சந்தி ஸ்லோகம் 13)

நாம் செய்யும் அனைத்து செயல்களயும் ஸ்ரீஹரிக்கு சமர்ப்பிக்க வேண்டும். ஸ்ரீஹரி கருணை மிக்கவன். கர்ம-சமர்ப்பணம் செய்யும் பக்தர்களுக்கு அவர் கெட்ட புத்தியைக் கொடுப்பதில்லை. அவர்களை கருணையுடன் பார்க்கிறார். தன் இடத்தையே அவர்களுக்குக் கொடுத்து அருள்கிறார்.

மொக3தொ3ளகெ3 மொக3விட்டு1 முத்தி3ஸி
மகு3வினம்பி3கி3தப்பி1 நேஹதி3
தெ1கெ3து த1ன்ன ஸ்த1னக3ளுணிசுவ ஜனனியந்த3த3லி |
அக3ணிதா1த்1மனு த1ன்ன பாதா3
ப்3ஜக3ள தெ3னிப பக்தஜனரிகெ3

ப்ரக3டக1னு தா1னாகி3 சௌக்யகளீவ சர்வத்ர ||
(தத்தஸ்வாதந்த்ர்ய சந்தி ஸ்லோகம் 11)

ஒரு தாயின் பாசம் எப்படிப்பட்டது என்பது அனைவரும் அறிந்ததே. தாய் கருணையின் இருப்பிடம். குழந்தை தன் காலால் எட்டி உதைத்தாலும், அதைக் கண்டு மகிழ்பவள். குழந்தையின் முகத்தில் தன் முகத்தை வைத்து கொஞ்சுபவள். அன்புடன் முலைப்பாலைக் கொடுப்பவள். இப்படிப்பட்ட தாயின் கருணைக்கு ஈடாக ஸ்ரீஹரியும் தன் தாய்ப்பாசத்தைக் காட்டுகிறான்.

ஏனு க1ருணவோ த1ன்னவரலி த3
யானிதி4கெ சத்ப4க்தஜனரதி1
ஹீனக1ர்மவ மாடி3த3ரு சரி ஸ்வீக1ரிஸி பொ1ரெவ |
ப்ராணஹிம்ஸக1 லுப்த1க1கெ3 சு
ஞான ப4க்திக3ளித்து த3சரத1
சூனு வால்மிகிரிஷிய மாடித3 பரமக1ருணாளு ||
(சகலதுரித நிவாரண சந்தி ஸ்லோகம் 31)

தன் பக்தர்களுக்கு அபாரமான காருண்யத்தைக் காட்டுகிறான் ஸ்ரீஹரி. வால்மிகி ரிஷி முன்னர் கெட்ட செயல்களை செய்து வந்தவர். அகிம்சை, தர்மம் இவற்றை எதிர்த்தவர். அத்தகையவர்களிடமும் ராமாயண கதையை எழுத வைத்தவர் ஸ்ரீஹரி. இதுவே அவரின் காருண்யத்திற்கு இன்னொரு உதாரணம் ஆகும்.

கருணாபூர்ண வரப்ரத சரிதம் ஞாபயமேதே ||

ஸ்ரீஹரியை கருணாபூர்ணன் என்று ஸ்ரீமதாசார்யர் வர்ணிக்கிறார். அவரின் கதையைக் கேட்பதற்கு மற்றும் சொல்வதற்கு அவனின் கருணைக்கு நாம் பாத்திரராக வேண்டும்.

இப்படி ஸ்ரீஹரி பற்பல பக்தர்களின் தவறுகளை மன்னித்து அவர்களை நல்வழியில் அனுப்புகிறார்.

***** C.H.பதரி ஆசார்ய**

வங்கிக் கணக்கில் சந்தா செலுத்தினால், மறக்காமல் உங்கள் முகவரியை 89044 58276 எண்ணுக்கு வாட்சப் / SMS அல்லது haridasa.vijayam@gmail.comக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

தொடர்

## ஹரிகதாம்ருதசார ஸ்லோக அர்த்தங்கள்

### ஸ்ரீவேதவியாசர் & ஸ்ரீமத்வர்

ஹரிகதாம்ருத மங்களாசரண சந்தியில், தாரதம்யத்தின்படி ஸ்ரீலட்சுமி நரசிம்மர், லட்சுமிதேவியிடமிருந்து வணங்கி வந்த ஸ்ரீஜகன்னாததாசர், சரஸ்வதி பாரதியருக்குப் பிறகு, கருட சேஷ ருத்ரர்களை வணங்கி யிருக்க வேண்டும். ஆனால், அவரோ அடுத்து ஸ்ரீவேதவியாசரையும், மத்வரையும் ஸ்தோத்திரம் செய்கிறார். இதற்கான காரணம் என்ன? இதனால் தாரதம்யத்திற்கு பாதகம் வருகிறதா? என்று கேட்டால், இதற்கான பதிலை ஸ்ரீமன் மத்வாசார்யரே தமது கிரந்தத்தில் சொல்லியிருக்கிறார்.

நாராயணம் நமஸ்க்ருத்ய நரஞ்சைவ நரோத்தமம் |
தேவீம் சரஸ்வதீம் வியாஸம் ததோ ஜயமுதீரயேத் ||

இதன்படி, சரஸ்வதி பாரதிக்குப் பிறகு வியாசர் வரவேண்டும் என்று ஸ்ரீமத்வரே சொல்லியிருப்பதாகக் கொள்ளலாம்.

இன்னொரு காரணமாக:
ஆதௌ அந்த்யேச மத்யேச விஷ்ணு: சர்வத்ர கீயதே ||

ஒரு காவியத்தின் துவக்கத்தில், நடுவில் மற்றும் இறுதியில் ஸ்ரீமன் நாராயணனை நினைக்க வேண்டும். அப்படி இந்த மங்களாசரண சந்தியில் உள்ள மொத்தம் 13 பத்யங்களில், நடுவில் ஏழாவதாக இருக்கக்கூடிய பத்யத்தில், ஸ்ரீமன் நாராயணனின் ரூபமான ஸ்ரீவேதவியாசரை துதிக்கிறார் தாசராயர். ஆகையால், இது சரியே என்று அறியவேண்டும். இதனால், தாரதம்யத்திலும் பிரச்னை வரவில்லை என்று புரிந்து கொள்ள வேண்டும்.

இன்னொரு காரணம், பாரதி தேவியின் பத்யத்தில்: ‘ஸதத ஹரியலி குருகளலி ஸத்ரதிய பாலிஸி’ என்று சொல்லியிருப்பதால், அடுத்து ஹரியலி = ஸ்ரீவேதவியாசர், குருகளலி = ஸ்ரீமத்வர், இவர்களது தத்வங்கள் எங்களுக்கு புரிய வைக்க வேண்டும் என்று பிரார்த் தித்திருப்பதால், அடுத்து அவர்களை வணங்குகிறார் என்றும் அறிய வேண்டும்.

ஸ்ரீவேதவியாசரை வணங்கும் பத்யம்:

வேதபீ1ட2 விரிஞ்சி ப4வ ஷ
க்ராதி3சுர விக்ஞானதா3யக
மோத3 சின்மயகா3த்ர லோக1பவித்ர சுசரித்ர |
ச்சேத3 பே4த3 விஷாத3 கு1டி1லா
ந்தாதி மத்ய விதூ3ர ஆதா3
நாதி3 காரண பாத3ராயண பாஹி சத்1ராண ||7

வேதபீட = லட்சுமிதேவி; விரிஞ்சி = பிரம்ம; பவ = ருத்ர
ஷக்ராதி = இந்திராதி
சுரவிக்ஞான தாயக = தேவதைகளுக்கு ஞானம் கொடுப்பவர்
மோத சின்மய காத்ர = ஆனந்த ஸ்வரூபமே அவர்
லோக பவித்ர = எங்கு நினைத்தால் அங்கு வந்து தரிசனம் கொடுக்கிறார் பகவந்தன்
சுசரித்ர = அற்புத மங்களங்களை கொடுக்கத்தக்க கதை
கேதபேத ... விதூர = துக்கம், பிறப்பு, வளர்ச்சி, மரணம் போன்ற எவ்வித தோஷங்களும் அற்றவன்
ஆதானாதி காரண = நிரந்தரமானவன்
பாதராயண = பதரிகாஸ்ரமத்தில் பதரி மரத்தடியில் அமர்ந்திருப்பதால், ஸ்ரீவேதவியாசருக்கு பாதராயண என்று பெயர்.
பாஹி சத்ராண = சாத்விக குணத்தைக் கொடுத்து எனக்கு அருள்வீராக.

க்ஷிதி1யொளகெ மணிமந்த1 மொத3லா
த3தி1து3ராத்1மரு ஒந்த3தி4க விம்
ஷதி குபாஷ்யவ ரசிஸெ நடுமனெயெம்ப பிராம்மணன |
சதிய ஜடரதொளவதரிஸி பா4
ரதிரமண மத்வாபி4தானதி3
சதுரத3ஷ லோகதலி மெரெதப்ரதிமகொ3ந்திசுவெ ||8

மணிமந்த மொதலாத = மணிமந்தன் முதற்கொண்டு
அதி துராத்மரு = தமோ யோக்யரான தைத்யர்கள்
க்ஷிதியொளகெ = பூமியில் பிறந்து
ஒந்ததிகவிம்ஷதி குபாஷ்யவ = பிரம்மசூத்திரத்திற்கு 21 குபாஷ்யங்களை
ரசிஸெ = இயற்றியபோது

பாரதிரமண = பாரதிபதியான வாயுதேவர்
நடுமனெயெம்ப = நடுத்திலாயா அல்லது மத்யகேஹ பட்டர் என்னும் பிராமணரின்
ஸதிய = மனைவியின்; ஜடரதொளு = வயிற்றில்
அவதரிஸி = பிறந்த குழந்தையின் தேகத்தில் பிரவேசித்து
மத்வாபிதானதி = மத்வர் என்னும் பெயரால்
சதுரதஷ லோகதலி = 14 உலகங்களிலும்
மெரெத = புகழடைந்த; அப்ரதிமெகெ = ஒப்புமை இல்லாத (அவரை)
வந்திஸுவெ = வணங்குவேன்.

ப[1]ஞ்சபே[4]தாத்மக ப்ரபஞ்சகெ
பஞ்சரூபாத்மகனெ தை[3]வக
பஞ்சமுக[2] சக்ராதிக[3]ளு கிங்கரரு ஶ்ரீஹரிகெ |
பஞ்சவிம்ஷதி த[1]த்வ தரதம
பஞ்சிகெகளனு பே[1]ள்த பா[4]வி வி
ரிஞ்சியெனிபானந்த தீர்த்தர நெனெவெனனுதி[3]னவு ||9

பொருள்:
பஞ்ச பேதாத்மக ப்ரபஞ்சகெ = 5 பேதங்களைக் கொண்ட இந்த உலகத்திற்கு
பஞ்ச ரூபாத்மகனெ தெய்வக = அனிருத்தாதி 5 ரூபங்களைக் கொண்ட ஶ்ரீபரமாத்மனே தெய்வம்
ஶ்ரீஹரிகெ = இத்தகைய பரமாத்மனுக்கு
பஞ்சமுக ஷக்ராதிகளு கிங்கரரு = பஞ்சமுக = ஐந்து முகங்களைக் கொண்ட ருத்ரதேவர். ஷக்ர = தேவேந்திரன். ஆதிகளு = இவர்களிலிருந்து அனைவரும். கிங்கரரு = சேவகர்கள்.
பஞ்சவிம்ஷதி தத்வதரதம பஞ்சிகெகள = பஞ்சவிம்ஷதி = 25 தத்வங்கள். தர, தம = தேவதைகளில் உத்தம, மத்யம என்னும் தாரதம்யம் இவைகளை.
பஞ்சிகெகள = மகிமைகளை; பேளித = தெரிவித்த
பாவிவிரிஞ்சியெனிப = அடுத்த கல்பத்தில் பிரம்மன் என்று சொல்லப்படும் வாயுதேவரின் அவதாரரான
ஆனந்த தீர்த்தர = ஶ்ரீமதானந்த தீர்த்தரை
அனுதினவு = தினந்தோறும்; நெனெவெனு = நினைப்பேன்.

*** திரு.முரளிதரதாசர், பெங்களூரு

தொடர்

## பலவிது பாள்துதக்கெ-ஸ்ரீஜகன்னாத்தாசர்

**கன்னட உரை: திரு.தாவண்கெரெ பீமராவ்**

**வாஸவமுக[2] விபு[3]தா[4]ஸுர நிசயகெ[1] வாசுதேவனெ ஷுபா[4]ஷுப[4]த[3]**
**ஈ ஸமஸ்த ஜக[3]கீ[1]ஷ கேசவ ஈசஜீவரெம்ப சுஞ்ஞானவே |4|**

வாசவமுக = இந்திரன் முதலான, விபுதாசுரநிசயகெ = தேவர்கள் மற்றும் அசுரர்களின் சமூகத்திற்கு, வாசுதேவனே = ஸ்ரீஹரியே, ஷுபாஷுபத = சுப மற்றும் அசுபங்களைக் கொடுப்பவன், ஈ சமஸ்த ஜகக்கெ = சேதன, அசேதங்களால் நிரம்பிய இந்த ஜகத்திற்கு, கேசவ = ஸ்ரீகேசவனே, ஈஷ = ஸ்வாமி (தலைவன்), ஜீவரு = ஜீவர்கள் அனைவரும், அனீஷரு = அஸ்வதந்த்ரர்கள், எம்ப ஈ = என்று, சுக்ஞானவே = யதார்த்த (உண்மையான) ஞானமே, (இந்த வாழ்க்கையின் உண்மையான அர்த்தம்).

ஹே இந்திரனே, இந்த ஜீவர்கள் அனைவரும் மரப்பாச்சி பொம்மைகளைப் போன்று அஸ்வதந்த்ரர்கள் - என்று பாகவதம் சொல்கிறது.

ஈஸ்வர: சர்வபூதானாம் ஹ்ருத்தேஷேऽர்ஜுன திஷ்டதி |
ப்ராமயன் சர்வபூதானி யந்த்ராரூடானி யாமயா || (பகவத்கீதை)

ஹே அர்ஜுனனே! ஸ்ரீஹரியானவன் அனைத்து பிராணிகளின் இதயத்தில் இருந்து, இயந்திரத்தில் சிக்கியவர்களைப் போல அவர்களை ஆட்டுவிக்கிறான்.

இத்தகைய ஆதாரங்கள் மூலமாக, ஸ்ரீஹரியே ஸ்வதந்த்ரன் அனைவருக்கும் தலைவன் என்றும் பிற ஜீவர்கள் அனைவரும் அவனுக்கு கீழ்ப்பட்ட அஸ்வதந்த்ரர்கள் என்றும் நிரூபிக்கப் பட்டுள்ளது.

**பஞ்சபே[4]த[3]யுத[1] பிரபஞ்ச ஸுசத்ய விரிஞ்சி ப[4]வமுக2ப[3]லி வஞ்சக[1]கே[3]**
**ஸஞ்சல பிரதிமெ அஸஞ்சல பிரக்ருதியு சஞ்சிந்திஸி முத[3]லாஞ்சன நஹுதே[3] |5|**

பஞ்சபேதயுத பிரபஞ்ச = பஞ்சபேதங்களைக் கொண்ட உலகம், ஸுசத்ய = மிகவும் உண்மையானது, பலிவஞ்சககே = வாமனனுக்கு (ஸ்ரீஹரிக்கு), விரிஞ்சிமுகரு = பிரம்ம முதலானவர்களுக்கு, சஞ்சலபிரதிமெ = நடமாடும் பிரதிமைகள், அசஞ்சல பிரக்ருதியு = நடமாடாத பிரதிமைகள், சஞ்சிந்திஸி = (அதன்) உண்மையான அர்த்தங்களை அறிந்து, முதலாஞ்சன = எப்போதும் சிரித்த முகத்தை உடையவன், ஆஹுதே = இருப்பதே (இந்த வாழ்க்கையின் உண்மையான அர்த்தம்).

பஞ்சபேத = ஜடஜட பேத, ஜடஜீவ பேத, ஜீவஜீவ பேத, ஜடஈஸ்வர பேத, ஜீவ ஈஸ்வர பேத - இவையே பஞ்சபேதங்கள். உலகமானது இந்த பஞ்சபேதங்களால் ஆனது என்பதே மத்வ சித்தாந்தம்.

ஸுசத்ய = இந்த உலகம் உண்மையானது (ஜகத் சத்ய). மாயாவாதிகள் சொல்வதைப் போல இது மாயையல்ல. முத்துச்சிப்பியில் முத்து இல்லை - இருக்கவில்லை - இருப்பதில்லை - என்று சொல்வதைப்போல, இந்த உலகத்தையும் மாயாவாதிகள், ‘மித்யை’ (மாயை) என்கின்றனர்.

ஸ்ரீஹரியின் இருப்பிடங்கள் இரு வகையானவை. சல மற்றும் அசல. ஸ்ரீஹரியின் மகாத்ம்ய ஞானம் உள்ள ஜீவர்கள் - சல பிரதிமைகள். சாலிகிராமம், தீர்த்தக்ஷேத்திரங்கள் (ஆவாஹனம் செய்யத் தேவைப்படாதவை) ஆகியவை மற்றும் ஸ்ரீஹரியை ஆவாஹனம் செய்து பூஜிக்கத் தகுந்தவைகளான பிரதிமைகள் - அசல பிரதிமைகள் என்று சொல்லலாம். பிரம்மன் முதலானவர்கள் ஸ்ரீஹரியின் முக்கியமான சல பிரதிமைகள் ஆவர். இந்த இரண்டு விதமான பிரதிமைகளை அறிந்து, பிரமாந்தர்கதனான ஸ்ரீஹரியை பூஜித்து, மகிழ்வதே (பலவிது பாள்துதக்கே).

‘பலிவஞ்சககே’. வடுரூபத்தில் வந்து மூன்றடி நிலம் தானம் கேட்டுப் பெற்று, த்ரிவிக்ரமனாக வளர்ந்து, ஒரு பாதத்தினால் பூலோகத்தை ஆக்ரமித்து, மற்றொரு பாதத்தினால், அந்தரிக்ஷம் மற்றும் ஸ்வர்க்கம் என்னும் பலியின் இரண்டு உலகங்களை ஆக்ரமித்து, அந்த பாதத்தை சத்யலோகத்தின் மேலிருக்கும் பிரம்மாண்டத்தின் வரை அனுப்பி, மூன்றாவது பாதத்தை பலியின் விருப்பப்படி, அவனின் தலையிலேயே வைத்த வாமனாவதார ஸ்ரீஹரியின் மகிமைகளை இங்கு தெரிவிக்கிறார் தாசர். பலியின் மூன்று உலகங்களையும் ஆக்ரமித்து அதன் அதிபதியானான் வாமனன். அந்த மூன்று உலகங்களும்,

வாமனனின் இரு காலடிகளுக்கே போதுமானதாயிற்று. ஆனாலும், மூன்றாவது காலடிக்காக, அவன் தலையையே பெற்று, பலிக்கு ‘சத்யபிரதிக்ஞன்’ என்னும் புகழைக் கொடுத்தான்.

அஞ்ஞானிகளின் பார்வையில் வாமனன் வஞ்சகன். இவன் தன்னை வஞ்சிக்கப்போகிறான் என்று பலி அறியவில்லை. ஆகையால், தானத்திற்கான சங்கல்பம் செய்யத் துணிகிறான். அப்போது அவனது குருகளான சுக்ராசாரியர், வந்திருப்பது விஷ்ணுவே, உன்னுடைய அனைத்தையும் அபகரிக்கப் போகிறான் என்று எச்சரிக்கிறார். அது உண்மையெனில், நானே தன்யன் என்கிறான் பலி. வாமனன் பலியை வஞ்சிக்கவில்லை. ஆனால், விசேஷமாக அருள்கிறான். அடுத்த மன்வந்திரத்தின் இந்திர பதவியைக் கொடுக்கிறான்.

**பஞ்சருது[1]க[3]ளலி பஞ்சாக்னிக[3]ளலி பஞ்சபஞ்சரூபவ தி[1]ளிது[3]**
**பஞ்ச ஸுசம்ஸ்கா[1]ராஞ்சித[1]னாகி[3] த்[3]விபஞ்சக[1]ரணத[3]லி**
**பஞ்ச க[1]னரிவுதே |6|**

பஞ்சருதுகளலி = ஆண்டில் இருக்கும் ஐந்து ருதுகளில் (ஹேமந்த மற்றும் ஷிஷிர ருதுக்களை ஒன்றாக சேர்த்து, மற்ற நான்குடன், ஐந்தாக கருதுவது). பஞ்சாக்னிகளலி = ஐந்து வித அக்னிகளில், பஞ்சபஞ்ச ரூபவ திளிது = (அந்த ஒவ்வொரு அக்னியிலும்) ஸ்ரீஹரியின் ஐந்து ரூபங்களை சிந்தித்து, பஞ்சஸு சம்ஸ்காரா ஞ்சிதனாகி = பஞ்சமகாயக்ஞத்தை அனுசரித்து பவித்ரனாகி, த்விபஞ்சகரணதலி = 10 இந்திரியங்களில், பஞ்சகன = பஞ்ச ரூபியான ஸ்ரீநாராயணனை, அரிவுதே = அறிந்து கொள்வதே (இந்த பிறவியை எடுத்ததற்கான பலன்).

பஞ்சாக்னி = ஹரிகதாம்ருதசார பஞ்சமஹாயக்ஞ சந்தியில் ஜனனி (தாய்), பித (தந்தை), பூ (பூமி), வாரித (மேகம்), அம்பர (வானம்) என்று இவையே பஞ்சாக்னிகள் என்று தாசர் கூறியிருக்கிறார். இவற்றில் நாராயணாதி (நாராயண, வாசுதேவ, சங்கர்ஷண, பிரத்யும்ன, அனிருத்த) ஐந்து ரூபங்களை சிந்திப்பதையும் விவரித்திருக்கிறார். தேவதைகள், ஜீவனை இந்த பஞ்சாக்னிகளில் சேர்க்கின்றனர். இந்த அனு சந்தானத்தைக் கொண்ட ஞானியே உத்தமமானவன்.

பிரம்மயக்ஞ, அன்வாதான, வைஸ்வதேவ ஹோமம், பித்ரு தர்ப்பணம், பலிஹரண - ஆகிய ஐந்தும் பிராமண கிருஹஸ்தனின் மிகவும் அவசியமாக செய்யவேண்டிய கடமைகளாகும். இவையே மகாயக்ஞம் எனப்படுகின்றன.

10 இந்திரியங்கள் என்றால், 5 கர்மேந்திரியங்கள் மற்றும் 5 ஞானேந்திரியங்கள்.

**ஹ்ருத³யதி³ ரூபவு வத³னதி³ நாமவு உத³ரதி³ நைவேத்³யவு ஷிரதி³ பத³ஜல நிர்மால்யவனே த⁴ரிஸி கோ¹வித³ர ஸதன ஹெக்க³த³வ கா¹யுவுதே³ |7|**

ஹ்ருதயதி = மனதில். ரூபவு = (ஸ்ரீஹரியின்) ரூபங்கள், வதனதி = முகத்தில், நாமவு = (ஸ்ரீஹரியின்) நாமங்கள், உதரதி = வயிற்றில், நைவேத்யவு = (ஸ்ரீஹரிக்கு அர்ப்பிக்கப்பட்ட) உணவு பொருட்கள், ஷிரதி = தலையில், பதஜல நிர்மால்யவ = (ஸ்ரீஹரியின்) பாதோதகம் மற்றும் நிர்மால்யம் (துளசி, கந்தம் ஆகியன), தரிஸி = (தினந்தோறும்) தரித்து, கோவிதர ஸதன ஹெக்கதவ = ஞானிகளின் வீட்டு நிலைப்படியில், காயுவுதே = நின்று வணங்குவதே (இந்த வாழ்க்கைக்கான உண்மையான அர்த்தம் ஆகும்).

அனந்தகல்யாண குணபரிபூர்ணனான ஸ்ரீஹரியின் ரூபத்தை நம் மனதில் எப்போதும் காணவேண்டும். அப்படிக் காண்பதற்கான சாத்விக முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். மனதில் ஸ்ரீஹரியின் சிந்தனையை எப்போதும் இருத்திக்கொண்டால், நம் இதயத்தில் அவரின் தரிசனம் நமக்குக் கிடைக்கும்.

ஹ்ருதி ரூபம் முகே நாம நைவேத்யமுதரே ஹரே: |
பாதோதகம் ச நிர்மால்யம் மஸ்தகே யஸ்ய ஸூசௌச்யுத: ||

கிருஷ்ணாம்ருத மஹார்ணவத்தின் இந்த ஸ்லோகத்தின் சாரத்தையே இந்த பதம் சொல்கிறது. ஞானத்தை வழங்கக்கூடிய தன் யஜமானனின் வீட்டு வாசலில் நின்று வணங்குவதைப் போல, ஞானிகளின் உதவியை, நன்றியுள்ளவராக எப்போதும் நினைத்து, அவரது தாசரைப் போல வாழ்ந்து அவர்களது அருளைப் பெறவேண்டும். ***

தொடர்

# கன்னட கிரந்தங்கள் அறிமுகம்

## ஸ்ரீவாதிராஜரின் ஸ்ரீனிவாச கல்யாணம்

மத்வ மத பரம்பரையில் உடுப்பி அஷ்ட மடங்களில் சோதே மடாதீசராக அலங்கரித்தவர் ஸ்ரீவாதிராஜ தீர்த்தர். மத்வ சித்தாந்தத்தில் வியாச மற்றும் தாச சாகித்யம் என இரண்டுக்குமே தமது பங்களிப்பை அளித்த மகான். பகவான் வேத வியாசர் அருளிய மகாபாரதம் முதலான மூல கிரந்தங்கள், ஆசாரியர் ஸ்ரீமத்வர் இயற்றிய சர்வமூல கிரந்தங்களை அனுசரித்து பலதரப்பட்ட காவிய, ஸ்தோத்திர, டிப்பணி மற்றும் வியாச கீர்த்தனைகளை இயற்றியதுடன், கன்னடத்திலும் துளுவிலும் தன் 'ஹயவதன' முத்திரையில் பல கிருதிகளை ரசனை செய்துள்ளார். பகவான் ஸ்ரீ ஹரியின் கல்யாண குணங்களை தம்முடைய கிரந்தங்களில் வர்ணித்திருக்கும் ஸ்ரீவாதிராஜர் பகவானின் கல்யாண வைபவங்களையும் தம்முடைய ஸ்ரீ லக்ஷ்மி ஷோபானே மற்றும் ருக்மணீச விஜயம் முதலான கிரந்தங்களில் மிக அழகாக வர்ணித்துள்ளார். அந்த வரிசையில் பகவான் ஸ்ரீநிவாசனின் விவாக சரித்திரத்தைப் பற்றி வர்ணிக்கும் மிகச் சிறியதான கன்னட கிரந்தமே ஸ்ரீனிவாச கல்யாணம் ஆகும்.

பகவான் ஸ்ரீனிவாசனின் லீலா வினோதங்களை விவாகத்தைப் பற்றி பவிஷ்யோத்ர புராணம் - வேங்கடேச மஹாத்மியம் மிகவும் விஸ்தாரமாக கூறுகிறது. பகவான் வாசம் செய்யும் திருமலை க்ஷேத்திரம் சதுர்யுக பர்வதம் என்பதையும், கிருத யுகத்தில் வ்ருஷபாத்ரி என்றும், திரேதா யுகத்தில் அஞ்சனாத்ரி என்றும் துவாபர யுகத்தில் சேஷாத்ரி என்றும், இந்த கலியுகத்தில் வேங்கடாத்ரி என்றும் போற்றப்படுகிறது என்பதையும், அதற்கான காரணங்களையும் விளக்கும் பவிஷ்யோத்ர புராணம், முக்கியமாக பகவான் ஸ்ரீனிவாசனின் விவாக கட்டத்தை விஸ்தாரமாக வருணிக்கிறது. இத்தகைய பகவானின் லீலைகளை, கல்யாண குணங்களை, வர்ணிக்கும் சீனிவாச கல்யாண சரித்திரத்தை பாமரரும் புரிந்து கொள்ளும் விதமாக பாராயணம் செய்ய சுலபமாகவும், ஸ்ரீ புரந்தரதாஸர், வாதிராஜர், ஹரபனஹள்ளி பீமவ்வா போன்றோர் கன்னடத்தில் மிக சுருக்கமாக அருளியுள்ளனர். இதிலே ஸ்ரீவாதிராஜர்

அருளிய ஸ்ரீனிவாச கல்யாணம் என்னும் இந்த கன்னட கிரந்தம், 39 பத்யங்களில் மிக சரளமாக எதுகை மோனையுடன், தாளத்துடன் கூடிய வகையிலேயே அமைந்துள்ளது

ஸ்ரீவாதிராஜர், முதலாவது பத்யத்தில், 'ஸ்ரீயரெல்லரு பன்னிரே, ஸ்ரீநிவாசன பாடிரே' எனத் தொடங்கி, ஸ்ரீனிவாசனின் மகிமையைப் பாட அழைக்கிறார். முதலில் குரு வந்தனம் செய்து எந்த ஒரு கிரந்தமும் எழுதப்பட வேண்டும் என்பதைக் கூறுவதாக, 'ஞானகுருகள வந்திஸி முந்தெ கதெய பேளுவெ' என வேண்டித் துதித்து கிரந்தத்தை முன்னெடுத்துச் செல்கிறார். 2 முதல் 7 வரையிலான பந்தயங்களில், கங்கா தீரத்தில் ரிஷிகள் அனைவரும் சேர்ந்து யாகம் செய்தபோது, அங்கு வந்த நாரத மகரிஷி, இதனை யாருக்கு சமர்ப்பணம் செய்வீர்கள் என வினவியபோது, அதற்கு சரியான மார்க்கத்தை அனைவருக்கும் தெரியப்படுத்த, பிருகு மகரிஷி, சத்ய லோகத்தில் பிரம்ம தேவரையும், கைலாசத்தில் ருத்ர பகவானையும் கண்டு, தமக்கு அவமானம் ஏற்பட்டதாக எண்ணி, இறுதியில் வைகுண்டம் சென்று, சேஷசாயி ஆன பரமனை கண்ட போது, தமக்கு முன்பு இரு லோகங்களில் ஏற்பட்ட அனுபவத்தின் பிரதிபலிப்பாக, பரமாத்மாவின் மார்பில் எட்டி உதைக்க, பகவான் சிறிதும் கோபம் கொள்ளாது, பிருகு மகரிஷியின் பாதத்தை வெந்நீரால் அலம்பி கௌரவித்தபோது, மெய்சிலிர்த்து யாக சபையில், ஸ்ரீஹரியே சர்வோத்தமன். அனைத்து பலன்களையும் அவனுக்கே சமர்ப்பணம் செய்ய வேண்டும் என பிருகு மகரிஷி பறைசாற்றிய விதத்தைப் பற்றி விளக்குகிறார் ஸ்ரீவாதிராஜர்.

8 முதல் 9 வரையிலான பத்யங்களில், ஸ்ரீமகாலட்சுமி பகவானின் லீலா வினோதங்களுக்குத் தகுந்தபடி கலக லீலையைப் புரிந்து, கொல்லாபுரத்திற்குச் செல்வதையும், பின்னாலேயே பகவானும் கிளம்பி வேங்கடாத்ரி பர்வதத்திற்கு வந்து, ஒரு பாம்பு புற்றில் 10,000 ஆண்டுகள் வாசம் புரிவதையும் வர்ணிக்கிறார்.

9 முதல் 17 வரையிலான பத்யங்களில், லட்சுமி கோபிகா ஸ்த்ரீ ரூபத்தையும், பிரம்மதேவர் மற்றும் ருத்ர பகவான் முறையே, பசுவும் கன்றுமாக ரூபங்களை தரித்து, சோழராஜன் அரண்மனையை அடைந்ததையும், பசுவின் லட்சணங்களையும், சிறப்பையும் கண்டு ராணி மகிழ்ச்சியுடன் ஸ்வீகாரம் செய்ததையும், பின்னால் அந்த பசு ஒரு துளிப் பால் கூட கறக்காமல் போக, அதற்கு ராணி வினவிய

கேள்விகளுக்கு, கோபாலகன் கூறிய பொறுப்பற்ற பதிலால் ராணி அவனுக்கு தண்டனை அளித்ததையும் கூறி, அதற்காக அந்த கோபாலன் பழிவாங்கும் எண்ணத்துடன் பசுவையும் கன்றையும் பின்தொடர, அவை பகவான் வாசம் செய்யும் பர்வதத்திற்குச் சென்று, புற்றில் பால் சொரிய, அதனைக் கண்ட கோபாலன் கோபத்தினால் பசுவைக் கொல்ல எத்தனித்து தன் கையில் உள்ள கோடாலியை வீசி எறிந்த போது, அத்தனை வருடங்களாக உள்ளிருந்த பகவான் தன் பிரியமான பக்தரான பிரம்ம தேவரை காப்பதற்காக தன்னுடைய தலையை குறுக்கே வைத்து தன் பக்தன் மேல் கொண்ட காருண்யத்தை நிரூபிக்கும் விதமாக புரிந்த லீலைய 'கிருஷ்ணா தன்ன மனதி யோசிஸி கொட்ட தன்ன சிரவனு' போன்ற பதங்களால் மிக அழகாக விளக்கிக் கூறி, இதைப்பற்றி பசுவானது சோழராஜனிடம் முறையிடுவதையும், அவ்விடம் வந்து விசாரித்த சோழனுக்கு, அவனின் கடமையை செய்யத் தவறியதற்காக, பகவான் சாபம் விட்டதையும் விளக்குகிறார் ஸ்ரீவாதிராஜர்

17 முதல் 19 வரையிலான பத்யங்களில், பகவான் தன் லீலைகளை தொடரும் விதமாக, அடிபட்ட காயத்திற்கு மருந்து சேகரிக்க, அருணோதய காலத்தில் கிளம்பிச் செல்ல, அந்த க்ஷேத்திர மூர்த்தியான பூவராக சுவாமியுடன் ஏற்பட்ட சந்திப்பையும், ஸ்ரீனிவாசன் தான் வாசம் செய்ய மூன்று அடி நிலம் கேட்க, அதற்கு பிரதிபலனாக தன் பக்தர்கள் செய்யும் முதல் தரிசனம், முதல் பூஜை மற்றும் முதல் நைவேத்தியம் என அனைத்தும் ஸ்ரீவராக சுவாமிக்கே சமர்ப்பணம் செய்வார்கள் என வாக்களித்தை, 'மூரு பாத பூமி கொட்டரெ முதலு பூஜெ நிமகெந்தனு' முதலான பதங்களினால் விளக்கி, சீனிவாசனுக்கு அமுது படைக்கும் சேவையைச் செய்ய யசோதா தேவியின் மறு அவதாரமான பகுளா தேவியை அனுப்பி வைத்ததையும் விவரித்துள்ளார்

20 முதல் 29 வரையிலான பத்யங்களில், ஸ்ரீனிவாசன் வேட்டைக்கு கிளம்பும் விதத்தையும் அதற்காக தான் செய்துகொண்ட அலங்காரங்களையும் மிக அழகாக வர்ணித்து 32 லட்சணங்களுடன் கூடிய வாயு பகவானே குதிரை ரூபத்தில் வர, பகவான் புறப்பட்டதை 'கனக பூஷிதவாத குதிரெ கமலநாப வேரித' என்ற பதத்தால் விளக்கி, வேட்டைக்கு சென்ற இடத்திலே, ஆகாசராஜன் மற்றும் தரணி தேவி

தம்பதியரின் மகளாக அவதரித்த ஸ்ரீபத்மாவதியை சந்திப்பதையும் தோழியர் தடுத்து நிறுத்தி கற்களால் அடித்து விரட்ட, ஸ்ரீனிவாசன் மீண்டும் பர்வதத்தை வந்தடைந்து பகுளா தேவியின் முன்னால் மனம் துவண்டதுபோல நடிப்பதையும் கூறி, பகுளாதேவிக்கு தன்னுடைய விவாகத்திற்கான காரியங்களை துவங்கும் மார்க்கத்தை ஸ்ரீனிவாசன் காட்டியது முதலான கட்டங்களை வர்ணிக்கிறார் ஸ்ரீவாதிராஜர்

25 முதல் 35 வரையிலான பத்யங்களில், பகவான் ஸ்ரீனிவாசன் தானே ஒரு குறத்தி வேடம் பூண்டு, பிரம்ம தேவரை குழந்தையாகவும் ருத்ர பகவானை கோலாகவும் ஆக்கிக் கொண்டு ஆகாசராஜனின் அரண்மனையில், தரணி தேவிக்கு, பத்மாவதியை ஸ்ரீநிவாசனுக்கு விவாகம் செய்யும் மார்க்கத்தைக் கூறும்படியாக குறி சொல்லி திரும்பியதையும், பின்னர் பெண் கேட்டு செல்லும் பகுளாதேவி மற்றும் தரணி தேவிக்கு இடையில் நடக்கும் சம்பாஷணைகளை கூறி, பின்னர் பிரகஸ்பதி ஆசாரியர் மூலம் லக்ன பத்திரிக்கை எழுதி சுகாசார்யர் மூலம் விவாக பத்திரிக்கையை ஸ்ரீனிவாசனிடம் சேர்க்கும் காரியத்தை செய்த கட்டத்தையும், விவாகத்திற்கான ஏற்பாடுகள் நடக்க கொல்லாபுரத்தில் இருக்கும் லட்சுமியை கருடன் மேல் அழைத்து வருவது வரையிலும் மிகக் கோர்வையாக அழகாக வர்ணிக்கிறார் ஸ்ரீவாதிராஜர்.

35 முதல் 37 பத்யங்களில் பகவான் ஸ்ரீநிவாசன் முப்பத்து முக்கோடி தேவர்கள் புடைசூழ மகாலக்ஷ்மி, பிரம்மா, ருத்ராதி தேவதைகளுடன் விவாகத்திற்கு எழுந்தருளி, அஷ்டவர்க்கம் முதலான நானாவித விவாகச் சடங்குகளை செய்து, அலங்காரங்களுடன் கூடிய மண்டபத்தில் எழுந்தருளி, பகவான் ஸ்ரீனிவாசனும் ஸ்ரீபத்மாவதியும் பரஸ்பரம் கங்கணதாரம் கட்டிக் கொள்வதையும், பகவான் சீனிவாசன் ஸ்ரீபத்மாவதியின் கழுத்தில் திருமாங்கல்யம் அணிவிக்கும் இந்த வைபவத்தை விளக்கும் விதமாக ‘கமலநாப காந்தெ கைகெ கங்கணவ கட்டித, ஸ்ரீனிவாச பத்மாவதிகெ மாங்கல்யவ கட்டித’ என வர்ணித்து, ‘ஸ்ரீனிவாசன மதிவெ நோடெ ஸ்ரீயரெல்லரு பன்னிரெ’ என ஆரம்பித்ததைப் போலவே மீண்டும் அனைவரையும் அழைத்து, இந்தப் பகுதியை பூர்த்தி செய்கிறார் ஸ்ரீவாதிராஜர்

38 மற்றும் 39ம் பத்யங்களில், ஸ்ரீவாதிராஜர் வினயத்துடனும், பக்தியுடனும் பகவானிடம் நாம் அனைவரும் நம் பாவங்களை

களைய எவ்விதம் சரணடைய வேண்டும் என்பதைக் குறிப்பதாக 'லட்சதப்பு என்னல்லி உண்டு பக்ஷி வாஹனனே சலஹென்ன, கோடி தப்பு எனகெ உண்டு குஸுபநாப சலஹென்ன' என வேண்டி அளவில்லாத வரங்களை வாரி வழங்கும் வெங்கடேசனை துதித்து, இத்தகைய உயரிய பதத்தை பக்தியுடன் பாடுபவர்களுக்கும் கேட்பவர்களுக்கும் ஸ்ரீ ஹயக்ரீவ ரூபி பரமாத்மா முக்தியை அளிக்கிறான் என்பதை 'பக்தியிந்த ஹேளி கேளிதவரிகெ முக்தி கொடுவ ஹயவதன' என்று பல ஸ்ருதியை ஆணித்தரமாக எடுத்துரைத்து தனது உபாசன மூர்த்தியான ஸ்ரீ ஹயக்ரீவரைத் துதித்து சமர்ப்பணம் செய்கிறார் ஸ்ரீவாதிராஜர்

இத்தகைய உயரிய கிரந்தத்தை அனுதினமும் பக்தியுடன் அதன் விசேஷ அர்த்தங்களை தெரிந்து கொண்டு பாராயணம் செய்து சீனிவாசனின் அனுக்கிரகத்திற்கு பாத்திரராவோமாக.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**** திரு.லட்சுமிபதிராஜா, சென்னை**

**15ம் பக்கத்திலிருந்து தொடர்கிறது:**

நானிவன பணியல்லி பஹு வர்ஷ பர்யந்த
புண்ய ஸாதனகெய்து க்ருத க்ருத்யனிகனு

உரகாத்ரி வாஸவர பிதன பஜகனு ஈத
வர தந்தெ வெங்கடேச விட்டலாங்கித
சரணஜன ஸன்மார்க்க தாசகரு தானாகி
மெரதிஹனு ஈ ஜகதி கேளி சஜ்ஜனரு ||

ஆப்தரொளு அனுபவவு ஈத மானவி தாஸ
மத்தவன கவனகளு  உத்தம ஸுஸாம்ய ||
கோபதி குரு கோவிந்த விட்டலா சிந்திஸனு
தெத்திஹனு தவதேஹ ஆஷாட அஸித அஷ்டமி ||
***

## ஹரிதாச விஜயம் - ஆன்லைனில் படிக்க

* 'Readwhere' Android/iPhone appனை Download செய்யவும்
* Search Boxல் 'Haridasa Vijayam' என்று தேடவும்.
* 1 ஆண்டு மின்னிதழ் சந்தா : ரூ.100
* அங்கேயே 'Subscribe' க்ளிக் செய்து, பணத்தைக் கட்டவும்.
* மாதாமாதம் Readwhere appல் 'Shelf'ல் புது இதழ், பிரதி 25ம் தேதி வெளியாகும்.
* eBook சந்தா பணத்தை எங்களுக்கு அனுப்பக்கூடாது.

போட்டி

## மாதாந்திர குறும்போட்டி

**ஜூலை 2020**

இம்முறை கேள்விகள் அனைத்தும் ஸ்ரீஹரிகதாம்ருதசாரத்தைப் பற்றியதாகும்.

1. HKS, கன்னட ___ என்றும் அழைக்கப்படுகிறது.
2. இதில் மொத்தம் __ சந்திகள் உள்ளன
3. பல ஸ்ருதி எழுதியவர்கள் மொத்தம் ___ பேர்.
4. தாரதம்யத்தில் உள்ள இவரைப் பற்றி தனி சந்தி ____ உள்ளது.
5. HKS, இந்த ___ நுடியில் (meterல்) எழுதப்பட்டுள்ளது
6. HKS யாருடைய அகராதிக்கு (கோஷத்திற்கு) ஒப்பானது என்று ஸ்ரீதவிட்டலர் கூறுகிறார்?
7. கிரந்தகாரரின் குரு யார்?
8. HKSக்கு சமஸ்கிருதத்தில் உரை எழுதியவர் யார்?
9. ருஜு கணஸ்தர்களின் பட்டியல் (பெயர்கள்) எந்த சந்தியில் வருகின்றன?
10. ஜகன்னாததாசரின் சிஷ்ய பரம்பரையில் 4 பேர் சொல்லவும்.

* தயவு செய்து அனைவரும் இதில் பங்கேற்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.
* இருவருக்கு புத்தகப் பரிசு கிடைக்கும்.
* ஜூன் 20க்குள் உங்கள் விடைகளை அனுப்பவும்.

*****

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்

Haridasa Vijayam - Monthly

மலர் 1 ** ஆகஸ்ட் 2020 ** இதழ் 10



ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள்

# ஹரிதாச விஜயம்

## சந்தா விவரம் (36 பக்கங்கள்)

1 ஆண்டுக்கு ரூ.200/- 3 ஆண்டுகளுக்கு ரூ.500/-
5 ஆண்டுகளுக்கு ரூ.900/- 10 ஆண்டுகளுக்கு ரூ.1700/-

புதிய சந்தாக்கள் அந்தந்த மாதத்திலிருந்து துவங்கும். பழைய இதழ்கள் வேண்டுமெனில், இதழுக்கு ரூ.20/- என சேர்த்து அனுப்பவும்.

## வங்கி விபரம்:

Sathya Narayanan, ICICI Bank - Savings account

A/c. No. 000101043177. IFSC: ICIC0000001

Cenotaph Road Branch, Chennai 18

போட்டி

மாதாந்திர குறும்போட்டி

ஜூலை 2020ன் விடைகள்

1. சுதா 2. 32 3. 7 பேர் (ஸ்ரீதவிட்டலதாசர், இபவரத விட்டலதாசர், குருஸ்ரீத விட்டலதாசர், மனோஹர விட்டலதாசர், பீமேஷவிட்டல தாசர், ஸ்ரீனிவாச விட்டலதாசர், கமலாபதி விட்டலதாசர்).
4. விக்னேஸ்வர ஸ்தோத்திர 5. பாமினி ஷட்பதி 6. ஸ்ரீவாதிராஜர்
7. ஸ்ரீகோபாலதாசர் 8. ஸ்ரீசங்கர்ஷண ஒடெயரு 9. கல்பசாதன சந்தி
10. ஜகன்னாததாசர், பிராணேஷ தாசர், ஸ்ரீஷ விட்டலர், குருஸ்ரீஷவிட்டலர், கமலாபதி விட்டலர், கமலேஷ விட்டலர், வரதேஷ விட்டலர்.

* இந்த இதழுக்கான புத்தகப்பரிசு பெறுபவர்கள்:

** திரு ரகூத்தமன், பெங்களூரு

** திரு. நாராயணன், பெங்களூரு

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா



நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

சிரி நிலயன குணகள '**திளிது**' பஜிசுவுதே

மலர் : 1 இதழ் : 10

**நிர்வாக ஆசிரியர்**

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்

ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,

380, 2A Main, 16th Cross,

JP Nagar 4th Phase, பெங்களூரு 560078

Ph.: 89044-58276. haridasa.vijayam@gmail.com

jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**

'தாச சாகித்ய சேவா ரத்ன'

திரு. குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**

திரு. முரளிதர தாசரு, திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா, திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

# ஆசிரியர் பக்கம்

கொரோனா காரணமாக சாதாரணமாக 4-5 நாட்கள் எடுக்கும் தபால்கள், தற்போது 2 வாரங்கள் எடுக்கின்றன என்பதை கடந்த மாதத்தில் பார்த்தோம். ஆகவே, நடப்பு ஆகஸ்ட் 2020 இதழ், ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் ஆராதனை குறித்த சிறப்பு பதிவுகளுடன் வரும்போது, அவரது ஆராதனை முடிந்திருக்கும். ஆனாலும் ஆராதனையன்று மட்டுமே நினைக்கக்கூடியவர் அல்ல ராயர். ப்ராதஸ்மரணீயர் ஆவார். ஆகவே, இந்த இதழில் வந்திருக்கும் பதிவுகளைப் படித்து, அவரது மகிமையை, கிரந்தங்களை, போதனைகளை அறிந்து அவரது அருளைப் பெற முயல்வோமாக.

உடன் இந்த மாதம் ஸ்ரீஇபராமபுர அப்பாவரு அவர்களின் புண்ய தினமும் வருகிறது. அவரைப் பற்றிய ஒரு சிறப்பு பதிவும் இங்கு வந்திருக்கிறது. உடன் வழக்கம்போலான தொடர் பதிவுகளும் வந்திருக்கின்றன.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்**

ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்
## சிராவண & பாத்ரபத மாதங்களில்

சிராவண சுத்த த்ருதியை - ஸ்ரீஇபராமபுர அப்பாவரு (இபராமபுர)
சிராவண சுத்த த்வாதசி - ஸ்ரீவர விட்டல தாசர் (தார்வாட)
சிராவண பகுள த்விதியை - ஸ்ரீஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள்
பாத்ரபத சுத்த பஞ்சமி : ஹஸிக்யாளு கோவிந்த தாசர்
பா. சுத்த அஷ்டமி : ஸ்ரீஷ பிராணேஷ விட்டல தாசர் (லிங்கசுகூர்)
பா. சுத்த நவமி: ஸ்ரீஜகன்னாத தாசர் (மானவி)
பா. சுத்த ஏகாதசி: ஸ்ரீபிரசன்னவெங்கட தாசர் (பாகல்கோடெ)
பா. சுத்த த்வாதசி : ஸ்ரீகமலேஷ விட்டல தாசர் (சுரபுர)
பா. சுத்த சதுர்தசி : ஸ்ரீபாகெபள்ளி சேஷதாசர்

தொடர்

## ஹரிதாசர்களின் வாழ்க்கை வரலாறு

## ஸ்ரீதவிட்டல தாசர்

குரு ஜகன்னாததாசரின் இன்னொரு சிஷ்யரான வரதேஷ விட்டலர், இன்னும் ஒரு படி முன்சென்று, ராயரின் பரமானுக்கிரகத்திற்கு பாத்திரரான அப்பண்ணாசார்யர், அடுத்த பிறவியில் மந்திராலய த்திற்கு அருகில் லச்சமரி என்னும் கிராமத்தில் பெனகப்பனாக பிறந்து, அதற்கு அடுத்த பிறவியில் தாசப்ப என்னும் பெயரைக் கொண்டு ஸ்ரீதவிட்டலதாசராக அவதரித்தார் என்கிறார். கர்ஜிகியின் ஸ்ரீதவிட்டல தாசரே, மறுபடி குரு ஜகன்னாததாசராக அவதரித்தார் என்றும் 'வரதேஷ விட்டலன ப்ருத்யனே திளியுவனு குருவின மஹிமெயனு' என்று தாசர் பாடியிருக்கிறார்.

**யாதகெ அனுமான ஈதனே ஜாதரூபஷயன**
**ஜாத தாத யதினாத ராயர**
**ப்ரீதி படெத பித ப்ராதாசார்யரு நிஜ**
**புன: ஜகதி ஜனிஸி கணபதி**
**அனுசர நாம தரிஸி**
**அனில நிகமதோள் மினுகுவ ஹரிகுண**
**மணி பெளகனு குணி ஜகக்கெ தோரிதனு** ||

என்று மானவியின் ஸ்ரீஷ்யாமசுந்தர தாசரும்கூட தாம் இயற்றியிருக்கும் 'நித்ய பஜிஸோ கொஷகி முத்யன க்ருபெயனு களிஸோ' என்னும் கீர்த்தனையில் இதனை உண்மை என்று சொல்லியிருக்கிறார். இந்த நுடியில் வரும் 'பித ப்ராதாசார்யரு' என்றால் அப்பண்ணாசார்யர். கணபதி மற்றும் அனுசர நாம என்றால் கணபதி என்பது பெனகப்ப. அனுசர என்றால் தாசப்ப. ஸ்ரீதவிட்டல தாசரின் இயற்பெயரே அது என்பதை கவனிக்க வேண்டும்.

இதே விஷயத்தை ஸ்ரீவரத விட்டல தாசர் மேலும் விவரமாக, ஸ்ரீதவிட்டலரின் பூர்வ அவதாரங்களுக்கு ஒவ்வொரு பத்யமாக ஒரு நீண்ட கிருதியை இயற்றியிருக்கிறார். இந்த நுடியில் பற்பல சிறப்பு அர்த்தங்கள் மறைந்திருக்கின்றன.

**அப்பண்ணாசார்யர்:**
எரடனெ ஜன்மதி அப்பண்ணாபிதனு எனிஸி ராயர ஒலிஸி

குருகளு ஈதகெ ஸம்ஸ்தானவ கொட பயஸே திளிஸித ஆஸே ||

**பென்னப்ப**:
மூரனெ ஜனுமதி பெனகன நாமதி பந்த லச்சமரியல்லி நிந்த
மூரு ஹொத்து போஜன தாம்பூலவ திந்த ஸ்த்ரீயரானந்த ||

**ஸ்ரீதவிட்டலதாசர்**
ஹரிகதாம்ருதசார கிரந்தவ படிஸி ஸாரவ திளிஸி
பரெதனு பலஸ்துதி ஸந்தியனு தானிதகெ வினயதி அரிகெ
ஹருஷதி ஓதலு கிருஷ்ணனு பிடியுவ கரவ தாஸ்யவ கொடுவ ||

என்று ஸ்ரீதவிட்டலதாசரின் முந்தைய அவதாரங்களையும், அவரே அடுத்து குரு ஜகன்னாததாசராக அவதாரம் செய்தார் என்பதையும் சொல்லி, தன் கிருதியை முடிக்கிறார்.

மருதாந்தர்கத வரத விட்டலன தூதா | குரு ஜகன்னாத ||

இப்படி அஹ்லாதனின் அம்சத்தைக் கொண்ட பிச்சாலெயின் ஸ்ரீஅப்பண்ணாசார்யர், தன் அண்ணனான பிரகலாதன், ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளாக அவதரித்தபோது தாமும் அவதரித்து அவரின் அகண்ட சேவையை செய்து மறுபடி ஸ்ரீதவிட்டல தாசராக 'மேதினியொளு சுகதத்வவ பீரலு' மற்றும் 'ஹரிகதாம்ருதசார கிரந்தவ படிஸி, ஸாரவ திளிஸலு' பூமியில் இறங்கினார் என்கிறார்.

ஸ்ரீஹரிகதாம்ருதசாரத்திற்கு வியாக்யானம் எழுதிய ஸ்ரீகமலாபதி விட்டலதாசர், தாம் இயற்றிய 'அம்புஜாக்ஷி ஸ்தம்பதிஹர்யாரே' என்னும் கீர்த்தனையில் சொல்லியிருப்பதைப் போல, சஹ்லாதன் ஸ்ரீஜகன்னாததாசராக இருந்தபோது இயற்றிய மோட்சத்தைக் கொடுக்கக்கூடிய ஸ்ரீஹரிகதாம்ருதசார கிரந்தத்திற்கு பலஸ்துதி சந்தியை இயற்றி ஸ்ரீதவிட்டலதாசர், ஹரிதாசர்களுக்கு மிகப்பெரிய உதவியை செய்தார், என்கிறார்.

**ஸ்ரீதவிட்டலதாசரின் வம்சம்:**
ஸ்ரீதவிட்டலதாசர் கர்ஜிகி தாசர் என்று பெயர் பெற்றிருந்தாலும், அவர் பிறந்தது கர்ஜிகியில் அல்ல. தார்வாட ஜில்லா ஷிரஹட்டியில் அவர்

பிறந்தார். தாசரின் மூதாதையர் அங்கு பல்லாண்டுகளாக செல்வந்தர்களாக இருந்தனர். ஆத்ரேயஸ கோத்ரத்தை சேர்ந்த அவர்கள் ஷார்ஷிக அல்லது அரவத்தொக்கலு பிரிவை சேர்ந்தவர்கள். இந்த விஷயங்கள் ஸ்ரீஜகன்னாததாசரின் சிஷ்யரும், 18ம் நூற்றாண்டின் இறுதியில் தொட்டபள்ளாபுரத்தில் இருந்த ஸ்ரீராகவேந்திரப்ப என்னும் கவி இயற்றியிருக்கும் 'ஸாரஸ்வத பரிணய' என்னும் கிருதியில் இவ்வாறு சொல்லியிருக்கிறார். அதே கிருதியில் மேலும் அவர், ஸ்ரீதவிட்டல தாசர், கமகங்களிலும், சங்கீதம் பாடுவதிலும் வல்லவராக இருந்தார் என்பதை சொல்கிறார்.

ஷார்ஷிக அல்லது அரவத்தொக்கலு பிரிவு என்பது வைஷ்ணவர்களில் மிகவும் புகழ்பெற்ற வம்சமாகும். த்வைத சித்தாந்தத்தில் புகழ்பெற்றவர்களான, ஸ்ரீஅக்ஷோப்ய தீர்த்தர், ஸ்ரீஜய தீர்த்தர், ஸ்ரீராஜேந்திர தீர்த்தர், ஸ்ரீஜயத்வஜ தீர்த்தர், ஸ்ரீபுருஷோத்தம தீர்த்தர், ஸ்ரீபாதராஜர், ஸ்ரீவியாசராஜர், ஸ்ரீசுரேந்திர தீர்த்தர், ஸ்ரீவிஜயீந்திரர், ஸ்ரீசுதீந்திரர், ஸ்ரீராகவேந்திரர் என மேலும் பலர் தங்களின் பூர்வாசிரமத்தில் இதே வம்சத்தை சேர்ந்தவர்கள் ஆவர். புரந்தரதாசர், ஜகன்னாததாசர் போன்ற பல ஹரிதாசர்களும்கூட இந்த வம்சத்தை சேர்ந்தவர்களே ஆவர். இதுவே இந்த வம்சத்தின் சிறப்பினை அற்புதமாக விளக்குகிறது.

தாசப்பன் பிறந்த பிறகு அவரது பெற்றோர் சில காரணங்களால் கர்ஜிகி கிராமத்தில் வந்து வாழ்ந்திருக்கலாம் என்று தோன்றுகிறது.

ஹரிதாச சதுஷ்டயர்களில் மூவரான ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீகோபாலதாசர் மற்றும் ஸ்ரீஜகன்னாத தாசரைக் கண்ட பொற்காலம் - 18ம் நூற்றாண்டு. இந்த காலத்தில், பல தேவதைகள் ஹரிதாசர்களாக இந்த பூமியில் வந்து இறங்கினர். இதற்கேற்பவே, ஒவ்வொரு கிராமத்திலும், பற்பல பண்டிதர்கள் ஆசாரசீலராகி, மட, பிரவசங்களை செய்தவாறு இருந்தனர். சில கிராமங்களில் ஹரிதாச வித்வன்மணிகளும் இருந்தனர்.

மந்திராலய ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் பரம்பரையில் வந்த ஹொஸரித்தியில் ஸ்ரீதேவேந்திரர், ஸாவனூரில் ஸ்ரீசத்யபோதர், லிங்கசுகூரில் ஸ்ரீவரதேந்திரர் ஆகிய தவவலிமை பொருந்திய யதிகள், அதே காலகட்டத்தில் மக்களின் தார்மிக வாழ்க்கைக்கு தங்களின் பங்களிப்பை செய்து வந்தனர்.

தாசப்பன் பிறந்த ஆண்டு சரியாகத் தெரியவில்லை என்றாலும், 1820ன் ரௌத்ரி நாமக சம்வத்ஸரம் ஆஷாட சுத்த ஏகாதசியன்று தன் அவதாரத்தை நிறைவு செய்தார் என்றும் 80 ஆண்டு காலம் வாழ்ந்தார் என்று மட்டும் விவரங்கள் தெரிய வருகின்றன.

கர்ஜிகி கிராமத்தில் செல்வந்தர்களாக இருந்த தாசப்பன் பெற்றோர் மிகவும் பெரிய, அனைத்து சௌகர்யங்களும் கொண்ட மாளிகைகளில் வசித்து வந்ததால், அந்த ஊருக்கு வந்த யதிகள், ஹரிதாசர்கள் ஆகியோர் அவரின் வீட்டிலேயே இறங்கி, பூஜாதிகளை செய்துகொண்டனர் என்று அறிகிறோம். தாசரின் பெற்றோர் மிகவும் தார்மிகர்கள், பக்தி பாவத்தைக் கொண்டிருந்தனர் என்றும் தெரிகிறது.

**இயற்பெயர் - தாசப்பா**

சிக்கதனதலி தந்தெ தாயிகளு ஒலிது
பெசரிக்கி கரெதரு நின்ன தாஸனெந்து

என்று ஜகன்னாததாசரே தமது அங்கிதோபதேச கிருதியில் சொல்லியிருப்பதைப் போல இவருக்கு பெற்றோர் வைத்த பெயர் ‘தாசப்பா’. தாசராயர்களை நினைவு படுத்தும் இந்தப் பெயரை இவருக்கு பெற்றோர்கள் வைத்ததைப் பார்த்தால், ஹரிதாசர்களின் மேல் அவர்களுக்கு இருக்கும் பக்தி மரியாதைகளை புரிந்து கொள்ள முடிகிறது. மேலும் விஜயதாசர் போன்றவர்கள் அவதரித்த அந்த காலகட்டத்தில், அவர்களால் சாதாரண மக்களில் வந்த மாற்றங்களை நன்கு உணர முடிகிறது.

** 32ம் பக்கத்தில் தொடர்கிறது...

**வியாப்தி சந்தி குறுக்கெழுத்துப் போட்டி**
**விடைகள் எழுதி புத்தகப் பரிசு பெறுபவர்கள்**

1. திரு. சேதுமாதவன், பெங்களூரு 2. திரு.ரகூத்தமன், பெங்களூரு
3. திரு.பத்மனாபன், திருநெல்வேலி
4. திருமதி. உஷா, சென்னை 5. திருமதி. ஜெயஸ்ரீ, சென்னை

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## வியாப்தி சந்தி - விடைகள்

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| [1]அ | க்ஷ | ர | | [2]ஸு | மே | ய | | | | [27]ஸ | ர் | ப | [28]ஸ் |
| ள | ய | [21]ந | | ஷு | | | | [3]நி | ர் | லி | ப் | த | |
| ல | னி | [22]அ | | [4]ப் | ரே | ர | [23]க | | | ல | | | |
| | | | | தி | | | ட | | | | | | |
| [5]ஸ | ச் | ச | [24]வி | | | | [6]ம | த் | த | ன் | | | |
| | | தி | த் | [25]பு | | [7]க | ந் | த | | | | | |
| | | [8]ஸ் | ரு | தி | | | தி | | | | | | |
| [9]ஹ | ரி | ண் | ம | ணி | | [10]ஸ் | ர | வ | ண | | | | |
| ரு | | | | | | | ம் | | ரா | | | | |
| ள | | ம் | த | ப் | [11]ஸ | க் | ர | | [34]க் | வ | [26]த் | | |
| [35]வ | | | [12]ஸ் | தூ | ல | | த் | | | | [30]வ் | | |
| | | | ப | | ள | | [36]சி | | [13]எ | ல | ரு | ணி | |
| | [31]ர | த | [33]உ | | [37]ம | | | | ல | | ஜி | [38]கு | |
| | ஸ | தீ | | | | | | | ர் | | ன | | |
| | | [14]அ | ணு | | | | | | | | | | ரு |
| | | | | [15]க | [32]ஜு | ஷ | | | | | | | த |
| | | | | | ப் | | | [16]து | க்ஷ | ல | | | லி |
| | | [29]ம | | | த | | | ந் | | | | | ல் |
| | | ர் | ய | ர் | [39]பா | | | த | | | [17]பா | த | [39]ப |
| | | த் | ம | | வ | | | ட | | | | | |
| | | ய | ன் | | [18]க | ளி | கெ | [40]ப | ட் | ட | லு | | |
| | | ர் | [19]சி | த் | | | [41]பொ | | | | | | |

ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டியில் - ஹரிதாச விஜயம் சந்தாதாரர்கள் அல்லாத பிறரும் பங்கேற்கலாம். ஆகவே இதனை உங்கள் க்ரூப்களில் பகிர்ந்து கொள்ளவும்.

தொடர்



## கேசவ நாமா

## 7. அச்யுதானந்த கோவிந்த-ஸ்ரீபுரந்தரதாசர்

**புருஷோத்தமகா[3]ரு ஸாடி ப[1]ர**
**பிரம்ம ஸ்வரூபியெ நினகாரு போ[1]டி**
**மஹிமெ கேளிதரொந்து கோடி நின்ன**
**ஹ்ருதயதி கண்ட பிரம்மாண்ட கிரீட ||17**

புருஷாப்யாம் உத்தம: புருஷோத்தம: - புருஷோத்தமான நீயே சர்வோத்தமன், உனக்கு சரிசமம் என்று யாரும் இல்லை. உன்னுடன் போட்டி போடுபவரும் யாரும் இல்லை. பரபிரம்ம ஸ்வரூபியானவனே உன் மகிமைகள் கோடானுகோடி.

பிரம்மாண்டத்தை கண்டவள் யசோதை. விஷ்வரூபத்தை கண்டவர்கள் பீஷ்மர் மற்றும் அர்ஜுனன். பிரம்மாண்டத்தை கிரீடத்தில் (தலையில்) தரித்தவள் கொரவஞ்சி. உன் இதயத்திலேயே பிரம்மாண்டத்தை கண்டவர் பலி சக்ரவர்த்தி.

**அதோ[4]க்ஷஜ அசுர சம்ஹாரி க்ருஷ்ண**
**அத்புத ரூப சிசுபாலன வைரி**
**பக்தர பா[1]லிப[1] ஷௌரி அஜா**
**மிள நாரக[3]னன்னெ காய்தெ முராரி ||18**

அதோக்ஷஜனே, ஞான பக்தி வைராக்ய குணங்களினால் மட்டுமே உன்னை பார்க்க முடியும். புற இந்திரியங்களால் உன்னை காணமுடியாது. உன்னுடையது அற்புத ரூபம், அசுரனான சிசுபாலனின் வைரி. ருக்மிணியை, அஜாமிளனை காப்பாற்றிய முராரி, நீ பக்தர்களை காப்பவன்.

**நரசிம்ஹ ரூபவ தாள்தெ கந்த**
**கரெயெ கம்பதி ப[3]ந்து[3] கருணதி காய்தெ**
**துருள ஹிரண்யகன ஸீள்தெ அவன**
**க[1]ருள ப[3]கி[3]து[3] வனமாலெய ஹாகி[1]தெ ||19**

தசாவதரத்தில் நான்காவது அவதாரம் நரசிம்ம அவதாரம். வைவஸ்வத மன்வந்தரத்தில் நடந்த அவதாரம் இது. பிரகலாதனின் வேண்டுதலைக் கேட்டு, கம்பத்தில் அவதரித்து, ஹிரண்யகசிபுவினை கொன்று, அவனின் குடலை உருவி, தன் கழுத்தில் மாலையாக அணிந்தவன். நரனும் அல்லாத சிங்கமும் அல்லாத ரூபம் நரசிம்மன்.

**அச்யுத நீனதி[1] முத்து[3] கோ[3]பி[1]**
**ப[3]ச்சிட்ட[1] ஹாலு மொசரு பெண்ணெ மெத்து[3]**
**துச்ச ஷகடன கா[1]லிலொத்து[3] கா1ட்கி[3]**
**ச்சனு நுங்கி பாலிசிதெயோ கெ[3]த்து[3] ||20**

அச்யுதனே, நீ மிகவும் அழகானவன். கோபியர் மூடிவைத்த பால், தயிர், வெண்ணைய் ஆகியவற்றை திருடித் தின்றவன். ஷகடாசுரனை உன் சிறிய கால்களாய் கொன்றாய். தாவாக்னியை நீ உட்கொண்டு, பசு மற்றும் கோபாலகர்களை காப்பாற்றினாய்.

**ஜனார்த்தனரூப நீனாகி என்ன**
**மனத கர்மவ தொலகிஸு முந்தா[3]கி[3]**
**முனிகளெல்லரு ஒந்தாகி ஈ**
**தனு நின்னதெம்பரோ கேளோ நிஜவாகி ||21**

ஜனார்த்தனனே! ஜீவாத்மருக்கு தேகத்தை கொடுப்பவனே. தன் பக்தர்களின் (புனர்) ஜென்மத்தை நாசம் செய்வதால் உனக்கு ஜனார்த்தனன் என்று பெயர். என் மானசிக பாவங்களை நாசம் செய். இந்த உடல் உனது. நீ கொடுத்த சாதனை சரீரம் இது. நீயே முன் நின்று, என்னை பாவம் செய்யாதிருக்கச் செய். இது ஞானிகளே ஒப்புக்கொண்ட விஷயம்.

**உபேந்திரரூபதி ப[3]ந்தெ[3] அப்ர**
**மேய காளிங்கன மடுவ துமுகி[3]தெ[3]**
**நாகன ஹெடெகள துளிதெ நாக[3]**
**பத்னியரு பே[3]டெ[3] ப[1]திய பா[1]லிஸிதெ |22**

உபேந்திரனே, அப்ரமேயனே, காளிங்கன் என்னும் பாம்பினை கொன்றாய், நாகபத்னியர்கள் உன்னை சரணடைந்தபோது அவர்களின் கணவர்களை காப்பாற்றினாய்.

**ஹரிஹரியெந்தரெ பா[1]ப[1]ராஷி**
**ஹரிது ஹோயித்து என்ன மனத[3] ஸந்தா[1]ப[1]**
**சர்வரோக விஷ்வரூப நின்ன**
**நெரெ நம்பிதவரனு சலஹுவ பூ[4]ப[1] ||23**

ஹரியே. பக்தர்களின் வினைப்பயன்களை நீக்குபவனே. என் மனதின் துயரங்களைக் களை, உன்னை நம்பிய பக்தர்களை காப்பாற்றும் கருணாமயி, உன்னுடைய விஸ்வரூப தரிசனத்தால் அனைத்து கஷ்டங்களும் தீர்கின்றன.

**கிருஷ்ண கிருஷ்ணனெம்ப ஸொல்ப கே[1]ளி**
**நஷ்டவாயிது என்ன பாபகளெல்ல**
**முட்டி பஜிஸிரோ நீவெல்ல புரந்தர**
**விட்டலனல்லதெ மத்தெ[1] பே[3]ரில்ல ||24**

கிருஷ்ணா கிருஷ்ணா என்னும் நாமஸ்மரணையினால் கஷ்டங்கள் தீர்ந்தன. பாவங்கள் தொலைந்தன. அவனைத் தவிர வேறு யாரும் நம்மை காப்பவரில்லை. புரந்தரவிட்டலனான ஸ்ரீகிருஷ்ணனைத் தவிர வேறு யாரும் இல்லை. அவனையே நம்புங்கள் என்கிறார் தாசர்.

புரந்தரதாசர், நரசிம்ம அவதாரம், ராமாவதாரம் மற்றும் கிருஷ்ணாவதாரத்தின் பல சம்பவங்களை தொகுத்து, 24 நாமங்களுடன் கட்டி, க்ருத, த்ரேதா, த்வாபர யுகங்களின் மகத்துவத்தை 16ம் நூற்றாண்டிலேயே மனித குலத்திற்கு தெரிவித்திருக்கிறார். இது மிகவும் அபூர்வமான, படிக்க வேண்டிய கிருதியாகும்.

## அடுத்த பாடல்.. 8. காளி பந்த கையலி - ஸ்ரீபுரந்தரதாசர்

**கா[3]ளி ப[3]ந்த[3] கை[1]யல்லி தூ[3]ரிகொ[1]ள்ளிரோ ||ப||**
**நாளெ என்னபே[3]டி இதே[3] வேளெ பன்னிரோ ||அப||**

இது ஒரு பழமொழி போல உள்ளது. காற்றுள்ளபோதே தூற்றிக்கொள். காலம் பொன் போன்றது. அதை வீணாக்காதே என்று சொல்லலாம்.

எந்த வேலையையும் நாளை என்று தள்ளிப் போடாமல் உடனடியாக அதை செய்து முடிக்கவும் என்கிறார்.

இதற்கு இன்னொரு அர்த்தத்தை பார்க்கலாம். காளி என்றால் வாயு என்று பொருள். காளி (வாயு) வந்த கை எது? அந்த கையில் இருக்கும் மகிமை என்ன? என்று சிந்தித்தால் அந்த இன்னொரு அர்த்தம் விளங்கும்.

**ரகு4நாத2கெ எரகி3 முகி3த3 ஹஸ்த1**
**சூடாமணிய ஒடெ3யகி3த்த3 ஹஸ்த1**
**ரணதொ3ளு லட்சுமணன எத்தி1 த1ந்த3 ஹஸ்த1**
**வனிதெ1கெ3 சௌக3ந்திகு1சும த1ந்த3 ஹஸ்த1**

இப்படிப்பட்ட மகிமைகளை பொருந்திய பிராணதேவரின் அபய ஹஸ்தத்தைப் பிடித்து, அதிலிருந்து தொடங்கினால் பகவந்தனின் அருள் கிடைக்கிறது. அந்த அருளைப் பெறுவதற்கு நாளை வரை காத்திருக்காமல் இன்றே தொடங்குங்கள். அந்த வாயுவின் இதயத்தில் வசித்திருக்கும் பகவந்தனின் கருணையைப் பெறுவதற்கு, செய்ய வேண்டிய சாதனைகளைப் பற்றி நினையுங்கள் என்கிறார் தாசர்.

**வாஸவாதி3 வினுத1 வைகுண்ட2தொ3டெ3ய நம்ம ஹ்ருத3ய**
**வாஸனெந்து பி3ட3தே3 கேசவன்ன நெனெயிரோ ||1**

நம் இதயத்தில் இருக்கும் கேசவ. இந்திரன் முதலான அனைத்து தேவதைகளால் வணங்கப்படும், வைகுண்டத்தில் வசிப்பவனான ஸ்ரீஹரியை நினையுங்கள்.

**ஹேய சம்சாரத3 மர்ம கா4யவது3 மாயுவந்தெ1**
**பா3யி முச்சிகொ1ள்ளதெ3 நாராயணன நெனெயிரோ ||2**

சுக துக்கம், நோய் நொடி, இருட்டு வெளிச்சம் ஆகியவை கலந்ததே வாழ்க்கை. ஒரு துக்கம் மறைந்து / மறந்து கொண்டிருக்கும்போதே, இன்னொரு நோய் தலை தூக்குகிறது. இதிலிருந்து தப்பிப்பதற்கு, சும்மா இல்லாமல், வாய் மூடாமல், நாராயணனை நினையுங்கள்.

**போ3தெ4க3ளல்லி சத்குரு போ3தெ4யிது எந்தெ3னுத1**
**கா3தெ3க3ளெல்லவு பி3ட்டு1 மாத4வன நெனெயிரோ ||3**

கதைகள் மனிதனின் அனுபவத்தின் வெளிப்பாடுகள். இது குரு உபதேசமல்ல. ஆனால் நான் சொல்லிக் கொண்டிருக்கும் இந்த வாக்கு, குரு உபதேசம் என்று அறிந்து மாதவனை நினையுங்கள்.

**இந்தி[3]ன தி[3]னவே சுதி[3]ன இந்தி[3]ன சொல்லெ லேஸெந்து**
**இந்திராரமண கோவிந்தன நெனெயிரோ ||4**

இந்திரா ரமணனை நினைப்பதற்கு திதி, வார, நட்சத்திர, யோக, கரண, காலங்களைப் பார்ப்பதற்கு அவசியம் கிடையாது. நாம த்ரயங்களில் ஒன்றான கோவிந்தனை நினைப்பதற்கு அனைத்து நாட்களும் நல்ல நாட்களே. ஆகையால், இந்த நொடியிலிருந்தே கோவிந்தனை நினையுங்கள்.

**க[4]ன்ன தே[3]வர்களிகின்னு மஹிமனு ஹரி**
**அன்யவில்லவெந்து ஸ்ரீவிஷ்ணுவன்னு நெனெயிரோ ||5**

ரமா, பிரம்மா, ருத்ர முதலான அனைத்து தேவதைகளைவிட மகாமகிமன் ஸ்ரீஹரி. ஸ்ரீஹரியைவிட சிறந்தவர் / அபின்னனானவர் என்று யாரும் கிடையாது என்பதால் ஸ்ரீவிஷ்ணுவை நினையுங்கள்.

**சாத[4]னெய ப[4]க்தியொளு சோத[4]னெ கையுக்த[1] கண்டெ**
**வீதனவெனுத மது[4]சூதனன்னு நெனெயிரோ ||6**

பக்தியை சாதனையாக ஆக்கிக்கொண்டு, அந்த சாதனையில் மூழ்கினால், மதுசூதனனைக் காணலாம். அத்தகைய மதுசூதனனை நினையுங்கள்.

**ஷக்ரனிகெ ஒலிது[3] ஜக[3]த்சக்ரவன்னு அளிது[3] மத்தெ[1]**
**சுக்ர சிஷ்யன கெ[3]லித[3] த்ரிவிக்ரமன நெனெயிரோ ||7**

இந்திரனுக்கு காட்சியளித்து, பகவந்தன் வாமனாவதாரத்தில் வந்து ஜகத்சக்ரத்தை (ஆகாயம், பூமி, பாதாளம்) தன் பாதங்களால் அளந்து (சுக்ர சிஷ்யனான) பலி சக்ரவர்த்தியை வென்ற த்ரிவிக்ரமனை நினையுங்கள். ** **திருமதி. ஜெயம்மா, பெங்களூரு**

தொடர்

## .ஹரிதாசர்களின் சிந்தனை முத்துக்கள்
## ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள்

**பூஜ்யாய ராகவேந்த்ராய சத்யதர்ம ரதாயச ।**
**பஜதாம் கல்பவ்ருக்ஷாய நமதாம் காமதேனவே ॥**

'தேவனெந்தரெ வெங்கப்பா, குருகளெந்தரெ ராகப்பா' இது பொதுவாக அனைவரும் சொல்லும் வசனம். ராயரைப் பற்றி அப்பண்ணாசார்யர் சொல்வது இப்படியாக இருக்கிறது.

ஸ்ரீமத்வமததுக்தாப்தி சந்த்ரோSபவது சதாsனக: । ஸ்ரீமத்வமத வர்தன: । அபேக்ஷிதப்ரதாதான்யோ ராகவேந்த்ரன்ன வித்யதே ॥

ஸ்ரீமத்வ மதத்தின் சந்திரனாக, பக்தர்களின் வேண்டுதல்களை நிறைவேற்றுபவராக, மந்திராலயத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீராயரை யார்தான் வணங்க மாட்டார்கள்? பஜிக்க மாட்டார்கள்? 'பஜதாம் கல்பவ்ருக்ஷாய நமதாம் காமதேனவே'. ஹரிதாச சாகித்யத்தின் இரண்டாம் கட்டத்தின் துவக்க நாயகர் ஸ்ரீராகவேந்திரர். இவருக்குப் பிறகு வந்த - இவரை வணங்காத, பாடாத ஹரிதாசர்கள் இல்லை. பண்டித பாமரர்களுக்கும் ஞானாதி அபீஷ்டங்களைக் கொடுப்பவராக இருக்கிறார். குருகளின் மகிமையை ஹரிதாசர்கள் மிகவும் அருமையாக தங்கள் கிருதிகளில் பாடியிருப்பதை காண்கிறோம்.

**ஸ்ரீவிஜயதாசர்** --
நோடிதே குருகள நோடிதே ||ப||

நோடிதேனு குருராகவேந்திரர
மாடிதேனு பகுதியலி வந்தனெ
பேடிதேனு கொண்டாடி வரகள
ஈடு இல்லதெ மெரெவ மஹிமெய ||அப||

'டிப்பணாசார்ய சக்ரவர்த்தி' என்றே அழைக்கபடுபவரான ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் கிரந்தங்களின் மகிமை மிகவும் அபாரமானது. ஐம்பதுக்கும் மேற்பட்ட கிரந்தங்கள் டீகா, டிப்பணி, ஸ்வதந்த்ர கிரந்தங்கள், ஸ்தோத்திரங்கள் என பலவிதங்களாக

இருக்கின்றன. பரிமளாசார்ய, பாவதீபகாரர் ஆகிய பட்டங்களைக் கொண்டவர். கன்னட மொழியிலும் கிருதிகளை இயற்றி ஹரிதாச சாகித்யத்திற்கும் ஒளியூட்டிய மகான் ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள். இவரைப் பற்றி ஸ்ரீஜகன்னாததாசர்:

ஹொந்தி பதுகிரோ ராகவேந்திர ராயர ।
குந்ததெம்மனு கருணதிந்த பொரெவர ॥ என்று கொண்டாடினார்.

**ஸ்ரீவித்யாபிரசன்ன தீர்த்தர்:**
யதிவர நிம்மனு ஸ்துதிப ஜனரு திவ்ய
கதியனு பொந்துவரு ராகவேந்திரா ॥

**ஸ்ரீகோபாலதாசர்:**
ராயென்னெ ராசி தோஷகள தஹிஸுவரு
காயென்னே கன ஞான பகுதியனித்து
வே என்னெ வேகாதி ஜனன மரண கெம்மெ
த்ரா என்னெ த்ரவிணோத ஸ்ருதிகீவ கனகாம்ப ॥

**ஸ்ரீபிராணேசதாசர்:**
ஸ்ரீராமசந்திராங்க்ரி நரசிம்ம ப்ருங்கனிகெ
தீக்ஷ சுதீந்த்ரகர சம்பூதனிகெ
வாராஹிதீர மந்த்ராலய நிகேதனகெ
ஸ்ரீராகவேந்த்ர ராயர சரணக்கெ
ஜயமங்களம் நித்ய சுபமங்களம் ॥

இன்றும் ராகவேந்திர ஆராதனை விழாக்களில் பங்கேற்பது, ராகவேந்திர விஜயம் பாராயணம் செய்வது முக்கியமாக இருக்கிறது. ஸ்ரீராகவேந்திர ஸ்தோத்திரம், அஷ்டோத்திரம், ராகவேந்திர விஜயம், குருகுணஸ்தவம், ஹரிதாசர்களின் பாடல்கள் ஆகியன பாராயணம் செய்கிறார்கள். அறிஞர்களால் ராயரின் வாழ்க்கைச் சரிதம், மகிமைகளை சொல்லக் கேட்கிறார்கள். கலியுகத்தின் கல்பவிருட்சம் என்று புகழ்பெற்றுள்ள ஸ்ரீராயரின் அருள் அனைவருக்கும் தேவையாக இருக்கிறது. உயிருடன் பிருந்தாவன பிரவேசம் செய்தவரின் மூலபிருந்தாவன தரிசனம் அதிஅற்புதம்.

**விஸ்வேந்திர தீர்த்தர்:**
மத்வமதவெம்ப துகததஸாகரதொளு ।
உத்பவிஸித மூர்ண ஹிம கர தேஜ ॥

**ஸ்ரீவித்யாபிரசன்ன தீர்த்தர்:**
யதிவர நிம்மனு சுத்திப ஜனரு திவ்ய
கதியனு பொந்துவரு ராகவேந்திர ॥

மூகோபியத் பிரசாதேன முகுந்த சயனாயகெ ।
ராஜராஜாயதே ரிக்தோ ராகவேந்திரம் தமாஸ்ரயே ॥

** திரு. ஏ.பி. ஷாமாச்சார், பெங்களூரு

**ஸ்ரீகமலேஷ விட்டலதாசரின் ஒரு கீர்த்தனை**

**கரெதரே பரபாரதே குரு ராகவேந்திரா (கரெதரே)**

கூப்பிட்டால் வரக்கூடாதா குரு ராகவேந்திரா (கரெதரே)

**வர மந்திராலய புர மந்திர தவ**
**சரண சேவகரு கரவா முகிது (கரெதரே)**

(புனித தலமான) மந்திராலயத்தில் உங்கள் கோவிலின் முன் நின்று
சேவை செய்யும் பக்தர்கள் கைகூப்பி தொழும்போது (கரெதரே)

**ஹரிதாசரு சுஸ்வர சம்மேலதி**
**பரவசதல்லி பாயி தெரது கூகி (கரெதரே)**

ஹரியின் பக்தர்கள் நல்ல ராக, தாளத்துடன்
பக்தி பரவசத்துடன் உன்னை போற்றி பாடி, தொழும்போது (கரெதரே)

**பூஷரபித கமலேஷ விட்டலன்ன**
**தாசகிரேஸரு ஈ சமயதல்லி (கரெதரே)**

மன்மதனின் தந்தையான கமலேஷ விட்டலனே
உன் தாசர்கள் உன்னை வணங்கும் இந்த தருணத்தில் (கரெதரே)

தொடர்

# ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## போஜன ரஸ விபாக சந்தி

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | 26 | | | | 2 | | | | | | |
| | | | | | 34 | | 3 | | | | | | |
| | | | | | | | | | | | 27 | | |
| | | | | 22 | | | 4 | 28 | | | | | |
| | | | | | | | | | | | | | |
| 5 | 35 | | | | | | | | | | | | 23 |
| | | 29 | | | | | | | | | | | |
| 6 | | | | | | | | | | 7 | | | |
| | | 8 | | | | | | | | | | | |
| | | | | | | 36 | | | | | | | 24 |
| | | | 30 | | | | | | | | | | |
| | | | | | 25 | | | 9 | | | | | |
| | | | | 37 | | | | | | | | | |
| | 10 | | | | | | | | | | | | |
| | | 11 | 31 | | | | 32 | | | 12 | | | |
| | | 13 | | | | | 14 | | | | | | |
| | | | | | | | 15 | | | | | | |
| | | | | 33 | | | | | 16 | | | | |
| | 17 | | | | | | | | 38 | | | | |
| | | | | | | | | 18 | | | | | |
| | | | 19 | | | | | | | | | | |
| 20 | | | | | | | | | | | 21 | 39 | |

* வடிவமைத்தவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி.

* இதற்கான விடைகளை ஆகஸ்ட் 15ம் தேதிக்குள் வாட்சப்பிலோ, மெயிலிலோ அனுப்பலாம்.
* சரியான விடைகள் தரும் இருவருக்கு புத்தகப் பரிசு கிடைக்கும்.

**வலமிருந்து இடம் :** 1.ப்ரஹ்மாண்டம்(6); 2.தேவதைகள்(5); 3.ஹயாஸ்ய (5); 4.ப்ராதனமற்ற ரசம்.(5); 5.தனக்கு வருவது(4); 6.யஜமான பகவத் ரூபம் (5); 7.ருத்ரர் இருக்கும் பித்ரூ ரூபம்(4); 8.அனலாதி பித்ரூ தேவதைகளை ப்ரேரணை செய்பவர்(6); 9.வாஸுதேவ பகவத் ரூபம் இந்த தாதுவில் (ஸப்த தாது) உள்ளது(3); 10.த்ரிநவ (எண்)(2); 11.போக்த்ரு, போஜ்யர்களில் பரமாத்மாவின் ரூபங்கள்(எண்)(6); 12. ருத்ர தேவன்(4); 13.விக்ஞானமய கோஸத்தில் பகவத் ரூபங்கள் (எண்)(4); 14.அன்னமய கோஸத்தில் அனிருத்த ரூபி பரமாத்மாவின் ரூபங்கள்(எண்)(3); 15.ஆனந்தமய கோஸத்தில் நாராயண பகவத் ரூபங்கள்(எண்)(4); 16.நெய்யில் உள்ள பகவத் ரூபங்கள் (எண்)(2); 17.மனோமய கோஸத்தில் உள்ள பகவத் ரூபங்கள் (எண்)(6); 18.ருசிகரமான சாப்பாடு.(6); 19.ப்ராணமய கோஸத்தில் உள்ள பகவத் ரூபங்கள்(எண்)(4); 20.அபான வாயுவில் உள்ள பகவத் ரூபங்கள் (எண்)(3); 21.பிதாமஹ பாகத்தில் உள்ள தேவதை.(3)

**இடமிருந்து வலம் :** 22.இந்திரியங்களை அடக்க முடியாதவன்(4); 23. வராஹ ரூபம்(3) 24.பித்ருகளுக்கு அன்ன விபாகம் செய்யும் பகவத் ரூபம்.(6); 25.சாப்பிடுபவன்.(4)

**மேலிருந்து கீழ்:** 1.பாலில் உள்ள ரசம்.((3); 2.பகல்(2); 4.ஒரு வஸ்துவில் முழுமையாக உள்ள ரசம்(4); 7.பித்ரு காரியத்தில் அக்னி தேவதை இவருக்கு அபிமானியாக இருக்கிறார்.(3); 26.மனோகரமான நெய்(5); 27.கரும்பின் சாரிலிருந்து எடுத்த வெல்லம்(4); 28.நாடிகள் அனைத்திலும் இருக்கும் பகவத்ரூபம்(4); 29.ஸ்ரீக்ருஷ்ணன் இந்த பதார்த்தத்தின் பகவத் ரூபம்(4); 30.கண்(3); 31.பால் முதலானவைகளில் உள்ள ரஸங்களின் ஒட்டு மொத்த பகவத் ரூபங்கள்(எண்)(4); 32.ப்ராணமய கோஸத்தில் ப்ராண என்ற பெயருடன் இருக்கும் பகவத் ரூபங்கள்(எண்)(3); 33.ஆனந்த மய கோஸத்தில் உள்ள பகவத் ரூபங்கள்(எண்)(4)

**கீழிருந்துமேல்:** 6.தாய்(3); 34.கூண்டு(2); 35.பஞ்ச ப்ராணனுள் முதன்மையானது(3) 36.சாப்பிடுவது(4); 37.நாஸிக(3); 38.அன்னமய கோஸத்தில் பகவத்ரூபங்கள்(எண்)(4); 39.ஸப்த தாதுகளில் ஒன்று.(3) **


ஆராதனை

## இபராமபுர அப்பாவரு

By குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்

### ஸ்ரீமத் அப்பாவர அஷ்டகம் அல்லது
### ஸ்ரீமத் இபராமபுர கிருஷ்ணார்ய அஷ்டகம்

**ஸ்ரீராமசரண த்3வந்த்3வ வார்தி4 சந்தி3ரோத3யோபம: |**
**ஸ்ரீகிருஷ்ண பூஜா நிரத: கிருஷ்ணோ மாம் ஸர்வதா3வது ||**

ஸ்ரீராமனின் திருவடிகள் என்னும் கடலில் முழுமதி உதித்ததைப்போல, ஸ்ரீகிருஷ்ணனின் பூஜையில் நித்தம் ஈடுபட்ட ஸ்ரீகிருஷ்ணாசார்யர் என்னையும் எக்காலத்திலும் காக்கட்டும்.

**க்ருஷ்ணோத்க்ருஷ்ட த3யாபூர்ண (புஷ்ப)**
**க்ருஷ்ணாபதி ஸுஹ்ருத் ப்ரியம் |**
**த்3ருஷ்டாத்3ருஷ்ட ப்ரவக்தாரம்**
**க்ருஷ்ணாசார்யர் கு3ரும் ப4ஜே || 1**

ஸ்ரீகிருஷ்ணரின் சிறந்த கருணையால் பலம் கொண்டவரும் (தயையால் பூத்தவரும்) திரௌபதி மணாளன் பீமசேனதேவரின் அன்புக்கு பாத்திரரானவரும், முக்காலங்களையும் நன்றாக அறியும் வல்லமை படைத்தவருமான இபராமபுரத்து ஸ்ரீகிருஷ்ணாசார்ய குருவை தொழுகின்றேன்.

**ஸுப4த3ம் ஸேவமானானாம் அப4யப்ரத மர்தீ2னாம் |**
**இப4ராம புராகா3ரம் க்ருஷ்ணாசார்யர் கு3ரும் ப4ஜே || 2**

சேவிப்பவர்களுக்கு நல்லதையே அருள்பவரும், வேண்டியவர்களுக்கு அபயத்தைக் கொடுப்பவரும், இபராமபுரத்தில் இருப்பவருமான ஸ்ரீக்ருஷ்ணாசார்யர் குருவை பஜிக்கிறேன்.

**ரோகா3த்3யுபத்3ர வார்தானாம் போ4கா3யதன ஸௌக்2யத3ம் |**
**யோகா3யோக3ஸமம் ஸாந்தம் க்ருஷ்ணாசார்யர் கு3ரும் ப4ஜே || 3**

பிணி முதலிய பாதைகளால் பீடிக்கப்பட்டவர்களுக்கு மிகவும் அதிகம் சுகத்தைக் கொடுப்பவரும், சுகசுக்கங்களை ஒரே நிலையில் பார்ப்பவருமான ஸ்ரீக்ருஷ்ணாசார்ய குருவை பஜிக்கிறேன்.

**பூ4தப்ரேத க்3ரஹஸ்வேத வாத பித்த வ்ரணாத3ய: |**
**பீ4தா க3ச்ச2ந்தி யஸ்மாத்தம் க்ருஷ்ணாசார்ய கு3ரும் ப4ஜே || 4**

பூத, ப்ரேத, க்ரஹ, தெய்வ, வாத, பித்த, ரண முதலானவை யாரின் ஸ்மரணையால் ஓடுகிறதோ, அத்தகைய ஸ்ரீக்ருஷ்ணாசார்யர் குருவை தொழுகிறேன்.

**ஸ்ரீபூ4தே3வக3ணை: பூஜ்யம் ஸ்ரீபூ4மாதி3ஷணாயுதம் |**
**பூ4மிஸாத்3ருஷ்ட விப4வம் க்ருஷ்ணாசார்ய கு3ரும் ப4ஜே || 5**

பிராமணர்களால் பூஜிக்கப்படுபவரும், அதிசயமான அறிவுள்ள ப்ருஹஸ்பதி ஆசார்யர் போல இருப்பவரும், ராஜவைபவத்துடன் கூடியிருப்பவருமான ஸ்ரீக்ருஷ்ணாசார்ய குருவை பஜிக்கிறேன்.

**பா4ரதீஸ பத3த்3வந்த்3வ ஸாரஸ ப்4ரமராயிதம் |**
**ஸூரவத்காந்தி ஸம்பன்னம் க்ருஷ்ணாசார்ய கு3ரும் ப4ஜே || 6**

பாரதிபதி முக்யபிராணரின் பாத கமலங்களுக்கு வண்டு போல விளங்குபவரும், தேவதைகளைப் போல பிரகாசிப்பவருமான ஸ்ரீக்ருஷ்ணாசார்ய குருவை பஜிக்கிறேன்.

**ஸ்ரீராக4வேந்தி3ர சித்தஜ்ஞம் ஸாரமாத்ர லதா3வத3ம் |**
**தூ3ரீக்ருத து3ராசாரம் க்ருஷ்ணாசார்ய கு3ரும் ப4ஜே || 7**

ஸ்ரீராகவேந்திர குருவின் மனதை அறிந்தவரும், உள்ளதை உள்ளபடி உபதேசிப்பவரும், தீய நடவடிக்கைகளை தூரம் செய்பவருமான ஸ்ரீக்ருஷ்ணாசார்ய குருவை பஜிக்கிறேன்.

**சிஷ்டேஷ்ட ஜன சந்துஷ்டம் வ்ருஷ்ணீஸ அங்க்3ரி ஸமாஸ்ரிதம் |**
**கஷ்ட நாஸம் ஸ்வப4க்தானாம் க்ருஷ்ணாசார்ய கு3ரும் ப4ஜே || 8**

ஸ்ரீகிருஷ்ணனின் பாதங்களை நன்றாக அண்டியவரும், தகுதியான அன்புக்குரிய தங்கள் பக்தர்களின் இன்னல்களை நாசம் செய்பவரும், மகிழ்ச்சியுடன் கூடியிருப்பவருமான ஸ்ரீக்ருஷ்ணாசார்ய குருவை பஜிக்கிறேன்.

**அஷ்டஸ்லோகமயீம் மாலாம் க்ருஷ்ணாசார்ய ஸ்தவாபி4தா3ம் |**
**இஷ்ட ஸித்3தி3 லபேத் ஸத்3யோ நிஷ்டா2யா ஜபக்ருன் நர: || 9**

ஸ்ரீக்ருஷ்ணாசார்யரின் ஸ்தோத்திரம் என்று அழைக்கப்படுகின்ற எட்டு ஸ்லோகங்கள் உள்ள இந்த மாலையை நிஷ்டையுடன் ஜபித்தவர்கள், வெகு விரைவிலேயே தங்களுடைய இஷ்டார்த்தங்களை அடைகிறார்கள்.

**பா³லிஸேன க்ருத மாலா காலீநாத² பதா³ம்பு³ஜே |**
**லோல ஷட்பதவத்³ பூ⁴ஷாஸ்யாத் ஸதாம் ப4ஜதாம் முதே3 || 10**

சிறு மதியால் இயற்றப்பட்ட இந்த மாலையானது, காலிந்தி தேவியின் கணவனாகிய ஸ்ரீகிருஷ்ணனின் பாத கமலங்களில் ஈடுபாடு கொண்ட வண்டினைப் போல, சஜ்ஜனர்களால் தரிக்கப்பட்டு பஜிப்பவர்களுக்கு மகிழ்ச்சியை உண்டு பண்ணுகின்றன.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

## இபராமபுர அப்பாவரு

**காலம்:** 1789-1869
**இயற்பெயர்** : இபராமபுர கிருஷ்ணாசார்யர்
**உபதேச குரு:** ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள் (கனவில்)
**சிஷ்யர்:** ஸ்ரீவிஜயராமசந்திர விட்டலதாசர்
**இடம்**: இபராமபுர (மந்திராலயத்திற்கு அருகில்)
**புண்ய தினம்:** சிராவண சுத்த த்ருதியை

**சரம ஸ்லோகம்:**
ஹனுமந்தார்சகம் ஸௌம்யம் ராகவேந்த்ரோ குரோ: ப்ரியம் |
அப்பேதி நாம்னா விக்யாதம் கிருஷ்ணாசார்ய குரும் பஜே ||

https://hks-bhavaprakashike.blogspot.in என்னும் இணைய தளத்தில் 'பாவபிரகாசிகை' என்னும் (ஹரிகதாம்ருதசாரத்தின்) கன்னட உரையின் தமிழாக்கம் - தினமும் 5 பத்யங்கள் - என்று வெளியிட ப்பட்டு வருகிறது. அனைவரும் அந்த தளத்திற்குச் சென்று படித்து பயன் பெறவும் என்று கேட்டுக் கொள்கிறோம்.



தொடர்

# ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

## ஸ்ரீராகவேந்திரரைப் பாடிய ஜகன்னாத்தாசர்

கன்னட சாகித்ய பரம்பரையில் ஒரு சிறந்த இடம் கன்னட ஹரிதாச சாகித்யத்திற்கு உண்டு. சமஸ்கிருதத்தில் எழுதப்பட்டிருக்கும் காவியங்கள் படிப்பறிவு கொண்டவர்களுக்கு மட்டுமே என்று இருந்தபோது, படிப்பறிவு இல்லாத பாமரர்களுக்கும் அத்தகைய காவியங்களை அவர்களது எளிய மொழியிலேயே கொண்டு சென்று சேர்த்ததில் ஹரிதாச சாகித்யத்தின் பங்கு மிகவும் முக்கியமானது.

அந்தந்த காலகட்டத்தில் இருந்த சமூக, அரசியல் நிலைமைக்கேற்ப மக்களை நல்வழிப்படுத்தி, ஸ்ரீஹரியிடம் பக்தி செலுத்தும் வழியினை, வாழ்க்கையில் திடம் / நம்பிக்கை கொடுக்கக்கூடிய பாடல்களை இயற்றி அதன்மூலம் அவர்களை வாழ்க்கையை நல்லவிதமாக தைரியமாக எதிர்கொள்ளுமாறு செய்து, சமூகத்தை முன்னேற்றிச் செல்லும் ஒரு பெரிய விஷயத்தை செய்து வருவதே ஹரிதாச சாகித்யம்.

ஸ்ரீமன் மத்வாசாரியாரின் ஆணைப்படி ஸ்ரீநரஹரி தீர்த்தரிடமிருந்து தொடங்கிய இந்த தாச சாகித்யம், ஸ்ரீஸ்ரீபாதராஜர், ஸ்ரீவியாசராஜர் மற்றும் ஸ்ரீவாதிராஜர் மூலமாக நன்கு வளர்ந்து, ஸ்ரீபுரந்தரதாசர் மற்றும் ஸ்ரீகனகதாசர் மூலமாக பிரபலமடைந்தது. 15ம் நூற்றாண்டின் துவக்கத்திலிருந்து, 17ம் நூற்றாண்டு வரையிலான இந்த காலகட்டம் 'முதலாம் கட்டம்' அல்லது 'ஸ்ரீபாதராஜ யுகம்' என்று அழைக்கப்படுகிறது.

மஹிபதிதாசர், பிரசன்ன வேங்கடதாசருக்குப் பிறகு ஸ்ரீராகவேந்திரர் மூலமாக மேலும் 18ம் நூற்றாண்டின் ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீகோபாலதாசர் மற்றும் ஸ்ரீஜகன்னாததாசர் மூலமாக வளர்ந்த தாசசாகித்யத்தின் இந்த காலகட்டம் 'இரண்டாம் கட்டம்' அல்லது 'விஜயதாசரின் யுகம்' என்று அழைக்கப்படுகிறது.

1. இப்படி ஹரிதாச சாகித்யத்தை மறுபடி வளர்த்தெடுத்ததில் முக்கிய பங்காற்றிய ஸ்ரீராகவேந்திரரைக் குறித்து ஸ்ரீவிஜயதாசர் முதற்கொண்டு பல ஹரிதாசர்கள் மிகவும் நன்றியுடன் பாடல்களைப் பாடி தமது மரியாதையினை தெரிவித்திருக்கிறார்கள். இங்கு ஸ்ரீராகவேந்திரரைக் குறித்து அவர், ஸ்ரீபுரந்தரதாசர் மற்றும்

ஸ்ரீவிஜயதாசர் இருவரின் பரம்பரைக்கும் நடுவில் இருந்து, தாச-வியாச என இரு குழுக்களையும் வளர்த்து, இருவரையும் அடுத்த நிலைக்குக் கொண்டு சென்றவராக இருந்தார் என்று ஸ்ரீ R.S.பஞ்சமுகி அவர்கள் தெரிவித்திருக்கிறார்கள்.

2. மற்ற அனைத்து ஹரிதாசர்களின் பாடல்களைவிட ஸ்ரீஜகன்னாததாசரே, ஸ்ரீராகவேந்திரரை அதிகம் பாடியிருக்கிறார் என்ப தையும் கவனிக்க வேண்டும். ஸ்ரீஜகன்னாததாசரின் கீர்த்தனைகளை கவனித்தோமானால் அவருக்கு மந்திராலயத்தின் மேல் மிக அதிக மதிப்பு இருந்ததை பார்க்கமுடியும். சிறு வயது முதலேயே அவருக்கு கல்வியறிவு புகட்டிய இடம் மந்திராலயம் என்கிற பெருமை / மதிப்பு ஜகன்னாததாசருக்கு இருந்தது.

3. மந்திராலய ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் பரம்பரையில் வந்த ஸ்ரீவரதேந்திரரிடம் படித்தவர் ஸ்ரீஜகன்னாததாசர். முதலிலிருந்தே இவருக்கு ஸ்ரீராகவேந்திரர் மேல் அளவிட முடியாத பக்தி, நம்பிக்கை இருந்ததில் வியப்பு எதுவுமில்லை. இத்தகைய குரு இருந்த தமது ஞானத்திற்குக் காரணமான மந்திராலயத்தை ஜகன்னாததாசர் ஸ்வர்க்கம் என்றே நினைத்தார்.

அங்கு காமதேனுவாக இருந்தவர், சுதீந்திரர் வழிவந்த ஸ்ரீராகவேந்திரர். அவர் அஞ்ஞானத்தைப் போக்கும் சிந்தாமணியாக இருந்தவர். தன்னை நம்பியவர்களின் விருப்பங்களை நிறைவேற்றும் கல்ப விருக்ஷம் அவர். இத்தகைய ஸ்ரீராகவேந்திரர் அங்கு நிலைத்திரு ப்பதாலேயே தமது ஜகன்னாதவிட்டலனும் அங்கு நிலைத்திருப்பான் என்று நம்பிக்கை கொண்டிருந்தார் தாசர்.

4. குரு ராகவேந்திரரின் பிருந்தாவனத்திற்கு எதிரில் நின்றால், சாட்சாத் அவரையே தரிசனம் செய்பவராக இருந்தார் தாசர். கண்ணீர் மல்க வேண்டுபவராக இருந்தார். தம்முடனேயே வந்துவிடுமாறு ராயரை அழைப்பவராக இருந்தார் தாசர். ஸ்ரீராயரின் பிருந்தாவனத்திற்கு எதிராக நின்று அவரது கருணைப் பார்வைக்காக வேண்டினார் தாசர். அவரது பாடல்களின் பொருள் நம் இதயத்தைத் தொடுமாறு இருக்கின்றன. 'ராய பாரோ தந்தெ தாயி பாரோ நம்மனு காயிபாரோ, மாயிகள் மதிஸித ராகவேந்திர ராயபாரோ' என்று மனமுருகி பாடிய பாடலில் தாசரது பக்திபாவம் மிக அற்புதமாக வெளிப்படுகிறது.

பக்தியுடன் வணங்குபவர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் கல்பதரு என்றும், ஸ்ரீமதாசார்யரின் சர்வமூல கிரந்தங்களின் சாரத்தைப் பிழிந்து தமது கிரந்தங்களை இயற்றிய 'சூரிகளரஸ' என்றும் ராயரை வணங்கி, தம்மை காப்பாற்றவும் என்று வேண்டுகிறார்.

5. 'பூதள நாதன பீதிய பிடிஸிதெ' என்று - அன்று தஞ்சாவூருக்கு மிகப் பெரிய பஞ்சம் வந்தபோது, மழை பொழியவைத்து அந்த மக்களை காப்பாற்றினாயே? மற்றொருமுறை விஜயராகவ நாயக்கனின் வேண்டு கோளுக்கிணங்க அவன் அரண்மனை கஜானாவிற்கு ஸ்ரீசூக்தம் சொல்லி ஆசிர்வதித்து, பிறகு அவனுக்கு தங்களின் மந்திர சக்தி யினால் அருளிய மகான் நீயல்லவா? பிறகு கணவனின் பிரிவால் துயருற்று, கிணற்றில் விழுந்து தற்கொலை செய்த சரஸ்வதியின் ஆத்மாவைக் கடைத்தேற்றிய கருணைக்கடல் நீயல்லவா' என்று பாடியிருக்கிறார். 'பாரோ ராகவேந்திர பாரோ' என்னும் பாடலில் ஸ்ரீராகவேந்திரரின் மூன்று அவதாரங்களைக் குறித்து பாடுகிறார்.

முதல் அவதாரத்தில் ஹிரண்யகசிபுவின் மகனாக பிரகலாதனாகப் பிறந்து, இரண்டாம் அவதாரத்தில் வியாசராஜராக இருந்தபோது, கிருஷ்ணதேவராயருக்கு வந்த குஹூயோகத்தைப் போக்கி அவனைக் காப்பாற்றினாய். மூன்றாம் அவதாரத்தில், ஸ்ரீசுதீந்திரரின் சிஷ்யராக, அவரிடமிருந்து சன்யாசத்தைப் பெற்று, பக்தர்களின் விருப்பங்களை நிறைவேற்றும் கருணைக்கடலாக இருக்கும் தாங்கள் என்னையும் காப்பாற்றவேண்டும் என்று வேண்டுகிறார்.

ராயர் துங்கபத்ரா நதிக்கரையில் வசிப்பதால் துங்கபத்ராவைப் பற்றி தாசர் பாடும் பாடல்கள் உள்ளன. வராஹதேவரின் மகள் என்பதால் எப்படி வாராஹி என்று அழைக்கிறோமோ அது போல 'பூலலனாதவ கோலனந்தனா' அதாவது பூதேவியை வராகர் தனது கொம்பின் மேல் தாங்கியிருக்கும் மகள் என்கிறார். இன்னொரு இடத்தில் 'குதர தேவன திவ்யரதனதி ஜனிசித' அதாவது பூதேவியைத் தாங்கி யிருக்கும் வராக தேவனின் கொம்பிலிருந்து பிறந்த துங்கா, பத்ரா இவ்விரண்டு ஆறுகளும் சேர்ந்து துங்கபத்ரா என்று அழைக்கப்பட்டன என்று விதம்விதமாக வர்ணிக்கிறார். அத்தகைய 'துங்கபத்ரா சுரதரங்கிணி' கரையில் மந்திராலயத்தில் இருக்கும் உன் பாதம் வணங்கி உன்னை நான் அர்ச்சிக்கிறேன் என்கிறார்.

மத்வமதத்தை மறுபடி நிலைநாட்டிய ஸ்ரீராகவேந்திரர் அந்த மதத்து சித்தாந்தங்கள் என்னும் தாமரையை பூக்க வைக்க வந்த சூரியன் என்று அழைக்கப்படுகிறார். ஸ்ரீமதாசாரியரின் மதத்தை காப்பாற்ற வந்த சந்திரிகா என்றும் வர்ணிக்கப்படுகிறார் ராயர்.

'ராகவேந்திர யதிசார்வபௌம துரிதாகதூரதே நமோ நமோ' என்னும் பாடலில் 'மாகதரிபுமத சாகரமேன' என்று ராயரை தாசர் அழைக்கிறார். இங்கு மாகத என்றால் ஜராசந்தனைக் கொன்ற பீமசேனன் அவரே மூன்றாவது அவதாரத்தில் ஸ்ரீமதாசார்யர். அவரது 'மத சாகரதலி' என்றால், மத்வ மத சித்தாந்த தத்வங்களை பரப்பும் நோக்கில் எப்போதும் மூழ்கியிருக்கும் மீன் என்றால் அதிலேயே நிலைத்திருப்பவர் என்றும் பாடுகிறார். இப்படியாக இந்தப் பாடலின் கருத்துக்கள் மிகவும் அற்புதமான பொருள் பொதிந்தவை.

ஸ்ரீராகவேந்திரரின் கருணையை ஸ்ரீஜகன்னாததாசர் தமது பற்பல பாடல்களில் மனமுருகிப் பாடியிருக்கிறார். 'கருணிகளொள கெணெ காணெ நா நினகொந்து, திங்கள கருணாபாங்க' என்று மேலும் 'சாஷ் வத கருணாசக்தி' 'சுலலித கருணாம்புதி' 'கருணா பயோநிதி' 'கருணா ந்தரங்க' என்றெல்லாம் வர்ணித்து ' நின்னந்த கருணில்லா, என்னந்த க்ருபணில்லா, காகு ஜனரொளின்னா நூகிபிட்டு நீனு, யாகே மூகனாத்யோ' என்று அரற்றியவாறு 'ஷரண மந்தார கருணவ பேரி பவவனதி' என்று வேண்டுகிறார்.

ஸ்மரிஸி பேடுவனே நா ஹே குருசார்வபௌம
நிருத நீ பொரெ என்ன வாதி கஜசிம்ஹ |ப|.

ஸ்ரீராகவேந்திரர், கஜ-யானை போன்ற பெரிய பண்டிதர்களையெல்லாம் சிம்ஹத்தைப் போல எதிர்த்து ஜெயித்தவர் என்று போற்றுகிறார். ஸ்ரீராகவேந்திரரின் மூன்று அவதாரங்களைப் பற்றியும் இந்தப் பாடலில் விளக்கியிருக்கிறார் ஜகன்னாததாசர்.

**முதலாம் அவதாரம்:**

பிரகாலத ராஜன். திதிசுதகெ சுதனெனிஸி = திதி தேவியின் மகனான ஹிரண்யகசிபுவின் மகன். சுரமுனிய மத ஹிடிது = தேவரிஷி நாரதரின் உபதேசத்தின்படி ஸ்ரீஹரியின் மகிமையை, தைத்யனான

தன் தந்தைக்கு தெரிவித்தபோது, அந்த தந்தை மிகுந்த கோபத்துடன், உன் ஹரியைக் காட்டு என்று தூணை உதைத்தான். அனைத்து இடங்களிலும் வியாப்தனான ஸ்ரீஹரி அந்தத் தூணிலும் இருக்கிறான் என்று திடமாக நம்பிய பிரகலாதனின் நம்பிக்கையைக் காப்பாற்றும் விதமாக, ஸ்ரீஹரி அந்தத் தூணிலிருந்தே வெளிப்பட்டான். ஹிரண்ய கசிபுவினையும் கொன்றான். இந்தக் கதையை நினைத்தவாறு, அத்தகைய பிரகலாதன் நீங்கள்தான் என்றவாறு பாடுகிறார் தாசர்.

**இரண்டாம் அவதாரம்:**

சிறுவயதிலேயே சன்யாசத்தை ஏற்று, ஸ்ரீகிருஷ்ணனை பூஜித்து வந்த ஸ்ரீவியாசராரஜைக் குறித்து, அவர் கிருஷ்ணதேவராயரின் ஆஸ்தான குருகளாக இருந்தபோது, அவர் கேட்டதையெல்லாம் கொடுப்பேன் என்ற அரசனின் குஹு ரோகத்தைப் போக்குவதற்காக, அந்த நேரத்தில் அவனது அரசாட்சியையே கேட்டுப் பெற்று, தன்னுடைய காவி மேலாடையை அந்த நோயின் மேல் வீசினார். அந்த ஆடையானது நெருப்பில் எரிந்து போனது. ஒரு அரசையே ஒரு மிகப்பெரிய பிரச்னையிலிருந்து காப்பாற்றினார் வியாசராஜர். தம்முடன் வாதத்திற்கு வந்த பற்பல பண்டிதர்களை வீழ்த்தி, வியாசத்ரயங்களில் ஒன்றான ‘சந்திரிகா’ கிரந்தத்தை இயற்றிய மகான் என்று மனமுருகி போற்றிப் பாடியிருக்கிறார்.

**மூன்றாம் அவதாரம்:**

ஸ்ரீராகவேந்திரர். இவரைப் பற்றியே பல்வேறு பாடல்களை இயற்றியிருக்கிறார் தாசர். ராயர், காமாரிரிபுனுத = காமனை எரித்த சிவனாலும் வணங்கப்படும் ஸ்ரீராமனின் பாதங்களை வணங்குபவர். தன்னை வணங்குபவர்களுக்கு இன்று வரை அவர்கள் கேட்கும் அனைத்தையும் வழங்கும் கல்பவிருக்ஷ காமதேனு ராகவேந்திரர். இவர் ‘மூக பதிராந்தத்வகள பொந்தி தொரெயொளு வியாகுலவ படுவவரனுத்தரிசுத, விருந்தாவனதொளு ஷாந்த மூர்த்திகளாகி நிந்த தொரெகளு’ என்கிறார்.

நாக பதினுத = இந்திரன் முதலானவர்களால் வணங்கப்படும் ஸ்ரீஹரி ஜகன்னாதவிட்டலனின் கருணை என்னும் தேனை கொடுப்பவர் - என்கிறார். மிகுந்த பக்தியினால் இயற்றப்பட்ட இந்தப் பாடல், தாசரின் மனநிலைக்கு சரியானதொரு உதாரணமாகும்.

28 - <u>ஹரிதாச விஜயம் -ஆகஸ்ட் 2020</u>

இப்படி ஸ்ரீஜகன்னாததாசர், ஸ்ரீராகவேந்திரரைக் குறித்து, ‘ரோகஹரனே க்ருபா சாகர ஸ்ரீகுரு ராகவேந்திர பரிபாலிஸோ’ என்ற சிறு பாடலைப் பாடியதுடன், ‘ராய பாரோ தந்தெ தாயி பாரோ நம்மன்னு காய பாரோ’, ‘ராகவேந்திர யதி சார்வபௌம துரி | தௌக தூரதே நமோ நமோ || ‘ என்னும் நீண்ட அழகான பாடல்களையும் இயற்றி,

அவற்றின் மூலம் ஸ்ரீராகவேந்திரரின் மூன்று அவதாரங்கள், சரித்திரம், மகிமை, கருணை ஆகியவற்றை மிகுந்த பக்தியுடன் பாடியிருக்கிறார்.

வந்தி3சுவே கு3ரு ராகவேந்த்ரார்யர |
விருந்தாவனதெ ப்1ரதி ப்1ரதி தி3னக3ளல்லி ||ப||

சுவிரோதி3 வத்1ஸரதி3 ஷ்ராவண பரத்3விதீ1ய
க1விார துங்கபத்ரா தீ1ரதா3
நத1 சுமந்த்ராலயதி தே3ஹவனு பிட்டு மா
த4வன புரவைதி3த3 மஹாத்மரிவரஹுதெ3ந்து ||1||

ஸ்வபதா3 வலம்பிக3ளிகு1பனிஷத் க1ண்டார்த்த1
உபதேசகை3து கா1ஷ்யப சுரரன |
சுபு1நீத1ரன மாடி அப1வர்க3 தா3சனொ
ளுபமரில்லெந்துருபிதுபகா1ரிக3ள க1ண்டு3 ||2||

தே3வதெ1க3ளிவரு சந்தே3ஹ பட3சல்ல விருந்தா
வனவ ரசிஸி பூஜிப ப4க்தர
சேவே கைகொண்டவர மனோரத1வ சலி
சுவரு ஜகன்னாதவிட்டலகெ ப்ரியரெந்து ||3||

நன்றியுடன் நினைத்துப் பார்த்து, மிகுந்த பக்தி கொண்டு வணங்கி தன்யராகியிருக்கிறார் ஜகன்னாததாசர். அத்தகைய ஜகன்னாததாசருக்கும், அவர் வணங்கும் கலியுக கல்பதரு என்று அழைக்கப்படும் ஸ்ரீராகவேந்திரருக்கும் பலப்பல வணக்கங்கள்.

***

தொடர்

## பலவிது பாள்துதக்கெ-ஸ்ரீஜகன்னாத்தாசர்

**கன்னட உரை: திரு.தாவண்கெரெ பீமராவ்**

**பா1த்1ரர ஸங்க3ட3 யாத்1ரெய சரிஸுத1**
**விதா4த்1ருபி1த1ன கு3ணஸ்தோ1மகள |**
**ஸ்ரோத்ரதி3 ஸவிது விசித்1ரானந்த3தி3**
**கா3த்1ரவ மரெது3 ப1ரத்1ரவ ப1டெவுதே3 |8|**

பாத்ரர சங்கட = விஷ்ணு பக்தர்களுடன், யாத்ரெய = தீர்த்த யாத்திரைகளை, சரிஸி = செய்து, விதாத்ருபிதன = பிரம்மனின் தந்தையான ஸ்ரீஹரியின், குணஸ்தோமகள = அவரது நற்குணங்களை, ஸ்ரோத்ரதி சவிது = கேட்டு மகிழ்ந்து, விசித்ரானந்ததி = எல்லையற்ற மகிழ்ச்சியுடன், காத்ரவ மரெது = மெய்மறந்து, பரத்ரவ படெவுதே = சத்கதியை (அல்லது அதிக சாதனை செய்வதற்கான தேகத்தை) பெறுவதே, (இந்த வாழ்க்கையை பெற்றதற்கான உண்மையான அர்த்தம் ஆகும்).

பாத்ரர் என்றால் விஷ்ணு பக்தர்கள். அவர்களுடனான பழக்க வழக்கங்கள், புகழைத் தரும். விஷ்ணு பக்தர்களே சஜ்ஜனர்கள், சாதுகள், சத்புருஷர். மகாத்மர். அவர்களுடன் இருப்பது, அவர்களுக்கு சேவை செய்வது, நம் காதுகளுக்கு மகிழ்ச்சியைத் தரும். ஸ்ரீஹரியின் திவ்ய சரித்திரத்தை நம் காதுகள் எப்போதும் கேட்டுக் கொண்டிருக்கும். அதனால், அபரோக்ஷ ஞானம் கிடைப்பதற்கான வழியான பக்தி உருவாக / வளர வாய்ப்பு உள்ளது.

**ஹம்ஸமொத3லு ஹதினெண்டு ரூப1க3ள**
**சம்ஸ்தா1னவ தி1ளித3னுதி3னதி3**
**சம்ஸேவிஸுவ மஹாபுருஷர ப1த3**
**பா1ம்ஸுவ த4ரிஸி அசம்ஷயனப்பு1தே3 |9|**

ஹம்ஸமொதலு ஹதினெண்டு ரூபகள = ஹம்ஸவில் தொடங்கி 18 ரூபங்கள் வரை, சம்ஸ்தானவ = அவர்களின் நிலையை அறிந்து, அனுதினதி = தினமும், சம்ஸேவிஸுவ = பக்தியுடன் பூஜிக்கும், மகாபுருஷர = சிறந்த ஹரிபக்தரின், பத பாம்ஸுவ = அவர்களின் பாத தூளியை, தரிஸி = தேகத்தில் (தலையில்) தரித்து, அஸம்ஷயனாஹுதே = சந்தேகங்கள் அற்ற, உண்மையான ஞானம்

உள்ளவனாக ஆவதே (இந்தப் பிறவி எடுத்ததற்கான உண்மையான அர்த்தம் ஆகும்).

ஹம்ஸத்திலிருந்து 18 ரூபங்கள் என்றால், அந்த வரிசையில் ஹம்ஸத்தையும் சேர்த்து 19 ரூபங்கள் என்று எண்ணவேண்டும். ஒவ்வொரு ஜீவியும், ஸ்வரூப, லிங்க, அனிருத்த, ஸ்தூல என்னும் நான்கு தேகங்களை கொண்டவர்கள். இந்த நான்கு தேகங்களில் ஒவ்வொன்றிலும், 19 பகவத் ரூபங்களையும், அவர்களின் செயல்களையும் சிந்திக்கும் ஞானிகள், நிஜமான மகாபுருஷர்களே ஆவர்.

இந்த நான்கு தேகங்களிலும், ஒவ்வொன்றிலும், ஞானேந்திரியங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5, தன்மாத்ரங்கள் 5, அவ்யக்த தத்வ, மஹத் தத்வ, மனஸ், அஹங்கார தத்வங்கள் 4 என மொத்தம் 19 தத்வங்கள் உள்ளன. இவற்றின் நியாமக ரூபங்கள் இவ்வாறாக இருக்கின்றன. அனிருத்தன் (நாராயண, வாசுதேவ, சங்கர்ஷண, ப்ரத்யும்ன, அனிருத்த என்னும்) தன் ஐந்து ரூபங்களால் மேற்சொன்ன முதல் 15 தத்வங்களில் நிறைந்திருக்கிறான். அடுத்த 4 தத்வங்களில், அச்யுத, அனந்த, கோவிந்த மற்றும் ஹம்ஸ ரூபங்களில் ஸ்ரீஹரி இருக்கிறான்.

ஸ்வரூப தேகத்தில் விஸ்வ நாமகன், லிங்க தேகத்தில் ஹயக்ரீவர், அனிருத்த தேகத்தில் அனிருத்தன், ஸ்தூல தேகத்தில் மூலேஷன் (நாராயண அல்லது பத்பனாப) இருக்கிறார். இந்த அனைத்து ரூபங்களும் அனிருத்தனிடமிருந்து அபின்னமானவை.

ஜீவலிங்கனிருத்த ஸ்தூலக
ளேவரகளொளு விஷ்வதுரக
க்ரீவ மூலேஷாச்யுதத்ரய ஹம்ஸமூர்த்திகளு |
ஈ வித சது:ஸ்தானதலி ஷான்
தீவரன ஈரெரடு ரூபதி
பாவிசுவரேகோனவிஷதி மூர்த்தி சர்வத்ர || (ஹரிகதாம்ருதசார)

**வரகா³யத்ரி நாமக¹ ஹரிகீ³ரெ**
**ரடங்க்ரிக³ள விவரவ தி¹ளிது³**
**த¹ருவாயதி³ ஷட்வித⁴ரூப¹வ சாத³னத³லி**
**அனுதின தி³யானிசுதி¹ப்புதே³ |10|**

வரகாயத்ரி நாமக ஹரிகே = சர்வோத்தமனான ஸ்ரீஹரியின் ஸ்வரூபத்தை பிரதிபலிக்கும் காயத்ரி மந்திரத்தின், ஈரெரடங்க்ரிய விவரவ = நான்கு பாதங்களின் விவரங்களை, திளிது = அறிந்து, தருவாயதி = பிறகு, ஷட்விதரூபவ = ஆறு விதங்களாக இருக்கும் காயத்ரி ரூபத்தை, அனுதின = தினமும், சாதரதலி = பக்தியுடன், த்யானிஸுதிப்புதெ = தியானித்திருப்பதே (ஜபித்திருப்பதே), இந்த பிறவி எடுத்ததன் சிறந்த பலன் ஆகும்.

நான்கு பாதங்கள் உள்ள காயத்ரி மந்திரம், ஆறு விதங்களாக இருக்கின்றன என்று சாந்தோக்ய உபநிஷத் சொல்கிறது. காயத்ரி மந்திரம் சந்த்யா காலங்களில் ஜபிக்கப்படுகிறது மற்றும் அஷ்டமகா மந்திரங்களில் ஒன்று என்று இரு வகைகள் சொல்லலாம்.

முதலாவதற்கு விஷ்வாமித்ர ரிஷிகள், வியாஹ்ருதியுடன் கூடியதாகும். இரண்டாவது, பிரஜாபதி ரிஷி, வியாஹ்ருதி இல்லாதது. இரு காயத்ரிகளுக்கும் தேவதை - சவித்ரு. சந்தஸ் - காயத்ரி.

முதலாவது - ஓம் பூர்புவஸ்வ: ஓம் தத்ஸ்விதுர்வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி தியோ யோ ந: பிரசோதயாத். இரண்டாவது - ஓம் ஓம் தத்ஸவிதுர்வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி தியோ யோ ந: பிரசோதயாத். அஷ்ட மகா மந்திரங்களில் ஒன்றாக இந்த இரண்டாம் வகையானது, மூன்று பாதங்களைக் கொண்டது, அகார, உகார, மகார, நாத, பிந்து, கோஷ, ஷாந்த, அதிஷாந்த என்னும் எட்டு எழுத்துகளைக் கொண்டது.

ஆறுவித காயத்ரி இதுவே: காயத்ரி, பூத, வாக், ப்ருதிவி, ஷரீர, ஹ்ருதய என்னும் ஆறு ரூபங்களால் நிலைத்திருப்பவனே காயத்ரி பிரதிபாத்யனான ஸ்ரீஹரி.

**பி$^3$கித$^3$ க$^1$ண்ட2தி$^3$ம் த்$^3$ருக்$^1$பா4ஷ்பக$^1$ளிம்**
**நகெ$^3$மொக$^3$தி$^3$ம் ரோமக$^3$ளொகெ$^3$து$^3$**
**மிகெ$^3$ ஸந்தோ$^1$ஷதி$^3$ம் நெகெ$^3$தா$^3$டுத$^1$**
**நான்மொக$^3$னய்யன கு$^3$ண பொ$^1$க$^3$ளி ஹிக்கு$^3$வுதே$^3$ ||11||**

பிகித கண்டதிம் = தழுதழுத்த குரலுடன், த்ருக்பாஷ்பகளிம் = கண்ணீர் நிரம்பிய கண்களுடன், நகெமொகதிம் = புன்னகைத்த முகத்துடன், ரோமகளுகிது = மயிர்கூச்செரியும்படி, மிகெ சந்தோஷதி = மிகவும் மகிழ்ச்சியுடன், நெகெதாடுத = ஆடியவாறு, நான்மொகனய்யன =

சதுர்முக பிரம்மனின் தந்தையை (ஸ்ரீஹரியை), பொகளி = புகழ்ந்து, ஹிக்குவுதே = மகிழ்வதே, இப்பிறவு எடுத்ததற்கான சிறந்த பலன் ஆகும்.

சிறந்த பகவத்பக்தர்களுடன் நெருக்கமாக இருப்பதே, நாம் செய்யக்கூடிய சாதனைகளின் முக்கிய குறிக்கோள். பகவத் பக்தர்களில், பக்வ பக்தர், பக்வ கல்பர் மற்றும் பக்வ பிரதிநிதிகள் (சாதகர்கள்) என்று மூன்று வகைகள் உண்டு. பக்வ பக்தர்களின் லட்சணங்களை இந்த நுடியில் விவரித்திருக்கிறார்.

பக்வகல்பர் என்றால் பக்குவத்திற்கு அருகில் இருப்பவர் (இன்னும் அதை அடையாதவர்). அவர்களிடமும் சில நேரங்களில் மேற்கண்ட சுபாவங்கள் காணப்படலாம். ஆனால், இந்த லட்சணங்கள் இல்லாதவர்கள் (அதாவது அழுவது, சிரிப்பது, ஆடுவது போன்றவை செய்யாதவர்கள்), பக்தர்கள் இல்லை என்று மட்டும் சொல்லக்கூடாது.

வெட்கத்தை விட்டு, ஸ்ரீஹரி நாமகீர்த்தனையை சொல்லி, மகிழ்ச்சியுடன் நடனமாடும் மனோபாவமானது, சிறந்த பக்தியின் வெளிப்பாடு என்று சொல்லலாம்.

வாக்க3த்க3தா3 த்1ரவதே1 யஸ்ய சித்த1ம்
ருத3த்1யபீஷ்ணம் ஹஸதி1 க்1வசிச்ச |
விலஜ்ஜ உத்கா3யதி1 ந்ருத்1யதே1 ச
மத்3ப3க்த்யுக்தோ1 பு4வனம் பு1னாதி1 ||

பாகவதத்தின் இந்த ஸ்லோகத்தின் சாராம்சமே, இந்த நுடியிலும் விளக்கப்பட்டுள்ளது.

**க்3ருஹக1ர்மவ பே3ஸரத3லெ ப1ரமோத்**
**ஸஹத3லி மாடுத1 மூர்ஜக3த3**
**மஹித1ன ஸேவேயிதெ3யெனுத1லி மோத3தி3**
**அஹரஹர்மனதி3 சமர்ப்பிசுதி1ப்புதே3 |12|**

க்ருஹகர்மவ = கிருஹஸ்த தர்மங்களை (தன்னை சார்ந்தவர்களை பாதுகாப்பதற்காக செய்யப்படும் செயல்களை), பேஸரதலெ = சோர்வடையாமல், பரமோத்ஸஹதலி = மிகவும் உற்சாகத்துடன், மாடுத = செய்யும், மூர்ஜகத மஹிதன = அனைத்து உலகங்களிலும்

பூஜிக்கப்படும் ஸ்ரீஹரி, சேவெ இது எனுதலி = (அந்த அனைத்து செயல்களும்) சேவை என்னும் பாவத்துடன், மோததி = மகிழ்வுடன், அஹரஹ: = தினமும், மனதி = (தன்) மனதில், சமர்ப்பிசுதிப்புதெ = (ஸ்ரீஹரிக்கு) சமர்ப்பிப்பதே, இந்த வாழ்க்கையின் முக்கிய பலனாகும்.

கிருஹஸ்த தர்மங்களை உற்சாகத்துடன் செய்து அவற்றை ஸ்ரீஹரிக்கு அர்ப்பிக்க வேண்டும் என்பது அனைத்து ஆசிரமங்களுக்கும் பொருந்தும் என்று அறிய வேண்டும். 'ஓம் விஹிதத்வாச்சாஸ்ரம கர்மாபி ஓம்' என்னும் பிரம்ம சூத்திரத்தில், அபரோக்ஷ ஞானியும்கூட தனக்கு விதிக்கப்பட்ட செயல்களை தவறாமல் செய்யவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

மூன்று உலகங்களையும் காப்பாற்றும் வல்லமையுடைய த்ரிகால ஞானியும்கூட, ஸ்ருதி ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்ட கடமைகளை / செயல்களை செய்யாமல் விடக்கூடாது என்று ஹரிவம்சம் சொல்கிறது.

கா1யேன வாசா மனஸேந்த்3ரியைர்வா
புத்3யாத்1மனா வா ப்1ரக்1ருதே1: ஸ்வபா4வாத்1 |
க1ரோமி யத்3யத்3 ஸக1லம் பரஸ்மை
நாராயணாயேதி1 ஸமர்ப்பயாமி ||(பாகவதம் 11-2-38)

தகுதி / ஆசிரமத்திற்கேற்ப, 'ஸ்வபாவ' என்று அழைக்கப்படும் ஸ்ரீஹரியின் விருப்பத்திற்கேற்ப (செயல்களை ஸ்ரீஹரியே தீர்மானித்து, ஜீவர்கள் மூலமாக செய்விக்கிறான் என்ற அனுசந்தானத்துடன்), மனோ-வாக்-காயங்களினால் செய்யப்படும் செயல்களை, நாராயணனுக்கு அர்ப்பிக்க வேண்டும். அதன் பலன்களை எதிர்பார்க்கக்கூடாது. சமர்ப்பணையின் லட்சணம் இப்படியாக சொல்லப்பட்டிருக்கிறது. ***

ஹரிதாச விஜயம் அனுப்புதல் மற்றும் புதிய புத்தகங்கள் குறித்தான தகவல்களுக்கு ஒரு புதிய வாட்சப் க்ரூப் தொடங்கப் பட்டுள்ளது. வேண்டுமெனில் சேர்ந்து கொள்ளலாம். 89044 58276 எண்ணில் தொடர்பு கொள்ளவும். Admin only. No spam.

**6ம் பக்கத்திலிருந்து தொடர்கிறது...

தாசப்பனுக்கு காலாகாலத்தில் நடக்கவேண்டிய சௌல, உபநயனாதி சம்ஸ்காரங்கள் மிகவும் விமரிசையுடன் நடைபெற்றன. அதற்கேற்ப அவனுக்கு தக்க கல்வியும் வழங்கப்பட்டது. வேண்டிய அளவிற்கு செல்வம் இருந்ததால், அவனுக்கு எவ்வித பிரச்னைகளோ குறை களோ இருந்ததேயில்லை. ஆகையால் சிறு வயதில் தாசப்பா தன் இஷ்டத்திற்கேற்பவே வளர்ந்தான். பின்னர் அவன் வழி தவறி நடப்ப தற்கும் இத்தகைய வளர்ச்சியே காரணமானது.

வீட்டில் ஆன்மீக, தார்மீக சூழல் இருந்தாலும், அவனில் ஆன்மீக புத்தி வளரவில்லை. தெய்வ பக்தி வரவில்லை. வினய மரியாதை முதலான சத்குணங்கள் அவனில் குடிகொள்ளவில்லை. 'தாஸ' என்பது பெயரில் மட்டுமே இருந்தது. தறிகெட்டும், தன் இஷ்டப்படியும் கொண்டு வளர்ந்த தாசப்ப, ஊரில் கெட்ட பெயரை வாங்கினான். இதனால் 'பந்துத மரெதா' என்று தாசர் சொன்னதைப் போல, தான் எதற்காக வந்திருக்கிறோம் என்பதையே தாசப்ப மறந்தான்.

இவனுக்கு ஒரு திருமணம் நடந்தால், பொறுப்பு வருமோ என்று நினைத்து, அவனின் பெற்றோர்கள் தாசப்பனுக்கு, ஒரு தக்க பெண்ணை கண்டுபிடித்து, திருமணம் செய்து வைத்தனர். தாசப்பனின் மறுபாதியாக வந்த அந்த சாத்வி பெண்ணின் பெயர் குண்டம்மா (அல்லது நரசம்மா). குண்டம்மா, தன் கணவனையே தெய்வம் என்று கருதி மரியாதை செலுத்தி, பக்தி கொண்ட மஹிமள். பின்னர் தாசப்பா மாற்றம் அடைவதற்கு இந்த சாத்வியே காரணமாக இருக்கப் போகிறாள் என்பதை அறிந்தால், அவளது நற்குணங்களை நாம் ஊகிக்க முடியும்.

**** கன்னடத்தில்: ஸ்ரீதிருமலேஷஹரி விட்டலதாசர்,பெங்களூரு.**

மாதாந்திர கேள்வி-பதில் விடைகளை & ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்து போட்டிகளின் விடைகளை 8904458276 எண்ணிற்கு வாட்சப்பிலோ அல்லது haridasa.vijayam@gmail.com ஐடிக்கோ மெயிலிலோ அனுப்பலாம்.

போட்டி

## மாதாந்திர குறும்போட்டி

**ஆகஸ்ட் 2020**

1. ராகவேந்திர விஜயத்தை இயற்றியவர் யார்?
2. ஸ்ரீராயரின் பிறந்த நாள் எது? (மாதம்-பட்சம்-திதி)
3. ஸ்ரீராயர் சன்யாச ஆசிரமம் ஏற்ற நாள்?
4. ஸ்ரீமன் நியாய சுதாவிற்கான ராயரின் டிப்பணி எது?
5. ராயருக்காக செய்த முதல் பிருந்தாவனத்தில் தற்போது பிருந்தாவனஸ்தர் ஆகியிருப்பவர் யார்?
6. ராகவேந்திர ஸ்தோத்திரத்தில் ராயர் கூறிய சொற்கள் என்ன?
7. ராயர் பிறந்த இடம்?
8. ராயரின் ஆசிரம குரு யார்?
9. ராயரின் ஆசிரம சிஷ்யர் யார்?
10. மாஞ்சாலவில் முன்னர் யாகம் செய்தவர் யார்?

* தயவு செய்து அனைவரும் இதில் பங்கேற்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.
* இருவருக்கு புத்தகப் பரிசு கிடைக்கும்.
* ஆகஸ்ட் 20க்குள் உங்கள் விடைகளை அனுப்பவும்.

*****

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்

Haridasa Vijayam - Monthly

மலர் 1 ** செப்டம்பர் 2020 ** இதழ் 11



ஸ்ரீ ஜகன்னாத தாசர்

# ஹரிதாச விஜயம்

## சந்தா விவரம் (36 பக்கங்கள்)

1 ஆண்டுக்கு ரூ.200/- 3 ஆண்டுகளுக்கு ரூ.500/-
5 ஆண்டுகளுக்கு ரூ.900/- 10 ஆண்டுகளுக்கு ரூ.1700/-

புதிய சந்தாக்கள் அந்தந்த மாதத்திலிருந்து துவங்கும். பழைய இதழ்கள் வேண்டுமெனில், இதழுக்கு ரூ.20/- என சேர்த்து அனுப்பவும்.

## வங்கி விபரம்:

Sathya Narayanan, ICICI Bank - Savings account
A/c. No. 000101043177. IFSC: ICIC0000001
Cenotaph Road Branch, Chennai 18

போட்டி

மாதாந்திர குறும்போட்டி
ஆகஸ்ட் 2020ன் விடைகள்

1. லட்சுமி நாராயணாசார்யர் 2. பால்குண சுத்த சப்தமி
3. பால்குண சுத்த த்விதியை 4. பரிமள 5. ஸ்ரீவாதீந்திர தீர்த்தர்
6. சாக்ஷி ஹயாஸ்தோத்ரஹி 7. புவனகிரி 8. ஸ்ரீசுதீந்திர தீர்த்தர் 9. ஸ்ரீயோகீந்திர தீர்த்தர் 10. ஸ்ரீபிரகலாத ராஜர்

* இந்த இதழுக்கான புத்தகப்பரிசு பெறுபவர்கள்:
* திரு. நாராயணன், பெங்களூரு.
* திரு. வாசுதேவபிரபு, சென்னை

வங்கிக் கணக்கில் சந்தா செலுத்தினால் , மறக்காமல் உங்கள் முகவரியை 89044 58276 எண்ணுக்கு வாட்சப் / SMS அல்லது haridasa.vijayam@gmail.comக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா



நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# “ஹரிதாச விஜயம்”

சிரி நிலயன குணகள ‘**திளிது**’ பஜிசுவுதே

மலர் : 1 இதழ் : 11


## நிர்வாக ஆசிரியர்

‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross,
JP Nagar 4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276. haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

## துணை ஆசிரியர்

’தாச சாகித்ய சேவா ரத்ன’
திரு. குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்

## ஆசிரியர் குழு உறுப்பினர்கள்

திரு. முரளிதர தாசரு, திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா, திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

# ஆசிரியர் பக்கம்

ஹரிதாச சாகித்யத்தின் மிக முக்கிய ஹரிதாசர்கள் பலரின் புண்ய தினங்கள் இந்த பாத்ரபத & ஆஸ்வீஜ மாதங்களில் வந்திருக்கிறது.

**ஸ்ரீஜகன்னாததாசர்**: இந்த இதழில் பல கட்டுரைகள் இவரைப் பற்றியதே ஆகும். சிந்தனை முத்துக்கள் , பலவிது பாள்துதக்கெ , ஹரிகதாம்ருதசார கட்டுரை & ஸ்லோக அர்த்தங்கள் மற்றும் ஸ்ரீத விட்டலரின் வாழ்க்கை சரிதத்திலும் இவரின் மகிமையையே நாம் காண்கிறோம்.

**ஸ்ரீபிரசன்னவேங்கட தாசர்:** இவரைப் பற்றிய ஒரு சிறு கட்டுரை வந்துள்ளது.

வழக்கமான தொடர்களால் பக்கங்கள் நிரம்பியதால் , பிற ஹரிதாசர் களைப் பற்றி எழுதமுடியவில்லை. அந்தந்த நாட்களில் அவர்களை சிறப்பாக நினைத்து ஹரிதாச சாகித்யத்திற்கு அவரவர்கள் ஆற்றிய பங்கினை நினைவு கூர்வோம். ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்**

ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்
## பாத்ரபத & ஆஸ்வீஜ மாதங்களில்

பாத்ரபத சுத்த பஞ்சமி : ஹஸிக்யாளு கோவிந்த தாசர்
பா. சுத்த அஷ்டமி : ஸ்ரீஷ பிராணேஷ விட்டல தாசர் (லிங்கசுகூர்)
பா. சுத்த நவமி: ஸ்ரீஜகன்னாத தாசர் (மானவி)
பா. சுத்த ஏகாதசி: ஸ்ரீபிரசன்னவெங்கட தாசர் (பாகல்கோடெ)
பா. சுத்த த்வாதசி : ஸ்ரீகமலேஷ விட்டல தாசர் (சுரபுர)
பா. சுத்த சதுர்தசி : ஸ்ரீபாகெபள்ளி சேஷதாசர்
ஆஸ்வீஜ சுத்த த்விதியை - ஸ்ரீஆனந்தவிட்டல தாசர், லிங்கசுகூர்
ஆஸ். சுத்த த்ருதியை - ஸ்ரீவரதேஷ விட்டல தாசர், லிங்கசுகூர்
ஆஸ்வீஜ சுத்த சப்தமி - ஸ்ரீப்ராணேஷ தாசர், லிங்கசுகூர்
ஆஸ்வீஜ பகுள ப்ரதமை - ஸ்ரீகுருஜகன்னாத தாசர், கௌதளம்

தொடர்

## ஹரிதாசர்களின் வாழ்க்கை வரலாறு
## ஸ்ரீதவிட்டல தாசர்

ஆனால், தாசப்பனின் வாழ்க்கையை , நடவடிக்கைகளை திருமணம் சிறிதளவுகூட மாற்றவில்லை. அவரது செயல்கள் முன்பைவிட அதிக மாகியே இருந்து வந்தன. வினைப்பயனால் அதே கிராமத்தை சேர்ந்த இன்னொரு பெண்ணின் சகவாசத்தை அடைந்து அவளுடன் சேர்ந்து வாழவும் தொடங்கினார்.

இந்த கெட்ட நடவடிக்கைகளையெல்லாம் பார்க்ககூடாதென்று தாசப்பனின் தாய் தந்தையர் ஒருவருக்குப்பின் ஒன்றாக இவ்வுலகை நீத்தனர். அவர்கள் சென்றபிறகு, தாசப்பனை திருத்துபவர்கள், கண்டிப் பவர்கள் யாருமே இல்லை என்றானது. பெரும்பாலும் அந்த மற்றொரு பெண்ணின் சகவாசத்திலேயே இருந்து , தன் செல்வங்க ளை அவளுக்கே கொடுத்து , புகையிலை போன்ற கெட்ட பழக்கங்க ளையும் வளர்த்துக் கொண்டு, தன்னிலை மறந்து வாழ்ந்து வந்தார்.

நெல ஸதி தனதோளனவரத । ஹுளாகிருவியல்லோ ।
ஸ்தளா ஸ்தளரியதெ கலாப மாட்யக । கோளாருவுது ஸல்லோ ।
ஹலாபிடிது விதி குலாசரணெ பிடெ । பலா தெகெவரல்லோ ।
எலா கேளு ஒந்து திலா மாத்ர நீ । கெலாஹ பகெயில்லோ ப்ராணி ।

என்னும் பிராணேஷதாசரின் ‘ஆதத்தாயிது இன்னாதரு ஒள்ளே ஹாதி ஹிடியோ பிராணி ’ என்னும் கிருதியின் முதல் நுடி மேற்கண்ட விஷயத்தையே சொல்கிறது.

வழிதவறிய கணவனின் நடவடிக்கைகளைக் கண்டு துக்கப்பட்ட தாசப்பனின் மனைவி குண்டம்மா , சந்தர்ப்பம் கிடைத்தபோதெல்லாம் கணவனுக்கு பயபக்தியுடன் அறிவுரை கூற முற்பட்டாள். கணவன் இன்னொருவளின் வீட்டுக்குக் கிளம்பும் போதெல்லாம் , கண்ணீர் விட்டவாறு, தம் வீட்டிலேயே இருக்குமாறு வேண்டிக் கொண்டி ருந்தாள். ஆனால் , மயக்கத்தில் இருந்த தாசப்பனுக்கு மனைவியின் சொல் கேட்கவில்லை. அவளின் பேச்சை கேட்காமல் , அவளையே திட்டி, தண்டித்து, தன் துஷ்ட காரியங்களை மேலும் அதிகமாக செய்யத் துவங்கினார்.

**வீட்டுக்கு வந்த மகான்கள்**

தாசப்பனின் வினைப்பயன்கள் முடியும் சமயம் வந்தாற்போல தெரிகிறது. அண்ணனான பிரகலாதனின் ஆணைப்படியே என்று சொல்லுமாறு, சஹ்லாத அம்சரான ஸ்ரீஜகன்னாததாசர் , தன் சகோத ரனான அஹ்லாதனை மேம்படுத்துவதற்கு வரதா நதிக்கரையில் இருக்கும் கர்ஜிகி கிராமத்திற்கு தமது பயண கிரமத்தில் , தம் சிஷ்யரான ஸ்ரீபிராணேஷ தாசருடன் வந்து சேர்ந்தார்.

தாசப்பனை திருத்துவதற்கென்றே தீர்மானம் செய்துகொண்டு வந்திருந்த ஸ்ரீஜகன்னாததாசர் , அதனை வெளியே தெரிவிக்காமல் , ஊர் மக்களின் பிரார்த்தனையின்படி கர்ஜிகியிலேயே ஓரிரண்டு நாட்கள் தங்குவதற்கு நிச்சயித்தார். சூரிய , சந்திரர்களைப் போல இருந்த ஹரிதாச த்வயர்களை (இருவரை) வரவேற்ற கர்ஜிகி மக்கள் , அந்த கிராமத்திலேயே பெரியதான , சுத்தமான தண்ணீர் உள்ள கிணற்றையும், துளசி மற்றும் பூந்தோட்டத்தையும் கொண்ட , தாசப்பனின் வீட்டில் தங்க வைப்பதற்கு ஏற்பாடு ஆனது. அடுத்த நாள் மாலையில் அங்கேயே ஸ்ரீஜகன்னாததாசரின் பஜனை மற்றும் சொற்பொழிவு நிகழ்ச்சிகள் வைப்பதற்கு தீர்மானித்திருந்தனர்.

ஸ்ரீவிஜயதாசரின் பிர-சிஷ்யரும் , கோபாலதாசரின் சிஷ்யருமான மானவியின் ஸ்ரீஜகன்னாததாசர் அப்போதே வட கர்னாடகத்தில் அனைவராலும் அறியப்பட்டிருந்தார். ‘ஜகன்னாதவிட்டலா’ என்னும் அங்கிதத்தில் தாசர் , ஹரிதாச சாகித்ய மற்றும் சங்கீத க்ஷேத்தி ரத்தில் கீர்த்தனை , சுளாதி, உகாபோக மற்றும் சுவ்வாலி ஆகிய வற்றை இயற்றியிருந்தார். ஜகன்னாததாசரின் மேரு கிருதி என்றால் , அது ‘ஸ்ரீஹரிகதாம்ருதசார’. ஆன்மீகத்தின் சாரத்தையே அடக்கி யிருக்கும் ஆதாரங்களுடன் கூடிய இந்த அற்புத கிருதி , த்வைத சித்தாந்தத்தின் அகராதியாக , வித்வாம்ஸர்களின் கைவிளக்காக இருந்தது.

இந்த கிருதியில் இருக்கும் சரளமான நடை , சங்கதிகள் ஆகியவை , ஹரிகதாம்ருதசாரத்தை அனைவருக்கும் பிடித்தமானதாக ஆக்கியது. அது மட்டுமல்லாமல் , ஸ்ரீஜகன்னாததாசரைப் பற்றி மக்களிடம்

நன்மரியாதை வருவதற்கு அவரது அபூர்வமான வாழ்க்கை வரலாறும் காரணமாக இருந்தது.

இத்தகைய மஹானுபாவரான ஸ்ரீஜகன்னாததாசர் தம் ப்ரிய சிஷ்ய ரான ஸ்ரீபிராணேஷ தாசருடன் தம் வீட்டிற்கு வந்ததைக் கண்டு , பதி விரதையான குண்டம்மாவிற்கு மிகுந்த மகிழ்ச்சி உண்டானது. கல்ப வ்ருக்ஷ, காமதேனுவே தம் வீட்டிற்கு வந்ததைப் போல அவள் ஆனந்தமடைந்தாள். அந்த தாச த்வயர்களின் கருணை மற்றும் அருளிலாவது, கெட்ட நடவடிக்கைகளில் ஈடுபட்டிருக்கும் தன் கணவனான தாசப்ப , நல்வழியில் திரும்புவான் என்ற நம்பிக்கை அவளுக்கு வந்தது.

தன் வீட்டினைக் கழுவி , சுத்தம் செய்து , தோரணங்களால் அலங்கரித்து, ரங்கவல்லிகளை இட்டு , தாசர்களின் பூஜைக்கு அனைத்து பொருட்களையும் தயார் செய்து கொடுத்தாள் குண்டம்மா. அந்த வேறொரு பெண்ணின் வீட்டிலிருந்த தன் கணவன் , அதிர்ஷ்ட வசமாக அன்று வீட்டிற்கு வந்தது , பெரியவர்களுக்கு பாதபூஜை செய்து, அவர்களின் பூஜை சொற்பொழிவுகளைக் கேட்க அமர்கிறேன் என்று சொன்னது என இவை அனைத்தும் அவளது உற்சாகத்திற்கு காரணமாக இருந்தது.

ரங்க ஒலித தாசர் என்றெ பெயர் பெற்றிருந்த ஜகன்னாததாசரின் பூஜை நிகழ்ச்சி துவங்கியது. பிராணேஷ தாசர் மற்றும் தாசரின் மற்ற சிஷ்யர்கள் தங்களின் ஆன்ஹீகங்களை சீக்கிரத்தில் முடித்துக் கொண்டு குருகளின் பூஜைக்கு உதவி செய்தனர். மனைவியின் கட்டாயத்தின் பேரில் ஸ்னானம் செய்து , அதுவே முதல் முறையாக ஊர்த்வ புண்ட்ரங்களை தரித்து, தாசப்ப பூஜையைக் காண அமர்ந்தார்.

ஸ்ரீஜகன்னாததாசர் தம்மிடம் இருந்த விக்கிரகங்களை அழகான மண்டபத்தில் வைத்து, துளசி, புஷ்பங்களை வைத்து பூஜித்தார். பிறகு, நைவேத்திய, ஹஸ்தோதக, மங்களாரத்திகள் செய்யப்பட்டன. அங்கிருந்த அனைவருக்கும் தீர்த்தம் கொடுத்து , ஹரி நிர்மால்யத்தை வழங்கினார். அந்த தீர்த்தத்தை ப்ரோக்ஷணம் செய்து , குடித்ததாலேயே தாசப்பனின் அந்த:கரணம் சுத்தியாயிற்று. தாசரின் மற்றும் வித்வாம்சர்களின் தீர்த்தபிரசாதம் முடிந்தபிறகு , மற்ற அனைவரும் ஹரி நைவேத்தியங்களை உண்டு மகிழ்ந்தனர். ***

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## போஜன ரஸ விபாக சந்தி - விடைகள்

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| [1]வி | ரி | ஞ் | [26]சா | ண் | ட | | [2]அ | னி | மி | ஷ | ரு | | |
| ஸ | | | ரு | | [34]நீ | | [3]ஹ | ய | க் | ரீ | வ | | |
| த | | | க் | ர | | | | | | | [27]ஸா | | |
| | ண | ப | ரு | [22]க் | | | [4]அ | [28]ப் | ர | சு | ர | | |
| | ரா | | த | ஸ | | | க | ரு | | | கு | | |
| [5]ப | [35]ப் | பு | து | | | | ண் | ஹ | | | ட | ரோ | [23]க் |
| ம் | | [29]ப | | | | து | ட | தீ | | | | | |
| [6]அ | னி | ரு | த் | த | | பு | | | | [7]பி | தா | ம | ஹ |
| | | [8]ப் | ர | த் | யு | ம் | ன | | | த் | | | |
| | | பு | | | | [36]உ | | ண | ஷ | ரு | க | ங் | [24]ஸ |
| | | | [30]நே | கு | | | | ம | | | | | |
| | | ரு | த் | க் | [25]போ | | | [9]ர | க் | த | | | |
| | | | ர | [37]மூ | ஜ் | | | | | யு | | | |
| | [10]9 | 3 | | | ய | | | | | ச் | | | |
| | | [11]5 | [31]8 | 9 | 7 | 0 | [32]5 | | | [12]அ | ம் | ரு | த |
| | | [13]4 | 3 | 7 | 4 | | [14]1 | 0 | 1 | | | | |
| | | | 0 | | | | [15]3 | 0 | 5 | 2 | | | |
| | | | 9 | [33]5 | | | | | [16]2 | 9 | | | |
| | [17]5 | 6 | 2 | 1 | 0 | 7 | | | [38]8 | | | | |
| 5 | 1 | | | 2 | | | | [18]ஸூ | ஷ் | டு | போ | ஜ | ன |
| 3 | 0 | | [19]5 | 5 | 4 | 3 | | | | | | ஜ | |
| [20]5 | 1 | 1 | | | | | | | | | [21]ய | [39]ம | ன் |

தொடர்

## கேசவ நாமா

## காளி பந்த கையலி - ஸ்ரீபுரந்தரதாசர்

**ஒம்மெ நெனெயலு பு[4]க்தி[1] ஒம்மெ நெனெயலு முக்தி**
**ஒம்மன பூர்வக[1]திந்த வாமனன்னு நெனெயிரோ** ||8

புக்தி என்றால் சுகானுபவங்கள். முக்தி என்றால் மோட்சம் மற்றும் விடுதலை. உயிர் வாழ்வதற்கு புக்தி எவ்வளவு முக்கியமோ அவ்வ ளவே முக்கியம் சதுர்வித புருஷார்த்தங்களில் (சிறந்ததான) மோட்சம். அதனை பெறவேண்டுமெனில் பக்தியுடன் வாமனனை நினையுங்கள்.

**ஈ த[4]ரெ ரமணனெ நம்ம ஆதா[4]ர தொ[3]ரெயு பே[3]ரெ**
**ஆதா[4]ரவ கா[1]ணேனெந்து ஸ்ரீத[4]ரன்னு நெனெயிரோ** ||9

14 லோகங்களுக்கும் தலைவனான , உலகத்தை படைத்தவனான பகவந்தன் ஸ்ரீரமணன் , பூரமணன் மற்றும் துர்காரமணன். இந்த உலகத்தை ஆடையாக அணிந்திருக்கும் பகவந்தன் பூதேவியின் ரமணன். அவனே அனைத்து ஜீவர்களுக்கும் ஆதாரமே தவிர வேறு யாரும் இல்லை. அத்தகைய ஸ்ரீரமணனை நினையுங்கள்.

**கா[1]ஸிகெ[3] கை[1] சாசுவந்தெ ஆஷாபாஷவன்னு தொரெது[3]**
**காஷிவாஸவினுத ஹ்ருஷிகேஷனன்னு நெனெயிரோ** ||10

ஆசை - இதுவே மனிதனின் பொதுவான மற்றும் பலவீனமான குணம். துர்குணம் என்பது துர்ஜனர்களின் நட்பு, அது மிகவும் கெட்டது என்கின்றனர் தாசர்கள். ‘இஷ்டு தொரெதரெ மத்தஷ்டு பேகெம்பாசெ , அஷ்டு தொரெதரு மத்தஷ்டு ஆசெ , கஷ்ட பேடெம்பாசெ , கடுசுகவ காம்பாசெ, நஷ்ட ஜீவனதாசெ ’ (கேட்டது கிடைத்தால் , மேலும் அதிகம் வேண்டும் என்னும் ஆசை. கஷ்டம் வேண்டாம் என்னும் ஆசை. சுகம் அதிகம் வேண்டும் என்னும் ஆசை). இத்தகைய ஆசைகளை துறப்பதற்கு மனோ நியாமகனான காசி வாசனான ஹ்ருஷிகேசனை நினையுங்கள்.

**ஈ ப[4]வ திமிரக்கெ கோ[1]டி[1] விபா[4]வசு சங்காஷ**
**ஷோபனாகா[1]ர பத்பனாப[4]னன்னு நெனெயிரோ** ||11

இந்த சம்சார சாகரத்தை தாண்டுவதற்கு கோடி சூரியனைப் போல ஒளிரும் பத்பனாபனை நினையுங்கள்.

**ஈ துராசாரகி[3]ரி பி[3]துரவெந்தரிது சன்**
**மோத[3]தி[3]ந்த மனதி[3] தாமோத[3]ரன்னு நெனெயிரோ ||12**
கெட்ட வழியில் சென்றால் அழிவோம் என்று அறிந்து, மகிழ்ச்சியுடன் மனதில் தாமோதரனை நினையுங்கள்.

**புருஷனாகி ஹுட்டி நூரு வருஷ ப[3]துகி[1]துதகெ ப[2]லவ**
**ஹருஷதிந்த ப[1]டெயெ சங்கர்ஷணன நெனெயிரோ ||13**
100 ஆண்டு ஆயுளைப் பெற்ற மனிதனின் வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக ஆக்கவேண்டுமெனில் மகிழ்ச்சியுடன் சங்கர்ஷணனை நினைக்க வேண்டும்.

**இவனே சர்வ ஷரண்ய இவனே லோகைக மான்ய**
**தேவ தேவோத்தம வாசுதேவன்ன நெனெயிரோ ||14**
அனைவருமே ஸ்ரீஹரியை வணங்குபவர்களே. இவனே அனைவருக்கும் தலைவன். அனைத்து தேவதைகளையும்விட உத்தமோத்தமன். மோட்சத்தைக் கொடுப்பவனான வாசுதேவனை நினையுங்கள். (நம் இதயத்தில் இருக்கும் பஞ்சரூபங்களில் நான்காவது ரூபமான வாசுதேவனை நினையுங்கள்).

**வித்யெ பே[3]கு பு[3]த்தி[4] பே[3]கு சித்தி[4] பேகு[1] எம்புவரு**
**ப்ரத்யும்ன ப்ரத்யும்ன எந்து நெனெயிரோ ||15**
வித்யை, புத்தி, சித்தி இவை ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டவை. வித்யை என்றால் ஞானம். புத்தி என்றால் ஞானத்தை பயன்படுத்துவது. சித்தி என்றால் ஞானத்திலிருந்து கிடைக்கும் பலன். இந்த மூன்றும் கிடைக்கவேண்டுமெனில் இரு முறை பிரத்யும்னனை நினைக்க வேண்டும்.

**கத்து[3] ஹுஸியனாடி அபர பு[3]த்தியிந்த கெ[1]டலிபே[3]டி[3]**
**புத்தி[4]வந்தனாகி நீவு அனிருத்தன நெனெயிரோ ||16**
திருட்டு, பொய் பேசுவது போன்ற கெட்ட செயல்கள் வேண்டாம். அவற்றை விடுத்து இந்த பிறவியின் பயனைப் பெறுவதற்கு அனிருத்தனை நினையுங்கள் ||17

**நித்ய நேமவெம்போதில்ல மத்தெ தா[3]னத[4]ர்மவில்ல**
**வ்யர்த்த[2]வாகி கெடதெ புருஷோத்தமன நெனெயிரோ ||17**

அனைவரிலும் சிறந்தவனான புருஷோத்தமனை நினைப்பதற்கு , விதிகள் தேவையில்லை, தான தர்மங்கள் செய்ய வேண்டியதில்லை. இந்த மனிதப்பிறவி வீணாகாமல் இருப்பதற்கு புருஷோத்தமனை நினையுங்கள்.

**ரக்ஷெ யந்த்ர மந்த்ர தந்த்ராபேக்ஷெ பேட நிம்ம ஜன்ம**
**மோக்ஷவன்னு படெ[3]யலு அதோக்ஷஜன நெனெயிரோ ||18**

யந்திரம், மந்திரம், தந்திரம் இவற்றால் நமக்கு பாதுகாப்பு கிடைக்கும் என்று நம்ப வேண்டாம். யந்திரம் (மனது) , மந்த்ர (சொல் / வாக்கு) , தந்த்ர (செயல்) அதாவது மனசா , வாசா, காய மூலமாக அதோக்ஷஜனை எப்போதும் நினைத்தால் மோட்சத்தை அடைய முடியும்.

**பிரம்மனாகி நிர்மிஸி பரபிரம்மனாகி ரக்ஷிஸி**
**சம்ஹாரக்கெ ருத்ர நாரசிம்மன நெனெயிரோ ||19**

பிரம்ம என்றால் படைத்தல் ; பரபிரம்ம என்றால் காத்தல் ; ருத்ர என்றால் அழித்தல். பிரம்மனிடம் அந்தர்கதனாக பகவந்தன் இருந்து படைத்தல் தொழிலை செய்கிறான். ருத்ரரில் அந்தர்கதனாக பகவந்தன் இருந்து அழித்தல் தொழிலை செய்கிறான். பரபிரம்மனான ஸ்ரீஹரியே அனைத்தையும் செய்கிறான் என்பதால் அவனுடையதே ஆன நரசிம்ஹ ரூபத்தை நினையுங்கள்.

**முச்சுமரெய மந்த்ரவல்ல வெச்ச ஒந்து காசு இல்ல**
**நெச்சதெ சம்சார ஸ்ரீமதச்யுதன நெனெயிரோ ||20**

இந்த சம்சார சாகரத்தை தடையின்றி தாண்டுவதற்கு அச்யுதனை நினைப்பதற்கு, மந்திர கோஷங்கள் தேவையில்லை. காசும் செலவில்லை. எதையும் மூடி மறைக்கத் தேவையில்லை. ஆகவே அச்யுதனை நினையுங்கள்.

**காத்[3]ரவேய ஷயன க[1]ருணார்த்[3]ர ஹ்ருதயன நித்ய**
**ப[4]த்ரதா[3]யக[1] ஸ்ரீ ஜனார்த்தனன நெனெயிரோ ||21**

கத்ருவின் மகன் சேஷன். அவன் மேல் படுத்திருக்கும் ஸ்ரீரங்கசாயி கருணா சமுத்ரனாக இருக்கிறான். அனைவரின் இதயங்களிலும் வசித்திருக்கும் மங்கள ஸ்வரூபியான ஜனார்த்தனனை நினையுங்கள். அவனே நித்ய மற்றும் சத்ய.

**இந்திரியகளேகவாகி சந்திரிகெ தெ[1]ரதி[3] சுத்தி**
**தொந்த்ரெ தா[1]ரத[3] முன்ன உபேந்திரனன்ன நெனெயிரோ ||22**

சந்திரன் எப்படி பௌர்ணமி வரைக்கும் வளர்ந்து , அமாவாசை வரை தேய்ந்து, சுக்லபக்ஷம் மற்றும் கிருஷ்ண பக்ஷத்திற்கு காரணமாக இருக்கிறானோ, அப்படியே நம் உடலின் நோய் நொடிகள் நமது இந்திரியங்களால் வருகின்றன. இப்படி அனைத்து இந்திரியங்களும் நாசம் அடையும் முன்னர் உபேந்திரனை நினையுங்கள்.

**ஹரி ஹரியெனலு து[3]ரித[1] ஹரிது ஓடுவுது த்வரித**
**ஹிரிது ப[4]க்தியிந்த ஸ்ரீஹரியன்னு நெனெயிரோ ||23**

ஸ்ரீஹரியை நிரந்தரமாக நினைத்தால் நம் பாவங்கள் ஓடிப் போகின்றன. ஆகையால் , திடமான தூய்மையான பக்தியினால் ஸ்ரீஹரியை நினையுங்கள்.

**கிருஷ்ணன நாமவே கதி கிருஷ்ணன பாதவே கதி**
**கஷ்டவெல்ல நீகலு ஸ்ரீகிருஷ்ணனன்னு நெனெயிரோ ||24**

'நரஜென்ம பந்தாக நாலிகெ இருவாக கிருஷ்ணா எனபாரதே ' என்கிறார் தாசர். கிருஷ்ணனின் நாமம் , கிருஷ்ணனின் பாதம் இவ்விரண்டே நமக்கு கதி என்று சொல்லி , ஸ்ரீகிருஷ்ணனை நினையுங்கள்.

**பக்தி கொடுவ முக்தி கொடுவ மத்தெ சாயுஜ்ய கொடுவ**
**ஷக்த நம்ம புரந்தரவிட்டலன்ன நெனெயிரோ ||25**

பக்தி என்றால் செல்வம் ; முக்தி என்றால் மறுபிறவியிலிருந்து விடுதலை என்று பொருள். பக்தி , முக்தியைப் பெறுவதற்கு நிரந்தரமாக பகவந்தனின் ஸ்மரணை அவசியமானது. முக்தியில் சிறந்ததான சாயுஜ்ய பதவியைக் கொடுப்பதற்கு தகுதியானவன் பகவந்தன் மற்றும் அவனது கேசவாதி நாமங்கள். ஆகையால் , பிம்பனான புரந்தரவிட்டலனை நினையுங்கள் என்கிறார் ஸ்ரீபுரந்தரதாசர்.

**அடுத்த இதழில் அடுத்த பாடல் துவங்கும்.**

**** திருமதி. ஜெயம்மா, பெங்களூரு**

**ஹரிதாச விஜயத்தை & இதில் வரும் தகவல்கள், போட்டி களைப் பற்றி தயவு செய்து உங்கள் நண்பர் / உறவினர்களிடம் அறிமுகம் செய்யுமாறு கேட்டுக் கொள்கிறோம்.**




# .ஹரிதாசர்களின் சிந்தனை முத்துக்கள்

## ஸ்ரீபிரசன்னவெங்கட தாசர்

ஹரிதாச சாகித்ய உலகில் பிரசன்னவேங்கடதாசரின் பெயர் துருவ நட்சத்திரம் போல ஜொலிக்கிறது. தாச சதுஷ்டயருக்கு அடுத்ததான முக்கிய இடத்தைப் பிடித்து , சாகித்யத்திற்கு அனைத்து விதமான அலங்காரங்களையும் செய்த மகானுபாவர். திருப்பதி ஸ்ரீனிவாசன் இவரின் அத்யந்த பக்தியை மெச்சி அங்கிதத்தை வழங்கினான். பிறகு இவரது புனிதமான வாழ்க்கை , சஜ்ஜனர்களை மேம்படுத்தியது. பாகவதம் பத்தாம் ஸ்கந்தம் (முதல் பாதியின்) மொழிபெயர்ப்பு, நீண்ட க்ருதிகள், சுளாதி, உகாபோகம், கீர்த்தனைகள் இப்படி 700க்கும் மேற்பட்ட க்ருதிகளை இயற்றியிருக்கிறார்.

பாகவத க்ருதியில், பாகவதர்களைப் பற்றி தாசர் கூறுவதாவது:
ஸ்ரோதவ்யவு இதெ மந்தவ்யவு இதெ த்யாதவ்யவு நமகெ |
பூதவு ஹரிகுணகாதெயு முகுதிய பாதேயவு நமகெ ||

நவவித பக்தியைப் பற்றிய ஒரு உகாபோகத்தில் இவ்வாறு கூறுகிறார். 'ஹரிய ஒம்பத்து பக்தி பல்ல தீரா , மரளி சம்ஸ்க்ருதியல்லி ஹுட்டி பாரா'.

ஹரிகதா ஸ்ரவணவு ஹரிநாம கீர்த்தனெ
ஹரிய ஸ்மரணெ ஹரிய பாதசேவனெ
ஹரிபூஜெ வந்தன தாஸ்ய சகத்வ
ஹரிகாத்மார்பணெ முகுதிபத தத்வ
ப்ரசன்னவேங்கட பரபொம்ம சித்த
குருமத்வமத ஸ்ருதிஸ்ம்ருதியொள் பிரசித்த ||

தாசரின் கிருதிகளில், தேவ-குரு ஸ்தோத்திரங்கள், தத்வ விசாரங்கள், சமூக நீதி , ஆத்ம சமர்ப்பணம் , சாம்பிரதாயமான கீர்த்தனைகள் பலவகைகளாக உள்ளன. 'பிடேனோ நின்னங்க்ரி ஸ்ரீனிவாசா ' இந்தப் பாடலை பாடாத பஜனா மண்டலி இல்லை. இவரின் கிருதிகள் காவிய மயமாக , தத்வங்களால் நிரம்பி இருப்பது விசேஷம். வாழ்க்கையில் ஸ்ரீஹரியின் கருணையால் பல்வேறு அற்புதங்களை நிகழ்த்தி, இறுதியில் பாதாமியில் ஆண்டு 1752 பாத்ரபத சுத்த

ஏகாதசியன்று இறைவனடி சேர்ந்தார். மேலும் அவரது கிருதிகளில் சில:

சத்சங்கவிடிது சர்வோத்தமனெ கதியெந்து
நிச்செ அர்ச்சிஸூ கட மனுஜ ।
நாகஷயனன நாம கூகுவுதெ மஹயோக ।
ஞானியாகபேகு அஞ்ஞான நீகபேகு தத்வ
ஞானதிந்திரபேகு முக்தி தானே ஆவாக்கு ॥

** **திரு. ஏ.பி. ஷாமாச்சார், பெங்களூரு**

**Subscription Renewal**

ஹரிவாயுகுருகளின் ப்ரேரணையால் , அவர்களாலேயே நடத்தப் படும் நமது ஹரிதாச விஜயம் பத்திரிக்கையின் 11வது இதழ் இது. இதற்கு ஆதரவு அளித்து தொடர்ந்து படித்து , நிறை குறைகளை அழைத்து / மெயில் / வாட்சப்பில் சொல்லும் அனைத்து ஹரி பக்தர்களுக்கும் மிக்க நன்றிகள்.

பத்திரிக்கை துவக்கும் முன் & துவங்கிய மாதத்தில் ஓராண்டுக்கு சந்தா கட்டியவர்களுக்கு அதை புதுப்பிக்கும் நேரம் நெருங்கி வருவதால் ஒரு சிறிய நினைவூட்டல். உங்கள் சந்தா முடியும் மாதத்தை உங்களுக்கு அனுப்பிய Receiptல், அல்லது இந்த மாத 'To address' labelல் முதல் வரியில் பார்க்கலாம்.

கூடுதலாக சில பக்கங்களை சேர்க்க வேண்டும் , மேலும் பல அரிய தகவல்களைக் கொடுக்க வேண்டும் என்று நினைக்கிறோம். அதற்கு உங்கள் அனைவரின் ஆதரவு இருந்தால் மட்டுமே சாத்தியம் என்பதால் , உடனடியாக உங்கள் சந்தாவை புதுப்பிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம். நன்றி.

போஜன ரச விபாக சந்தி குறுக்கெழுத்துப் போட்டிக்கு விடை எழுதி புத்தகப் பரிசு பெறுபவர்கள்: 1.திருமதி. பானுமதி, திருநெல்வேலி 2.திரு. பத்மனாபன், திருநெல்வேலி 3. திருமதி. ப்ரேமா குருராஜன், பொள்ளாச்சி.

ஆராதனை



## .ஹரிதாசர்களின் சிந்தனை முத்துக்கள்

## ஸ்ரீஜகன்னாத தாசர்

ஜலஜேஷ்ட நிபாகாரம் ஜகதீஷ பதாஸ்ரயம் ।
ஜகதீதல விக்யாதம் ஜகன்னாத குரும்பஜே ॥

'திளியனு எந்தெந்திகன்ய ரங்க ஒலித தாசரு ஜகன்மான்ய ' என்று பிராணேசதாசர் புகழ்ந்தால், ஸ்ரீதவிட்டலர் இவரை 'சங்கசுகத பயஸி பதுகிரோ ரங்க ஒலித பாகவதர ' என்று கொண்டாடினார். தாச சதுஷ்டயரில் ஒருவரான ஜகன்னாததாசரின் வாழ்க்கைச் சரிதம் மற்றும் கிருதிகளைப் பற்றி அறிவதென்றால் அதுவே நம் பாக்கியம். அவற்றைப் படித்தால் அதுவே மோட்சத்திற்கான வழி.

ஸ்ரீதவிட்டலர்: நம்ம குருகள உக்தி சும்மனதலே நித்ய
ஒம்மென்ன ஸ்மரிபரிகெ பொம்மன பித
ஸ்ரீனிவாச விட்டலனு கம்மனெ தானே ஒலிவ நலிவா ॥

அன்றைய சமூகத்தில் மிகப் பிரபலமான வித்வாம்சர் , ஸ்ரீனிவாசா சார்யர். சாஸ்திரங்களில் விற்பன்னர். அன்றைய பலராமாச்சாரிடம் (பின்னர் ஸ்ரீவரதேந்திரர்) பாடங்களைப் படித்து பின் தம் வீட்டிலேயே குருகுலத்தை நடத்தி வந்தார். காலக்கிரமத்தில் நடந்த சம்பவங்களில், விஜயதாசர் இவரை கோபாலதாசரின் மூலம் காப்பாற்றினார். ஆயுள் தானத்தைப் பெற்று பின்னர் பற்பல கிருதிகள் , ஹரிகதாம்ருதசாரம் முதலான கிரந்தங்களை இயற்றினார். பின்னர் வந்த ஹரிதாச பரம்பரையே இவரை பாடிப் புகழ்ந்தது.

**ப்ராணேஷதாசர்**: திளியனு எந்தெந்திகன்ய ரங்க
ஒலித தாசரு ஜகன்மான்ய ॥

**குரு ஸ்ரீசவிட்டலர்**: எந்து பொகளலி ஜகன்னாததாசரனு
கந்து பித ஒலிதவர அந்தரங்கதி பொளிவா ॥

**குரு ஜகன்னாததாசர்**: ஜகதீதல விக்யாதம் ஜகதாமோத காரணம் ।
ஜகதீஷ பதாசக்தம் ஜகன்னாத குரும்பஜே ॥
தாசவர்யம் தயாயுக்தம் துரீக்ஷததுராசிஷம் ।
ஹரிகதாம்ருதவக்தாரம் ஜகன்னாத குரும்பஜே ॥
***

தொடர்

# ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

## நரசிம்ம வந்தனம்

By ஹணவந்த தாஸகாம்வகர

**ஸ்ரவண மனகா1னந்த3 வீவுது3**
**ப4வஜனித1 து3க்க2க3ள க1ளெவுது3**
**விவித3 போ4க3க3ளிஹபரங்க3ளலித்து1 ஸலஹுவுது3 |**
**பு4வன பா1வனனெனிப1 லகு1மி**
**த3வன மங்க3ளக1தெ1ய ப1ரமோ**
**த்ஸவதி3 கி1விகொ1ட்டாலிபு1து3 பூ4ஸுரரு தி3னதி3னதி3 || (2-1)**

ஸ்ரீஜகன்னாததாசர் இயற்றிய ஹரிகதாம்ருதசார கிரந்தத்தில், ஸ்ருஷ்டி முதலான அஷ்டகர்த்ருத்வங்கள் , ஸ்ரீஹரியின் சர்வோத்தமத்வம் , ஸ்ரீஹரியின் கருணை, தேவ-தானவ தாரதம்யங்கள், ஜீவர்கள் சாதனைகளை செய்யும் முறைகள் , பக்தியின் சிறப்புகள் , தியானம் செய்யும் முறைகள், பிம்பரூபியைக் காணும் வழிகள் , தத்தஸ்வாதந்த்ர்ய என்று இவை அனைத்தையும் குறித்து மிகவும் விளக்கமாக இந்த கிரந்தத்தை இயற்றியுள்ளார் தாசர். கிரந்தத்தின் துவக்கத்திலேயே நரசிம்மதேவரின் வர்ணனை இருக்கிறது.

ஸ்ரீநரசிம்மரைக் குறித்தே பற்பல பாடல்களை தாசர் இயற்றியுள்ளார். நரசிம்மா பாஹி லட்சுமி நரசிம்மா பாஹி என்று வேண்டிக்கொண்டு -

நரசிம்ம நமிபெ1 நானின்ன சாருசரண க1மலக்கெ1
நீ என்ன க1ரவபி1டி3து3 நிஜ ஷரணனெந்தெ3னிஸொ
பூ4சுர க1ருணாம்பு3தெ க3ருடவாஹன லக்ஷ்மீ நரசிம்ம |

கருடவாகனனான ஸ்ரீ லட்சுமி நரசிம்மரை இங்கு வணங்கியிருக்கிறார். ஏன் ? இந்தக் கேள்விக்கான விடையும் இதே பாடலில் இருக்கிறது. புரந்தரதாசரிடமிருந்து கனவில் அங்கிதம் வாங்கியவர் விஜயதாசர். விஜயதாசரின் சிஷ்யர் கோபாலதாசர். இவர்கள் இருவரின் சிஷ்யரே ஜகன்னாததாசர். ஜகன்னாததாசரின் தந்தையான நரசிம்மதாசரும், புரந்தரதாசரிடமிருந்து கனவில் அங்கிதம் வாங்கியவரே.

ஸ்ரீஉபேந்திரராயர் (தீர்த்தர்), மந்திராலய ராயர் மடத்தின் 11ம் பீடாதிபதி ஆவார். இவரது காலம் 1725 - 1728). இந்த துறவியிடமிருந்து நரசிம்ம தாசருக்கு, நரசிம்ம பிரதிமை , நரசிம்ம சாலிக்ராமங்கள் கிடைத்தன. விஜயதாசரின் சிஷ்யரான திவான் பங்கநாமத திம்மண்ணரின் சிஷ்யரே நரசிம்மதாசர். உபேந்திரதீர்த்தரின் பூரண ஆசியைப் பெற்ற நரசிம்ம பிரதிமையானது , மிகப் பழமையும் பெருமையும் வாய்ந்தது. ஆகவே ஜகன்னாததாசரும் அவற்றை மிகுந்த பக்தியுடன் பூஜித்து வந்தார். அவற்றைப் பற்றி பாடல்கள் பாடினார்.

தன்னுடைய இஷ்டதெய்வம், குலதெய்வம் என்று மிகுந்த பக்தியுடன் பூஜித்து வந்தார். இன்னொரு முக்கியமான விஷயம் என்னவென் றால், மானவியின் அருகிலேயே இருக்கும் சிக்கலபரவி கிராமத்தில் இருக்கும் அஸ்வத்த லட்சுமி நரசிம்மதேவர் ஆலயம். தாசசாகித்ய த்தை துவக்கியதில் பெரும் பங்காற்றிய முளபாகல் மடத்தின் தலைவரான ஸ்ரீபாதராயர் , தனது பயணத்தின்போது சிக்கலபரவிக்கு வந்து, அஸ்வத்த மரத்தில் லட்சுமி நரசிம்மரை பிரதிஷ்டை செய்து , இந்த கிராமத்தை ஒரு க்ஷேத்திரமாக மாற்றினார். இந்த லட்சுமி நரசிம்மரின் அருளினாலேயே பிறந்தவர் விஜயதாசர். இந்த லட்சுமி நரசிம்மரை பூஜித்தவர்கள் ஜகன்னாததாசர் மற்றும் விஜயதாசரின் பிற சிஷ்யர்கள். தமது குருகள் பூஜித்த தெய்வம் என்று இந்த லட்சுமி நரசிம்மரை ஜகன்னாததாசர் மிகவும் விரும்பி பக்தியுடன் தானும் பூஜித்து வந்தார். இஷ்டதெய்வம் என்று கொண்டாடினார். இவரைக் குறித்து பாடல்களையும் இயற்றினார். ஹரிகதாம்ருதசாரத்தில் தாரதம்யத்தின்படி ஹரிகுருகளை பாடியிருக்கிறார். மங்களாசரண சந்தியில் முதல் ஸ்லோகமே இவ்வாறாக இருக்கிறது.

**ஸ்ரீரமணி க1ரக1மல பூ1ஜித**
**சாரு சரண சரோஜ பிரம்ம ச**
**மீர வாணி ப2ணீந்திர வீந்தி3ர ப4வேந்தி3ர முக2 வினுத1 |**
**நீரஜப4வாண்டோ3த3ய ஸ்தி1தி1**
**கா1ரணனே கை1வல்யதா3யக1**
**நாரசிம்ஹனே நமிபெ க1ருணிபு1தெ3மகெ3 மங்க3ளவ ||**

** தொடர்ச்சி 18ம் பக்கத்தில்

உங்கள் வீட்டு முகவரி மாறினால் , எங்களுக்குத் தெரியப்படுத்த மறக்க வேண்டாம்.




## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### விபூதி சந்தி

**வலமிருந்து இடம்**

1.க்ஞானிகள்(3), 2.தன்னைவிட உயர்ந்தவர்கள்(6), 3.விரோதிகள்(4), 4.15 நாட்கள் கொண்டது.(2), 5.கண்ணாடி(3), 6.கண்(4), 7.பசு(2), 8.அழைப்பை ஏற்றுக்கொண்டு வீட்டிற்கு வரும் விருந்தாளிகள்(6), 9.போர்வை(5), 10.சேனை வீரர்கள்(3), 11.ஆடை(3), 12.ப்ரஹ்மா(3), 13.மேனகாத்மஜெ(4), 14.நீரின் குணம்(3), 15.புருஷார்த்தங்களில் முதன்மையானது(3), 16.வடக்கு திசையின் உபாசனை மூர்த்தி.கலைந்துள்ளது(6), 17.உபகரணங்களில் ரூபங்கள்(எண்)(5), 18.தங்கம்(4) 19.ப்ரதிமைகளில் ரூபங்கள்(எண்)(3), 20.துளஸியில் ரூபங்கள்(எண்)(4),

**இடமிருந்து வலம்**

3.மக்கள்(4), 21.துடை(2), 22.காற்று(2), 23.குளிப்பது(4), 24.சூரியன்(2), 25.பூமியின் குணம்(4), 26.மேற்கு திசையின் அபிமானி தேவதை. கலைந்துள்ளது(4), 27.ஸமுத்திரம்(3), 28.அக்னி(3)

**மேலிருந்து கீழ்**

2.பந்த்துக்கள் மற்றும் அந்நியர்கள்(6), 12.செல்வம்(3), 17.ஸாலிக்ராமத்தில் ரூபங்கள்(எண்)(4), 18.தேஹம்(3), 29.என்றும் இளமையுடன் இருப்பவள்(3), 30.தாகம் மிகுந்தவன். கலைந்துள்ளது(6), 31.யானைகளில் ஸ்ரேஷ்டமான கஜராஜன்(4), 32.கதவு(3), 33.தாமரை(4), 34.அரச மரம்(4), 35.கடைகள்(5), 36.அரசன்(4), 37.புஷ்பத்தில் ரூபங்கள்(எண்)(3), 38.நீரில் ரூபங்கள்(எண்)(2),

**கீழிருந்துமேல்**

39.வெய்யில்(2), 40.சேனைத்தலைவன்(4), 41.நட்சத்திர மார்கமான ஆகாயம்(4), 42.சந்திரன்(2), 43.விசிறி(3), 44.மீனை சின்னமாக உடைய கொடிக்கு அதிபதி(5) 45.வடமேற்கு திசையின் அபிமானி தேவதை(6)

* வடிவமைத்தவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி.
* இதற்கான விடைகளை செப்டம்பர் 15ம் தேதிக்குள் வாட்சப்பிலோ, மெயிலிலோ அனுப்பலாம்.
* சரியான விடைகள் தரும் இருவருக்கு புத்தகப் பரிசு கிடைக்கும்.

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 29 | | | 2 | | | | | 30 | | | 31 | | |
| | | 21 | | | | | | | | | 3 | | 32 | |
| | | | | 4 | | | | | | | | | | |
| | | | | | | | | 5 | | | | | | |
| | 33 | | | | | | | | | 22 | | | | |
| 6 | | | | | | | | 7 | | | | | | |
| | | 39 | | | | | | | | | | 40 | | |
| | | | | | | | | | 34 | | | | | |
| | | | | | 23 | | | 8 | | | | | | |
| | | 9 | | 35 | | | | | | | | 10 | | |
| | | | 39 | | | | 24 | | | | | | | |
| | | | | | | 11 | | | | | | 41 | | |
| | | | | 25 | | | 42 | | | | | | | |
| | | | | | | | | 12 | | | | | | |
| | | 13 | | | | | | | | 14 | | | | |
| | | | | | | | | 15 | | | | | | 36 |
| 16 | | | | | | | 37 | | | 43 | | | | |
| | | | | | | | | | 38 | | | | | |
| | | | 26 | | 17 | | | | | | 18 | | | |
| | 44 | | | | 19 | | | | | | | | | |
| | | 45 | 27 | 20 | | | | | | | | | 28 | |
| | | | | | | | | | | | | | | |

போட்டிகளுக்கான விடைகளை மின்னஞ்சல் முகவரி : haridasa.vijayam@gmail.com அல்லது வாட்சப் எண் 89044 58276 க்கு அனுப்பலாம்.

** 15ம் பக்கத்திலிருந்து தொடர்கிறது.

அனைத்து விருப்பங்களையும் பூர்த்தி செய்பவனான நாரசிம்மனை , தனக்கு (நமக்கு) அருளுமாறு வேண்டிக்கொள்கிறார். ஸ்ரீஹரியின் மனைவியான லட்சுமிதேவிக்கு , ரமணி என்று ஒரு காரணப்பெயர் இருக்கிறது. (ஸ்ரீ என்றால் நாராயணன் என்றும் லட்சுமி என்றும் பொருள் உண்டு). மிகவும் அழகான வடிவுடையவள். ஆகையால் ரமணி என்று அழைக்கப்படும் இத்தகையவளின் கைகளால் பூஜிக்கப் படும் ஸ்ரீஹரியானவர் சாருசரணசரோஜ மகாலட்சுமி தேவியைவிட சிறந்தவர் ஆவார். அத்தகைய ஸ்ரீஹரியின் அழகான பாத-கமலங் களை, மகாலட்சுமி பூஜிக்கிறார். வினுத என்றால் ஸ்ருதி மற்றும் ஸ்ம்ருதிகளால் போற்றப்படுபவர் என்று பொருள்.

நீரஜபவாண்டோதய ஸ்திதிகாரண என்று , படைத்தல் முதலான காரியங்களுக்கு ஸ்ரீஹரியே காரணம் என்று விளக்குகிறார். அவரே அனைத்தையும் படைக்கிறார் , காக்கிறார், அழிக்கிறார். தோஷங்கள் இல்லாதவர் மற்றும் மோட்சத்தைக் கொடுக்கக் கூடியவருமாக இருக்கிறார் நரசிம்மர் (நாராயணன்). லட்சுமிதேவியிடமிருந்து பூஜை யைப் பெற்றுக்கொள்பவர். இத்தகையை கடவுளை வணங்கி , எமக்கு அருள்வாயாக என்று வேண்டிக்கொள்கிறார்.

முன்னர் ‘பக்தாபராதசஹிஷ்ணு சந்தியில் ’ மறுபடி ஸ்ரீநரசிம்மரை இப்படியாக வணங்குகிறார்.

**ஸ்ரீலகுமிவல்லபகெ[3] ஸம க[1]ரு**
**ணாளுக[3]ள நா காணெனெல்லு கு[1]**
**சேலனவலிகெ[3] மெச்சி கொ[1]ட்டனு சகலசம்பத[3]வ |**
**கே[1]ளிதா[3]க்ஷண வஸ்த்ரகள பா[1]**
**ஞ்சாலிகி[3]த்தனு தை[3]த்யனுத[3]ரவ**
**ஸீளி ஸந்தை[1]ஸித[3]னு பிரஹ்லாத[3]ன கி[1]ருபாஸாந்திரா ||**
**(சகலதுரித நிவாரண சந்தி ஸ்லோகம் #1)**

இது சகலதுரிதநிவாரண சந்தி ஆகும். ஸ்ரீஹரியின் தசாவதாரங்களில் , நரசிம்ம அவதாரத்துடன் , மகாபாரத சூதாட்ட சமயத்தில் , திரௌபதி யின் மானத்தை உடனடியாகக் காத்தவர் கிருஷ்ணன் என்று கிருஷ் ணாவதாரத்தையும் புகழ்கிறார். மிகுந்த பக்தியுடன், அசைக்க முடியாத

நம்பிக்கையுடன் ஸ்ரீஹரியை அழைத்தால் , ஓ என்று சொல்லாமல் இருப்பானா, நம் தவறுகளை மன்னிப்பவன் , கஷ்டங்களை தூர விலக்குபவன், அவனே நம் அப்பன் ஸ்ரீஹரி. செய்த தவறுகளை எண்ணாமல், அவற்றை மன்னித்து அவனின் பக்தர்களுக்கு அருள் பவனான ஸ்ரீஹரி மிகுந்த கருணை கொண்டவன். பக்தியுடன் சுதாமன் சமர்ப்பித்த அவலை ஏற்றுக்கொண்ட ஸ்ரீகிருஷ்ணன் அவனுக்கு அருளினான். ஸ்ரீலட்சுமிபதிக்கு சமமான தயாளு (கருணை கொண்டவர்) இந்த உலகத்தில் வேறு யாரும் இல்லை. அவர் கருணைக்கடல் என்பதை இந்த ஸ்லோகத்தில் பற்பல உதாரணங்களுடன் விளக்கியிருக்கிறார்.

சுதாமனின் மனைவி கிருஷ்ணருக்காகக் கொடுத்தனுப்பிய ஒரு கைப்பிடியளவு அவலை மிகவும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு , அவனுக்கு ஏகப்பட்ட செல்வத்தை அருளி காப்பாற்றினார். கௌரவர்களின் சபையில் பற்பல அறிஞர்களுக்கு நடுவில் தன் சகோதரனின் மனைவி என்றும் பாராமல் திரௌபதியின் சேலையை இழுத்து அவளுக்கு அவமானம் இழைத்த தருணத்தில் - நீயே கதி கிருஷ்ணா, எனக்கு நீயே கதி என்று பாஞ்சாலி கூப்பிட்டபோது , மிகுந்த கருணையுடன் குறையாக சேலைகளை வழங்கி அவள் மானம் காத்தார்.

தைத்யனான ஹிரண்யகசிபுவைக் கொல்வதற்கு விஷ்ணுவே நரசிம்மராக அவதாரம் எடுக்கவேண்டியதாயிற்று. பிரகலாதனின் பக்திக்கு மெச்சி, அவனின் வாக்கினை உண்மை என்று நிரூபிப்பதற்கு, அசுரன் ஹிரண்யகசிபுவின் உடலைக் கிழித்து அவனைக் கொன்றார். பக்தர்களைக் காப்பாற்ற ஓடி வந்த கருணைக்கடல் , பக்தர்களின் சொல்லிற்குக் கட்டுப்பட்டவர் என்று ஸ்ரீஹரியின் நற்குணங்களை சொல்கிறார். மேலும் 32வது சந்தியான கக்ஷதாரதம்ய சந்தியில் நரசிம்ம வர்ணனை வருகிறது.

**ஓதி[3]ஸுவ கு[3]ருக[3]ளனெ ஜரிது ஸ**
**ஹோத[3]ரரிகு[1]பதேஷிஸிதி மஹ**
**தா[3]தி[3]கா[1]ரண சர்வகு[3]ணஸம்பூ[1]ர்ண ஹரியெந்து[3] |**
**வாதி[3]சுவி த்[1]வத்[1]ப[1]திய தொ[3]ரெ**
**ந்தா[3]த[1]னுஜ பெசகொ[1]ளளு ஸ்த[1]ம்பதி[3]**
**ஸ்ரீத[3]னாக்ஷண தோ[1]ரிசித[3] பிரஹ்லாத சலஹெம்ம ||**
**(கக்ஷாதாரதம்ய சந்தி ஸ்லோகம் #36)**

கம்பத்தில் தரிசனம் அளிக்குமாறு வேண்டிக்கொண்ட பிரகாலதனைக் குறித்தே இந்த ஸ்லோகம் இருக்கிறது. தாரதம்யத்தில் 19ம் வகுப்பில் வருபவர் பிரகலாதராஜர். அசுர அம்சம் கொண்ட குருகளான சுக்ராசாரியரின் மக்களான சண்டாமர்கர் சிவ சர்வோத்தமத்வத்தை அனைவருக்கும் சொல்லிக் கொடுத்திருந்தனர். இவர்களின் மாணவர்களான பிரகலாதன், சஹ்லாதன் இருவருக்கும் அது சரியாகப் படவில்லை.

இந்த உலகத்தைப் படைத்தவனும் , அனைத்து நற்குணங்களைக் கொண்டவனும் ஆனவன் ஸ்ரீஹரி ஸ்ரீமன் நாராயணன் மட்டுமே. ஆனால் இதைப் பற்றி எதுவும் கற்றுத் தராததால் , பிரகலாதர், தன் சகோதரருக்கும், தன் நண்பர்களுக்கும் , ஸ்ரீமன் நாராயணனே சர்வோத்தமன் என்றும் , மஹத்தத்வாதி அபிமானி தேவதைகளான பிரம்மன் முதலானவர்களின் பிறப்பிற்கும் ஸ்ரீஹரியே காரணம் என்றும், அவர்களால் பூஜிக்கப்படுபவனும் , அனைத்து உலகங்களும் இந்த ஸ்ரீமன் நாராயணனின் சொல்லிற்குக் கட்டுப்பட்டவையே என்றும் உபதேசித்தார். குரு நாரதரின் உபதேசத்தால் விசேஷ ஞானத்தைப் பெற்ற பிரகலாதன் , ஸ்ரீஹரியின் சிறந்த பக்தன். ஸ்ரீமன் நாராயணனே சிறந்தவர் , அனைத்து இடங்களிலும் பரவியிருப்பவர் என்றும் குரு மற்றும் தந்தை ஹிரண்யகசிபுவிடம் வாதிட்டார்.

அசுரனான ஹிரண்யகசிபு மிகுந்த கோபத்துடன் , உன் கடவுள் எங்கு இருக்கிறான் என்று காட்டு என்று சொல்லி , மிகுந்த ஆத்திரத்துடன் கர்ஜித்தபோது, தூணிலிருந்து வெளிப்பட்டார் நரஹரி.தன் பக்தனான பிரகலாதனின் நம்பிக்கையை உண்மையாக்கினார். தூணில் உக்ர நரசிம்மர் தோன்றினார். திடமான பக்திக்கு மதிப்பளித்தார். இத்தகைய ஸ்ரீஹரியின் விசேஷமான மகிமைக்கு , அவதாரத்திற்குக் காரணமான பிரகலாதராஜர், நமக்கும் அத்தகைய பக்தியை வழங்கட்டும் என்று வணங்குகிறார் ஸ்ரீஜகன்னாததாசர்.

**பி1ரதி1தி3வசதி3 ஸ்ருதி1 ஸ்ம்ருதி1க3ளிந்த3**
**சம்ஸ்து1தி1சுத1 லட்சுமி ப1திகு3ணவ**
**க்1ருதி1பதி1 ஸ்ருஷ்டிஸ்தி1தி1 லய கா1ரண**
**இத1ர சர்வதே3வதெ1க3ளிகி3ல்லெம்புதே3**
**ப2லவிது பா3ள்து3த3க்கே1** ***

தொடர்

**பலவிது பாள்துதக்கெ-ஸ்ரீஜகன்னாத்தாசர்**

**கன்னட உரை: திரு.தாவண்கெரெ பீமராவ்**

**க்[1]ளேஷாந்தக[3]ள் ஈசாதீ[3]ன சமாசம பிரம்ம சதாஷிவரு**
**ஈஷித[1]வ்ய ருபரேஷனல்லதே [3] ஸ்வாஸபிடுவ சக்தி**
**லேசில்லெம்புதெ |13|**

க்லேஷானந்தகளு = சுக துக்கங்கள் , ஈஷாதீன = ஸ்ரீஹரிக்கு கட்டுப்பட்டவை. (ஜீவர்களுக்கு சுக துக்கங்கள் என அனைத்தும் ஸ்ரீஹரியிடமிருந்தே கிடைக்கின்றன. அவர்களது சுய முயற்சியால் அல்ல). சமாசம பிரம்ம சதாஷிவரு = ரமாதேவி , பிரம்ம, ருத்ரர்களும் (இவர்களிலிருந்து அனைவரும்) , ஈஷிதவ்யரு = ஸ்ரீஹரியால் நியமிக்கப்பட்டவர்கள், பரேஷனில்லதே = ஸ்ரீஹரி இல்லாமல் , ஷ்வாஸபிடுவ = மூச்சு விடும் , ஷக்திலேசில்லெம்புதே = சாதாரண சக்திகூட ரமா பிரம்மாதிகளுக்கு இல்லை என்பதை அறிவதே , இந்த வாழ்க்கை எடுத்ததற்கான பலன்.

சுகதுக்கங்கள் யாரை பாதிப்பதில்லையோ , எந்த ஞானி சுகதுக்கங்களை சமமாகக் கருதுகின்றாரோ , அவரே மோக்ஷத்திற்கு அருகதை உடையவர்கள் என்று பகவத்கீதையில் சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்வுலகில் இருக்கும் ஜீவர்கள் அனைவருக்கும் சுகதுக்கங்கள் ஸ்ரீஹரியின் மூலமாகவே வருகின்றன. துக்கம் வேண்டும் என்று விரும்பாவிட்டாலும், அது எப்படி நம்மை வந்து பீடிக்கின்றதோ , அதுபோலவே, சாத்விகர்களுக்கு மோட்சத்திலும் , தாமசர்களுக்கு தமஸ்ஸிலும், கிடைக்கும் சுகதுக்கங்கள் ஸ்ரீஹரியிடமிருந்தே கிடைக்கிறது - என்று பிரகலாதராஜர் சொல்லியபடி பாகவதத்தில் வருகிறது.

மத்ஸ்ய, கூர்ம, வராகாதி அவதாரங்களில் வேறுபாடு இல்லையாதலால், ஸ்ரீஹரிக்கு ‘ஸம’ என்று பெயர் இருக்கிறது. பிரம்மாதி ஜீவர்கள் ‘அஸமர்’. லட்சுமிதேவியோ ‘ஸமாஸமள்’ என்று அழைக்கப்படுகிறார்.

ஓம் ஸமனாஜாஸ்ருத்யுப க்ரமாதம்ருதத்வம் ஓம் - என்னும் சூத்திரத்தின்படி, லட்சுமிதேவி, தேச காலத்தின்படி ஸ்ரீஹரிக்கு

சமமானவள் என்றும் , குணங்களால் அஸமள் என்றும் கருதப்படுகிறாள்.

அனந்தா1னந்தகு3ணத1 இந்திராயா:ப1ரோ ஹரி: |
இந்தி3ராக3ம்ய நி:ஸீம மஹாமாஹாத்1ம்யப்3ரும்ஹித: ||

என்னும் சத்தத்வ ரத்னமாலா வாக்கியத்தின்படி , ஸ்ரீஹரி, ரமாதேவியைவிட அனந்தானந்த குணங்கள் சிறந்தவன் என்று தெரிய வருகிறது.

ஸ்ரீவிஷ்ணுவினால் நியமிக்கப்பட்ட முக்யபிராணர் , அனைத்து ஜீவர்களிலும், மூச்சுக்காற்றின் மூலமாக ஹம்ஸ மந்திரத்தை எப்போதும் ஜெபித்துக் கொண்டிருக்கிறார்.

‘பிராணஸ்ய சர்வசிதசித் பரமேஷ்வரஸ்ய ஸாக்ஷாததீஷ்வரம் ’ என்னும் ஐதரேய பாஷ்ய வாக்கியத்தில் , அனைத்து சேதனா சேதனர்களில் இருந்து ஹம்ஸ மந்திரத்தை ஜெபித்துக் கொண்டிருக்கும் முக்யபிராணரின் தலைவனாக இருந்து அனைத்தையும் செய்விக்கும் ஸ்ரீஹரியின் மகிமைகள் விவரிக்கப்பட்டிருக்கிறது. ’தேன வினா த்ருணமபி ந சலதி ’ என்னும் ஸ்ருதியும் இதையே சொல்கிறது.

**ஆ பரமாத்மகே3 ரூபத்3யவவு ப1ராப1ர த1த்வக3ளித3ரொளகே3**
**ஸ்த்1ரீபும்பே4த3தி3 ஈ பத்3மஜாண்ட3வ வியாபி1ஸிஹனெந்தீ3 ப1ரி**
**தி1ளிவுதே3 |14|**

ஆ பரமாத்மகே = (இப்படியாக வர்ணிக்கப்பட்ட) இந்த பரமாத்மனுக்கு , ரூபத்வயவு = இரு ரூபங்கள் , இதரொளகெ = (இரண்டு ரூபங்களானாலும் அதில் வேறுபாடுகள் இல்லை) இந்த ரூபங்களில் , பராபர தத்வகளு = பர மற்றும் அபர என்னும் அனைத்து வஸ்துகளும் உள்ளன , ஸ்த்ரீபும் பேததலி = ஸ்த்ரி மற்றும் புருஷ என்னும் ரூபங்களால் , ஈ பத்மஜாண்டவ = இந்த பிரம்மாண்டத்தை , வியாபிஸி = வியாபித்து , இஹனு = இருக்கிறான் என்று , ஈ பரி = இப்படியாக, திளிவுதே = நினைப்பதே , இந்த வாழ்க்கைக்கான உண்மையான பலன் ஆகும்.

ஸ்ரீஹரிக்கு, ஸ்த்ரீ, புருஷன் என்னும் இரு வகைகளில் அனந்த ரூபங்கள் உள்ளன. நபும்சக ரூபம் என்பது அவருக்கு இல்லை. நபும்சகனான பிராணிகளுக்கு , அந்த நபும்சகத்வமானது பாவத்தின் பலனால் கிடைத்த தேகமே ஆகும். ஸ்த்ரீகளில் , ஸ்ரீஹரியானவர், ஸ்த்ரீ ரூபத்திலேயே பிம்பனாக இருக்கிறார். புருஷர்களின் புருஷனாக பிம்பனாக இருக்கிறார்.

பராபர தத்வங்கள் என்றால் - பர என்று அழைக்கப்படும் ரமாதேவி மற்றும் அபர என்று அழைக்கப்படும் பிரம்மாதி ஜீவர்கள். பர என்றால் உத்தம தத்வம். அபர என்றால் அதைவிட குறைந்த தத்வம். சேதனாசேதனர்களும் பராபர என்று அழைக்கப்படுகின்றனர். இந்த அனைத்தும் ஸ்ரீஹரியால் நியமிக்கப்பட்டவை ஆகும்.

இவற்றில் இருக்கும் ஸ்ரீஹரியின் நியாமக ரூபங்களுக்கு அபேத (வேறுபாடு இல்லாதவை) சிந்தனை செய்யவேண்டும்.

ப[1]ராவராணாம் ப[1]ரம ஆஸ்தே[1] கை[1]வல்யஸங்கி[3]த: |
கே[1]வலானுப[4]வானந்த சந்தோ[3]ஹோ நிருபா[1]தி[4]க: || (பாகவத 11-9-18)

ரமா பிரம்மாதிகளைவிட (சேதனா சேதனர்களைவிட) , உத்தமனாகையால், கேவல நாமக புருஷோத்தமனான ஸ்ரீஹரி , துக்கங்களே இல்லாத, ஆனந்தமய தேகத்தை உடையவன். ப்ராக்ருத தேகம் இல்லாதவன்.

ஸ்ரீஹரி, அனந்த புருஷரூபங்களைக் கொண்டிருப்பதைப் போல, அனந்த ஸ்த்ரீரூபங்களையும் கொண்டிருக்கிறான்.

**ஏகோ[1]த்த[1]ர பஞ்சாஷத் வர்ணக[3]ள் ஏகா[1]த்மன நாமங்க[3]ளிகு[3]**
**மா க [1]மலாஸன மொத [3]லாத[3]மரரு சாக [1]ல்யதி[3] இவனரிய**
**னெம்பு[3]தே |15|**

ஏகோத்தர பஞ்சாஷத் வர்ணகளு = 51 எழுத்துக்கள் (அ-முதல் க்ஷ-வரை), இவு = இந்த எழுத்துக்கள் , ஏகாத்மன = ஸ்வதந்த்ரனான ஸ்ரீஹரி, நாமங்களு = அவன் மகிமைகளை விளக்கும் அவனின் பெயர்கள், மாகமலாசன மொதலாத்யமரரு = ரமாபிரம்ம ருத்ராதி தேவதைகள், ஸாகல்யதி = முழுமையாக , இவன = ஸ்ரீஹரியை , அரியரு = அறியமாட்டார்கள், எந்தெம்புதே = என்று அறிந்து கீர்த்தனைகளை பாடுவதே, வாழ்க்கைக்கான உண்மையான அர்த்தம் ஆகும்.

அ-முதல் க்ஷ-வரையிலான 51 எழுத்துக்களில் வியாபித்திருக்கும் ஸ்ரீஹரியின் ரூபங்கள் என்றால் : அ-அஜ , ஆ-ஆனந்த, இ-இந்திர, ஈ-ஈஷான என்று க்ஷ-லட்சுமி நரசிம்ம என்று 51 எழுத்துக்களில் நிலைத்திருக்கும் ஸ்ரீஹரியின் ரூபங்கள் , பிரணவ மந்திரத்தில் இருக்கும், அ, இ, உ, நாத, பிந்து, கோஷ, ஷாந்த, அதிஷாந்த என்னும் எட்டு எழுத்துகளிலும் நிலைத்திருக்கின்றன. பிரணாவதி அஷ்ட மஹாமந்திரங்களின் ஜபங்கள் , ஸ்ரீவிஷ்ணு பிரசாதத்தைக் கொண்டு தரும் சிறந்த சாதனங்கள். அவற்றில் மாத்ருகா மந்திரமும் ஒன்று - அதே 51 எழுத்துகளால் ஆனது. அஷ்ட மஹா மந்திரங்கள் யாதெனில் - 1. பிரணவ. 2. பூ: புவ: ஸ்வ: பூர்புவஸ்வ: என்னும் நான்கு வியாஹ்ருதிகள். 3. நாராயண அஷ்டாக்ஷர. 4. வாசுதேவ த்வாசஷாக்ஷர 5. காயத்ரி (24 எழுத்துகள்) 6. மாத்ருகா 7. பூருஷசூக்த 8. விஷ்ணு ஷடக்ஷர.ஸ்ரீஹரியின் குணங்களைப் பற்றிய அறிவு , ரமா பிரம்மாதிகளுக்கும் முழுமையாக தெரியாது என்று சத்தத்வ ரத்ன மாலாவில் சொல்லப்பட்டிருக்கிறது.

முக்தபிரம்மர்களில் இருக்கும் மற்றும் நித்யமுக்தளான ரமாதேவி யிடம் இருக்கும் குணங்களை பல மடங்கு செய்தாலும் எட்ட முடியாத, அனேக குணங்களாலும் , விலக்ஷணங்களாலும் நிறைந்தி ருக்கும் ஸ்ரீஹரி, ரமாதி தேவதைகள் யாராலும் அறியப்பட முடியாத வனாக இருக்கிறான்.

ஸ்ரீஹரியின் கால் நகத்தில் இருக்கும் தூசியில் இருக்கும் அவரது சத்குணங்களை எண்ணவே முடியாதவள் ஸ்ரீலட்சுமிதேவி. இப்படி யிருக்கும் ஜீவர்களால் ஸ்ரீஹரியின் குணங்களை சொல்வதற்குகூட எப்படி சாத்தியம்? என்று சுமத்வவிஜயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

ஸ்ரீரமாதேவியானவள், ஸ்ருஷ்ட்யாதி செயல்களை தன் லீலைகளால் நிர்வகித்து, பிரம்மருத்ரர்களுக்கு அவரவர் பதவிகளை வழங்குவதற்கும் சாமர்த்தியம் உள்ளவள் என்று அம்ப்ரிணி சூக்தம் சொல்கிறது. இப்படி இருந்தும்கூட , அவளால் ஸ்ரீஹரியை முழுமையாக அறியமுடிவதில்லை. . ***

தொடர்

## கன்னட கிரந்தங்கள் அறிமுகம்

## வாமன ஹுட்டு - ஸ்ரீஸ்ரீபாதராஜர்

ஸ்ரீஸ்ரீபாதராஜர் தாச சாகித்ய பரம்பரையின் பிதாமகர் எனப் போற்றப் படுபவர். தாச சாகித்யம் மற்றும் வியாச சாகித்யம் என இரண்டு க்குமே பெரும் பங்களிப்பை அளித்தவர். துருவ அம்ச சம்பூதர் இவர். ஸ்ரீஸ்வர்ணவர்ண தீர்த்தரை ஆசிரம குருவாக அடைந்து , ஸ்ரீலட்சுமி நாராயண தீர்த்தர் என பெயர் கொண்டு , ஸ்ரீவிபுதேந்திர தீர்த்தரை வித்யாகுருவாக ஏற்று சாஸ்திர அத்யயனம் செய்து , இவருடைய பாண்டித்யத்தால் ஸ்ரீபாதராஜர் எனப் பெயர் கொண்டு பிரசித்தியாக விளங்கிய மகான்.

ரங்கவிட்டல என்னும் முத்திரையில் கன்னடத்தில் எத்தனையோ கிருதிகளையும், உகாபோகங்களையும் பிராந்திய பாஷையில் கொடுத்து, பாமரர்களுக்கும், சம்ஸ்கிருதம் அறியாதவர்களுக்கும் பக்தியையும், ஞானத்தையும் ஊட்டிய கருணாமூர்த்தி ஸ்ரீஸ்ரீபாதராஜர். மேரு க்ருதியான, கன்னட ஹரிவாயுஸ்துதி எனப் போற்றப்படக்கூடிய ஸ்ரீமன் மத்வ நாமாவை அருளியவர். இந்த வரிசையில் , ஸ்ரீபாதராஜர் வாமன அவதாரத்தைப் பற்றி கன்னடத்தில் ரசனை செய்த மிகச்சிறிய கிரந்தமே வாமன ஹுட்டு அல்லது வாமன அவதாரம் ஆகும்.

ஸ்ரீபாதராஜர் ரசனை செய்த வாமன ஹுட்டு அல்லது அவதாரம் என்பது 20 பத்யங்களைக் கொண்ட மிகச்சிறிய கிரந்தம் ஆகும். வேத வியாசர் அருளிய ஸ்ரீமத் பாகவதத்தின் 8வது ஸ்கந்தத்தில் விஸ்தாரமாக வரும் ஸ்ரீவாமன அவதார சரித்திரத்தின் கன்னட சாராம்சம் இது ஆகும். ஸ்ரீபாதராஜர் இந்தவொரு பாகத்தை கன்னடத் தில் மிகச் சுருக்கமாக , எளிமையாக, சரளமாக, எந்தவொரு கட்டத்தையும் விட்டுவிடாமல் கொடுத்துள்ள விதம் மிகவும் ஆச்சரியப்படத்தக்க வகையில் உள்ளது.

அதிதி தேவியின் பிரார்த்தனை , ஸ்ரீவாமனரூபி பகவானின் ஜனனம் , குழந்தைப் பருவம் , அதிதி கஸ்யப தம்பதிகள் வாமனனுக்கு செய்வித்த சம்ஸ்காரங்களின் வர்ணனை , உபநயன வைபவம் , பலிச் சக்ரவர்த்தியின் யாக சாலையில் வாமனனின் பிரவேசம் , பலி ராஜனின் உபசாரம் மற்றும் பகவான் செய்த யாசகம் , சுக்ராசார்யர் செய்த எச்சரிக்கை , பலி செய்த தானம் , பகவான் த்ரிவிக்ரமனாக வளர்ந்து பலியை ஆட்கொண்டு அருள் புரிந்த மகிமை என வாமன

சரித்திரத்தை மிகக் கோர்வையாக அழகாக 20 பத்யங்களில் அளித்துள்ளார் ஸ்ரீஸ்ரீபாதராஜர்.

முதல் பத்யத்தில் 'அதிதி தேவி பயோ வ்ரத மாடிதளாக்கே ' எனத் தொடங்கி, தக்ஷனின் மகளும் கஸ்யபரின் மனைவியுமான அதிதி தேவி தன் கணவரின் அனுமதியுடன் , பயோ விரதம் மேற்கொண்டதையும், அதன் பலனாக பகவான் ஸ்ரீ விஷ்ணுவே மகனாகப் பிறந்தார் என்பதையும் எடுத்துக்கூறி பதியின் அனுமதியுடனே விரதங்களை சுமங்கலிப் பெண்கள் செய்வது முறை என்பதையும் , சிரத்தையுடன் செய்யக்கூடிய விரதங்களுக்கு கண்டிப்பாக பலன் உண்டு என்பதையும் சூசகமாக உணர்த்தியுள்ளார் ஸ்ரீபாதராஜர்.

2 முதல் 4 பத்யங்கள் வரையில் , முக்கியமாக குழந்தைகளுக்குச் செய்ய வேண்டிய சம்ஸ்காரங்களை விளக்கும் வகையில் , குழந்தையாய் அவதரித்த வாமன ரூபி பகவானுக்கு தொட்டிலிட்டு , ஜாதகர்மம் செய்து, தேன் ஊட்டி , புண்யாஹவாசனங்கள் முதலான காரியங்களை சாஸ்திர ரீதியில் செய்ததையும் , கஸ்யபர் கோடி கோதானம் செய்து , பகவானுக்கு அர்ப்பணித்தார் என்பதையும் கூறி, பத்து இரவுகள் கடக்க, பெண்கள் எல்லாம் கூடி புதிய தங்கத் தொட்டியில் இட்டு பாட்டுகள் பாடி 'வாமனன்' என நாமகரணம் செய்ததையும் , பின்னர் குழந்தைக்கு முறையாக அன்னபிராசனம் , சௌளம் முதலான கர்மங்களை செய்தனர் என்பதையும் வர்ணிக்கிறார் ஸ்ரீபாதராஜர். இதன் மூலம் ஷோடஸ சம்ஸ்காரங்களின் முக்கியத்துவத்தை உணர்த்தியுள்ளார்.

4 முதல் 6 பத்யங்களில் கஸ்யபர் பந்துக்கள் எல்லாரையும் அழைத்து, குழந்தை வாமனனுக்கு தர்ப்பைப் புல்லை கயிறாகச் செய்து (முஞ்ஜி) இடுப்பில் கட்டி , உபநயனம் செய்வித்தார் என்பதை 'உபநயனவனு வாமனகே கஸ்யப மாடிதா ' முதலான பதங்களால் விளக்கி, அப்போது சரஸ்வதி , பாரதி தேவியர் , பக்தி பூர்வகமாக பகவானான வாமனனுக்கு பிட்சையிட்டு , கானங்கள் பாடி , ஆரத்தி எடுத்து கொண்டாடினர் என்பதையும் , பின்னர் வாமனன் அஸ்வத்த தண்டம், கமண்டலம், யக்ஞோபவீதம், கிருஷ்ணாஜினம் (மான் தோல்) , காலில் சலங்கை ஒலிக்க , வாமனன் பலிச்சக்ரவர்த்தியின் ராஜ சபைக்கு பிரவேசம் செய்வதையும், மிக அழகாக வர்ணிக்கிறார்.

7 முதல் 9 வரையிலான பத்யங்களில், முக்கியமாக வாமனரூபி பகவானின் சௌந்தர்யம், பலிச்சக்ரவர்த்தி செய்த உபசாரங்களை வர்ணிக்கும் விதத்தில், சபையில் பிரவேசித்த வாமனன் கோடி சூர்ய பிரகாசத்துடனும், சந்திரனின் காந்தியையும், முத்தினைப் போல முகமும் கொண்டிருப்பதைக் கண்டு, நிறைந்திருந்த ராஜசபையில் உள்ளவர்கள் எல்லாம் மிகவும் ஆச்சரியத்துடன், மெய்மறந்து பார்த்துக் கொண்டிருக்க, அதே நேரத்தில் தேவலோகத்தில் பகவான் வாமனரூபியின் மகிமைகளை பாடிக் கொண்டாட, மத்தளம், பேரி வாத்தியங்கள் முழங்க, ரம்பை, ஊர்வசி முதலான அப்சரா ஸ்த்ரிகள் நாட்டியமாட, பிரம்மதேவர் ஸ்தோத்திரம் செய்து கொண்டாட, இவ்விதம் அனைவரும் பகவானைத் துதிக்க, இங்கு பலி ராஜன், பகவானே நேரில் வந்திருப்பதாக அனுமானித்து, முத்து மாணிக்கங்களால் ஆன ஆசனத்தை அளித்து கௌரவித்ததையும் வர்ணிக்கிறார் ஸ்ரீபாதராஜர்.

அடுத்து 10 முதல் 17 வரையிலான பத்யங்களில், பகவான் வாமனனாகி வந்து தானம் கேட்டு, பின்னர் த்ரிவிக்ரமனாகி வளர்ந்து மகிமை புரிந்ததை விளக்கும் விதமாக, பலி சக்ரவர்த்தி வாமனனிடத்தில் கை கூப்பி நலன் விசாரிப்பதையும், அதற்கு வாமனன் தான் வெகு தூரத்தில் இருந்து பலியின் புகழைக் கேட்டு இங்கு வந்ததாகவும் கூறி, தன் பாதத்தால் மூன்று பாத பூமி மட்டுமே கொடுத்தால் போதும் எனக் கேட்டதையும் 'மூரு பாதத பூமி தானவ கொடுவென பேடி கொண்டனு பிரம்மசாரி' போன்ற பதங்களால் விளக்கி, அதற்கு பலி சக்ரவர்த்தி ஆச்சரியம் அடைந்து, தங்கத்தை அள்ளிக் கொடுக்க தான் தயாராக உள்ளபோது, இவ்வளவு குறைவாக வேண்டுவது சரியல்ல எனக் கூறியபோதும், வாமனரூபி பரமாத்மா மறுத்து தான் வேண்டிய 3 பாத பூமி போதுமானது என த்ருடமாக உரைத்ததை விளக்குகிறார் ஸ்ரீபாதராஜர். இதன் மூலமாக தானம் பெறுபவர்களும் கவனமாக இருக்கவேண்டும் என்பதை சூசனையின் மூலம் உணர்த்துகிறார் ஸ்ரீபாதராஜர்.

மேலும் தொடர்ந்து இந்த சந்தர்ப்பத்தில் குலகுருவான சுக்ராச்சார்யர் இடைமறித்து, இதில் உள்ள சூழ்ச்சியையும், வந்தவன் மாயம் செய்யும் கிருஷ்ணன் என்பதையும் உணர்த்தியதையும் 'யாசகனிவனல்லா யதுகுலதிலகனு மாதினல்லி மனவ கொம்புவனு' என்ற பதத்தினால் எடுத்துக் கூறி, பலி அதையும் மீறி ஏற்காமல் தான் வாக்களித்தபடி தானம் கொடுப்பதே முறை எனத் தீர்மானித்து முத்தினால்

அலங்கரிக்கப்பட்ட கிண்டியில் அரசி விந்த்யாவளி ஜலம் கொண்டு வர, சேஷசாயியான பகவானின் பாதம் அலம்பி , பூஜித்து நமஸ்கரிக்க, புண்ணிய நதிகள் எங்கும் பிரவாகித்தன என்பதையும் மிக அழகாக கவி நயத்துடன் வர்ணிக்கும் ஸ்ரீபாதராஜர் , பகவான் வாமனன் அச்சமயம் ஒரு பாதத்தினால் பூமியையும் , மற்றொரு பாதத்தினால் ஆகாயத்தையும் அளந்துவிட்டு , மூன்றாவதாக எதை அளப்பேன் என வினவியதையும், அதற்கு பலி சக்ரவர்த்தி தன் தலையைக் காட்ட , பகவான் தனது திவ்ய பாதத்தை அவன் தலைமீது வைத்து பாதாளத்திற்கு அனுப்பியதையும் இங்கு வர்ணிக்கிறார் ஸ்ரீபாதராஜர்.

17 முதல் 20 வரையிலான பத்யங்களில் பகவானின் மகிமைகளையும், காருண்யத்தையும் விளக்குவதாக, ஜனங்களெல்லாம் இதை பலிக்கு நேர்ந்த அநியாயம் என பேசிக்கொள்ள , நாபிக் கமலத்தில் பிரம்மனையும் , பாதத்தினால் பாகீரதியையும் , வலுவான கோரைப் பற்களைக் கொண்ட தாடையினால் துங்கபத்ராவையும் படைத்தவனை, ஸ்ரீமன் நாராயணனை எதிர்க்க யாருமில்லை , சமான மானவனும் இல்லை , அவனுக்கு தோஷம் என்பதேயில்லை என்று எடுத்துரைத்து, த்ரிவிக்ரமனாகி வளர்ந்த பகவான் அஷ்ட ஐஸ்வர்யமும், சம்பத்தும் நிரம்பிய பட்டணத்தை ஸுதள லோகத்தில் நிர்மாணம் செய்து பலியையே அதற்கு அதிபதியாக்கி , பலியின் வாயிலைக் காக்கும் பணியை தானே மேற்கொண்டான். பக்தவத்ஸல னான ஸ்ரீஹரி என பலிசக்ரவர்த்திக்கு பகவான் புரிந்த அருளை எடுத்துக்கூறி, இவ்விதம் பலியை உத்தாரம் செய்த ரங்கவிட்டலனை அனுதினமும் நம் மனது நினைக்கட்டும் , தியானிக்கட்டும் என பிரார்த்தனை செய்து சமர்ப்பணம் செய்கிறார் ஸ்ரீபாதராஜர்.

இத்தகைய உயரிய கிரந்தத்தை அனுதினமும் பக்தியுடனும் , அதன் விசேஷ அர்த்தங்களைத் தெரிந்து கொண்டும் , நாம் அனைவரும் பாராயணம் செய்து , ஸ்ரீபாதராஜரின் அந்தர்யாமியான பாரதிரமண முக்யபிராணரின் அந்தர்யாமியான வாமனரூபி பகவானின் அருளுக்குப் பாத்திரராவோமாக. ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

** **திரு.லட்சுமிபதிராஜா, சென்னை**

இந்த இதழ் வந்திருக்கும் வேளையில், ஹரிகதாம்ருதசார உரையான பாவபிரகாசிகையின் தமிழ் மொழிபெயர்ப்பு PDF வெளியாகியிருக்கும். அந்த PDF கிடைக்காதவர்கள் தொடர்பு கொள்ளவும்.

தொடர்

## ஹரிகதாம்ருதசார ஸ்லோக அர்த்தங்கள்

ஸ்ரீருத்ரதேவர்

**வாமதே[3]வ விரிஞ்சித[1]னய உ**
**மாமனோஹர உக்[3]ர தூ[4]ர்ஜடி**
**ஸாமஜாஜின வஸனபூ[4]ஷண ஸுமனஸோத்தம்ஸ |**
**கா[1]மஹர கைலாஸமந்தி[3]ர ஸோம**
**ஸூர்யானல விலோசன**
**காமித[1]ப்ரத[3] கருணிஸெமகெ[3] ஸதா[3] ஸுமங்க[3]லவ ||10**

வாமதேவ = சாந்தமான ஸ்வபாவமுள்ள அல்லது தனது இடதுபாகத்திலிருக்கும் பரமாத்மனை எப்போதும் உபாசனை செய்துகொண்டிருப்பதால் வாமதேவ என்ற பெயர் கொண்ட,
விரிஞ்சிதனய = பிரம்மனின் மகனான
உமா மனோஹர = பார்வதி தேவியின் , மனோஹர = மனதைப் பறிக்கும் (அதாவது உமாபதியான என்று பொருள்)
உக்ர = எதிரிகளுக்கு உக்ர ஸ்வரூபனான, அல்லது பிரளய காலத்தில் உக்ர ரூபத்தினால் பிரபஞ்சத்தை எரிப்பதால் உக்ர என்று பெயர் பெற்றவர்
துர்ஜடி = கங்கையைக் கொண்ட ஜடையுள்ள
ஸாமஜாஜின வஸன = ஸாமஜ = யானை. அஜின = தோலினால். வஸனெ = ஆடை.
பூஷண = அணிகலன்களாக உள்ள
ஸுமனஸோத்தம்ஸ = தேவோத்தமனான
காமஹர = மன்மதனை எரித்தவனான
கைலாஸ மந்திர = கைலாயத்தையே வீடாகக் கொண்ட
ஸோமசூர்யானலவிலோசன = ஸோம = சந்திரன். சூர்ய = சூரியன். அனல = அக்னி. என்று மூன்று தேவதைகளைக் கொண்ட மூன்று கண்களையுடையவன் (இட வல கண்களில் சந்திர சூரியர்கள். நெற்றிக்கண்ணில் அக்னி என்று அறியவேண்டும்).
காமிதப்ரத = வேண்டுபவர்களின் இஷ்டார்த்தங்களை நிறைவேற்று பவர்.

ஸ்ரீஜகன்னாததாசர், ஏகாதச ருத்ர கணம் என்று சொல்லக்கூடிய ருத்ரதேவரை 11 விதமான பெயர்களைச் சொல்லி வணங்குகிறார். வாமதேவ, விரிஞ்சிதனய, உமாமனோகர, உக்ர, துர்ஜடி, சாமஜாஜின

வஸனபூஷண, சுமனோத்தம்ஸ, காமஹர, கைலாச மந்திர, சோமசூர்ய அனல விலோசன, காமிதப்ரத என்று வணங்குகிறார்.

**க்ருத்திவாஸனெ ஹிந்தெ[3] நீ நா**
**ல்வத்து[1] க[1]ல்ப ஸமீரனலி ஸி**
**ஷ்யத்வ வஹிசகி[2]ளாக[3] மார்த்தக[3]ளோதி[3] ஜலதி[4]யொளு |**
**ஹத்து கல்பதி[3] தபவகை[3]தா[3]**
**தி[3]த்யரொளஹ கு[3]த்தமனெனிஸி புரு**
**ஷோத்தமன பரியங்க பத[3]வைதி[3]தெ[3]யோ மஹதேவ ||11**

க்ருத்திவாசனே = புலித்தோலை ஆடையாக உடுத்தியவனே
மஹதேவ = தேவோத்தமனே
நீ = நீ
ஹிந்தே = ருத்ர பதவிக்கு வருவதற்கு முன்னர்
நால்வத்து கல்ப = 40 பிரம்ம கல்பத்தின் வரைக்கும்
ஸமீரனலி = வாயுதேவரிடம்
சிஷ்யத்வ = சிஷ்யனாக
வஹிஸி = இருந்து
அகிளாகமார்த்தகள = அனைத்து வேத சாஸ்திரங்களைப் படித்து
ஜலதியொளு = சமுத்திரத்தில்
ஹத்துகல்பதி = 10 பிரம்ம கல்பத்தின் வரைக்கும்
தபவகெய்து = தவம் செய்து
ஆதித்யரொளகெ = அதிதியின் மக்களான தேவதைகளிடம்
உத்தமனெனிஸி = உத்தமன் என்று போற்றப்பட்டு
புருஷோத்தமன = க்ஷாக்ஷரர்களில் சிறந்தவரான ஸ்ரீமன் நாராயணனின்
பர்யங்க = படுக்கையாக இருக்கும் சேஷனின்
பதவ = பதவியை
யைதிதெயோ = பெற்றாயே, இப்படியான நீ
எமகெ = எமக்கு
சதா = எல்லா காலங்களிலும்
மங்களவ = மங்களகரமான உத்தம ஞானத்தை
கருணிஸு = தயவுசெய்து அருள்வாயாக

பின்வரும் விஷயத்தை , த்வைத சித்தாந்தத்தைப் பின்பற்றும் அனைவரும் கண்டிப்பாக தெரிந்து கொள்ள வேண்டும். ருத்ரதேவர் ,

நம் மூலகுருவான ஸ்ரீவாயுதேவரின் பிரதம (முதல்) சிஷ்யர் ஆவார். வாயுதேவரிடம் 40 கல்பங்கள் சிஷ்யராக இருந்து, மொத்த சாஸ்திரங்களையும் அத்தியயனம் செய்த மகானுபாவர் அவர். பிறகு மீண்டும் உப்புக் கடலில் 10 கல்ப தவம் செய்து, அதன் பலனாக பரமாத்மனின் படுக்கையான சேஷதேவரின் பதவியைப் பெற இருக்கிறார். பகவந்தனின் ஸ்பர்சம் ஆகவேண்டுமெனில், வாயுதேவரின் சாஸ்திரங்களை படிக்க வேண்டும். அதனுடன், தவமும் செய்ய வேண்டும்.

உபதேச லப்தவில்லத மந்த்ர
யேசு ஜெபிஸலு பலகள கொடதந்தே
உபவாஸ நேமங்களா இல்லதே

என்று ஸ்ரீபாதராயர் சொல்வதைப் போல, வெறும் உபவாச விரதங்களை செய்து பயன் இல்லை. நேம நிஷ்டைகளை செய்யவேண்டும். இதுவே நம் ஸ்ரீமத்வரின் சித்தாந்தம். இதையே ருத்ரர் செய்திருக்கிறார். அத்தகைய ருத்ரரை ஜகன்னாததாசர் வணங்கியிருக்கிறார்.

**பாக[1]ஷாசன முக்[2]ய ஸகல தி**
**வௌகசரிக[3]பி[3]னமிபெ ருஷிக[3]ளி**
**கே[3]கசித்ததி[3] பித்ருக[3]ளிகெ[3] க[3]ந்த[4]ர்வ க்ஷிதிபரிகெ[3] |**
**ஆ க[1]மலனாபா[4]தி[3] யதிக[3]ள**
**நீக[1]கானமிஸுவேனு பி[3]டதெ[3] ர**
**மா களத்ரன தா[3]ஸவர்க[3]க்கெ நமிபெனனவரத ||12**

பாகஷாஸன முக்ய சகல திவௌகஸரிகெ = தேவேந்திரன் முதலான அனைத்து தேவதைகளுக்கு
ஏக சித்ததி = ஒரு மனத்துடன் புத்தியை அவர்களிடமே வைத்து
அபினமிபெ = சாஷ்டாங்க நமஸ்காரத்தை செய்து
ருஷிகளிகெ = விஸ்வாமித்ர, மரீச்யாதி ரிஷிகளுக்கு
பித்ருகளிகெ = பித்ரு கணங்களுக்கும்
கந்தர்வ = தேவ கந்தர்வ, மனுஷ்ய கந்தர்வர்களுக்கு
க்ஷிதிபரிகெ = ப்ரியம்வ்ரத முதலான அரசர்களுக்கு
ஆ கமலனாபாதி யதிகள = (ஸ்ரீமன் மத்வாசார்யரின் சிஷ்யரான) பத்மனாப தீர்த்தரே முதலான யதிகளுக்கு
ஆனீககெ = குழுவிற்கு
ஆனமிசுவெனு = நன்றாக வணங்குவேன்

பிடதெ = யாரையும் விடாமல்
ரமாகளத்ரன = ஶ்ரீலட்சுமிதேவியையே மனைவியாகக் கொண்ட ஶ்ரீபரமாத்மனின்
தாச வர்கக்கெ = தாச சமூகத்திற்கு
அனவரத = என்றைக்கும்
நமிபெ = வணங்குவேன்

பாகசாசன என்றால் இந்திரன். இந்திரனே முதலான அனைத்து தேவதைகளையும் நான் வணங்குகிறேன் என்கிறார் தாசர். பின் , ரிஷிகளுக்கு, கந்தர்வர்களுக்கு, ராஜாதி ராஜர்களை வணங்கிவிட்டு , கமலனாபாதி யதிகள , அதாவது, ஶ்ரீபத்மனாப தீர்த்தரே முதலான அனைத்து யதி சமூகங்களுக்கும் வணக்கத்தை செலுத்துகிறார். எதற்கு? இவர்கள் அனைவரும் ரமாபதியின் தாசர்களின் கூட்டம். ஆகவே இவர்களுக்கு நமஸ்காரங்கள் என்கிறார்.

**ப$^{1}$ரிமளவு ஸுமனக3ளொளக$^{3}$னல**
**நரணியொளகி$^{3}$ப்பந்தெ தா$^{3}$மோ**
**த$^{3}$ரனு பிரம்மாதி$^{3}$க$^{3}$ள மனத$^{3}$லி தோரி தோரத$^{3}$லெ |**
**இருதிஹ ஜகன்னாத$^{2}$விட்டலன**
**கருண படெ$^{3}$வ முமுக்ஷு ஜீவரு**
**பரமபா$^{4}$க$^{3}$வதரனு கொண்டா$^{3}$டு$^{3}$வுது ப்ரதிதி$^{3}$னவு ||13**

தாம = வயிறு
தாமோதரன் = யசோதையால் கயிற்றால் கட்டப்பட்ட வயிற்றை உடையவன்
பிரம்மாதிகள = பிரம்மதேவரே முதலான அனைத்து தேவதைகளின்
மனதலி = மனதில்
சுமனதொளகெ = புஷ்பத்தில்
பரிமளவு = வாசனையானது வருவதைப் போல
தோரி = காட்டி
அரணியொளகெ = நெருப்பு மறைந்திருப்பதைப் போல
தோரதலெ = கண்ணுக்குத் தெரியாமல்
இருதிஹவு = இருக்கின்றது.
இந்தஹ ஜகன்னாதவிட்டலன = ஜகன்னாததாசரின் பிம்பரூபியான ஜகன்னாதவிட்டலனான பரமாத்மனின்

கருணபடெவ = கருணையைப் பெறவேண்டும் என்னும் விருப்பமுள்ள
முமுக்ஷுஜீவரு = மோட்சத்திற்கு யோக்யரான ஜீவர்கள் அனைவரும்
ப்ரதிதினவு = தினந்தோறும்
பரமபாகவதரன = பிரம்ம வாயு ஆகியோரில் துவங்கி மனுஷ்யோத்தமர் வரை , தாரதம்யத்தின்படி, இந்த சந்தியில் சொல்லப்பட்டிருக்கும் பரம பகவத் பக்தர்களை
கொண்டாடுவது = நமஸ்காராதிகளை செய்து ஸ்தோத்திரங்களால் கொண்டாட வேண்டும்.

பரமாத்மனை அறிவதற்கு இரு விஷயங்கள் தேவை. ஒன்று ஞானம். இன்னொன்று அனுபவம். பூவில் இருக்கும் நறுமணத்தை ஞானத்தினால் அறிவது போல பரமாத்மனையும் ஞானத்தினால் மட்டுமே அறிவதற்கு சாத்தியம். அந்த ஞானத்தை அடைந்து , பின் அனுசந்தானம் செய்வதால் பகவந்தனை அறியமுடியும் என்கிறார் தாசர். அப்படிப்பட்ட தாமோதரன் என்னும் கிருஷ்ணன் , பிரம்மாதி அனைத்து தேவதைகளுக்கும் , தோரி தோரதலெ , தெரிந்தும் தெரியாதவாறும் இருக்கிறான் என்று சொல்லி , ஜகன்னாததாசர் இந்த மங்களாசரண சந்தியை பாரதிரமண முக்யபிராணாந்தர்கத ஜகன்னாதவிட்டலனுக்கு சமர்ப்பணம் செய்கிறார்.

**** திரு.முரளிதரதாசர், பெங்களூரு**

# ஹரிதாச விஜயம்

## சந்தா விவரம் (36 பக்கங்கள்)

1 ஆண்டுக்கு ரூ.200/-
3 ஆண்டுகளுக்கு ரூ.500/-
5 ஆண்டுகளுக்கு ரூ.900/-
10 ஆண்டுகளுக்கு ரூ.1700/-

புதிய சந்தாக்கள் அந்தந்த மாதத்திலிருந்து துவங்கும். பழைய இதழ்கள் வேண்டுமெனில், இதழுக்கு ரூ.20/- என சேர்த்து அனுப்பவும்.

## வங்கி விபரம்:

Sathya Narayanan, ICICI Bank - Savings account

A/c. No. 000101043177. IFSC: ICIC0000001

Cenotaph Road Branch, Chennai 18

**Subscription Renewal**

ஹரிவாயுகுருகளின் ப்ரேரணையால், அவர்களாலேயே நடத்தப் படும் நமது ஹரிதாச விஜயம் பத்திரிக்கையின் 12வது இதழ் இது. பத்திரிக்கை துவக்கும் முன் & துவங்கிய மாதத்தில் ஓராண்டுக்கு சந்தா கட்டியவர்களுக்கு அதை புதுப்பிக்கும் நேரம் நெருங்கி வருவதால் ஒரு சிறிய நினைவூட்டல். உங்கள் சந்தா முடியும் மாதத்தை உங்களுக்கு அனுப்பிய Receiptல், அல்லது இந்த மாத 'To address' labelல் முதல் வரியில் பார்க்கலாம்.

கூடுதலாக சில பக்கங்களை சேர்க்க வேண்டும், மேலும் பல அரிய தகவல்களைக் கொடுக்க வேண்டும் என்று நினைக்கிறோம். அதற்கு உங்கள் அனைவரின் ஆதரவு இருந்தால் மட்டுமே சாத்தியம் என்பதால், உடனடியாக உங்கள் சந்தாவை புதுப்பிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம். நன்றி.

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா



நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

**"ஹரிதாச விஜயம்"**

சிரி நிலயன குணகள '**திளிது**' பஜிசுவுதே

மலர் : 1 இதழ் : 12


**நிர்வாக ஆசிரியர்**

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross,
JP Nagar 4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276. haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**

'தாச சாகித்ய சேவா ரத்ன'
திரு. குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**

திரு. முரளிதர தாசரு, திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா, திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

# ஆசிரியர் பக்கம்

மிகச்சிறந்த பர்வ காலமான 'அதிக மாசம்' வந்திருக்கிறது. பூஜை, பாராயணங்கள், தான, தர்மங்கள் என செய்து இந்த சமயத்தை நன்கு பயன்படுத்திக் கொள்ள முயல்வோம்.

புத்தக தானம் செய்யலாம் என்று சொன்னதற்கு சிலர் ஒப்புக்கொண்டு புத்தகங்களை வாங்கியிருக்கிறார்கள். அவர்களுக்கு நன்றி சொல்லிக் கொண்டு மற்றவர்களும், இந்த அதிக மாதம் மற்றும் அடுத்து வரும் நவராத்திரி சமயத்தில் புத்தக தானம் கொடுக்கலாம். அதற்காக புத்தகங்கள் 50% தள்ளுபடியில் கொடுக்கிறோம்.

ஹரிதாசர்களின் புண்ய தினங்கள் நிஜ மாதத்திலேயே வருவதால், அடுத்து வரும் ஸ்ரீபிராணேஷ தாசரின் புண்ய தினத்திற்காக ஒரு சிறப்புப் பதிவு இந்த இதழில் வந்திருக்கிறது.

செப்டம்பர்2020 மாதத்திற்கான ஹரிதாசர்களின் கேள்வி பதில் போட்டி விவரங்களுக்கு https://jagannaathakesava.blogspot.com பார்க்கவும். அனைவரும் இதிலும் பங்கேற்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள் ஆஸ்வீஜ மாதத்தில்

ஆஸ்வீஜ சுத்த த்விதியை - ஸ்ரீஆனந்தவிட்டல தாசர், லிங்கசுகூர்
ஆஸ். சுத்த த்ருதியை - ஸ்ரீவரதேஷ விட்டல தாசர், லிங்கசுகூர்
ஆஸ்வீஜ சுத்த சப்தமி - ஸ்ரீப்ராணேஷ தாசர், லிங்கசுகூர்
ஆஸ்வீஜ பகுள ப்ரதமை - ஸ்ரீகுருஜகன்னாத தாசர், கௌதளம்

தொடர்

## ஹரிதாசர்களின் வாழ்க்கை வரலாறு

## ஸ்ரீதவிட்டல தாசர்

### மறுபிறவி கிடைத்தது

மாலையில் தாசப்பனின் வீட்டில், ஸ்ரீஜகன்னாததாசரின் பஜனை மற்றும் பிரவசன நிகழ்ச்சிகள் துவங்கின. காலையில் இருந்த மக்கள் கூட்டத்தைவிட அதிகமான பேர், தாசரின் வாணியைக் கேட்க வந்திருந்தனர். வீட்டில் எஜமானனான தாசப்பனை, முதல் வரிசையில் அமருமாறு தாசர் கூறினார். குருகளின் சொல்லிற்கேற்ப ஸ்ரீபிராணேஷ தாசர், பஜனை நிகழ்ச்சியைத் துவக்கினார். பொதுவாக கணபதி ஸ்தோத்திரத்தின் மூலமாகவே நிகழ்ச்சியை துவக்குவது வழக்கம். ஆனால், குருகளின் மனதை அறிந்திருந்த ஸ்ரீபிராணேஷ தாசர், அந்த வழக்கத்தை சற்று மாற்றியவாறு, எதிரில் அமர்ந்திருந்த தாசப்பனை பார்த்தவாறு, தனது ஆசுகவித்வத்தால் கீழ்க்கண்ட பாடலை இயற்றிப் பாடினார்.

ஆத$^3$த்தா$^3$யித்தின்னாத$^3$ரு ஒள்ளே ஹாதி$^3$ ஹிடி$^3$யோ ப்ராணி ||ப
ஈ து$^3$ர்நட$^3$திம் ஹோத$^3$ரிஹபரதீ$^3$
மோதெ$^3$ந்தி$^3$கு$^3$ காணே ப்ராணீ || அப

நெல ஸதி$^1$ த$^4$னதொ$^3$ளனவரத ஹுளாகி$^3$ருவியல்லோ
ஸ்த$^2$ளா ஸ்த$^2$ளரியதே$^3$ கலாப மாட்$^3$யக$^4$ கூளாகு$^3$வுது$^3$ ஸல்லோ
ஹலா பிடி$^3$து$^3$ குலாசரணெ பி$^3$டெ$^3$ ப$^1$லா தெகெ$^3$வரல்லோ
எலாகேளு ஒந்து$^3$ தி$^1$லா மாத்ர நீ கெ$^3$லாஹ ப$^3$கெ$^3$யில்லோ ப்ராணி||1

ஷிலாதி$^3$ விக்$^3$ரஹ ப$^2$ளாஸி ஹரி எந்தெம்பெ$^3$லா கேவல ஸுள்ளோ
சலா ப்ரதிமெக$^3$ள பதா$^3$க$^3$ளர்ச்சிஸத$^3$லே மலா க$^4$ளிஸித்$^3$யெல்லோ
களா பி$^3$ட$^3$தி$^3$ரெ அனிலான ஹரிமனே மொளாகி$^3$ருவுத$^3$ல்லோ
நளாப$^4$ரத முக$^2$ இளாண்மரந்த$^3$தி$^3$ ப$^4$லா எனனிஸிகொள்ளோ ப்ராணி||2

பி$^3$லா ஸேரி தலெ கெளாகி$^3$ ஜபிஸலு ப$^2$லா லேஷத்தில்லோ
க$^2$ளாரி தி$^3$ன பி$^3$ந்து$^3$ ஜலா கொள்ளெனெந்து$^3$ ச$^2$லா மாட$^3$லில்லோ
ப$^3$லாத$^3$ரலிந்துலாதி$^3$ ஸ்னான மொத$^3$லாத$^3$ வ்ரதக$^3$ளெல்லோ
ப$^3$லாரினுத ப்ராணேஷவிட்டலன ப$^3$லா க$^3$ளிஸிகொள்ளோ ப்ராணி ||3

ஞானிவரேண்யரான ஸ்ரீபிராணேஷ தாசர் பாடிய இந்த பதத்தினை தாசப்ப மிகவும் கவனமாகக் கேட்டார். தாசர் தன்னைக் குறித்தே

பாடியதாகவும், இந்த பதத்தில் இருக்கும் ஒவ்வொரு சொல்லும் குண்டூசியைப் போல தன்னைக் குத்துவதாக அவருக்குத் தோன்றியது. சேற்றில் புரளும் பன்றியைப் போல எப்போதும் போகத்தில் விழுந்து கிடக்கும் தன் மேல் அவருக்கு அவமானம் உண்டாயிற்று. தான் யார், தான் இங்கு வந்திருப்பது எதற்கு, இப்போது செய்து கொண்டிருப்பது என்ன? என்று அவரது மனம் கேட்டது. ஆயிரம் தேள்கள் ஒருசேர அவரைக் கடித்ததைப் போல ஆயிற்று. ஆத்ம விமரிசனத்தை செய்து கொண்ட அவர், நொடிப்பொழுதில் அதிகமான விரக்தியை அடைந்தார்.

காலையில் தாசர் செய்த பூஜையைக் கண்ட அவரது கண்கள் புனிதர் ஆகியிருந்தன. தீர்த்த, பிரசாதங்களால் தேக இந்திரியங்கள் பவித்ரம் ஆகியிருந்தன. தற்போது ஸ்ரீபிராணேஷ தாசரின் மர்மம் பொதிந்த பாடல், ஈட்டியைப் போல நேராக அவரது இதயத்தையே குத்தியது.

ஜக3தொ3டெ3ய ப்ராணேஷதா3சரு அந்து3 இவரல்லிகெ3 ப3ந்து3
ப3கெ3ப3கெ3யிந்த3லெ ஆத3த்தா3யிது எனலு நெனபிகெ3 ப3ரலு

என்று ஸ்ரீவரதவிட்டல தாசர் கூறுவதைப் போல, தாசப்பனுக்கு அவரது முற்பிறவி மற்றும் தற்போது வந்திருப்பதன் நோக்கம் ஆகியவை புரிந்தன. துர்மார்க்கத்தைப் பின்பற்றியவராக இருந்தாலும், ஹரிதாசர்களின் வசனங்கள், இந்த யோக்யஜீவியின் மனதை மாற்றி, அவரின் வாழ்க்கையையே எப்படி மாற்றின என்பதற்கு இந்த சிறிய சம்பவமே சாட்சியாகும்.

தாசப்ப, பிராணேஷ தாசரின் பதங்களைக் கேட்டு சுய பச்சாதபத்துடன் கண்ணீர் விடத் தொடங்கினார். அருகில் அமர்ந்திருந்த அவரது மனைவி குண்டம்மா, தன் கணவன் அழுது கொண்டிருப்பதைக் கண்டு வியந்தாள். இவ்வளவு நாட்களாக அவர் மற்றவர்களை துன்புறுத்தி அழ வைத்தாரே தவிர, அவர் அழுது அவள் பார்த்தவள் அல்ல. இவை அனைத்தும், வீட்டிற்கு வந்திருக்கும் மகானுபாவர் களாலேயே ஆகிறது என்று அவள் திடமாக நம்பினாள். அடுத்து வரப்போகும் மங்கல நாட்களை நினைத்து அவள் மேலும் மகிழ்ச்சியடைந்தாள்.

ஸ்ரீபிராணேஷதாசர் இவ்வாறு சில பதங்களைப் பாடிய பிறகு, ஸ்ரீஜகன்னாததாசரின் பிரவசனம் தொடங்கிற்று. ஸ்ரீதாசர், பாகவதத்தின் அனேக சம்பவங்களை உதாரணமாகக் கொடுத்து, பக்தியின் சக்தியை மற்றும் ஸ்ரீஹரியின் காருண்யத்தை, மிகவும் சுவாரசியமாக விளக்கிக் கொண்டு வந்தார். தாமே இயற்றிய 'சிரி ரமண தவ சரண தொரகுவுது ஹ்யாங்கின்னு பரம பாபிஷ்ட நானு' என்னும் பதத்தையும் பாடி அதன் விளக்கத்தைக் கூறினார்.

ஸிரிரமண தவசரண தொ3ரகுவுது3 ஹ்யாங்கி3ன்னு பரமபாபிஷ்டநானு
நரஹரியே நிம்ம நாமஸ்மரணெ மாட3தெ3 நரகக்கெ கு3ரியாதெ3னோ ஹரியே ||அப

கெரெபா3வி தே3வாலயவ கெடி3ஸி தி3வ்ய ஹிரிதா3த3 மனெ கட்டிதெ3
நெரெ நடெ3வ மார்க்க3தொ3ளு அரவட்டெகெக3ளன்னு த4ரத4ரதி3 பி3ச்சிதெகெ3தெ3
பரம ஸம்ப்4ரமதி3ந்த3 அரளியா மரகடி3ஸி கொரெஸிபா3கி3ல மாடி3தெ3
வர மந்தி3ரவ முகி3ஸி ஹருஷ சித்ரவ ப3ரெஸி பரிபரிய ஸுக2 ஸுரிதெ3 மெரெதெ3 ||1

ஹொஸமனெய கண்டு3 ப3லு ஹஸிது3 பூ4ஸுரரு ப3ரெ கொஸரி ஹாகுத த3ப்பு3தா
ஷஷிமுகி2யெ பா3ரெந்து3 அஸமஸதி3 ப3ண்ணிஸி வஷவாகி3 அவளொலிஸுத
த3ஷமி ஏகாத3சி த்3வாத3சி தி3னத்ரயதி3 அஷனவெரட் ஹொத்துண்ணுத
க4ஸக4ஸனெ தாம்பூ3ல பஷுவினந்த3தி3 மெத்3து3 குஸும க3ந்தி4ய ரமிஸுத ஸதத ||2

ஸ்னானஸந்த்3யா ஜபதபாதி3க3ளனெ மாடி3 பா4னுக3ர்க்4யவனு கொட3தெ3
ஸ்ரீனிவாஸா நின்ன ஞானபூர்வக பூஜெ நானொந்து3 க்ஷண மாட3தெ3
ஜீனத்வத3ல்லி து3ட்3ட3 தா3ன த4ர்மவ கொட3தெ3 ஷ்வானனந்த3தி3 சரிஸி3தெ3
பே3னெ ப3ந்த3ரிதா1கெ3 ஹீன ஸகேஷி கை நானா விதா4ன்ன திந்தே3 நொந்தே3 ||3

ஸாகல்யதி3ந்த3 ஸாலிக்3ராமத3பி4ஷேக ஆகள்ஹாலலி மாட3தே3

நால்கெண்டு நாயிக3ள ஸாகெ மனெயலி பது3க பே3கெந்து ஹாலஹொய்தெ3
காகு பு3த்தி3க3ளிந்த3 கு3டி3கு3டி3 நஷ்வபுடி3 ஹாகி ப4ங்கி3ய ஸேதி3தெ3
லோகனிந்த3கனாகி3 பாபக்கெ கைஹச்சி அனேக ஜூஜுக3ளாடி3தே3 பி3ட3தே3 ||4

உத்தமபி3ராமணர வ்ருத்தியனெகஸிது3 பி3ரம்மத்வகாரனு எனிஸிதெ3
மத்தெ முஞ்சிமது3வெ ஸமயக்கெ நாபோகி3 ஸத்தஸூத்3தி3ய பேளிதே3
வித்தவித்தவர பெ3ன்ஹத்தி தூ3தர களுஹி குத்திகெ3ய நா கொய்ஸிதே3
ஹத்து ஜனரென்ஹணகெ நித்ய கல்லொடெ3யுதிரெ ம்ருத்யு தே3வதெயெனிஸிதே3 பி3ட3தே3 ||5

பா3த3ராயண க்ருத பா4க3வத ஓது3வுத3 காத3ரவு புட்டலில்ல
வாதி3க3ள மதவளிது3 மத்4வஸித்தா3ந்தத3 ஹாதி3கெ3 ஹோக3லில்ல
ஷோதி4ஸித3 சின்னக்கெ ஸமனாத3 வைஷ்ணவர பாத3க்கெ பீ3ளலில்ல
வேத3 பா3ஹிரனாகி3 அபஸவ்ய மனனாகி3 ஓதி3கொண்டெ3னோ இவெல்ல ஸுள்ள ||6

க்ஷிதியொளகெ3 இன்னாரு ஹிதவ ப3யஸுவரெனகெ3 க3தியேனோ கேளோ கொனெகெ3
ஸதத தவ த்4யானத3லி ரதனாகி இருவ ஸன்மதிய பாலிஸய்யா
பதித பாவனனெம்ப3 பி3ரிது அவனிய மேலே ஸ்ருதியு ஸாருதிதெ3 ஹீகே3
ஷிதகண்ட2னுத ஜகன்னாத2விட்ட2ல நின்ன துதிஸி மொரெ ஹொக்கெ ஹரியே தொ3ரெயே ||7

மாதரிஷ்வப்ரிய ஸுரேதராந்தகனே புரு
ஹூதனந்த3ன ஸக2 நிராதங்கதி3 |
நீ தோரு மனதி3 ஸம்ப்ரீதியிந்த3லி ஒலிது3
ஹோதாஹ்வய ஜகன்னாத2விட்ட2ல ப3ந்து4 ||8

*** **தொடரும்...**

## தொடர் ஹ  சார குறுக்கெழுத்துப் போட்டி
## விபூதி சந்தி - விடைகள்

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| [1]பு | [29]த | ரு | | [2]ஸ் | வோ | த் | த | ம | [30]ரு | | | [31]க | | |
| | ரு | [21]ஊ | | வ | | | | ய | த் | ப | [3]அ | ரி | [32]க | ள் |
| | ணி | | | [4]ப | க்ஷ | | | | ஷா | | | வ | வா | |
| | | | | ர | | | | [5]த | ர் | வி | | ர | ட | |
| | [33]அ | | | ஜ | | | | | த | [22]வா | | வா | | |
| [6]அ | ம் | ப | க | ன | | | | [7]தே | னு | | | ள | | |
| | பு | [39]தா | வ | | | | | | | | | [40]த | | |
| | ஜ | | ப | | | | | | [34]பி | | | | | |
| | | ன | ஜ | ஜ் | [23]ம | | | [8]அ | ப் | யா | க | த | ர் | |
| | | [9]சு | ப் | [35]ப | த் | தி | | | ப | | | [10]ப | தா | தி |
| | | | [39]அ | ஸா | | ன | [24]இ | | ல | | | ரா | | |
| | | ள | | ரு | | [11]வ | ஸ | ன | | | | [41]தா | | |
| | ம் | த | ந் | [25]க | | | [42]பே | | | | | | | |
| | | ந் | | ளு | | | | [12]வி | தா | த | | | | |
| | | [13]பா | ர் | வ | தி | | | த் | | [14]ர | ஸ | ம் | | |
| | ன் | யு | | | | | | [15]த | ர் | ம | | | | [36]ய |
| [16]தி | த | வா | ம | ன | ன் | | [37]1 | | | [43]சா | | | | ஜ |
| | ம | ஹ | | | | | 6 | | [38]2 | | | | | மா |
| ண | ன் | வ | [26]ரு | | [17]5 | 2 | 1 | 1 | 4 | | [18]கா | ஞ் | ச | ன |
| | [44]ம | ர | | | [19]5 | 1 | 3 | | | | ய | | | |
| | தி | [45]ப் | [27]அ | [20]5 | 3 | 1 | 7 | | | | க | வ | [28]பா | |
| | | | | | 5 | | | | | | | | | |

விபூதி சந்தி குறுக்கெழுத்துப் போட்டிக்கு விடை எழுதி புத்தகப் பரிசு பெறுபவர்கள்: திருமதி. சாந்தி பத்மனாபன், திருநெல்வேலி, திருமதி. பானுமதி, திருநெல்வேலி, திருமதி. ப்ரேமா குருராஜன், பொள்ளாச்சி, திரு.சேதுமாதவன், கோயமுத்தூர்

தொடர்

## கேசவ நாமா

## **ஸ்ரீமகாலட்சுமி by ஸ்ரீபுரந்தரதாசர்**

ஸ்ரீமகாலட்சுமிய அலங்கரிஸி கரெதரு ஹஸெகெ ||ப||

'க்ஷீராப்தி கன்னிகே ஸ்ரீமஹாலட்சுமி யாரிகே வதுவாகுவே' என்னும் கிருதியில், புரந்தரதாசர், மகாலட்சுமியை யாரை திருமணம் செய்துகொள்வாய்? என்று கேட்டு, ஒரு பெரிய வர-பட்டியலையே கொடுக்கிறார். ராமேஸ்வரத்தின் ராமசந்திரன், அனந்தசயனத்தின் அனந்தபத்பனாபன், ஸ்ரீரங்கபட்டிணத்தின் ரங்கனாதன், பேலூரின் சென்னகேசவன், உடுப்பியின் ஸ்ரீகிருஷ்ணன், பண்டரிபுரத்தின் பாண்டுரங்கன், பதரியின் நாராயணன், காசியின் பிந்துமாதவன், புரி ஜகன்னாதன், திருப்பதியின் ஸ்ரீனிவாசன், காஞ்சியின் வரதராஜன், ஸ்ரீமுஷ்ணத்தின் வராகன், அளகிரியின் அளகிரீஷன், கும்பகோணத்தின் சாரங்கபாணி, மன்னூரின் ராஜகோபாலன், ஜனார்த்தன மூர்த்தியான புரந்தரவிட்டலன் - என இந்த பட்டியலில் இருக்கும் எந்த வரனை திருமணம் செய்து கொள்வாய் என்று தாசர் கேட்கிறார்.

'ஸ்ரீமகாலட்சுமிய அலங்கரிஸி கரெதரு ஹஸெகெ' என்னும் பாடலில் லட்சுமியை வதுவாக கொண்டிருக்கும் ஸ்ரீஹரியின் கேசவ நாமாவின் 24 ரூபங்களை, அவளின் ஆபரணங்களுக்கு ஒப்பிட்டு பாடுகிறார். ஆபரணங்களே லட்சுமி ரூபங்களான காரணத்தால், அவற்றை அணிந்த லட்சுமிதேவியில் கேசவ நாமங்களை பொருத்தி, அந்த நாமங்களின் மகிமைகளை சொல்கிறார்.

கேசவ நிம்ம நாம | மாங்கல்ய சூத்ரதா$^{1}$ளி
நாராயண நிம்ம நாம | தா$^{1}$ளி பத$^{3}$க$^{1}$வு
மாத$^{4}$வ நிம்ம நாம | சுரகி$^{3}$ ஸம்பிகெ$^{3}$ மொக்கு$^{3}$
கோ$^{3}$விந்த நிம்ம நாம | கோ$^{3}$தி$^{4}$ய ஸரவு ||1

விஷ்ணுவே நிம்ம நாம | ரத்ன குண்டலிகளு
மது$^{4}$சூதன நிம்ம நாம | மாணிக்யத ஹரளு

த்ரிவிக்ரம நிம்ம நாம । வங்கி[1] நாக[3]முரிகெ[3]
வாமன நிம்ம நாம । ஒலெயு ஏகா[1]வளியு ||2

ஶ்ரீத[4]ர நிம்ம நாம । ஒள்ளெ முத்தினஹார
ஹ்ருஷிகேச நிம்ம நாம । உடிகெ[3]ஜ்ஜெயு
பத்பனாப[4] நிம்ம நாம । முத்தின அட்டி[3]கெ[3]யு
தாமோத[3]ர நிம்ம நாம । ரத்னபத[3]க[1]வு ||3

சங்கர்ஷண நிம்ம நாம । வங்கி[1] தோளாயிது[1]
வாசுதேவ நிம்ம நாம । வலித[3] சூடா[3]மணி
பிரத்யும்ன நிம்ம நாம । ஹஸ்த கங்கண ப[3]ளெ
அனிருத்த நிம்ம நாம । முக[2]ர பு[3]லாகு ||4

புருஷோத்தம நிம்ம நாம । முத்தின மூகு[3]தி
அதோக்ஷஜ நிம்ம நாம । சந்திர சூர்ய
நாரசிம்ம நிம்ம நாம । சௌரி ராக[3]டி[1] கொ[3]ண்டெ[3]
அச்யுத நிம்ம நாம । முத்தின ப[3]ட்ட[1]லு ||5

ஜனார்த்தன நிம்ம நாம । ஜரிய பீதாம்ப[3]ர
உபேந்திர நிம்ம நாம । க[1]ட[3]க[3] கெ[3]ஜ்ஜெயு
ஶ்ரீஹரி நிம்ம நாம । கஞ்சுக வங்கி[1]ய துளஸி
ஶ்ரீகிருஷ்ண நிம்ம நாம । நடுவின ஒட்[3]யாண ||6

சரசிஜாக்ஷ நிம்ம நாம । அரிஷின எண்ணெய ஹெச்செ
பங்கஜாக்ஷ நிம்ம நாம । குங்கும காடி[3]கெ[3]யு
நிலுவுக[3]ன்னடியலி । லட்சுமிய தோரிஸுதா
புரந்தரவிட்டல நாம । சர்வாப[4]ரணவு ||7

சரஸிஜாக்ஷனின் நாமமானது மகாலட்சுமிக்கு மஞ்சள் மற்றும் நறுமணமுள்ள சந்தனம், பங்கஜாக்ஷனின் நாமமானது குங்குமம் மற்றும் கண்-மை. மகாலட்சுமியை மிகச்சிறந்த ஆபரணங்களால் அலங்கரித்து, நிலைக்கண்ணாடியின் முன் நிறுத்தி, அவளின் அலங்கரிக்கப்பட்ட பிரதிபிம்பத்தைக் தாசர் இங்கு காட்டுகிறார். இந்த அனைத்து ஆபரணங்களைவிட பிம்பமூர்த்தியான புரந்தரவிட்டலனின் நாமமே சர்வாபரணம் என்கிறார் தாசர்.

சுமங்கலிகள் கட்டாயமாக தரிக்க வேண்டிய ஆபரணங்கள் ஐந்து. அவை, தாலி, கை வளை, மூக்குத்தி, தோடு மற்றும் மெட்டி. தாலிக்கயிற்றில் பகவந்தனின் சன்னிதானம், தாலியில் மகாலட்சுமியின் சன்னிதானம், மணிச்சரங்களில் பிரம்ம வாயுகளின் சன்னிதானம், கருமணியில் கோடானுகோடி தேவதைகளின் சன்னிதானம், குங்குமத்தில் ரமா சன்னிதானம், மூக்குத்தியில் பாரதிதேவியின் சன்னிதானம், தோடுகளில் ரமா சன்னிதானம், வளையல்களில் துர்கா (ரமா) சன்னிதானம்) இருக்கின்றன. ஆபரணங்களில் லட்சுமியாத்மகனாக பரமாத்மன் இருக்கிறான் என்னும் செய்தியை இந்த கேசவ நாமத்தின் மூலம் சொல்கிறார் தாசர்.

*** அடுத்த இதழில் அடுத்த பாடல் தொடரும் ***

**** திருமதி. ஜெயம்மா, பெங்களூரு**

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

**தத்வ சுவ்வாலிகள் - By வாணிஸ்ரீ கிரீஷ**

தாச சதுஷ்டயர்களில் ஒருவரான ஸ்ரீஜகன்னாததாசரின் தத்வசுவ்வாலிகள் நாட்டுப்புற பண்ணில், த்ரிபதி நுடியில் இருக்கின்றன. தத்வ என்றால் முக்காலத்திலும் உண்மையான, சித்தாந்தத்தை பிரதிபலிக்கும்; சுவ்வாலி என்றால் வசனங்களின் தொகுப்பு என்று சொல்லலாம். தத்வ போதனையே இதன் நோக்கம். தத்வசுவ்வாலிகளை தன் மருமகளின் நலனுக்காக, நிம்மதிக்காக தாசர் இயற்றினார் என்று சொல்வதுண்டு.

தத்வசுவ்வாலிகளில் 13 ஸ்தோத்திரங்கள் இருக்கின்றன. விநாயக, வெங்கடேச, கிருஷ்ண, தசாவதார, பிரம்ம, வாயு, ருத்ர, அக்னி, நவக்கிரக மற்றும் தத்வ பிரசாரம் ஆகிய ஸ்தோத்திரங்களை இதில் இயற்றியிருக்கிறார். ஹரிதாசர் தத்வசுவ்வாலியில் முதலில் விக்னங்களை களைபவனான கணபதியை துதிக்கின்றனர். ஜகன்னாததாசர் கணபதியை ஐந்து சுவ்வாலிகளில் பாடியிருக்கிறார்.

அம்பிகா தனய, பூதகராதிப, ககுபீஷ, கஜவக்த்ர, ஷண்முகானுஜ என்றெல்லாம் கணபதியை வர்ணித்திருக்கிறார் தாசர்.

**ஸ்ரீ வெங்கடேச ஸ்தோத்திரம்**

திருப்பதியின் வெங்கடரமணனைக் குறித்து தாசர் 170 தத்வசுவ்வாலிகளை இயற்றியிருக்கிறார். அவரின் ஆழமான பக்தி இவற்றில் நன்கு தெரிகிறது. தாசரின் சரணாகதி, ஆத்ம நிவேதனம், ஹரியின் கருணை, ஹரியின் குணங்கள், மகிமைகள், அதனைக் கண்ட தாசரின் நற்சிந்தனைகள் ஆகிய விஷயங்களை இந்த தத்வசுவ்வாலிகளில் காணலாம்.

ஏஸேஸு ஜன்மதலி தாஸ நா நினகய்யா
ஈஷ நீனெம்போ நுடிஸித்த | நுடிஸித்தவாகிரலு
தாஸீன மாடோதுசிதல்ல

என்னும் தாசரின் சரணாகதிக்கு, கருணாமயியான ஸ்ரீஹரி கருணை காட்டாமல் இருப்பது சாத்தியமா? அவனின் தரிசனத்தைப் பெற்ற தாசர்:

தந்தெ மக்களனு மொரெவந்ததலி ஸ்ரீகாந்த
எந்தெந்து தன்ன பகுதர | பகுதர ஸலஹுவ
ஸந்தேஹவ்யாகோ நினகின்னு

என்று கேட்டு ஹரியின் கருணையின் மகிமையை தெரிவிக்கிறார். அப்படியே:

அச்யுதனெ நின்னந்த ஹுச்சு தொரெயனு காணெ
கச்சி பைதொத்த பகுதர | பகுதரபராதகள
துச்சகைதவர ஸலுஹிதெ

பழத்தைக் கடித்து எச்சில் செய்த சபரி, திட்டிய சிசுபாலன், எட்டி உதைத்த ப்ருகு ரிஷி என இவர்கள் அனைவரின் தவறினையும் கவனத்தில் கொள்ளாமல் அவர்களைக் காப்பாற்றிய ஹரியின் பக்தவாத்ஸல்யத்தை கொண்டாடுகிறார் தாசர்.

அனுசந்தானத்துடனான பூஜை, ஞானத்துடனான செயல்களை செய்தல், இவற்றின் மகத்துவத்தை மற்றும் ஸ்ரீஹரியின் நற்குணங்களை வர்ணித்தவாறு இருக்கு பிரார்த்தனை துதிகள் இவை.

**ஸ்ரீகிருஷ்ண லீலைகள்:**

ஸ்ரீகிருஷ்ணனைக் குறித்து தாசர் 44 சுவ்வாலிகளை இயற்றியிருக்கிறார். ஸ்ரீகிருஷ்ணன் பால்யத்திலிருந்து செய்து காட்டிய லீலைகளை தாசர் இங்கு பாடியிருக்கிறார். பல அசுரர்களைக் கொன்றது, சத்யபாமாவுக்காக பாரிஜாதத்தைக் கொண்டு வந்தது,

குப்ஜெயைக் காப்பாற்றியது, பக்தர்களின் கஷ்டங்களை தீர்க்கும் கருணை குணம், ஸ்ரீஹரி ஸ்மரணையின் மகிமை, ஏகாதசியின் மகத்துவம் ஆகியவற்றை இங்கு பாடியிருக்கிறார்.

தசாவதாரங்களைக் குறித்து ஜகன்னாததாசர் 11 தத்வசுவ்வாலிகளை இயற்றியிருக்கிறார். தர்மத்தை நிலைநாட்டுவதற்காக ஸ்ரீஹரி அவ்வப்போது எடுத்த அவதாரங்களைக் குறித்து பாடியிருக்கிறார்.

ஸ்ரீ-பூ-துர்கா என்னும் ரூபங்களால் ஸ்ரீலட்சுமிதேவி செய்யும் உலக காரியங்களை நமக்குத் தெரிவிக்கிறார். நித்யவியோகினியான லட்சுமிதேவி, ஸ்ரீஹரியை எப்போதும் பிரிவதில்லை. லட்சுமியின் சக்தி, குண ரூபங்களை வர்ணித்து, அவள் ஸ்ரீஹரிக்கு சேவை செய்யும் விதத்தை இவ்வாறு சொல்கிறார்.

ஆனந்தமய ஹரிகெ நானாபரணவாதெ
பானீயவாதெ படவாதெ | படவாதெ பங்கஜ
பாணி நீனெமகெ தயவாகெ

என்றவாறு, தன்மேல் கருணை காட்டுமாறு லட்சுமிதேவியை வேண்டுகிறார் தாசர்.

**ஸ்ரீருக்மிணி விலாஸ:**

19 நுடிகளில் இந்த விஷயத்தை சொல்லியிருக்கிறார் தாசர். ஸ்ரீகிருஷ்ணன் மற்றும் ருக்மிணியின் நடுவில் நடக்கும் பேச்சினைப் போல இருக்கிறது இந்த சுவ்வாலிகள். ஸ்ரீகிருஷ்ணன் ஒரு முறை ருக்மிணியிடம் கேலி பேசி விளையாடுகிறான்.

ஹே ராஜகன்னிகெ பூரமண நானல்ல
வாரிதியொளகித்து பதுகுவ | பதுகுவகெ மருளாதெ

நாரதன நுடிகெ நளினாக்ஷி

சிசுபாலன் முதலான அரசர்களை விட்டு, இடையனான என்னை ஏன் மணம் செய்தாய்? என்றபோது:

ஈ மாத கேளி கை சாதுரவனீடாடி
பூமிகொரகிதளு புகிலெந்து | புகிலெந்து மலகிதா
காமினிய கண்ட கமலாக்ஷ

ஸ்ரீகிருஷ்ணனின் பேச்சைக் கேட்டு மூர்ச்சையடைந்து விழுந்த ருக்மிணியை எழுப்பி, சமாதானம் செய்தார் ஸ்ரீகிருஷ்ணன்.

பரிபூர்ணகாம நின்னரஸி நானஹுது ஸ்வீ
கரிஸிதெயோ என்ன ஸதியெந்து | ஸதியெந்தாகாரணா
க்ஷரளெனிஸிகொண்டெ ஸ்ருதியிந்த

என்கிறாள் ருக்மிணி. ஸ்ரீகிருஷ்ணனின் நற்குணங்களையும், அவன் மூலமாக தான் பெற்ற உத்தம ஸ்தானத்தையும் கூறுகிறாள். இந்த ஸ்தோத்திரத்தைப் படித்தால் கிடைக்கும் பலன்களை தாசர் இறுதியில் கூறுகிறார்.

**<u>பிரம்மதேவரின் ஸ்தோத்திரம்:</u>**

ஹரிதாச சாகித்யத்தில் பிரம்மதேவரைக் குறித்தான ஸ்தோத்திரங்கள் மிகக் குறைவு. பிரம்மன் ஸ்ரீஹரியின் நாபிகமலத்திலிருந்து பிறந்தவர். பிரம்மன் 'ஹிரண்யகர்ப்ப' என்னும் பதவியை அடைந்ததைக் குறித்து தாசர் இவ்வாறு பாடியிருக்கிறார்.

த்விஷத கல்பதலி தபவெஸகி ஆஸுதேவ பொம்
பஸிர பத படெதெ ஹரியிந்த | ஹரியிந்த மிக்க ஸூம
நஸரிகுண்டேனோ ஈ பாக்ய

அஞ்ஞானம் என்னும் தானியத்தை உரலில் போட்டு, சுக்ஞானம் என்னும் உலக்கையால் அதை குத்தி, நற்பலன்களைக் கொடுக்குமாறு பிரார்த்திக்கிறார்.

**<u>வாயுதேவரின் ஸ்தோத்திரம்:</u>**

முக்யபிராண, மாதரிஷ்வ, மருத, அனிலதேவ என்று பல பெயர்களில் வாயுதேவர் அழைக்கப்படுகிறார். ஹரிதாசர்களுக்கு வாயுதேவரே

முக்ய குருகள். வாயுதேவரின் அவதார த்ரயங்களை ஹரிதாசர்கள் பல்வேறு விதங்களில் வர்ணித்துப் பாடியிருக்கின்றனர். அதிலும், மத்வாசார்யர் ஹரிதாசர்களின் குருகள் ஆவார். அவரின் தத்வங்களே தாச சாகித்யத்தின் அடித்தளம். 47 சுவ்வாலிகளில் வாயுதேவரை பாடியிருக்கிறார் ஜகன்னாததாசர். வாயுதேவரை எந்தவித தோஷங்களும் அண்டாது என்பதை இவ்வாறு சொல்கிறார்.

ஆகணாஷ்மனெ நின்ன ஸோகலரியவு தோஷ
ஶ்ரீகண்டமுக்யசுரரிகெ | சுரரிகில்லவு பார
தீகாந்த நினகெ பஹதெந்தோ

வாயுதேவரைப் பாடுபவர்களுக்கு கிடைக்கும் பலன்களை இவ்வாறு சொல்கிறார்.

வாயுஹனுமத்பீமராய மத்வர ஸ்தோத்திர
பாயொளுள்ளவகெ ஜன்மாதி | ஜன்மாதி ரோகபய
வீயனெந்தெந்து பகவந்த

அவரை நினைப்பதால் மட்டுமே பயம் விலகிப் போகிறது என்கிறார்.

பாரதீரமண மத்பார நின்னது என்ன
பார தோஷகள எணிஸதெ | எணிஸதெ சந்தெயிஸு
காருண்ய ஸிந்து எந்தெந்து
என்று வேண்டி,
புத்திபல கீர்த்தி பரிசுத்த பக்தி ஞான
ஸத்தைர்யாஜாட்ய ஆயுஷ்ய | ஆயுஷ்ய வித்தபி
வ்ருத்தியைதிஸுவி பவமான

என்று சொல்லி, ஹனுமந்தனின் ஸ்மரணை ஒன்றால் மட்டுமே கிடைக்கும் பலன்களை சொல்கிறார். ஹனும, பீம, மத்வர்களின் சாதனைகளை இந்த சுவ்வாலிகளில் அருமையாக விளக்கியிருக்கிறார் தாசர்.

**தத்வங்களை விளக்குதல்:**

ஜகன்னாததாசர், சம்ஸ்கிருதம் மற்றும் த்வைத சித்தாந்தங்களில் மிகச்சிறந்த பண்டிதராக இருந்தார். த்வைத சித்தாந்தத்தை

நிறுவுவதற்கும், பிற மதங்களைக் கண்டிப்பதற்கும், அனைத்து ஹரிதாசர்களைப் போல ஜகன்னாததாசரும் பாடியிருக்கிறார். மாயாவாதிகளிடம் அவர்களது விஷயங்களைப் பற்றி இவ்வாறு கேள்வி கேகிறார்.

ஷிவனு நீனாதரெ ஷிவராணி நினகேனோ
அவிவேகி மனுஜ ஈ மாது |ஈ மாது கேளிதரெ
கவிஜனரு நகரே கை ஹொடெது

என்கிறார்.

நின்ன நா பைதரெ என்ன நீ பையலு
நிர்மூலவாய்து அத்வைத |அத்வைதவுளுஹலிகெ
சும்மனிரபேகோ எலோ ப்ராந்த

என்று அத்வைதவாதிகளுக்கு உபதேசிக்கிறார்.

பல்வேறு உவமைகளைக் கொடுப்பதன் மூலம் த்வைத மதத்தின் சிறப்புகளை நிரூபிக்கிறார் தாசர்.

ஈஷத்வவெம்புது ஸ்ரீஷகல்லதெ ஜீவ
ராஷிகளிகுண்டெ ஈ ஷக்தி |ஈ ஷக்தி ஸத்யகுண
ஈஷ பிட்டிஹனெ ஜகதொளு

ஜகன்னாதவிட்டலனே ஸ்வாமி, உலகத்தின் தலைவன் என்றும் மற்றவர்கள் அனைவரும் அவனின் தாசர்களே என்னும் தத்வத்தை விளக்கியிருக்கிறார் தாசர்.

தாச சாகித்யமானது நம் வாழ்க்கையில் நம்பிக்கையை, சிரத்தையை கொடுத்திருக்கிறது. இதிலிருந்து நல்ல ஞானமும் வருகிறது. ஹரிதாசர்கள் தம் வாழ்க்கையையே கீர்த்தனைகளாகப் பாடி, அதுபோலவே வாழ்ந்து சாகித்யங்களை இயற்றியிருக்கிறார். தம் சாகித்யங்களின் மூலம் சமூகத்தில் இருக்கும் அழுக்குகளைக் களைந்து புனிதமாக்கியிருக்கின்றனர். சாகித்ய சங்கீதங்களின் மூலம் சமூகத்தை மேம்படுத்தும் வேலையை செய்திருக்கின்றனர். ஜகன்னாததாசரின் தத்வசுவ்வாலிகள் மனதுக்கு நிம்மதியை, ஆன்மிக அமைதியைக் கொடுப்பதாக இருக்கின்றன. ***

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### பஞ்சமஹாயக்ஞ சந்தி

| | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | | 2 | | | 28 | | | 3 | | | | 29 |
| | | 27 | | 4 | | | | | | 5 | | | | | |
| | | | | | | | | | 18 | | | | | | |
| | | | | | 36 | | | | | | | | 35 | | |
| | | | | 19 | | | | | | | 20 | | 6 | | |
| | | | 7 | | | | | | | | | | 21 | | |
| | | | | | | | | | | 30 | | | | | |
| | | | 31 | 22 | | | | 37 | | 23 | | 38 | | | |
| | | | | | | | | | | | | | | | |
| 32 | | | 8 | | | | | | 9 | | | 33 | | 24 | |
| 10 | | | | | | 11 | | | | | | | | | |
| | | | | | | | 12 | | | | | | | 25 | |
| 13 | | 39 | | | | | | | 14 | 34 | | | | | |
| | | | | | | | | | | | | | | | 26 |
| 40 | | | | | 41 | | 15 | | | | | | | | |
| | 16 | | 42 | | | 17 | | | 43 | | | | | | |

போட்டிகளுக்கான விடைகளை மின்னஞ்சல் முகவரி : haridasa.vijayam@gmail.com அல்லது வாட்சப் எண் 89044 58276 க்கு அனுப்பலாம்.

**வலமிருந்துஇடம்**

1.தாய்(3),2.ஐந்து பெண்கள்(5),3.செம்மறியாடுவில் பகவத்ரூபத்தின் பெயர்(5),4.உபப்ராணர்களில் ஒருவர்(3),5.பூ தத்வதன்மாத்ர பகவத் ரூபம்(4), 6.குதிரை(3),7.மேகாபிமானிதேவதை(5), 8.உபப்ராணர்(4), 9.வாயு (2),10.ஆகாயம்(4),11.மனஸ் தத்வபகவத் ரூபம்(4), 12. இரும்பு (2), 13.ஸ்ரீ ஹரி இந்த ஸ்ருதியினால் துதிக்கப்படுகிறான்(6), 14.பாவம்(4), 15. அவித்யைகளின் அதிஷ்டானத்தில் ஒன்று.(5), 16.இந்த ருதுவில் ஸ்ராவண, பாத்ரபத மாஸம் வரும்(3), 17.கார்த்தீக மாஸ நியாமகரூபம்(5).

**இடமிருந்துவலம்**

18.லக்ஷ்மிபதி(6),19.ஸ்த்ரீ அக்னியில்பகவத்ரூபம்(5), 20.ம்ருதுவான (4), 21. வாய்(3),22.க்ஞானாத்மக ஸ்வரூப தேஹம்(4), 23.நெருப்பு பொறிகள் (4),24.புருஷ சரீரம்(5),25.அன்ய விஷயங்களில் மோஹம் (3), 26.மனோ இந்திரியங்களில் பகவத்ரூபம். கலைந்துள்ளது(4).

மேலிருந்துகீழ்

1.வாயு தத்வபகவத்ரூபம்(6),3.த்வாபர யுகத்தில் ஸ்ரீஹரியின் ரூபம்(7), 12. மண் ஓடு(3),19.ஜ்வாலை(4),26.பஞ்ச பூதங்களில் ஒன்று. இதன் தன்மாத்ர குணம் ரஸம்.(3),27.ஸ்த்ரீ(2),28.உப ப்ராணர்(2), 29.கட்டில்(5),30.சேஷ தேவன்(4), 31.தோல்(3), 32.செம்மறியாடு(2), 33.சரீரம்(5),34.அஹங்கார தத்வஅபிமானிதேவதை(4).

**கீழிருந்துமேல்**

11.வராஹ ரூபம்(4),26.யக்ஞத்தை செய்யும் தலைவன்(5), 27. ஜனேந்திரியம்(2),35.ஸப்தத்தில் வ்யாபித்திருக்கும் ப்ரத்யும்ன ரூபி(3), 36.த்ருப்தியைக் கொடுப்பவன். கலைந்துள்ளது(4), 37. கழுத்திற்கு கீழ்(5), 38.நண்பன்(3),39.அக்னிக்கு ஸமித்து(4), 40. ஒரே ரூபம் பெற்றவன்(4),41.இந்திரியங்கள்(3),42.முப்பது. கலைந்துள்ளது (5), 43.கிரணங்கள்(3)

**ஹரிதாச விஜயத்தை & இதில் வரும் தகவல்கள், போட்டி களைப் பற்றி தயவு செய்து உங்கள் நண்பர் / உறவினர்களிடம் அறிமுகம் செய்யுமாறு கேட்டுக் கொள்கிறோம்.**

ஆராதனை

# ஸ்ரீபிராணேஷ தாசர்

By திரு.க்ரோம்பேட்டை R. ஸ்ரீதரன்

ஸ்ரீபிராணேஷ தாசர் வாழ்ந்த காலம் 1736-1822CE. இவர் கர்னாடகத்தில், ராய்ச்சூர் மாவட்டத்தில், கசப லிங்கசுகூரைச் சேர்ந்தவர் ஆவர். மானவி மகான் ஸ்ரீஜகன்னாததாசரின் அத்யந்த சிஷ்யர் இவர். இவரும் ஒரு மிகப்பெரிய ஹரிதாசர் மற்றும் அபரோக்ஷ ஞானியே ஆவார். பல்வேறு கிருதிகள், பதங்கள், சுளாதிகளை இயற்றி தாச சாகித்யத்திற்கு பெருமை சேர்த்தவர் ஸ்ரீபிராணேஷ தாசர். இவரது சிஷ்ய பரம்பரையானது இன்று வரை தொடர்ந்து அந்தப் பகுதியில் வளர்ந்து வருவதை நாம் பார்க்கலாம்.

ஸ்ரீராகவேந்திர மடத்து பரம்பரையைச் சேர்ந்த, புனேவில் பிருந்தாவன ஸ்தரான ஸ்ரீவரதேந்திர தீர்த்தரின் அன்பினைப் பெற்றிருந்தார் ஸ்ரீபிராணேஷ தாசர். ஸ்ரீஸ்வாமிகள், ஸ்ரீதாசரின் கனவில் சொல்லியபடி, இவரின் வீட்டில் துளசிச் செடியில் ஒரு அம்சமாகத் தோன்றினார். யதிகளின் பாதுகையும் புனேவிலிருந்து வந்தன. ஸ்ரீதாசரின் மகிமையை இந்த சம்பவமே அற்புதமாக விளக்குகிறது.

ஸ்ரீபிராணேஷ தாசரின் இயற்பெயர் யோகீந்திரப்பா. சிறு வயதில் அவரது தேகத்தில் பல வெள்ளைத் தழும்புகள் காணப்பட்டதால், அவரது பெற்றோர் கவலைப்பட்டு, மந்திராலயம் செய்து ஸ்ரீராயரின் சேவையைச் செய்தனர். ஸ்ரீராயரின் கருணையால், அனைத்து தழும்புகளும் மறைந்து ஒரேயொரு சிறிய தழும்பு மட்டும் அவரது தேகத்தில் தங்கியது.

அதற்காக அவரது பெற்றோர் இன்னொரு முறை ஸ்ரீராயருக்கு சேவை செய்தபோது, ஸ்ரீராயர் அவர்களது கனவில் தோன்றி அத்தழும்பு அவரது வினைப்பயனால் வந்தது என்றும் அது மறையாது என்றும் கூறினார். மேலும் யோகீந்திரப்பா தனது முற்பிறவியில் பாண்டு ராஜாவாக இருந்தார் என்றும், மூல ரூபத்தில் பராவஹ மருதனாக இருந்தார் என்றும் அதன் அடையாளமாக இத்தழும்பு இருக்கிறது என்றும் உணர்த்தினார்.

யோகீந்திரன் சர்வமூல கிரந்தங்கள் மற்றும் சாஸ்திரங்களை மந்திரா லய ஸ்வாமிகளிடமிருந்து கற்றுத் தேர்ந்தார். பாரசீக, உருது மற்றும் பல மொழிகளிலும் தேர்ச்சி பெற்றிருந்த யோகீந்திரன், கணக்காளராக வேலை பார்த்து வந்தார். மானவி தாசர், இவரது மனதை மாற்றி, ஹரிதாசனாக ஆக்கி, பிராணேஷ விட்டலா என்னும் அங்கிதத்தைக் கொடுத்து, இவரை பிராணேஷ தாசராக ஆக்கினார்.

ஹளே கன்னடா, புதிய கன்னடா, சமஸ்கிருதம், பாரசீகம் ஆகிய மொழிகளில் அவர் பதங்களை, கிருதிகளை, காவியங்களை இயற்றினார். ஊர்த்வ புண்ட்ர மஹாத்ம்யம், பீகரபதம், பட்டி பிராமண னின் கதை, காலவ சரித்ரெ, வீரபத்ர விலாஸ, மன்மத விலாஸ (ரதி கல்யாண) ஆகிய காவியங்களை இவர் இயற்றியுள்ளார்.

கர்ஜிகி தாசப்பாவை ஸ்ரீதவிட்டல தாசராக மாற்றியதில் இவருக்குப் பெரும் பங்கு உண்டு. ஸ்ரீஷவிட்டலதாசர் (ஹுண்டெகாரதாசர்) இவரது சமகாலத்தவர். அபினவஜனார்த்தனவிட்டலதாசர் இவரது நண்பர்.

ஸ்ரீஜகன்னாததாசர் தமது தந்தை ஸ்ரீ நரசிம்ம தாசரின் திதிக்கு ஸ்ரீபிராணேஷ தாசரை ஆண்டுதோறும் அழைத்தார் என்று அறிகிறோம். அதற்காக அவர் லிங்கசுகூரிலிருந்து தாமதமாகக் கிளம்பினாலும், தன்னுடைய யோகசக்தியால் சரியான நேரத்தில் மானவியை அடைந்து விடுவாராம். அப்படி ஒரு முறை ஒரு சில நிமிடங்கள் தாமதம் ஆனதால், அங்கு வந்து ஸ்னானம் செய்யாமல் அப்படியே உணவு உண்ண அமர்ந்தாராம். அதற்கு ஸ்ரீஜகன்னாத தாசரின் உறவினர் ஒருவர் எதிர்ப்பு தெரிவிக்க, ஸ்ரீபிராணேஷ தாசர் தனது குடுமியைப் பிழிய, அதிலிருந்து நீர் வந்ததாம்.அதற்கு ஸ்ரீஜகன்னாததாசர், ஸ்ரீபிராணேஷ தாசர் மானஸ ஸ்னானம் மற்றும் மானஸ பூஜை செய்துவிட்டார் என்று சொன்னாராம். ஸ்ரீபிராணேஷ தாசரின் மகிமையை இந்த சம்பவத்திலிருந்து நாம் கண்கூடாக அறியலாம்.

ஸ்ரீபிராணேஷ தாசரின் மகன் ஸ்ரீகுருபிராணேஷ விட்டலதாசர் ஆனார். அவரது பேரர்கள், ஸ்ரீவரதேஷ விட்டலதாசர், ஸ்ரீஸ்ரீஷபிராணேஷ தாசர்கள் ஆயினர். ஸ்ரீதாசர் ஆஸ்வீஜ சுத்த சப்தமியன்று லிங்கசுகூரில் ஹரிபாதத்தினை அடைந்தார். அவரது பாடல்கள் அர்த்தம் பொதிந்தவை மற்றும் ஆதாரங்கள் நிறைந்தவை.
**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து. *****

தொடர்

## பலவிது பாள்துதக்கெ-ஸ்ரீஜகன்னாத்தாசர்

**கன்னட உரை: திரு.தாவண்கெரெ பீமராவ்**

ஒந்து3 ரூப1தொ3ள் அனந்த1ரூப1வு ஒந்தி3ப்ப1வு கு3ணக3ணஸஹித1
ஹிந்தே3 முந்து3 எந்தெ3ந்தி3கு3 கோ3விந்த3கெ3 ஸரிமிகி3 இல்லெந்
தெ1ம்புதே3 |16|

ஒந்து ரூபதொளு = ஸ்ரீஹரியின் ஒவ்வொரு ரூபத்திலும், அனந்தரூபகளு = பல ரூபங்கள் (அந்த ரூபத்தின் பல ரூபங்கள் மற்றும் வேறொரு ரூபத்தின் பல ரூபங்கள்), குணகணஸஹித = அனந்தகுணங்களுடன் கூடி, பொந்திப்பவு = சேர்ந்திருப்பது, ஹிந்து முந்து எந்தெந்திகு = இறந்த, நிகழ், எதிர்காலங்கள் அனைத்திலும், ஸ்ரீகோவிந்தகெ = வேதங்களில் புகழப்படும் ஸ்ரீஹரிக்கு, ஸரிமிகிலு = சரிசமமானவர்கள் யாரும், இல்லெம்புதெ = இல்லை என்று அறிவதே, நாம் எடுத்த இப்பிறவியின் சரியான அர்த்தம் ஆகும்.

பற்பல பகவத்ரூபங்கள் உள்ளன. அவை அனைத்தும் ஞானானந்தாதி அனந்தகுணங்களால் நிரம்பியதே. அனைத்து ரூபங்களும் எவ்வித வேறுபாடும் இல்லாதவை. ஒவ்வொரு ரூபமும், தனித்தனியாக, எண்ணிக்கை இல்லாததாகவும், பரிபூர்ணமானதுமாகவும் இருக்கிறது. ரமாபிரம்மாதிகளாலும் முழுமையாக அறியப்பட முடியாதவை. இப்படிப்பட்ட அனந்தானந்த ரூபகுணங்கள் கொண்டவன், அனைத்திற்கும் தலைவனான ஸ்ரீமகாவிஷ்ணு. ராம, கிருஷ்ண, வியாஸ, ஹம்ஸ, கபில முதலான அவதாரரூபங்களும், ஒவ்வொன்றும், ராமராம, ராமகிருஷ்ண, ராமவியாஸ, கிருஷ்ணராம, கிருஷ்ணகிருஷ்ண, கிருஷ்ணவியாஸ என அனந்த ரூபங்களாக உள்ளன.

ஹரிக1தெ பரமாத3ரத3லி கே1ளுத1 மரெது3 த1னுவ ஸுக1 ஸுரியுத1லி
உருகா3யன ஸந்த3ருசன ஹாரைசிருளு ஹக3லு ஜரிஜரிது பா3ளுதே
|17|

ஹரிகதெ = ஸ்ரீஹரியின் கதைகளை (ஸ்ருஷ்டி முதலிய செயல்கள் மற்றும் அவரின் அவதார லீலைகளை), பரமாதரதலி = மிகவும்

உற்சாகத்துடன் (மிகவும் சிரத்தை, பக்திகளுடன்), கேளுத = சாஸ்திர கிரந்தங்களிலிருந்தும், யோக்ய விஷ்ணு பக்தர்களிடமிருந்தும் கேட்டு, தனுவ மரெது = மெய்மறந்து (தேகாபிமானங்களை துறந்து), சுகசுரியுதலி = மகிழ்ச்சியுடன், (ஆனந்தக் கண்ணீருடன்), உருகாயன = (உத்தமனான, ரமா பிரம்மாதிகளால் புகழப்படும் ஸ்ரீஹரியின்) மிகச் சிறந்த கீர்த்தனைகளை, சந்தருஷன = தரிசனத்தை (சாக்ஷாத்காரத்தை, அபரோக்ஷ தரிசனத்தை) ஹாரைசி = மிகவும் விரும்பி, இரளு ஹகலு = இரவும் பகலும் (நிரந்தரமாக), ஜரிஜரிது = விஷய ஆசைகளை துறந்து, அவன் கொடுத்த பொருட்களை மட்டும் வைத்துக்கொண்டு, பேராசைப்படாமல், அனைத்து தேவதைகளையும்விட ஸ்ரீஹரியே சர்வோத்தமன் என்று நினைத்து வாழ்வதே, இவ்வாழ்க்கைக்கான சிறந்த அர்த்தம் ஆகும்.

அபரோக்ஷ ஞானமில்லாமல் மோக்ஷம் இல்லை. அபரோக்ஷ தரிசனம் பெற்றவர்களுக்கு என்றும் மோக்ஷம் தவறுவதில்லை. ஆகையால், துக்கங்கள் இல்லாமல், சுகத்தை மட்டும் விரும்புபவர்கள் அனைவரும் ஸ்ரீஹரியின் தரிசனத்திற்காக முயலவேண்டும்.

'யேஷாம் ஞானம் சமுத்பன்னம் தேஷாம் மோக்ஷோ வினிஸ்சய:' அபரோக்ஷ தரிசனம் பெற்றவர்களுக்கு தவறாமல் மோக்ஷம் கிடைக்கும் என்று பிரம்ம தர்க்க வசனம் இருக்கிறது.

விஷயேந்தி3ரயக3ளலி த1த3பி4மானி ஸுமனசரொளு நிந்து1 நியாமிசுத1
ஷ்வசனாந்தர்க3த1 வாசுதேவ தா1 விஷயங்க3ள
போ4கிசுவனெந்த3ரிவுதே3 |18|

விஷயேந்திரியகளலி = ஷப்த முதலான தன்மாத்ரகள் மற்றும் நமது இந்திரியகளில், ததபிமானி ஸுமனசரொளு = அவற்றின் அபிமானிகளான தேவதைகளில், நிந்து = அவற்றில் அந்தர்யாமிகாக இருந்து, நியாமிஸுவ = அவற்றின் நடவடிக்கைகளை நடத்துபவனான, ஷ்வஸனாந்தர்கத வாசுதேவ = முக்யபிராணாந்தர்கதனான வாசுதேவன், தா = தான், விஷயங்கள = (அனைத்து நல்ல) விஷயங்களையும், போகிசுவனெந்தரிவுதே = அவனே உட்கொள்கிறான் (போகிக்கிறான்) என்று அறிவதே, இந்த வாழ்க்கையை பெற்றதற்கான உண்மையான அர்த்தம் ஆகும்.

சர்வேந்த்3ரியாபி4மானிஸ்த1 முக்யப்ராணஸ்த1விஷ்ணுனா |
ப்1ரேரித1: ஸ்ரீஷது3ஷ்ட்யர்த்த1ம் க1ரிஷ்யே க1ர்மசாகி1லம் ||

என்று அனைத்து இந்திரியாபிமானி கருடாதி தேவதைகளிலும் அந்தர்யாமியாக இருப்பவர் ஸ்ரீமுக்யபிராணர். அவருள்ளும் அந்தர்யாமியாக இருந்து, அனைத்தையும் நடத்துபவர், லட்சுமிபதியான ஸ்ரீநாராயணன் என்று சொல்லப்படுகிறது.

பூ4தே1ஷு ஜாந்த1ர்ஹித1 ஆத்1மத1ந்த்1ர: ஷாட்வர்கி3க1ம் ஜிக்4ரதி1
ஷட்கு3ணேஷ:
(பாகவதம் 1-3-34)

ஸ்வதந்த்ரனான ஸ்ரீஹரி, தன்னாலேயே படைக்கப்பட்ட அனைத்து பிராணிகளின் தேகங்களில் வியாபித்து, மனஸ் மற்றும் ஞானேந்திரியங்கள் என்னும் ஆறு இந்திரியங்களின் நியாமகனான தான், அந்த ஆறு இந்திரியங்களால், தனக்கு எவ்வித பயனும் இல்லாவிட்டாலும், சுப விஷயங்களை போகிக்கிறான் (ஏற்றுக் கொள்கிறான்).

ஸ்ரோத்1ரம் சக்1ஷு:ஸ்பர்ஷனம் ச ரஸனம் ப்ராணமேவ ச |
அதி4ஷ்டா2ய மனஸ்சாயம் விஷயானுப1ஸேவதே1 || (பகவத்கீதை)

காது முதலான ஞானேந்திரியங்களில் மற்றும் மனதில் இருந்து, ஸ்ரீஹரி, அனைத்து சுப விஷயங்களை உட்கொள்கிறான். இத்தகைய ஆதாரங்கள் மேற்கண்ட விஷயத்தை நிரூபிக்கின்றன.

மூஜக3தொ3ளகி3ஹ பூ4ஜல கே1சர ஈ ஜீவரொளு மஹௌஜசன
சோஜிக3 ப4ஹுவித நைஜவிபூ4திய பூ1ஜிசுத1னுதி3ன ராஜிசுதி1ப்புதே3
|19|

மூஜகதொளகிஹ = மூன்று உலகங்களிலும் இருக்கும், பூஜல கேசர = நிலம், நீர், ஆகாயத்தில் சஞ்சரிக்கும், ஈ ஜீவரொளு = அனைத்து பிராணிகளையும், ஸோஜிகெ = அதிசயப்படும், பஹுவித = பலவிதமான, மஹௌஜஸன = மிகவும் சாமர்த்தியசாலியான ஸ்ரீஹரி, நைஜவிபூதிய = நைஜ நாமக சிறப்பு ரூபத்தை, பூஜிஸுத = சிந்தித்து, பூஜித்து, அனுதின = எப்போதும், ராஜிஸுதிப்புதே = இருப்பதே (துக்கத்தால் சலனப்படாமல், சுகியாக இருப்பதே), இந்த வாழ்க்கையின் முக்கியமான பலன் ஆகும்.

கேட குக்குட ஜலடவெம்ப த்ரி
கோடிரூபவ தரிஸி சதத நி
ஷாடரனு சம்ஹரிஸி சலஹுவ சர்வசஜ்ஜனர ||
(ஹரிகதாம்ருதசாரம்)

வாயுதேவரின் மூன்று கோடி ருபங்கள், இந்த மூன்று வித தேகங்களில் இருந்து, சஜ்ஜனர்களை காப்பாற்றி வருகிறது என்றும், அந்த வாயுதேவரின் அந்தர்யாமியாக இருக்கும் (மஹௌஜஸன) ஸ்ரீஹரியே முக்கிய ரட்சகன் என்பதால், அத்தகைய வாயு-அந்தர்யாமியான-ஸ்ரீஹரியின் விபூதி ரூபங்களை மனதில் சிந்திக்க வேண்டும்.

ஹரிகதாம்ருதசாரத்தின் விபூதி சந்தியில், பரமாத்மனின் பல விபூதி ரூபங்கள் விளக்கப்பட்டிருக்கின்றன. அவற்றில் 'னைஜ' ஒன்று. 'னைஜ' என்றால், சாலிகிராமங்களில் இருக்கும் பகவத்ரூபங்களையும் அல்லது ராமகிருஷ்ணாதி அவதாரங்களையும் சிந்திக்கலாம்.

மேதி$^{3}$னி பரமாணாம்பு$^{3}$ க$^{3}$ணங்க$^{3}$ள நைத$^{3}$ப$^{3}$ஹுது ப$^{1}$ரிக$^{3}$ணனெயனு
மாத$^{4}$வனானந்தா$^{3}$தி$^{3}$ கு$^{3}$ணங்க$^{3}$ள நாதி$^{3}$கா$^{1}$லத$^{3}$லி அக$^{4}$ணித வெம்புதே$^{3}$
|20|

மேதினி பரமாணாம்பு கணங்கள = பூமியில் (மற்றும் நீரில்) இருக்கும் பரமாணுகளை, பரிகணனெயனு = முழுமையாக எண்ணுவது, ஐதபஹுது = சாத்தியமே. (அவற்றை எண்ணி முடித்துவிடலாம்). ஆனால், மாதவன = ஸ்ரீலட்சுமிபதியின், ஆனந்தாதிகுணங்களு = ஆனந்தாதி குணங்களை, அனாதிகாலதிந்த = அனாதி காலத்திலிருந்து, அகணிதவெம்புதே = எண்ணி முடிப்பது சாத்தியமே இல்லை என்று அறிந்து, அதை பாடுவதே, இவ்வாழ்க்கைக்கான உண்மையான அர்த்தம் / பயன்.

ஒருவன் மொத்த உலகத்தில் இருக்கும் மணற்துளிகளை எண்ணி முடித்துவிடலாம். ஆனால், ஸ்ரீவிஷ்ணுவின் அனந்தகுணங்களின் எண்ணிக்கையை எண்ணுவதற்கு யாராலும் சாத்தியமில்லை, என்று பாகவதம் 2-7-40வது ஸ்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கும் விஷயம் இங்கு விளக்கப்பட்டிருக்கிறது. இப்படி ஸ்ரீஹரி அனந்தகுணபூர்ணன் என்னும் விஷயத்தை அறிந்துகொள்வதே இந்த வாழ்க்கையின் உண்மையான பலன் ஆகும். *** தொடரும்.

தொடர்

## கன்னட கிரந்தங்கள் அறிமுகம்

## ஸ்ரீவாதிராஜரின் கஜேந்திர மோட்சம்

மத்வ மத பரம்பரையில் உடுப்பி அஷ்ட மடங்களில் ஸோதே மடத்தின் பீடாதீஸராக அலங்கரித்தவர் ஸ்ரீ வாதிராஜ தீர்த்தர். மத்வ ஸித்தாந்தத்தில் வியாஸ ஸாஹித்தியம் மற்றும் தாஸ ஸாஹித்தியம் என இரண்டுக்குமே தமது பங்களிப்பை அளித்த மஹனீயர். பகவான் வேதவ்யாசர் அருளிய மஹாபாரதம் முதலான மூல கிரந்தங்கள், ஆச்சாரியர் ஸ்ரீமத்வரின் ஸர்வ மூல கிரந்தங்கள், டீகாசாரியாரின் டீகா கிரந்தங்களை அனுசரித்துப் பலதரப்பட்ட காவிய, ஸ்தோத்திர, டிப்பணி மற்றும் வியாக்யான கிரந்தங்களை இயற்றியதுடன் கன்னடத்திலும், துளு பாஷையிலும் 'ஹயவதன' முத்ரையிலே பல க்ருதிகளையும் ரசனை செய்துள்ளார். அந்த வரிசையிலே பகவானின் காருண்யத்தையும் மகிமையையும் பறைசாற்றும் விதத்தில் கஜேந்திர மோக்ஷத்தை பற்றியதான ஒரு கன்னடக் கிரந்தமே "ஸ்ரீவாதிராஜரின் கஜேந்திர மோக்ஷம்" ஆகும்.

ஸ்ரீவாதிராஜர் அருளிய "கஜேந்திர மோக்ஷம்" என்பது 50 பத்யங்களில் அமைந்த கன்னட கிரந்தம் ஆகும். வேதவ்யாசர் அருளிய ஸ்ரீமத் பாகவதத்தின் எட்டாவது ஸ்கந்தத்தில் விஸ்தாரமாக வர்ணிக்கப்பட்டுள்ள கஜேந்திர மோக்ஷ கட்டத்தின் கன்னட ஸாராம்ஸமாக இது அமைந்துள்ளது. ஸ்ரீவாதிராஜர் பாகவதத்தின் இந்த ஒரு பகுதியை கன்னடத்தில் சரளமாக, அழகான வர்ணனைகளுடன் கூடிய பத்யங்களிலே எந்த ஒரு கட்டத்தையும் விட்டுவிடாமல் கொடுத்துள்ள விதம் ஆச்சரியப்படத்தக்க வகையில் உள்ளது.

இந்த்ரத்யும்னன் என்ற அரசன், ஸ்வரூபத்தில் "ஹாஹா" என்ற ஒரு கந்தர்வன். தேவலா என்ற ரிஷியின் சாபத்தால் மனிதனாகப் பிறந்து, அரசாட்சி புரிந்து வந்த நிலையில், அனைத்தையும் துறந்து, மேருமலை சமீபத்தில் தியானம் மேற்கொண்ட போது, அகத்தியரின் சாபத்தால் கஜேந்திரன் எனும் யானையாகி, பெண் யானை மற்றும் குட்டிகளுடன் தடாகத்தில் நீர் அருந்தச் சென்ற போது, தேவலா ரிஷியின் சாபத்தால் முதலை உருவம் கொண்ட "ஹுஹு" என்ற

கந்தர்வனால் அதன் கால் கடிக்கப்பட்டு, இழுக்கப்பட்ட போது, எவ்வளவு முயன்றும் முடியாமல் போக இறுதியில் பகவானைப் பிரார்த்தனை செய்ய, கருடவாஹனத்தில் பகவான் எழுந்தருளி, லஷ்மி, ருத்ரன், தேவதைகள், ரிஷிகள் ஸமேதமாக வந்து பகவான் தமது சக்ராயுதத்தால் முதலையின் வாயைப் பிளந்து, அதற்கு சத்கதி அளித்து, தன்னுடைய திவ்ய ஸ்வரூபத்தைக் காட்டி கஜேந்திரனை உடன் அழைத்துச் சென்று சத்கதி அளித்த விதத்தைக் கூறி, இறுதியில் இத்தகைய பதத்தினைப் படிப்பதினால் ஏற்படும் பலன்களையும் சேர்த்து முழுவதுமாக 50 பத்யங்களில் அழகாக வர்ணித்துள்ளார் ஸ்ரீவாதிராஜர்.

முதலில் "ஸ்ரீ நாத பார்வதிய நாத ஸரனெம்பெ ! வாணி பாரதிய கஜமுகன பலகொம்பெ! நானு பல்லஷ்டு பேளுவனு கதெய! ஸ்ரீ நாத கஜனாத கொலித ஸங்கதிய!!" எனத் தொடங்கி ஸ்ரீ லக்ஷ்மிநாதனான ஸ்ரீ மஹாவிஷ்ணு, பார்வதி நாதனான சிவன், ஸரஸ்வதி பாரதி, கஜமுகனான கணபதியின் அனுக்ரஹத்தை கொண்டு தாம் அறிந்த வரையில் கதையைச் சொல்வதாகவும், ஸ்ரீமந் நாராயணன் கஜராஜனுக்கு அருள் புரிந்த விதத்தை உரைப்பதாகவும் கூறித் தொடங்கி "நாராயண கிருஷ்ண" என்ற பதத்தினால் துதித்துத் தொடங்குகிறார் ஸ்ரீவாதிராஜர்.

2 முதல் 7 வரையிலான பத்யங்களில் பூவுலகில் ராஜ்ஜியங்களை ஆண்ட ராஜதானியில், உத்தமனான தேஸத்திலுள்ள ராஜ்ஜியத்தில் விஷ்ணு பக்தர்களில் ஒருவரான இந்த்ரத்யும்னன் என்னும் ஒரு ராஜன், தேவர்களையும் மனிதர்களையும் பரிபாலித்து வந்ததையும், மனதிலே நரஹரியை தியானித்து, பூஜித்து புத்திரர்களையும், பந்துக்களையும் நினைப்பதை விட்டு, யானை, குதிரை, ராஜ்ஜியத்தையும் துறந்து, திரிகூட பர்வதத்திற்கு வந்து, மேரு மலையின் ஸமீபத்தில், சித்தர்களும், கின்னரர்களும், கந்தர்வர்களும், உள்ள இருப்பிடமான அந்த பிரதேஸத்தில், மிருகங்கள் குதித்து விளையாடுவதும், எங்கு பார்த்தாலும் நான்கு யோஜனை விஸ்தீரணம் கொண்ட பூமி, சுற்றிலும் பொன் வண்ணம் பூண்ட அழகிய ரம்யமான சீதோஷ்ணமும் பசுமையும் கொண்ட பிரதேஸத்தில், நதிகள், குளங்கள், ஸரோவரங்கள், மணம் வீசும் புஷ்பங்கள் அணிவகுக்கும் கரை ஓரங்களில், கந்தர்வர்கள், கின்னரர்கள், ஆடும் மயில்கள், பாடும் குயில்கள் உள்ள இருப்பிடத்தில், அந்த அழகிய சூழ்நிலையில், அங்குள்ள நதியில்

ஸ்நானம் செய்து, த்வாதஸ நாமம் தரித்து, ஸந்தியாவந்தனம் செய்து, பத்மாஸனத்தில் அமர்ந்து இந்திராபதியான விஷ்ணுவை மனதில் நிறுத்தி தியானித்த விதத்தை மிக அழகாக ஸ்ரீவாதிராஜர் வர்ணித்துள்ளார்.

8 முதல் 10 வரையிலான பத்யங்களில், அந்த ஸ்தலத்திற்கு அகஸ்த்திய முனிவர் வந்ததையும், தியானத்தில் இருந்த அரசன் இந்த்ரத்யும்னன் முனிவர் வந்ததை கவனிக்காமல், எழுந்து நின்று வணக்கங்களை, மரியாதையைச் செலுத்தவில்லையெனக் கோபம் கொண்டு "யானையின் ரூபத்தில் பிறப்பாய்" என சபித்ததையும் அதற்கு வருந்தி அரசன் சாப விமோசனம் வேண்டியதற்கு, மனமிறங்கி முனிவர் "விஷ்ணுவின் சக்கரம் வந்து காப்பாற்றும் போது சாப விமோசனம் ஆகும்" என அருளியதையும் விவரித்து, க்ஞானம் அடங்கி, அஞ்ஞானம் தலைதூக்கி, சூரியன் அஸ்தமனமாகி இருள்சூழ, த்யானம் செய்து கொண்டே இருக்கும் போது இந்த்ரத்யும்னன், அந்த க்ஷணம் யானை வடிவம் கொண்டான் என விவரிக்கிறார் ஸ்ரீவாதிராஜர்.

11 முதல் 16 வரையிலான பத்யங்களில் அந்த கஜேந்திரன் மேடு பள்ளங்களிலிருந்து புறப்பட்டு, மஸ்தகத்தில் மதநீர் இருபுறமும் சொரிய, பெண்யானை, குட்டி யானைகளுடன் சேர்ந்து கொண்டு, மரங்களை தவிடு பொடியாக்கி, அவைகளை மிதித்துக் கொண்டு, அடர்ந்த காடுகளில் ஸஞ்சாரம் செய்து கொண்டு, வெயில் காலம் வந்ததால் நீர் மடு எல்லாம் வறண்டு போக, மனைவி மக்களுடன் கூடி பசி தாகத்தினால் துவண்டு அவஸ்தைப்பட்ட நிலையில், ஓரிடத்தில் வாழை, நாரத்தை, எலுமிச்சை, மாதுளம் பழ மரங்கள், திராக்ஷைக் கொடி, பேரீக்ஷை மரம் முதலியவைகளுடன் கூடிய தாமரைக் குளத்தைக் கண்டு, அக்குளத்தைச் சுற்றிலும் முத்து நவரத்தினங்களும், பறந்து திரியும் சக்கரவாஹப் பறவைகளும், நீரில் மிதக்கும் அன்னங்களையும் கண்டு, அக்குளத்திலே இறங்கி, நீரை இறைத்தும், தும்பிக்கையால் அடித்தும், நீரைக் குடித்தும், பக்கத்து மடுவினில் நீரை வாரி இறைத்தும், பெண் யானை மற்றும் குட்டிகளுடன் கூடி நீரில் ஜலக்கிரீடை ஆடிய விதத்தை அழகாக வர்ணிக்கிறார் ஸ்ரீவாதிராஜர்.

17 முதல் 20 வரையிலான பத்யங்களில் தேவலா என்னும் முனிவரின் சாபத்தினால் ஒரு முதலை அந்த மடுவில் வாழ்ந்து கொண்டிருக்க, மத யானையானது மடுவை கலக்கிக் கொண்டிருப்பதைப் பொறுக்காமல், யானையின் காலைப் பிடித்தவுடன் அகப்பட்ட யானை, சுற்று முற்றிலும், அங்கும் இங்கும், எப்படி எங்கு திரும்பிப் பார்த்தாலும், இழுத்து விடுவித்துக் கொள்ள முயன்றும் முதலை யானையின் காலை விடவில்லை எனவும், யானையின் மனைவி யானை, பிள்ளை யானை என எல்லோரும் ஒன்று சேர்ந்து இழுத்தும் முடியாமல் திரும்ப, அனைவரையும் கஜேந்திரன் போகச் சொல்ல, அவர்களும் கஷ்டமான மனதுடன் தொலைவில் நிற்க, முதலை யானையின் காலைக் கடித்து இழுத்துக் கொண்டிருக்க, குளத்தின் நீரெல்லாம் ரத்தமயமாகி நிறைய, "இனி எனக்கு கதியார்" என்று திசைகள் எல்லாம் ஒலிக்குமாறு கூக்குரலிட்டதையும், "எனகின்னு கதியாரு எனுத திக்கு கெட்டந்தெ முறையிட்டா கஜராஜா" போன்ற பதங்களினால் விளக்குகிறார் ஸ்ரீவாதிராஜர்.

21 முதல் 35 வரையிலான பத்யங்களில் ஸ்ரீவாதிராஜர், கஜராஜன் தன் பூர்வ ஜென்ம புண்ணிய பலத்தினால் பகவத் ஸ்மரணை ஏற்பட்டு, பகவானை பிரார்த்தனை செய்த விதத்தை விஸ்தாரமாகி விவரித்துள்ளார். 21 முதல் 23 வரையிலான பத்யங்களில் பகவானை "அச்சுதா அனந்தா ஸ்ரீஹரி காயோ! சச்சிதானந்தா ஸர்வேஸ்வரனே காயோ!பக்தவத்ஸலனே பவபஞ்சனனே காயோ! கஷ்டப்படுத்தேனே கருணிஸி கருணீ காயோ!!" போன்ற பதங்களினால் கஜேந்திரன் பகவானிடம் மனம் உருகி அவன் நாமங்களைக் கூறி "கஷ்டப்படுகிறேன் காப்பாற்று" என வேண்டிய விதத்தை உருக்கமாக விளக்கி, பகவானிடம் மேலும் "84 லக்ஷ ஜீவராசிகளை காப்பாற்றும் ஜகதீஸ்வரனே, அசையும் பொருள் அசையாப் பொருள் என எல்லாவற்றிலும் பரிபூர்ணனாகி இருக்கும் நாராயணனே" எனத் துதித்து, "ஈரேழு புவனங்களையும் காப்பாற்றும் நீ என்னையும் காப்பாற்று! 1000 வருடங்கள் நீர் ஆகாரம் இல்லாமல் நொந்து வேண்டுகிறேன்" என கதறித் துதித்ததை வர்ணிக்கிறார். 24 முதல் 33 வரையிலான பத்யங்களில் பகவானின் தஸாவதாரங்களை தனித்தனியாக வர்ணித்து, போற்றித் துதித்து, 34 மற்றும் 35 பத்யங்களில் மீண்டும் பகவானிடத்தில் மிகவும் உருக்கமாக "என்னை மறந்து விட்டேன்" என்றோ "அழைப்பு எனக்கு கேட்கவில்லை" என்றோ "என்னைக் காண முடியவில்லை" என்றோ கூறாது காப்பாற்றும்படி வேண்டி, "எனக்கு பிராணன் போகிறது முன்னால்

எப்போது ஹரி வந்து காப்பாற்றுவானோ" என பிளிரிட்டது, கூக்குரலிட்டது, முறையிட்டது அந்த யானை, தானவாந்தக ஸ்ரீஹரி அதைக் காது கொடுத்துக் கேட்டான் என விவரித்துள்ளார் ஸ்ரீவாதிராஜர்.

36 முதல் 38 வரையிலான பத்யங்களில் பாற்கடலில் வைகுண்டத்தில் லக்ஷ்மியுடன் உரையாடிக் கொண்டிருந்த சேஷஸாயியான பகவான் கஜேந்திரன் இட்ட கூக்குரலைக் கேட்டு, சங்கமும் சக்கரமும் கைகளில் இல்லையே என எண்ணாமல், ஜபர்தஸ்தாக கருடன் மேல் அமர்ந்து கொள்ளாமல், ஸ்ரீலக்ஷ்மியிடம் கூட சொல்லாமல் ஸ்ரீமஹாவிஷ்ணு யானை இருக்குமிடத்திற்கு வந்த விதத்தைக் கூறி, கீழே இறங்கி வரும்போது வஜ்ர குண்டலங்கள், மார்பில் ஹாரங்கள் ஒளிவீச, பீதாம்பரம் கீழே தரையில் அசைந்தாட எழுந்து, தயா ஸமுத்திரம் போல் புறப்பட்டு வந்த விதத்தைக் கூறி, பகவான் தன் பக்தனின் கூக்குரலுக்கு அனுக்கிரஹம் புரிய காட்டும் வேகத்தை விளக்கும் விதமாக புரிந்த லீலைகளை வர்ணித்துள்ளார் ஸ்ரீவாதிராஜர்.

39 முதல் 42 வரையிலான பத்யங்களிலே ஸ்ரீமஹாலக்ஷ்மி தம் பதியானவர் எங்கு சென்றாரோ என எண்ணித் தாமும் புறப்பட்டு வர, வணக்கத்துடன் கருடனும், கந்தர்வர்களும் கூடிவர அப்போது சங்கமும் சக்கரமும் சேர்ந்து வர, ஸ்ரீஹரி கருடன் மேலேறி கஜேந்திரனிடம் வர, சிவனும் பார்வதியும் நந்தியின் மேல் ஏறி வர, சிவனின் தலையில் கங்கையும் பொங்கித் ததும்ப, தேவரிஷிகள், பிரம்மரிஷி, ராஜரிஷிகள் சகிதமாக தேவபுத்திரர்கள், ஸனகாதிகள் இவர்களுடன் கூடி நாரதரும், தேவாதி தேவர்களும் ஒன்று கூடி அவ்விடம் வந்ததாக வர்ணிக்கிறார் ஸ்ரீ வாதிராஜர்.

43 மற்றும் 44 பத்யங்களில் பகவான் வைகுண்டத்தில் இருந்து வந்த சக்கரத்தை கையில் ஏந்தி, முதலையின் பற்கள் முறியுமாறு சுழற்றி வீச, அப்போது அந்த தருணமே முதலையின் சாபம் நீங்கி, சாப விமோசனம் அடைந்து, முதலை ரூபத்தில் இருந்து விடுபட்டு, ஹூஹூ கந்தர்வனாக தன் ஸ்வரூபத்தை அடைந்தான், ஸத்கதி பெற்றான் என்பதையும், மேற்கொண்டு பகவான் பீதாம்பரம், கிரீடம், குண்டலங்கள், அழகிய துளசி மாலைகளுடன் காட்சியளித்தார் என்பதையும் விளக்குகிறார் ஸ்ரீவாதிராஜர்.

45 மற்றும் 46 பத்யங்களிலே தேவதைகள் அனைவரும் போற்றித் துதித்து வணங்குவதை "ஜய ஜய ஜகன்னாத ஜய விஸ்வமூர்த்தி! ஜய ஜய ஜனார்த்தன ஜய விஸ்வரூப! ஜய ஜய ஸர்வோத்தமனே க்ஷீராப்திஸயனனே! ஜய வெந்து பதகளிஜெ பந்து எரகிதனு!" போன்ற பதங்களினால் வர்ணித்து, "இன்று இவனுடைய (யானையின்) பாக்கியத்தைப் பார்" எனவும், இந்திராதிபதியைக் கொண்டாடி, மந்தாரப் புஷ்பங்களை மழையாக தேவதைகள் சொரிய துந்துபி வாத்தியங்கள் முழங்கின என ஸ்ரீவாதிராஜர் விவரித்துள்ளார்.

47வது பத்யத்திலே ஸ்ரீ மகாலக்ஷ்மி ஸமேதனாக கருடன் மேல் ஏறிக்கொண்டு ஸ்ரீஹரி கஜேந்திரனையும் அழைத்துக்கொண்டு வைகுண்டம் வந்தார் எனவும், சிவனும் பார்வதியும் கைலாஸம் திரும்ப, தேவதைகள் விதவிதமான வாகனங்களில் அவரவர்களின் இருப்பிடத்திற்கு புறப்பட்டனர் என்பதைக் கூறியுள்ளார் ஸ்ரீவாதிராஜர்.

48வது பத்யத்திலே விஸேஷமாக இப் பதத்தின் பலஸ்ருதியை விளக்கும் விதமாக, காலையில் சீக்கிரமாக எழுந்து இந்தக் கதையைப் பாடி கேட்பவர்களுக்கு துர்ஸ்வப்னம், துர்புத்தி, கெட்ட எண்ணங்கள் நீங்கும் எனக் கூறி, ஸேஷ வாகனனை தியானித்து இருப்பவருக்கு ஸத்ஸங்கமும் ஸாயுஜ்ய பதவியும் (மோக்ஷமும்) ஸித்திக்கும் என ஸ்பஷ்டமாக எடுத்துரைக்கிறார் ஸ்ரீவாதிராஜர்.

49 மற்றும் 50 பத்யங்களில் நிறைவு செய்யும் விதமாக, ஸ்ரீஹரியை, மாதவனை மறவாமல் நினைக்கும்படியும், அவ்விதம் நினைப்பவர்க்கு மோக்ஷ பதவியுண்டு, அதனால் கரிராஜவரதனை ஸரணம் எனத் துதிக்கும்படியும் வலியுறுத்தி, த்ருவராஜனுக்கு வரம் கொடுத்த, ப்ரஹலாதனுக்கு அபயமளித்த, திரௌபதிக்கு ஸம்ரக்ஷணம் கொடுத்த, தேவனுக்கு ஹயவதனனுக்கு ஸ்ரீ வாஸுதேவனுக்கு ஸரணம் என வேண்டி பூர்த்தி செய்கிறார் ஸ்ரீவாதிராஜ தீர்த்தர்.*

இத்தகைய உயரிய கிரந்தத்தை அனுதினமும் பக்தியுடனும், அதன் விஸேஷ அர்த்தங்களை தெரிந்து கொண்டும், நாம் அனைவரும் பாராயணம் செய்து ஸ்ரீவாதிராஜரின் அந்தர்யாமியான ஸ்ரீஹயக்ரீவ ரூபி பரமாத்மாவின் அனுக்கிரஹத்திற்கு பாத்திரராவோமாக!!

ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து!!

**** திரு.லட்சுமிபதிராஜா, சென்னை**

தொடர்



## ஹரிகதாம்ருதசார ஸ்லோக அர்த்தங்கள்

### கருணா சந்தி - முதல் 3 பத்யங்கள்

ஹரிகதா2ம்ருதசார கு3ருக3ள
கருணதிந்தா3பநிது பே1ளுவே
பரம ப4கவத்3ப4க்தரித3னாத3ரதி3 கேளுவுது3

ஸ்ரவண மனனானந்த3வீவுது3
ப4வஜனித து3க்க2க3ள க1ளெவுது3
விவித4 போ4க3வ னிஹபரங்களலித்து ஸலஹுவுது3 |
பு4வனபாவன நெனிப லகுமி
த4வன மங்க3ள க1தெ2ய பரமோ
த்ஸவதி3 கி1விகொ3ட்டாலிபுது3 பூ4ஸுரரு தி3னதி3னதி3 ||1-(14)

கருணா சந்தியின் முதல் இரு பத்யங்களில், ஹரிகதாம்ருதசாரம் எப்படி கேட்க வேண்டும், கேட்பதால் என்ன பலன்? மற்றும் இந்த கிரந்தத்தின் மகத்துவம் என்ன என்பதை ஸ்ரீஜகன்னாததாசர் விளக்குகிறார். ஒரு நல்ல விஷயத்தை கேட்டவுடன், நம் மனதுக்கு ஆனந்தம் உண்டாகிறது. அது தற்காலிகமானதாகவும் இருக்கலாம். ஸ்ரீவாதிராஜர் சொல்வது இப்படி:

ஆவன ஸ்ரவண மனனா நிதித்யாஸன
ஸ்ரீவிஷ்ணுவின பக்தி மஹாபிரசாதங்களு
கைவல்யபத கிக்கித நிச்சனிகெந்து
பாவக்ஞரு பேள்வரு ||

ஸ்ரவண செய்தபிறகு அதனை மனன, நிதித்யாஸன செய்தால் கிடைப்பது விஷ்ணு பக்தி என்னும் மகாபிரசாதம். அதன்பின் உச்ச விஷயமான மோட்சமே கிடைக்கிறது என்கிறார் ராஜர். அதன்படியே ஜகன்னததாசரும், விவித போகவனு என்கிறார். போகங்கள் என்றால் சம்சாரிக சுகங்கள் அல்ல. இதே சம்சாரத்தில் இருந்துகொண்டு, உபன்யாசங்களில் பகவந்தனின் அசிந்த்யாத்மக நற்குணங்களை சில நிமிடங்களே ஆனாலும் கேட்டு மகிழ்கிறோமே, அதுவே இஹத்தின் சுகம். அடுத்து மோட்ச சுகம் என்றால், ஸ்வரூபானந்தம். மொத்த உலகத்தையே பவித்ரம் ஆக்குபவனான பகவந்தனின் அனந்த கல்யாண குண கானங்களைக் கேட்டால் மேலே சொன்ன சுகங்கள்

கிடைக்கின்றன என்கிறார் தாசர்.

அப்படிப்பட்ட பகவந்தனின் கதைகளைக் கேட்கையில், தியானம் செய்கையில், நாம் மகிழ்ச்சியுடன், புத்துணர்ச்சியுடன் கேட்க வேண்டும். காது கேட்க வேண்டும். தலை ஆட வேண்டும்.

மளெய நீரோணியலி ப$^{1}$ரியலு
ப$^{3}$ளஸரூரொளகி$^{3}$த்த$^{3}$ ஜனரா
ஜலவு ஹெத்தொ$^{3}$ரெகூ$^{3}$டே$^{3}$ மஜ்ஜன பான **கை$^{3}$**த$^{3}$பரு ।
கலுஷ வசனக$^{3}$ளாதொ$^{3}$டெ$^{3}$யு பா$^{3}$
ம்பொ$^{3}$ளெய பெ$^{1}$த்தன பா$^{1}$த$^{3}$மஹிமா
ஜலதி$^{3}$ பொக்குத$^{3}$ரிந்த$^{3}$ மாண்த$^{3}$பரெ மஹிஸூரரு ||2-(15)

அடுத்து 2ம் பத்யத்தில், மழை நீரானது சாலையின் ஓரத்தில் ஓடும்போது அசுத்தம் என்று அதனை மிதிக்காமல் தாண்டிச் செல்கிறோம். அதுவே நதியில் சேர்ந்தபோது, கங்கை, யமுனை என்று சொல்லி, அனைத்து பாவங்களையும் போக்கவல்ல புனித நீர் என்ற சிந்தனையுடன் அதில் நீராடுகிறோம்.

கங்கை, ஸ்ரீஹரியின் பாதங்களைக் கழுவி வந்த நீர். யமுனை, ஸ்ரீகிருஷ்ணன் தாண்டிய நீர். அவன் பிறந்தபோது அவனை வணங்கி வழிவிட்ட நீர். அப்படிப்பட்ட பகவந்தனின் பாதங்களின் மகிமையை எப்படி சொல்வது? அகலிகையின் சாபத்தைப் போக்கிய பாதங்கள், அர்ஜுனனை காத்த பாதங்கள், துரியோதனனின் கர்வத்தை அடக்கிய பாதங்கள் அவை.

அப்படிப்பட்ட அனைவரின் பாவங்களையும் களையத்தக்க மகிமைகளைக் கொண்ட பாதங்களைப் போல, இந்த ஹரிகதாம்ருதசாரத்திலும் பகவந்தனின் ரூப நாம குண க்ரியைகள் நிரம்பியிருப்பதால், வேத புராண சாஸ்திர பாகவத அனைத்தின் சாரமும் இதில் அடங்கியிருப்பதால், அந்த கங்கையில் ஸ்னானம் செய்தால் எவ்வளவு பவித்ரம் ஆகிறோமோ, அவ்வளவே இந்த கிரந்தத்தைப் பானம் செய்தாலும்கூட பவித்ரம் ஆகிறோம் என்கிறார் தாசர்.

ஸ்ருதி த$^{1}$திகளபி$^{4}$மானி லகுமி
ஸ்துதிக$^{3}$ளிகெ$^{3}$ கோ$^{3}$சரிஸத$^{3}$ப்ரதி
ஹத மஹைஸ்வர்யாத்யகி$^{2}$ள ஸத்$^{3}$கு$^{3}$ண கணாம்போ$^{4}$தி$^{3}$ ।

ப்ரதிதி[3]வஸ தன்னங்க்[4]ரி ஸேவா
ரத மஹாத்மரு மாடு[3]தி[1]ஹ ஸம்
ஸ்துதிகெ[3] வஷனாகு[3]வனிவன காருண்யகேனெம்பே[3] ||3-(16)

அடுத்து 3ம் பத்யத்தில், பரமாத்மன் கருணாமயியாக, கருணா சமுத்திரனாக இருக்கிறான். நாம் ஒரு முறை கிருஷ்ணா என்று சொன்னால் போதும், அவன் ஓடோடி வந்து நம் பின்னாலேயே நின்று, நம் பேச்சைக் கேட்கிறான், ஏனெனில் பகவந்தன் 'பக்த பராதீனன்'. இப்படி ஒருவன் வந்து நம்முடனேயே எப்போதும் இருக்க வேண்டுமெனில் நாம் என்ன நினைப்போம்? அவனுக்கு வேறு வேலையே இல்லை. மற்றும் ஏதோ ஒரு பலனை எதிர்பார்த்து நம்முடன் இருக்கிறான் என்று நினைக்கத் தோன்றும். ஆனால் ஸ்ரீகிருஷ்ணனை இப்படி சொல்ல முடியுமா என்றால், ஜகன்னாத்தாசர் - இல்லை என்கிறார்.

மொத்த வேத ராசிகளுக்கே அபிமானியான லட்சுமிதேவியானவள், பகவந்தனுக்கு செய்யும் சேவைகளைப் பார்ப்பதற்கே பகவந்தனுக்கு நேரம் இல்லை. அடுத்து அனைத்து உலகங்களிலும் அனைத்து ஜீவர்களுக்கும் அவரவர்களுக்குத் தேவையானவற்றைக் கொடுக்க வேண்டிய வேலையும் அவனுக்கு உள்ளது. ஆகவே, அவனுக்கு வேறு வேலை இல்லை என்று சொல்ல முடியாது.

அடுத்து, அப்ரதிஹத மஹைஸ்வர்யாத்யகிள சத்குண கணாம்போதி - அவனின் அபரிமிதமான ஐஸ்வர்யங்களை, சத்குணங்களை, ருத்ராதி தேவர்களும்கூட அறிவதற்கு சாத்தியம் இல்லை என்றபிறகு, நரர பாடேனு என்கிறார்.

ஒரு பக்தனானவன், எந்த வேலையை செய்தாலும் அவற்றை 'ஸ்ரீஹரி இது உன் பாதங்களில் அர்ப்பணம்' என்று அர்ப்பித்தால், பகவந்தன் அவர்களின் வசமாகிறான்; தன்னையே கொடுக்கிறான் என்று அவனின் மகாமகிமையை ஸ்ரீஜகன்னாததாசர் மிகவும் அற்புதமாக விளக்குகிறார். (தொடரும்).

*** **திரு.முரளிதர தாசரு, பெங்களூரு**

***

வங்கிக் கணக்கில் சந்தா செலுத்தினால், மறக்காமல் உங்கள் முகவரியை 89044 58276 எண்ணுக்கு வாட்சப் / SMS அல்லது haridasa.vijayam@gmail.comக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**ஹரிதாச விஜயம் - ஆன்லைனில் படிக்க**

* ‘Readwhere' Android/iPhone appனை Download செய்யவும்
* Search Boxல் 'Haridasa Vijayam' என்று தேடவும்.
* 1 ஆண்டு மின்னிதழ் சந்தா : ரூ.100
* அங்கேயே ‘Subscribe' க்ளிக் செய்து, பணத்தைக் கட்டவும்.
* மாதாமாதம் Readwhere appல் ‘Shelf'ல் புது இதழ், பிரதி 25ம் தேதி வெளியாகும்.
* eBook சந்தா பணத்தை எங்களுக்கு அனுப்பக்கூடாது.

இந்த இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப், அல்லது தொலைபேசியில் அழைத்தோ சொல்லவும்.

ஹரிதாச விஜயம் அனுப்புதல் மற்றும் புதிய புத்தகங்கள் குறித்தான தகவல்களுக்கு ஒரு புதிய வாட்சப் க்ரூப் தொடங்கப் பட்டுள்ளது. வேண்டுமெனில் சேர்ந்து கொள்ளலாம். 89044 58276 எண்ணில் தொடர்பு கொள்ளவும். Admin only. No spam.

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்

Haridasa Vijayam - Monthly

மலர் 2 ** நவம்பர் 2020 ** இதழ் 1



ஸ்ரீவிஜயதாசர்

# ஹரிதாச விஜயம்

## சந்தா விவரம் (36 பக்கங்கள்)

1 ஆண்டுக்கு ரூ.200/-
3 ஆண்டுகளுக்கு ரூ.500/-
5 ஆண்டுகளுக்கு ரூ.900/-
10 ஆண்டுகளுக்கு ரூ.1700/-

புதிய சந்தாக்கள் அந்தந்த மாதத்திலிருந்து துவங்கும். பழைய இதழ்கள் வேண்டுமெனில், இதழுக்கு ரூ.20/- என சேர்த்து அனுப்பவும்.

## வங்கி விபரம்:

Sathya Narayanan, ICICI Bank - Savings account

A/c. No. 000101043177. IFSC: ICIC0000001

Cenotaph Road Branch, Chennai 18

**Subscription Renewal**

பத்திரிக்கை துவக்கும் முன் & துவங்கிய மாதத்தில் ஓராண்டுக்கு சந்தா கட்டியவர்களுக்கு அதை புதுப்பிக்கும் நேரம் நெருங்கி வருவதால் ஒரு சிறிய நினைவூட்டல். உங்கள் சந்தா முடியும் மாதத்தை உங்களுக்கு அனுப்பிய Receiptல், அல்லது இந்த மாத 'To address' labelல் முதல் வரியில் பார்க்கலாம்.

கூடுதலாக சில பக்கங்களை சேர்க்க வேண்டும், மேலும் பல அரிய தகவல்களைக் கொடுக்க வேண்டும் என்று நினைக்கிறோம். அதற்கு உங்கள் அனைவரின் ஆதரவு இருந்தால் மட்டுமே சாத்தியம் என்பதால், உடனடியாக உங்கள் சந்தாவை புதுப்பிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம். நன்றி.

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 2 : இதழ் 1

**நிர்வாக ஆசிரியர்**
'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276.
haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**
'தாச சாகித்ய சேவா ரத்ன'
திரு.குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**
திரு. முரளிதர தாசரு,
திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா,
திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

## ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்
## ஆஸ்வீஜ & கார்த்திக மாதங்களில்

ஆஸ்வீஜ சுத்த த்விதியை - ஸ்ரீஆனந்தவிட்டல தாசர், லிங்கசுகூர்
ஆஸ். சுத்த த்ருதியை - ஸ்ரீவரதேஷ விட்டல தாசர், லிங்கசுகூர்
ஆஸ்வீஜ சுத்த சப்தமி - ஸ்ரீப்ராணேஷ தாசர், லிங்கசுகூர்
ஆஸ்வீஜ பகுள ப்ரதமை - ஸ்ரீகுருஜகன்னாத தாசர், கௌதளம்
கார்த்திக சுத்த தசமி - ஸ்ரீவிஜயதாசர், சிப்பகிரி / சிகலபரவி
கார்த்திக சுத்த சதுர்தசி - ஸ்ரீவரதவிட்டல தாசர், கவிதள

# ஆசிரியர் பக்கம்

ஹரிவாயுகுருகளின் ஆசிகளால், ஹரிதாச விஜயம் இரண்டாம் ஆண்டில் அடியெடுத்து வைக்கிறது. ஆதரவு அளித்து வரும் அனைவ ருக்கும் நன்றி. இதற்கான கட்டுரைகளை, தகவல்களை தொடர்ந்து அளித்து வரும் நம் குழு நண்பர்களுக்கும் நன்றிகள்.

இதுவரை நம் பத்திரிக்கையில் வந்து முடிந்த தொடர்கள்: பகவத்கீதா சாரம், முண்டிகெ பாடல்கள், ஹரிதாச சாகித்யத்தின் வரலாறு, ஸ்ரீகுருகோவிந்த விட்டலதாசரின் வாழ்க்கை வரலாறு ஆகியவை. தற்போது வந்து கொண்டிருக்கும் தொடர்கள் : கேசவ நாமா பாடல்கள், ஸ்ரீதவிட்டலரின் வாழ்க்கை வரலாறு, ஹரிகதாம்ருதசார கட்டுரைகள் / குறுக்கெழுத்துப் போட்டி / பத்ய அர்த்தங்கள், கன்னட கிரந்தங்களின் அறிமுகம், பலவிது பாள்துதக்கெ ஆகியவை.

இன்னும் தொடர்ந்து பல்வேறு விஷயங்கள், புத்தகங்கள், சுளாதிகள் என ஏகப்பட்ட தகவல்களை, பகவந்தனின் கருணையால் வரிசை யாகக் கொடுக்கவுள்ளோம். தொடர்ந்து ஆதரவு அளித்து, மற்றவர் களுக்கும் நம் பத்திரிக்கையினை அறிமுகம் செய்து வைக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

அதிக ஆஸ்வீஜ மாதத்திற்காக, புத்தக தானத்திற்காக பணம் அனுப்பி யவர்களுக்கு மிக்க நன்றி. அவர்கள் சார்பில் பல ஊர்களில் மாத்வ அன்பர்களுக்கு புத்தகங்கள் தானமாக அளிக்கப்பட்டன. இதே போல, உங்கள் வீட்டுத் திருமணம் போன்ற நிகழ்ச்சிகளுக்கு புத்தகங்களை பரிசாக அளிக்கலாம். மாத்வ சித்தாந்ததைப் பற்றிய, அரிய கன்னட புத்தகங்களின் தமிழ் மொழிபெயர்ப்பு புத்தகங்கள், அனைவருக்கும் சென்று சேருமாறு செய்வோம்.

நமது பத்திரிக்கைக்காக ஒரு வாட்சப் க்ரூப் உள்ளது. அதில் பத்திரி க்கை, புத்தகங்கள் பற்றிய முக்கிய தகவல்கள் கொடுக்கப்படுகின்றன. அதில் சேர விருப்பம் உள்ளவர்கள் தொடர்பு கொள்ளவும்.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்**

# துணை ஆசிரியர் பக்கம்

பகவான் பாரதிபதி பரதத்வ பிரகாசிக, ஸ்ரீபூர்ணபிரக்ஞாசார்ய அந்தர்கத ஸ்ரீரகுமாயி சமேத விடோபாவின் அருளாலும், ஹரிதாசர்களின் அருளாலும் இந்த ‘ஹரிதாச விஜய’ மாதப்பத்திரிக்கை, ஓராண்டு காலமாக நன்றாக நடைபெற்று வருகிறது. சார்வரி ஆண்டு துவக்கத்திலிருந்து, 2020 மார்ச முதல், இந்த கொரோனா மஹாமாரி உலகத்தையே பீடித்துக் கொண்டிருப்பதால், நாங்கள், பத்திரிக்கை நிர்வாகிகள், பல இன்னல்களை சந்தித்து வருகிறோம். நிறைய பொருளாதார, போக்குவரத்து, பின்னடைவுகள் ஏற்பட்டன.

இருந்தாலும், பெங்களூரில் இருந்துகொண்டு, தனிப்பட்ட ஆளாக இருந்து, சத்ய நாராயணன் அவர்கள் இதனை நிர்வகித்து வருகிறார். கடந்த இரு மாதங்களாக பத்திரிக்கை பட்டுவாடா, மாதயிறுதியிலேயே ஆகிவிடுகிறது. இதில் ஏதாவது குறைகள் இருந்தால், தயக்கமின்றி தெரிவிக்கவும். இந்த இதழிலிருந்து இரண்டாம் ஆண்டில் அடியெடுத்து வைக்கிறோம். வாசகர்கள், சந்தா தாரர்கள் எண்ணிக்கை உயர்ந்தால், இன்னும் சில பக்கங்களை உயர்த்தலாம் என்னும் எண்ணம் உள்ளது.

தாச சாகித்யம் ஒரு பெரும் கடல். அதில் ஸ்னானம் செய்வது என்பது, ஏதோ ஒரு மூலையில் நீராடுவதைப் போல. முழு கடலையும் வியாபித்து, ஸ்னானம் செய்யவே முடியாது. இறைவன் அருள் இருந்தால், பல விஷயங்களை கூறலாம். அனைத்திற்கும் உங்கள் ஆதரவு தேவை. மீண்டும் சந்திப்போம்.

** **குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்**

| கன்னடம் | அருஞ்சொற்பொருள் |
|---|---|
| | கடினமான சொற்களின் அர்த்தங்கள் |

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

1. கைவல்ய / கைவல்யபத³ = முக்தி, மோட்சம், ஸ்வர்க்கம்
2. கோவித³ரு = பண்டிதர் / வித்வாம்ஸர்
3. த³ர்ப்பண = கண்ணாடி 4. பு⁴ஜங்க = சேஷர் / பாம்பு
5. வாரிஜ = தாமரை 6. ஸம்பத³ = ஐஸ்வர்யம் / செல்வம்
7. அவியோகி³ = பிரிவு இல்லாதவர் (எப்போதும் சேர்ந்தே இருப்பவர்)
8. சீல = ஆடை / வஸ்திரம் 9. தரங்க³ = அலை
10. பயோத³தி⁴ = பாற்கடல்

தொடர்

## ஹரிதாசர்களின் வாழ்க்கை வரலாறு

## ஸ்ரீதவிட்டல தாசர்

சிரிரமண தவசரண என்ற தீர்க்க கிருதியை ஸ்ரீஜகன்னாததாசர் பாட, அதைக் கேட்ட தாசப்பனின் மனதில் பெரும் மாற்றமே உருவாகத் தொடங்கியது. இவ்வளவு நாட்கள் தான் செய்த தவறுகள் அனைத்தும் ஒருசேர ஒரு திமிங்கிலத்தைப் போல வந்து, தன்னையே விழுங்கி விடுவதைப் போல அவருக்கு தோன்றியது.

தாசரின் பஜனை, பிரவசனங்கள் முடிந்தன. நிகழ்ச்சிக்கு வந்த மக்கள் தத்தம் வீடுகளுக்குத் திரும்பினர். ஸ்ரீஜகன்னாததாசர் மற்றும் ஸ்ரீபிராணேஷ தாசர் இந்த இருவர் மட்டுமே இருந்த நிலையில், தாசப்ப அவர்கள் இருவரை சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி, ஸ்ரீஜகன்னாததாசரின் பாதங்களை கெட்டியாக பிடித்துக் கொண்டார். அதுவரை தான் செய்த தவறுகளை சொல்லிக்கொண்டு கண்ணீர் விட்டுக் கதறினார். தாச வரேண்யரான நீங்கள் எனக்கு தாச தீக்ஷையைக் கொடுத்து அருளவேண்டும் என்று வேண்டினார்.

தாசப்பனின் முக பாவங்களை, அவனின் மனநிலையை காலை யிலிருந்தே கவனித்து வந்த ஸ்ரீதாசர், அவன் சுயபச்சாதாபத்தினால் மனத்தூய்மை அடைந்திருக்கிறான் என்பதை அறிந்து, அவருக்கு அபயம் அளித்தார். 'தாசப்பா, ஆனது ஆகிவிட்டது. நீ எங்களுக்கு அன்னியனல்ல. குருராஜரின் ப்ரேரணையின்படியே, முற்பிறவியின் தம்பியான உன்னை எச்சரித்து, நீ இங்கு வந்திருக்கும் நோக்கத்தை உணர்த்தி, உனக்கு தாச தீக்ஷையைக் கொடுக்கவே நாம் இங்கு வந்தோம். நாளை காலை உன் விருப்பம் நிறைவேறும். அதற்குத் தேவையான தயாரிப்புகளை செய்துகொள்' என்று அவருக்கு தைரியம் அளித்தார்.

**அங்கித உபதேசம்**

தாசப்பனுக்கு அன்றிரவு காலத்தைக் கழிப்பது ஒரு யுகம் கழிவது போல தோன்றியது. மனம் முழுக்க ஸ்ரீஜகன்னாததாசரின் திவ்ய

ஆக்ருதியே நிரம்பியிருந்தது. தனக்கு அருள்வதற்காகவே வந்த தாச-த்வயர்களின் கருணையை நினைத்து நினைத்து, உள்ளம் மருகினார்.

மறுநாள் விடியலிலேயே எழுந்த தாசப்பன், தன் குல பத்ததியைப் போலவே சிகை வைத்துக் கொண்டார். அருகில் இருந்த வரதா நதியில், ஸ்னானம் செய்து, ஆன்ஹிகங்களை முடித்து சிகையுடன் வந்த தாசப்பனைக் கண்ட ஊர் மக்கள் வியப்பில் ஆழ்ந்தனர். சாது, சஜ்ஜனர்களின் தரிசனத்தினாலேயே, நற்பலன்கள் உண்டாகின்றன என்னும் சொல்வழக்கு தாசப்பனின் விஷயத்தில் உண்மையானதை அனைவரும் கண்டனர்.

தாசப்பனின் மாற்றம் மற்றும் அவனது முகத்தில் தெரிந்த சாத்விக தனம் ஆகியவற்றைக் கண்ட ஸ்ரீஜகன்னாததாசருக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று. முற்பிறவியின் சகோதரனான அவன் மேல் அவருக்கு அதிகமான பாசமும், கருணையும் தோன்றியது. தமது ஆன்ஹிக ங்களை முடித்துக்கொண்டு, தாசப்பனை அழைத்த அவர், அவன் தலைமேல் அவரது கரங்களை வைத்து, தம் பிம்பமூர்த்தியை இவ்வாறாக பிரார்த்திக்கொண்டு அங்கித உபதேசத்தை வழங்கினார்.

ஸ்ரீதவிட்டல ஸர்வரந்தராத்ம ||ப

நீதயதி ஒலிது நித்யதலி பாலிபுது ||அப

சிக்கதனதலி தந்தெதாயிகளு ஒலிது பெஸ
ரிக்கி கரெதரு நின்ன தாஸனெந்து |
அக்கரதி ஒலிது பவதுக்ககள பரிஹரிஸி
மக்களனு தாயி ஸலஹுவ தெரதி ஸந்தெயிஸு ||1

ஷுகனய்ய நின்ன பதபகுதி த்வத்கதெ ஷாஸ்த்ர
யுகுதிவந்தர ஸங்க சுகவன்னித்து |
சகலகர்மகள வைதிகவெனிஸு ஒலிது தே
வகி தனய நின்னவர முகதிந்த ப்ரதிதினதி ||2

மாதரிஷ்வப்ரிய சுரேதராந்தகனெ புரு
ஹூதனந்தன சக நிராதங்கதி |
நீ தோரு மனதி ஸம்ப்ரீதியிந்தலி ஒலிது
ஹோதாஹ்வய ஜகன்னாத விட்டல பந்து ||3

இப்படியாக கர்ஜிகி தாசப்பா, ஸ்ரீஜகன்னாததாசரின் சிஷ்யராகி, ஸ்ரீதவிட்டல தாசர் ஆனார். அங்கிதம் கொடுத்தபிறகு, ஸ்ரீதாசர், ஸ்ரீத விட்டலருக்கு பல விஷயங்களை உபதேசித்து, தாசதர்மத்தை பின் பற்றும் அவசியத்தை உணர்த்தினார். இதனுடன், ஸ்ரீதவிட்டலரின் விருப்பத்தின்படி, ஸ்ரீஹரிகதாம்ருதசாரத்தில் உள்ள தத்வங்களின் உபதேசத்தையும் அளித்தார்.

குருகளிடமிருந்து உபதேசங்களைப் பெற்ற ஸ்ரீதவிட்டலதாசர், ஹரி தாச தீக்ஷையின் முக்கிய அடையாளங்களான தாளம், தம்பூரி, கெஜ்ஜெ ஆகியவற்றை தரித்தார். அன்றிலிருந்து தாசரின் தினப்படி நடவடிக்கைகள் முற்றிலும் மாறின. (ஸ்ரீதவிட்டலதாசர் பயன்படுத்திய 'ஸுரஷ்ருத' என்னும் விசேஷமான ப்ருங்கி வீணையானது இன்றும் பெங்களூரில் வசிக்கும், வியாசதாசங்களில் விற்பன்னரான வித்வான். பி. சத்யநாராயணாச்சார் என்பரின் வீட்டில் இருக்கிறது).

தாசதீக்ஷை மற்றும் அங்கித உபதேசத்தின் மகிமையை எப்படி விளக்குவது? அத்தகைய உபதேசம் பெற்ற சில நாட்களிலேயே, ஸ்ரீத விட்டலதாசர், அனைவரும் வியக்குமாறு, ஆத்யாத்ம விஷயத்தில் அபாரமான சாதனைகளைப் புரிந்தார். வினைப்பயன்களின் பலன் மற்றும் சாதனையின் பலன்களால் ஸ்ரீதவிட்டலதாசர், பிம்ப அபரோக்ஷத்தின் உச்ச நிலையை அடைந்தார்.

தமது குருகள் எழுதிய ஹரிகதாம்ருதசார கிரந்தத்தை தினமும் படிப்பது, சிந்திப்பது, மனனம் செய்வது என தாசருக்கு இந்த கிருதியின் பரிபூர்ண அறிவு உண்டாயிற்று. ஸ்ரீஜகன்னாததாசரின் ஆணைப்படியே, பாமினி ஷட்பதி சந்தஸ்ஸில், 32 சந்திகளைக் கொண்ட அந்த கிரந்தத்திற்கு, அதே சந்தஸ்ஸில் 24 நுடிகளைக் கொண்ட பல-ஸ்ருதியை இயற்றினார். இந்த பல-ஸ்ருதியானது கிரந்தத்துடன் சேர்ந்து அதன் பாகமாகவே ஆகியிருப்பது என்பது, குருகளுக்கு சிஷ்யரின் மேல் இருக்கும் கருணை, அருள் ஆகியவற்றின் சாட்சியாக இருக்கிறது.

ஸ்ரீதவிட்டலதாசரின் இந்த மாற்றத்திற்கு காரணளான, அவரது தர்ம பத்னியான, சாத்வி குண்டம்மா, மட்டற்ற மகிழ்ச்சியுடன் தன் இறுதிக்காலம் வரை தன் கணவரின் சேவையை செய்து வந்தாள்.

**ஸ்ரீதவிட்டலதாசரின் கிருதிகள்**

ஸ்ரீதவிட்டலதாசரின் வாழ்க்கையைப் போலவே அவரது கிருதிகளும் மிகவும் விசேஷமானவை. தாசர், அவரது அங்கித பிரதானம் ஆனபிறகு, தொடர்ந்து ஆன்மிக, ஆத்யாத்மிக வழியிலேயே, படிப்பது, கிருதிகளை இயற்றுவது என இருந்ததாக தெரியவருவதால், அதிக மான கிருதிகளை இயற்றியிருக்கலாம் என நினைக்கிறோம். ஆனால், இதுவரை கிடைத்துள்ள அவரது கிருதிகள் வெறும் 70+ மட்டுமே. இந்த அவரது கிருதிகளை மட்டுமே படித்தவர்களுக்கு, தாசரின் சாதனை, அவர் அடைந்த சித்தி மற்றும் அவருக்குக் கிடைத்த பகவத் அருள் ஆகியவை நன்றாக புரிகின்றன.

மேற்கண்ட ஹரிகதாம்ருதசார பல-ஸ்ருதியுடன், அவரது இரு சுளாதிகள், ஒரு லாவணி மற்றும் பல கீர்த்தனைகள் இருப்பது தெரியவருகிறது. தம் குருகள், கங்கை, கௌரி, ருத்ரதேவர், துளசி, ராதை, முதலான தேவதைகளைப் பற்றியும், ஸ்ரீனிவாச, கிருஷ்ண, ராம ஆகிய ஸ்ரீஹரியின் ரூபங்களைக் குறித்து தாசர் கீர்த்தனைகளை இயற்றியுள்ளார். நீதிபோதனை, தத்வசிந்தனைகளைக் குறித்த கீர்த்தனைகளும் உள்ளன.

ஸ்ரீதவிட்டலரின் கிருதிகளின் சிறப்பு என்னவென்றால், அவற்றின் எளிமை, சரளம், அதில் பொதிந்திருக்கும் கருத்துகள் அற்புதமானவை. அவரது கீர்த்தனைகள் அனைத்தும் அவரது அனுபவத்தின் பின்னணி யில் வந்தவை என்று தெரிய வருகிறது. அபரோக்ஷ ஞானிகள் கிருதிகளில் தெரியும், திடமான பக்தி இவற்றிலும் நாம் பார்க்கிறோம். இவற்றில் ஒன்றிரண்டினை மட்டும் இங்கு பார்ப்போம்.

*** **தொடரும்...**

* குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam@gmail.com என்னும் ஐடிக்கோ அல்லது 89044 58276 க்கோ வாட்சப் செய்யலாம்.

* ஹரிதாச விஜயத்தை & இதில் வரும் தகவல்கள், போட்டிகளைப் பற்றி தயவு செய்து உங்கள் நண்பர் / உறவினர்களிடம் அறிமுகம் செய்யுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### பஞ்சமஹாயக்ஞ சந்தி - விடைகள்

| | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 ஜ | ன | னி | | | 2 ப | ஞ் | ச | 28 நா | ரி | | 3 ப் | ர | ஸ் | தா | 29 ப |
| னா | | 27 யோ | | 4 கூ | ர் | ம | | க | | 5 ந | ர | ஹ | ரி | | ர் |
| ர் | | ஷா | | வ | த | ரா | தி | ந் | 18 இ | | த் | | ஹ | | ய |
| த் | | | | | 36 க | | | டி | | | யு | | 35 ஸ்ரீ | | ங் |
| த | த் | ரு | னி | 19 அ | | | | ல | த | ரு | 20 ம் | | 6 து | ர | க |
| ன | | | 7 ப | ர் | ஜ | ன் | ய | ட | | | ன | த | 21 வ | | |
| | | | | ச் | | | | ண் | | 30 போ | ன் | ப் | | | |
| | ஹ | தே | 31 த் | 22 சி | | பி | ளு | 37 க | டி | 23 கி | | 38 ஆ | | | |
| | | | வ | | | ரூ | | | | வ | | | | | |
| 32 ஆ | | ன் | 8 க் | ரு | க | ல | | | 9 ஈ | ர | ரீ | 33 ஸ | ம் | 24 பு | ய |
| 10 வி | ஹா | ய | ஸ | | | 11 கோ | வி | ந் | த | | | ம் | | | ர் |
| ம | | ர் | ச | | | | 12 லோ | ஹ | | | | ஹ | மோ | 25 கு | வ |
| 13 த் | வா | 39 ஸு | ப | ர் | ண | | ஷ் | | 14 வ் | 34 ரு | ஜி | ன | | | த் |
| கா | | | ஞ் | | ர | | ட | | மி | த் | | ன | த | ந் | 26 அ |
| 40 ஏ | | | ட் | | 41 க | | 15 தா | மி | ஸ் | ர | ம் | | | | ப் |
| | 16 வ | ர் | 42 ஷ | | | 17 தா | மோ | த | 43 ர | ன் | | | | | பு |

**பஞ்சமஹாயக்ஞ சந்தி குறுக்கெழுத்துப் போட்டிக்கு விடை எழுதி புத்தகப் பரிசு பெறுபவர்கள்:**

1. திருமதி. பானுமதி, திருநெல்வேலி 2. திருமதி. லலிதா, திருநெல்வேலி, 3. திருமதி. பிரமிளா சாந்தி, திருநெல்வேலி, 4. திருமதி. சந்திரா, கோவை, 5. திருமதி. விஜயப்ரியா, வேளச்சேரி.

ஆராதனை

## ஸ்ரீவிஜயதாசர்

## கன்னடத்தில்: திரு.ஏ.பி.ஷாமாச்சார்

அஞ்ஞான திமிரச்சேதம் புத்தி சம்பத் ப்ரதாயகம் |
விக்ஞான விமலம் ஷாந்திம் விஜயாக்ய குரும்பஜே ||

ஹரிதாச சாகித்ய பரம்பரையில், ஸ்ரீபுரந்தரதாசருக்கு அடுத்த இடத்தைப் பிடித்தவர் ஸ்ரீவிஜயதாசர். இவரிடமிருந்து தொடங்கி வந்த சாகித்யங்கள் மற்றும் பரம்பரையில் வந்த சிஷ்யர்களின் வரிசை, இடைவிடாது இன்றுவரை வந்திருக்கிறது. சஜ்ஜனர்களின் மேம்பாட்டிற்காக அவதரித்து வந்த இந்த மகானை புகழ்ந்து பாடாத ஹரிதாசர் இல்லை. மோகனதாசர் சொல்வது:

இவர ஸ்மரணெயெ ஸ்னான இவர ஸ்மரணெயெ த்யான |
இவர ஸ்மரணெயெ அம்ருதபான || என்றார்.

சாகித்ய அபிமானிகள் தினந்தோறும் சொல்வது ஸ்ரீவியாசவிட்டலரின் விஜயகவசம்.

ஸ்மரிஸி பதுகிரோ திவ்ய சரணக்கெரகிரோ |
துரித தரிது பொரெவ விஜயகுருகளெம்பரா ||

ஸ்ரீவிஜயதாசரின் முதலாம் சிஷ்யர் மற்றும் அவரின் வாழ்க்கை வரலாற்றை முதலில் எழுதியவருமான ஸ்ரீகோபாலதாசர், குருவின் கருணையை ஸ்தோத்திரங்களில் பாடியது இவ்வாறு:

ஸ்மரிசுவெ நா நிம்ம சரணகமலவன்னு | விஜயராய |
ஷரணஜனர ப்ரிய பரம கருணானிதி விஜயராய |
திவிஜராவேஷதிந்த அவனியொளு உதிஸிதி விஜயராய
மஹியெல்லா சரிஸி சர்வக்ஷேத்ரமூருதிய வர்ணிசிதேயோ
மத்வமதக்கெ அவிருத்தவாகி கவன பத்தாதி | விஜயராயா
ஷுத்ததத்வஸார சுளாதி பதகள புத்திலி விஜயராய |
என்னிந்தலேனேனு ஆகோ சாதனவெல்ல நின்னதெ விஜயராய
ஹ்ருத்கமலதி ஹரிய திளிஸி சத்கதிகபயவித்தெ விஜயராய
நின்ன புண்யத சேஷ இன்னுவும்புவெ நானு பண்ணிபெனெ
சிரி மஹராஜ கோபாலவிட்டல பொலிது கரது
கைபிடிதனய்ய விஜயராய ||

கோபாலதாசரின் ஆத்ம மேம்பாட்டிற்காக உதவிய விஜயதாசரை, எவ்வளவு பாராட்டினாலும் அது போதாது என்று சொல்லி அவர் பாடியதாவது - 'நித்ய பஜிஸி பதுகுவெ புண்யாத்மன்ன'. குருவின் பெயரின் ஒவ்வொரு எழுத்தின் மகிமைகளையும் இவ்வாறு சொல்கிறார்.

வி யெந்து ஜபிசலு விரகுதி தொரகுவுது
ஜ என்னெ ஜனனமரண நாஷவு
ய என்னெ யெல்லதக்கிந்த பகுத்யதிகித்து
ராயென்னெ ராய ராயரன தோர்புவுது ||

ஸ்ரீவிஜயதாசரிடம் இருந்த குருபக்தி மற்றும் சிஷ்ய வாத்ஸல்யம் வேறொருவரிடம் காண்பது அரிது. கோபாலதாசர் இருந்த இடத்திற்குப் போய் அவரை மேம்படுத்தி, ஜகன்னாததாசரை அழைத்துக்கொண்டு அவரையும் மேம்படுத்திய வரலாறு பார்க்கிறோம். தம் குருவைப் பற்றி இவர் சொல்வது:

குருகளெந்தரெ இவரெ குருகளு எனகெ காணோ
தரெயொளகெ புரந்தரதாசரெ குருகளு || என்கிறார்.

ஹரிதாச சாகித்யத்தை மறுபடி நிலைநாட்டியதில் முக்கிய பங்கு வகித்தவர் ஸ்ரீவிஜயதாசர். சுளாதி தாசர் என்று அழைக்கப்பட்ட இவரது சுளாதிகளில் மத்வ சித்தாந்தத்தின் பற்பல தத்வங்களை மொழிபெயர்த்து எளிமையாக்கினார். இரண்டாம் கட்டத்தில் தலைவரான தாசருக்கு நான்கு பேர் சிஷ்யர்கள் இருந்தனர். தனக்கு அனைத்தும் தன் குருவே என்றார் கோபாலதாசர் - வத்ஸ தானு கூகலு காமதேனு ஒதகிதந்தெ' என்றார். மேலும்:

தந்தெ விஜயராய வ்யாளெகெ | பந்த்யோ விஜயராய |
ஹிந்தேனு ஜன்மவு முந்தேனு ஜன்மவு | ஒந்து திளியதெந்திகு யென்னய ||

என்று சொல்லி, 'இன்னேனு இன்னேனு யென்ன குலகோடி பாவன்னவாயிது நிஸ்சயா ஜீயா' என்றது, அனைத்து சஜ்ஜனர்களுக்கும் சொன்னதாகும். ரகுபதிவிட்டல தாசரின் வாக்கு இவ்வாறாக இருக்கிறது:

நானெந்தோ அஹங்காரவன்னெ தொலகிஸோ நின்னவரவ னெனிஸோ |
நீனே கதியெந்து நின்ன மொரெஹொக்கெனோ க்ஷோணியொளகெ பளலி ||

'நின்ன நம்பித நரகெ அன்யராஸ்ரயவேகோ, சன்ன குருவிஜயராயா' என்று வேணுகோபால விட்டலதாசர் கூறினால், ஹயவதன தாசர் 'தாசர நோடிரோ விஜயதாசர பாடிரோ' என்று கொண்டாடினார்.

இப்படி அனைவராலும் கொண்டாடப்பட்ட ஸ்ரீவிஜயதாசரின் திவ்ய சரித்திரத்தை, அவரது கிருதிகளை படித்து தன்யராவோமாக.***

தொடர்

## கேசவ நாமா

## 10. உதயராகம் - ஸ்ரீபுரந்தரதாசர்

கேசவ மூருதி ஏளேளை - நாராயண நீனு ஏளை
மாத4வ மூருதி ஏளேளை - கோவிந்த பெ3ளகா3யிது ஏளய்யா |1
விஷ்ணு மூருதி ஏளேளை - மது4சூதன நீனு ஏளை
த்ரிவிக்ரம மூருதி ஏளேளை - வாமன பெ3ளகா3யிது நீனேளய்யா |2

ஸ்ரீத4ர மூருதி ஏளேளை - ஹ்ருஷிகேஷ நீனு ஏளை
பத்பனாப4 மூருதி ஏளேளை - தாமோதர பெ3ளகா3யிது ஏளோ |3
சங்கர்ஷண மூருதி ஏளேளை - வாசுதேவ நீனு ஏளை
பிரத்யும்ன மூருதி ஏளேளை - அனிருத்தனே பெ3ளகா3யிது ஏளோ |4

புருஷோத்தம மூருதி ஏளேளை - அதோக்ஷஜனெ நீனேளு
நரசிம்ஹ மூருதி ஏளேளை - அச்யுதா நீனேளு பெ3ளகா3யிது |5
ஜனார்த்தன மூருதி ஏளேளை - உபேந்திரனே ஏளோ
ஸ்ரீஹரி மூருதி ஏளேளை - ஸ்ரீகிருஷ்ண பெ3ளகா3யிது ஏளோ |6
பெட்டத வெங்கட நீனேளை - பேலூரு சென்னிக நீனேளை
நாகமங்கலத நரசிம்ஹ நீனேளை - புரந்தரவிட்டல நீனேளோ |7

கர்னாடகத்தில் மாண்ட்யா பகுதியில் இருக்கும் நாகமங்கல க்ஷேத்தி ரத்திற்கு, தனது பயணத்தில் வந்த ஸ்ரீபுரந்தரதாசர், அங்கு இருக்கும் ஸ்ரீலட்சும் நரசிம்மனை தரிசனம் செய்த சந்தர்ப்பத்தில் (விடியல்

நேரமாக இருக்கலாம்), அந்த மங்களமூர்த்தியைக் கண்டு, ஆதி தாளத்தில் உதய ராகத்தில் இந்த கீர்த்தனையை இயற்றியிருக்கலாம்.

ஏளு, ஏளை, ஏளேளை, ஏளய்யா, ஏளோ, நீனேளோ, பௌகாயிது ஏளோ என்றெல்லாம் சொல்வதில், தாசரின், ஏக்கம், கவலை, அவசரம் ஆகிய உணர்ச்சிகளை காணலாம்.

தூக்கத்திலிருந்தே விழிப்பு, தமஸ்ஸிலிருந்தே ஒளி, ஜட தேகத்திலிருந்து தூக்கம் என்னும் நோயினால் ஞானம் வருவதற்கு, மனோபிமானி ருத்ராந்தர்கத லட்சுமி நரசிம்மனே காரணம். அவனே அனைத்தையும் நடத்துவதால், அவனைக் குறித்தே தாசர் பாடியிருக்கிறார்.

திருப்பதியின் வெங்கடேசன், பேலூரின் சென்ன கேசவன், நாகமங்கலத்தின் நரசிம்ம மற்றும் கேசவாதி ரூபங்களுக்கு தம் பிம்பரூபி புரந்தரவிட்டலனை ஐக்ய சிந்தனை செய்கிறார் ஸ்ரீபுரந்தரதாசர்.

## 11. முயற்சி செய்ய வேண்டும்

அப்4யாஸவனு மாட3பே3கு பி3ட3தெ3 - ஸ்ரீகு3
ருப்4யோ நம: எம்ப திவ்ய நாமங்களம் |ப

கேசவ நாராயண மாத4வ கோவிந்த ப4வ
நாஷ ப4க்த ஹ்ருதய கமலாப்3ஜ த்3யுமணி
தோ3ஷரஹித விஷ்ணு மது4சூதன த்ரிவிக்ரம சு
ரேஷ சர்வோத்தம திவ்ய நாமங்களனு ||1

வாமன ஸ்ரீதர ஹ்ருஷிகேஷ
புண்யோத3ர ஹிரண்யவாஸ
தாமோத3ராமல கௌஸ்துப4ரத்ன வனமாலி
ராம ரகு4புங்க3வன நாமங்களனு ||2

சங்கர்ஷண வாசுதேவ ப்ரத்யும்ன நிகி2
ளாங்க1 பங்கே1ஜ ப1த்1ராயதா1க்ஷ
கிங்கர ரக்ஷக அனிருத்த புருஷோத்தம
ஷங்கர ப்ரிய அதோக்ஷஜ நாமங்களம் ||3

நாரசிம்ஹாச்யுத ஜனார்த்தன உபேந்த்ர
ஸாரப[4]வப[4]யஹர கிருஷ்ண விஷ்வோ
த்தார வனமாலி ஆ
மூருதியே நாமங்களம் ||4

அஸமபடு[1] ப[3]லிய காளக[3]தி[3] நுங்கி[3]த[3] நிஜபாத[3]
ரஸவிருத்த[3] தாவிகொ[3]த[3]கு[3]வ தெரதொளு
பி[3]ஸஜாக்ஷ காகி[3]னெலெயாதி கேஷவ என்ன
அஸுவளிது[3] போ[1]பா1க[3] ஜிஹ்வெகொ[3]த[3]கு[3]வந்தெ ||5

'சந்ததம் சிந்தயேனந்தம் அந்த்யகாலே விசேஷத:' என்பது போல, 'சந்தத ஹரி நின்ன சாசிர நாமவு, அந்தரங்கதொளகிரிஸி, எந்தோ புரந்தர விட்டலராயன, அந்த்யகாலதல்லி சிந்திஸோ ஹாகே' என்று ஆகவேண்டுமெனில், எப்போதும் தொடர்ந்து நாமஸ்மரணையை முயற்சி செய்ய வேண்டும். இத்தகைய முயற்சியின் பலனே 'அஸுவளிது போபாக ஜிஹ்வெகொதகுவந்தெ' என்கிறார் கனகதாசர்.

ஸ்ரீகுருப்யோ நம: என்று தொடர்ந்து முயற்சி செய்துகொண்டே இருக்க வேண்டும் என்று தாசர் சொல்வதில் - குரு - பரமகுரு - அவரின் பரமகுருகளை, அதாவது அவரின் குருவான ஸ்ரீவியாச ராஜரை, அவரின் குருவான ஸ்ரீபாதராஜரை, அவர குருகளான, ஸ்ரீமன் மத்வாசார்யரை, ஸ்ரீமத்வரின் குருவான பரமாத்மனையே குறிக்கிறார். கேசவாதி 24 நாமங்களும், சர்வோத்தமனான பகவந்தனின் பெயர்களே ஆகும்.

முதல் நுடியில் அவனின் பெயரைச் சொல்லி, பிறகு அவனின் ரூப லட்சணங்களை விவரித்திருக்கிறார். இரண்டாம் நுடியில் கௌஸ்துபத்தை தரித்திருப்பவன் என்றும், மூன்றாம் நுடியில் ருத்ரரால் பூஜிக்கப்படுபவன் என்றும், நான்காவதில் சர்வபய நிவாரகன் மற்றும் உலகத்தைக் காப்பவன் என்றும், ஐந்தாவதில் அசமபவன் என்றும் த்ரிவிக்ரமன் என்றும் பிம்பரூபியான கேசவனை வணங்குகிறார்.

இந்த தேகமானது அழியும்போது, உன் நினைவு இருக்குமாறு, நம் நாக்கில் இருக்கவேண்டிய நாமமே கேசவ நாமங்கள். கேசவனின் (பிம்பரூபனின்) ஸ்மரணையினால் அந்த பெயர்களே நினைவுக்கு வர வேண்டும் என்றும் கனகதாசர் கூறுகிறார். இவற்றை தொடர்ந்து

பயிற்சி செய்து வரவேண்டும் என்றும் இந்தப் பாடலில் குறிப்பிடுகிறார் ஸ்ரீகனகதாசர்.

## 12. ஈச நின்ன சரண பஜனெ

ஈச நின்ன சரண பஜனெ ஆஷெயிந்த[3] மாடுவெனு
தோஷராசி நாஷ மாடு ஸ்ரீஷ கேசவ ||1

ஈச நீயே அனைத்தும் செய்பவன். நான் உன் தாசன். மனப்பூர்வமாக நான் உன்னை ஸ்மரணை செய்வேன். உன் இரு பாதங்களில், ஒரு பாதமானது முக்தியையும், இன்னொரு பாதம் ஞானத்தையும் கொடுப்பதால், அவற்றை அடைவதற்கு ஆசையினால் ஸ்மரணை செய்வேன். கேஷி என்னும் அசுரனைக் கொன்று, கேசவ என்னும் பெயரைப் பெற்றிருக்கிறாய். என் தோஷங்களின் பலன்களை போக்குவாயாக, ஸ்ரீஷ கேசவனே.

ஷரணு ஹொக்கெ[1]னய்ய என்ன மரண சமயத[3]ல்லி நின்ன
சரண ஸ்மரணெ கருணிசய்யா நாராயண ||2

'சந்ததம் சிந்தயேனந்தம் அந்த்ய காலே விசேஷத:' என்பது போல, என்னுடைய இறுதிக்காலத்தில் உன்னுடைய நினைப்பைக் கொடு. இறுதிக்காலத்தில் வரும் நினைப்பின் பலனே அடுத்த பிறவி என்பதால், உன் சரண கமலங்களில் நான் அடிபணிவேன். எப்போதும் உன் நினைப்பைக் கொடுத்து எனக்கு அருள்வாயாக, நாராயணா.

ஷோதி[4]சென்ன ப[4]வத கலுஷ போதி[4]சய்ய ஞானவெனகெ
பா[3]தி[4]சுவ எமன பா[3]தெ[4] பி[3]டி[3]ஸு மாத[4]வ ||3

மா என்றால் பிரம்மவித்யை. அதற்கு தவ என்றால் ஸ்வாமியாகிய நீ. ஆகையால், ஞானத்தை எனக்கு கொடுப்பாயாக. மனனம் மற்றும் தியானத்திற்கு தரிசனம் கொடுப்பதாலேயே நீ மாதவன். சிற்றின்பங்கள் என்னும் தோஷங்களிலிருந்து என்னை விடுவி. உன் தியானத்தை செய்வதற்கு எனக்கு ஞானத்தைக் கொடு. யமனை நிர்வகிப்பவன் நீயே ஆகையால் மரண தோஷத்தை (பிறப்பு இறப்பு சுழற்சியை) விடுவி, மாதவனே.

ஹிந்த3னேக யோனிக3ளலி ப3ந்து3 ப3ந்து3 நொந்தெ3 நானு
இந்து3 ப4வத ப3ந்த4 பி3டிஸு தந்தெ3 கோவிந்த ||4

84 லட்ச யோனிகளில் திரும்பத் திரும்ப பிறந்து நான் நொந்து போயிருக்கிறேன். இப்போதாவது சாதனை செய்வித்து, வினைப் பயனை அகற்றுவாய், வேதவேத்யனான, பசுக்களைக் காப்பாற்று பவனே, கோவிந்தனே.

பிரஷ்டனெனிஸபே3ட3 கிருஷ்ண இஷ்டு மாத்ர பே3டி3கொம்பெ3
சிஷ்டரொட3னெ இஷ்டு கஷ்ட பிடிஸு விஷ்ணுவே ||5

ஹே விஷ்ணுவே! என்னை கயவன் என்று ஒதுக்கிவிடாதே. நல்லவர் களுடனேயே என்னை இருக்க வை. உன் நினைவைக் கொடுத்து, என் கஷ்டங்களை நீக்குவாயாக.

மொதலு நின்ன பாத3பூஜெ முததி3 மாடுவேனு நானு
ஹ்ருதயதொளகெ ஹுது3கி3ஸய்ய மது4சூதன ||6

போன பிறவியில் செய்த கர்மங்களின் பலனே, இப்போது உன் பாத பூஜை செய்யும் புத்தி எனக்கு வந்திருக்கிறது. ஆகையால், முதலில் உன் பாதபூஜையை நான் எப்போதும் விரும்பிச் செய்வேன். என் இதயத்தில் அந்தர்யாமியாக இருக்கும் நீ, அங்கு எனக்கு தரிசனம் தா, மதுசூதனா!

கவிது3கொண்டு இருவ பாப ஸவெது3 ஹோகு3வந்தெ மாடு
ஜவன பா3தெ4யன்னு பி3டி3ஸொ த்ரிவிக்ரம ||7

சத்வாதி மூன்று குணங்களையும் மீறி நிற்பவனே. அனைத்து தேவதைகளையும் விட சிறந்தவனே. பூ: புவ: ஸ்வ: உலகங்களுக்கு அப்பாற்பட்ட த்ரிவிக்ரமனே. என்னை சூழ்ந்திருக்கும் பாவங்களை பரிகரிப்பாயாக. பாவங்களே நிறைந்திருக்கும் இந்த பூலோகத்தில், நீயே என்னை யம பயத்திலிருந்து காப்பாற்ற வேண்டும். வைகுண்ட, அனந்தாசன, ஸ்வேதத்வீப உலகங்களில் நிலைத்திருக்கும் த்ரிவிக்ரம னே, எனக்கு என்றைக்கும் பாவங்களே வராமல் காப்பாற்றுவாயாக.

** **திருமதி. ஜெயம்மா, பெங்களூரு**

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### மாத்ருகா சந்தி

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | | 2 | | | | | | 3 | | | 36 |
| 4 | | | | | | | | 43 | | 5 | | | | |
| | | | | | 6 | | | | | | | | | |
| 7 | | | | | | 44 | | | | 27 | | | | |
| | | | | | | | 28 | | | | | | | |
| 8 | 37 | | | | | 9 | 38 | | | | 10 | 39 | | |
| | | | 29 | | 45 | | | | | | | | | |
| | | | 30 | | 12 | | | | | 13 | | | | 40 |
| | | | | | | | | | | | | | | |
| | | | 41 | 31 | 46 | | | | 14 | | | | | |
| | | | | | | | | | | | | 32 | | |
| | | | | | | | | | | | | | | |
| 15 | | | | | | 16 | | | | 42 | | | | |
| | | | | | | 35 | | 47 | | 17 | | | | |
| 48 | | 18 | | | | | | 19 | | | | | 20 | |
| | | | | | | | | | | | | | 33 | |
| | | | | | | | | | | 34 | | | | |
| | 21 | | | | | | 22 | | | | | | | |
| | 23 | | | | | | | | | | | | | |
| | | | | | | | | | | 24 | | | | |
| 25 | | | | | | | 26 | | | | | | | |
| | | | | | | | | | | | | | 35 | |

**இடமிருந்துவலம்** : 1.பாதமானி ஜயந்தனின் பகவத்ரூபம்(3), 2.வெற்றி டம்(4), 3.நாராயண முத்ரையில் ஸ்ரீஹரியின் பகவத்ரூபம்(4), 4.ஆறு

மூலை(4), 5.மனைவி(3), 6.வலது கண்ணில் லக்ஷ்மிதேவி இந்த ரூபத்தில் இருக்கிறாள்(3), 7.கண்ணின் இந்த பாகத்தின் தேவதை வருணன்(4), 8. இதற்கு அபிமானி தேவதைகருடன்(4), 9.நெற்றியின் அபிமானி தேவதை. உமாபதி என்றும் அழைப்பர்(3), 10.குழந்தைகள்(4), 11.தலைமுடியின் அபி மானி தேவதை. கங்கையை தன் தலையில் வைத்துள்ளார்(4), 12.அஷ்ட வஸுக்களில் ஒருவர். பாண்டவ கௌரவர்களின் குரு(3), 11. தேவதை கள்(5), 13தேவதைகள்(5), 14.வேதம் என்று பொருள்படும்(4), 15.கன்னத்தின் அபிமானி தேவதை. ரதியின்பதி(5), 16.இச்சா சக்தியின் அபிமானி தேவதை. கலைமகள் என்றும் அழைப்பர்(5), 17.கண்ணின் வெள்ளை விழி யில் இந்த ரிஷி உள்ளார். இவரின் வாக்கே இறுதியானது(5), 18.அக்னி தேவதை கண்ணின் இந்த பாகத்தில் உள்ளார்(4), 19.கன்று குட்டி ரூபத்தில் வாயுதேவர் இருக்கிறார்(3), 20.குதம் இந்திரியத்தின் நாடியின் பெயர்(2), 21. கண்ணின் உள்பாகத்தின் பகவத்ரூபம். மூன்றடி மண் கேட்ட த்ரிவிக்ர மன்(4), 22.முளை உருவத்தில் பரமாத்மா இந்த ரூபத்தில் உள்ளார்(7), 23.தேவநதி(4), 24.தேஹத்தில் உள்ள ரோமத்தின் அபிமானி தேவதை(4), 25..ஸமூகம்(3), 26.இடா நாடியின் பகவத்ரூபம்(4).

**<u>வலமிருந்துஇடம்</u>:** 27.தொண்டைக்குழி(2),28 ஸமூகத்தை தாஸர் இப்படியும் அழைக்கிறார். கலைந்துள்ளது.(4), 29..வலது காதில் ஸ்மரிக்கவேண்டிய நதி. ரங்கநாதர் இதில் பள்ளி கொண்டிருக்கிறார்(3), 30. கண்ணின் பார்வைக்கு அபிமானி தேவதை(4), 31.தூண் அல்லது கம்பம்(4), 32.கருவிழியில் உள்ள ரிஷி(5), 33.இரண்டு நாழிகைகள் கொண்ட நேரத்திற்கு இந்த பெயர்(5), 34.சந்திரனுள் அந்தர்யாமியாக ததி ---------- என்ற பகவத் ரூபம்(4), 35.நெற்றி கண்ணாக அக்னியை உடைய ஸிவன்(6).

**<u>மேலிருந்துகீழ்:</u>** 1.உத்தமமான ஸங்கு(4), 2.ஸுரியன்(3), 3.தண்ணீர்(3), 5.ஸ்ரேஷ்டமான கதாயுதம்(3), 21.தலையின் உச்சியில் உள்ள பகவத் ரூபம்(5), 22.தலையின் அபிமானி தேவதை.தாமரஸபவ என்றும் அழைப் பர்(4), 34.கழுத்துப் பகுதியில் இரண்டு இதழ் கமலத்தில் இவர் இருக்கி றார்(5), 36.பத்து குறைந்த(5), 37.மூன்று கண்களை உடையசிவன்(6), 38. நாக்கின் அபிமானி தேவதை(4), 39.தொண்டைக்குழியின் அபிமானி தேவதை(5), 40.இரண்டு மாதங்களை குறிப்பது(2), 41.தேஹம்(2), 42.ஒரு நாள்(3).

**<u>கீழிருந்துமேல்:</u>**33.கீரிடம்(3),35.எல்லையற்றது(3), 39.கர்பம்(3), 43. சந்திரன்(2), 44.வாயுதேவர் இந்த பதார்த்தத்தில் க்ரியை என்று அழைக்கப் படுகிறார்(3), 45.கீழ் இமையில் உள்ள முனிவர். கலைந்துள்ளது(4), 46. மூக்கின் த்வாரங்களில் உள்ள தேவதைகளில் ஒன்று(4), 47.மூக்கின் அபி மானி தேவதை(4), 48.கர்வம்(5),49.இந்திரன்(4). ***

தொடர்

# ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

## உவமான உவமேயங்கள்

கன்னட சாகித்தியத்திற்கு ஹரிதாச சாகித்யம் அளித்த பங்கு மிக அதிகம். பக்தியின் சிறப்புகள் மற்றும் வாழ்க்கையின் நெறிமுறை களைப் பாடிப் பிரசாரம் செய்தது தாசர்களின் முக்கிய செயலாக இருந்தது. ஸ்ரீஹரி, பக்தி, சித்தாந்த, தத்வசாஸ்திரங்கள் என இவற்றைப் புரிந்து கொள்வதற்காகவே தாசசாகித்யத்தைப் படிக்கும் வேலையை செய்து வருகிறோம். தாசர்களின் இன்னொரு முக்கியமான நோக்கம் - ஒழுங்கான வலிமையான சமுதாயம், வாழ்க்கையைப் புரிந்து கொள்ளல், வாழ்க்கைச் சுழற்சியைப் புரிந்துகொள்ளல் - ஆகியன. இவற்றைப் பற்றிய படிப்பு, விமர்சனம், ஆய்வுகள் தற்காலத்தில் அதிகம் செய்யப்படாதது கவலைக்குரியது. தாசசாகித்யத்தின் பன் முகத்தன்மைப்பற்றி அதிகம் தெரிந்துகொள்ள வேண்டும். அவை என்ன சொல்கிறது என்று புரிந்து, அவற்றை நடைமுறையில் பின் பற்றுவது முக்கியம். தாசர்களின் கண்ணோட்டம், சாகித்யம், சிந்தனைகளை கவனத்தில் கொள்ளவேண்டும்.

ஜகன்னாததாசரின் ஹரிகதாம்ருதசாரமானது, எங்கும் சொல்லிக் கொடுக்காத பல அரிய விஷயங்களை தன்னுள் அடக்கிக் கொண்டி ருக்கும் காவியம். 32 சந்திகளில் 988 ஸ்லோகங்களில் பாமினி ஷட்பதி நுடியில் இயற்றப்பட்ட ஹரிகதாம்ருதசாரம், தாச சாகித்யத் திலேயே மிகச் சிறந்த கிரந்தம் எனப்படுகிறது. இதற்குக் காரணம் அதில் இருக்கும் அரிய விஷயங்கள், பரவலான சிறந்த கருத்துகள், சரளமான கன்னடம், பாமினியின் அழகு நடை ஆகியன. பாய்ந்து வரும் தண்ணீரைப் போல, பக்தியை பெருக்கும் விதத்தைப் பற்றி, அன்றாட வாழ்க்கையில் தாத்விக சிந்தனைகளைக் கொண்டு வருவது பற்றி, சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கும் அரிய விஷயங்களை, சாதாரண மக்களுக்கும் புரியுமாறு சொல்லும் அதே நேரத்தில், காவிய த்தின் நடையை சிறப்பாகக் கையாண்டிருக்கும் தாசரின் புலமை, ஹரிகதாம்ருதசாரத்திற்கு அழகூட்டுகிறது.

* மலகி பரமாதரதி பாடலு குளிது கேளுவ
* மக்களாடிசுவாக மடதியொளக்கரதி நலிவாக

* சர்வதேஷவு புண்ய தேஷவு
* ஆவ காலதவனாதடேனின்னாவ தேஷதொளித்தரேனு
* நானு நன்னது எம்ப ஜடமதி மானவனு
* கண்ட நீரொளு முளுகி தேஹவ தண்டிசித பலவேனு
* நின்ன சர்வத்ரதலி நெனெவவரன்ய கர்மவ மாடிதரு சரி
* ஆவ க்ஷேத்ரக்கெ போதரேனின்னாவ தீர்ததி முளுகலேனு
* வாரிஜ பவாண்டவெசுமண்டப மேருகிரி சிம்மாசன
* வேதசாஸ்திர புராண கதெகள ஓதி பேளிதரேனு?
* காம க்ரோதவளியதெ நானு நன்னது எம்ப மானவனு

இப்படியான பற்பல ஸ்லோகங்களில், திடமான பக்தி, ஸ்ரீஹரியின் கருணை, பக்தியின் விதங்கள் ஆகியவற்றை அற்புதமாக விளக்கு கிறார். பக்தி, விரக்தி, ஆசை ஆகிய மூன்றைப் பற்றி (த்ரிவேணி) ஜகன்னாததாசர் பற்பல உதாரணங்களைக் கொடுத்து எடுத்து ரைக்கிறார். சந்தஸ் (நுடி), அலங்காரம், வியாகரணம் (இலக்கணம்), வட்டார வழக்குகள், ராக / தாளங்களின் பயன்பாடு, மொழி, உதாரணங்கள் - என அனைத்தையும் சிறப்பாகப் பயன்படுத்தி யிருப்பதால், மொழி-சாஸ்திரத்தின் பின்னணியில் ஆராய்ச்சி, மேற்படிப்பு ஆகியவை தேவைப்படுகிறது.

தற்போதைக்கு அலங்கார சாஸ்திரத்தின் ஒரு பகுதியாக இருக்கும் உவமைகளை பயன்படுத்தியதைக் குறித்த விஷயங்களை சுருக்கமாக சேகரிக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. நல்ல ஆடை அணிகலன்களை அணிந்தவர்கள் எப்படி அடுத்தவரின் கவனத்தை ஈர்க்கின்றனரோ, அதே போல் ஒரு காவியமும் தன் அழகினை இலக்கணம், சந்தஸ், அலங்காரம், சங்கீதம், நாதம் ஆகியவற்றின் மூலம் பெறுகிறது. கன்னடத்தின் கவிஞர்கள் அழகான உவமை களைப் பயன்படுத்துவதின் மூலம் தாம் பிரபலம் ஆவதோடு மட்டும ல்லாமல், தங்களுடைய காவியத்திற்கும் பெருமை சேர்த்துத் தருகின்றனர்.

கன்னடத்தில் ஜைமினி பாரதத்தை எழுதிய லட்சுமீசர், உவமைக்கவி என்றே அழைக்கப்படுகிறார். குமாரவியாசரின் 'கர்னாடக பாரத கதா மஞ்சரி'யின் உவமைகள், சித்தாந்ததை மிகவும் ஜனரஞ்சகமாக விளக்குவதில் உலகப் புகழ்பெற்றிருக்கிறது. ஹரிதாசர்களின் பல் வேறு கீர்த்தனைகளில் இருக்கும் உவமைகள், பாடுபவர்களின், கேட்பவர்களின் மனங்களை கொள்ளை கொள்கின்றன. ஸ்ரீஜகன்னாத தாசர், தனது ஹரிகதாம்ருதசாரத்தில், தாம் சொல்லவரும் விஷயங்

களை உவமைகளின் மூலம் அழகாக விளக்கி, படிப்பவர் / கேட்பவர் களின் மனதைத் தொடுவதில் பெரும் வெற்றி பெற்றிருக்கிறார். தாம் சொல்ல வரும் விஷயங்களை விளக்கும்போது மனதில் தோன்றும் சரியான உதாரணங்களை / உவமைகளை பயன்படுத்தியிருக்கிறார்.

ஹரிகதாம்ருதசாரம் மொத்தம் 32 சந்திகளில் அவர் பயன்படுத்தி யிருக்கும் உவமை / உவமானங்கள் பற்பல. அவற்றில் மிகவும் முக்கியமான, மக்களின் மனதைத் தொடும் சில உவமைகளை கவனிக்கலாம்.

பரிமளவு சுமனக3ளொளக3னல
னரணியொளகி3ப்பந்தெ1 தா3மோ
த3ரனு பிரம்மாதி3க3ள மனத3லி தோ1ரி தோ1ரத3லெ |
இருதிஹ ஜகன்னாதவிட்டலன
கருண படெவ முமுக்ஷு ஜீவரு
பரமபா4க3வத1ரனு கொ1ண்டா3டு3வுது3 பி1ரதி1தி3னவு ||
(மங்களாசரண சந்தி ஸ்லோகம் #13)

பூவிற்குள் இருக்கும் நறுமணம், கட்டையில் இருக்கும் நெருப்பு எப்படி மறைந்திருக்கிறதோ, அதைப் போலவே, அனைத்து ஜீவர்களின் மனதிலும் ஸ்ரீஹரி இருக்கிறார் என்கிறார். இதற்கு கற்றறிந்தவர்கள் மூன்று விதமான பொருள்களைச் சொல்கின்றனர். மேம்போக்கான ஒரு பொருள். அதையே நாம் மேலே பார்த்தது. இதை 'வாச்யார்த்தம்' என்று சொல்கின்றனர். இன்னும் உள் நுழைந்தால், ஸ்ரீஹரி வியக்த- அவ்யக்த, சுகுண- நிர்குண, சாகார - நிராகாரன் என்கின்றனர். இது ஸ்ரீஹரியின் சாகார - நிராகாரத்தின் வர்ணனையாகும். இது இரண்டாம் பொருள் - இதை லட்சியார்த்தம் என்கின்றனர்.

மூன்றாவதை - வியங்கார்த்தம் அல்லது த்வனி என்கின்றனர். இது தர்க்க சாஸ்திரத்தின்படி சொல்லும் பொருளாகும். இதுவே காவிய த்தை உருவாக்கியவரின் மனதில் இருப்பது. இந்த த்வனியைப் புரிந்து கொண்டாலே, தாசர் இந்த உவமையின் மூலம் சொல்லவருவது என்ன என்பது சரியாகப் புரியும். அவர் வேறு ஏதோ ஒன்றை சொல்ல வருகிறார் என்றும் புரியும். 'பரிமளவு சுமனதொளகெ' என்று ஒரு உவமை சொன்னால் போதாதா? இரண்டாம் உவமையிலும் அதே விஷயத்தை சொல்ல வருவதென்றால், அது தேவையே இல்லையே?

இதற்கான உண்மைப் பொருளை கண்டுபிடிக்க முயன்றால் - 'பிரம்மாதிகள மனதலி தோரி தோரதலெ, இருதிஹ ஜகன்னாதவிட்டல' என்னும் வாக்கியத்தில் பிரம்மா மற்றும் இதர தேவதைகள் மட்டும் அல்ல, அவருடன், பக்தர்கள், சாத்விகர்கள், மனிதர்கள் என அனைவரையும் சேர்க்கலாமா? இதற்கு தக்கவாறு, 'கருண படெத முமுக்ஷு ஜீவரு, பரம பாகவதரு' என்னும் முந்தைய வாக்கியத்தை கவனிக்க வேண்டும்.

முமுக்ஷுகள் என்றால் மோட்சத்தை விரும்புபவர்கள். பிரம்மாதி சுரர்களுக்கு ஸ்ரீஹரி பூவில் இருக்கும் நறுமணத்தைப் போல உடனடியாகக் காட்சி தரக்கூடியவர். பூ பூப்பதைப் போல, காற்று வீசுவதைப் போல, சுலபமாக காணக்கூடியவர். ஆனால், ஸ்ரீஹரியிடமிருந்து தூரத்தில் இருக்கும் மனிதர்கள், அவரின் கருணையைப் பெறுவதற்கு சிறிது அதிகமாக கஷ்டப்படவேண்டியிருக்கும் என்பதையே விறகுக் கட்டையில் மறைந்திருக்கும் நெருப்பு/புகை என்னும் உவமையால் விளக்குகிறார். இதில் முயற்சி, சகிப்புத்தன்மை மற்றும் சாதனை செய்தல் ஆகியவை வேண்டியிருக்கிறது. அரச மரத்தைத் தேட வேண்டும், கட்டையை முறித்து, அதை காயவைத்து பின் நெருப்பு பற்ற வைக்கவேண்டும்.

ஸ்ரீஹரியின் கருணையைப் பெறுவதற்கு இந்த எல்லா செயல்களையும் செய்யவேண்டும். சுரர்களுக்கு பூவில் இருக்கும் நறுமணம் உவமையைப் பொருத்தினால், மனிதர்களுக்கு கட்டையில் இருக்கும் நெருப்பின் புகை உவமையைப் பொருத்தலாம். இதுவே இவர்களின் மனதை சுத்தப்படுத்தும் செயல் என்கிறார்.

ஜகன்னாததாசர் பயன்படுத்தியிருக்கும் இந்த இரு உவமைகளும் எவ்வளவு அரிய பொருள்களைக் கொண்டுள்ளது என்பதையே மேலே பார்த்தோம்.

**(அடுத்த இதழில் இந்தக் கட்டுரை தொடரும்).**

தொடர்

## பலவிது பாள்துதக்கெ-ஸ்ரீஜகன்னாத்தாசர்

**கன்னட உரை: திரு.தாவண்கெரெ பீமராவ்**

கு$^{3}$ணகா$^{1}$லாஹ்வய ஆக$^{3}$மார்ண கு$^{1}$ம்பிணி பரமாண்வாம்பு$^{3}$திக$^{3}$ளலி
வனகி$^{3}$ரிநதி$^{3}$ மொத$^{3}$லாத$^{3}$த$^{3}$ரொரள கிம்த$^{1}$ன க$^{3}$தபா$^{1}$வக$^{1}$னந்தி$^{3}$ஹ
நெம்புதே |21|

குணகாலாஹ்வய = ப்ரக்ருதியிலிருந்து அனைத்து தர்மங்களின், நொடி (க்ஷணம்) முதல் அனைத்து கால அளவின் பெயர்களையும் கொண்ட ஸ்ரீஹரி, ஆகமார்ண கும்பிணி பரமாண்வம்புதிகளல்லி = வேதாதி ஆகமங்கள், அகாராதி எழுத்துகள், உலகத்தில் இருக்கும் பரமாணுகள், கடலில் இருக்கும் உயிரினங்கள் ஆகிய அனைத்திலும், வனகிரி நதி மொதலாததரொரளகெ = காடு, மலை, ஆறு முதலான அனைத்திலும், இந்தன கதபாவகனந்தெ = கட்டையில் மறைந்திருக்கும் நெருப்பைப் போல மறைந்து, இஹனெம்புதே = இருக்கிறான் என்பதை அறிந்து கொள்வதே, இந்த வாழ்க்கை வாழ்வதற்கான சரியான அர்த்தம் / பயன் ஆகும்.

அனலாங்கா$^{3}$ரனொள்ளித்தோ$^{3}$ பாதி$^{3}$யொள் அனிருத்த$^{4}$னு சேத$^{1}$ன ரொளகெ$^{3}$
க்ஷண பிட்ட$^{3}$க$^{3}$லதே$^{3}$ ஏகோ$^{1}$ நாராயண ஸ்ருதி பிரதி1பாத்$^{3}$யனு
இஹனெம்புதே$^{3}$ |22|

அங்காரதலி = எரிதழலில், அனல = நெருப்பு, இப்போபாதிலி = இருப்பதைப் போல, அனிருத்தனு = அனிருத்தரூபி ஸ்ரீஹரி, சேதன ரொளகெ = ஜீவர்களில், க்ஷணபிட்டகலதெ = ஒரு கணமும் விட்டு விடாமல் (விலகாமல்), ஏகோ நாராயண ஸ்ருதி பிரதிபாத்யனு = 'ஏகோ நாராயண ஆஸீத்' ஆகிய வேத மந்திரங்களால் சர்வோத்தமன் என்று புகழப்படும் மகிமைகளை, இஹனெம்புதே = ஸ்ரீஹரி கொண்டிருக்கிறான் என்று அறிவதே, இவ்வாழ்க்கையில் அர்த்தம் / பயன் ஆகும்.

ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், பூமி, நட்சத்திரங்கள், பிராணிகள், திசைகள், மரங்கள், நதிகள், கடல் ஆகிய அனைத்தும் ஸ்ரீஹரியின் இருப்பிடங்கள். இவை அனைத்திலும் ஸ்ரீஹரி அந்தர்யாமியாக வியாபித்தி

ருக்கிறான் - என்ற ஞானத்தைப் பெற்று அவனை வணங்கவேண்டும். அனைத்து இடங்களிலும் இருக்கும் ஸ்ரீஹரி, ஸ்வதந்த்ர சர்வபிரேரகன் என்ற ஞானம் மிகவும் அவசியம் என்று இந்த ஸ்லோகத்தில் விளக்குகிறார் தாசர்.

ஒரு மரக்கட்டையில் நெருப்பு மறைந்திருப்பதைப் போல, அவனைத் தேடாதவரை, தன்னுடைய இருப்பைக் காட்டிக்கொள்ளாமல், பகவந்தன் அனைத்து இடங்களிலும் அணு, மலை போன்ற அனைத்து சிறிய, பெரிய வஸ்துக்களிலும் இருக்கிறான் என்று சிந்திக்க வேண்டும்.

ப1க்1ஷக3ளக்1ஷிக3ளக3லத3 லிப்ப1ந்தே1 அக்1ஷர பு1ருஷன
பே1க்ஷெயலி
கு1க்ஷியொளப்ஜஜ த்ர்யக்ஷாத்3யமரர ஈக்1ஷிஸி க1ருணதி ரக்1
ஷிபனெம்புதே |23|

பக்ஷகளு = இமைகள், அக்ஷிகள = கண்களை, அகலதலிப்பந்தே = எப்போதும் விட்டு விலகாமல் இருப்பதைப் போல, அக்ஷரபுருஷ = அழிவில்லாதவனான புருஷ நாமக ஸ்ரீஹரி, அனபேக்ஷெயலி = எவ்வித எதிர்ப்பார்ப்பும் இல்லாமல் (எவ்வித பயனையும் எதிர்பார்க்காமல்), குக்ஷியொளு = தன் வயிற்றில், அப்ஜஜ த்ர்யக்ஷாத்யமரர = கமலோத்பவ (பிரம்மன்), த்ரினேத்ர (ருத்ரர்) ஆகிய தேவதைகளை, ஈக்ஷிஸி = தன்னுடைய கருணைப் பார்வை யில், கருணதி = கருணையால், ரக்ஷிபனு = ரட்சிக்கிறான் எம்புதே = என்று அறிந்து அவனை வணங்குவதே, இவ்வாழ்க்கை எடுத்ததற்கான சிறந்த பலன் / அர்த்தம் ஆகும்.

கண் இமைகளுக்கு, கண்களில் தூசு விழாதபடி காப்பாற்றுவதில் எவ்வித லாபமும் இல்லை. அப்படி காப்பாற்றுவதற்கு, அவை கண்களிடமிருந்து எவ்வித பலனும் எதிர்பார்ப்பதில்லை. 'கை மைதிண்ணிகொதகுவ தெரதி, பல்களு ஹண்ணுபலகளனகிது ஜிஹ்வெகெ ரஸவனீவந்தெ' (ஹரிகதாம்ருதசாரம்) என்று பிரதிபலன் பாராமல் செய்யும் உதவிக்கு உதாரணம் நம் உடலிலேயே இருக்கிறது. ஸ்ரீஹரியும் இப்படியே ஜீவர்களுக்கு உதவுகிறார். தான் ஜீவர்களுக்கு உதவுவதால் அவருக்கு எவ்வித பலனும் இல்லை; அப்படி உதவுவதற்காக அவர் எவ்வித பிரதிபலனையும் எதிர்பார்ப்பதில்லை.

நாசமடையும் தேகத்தைக் கொண்ட ஜீவர்கள் அனைவரும் 'க்ஷர புருஷர்' என்றும், நித்யமுக்தள் நித்யசச்சிதானந்த தேகம்கொண்ட ஸ்ரீலட்சுமிதேவி 'அக்ஷரள்' என்றும், ஸ்ரீஹரி ஸ்வதந்த்ரனான 'அக்ஷர புருஷன்' என்று அழைக்கப்படுகின்றனர்.

பிரம்மருத்ரர்களையும்கூட தன் வயிற்றில் வைத்துக்கொண்டு, பிரளய காலத்திலும், மற்ற காலங்களிலும் தன் பாதுகாப்பில் வைத்துக் கொண்டு காப்பாற்றுபவர் ஸ்ரீஹரி. பிரம்ம ருத்ராதி தேவதைகளுக்கும், ஸ்ரீஹரியே தம்மை காப்பாற்றுகிறார், காப்பாற்றுவார் என்னும் திடமான நம்பிக்கை உள்ளது.

ப[1]வனமதா[1]னுக[3] நவனானகு[3]தெ[3]ன் அவனியொளகெ[3] சத்யவிஜனர
ப[4]வனங்க[3]ளலி ஸஞ்சரிசுத[1] ஸுக[1]தா[1] ஸ்ரவணவ மாடுத[1]லி
பிரவரனாகு[3]வுதே[3] |24|

பவனமதானுகரவ நானு = ஸ்ரீமத்வ அவதாரத்தின் சங்கத்தைச் சேர்ந்தவன், நான், (விஷ்ணு பக்தர்களில் ஒருவன்), எந்தெந்து = என்றும் (தைரியமாக) சொல்லி, அவனியொளகெ = பூமியில் (இந்த உலகத்தில்), ஸத்யவிஜனர = சுஜீவிகளான ஞானிகளின், பவனகளலி = வீடுகளில், ஸஞ்சரிசுத = மரியாதை பக்தியுடன் அங்கு பழகியவாறு, சுகதாஸ்ரவண மாடுதலி = (அவர்களுடன் சேர்ந்து) ஸ்ரீஹரியின் மகிமைகளை, அவரின் கதைகளை, கேட்டவாறு, ப்ரவர நாகுவுதே = சிறந்தவனாவதே (பக்தியுடன், மோக்ஷ சாதனைக்கான வழியில் செல்வதே), இப்பிறவியை எடுத்ததற்கான சிறந்த பலன் ஆகும்.

வாயுதேவரின் அம்சத்தில் அவதரித்த ஸ்ரீமத்வாசார்யர் ஸ்தாபித்த சத்சித்தாந்தமே பவனமதம் - வாயுமதம். அந்த மதத்தில் மிக்க ஈடுபாடு கொண்டவர்களே, தாம் அந்த மதானுகர் (அந்த மதத்தை சேர்ந்தவர்) என்று மிகவும் பெருமையுடன், கர்வத்துடன் சொல்ல வல்லவர்கள்.

சம்சாரத்தில் உழன்று கொண்டிருக்கும் ஜீவர்கள் அதிலிருந்து விடுபடும் காலம் வரும்போது மட்டும், ஸ்ரீஹரியின் இச்சையின்படி, சஜ்ஜனர்களின் நட்பு ஏற்படுகிறது. இந்த நட்பினால், சர்வோத்தமனான அச்யுதனில், அபரோக்ஷத்திற்கு சாதனமான சிறந்த பக்தி உண்டா

கிறது. சத்புருஷர்களின் பழக்க வழக்கத்தினால், மனதிற்கு மிக்க மகிழ்ச்சியைக் கொடுக்கவல்ல, பகவன் மகிமைகளையே கேட்கும் வாய்ப்பும், அதிலிருந்து அபரோக்ஷத்திற்கு வழியான பக்தியும் உண்டாகிறது.

கா[1]ரணகா[1]ர்யாந்த[1]ர்க[3]த[1] அம்சவதா[1]ரா வேஷவிஹித[1] ஸஹஜ
ப்[1]ரேரக[1] ப்[1]ரேர்யாஹ்வய ஸர்வத்[1]ர விகா[1]ரவில்லதெலெ தோ[1]ருவ
னெம்பு[3]தே[3] |25|

காரணகார்யாந்தர்கதனு = காரண காரியங்கள் அனைத்திலும் நிறைந்திருக்கும் ஸ்ரீஹரி, அம்சவதாராவேஷ விஹித சஹஜ ப்ரேரக ப்ரேர்யாஹ்வய = அம்ச, அவதார, ஆவேச, விஹித, சஹஜ மற்றும் ப்ரேரக, ப்ரேர்ய என்னும் பல பெயர்களில் அழைக்கப்படுபவனான ஸ்ரீஹரி, சர்வத்ர = (இந்த அனைத்து) இடங்களிலும், விகாரவில்லதலெ = (எவ்வித) ஏற்றத்தாழ்வு, வேறுபாடுகளும் இல்லாமல் (மூலரூபத்திலிருந்து எவ்வித வேறுபாடும் இல்லாமல்), தோருவனு = காட்டிக் கொள்கிறான், எம்புதே = என்று அறிந்து சிந்தனை செய்வதே, இவ்வாழ்க்கை பெற்றதற்கான சிறந்த பலன் ஆகும்.

ஸ்ரீஹரியின் அபாரமான மகிமைகள், அவரின் :
**அம்ச** : சாக்ஷாத் அம்ச மற்றும் பின்ன-அம்சர்களான பிரம்மாதி தேவதைகளில்; **அவதார** : ராம, கிருஷ்ண, ந்ருஹரி, கபில முதலான அவதாரங்களில், **ஆவேச** : நரநாராயணரில் நரனில், பலராமனில், ப்ருதுராஜன் முதலானவர்களில் தெரியவரும் ஆவேசங்களில், **விஹித** : தேவதைகளில் இருக்கும் விசேஷ ரூபங்களில் (பரத, லட்சுமணாதிகளில் இருக்கும் பிரத்யும்ன, சங்கர்ஷண ரூபங்களைப் போல), **ஸஹஜ** : சாலிகிராமங்களைப் போல ஸ்வயம்வியக்த இடங்களில், ஜீவர்களின் மனங்களில் ஸ்வதந்த்ரனாக இருக்கும், என இப்படி பல இடங்களில் சர்வதந்த்ர ஸ்வதந்த்ரனாக இருக்கும் ஸ்ரீஹரியின் மகாமகிமைகள் தெரியவருகின்றது.

இந்த அனைத்து ரூபங்களும், மூலரூபத்தில் இருக்கும் ஸ்ரீநாராயணனே என்னும் உண்மையான ஞானத்தைப் பெறுவதே வாழ்க்கையின் உண்மையான பலன் ஆகும்.

*** தொடரும்.

ஆராதனை

## ஸ்ரீகுருஜகன்னாத தாசர்

By திரு.குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்

மந்திராலயத்திற்கு அருகில் உள்ள 'கோஸிகி' என்னும் ஊரில் தாசர் பிறந்தார். அதன் அருகில் உள்ள 'கௌதாளம்' என்னும் ஊரில் மறைந்தார். அந்த ஊரின் நடுவில் பிரசித்தி பெற்ற ஹனுமந்த தேவாலயம் உள்ளது. அங்கே பாஷாசார்யார் வம்சத்தில் தோன்றிய ஸ்ரீவெங்கடகிரியாச்சார் என்பவரின் மகனாக பிறந்தவரே நம் கதாநாயகர். அம்மாவின் பெயர் சீதம்மா. வெகு காலம் சந்தான பாக்கியம் இல்லாததால், அவர்கள் சந்தான கோபாலகிருஷ்ணனின் சேவை செய்தனர்.

மந்திராலயத்தின் அருகில் இபராமபுரத்தில் 'அப்பாவரு' என்னும் பஞ்சமுகி ஆஞ்சனேயனின் உபாசகர், ஸ்ரீராகவேந்திரரின் அத்யந்த பக்தர் வாழ்ந்து வந்தார். அவர் வெங்கடகிரியாச்சாரிடம், 'உனக்கு உத்தம புத்ரன் பிறப்பான்' என்று ஆசி கூறினார். அதன் பலனாக நம் கதாநாயகர், ஸ்வாமி ராயாச்சார் அல்லது ஸ்ரீனிவாசாச்சார் என்னும் பெயரில் 1837ம் ஆண்டு துர்முகி நாம சம்வத்சரம் மார்கசீர்ஷ சுத்த பஞ்சமியன்று அவதரித்தார். குழந்தையாக இருந்தபோதே இவரது தாய் மறைந்து விட்டார். இரு பாட்டிகளின் செல்லத்தில் வளர்ந்த அக்குழந்தை, பொறுப்பில்லாமல், படிப்பில் நாட்டமின்றி வளந்தது.

ஸ்வாமிராயனுக்கு 14 வயது ஆனபோது, துளசி என்னும் 8 வயது சிறுமியுடன் திருமணம் செய்து வைத்தனர். அந்தச் சிறுமியோ 10 வயதிலேயே இறந்துவிட்டாள். அவரது 18ம் வயதில் மறுமணம் செய்து வைக்க, அவரோ எப்போதும்போல பொறுப்பில்லாமல் ஊர் சுற்றிக் கொண்டிருந்தார். இப்படி இருக்கையில், அவரது 24ம் வயதில், அவரது வாழ்க்கையில் ஒரு திருப்புமுனை ஏற்பட்டது.

ஒரு நாள் ஒரு கிருஹஸ்தன், ஸ்வாமிராயனைப் பார்த்து 'நீ என் பிள்ளையாக இருந்தால், நான் உன்னைக் கொன்றிருப்பேன். பிரகலாதனின் வயிற்றில் விரோசனன் பிறந்ததைப் போல, மகாத்மரான ஆசார்யரின் வயிற்றில் பிறந்து அவரை மனோ வியாதிக்கு ஆளாக்கி இருக்கிறாய்' என்றார். பிரகலாதன், விரோசனன்

என்னும் பதங்கள், ஸ்வாமிராயனின் மனதில் பெரும் சலனத்தை ஏற்படுத்தியது.

உடனே வைராக்கியம் பிறந்தது. அருகில் இருக்கும் 'புடமலதொட்டி' என்னும் பவித்ரமான க்ஷேத்திரத்திற்கு வந்து, பிராணதேவரைக் குறித்து தவம் மேற்கொண்டார். குரு முக்யபிராணர் அவரது கனவில் காட்சியளித்தார். அவரது நாக்கில் பீஜாக்ஷரத்தை எழுதினார். 'மந்திராலய பிரபு ஸ்ரீராகவேந்திரர் வந்து உனக்கு உபதேசம் செய்வார். வீட்டிற்குப் போ' என்றார். வாயுதேவரின் ஆணையை ஏற்றுக்கொண்டு ஸ்வாமிராயர் வீட்டிற்கு வந்தார்.

பின்பு 1861ம் ஆண்டு ரௌத்ரி நாம சம்வத்சரம் வரலட்சுமி விரதத்தன்று ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளே ஒளி வடிவில் ஸ்வாமிராயரின் வீட்டிற்கு வந்தார். அன்று இரவே, இபராமபுர அப்பா அவர்களின் முன்னிலையில், மந்திராலய மகான் இவரது கனவில் பாடம் எடுத்தார். குருவின் அருளால் நொடிப் பொழுதில் இவர் மகா பண்டிதர் ஆனார். ஸ்வாமிராய ஆசார்யர் என்று அழைக்கப்பட்டார். ஆசு-கவி ஆனார்.

ஸ்ரீராகவேந்திரர், ஸ்வாமிராயாச்சார்யரின் வீட்டில், பட உருவில் வந்து அமர்ந்தார். ஆசார்யர், பஞ்ச லோகத்தில் பிருந்தாவனம் செய்து, அதில் படத்தை வைத்து, ம்ருத்திகையை நிரப்பி பூஜை செய்து வந்தார். குருவின் ஆணைப்படி, தந்தெகோபாலவிட்டல தாசர் என்னும் மகானை சந்தித்து, 'குரு ஜகன்னாதவிட்டலா' என்னும் அங்கிதத்தைப் பெற்றார். கோஸிகி தாசர் ஆனார். தேச சஞ்சாரம் செய்யப் புறப்பட்டார்.

அவருக்கு இரு குழந்தைகள் பிறந்தன. அதில் ஒன்று இறந்துவிட, மற்றொருவனுக்கு 'ராகவேந்திரா' என்று பெயர் வைத்தார்.

12 ஆண்டு காலம், காடாபுர சம்ஸ்தானத்தில் இருந்த தாசர், குருவின் ஆணைப்படி, தனது அனைத்து செல்வங்களையும் தானம் செய்துவிட்டு, சோதே க்ஷேத்திரத்திற்குச் சென்றார். ஸ்ரீவாதிராஜ ஸ்வாமிகளை பல பாடல்களில் கொண்டாடினார். அங்கிருந்து தார்வாட வந்து, சில நாட்கள் தங்கி, பின் சிக்காவிக்குச் சென்றார்.

பொம்மனஹள்ளி என்னும் கிராமத்தில் இருந்த இரு விதவை சகோதரிகளின் வீட்டில், ஸ்ரீராகவேந்திரர் சுவற்றில், சாலிகிராம

சிலையில், பிருந்தாவன ரூபத்தில் இருந்தார். குருகளின் ஆணைப்படி, அவர்கள் அதை நம் தாசருக்கே கொடுத்து விட்டனர். சிக்காவி ராமாச்சார் என்பவரின் மனைவிக்கு தீர்க்க முடியாத வியாதி இருந்தது. தாசரின் காலடியில் கிடந்த மண்ணை பக்தியுடன் எடுத்து, அவர் உடம்பில் தடவ, அந்த வியாதி குணமடைந்தது.

கௌதாள சானுபோகனான ஹனுமந்தராயருக்கு தீராதி வியாதி வந்தது. குருராயரைப் பாடி வேண்டிய தாசர், அந்த நோயை குணப் படுத்தினார். அவர் தாசரின் சிஷ்யராக மாறி 'வரதவிட்டலா' என்னும் அங்கிதத்தைப் பெற்றார். லிங்கசுகூர் ஸ்வாமிராயருக்கு, வரதேந்திர குருகளின் ஆணைப்படி 'வரதேச விட்டலா' என்ற அங்கிதத்தை வழங்கினார். இப்படி இன்னும் அனேக சீடர்கள், குரு ஜகன்னாத தாசரிடம் தாசதீக்ஷை, அங்கிதம் பெற்றனர்.

வரதேசவிட்டல தாசர், 'ஸ்மரிஸி பதுகிரோ குரு ராயர பதவ' என்ற பதத்தை இயற்றி, அதில் தாசரின் ஸ்வரூபத்தை வெளிப்படுத்தினார். தாசர், முந்தைய பிறவிகளில் அப்பண்ணாச்சார்யராகவும், ஸ்ரீதவிட்டல தாசராகவும் அவதரித்தார். தற்போது குருஜகன்னாததாசராக உள்ளார் என்பதை வெளிப்படுத்தினார்.

ஸ்வரூபம் வெளிப்பட்டபிறகு, அதிக நாட்கள் வாழக்கூடாது என்ற நியமத்தின்படி, தனது சிஷ்யர் வரதேச விட்டலரை, கௌதாளத்திற்குச் செல்லும்படி சொல்லிவிட்டு, தானும் புறப்பட்டுச் சென்றார். அங்கேயே 3-10-1918 அன்று, வரதேசவிட்டலர், காலயுக்தி சம்வத்ஸரம் ஆஸ்வீஜ சுத்த த்ருதியை, செவ்வாய்க்கிழமையன்று மோட்சம் அடைந்தார். தனது சிஷ்யர் மோட்சம் அடைந்ததைக் கண்ட குரு ஜகன்னாததாசர், அடுத்த 17ம் நாளில், ஆஸ்விஜ பகுள பிரதிமை, ஞாயிறு அன்று (20-1-1918) மதியம் 2மணிக்கு வைகுண்ட பிராப்தி அடைந்தார்.

தாசர், ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் மேல் நிறைய பாடல்களை இயற்றியுள்ளார். பல தாத்விக விஷயங்களை தனது பாடல்களில் சொல்லியுள்ளார். ஸ்ரீராகவேந்திர விஜய காவியத்தை கன்னட மொழியில், பாமினி ஷட்பதி வ்ருத்தத்தில் இயற்றியிருக்கிறார். இந்த மகான் தாசரை, நாம் தினந்தோறும் நினைப்போமாக.

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.** ***

தொடர்

## கன்னட கிரந்தங்கள் அறிமுகம்

## தசம ஸ்கந்த பாகவதம் - ஸ்ரீவாதிராஜர்

மத்வ மத பரம்பரையில் உடுப்பி அஷ்ட மடங்களில் ஸோதே மடத்தின் பீடாதீஸராக அலங்கரித்தவர் ஸ்ரீ வாதிராஜ தீர்த்தர். மத்வ ஸித்தாந்தத்தில், வியாஸ ஸாஹித்தியம் மற்றும் தாஸ ஸாஹித்தியம் என இரண்டுக்குமே தமது பங்களிப்பை அளித்த மஹனீயர். பகவான் வேதவ்யாசர் அருளிய மஹாபாரதம் முதலான மூல கிரந்தங்கள், ஆச்சாரியர் ஸ்ரீமத்வரின் ஸர்வ மூல கிரந்தங்கள், டீகா சாரியாரின் டீகா கிரந்தங்களை அனுசரித்து, பலதரப்பட்ட காவிய, ஸ்தோத்திர, டிப்பணி மற்றும் வியாக்யான கிரந்தங்களை இயற்றியதுடன் கன்னடத்திலும், துளு பாஷையிலும் 'ஹயவதன' முத்ரையிலே பல க்ருதிகளையும் ரசனை செய்துள்ளார். அந்த வரிசையிலே, ஸ்ரீவேதவியாசர் அருளிய ஸ்ரீமத் பாகவதத்தில், தசம (10வது) ஸ்கந்தத்தில் விஸ்தாரமாக வர்ணிக்கப்பட்டுள்ள ஸ்ரீகிருஷ்ணனின் சரித்திரத்தை, கன்னடத்தில் சரளமாகவும் அழகாகவும் மிகச்சுருக்கமாகவும் 9 பத்யங்களில் விளக்குவதே ஸ்ரீவாதிராஜர் அருளிய ஸ்ரீதசம ஸ்கந்த கிரந்தமாகும்.

ஸ்ரீவாதிராஜர், இந்த கிரந்தத்தில் பகவான் ஸ்ரீமன் நாராயணன், தேவகிக்கு மகனாகப் பிறந்து, கோகுலத்திற்குச் சென்று, கம்சன் அனுப்பிய பூதனை, ஷகடாசுரன் முதலானவர்களை வதைத்து, கோகுலத்தில் கோபியர்களின் மனதைக் கவர்ந்து, லீலைகள் புரிந்து, மாடுகள் மேய்த்து, காளிங்கனுக்கு அருள் புரிந்து, கோவர்த்தன கிரியைத் தூக்கி, கோபாலர்களைக் காத்து, கோபிகா ஸ்திரிகளுடன் ஜலக்ரீடை புரிந்து, கேசி, பகாசுரன் போன்றவர்களை அழித்து, சிவனின் வில்லை முறித்து, மற்போரில் வென்று, கம்சனைக் கொன்று, தாய் தந்தையை விடுவித்து, 64 கலைகளைக் கற்று, குருவின் மைந்தனின் உயிர் காத்து, த்வாரகையை நிர்மாணித்து, யவனனை அழித்து, அஷ்ட மஹிஷியர்களுடன் ஆனந்தமாய் வாழ்ந்து, முரண், சிசுபாலன், கௌரவர்கள் முதலானவர்களை அழித்து, பாண்டவர்களுக்கு மிகவும் பிரியமானவனாக விளங்கிய ஸ்ரீகிருஷ்ணன், நம்மையும் காப்பாற்று வான் என வர்ணித்து, இந்தக் கதையை கேட்பவருக்கு உண்டாகும் பலனையும் எடுத்துக்கூறி, மிகச்சுருக்கமாக 9 பத்யங்களில் வழங்கியுள்ளார் ஸ்ரீவாதிராஜர்.

முதலில் ஸ்ரீவாதிராஜர் 'நெனெவெனனுதின நீல நீரத வர்ணன குண ரன்னன, முனி ஜனப்ரிய முத்து உடுப்பிய ரங்கணா தயா பாங்கன' என்ற பல்லவியுடன் தொடங்கி, அனுதினமும் நீலமேக ஸ்யாமளாகிய ஸ்ரீமன் நாராயணன், குண சம்பூர்ணனை, முனிகளின் பிரியனான அழகிய முத்துப் போன்ற உடுப்பி ரங்கனை, தயாநிதியை நினைப்பேன் - என்று கூறி, ஸ்ரீகிருஷ்ணனின் லீலைகளை, மகிமைகளைப் புரிந்த ஸ்ரீகிருஷ்ணனை, தினமும் நினைப்பதாகக் கூறி, பல்லவியை அமைத்திருக்கிறார்.

முதல் பத்யத்தில், ஸ்ரீகிருஷ்ணனின் ஜனனத்தையும், கோகுலத்திற்குச் சென்று லீலைகள் புரியத் துவங்கியதையும் விளக்கும்படியாக, தேவகியின் உதரத்தில் உதித்த சந்திரனைப் போன்றவனை, நல்ல குணங்கள் உடையவனை, கோகுலத்திற்கு யமுனையைத் தாண்டி வந்தவனை, அங்கு இருந்தவனை, மாமன் கம்சன் அனுப்பிய மாய பூதனையை வதைத்தவனை, ஆனந்த ஸ்வரூபனை, தைத்யனான ஷகடாசுரனை உதைத்தவனை (கொன்றவனை), ஸ்ம்ருதிகள் புகழ்பவனை, ஸ்ரீகிருஷ்ணனை நினைத்து துதிக்கிறார் ஸ்ரீவாதிராஜர்.

இரண்டாம் பத்யத்தில், ஸ்ரீகிருஷ்ணனின் பால்ய லீலைகளை வர்ணிக்கும் விதத்தில் தொடர்ந்து, கோகுலத்தில் கோபியரின் மனதைக் கவர்ந்தவனை, மிகவும் பராக்கிரமம் உடையவனை, எண்ணற்ற கோபிகா ஸ்த்ரீகளின் வஸ்திரங்களை அபகரித்து, அவர்களுக்கு பாடம் புகட்டியவனை, மாடுகள் மேய்த்தவனை, தேனு காசுரன் என்னும் கன்றுக்குட்டி ரூபத்தில் வந்த அசுரனைக் கொன்ற வனை, புகழ் பெற்றவனை, சிறுமதி படைத்த காளிங்கனின் தலையில் குதித்தவனை, அவனுக்கு அருள்புரிந்தவனை, ஸ்ரீகிருஷ்ணனை 'காகுமதி காளிங்கன பண துளிதன அவ கொலிதன' முதலான பதங்களால் துதித்துள்ளார் ஸ்ரீவாதிராஜர்.

மூன்றாம் பத்யத்தில், மேலும் ஸ்ரீகிருஷ்ணனின் லீலாவினோதங்களை வர்ணிக்கும் ஸ்ரீவாதிராஜர், கோவர்த்தன கிரியை விரலால் தூக்கியவனை, அமிர்தத்தை பங்கிட்டவனை, கோபிகா ஸ்த்ரீகளுடன் ஜலக்ரீடைக்கு யமுனையில் இறங்கியவனை, அங்கு ப்ரீதியுடன் விளையாடியவனை, லீலையால் பெண்களுடன் விளையாடி அவர்களுக்கு ஆனந்தத்தை அளித்தவனை, ஸ்ரீகிருஷ்ணனை துதிக்கிறார்.

நான்காம் பத்யத்தில் ஸ்ரீகிருஷ்ணன் மதுராவிற்கு கிளம்பிச் சென்று அங்கு பராக்கிரங்களைக் காண்பிக்கும் கட்டங்களை விளக்கும் விதத்தில் க்ரூரமான கேஸி, பகாசுரன் போன்றவர்களை கிழித்து அழித்தவனை, சஜ்ஜீவியான அக்ரூரர் அழைத்தவுடன் சந்தோஷமாக வந்தவனை, தேவர்கள் போற்றுபவனை, குப்ஜை என்னும் பெண்ணிற்கு யௌவன வரமளித்து சந்தோஷப்படுத்தியவனை, மிகுந்த சக்தி படைத்தவனை, குவலய பீடம் என்னும் யானையை அழித்த பலம் படைத்தவனை, அதி சாமர்த்தியம் உள்ளவனை, ஸ்ரீகிருஷ்ணனை துதிப்பதாக வர்ணித்துள்ளார் ஸ்ரீவாதிராஜர்.

ஐந்தாம் பத்யத்தில், சிவனின் வில்லை சுலபமாக முறித்தவனை, வீரத்துடன் நின்றவனை, மற்போருக்கு அழைப்பு விடுத்த மல்லர்களை வீழ்த்தி சபையில் நின்றவனை, வெற்றி கொண்டவனை, குலத்தைக் கெடுத்த கம்சனை அடித்து வீழ்த்திக் கொன்றவனை, தாய் தந்தையை சிறையிலிருந்து விடுவித்தவனை, கீர்த்தி படைத்தவனை புகழ்வதாக ஸ்ரீவாதிராஜர் வர்ணித்துள்ளார்.

ஆறாவது பத்யத்தில், முக்கியமாக ஸ்ரீகிருஷ்ணனின் குருகுலவாசம், குருவிற்கு அளித்த தட்சிணை இவற்றை விளக்குவதாக, உக்ர சேனனுக்கு அரசாட்சியைக் கொடுத்தவனை, மிகவும் சிரேஷ்ட மானவனை, கோபிகா ஸ்த்ரீகளுக்கு உத்தவனை சமாதானம் செய்ய அனுப்பியவனை, சமர்த்தனை, மிகுந்த அறிவுடையவனை, 64 கலை களையும் கற்றவனை (வெறும் 64 நாட்களில் கற்றது போல லோக விடம்பனத்திற்காக), சுக சரித்திரம் கொண்டவனை, திமிங்கலத்தின் வயிற்றில் அகப்பட்ட குரு புத்திரனின் உயிரைக் காப்பாற்றிக் கொணர்ந்தவனை, ஆனந்தம் அளிப்பவனை, ஸ்ரீகிருஷ்ணனை விவித வித்யா கலெகளெல்லவ அரிதன, சுப சரிதன, ஜவன சிக்ஷிஸி த்விஜன கந்தன தந்தன ஆனந்தன முதலான பதங்களால் வர்ணித்து துதிக்கிறார் ஸ்ரீவாதிராஜர்.

ஏழாவது பத்யத்தில், முக்கியமாக த்வாரகா பட்டணத்தை நிர்மாணித்து, பத்னிகளுடன் வாசம் புரிந்ததை விளக்கும் விதமாக, கெட்ட எண்ணம் கொண்ட ஜராசந்தனை யுத்தத்தில் வென்றவனை, நாராயணனை, மணிகளால் இழைத்த மண்டபம் போன்ற துவாரகையை நிர்மாணித்தவனை, மிகுந்த கம்பீரம் பொருந்தியவனை, நல்ல மனதுள்ள உறக்கத்தில் இருந்த முசுகுந்தனை உதைத்த கால யவணனை (முசுகுந்தனுக்கு தேவதைகள் அளித்த வரத்தால்) பொசுக்கி அழித்தவனை, மிகுந்த மதிநுட்பம் கொண்டவனை, அஷ்ட

மஹிஷிகளுடன் ஆனந்தமாய் வாழ்ந்தவனை, ஶ்ரீகிருஷ்ணனை துதிக்கிறார் ஶ்ரீவாதிராஜர்.

எட்டாவது பத்யத்தில், விசேஷமாக தைத்யர்களின் சம்ஹாரத்தைப் புரிந்த கட்டத்தை விளக்கும் விதத்தில், முரண், நரகன் முதலான அசுரர்களை சக்ராயுதத்தால் வதைத்தவனை, கஜேந்திரனுக்கு அருள் புரிந்தவனை (ஜகத்துக்கு ரட்சகனாக இருப்பவனை), தேவலோக விருட்சத்தை சத்யபாமாவிற்காக கொணர்ந்து தந்தவனை, சமர்த்தனை, ஜகத்தை இயக்குபவனை, சிசுபாலன் முதலான தைத்யர்களை சம்ஹரித்தவனை, மிகுந்த பராக்கிரமம் உடையவனை, குருகுல வம்சத்தில் உதித்த கௌரவர்களை அழித்தவனை, அதே குலத்தில் உதித்த பாண்டவர்களுக்கு ப்ரியமானவனை, நல்லிதயம் கொண்ட வனை ஶ்ரீகிருஷ்ணனைப் போற்றுகிறார் ஶ்ரீவாதிராஜர்.

கடைசி பத்யத்தில், ஶ்ரீகிருஷ்ணனிடம், ஶ்ரீஹயவதனனிடம் பிரார்த்தனை செய்து பூர்த்தி செய்வதுடன், இந்த பத்யத்தைக் கேட்பதால் உண்டாகும் பலனை விவரிக்கும் விதத்தில், இன்று நம்மைக் காப்பாற்றும் லட்சுமியின் காந்தனும், ஶ்ரீலட்சுமி துதிக்கும் பிரகாசம் உடையவனும், ஶ்ரீஹயவதனனும், முனிவர்களால் தொழப் படுபவனுமான ஶ்ரீகிருஷ்ணனின் மகிமையை உரைக்கும் இந்தக் கதையை பக்தியுடனும், ப்ரீதியுடனும் கேட்பவரை, நிறைந்த வாழ்க்கையை வாழச்செய்து, கந்துபிதனான ஶ்ரீகிருஷ்ணன், காருண்யத்துடன் காப்பாற்றுவான், சுகத்தைக் கொடுப்பான் என்பதாக 'ஸந்தஸதொளீ ஸார கதெயன்னு கேள்வர நெரெ பா3ள்வர, கந்து பித காருண்யதிந்தலி பொரெவனு சுக கரெவனு' போன்ற பத்யங்களால் வர்ணித்து பூர்த்தி செய்கிறார் ஶ்ரீவாதிராஜர்.

இத்தகைய உயரிய கிரந்தத்தை அனுதினமும் பக்தியுடனும், அதன் விசேஷ அர்த்தங்களைத் தெரிந்து கொண்டும், நாம் அனைவரும் பாராயணம் செய்து ஶ்ரீவாதிராஜரின் அந்தர்யாமியான ஶ்ரீஹயக்ரீவ ரூபி பரமாத்மாவின் அருளுக்கு பாத்திரராவோமாக.

ஶ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**** திரு.லட்சுமிபதிராஜா, சென்னை**

வங்கிக் கணக்கில் சந்தா செலுத்தினால், மறக்காமல் உங்கள் முகவரியை 89044 58276 எண்ணுக்கு வாட்சப் / SMS அல்லது haridasa.vijayam@gmail.comக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**ஹரிதாச விஜயம் - ஆன்லைனில் படிக்க**

* 'Readwhere' Android/iPhone appனை Download செய்யவும்
* Search Boxல் 'Haridasa Vijayam' என்று தேடவும்.
* 1 ஆண்டு மின்னிதழ் சந்தா : ரூ.100
* அங்கேயே 'Subscribe' க்ளிக் செய்து, பணத்தைக் கட்டவும்.
* மாதாமாதம் Readwhere appல் 'Shelf'ல் புது இதழ், பிரதி 25ம் தேதி வெளியாகும்.
* eBook சந்தா பணத்தை எங்களுக்கு அனுப்பக்கூடாது.

இந்த இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப், அல்லது தொலைபேசியில் அழைத்தோ சொல்லவும்.

ஹரிதாச விஜயம் அனுப்புதல் மற்றும் புதிய புத்தகங்கள் குறித்தான தகவல்களுக்கு ஒரு புதிய வாட்சப் க்ரூப் தொடங்கப் பட்டுள்ளது. வேண்டுமெனில் சேர்ந்து கொள்ளலாம். 89044 58276 எண்ணில் தொடர்பு கொள்ளவும். Admin only. No spam.

**BOOK POST**

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்

Haridasa Vijayam - Monthly

மலர் ௨ ** டிசம்பர் ௨௦௨௦ ** இதழ் ௨



ஸ்ரீமுத்துமோகனதாசர்

# ஹரிதாச விஜயம்

## சந்தா விவரம் (36 பக்கங்கள்)

1 ஆண்டுக்கு ரூ.200/-
3 ஆண்டுகளுக்கு ரூ.500/-
5 ஆண்டுகளுக்கு ரூ.900/-
10 ஆண்டுகளுக்கு ரூ.1700/-

புதிய சந்தாக்கள் அந்தந்த மாதத்திலிருந்து துவங்கும். பழைய இதழ்கள் வேண்டுமெனில், இதழுக்கு ரூ.20/- என சேர்த்து அனுப்பவும்.

## வங்கி விபரம்:

Sathya Narayanan, ICICI Bank - Savings account

A/c. No. 000101043177. IFSC: ICIC0000001

Cenotaph Road Branch, Chennai 18

**Subscription Renewal**

பத்திரிக்கை துவக்கும் முன் & துவங்கிய மாதத்தில் ஓராண்டுக்கு சந்தா கட்டியவர்களுக்கு அதை புதுப்பிக்கும் நேரம் நெருங்கி வருவதால் ஒரு சிறிய நினைவூட்டல். உங்கள் சந்தா முடியும் மாதத்தை உங்களுக்கு அனுப்பிய Receiptல், அல்லது இந்த மாத 'To address' labelல் முதல் வரியில் பார்க்கலாம்.

கூடுதலாக சில பக்கங்களை சேர்க்க வேண்டும், மேலும் பல அரிய தகவல்களைக் கொடுக்க வேண்டும் என்று நினைக்கிறோம். அதற்கு உங்கள் அனைவரின் ஆதரவு இருந்தால் மட்டுமே சாத்தியம் என்பதால், உடனடியாக உங்கள் சந்தாவை புதுப்பிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம். நன்றி.

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 2 : இதழ் 1



ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்
## கார்த்திக & மார்கசீர்ஷ மாதங்களில்

கார்த்திக பகுள த்வாதசி - ஸ்ரீஉரகாத்ரிவாச விட்டலதாசர், சித்ரதுர்கா
கார்த்திக பகுள சதுர்தசி - ஸ்ரீமுத்துமோகனதாசர், தொட்டபள்ளாபுர
கார்த்திக அமாவாசை - ஸ்ரீமஹிபதி தாசர், காகிண்டிகி
மார்கசிர பௌர்ணமி - ஸ்ரீவித்யாபிரசன்ன தீர்த்தர், ஸோஸலெ

# ஆசிரியர் பக்கம்

இந்த இதழுடன், ஸ்ரீதவிட்டலதாசரின் வாழ்க்கைக் குறிப்பு மற்றும் பலவிது பாள்துதக்கெ - இந்த இரு தொடர்களும் முடிகின்றன. டிசம்பர்2020 மாதத்தில் வரும் ஹரிதாசர்களின் புண்ய தினங் களில்: ஸ்ரீமஹிபதி தாசர் மற்றும் ஸ்ரீமுத்துமோகனதாசர் பற்றிய கட்டுரைகள் இந்த இதழில் உள்ளன.

ஹரிதாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட கடினமான சொற்களி ன் அர்த்தங்கள் என மாதம்தோறும் 10 சொற்களை சென்ற இதழி லிருந்து கொடுத்து வருகிறோம். இந்த இதழிலிருந்து புதிய தொடராக ஸ்ரீவரதேந்த்ர தீர்த்தர் இயற்றிய கன்னட தந்த்ரசார என்னும் சிறு கிரந்தத்தை, அதன் அர்த்தங்களுடன் பார்க்க விருக்கிறோம். இந்த உரையை எழுதியவர் திரு. குரோம்பேட்டை ஸ்ரீதரன் அவர்கள். ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

**கன்னடம்**

## அருஞ்சொற்பொருள்

## கடினமான சொற்களின் அர்த்தங்கள்

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

1. ஹஸெ - சுபகாரியங்களில் போடப்படும் மணை/பீடம் ;
2. த$^{1}$ண்ட$^{3}$ - குழு / சமூகம்; 3. வஸன - வஸ்திரம் / உடை / தேகம் ;
4. ஹரண - தேகம் / பிராண ; 5. ஹரிணி - மான் ;
6. நிஷாகர - சந்திரன் ; 7. தூ$^{3}$ரு - திட்டுவது / புகார் சொல்வது ;
8. தி$^{3}$ட்ட - உண்மை ; 9. ஆர்யளு - லட்சுமிதேவி / மூத்தவள் ;
10. இந்த்ரஜ - அர்ஜுனன்.

* குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam@gmail.com என்னும் ஐடிக்கோ அல்லது 89044 58276 க்கோ வாட்சப் செய்யலாம்.

* ஹரிதாச விஜயத்தை & இதில் வரும் தகவல்கள், போட்டிகளைப் பற்றி தயவு செய்து உங்கள் நண்பர் / உறவினர்களிடம் அறிமுகம் செய்யுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

தொடர்

## ஹரிதாசர்களின் வாழ்க்கை வரலாறு

## ஸ்ரீதவிட்டல தாசர்

### ஸ்ரீதவிட்டலரின் கிருதிகள்

பக்தர்களின் பிரச்னைகளை போக்கி, அவர்களது விருப்பங்களை நிறைவேற்றும் ஸ்ரீரகூத்தம தீர்த்தரைக் குறித்தான 'நோடிதே குருகள நோடிதே' என்னும் கீர்த்தனை, குருகளைக் கண்டு தாசர் இயற்றிய ஆசு-கவிதையாக இருக்கிறது. மிகவும் சிறப்புமிக்க, அற்புதமான பாடலாக இது இருக்கிறது. மூல கையெழுத்துப் பிரதியிலிருந்து கண்டுபிடித்து இந்தப் பாடலை வெளியிட்டிருக்கிறார் வித்வான் திரு.பி. சத்யநாராயணாச்சார் அவர்கள்.

நோடிதே குருகள நோடிதே ||ப

நோடிதெனு குருகள பாதாப்ஜவ
பாடிதெனு ஸன்மஹிமெகளனா
பேடிதேனு மனதணிய வரகள
ஈடு இல்லதெ கொடுவ பிரபுகள || நோடிதே

பஞ்சக்ருஷ்ணாரண்ய க்ஷேத்ர பினாகினி தீரதலி நிந்து
மிஞ்சுதிஹ காஷாயதண்ட கமண்டலவ தரிஸுத்த தரெயொளு
பஞ்சபாணன பிதன குணகள அஞ்செயலி பொகளுத்த ஹருஷதி
ஸஞ்சிதாகாமிகள களெது ப்ரபஞ்சதலி மெரெதந்த குருகள || நோடிதே

அலவபோதர பாஷ்ய டீகா பாவவனு ஸுஜனரிகெ போதிஸி
கலுஷமததலி ஸமுதயங்கள குலிஷதந்ததி கண்டிஸுதலி
ஒலவினலி திக்விஜயராமர பாதகமலகெ ப்ருங்கனெனிஸுவ
சலபக்தி விரக்தி மதிகள பாலிஸுவ யதிமௌளி ரதுனவ || நோடிதே

காமதேனு ஸுகல்பதரு சிந்தாமணியவோல் காமிதார்த்தவ
ப்ரேமதலி பீருத ஆத்யாத்மாதி தாபத்ரயவ களெயுவ
ஸ்வாமி ஸ்ரீஹரி ஸ்ரீதவிட்டலன தாஸராக்ரணியெனிஸி மெரெயுவ
நேமதிந்தலி ஸ்ரீரகூத்தம மௌனிவர்யர கருண பயஸுத || நோடிதே

'ரங்கய்யா ரங்க பாரோ' என்னும் கீர்த்தனையில்,

பந்தரெ புகுரி சண்டுகளனெ கொட்டு
பகெ பகெ ஆடவ கலிஸி வலிஸுவெ ||

பந்தரெ ரஸா ரஸாயனகளனுணிஸி
முஸுகினொளகெ பச்சிட்டுகொம்பெனு பாரோ ||

ஸ்ரீதவிட்டலனெ பந்தரெ நினகெ
ஸாதரதலி ஸவிமாதன்ஹேளுவேனு ||

என்று, தாசர் தம்மை கோபிகாஸ்த்ரியரைப் போல பாவித்து, ஸ்ரீகிருஷ்ணனை வேண்டுகிறார்.

ஸ்ரீதவிட்டலதாசருக்கு பெரும்புகழைப் பெற்றுத் தந்த அவரது கீர்த்தனை என்றால் அது 'ஹரிகதாம்ருதசாரத்திற்கு' அவர் எழுதிய பல-ஸ்ருதியாகும். கேசவ நாமத்தைப் போல 24 நுடிகளைக் கொண்ட இந்த பல-ஸ்ருதியானது, மூலஸ்ருதியின் சிறப்பினையும், அதனை அர்த்தம் புரிந்து கொண்டு படித்தால் வரும் பலன்களையும், படிப்பவர் மனதைத் தொடும் விதமாக உள்ளது.

**ஸ்ரீதவிட்டலரின் இறுதிக்காலம்**

இப்படியாக பல்வேறு பக்திபூர்வகமான கிருதி, கீர்த்தனைகளை இயற்றி, ஹரிதாச சாகித்யத்திற்கு பெருமை சேர்த்த ஸ்ரீதவிட்டலதாசர், தீர்த்த யாத்திரையை ஒரு தீக்ஷையாகவே எடுத்து செய்து வந்தாலும், தன் இறுதிக்காலத்தில் கர்ஜிகியிலேயே வசித்தார். தினந்தோறும் பவித்ரமான வரதா நதியில் ஸ்னானம் செய்து, தமக்குக் கிடைத்த சீதாராம, கோபாலகிருஷ்ண அகிய விக்ரகங்களை பரமபக்தியுடன் பூஜித்தவாறு, மௌனவிரதம் ஏற்று, பெரும்பாலும் ஹரிதியானத்திலேயே நாளைக் கழித்தார்.

ஞானிகளான தாசருக்கு, தமது இறுதிக்காலம் நெருங்கிவிட்டது என்று தெரிந்திருக்கலாம். 1820ம் ஆண்டு ஆஷாட சுத்த ஏகாதசியன்று, தாசர் ஹரிகுருகளின் கீர்த்தனையில் ஈடுபட்டார். ஹரிதாச பத்ததியைப் போல, தாரதம்யத்திற்கேற்ப, தாச கக்ஷை, யதி கக்ஷை, தேவதா கக்ஷையை வணங்கி, ஸ்ரீதவிட்டலனின் ருபத்தை தம் இதயத்தில்

நினைத்தவாறு, அவனின் நற்குணங்களை சிந்தித்தவாறு, லய சிந்தனையை செய்து கொண்டிருந்தபோதே, தாசர் தமது அவதாரத்தை முடித்துக் கொண்டார். ஹரிதாச சாகித்ய பரம்பரையில் சுடர்விட்டு பிரகாசித்த நட்சத்திரமானது இந்த உலகத்திலிருந்து மறைந்தது.

***** ஸ்ரீதவிட்டல தாசரைப் பற்றிய இந்த தொடர் முடிந்தது *****

****

| ஆராதனை | **ஸ்ரீமஹிபதி தாசர், காகிண்டிகி** |
|---|---|
| | **கன்னடத்தில்: திரு.ஏ.பி.ஷாமாச்சார்** |

ஜகத்குரும் க்ருபாசிந்தும் ஷரணாகத வத்ஸலம் ।
பக்தமானஸ சஞ்சாரம் மஹிபதி குரும் பஜே ॥
ஸ்வபக்தானுக்ரஹார்த்தாய ஸாமீப்யாத் த்ருவமாகதான்
மஹீபதிகுரூன் வந்தே ஸர்வவித்யா விஷாரதான் ॥

காலம்: 1611-1681. இயற்பெயர்: குருராயா பெற்றோர் : கோனேரி ஆச்சார் & திம்மம்மா. குரு : தார்வாட் பாஸ்கர ஸ்வாமி அவர்கள்.
தொழில்: நவாப்பிடம் கணக்காளராக சிறிது காலம் பணியாற்றினார்
அறிந்த மொழிகள்: கன்னட, சம்ஸ்கிருத, இந்தி, மராத்தி, உருது மற்றும் பார்ஸி

ஸ்ரீபுரந்தரதாசர் மற்றும் ஸ்ரீவிஜயதாசரின் நடுவில் சற்று தொய்ந்து போயிருந்த ஹரிதாச சாகித்யத்தை, கெட்டியாகப் பிடித்து காப்பாற்றியவர் ஸ்ரீமஹிபதி தாசர். ஸ்ரீஹரியின் அருளால் பிறந்தாலும், லௌகிக வாழ்க்கையை வாழ்ந்து, பிறகு ஆத்யாத்ம சாதனைகளை செய்து சத்கதி பெற்றவர். பற்பல கிருதிகளை இயற்றி தாச சாகித்யத்தை வளர்த்து இறுதியில் சன்யாசியாகி காகண்டியில் பிருந்தாவனஸ்தர் ஆனார். மஹிபதி தாசர், தனது குருவான பாஸ்கர ஸ்வாமிகளை இவ்வாறு புகழ்கிறார்.

இந்தென்ன ஜன்ம பாவனவாயிது
தந்தெ குரு நிம்ம சரணதருஷனதி
தரெயொளஞ்ஞான தமஹரண பாஸ்கரனெனிப
வரமுனிய கரகமலதலி ஜனிஸி ।
வரமூல மந்த்ரதிம் குருமஹிபதியிந்த
நிருத க்யாதிய நாமதரிஸி பந்தன மஹிமெ ॥

மஹிபதி அங்கிதத்தில் இவர் இயற்றிய சுமார் 700 கிருதிகள் கிடைத்துள்ளன. இவர் மராத்தி, இந்தியிலும் கிருதிகளை இயற்றியிருக்கிறார். ஸ்ரீஹரியை பாடியதோடு தம் அனுபவத்தின் பல கிருதிகளையும் பாடியிருக்கிறார். இவரின் ஆறுதல் வசனங்கள்:

நானு நன்னது எந்து ஏனு களிஸிகொண்ட்யோ
ஸ்வானுபவவ சுக அனுபவிஸதெ ஹோகி
ஸ்வான சூகர யோனி முக சோஸிதெல்ல
ஹொன்னு ஹெண்ணின சவிய பண்ணிஸி நீ பயஸிதெல்ல
மண்ணி மாணிகவெந்து தண்ணனெ தணுவரெ
கண்ணகெட்டரப்யாடோ தன்னொளரியதெ ||

ஹரிசர்வோத்தமன் என்று பாடும் ஒரு பாடலில் அனைத்தும் நீயே என்று கூறி வேண்டுகிறார்.

சகலவெனகெ நீனே ஸ்ரீஹரியெ
காவ கருண சூத்ராந்த்ரனு நீனே
பாசுத பாஹ்யாந்த்ரதொளிஹ நீனே
மஹிபதி மனோமூர்த்தியு நீனே ||

'நாம் செய்யும் அனைத்து செயல்களும் உன் பூஜையே' என்கிறார்.

***

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### மாத்ருகா சந்தி - விடைகள்

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 ஸு | மே | த | | | 2அ | வ | கா | ஸ | | | 3 உ | த் | கீ | 36த |
| 4 ஷ | ட் | கோ | ண | | ர் | ர் | | 43பே | | 5ஸு | த | தி | | ஸ |
| ங் | | | | | 6 க | யி | று | | | க | க | | | வி |
| 7 க | ண் | ணீ | ர் | | ஸ் | 44த | | | லு | 27தா | | ர | | ஹி |
| | | | | ம் | ப | த | 28க | | | | | ஸு | | ன |
| 8 சி | 37த் | த | ம் | | க | 9ஸி | 38 வ | ன் | | | 10அ | 39ப | த் | ய |
| | ரி | வே | 29கா | | 45ய | | 11 ரு | த் | ர | ன் | | ர் | | |
| ன் | ய | ரி | 30தூ | | 12த் | ரோ | ண | | | 13 நி | ர் | ஜ | ர | 40ரு |
| | ம் | | | | ஸ | | ன் | | | | | ன் | | து |
| | ப | ம் | 41த | 31ஸ் | 46நா | | | | 14ஆ | ம் | ன | ய | | |
| த | க | | னு | | | | | ளி | க் | த | ம | 32ஜ | | |
| த் | | | | | | ம் | | வி | | | | | | |
| 15 ம | ன் | ம | த | ன் | | 16ஸ | ர | ஸ் | வ | 42 தி | | | | |
| ன் | | | ஹு | | | 35மா | | 47அ | | 17 வ | ஸி | ஷ் | ட | ர் |
| 48உ | | 18 க | ரு | வி | ழி | | | 19வ | த் | ஸ | | | 20கு | ஹு |
| | | | 49 பு | | | | | | ம் | த | ர் | கூ | 33மு | |
| | | | | | | | ன் | ன | ம | 34வா | | | | |
| | 21வா | ம | ன | ன் | | | 22 ப் | ர | த் | யு | ம் | ன | ன் | |
| | 23ஸு | ர | ந | தி | | | ர | | | தே | | | | |
| | தே | | | | | | ஹ் | | | 24வ | ஸ | ந் | த | |
| 25 நி | வ | ஹ | | | | | 26மா | த | வ | ன் | | | மி | |
| | ன் | | | | | | | ன | ச | லோ | ல | ன | 35அ | |

**மாத்ருகா சந்தி குறுக்கெழுத்துப் போட்டிக்கு**
**விடை எழுதி புத்தகப் பரிசு பெறுபவர்கள்:**

- திரு.ஹனுமந்த ராவ், திருநெல்வேலி
- திருமதி. ப்ரேமா குருராஜன், பொள்ளாச்சி.
- திரு.ரகூத்தமன், பெங்களூரு

தொடர்

கேசவ நாமா

**12. ஈச நின்ன சரண பஜனெ - ஸ்ரீகனகதாசர்**

**காமஜனக நின்ன நாம ப்ரேமதிந்த பா1டு3வந்த2**
**நேம எனகெ பாலிசய்ய ஸ்வாமி வாமன ||8**

மன்மதனின் தாக்கத்தால் நான் உன் பெயரை சொல்லாமல், வேறு யார்யார் பெயரையோ சொல்லிக் கொண்டிருக்கிறேன். அத்தகைய ஆசைகளைக் கொடுப்பவன் நீயே. ஆகையால், வாமனரூபியே, உன் பெயரை நான் பக்தி, அன்பு, காதலுடன் சொல்வதற்கு எனக்கு ஆசையைக் கொடுப்பாயாக.

**மத3னனய்யா நின்ன மஹிமெ வத3னத3ல்லி நுடி3யுவந்தெ**
**ஹ்ருதயதல்லி ஸதன மாடு முத3தி3 ஸ்ரீத4ர ||9**

லட்சுமிதேவியை இதயத்தில் தரித்திருக்கும் ஸ்ரீதரனே, என் வதனத்திலிருந்து உன் மகிமைகளை புகழும்படிச் செய்து, நாக்கிற்கு அபிமானி தேவதைகள் எனக்கு அருளுமாறு தயை புரிவாயாக. ஸ்ரீதேவியுடன் நீ என் இதயத்தில் வசித்து, என் நாக்கிற்கு (உன்னையே நினைக்குமாறு) ஆணையிடு.

**ஹுஸியனாடி3 ஹொட்டெ ஹொரெவ விஷயத3ல்லி ரஸிக1னெந்து - ஹுஸிகெ ஹாக1தி3ரு ஹ்ருஷிகேஷனெ ||10**

ஹ்ருஷிக என்றால் இந்திரியங்கள். அவர்களுக்கு நீயே ஈசன் மற்றும் அவர்களை நிர்வகிப்பவனும் நீயே - ஹ்ருஷிகேசன். வயிற்றுப் பிழைப்பிற்காக பல்வேறு வேடங்களை தரித்து, என் வாழ்க்கையை நடத்துகிறேன். அதற்காக, என்னை நரகத்தில் தள்ளாமல், அனைத்து இந்திரியங்களையும் உன்னிடத்தில், உன் சேவையைச் செய்தே நடக்குமாறு கருணை செய்வாயாக, ஹ்ருஷிகேசனே.

**பித்து ப4வத3னேக ஜனும ப3த்த3னாகி கலுஷதிந்த**
**கெ3த்து போப பு3த்தி4 தோரோ பத்மனாபனே ||11**

பாற்கடலில் படுத்திருக்கும் பத்பனாபன் நீ. சம்சாரக் கடலில் மூழ்கியிருப்பவன் நான். என் இதயத்திலும் அவதரித்து, எல்லா பாவங்களிலிருந்தும் நான் வெளியே வருமாறு எனக்கு புத்தியைக் கொடு.

**காமக்ரோத பி³டி³ஸி நின்ன நாம ஜிஹ்வெயொளகெ நுடிஸு**
**ஶ்ரீமஹானுபா⁴வனாத தாமோதர ||12**

இந்திரியங்களை கட்டுப்படுத்தும் ஜீவர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுப்பவன் தாமோதரன். காம, க்ரோதம் முதலான அரிஷட் வர்கங்களைப் போக்கி, உன் பெயர் என் நாக்கில் எப்போதும் இருக்குமாறு அருளி, இந்திரியங்களை கட்டுப்படுத்தும் வலிமையை எனக்குக் கொடுத்து, என் பக்தியினால் உன்னை நீ கட்டிக்கொள். அதனால் நான் சத்கதி அடையுமாறு செய்வாயாக.

**பங்கஜாக்ஷ நீனு என்ன மங்கு¹புத்தி³யன்னு பி³டி³ஸி நின்ன**
**கிங்கரன்னு மாடிகொள்ளொ சங்கருஷண ||13**

நான், எனது என்னும் ஆசைகள் நிரம்பி, நான் உன்னிடமிருந்து தூர விலகியிருக்கிறேன். அனைவரையும் உன்னிடம் ஆகர்ஷணம் செய்து (ஈர்த்து), சங்கர்ஷண என்னும் பெயர் பெற்ற நீ, என்னை உன்னிடம் ஈர்த்துக் கொள். என் மந்தபுத்தியை விலக்கு. உன் தாசனாக என்னை ஏற்றுக்கொள்.

**ஏஸு ஜென்ம பந்த³ரேனு தாஸனல்லவேனோ நானு**
**கா⁴ஸி மாட³தி³ரு இன்ன வாசுதேவனெ ||14**

ஹே வாசுதேவனே! எவ்வளவு பிறவி வந்தாலும் நான் உன் தாசனாக இருப்பேன். மேலும் காயப்படுத்தாமல், என்னைக் காப்பாற்று. (இறந்த, நிகழ், வருங்காலங்களிலும் நீ ஈசன், நான் தாசன் என்னும் அறிவைக் கொடுப்பாயாக).

**புத்தி³ஷூன்யனாகி என்ன பத்த³காய குஹக மனவ**
**தி¹த்தி³ ஹ்ருதய ஷுத்த³ மாடோ³ ப்ரத்யும்னனே ||15**

துர்புத்தியினால் கெட்ட செயல்களை செய்து, அனைவரிடமும் கெட்ட பெயரைப் பெற்றிருக்கிறேன். என் இதயத்தை சுத்தமாக்கி, உன் பக்தர்களின் நட்பை எனக்குக் கொடுத்து, பிரத்யும்னனான ஸ்ரீஹரியே அறிவு கெட்டவனான எனக்கு ஞானத்தைக் கொடு.

**ஜனனி ஜனக நீனெ எந்து நெனெவெனய்ய தீனப³ந்து⁴**
**எனகெ முக்தி பாலிஸிந்து அனிருத்தனே ||16**

அனைத்து பிராணிகளும் தத்தம் ஸ்தூல சரீரங்களில் இருப்பது போல் செய்தவனாகையால் நீ அனிருத்த (ஸ்தூல, அனிருத்த, லிங்க, ஸ்வரூப). என் அனைத்து பிறவிகளிலும் பற்பல தாய் தந்தைகள் வந்தனர். ஆனால், என் நிஜமான தாய் தந்தை நீயே. தீனபந்து,

பக்தவத்ஸலனே, என் இந்த சாதனை சரீரத்தில் என்னை வைத்திருக்கும் காரணத்தால், நீயே ஜனனி- ஜனகன். அனிருத்தரூபி பரமாத்மனே எனக்கு முக்தியைக் கொடு.

**ஹருஷதிந்த நின்ன நாம ஸ்மரிசுவந்தெ மாடு ப்ரேம**
**இரிஸு சரணதல்லி க்ஷேம புருஷோத்தம** ||17
ஜீவர்களின் தேகங்களில் இருப்பதால் உனக்கு புருஷ என்று பெயர். மூன்று குணங்களும் இல்லாதவனாகையால் உனக்கு உத்தம என்று பெயர். ஹே புருஷோத்தமனே, உன் பெயரை நான் பெருமையுடன் சொல்வதற்கு எனக்கு அருள் புரிவாயாக. உன் சரணங்களில் எனக்கு அன்பு வருமாறு செய். இதுவே என் ப்ரார்த்தனை.

**ஸாது ஸங்க$^3$ கொட்டு நின்ன பாத ப$^4$ஜனெ இத்து என்ன**
**பே$^4$த மாடி நோடதி$^3$ரு ஸ்ரீஅதோக்ஷஜ** ||18
ஜீவோத்தமரான வாயுதேவரின் அருளுக்கு பாத்திரர்களான சாதுக்களின் நட்பைக் கொடு. துர்ஜனர்களின் வட்டத்தில் விழுந்திருக்கும் என்னை நீ உன் கருணைப் பார்வையால் மேம்படுத்து. உன் பாத பஜனை செய்யும் பாக்கியத்தைக் கொடு. என்னை ஒதுக்கி வைக்காதே, ஹே அதோக்ஷஜனே.

**சாரு சரண தோரி எனகெ பாருகா$^3$ணிஸய்யா கொனெகெ**
**பா$^4$ர ஹாகிருவி நினகெ நாரசிம்ஹனே** ||19
பக்த பிரகலாதனுக்காகவே ஜடத்திலிருந்து வந்து, நரசிம்மனாக அவதரித்தாய். உன் அழகான பாதங்களைக் காட்டு, என் வினைப்பயன்களிலிருந்து எனக்கு விமோசனம் பெற, உன் சரணங்களே எனக்கு கதி, என்னை கரையேற்று.

**ஸஞ்சிதார்த்த$^2$ பாபக$^3$ளு கிஞ்சிதாத$^3$ பீடெ$^3$க$^3$ளு**
**முன்சிதவாகி களெது பொரெயொ ஸ்வாமி அச்யுத** ||20
அனைத்து பிறவிகளிலிருந்து என்னை பாவங்கள் தொடர்கின்றன. அதன் காரணமாகவே பல துன்பங்களை அனுபவித்து வருகிறேன். அவற்றை களைந்து என்னை காப்பாற்று அச்யுதனே. உன் நினைவினால், எனக்கும் அழிவில்லாத ஞானானந்தாதிகள் கிடைக்கட்டும், பாவங்கள் போகட்டும்.

**ஞானபக்தி கொட்டு நின்ன த்[4]யானதல்லி இட்டு ஸதா**
**ஹீன புத்தி[3] பி[3]டி[3]ஸு முன்ன ஸ்ரீஜனார்த்தன ||21**

ஜீவாத்மருக்கு தகுந்த கதியினைக் கொடுப்பதாலேயே ஜனார்த்தன என்று பெயர் பெற்றாய். உன்னை அனைவரும் பித்ரு கார்யங்களில் சிறப்பாக நினைக்கின்றனர். பாவ கர்மங்களைச் செய்யும் துஷ்டர்களை தண்டித்து, பிறரைக் காப்பாற்று. உன்னிடத்தில் ஞான பக்திகளைக் கொடுத்து, உன்னைப் பற்றியே சிந்தித்திருக்குமாறு செய். என் துர்புத்திகளை அழித்துவிடு என்று பிரார்த்திக்கிறேன்.

**ஜபதபானுஷ்டானவில்லதெ குபத[2]கா[3]மியாத என்ன**
**க்ருபெய மாடி க்ஷமிஸபேகு ஹே உபேந்த்ரனே ||22**

தற்காலிக சுகங்களில் மூழ்கியிருக்கும் நான், ஜப தப அனுஷ்டானங்கள் எதுவும் செய்யாமல் வாழ்க்கையை வீணடித்திருக்கிறேன். தயவு செய்து என்னை மன்னித்துவிடு. தக்ஷபிரஜாபதியில், ஆவேசம் கொண்டிருப்பதால் நீ உபேந்திர எனப்படுகிறாய்.

**மொரெய இடுவெனய்ய நினகெ ஷரதி[4]ஷயன ஷுபமதி[1]ய**
**இரிஸொ பக்தரொளகெ பரம புருஷ ஸ்ரீஹரே ||23**

பரமாத்மனின் ஸ்ரவண, ஸ்மரணைகள், பாவங்களைப் போக்குகின்றன. ஸ்ரீஹரியே, சம்சார சாகரத்திலிருந்து என்னை விடுவித்து, உன் பக்தர்களின் வட்டத்தில் என்னை நிறுத்து.

**புட்டிஸலேபே[3]ட[3] என்ன புட்டிஸித[3]கெ பாலிஸின்னு**
**இஷ்டு மாத்ர பேடி[3]கொம்பெ ஸ்ரீகிருஷ்ணனே ||24**

அனைத்தையும் செய்பவன், செய்விப்பவனான ஸ்ரீகிருஷ்ணனே, என்னை மறுபடி பிறக்காதிருக்கச் செய். தற்போது பிறந்திருப்பதால் ஞான, பக்திகளைக் கொடுத்து மறுபடி இங்கேயே வராமலிக்க அருள்புரி என்று வேண்டிக் கொள்கிறேன்.

**சத்யவாத[3] நாமக[3]ளனு நித்யத[3]ல்லி படிஸுவரிகெ[3]**
**அர்த்தியிந்த சலஹுதிருவ கர்த்ரு கேஷவ ||25**

உன் மகிமைகளைச் சொல்லும் கேசவாதி 24 நாமங்கள் உண்மையானவை (ஸ்வரம், எழுத்து, சொல், வாக்கியம் என அனைத்துமே பகவந்தனையே சொல்கின்றன). இதனை யார் மிகுந்த பக்தியுடன் சொல்கின்றனரோ, அவரை ஸ்ரீஷ கேசவன்

காப்பாற்றுகிறான் என்று பல-ஸ்துதியைச் சொல்லி கனகதாசர் இந்த கிருதியை முடிக்கிறார்.

**மரெயத[3]லெ ஹரிய நாம ப[3]ரெது ஓதி[3] கேளுவர்கெ[3]**
**கரெது[3] முக்தி கொடுவ நெலெ ஆதிகேசவ** ||26

ஸ்ரீஹரியின் நாமமான இந்த கேசவ நாமத்தை தினந்தோறும் எழுதவேண்டும், படிக்க வேண்டும், கேட்க வேண்டும். இதனால் பகவந்தன் நம் பாவங்களை விலக்குகிறான். இது சத்தியம் என்று சொல்லி கனகதாசர் இதனை ஆதிகேசவனுக்கு சமர்ப்பணம் செய்கிறார்.

**அடுத்த இதழில் அடுத்த பாடல் துவங்கும்**

**** திருமதி. ஜெயம்மா, பெங்களூரு**

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

### உவமான உவமேயங்கள்

**(சென்ற இதழின் தொடர்ச்சிக் கட்டுரை)**

மளெய நீரோணியலி ப[1]ரியலு
ப[3]ளசரூரொளகி[3]த்த[1] ஜனரா
ஜலவு ஹெத்தொ[3]ரெகூ[1]டெ மஜ்ஜன பா[1]ன கை[3]த[3]ப[1]ரு |
க[1]லுஷ வசனகளாதொ[3]டெ[3]யு பா[3]
ம்பொ[3]ளெய பெ[1]த்த[1]ன பா[1]த[3]மஹிமா
ஜலதி[4] பொ[1]க்கு[1]த[3]ரிந்த[3] மாண்த[3]ப[1]ரே மஹிசுரரு || (2-2)

இது ஒரு அழகிய உவமையாகும். மழை நீரானது சாலையோரத்தில், கால்வாயில் போகும்போது மக்கள் அதை எதற்கும் பயன்படுத்து வதில்லை. அதே நீர் சென்று ஒரு பெரிய ஏரியில், நதியில் சேரும் போது, அங்கு குளிக்க, குடிக்க மக்கள் அதை பயன்படுத்துவதைப் போல, ஹரிகதாம்ருதசார கிரந்தமும் தேவமொழியான கிரந்தத்தில் இயற்றப்படாமல் மக்கள் பேசும் மொழியான கன்னடத்தில் இயற்றப் பட்டிருந்தாலும், சாலையோர நீர் கங்கை, கிருஷ்ணா நதிகளில் போய் சேர்ந்து புனிதமாகுவதைப் போல, வேத உபநிஷத்களின் விஷயங்கள் கன்னடத்தில் சொல்லப்பட்டிருந்தாலும், அந்த விஷயங்கள் ஸ்ரீஹரி யைக் குறித்தான விஷயங்கள் ஆகையால் இதுவும் புனிதமாக ஆகி யிருக்கிறது. இதை படிப்பவர்கள், பக்தர்கள் இதை பருகுவதற்கு தகுதி

பெற்றிருக்கிறது என்னும் செய்தியை தாசர் இந்த ஸ்லோகத்தில் விளக்கியிருக்கிறார். மொழியைவிட அதில் சொல்லப்பட்டிருக்கும் கருத்துகளே முக்கியம் என்பதை புரியவைக்கிறார்.

தாசரின் இந்த கருத்து, கன்னட மொழியின் சிறப்பினை இன்னும் மெருகூட்டியிருக்கிறது மட்டுமல்லாமல், நற்கருத்துகளை எந்தவொரு மொழியிலும் படித்துத் தெரிந்துகொள்ளலாம் என்பதை புரியவைத்தி ருக்கிறது. ஸ்ரீஹரி மற்றும் பக்தர் இருவரின் சம்பந்தத்தைப் பற்றி தாசர் ஒரு உவமை மூலமாக புரிய வைக்கும் ஸ்லோகம் இதோ.

ஜனனியனு கா$^{1}$ணதி$^{3}$ஹ பா$^{3}$லக$^{1}$
நெனெநெனெது$^{3}$ ஹலபு$^{3}$தி$^{1}$ரெ க$^{1}$த்த$^{1}$லெ
மனெயொளடகி$^{3}$த்த$^{3}$வன நோடு$^{3}$த$^{1}$ நகு$^{3}$த$^{1}$ ஹருஷத$^{3}$லி |
த$^{1}$னயனம்பிகி$^{3}$த$^{3}$ப்பி$^{1}$ ரம்பி$^{3}$ஸி
க$^{1}$னலிகெ$^{1}$ய க$^{1}$ளெவந்தெ$^{1}$ மது$^{4}$சூ
த$^{3}$னனு த$^{1}$ன்னவரித்தெ$^{3}$டெ$^{3}$கெ$^{3}$ ப$^{3}$ந்தொ$^{3}$த$^{3}$கி$^{3}$ ஸலஹுவனு || (2-13)

தாய்க்கும் குழந்தைக்கும் நடுவில் இருக்கும் பாசத்தை இந்த ஸ்லோகத்தின் மூலம் மிகவும் அழகாக விவரித்துள்ளார் தாசர். தாய் குழந்தையை விட்டு மறைந்து நிற்பது எதற்கு? பின்னர் வந்து அக்குழந்தையை கொஞ்சுவது எதற்கு? குழந்தைக்கு தன்னிடம் எவ்வளவு பாசம் உள்ளது என்பதை கண்டுபிடிப்பதற்காக. இதைப் போலவே ஸ்ரீஹரி, பக்தனின் பக்தியை சோதனை செய்து பார்க்கி றாராம். குழந்தையானது தனியாக, பயத்தில் தாயின் வரவை எதிர் பார்த்து அழுவதைப் போல - பக்தன் ஸ்ரீஹரியை எதிர்பார்க்க வேண்டும். இங்கு பரமாத்மா ஸ்ரீஹரி, தேஹாத்மா குழந்தை. தாசரின் கற்பனை மிகவும் அழகானது. எப்படி அழைத்தவுடன், அழுது எதிர்பார்த்தவுடன் தாய் குழந்தையைக் கொஞ்சுவதைப் போல, ஸ்ரீஹரியானவர் பக்தரை காப்பாற்றுகிறார் என்று அழகாக ஒரு உவமையின் மூலம் சம்பந்தப்படுத்தி தாசர் வர்ணிக்கிறார்.

த$^{4}$னவ ஸம்ரக்$^{1}$ஷிசுவ ப$^{2}$ணி தா$^{1}$
நுணதெ$^{3}$ மத்தொ$^{1}$ப்ப$^{3}$ரிகெ$^{3}$ கொ$^{1}$ட$^{3}$த$^{3}$னு
தி$^{3}$னதி$^{3}$ நோடுத$^{1}$ சுகி$^{2}$சுவந்த$^{3}$தி$^{3}$ லகு$^{1}$மிவல்லப$^{4}$னு |
ப்$^{1}$ரணத$^{1}$ரனு கா$^{1}$ய்தி$^{3}$ஹனு நிஷ்கா$^{1}$
மனதி$^{3}$ நித்$^{1}$யானந்தமய து$^{3}$
ர்ஜனர சேவெயனொல்லன பிரதிமல்ல ஜகக்கெ$^{1}$ல்ல || (2-12)

புதையல் இருக்குமிடத்தில் அதை பாம்பு காவல் காக்கிறது என்பது பொதுவான நம்பிக்கை. அந்தப் பாம்பிற்கு அந்த செல்வத்தினால் எந்தவொரு பயனும் இல்லை. அந்த செல்வத்தைப் பெருக்குவதும் அதனால் முடியாது. அந்த செல்வத்தைப் பாதுகாப்பதற்காக அதற்கு யாரும் சம்பளமோ பரிசோ கொடுப்பதில்லை ஆனாலும் அதை பாதுகாப்பதை அந்தப் பாம்பு மிகவும் சிரத்தையுடன் செய்கிறது.

இதே போல், ஸ்ரீஹரியும் தன் பக்தர்களிடம் பக்தியைத் தவிர வேறு எதையும் எதிர்பார்ப்பதில்லை. லட்சுமியின் தலைவர், சேஷனை படுக்கையாகக் கொண்டவர், எதற்கும் ஆசைப்படாத நற்குணங்களைக் கொண்டவர், பக்தர்களைக் காப்பவர், பக்தர்களின் சொல்லிற்குக் கட்டுப்பட்டவர் என்னும் பெயரைக் கொண்டவர் ஸ்ரீஹரி. 'ஹூவ தருவர மனெகெ ஹுல்ல தருவ, அவ்வ லகுமி ரமண இவகில்லா கருவ - என்னும் தாசர் பாடலே இதற்கு சாட்சி. இத்தகைய ஸ்ரீஹரி, அந்த பாம்பினைப் போலவே, எந்தவொரு எதிர்பார்ப்பும் இல்லாமல் பக்தர்களைக் காப்பாற்றுகிறார். ஆனால் தன் பக்தர்களிடமிருந்து ஒரே ஒரு விஷயத்தை மட்டும் எதிர்பார்க்கிறாராம். அது என்ன?

பா3லக1ன க1லபா4ஷே ஜனனியு
கே1ளி சுக2ப1டுவந்தே1 லகு1மி
லோல ப4கு1தரு மாடு3தி1ஹ சம்ஸ்துதிகெ3 ஹிக்கு3வனு |
தா1ள த1ன்னவரல்லி மாடு3வ
ஹேளனவ ஹெத்தை3வ விது3ரன
ஆலயதி பா1லுண்டு3 கு1ருப1ன மானவனெ கொ1ண்ட3 || (2-14)

இங்கும் தாசர், தாய்-குழந்தையின் சம்பந்தத்தையே உவமையாகக் காட்டுகிறார். தாய்-குழந்தையின் பாசமானது எதையும் எதிர்ப் பார்க்காமல் வருவது. ஸ்ரீஹரியின் கருணையைப் போலவேதான் இதுவும். சிறிய குழந்தையானது தப்பு தப்பாகப் பேசினாலும், அது மிகவும் அழகாக மழலைப்பேச்சாக இருக்கிறது. அதில் இருக்கும் தவறுகளை தாய் கண்டுகொள்வதில்லை. அக்குழந்தையும், ஏமாற்றுவது, மோசம் செய்வது இதெல்லாம் செய்வதில்லை. அப்படி யென்றால் என்னவென்றே அக்குழந்தைக்கு தெரிவதில்லை. இதற்காகவே 'குழந்தையும் தெய்வமும் குணத்தால் ஒன்று' என்கின்றனர். குழந்தையின் தப்புதப்பான பேச்சுகள், தவறான தப்படிகள், மழலைப்பேச்சுகள் ஒரு தாய்க்கு எப்படி பிடிக்குமோ

அதுபோலவே, பக்தர்களின் தவறுகள் அனைத்தும் ஸ்ரீஹரிக்கும் ப்ரியமானவை. தெரியாமல் செய்த தவறுகளுக்கு ஸ்ரீஹரியிடம் மன்னிப்பு கிடைக்கும் என்றாலும், தெரிந்தே செய்யும் தவறுகளுக்கு அவரிடம் மன்னிப்பு கிடைப்பதில்லை. அவர் துஷ்டர்களை திருத்துபவர். பக்தர்களைக் காப்பாற்றுபவர். இதுவரை தாய்-குழந்தை சம்பந்தப்பட்ட உவமைகள் பார்த்தோம். தந்தைக்கு எதுவும் உவமைகள் இல்லையா? அதை அடுத்து பார்ப்போம்.

ஜனக1 த1ன்னாத்மஜகெ3 வர பூ4
ஷண து3கூ1லவ தொ1டிஸி தா1 வ
ந்த3னெய கை1கொளுத1வன ஹரசுத1 ஹருஷபடுவந்தெ1 |
வனருஹேக்1ஷண பூ1ஜ்ய பூ1ஜய
நெனெஸி பூ1ஜாசாதனப1தா3
ர்த1னுத1னகெ தா1னாகி3 ப2லக3ளனீவ ப4ஜக1ரிகெ3 || (3-10)

ஸ்ரீஹரி அனைத்து இடங்களிலும் வியாபித்திருப்பவர் என்பதைக் காட்ட தாசர் இந்த உவமையைக் கையாண்டிருக்கிறார். தந்தை யானவர் தனது மகனுக்குத் தேவையான ஆடை அணிகலன்கள் மற்றும் இதர தேவைகளை செய்து கொடுத்து, மகனின் வளர்ச்சியில் மிகவும் மகிழ்ச்சியடைந்து, அவனிடம் மரியாதையை / வணக்க ங்களைப் பெற்றுக்கொண்டு அவனுக்கு ஆசிகளை வழங்குவதைப் போலவே, தன்னால் உருவாக்கப்பட்ட ஜீவர்களை ஸ்ரீஹரி மிகவும் கருணையுடன் அருள்கிறார். ஜீவர்கள் மகிழ்ச்சியுடன் இருக்க வேண்டும் என்று விரும்புகிறார். தன்னை வணங்கும் பக்தர்களை மகிழ்விக்கிறார். படைத்ததும் அவரே, பக்தர்கள் மனதில் விருப்பத்தை உண்டாக்குவதும் அவரே, பூஜைக்குப் பயன்படும் பொருட்களும் அவருடையதே - ஆனால் அதன் நற்பலன்கள் மட்டும் பக்தர்களுக்கு. ஸ்ரீஹரி மற்றும் ஜீவர்களின் இப்படிப்பட்ட சம்பந்தத்தைப் போலவே மக்களின் (வாரிசு) சம்பந்தமும். மகனுக்கு அனைத்து சுகங்களையும் செய்து கொடுப்பது தந்தையே. இதற்காகவே ஸ்ரீஹரி ஜகத்பிதா, ஜகன்னாத என்று அழைக்கப்படுகிறார். ஒரு தந்தையின் சிறப்புகளை தாசர் மேலும் விளக்குகிறார்.

** 17ம் பக்கத்தில் தொடர்கிறது.

தொடர்

# ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## பஞ்சதன்மாத்ர சந்தி

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | 19 | | | | 2 | 20 | 21 | | | 22 | |
| | | | | 3 | | | | | | | | | | 12 |
| | | | 13 | | | | | | | | | | | |
| 4 | | 23 | | | | | 24 | | | | 25 | 14 | | |
| | | | | | | | | | | | 15 | | | |
| | | | | | | | 16 | | | | | 17 | | |
| | | 26 | | | | 29 | | | | | | | | |
| | | | | 5 | | | | | | | | | | |
| 6 | | | | | | | | | | | 7 | | | |
| | | | | 30 | 8 | | | | | | | | | 27 |
| | | | | | 9 | | | | | | 31 | | | |
| | | | | | | | | | | 10 | 28 | | | |
| 11 | | | | | | | | 32 | | | | | | |
| | | | | | | | 33 | | 18 | | | | | |
| | | 34 | | | | | | | | | | | | |

* குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam@gmail.com என்னும் ஐடிக்கோ அல்லது 89044 58276 க்கோ வாட்சப் செய்யலாம்.

இடமிருந்துவலம் : 1.தோஷங்கள் அற்றவன்(6),2.இருபத்தி ஒன்று(6) 3.தண்ணீர்(3),4.புருஷ ஸுக்தத்தினால் துதிக்கப்படுபவன்(5), 5.தோஷம் அல்லது அழுக்கு(3), 6.ஜ்வரனுள்ளும் ஹரனுள்ளும் இருக்கும் பகவத் ரூபம்(5), 7.தங்கம்(3), 8.ப்ரளயத்தை கண்டரிஷி(7), 9.மகன்(4), 10. நீர்துளி (5), 11.இலக்கியம்(5),

வலமிருந்துஇடம்: 3.முயல் உருவ சின்னம்(2), 12..முடிவு(3), 13.தாங்கப்படுவது(4), 14.புல்(3), 15.முப்பது(5), 16.ப்ரத்யும்ன ரூபி ஸ்ரீஹரி, சந்திரனுள் இந்த பெயருடன் இருக்கிறார்(6), 17.முடிவற்ற(4), 18.ஒன்பது பெண்களின் சித்திரங்களை யானையின் உருவத்தில் ஜோடிப்பது(8).

**மேலிருந்துகீழ்:** 1.அகால மரணம்(6),2.ஒன்று குறைந்த(3),17.தாய் மாமன், கலைந்துள்ளது(3), 19.தண்ணீரின் தன்மாத்ரகுணம்(2), 20.தேஹம்(5),21.வேறுபட்டவை(4), 22.நல்லெண்ணெய்(3), 23.மாற்றம்(3), 24.ஸமூகம்(2), 25.ஜ்வரத்தை ஸ்ருஷ்டித்தவர்(4), 26.நூல்(3), 27.நூலிழைகள்(5), 28.கண்ணாடி(4),

கீழிருந்துமேல்: 29.திரி(3),30.குதிரை(3),31.அலை(3), 32.ப்ரஹ்மாண்டம். கலைந்துள்ளது(6), 33.படகு(2),34.அலைகள்(4).

****

(15ம் பக்கத்திலிருந்து தொடர்கிறது)...

த$^{1}$ந்தெ$^{3}$ ப$^{3}$ஹுஸம்ப்$^{4}$ரமதி த$^{1}$ன்னய
ப$^{3}$ந்து$^{4}$ப$^{3}$ளக$^{3}$வ நெரெஹி மது$^{3}$வெய
நந்த$^{3}$னகெ$^{3}$ தா$^{1}$ மாடி$^{3}$ மனெயொளகி$^{3}$டு$^{3}$வ தெ$^{1}$ரனந்தெ$^{1}$ |
இந்தி$^{3}$ராத$^{3}$வ த$^{1}$ன்ன இச்செக$^{3}$
ளிந்த$^{3}$ கு$^{3}$ணக$^{3}$ள சேதனக்கெ$^{1}$ ச
ம்பந்த$^{4}$கை$^{3}$ஸி ஸுகா$^{1}$ஸுகா$^{1}$த்மக$^{1}$ ஸம்ஸ்ருதி$^{1}$யொளிடு$^{3}$வ ||
(வியாப்தி சந்தி ஸ்லோகம் #11)

மகன் குழந்தையாக இருந்தபோது மட்டுமல்ல, வாலிப வயதை அடைந்தபிறகும், உற்றார் உறவினர் அனைவரையும் கூப்பிட்டு, மகனின் திருமணத்தை செய்து, மகன் - மருமகளை வீட்டில் அமர்த்தி ஒரு தந்தையானவர் மகிழ்ச்சி அடைவதைப்போலவே - உலகத்திற்கே காரணமான ஸ்ரீஹரியானவர், தன்னால் உருவாக்கப்பட்ட சத்வ, ரஜோ, தமோ ஜீவர்களுக்கு, அவரவர்களின் கர்மங்களுக்கேற்ப சுக-துக்கங்களைக் கொடுத்து, அவர்களுக்கு அருளி, அதில் மகிழ்ச்சியடைகிறாராம். இதையே நாம் ஸ்ரீஹரியின் லீலை என்று சொல்கிறோம்.

** கட்டுரை அடுத்த இதழில் தொடரும் ***

தொடர்

## பலவிது பாள்துதக்கெ-ஸ்ரீஜகன்னாத்தாசர்

**கன்னட உரை: திரு.தாவண்கெரெ பீமராவ்**

பிரதி[1]தி[3]வசதி ஸ்ருதி ஸ்ம்ருதிக[3]ளிந்த[3]
சம்ஸ்துதி[1]சுத[1] லட்சுமி பதி[1]கு[3]ணவ
க்[1]ருதிப[1]தி ஸ்ருஷ்டிஸ்தி[1]தி[1] லய கா[1]ரண இத[1]ர
சர்வதே[3]வதெ[1]க[3]ளிகி[3]ல்லெம்பு[3]தே |26|

பிரதிதிவஸதி = தினமும், ஸ்ருதி ஸ்ம்ருதிகளிந்த = புராண இதிகாச ங்களிலிருந்து, லட்சுமிபதிகுணவ = ஸ்ரீநாராயணனின் மகிமைகளை, ஸம்ஸ்துதிஸூத = பக்தியுடன் பாடியவாறு, க்ருதிபதி = ஸ்ரீபிரத்யும்ன னே, ஸ்ருஷ்டிஸ்திதி லயகாரணனு = பிறத்தல், காத்தல், அழித்தல் ஆகியவற்றிற்கு காரணம் என்று, இதர தேவதெகளிகெ = ரமா பிரம்மன் முதலான இதர தேவதைகளுக்கு (அத்தகைய ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய செயல்களை செய்யும் திறன்), இனிது = கொஞ்சம்கூட, இல்லெம்புதே = இல்லை என்று தெளிவாக அறிவதே, இந்தப் பிறவி எடுத்ததற்கான சிறந்த அர்த்தமாகும்.

ரமா, பிரம்மாதி தேவதைகள், படைத்தல் முதலான காரியங்களை நிர்வகித்து வருகிறார்கள் என்று சொல்லப்பட்டாலும், அவர்கள் ஸ்வத ந்த்ரனான ஸ்ரீஹரியின் அதீனராகியே, அவரது ஆணையின்படியே அவற்றை செய்கிறார்கள் என்று தெளிவாக சொல்லப்பட்டிருப்பதை கவனிக்க வேண்டும்.

பன்னகா[3]சல ஸுஸன்னிவாஸ பா[1]வன்னசரித[1] சத்கு[3]ணப[4]ரித[1] |
ஜன்ய ஜனக[1] லாவண்யேக[1] நிதி[4] ஜகன்னாத[1]விட்டலா நான்யப[1]
நெம்புதே |27|

பன்னகாசல ஸுஸன்னிவாஸ = சேஷாசலம் என்னும் மிகவும் பவித்ரமான க்ஷேத்திரத்தில் வசிக்கும், பாவன்னசரித = (கேட்பதற்கு) மிகவும் பவித்ரமான சரித்திரத்தைக் கொண்டவனான, ஸத்குணபரித = கல்யாணாதி நற்குணங்களைக் கொண்டவனான, ஜன்யஜனக = அனை வரையும் (அவரவர் தகுதிக்கேற்ப) மேம்படுத்தும், லாவண்யனு = மிகவும் அழகானவனான, ஏக ஜகன்னாதவிட்டலனு = ஸ்வதந்த்ர

னான ஒருவனேயான (தலைவனான) ஜகன்னாதவிட்டலன், அனன்யப நெம்புதே = வேறு யாராலும் காப்பாற்றப்படத் தேவையில்லாதவன் (தானே அனைவரையும்விட மேம்பட்டவன், அனைவரையும் காப்பா ற்றுபவன்) என்று அறிந்து வாழ்வதே, இப்பிறவி எடுத்ததற்கான பலன் ஆகும்.

'ஸ இவம் ஸர்வமஸ்ம்ருஜத' என்னும் வேத வாக்கியம், ஸ்ரீ நாராயணனே அனைத்தையும் படைத்தான் என்கிறது.

ஸௌந்த3ர்யஸாரைக1ரஸம் ரமாபதே1 ரூப1ம் ஸதானந்த3யதீ1ஹ மோக்1ஷிண: || - சுமத்வவிஜயம். வைகுண்டம் முதலான முக்த தாமங்களில், மிகவும் அழகான ரூபங்களைக் கொண்டு, எப்போதும், முக்தர்களுக்கு தரிசன பாக்கியத்தை கொடுப்பதாலேயே, முக்தர்கள் மிகவும் ஆனந்தத்தைப் பெறுகிறார்கள் என்று சொல்லப்படுகிறது. ஆனந்தரூபனான, இந்திராரமணனின் சுந்தர ரூபத்தை காணவேண்டு மென்று விரும்பியே, ஞானிகள் பிரார்த்தனை செய்கிறார்கள்.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**** இந்தப் பகுதி இத்துடன் முடிந்தது ****

| தொடர் | .ஹரிகதாம்ருத ஸ்லோக அர்த்தங்கள் |
|---|---|
| | கருணா சந்தி - தொடர்ச்சி |

**மலகி3 பரமாத3ரதி3 பாட3லு**
**குளிது1 கேளுவ குளிது1 பாட3லு**
**நிலுவ நிந்தரெ நலிவ நலித3ரெ ஒலிவெ நிமகெ3ம்ப3 |**
**சுலப4னோ ஹரி தன்னவரனர**
**க4ளிகெ3 பிட்டக3லனோ ரமாத4வன**
**ஒலிசலரியதெ3 பாமரரு ப3ளலுவரு ப4வதொ3ளகெ3 ||5**

பகவந்தனின் காருண்யத்தை விளக்கும் ஜகன்னாததாசர், ஒருவன் எந்தவொரு நிலையில் இருந்தாலும், மிகவும் பக்தி மரியாதையுடன், விரக்தனாக, பகவந்தனை ஆராதனை செய்தால், பகவந்தன் அவனுக்கு கண்டிப்பாக தரிசனம் அளிக்கிறான் என்கிறார். அதாவது,

* அவரவர்களின் யோக்யதைக்கேற்ப,
* அவரவர்களின் பாப புண்ணியங்களுக்கேற்ப,

* வாயுதேவரின் ப்ரேரணைக்கேற்ப,
* பகவந்தனின் விருப்பப்படி
பக்தி, மரியாதையுடன் ஆராதனை செய்ய வேண்டும் என்கிறார்.

ஆக, எந்தவொரு நிலையிலும், எப்படி வேண்டுமானாலும் பகவந்தனை துதிக்கலாம் என்ற அர்த்தம் வந்தாலும், 'ஆதரதி' என்னும் சொல் இங்கு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது.

படுத்தவாறு பக்தியுடன் பகவந்தனை வணங்கியவர் - பீஷ்மாசார்யர். கௌரவர்களின் சகவாசத்தால் வந்த பாவங்களைப் போக்கும் வகையில், கூர்மையான அஸ்திரங்களின் மேல் படுத்து, தனக்குள் இருந்த பாவம் நிறைந்த ரத்த, மாமிசங்களை வெளியே எறிந்தார். அப்படியான பக்தி தேவை. இப்படியாக பாவங்களை வெளியேற்றி, பக்தியுடன் வழிபட்டால், பகவந்தனின் அருள் கிடைக்கும் என்பதையே இங்கு உதாரணம் கொடுக்கிறார் தாசர்.

'தனுவ தண்டிஸி தினதினதி' என்று ஹரிகதாம்ருதசாரத்தில் வருவதைப்போல, பீஷ்மாசார்யர் செய்து வணங்கியதும், ஸ்ரீகிருஷ்ணன் தரிசனம் அளித்தான். அப்போதும் அவர் ஸ்ரீகிருஷ்ணனை - 'கிருஷ்ணா, நான் எவ்வளவோ பாவம் செய்திருக்கிறேன். அதற்கான பிராயச்சித்தமாகவே இப்போது இந்த முள்படுக்கையில் படுத்திருக்கிறேன். எனக்கு நீ அருள்வாயாக' என்று வேண்டினார்.

'ரோகோபத்ரவகளெ உக்ர தபஸ்ஸு சாதனக்கெ பஹெ காணெ எனபஹுதே' என்றார் ஸ்ரீவிஜயதாசர். சாதனைக்கு வழி தெரியவில்லை என்று சொல்லாதே, கெட்ட புத்தியால், ஹரி சர்வோத்தமத்வத்தை அறியாமல் காலத்தைக் கழித்தேனே, அந்த பாவத்தின் பிராயச்சித்தத்திற்காக, இப்போது ஸ்ரீஹரியை 'ஆதரதி' வணங்கு.

அடுத்து 'குளிது பாடலு நிலுவ'. இதற்கு உதாரணம் : ஸ்ரீமன் மத்வாசார்யர். ஹஸிக்யாளு கோவிந்த தாசர் இவ்வாறு சொல்கிறார். 'ஈதனு பேளித மாதுகளனு ஹரி கூது கேள்வானெம்போது கரே'. பதரிகாஸ்ரமத்தில், கடும் குளிரில், அலகனந்தா தீரத்தில், கௌபீனதாரியாக, காஷ்ட மௌனவிரதத்தில் இருந்து தவம் புரிந்த

மகானுபாவர் ஸ்ரீமத்வர். அவரது வேண்டுதலுக்கு இரங்கி, வந்து நின்றான் ஸ்ரீகிருஷ்ணன்.

அடுத்து, 'நிந்தரே நலிவ'. இதற்கு உதாரணம் : த்ருவ மகாராஜன். ஆறு மாத காலங்கள், காட்டில், கொடிய விலங்குகளுக்கு நடுவில், உணவு தண்ணீர் இல்லாமல், கால் கட்டைவிரலில் நின்று, ஸ்ரீஹரியைக் குறித்து கடுந்தவம் புரிந்தான். அவனின் தவத்திற்கு மெச்சிய ஸ்ரீஹரி, ஓடோடி வந்தான் என்பதை பார்க்கிறோம்.

அடுத்து, 'நலிதரே ஒலிவெ நிமகெம்பா'. இதற்கு உதாரணம் : நாரதர். மூன்று உலகங்களிலும் சஞ்சரித்து, பலருக்கும் பக்தியை ஊட்டி, தொடர்ந்து ஹரி நாமஸ்மரணம் செய்தவாறு இருந்தார். இவரே புரந்தரதாசராக அவதாரம் செய்தபோது, வைராக்யசாலியாக, கோடானுகோடி செல்வத்தை தியாகம் செய்து, ஸ்ரீவியாசராஜரிடம் தீக்ஷை பெற்று, கால்களில் சலங்கை அணிந்து, ஆடிப்பாடினார். அப்போது அவருக்கு தரிசனம் அளித்தான் ஸ்ரீஹரி.

'ஸுலபனோ..' - இங்கு தன்னவர என்பதற்கு பொருள் ஹனுமந்ததேவர் என்று சொல்லலாம். ஹனும, பீம, மத்வ அவதாரங்களில் ஹரி சர்வோத்தமத்வத்தை எடுத்து நிறுவியவர். ஸ்ரீஹரியே சர்வோத்தமன். நாம் அவனது தாசர்கள் என்பதை நிலைநிறுத்தி, மற்ற அனைத்து சித்தாந்தங்களையும் வென்றவர். இப்படி பக்தி செய்பவர்களை விட்டு ஸ்ரீஹரி ஒரு கணமும் விட்டு விலகமாட்டான் என்கிறார் தாசர்.

இப்படி உதாரணம் கொடுத்த மகானுபாவர்களைப் போல பக்தி செய்யாமல், தற்காலிக சுகங்களில் ஈடுபட்டு, போகங்களை அனுபவித்தவாறு இருக்கும் பாமரர்கள், அதன் பலனாக, திரும்பத்திரும்ப இதே சம்சாரத்தில் விழுந்து துன்பப்படுவார்கள் என்று சொல்லி இந்த பத்யத்தை முடிக்கிறார் ஸ்ரீஜகன்னாததாசர்.

**

ஆராதனை

## ஸ்ரீதந்தெமுத்துமோகனதாசர்

**காலம் 1830 - 1898**

தொட்டபெல்லாபுர ஸ்ரீ ராகவேந்திரதாசர்
(முத்துமோகனவிட்டலதாசர்)

மத்வபதி திவ்ய பாதாப்ஜ மதுபம் வித்வதார்ய ஸ்ரீவரவிட்டல கரஜம் |
மத்குரு சத்ஹயா வாசம் முத்துமோகன தாசவர்யம் பஜே ||

தாசர் பிறந்தது பெங்களூரைச் சேர்ந்த தொட்டபெல்லாபுர் ஊரில். சுமார் 1830 ஆண்டில், ராகண்ண அல்லது ராகவேந்திரர் பிறந்தார். சாதாரணமான ஒரு பள்ளியில் சாஸ்திரங்களின் அறிமுகம் ஆயிற்று. கீர்த்தனைகளை ராகத்துடன் பாடும் வல்லமை பெற்றிருந்தார் எனத் தெரிய வருகிறது.

இவர் சிறுவனாக இருந்தபோது இவரது பெற்றோர் இறந்துவிடு கின்றனர். இவருக்கு 4 அல்லது 5 வயது குறைவான வெங்கடப்பா என்னும் தம்பி இருந்தார். ராகண்ணர் பரம வைராக்கியத்தைக் கொண்டிருந்தார். தேஷ்பாண்டே வம்சத்தைச் சேர்ந்த நரசம்மா மற்றும் நரசிங்கராயரின் மகளான அக்கம்மா என்பவருடன் திருமணம் நடந்தது. அக்கம்மா பிறவியிலேயே கண்பார்வை அற்றவர். குடும்பச் சொத்தின் உதவியுடன் வாழ்க்கை நடந்து வந்தது. திருமணம் ஆனாலும் பிரம்மச்சரியம் கடைப்பிடித்ததால், தாசரின் வம்சம் வளர வில்லை. அண்ணன் மற்றும் அண்ணிக்கு சேவை செய்தே வெங்கடப்பனும் பிரம்மச்சாரியாகவே வாழ்க்கையைக் கழித்தார்.

தாசதீட்சை பெறுவதற்கு முன்னும் பின்னும், தன் மனைவியை உறவினர்களிடம் விட்டுவிட்டு, தாசர் தன் தம்பியுடன் பல முறை காசி மற்றும் இந்தியாவில் பல தீர்த்த க்ஷேத்திரங்களுக்கு பயணம் மேற்கொண்டு வந்தார். நான்காவது முறை காசிக்கு சென்றிருந்த போது, தாசர், ஸ்ரீவிஸ்வநாதரின் ஆலயத்திலிருந்து சிவலிங்கம் ஒன்றை கொண்டு வந்திருந்தார்.

ராகப்பனுக்கு சுமார் 29-30 வயதாகியிருந்தபோது, ஸ்ரீவிஜயதாசரின் ஆராதனைக்காக தம்பியுடன் சிப்பகிரி போயிருந்தார். அங்கு, வேணு கோபாலவிட்டலதாசரின் பரம்பரையில் வந்த ஸ்ரீநிதிவிட்டலதாசரின் ஆசியைப் பெற்றவரான ஸ்ரீவரவிட்டலா என்னும் அங்கிதத்தைப்

பெற்றவரான சௌதி ராமசந்திரர் என்பவரின் அறிமுகம் கிடைத்தது. ஸ்ரீவரவிட்டலர் மூலமாக 'முத்துமோகனவிட்டலா' என்னும் அங்கிதம் ஆயிற்று. பண்டரிபுரம் மற்றும் காசி யாத்திரையை முடித்துக் கொண்டு, தாசர் தொட்டபெல்லாபுரத்திற்கு திரும்பி வந்தார்.

ஸ்ரீதாசர் மிகவும் வைராக்கியசாலி. சன்யாசிகளைப் போலவே கடினமான அனுஷ்டானங்கள், சமையலில் மடி ஆகியவற்றை பின்பற்றி வந்தார். பூஜை சமயத்தில் சங்கு, துத்தூரி, நகாரி ஆகிய வாத்தியங்களை வாசித்து வந்தார். மாலை வேளைகளில், தம்பூரி மீட்டியவாறு பஜனையில் பாடல்களைப் பாடி வந்தார். தாசர் வாசித்து வந்த வாத்தியங்கள் தற்போது தொட்டபெல்லாபுரத்தில் உள்ள விஜய விட்டல ஆலயத்தில் இருப்பதாக தெரிய வருகிறது. அவரது தம்பூரி மட்டும், மைசூரில் ஸ்ரீ குருகோவிந்தவிட்டலதாசர் நிர்மாணித்த ஸ்ரீவிட்டலனின் ஆலயத்தில் இருக்கிறது. எல்லா முக்கிய ஆராதனை களையும் தாசர் வெகு விமரிசையாக கொண்டாடி வந்தார்.

ஸ்ரீதாசர், மந்திராலய மகான் ஸ்ரீராகவேந்திரரின் அம்சம் என்றும் சொல்கின்றனர்.

பயணம் செய்யும்போது, தாசர், கிருஷ்னாஞ்சம் தரித்த சட்டையை அணிந்திருந்தார். தலையில் கிருஷ்ணாஞ்சத்தாலான குல்லாய் அணிந்திருந்தார். அங்கவஸ்திரத்தை உடலைச் சுற்றி, அதில் தம்பூரியை பிடித்தவாறு வந்தார். வயதான காலத்தில், ஒரு சிறிய குதிரையில் ஏறி அமர்ந்து, அதில் பயணம் மேற்கொண்டார்.

ஸ்ரீதாசருக்கு பல சிஷ்யர்கள் இருந்தாலும், தற்போது வெறும் 11 பேரின் விவரங்கள் மட்டுமே தெரிய வந்துள்ளது. அவர்களில் மிகவும் பிரபலமானவர், தந்தேமுத்துமோகனவிட்டல அங்கிதத்தைப் பெற்றவ ரான தேவராயனதுர்காவின் பரமப்ரிய சுப்பராயதாசர். குலம் கோத்திர ம் பார்க்காமல், 1000 பேருக்கு தாசதீட்சை வழங்கவேண்டுமென்று பரமப்ரியரிடம் ஸ்ரீதாசர் கேட்டுக் கொண்டதாக தெரிய வருகிறது.

தொட்டபெல்லாபுரத்தில் ஸ்ரீவிஜயவிட்டலனின் ஆலயம் எழுப்ப வேண்டுமென்று ஸ்ரீதாசரின் கனவில் தோன்றியதால், அதன்படியே ஆலயம் கட்ட திட்டமிடலானார். சுமார் 1888ம் ஆண்டு - தம் சிஷ்யர்கள், ஊரினர் மற்றும் கிராம அதிகாரிகளின் உதவியுடன், தொட்டபெல்லாபுரம் குச்சப்பன் பேட்டையில், தம் திருமணத்திற்கு பரிசாக வந்த இடத்திலேயே ஸ்ரீவிஜயவிட்டலனின் ஆலயத்தைக்

கட்டி, தாம் காசியிலிருந்து கொண்டு வந்திருந்த சிவலிங்கத்தை பிரதிஷ்டை செய்தார் ஸ்ரீதாசர்.

ஸ்ரீதாசர் தன் யாத்திரைகளின்போது, ஸ்ரீ குருவிஜயவிட்டலா என்ற அங்கிதத்தைப் பெற்றவரான மொதலகல்லு சேஷதாசரை அவரது முதிய வயதில் ஒன்றிரண்டு முறை சந்தித்து, அவருக்கு சேவை செய்ததாக தெரிய வருகிறது.

விளம்பி ஆண்டு கார்த்திக கிருஷ்ண சதுர்தசி ஞாயிற்றுக்கிழமை - 13/11/1898 அவரது சிஷ்யர்கள் ஜெயஜெய என்று சொல்லிக் கொண்டிருக்கும்போது, ஸ்ரீதாசர் உயிர்த்தியாகம் செய்தார். ஸ்ரீதாசர் கட்டிய விஜயவிட்டலனின் ஆலயத்தில் இன்றும் அவர் ஒரு அம்சமாக இருந்து வருகிறார் என்று நம்பப்படுகிறது.

ஸ்ரீதாசர் பற்பல பாடல்களை இயற்றியிருப்பதற்கு சாத்தியம் இருந்தாலும், தற்போது வெறும் 16 பாடல்கள் மற்றும் 2 அங்கித பாடல்கள் மட்டுமே கிடைத்திருக்கின்றன. இப்படியாக ஸ்ரீதாசர் மைசூரில் நிறுவிய தாச பரம்பரை, அவரது சிஷ்யர்களான, தந்தே முத்துமோகனவிட்டலதாசர், பாகேபல்லி சேஷதாசர், உரகாத்ரி விட்டல தாசர், ரமாகாந்தவிட்டலதாசர், குருகோவிந்தவிட்டலதாசர், தந்தே வேங்கடவிட்டலதாசர் ஆகியவர்களால் இன்றும் வளர்ந்து வருகிறது.

இதுவரை கிடைத்த தகவல்களின்படி, ஸ்ரீதாசரின் சிஷ்யர்களின் பெயர்கள் மற்றும் அங்கித நாமங்கள் பின்வருமாறு உள்ளன.

1. சுப்பராயதாசர் (அசிந்த்யத்புதவிட்டல)
2. திப்பதாசர் / கிருஷ்ணதாசர் (ஹயக்ரீவவிட்டல)
3. பாலகிருஷ்ணதாசர் (பாலகிருஷ்ணவிட்டல)
4. ராமதாசர் (கரிவரதவிட்டல)
5. ராகவேந்திரதாசர் (கருணாகரவிட்டல)
6. வேங்கடராயர் (ஞானதாயகவிட்டல)
7. சுப்பண்ணதாசர் (பரமபாவனவிட்டல)
8. பாலாஜிதாசர் (வாகீசவிட்டல)
9. பரமப்ரிய சுப்பராயதாசர் (தந்தேமுத்துமோகனவிட்டல)
10. குண்டுராயதாசர் (வாசுகிசயனவிட்டல)
11. சேஷதாசர் (வரவிட்டல) ***

தொடர்

## கன்னட கிரந்தங்கள் அறிமுகம்

## நாராயண பஞ்சர

ஸ்ரீ பிரஸன்ன வேங்கடதாஸர் 600க்கும் மேற்பட்ட கீர்த்தனைகள், 20க்கும் மேற்பட்ட உகாபோகங்கள் 9க்கும் மேற்பட்ட ஸூளாதிகள், கோலுப் பாட்டு போன்றவற்றை ரசனை செய்த மஹனீயர். சிறுவயதிலேயே தாய் தந்தையரை இழந்து, உணவிற்கே கஷ்டப்பட்டவர். ஸஜ்ஜனர்களின் சகவாஸத்தால் திருமலை ஸ்ரீநிவாசனின் தரிசனம் கண்டு, வாழ்வில் திருப்புமுனை கண்டு பகவானே அவருடைய ஸ்வரூப யோக்கியதையைக் கண்டு அவருக்கு தரிஸனம் அளித்து, அங்கிதம் அளிக்கும் விதமாக அவரின் நாவில், "பிரஸன்ன வேங்கட" என்னும் முத்திரையை எழுதி அனுக்கிரகம் செய்துள்ளான். திருமலையில் பகவானே அர்ச்சகர்களுக்கு சூசனை அளித்து, தாஸருக்கு பூஜா விக்கிரகங்களை அருளியுள்ளான். தாஸர் அருளிய 'ஸத்யபாமா விலாஸ', 'பேத முக்தாவளி' 'நாரத கொரவஞ்சி' 'ஸ்ரீ கிருஷ்ண பாரிஜாத', ''கோபி கீதம்' போன்ற படைப்புகளின் வரிசையில், 'நாராயண பஞ்ஜரம்' என்பது ஸ்ரீமன் நாராயணனின் மஹிமைகளைக் கூறி பிரார்த்தனை செய்யும் விதத்தில் கன்னடத்தில் அமைந்த கிரந்தமாகும்.

நாராயண பஞ்ஜரம் என்பது 41 பத்யங்களில் ஸ்ரீமன் நாராயணனைத் துதிக்கும் கன்னட கிரந்தம் ஆகும். தாஸர் பகவானைத் துதிக்கும் பல்லவியுடன், அனேக அவதாரங்களை, ரூபங்களை, மஹிமைகளை வர்ணித்து, விஸேஷமாக ஸ்ரீ ராமாவதாரம் மற்றும் ஸ்ரீ கிருஷ்ணாவதார லீலைகளைப் பற்றி விஸ்தாரமாகக் கூறி திருமலை ஸ்ரீநிவாஸனின் ரூப ஸௌந்தர்யம், மஹிமைகளை ப்ரத்யேகமாக சில பத்யங்களில் எடுத்துக்கூறி பகவானின் மஹிமைகளை உரைப்பதுடன், நமது குறைகளையும், கஷ்டங்களையும் பகவானிடம் முறையிட்டு உருக்கமாக பிரார்த்தனை செய்யும் படியாக, 41 பத்யங்களில் இந்த கிரந்தத்தை ரசனை செய்துள்ளார்.

பல்லவியில் நாராயணனைத் துதித்து, முன்பு நாரதர் நாராயண மந்திரத்தை உச்சரித்தவாறு, நரகத்தில் இருந்த மக்களை அவர்களின் துக்கத்தில் இருந்து காப்பாற்றி அருளியதை குறிக்கும் விதமாக "நாராயணாய நமோ நாராயணாய நமோ நாராயணாய நமோ நாராயண ! நாரதர முகதிந்த நரகஸ்தரெப்பிஸிதெ நாராயணாய

நமோ நாராயணா"!! எனப் பல்லவியை அமைத்து ஒவ்வொரு பத்யத்திலும் "நாராயணாய நமோ நாராயண" என மீண்டும் மீண்டும் தாஸர் துதிக்கிறார்.

1 முதல் 20 வரையிலான பத்யங்களிலே, தாஸர் பகவானின் அனேக அவதாரங்கள், ரூபங்கள் மற்றும் மஹிமைகளைக் குறிப்பிடும் வகையில், பாகவதம், ராமாயணம், மஹாபாரதம் முதலான ஸாஸ்திர கிரந்தங்களில் உள்ள கருத்துக்களின் சாரத்தை இங்கு குறிப்பிட்டுள்ளார்.

1 முதல் 6 வரையிலான பத்யங்களில், பகவான் முதலையின் வாயில் அகப்பட்ட கஜேந்திரனைக் காத்த விதத்தையும், பக்த பிரகலாதனின் பக்திக்கு மெச்சி கம்பத்திலிருந்து வெளிப்பட்டு ஹிரண்யகசிபுவை வதம் செய்து ரக்ஷித்ததையும், வ்ருகாஸுரனுக்கு அளித்த வரத்தினால் தானே சோதனைக்கு உள்ளான ருத்ர பகவானைக் காத்த விதத்தையும், திதி த்ரய விரதத்தினை மேற்கொண்ட அம்பரீஷ ராஜனின் பெருமையை உலகிற்கு உணர்த்திய விதத்தையும், மச்சாவதாரத்தில் ஸத்யவ்ரத ராஜனுக்கு தத்வோபதேஸம் செய்ததையும், வேதங்களை அபகரித்த ஹயக்ரீவ என்னும் தைத்யனைக் கொன்று, பிரஹ்ம தேவருக்கு அனுக்ரஹம் புரிந்த ஹயக்ரீவ அவதாரத்தையும், தேவேந்திரன் அர்ஜுனனாகி அவதரித்த போது யுத்தத்தில் ஸ்ரீகிருஷ்ணனாக கீதையை உபதேஸம் செய்து காத்ததையும், அதே இந்திரனுடைய பதவிக்கு ஆபத்து வந்தபோது, பலிராஜனிடத்தில் வாமனனாகி வந்து 3 அடி நிலம் கேட்டு, அவனை ஆட்கொண்டு, இந்திரனுக்கு சுவர்கத்தின் ஆட்சியை மீண்டும் பெற்றுத் தந்ததையும், துருவராஜனின் பக்திக்கு இரங்கி அவனை துருவ மண்டலத்தின் அதிபதியாக அமர்த்தி அனுக்ரஹம் புரிந்ததையும், பாவங்கள் பல புரிந்த அஜாமிளனின் வினைகளைப் போக்கி, அவன் அந்திம காலத்தில் செய்த நாராயண நாம ஸ்மரணைக்கு ஸத்கதி அளித்ததையும், மஹிதாஸ என்னும் நாமத்தில் அவதரித்து, தாய்க்கு தத்துவ உபதேஸங்கள் புரிந்ததையும், ஸர்வோத்தமன் யார் என்பதைச் சோதிக்கச் சென்ற பிருகு மகரிஷி காலால் எட்டி உதைத்த போதும், கருணை கூர்ந்து அவருக்கு அனுக்ரஹம் புரிந்ததையும் வர்ணித்து, அத்தகைய பகவத் பக்தர்களுக்கு அருள்புரிந்த நாராயணனைத் துதிக்கிறார் தாஸர்.

7 முதல் 11 வரையிலான பத்யங்களில் ராமாயணத்தில் உள்ள ராமாவதார மஹிமைகளைக் கூறும் விதமாக கௌதம மகரிஷியின் சாபத்தால் கல்லாகிக் கிடந்த அகலிகைக்கு அனுக்கிரஹம் புரிந்து சாபவிமோசனம் அளித்ததையும், விஸ்வாமித்ர ரிஷியின் யாகத்தைக் காத்து, சிவதனுசுவை பங்கம் செய்து சீதையை மணந்ததையும், சுக்ரீவனுக்கு அபயம் அளித்து உபயம் புரிந்து, அவனின் பயத்தை பரிஹாரம் செய்ததையும், ராவணன் தம்பி விபீஷணன் சரணாகதி அடைந்தபோது, அவனுக்கு அடைக்கலம் அளித்து இலங்கையின் அதிபதியாக்கியதையும், ராவணனனைக் கொன்று அனைத்து தேவதைகளின் சங்கடங்களைப் போக்கியதையும்,14 ஆண்டுகள் தான் திரும்பி வரும் வரை தபோ வாழ்க்கை மேற்கொண்டு வந்த பரதனுக்கு வாக்களித்தபடி வனவாஸம் முடிந்தவுடனேயே சரியான நேரத்தில் அனுமனை அனுப்பி அக்னிப் பிரவேஸம் செய்வதிலிருந்து அவனைக் காத்தருளி, அரசாட்சி ஏற்று பல ஆண்டுகள் ஆட்சி புரிந்து, தேவதைகளின் பிரார்த்தனைக்கு இணங்க பரந்தாமத்திற்கு எழுந்தருளி தேவதைகளுக்கு மகிழ்ச்சி அளித்ததையும் 'ஷரதி ராவணனரிது ஸூரர சங்கட ஹரிதெ" முதலான பத்யங்களில் அழகாக வர்ணித்துள்ளார் தாஸர்.

12 முதல் 20 வரையிலான பத்யங்களில் பாகவதம், மஹாபாரதம், ஹரிவம்ஸம் முதலான கிரந்தங்களில் வர்ணிக்கப்பட்டுள்ள ஸ்ரீ கிருஷ்ணாவதார லீலைகளை வர்ணிக்கும் விதமாக, காட்டுத் தீயை பாணம் செய்து கோபாலர்களைக் காத்ததையும், காளிங்கன் யமுனை நீரில் விஷம் கலந்தபோது, அவனின் தலைமேல் குதித்து நாட்டியமாடி சிக்ஷையளித்தபோது, காளிங்கனின் பத்னியர்களான நாக கன்னியர்களின் பிரார்த்தனைக்கு இணங்கி அனுக்ரஹம் புரிந்ததையும், கோவர்த்தன மலையைத் தூக்கி இந்திரன் 7 நாட்கள் விடாமல் பெய்வித்த மழை வெள்ளத்திலிருந்து கோபாலர்களைக் காத்ததையும், பிராமண ஸ்த்ரீயர்கள் பக்தியுடன் அளித்த அன்னத்தைத் தானும் உண்டு, கோபாலர்களுக்கும் கொடுத்து, அவர்களுக்கு அருளியதையும், கோபிகா ஸ்தீரியர்களுடன் ராஸக்ரீடை புரிந்ததையும், வெண்ணையைத் திருடி உண்டு லீலைகள் புரிந்ததையும், கம்ஸனின் ஆணைக்கிணங்க மதுராவிற்கு அழைத்துச் செல்ல வந்த அக்ரூரருக்கு அனுக்ரஹம் புரிந்ததையும், கம்ஸனை அழித்து தாய் தந்தையரின் பயத்தினைப் போக்கி விடுதலை அளித்ததையும், நரகாசுரனை அழித்து அவன் கவர்ந்து சென்ற அதிதிதேவியின் குண்டலங்களை மீட்டுத் தந்ததையும், நரகாசுரனின்

மகனான பகதத்தனுக்கு அபயம் அளித்து அவரை அரசனாக்கியதையும், உலகத்தில் உள்ள அதிபதிகளுக்கெல்லாம் அதிபதியாக உள்ளவனும், பைஷ்மீ (ருக்மணி) மற்றும் சத்யபாமாவின் பதியுமானவனும், லக்ஷ்மி, பிரம்மா, ருத்ராதி தேவதைகளினால் பூஜிக்கப்படுபவனும், சாந்தீபனி குருவிற்கு அவரது புத்ரனை மீட்டுத்தந்து ப்ரியமானவனாய் விளங்கியவனும், பாண்டவர்களின் ராஜஸூய யாகத்தில் அக்ர பூஜையை ஸ்வீகாரம் புரிந்தவனும், திரௌபதியின் மானத்தைக் காத்து ரக்ஷித்தவனும், பூமிக்கு பாரமாக இருந்த பௌண்ட்ரக வாஸுதேவன், ஷ்ருகால வாஸுதேவன், துரியோதனன் முதலான கௌரவர்கள் போன்ற துஷ்டர்களை அழித்து பூமியின் பாரத்தைக் குறைத்தவனும், அபிமன்யுவின் மகனான பரிஷித்ராஜனை தாயின் கர்பத்தில் இருந்த போதே, கொல்லத் துணிந்த, அஸ்வத்தாமாசாரியாரின் பிரம்மாஸ்திரத்தில் இருந்து காத்தவனும் பாண்டவர்களுக்கு அபயம் அளித்து அவர்களின் சந்ததியை வளர்த்தவனுமான ஸ்ரீ கிருஷ்ண ரூபி நாராயணனுக்கு நமஸ்காரம் என்பதாக "பௌண்ட்ரக ஷ்ருகால கௌரவ பூமிபாரஹர" போன்ற பத்யங்களினால் வர்ணித்து தாஸர் துதிக்கிறார்.

21 முதல் 27 வரையிலான பத்யங்களில், வேங்கடாசலத்தில் உள்ள ஸ்ரீநிவாஸனைப் பற்றி வர்ணிக்கிறார் தாஸர். கருடன், கந்தர்வர்கள், கின்னரர்கள் செய்யும் ஸ்தோத்திரங்களினால் மகிழ்ந்து, லக்ஷ்மியுடன் கூடி வேங்கடாசலத்தில் இருப்பவனும், சங்கு, சக்கரம், கதை, தாமரை, ஸ்ரீவத்ஸம் ஆகியவற்றை தரித்தவனும், எண்ணற்ற ஆபரணங்களினால் அலங்காரம் செய்யப்பட்டவனும், அனைத்தையும் படைப்பவனும், மச்சாதி அவதாரங்களை எடுத்தவனும், ஸ்வாமி புஷ்கரணி தீர்த்தத்தினால் அபிஷேகம் செய்து கொள்பவனும், வேங்கடகிரியில் பூவராக ஸ்வாமி ரூபத்தில் பூவைகுண்டத்திற்கு ஸ்வாமியாகி, மொத்த உலகிற்குமே ஸ்வாமியாக இருப்பவனும், 6 கோடி தீர்த்தங்களைக் கொண்ட பாதங்களை உடையவனும், ஸ்ரீதேவி பூதேவி சமேதனாய் 6 கமலங்கள் உள்ள இடத்தில் வசிப்பவனும், ஞானாதி குண ஸமுத்திரத்திரங்களினால் நிரம்பியவனும், பக்தர்களை காப்பவனும், பிறப்பு இறப்பிலிருந்து விடுபட்டவனும், பக்தவத்ஸலனும், கருணைக் கடலாக உருவெடுத்தவனும், பூலோக வைகுண்டம் எனப்படும் வேங்கடாசலத்தில் ஸ்ரீநிவாஸன் எனும் நாமத்தில் நிலைத்திருப்பவனும், ஞானத்தை அருள்பவனும், ஞான

பூர்ணனுமான ஸ்ரீமன் நாராயணனைத் துதிப்பதாக "வஸுதே வைகுண்ட மந்திரவாஸ ஸ்ரீநிவாஸ" முதலான பத்யங்களினால் வர்ணிக்கிறார் தாஸர்.

28 முதல் 40 வரையிலான பத்யங்களில் பகவானின் மஹிமைகளை போற்றித் துதித்து நமது கஷ்டங்களையெல்லாம் உருக்கமாக முறையிட்டு வேண்டும் விதத்தில் தாஸர் பிரார்த்தனை செய்கிறார். அனாதி காலத்தில் இருந்து யாராலும் அறியப்பட முடியாதவனும், எல்லோரைக் காட்டிலும் உத்தமனானவனும், ஆதி,மத்யம், அந்த்யம் இல்லாதவனுமாகிய பகவானிடத்தில், நம்மைக் காப்பாற்றும் படியும், அவன் புகழ்பாடி வாழும்படி செய்யவும், ஞானிகளின் சகவாசத்தை அருளும்படி வேண்டித் துதிக்கிறார் தாஸர் .பிரம்ம, ருத்ராதி தேவதைகளையும் ரக்ஷிக்கும் பகவானிடத்தில், ஸம்ஸாரத்தில் மீண்டும் மீண்டும் வந்து நொந்திருக்கும் தம்மையும் ரக்ஷிக்கும்படி வேண்டுகிறார் தாஸர். தாம் நீதி ஸாஸ்திரங்களை அறிந்திராவிடினும், தாயாகி தந்தையாகி, உற்றார் உறவினராகி அனைத்துமாகி இருக்கும் பகவானின் நாமமே கதி, அதுவே அனைத்தும் இருப்பதாகக் கூறி வேண்டுகிறார் தாஸர். மனித தேகமோ மனைவி, மக்களோ எதுவும் நிலையில்லாத நிலையில் ஜீவனோடு வருவது நாராயணனின் நாமமே எனவும், அப்பேற்பட்ட பக்தர்களை ரக்ஷிக்கும் தேவன் தம்முடைய குற்றங்களை நோக்காமல் காக்க வேண்டும் எனவும், பகவானின் மூர்த்தியைக் கண்டு அவனே பிம்ப ரூபி எனக் கொண்டாடுவதாகவும், தம்மை விரஜா நதியில் மூழ்கடித்து, லிங்க தேகத்தை பங்கமாக்கி, தம்மை அவனுடையவனாக எண்ணி,பகவத் பக்தர்கள் கையில் தன்னை ஒப்படைக்கும்படி வேண்டுகிறார் தாஸர். தண்ணீரில், நிலத்தில், காட்டில் நம்மைக் காக்கும் பொருட்டு வராஹனாகவும், வாமனனாகவும், நரஸிம்மனாகவும், கேஸவனாகவும் உள்ள ஸ்வாமியை, தாம் நற்குலத்தில் பிறந்தும், நல்ல வழியை எதுவென்று அறியவில்லை எனவும் சத்காரியங்களைச் செய்யவில்லை எனவும் கூறித் தம்மை காக்கும்படி மீண்டும் மீண்டும் வேண்டுகிறார் தாஸர். ஸ்ரீ மத்வருக்கு ஸ்வாமியானவனும், ப்ரியமானவனும், மத்வமத பரிபாலனும், ஸ்ரீ மத்வருக்கு மஹனீயர்களால் வணங்கப்படுபவனும், ஸ்ரீ மத்வரால் அர்ச்சிக்கப்படும் பாத கமலங்களையுடையவனுமான ஸ்ரீமன் நாராயணனுக்கு நமஸ்காரம் என்பதை"மத்வேஷ மத்வப்ரிய மத்வமத பரிபாலன நாராயணாய நமோ நாராயணா மத்வ குரு

ஸ்துத்ய மத்வார்ச்சித பதாப்ஜஹரி நாராயணாய நமோ நாராயண" போன்ற பத்யங்களால் போற்றுகிறார் தாஸர்.

முடிவில் 41 வது பத்யத்தில் தான் ஏதும் அறியாதவன், பகவானே பரகதி எனவும், அவனிடத்தில் தனது ப்ராணனையே அர்ப்பித்து இருப்பதாகக் கூறி, பிரஸன்ன வேங்கட கிருஷ்ணனான நாராயணனைத் துதிப்பதாக""ப்ராண நினகர்ப்பிஸிதெ பிரஸன்ன வேங்கட கிருஷ்ண நாராயணாய நமோ நாராயணா" என்ற பதத்தைக் கொண்டு தாஸர் நிறைவு செய்கிறார்.

இத்தகைய உயரிய கிரந்தத்தை அனுதினமும் விஸேஷ அர்த்தங்களைத் தெரிந்து கொண்டு பாராயணம் செய்து பிரஸன்ன வேங்கட தாஸரின் அந்தர்யாமியான ஸ்ரீஹரியின் அனுகிரஹத்திற்கு பாத்திரராவோமாக!. ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து!

**** திரு.ட.லட்சுமிபதிராஜா, சென்னை**

தொடர்

## கன்னட தந்த்ரசாரம் - ஸ்ரீவரதேந்திர தீர்த்தர்

**உரை: திரு.குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்**

வாதே விஜயஷீலாய வரதாய வரார்தினாம்
வதான்ய ஜனஸிம்ஹாய வரதேந்த்ராய தே நம: ||

வாதத்தின் வெற்றிவாகை சூடுபவரும்
வரம் வேண்டுவோர்க்கு வரமளிப்பவரும்
கொடையாளிகளின் கூட்டத்தில் சிம்மம்போல கம்பீரமானவருமான
குரு வரதேந்திர ஸ்வாமியே, உமக்கு எனது நமஸ்காரங்கள்.

ஸ்ரீவரதேந்திர தீர்த்தர் (1761-1785) ஒரு பெரிய யோகி. ஸ்ரீராகவேந்திர குருராயர் (1623-1671) அமர்ந்த குருபீடத்தில், அவருக்குப் பிறகு ஏழாவதாக வந்தவர். ஸ்ரீகுருராகவேந்திரரே இவரைப் பற்றி முன் கூட்டியே சொல்லியிருக்கிறார். 'ஸப்தமோ மத் ஸமோ யோகி வரதேந்திரோ பவிஷ்யதி' என்று, 'எனக்குப் பிறகு ஏழாவதாக பீடத்திற்கு வருபவர், எனக்கு இணையாக யோகி வரதேந்திரர் என்ற

பெயரில் விளங்கப் போகிறார்' என்று அவர் கூறியது, 100 ஆண்டுகளுக்குப் பிறகு அப்படியே பலித்தது.

ஸ்ரீமன் மத்வாசார்யரின் மூலமஹா சம்ஸ்தானத்தில், ஸ்ரீராகவேந்திரர் கோலோச்சி, சரியாக 350 ஆண்டுகளுக்கு முன், 1671ம் ஆண்டில் மந்திராலயத்தில், ஸ-சரீர பிருந்தாவனத்தில் பிரவேசம் செய்து, இன்றும் ஜீவ சமாதியில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்.

ராயருக்குப் பிறகு, வரிசையாக ஸ்ரீயோகீந்திர தீர்த்தர், ஸ்ரீசுரீந்திர தீர்த்தர், ஸ்ரீசுமதீந்திர தீர்த்தர், ஸ்ரீஉபேந்திர தீர்த்தர், ஸ்ரீவாதீந்திர தீர்த்தர், ஸ்ரீவசுதேந்திர தீர்த்தர் என ஆறு மகான்கள் பீடத்தில் அமர்ந்து கோலோச்சினர். ஏழாவதாக வந்தவரே நமது கதாநாயகர் ஸ்ரீவரதேந்திர தீர்த்தர் ஆவார்.

பூர்வாசிரமத்தில் இவர் ஸ்ரீபலராமாசார்யர் என்ற பெயரைக் கொண்டிருந்தார். பீகமுத்ரெ என்னும் பிரிவைச் சேர்ந்த மாத்வ பிராமணரான ஸ்ரீவேணுகோபாலாசார்யரின் இரண்டாவது குமாரர் இவர். அவரின் முதல் குமாரர், ஸ்ரீபுருஷோத்தமாசார்யர். அவரே பிறகு, ஸ்ரீவசுதேந்திர தீர்த்தராக மாறியவர். கடைசி குமாரரான ஸ்ரீலட்சுமி நாராயணாச்சார் பிறகு, ஸ்ரீபுவனேந்திர தீர்த்தராக மாறினார்.

ஸ்ரீபலராமாசார்யர் இளம் வயதிலேயே பெரிய வித்வானாக விளங்கியவர். இவரிடம் பாடம் பயிற ப்யாகவாட ஸ்ரீஸ்ரீநிவாசாசார்யரே, பிறகு புகழ்பெற்ற ஸ்ரீஜகன்னாததாசராக மாறினார். ஸ்ரீபலராமாசார்யர், கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கி, பெரும் வித்வானாக வாழ்ந்து வந்தார். அவர் தமது பூர்வாசிரம தமையனாரும், குருவுமான ஸ்ரீவசுதேந்திர தீர்த்தரிடம் ஸ்ரீமன் நியாயசுதா, வியாஸத்ரயம் ஆகிய பெரும் நூல்களைக் கற்றார். கன்னடப் புலமையும் இவருக்கு இருந்தது.

1761ம் ஆண்டு, ஸ்ரீபலராமாசார்யர், சன்யாசம் பெற்று, ஸ்ரீவரதேந்திர தீர்த்தர் ஆனார். அவர் பாரதம் முழுக்க திக்விஜயம் செய்து, பல பெரும் பண்டிதர்களை வென்று, தன் புகழை நிலைநாட்டினார். ஸ்ரீமடத்துக்கும் பல சொத்துகள் சேர்ந்தன. ஸ்ரீஸ்வாமிகள், தட்சிண தேசம் மட்டுமல்லாமல், க்வாலியர், புனே போன்ற வட தேசங்களிலும் சஞ்சாரம் செய்து வெற்றிக்கொடி நாட்டினார்.

மகாராஷ்டிராவில் உள்ள புனே என்னும் நகரத்தில், ஸ்ரீராமசாஸ்திரி பிரபு என்னும் மாபெரும் அத்வைத பண்டிதருடன் 17 நாட்கள் பெரும் வாதம் நடத்தி, அவரை வென்றார். ஒப்பந்தப்படி, ஸ்ரீராமசாஸ்திரிகள் தன்னுடைய அரண்மனையை ஸ்வாமிகளிடம் ஒப்படைத்துவிட்டு, காசி நகரம் சென்றுவிட்டார். பெரும் வெற்றி இது.

ஸ்ரீவரதேந்திர ஸ்வாமிகளும் குருராயரைப் போலவே பல மகிமைகளை செய்து காட்டியுள்ளார். இடம் க்ருதி இரண்டினை மட்டும் இங்கு பார்ப்போம்.

சென்னகிரி என்னும் ஊரில், ஸ்ரீஸ்ரீவரதேந்திர ஸ்வாமிகள் ஒரு மிருத்திகா பிருந்தாவனம் ஏற்படுத்தினார். அதில் குருராயர் சன்னிதானம் வந்தது, மிகவும் அதிசய செயல் ஆகும். சென்னகிரி, தாவணகெரெயின் அருகில் உள்ளது. அந்த ஊரில் இருவருக்கு, ராயரின் பிருந்தாவனம் பிரதிஷ்டை செய்ய வேண்டும் என்று எண்ணம் ஏற்பட்டது. இடமும் ஏற்பாடு செய்து விட்டார்கள். பிருந்தாவனம் செய்வதற்கு கல் தேர்ந்தெடுத்து விட்டார்கள். நஞ்சாசாரி என்னும் சிற்பியை சந்தித்து, பிருந்தாவனம் அமைக்க வேண்டினார்கள்.

அவனோ தற்போது அதற்கு நேரம் இல்லை என்று கூறிவிட்டான். அவனை விட்டால் அந்தப் பகுதியில் வேறு நல்ல சிற்பி கிடையாது. ஒரு நாள் அந்தச் சிற்பி, ஏரிக்கரையில் உலவும் போது, திடீரென்று அவனது பார்வை பறிபோனது. பல மருத்துவர்கள் பார்த்தும் எந்தப் பலனும் இல்லை. 'நான் குருராயரின் பிருந்தாவனம் செய்யாமல் விட்டதால்தான் கண் பார்வை பறிபோனது' என்று அவனுக்குத் தோன்றினது. உடனடியாக எப்படியாவது அந்த பிருந்தாவனம் செய்துவிடுகிறேன் என்று சங்கல்பம் செய்தான்.

அதனை அந்த இருவரிடம் கூறினான். அவர்கள், அந்தக் குருடனை, அந்தப் பாறை இருக்குமிடத்திற்கு அழைத்துச் சென்றார்கள். அவனும், அந்தக் கல்லை தடவிப்பார்த்தபடியே பிருந்தாவனம் செதுக்கினான். அந்த வேலை செய்யும்போது, அவனுக்கு அரைகுறை பார்வை தெரிந்தது ; பின் வீட்டுக்குத் திரும்பினால் பழையபடி குருடனாகவே ஆனான்.... (தொடரும்).

வங்கிக் கணக்கில் சந்தா செலுத்தினால், மறக்காமல் உங்கள் முகவரியை 89044 58276 எண்ணுக்கு வாட்சப் / SMS அல்லது haridasa.vijayam@gmail.comக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

## ஹரிதாச விஜயம் - ஆன்லைனில் படிக்க

* ‘Readwhere' Android/iPhone appனை Download செய்யவும்
* Search Boxல் 'Haridasa Vijayam' என்று தேடவும்.
* 1 ஆண்டு மின்னிதழ் சந்தா : ரூ.100
* அங்கேயே ‘Subscribe' க்ளிக் செய்து, பணத்தைக் கட்டவும்.
* மாதாமாதம் Readwhere appல் ‘Shelf'ல் புது இதழ், பிரதி 25ம் தேதி வெளியாகும்.
* eBook சந்தா பணத்தை எங்களுக்கு அனுப்பக்கூடாது.

ஹரிதாச விஜயம் அனுப்புதல் மற்றும் புதிய புத்தகங்கள் குறித்தான தகவல்களுக்கு ஒரு புதிய வாட்சப் க்ரூப் தொடங்கப் பட்டுள்ளது. வேண்டுமெனில் சேர்ந்து கொள்ளலாம். 89044 58276 எண்ணில் தொடர்பு கொள்ளவும். Admin only. No spam.

**அனைத்து விரத, பண்டிகைகளைப் பற்றிய**
**30 புத்தகங்களைக் கொண்ட செட்**

* கன்னடத்தில் வெளியாகி பரவலான வரவேற்பினைப் பெற்ற புத்தக செட் இது.
* தற்போது தமிழில் மொழிபெயர்கப்பட்டு வருகிறது.
* தமிழில் மொழிபெயர்ப்பு : ‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்.
* தமிழ்ப் புத்தகங்கள் வெளியாகும் நாள்: ஸ்ரீமத்வநவமி 21-02-2021.
* இந்த யூட்யூப் சேனலை சப்ஸ்க்ரைப் செய்து, மேலதிக தகவல்களைப் பெறலாம்.

Jagadguru Madhwacharya Siddhanta prathishtana Tamil

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்

Haridasa Vijayam - Monthly

மலர் 2 ** ஜனவரி 2021 ** இதழ் 3



ஸ்ரீகுருகோவிந்த விட்டலதாசர்

# ஹரிதாச விஜயம்

## சந்தா விவரம் (36 பக்கங்கள்)

1 ஆண்டுக்கு ரூ.200/-
3 ஆண்டுகளுக்கு ரூ.500/-
5 ஆண்டுகளுக்கு ரூ.900/-
10 ஆண்டுகளுக்கு ரூ.1700/-

புதிய சந்தாக்கள் அந்தந்த மாதத்திலிருந்து துவங்கும். பழைய இதழ்கள் வேண்டுமெனில், இதழுக்கு ரூ.20/- என சேர்த்து அனுப்பவும்.

## வங்கி விபரம்:

Sathya Narayanan, ICICI Bank - Savings account

A/c. No. 000101043177. IFSC: ICIC0000001

Cenotaph Road Branch, Chennai 18

**Subscription Renewal**

பத்திரிக்கை துவக்கும் முன் & துவங்கிய மாதத்தில் ஓராண்டுக்கு சந்தா கட்டியவர்களுக்கு அதை புதுப்பிக்கும் நேரம் நெருங்கி வருவதால் ஒரு சிறிய நினைவூட்டல். உங்கள் சந்தா முடியும் மாதத்தை உங்களுக்கு அனுப்பிய Receiptல், அல்லது இந்த மாத 'To address' labelல் முதல் வரியில் பார்க்கலாம்.

கூடுதலாக சில பக்கங்களை சேர்க்க வேண்டும், மேலும் பல அரிய தகவல்களைக் கொடுக்க வேண்டும் என்று நினைக்கிறோம். அதற்கு உங்கள் அனைவரின் ஆதரவு இருந்தால் மட்டுமே சாத்தியம் என்பதால், உடனடியாக உங்கள் சந்தாவை புதுப்பிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம். நன்றி.

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 2 : இதழ் 3


**நிர்வாக ஆசிரியர்**

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276.
haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**

'தாச சாகித்ய சேவா ரத்ன'
திரு.குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**

திரு. முரளிதர தாசரு,
திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா,
திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்


ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்

**ஜனவரி 1 முதல் 31 வரை, 2021**

மார்கசிர பகுள சஷ்டி - ஸ்ரீநரசிம்ம விட்டலதாசர், ப்யாக்யவட
மார்கசிர பகுள த்வாதசி - ஸ்ரீகுருகோவிந்தவிட்டலதாசர், மைசூர்
மார்கசிர அமாவாசை - ஸ்ரீகுருஸ்ரீஷவிட்டலதாசர், கனககிரி
புஷ்ய சுத்த த்ரயோதசி - ஸ்ரீஹரபனஹள்ளி பீமவ்வா.

குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam@gmail.com என்னும் ஐடிக்கோ அல்லது 89044 58276 க்கோ வாட்சப் செய்யலாம்.

# ஆசிரியர் பக்கம்

இந்த மாதம், எனது குருவின் குருவான ஸ்ரீகுருகோவிந்த விட்டல தாசரின் புண்ய தினம் வருகிறது. இவரது வாழ்க்கை வரலாற்றினை ஒரு தொடராக ஏற்கனவே பார்த்துவிட்டோம். இவரது ‘கோவிந்தாஷ்டகம்’ என்னும் ஒரு கிருதியை, அர்த்தத்துடன் இந்த இதழிலிருந்து பார்ப்போம்.

பூஜை / பண்டிகைக்கான புத்தகங்களில், பூஜா விதானத்துடன், அதற்கு சம்பந்தப்பட்ட கதை (மூல ஸ்லோகங்களுடன்), இதர ஸ்லோகங்கள், ஸ்தோத்திரங்கள், பாடல்கள், சமையல்கள் ஆகியவையும், அந்த பூஜையின் பின்னணி விவரங்கள், அறிந்து கொள்ள வேண்டியவை, தேவையான பொருட்கள் என அனைத்து குறிப்புகள் அடங்கிய தொகுப்பாக இருக்கிறது. இதைத்தவிர சைத்ர சுத்த பிரதமை முதல், பால்குண அமாவாசை வரையிலான இதர சிறப்பு நாட்கள், அதன் குறிப்புகள் என மாதவாரியாக புத்தகங்களும் இந்தத் தொகுப்பில் இருக்கிறது.

இந்த செட்டின் முன்பதிவு தற்போது நடைபெறுகிறது. விவரங்கள் இந்த இதழின் உள்ளே உள்ளன. மேலதிக விவரங்கள் வேண்டுமெனில், என்னை தொடர்பு கொள்ளவும். நன்றி.

**‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்**

**கன்னடம்**

**அருஞ்சொற்பொருள்**

**கடினமான சொற்களின் அர்த்தங்கள்**

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

1. பகவைரி = பகாசுரனின் எதிரி = பீமசேனர். 2. ஹுஸி = பொய்
3. மஹோரககிரி = சேஷாத்ரி. 4. சந்தோஹ = குழு / கூட்டம்
5. ஒலுமெ = ப்ரீதி (அன்பு / கருணை). 6.க்ஷுல்லகன் = அல்பன்/ நீசன்
7. தாத்ரி = பூமி / தாய் / நெல்லிக்காய். 8. நகசாப = ருத்ரதேவர்
9. பிரம்மகல்ப = பிரம்மனின் ஒரு நாள். 10. பரித = நிரம்பிய.

தொடர்

## கோவிந்தாஷ்டகம்

**இயற்றியவர்: ஸ்ரீகுருகோவிந்தவிட்டலதாசர்**

கோவிந்தாஷ்டகம் என்னும் 27 பத்திகளைக் கொண்ட இந்த கிருதியை இயற்றியவர் ஸ்ரீகுருகோவிந்தவிட்டலதாசர். கன்னட மாத்ருகான் யாசம் என்றும் இது அழைக்கப்படுகிறது. இதனை நித்ய பாராயணம் செய்து, அஜாதி 51 எழுத்துக்களில் இருக்கும் பகவந்தனின் அருளைப் பெறுவோமாக.

நாம ரூபாத்மகமான இந்த உலகத்தை, ஸ்ரீஹரிக்கு சமர்ப்பிக்க ஸ்ரீமதாசார்யர் சொல்லிக் கொடுத்த விஷயம் என்னவெனில் - ஒவ்வொரு மனிதனிலும், ஒவ்வொரு பொருட்களிலும், பகவந்தன் நிலைத்திருந்து, பிம்பரூபமாக அவர்களின் / அவற்றின் ஆளுமையை / நடவடிக்கைகளை நடத்துகிறான். ஆகையால், அனைவரும், அனைத்து பொருட்களும் அவனையே சேர்ந்ததாகும். அனைத்து மொழிகளின் அனைத்து சொற்களும் அவனையே புகழ்கின்றன. இப்படி அனைத்து ரூபங்களும், அனைத்து நாமங்களும் அவனையே சேர்ந்தவை என்னும் அனுசந்தானத்துடன் (நற்சிந்தனையுடன்) அவற்றை அவனுக்கே சமர்ப்பிக்க வேண்டும்.

ஸ்ரீமதாசார்யர், தந்த்ரசார சங்க்ரஹத்தில், பிரணவத்தின் எட்டு எழுத்துகளில் நிலைபெற்றிருக்கும் எட்டு பகவத்ரூபங்களிலிருந்து தோன்றிய அஜ முதலான 50 பகவத்ரூபங்களையும், பிரணவத்தின் எட்டு எழுத்துக்களிலிருந்து தோன்றிய அ-காரத்திலிருந்து துவங்கி ள-காரம் வரைக்குமான 50 எழுத்துக்களின் அர்த்தங்களைச் சொல்லி, அஜாதி 50 ரூபங்கள், அந்த அகாராதி எழுத்துக்களிலிருந்து வெளிப் பட்டிருக்கின்றன என்பதை நிரூபித்திருக்கிறார். அப்படியே கடைசி எழுத்தான க்ஷ-காரமானது, ந்ருசிம்ஹ ரூபி பகவந்தனைக் குறிக்கிறது என்பதையும் நிரூபித்திருக்கிறார்.

ஆகையால், எந்தவொரு மொழியில் எந்தவொரு சொல்லைக் கேட்டாலும் / சொன்னாலும், அந்தந்த எழுத்துக்களைச் சேர்ந்த அந்தந்த பகவத்ரூபங்களை சிந்திப்பதுடன், அந்த ரூபங்களுக்கு சம்பந்தப்பட்ட எழுத்துக்களின் அர்த்தத்தைப் பற்றியும் சிந்திக்க வேண்டும்.

உதாரணத்திற்கு, 'நாயி' (நாய்) என்ற சொல்லைக் கேட்டால், அதில் நான்கு எழுத்துகள் நமக்குத் தெரிகின்றன. ந, அ, ய மற்றும் இ. அதிலிருந்து நான்கு பகவத்ரூபங்களும் நமக்குத் தெரிகின்றன. ந - நம்ய, அ - அஜ, ய - யக்ஞ மற்றும் இ - இந்திர. நம்யனின் அருளுக்குப் பாத்திரமானதால், அது தன் குட்டிகளைப் பெறும் சக்தியைப் பெறுகிறது. அஜனின் அருளுக்குப் பாத்திரமாகி, இந்த பிறப்பை எடுத்திருக்கிறது. யக்ஞனின் அருளைப் பெற்றதாலேயே, அந்த நாய் தன் முந்தைய அல்லது அடுத்த பிறவியில், யக்ஞத்தில் பங்கு வகிக்கக்கூடிய அருகதையைப் பெறுகிறது. இப்படியான சிந்தனையுடன், நாய் என்று சொல்லும்போது / கேட்கும்போது, அது மந்திர துல்யமாக அதற்குத் தகுந்த பலனை நமக்குத் தருகிறது.

'அ மொதலு க்ஷ-காராந்த ஈ மஹாவர்ணகளெல்ல ஸ்வாமியாத விஷ்ணுவின நாமகளெந்து திளிதவரிகெ ஆனந்தா' என்று ஸ்ரீவிஜயதாசர் சொல்லியிருப்பதைப் போல, ஒவ்வொரு எழுத்தும் பகவந்தனின் நாமம் என்று சொன்னபிறகு, அந்த எழுத்துகளால் ஆன, அனைத்து மொழிகளின் அனைத்து வாக்கியங்களும் அவனுடைய பெயர்களே ஆகின்றன. அவனுக்கு வெறும் ஒரு பெயர் மட்டும் அல்ல. அனைத்தும் அவன் பெயர்களே. ஆகவே, அந்த சொற்கள் அவனின் மகிமைகளை சிறப்பாக விளக்குகின்றன. இப்படியாக நாம் சிந்திப்பதின் மூலம், எந்தவொரு சொல்லை சொல்லும்போதும் அல்லது கேட்கும்போதும் அதிலிருந்து வெளிப்படும் பகவத்ரூபங்களின் நினைவு நமக்கு வந்தால், அதைவிட ஆனந்தம் / மகிழ்ச்சி வேறு என்ன இருக்கமுடியும்?

இப்படி நாம் சொல்லும், கேட்கும் ஒவ்வொரு வாக்கியத்தையும், சொல்லையும், எழுத்தையும் அந்த பகவந்தனுக்கு சமர்ப்பிக்க வேண்டுமெனில், அந்தந்த வாக்கியம், சொல், எழுத்து ஆகியவை எந்தெந்த பகவத்ரூபங்களை தெரிவிக்கிறது என்பதை கண்டிப்பாக நாம் அறிந்திருக்க வேண்டும். தந்திரசார சங்கிரஹ கிரந்தத்தில் ஸ்ரீமதாசார்யர் இதனை விளக்கியிருக்கிறார்.

இந்த 51 எழுத்துகளால் வெளிப்படும் பகவத்ரூபங்களைப் பற்றிய அறிமுகத்தை, மைசூரின் ஸ்ரீ குருகோவிந்தவிட்டல தாசர், கன்னடத்தில் 'மாத்ருகான்யாச' பாடலின் மூலம் நமக்குக் கொடுத்திருக்கிறார். 27 நட்சத்திரங்களைக் குறிக்கும் வண்ணம் (இது

நட்சத்திர மாலிகா ஸ்தோத்திரம் என்றும் சொல்லப்படுகிறது), 27 நுடிகளில், 51 பகவத்ரூபங்களை வணங்குகிறார் தாசர். 'அஜ' என்று அவர் சொல்லாவிட்டாலும், 'அலவமஹிமே', 'ஆலயதொளு', 'ஈக்ஷிஸு' என்று அந்தந்த எழுத்திலிருந்து தொடங்கும் (அந்த பகவத்ரூபங்களின் சிறப்புகளை விளக்கும்படியான) ஒரு சொல்லை சொல்லி, அதை அந்த பகவத்ரூபத்திற்கே சமர்ப்பிக்கிறார்.

ஏக பஞ்சாஷது கோவிந்த |வர்ண
ஏகாத்ம மாலெய கோவிந்த |
லோகைகனாத2 குரு கோவிந்த |விட்டல
ஸ்வீகரிஸென்ன காயோ கோவிந்த ||27

என்று முடியும் கடைசி நுடியில் வேண்டியிருப்பதைப் போல, 51 எழுத்துக்களால் ஆன மாலையை குருகோவிந்தவிட்டலனுக்கு சமர்ப் பிக்கும் மூலம், அந்த எழுத்துக்களாலான சொற்களை, வாக்கியங்களை, பகவந்தனுக்கு அந்த மாலையின் மூலம் சமர்ப்பித்தது போலாயிற்று.

அனைத்து சொற்களாலும் அவன் எப்படி புகழப்படுகிறான்?

ஸ்ரீகுருகோவிந்தவிட்டல தாசர், எளிய கன்னடத்தில், 27 நுடிகளைக் கொண்ட வர்ணமாலை என்னும் இந்த பாடலை இயற்றியிருக்கிறார். அவற்றில் அடங்கியிருக்கும் அழகினை, ஆழமான அர்த்தங்களை புரிந்து கொள்ளாமல், அந்தப் பாடலை அப்படியே பாடி கோவிந்தனுக்கு அர்ப்பித்தால், அது ஞான பக்தியுடன் அர்ப்பித்தைப் போல ஆகாது. அந்த ஞான பக்திகளை வேண்டியது போலவும் ஆகாது. ஆகவே, அதன் அழகினை, சிறப்பினை புரிந்து கொள்வதற்கு முயல்வோம்.

51 எழுத்துக்களால் வெளிப்படுபவனான பகவந்தனின் 51 ரூபங்களைக் குறித்து வணங்கும்படியாக இந்த கிருதி இயற்றப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு வரியிலும் முதல் சொல்லானது, அந்த எழுத்திலிருந்து துவங்கும் பகவத் ரூபங்களை நமக்கு விளக்குகிறது. உதாரணத்திற்கு: அ-எழுத்தில் வெளிப்படும் கோவிந்தனின் ரூபமாக 'அஜ' ரூபத்தை விளக்குகிறார் தாசர். அந்த அஜனானவன், 'அலவமஹிம' (எண்ணிக்கை யற்ற மகிமைகளைக் கொண்டவன்) மற்றும் அலபோதரப்ரிய (ஸ்ரீமன் மத்வாசார்யரால் வணங்கப்படுபவன்) என்று அந்த ரூபத்தின் சிறப்பு களையும் மிகவும் அழகாக பாடியுள்ளார் தாசர்.

பகவந்தன், அகாராதி எழுத்துக்களில் நிலைத்திருப்பது மட்டுமல்லாமல், அந்த அகாராதிகள் நித்யமாக இருப்பதைப் போல, அனைத்து இடங்களிலும் பரவியிருப்பதைப் போல, லௌகிக அர்த்தங்களை வெளிப்படுத்துவதைப் போல, அந்த பகவந்தனின் தர்மங்களையும், அதன் பின்னணியில் அவனின் மகிமைகளையும் நாம் சிந்திக்க வேண்டும். (தொடரும்)...

***

தொடர்

## ஹரிபக்தர்களை நிந்திப்பவர்கள்

## ஹரிதாசர்களின் சிந்தனை முத்துக்கள்

சாதனை மார்க்கத்தில் இருப்பவர்கள் தினமும் தேவபூஜை செய்யும்போது, ஸ்ரீஜயதீர்த்தர் தனது பத்யமாலாவில் தெரிவித்த ஸ்லோகமான 'வைஷ்ணவ த்வேஷ ஹேதொம்மெ பச்மசாத் குரு மாதவ' என்று கேட்கும் வழக்கம் இருக்கிறது. இதன் பொருளாக ஸ்ரீவிஜயதாசர் தம் சுளாதியில் - என்றைக்கும் ஹரிபக்தரின் த்வேஷம், நிந்தித்தல் கூடாது என்று போதித்தார்.

ஹரிபக்தர ஒம்மெ நிந்தெ மாடிதவ ।
நரகவாஸி என்னி விஜயவிட்டல பொலியா ॥

ஹரிபக்தர்கள் என்றைக்கும் யாருக்கும் கெட்டது நினைக்க மாட்டார்கள். அவர்களது தூய்மையான வாழ்க்கையே மற்றவர்களுக்கு வழிகாட்டியாக இருக்கிறது. எப்போதும் ஸ்ரீஹரியை நினைப்பதிலேயே இருப்பர்.

சாரிதெ நினகெ நன்ன ஹிரியரு பேளித்து
தாரிய தப்பதிரு எலோ மனவெ
பாரு முட்டது காணோ சுஜனர நிந்த்யகளிந்த
கோர தமஸினலி வாச அவகெ । -- ஸ்ரீவிஜயதாசர்

சஜ்ஜனரான ஹரிபக்தர்களை நிந்தித்தால் தமஸ்ஸே கதி என்று கூறினர். அதற்கே:

சல்லது சல்லது பயஹாரிய பக்தர । நில்லதெ தோஷிசுவ நிஷ்டுர வசனகளு ।
எல்லித்தாரெ ஏனு எந்து நடெதரேனு । பல்லிதரு காணே அவரு ஜகத்தினொளு ।
சல்லுவரு ஹரிய பாதபல்லவ சேவெகெ । பல்லவரு என்ன யோக்யதானுசார ॥

சஜ்ஜனர்களை, உத்தமர்களைக் கண்டால், நாம் செய்யவேண்டியது என்ன?

உத்தமரனு கண்டு எத்தி கரகள முகியெ
சித்ததலி பாபதத்த போகதிரு
தொத்து வார்திகெ கிவியித்து கேளதிரு
சோத்தமர கூட ப்ரதிமாடதிரு
ஆத்மஸ்துதிய இடு எத்ததிரு பரர நிந்தெ ॥ -- ஸ்ரீவிஜயதாசர்

கூடவே, நம்மை எப்போதும் அமைதியான மனநிலையில் இருக்குமாறும் அறிவுறுத்துகிறார்.

நிந்தா மாடிதரெந்து நொந்து கொளலி பேட
வந்திஸிதரெந்து நந்தவ படபேட
நிந்தெ வந்தனெகளு ஆராரவு ஹெச்சு ॥

மேலும்:

சகல போஷககெ ப்ராயஸ்சித்த உண்டு நின்
தககெ இல்லவோ காணோ விஜயவிட்டல பல்ல ॥ -- ஸ்ரீவிஜயதாசர்

****

**பஞ்சதன்மாத்ர சந்தி குறுக்கெழுத்துப் போட்டிக்கு விடை எழுதி புத்தகப் பரிசு பெறுபவர்கள்:** 1. திருமதி. சாந்தி பத்மனாபன், திருநெல்வேலி 2. திருமதி. சந்த்ரா, கோவை 3. திருமதி. உஷா ரகூத்தமன், பெங்களூரு 4. திருமதி. பிரேமா குருராஜன், பொள்ளாச்சி 5. திருமதி. லலிதா, திருநெல்வேலி 6. திருமதி. கபிலா ஸ்ரீதர், கோவை 7. திருமதி. பானுமதி, கோவை

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### பஞ்சதன்மாத்ர சந்தி - விடைகள்

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 அ | ர | வி | தூ | 19 ர | னு | | | 2 ஏ | 20 க | 21 வி | ம் | ஸ | 22 தி | |
| ப | | | ஸ | 3 ஸ | லி | ல | | கோ | ளே | ல | | பு | ல | 12 ஹெ |
| ம் | ய | தே | 13 ஆ | | | | | ன | வ | க்ஷ | | ரு | ஜ | |
| 4 ரு | க் | 23 வி | னு | த | | | 24 த | | ர | ண | 25 ரு | 14 த் | | |
| த் | | கா | | வ | | தி | தி | ஸ | ம் | ரி | 15 த் | | | |
| யு | | ர | க | ரீ | வ | ர் | 16 ஸா | | த | ந் | ர | 17 து | | |
| | | 26 சூ | | க் | | 29 வ | | | | | ன் | மா | | |
| | | த் | | 5 க | லு | ஷ | | ட | | | | ள | | |
| 6 ஜ் | வ | ர | ஹ | ர | | | | ஜா | | | 7 மி | ஸு | னி | |
| | | | ள | 30 து | 8 மா | ர் | க | ண் | டே | ய | ர் | | | 27 த |
| | | | | | 9 ஆ | த் | ம | ஜ | | | 31 ஊ | | | ந் |
| | | ளு | | | | | | ஸ | | 10 உ | 28 த | பி | ந் | து |
| 11 வ் | யா | க | ர | ண | | | வெ | 32 பி | | | ர் | | | க |
| | | ர | ச | ஞ் | கு | ரி | 33 நா | வ | 18 ந | | ப | | | ள் |
| | | 34 தெ | | | | | | | | | ண | | | |

ஹரிதாச விஜயத்தை & இதில் வரும் தகவல்கள், போட்டிகளைப் பற்றி தயவு செய்து உங்கள் நண்பர் / உறவினர்களிடம் அறிமுகம் செய்யுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

தொடர்

**கேசவ நாமா**

**13.முஞ்சானெ எத்து - ஸ்ரீமஹிபதி தாசர்**

முஞ்சானெ எத்து3 முரஹரனா ஸ்மரிஸெலா மனவே
அஞ்சு ப4வ ப4ய து3ரித ஹிங்கி3ஸுவனு ||ப

கேசவயெந்தெனலு தா க்லேஷ பரிஹரிசுவனு
நாஷக3யிஸுவ ப4வ நாராயணனெனலு
மீஸலு மனத3லொம்மெ மாத4வனெந்தெனலு தா பா
விஸுவ ஹ்ருதயதொ3ளு கோவிந்தனு

வாஸனிய பூ1ரிஸுவ விஷ்ணுயெந்தெனலு தா
தோ3ஷ பே4தி3ஸுவ மதுசூதனனெனலு
பா4ஷெ பா1லிஸுவ த்ரிவிக்ரமனெந்தெனலு தா
லேஸு கை3சுவ ஜனுமா வாமனனெனலு ||1

ஸிரிஸகலு பத3வீவ ஸ்ரீத4ரனெந்தெனலு தா
ஹருஷக3தியீவா ஹ்ருஷிகேஷனெனலு
பரமபாதகதூ3ரா பத்பனாபெந்தெனலு
தா3ரித்3ரய ப4ஞ்சன தாமோதரனெனலு

சுரிசுவா அம்ருதவா சங்கருஷண்னெனலு
ஹொரெவ த3ரெயொளு வாசுதேவனெனலு
பரிபரிய சலஹுவா ப்ரத்யும்னனெந்தெனலு
அரஹு க3தியீவ அனிருத்தனெனலு ||2

பூ1ரிஸுவ பா4வ புருஷோத்தமெந்தெனலு தா
தா1ரிஸுவ ஜனும அதோக்ஷனெனலு
நரஜனும உத்த3ரிசுவா நாரசிம்ஹனெந்தெனலு
கருண த3ய பீ3ருவா அச்யுத எனலு

ஜரிசுவா து3ர்வ்யஸன ஜனார்த்தனெனலு
ஊர்ஜிதவாகுவுது உபேந்த்ர எனலு
த1ரள மஹிபதி ப்ராணதொடெய ஸ்ரீஹரி எனலு
கருணதிந்தாகுவ குரு கிருஷ்ணனு ||3

வினைபயன்களிலிருந்து தப்ப வேண்டுமெனில், விடியலிலேயே எழுந்து முரஹரனை நினைக்க வேண்டும் என்று மனதிற்கு எச்சரிக்கை விடுக்கிறார். முக்யபிராணாந்தர்கத ஸ்ரீஹரியின் இருபத்தி நான்கு நாமாவளியை நினைப்பது நமக்கு அனந்த பலன்களைக் கொடுக்கிறது. குருகளின் அந்தர்யாமியான, ஆசார்ய மத்வரின் குரு ஸ்ரீகிருஷ்ணனே ஆனதால், அவனையே மஹிபதி என்றும், குரு என்றும் பூஜிக்க வேண்டும் என்கிறார். இதிலிருந்து குரு ஸ்தானத்தின் மகிமைகளையும் தெரிவித்திருக்கிறார்.

***

## 14. காலகாலதி

காலகாலதி கேசவனெனிரோ
பா[3]ல முகுந்த மாத[4]வனென்னிரோ ||ப

தினந்தோறும் மூன்று காலங்களிலும், எட்டு யாமங்களிலும், 60 சம்வத்ஸரங்களிலும், பிறப்பிலிருந்து மரண காலம் வரைக்கும், பால முகுந்தனான கேசவனை நினையுங்கள். மாதவனை நினையுங்கள்.

உத[3]யகாலத[3]லி அனந்த மஹிமனென்னி
மத்யான்ஹதலி பத்மனாப[4]னென்னி
சந்த்யா ஸாயங்காலத[3]லி ஸ்ரீத[4]ரனென்னி
ஸதா காலதலி ஸ்ரீஹரியென்னிரோ ||1

காலையில் அனந்த மகிமன் என்றும், மதியத்தில் பத்பனாபன் என்றும், மாலையில் ஸ்ரீதரன் என்றும், எல்லா நேரங்களிலும் ஸ்ரீஹரி என்றும் சொல்லுங்கள்.

ஏளுத்த மச்சாவதார அச்யுதனென்னி
மலகு[3]த சேஷசயனனென்னிரோ
ஹேளுத விஷ்ணு வரஹாவதாரனென்னி
கேளுத கிருஷ்ணாவதாரனென்னி ||2

எழும்போது மத்ஸ்யாவதாரி அச்யுதனையும், படுக்கும்போது சேஷசயனனையும், பேசும்போது விஷ்ணுவையும், வராகனையும், கேட்கும்போது கிருஷ்ணாவதாரனையும் நினையுங்கள்.

நடெ3யுத சுகு3ண நிர்கு3ண சர்வோத்தமனென்னி
நுடி3யுத நாராயணனென்னிரோ
மாடு3த கிருஷ்ண நிர்மித தாமோதரனென்னி
கூடு3த கூர்மாவதாரனென்னி ||3

நடக்கும்போது, பாடும்போது, வேலைகளை செய்யும்போது, நிர்மாணம் செய்யும்போது, அமர்ந்திருக்கும்போது முறையே குணபூர்ணனான (சத்வாதி மூன்று குணங்களும் இல்லாதவனான) சர்வோத்தமனையும், நாராயணனையும், கிருஷ்ணனையும், தாமோதரனையும், கூர்மனையும் நினைக்க வேண்டும்.

ஆடு3த க3ருடவாகனான த்ரிவிக்ரமனென்னி
பே3டுத்த ஸ்வாமி வாமனனென்னி
நோடு3த வாரிஜநேத்ர ப்ரஸித்த3னென்னி
பாடு3த பரமாத்மனென்னிரோ ||4

ஆடும்போது, வேண்டும்போது, பார்க்கும்போது, பாடும்போது முறையே கருடத்வஜனான த்ரிவிக்ரமனை, வாமனனை, தாமரைக் கண்ணனை, பரமாத்மனை நினைக்க வேண்டும்.

உத்யோக3த3லி சஹகார னிருத்தனென்னி
உத3ரகாயத3லி உபேந்த்ரனென்னி
மேதி3னியொளு ஹரி மதுசூதனனென்னி
ஆதி3 அந்திம அதோக்ஷஜனென்னிரோ ||5

வேலை செய்யும்போது அனிருத்தனையும், சாப்பிடும்போது உபேந்திரனையும், பூமியில் நடக்கும்போது ஹரி மதுசூதனனையும், இரவும் பகலும் அதோக்ஷஜனையும் நினைக்க வேண்டும்.

ஹ்ருதய கமலதொளு ஹ்ருஷிகேஷனு என்னி
ஷப்த3 ஜிஹ்வெலி ஜனார்த்தனென்னிரோ
புத்தி3யலி சித்த பௌத்தாவதாரனென்னி
ஆதி3 அனாதி3 கோவிந்தனென்னி ||6

இதய கமலத்தில் ஹ்ருஷிகேசனையும், நாக்கில் ஜனார்த்தனனையும், புத்தியில் பௌத்தாவதாரியையும், எப்போதும் கோவிந்தனையும் நினைக்க வேண்டும்.

அனுதின மனதொ[3]ளு க[4]னமஹிமனு என்னி
தனுவினொளு புருஷோத்தமனென்னி
அன்ன உத[3]க ஸேவிசுத ஹரிபோ[4]க்தனென்னி
க[4]ன பூ[4]ஷணதி சங்கருஷணனென்னி ||7

ஒவ்வொரு நொடியும் அவனின் மகிமைகளை நினையுங்கள். இந்த தேகத்தில் புருஷோத்தமன் இருக்கிறான் என்று நினைக்கவும். உணவை வணங்கி, அதை ஏற்றுக்கொள்பவன் ஸ்ரீஹரி என்று சொல்லவும். அலங்காரம் செய்து கொள்ளும்போது சங்கர்ஷணனை நினையுங்கள்.

ஸதிபதி சம்யோக[3]தலி ப்ரத்யுமனென்னி
பதித பாவன பரபிரம்மனென்னி
ப[4]க்தவத்ஸல நரசிம்ஹாவதாரனென்னி
முக்திதா[3]யக தே[3]வோத்தமனென்னிரோ ||8

வாமதேவ யக்ஞத்தின்போது பிரத்யும்னா என்று சொல்லுங்கள். நம்மை மேம்படுத்துபவன் பரபிரம்மன் என்று சொல்லவும். நரசிம்மன் பக்தவத்ஸலன் என்றும், முக்தியைக் கொடுக்க வல்லவன் தேவோத்தமன் என்றும் அறியவும்.

பாவன மூருதி பரசுராமனென்னி
ஜீவ சஞ்சீவ ஸ்ரீராமனென்னி
ப[4]வப[4]யனாஷ கல்க்யாவதாரனென்னி
மஹிபதி குருவாசுதேவனென்னி ||9

பரம பாவன மூர்த்தி பரசுராம, ஜீவர்களில் முக்யபிராணாந்தர்கத ஸ்ரீராம, சம்சார பயத்தைப் போக்கும் கல்கி அவதாரி, வாசுதேவன் என்று பயமில்லாமல் எப்போதும் நினையுங்கள் என்கிறார் மஹிபதிதாசர். எழும்போது, படுக்கும்போது, சொல்லும்போது, கேட்கும்போது, நடக்கும்போது, பாடும்போது, வேலை செய்யும்போது, ஆடும்போது, வேண்டும்போது, பார்க்கும்போது என அனைத்து செயல்களையும் அனைவரிலும் இருந்து, எப்போதும் செய்விப்பவன் ஸ்ரீஹரியே என்கிற செய்தியை சொல்கிறார்.

**(24ம் பக்கத்தில் தொடரும்)...**

தொடர்

# ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

## உவமான உவமேயங்கள்

**(சென்ற இதழின் தொடர்ச்சிக் கட்டுரை)**

ஸ்ரீஹரியின் இருப்பை உவமைகளின் மூலம் விளக்கும் தாசர்,

த்1ருணக்1ருதா1லயதொ3ளகெ3 பொ1கெ3 ச
ந்த3ணிஸி பி1ரதி1சித்ரத3லி பொ1ரம
ட்ட1னலனிரவனு தோ1ரி தோ1ரத3லிப்ப1 தெ1ரத3ந்தெ1 |
வனஜஜாண்டதொ3ளகி2ல ஜீவர
த1னுவினொளஹொரகி3த்து3 கா1ணிஸ
த3னிமிசேஷனு சகலகர்மவ மாள்பனவரந்தே1 || (3-12)

பா1த3ப1க3ளடிகெ3ரெயெ ஸலிலவு
தோ1து3 கொ1ம்பெ3க3ளுப்பி3 புஷ்ப
ஸ்வாது3 ப2லவீவந்ததலி சர்வேஸ்வரனு ஜனரா
ராத4னெய கை1கொ3ண்டு3 பிரம்ம ப4
வாதி3க3ள நாமத3லி ப2லவி
த்தா1த3ரிசுவனு த1ன்ன மஹிமெய தோ1ரகொ3ட3 ஜக3க்கெ1 | (3-13)

குடிசைக்குள் நெருப்பு இருந்தால், வெளியில் தெரிவது புகை மட்டுமே. உள்ளிருக்கும் நெருப்பு தெரிவதில்லை. கண்ணிற்குத் தெரியா விட்டாலும், ஸ்ரீஹரியானவர் அனைத்து ஜீவர்களில் வியாபித் திருக்கிறார். கண்ணிற்குத் தெரியாத நெருப்பு, தன் சுடும் தன்மையை (வேலையை) செய்கிறதோ, அதைப்போலவே, கண்ணிற்குத் தெரியாமல் மறைந்திருந்தாலும் ஸ்ரீஹரி தன் கடமைகளை சரியாகச் செய்கிறார்.

இரண்டாம் உவமையில், மரம், செடி, கொடி ஆகியவற்றின் கீழ்ப் பகுதியில் நீர் இறைக்கிறோம். வேருக்கு நீர் முக்கியம். அதுபோல், ஜீவர்கள் அவர்கள் செய்யும் பூஜை, புனஸ்காரம் ஆகியவற்றிற்கு வேராக உள்ளிருக்கும் ஸ்ரீஹரியே காரணம். நீர் குடிக்கும் வேரானது, உள்ளிருந்து மரத்தை வளர்த்து, அதிலிருந்து காய், பழம், பூ ஆகியன கொடுப்பதைப்போல, ஸ்ரீஹரி நம் செயல்களுக்குத் தக்கவாறு நமக்கான பலன்களைக் கொடுக்கிறார். உடலில் அந்தர்யாமியாக இருந்து ஸ்ரீஹரி செய்யும் செயல்களை, பல்வேறு உவமைகளுடன் ஜகன்னாததாசர் வர்ணிக்கிறார்.

த1ப்த1லோஹவு நோள்ப1 ஜனரிகெ3
சப்தஜிஹ்வன தெ1ரதி3 தோ1ர்புது3
லுப்த1பா1வக1 லோஹ கா1ம்பு3த3 பூ1ர்வதோ3பாதி3 |
ஸப்தவாஹன நிகி2ல ஜனரொ
ள்வியாப்த1னாது3த3ரிந்த3 ஸர்வரு
ஆப்தராகி3ஹரெல்லகா1லதி3 ஹித1வ கை1கொ1ண்டு3 || (3-22)

காய்ச்சிய இரும்பு நன்றாக சிவப்பாக நெருப்பைப் போல தெரியும். ஆனால் அந்த நெருப்பு குளிர்ந்தபிறகு அது வெறும் இரும்புதான். அதைப்போலவே, ஸ்ரீஹரியின் சான்னித்யம் மற்றும் கருணை அனைத்து ஜீவர்களுக்கும் கிடைக்கின்றது. அந்த கருணையானது இல்லையென்றால், சூடு இல்லாத இரும்பினைப் போல, ஜீவனும் சக்தியில்லாதவன் ஆகிவிடுகிறான் என்கிறார்.

வாரித3னு மளெகெ3ரெயெ பெ3ளெதி3ஹ
பூ4ருஹங்க3ள சித்ரப2லரச
பே3ரே பே3ரிப்ப1ந்தெ1 ப3ஹுவித3 ஜீவரொளகி3த்து3 |
மாரமணனவரவர யோக்யதெ1
மீரத3லெ கு3ண க1ர்மக3ள அனு
சார நடெசுவ தே3வனிகெ3 வைசம்யவெல்லிஹுதோ || (3-23)

அனைத்தையும் படைத்த ஸ்ரீஹரி ஒருவரேயானாலும், அவர் படைப்பில் இத்தனை பன்முகத்தன்மை எப்படி வந்தது என்பதன் காரணத்தை தாசர் இந்த உவமையின்மூலம் விளக்குகிறார். மழை யானது அனைத்து இடங்களிலும் பெய்வது ஒரே மாதிரியானாலும், வெவ்வேறு மரங்கள், செடிகள் ஆகியவற்றின் காய், பழங்களின் சுவை வெவ்வேறாக இருப்பதைப்போல, பூக்களின் மணம் வெவ்வேறாக இருப்பதைப்போல, அனைத்து ஜீவர்களிலும் ஸ்ரீஹரி இருந்தாலும், பன்முகத்தன்மை வந்துவிடுகிறது. சூரியனின் கிரணங்களால் நீரானது ஆவியாகி, மேலே போய் மேகமாகி, மறுபடி மழையாக வருவதற்கும் ஸ்ரீஹரியே காரணம் என்று தெரிந்துகொள்வது முக்கியம். முந்தைய கர்மங்களைப் பொறுத்து, ஜீவர்கள் பற்பல விதமான பலன்களைப் பெறுகின்றனர்.

ஜீவர்கள் அனுபவிக்கும் சுகதுக்கங்கள் அவர்களது உடலுக்கு மட்டுமே தவிர, ஆத்ம ரூபத்தில் இருக்கும் ஸ்ரீஹரிக்கு அது போய் சேர்வ

தில்லை என்பதை தாசர் ‘காத கப்பிண ஹிடிது படியலு வேதனெயு லோஹகளிகல்லதெ ஆதுதேனை அனலகெ’ - காய்ச்சிய இரும்பினை சுத்தியலால் அடித்தால், அந்த இரும்பிற்கு வலிக்குமே தவிர, அதில் மறைந்திருக்கும் நெருப்பிற்கு அந்த வலி தெரியாது - என்கிறார். படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவற்றிற்கு காரணம் ஸ்ரீஹரியே. இதற்கான தாசரின் உவமை இப்படியாக இருக்கிறது.

மளல மனெக3ளமாடி மக்க1ளு
கெ1லவு கா1லதொ3ளாடி3 மோத3தி3
து1ளிது3 கெ1டி3சுவ தெ1ரதி3 லகு1மிரமண லோக1க3ள ।
ஹலவு ப3கெ3யலி நிர்மிசுவ, நி
ஸ்சலனு தா1னாகி3த்து3 ஸலஹுவ
எலருணிய வோல் நுங்கு3வகெ3ல்லிஹுதோ3 சுக1து3க்க2 ।। (3-28)

படைத்தல், காத்தல், அழித்தல் என அனைத்திற்கும் ஸ்ரீஹரியே காரணமாக இருந்தாலும், தனக்கும் அதற்கும் சம்பந்தம் இல்லாதது போல் அவர் எப்போதும் விலகியே இருப்பார். இத்தகைய பற்பல உவமை, உவமேயங்களால் ஹரிகதாம்ருதசாரத்தின் பொருள் மற்றும் சிறப்பு உள்-அர்த்தங்கள் நமக்கு விளக்கப்பட்டுள்ளன.

கெரெய நீரனு கெரெகெ செல்லி என்று சொல்வதைப்போல், ஸ்ரீஹரி நமக்குக் கொடுத்ததை அவருக்கே திரும்ப அர்ப்பணித்து - நான் செய்தேன் என்று நினைக்கும் ஜீவர்கள் (விபூதி சந்தி - ஸ்லோகம் 36). ஹரியின் பக்திரசத்தின் ருசியை அறிந்தவர்களுக்கு மட்டுமே இந்த கிரந்தம் பயன்படுகிறது. கரும்பைப் போல இருக்கும் இந்த கிரந்தமானது, பல் இருப்பவர்கள் மட்டுமே ருசிப்பதற்கு சாத்தியம்.

இளமை, வாய்ப்பு என இரு ஈறுகள் இருந்தாலும், ஞானம் என்னும் பல் இல்லாதவர்களுக்கு இந்த சாரம் பயன்படுவதில்லை. ருசிப்பதில்லை. சாஸ்திரிய விஷயங்களின் சாரமான ‘ஹரிகதாம்ருதசாரம்’ கிரந்தத்தை, ஜகன்னாததாசர் தனது அற்புதமான காவியத்திறன் மற்றும் மொழித்திறனைக் கொண்டு, மிகவும் அழகாக, அனைவரும் விரும்பக்கூடிய கிரந்தமாக இயற்றியதில் வெற்றியடைந்திருக்கிறார்.

(இந்த கட்டுரை இத்துடன் முடிந்தது. அடுத்த இதழில் புதிய கட்டுரை வரும்). ***

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### ஜீவப்ரகரண சந்தி

| | | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | 26 | | | | | 2 | | | | | | | | |
| | | | | | | | | | | | 3 | | | | | |
| | | | | | | | 27 | 4 | | | | | 5 | | | |
| | 36 | | 6 | | 28 | | 7 | | | | | | | | 37 | |
| | | | | | | | | | | | | | | | | |
| | | 29 | | | | | | | | | | | | | 21 | |
| | 8 | | | | | | | | | 30 | | | 38 | | | |
| | | 9 | | | | | | | | | | | | | | |
| | | | | | | | 10 | | | | | | | | | 22 |
| | | | | | 11 | | | | | | | | 31 | | | |
| 12 | | | | | 39 | | 13 | | | | 14 | | | | | |
| | | | 23 | | | | | | | | | | | | | |
| | | | | | | 32 | | | | | | | 15 | | | 33 |
| 40 | | | | 16 | | | | | | | | | | | | |
| | | | | | | | | | | | | | 41 | | | |
| | 17 | 34 | | | | 18 | | | | | | | | | | |
| | | | | | | | | | 24 | | 35 | | | | | |
| | 42 | | | | | | 19 | | | | | | | | | |
| | | | | 25 | | | | | | | 20 | | | | | |

* குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam @gmail.com என்னும் ஐடிக்கோ அல்லது 89044 58276 க்கோ வாட்சப் செய்யலாம்.

**இடமிருந்துவலம்** : 1.வேத ஸ்வரங்களில் ஒன்று(6), 2.பன்னிரண்டு விரற்கட்டை அளவை இப்படி அழைப்பர்(4), 3.அஷ்ட ஆயுதங்களில் ஒன்று(4), 4.ஸுஷும்னா நாடியின் மேற்கு திசையில் உள்ளநாடி(4),

5.சதுர்முக ப்ரஹ்மாவை தாஸர் இப்படி குறிப்பிகிறார்(4), 6.தேஹ சம்பந்தமான கர்மங்கள்(3), 7.யமனின் வேறு பெயர்(5), 8.கட்டை விரல்(5), 9.மனைவி(4), 10.ஸந்தேகப்படாமல் இருப்பது(5), 11.ஸப்த தாதுகளில் ஒன்று(3), 12.தாகம்(3), 13.தேஸ சம்பந்தமான கர்மங்கள்(3), 14.ஸ்தூல தேஹத்தில் ஸ்ரீஹரியின் ரூபம்(6), 15.நீர்(4), 16.ப்ரஹ்ம நாடியை இப்படியும் அழைப்பர்(6), 17.வாயுதேவர் ஸ்ரீ ஹரியோடு கூடி இந்த தேஹத்தில் இருப்பார்(4), 18.பிம்பரூபி பரமாத்மா ஸ்ரீநாராயணனை தாஸர் இப்படி குறிப்பிடுகிறார்.(4), 19.தென்மேற்கு திசையின் வலர்(4), 20.ஸுஷும்னா நாடியின் வடக்கு திசையில் உள்ள நாடியின் பெயர்(3),

**வலமிருந்துஇடம்:** 21.தேஹம்(3), 22.நுனி(2), 23.க்ஞானிகள்(4), 24.ருத்ரர். வேறு பெயர்(4), 25.இவருடைய வாசஸ்தலம் அனிருத்த தேஹம்(3),

**மேலிருந்துகீழ் :** 1.நாள்தோறும்(5), 2.திரை அல்லது கவசம்(5), 8.இமையோர் அல்லது தேவர்கள்(5), 16.இந்திரன்(4), 22.பனிக்காலம்(3), 26.எதிரெதிரான(5), 27.முடி(3), 28.சின்னம்(2), 29.நான்கு வகை தேஹங்களில் ஒன்று(3), 30.இதய கமலத்தில் ஸ்ரீஹரியின் பெயர்(4), 31.மகன்(4), 32.வாஸம் அல்லது இருப்பிடம்(3), 33.தெற்கு திசையின் காவலன்(3), 34.மேற்கு திசையின் அதிபதி(4), 35.தூய்மை(3).

**கீழிருந்துமேல்:** 3.கூந்தல்(2), 13.விஸ்வாதி ரூபங்களில் ஒன்று(4), 19.ஒட்டுதல் அற்றவனாக(4), 36.அக்னி(4), 37.பூமி(2), 38.நன்றாக அறியப்படுபவன்(6), 39.சந்திரன்(4). 40.செழிப்பு(5), 41.தம்பி(3), 42.மேற்கு திசையின் பகவத் ரூபம்(5).

## ஹரிதாச விஜயம் - ஆன்லைனில் படிக்க

* www.readwhere.com தளத்திற்குச் சென்று, Search Boxல் 'Haridasa Vijayam' என்று தேடவும்.
* 1 ஆண்டு மின்னிதழ் சந்தா : ரூ.100; தனி இதழ் ரூ.10.
* அங்கேயே 'Subscribe' க்ளிக் செய்து, பணத்தைக் கட்டவும்.
* மாதாமாதம் Readwhere appல் 'Shelf'ல் புது இதழ், பிரதி 25ம் தேதி வெளியாகும்.
* eBook சந்தா பணத்தை எங்களுக்கு அனுப்பக்கூடாது.

தொடர்

## .ஹரிகதாம்ருத ஸ்லோக அர்த்தங்கள்

### கருணா சந்தி - தொடர்ச்சி

மனதொா$^{3}$ளகெ$^{3}$ தானித்து$^{3}$ மனவெ
ந்தெ$^{3}$னிஸிகொம்ப$^{3}$னு மனத$^{3}$ வ்ருத்திக$^{3}$
ளனுஸரிஸி போ$^{4}$க$^{3}$க$^{3}$ளனீவனு த்ரிவித$^{4}$ சேத$^{1}$னக்கெ |
மனவனித்தரெ த$^{1}$ன்னனீவனு
த$^{1}$னுவ த$^{3}$ண்டி$^{3}$ஸி தி$^{3}$னதி$^{3}$னதி$^{3}$ ஸா
த$^{4}$னவ மாள்பரிகி$^{3}$த்தபனு ஸ்வர்க்கா$^{3}$தி$^{3}$ போ$^{4}$க$^{3}$க$^{3}$ள ||6

மனதில் பகவந்தன் இருக்கிறான் என்றால், அவன் அனைவருக்கும், எப்போதும் சுகத்தையே கொடுக்கலாமே, ஜப தப அனுஷ்டானங்களை நாம் செய்வதற்கு நமக்கு மனம் (சிந்தனை) கொடுக்கலாமே, ஏன் அப்படி செய்வதில்லை என்று கேள்வி வரலாம்.

சாத்விக, ராஜஸ, தாமஸ ஆகிய மூன்று வித சேதனர்களுக்குள்ளும் இருக்கும் முக்யபிராணதேவரின் அந்தர்யாமியாகி நின்று, ஸ்ரீஹரி, சாத்விகர்களுக்கு சுக, ராஜஸர்களுக்கு சம்சார துக்கங்களையும், தாமஸர்களுக்கு அபாரமான துக்கங்களையே கொடுக்கிறான்.

ஒரு ஹரிதாசரை பார்த்தால், ஒரு மனிதரைப் பார்க்கிறோம் என்று நினைக்காமல், அவரின் அந்தர்யாமியாக இருக்கும் பிம்பரூபியை சிந்தியுங்கள். அவரது வாயிலிருந்து வரும் பாகவதாதி சாஸ்திர ங்களை கேளுங்கள். அவையே, தத்வோபதேசம், மோட்சத்திற்காக வழி காட்டி என்று நினையுங்கள். அவரின் பாதங்களை தொட்டு வணங்கினால், நமக்கு மோட்சம் கிடைக்கும் என்று நம்புங்கள். அவர் பேசுவதே வேதார்த்த என்று சிந்தனை செய்யுங்கள் -- என்று ஸ்ரீஜகன்னாததாசர் கூறுகிறார்.

இப்படியாக பார்ப்பது அனைத்தும் ஹரிரூபம், பேசுவது அனைத்தும் ஹரி நாமம், கேட்பவை அனைத்தும் பாகவதம், உண்பதெல்லாம் பிரசாதம், தொட்டதெல்லாம் பாகவதர்களின் பாதங்கள், நடப்ப தெல்லாம் பிரதட்சிணை, படுப்பதெல்லாம் நமஸ்காரம், உருண்ட தெல்லாம் அங்கபிரதட்சிணை -- என்கிற இத்தகைய அனுசந்தான

த்துடன், மனவினத்தரே = பகவந்தனிடம் மனதைக் கொடுத்தால், தன்னனீவனு = ஸ்வாமி, தன்னையே கொடுக்கிறான்.

ஸ்ரீவாதிராஜர் சொல்வது:
பாதெயவ கட்டிரோ வைகுண்டக்கெ
பயண நிஸ்சயவாதரே

நான் வைகுண்டம் போகவேண்டும் என்று முதலில் நிச்சயம் செய்துகொள். அதற்கான பாதை எது? பகவந்தனின் நாமஸ்மரணை. அதற்காக, ஹரிதாசர்களின் சேவையை செய்பவனாக ஆகு.

இப்படிப்பட்ட சாதனைகளை செய்பவர்களுக்கு, ஸ்வர்க்காதி போகங்களையே கொடுக்கிறான் ஸ்ரீஹரி என்கிறார் ஸ்ரீஜகன்னாததாசர்.

பரமஸத்[1] புருஷார்த்த[2] ரூபனு
ஹரியு லோக[1]க்கெ[1] யெந்து[3] பரமா
த[3]ரதி[3] ஸது[3]பாஸனெய கை[3]வரிகி[3]த்தப[1]னு தன்ன |
மரெது[3] த[3]ர்மார்த்தக[3]ள காமிஸு
வரிகெ[3] நகு[3]த[1]தி[3] ஷீக்[4]ரதி[3]ந்த[3]லி
ஸுரபத[1]னய ஸுயோத[4]னரிகி[3]த்தந்தெ கொடு[3]திப்ப ||7

சுரப-தனயனான இந்திரனின் மகன் அர்ஜுனன் மற்றும் துரியோதனன் இருவரும் ஸ்ரீகிருஷ்ணனிடம் போருக்கான உதவியைக் கேட்பதற்காக வந்திருக்கிறார்கள்.

ஸ்ரீகிருஷ்ணன் சொல்கிறான் - '18 அக்ஷோஹிணி சைன்யங்கள், அஸ்திர, ஷஸ்திரங்கள் இவற்றை வழிநடத்தியவாறு, பிரம்ம ருத்ரர்கள், இவற்றுடன் நாகாஸ்திரங்கள் மற்றும் பிரம்மாஸ்திரங்கள் அனைத்தையும் ஒருவருக்குக் கொடுக்கிறேன். இன்னொருவரிடம் நானே வருகிறேன் ஆனால், நான் ஆயுதம் ஏந்தி போரிட மாட்டேன். எது, யாருக்கு வேண்டும்?' என்று கேட்டான்.

அந்த மொத்த சைன்யத்தையும் துரியோதனன் கேட்டு வாங்கிப் போக, அர்ஜுனனோ - பரம சத்புருஷார்த்த ரூபனு, ஹரியுலோகக்கெ எந்து - 'ஸ்ரீகிருஷ்ணனே, நீயே எனக்கு வேண்டும், உன் பாதங்களே எனக்கு வேண்டும்' - த்வமேவ ஷரணம் மம, என்று கேட்டான்.

'எவ்வளவு பேர்களை காப்பாற்றிய பாதங்கள் இவை. எவ்வளவு பேர்களின் கர்வ பரிகாரம் செய்த பாதங்கள் இவை. அத்தகைய உன்

பாதங்களை என் ரதத்தின் முன் வை. இந்த பாதங்களே என் வெற்றிக்கு முக்கிய காரணமாக இருக்கப்போகின்றன’ - என்று கூறி ஸ்ரீகிருஷ்ணனை வணங்கினான் அர்ஜுனன்.

இப்படியாக அர்ஜுனன், ஸ்ரீகிருஷ்ணன் மூலமாக 18 அத்தியாய ங்களைக் கொண்ட பகவந்தனின் வாணியான பகவத்கீதையை நமக்குக் கொடுத்தான்.

ஆக, இந்த பத்யத்தின் மூலமாக, நாம் துரியோதனனைப் போல, அஸ்திர, ஷஸ்திர, ராஜ்ஜியம் ஆகியவற்றை பகவந்தனிடம் வேண்டா மல், அர்ஜுனனைப் போல - சத்புருஷார்த்தரூபியாக இருக்கக்கூடிய ஸ்ரீகிருஷ்ணனின் பாதாரவிந்தங்களே வேண்டும் என்று வேண்டு வோமாக என்று ஸ்ரீஜகன்னாததாசர் இந்த பத்யத்தின் மூலம் கூறுகிறார்.

** **திரு.முரளிதர தாசரு, பெங்களூரு**

தொடர்

## கன்னட கிரந்தங்கள் அறிமுகம்

## ஸ்ரீபுரந்தரதாசரின் மானஸ பூஜை

ஸ்ரீபுரந்தரதாசர் நாரத அம்ச சம்பூதர். கர்நாடக சங்கீதத்தின் பிதாமகர் என போற்றப்படுபவர். நவகோடி நாராயணன் என்று பிரசித்தியான வைர வியாபாரியாக இருந்த சீனப்ப நாயக், பாண்டுரங்கனால் ஆட்கொள்ளப்பட்டு, அனைத்தையும் துறந்து குரு ஸ்ரீவியாசராஜரின் அருளுக்குப் பாத்திரமாகி, தாசதீட்சை பெற்று, புரந்தரவிட்டல என்னும் அங்கிதத்தில், கன்னடத்தில் சாகித்யங்களை படைத்த மகானுபாவர். 'தாசரெந்தரெ புரந்தர தாசரய்யா' என்று ஸ்ரீவியாசராஜராலேயே கௌரவிக்கப்பட்டவர். ஸ்ரீஹரியைக் கண்ட அபரோக்ஷ ஞானி. ஸ்ரீவாதிராஜர், ஸ்ரீவிஜயேந்திரர், ஸ்ரீகனகதாசர் ஆகியவர்களின் சமகாலத்தவர். பகவானின் லீலைகள், மகிமைகள், தீர்த்த க்ஷேத்திர யாத்திரைகள், புராண, இதிகாச விஷயங்கள், தேவதைகள் மற்றும் குரு மஹனீயர்களின் துதிப் பாடல்கள், வைராக்கிய பதங்கள் எனப் பலவற்றைப் பற்றியும் பதங்கள், உகாபோகங்கள், சுளாதிகள் என பல வகைகளிலும், லாலி, தாலாட்டு, ஸுவ்வி, ஊஞ்சல் பாட்டு, ஷோபானே என்னும் மங்களப்பாட்டு, தேவர நாம, நிந்தா ஸ்துதி, தண்டகம், கத்யம் (உரைநடை) என பல விதங்களிலும் சுமார் 475,000 படைப்புகளை அளித்து, பக்தியை பரப்பிய மஹனீயர். தியாகராஜர், முத்துஸ்வாமி தீக்ஷிதர் போன்றவர்களுக்கும், ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீகோபாலதாசர், ஸ்ரீஜகன்னாததாசர் போன்றவர்களுக்கும் முன்னோடியாக திகழ்ந்தவர். அவரது படைப்புகள் 'புரந்தரோபனிஷத்' என்று கொண்டாடப் படுகின்றன. பகவானுக்கு செய்யும் பூஜைகளையும், நித்யகர்மா னுஷ்டாங்களையும், பலதரப்பட்ட கிருதிகளில் அளித்துள்ள தாசர், அந்த வரிசையிலேயே, பகவானுக்கு செய்யும் மானஸ பூஜையை (மானசீகமாக செய்யும் பூஜை) வர்ணிக்கும் கன்னட கிரந்தமே 'மானஸ பூஜை' ஆகும்.

பூஜையை நேரடியாக செய்ய முடிந்தாலும், ஆபத்து காலங்களில் முடியாவிட்டாலும் கூட, மானசீக பூஜைக்கு நமது சாஸ்திரம் முக்கிய த்துவம் அளித்துள்ளது. அந்த வகையில் ஸ்ரீபுரந்தரதாசர் இயற்றிய இந்த மானஸ பூஜா விதானத்தில், தாசர், பகவானின் நாமங்களை நாவினால் துதித்து, மனதினால் நினைத்து, பகவானின் திவ்ய கதைகளைக் கேட்டு, ஸ்ரீஹரியை மண்டபத்தில் அமர்த்தி, கோலமிட்டு, துளசி பூஜை செய்து, விளக்கு ஏற்றி, அபிஷேக ஆராதனைகளை

செய்து, ஆபரணங்களால் அலங்கரித்து, மலர்களால் அர்ச்சித்து, நைவேத்யம் செய்து, ஸ்ரீகிருஷ்ணனுக்கு சமர்ப்பணம் செய்யும் வரையிலான மானஸ பூஜா கிரமங்களை வர்ணித்து, இத்தகைய பூஜையைச் செய்பவர்களுக்கு உண்டாகும் பலனைக் கூறி பூர்த்தி செய்துள்ளார்.

முதலில் பல்லவியில், 'நாராயணா உந்தன் நாமம் நாவினிலே, அமிர்த துளி போலே, க்ஷேமத்தைக் கொடுக்கக் கூடியது' என பகவன் நாமத்தின் மகிமையைப் போற்றும் விதமாக, 'நாராயணா! நின்ன நாமவ நெனெது, நாலிகெ துதியலி அம்ருதவ ஸுரிது' எனத் தொடங்கி, பின்னர் ஸ்ரீராமனின் நாமத்தை நினைத்து, அச்சுதனை பக்தியுடன் நினைத்து, பகவானின் நாமங்களையும், பரிபூரண குணங்களை உடையவனின் கதைகளை கேளுங்கள் என்பதாக தாசர், பகவானின் நாமத்தின் மகிமையை கூறி, நாம சங்கீர்த்தனம், ஸ்மரணை, பகவானின் குணங்களைப் போற்றும் கதா ஸ்ரவணம் ஆகியவற்றை செய்யும்படி கூறித் தொடங்குகிறார்.

பகவானின் மானஸ பூஜையை ஆரம்பிப்பதற்கு தயாராகும் விதமாக, குஸும நாபனை மணிமண்டபத்தில் அமர்த்தி, குங்குமம், கஸ்தூரி முதலிய வாசனை திரவியங்களை சேகரித்து, துளசி பிருந்தா வனத்தின் முன்பு கோமயத்தால் மெழுகி, முத்து முத்தாக கோலங்க ளைப் போட்டு, சங்கு, சக்கரம், கதா, பத்மம் ஆகியவற்றை வரைந்து, அலங்கரித்த கிண்ணங்களில் பூஜைக்கு வேண்டிய பொருட்களை சேகரித்து, சகல தீர்த்தங்கள் என்னும் கங்கை நீரில் ஸ்நானம் செய்து, தேவாங்க பட்டு என்னும் அழகிய பட்டாடை உடுத்திக் கொண்டு, அழகான நீர் பாத்திரத்தில் தூய நீரை நிரப்பி, நியமத்துடன் ஸ்ரீகிருஷ்ணதுளசிக்கு நீரை வார்ப்பது முதலான பூஜா காரியங்களை, 'ஸகல தீர்த்தகளெம்போ கங்கெயலி மிந்து, தேவாங்க பட்டவலிய னொகெது, கிண்டிலி உதக ஜாரிலி தும்பி, நேமதிந்தலி ஸ்ரீதுளஸி கெரெது' என்பது முதலான அழகிய பதங்களினால் விவரித்து, பகவானிடத்தில் அனேக ஜென்ம பாவங்களை போக்க வேண்டிக்கொண்டு, அழகிய தூய பஞ்சினால் திரிகளை செய்து, நல்ல காராம்பசுவின் நெய் இட்டு, முத்து, மாணிக்கம் போல மின்னும் அழகிய விளக்குகளை ஸ்வாமியின் மேடையில் வைத்து, 'கோவிந்தா உனக்கு அர்ப்பணம், ஸ்ரீகிருஷ்ணா உனக்கு அர்ப்பணம்' என்று

சமர்ப்பணம் செய்யும் விதத்தை, 'தேவர ஜவலிகெ இதிராகிட்டு, கோவிந்தா நினகர்ப்பிதவெந்து ஸ்ரீகிருஷ்ணா நினகர்ப்பிதவெந்து' முதலிய பதங்களில் வர்ணிக்கிறார் தாசர்.

முன்னாலே பூஜை கிரமங்களை விளக்கும் விதமாக, அபிஷேக, அலங்காரம் மற்றும் அர்ச்சனை செய்யும் விதத்தை வர்ணிக்கும் தாசர், பகவானுக்கு பஞ்சாமிர்த அபிஷேகம் செய்து, ஆசமனங்களை கேசவனுக்குக் கொடுத்து, ஆபரணங்களை ஸ்ரீஹரிக்குக் கொடுத்து, கையில் அணியும் ஆபரணங்களை முராரியான முகுந்தனுக்குக் கொடுத்து, காலில் அணியும் ஆபரணங்களான, அந்திகை, பாடலி (கால் சலங்கை, கொலுசு) முதலானவற்றை கோவிந்தனுக்குக் கொடுத்து, முத்துக்களால் ஆன வங்கிகளை விட்டலனுக்குக் கொடுத்து அலங்கரிக்கும் விதத்தினை, 'ஆசமனங்கள கேசவகிட்டு, ஆபரணங்கள ஸ்ரீஹரிகிட்டு, முங்கை முராரி முகுந்தனிகிட்டு, அந்திகி பாடலி கோவிந்தகிட்டு' போன்ற பதங்களால் வர்ணித்து, மேலும் பாரிஜாதம், சம்பிகை, மல்லிகை, தாழம்பூ, மரிக்கொழுந்து, முதலான வாசனை புஷ்பங்களைக் கொண்டு அர்ச்சிப்பதை வர்ணிக்கிறார் தாசர்.

பின்னர் பகவானுக்கு செய்யும் நைவேத்திய பதார்த்தங்களை, நைவேத்திய கிரமத்தை வர்ணிக்கும் தாசர், அழகான மாணிக்கங்கள் மின்னும் சந்திரன், சூரியனை போல பளபளக்கும் பொன்னால் ஆன தாம்பாளத்தில், சித்திரான்னங்கள், போஜன வகைகளை சமர்ப்பித்து, பாயசம் பட்சணங்களை பரிமாறி, அவற்றை காயத்ரி மந்திரங்களினால் ப்ரோக்ஷணம் செய்து, ஞானத்துடன் பஞ்ச பிராணனான வாயு பகவானை ஸ்மரணை செய்து, நைவேத்திய பதார்த்தங்களை முறையாக சமர்ப்பித்து, 'ஸ்ரீகிருஷ்ணா உனக்கு அர்ப்பணம்' என்று மானஸ பூஜையில் சமர்ப்பணம் செய்வதை 'காயத்ரி மந்த்ரதலி ப்ரோக்ஷிஸி, ஞானதிந்த பஞ்ச பிராணன ஸ்மரிஸி, நைவேத்யங்கள கிரமதிந்த படிஸி, ஸ்ரீகிருஷ்ணா நினகர்ப்பிதவெந்து' போன்ற பதங்களினால் வர்ணிக்கிறார்.

முடிவாக இதன் பல-ஸ்ருதியை கூறும் தாசர், இந்த மானஸ பூஜையை செய்யும் பக்தர்களுக்கு, ஆனந்தமயமான முக்தியை அளிப்பான் ஸ்ரீபுரந்தரவிட்டலன் என ஸ்பஷ்டமாகக் கூறி பூர்த்தி செய்துள்ளார்.

இத்தகைய உயரிய கிரந்தத்தை அனுதினமும், அதன் விசேஷ அர்த்தங்களை தெரிந்து கொண்டு, பாராயணம் செய்து

அனுசந்தானத்துடன் இந்த மானஸபூஜையை செய்து, ஸ்ரீபுரந்தரதாசரின் அந்தர்யாமியான பாரதிரமண முக்யபிராணாந்தர்கத ஸ்ரீஹரியின் அருளுக்கு பாத்திரர் ஆவோமாக.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

** **திரு.S.லட்சுமிபதிராஜா, சென்னை**

****

**(13ம் பக்கத்திலிருந்து தொடர்கிறது)...**

24 நாமங்களுடன் தசாவதார ரூபங்களின் சிந்தனையையும் தருகிறார் தாசர்.

முக்யபிராணன் எப்படி தினந்தோறும் 21,600 ஹம்ஸ மந்திர ஜபங்களை செய்து பரமாத்மனுக்கு அதை அர்ப்பிக்கிறாரோ, அப்படியே ஜீவியும் அந்தந்த காலங்களில் செய்யப்படும் வேலைகளில், பரமாத்மனின் ஸ்மரணையையும் செய்ய வேண்டும் என்று மஹிபதி தாசர் கூறுகிறார்.

** அடுத்த இதழில், அடுத்த பாடல் தொடரும் **

*** **திருமதி. ஜெயம்மா, பெங்களூரு**

தொடர்

**கன்னட தந்த்ரசாரம் - ஸ்ரீவரதேந்திர தீர்த்தர்**

**உரை: திரு.குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்**

அதன்பிறகு, எப்படியோ ஒரு வழியாக பிருந்தாவனம் செய்து முடித்தான். குருராயரின் மகிமையால், அது பிரமாதமாக அமைந்தது. அது குருடனால் செய்யப்பட்டது என்றால் யாராலும் நம்ப முடியாது என்பது போல இருந்தது. அதற்காக அந்த இருவரும் அவனுக்கு சம்பாவனை கொடுக்க, அவனோ அதனை ஏற்க மறுத்தான். தான் செய்த தவறுக்கு வருந்தினான். என்ன ஆச்சரியம்! குருராயரின் அருளால் அவனுக்கு பழையபடி பார்வை வந்தது.

ஊர்மக்கள் அனைவரும் மந்திராலயம் சென்று, ஸ்ரீவரதேந்திரரை அந்த மிருத்திகா பிருந்தாவனம் பிரதிஷ்டை செய்வதற்கு அழைத்தனர். அவர் அவர்களுக்கு மிருத்திகையை கொடுத்தார். அவர்கள், நடந்தே அதனைக் கொண்டு வந்து, பிருந்தாவனம் அருகில் வைத்தனர். 1783ம் ஆண்டு (6-2-1783) ஸ்ரீவரதேந்திர ஸ்வாமிகள், அந்த சென்னகிரி பிருந்தாவனத்தை பிரதிஷ்டை செய்தார். இன்றும் அந்த இருவரின் வம்சத்தினர், அந்த பிருந்தாவன சேவையை செய்து வருகிறார்கள்.

ராய்ச்சூர் அருகில் லிங்கசுகூர் என்னும் ஊர் உள்ளது. அங்கு ஸ்ரீஜகன்னாததாசரின் முதல் சிஷ்யர் ஸ்ரீபிராணேஷ தாசரின் வீடு உள்ளது. அவர் ஸ்ரீவரதேந்திர ஸ்வாமிகளின் ப்ரிய சிஷ்யர். அவர், ஸ்வாமிகளை தன் வீட்டுக்கு வரவழைத்து, பல நாட்கள் சேவை புரிந்தார். ஸ்வாமிகள் அந்த ஊரை விட்டு கிளம்பும் முன்னர், தன்னிடம் உள்ள அனைத்து சொத்துக்களையும் ஸ்வாமிகளுக்கு தானம் அளிக்க முன்வந்தார்.

ஸ்வாமிகளோ தனக்கு எதுவும் வேண்டாம் என்று கூறி, நிராகரித்து விட்டு, புழக்கடையில் உள்ள ஒரு சிறு இடத்தை மட்டும், நான் கேட்கும்போது எனக்குக் கொடு என்று கூறிச் சென்றார். ராம சாஸ்திரிகளை வென்றபிறகு, அவரின் அரண்மனையை தன் மடமாக மாற்றி, அங்கேயே (புனேவில்) வசிக்கத் துவங்கினார். 1785ம் ஆண்டு விஸ்வாவஸு ஆண்டு, ஆஷாட சுத்த சஷ்டியன்று, புனேவில் பிருந்தாவனஸ்தர் ஆனார். அவருக்குப் பின், ஸ்ரீபுவனேந்திர தீர்த்தர் பட்டத்திற்கு வந்தார்.

இதன் பின், சில நாட்கள் கழித்து, லிங்கசுகூரில் உள்ள பிராணேஷ தாசரின் கனவில் தோன்றி, தான் ஒரு உருவில் அவர் வீட்டில் எழப் போவதாகவும், தான் ஏற்கனவே கேட்ட, புழக்கடையில் வைக்கோல் போர் வைக்கும் இடத்தில், தான் வந்து அமரப் போவதாகவும் கூறினார். என்ன ஆச்சரியம்! மறு நாள், அந்த இடத்தில் ஒரு ஆள் உயரத்திற்கான ஒரு துளசி மரம் இருந்தது. அதுதான் ஸ்ரீவரதேந்திரரின் மறுவடிவம் என்று நினைத்து, அங்கு பிருந்தாவனம் அமைத்தார்கள். புனேவிலிருந்து குருவின் பாதுகைகளும் எப்படியோ வந்து சேர்ந்தன. இப்படியாக, புனேவில் மூல பிருந்தாவனமும், லிங்கசுகூரில் ஸ்வப்ன-பிருந்தாவனமும் அமைந்தன.

இவர் இவற்றிய நூல்களில் இரண்டே இரண்டுதான் நமக்குக் கிடைத்துள்ளன. ஒன்று, கன்னடத்தில் இயற்றப்பட்ட தந்திரசாரம். மற்றொன்று சம்ஸ்கிருதத்தில் இயற்றப்பட்ட தேவபூஜா பத்ததி. இப்போதும் ஸ்வாமிகள், அந்த பிருந்தாவனங்களில் இருந்துகொண்டு, தனது பக்தர்களுக்கு அருளிக்கொண்டு உள்ளார்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

## ஸ்ரீவரதேந்திர தீர்த்தர் இயற்றிய கன்னட தந்திரசாரம் - ஓர் அறிமுகம்

தந்த்ரம் என்றால் என்ன? 'தமநாதி த்ராயதே சேதி தந்த்ரம்' என்பதே நிருக்தி. 'வெளிப்படுத்துகிறது, காக்கிறது என்பதே தந்த்ரம்'. மந்த்ரம் என்றால் மனனத்தால் காப்பது என்று பொருள். அதை மனதில் திரும்பத்திரும்ப நினைக்கிறோமோ, அதுவே மந்திரம். மந்திரம் எதை வெளிப்படுத்துகிறதோ, அதை முறைப்படி தெரிந்துகொண்டு செய்வதே தந்திரம்.

தந்திரங்களில் பல வகைகள் உண்டு. பாஞ்சராத்ர வைஷ்ணவ தந்த்ரம், வைகானஸ வைஷ்ணவ தந்த்ரம், சைவ தந்த்ரம், சாக்த தந்த்ரம் என இப்படி பல விதமான தந்த்ரங்கள் வெவ்வேறு தெய்வ உபாசனைகளுக்காக உள்ளன.

அந்த தந்த்ரசார நூல்களில், பல தெய்வங்களின் மந்த்ரங்கள், அதை ஜெபிக்கும் முறை, ஜெபிப்பதற்கு முன்னும் பின்னும் செய்ய வேண்டிய க்ரியைகள், மந்திரங்களின் மகத்துவங்கள், பெருமைகள், சிலை வழிபாடு முறைகள், கோயில்கள் கட்டும் முறை, உற்சவம் செய்தல், பூஜை செய்தல் போன்ற பல விஷயங்கள் கூறப் பட்டிருக்கும். அப்படிப்பட்ட ஒரு பெரிய 'தந்த்ர சரம்' என்னும் கிரந்தத்தை பகவந்தனே, ஸ்ரீஹயக்ரீவ ரூபத்தில் செய்து, நான்முக பிரம்மனுக்கு உபதேசித்தார் என்று வேதாகமங்கள் சொல்கின்றன. அந்தகோ! அந்த நூல் இந்த உலகில் இப்போது காணப்படுபவதில்லை.

நான்முகக் கடவுளுகு இணையான சக்தி, பலம், ஞானம், பக்தி ஆகியவற்றைக் கொண்டுள்ள ஸ்ரீமுக்யபிராணரான வாயுதேவர், மதவ அவதாரம் செய்தபோது, சம்ஸ்கிருத மொழியில் அந்த மூல 'தந்த்ர சாரத்தை' அடியொற்றி, 'தந்த்ரசார சங்க்ரஹம்' (தந்த்ரசார சுருக்கம்) என்னும் கிரந்தத்தை நான்கு அத்தியாயங்களில், 402 ஸ்லோகங்களில் இயற்றியுள்ளார். அதில் எட்டு மந்திரங்கள் (அஷ்ட மஹா மந்திரங்கள்), தேவபூஜை விதானங்கள், கலசபூஜை செய்யும் முறை, ஹோமங்கள் செய்யும் முறை, ஹோமகுண்டங்கள் இவைகளை அமைக்கும் பிரிவுகள், முறைகள், நைவேத்திய சமர்ப்பண விதிகள், சிலைகள் வடிக்கும் கலை, சிலைகள் எந்த லட்சணங்களுடன் இருக்க வேண்டும், கோவில்கள் எப்படி நிர்மாணிக்க வேண்டும், பிரதிஷ்டை முறைகள், உற்சவங்கள், அதன்பின், அனைத்து தெய்வங்களின் மந்திரங்கள், அவற்றை ஜெபிக்கும் முறைகள் ஆகியவற்றை சொல்லி, கடைசியில் அந்த நூலின் பயன்களைக் கூறியுள்ளார்.

அந்த கிரந்தமானது, மாத்வர்களுக்கு மிகவும் பொக்கிஷமான நூல். அதை அனுசரித்தே, மாத்வ கோயில்கள், மடங்களில் பூஜை புனஸ் காரங்கள் நடக்கின்றன. இதைப்போல, வெவ்வேறு இந்து பிரிவு களுக்கும், அவர்களுக்கே உரிய தந்த்ர முறைப்படியே வழிபாடுகள் நடத்தி வருகிறார்கள்.

ஸ்ரீஜகன்னாததாசர், தமது குருவான ஸ்ரீவரதேந்திர ஸ்வாமிகளிடம், இந்த தந்த்ரசார சங்க்ரஹத்தை பேசுமொழியான கன்னடத்தில் இயற் றும்படி கேட்டுக் கொண்டார். அதற்காக, ஸ்ரீஸ்வாமிகளும், 29 சிறிய செய்யுட்களில், இந்த கன்னட தந்த்ரசாரத்தை கிருதி வடிவில், மத்யமாவதி ராகத்தில் இயற்றினார். ஸ்ரீமத்வாசார்யரின் சம்ஸ்கிருத

'தந்த்ரசார சங்க்ரஹத்தின்' முதல் இரு அத்தியாயங்களை அடிப்படை யாகக் கொண்டு, இதனை ஸ்வாமிகள் இயற்றியுள்ளார்.

இந்த செய்யுட்களில் அஷ்ட மஹா மந்திரங்கள், அவை வெளிவந்த விவரம், அதன் பெருமைகள் மற்றும் சில விளக்கங்கள் மட்டும் கூறப்பட்டுள்ளன.

இந்த 'ப்ராக்ருத தந்த்ரசாரம்' எனக்கு சமீபத்தில் கிடைத்தது. இதில் ஸ்ரீமத்வாசார்யர் தந்த்ரசாரத்தில் கூறியதை எவ்வளவு எளிமையாக, சுருக்கமாக ஸ்ரீவரதேந்திர ஸ்வாமிகள் கூறியுள்ளார் என்பதை பார்க்கலாம்.

நான் என் சிற்றறிவுக்கேற்ப, மூல பத்யங்கள், தமிழ் மொழிபெயர்ப்பு, சில கடின பதங்களின் விளக்கங்கள் மற்றும் விரிவுரை, அது சம்ஸ் கிருத மூலத்தில் எப்படி உள்ளது என்பதை மிகச் சுருக்கமாக தொகுத்துக் கொடுத்துள்ளேன். குற்றங்கள், குறைகள், இலக்கண தவறுகள் இருந்தால், அவை அடியேனின் அறியாமை என்றறிந்து, மன்னிக்கவும். ஏதாவது, நல்லது காணப்பட்டால், அவை குருராஜரின் கருணை என்று உணர்ந்து, என்னை ஆசிர்வதியுங்கள்.

இப்படிக்கு,<br>
ஹரிதாச பாத பாம்ஸு<br>
குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்

ஸ்ரீஸ்ரீ வசுதேந்திர தீர்த்த கரகமல சஞ்சாத<br>
ஸ்ரீஸ்ரீ வரதேந்திர தீர்த்த க்ருத ப்ராக்ருத தந்த்ர சார ||

ஸ்ரீஸ்ரீ வசுதேந்திர தீர்த்தரின் திருக்கர தாமரையில் தோன்றிய<br>
ஸ்ரீஸ்ரீ வரதேந்திர யோகி இயற்றிய கன்னட தந்த்ர சாரம்.

பாஹி பங்கேருஹேக்ஷண சர்வகாமத<br>
பாஹி பத்மாலய நிகேதன ஸதா ||

காப்பாய் தாமரைக் கண்ணா, எல்லாம் அருள்பவரே,<br>
காப்பாய் திருமகள் வாழ் மார்ப, எப்போதும் ||

ஸ்ரீவரதேந்திர தீர்த்த யோகி, நூல் ஆரம்பத்தில், இறைவனை 'கடவுள்பா' வடிவில், பல்லவியில் துதிக்கிறார். எந்த நூல் இயற்றும்போதும், அது நன்றாக முடிய வேண்டும் என்றும், எந்த தடைகளும் இடையில் வரக்கூடாது என்பதற்காக, 'கடவுள்பா' படைக்கும் வழக்கம் பல காலமாக உள்ளது. அதுவே இங்கும் செய்யப்பட்டுள்ளது.

ஆண்டவனை காப்பாற்று என்று இறைஞ்சுகிறார். பங்கேருஹேஷண என்றால் தாமரைக் கண்ணன் என்று பொருள். சர்வகாமத - இஹ பரங்களில் உள்ள அனைத்து சுகங்களையும் அருள்பவன் என்று பொருள். பத்மாலய நிகேதன என்றால் தாமரையில் வசிக்கும், அல்லது, தோன்றிய இலக்குமியை, தன் மார்பில் தரித்தவன் - ஸ்ரீனிவாசன் என்று பொருள்.

தாமரையில் தோன்றிய பிரம்மன், இறைவனின் நாபியை தன் இருப்பிடமாகக் கொண்டுள்ளார். ஆகையால், இது பிரம்மனின் துதியும் ஆகும். இந்த தந்த்ரசாரத்தை ஸ்ரீஹரி, பிரம்மனுக்கு உபதேசம் செய்துள்ளார்.

ஆகையால், நூலாசிரியர், ஸ்ரீஹரி மட்டும் துதிக்காமல், ஸ்ரீதேவி, பிரம்மன் இவர்களையும் மறைமுகமாக, தாரதம்ய ரீதியில் துதித்தது போற்றத்தக்கது. இதையே அடுத்த பாடலில் மேலும் விவரிக்கிறார். இதுவும் ஹரித்துதியே. அடுத்த பாடலும் ஹரித்துனியே. இவற்றில் இதர தெய்வங்களும், மறைமுகமாக தாரதம்ய முறையில் துதிக்கப்படுகிறார்கள். (தொடரும்)...

**∗∗ திரு.குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்**

**Subscription Renewal**

உங்கள் சந்தாவை சரியான நேரத்தில் புதுப்பித்துக் கொள்ளவும். ஹரிதாச விஜயம் இதழை தொடர்ந்து பெற்று, உங்கள் ஆதரவை வழங்கவும்.

ஆராதனை



## ஸ்ரீகுருஸ்ரீஷ விட்டலதாசர்

## மார்கசிர அமாவாசை

குருஸ்ரீஷமஹம் வந்தே குரு தத்வ விபோதகம் ।
குஹாஷயம் குணாதீதம் பாவயந்தம் மஹாமதிம் ॥

இயற்பெயர் : ஸ்ரீநரசிம்ம. தந்தை : ஸ்ரீ தம்மண்ணரஸய்ய. பிறந்த இடம் : கனககிரி. காலம்: 1745 - 1820. வம்சம் : ஷாஷ்டீர. கோத்திரம் : கௌஷிக. ஸ்வரூபோத்தாரகர் : ஸ்ரீஜகன்னாததாசர். அங்கித உபதேசம்: ஸ்ரீஸ்ரீஷவிட்டல தாசர். ஆராதனை : மார்கசிர அமாவாசை.

ஸ்ரீகுருஸ்ரீஷ விட்டலதாசரின் குரு பரம்பரை: ஸ்ரீஜகன்னாத தாசர் -> ஸ்ரீதவிட்டலதாசர் -> ஸ்ரீஸ்ரீஷவிட்டலதாசர் -> ஸ்ரீகுருஸ்ரீஷவிட்டலதாசர்.

தாஸர நெரெனம்பிரோ - குரு
ஸ்ரீஷ தாஸர நெரெனம்பிரோ ।
தாஸர நெரெ நம்பி லேஸு பொண்டிஸி மனத
க்லேஷவ களதபிலாஷெ பூரெயிஸுவ ॥ ப

ஸுரதேனு மனெயொளகிரலு மஜ்ஜிகெ பயஸி
பரரல்லி போகி பாயி தெரெவுத்யாதகெ ஹரி ॥1

அக்ஷயாத்ம கல்பவ்ருக்ஷ தானிருதிரெ
குக்ஷிகோஸுக போகி பிக்ஷா பேடுவுத்யாகெ ॥2

ஸந்ததா கையொளு சிந்தாமணியு யிரலு
ப்ராந்தனாகி அன்ய சிந்தெ மாடுவத்யாதகெ ॥3

ஸுரநதி மனெ முந்தெ பரியலு உதககெ
வரதியாதெகுவா ப்யாஸரத தாவதியாகெ ॥4

துதுபத்யாதகெ பளரா ப்ரதிதினதலி - லட்சுமி
பதிவிட்டலன பாதாஸ்ரீதரெ பகுதியலி ॥5

**

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

## ஹரபனஹள்ளி பீமவ்வா

(பீமேஷ கிருஷ்ணவிட்டலா)

ஆண்டு: 1822-1903

நாரதாதாப்த ஸத்போதா ஸாத்வீம் ஸாஹித்யகாரிணி ।
பீமேஷ கிருஷ்ணம் நிரதம் வந்தே பீமத்வ மாதரம் ॥

ஹரபனஹள்ளி அவ்வ கமலாக்ஷி கிருஷ்ணவ்வ நிரக்ஷர குக்ஷியாகி ரசிஸிதெ பஹு காவ்ய ।
வர மங்களாங்க ஹரிவிட்டலன பாந்தவ்ய நிரந்தர ஒதகிஸீ பொரெயெ நம்மவ்வ ॥

ஹோஸ்பேட் தாலுக்கை சேர்ந்த நாராயணதேவரகெரெ என்னும் கிராமத்தில் ரகுநாதாசார்யர் மற்றும் ராகம்ம என்னும் தம்பதி இருந்தனர். அவர்களின் மூத்த மகள் கமலாக்ஷி. நன்றாக புஷ்டியுடன் இருந்ததால் அக்குழந்தையை, பீமாபாய் / பீமவ்வா என்று அழைத்து வந்தனர். நாளடைவில் பீமவ்வா என்ற பெயரே அவளுக்கு நிலைத்துவிட்டது. நாராயணதேவரகெரெ என்னும் அந்த கிராமம், துங்கபத்ரா அணை கட்டும்போது மறைந்துவிட்டதைப் போல, கமலாக்ஷி என்னும் பெயரும் மறைந்துவிட்டது. பிறந்த குழந்தைக்கு உடம்பு முழுவதும் சக்கரங்கள் மற்றும் இரு கால்களில் பத்மங்கள் தெளிவாகத் தெரிந்தனவாம். பிறகு, அவர்கள் ஹரபனஹள்ளியில் வசித்து வந்தனர்.

பீமவ்வாவின் தாய் வழித் தாத்தா, ஜோயிஸ் வெங்கப்பாசார்யர் ஹரிதாசராக இருந்து எப்போதும் ஹரி நாமஸ்மரணை செய்து கொண்டிருந்தார். இந்த சூழ்நிலையிலேயே குழந்தை பீமவ்வா வளர்ந்து வந்தாள். சிறியவளாக இருந்ததிலிருந்தே, பீமவ்வாவுக்கு நினைவுத்திறன் அபாரமாக இருந்தது. அவள் ஒரு வயது குழந்தையாக இருந்தபோது, அவள் படுத்திருந்த தொட்டிலுக்கு ஒரு பாம்பு வந்து சுற்றிக்கொண்டது. வீட்டினர் அனைவரும் பயத்துடன் ஓடி வந்து, குழந்தையை எடுத்து சமாதானம் செய்தனர்.

இரண்டாம் வயதின் பிறந்த நாளன்று, அக்குழந்தைக்கு தங்கத்தில் தலையில் சூடும் ஆபரணத்தை செய்து அலங்கரித்தனர். ஒரு நாள்

இரவில் படுத்திருந்தபோது, குழந்தை எழுந்து 'தேள், தேள்' என்று அலறினாள். அனைவரும் ஓடி வந்து பார்த்தனர். ஆனால் தேள் காணப்படவில்லை. பிறகு அக்குழந்தையே தன் தலை ஆபரணத்தில் மறைந்திருந்த தேளைக் காட்டினாள்.

பீமவ்வாவிற்கு நான்கு வயதானபோது, அந்த ஊருக்கு ஒரு ராணுவப் படை வந்திருந்தது. அதில் இருந்த ஒரு சிப்பாய், தங்க ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்த இக்குழந்தையை அபகரித்துப் போனான். சிறிது தூரம் போகையிலேயே, அவனுக்கு இரு கண்களும் தெரியவில்லை. பிறகு, பீமவ்வாவிடமே வழி கேட்டு, திரும்ப அவள் வீட்டிற்கே கொண்டு வந்து விட, பிறகு அவனுக்கு கண்கள் தெரிய ஆரம்பித்தது.

பீமவ்வா ஆறு வயதாக இருந்தபோது, ஒரு முறை தன் தாத்தாவுடன் அமர்ந்து பஜனை செய்து கொண்டிருந்தாள். அப்போது அங்கு திடீரென்று ஒரு பெரிய ஒளி தோன்றி மறைந்தது. 'பார், இந்த ஒளியில் வேதவியாசர் வந்து உன்னை அருளியிருக்கிறார்' என்று தாத்தா கூறினார். அன்றிலிருந்து, அவளுக்கு விளையாட்டுகளில் விருப்பமே இல்லாமல் போயிற்று. எந்நேரமும் பஜனை செய்வது, தேவரநாமங்களின் அர்த்தம் அறிவது, இவற்றிலேயே பீமவ்வாவிற்கு ஆசை இருந்தது. ராம-சீதை, கிருஷ்ண-சத்யபாமா ஆகிய தம்பதிகளின் பிரிவுகளை விளக்கும் பாடல்களைக் கேட்டால், அவளுக்கு அழுகை வந்தது.

பீமவ்வாவின் 11வது வயதில் அவளுக்கு, ஹரேஸமுத்ர கிராமத்தின் முனியப்பா என்பவருடன், சம்பிரதாயப்படி திருமணம் நடந்தது. 45 வயதான முனியப்பனுக்கு இது நான்காம் திருமணம். அன்றைய வழக்கப்படி, கணவனின் வீட்டில் இவளின் பெயர் கிருஷ்ணாபாய் என்றானது. திருமணம் முடிந்து, 14 ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு ஆண் குழந்தையும், அடுத்து நான்கு ஆண்டுகளில் ஒரு பெண் குழந்தையும் இவர்களுக்குப் பிறந்தது. ஆண் குழந்தைக்கு சுப்பராய என்றும், பெண் குழந்தைக்கு சுப்பாபாய் என்றும் பெயர் வைத்தனர்.

பிறகு ஒரு சமயத்தில், வீட்டில் கஷ்டகாலம் துவங்கியது. இவர்களுக்கு ஏழ்மை வந்தது. கஷ்டத்திலும் கஷ்டமாக, முனியப்ப ஹரிபாதம் அடைந்தார். 36 வயதான பீமவ்வா, அன்றைய கால வழக்கப்படி மடி உடுத்திக் கொண்டாள். சிறிய குழந்தைகளை வளர்ப்பதற்கு மிகவும் கஷ்டப்பட்டாள். இத்தகைய கஷ்டங்கள் அனைத்தையும் மறப்பதற்கு நல்ல மருந்து - ஹரிநாம பஜனை. மற்றும் தேவ, பிராமணர்களின் சேவையையே தன்னுடைய உயிர்மூச்சாக ஆக்கிக் கொண்டாள்.

ஒரு நாள் இரவு படுத்திருந்தபோது, நாரதரின் ஆணைப்படி, ஒரு கிருஷ்ண சர்ப்பம் வந்து, பீமவ்வாவின் நாக்கின் மேல் மூன்று பீஜாக்ஷரங்களை எழுதியதைப் போல இருந்தது. அடுத்த நாளிலிருந்து, தாமாகவே பாடல்கள் சிந்தனைக்கு வரத்துவங்கின. ஆனால், அந்த பாடல்களை பாடுவதற்கு வெட்கப்பட்டு, பாடாமல் விட்டதால், அவருக்கு வயிற்றுவலி துவங்கியது. வீட்டிலும் யாரும் அவளை பாடச் சொல்லவில்லை. 'பாடாதே' என்றும் கூறினர். வயிற்றுவலி பெரும் வலியாயிற்று. அதைக்கண்ட பின் அவர்களே, இவரை 'பாடல்களைப் பாடவும்' என்றனர்.

வீட்டில் பகவந்தனின் முன் கைகுவித்து நின்று பாடியபோது அவரின் வயிற்றுவலி தீர்ந்து, அவர் சகஜ நிலைக்கு திரும்பினார். அடுத்து பாடல்களைப் பாடும்போதெல்லாம், தமக்கு அங்கிதம் இல்லையே என்று கவலைப்பட்டார். அப்போது ஒரு நாள் இரவு இவரது கனவில், நாரதர் மூலமாக 'பீமேஷ கிருஷ்ண' என்னும் அங்கிதம் இவருக்குக் கிடைத்தது.

தாய் வீட்டுப் பெயர் பீமாபாய் மற்றும் கணவன் வீட்டுப் பெயர் கிருஷ்ணாபாய் இந்த இரண்டும் சேர்ந்து, பீமேஷகிருஷ்ண என்று அங்கிதம் கிடைத்தது போல ஆயிற்று. மிகவும் மகிழ்ச்சி அடைந்தார். அங்கிதம் கிடைப்பதற்கு முன்னர் இவர் இயற்றிய ஒரேயொரு பாடல் 'ரக்ஷிஸபேகென்ன லக்ஷ்மி நரஸிம்ஹன பக்தனெனிஸித பவானி பதி'. இது கையெழுத்துப் பிரதியாக கிடைக்கிறது என்று அறிஞர்கள் சொல்கிறார்கள். அங்கிதம் கிடைத்தபிறகு பாடிய முதல் பாடல், 'யாதகவனியொள் ஜனிஸிதெ நானு ஸார்த்தகேனு நீதியில்லத மாதலி கால களெவெ நானு கோதி ஸார்த்தகேனு' என்று தன்னுடைய பிறவியைப் பற்றி இதில் சொல்லியிருக்கிறார். (தொடரும்)..

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள 'திளிது' பஜிஸுவுதே

மலர் 2 : இதழ் 4

**நிர்வாக ஆசிரியர்**
'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross, JP Nagar
4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276.
haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**
'தாச சாகித்ய சேவா ரத்ன'
திரு குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**
திரு. முரளிதர தாசரு,
திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா,
திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

## ஆராதனை — ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்

**பிப்ரவரி 1 முதல் 28 வரை, 2021**

புஷ்ய பகுள சப்தமி - ஸ்ரீநரஹரி தீர்த்தர் (ஹம்பி)
புஷ்ய பகுள சப்தமி - ஸ்ரீஅபினவ பிராணேஷவிட்டல தாசர் (லிங்கசகூர்)
புஷ்ய பகுள அஷ்டமி - ஸ்ரீகோபாலதாசர் (உத்தனூர்)
புஷ்ய பகுள ஏகாதசி - ஸ்ரீரமாகாந்தவிட்டல தாசர் (பெங்களூரு)
புஷ்ய அமாவாசை - ஸ்ரீபுரந்தரதாசர் (ஹம்பி)

# ஆசிரியர் பக்கம்

இந்த மாதம் இரு முக்கிய ஹரிதாசர்களின் ஆராதனை நாட்கள் வருகின்றன. ஸ்ரீபுரந்தரதாசர் மற்றும் ஸ்ரீகோபாலதாசர். ஸ்ரீபுரந்தரதாசரின் கிருதிகள் 'புரந்தரோபனிஷத்' என்று பெயர் பெற்றால், ஹரிதாச சாகித்யத்தின் மேரு கிருதியான 'ஹரிகதாம்ருதசாரம்' வருவதற்கு முக்கிய காரணமான இருந்தவர் ஸ்ரீகோபாலதாசர். இந்த நாட்களில் மிகவும் விசேஷமாக அவர்களை சிந்தித்து, அவர்களின் அந்தர்யாமியான விட்டலன் நமக்கு ஞான, பக்தி, வைராக்யங்களைக் கொடுக்கட்டும் என்று வேண்டுக் கொள்வோம். ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

**கன்னடம்**

**அருஞ்சொற்பொருள்**

**கடினமான சொற்களின் அர்த்தங்கள்**

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

1. க$^2$க$^3$வர = கருடன். 2. போ$^3$த$^4$ = ஞானம். 3. தி$^3$னப = சூரியன். 4. காலாதீத = காலத்தை வென்றவன் (ஸ்ரீஹரி). 5. காஞ்சன = தங்கம். 6. கு$^3$ஹ = ஸ்கந்தன். 7. குஹபித = ருத்ரர். 8. குஹ பித சக = விஷ்ணு. 9. வைரி. 10. வைரோசன = இந்திரன்.

தொடர்

## கோவிந்தாஷ்டகம்

**இயற்றியவர்: ஸ்ரீகுருகோவிந்தவிட்டலதாசர்**

ஹ்ருத்க3த தமனாஷ கோவிந்த । என்ன
ஹ்ருத்கு3ஹதொ3ளு தோரோ கோவிந்த ।।ப

அலவ மஹிம ஹரி கோவிந்த ।
நம்ம அலவ போ4த3ர ப்ரீய கோவிந்த
ஆலயதொளு நில்லோ கோவிந்த । ஹ்ரு
தா3லயத3லி தோரோ கோவிந்த ।।1

இக்ஷுசாபன பிதனெ கோவிந்த । நீ
னிக்ஷுத4ன்வாரினுத கோவிந்த ।
ஈக்ஷிஸோ கருணதி கோவிந்த । நீ
நீக்ஷிஸலோஷவேனோ கோவிந்த ।।2

உரக3சயனனே கோவிந்த । நம்ம உரக3ராய வைகுண்ட2 கோவிந்த ।
ஊரூரு சரிஸிதெ3 கோவிந்த । நி
ம்மூரிகெ கரெதொ3ய்யோ கோவிந்த ।।3

ருகா3தி த்ரயிமயி கோவிந்த । ஹரி ருக்3வினுதனெ குரு கோவிந்த ।
ரூக்ஷ சத்வினுதனெ கோவிந்த । ஹரி
ரூகார ப்ரதிபாத்3ய கோவிந்த ।।4

ஏதத்தெனிஸியு ஹ்ருத்க3 கோவிந்த । நீ
நேதகெ காணெயாகி3ஹெ கோவிந்த ।
ஐததாத்மயைக சர்வ கோவிந்த । நீ னைதருவுது மனகெ கோவிந்த ।।5

ஓதப்ரோதனெ ஜக3தி கோவிந்த । நீ
ந்னோதத்வனெ திளிஸோ கோவிந்த ।
ஔதணித்தளெ ஸதி கோவிந்த । நீ
நௌதுஹொண்டிஹதேகோ3 கோவிந்த ।।6

அங்காங்கி பா4வதி3 கோவிந்த । நீ நங்காங்கதி க்ரீடி3பெ கோவிந்த ।
அஹரஹர்மனத3லி கோவிந்த । நீ

அஹரஹர்விஹரிஸோ கோவிந்த ||7

கபிலாத்ம ஶ்ரீஹரி கோவிந்த | நம்ம கபிவர பூஜ்யனெ கோவிந்த |
க2பதிக3மன குரு கோவிந்த | ஜக
க2ர்ப்பர ஸீளித கோவிந்த ||8

க3ருடத்வஜனெ பாரோ கோவிந்த | ஜக க3ருவவ களெயோ கோவிந்த |
க4ர்மாஸ ஸமந்தாது கோவிந்த | சூக்த
க4ர்மக்கெ விஷயனெ கோவிந்த ||9

ஙகார பிரதிபாத்ய கோவிந்த | பா ங்தவு ஜகவெல்ல கோவிந்த |
சர்மதொளுத்கீ3த கோவிந்த | இத்து
சர்ம லாவண்யத கோவிந்த ||10

சந்தஸ்ஸினின்சன்ன கோவிந்த | நாகி3 சந்தோபிதனெனிபெ கோவிந்த|
ஜங்க3ம சரவ்யாப்த கோவிந்த | நம்ம
ஜங்கு3ளிகள களெயோ கோவிந்த ||11

ஜஷ ரூபி கமட2னெ கோவிந்த | நம்ம
ஜஷ கேதுபித காயோ கோவிந்த |
ஞான ஞேய ஞாத்ரு கோவிந்த | ப்ர
ஞான க4னனெனிபெ கோவிந்த ||12

டங்கி எம்புவனெ கோவிந்த | நம்மா டங்கவ களெயோ கோவிந்த |
ட2க்கு ட2வளிகார கோவிந்த | நம்ம
ட2க்கிஸி ஹாகதி3ரோ கோவிந்த ||13

ட3ரகோ ட3யார்பித கோவிந்த | நம்மெ
ட3ரனு பரிஹரிஸொ கோவிந்த |
ட4ண ட4ண நாததி கோவிந்த | பலு
ட4ணிரெம்போ வாத்3யதி3 கோவிந்த ||14

ணநாம வாச்யனெ கோவிந்த | ப்ர ணமன மாடுவெனோ கோவிந்த |
தருணார்க்க ப்ரபெ4ய கோவிந்த | நம்ம
தருணி த்ரௌபதிவரத கோவிந்த ||15

த2ரத2ரவர்ணனெ கோவிந்த | ப3ல்ப்ரம த2ன ஷீலனெ குரு கோவிந்த |
த3ர கம்புத4ரனெ கோவிந்த | த்ரி
த3ஷர பரிபால கோவிந்த ||16

6 - ஹரிதாச விஜயம் - பிப்ரவரி 2021

த4ர்மஸூ கோப்தனெ கோவிந்த | ஸ த்த4ர்மனாமக குரு கோவிந்த |
நரெயணாபித குரு கோவிந்த | நம்ம
நரஸக2னெனிஸிஹெ கோவிந்த ||17

பரமபுருஷ குரு கோவிந்த | காயோ பரமானந்த ப்ரதனெ கோவிந்த |
ப2லரூபனு நீனெ கோவிந்த | இதெ
ப2லிதார்த்தவோ குரு கோவிந்த ||18

ப3கெ ப3கெ கர்மகள் கோவிந்த | மாடி ப3கெ ப3கெ லீலனெ கோவிந்த |
ப4ர்க3ரூபியெ குரு கோவிந்த | நம்ம
ப4ர்மக3ர்ப்பன பித கோவிந்த ||19

மதஜனகமஜ்ஜதி கோவிந்த | நம்ம மதன கோபாலனெ கோவிந்த |
யக்ஞபுக்யக்ஞனெ கோவிந்த | மத்தெ
யக்ஞஸாதன நீனெ கோவிந்த ||20

ரணதொளர்ஜுன பால கோவிந்த | ஹர ரணவனெகளெயோ கோவிந்த|
லவகுஷ பிதனெனிப கோவிந்த | நீன
லவபூர்ண மஹிம கோவிந்த ||21

வர்ணக3ள் த்4வனிக3ளு கோவிந்த | சர்வ வர்ணிபுது நின்ன கோவிந்த |
ஷரோ அபி4த4 ஜீவன்ன கோவிந்த | மீடி1
ஷரீராக்2யனெனிஸுவெ கோவிந்த ||22

ஷட்குண பரிபூர்ண கோவிந்த | நீனெ
ஷட்வாதி ஸ்வர வ்யாப்தி கோவிந்த |
ஸத்தாதி ப்ரதரூபி கோவிந்த | நீனெ
ஸத்தத்வ ப்ரதிபாத்3ய கோவிந்த ||23

ஹரிஹரி எந்தரெ கோவிந்த | பாப ஹரிசூவி நீனெ கோவிந்த |
ளாளுக ஆபி4த4 கோவிந்த | காயோ
ளகார ப்ரதிபாத்3ய கோவிந்த ||24

க்ஷமிஸென்ன அபராத கோவிந்த | ப3லி
க்ஷமெயனளெத குரு கோவிந்த |
க்ஷமக்ஷாமாபி4த குரு கோவிந்த | நீ ல
க்ஷுமி சஹ நெலெஸோ கோவிந்த ||25

ஞானகம்யனெ குரு கோவிந்த |தத்வ ஞானவ பாலிஸோ கோவிந்த|
ஞானிகெ ப்ரியதம கோவிந்த |நினகெ
ஞானி ஜனரு ப்ரியரு கோவிந்த ||26

ஏக பஞ்சாஷது கோவிந்த |வர்ண ஏகாத்ம மாலெய கோவிந்த |
லோகைகனாத[2] குரு கோவிந்த |விட்டல
ஸ்வீகரிஸென்ன காயோ கோவிந்த ||27
(அடுத்த இதழிலிருந்து இதன் அர்த்தங்கள் தொடரும்)...
***

ஆராதனை

## புஷ்ய பகுள அஷ்டமி

## ஸ்ரீகோபாலதாசர்

கோபபிரகர சங்காசம் கோபாலார்ய நதத்பரம் |
கோதேவ வந்த்யபாதாப்ஜம் கோபாலாக்ய குரும் பஜே ||

கோபால தாசராய நின்னய பாத நா பொந்திதெனோ நிஸ்சய || -- இது ஸ்ரீகோபாலதாசரின் மிகச்சிறந்த சிஷ்யர் மற்றும் பக்தரான ஸ்ரீஜகன்னாததாசரின் வாக்கு. இதுவே நம் அனைத்து பக்தர்களின் வாக்கும் ஆகும். 'க்ருபண வத்ஸல நின்ன கருணக்கெ உபமெ காணெயோ' என்றும் பாடினார்.

ஸ்ரீவிஜயதாசர் போன்ற சிறந்த குருவைப் பெற்று, ஸ்ரீஜகன்னாததாசர் போன்ற சிஷ்யரைப் பெற்று, தன் வீட்டையே தாசகூட ஆக்கி, தம் சகோதரர்களையும் ஹரிதாசர்களாக்கிய அற்புத ஜீவர் ஸ்ரீகோபாலதாசர். காயத்ரி மந்திரத்தின் சித்தியைப் பெற்ற இவரது வாழ்க்கை, ஹரிதாச பரம்பரைக்கே சிறந்த வழிகாட்டியானது. இவர் செய்த தியாகம் யாராலும் செய்யமுடியாதது. விலை மதிப்பற்றது.

அகதாதி த்ரிகாலக்ஞம் அகமார்த விஷாரதம்
த்யாகபோக சமாயுக்தம் பாகண்ணார்ய குரும் பஜே ||

பாதராயண விட்டலரின் வாக்கு இப்படியாக இருக்கிறது:
வைராக்ய ஹரிபக்தி விக்ஞானகள கொட்டு
கோரதுரிதங்கள தூரோடிஸி
ஸ்ரீரமணனங்க்ரிகள தோருவரு பிடதெ ஈ
சூரிகள நம்பிதவ தன்ய தன்ய ||

8 - ஹரிதாச விஜயம் - பிப்ரவரி 2021

தாச சதுஷ்யரில் மூன்றாம் இடத்தைப் பிடித்து, ஹரிதாச சாகித்யத்தை வளர்த்ததில் முக்கியப் பங்காற்றியவர். சிஷ்ய பரம்பரையைப் பெற்று அவர்களையும் காப்பாற்றிய பெருமைக்குரியவர் ஸ்ரீகோபாலதாசர். தனது ஆயுளையே தானம் செய்த மஹாபுருஷர் இவர். இவரின் சகோதரரான தந்தெ கோபால்தாசரின் வாக்கு:

பரலு பக்தியவொளகெ நால்வத்தோருவ ஆயுவன்னித்தனு ।
சுதே சுபாத்ரதி பிடிது ஹரியனு முததி ஸ்மரிசுத கொட்டரு ॥

'மனுஜ ஜன்ம மஹா சுக்ருதத பல' என்று தாசர் கூறியது, நாமும் சிந்திக்கவேண்டியது. லௌகிக விஷயங்களில் ஈடுபட்டு, காலத்தை வீணடிக்கிறீர்கள் என்று எச்சரிக்கை விடுத்தார் தாசர். அதற்கே ஒரு இடத்தில், தம் குருவிடம் தாசர் கேட்டது:

சதத சன்மார்கத பதவனு தோரிஸி கதியாகு தசப்ரமதி முனிராய ॥

ஸ்ரீகோபாலதாசருக்கு, ஸ்ரீஹரியிடம், குருவிடம், தூய்மையான பக்தி இருந்தது. ஸ்ரீமதாசார்யரிடம் இவர் வேண்டியது இது:
நின்ன மத பொந்திஸு நின்ன சின்னய தரிஸு
நின்ன சாஸ்திரதொளென்ன முளுகாடிசு ।
நின்னவரொளகிடிஸு நின்ன மூர்த்திய தோரிஸு

தம் குருவிடம் கேட்டது:
நீனு பிடியலு ஹரியு தானு பிடிதனு
நீனு முனிதரெ ஹரியு தானு முனிவா
நீனு இத்தரே ஹரியு தானு இருவா
நீனு பிட்டரே ஹரியு தானு பிட்டோடுவா ॥

கோபாலதாசரைப் பற்றி இவரது சகோதரர் சொல்வது:
பக்தியலி இவர்யாரு சரியெம்ப । உக்திகுருகள வாக்யவு ।
மந்தமதி நானிதரெ குணகளு । ஒந்தனாதரு அரியேனு ।
எரடு விம்சதி வருஷக்கெ ஈ சரியவ மாடிதா ।
பரம ஹருஷதி ஷ்வாஸ பந்திஸி । கருண மார்கதி தெரளிதா ॥ -- தந்தெ கோபாலதாசர்.

பித்ருப்ராத்ரு குருசோதர । பரம சுஹ்ருது பந்து ப்ரிய ஷுபக ।
ஹிதவனுபதேஷ மாடி । என்ன துர்மதிய பிடிசுத பொரெதன ॥ --சீனிப்பதாசர்

ஸ்ரீகோபாலதாசரின் வாக்கினை நம் வாழ்க்கையில் பின்பற்ற முயற்சிப்போமாக.

திளிவனாகலி பேகு தனகிந்துத்தமரிந்த
திளிதாடுதிரபேகு தன்ன சமானிகரிந்த
திளிய பேளலிபேகு அனகிந்தவராரிகெ ।

நின்ன கண்ண முந்தெ போப ஜீவரு கண்டு இன்னு நினகெ நாசிகெ பாரதெ ।
இன்னு முன்னெ நாளிகெம்போ கன்ன ஆஸெ சன்னாகி பிடு கண்ட்ய கூளமனவே ॥ --ஸ்ரீகோபாலதாசர்***
***

தொடர்

## கேசவ நாமா

## 15. நீனே தயாநிதியு- ஸ்ரீமஹிபதி தாசர்

நீனே தயாநிதி[4]யு ஸ்ரீகுருராயா நீனே தயாநிதி[4]யு ॥ப

மஹிபதிதாசர் தமது குருகளான பாஸ்கர ஸ்வாமியின் அந்தர்யாமியான ஸ்ரீஹரியின் கருணையை வேண்டுகிறார்.

கருணதி குந்திய புத்ரரிகெ ஒலிது காளக[3] நிர்மிஸி கௌரவரளிது[3]
உளியதெ[3] இளெயொளு வம்ஷவ ஸவரித[3]
சேஷஷயன ஸ்ரீகேசவ நீனே ॥1

பஞ்ச பாண்டவருக்கு உதவி செய்து, மகாபாரதப் போருக்கு முக்கிய காரணமாக இருந்து, கௌரவர்கள் அனைவரையும் அழித்து, யது வம்சத்தை அழித்த, சேஷ சயனனான கேசவனே, நீயே தயாநிதி.

நரகொ[3]லிது[3] நரகாசுரன மர்த்தி[3]ஸி நாரக[3]னெந்தஜமிளன நீ தாரிஸி
நாரதகொ3லிது[3] நாட்யவனாடித நரஹரியு நாராயண நீனே ॥2

அர்ஜுனனுக்கு உதவி செய்து, நரகாசுரனைக் கொன்று, இறுதி காலத்தில் நாராயணனை நினைத்த அஜாமிளனை காப்பாற்றி, நாரதருக்கு தரிசனம் தந்து, காளிங்கனின் மேல் நாட்டியமாடிய ஸ்ரீகிருஷ்ணன் நீயே, நரஹரியாக இருக்கிறாய்.

வேத3வ கத்தொ3ய்த சுரன ஸீளி மச்சவதாரத3 ரூபவ தாளி
மானவ கொந்த3 மான்யர மடுஹித3
மைது3னகொ3லித3 ஸ்ரீமாத4வ நீனே ||3

வேதங்களை திருடிச் சென்ற அசுரர்களைக் கொன்ற, மாமனான கம்சனைக் கொன்ற, அர்ஜுனனுக்கு உதவி செய்த கிருஷ்ணரூபி மாதவன் நீயே.

கோகுலத3லி புட்டி த4ரெயொளு பெ3ரளலி கோவர்த்த4ன கி3ரியனெத்தி
கோ3குல காய்தி3 கோபியரிகொ3லித3
கோபாலகிருஷ்ண கோவிந்தனு நீனே ||4

த்வாபர யுகத்தில் கோகுலத்தில் பிறந்து, கோவர்த்தன மலையைத் தூக்கி, பசுக்களை, கோபாலகர்களைக் காத்து, கோபியர்களுக்கு தரிசனம் தந்த கோபாலகிருஷ்ண கோவிந்தன் நீயே.

ஸ்ருஷ்டினெல்ல சென்னிலி தாளித3 சேஷன சம்
கஷ்டவ பரிஹரிஸித
சிஷ்ட விபீஷணகொ3லிது3 பட்டவ கட்டித விஷ்ணுவு நீனே ||5

முதுகில் பூமியை சுமந்திருக்கும் சேஷன் மேல் படுத்த, விபீஷணனுக்கு அபயம் அளித்து பட்டம் கட்டிய, ஸ்ரீராம விஷ்ணு நீயே.

மதனனொலிது காளிங்கன துளிது கத3னத3லி பா3ணாஸுரனளிது3
மேதி3னியொளு மரெ இல்லதெ தை3த்யர
மர்த்தி3ஸித மது4சூதனனு நீனே ||6

காளிங்கனின் கர்வத்தை அடக்கிய, பாணாசுர மற்றும் அவனைப் போன்ற பல்வேறு தைத்யர்களைக் கொன்ற மதுசூதனன் நீயே.

த்ரிபுரவனளித த்ரிகு3ணவ தாளித3
தித்தே1ஸகோடி தேவருக3ளிகா3ளித3
அக்ரூரகொ3லிது3 சரித்ரவதோரித த்ரிஜகபதி த்ரிவிக்ரம நீனே ||7

பூமி (இரும்பு நகரமான வித்யுன்மாலி), அந்தரிக்ஷ (வெள்ளி நகரமான கமலாக்ஷ), ஸ்வர்க்க (தங்க நகரமான தாராக்ஷ) - இந்த வித்யுன்மாலி, கமலாக்ஷ, தாராக்ஷ அசுரர்களைக் கொன்று, அக்ரூரருக்கு தரிசனம் கொடுத்து, 33 கோடி தேவதைகளின் தலைவனான நீயே, மூன்று உலகங்களுக்கும் தலைவனான த்ரிவிக்ரமன்.

வாலியனளிது3 வால்மீகிகொ3லிது3 ப3லிசக்ரன முனீமுந்த3லி சுளிது3
ப்ராஹ்மணனாகி தா3னவ பே3டி3த
மானவகொ3லித3 ஸ்ரீவாமன நீனே ||8

வாலியைக் கொன்ற, ஆதிகவி எனப்படும் - ராமாயணத்தை எழுதிய வால்மீகிக்கு அருளிய, கஷ்யப - அதிதியரின் மகனாகப் பிறந்த, பிராமண பிரம்மசாரியாக வந்து பலியிடம் தானம் பெற்ற வாமனன் நீயே.

ஸ்ருஷ்டினெல்ல நிர்மிஸி வக்ஷ
ஸ்தளதல்லி ஸ்ரீமஹாலட்சுமிய த4ரிஸித3
ஸ்ரீநிதி ஸ்ரீபதி ஸ்ரீகுருமூருதி ஸ்ரீதேவிகொலிதிஹ ஸ்ரீத4ர நீனே ||9

உலகத்தைப் படைத்தவனான, மார்பில் ஸ்ரீமன் மகாலட்சுமியை தரித்தவனான, ஸ்ரீதேவிக்கு அருளிய, ஸ்ரீநிதி, ஸ்ரீபதி, ஸ்ரீகுருமூர்த்தி ஸ்ரீதரன் நீயே. (ஸ்ரீ என்றால் இந்திரியங்கள். அந்த இந்திரியங்களை கட்டுப்படுத்துபவன் மற்றும் ஞானத்தைக் கொடுத்து சன்மார்க்கத்தில் நடத்தும் குருவும் அவனே).

தா3ஸர க்லேஷ கில்மிஷக3ள தொளெது
அம்பரீஷ ருக்மாங்க3த3 கொலிது
ஷுக ஷௌனக பராஷர முனிகளிகெ
ஹருஷவனித்த ஹ்ருஷிகேஷனு நீனே ||10

பக்தர்களின் பாவங்களைக் களைந்து, அம்பரீஷன், ருக்மாங்கதன், சுக, சௌனக, பராசர ஆகிய முனிவர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்த ஹ்ருஷிகேசன் நீயே.

க்ஷிதியொளு த்ருடபதிவ்ரதெகொலிது
யதி முனிகளிகி3ன்னு க3திக3ளனித்து
பதிதர தா1ரிஸி பாவனகை3ஸித பரஞ்சோதி பத்மனாபனு நீனே ||11

பூமியில் இருக்கும் அனேக பதிவிரதைகளுக்கு (அனுசுயா, அகல்யை, திரௌபதி ஆகிய) அருளிய, யதிமுனிவர்களுக்கு சத்கதியைக் கொடுத்த, பக்தர்களை மேம்படுத்திய பத்பனாபன் நீயே.

தே3வகிகொ3லிது ஸ்தாபிஸி த4ரெயொளு
த்வாரகியலி நிஜலீலெய தோரித
தா3ரித்ரயப4ஞ்சன து3ரித வித்வம்ஸன
தேவகி புத்ர தா3மோதர நீனே ||12

தர்மத்தை நிலைநாட்டுவதற்காக தேவகியின் மகனாகப் பிறந்து, த்வாரகையில் உன் லீலைகளைக் காட்டினாய். ஏழ்மையைப் போக்கத்தக்கவன் மற்றும் அனைத்தையும் அறிந்தவனான நீயே தாமோதரனாக இருக்கிறாய்.

சித்தஷரணரிகொலிது சத்கதி சுக2 சாதன சஹதேவகெ தோ3ரித3
சம்ப்4ரமதி3 சுதா4மகெ3 ஒலிது3
சந்தோஷவனித்த சங்கருஷண நீனே ||13

தன்னை சரணடைந்தவர்களை கைவிடாமல் காப்பாற்றுபவன், அவர்களுக்கு சத்கதியைக் கொடுத்து காப்பாற்று, சுகத்தைக் கொடுக்கிறாய். சுதாமனின் ஏழ்மையைப் போக்கி, மகிழ்ச்சியைக் கொடுத்த சங்கர்ஷண நீயே. (தொடரும்)...

**ஜீவபிரகரண சந்தி குறுக்கெழுத்துப் போட்டியில்** விடை எழுதி புத்தகம் பரிசு பெறுபவர்கள் : 1. திருமதி. சாந்தி, திருநெல்வேலி 2. திருமதி. சந்திரா, கோவை. 3. திருமதி. பிரேமா, பொள்ளாச்சி. 4. திருமதி. லலிதா, திருநெல்வேலி, 5. திருமதி. பானுமதி, கோவை.

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

### கிரந்தத்தைப் பற்றிய விளக்கம்

**(எழுதியவர்: டாக்டர். மதுசூதன் ஜோஷி)**

சித்தாந்தத்தின் ஆராய்ச்சிக்கு, அதைப்பற்றிய பற்பல விஷயங்களை மக்களிடையே பரப்புவதற்காக மிகவும் நற்பெயர் பெற்றது தாச சாகித்யத்தின் 3வது கட்டம். விஜயதாசரிடமிருந்து துவங்கிய இந்த கட்டம் கோபாலதாசர், ஜகன்னாததாசர் முதலானவர்களைக் கொண்டது. சமஸ்கிருதத்தில் திறன் வாய்ந்த பாக்யவாட கிராமத்தின் (ராய்ச்சூர் ஜில்லா மான்வி தாலுகா) ஸ்ரீனிவாசராயர், ஹரிதாசர்களைப் பற்றியும், ஹரிதாச சாகித்யத்தைப் பற்றியும் நல் அபிப்பிராயத்தைக் கொண்டிருக்கவில்லை. தம் வீட்டிற்கு சாப்பிட வாருங்கள் என்று விஜயதாசர் அழைத்தபோது, வயிற்றுவலி என்று சொல்லி தட்டிக்கழிக்கிறார். அப்படியே ஆகட்டும் என்கிறார் விஜயதாசர். அன்றிலிருந்து வயிற்றுவலி துவங்கி, வளர்ந்துகொண்டே போகிறது. தீர்த்தயாத்திரை மேற்கொண்டு பல கோயில்களுக்குப் போய், பாதோதகத்தை எடுத்துக்கொண்டாலும் வலி தீரவில்லை. மந்திராலயத்தில் மகா-த்வாரத்திற்கு அருகில் படுத்திருந்தபோது இவர் கனவில் ராயர் வந்து, இது விஜயதாசரை அவமானம் செய்ததற்கான பலனே அகும் என்றும் அவரைப் போய் சரணடைவாயாக என்கிறார். கனவு வந்ததற்கு சாட்சியாக, தூங்கி எழுந்த அவர் கையில் உத்தத்தி-மந்திராட்சதை இருந்தன. அங்கிருந்து நேராக சிக்கலபரவிக்கு வந்து விஜயதாசராயா பாஹிபாஹி என்று வேண்டுகிறார். 'ஆசார்யரே, ராயரின் கருணை உங்கள் மேல் விழுந்திருக்கிறது. உத்தனூருக்குப் செல்லுங்கள். பாகண்ணர் உங்களுக்காக காத்திருக்கிறார். அவர் மூலமாகவே உங்களுக்கு அபரோக்ஷ ஞானம் கிடைத்து, ஹரிதாசர் ஆவீர்கள்' என்று சொல்லி அனுப்பிவைக்கிறார்.

ஸ்ரீனிவாசராயர் கோபாலதாசரிடம் செல்கிறார். பக்கிரி (சோள ரொட்டி) ஒன்றினை மந்திரித்துக் கொடுத்து அவரின் நோயினை கோபாலதாசர் தீர்த்துவைத்து, தமது குருகளின் ஆணைப்படி தமது ஆயுளிலிருந்து 40 ஆண்டுகளை தானம் செய்து ஸ்ரீனிவாசராயருக்கு வந்த ஆபத்தினை தீர்க்கிறார்.

'என்ன பின்னப கேளோ' என்னும் பாடலைப் பாடுகிறார். பண்டரிபுரத்தில் பீமரதி நதிக்கரையில் ஜகன்னாதவிட்டலா என்னும் பலகை ஒன்று கிடைக்கிறது. அதையே தனது அங்கிதமாக வரித்து, தாசதீட்சை பெற்று ஜகன்னாததாசர் ஆகிறார் ஸ்ரீனிவாசராயர்.

‘எந்து காம்பேனு பாண்டுரங்க மூருதிய’ என்பது இவரது முதல் பாடலாகும். பிறகு ‘கண்டே பண்டரிராயன ஸ்ரீ மன: ப்ரியன’ மற்றும் ‘பாலிஸு பண்டரிராயன தன்யனாதே’ என்னும் பாடல்களைப் இயற்றினார். தமக்கு அருளிய குருகளைப் பற்றி ‘கோபாலதாசராயா நின்னய பாத நா பொந்திதேனோ நிஸ்சய’ என்னும் பாடலப் பாடினார். ‘ரதுன தொரகிதல்லா’ என்று விஜயதாசரைக் குறித்துப் பாடினார்.

ஜகன்னாததாசர் தத்வசுவ்வாலி என்னும் 600 ஸ்லோகங்களைக் கொண்ட கிரந்தம் ஒன்றை இயற்றியுள்ளார். ‘பதிதனாதரு பதித பாவன நீனு’ என்று இந்த கிரந்தம் துவங்குகிறது. ‘பாஹி பங்கேருஹேக்ஷண’ என்று தொடங்கும் தந்திரசாரம் என்னும் கிரந்தத்தையும் இவர் இயற்றியுள்ளார். தமது 80வது வயதில் இவர் இயற்றிய ஹரிகதாம்ருதசாரம் தாச சாகித்யத்தின் மிக உயர்ந்த கிரந்தம் என்று கருதப்படுகிறது. அதன் மூலம் கோபாலதாசர் தானம் அளித்த 40 ஆண்டு கால ஆயுளை அர்த்தமுள்ளதாக ஆக்கினார். இந்த கிரந்தத்தை எழுதும் அந்த வயதான சமயத்தில், அவரது கண் இமைகள் துவண்டு தானாக மூடிக்கொள்ளுமாம். அப்போது அவரது சிஷ்யர்கள் அதை தூக்கிப் பிடிக்க, தாசர் கிரந்தத்தை எழுதுவாராம். தத்வாபிமானி தேவதைகள் கிரந்தத்தை எழுத வைத்தனர். வர்ணாபிமானி தேவதைகள் தாமாகவே வந்து தம்மை எழுதுமாறு வேண்டினர். அப்படி எழுதப்பட்ட கிரந்தமே ஹரிகதாம்ருதசாரம். பாமினி ஷட்பதி நுடியில் 32 சந்திகளில், மங்களாசரண சந்தியிலிருந்து துவங்கி, தேவதா தாரதம்ய சந்தியுடன் முடிகிறது இந்த கிரந்தம்.

இந்த கிரந்தத்தின் பல-ஸ்ருதியை எழுதிய ஸ்ரீதவிட்டலர் ‘க்ருதிபதிய அமல குணகளு ஈ க்ருதியொளுண்டாத பளிக ப்ராக்ருதவே? சம்ஸ்க்ருதத சடகரவேனு சுஜனரிகெ’ என்று புகழ்ந்திருக்கிறார். மிகவும் புனிதமான விஷயங்கள் சமஸ்கிருதத்தில்தான் இருக்கவேண்டுமா? வேறு மொழிகளில் இருக்கக்கூடாதா? என்று கேட்கிறார். இந்த கிரந்தத்தைப் படித்தால், கேட்டால், கண் இல்லாதவர்க்கு கண்கள் கிடைக்கும்; காது கேட்காதவர்க்கு காது கேட்கும் என்கிறார். ’கிருஷ்ண கைபிடியுவனு சத்ய விசிஷ்ட தாசத்வனு பாலிஸி ! நிஷ்டெயிந்தலி ஹரிகதாம்ருதசார படிசுவவர’ என்கிறார். (ஹரிகதாம்ருதசாரத்தை படிப்பவரின் கைகளை ஸ்ரீகிருஷ்ணன் வந்து பிடிப்பான்).

'ஹரிகதாம்ருதசார குருகள கருணதிந்தா பனிது பேளுவே பரமபகவத் பக்தரிதனாதரதி கேளுவுது' - என்ற பல்லவியுடன் அனைத்து சந்திகளும் துவங்குகின்றன.

மங்களாசரண சந்தியில் ஸ்ரீரமணி கர கமல பூஜிதனான நரசிம்மனை வணங்கியவாறு, ஸ்ரீஹரியானவர் நீரஜபவாண்டோதய ஸ்திதிக்கு (படைக்கும் தொழிலுக்கு) காரணமானவர், கைவல்யதாயகர் (மோட்சத்தைக் கொடுக்கக்கூடியவர்), ஒரு நாளைக்கு 21,600 மூச்சுகளை அனைத்து ஜீவர்களிடமும் நடத்துகிறார் 'ஆறு மூரெரடொந்து சாவிர மூரெரடு ஷத ஸ்வாச ஜபகள' என்கிறார். பின்னர் நாடி பிரகரண சந்தியில் 36,000 நாடிகள் பகல்களிலும், 36,000 நாடிகள் இரவிலும் அவற்றில் வியாபித்திருந்து நம்மைக் காக்கிறார் என்கிறார். விஞ்ஞான மருத்துவ ஆராய்ச்சிகளே இல்லாத அந்தக் காலத்தில் இத்தகைய துல்லிய எண்ணிக்கைகளைக் கொடுத்தது நம்பமுடியாத விஷயமாகும்.

அபரோக்ஷ ஞானத்திற்கு இன்னும் வேறு என்ன சாட்சி வேண்டும்? லட்சுமிபதிய குண துதிபுதகெ சன்மதிய பாலிஸி' - நாக்கில் நிலைத்திருக்கும் சரஸ்வதியை வேண்டுகிறார். பூவில் இருக்கும் நறுமணம், விறகுக்கட்டையில் நெருப்பு மறைந்திருப்பதைப்போல், ஸ்ரீஹரி நம்மில் வியாபித்திருக்கிறார் என்கிறார். அவரின் கருணையே முக்தி என்கிறார். கருணாசந்தியில் ஸ்ரீஹரியானவர் கருணாகரன் என்பதை நிரூபிக்கிறார்.

சுத்தமான பக்திக்கு ஸ்ரீஹரி கண்டிப்பாக செவி சாய்க்கிறார். அவரை நினைப்பதற்கு காலம், இடம் எதுவும் பொருட்டல்ல என்பதை 'மலகி பரமாதரதி பாடலு குளிது கேளுவ, குளிது பாடலு நிலுவ நிந்தரெ நலிவ நலிதரெ ஒலிவ நிமகெம்ப' என்ற ஸ்லோகத்தில் தெரிவித்து, ஸ்ரீஹரியை நெருங்குவது மிகவும் சுலபம் என்கிறார். அவரை நெருங்கும், வணங்கும் வழி தெரியாமல் நாம் அலைகின்றோம். ஆடம்பரத்தில் திளைத்து பக்தியை மறக்கின்றோம் என்று எச்சரிக்கிறார். பக்தியானது வெளிக்காட்டிக் கொள்வது அல்ல, ஒரு உதாரணமாக உள்ளிருக்க வேண்டும் என்கிறார். ஸ்ரீஹரி, மூன்று வித ஜீவர்களுக்கும் அவரவர்களுக்குத் தக்கவாறு போகங்களைக் கொடுக்கிறார். பிரம்மனிடம் வியாபித்து படைத்தலையும், தானே அனைத்தையும் காத்து, ருத்ரரில் வியாபித்து அழிக்கும் தொழிலையும் மேற்கொள்கிறார். படைத்தல் - காத்தல் - அழித்தல் என்று

மூன்றையும் தானே சரியாக செய்து காலசக்கரம் சுழல்வதற்குக் காரணமானவர் ஸ்ரீஹரியே ஆவார்.

32 ஸ்லோகங்களைக் கொண்ட வியாப்தி சந்தியில், ஸ்ரீஹரி சர்வாந்தர்யாமி (அனைத்து இடங்களிலும் வியாபித்திருப்பவர்) என்பதை நிரூபிக்கிறார். 'ஸ்த்ரீ நபும்சக புருஷ பூசலிலானலானில ககன மன சசி பானு காலகுண ப்ரக்ருதி' என்று ஸ்ரீஹரி வியாபித்திருக்கும் இடங்களை பட்டியலிடுகிறார். பெண், அரவாணி, ஆண், பூமி, நீர், காற்று, நெருப்பு, சந்திரன், சூரியன் இப்படி அனைத்து இடங்களிலும் இருக்கிறார் என்றும், அணுவை விட சிறியவராகவும், பெரியதை விட பெரியவராகவும், பரிபூர்ணன் என்றும் கோவிந்தனை வர்ணிக்கிறார்.

'அணு மஹத்தினொளிப்ப கன பரமாணுவினொளடகிசுவ சூக்ஷ்மவ முளுகிசுவ தேலிஸுவ ஸ்தூலகலவன மாயயிது' என்று மிகவும் எடை குறைந்த பொருட்களை மூழ்கடிப்பவனும்; மிகவும் எடை அதிகமான பொருட்களை மிதக்க வைப்பவருமான மாயாவி அவர் என்கிறார். 'ஒனகெகளு தான்யகள ஹணிவந்ததலி சம்ஹரிப' - உலக்கையால் குத்தி அரிசி/உமியைப் பிரிப்பதுபோல் - துஷ்டர்களை அழிப்பார் என்று சொல்வது கவனிக்கத்தக்கது.

30 ஸ்லோகங்களைக் கொண்ட போஜன சந்தியில், ஆகார-அபிமானி தேவதைகளைப் பற்றி விவரிக்கிறார். நாம் உண்ணும் உணவை மூன்று பாகங்களாகப் பிரித்தால், முதல் பாகம் ரத்தத்தில் கலக்கிறது. அடுத்த பாகம் வெளியேறிவிடுகிறது. மூன்றாவது பாகம், நம் சுபாவத்தை நிர்ணயம் செய்வதில் பங்கு வகிக்கிறது என்கிறார் தாசர். சாத்விகமான உணவையே உட்கொள்ளவேண்டும் என்றும் மகிழ்ச்சியுடன் உண்ணவேண்டும் என்றும் சொல்கிறார்.

துவர்ப்பு, இனிப்பு, கார்ப்பு, கசப்பு, புளிப்பு மற்றும் உவர்ப்பு ஆகிய அறுசுவைகளை நம் நாக்கில் கொடுத்து ஷபர நாமகனாகவும், பற்களில் ஹம்ஸ நாமகனாகவும், அன்னத்தில் வாசுதேவனாகவும், இனிப்பு பொருட்களில் சங்கர்ஷணனாகவும், பாயசத்தில் பிரத்யும்னனாகவும், நெய்யில் அனிருத்தனாகவும் ஸ்ரீஹரியானவர் நிலைத்திருக்கிறார் என்று ஸ்ரீஜகன்னாததாசர் விளக்குகிறார். (தொடரும்)... ***

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

## ஹரபனஹள்ளி பீமவ்வா

(பீமேஷ கிருஷ்ணவிட்டலா) ஆண்டு: 1822-1903

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)...

வீட்டின் முன் வீட்டினர், உற்றார், உறவினர், குழந்தைகள் அனைவரையும் அமர்த்திக் கொண்டு, பாடல்களை பாடிக் கொண்டிருந்தார். பெண் குழந்தைகள் பாடல்களைக் கற்பதற்கு, பீமவ்வரிடம் வந்து கொண்டிருந்தனர். 10, 20, 30 நுடிகளைக் கொண்ட பெரிய பாடல்களை பீமவ்வா அவர்கள் மிகவும் அனாயாசமாக பாடிக் கொண்டிருந்தார். இவரின் இன்னொரு விசேஷம் என்னவென்றால், புதுப்புது பாடல்களை உடனடியாக இயற்றி சொல்வதேயாகும். மிகவும் குறைவாக பேசுபவரான அவர், தம் பாடல்களைப் பற்றி பிரசாரமே செய்யவில்லை என்றாலும், நாளடைவில் ஊர் மக்களின் வாயில் அவரது பாடல்கள் ஒலிக்கத் துவங்கின.

பீமவ்வா அவர்கள் பள்ளிக்கூட வாயிலையே மிதிக்காதவர். ஓரெழுத்தும் எழுதப்படிக்க அறியாதவர் என்றால் மிகையில்லை. ஆனால், எழுதாமல், படிக்காமல், பற்பல விதமான பாடல்களை அவர் திறன் பெற்றிருந்தார். அபாரமான நினைவுத்திறன். ஓரிடத்தில் அவரே சொல்லியிருக்கிறார். 'நுடிஸுவவனு நாராயண, நான் கேவல நுடித நாலிகெ மாத்ர', என்று தனது பக்தி, மரியாதை மற்றும் சிரத்தையை காட்டியிருக்கிறார்.

பீமவ்வா அவர்களுக்கு பாதனஹட்டி சீதாபாய் மற்றும் கேளூர் கங்காபாய் என்று இரு தோழியர் இருந்தனர். அவர்கள் இருவரும் சகோதரிகள் மற்றும் எழுதப்படிக்க தெரிந்தவர்கள். எப்போதும் பீமவ்வாவுடனேயே இருந்தனர். அவர் பாடிய பாடல்கள் அனைத்தையும் எழுதி வைத்தனர். அவர்களாலேயே, பீமவ்வாவின் அபாரமான, அமோகமான, அற்புத சாகித்யங்கள் நமக்கெல்லாம் வழிகாட்டியாக, நம் முன் இருக்கின்றன...22ம் பக்கத்தில் தொடர்கிறது

குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam@gmail.com என்னும் ஐடிக்கோ அல்லது 89044 58276 க்கோ வாட்சப் செய்யலாம்.

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### 10 - சர்வபிரதீக சந்தி

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 26 | | 27 | | | 2 | | | | 28 | | | |
| | | | | | | | 33 | 34 | | | | | |
| | | | | | | | 18 | | | | | 29 | |
| | | | | | | | | | | | | | |
| | | 3 | | | | | | | | | | | |
| | | | | | 4 | | | | | 5 | | | |
| | | | 19 | | | | | | | | | | |
| | 6 | | | | | | 7 | | | | 8 | | 35 |
| | 9 | | | | | | | | 36 | | | | |
| | | | | | 30 | 37 | 20 | | | | | | |
| | | | | | 10 | | | | | | 21 | | |
| | | | | | | | 22 | | | | 31 | | |
| | | | | | | | | 11 | | | | | 38 |
| | 39 | | | 23 | | | | 40 | | | | | |
| 12 | | | | | | | | | 13 | | 32 | | |
| | 41 | | 42 | | | | | | | | | 15 | |
| | | | | | | 14 | | | | | | | |
| | | 16 | | | | | | | | 42 | | | |
| | | | | | | | | | | | | | 24 |
| | | 25 | | 43 | | 17 | | | | | | | |

**இடமிருந்து வலம்**

1.பூமியின் வேறு பெயர்(5), 2.விளாம்பழத்தை தாஸர் இப்படி குறிப்பிடுகிறார் (6), 3.நாஸம் அற்றவன்(4), 4.தேவதைகள்(4), 5. ஆறு கால் வண்டு(4), 6.கிழக்கிலிருந்து மேற்கு நோக்கி பாயும் ஆறு(2), 7.பசுக்களை காப்பாற்றும் கோபாலகரை இப்படி அழைப்பர் (3), 8.ஸ்ரீ ஹரியின் நான்கு குணங்களில் ஒன்று(3), 9.விடுகதை(3), 10.அஸுரர்கள்(4), 11.நாம் செய்யும் பாப கர்மங்கள்(6), 12.பல் இல்லாதவன்(5), 13.துக்கம்(3), 14.ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் பக்ஷிகள்(2), 15.கண்(2), 16.தாமரை(5), 16.ஆகாய கங்கை(6).

**வலமிருந்து இடம்**

8.எப்பொழுதும் பக்தி ஸ்ரத்தையுடன் இருப்பது(6), 19. முறைப் படுத்தி செய்தல்(4), 20.கொடி. கலைந்துள்ளது(3), 22.உடல்(3), 23.பெண் ஆறு(2), 24.அன்னம்(3), 25.தீ அல்லது நெருப்பு(3).

**மேலிருந்து கீழ்**

3.தோஷங்கள்(6),15.தேவநதி என்று போற்றப்படும் கங்கை. முற்றுப் பெறவில்லை(5), 16.பாதம் அல்லது திருவடி.கடைசி எழுத்து இல்லை(3), 26.கரைபுரண்டு நிரம்பி ஓடும்(4),27.ஏரிகள்(3), 28.வண்டு, தேனீ போன்ற பூச்சிகள்(4),29.திருப்திகரமாக(5), 30.ஸம்ஹாரம் செய்தவன்(4), 31.இரண்டு(2), 32.உத்தமன்(2).

**கீழிருந்து மேல்**

4.குழந்தைகள்(3), 7.தாமரையின் வேறு பெயர்(3),12.வேதமறிந்த அந்தணன்(4), 17.மதியை மயக்கியவர்(4),33.கிணறு(2), 34.க்ஞான பூர்ணன்(2), 35.வாயு தேவர்(3),36.கருணை மிகுந்தவன்(3), 37.விலக்கி வைத்தல்(3), 38.மதம் பிடித்த யானை(4),39.நன்கு பழுத்த(3), 40.தவளை(2), 41.வ்ருக்ஷங்கள்(3), 42.ஸமுத்திரம்(3) 43.மதம்(3).

| தொடர் | கன்னட தந்த்ரசாரம் - ஸ்ரீவரதேந்திர தீர்த்தர் |
|---|---|
| | உரை: திரு.குரோம்பேட்டை R.ஸ்ரீதரன் |

**(சரணம் 1)**

ஜயது சதுரானன பவேந்த்ராதி வினுத
ஜயதி சதுரானன ரமாவல்லபா ।
ஜயது சம்பூர்ண சித்ஸுகமுக ஸுகுண நிலய
ஜயது ஜன்மாதி காரண தோஷஹா ॥

வெற்றி, நான்முகன், சிவன், இந்திரன் இவர்களால் துதிக்கப்பட்டவனே
வெற்றி, நான்முகன், இலக்குமி இவர்களின் நாயகனே
வெற்றி, முழுமுடல் சச்சிதானந்த பண்பு கடல் கடவுளே
வெற்றி, பிறப்பற்றவனே, குறையில்லா ஸ்ரீஹரியே.

ஜயது என்றால் வெற்றி என்று பொருள். சிறப்பாக விளங்குபவன் என்று அதன் தாத்பர்யம். ஸ்ரீஹரி, நான்முக பிரம்மன், சிவன், இந்திரன் போன்ற தேவதைகளால் வணங்கப்படுபவன். அவன், நம்மைப் போன்று ப்ராக்ருத குணம் படைத்தவன் அல்ல. அவனுடைய பண்புகள் அனைத்துமே அப்ராக்ருதமானவை. நம்முடைய மொழிகளால் வர்ணிக்கப்பட முடியாதவன். அவன் பூரணன். முழுமையானவன். அறிவு, இன்பம் போன்றவைகளையே உடலாகக் கொண்டவன். எல்லா நற்பண்புகளின் இருப்பிடம். அனைவரின் பிறப்பு, இறப்பு போன்றவற்றிற்கு காரணமானவன். ஆனால், தான் மட்டும் பிறப்பு இறப்பு அற்றவன். குறையில்லா கோவிந்தன்.

பிறப்பு இறப்பு என்பது ஜீவர்களின் தேகங்களுக்குதானே தவிர, ஆன்மாவுக்கு இல்லை என்பதை நினைவில் கொள்ள வேண்டும். இது கடவுள் வாழ்த்துப்பா. முதலில் செய்ய வேண்டிய கிரியை ஆகும். அதையே கவி இங்கு செய்துள்ளார். இனிமேல், சொல்ல வந்த விஷயத்தை (தந்த்ரசாரத்தை) பார்ப்போம்.

சதுரானன = நான்கு முகங்கள். பவ = சிவன் / ருத்ரன். சித்ஸுக = check.. சுகுண நிலய = நற்பண்புகள் கொண்டவன். ஜன்மாதிகாரண =

பிறப்பு ஆகியவற்றிற்குக் காரணன். தோஷஹா = குறைகள் அற்றவன் மற்றும் குறைகளை அழிப்பவன்.

**(சரணம் 2)**

கமலாக்ஷ பரம சம்பிரமதிந்த லகுமிகர
கமலதிம் ஸேவெகொளுதிரலு ஆக ।
அமரரிகராராத்ய கமலாஸனனு பந்து
நமிஸி பின்னயிஸிதனு தன்ன பிதகெ ॥

கமலக்கண்ணனான ஸ்ரீஹரி மிகவும் உற்சாகத்துடன் இலக்குமியின் கரகமலங்களால் சேவை கொண்டிருக்கும்போது, அமர சந்ததிகளால் கொண்டாடப்படும் பிரம்மன் வந்து வணங்கி, விண்ணப்பம் புரிந்தான், தன் தந்தையிடம்.

இது அவதாரிகைப் பாடல். தாமரை போன்ற கண்கள் உடைய ஸ்ரீஹரி, சம்பிரமத்துடன் இலக்குமியுடன் வைகுண்டத்தில் விளங்கும் வேளையில், தேவக்கூட்டத்தின் தலைவன், தாமரையை பீடமாகக் கொண்ட நான்முக பிரம்மன் வந்து, தன் தந்தையைப் பார்த்து, சில கேள்விகள் எழுப்பினார்.

கமலாக்ஷ = தாமரைக் கண்ணன். அமரநிகர = தேவர்கூட்டம். கமலாஸனன் = தாமரை பீடம் = பிரம்மன். பின்னயிஸிதனு = விண்ணப்பித்தான்.

இந்த பின்னணிக்கு ஆதாரம், ஸ்ரீமத்வாசார்யர் இயற்றிய தந்த்ரசார சங்க்ரஹத்தில், அத்தியாயம் 1, ஸ்லோகம் 2ல் உள்ளது.

ஜயத்யப்ஜ பவேஷேந்த்ர வந்தித: கமளாபதி: ।
அனந்த விபவானந்த ஷக்திஞானாதி சத்குண: ॥ (1-1)

தாமரையில் உதித்த பிரம்மன், சிவன், இந்திரன் இவர்களால் வணங்கப்பட்ட இலக்குமிபதியான ஸ்ரீஹரி, எண்ணற்ற முழுமையான ஆனந்தம், ஞானம், சக்தி போன்ற பண்புகளால் நிரம்பி, சிறப்பாக விளங்குகிறார்.

விதிம் விதாய ஸர்காதௌ தேன ப்ருஷ்டோப்ஜ லோசன: ।
அஹ தேவோ ரமோத்ஸக்ஞ விலஸத் பாதபல்லவ: ॥ (1-2)

தாமரை போன்ற கண்களைப் படைத்த ஸ்ரீஹரி, தன்னுடைய மென்மையான திருவடிகளை ரமாதேவியின் தொடையின் மீது வைத்து ஷோபிக்கிறார். தான் படைத்த பிரம்மதேவனுக்கு, தந்த்ரசாரத்தை, கேள்விகளுக்கு பதிலாக உரைத்தார்.

இதைப் படித்தால், குருநாதர், ஸ்ரீமத்வர் காட்டிய பாதையை, ஸ்ரீஸ்வாமிகள் எப்படி பின்பற்றியிருக்கிறார் என்பதை தெளிவாக அறியலாம். கவியானவர், மூலத்திற்கு அனுசரணையாக எப்படி இதை கன்னடத்தில் எழுதியுள்ளார் என்பதை இதுபோன்ற மேற்கோள்கள் மூலமாக காட்டி, புரியவைக்க முயல்கிறேன்.

தாச சாகித்யம் என்பது மூலகிரந்தங்களின் கன்னட (ப்ராக்ருத) வடிவம்தான் என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

**(சரணம் - 3)**

ஆவ தேவோத்தமனு ஆவாவ
குணகளிஹவாவாவ ஷப்தவாச்யாவரீதி ।
ஈ விசாரவனு பேளெனலு நஸுநகுத
ராஜீவஸம்பவகெ இந்தெந்து நுடிதா ॥3

அந்த உயர்ந்த கடவுள் யார்? அவனிடம் என்னென்ன பண்புகள் உள்ளன? அவன் எந்தெந்த ஒலிகளால் சொற்களால் துதிக்கப்படுகிறான்? இந்த கேள்விகளுக்கு சரியாக பதில் தருக என்று தந்தையிடம், தாமரையில் பிறந்த பிரம்மன் கேட்டான்.

தேனப்ருஷ்டோ அப்ஜலோசன: என்னும் ஸ்லோகத்தில் கூறியபடி, ஸ்ருஷ்டியின் துவக்கத்தில், பிரம்மன் கேள்வி கேட்க, அதற்கு பதிலாக வந்ததே 'தந்த்ரசாரம்'.

**(சரணம் - 4)**

வனஜசம்பவ கேளு நானே ஸர்வோத்தமனு
யனகனந்தானந்த மங்களகுண ।
ப்ரணவவாச்யனு நானெ அஷ்டவர்ணோபேத
ப்ரணவத விசாரவனு பேள்வெ நினகெ ॥4

தாமரையில் பிறந்த பிரம்மனே, கேட்பாயாக. நான்தான் சர்வோத்தமன். அனைவரிலும் சிறந்தவன். என்னிடம் அனந்தமான (எண்ணிலடங்கா) நற்பண்புகள் உள்ளன. நான் பிரணவத்தால் அறியப்படுபவன். பிரணவம் எட்டு எழுத்துக்களைக் கொண்டது. அதைப்பற்றி உனக்கு கூறுகிறேன் -- என்றார் ஸ்ரீஹரி.

பிரம்மன் கேட்ட கேள்விகள்:

1. தேவர்களில் யார் உயர்ந்தவர்? 2. அவனின் பண்புகள் யாவை?
3. அவன் எந்த ஒலிச் சொற்களால் குறிப்பிடப்படுகிறான்?

இவற்றிற்கான பதில்களாக ஸ்ரீஹரி கூறுபவை:

1. நான்தான் உயர்ந்தான். சர்வோத்தமன்.
2. என்னிடம் எண்ணிலடங்கா நற்பண்புகள் உள்ளன.
3. நான் பிரணவத்தால் அறியப்படுபவன். அந்த பிரணவம் எட்டு எழுத்துக்களைக் கொண்டது.

இதையே ஸ்ரீமத்வர், மூலத்தில் குறிப்பிட்டுள்ளார்.

அஹமேகோsகில குணோ பாசக: ப்ரணவோ மம |
அகாராத்யதிஷாந்தாந்த: ஸோsயமஷ்டாக்ஷரோ மத: || (1-3)

நானே அனைத்து கல்யாண குணங்களின் உறைவிடமாக உள்ளேன். பிரணவம் என்னையே குறிக்கிறது. பிரணவம் என்பது 'ஓம்காரமே'. 'ஓம்காரத்தில்', 'அ' முதல் 'அதிஷாந்தம்' வரையில் எட்டு எழுத்துக்கள் உள்ளன.

ஸ்ருஷ்டியில் முதலில் தோன்றிய ஒலியே பிரணவம். பிரணவம் = தார = ஓம்காரம். ஓம் என்றால் பூர்ணம் = முழுமை = விஷ்ணு. ஓம்'ல் எட்டு எழுத்துக்கள் மற்றும் ஒலிகள் உள்ளன. அவை அகாரம், உகாரம், மகாரம், நாதம், பிந்து, கலா அல்லது கோஷம், ஷாந்தம் மற்றும் அதிஷாந்தம் ஆகும். இதில் அ,உ,ம இவை எழுத்துக்கள், மற்றவை ஒலிகள் ஆகும். (தொடரும்)...

**** திரு.குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்**

15ம் பக்கத்திலிருந்து தொடர்கிறது...

பீமவ்வாவின் முன்னோர்கள் மிகவும் செல்வந்தர்களாக இருந்ததால் பல தான தர்மங்களை செய்து வந்தனர். ஆனால், பீமவ்வாவின் காலத்தில் ஏழ்மை வந்துவிட்டது. ஆகையால் தான தர்மங்களுக்கு வழியில்லை என்று புலம்பாமல், கவலைப்படாமல், அனேக நேம நிஷ்டைகளை தமதாக்கிக் கொண்டார். தாரண-பாரண, விஷ்ணு பஞ்சக, ஏகாதசி விரத உபவாச, அகண்ட உபவாச, சாதுர்மாத விரதம் ஆகிய விரதங்களை, ஸ்ரீஹரி ப்ரீதிக்காக செய்து வந்தார்.

1895ம் ஆண்டில் தீர்த்தக்ஷேத்ர யாத்திரைகளை செய்தார். அந்தந்த க்ஷேத்ர மூர்த்திகளை துதித்தார். உடுப்பிக்குச் சென்றார். அங்கு விலக்காக இருந்ததால், ஸ்ரீகிருஷ்ணனின் தரிசனம் கிடைக்கவில்லை. மிகவும் கவலைப்பட்டார். அடுத்த நாள் வெள்ளிக்கிழமை. ஸ்ரீகிருஷ்ணனுக்கு மோகினி ரூபம். கிருஷ்ணனின் தரிசனம் பெற்றவர்கள் அனைவரும், இவரிடம் வந்து அவனின் அழகினை வர்ணித்தனர். இவரோ தனக்கு அந்த தரிசன பாக்கியம் கிடைக்கவில்லையே என்று கவலைப்பட்டு படுத்திருந்தார்.

அன்றிரவு கனவில், ஒரு பெண் சிறுமி, அனைத்து ஆபரணங்களையும் தரித்து, வெள்ளைப் புடவையை அணிந்து, இவர் எதிரில் வந்து நின்றார். அடுத்த நாள், இவர் சரியாகிவிடவே, கிருஷ்ணனை தரிசிக்கச் சென்றார். தான் முன்னிரவில் கனவில் கண்ட ரூபத்தையே அங்கு நேரடியாகக் கண்டார். உடனடியாக - ‘காமன பித கிருஷ்ண காமினியாதனு’ என்னும் 9 நுடிக்ளைக் கொண்ட பாடலை இயற்றிப் பாடினார்.

இறுதி நாட்களில், பீமம்மா அவர்கள் ஹோஸ்பேட்டில் தம் தங்கையின் வீட்டில் இருந்தார். வயதான காரணத்தால் சக்தி குறைந்திருந்தது. ஆனாலும், பீமேஷ கிருஷ்ணனின் தியானத்தை அவர் ஒரு நொடியும் விட்டிருக்கவில்லை. படுக்கையில் படுத்தவாறே, மெய்மறந்து பாடிக் கொண்டிருந்தார். மறைவதற்கு 50 நாட்கள் முன்பு, ‘சின்னத ஜாவடி மேலே பன்னஙகஷயனரு மான்ய மான்யரு முக்தரு முக்தர நோடுதலெ இன்யார பயவு நமகில்லா’ என்று ஐந்து நுடிகளைக் கொண்ட பாடலைப் பாடி, அதனை பீமேஷ கிருஷ்ணனுக்கு அர்ப்பித்தார்.

மறைவதற்கு மூன்று நாட்கள் முன்னர், ஊர் குழந்தைகள் இவரிடம் வந்து, ஷகுந்தலா நாடகத்திற்கு ஆரத்தி பாடல் இயற்றிக் கொடுங்கள் என்று கேட்டனர். 'மாடோணா முத்தெயிதெயரு சோடு ஜ்யோதி ஆரதி ஹாடி பாடி ஹருஷதிந்த மாடுத ஆஷீர்வாதவ' என்னும் ஆரதி பாடலை இயற்றிக் கொடுத்து, அதனை பீமேஷ கிருஷ்ணனுக்கு அர்ப்பித்தார்.

ஷுபக்ருத் சம்வத்ஸரம் புஷ்ய பகுள த்ரயோதசி ஆண்டு 1903 ஜனவரி 11ம் தேதி மதியம் 2.30 மணி இருக்கும். பீமவ்வாவிற்கு பாகவதத்தின் ஒரு ஸ்லோகம் நினைவுக்கு வந்தது. 'கங்காதர நுத கணபதி மங்கள சரணக்கெ எரகுவெ; எரகி நா பேளுவெ நீரொளகிருவ நாராயண ஸ்வாமி தோஷ தூர ஞானகம்ய' என்று பாடினார். தொடர்ந்து, 'நாராயணா, நாராயணா' என்று கூவினார். உடனடியாக அவர் மூச்சு நின்றது. அந்த கவி, புண்ய மூர்த்தி சேதன, இந்த உலகிலிருந்து விடைபெற்றார். 81 வயதில் அர்த்தமுள்ள வாழ்க்கையை வாழ்ந்தவர் இவர்.

பீமவ்வாவின் பாடல்களை எழுதி வைத்த, அவரின் தோழியான பாதனஹட்டி சீதாபாயின் பேத்தியான சரிதாகுசுமாகர தேசாய் அவர்கள் மற்றும் குருகோவிந்தவிட்டல தாசர் இருவரும், பீமவ்வாவின் வாழ்க்கை வரலாற்றினை, சாதனைகளை, பாடல்களை புத்தக ரூபத்தில் அச்சிட்டு வெளியிட்டனர். இத்துடன், மைசூர் பல்கலைக்கழகத்தில் ஆராய்ச்சியாளராக இருந்த டாக்டர். திருமதி. டி.என். நாகரத்னா அவர்கள், பீமவ்வாவின் பாடல்களை தொகுத்து வெளியிட்டார். அவரின் சுமார் 143 பாடல்கள் இந்தப் புத்தகத்தில் உள்ளன.

இவற்றில் ஒரு உகாபோக, இரு சுளாதிகள் மற்றும் 1 மந்திரமும் உள்ளன. இவற்றில் ஒரு உகாபோக, இரு சுளாதிகள் மற்றும் 1 மந்திரமும் உள்ளன. ஆறு பெரிய பாடல்களை த்வனி, வசன ரூபத்தில் இயற்றியுள்ளார். தேவரநாமங்களை 3 நுடிகளிலிருந்து துவங்கி, 193 நுடிகள் வரை இயற்றியுள்ளார். பீமவ்வாவிடம் ஒரு சிறப்பு இருந்தது. அவர், முந்தைய நாளில் கனவில் புராண, புண்ணிய பிரவசங்களை கேட்டு வந்தார். அடுத்த நாள், அதனையே பாடல்களாக இயற்றினார்.

ஒரு முறை பீமவ்வாவின் கனவில், நாரதர் வந்து ஸ்ரீகிருஷ்ணன், சத்யபாமாவின் வீட்டிற்குச் சென்றதை நான் பார்த்தேன் என்று கூறினார். அடுத்த நாளே, 23 சரணங்களைக் கொண்ட ஸ்ரீகிருஷ்ண சத்யபாமையின் நுழைவாயில் கட்டிய பாடலைப் பாடினார். 'பக்ஷிவாஹன சத்யபாமெ ஸதன த்வாரதி நிந்து ஸதன த்வாரதி, மித்ரெ எனகெ கதவ தெகெயெ பருவெ தீவ்ரதி'. இதனை திருமண நிகழ்ச்சிகளில் பாடுகின்றனர். மாளிகைக்குள் இருந்த சத்யபாமா, கதவைப் போட்டு, ஸ்ரீகிருஷ்ணனை உள்ளே வரவிடாமல் செய்கிறாள். அவனின் கெட்ட குணங்களைப் பற்றி பாடுகிறாள். ஸ்ரீகிருஷ்ணன் அவற்றை விளக்கி அவளை திருத்துகிறான். இறுதியில், சத்யபாமா, 'தவறு நடந்துவிட்டது. மன்னித்து அருளுங்கள்' என்று விழுந்து வணங்குகிறாள். இதனை நிந்தாஸ்துதி என்று சொல்லலாம்.

இன்னொரு முறை, பீமவ்வா, தமது கனவிலேயே தமது தம்பியின் வீட்டிற்குச் சென்று கொண்டிருந்தார். அங்கு ஆறு பேர் நன்றாக போர்த்திக் கொண்டு படுத்திருந்தனர். போர்வையை விலக்கிப் பார்த்தால், அனைவரும் வஜ்ர வைடூர்ய, கிரீடங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்ததைக் கண்டார். பிறகே, அது கிருஷ்ணன் என்னும் சிந்தனை இவருக்கு வந்தது. 'ஜய ஜய தர்ம பீமார்ஜுனனிகெ ஜய ஜய த்ரௌபதி நகுல ஸஹதேவரிகெ' என்று பாடவரின் உருட்டாணி பாடலை அடுத்த நாள் இயற்றினார்.

இன்னொரு முறை, கனவில் ஒருவர் வந்து, திருமணம் செய்துகொள்ள விரும்பினார். உடனடியாக பீமவ்வாவிற்கு முழிப்பு வந்தது. அந்த நொடியிலேயே சுபத்ரா கல்யாண தீர்க்கக்ருதியை இயற்றினார். 'ஹஸ்தி முகத கணபதிகபிவந்திஸி உத்தம ஸரஸ்வதிகெ பக்தி பாவகளிந்தெரகி நா பேளுவெ பார்த்தராயன கதெய' என்று துவங்கும் கிருதி, மிக நீண்ட கிருதியாகும்.

***** அடுத்த இதழில் தொடரும்**

* குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam @gmail.com என்னும் ஐடிக்கோ அல்லது 89044 58276 க்கோ வாட்சப் செய்யலாம்.

தொடர்

## .ஹரிகதாம்ருத ஸ்லோக அர்த்தங்கள்

### கருணா சந்தி - தொடர்ச்சி

ஜகவனெல்லவ நிர்மிசுவ நா
ந்மொகனொளகெ தானித்து சலஹுவ
ககனகேஷனொளித்து சம்ஹரிசுவனு லோககள |
ஸ்வகதபேத விவர்ஜிதனு ச
ர்வக சதானந்தெய்கதேஹனு
பகெபகெய நாமதலி கரெசுவ பகுதரனு பொரெவ ||8

ஸ்ரீமன் மத்வாசார்யரின் மூல சித்தாந்தத்தை, அவரின் அவதார தத்வத்தை விளக்குவதற்காக இந்த பத்யம் வந்துள்ளது. இன்று பொதுவாக மக்கள் பேசுகையில், அனைத்து தேவதைகளும் ஒன்றே என்று சொல்வதுடன் ; பிரம்மா, விஷ்ணு, மஹேஷ்வர இந்த மூவரும் சமமானவர்கள் என்றும் சொல்லி, பல பேர் குழப்பத்தில் உள்ளனர். இது எவ்வளவு பெரிய விபரீதம்; எப்பேற்பட்ட தவறு என்று அவரகள் அறிவதில்லை. மேலும், படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவற்றை முறையே பிரம்ம, விஷ்ணு, ருத்ரர்கள் செய்கிறார்கள் எனவே இம்மூவரும் சமம் என்றும் ஒரு வாதம்கூட பழக்கத்தில் இருக்கிறது.

ஞானிகளான ஸ்ரீஜகன்னாததாசர், சுமார் 250 ஆண்டுகளுக்கு முன்பே இத்தகைய குழப்பங்கள் வரலாம் என்று கணித்து, அதனை தீர்ப்பதற்காகவே இந்த பத்யத்தை இயற்றியிருக்கிறார் என்று சொல்ல வேண்டும். பகவந்தனின் மகன் பிரம்மன்; பேரன் ருத்ரர் என்பதை இங்கு தெளிவுபடுத்துகிறார்.

பரமாத்மனின் நாபி கமலத்திலிருந்து ஒரு பெரிய தாமரை பிறந்திருக்கிறது. அந்த தாமரையின் மேல், பிரம்மனின் சன்னிதானம் இருக்கிறது என்று நாம் ஸ்ரீரங்க ரங்கனாதன், திருவனந்தபுர அனந்தபத்மனாபன் முதலான கோயில்களில் பார்க்கலாம். இதிலிருந்து பிரம்மன், பகவந்தனின் அதீன (அவருக்குக் கீழ்) என்பது தெளிவாக புரிகிறது. இதேபோல, ராமேஸ்வரத்திலும், ருத்ரதேவரின் மேல் கை வைத்தவாறு பகவந்தன் இருப்பது, அங்கும் ருத்ரர், பகவந்தனின் அதீனம் என்பதையே காட்டுகிறது.

மேலும், ஸ்ரீவேதவியாச தேவரால் இயற்றப்பட்ட பவிஷ்யோத்தர முதலான புராணங்களில்கூட, லட்சுமிதேவியே, பிரம்மனை ஒரு பசுவாகவும், ருத்ரரை ஒரு கன்றாகவும் ஆக்கி, அவர்களை

இழுத்துக்கொண்டு, ஆகாசராஜனின் பட்டணத்திற்கு வருகிறாள் என்று படிக்கிறோம்.

இதையே ஹரி சர்வோத்தமன் என்றும்; பிரம்மன் அவரது மகன்; ருத்ரர் அவரது பேரன் என்பதை ஸ்ரீமதாசார்யர் நிர்ணயித்ததை, அவரது வழிவந்த யதிபரம்பரையினர்களான ஸ்ரீஸ்ரீபாதராஜர், ஸ்ரீவியாசராயர், ஸ்ரீவாதிராஜர், ஸ்ரீவிஜயீந்திரர், ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள் முதற்கொண்டு அனைவரும்; மற்றும் தாசஸ்ரேஷ்டர்களான ஸ்ரீபுரந்தரதாசர், ஸ்ரீவிஜயதாசர் முதலான அனைவரும் விளக்கியிருக்கிறார்கள்.

இந்த அனைத்து ஆதாரங்களையும் கொண்டு, ஸ்ரீஜகன்னாததாசரும் பிரம்ம, விஷ்ணு, மகேஷ்வரர்கள் சமம் அல்ல என்பதை இந்த பத்யத்தில் சொல்கிறார். ஆகவே இதனை மிகவும் முக்கியமான பத்யம் என்று சொல்லலாம். ஒரு மாட்டு வண்டிக்கு அச்சாணி எப்படி முக்கியமோ, அந்த அச்சாணி இல்லையெனில் எப்படி வண்டியே கவிழுந்துவிடுமோ, அது போல, இந்த பத்யத்தையும் மிகவும் முக்கியமான பத்யம் என்று சொல்லலாம்.

14 உலகங்களையும் படைக்கும் நான்முக பிரம்மதேவனின் உள்ளே அந்தர்யாமியாக நின்று பகவந்தன் தானே அந்த படைத்தலுக்கான வேலைகளை செய்கிறான் என்கிறார் தாசர். அதே போல, ருத்ரதேவருக்குள் அந்தர்யாமியாக இருந்து, தானே அவரின் செயல்களை செய்கிறான் என்கிறார்.

அஷ்ட கர்த்ருத்வங்களான ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய, நியமன, ஞான, அஞ்ஞான, பந்த, மோட்ச என அனைத்தையும் பகவந்தனே செய்கிறான் என்றபிறகு, பிரம்ம ருத்ரர்களிலும் நின்று இவனே அந்த செயல்களையும் செய்விக்கிறான் என்பது தெளிவாகிறது.

அடுத்து, ஸ்வகதபேதவிவர்ஜித என்கிறார். அதாவது பரமாத்மனின் ரூபங்களுக்கு, அவனது அவயவங்களுக்கு, நாமங்களுக்கு, செயல்களுக்கு, குணங்களுக்கு சிறிதும் வேறுபாடுகள் இல்லை. பகெபகெய நாமதலி கரெசுவ என்றால், ருத்ர, இந்திர, சூர்ய, சந்திர என அனைத்து பெயர்களாலும் பகவந்தனே அழைக்கப்படுகிறான்.

ஆக மொத்தம், இந்த பத்யத்தின் சாராம்சம் என்னவென்றால், பிரம்ம ருத்ரரில் துவங்கி இந்த 14 உலகங்களிலும் இருக்கும் அனைத்து ஜீவர்களிலும் பகவந்தனே நின்று அனைத்து செயல்களையும் செய்விக்கிறான். அவனே சர்வோத்தமனாக, ஜகதொடெயனாக இருக்கிறான். அனைவரும் அவனின் அதீனர்களாகவே இருக்கிறார்கள் என்கிறார் ஸ்ரீஜகன்னாததாசர்.

ஒப்பனலி நிந்தாடுவனு ம
த்தொப்பனலி நோடுவனு பேடுவ
நொப்பனலி நீடுவனு மாதாடுவனு பெரகாகி |
அப்பரத ஹெத்தெய்வனிவ ம
த்தொப்பரனு லெக்கிசனு லோகதொ
ளொப்பனெ தா பாத்ய பாதகனாஹ நிர்பீத ||9

சென்ற பத்யத்தையே இன்னும் விளக்கமாக இங்கு சொல்கிறார் தாசர். அனைவரிலும் பகவந்தனே நின்றிருக்கிறான் என்கிறார். அதாவது, அனைவரிலும் நின்று, அனைத்து செயல்களையும் செய்கிறான் மற்றும் செய்விக்கிறான் என்கிறார். ஸ்வாமி நமது மனஸா, வாசா, காயா (மனம், வாக்கு, செயல்) ஆகியவற்றில் நின்று அனைத்து செயல்களையும் செய்கிறான் என்று பொருள் கொள்ள வேண்டும். இப்படி அனைவரில் நின்று செயல்களை செய்வது, பார்ப்பது, வேண்டுவது, கொடுப்பது, பேசுவது என அனைத்தும் அவனே என்று புரிந்து கொள்ள வேண்டும்.

பெரகாகி = வியப்புடன் பெருமை கொள்ளுதல்; ஸ்வாமி எனக்குள் நின்று ஹரிகதாம்ருதசாரத்தை படிக்க வைக்கிறானா? சொல்ல வைக்கிறானா? என்று சொல்வதிலிருந்து, நம்மையும் வைகுண்டத்தில் வைக்கப் போகிறானா? என்று சொல்வது வரை அனைத்தையும் அந்த பகவந்தனே செய்விக்கிறான் என்று அறிய வேண்டும்.

மத்தொப்பரனு லெக்கிசனு = வேறு யாரையும் லட்சியம் செய்யாதவன் அவன். இந்த உலகத்தில் அவன் மட்டுமே சர்வோத்தமன் ஆகிறான். இந்த உலகத்தில் ஜீவனின் யோக்யதைக்கேற்ப, அவர்களுக்கு சம்பந்தப்பட்டு, யாருக்கும் பயப்படாமல் இருக்கிறான். ** **திரு.முரளிதர தாசரு, பெங்களூரு**

தொடர்

## கன்னட கிரந்தங்கள் அறிமுகம்

## ஸ்ரீபுரந்தரதாசரின் பிரகலாத சரித்திரம்

ஸ்ரீ புரந்தர தாஸர் நாரதாம்ஸ ஸம்பூதர். கர்நாடக சங்கீதத்தின் பிதாமகர் எனப் போற்றப்படுபவர். நவகோடி நாராயணன் எனப் பிரஸித்தியான வைர வியாபாரியாக இருந்த சீனப்ப நாயக், பாண்டு ரங்கனால் ஆட்கொள்ளப்பட்டு, அனைத்தையும் துறந்து, குரு ஸ்ரீ வியாஸராஜரின் அனுக்ரஹத்திற்குப் பாத்திரராகி, தாஸ தீக்ஷை பெற்று "புரந்தர விட்டல" என்னும் அங்கிதத்தில் கன்னடத்தில் ஸாஹித்தியங்களைப் படைத்த மஹானுபாவர் இவர். சுமார் 4,75,000 படைப்புகளை அளித்து பக்தியை பரப்பிய மஹனீயர். அவரது படைப்புகளே "புரந்தரோபநிஷத்" எனக் கொண்டாடப்படுகிறது.

"தாஸரெந்தரெ புரந்தர தாஸரையாஎன ஸ் "ரீ வியாஸராஜராலேயே கௌரவிக்கப்பட்டவர் .ஸ்ரீ ஹரியினைக் கண்ட அபரோக்ஷ ஞானி . ஸ்ரீவாதிராஜர், ஸ்ரீவிஜயீந்திரர், ஸ்ரீகனகதாஸர் போன்றோரின் சம காலத்தவர்பகவானின் லீலைகள் ., மஹிமைகள், தீர்த்த க்ஷேத்திர யாத்திரை, புராண இதிஹாச விஷயங்கள், தேவதைகள் மற்றும் குரு மஹனீயர்களின் துதிப்பாடல்கள், அனுஷ்டானங்கள், வைராக்கிய பதங்கள் எனப் பலவற்றை பற்றியும், பதங்கள், உகாபோகங்கள், ஸுளாதிகள் எனப் பலவகைகளிலும் ,லாலி, தாலாட்டு, ஸுவ்வி, ஊஞ்சல் பாட்டு, ஷோபானே எனும் மங்களப்பாட்டு, தேவர நாமா, நிந்தா ஸ்துதி, தண்டகம், கத்யம் (உரைநடை) எனப் பலவிதங்களிலும் சுமார் 4,75,000 படைப்புகளை அளித்து பக்தியை பரப்பிய மஹனீயர் . தியாகராஜர், முத்து ஸ்வாமி தீக்ஷிதர் போன்றவர்களுக்கும், ஸ்ரீ விஜய தாஸர், ஸ்ரீ கோபால தாஸர், ஸ்ரீ ஜகன்னாத தாஸர் போன்றவர்களுக்கும் முன்னோடியாகத் திகழ்ந்தவர்அவரது . படைப்புகளே "புரந்தரோபநிஷத் .எனக் கொண்டாடப்படுகிறது " பாகவதம் முதலான புராணங்களில் இருந்து பகவானின் அவதார சரித்திரங்களை, மஹிமைகளை ஸாரமாக கன்னடத்தில் அளித்துள்ள தாஸர் அந்த வரிசையிலே ஸ்ரீ நரஸிம்ம அவதாரத்தை வர்ணிக்கும் வகையில் அமைந்த கன்னட கிரந்தமே "ஸ்ரீ ப்ரஹ்லாத சரித்திரம்" .ஆகும்

ஸ்ரீ புரந்தர தாஸரின் "ஸ்ரீ ப்ரஹ்லாத சரித்திரம்" என்பது 13 பத்யங்களில் அமைந்த மிகச்சிறிய கிரந்தம் ஆகும். வேதவ்யாஸ பகவான் அருளிய ஸ்ரீமத் பாகவதத்தின் 7ம் ஸ்கந்தத்திலும், ஸ்ரீ நரஸிம்ம புராணத்திலும் வர்ணிக்கப்பட்டுள்ள ஸ்ரீ ப்ரஹ்லாத சரித்திரத்தையும், ஸ்ரீ நரஸிம்ம அவதார கட்டத்தையும் ஸங்க்ரஹம் செய்து சரளமாகவும் மிகச்சுருக்கமாகவும் தாஸர் கொடுத்துள்ளார்.

தாஸர் இந்த கிரந்தத்தில் 13 பத்யங்களில், த்வாரபாலகர்கள் பகவானைத் தரிஸிக்க வந்த ஸனகாதி ரிஷிகளைத் தடுத்ததினால் அஸுரர்களாக பிறக்கும்படி சாபம் பெற்று, ஹிரண்யாக்ஷன் மற்றும் ஹிரண்யகஸிபுவாக பிறந்த நேரத்தில், ஹிரண்யாக்ஷனை பகவான் வராஹ அவதாரம் எடுத்து அழித்துவிட, ஹிரண்யகஸிபு கொடும் தவம் புரிந்து, பிரம்ம தேவரிடம் வரம் பெற்று கொடுமைகள் பல புரிந்து வந்த நேரத்தில், கர்பிணியான மனைவி கயாதுவை நாரத மகரிஷி அடைக்கலம் அளித்து காக்க, ஹிரண்யகஸிபு தனக்குப் பிறந்த ஸத்புத்ரனான ப்ரஹ்லாதனை குருகுலத்திற்கு அனுப்ப, ப்ரஹ்லாதன் நரஹரியின் நாமத்தை உரைப்பதைக் கண்டு கோபம் கொண்ட அவன் உத்தரவிட்டபடி, சேவகர்கள் ப்ரஹ்லாதனைக் கொல்ல பலவிதங்களில் முயன்ற போதும், பகவான் ப்ரஹ்லாதனை ரக்ஷணை செய்ய, கோபம் கொண்ட ஹிரண்யகஸிபு, ஸ்ரீ ஹரியைத் தேடும் விதத்தில் கம்பத்தை உதைக்க, நரஸிம்மன் உக்ரமாக ஆவிர்பவித்து, நகங்களால் கிழித்துக் கொன்று, ஸ்தோத்திரம் செய்த ப்ரஹ்லாதனுக்கு அபயம் அளித்து, தேவதைகள் பூமழை பொழிய மஹாலக்ஷ்மியுடன், நரஸிம்மன் தரிஸனம் தந்து, பயம் நீக்கி அருள் புரிந்ததையும் மிக அழகாக வர்ணித்து, இந்த கிரந்தத்தில் பலஸ்ருதியையும் எடுத்துக் கூறி நிறைவு செய்துள்ளார்.

ஸ்ரீ புரந்தர தாஸர் "நாரஸிம்மனெம்பொ தேவனு நம்பிதந்த நரரிகெல்ல வரவ கொடுவனு" என்று பல்லவியில் நரஸிம்மன் என்னும் தேவன் நம்பிய மனிதர்களுக்கு வரம் கொடுப்பான் எனப் போற்றித் துதித்துத் தொடங்குகிறார்.

முதல் பத்யத்தில், பகவான் லக்ஷ்மி ஸமேதனாக பாற்கடலில் துயில் கொண்டிருக்க, அங்கு பகவானின் தரிஸனம் பெற வந்த ஸனகர், ஸனத்குமாரர் முதலான ரிஷிகளைத் தடுத்த த்வார பாலகர்களுக்கு, ரிஷிகள் கோபத்தினால் அவர்களுக்கு மூன்று ஜென்மங்களில் அசுரர்களாக பிறக்க சாபமிட்டதை தாஸர் விளக்கியுள்ளார்.

2ம் பத்யத்தில், திதியின் கர்பத்தில் ஹிரண்யாக்ஷன் மற்றும் ஹிரண்யகஸிபு என இருவரும் ஜனித்ததையும், பூமியை மறைத்து வைத்த ஹிரண்யாக்ஷனை பகவான் தஸாவதாரத்தில் மூன்றாவதாக குறிப்பிடுகின்ற வராஹ அவதாரத்தை எடுத்து கொன்று, பூமியை ரக்ஷித்ததையும் தாஸர் குறிப்பிடுகின்றார்.

3ம் பத்யத்தில் , தன் சகோதரனான ஹிரண்யாக்ஷனின் மரணச் செய்தியைக் கேட்டு தைத்யராஜனான ஹிரண்யகஸிபு ஸ்ரீ ஹரியின் மேல் கோபம் கொண்டு, கொடும் தபஸு மேற்கொண்டு, பிரம்மதேவரிடம் இருந்து வரங்களைப் பெற்றதை தாஸர் விளக்கியுள்ளார்.

4ம் பத்யத்தில் இவ்விதம் வரங்களைப் பெற்ற ஹிரண்யகஸிபு, பிறகு இந்திர லோகத்தை சூறையாடி, மூன்று லோகங்களிலும் தன்னைப் பற்றியதான பயத்தை உண்டாக்கியதையும் விவரித்து, கர்பிணியான ஹிரண்யகஸிபுவின் மனைவி கயாதுவிற்கு பிரம்மதேவரின் புத்ரரான நாரதமகரிஷி தமது ஆஸ்ரமத்தில் அடைக்கலம் தந்து ரக்ஷித்து, தைத்யராஜனை ஹிரண்யகஸிபுவிடம் ஒப்படைத்ததையும் தாஸர் விவரித்துள்ளார்.

5ம் பத்யத்தில், ஒன்பது மாதங்கள் முடிய, கயாது ஸத்புத்திரனை பெற்றெடுத்ததையும், ஹிரண்யகஸிபு பிராமணர்களை வரவழைத்து தனது மகனுக்கு "ப்ரஹ்லாதன்"என நாமகரணம் செய்ததையும், "தன்ன ஸூதனிகெ ப்ரஹலாதனெந்து கரெஸிதெனு" போன்ற வாக்கியங்களினால் வர்ணித்துள்ளார்

6ம் பத்யத்தில் பால சந்திரன் போல பாலகன் ப்ரஹ்லாதன் வளர்ந்து வர, அவனுக்கு ஐந்தாவது வயது நிரம்புகையில், அஸுரன் ஹிரண்யகஸிபு குருவினை வரவழைத்து, தனது மகனுக்கு சகலவிதமான வித்யையும், கற்பிக்கும்படி வேண்டி அவர்களிடம் ஒப்படைத்து குருகுலத்திற்கு, அனுப்பி வைத்ததைப் பற்றி விளக்கியுள்ளார் தாஸர்.

7ம் பத்யத்தில் அஸுரன் தன் மகனான ப்ரஹ்லாதனை தன்னுடைய நாமத்தை சொல்லும்படி கூற, ப்ரஹ்லாதன் நரஹரியின் நாமத்தைப் பிரீதியுடன் எழுதவே, இடது மடியில் அமர்ந்திருந்த பாலகனை

அடித்து தரையில் தள்ளிய ஹிரண்யாக்ஷனின் செயலை உரைக்கிறார் தாஸர்.

8ம் பத்யத்தில், அரண்மனை சேவகர்களை அழைத்த ஹிரண்யகஸிபு, தன்னுடைய மகனைக் கொல்ல வேண்டுமென உத்தரவிட சேவகர்கள்ப்ரஹ்லாதனைக் கானகத்திற்கு அழைத்துச் சென்று, உண்ணும் போஜனங்களில் விஷம் கலந்து வைத்ததையும், ஹரியின் ஸ்மரணை செய்து கொண்டே விஷம் கலந்த உணவை பாலகன் ப்ரஹ்லாதன் உண்டும், அவனுக்கு விஷம் ஒன்றும் செய்யாமல் ரக்ஷிக்கப்பட்டதையும் விவரித்துள்ளார் தாஸர்.

9ம் பத்யத்தில் மேலும் அஸுரனான ஹிரண்யகஸிபு குழந்தை ப்ரஹ்லாதனை, சமுத்திரத்தில் படுக்க வைத்து மேலே பெரிய மலை போன்ற கல்லை வைத்து வரச் சொன்னதையும், ஆனால் பக்தனான இந்த பாலகன் ஹரியின் க்ருபைக்கு பாத்திரமானவன் என்று வருணபகவான், அவனுக்கு மரணம் இல்லாமல் செய்து வீட்டிற்கு அனுப்பி வைத்ததையும் தாஸர் விளக்கியுள்ளார்.

10வது பத்யத்தில், ஹிரண்யகஸிபு ப்ரஹ்லாதனைக் கொல்வதற்கு மேற்கொண்ட முயற்சிகளையும், அதில் அவன் தோற்றதையும், பாலகனுக்கு ஒன்றுமே ஆகவில்லை எனவும், மகனைக் கொல்வதற்கு உபாயம் ஒன்றும் தோன்றாமால் அசுரன் ஹிரண்யகஸிபு திகைத்ததையும், "ஸுதன கொல்லலு சக்தனல்லதெ போதனந்தெ" போன்ற வாக்கியங்களால் வர்ணிக்கிறார் தாஸர்.

11வது பத்யத்தில், கோபமுற்ற ஹிரண்யகஸிபு, ப்ரஹ்லாதன் ரக்ஷிக்கப்படுவதற்குக் காரணமான ஸ்வாமியைக் காணும் பொருட்டு , அவனின் ஸ்வாமி இருக்குமிடத்தை தனக்குக் காண்பிக்கும்படி மகனான ப்ரஹ்லாதனைக் கேட்க, "தன்னுடைய ஸ்வாமி இல்லாத இடம் இல்லை இந்த லோகத்தில் " என்பதாக நிச்சயமாகக் கூறி, கைகுவித்து காட்டி "தூணிலும் இருப்பான்"என்று கூறும்படியாக 'கம்பதல்லி இருவனெந்து கைய முகிது தோர்தனாக" போன்ற வாக்கியங்களால் மிக அழகாக விளக்குகிறார் தாஸர்.

12வது பத்யத்தில், வைரத்தால் ஆன கம்பத்தை அசுரன் ஹிரண்யகஸிபு உதைக்க, நரஹரி உக்ரமாகி உள்ளிருந்து வந்து கோபத்துடன் நிற்க "கட கட" என்று சப்தம் செய்து கொண்டு, அசுரனைப் பிடித்து மடியில் அமர்த்தி நகங்களினால் அவனைக்

கிழித்துக் கொன்று, அவனின் குடலை எடுத்து மாலையாக மார்பினில் அணிந்து, ஸ்தோத்திரம் செய்த பாலகனை நரஸிம்மன் ஆலிங்கனம் செய்து கொண்டதை "வர கம்பவன்னு ஒதெயலு நரஹரியு" போன்ற வாக்கியங்களினால் தத்ருபமாக நரஸிம்ம அவதார கட்டத்தை வர்ணிக்கிறார் தாஸர்.

இறுதியில் 13வது பத்யத்தில், ஸ்வர்க்க லோகத்திலிருந்த தேவர்கள் அப்போது பூமழை பொழிய, பட்ட மகிஷியான ஸ்ரீ மஹாலக்ஷ்மி நரஸிம்மனுடன் அமர்ந்து, லக்ஷ்மியும், பகவானும் லக்ஷ்மி நரஸிம்மனாக தரிசனம் தர, தேவாதி தேவர்களுக்கெல்லாம் பயத்தை போக்கி அபயம் அளித்ததை வர்ணித்து, ஸ்ரீ லக்ஷ்மி நரஸிம்மரின் சரித்திரத்தை, உதயகாலத்தில் படிக்கும் மானுடர்களுக்கு புத்ர ஸந்தானங்களை கொடுத்து மற்றும் வேண்டிய வரங்களைக் கொடுத்து பக்த வத்ஸலனான புரந்தர விட்டலன் முக்தியையும் அளிப்பான் என்பதாக பலஸ்ருதியையும் கூறி பூர்த்தி செய்கிறார் தாஸர்.

இத்தகைய உயரிய கிரந்தத்தை அனுதினமும் விஸேஷ அர்த்தங்களைத் தெரிந்து கொண்டு, பாராயணம் செய்து ஸ்ரீ புரந்தர தாஸரின் அந்தர்யாமியான பாரதிரமண முக்ய ப்ராண அந்தர்கத ஸ்ரீ ஹரியின் அனுக்ரஹத்திற்குப் பாத்திரராவோமாக!

ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து ******S. லக்ஷ்மிபதிராஜா, சென்னை**

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 2 : இதழ் 5


| **நிர்வாக ஆசிரியர்** | **துணை ஆசிரியர்** |
|---|---|
| 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்<br>ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,<br>380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase, பெங்களூரு 560078<br>Ph.: 89044-58276.<br>haridasa.vijayam@gmail.com<br>jagannathakesava.blogspot.com | 'தாச சாகித்ய சேவா ரத்ன'<br>திரு.குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்<br><br>**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**<br>திரு. முரளிதர தாசரு,<br>திருமதி. நிர்மலா நரசிம்மன்,<br>திரு. லட்சுமிபதிராஜா,<br>திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ் |


ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்

**மார்ச் 1 முதல் 31 வரை, 2021**

March 11: மாக பகுள த்ரயோதசி - ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர், மாதனூரு

March 13: மாக அமாவாசை - ஸ்ரீகுருபிராணேஷ விட்டல தாசர், லிங்கசுகூர்

March 31: பால்குண பகுள த்ருதியை - ஸ்ரீவாதிராஜ தீர்த்தர், ஸோதே

# ஆசிரியர் பக்கம்

த்வைத சித்தாந்தத்தையே அடிப்படையாகக் கொண்ட ஹரிதாச சாகித்யத்தினை, ஸ்ரீஸ்ரீபாதராஜர் துவக்கி, ஸ்ரீவியாசராஜர் அதனை ஒரு தாசகூட பரம்பரையாகவே வளர்த்தெடுத்தாலும், அதற்கு தன் மகத்தான பங்களிப்பினை செய்தவர், ஸ்ரீவாதிராஜர். கன்னடத்தில் பல்வேறு கிருதிகளை இயற்றி, நம்மையும் முக்தி மார்க்கத்திற்குச் செல்வதற்கான வழிவகையை செய்தவர் இவர். பிராத: ஸ்மரணீய ரான ஸ்ரீவாதிராஜரைப் பற்றி பல்வேறு ஹரிதாசர்கள் பற்பல பாடல்களை இயற்றியுள்ளனர். அவற்றைப் பற்றி ஒரு பதிவும், ஸ்ரீவாதிராஜர் இயற்றிய ஸ்ரீசுந்தரகாண்டம் பற்றிய ஒரு பதிவும் இந்த இதழில் உள்ளது. ஸ்வாமிகளின் கன்னட கிருதிகளை அதன் அர்த்தங்களை புரிந்துகொண்டு, பாராயணம் செய்து, அதன் பலன்களைப் பெறுவோமாக.

ஹரிதாச சாகித்யத்தைப் பற்றி பல்வேறு அற்புத ஆராய்ச்சிக் கட்டுரைகள், சுளாதி (அர்த்தங்களுடன்) புத்தகங்கள், ஹரிதாசர் களின் பார்வையில் த்வைத சித்தாந்தம் என பல புத்தகங்கள் கன்னடத்தில் உள்ளன. அவற்றை தமிழ் மாத்வர்களுக்குப் புரியும் வகையில் தமிழில் கொண்டு வருவதற்கு நீங்களும் உதவலாம். இத்தகைய மஹனீயர்களின் ஆராதனை விழா சமயங்களில், அல்லது உங்கள் வீட்டு சுபநிகழ்ச்சிகளில், மேற்கண்ட விஷயங் களில் ஏதாவது ஒரு புத்தகத்தை, உங்கள் மடம், பஜனா மண்டலி சார்பாக வெளியிட்டு, அதனை வினியோகிக்கலாம். விருப்பம் உள்ளவர்கள் தொடர்பு கொள்ளவும். கன்னடத்தில் உள்ள சிறந்த விஷயங்களை தமிழில் கொண்டுவருவதற்கான ஒரு சிறு முயற்சியே இது.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

வங்கிக் கணக்கில் சந்தா செலுத்தினால், மறக்காமல் உங்கள் முகவரியை 89044 58276 எண்ணுக்கு வாட்சப் / SMS அல்லது haridasa.vijayam@gmail.comக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

தொடர்

## கோவிந்தாஷ்டகம்

**இயற்றியவர்: ஸ்ரீகுருகோவிந்தவிட்டலதாசர்**

**அம் அஜாய நம:** - அ-எழுத்திற்கான அஜனின் ஸ்துதி

**அலவ மஹிம ஹரி கோவிந்த | நம்ம**
**அலவ போ⁴த³ர ப்ரீய கோவிந்த ||**

லவ என்றால் சிறிது. அலவ என்றால் மிகவும் அதிகமான. ஆகையால், அலவ மஹிம என்றால் மிகவும் அதிகமான (எண்ண முடியாத) மகிமைகளையுடைய கோவிந்தன் என்று பொருள். அத்தகைய கோவிந்தன், நம் அனைவரின் ஆதிகுருகளான அலவபோதரின் (பூர்ணப்ரக்ஞரின்) மிகவும் பிரியமான கடவுளாகும்.

அகாரத்தால் வணங்கப்படும் அஜ நாமக ஸ்ரீஹரியின் ஸ்துதி இங்கு செய்யப்படுகிறது. ஸ்ரீஹரிக்கு அஜ என்று பெயர் வருவதற்கு முக்கியமான காரணங்கள் இரண்டு. 1. பிறப்பு என்பதே இல்லாதவன். (ந ஜாயதே இதி அஜ:) மற்றும் 2. அ என்னும் எழுத்தினால் வெளிப்படுகிறவன். (வெளிச்சத்திற்கு வருபவன்). இந்த இரு மகிமைகளையே அலவமஹிமெ என்று வர்ணித்து அத்தகைய மகிமைகளைக் கொண்ட அஜ ரூபனையே கோவிந்தன் என்று அழைத்து பாடியிருக்கிறார் தாசர்.

இப்படி அகார எழுத்தினால் வெளிப்படுகிறவன் கோவிந்தன் என்று எண்ணி அவனைப் பாடினால், அதனால் மகிழ்ச்சியடையும் அவன், நம் பாவங்களை போக்குகிறான். அடுத்து, சம்சார பந்தத்திலிருந்தும் (பிறப்பு இறப்பு என்னும் சுழற்சியை) நம்மை விடுவிக்கிறான் அந்த ஹரி என்கிறார்.

இத்தகைய மகிமைகளைக் கொண்டிருப்பதாலேயே, அஜ நாமக கோவிந்தன், ஆதிகுருகளான பூர்ணப்ரக்ஞருக்கு மிகவும் ப்ரியமானவனாக இருக்கிறான். ஆகையாலேயே, ப்ரிய என்று சொல்லாமல் ப்ரீய என்று சொல்லியிருக்கிறார். ஸ்ரீமதாசார்யரை, அலவபோதர் என்று அழைப்பதற்கு, அவர் அஜரூபி பகவந்தனை நன்கு அறிந்திருப்பதும் ஒரு காரணமாகும். ஸ்ரீமதாசார்யருக்கு அஜ நாமக

பகவந்தன் மிகவும் ப்ரியமாக இருப்பதாலேயே, அவன் (ஸ்ரீஹரி) தன்னை இவ்வுலகில் சரியாக வெளிப்படுத்துவதற்கு (நிர்ணயம் செய்வதற்கு), அவரையே (மத்வரையே) பயன்படுத்துக் கொண்டான்.

**ஆம் ஆனந்தாய நம:** - ஆ-எழுத்திற்கான ஆனந்தனின் ஸ்துதி

**ஆலயதொளு நில்லோ கோவிந்த | ஹ்ரு**
**தா³லயத³லி தோரோ கோவிந்த ||**

ஹே கோவிந்தனே. எனக்குள் இரு. என் இதயம் என்னும் ஆலயத்தில் நின்று, உன் தரிசனத்தைக் கொடு.

ஆகாரத்தால் வணங்கப்படும் ஆனந்த நாமக ஸ்ரீஹரியின் ஸ்துதி இங்கு செய்யப்படுகிறது. ஸ்ரீஹரிக்கு ஆனந்த என்று பெயர் வருவதற்கு முக்கியமான காரணங்கள் இரண்டு. 1. எப்போதும் ஆனந்தமயமாக இருப்பவன். 2. ஆ என்னும் எழுத்து, ஆனந்த நாமக பகவந்தனின் நாமம் என்று நினைத்து உபாசனை, ஸ்துதி செய்பவர்களுக்கு, எப்போதும் ஆனந்தத்தையே வழங்குகிறவன்.

ஆலயம் என்றால் வீடு. மனிதனின் சரீரமே ஜீவனுக்கு வீடு என்கின்றனர். ஆகையால், 'ஆலயதல்லி நில்லோ' என்றால், நீ ஆனந்தமயனாக இருப்பதால், ஆனந்தமயனாகவே என் தேகத்தில் நிலைபெறுவாயாக என்று வேண்டுகிறார். இப்படி, முதல் வரியில், என் தேகத்தில் இரு என்று வேண்டிவிட்டு, அடுத்த வரியில், இந்த தேகத்தில் இருக்கும் இதயக் கோயிலில், ஆ-எழுத்தில் வெளிப்படும், ஆனந்தரூபனான கோவிந்தன், எனக்கு தரிசனம் கொடுக்கட்டும் என்று வேண்டுகிறார்.

எல்லா இடங்களிலும் இருக்கும் பகவந்தன், நம் தேகத்திலும், தேகத்தில் இருக்கும் இதயத்திலும் கண்டிப்பாக இருக்கிறான். ஆனால், அவன் இருக்கிறான் என்னும் அறிவு / சிந்தனை மட்டும் நமக்கு இருப்பதில்லை. ஆகையால், நீ என் தேகத்திலும், இதயத்திலும் இருக்கிறாய் என்னும் அறிவைக் கொடு என்றே பிரார்த்திக்க வேண்டும்.

கோவிந்த என்று இங்கு சொல்வது, என் இதயக் கோயிலில் இருந்துகொண்டு, என் மூலமாக பக்தியை, பிரார்த்தனைகளை, ஆனந்தமயமான பகவத் ரூபத்தின் ஸ்துதிகளை மிகவும் அன்புடன்

பெற்றுக் கொள்பவனே என்னும் சிறப்புப் பொருளையும் நாம் சிந்திக்கலாம்.

**இம் இந்திராய நம:** - இ-எழுத்திற்கான இந்திரனின் ஸ்துதி

**இக்ஷுசாபன பிதனெ கோவிந்த | நீ**
**னிக்ஷுத⁴ன்வாரினுத கோவிந்த |**

கரும்பினை வில்லாகக் கொண்டிருப்பதால் 'இக்ஷுசாப' என்று அழைக்கப்படும் பிரத்யும்னனாக, ருக்மிணியிடம் அவதரித்தபோது, அவனுக்கு நீயே தந்தையானாய். அத்தகைய 'இக்ஷுதன்வா' என்று அழைக்கப்படும் காமனுக்கு, எதிரியைப் போல இருக்கும் ருத்ரன் 'இக்ஷுதன்வாரி' - அவனால் 'நுத' வணங்கப்படுகிறாய்.

இ-காரத்தால் வணங்கப்படும் இந்திரரூபி ஸ்ரீஹரியின் ஸ்துதி இங்கு செய்யப்படுகிறது. ஸ்ரீஹரிக்கு இந்திர என்று பெயர் வருவதற்கு முக்கியமான காரணங்கள் இரண்டு. 1. மிகவும் அதிகமான செல்வத்தைக் கொண்டிருப்பவன் என்று பொருள். 2. அனைத்து வேத, புராணங்களில் இருக்கும் 'இ' என்னும் எழுத்தில் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறான்.

பரசுக்ல த்ரயர்களில் சேர்ந்த லட்சுமிதேவி, நான்முகன், வாயுதேவர், சரஸ்வதி மற்றும் பாரதி ஆகியோரைத் தவிர, மற்ற அனைவரும் காமன் வசப்பட்டவர்களே. இப்படி அனைவரும் தன் ஆதினத்தில் வைத்துக் கொண்டிருக்கும் காமனுக்கு தந்தையாக இருந்து, அவனை தன் கட்டுப்பாட்டில் வைத்துக் கொண்டிருக்கும் பகவந்தனின், மிகவும் அதிகமான செல்வங்களை உடைய ஒரு முகம் வெளிப்படுகிறது. அத்தகைய காமனுக்கு, எதிரியாக இருக்கும் ருத்ரதேவராலும் வணங்கப்படும் பகவந்தன் என்றபோது அவனின் மிகவும் அதிகமான செல்வங்களை உடைய இன்னொரு முகமும் வெளிப்படுகிறது.

இப்படி இரு வரிகளிலும், இந்திர நாமக பகவந்தனின் செல்வங்களைக் கொண்ட இரு முகங்களை வேண்டுவதன் மூலம், இந்திரன் என்று அழைக்கப்படும் மற்றும் அனைத்து 'இ'கார எழுத்துக்களாலும் வர்ணிக்கப்படும் கோவிந்தன், நமக்கு தேவையான செல்வங்களைக் கொடுப்பான் என்று உணர்த்துகிறார் தாசர்.

**ஈம் ஈஷானாய நம:** - ஈ-எழுத்திற்கான ஈசனின் ஸ்துதி

**ஈக்ஷிஸோ கருணதி கோவிந்த | நீ**
**நீக்ஷிஸலோஷவேனோ கோவிந்த ||**

கோவிந்தா! என்னை கருணையுடன் பார்ப்பாயாக. என்னை அப்படி கருணைப் பார்வையால் பார்க்காமலிருக்க என்னிடம் உள்ள தோஷம் என்ன? அப்படி என்மேல் உனக்கு என்ன கோபம்?.

ஈ எழுத்தால் அழைக்கப்படும் ஈசரூபி பகவந்தனின் பெயருக்கு இரண்டு முக்கிய காரணங்கள் உள்ளன. 1. எந்தவொரு செயலையும் செய்து முடிப்பதற்கு சாமர்த்தியம் உள்ளவன். 2. ஈ-என்னும் எழுத்திற்கு வெளிப்படுபவன் என்று சிந்தித்து உபாசனை, ஸ்துதி செய்பவர்களுக்கு அதிக சுகங்களைக் கொடுப்பவன்.

ஈ-கார என்னும் எழுத்தில் வெளிப்பட்டு, தன்னை கோவிந்தன் என்று அழைத்துக் கொள்ளும், ஈச நாமக பகவந்தன், தன் கருணைப் பார்வையால் நம்மைப் பார்த்தால் மட்டுமே, அனைத்து வேத புராணங்களில் ஈ என்னும் எழுத்தில் வியாபித்திருக்கும் அவனை நாம் உபாசனை செய்யமுடியும். ஆகையால், ஈச நாமக பகவந்தனை, கோவிந்த என்று அழைத்து, ஈ என்னும் எழுத்தில் இருக்கும் உன்னை நான் வணங்குமாறு எனக்கு கருணை காட்டு என்று வணங்க வேண்டும்.

இதுவரை ஈகாரத்தினால் ஈசனின் உபாசனை செய்ய முடியவில்லை. அதற்கு முக்கிய காரணம், ஈச நாமக பகவந்தன் நம்மை கருணையால் பார்க்காததே ஆகும். அப்படி என்னை பார்க்காமல் / காப்பாற்றாமல் இருப்பதற்கு என்ன காரணம்? என்மேல் ஏதேனும் தோஷம், கோபம் உள்ளதா? என்று ஈச நாமக கோவிந்தனிடம் வேண்டுதன் மூலம், அவனின் அவனை வேண்டாமல் / பூஜிக்காமல் இருந்தால், அவன் கருணைப் பார்வையை நம் மேல் வீசுவதில்லை என்றும் பொருள் கொள்ளலாம்.

**உம் உக்ராய நம:**
உ-எழுத்திற்கான உக்ரனின் ஸ்துதி

**உரக$^{3}$சயனனே கோவிந்த | நம்ம**
**உரக$^{3}$ராய வைகுண்ட$^{2}$ கோவிந்த |**

சேஷரூபனான பாம்பின் மேல் படுத்திருக்கும் கோவிந்தா! மிகச்சிறந்தவர்களான பிரம்மாதி தேவதைகளால் வணங்கப்படும், வைகுண்டத்திற்கு அதிபதியான கோவிந்தனே!

உ எழுத்தால் அழைக்கப்படும் உக்ரரூபி பகவந்தனின் பெயருக்கு இரண்டு முக்கிய காரணங்கள் உள்ளன. 1. துஷ்டர்களுக்கு எப்போதும் பயங்கரமாக காட்சியளிப்பவன். 2. யார் தன்னை உ-கார எழுத்தில் வெளிப்படுபவன் என்று சிந்தித்து வணங்குவதில்லையோ, அவனை கேலி செய்கிறார்களோ - அத்தகையவர்களுக்கு உக்ர ரூபமாக காட்சியளிப்பவன்.

வயிற்றின் மூலம் ஊர்ந்து செல்வதால் உரக என்று அழைக்கப்படும் பாம்பு, மிகவும் உக்ரமானது என்று அனைவருக்கும் தெரிந்ததே. அத்தகைய சேஷரூபி உரகனின் மேல் படுத்திருப்பவன் என்று சொல்வதன் மூலம், அவனின் உக்ரத்தையும் நமக்கு தெரியப்படுத்துகிறார். உக்ரமான பாம்பின் மேல் படுத்து, அதனை அடக்கியாள்பவனாகையால், உக்ரமாக இருக்கும் மற்றவர்களின் உக்ரங்களையும் கட்டுப்படுத்துபவன் என்று இங்கு குறிப்பால் உணர்த்தப்படுகிறது.

'உருகாய' என்பது உபநிஷத்தில் ஸ்ரீஹரிக்கு வழங்கப்படும் பெயர். மிகச்சிறந்தவர்களான பிரம்மாதி தேவதைகளால் வணங்கப்படுபவன் என்பதாலும் அவனுக்கு உருகாய என்ற பெயர் வந்திருக்கிறது.

உ-கார என்னும் எழுத்தில் வெளிப்பட்டு, தன்னை கோவிந்தன் என்று அழைத்துக் கொள்ளும், உ-கார நாமக பகவந்தன், பிரம்மாதிகளால் உ-காரத்தினால், உ-என்று தொடங்கும் அனைத்து சொற்களாலும் வணங்கப்படுபவன் என்றும் பொருள் கொள்ளலாம்.

வைகுண்ட லோகமானது, ஸ்ரீஹரியின் கட்டுப்பாட்டில் இருப்பதால், அந்த பகவந்தனையே வைகுண்ட என்று அழைக்கிறோம். அவனை வைகுண்ட என்று அழைப்பதன் மூலம், உக்ர ரூபத்தில் தன்னை உபாசனை மற்றும் ஸ்துதிப்பவர்களால் மகிழ்ந்திருக்கும் அவன், பின்னர் அவர்களுக்கு வைகுண்டத்தையே அருள்பவனாகிறான் என்று அறியவேண்டும். (தொடரும்)....

தொடர்

## கேசவ நாமா

## 15. நீனே தயாநிதியு- ஸ்ரீமஹிபதி தாசர்

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)

வசுதி4யொளு ப4ஸ்மாஸுரன மர்த்தி3ஸி
பா4ஷெயனித்து ப4க்தர பாலிஸி
ரிஷி வேதவ்யாஸ கொ3லிதா3தனு
வசுதேவ சுத வாசுதேவனு நீனே ||14

பூமியில் பஸ்மாசுரனைக் கொன்ற (பக்தர்களுக்குக் கொடுத்த வாக்கினை நிறைவேற்றிய), சத்யவதி - பராசரரின் மகனான வேதவியாஸ, தேவகி - வசுதேவனின் மகனான வாசுதேவன் நீயே.

விதுர உத்தவ கருடனிகொ3லிது3
ப்4ருகுமுனி கபில மொகேந்த்ரன சலஹித
ஸ்திர பதவித்தனேக மந்தி3கெ3 ப்ரசன்னனாத ப்ரத்யும்னனு நீனே ||15

விதுர, உத்தவ, கருட, ப்ருகு முனி, யோகேந்திரனான அர்ஜுனன் ஆகியோருக்கு அருளிய நீ, பற்பல சுஜீவிகளுக்கு தரிசனம் அளித்து, ஸ்திர பதவியை (மோட்சத்தை) அளிக்கும் பிரத்யும்னன் நீயே.

சீதா சுத்3தி3ய தந்த3வகொ3லிது3 ஹத்து தலெகள இத்த3வனளிது3
க1த்து3 பெ3ண்ணெய முத்தெ3ய மெத்து3
உத்த3வகொ3லித3 அனிருத்த3னு நீனே ||16

சீதாதேவியின் செய்தியைக் கொண்டு வந்த அனுமனுக்கு அருளிய, ராவணனைக் கொன்ற, வெண்ணையைத் திருடித் தின்ற, உத்தவருக்கு அருளிய அனிருத்தன் நீயே.

சோகிஸி பூதனிய ப்ராணவ ஹீரித3 ப4க்த புண்டலீகன சலஹித
ப4க்திகெ ஒலிது முக்தியனித்த
பரமபுருஷ புருஷோத்தமனு நீனே ||17

(சிறிய வாயினால்) பூதனியின் பிராணனைப் பறித்த, புண்டலீகனின் பக்திக்கு மெச்சி பாண்டுரங்கனான, ஷரணாகதி அடைந்தவர்களை முக்தியைக் கொடுக்கக்கூடிய புருஷரூபி புருஷோத்தமன் நீயே.

அக்ஷயவெந்து ரக்ஷிஸி சபெயொளு
த்ரௌபதி கருணகடாக்ஷதி சலஹித
பக்தவத்ஸலனாகி கஜேந்த்ரகெ

மோக்ஷவனித்த அதோக்ஷஜ நீனே ||18
கௌரவர்களின் சபையில் த்ரௌபதிக்கு கருணையுடன் முடிவில்லாத ஆடையைக் கொடுத்து காப்பாற்றிய, பக்தவத்ஸலன் என்னும் பெயர் பெற்றதற்காக கஜேந்திரனுக்கு அருளி மோட்சத்தைக் கொடுத்த, அதோக்ஷஜன் நீயே.

நரநாரியு நடேஷ்வரனாகி நக2முக2தலி ஹிரண்யாக்ஷன சீளி
பக்த ப்ரஹ்லாதக3 ஒலிது ஸ்தம்பதி
ப்ரகடிஸித3 நரசிம்ஹனு நீனே ||19
மோகினியாகி (இதையே நடேஷ்வரன் என்கிறோம்), தூணிலிருந்து வந்து வெறும் நகங்களினால் ஹிரண்யசிபுவைக் கொன்ற, பிரகலாதனுக்கு அருளிய நரசிம்மன் நீயே.

அனில ஸ்னேஹித அஜசுதாக்னிகெ3 ஒலிது
அஹல்யா ஷாப விமோசன மாடித
நெச்சித3 த்ருவன நிஜபக்திகெ ஒலிது அசல பதவித்தச்யுத நீனே ||20
சூரியனின் மகனான வானர சுக்ரீவன் மற்றும் அனுமனுக்கு ஸ்ரீராமனாகி வந்து அருளி, அகல்யா சாப விமோசனத்தை செய்தாய். (தாய் சொன்னதால்) தவம் மேற்கொண்ட சிறுவன் த்ருவனின் பக்திக்கு மெச்சி த்ருவ பதவியையே கொடுத்த, அச்யுதன் நீயே. (அனில - வாயு / அனுமன். அஜ - சூரியன். அஜசுத - சூரியனின் மகன் சுக்ரீவன்).

ஜக3தொ3ளு ப4க்த ஜனரிகெ3 ஒலிது
ஜான்ஹவி நிர்மிஸி ஜனகன சலஹித
சாதுசஜ்ஜன முனி சஞ்சீவன ஜானகீபதி ஜனார்த்தனனு நீனே ||21
தன் பித்ருக்களின் சத்கதிக்காக பகீரதன் இறைவனை வேண்டியதால், கங்கை, பாகீரதி / ஜான்ஹவியாக பாய்ந்து சகரனின் 60,000 வாரிசுகளுக்கு சத்கதியைக் கொடுத்த, சாது சஜ்ஜனர்களுக்கும் முனிவர்களுக்கும் சஞ்சீவன் ஆன ஜானகி-பதி நீயே ஜனார்த்தனன் என்று அழைக்கப்படுகிறாய்.

அங்க3த3 கொ3லிதானந்தவனித்து
கு1ந்த3தெ3 கரெதுபமன்யன ஸலஹித
தினகர சந்த்ர களியுக3ளித்து இந்த்ரகெ ஒலித உபேந்த்ரனு நீனே ||22

வாலி புத்ரனான அங்கதனுக்கு அருளி, அவனை கிஷ்கிந்தையின் அரசனாக ஆக்கிய, உபமன்யுவிற்கு பால் கொடுத்து அருளிய, சூரிய சந்திரர்களில் இருந்து மனுகுலத்திற்கு மகிழ்ச்சியைக் கொடுத்திருக்கும் இந்திரனுக்கு, இந்திர பதவியைக் கொடுத்த உபேந்திரன் நீயே.

ஹயவதன னவதாரவ தரிஸி த[4]ரெயொளு ப[4]க்தன ஜன்மவ ஹரிஸி
ஹரிஷ்சந்திரன க்லேஷவ பரிஹரிசித
சுரமுனிகொலித ஸ்ரீஹரியு நீனே ||23

ஹரிசந்திரனின் கஷ்டத்தை போக்கிய, சுரமுனிவர்களுக்கு அருளிய, ஹயவதன ரூபியாக வாதிராஜருக்கு தரிசனம் அளித்த, சாத்விக ஜீவர்களைக் காப்பாற்றும் ஹரி நீயே.

கா[1]லிமத[2]னவ மாடி கருணதி சுரரிகெ அம்ருதவனித்து சலஹித
கல்க்யாவதாரத லீலெய தோரித கபட நாடக ஸ்ரீகிருஷ்ணனு நீனே ||24

காளிங்க மர்த்தனம் செய்த, மோகினி ரூபத்தினால் சுரர்களுக்கு அம்ருதத்தைக் கொடுத்த, கல்கியாக அவதரித்து லீலைகளை செய்த, கபட நாடக சூத்ரதாரி கிருஷ்ண நீயே.

சந்த்[4]யானத ரசாயனவனித்து கா[1]யதி[3] சத்கதி சாத[4]னதோரித
நரகீடக மஹிபதி தா[1]ரக[1] குருமூர்த்தியு பரமதயாநிதியு நீனே ||25

குருமந்திரமே மனிதர்களுக்கு தாரக மந்திரம். குருபக்தியின் மூலமே மஹி (உலகம்) தலைவனான மஹிபதியின் கருணை கிடைக்கின்றது. பாமரனான இந்த தாசனுக்கு, பரமதயாநிதியான குரு மஹிபதியின் அருள் கிடைக்குமாறு செய்தவன் நீயே.

கேசவ நாமத்தின் மூலமாக, சந்தியாவந்தனம் செய்யும் யோக மார்க்கம் மற்றும் சத்கதிக்கான சாதனா மார்க்கத்தை தெரிவிக்கிறார். கேசவ நாமத்தின் உள் அர்த்தங்களை தெரிவித்த தாசர் அந்தர்முகி (உள்நோக்கிய) சாதனையை செய்ய வேண்டுமென்றும் சொல்கிறார்.
**

## 16. மங்கள மங்கள

மங்கள மங்கள ஜயமங்களா | சுப மங்கள ஸ்வாமி சர்வோத்தமகெ
சஹஸ்ர மங்கள தேவோத்தமகெ ||ப

கேசவ நாராயணகெ மங்கள வாசுதேவசுத ஸ்ரீகிருஷ்ணகெ மங்கள

ஹ்ருஷிகேஷ புருஷோத்தமகெ மங்கள
வசுதேவசுத ஸ்ரீகிருஷ்ணகெ மங்கள ||1

அச்யுத ஜனார்த்தனகெ மங்கள மத்ஸ்ய கூர்ம வராஹகெ மங்கள
சச்சிதானந்த ஸ்ரீதரகெ மங்கள
முசுகுந்த வரத விஷ்ணுகெ மங்கள ||2

மாதவ மதுசூதனகெ மங்கள சாதுஹ்ருதய வாசகெ மங்கள
அதோக்ஷஜ அனிருத்தகெ மங்கள
பத்பனாப ப்ரத்யும்னகெ மங்கள ||3

கருடவாஹன கோவிந்தகெ மங்கள உரகஷயன உபேந்த்ரகெ மங்கள
ஹரிதாமோதர சங்கருஷணகெ மங்கள
நாரசிம்ஹ த்ரிவிக்ரமகெ மங்கள ||4

பரமபாவன பார்க்கவகெ மங்கள கருணாகர ஸ்ரீவிக்ரமகெ மங்கள
தரெயொளு பௌத்தகல்கிகெ மங்கள
தரள மஹிபதி ஸ்வாமிகெ மங்கள ||5

சர்வோத்தமன், தேவோத்தமன், சச்சிதானந்தன், முசுகுந்தனுக்கு அருளியவன், சாதுக்களின் இதயத்தில் வசிப்பவன், கருட வாகனன், பாம்பின் மேல் படுத்திருப்பவன், பரம பாவனன் மற்றும் கருணாகரனுமான வசுதேவனின் மகனான ஸ்ரீகிருஷ்ணனுக்கு மங்களத்தைப் பாடியிருக்கிறார் தாசர். கேசவாதி 24 ரூபங்களுக்கும், தசாவதார ரூபங்களுக்கும் சுப மங்களத்தை பாடியிருக்கிறார் தரள மஹிபதி தாசர்.

## 17. அச்சத்தைப் போக்குதல்

ப⁴ய நிவாரணவு ஸ்ரீகுரு திவ்ய நாம நிம்ம நாம ||பல்லவி

முகுந்த பக்த்யை குரு பக்தி ஜாயை - அதாவது குரு பக்தியினாலேயே ஹரிபக்தி கிடைக்கிறது. ஹரிபக்தியினாலேயே முக்தி சாத்தியம். ஹரிபக்தி பிறப்பதற்கு குருபக்தி தேவை. அதற்காக, அனைவருக்கும் ஸ்வரூபோத்தாரக குரு கண்டிப்பாக தேவை.

நியத குருவானவர் - ஸ்வரூபோத்தாரகர். அநியத குருவானவர், பகவந்தனின் விஷயங்களைக் குறித்த உண்மையான ஞானத்தைக் கொடுப்பவர். அநியத குருகளிடமிருந்து விஷயங்களை கேட்டபிறகு, நியத குருகளிடமிருந்து, மோட்சத்திற்குத் தேவையான ஞானத்தைப் பெறவேண்டும். அநியத குருகளிடமிருந்து துவங்கி பிரம்ம வாயுகளின் வரை அனைவரும் குரு என்றே அழைக்கப்படுகின்றனர். ஸ்வரூபோத்தாரக குரு என்றால் தேவோத்தமரான வாயுதேவரின் அந்தர்கதனான ஸ்ரீஹரியையே, அனுசந்தானத்துடன் வணங்கவேண்டும். குருபக்தி, குரு நாமஸ்மரணை, குருவின் கருணையால் பிறப்பு இறப்பு சுழற்சியிலிருந்து விடுதலை பெறமுடியும். வாயுதேவருக்கும் பரமாத்மனே குரு. பரமாத்மனின் 24 ரூபங்களின் நாமஸ்மரணையை செய்வதன் மூலம் 'குருவே ஹரி - ஹரியே குரு' என்பதே மஹிபதி தாசரின் சிந்தனை.

குரு = கு - இருளை. ரு - அகற்றுபவர். அஞ்ஞானம் என்னும் இருட்டினை சுக்ஞானம் என்னும் ஒளியினால் விரட்டும் ஞானியே குரு. எண்ணிக்கை சாஸ்திரத்தின்படி குருவின் லட்சணங்கள் 32. வாயுதேவருக்கு 32 லட்சணங்கள். இத்தகைய குருகளைப் பற்றி எப்போதும் நினைப்பதால் நமக்கு வரும் அச்சங்கள் ஓடிப்போகின்றன.

க்லேஷபாஷவு கத்தரிஸி தோஷ நாஷவனு கெ³ய்ஸி
போஷிசுவ கேசவ நிம்ம நாம ||1

கேசவனின் நாமமானது தோஷங்களைப் போக்கி, துக்கம் என்னும் கயிற்றை கத்தரிக்கிறது. (தொடரும்)...

| கன்னடம் | அருஞ்சொற்பொருள் |
|---|---|
| | கடினமான சொற்களின் அர்த்தங்கள் |

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

1.அஹிகிரி = சேஷாசலம்; 2. ஆத்மபூ = பிரம்ம; 3. அப்ஜ = தாமரை; 4. அப் = தண்ணீர்; 5. அராதி = எதிரி ; 6. அமாத்ய = மந்திரி; 7. அஷக்ய = சாத்தியம் இல்லாதது; 8. ஆதபி = சூரியன்; 9. ஆனந்தமுனி = ஸ்ரீமன் மத்வாசார்யர்; 10. ஆலிஸு = கேள்.

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

### கிரந்தத்தைப் பற்றிய விளக்கம்

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)

இந்த உலகமானது ஸ்ரீஹரியின் இருப்பிடமாக இருக்கிறது. அது எப்படியென்று விவரிக்கும் ஜகன்னாததாசர், 'வாரிஜபவாண்டவே சுமண்டப மேருகிரி சிம்மாசனவு பாகீரதியே மஜ்ஜனவு திக்வஸ்த்ரகளு நுடிமந்த்ர' என்கிறார். மேருமலையை சிம்மாசனமாக ஆக்கிக்கொண்டு, அதை சுற்றியிருக்கும் பிரம்மாண்டத்தை மண்டபமாக்கிக் கொண்டு, ஸ்ரீஹரி வாகனத்தில் ஊர்வலம் வரும் காட்சியை நம் மனம் கவரும் வண்ணம் வர்ணிக்கிறார்.

பஞ்சபூதங்களைக் குறித்து வர்ணிக்கும் 33 நுடிகளைக் கொண்ட பஞ்சதன்மாத்ர சந்தியில், ஐந்து பூதங்களிலும் ஒந்ததிக பஞ்சாசத்வரண வேத்யனாக (51 எழுத்துக்களின் தலைவனாக) இருக்கிறார் என்கிறார் (சந்தி 7 ஸ்லோகம் 1). 72,000 நாடிகளில் 72,000 அம்சங்களில் ஸ்ரீஹரி வியாபித்திருக்கிறார். ஒரு மனிதனின் ஆயுளான 100 ஆண்டுகளில் 36,000 நாட்கள் உள்ளன என்பதை கவனிக்க வேண்டும். 'வாரிஜபவாண்டதொளு லட்சுமி நரசிம்மன ரூபகளு வாரிதியொளிஹ தெரெரளந்ததி சம்தணிஸிஹவு' என்று ஸ்ரீஹரியானவர் அணுவைவிட சிறியதாகவும், பெரியதைவிட பெரியதாகவும், அனைத்திலும் பரிபூர்ணமாகவும் இருக்கிறார் என்கிறார். நம் உடலில் ஸ்ரீஹரி, பற்பல அம்ச-ரூபங்களில் நிலைத்திருப்பதை தாசர் இங்கு விவரிக்கிறார்.

32 நுடிகளைக் கொண்ட மாத்ருகா சந்தியில் மேற்கண்ட விவரத்தை மேலும் விளக்குகிறார். 'ஐது மேலொந்ததிக தளவுள்ளைது பத்மவு நாபி மூலதி' என்றவாறு அவற்றில் அனிருத்த முதலான ஐந்து மூர்த்திகள் உள்ளன என்கிறார்.

எட்டு தளங்களைக்கொண்ட தாமரையைப் போலிருக்கும் இதயத்தில் ஸ்ரீஹரி, பிராதேச நாமகனாக இருக்கிறார். 'த்விதள பத்மவு சோபிபுது கண்டதலி' என்பதையே தற்போதைய அறிவியலில் குரல்வளை என்கிறார்கள். குரல் இங்கிருந்தே புறப்படுகிறது. 'வாயுவின சஹாயதிந்த' என்றால், அந்த இடத்தில் இரு தளம் கொண்ட தாமரையில் வாயுதேவர் நிலைத்திருக்கிறார் என்கிறார் தாசர்.

இப்படியாக தாசர் சொல்லியிருக்கும் பல விஷயங்கள், இன்றைய அறிவியல் கண்டுபிடிப்புகளுக்கு ஒத்திருப்பதை கவனிக்க வேண்டும். ‘நாலிகெயொளிஹ வருண மத்ஸ்யனு நாலிகெயொளு உபேந்திர இந்திரரு’ (நாக்கில் வருணர், அவருள் மத்ஸ்யரூபி பரமாத்மா, மற்றும் உபேந்திர, இந்திரன் ஆகியோர்) என்றெல்லாம் வர்ணிப்பதைக் கண்டு மனம் மகிழ்ச்சி கொள்கிறது.

காலத்திற்கு அதிபதியான ஸ்ரீஹரி நாள், யாமம், முகூர்த்தம், நாழிகை ஆகிய அனைத்திலும் நிலைத்திருக்கிறார். வர்ணப்ரக்ரியா சந்தியில் 31 ஸ்லோகங்களில் அக்ஷராபிமானி தேவதைகளை விவரிக்கும்போது, ஸ்ரீஹரியை அறிந்தவர்கள் சுரர் எனப்படுவரே தவிர அவர்கள் மனிதர்கள் அல்லர் என்கிறார். நெருப்பில் சமைத்த அரிசியை (சோற்றினை), அந்த நெருப்பிலேயே போட்டு ஹோமம் செய்வதைப் போல அதாவது, கெரெய நீரனு கெரெகெ செல்லி (ஆற்று நீரை எடுத்து ஆற்றிலேயே அர்க்யம் விடுவதைப் போல), அனைத்தையும் தான் செய்து, மற்றவர்களால் செய்வித்து நடத்தும் ஸ்ரீஹரியின் லீலை அதிஅற்புதமானது. ஜீவன் ஒரு சிறிய அணுத்துகளைப் போன்றதாகும். குதிரையின் வாலின் ஒரு மயிரை 100 பாகங்களாகப் பிரித்து, அதில் ஒரு பங்கு எவ்வளவு சிறியதாக இருக்குமோ அவ்வளவு சிறியதானது ஜீவன் என்கிறார். கண்ணிற்குத் தெரியாத, கற்பனைக்கும் எட்டாத அளவு அது. 72,000 நாடிகளாலான இந்த தேகத்தில், வியாபித்து இந்த ஜீவஸ்வரூப தேகத்தின் உள்ளே மற்றும் வெளியே தனக்கு சம்பந்தம் இல்லாததைப் போல் இருக்கிறார் ஸ்ரீஹரி. அவரவர்களின் வினைப்பயன்களுக்கு ஏற்ப இருக்கிறார் என்கிறார். அனைத்து எழுத்துகளின் அதிபதியாக ஸ்ரீஹரி இருக்கிறார் என்று நாம் பார்க்கிறோம்.

ஹரிதியானத்தின் மகிமையை தியானப்ரக்ரியா சந்தியின் 31 ஸ்லோகங்களில் விவரிக்கிறார். பகலில் ஏற்றி வைக்கும் விளக்கு, வெளிச்சத்திற்காக அல்ல, பூஜைக்காக மட்டுமே என்பதுபோல, நாமும் ஸ்ரீஹரியை மகிழ்விப்பதற்கு மட்டுமே பூஜை செய்யவேண்டும். ஸ்ரீஹரியின் தாசனான ஜீவன் - அஸ்வதந்திரன் (சுதந்திரம் இல்லாதவன்). அதிக சக்தி இல்லாதவன், குறைந்த ஞானம் உள்ளவன், மனது, கர்வம், மஹத்தத்வங்கள் மற்றும் பஞ்சபூதங்கள் என மொத்தம் 9 பொருட்களில் ஒவ்வொன்றிலும் எட்டு ரூபங்களில் என மொத்தம் 72 ரூபங்களில், ப்ருஹதிசஹஸ்ர நாமங்களினால் பெருக்கினால்

மொத்தம் 72,000 ரூபங்களில் ஒவ்வொரு நாடிகளிலும் இருக்கிறார் என்கிறார்.

நாடிபிரகரண சந்தி பல அற்புதமான விஷயங்களை 45 ஸ்லோகங்களில் சொல்கிறது. நமது உடலில் வலது பக்கத்தில் 36,000 இடது பக்கத்தில் 36,000 என்று மொத்தம் 72,000 நாடிகள் உள்ளன. நடுவிலிருந்து பாதம் வரை 12,000, தொண்டையிலிருந்து நாபி வரை 14,000, தோள்களில் 4,000, தலையில் 6,000 என்று
மொத்தம் 36,000 நாடிகளுக்கு பகலுக்கு அபிமானி புருஷ ரூபி ஸ்ரீஹரி, பாக்கி 36,000 நாடிகளுக்கு இரவிற்கு அபிமானி ஸ்த்ரிரூபம் என்று சொல்கிறார். பகலில் முக்யபிராணரும் இரவில் பாரதிதேவியும் அபிமானியாக இருக்கின்றனர் என்றும் கூறுகிறார்.

தோஷங்கள் இல்லாதவர், இந்த உலகத்தின் புராதன (முதன்மை) புருஷன் இவரே என்று ஸ்ரீஹரியை விதவிதமாக மறுபடி மறுபடி வர்ணிக்கிறார் ஜகன்னாததாசர். சிறிதளவும் தோஷங்கள் இல்லாத ஸ்ரீஹரியை, மனதில் நிறுத்தி பூஜித்து, செய்யும் செயல்கள் அனைத்தையும் அவனுக்கு செய்யும் பூஜை என்று எண்ணி அவனுக்கே அதை அர்ப்பணம் செய்யுங்கள் என்கிறார். எப்போதும் ஸ்ரீஹரியை நினைத்திருப்பதே புண்ணிய காரியம் என்றும், அவர் கொடுப்பதை மனம் விரும்பி ஏற்று திருப்தியுடன் வாழ்வதே நன்று என்று தாசர் கூறுகிறார்.

குறிப்பிட்ட திரவத்தில் நனைத்த துணியை நெருப்பு எப்படி எரிக்காமல் விடுகிறதோ, அந்த நெருப்பிலிருந்து அந்தத் துணியை அந்தத் திரவம் எப்படி காக்கிறதோ, அப்படியே பக்திரசம் கொண்ட பக்தர்களை அவர்களின் பிரச்னைகளிலிருந்து ஸ்ரீஹரி காக்கிறார் என்று சொல்கிறார் தாசர்.

ஸ்வாச சந்தியின் 29 ஸ்லோகங்களில் மூச்சு விடுவதைப் பற்றி நிரூபிக்கிறார்.

60 பலங்கள் = 1 நாழிகை ; 1 நாழிகை = 24 நிமிடங்கள் ; 1 யாமம் = 3 மணி நேரங்கள் ; 1 நாள் = 24 மணி நேரங்கள் ; 7 நாட்கள் = 1 வாரம் ; 15 நாட்கள் = 1 பக்ஷம் ; 2 பக்ஷங்கள் = 1 மாதம் ; 2 மாதங்கள் = 1 ருது ; 3

ருதுகள் = 1 அயனம் ; 2 அயனங்கள் = 1 ஆண்டு என்பது நேரத்தை நாம் வகுத்து வைத்திருக்கும் வழக்கம்.

மூச்சு விடுவது ஒரு ஜபம் என்று சொல்லும் ஜகன்னாததாசர், 1 நாழிகைக்கு 360 முறை இந்த ஜபம் நடைபெறுகிறது என்கிறார். ஒரு நாளுக்கு 21,600 முறையும், 1 ஆண்டிற்கு 77,76,000 முறையும் ஜபம் நடைபெறுகிறது என்றும் கூறுகிறார். ஒரு மணி நேரத்திற்கு 900 முறை ஜபம் செய்து, பிராணதேவர் அதை ஹம்ஸரூபி ஸ்ரீஹரிக்கு சமர்ப்பிக்கிறார். ஸ்வாச என்றால் மூச்சு விடுவது; உஸ்வாச என்றால் மூச்சு இழுப்பது என்று பொருள். இப்படியாக ஒரு யாமத்திற்கு 2,700 முறையும், 4 யாமத்திற்கு (பகல் பொழுதில்) 10,800 முறையும், 1 நாளைக்கு 21,600 முறையும் இந்த ஜபம் நடைபெறுகிறது. 1 பட்சத்திற்கு 3,24,000 முறையும் 1 மாதத்திற்கு 6,48,000 முறையும் இந்த ஸ்வாச-உஸ்வாச நடைபெறுகிறது. பிராணதேவர் இப்படியாக ஒரு ஆண்டிற்கு 77,76,000 முறை ஸ்வாச-உஸ்வாச செய்து, செய்விக்கிறார்.

நம் இதயத்திற்கு பிராணவாயு ; கண்களின் அபிமானி தேவதை சூரியன் ; தெற்கு த்வாரத்திற்கு வாயு ; காதுகளுக்கு அபிமானி சந்திரன் ; மேற்கு த்வாரத்திற்கு அபானவாயு ; வடக்கு த்வாரத்திற்கு சமானவாயு அபிமானி ; மனோபிமானி தேவதை இந்திரன் ; 5வது மேலிருக்கும் த்வாரத்திற்கு உதானவாயு அபிமானி ; இப்படி வாயுதேவர் பாரதிதேவியுடன் அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கிறார் என்கிறார். (கட்டுரை அடுத்த இதழில் தொடரும்)...

*** **டாக்டர். மதுசூதன் ஜோஷி**

**இடமிருந்து வலம் :** 1. இந்த்ரியங்களின் நியாமகன்(5), 2.தடை(3), 3.முட்கள்(4), 4.நிச்சயமாக(4), 5.நல்ல ருசி(3), 6.வாயு பகவானுள் ஸ்ரீஹரி இந்த பெயருடன் இருக்கிறார்(4), 7. .பஞ்ச பூதங்களில் பகவான் இந்த பெயருடன் இருக்கிறான்(4), 8.ஐந்து கோஸங்களில் இருக்கும் பகவத் ரூபம்(4), 9.வாயு தேவர்(3), 10.மோட்சம்(7), 11.ப்ரஹ்மா(5), 12.பக்ஷிகள்(4), 13..உரல்(4), 14.சிலைகள்(5), 15.வேறுபாடு(5).

**வலமிருந்து இடம் :** 16.நரகம்(3), 17.உலோகம்(2), 18.மீண்டும் அல்லது மறுபடியும்(3), 19.உயிருள்ளவை(4), 20.இந்திரன்(4)

**மேலிருந்து கீழ் :** 1.குறுகிய வடிவம்(4), 2.வேதம்(3) 5.நறுமணம்(4), 9.குதிரை(3), 10.கோபம்(4), 11.புண்ய கர்மா(5), 13.உடல்(5), 14.தூண்டுபவன்(4), 21.ஸம்ஸாரம்(2), 22.அறுசுவை(4), 23.பஞ்ச க்ஞானேந்திரியங்களில் பகவத் ரூபம்(6), 24.பஞ்ச தன்மாத்திரத்தில் பகவத் ரூபம்(5), 25.வறுமை(4).

**கீழிருந்து மேல் :** 15.தானியம்(3), 26.மணல், தூள்(3), 27.தேவதைகளுக்கு ஹவிஸ்ஸைக் கொண்டு சேர்க்கும் அக்னி(6), 28.உயிரற்றவை(3), 29.நீரில் சஞ்சரிப்பவர்(5) ,30.பூமியில் சஞ்சரிப்பவர்(4), 31.துரு பிடித்தல்(3), 32.மலை(2)

குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam@gmail.com என்னும் ஐடிக்கோ அல்லது 89044 58276 க்கோ வாட்சப் செய்யலாம்

## Subscription Renewal

தகுந்த சமயத்தில் உங்கள் சந்தாவை புதுப்பித்து, ஹரிதாச விஜயம் பத்திரிக்கை தொடர்ந்து வருமாறு பார்த்துக் கொள்ளவும். உங்கள் ஆதரவு இருந்தால் மட்டுமே ஹரிதாச விஜயம் தொடர்ந்து வெளி வருவது சாத்தியம்.

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

## ஹரபனஹள்ளி பீமவ்வா

(பீமேஷ கிருஷ்ணவிட்டலா) ஆண்டு: 1822-1903

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)...

ஒரு நாள் அனைத்து தோழிகளும் பீமவ்வாவின் வீட்டில் சேர்ந்திருந்தனர். இவர் சுதாமா கதையை சொல்லிக் கொண்டிருந்தார். சிலர் உணவு நேரம் என்று எழுந்து சென்றனர். பீமவ்வாவிற்கு அப்படியே தூக்கம் வந்தது. அதில் ஒரு கனவும் வந்தது. அதில் ஒரு ஏழை பிராமணன் மற்றும் ஒரு சுமங்கலி வந்தனர். உடனடியாக இவருக்கு முழிப்பு வந்தது. அந்த நொடியிலேயே 193 சரணங்களைக் கொண்ட 'சுதாம சரித்ரெ' பாடலைப் பாடினார். பாடல்களைப் பாடுவதற்கும், அவற்றை எழுதவைப்பதற்கும் அவருக்கு காலத்தின் கட்டுப்பாடுகளே இல்லாததுபோல ஆயிற்று.

ஹரபனஹள்ளியில் ஒரு முறை, ஒருவரின் வீட்டிற்கு ஒரு பூஜை நிகழ்ச்சிக்குப் போயிருந்தார். பாடுவதற்கு ஏற்றாற்போல ஒரு முய்யத (பூஜைக்கு) பாடலை இயற்றிக் கொடுக்குமாறு அந்த வீட்டினர் வேண்டினர். 'ஏகதந்தகெ அனேக பகுதியிந்த ஏக சித்ததலி நமோ எம்பெ கோலெ | ஏகசித்ததலி நமோ எந்து ஹேளுவ ஸ்ரீகாந்த சரிதெய கோலெ' என்று துவங்கும் கோலு பாட்டின் ரூபத்தில் ஒரு பாடலை இயற்றிக் கொடுத்தார். அந்த பாட்டில் பலவித நுடிகள் உள்ளன.

வர்ணனை செய்வதில் பீமவ்வாவை மிஞ்சுவதற்கு வேறு யாரும் இல்லை எனலாம். பக்ஷ்ய போஜ்யங்களின் வர்ணனை, பெண்களின் அலங்கார ஆபரணங்களின் வர்ணனை, புடவைகளின் வர்ணனை, மோகினி ரூபத்தின் வர்ணனை, மனோஸ்திதியின் வர்ணனை ஆகிய வர்ணனைகள் அவரது பாடல்களாக வந்துள்ளன மற்றும் மனதை மயக்குவதாக உள்ளன. இவரின் பாடல்களில் ; ஈஸ்வர - பார்வதி; துரியோதன - திரௌபதி; கிருஷ்ண - ருக்மிணி; ஸத்யபாமா - பார்வதி; ருக்மிணி - சத்யபாமா ஆகிய இருவரின் சம்பாஷணகளின் ரூபமே அதிகம் காணப்படுகின்றன. இவற்றிலேயே அவரது கவிநயம், சொல் நயம், எதுகை மோனைகள், சொல்ல வந்த விஷயம், உலக

நடப்புகள், என அனைத்தையும் அவர் இத்தகைய பாடல்களில் விளக்கியிருக்கிறார்.

மத்வ மதத்தின் முக்கிய தத்வங்களான ஹரி சர்வோத்தமத்வ மற்றும் ஜீவ பரமாத்மரின் பேதங்களை, அவரது கிருதிகளில் தேவைப்பட்ட இடங்களில் பீமவ்வா தெரியப்படுத்தியிருக்கிறார். பஞ்சபேத, தாரதம்ய, பஞ்ச தத்வங்கள், பஞ்ச கோஷங்களில் பகவத் ரூபங்கள் ஆகியவற்றை விவரித்திருக்கிறார். அது மட்டுமல்லாமல், தாரதம்யமாக ஹரி, ஸ்ரீ, பிரம்மா, வாயு, ருத்ராதி தேவதைகளை துதித்திருக்கிறார்.

பீமவ்வாவின் கிருதிகளில் பஞ்சபாவங்களான தாஸ்ய, ஸக்ய, வாத்ஸல்ய, ஸ்ருங்கார மற்றும் ஷாந்த பாவங்கள் நிறைந்திருக்கின்றன.

'ஶ்ரீஷனே கேள் நின்ன தாஸரங்களதல்லி பீஸி பிஸாடோ என்னனு ஹரிதாஸர தாஸத்வ எனகெ கொடுஸய்யா' என்று சொல்வதில் தாஸ்யபாவத்தை விளக்கியிருக்கிறார்.

'இந்துகால ஜாத நின்ஹொாந்திகொண்டித்து, எந்தெந்திகு பிடத கௌதன கௌதனவித்தல்லி ஸந்தேஹவ்யாகோ ஸலஹலு' என்றதில் ஸக்ய பாவத்தை சொல்லியிருக்கிறார்.

வாத்ஸல்ய பாவங்களை இவரது அனேக பாடல்களில் பார்க்கலாம். கோபியர் வந்து யசோதாதேவியிடம் புகார் சொல்வது; கிருஷ்ணனின் வர்ணனை; யசோதாதேவி கிருஷ்ணனை திட்டுவது; கோபியர்களை திட்டுவது; பாலகிருஷ்ணனின் சமாதானம் ஆகிய பாடல்களில் தாயின் வாத்ஸல்யத்தை காணலாம்.

'கேளோ நந்த இது ஏனு சிந்த ஹாலின்ஹரவிய ஒடெதோடி பந்து பாலரனு கூட்யாடி கோவிந்த பவணெ படிஸுவ பஹு பகெயிந்த'.

யசோதாதேவி கோபியரின் பேச்சுவார்த்தை 'நீலவர்ண கோபாலனு எல்லி காணிரேனே வ்ரஜத ஔகெ ஹேளே கோப்யம்மா; சிண்ணிகோலு செண்டு புகுரி வேணு கொளல த்வனிய ஆலிஸி ஒணெ ஒணெ ஹுடுகலு நந்த ஸூனு எல்லிஹனே'?

கோபியர்கள், யசோதாதேவியிடம் கிருஷ்ணன் மேல் புகார் கூறுகின்றனர். 'நோடே கோப்யம்மா கிருஷ்ணன பாளெய நீ, மாடி பிட்டெயெ இந்தா கூளிய இந்தா தாளிய | ஹாலு மொஸரு பேடுவ கடகோலிந்த ஒடெது நம்மன்னோடுவ பந்து ஹாடுவ'.

ஸ்ரீகிருஷ்ணன் அக்ரூரனுடன் மதுரைக்குச் புறப்பட்டபோது மற்றும் சென்ற பிறகு, கோபியர்கள் அனுபவிக்கும் விரக நிலையை யதார்த்த பாவத்துடன் விளக்கியிருக்கிறார்.

'பாரோ ரங்க கோமலாங்க தாரிகெ தன்னங்க ஸங்க நீடல்ஹோத என்ன கங்களிந்த நோடதெ' என்று கோபி ஒருத்தி தன் விரக நிலையை விளக்குகிறாள். மதுரையிலிருந்து கிருஷ்ணனின் செய்தியைக் கொண்டு வந்த உத்தவனிடம் கோபிகையர் அனைவரும் தங்களின் விரகத்தை சொல்லிக் கொள்கிறார்கள். 'ப்யாகெ பருவெனெந்து ஸாகி மதுரெகெ ஹோத ஹ்யாகெ மாடுவோணுத்தவ'.

பக்தியுடன் வேண்டிக் கொள்ளும், பிரார்த்தனை செய்யும், ஸ்மரணை செய்யும், மற்றும் துதிக்கும் பாடல்களில் ஷாந்த பாவம் நிரம்பி வழிகிறது. அங்கு பீமவ்வா அவர்கள் தன் தன்யத்தை காட்டியிருக்கிறார். 'அப்ப வெங்கோபன நேத்ரதலி கண்டு பவித்ரளாதேனோ இந்திகெ', 'கண்டு தன்யனாதே நந்த தனயன', 'நாராயண நின்ன நாம நாலிகெயல்லிரலி', 'நாராயண என்னிரோ நாராயண என்னி' - என ஷாந்தி பாவத்தில் பல்வேறு பாடல்களை பாடியிருக்கிறார்.

ஸ்ரீஹரியின் தசாவதார பாடல்களை வெவ்வேறு பாவங்களில், விதம்விதமாக வர்ணித்திருக்கிறார். அந்த பாடல்களில், உவமான உவமைகள், எதுகை, மோனை ஆகிய அலங்காரங்கள் அதிகமாக காணப்படுகின்றன.

பீமவ்வாவின் கிருதிகளில் சம்பிரதாயங்களை மற்றும் விரத கதைகளை விளக்கும் பாடல்களே அதிகமாக காணப்படுகின்றன என்றால் அதில் வியப்பு ஏதும் இல்லை. சுக்ரவாரத ஹாடு; ஷனிவாரத ஹாடு; மங்களகௌரி ஹாடு; புத ப்ருஹஸ்பதி ஹாடு; கிருஷ்ணதான வ்ரதத ஹாடு; ஹஸெகெ கரெயுவ ஹாடு; ஆரதி

ஹாடு; ஆசிர்வாதத ஹாடு; பாகிலு கட்டுவுது; உருட்டாணி பத; பூம ஹாடு; உடி தும்புவ ஹாடு; ஆபோஷன போடும்போது பாடும் பாடல்; பூ கட்டும்போது, தாலாட்டு, லாலி, ஜோஜோ பாடல்கள் என இவரது பல்வேறு வகையான பாடல்கள், இன்றைக்கும் அனேகரால் பாடப்பட்டு வருகிறது.

மேஷ, ரிஷப, ஆகிய 12 ராசிகளின் மேல் இயற்றிய பாடல் சிறப்பாக இருக்கிறது. பல கேள்விபதில் / விடுகதை / புதிர் பாடல்களையும் இவர் பாடியிருக்கிறார். 'ஒப்பன்னு கட்டித்தெ ஒப்பன்ன பிட்டித்தெ ஒப்பன்ன கரகொண்டு ஒளக்ஹோதே; யாரன்ன கட்டித்தெ யாரன்னு பிச்சித்தெ யாரன்ன கரகொண்டு ஒளக்ஹோதே?' என்னும் கேள்விக்கு விடையாக, 'பசுவை கட்டினேன்; கன்றினை அவிழ்த்து விட்டேன்; பாலுடன் உள்ளே சென்றேன்' என்று சொல்லும்போது புன்னகைக்காமல் இருக்கமுடியாது. இத்தகைய பாடல்கள் திரைப்படங்களிலும் வந்திருப்பது நமக்கு பெருமையான விஷயமே.

பீமவ்வா ஆறு பெரிய பாடல்களை இயற்றியிருக்கிறார். இவற்றில் கதா நிரூபணம் இருக்கிறது. த்வனி மற்றும் வசனங்களால் இவை மிக நீண்டதாக இருக்கிறது.

மகாபாரத அரண்ய பர்வத்தில் நளோபாக்யான கதையை 'நள சரித்ரெ' என்னும் நீண்ட கிருதியாக இயற்றியிருக்கிறார். இதில் 105 த்வனிகள் மற்றும் 104 வசனங்கள் இருக்கின்றன.

'உமெய சுதன சரணகமலகெ நமிஸி பேளுவெ ஹருஷதி ரமெய ரமணன கருணதிந்த நளன கதெகளனு. கந்துபதிதன கருணதலி தமயந்தி பந்தாபத்து களெது ஸந்தோஷதி ராஜ்யவாளித கதெய பேளுவேனு' என்று துவங்கி, 'எத்தி பௌகிரெ முத்தினாரதிய நள சக்ரவர்த்தி ராஜ பூபாலகெ அஜ்ஜதரஸிய ஸஹித குளித நளராயகெ அஜ்ஜ கெம்பின கதலாரதிய... பீமேஷ கிருஷ்ணன பாட்யானந்ததிந்தக்ஷதெனிட்டு ஹரஸுத' என்று முடிகிறது இந்தப் பாடல். .. (தொடரும்)....

ஹரிதாச விஜயத்தைப் பற்றி தயவு செய்து உங்கள் நண்பர் / உறவினர்களிடம் அறிமுகம் செய்யவும்.

தொடர்

**கன்னட தந்த்ரசாரம் - ஸ்ரீவரதேந்திர தீர்த்தர்**

**உரை: திரு.குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்**

(சரணம் - 5)
ஸாதரதி கேளின்னு அகார உகார மகார
நாத பிந்து கோஷ ஷாந்தாதிஷாந்த ।
ஈ திவ்ய வர்ணதலி விஷ்வதைஜஸப்ராக்ஞ
மோதமய துர்யாத்ம அந்தராத்ம ||5

(சரணம் - 6)
பரமாத்ம ஞானாத்மனெம்பஷ்ட ரூபதிந்திருதிஹெனு
வேதாதியலி ஸர்வதா ।
பரமருஷிகளு ஈ மஹாமந்திர ஜபிஸென்ன
புரவனைதுவரு ஸத்வரதிந்தலி ||6

இந்த இரண்டு பாக்களுக்கும் சேர்த்து ஒரேயொரு வினைச்சொல் இருப்பதால், இது குளகம் என்னும் பிரிவைச் சேர்ந்ததாகும். ஆகையால், இரண்டிற்கும் சேர்த்து பொருள் மற்றும் விளக்கம் தரப்படுகிறது.

பிரணவத்தில் அகாரம், உகாரம், மகாரம், நாத, பிந்து, கோஷ, ஷாந்த, அதிஷாந்த என்னும் எட்டு சிறந்த வர்ணங்கள் (எழுத்துக்கள்) உள்ளன. அவற்றிற்கு பிரதிபாத்ய தேவதையாக, விஷ்ணுவே எட்டு ரூபங்களில் உள்ளார். அந்த ரூபங்கள், விஸ்வன், தைஜஸன், ப்ராக்ஞன், துர்யன், ஆத்மா, அந்தராத்மா, பரமாத்மா மற்றும் ஞானாத்மா ஆகும். மறைகள் (வேதங்கள்) ஆகியவற்றில், பெரும் ரிஷிகள் எப்போதும் இந்த மந்திரத்தையே ஜெபிப்பார்கள். அதன் பலனாக, என் உலகமான வைகுண்டத்தை விரைவில் அடைவார்கள்.

ஸ விஷ்வ தைஜஸப்ராக்ஞ துரியாத்மாந்தராத்மனாம் ।
பரமாத்மா ஞானாத்மாயுஜாம் மத்ரூபாணாம் ச வாசக: || (1-4)

பிரணவத்தின் எட்டு எழுத்துக்கள், பகவானின் எட்டு உருவங்களை, எழுத்து, ஒலி வடிவங்களில் தெரியப்படுத்துகின்றன. அந்த பகவானின்

எட்டு ரூபங்கள் இவையே. விஸ்வன், தைஜஸன், ப்ராக்ஞன், துர்யன், ஆத்மா, அந்தராத்மா, பரமாத்மா மற்றும் ஞானாத்மா.

எழுத்து - ஸ்ரீஹரிரூபம் ; அகாரம் - விஷ்வன் ; உகாரம் - தைஜஸன் ; மகாரம் - ப்ராக்ஞன் ; நாதம் - துரியன் ; பிந்து - ஆத்மா ; கோஷம் - அந்தராத்மா ; ஷாந்த - பரமாத்மா ; அதிஷாந்த - ஞானாத்மா

பிரணவத்தை உச்சரிக்கும்போது இந்த எட்டு உருவங்களை தியானிக்க வேண்டும். சரியாக உச்சரித்தால், வீடுபேறு நிச்சயம் என்கிறார். எப்படி உச்சரிக்க வேண்டும் என்பதை வல்லுனர்களிடம் கேட்டு கற்றுக் கொள்ளவும். அவசரப்படாமல் உச்சரிக்க வேண்டும்.

(சரணம் - 7)
வாரிருஹஸம்பவனே கேளகாரதலி ஹதினாரு
அச்சுகளு ஜனிஸிதவு க்ரமதி ।
சாரு அஜ ஆனந்த இந்த்ரேஷ மொதலாத
ஈரெண்டு மூர்த்திகளு விஷ்வஜனிதா ॥7

தாமரையில் பிறந்தவனே, கேள், அகாரத்திலிருந்து பதினாறு உயிரெழுத்துகள் தோன்றின, முறையாக. அழகிய அஜ, ஆனந்த, இந்திர, ஈஸ முதலான பதினாறு மூர்த்திகள் விஸ்வத்திலிருந்து தோன்றின.

பிரணவம் (ஓம்காரம்): எட்டெழுத்து மற்றும் எட்டு ஸ்ரீஹரி ரூபங்களை நியாமகமாகக் கொண்டன. பிரணவத்தில் உள்ள அகாரத்திலிருந்து, சம்ஸ்கிருத மொழியில் 16 உயிர் எழுத்துக்கள் என்கிற ஸ்வராக்ஷரங்கள் அல்லது 'அச்' எழுத்துக்கள் தோன்றின. அந்த பதினாறு எழுத்துகளுக்கும் அபிமானி தேவதைகளான அஜ, ஆனந்த, இந்திர, ஈஸ முதலிய ஸ்ரீஹரி ரூபங்கள், விஸ்வ என்னும் ஸ்ரீஹரியின் வடிவத்திலிருந்து தோன்றின. ஆவிர்பாவம் ஆயின என்று கவி கூறுகிறார்.

இதற்கான ஆதாரம், மூல நூலில் இப்படி உள்ளது.
தத்ரூப பேதா: பஞ்சாஷன் மூர்த்தயோ மம சாபரா: ।
பஞ்சாஷத் வர்ண வாச்யாஸ்தா வர்ணாஸ்தாரார்ண பேதிதா: ॥ (1-5)

பிரணவம், பகவந்தனின் எட்டு ரூபங்களை பிரதிபலிக்கிறது. விஸ்வ, தைஜஸ போன்ற எட்டு ரூபங்களிலிருந்து 'அஜாதி' 50 ருபங்கள் அபிவியக்தமாயின. அந்த 50 உருவங்கள், சம்ஸ்கிருத மொழியில் உள்ள 50 எழுத்துக்களின் பிரதிபாத்ய ரூபங்களை பிரதிபலிக்கிறது. விஷ்ணுவின் 'அஜாதி' 50 ரூபங்கள்கூட பிரணவத்திலிருந்து தோன்றியவையே.

16 உயிர் எழுத்துக்கள் பிரணவத்தின் முதல் எழுத்தான 'அ'விலிருந்து தோன்றியது. அவை விஷ்வமூர்த்தி ரூபத்தைக் குறிக்கின்றன. உயிர் எழுத்துக்கள் மற்றும அவற்றின் பகவத்ரூபங்களின் பெயர்கள் பின்வருமாறு.

அ- அஜ; ஆ- ஆனந்த; இ- இந்திர; ஈ- ஈஸ; உ- உக்ர; ஊ-ஊர்ஜ; ரு- ருதம்பர; ரூ - ரூக; ல்ரு- ல்ருஸ; ல்ரூ- ல்ரூஜ; ஏ- ஏகாத்மா; ஐ- ஐர; ஓ-ஓஜப்ருத்; ஔ- ஔரஸ; அம்= அம்ன; அ:- அர்த்தகர்ப்ப; இந்த 16 'அச்' எழுத்துக்கள், ஸ்ரீஹரி ரூபங்களை இந்த நுடியில் கூறியுள்ளார்.

(சரணம் - 8)
உமநாத பிந்து கோஷகளிந்த கசடதப விமலவர்க்ககளு புட்டிதவு ஐது|
கமஸலம்பவ கேளு தைஜஸ ப்ராக்ஞ துர்யாத்மாந்தராத்ம மூர்த்திகளிந்தலி ||8

உகார, மகார, நாத, பிந்து, கோஷங்களிலிருந்து க,ச,ட,த,ப என்னும் ஐந்து பிரிவுகள் பிறந்தன. பிரம்மனே, கேள்! அவற்றின் தெய்வங்கள், தைஜஸ, ப்ராக்ஞ, துர்ய, ஆத்மா, அந்தராத்ம, ஆகும். அவர்களிடமிருந்து இந்த ஐந்து பிரிவுகள் தோன்றின.

க என்பது தமிழில் ஒன்று மட்டுமே உள்ளது. இதர மொழிகளில் க-வர்க்கம், க-பிரிவில் ஐந்து எழுத்துக்கள் உள்ளன. க1,க2,க3,க4,ங என்று இந்த ஐந்து எழுத்துக்கள் 'உ'விலிருந்து தோன்றின. உ-க்கு ஹரிரூபம் - தைஜஸ.

ச என்பது தமிழில் ஒன்று மட்டுமே உள்ளது. இதர மொழிகளில் ச-வர்க்கம், ச-பிரிவில் ஐந்து எழுத்துக்கள் உள்ளன. ச1,ச2,ச3,ச4,ச5 என்று

இந்த ஐந்து எழுத்துக்கள் 'ம'விலிருந்து தோன்றின. ச-க்கு ஹரிரூபம் - ப்ராக்ஞ.

ட என்பது தமிழில் ஒன்று மட்டுமே உள்ளது. இதர மொழிகளில் ட-வர்க்கம், ட-பிரிவில் ஐந்து எழுத்துக்கள் உள்ளன. ட1,ட2,ட3,ட4,ட5 என்று இந்த ஐந்து எழுத்துக்கள் 'ம'விலிருந்து தோன்றின. ட-க்கு ஹரிரூபம் - துர்ய.

அதேபோல, த என்பது தமிழில் ஒன்று மட்டுமே உள்ளது. இதர மொழிகளில் த-வர்க்கம், த-பிரிவில் ஐந்து எழுத்துக்கள் உள்ளன. த1,த2,த3,த4,த5 என்று இந்த ஐந்து எழுத்துக்கள் 'பிந்து'விலிருந்து தோன்றின. த-க்கு ஹரிரூபம் - ஆத்மா.

அதேபோல, ப என்பது தமிழில் ஒன்று மட்டுமே உள்ளது. இதர மொழிகளில் ப-வர்க்கம், ப-பிரிவில் ஐந்து எழுத்துக்கள் உள்ளன. ப1,ப2,ப3,ப4,ப5 என்று இந்த ஐந்து எழுத்துக்கள் 'கலா' அல்லது 'கோஷ'விலிருந்து தோன்றின. ப-க்கு ஹரிரூபம் - அந்தராத்மா.

இந்த வெவ்வேறு ஹரிரூபங்களுக்கு ஸ்வரூபத்தில் எந்த பேதமும் (வேற்றுமையும்) கிடையாது. ஆனால் 'விசேஷ' என்னும் ஒரு தத்வத்தால் வெவ்வேறாவை போன்று தெரிகின்றன. இவற்றை தத்வசாஸ்திரத்தில் 'ஸவிசேஷ அபேதம்' என்கிறோம்.

மெய் எழுத்துக்களில் உள்ள முதல் ஐந்து பிரிவுகளான, க பிரிவு, ச, ட, த, ப பிரிவுகள் இவற்றில் உள்ள 25 எழுத்துக்கள், உகார, மகார, பிந்து, நாத, கோஷ இவற்றிலிருந்து தோன்றின என்றும், இவை, தைஜஸ, ப்ராக்ஞ, துர்ய, ஆத்மா, அந்தராத்மா என்கிற ஹரிரூபங்களிலிருந்து தோன்றின என்றும் கூறியுள்ளார்.

இந்த 25 எழுத்துக்களுக்கும் கபில முதற்கொண்டு, மனு வரையில் 25 ரூபங்கள் உள்ளன. அவற்றை சம்ஸ்கிருத மூலத்தில் பார்க்கலாம். இடம் கருதி இங்கு கொடுக்கவில்லை.

**** திரு.குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்**

***** அடுத்த இதழில் தொடரும்**

தொடர்

## கன்னட கிரந்தங்கள் அறிமுகம்

## ஸ்ரீவாதிராஜ தீர்த்தரின் ஸ்ரீசுந்தரகாண்டம்

ஸ்ரீமத்வமதப் பரம்பரையில் உடுப்பி அஷ்டமடங்களில் ஸோதே மடத்தின் பீடாதீசராக அலங்கரித்தவர் ஸ்ரீவாதிராஜ தீர்த்தர். மத்வ சித்தாந்தத்தில் வியாச மற்றும் தாச சாகித்யம் என இரண்டுக்குமே தமது பங்களிப்பை அளித்த மஹனீயர். பலதரப்பட்ட காவிய, ஸ்தோத்திர, டிப்பணி மற்றும் வியாக்யான கிரந்தங்களை இயற்றியதுடன், கன்னடத்திலும், துளு பாஷையிலும், 'ஹயவதன' முத்திரையில் பல கிருதிகளையும் ரசனை செய்துள்ளார். முக்யபிராணரின் மஹத்துவங்களை தமது பல கிருதிகளில் விவரித்துள்ள ஸ்ரீவாதிராஜர், ஸ்ரீஹனுமந்தனின் பராக்ரமங்களை முக்கியமாக வர்ணிக்கும் ஸ்ரீமத் ராமாயணத்தின் சுந்தரகாண்டப் பகுதிகளை பிரத்யேகமாக விளக்கும் கன்னட கிரந்தமே ஸ்ரீவாதிராஜரின் ஸ்ரீசுந்தரகாண்டம் ஆகும்.

ஸ்ரீவாதிராஜரின் இந்த சுந்தரகாண்டம், ஒரு பல்லவியுடன் 11 பத்யங்களில் அமைந்த மிகச்சிறிய கன்னட கிரந்தமாகும். ஸ்ரீமத் வால்மிகி ராமாயணத்தின் சுந்தரகாண்டத்தின் பகுதிகளை, ஸ்ரீஹயக்ரீவ ரூப பரமாத்மா அருளிய 100 கோடி ஸ்லோகங்களைக் கொண்ட மூல ராமாயணத்தையும், ஸ்ரீமன் மத்வாசார்யரின் மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தையும் அனுசரித்து, மிகச் சுருக்கமாக, எளிமையாக ராக தாளத்துடன் பாடி, கேட்டு ரசிக்கும்படியாக வழங்கிய விதம் ஆச்சரியப்படத்தக்க வகையில் உள்ளது.

ஸ்ரீவாதிராஜர் இந்த கிரந்தத்தில், முதலில் பல்லவியில் சாதுர்யம் படைத்தவரான ஸ்ரீஹனுமானைப் புகழ்ந்து கொண்டாடி, பின்னர், 11 பத்யங்களில் ஸ்ரீஹனுமான், ஸ்ரீராமரின் ஆணைக்கிணங்க, தூரத்திலிருந்தே லங்கையைக் கண்டு, ஸ்ரீராமரை ஸ்மரித்து, கடலைத் தாண்டி, லங்கிணி முதலான ராட்சசர்களை வென்று, சீதையைக் கண்டு, ஸ்ரீராமனின் க்ஷேமத்தை உரைத்து, மோதிரம் அளித்து, அசுரர்களை விரட்டி அடித்து, ராவணனின் மகனான அக்ஷகுமாரனைக் கொன்று, இன்னொரு மகனான இந்திரஜித் எய்த பிரம்மாஸ்திரத்திற்கு கட்டுப்பட்டதாக நடித்து, சபையில் ராவணனைக் கண்டு, தன்னை

ஸ்ரீராமனின் சேவகன் என அறிமுகப்படுத்திக் கொண்டு, எச்சரிக்கை விடுத்து, தமது பராக்ரம சாமர்த்தியத்தை எடுத்துக்கூறி, ராவணனின் ஆணைக்கிணங்க ராட்சசர்கள் ஹனுமனின் வாலில் துணியைச் சுற்றி, நெருப்பு வைக்க, ஸ்ரீராமரின் பாத ஸ்மரணையுடன் லங்கையை சுட்டுப் பொசுக்கி, கடலை மீண்டும் தாண்டி, ஸ்ரீராமரிடம் சீதாதேவியின் க்ஷேமத்தை தெரிவித்து, அவள் அளித்த சூடாமணியையும் சமர்ப்பணம் செய்ததையும், பின்னர் வானரப் படைகள் சேதுவை அமைத்து, லங்கை சென்று, யுத்தம் புரிந்ததையும், ஸ்ரீராமபிரானும், அவள் தலைமையில் வானர சேனையும் ராவணன் முதலான ராட்சசர்களைக் கொன்று, விபீஷணனுக்கு பட்டம் சூட்டி, ஸ்ரீராமன் சீதையை அழைத்துக் கொண்டு, அயோத்தி திரும்பி, முடிசூட்டிக் கொண்டு ராஜ்ஜியம் புரிந்ததையும் வர்ணித்து, முடிவில் ஸ்ரீஹனுமனின் புகழை மீண்டும் பாடி பூர்த்தி செய்கிறார்.

ஸ்ரீவாதிராஜர் முதலில் பல்லவியில் 'எவ்வளவு சாதுர்யம் படைத்தவனே, நீதான் பலவந்தன்! கெட்டிக்காரனே வாழி, வாழி, ஹனுமந்தனே !! வழிமறித்த அசுரர்களை வதைத்து அழித்து தலையில் குட்டி, பந்தாட்டம் ஆடிய கெட்டிக்காரன் நீதானே!!' என பொருள்படும்படியாக 'எஷ்டு சாஹஸவந்தா, நீயே பலவந்தா, திட்ட மூருதி பளிரே பளிரே ஹனுமந்தா, அட்டுவ களரெதெ மெட்டி துளிதுதலெ குட்டி செண்டாடித திட்ட நீனஹுதோ' அமைத்து ஆரம்பித்துள்ளார்.

முதல் இரண்டு பத்யங்களில் ஸ்ரீராமரின் உத்தரவினால் சமுத்திரத்தைத் தாண்டி, லங்கையைக் கண்டு, ஸ்ரீராமரின் காரியத்தை ப்ரீதியுடன் செய்த ஹனுமனுக்கு இணை யாருமில்லை எனக்கூறி, தூரத்திலிருந்தே லங்கா நகரைக் கண்டு ஸ்ரீராமனை ஸ்மரித்துக்கொண்டு, சமுத்திரத்தைத் தாண்டி, லங்கிணி முதலானவர்களை வென்று, அழகிய முகம் படைத்த சீதையைக் கண்டு, ஸ்ரீராமரின் க்ஷேமத்தை சொல்லி, மோதிரத்தை அளித்ததையும், சீதாதேவி அதை ஸ்வீகரித்து ஆனந்தப்பட்டதையும், பின்னர் ஹனுமான் அந்த அசோக வனத்தில் பழங்களைத் தேடி வரும்போது, கண்ணுக்கு அழகான ருசியான பழங்களைப் பறித்து, அதை தடுந்த அசுரர்கள் அடித்து விரட்டி, தாவித்தாவி நகைத்து அசுரர்களின் பலத்தை முறியடித்ததையும் வர்ணிக்கிறார் ஸ்ரீவாதிராஜர்.

3ம் பத்யத்தில், அழகிய வனத்தில் காவலுக்கு இருந்த அசுரர்களை அடித்து விரட்டிய ஹனுமந்தன், போருக்கு வந்த ராவணனின் மகன் அக்ஷகுமாரனை வதைத்ததையும், இந்த சங்கதியை அசுரர்கள் ராவணனுக்குத் தெரிவிக்க, உடனே ராவணன் தனது இன்னொரு மகனான இந்திரஜித்தை அழைத்து, அசுரப் படையுடன் சென்று, வானரனைப் பிடித்து வர கட்டளையிட, இந்திரஜித் கோபத்துடன் பிரம்மாஸ்திரத்தை ஏவ, ஹனுமந்தன் அதற்கு கட்டுப்பட்டு (நடித்து) உடன் செல்ல, இந்திரஜித் அசுரர்களுடன் கர்ஜனை செய்து கொண்டு ராவணனிடம் அழைத்துச் சென்றதையும் ஸ்ரீவாதிராஜர் விளக்குகிறார்.

4 முதல் 7 வரையிலான பத்யங்களில், சபையில் ராவணன், சண்டித்தனம் செய்த ஹனுமனைப் பார்த்து, ‘அவன் யார்? ஏன் இந்தக் காரியம் செய்தான்? அவனை அனுப்பியது யார்?’ என்று மிரட்டும்படியாக விசாரிக்க, ஸ்ரீஹனுமான், ஸ்பஷ்டமாக தான் ஸ்ரீராமரின் சேவகன் எனவும், தம் பெயர் ஹனுமான் எனவும் அறிமுகப்படுத்திக் கொண்டதையும், ‘பலவந்த ராமர பண்ட பந்திஹனோ, ஹலவு மாத்யாகோ ஹனுமனு நானே’ முதலான பத்யங்களினால் விளக்கி, ஹனுமந்தன் தன்னாலேயே மூடனான ராவணனை அடித்துப் போட முடியுமென்றும், ஸ்ரீராமரின் உத்தரவு (சங்கல்பம்) இல்லையென்பதால், பொறுமையுடன் இருப்பதாகக் கூறி, பயம் கொண்ட ராவணன் இவனைப் போல இன்னும் எத்தனை பேர் உள்ளனர் என்பதை வினவ, ஹனுமந்தன் தன்னைப் போன்ற தூதர்களும், ராவணனைப் போன்ற பேடிகளும், இருனூறு முன்னூறு கோடி பேர் இருப்பதைக் கூற, கோபம் கொண்ட ராவணன், வானரனான ஹனுமந்தனின் வாலில் நெருப்பை வைக்கச் சொல்லி ஆணையிட, எஜமானனின் வார்த்தைக்கு கட்டுப்பட்ட அவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து, துணி மூட்டைகளை எடுத்து, துணிகளை தைலத்தில் நனைத்து எடுக்க, ஹனுமந்தன் அதனைக் கண்டு நகைத்து வாலை உயர எழுப்பியதையும் கூறி, ஜனங்கள் கொணர்ந்த துணிகள், சால்வைகள் போதாமல் ஸ்த்ரீகளின் ஆடைகளையும் எடுத்து வரச்சொல்லி, வாலில் சுற்றிய துணியில் காலம்ருத்யு என்னும் நெருப்பை பற்ற வைத்ததையும் ஸ்ரீவாதிராஜர் விளக்கியுள்ளார்.

8 முதல் 10 வரையிலான பத்யங்களில், வாலில் நெருப்பு வைக்கப்பட்ட ஹனுமந்தன், குதித்துக் கூத்தாடி, கூச்சலிட்டுக்

கொண்டு, அசுரர்களைப் பார்த்து எள்ளி நகையாடி, வாலில் கட்டியிருந்த மணிகள், ஜணஜணவென்று சப்தித்துக் கொண்டு, ஸ்ரீராமரின் பாதத்தினை மனதினில் ஸ்மரித்துக் கொண்டு, ஸ்ரீராமசந்திர மூர்த்திக்கு மங்களம் பாடி, லங்கையை சுட்டுப் பொசுக்கியதையும், சுற்றிலும் தீயினால் புகை பிரம்மாண்டமாக சுற்றிக் கொண்டு, கட்டடங்கள் எரிய, இனிமேலும் ஏதேனும் செய்தால், ஸ்ரீராமர் கோபிப்பார் என நினைத்து (சங்கல்பத்தை உணர்ந்து) சமுத்திரம் தாண்டி, ஸ்ரீராமரின் இடம் சேர்ந்து, வாலின் நெருப்பினை கடலில் அணைத்து, சீதாதேவியின் க்ஷேமத்தை ஸ்ரீராமருக்கு தெரிவித்து, சீதை அளித்த சூடாமணியையும், ஸ்ரீராமனிடம் சேர்ப்பித்த வரையிலான கட்டங்களை மிக அழகாக 'சீதெய க்ஷேமவ ராமரிகெ ஹேளி ப்ரீதியிந்த கொட்ட குங்குரதில்லி' முதலான பத்யங்களில் வர்ணித்து, முன்னால் யுத்த காண்டத்தின் பகுதிகளையும் இணைத்து மங்களம் செய்யும் வகையில், ஸ்ரீராமரின் படையினர் சமுத்திரத்தில் சேதுவைக் கட்ட, ஸ்ரீராமர் வானர சதுரங்க சேனையுடன் லங்கைக்கு வந்து, கோட்டையை முற்றுகையிட்டு, ராவணனுடன் போரிட்டு, அசுரப்படையை தோல்வியுறச் செய்து, ராவணன் முதலான ராக்ஷசர்களைக் கொன்று, விபீஷணனுக்கு பட்டம் கட்டி, சீதா தேவியை அழைத்துக்கொண்டு, அயோத்திக்கு வந்து முடிசூட்டிக் கொண்டு, ராஜ்ஜியத்தை ஆண்டதையும் வர்ணிக்கிறார் ஸ்ரீவாதிராஜர்.

கடைசி பத்யத்தில் ஸ்ரீவாதிராஜர், மீண்டும் ஹனுமந்தனைப் புகழ்ந்து, துதிக்கும்படியாக, நிறைய அசுரர்களைக் கொன்றவனும், சங்ககிரியில் நின்றவனும், ஹயவதனனின் அருளைப் பெற்றவனும், பிரம்ம பதவிக்கு வருபவனுமான ஹனுமந்தனுக்கு சரணம் எனப் போற்றி நிறைவு செய்கிறார் ஸ்ரீவாதிராஜர். சுந்தர காண்டத்தைப் படித்தாலும், கேட்டாலும் சுபிட்சம் உண்டாகும். இத்தகைய உயரிய கிரந்தத்தை அனுதினமும் விசேஷ அர்த்தங்களை தெரிந்து கொண்டு, பாராயணம் செய்து, ஸ்ரீவாதிராஜ தீர்த்தரின் அந்தர்யாமியான ஸ்ரீஹயக்ரீவ ரூபி பரமாத்மாவின் அனுக்கிரகத்திற்க்கு பாத்திரராவோமாக.

ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து

****** S. லக்ஷ்மிபதிராஜா, சென்னை**

ஆராதனை

## பால்குண பகுள த்ருதியை

## ஸ்ரீவாதிராஜ தீர்த்தர்

தபோவித்யா விரக்த்யாதி சத்குணௌ காகரானஹம் ।
வாதிராஜ குரூன்வந்தே ஹயக்ரீவ தயாஸ்ரயான் ॥

வேதாந்த உலகில் நாம் கண்ட சுத்தமான, புகழ்பெற்ற, மிகச்சிறந்த அறிஞர், யதிவரேண்யர் பலதரப்பட்ட திறமைகள் .ஸ்ரீவாதிராஜர் -, அனைவராலும் புகழப்பட்ட இவர் 120 ஆண்டுகள் வாழ்ந்து சஜ்ஜனர்களுக்கு அருளினார்இரு மொழிகளிலும் திறன் படைத்த . டீகை . இவரது சாகித்யம் ஒப்பிடமுடியாதது, டிப்பணி, ஸ்வதந்த்ர கிரந்தங்கள், ஸ்தோத்திரம், கன்னடத்தில் பாடல்கள், காவியங்கள் என இவர் இயற்றியது பற்பல உள்ளன .இவரது மகிமைகளும் அபாரம் . .இத்தகைய சிறந்த புருஷரின் சிந்தனை நமதாகவேண்டும்

ஸ்ரீவிஸ்வேந்திர தீர்த்தரின் வாக்கு:
ஜன்ம சபல காணிரோ நம்ம குரு வாதிராஜராயர கண்டு ॥
வியாசகூடகளல்லி ஸ்ரேஷ்டராகிஹரு
தாசகூடகளல்லி ரத்னதந்திஹரு
பாசுர காமதி நூரிப்பத்து வர்ஷ தரெயொளகெ மெரெதிஹரு

ஸ்ரீவாதிராஜரின் பிரசிஷ்யரான ஸ்ரீவேதநிதி தீர்த்தர், தனது அனைத்துமே இவர் என்கிறார்.

மாதா ராஜா மத்பிதா வாதிராஜ: ப்ராதா ராஜா மத்சகா வாதிராஜ:
சர்வஸ்வம் மே வாதிராஜோ தயாலு
ர்னான்யதெய்வம் நைவ ஜானே ந ஜானே ॥

க்ஷிதியார துர்வாதிகள ஜயிஸித அ
ப்ரதிம மஹாரதிகனெனிசுவ சக்ரவர்த்தி ராஜா ॥
(ஸ்ரீப்ரசன்ன வேங்கடதாசர்(

ஸ்ரீமத் உத்தராதி மடாதீசரான ஸ்ரீசத்யதர்மதீர்த்தர் தம் பூர்வாசிரமத்தில் இயற்றிய கிருதியில் ஸ்ரீராஜரை இவ்வாறு புகழ்ந்திருக்கிறார் .

கதா புண்யாரண்யே ஷுப தவலகங்கா பரிசரே
சரன் சூரே :சேவா ஜனித பரமானந்த பரித :||
ஆயி சம்வித்ஸ்வாமின் ஹயவதன வாதீசவரத
ப்ரசீதீதி க்ரோஷன்னிமிஷமிவ நேஷ்யாமி திவசான் ||

ஸ்ரீவாதிராஜ யதிவரேண்யரின் மகிமைகள் பற்பல உள்ளனஅவரிடம் . இருந்த பாண்டித்யம், தவம், வாத்ஸல்யம், தீக்ஷை, சாதுர்யம், பகவத்பக்தி, விரக்தி ஆகிய மிகச்சிறந்த நற்குணங்களைப் பெற்ற இவர், அஷ்டமடங்களின் வழிகாட்டியாகவும் விளங்கினார்வியாச . சாகித்யத்தைப் போலவே, தாச சாகித்யத்திற்கும் இவர் செய்த அருள் அனேகம்சிறிய கீர்த்தனையில் துவங்கி ., நீண்ட கிருதிகளை இயற்றி, சாகியத்திற்கு அருளி, அதனை கடைத்தேற்றிய மகான் இவர் .

இவருக்குப் பிறகு வந்த உரையாசிரியர்கள், விஜயதாசர் துவங்கி பற்பல ஹரிதாசர்கள் என அனைவரும் இவரைப் பாடி புகழ்ந்திருக்கின்றனர் .

துரிதராசிகள சீளி ஹொரர தெகெது மருதஷாஸ்த்ரவனெ பேளு
பரமார்த்த மார்கவதோரி சுகபடிஸி தரெயொளகெ மெரெத தீர |
த்ரிஜகதொளிவரிகெ எணேகாணே குஜன மத சோலிசுவல்லி
விஜயவிட்டலனே த்ருவவெந்து த்வஜவெத்தி திருகித முனிப ||
(ஸ்ரீவிஜயதாசர்(

மோதமுனிமத பயோநிதிபூர்ண
விதோதய ஷரணர காதுகோ தொரெயே ||

வாதிராஜ ப்ரதிவாதி கஜேந்திர ம்ரு காதிராஜ விபுதோதிர சந்த்ர ||
(ஸ்ரீஜகன்னாததாசர்(

மத்வமத ஷுபவார்த்தி சந்திரகெ நித்ய நிர்மல நிகமஸ்தோத்ரகெ |
ப்ருத்ய பாலகெ சுகுணகாத்ரகெ சத்யலோக சுமுக்ய பாத்ரகெ |
ஸ்துத்யயதிவர சுஜனமித்ரகெ ஷரணு ஷரணு ஷரணய்ய ஷரணு ||
(ஸ்ரீகுருஜகன்னாததாசர்(

நின்ன நெனெமெ தன்ய நின்ன பாடலு மான்ய
நின்ன கொண்டாடலு பாபஷூன்ய ||
(ஸ்ரீபங்க நாமத திம்மண்ண தாசர்( ***

**தொடர்**

## ஹரிதாசர்களின் சிந்தனை முத்துக்கள்

## கலௌ சங்கீர்த்ய கேசவம்

ஹரிதாச சாகித்யத்தின் இன்னொரு பெயர் பக்தி சாகித்யம் . இதனுடன் சங்கீதமும் சேர்ந்து, அனைத்தும் மிகச்சிறந்த காவியமாக உருவெடுத்துள்ளதுஇதற்கு முக்கிய காரணம் ., ஸ்ரீஹரி சங்கீதத்திற்கு வேகமாக வந்து தரிசனம் அளிப்பான் .

த்யாயன் க்ருதே யஜன் யக்ஞைத்ரேதாயாம் த்வாபரே :Sர்ச்சயன் |
யாதாப்னோதி ததாப்னோதி கலௌ சங்கீர்த்ய கேஷவம் || -- விஷ்ணு புராணம்

கலியுகதொளு ஹரிநாமவ நெனெதரே குலகொடிகளு உத்தரிசுவுது -
:ஸ்ரீஸ்ரீபாதராஜர் தமது ஒரு உகாபோகத்தில் .என்றார் புரந்தரதாசர்

த்யானவு க்ருதயுகதி யஜன யக்ஞவு த்ரேதாயுகதி
தானவாந்தக தேவதார்ச்சனெ த்வாபரயுகதி ஆ
மானவரிகெஷ்டு பலவோ அஷ்டு பலவு கலியுகதி
கானதலி கேசவ எனலு கைகொடிசுவனு ரங்கவிட்டலா ||

கலியுகத்தின் சிறப்பு இதுவேக்ருத ., த்ரேதா மற்றும் த்வாபர யுகங்களில் முறையே தியானம், யக்ஞம், அர்ச்சனைகள் சிறந்த பலன்களைக் கொடுத்து, ஸ்ரீஹரியின் அருளைப் பெறுவதற்கு உதவியாக இருந்தால், கலியுகத்தில் ஸ்ரீஹரியை பக்தியுடன் பாடினால் அவனின் அருள் முழுமையாகக் கிடைக்கிறது ஹரிதாச . சாகித்யத்தின் பிதாமகர் என்று அழைக்கப்பட்ட ஸ்ரீஸ்ரீபாதராஜர் சொன்னதும் இதுவே:இதையே மறுபடி ஸ்ரீபுரந்தரதாசரும் .

த்யானவு க்ருதயுகதலி யக்ஞ
யாகவு த்ரேதாயுகதல்லி
அர்ச்சனெ த்வாபரயுகதலி
கீர்த்தனெ மாத்ரதி கலியுகதல்லி மு
குதிய நீவ புரந்தரவிட்டலா ||
***

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### 10-சர்வ பிரதீக சந்தி விடைகள்

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| [1]வ | [26] | ந் | [27]த | ரெ | | [2]க | பி | த் | த | [28]ப | ல | | |
| | ஸி | | டா | | | | [33]வா | [34]சி | | ண் | | | |
| | ப | தி | க | ரா | னு | தா | [18]ஸ | | | டு | | [29]ஸ | |
| | ஹ | | | | ரு | | | | | ணி | | ம | |
| | | [3]அ | ச் | யு | த | | | | | | | ர் | |
| | | ப | | | [4]ஸு | ம | ன | ஸா | | [5]ஷ | ட் | ப | த |
| தி | த | த் | [19]ப | | | | க | | ணி | | | க | ரு |
| | [6]ந | த | | | | து | [7] | ப | ரு | | [8]ஆ | த் | [35]மா |
| | [9]ஒ | க | டு | | | ரி | | | [36]க் | | | | |
| | | ளு | | | [30]வி | [37]ஜ | [20]த் | | | | | | னெ |
| | | | | | [10]தா | ன | வ | ர் | ன | சு | [21]பி | | தா |
| ன் | வ | | | | ர | த் | [22]கா | | | | [31]யு | | த் |
| ர | க் | | | | ண | | | [11]க | லு | ஷ | க | ர் | [38]ம |
| ப் | [39]ப | | தி | [23]ந | | | | [40]பே | | | ள | | |
| [12]வி | த | ந் | த | ன் | | | | | [13]க் | லே | [32]ஸ | | |
| | [41]பா | | [42]உ | | | | | | | ரி | த் | [15]அ | க்ஷ |
| | | | | | | [14]க | க | | | த் | | ம | |
| | | [16]அ | ம் | பு | ரு | ஹ | | | | [42]தா | | ர | |
| | | ங் | | ப் | | மோ | | | | | ன | த | [24]ஓ |
| சு | ச் | [25]கி | | [43]ம | | [17]வி | ய | த் | க | ங் | கா | ர | |

பிப்ரவரி 2021 ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டிக்கு சரியாக பதிலளித்து புத்தகப் பரிசினைப் பெறுபவர்கள்:
1. திருமதி. ஷாந்தி பத்மனாபன், திருநெல்வேலி 2. திருமதி. உஷா ரகூத்தமன், பெங்களூரு 3. திருமதி. பிரேமா குருராஜன், பொள்ளாச்சி 4. திருமதி. லலிதா, திருநெல்வேலி

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்

Haridasa Vijayam - Monthly

மலர் ௨ ** ஏப்ரல் 2021 ** இதழ் 6



ஸ்ரீவியாஸராஜர்

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 2 : இதழ் 6

| நிர்வாக ஆசிரியர் | துணை ஆசிரியர் |
|---|---|
| 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்<br>ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,<br>380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase, பெங்களூரு 560078<br>Ph.: 89044-58276.<br>haridasa.vijayam@gmail.com<br>jagannathakesava.blogspot.com | 'தாச சாகித்ய சேவா ரத்ன'<br>திரு.குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்<br><br>**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**<br>திரு. முரளிதர தாசரு,<br>திருமதி. நிர்மலா நரசிம்மன்,<br>திரு. லட்சுமிபதிராஜா,<br>திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ் |

**ஆராதனை**

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்

**ஏப்ரல் 1 முதல் 30 வரை, 2021**

April 1 - பால்குண பகுள சதுர்த்தி - ஸ்ரீவியாசராயர், நவபிருந்தாவனம்
April 21 - சைத்ர சுத்த நவமி - ஸ்ரீதந்தெமுத்துமோகனதாசர், தேவராயனதுர்கா

# ஆசிரியர் பக்கம்

ஸ்ரீவாதிராஜரின் ஆராதனைக்குப் பிறகு, ஏப்ரல் 1ம் தேதி, ஸ்ரீவியாசராஜரின் ஆராதனை வருகிறது. மத்வ சித்தாந்தத்தில், வியாசகூட மற்றும் தாசகூட என்னும் இரு பரம்பரைக்கும் மிகவும் முக்கியமான யதியான. இவரது சிந்தனை நமக்கு எப்போதும் இருக்க வேண்டியது. 'தாசரெந்தரெ புரந்தர தாசரய்யா' என்று இவர் ஸ்ரீபுரந்தரதாசரை புகழ்ந்து பாடினால், 'ஸாஸிர ஜிஹ்வெகளுள்ள சேஷனே கொண்டாட பேகு, வியாசமுனிராயர சன்யாஸதிரவா' என்று குருவான ஸ்ரீஸ்ரீபாதராஜரால் கொண்டாடப்பட்ட மகானுபாவர் இவர். இவரைப் பற்றிய ஒரு சுருக்கமான பதிவும், இவர் இயற்றிய பகவத்கீதாசாரம் பற்றிய ஒரு பதிவும் இந்த இதழில் உள்ளது. இவற்றைப் படித்து, ஸ்ரீவியாசராஜரின் மற்றும் அவர் அந்தர்யாமியான ஸ்ரீகிருஷ்ணனின் அருளைப் பெறுவோமாக.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

| கன்னடம் | **அருஞ்சொற்பொருள்** |
|---|---|
| | **கடினமான சொற்களின் அர்த்தங்கள்** |

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

நாகாரி = கருடன். நிக[4] = பாபம். நிர்ஜரேஷ = கிருஷ்ணன், இந்திரன். நிர்பீதி = பயம் இல்லாத. நினத = ஷப்த. தோய = தண்ணீர். தாரேஷ = சந்திரன். துண்ட = முகம். திரெ = பூமி. த்ரையம்பக = மூன்று கண்கள் கொண்டவன். ருத்ரர்.

வங்கிக் கணக்கில் சந்தா செலுத்தினால், மறக்காமல் உங்கள் முகவரியை 89044 58276 எண்ணுக்கு வாட்சப் / SMS அல்லது haridasa.vijayam@gmail.comக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

தொடர்

## கோவிந்தாஷ்டகம்

**இயற்றியவர்: ஸ்ரீகுருகோவிந்தவிட்டலதாசர்**

**ஊம் ஊர்ஜாய நம:** - ஊ-எழுத்திற்கான ஊர்ஜனின் ஸ்துதி

**ஊரூரு சரிஸிதெ³ கோவிந்த | நி**
**ம்மூரிகெ கரெதொ³ய்யோ கோவிந்த ||**

சம்சாரத்தில் (பிறப்பு இறப்பு சுழற்சியில்) ஈடுபட்டு, ஸ்வர்க்கம், நரகம், பூமி என்று தொடர்ந்து சுற்றி வந்தேன். பூமியில் வெவ்வேறு வேலைக்காக வெவ்வேறு ஊர்களுக்கு சென்றேன். இப்படியான தொடர்ச்சியான பயணங்களால் சோர்வுற்றிருக்கிறேன். உன் ஊரான வைகுண்டத்திற்கு என்னை அழைத்துப் போய்விடு. அங்கு ஒருமுறை வந்துவிட்டால், மறுபடி வெவ்வேறு ஊர்களுக்கு பயணப்படும் தேவையே / வேலையே இல்லை.

இப்படி உன் ஊரான வைகுண்டத்திற்கு அழைத்துப் போகவேண்டுமெனில், உன் சன்னிதான விசேஷங்கள் இருக்கும்படியான, உன் ஊர்களே என்று அழைக்கப்படும் வெவ்வேறு புண்ணிய தீர்த்தக்ஷேத்திரங்களுக்கு என்னை அழைத்துப் போ.

ஊர்ஜ என்று ஸ்ரீஹரிக்கு பெயர் வருவதற்கு இரு காரணங்களை சொல்லலாம். 1. நற்செயல்களை செய்வதற்கு தேவையான வலிமையைக் கொடுத்து, அந்தந்த நற்செயல்களை நம் மூலமாக செய்விப்பவன். 2. ஊ-கார எழுத்திற்கு அதிபதி என்று யார் தன்னை வணங்குகிறாரோ, அவர்களுக்கு தேவையான ஆன்மிக வலிமையை வழங்கி, ஆன்மிக உலகத்தில் இருக்கும் அனைத்து ஊ-கார என்னும் ரூபத்தை உபாசனை செய்வதற்கு அருள்கிறான்.

நீ ஊ-காரத்திற்கு அதிபதியாக இருக்கிறாய் என்பதை அறியாத அஞ்ஞானியான நான், இந்த சம்சார பந்தத்தில் மூழ்கிக் கிடக்கிறேன். அதனால், வெவ்வேறு ஊர்களுக்கு பயணப்பட்டேன். இப்படிப்பட்ட பயணங்களிலிருந்து விடுபட வேண்டுமெனில், நித்யமான பகவந்தனின் ஊரான வைகுண்டத்திற்கு போகவேண்டும். ஆனால் அது நமது முயற்சியால் மட்டுமே சாத்தியமானது இல்லை.

பகவந்தனின் அருளும் தேவை. அதனாலேயே, 'நிம்மூரிகெ கரெதொய்யோ கோவிந்த' என்று அவனையே வேண்டுகிறார் தாசர்.

கோவிந்தன் நம்மை தன் ஊருக்கு அப்படியே அழைத்துப் போவதில்லை. அப்படியே ஒருவனை தன் ஊருக்கு அழைத்துப் போகவேண்டுமெனில், அவனிடமிருந்து பற்பல சாதனைகளை செய்வித்து, அதன் பலனாக அவனை அழைத்துக் கொள்கிறான். அவனுடைய ஊருக்குப் போவதற்கு செய்ய வேண்டிய சாதனைகளில், அவன் ஊர்ஜ நாமகனாக இருந்து, ஊ-காரத்திற்கு அதிபதியாக இருக்கிறான் என்ற அறிவு இருக்கவேண்டும்.

ஆகையால், நிம்மூரிகெ கரெதொய்யோ என்னும் வரியில், உன் ஊருக்கு அழைத்துச் செல்வதற்கு என்னென்ன சாதனைகள் செய்யவேண்டுமோ அவை அனைத்தையும் என் மூலமாக நடத்தி, அதன் பலனாக என்னை அழைத்துச் செல் என்கிறார் தாசர்.

முதல் வரியில் சொன்னதைப் போல, ஊர் ஊராக சுற்றுவதற்கு, ஊர்ஜ நாமக பகவந்தனை ஊ-கார ரூபகனாக வணங்கி உபாசனைகளை செய்யாமல் இருப்பதே முக்கிய காரணமாகும். இப்படி இந்த நுடியில், பகவந்தன் ஊர்ஜ நாமக ரூபகனாக, ஊ-காரத்தால் வெளிப்படுபவனாக அறியவேண்டும் என்பதை விளக்குகிறார் தாசர்.

**ரும் ருதம்பராய நம:** - ரு-எழுத்திற்கான ருதம்பரனின் ஸ்துதி

**ருகா³தி த்ரயிமயி கோவிந்த | ஹரி**
**ருக்³வினுதனெ குரு கோவிந்த |**

ரிக், யஜுர், சாம என்கிற மூன்று வேதங்களிலும் முக்கியமானவனான கோவிந்தன், ரிக்வேதத்தின் மிகவும் அதிகமாக புகழப்படுகிறான் (வணங்கப்படுகிறான்) குருகோவிந்தன்.

ரு-கார ருதம்பர என்னும் பெயருக்கு இரு காரணங்கள் உள்ளன. 1. உண்மையான / விசேஷமான ஞானத்தைக் கொண்டிருப்பவன். 2. ரு-காரத்திற்கு அதிபதி ருதம்பர நாமக பரமாத்மன் என்னும் உண்மையான ஞானத்தை, தகுந்தவர்களுக்கு புரியும் வண்ணம் செய்பவன்.

தைத்திரிய உபநிஷத் சொல்வதைப் போல, சங்கர்ஷண ரூபி பரமாத்மனின் தலை யஜுர்வேதத்திலும், வலது கை ரிக்வேதத்திலும்,

இடக்கை சாம வேதத்திலும், கால்கள் அதர்வ வேதத்திலும் வியாபித்திருப்பதால், அவன் த்ரயீமய என்று அழைக்கப்படுகிறார். இப்படி வேதங்களுக்கு ஆதாரமாக இருப்பதால், அத்தகைய வேதங்கள், ஞானத்தின் சுரங்கமாக இருப்பதால், வேதங்களின் மூலம் ஞானத்திற்கு ஆதாரமாக இருக்கிறான். மொத்த வேதங்களுக்கும், அதிலிருந்து உண்டாகும் ஞானத்திற்கும் அவனே ஆதாரம் என்றபிறகு, வேதங்களில் சொல்லப்பட்டிருக்கும் ரு-காரங்களுக்கும், அவை ருதம்பர நாமக பகவத் ரூபங்களையே குறிக்கிறது என்னும் ஞானத்திற்கும் ஆதாரம். இப்படி மொத்த ஞானத்திற்கே ஆதாரமாக இருப்பதனால் 'ருதம்பர' என்றும்; அவன் ரு-கார நாமக ருதம்பரன் என்னும் ஞானத்திற்கும் ஆதாரமானவன் என்பதாலும் அவன் ருதம்பரன்.

வேதங்களிலும், ரிக்வேதம் பகவந்தனை விசேஷமாக துதிக்கிறது. ஆகையால், ரிக்வேதத்தை பகவந்தனின் நாம (பெயர்) என்று விசேஷமாக சொல்கிறார்கள். இதையே ரிக்விநுதனெ - ரிக்'கினால் விசேஷமாக கொண்டாடப்படுபவனே என்று இன்று சொல்லியிருக்கிறார் தாசர்.

ரிக்விநுதனெ குரு கோவிந்த என்பதில் கோவிந்த என்று அழைப்பதில் ரு-காரத்தை தன் பெயராகக் கொண்டிருப்பவனே என்று பொருள் கொள்ளவேண்டும். ரிக்விநுதனே என்றால் ரிக்வேதத்தில் வந்திருக்கும் ரு-எழுத்தால் விசேஷமாக வணங்கப்பட்டிருப்பவன் என்ற பொருளையும் அறியவேண்டும்.

ஞானத்தைப் பெற்று ருதம்பரன் ஆகியிருப்பதால், அவனே குருவும் ஆகியிருக்கிறான் என்பதால் 'குரு கோவிந்த' என்று சொல்கிறார் தாசர்.

அனைத்திற்கும் ஆதாரமான 'ருத' என்னும் ருதம்பரன், உண்மையான ஞானத்திற்கு எப்படி அதிபதியோ, அப்படியே பொய்யான ஞானத்திற்கும் அவனே ஆதாரம். ஆனால், அவனை, உண்மையான ஞானத்திற்கான அதிபதி என்றே உபாசனை செய்யவேண்டி இருப்பதால் 'ருதம்பர' என்று அழைக்கின்றனர்.

**ரூம் ருகாய நம** - ரூ-எழுத்திற்கான ருகனின் ஸ்துதி

**ருக்ஷ சத்வினுதனெ கோவிந்த | ஹரி**
**ருகார ப்ரதிபாத்³ய கோவிந்த ||**

சம்ஹாரத்திற்கு அதிபதிகளான துர்கா, ருத்ர, யம ஆகியோரில் சம்ஹாரகனாக நிலைத்திருப்பதால் ருக்ஷ நாமகனாக வணங்கப்படுபவனே. வேதவியாசாதி ரூபங்களால் வித்யோபதேசங்களை செய்பவனாக இருக்கும், குரு என்று அழைக்கப்படும் கோவிந்த. துஷ்டர்களுக்கு பயங்கரமானவனாக இருப்பதால் ருத்ர என்றும், அவர்களை சம்ஹரிப்பதால் ஹரி என்றும், அழைத்துக் கொள்ளும் நீ, துஷ்டர்களை இம்சிப்பவன் என்னும் அபிப்பிராயத்தில் ரூ-எழுத்திற்கான அதிபதியாக கோவிந்த எனப்படுகிறாய்.

ரூ-எழுத்திற்கான அதிபதி என்றும் ருக என்று அழைத்துக் கொள்ளப்படும் பகவத்ரூபமானது அந்தப் பெயரைப் பெறுவதற்கு இரு காரணங்கள் உள்ளன. 1. அனைவரையும் இம்சிக்கும் தைத்ய சமூகத்தை சம்ஹாரம் செய்பவன். 2. தகுதி உள்ளவர்களுக்கு ரூ-காரத்திற்கான அதிபதியானவன், ருக நாமக பகவந்தன் என்னும் ஸ்ம்ருதியை சொல்பவன்.

துஷ்ட சக்திகளை அழிப்பதற்காக இருக்கும் துர்கா, ருத்ர, யம ஆகியோரில் சம்ஹாரகனாக இருப்பவன் ருக் நாமக பகவந்தன். அவர்களில் இருந்து, அவர்கள் மூலமாக சம்ஹாரத்தை செய்பவன். இப்படிப்படவன் ருக்ஷ என்னும் பெயரில் வணங்கப்படக்கூடியவனாக இருந்து, துஷ்டர்களை சம்ஹரிப்பவன். இவனே ரூ-காரத்தை தன் பெயராக வைத்திருக்கும் ருக் ரூபத்திலான கோவிந்தன்.

(தொடரும்)....

தொடர்

## கேசவ நாமா

## 15. நீனே தயாநிதியு- ஸ்ரீமஹிபதி தாசர்

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)

நரககோ4ரத3 க4டவெம்ப3 நரஜன்ம து3ர்க4ட1
தா1ரிசுவ நாராயண நிம்ம நாம ||2

சஞ்சித, ஆகாமி, ப்ராரப்த ஆகிய பாவங்களால் இந்த சரீரமானது பயங்கர நரகத்தை அனுபவிக்கிறது. அத்தகைய பாவங்களை, நம் மனிதப் பிறவு வந்தபோது போக்கவேண்டுமெனில், நாராயண ஸ்மரணை மிகவும் அவசியம். ந+அ+ர+அ+ய+ண என்னும் எழுத்துக்களால் முறையே ஜீவர்களிலிருந்து வேறுபட்டவன், ஜடப்பொருட்களிலிருந்து வேறுபட்டவன், தோஷங்கள் அற்றவன், சர்வோத்தமன், பக்தர்களின் பாவங்களைப் போக்குபவன், நற்குணங்கள் நிறைந்தவன் என்று பொருள். இத்தகைய நாராயணனின் திவ்ய நாமஸ்மரணையினால் பயங்கரமான நரகத்தையும்கூட தாண்டிவிடலாம்.

மத3 மத்ஸரவ ஜரிஸி பே3தா3பே3த3வு ஹரிஸி
சத்கைசுதிஹ மாத4வ நிம்ம நாம ||3

மாதவனின் திவ்ய நாமஸ்மரணையினால், மத மத்ஸர என்னும் தோஷங்கள் நாசமாகி, பரமாத்மன் மற்றும் ஜீவர்களின் பேத ஞானம் அழிந்து சத்கதி கிடைக்கிறது.

கோ3விஸிஹ வித்3யதி3 மாய மோஹவனளிஸி
ப4வ ஹிங்கி3சுவ கோ3விந்த நிம்ம நாம ||4

கோவிஸிஹ = பசுக்களை மேய்க்கும் கோவிந்தனின். வித்யதி = ஞானத்தால். மாயா மோகங்களை அழித்து. கோவிந்தனை இந்திரியங்களில் காட்சியளித்து, சம்சார சாகரத்தை கடந்துவிடலாம்.

இஷ்டார்த்த2கள கொட்டு கஷ்டார்த்த2 பரிஹரிஸி
த்3ருஷ்டாந்தத3லி ஹொரெவ விஷ்ணு நிம்ம நாம ||5

விஷ்ணு நாமஸ்மரணையினால், கஷ்டங்கள் பரிகாரம் ஆகி, இஷ்டார்த்தங்கள் நிறைவேறும் சந்தர்ப்பங்கள் பலவற்றை பாகவதம், பாரத புராணங்களில் நாம் காணலாம்.

மொத[3]லு மூவிதி[4]யக[3]ளு ஜரிஸி ஸத[3]மல புண்ய
பத[3]வீவ மது[4]சூதன நிம்ம நாம ||6
மதுசூதனன் என்னும் உங்கள் பெயர் பிராப்த கர்மங்களை தொலைத்து, பவித்ரமான புண்ய பதவியை கொடுக்கின்றன.

த்ரிவிதா[4]த்[4]யாத்ம ஸ்தி[2]திக[3]திய ஈவ சாஸ்திரகளனரிஸி
பா[4]வ ப[4]க்தீவ த்ரிவிக்ரம நிம்ம நாம ||7
பரபிரம்மனை அறிமுகம் செய்யும் சாஸ்திரங்களை படிப்பதன் மூலம் த்ரிவிக்ரம ரூபியானவர், மன, வாக், தேகத்தில் பக்தியைக் கொடுத்து, பின் மோட்சத்தையும் கொடுக்கிறார்.

மர்மத[4]ர்மவனரிஸி கர்மபாஷவ ஹரிஸி
ஜன்ம தா[1]ரிசுவ வாமன நிம்ம நாம ||8
வ = ஞான ஸ்வரூபி. ஆ = ஆனந்தரூபி. மன = மரியாதைக்குரியவனாக இருப்பதால், வாமனன். வாமனின் நாமஸ்மரணையினால், தர்மத்தின் மர்மங்களை அறிந்து, கர்மங்களிலிருந்து விடுதலை பெற்று, பிறப்பு இறப்பு சுழற்சியிலிருந்து விடுதலை பெறமுடியும்.

ஸ்ரீகரவனித்து ஸிரிசகல சௌபா[4]க்யத[3]லி
ஸ்ருஷ்டியொளு ஹொரெவ ஸ்ரீத[4]ர நிம்ம நாம ||9
ஸ்ருஷ்டியில் இருக்கும் அனைத்து ஜீவராசிகளுக்கும் அனைத்து சௌபாக்கியங்களையும் கொடுத்து, அருளும் நாமமே ஸ்ரீதரன்.

ஹரிஸி சந்தே[3]ஹ சங்கல்ப பா[3]தெ[4]க[3]ளு
ஹருஷக[3]தினீவ ஹ்ருஷிகேஷ நிம்ம நாம ||10
ஹ்ருஷிகேஷ நாமஸ்மரணையினால் தத்வ மற்றும் சாஸ்திரங்களில் இருக்கும் சந்தேகங்கள், புரிந்து கொள்வதற்கு இருந்த தடைகள் நீங்கி, சர்வோத்தமனான ஹரி மற்றும் குருகளான ஜீவோத்தமரிடமிருந்து சத்கதி கிடைக்கின்றது.

பரபிரம்மதொளு பெ[3]ரெ[3]ஸி பரமபாத[1]க[1] ஹரிஸி
பரமக[3]தினீவ பத்பனாப[4] நிம்ம நாம ||11
பத்பனாப நாமஸ்மரணையினால் பாவங்கள் தொலைந்து, கல்பத்தின் முடிவில் பரபிரம்மனின் உதரத்தில் சேர்ந்து, பரமகதி கிடைக்கிறது.

தா3ரித்ர்யது3ரித வித்4வம்ஸனீய மாடி3 த4ரெயொளு
த்த4ரிசுவ தா3மோத3ர நிம்ம நாம ||12
ஜடப்பொருட்களால் உண்டாகும் அமங்கலங்கள் நீங்கி, நம்மை இப்புவியில் மேம்படுத்தும் நாமமே தாமோதர நாமம்.

சகல பத3வித்த சுக2 ஸாத4னவ தோருதிஹ்ய
அகி2ளதொ3ளு சங்கருஷண நிம்ம நாம ||13
இஹபரங்களில் அனைத்து பதவிகளையும் அடையவேண்டுமெனில், சுகமான சாதனை மார்க்கம், சங்கர்ஷணனின் நாமஸ்மரணையே.

வாஸனெயு பொரிஸுத பா4ஷெ பாலிசுதிஹ
லேஸாகி ஸ்ரீவாசுதேவ நிம்ம நாம ||14
லௌகிகத்தில் இருந்தாலும் அலௌகிகத்தைக் கொடுப்பது, சேதனனின் ஸ்வரூபத்தின் அறிவு, வேத ஞானத்தைக் கொடுக்கும் நாமமே வாசுதேவ நாமம்.

பிராணப்ரியனாகி ப்ரசன்னவாகுவ பூர்ண
ப்ரத்யக்ஷவிது ப்ரத்4யும்ன நிம்ம நாம ||15
முக்யபிராணரூபியான, பிரத்யும்னனின் நாமஸ்மரணையை செய்தால், அவன் மகிழ்ச்சியடைந்து அபரோக்ஷ ஞானத்தைக் கொடுக்கிறான். உதாரணம்: ஹனுமன மதவே ஹரிய மதவு. ஹனுமனு ஒலிதரெ ஹரி தா ஒலிவ.

அனுமான பரிஹரிஸி அனுப4வாம்ருத ஸுரிஸி
அனுகூலாகுவ அனிருத்த நிம்ம நாம ||16
ஹரிசர்வோத்தமத்வ ஞானத்தில் இருக்கும் சந்தேகங்களைப் போக்கி, இந்திரியங்களின் மூலம் ஞானாம்ருதத்தைக் கொடுத்து, நிச்சய புத்தி கிடைப்பதற்கு உதவி செய்யும் நாமமே அனிருத்த நாமம்.

பூர்வகர்மவ ஹரிஸி பூர்ண க1ளெயொளு பெ3ரெஸி
புண்யபத3வீவ புருஷோத்தம நிம்ம நாம ||17
'முக்திர் நைஜசுகானுபூதி:' 'ஸ்வரூப சுகானுபவவே மோக்ஷ'. சேதனனின் மூன்று கவசங்கள் - ஸ்தூல, அனிருத்த, லிங்க தேகங்கள். வினைப்பயன்களை களைந்து, (லிங்க தேகம் பங்கமாகி), ஜகதுதரனின் உள்ளே நுழைந்து, தகுதிக்கேற்ப புண்ய ஸ்தலங்களான

சாலோக்ய, சாமீப்ய, சாரூப்ய, சாயுஜ்ய ஆகிய மோட்ச சுகங்களைக் கொடுக்கும் நாமமே புருஷோத்தம நாமம்.

அத்யாத்ம சுக[2]வரிஸி சித்தாந்தவனு தோரி
அத்[4]யக்ஷவாகு வாதோ[4]க்ஷஜ நிம்ம நாம ||18
பரபிரம்ம சுகத்தை அடைபவர்களுக்கு, மத்வ சித்தாந்தத்தின் அறிவைக் கொடுத்து, சாட்சாத்காரத்தைக் கொடுக்கும் நாமமே அதோக்ஷஜ நாமம்.

நரஜன்மவனு ஹரிஸி ஹரிப[4]க்தியொளு பெரெஸி
அருவு குர்ஹுர்விடி[3]த நரசிம்ம நிம்ம நாம ||19
'மானவ ஜென்ம தொட்டது, இத ஹானி மாடலுபேடி ஹுச்சப்பகளிரா'. மனிதர்களில் இருக்கும் அரிஷட்வர்கங்களைப் போக்கி, நவவித பக்தியை உண்டாக்கி, ஹரிதாசர்களின் நட்பில் இருக்கவைத்து, ஸ்வரூப ஞானத்தைக் கொடுக்கும் நாமமே நரசிம்ம நாமம்.

அர்ச்சனெயு ப்ரார்த்த[2]னெயு பரம பூஜெயனரிஸி
அசல பத[3]வீவ அச்யுத நிம்ம நாம ||20
பரமபூஜைகளான அர்ச்சனை, பிரார்த்தனை, நாமஸ்மரணைகளால் அச்யுதன், நிரந்தரமான மோட்சத்தைக் கொடுக்கிறான்.

ஜனன மரணவனளிஸி தனுமனதொளு பெரெஸி
ஜனும ஹரிசுவ ஜனார்த்தன நிம்ம நாம ||21
பிறப்பு இறப்பு சுழற்சியிலிருந்து விடுதலை அளித்து, அவன் தேகத்திலேயே இடம் கொடுத்து மறுபிறவியே இல்லை என்று சொல்லும் நாமமே ஜனார்த்தன நாமம்.

உபமேய ரஹித வஸ்துவுபாயத[3]லி தோரி
க்ருபெயிந்த ஹொரெவ உபேந்த்ர நிம்ம நாம ||22
பரமாத்மனின் இருப்பை ஆதாரத்துடனோ, தந்திரத்துடனோ நேரடியாகவோ காட்ட வேண்டுமெனில் உபேந்திரனின் ஸ்மரணை மிகவும் அவசியம். (தொடரும்)...

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

### கிரந்தத்தைப் பற்றிய விளக்கம்

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)

ஒரு விவசாயி எப்படி தனது நிலத்தை கண்ணும் கருத்துமாக பார்த்துக்கொள்கிறாரோ அது போல, உண்மையான பக்தர்களை ஸ்ரீஹரி ஒரு தாயைப் போல் காக்கிறார். தனக்குள் இருக்கும் ஸ்ரீஹரியை அறியாதவரின் நிலை மிகவும் பரிதாபகரமானது என்கிறார் தாசர். ஞான, பக்தி, தான, யக்ஞம் ஆகிய சாதனைகளைச் செய்து இந்த உடலை ஒரு க்ஷேத்திரமாக மாற்றவேண்டும் என்று சொல்கிறார். இந்த உடலானது எப்போது வேண்டுமானாலும் அழிந்துபோகக்கூடும் ஆகவே வைகுண்டமே நமது குறிக்கோளாக இருக்கவேண்டும். சிற்றின்பம் முக்கியமானது அல்ல. நோயை குணப்படுத்துவதற்கு, மருந்து குடிப்பதற்கு முன், சிறிது சர்க்கரை சாப்பிடுவதைப் போல, காம்ய-கர்மங்கள் நமக்கு உதவி புரிகின்றன என்கிறார்.

பகலில் வீட்டில் எரியும் விளக்குகளை அணைத்துவிடுகிறோம். 'துர்ஜனர கொண்டாடதிரு ஸ்வப்னதி' என்னும் எச்சரிக்கையை கவனிக்கவேண்டும். நானே செய்கிறேன், நிறைய செய்கிறேன், பொருட்களை சேகரிக்கிறேன் என்னும் இந்த மூன்று பிரமைகளைக் குறித்து சொல்கிறார். இந்திரியங்கள் எனது கட்டுப்பாட்டில் உள்ளன என்பதே நானே செய்கிறேன் என்றால், கர்வம் கொள்வதே நிறைய செய்கிறேன் என்பதாகிறது. நான் சுதந்திரம் இல்லாதவன் என்பதே உண்மையான கருத்தாக இருக்கவேண்டும். மேற்படி விஷயங்கள் அனைத்தும் வேத புராணங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. இவையே முக்தி மார்க்கத்திற்கு நம்மை அழைத்துச் செல்பவை. சத்வ ரஜஸ் தமஸ் ஆகிய மூன்று குணங்களில் விஷ்வ, தைஜஸ மற்றும் ப்ராக்ஞ என்னும் மூன்று ரூபங்களில் ஸ்ரீஹரி நிலைத்திருக்கிறார். நானே சர்வேசன் என்பது அசுரர்களின் நினைப்பு. நான் இன்னொரு சக்தியின் கட்டுப்பாட்டில் இருக்கிறேன் என்பது தேவதைகளின் நினைப்பு.

இந்த உலகம் முழுவதும் ஈசாவாஸ்யம் (ஸ்ரீஹரி) நிறைந்திருக்கிறார் என்கிறார் தாசர். அனைத்து ஜீவர்களிலும் ஸ்ரீஹரி பிம்பரூபியாகி

அவரவர்களுக்கான செயல்களை செய்து செய்விக்கிறார். காட்டினில் தானாக வளர்ந்த ஒரு மூலிகையானது எப்படி ஒரு நோயாளியின் நோயினை தீர்க்கின்றதோ, ஸ்ரீஹரி நம்மை எந்தவித எதிர்ப்பார்ப்பும் இல்லாமல் காப்பாற்றுகிறார். ரமாதேவியின் மூன்று ரூபங்களான ஸ்ரீ பூ துர்கா ஆகியவை சத்வ ரஜஸ் தமஸ் ஆகிய மூன்று குணங்களுக்கு அபிமானியாக இருக்கின்றன. இத்தகைய தாரதம்ய பேதங்களை அறிந்து ஸ்ரீஹரியை வணங்கவேண்டும்.

தாரதம்ய ஞானம் இல்லாதவர்கள் அந்தந்தமஸ்க்கு செல்கின்றனர் என்று தாத்பர்ய நிர்ணயத்தில் ஆசாரியர் சொல்லியிருக்கிறார். இந்த ஞானம் இல்லாமல் முக்தி இல்லை. அணுவை விட சிறியதாக வல்லவன். பெரியதைவிட பெரியதாகக்கூடியவன். வேதங்களினால் போற்றப்படுபவனான பிறப்பு இறப்பு ஆகியவை இல்லாதவன் ஸ்ரீஹரி. அவனை ' நித்ய நிர்மல நிகம வேத்யோத்பத்தி ஸ்திதி லய தோஷவர்ஜித' (சந்தி 20 ஸ்தோத்திரம் 2) என்று வர்ணிக்கிறார் தாசர்.

அடுத்து பிரம்மவாயுகளைப் பற்றி, 'கமலசம்பவ வாயுரீர்வரு சமரு சமவர்த்திகளு' என்கிறார். அவரவர்களின் கணவர்களைவிட சரஸ்வதி பாரதியர் 100 குணங்கள் குறைவானவர்கள் என்கிறார். சரஸ்வதி பிரம்மனின் மனைவி. பாரதி வாயுதேவரின் மனைவி. 'ககப-பணிபதி-ம்ருட சமரு' என்றால் - கருட, சேஷ, ருத்ரர் சமம் என்று பொருள். ம்ருட என்றால் சுகத்தைக் கொடுப்பவர் என்று பொருள்.

கிருஷ்ணனின் மனைவியரான நீலா, பத்ரா, மித்ரவிந்தா, ஜாம்பவதி, காளிந்தி, லக்ஷணா - ஆகியோரை 'ஷண்மஹிஷியர்' என்கிறார்கள். இவர்களுக்குப் பிறகு சௌபர்ணி (கருடனின் மனைவி), வாருணி (சேஷரின் மனைவி), பார்வதி (ருத்ரரின் மனைவி) வருகிறார்கள். அடுத்து இந்திரன், காமன் என்று தாரதம்ய வகுப்புகள் வளர்ந்துகொண்டே போகின்றன. குணங்களும் குறைந்துகொண்டே போகின்றன என்று அவரோகண தாரதம்யத்தை தாசர் விளக்குகிறார்.

20வதாக ஆரோகண தாரதம்ய சந்தியில், ஆரோகண முறையில் தாரதம்யத்தை விளக்குகிறார். ஸ்ரீஹரியிடமிருந்து துவங்கி கலி-மனைவி வரை அவரோகண முறை என்றால், மேல்நோக்கிப் போவது ஆரோகண முறையாகும். ஸ்தாவர ஜீவர்களிடமிருந்து துவங்கி, கிருமிகள், புழுக்கள், பாம்பு ஆகியவை, பிறகு பசு, யானை, சிங்கம், சூத்ரர், வைசியர், க்ஷத்ரியர், பிராமணர், ஞானி, ராஜன் என்று வரிசை போகின்றது. தாரதம்ய ஞானமே மோட்சத்திற்கான வழி என்கிறார்கள்.

ஜடப்பொருட்கள், கலியை விட உத்தமமானவை என்ற பொருள் இங்கு மறைந்திருக்கிறது. அரசர்களுக்குப் பிறகு கந்தர்வர், ரிஷிகள், அப்ஸரஸ் பெண்கள், சிரபித்ருகள் என்று தாரதம்யம் வளர்கிறது.

21வது சந்தியாக கர்மவிமோசன சந்தி 35 ஸ்லோகங்களில் கர்மங்களினால் முக்தி அடைவது எப்படி என்று சொல்கிறார். அபரோக்ஷம் கிடைத்தபிறகு கர்மங்கள் குறைகின்றன. மூல ரூப நாராயணன். பிறகு வாசுதேவ, சங்கர்ஷண, பிரத்யும்ன மற்றும் அனிருத்தன். இந்த 5 ரூபங்களிலிருந்து பற்பல ரூபங்கள் தோன்றுகின்றன. விறகுக்கட்டைகளில் மறைந்திருக்கும் நெருப்பினைப் போன்று ஸ்ரீஹரி யோகிகளில் மறைந்து, தானே அனைத்திற்கும் காரணம் என்று அழைத்துக் கொள்கிறார்.

கடல் நீரே ஆவியாகி, மேகமாகி பின்னர் மழையாக பெய்கிறதைப் போல, நம்முள் அந்தர்யாமியாக இருக்கும் ஸ்ரீஹரியை அறியாமல், என்ன படித்தாலும், பாடினாலும் அதனால் பலன் இல்லை என்பதை தெளிவாக விளக்குகிறார்.

பக்தாபராத சஹிஷ்ணு அல்லது சகலதுரித நிவாரண சந்தி 22ம் சந்தியாக வருகிறது. பாவத்தைப் போக்கும் செயல்கள் இதில் வருகிறது. கர்மங்கள் அனைத்தும் முடிந்தபிறகே முக்தி கிடைக்கிறது. கருணைக்கடலான ஸ்ரீஹரி, சுதாமனின் நட்பிற்கு கொடுத்த பாக்கியம், திரௌபதியின் மானத்தைக் காத்த அவனது செயலே அவனது கருணைக்கு சாட்சி. ஹரியின் கருணைக்குப் பாத்திரரானவர்கள், நிஜ சுகமான மோட்சத்தைப் பெறுகிறார்களே தவிர வேறு சுகங்களைப் பெறுவதில்லை என்கிறார். இந்த சந்தியில் 25 ஸ்லோகங்கள் உள்ளன. பீஷ்ம, த்ரோண, க்ருபர் ஆகியவர்களையே மன்னித்து அருளிய ஸ்ரீகிருஷ்ணனின் உதாரணத்தைக் கொடுக்கிறார். தொண்டமான் அரசனுக்கு சங்கு ஆயுதம், பிரம்மாயுதங்களையே கொடுத்தார். பக்தனின் பக்திக்கு மெச்சி என்னவேண்டுமானாலும் கொடுக்கிறார் ஸ்ரீஹரி. கோபியர்களின் திடமான பக்தி அவர்களுக்கு வேண்டிய பலன்களைக் கொடுத்தது. நந்த - யசோதைக்கு மகனாகப் பிறந்து, கோபாலகர்களுடன் நட்பில் இருந்து, விதுரனின் பக்திக்கு மெச்சி, அனைவருக்கு அருளிய உதாரணங்களைக் கொடுக்கிறார்.

சல்லடையின் நிழலில் வெயில் / நிழல் என்று எப்படி இரண்டும் தெரிகின்றதோ, அதுபோலவே வாழ்க்கையில் சுக துக்கங்கள் என இரண்டும் மாறி மாறி வருகின்றன என்கிறார் தாசர்.

அனைத்தையும் ஸ்ரீஹரிக்கு அர்ப்பித்த பிறகே நாம் உண்டு, நமது துக்கங்களை நாம் போக்கிக் கொள்ளவேண்டும். பறித்து, இடித்து, வேகவைத்து, நனைத்து, சுட்டு - உணவுப் பொருட்களுக்கு நாம் செய்யும் தோஷங்களை பரிகரிப்பதற்காக ஸ்ரீஹரிக்கு வைஸ்வதேவம் மூலம் சமர்ப்பித்து, குருகளுக்கு, பிராமணர்களுக்கு அர்ப்பித்து, பிறகு உண்டால் நற்புத்தி, பக்தி, ஞானம் ஆகியவை வளர்ந்து நாம் நற்கதியை அடைவதற்கு வழி ஏற்படுகிறது. நைவேத்தியம் செய்த பிறகே அதை உண்பவர்களுக்கு பாவங்கள் வருவதில்லை. இது செய்யாமல் உண்பவர்கள் நரகத்திற்குச் செல்கின்றனர். 'ஜாகு மாடதெ போகதாஷெய நீகி' ஸ்ரீஹரியை சரணடைந்தவர்களுக்கு வேகமாக உதவுவார் என்கிறார். வேடனான வால்மீகியை ராமர், மகாகவியாக மாற்றி அருளிய கதையை வர்ணிக்கிறார். ஸ்ரீஹரியை விட்டு மற்றவர்களை வணங்கக்கூடாது என்றும் சொல்கிறார்.

'மருளு தைவத கொடவெ பேட நரக தப்பது' என்னும் தாசர் பாடல் இதையே வலியுறுத்துகிறது.

22வது வகுப்பில் அக்னியின் மனைவி ஸ்வாஹாதேவி வருகிறார். பிறகு அஸ்வினி தேவதைகளின் மனைவி உஷாதேவி. ஹுஹு என்னும் கந்தர்வனுக்கு இரு ரூபங்கள் உள்ளன. பவனரின் ஆவேசம் உள்ளவரான கந்தர்வர் தும்புர - இவர் ஊர்வசியின் சமமான வகுப்பில் இருக்கிறார். சுரர்களுக்கு வர்ணங்கள், ஆசிரங்கள் ஆகியவை இல்லை. பிறகு சிரபித்ருகள், தேவ கந்தர்வர்கள், மனுஷ்ய கந்தர்வர்கள், சக்ரவர்த்திகள் பிறகு மானுஷோத்தமர்கள் அதாவது முக்தி-யோக்யர்கள் வருகிறார்கள். இவர்கள் யாரென்றால் நவவித பக்தியை செய்பவர்கள். பிறகு நித்ய சம்சாரிகள் இவர்கள் சுக துக்கங்களை அனுபவிப்பவர்கள் பிறகு தமோ-யோக்யர்களான கலி முதலான தைத்யர்கள் வருகிறார்கள். (கட்டுரை அடுத்த இதழில் தொடரும்).

*** **டாக்டர். மதுசூதன் ஜோஷி**

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

## ஹரபனஹள்ளி பீமவ்வா

(பீமேஷ கிருஷ்ணவிட்டலா) ஆண்டு: 1822-1903

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)...

அடுத்த தீர்க்க பாடல் - முய்யத ஹாடு. வட கர்னாடகத்தில் முய்ய கொடுப்பது ஒரு பத்ததி. பொதுவாக திருமண வீட்டில், திருமணம் ஆனபிறகு, மணமகன் வீட்டினர் தம்முடைய கௌரவம் மற்றும் மரியாதைகளுக்கு குறைவு இல்லாமல், பெண் வீட்டினருக்கு பற்பல வகை பொருட்கள், வஸ்திரங்கள் ஆகியவற்றை கொடுப்பார்கள். அதே சமயத்தில் பெண் வீட்டினரும் அதைவிட அதிகமாக விதம்விதமான பொருட்கள், வஸ்திர, ஆபரண ஆகியவற்றைக் கொடுத்து எதிர் மரியாதை செய்வார்கள் (கன்னடத்தில் : முய்ய தீரிஸுவுது). அப்போது ஒருவருக்கொருவர் புகழ்ந்தவாறு, கேலி பேசியவாறு பாடல்களைப் பாடுவர். இங்கு, பீமவ்வாவின் முய்யத பாடலில் கிருஷ்ணனின் மனைவியரான ருக்மிணி சத்யபாமா ஆகியோர், குந்திதேவியின் மருமகள்கள் ஆனதால், த்ரௌபதி, சுபத்ரை ஆகியோர் அவர்களுக்கு முய்ய எடுத்துக்கொண்டு போய், கொடுத்துவிட்டு வருகிறார்கள்.

அவர்களுடன், தேவானுதேவதைகள், ரிஷிபுங்கவர்கள், யக்ஷர்கள், கந்தர்வர்கள் என அனைவரும் புறப்படுகின்றனர். வழியில் செல்லும்போது, கந்தர்வர்களின் பாடல், ரம்பை ஊர்வசிகளின் நடனங்கள் ஆகியவை நடக்கின்றன. அங்கு சென்ற பிறகு, முய்ய கொடுக்கின்றனர், பெற்றுக் கொள்கின்றனர். சிரித்துப் பேசுவது, புகழ்வது, வணங்குவது ஆகியவை நடக்கின்றன. அங்கு அப்போது அனைவரிடையே உல்லாசம், உற்சாகம், மகிழ்ச்சி என அனைத்தும் காணக்கிடைக்கின்றன.

இத்தகைய பாரத, பாகவத சம்பவங்களைக் கொண்டு பாடல்களை இயற்றுவது

பீமவ்வாவின் சாமர்த்தியம். இந்த கதையை கவனத்துடன் கேட்பவர்களுக்கு விருப்பங்கள் நிறைவேறுகின்றன. கஷ்டங்கள் விலகுகின்றன. ஸ்ருஷ்டீசனின் தரிசனம் கிடைக்கிறது. பீமேஷ

கிருஷ்ணன் தயவு செய்து அருளட்டும் - என்று பலஸ்ருதியில் சொல்லி பீமவ்வா இந்தப் பாடலை முடிக்கிறார்.

மூன்றாவது பதிதானம் கொடுத்த பாடல். இந்த சம்பவம் ஹரிவம்ச புராணத்தில் சுருக்கமாக வருகிறது. நாரதரின் பேச்சினைக் கேட்டு, சத்யபாமா, கணவனின் அன்பினை தான் ஒருத்தியே பெறவேண்டும் என்று சிந்தித்து, ஸ்ரீகிருஷ்ணனை நாரதருக்கு தானமாகக் கொடுக்கிறாள். இந்த கதையை பீமவ்வா 71 வசன மற்றும் 72 த்வனிகளில் இயற்றியிருக்கிறார். ஸ்ரீகிருஷ்ண நாரதரின் தம்புரி ஆகியவற்றை எடுத்துக்கொண்டு, அவரின் சேவகனைப் போல அவரின் பின்னாலேயே செல்கிறான். இந்தக் காட்சியைக் கண்ட தேவகிதேவி, சத்யபாமாவை நன்றாக திட்டுகிறாள். அனைவரும் சேர்ந்து கிருஷ்ணனின் எடைக்கு எடை தங்கம் கொடுப்பதற்காக வருகின்றனர். கிருஷ்ணனை தராசின் ஒரு தட்டில் அமர்த்துகின்றனர். இருக்கும் தங்கம் அனைத்தையும் மற்றொரு தட்டில் வைக்கின்றனர். ஆனால், கிருஷ்ணன் இருக்கும் தட்டு மேலே வரவேயில்லை.

கடைசியில் கிருஷ்ணனின ஆணைப்படி, சத்யபாமை சென்று ருக்மிணிதேவியை அழைத்து வருகிறாள். துளசிபூஜை செய்து கொண்டிருந்த ருக்மிணிதேவி, ஒரு துளசிதளத்தை எடுத்து வந்து தங்கம் இருக்கும் தராசுத்தட்டில், பக்தியுடன் வைக்கிறாள். அனைவரும் பார்க்கையிலேயே, ஸ்ரீகிருஷ்ணன் இருக்கும் தட்டு மேலே வருகிறது. நாரதர் மிகவும் மகிழ்ந்து, அந்த துளசி தளத்தை தலையில் ஏந்தி, தம் உலகிற்கு திரும்புகிறார். தாய் மற்றும் மனைவியருக்கு ஸ்ரீகிருஷ்ணன் திரும்பக் கிடைக்கிறான். இந்தப் பாடலின் நடுநடுவே பீமவ்வா அவர்கள் நகைச்சுவை ரசத்தையும் கொடுத்திருக்கிறார். ருக்மிணி, சத்யபாமை சஹிதமாக ஸ்ரீகிருஷ்ணனுக்கு ஆரத்தி எடுத்து இந்த தீர்க்க பாடலை முடித்து வைக்கிறார்.

நான்காம் பாடல் - சகுந்தலை துஷ்யந்த மகாராஜனின் பாடல். இதுகூட மகாபாரதத்தின் ஷாகுந்தலோபாக்யானத்தின் கதை. ஒருமுறை பீமவ்வா, ஷாகுந்தலா என்னும் நாடகத்தைப் பார்த்து வந்தாராம். அடுத்த நாள் வீட்டில் ஒருவர், 'நீங்கள் ஏன் ஷாகுந்தலா நாடகத்தை எழுதக்கூடாது?' என்று கேட்டாராம். அதன்படி எழுதிய இந்தப்பாடலில் மொத்தம் 60 வசனங்கள் மற்றும் 61 த்வனிகள் இருக்கின்றன.

*** 18ம் பக்கத்தில் தொடர்கிறது..

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### நாடி பிரகரண சந்தி

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | 29 | 21 | 30 | | | 2 | | 3 | | | |
| | | | | 22 | | | 31 | | | 4 | | | | |
| | | | | | 32 | | | | | | | | | |
| | | | | 5 | | | | | | | | | | |
| | | 39 | | | | | | | | | 6 | 33 | | |
| | | | | 7 | | | | | | | | | | |
| | 8 | | 34 | | | | | 39 | 9 | | 35 | | 40 | |
| | 10 | | | | | | 36 | | | | | | | |
| | | | | | | | | | 11 | | | | | |
| | | 23 | | | 41 | | 12 | | | | | | 24 | |
| | | | | 13 | | | | | | 25 | | | | |
| 14 | | | | | | 26 | | | | | | 15 | | 42 |
| | | | | | | 43 | | | | | | | | |
| | | | | 27 | | | 16 | | | | | | | 37 |
| | | | | | | | | | | | | | | |
| 17 | | | | | | | | | 38 | 18 | | | | |
| | | | | | | | | 44 | | | | | | |
| | | | 19 | | | | | | | | | 45 | | |
| | | 46 | 28 | | 20 | | | | | | | | | |

குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam@gmail.com என்னும் ஐடிக்கோ அல்லது 89044 58276 க்கோ வாட்சப் செய்யலாம்

**இடமிருந்துவலம்**

1.உயர்ந்தாஸன்(4), 2.அழகு(3), 3.துஷ்டன்(3), 4.தொப்புள்(4), 5.வெண்மையான ஸரீரம் உடையவன்(4), 6.கருடன்(4), 7.பக்ஷிகளின் தலைவன்(6), 8.மஹாலக்ஷ்மி(7), 9.க்ஞான ஸ்வரூபி(4), 10.சேஷன்(5), 11.அஸுரர்கள்(3), 12.கண்இழந்தவன்(6), 13.மருந்து(3), 14.நாய்(2), 15.கடல்(3), 16.சிறியவன் இல்லை(4), 17.சூர்யோதயத்திலிருந்து மத்யானம் காலம் வரை அழைக்கப்படுவது(7) , 18.அனுபவிப்பவன்(4), 19.சந்திரனை இந்த மலரின் நண்பன் என்று தாஸர் குறிப்பிடுகிறார்(6), 20.உயர்ந்த பட்டாடை(6).

**வலமிருந்துஇடம்.**

21.ஒட்டுதல்(2), 22.நாடிகளில் உள்ள தேவர்கள் பூஜிக்கும் ஹரியின் பெயர்(5), 23.கலந்த(3), 24.ஸமஸ்த ஜகத்தையும் உண்பவன்(3), 25.குறுக்கும் நெடுக்குமாக(5), 26.அழுக்கு(4), 27.பரிபூர்ணமாக(5), 28.கருவூலம்(3).

**மேலிருந்துகீழ்**

1.பாதங்களில் இத்தனை ஆயிரம் நாடிகள் உள்ளன என தாஸர் கூறுகிறார்(6), 3.தரையில் சஞ்சரிப்பவை(4), 4.பொன் பறவை கருடன்(5), 17.ஓங்காரம்(4), 29.விரித்து பரவச் செய்வது(4), 30.மாத்யம ஸவனத்தின் அபிமானி தேவதைகள் இந்த ருத்ரர்கள். கலைந்துள்ளது(4), 31.ரோகம்(3), 32.அக்னி(4), 33.கட்டில்(5), 34.72000 நாடிகளில் உள்ள பகவத் ரூபம்(4), 35.குளிப்பது(4), 36.கிரணங்கள்(3), 37.தகுதியற்றவர்(6), 38.பல வகை. கடைசி எழுத்து இல்லை(4),

**கீழிருந்துமேல்**

14.பன்றி(3), 18.அனுபவிக்கப்படும் பொருள்(3), 19.இந்திரன்(5), 27.ருத்ர கணங்களில் ஸ்ரீஹரி இந்த பெயருடன் இருந்து பித்ருக்களை காப்பாற்றுகிறான்(3), 39.வலப்புறம் உள்ள நாடிகளின் பெயர். அயனத்தில் ஒன்றும் கூட(6), 40.உறுதியான மனம் படைத்தவர்(3), 41.சேறு(3), 42.குறி மற்றும் குதம்(3), 43.விரும்பியதை கொடுப்பவன்(3), 44.ப்ரஹ்மாவின் வேறு பெயர்(6), 45.அஷ்ட வஸுக்களில் ஸ்ரீஹரியின் ரூபம் கலைந்துள்ளது(6), 46.பதினான்கு தாஸர் இப்படி குறிப்பிடுகிறார்(5).

**** 15ம் பக்கத்திலிருந்து தொடர்கிறது...

'ப்ருத்வியொளு துஷ்யந்தராஜனு அதி தார்மிகனெந்தெனிஸி கொம்புவ ஸதி ஷகுந்தலெயனகலி கூடித கதெய பேளுவெனு' என்று ரிஷி விஷ்வாமித்ரர் மூலமாக தனக்குப் பிறந்த குழந்தையை, மேனகை அரண்மனையில் விட்டுப் போகிறாள். அந்த அனாதைக் குழந்தையை கண்வ ரிஷிகள் தம் ஆசிரமத்திற்கு அழைத்துக்கொண்டு வந்து ஷகுந்தலா என்று பெயர் வைத்து வளர்க்கிறார். வாலிப வயதை எட்டிய ஷகுந்தலையை, காட்டிற்கு வேட்டைக்கு வந்த துஷ்யந்த மகாராஜா பார்த்து விரும்பி, காந்தர்வ விவாகம் செய்து கொள்கிறான்.

துர்வாச முனிவர் சாபம் கொடுத்தது, ஷகுந்தலைக்கு அரசன் போகும்போது கொடுத்த முத்திரை மோதிரம் தொலைந்து போனது, துஷ்யந்த ராஜா கர்ப்பிணி ஷகுந்தலையை புறக்கணித்தது, பரதனின் பிறப்பு, தாயும், குழந்தையும் மறுபடி அரசனின் இருப்பிடத்திற்கு வந்து மறுபடி கிடைத்த மோதிரத்தை அவனுக்குக் கொடுத்தது, அதைப் பார்த்ததும் அவனுக்கு அனைத்தும் நினைவுக்கு வந்து, ஷகுந்தலை மற்றும் மகன் பரதனை ஏற்றுக்கொண்டு, பிறகு பரதனுக்கு பட்டாபிஷேகம் செய்தது - என அனைத்து சம்பவங்களையும் பீமவ்வா அவர்கள் அழகாக வர்ணித்திருக்கிறார்.

'ஸாமஜபுரதல்லி துஷ்யந்த ராஜனு தன்ன காந்தெ ஷகுந்தலெய கூடிகொண்டு பீமேஷகிருஷ்ணன தயதிந்த க்ஷேமதிந்திருதித்தனு. ஈ கதெய ஸந்தோஷதிந்த்ஹேளி கேளித ஜனக்கெல்லா ஸந்தான ஸம்பத்து ஸாயுஜ்ய பதவி ஶ்ரீகாந்த பீமேஷகிருஷ்ணனு ஒலிது வரகள கொடுவனு' என்னும் பலஸ்ருதியுடன் இந்த தீர்க்க க்ருதியை முடித்து வைக்கிறார் பீமவ்வா. கடைசியில், ஆசிர்வாதம் செய்தவாறு, ஆரத்தி எடுக்கிறார்.

ஐந்தாம் பெரிய பாடல் ரதி கல்யாணம். மன்மதன் சிவனால் சுட்டு பஸ்மம் ஆனபிறகு, கிருஷ்ணனின் மகனாகப் பிறந்த பிரத்யும்ன (மன்மதனின்) விவாகம் ரதியுடன் நடக்கிறது. இதுவே ரதி கல்யாணம். இந்த சம்பவத்தை, கனகதாசர் தம் மோகன தரங்கிணியில்

சொல்லியிருக்கிறார். அதையே பீமவ்வா அவர்கள் 60 வசன மற்றும் 61 த்வனிகளில் பாடியிருக்கிறார்.

மன்மதன் ஷம்பராசுரனைக் கொன்ற பிறகு, ரதி அக்னிப்பிரவேசம் செய்கிறாள். பிறகு கமலவதி ராஜனின் மகளாகப் பிறக்கிறாள். ஆனாலும் எப்போதும் கணவனின் தியானத்திலேயே இருக்கிறாள். இங்கு த்வாரகையில் ரதியை விட்டுப் பிரிந்த மன்மதனின் துக்கத்தைப் பார்க்க முடியாமல், ருக்மிணிதேவி, கிருஷ்ணனிடம், அவனுக்கு ஒரு பெண்ணுடன் திருமணம் செய்துவைக்குமாறு கூறுகிறாள். ஏழு நாட்களில் பெண்ணைத் தேடி வருவதாகவும், இது முடியாவிட்டால், தான் தன் 16,000 மனைவியரை விட்டுவிடுவதாகவும் கூறுகிறான் ஸ்ரீகிருஷ்ணன். கன்யையைத் தேடுவதற்குச் செல்கிறான். கிருஷ்ணன் தேடித்தேடி சோர்வடைந்தபோது, நாரதர் அங்கு வந்து, கிருஷ்ணனிடம் இவ்வாறு கூறுகிறார். 'ப்ருத்விகொடெய கமலவதி ராஜனிகெ, ஸுதெயாக்ஹுட்டிஹளதி குணவந்தி, அங்கநாமணி அரவிந்த லோசனெ அனங்கனி தக்க கன்னிகெ ஆகெ'. ஆனால், இந்த காரியத்திற்கு திரௌபதியை அனுப்பு என்று குறிப்பு கொடுக்கிறார். அதைப் போலவே திரௌபதிதேவி கமலவதி ராஜனைப் பார்த்தபோது, கிருஷ்ணனின் பெயரைக் கேட்டதுமே அந்த அரசன் கோபப்படுகிறான்.

மாடு மேய்ப்பவனுக்கு தன் மகளை கொடுப்பதில்லை என்று கூறுகிறான். இதைக்கேட்ட ரதி, தந்தையிடம் வருகிறாள். மன்மதனுடன் தன் திருமணம் செய்யவில்லை என்றால், தான் தற்கொலை செய்துகொள்வதாகச் சொல்லி அழுகிறாள். கடைசியில் பெற்றோர் இந்தத் திருமணத்திற்கு ஒப்புக் கொள்கின்றனர். இரு தரப்பிலும் திருமண ஏற்பாடுகள் நடக்கின்றன. சம்பந்திக்கு உபசாரம், வரபூஜை, உணவு உபசாரம், அடுத்த நாள் மங்கள ஸ்னானம், நாந்தி, கௌரி பூஜை ஆகியவற்றை வைபவத்துடன் நடந்து, வதுவை திருமண மண்டபத்திற்கு அழைத்து வருகின்றனர்.

அப்போது திடீரென்று, வதுவின் தாய்மாமன், கௌண்ட்ரிக என்பவன் வந்து வது ரதியை தன் ரதத்தில் ஏற்றிக்கொண்டு போய்விடுகிறான். கமலவதி ராஜன், அவனை துரத்திக் கொண்டு போய், போர் செய்யத் துவங்குகிறான். .. (தொடரும்)....

தொடர்

**கன்னட தந்த்ரசாரம் - ஸ்ரீவரதேந்திர தீர்த்தர்**

**உரை: திரு.குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்**

(சரணம் - 9)

பஞ்சவிம்ஷதிரூப அபிவ்யக்தவாதவு விரிஞ்சி கேள் ஷாந்ததிம் யரலவகளு ।
ஸன்சிஞ்திஸுவுது அதிஷாந்ததிம் ஷஷஸஹள பஞ்சாக்ஷரங்களு ஜனிஸிதவு இல்லி ||9

மேலே கூறிய 25 எழுத்துக்களும் அபிவ்யக்தமானது. அதாவது, வெளிப்படையாகத் தோன்றியது (உ,ம, நாத, பிந்து, கோஷ இவைகளிடமிருந்து). பிரம்மனே, கேள், சாந்தம் என்கிற வர்ணத்தால், ய,ர,ல,வ ஆகியவை தோன்றின. அதிஷாந்தம் வர்ணத்தால் ஷ1, ஷ2, ஸ, ஹ, ள என்னும் ஐந்து எழுத்துக்கள் தோன்றின.

மெய்யெழுத்தில் 25 எழுத்துக்களை பார்த்தோம். இப்போது மீதம் இருக்கும் 9 எழுத்துக்களைப் பற்றி கூறுகிறார்.

ஷாந்தம் - ஒலி எழுத்திலிருந்து ய,ர,ல,வ என்னும் எழுத்துக்கள். அதிஷாந்தம் - ஒலி எழுத்திலிருந்து ஷ1, ஷ2, ஸ, ஹ, ள ஆகியவை வெளிப்பட்டன என்கிறார். இப்படியாக, 'ஓம்' என்பதில் உள்ள 'அ'விலிருந்து, 'அ' முதல் 'அ:' வரை உள்ள 16 உயிரெழுத்துக்கள் தோன்றின.

உ-விலிருந்து - க வர்க்கம் தோன்றியது.
ம-விலிருந்து - ச வர்க்கம் தோன்றியது
நாதம்- இதிலிருந்து - ட வர்க்கம் தோன்றியது
பிந்து- இதிலிருந்து - த வர்க்கம் தோன்றியது
கோஷம்- இதிலிருந்து - ப வர்க்கம் தோன்றியது
ஷாந்த- இதிலிருந்து - ய வர்க்கம் தோன்றியது
அதிஷாந்த- இதிலிருந்து - ஷ1 ஷ2 ஸ ஹ ள தோன்றியது

ஆக, பிரணவத்தின் எட்டு வர்ணங்களிலிருந்து 50 எழுத்துக்கள் தோன்றின. இவைகளுக்கு உள்ள பிரத்யேக ஹரிரூபங்களை இங்கு

இடம் கருதி கொடுக்கவில்லை. விருப்பமுள்ளவர்கள் என்னுடைய 'தந்த்ரசார சங்க்ரஹம்' முதல் பாகம், முதல் அத்தியாயத்தை படிக்கலாம்.

(சரணம் - 10)
பரமாத்ம ஞானாத்ம ரூபதிந்தொம்பத்து நிருபமஸ்வமூர்த்திகளு ஷோபிஸிதவு |
பரமேஷ்டி நாராயணாஷ்டாக்ஷரா மந்த்ர பொரெவெ நெனகானு ஸாங்கோபாங்கதிம் ||10

பரமாத்மா, ஞானாத்ம ரூபங்களிலிருந்து ஒன்பது உவமையற்ற ஹரிமூர்த்திகள் அபிவியக்தமாயின. பிரம்மாவே! நாராயண அஷ்டாக்ஷர மந்திரத்தை கூறுவேன். உனக்கு நான், அங்கங்களுடன் விரிவாக.

பரமாத்மா ரூபத்திலிருந்து, ஷாந்தத்திலிருந்து, ய,ர,ல,வ என்னும் நான்கு எழுத்துக்களும், ஞானாத்ம ரூபத்திலிருந்து, அதிஷாந்தத்திலிருந்து ஷ1, ஷ2, ஸ, ஹ, ள என்னும் ஐந்து எழுத்துக்களும் வெளிப்பட்டன. இந்த ஒன்பது எழுத்துக்களும் பிரத்யேக ஹரிரூபங்கள் என மூலத்தில் கூறப்பட்டுள்ளது. ய,ர,ல,வ ஆகிய எழுத்துக்களுக்கு யக்ஞ, ராம, லட்சுமிபதி, வர என்னும் உருவங்கள் கூறப்பட்டுள்ளன. ஷ1, ஷ2, ஸ, ஹ, ள ஆகியவற்றிற்கு ஷாந்த ஸம்வித, ஷட்குண, ஸாராத்ம, ஹம்ஸ, ளாளுக ஆகிய உருவங்கள் கூறப்பட்டுள்ளன.

இப்படியாக, ஓம்காரத்திலிருந்து தோன்றிய 50 எழுத்துக்களையும், அவற்றின் பிரதான தேவதைகளின் பெயர்களையும் தெரிவித்த பின்பு, பிரம்மாவிற்கு நாராயண அஷ்டாக்ஷர மந்திரத்தின் எழுத்துக்கள் தோன்றிய விதத்தை, விரிவாகக் கூறுகிறேன் என்கிறா விஷ்ணு. 'ஓம் நமோ நாராயணாய' என்பதே நாராயண அஷ்டாக்ஷர மந்திரம். இந்த மந்திரமும் பிரணவத்திலிருந்து எப்படி தோன்றின என்பதை விளக்குகிறார்.

இதற்கு ஆதார ஸ்லோகம், தந்த்ரசாரத்தில் (1-11) இவ்வாறு உள்ளது.

நாராயணாஷ்டாக்ஷரஸ்ச தாராஷ்டாக்ஷர பேத வான் |
அத்யைஸ்தார சதுர்வர்ண்யைர் பின்னா வ்யாஹ்ருதய: க்ரமாத் ||

பிரணவத்தின் எட்டு எழுத்துக்களிலிருந்து முறையாக நாராயண அஷ்டாக்ஷரத்தின் எட்டு எழுத்துக்கள் தோன்றியுள்ளன. அதைப் போல, பிரணவத்தின் முதல் நான்கு எழுத்துக்களிலிருந்து முறையே நான்கு வியாஹ்ருதிகள் தோன்றியுள்ளன.

ஸாங்கோ பாங்கம் என்பது கீழ்க்கண்ட விளக்கமே.

| பிரணவத்தின் 8 எழுத்துக்கள் | நாராயண அஷ்டாக்ஷர மந்திரத்தின் 8 எழுத்துக்கள் |
|---|---|
| அகாரம், உகாரம், மகாரம், நாதம், பிந்து, கலா (கோஷம்), ஷாந்த, அதிஷாந்த | ஓம், ந, மோ, நா, ரா, ய, ணா, ய |
| பிரணவத்தின் 8 எழுத்துக்கள் | வியாஹ்ருதிகள் |
| அகாரம், உகாரம், மகாரம், நாதம் | பூர், புவ: ஸ்வ:, பூர் புவ: ஸ்வ: |

(சரணம் - 11)
தாரகத அஷ்டவர்ணகளிந்த ஓம் நமோ நாராயணாய எம்பி மந்த்ரவு ।
சாரு அஷ்டார்ண தத்வாச்ய மூர்த்திகளுண்டு ஸார விஷ்வாதி ப்ரணவஸ்த பின்ன ||11

தார என்றால் பிரணவம். அதாவம் 'ஓம்' சப்தம். அது எட்டு வர்ணங்கள் / ஒலிச்சொற்களைக் கொண்டது. அந்த எட்டெழுத்துக்கள் மூலமாக 'ஓம் நமோ நாராயணாய' என்னும் அஷ்டாக்ஷர மந்திரம் தோன்றியது. அந்த எட்டு எழுத்துக்களுக்கும் விஷ்வ, போன்ற மூர்த்திகள் (பிரணவத்தை தவிர்த்து) பிரத்யேமாக உள்ளன.

சென்ற பாடலில் கூறியதைப் போல, அகார, உகார, மகார, நாத, பிந்து, கோஷ, ஷாந்த, அதிஷாந்த ஆகிய பிரணவ எட்டெழுத்துக்கள் மூலமாக - ஓம், ந, மோ, நா, ரா, ய, ணா, ய என்னும் அஷ்டாக்ஷர மந்திரம் பிறந்தது. இந்த எழுத்துக்களுக்கு உரிய நாராயண ரூபங்கள், விஷ்வ, தைஜஸ, ப்ராக்ஞ, துர்ய, ஆத்மா, அந்தராத்மா, பரமாத்மா மற்றும் ஞானாத்மா ஆகும். பிரணவ ப்ரதிபாத்ய எட்டு ரூபங்களே இங்கேயும் அதே பேரில் ப்ரிஅதிபாத்யமாக உள்ளன. இப்படியாக, அஷ்டாக்ஷர மஹா மந்திரத்தின் மகிமை கூறப்பட்டு விட்டது. அடுத்து சில வேறு மந்திரங்களைப் பற்றி கூறுகிறார்.

(சரணம் - 12)
ஓம் பூ: ஓம் புவ: ஓம் ஸுவ: ஓம் எம்ப ஓம்பூர்புவஸ்வ: ஈ வியாஹ்ருதி |
அம்புஜோத்பவ ப்ரணவாதி நால்வர்ணதிம் ஸம்பவிஸிதீ மந்த்ர ஸுலபதிந்தா ||12

ஓம் பூ: ஓம் புவ: ஓம் ஸுவ: ஓம் பூர்புவஸ்ஸுவ: என்னும் இந்த நான்கு வர்ணங்கள்தான் வியாஹ்ருதி எனப்படும். இந்த நான்கு வர்ணங்களும் பிரணவத்தின் நான்கு எழுத்துக்கள் மூலம் தோன்றின. தாமரையில் தோன்றிய பிரம்மனே, இவற்றைப் பற்றி சுலபமாக தெரிந்து கொள்.

அகாரத்திலிருந்து ஓம் பூ:
உகாரத்திலிருந்து ஓம் புவ:
மகாரத்திலிருந்து ஓம் ஸுவ:
நாதத்திலிருந்து ஓம் பூர்புவஸ்ஸுவ:

என்கிற நான்கு எழுத்துக்கள் உள்ள வியாஹ்ருதி மந்திரம் தோன்றியது.

பிரணவம் என்பது ஒரு மந்திரம். அதில் எட்டு எழுத்துக்கள் - அ,உ,ம், நாத, பிந்து, கோஷ, ஷாந்த, அதிஷாந்த - ஆகியவை உள்ளன. வியாஹ்ருதி என்பது ஒரு மந்திரம். அதில் நான்கு எழுத்துக்கள் - ஓம் பூ:, ஓம் புவ:, ஓம் ஸுவ:, ஓம் பூர்புவஸ்ஸுவ: - உள்ளன. நாராயண அஷ்டாக்ஷர மந்திரம் எப்னது ஒரு மந்திரம். அதில் - ஓம், ந, மோ, நா, ரா, ய, ணா, ய - என்னும் எட்டு எழுத்துக்கள் உள்ளன. இவையே இங்கு விவரிக்கப்பட்டுள்ளன.

***** அடுத்த இதழில் தொடரும்**
**** திரு.குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்**

மார்ச் 2021 ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டிக்கு சரியாக பதிலளித்து புத்தகப் பரிசினைப் பெறுபவர்கள்:
1. திருமதி. ஷாந்தி பத்மனாபன், திருநெல்வேலி 2. திருமதி. உஷா ரகூத்தமன், பெங்களூரு 3. திருமதி. லலிதா, திருநெல்வேலி 4. திருமதி. சந்திரா, கோவை.

தொடர்

## ஹரிகதாம்ருதசார பத்ய அர்த்தங்கள்

## கருணா சந்தி - தொடர்ச்சி

**ஷரணஜன மந்தா$^3$ர ஸாஸ்வத**
**க$^1$ருணி கமலாகாந்த காமத$^3$**
**பரமபாவனதர ஸுமங்க$^3$லசரித பா$^1$ர்த்தஸக$^2$ |**
**நிருபமானந்தா$^3$த்ம நிர்க$^3$த$^1$**
**து$^3$ரிததே$^3$வ வரேண்யனெந்தா$^3$**
**த$^3$ரதி$^3$ க$^1$ரெயலு ப$^3$ந்தொ$^3$த$^3$கு$^3$வனு த$^1$ன்னவர ப$^3$ளிகெ$^3$ ||10**

மந்தார என்றால் மரம். அந்த மரத்தின் கீழ் நின்றால், அருமையான சுகமான ஓய்வு கிடைக்கும். அப்படியே, சாட்சாத் பகவந்தன். அவனே கல்பவ்ருக்ஷ. யார் அவனை சரணடைகிறாரோ, 'ஸ்ரீஹரியே, நீயே எனக்கு கதி, த்வமேவ ஷரணம் மம, நந்தேனதோ ஸ்வாமி, நிந்தே இதெல்லவு, நந்த நந்தன கோவிந்தா' என்று யார் அவனிடம் சரணடைகின்றனரோ, உன் விருப்பப்படி எனக்கு அருள்வாயாக என்று யார் அவனிடம் முறையிடுகின்றனரோ, அவர்களுக்கு அவன் 'ஷரணஜன மந்தார'. கருணைக்கடல்.

ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள் பாடியதைப் போல..
ஆரு காயுவரில்ல ஸேரிதே நினகய்யா
தீர வேணுகோபால பாரு காணிஸோ ஹரியே
இந்து எனகே கோவிந்தா...

இதுவே ஷரணஜன மந்தார-த்திற்கு சரியான உதாரணம்.

சாஷ்வத கருணி = ஸ்ரீஹரி நமக்குக் காட்டுவது, நிரந்தரமான, எதையும் எதிர்பார்க்காத (அனிமித்த) கருணை. வெறும் ஒரு நமஸ்காரத்தை செய்துவிட்டால் போதும், அவன் நமக்குக் கொடுப்பது நிரந்தரமான இத்தகைய கருணை. கருணை என்றால் என்ன? திரும்பி இவ்வுலகிற்கு வரத்தேவையில்லாத, வைகுண்டத்தையே நமக்கு அருள்கிறான்.

கமலா காந்த = இதற்கு லட்சுமிபதி என்று ஒரு அர்த்தம் உள்ளது. இந்த கமலாவானது (தாமரை) சேற்றில், அழுக்கில் தோன்றினாலும், அது மலரும்போது அந்த சேற்றின் எந்தவொரு அழுக்கும், கறையும் இல்லாது எப்படி நிர்லிப்தமாக (அதற்கு சம்பந்தம் இல்லாமல்) இருக்கிறதோ, அதைப் போலவே தோஷதூரனாக இருக்கக்கூடிய பகவந்தன் நமக்கு அருள்கிறான். நம்மால் ஆன தோஷங்களை பொருட்படுத்தாதவன், அத்தகைய நம் தோஷங்களை களைபவன் என்றும் 'கமலா காந்த'விற்கு சிறப்புப் பொருளை உணர்த்துகிறார் தாசர்.

காமத = அனைவருக்கும் அவரவர்களின் தகுதிப்படி, எப்போது, எவ்வளவு தேவையோ, அவற்றை அவ்வப்போது சரியான விதத்தில் கொடுக்கிறான்.

பரம பாவனதர = தோஷங்கள் அற்றவன்; பரம பவித்ரன்; அத்யந்த பவித்ரமான, சுமங்கலமான சரிதங்களைக் கொண்டவன். இறுதிக்காலத்தில் நமக்கு அவனது சிந்தனையைக் கொடுத்து, நம்மை அவனிடம் இழுத்துக் கொள்கிறான்.

நிருபமானந்தாத்ம = ஒப்புமை இல்லாத, ஆனந்த ஸ்வரூபன். அனைவரின் அனைத்து கஷ்டங்களையும் பரிகரிப்பவன் அவனே. அனைத்து தேவதைகளிலும் நிலைத்திருப்பவனே, என்று அவனது நற்குணங்களை சிந்தித்து, அவன் புகழ் பாடினால், அவனை சிந்தித்து, போற்றி, துதித்தால், கருணாளுவான ஸ்ரீஹரி, ஓடி வந்து உதவுகிறான் என்று இந்த பத்யத்தில் சொல்கிறார் தாசராயர்.

**இட்டிகல்லனு ப$^4$குதியிந்த$^3$லி**
**கொட்ட ப$^4$குதகெ$^3$ மெச்சி தன்னனெ**
**கொட்ட ப$^3$ட$^3$பிராமணன ஒப்$^1$பிடி$^3$யவலி க$^3$கி$^2$லார்த்த |**
**கெட்ட மாதுக$^3$ளந்த$^3$ சைத்$^3$யன**
**பொட்டெயொளகி$^3$ம்பி$^3$ட்ட பா$^3$ணத$^3$**
**லிட்ட பீ$^4$ஷ்மனவ கு$^3$ணக$^3$ளெணிஸித$^3$னெ கருணாளு ||11**

**இட்டிகல்லனு** = செங்கல்லை ; **பகுதியிந்தலி** = பக்தியுடன் ; **கொட்ட** = நிற்பதற்காகக் கொடுத்த ; **பகுதகெ** = புண்டலீகன் என்னும் பக்தனுக்கு ; **மெச்சி** = தரிசனம் அளித்து ; **தன்னனெ** = விட்டலன் என்னும் ஸ்வரூபத்தையே ; **கொட்ட** = கொடுத்த ; **படபிராமணன** = குசேலன்

என்னும் ஏழை பிராமணன் கொடுத்த ; **ஒப்பிடி** = ஒரு பிடி ; **அவலிகெ** = அவலுக்கு ; **அகிளார்த்த** = நான்குவித புருஷார்த்தங்களையும் கொடுத்தான். ; **கெட்ட மாதுகளிந்த** = தன் மனம் போல திட்டிய ; **சைத்யன** = சிசுபாலனை ; **பொட்டெயொளு** = தன் வயிற்றில் ; **இம்பிட்டு** = சேர்த்துக்கொண்டான் ; **பாணதலிட்ட** = பாணங்களால் துளைத்த ; **பீஷ்மன** = பீஷ்மாசார்யரின் ; **அவகுணகள** = தவறுகளை ; **எணிஸதலெ** = தவறாக எண்ணாமல் ; **கருணாளு** = கருணாபூர்ணன் ஆனவன்.

புண்டலீகன் என்னும் பக்தன், தான் நிற்பதற்காக பக்தியுடன் கொடுத்த செங்கல் மேல் நின்று, விட்டல ரூபத்தினால் அவனுக்கு தரிசனம் அளித்து, பண்டரிபுரத்தில் நின்றுவிட்டான். பரம ஏழையான குசேலன் என்னும் பிராமணன், பக்தியுடன் கொண்டு வந்திருந்த ஒரு பிடி அவலை ஏற்றுக்கொண்டு, அவனுக்கு சதுர்வித புருஷார்த்தங்களைக் கொடுத்தான். சிசுபாலன் அசுராவேஷத்தினால் ஸ்ரீகிருஷ்ணனை மனம் போல திட்டியும், அவனைக் கொன்று, தன் வயிற்றில் வைத்துக் கொண்டான். போர்க்களத்தில் அம்புகளால் தன்னை துளைத்த பீஷ்மாசார்யரை, அவரின் தவறுகளை மன்னித்தான். ஆகையால், இவனது கருணையை எவ்வளவு வர்ணித்தாலும் அது மிகக்குறைவே என்று பொருள். தாசராயர் ‘கருணாளு’ என்ற சொல்லை பயன்படுத்தியிருக்கிறார். இந்த சம்பவத்தால், பரமாத்மன் மிகக் கருணாமயி என்பது நிரூபணமாகியிருக்கிறது என்பதே தாசராயரின் அபிப்பிராயம்.

*** **திரு. முரளிதர தாசர், பெங்களூரு**

**ஆராதனை**

**பால்குண பகுள சதுர்த்தி**

**ஸ்ரீவியாசராஜ தீர்த்தர்**

ஸ்ரீவியாச தீர்த்தரின் முககமலத்திலிருந்து வெளிவந்த கங்கா பிரவாகமே வியாச த்ரய. வியாஸத்ரயங்களிலும் அத்யந்த சிறந்ததான கிருதி என்றால் அது தாத்பர்ய சந்திரிகா. அதிலிருந்தே ஸ்ரீவியாச தீர்த்தருக்கு கிடைத்த பெயர் 'சந்திரிகாசார்யர்' என்பது.

முதலில் சந்திரிகாசார்யரின் வாழ்க்கை வரலாற்றினை சிறிது பார்ப்போம். சர்வக்ஞ சிம்மாசனத்தில் வந்த சித்தபுருஷர் ஸ்ரீபிரம்மண்ய தீர்த்தர். இவர் ஸ்ரீ வியாசதீர்த்தருக்கு ஆசிரமம் கொடுத்த குரு. இவரை சந்திரிகாசார்யர் தனது கிரந்தத்தின் துவக்கத்தில் இவ்வாறு புகழ்கிறார்.

கம்ஸத்வம்ஸி பதாம்போஜ ஸம்ஸக்தோ ஹம்ஸபுங்கவ: |
பிரம்மண்யகுருராஜாக்யோ வர்த்ததாம் மம மானஸே ||

அனைத்து குருகளுக்கும் ராஜன் ஆனவர் ஸ்ரீபிரம்மண்ய தீர்த்தர். கிருஷ்ணனின் பாத கமலங்களில் மனம் வைத்த பரமஹம்ஸர் இவர். என் மனம் என்னும் சரோவரத்தில் நிரந்தரமாக இருக்கட்டும்.

மைசூர் ஜில்லா சோஸலே அருகில் இருக்கும் பன்னூர் கிராமத்தில் ஸ்ரீவியாச தீர்த்தர் பிறந்தார். அவருடைய தந்தை பல்லண்ண சுமதி. இவர் ராமாசார்யரின் ஆறு புத்திரர்களில் கடைசி மகன். முதல் மனைவி இறந்ததால் இரண்டாவது திருமணம் செய்து கொண்டார். இரண்டாம் மனைவி சென்னைப் பட்டணத்தில், பிரம்மண்ய தீர்த்தரின் அருளால் ஒரு பெண், இரு ஆண் மகன்களை பெற்றெடுத்தார் அவர்களில் கடைசியாக வந்தவரே அடுத்து வியாசதீர்த்தர் ஆகிறார். அந்த சிறிய பாலகனுக்கு ஐந்து வயது இருக்கும்போது அக்ஷராப்யாஸம் செய்து, ஏழாம் வயதில் உபநயனம் செய்தனர். பிறகு நான்கு ஆண்டுகள் குருகுல வாசம். இந்த சமயத்தில் தம்பதிகள் பிரம்மண்ய தீர்த்தரிடம், தம்முடைய இரண்டாம் மகனை ஒப்படைப்பதாக வாக்கு கொடுத்திருந்தனர். அதற்கு இது சரியான சமயம் என்று அறிந்து, தம்பதிகளுக்கு கொடுத்த வாக்கினை ஸ்வாமிகள் நினைவுபடுத்தினார்.

முதலில் சிறிது தயங்கினாலும், பிறகு தம்முடைய மகனை கொண்டுவந்து ஒப்படைப்பதாக கூறினர். அதன்படியே தம்பதிகள் பிரம்மண்ய தீர்த்தரிடம் தம்முடைய மகனை ஒப்படைத்தனர். சிஷ்யனைக் கண்டு குருகளுக்கு மிகவும் மகிழ்ச்சி உண்டாயிற்று. சில காலம் கழித்து, அவருக்கு சந்நியாச தீட்சை கொடுக்க வேண்டும் என்று நினைத்தார். இதனை அறிந்த பாலகன், சன்யாச ஆசிரமத்திற்கு தான் தகுதி அற்றவன் என்று சிந்தித்து, குருவின் ஆசிரமத்திலிருந்து யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் வெளியேறினான். சிறிது தூரம் சென்ற பிறகு சோர்வு அடைந்ததால், ஒரு மரத்தின் நிழலில் படுத்தான். அப்பொழுது கனவில் பகவான் தரிசனம் அளித்து, அவன் செய்ய வேண்டிய கடமைகளை உபதேசம் செய்தார். எதுவும் அறியாத பாலகன் மிகவும் அதிசயமாக திரும்ப ஆசிரமத்திற்கு வந்தான். பிறகு சிலநாட்களிலேயே ஸ்ரீபிரம்மண்ய தீர்த்தர் அவருக்கு சந்நியாச தீட்சை கொடுத்து, ஸ்ரீவியாச தீர்த்தர் என்று பெயர் சூட்டினார்.

ஆசிரமம் பெற்ற சில நாட்கள், தம்முடைய குருகளிடமே இருந்தார். சுமார் ஆண்டு 1474ல் குருகளான ஸ்ரீபிரம்மண்ய தீர்த்தர், அப்பூரு ஷேத்திரத்தில் விருந்தாவனஸ்தர் ஆனார். அப்பொழுது ஸ்ரீவியாச தீர்த்தருக்கு பதினைந்து வயது இருக்கலாம். பிறகு தென்னிந்தியாவில் புகழ்பெற்ற காஞ்சிபுரம் சென்று, பல ஆண்டு காலம், பல பண்டிதர்களிடம் இருந்து ஷட்தரிசனங்களை அத்யயனம் செய்தார்.

அத்வைதம், விசிஷ்டாத்வைதம், மீமாம்சம், நியாயம், வியாகரணம் முதலான சாஸ்திரங்களில் முதல்மையானவராக திகழ்ந்தார். அடுத்து நியாயாம்ருத, தாத்பரிய சந்திரிகா, தர்க்க தாண்டவ முதலான கிருதிகளை இயற்றுவதற்குத் தேவையான ஞானத்தை சம்பாதித்தார். வித்தியாப்யாசம் முடிந்த பிறகு, முளபாகிலு ஷேத்திரத்தில் இருந்த ஸ்ரீபாதராஜரின் சன்னிதானத்திற்கு வந்தார். அந்த காலத்தில் காஞ்சிபுரத்தை போலவே, முளுபாகிலுகூட நற்பெயர் பெற்று வித்யா கேந்திரமாக இருந்தது. ஸ்ரீகளவரிடம் சிஷ்யராக சேர்ந்து, த்வைத சித்தாந்தத்தை முழுமையாக அத்தியயனம் செய்தார். ஸ்ரீபாதராஜரிடமிருந்து தாம் வித்தியாப்யாசம் செய்தேன் என்பதை உபா கண்டன டிரெயின் வந்தாரா வழியில் தாமே சொல்லியிருக்கிறார். ****

தொடர்

## கன்னட கிரந்தங்கள் அறிமுகம்

## ஸ்ரீவியாசராயரின் பகவத் கீதா ஸாரம்

வியாஸராஜ தீர்த்தர் ஸ்ரீமன் மத்வாச்சாரியாரின் ஸ்ரீ மூல மஹா சம்ஸ்தானத்தில் ஸ்ரீ ராஜேந்திர தீர்த்தர் பூர்வாதி மடத்தில் பீடாதீஸராக அலங்கரித்த மஹனீயர். ஸ்ரீ பிரஹ்மண்ய தீர்த்தரை ஆஸ்ரம குருவாகவும், ஸ்ரீ பாதராஜரை வித்யா குருவாகவும் அடையும் பாக்கியம் பெற்றதுடன் ஸ்ரீ விஜயீந்திர தீர்த்தர் போன்ற பலதரப்பட்ட ஸன்யாஸ சிஷ்யர்களுக்கு வித்யா குருவாக இருந்து அவர்களையும் தயார் செய்தவர். வியாஸ ஸாகித்தியம் மற்றும் தாஸ ஸாகித்தியம் என இரண்டுக்குமே தமது பங்களிப்பை அளித்தவர்.

புரந்தர தாஸர் கனகதாஸர் போன்றவர்களுக்கு தாஸ தீக்ஷை அளித்தவர். தாத்பர்ய சந்த்ரிகா, ந்யாயாம்ருதா, தர்க்க தாண்டவா எனும் வ்யாஸ த்ரய கிரந்தங்ளைப் படைத்தவர். முனித்ரயர்கள் என்றே போற்றப்படும் மத்வமுனி ஜெயமுனி மற்றும் வ்யாஸமுனி எனும் மூவரிலே மூன்றாமவர் இவர். கிருஷ்ண தேவராயர் முதலான அரசர்களுக்கு ராஜகுருவாக இருந்து ஸன்மார்க்கத்தைக் காட்டியவர். பாரததேஸம் முழுவதும் யாத்திரை மேற்கொண்டு 732 இடங்களில் முக்யப்ராண மூர்த்தியை பிரதிஷ்டை செய்தவர். ஸம்ஸ்கிருதத்தில் பலதரப்பட்ட வ்யாக்யான, ஸ்தோத்திர கிரந்தங்களை அருளிய ஸ்ரீ வ்யாஸராஜர் பாமரர்களுக்கும் பக்தியையும் ஞானத்தையும் ஊட்டும் விதத்தில் கன்னடத்தில் 'ஸ்ரீ கிருஷ்ண' எனும் முத்ரையிலே க்ருதிகளையும், உகாபோகங்களையும் முண்டிகெ பதங்களையும் இயற்றியுள்ளார். அந்த வரிசையிலே ஸ்ரீ வ்யாஸராஜர் ரசனை செய்துள்ள மிகச் சிறிய கன்னட கிரந்தமே 'ஸ்ரீமத் பகவத் கீதா ஸாரம்' என்பதாகும்.

ஜகத்குருவான ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா யுத்தகளத்தில் அர்ஜூனனுக்கு உபதேஸம் செய்தது ஸ்ரீமத் பகவத் கீதை. இந்த கீதையானது குருக்ஷேத்திரத்தில் நடந்தவைகளை வேதவ்யாஸரின் அருளினால் ஞானத்ருஷ்டி அடைந்த ஸஞ்சயன், த்ருதராஷ்டிரனுக்கு விளக்குவதாக அமைந்துள்ளது.

ஸ்ரீமன் மஹாபாரதத்திலே 18 அத்யாயங்களில் விளக்கப்பட்டுள்ள ஸ்ரீமத் பகவத்கீதையின் ஸாரத்தை ஸ்ரீ வ்யாஸராஜர், ஆச்சாரியார் ஸ்ரீ மத்வரின் கீதா பாஷ்யம் மற்றும் கீதா தாத்பரியத்தை அனுசரித்து கன்னடத்திலே மிகச் சுருக்கமாக அமைத்துக் கொடுத்துள்ளார். கீதையின் 18 அத்யாயங்களின் ஸாரத்தை 18 பத்யங்களில் (9 ஸ்லோகங்கள் 9 பதங்கள்) விருத்த நாமா என்னும் பாணியில் கொடுத்துள்ள விதமானது மிகவும் ஆச்சரியப் படத்தக்க வகையில் அமைந்துள்ளது.

முதலில் பல்லவியில் ஸ்ரீ வ்யாஸராஜர், ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா அர்ஜூனனிடம் , "கேட்பாய் என்னுடைய வார்த்தைகளை ஓ பார்த்தனே !" என்று உரைக்கும் படியாக, "கேளய்யா என்ன மாத பார்த்தனே கீதா தார்த்தனே" என அமைத்துத் தொடங்குகிறார்.

முதல் ஸ்லோகம் மற்றும் பதத்திலே (1&2) திருதராஷ்டிரன் ஸஞ்சயனிடம், தன்னுடைய மக்களான கௌரவர்களும், பாண்டு புத்திரர்களும் குருக்ஷேத்திரத்தில் என்ன செய்கிறார்கள் என வினவ, அதற்கு பதிலளிக்கும் விதத்தில் ஸஞ்சயன், களத்தில் கௌரவ, பாண்டவ சேனைகள் கூடியுள்ள விதத்தையும், துரியோதனின் வேண்டுகோளுக்கிணங்க, குரு துரோணாச்சாரியார் முதலாவதாக நிற்பதையும் கூறி, அர்ச்சுனன் ரதத்தின் சாரதியாக உள்ள ஸ்ரீ கிருஷ்ணனிடம் உரைப்பதாக, குரு துரோணரின் வேகமாக போரிடும் சாமர்த்தியத்தைப் பற்றிக் கூறி, முன்னால் ரதத்தை செலுத்த வேண்டுமெனவும், அனைவரையும் சீக்கிரமாக தான் பார்க்க வேண்டும் எனவும், ஸ்ரீ கிருஷ்ணரிடம் வேண்டியதற்கிணங்க, பகவானும் அங்கு ரதத்தைச் செலுத்த, அவர்களைக் கண்ட மாத்திரத்தில் அர்ச்சுனன், "குரு பெரியவர்களுடன் போர் எதற்கு ?" எனவும், "யுத்தத்திற்குப் பதிலாக பிச்சை எடுப்பதே மேல்" எனவும் கூற ஸ்ரீ கிருஷ்ணன், அர்ச்சுனனிடத்தில் இத்தகைய வார்த்தைகளைக் கூறுவது அவனுக்குத் தகுந்ததல்ல எனவும், காண்டீப வில்லை எடுத்துக் கொண்டு யுத்தம் புரிய வேண்டும் எனவும் கூறிய வார்த்தைகளை, "குந்தி ஸூத ஈமாது உசிதல்ல | நினகிது ஸல்ல |

பிடி காண்டீப பில்ல ||" முதலான பத்யங்களில் விளக்குகிறார் ஸ்ரீ வியாஸராஜர்.

இரண்டாவது ஸ்லோகம் மற்றும் பதத்திலே (3&4), ஜீவனைப் பற்றியும் அவனின் பிறப்பைப் பற்றியும் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா உபதேசம் செய்யும் விதத்தில், பகவான் அர்ச்சுனனிடம் "பால்யம்,யௌவனம், மூப்பு என்பதெல்லாம் தேஹத்திற்கு மட்டுமே எனவும், இத்தகைய தேஹத்தின் மேல் மோஹம் எதற்கு?" எனவும் வினவி "அனைவரையும் காப்பாற்றுபவனும் அழிப்பவனுமாகிய தாம் இங்கு இருக்கையில், வில்லினைப் பிடித்து போரிட்டு, கீர்த்தியடைவாயாக", எனக் கூறி, மேலும் ஜீவனுக்கு அஸ்திரங்களினால் பயம் கிடையாது, தேஹத்திற்கு மட்டுமே அழிவு உண்டு, இந்த ஜீவனை நெருப்பு எரிப்பதில்லை, தண்ணீர் நனைப்பதில்லை, காற்றானது உலர்த்துவதில்லை. ஆதலால், ஜீவன் நாசமில்லாதது, துண்டுகளாக பிளக்க முடியாதது, ஆதி அந்தம் அற்றது, அதே வேளையில் இந்த தேஹமானது பழைய கிழிந்த வஸ்திரம் போன்றது என்று விளக்கி, எத்தனையோ ஜன்மங்கள் தமக்கும், ஜீவனுக்கும் (அர்ச்சுனன்) உள்ளதென்றும், அதைத் தாம் அறிந்திருந்தாலும், ஜீவனான அவன் அறியமாட்டான் எனவும் கூறி உபதேசம் செய்ததை ஸ்ரீ வியாசராஜர் வர்ணிக்கிறார்.

மூன்றாவது ஸ்லோகம் மற்றும் பதத்திலே (5&6), கர்மங்களைப் பற்றியும் ஞானத்தைப் பற்றியும் உபதேசம் செய்யும் வகையில், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அர்ச்சுனனிடம், பலனை எதிர் நோக்காமல் கர்மங்களைச் செய்யும் படியும், கர்மத்தை செய்வதற்கு மட்டுமே அவனுக்கு (அர்ச்சுனன்) அதிகாரம் உள்ளதென்றும், அதன் பலனில் அல்ல எனவும் உபதேசம் செய்கிறான். மேலும் ஜிதபுத்தியைப் பற்றி அர்ச்சுனன் வினவ, பகவான் பதிலுரைக்கும் வகையில், இந்த்ரியங்களை வெல்வதே ஜிதபுத்தி எனவும், இவைகளை ஜெயித்தவனே ஜிதேந்த்ரியன் ஆக முடியும் எனக் கூறி எல்லா ஆசைகளையும் விட்டு பகவானிடம் மனதைச் செலுத்துபவனே ஜிதேந்த்ரியன் ஆவான் என்றும் உபதேஸம் செய்த விதத்தை "கோவிந்தனல்லி மனவிட்டவ | காம

பிட்டவ | ஜித தேஹ தானவ ||" முதலான பதங்களினால் விளக்குகிறார் ஸ்ரீ வியாசராஜர்.

நான்காவது ஸ்லோகம் மற்றும் பதத்திலே (7&8), தர்மத்தின் அடிப்படையில் செய்யும், கர்மத்தையும், அதனை ஸமர்பணம் செய்வதையும் விளக்கும்படியாக அர்ச்சுனன் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவிடம், "ஞானமே பெரிது எனில் ஏன் யுத்தம் புரிய வேண்டும் ?" என வினவ பதிலுரைத்த பகவான், இந்த யுத்த பூமியில் போரிட்டும் ஜெயிப்பதே அவனின் கடமை எனவும், மோக்ஷத்திற்கு சரியான கர்மமே விதை எனவும் உணர்த்தி, ஜனங்கள் எல்லாம் அவனைப் ( அர்ச்சுனனை) பார்த்துக் கொண்டிருக்க, அவரவருக்கு விதிக்கப்பட்ட கடமையைச் செய்ய வேண்டும் எனவும், அவனுக்குரிய க்ஷத்ரிய தர்மத்தை விட்டு விட்டால் தர்மமே நஷ்டமாகும், ஆதலால் கடமையைச் செய்து , தன்னுள் (பகவான்) ஸர்வமும் அடக்கம் என அறிந்து, அனைத்தையும் துறந்து, கர்வம் கொள்ளாமல், கர்மத்தின் பலனைத் தனக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும் எனவும் உபதேஸம் செய்ததை "அர்பிஸு என்னல்லி ஸர்வவு | பிட்டு கர்வவு | திளி என்னொளு ஸர்வவு |" போன்ற பதங்களினால் விளக்குகிறார் ஸ்ரீ வியாஸராஜர்.

(அடுத்த இதழில் தொடரும்)...

**S.லக்ஷ்மிபதிராஜா, சென்னை**

தொடர்

## ஹரிகதாம்ருதஸார குறுக்கெழுத்துப் போட்டி

**12 - த்யான ப்ரக்ரியா ஸந்தி விடைகள்**

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 1 ஹ்ற | ரு | ஷீ | க | 21ப | | | த | | | 2 நி | ரோ | த |
| ய | ர | 16நி | | | வ | | | 3க | ண் | ட | க | | |
| 4நி | ஸ் | ச | ய | | | | | 26 ஸி | | | ம | | |
| | வ | | | | 5ஸு | ரு | சி | | | | | ன | |
| | | | | | க | | 6 ஸு | சி | 22ஷ | த் | | ஹ | |
| 3ஸ | | 24அ | | | ந் | | | | ட் | | | வா | |
| த் | ர | வ் | ய | | த | | | | 8ர | ஸ | ம | ய | |
| | | ய | | | | | | | ச | | | வ் | |
| ரி | | ய | | | | | | | | | | 27 ஹ | 17 லோ |
| ய | | ன் | | 9அ | ணி | ல | | | | | | | |
| ன் | | | | ஷ் | | | | | | | ம் | | |
| | | 10அ | ப | வ | ர் | க் | க | ம் | | | ட | | |
| ளி | ர | 18ம | | | ர | | | | 11அ | ப் | 28ஜ | 25ப | வ |
| | | ரு | | 12கே | ச | ர | ரு | | நி | | | ட | |
| | | ஷ | | | ரி | | ர | | ந் | | | த | |
| | | | | | 29வா | | ஸு | | த் | | | ன | |
| | | டி | | | | | 30பூ | | யா | | | | |
| 13க | ர | ட் | ட | | ஹி | | | | | | | | |
| ளே | | 31கி | | | ரூ | | | 14ப் | ர | தீ | க | ம் | |
| வ | | | | | 15வ் | ய | தி | ரே | க | | 32ந | | |
| ர | | | | | | | | ர | | | | | |

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே ।
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ॥

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே
மலர் 2 : இதழ் 7


| நிர்வாக ஆசிரியர் | துணை ஆசிரியர் |
|---|---|
| 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்<br>ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,<br>380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase, பெங்களூரு 560078<br>Ph.: 89044-58276.<br>haridasa.vijayam@gmail.com<br>jagannathakesava.blogspot.com | 'தாச சாகித்ய சேவா ரத்ன'<br>திரு.குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்<br><br>**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**<br>திரு. முரளிதர தாசரு,<br>திருமதி. நிர்மலா நரசிம்மன்,<br>திரு. லட்சுமிபதிராஜா,<br>திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ் |


ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்

**மே 1 முதல் 31 வரை, 2021**

மே14: வைசாக சுத்த த்ருதீயை : ஸ்ரீவேணுகோபால விட்டலதாசர், ஆதோனி
மே19: வைசாக சுத்த அஷ்டமி : மொதலகல்லு ஸ்ரீசேஷதாசர்
மே20: வைசாக சுத்த நவமி : ஸ்ரீஷ்யாம சுந்தர தாசர், மான்வி
மே27: வைசாக பகுள த்விதியை : ஸ்ரீஜயேஷ விட்டல தாசர், மைசூரு

# ஆசிரியர் பக்கம்

நாடு முழுவதும் கொரோனா மீண்டும் பரவத் துவங்கியிருப்பதால், அனைவரும் மிகவும் பாதுக்காப்பாக இருக்க வேண்டிய நேரம் இது. நமது யதிவரேண்யர்கள் கூறும் அறிவுரைகளைக் கேட்டு, அதன்படி தேவையில்லாத பயணங்களை தவிர்த்து, வீட்டில் இருந்தபடியே சாதனைகளை செய்ய வேண்டியது நம் கடமையாகும்.

இந்த இதழிலும் வழக்கம்போல - கோவிந்தாஷ்டகம், ஹரிகதாம்ருதசார கட்டுரை / குறுக்கெழுத்துப் போட்டி, ஸ்லோக அர்த்தங்கள், கேசவ நாமா பாடல், தந்த்ரசார, கன்னட கிரந்த அறிமுகங்கள், ஹரிதாசினிகள் - என அனைத்து தொடர்களும் வந்துள்ளன.

ஹரிதாச சாகித்யத்திற்கு சம்பந்தப்பட்ட மேலும் அரிய தகவல்கள், தொடர்கள் அடுத்தடுத்த இதழ்களில் வரவிருக்கின்றன. ஆகவே அனைவரும் தங்கள் சந்தாக்களை சரியான காலத்தில் புதுப்பித்து, இந்த பத்திரிக்கையைப் பற்றி உங்கள் க்ரூப்களில் தெரிவிக்கவும். நமது சம்பிரதாயத்தை சேர்ந்த அரும்பெரும் விஷயங்கள் அனைவருக்கும் சென்று சேரவேண்டும் என்பது மட்டுமே நமது நோக்கமாகும்.

ஹரிகதாம்ருதசார பாடம் படித்தவர்கள், படிப்பவர்கள் இங்கு வரும் குறுக்கெழுத்துப் போட்டியில் பதில் அளிக்க முயற்சி செய்யவும்.

மே மாதத்தில் நான்கு ஹரிதாசர்களின் புண்ய தினங்கள் வருகின்றன. அவர்கள் அனைவரையும் அந்தந்த நாட்களில் சிறப்பாக சிந்தித்து, அவர் அந்தர்யாமி பகவந்தனின் அருளை வேண்டுவோமாக.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்**

தொடர்

## கோவிந்தாஷ்டகம்

**இயற்றியவர்: ஸ்ரீகுருகோவிந்தவிட்டலதாசர்**

**ஏம் ஏகாத்மனே நம:** - ஏ-எழுத்திற்கான ஏகாத்மனின் ஸ்துதி

**ஏதத்தெனிஸியு ஹ்ருத்க³ கோவிந்த | நீ**
**நேதகெ காணெயாகி³ஹெ கோவிந்த |**

சம்ஸ்கிருதத்தில் ஏதத் என்னும் சொல், மிகவும் அருகில் இருப்பவரைக் குறிக்கும் சொல்லாகும். ஆகையால், ஹே கோவிந்தனே, நீ ஏதத், என்று மிகவும் சமீபத்தில் இருப்பவன் - அதாவது அனைவரின் இதயத்தில் இருப்பவன். இவ்வளவு அருகில் இருந்தாலும் நீ ஏன் கண்ணுக்குத் தெரிவதில்லை? இதற்கு ஏதேனும் காரணம் இருக்கிறதா?

ஏ-கார நாமக பகவந்தனுக்கு ஏகாத்மன் என்று பெயர் வருவதற்கு இரு காரணங்கள் உள்ளன.

1. அனைவரைவிட முக்கியமான ஸ்வாமி அவரே.
2. ஏ-காரம் என்னும் எழுத்திற்கு அதிபதியானவன்.

ஏ-காரத்தினால் வெளிப்படும் பகவந்தன், ஏதத் என்னும் சொல்லாலும் அழைக்கப்படுகிறான். அனைவரின் இதயங்களிலும் அந்தர்யாமியாக இருப்பதால் அவன் 'ஏகாத்மன்'. இவ்வளவு அருகில் இருந்தாலும், நீ ஏன் கண்ணுக்குத் தெரிவதில்லை என்பதன் மூலம், உன் ஏகாத்மத்வம் ஏன் யாருக்கும் தெரிவதில்லை என்று கேட்கிறார் தாசர்.

**ஐம் ஐராய நம:** ஐ-எழுத்திற்கான ஐரனின் ஸ்துதி

**ஐததாத்மயைக சர்வ கோவிந்த | நீ**
**னைதருவுது மனகெ கோவிந்த ||**

அனைத்திற்கும் பகவந்தனே ஸ்வாமியாக இருக்கிறான் என்பதாக சாந்தோக்ய உபநிஷத்தில் 'ஐததாத்ம்யம் இதம் சர்வம்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதன் பின்னணியில் அனைத்து எழுத்துக்கள், சொற்களின் அதிபதியாக இருக்கும் கோவிந்தனே, என்று

அழைத்து, நீ அனைத்திற்கும் ஸ்வாமி என்றானபிறகு, என் மனதிற்கும் இந்த விஷயத்தை (சிந்தனையை) நீயே கொண்டு வரவேண்டும். என் மனம் உன்னையே நினைக்கும்வண்ணம் நீ செய்யவேண்டும்.

ஐ-கார நாமக பகவந்தனுக்கு ஐர என்னும் பெயர் வருவதற்கு இரு காரணங்கள் உண்டு.

1. முக்யபிராணனுக்கும் நியாமகனாக (தலைவனாக) இருப்பவன்.
2. ஐ-காரம் என்னும் எழுத்திற்கு அதிபதியானவன்.

ஜீவர்களில் உத்தமனான முக்யபிராணனுக்கும் நியாமகன் (தலைவன்) என்றதன் மூலம் அனைத்திற்கும் பகவந்தனே தலைவன் என்று நிரூபித்தாயிற்று. இப்படிப்பட்ட ஐ-கார எழுத்தால் அறியப்படுபவனான கோவிந்தன், நீயே என் ஸ்வாமி என்னும் சிந்தனையை என் மனதில் விதைக்க வேண்டும்.

**ஓம் ஓஜோப்ருதே நம:**
ஓ-எழுத்திற்கான ஓஜோப்ருத் ரூபத்தின் ஸ்துதி

**ஓதப்ரோதனெ ஜக³தி கோவிந்த | நீ**
**ந்னோதத்வனெ திளிஸோ கோவிந்த |**

இந்த உலகத்தில் குறுக்கும் நெடுக்குமாக (அனைத்து இடங்களிலும்) இருப்பவனே. உன்னில் பிணைத்திருப்பதை (அடங்கியிருப்பதை) எனக்குத் தெரியப்படுத்து.

ஓ-கார நாமக பகவந்தனுக்கு ஓஜோப்ருத் என்னும் பெயர் வருவதற்கு இரு காரணங்கள் உள்ளன.

1. ஓஜ: - அனைவரையும் வெல்லக்கூடிய சாமர்த்தியத்தைக் கொண்டவன்.
2. தன்னை ஓ-கார நாமகனாக, ஓஜோப்ருத் என்னும் ரூபத்தைக் கொண்டாடுபவர்களுக்கு, அசுர சக்திகளை வெல்லக்கூடிய சக்தியை / சாமர்த்தியத்தைத் தருபவன்.

பகவந்தன், உலகத்தில் குறுக்கும் நெடுக்குமாக, அனைத்து இடங்களிலும் இருக்கிறான். அப்படி அவன் பின்னிப் பிணைந்திருப்பதற்கான சாமர்த்தியம், அனைவரையும் வெல்வதற்கான சாமர்த்தியம் அவனிடம் மிகவும் அதிகமாக இருக்கிறது என்பதே ‘ஓஜோப்ருத்’ என்னும் பெயரின் பொருளாகும்.

ஆகையால், ஓகார என்னும் எழுத்தில் தன்னை வெளிப்படுத்துபவனும், ஓஜோப்ருத் என்று தன்னை அழைத்துக் கொள்பவனுமானவன், கோவிந்தனே என்றும், இப்படி உலகத்தில் அனைத்திலும் பின்னிப் பிணைந்திருப்பதாலேயே, அனைத்தின் / அனைவரின் மேலும் உன் ஆளுமை இருக்கிறது என்றும் சொல்லிப் பாடுகிறார் தாசர்.

**ஔம் ஔரசாய நம:** ஔ-எழுத்திற்கான ஔரசனின் ஸ்துதி

**ஔதணித்தளெ ஸதி கோவிந்த | நீ**
**நௌதுஹொண்டிஹதேகோ[3] கோவிந்த ||**

ஔ-கார எழுத்தில் தன்னை வெளிப்படுத்துபவனும், கோவிந்த என்று அழைக்கப்படுபவனுமான பகவந்தனே! வாக்-அபிமானினியான உன் மனைவி லட்சுமிதேவி, ஔ-காரத்தில் துவங்கும் அனைத்தையும் உனக்கு சமர்ப்பிப்பதன் மூலம், ஒரு பெரிய விருந்து அளித்தாள் அல்லவா? ஔரச நாமகன் நானே, அனைத்து ஔ-காரங்களில் வெளிப்படுபவன் நானே என்று நீ ஏன் சொல்லிக் கொள்வதில்லை? நீயோ, இந்த விஷயத்தில் ஏன் 'ஔதுகொண்டிருவி' - மறைந்து கொள்கிறாய்?.

ஔ-கார நாமக பகவந்தனுக்கு ஔரஸ என்னும் பெயர் வருவதற்கு இரு காரணங்கள் உள்ளன.
1. இதயத்தில் நிலைத்திருப்பவன்.
2. ஔரச நாமகனாக, ஔ-காரத்தினால் தன்னை வெளிப்படுத்துபவனாக, அதன் சாரமாக இருப்பவன்.

பகவந்தன் அனைரின் இதயத்திலும் இருப்பதைப் போல, தன் மனைவியான லட்சுமிதேவியின் இதயத்திலும் இருக்கிறான். ஸ்ரீதேவி, தன் இதயத்தில் இருக்கும் பகவத் ரூபத்தின் தரிசனத்தைப் பெற்று, வேதங்களால் அவனை எப்படி புகழ்ந்து கொண்டிருக்கிறாளோ, அப்படியே, அந்த வேதங்களில் இருக்கும் ஔ-காரங்களினால், அவனின் ஔரச ரூபத்தையும் பாடிக் கொண்டிருக்கிறாள். ஞானபக்தி பூர்வகமான இந்த ஸ்துதிகளை, பகவந்தன் ஔதண (விருந்து) ரூபத்தில் ஏற்றுக் கொள்கிறான்.

இந்த நுடியின் முதல் வரியில் - லட்சுமிதேவி, பற்பல எழுத்துக்களால் பகவந்தனை துதித்து, அதை ஒரு விருந்து போல படைக்கிறாள் என்னும் விஷயமும். இரண்டாவது வரியில் - அந்தந்த எழுத்துக்களின் நாயகன் அந்தந்த பகவந்தனே என்னும் விஷயம் சாதாரண மக்களுக்கு தெரிவதில்லை என்று சொல்வது, வெறும் ஔ-காரத்திற்கு நாயகனான ஔரசனுக்கு மட்டும் அல்ல, அனைத்து எழுத்துக்களாலும் அழைக்கப்படும் பகவத்ரூபங்களும் பொருந்தும் என்று அறியவேண்டும்.

**அம் அந்தாய நம:** அம்-எழுத்திற்கான அந்தனின் ஸ்துதி

**அங்காங்கி பா[4]வதி[3] கோவிந்த । நீ**
**நங்காங்கதி க்ரீடி[3]பெ கோவிந்த ।**

தைத்திரிய உபநிஷத் பிரம்மவல்லியில் அன்னரச-மயனான அனிருத்தன் இப்படி வர்ணிக்கப்படுகிறான். நம் உடலின் தலையில் அனிருத்தனின் தலையும், நம் வலது கையில் அனிருத்தனின் வலது கையும், நம் இடது கையில் அனிருத்தனின் இடது கையும், நம் தேகத்தில் நடுப்பகுதியில் அனிருத்தனின் நடுப்பகுதியும், நம் கால்களில் அனிருத்தனின் கால்களும் இருக்கின்றன என்று சொல்லப்பட்டிருக்கிறது. அம் எழுத்திற்கான நாயகன் கோவிந்த எனப்படும் அந்த நாமக பகவத் ரூபமே ஜீவர்களின் தலை முதலிய அனைத்து பாகங்களிலும் வியாபித்து தன் செயல்களை செய்கிறார்.

அம் எழுத்திற்கான நாயகன் அந்த நாமக பகவந்தனுக்கு அந்த என்னும் பெயர் வருவதற்கு இரு காரணங்கள் உள்ளன.
1. தாரதம்யத்தின் இறுதியில் இருந்துகொண்டு, அனைவருக்கும் சர்வோத்தமன் என்று பெயர் பெற்றவன்.
2. அந்த நாமகனாக அம்-என்னும் எழுத்தினால் அழைக்கப்படுவதன் மூலம் அம் எழுத்தின் மகிமைகளை வெளிப்படுத்துகிறவனாக இருக்கிறான்.

அம் என்னும் எழுத்தின் பெருமை என்னவென்றால், அது அந்த நாமக என்னும் பகவந்தனின் ரூபத்தை வெளிப்படுத்துகிறது. அந்த நாமக பகவந்தனை, அம் எழுத்து வெறும் ஒரு குறியீடாகக் காட்டாமல், தாரதம்யத்தின் கடைசியில் இருக்கும் அவன், சர்வோத்தமன் எனப்படுகிறான் என்று அவனின் சர்வோத்தமத்வத்தை அறியும்வண்ணம் அவனை வெளிப்படுத்துகிறது.

**அ: அர்த்தகர்ப்பாய நம:** - அ:-எழுத்திற்கான அர்த்தகர்ப்பனின் ஸ்துதி

**அஹரஹர்மனத³லி கோவிந்த । நீ**
**அஹரஹர்விஹரிஸோ கோவிந்த ।।**

அ: என்னும் எழுத்தின் அதிபதியாக தன்னைக் காட்டிக்கொள்ளும் கோவிந்தனே, அர்த்தகர்ப்ப என்னும் பெயரைக் கொண்டவனே, நீ என் மனதில் எப்போதும் இடைவிடாமல் நிலைபெற்று இரு.

அ: எழுத்தின் அதிபதியான அர்த்தகர்ப்பனின் பெயருக்கான காரணங்கள் இரண்டு.
1. பிரம்மாதி தேவதைகளை தன் உதரத்தில் தரித்திருப்பவன்.
2. அர்த்தகர்ப்பனாக அ: என்னும் எழுத்தினால் அழைக்கப்படுபதன் மூலம் அ: எழுத்தின் குழந்தையாக இருப்பவன்.

'குக்ஷிகம் யஸ்ய விஸ்வம் சதாஜாதிகம்' என்று த்வாதச ஸ்தோத்திரத்தில் சொல்லியிருப்பதைப் போல, அனைத்து உலகங்களும் அவன் உதரத்திலேயே அடங்கியிருக்கின்றன. ஆனால், 'அர்த்தகர்ப்ப' என்னும் பெயர், பிரம்மாதிகளை விசேஷமாக சொல்வது ஏனெனில், அத்தகையவர்களை தன் கர்ப்பம் எனும் உதரத்தில் வைத்திருப்பவன் என்று மறுபடி தெள்ளத் தெளிவாக நிரூபிக்கிறது. இதையே பகவத்கீதையில் 'யே பஜந்தி து மாம் பக்த்யாமயி தே தேஷு சாப்யஹம்' - பக்தியுடன் என்னை வணங்கும் பக்தர்கள் என் கட்டுப்பாட்டிலேயே இருப்பார்கள். அவர்களை எப்போதும் நான் கருணைப் பார்வையிலேயே பார்க்கிறேன் என்கிறார் ஸ்ரீகிருஷ்ணர்.

இப்படியாக, 'அர்த்தகர்ப்ப' என்னும் பெயருக்கேற்ப, கோவிந்த என்று அழைக்கப்படும் 'அ:' என்னும் எழுத்தினால் வெளிப்படுபவனான அர்த்த நாமக பகவத்ரூபத்தை அழைத்து, என் மனதில் இடைவிடாமல் (எப்போதும்) 'அ:' என்னும் எழுத்தின் அதிபதியாக நிலைபெற்று இரு என்று இந்த ஸ்லோகத்தில் வேண்டுகிறார் தாசர்.

சம்ஸ்கிருதத்தில் 'அஹ:' என்னும் சொல் பகலைக் குறிப்பதுடன், முழு நாளையும் குறிக்கும் பொருளைக் கொண்டதாக இருக்கிறது. ஆகையால் 'அஹரஹ:' என்னும் சொல்லினால், தினந்தோறும் / எப்போதும் என்ற பொருளைக் கொடுக்கிறார் தாசர். (தொடரும்)....

தொடர்

கேசவ நாமா

17-பய நிவாரணவு - ஸ்ரீமஹிபதி தாசர்

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)

ஹரிஸி அஹம்பாவ அரிஸி அனுபவ பூர்ண
சுரிசுவ சுக ஸ்ரீஹரி நிம்ம நாம ||23

கர்வத்தை ஒடுக்கி, பூர்ண அனுபவ அறிவைப் பெற்றுத் தரும், சுகத்தை தடையின்றி பெற்றுத் தரும் நாமமென்றால் அது ஸ்ரீஹரி நாமமே.

கரகமலவிட்டு ஷிரதலி சத்கை[3]சுதிஹ
கருணாளு மூர்த்தி ஸ்ரீகிருஷ்ண நிம்ம நாம ||24

அபரோக்ஷ ஞானத்தைக் கொடுத்து, தலை மேல் கரங்களை வைத்து, சத்கதியை கொடுக்கும் நாம ஸ்ரீகிருஷ்ணனின் நாமம்.

வேதவிம்ஷதி நாமஸார சந்த்[3]யாயனதி[3]
மஹிபதிய ஹொரெவ ஸ்ரீகுரு நிம்ம நாம ||25

இப்படியான 24 நாமங்களை நினைத்தால், பிறப்பு இறப்பு சுழற்சியிலிருந்து விடுதலை கிடைக்கிறது. இந்த சுழற்சியிலிருந்து விடுபட, குருவின் கருணை மிகவும் அவசியம். 'ந ச மத்வ சமோ குரு:' என்பது போல, மத்வாந்தர்யாமி (பாரதிரமண முக்யபிராணாந்தர்கத) ஸ்ரீஹரியின் நாமஸ்மரணையினால் பிறப்பு இறப்பு சுழற்சியிலிருந்து விடுதலை கிடைக்கிறது.

## 18. காசிய ஹாதியல்லி

'ஸ்னானவ மாடிரோ ஞான தீர்த்ததலி, நானு நீனெம்ப அஹங்காரவ பிட்டு' என்னும் கிருதியில் தீர்த்த ஸ்னானங்களைப் பற்றி பல விஷயங்களை சொல்கிறார் புரந்தரதாசர்.

வேதசாஸ்திரவன ஓதுவது ஒந்து ஸ்னான,
பே[4]தாபே[4]தவ திளித[3]ரொந்து ஸ்னான
ஸாது சஜ்ஜனர சங்க[3] ஒந்து ஸ்னான,
பரதத்வ திளிதுகொண்டரெ கங்காஸ்னான
இந்திரேஷன த்யான ஹரிய ஸ்மரணெ,
பார்த்தசாரதிய த்யான

புரந்தரவிட்டலன த்யானவே கங்காஸ்னான - என்கிறார் புரந்தரதாசர்.

கங்கெ மிந்தரெ மலவு ஹிங்கிதல்லவெ
ரங்கனொலிவனு பக்தர சங்க தொரெயதெ - என்கிறார் வியாசவிட்டலர்.

வைசாக ஸ்னான, கார்த்திக ஸ்னான, மாக ஸ்னான, சங்க்ரமண, பர்வகால, கிரகண ஆகிய சமயங்களில் பொதுவாக வைதிகர்கள் நதி ஸ்னானங்களுக்காக, தீர்த்த யாத்திரைக்கு செல்வதுண்டு. தீர்த்தயாத்திரைகள் ஒருவரது வாழ்க்கையில் பல மாற்றங்களை கொண்டு வருவதற்கும் மற்றும் சம்சார சாகரத்தைக் கடப்பதற்கும் உதவி செய்கின்றன.

தீர்த்த = தீர்+த்த. 'தீர்' என்றால் கஷ்டம், சம்சாரம், நோய் நொடிகளை கடப்பது என்று பொருள். 'த்த' என்றால் அதற்குத் தேவையான வழிகள் என்று பொருள். இப்படியாக பாவங்களை களைந்து புண்ணியத்தைக் கொடுக்கும் நதிகள் அனைத்தும் 'தீர்த்தம்' எனப்படுகின்றன.

க்ஷேத்திர - புண்ணியதலம், யாத்திரா தலம், சரீரம் என்னும் பல அர்த்தங்களைக் கொண்ட சொல். இத்தகைய புண்ணிய தலத்தின் மண்ணைத் தொட்டாலும் நம் பாவங்கள் களைந்து போகின்றன.

யாத்திரை = இத்தகைய புண்ணிய தலங்களில் சாதனைக்காக வைக்கப்படும் ஒவ்வொரு காலடியும் யாத்திரை எனப்படுகிறது.

தீர்த்த யாத்திரையில் பாயும் நதி, இருக்கும் நிலம், வீற்றிருக்கும் பகவந்தன் என அனைத்தும் யாத்ரிகனின் மனதினை மகிழ்ச்சிப்படுத்துகிறது. தீர்த்த யாத்திரைக்கு இரு பலன்கள் உண்டு. ஒன்று அங்கு பாயும் நதியில் குளிப்பது, மற்றும் அங்கு இருக்கும் ஹரியின் மகிமைகளில் மூழ்குவது. ஞானிகள், யதிகள் என அனைவரும் தீர்த்தயாத்திரைகளின் சந்தர்ப்பங்களிலேயே பல கிரந்தங்களை இயற்றி வந்தனர். பிரவசனங்களை செய்து வந்தனர். இதனால் பாவங்கள் தொலைவது, புண்யங்கள் சேர்வது, ஞானம் வளர்வது என்று பல பலன்கள் இருந்தன.

பாத்ரர சங்கட யாத்ரெய சரிசுத விதாத்ரு பிதன குண ஸ்தோத்ரகள ஸ்ரோத்ரதி சவிது விசித்ரானந்ததிகாத்ரவ படெது பாரத்ரிக படெவுதெ -- பலவிது பாள்துதக்கெ சிரி நிலயன குணகள திளிது பஜிஸுவுதே - என்கிறார் ஜகன்னாத்தாசர்.

ஸ்ரீஹரிகுருகளின் அருளுக்குப் பாத்திரரான பகவத் பக்தர்களின் சேவையை செய்து, ஹரிதாசர்களின் சகவாசத்தில் இருந்து, பகவந்தன ப்ரேரணை என்று அறிந்து யாத்திரை செய்யவேண்டும். அவனின் ஸ்தோத்திரங்களை செய்தவாறு, தேகாபிமானத்தை துறந்து, அவனையே தியானம் செய்தவாறு வாழ்ந்திருப்பதே வாழ்க்கையின் உண்மையான அர்த்தம் என்கிறார் ஸ்ரீஜகன்னாததாசர்.

விஜயதாசர், பற்பல தீர்த்தக்ஷேத்திரங்களில் இருக்கும் நதிகளில் ஸ்னானம் செய்து, கேசவாதி 24 ரூபங்களை தியானிக்கிறார்.

காஷிய ஹாதி[3]யல்லி கேஷவனித்தானே ராமராம ।
கேஷவன தயதி காஷியாத்ரெய கண்டே ராமராம ।।1

அயோத்யா மதுரா மாயா காசி காஞ்சி அவந்திகா ।
புரி த்வாராவதிசைவ சப்தைதா மோக்ஷ தாயகா: ।।

என்னும் சாஸ்திர வாக்கியத்தின்படி காசியின் மகிமையை தெரிவிக்கிறது. கங்கா நதியில் வந்து கலக்கும் வருணா மற்றும் ஆசி என்னும் நதிகளின் நடுவே இருப்பதால் இதற்கு வாரணாசி என்று பெயர். காசியில் மரணமடைந்தால் அவரது காதுகளில், மகாதேவரே, ராம நாமத்தை உபதேசிக்கிறார் என்றபிறகு, இதைவிட உத்தமமான வைஷ்ணவ க்ஷேத்திரம் மற்றும் முக்திக்ஷேத்திரம் வேறு எதுவும் இல்லை எனலாம்.

காசியில் விஸ்வேஸ்வரன், அன்னபூர்ண, காலபைரவ, பிந்துமாதவ, ஆதிகேசவனின் ஆலயங்கள் உள்ளன. பஞ்ச தீர்த்தங்கள் உள்ளன. வருண தீர்த்தத்தின் அருகில் ஆதிகேசவ ஆலயம் உள்ளது. பஞ்ச கங்கா தீர்த்தத்தின் அருகில் பிந்துமாதவனின் ஆலயம் உள்ளது. மணிகர்ணிகா காட் அருகில் இருக்கும் தாரகேஸ்வர ஆலயத்தில் விஷ்ணு சஹஸ்ரநாம, ராமனின் ஸ்துதிக்குப் பிறகே சிவ ஸ்துதி சொல்கிறார்கள். துளசிதாசர் ராமசரித்ர மானஸ் கிரந்தத்தை இயற்றிய இடமே, பிரகலாத காட். காசி க்ஷேத்திரத்திற்கும் விஜயதாசருக்கும் இருக்கும் சம்பந்தம் மிகவும் அதிகமானது. மூன்று முறை காசி

யாத்திரை செய்த விஜயதாசருக்கு, வியாசகாசியில் 'விஜயவிட்டலா' என்னும் அங்கிதம் கிடைத்தது. அவரது அந்தரங்க கதவு திறந்த க்ஷேத்திரமே காசி. வேதவியாசரின் தரிசனம், புரந்தரதாசரின் கையால் விஜயதாசர் ஆனார்.

காசியின் பிந்துமாதவன், பிந்து (நீர்த்துளி) போன்ற சிறு நொடிப்பொழுதையும் சார்த்தகமாக மாற்றிக் கொள்ளவேண்டும் என்கிறார். சம்சாரம் என்னும் சாகரத்தை கடக்க உதவும் பிந்து மாதவனின் அருளே காசியில் கிடைக்கும் மிகப்பெரிய பலன் எனலாம்.

பதரிகாஸ்ரமதல்லி நாராயணனித்தானே ராமராம |
பதரிகாஸ்ரமவ கண்டே நாராயணன தயதி ராமராம ||2

பதரியின் மகிமை அளவிடமுடியாதது. நர நாராயணர்கள் தவம் செய்த தலம். வேதவியாசரின் குகை, முசுகுந்தனின் குகை, பீம சேது, அலகனந்தா, பதரி மரங்களை பதரியில் காணலாம். பதரியின் ஆராத்ய தெய்வம் பதரி நாராயணன். நர நாராயணர்கள் தவம் செய்தபோது, லட்சுமிதேவி பதரி மர ரூபத்தில் அவர்களுக்கு நிழல் தந்து, பலன்களைக் கொடுத்ததால் இந்த க்ஷேத்திரத்திற்கு பதரி என்று பெயர் வந்தது. த்ருவ, ப்ருது ராஜர்கள் தவம் செய்த தலம் பதரி. மகாபாரதத்தை எழுதிய கணேசரின் குகையும் இங்குள்ளது. மத்வாசார்யர், கீதா பாஷ்யத்தை இயற்றி, வேதவியாசருக்கு சமர்ப்பித்த இடம் இது.

அலகனந்தாவின் தெளிவான நீர், கொதிக்கும் சுனை நீர் இவற்றிற்கு நடுவில் நிற்கும் சாதகனுக்கு சுக துக்கங்களை சமமாக ஏற்றுக்கொள்ளும் பக்குவத்தைக் கொடுக்கிறார். பதரி நாராயணனின் தரிசனத்தால், தேவ ருண, வியாசரின் சிந்தனையால் ரிஷி ருண, பிரம்ம கபாலத்தில் பிண்ட பிரதானம் செய்வதால் பித்ரு ருண ஆகியவை தீர்கின்றன. பதரி வேதவியாசர் நிலைத்திருக்கும் தலம். மத்வாசார்யர் தினமும் அவரிடம் பாடம் படிக்கும் இடம். இங்கிருந்தே பாரதம், பஞ்சராத்ர, மூலராமாயண, வேதங்கள், பாகவதம் முதலான 18 புராணங்கள் மற்றும் உப புராணங்கள் இயற்றப்பட்டன.

ப்ரயாக நதியலி மாதவனித்தானே ராமராம |
ப்ரயாக நதி மிந்தே[3] மாத[4]வன த[3]யதி[3] ராமராம ||3

'பிரயாகத்திற்குச் சென்றால், வைகுண்டத்திற்கு சென்றதைப் போல' என்று சொல்லும் வழக்கம் உண்டு. ஸ்ருஷ்டி கர்த்தனாகிய பிரம்மன், 10 அஸ்வமேத யாகங்களை செய்த இடம் ஆகையால் இந்த இடத்திற்கு பிரயாகை என்று பெயர் வந்தது. கங்கா, யமுனா, சரஸ்வதி ஆகிய நதிகளின் சங்கமமே த்ரிவேணி சங்கமம் எனப்படுகிறது. த்ரிவேணி ஸ்னானம், த்ரிகரண சுத்திக்கு காரணமாக இருக்கிறது.

பிரயாக தீர்த்தின் தலைவன் மாதவன். மா என்றால் பிரம்ம வித்யை. அதற்கு 'தவ' என்றால் தலைவன். அதாவது, வித்யைக்கு தலைவன் மற்றும் லட்சுமியின் பதி. சரீர, வாக், மனஸ் ஆகியவை சுத்தமாவதற்கு த்ரிவேணி ஸ்னானம் முக்கியம்.

வித்யை, வினயம், விவேகத்திற்கு மாதவனின் ஸ்ம்ரணை முக்கியம். பிரயாகையில் வேணிதானம், கோதானம், சந்தியாவந்தனம், பிண்டபிரதானம் ஆகியவற்றை மாதவனின் கருணையுடன் செய்யவேண்டும்.

கோகுலதல்லி ஶ்ரீகோவிந்தனித்தானே ராமராம |
கோகுலவன்னு கண்டே கோவிந்தன த[3]யதி[3] ராமராம ||4

யமுனா நதியின் நடுவில் கோகுல க்ஷேத்திரம் இருக்கிறது. ஶ்ரீகிருஷ்ணன் தனது மகிமைகளை வெளிப்படுத்த தேர்ந்தெடுத்த இடமே கோகுலம். இங்கு கிருஷ்ணனின் நாமகரணம் மற்றும் பூதனி, த்ருணாவக்த்ர, ஷகடாசுர ஆகிய அசுரர்களின் வதம் ஆயிற்று. யசோதைக்கு பிரம்மாண்டத்தையே காட்டிய புண்ணிய க்ஷேத்திரம் கோகுலம். இந்த க்ஷேத்திரத்தின் தலைவனே கோவிந்தன்.

கோவிந்தனின் கருணையால் கோகுலத்தின் மண்ணின் ஸ்பர்சம், ம்ருத்திகா தாரணம், கோ-சேவை, கோ-தூளிகளின் மணம், சூரிய அஸ்தனம் ஆகியவற்றைக் கண்டேன் என்கிறார் தாசர். (தொடரும்)...

தொடர்

# ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

## கிரந்தத்தைப் பற்றிய விளக்கம்

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)

பிரம்மா, வாயு, வாணி, பாரதி ஆகியோர் மிகச்சிறந்த பக்தர்கள் எனப்படுகிறார்கள். அதாவது தெளிவான ஞானம், பக்தி பெற்றிருப்பவர்கள். இவர்களே அனைத்து பக்தர்களையும் கட்டுப்படுத்துகிறவர்களாக இருக்கின்றனர். கருட, சேஷ முதலானவர்கள் பக்தர்கள் எனப்படுகிறார்கள். (சந்தி 23 ஸ்லோகம் 14).

லிங்க, அனிருத்த, ஸ்தூல தேகங்களில் வாயுதேவர் நிலைத்திருக்கிறார். பாவ புண்ணியங்களை அவரவர்களின் தகுதிக்கு ஏற்ப செய்து, செய்விக்கிறார்.

முழித்திருக்கும்போது, தூக்கத்தில் என அனைத்து நிலைகளிலும் ஒரு நாளைக்கு 21,600 முறை மூச்சு விடும் செயலை செய்வதால், வாயுதேவர், அனவத்ய (தோஷங்கள் இல்லாதவர்) என்று அழைக்கப்படுகிறார். (அபரோக்ஷ சந்தி ஸ்லோகம் 18). பிரம்ம வாயு இருவரும் ருஜுகள் அதாவது வாயு 100 கல்பங்கள் சாதனை செய்து, 101வது பிரம்மகல்பத்தில் கல்கி என்று அழைக்கப்படுகிறார். 99வது கல்பத்தில் அனும-பீம-மத்வராக அவதரித்திருக்கிறார் என்று 100 ருஜுக்களின் பெயர்களை விவரிக்கும் கொடுக்கும் ஜகன்னாததாசர் கல்கி, சுதேஜ, தாச, தர்ம, சந்த்யாத, விஞ்ஞான, மோத, பிரமோத என்று அவர்களை பட்டியலிடுகிறார்.

சேவ்ய, கவ்ய, லாதவ்ய என்று வரும் அந்தப் பட்டியல், 99வதாக வாயுதேவர் 100வதாக பிரம்மதேவர். இப்படி அனைவரையும் பாஹி பாஹி என்று வணங்கி, பாஹி பிரம்மா பிராமணப்ரியா, பாஹி பாஹி சரஸ்வதிபதே, ஜகத்குருவர்ய என்று வேண்டுகிறார். வாமன புராணத்தில் சொல்லியபடி 100 பெயர்களைக் கொடுக்கிறேன் என்கிறார் தாசர்.

நானே அனைத்தையும் செய்கிறேன் என்று நினைப்பது தவறு என்று வேதங்கள் சொல்கின்றன. 'ஒடெயரித்த வனஸ்தபலகள ஒடிது திம்புவருண்டே கண்டரெ' என்று ஸ்ரீஹரி என்னும் தலைவன்

இருக்கும்போது வேறு யாரும் நம்மை ஆக்ரமிப்பு செய்யமுடியாது என்று நினைக்கவேண்டும். அனைத்தையும் அவருக்கு அர்ப்பித்து, முக்தியை வேண்டி, அனைவரும் சுஜீவிகளாக வேண்டும். கர்வத்துடன் அர்ப்பணிக்கப்படும் பூஜைகளை ஸ்ரீஹரி ஏற்பதில்லை. எப்போதும் ஸ்ரீஹரியின் பெயரை சொல்லிக் கொண்டிருப்பவர்களுக்கு எவ்வித பாவங்களும் வருவதில்லை என்று தாசர் தைரியம் அளிக்கிறார்.

28வது சந்தியான கணபதி ஸ்தோத்திர சந்தி விக்னநிவாரண மந்திரம் என்றே சொல்லப்படுகிறது. 'பரம குருவின மூர்த்தியனு ஸ்வகுரு பிம்பமூர்த்திலி ஐக்யவனு மாடோ' என்று இவரின் குருகளான கோபாலதாசர் சொல்கிறார். கோபாலதாசரை கணேசரின் அம்சர் என்கிறோம். இதனால் இந்த சந்தியானது முக்கியமானதாகிறது. கணேசர் வரங்களை விரைவில் கொடுப்பவராம். தியான, உபாசனைக்குப் பிரேரகர் மற்றும் அதிகமாக வணங்கப்படுபவர் இவர்.

'மன்மனதொளு பிரகாஷிஸி நீ சலஹு சஜ்ஜனர' என்று விநாயகரை துவக்கத்தில் வணங்குகிறார். ஆகாசாபிமானி கணேசர், வேதவியாசரின் அருளுக்குப் பாத்திரமானவர். விஸ்வ நாமக ஹரியின் 21 முகங்களில் மத்திய முகம் கஜானனன் என்பதால் இவர் கஜானனன் ஆனார் என்று சொல்கின்றனர். சஜ்ஜனர்களின் நட்பைக் கொடுக்கவும் என்று வேண்டுகிறார். கெட்ட விஷயங்களில் ஈடுபடும் மனதினை ஹரிபாதங்களில் கொண்டு சேர்க்குமாறு செய் என்று வேண்டுகிறார்.

29வது அணுதாரதம்ய சந்தி. இதில் ஸ்ரீஹரியிடம் துவங்கி லட்சுமி, பிரம்மா, வாயு என ஒருவரைவிட அடுத்தவர் வகுப்பில் குறைந்தவர் என்று வணங்குகிறார். விஷ்ணுவாகன கருடனுக்கு, கிருஷ்ண மஹிஷியர்கள் குறைந்தவர்கள் என்கிறார். குணங்களின் எண்ணிக்கையினால் இவர்களில் தாரதம்யம் வருகிறது. ஷண்மஹிஷியர்களுக்குப் பிறகு, இந்திரன், யமன், அனிருத்தன் என்று பட்டியல் வளர்கிறது. இந்த வகுப்புகளுக்கேற்ப தேவதைகளை நினைத்தவாறு வணங்கவேண்டும்.

12வது வகுப்பில் யமன், சூரியன், சந்திரன்,
13ல் மித்ர நாமக சூரியன், பிருஹஸ்பதியின் மனைவி தாரா,
18ல் விஷ்வக்சேனன், கணேச, குபேர, அஸ்வினி தேவதைகள்
என இந்த பட்டியல் செல்கிறது.

49மருத்தமர்கள், இரு அஸ்வினி தேவதைகள், 11 ருத்ரர், 10 விஸ்வதேவதைகள், 12 ஆதித்யர், 8 வசுகள்-குருகள், யம, சோம மற்றும் கவ்யவாஹன என்னும் மூன்று பித்ருதேவதைகள், பரத, த்யாவா, பிருத்வி மற்றும் தேவகணங்கள் என மொத்தம் 100 பேர் சோமரசத்தைப் பருகும் தகுதி உள்ளவர்கள் என்கிறார். இதில் 85 பேர் 18ம் வகுப்பில் வந்தால், 11 மனுகள் 19ம் வகுப்பில் இருக்கின்றனர். 20ல் கங்கா, ரோஹிணி (சந்திரனின் மனைவி), ஸ்யாமளா (யமனின் மனைவி), உஷாதேவி, பர்ஜன்ய நாமக சூரியன் மற்றும் சங்க்யா (சூரியனின் மனைவி) இருக்கிறார்கள். பிறகு ஸ்வாஹா (அக்னியின் மனைவி), ஜலாபிமானி புதன், சனி, புஷ்கரர் இருக்கிறார்கள்.

இதயத்தில் இருக்கும் ஸ்ரீஹரிக்கு வெளியில் இருக்கும் பொருட்களினால் பூஜித்து, ஆவாஹன, ஆசன, ஆசமன, பாத்ய, ஸ்னான, வஸ்திர, கந்த, அட்சத, துளசி, தூப, தீப, நைவேத்திய ஆகியவற்றை வரிசையாக சமர்ப்பிக்கவேண்டும்.

அன்னத்தில் சரஸ்வதி மற்றும் கேசவரூபம்,
பாயசத்தில் பாரதி மற்றும் நாராயணரூபி ஸ்ரீஹரி,
பக்ஷ்யங்களில் சூரியன்,
நெய்யில் மகாலட்சுமி மற்றும் கோவிந்த ரூபி ஸ்ரீஹரி,
பாலில் சரஸ்வதி,
மண்டிகெயில் (இனிப்பு) பிரம்மன் மற்றும் ஸ்ரீஹரியின் ரூபமான மதுசூதனன்,
வெண்ணெயில் வாயுதேவர் மற்றும் ஸ்ரீஹரியின் ரூபமான த்ரிவிக்ரமன்,
தயிரில் வருணன் மற்றும் சந்திரன்,
பருப்புகளில் கருடன்,
இலைகள் உள்ள காய்கறிகளில் சூரியன் (மித்ரன்),
இலைகள் இல்லா காய்கறிகளில் சேஷன்,
கசப்பு பொருட்களில் பார்வதி,
கசப்பில்லா பொருட்களில் ருத்ரர்,
துவர்ப்பு பொருட்களில் யமன்,
ஏலக்காய், பெருங்காயம் முதலியவற்றில் மன்மதன்,
அப்பளம் முதலியவற்றில் ஸ்வாயம்புவ மனு மற்றும் அச்யுதரூபி ஸ்ரீஹரி,

உப்பில் நிரருதி மற்றும் ஜனார்த்தனரூபி ஸ்ரீஹரி,
பழச்சாறுகளில் தாசபிராண மற்றும் உபேந்திரன்,
வெற்றிலையில் கங்காதேவி மற்றும் ஸ்ரீஹரி நிலைத்திருக்கிறார்.

இப்படி 24 ஜட தத்வங்களுக்கு அபிமானி தேவதைகளும் ஸ்ரீஹரியின் ரூபமும் இருக்கின்றன. அந்தந்த பொருட்களில் அபிமானி தேவதைகளையும், ஸ்ரீஹரியின் ரூபத்தையும் நினைப்பதே அவரின் பூஜையாகும்.

(அடுத்த இதழில் தொடரும்)

*** **டாக்டர். மதுசூதன் ஜோஷி**

**கன்னடம்**

**அருஞ்சொற்பொருள்**

## கடினமான சொற்களின் அர்த்தங்கள்

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

1. பினாகி - சிவன். 2. நௌகெ - படகு. 3. பங்கேஜ - தாமரை. 4. தபக - தட்டு (ஹரிவாண). 5. ஜடி - ரிஷி. 6. கார்தப - கழுதை. 7. காஸி - கஷ்டம். 8. குஸுமஸம்பவ - பிரம்மன். 9. குஜன - துஷ்ட 10. குக்குர - நாய்.

**ஏப்ரல் 2021 மாதத்தின் ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டிக்கு சரியான பதில் எழுதி புத்தகப் பரிசினைப் பெறுபவர்கள் :**

1. திருமதி. சாந்தி பத்மனாபன், திருநெல்வேலி. 2. திருமதி. சந்திரா, கோவை. 3. திருமதி. லலிதா, திருநெல்வேலி. 4. திருமதி. கீதா, திருநெல்வேலி

**மாதத்திற்கு ஒரு இலவச PDF புத்தகம்**

இதுவரை நாம் வெளியிட்ட அனைத்து இலவச PDF புத்தகங்களை download செய்து படிப்பதற்கு, இந்த தளத்திற்கு செல்லவும். https://archive.org/details/@sathya_narayanan

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### நாமஸ்மரணை சந்தி

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | | | 2 | | 34 | | | | | 23 | |
| 3 | | | | | | 24 | | | | | | | | 25 |
| | | | | 38 | | 4 | | | 35 | | | | | |
| | | | | | | | | | | | | | | 26 |
| 5 | | | | | | | | | 6 | | | | | |
| | 7 | | 39 | | | | | | | | | 8 | | |
| | | | | | | | | | | | | | | |
| | | | | | | 9 | | | | | | | | |
| | | 40 | | | | | | | | | 27 | | | 36 |
| 10 | | | | | | | | | | | | 11 | | |
| | 41 | | | | 12 | | | 13 | 14 | | | | | |
| | | 15 | | | | 42 | | | | 16 | | | | |
| | | | 17 | | | | | | 28 | | | | | |
| | | | | | | | | | 18 | | 19 | | | |
| | | | | 29 | | | 43 | | | | | | | 30 |
| 20 | | | | | | | | | 37 | | | | | 31 |
| | | | | | | | | | | | 32 | | | |
| | | | | | | 21 | | | | | | 33 | | |
| | 22 | | | | | | | | | | 44 | | | |

குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam@gmail.com என்னும் ஐடிக்கோ அல்லது 89044 58276 க்கோ வாட்சப் செய்யலாம்

**இடமிருந்துவலம்**: 1.அன்பினால் செய்வது (5), 2. புஜங்கள் மேல் செல்பவன் (4), 3. துக்கம் (3) 4. காடு (3), 5. தொழில் (3 ), 6. தேனீ (4), 7. கீழானவன் (3), 8. ஸிவன் (2), 9. பாவங்களின் வரிசை (5), 10.தாமரை (5), 11. கடல்(3), 12. பாம்பு(2), 13.மீன்(3), 14.கிளிஞ்சல்(3), 15. தங்கம்(4), 16.மகிழ்வு(3), 17. பருத்தி(2), 18. விக்கல்(3), 19. கெட்ட மனிதன்(4), 20. மறந்து போதல்(5), 21. வத்ஸ்ரம்(4), 22. கூடவாழுதல்(4).

**வலமிருந்துஇடம்**: 21.பூமி(3), 23.நல்வழி(4), 24.சந்திரன்(3), 25. பெயர் அல்லது அழைக்கப்படுவது(4), 26.மலையில் பிறப்பவை(4), 27.இடி(3), 28.லக்ஷ்மி மணாளன்(4), 29.ஈனப்பிறவி(3), 30.ஆகாய ஆறு(4), 31.குணங்கள் அற்றவன்(4), 32.களைப்பு(4), 33.அசையும் அசையா(4).

**மேலிருந்துகீழ்** 1.தூய்மையான நீர்(5), 4.கருடன்(3), 7.சாப்பாடு(3), 10.பிரம்மா(6), 11.மழை(3), 20.பக்ஷிகளின் தலைவன். கடைசி எழுத்து இல்லை(4) 23.நண்பனுக்கு நண்பன்(6), 26.ஆசை(4), 31.துஷ்டத்தனம்(4), 34.வீடு(3), 35.நீச்சல் அடிக்கும் வல்லமை பெற்றவன்(6), 36.ஸந்தோஷப்படுபவன்(3), 37.தளர்வு இல்லாமல்(4).

**கீழிருந்துமேல்**: 7.சூரியன்(3), 14.தத்தளிப்பான்(4), 21. த்வேஷம்(4), 29.குயவனின் சக்கரம்(8), 30.ஒலி(3), 38.ரிஷிகேசன்(3), 39.மனைவி(3), 40.ஸாத்வீகஜீவன்(5), 41.நெருப்பு(3), 42.சுடுவது(5), 43.பசு, கழுதை போன்ற பிராணிகள்(3), 44.நட்சத்திரம்(2).

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

## ஹரபனஹள்ளி பீமவ்வா

(பீமேஷ கிருஷ்ணவிட்டலா) ஆண்டு: 1822-1903

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)...

இங்கு திருமண வீட்டில், ருக்மிணிதேவி, த்ரௌபதிதேவியை சென்று போர் புரிந்து, அவனை நிலத்தில் சாய்த்து, ரதியை அழைத்துக்கொண்டு வருவதற்கு அனுப்புகிறாள். த்ரௌபதிதேவி துர்க்கையின் அவதாரம் எடுத்து அந்த பௌண்ட்ரகனின் கழுத்தை வெட்டி சாய்த்து, ரதியை தூக்கிக்கொண்டு வந்து, அரசனின் முன் நிறுத்துகிறாள். இந்த கதை பாகங்களெல்லாம் பீமவ்வாவின் சொந்த கற்பனை ஆகும். ரதி மன்மதரின் திருமணம், சாஸ்திரோக்தமாக நடக்கிறது. அடுத்து பீமவ்வா அவர்கள் வழக்கம்போல உடுகோரெ, ஊட, முய்ய, ஒகுளியாட ஆகிய அனைத்தையும் மிகவும் ஜனரஞ்சகமாக, மிகவும் தத்ரூபமாக நம் எதிரிலேயே நடப்பதுபோல வர்ணிக்கிறார்.

'அதி பக்தியிந்த த்ரௌபதியு மன்மதகெ தா ரதிய தந்து லக்ன மாடித கதெயனு ஹிததிந்த ஹேளி கேளித ஜனரிகெல்லா ஸ்ரீபதி பீமேஷவிட்டல ஒலிது கொடுவ காமிதபலவ கருணதிந்த' என்று பலஸ்ருதி சொல்லி, ஆரதி செய்து இந்த கதையை முடிக்கிறார்.

கடைசியாக சுபத்ரா கல்யாணம். இந்த கதை, ஸ்ரீமத் பாகவத 10ம் ஸ்கந்தம் மற்றும் மஹாபாரதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதனை தம் கற்பனைக்கு தக்கவாறு, மிகவும் சுவாரசியமாக இயற்றியிருக்கிறார். மூல கதைக்கு எவ்வித பங்கமும் வரவில்லை. திரௌபதி - தர்மராய இருவரும் ஏகாந்தத்தில் இருந்தபோது, ஆயுதங்களை எடுக்க வேண்டும் என்று, திடீரென்று அர்ஜுனன் அவர்கள் எதிரில் வந்துவிடுகிறான். தாங்கள் செய்து கொண்ட ஒப்பந்தத்தின்படி, அண்ணனின் அனுமதி பெற்று, தீர்த்தயாத்திரைக்கு புறப்பட்டுச் செல்கிறான். கங்கா தீரத்தில் உலூபியை மற்றும் மணிபுரத்தில் சித்ராங்கதையை திருமணம் செய்துகொண்டு, அவர்கள் இருவரையும் அங்கங்கேயே விட்டு தான் த்வாராவதிக்கு வருகிறான்.

'கெட்ட கௌரவகீக புட்ட ஸுபத்ரெய கொட்டேனெனுத பலராமனு ஸ்ரேஷ்டதனதி ப்ரதிக்ஞெ மாடிரது இஷ்டவில்லவு கிருஷ்ணகெ' - என்று அர்ஜுனனுக்கு புரிகிறது. 'நா ஸுபத்ரெய தரதெ ஹோதரெ மீஸெயாதகெ முகதலி' என்று சபதம் செய்து சன்யாசி வேஷம் தரிக்கிறான். அவனுக்கு ஸ்ரீகிருஷ்ணனின் உதவி கிடைக்கிறது. பலராமனின் அரண்மனையின் பூஜை மந்திரத்தில் யதிகள் பூஜை செய்கிறார். அவருக்கு உதவியாக ஸுபத்ரெயே வருகிறாள். இந்திரபிரஸ்தத்திலிருந்து யதிகள் வந்திருக்கிறார் என்று அறிந்து ஒரு முறை அர்ஜுனனைப் பற்றி விசாரிக்கிறாள்.

பிறகு, அவரே பார்த்தன் என்று அறிந்து ஸுபத்ரை பயம், வெட்கம் அடைகிறாள். கிருஷ்ணன் தன் மனைவியருடன் அங்கு வந்து தேவகி வசுதேவ, உத்தவ, அக்ரூர என அனைவரையும் அழைக்கிறான். இந்திர, ப்ருஹஸ்பதி, கர்காசார்யர் ஆகியோரும் வருகின்றனர். அதே இரவில் ஸ்ரீகிருஷ்ணன், ஸுபத்ரை அர்ஜுனரின் திருமணத்தை நடத்தி முடிக்கிறான். நான்கைந்து நாட்கள் நடக்கவேண்டிய திருமணம், சாஸ்திர சம்பிரதாயங்களின்படி ஒரே இரவில் நடந்து முடிந்துவிடுகிறது. அன்றே இரவில், ஸ்ரீகிருஷ்ணன், புது மணத் தம்பதிகளை, இந்திரபிரஸ்தத்திற்கு அனுப்பி வைக்கிறான்.

அடுத்த நாள் அண்ணனை மிகவும் சமாதானம் செய்து, அனைவரையும் அஸ்தினாபுரத்திற்கு அழைத்துக் கொண்டு போகிறான். அங்கு அனைவரும் உண்டு, கொண்டாடி, பின் த்வாராவதிக்கு திரும்பி வருகின்றனர்.

இந்த காவியத்தில் 31 வசனங்கள் மற்றும் 32 த்வனிகள் இருக்கின்றன. 'தங்கி ஸுபத்ரெகல்யாணவ கேளலானந்த வாகோது தனு மனகெல்லா. மங்களாதேவி ரமண மங்களவீவ ஸஜ்ஜனகெல்லா' என்று இந்தப் பாடலை முடிக்கிறார்.

இத்துடன் ஹரபனஹள்ளி பீமவ்வா வாழ்க்கை வரலாறு முடிந்தது.

அடுத்து ஹரிதாசினி ஹௌவனகட்டெ கிரியம்மாவின் வரலாற்றினை பார்ப்போம்

## ஹரிதாசினி ஹெளவனகட்டே கிரியம்மா (1712 - 1790)

ரங்கனாத பதாஸக்தம் ரங்கனாதஸ்ய கிங்கரீ ।
கிரியம்மாபிதம் வந்தே ஞான வைராக்யஸித்தயே ॥

ரங்கனாத தேவன கிங்கரி ரங்கனாத பாதாஸக்தே ।
அங்கனெ தன்ன ஹ்ருதாயாங்கனதி ரங்கன காணுவ பக்தெ ।
அங்களதி சித்ரிஸுவ ரங்கோலியலி அனுரக்தெ ।
ஹிங்கதெ பக்தர பங்ககள நிவாரிஸுவ ஸஷக்தெ ।
பங்கார ஷ்ருங்கார ஸம்ஸார போகதலி விரக்தெ ।
மங்களாங்க ஹரிவிட்டலன பக்தர ஸங்க ஸம்யுக்தெ ।
துங்கெ உத்துங்கெ ஸாத்வி கிரியம்ம ஜீவன்முக்தெ ॥

ஹெளவன கட்டெ கிரியம்ம, பீஷ்மப்ப ஜோயிஸரின் மகள். அவளின் தாயைப் பற்றியும், அவரின் பிறந்த தேதி மற்றும் வாழ்க்கை ஆகிய எந்த விஷயத்தைப் பற்றியும் விஷயங்கள் சரியாக கிடைக்கவில்லை என்றாலும், அவரின் பாடல்கள் மூலமாகவே ஆராய்ச்சியாளர்கள் அவரின் வாழ்க்கை சம்பவங்களை தொகுத்திருக்கிறார்கள்.

கிரியம்மா பிறந்த ஊர் ராணே பென்னூர். சிறிய வயதிலேயே அவரின் பெற்றோர் இறந்துவிட, அவர் தன் சித்தப்பா-சித்தியிடம் வளர்ந்தார். ஆனால், அவரின் தந்தை இறப்பதற்கு முன்னரே, கிரியம்மா அவரிடமிருந்து தேவையான வித்யை கற்றிருந்தார். அப்போதே அவரிடம் கவிதாசக்தி வெளிப்பட்டிருந்தது. அந்த கால வழக்கப்படி, 10-12 வயதிலேயே திருமணம் நடைபெறுவதால், மலெபென்னூரின் திப்பரஸனுடன் கிரியம்மாவுக்கு திருமணம் நடைபெற்றது. ஆனால், இவருக்கு சம்சாரத்தில் விருப்பமே இருந்திருக்கவில்லை.

அவர்களின் முதல் இரவில், திப்பரஸனுக்கு கிரியம்மாவின் இடத்தில் அவருக்கு பதிலாக ஒரு பெரிய சர்ப்பம் தெரிந்தது என்றும், அன்றிலிருந்து அவர் மேல் மிகப்பெரிய கௌரவம் வந்தது என்றும் சொல்கின்றனர். வைராக்கியம் வந்துவிட்டது என்று கிரியம்மா சம்சாரத்தை விடவில்லை. அத்தை, மாமா, கணவன் என அனைவரின் சேவையை செய்து கொண்டே இருந்தார். அத்தை மாமாவிடம் கூறி, தன் கணவனுக்கு இரண்டாம் திருமணத்தை

செய்து வைத்தார். தான் விராகிணியாகவே (வைராக்கியசாலி) இருந்தார்.

வீட்டு வேலைகளை செய்தவாறு, அத்தை மாமாவிற்கு சேவை செய்தவாறு காலத்தை கழித்தார். அக்கம் பக்கத்து வீட்டு குழந்தைகள், சிறுவர் சிறுமிகளின் காய்ச்சல், சளி, இருமல்களுக்கு மருந்து கொடுத்து, அவற்றை தீர்த்து, சமூகத்திற்கு பயனாக இருந்தார். துக்க கஷ்டங்களுக்காக கஷ்டப்படுபவர்களுக்கு ஒரு நல்ல வழிகாட்டியாக இருந்து, அனைவராலும் 'அம்மனவரு' என்று அன்புடன் அழைக்கப்பட்டார்.

நீர் கொண்டு வரவும், துணி துவைக்கவும் கிரியம்மா ஏரிக்கரைக்கு வரும் வழக்கம் கொண்டிருந்தார். அங்கு அருகில் ரங்கநாதனின் ஆலயம் ஒன்று இருந்தது. அங்கு ஒரு மாற்றுத் திறனாளி (ஹெளவ) வசித்துக் கொண்டிருந்தானாம். அவனே அந்த ஏரியைக் கட்டி, ரங்கநாதனின் ஆலயத்தையும் நிர்மாணம் செய்தானாம். ஆகவே அது 'ஹெளவன கட்டெ ரங்கநாத' என்றே பெயர் பெற்றது. ரங்கநாதனின் தரிசனத்திற்கு வந்தபோது, ஆலயத்தின் அக்கம்பக்கத்தில் சுத்தம் செய்வது, பெருக்கி பற்பல அழகான கோலங்களைப் போடுவது ஆகியவற்றை தன் வழக்கமாக ஆக்கிக்கொண்டார் கிரியம்மா.

அங்கேயே பூ கட்டுவது, பூஜிப்பது, பஜனை செய்வது ஆகியவற்றிலேயே கிரியம்மா மெய்மறந்தார். அதே 'ஹெளவன கட்டே ரங்கநாதனின்' அங்கிதத்தால் பல்வேறு கீர்த்தனைகளை இயற்றி பாடிக்கொண்டிருந்தார். இவளை 'தென்னிந்திய மீரா' 'ராதிகெ' என்றெல்லாம் மக்கள் புகழ்ந்தனர். தெய்வாம்சம் கொண்டவள் என்று அனைவரும் மரியாதை செலுத்தி வந்தனர். பால் கறக்கும்போது, தயிர் கடையும்போதெல்லாம் கிரியம்மாவிற்கு பாலகிருஷ்ணன் தரிசனம் கொடுத்து வந்தானாம். அவளுடன் விளையாடி வந்தானாம்.

(தொடரும்)...

| தொடர் | **கன்னட தந்த்ரசாரம் - ஸ்ரீவரதேந்திர தீர்த்தர்** |
|---|---|
| | **உரை: திரு.குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்** |

**[சரணம் - 13]**
தனய கேளி மந்த்ரகத நால்கு ரூபகளு அனிருத்த ப்ரத்யும்ன சங்கர்ஷணா |
அனக ஸ்ரீவாசுதேவன மூர்த்திகளு சிந்தனெ மாடு ஈ வ்யாஹ்ருதியலி பிடதே ||13

மகனே! கேள். இந்த மந்திரத்தில் உள்ள நான்கு ரூபங்கள் - அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண மற்றும் குறையற்ற ஸ்ரீவாசுதேவன். இந்த நான்கு மூர்த்திகளை, இந்த வியாஹ்ருதியில் விடாமல் சிந்தனை செய்.

ஓம் பூ: ஓம் புவ: ஓம் ஸுவ: ஓம் பூர்புவஸ்ஸுவ: என்பதே வியாஹ்ருதி மந்திரத்தின் நான்கு வர்ணங்கள். இவற்றின் பிரதிபாத்ய தேவதைகள் அல்லது ஹரிரூபங்கள்: அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண மற்றும் வாசுதேவ ஆகும். இவற்றை சிந்தியுங்கள்.

தந்த்ரசார (1-12) மூலம் இவ்வாறு கூறுகிறது:
அனிருத்தாதி காஸ்தாஸாம் தேவதா வ்யுத்க்ரமேண வா |
தாஷ்சதுர் மூர்த்த்தயஸ்த்யேவ த்வாதஷார்ண பதோதிதா: ||

அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண மற்றும் வாசுதேவ ஆகிய ஹரிரூபங்கள், நான்கு வியாஹ்ருதிகளை பிரதிபாதிக்கின்றன. அல்லது இதற்கு நேர்மாறான, தலைகீழான ரூபங்கள், நான்கு வியாஹ்ருதிகளையும் பிரதிபாதிக்கின்றன. (வாசுதேவ, சங்கர்ஷண, பிரத்யும்ன, அனிருத்த ரூபங்கள் என்பது போல). இந்த நான்கு ரூபங்களே ஸ்ரீவாசுதேவ 12 எழுத்து மந்திரத்தின் நான்கு பாதங்களையும் பிரதிபாதிக்கின்றன.

ஓம் நமோ பகவதே வாசுதேவாய என்பதே வாசுதேவ 12 மந்திரமாகும். (த்வாதச அக்ஷர மந்திரம்).

(இதன் பாடல் அடுத்ததாக வருகிறது).

| **வியாஹ்ருதிகள்** | **வாசுதேவ 12 எழுத்து மந்திர பாதங்கள்** |
|---|---|
| பூ: | ஓம் |
| புவ: | நமோ |
| ஸ்வ: (ஸுவ:) | பகவதே |
| பூர்புவஸ்வ: (ஸுவ:) | வாசுதேவாய |

கிருஹஸ்தன் வியாஹ்ருதிகளை ஜெபிக்கும்போது, வாசுதேவ, சங்கர்ஷண, பிரத்யும்ன, அனிருத்த என்று நினைக்க வேண்டும். சன்னியாசிகள், அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண மற்றும் வாசுதேவ உருவங்களை நினைக்க வேண்டும் என்று ஓர் உரையாசிரியர் கூறியுள்ளார். இவை அடுத்த சரணத்தின் விஷயங்கள் ஆகும்.

**[சரணம் - 14]**

நிகமாதி மொதலு நால்வர்ணதிம் ஓம் நமோ பகவதே வாசுதேவாய எம்ப ।
யுகள ஆரக்ஷராத்மக மந்த்ரப்ரதிபாத்யனா பகவத்ரூபகள பேள்வெ நா நினகெ ||14

மறைகளின் முதல் நான்கு வியாஹ்ருதி எழுத்துக்கள் மூலம் ஓம் நமோ பகவதே வாசுதேவாய என்கிற இரட்டை-ஆறு (12) எழுத்துக்கள் கொண்ட, வாசுதேவ மந்திரத்தின் உருவங்களை கூறுவேன் உனக்கு. (இவை ஏற்கனவே மேலே விவரிக்கப்பட்டு உள்ளன).

**[சரணம் - 15]**

கேஷவ நாராயணனு மாதவனு கோவிந்த க்லேஷனாஷன விஷ்ணு மதுசூதனா ।
ஸ்ரீஷ த்ரிவிக்ரமனு வாமன ஸ்ரீதர ஹ்ருஷிகேஷாம்பு3ருஹனாப4 தா3மோத3ரா ||15

கேசவ, நாராயண, மாதவ, கோவிந்த; கஷ்டங்களை அழிக்கும் விஷ்ணு மதுசூதனா; திரு, பிரபு, திரிவிக்ரமா, வாமன, ஸ்ரீதர, ஹ்ருஷிகேஷ, பத்மனாப, தாமோதர - ஆகியவை 12 உருவங்கள் ஆகும்.

ஓம், ந, மோ, ப, க, வ, தே, வா, சு, தே, வா, ய - என்பது 12 எழுத்து மந்திரம். இரண்டு ஜோடி ஆறெழுத்து இதுவே. இதற்கான பிரமாணம் மூலத்தில் (1-13) இவ்வாறு உள்ளது.

நாராயணாஷ்டாக்ஷராச்ச வ்யாஹ்ருதிப்யஸ்ததைவ ச ।
வி பேதோ த்வாதஷார்ண்ணானாம் கேஷவாத்யாஸ்ச தேவதா: ||

வாசுதேவ 12 எழுத்து மந்திரமான 'ஓம் நமோ பகவதே வாசுதேவாய' என்பது எட்டு எழுத்து நாராயண மந்திரத்திலிருந்தும் (ஓம் நமோ நாராயணாய) மற்றும் நான்கு எழுத்து வியாஹ்ருதி மந்திரத்திலிருந்தும் வெளிப்பட்டுள்ளது. வாசுதேவ மந்திரத்தின் 12 எழுத்துக்கள், தனித்தனியாக கேசவ முதலிய 12 பகவத் ரூபங்களை பிரதிபாதிக்கின்றன. ஓம் நமோ நாராயணாய + பூ: புவ: ஸ்வ: (8+4=12) - இதுவே த்வாதஷ அக்ஷர மந்திரமான - ஓம் நமோ பகவதே வாசுதேவாய என்று வெளிப்பட்டுள்ளது.

| வாசுதேவ மந்திரத்தின் 12 எழுத்துக்கள் | கேசவாதி 12 பகவத் ரூபங்கள் |
|---|---|
| ஓம் | கேசவ |
| ந | நாராயண |
| மோ | மாதவ |
| ப | கோவிந்த |
| க | விஷ்ணு |
| வ | மதுசூதன |
| தே | த்ரிவிக்ரம |
| வா | வாமன |
| சு | ஸ்ரீதர |
| தே | ஹ்ருஷிகேஷ |
| வா | பத்மனாப |
| ய | தாமோதர |

[சரணம் 16]
த்ரித1ய ஆவர்த்தி அஷ்டார்ணதி3ம் மூரு வ்யாஹ்ருதியிந்த3
த்விஷட3க்ஷரெரட3ரிந்த3 ।

சதுராஸ்ய கேளு கா3யத்ரி உத்பன்னவாயிது கேஷவாதி3 க்ருஷ்ணாந்தரூபா ||16

மூன்று முறை எட்டெழுத்து மந்திரம் மற்றும் வியாஹ்ருதி மந்திரம்; இரண்டிரண்டு முறை ஆறெழுத்து மந்திரம் - ஹே நான்முகக் கடவுளே கேள். காயத்ரி பிறந்தது. அவற்றிற்கு கேசவ முதற்கொண்டு கிருஷ்ணன் வரையில் 24 ரூபங்கள் அமைந்தன.

இப்போது மூன்றாவது முறை, எப்படி பிரணவத்தின் எட்டெழுத்துக்கள், காயத்ரியை தோற்றுவித்தன என்பதைப் பற்றி கூறுகிறார்.

பிரணவம் - எட்டு எழுத்து. (அ,உ,ம்,நாத, பிந்து, கோஷ, ஷாந்த, அதிஷாந்த).
வியாஹ்ருதி - மூன்று எழுத்து (பூ:, புவ:, ஸ்வ).
பிரணவம் x வியாஹ்ருதி = 8 x 3 = 24.

நாராயண அஷ்டாக்ஷரம் - எட்டெழுத்து; (ஓம் நமோ நாராயணாய).
அது மூன்று முறை (ஆவர்த்தி) சேர்ந்தால், 8 x 3 = 24.

விஷ்ணு மந்திரம் : ஓம் விஷ்ணவே நம:
ஓம், விஷ், ண, வே, ந, ம: - ஆறெழுத்து.
இது இரண்டு இரண்டு முறை சேர்த்தால், 6 x 2 x 2 = 24

காயத்ரி மந்திரம் = 24 எழுத்துக்கள். இவையே காயத்ரியாக ஆனது.

தத், ஸ, வி, துர், வ, ரே, ணி, யம் - 8 எழுத்துக்கள்
பர், கோ, தே, வ, ஸ்ய, தீ, ம, ஹி - 8 எழுத்துக்கள்
தி, யோ, யோ, ந:, ப்ர, சோ, த, யாத் - 8 எழுத்துக்கள்

கேசவ, நாராயண, மாதவ, கோவிந்த, விஷ்ணு, மதுசூதன, த்ரிவிக்ரம, வாமன, ஸ்ரீதர, ஹ்ருஷிகேஷ, பத்மனாப, தாமோதர, சங்கர்ஷண, வாசுதேவ, பிரத்யும்ன, அனிருத்த, புருஷோத்தம, அதோக்ஷஜ, நாரசிம்ம, அச்யுத, ஜனார்த்தன, உபேந்திர, ஹரி, ஸ்ரீகிருஷ்ண (12+12=24) ஆகிய 24 ரூபங்களும், மேற்சொன்ன 24 எழுத்துக்களை பிரதிபலிக்கின்றன. இதுவே இந்த பத்யத்தில் கூறப்பட்டுள்ளது.

***** அடுத்த இதழில் தொடரும்**

**** திரு.குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்**

தொடர்

## கன்னட கிரந்தங்கள் அறிமுகம்

## ஸ்ரீவியாசராயரின் பகவத் கீதா ஸாரம்

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)

ஐந்தாவது ஸ்லோகம் மற்றும் பதத்திலே (9&10), யோகம், தியானம், ஸன்யாஸம் முதலியவை பற்றிக் கூறும் விதமாக, ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா யோகம், ஸன்யாஸம் என இரண்டையும் உடையவர்களுக்கே மோக்ஷம் என்பது திடமாகும் எனக் கூறி, தாமரை இலையில் நீர்போல, யோகியானவன் இவ்வுலகில் இருந்தாலும் உலக விஷயங்களில் அவனது மனது ஒட்டுவதில்லை, அது பகவானிடமே உள்ளது என விவரித்து, மேலும் தாம் ப்ரம்மனிடத்திலும், ப்ராஹ்மணனிடத்திலும், யானையிடத்திலும் சமமாக இருப்பதாகவும் (பிம்ப ரூபி), தம்மை பஜிப்பவர்கள் மனதிலும் நிலைபெற்று உள்ளதாகவும் விளக்கி, ஜீவன் மனப்பூர்வமாக சிந்தித்து நோக்கினால், ஜீவனுக்கு சத்ருக்கள் யாருமில்லை, மித்திரர்கள் யாருமில்லை என உணர்ந்து, மண்ணும் பொன்னும் ஒன்றெனக் கொண்டு, நல்ல ஆஸனத்தில் ஸ்திரமாக அமர்ந்து, மனதை அடக்கி, மூக்கின் நுனியில் பார்வையிட்டு, த்யானம் செய்பவன் எவனோ, அவனே யோகி, அந்த யோகியிடம் ஸ்ரீ ஹரி (ஸ்ரீ கிருஷ்ணன்) ஸன்னிதானத்துடன் கூடி இருக்கிறான் என அர்ச்சுனனுக்கு உபதேஸம் செய்ததை ஸ்ரீ வியாஸராஜர் விவரிக்கிறார்.

ஆறாவது ஸ்லோகம் மற்றும் பதத்திலே (11&12), பகவான் மேலும் தொடர்ந்து, தமது பாத கமலத்தில் பக்தி செய்பவர்களுக்கு ஸம்ஸாரத்தின் உபாதைகள் இல்லை எனவும் கூறி, இந்த ஸரீரமே க்ஷேத்திரம், உள்ளுரையும் பகவானே (பிம்பரூபி) க்ஷேத்ரக்ஞன் என அறிந்து, உபாஸனை செய்ய வேண்டும் எனவும், பகவானுக்கு சுகம், துக்கம் என்பது கிடையாது, அவனுக்கு ஒன்றும் ஒட்டுவதும் இல்லை, த்ரிகுணங்களான ஸத்வ, ரஜஸ், தமஸ் முதலியவற்றையும் மீறி நிற்பவன் பகவான், சுகம் மற்றும் துக்கம் என இரண்டையும் சமமாகக் கண்டு திடமாக அனுபவித்துக் கொண்டு வாழ வேண்டும், ப்ரம்மத்தைக் காண வேண்டும் எனவும் கூறி சந்திர, சூரியனின் ப்ரகாஸமும் தன்னிடமிருந்தே உருவாகின்றன எனவும், உண்ணும் அன்னத்தில் தாமே (பகவான்) இருந்து, ஜீரணிப்பவனும் தானே (வைஸ்வானர ரூபம்) எனவும், குடாகேஸனான அர்ச்சுனனுக்கு

உபதேஸம் செய்ததை , “சந்த்ர ஸூர்யன தேஜ நனதய்ய | குடா கேஸய்ய | அன்ன பான வெனதய்ய |” முதலான பதங்களினால் விளக்குகிறார் ஸ்ரீவியாஸராஜர்.

ஏழாவது ஸ்லோகம் மற்றும் பதத்திலே (13&14) பகவான், தானே உத்தமன் எனவும். தன்னிடம் மனதைச் செலுத்துமாறும், ஞானம், அஞ்ஞானம் இவைகளைப் பற்றிக் கூறி , ஞானம் கிடைப்பது சாத்தியமான ஒன்றல்ல, அவரவர்களின் பக்திக்கு (யோக்யதைக்கு) தகுந்தாற் போல பலனைத் தான் தருவதாகவும், தன்னை யார் ஸ்மரித்துக் கொண்டே அந்திம காலத்தில் தேஹத்தை விடுகிறார்களோ, அவர்கள் தன்னையே (பகவான்) அடைவார்கள் எனவும், எல்லாவிதமான ஜீவர்களிலும் அசேதனங்களிலும் தான் இருப்பதை அறிந்தவனுக்கு ஸ்ரீ ஹரியான தான் மிகவும் ஸுலபன் எனவும், அவ்விதம் ஸ்மரிப்பவனுக்கு மீண்டும் பிறப்பில்லை, அத்தகைய பக்தனுக்கு நாசம் கிடையாது, அவன் ஸ்வர்க்கத்தையும் கூட விரும்புவது இல்லை எனவும் அர்ச்சுனனுக்கு உபதேஸம் செய்த விதத்தை ஸ்ரீ வியாஸராஜர் வர்ணிக்கிறார்.

எட்டாவது ஸ்லோகம் மற்றும் பதத்திலே (15&16), பகவான் தம்முடைய விபூதி ரூபங்களையும், விஸ்வ ரூபத்தையும் வர்ணிக்கும் விதத்தில் அர்ச்சுனன் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவிடம் விபூதி ரூபங்களைக் காண்பிக்கும்படி தமது விருப்பத்தைத் தெரிவிக்க, பகவான் அவைகளைக் காண்பித்து விளக்கும் வகையில், ராஜாக்களில் தான் சக்கரவர்த்தி, நக்ஷத்திர மண்டலத்தில் சந்திரன், அக்ஷரங்களில் ‘அ’என்னும் எழுத்து, பக்ஷிகளில் கருடன் என இவ்விதம் எல்லாவற்றிலும் ஸ்ரேஷ்டமானது எதுவோ அது தான் ஒருவனே எனவும் அறிய வைத்து, மேலும் பகவானின் விஸ்வரூபத்தைக் காண்பிக்க ப்ரார்த்தனை செய்த அர்ச்சுனனுக்கு, பகவான் ப்ரஹ்மாண்டத்தில் உள்ள ஸ்ரீ கிருஷ்ணனின் விஸ்வரூபத்தில் (விராட் ரூபத்தில்), அர்ச்சுனன் தன்னையும், அருகே நின்ற ஸ்ரீ கிருஷ்ணனையும், ப்ரஹ்மாண்டத்தையும் காணும்படி செய்த விதத்தை ஸ்ரீ வியாஸராஜர், “கண்டனு தன்னனு ஸஹிதாதி | ஹரி தேஹதி ப்ரஹ்மாண்டதி |" போன்ற பதங்களினால் வர்ணிக்கிறார்.

ஒன்பதாவது ஸ்லோகம் மற்றும் பதத்தில் (17&18) பகவான் நாஸமுள்ளவர்கள் (க்ஷர) நாஸமற்றவளான (அக்ஷர) மஹாலஷ்மி என இரண்டைக் காட்டிலும் உத்தமனான புருஷோத்தமன் தானே எனவும் காமம், குரோதம், லோபம் முதலான

துர்குணங்களுக்கும், அதீனமான தானே ஸஜ்ஜனர்களை அவற்றில் விழாமல் காப்பதாகவும் கூறி, ஸஜ்ஜனர்களுக்கு தானம், தக்ஷணை மிக அளிப்பதுடன், எல்லா தானங்களிலும் சிறந்தது தன் மீது வைக்கும் பக்தி என அறிந்து அதன்படி நடப்பது பூரண சக்தியை அளிக்கும் எனவும், இதர விஷயங்களில் விரக்தியாக இருக்கவும் உபதேஸம் அளிக்க, அர்ச்சுனன் பகவானிடம், தாம் புத்தி தெளிந்து யோக்யதை அடைந்த தையும், தமக்கு மோஹம், சந்தேஹம் எல்லாம் விலகியதையும், பகவானின் நல்ல வார்த்தைகளினால் ஆனந்தம் அடைந்ததாகவும் கூறிப் பணிந்ததையும், ஸ்ரீ கிருஷ்ணன் மற்றும் பீமனின் தம்பியாகிய அர்ச்சுனனுக்கு இடையே நிகழ்ந்த இந்த ஸம்பாஷணை மஹத்தான விஷயங்களைக் கொண்டது எனவும், எங்கு ஸ்ரீ கிருஷ்ணன் உண்டோ, அங்கு வெற்றி நிச்சயம் எனவும் வியாஸரின் அனுக்ரஹம் பெற்ற ஸஞ்சயன் உரைக்க, திருதராஷ்டிரன் இவையனைத்தையும் கேட்டுத் தெரிந்தான் என்பதையும், "ஸ்ரீ கிருஷ்ண பீமானுஜர ஸம்வாத | மஹ ஸுகப்ரத | திருதராஷ்டிர கேளித | பல்லெனு வ்யாஸர தயதிந்த | மனஸீனிந்த | கிருஷ்ணல்லே ஜெய வெந்த ||" என்ற பதங்களினால் விளக்கி பூர்த்தி செய்கிறார் ஸ்ரீ வியாஸராஜர்.

கீதையின் ஸாரத்தை அருளிய ஸ்ரீ வியாஸராஜரின் இவ்வுயரிய க்ரந்தத்தைப் பாராயணம் செய்வதாலேயே முழு கீதையின் பாராயண பலன் கிட்டும் என்பதில் சந்தேகமில்லை. இதனை அனுதினமும் அதன் விஸேஷ அர்த்தங்களைத் தெரிந்து பாராயணம் செய்து ஸ்ரீ வியாஸ ராஜரின் அந்தர்யாமியான ஸ்ரீ மூல கோபால கிருஷ்ணனின் அனுக்ரஹத்திற்கு பாத்திரமாவோமாக !

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.**

**S.லக்ஷ்மிபதிராஜா, சென்னை**

## Subscription Renewal

தகுந்த சமயத்தில் உங்கள் சந்தாவை புதுப்பித்து, ஹரிதாச விஜயம் பத்திரிக்கை தொடர்ந்து வருமாறு பார்த்துக் கொள்ளவும். உங்கள் ஆதரவு இருந்தால் மட்டுமே ஹரிதாச விஜயம் தொடர்ந்து வெளி வருவது சாத்தியம்.

**ஆராதனை**

## ஸ்ரீமொதலகல்லு சேஷதாசர்

## வைசாக சுத்த அஷ்டமி

இரண்டாம் கட்டத்தின் தலைவரான ஸ்ரீவிஜயதாசரினால் வளர்ந்த ஹரிதாச பரம்பரை, இன்றும் அனைத்து திசைகளிலும் கொடிகட்டிப் பறந்து வருகிறதுஸ்ரீவிஜயதாசரின் முக்கிய சிஷ்யர்களில் ஒருவர் . இந்த சேஷப்பா .மொதலகல் சேஷதாசர், ஸ்ரீவிஜயதாசரிடமிருந்து கனவில் அங்கிதத்தைப் பெற்று சேஷதாசர் என்று பெயர் பெற்றார் . கணக்காளரான தந்தையின் வேலையையே செய்து வந்த இவர், ஸ்ரீபிராணதேவர், ஸ்ரீருத்ரர் ஆகியோர்களைக் குறித்து கடும்தவம் புரிந்து, சித்தி பெற்றார் .

'குரு விஜயவிட்டலா' என்ற அங்கிதத்தில் பற்பல கிருதிகளை இயற்றி, தம் கிருஹஸ்த ஜீவனத்தை நடத்தி வந்தார்நித்ய . அன்னதானம், அதிதிகளின் ஆராதனை, தீர்த்தக்ஷேத்திர யாத்திரை ஆகியவையே இவரது வாழ்க்கையின் முக்கிய வேலைகளாயிற்று . சுளாதிகள் - இவரது கிருதிகளில், ஹரிகதாம்ருதசார மங்களாசரண சந்திக்கு உரை, சக்ராப்ஜ மண்டலத்தின் விவரணை, ஐந்து சூத்திரங்கள், கீதா சூத்திரம், ஞானயக்ஞ சுளாதி ஆகியவை உள்ளன . இவரைப் பற்றி, ஹரபனஹள்ளி பீமவ்வா சொன்னது:

குஷ்டரோக வியாதிஜ்வர சதுர்த்தி பயபீதிகளனெல்ல
பிட்டோடிஸி தீர்த்த அங்காரதல்லி சமஸ்தர மஹிமெ நோடி
ஸ்மரிஸி பதுகிரோ சர்வானந்த குருகள ||

என்று தாசரின் மகிமையை பாடியிருக்கிறார் .

தாசர் தமது வாழ்க்கை முழுவதும், சஜ்ஜனர்களுக்கு உதவி, உபதேசம், அன்ன சத்திரம், கிருதிகளை இயற்றுவது என்றே கழித்தார்அவரின் சமகாலத்திய அனைத்து பீடாதிபதிகளின் ., குறிப்பாக உத்தராதி மடாதீசரின் கௌரவத்திற்குப் பாத்திரராகி அன்றைய கத்வால் அரசராலும் கௌரவிக்கப்பட்டிருந்தார்.

இரு மனைவிகளைக் கொண்டிருந்த சேஷதாசருக்கு இரு மகன்கள் . .இருவரும் இவரிடமிருந்தே அங்கிதம் பெற்று தாசராக இருந்தனர்

.பீமதாச மற்றும் கோவிந்ததாச என்று அந்த பரம்பரை வளர்ந்தது தாசர், சிப்பகிரியில் குருவிற்கு சேவை செய்து வந்தார் பலருக்கு . ஆண்டு .வழிகாட்டியாகவும் இருந்தார்1817ல் பிறந்த இவர், 1885 வைசாக சுத்த அஷ்டமியன்று வைகுண்டவாசியானார் . .ஆதாரபூர்வமான இவரது கிருதிகள் நமக்கு கிடைத்திருக்கின்றன அனைத்து சஜ்ஜனர்களுக்கும் அவரது அருள் கிடைக்கட்டும் என்று வேண்டுவோமாக.

தொடர்

**ஹரிகதாம்ருதசார பத்ய அர்த்தங்கள்**

**கருணா சந்தி - தொடர்ச்சி**

த4னவ சம்ரக்ஷிசுவ ப2ணி தா
நுணதே3 மத்தொ1ப்ப3ரிகெ3 கொட3த3னு
தி3னதி3 நோடு3த சுகிசுவந்ததி3 லகுமிவல்லப4னு |
ப்ரணதரனு காய்தி3ஹனு நிஷ்கா1
மனதி3 நித்யானந்த3மய து3
ர்ஜனர சேவேயனொல்லன ப்ரதிமல்ல ஜக3க்கெல்ல ||12

முந்தைய காலத்தில் செல்வங்களை பாதுகாப்பதற்கு, அவற்றை பூமியில் குழி தோண்டி புதைத்து வைக்கும் வழக்கத்தைக் கொண்டிருந்தனர். இதற்கு புதையல் என்று பெயர். அந்த புதையல்களை பாம்புகள் காவல் காத்து வருகின்றன என்பது அந்த மக்களின் நம்பிக்கை. இதற்காகவே அவற்றிற்கு நன்றி தெரிவிக்கும் பொருட்டு, அந்த காலத்திலிருந்து நாக சதுர்த்தியன்று, வீட்டிற்கு முன்னர் பாம்புகளை வரைந்து பூஜை செய்யும் சம்பிரதாயம் வந்திருக்கிறது. ஆனால், அந்த பாம்புகள், அந்த செல்வத்தினை தானும் பயன்படுத்தப் போவதில்லை, மற்றவர்களை எடுக்கவும் விடாது.

அது போல, ஸ்ரீஹரியும் தன் பக்தர்கள் செய்யும் சாதனைகளை (ஏகாதசி விரத அனுஷ்டானங்களோ, பூஜை புனஸ்காரங்களோ) ரக்ஷணை செய்கிறான். அதாவது, நாம் 'நாஹம் கர்தா ஹரி: கர்தா' என்று நம் செயல்களை, எவ்வித பலன்களையும் எதிர்பார்க்காமல், பகவந்தனின் பாதங்களில் சமர்ப்பணம் செய்தால், ஸ்ரீஹரி அதனை ரக்ஷணை செய்கிறான்.

ஸ்ரீஹரியை பரிசோதனை செய்ய வேண்டும் என்ற மனதுடன் (பலன் கிடைத்தால் பூஜை செய்கிறேன், பலன் கிடைக்கவில்லை என்றால், சேவையை நிறுத்திவிடுகிறேன் போன்ற எண்ணங்களுடன்) ஐஹிக சேவைகளை செய்தால், நித்யானந்த ஸ்வரூபனான ஸ்ரீஹரி, அத்தகைய துர்ஜனர்களின் சேவைகளை ஏற்றுக் கொள்வதில்லை.

ஸ்ரீஹரி, ஸ்வரமணனாக இருந்தாலும், நிர்லிப்தனாக இருந்து, நம் சேவைகளை ஏற்றுக்கொண்டு நமக்கு மோட்சத்தையே கொடுத்து அருள்கிறான் என்று முடிக்கிறார்.

அதாவது,
* நிஷ்காம கர்மத்தை செய்ய வேண்டும்
* பரமாத்மனுக்கு சாஷ்டாங்க நமஸ்காரங்களை செய்ய வேண்டும்
* ந அஹம் கர்த்தா ஹரி: கர்த்தா என்று அனுசந்தானம் செய்ய வேண்டும்
போன்ற விஷயங்களை இந்த பத்யத்தின் மூலம் ஸ்ரீஜகன்னாததாசர் நமக்கு தெரிவிக்கிறார்.

ஜனனியனு கா1ணதி3ஹ பா3லக
நெனெனெனெது3 ஹலபு3திரெ கத்தலெ
மனொயொளட3கி3த்த3வன நோடு3த நகு3த ஹருஷத3லி |
தனயனம்பி3கி3த3ப்பி ரம்பிஸி
கனனிகெய களெவந்தெ மதுசூ
த4னனு தன்னவரித்தெடெ3கெ3 ப3ந்தொ3த3கி ஸலஹுவனு ||13

எப்போதும் தன்னுடனேயே இருக்கும் குழந்தையானது, தான் சில நிமிடங்கள் கண்மறைவாக இருந்தால் தேடுகிறதா என்று சோதித்துப் பார்க்கும் நோக்கத்துடன், குழந்தையை வீட்டில் படுக்க வைத்து, தான் ஒரு இருட்டான அறையில் சென்று மறைந்து நின்று அக்குழந்தையை பார்க்கிறாள். அதே போல அக்குழந்தையும் சில நிமிடங்களில் தன் தாயைக் காணாமல், 'அம்மா, அம்மா' என்று அழத் துவங்குகிறது. அங்கும் இங்கும் தலையைத் திருப்பி அவளை தேடுகிறது. இதைக்கண்ட அந்த தாய்க்கு மிகவும் மகிழ்ச்சியாகிறது. தன்னைத்தான் தன் குழந்தை தேடுகிறது என்று தெரிந்தவுடன், ஓடோடி வந்து, குழந்தையை தூக்கி, முத்தம் கொடுத்து, கட்டியணைத்து, சமாதானம் செய்கிறாள்.

இந்த குழந்தையைப் போலவே, நாமும் நம் தாயான ஸ்ரீகிருஷ்ணனை நினைத்து, சிந்தித்து, எப்போதும் ஸ்மரணை செய்து கொண்டே இருக்கவேண்டும். இது மட்டுமல்ல, 'ஹலபுதிரெ' அதாவது 'உளறுவது' அல்லது திரும்பத்திரும்ப சொன்னதையே சொல்வது என்று அர்த்தம். ஸ்ரீகிருஷ்ணனின் குணங்களை, எந்நேரமும் திரும்பத்திரும்ப சொல்லிக் கொண்டே இருக்கவேண்டும்.

இப்படி அஞ்ஞானத்தில் இருக்கும் நாம் பகவந்தனை நினைத்து அவனை பூஜித்தால், அவன் சிரித்தவாறு வந்து, இவன் என் தியானம், என் ஸ்மரணை செய்கிறான், என்னை நினைத்து பக்தி பரவசத்துடன் ஆனந்தக்கண்ணீர் விட்டு அழுது கொண்டிருக்கிறான், என் தீர்த்தக்ஷேத்ர யாத்திரைகளை செய்துகொண்டு சாதனைகளை செய்கிறான் - என்று சொல்லி, நமக்கு அருள்கிறான் என்கிறார் தாசராயர்.

இப்படியாக, ஸ்ரீஜகன்னாததாசர், ஸ்ரீஹரி எப்பேற்பட்ட கருணாளு என்பதை விவரிக்கிறார். சிறிதளவு காசும் செலவில்லை. எவ்வித சிரமமும் இல்லை. அமர்ந்த இடத்திலிருந்தே, அச்யுதா, அனந்தா, கோவிந்தா என்று அவனது நாமஸ்மரணைகளை நாம் செய்யலாம். தொடர்ந்து எப்போதும் அவனது பெயர்களையே, குணங்களே ஜெபித்துக் கொண்டிருக்கலாம். அப்படி செய்தால், பகவந்தன் மகிழ்ந்து நமக்கு மோட்சத்தையே கொடுத்து அருள்கிறான் என்று சொல்கிறார்.

*** **திரு. முரளிதர தாசர், பெங்களூரு**

## வாட்சப் க்ரூப்

ஹரிதாச விஜயம் வாட்சப் க்ரூப் ஒன்று உள்ளது. இதில் ஹரிதாசர்களின் புண்ய தினங்களில் அவர்களைப் பற்றிய தகவல்கள், புதிய புத்தகங்கள் போன்ற தகவல்கள் வெளியாகின்றன. Admin-only. No spam. விருப்பப்பட்டவர்கள் இணைந்து கொள்ளலாம். Contact : 89044 58276

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி
## நாடி பிரகரண சந்தி விடைகள்

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| [1]ப | ரே | ஸ | ன் | [29]ப | [21]லே | [30]ஏ | | | [2]ஸௌ | ப | [3]கு | ன | ர | |
| ன் | த | கா | ங் | [22]ஸ | | த | [31]ஆ | ண | | [4]பொ | க் | கு | ளு | |
| னி | | வா | | ரி | [32]ஹு | ஸ | ம | ய | | ம் | கு | | | |
| ர | | ர | | [5]ஸி | த | கா | ய | ரா | | ப | ட | | | |
| ண் | | [39]நி | | | வ | | லெ | த | க | க் | [6]ஸு | [33]ப | ர் | ண |
| டு | | | | [7]வி | ஹ | கே | ந் | த் | ர | கி | | ரி | ர | |
| | [8]சி | த் | [34]ப் | ர | க் | ரு | தி | [39]உ | [9]சி | ன் | [35]ம | ய | [40]தீ | |
| | [10]எ | ல | ரு | ணி | க | | [36]ம | | | | ஜ் | ங் | | |
| | | | ஹ | | ங் | | யூ | | [11]த | னு | ஜ | க | | |
| ர | ஸ் | [23]மி | தி | | [41]ப | | [12]க | த | லோ | ச | ன | ன் | [24]அ | தி |
| க | | | | [13]ஔ | ஷ | த | ரோ | ப் | த | [25]ஓ | | | | ந் |
| [14]ஸு | னி | | ம் | ன | லி | [26]ம | | த | | | | [15]ஸி | ந் | [42]து |
| | | | | த | | [43]கா | | ந் | | | | ம் | | |
| ஸ | கா | வா | ர | [27]நி | | | [16]நோ | க | னீ | ய | ம | ன | ன் | [37]அ |
| | | ஸ | த | | | | | ரெ | | க் | | யு | | ல் |
| [17]ப் | ரா | த | ஸ | வ | ன | ம் | | வ | [38]ஹ | [18]போ | க் | த் | ரு | ப |
| ர | | ர | லி | | | | | [44]தா | ல | | | ர | | ஜ |
| ண | | து | [19]கு | மு | தா | ப் | த | ன் | வு | | | [45]ப் | | ன |
| வ | ம் | [46]ச | [28]கோ | | [20]ஊ | ர் | ணா | ம் | ப | ர | | | | ரு |

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்

Haridasa Vijayam - Monthly

மலர் ௨ ** ஜூலை 2021 ** இதழ் 8



ஸ்ரீவரதேந்திர தீர்த்தர்

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 2 : இதழ் 8


| நிர்வாக ஆசிரியர் | துணை ஆசிரியர் |
|---|---|
| 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்<br>ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,<br>380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase, பெங்களூரு 560078<br>Ph.: 89044-58276.<br>haridasa.vijayam@gmail.com<br>jagannathakesava.blogspot.com | 'தாச சாகித்ய சேவா ரத்ன'<br>திரு.குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்<br><br>**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**<br>திரு. முரளிதர தாசரு,<br>திருமதி. நிர்மலா நரசிம்மன்,<br>திரு. லட்சுமிபதிராஜா,<br>திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ் |


## ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்

**ஜூலை 1 முதல் 31 வரை, 2021**

ஜூலை 7 : ஜ்யேஷ்ட கிருஷ்ண திரயோதசி - ஸ்ரீவிஜயீந்திர தீர்த்தர், கும்பகோணம்
ஜூலை 15 : ஆஷாட சுத்த சஷ்டி - ஸ்ரீவரதேந்திர தீர்த்தர், புனே
ஜூலை 20 : ஆஷாட சுத்த ஏகாதசி - ஸ்ரீத விட்டல தாசர், கர்ஜிகி

# ஆசிரியர் பக்கம்

கொரோனா இரண்டாம் அலை சற்றே குறைந்திருக்கும் இந்த நேரத்தில், நாம் அனைவரும் தொடர்ந்து கவனத்துடன் இருந்து, நமது யதிவரேண்யர்கள் நமக்கு அருளும் உபதேசங்களை தொடர்ந்து கேட்டு, அதன்படியே நடந்து கொள்வோம்.

இதன் காரணமாகவே, ஹரிதாச விஜயம் மே இதழ் பலருக்கும் சென்று சேராததால், ஜூன் 2021 இதழை அச்சடிக்கவில்லை. இந்த ஜூலை 2021 இதழிலிருந்து தொடர்ந்து வரவேண்டும் என்று ஹரிவாயு குருகளின் வேண்டிக் கொள்கிறோம். அனைவரின் சந்தா காலமும் ஒரு மாதத்திற்கு நீட்டிக்கப்பட்டிருக்கிறது.

ஹரிதாச சாகித்யத்திற்கு தம் அற்புத பங்கினை அளித்த இரு யதி ஸ்ரேஷ்டர்களின் ஆராதனை ஜூலை மாதத்தில் வருகிறது. ஸ்ரீவிஜயீந்திர தீர்த்தர், ஸ்ரீவிஜயீந்திர ராமா என்னும் அங்கிதத்தில் இயற்றிய சில சுளாதிகள் நமக்குக் கிடைத்துள்ளன. விரைவில் துவக்க உள்ள சுளாதி பகுதியில், அவற்றைப் பார்ப்போம். ஸ்ரீவரதேந்திர தீர்த்தர் இயற்றிய கன்னட தந்த்ரசார சங்க்ரஹ தொடர் தற்போது வந்து கொண்டிருக்கிறது.

அடுத்து, ஸ்ரீஜகன்னாத தாசரின் சிஷ்யரான ஸ்ரீதவிட்டலதாசரின் புண்ய தினமும் ஜூலையில் வருகிறது. அவரது வாழ்க்கை வரலாறு ஏற்கனவே ஒரு தொடராக நம் இதழில் வந்தது. அந்தந்த ஆராதனை நாட்களில் அவர்களைப் பற்றியும், அவர்களின் கிருதிகளையும் படித்து, குருகளின் / தாசரின் அந்தர்யாமியான பகவத்ரூபத்தின் அருளைப் பெறுவோம்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்**

தொடர்

# கோவிந்தாஷ்டகம்

**இயற்றியவர்: ஸ்ரீகுருகோவிந்தவிட்டலதாசர்**

**கம் கபிலாய நம:** - க-எழுத்திற்கான கபிலனின் ஸ்துதி

**கபிலாத்ம ஸ்ரீஹரி கோவிந்த | நம்ம**
**கபிவர பூஜ்யனெ கோவிந்த**

க-காரத்திற்கு அதிபதியாகவும், அந்த எழுத்தில் தன்னை வெளிப்படுத்திக் கொள்பவனாகவும் இருக்கும் கோவிந்தன் என்னும் கபில நாமக பகவந்தனே, நீ, கபிகளில் சிறந்தவரான ஆஞ்சனேயரின் அவதாரரான ஸ்ரீமத்வரால் சிறப்பாக பூஜிக்கப்படுபவனாக இருக்கிறாய்.

க-காரத்தின் அதிபதியான கபில என்னும் பகவந்தனின் அப்பெயருக்கான காரணம் இவ்வாறு:
* சுகத்தையே அனுபவிப்பவர்களான முக்தர்களை தன்னுடையவராக ஏற்றுக்கொண்டவன்.
* க-காரத்தின் அதிபதி, கபில நாமக பகவந்தனே என்று சிந்தித்து பூஜிக்கும் சாதகர்களை, தன்னுடையவர்களாக ஏற்றுக் கொள்கிறான்.

கபில என்று இரு ரூபங்கள் உள்ளன. சாட்சாத் பகவந்தனின் கபில நாமக அவதாரம் மற்றும் கபில என்னும் ஒரு ரிஷி. பாத்ம புராணத்தில் சொல்லியபடி இதனை நமக்கு நிர்ணயம் செய்து கொடுத்திருக்கிறார் ஸ்ரீமத்வாசார்யர். இந்த நுடியில் சொல்லப்பட்டிருப்பது, கபில நாமக ஸ்ரீஹரியே என்பதை 'கபிலாத்ம' என்று சொல்லின்மூலம் தாசர் நமக்குப் புரிய வைக்கிறார். ஆத்மா என்றால் ஸ்வாமி. ஆகையால், இவர் கபில-ரிஷி அல்ல என்பதை நாம் அறியவேண்டும்.

கபிவர என்றால் கபிகளில் சிறந்தவரான ஆஞ்சனேயர். அதே ஆஞ்சனேயரின் அவதாரியான ஸ்ரீமத்வாசார்யரையும் இதே சொல் குறிக்கிறது. இப்படி, கபிவரர் என்று அழைக்கப்படும் ஸ்ரீமத்வரால், ஸ்ரீகபில நாமக பகவந்தனானவன், தனது சாஸ்திரங்களை நிர்ணயம் செய்து வைக்கவேண்டியிருந்ததால், அவன் ஸ்ரீமதாசார்யருக்கு ஒரு மரியாதைக்குரிய இடத்தைக் கொடுத்தான் என்கிறார்.

அதுமட்டுமல்லாமல், கபில ரூபக பகவந்தன் என்றும், தான் க-எழுத்திற்கான அதிபதி என்றும் அவரால் தந்திரசார சங்கிரஹ நூலில் போற்றப்படுகிறான்.

கபிகள் என்றால் முக்தர்கள். அவர்களில் சிறந்தவரான, முக்த-ஸ்ரேஷ்டரால் மிகச்சிறப்பாக பூஜிக்கப்படுபவனாகையால், அவன் கபிவரபூஜ்யன் என்று அழைக்கப்படுகிறான்.

**க$^{2}$ம்-க$^{2}$பதியே நம:** - க$^{2}$-எழுத்திற்கான க$^{2}$பதியின் ஸ்துதி

**க$^{2}$பதிக$^{3}$மன குரு கோவிந்த | ஜக**
**க$^{2}$ர்ப்பர ஸீளித கோவிந்த ||8**

ககபதி - பறவைகளில் சிறந்தவரான கருடன். அத்தகைய கருடனை தனது வாகனமாகக் கொண்டு சஞ்சரிக்கும் கோவிந்தன் எனப்படும் கபதியே. கர்ப்பர என்றால் கெட்டவர்கள் / அசுரர்கள். இவர்களைக் கொன்று / நாசம் செய்து சஜ்ஜனர்களைக் காப்பாற்றியவனே கோவிந்தனே என்று பிரார்த்திக்கிறார்.

**க$^{3}$ம்-க$^{3}$ருடாசனாய நம:** - க$^{3}$-எழுத்திற்கான க$^{3}$ருடாசனின் ஸ்துதி

**க3ருடத்வஜனெ பாரோ கோவிந்த | ஜக**
**க3ருவவ களெயோ கோவிந்த |**

கருடன் மூலமாக பயணிப்பவன். அந்த கருடனானவன் கோவிந்தனுக்கு ஒரு சின்னத்தைப் போலவே இருப்பவன் ஆகையால் அவனை, கருட-த்வஜ என்று அழைக்கிறார். அனைத்து சொற்களிலும் வரும் கம்- என்னும் எழுத்தில் தன்னை வெளிப்படுத்துபவனாகிய கோவிந்தனை, பக்தர்கள் தன்னை பக்தியோடு வணங்கி சொல்லும் ஸ்துதிகளை, அன்புடன் ஏற்றுக் கொள்கிறான் என்னும் அபிப்பிராயத்தில் கோவிந்தா என்று அழைத்து, உன் பக்தர்களின் கர்வத்தை அழிப்பாயாக என்று வேண்டுகிறார் தாசர்.

**க$^{4}$ம்-க$^{4}$ர்மாய நம:** - க$^{4}$-எழுத்திற்கான க$^{4}$ர்மனின் ஸ்துதி

**க$^{4}$ர்மாஸ ஸமந்தாது கோவிந்த | சூக்த**
**க$^{4}$ர்மக்கெ விஷயனெ கோவிந்த ||**

ரிக் வேதத்தின் ‘கர்மா சமந்தா’ என்னும் சூக்தத்தில் வரும் ‘கர்மா’ என்னும் சொல்லுக்கு, ‘ஒளிர்பவன்’ என்று பொருள். இப்படி க-எழுத்தில் தன்னை வெளிப்படுத்தி, கர்மா என்று அழைக்கப்படும் கோவிந்தன், ‘கர்மா சமந்தா’ என்னும் சூக்தத்தின் பொருளினாலும் போற்றப்படுகிறான் என்று இங்கு விளக்குகிறார் தாசர்.

**ஞம்-ஞஸாராய நம:** - ஞ-எழுத்திற்கான ஞஸாரனின் ஸ்துதி

**ஓங்கார பிரதிபாத்ய கோவிந்த । பா**
**ங்தவு ஜகவெல்ல கோவிந்த ।**

ஞ-கார எழுத்தில் துவங்கும் அனைத்து சொற்களின் அதிபதியாக இருக்கும் கோவிந்தனே, பாக்தம் வா இதம் சர்வம் - என்று தைத்திரிய உபநிஷத்தில் சொல்லியிருப்பதைப் போல, ஜகத் என்பது ப்ருத்வி முதலான ஆறு லோகங்களைக் கொண்ட ஒரு குழுவாகும். அந்த ஆறு உலகங்களில், நாராயண ரூபி பகவந்தன், நாராயணன் முதலான ஐந்து ரூபங்களில் இருந்து, அந்த ஆறு உலகங்களும் தத்தம் காரியங்களை செய்வதற்குரிய சக்தியினைத் தருகிறான். இப்படியாக, தைத்திரிய உபநிஷத்தின் வாக்கியங்களினால் போற்றப்படுகிறான் கோவிந்தன் என்று வணங்குகிறார் தாசர்.

**சம்-சார்வங்காய நம:** - ச-எழுத்திற்கான சார்வங்கனின் ஸ்துதி

**சர்மதொளுத்கீ3த கோவிந்த । இத்து**
**சர்ம லாவண்யத கோவிந்த ।।**

ச-கார எழுத்தில் துவங்கும் அனைத்து சொற்களின் அதிபதியாக இருக்கும் கோவிந்தனே, அனைவருக்கும் பாதுகாவலனாக இருப்பதனால் ‘உத்கீத’ என்னும் காரணப் பெயரைப் பெற்றவனே, நம் உருவத்திற்கு (தேகத்திற்கு) அழகு சேர்ப்பவனே,

**சம்-சந்தோகம்யாய நம:** - ச-எழுத்திற்கான சந்தோகம்யனின் ஸ்துதி

**சந்தஸ்ஸினின்சன்ன கோவிந்த । நாகி3**
**சந்தோபிதனெனிபெ கோவிந்த ।**

ச-கார எழுத்தில் துவங்கும் அனைத்து சொற்களின் அதிபதியாக இருக்கும் கோவிந்தனே, சந்தஸ்களினால், வேதங்களினால், போற்றப்படுபவனாகையால், அவற்றிற்கு ‘சந்தஸ்’ என்னும் பெயரை கொடுத்தவனாகிறாய்.

**ஜம்-ஜனார்த்தனாய நம:** - ஜ-எழுத்திற்கான ஜனார்த்தனின் ஸ்துதி

**ஜங்க³ம சரவ்யாப்த கோவிந்த | நம்ம**
**ஜங்கு³ளிகள களெயோ கோவிந்த ||**

ஜங்கம என்றால் சஞ்சரிக்கும் (நகரும்). ஸ்திர என்றால் ஒரே இடத்தில் நிலைத்திருக்கும். அதாவது நின்று / நிலைத்திருக்கும் பொருட்களையுடைய இந்த உலகத்தில் அனைத்திலும் வியாபித்திருப்பவன். நம்ம ஜங்குளிகள களெயோ என்றால், நம் பிறப்பு இறப்புகளைக் களைந்து, அதைத் தாண்டிய மோட்சத்தைக் கொடுத்து, மறுபடி பிறக்காமலிருக்கச் செய் என்று பிரார்த்தனை செய்கிறார்.

**ஜம்-ஜாடிதாரயே நம:** - ஜ-எழுத்திற்கான ஜாடிதாரனின் ஸ்துதி

**ஜஷ ரூபி கமட²னெ கோவிந்த | நம்ம**
**ஜஷ கேதுபித காயோ கோவிந்த |**

ஜஷ என்றால் மீன். கமட என்றால் ஆமை. மீனின் ரூபத்தை எடுத்து, ஆமையாக உள்ளவனே, மீனை த்வஜமாகக் (சின்னமாக) கொண்டவனே, அதனால் ‘மீனகேதன’ என்றே பெயர் பெற்று, மன்மதனின் தந்தையாக (ஜஷகேது பித) இருப்பவனே, எங்களைக் காப்பாற்று.

**ஞம்-ஞாமாய நம:**
ஞ-எழுத்திற்கான ஞமனின் ஸ்துதி

**ஞான ஞேய ஞாத்ரு கோவிந்த | ப்ர**
**ஞான க⁴னனெனிபெ கோவிந்த ||**

ஞ-கார எழுத்தில் துவங்கும் அனைத்து சொற்களின் அதிபதியாக இருக்கும் கோவிந்தனே, நீ ஞான- ஸ்வரூபி. அனைவராலும், முக்கியமாக அதற்கான தகுதி உள்ளவர்களால் அறியப்படுபவனாக இருப்பதால் ஞேய என்று அழைக்கப்படுகிறாய். ஸ்வதந்த்ரனாக,

அனைத்தையும் அறிந்திருப்பவனாக இருப்பதால் ‘ஞாத்ரு’ எனப்படுகிறாய். உபநிஷத்தின் வாக்கியங்கள் அனைத்தையும் தன் ஸ்துதியாகவே கொண்டிருப்பதால், கோவிந்தா என்று அழைக்கப்படுகிறாய்.

ஜீவர்கள் அஞ்ஞானத்தின் பிடியில் இருப்பதால் ‘கன’ என்று அழைக்கப்பட்டால், அவனுக்கு ஜீவாத்மனின் ஸ்வரூபத்தையே சொல்லிக் கொடுப்பதால், ஞானரூபி பரமாத்மனான நீ, ஞானப்ரக்ஞ என்று அறியப்படுகிறாய். இதையே மாண்டுக உபநிஷத், ப்ரக்ஞானகன என்று சொல்கிறது. உபநிஷத்தின் இந்த வாக்கியத்தின் அடிப்படையிலேயே ‘ப்ரக்ஞானகன எனிபெ’ என்கிறார் தாசர்.

**டம்-டங்கினே நம:**

ட-எழுத்திற்கான டங்கி நாமக பகவத் ரூபத்தின் ஸ்துதி

**டங்கி எம்புவனெ கோவிந்த | நம்மா**
**டங்கவ களெயோ கோவிந்த |**

ட-கார எழுத்தில் துவங்கும் அனைத்து சொற்களின் அதிபதியாக இருக்கும் கோவிந்தனே, வாளினை ஆயுதமாகக் கொண்டிருப்பதனால், டங்கி என்று அழைக்கப்படுபவனே, எங்களின் ஸ்துதிகளை / பிரார்த்தனைகளை ஏற்றுக்கொண்டு, எங்களின் கர்வத்தை / பொறாமைக் குணங்களை நீக்குவாயாக.

**ட$^2$ம்-ட$^2$கலாய நம:**

ட$^2$-எழுத்திற்கான ட$^2$கலனின் ஸ்துதி

**ட$^2$க்கு ட$^2$வளிகார கோவிந்த | நம்ம**
**ட$^2$க்கிஸி ஹாகதி$^3$ரோ கோவிந்த ||**

ட-கார எழுத்தில் துவங்கும் அனைத்து சொற்களின் அதிபதியாக இருக்கும் கோவிந்தனே, நீ மோசக்காரர்களைவிட பெரிய மோசக்காரன். எங்கள் பிரார்த்தனைகளை ஏற்றுக்கொண்டு, எங்களை தவறான பாதையில் செலுத்திவிடாதே / அனுப்பிவிடாதே கோவிந்தனே. (தொடரும்)...

தொடர்

## கேசவ நாமா

## 17-பய நிவாரணவு - ஸ்ரீமஹிபதி தாசர்

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)

**விஷ்ணுதீர்த்ததி ஸ்ரீவிஷ்ணுவித்தா[3]னே ராமராம |**
**விஷ்ணுதீர்த்ததி மிந்தே விஷ்ணுவின த[3]யதி[3] ராமராம ||5**

ஸ்ரீவிஷ்ணுவின் நாமங்கள் பற்பல உண்டு. விஷ்ணு சஹஸ்ரநாமம் அனைவரின் வீடுகளில் சொல்லப்படுகிறது. விஷ்ணுவின் அவதாரங்களில் தசாவதாரங்களை அனைத்து ஹரிதாசர்களும் பாடிப் புகழ்ந்திருக்கிறார்கள். விஷ்ணு க்ஷேத்திரங்களான ஸ்ரீரங்கம், அயோத்யா, த்வாரகா, மதுரா, பதரி (தேவபிரயாகை), கயா, புரி, திருப்பதி, பண்டரிபுரம், முக்தி நாராயணன் என இந்த அனைத்து க்ஷேத்திரங்களில் நதி, ஏரி, குளம் இருக்கிறது. அந்தந்த க்ஷேத்திரத்தில் விஷ்ணுவின் இருப்பை உணர வேண்டும் என்கிறார் தாசர்.

**மத்ஸ்யதீர்த்ததலி மது[4]சூதனனித்தானே ராமராம |**
**மத்ஸ்ய தீர்த்ததி மிந்தே மது[4]சூதனன த[3]யதி[3] ராமராம ||6**

இன்றைய ஜயபுரத்தின் சுற்றுப்புறமே அன்றைய காலத்தில் மத்ஸ்ய தேசம். மத்ஸ்ய தீர்த்தம் 'அனந்தபுர' என்று சொல்லப்படும் இன்றைய திருவனந்தபுரத்தில் இருக்கிறது. (ஆதாரம் - க்ஷேத்திர வைபவம்). முந்தைய கல்பத்தின் இறுதியில், பிரளய காலத்தில், பூலோகம் முதலான ஒன்பது உலகங்கள் கடலில் அமிழ்ந்தன. பிரம்மன் அப்போது தூங்குகையில், அவரிடமிருந்த வேதங்களைப் பறித்துக்கொண்டு ஓடிய ஹயக்ரீவன் என்னும் தைத்யனைக் கொல்வதற்கு பகவந்தன், மத்ஸ்ய ரூபியானார். ஹயக்ரீவ தைத்யனைக் கொன்று வேதங்களை மறுபடி பிரம்மனிடம் சேர்ப்பித்தார்.

க்ருதமாலா நதியில், ஜல தர்ப்பணத்தைக் கொடுத்துக்கொண்டிருந்த சத்யவ்ரதன் என்னும் ராஜரிஷியின் கையில் ஒரு மீன் சிக்கியது. அது மனிதர்களைப் போல பேசியது. கையிலிருந்த மீனை கமண்டலத்தில் விடும்போது, மீன் வளர்ந்து கமண்டலத்தில் நிரம்பியது. மறுபடி குளத்தில் விடும்போது, அது குளத்தைவிட பெரியதாக வளர்ந்தது.

இப்படி வளர்ந்த மீனைக் கண்ட சத்யவிரதனுக்கு, அது நாராயணனே என்னும் நம்பிக்கை வந்தது. சத்யவிரதனின் பிரார்த்தனைக்கு செவிசாய்த்த மத்ஸ்யரூபி பரமாத்மன், தன் அவதாரத்தின் நோக்கத்தைக் கூறினார்.

இன்றிலிருந்து ஏழாவது நாளில் பிரளயம் நடைபெறும். கடல் பொங்கி மூன்று உலகங்களும் அதில் மூழ்கும். அப்போது உன்னிடம் ஒரு படகு வரும். முந்தைய ஸ்ருஷ்டிக்குத் தேவையான விதைகள், தாவரங்கள் ஆகியவற்றை ஒரு அந்தப் படகில் சேகரித்து, அந்தப் படகை, ஒரு பாம்பின் உதவியுடன் அந்த மீனின் கொம்பில் மாட்டிவிடு. பிரளய காலம் முடியும்வரை அந்தப் படகையும், அதில் உள்ளவர்களையும் நான் காப்பாற்றுவேன் என்று மத்ஸ்யரூபி பரமாத்மன் கூறினார்.

பகவந்தன் சொன்னதைப் போலவே அனைத்தும் நடந்தன. சப்தரிஷிகள், சத்யவிரத ராஜனை கேசவரூபியை தியானிக்குமாறு கூறினர். அவரும் அப்படியே தியானிக்க, மதுசூதனன், சங்க்யா சாஸ்திரம், கர்ம பக்தி காண்டங்கள் சேர்ந்த மத்ஸ்ய புராணத்தை சத்யவிரதனுக்கு உபதேசித்தார்.

தீர்த்த யாத்திரை சமயத்தில் மத்ஸ்ய புராணக் கேட்டு ஞானத்தை வளர்த்துக் கொள்ளவும். சம்சாரம் என்னும் படகில், தமஸ் என்னும் கடலைக் கடக்க, மதுசுதனனின் தயை மிகவும் அவசியம் என்கிறார் தாசர்.

**த்ரிவேணியல்லி த்ரிவிக்ரமனித்தா³னே ராமராம ।**
**த்ரிவேணியல்லி மிந்தே த்ரிவிக்ரமன த³யதி³ ராமராம ॥7**

கங்கா, யமுனா, சரஸ்வதி ஆகிய மூன்று நதிகளின் சங்கமமே த்ரிவேணி. இன்றைய அலகாபாத் க்ஷேத்திரமே த்ரிவேணி. த்ரிவேணி நதிக்கரையில் வட-வ்ருக்ஷம் இருக்கிறது. வட-வ்ருக்ஷத்தில் வேர் த்ரிவேணியிலும், அதன் நடுபாகம் காசியிலும், இறுதிப்பாகம் கயாவிலும் இருக்கிறது என்கிறார்கள். வட-வ்ருக்ஷம் இருக்கும் இடத்தை பாதாளபுரி என்கிறார்கள்.

வாமனம், பலியிடம் மூன்று பாத நிலத்தை தானம் கொடு என்று கேட்க, அதைப் பெறும்போது த்ரிவிக்ரமன் ஆனான். இரண்டு பாதங்களால் பூமி மற்றும் ஆகாயத்தை அளந்து, மூன்றாம் பாதத்தை பலியின் தலையில் வைத்து அவனை சுதல லோகத்திற்கு அனுப்பி, பக்த பராதீனனான ஸ்ரீஹரி கதா-பாணியாகி, அவனின் அரண்மனையின் கதவை பாதுகாத்து வந்தான் என்று படிக்கிறோம்.

மூன்று பாதங்களாலேயே உலகத்தை அளந்ததால் வாமன மூர்த்தி, த்ரிவிக்ரமன் ஆனான். ஸ்ரீஹரி, பிரளய காலத்து நீரில் வடபத்ரத்தில் (ஆல இலை) படுத்திருக்கிறார். இங்கு அக்ஷய வடவ்ருக்ஷமானது, பிரயாகை, காசி, கயா என்னும் மூன்று க்ஷேத்திரங்களிலும் த்ரிவிக்ரமனைப் போல வளர்ந்திருக்கிறது என்று தெரிவித்தவாறு, த்ரிவேணியில் த்ரிவிக்ரமன் இருக்கிறார் என்கிறார் தாசர்.

**வாமன நம்மன்னு ஒலிது காயுவவனந்தே ராமராம ।**
**வாமனன தயதி பூ4-வைகுண்ட2வ கண்டே3 ராமராம ॥8**

ஸ்ரீவிஷ்ணுவின் தசாவதாரங்களில் ஐந்தாவது அவதாரமே வாமன அவதாரம். ஹிரண்யகசிபுவின் மகன் பிரகலாதன். அவன் மகன் விரோசனன். அவன் மகன் பலிசக்ரவர்த்தி.

வராக அவதாரத்தால் ஹிரண்யாக்ஷனை, நரசிம்ம ரூபத்தினால் ஹிரண்யகசிபுவை, வாமன அவதாரத்தால் பலி சக்ரவர்த்தியைக் கொன்றது போல தெரிந்தாலும், பக்தவத்ஸலனான ஸ்ரீஹரி அவர்களுக்கு அருளியிருக்கிறான் என்பதே உண்மை. அப்படியே, வாமனரூபி பரமாத்மன், நம் அஞ்ஞானத்தையும் போக்கி, நமக்கு அருள்வான் என்கிறார் தாசர்.

**ஸ்ரீத4ர நம்ம ஹ்ருதயதல்லித்தா3னே ராமராம ।**
**ஸ்ரீத4ரன தயதி3ந்த3 ஹ்ருதயவாசன கண்டே ராமராம ॥9**

ஸ்ரீ என்றால் இந்திரியங்கள் என்று உபநிஷத் சொல்கிறது. இந்திரியங்களின் அபிமானி தேவதை ஸ்ரீதரர்கள். அவர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுக்கும் நீ, ஸ்ரீதரன்,

ஸ்ரீ என்றால் மகாலட்சுமி. நாராயணனின் மனைவி. செல்வத்தின் அதிபதி. பாற்கடலில் தோன்றியவள். இந்த ஸ்ரீதேவியை தன்னுடைய மார்பில் தாங்கியிருப்பவன் ஸ்ரீதரன்.

ஹே ஸ்ரீதரனே, ஸ்ரீதேவியுடன் என் இதயத்தில் நீ வசித்திருப்பாய். உன் கருணையால் என் பிம்பமூர்த்தியின் தரிசனத்தைப் பெற்றேன்.

**ருஷிகளாஸ்ரமதலி ஹ்ருஷிகேஷன கண்டே ராமராம |**
**ஹ்ருஷிகேஷன த³யதி³ ஹ்ருஷிகளாஸ்ரம கண்டே³ ராமராம ||10**

பதரி நாராயணனின் தரிசனத்திற்கு ஹரித்வாரத்திலிருந்து ஹ்ருஷிகேசத்தின் வழியாகவே செல்லவேண்டும். சாதகர்கள் சாதனை செய்யும் இடம் - ஹ்ருஷிகேசம். ரிஷிகளின் இருப்பிடமாகையால், அது ஹ்ருஷிகேசம் எனப்படுகிறது. ஹ்ருஷிக என்றால் இந்திரியங்கள், ஈச என்றால் தலைவன். ஆகையால், பரமாத்மனை ஹ்ருஷிகேசன் என்று அழைக்கிறார்கள். ஹ்ருஷிகேசனின் கருணையால், ஐந்து ஐந்திரியங்களின் மூலமாக ஞானம் வளர்கிறது.

**பத்மனாப⁴தல்லி பத்மனாப⁴னித்தானெ ராமராம |**
**பத்மனாப⁴ன தயதி பத்மனாப⁴ன கண்டெ ராமராம ||11**

பொக்களல்லி கண்டு படெதவருண்டெ
அங்கு³டதல்லி பெ¹ண்ண பெத்த¹வருண்டெ
மிக்காத தேவரிகெ ஈ சொபகு³ உண்டெ
மொரெ ஹொக்கெ காயய்ய புரந்தரவிட்டல

மிக மகிமைகளைக் கொண்ட செயல்களை அனைத்தும், அனைத்து உலகங்களுக்கும் தலைவனான ஸ்ரீமன் நாராயணனுக்கு மட்டுமே சாத்தியமே தவிர வேறு யாருக்கும் சாத்தியமில்லை. ஸ்ரீ நாராயணனின் நாபியிலிருந்து தோன்றிய தாமரையில் பிரம்ம தேவர் பிறந்ததால் நாராயணன் பத்பனாபன் ஆனார்.

ஸ்ரீபத்பனாப ஸ்வாமி ஆலயம், கேரளத்தின் திருவனந்தபுரத்தில் உள்ளது. இதனை அனந்தசயனம் என்றும் அழைக்கின்றனர்.

புராணங்களில் இதனை 'அனந்தவன' என்று அழைத்தனர். பாகவதத்தில் 10ம் ஸ்கந்தம் 97ம் அத்தியாயத்தின்படி, பலராமன் தீர்த்தயாத்திரை செய்தபோது 'ஸ்வனந்துரபுரம்' ஆலயத்திற்கு வந்ததாகவும், அதுவே இன்றைய அனன்சயன ஆலயம் என்றே தெரிய வருகிறது.

இங்கு அனந்தபத்பனாபனை மூன்று த்வாரங்கள் வழியே தரிசனம் செய்யவேண்டும். முதலாம் த்வாரத்தில், பகவந்தனின் முகம் மற்றும் சிர தரிசனம். இரண்டாம் த்வாரத்தில் பத்பனாபனின் விசாலமான மார்பு மற்றும் நாபியிலிருந்து வெளிவந்த பிரம்மனின் தரிசனம். மூன்றாம் த்வாரத்தில் பாதங்களின் தரிசனம் கிடைக்கிறது. சேஷன் மேல் படுத்திருக்கும் பத்பனாபனுக்கு சேஷனின் தலை ஒரு குடையாக இருப்பதையும், அவனின் கண்கள் பரமாத்மனின் தரிசனத்தைப் பெறும் பாக்கியத்தைப் பெற்று, அவன் நாக்குகள் பகவந்தனின் ஸ்துதிகளை சொல்வதுபோலவே தோன்றுகிறது.

பத்பனாபனின் வயிற்றிலிருந்து வெளிவந்த தாமரையே, பிரம்மாண்டமாக இருந்து, 14 தளங்கள் 14 உலகங்களின் குறியீடாக இருக்கிறது. பரமாத்மனின் பாத சேவையை மகாலட்சுமி செய்தால், பரமாத்மன் தன் வலது கையை ருத்ரரின் தலை மேல் வைத்து அருள்கிறான். மனோபிமானி ருத்ரர் மூலமாக என்னை ஸ்தோத்திரம் செய்தால், என் அருள் கண்டிப்பாக கிடைக்கும் என்று சொல்வதைப் போல அந்தக் காட்சி இருக்கிறது.

பாற்கடலில், பாம்பின் மேல் படுத்திருக்கும் பத்பனாபனே, சம்சார சாகரத்தில் மூழ்கியிருக்கும் என்னை காப்பாற்று. தாமரையைப் போல அழகாக இருக்கும் உன் நாபில் ஒரு தாமரை, அதில் 14 உலகங்கள், ஸ்ருஷ்டி கர்த்தனாகிய நான்முகன், அந்த தாமரையில் இருப்பதைப் போல, என் இதய கமலத்தில் இருக்கும் உன் பத்பனாப ரூபத்தை நான் காணும்படி அருள்வாயாக.

கமலஜாதிக[3]ளிந்த[3] துதிஸிகொள்ளுத ஹ்ருதய
கமலதொளகி[3]ருவ விஜயவிட்டலன கண்டெ
அந்தரங்கத கதவு தெரெயிதிந்து
எந்த புண்யத ப[2]ல ப்ராப்தியாயிது எனகெ
என்று விஜயதாசர் அனுபவித்துப் பாடுகிறார். (தொடரும்)...

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

## கிரந்தத்தைப் பற்றிய விளக்கம்

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)

32ம் கக்ஷ தாரதம்ய சந்தியில் கக்ஷ(வகுப்பு) அனுசரித்து, அவரோஹண கிரமத்தில் தேவதா தாரதம்யத்தை விளக்குகிறார்.

1ம் வகுப்பில் ஸ்ரீஹரி
2ம் வகுப்பில் மகாலட்சுமி நிலைத்திருக்கிறார்.
3ல் பிரம்மதேவர் மற்றும் வாயுதேவர். 199 ஆண்டுகளின் கல்பசாதனைக்குப் பிறகு 200ம் கல்பத்திற்கு வரும்போது வாயுதேவர் பிரம்மபதவிக்கு வருகிறார்.
4ம் வகுப்பில் சரஸ்வதி பாரதியர்,
5ல் கருட சேஷ ருத்ரர்,
6ல் ஷண்மஹிஷியர்கள்
7ல் சௌபர்ணி, வாருணி, பார்வதியர்
8ல் இந்திர மற்றும் காமதேவன்
9ல் அஹங்காரிகப் பிராணன்
10ல் ரதி, சசி, தக்ஷபிரஜாபதி ஆகியோர்
11ல் ப்ரவாஹ வாயு
12ல் சூர்ய, சந்திர, யம மற்றும் ஷதரூபா தேவி
13ல் வருணன்
14ல் நாரத ரிஷி
15ல் அக்னி, ப்ருகுமுனி, ப்ரசூதிதேவி
16ல் சப்தரிஷி, வைவஸ்வதமனு, விஸ்வாமித்திரர் ஆகியோர்
17ல் மித்ரா, நிரருதி, தாராதேவி, ப்ரவாஹி
18ல் குபேர, விஷ்வக்சேன, கணபதி, சேஷசதஸ்தரு (85 பேர்)
19ல் கர்மஜதேவதைகள்
20ம் வகுப்பில் கங்கா, பர்ஜன்யா, சூரியன், சங்க்யா, சசி, ஷாமலா, விராட்தேவி ஆகியோர்
21ல் ஸ்வாஹா,
22ல் புத
23ல் உஷா
24ல் தரணிதேவி
25ல் சனிதேவர்

26ல் புஷ்கர
27ல் அஜானஜ தேவதைகள்,
28வது வகுப்பில் குறைந்த புகழ்பெற்ற தேவதைகள்
29ல் ரிஷிகள்
30ல் சிரபித்ருகள்,
31ல் தேவகந்தர்வர்கள்,
32ல் மனுஷ்யகந்தர்வர்கள்,
33ல் க்ஷிதிபர்கள் (பேரரசர்கள்),
34ல் மனுஷ்யோத்தமர்கள்
35ல் இதர மனிதர்கள்

வருகிறார்கள் என்று சொல்லியவாறு இவர்கள் அனைவருக்க்கும் தன் வணக்கங்களை தெரிவிக்கிறார். தாரதம்யத்தை தெரிந்துகொண்டால் அதன் பலன் என்ன என்பதை தெரிவித்தவாறு, இதனை அறிந்தவர்களுக்கு ஸ்ரீஹரி அவர்கள் வேண்டியவற்றைக் கொடுத்து, பாவம் துக்கம் பயங்களிலிருந்து விடுவிக்கிறார் என்கிறார்.

ஜயஜயது த்ரிஜக[3]த்விலக்ஷண
ஜயஜயது ஜகதே[3]க[1]கா[1]ரண
ஜயஜயது ஜானகிரமண நிர்க[3]த ஜராமரண |
ஜயஜயது ஜான்ஹவிஜனக[1] ஜய
ஜயது தைத்யகு[1]லாந்த[1]க[1] பவா
மயஹர ஜகன்னாதவிட்டல பாஹிமாம் ஸத[1]த[1] ||
(கக்ஷ தாரதம்ய சந்தி ஸ்லோகம் #56)

என்று வேண்டியவாறு ஸ்ரீஹரிகதாம்ருதசாரத்தை முடிக்கிறார். இந்த சந்தியில் 56 ஸ்லோகங்கள் உள்ளன. கர்ஜிகி தாசர் என்று பெயர்பெற்ற ஸ்ரீதவிட்டலர் இந்தக் காவியத்திற்கு பல-ஸ்ருதியை எழுதியிருக்கிறார். இந்த காவியத்தை தினம்தோறும் படிப்பவர்களுக்கு சுதாம-சகனான கிருஷ்ணன் அருள்வான் என்கிறார். இந்த பல-ஸ்ருதி சந்தி 24 நுடிகளைக் கொண்டது.

குருஸ்ரீசவிட்டலர் (குண்டோஜிதாசர்) 3 நுடிகளிலும்; ஸ்ரீ மனோஹர விட்டலர் 17 நுடிகளிலும் பல-ஸ்ருதியை எழுதியிருக்கின்றனர்.

ஸ்ரீபீமேசவிட்டலர், ஸ்ரீனிவாசவிட்டலர், ஸ்ரீகமலபதிவிட்டலர் ஆகியோரும் பல-ஸ்ருதிகளை எழுதியிருக்கின்றனர். இப்படி தாச சாகித்யத்திற்கு ஜகன்னாததாசர் கொடுத்த மிகப்பெரிய பரிசு

ஹரிகதாம்ருதசாரம் ஆகும். 32 சந்திகளில் 988 நுடிகளில் மிகச்சிறந்த காவியமாக இது இருக்கிறது. அபரோக்ஷ ஞானிகளின் அறிவுத்திறனை நமக்கு எடுத்துக்காட்டிய இந்த ஹரிகதாம்ருதசாரம் இருக்கிறது. இதன் பெயரே சொல்வதுபோல, ஸ்ரீஹரியின் கதை என்னும் அம்ருதத்தின் சாரத்தை அற்புதமாக விளக்குகிறது. இந்த பிரம்மாண்டத்தில் உள்ள பல புரியாத விஷயங்களை மிக எளிமையாக எடுத்துரைக்கிறது. பாமினி ஷட்பதி நுடியில் இந்த மிகப்பெரிய கிரந்தத்தை எழுதிய ரங்கஒலித தாசரான ஜகன்னாததாசர் உலகப்புகழ் பெற்றிருக்கிறார்.

*** **டாக்டர். மதுசூதன் ஜோஷி**

| **கன்னடம்** | **அருஞ்சொற்பொருள்** |
| --- | --- |
| | **கடினமான சொற்களின் அர்த்தங்கள்** |

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

1. ஜனக - தந்தை. 2. ஜடதி - சமுத்திரம். 3. துர்தர - தாங்க முடியாத / கடினமான 4. ப்ரஹரி - காவல்காரர். 5. பா4வி - எதிர்கால. 6. பவபய - சம்சார பயம். 7. பிராணேஷ - ஜீவோத்தமர் (வாயுதேவர்). 8. பூர்வஜாத - தைத்யன். 9. பத்மாங்க்ரி - பாத கமலம். 10. நீலக்ரீவ - மயில் / நீலகண்டனான சிவன்.

**மே 2021 மாதத்தின் ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டிக்கு சரியான பதில் எழுதி புத்தகப் பரிசினைப் பெறுபவர்கள் :**

திருமதி. சாந்தி பத்மனாபன், திருநெல்வேலி; திருமதி. ஜெயஸ்ரீ ராமசந்திரன், சென்னை; திருமதி. லலிதா, திருநெல்வேலி.

ஹரிதாச விஜயத்தைப் பற்றி தயவு செய்து உங்கள் நண்பர் / உறவினர்களிடம் அறிமுகம் செய்யவும்.

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்
## ஹெளவனகட்டே கிரியம்மா

'ஹெளவனகட்டே ரங்கனாத' (1712 - 1790)

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)...

கிரியம்மா தொட்டு ஆசிர்வதித்த குழந்தைகள், தீர்க்க ஆயுளைப் பெறுகிறார்கள் என்னும் நம்பிக்கை அங்கு சுற்றுமுற்றும் இருந்த மக்களுக்கு இருந்தது. ராணி சென்னூரில் கிரியம்மா குழந்தைகளை, படுக்க வைத்து குளிப்பாட்டிய குளியலறை இன்றைக்கும்கூட அப்படியே பாதுகாக்கப்பட்டு வருகிறது. தம் குழந்தைகளை அந்த அறையில் குளிப்பாட்டினால் அவர்களின் பீடை பரிகாரம் ஆகிறது என்னும் நம்பிக்கை இன்றைக்கும்கூட அந்த ஊர் மக்களிடையே இருக்கிறதாம்.

மங்களூரின் அரசகுமாரனுக்கு கண் தெரியாமல் இருந்தது. ரங்கநாத ஸ்வாமிக்கு செய்த ஆரத்தியின் மை எடுத்து, அந்த அரசகுமாரனின் கண்ணிற்கு கிரியம்மா தினமும் தடவிக்கொண்டு இருந்தாராம். உடன் இவ்வாறு பிரார்த்தனையும் செய்தாராம்.

தோரபாரதெ நிம்ம சரிதெயனு
நரரொளு நகெகீடு மாடத ஹாகெ
நீனெகதியெந்து பந்த பக்த கண்ணுகள தித்தி நிஜவ தோரிஸய்யா ।
தீனதயாளு ஹெளவன கட்டெ ரங்கய்யா
தானி என்னொடெய தொட்டவனெந்து ஹொகளுவெ ॥

இவ்வாறு சுமார் 15 நாட்கள் செய்த பிறகு, அந்த அரசகுமாரனின் கண் கோளாறு சரியாகி, கண் சரியாக தெரிய வந்தது.

இன்னொரு இடத்தில், மழையே இல்லாமல் வறட்சி நிலவிக் கொண்டிருந்தது. அப்போது ஊர் பெரியவர்கள் அனைவரும் கிரியம்மாவிடம் முறையிட்டனர். அவரும் அத்யந்த பக்தியுடன் இவ்வாறு பிரார்த்தனை செய்தார்.

மளெய தய மாடோ ரங்கய்ய நிம்ம
கருண தப்பதரெ உளியதீ லோக ॥

(18ம் பக்கத்தில் தொடரும்).

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### பித்ருகண சந்தி

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | 26 | | | 2 | | | | | | | 19 | 27 |
| | | 3 | | | | | | | | | 4 | | | |
| | | 5 | | | | | | | | 20 | | | | |
| | 28 | | | | | | | | | | 6 | | | |
| 7 | | | | | | 35 | | 8 | | | | | | |
| | | | | 29 | 21 | | | | | | 9 | 30 | | |
| | | | | | | | | | 31 | | | | | |
| 10 | | | | | | 11 | | | 32 | 33 | | | | 22 |
| | | | | 23 | | | 36 | | | | | | | |
| | | 12 | | | | | 13 | | | | | | | |
| 14 | | | | | 15 | | | | | | | | | |
| | | | | | 34 | | | | 16 | | | | 37 | |
| | | 17 | | | | | | | | | | | | |
| | | | | | 24 | | 25 | | 18 | | | | | |

குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam@gmail.com என்னும் ஐடிக்கோ அல்லது 89044 58276 க்கோ வாட்சப் செய்யலாம்

**இடமிருந்துவலம்**:1.இருபத்தி நான்கு(7), 2.அரக்கர்கள்(6), 3.இந்திரிய ஸமூகம்(3), 4.தோன்றுதல்(4), 5.ஸிவனின் வேறு பெயர்(5), 6.லிங்க தேகத்துடன் கூடிய ஸம்ஸார ஜீவர்கள்(4), 7.குற்றமற்ற(5), 8. கோணலற்ற (4), 9.கடைகள். கடைசி எழுத்து இல்லை(4), 10.தேசஸமூகம் கலைந்துள்ளது(3), 11.உணவு தருபவன்(4), 12.கஷ்டம்(3), 13.பிரிவு(5), 14.இருட்டு(3), 15.தொண்ணுற்றாரு(5), 16.எடுத்துக் காட்டு(6), 17.தடங்கள்கள்(5), 18.பலவிதமாக(6).

**வலமிருந்துஇடம்**:11.பகுதி(3), 19.போர்(3), 20.சாப்பிடுபவன் கலைந்துள்ளது(4), 21.மூன்று வித பித்ருகளில் ஒருவர்(4), 22.தாமரை கலைந்துள்ளது(4), 23.சாப்பிடும் வஸ்த்துக்கள்(3), 24.நூலால் நெய்த துணி(5), 25.செய்யத்தகுந்த(3).

**மேலிருந்துகீழ்:**5.நெருப்பு(4), 10.தினந்தோறும்(6), 19.வண்டி(3), 26.உகந்த(3), 27.அருகிலுள்ளான் கலைந்துள்ளது(5), 28.மறுமை(5), 29.அஹங்கார தத்துவங்களில் ஒன்று(3), 30.உடைத்தல்(4), 31.படகு(2), 32.வேகமாக(4), 33.இந்த தேவதைகள் பதினொன்று பேர்(3), 34.ஆந்தை(2).

**கீழிருந்துமேல்**: 8.ஸ்ருஷ்டிக்கு வராத ஜீவர்கள்(5), 9.சோம்பல்(4), 12.வேண்டுதல்(3), 17.விளையாடுதல்(3), 18.சம்சாரக்கடல்(4), 35.வேறுபட்டவன்(4), 36.உணவை ஏற்பவன்(4), 37.நீர்(3).

(15ம் பக்கத்திலிருந்து தொடர்கிறது)...

பஷு ஜாதி ஹுல்லெ ஸாரங்க ம்ருககளு பஹள
ஹஸிது பாயாரி பத்தித கெரெகெ பந்து
த்ருஷெயடகதெ தல்லணிஸி மூர்ச்செகொண்டு
தெஸெதெஸெகெ பாயி பிடுதிஹவய்ய ஹரியெ ||

தரெயாகி த்ரவகுந்தி இருவ பாவிய நீர
மொகெ மொகெது பாத்ரெயலி நாரியரு
ஹகலெல்ல தருதிஹரு யோசனெய மாடுத்த
பேகதிந்தலி தரிஸு வ்ருஷ்டியனு ஹரிய ||

ஸந்துஹோதவு ஜ்யேஷ்ட, ஆஷாட, ஸ்ராவண
பந்திதெ பாத்ரபத மாஸவீக இந்து
புரந்தரகெ ஹேளி வ்ருஷ்டிய தரிஸோ
ஸந்தேஹவ்யாகெ ஹெளவன கட்டெ ரங்க ||

பிறகு, மழை பொழிந்து, ஏரி, கண்மாய்கள் அனைத்தும் நிரம்பி வழிந்தன என்பது வரலாறு.

இன்னொரு முறை, ஸ்வாமி ரங்கநாதனின், தங்க மோதிரம் தொலைந்து போயிற்று. சம்பந்தப்பட்டவர்கள் அனைவரும் கவலையுடன் இருக்க, கிரியம்மா 'ஹொன்னுதா குப்பி ஹொன்னு தா' என்று பிரார்த்தித்து அனன்ய பக்தியுடன் தசாவதாரங்களை வணங்கினார். இறுதியில் ஒரு குப்பி (குருவி), அந்த மோதிரத்தை கடித்துக்கொண்டு வந்து அனைவரின் முன்னிலையிலும் கீழே போட்டதாம். 'குப்பி' என்றால் பிராணதேவர் என்றும் அர்த்தம் இருக்கிறது என்று அறிஞர்கள் கூறுகின்றனர்.

இவ்வாறாக கிரியம்மாவின் மகிமைகளைக் கேட்ட ஆங்கிலேய சர்தார் ஒருவர் வந்து அவரின் தரிசனம் செய்து, அவரின் வீட்டிற்கு (மனெதன) 'ஷ்யானபோக' என்னும் பட்டத்தைக் கொடுத்தார். பல காணிக்கைகளை / பரிசுகளைக் கொடுத்தார்.

தனது கடைசி நாட்களில், கிரியம்மா, குக்னூரு, பிள்ளங்கேரி, மைலார, கோகர்ண ஆகிய க்ஷேத்திரங்களுக்கு சென்றிருந்தார். ஒரு நாள் 'கும்பளூரு வழியாக ஹொன்னாளி அருகில் இருக்கும் கம்மாரகட்டெக்கு செல்' என்று அவருக்கு கனவு வந்தது. அதன்படி, கம்மாரகட்டெக்குச் சென்று மாருதிக்கு ஒரு கோயிலும், துங்கபத்ரா நதிக்கரையில் குளிப்பதற்கு படிக்கட்டுகளையும் கட்டினார். அதே இடத்தில் சிராவண சுத்த பஞ்சமி (நாக பஞ்சமி) அன்று, துங்கபத்ரா நதியில் நீந்திச் சென்றுவிட்டார் என்று நம்பிக்கை. ஆகவே, அன்றைய நாளே கிரியம்மாவின் ஆராதனை நடைபெறுகிறது.

அவரின் இஷ்ட தெய்வமான ரங்கநாத ஸ்வாமியின் கோயிலின் பகுதியிலேயே கிரியம்மாவிற்கும் ஒரு கோயில் கட்டி, அவரின் மூர்த்தியை வைத்து பூஜித்து வருவது, அவரின் மகிமையை காட்டுகிறது. மற்றும் மக்கள் அவர் மேல் வைத்திருக்கும் மதிப்பின் சாட்சியாக அந்தக் கோயில் இன்றைக்கும் இருக்கிறது.

கிரியம்மா தேவ-தேவியரின் மேல் பற்பல தேவர நாமாக்களை இயற்றியிருக்கிறார். எவ்வளவோ பாடல்கள், வாய்மொழியாகவே பரவி புகழ் பெற்றிருக்கின்றன. ஆனால் இன்று அவருடையது என்று சொல்லப்படும் 41 சிறிய பாடல்கள், ஐந்தாறு தீர்க்க க்ருதிகள் மட்டுமே கிடைக்கின்றன.

ஹௌவன கட்டெ ரங்கநாதனைக் கண்டு முதன்முதலில் இயற்றப்பட்ட பாடல் 'கண்டெனீக ரங்கநாதன காருண்யநிதிய' என்று சொல்வதுண்டு. இதில் 'உரகஷயன உதாரி நின்ன மொரெய ஹொக்கெ காயோ' என்று பிரார்த்தனை செய்திருக்கிறார். அந்தரங்க நிவேதனையைக் கூறும் இவரது அனேக தேவர நாமாக்கள் இருக்கின்றன. சில தேவர நாமாக்களில் ரங்கநாத ஸ்வாமியின் மகிமைகளை வர்ணித்திருக்கிறார். தசாவதாரம், ராமாயணம், மகாபாரதம் ஆகிய புராண கதைகளை பாடல்களாக இயற்றியிருக்கிறார் கிரியம்மா.

இவரின் கிருதிகளில் பஞ்சபாவங்களைக் காணலாம்.

கடெகண்ணலி நீ நோடதிரென்னய்ய பிடபேடவோ கைய
தந்தெ அடிய ஹொந்திதெனோ இந்து ஹௌவன கட்டெ ரங்க
ஆனந்தபடிஸோ ராமலிங்க ஹொந்திதேனு நின்ன சரண

ஆகிய கீர்த்தனைகளில் ஆத்ம நிவேதனையுடன் ஷாந்த பாவமும் கூடி வந்திருக்கிறது.

கரெதளு தன்ன மகன யஷோதெ - என்னும் கிருதி வாத்ஸல்ய பாவத்தைக் கொண்டிருக்கிறது.

தோரபாரதெ நின்ன சரிதெயனு
நரரொளு நகெகீடு மாடத ஹாகெ
கல்லொளு காந்தெய மாடிதவனெம்பரு
அல்லி மாடித ஹாகெ இல்லி ஸாரிதரெ
பல்லியதனென்னொடெய தொட்டவனெந்து ஸாருவெ

என்று ஸக்ய பாவத்தில் பாடியிருக்கிறார்.

வெங்கடேஷ என்ன ஸலஹல்யாகெ பளலுவி
கஜேந்திர த்ருவரன்னு ஸலஹிதந்தெ நன்னன்னு ஸலஹு

என்று ஸக்ய பாவத்தினால் கேட்டுக் கொள்கிறார்.

சந்ததி கொளலூதி பாடுவ நம்ம
கந்தர்ப்ப ஜலக்ரீடெயாடுத நந்தனந்தன
கோவிந்தன காணதெ ஒந்து நிமிஷ
யுகவாகி தோருத்தலிதெ
தாரம்ம ஸ்ரீரங்கதாமன தந்து தோரம்மா
கரெ தாரே, ஸைரிஸலாரே

என்று இனிமையுடன் பாடுகிறார்.

பாரன்யாதகெ நீரே நீ கரெதாரெ
ஸூகுண கம்பீரன - என்னும் கிருதியில் விரகத்தைக் காட்டிப் பாடுகிறார்.

பதுமனாபனே நின்ன பாத கிங்கர நானு - என்று நீ தலைவன். நான் தாஸி என்று தாஸ்ய பாவத்தைக் காட்டுகிறார்.

(தொடரும்)...

தொடர்

**கன்னட தந்த்ரசாரம் - ஸ்ரீவரதேந்திர தீர்த்தர்**

**உரை: திரு.குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்**

விததவாது3து3 புருஷஸூக்த கா3யத்ரியிந்த3தி1ஷயதி3 புருஷஸூக்தத3லி வேத3 |
ததிக3ளுதி3ஸித3வு நிக3மாதி3 பிரம்மஸூத்ர பா4ரத பஞ்சராத்ராதி3 ஆக3மக3ளு ||17

காயத்ரி மந்திரத்திலிருந்து புருஷ சூக்தம் வெளிப்பட்டது. அதிசயமாக புருஷ சூக்தத்திலிருந்து வேதராசிகள் உதயமாகின. அவற்றிலிருந்து வேதாந்த நிர்ணாயகமான பிரம்ம ஸூத்ரங்கள், மகாபாரதம், பஞ்சராத்ர ஆகமம் போன்றவை தோன்றின.

பிரணவம் - முதலில் தோன்றிய எழுத்து. அதுவே எட்டெழுத்து ஓம்காரம் ஆகும். அந்த எட்டெழுத்துக்களிலிருந்து 'அ' முதல் 'ள' வரை உள்ள 16 உயிர் எழுத்துக்கள் மற்றும் 34 மெய் எழுத்துக்கள் தோன்றின. அவற்றிலிருந்து, வியாஹ்ருதி, அட்சரங்கள், ஸ்ரீ நாராயண அஷ்டாக்ஷர மந்திரம், ஸ்ரீவிஷ்ணு ஷடக்ஷர மந்திரம், ஸ்ரீவாசுதேவ த்வாதசாக்ஷர மந்திரம் மற்றும் காயத்ரி மந்திரம் (24 எழுத்துக்கள்) ஆகியவை தோன்றின என்று பார்த்தோம்.

அந்த காயத்ரி மூன்று பாதங்களை (அடிகளை) கொண்டது. அவை ஒவ்வொன்றிலிருந்தும் மூன்று வர்க்கங்களைக் கொண்ட புருஷ சூக்தம் வெளிப்பட்டது. மூன்று வர்க்கங்களிலிருந்து, ரிக், யஜுர், ஸாம என்கிற மூன்று வேதங்கள் வந்தன. அவற்றிலிருந்து, பிரம்மஸூத்ரங்கள் (564), மகாபாரதம் (60 லட்சம்), மற்றும் பாஞ்சராத்ர ஆகமங்கள் தோன்றின என்று இந்த பத்யத்தில் ஸ்ரீவரதேந்திர தீர்த்தர் கூறுகிறார்.

இதற்கு ஆதாரம் மூல தந்த்ர ஸாரத்தில் 1-15, 1-16 ஸ்லோகங்களைக் காணலாம்.

சதுர்விம்ஷன் மூர்த்தயோ஽ஸ்யா: கதிதா வர்ண்ண தேவதா: |
தத்பேத: பௌருஷம் ஸூக்தம் வேதா: புருஷ ஸூக்த கா: ||15

24 மூர்த்திகளைக் கொண்ட காயத்ரியிலிருந்து புருஷ சூக்தமும், அதிலிருந்து மூன்று மறைகளும் வெளிப்பட்டன.

வைதிகா: ஸர்வ ஷப்தாஸ்ச தஸ்மாத் ஸர்வாபிதோ ஹ்யஹம் |
பஞ்சாஷத் வர்ண பின்னாஸ்ச ஸர்வ ஷப்தா அதோsபி ச ||16

அனைத்து வைதிக வாங்க்மய சப்தங்கள் மற்றும் இலக்கியங்கள், வார்த்தைகள், புராணம் போன்றவை வேதங்களிடமிருந்துதான் தோன்றியுள்ளன. இந்த அனைத்து சப்தங்களாலும், ஹரியே சுட்டிக் காட்டப்படுபவர் ஆகிறார். அனைத்து 50 வர்ணங்களும் ஆண்டவனையே குறிப்பிடுகின்றன.

அனைத்து சொற்களும், ஒலிகளும், ஸ்ரீஹரியையே குறிப்பிடுகின்றன. இவை அனைத்தும் பிரணவத்தை மூலமாகக் கொண்டுதான் தோன்றியுள்ளன. ஆகையால், பிரணவத்தைக் கொண்ட வேதராசியானது 'ஜடோத்தமம்' (ஜடப் பொருட்களிலில் சிறந்தது) எனப்படுகிறது. மற்றும் வேதத்தை அபௌருஷேயம் என்கிறோம். இதையே பிரம்மஸூத்ரத்தின் முதல் அத்தியாயம் தெளிவுபடுத்துகிறது.

ஷதகோடி மூலராமாயண புராணக3ளு ஸ்ம்ருதி ஸமூஹக3ளுபபுராணக3ளு ||
இதர வைதி3கஸூக்த (வேதோக்த) ஷப்3த ஜனிஸித3வு ஸந்ததவாச்ய நானே ஸந்தே3ஹவில்ல ||18

நூறு கோடி ஸ்லோகங்களைக் கொண்ட மூலராமாயண, புராணங்கள், ஸ்ம்ருதிகளின் கூட்டம், உப புராணங்கள் மற்றும் வேத சம்பந்தமான நற்சப்தங்கள் ஜனித்தன. எப்போதும் அவற்றால் குறிப்பிடப்படுகிறவன் நான்தான். சந்தேகம் வேண்டாம். (இவ்வாறு பகவான், பிரம்மனிடம் கூறினார்).

மூலராமாயணம் என்பது இப்போதுள்ள அனைத்து ராமாயணங்களுக்கும் ஆதார நூலாகும். அது ஹயக்ரீவ ரூப இறைவனால் இயற்றப்பட்டது. அதில் நூறு கோடி ஸ்லோகங்கள் உள்ளன. வேதவியாசரால் இயற்றப்பட்ட 18 புராணங்கள் (4 லட்ச

ஸ்லோகங்கள்), 18 உப புராணங்கள், அவருடைய சிஷ்யர்கள், பிரதி சிஷ்யர்கள் மூலம் இயற்றப்பட்ட ஸ்ம்ருதி சப்த கூட்டங்கள் மற்றும் அனைத்து வித, ஒலி, மொழி, சப்தங்கள் அனைத்துமே முக்கியமாக, பரம்பொருளான ஸ்ரீஹரியையே குறிக்கின்றன என்று மிகவும் தெளிவாக தந்திர ஸாரத்தில் கூறப்பட்டுள்ளது.

அதையே இங்கு நம் குருநாதரும் தெளிவுபடுத்தியுள்ளார். பிரணவம், வியாஹ்ருதி, மாத்ருகா வர்ணங்கள், நாராயண அஷ்டாக்ஷரம், விஷ்ணு ஷடக்ஷரம், வாசுதேவ த்வாதச அக்ஷரம், காயத்ரி, புருஷ சூக்தம், இந்த எட்டும் அஷ்ட மஹா மந்திரங்கள் எனப்படுகின்றன. தினமும் அனைவரும் ஜெபிக்க வேண்டியவை என்று ஸ்ரீமத்வாசார்யர் கூறியுள்ளார்.

உத3யிஸுவ ரவியவோல்காந்தி ஞானானந்த3 மொத3லாத3 தி3வ்ய கு3ண மய ஷரீரா |
ஸுத3ருஷனத3ர க3தா3ம்பு3ஜக3ளாயுத3வெனகெ3 த்ரித3ஷக3ணமயனு ஸர்வேஷ நாம ||19

உதிக்கும் ஞாயிறை மீறும் காந்தியுள்ளவன். ஞானம், ஆனந்தம் முதலிய சிறந்த பண்புகளையே தேகமாகக் கொண்டவன். சுதர்ஸன சக்கரம், சங்கு, கதை, தாமரை என்னும் ஆயுதங்களை தரித்தவன். நான் தேவதேவோத்தமன். அனைவரின் ஈசன். இப்படியாக தன்னைப் பற்றிய விஷயத்தை ஸ்ரீஹரி பிரம்மனுக்கு தெரிவித்தார்.

த்ரிதஷ என்றால் தேவர்கள். தேவர்களிடம் உள்ள அனைத்து பண்புகளைக் காட்டிலும், உயர்ந்த ஞான, ஆனந்த முதலிய பண்புகளையே உடலாகக் கொண்டவன் என்று இறைவன் கூறுகிறார். தந்த்ரசாரத்தில் பல இடங்களில் இவை கூறப்பட்டுள்ளன.

ஈ தி3ஷெயலென்ன ஸேவிபரு ஸ்ரீ பூ4தே3வி க்ருத்3தோ4ல்க விஷ்வகேஷவ மத்ஸ்யாதி |
மத்3ரூபக3ணமத்4யக3னு நாம பி3ரம்மபதிபாத்ய ரதிப4க்தி ஸேவ்யனு ஸமர்த்த2 ||20

இப்படியாக என்னை வணங்குபவர்கள், ஸ்ரீதேவி, பூதேவி, க்ருத்தோல்க, விஸ்வ, கேஷவ, மத்ஸ்ய போன்ற தன் ரூபங்களில் விளங்குபவனாக அவர்கள் நடுவில் உள்ளேன். பிரம்மன், சேஷாதி

தேவதைகள் மிகவும் பக்தியுடன் என்னை வணங்குகிறார்கள். நான் ஸமர்த்தன்.

இறைவன், தன்னைப் பற்றிக் கூறுகிறான். தந்த்ர ஸாரத்தில் 'ஸ்வ மூர்த்தி கண ஸேவ்ய:' மற்றும் 'ஸ்ரீ பூ ஆலிங்கித' போன்ற பதங்கள், பிரம்மாதி தேவதைகளால் வணங்கப்பட்டவன் என்று கூறுகின்றன. அவற்றையே, குருவானவர் இங்கு குறிப்பிட்டுள்ளார்.

தந்த்ர ஸாரம் 1-18, 1-19, 1-20 ஸ்லோகங்களில் இவை பேசப்பட்டுள்ளன.

உத்யத் பாஸ்வத் ஸ்மாபாஸஸ் சிதானந்தைக் தேஹவான் ।
சக்ர ஷங்க கதா பத்மதரோ த்யேயோऽஹமீஷ்வர: ||18
லட்சுமிதராப்யாம் ஆஷ்லிஷ்ட: ஸ்வமூர்த்திர் கணமத்யக: ।
பிரம்ம வாயு ஷிவாஹீஷ விப்யை: ஷக்ராதிகைரபி ||19
ஸேவ்யமானோऽதிகம் பக்த்யா நித்ய நிஷ்யேஷ ஷக்திமான் ।
மூர்த்தயோऽஷ்டாவபி த்யேயாஸ்சக்ர ஷங்க வராபயை: ||20
யுக்தா ப்ரதீப வர்ணாஸ்ச ஸர்வாபரண பூஷிதா: ।
தாத்ருக்ரூபாஸ்ச பஞ்சாஷத் ஞான முத்ராபயோத்யதா: ||21

க்ருத்தோல்க, மஹோல்க, வீரோல்க, த்யுலோக மற்றும் சஹஸ்ரோல்க இவை அஷ்டாக்ஷர ஜப நியாஸத்தில் கூறப்பட்டுள்ளன.

விஷ்வ, விஷ்ணு என்பது சஹஸ்ர நாம ரூபங்கள்.
கேசவ, நாராயண என்பது 24 ரூபங்கள்.
விஷ்வ, தைஜஸ என்பது 4 ரூபங்கள்
மத்ஸ்ய, கூர்ம என்பது 10 ரூபங்கள்.

இவர்கள் அனைவரும் சுற்றி நின்று, மூலரூபத்தில் இருக்கும் ஸ்ரீஹரியை வணங்குகிறார்கள் என்கிறார் குரு.

***** அடுத்த இதழில் தொடரும்**
**** திரு.குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்**

தொடர்

**கன்னட கிரந்தங்கள் அறிமுகம்**

**ஹரிசர்வோத்தம ஸார - ஸ்ரீவாதிராஜர்**

ஸ்ரீ மத்வ மதப் பரம்பரையில் உடுப்பி அஷ்ட மடங்களில் ஸோதே மடத்தின் பீடாதீஸராக அலங்கரித்தவர் ஸ்ரீ வாதிராஜ தீர்த்தர். மத்வ சித்தாந்தத்தில் வ்யாஸ ஸாஹித்யம் மற்றும் தாஸ ஸாஹித்யம் என இரண்டுக்குமே தனது பங்களிப்பை அளித்த மஹனீயர். பலதரப்பட்ட காவிய, ஸ்தோத்திர, டிப்பணி மற்றும் வ்யாக்யான கிரந்தங்களை இயற்றியதுடன், கன்னடத் திலும், துளு பாஷையிலும் 'ஹயவதன' முத்திரையிலே பலதரப்பட்ட க்ருதிகளையும் ரசனை செய்துள்ளார்.

'ஸ்ரீ ஹரியே ஸர்வோத்தமன்' எனும் தத்துவத்தை தம்முடைய பலதரப்பட்ட கன்னட பதங்களிலே வர்ணித்திருக்கும் ஸ்ரீ வாதிராஜர், இதனை பிரத்யேகமாக பலவித உதாரணங்களுடன் நிரூபிக்கும் வகையில் கன்னடத்தில் அருளிய மிகச் சிறிய கிரந்தமே 'ஹரி ஸர்வோத்தம ஸார' என்பதாகும்.

ஸ்ரீ வாதிராஜர் அருளிய 'ஹரி ஸர்வோத்தம ஸார' என்பது 16 பத்யங்களில் அமைந்த கன்னட கிரந்தம் ஆகும். வேதங்களில், உபநிஷத்துக்களில், ஸாத்வீக புராணங்களில், இதிஹாஸ ங்களில் தெளிவாக விளக்கப்பட்டுள்ள 'ஹரி ஸர்வோத்தமத்வ' தத்துவத்தை ஸ்ரீ வாதிராஜர் பல்வேறு வகைகளில் ஆராய்ந்து நமக்கு ஸந்தேகம் எழும் இடங்களில் கேள்விகளை அவரே எழுப்பி, அதற்கு சரியான வகையில் விளக்கமளித்து, "ஸ்ரீ ஹரியே ஸர்வோத்தமன்; அவனே பரபிரம்மம், அனந்தானந்த கல்யாண குண பரிபூரணன்; ஸர்வ தோஷ தூரன்" என ஸ்பஷ்டமாக நிரூபணம் செய்துள்ளார். ஸமஸ்க்ருதம் அறியாத பாமரரும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் கன்னடத்தில், ஸாஸ்திரக் கடலில் முத்தெடுத்து, சுவையாக, ஸஜ்ஜனர்களின் மேல் கருணை கொண்டு இதனைப் படைத்து ள்ளார் ஸ்ரீ வாதிராஜர். ஸ்ரீ ஹரியின் ஸர்வோத்தமத்வத்தை நிரூபிக்கும் வகையில் உதாரணங்களைக் கூறி விளக்குகிறார்.

முதல் பத்யத்தில் ஸ்ரீ வாதிராஜர், பகவான் த்ரிவிக்ரமனாகி வளர்ந்தபோது, பகவானின் பாதத்தைத் தமது கமண்டல ஜலத்தால் அலம்பியவர் பிரம்மா; அலம்பிக் கொண்டவர் ஸ்ரீ விஷ்ணு; பாதம்

அலம்பிய தீர்த்தத்தை ப்ரோக்ஷணை செய்து கொண்டவர் ருத்ர பகவான். அதேபோல் பிரம்மாவினுள் இருந்து படைத்தலைச் செய்பவனும், சிவனுள் இருந்து அழித்தலைச் செய்பவனுமான ஸ்ரீ ஹரி, தானே விஷ்ணுவாக, வாஸூதேவனாக இருந்து காக்கும் தொழிலைப் புரிபவன். பாற்கடலைக் கடையும் போது உதித்த மஹாலக்ஷ்மி, பிரம்ம, ருத்ராதி தேவதைகளிடத்தில் தோஷங்களைக் கண்டு, தோஷம ற்றவனான ஸ்ரீ ஹயவதனனுக்கு மாலை அணிவித்தாள். மேற்கண்ட உதாரணங்களில் ஸ்ரீ ஹரியே ஸர்வோத்தமன் என்பது தெளிவாகப் புலப்படுவதை ஸ்ரீ வாதிராஜர் "கால தொளதவனொப்ப தொளெஸி கொண்டவனொப்ப மௌளிய மேலே ஜலவ தரிஸிதவனொப்ப" போன்ற பதங்களினால் எளிதாக விளக்கியுள்ளார்.

இரண்டாம் பத்யத்தில், பிரம்மாவின் தலையைக் கத்தரித்த பாவம் போக்க, சிவன் காசிக்குச் சென்று விஷ்ணுவின் பாதம் பணிந்தார் என்றிருக்க, ஸ்ரீ ராமன் ராவணனைக் கொன்றதால் உண்டான ப்ரஹ்மஹத்ய தோஷத்தைப் போக்க, ராமேஸ்வரத்தில் சிவலிங்கத்தை பிரதிஷ்டை செய்தார் என்பது சரியல்ல. அங்கு சிவபெருமான் அமர்ந்து ராம ஸேதுவை தரிசனம் செய்து கொண்டு தமது தோஷங்களைப் பரிகாரம் செய்து கொண்டுள்ளார் எனவும், இது அஸூர மோகத்திற்காக எனவும் அறிய வேண்டும் என்று ஸ்ரீ வாதிராஜர் குறிப்பிட்டு ள்ளார்.

மூன்றாம் பத்யத்தில், பகவானின் வேறு அஸூர ஸம்ஹார லீலைகளையும் குறிப்பிட்டு, எந்தவொரு `ராவண வதம்' புரிந்த சரித்திரமான ராமாயணம், புண்ணியக் கதையாக போற்றப் படுகிறதோ, அந்த ஸ்ரீ ராமனுக்கு எவ்விதம் தோஷம் ஏற்படும்? ருத்ரனின் மூலமாக ப்ரஹ்மாவின் தலையைக் கொய்த போதும், கஸ்யபரின் மகனான ஹிரண்யகஸிபுவை நரசிம்மனாக வந்துக் கொன்ற போதும், ஸ்ரீ ஹரிக்கு தோஷமில்லை எனில் அவதார ரூபமான ராமனுக்கும், ராவணனைக் கொன்றதால் தோஷமில்லை என அறிய வேண்டும் என்று ஸ்ரீ வாதிராஜர் விளக்குகிறார்.

நான்காம் பத்யத்தில், ராவணனின் ஸம்ஹாரத்திற்காக இலங்கை செல்ல ஸ்ரீ ராமன் கட்டிய ஸேதுவை (பாலத்தை) தரிசனம் செய்யும் மக்களுக்கு ப்ரஹ்மஹத்ய பாவம் கரைந்து விடும் என ஸ்ருதிகள்

உரைப்பதால், பிரம்ம தேவரின் தலையைக் கத்தரித்து கையில் தரித்த சிவனுக்கு ப்ரஹ்ம ஹத்ய பாவம் வரக்கூடாது என்றே, அவருக்கு ஸேதுவின் தரிசனம் செய்விக்க, ஹயவதனனான ஸ்ரீ ராமன் சிவ லிங்க த்தை பிரதிஷ்டை செய்தான் என்பதை ஸ்ரீ வாதிராஜர் "ஸேது வெய கண்ட நரரிகே ப்ரஹ்மஹத்ய பாதக கெடுவுதெந்து ஸ்ருதி மன்னிஸலு முதலான பதங்களினால் விளக்கியுள்ளார்.

ஐந்தாம் பத்யத்தில் மேலும் ஸ்ரீ வாதிராஜர், ராம ஸேதுவின் மகிமைகளை உரைப்பதாய், ஸ்ரீ ராமன் அமைத்த பாலத்தின் தரிசனமே அனைவரின் பாவத்தையும் போக்கிவிடும் எனில் அந்த ஸ்ரீ ராமன் பாவம் செய்தவர்களை சுத்தமானவர்களாகச் செய்கிறான் என்றே அறிய வேண்டும் என உரைக்கிறார்.

ஆறாம் பத்யத்தில், விபீஷணன் மற்றும் சிவனிடையே தாரதம்யத்தில் அதிகமான வேறுபாடுகள் உள்ளது. எனினும், இருவரும் ஹரிபக்தர்கள் என்ற வகையில் ஒன்று பட்டு உள்ள தால், இருவரின் ப்ரதிமைகளையும் வெவ்வேறு இடங்களில் ப்ரதிஷ்டாபனை செய்து, உலகத்திற்கு கற்றுக் கொடுப்பதற் காகவும், ஹரிபக்தர்களான சிவன் மற்றும் விபீஷணனின் அருளை எல்லோரும் பெறுவதற்காகவுமே யன்றி, ஸ்ரீ ராமன் அவர்களின் அருளைப் பெற புரிந்த காரியமல்ல என ஸ்ரீ வாதிராஜர், "ஒந்து கடயல்லி விபீஷணன ப்ரதிஷ்டிஸிதனு, மத்தொந்து கடயல்லி ஸதாசிவன பூஜிஸித" போன்ற பதங்களில் விளக்குகிறார்.

ஏழாம் பத்யத்தில் "ராம,ராம,ராம" என ராம நாமத்தை ஜெபிப்பதாலேயே தாம் வாழ்வதாகக் கூறும் மஹாதேவன், பகவத் பக்தன் எனவும், எனவேதான் தமது பக்தர்களான மஹா தேவன் மற்றும் விபீஷணனை பிரதிஷ்டாபனை செய்து, அவர்கள் உலகத்தாரால் வணங்கப்பட வேண்டியவர்கள் என்று ஸஜ்ஜனர்களுக்கு உணர்த்தியவன் கருணைக்கடலான ஸ்ரீ ராமன் எனவும் விளக்கி, அவன் அனைவரின் சம்சாரக் கடலை யும் தாண்டச் செய்யும் பரப்ரம்மன் எனவும் ஸ்பஷ்டமாக ஸ்ரீ வாதிராஜர் உரைத்துள்ளார்.

எட்டாம் பத்யத்தில் ஸ்ரீ கிருஷ்ணனின் மஹிமைகளைக் கூறத் தொடங்கி, தேவதைகள் பூபாரத்தை பரிகாரம் செய்ய வேண்ட, பகவான் ஸ்ரீ கிருஷ்ணனாக அவதரிக்க, த்வாரகையிலே தேவதைகள் மூல ரூபத்திலும், ஸ்ரீ ஹரியின் ஆணையின்படி அவதார ரூபத்திலும்

வந்து சேவித்தனர் எனவும், இதுவே ஸ்ரீ ஹரியின் ஸர்வோத்தமத்துவத்தைக் காட்டுகிறது என்பதையும் தெளிவாக எடுத்துக் கூறி, வ்ருகாஸுரனால் வந்த ஆபத்தைப் பரிஹரிக்க சிவன் வைகுண்டம் வரை சென்று சரணடைய, பகவான் சிவனைக் காத்து ரக்ஷித்தார் என்றிருக்க, ஸ்ரீ கிருஷ்ணன் புத்திர பாக்கியத்திற்காக சிவனைக் குறித்து தவம் புரிய கைலாஸ யாத்திரை புரிந்தது ஒரு விளையாட்டே என்று அறிய வேண்டும் என ஸ்ரீ வாதிராஜர் விளக்குகிறார்.

ஒன்பதாம் பத்யத்தில் ஸ்ரீ வாதிராஜர், ஸ்ரீ கிருஷ்ணனின் கைலாச யாத்திரையைப் பற்றி தெளிவுபடுத்தும் விதமாக் கூறி, ஸ்ரீ கிருஷ்ணன் கைலாஸ யாத்திரையை வரம் பெறுவதற்காக மேற்கொண்டதாகக் கூறினால், அதனால் ஹரனே உத்தமன் என்று வாதம் புரிந்தால், "ஹரியும் ஹரனும் ஒன்றே" என்ற அத்வைத சித்தாந்தம் இங்கு பொய்யாகிவிடுகிறது எனவும் விவரித்து, ஸ்ரீ கிருஷ்ணனின் கைலாஸ யாத்திரை வெறும் லீலை; புத்திர வரம் பெறுவதற்காக அல்ல என்றாகி, அது 'ஹரி ஸர்வோத்தம' தத்துவத்திற்கு மேலும் பலமாகிறது என வாதிடுகிறார்.

பத்தாம் பத்யத்தில், ஜகத்பதியான ஸ்ரீ ஹரி அனைவராலும் வணங்கப்படத்தக்கவன் என ஸ்ருதிகள் புகழ்வதினால், ஸ்ரீ கிருஷ்ணன் கைலாஸம் சென்று வணங்கியது, தனது பேரனான ருத்ர பகவானுக்கு ஒரு கௌரவத்தை அளிப்பதற்காக எனவும், அஞ்ஞானிகளுக்கு மோகத்தை உண்டு பண்ணுவதற்காக எனவும் அறிய வேண்டுமெனக் கூறி ஸ்ரீ வாதிராஜர் "தந்தே மக்கள பளிகே போதந்தே போகி முகுந்த பொம்மனிகெ, ஹரியதன கொடலெந்து" போன்ற பதங்களினால் விளக்குகிறார்.

**** அடுத்த இதழில் தொடரும் ****

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.**

**S.லக்ஷ்மிபதிராஜா, சென்னை**

**Subscription Renewal**

தகுந்த சமயத்தில் உங்கள் சந்தாவை புதுப்பித்து, ஹரிதாச விஜயம் பத்திரிக்கை தொடர்ந்து வருமாறு பார்த்துக் கொள்ளவும்.

தொடர்

**ஹரிகதாம்ருதசார பத்ய அர்த்தங்கள்**

**கருணா சந்தி - தொடர்ச்சி**

**பா[3]லக[1]ன க[1]லபா[4]ஷெ ஜனனியு**
**கே[1]ளி ஸுக[2]படு[3]வந்தெ லகுமி**
**லோல ப[4]குத[1]ரு மாடு[3]திஹ ஸம்ஸ்துதிகெ[3]**
**ஹிக்[3]கு[3]வனு ।**
**தாள தன்னவரல்லி மாடு[3]வ**
**ஹேளனவ ஹெத்தை[3]ய்வ விது[3]ரன**
**ஆலயதி[3] பாலுண்டு[3] கு[3]ருபன மானவனெ கொண்ட[3] ||14**

குழந்தையானது, தனது மழலைச் சொற்களால், யாருக்கும் புரியாத மொழியில் பேசினால்கூட, தாயானவள் மட்டற்ற மகிழ்ச்சி கொள்கிறாள். அதைப் போலவே, லட்சுமிபதியானவன், மஹாத்ம்ய ஞானபூர்வக சத்ருட பக்தியைக் கொண்ட பக்தர்கள் செய்யும் ஸ்தோத்திரங்களுக்கு - அதாவது, ஸ்ரீமதாசார்யர் நிர்ணயம் செய்து கொடுத்தபடி இருக்கும் கிரந்தங்களை / ஸ்தோத்திரங்களை படித்தால், ஸ்வாமி மகிழ்கிறான்.

அப்படி ஸ்வாமியானவன் ஆனந்தப்பட்டால், நமது பிறவியே அர்த்தமுள்ளதாக ஆயிற்று என்கிறார்கள் அறிஞர்கள். அப்படி ஸ்வாமி ஆனந்தப்படுமாறு, நமது ஸ்தோத்திரங்கள் இருக்க வேண்டும். மாறாக மக்கள் மகிழவேண்டும், நம்மைப் போற்ற வேண்டும் என்று நாம் எதையும் செய்யக்கூடாது ஆனால், யாராவது தனது பக்தர்களுக்கு ஏதாவது அவமானங்களை செய்தால், ஸ்வாமி பொறுப்பதில்லை.

துரியோதனன், ஸ்ரீகிருஷ்ண பரமாத்மனை அழைத்து, அவனுக்கு ராஜோபசாரங்களை செய்வதற்கு தயாராக

இருக்கிறான். ஆனால், அவனது மனதிலோ, ஸ்ரீகிருஷ்ணனை வஜ்ர, வைடூரியங்களைக் கொடுத்து மயக்கிவிட வேண்டும், பாண்டவர்களிடமிருந்து அவனை பிரித்துவிட வேண்டும் என்று நினைக்கிறான். ஆனால், ஸ்ரீகிருஷ்ணனோ, துரியோதனனின் வீட்டிற்கும் செல்லவில்லை. அவனின் உபசாரங்களையும் ஏற்றுக் கொள்வதில்லை. மாறாக, அவன் தன் பக்தனான விதுரனின் வீட்டிற்குச் சென்று பால் குடித்து, அவனின் பக்தியை ஏற்றுக் கொள்கிறான்.

அப்படியே, பக்தர்களும், பகவந்தனை மகிழ்விப்பதற்காக ஆடம்பரமாக / படாடோபமாக செய்யும் செயல்களை அவன் ஏற்றுக் கொள்வதில்லை, என்று இந்த பத்யத்தின் மூலம் விளக்குகிறார் ஸ்ரீஜகன்னாததாசர்.

**ஸ்மரிஸுவவ ரப[1]ராத[4]கள தா**
**ஸ்மரிஸ ஸகலேஷ்ட பிரதா[3]யக**
**மரளி தனக[3]ர்ப்பிஸலு கொட்டுத[3]னந்த மடி[3] மாடி[3] |**
**ப[1]ரிபரியலிந்து[3]ணிஸி ஸுக[2] ஸா**
**க[3]ரதி[3] லோலாடி[3]ஸுவ மங்க[3]ல**
**சரித சின்மயகா[3]த்ர லோக[1]பவித்ர ஸுசரித்ர ||15**

பகவத் பக்தர்கள் செய்யும் செயல்களில் எவ்வளவே குறைகள், பிழைகள் இருந்தாலும், கருணைக்கடலான ஸ்ரீஹரி அவற்றை மன்னித்து அவர்களுக்கு அருள்கிறான் என்கிறார் தாசராயர்.

சர்வே ஜனா: ஸுகினோ பவந்து
கோபிராமணேப்ய: ஷுபமஸ்து

என்று அனைவரும் நன்றாக இருக்க வேண்டும், அனைவருக்கும் பகவத் பிரசாதம் / அருள் கிடைக்க

வேண்டும் என்று நாம் வேண்டினால், அத்தகைய பக்தர்களின் அபராதங்களை ஸ்ரீஹரி பொருட்படுத்த மாட்டான். அவற்றை அவன் மன்னித்து விடுகிறான். அத்தகையவர்களுக்கு அவன் மோட்சத்தையே கொடுக்கிறான்.

அவன் கொடுத்ததையே நாம் அவனுக்குத் திருப்பிக் கொடுத்தால் (சமர்ப்பித்தால்), அவன் அதை மறுப்பதில்லை. கிருஷ்ணார்ப்பணம் என்று நாம் கொடுத்ததை, மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்கிறான். பிறகு, அதையே பல மடங்காக்கி திருப்பி நமக்கே கொடுக்கிறான். பல்வேறு விதங்களில் நமக்கு சுக-சாகரமான அமிர்தத்தையே கொடுக்கிறான்.

அத்தகைய ஸ்ரீஹரியின் சரித்திரமானது, மிகவும் மங்களகரமானது என்று இந்த பத்யத்தை முடிக்கிறார் ஸ்ரீஜகன்னாததாசர்.

*** **திரு. முரளிதர தாசர், பெங்களூரு**

தொடர்

## ஹரிதாசர்களின் சிந்தனை முத்துக்கள்

### யார் ஹரிதாசன்?

ஹரிதாசன் என்றால் ஸ்ரீஹரிக்கு ப்ரியமானவர். ஸ்ரீஹரி நினைப்பதற்கு கொஞ்சமும் எதிராகச் செய்யாதவன். ஸ்ரீமதாசார்யர் மத்வரின் சித்தாந்தத்தில் திடமான பக்தி வைத்து, த்வைத சித்தாந்தத்தை முழுமையாக நம்பி, அவரை பின்பற்றுபவராகிறவனே, உண்மையான ஹரிதாசன். ஸ்ரீமத்வர் சொன்னதுபோல 'ததலம் பஹுலோக விசிந்தனயா ப்ரவணம் குரு மானசமீஷபதே'. இதையே ஸ்ரீபுரந்தரதாசர்:

ஹரிதாசனாதரெ ஹேகிரபேகு
நரலோகத சிந்த பிட்டிரபேகு ||

ஈஷ - தாசர்களின் நிலையை அறிந்து 'நாஹம் கர்த்தா ஹரி: கர்த்தா' என்னும் சிந்தனையுடன், தன் சாதனைகளை நிறைவேற்றிக் கொள்பவனே ஹரிதாசன்.

ஹரியில்லதன்யத்ர தெய்வவில்ல எனபேகு
மர்தனே ஜகக்கெ குரு எனலுபேகு ।
புரந்தரதாசரே தாசரெனபேகு
சிரி விஜயவிட்டலன ஸ்மரணே மாடலேபேகு ॥
--ஸ்ரீவிஜயதாசர்

மேலும், தினப்படி வாழ்க்கையில் எப்படி இருந்து, சாதனைகளை செய்யவேண்டும் என்பதை விளக்குகிறார்.

இந்து நாளெகெ எம்ப யோசனெ பிடபேகு
இந்திரியகளன்னெல்ல நிக்ரஹிசபேகு ।
பந்தத்தெல்ல பரலி ஈகலே எனபேகு
அந்தவரு எனகெ பந்துகள எனபேகு ॥

பாகவத தர்மங்களை பின்பற்றி, அனைவருக்கும் உதவியாக, ஸ்ரீஹரியை 'ஹரிரேவ பித்ருமாத்ரு கதி:' என்று வணங்கவேண்டும். மேலும் இன்னொரு இடத்தில்:

அன்ன பானாதிகளிகெ அவசர பீளதிரபேகு
கண்ணித்து குருடனெந்தெனிசபேகு
சன்னாகி வாயு மததலி எந்திரபேகு
தன்னொளகெ தா தாளிது நகுதலிரபேகு ॥
-- ஸ்ரீவிஜயதாசர்

'யத்ருச்சாலாப சந்த்ருப்த' என்று, 'பந்தத்தெல்லா பரலி கோவிந்தன தய ஒந்திரலி' என்று வியாச தாச சாகித்யங்களை ஈடுபாட்டுடன் படிக்கவேண்டும். 'ஹரிசர்வோத்தம - வாயுஜீவோத்தம' என்னும் நுடி மனதில் எப்போதும் இருக்கவேண்டும். இந்த நற்குணங்களைப் பெற்றவனே ஹரிதாசன் எனப்படுகிறான். ****




## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## நாமஸ்மரண ஸந்தி - விடைகள்

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| [1]அ | க் | க | ர | தி | | [2]அ | ம் | [34] | க | க | ர் | மா | [23] | |
| [3]க் | லே | ஸ | | ப | டு | [24]உ | | த | | | ய | வ | ஹ் | [25] |
| ரோ | | | | [38]க | | [4]வி | பி | ன | [35]ஈ | | | | ரு | |
| த | க | | தி | | | பே | | | ஸ | | ஜ | ரி | த் | [26]அ |
| [5]க | ர் | ம | ட | | | ஸ | | | [6]ப | ண் | டு | ணி | த | பி |
| | [7]அ | த | [39]ம | | | | | | ல் | | | [8] | ம | லா |
| | ஹ | த் | | | | | | | ல | | | | | ஷெ |
| | ர | ரோ | | ம் | | [9]து | ரி | தா | வ | ளி | | | | |
| | ட | [40]ந | | ர | | வ | | | லு | டி | [27] | | | [36] |
| [10]பு | ண் | ட | ரீ | க | | ஸு | | | ள | | | [11]வ | ன | தி |
| ரு | [41] | | | க் | [12]அ | ஹி | | [13] | [14]ப | ர | டெ | ரு | | ப |
| ட | | [15] | ஞ் | ச | ன | [42]த | | | | [16] | ர் | ஷ | | |
| க | | | [17] | ல | | ன் | ர | வ | [28] | | | | | னி |
| ர் | | | | லா | | | க | | [18]பி | க் | [19]கு | மா | ன | வ |
| ப | | னி | யோ | [29]கு | | ஷ | [43] | | | | தி | ந | யு | [30]த் |
| [20] | ஸ் | ம் | ரு | தி | | ர் | | | [37] | | ண | கு | ர் | [31]நி |
| ஹ | | | | | | ம | | ம் | ஸ | யா | [32] | | | ஷ் |
| கா | | | | னி | வ | [21]அ | ம் | ப | ர | ச | ரா | [33]ச | | டு |
| தி | [22]ஸ | ஹ | வா | ஸ | | | | | தே | | [44]தா | | | ர |

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்

Haridasa Vijayam - Monthly

மலர் 2 ** ஆகஸ்ட் 2021 ** இதழ் 9



ஸ்ரீ வியாஸ தத்வக்ஞ தீர்த்தர்

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 2 : இதழ் 9


**நிர்வாக ஆசிரியர்**

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276.
haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**

'தாச சாகித்ய சேவா ரத்ன'
திரு.குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**

திரு. முரளிதர தாசரு,
திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா,
திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்


## ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்

**ஆகஸ்ட் 1 முதல் 31 வரை, 2021**

ஆகஸ்ட் 1 - ஆஷாட கிருஷ்ண அஷ்டமி - ஸ்ரீதந்தெ வெங்கடேச விட்டல தாசர், சித்ரதுர்கா
ஆக. 6 - ஆ. கி. த்ரயோதசி - ஸ்ரீகர்பர நரஹரி
ஆக 11 - சிராவண சுத்த த்ருதியை - ஸ்ரீஇபராமபுர அப்பாவரு
ஆக. 13 - சி. சு. பஞ்சமி - ஹெளவனகட்டெ கிரியம்மா
ஆக. 19 - சி. சு. த்வாதசி - ஸ்ரீவர விட்டலரு, தார்வாட்
ஆக. 24 - சிராவண கிருஷ்ண த்விதியை - ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள்
ஆக.30 சி.கி.அஷ்டமி- ஸ்ரீவியாஸ தத்வக்ஞ தீர்த்தர், வேணிஸோமபுர

# ஆசிரியர் பக்கம்

இந்த ஆகஸ்ட்2021 மாதத்தில் பல்வேறு ஹரிதாசர்களின் ஆராதனை நாட்கள் வருகின்றன. நம் அனைவருக்குமே கலியுக கல்பவ்ருக்ஷமாக, காமதேனுவாக இருக்கும் ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் 350வது ஆராதனையும் இந்த மாதம் வருகிறது. இவருக்குப் பிறகு வந்த ஹரிதாசர்களில் ராயரைப் பற்றி பாடாதவர்களே இல்லை என்னும் அளவிற்கு அவரது கருணை - ஹரிதாசர்களின் மேல், ஹரிதாச சாகித்யத்தின் மேல் இருக்கிறது என்பதை அறிகிறோம்.

வாசுதேவ விட்டலா என்னும் அங்கிதத்தில் தேவர நாமாக்களை இயற்றிய ஸ்ரீவியாச தத்வக்ஞ தீர்த்தரைப் பற்றிய ஒரு குறிப்பு இந்த இதழில் இருக்கிறது. மற்ற அனைத்து ஹரிதாசர்களின் வாழ்க்கை வரலாறுகளை, அவர்களைப் பற்றிய குறிப்புகளை தொடர்ந்து நம் பத்திரிக்கையில் கொடுக்க முயல்கிறோம்.

குருராயர் மற்றும் இந்த அனைத்து ஹரிதாசர்களையும் அவர்களது ஆராதனை நாட்களில் சிறப்பாக சிந்தனை, ஆராதனை செய்து அவர்களது அருளைப் பெறுவோமாக.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

**வேண்டுகோள்**

* ஸ்ரீஜகன்னாத தாசரின் தத்வ சுவ்வாலி - தமிழில் அர்த்தங்களுடன்
* ஸ்ரீவாதிராஜரின் குண்டக்ரியெ - தமிழில் அர்த்தங்களுடன்
* ஹரிதாச சாகித்யத்தில் நிந்தா ஸ்துதி - அர்த்த விளக்கங்களுடன்

தமிழ் மாத்வ சமூகத்திற்கு மிகவும் பயன் தருவதான இத்தகைய அரிய புத்தகங்கள் வெளியிடுவதற்கு ஸ்பான்ஸர்ஸ் (Sponsors) தேவை. ஹரிபக்தர்கள் உதவுமாறு கேட்டுக் கொள்கிறோம். நன்றி.

தொடர்

## கோவிந்தாஷ்டகம்

**இயற்றியவர்: ஸ்ரீகுருகோவிந்தவிட்டலதாசர்**

**ட$^{3}$ம்-ட$^{3}$ரகாய நம:** - ட$^{3}$ரக நாமக பகவத் ரூபத்தின் ஸ்துதி

**ட$^{3}$ரகோ ட$^{3}$யார்பித கோவிந்த । நம்மெ**
**ட$^{3}$ரனு பரிஹரிஸொ கோவிந்த ।**

ட-கார எழுத்தில் துவங்கும் அனைத்து சொற்களின் அதிபதியாக இருக்கும் கோவிந்தனே, வேதங்களில் ட-காரத்தில் துவங்கும் சொற்களையும் தன் பெயர்களாகவே கொண்டவனே, எங்களின் பயங்களைப் போக்குவாயாக. அந்த ட-கார சொற்களில் நாங்கள் செய்யும் ஸ்துதிகளை / ஸ்தோத்திரங்களைப் பெற்று கோவிந்தா என்று அழைக்கப்படுபவனே, இந்த ஸ்துதிகளை ஏற்றுக்கொண்டு எங்களை காப்பாற்றுவாயாக.

**ட$^{4}$ம்-ட$^{4}$ரிணே நம:** - ட$^{4}$ரின் நாமக பகவத் ரூபத்தின் ஸ்துதி

**ட$^{4}$ண ட$^{4}$ண நாததி கோவிந்த । பலு**
**ட$^{4}$ணிரெம்போ வாத்$^{3}$யதி$^{3}$ கோவிந்த ।।**

ட-கார எழுத்தில் துவங்கும் அனைத்து சொற்களின் அதிபதியாக இருக்கும் கோவிந்தனே, இசைக்கும் வாத்தியங்களிலிருந்து வரும் டண டண என்னும் சப்தத்தின் அதிபதியானவனே. அதாவது சப்தத்திலும் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும் கோவிந்தனே, ‘நம்ம தரவ பரிஹரிஸோ’ - எங்களின் துக்கங்களைப் போக்குவாயாக. (முந்தைய ஸ்லோகத்தின் வரிகளை இங்கு பொருத்தி, வாக்கியத்தை பூர்த்தி செய்ய வேண்டும்).

**ணம்-ணாத்மனே நம:** - ணாத்ம நாமக பகவத் ரூபத்தின் ஸ்துதி

**ணனாம வாச்யனெ கோவிந்த । ப்ர**
**ணமன மாடுவெனோ கோவிந்த ।**

ண-கார எழுத்தில் துவங்கும் அனைத்து சொற்களின் அதிபதியாக இருக்கும் கோவிந்தனே, வேதங்களில் இருக்கும் அனைத்து ண-

காரங்களையும் தன் பெயர்களாகவே கொண்டு, அவற்றினால் ணா-த்மரூபியாக இருக்கிறாய். உனக்கு பிரணாமத்தை (வணக்கங்களை) தெரிவிக்கிறேன். (உன்னை வணங்குகிறேன்).

**தம் தாராய நம: - த-எழுத்திற்கான தார நாமகனின் ஸ்துதி**

**தருணார்க்க ப்ரபெ$^{4}$ய கோவிந்த । நம்ம**
**தருணி த்ரௌபதிவரத கோவிந்த ।।**

த-காரத்தில் துவங்கும் அனைத்து சொற்களின் அதிபதியாக இருக்கும் கோவிந்தனே, உதயசூரியனைப் போல செம்மை ஒளி பொருந்திய நீ, யுவதியான திரௌபதி, துச்சாதனர்களின் தொந்தரவுக்கு ஆளானபோது, அவளுக்கு முடிவில்லா ஆடையைக் கொடுத்து அருளினாய். அவளின் பிரார்த்தனைகளை ஏற்று அவளுக்கு அருளி, கோவிந்தா என்று அழைக்கப்பட்டாய்.

**த$^{2}$ம் த$^{2}$பாய நம:** - த$^{2}$ப நாமக பகவந்தனின் ஸ்துதி

**த$^{2}$ரத$^{2}$ரவர்ணனெ கோவிந்த । ப$^{3}$ல்ப்ரம**
**த$^{2}$ன ஷீலனெ குரு கோவிந்த ।**

த-காரத்தில் துவங்கும் அனைத்து சொற்களின் அதிபதியாக இருக்கும் கோவிந்தனே, சம்சார பயத்தினால் மற்றும் அந்த சம்சாரத்தில் வரும் நோய் நொடி ஆகியவற்றால் அவதிப்படுபவர்களின் பிரார்த்தனைகளை ஏற்று, அவர்களைக் காப்பாற்றுபவனே. உன் பக்தர்களின் வெவ்வேறு எதிரிகளின் சேனைகளை நாசம் செய்பவனும் நீயே, கோவிந்தா.

**த$^{3}$ம் த$^{3}$ண்டினே நம:** - த$^{3}$ண்டி நாமக பகவந்தனின் ஸ்துதி

**த$^{3}$ர கம்புத$^{4}$ரனெ கோவிந்த । த்ரி**
**த$^{3}$ஷர பரிபால கோவிந்த ।।16**

தர என்றால் சங்கு. கம்பு என்றால் (கழுத்தில்) சங்கு வடிவத்தில் இருக்கும் ரேகைகள். ஆகையால், தர கம்புதரனே என்றால், கழுத்தில், சங்கினைப் போல மூன்று ரேகைகளைக் கொண்டவனே என்று பொருள். எப்போதும் இளமையாகவே இருக்கும் தேவதைகளை காப்பாற்றுபவனே. நீயே, த-காரத்தில் துவங்கும் அனைத்து சொற்களில் வெளிப்படுபவனாக கோவிந்தன் எனப்படுகிறாய்.

**த⁴ம் த⁴ன்வினே நம:** - த⁴ன்வி நாமக பகவந்தனின் ஸ்துதி

**த⁴ர்மஸூ கோப்தனெ கோவிந்த । ஸ**
**த்த⁴ர்மனாமக குரு கோவிந்த ।**

த-காரத்தின் துவங்கும் சொற்களின் அதிபதியாக தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும் கோவிந்தனே; தர்மத்தை சரியாக நிலைநாட்டுபவனே / காப்பாற்றுபவனே; சஜ்ஜனர்களை தர்மத்தின் பாதையில் அனுப்புவதால், 'தர்ம' என்ற நல்ல பெயரைப் பெற்றவனே; தர்மத்தைக் காப்பாற்றக்கூடிய அனைத்து ஸ்துதிகளாலும் போற்றப்படுபவனாகையால், கோவிந்தா என்று அழைக்கப்படுகிறாய்.

**நம் நம்யாய நம:** - நம்ய நாமக பகவந்தனின் ஸ்துதி

**நரெயணாபித குரு கோவிந்த । நம்ம**
**நரஸக²னெனிஸிஹெ கோவிந்த ।।17**

ந-காரத்தில் துவங்கும் சொற்களின் அதிபதியாக தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும் கோவிந்தனே, நீ நாராயணன் என்னும் பெயரை பெற்றிருக்கிறாய். நரர்கள் சொல்லும் ஸ்துதிகளை மிகவும் அன்புடன் ஏற்றுக்கொள்பவன் ஆகையால், நாராயணன் என்று அழைக்கப்படுகிறாய். நீ, யமதேவன் மற்றும் மூர்த்தி தம்பதிகளிடம் நாராயண நாமத்தினால் அவதரித்தபோது உன்னுடன் அவதரித்த நர நாமக சேஷனுக்கு சகனாக (நண்பனாக) இருந்தாய். அதுமட்டுமல்லாமல், அனைத்து நரர்களுக்கும் நண்பனாகவே இருந்து அவர்களுக்கு அருள்கிறாய்.

**பம் பராய நம:** - பர நாமக பகவந்தனின் ஸ்துதி

**பரமபுருஷ குரு கோவிந்த । காயோ**
**பரமானந்த ப்ரதனெ கோவிந்த ।**

ப-காரத்தில் துவங்கும் சொற்களின் அதிபதியாக தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும் கோவிந்தனே, நீயே ஸ்ரேஷ்ட புருஷன் (புருஷோத்தமன்). மிகச்சிறந்த புருஷார்த்தமான மோட்சத்தைக் கொடுத்து, பரமானந்தத்தைக் கொடுத்து அருள்பவன் ஆகையாலும் நீ பரமபுருஷன் என்று அழைக்கப்படுகிறாய். நீயே பரமபுருஷன் என்கிற

அறிவை எமக்குக் கொடுத்து, அதன் பலனாக மோட்சத்தையும் கொடுத்து, எங்களைக் காப்பாற்ற வேண்டும்.

**ப$^{2}$ம் ப$^{2}$லினே நம:** - ப$^{2}$லி நாமக பகவந்தனின் ஸ்துதி
**ப$^{2}$லரூபனு நீனெ கோவிந்த | இதெ**
**ப$^{2}$லிதார்த்தவோ குரு கோவிந்த ||18**

ப-காரத்தில் துவங்கும் சொற்களின் அதிபதியாக தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும் கோவிந்தனே, அனைத்து சாதனைகளின் / கர்மங்களின் பலன் நீயே. அனைத்து சாஸ்திரங்களின் வாக்கியங்களை தன் ஸ்துதி ரூபமாகவே கொண்டிருக்கும் கோவிந்தா என்று அழைக்கப்படுபவனே, அனைத்து சாஸ்திரங்களின் அர்த்தங்களும் நீயே.

**ப$^{3}$ம் ப$^{3}$லினே நம:** - ப$^{3}$லி நாமக பகவந்தனின் ஸ்துதி
**ப$^{3}$கெ ப$^{3}$கெ கர்மகள் கோவிந்த | மாடி**
**ப$^{3}$கெ ப$^{3}$கெ லீலனெ கோவிந்த |**

ப-காரத்தில் துவங்கும் சொற்களின் அதிபதியாக தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும் கோவிந்தனே, நீ, வெவ்வேறு கர்மங்களை செய்து, உன் வெவ்வேறு லீலைகளை காட்டுகிறாய். உன் இத்தகைய லீலைகளைக் குறித்தான ஸ்துதிகளை / ஸ்தோத்திரங்களை மிகவும் அன்புடன் ஏற்றுக்கொள்வதினால், நீ கோவிந்தா என்று அழைக்கப்படுகிறாய்.

**ப$^{4}$ம் ப$^{4}$காய நம:** - ப$^{4}$க நாமக பகவந்தனின் ஸ்துதி

**ப$^{4}$ர்க$^{3}$ரூபியெ குரு கோவிந்த | நம்ம**
**ப$^{4}$ர்மக$^{3}$ர்ப்பன பித கோவிந்த ||19**

ப-காரத்தில் துவங்கும் சொற்களின் அதிபதியாக தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும் கோவிந்தனே; தேஜஸ், சுகம் மற்றும் ஞான-ஸ்வரூபியான காயத்ரி மந்திரத்தின் அதிபதியான சவித்ரு நாராயணனே; நமக்கெல்லாம் குரு என்றும் ஹிரண்யகர்ப்ப என்றும் அழைக்கப்படும் சதுர்முகனுக்கும் தந்தையானவனே, அந்த பிரம்மன் சொல்லும் புகழுரைகளை / போற்றுதல்களை அன்புடன் ஏற்றுக் கொள்ளும் பொருட்டு கோவிந்தா என்று அழைக்கப்படுபவனே.

(தொடரும்)...

தொடர்

## கேசவ நாமா

### 17-பய நிவாரணவு - ஸ்ரீமஹிபதி தாசர்

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)

பி$^{3}$ருந்தாவனதல்லி தா$^{3}$மோத$^{3}$ரனித்தானே ராமராம |
ப்$^{3}$ருந்தவ கண்டெ தா$^{3}$மோத$^{3}$ரன தயதி ராமராம ||12

க்ருதயுகத்தில் இருந்த கேதார என்னும் அரசனின் மகள் பிருந்தா. ஸ்ரீகிருஷ்ணனே தனக்கு கணவனாக வரவேண்டுமென்று தவம் செய்தாள். அவளின் தவத்தை மெச்சி ஸ்ரீகிருஷ்ணன் வரம் அளித்தான் என்றும், பிருந்தாவின் தபோபூமியாத காரணத்தால் இதற்கு பிருந்தாவனம் என்று பெயர் வந்தது என்றும் வைவர்த புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இங்கே ஸ்ரீகிருஷ்ணனின் பால லீலைகள் நடைபெற்றன. காளிங்க மர்த்தனம், ராசக்ரீடை, கோபிகா ஸ்த்ரீயரின் வஸ்த்ராபரணம் நடந்தவை இங்கேதான்.

அனைவருக்கும் துன்பம் கொடுத்துவந்த கேஷி அசுரனை கேசவனாகி கொன்றதைக் கண்ட நாரதர், அதற்குப் பின் நடந்ததையெல்லாம் தெரிவிக்கிறார். இந்த இடம் புனிதத்தில் கங்கையைவிட 100 சதவிகிதம் அதிகம் என்று கூர்மபுராணம் தெரிவிக்கிறது.

ஸ்ரீகிருஷ்ணனின் குறும்பினால் கோபம் கொண்ட யசோதை அவனை கயிற்றில் கட்டுவதற்கு முயன்றால், அவள் கைக்கு சிக்காமல் ஓடி ஒளிந்தவன் அப்ரமேயனான ஸ்ரீகிருஷ்ணன். பின், தாய் சோர்வடைந்ததைக் கண்டு, அவளை கட்டித் தழுவி, தாமோதரன் என்று அழைத்துக் கொண்டான். இப்படியாக தாமோதரன் என்று அழைக்கப்பட்ட இடமான பிருந்தாவனத்தைக் கண்டேன் என்கிறார் தாசர்.

சகல தீர்த்த$^{2}$தலி சங்கர்ஷணனித்தானே ராமராம |
சங்கர்ஷண த$^{3}$யதி$^{3}$ சகல தீர்த்த$^{2}$தி மிந்தே$^{3}$ ராமராம ||13

காந்தமானது இரும்பையும், கடலானது சந்திரனையும், தாமரையானது சூரியனையும், மகரந்தமானது தும்பியையும் எப்படி

ஈர்க்கின்றதோ அப்படியே லயகாலத்தில் சங்கர்ஷண ரூபத்தினால் அனைவரையும் உன்னிடம் ஈர்க்கிறாய்.

பாயும் நதிகளிலும், ஹரியின் மகிமைகளிலும் மூழ்குவது தீர்த்த யாத்திரையின் முக்கிய நோக்கமாக இருக்கிறது. அப்படியே, பாரதத்தில் இருக்கும் அனைத்து தீர்த்தங்களிலும் இருக்கும் சங்கர்ஷணன், பக்தர்களை ஈர்க்கிறான். சங்கர்ஷணனின் கருணையால் அனைத்து தீர்த்தங்களிலும் மூழ்கினேன் என்கிறார் விஜயதாசர்.

ஜலாந்தர்கத சங்கர்ஷண ரூபி பரமாத்மனின் கருணையால் ஸ்ரீனிவாசாசார்யருக்கு ஜகன்னாதவிட்டலா என்னும் அங்கிதம் (ஒரு மரப்பலகை மூலமாக) பண்டரிபுரத்தில் பீமரதி நதியில் கிடைத்தது.

வசுதெ$^{4}$ய மேலெல்ல வாசுதேவனித்தானே ராமராம |
வாசுதேவன தயதி வசுதெ$^{4}$யெல்லவ கண்டே ராமராம ||14

வசுதெ என்றால் பூமி. பூமிக்கு தத்வாபிமானி தேவதைகள் - தரா மற்றும் சனி. பகவத்ரூபம் ஸ்ரீகிருஷ்ணன் அவனின் மனைவி சுலக்ஷணா. வசுதேவ தேவகியரின் மகன் வாசுதேவன். தேவகியின் எட்டாவது கர்ப்பத்தில் பிறந்தவன். இவன் பிறந்த யதுகுலமானது, சந்திர வம்சத்தில் சேர்ந்தது. தசாவதாரத்தில் எட்டாவது அவதாரம் கிருஷ்ண அவதாரம்.

ப்ருத்வி தத்வத்திற்கு தலைவனான வாசுதேவனே, வசுதெயை காப்பாற்றுபவன். அந்த வாசுதேவனின் கருணையால் வசுதெயில் இருக்கும் பரமாத்மனின் சுயம்பு க்ஷேத்திரங்களை, பக்தர்களுக்காக அவதரித்த க்ஷேத்திரங்களை, யதிவரேண்யர்களால் உருவான தீர்த்த க்ஷேத்திரங்களை, ஹரிதாசர்களால் உண்டான தீர்த்த க்ஷேத்திரங்களை, என இந்த அனைத்து இடங்களிலும் இருக்கும் பகவத் ரூபங்களைக் கண்டு தன்யனானேன்.

வ்ருத்த$^{3}$க$^{3}$ங்கெயல்லி ப்ரத்யும்னனித்தானே ராமராம |
ப்ரத்யும்னன த$^{3}$யதி$^{3}$ வ்ருத்த$^{3}$ க$^{3}$ங்கெ$^{3}$ய மிந்தே$^{3}$ ராமராம ||15

பூஜிக்கத் தகுந்த கங்கா நதிக்கரையிலேயே ஹ்ருஷிகேச, ஹரித்வார, ப்ரயாக, காசி ஆகிய க்ஷேத்திரங்கள் உள்ளன. பரமாத்மன் தனது

த்ரிவிக்ரம அவதாரத்தில் உலகத்தை அளந்தபோது, பகவந்தனின் இடது காலின் கட்டை விரல் நகம் பட்டு, பிரம்மாண்டத்தின் ஓடு சிறிது உடைந்தது. அந்த விரிசலிலிருந்து வந்த நீரே கங்கை. அந்த தீர்த்தோதகத்தை பிரம்மன் தன் கமண்டலத்தில் பிடித்தார். அதை புண்யோதகம் என்று சிவன் தன் ஜடாமுடியில் பிடித்தார். விஷ்ணு பாதோதகம் என்று தேவதைகள், சப்த ரிஷிகள் அதனை தலையில் ஏந்தினர். சகர சக்ரவர்த்தி 60,000 பேர் கங்கையின் ஸ்பரிசத்தால் சத்கதி அடைந்தனர். கங்கையில் பிரத்யும்னன் இருந்து பக்தர்களுக்கு ஞானத்தைக் கொடுக்கிறார். சச்சாஸ்திரங்களின் ஸ்ரவண ஞானத்தைக் கொடுக்கிறார்.

அலகனந்தனெயல்லி அனிருத்தனித்தானே ராமராம |
அலகனந்தனெ மிந்தெ அனிருத்தன த3யதி3 ராமராம ||16

இமாலயத்திலிருந்து பாயும் புண்ணிய நதிகளான பாகிரதி மற்றும் அலகனந்தா சங்கமத்தில் இருப்பது தேவபிரயாகை. அலகனந்தா தீரத்தில் பதரிநாத்திற்குச் செல்லும் வழியிருக்கிறது. விஷ்ணுகங்கை மற்றும் அலகனந்தா சேரும் இடத்தில் விஷ்ணு பிரயாகை இருக்கிறது. இந்த இடத்திலேயே நாரதரின் தவத்திற்கு மெச்சி விஷ்ணு தரிசனம் அளித்தார்.

பாரதத்தின் மேல் பகுதியில் இருக்கும் இமாலயத்தில் பாயும் அலகனந்தாவில் ஸ்னானம் செய்தால், அனிருத்தன் சத்கதியைக் கொடுக்கிறான்.

புண்யக்ஷேத்ரதல்லி புருஷோத்தமனித்தானே ராமராம |
புண்யக்ஷேத்ரவ கண்டே புருஷோத்தமன த3யதி3 ராமராம ||17

இந்த தேகமே ஒரு க்ஷேத்திரம் எனப்படுகிறது. இந்த தேகத்தில் க்ஷேத்ரக்ஞனான உன் கருணையால் சாதன சரீரமான இந்த சாதனை பிறவி கிடைத்திருக்கிறது.

வைதரணியல்லி அதோக்ஷஜனித்தா3னே ராமராம |
வைதரணி தா3டிதெ3 அதோக்ஷஜன த3யதி3 ராமராம ||18

யம மார்க்கத்தில் வைதரணி என்னும் நதி வருகிறது. அந்த நதி 100 யோஜனை அகலமாக இருக்கிறது. ரத்தம், மாமிசம், மல, மூத்திர போன்ற கசடுகளே இந்த நதியில் பாய்கின்றன. அந்த நதியைக் கடக்க உதவுவதற்கு படகோட்டிகள் இருந்தாலும், நாம் கோ-தானம் செய்திருந்தால் மட்டுமே அவர்கள் உதவுவார்கள். இல்லையெனில், யமதூதர்கள் ஜீவனை கயிற்றில் கட்டி, பாபிகளை அங்கே மூழ்கடித்து, தாம் ஆகாயத்தில் பறக்கும்போது அப்படியே இழுத்துக்கொண்டு போகிறார்கள். தலை தூக்கிப் பார்த்தால் ஈட்டியினால் குத்துகிறார்கள். (ஆதாரம் : கருட புராணம்).

சம்சார பிரச்னைகளில் மூழ்காதவன் அதோக்ஷஜன். அவன் நித்யமுக்தன். சம்சாரம் என்றால் பிறப்பு இறப்பு என்னும் சுழற்சி. இந்த பந்தத்தில் சிக்கிக் கொண்டிருக்கும் ஜீவி சாதனைக்காகவே இந்த தேகத்தைப் பெற்றிருக்கிறான். இந்த சரீரத்தில் ரத்தம், மாமிசம், மல மூத்திரங்கள் ஆகிய கசடுகள் இருக்கின்றன. இத்தகைய சரீரத்தைப் பெற்றிருக்கும் சாதனை ஜீவி (சாத்விகர்), படகோட்டியான ஸ்ரீஹரியை நிரந்தரமாக நினைத்தவாறு இந்த சம்சாரத்திலிருந்து விடுதலை அடைகின்றனர்.

சம்சாரம் என்னும் வைதரணியை தாண்டுவதற்கு அதோக்ஷஜனின் அருள் வேண்டும். சம்சாரம் என்னும் இருட்டிலிருந்து, வெளிச்சத்திற்கு வரவைப்பவன் (மேல் இழுப்பவன்) அதோக்ஷஜனே. ஆகையால், அவனின் அருளைப் பெறுங்கள் என்று எச்சரிக்கிறார் தாசர்.

நிர்மல க$^3$ங்கே$^3$லி நரசிம்ஹனித்தா$^3$னே ராமராம |
நிர்மல க$^3$ங்கே$^3$லி மிந்தே$^3$ நரசிம்ஹ த$^3$யதி$^3$ ராமராம ||19

நரர்களின் அஞ்ஞானாதிகளை நாசம் செய்பவனே நரசிம்மன். கங்கா தீரத்திலேயே ஹ்ருஷிகேச, ஹரித்வார, பிரயாகை, காசி ஆகிய க்ஷேத்திரங்கள் இருக்கின்றன. கங்கா ஸ்னானம், துங்கா பானம் என்னும் பழமொழியைப் போல கங்கையில் குளித்தால் நரசிம்மனின் அருளால் சம்சார சாகரத்தைக் கடக்க முடியும். (தொடரும்)...

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

## ஹரிகதாம்ருதசாரத்தில் பக்தியின் பார்வை

டாக்டர். ஜெயலட்சுமி மங்களாமூர்த்தி

ஹரிகதாம்ருதசாரமானது மிகச்சிறந்த, விலைமதிப்பற்ற விஷயங்களை தன்னிடத்தில் அடக்கியுள்ளது. இந்த கிரந்தமே பக்தியில் நம்முடனே வருகின்ற ஒரு மிகப் புனிதமான கிரந்தமாக இருக்கிறது. இதை இயற்றியவர் மிகச் சிறந்த பக்தரான ஸ்ரீஜகன்னாததாசர்.

இவர் ஜகன்னாதவிட்டலனின் பக்தர். பண்டரிபுரத்தில் விட்டலன், திருப்பதி வெங்கடேசன் - இருவரின் கருணையையும் பெற்றவர். இவரது ஆளுமையே சிறந்த பக்திக்கு ஒரு உதாரணமாகும். வியாசகூடத்தில் நிபுணராக விளங்கி, அதன்மூலம் இவர் இயற்றிய ஹரிகதாம்ருதசாரம் பக்தியின் உச்சம் எனக் கருதப்படுகிறது. அவரின் அந்தரங்க பக்தியின் ஒரு சான்றாக இது விளங்குகின்றது. பக்தியோகத்தின் ஒரு தங்கக் கடலாக கருதப்படுகிறது. பக்தி ரசம் இதில் பாகிரதி நதியைப் போல் பிரவகிக்கிறது. தாசராயரின் இதயத்தில் ஊற்றெடுத்த பக்தியில் வந்த, ஆயிர தள கமலத்தில் நின்றிருக்கும் ஸ்ரீஹரியே, இந்தக் கிரந்தத்தில் புகழ்ப்படும் இறைவனாக இருக்கிறான்.

வேதத்தில் சொல்லப்பட்டிப்பவை, மத்வ சித்தாந்த்தின் தத்வங்கள் ஆகியவற்றை அடக்கிய சிறந்த கிரந்தம் இது. முக்தியை வேண்டுபவர்களுக்கு, கன்னட மொழியில் சரியான ஞானத்தைக் கொடுக்கக்கூடிய கிரந்தம் இது. வியாசகூடத்தவர்களிடம் பாராட்டினைப் பெற்று, தாசகூடத்தவர்களுக்கு பாராயணத்திற்கு ஏற்ற கிரந்தமான இது, மந்திரதுல்யமான கிரந்தம் எனப்படுகிறது. ஆங்கிலம்,

தெலுங்கு ஆகிய பல மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்ட இந்த கிரந்தத்திற்கு சமஸ்கிருதத்தில் உரை எழுதப்பட்டிருக்கிறது.

ஸ்ரீஜகன்னாததாசர் தனது சிறந்த கிருதியான ஹரிகதாம்ருதசாரத்தில் இவ்வாறு கூறியிருக்கிறார்.

யுக்திமாதுகளல்ல ஸ்ருதி ஸ்ம்ரு
த்யுக்த மாதுகளிவு விசாரிஸெ
முக்திகிவு சோபானவெனிபவு ப்ரதி1பதீ1பத3வு |
ப4க்திபூர்வக1 படிசுவவரிகெ
வ்யக்திகொடுவ ஸ்வரூபசுக2 ப்ரவி
விக்தரனு மாடுவனு ப4வப4யதிந்த ப4ஹுரூப1
(தத்தஸ்வாதந்த்ர்ய சந்தி ஸ்லோகம் 31)

கோபபிய பவாந்தகாரகெ
தீபவொதகெ சகல சுக சத
னோபரிக்ரஹ வெனிசுதிப்புது ஹரிகதாம்ருதவு |
கோபதி ஜகன்னாதவிட்டல ச
மீபதலி நெலெசித்து பக்தர
நாபவர்கர மாடுவனு மஹதுக்க பவதிந்த ||
(பிம்பாபரோக்ஷ சந்தி ஸ்லோகம் #31)

பக்தி பூர்வகவாகி அன்ய ப்ர
சக்தி நீடாடி பரமா
சக்தனாகிரு ஹரிகதாம்ருத பான விஷயதலி ||
(கர்ம விமோசன சந்தி ஸ்லோகம் #31)

பக்தி புரஸ்கரதி கேள்வரிகெ ஒலிவனு புஷ்கராக்ஷசக ||
(தத்த ஸ்வாதந்த்ர்ய சந்தி ஸ்லோகம் #35)

சத்கதிய நீவுது பக்தி பூர்வக கேளி பேள்வரிகெ
(தத்த ஸ்வாதந்த்ர்ய சந்தி ஸ்லோகம் #36)

ஆகிய ஸ்லோகங்கள் இந்த கிரந்தத்தின் சிறப்பினை, இதன் உச்சத்தை எடுத்துச் சொல்கின்றன. மத்வ சித்தாந்தத்தில் பக்தி என்பது பரவசமடைவது அல்ல. பிறருக்குக் காட்டுவதற்காக செய்யப்படும் டாம்பீகம் / ஆடம்பரம் அல்ல. தன் வாழ்க்கையின் இலக்கினை நிர்ணயித்துக்கொண்டு, தன் வாழ்க்கை முறையை மாற்றிக்கொள்ள வேண்டியிருக்கிறது. வேதங்களில் சொல்லப்பட்டிருக்கும் விதிமுறைகள், விதிவிலக்குகளை பின்பற்ற வேண்டியிருக்கிறது. இப்படியாக ஒரு பக்தர், குரு உபதேசம் பெற்று, ஞான, பக்தி, வைராக்கியம் பெற்று, ஸ்ரவண, மனன, நிதித்யாஸனங்களுடன், நவவித த்வேஷங்களைப் பற்றி அறிந்து, பக்தியைப் பற்றி அறிந்து, அந்தர்தீட்சை, புறதீட்சைகளைப் பற்றி தெரிந்து, மூன்று குணங்களைக் கொண்ட ஜீவர்களின் சுபாவத்தை அறிந்து, மனதை வளர்த்துக் கொண்டு ஜீவ-ஸ்வரூபத்தை அறிந்து அதையே பின்பற்றவேண்டும்.

பாகவத வசனம்

’மஹாத்ம்ய ஞான பூர்வஸ்து சுத்ருட: சர்வதோதிக: ஸ்னேஹோபக்திரித ப்ரோக்த: தயா யுக்திர்னசான்யதா’ என்னும் ஸ்லோகம், ஸ்ரீஹரியின் குணம், ரூபக்ரியைகளை தெளிவான ஞானத்துடன், ஸ்ரீஹரியிடம் வைக்கும் ஆத்மார்த்த நட்பினையே பக்தி என்று சொல்ல வேண்டும் என்கிறது. பக்தியைக் குறித்து நாரதர் மற்றும் சாண்டில்யர் சொல்லிய பக்தி சூத்திரங்கள், ஸ்ரீஹரியின் சாக்ஷாத்காரத்தைப் பெறுவதில் - ஸ்ரவண, கீர்த்தன, ஸ்மரணை, பாதசேவனம், அர்ச்சனம், வந்தனம், தாஸ்யம், சக்யம் மற்றும் ஆத்ம நிவேதனம் என்று ஒன்பது வழிகள் உள்ளன என்று தெரிவிக்கின்றன.

பகவத்கீதையில் சாட்சாத் ஸ்ரீகிருஷ்ணனே சொல்லிய பக்தி யோகத்தில், பக்தர்களின் லட்சணங்களை, ஸ்ரீஹரியின் ஸ்வரூபத்தை விளக்கியிருக்கிறார். அகங்காரத்தை நீக்கி, இந்திரியங்களைக் கட்டுப்படுத்தி, திருப்தி அடைந்து, சரணாகதி அடைந்து, சர்வ சமர்ப்பணம் செய்து, அகத்தூய்மை பெற்றிருக்க வேண்டும் என்றெல்லாம் சொல்கிறார்.

பக்தர்களின் பரவச நிலையைக் குறித்து பாகவதத்தில் சொல்லப்பட்டிருப்பதாவது:

’வாக்கத்கதா த்ரவதேயஸ்ய சித்தம் ருதத்யபீக்ஷம் ஹஸதி க்ஷிசிச்ச விலஜ்ஜ
உத்காயதின்னத்யதே ச மத்பக்தியுக்தோ புவனம் மனாதி’

பக்தனானவன் உலகத்தை புனிதமாக்குகிறான். அவன் குரல் எப்போதும் தழுதழுத்திருக்கிறது. அவன் மனது எப்போதும் கரைந்திருக்கிறது. சில சமயம் அழுகிறான், சில சமயம் சிரிக்கிறான், வெட்கம் இல்லாமல் குதிக்கிறான், பாடுகிறான் என்று சொல்கிறார்.

ஸ்ரீஜகன்னாததாசர் தனது பாடலில்:

நகுவரோ, ரோதிசுவரோ, நாட்யவாடுவரோ, பகெயரோ, படதன பாக்ய பாகவதரு - என்று சொல்கிறார்.

சிரவணம் என்பது ஒன்பது பக்தி வழிகளில் ஒன்றாகும். இதிலிருந்து கிடைக்கும் மகிழ்ச்சி மிகவும் அதிகம்.

ஸ்ரவண மனனானந்தவீவுது
பவஜனித துக்ககள களெவுது
விவித போகவனிஹபரங்களலித்து சலஹுவுது ।

புவனபாவனனெனிப லகுமி
தவன மங்களகதெய பரமோ
த்சவதி கிவிகொட்டாலிபுது பூசுசருதினதினதி ||
(கருணா சந்தி ஸ்லோகம் #1)

பக்தியின் விதங்களில் ஸ்ரவணம் முதலாவதாக இருக்கிறது. சாத்விக, ராஜஸ, தாமஸ ஆகிய மூன்று வகையினரும் ஸ்ரவண பக்தியை செய்தாலும், சாத்விக ஜீவர்கள் மட்டுமே அதிலிருந்து சரியான பலன்களைப் பெறுகின்றனர். இளகிய மனம் அவர்களது இயல்பாக இருக்கிறது.

ஸ்ரவண பக்தியினால் இவர்கள் தங்களின் தலைசிறந்த கடவுள் என்று நினைக்கும் ஸ்ரீஹரியின் நற்குணங்கள், ரூபம், செயல்கள், மற்றும் களஞ்சியங்களான வேதம், உபநிஷத்கள், ஸ்ருதிகளின் விஷயங்கள், இதிகாச, புராணங்கள், பாகவத, பாரத, ராமாயணம் முதலானவை, பிரம்மசூத்திரம், தாத்பர்ய நிர்ணயம் முதலான கிரந்தங்கள், ஈஷ, ஜீவ, ஜட முதலானவைகளின் விஷயங்கள் மனதை தூய்மையாக்குகின்றன. பக்தியில் ஒரு திடம், சிரத்தை கொடுத்து ஆனந்த அனுபவத்தைக் கொடுக்கிறது. அகத்தை சுத்தப்படுத்தி அதில் ஸ்ரீஹரியின் மூர்த்தி வந்து அமர்கிறது. ஸ்ரவணத்தால் ஸ்ரீகிருஷ்ணனே இதயத்தில் வந்து அமர்கிறான். மற்றும் இதயத்தில் இருக்கும் கறைகள் மறைந்து தூய்மையாகிறது. (தொடரும்).

*** **டாக்டர். ஜெயலட்சுமி மங்களாமூர்த்தி**

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

## ஹௌவனகட்டே கிரியம்மா

'ஹௌவனகட்டே ரங்கனாத' (1712 - 1790)

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)...

தம் பிறந்த வீட்டு தெய்வமான மைலார லிங்கனை வணங்கியிருக்கிறார். 'ஈத ரங்கனாத ஹரியு ஆத லிங்கனாத ஹரியு'. ஈக லிங்க தேவ சிவனு, ஆத ரங்கதாம விஷ்ணு - என்று ஹரிஹரனைக் கொண்டாடியிருக்கிறார். அப்படியே, நீலகிரி லிங்கனையும் வணங்கியிருக்கிறார்.

மலெபென்னூரின் ஏகனாதேஷ்வரனையும், பார்வதிதேவி என்று சிந்தித்து வணங்கியிருக்கிறார்.

கிரியம்மா அவர்கள் தாம் தரிசித்த க்ஷேத்திரங்களையும் அந்த க்ஷேத்திர மூர்த்திகளையும் வணங்கியிருக்கிறார். குக்கனூரின் ஹனுமந்த, பில்ளங்கேரியின் ரங்கனாத, குப்தகாமியான கிருஷ்ணவேணி நதி தேவதையையும், ராணெபென்னூரில் பயலாஞ்சனேயரையும், முத்தேனஹள்ளியின் ஹனுமனையும் போற்றியிருக்கிறார்.

யாதகெ மருளாதி ஹிங்கே ஏலே மானவ காகு புத்திய பிடு பிடு ஆஸெயெம்புது பிடது ஈ புவனதொள் - என்று உலக மக்களை எச்சரிக்கிறார்.

பாகவதத்தில் வரும் அஜாமிளனின் கதையை 15 நுடிகளிலும், பாரிஜாத மரத்தைக் கொண்டு வந்த கதையை 18 நுடிகளிலும் கிரியம்மா பாடியிருக்கிறார்.

இந்த இரு பாடல்களும் தீர்க்ககிருதிகள் எனப்பட்டாலும், இவற்றை விடவும் தீர்க்கமான 448 நுடிகளில் உத்தாளிகனின் கதை, 62 நுடிகளில் ஷங்கர கண்டன ஹாடு, 87 நுடிகளில் சீதா கல்யாண மற்றும் நான்கு சந்திகளில் சந்திரஹாஸனின் கதை ஆகியவற்றை இயற்றியிருக்கிறார் கிரியம்மா.

(18ம் பக்கத்தில் தொடர்கிறது...)

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### ஸ்வாச சந்தி

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | 2 | 25 | 26 | | | | | | | 27 | 18 |
| | | | 3 | | | | | | | 4 | | | | |
| | | 19 | 5 | | | | | | | | | | | |
| | | | 20 | | 32 | | | 6 | | | | | | |
| | | | | | | | 28 | | 21 | | 7 | | | |
| | | | | | | | | 33 | | | | | | |
| | 8 | 9 | | | | | | | | | | 22 | | |
| | | 10 | | | | | | | | | | | | |
| | | | | | | | | 11 | | 34 | | 35 | | 36 |
| | 12 | | | 37 | | | | | | | | | 29 | |
| | | | | | | | | | | 13 | | | | |
| | | | 14 | | | | 30 | | | | 38 | | | |
| | | | | | 39 | | | | 15 | | 16 | | 31 | |
| | 23 | | | | | | | | | 40 | | | | |
| 17 | | | | | | | 24 | | | | | | | |

**இடமிருந்து வலம்**: 1.நாழிகை(3), 2.பரசுராமரை தாஸர் குறிப்பிடுகிறார்(7), 3.செவிடன்(3), 4.அரக்கர்(5), 5.நறுமணம்(3), 6.தாமரை இதழ்(5), 7.கெட்ட காற்றை வெளியே விடுவது(4), 8.ஸுகம்(2), 9.கொல்லுபவன்(3), 10.தேவதை(4), 11.பருத்தி(4), 12.இந்த்ர நீலமணி(5), 13.மேற்கு(4), 14.மான்தோல்(7), 15.கடல்(3), 16.மாதம்(4), 17.அன்னம் அல்லது உணவு(3).

**வலமிருந்து இடம்:** 18.களைப்பு இல்லாமல்(4), 19.எண்ணற்ற(3), 20.பஞ்சு(2), 21.திருவடி(4), 22. மனதின் பகவத் ரூபம்(6), 23.வெண்மை(2), 24. நாக்கின் அபிமானி தேவதை(4).

**மேலிருந்து கீழ்**: 1.காற்று(5), 15.வாக் அபிமானி தேவதை(3), 19.மத்வர்(5), 25.இந்த்ரன்(3), 26.சூரியன்(4), 27.தாமரையிரண்டு(5), 28.மூக்கு(3), 29.ஜாமம்(2), 30.அங்கங்கள்(4), 31.கதவு(3)

**கீழிருந்து மேல்**: 15.பாபமற்றவன்(3), 17.குறுக்கும் நெடுக்குமாக(5) ,21.தாமரை(5), 30.கருப்பு(3), 32.கிணறு(2), 33.த்யுநதி(3), 34.லக்ஷ்மி(4), 35.இருபது(4), 36.ஸ்வாஸம் தங்கி முழு சக்தியை அடைவது(5), 37.ஸ்நானம்(5), 38.கெட்ட காற்றை வெளியே விடுவதை தாஸர் இப்படியும் அழைக்கிறார்(4), 39.போஷாக்கான(3), 40.இலை அல்லது கீரை கலைந்துள்ளது(4).

குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam @ gmail.com என்னும் ஐடிக்கோ அல்லது 89044 58276 க்கோ வாட்சப் செய்யலாம்

ஜூலை 2021 மாதத்தின் ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டிக்கு சரியான பதில் எழுதி புத்தகப் பரிசினைப் பெறுபவர்கள் : 1. திருமதி. ஷாந்தி பத்மனாபன், திருநெல்வேலி, 2. திருமதி. சந்திரா. கோவை. 3. திருமதி. கீதா ராமசந்திரன், திரு நெல்வேலி. 4. திருமதி. உஷா ரகூத்தமன், பெங்களூரு 5. திருமதி. கிரிஜா.ஜயதீர்த்தாச்சார், மனம்பூண்டி.

**கன்னடம்**

## அருஞ்சொற்பொருள்

## கடினமான சொற்களின் அர்த்தங்கள்

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

1. கீசகாரி - பீமன். 2. கிரீடி - அர்ஜுனன் 3. கிரீடிஸக - ஸ்ரீகிருஷ்ணன் 4. கஜபுர - ஹஸ்தினாபுர 5. கஜானன - யானையின் முகம் 6. கௌதமி - கோதாவரி 7. ஜடர - கர்ப்ப, வயிறு 8. தாசரதி - தசரதனின் மகனான ஸ்ரீராமன் 9. நகாக்ர - நகத்தின் முனை 10. நிகமததி - வேத சமூகம்.

(15ம் பக்கத்திலிருந்து தொடர்கிறது...)

இந்த சந்திரஹாஸனின் கிருதி ஒரு கண்ட காவ்ய (சிறு காவியம்). பாரிஜாத காவ்ய என்பது ஸ்லோக மற்றும் பதங்களில் இயற்றப்பட்ட வ்ருத்த நாமா வகையைச் சேர்ந்ததாகும். ஆனால் இதற்கு பல்லவி இல்லை.

வசன மற்றும் பாடல்களைக் கொண்டிருக்கும் பிரம்ம கொரவஞ்சி பாடலும் ஒரு தீர்க்க கிருதி எனப்படுகிறது. கிருஷ்ண கொரவஞ்சி மற்றும் லவ-குஷரின் பாடல் முழுமையடையாமல் இருக்கிறது.

கிரியம்மாவிற்கு மக்கள் மேல் இருந்த பாசம், ஞான பக்தி, வைராக்யத்தைக் கண்டு பொறாமை கொண்டவர்களும் இருந்தார்களாம். இந்த பெண்மணிக்கு என்ன அபரோக்ஷ ஞானம் என்று கேலி பேசினார்களாம். கிரியம்மாவின் சொந்த ஓர்ப்படிகளே (கணவரின் சகோதரர்களின் மனைவிகளே) இவரை வெறுப்புடன் பார்த்து வந்தனராம். தேவையில்லாத பொல்லாப்புகளை இவர் மேல் சுமத்தினார்களாம். இதன் காரணங்களால், ஒரு சமயம், ஊர் பெரியவர்கள் எனப்பட்டவர்கள் இவருக்கு பஹிஷ்காரம் (ஊரிலிருந்து விலக்கி வைத்தல்) கூட செய்தார்களாம்.

ஸ்ரீராகவேந்திர மடத்தின் அன்றைய பீடாதிபதிகளாக இருந்த ஸ்ரீசுமதீந்திர தீர்த்தர், மனெபென்னூருக்கு வந்தபோது, பூஜை முடிந்தாலும், கிரியம்மாவைக் காணாத ஸ்ரீபாதங்களவர், அவரை தாமே அழைத்தார். கிரியம்மாவிற்கு தீர்த்தம் கொடுக்கும்போது அவரின் உள்ளங்கையைப் பார்த்து, 'இது ஸ்ரீகிருஷ்ணன் தாங்கிப் பிடித்த யசோதாதேவியின் கை' என்று புகழ்ந்தார்.

இதே ஊருக்கு ஒரு முறை ஸ்ரீகோபால்தாசர் தம் சஞ்சாரத்தில் வந்தபோது, கிரியம்மா பக்தியுடன் வரைந்திருந்த ரங்கோலியின் மேல் தன் தேவர பெட்டியை வைத்து பூஜித்தார். அவரின் பக்திக்கு மெச்சி, கோபாலகிருஷ்ணனின் விக்ரகத்தை அவளுக்கு பரிசாக அளித்தார் என்றும் தெரிய வருகிறது.

அன்யர குணதோஷவ எணிஸதலெ நின்னிரவ நோடு கண்ட்ய மனவெ
பண்ணகாரிகெயு பரிதெ ஔதம்ப்ர கண்ணினந்தீ காயவு மனவெ

******

## ஸ்ரீருக்மிணிவர விட்டல
## (ஸ்ரீமதி டாக்டர் ருக்மிணி கிரிமாஜி) 1927-2012

ஸ்ரீ ஸ்ரீனிவாஸ சத்பக்தாம் ஸாத்வீம் ஸாஹித்ய காரிணீம் |
ருக்மிணி வரதாஸக்தாம் வந்தே ருக்மிணி மாதரம் ||

வந்திஸுவெ ருக்மிணிவரதன ப்ரியளே
மந்தி ஜனர மனவ ஸெளெத மஹிளே
ஹிந்தி கன்னட பாலி பாஷெ அரிதவளெ
இந்திரேஷன அக்ஷரதி நிலிஸிஹளெ
அங்கனெயரெல்லர ஸங்ககெ ஸ்பந்திஸுத
பங்க பவணெகளிகெ முக்தி தோரிஸித
மங்களாங்க ஹரிவிட்டலன த்யானிஸுத
மங்களெயரிகெல்ல ஸன்மார்க்க காணிஸிதெ ||

கிரிமாஜி என்றவுடன் பலருக்கும் ஷிவமொக்கா நினைவுக்கு வந்துவிடும். ஆனால், ருக்மிணி கிரிமாஜியின் முன்னோர் கோலார் பக்கம் இருந்தார்கள். அங்கு ஜயராவ் கிரிமாஜி மற்றும் வெங்கம்மா கிரிமாஜி அவர்களின் மூத்த மகளாக ருக்மிணி கிரிமாஜி அவர்கல் சுமார் 1927ம் ஆண்டு உத்தான த்வாதசியன்று பிறந்தார்.

இவருக்கு நான்கு பேர் தம்பிகள். தந்தை ஜயராவ் கிரிமாஜி அவர்கள், தமது மத்யம வயதிலேயே இவ்வுலகத்தை விட்டு நீங்கினார். அன்றைய கால வழக்கப்படி தாய் வெங்கம்மா மடி ஆனார். வீட்டுப் பொறுப்பினை ஏற்றுக்கொண்ட ருக்மிணி, தாமும் படித்தவாறு, தம் தம்பிகளையும் நன்றாகப் படிக்க வைத்தார். பெங்களூரின் மகாராணி கல்லூரியில் பி.ஏ படித்தார். கூடவே 1946 ஹிந்தி விஷாரத பட்டம் பெற்றார்.

மகாத்மா காந்தி அவர்களின் கையினால் பாராட்டுப் பத்திரம் மற்றும் ஒரு சால்வையைப் பெற்றார். இதனால் அனேக தேச பக்தர்களின்

பரிச்சயம் அவருக்குக் கிடைத்தது. அப்படியாக அவரது வாழ்க்கையில் நடந்த ஒரு மிக முக்கிய நிகழ்ச்சியாக இது அமைந்தது.

அடுத்து, வடஇந்தியாவின் பாகல்புரத்தின் விக்ரமஷீல ஹிந்தி வித்யாபீடத்தின் ஹிந்தி எம்.ஏ பட்டம் பெற்றார். உடன் 'கன்னட ரத்ன' தேர்வினை எழுதினார்.

கடவுளின் அருளால் சுமார் 1952ம் ஆண்டில், பெங்களூரு மாநகராட்சி உயர் நிலைப் பள்ளியில் ஆசிரியராக வேலையில் சேர்ந்தார். வேலையில் சேர்ந்துவிட்டாலும், ருக்மிணிக்கு மேலும் படிக்கவும், தேர்வுகளை சந்திப்பதிலும் ஆர்வம் குறையவேயில்லை. சம்ஸ்கிருதத்தின் நான்கு தேர்வுகளை எழுதித் தேர்ந்தார். பாலி மொழியை கற்றுத் தேர்ந்தார். Girls guide, Red cross ஆகியவற்றில் சேர்ந்து கொண்டார். சமூக சேவை செய்வதற்காக கிராமங்களுக்குச் சென்று சேவை செய்வதில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார். காந்தி பக்தராக அவரையே பின்பற்றினார்.

ருக்மிணி அவர்கள் திருமண வயதைக் கடந்தார். திருமணம், கணவன், குழந்தைகள் என்னும் பந்தனத்திலிருந்து விலகி இருந்தார். தம் தம்பிகள் அனைவரும் நன்றாகப் படித்து, நல்ல வேலையில் சேர்ந்தபிறகு, அவர்களுக்கு ஏற்ற பெண்களைத் தேடி, அனைவருக்கும் திருமணம் செய்து வைத்தார். தாம் மட்டும் தம் தாயுடன் திருமணம் செய்யாமலேயே வாழ்ந்து வந்தார்.

ருக்மிணி அவர்கள், ஹரிதாச சாகித்யத்தில் அபாரமான ஈடுபாட்டினைக் கொண்டிருந்தார். அதன் வளர்ச்சிக்காக தம் வாழ்க்கையை செலவழித்தார். 'கர்னாடக ஹரிதாசர்களின் வாழ்க்கை மற்றும் கிருதிகள்' என்னும் ஒரு ஆராய்ச்சி நூலினை எழுதி, பி.ஹெச்.டி பட்டம் பெற்றார்.

பரமபூஜ்ய பேஜாவர மடாதீசரான ஸ்ரீஸ்ரீவிஷ்வேஸ தீர்த்த ஸ்வாமிகள் பெங்களூரில் வித்யாபீடத்தை நிறுவி, அதனுடன் 'அகில பாரத மாத்வ மஹா மண்டல'த்தை நிறுவினார். அதன் மூலமாக கல்வி, தர்ம மற்றும் சமூக மேம்பாட்டு செயல்களை செய்து வந்தார். பெங்களூரு மல்லேஷ்வரத்தை சேர்ந்த யஷோதம்ம என்பவர், மாத்வ

மஹாமண்டலத்தில் அலுவல் அதிகாரியாக இருந்தார். ருக்மிணி கிரிமாஜி அவர்கள் சாதாரண ஒரு பதவியில் இருந்தார். இவர்கள் இருவரும் மல்லேஷ்வர 8ம் குறுக்குத் தெருவில் மாத்வ சங்கத்திலும் உறுப்பினராக இருந்தனர்.

வயதானவரான யஷோதம்மா, நன்கு படித்த இளையவர்களுக்கு தக்க மரியாதை கொடுத்து வந்தார். இப்படியாக அவர் ருக்மிணியை ஸ்ரீபாதங்களவருக்கு அறிமுகம் செய்து வைத்தார். அப்போது ஸ்ரீபாதங்களவர் மதராஸில் சாதுர்மாத விரதத்தில் இருந்தார். அங்கேயே இவரது அறிமுகம் ஆயிற்று. உடனடியாக ஸ்வாமிகள், ருக்மிணியை அலுவல் அதிகாரியாக சேர்த்துக் கொண்டார். தாம் வேலையில் இருப்பதால், அனைத்து கூட்டங்களுக்கும் தம்மால் வர இயலாது என்றும், தமக்கு விடுமுறை இருக்கும் போதெல்லாம் கண்டிப்பாக வந்து சேவை செய்வதாக ஸ்வாமிகளிடம் வாக்களித்தார் ருக்மிணி.

பெங்களூரு மாத்வ மஹிளா சங்கம், என்று சாம்ராஜ்பேட்டையில் உருவாயிற்று. நகரின் வேறு பகுதிகளிலிருந்து பெண்கள் அங்கு வந்து போவதில் பிரச்னை இருந்ததால், பின், அது வடக்கு மற்றும் தெற்கு என்று இரு கிளைகளைக் கொண்டது. பேஜாவர் ஸ்ரீகளவர் சாதுர்மாதத்திற்கு அமர்ந்த இடங்களுக்கெல்லாம் சென்று, யசோதாம்மா, ருக்மிணி கிரிமாஜி, ராஜலட்சுமி பார்த்தசாரதி மற்றும் அவரின் தாய் இந்திரம்ம ஆகியோர் புதிய கிளைகளை துவக்கினர். மதராஸ், பம்பாய், ஹைதராபாத், கடப்பா, கர்னூல், அனந்தபுர, ஷிவமொக்க, தாவணகெரெ, கோலார், மாலூர், பள்ளாரி, தாரவாட், ஹுப்பள்ளி என பல்வேறு இடங்களில் மஹிளா சங்கத்தின் கிளைகள் துவங்கின.

ஆண்கள் மற்றும் பெண்களின் கிளைகள் தனித்தனியாக பல இடங்களில் இவ்வாறு தோன்றின. பெங்களூரின் தலைமை அலுவலகத்திற்கு இவர்கள் அனைவரும் மாதத்திற்கு ஒரு முறை தங்களின் செயல்களை, நிகழ்ச்சிகளைப் பற்றி தகவல் கொடுத்து வந்தனர். .. (தொடரும்)...

தொடர்

**கன்னட தந்த்ரசாரம் - ஸ்ரீவரதேந்திர தீர்த்தர்**

**உரை: திரு.குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்**

அரித3ரவராப4யாங்கித சதுர்பு4ஜனு நால்கெரடு3 ரூபங்க3ளு ப்ரதீ3பவர்ண ।
ஸருவாப4ரணபூ4ஷிதவாத3 மத்3ரூப நிருத மேயவு முமுக்ஷுகளிந்த3லி ||21

அரி-சக்ரம். தர- சங்கு. வர- வரமளிக்கும் முத்திரை. அபய - அபய ஹஸ்தம் இவற்றுடன் கூடிய, நான்கு கரங்களுடன். 4*2=8 உருவங்களுடனும், விளக்கின் ஒளியில், அனைத்து அணிகலன்களையும் தரித்தவனான நான் (பிரணவ பிரதிபாத்யன்), நித்ய தத்வ விஷயமாக, முக்திக்கு தகுதி உடைய ஜீவர்களால் காணப்படுபவனாக உள்ளேன்.

தந்த்ரஸார மூலம் 1-18,19,20 ஸ்லோகங்கள் முந்தைய பத்யத்தில் கொடுத்துள்ளேன். அதற்கான பொருள் விளக்கத்தை இப்போது பார்ப்போம். இவை, அனைத்திற்கும் மூல மூர்த்தியான, நாராயண அஷ்டாக்ஷர பிரதிபாத்யனான பிரணவ ஸ்வரூபன் நாராயணனின், தியான மந்திரமாகும். அஷ்ட மஹா மந்திரங்களின் சாரங்களே இந்த மூன்றில் உள்ளன.

பகவான் உதய கால சூரியனைப் போல ஒளி படைத்தவராக உள்ளார். பகவத் சரீரம், கருணை மயமானது. பகவான், சக்ரம், சங்கு, கதா, பத்மம் ஆகியவற்றை நான்கு கரங்களில் தரித்துள்ளார். ஸ்ரீதேவியும், பூமிதேவியும் அவரை ஆலிங்கனம் செய்து தழுவிக் கொண்டுள்ளார்கள். அவர், விஷ்வ, தைஜஸ, ப்ராக்ஞ, துர்ய, ஆத்மா, அந்தராத்மா, பரமாத்மா, ஞானாத்மா என்கிற பிரணவத்தின் எட்டு மூர்த்திகளின் நடுவில் விளங்குகிறார். அவரை, பிரம்மா, வாயு, ருத்ர, சேஷ, கருட, இந்திர மற்றும் மற்ற தேவதைகள் வழிபடுகின்றனர். இவர் பூர்ண சக்திவந்தனாக விளங்குகிறார்.

நாந்தான் அப்பேர்ப்பட்ட ஆண்டவன். (பகவானின் வாக்கியம் இது). அப்பேர்ப்பட்ட இறைவனையே நாம் தியானிக்க வேண்டும். அதே சமயம், விஷ்வ, தைஜஸ, போன்ற எட்டு ரூபங்களையும் தியானிக்க வேண்டும். இந்த ஒவ்வொரு ரூபத்டிலும் சக்ர, சங்கு, வர மற்றும் அபய ஹஸ்தங்கள் உள்ளன. மற்றும் தீபத்தின் ஒளியைக் கொண்டவனாக இருக்கிறான்.

என்னுடைய தந்த்ரஸார சங்கரஹ தமிழ் - பகுதி 1 அட்டைப்படத்தைப் பார்க்கவும். இதையே அங்கு கொடுத்துள்ளேன்.

எட்டு மூர்த்திகளின் நடுவில் மூலரூபி நாராயணன் உள்ளார். அவர், மேல் வலது கரத்தில் சக்ரத்தையும், மேல் இடது கரத்தில் சங்கினையும், கீழ் வலது, கீழ் இடது கரங்களில் கதை, பத்மங்களை தரித்துள்ளார். அவரது இடது பக்கத்தில் ஸ்ரீதேவி, வலது பக்கத்தில் பூதேவியும் இருக்கின்றனர். அவரது ஒளி உதிக்கும் சூரியனைப் போல சிவப்பாக உள்ளது. விஷ்வ, தைஜஸ போன்ற எட்டு உருவங்களிலும் நான்கு கரங்களில் மேற்சொன்ன சக்ர, சங்கு, வர, அபய முத்திரைகள் உள்ளன. விளக்கிற்கு இருப்பதைப் போல மஞ்சள் வர்ணம் அவற்றில் உள்ளன.

இப்படியாக, மஹாமந்திரங்கள் (எட்டு) ஜெபிக்கும்போது, பொதுவாக, தியானம் செய்ய வேண்டும். எந்த ஜபத்திற்கும், அங்கன்யாஸ, கரன்யாஸ, தியானம் ஆகியவை - ஜபத்திற்கு முன்னும், பின்னும் தேவையானவை. இவை செய்யவில்லையெனில், அந்த ஜபம் பலன் தராது.

தார நாராயணாஷ்டாக்ஷரவு வ்யாஹ்ருதியு ஈராருவர்ண கா[3]யத்ரிமந்திர ।
ஸாரமாத்ரு புருஷஸூக்த வைஷ்ணவக[3]ளிவு நீரஜாஸன கேளு மஹமந்த்ரவு ||22

'ஓம்காரம்', நாராயண அஷ்டாக்ஷரம், வியாஹ்ருதி, 2*(6+6=12)=24 எழுத்துக்களைக் கொண்ட காயத்ரி, 50 மாத்ருக வர்ணங்கள், புருஷ சூக்தம், இரண்டு வைஷ்ணவ மந்திரங்களான வாசுதேவ மந்திரம், விஷ்ணு மந்திரம் ஆகியவற்றை நான் உபதேசித்தேன். கேட்பாயாக. பிரம்மதேவனே.

இந்த எட்டு மந்திரங்களே, அஷ்ட மஹா மந்திரங்கள் ஆகும். இவை மட்டும் இந்த கன்னட ப்ராக்ருத தந்த்ர சாரத்தில் கூறப்பட்டுள்ளன. இனி அடுத்து, பல ஸ்ருதியைக் கூறி, ஸ்தோத்திரத்தை முடிக்கிறார்.

ஸீதாரமண மூலராமனதிஹருஷதி$^{3}$ விதா$^{4}$தகு$^{3}$பதே$^{3}$ஷிஸித$^{3}$ ஈ தெரத$^{3}$லி ।
ப்ரீதியிந்த$^{3}$லி நிரந்தரத$^{3}$லித$^{3}$ படி$^{2}$ஸெ ஸேஷாதபத்ரனு காமிதார்த்தவீவ ॥
(ப்ரீதியிந்த$^{3}$லி த்$^{3}$வாதஷார்வதி படி$^{2}$ஸலு விதா$^{4}$தபிதனு காமிதார்த்த$^{2}$வீவ ॥23

சீதாபதி மூலராம தேவன் மகிழ்ச்சியுடன் பிரம்மனுக்கு இவ்வாறு உபதேசித்தான். இவ்விதமாக பக்தியுடன் எப்போதும் விடாமல் இதைப் படித்தால், பாம்பினை குடையாகக் கொண்டவன், வேண்டியதை நல்குவான்.

சேஷ+ஆதப+த்ர- பாம்பினைக் குடையாகக் கொண்டவன். இது பல-ஸ்ருதி. பயன்பாட்டுப்பா போல அமைந்துள்ளது. கன்னட தந்த்ரசாரத்தின் கர்தாவான குருநாதர் கூறுகிறார். சீதை மணாளன் ஸ்ரீமூலராமன் ஹரி. அவர் நான்கு தலை பிரம்மனுக்கு இவ்வாறு அருளினார். இந்தப் பாடலை அனுதினமும் பக்தியுடன் பாடுபவர்களுக்கு, அவர்களின் மன விருப்பங்கள் அனைத்தையும், பாம்புக் குடையின் கீழ் இருக்கும் ஹரி நல்குவார் என்று கூறி, சுபமாக முடிக்கிறார்.

மூல தந்த்ரசார சங்க்ரஹத்தில் 4 அத்தியாயங்கள். மேலும் பல விஷயங்கள் உள்ளன. இங்கே, முதல் அத்தியாயத்தில் கூறப்பட்ட அஷ்ட மஹா மந்திரங்கள் மட்டும் எப்படி பிரணவத்திலிருந்து தோன்றின என்பதை மட்டும் குருநாதர் எடுத்துக் காட்டியுள்ளார். கிரந்த விஸ்தாரம் கருதி, இந்த இடத்தில் நிறுத்தி, தொடர்ந்து பல பாகத்தை கூறுகிறார். நாம் கருத்தில் கொள்ள வேண்டிய விஷயம் என்னவென்றால், உலகில் உள்ள அனைத்து ஒலிகளும், எழுத்துக்களும், மறையின் முதல் வர்ணமான ‘ஓம்’காரத்திலிருந்து தோன்றியவை என்பதே ஆகும்.

ப்[3]யாக[3]வாடத[3] ரங்க[3]னொலித[3] ஸ்ரீநரசிம்ஹ பா[4]க[3]வதரணுக[3]
ஜகன்னாத[2]தா[3]ஸ |
பா[3]கி[3] விக்[3]ஞாபிஸலு கைகொண்டு[3] பரமானுராக[3]த[3]லி பேளிதே[3]வு
தந்த்ரஸார ||24

ப்யாகவாட-வை சேர்ந்த ரங்கனொலித ஸ்ரீநரசிம்ம பாகவதரின் மகனான ஸ்ரீஜகன்னாத தாசர். பணிந்து விண்ணப்பித்ததை ஏற்று, மிகவும் அன்புடன் (அவரின் குருவாகிய நான்) இந்த தந்த்ர சாரத்தை கூறினேன்.

இந்தப் பாடல் இயற்றப்பட என்ன காரணம் என்பதை இந்த செய்யுளில் தெளிவு படுத்தியுள்ளார். இப்போது ஜகன்னாததாசரைப் பற்றி சுருக்கமாக பார்ப்போம்.

மந்திராலயம் தற்போதைய ஆந்திர மாநிலத்தில், கர்னூல் மாவட்டத்தில் உள்ளது. அங்கு துங்கபத்ரா நதி பாய்கிறது. அதைக் கடந்து அந்தப் பக்கம் போனால், கர்னாடக மாநிலத்தின் ராய்ச்சூர் மாவட்டம் வரும். அதில் மானவி என்கிற தாலுக்காவில் ப்யாகவட என்னும் சிறு கிராமம் இருக்கிறது. அங்கு ஷாஷ்டிக வம்சம் (அரவத்தொக்கலு பிரிவு) ஹரிதஸ கோத்திரத்தில் கங்கரஸரு இல்லத்தை சேர்ந்த நரசிம்மாசார்யர் என்பவர் இருந்தார். அவர் ராகவேந்திர ஸ்வாமி மடம் என்னும் ராயர் மடத்தில் ஸ்ரீஸ்ரீ ஸுமதீந்திர தீர்த்தர், ஸ்ரீஉபேந்திர தீர்த்தர் போன்றோர்களிடம் கல்வி கற்றார். அவர் நன்றாக பாடவும் செய்வார். அவர் பராவசு கந்தர்வரின் அவதாரம் ஆவார்.

ஸ்ரீஉபேந்திர தீர்த்தர் இவருக்கு ஒரு கருவாகன லட்சுமி நரசிம்ம பிரதிமையைக் கொடுத்து அருளினார். ஸ்ரீபுரந்தரதாசர் இவரது கனவில் தோன்றி, ‘ஸ்ரீ நரசிம்ம விட்டலா’ என்னும் அங்கிதத்தை அருளினார். இவரும் பாடல்களை புனையத் துவங்கினார். 1727ம் ஆண்டு, இவருக்கு ஸ்ரீனிவாச ஆச்சார் என்பவர் பிறந்தார். அவரே பின்னர் ஸ்ரீஜகன்னாத தாசர்.

***** அடுத்த இதழில் தொடரும்**

**** திரு.குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்**

தொடர்

## கன்னட கிரந்தங்கள் அறிமுகம்

## ஹரிசர்வோத்தம ஸார - ஸ்ரீவாதிராஜர்

**(சென்ற இதழின் தொடர்ச்சி)**

பதினொன்றாம் பத்யத்தில், ஒவ்வொரு ரோமங்களிலும் கோடி லிங்கங்களை செய்யக்கூடிய, தரிக்கக்கூடிய சாமர்த்தியம் உள்ள ஹனுமானைத் தன் சேவகனாக செய்து கொண்டு அருள் புரியும் ஸ்ரீ ராமனே பரதெய்வம்; ஸர்வோத்தமன் எனவும், தைத்யர்களால் அபகரிக்கப்பட்ட வேதத்தை மீட்டு வந்து, ப்ரம்ம தேவருக்கு அருள் புரிந்தவன் ஸ்ரீ ஹயக்ரீவன்; அவனே ஸ்ரீ ராமன், இந்த உலகை ஆளும் பிரபு எனவும் அறிய வேண்டுமென ஸ்ரீ வாதிராஜர் உரைத்துள்ளார்.

பன்னிரெண்டாம் பத்யத்தில், சிவன் தனக்களித்த வரத்தை பரிக்ஷித்துப் பார்க்க, வ்ருகாஸுரன் சிவனின் தலை மேல் கையை வைப்பதற்கு துரத்தி வர, சிவபெருமான் அஞ்சி அசுரனிடமிருந்து தன்னைக் காத்துக்கொள்ளும் வழி அறியாமல் வைகுண்டத்திற்குச் சென்று சரணடைய, ஸ்ரீ ஹரி வருகாஸுரனை ஒரு ரூபத்தில் வந்து ஏமாற்றி அவனின் கையை அவன் தலை மேலேயே வைத்துக் கொள்ளும்படி செய்து அவனை அழித்து, சிவனைக் காத்து ரக்ஷணை புரிந்தது மிகவும் பிரசித்தம் எனவும், சரணாகதி அடைந்தவர்களைத் தவறாமல் காப்பாற்றுபவன் என்றே புகழப்படும் ஸ்ரீ ஹயக்ரவ ரூபி பரமாத்மா, ஸ்ரீ ஹரியை விட்டால் வேறொரு பரதெய்வம் இல்லை எனவும் அறிய வேண்டும் என ஸ்ரீ வாதிராஜர் பறைசாற்றுகிறார்.

பதிமூன்றாம் பத்யத்தில், காஸி க்ஷேத்திரத்தில் ராம மந்திரத்தை உபதேசம் செய்யும் ருத்ர பகவான், ஞானிகளுக்கு ஞான உபதேசகராக இருப்பதாகவும், அந்த சிவன் உபதேசிக்கும் ராம மந்திரத்தால் போற்றப்படும் ஸ்ரீராமனே பரபிரம்மன், ஸர்வோத்தமன் எனவும் அறிந்து, மோக்ஷத்தை அளிக்கும் ஞானத்தை சிவனுக்கு உபதேசம் புரிந்த ஸ்ரீ ஹயக்ரீவனைத் துதிக்கும்படி வேண்டுகிறார் ஸ்ரீ வாதிராஜர்.

பதினான்காம் பத்யத்தில், சிவனே ஸர்வோத்தமன் எனக்கூறும் 6 தாமஸ புராணங்கள், பிரம்மனே ஸர்வோத்தமன் எனக்கூறும் 6 ராஜஸ புராணங்கள் இருக்க, ஞானிகள் விஷ்ணுவே ஸர்வோத்தமன் என்பதை உரைக்கும் சாத்வீக புராணங்களைத் தாங்கிப் பிடித்து, அதில்

உள்ள ஸ்ருதி சம்மதமானவை என்று உரைக்கும் ஸ்ரீமதானந்த தீர்த்தரின் மதத்தை, விட்டு விட வேண்டாம் என அறிவுறுத்தும் " ஸ்ரீ வாதிராஜர் "துராக்ரஹ மாட பேட குரு மதவ பிட பேட ஸிரியரஸ ஹயவதன ஆரு புராணகள நோடி" போன்ற பதங்களினால் விளக்குகிறார்.

பதினைந்தாவது பத்யத்தில், பரபிரம்மன், ஜீவன் மற்றும் ஜடம் என அனைத்தும் வேறு என ஸ்ருதிகள் சொல்ல, வேதாதி க்ரந்தங்களுக்கு எதிரான அர்த்தங்களை அவற்றின் மேல் புகுத்தி, அனைத்தும் ஒன்றே என்று வாதிடுபவர்களுக்கு "ஸ்ரீ ஹரியும் ஜடமா?", "ஹரனும் ஜடமா?", "மனுக்கள் மற்றும் சப்தரிஷிகளும் ஜடமா? எனக் கேள்விகளை எழுப்பி அஞ்ஞானிகளைக் கண்டு ஸ்ரீ ஹயவதனன் நகைப்பதாக ஸ்ரீ வாதிராஜர் பரிஹாஸம் புரிகிறார்.

பதினாறாம் பத்யத்தில், நூறு ருத்ரர்களின் சாதனைக் காலமான 5000 பிரம்ம கல்பங்கள் காரியங்களில் சிரமப்பட்டாலும், ருத்ர பகவான் 14 லோகங்களை லயம் செய்வதற்கு சமர்த்தர் அல்ல எனவும், விருப்பத்தாலேயே ஸம்ஹரிக்கும் சாமர்த்தியம் ஸ்ரீ ஹரிக்கே உண்டு எனவும், அவரே லய கர்த்தா எனவும் அறிந்து, பிரம்மா மற்றும் ருத்ரரை ஸ்ருஷ்டி ஸம்ஹார கர்த்தாக்கள் என எண்ணாமல், ஸ்ரீ பூர்ண ப்ரக்ஞரின் ஸித்தாந்தத்தைப் பின்பற்றுமாறு ஸ்ரீ வாதிராஜர் கேட்டுக் கொண்டு இந்த கிரந்தத்தைப் பூர்த்தி செய்துள்ளார்.

'ஹரி ஸர்வோத்தம ஸாரத்தை' உரைக்கும் இத்தகைய உயரிய க்ரந்தத்தை தினமும் பாராயணம் செய்து, விஸேஷமான அர்த்தங்களைத் தெரிந்து கொண்டு ஸ்ரீ வாதிராஜரின் அந்தர்யாமியான ஸ்ரீ ஹயக்ரீவரின் அனுக்ரஹத்திற்குப் பாத்திரராவோமாக.

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.**

## சமஸ்த நாம மணிகண ஷட்சரண பத்யமாலா (ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர்)

ஸ்ரீ ப்ரஸன்ன வேங்கட தாஸர் 600-க்கும் மேற்பட்ட கீர்த்தனைகள், 20-க்கும் மேற்பட்ட உகாபோகங்கள், 9-க்கும் மேற்பட்ட சுளாதிகள், கோலு பாட்டு போன்றவற்றை ரசனை செய்த மஹனீயர். சிறு வயதிலேயே தாய், தந்தையரை இழந்து, உணவிற்கே கஷ்டப்பட்டவர்.

ஸஜ்ஜனர்களின் சகவாஸத்தால் திருமலை ஸ்ரீ நிவாஸனின் தரிசனம் கண்டு, வாழ்வில் திருப்பு முனை கண்டு, பகவானே அவருடைய ஸ்வரூப யோக்யதையைக் கண்டு அவருக்கு தரிசனம் அளித்து, அங்கிதம் அளிக்கும் விதமாக அவரின் நாவில் 'ப்ரஸன்ன வேங்கட" என்னும் முத்திரையை எழுதி அனுக்கிரஹம் புரிந்துள்ளான். திருமலையில் பகவானே அர்ச்சகர்களுக்கு சூசனை அளித்து, தாஸருக்கு பூஜா விக்ரகங்களை அருளியுள்ளான். தாஸர் அருளிய 'ஸத்யபாமா விலாஸ', 'பேத முக்தாவளி', 'நாரத கொரவஞ்சி', 'ஸ்ரீ கிருஷ்ண பாரிஜாத', 'கோபி கீதம்', 'நாராயண பஞ்ஜரம்' போன்ற படைப்புகளின் வரிசையில் 'ஷட்சரண பத்மமாலா' என்பது பகவானை பல்வேறு நாமங்களிலே துதித்து பிரார்த்தனை செய்யும் விதத்தில் கன்னடத்தில் அமைந்த க்ரந்தமாகும்.

'ஷட்சரண பத்மமாலா' என்பது 71 பத்யங்களில் ஸ்ரீமன் நாராயணனின் பல்வேறு குணங்களை, மஹிமைகளைப் போற்றும் வகையில் உள்ள பல்வேறு நாமங்களைக் கொண்டு துதிபாடும் வகையில் அமைந்த கிரந்தமாகும். இது தாஸர், 956 நாமங்களிலே பகைவனைத் துதித்து பிரார்த்தனை (அ) ஸ்தோத்திர ரூபத்தில் அருளிய கிரந்தமாகும்.

பல்லவியில் தாஸர், "ஸ்ரீரமாவர ஸ்ருதிவினுத ஸுக² ஸாரக்³ரஹக்கெ ஸர்வேஷ ஸுரத்ரும வாரிஜாக்ஷ முகுந்த³ முரஹர நரஸிம்ஹ நமோ" என ஆரம்பித்து, அதிலும் முக்கியமாக இந்த கிரந்தத்திற்கு மங்கள பதமாக அமையும் வகையில், 'ஸ்ரீ' எனத் தொடங்கி, ஸர்வ ஸம்பன்னனான ஸ்ரீ லக்ஷ்மியின் வல்லபனான ஸ்ரீ ஹரியைப் போற்றி வர்ணித்துள்ளார். மேலும், ஒவ்வொரு பத்யத்தின் இறுதியிலும் பகவானின் நாமங்களைக் கூறி "நமோ நமோ" எனப் போற்றி பிரார்த்தனை செய்யும் வகையில் இயற்றி உள்ளார் தாஸர்.

தாஸர் புராணோக்தமான, வேதோக்தமான ரூபங்களை, நாமங்களை, பல்வேறு பத்யங்களில் வரிசைப்படுத்தி குறிப்பாக 'பத்மநாப', 'தாமோதர', 'உபேந்த்ர', 'அச்சுத' 'ஜனார்த்தன', 'வாஸுதேவ', 'ஸங்கர்ஷண', 'அனிருத்த', 'அதோக்ஷஜ', 'விஸ்வ', 'தைஜஸ', 'ப்ராக்ஞ' முதலான நாமங்களைக் கொண்டு துதித்துப் பாடியுள்ளார்.

பகவானின் பல்வேறு அவதார ரூபங்களை 'ராம' , 'கிருஷ்ண', 'நாரஸிம்ஹ', 'த்ரிவிக்ரம', 'கபில', 'யக்ஞ', 'மஹிதாஸ', 'தத்தாத்ரேய' ,

'நாராயண', 'ருஷப' முதலான நாமங்களினால் பல்வேறு பத்யங்களில் துதித்ததுடன், முக்கியமாக ராம மற்றும் கிருஷ்ண அவதாரங்களில் பகவானின் மஹிமைகளை லீலைகளை, வர்ணிக்கும் வகையில் குறிப்பிட்டு வர்ணித்து ஸ்தோத்திரம் செய்துள்ளார் தாஸர்.

பகவானின் ஸ்ரீ ராம அவதாரத்தின் லீலைகளை வர்ணிக்கும் வகையில் 'தாடகாந்தக', 'ஜனகஜாவர', 'லக்ஷ்மணாக்ரஜ', 'ஜனகவாக்வர', 'தினபகுலபதி', 'தஸஸிர ஹனன காரண', 'பரதபாலக', 'ராமராஜ' முதலான நாமங்களில் தாஸர் குறிப்பிட்டு துதித்துப் பாடியுள்ளார்.

பகவானின் ஸ்ரீ கிருஷ்ண அவதாரத்தின் லீலைகளை 'பூதனாந்தக', 'நவநீதப்ரிய', 'ததிஸார போஜக', 'பக ஹர, 'கரி ஹர', 'சாணூர ஹர', 'மாதுஸாந்தக', 'பார்த்த ஸ்தாபக', 'கௌரவாந்தக' முதலான நாமங்களினால் போற்றியுள்ளார் தாஸர். குறிப்பாக கிருஷ்ணாவதார காலத்தில் பக்தர்களைக் காத்து அனுக்ரஹம் புரிந்த விதத்தையும், அத்தகைய அருளுக்கு பாத்திரரான பக்தர்களை மனதில் கொண்டு 'அக்ரூராபிஷ்டத', 'விதுரவரேண்ய', 'உத்தவவரேண்ய', முதலான நாமங்களினால் பகவானைக் கொண்டாடி வணங்கியுள்ளார் தாஸர்.

மேலும் தாஸர் பகவானின் ஸர்வோத்தமத்வத்தை, அதிலும் குறிப்பாக பகவான் அனந்த கல்யாண குண பரிபூர்ணன், மற்றும் ஸர்வதோஷதூரன் என்பதை பறைசாற்றும் படியாக 'ஸ்ருதி வினுத', 'ஸூரேஷ', 'ஆதிபுருஷ', 'ஸூவ்யாப்த', 'ஞானானந்த', 'நித்ய த்ருப்த', 'நிர்பயாத்ம', 'அனவேத்ய',' "ஸதத விபுத நியாமக', 'ஸம்பூர்ணவாச்ய', 'அஸேஷ தூரதூர, 'அப்ராக்ருத', 'பரமபுருஷ', 'அவ்யய', 'அதிஸயாத்புத', 'அனந்தகுணநிதி', 'ஸமாதிகாபக்ஷ', 'ஸகல புவன நிவாஸ', 'பஹூள ஜீவாந்தரீய', 'பராத்பரா', 'வர்ஜித கலுஷ', 'ஸுசரித', 'ஸர்வபுக்', 'ஸ்வபூர்ண' முதலான பல்வேறு நாமங்களினால் துதித்துள்ளார்.

தைத்யர்களை அழித்து தர்மத்தை நிலை நாட்டுபவன் என்பதைக் காட்டும் வகையில் பல்வேறு பத்யங்களில் 'பூதனாந்தக', 'தாடகாந்தக', 'கௌரவாந்தக', 'மதுமதன', 'கைடப விதாரண', 'தஸஸிர ஹனன காரண', 'க்ஷிதி பரஹர', பகாந்தக', 'வாத சக்ரா நிஷ்ட ஹர' முதலான பல்வேறு நாமங்களினால் ஸ்தோத்திரம் செய்துள்ளார் தாஸர்.

(தொடரும்)...

**S.லக்ஷ்மிபதிராஜா, சென்னை**

தொடர்

## ஹரிகதாம்ருதசார பத்ய அர்த்தங்கள்

### கருணா சந்தி - தொடர்ச்சி

ஏனு கருணாநிதியோ ஹரி ம
த்தேனு பக்தாதீனனோ இ
ந்னேனு ஈதன லீலெ இச்சாமாத்ரதலி ஜகவ |
தானெ ஸ்ருஜிசுவ பாலிசுவ நி
ர்வாண மொதலாதகில லோக
ஸ்தானதலி மத்தவரனிட்டானந்த படிசுவனு ||16

ஸ்ரீஜகன்னாததாசர் பகவந்தனின் கருணையை இந்த கருணா சந்தியில் 15 பத்யங்களில் தொடர்ந்து அற்புதமாக வர்ணித்து வருகிறார். இந்த 16ம் பத்யத்தில், ஒரு சிறப்பான அனுபவ விஷயத்தைப் பற்றி சொல்கிறார். அத்தகைய பகவந்தனின் கருணையை மேலும் சிலாகிப்பதைப் போல, 'ஆஹா, ஸ்ரீஹரி எவ்வளவு கருணாமயி தெரியுமா' என்று துவக்குகிறார். பக்தியுடன் அவனது ஸ்மரணை, தியானம், கீர்த்தனை செய்பவர்களுக்கு அவனே அதீனன் ஆகிவிடுகிறான். அதாவது, அவர்கள் கேட்டதெல்லாம் அவன் கொடுத்து விடுகிறான். அவர்களுக்கு வரும் ஆபத்துகளை முன்கூட்டியே பரிகரித்து விடுகிறான்.

அவர்களுக்கு எவ்வித தோஷங்கள், கஷ்டங்கள், தடைகள் என எவையும் வராதவாறு காப்பாற்றுகிறான். தன் பக்தனின் ஜென்மாந்தர பாவங்களைக் களைந்து, அவன் சுகமாக இருக்குமாறு செய்கிறான். என்றபிறகு, இவனுடைய லீலைகளை நான் என்னவென்று வர்ணிப்பது என்று சொல்லி வியக்கிறார் தாசார்யர்.

தன்னை எப்போதும் துதிக்கும் பக்தர்களை, தன்னுடைய அகில லோக ஸ்தானங்களில் வைத்து, அதாவது ஷ்வேதத்வீப, வைகுண்ட, அனந்தாஸன முதலான முக்தஸ்தானங்களில் வைத்து, அவர்களுக்கு நிரந்தர சுகத்தையே கொடுக்கிறான். இத்தகைய கருணாளுவைப் பற்றி நான் என்ன சொல்வது? என்று சொல்லி ஆனந்தப்படுகிறார் தாசார்யர்.

ஜனப மெச்சிதரீவ தன வா
ஹன விபூஷண வசன பூமிய

தனு மனகளித்தா தரிபருண்டேனு லோகதொளு |
அனவரத நெனெவவரனந்தா
சனவே மொதலாதாலயதொளி
ட்டணுகனந்ததி அவர வஷனாகுவ மஹாமஹிம ||17

பகவந்தனின் காருண்யத்தை மேலும் இந்த பத்யத்தில் வர்ணிக்கிறார் ஸ்ரீஜகன்னாத தாசர். பழைய காலத்தில் புலவர்கள் / அறிஞர்கள் தங்களின் அரசனைப் பற்றி புகழ்ந்து கவிதைகளை / பாடல்களைப் பாடினால், அதற்கு அந்த அரசன் அவர்களுக்கு வேண்டிய செல்வத்தைக் கொடுப்பது, பட்டாடைகளை, ஆபரணங்களைக் கொடுத்து மரியாதை செய்வது வழக்கமாக இருந்தது.

ஸ்ரீதாசார்யர் இதையே இந்த பத்யத்தில் சொல்கிறார். இவ்வளவு பொருட்களையும் கொடுக்கும் அரசன், தன் சரீரத்தையே கொடுப்பானா? அதாவது அந்த புலவர்கள் அரசனை தொட முடியுமா? ஆலிங்கனம் செய்ய முடியுமா? முடியாது. அது போல, தன் மனதைக் கொடுப்பானா? அதுவும் இல்லை. வந்ததற்கு, பாடியதற்கு, சன்மானம் செய்து அனுப்பி விடுகிறான். அவ்வளவே.

ஆனால், நம் ஸ்வாமி அப்படியில்லை. தன்னை எப்போதும் நினைப்பவர்களுக்கு, அனந்தாஸனம் முதலான தன் இருப்பிடங்களிலேயே வைத்து, தன்னையே அவர்களுக்குக் கொடுத்து அவர்களின் வசம் ஆகிவிடுகிறான். அதாவது, தன் உடன் பிறந்த அண்ணன் தம்பிகளைப் போல பாசம் கொண்டு, தன்னையே கொடுத்து விடுகிறான் என்று சொல்லி, பகவந்தனின் அபாரமான காருண்யத்தை இந்த பத்யத்தில் சொல்லி தாசார்யர் முடிக்கிறார்.

*** **திரு. முரளிதர தாசர், பெங்களூரு**

**வாட்சப் க்ரூப்**

ஹரிதாச விஜயம் வாட்சப் க்ரூப் ஒன்று உள்ளது. இதில் ஹரிதாசர்களின் புண்ய தினங்களில் அவர்களைப் பற்றிய தகவல்கள், புதிய புத்தகங்கள் போன்ற தகவல்கள் வெளியாகின்றன. Admin-only. No spam. விருப்பப்பட்டவர்கள் இணைந்து கொள்ளலாம். Contact : 89044 58276

ஆராதனை

# ஸ்ரீவியாஸ தத்வக்ஞ தீர்த்தர்

## சிராவண கிருஷ்ண அஷ்டமி

இரு மொழிகளில் வல்லவரான இன்னொரு யதிகள் என்றால் அது ஸ்ரீவியாதத்வக்ஞர்ஜஜி வெங்கடரமணாசார் என்று பிரபலமான . கோபாலதாசரின் உறவினரான இவர் .அறிஞர், ஸ்ரீபுவனேந்திரரிடம் அசிரமம் பெற்று, வைராக்யசாலியாக, யதி ஆசிரமத்தின் கடமைகளான சாஸ்திர பாடம், சத்கர்மானுஷ்டாங்களை பின்பற்றலானார். பல புகழ்பெற்ற சிஷ்யர்களைப் பெற்றிருந்தனர் . பல .அதில் முக்கியமானவர் மாதனூர் ஸ்ரீவிஷ்ணுதீர்த்தர் - பிடி சன்யாசியான இவர் .கிரந்தங்களை இயற்றினார் மானஸஸ்ம்ருதி, நியாயசுதா, சந்திரிகா போன்றவற்றிற்கு உரை எழுதி, வாசுதேவ விட்டல என்ற அங்கிதத்தில் பற்பல பாடல்களை - சிறந்த ஞானி .சுளாதிகளை இயற்றிய மகானுபாவர், வைராக்கிய குணம் கொண்டவர், தத்வபிரசாகரும் ஆன இவர் வேணிசம்புரத்தில் பிருந்தாவனஸ்தரானார்பின் வந்த ஹரிதாசர்க .ள் இவரை நினைத்து, பாடல்களில் போற்றியுள்ளனர் .

ஆவஜெனுமதி சுக்ருத பலிஸிதெனெகெ
கோவிதாக்ரணி வியாசதத்வக்ஞர கண்டே ||ப||
ஜீவ சாமான்யரெந்தரியதிரி ஷாஸ்த்ரகள
நாவலோகனதி பேள்தரு நித்யதி |
தேவாம்ஷரிவரு சம்ஷயபடஸல்ல மா
யாவல்லபனு இவர ஹ்ருதயதொளகிருதிப்ப ||1||
கவிபிரீடித மஹாமுனிவியாஸக்ருத சுபா
கவதாதி கிரந்த வியாக்யான நோடி |
புவனேந்த்ரராயரா கருணதலி துரியாஷ்ர
மனவித்து வியாஸதத்வக்ஞரஹுதெந்த ||2||
ஈ ஜகத்ரயதொளகெ பூஜ்ய பூஜகர நி
ர்வ்யாஜதலி திளுபிதரு பக்தஜனகெ |
ஸ்ரீஜகன்னாதவிட்டலனொப்ப பூஜ்ய, பங்
கேஜபவ பவரு பூஜகரெம்புவர நோட்த -||3|| -- ஸ்ரீஜகன்னாததாசர்

***




| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 ச | து | ர | 26 | ம் | ஸ | 2 தி | தி | ய | கு | மா | ர | ம | 19 | 27 நி |
| | | 3 த | ஹி | க | | ண | | ஜ் | | | 4 ப் | ர | க | ட |
| | | 5 | த | வ | ஹா | க்ஷ | த் | ரு | க் | 20 | வ | | ட | க |
| | 28 | த | | | | ல | | ஸ் | | | 6 | லி | ங் | க |
| 7 நி | ர | வ | த் | ய | | 35 | | 8 அ | கு | டி | ல | | | னு |
| | த் | ஹ | ம | 29 | 21 | | த | | | | 9 | 30 ப | ணா | ல |
| | ரி | | | ம | | | னா | | 31 | | | ஞ் | | |
| 10 | க | ஸி | | ஸ | ம் | 11 | ன் | ன | 32 த | 33 | ல | ஜ | லா | 22 கி |
| ன | | ய | ஜ் | 23 | | | 36 | | வ | த் | | ன | | |
| ந் | | 12 ப | ன் | ன | | | 13 ப் | ர | க | ர | ண | | ல | |
| 14 | மி | ர | | | 15 | ண் | ண | வ | தி | | | | லி | |
| ன | | ஹா | | | 34 | | | | 16 ப் | ர | த | ர் | 37 | ன |
| தி | | 17 | க் | ன | க | ளு | | | வா | | | | | |
| | ட | ப | து | ந் | 24 த | சி | 25 | | 18 ப | ஹு | ப் | ர | கா | ர |

**Appeal - விண்ணப்பம்**

தொடர்ந்து பல அரிய கன்னட புத்தகங்களை மொழிபெயர்த்து தமிழில் ஹரிபக்தர்களுக்காக கொடுத்து வருகிறோம். அடுத்து வரும், ஸ்ரீராயர் மற்றும் ஸ்ரீஜகன்னாத தாசர் ஆராதனையில் தத்வ சுவ்வாலி, குண்ட க்ரியெ போன்ற சில புத்தகங்களை தமிழில் (நீண்ட விளக்க உரைகளுடன்) வெளியிட திட்டமிட்டுள்ளோம்.

அதற்கு Sponsors தேவைப்படுகிறது. தனிப்பட்ட முறையிலோ அல்லது உங்கள் பஜனா மண்டலி அல்லது மடங்களின் சார்பாக இதனை வெளியிடலாம். இத்தகைய ஹரிதாச சாகித்ய பொக்கிஷங்கள் தமிழில் வெளிவருவதற்கு உங்கள் உதவி தேவை. மேலும் விவரங்களுக்கு தொடர்பு கொள்ளவும்.

**|| நன்றி. ஹரே ஸ்ரீனிவாஸா ||**

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்

Haridasa Vijayam - Monthly

மலர் ௨ ** செப்டம்பர் 2021 ** இதழ் 10



ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர்

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 2 : இதழ் 10


**நிர்வாக ஆசிரியர்**

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276.
haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**

'தாச சாகித்ய சேவா ரத்ன'
திரு.குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**

திரு. முரளிதர தாசரு,
திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா,
திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்


## ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்

**செப்டம்பர் 1 முதல் 30 வரை, 2021**

Sep 13 - பாத்ரபத சுத்த பஞ்சமி - ஸ்ரீஹஸிக்யாளு கோவிந்த தாசர்
Sep 16 - பா.சு.அஷ்டமி - ஸ்ரீஷபிராணேஷ விட்டலதாசர், லிங்கஸுகூர்
Sep 17 - பா. சு. நவமி - ஸ்ரீஜகன்னாத தாசர், மானவி
Sep 18 - பா.சு.ஏகாதசி - ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர், பாகல்கோடெ / பாதாமி
Sep 19 - பா. சு. த்வாதசி - ஸ்ரீகமலேஷ விட்டல தாசர். சுரபுர
Sep 21 - பா. சு. சதுர்தசி - ஸ்ரீபாகெபள்ளி சேஷதாசர்

# ஆசிரியர் பக்கம்

செப்டம்பர்2021ல் ஸ்ரீஜகன்னாத தாசர், ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர் முதலான பல ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள் வருகின்றன. அந்தந்த ஹரிதாசர்களின் தேவரநாமாக்களை பாடுவதுடன், அவர்களுடைய வாழ்க்கை வரலாறு, அவர்கள் இயற்றிய கிரந்த, காவியங்களையும் படித்து, அவர்களின் மூலமாக ஹரிவாயு குருகளின் அருளைப் பெற முயல்வோம்.

சில அரிதான ஹரிதாசர்களின் வாழ்க்கை வரலாறுகளை நம் பத்திரிக்கையில் தொடர்ந்து பார்த்து வருகிறோம். மேலும் பார்க்கவிருக்கிறோம். அவர்கள் தம் வாழ்க்கையில் நடத்திக் காட்டிய பக்தி வைராக்கியங்களைக் கண்டு அதன்படியே நாமும் முயல வேண்டும் என்பது என் குரு சொல்லும் வாக்கு.

ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால், ஸ்ரீராயரின் ஆராதனை ஸ்ரீஜகன்னாததாசரின் தத்வ சுவ்வாலி - தமிழ் அர்த்தத்துடன் வெளியிட்டோம். அதைப்போல, வரிசையாக பல புத்தகங்கள் வரவிருக்கின்றன. நம் வாட்சப் க்ரூப்பில் இணைந்து, அந்த தகவல்களைப் பெற்று, புத்தங்களையும் வாங்கிப் படித்து பயன்பெறவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்**

**Subscription Renewal**

* தக்க சமயத்தில் உங்கள் ஹரிதாச விஜயம் சந்தாவினை ரென்யூ செய்து கொண்டு, பத்திரிக்கையை தொடர்ந்து பெறுமாறு பார்த்துக் கொள்ளவும்.
* பத்திரிக்கை பெறும் முகவரி மாறினால், அதனை எங்களுக்கு தெரியப்படுத்தவும்.

தொடர்

## கோவிந்தாஷ்டகம்

**இயற்றியவர்: ஸ்ரீகுருகோவிந்தவிட்டலதாசர்**

**மம் மனவே நம:**

ம-எழுத்திற்கான மனு நாமக பகவந்தனின் ஸ்துதி

**மதஜனகமஜ்ஜதி கோவிந்த |நம்ம**
**மதன கோபாலனெ கோவிந்த |**

ம-காரத்தில் துவங்கும் சொற்களின் அதிபதியாக தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும் கோவிந்தனே, எலும்பில் இருக்கும் சத்வத்தினால் விந்தினை உற்பத்தி செய்பவனே. மன்மதனைப் போல மிகவும் அழகான நம் கோபாலகிருஷ்ணனே. எங்களில் ஸ்துதிகளை மிகவும் மரியாதையுடன் ஏற்றுக்கொண்டு எங்களை காப்பாற்று.

**யம் யக்ஞாய நம:**

ய-எழுத்திற்கான யக்ஞ நாமக பகவந்தனின் ஸ்துதி

**யக்ஞபுக்யக்ஞனெ கோவிந்த |மத்தெ**
**யக்ஞஸாதன நீனெ கோவிந்த ||20**

ய-காரத்தில் துவங்கும் சொற்களில் அதிபதியாக தன்னை வெளிப்படுத்தும் கோவிந்தனே, யக்ஞத்தை காப்பாற்றுபவனும் நீயே, யக்ஞத்தின் சாரத்தை (பலனை) உட்கொள்பவனும் நீயே. ஆகையால், 'யக்ஞபுக்' எனப்படுகிறாய். யக்ஞத்தை நடத்துவது, காப்பாற்றுவது, அதன் பலனைக் கொடுப்பது, அந்த பலனை ஏற்றுக்கொள்வது என யக்ஞத்தின் அனைத்து பாகங்களிலும் சம்பந்தப்பட்டிருக்கிறாய். பகவந்தனை யக்ஞம் என்று மட்டும் அழைக்காமல், அதற்கு சம்பந்தப்பட்ட அனைத்து உபகரணங்கள் (பொருட்கள்) அனைத்திற்கும் சம்பந்தப்பட்டவனாக இருப்பதால், 'யக்ஞசாதன' என்றும் அழைக்கிறோம்.

இதையே விஷ்ணு சஹஸ்ரநாமத்தில்:
யக்ஞோ யக்ஞபதிர்யஜ்வா யக்ஞாங்கோ யக்ஞவாகன: |
யக்ஞப்ருத் யக்ஞக்ருத் யக்ஞீ யக்ஞபுக் யக்ஞசாதன: ||

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

**ரம் ராமாய நம:**

ர-எழுத்திற்கான ராம நாமக பகவந்தனின் ஸ்துதி

**ரணதொளர்ஜுன பால கோவிந்த | ஹர**
**ரணவனெகளெயோ கோவிந்த |**

ர-காரத்தில் துவங்கும் சொற்களின் அதிபதியாக தன்னை வெளிப்படுத்தும் கோவிந்தனே, நீ கிருஷ்ணாவதாரத்தில், மகாபாரதப் போரில், அர்ஜுனனுக்கு பாதுகாவலனாக இருந்தாய். நமக்கு (சஜ்ஜனர்களுக்கு) எதிராக நடக்கும் கலகங்கள், அதனால் விளையும் விளைவுகள் ஆகியவற்றை களைவாயாக.

**லம் லட்சுமிபதயே நம:**

ல-எழுத்திற்கான லட்சுமிபதியின் ஸ்துதி

**லவகுஷ பிதனெனிப கோவிந்த | நீன**
**லவபூர்ண மஹிம கோவிந்த ||21**

ல-காரத்தில் துவங்கும் சொற்களின் அதிபதியாக தன்னை வெளிப்படுத்தும் கோவிந்தனே, நீ ராமாவதாரத்தில் லவ-குசர்களின் தந்தையாக உன்னை காண்பித்துக் கொண்டாய். எந்தவொரு குறைகளும் இல்லாத, பரிபூர்ணமான மகிமைகளைக் கொண்டவன். ஆகையாலேயே, அத்தகைய மகிமைகளைக் கொண்டாடும் ஒவ்வொரு சொற்களுக்கும் அதிபதியாக உன்னை காண்பித்துக் கொள்கிறாய்.

**வம் வராய நம:**

வ-எழுத்திற்கான வர நாமக பகவந்தனின் ஸ்துதி

**வர்ணக³ள் த்⁴வனிக³ளு கோவிந்த | சர்வ**
**வர்ணிபுது நின்ன கோவிந்த |**

வ-காரத்தில் துவங்கும் சொற்களின் அதிபதியாக தன்னை வெளிப்படுத்தும் கோவிந்தனே, அனைத்து எழுத்துகளும், அனைத்து சப்தங்களும், உன்னையே வர்ணிக்கின்றன. இப்படியாக அனைத்து எழுத்துகள், அனைத்து சப்தங்கள் ஆகியவற்றால் வணங்கப்படுபவதால் / வர்ணிக்கப்படுவதால் நீ கோவிந்தன் எனப்படுகிறாய்.

**ஷம் ஷாந்தசம்விதே நம:**
ஷ-எழுத்திற்கான ஷாந்தசம்வித் நாமக பகவந்தனின் ஸ்துதி

**ஷரோ அபி⁴த⁴ ஜீவன்ன கோவிந்த | மீடி¹**
**ஷரீராக்²யனெனிஸுவெ கோவிந்த ||22**

ஜீவன், பகவந்தனின் கையில் இருக்கும் பாணத்தைப் போன்றவன். அந்த பாணத்தை, வில்லின் மூலம் எய்வதைப் போலவே, ஜீவனையும் மோட்சத்தின் பாதையில் அனுப்புவதற்கு பகவந்தன் விரும்புகிறான் ஆகையால் அவன் ஷரீர எனப்படுகிறான்.

**ஷம் ஷட்குணாய நம:**
ஷ-எழுத்திற்கான ஷட்குண நாமக பகவந்தனின் ஸ்துதி

**ஷட்குண பரிபூர்ண கோவிந்த | நீனெ**
**ஷட்வாதி ஸ்வர வ்யாப்தி கோவிந்த |**

ஐஸ்வர்யம், வீரம், புகழ், ஆளுமை, ஞானம் மற்றும் சிறப்பு (உண்மையான) ஞானம் - ஆகிய ஆறு குணங்களால் பரிபூர்ணமானவன். நீயே சப்த-ஸ்வரங்களில் முதலாவதான 'ஸ' ஸ்வரத்திற்கு ஷட்ஜம் என்று பெயர். ஸ முதலான ஏழு ஸ்வரங்களுக்கும் அதிபதியானவன் பகவந்தன்.

**ஸம் ஸாராத்மனே நம:** - ஸ-எழுத்திற்கான ஸாராத்மனின் ஸ்துதி

**ஸத்தாதி ப்ரதரூபி கோவிந்த | நீனெ**
**ஸத்தத்வ ப்ரதிபாத்³ய கோவிந்த ||23**

ஸ-காரத்தில் துவங்கும் சொற்களின் அதிபதியாக விளங்கும் கோவிந்தனே, உன்னைத் தவிர, மற்ற லட்சுமி முதலான தேவதைகள், அஸ்வதந்த்ரரே ஆனதால், அவர்களுக்கு ஸத்தா - இருப்பு, ப்ரதீதி - அறிவு, ப்ரவ்ருத்தி - நடவடிக்கை (வேலை) ஆகியவற்றை கொடுப்பவன் நீயே. ஏனென்றால் நீயே - நீ மட்டுமே - ஸத் - ஸ்வதந்த்ரனான, தத்வ - தத்வ என்று அழைக்கப்படுபவனாக இருக்கிறாய்.

**ஹம் ஹம்ஸாய நம:** - ஹ-எழுத்திற்கான ஹம்ஸ நாமகனின் ஸ்துதி

**ஹரிஹரி எந்தரெ கோவிந்த ।பாப**
**ஹரிதூவி நீனெ கோவிந்த ।**

பாவங்களை உடனடியாக களைபவன் / போக்குபவன் என்னும் பொருளில் பகவந்தன் 'ஹரி' என்று அழைக்கப்படுகிறான் என்று அறிந்து, ஹரி ஹரி என்றால், அதனால் மகிழ்ச்சியடையும் பகவந்தன் அந்த பாவங்களை களைகிறான்.

முதல் வரியிலிருந்து கோவிந்தன், 'ஹ'கார எழுத்துக்களில் தன்னை வெளிப்படுத்துகிறான் என்ற பொருள் வருகிறது. இரண்டாம் வரியில், கோவிந்தன் என்று சொல்வது, பாவங்களைப் போக்குபவன் என்று பக்தியுடன் செய்யப்படும் பிரார்த்தனைகளை ஸ்வீகரிப்பவன் என்னும் பொருள் வருகிறது.

**ளம் ளாளுகாய நம:** - ள-எழுத்திற்கான ளாளுகனின் ஸ்துதி
**ளாளுக ஆபி⁴த⁴ கோவிந்த ।காயோ**
**ளகார ப்ரதிபாத்³ய கோவிந்த ।।24**

ள-காரத்திற்கான அதிபதியாகி ளாளுக என்று அழைக்கப்படுபவனே, நீ அந்த ளாளுக ரூபியாக, அனைத்து வேதங்களிலும் இருக்கும்படியான அனைத்து ள-காரத்தினால் உன்னை வெளிப்படுத்துகிறாய்.

**க்ஷம் லட்சுமி நரசிம்ஹாய நம:**
க்ஷ-எழுத்திற்கான லட்சுமி நரசிம்மனின் ஸ்துதி

**க்ஷமிஸெனன அபராத கோவிந்த ।ப³லி**
**க்ஷமெயனளெத குரு கோவிந்த ।**
**க்ஷமக்ஷாமாபி⁴த குரு கோவிந்த ।நீ ல**
**க்ஷுமி சஹ நெலெஸோ கோவிந்த ।।25**

தெரியாமல் செய்துவிட்ட பிழைகளுக்காக, பச்சாதாபப்பட்டு செய்யப்படும் பிரார்த்தனைகளை ஏற்றுக்கொள்ளும் கோவிந்தனே, அந்த அபராதங்களை மன்னித்து அருள்செய். நீ, வாமனாவதாரத்தில் பலிச்சக்கரவர்த்தியிடம் மூன்றடி நிலத்தை தானமாகப் பெற்று, அதனால், பலி (இந்திரனிடமிருந்து ஸ்வர்க்கத்தைப் பறித்த செயலை) செய்த தவறினை மன்னித்தாய். விஷ்ணு சஹஸ்ரநாமத்தில் 'க்ஷம' என்றும் 'க்ஷாம' என்றும் அழைக்கப்படுகிறாய். உன் ப்ரியளான லட்சுமிதேவியுடன் எப்போதும் என் இதயத்தில் நின்று நிலைப்பெற்றிருப்பாயாக.

(தொடரும்)...

தொடர்

## கேசவ நாமா

## 17-பய நிவாரணவு - ஸ்ரீமஹிபதி தாசர்

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)

வைகுண்டகிரியல்லி அச்யுதனித்தா[3]னே ராமராம |
வைகுண்டகிரி கண்டே[3] அச்யுதன த[3]யதி[3] ராமராம ||20

நாமத்ரய ஸ்மரணையில் முதலாம் பெயரே அச்யுதன். அச்யுத நாமஸ்மரணையினால் அனைத்து விதமான நோய்களும், பாவங்களும், பரிகாரம் ஆகின்றன. ச்யுதி (அழிவு) இல்லாதவன் அச்யுதன் - அவன் இருப்பது வைகுண்டகிரியில்.

வைகுண்டபதி தானு வைகுண்டவனெ பி[3]ட்டு
வெங்கடாத்[3]ரிகெ ஹோகி ஸ்ரீகாந்த நிந்த[1]

வைகுண்டபதியான ஸ்ரீகாந்தனே, ஸ்ரீனிவாசனாக திருப்பதியான வைகுண்டகிரியில் அச்யுதனாக நிற்கிறான். வைகுண்டத்திற்கு வருவதற்கு மக்களுக்கு கஷ்டமாக இருப்பதால், தானே இங்கு வந்து பூ-வைகுண்டமான வெங்கடாசலத்தில் நின்று, தன் பக்தர்களுக்கு அருள்வதற்கு தரிசனம் கொடுக்கிறான். அத்தகைய அச்யுதனின் கருணையால் வைகுண்டகிரியைக் கண்டேன் என்கிறார் தாசர்.

ஜான்ஹவியல்லி ஜனார்த்தனனித்தா[3]னே ராமராம |
ஜனார்த்தனன த[3]யதி[3] ஜான்ஹவியல்லி மிந்தெ[3] ராமராம ||21

பகீரத ராஜனின் தவவலிமையால் கங்கையானவள், தேவலோகத்திலிருந்து இறங்கி வந்து, பாகிரதி நதி என்று அழைக்கப்பட்டாள். தன் தவத்திற்கு, ஆசிரமத்திற்கு தொந்தரவு கொடுத்த கங்கையை ஜன்ஹு முனிவர் குடித்தபோது, பகீரதனின் வேண்டுதலின்படி தன் காதிலிருந்து கங்கையை வெளிக் கொணர்ந்தார். ஜன்ஹு ரிஷியின் காதிலிருந்து வெளிவந்ததால், ஜான்ஹவி என்று அழைக்கப்பட்டாள் கங்கை.

ஜீவாத்மர்களுக்கு தேகத்தைக் கொடுப்பவனே ஜனார்த்தனன். தன்னுடைய சாட்சாத்காரம் அளித்து, லிங்கதேகத்தை பங்கம் செய்கிறான் ஜனார்த்தனன். அத்தகைய ஜனார்த்தனின் கருணையால், ஜான்ஹவியில் குளித்தேன்.

உடுப்பி க்ஷேத்ரதல்லி உபேந்திரனித்தா³னெ ராமராம ।
உடுப்பி க்ஷேத்ரவ கண்டெ³ உபேந்திரன த³யதி³ ராமராம ।।22

தன் ஸ்வரூபத்தை பக்தர்களுக்குக் காட்டி, அவர்களுக்கு அருள்பவன் உபேந்திரன். மத்வ சரோவரத்தில் ஸ்னானம், அனந்தேஸ்வர, சந்திரமௌலீஸ்வர, கிருஷ்ணனின் தரிசனம், முக்யபிராண, கருட, போஜனசாலையின் பிராணதேவர், மத்வாசார்யர், சுப்ரமண்ய, நவக்கிரக, யதிகளின் பிருந்தாவனம், அஸ்வத்த மரம், கோசாலையில் கோமாதாவின் தரிசனம் ஆகியவற்றை உபேந்திரனின் அருளால் உடுப்பி க்ஷேத்திரத்தில் கண்டேன்.

உடுப்பி ஸ்ரீகிருஷ்ணனின் வலது கையில் மத்து, இடது கையில் கயிறு இருக்கிறது. அவனின் மத்து உங்கள் சம்சார சாகரத்தைக் கடைந்து, உங்களுக்கு ஞான பக்தி வைராக்கியம் என்னும் வெண்ணையைக் கொடுக்கிறது. அவனின் இடக்கையில் இருக்கும் கயிறு, என்னை பக்தி என்னும் கயிற்றில் கட்டினால், நான் உங்களை சம்சாரம் என்னும் வாழ்க்கையிலிருந்து உங்களை கட்டி இழுப்பேன்.

ஹரியுவ நதி³யலி ஸ்ரீஹரியித்தானெ³ ராமராம ।
ஸ்ரீஹரிய த³யதி³ ஹரியுவ நதியல்லி மிந்தெ³ ராமராம ।।23

பக்தர்களின் பாவங்களை பரிகரிப்பவனே ஸ்ரீஹரி. பாயும் குணம் இருக்கும் தண்ணீரை ஆறு என்பதால், அதைச் சுற்றி இருக்கும் இடங்களையெல்லாம் தீர்த்தக்ஷேத்திரம் என்கிறோம். ஸ்ரீஹரியின் அருளால் தீர்த்தக்ஷேத்திரங்களில் இருக்கும் ஆற்றில் குளித்தேன் என்கிறார் தாசர்.

கிருஷ்ணா எந்த³ரெ கஷ்டவு பரிஹார ராமராம ।
கிருஷ்ணன த³யதி³ சகல கஷ்டபி³ட்டி¹து ராமராம ।।24

திரௌபதியின் இன்னொரு பெயர் கிருஷ்ணை. மகாபதிவ்ரதையான திரௌபதியின் ஸ்மரணையால் கஷ்டங்கள் பரிகாரம் ஆகின்றன.

கிருஷ்ணனின் ஸ்மரணையால் கிருஷ்ணையின் கஷ்டங்கள் பரிகாரம் ஆனதைப் போல, கிருஷ்ண - கிருஷ்ணெயரின் ஸ்மரணையினால் நம் அனைத்து கஷ்டங்களும் பரிகாரம் ஆகும்.

ப⁴க்திலிப்பத்னால்கு நாம பே1ளுவவரிகெ ராமராம |
ப⁴க்தமுக்தியனீவ விஜயவிட்டலராய ராமராம ||25

இந்த கேசவ நாமத்திற்கு பல- ஸ்ருதி என்பதைப் போல விஜயதாசர், யார் மிகுந்த பக்தியுடன் 24 ரூபங்களை நினைக்கிறார்களோ, அவர்களுக்கு விஜயவிட்டலன் முக்தியைக் கொடுக்கிறான் என்று முக்திக்கான வழியை நமக்குக் காட்டுகிறார் தாசர்.

ராம எம்பு³வ எரட³க்ஷரத
மஹிமெயனு பாமரரு தாவேனு ப³ல்லரய்யா -

என்னும் கீர்த்தனையில் வால்மீகிக்கு, அனுமனுக்கு, காசியில் இருக்கும் சிவனுக்கு மட்டும் ராம மந்திரத்தின் மகிமைகள் தெரிந்திருக்கின்றன என்கிறார் புரந்தரதாசர். இங்கு பார்த்த கேசவ நாம கீர்த்தனையில், 100 முறை ராம நாமத்தை சொல்லியிருக்கிறார் விஜயதாசர்.

## 19. ஜோ.. ஜோ.. ஹரி. -- ஸ்ரீவிஜய தாசர்

ஹரிதாசர்கள் காட்டியிருக்கும் வாத்ஸல்ய பாவத்தில், பகவந்தனை தொட்டிலில் வைத்து தாலாட்டும் பாவமும் ஒன்று எனலாம். இது நாம் தினமும் அன்றாட வாழ்க்கையில் காணும் தாய்- குழந்தையின் வாத்ஸல்ய பாவத்தைப் போலவே இருக்கிறது. ஸ்ரீஹரியை ஒரு குழந்தையாக பாவித்து, தன் பக்தி சாதனையில் அவனை போற்றிப் பாடியிருக்கிறார்கள். தூக்கம் வந்த குழந்தையை தாய் தொட்டிலில் போட்டு, படுக்க வைத்து தாலாட்டு பாடுவதைப் போல, பகவந்தனையும் குழந்தையாக பாவித்து, அவனின் லீலா வினோதங்களை ஜோ ஜோ பதங்களில் பாடி படுக்கவைப்பதே லாலி பாட்டுகள்.

ஜோ ஜோ ஹரி ஜான்ஹவி ஜனக
மூஜக³த்பதி ஸருகு¹ல ஸனகா
தீ ஜன மனோஹர மாணிக்ய கனகா
வைஜயந்தி ஹார பாவன்ன பத³க ||ப

கங்கையின் தந்தை, ஸ்வர்க்க- பூமி- பாதாளத்திற்கான அதிபதி, சனகாதி தேவதைகளுக்கு ஒளி (ஞானம்) கொடுப்பவன், மிகவும் அழகான வைஜயந்தி மாலையை தரித்திருப்பவனான ஹரியே உனக்கு ஜோ ஜோ.

கே¹ஷி ப⁴ஞ்சன வ்யோமகேஷ வந்தி³த பாத³
க்லேஷ நாஷன வாதே¹ஷன ஜனக
கேஷரிருஹ முஞ்சிகே¹ஷனெ குங்கும
கேசரி பூ⁴ஷண கேஷவ ஷௌரி ||1

கேசவா! நீ கேஷி என்னும் தைத்யனைக் கொன்றவன். ருத்ரரால் வணங்கப்படும் பாதங்களைக் கொண்டவன். முக்யபிராணனின் தந்தை. அலை போன்ற முடி உள்ளவன். வாசனாதி திரவியங்களை அணிந்திருப்பவன். சூரன். துக்கங்களை நாசம் செய்பவன்.

வாருணி பதி¹னுத வாருணன ப⁴ய நி
வாரணா வாரணாஷி பு¹ரத³ரஸெ
வாரண நகரிய வாரணஹத¹ப¹ல்ல
வாருண பாணியெ நாராயணனெ ஜோ ஜோ ||2

வாருணியின் பதி சேஷனால் வணங்கப்படுபவன். காளிங்கனின் பயத்தை போக்கியவன். வாரணாசியின் பிந்து மாதவன். தன்னுடன் போர் புரிய வந்த மதுரா பட்டணத்தின் குவலயாபீட என்னும் யானையைக் கொன்றவன். செக்கச்சிவந்த உள்ளங்கையைக் கொண்ட நாராயணனே உனக்கு ஜோ ஜோ. ... (தொடரும்)...

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

### ஹரிகதாம்ருதசாரத்தில் பக்தியின் பார்வை

டாக்டர். ஜெயலட்சுமி மங்களாமூர்த்தி

பாகவதத்தில் ஸ்ரீவேதவியாசர் சொல்கிறார்.
ஸ்ருண்வதாம் ஸ்வகதாம் கிருஷ்ண: புண்ய ஸ்ரவண கீர்த்தன: |
ஹ்ருத்யந்தஸ்தூ ஹ்யபத்ராணி விதுனோதி சுஹ்ருத் சதாம் ||

தாசர் சொல்வதைப்போல:
சம்ஸ்ரவண மானனவ மாள்பரிகெ மோசகனெனிசுதிப்ப.

பக்தி செய்தால் ஸ்ரீஹரியின் கருணையே அதற்கான பலன்.

பிரதிதிவச தன்னங்க்ரிசேவா
ரதமஹாத்மரு மாடுதிஹ சம்
ஸ்துதிகெ வசனாகுவனிவன காருண்யகேனெம்பெ || (கருணா #3)

பாலகன கலபாஷெ ஜனனியு
கேளி சுகபடுவந்தெ லகுமி
லோல பகுதரு மாடுதிஹ சம்ஸ்துதிகெ ஹிக்குவனு || (கருணா#14)

ஹரிதாசர்கள் தங்கள் பாடல்களில் செய்வது வெறும் புகழ்ச்சியல்ல. அது சிபாரிசும் ஆகும். அவர்களின் பக்தியுடன் கூடிய, அகத்திலிருந்து புறப்படும் சிறந்த பாடல்கள் அவை. அனைத்து ஜீவராசிகளையும் கட்டிக்காப்பவன், தேவதைகளுக்கும் அவனே முதல்வன். எண்ணிக்கையற்ற காலங்களிலிருந்து லட்சுமிதேவி முதலான அனைத்து தேவதைகளாலும் வணங்கப்படுபவன். அனைவருக்கும் இறைவன், அனைத்தையும் நியமித்தவன், நற்குணங்களைக் கொண்டவன், ஆனந்தமயம் ஆனவன், ஞானத்தால் நிரம்பியவன், பக்தர்களின் புகழ்ச்சிக்கு இரங்குபவன். ஒரு தாய் தனது குழந்தையின் மழலைப்பேச்சைக் கேட்டு எப்படி மகிழ்ச்சியடைகிறாளோ, ஸ்ரீஹரி தனது பக்தர்களின் ஸ்துதிக்கு மயங்குகிறான். ஏனென்றால் ஒவ்வொரு ஜீவனும் இவ்வுலகத்திற்கு வருவதற்கு முக்கிய காரணம் ஸ்ரீஹரியே. ஆகையால் ஸ்ரீஹரியே அனைவரின் தாய் மற்றும் தந்தையாக இருக்கிறார். பக்தர்கள் சொல்லும் மழலைச் சொற்களால் பரவசத்துடன் பக்தி செய்யும்போது, குரல் தழுதழுத்துப் போவது

சகஜமே. அப்போது செய்யும் சிறுசிறு தவறுகளை ஸ்ரீஹரி மன்னிக்கிறான் என்பதை ஸ்ரீஜகன்னாததாசர் தனது 'பலவிது பாளுதக்கே' பாடலில் இவ்வாறு தெரிவிக்கிறார்.

பிகித கண்டதிம் த்ருக்பாஷ்யகளிம்
நகெ முகதிம் ரோமகளொளிது
மிகெ சந்தோஷதிம் நெகெதாடுத
நான்முகனய்யன பொகளி ஹுக்குவுதே (பலவிது பாளுதக்கே)

மந்தஜாஸன புளக புளகா
னந்த பாஷ்பதூதலனுடியி
ந் திந்திரா வல்லபன மஹிமெகபீரதரவெந்த (கக்ஷதாரதம்ய #4)
என்று சொல்கிறார்.

அவனை நினைப்பதே பக்தி என்றால், அதில் உச்சம் காண்பதே இந்தப் பிறவியின் நோக்கமாக இருக்கிறது.
மனவசனகதிதூர நெனெவரனனுசரிஸி திருகுவனு (2-4)

ஜனனியனு காணதிஹ பாலக நெனெனெனெது ஹலபுதிரெ (2-14)

ஜாவஜாவகெ நெனெவரிகெ ஐதுசலு ஜனுமகள (6-14)

ஸ்மரிசுவவரபராதகள தா ஸ்மரிஸ (2-15)

காலங்களில், ஜீவர்களில், உடல்களில், பிரம்மாண்டத்தில் இருக்கும் ஸ்ரீஹரியின் ரூபங்கள் பற்பல. இத்தகைய ஸ்ரீஹரி நமக்குச் செய்யும் உதவிகளை மறப்பது மிகப் பெரிய தவறு எனப்படுகிறது. ஆகாயம், மேகங்கள், மழை, பூமியில், தானியங்களில், தந்தை, தாய், என ஒவ்வொரு அக்னியிலும் ஐந்து ரூபங்களில் இருந்து, அனைத்தையும் படைக்கும் தந்தையாக இருக்கிறான் ஸ்ரீஹரி. கண்ணிற்கு இமையைப் போல, மாலைக்கு நூலைப் போல, உள்ளேயும் வெளியேயும் இருந்து நம்மைக் காப்பாற்றுகிறான். சாதனைகளை செய்வித்து மோட்சத்தைக் கொடுக்கிறான். போகும் வழியும் அவனே. சேரும் இலக்கும் அவனே ஆகியிருக்கிறான்.

'ததேஜத் தன்னேஜதி தத்தொரெ தத்தந்திகெ' என்னும் ஈஷோ பநிஷத்தின் வாக்கியத்தின்படி, வேத வாக்கியங்களுக்கு மிக தூரத்தில் இருப்பவன் ஸ்ரீஹரி. ஆனால், பக்தியுடன் நினைப்பவர்களுக்கு

அவர்கள் மிக அருகில் இருப்பான். ஒவ்வொரு ஜீவன் பிறக்கும்போதும், ஸ்ரீஹரி தானும் கூடவே அவதாரம் எடுக்கிறான்.

அஞ்ஞானத்தின் இருட்டு நிரம்பியிருக்கும் இந்த லிங்க-தேகத்தில் பக்தர்களுடன் தானும் இருந்து, அவர்களை எப்போதும் காக்கும் கருணாமயியாக இருக்கிறான். ஸ்ரீஜகன்னாததாசர்,

ஸ்மரிஸுதனு மோதிசுத ஹிக்குவ
பரவஷதி பாடுவவரிகெ தன்னிரவ
தோரிஸி பவ விமுக்தர மாடி போஷிசுவ (பஞ்சமஹாயக்ஞ #33)
என்கிறார்.

ஸாதரதி தன்னங்க்ரி கமலவ நம்பி ஸ்துதிசுவர
காது கொண்டிஹ பரமகருண மஹோததியு (கருணா #29)

சாத்விகர்கள் செய்யும் சாதனைகளை ஸ்ரீஹரி ஏற்றுக்கொள்கிறான். ஸ்ரீஹரி, இத்தகைய பக்தர்கள் உடனேயே இருந்து அவர்களைக் காப்பாற்றுகிறான். சுக, துக்கம், வெற்றி, தோல்வி ஆகிய தோஷங்கள் இல்லாத அப்ராக்ருத ரூபம் உடையவன். ஸ்ரீஹரியின் பற்பல நற்குணங்களில் கருணையும் ஒரு குணமாகும். கருணை என்னும் குணம் மிகச்சிறந்ததாகும். பக்தர்களின் சாதனைக்கு தடை செய்யும் பிரச்னைகளை தகர்த்தெறிகிறான் என்கிறார் தாசர்.

திளிது தத்தத்ஸ்தானதலி வெ
க்களிஸி ஹப்பிதமனதி பூஜிஸு
தலவ வியாப்தன ரூபகள நோடுதலெ ஹிக்குதிரு || (விபூதி #2)

பக்தர்களுக்கு ஸ்ரீஜகன்னாததாசர் கொடுக்கும் செய்தி இதுவாகும். ஞானிகளிடமிருந்து பற்பல விபூதி ரூபங்களை அறிந்து, ஸ்ரீஹரியின் சான்னித்யத்தை அறிந்து பிம்ப-ஐக்ய சிந்தனை செய்யவேண்டும் என்று தாசர் கூறுகிறார். தண்ணீரில், பூமியில் மற்றும் ஆகாயத்தில் இருக்கும் பற்பல ஜீவராசிகளில் இருக்கும் ஸ்ரீஹரியின் சிந்தனையை விவரிக்கிறார். இத்தகைய ஸ்ரீஹரியின் விபூதி ரூபங்களைக் கண்டு மகிழவேண்டும் என்று தாசர் கூறுகிறார்.

பிரார்த்தனையே பக்தி என்றால், ஸ்ரீஹரியை தரிசிப்பதே அதன் உச்சமாகும்.

ஜடஜசம்பவ ஜனக த்ரிஜக
த்தொடெய சந்தெயிசெனலு அவரி
த்தெடெகெ பந்தொதகுவனு ப4க்தர பிடெய மீரதெலெ
(பிம்ப அபரோக்ஷ சந்தி ஸ்லோகம் #25)

ஜீவனுக்கு மிகவும் நெருங்கிய உறவினனான ஸ்ரீஹரி, அவரின் பக்திக்கு மெச்சி பக்தர்கள் இருக்குமிடத்திற்கே வந்து நல்ல ஞானத்தையும், அபரோக்ஷத்தையும் கொடுத்து அவர்களை காப்பாற்றுகிறான் என்கிறார் தாசர். த்ரௌபதி, பிரகலாதன், கஜேந்திரன் ஆகியோரின் அழைப்பிற்கு ஸ்ரீஹரி வந்ததை உதாரணங்களாகக் காட்டுகிறார். ஜீவனின் துக்கங்களுக்கு ஸ்ரீஹரி பக்தியே தீர்வு என்கிறார்.

ஸ்ரீஹரியைக் குறித்து பக்தனின் பிரார்த்தனையை இப்படியாக வர்ணிக்கிறார்.

பரம சுந்தரதர பராத்பர
ஷரணஜனசுரதேனு சாஸ்வத
கருணி கஞ்சதலாக்ஷ காயேனே கங்கொளிப ஷீக்ர ||
(கர்மவிமோசன சந்தி ஸ்லோகம் 12)

சித்சுகபிரத சலஹெனலு கோ
வத்சதனிகொதகுவ தெரதி பர
மோத்சஹதி பந்தொதகுவனு நிர்மர்சரர பளிகெ ||
(கர்மவிமோசன சந்தி ஸ்லோகம் 27)

என்று கன்றுக்குட்டியின் உதாரணத்துடன் விவரிக்கிறார்.

தீட்சையுடன் செய்யப்படும் சாதனையே பக்தி என்றால், ஸ்ரீஹரியின் தரிசனமே அதன் இலக்கு என்கிறார்.

எரடு தீக்ஷெகளிஹவு பாஹ்யா ந்தரவெனிபனாமதலி
(தத்தஸ்வாதந்த்ர்ய சந்தி ஸ்லோகம் 18)

சர்வஸ்வாமி மமகுலதெய்வ ஏனே பொரெவ
(தத்தஸ்வாதந்த்ர்ய சந்தி ஸ்லோகம் 20)
(தொடரும்).

*** **டாக்டர். ஜெயலட்சுமி மங்களாமூர்த்தி**

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

### ஸ்ரீருக்மிணிவர விட்டல

**(ஸ்ரீமதி டாக்டர் ருக்மிணி கிரிமாஜி) 1927-2012**

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)...

ருக்மிணி அவர்கள் தம் வேலையிலிருந்து ஓய்வு பெற்றபிறகு, சுமார் 1982-83 ஆண்டில், மதிகெரெயில் அவரின் தம்பியின் வீட்டின் அருகில் வசித்து வந்தார். அப்போது அவர் அருளுமல்லிகெ பார்த்தசாரதி அவரின் 'ஸ்ரீபாதராஜ சம்புட' புத்தகத்தை இந்தி மொழியில் மொழிபெயர்த்துக் கொண்டிருந்தார்.

பள்ளி விடுமுறை காலங்களில் அக்கம்பக்க சிறுவ / சிறுமிகளுக்கு ஆன்மிக வகுப்புகளை ஏற்பாடு செய்து நடத்தினார். பல நல்ல விஷயங்களை அவர்களுக்கு சொல்லிக் கொடுத்தார். மதிகெரெயிலும் 'மதிகெரெ மாத்வ மஹிளா மண்டலி'யை துவக்கினார். அகில பாரத மாத்வ மஹா மண்டல (பேஜாவர் ஸ்ரீகளவர்) இந்த மண்டலியை தம் மண்டலியின் உதவி கேந்திரமாக ஆக்கிக் கொண்டார். அவரின் உதவியுடன் அங்கிருந்த ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் மடத்தில் பற்பல கார்யகிரமங்கள் நடைபெற்றன.

ருக்மிணி கிரிமாஜியின் குலதெய்வம் - திருப்பதி ஸ்ரீனிவாசன். ஸ்ரீனிவாசனின் மேல் பல பாடல்களை ருக்மிணி இயற்றினார். அவை அனைத்தையும் எழுதி வைத்துக் கொண்டார். ஒரு முறை தம் மண்டலியவர்களை அழைத்துக் கொண்டு திருப்பதிக்குச் சென்றார். விடியற்காலையில் அனைவரும் சேர்ந்து மலை ஏறும்போது இந்த பாடல்களை பாடியவாறு சென்று, திருமலையை அடைந்தனர். ஆண்டு 1984ல் 108 பாடல்களை தொகுத்து 'ருக்மிணி வரத' என்னும் புத்தகத்தை அச்சடித்து, அதனை ஸ்ரீனிவாசனுக்கு சமர்ப்பித்தார் ருக்மிணி.

இந்த 108 கிருதிகளில் ஸ்ரீனிவாசனைக் குறித்த ஸ்லோகங்களும் உள்ளன. ஏளு வெங்கடரமண, ஏளு ஷரணர த்ராண. ஏளு திருமலெவாஸ ஏளு ஸ்ரீ ஸ்ரீனிவாஸ ஏளய்ய பௌகாயிது' என்று ஸ்ரீனிவாசனை எழுப்பி உதயராகம் இயற்றினார். 'ஸாகி பாரய்யா மன

மந்திரக்கெ' என்று அவனை வரவேற்றார். 'காமிதவரத ஸ்ரீனிவாஸனே முரளிலோல ஸ்ரீகிருஷ்ண' என்று போற்றுகிறார். பவரோகஹரனின் தியான, ஸ்மரணை, தர்ஷன, ஆகியவை நாம் அனைவரும் செய்ய வேண்டியவை என்கிறார்.

பக்தரின் பந்து கருணாளு, பாவன மூருதியின் மகிமையை கொண்டாடியிருக்கிறார். ஸ்ரீனிவாஸனின் சிறப்பினை போற்றுகிறார். தசாவதார ரூபங்களை சிந்தித்திருக்கிறார். உகாபோகங்களை இயற்றியிருக்கிறார். மூன்று மற்றும் ஆறு நுடிகளில் ஸ்ரீனிவாஸ கல்யாணத்தை இயற்றியிருக்கிறார். 'பஜன்'களை மற்றும் லாலி, ஜோஜோ, மங்கள ஆகிய ஸ்ரீனிவாசனின் மேல் இயற்றியிருக்கிறார்.

ருக்மிணி கிரிமாஜி அவர்கள், பேஜாவர் ஸ்ரீகளவரின் அருளைப் பெற்ற சிஷ்யை எனப்பட்டார். அவருக்கு ஸ்ரீகளவரே 'ருக்மிணி வரத' என்னும் அங்கிதத்தைக் கொடுத்து அருளினார். ருக்மிணி கிரிமாஜி அவர்கள் வேலை மற்றும் தொண்டு இரண்டிலும் மிகச்சிறந்த உயரங்களைத் தொட்டார். பற்பல பரிசுகளை, விருதுகளைப் பெற்றார்.

ருக்மிணி அவர்கள் பெங்களூரு மாநகராட்சியில் காந்தி நகர் அரசு பள்ளியிலேயே 15 ஆண்டுகள் வேலை செய்து, மற்ற 15 ஆண்டுகளை பல்வேறு பள்ளிகளில் வேலை செய்தார்.

ஆண்டு 1956ல் சிம்லா அருகில் இமாலய தாராதேவி மலையில் சிறுவர்களின் முகாம் ஒன்று நடந்தது. அதற்கு ருக்மிணி அவர்கள் தம் பள்ளி சிறுவர்களை அழைத்துப் போய், 10 நாட்கள் அந்த முகாமில் பலரின் பாராட்டுதல்களைப் பெற்று வந்தது அவரது பன்முகத்தன்மைக்கு ஒரு சான்றாகும்.

அவரது கணீரென்ற குரல், தெளிவான சிந்தனை, பேச்சு ஆகியவற்றால் அனைவரையும் கவர்ந்தார். ஸ்ரீமதி லேடி ராமன் (சர்.சி.வி.ராமனின் மனைவி) அவர்களுக்கு, ருக்மிணி, ஆறே மாதங்களில் இந்தி மொழியில் பேசுவதற்கு கற்றுக் கொடுத்தார். இது ருக்மிணியின் சிறந்த சாதனை எனலாம்.

(18ம் பக்கத்தில் தொடர்கிறது..)

தொடர்

# ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## 16 - தத்த ஸ்வாதந்த்ர்ய சந்தி

| | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | | | | | 2 | | | | | | | |
| | | | | | | 29 | | | | 35 | | | | | 41 |
| 3 | | | | 36 | | 4 | | | | | | | | | |
| | | | 5 | | | 42 | | 6 | | | 43 | 7 | | | |
| | | 8 | | | | | | | | | | | | | 37 |
| 44 | | 9 | | | | 10 | | | | | 11 | | | | |
| 12 | | 38 | | 45 | | 13 | | | | | | 14 | | | |
| 15 | | | | 30 | | 16 | | | | | | 17 | | | |
| | | | | | 31 | | | | | | 18 | | | | |
| | | | | 32 | | | | 19 | | | | 20 | | | |
| 21 | | | | | 22 | | | | | | 39 | | | | |
| 23 | | | | | | 46 | | | 24 | | | | | | |
| | | | 25 | | | | | | | | | | | | |
| | | | | 26 | | | | | | | 27 | | 40 | | |
| | | 33 | | 28 | 47 | | | | | | | | 34 | | |

குறுக்கெழுத்துப் போட்டிகளை வடிவமைத்துக் கொடுப்பவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி

குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam @ gmail.com / அல்லது 89044 58276 க்கு வாட்சப் செய்யலாம்.

இடமிருந்து வலம்: 1ராஜா(4), 2.அரசு ஊழியர்(8), 3.முப்பத்திரண்டு(5). 4.கட்டளை(2), 5.பிரிவுகள்(4), 6.ஓட்டம்(4), 7.குறை(3), 8.மன்மதன்(4), 9.அழியாத ஜீவர்கள்(3), 10.பாற்கடல்(4), 11.குரங்கு(4), 12.சம்பளம்(4), 13.நந்தா தீபம்(4), 14.துளி அல்லது திவலை(3), 15.ஆதவன்(4), 16.ஸம்ஸாரம் என்னும் கடல்(4), 17.முலை(3), 18.ஒரே விதமாக. கடைசி எழுத்து இல்லை(5), 19.ஹயக்ரீவர்(5), 20.நல்லதை உண்பவன்(3), 21.ஓமம்(4), 22.வெயிற்காலம்(3), 23.நீர்(3), 24.ஸாமகானத்தில் விருப்பமுள்ளவன்(6) ,25.அண்டியவர்கள்(5), 26.திருடன். கலைந்துள்ளது.(4), 27.ப்ரமை பிடித்தல்(4), 28.பிரம்ம லோகம்(5).

வலமிருந்து இடம்: 2.பெயர்(4), 9.ஆணை(3), 27.விக்கிரகம்(4), 29.தாகம்(3), 30.குறைகள்(2), 31.உபகாரத்துப் பேச்சு(5), 32.மறதி(5), 33.புதுமையான(3), 34.ஆம்பல்(3).

மேலிருந்து கீழ்:1.அமைச்சர்(4),2.மன்மதன்(5), 10.இடையன்(3), 20.கயிறு(3), 21.நன்றாக இல்லாத(5), 25.பாம்பரசன்(3), 35.முகம்(3), 36.கால்பகுதி(3), 37.பானை(2), 39.மாறுதல். கலைந்துள்ளது(4), 40.குழந்தை(2).

கீழிருந்து மேல்: 7.வெல்ல நீர் பானகம்(4),18.சந்திரன்(6), 38.செய்யத்தகாத. கலைந்துள்ளது(4), 40.முட்டாள்(3), 41.அறிஞர்(2), 42.எல்லாவற்றையும் தன் வசம் வைத்துக் கொள்ளும் தன்மை(4), 43.புலி(4), 44.நண்பன்(3), 45.திருடன்(2), 46.தேஸ சம்பந்தப்பட்ட விஷயங்கள்(3), 47.மூன்று(3).

ஆகஸ்ட் 2021 மாதத்தின் ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டிக்கு சரியான பதில் எழுதி புத்தகப் பரிசினைப் பெறுபவர்கள் :

1. திருமதி. சந்திரா, கோவை. 2. திருமதி. உஷா ரகூத்தமன், பெங்களூரு 3. திருமதி. கிரிஜா ஜயதீர்த்தாச்சார், மனம்பூண்டி.

(15ம் பக்கத்திலிருந்து தொடர்கிறது).

ருக்மிணி கிரிமாஜி அவர்களின் சாகித்யங்கள்:
வாழ்க்கை வரலாறுகள்:

1. மகாத்மா காந்தி - சிறுவர்களுக்காக 4 மொழிகளில்
2. கோபால தாசர் - சிறுவர்களுக்காக 4 மொழிகளில்
3. கர்னாடக அனுபாவி கவயித்ரியர்கள். - ஹெளவனகெட்ட கிரியம்மா, ஹரபனஹள்ளி பீமவ்வா மற்றும் ஓர்வாய் ல்ட்சுமி தேவம்மா இவர்களின் வாழ்க்கை வரலாறு.
4. மகாராஷ்டிராவின் ஸந்த துகாராம்
5. குரு ராகவேந்திரர்
6. ஸ்ரீனிவாஸ கல்யாணத்தை கத்ய ரூபத்தில் இயற்றியிருக்கிறார்.
7. விஜயதாசரின் தாரதம்யத்திற்கேற்ற தேவர நாமாக்கள்
8. தாச சதுஷ்டயர்களின் வாழ்க்கை சரிதங்கள்.

வியாக்யானங்கள்:
1. ஹனுமத் விலாஸ. 2. லட்சுமி ஷோபானெ. 3. ஸ்ரீ வைஷ்ணவ மஹிளா ஹரிதாசினிகள்.

பயணக் கட்டுரைகள்:
1. பெங்களூரிலிருந்து பதரிநாத். 2. ஸேது யாத்திரை. 3. கர்னாடகத்தின் அனேக வரலாற்று ஸ்தலங்கள்.

டாக்டர் அருளுமல்லிகெ பார்த்தசாரதியின் ஸ்ரீபாதராஜ சம்புட மற்றும் ஸ்ரீவிஷ்வேஸ தீர்த்தரின் கீதா சாரோத்தார இவற்றை கன்னடத்திலிருந்து இந்தி மொழிக்கு மொழிபெயர்த்துள்ளார்.

ஸ்ரீமதி ருக்மிணி கிரிமாஜி அவர்கள் 1999ம் ஆண்டில் TTD உதவியுடன் ஸ்ரீனிவாஸ கல்யாண என்னும் புத்தகத்தை வெளியிட்டார். நித்ய பாராயணம் செய்வதற்கு ஏற்ப பற்பல புராணங்களை ஆதாரம் கொடுத்து, ஸ்ரீனிவாஸனின் கல்யாணத்தின் சுருக்க வர்ணனையை கத்ய ரூபத்தில் எழுதியிருக்கிறார். துவக்கத்தில் திருப்பதி மலைக்கு பல பெயர்கள் வந்த விஷயத்தை கூறியிருக்கிறார். ஒவ்வொரு யுகத்திலும் ஒவ்வொரு பெயர். 1. வ்ருஷபாசல 2. அஞ்சனாசல 3.

சேஷாசல மற்றும் 4. வெங்கடாசல. விவாக விதி மற்றும் விவாக வைபவத்தை வர்ணித்திருக்கிறார். இறுதியில் ஸ்ரீவெங்கட அஷ்டகம் மற்றும் ஸ்ரீவியாசராஜ விரசித ஸ்தோத்திரத்தை தொகுத்திருக்கிறார்.

நித்ய பாராயணத்திற்கு ஏற்றதாக, வாதிராஜரின், புரந்தரதாசரின், பீமேஷ கிருஷ்ண, கபில நாமக பரமாத்மரின் மற்றும் தாமே இயற்றிய 'நா நின்ன அரஸி பந்தெ' என்னும் 'ஸ்ரீனிவாஸ கல்யாண'த்தின் பாடல்களை இதில் தொகுத்திருக்கிறார். வேறு சில ஹரிதாசர்கள் இயற்றிய ஸ்ரீனிவாசனின் பாடல்களையும் இதில் சேர்த்திருக்கிறார். கடைசியில் ஸ்ரீஅனந்தாத்ரீஷரின் 'வெங்கடேஷ பாரிஜாத'வையும் சேர்த்து, புத்தகத்தை வெளியிட்டிருக்கிறார். ஹரிதாச வாஹினி பத்திரிக்கைக்கு தம் கட்டுரைகளை எழுதி அனுப்பிக் கொண்டிருந்தார் ருக்மிணி. மஹிளா ஹரிதாசினிகளைப் பற்றி அதிகமாக எழுதிக் கொண்டிருந்தார்.

பேஜாவர் ஸ்ரீகளவர், ஒரு முறை, பாக்கெட் சைஸில் புத்தகங்களை வெளியிடும் திட்டத்தைக் கொண்டு வந்தார். பல வித்வாம்ஸர்கள் இப்படியான புத்தகங்களை வெளியிட்டனர். ருக்மிணியும் 'கர்னாடக வைஷ்ணவ அனுபாவி கவயித்ரியர்கள்' என்னும் புத்தகத்தை வெளியிட்டார். அதில் கர்னாடக ஹரிதாசினிகளைப் பற்றி எழுதினார். இந்தப் புத்தகத்தின் விலை அப்போது ரூ.3 ஆக இருந்தது.

பல ஆண்டுகளுக்குப் பிறகு கர்னாடக அரசு, 'சமக்ர ஹரிதாசர சாஹித்ய' என்னும் தொகுப்பினை வெளியிட்டனர். அப்போது ருக்மிணி அவர்களும் இந்த வேலையில் பங்கேற்றனர். இந்த தொகுப்பில் பல கன்னட ஹரிதாசினிகள் வெளிச்சத்திற்கு வந்தனர். ஓர்வாய் லட்சுமி தேவம்மா, ராதாபாய் மற்றும் நஞ்சன்கூடு திருமலாம்பா ஆகியோர் வாழ்க்கை வரலாறுகள் வெளிவந்தன.

இந்த அனுபவத்தின் பேரில், 'ஸத்வைஷ்ணவ ஹரிதாச மஹிளெயரு' (பள்ளாரி ஜில்லாவின் ஹரிதாஸினிகள்) என்னும் புத்தகத்தை 2008ம் ஆண்டில் எழுதி வெளியிட்டார் ருக்மிணி. ருக்மிணியின் தாய் இறந்தபிறகு தன் ஒரு தம்பியின் வீட்டில் இருந்தார். அப்போதே அவருக்கு 80 வயது ஆகியிருந்தது. ஆனால் அப்போதும் அவருக்கு படிக்கும், எழுதும் ஆர்வம் குறையவில்லை. (தொடரும்)

தொடர்

**கன்னட தந்த்ரசாரம் - ஸ்ரீவரதேந்திர தீர்த்தர்**

**உரை: திரு.குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்**

அவர் ஸ்ரீபலராமாச்சார்யர் (பின்னால் ஸ்ரீவரதேந்திர தீர்த்தர்) அவரிடம், சாஸ்திரங்களை கற்று மாபெரும் பண்டிதர் ஆனார். கன்னட தாச சாகித்யத்தின் மேரு கிருதியான ஸ்ரீஹரிகதாம்ருத சாரத்தை இயற்றினார். அப்பேற்பட்டவர் நம் குருநாதரின் சிஷ்யர். அவரே குருநாதரை தந்த்ரசாரத்தை கன்னடத்தில் இயற்றுமாறு கேட்டுக் கொண்டார். அதற்கேற்ப குருநாதரும் இதனை இயற்றிக் கொடுத்தார். இதையே இந்த பத்யத்தில் குருநாதர் தெரிவித்துள்ளார்.

சில பழைய புத்தகங்களில், 24-29 வரையிலான பத்யங்களை ஸ்ரீஜகன்னாத தாசர் இயற்றி, தந்த்ரசாரத்துடன் இணைத்தார் என்று கூறப்பட்டுள்ளது. ஆனால் தற்போதைய ஆய்வில், அனைத்து (29) பத்யங்களும் ஸ்ரீவரதேந்திர தீர்த்தரே இயற்றியுள்ளார் என்று தெரிய வருகிறது.

கருணாப்[3]தி[4] வஸுதே[3]ந்த்[3]ரராயர க்ருபாப[3]லதி[3] விரசிஸிதே[3]வீ கி[3]ரந்த பத[3]ரூபதி[3] |
அரஸிக[1]னு நிந்தி[3]ஸலு குந்தா[3]வுதி[3]த[3]கெ பா[4]ஸ்கரனுத[3]ய கோ[4]க தூ[3]ஷிஸித[3] தெரதி[3] ||25

கருணைக்கடல் வஸுதேந்திர தீர்த்தரின் அருள் பலத்தால் இந்த கிரந்தம் பத்ய ரூபத்தில் இயற்றப்பட்டது. ரசிகத் தன்மையற்றவர்கள் இதனை நிந்திப்பதால் என்ன குறை வந்துவிடப் போகிறது? ஆதவனின் தோற்றத்தைக் கண்டு ஆந்தை தூஷிப்பதால், வெளிச்சம் என்ன ஆகிவிடும்?

இந்தப் பாடலை (பல்லவி- சரண அமைப்பு கொண்ட கிருதி) பதம் என்று கூறுவார்கள். குருநாதர் ஸ்ரீவரதேந்த்ர தீர்த்தர் இயற்றியது. அவரின் ஆசிரம குரு ஸ்ரீவசுதேந்திர தீர்த்தர். அவர் 1750 - 1761 வரை பீடத்தை ஆண்டார். குருகுண ஸ்தவனம் மற்றும் தந்த்ரசார சங்க்ரஹம் இவற்றிற்கு சம்ஸ்கிருதத்தில் உரை எழுதியுள்ளார். அவர்

கெஞ்சனகுட்டாவில் பிருந்தாவனஸ்தர் ஆனார். தன் குருவின் அடிச்சுவட்டை ஒட்டியே, இவர் கன்னடத்தில் இந்த கிரந்தத்தை இயற்றினார். இது கன்னட நூல் என சிலர் ஆட்சேபித்தார்கள். இது எப்படி இருக்கிறது என்றால், ஆந்தையானது இருட்டை ஒழிக்கும் சூரியனை நிந்திப்பது போல் உள்ளது என்கிறார் குருநாதர்.

த$^{4}$ர்மார்த்த$^{2}$ காமமோக்ஷக$^{3}$ளீவ கி$^{3}$ரந்தவிது$^{3}$ நிர்மாண மாடி$^{3}$ஸித$^{3}$ ராமசந்திர ।
ஹேமக$^{3}$ர்ப்ப$^{4}$கெ$^{3}$ (ப$^{3}$ர்மக$^{3}$ர்ப்ப$^{4}$கெ$^{3}$) ஒலிது$^{3}$ பேளித$^{3}$ மஹாமந்த்ர மர்மக$^{3}$ளனரிது ப$^{4}$ஜிஸுவனெ த$^{4}$ன்ய ||26

அறம், பொருள், இன்பம், விடுதலை (வீடு) நல்கும் நூல். இதை வடித்தவர் பெருமாள் ராமசந்திரனே. பிரம்ம தேவனுக்கு மகிழ்ந்து கூறிய நூல் இது. எட்டு பெரும் மந்திரங்களின் ரகசியங்களை அறிந்து பஜித்தால், அவனுக்கு எல்லாமே சித்திக்கும். பர்ம கர்ப = தங்க கர்ப்பன். பிரம்மனுக்கு பர்மகர்ப்பன் என்று பெயர்.

தொடக்கத்தில் பார்த்த மாதிரி, இந்த நூல் இறைவனாலேயே இயற்றப்பட்டு, பிரம்மனுக்கு உபதேசிகப்பட்டது. இதில் எட்டு மகாமந்திரங்களின் பெருமைகள், ஜபகிரமம் அனைத்தும் உள்ளன. இதனை தக்க ஆசான் மூலம் கற்று, அனுஷ்டித்தால், ஸ்ரீமூலராமனின் தயவால் அவனுக்கு அறம், பொருள், இன்பம், வீடுப்பேறு என்று சொல்லப்படும் நால்வகை புருஷார்த்தங்களும் சித்திக்கும் என்று நமது குருநாதர் பலன் கூறியுள்ளார்.

நம்பிக்கையுடன் மந்திரங்களைக் கற்று, முறைப்படி ஜெபித்தால் அனைத்தும் கிட்டும். இது திண்ணம். ஐயம் வேண்டாம். 'ரோசனார்த்தம் பலஸ்ருதி' என்பது போல பலன் கூறினால்தான் வாசகர்களுக்கு உற்சாகம் வரும் என்பது பண்டைய மரபு.

வரதே$^{3}$ந்த்$^{3}$ரமுனிரசித ஈ தந்த்ரஸாரவனு ப$^{3}$ரெதோ$^{3}$தி$^{3}$ கேளி மோதி$^{3}$ஸுவ ஜனர ।
வரமூலராம வேத$^{3}$வியாஸரிஹபரதி$^{3}$ கருணிபரு பே$^{3}$டி$^{3}$தி$^{3}$ஷ்டார்த்த$^{2}$க$^{3}$ளனு ||27

வரதேந்திர ஸ்வாமிகள் இயற்றிய இந்த தந்த்ரஸாரத்தை எழுதிப் படித்து, கேட்டு மகிழும் மக்களுக்கு ஸ்ரீமூலராம, வேதவியாஸ தேவர், இம்மை, மறுமை இரண்டிலும் வேண்டிய அனைத்தையும் நல்குவார்.

இந்த செய்யுளில் வரதேந்திர முனிவரே இதை இயற்றினார் என்று சொல்லியிருப்பதால், அனைத்து 29 சரணங்களையும் அவரே இயற்றினார் என்று புலப்படுகிறது. பழைய பதிப்புகளில் கூறப்பட்ட மாதிரி, பல ஸ்ருதி மட்டும் ஸ்ரீஜகன்னாத தாசரால் இயற்றப்பட்டதோ என்னும் சந்தேகம் அறவே அழிந்தது. அந்த காலத்தி எந்த ஒரு நூலையும், ஒருவர் கைப்பட எழுதிப் படித்து, இன்பமுறுவதே பழக்கமாக இருந்தது எனலாம். பல பாடல்களில் இவ்வாறே வருகிறது.

ராயர் மடத்தில் ராயருக்குப் பின் வந்த அனைத்து யதிகளும், கன்னடத்தில் பாடல்களைப் புனைவதில் வல்லவர்களாக இருந்தார்கள் என்பது பலரின் வாழ்க்கை வரலாற்றைப் படிக்கும்போது தெரிகிறது. இந்த ப்ராக்ருத தந்த்ர சாரத்தையும், குருநாதர் ஸ்ரீவரதேந்திர தீர்த்தர்தான் இயற்றினர் என்று திண்ணம் ஆகிறது. இதிலும் பலன் கூறப்பட்டுள்ளது. படிப்பவர்களுக்கு வேண்டியதெல்லாம் கிடைக்கும் என்று நம்பிக்கை அளிக்கிறார் நம் குருநாதர்.

மங்க$^{3}$ளம் ரமாபதிகெ$^{3}$ மங்க$^{3}$ளம் த்ருஹிணபிதகெ$^{3}$ மங்க$^{3}$ளம் த$^{3}$ஷப்ரமதி முனிமான்யகெ$^{3}$ |
மங்க$^{3}$ளம் ஷிவேந்த்$^{3}$ராதி$^{3}$ ஸுரநிக$^{3}$ரபூஜ்யனிகெ$^{3}$ மங்க$^{3}$ளம் ஜக$^{3}$த்விலக்ஷணரூபகெ$^{3}$ ||28

இலக்குமி மணாளனுக்கு மங்களம். பிரம்மனின் தந்தைக்கு மங்களம். மத்வ முனிவரால் பூஜிக்கப்பட்ட ஸ்ரீமூலராமருக்கு மங்களம். சிவன், இந்திரன் போன்ற தேவர் கூட்டம் வணங்கியவனுக்கு மங்களம். உலகின் இயல்புக்கு மாறாக உள்ளவனுக்கு மங்களம்.

எந்த நூலை முடிக்கும் முன்னரும், அதை மங்களகரமாக கடவுள் வாழ்த்துப்பாவுடன் முடிப்பார்கள். அதையே இங்கு குருநாதர் செய்துள்ளார். தந்த்ரசாரத்தி மூலப்பொருள் எல்லாம்

பிரணவப்ரதிபாத்யனான நாராயணனிடமிருந்து தோன்றியது என்பதே. அவன் என்றும் இலக்குமியை இணைபிரியாதவன். அவன் பிரம்மனின் தந்தை (த்ருஹிணபதி) மற்றும் பிரம்மனுக்கு இந்த தந்த்ரசாரத்தை உபதேசித்தவர்.

இதற்கு மூலமான தந்த்ரசார சங்க்ரஹத்தை வடமொழியில் இயற்றியவர் தஷபிரமதிமுனி என்கிற ஸ்ரீமத்வாசார்யர். அந்த நாராயணன் - சிவன், இந்திரன், முதலிய தேவர்களின் கூட்டத்தால் வணங்கப்படுப்படுபவன். அந்த நாராயணனின் உருவம், நமக்குத் தெரிகிற மாதிரிதான் இருக்க வேண்டும் என்று அவசியமில்லை. ஆகையால், ஹரி ஜகத் விலக்ஷணன்.

உதாரணத்திற்கு, நரசிம்ம ரூபம், பிரம்ம ஸ்ருஷ்டியிலேயே கிடையாது. அது ஜகத் விலக்ஷண ரூபம். இப்பேர்ப்பட்ட நாராயணன், மூலராமனுக்கு மங்களம் என்று கூறி முடிக்கிறார். இதனால் படிப்போர்களுக்கு நன்மையே உண்டாகும் என்பது உறுதி

இப்பத்தொம்ப$^{4}$த்து பத$^{3}$க$^{3}$ளெம்ப$^{3}$திவிமல புஷ்பமாலிகெ மூலராம
னடி$^{3}$கெ$^{3}$ | அர்ப்பிஸிதே$^{3}$வீ ஸுமனதா$^{4}$மவனு தி$^{3}$னத$^{3}$ல்லி ப$^{1}$ப்ப$^{1}$தி$^{3}$
ஹதே பு$^{3}$த$^{4}$ர மஸ்தகத$^{3}$லி ||29

இதி ஸ்ரீ வசுதேந்திர தீர்த்த கரகமல சஞ்சாத ஸ்ரீவரதேந்திர தீர்த்த பூஜ்ய சரணக்ருத ப்ராக்ருத தந்த்ரசாரம் சம்பூர்ணம்.

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.**

29 சரணங்களைக் கொண்ட, குற்றமற்ற இந்த பாமாலை என்கிற பூமாலையை மூலராமனின் திருவடிகளில் அர்ப்பணித்தேன். இந்த பூமாலை போன்ற பாமாலையை தினமும் பேரறிஞர்கள் தங்கள் தலையில் தரித்துக் கொள்கிறார்கள். அதாவது, அவர்கள் ஆதரவு தந்து தினமும் பாராயணம் செய்து பலன் பெறுகிறார்கள் என்பது கருத்து.

இப்படியாக ஸ்ரீவசுதேந்திர தீர்த்தரின் சீடரான ஸ்ரீவரதேந்திர தீர்த்தர் இயற்றிய கன்னட தந்த்ரசாரம் என்னும் பாடல் முற்றுப் பெற்றது.

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.**

இது 29 சரணங்களைக் கொண்ட கிருதி ரூபத்தில் உள்ள பாடல். பதம் என்றும் கூறுவார்கள். குருநாதரே 29 சரணங்கள்தான் உள்ளன என்று கூறியிருப்பதால், எந்தக் காலத்திலும் யாராலும் இடைச்செருகல்களை செய்ய முடியாது. இதனை இயற்றி, அவரின் உபாசனா மூர்த்தியான மூலராமனுக்கு அர்ப்பணித்தார். இந்த பதத்தில் மூன்று முறை 'மூலராம' என்கிற சொல் வருகிறது. ஆகையால் 'மூலராம' பிரதிமை மந்திராலய ராயர் மடத்தில்தான் உள்ளது என்று உறுதிப்பட கூறுகிறார் ஸ்ரீவரதேந்திர குருநாதர். இதை அறிஞர்கள் தினமும் படித்து, தங்கள் மூளையில் நிலை நிறுத்திக் கொள்ள வேண்டும் என்னும் தன் அவாவையும் கடைசியில் தெரிவித்துள்ளார்.

**இப்படியாக ப்ராக்ருத தந்த்ரசாரம் முடிவுற்றது. ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.**

**** திரு.குரோம்பேட்டை R. ஸ்ரீதரன்**

**கன்னடம்**

**அருஞ்சொற்பொருள்**

**கடினமான சொற்களின் அர்த்தங்கள்**

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

1. மாவாரி - மாமனைக் கொன்ற எதிரி - ஸ்ரீகிருஷ்ணன். 2. ஹரடி - கையில் அணியும் ஆபரணம். 3. ஹரிதின - ஏகாதசி. 4. ஷார்வரி - இரவு. 5. ஷார்வரிகர - சந்திரன். 6. விடம்ப - ஆடம்பரம். 7. வித்த - செல்வம், பணம். 8. விதிபதி - விஷ்ணு. 9. வட - ஆல மரம். 10. ரண - போர் / யுத்தம்.

**மறக்க வேண்டாம்**

வங்கிக் கணக்கில் சந்தா / புத்தகத்திற்காக பணம் செலுத்தினால், மறக்காமல் உங்கள் முகவரியை 89044 58276 எண்ணுக்கு வாட்சப் / SMS அல்லது haridasa.vijayam@gmail.comக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

தொடர்

**கன்னட கிரந்தங்கள் அறிமுகம்**

**சமஸ்த நாம மணிகண ஷட்சரண பத்யமாலா**

(சென்ற இதழின் தொடர்ச்சி)

அதே நேரத்தில் தமது பக்தர்களின் மேல் கருணை கொண்டவன், பக்தர்களுக்கு உண்டாகும் ஆபத்தைக் களைந்து ரக்ஷிப்பவன் என்பதைக் குறிப்பிடும் வகையில் 'கருணஸாகர', 'காமிதார்த்தக', 'தீனவத்ஸல', 'ஸௌக்யகர', 'உதாரலீல', 'மோக்ஷவல்லப', 'பவமலக்ன', "முமுக்ஷூவரத', 'தயாபர', 'ஸுரத்ரும', 'அஸுபவிலுண்டிகா', ' கருணநிதி', 'நுதஜனமந்தார', 'தாரீத்ரய தூரக', 'அசேஷஸஹ' முதலான பல்வேறு நாமங்களினால் மனமுருகி வேண்டிப் பாடியுள்ளார் தாஸர்.

மேலும் தாஸர் எல்லா தேவதைகளுக்கும் அனுக்ரஹம் புரிபவன், ப்ரியமானவன், அனைவராலும் போற்றப்படுபவன் என்பதாக 'வாணீதவப்ரிய', 'அணுமஹத் ரமாதேவி ப்ராண தேவுரு கணேஷ ப்ரிய', 'முனிபூஜித', 'இந்த்ரபூஜித', 'ஸ்ருதிவினுத' முதலான நாமங்களினால் போற்றியுள்ளார் தாஸர்.

பகவானின் ரூப ஸௌந்தரியம், லக்ஷணங்கள், ஆயுதங்கள், வாஹனம், ஆபரணங்கள் முதலியவைகளைக் கொண்டு துதிக்கும் வகையில் 'ஸேஷ ஸயன', 'சாரங்கபாணி', 'கூர்ச்சபாணி', 'கட்கெபாணி', 'இஷுபாணி', 'பண்டுராம்பக', 'முரளிதரகர', 'ஹிரண்மயவஸன', 'க்ஷுராயுதனெ' என்பதாக பல்வேறு நாமங்களினால் வெவ்வேறு பத்யங்களில் போற்றியுள்ளார் தாஸர்.

அதிலும் லட்சுமியுடன் கூடிய பகவானின் ரூபங்களை லக்ஷ்மிக்கு பகவான் அருள் புரிவதை விளக்கும்படியாக 'ஸ்ரீஸ்ரீஷ', 'ஸ்ரீராமவர', 'லக்ஷ்மீஸ', 'லக்ஷ்மீதர', 'பைஷ்மீஸ', 'வைதேஹி மனோஹர' முதலான நாமங்களைக் கொண்டு பகவானை ஸ்தோத்திரம் செய்துள்ளார்.

தாஸர் மேலும் அதிஸயத்தக்க வகையில், பகவானின் பல்வேறு குணங்களை, மஹிமைகளை எண்களின் (எண்ணிக்கைகளின்) அடிப்படையில் தொடுத்து வரிசைப்படுத்தி 47 முதல் 56 வரையிலான பத்யங்களில் வர்ணித்துள்ளார். உதாரணமாக 47 வது பத்யத்தில் 'ஏகவ்யாபக', 'ஏக போஜக', 'ஏக தாரக', 'ஏக ஸுசக', 'ஏக பத்ர' என்பதாக பகவானின் தனித்துவத்தைப் புகழ்ந்து, முறையே பின்வரும் பத்யங்களில் த்வய, த்ரய, சதுர், பஞ்ச, ஷட், ஸப்த, அஷ்ட, நவ, தஸ

எனத் தொடங்கும் வகையில் நாமங்களை வரிசைப்படுத்திக் கொடுத்துள்ளார்.

70 வது பத்யத்தில் ஆச்சார்யர் ஸ்ரீமன் மத்வாசாரியாரையும், அந்தர்யாமியான ஸ்ரீஹரியையும் 'மத்வ வல்லப', 'மத்வ தீர்த்தக', 'மத்வமதபர', 'மத்வபதே', 'ஸ்ரீ மத்வயதிநுத', 'மத்வபுஷ்கரபா', 'மத்வபோஷக', 'மத்வபாஷக' முதலான நாமங்களினால் துதித்து ஸ்ரீ ஹரி வாயுவை ஸ்தோத்திரம் செய்துள்ளார் தாஸர்.

இறுதியில் 71வது பத்யத்தில், இந்த க்ரந்தத்தை பூர்த்தி செய்யும் வகையில், அனைவருக்கும் ஆனந்தத்தை, அளிப்பவனும், பக்தர்களின் சேவையினால் மகிழ்ந்து பிரஸன்னமாகும் பகவானை, 'பிரஸன்ன பவன', 'பிரஸன்ன பாஷன', 'பிரஸன்ன கார்ய', 'பிரஸன்ன குணநிதே', 'பிரஸன்ன நாமத ', 'பிரஸன்ன தேஜத', 'பிரஸன்ன முர்த்தே', 'பிரஸன்ன புருஷ', 'பிரஸன்ன கதன', 'பிரஸன்ன பூஷண', 'பிரஸன்ன ஸொங்கித', 'பிரஸன்ன சரித', எனத் துதித்து, தம்முடைய அங்கித நாமத்தைக் கொண்டு 'பிரஸன்ன வேங்கட' எனப் போற்றி, இறுதியில் இத்தகைய உயரிய "நாம மணிகண ஷட்சரண பத்ய மாலாவை" ஸ்ரீ கிருஷ்ணார்பணம் செய்வதாலேயே பிரஸன்னமாகும் ஸ்ரீ ஹரியை 'பிரஸன்ன கிருஷ்ண' என்ற நாமத்தாலே துதித்து பூர்த்தி செய்துள்ளார் தாஸர்.

பகவானின் குணங்களை, மஹிமைகளைப் போற்றும், ஸ்தோத்திர ரூபத்தில் இயற்றப்பட்டுள்ள இத்தகைய உயரிய கிரந்தத்தை அனுதினமும் பாராயணம் செய்து, விஸேஷமான அர்த்தங்களைத் தெரிந்து கொண்டு ஸ்ரீ பிரஸன்ன வேங்கட தாஸரின் அந்தர்யாமியான ஸ்ரீ பிரஸன்ன வேங்கடனின் அனுக்ரஹத்திற்கு பாத்திரராவோமாக!

## **** தத்வ சுவ்வாலி *****

ஸ்ரீ ஜகன்னாத தாஸர் பிரஸித்தியான அஷ்ட தாஸர்களில் ஒருவராக போற்றப் படுபவர். இவர் தாஸ தீக்ஷ பெறுவதற்கு முன்பே ஸ்ரீ நிவாஸ ஆச்சாரியராக இருந்த போது ஸமஸ்கிருதத்தில் மாபெரும் புலமை பெற்று ஸ்ரீமன் நியாயஸுதா க்ரந்தத்திற்கு பாட பிரவசனங்களை இடைவிடாது கொடுத்து வந்தவர். மூல ரூபத்தில் கர்மஜ தேவதையான

தாஸர், ஸ்ரீ விஜய தாஸரின் ஆணைக்கிணங்க ஸ்ரீ கோபால தாஸர் மூலமாக 40 வருட ஆயுட்காலத்தை தானமாகப் பெற்று, பண்டரிபுரத்தில் சந்திரபாகா நதிக் கரையில் பகவானே இவருக்கு 'ஜகன்னாத விட்டல' என்னும் அங்கிதத்தை அளிக்க, தமது மீதமுள்ள ஆயுட்காலம் முழுவதையுமே தாஸமார்க்கத்தில், கன்னடத்தில் பல க்ருதிகளை ரசனை செய்வதிலேயே கழித்தவர். தாஸரின் உயரிய கன்னட படைப்பே 'கன்னட நியாய ஸுதா' எனப் போற்றப்படுகின்ற மேரு க்ருதியான 'ஸ்ரீமத் ஹரிகதாம்ருத ஸாரம் ' ஆகும். தத்வங்களின் தொகுப்பை திரிவிக்ரம ரூபமாக ஹரிகதாம்ருத ஸாரத்தில் அருளிய தாஸர், சுருக்கமாக, அதன் வாமன ரூபத்தை அணு ஹரிகதாம்ருத ஸாரத்தில் அருளியுள்ளார். அந்த வரிசையில் தாஸர், ஸ்ரீ ஹரியையும், தேவதைகளையும் ஸ்தோத்திரம் செய்யும் வகையிலும், தத்துவங்களின் சாரத்தையும் தொகுத்து நமக்கு அளித்துள்ள கன்னட கிரந்தமே 'தத்வ ஸுவ்வாலி' என்பதாகும்.

ஸ்ரீ ஜகன்னாத தாஸரின் 'தத்வ ஸுவ்வாலி' என்பது 392 பத்யங்களில் பல்வேறு பகுதிகளை உள்ளடக்கி , ஸ்ரீ ஹரி , ஸ்ரீ மஹாலஷ்மி, ப்ரஹ்மா, வாயு, ருத்ராதி தேவதைகளை ஸ்தோத்திரம் செய்யும் விதத்திலும், த்வைத ஸித்தாந்த தத்துவங்களைப் பறை சாற்றும் வகையிலும் அமைந்த கன்னட கிரந்தமாகும். தாஸர் இப்படைப்பில் கணபதி, நவக்கிரகங்கள், ஸ்ரீ துளஸி, ஸ்ரீ ருத்ர பகவான், ஸ்ரீ வாயு பகவான், ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் ஸ்ரீ, பூ மற்றும் துர்கா ரூபங்கள், கிருஷ்ண பரமாத்மாவின் லீலா வினோதங்களில் ஒன்றாக விளங்கும் ஸ்ரீ ருக்மணி விலாஸ, ஸ்ரீ கிருஷ்ண ஸ்துதி, தஸாவதார ஸ்தோத்திரம், வெங்கடேஸ ஸ்தோத்திரம், ஸ்ரீ நிவாஸ ஸ்தோத்திரம், மாயாவாத கண்டனம், அக்னி தேவனின் ஸ்தோத்திரம் என்பதாக வரிசைப் படுத்தி மங்கள பத்யங்களுடன் பூர்த்தி செய்துள்ளார்.

தாஸர் 1 முதல் 5 வரையிலான பத்யங்களில், ஸ்ரீ கணபதியை ஸ்தோத்திரம் செய்யும் விதத்தில், "அம்பிகாதனய பூதாம்பராதிப ஸுரக தம்ப ஸம்பூஜ்ய நிரவத்ய | நிரவத்ய நின்ன பாதாம்புஜகளெம்ம ஸலஹலி" எனத் தொடங்கி ஆகாஸ அபிமானி தேவதையான ஸ்ரீ விக்னேஷ்வரரைத் துதித்து, வித்யையில் அஞ்ஞானம் ஏற்படாமல் பகவானின் ஸ்மரணை தப்பாமல் காக்கும்படி வேண்டுகிறார்.

6 முதல் 28 வரையிலான பத்யங்களில் நவக்கிரகங்களிலே ஸுரியன், சந்திரன், அங்காரகன், புதன், குரு, ஸுக்கிரன் மற்றும் ஸனைஸ்சரன் முதலான தேவதைகளை தனித்தனியே 3 பத்யங்களில் துதித்துப் பாடியுள்ளார். முதலில் ஸுர்ய பகவானிடம், வியாதிகளை பரிஹாரம்

செய்து, பகவானின் மஹிமைகளை உணர்த்தும் ஞானத்தையும், த்ருட பக்தியையும் அருளும்படியாக, "அனுதினதி ஸஜ்ஜனர வ்யாதிகள களெது ஸீகவீயோ" முதலான பத்யங்களினால் வேண்டித் துதிக்கிறார் தாஸர். அங்காரகனைக் குறித்து ஸ்தோத்திரம் செய்கையில், ஸ்ரீ ஹரியை மனதில் தியானம் செய்யவும், ஸஜ்ஜனர்களின் மனோபீஷ்டங்களை பூர்த்தி செய்யவும் வேண்டுகிறார். ஸ்ரீ புதனிடம் உத்தமமான ஞானம் மற்றும் பக்தியை வேண்டி, ஸம்ஸார ஸாகரத்திலிருந்துக் காப்பாற்றும்படியாக, "ஸன்மார்க தோரி உத்தார கைஸென்ன பவதிந்த" முதலான பத்யங்களினால் துதித்துள்ளார் தாஸர். ஸ்ரீ குருபகவானைக் குறித்துப் பாடுகையில், மனதிலே சுத்தமான ஞானத்துடன் பகவானைக் காணவும், அனைத்து பிராமணர்களையும் காக்கவும், பாபங்களை பரிஹாரம் செய்யவும் வேண்டி "ஸுக்ஞானவித்து ஸ்ரீபதிய தோரென்ன மனதல்லி" முதலான பத்யங்களினால் தாஸர் பிரார்த்தனை செய்துள்ளார். ஸ்ரீ ஸுக்ர பகவானை ஸ்தோத்திரம் செய்யும் தாஸர், ஸ்ரீஹரியின் குணரூப வியாபாரங்களை அறிந்திடவும், பாரதம், பாகவதம் முதலான ஸாஸ்திரங்களை ஸ்ரவணம் செய்யும் பாக்கியத்தையும் அருளும்படி வேண்டுகிறார். ஸ்ரீ சனிபகவானை ஸ்தோத்திரம் செய்கையில், "பஹூ ஜன்ம க்ருத பாப பரிஹார மாடி ஸூகவீயோ" என்பதான பத்யங்களினால், பல ஜன்மங்களின் பாபங்களை பரிஹாரம் செய்து, நாராயணனின் ஸ்மரணையை அருளும்படி துதிக்கிறார் தாஸர். முடிவில் 27 & 28 பத்யங்களில், நவக்ரஹ தேவதைகள் நரஹரியின் பக்தர்களைத் துன்பப்படுத்துவது கிடையாது எனவும், அவர்களைத் துதிப்பவர்களுக்கு ஹரி ஸ்மரணையையும், ஸுகத்தையும் அளித்து ஸத்கதியை அருளுகின்றனர் எனவும் பலஸ்ருதியைக் கூறி, "ஜகன்னாத விட்டலன பதிகரிவரஹுதெந்து ஹகலிருளு பிடதெ நுதிஸுவ | நுதிஸுவ மஹாத்மரிகெ ஸுகதிகளனித்து ஸலஹோரு ||" முதலான பத்யங்களில் விவரித்து பூர்த்தி செய்துள்ளார் தாஸர்.

(தொடரும்)... **S.லக்ஷ்மிபதிராஜா, சென்னை**

**வாட்சப் க்ரூப்**

ஹரிதாச விஜயம் வாட்சப் க்ரூப் ஒன்று உள்ளது. இதில் ஹரிதாசர்களின் புண்ய தினங்களில் அவர்களைப் பற்றிய தகவல்கள், புதிய புத்தகங்கள் போன்ற தகவல்கள் வெளியாகின்றன. Admin-only. No spam. விருப்பப்பட்டவர்கள் இணைந்து கொள்ளலாம். Contact : 89044 58276

தொடர்

**ஹரிகதாம்ருதசார பத்ய அர்த்தங்கள்**

**கருணா சந்தி - தொடர்ச்சி**

பு$^{4}$வனபாவன சரித புண்ய
ஸ்ரவணகீர்த்தன பாபநாஷன
கவிபி$^{3}$ரீடி$^{3}$த கைரவத$^{3}$ல ஷ்யாம நிஸ்ஸீம ।
யுவதிவேஷதி$^{3}$ ஹிந்தே$^{3}$ கௌ$^{3}$ரி
த$^{4}$வன மோஹிஸி கெடி$^{3}$ஸி உளிஸித$^{3}$
இவன மாயவ கெ$^{3}$லுவனாவனு ஈ ஜக$^{3}$த்ரயதி$^{3}$ ||18

பகவந்தனின் அபாரமான காருண்யத்தை தொடர்ந்து சொல்லும் ஸ்ரீஜகன்னாததாசர். கணவன், மனைவி, மக்கள், செல்வம் என நாம் இந்த சம்சாரத்தில் மோகம் கொண்டு மயங்கியிருக்கிறோம். இதனால் நாம் பரமாத்மனின் சிந்தனையையே விட்டு, அவனின் பூஜை, தியானம் போன்றவற்றை செய்யாமல் தூர இருக்கிறோம். ஆனால் பகவந்தனோ நம்மை காக்கும் கருணாமயியாக இருக்கிறான்.

பகவந்தனின் புண்ணிய கதைகளை கேட்பதாலேயே நமக்கு பற்பல வித தானங்கள் செய்த பலன்கள் வருகின்றன. ராஜஸூய, அஸ்வமேஷ யாகங்கள் செய்த பலன்கள் கிடைக்கின்றன. ஸ்ரீஹரியின் நாமங்களை கீர்த்தனை செய்தால், நம் ஜென்ம ஜென்மாந்தரங்களின் பாவங்கள் தீர்கின்றன.

மோஹிஸி - தேவ அசுரர்கள் கூடி அமிர்தத்திற்காக பாற்கடலை கடைந்தபோது, ஸ்ரீஹரி மோகினி அவதாரம் எடுத்து, அசுரர்களை மயக்கி, அந்த அமிர்தத்தை தேவர்களுக்கே பிரித்துக் கொடுத்தான் என்பதை 'மோஹிஸி' என்று தாசர் குறிப்பிடுகிறார். இப்படிப்பட்ட மோகினி அவதாரத்தை, கண்ட ருத்ரதேவரின் மனதை 'கெடிஸி' கெடுத்ததால், அவர் வேகமாகச் சென்று அந்த மோகினி ரூப ஸ்ரீஹரியை ஆலிங்கனம் செய்து கொண்டார். பிறகு ஸ்ரீஹரி அவனது உண்மையான ரூபத்தைக் காட்டி ருத்ரருக்கு அருளினார் என்று கதை சொல்கிறது.

இதை எதற்கு தாசர் இங்கு சொல்கிறார் என்றால், ஸ்ரீஹரி நம்மையும்கூட சம்சாரத்தில் தள்ளி, மண், பொன், பெண் ஆசையில்

மோகிக்க வைத்து, புத்தியை கெட வைத்து, பின்னர் அவனது அற்புத கதைகளை கேட்டால், அவனது நாமங்களை கீர்த்தனை செய்தால், நமக்கும் சங்கு சக்ர கதாதாரியாக தரிசனம் அளித்து அருள் புரிகிறான். இத்தகைய ஸ்ரீஹரியைப் போன்ற கருணாளு, இந்த மூன்று உலகில் வேறு யார் உளர்? (அப்படி யாரும் இல்லை) என்கிறார் தாசார்யர்.

பாபகர்மவ ஸஹிஸுவொடெ[3] லகு
மீபதிகெ[3] ஸமராத[3] தி[3]விஜர
நீ பயோஜப[3]வாண்ட[3] தொ[3]ளகா[3]வல்லி நா காணே |
கோப கு[3]ருவினமட[3]தி[3] ப்[4]ருகு[3] நக[3]
சாப மொத[3]லாத[3]வரு மாட்[3]த ம
ஹாப[1]ராத[4]களெ ணிஸித[3]னெ கருணாஸமுத்[3]ர ஹரி ||19

நாம் நமது மனஸா, வாசா, காயா மற்றும் 11 இந்திரியங்களால் தொடர்ந்து பாவங்களையே செய்து வருகிறோம். ஆனால், நம் இந்த அனைத்து பாவங்களையும் சகித்துக்கொண்டு, அதற்கான தண்டனையைக் கொடுக்காமல், அனைத்தையும் மன்னித்து, நம் ஸ்வாமி நமக்கு அருள்கிறான். இத்தகைய ஸ்வாமியை நினைத்தாலே, நம் பாவங்கள் அனைத்தும் போக்க வல்ல இவனது காருண்யத்திற்கு பிரம்மாதி தேவதைகள் யாருமே சமம் இல்லை என்று சொல்கிறார் ஸ்ரீஜகன்னாத தாசர். இப்படி சொல்லிவிட்டு இதற்கான பல உதாரணங்களை இந்த பத்யத்தில் சொல்கிறார்.

கோப - ஸ்வர்க்க அதிபதியான இந்திரன். இந்திர பூஜையை நிறுத்திய கோபாலகர்களை தண்டிப்பதற்காக தொடர்ந்து 7 நாட்கள் கடும் மழை பெய்ய வைத்தான். ஸ்ரீகிருஷ்ணன் கோவர்த்தன மலையை தூக்கிப் பிடித்து, கோ மற்றும் கோபாலகர்களைக் காத்தான். அத்தகைய இந்திரனையும் பிறகு மன்னித்து அருள்கிறான் ஸ்ரீகிருஷ்ணன்.

சந்திரன், குருபத்னியான தாரையை மயக்கினாலும், அதற்கேற்ப தண்டனையான நரகதண்டனையை ஸ்வாமி சந்திரனுக்கு விதித்தானா? இல்லை.

குருவின மடதி - தந்தையின் மனைவி. தசரதனின் மனைவி கைகேயி. தனக்கு நடக்கவிருந்த பட்டாபிஷேகத்தையே நிறுத்தி, 14 ஆண்டுகள் காட்டிற்கு அனுப்பினாள். அத்தகைய கைகேயியை மன்னித்து, மோட்சம் அளித்தான் ஸ்ரீராமன்.

யார் சர்வோத்தமன் என்று சோதிப்பதற்காக ப்ருகுரிஷிகள் பரமாத்மனை அவன் மார்பில் எட்டி உதைத்தார். இதற்கான தண்டனையை பரமாத்மன் அவருக்கு கொடுத்தானா? இல்லை.

இவர்கள் அனைவரும் செய்த அபராதங்கள் மிகப்பெரியதாக இருப்பினும், அவற்றை கவனத்தில் கொண்டுவராமல், இவர்கள் அனைவருக்கும் ஸ்ரீபரமாத்மன் இஹ பரங்களில் சுகங்களைக் கொடுக்கிறார். ஆகையால், ஸ்ரீஹரி கருணைக்கடல் என்று சொல்கிறார் தாசராயர்.

இதே போல, நாமும் பகவந்தனின் ஸ்மரணையை, சிந்தனையை செய்துவிட்டால் போதும், அவன் நம் பாவங்களையும் களைந்து, நம்மை காக்கிறான். ஆகவே நாம் எல்லா காலங்களிலும் பகவந்தனை சிந்திக்க வேண்டும் என்று சொல்லி, இந்த பத்யத்தை முடிக்கிறார் ஸ்ரீஜகன்னாததாசர்.

*** **திரு. முரளிதர தாசர், பெங்களூரு**

**தொடர்**

**ஹரிதாசர்களின் சிந்தனை துளிகள்**

**ஈச - தாச பேத**

ஜீவ ஈஸ்வரனின் ஒற்றுமை மற்றும் வேறுபாட்டினை கனகதாசர் மிகவும் அழகாக ஒரு பத்யத்தில் சொல்கிறார்.

தீன நானு சமஸ்த லோகக்கெ தானி நீனு விசாரிசலு மதி
ஹீன நானு மஹாமஹிம கைவல்யபதி நீனு ।
ஏன பல்லனு நானு நெரெ சுக்ஞானமூர்த்தி நீனு நின்ன ச
மானருண்டே தேவ ரக்ஷிஸு நம்ம அனவரதா ॥

ஈசன் சர்வதந்த்ர ஸ்வதந்த்ரன் என்றால், அனைத்து விதங்களிலும் அ-ஸ்வதந்திரன் ஜீவன். இன்னொரு இடத்தில் சொல்லும்போது:

பரமாத்மனு நீனு பாமரனு நானு
அணுரேனு த்ருணகளல்லி பரிபூர்ண நீனு
க்ஷண க்ஷணக்கெ அவகுணத கர்மி நானு

வருஷ நூறாயுஷ்ய ரதரொளு கிருளு களெதெய்வத்து ஐவ
த்தரலி வார்திக பால்ய கௌமாரதலி மூவத்து ।
இரதெ சந்தம பளிக இப்ப த்தோரு வருஷவதரொளகாது தந்த:
கரண நின்னொளு தோரி ரக்ஷிஸு நம்மனனவரத ॥

ஹரிதாச சாகித்யத்தின் வளர்ச்சிக்குக் காரணமான, ஸ்ரீமதாசார்யரின் சாக்ஷாத் சிஷ்யரான ஸ்ரீ நரஹரி தீர்த்தரின் வாக்கு - 'திளகோ நின்னொளகெ நீனே । அளகோ போதாயுஷ்ய'. இதையே முன்னெடுத்து, கனகதாசர் நமக்கு காலத்தின் முக்கியத்துவத்தை, சிறப்பினை மேலும் நம் வாழ்க்கை நிலையை தெரிவிக்கிறார்.

மனிதப்பிறவியின் ஆயுள் நூறு என்று கொள்வோம். அதாவது மூன்று கட்டங்களாகப் பிரிக்கிறார். 24+48+44=116 ஆண்டுகள். இதில் பாதி ஆயுள் தூக்கத்திலேயே போய்விடுகிறது. பாக்கி இருப்பதில், பால்யம், கௌமாரம், வாலிபம் மற்றும் வயோதிக காலங்கள். இதில் முக்கியமானது, நாம் எவ்வளவு ஆண்டுகள் நம் சாதனைக்காக ஒதுக்குகிறோம் என்பதே. பால்ய, கௌமார, யௌவனத்தில் 30 ஆண்டுகள் போய்விடுகின்றன. இப்போது பாக்கி வெறும் 20 ஆண்டுகளே மிஞ்சுகின்றன.

வயோதிகத்தில் அவ்வப்போது வரும் பிரச்னைகள், நோய் நொடிகள் எவ்வளவு காலம் இருக்கும் என்று தெரியாது. மேலும் இதில் நாம் படிப்பது, மற்றவர்க்கு சொல்லிக் கொடுப்பது, ஜபம், தபம், யாகம், யக்ஞம், தியானம், ஆகிய சாதனைகளை செய்வது எப்போது? இவற்றை செய்து அடுத்த நிலையை எட்டிப் பிடிப்பது எப்போது? இதற்காக ஹரிதாசர்களையே பின்பற்ற வேண்டும்.

***

**தொடர்**

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## 15. ஸ்வாச சந்தி - விடைகள்

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 க | ளி | கெ | | 2 வ | 25 ஸு | 26 தி | பா | ர் | த | ன | தெ | ர | 27 ஸ | 18 பே |
| ந் | | | 3 ப | தி | ர | வா | | | ந் | 4 ஸு | ர | வி | ரோ | தி |
| த | மி | 19 அ | 5 செ | ர | ப | க | | | வி | | | | ஜ | |
| வ | | ல | 20 தூ | | 32 கூ | ர | | 6 கை | ர | வ | த | ள | யு | |
| ஹ | | வ | | | | ரி | 28 க் | ங் | 21 அ | | 7 ரே | ச | க | ம் |
| | | போ | | வ | | | ரா | 33 க | | வி | | தி | | க |
| | 8 மோ | 9 த | ம | ன | | | ண | ஷ | ரு | க | ங் | 22 ஸ | | ப |
| | | 10 நி | ர் | ஜ | ர | | | | | ர் | | ம் | | ம் |
| | | | | ஜ் | | | | 11 கா | ர் | 34 பா | ஸ | 35 வி | | 36 கு |
| | 12 ஹ | ரி | ன் | 37 ம | ணி | | த | | | | வா | | 29 யா | |
| த | | | | | ட | | ஸி | | க | 13 ப | ஸ் | சி | ம | |
| ரோ | | | 14 க் | ரு | ஷ் | ண | 30 அ | ஜி | ன | ல | 38 நி | | | |
| ப் | | | | | 39 செ | | வ | | 15 அ | ப் | 16 தி | ங் | 31 க | ளு |
| த | 23 ஸி | | | | | | ய | | க் | 40 தொ | | | வா | |
| 17 ஓ | த | ன | | ன் | ண | ரு | 24 வ | | னி | | | | ட | |

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்

Haridasa Vijayam - Monthly

மலர் 2 ** அக்டோபர் 2021 ** இதழ் 11



ஸ்ரீமன் மத்வாசார்யர்

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே
மலர் 2 : இதழ் 11

| நிர்வாக ஆசிரியர் | துணை ஆசிரியர் |
|---|---|
| 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்<br>ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,<br>380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase, பெங்களூரு 560078<br>Ph.: 89044-58276.<br>haridasa.vijayam@gmail.com<br>jagannathakesava.blogspot.com | ' தாச சாகித்ய சேவா ரத்ன'<br>திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்<br><br>**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**<br>திரு. முரளிதர தாசரு,<br>திருமதி. நிர்மலா நரசிம்மன்,<br>திரு. லட்சுமிபதிராஜா,<br>திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ் |

## ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்

## அக்டோபர் 1 முதல் 30 வரை, 2021

அக். 6 - பாத்ரபத அமாவாசை - ஸ்ரீமாதவ தீர்த்தர், மண்ணூரு
அக். 8 - ஆஸ்விஜ சுத்த த்விதியை - ஸ்ரீஆனந்த விட்டல தாசர், லிங்கசுகூர்
அக். 9 - ஆ.சு. த்ருதியை - ஸ்ரீவரதேஷ விட்டல தாசர், லிங்கசுகூர்
அக். 12 - ஆ.சு. சப்தமி - ஸ்ரீபிராணேஷ தாசர், லிங்கசுகூர்
அக். 14 - ஆ.சு. நவமி - இபராமபுர ஸ்ரீஅப்பாவரு (இவருடைய ஜயந்தி).
அக். 15 - ஆ.சு. தசமி - ஸ்ரீமத்வ ஜயந்தி
அக். 21 - ஆ.பகுள பிரதமை - ஸ்ரீகுரு ஜகன்னாத தாசர், கௌதளம்

# ஆசிரியர் பக்கம்

இந்த இதழுடன் ஸ்ரீகுருகோவிந்த விட்டல தாசரின், கோவிந்தாஷ்டகம் முடிந்தது. இதனை தினமும் பாராயணம் செய்து, மாத்ருகா ரூபங்களின் அருளைப் பெறுவோமாக.

இந்த இதழிலிருந்து இரு புதிய பகுதிகள் துவங்குகின்றன. ஸ்ரீவாதிராஜரின் கீசக வதெ - ஒரு சிறு காவியம். படிப்பதற்கும், பாராயணத்திற்கும் ஏற்ற கிரந்தம். அடுத்தது, ஹரிதாச சாகித்ய ப்ரவர்த்தகரான, அனைவரும் அறிய வேண்டிய ஸ்ரீவியாசராஜரைப் பற்றிய கட்டுரைகள் துவங்குகின்றன.

அக்டோபர் மாதத்தில் ஸ்ரீபிராணேஷ தாசரின் ஆராதனை வருகிறது. அவரைப் பற்றிய ஒரு குறிப்பினை இதில் பார்க்கலாம். அதே போல இன்னொருவர் ஸ்ரீகுரு ஜகன்னாத தாசர். இவரது வாழ்க்கை வரலாற்றினை, சாதனை, போதனைகளை அனைவரும் அறிய வேண்டியது அவசியம். இந்தத் தொடரும் மிக விரைவில் நம் பத்திரிக்கையில் வரவிருக்கிறது.

ஹரிவாயு குருகளின் அருளால், ஸ்ரீவாதிராஜரின் வைகுண்ட வர்ணனெ - தமிழில் அர்த்த விளக்கங்களுடன், ஸ்ரீமத்வ ஜயந்தியன்று வெளியிடத் திட்டமிட்டுள்ளோம். விவரங்கள் வாட்சப்பில் வரும். தகவல் கிடைக்கவில்லையெனில் தொடர்பு கொள்ளவும்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

**Subscription Renewal**

* தக்க சமயத்தில் உங்கள் ஹரிதாச விஜயம் சந்தாவினை ரென்யூ செய்து கொண்டு, பத்திரிக்கையை தொடர்ந்து பெறுமாறு பார்த்துக் கொள்ளவும்.
* பத்திரிக்கை பெறும் முகவரி மாறினால், அதனை எங்களுக்கு தெரியப்படுத்தவும்.

தொடர்

கோவிந்தாஷ்டகம்

**இயற்றியவர்: ஸ்ரீகுருகோவிந்தவிட்டலதாசர்**

## சதுர்முக / வாயுதேவரின் ஸ்துதி

**ஞானக³ம்யனெ குரு கோவிந்த | தத்வ**
**ஞானவ பாலிஸோ கோவிந்த |**
**ஞானிகெ ப்ரியதம கோவிந்த | நினகெ**
**ஞானி ஜனரு ப்ரியரு கோவிந்த ||26**

இந்த ஸ்லோகமானது 'ஞ'காரத்திற்கான ஸ்லோகமாகத் தெரிந்தாலும், அதை நாம் முன்னரே பார்த்துவிட்டபடியால் (ஞான ஞேய ஞாத்ரு...), இது ஞானிகளில் சிறந்தவரான ஸ்ரீமதாசார்யரின் ஸ்துதியாகவே நினைக்க வேண்டும்.

தன் அபரோக்ஷ ஞானத்தினால் மட்டுமே அறியப்படுபவனாகையால், ஞான என்று அறியப்படுபவன், நான்முகன் மற்றும் வாயுதேவர் மூலமாக தரிசனம் தரக்கூடியவன் ஆகையால், ஞானகம்ய என்று அழைக்கப்படுகிறார். ஞானிகளுக்கு நீ மிகவும் பிரியமானவனாக அறியப்படுகிறாய். உனக்கும் ஞானிகளை மிகவும் பிடிக்கும். நான்முகன் மற்றும் வாயுதேவர் மூலமாக எனக்கு தத்வஞானத்தை அருள்வாயாக. அகாரம் முதல் க்ஷகாரம் வரையிலான 51 எழுத்துக்களை வெறும் எழுத்துக்களாக எண்ணாமல், அவை அஜாதி பகவத்ரூபங்கள். அந்தந்த எழுத்துக்கள் அந்தந்த பகவத்ரூபங்களை விளக்குகின்றன என்னும் தத்வஞானத்தின் ஒரு கருத்தினை எனக்கு புரியவை.

## கோவிந்தனுக்கு சமர்ப்பணம்

இப்படி 25 நுடிகளில், 51 பகவத்ரூபங்களின் ஸ்துதிகளை சொல்லி, 26வது நுடியில், ஞானிகளின் ப்ரியனான ஸ்துதியையும், 27வது நுடியாக, 51 எழுத்துக்களிலிருந்து வெளிப்படுபவனான அஜாதி பகவத் ரூபங்களிலிருந்து வேறுபாடு இல்லாதவனான கோவிந்தனிடம் இவ்வாறு சொல்லி ஸ்துதியை சமர்ப்பிக்கிறார் குருகோவிந்த விட்டலதாசர்.

**ஏக பஞ்சாஷது கோவிந்த |வர்ண**
**ஏகாத்ம மாலெய கோவிந்த |**
**லோகைகனாத[2] குரு கோவிந்த |விட்டல**
**ஸ்வீகரிஸென்ன காயோ கோவிந்த ||27**

51 எழுத்துக்களாலும், அவற்றிலிருந்து தொடங்கும் சொற்களாலும் புகழப்பட்டு கோவிந்தன் என்று அழைக்கப்படுபவனே. பத்யமாலா என்று அழைக்கப்படும் இந்த கிருதியானது, உனக்கு பக்தியினால் அணிவிக்கப்படும் மாலையாக இருக்கிறது. இது நம் (குருகோவிந்த விட்டல தாசரின்) அந்தர்யாமியான குருகோவிந்தவிட்டலனின் பிரேரணையினால், அவனது அருளால் இயற்றப்பட்டது ஆகும். குருகோவிந்தவிட்டலன், நமக்கு மட்டுமல்ல, இந்த உலகத்திற்கே தலைவன். இந்த கிருதியை அவனுக்கே அர்ப்பணிக்கிறேன்.

அ-காராதி எழுத்துக்களில், அஜாதி பெயர்களால் நிலைத்திருக்கும் அவன், இந்த கிருதியை அன்புடன் ஏற்றுக்கொள்ள வேண்டும். நமக்கு இன்னும் ஞான பக்தி வைராக்கியங்களைக் கொடுத்து காப்பாற்ற வேண்டும். அ-காராதி எழுத்துக்களில், அஜாதி ரூபங்களின் சிந்தனையை நமக்கு அவனே கொடுக்க வேண்டும்.

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து..**

****

| கன்னடம் | அருஞ்சொற்பொருள் |
|---|---|
| | கடினமான சொற்களின் அர்த்தங்கள் |

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

1. சக்ரி - விஷ்ணு. 2. சக்ஷு - கண் 3. சதுர - அறிவாளி 4. சடுல - வேகம் 5. `கௌரவர்ண - வெண்மை 6. கோரஸ - பால். 7. கமலஸக - சூரியன் 8. கமலஸம்பவ - பிரம்மன் 9. கமலனாப - விஷ்ணு 10. கமலஜஸதி - சரஸ்வதி

தொடர்

## கேசவ நாமா

## 19. ஜோ ஜோ ஹரி - ஸ்ரீவிஜய தாசர்

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)

மாதே$^{3}$வி வருண பூ$^{4}$மிதேவி உத்தா$^{4}$ர
மாது$^{4}$ர்ய வசன உமாதேவி வினுதா
மாதா$^{4}$ர மஹஷூர மத்குலனெ ப்ரே
மாத$^{3}$வனனே ஹரி மாத$^{4}$வராம ||3

மாதவா! நீ லட்சுமிதேவியின் தலைவன். பூமிதேவிக்கு அருள்பவன். உமாதேவியால் வணங்கப்படுபவன். ஞானத்திற்கு ஆதாரமானவன். மகாசூரர்கள் உள்ள குலத்தில் அவதரித்தவனே. ஜீவர்களின் மேம்பாட்டிற்காக ஹிதோபதேசம் செய்தவனே. பக்தர்களுக்கு ப்ரியத்தைக் காட்டும் மாதவராமனே.

கோ$^{3}$வளி பரிபால கோ$^{3}$வளேரா ப்ரியா
கோ$^{3}$வுகள கா$^{3}$யிவ கோ$^{3}$வளராயா
கோ$^{3}$வர்த்த$^{3}$னனுத்தா$^{4}$ர கோ$^{3}$விப்ரஸம்ரக்ஷ
கோ$^{3}$விதா$^{3}$ம்பதி$^{1}$ ரங்க$^{3}$ கோ$^{3}$விந்த$^{3}$ நந்த$^{3}$ ||4

அனைத்து ஜீவர்களின் தலைவனே. கோபிகைகளின் தலைவனே கோபாலனே. கோவர்த்தன மலையை ஏந்தியவனே. கோவிப்ர (பசுக்கள் + சாதுக்களை) காப்பவனே. சங்கீதப் ப்ரியனே. ஆனந்த மூர்த்தி ரங்க கோவிந்தனே.

மது$^{4}$கைட$^{1}$பா$^{4}$ஸுர மத$^{3}$க$^{3}$ர்வ மர்த்த$^{4}$ன
மத$^{3}$ன ஜனக நித்ய மது$^{4}$ரன்ன பா$^{1}$னா
மது$^{4}$ராபுர பா1ல மத$^{3}$க$^{3}$ஜ ஹரணா ஷா
து$^{3}$தவர்ண ஷரீர மது$^{4}$சூத3னனே ||5

மதுகைடப அசுரர்களின் கர்வத்தைப் போக்கியவனே. குவலயாபீட யானையைக் கொன்றவனே. ஷ்யாமல வர்ண தேகத்தைக் கொண்டவனே. மதுசூதனனே ஜோ ஜோ.

இஷ்டப$^{4}$க்தர குல இஷ்டதெய்வவெ ஸர்வ
இஷ்டார்த்த கொடு$^{3}$வ ப$^{3}$லிஷ்டனு நின்ன

இஷ்ட அஷ்டயெந்து திளியலி வஷவல்ல
விஷ்ணு சர்வோத்தமனு விஷ்வ நாடக1னெ ||6

பாகவதரின் குலத்தில் உதித்தவனே. யக்ஞபுருஷனே. வேண்டியதை அனைத்தையும் கொடுப்பவனே. உலகத்தை நடத்தும் சூத்திரதாரியே. சர்வோத்தம விஷ்ணுவே. உன் மகிமைகளை முழுவதும் அறிவதற்கு சாத்தியமேயில்லை.

ஆக்ரமத3லி ஸ்வர்க்க3 ஆக்ரமிஸி ப3லி
விக்ரமனாகி3 காலக்ரமணி மாடெ
ஷக்ரமர்ச்சிஸெ அனுக்ரமனாகி3 ப
ராக்ரமதலி பெ3ளெத3 த்ரிவிக்ரமனெ ||7

ஸ்வர்க்கத்தை ஆக்ரமிக்க வேண்டுமென்று யாகம் செய்த பலி சக்ரவர்த்தியை, அபூர்வமான முறையில் வளர்ந்து, அவன் தலையில் காலடி வைத்து, அவனை அழித்த த்ரிவிக்ரமனே.

வாமலோசனெயர வாமன கெ1டி3ஸிதெ3
வாமன வாஸிஷ்ட வாதி3முனிவந்த்ய
வாமனதலி தா3னவாமன்யக3ளரன்னு அ
வமான மாடி3தெ3 சிரி வாமனனெ ||8

சுந்தரியரின் மனதைக் கெடுத்த, வாமன, வசிஷ்ட முதலான ரிஷி முனிவர்களால் வணங்கப்படுபவனே. மிகவும் அழகான வாமன ரூபத்தினால் கர்வத்தில் இருந்த தேவதைகளை அவமானம் செய்த வாமனனே.

ஸ்ரீதர ரமணனெ ஸ்ருங்கா3ர வாரிதி3
ஸ்ரீதன சம்பத்தாஸ்ரித ஜனரிகெ3
ஸ்ரீதே4னு நீனய்யா ஸ்ரீ கருணாகர
ஸ்ரீதே3வி உரபூ4ஷா ஸ்ரீத4ரானந்தா1 ||9

அழகுச் சுரங்கம். இந்திரியாபிமானிகளின் தலைவன். செல்வம், புகழ் ஆகியவற்றை விரும்புவர்களுக்கு கருணை காட்டுபவன். தன் மார்பில் ஸ்ரீதேவியை தரித்த ஸ்ரீதர நீயே. அனந்தனும் நீயே.

ஹ்ருஷிகேஷன தா1த1 ஹ்ருஷிஜன சம்ப்ரீத
ஹ்ருஷி குலோத்ப4வ புருஷராம மஹா
ஹ்ருஷினாமதே4யனெ ஹ்ருஷிபத்னி பா1லனெ

ஹ்ருஷிக3ள ஒடெயனெ ஹ்ருஷிகேஷ தே3வ ||10

நாரத முனிவரின் தாத்தா. ரிஷி முனிவர்களால் வணங்கப்படுபவன். ஜமதக்னி ரிஷியின் குலத்தில் உதித்த புருஷ ரூபி பரசுராமன். ரிஷிபத்னி அகலிகைக்கு அருளியவன். மகாரிஷி வேதவியாசனே. சப்த ரிஷிகளின் தலைவனே. நீயே இந்திரியங்களின் தலைவனானெ ஹ்ருஷிகேசன்.

பதுமஜாண்டதல்லி பதுமெ மாத1னு கேளி
பதும நாபி4யல்லி பதுமஜன பெத்த
பதுமாஸ்ய பதுமாக்ஷ பதுமகரனெ பாத3
பதும மிகலு காந்தி பதுமனாப4னெ ||11

தாமரை போன்ற முகத்தை உடையவனே. தாமரைக் கண்ணனே. தாமரை போன்ற பாதங்களைக் கொண்ட பத்பனாபனே. பிரம்மாண்டத்தில் லட்சுமியின் வேண்டுதலை நிறைவேற்றி, தன் கமல நாபியில் பிரம்மனை ஸ்ருஷ்டித்தவனே.

தா3மநிதி4குலனு தா4மனெ நிருத த்ரி
தா3மனிவாஸ சுதா4மன மித்ர
தா3ம புண்யதா4ம ப4க்த ஹ்ருத்3வனுஜ
தா3ம மது3கரனெ தாமோத3ர த4ர்மா ||12

பூமண்டலத்திற்கு அதிபதியே. த்ரிதாமங்களிலும் வசிப்பவனே. சுதாமனின் நண்பன் என்னும் செல்வத்தின் தலைவனே. பக்தர்களின் இதய கமலத்தில் வசிப்பவனே. கரங்களில் அமிர்தத்தை ஏந்தியவனே.

ஷங்க2 ஸுராஹரா நி:ஷங்க சரித
ஷங்க2பாணி ஷஷாங்க சுவத3ன
சங்க்2யெயில்லதெ தாயி ஸங்கலெ ஹரிக3டிதெ3
சங்கருஷணனனுஜ சங்கருஷணனெ ||13

ஷங்க என்னும் அசுரனைக் கொன்றவனே. சந்தேகமில்லா சரிதத்தைக் கொண்டவனே. ஷங்கத்தை தரித்தவனே (பாஞ்சஜன்ய). ஷஷாங்க வதனனே (பூர்ண சந்திரனே). மிகவும் மரியாதையுடன் தேவகியின் பயத்தைப் போக்கியவனே. சங்கர்ஷணனே. நீயே சங்கருஷணன தம்பி (பலராமனின் தம்பி).

ப்ரத்$^{3}$யோத ஷததேஜ ப்ரதா$^{3}$ன மூருதி
ப்ரத்$^{3}$வீப வர்ண சுப்ரதா$^{3}$யகனெ
ப்ரதே$^{3}$ஷ பரிமாண வரப்ரத$^{3}$ ஸித்த$^{3}$னெ
ப்ரத்$^{3}$யுக்த அவ்யக்த ப்ரத்$^{3}$யும்ன விஷ்வ ||14

நூறு உதயசூரியன்களை விட அதிக ஒளியுடையவனே. தங்கத்தின் வண்ணத்தைவிட அதிக வண்ணங்களைக் கொண்டவனே. வரங்களைக் கொடுப்பவனே. இதயங்களில் வசிப்பவனே. விஸ்வரூபனே. பிரத்யும்னனே.

வாசவானுஜ ஸ்ரீனிவாச புண்ட$^{3}$ரீக வாசுதேவன ஷமன புரத$^{3}$ல்லி
வாஸ மாடிசித$^{3}$ய்ய வாஸிவார்ச்சித ஸ்ரீவாசுதேவ வாசுதேவ ||15

வாசவானுஜ உபேந்திரனே, ஸ்ரீனிவாச புண்டரீகனே, வாசுதேவனே, ஜீவர்களின் கர்மங்களுக்கு ஏற்ப நரகத்தில் பலனைக் கொடுப்பவனே, மோட்சத்தைக் கொடுப்பவனே, ஞானத்தைக் கொடுப்பவனே, வாசுதேவனே எனக்கு அருள்புரிவாயாக.

அனுகா$^{3}$லவு நின்ன அனுசரிசிதெ$^{3}$ நானு
அனுகூலவாகி என்னன்னு சாகு$^{1}$வுது$^{3}$
அனுமான வ்யாதகெ$^{1}$ அனிமித்த ப$^{3}$ந்து$^{4}$
அனுபம சரிதனெ அனிருத்த$^{4}$ ஸ்ரீஷா ||16

பற்பல பிறவிகளின் நான் உனது பக்தன், அற்புத சரிதங்களைக் கொண்டவன் நீ, நான் நிரந்தரமாக உனது பக்தனாக இருக்கிறேன். உனக்கான சாதனையை செய்வதற்கு எனக்கு அருள் புரிவாயாக. எவ்வித பலன்களையும் எதிர்பார்க்காமல் உதவிகளை செய்பவன் நீ என்னும் விஷயத்தில் எனக்கு சந்தேகமில்லை. எனக்கு அருள் புரிவதில் உனக்கு ஏன் இன்னும் தாமதம், ஹே அனிருத்த ஸ்ரீஷனே.

(தொடரும்)...

| தொடர் | **ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்** |
|---|---|
| | **ஹரிகதாம்ருதசாரத்தில் பக்தியின் பார்வை** |

டாக்டர். ஜெயலட்சுமி மங்களாமூர்த்தி

கர்வம் இல்லாத மனதுடன், தெளிந்த அறிவுடன் அர்ப்பணிப்பினைப் பெறும் விஷயத்தை தாசர் விளக்குகிறார். அர்ப்பணிப்பில், அக மற்றும் புற என்று இரு அர்ப்பணிப்புகள் உள்ளனவாம்.

கோபிசந்தனம் முத்திரைகளை தரித்தல், சந்தியாவந்தனம், ஹரிதினங்களைப் பின்பற்றுதல் ஆகியன புற அர்ப்பணிப்புகள் என்றால், தாரதம்ய, பஞ்சபேத ஞானம், ஸ்ரீஹரியைப் பற்றி கேட்டு, மனப்பாடம் செய்தல் ஆகியன அக அர்ப்பணிப்புகள் எனப்படுகின்றன.

ஸ்ரீவிஷ்ணுவினை எந்நேரமும் நினைப்பதே முக்கியமான அர்ப்பணிப்பாகும். இத்தகைய உண்மையான ஞானத்தின் சாதனைக்கு ஸ்ரீஹரியே காரணன் என்று தெரிவிக்கிறார் தாசர்.

சத்சங்கமே சாதனை என்றால் – சத்கதி பிராப்தியே அதற்கான உச்சம் / இலக்கு என்கிறார்.

க்ஷுல்லகர கூடாடதலெ ஸ்ரீ
வல்லபன சத்குணகணங்கள
பல்லவர கூடாடி சம்பாதிசு பரம்பதவ ||
(சகலதுரித நிவாரணசந்தி ஸ்லோகம் 29)

ஒல்லெனெந்தரெ பிடது ஹரி நி
ர்மால்ய நைவேத்யவனு புஞ்சிஸு
பல்லவரகூடாடு பவது:க்ககள நீடாடு ||
(சகலதுரித நிவாரணசந்தி ஸ்லோகம் 27)

சம்சாரிக பிரச்னைகளிலிருந்து தீர்வு வேண்டுமெனில் அது ஹரியின் கருணையினால் மட்டுமே சாத்தியம். பகவத் பக்தர்களின் சத்சங்கங்களில், ஸ்ரீஹரியைப் பற்றிய விஷயங்களைப் பற்றி அறிந்து, அவற்றைக் கேட்டு மனப்பாடம் செய்து, ஹரி நிர்மால்ய, நைவேத்தியத்தை உண்டு, அவற்றை உள்ளிருக்கும் பிம்ப ரூபத்திற்கு சமர்ப்பித்து, பிராணாக்னிஹோத்திரத்தை செய்தவாறு சாதனை செய்யவேண்டும் என்று தாசர் கூறுகிறார். இதனால் நமது பிரச்னைகள் தீருமென்றும், ஸ்ரீஹரியின் அருள் கிடைக்கும் என்றும், சத்கதி கிடைக்கும் என்றும் தெரிவிக்கிறார்.

ஸ்ரீஹரிக்கு செய்யும் சேவையே பக்தி என்று நினைத்தால் – ஸ்ரீஹரியின் கருணையைப் பெறுவதே அதன் உச்சம்.

சேவிசுவ பக்தரி கொலிது சுக
வீவ சர்வத்ரதலி சுகமய
(தேவ தைத்யர தாரதம்ய சந்தி. ஸ்லோகம் #16)

என்று தாசர் கூறுவதைப்போல், சேவை என்பது ஞானத்துடன் செய்யவேண்டியதாகும். நம் உடலில் தேவதைகள், தைத்யர்கள் இருவரும் இருந்து, நம்மிடமிருந்து நற்காரியங்கள், கெட்ட காரியங்கள் ஆகியனவற்றை செய்ய வைக்கிறார்கள் என்ற அறிவுடன், ஸ்ரீஹரியின் சேவையைச் செய்தால், பிம்பரூபியின் தரிசனம் கிடைக்கும் என்று கூறுகிறார். தந்தை, தாய், குரு, அனைத்து ஜடப் பொருட்களில் ஸ்ரீஹரியின் இருப்பை அறிந்து அந்தந்த ரூபத்திற்கு சேவை செய்யவேண்டும் என்று தெரிவிக்கிறார் தாசர்.

விபூதி ரூபங்களை அறிந்து வணங்குவது பக்தி எனப்படுகிறது. இதிலிருந்து கிடைக்கும் முக்தி யோக்யதை மற்றும் ஸ்ரீஹரியின் கருணை ஆகியவையே அதன் உச்சம் எனப்படுகிறது.

சதுரமுக மொதலாதகில தே
வதெகளொள கிஹனெந்து லக்ஷ்மீ
பதிகெ வந்திஸெ ஒந்தரெக்ஷண பிட்டகலனவர
(தைத்ய தாரதம்ய சந்தி ஸ்லோகம் #7)

மத்வ சித்தாந்தத்தில் சொல்லியிருப்பதைப்போல 24 தத்வங்களுக்கு அபிமானி தேவதைகளை வணங்கும்போது, அவர்களின் அந்தர்யாமியான முக்யபிராணரை நினைத்து, அவரின் அந்தர்யாமியான பகவத் ரூபங்களை வணங்கவேண்டும். ஸ்ரீஹரியின் ரூப சிந்தனை இல்லாமல் வெறும் தேவதைகளை வணங்கினால், அந்த தேவதைகளுக்கும் ஸ்ரீஹரிக்கும் அது பிடிப்பதில்லை என்று தாசர் தெரிவிக்கிறார். ஸ்ரீஹரியின் அனைத்து ரூபங்களுக்கும், முக்யபிராணரே அடித்தளமாக இருக்கிறார். அந்தந்த தத்வ விஷயங்களுக்கேற்ப ஸ்ரீஹரியின் ரூபங்களை வேறுபடுத்திப் பார்க்காமல் நினைக்கவேண்டும் என்று தாசர் தெரிவிக்கிறார்.

பக்தியில் தோழமை இருந்தால், அதன் உச்சம் எனப்படும் நிலையில், ஸ்ரீஹரியே நமக்குத் தோழனாக இருப்பான்.

சுந்தரப்ரத பூர்ணஞானா
நந்தமய சித்தேஹதொளு தா
நொந்தரேக்ஷண அகலதலெ பரமாப்தனாகிப்ப (6-24)

ஸ்ரீஹரி, புருஷ நாமகனாக ஜீவர்களின் அனைத்து இந்திரியங்களிலும் இருக்கிறான். ஜீவனுக்கு இருக்கும் நான்கு தேகத்தில் சித்தேகம் எனப்படும் ஸ்வரூப தேகத்தில் ஆனந்தமயனாக ஜீவனுக்கு நண்பனாக இருக்கிறான். ஜீவனும் அனாதி, தேவனும் அனாதி. தனக்கு மிக அருகில் இருப்பவனாகவும், நண்பனாக இருப்பவன் என்று நினைக்கும் சிந்தனையே உச்சநிலை என்றும், அப்போது ஆனந்தமயனின் தரிசனம் கிடைக்கும் என்கிறார் தாசர்.

பூஜையே பக்தி என்றால், ஜீவன்முக்தியே அதன் உச்சநிலை எனப்படுகிறது.

ஈ சமன்வய வெந்தெனிப ஸது
பாஸனெய கைவபனு மோக்ஷா
ந்வேஷிகளொளுத்தமனு ஜீவன்முக்த நவனியொளு (11-22)

ஒரு செயல், நற்செயல் எனப்படுவது அதை செய்பவர் அப்படி நினைத்தால் மட்டுமே. தன்னுடைய உடலில் இருக்கும் பிம்பன் தனக்கு நாற்புறமும் இருக்கிறான். இந்த பிரம்மாண்டத்தில் இருக்கும் பரமாத்மனும், தனக்குள் இருக்கும் பரமாத்மனும் ஒருவனே என்னும் சிந்தனை வரவேண்டும். இதுவே சிறந்த பூஜை எனப்படுகிறது. இத்தகைய பக்தர்கள், சம்சார வாழ்க்கையில் இருந்தாலும் ஜீவன் முக்தர்கள் எனப்படுவார்கள் என்று ஜகன்னாததாசர் கூறுகிறார்.

ரூபோபாசனை பக்தி என்றால், ஸ்ரீஹரியின் தரிசனமே அதன் உச்ச நிலை எனப்படுகிறது.

க்லேஷ நாசன அசலகளொளு ப்ர
ஷாஷிசுதலிஹனஷன
தூபோபாசனவ மாள்பரிகெ
தோர்பனு தன்ன நிஜரூப || (17-9)

புருஷசூக்தத்தில் இருக்கும் ‘சாஷனா நஷனே அபி’ என்னும் விஷயத்தை ஜகன்னாததாசர், பக்தர்களுக்கு தெரிவிக்கிறார். சாஷனா

நாமக ஹரி, அனைத்து ஜீவர்களுக்கும் பசி, தாகத்தை ஏற்படுத்தி, அதைத் தீர்த்து, அவர்களை காப்பாற்றுகிறான். அனைத்து ஆண் பெண்களில் இருக்கும் எண்ணிக்கையற்ற ஸ்ரீஹரி ரூபங்களை அறிந்து, அவற்றை வணங்கவேண்டும் என்று தாசர் தெரிவிக்கிறார்.

ஸ்ரீஹரியின் குணோபாசனையே பக்தி என்றால், பணிவு மற்றும் நன்றியுணர்ச்சியே அதன் உச்ச நிலை எனப்படுகிறது.

அனகனமலா நந்தனந்தசு
குணகளொளகொந்தெ குணோபாசனவகைவ
மஹாத்ம தன்ய க்ருதார்த்தனெனிசுவனு (15-27)

ஸ்ரீஹரியின் குணங்கள் எண்ணிக்கையற்றவை. ஆனால், உபாசகர்கள் தங்களின் யோக்யதைக்கு தக்கவாறு ஒன்று இரண்டு குணங்களையே நினைக்கவேண்டும் என்கிறார். 'சச்சிதானந்தன்' என்று நினைத்து அவனை வணங்கவேண்டும் என்கிறார். லட்சுமி தன் கணவனாக, பிரம்மவாயு தங்களின் தந்தையாக, ருத்ராதி தேவதைகள் தங்களின் தாத்தா என்றும் ஸ்ரீஹரியை வணங்குகின்றனர் என்று தாசர் கூறுகிறார். ஸ்ரீஹரியின் ஒரே குணத்தில் பற்பல குணங்கள் அடங்கியிருக்கின்றன என்று நினைத்து, அவனின் அருளுக்குப் பாத்திரராகி, தன்யராக வேண்டும் என்று தெரிவிக்கிறார்.

தியானம் என்பது பக்தி என்றால், ஸ்ரீஹரியின் அபரோக்ஷ தரிசனம் மற்றும் சாரூப்ய முக்தியே அதன் உச்சநிலை எனப்படுகிறது.

கைரபாரிய த்யானதிந்த ப
வாடவியனதி ஷீக்ரதிந்தலி தாடி
சாரூப்யவனு ஐதுவரல்ல ஜீவிகளு (9-30)

ஈபரிய தேஹதொளு பகவ
த்ரூபகள மரெயதெலெ மனதி ப
தேபதே ப4கு3தி1யலி ஸ்மரிசுதலிப்ப பகுதரனு |
கோபதி ஜகன்னாதவிட்டல ச
மீபகனு தானாகி சந்தத
தாபரோக்ஷவ நீடி பொரெவனு எல்லகாலதலி (9-31)

தியானோபாசனை செய்வதே மிகச் சிறந்த பக்தி என்று ஜகன்னாததாசர் கூறுகிறார். தன் தேகத்தில் இருக்கும் ஸ்ரீஹரியின் ரூபங்களை, பிம்பமூர்த்தியை, எந்நேரமும் நினைக்கும் பக்தர்களை,

அவர்களுக்கு அருகிலேயே எப்போதும் இருக்கும் பிம்பரூபி ஸ்ரீஹரி, அவர்களை சம்சார பந்தத்திலிருந்து விடுதலை அளித்து, அவர்களுக்கு சாரூப்ய மோட்சத்தைக் கொடுத்து, அபரோக்ஷத்தைக் கொடுத்து அருள்கிறான் என்பதையும், பிரம்மாண்டத்தின் நகலாக இருக்கும் இந்த பிண்டாண்டத்தில் இருக்கும் ஸ்ரீஹரியின் ரூபங்களை சிந்திப்பதைப் பற்றியும் இந்த சந்தியில் விளக்குகிறார்.

தேவதேவேஷன சுமூர்த்தி க
லெவரகளொளகனவரத ச
ம்பாவிசுத பூஜிசுத நோடு3த சுகிசுதிரு பிடதெ |
(மாத்ருகா சந்தி ஸ்லோகம் #32)

வைனதேயாம்சகன மூர்த்தி
த்யான உள்ள மஹாத்மரிகெ சு
க்ஞான பக்த்யாதிகளு வர்த்திஸி சுக2வ கொடுதிஹவு
(தத்த ஸ்வாதந்த்ர்ய சந்தி ஸ்லோகம் #7)

அகணிதாத்மனு தன்ன பாதா
ப்ஜகள தேனிப ப4க்தஜனரிகெ
ப்ரகடகனு தானாகி சௌக்யகளீவ சர்வத்ர
(தத்த ஸ்வாதந்த்ர்ய சந்தி ஸ்லோகம் #11)

(தொடரும்).

*** **டாக்டர். ஜெயலட்சுமி மங்களாமூர்த்தி**

## மாதத்திற்கு ஒரு இலவச PDF புத்தகம்

இதுவரை நாம் வெளியிட்ட அனைத்து இலவச PDF புத்தகங்களை download செய்து படிப்பதற்கு, இந்த தளத்திற்கு செல்லவும்.

https://archive.org/details/@sathya_narayanan

தொடர்

**கன்னட ஹரிதாசினிகள்**

**ஸ்ரீருக்மிணிவர விட்டல**

**(ஸ்ரீமதி டாக்டர் ருக்மிணி கிரிமாஜி) 1927-2012**

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)...

ஆண்டு 2011ல் 'ஹௌவன கட்டெ ரங்கநாதனின் பக்த வ்ருந்த'த்தின் தலைமை ஸ்ரீமதி ஷாந்தா ரகூத்தமன் அவர்கள், கிரியமா அவர்களின் 10ம் ஆண்டு ஆராதனையை ஏற்பாடு செய்தார். அப்போது ஒரு நாள் ருக்மிணி கிரிமாஜி அவர்களின் வீட்டிற்குச் சென்று அவரின் தேர்ந்த அனுபவத்தைப் பெற்றுக் கொண்டார். எழுதுவதை நிறுத்தி அப்போது இரண்டு ஆண்டுகள் ஆகியிருந்தாலும், ஸ்ரீமதி ஷாந்தா ரகூத்தமன் அவர்களுக்கு இதயபூர்வகமாக நான்கு வாக்கியங்களை எழுதிக் கொடுத்து ஆசிர்வாதம் செய்தார். 'பகவந்தனிடம் உண்மையின் அன்பு செலுத்துபவர்களில் ஒன்றே பாவனை இருக்கிறது. இது எனக்கு மனதில் தோன்றிய விஷயம். அவருக்கு பிரபஞ்சத்தின் எந்தவொரு பேச்சுகளிலும் இஷ்டம் இருக்கவில்லை. பகவந்தனின் ஸ்மரணை என்றால் என்றும் இல்லாத மகிழ்ச்சி'. இதுவே அவருடைய கடைசி கையெழுத்தாக இருக்கலாம். 8.7.2011.

பொதுவாக பெண்களின் சாகித்யம் – அதிலும் தேவரநாம, ஹரிதாச சாகித்ய என்றால், மூக்கு சுளிப்பவரே அதிகம். இதில் மடி ஏற்றவர் வேறு. அதை சொல்லக்கூடாது, இதை சொல்லக்கூடாது என்று தடைகள் வேறு. ஸ்ரீபாதராஜர், ஸ்ரீவியாசராஜர் மற்றும் வாதிராஜர் பெண்களுக்காகவே தேவரநாமாக்களை இயற்றியிருக்கின்றனர். புரந்தரதாசரோ 'ஹெண்டதி ஸந்ததி ஸாவிரவாகலி' என்று மத்வாசார்யரின் தத்வங்களையெல்லாம் கன்னடத்தில் நமக்குக் கொடுத்தார். ஜகன்னாததாசர்கூட பிரமேயங்களையும், தத்வங்களையும், வேத வேதாந்தத்தின் வாக்குகளை 'ஹரிகதாம்ருதசார'த்தில் கூறியுள்ளார்.

இதெல்லாம் பழைய விஷயங்கள். இந்த காலத்தில் பேஜாவர ஸ்ரீகள் பெண்களுக்கு ஞானத்தின் கதவினை விசாலமாகத் திறந்தார். பெண்களுக்காகவே பயிற்சிக்கூட்டங்களை நடத்தினார். தம் சிஷ்யர்கள் மூலமாகவே, தத்வங்களை மிகவும் எளிதாக விளக்கும்படி செய்தார். பாடும், எழுதும், பிரவசனம் செய்யும் பெண்களை ஊக்குவித்தார். இவர்களிலெல்லாம் மிகச் சிறப்பு வாய்ந்தவர் ருக்மிணி கிரிமாஜி என்றால் அது மிகைப்படுத்தப்பட்ட விஷயம் அல்ல.

அகில பாரத மாத்வ மஹா மண்டலத்தின் கேந்திர கச்சேரிகளில் பொறுப்பாளராக சேவை செய்ததுடன், 'தத்வவாத' மாத பத்திரிக்கையில் 'வழிகாட்டி' என்னும் பகுதிக்கும் சேவை செய்தார்

ருக்மிணி. மற்றொரு புறம், TTD தாச சாகித்ய ப்ராஜெக்டின் சிறப்பு அதிகாரியான திரு.அப்பண்ணாசார்யர் அனேக பஜனா மண்டலிகளை ஏற்படுத்தினார். திருப்பதி திம்மப்பனின் தங்க வாயிலில் மண்டலி பெண்களை நிறுத்தினார். இந்த ப்ராஜெக்டின் அலுவல் சமிதியில் ருக்மிணி கிரிமாஜி அவர்கள் சேவை செய்தார்.

பெங்களூரு மல்லேஸ்வர 8ம் க்ராஸ்ஸில் இருக்கும் ஆஞ்சனேய ஸ்வாமி மாத்வ சங்கத்தில் 20 ஆண்டுகள் பல நிகழ்ச்சிகளை நடத்தினார். ருக்மிணி கிரிமாஜி அவர்கள் லௌகிக மற்றும் அலௌகிக சேவைகளை செய்து, பற்பல பரிசு / சான்றிதழ்களைப் பெற்று கௌரவிக்கப்பட்டார்.

பள்ளியில் வேலை செய்தபோதே, ‘மிகச்சிறந்த ஆசிரியை’ விருதினை மூன்று முறை பெற்றவர் இவர். ‘ரெட் க்ராஸ்’ விருதும் பெற்றிருந்தார். மேலும் ஹரிதாச சாகித்ய சேவையினால் ஏகப்பட்ட விருதுகளைப் பெற்றிருந்தார். ‘மாத்வ ஸமாஜஸேவா ரத்ன’, ‘ஸாஹித்ய-ஸம்ஸ்கிருதி ப்ரசார ப்ரவீண’, ‘ஸாஹித்ய ஸம்ஸ்க்ருதி ஸரஸ்வதி’, ‘குருகோவிந்ததாச ப்ரஷஸ்தி’ போன்ற பல பட்டங்களையும் பெற்றார் ருக்மிணி அவர்கள்.

ஆனால் இன்று ருக்மிணி கிரிமாஜி அவர்களின் சிந்தனை மட்டும் நம்மிடம் இருக்கிறது. ஆண்டு 2021 வைசாக சுத்த த்ரயோதசி – ஸ்ரீநரசிம்ம ஜயந்தி அன்று ருக்மிணி அவர்கள் இறைவனடி சேர்ந்தார்.

## *** கல்கலி அவ்வா (1670 – 1760) ***

16-17ம் நூற்றாண்டுகளில் ஹரிதாசர்களுக்கு இருந்த ஸ்வாதந்த்ர்யம் சிறிதுகூட ஹரிதாசினிகளுக்கு இருந்திருக்கவில்லை. மதுகர விருத்தி செய்ய ஸ்வாதந்த்ர்யம் இல்லாமல், ஹரிதாசினிகள், வேறொருவரின் ஆதரவில் வாழும் நிலையே இருந்தது. ஹரிதாசருக்கு கிடைத்த கல்வி, குரு உபதேசம் ஆகியவை ஹரிதாசினிகளுக்கு கிடைக்கவில்லை.

சமீப காலமாகவே, ஹரிதாசினியர்களின் வாழ்க்கை மற்றும் கீர்த்தன சாகித்யத்தை கண்டுபிடிக்கும் வேலை துவங்கியிருக்கிறது. அதன்படி தாச சாகித்யத்தில் இப்போது கிடைக்கும் ஆதாரங்களினால் ‘ரமி

அரஸு', 'ராமேஷ' அங்கிதத்தில் கீர்த்தனைகளை இயற்றும் ரமாபாய் அவர்கள் முதலாம் ஹரிதாசினி எனப்படுகிறார்.

கொப்பள தாலூக்கின் போகாபுர கிராமத்தின் கணக்காளரின் மகளான 12 வயது ரமாபாயின் திருமணம் பாகலகோடேயின் கலகலி கிராமத்தின் 90 வயதான முத்கலாசார்யருடன் ஆயிற்று. கன்னட மற்றும் சம்ஸ்கிருத என இரு மொழிகளில் பண்டிதராக இருந்த முத்கலாசார்யார் அந்த ஊரில் நற்பெயர் பெற்றிருந்தார். புகழ்பெற்றிருந்த கல்கலி வம்சத்தவரான முத்கலாசார்யர் மற்றும் ரமா தம்பதிகளை ஊரின் மக்கள் 'அப்பா, அவ்வா' என்றே கௌரவித்து அழைத்தனர்.

துரதிருஷ்டவசமாக, திருமணம் நடந்த 8 நாட்களிலேயே ரமாபாய் விதவையானார். ஆசார்யர் முன்னர் கூறியிருந்ததைப் போல, அவருடைய மக்களே கல்கலி அவ்வாவிற்கு குரு ஆனார். சமையில் செய்யும் சமயத்தில், காதால் சாஸ்திர பாடங்களைக் கேட்டே, பண்டிதர் ஆனார் அவ்வா. நியாய சாஸ்திரத்தில் பாண்டித்யம் பெற்று பல வித்வாம்சர்களை வாதத்தில் வென்ற சாமர்த்தியம் இவருடையது. ஒரு முறை ஆசார்யரின் மக்கள், பேஷ்வாவிடம் வாதத்தில் தோற்கும் நிலை வந்தபோது, அவ்வாவின் உதவியுடன் வென்றனர் என்று சொல்லப்படுகிறது. பேஷ்வாவின் தர்பாரில் நடந்த வாதத்தில் வென்று பரிசினை வென்றார். மைசூர் அரசனிடமிருந்தும் சன்மானம் பெற்றவர் ஆனார். அவ்வாவின் புகழுக்கு இதைவிட அதிக விவரணை தேவையில்லை.

கல்கலி அவ்வாவின் கிருதிகள்:

கல்கலி அவ்வா 'ராமேஷ', 'ரமி அரஸு' என்னும் அங்கிதத்தினால் சுமார் 262 கீர்த்தனைகளும் மற்றும் அவருடையது என்று அடையாளம் சொல்லப்படும் தீர்க்க கிருதிகளும் கிடைத்திருக்கின்றன.

(18ம் பக்கத்தில் தொடரும்)...

| தொடர் | ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி |
|---|---|
| | **17. ஸ்வகத ஸ்வாதந்த்ர்ய ஸந்தி** |

| | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | 19 | | 2 | | | | | | 20 | | | 21 | |
| | | | | | | | | | | | | | | | |
| | | 3 | | | | | | | | 4 | | | | | |
| | | | | | | | | 22 | | | | | | | 15 |
| | | | | 5 | | | | | | | | | | | |
| 6 | | | 23 | | 28 | | | | | | | | | | |
| | | 7 | | | | | 8 | | | | | | | | |
| 9 | | | | | | | | | | 10 | | | | | |
| | | 11 | | | | | | | | | | | | | |
| | | | | 24 | | | | | | 12 | | | | | |
| | | 25 | | 13 | | | | | | | | | | | |
| | | | | | | | | | | | | | 16 | | |
| 14 | | | | 26 | | | 29 | | | 27 | | | 17 | 30 | |
| | | | | | | | | | | | | | | | |
| | 31 | | | | | 18 | | | | | | | | | |

**இடமிருந்துவலம்:** 1.ப்ரஹ்மனின் தந்தை(4), 2.ஜீவர்களை ஸ்ருஷ்டித்து ரக்ஷிப்பவர்(5), 3.ஓடாடுவது(4), 4.மனைவிகள் (5), 5.ப்ரஹ்மனின் வேறு பெயர்(7), 6.ஸ்ரமமில்லாமல் அல்லது கஷ்டமில்லாமல்(4), 7.கோபாமானிகள்(3), 8.காலம்(3), 9.க்ஞானிகள்(3), 10.பொறாமை(4), 11.சூரியன்(3), 12.தாய் மாமனான

கம்ஸனை கொன்றவன்(6), 13.கால் பாகம் குறைவான ஐந்து(6), 14.பத்து விதமான(4).

**வலமிருந்துஇடம்**:13.தேவேந்திரனை இப்படியும் தாஸர் கூறுகிறார்(5), 15.மன்மதன்(3), 16.மனதின் விஹாரங்களுக்கு அபிமானி தேவதைகள்(5), 17.கணக்கிலடங்காத(4), 18.சூரியன்(4).

**மேலிருந்துகீழ்**:1.எங்கும் நிறைந்த பரமாத்மா(3), 6.ஸமுத்திரம்(4), 19.இருட்டு(3), 20.தாமரை இலை(6), 21.ஜகத்குரு. கலைந்துள்ளது(4), 22.வித்வாம்ஸர்கள்(6), 23.தடாகம்(4), 24.கால் பாகத்துடன் கூடிய ஐந்து(4), 25.மூன்று வித ஜீவர்களில் ஒருவர்(4), 26.அபிமானி தைத்யர்கள் பெறும் பலனில் ஒன்று கடைசி எழுத்து இல்லை(3) ,27.ப்ரகிருதி அபிமானி(3).

**கீழிருந்துமேல்**: 10.ஆச்சாரியார் மத்வருக்கு ப்ரியமானவன்(7) 17.இந்திரன்(6), 28.ருத்ரன், கலைந்துள்ளது (6), 29.பயமற்றவன்(4), 30.பாப புண்ணியங்கள் இரண்டும்(6), 31.இந்த குணத்தின் அபிமானி தேவதை துர்கா(3).

குறுக்கெழுத்துப் போட்டிகளை வடிவமைத்துக் கொடுப்பவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி

குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam @ gmail.com / அல்லது 89044 58276 க்கு வாட்சப் செய்யலாம்.

செப்டம்பர் 2021 மாதத்தின் ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டிக்கு சரியான பதில் எழுதி புத்தகப் பரிசினைப் பெறுபவர்கள் : 1. திருமதி. ஷாந்தி பத்மனாபன், திருநெல்வேலி 2. திருமதி. சந்திரா, கோவை. 3. திருமதி. ஜெயஸ்ரீ ராமசந்திரன், சென்னை 4. திருமதி. லலிதா, திருநெல்வேலி 5. திருமதி. கீதா ராமசந்திரன், திருநெல்வேலி

(15ம் பக்கத்திலிருந்து தொடர்கிறது)...

1. ஜோகுளத ஹாடு: 58 நுடிகளைக் கொண்ட தீர்க்க கிருதி. பாலகிருஷ்ணனை தொட்டிலில் போட்டு, தொட்டில் சாஸ்திரத்தை பகுதி பகுதியாக வர்ணிக்கும் அழகிய பாடலாக இது உள்ளது. உடன், ஸ்ரீஹரியின் தசாவதாரத்தின் வர்ணனை மற்றும் கேசவாதி 24 நாமாவளிகளும் இதில் உள்ளன.

2. ஸேதுபந்தன ஹாடு: ராமனின் சேவகன் ஹனுமன் மற்றும் கிருஷ்ண பக்தன் அர்ஜுனனின் நடுவே நடக்கும் வாக்குவாத ரூபத்தில் உள்ள தீர்க்க கிருதி இது. ராமனே சிறந்தவன் என்று வாதிக்கும் மாருதி; கிருஷ்ணனே சிறந்தவன் என்று வாதிக்கும் அர்ஜுனன்; இவர்கள் இருவரின் வாக்குவாதத்தில் அர்ஜுனன் தோற்கிறான். தோற்ற அர்ஜுனனில் த்வஜத்தில், மாருதி தானே வந்து அமர்கிறான் என்று சொல்லி, இப்படியாக இந்த கதை முடிகிறது.

அவ்வா, தனது ஒரு கிருதியில் ‘பல்லித குருகள, எல்ல ஹிரியர தயதி பல்லஷ்டு தத்வ ரசிஸிதெ’ என்று சொல்லி தம் பணிவினை வெளிப்படுத்தியுள்ளார். ‘முய்யத ஹாடுகளு’ இவரின் கிருதிகளில் விசேஷமானவை.

இந்த பாடலில் முய்ய (பரிசு) கொடுத்தது, முய்ய திரும்ப வந்தது என இரு பாகங்கள் உள்ளன. இந்த பாடலில் சாகித்யத்தில் வாக் சாதுர்யம், வினோதம், பூடகமான பதில், ஆகியவை மிகவும் அழகாக வந்துள்ளது. த்ரௌபதி, ருக்மிணி, சுபத்ரை, ஸத்யபாமை, கங்கை, கௌரி, விஷ்ணு, சிவ – இந்த பாத்திரங்களின் நடுவே நடக்கும் பேச்சுவார்த்தையின் அழகு மற்றும் ஸ்ரீஹரியின் மகிமையை நிரூபிப்பது மனதை ஈர்ப்பதாக இருக்கிறது.

முய்ய கொடுக்கும் மங்கள காரியத்தில் பாண்டவர்கள், சுபத்ரை, த்ரௌபதியர்களின் பாத்திரம் மட்டுமல்லாமல், தேவானு தேவதைகள், தும்புரு நாரதர், ஸித்தர், நாடக காரர்கள் ஆகியோரும் இருக்கின்றனர் என்பது விசேஷம். முய்யத்தின் வாதத்தில் தன்னை வெல்ல வைக்க வேண்டும் என்று ஸ்ரீ ஹரியை அவ்வா பிரார்த்தனை செய்திருப்பது அழகாக இருக்கிறது. பாண்டவர்களின் பக்தி, கிருஷ்ணனின்

வாத்ஸல்யம், இந்த பாடலில் அற்புதமாக வந்திருக்கிறது. (தொடரும்)...

தொடர்

**கன்னட கிரந்தங்கள் அறிமுகம்**

**தத்வ சுவ்வாலி**

**(சென்ற இதழின் தொடர்ச்சி)**

29 முதல் 36 வரையிலான பத்யங்களிலே, ஸ்ரீ துளஸி தேவியை ஸ்தோத்திரம் செய்யும் விதத்தில், ஸ்ரீ துளஸியானவள் விஷ்ணுவின் கண்களிலிருந்து வந்த ஆனந்த பாஷ்பத்தில் இருந்து தோன்றி 'ஸ்ரீ துளஸி' என்று பெயர் பெற்றதையும், நம்மிடம் கருணை கூர்ந்து, மிகப்பெரிய பாதகங்களைப் போக்கி, ஸம்ஸார ஸாகரத்திலிருந்து விடுவித்து அருளும்படி கைகூப்பி வேண்டி, பிரார்த்தனை செய்து, "அபி வந்திஸுத ஜனரு ஸூரிந்த நரரிந்த வந்தயராகுவரு ஜகதொளு" முதலான பத்யங்களினாலே ஸ்ரீ துளஸியை துதிப்பவர்கள் மோக்ஷத்தையும் அடைவர் என்பதாக பலன்களையும் குறிப்பிட்டுள்ளார் தாஸர்.

37 முதல் 51 வரையிலான பத்யங்களிலே , ஸ்ரீ ருத்ர பகவானைத் துதிக்கும் படியாக, இந்திராதி தேவதைகளால் பூஜிக்கப்படும் ருத்ர பகவானிடம், நமக்கு வைராக்கியத்தையும், நமது மனமெனும் வீட்டில் அமர்ந்து ஸுகத்தையும் அருளி, நமது அபராதங்களை மன்னித்து, ஞானத்தையும், மனமானது ஸ்ரீ ஹரியிடம் த்ருடமாக இருக்கும்படியான பக்தியையும், குருவாக இருந்து ஜகன்னாத விட்டலனின் மஹிமைகளை நமக்குத் தெரியப்படுத்தி, தியானத்தை அருளும்படியாகவும் வேண்டி, காலையிலே எழுந்து பக்தியுடன் மஹாதேவனின் மஹிமைகளைப் படிப்பவர்களை ஜகன்னாத விட்டலன் ரக்ஷிக்கிறான் எனும் பலஸ்ருதியையும் கூறி, "பூதநாதன குண ப்ரபாத காலதலெத்து ப்ரீதி பூர்வகதி படிஸுவ | படிஸுவர ஜகன்னாத விட்டலனு ஸலஹுவ ||" முதலான பத்யங்களில் விவரித்துள்ளார் தாஸர்.

52 முதல் 97 வரையிலான பத்யங்களில், விஸ்தாரமாக ஸ்ரீ வாயு பகவானின் மஹிமைகளை வர்ணித்து, பிரார்த்தனை செய்யும் விதத்தில், "ஹனும பீமானந்த முனிராய என்ன துர்குணகளெணிஸதலெ ஸலஹெந்து" எனத் தொடங்கி, வாயு பகவானின் மஹிமைகளைக் கூறும் விதத்தில், பிரம்ம பதவியில் அமர இருப்பவரும், 24 தத்வங்களின் அபிமானி தேவதைகளையும் ஆளும் சக்தி கொண்டவரும், அனைத்து சேதனருள்ளும் பாரதி தேவியுடன் எண்ணற்ற ரூபங்களில் இருந்து காப்பவரும், அனைவரிலும் 21600 முறை ஹம்ஸ சுவாச ஜபத்தை செய்து,

மூன்று விதமான ஜீவர்களுள்ளும் அவரவர்களின் யோக்யதைக்கு இணங்க காரியங்களைச் செய்வித்து, ஞானம் மற்றும் பலன்களை அருள்பவரும், ஹாலாஹல விஷத்தை உண்டு ஜீரணித்து அனைவரையும் காப்பாற்றியவரும், தோல்வியற்றவருமான ஸ்ரீ வாயு பகவானிடத்தில் அவரது பாத கமலங்களைப் பணிந்து வேண்டி, நவவித பக்தியையும் த்ருடமாக அருளும்படியும், பயங்களைப் போக்கி, நமக்கு புத்தி, பலம், கீர்த்தி, நோயற்ற வாழ்வு முதலானவற்றை அருளி, தாபத்ரயங்களை பரிஹரித்துக் காப்பாற்றும்படியாக, "புத்தி பல கீர்த்தி பரிஸுத்த பக்தி ஞான ஸத்வைர்ஜாட்ய ஆயுஷ்ய | ஆயுஷ்யவித்த பிவ்ருத்தி யைதிஸுவி பவமான ||" முதலான பத்யங்களினால் ப்ரார்த்தனை செய்கிறார் தாஸர். மேலும் இப்பேற்பட்ட வாயுபகவானின் மூல அவதார ரூபங்களை மனதில் ஒருமுறை நினைப்பதாலேயே பல பிறவிகளில் செய்த பாவங்கள் பரிஹாரமாகி விஷ்ணு லோகத்தில் வாஸம் கிட்டும் என்றும் விவரித்து, முக்ய ப்ராணரின் 3வது அவதாரமான ஸ்ரீமன் மத்வாசார்யாரின் சரித்திரத்தை, அவதார காரியங்களை வர்ணித்து, நம்முடைய ஸம்ஸார துக்கத்தை பரிஹாரம் செய்யும்படி, "மாதரிஸ்வனே, என்ன மாத லாலிஸி ஜகன்னாத விட்டலன மனதல்லி |மனதல்லி தோரி பவ பீதி பிடிஸய்ய பவ்யாத்ம ||" எனும் பதங்களினாலே பிரார்த்தித்து பூர்த்தி செய்கிறார் தாஸர்.

98 முதல் 106 வரையிலான பத்யங்களில் பிரம்மதேவரை ஸ்தோத்திரம் செய்யும் தாஸர், ஸத்ய லோகத்தில் வாஸம் புரிபவரும், ஸ்ரீலக்ஷ்மி நாராயணரையைத் தமது தாய் தந்தையாகக் கொண்டவரும், 14 உலகுக்கும் அதிபதியானவரும், ஸரஸ்வதியின் பதியும், கருட ஸேஷ ருத்ரர்களுக்கு தந்தையானவரும், 200 பிரம்ம கல்பங்கள் தபஸு மேற்கொண்டு பிரம்ம பதவியை அடைந்தவரும், தத்வாபிமானி தேவதைகளின் அந்தர்யாமியான பிரம்மதேவரிடம் நிரந்தரமான ஹரிபக்தியை அருளி துக்கம், அஞ்ஞானத்தினால் வருகின்ற கஷ்டங்களைப் பரிஹரித்து, மாயாவாத மதத்தைப் பின்பற்றாதபடி அருள்புரிய வேண்டும் என்பதாக "த்விஷத கல்பதி தபவெஸகி அஸூதேவ பொம்பஸிரபத படெதெ ஹரியிந்த", "மகாலக்ஷ்மி ஜனனி புருஷோத்தமனெ ஜகைனெனிஸூவ" முதலான பத்யங்களினாலே துதித்து, இறுதியில் ப்ரம்ம தேவரின் ப்ரீதி ஒன்றிருக்க ஜகன்னாத விட்டலனின் கருணையைப் பெறுவதற்கு அதுவே காரணமாகும்.

ஆதலால் நரக துக்கம் தமக்கு வந்திடினும் பயமில்லை என்பதாக தாஸர் உணர்வுப்பூர்வமாக போற்றியுள்ளார்.

107 முதல் 117 வரையிலான பத்யங்களிலே தாஸர் , ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் ஸ்ரீ-பூ-துர்க்கா ரூபங்களைத் துதிக்கும் விதத்தில், ஸ்ரீ மஹாலக்ஷ்மியானவள் பிரளய காலத்தில் ஸ்ரீ மன் நாராயணன் சயனிக்கும் வடபத்ரமாக சேவை செய்பவளும், ஸாத்வீக, ராஜஸ மற்றும் தாமஸ குணங்களின் நியாமகளும், பகவானின் வக்ஷஸ்தளத்தில் வாஸம் புரிபவளும், மந்தகாஸத்துடன் கூடிய முகத்தினை உடையவளும், முக்தர்களால் வணங்கப்படுபவளும், ஸ்ரீ ஹரிக்கு ஆபரண ரூபமாகி, வஸ்திராதி ரூபங்களைத் தரித்து சேவை புரிபவளும் , ஸ்ரீ ஹரியிடமிருந்து மஹதாதி தத்வங்களை கர்பத்தில் தரித்து ப்ரமாண்டத்தைப் படைத்தவளுமான ஸ்ரீ மஹாலக்ஷ்மியை ஸ்தோத்திரம் செய்து, அவளது கருணையை மனமுருக வேண்டி "ஸ்ரீ லக்ஷ்மி மஹாமஹிமளெ மெகெ தயவாகெ", "கமலதளாயதாக்ஷி நோடு தயதிந்த விதிமாதெ லோக ஸூந்தரியே நீ நோடே தயமாடே" முதலான பத்யங்களினாலே வேண்டித் துதிக்கிறார் தாஸர்.

118 முதல் 136 வரையிலான பத்யங்களிலே 'ஸ்ரீ ருக்மணிவிலாஸ' என்பதாக ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா ஸ்ரீ ருக்மணியிடம் கலஹ லீலை புரிந்தபோது அவர்களிடையே நடக்கும் உரையாடல் மூலமாக, ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் மஹிமைகளைப் புகழும் ஸ்ரீ மத்பாகவதப் பகுதிகளை தாஸர் இங்கு விவரித்துள்ளார். ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா ஒருமுறை ருக்மணி தேவியுடன் மஞ்சத்தில் அமர்ந்தபடி, ராஜ்யத்தை ஆளாது கடல் நடுவே வாழும் தன்னை மணந்ததன் காரணமென்ன என விளையாட்டாகக் கேட்க, அதற்கு ஸ்ரீ ருக்மணி தேவி பதிலுரைக்கும் விதமாக, தன்னை மனைவியாக ஏற்றுக் கொண்டது பகவானின் கருணை எனவும், அதனாலேயே தான் 'நித்ய முக்தள்', 'அக்ஷர' எனக் கொண்டாடப்படுவதாகவும், பிராக்ருத குணங்களின் தொடர்பற்ற பகவானின் மஹிமைகளைத் தம்மால் முழுவதுமாக் கூற இயலாது என்றும், தனது பதியின் அருளாலேயே பிரம்ம ருத்ராதி தேவதைகளையும் சிருஷ்டித்து, காத்து அழிக்கும் காரியத்தை தாம் புரிவதாகவும் கூறி, பகவானின் மஹிமைகளை பறைசாற்ற ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா புன்னகை பூத்து ப்ரேமையுடன், ஸ்ரீ ருக்மணி தேவி என்றென்றும் தமது கருணைக்கு பாத்திரமானவர் என்று பதில் அளித்த விதத்தை தாஸர் வருணிக்கிறார். இத்தகைய ஜகன்னாத விட்டலன் நமது தந்தை, ஸ்ரீ மஹாலட்சுமி நமது தாய், பிரம்மதேவர் நமது குரு

என்பதாகக் கூறி, ஸ்ரீ ருக்மணி விலாஸத்தின் இப்பகுதியில் வர்ணிக்கப்பட்டுள்ள பகவானின் லீலைகளைப் படிப்பவர்களுக்கு அவரவர்களின் அபிலாஷைகளை பகவான் நிறைவேற்றுகிறான் என்பதாக பலஸ்ருதியையும் கூறி, "தோஷ வர்ஜித ருக்மணீஷன விலாஸ ஸந்தோஷதலி படிஸித | படிஸிதந்தவர அபிலாஷ பூரயிஸி ஸலஹுவ ||" முதலான பத்யங்களினால் நிறைவு செய்கிறார் தாஸர்.

137 முதல் 178 வரையிலான பத்யங்களிலே 'ஸ்ரீ கிருஷ்ண ஸ்துதி' என்பதாக தாஸர் பாகவதாதி கிரந்தங்களில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் அவதார லீலைகளை, அதிலும் குறிப்பாக பகவான் தன் பக்தர்களுக்கு கருணையுடன் அருள்புரிந்ததை விளக்கும் வகையில், "ஞான ஸுக்ஞான ப்ரக்ஞான விக்ஞானமய மாணவக ரூப வஸுதேவ | வஸுதேவ தனய ஸுக்ஞானவனு கொட்டு கருணிஸோ ||" எனத் தொடங்கி, ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா பூதேவியின் பிரார்த்தனைக்கிணங்க, பூபாரத்தைக் குறைக்கும் பொருட்டு யாதவ குலத்தில் அவதரித்தது, நந்தகோபரின் இல்லத்தை அடைந்து, பூதனை ஷகடாஸுரன் முதலான அஸுரர்களைக் கொன்றது, கோபாலகனாகி பசுக்களை மேய்த்தது, தேவேந்திரன் இடைவிடாது மழை பொழிய பக்தர்களை காத்தது, கம்சனைக் கொன்று தாய் தந்தையரை விடுவித்தது, உக்ரஸேனருக்கு முடிசூட்டி அனுக்ரஹம் புரிந்தது, ஸத்யபாமா தேவிக்கு பாரிஜாதம் அளித்தது, கைப்பிடி அவலுக்கு குசேலனுக்கு ஸம்பத்தைக் கொடுத்தது, சந்தனம் அரைத்த குப்ஜைக்கும் அருள் புரிந்தது, த்ரௌபதியின் மானம் காத்தது முதலான லீலைகளை வர்ணித்து, பகவானின் காருண்யத்தைப் பற்றி எடுத்துக்கூறி, முக்கியமாக ஸாஸ்திர வசனங்களை உரைக்கும் விதத்தில் தாஸர் மேலும் தொடர்ந்து பகவானின் ஸ்வதந்த்ர தத்துவம், வ்யாப்த தத்துவம், ஜீவர்களை அவரவர்களின் யோக்யதை மற்றும் கர்மங்களுக்குத் தகுந்தபடி பந்தனப்படுத்தி, அவர்களுள் இருந்து காரியங்களை செய்து செய்வித்து, தான் மட்டும் பந்தனத்திற்குக் கட்டுப்படாமல் இருக்கும் நிலை, அனைவருள்ளும் அந்தர்யாமியாக இருத்தல் முதலான தத்துவங்களை எடுத்துக்கூறி, பகவானிடத்தில் பிரார்த்தனை செய்யும் விதத்தில், இந்திரியங்கள் அலைபாயாமல், பகவத் சேவையில் ஈடுபடவும், பகவானின் சரணங்களை பற்றியவர்களை காக்கும்படியும் வேண்டுவதாக, "பாஹி கருணா ஸாகரணே பாஹி லக்ஷ்மிரமண பாஹி கோபால குணஷீல" முதலான பத்யங்களனாலே துதித்து, ஜகன்னாத

விட்டலனை தினந்தோறும் ஸ்மரிக்கும்படியாக அறிவுறுத்தி தாஸர் இப்பகுதியை பூர்த்தி செய்கிறார்.

(தொடரும்)... **S.லக்ஷ்மிபதிராஜா, சென்னை**

**தொடர்**

## ஸ்ரீவியாசராஜரைப் பற்றிய கட்டுரைகள்

### வாழ்க்கை வரலாறு

பாரதத்தில் சனாதன தர்மத்தின் மறுமலர்ச்சி விஷயத்தில் மாத்வ யதிகளின் பங்கு எதுவுமே இல்லை என்று பலர் அவ்வப்போது சொல்வதை கேட்கிறோம். வித்யாரண்யர், ஹக்க-புக்கர்களால் விஜயநகரத்தை நிறுவி சனாதன தர்மத்தின் மறுமலர்ச்சிக்கு வித்திட்டத்தை நாம் படித்திருக்கிறோம். ஆனால் அதைப் போலவே வியாசராஜரின் வாழ்க்கையை வரலாற்றுப் பார்வையில் இன்னும் அதிகம் படித்தால், இவரின் பங்கும் இந்த விஷயத்தில் மிகவும் அதிகமானதே என்று தெரிய வருகிறது.

வியாசராஜர் சாளுவ நரசிம்ம தேவராய, திம்ம பூபால, துளுவ நரஸனாயக, வீர நரசிம்மராய, கிருஷ்ண தேவராய, அச்யுத தேவராய என்னும் விஜய நகர அரசர்களுக்கு 50 ஆண்டு காலங்களுக்கும் மேலாக வழிகாட்டியாக, ராஜகுருவாக இருந்திருக்கிறார். புரந்தரதாசர், கனகதாசர்களுக்கு ஆத்யாத்ம குருவாக தம் அரசில் பக்தி மார்க்கம் பரவி மக்களின் மனதில் நன்றாக வேரூன்றி வளருமாறு செய்தார். அரசர்கள் அனைவரும் தம் ஆலோசனையைக் கேட்கும் நிலையில் இருந்தாலும், எந்தவொரு பொருளுதவியும் அவர்களிடமிருந்து பெறாமல், கிருஷ்ணனின் பக்தியில் ஈடுபட்டு வைராக்கியத்தின் உச்சத்தில் ஒளிர்ந்திருந்தார்.

வியாசராஜரின் இந்த சிறப்பான வாழ்க்கை சரிதத்தை, சோமநாத கவி, தன் 'வியாஸயோகி சரிதம்' என்னும் காவியத்தில் விளக்கியிருக்கிறார். சோமநாதன், வியாசராஜரின் சமகாலத்தவர் என்பது இதில் குறிப்பிடத்தக்க விஷயம். அச்யுத தேவராயனின் ஆட்சிக் காலத்தில் நாராயண யதிகள் அவனை வியாசராஜருக்கு அறிமுகம் செய்து வைத்தார் என்று சோமநாதரே இந்த காவியத்தின் கடைசியில் சொல்லியிருக்கிறார். சோமநாதர் ஒரு ஸ்மார்த்த பிராமணர். ஆனாலும், இவர் தன் சித்தாந்தத்தின் விரோதிகளாக

இருந்த வியாசராஜரின் வாழ்க்கை வரலாற்றை எழுதினார் என்பது மேலோட்டமாக பார்க்கையில் வியப்பாக இருந்தாலும், வியாசராஜர் சித்தாந்தத்தை கவனிக்காமல், வித்வத்-பட்சபாதிகளாக இருந்தார் என்பதை அறியும்போது இது சகஜமே எனத் தோன்றுகிறது.

சோமநாதர் தன் கலைகளால் மிகவும் புகழ்பெற்று, தன் பயணத்தில் அனைத்து அரசர்கள், பேரரசர்களிடமிருந்து பரிசுகளை ஏற்றுக் கொண்டவாறு வந்தபோது, நாராயண யதிகள் வியாசராஜரின் ஆணைப்படி ஒரு கடிதத்தை எழுதினார். ‘உங்கள் பயணம் வெற்றியடைந்ததற்கு ஸ்வாமிகள் மிகவும் மகிழ்ச்சி அடைந்திருக்கிறார். ஆகவே உங்களை வெகு சீக்கிரம் காண்பதற்கு ஆவலாக உள்ளார்’. சோமநாதர் இந்த கடிதத்தை தன் பண்டித நண்பர்களிடம் காட்டி மகிழ்ச்சி அடைந்து, பக்தி பரவசத்துடன் இவ்வாறு கூறுகிறார். ‘மிகவும் சிறியவனான இந்த கவியின் விஷயத்தில் தவஸ்ரேஷ்டரான நாராயண யதிகளின் அபாரமான வாத்ஸல்யம் மிகவும் வியப்பினைக் கொடுக்கிறது’. பிறகு விஜய நகரத்திற்கு வேகமாக வந்து வியாசராஜரை அரசவையில் சந்திக்கிறார். இவரின் காவிய பாண்டியத்தை மெச்சி, அரசின் ஆஸ்தானத்தில் பாராட்டுகிறார் வியாசராஜர். இதனை கவி, தன் காவியத்தில் மேற்கோள் காட்டுகிறார்.

இத்தகைய இந்த காவியத்தினை 1926ம் ஆண்டில், வெங்கோபராவ் என்பவர், விளக்கமான நீண்ட ஆங்கில முன்னுரையுடன் வெளியிட்டார். இந்த கையெழுத்துப் பிரதியை, மிகவும் ஆவலுடன் பெங்களூருக்கு தருவித்த அன்றைய வியாசராஜ மடத்தின் அதிகாரியான ஸ்ரீனிவாஸமூர்த்தி அவர்களை, வெங்கோபராவ் மிகவும் புகழ்ந்திருக்கிறார். இப்படியாக இந்த பிரதி பெங்களூருக்கு வந்த சில வாரங்களில் வந்த காவேரி வெள்ளத்தில் இந்த கிரந்தம் அடித்துக் கொண்டு போகும் நிலை வந்தது. ஆனால் ஸ்ரீவியாசராஜரின் ஆசிர்வாதத்தினாலேயே இந்த கிரந்தம், பல நூற்றாண்டுகளுக்குப் பிறகும், அழியாமல், அந்த கிரந்தத்தின் பெயரினால் தப்பித்து வந்திருக்கிறது என்னும் அபிப்பிராயத்தை முன்னுரையில் தெரிவித்திருக்கிறார் சோமநாதர்.

வியாசராயர் தென்னிந்தியாவில் சஞ்சாரம் செய்தவாறு காஞ்சியில் சில ஆண்டுகள் வசித்திருந்தார். பிறகு, ஸ்ரீபாதராஜரை சந்திப்பதற்கு

முளபாகல் வந்தார். அங்கு சில ஆண்டுகள் அவரிடம் அத்யயனம் செய்தார். அந்த சந்தர்ப்பத்தில், சாளுவ நரசிம்மன் சந்திரகிரியை தலைநகராகக் கொண்டு ஆண்டுக் கொண்டிருந்தார். அந்த அரசன், ஸ்ரீபாதராஜரை, தன் ஆஸ்தானத்தில் வந்து இருந்து, திருப்பதியில் பூஜை ஏற்பாட்டினை பார்த்துக் கொள்ளும்படி பிரார்த்தித்தான். ஆனால், ஸ்ரீபாதராஜர், தாம் செல்லாமல், ஸ்ரீவியாசராஜரை சாளுவ நரசிம்மனின் ஆஸ்தானத்திற்கு செல்லுமாறு பணித்தார்.

சன்யாசிகள் குடை, சாமர சேவைகள் ஏற்றுக் கொள்வது என்பதற்கு ஆசார்யரின் சம்மதம் இல்லையே என்று சிலருக்கு சந்தேகம் வரலாம். ஸ்ரீபாதராஜர், ஸ்ரீவியாசராஜர், ஸ்ரீவாதிராஜர்கள் ஆகியோர், சத்ர சாமர ஆகிய சேவைகளை பெற்றவர்களே. ஸ்ரீவியாசராஜரோ, அரசனின் குஹுயோகத்தை பரிகரித்தார் என்பதால் அரச சிம்மாசனத்தில் அமர்ந்து ராஜ்யபாரம் செய்தார் என்று இந்த காவியம் வர்ணிக்கிறது. ஸ்ரீமத்வாசார்யர் உபதேசித்த சன்யாச விதிகள், இந்த மஹாஞானிகளுக்கு தெரிந்திருக்கவில்லையா?

இத்தகைய சந்தேகங்கள் பின்னால் பலருக்கு வரலாம் என்று எண்ணியே, சோமநாத கவி, இத்தகைய பின்வரும் விளக்கத்தைத் தருகிறார். ஸ்ரீவியாசராஜருக்கு ஸ்ரீபாதராஜர் சொல்லும் வாக்கு இது.

தத்ர சர்வேஷாம் அபி தர்மாணாம் ராஜா ஸேதுரிதி ந்யாயேன ப்ஹவதா சர்வதா ததா ததாஸ்தானீஸ்தேயுஷா ப்ஹவிதவ்யம். புரா கில யோகினோ நிஸ்ஸங்கா அபி தர்மாணாம் ராஜா ஸேதுரிதி ந்யாயேன பவதா ஸர்வதா ததா ததாஸ்தானீஸ்தேயுஷா ப்ஹவிதவ்யம். புரா கில யோகினோ நிஸ்ஸங்கா அபி மஹாந்தோ தத்தாத்ரேயாதய: ஜகதுபகரணாய ராஜன்யஸபா லங்காரா: பபூவு: ||

இதன் விளக்கம்: அனைத்து தர்மங்களின் இருப்பிற்கும், அரசின் இருப்பு முக்கியம். ராஜ்ஜியம் நிலையாக இருக்க வேண்டுமெனில், ஆளுமையான அரசன் இருக்க வேண்டும். ஆக, அந்த அரசனுக்கு நம் தேவை இருப்பதால், நீங்கள் அவனின் ஆஸ்தானத்தில் இருக்கவேண்டும் – என்று கூறினார். பரமாத்மனின் தத்த அவதாரத்தின் உதாரணத்தைக் கொடுக்கிறார். இங்கு இந்த உதாரணம் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது.

கார்த்தவீர்யார்ஜுனன், தத்தரூபி நாராயணனின் சிஷ்யன். பரமாத்மன் இந்த அவதாரத்தில் பரம வைராக்யசாலியாக இருக்கிறான்.

ஆனாலும், கார்த்தவீர்யார்ஜுனனின் சேவகம், பக்திக்கு மெச்சி, ராஜ்யத்தின் மக்களின் நலன்களுக்காக அவன் கேட்கும் வரங்களை அருளினார். பிறகு, தத்தனே அவனின் பட்டாபிஷேகத்தை செய்விக்கிறான்.

நாராயணேனாபிஷிக்தோ தத்தாத்ரேயஸ்வரூபிணா – என்கிறது மார்க்கண்டேய புராணம். இதன் பலனால் கார்த்தவீர்யார்ஜுனன் 88,000 ஆண்டுகள் வரை அரசாண்டான். அவனின் ராஜ்யத்தில் திருடர் பயம் இல்லை. அவனின் மக்கள் ஆபத்தில் இருந்தபோது, கார்த்தவீர்யார்ஜுனனை நினைத்தால், அவன் உடனே வந்து காத்தான் என்று அவனின் ஆளுமையை மார்க்கண்டேய புராணம் வர்ணிக்கிறது. இதெல்லாம் தத்தாத்ரேயனின் அருள் பலனே ஆகியிருக்கிறது என்று கார்த்தவீர்யார்ஜுனன் தினமும் பரமாத்மனின் பூஜா புனஸ்காரங்களை செய்து வந்தான்.

இவ்வளவின் பின்னணியில் நாம் ஸ்ரீவியாசராஜரின் வாழ்க்கையை பார்க்க வேண்டும். அவர் ஸ்ரீபாதராஜரின் ஆணைப்படி, பிறகும்கூட தம் வாழ்க்கையில் அரசர்களுக்கு தேவை ஏற்படும் போதெல்லாம் அவர்களை அருளி, அவர்களை கஷ்டங்களிலிருந்து விடுபடச் செய்கிறார். சாளுவ நரசிம்ம தேவராயனின் பிரார்த்தனைப்படி திருப்பதியில் பூஜையின் பொறுப்பினை 12 ஆண்டுகள் காலம் ஏற்றுக் கொண்டு அருளினார். அவனின் மகனான தம்மராயனுக்கு வியாசராஜர், இந்திரனுக்கு ப்ருஹஸ்பதியைப் போல இருந்தார் என்று இந்த வாக்கியம் வர்ணிக்கிறது. 'கோவித குல ஸேவன குதூஹலினம் குருரிவ குலிஷபாணிம் க்ஷ்மாபதிம் அனுக்ருண்ஹான்.. தாம் புரீம் சிராதலமகரோத்'.

அதுவரை சந்திரகிரியில் இருந்த வியாசராஜர், துளுவ நரஸ நாயகனின் பிரார்த்தனைக்கேற்ப விஜய நகரத்திற்கு வந்தார். நரஸ நாயகன் தினமும் வியாசராஜரிடம் தர்மோபதேசம் பெற்று வந்தான். 'ஏவமேவ பக்த்யா ஸம்பாவயந்தம் ரஹஸ்யேனம் தர்மோபதேஷேன ப்ரத்யஹம் அனுக்ருஹ்ணன்'. வீர நரசிம்மன் கூட வியாசராஜரிடம் மரியாதை செலுத்து வந்தான். 'வசுதாதிபேன ஹம்ஸேனேவ கமலாகர: ப்ரத்யஹமுபஸேவ்யமான:' என்கிறார் சோமநாத கவி.

(தொடரும்...)

**மறக்க வேண்டாம்**

தொடர்

## கீசக வதெ - சிறு காவியம்

**ஸ்ரீவாதிராஜர்**

23 நுடிகளைக் கொண்ட இந்த தேவரநாம, ஸ்ரீமன் மகாபாரத விராட பர்வத்தில் வரும் 'கீசக வதெ' கதையை நிரூபிக்கிறது. ஸ்ரீமன் மகாபாரத பிரவசன சிரவணாதிகளை, விராட பர்வத்திலிருந்து துவக்கும் சம்பிரதாயம் இருக்கிறது. ஸ்ரீபாரதிபதிகளான ஸ்ரீவாயுதேவர், சர்வலோக குருகள். உபதேஷகர் என்னும் பிற அனைத்து குருகளில், அவர்களின் சித்த நியாமகராக நின்று, சர்வஜீவருக்கு ஸ்வயோக்ய ஸர்வவித ஞானோபதேஷகர் - இவரே. குருபக்தி இல்லாமல், முக்தி யோக்ய ஜீவருக்கு, ஹரிபக்தி கிடைப்பதில்லை. ஹரிபக்தி இல்லாமல் ஸ்ரீஹரி, பிரசன்னன் ஆவதில்லை. அது இல்லாமல் மோட்சம் இல்லை. ஆகையாலேயே ஜகத்குருகளான ஸ்ரீவாயுதேவரின் இரண்டாம் அவதாரமான ஸ்ரீபீமசேனனில், அவரே ஜீவோத்தமர் என்னும் ஞானமும், சிறந்த பக்தியும் உண்டாகி, ஸ்ரீவிஷ்ணு பக்தி உதயமாவதற்கு முன்னர், 'கீசக வதெ'யின் கதாசிரவணம் ஆகவேண்டும் என்று இந்த சம்பிரதாயத்தை துவக்கியவரின் நோக்கமாக இருக்கிறது.

கீசகன் விஷயாஸக்த புருஷர்களையும், அந்த விஷயங்களையும் புறக்கணித்து, (விஷய போகத்தின் ஆசையையும் விட்டு), ஸ்ரீஹரி கொடுத்த போகங்களை, பற்றற்றவர்களாக போகித்து, அதன் மூலமாகவும் ஸ்ரீஹரிப்ரீதியையே காட்டி, போக்ய வஸ்துகளின் பிராப்திக்காக அதிக முயற்சிகளை செய்யாதிருப்பதே வைராக்கியம் ஆகும். வைராக்கியம் இல்லாமல் ஞானம் இல்லை. அது இல்லாமல் ஹரிகுருகளில் பக்தி இல்லை. பற்பல போக்ய விஷயங்களில் 'ஸ்த்ரி'யே மிகவும் ஈர்ப்பதாகும். (ஸ்த்ரியர்களுக்கு புருஷன் ஈர்ப்பு). ஆகையாலேயே, தற்காலிக விஷயங்களின் ஆசையை விடவேண்டும் என்று திரும்பத்திரும்ப சொல்லப்படுகிறது.

விலக்கவேண்டிய விஷயங்களின் (பரஸ்த்ரி முதலான) ஆசைகூட அனர்த்தகமே ஆகிறது. அதற்காக செய்யும் முயற்சி மற்றும் அதன் சாட்சாத் போகம் அனர்த்தமே ஆகும் என்று சொல்லவும் வேண்டுமா?

பாரதி அவதாரளான த்ரௌபதியின் சங்கத்தை கீசகன் விரும்பினான். அதற்காக துஷ்ட முயற்சிகளை செய்தான். திரௌபதி, பரஸ்த்ரி மட்டுமல்ல. அவள் தேவதை. ஜகத்குருகளின் மனைவி. இந்த மகாபாவத்தினால், கீசகன் கொல்லப்பட்டான். தமஸ்ஸினை அடைந்தான். கீசகனால் குறியீடாக கருதப்படும் 'விஷயாஸக்தி'யின் அழிவு, ஸ்ரீவாயுதேவரால் மட்டுமே சாத்தியம். பிறரால் அல்ல. ஜீவோத்தமரான இவரின் காம-ஜய சாமர்த்தியம் ஸ்வபாவிகமானதாகும். ஆகையாலேயே, ஸ்ரீவாயுதேவரின் மகிமையை அறிந்து, அவரில் பக்தி செய்து, அவரின் அருளைப் பெறுவது, அனைத்து முமுக்ஷுகளின் கடமையாக இருக்கிறது.

**ராகம்: பைரவி தாளம்: ஆட**

**பீ$^4$மஸேன காமினியாத$^3$னு ||பல்லவி**

**பீ$^4$மஸேன காமினியாக$^3$லு**
**ப்ரேமத$^3$ ஸதிய காமிஸித$^3$வன**
**ஜா$^2$மராத்ரிகெ$^3$ ஸீளுவெனென்னுத**
**ஸாமஜவரத$^3$ன பாடு$^3$தலி ||அப**

பீமஸேன – பீமசேனன். காமினியாதனு – ஸ்த்ரீ வேடத்தை தரித்தான் (விஷய சுகத்தை விரும்புபவனுக்கு மட்டும் ஸ்த்ரீத்வ. பிறருக்கு அல்ல. இது இல்லாத பீமசேனருக்கு எங்கிருந்து வந்தது ஸ்த்ரீத்வ?). ப்ரேமத ஸதிய – ப்ரியபதியான திரௌபதியை. காமிஸிதவன – (அங்கசங்கத்தை விரும்பிய) கீசகனை. ஜாமராத்ரிகெ – இரவு நேரத்தில் (யாமம் கழிந்த இரவு நேரத்தில்). ஸீளுவெனென்னுத – கொல்வேன் என்று. பீமஸேன – பீமஸேனன். காமினியாகலு – ஸ்த்ரீ வேடத்தை தரித்து (அஞ்ஞாத வாசத்தில் இருந்த காரணத்தால் நிஜ ஸ்வரூபத்தை வெளிப்படுத்த). ஸாமஜவரதன – கஜேந்திர வரதனான ஸ்ரீகிருஷ்ணனை. பாடுதலி – வணங்கியவாறு (ஸ்த்ரீ வேடத்தை தரித்தான்.

எந்தவொரு காரியத்தையும் ஸ்ரீஹரிபூஜை என்றே அறிந்து, ஸ்ரீஹரி ஸ்மரணையுடன் துவக்குவது, ஸ்ரீபீமசேனனின் ஸ்வபாவம். ‘கரிஷ்யமாணானி ச தஸ்ய பூஜாம் ஸங்கல்பயாமாஸ ஸ ஷுத்த புத்தி:’ (மத்வ விஜயம்). அடுத்த செயல்களை ஸ்ரீஹரிபூஜை என்று சங்கல்பம் செய்யும் ஷுத்த அந்தக்கரணம் ஸ்ரீபீமசேனனுடையது.

**ராஜாதி$^4$ராஜனு க$^3$ஜபுரத$^3$ல்லி**
**ஜூஜனாடி$^3$ தம்ம ராஜ்யவனு ஸோது**
**விஜயமுக்$^2$யானுஜர ஒடகூ$^3$டி$^3$**
**பு$^4$ஜக$^3$ஷாயிய ப$^4$ஜிஸுத**

**ஸூஜிமொனெயஷ்டு கோ$^3$ஜில்லதெ$^3$ பே$^3$ரெ**
**வ்யாஜதி$^3$ந்த$^3$ ரூப மாஜிகொண்டு$^3$ போகெ$^3$**
**ராஜ மத்ஸ்யனொளு போ$^4$ஜனவ மாடு$^3$த**
**பூஜிஸிகொம்பு$^3$து$^3$ ஸோஜிக$^3$வு ||1**

ராஜாதிராஜன் – யுதிஷ்டிரன். கஜபுரதல்லி – ஹஸ்தினாபுரத்தில். ஜூஜனாடி – சூதாட்டம் ஆடி. தம்ம ராஜ்யவன்னு ஸோது – தம் அரசு, செல்வங்களை சகுனியின் கபடத்தால் இழந்து. விஜய முக்யானுஜர ஒடகூடி – அர்ஜுனாதி சகோதரர்களுடன். புஜக ஷாயிய பஜிஸுத – ஸ்ரீகிருஷ்ணனை தியானித்தவாறு. ஸூஜிய மொனெயஷ்டு பேரெ கோஜில்லதெ – ஊசிமுனை அளவிற்குக்கூட தன்னுடையது என்னும் இடம் இல்லாமல். (ஒப்புக் கொண்டதைப் போல, காட்டில் 12 ஆண்டுகளை கழித்து, பிறகு ஓராண்டு அஞ்ஞாத வாசத்தை செய்து, வேறு). வ்யாஜதிந்த – காரணங்களைக் காட்டி. ரூப மாஜிகொண்டு – தம் ஸ்வரூபத்தை மறைத்துக் கொண்டு (வேடங்களை தரித்து). போகெ - விராடனின் தலைநகருக்குச் சென்று. ராஜமத்ஸ்யனொளு – மத்ஸ்ய தேஷாதிபதியான விராடனுடன். போஜன மாடுத – அரசனுடன் ராஜபோகங்களை போகித்தவாறு. பூஜிஸிகொம்புது – யதி வேடத்தில் இருந்த தான், மரியாதைகளைப் பெற்றுக் கொண்டு வசித்திருந்தான். ஸோஜிகவு – வியப்பானது (அது கிருஷ்ணனின் கருணையே ஆகும்).

** அனைத்து பகவத் அவதாரங்களும் சேஷசாயியான ஸ்ரீ அனந்தபத்மனாப ரூபத்திலிருந்து வெளிப்பட்டிருக்கின்றன. ஸ்ரீகிருஷ்ணனும் அனந்தபத்மனாபனே. ‘ஏதேஸ்வாம்ஷகலா: பும்ஸ: கிருஷ்ணஸ்து பகவான் ஸ்வயம் (பாகவதம்). பலி சக்ரவர்த்தி அசுர ஆவேசத்தினால், ஷ்வேதத்வீபத்தில் படுத்திருந்த சேஷசாயியின்

கிரீடத்தை திருடிக் கொண்டு செல்ல, கருடன் அதை திரும்ப அவனிடமிருந்து பெற்று கொண்டு வர, நடு வழியில் கோமந்த பர்வதத்தின் மேல் படுத்திருந்த ஸ்ரீகிருஷ்ணனின் தலையின் மேல் வைத்து சமர்ப்பித்தான். அது ஸ்ரீகிருஷ்ணனின் தலைக்கு சரியாக பொருந்தியது என்று பாகவதம் சொல்கிறது. இதிலிருந்து ஸ்ரீகிருஷ்ணனே சேஷசாயி என்று தெரிகிறது.

** பஞ்ச பாண்டவர்களும், திரௌபதியும் ஒவ்வொருவராக விராடனிடம் வந்து சேர்ந்தார்கள். பாண்டவர்கள் காட்டிற்குச் சென்றுவிட்டதால், அவர்களுடன் இருந்த தாங்கள் பிழைப்பிற்காக இங்கு வந்திருப்பதாக கூறினர். அனைவரும் தேவயோக்ய தேஜஸ்ஸினால் ஒளிர்ந்து கொண்டிருந்தனர். இவ்வாறு இருந்தாலும், இவரே பாண்டவர்களோ என்னும் சந்தேகம் யாருக்கும் வரவில்லை. இது வியப்பான விஷயம் அல்லவா? எப்படியாவது, யாருக்கும் தெரியாமல் அஞ்ஞாத வாசத்திற்காக ஒரு தக்க இடத்தை சேர்ந்து கொண்டது, ஸ்ரீகிருஷ்ணனின் அருளே ஆகும். விராட நகருக்கு நுழையும் முன்னர், யாராலும் இவர்களை அடையாளம் கண்டு கொள்ள முடியாது என்று ஸ்ரீதுர்க்கை வரம் அளித்திருந்தார்.

**மானினி த்³ரௌபதி³ ஸ்ரேணிலி ப³ருதிரெ**
**த்ராணி விராடன ராணியு காணுத**
**த்⁴யானிஸி யாரெந்து³ மன்னிஸி கேளலு**
**முன்னின ஸங்க³தி பேளித³ளு**

**ஆணிமுத்தினந்த² வாணிய கேளலு**
**க்ஷோணிலி நின்னந்த² ஜாணெய காணெனு**
**ப்ராணி நீ எனகெ³ வேணி ஹாகென்னுத**
**பாணி ஹிடி³து³ கரெதந்த³ளாக³ ||2**

மானினி திரௌபதி - பூஜ்யளான பாரதிதேவியின் அவதாரளான திரௌபதி தேவி. ஸ்ரேணிலி - நகரத்தின் கடைத்தெருவில். பருதிரெ - வந்து கொண்டிருந்தபோது. த்ராணி - சமர்த்தளான. விராடன ராணியு - விராடனின் பத்னியான ராணி சுதேஷ்ணை. காணுத - (திரௌபதியைக்) கண்டு. யாரெந்து தியானிஸி - அவளின் ரூபத்தைக் கண்டு வியப்படைந்து, இவள் யாராக இருக்கலாம் என்று சிந்தித்து. மன்னிஸி - அழைத்து மரியாதை அளித்து. யாரெந்து கேளலு - யார் என்று விசாரிக்க. முன்னின ஸங்கதி - முன்னர் நடந்த

விஷயங்களை, தான் அங்கு வரவேண்டிய காரணங்களை. பேளிதளு – கூறினாள்.

ஆணிமுத்தினந்த – சிறந்த முத்தினைப் போல விலைமதிப்பற்ற. வாணிய கேளலு – பேச்சினைக் கேட்டால். க்ஷோணிலி – பூமியில். நின்னந்த – உனக்கு சமளான. ஜாணெய காணெனு – அறிவாளியைக் காணேன். ப்ராணி – அனாதையான ஹே பெண்ணெ. எனகெ – எனக்கு. வேணி ஹாகென்னுத – எனக்கு முடி அலங்காரங்களை செய்தவாறு சேவை செய்தவாறு இரு என்று, பாணி ஹிடிது – கை பிடித்து. கரெதந்தளாக – தன் அரண்மனைக்கு அழைத்துக் கொண்டு சென்றாள்.

** பரிசுத்தமும் தெளிவும் ஆன பேச்சு, ஸைரந்திரி, வாக் அபிமானியான பாரதிதேவியின் அவதாரம் என்பதை குறிக்கிறது.

**( தொடரும் )...**

| ஆராதனை | ஸ்ரீபிராணேஷ தாசர் |
|---|---|
| | ஆஸ்வீஜ பகுள சப்தமி |

ஸ்ரீஜகன்னாததாசருக்குப் பிறகான தாச வரிசையில் முதலாவதாக இருப்பவர் ஸ்ரீபிராணேசதாசர். இவர் தன் குருவின் அடியொற்றி, பல கீர்த்தனைகளை இயற்றி தாச சாகித்யத்தை வளர்த்து, அவருக்கு மிகவும் பிரியமான சிஷ்யராக இருந்தார்.

கணக்கர்களின் குடும்பத்தில் வந்த திருகப்ப என்பவரின் இரண்டாம் மகன் யோகேந்திரப்பா, ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் அருளுக்கு பாத்திரரானவர். ஜகன்னாததாசரின் அறிமுகத்தால் இவரின் வாழ்க்கையே மாறியது. அவரை குருவாக ஏற்றுக்கொண்டார்.

வரபோ ஸ்ரீஜகன்னாததாச குரவ: நாமாள்வெ சாஷ்டாங்கவ |
ஹரினாமாங்கிதவித்து ரக்ஷிஸு விபோ பூனாத தாசப்ரபோ ||

பிராணேச விட்டலா என்று அங்கிதம் பெற்று, தன் வாழ்க்கையையே ஸ்ரீஹரிக்கு சமர்ப்பித்தார். குரு அருளிக் கொடுத்த 14 விக்ரகங்களை நித்ய பூஜைகளை செய்தவாறு, பாடல்களை இயற்றுவதன் மூலம், தத்வபிரசாரமும் செய்து, சமூக நலனுக்கான செயல்களை செய்யத்

தொடங்கினார். ஸ்ரீவரதேந்திர தீர்த்தரின் கிருபைக்கு பாத்திரராகி அவரது ஆராதனையை நடத்தினார். 1822ம் ஆண்டு சித்ரபானு சம்வத்ஸரத்தில் இந்த நாளில் ஹரி நாமஸ்மரணை செய்தவாறு உத்தமலோகத்தைச் சேர்ந்தார்.

பற்பல நற்செய்திகள், புராணக் கதைகள், நாடகங்கள், கன்னட வாயுஸ்துதி என்று இவரது கிருதிகள் பலவாறு உள்ளன. சமூகத்தில் தர்ம சிந்தனையை, ஹரிதாச பரம்பரையை வளர்ப்பதில் மிகச் சிறந்த வேலையை செய்திருக்கிறார். சுமார் 250க்கும் மேற்பட்ட கிருதிகளை இயற்றியுள்ளார். ஸ்ரீராயரைப் பற்றி:

ஸ்ரீராமசந்த்ராங்க்ரி சரசீருஹ பைகனிகெ
தீர சுதீந்த்ரகர சம்பூதகெ
வாராஹிதீர மந்த்ராலய நிகேதனகெ
ஸ்ரீராகவேந்திரராயர சரணகெ
ஜயமங்களம் நித்ய சுபமங்களம் ||

இவரைப் பற்றி சொல்லும்போது: கஜ ரிஷி அம்பகனெ பஷுபதி த்ரிஜகதி பூஜிதனெ ஹர ஹர |
அஜினாம்பரதரனே கருணிஸோ விஜயேக்ஷண ஷிவனெ ஹர ஹர |

வாயுதேவரைக் குறித்து:
குருவெ பாரதி நாத ஷரணு லாலிஸோ மாத
ஹரி பதார்ச்சனெ கொட்டு பொரெயோ தயெயிட்டு ||

மேலும்:
ப்ராண அபான வியான உதான சமான
ஞானமயா சத்வஷரீர சமீர
ஆனந்த்ரசாந்த்ர ஹரினந்தன பவமான || -- ஸ்ரீபிராணேசதாசர்

***

**தொடர்**

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## 15. தத்த ஸ்வாதந்த்ர்ய சந்தி - விடைகள்

| | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 அ | வ | னி | ப | | ய | வ | ஹ் | 2 ஆ | க் | ஞா | தா | ர | க | தூ | த |
| மா | | | | ஷ | ரு | 29 த் | | த் | | 35 ஆ | | க் | த | | 41 பு |
| 3 த் | வி | க்ஷோ | ட | 36 ஸ | | 4 ஸி | க்ஷெ | ம | | ஸ் | | யா | டோ | | |
| ய | | த | 5 வி | பா | க | 42 வ | | 6 ப | லா | ய | ன | 43 வ் | 7 கு | ந் | து |
| ளெ | | 8 சி | த் | த | ஜ | | | வ | | | ச | | | | 37 க |
| 44 கெ | ரி | 9 அ | க்ஷ | ர | | 10 ப | யோ | ப் | தி | | ஞ் | 11 ம | ர் | க | ட |
| 12 வே | த | 38 னு | வ | 45 சோ | | 13 ஸு | ந | ந் | த | | லா | | 14 பி | ந் | து |
| 15 பா | ஸ் | க | ர | 30 அ | | 16 ப | வா | ப் | தி | | ன | | 17 ஸ் | த | ன |
| | க | ரி | சா | ப | 31 ஔ | | | | | | 18 ஏ | க | ப் | ர | கா |
| ண | ர | ம | ஸ் | 32 வி | | க | | 19 கோ | ட | கா | ஸ் | ய | 20 ஸு | பு | ஜ |
| 21 அ | ஜி | வா | ன | | 22 பே | ஸி | கெ | | | | 39 வி | | த் | | |
| 23 ஸ | லி | ல | | | | 46 தை | | | 24 ஸா | ம | கா | ன | ர | த | |
| மீ | | | 25 அ | வ | ய | ம் | பி | | | | ம் | | | ந் | |
| சீ | | | ஹி | 26 த | ர | ஸ் | க | | மெ | தி | ர | 27 ப் | ரா | 40 ம | க |
| ன | த | 33 நூ | ப | 28 ஸ | 47 த் | ய | லோ | க | | | | த | மு | 34 கு | |

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 2 : இதழ் 12



| நிர்வாக ஆசிரியர் | துணை ஆசிரியர் |
|---|---|
| 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்<br>ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,<br>380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase, பெங்களூரு 560078<br>Ph.: 89044-58276.<br>haridasa.vijayam@gmail.com<br>jagannathakesava.blogspot.com | 'தாச சாகித்ய சேவா ரத்ன'<br>திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்<br><br>**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**<br>திரு. முரளிதர தாசரு,<br>திருமதி. நிர்மலா நரசிம்மன்,<br>திரு. லட்சுமிபதிராஜா,<br>திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ் |



| ஆராதனை | **ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்**<br>**நவம்பர் 1 முதல் 30 வரை, 2021** |
|---|---|

Nov 14th : கார்த்திக சுத்த தசமி. ஸ்ரீவிஜயதாசர் சிப்பகிரி / சீகலபரவி

Nov 18th : கார்த்திக சுத்த சதுர்தசி.
ஸ்ரீவரத விட்டலதாசர். கௌதாள.

# ஆசிரியர் பக்கம்

ஸ்ரீஹரிவாயுகுருகளின் அருளால் நம் ஹரிதாச விஜயத்தின் 24வது இதழ் இது. கடந்த இரு ஆண்டுகளில் பத்திரிக்கையை தொடர்ந்து வாங்கி, படித்து, கருத்துகளை பகிர்ந்து கொண்ட அனைவருக்கும் நம் நன்றிகள்.

பல்வேறு தொடர்கள், ஹரிதாசர்களின் / ஹரிதாசினிகளின் வாழ்க்கை வரலாறுகள் என வந்து கொண்டிருக்கும் நம் பத்திரிக்கையில், அந்த ஹரிதாசர்களின் அருளால், மேலும் பல அரிய தகவல்கள் வரவிருக்கின்றன. அதற்கு உங்களின் தொடர்ந்த ஆதரவு தேவை. உங்கள் சந்தாவினை சரியான நேரத்தில் புதுப்பித்து, தொடர்ந்து பத்திரிக்கையை வாங்கி வரவும்.

புதிய புத்தகங்கள், ஹரிதாசர்களின் ஆராதனை விவரங்கள் என பல தகவல்களைப் பெறுவதற்கு நம்முடைய ஹரிதாச விஜயம் வாட்சப்பில் க்ரூப்பில் இணைந்து கொள்ளுங்கள்.

ஸ்ரீஹரிவாயுகுருகளின் அருளால் மற்றும் ஹரிபக்தர்களின் உதவியால், நம் பப்ளிகேஷன்ஸ் மூலமாக தொடர்ந்து புதிய புத்தகங்கள் வந்து கொண்டிருக்கின்றன. ஹரிதாச சாகித்யத்தின் மகிமையையும், மத்வ சித்தாந்தத்தின் சிறப்பினையும் விளக்கக்கூடிய இப்புத்தகங்களை இன்னும் வாங்காதவர்கள் வாங்கிப் படிக்கவும். மேலும் வரவிருக்கும் புத்தகங்களின் விவரங்களையும் பெறுவதற்கு தொடர்பு கொள்ளவும்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

வங்கிக் கணக்கில் சந்தா / புத்தகத்திற்காக பணம் செலுத்தினால், மறக்காமல் உங்கள் முகவரியை 89044 58276 எண்ணுக்கு வாட்சப் / SMS அல்லது haridasa.vijayam@gmail.comக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

தொடர்

## கேசவ நாமா

## 19. ஜோ ஜோ ஹரி - ஸ்ரீவிஜய தாசர்

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)

புருஷ புருஷ ஸ்ரேஷ்ட புருஷார்த்த காரண
புருஷேஷ்வர தத்புருஷாதி புருஷ
புருஷ பீ$^{3}$ஜ வேத புருஷ பரம
புருஷ புருஷரு மோஹிசுவ புருஷோத்தமனே ||17

க்ஷாக்ஷர புருஷர்களைவிட உத்தமனே. அனைவருக்கும் புருஷார்த்தங்களைக் கொடுப்பவனே. பிரம்மனுக்கு தந்தையே. ருத்ரதேவரைவிட உத்தமமானவனே. ஸ்ருஷ்டிக்கு காரணமானவனே. அனைத்து ஜீவர்களையும் காப்பாற்றுபவனே. உத்தம ஞானத்தைக் கொடுப்பவனே. சஜ்ஜீவர்களுக்கும் மோகத்தைக் கொடுக்கக்கூடிய புருஷோத்தமனே.

அக்ஷய ப$^{3}$ல சஹஸ்ராக்ஷ ரக்ஷக
அக்ஷரபர பிரம்ம கீ$^{3}$ர்வாணத$^{3}$க்ஷ
அக்ஷய பா$^{1}$த்ரிய ஷாகா$^{2}$த$^{3}$ளவன்னு
அக்ஷய மாடித$^{3}$தோ$^{4}$க்ஷஜ சக்ரி ||18

நாசமில்லாத பலத்தை உள்ளவனே. ஆயிரம் பேர் கொண்டவனே. சகல தேவதைகளுக்கும் தலைவனான பரபிரம்மனே. திரௌபதிக்கு அக்ஷய பாத்திரத்தில் துளசியை வைத்து அன்னத்தை அக்ஷயமாக்கிய சக்ரதாரி அதோக்ஷஜனே.

நரஸக$^{2}$ நரஹரி நாராயண வா நர தளனாயக நாரத வினுத
நரக உத்தா$^{3}$ரக நரகாந்தக கிந்னர சுரனரோரக$^{3}$ வ்ருந்த$^{3}$ நரசிம்ம ||19

அர்ஜுனனின் நண்பனே. நாரதனால் வணங்கப்படுப்பவனே. வானரர்களின் தலைவனே. நர மற்றும் சிம்ம ரூபியே. நாராயண என்னும் நாமத்தால் கின்னர, சுர, நரர்களை யமனிடமிருந்து மற்றும் நரகத்திலிருந்தும் காப்பாற்றுபவனே. நரசிம்மனே.

சச்சிதானந்தாத்ம ஸசல விக்$^{3}$ரஹனெ
ஸச்சராசரதொளு குணபரிபூர்ண

ஸச்சாஸ்த்ரதலி நின்ன ஸாமர்த்தி பரிபூர்ண
ஸச்சூத சுதி தூர சின்மய ரூபா[1] ||20

சத், சித், ஆனந்த, ஆத்ம என்னும் நான்கு குணங்களால் மனிதர்களால் வணங்கப்படுபவனே. சராசரர்களில் பரிபூர்ண குணங்களைக் கொண்டவனாக இருப்பவனே. உத்தமமான சாஸ்திரங்களில் நீ பரிபூர்ண மகிமைகளை உடையவன் என்று போற்றப்பட்டிருக்கிறது. தோஷம் உள்ளவர்களிடம் இருக்கும் துக்கம், மரணம், நிலையில்லாமை ஆகிய எதுவும் இல்லாதவனே. நாசமில்லாத பரமாத்ம ரூபியே. அச்யுதனே.

ஜனன மரண நாஷ ஜனனாதி கர்த்தா[1]ர
ஜன சுத[1]க[3]தி ப்ரேமாஞ்ச[3]ன கி[3]ரிதா[4]ம
ஜனகவரத[3] சஜ்ஜனரக[4]த[3]ஹன து
ர்ஜனர குலராதி[1] ஜனார்த்தனனெ ||21

பிறப்பு இறப்பு இல்லாத, ஞானத்தினால் மகிழ்ச்சியைக் கொடுப்பவனே. அஞ்சனா கிரியில் வசிக்கும் ஸ்ரீனிவாசனே. ஜனக மகாராஜாவுக்கு வந்த துக்கத்தை பரிகாரம் செய்து வரத்தைக் கொடுத்தவனே (வெங்கடாசல மகாத்ம்யம்). சஜ்ஜனர்களின் பாவத்தைப் போக்குபவனே. துர்ஜனர்களுக்கு எதிரியாகும் ஜனார்த்தனனே.

வீந்த்[3]ரவாஹன மஹேந்த்ரதா[4]ரனெ க
ஜேந்த்ரன்ன பி[3]டி[3]ஸி நகே[1]ந்த்[3]ரன ஸீளி நா
கே[3]ந்த்ர[3] ஷயன குணஸாந்த்[3]ர கோ[3]குல சந்திர
இந்த்ரமணி நிப[4] ராமசந்திர உபேந்த்[3]ரா ||22

உபேந்திரனான ராமசந்திரனே, மகேந்திரனுக்கு ஆதாரமானவனே. முதலையிடமிருந்து யானையைக் காப்பாற்றியவனே. நற்குணங்களைப் பெற்றவனே. கருட வாகனனே. நாகேந்திர சயனனே. கோகுலத்து சந்திரனைப் போல ஒளிர்பவனே. உபேந்திரனே.

ஹரி எனுதா ஹரி ஹரிது ஓடி[3] ப[3]ரெ
ஹரிது போ[1]கி[3] பரிஹரிஸித[3] க[2]ளன
ஹரி ஹரிய நலிவனெ ஹரிரூப ப[1]ரி
ஹரி நாமவெ க[3]தி ஹரி சர்வோத்தமா ||23

ஹரி நாமஸ்மரணை செய்தவாறு கபி சைன்யமானது ஓடி வர, வாயு வேகத்தினால் ஓடி ராவண சேனையினைக் கொன்று, அக்னியைப்

போல அனைத்து இடங்களுக்கும் பரவி, போர்க்களம் முழுவதும் ஹரிமயமாக ஆக்கியவனே. இத்தகைய சர்வோத்தமனான ஹரிஸ்மரணையே இஹபரத்திற்கு கதி. அல்லி நோடலு ராம, இல்லி நோடலு ராம. எல்லெல்லி நோடிதரல்லி ஸ்ரீராம என்னும் புரந்தரதாசரின் கிருதி இதையே சொல்கிறது.

கிருஷ்ணத்வைபாயன உத்க்ருஷ்ட முனேஷ
கிருஷ்ணிகெ ப$^{3}$ந்த$^{3}$ கஷ்ட ஓடிஸிதெ
கிருஷ்ணவர்த்மனே சந்துஷ்டிகெ$^{3}$ சுக$^{2}$படுவ
கிருஷ்ணாவதார கிருஷ்ண கமலேஷ ||24

ஸ்ரேஷ்ட முனி எனப்பட்ட கிருஷ்ணத்வையாபயன என்று அழைக்கப்பட்ட ஸ்ரீகிருஷ்ணன், கிருஷ்ணைக்கு (திரௌபதிக்கு) வந்த ஆபத்தினை பரிகரித்தவன். கிருஷ்ணாவதாரத்தில் கிருஷ்ணவர்த்மனாக (அனைத்தையும் தீர்மானிப்பவன், நடத்துபவன், எல்லா இடங்களிலும் இருப்பவன்) பூர்ணானந்தனாக ப்ருத்விக்கு சுகத்தை அளித்தாய்.

நின்ன மஹிமெயனு ப$^{3}$ண்ணிஸலளவில்ல
நின்னொளகெ$^{3}$ நீனு பீ$^{3}$ய பீ$^{3}$ஜவனு
என்ன பாலிஸுவுது விஜயவிட்டல ப்ர
சன்ன பக்தரவரத பா$^{3}$லகோ$^{3}$பால ஜோ ஜோ ||25

பால கோபாலனும், பக்தர்களின் நண்பனுமான, விஜயவிட்டலனே உன் மகிமைகளை வர்ணிப்பதற்கு சாத்தியமில்லை. உலகத்தை தன் வயிற்றில் வைத்துக் கொண்டிருப்பவனான நீ, என்னை காப்பாற்ற வேண்டும். இந்த கேசவ நாமத்தில் எதுகை, மோனையுடன் ஒரே சொல் மறுபடி மறுபடி வருவதை காணமுடியும். கேசவ ஷௌரி, ஹரிமாதவ, ரங்க கோவிந்த, ஸ்ரீதர அனந்தா, பிரத்யும்ன விஷ்வ, வாசுதேவ வாசுதேவ, அனிருத்த ஸ்ரீஷா, அதோக்ஷஜ சக்ரி, ராமசந்திர உபேந்திரா, கிருஷ்ண கமலேஷா என்னும் இரு பதங்களினால், ரூப ரூபங்களில் அபேத (வேறுபாடு இல்லாத) சிந்தனையை தாசர் குறிக்கிறார். அந்தந்த நுடிகளில் அந்தந்த நாமத்திற்கு பொருந்தும் சரியான அர்த்தங்களுடன், பரமாத்மனின் மகிமைகளை விஜயதாசர் மிகச்சிறப்பாக விவரித்திருக்கிறார்.

## 20. கூகெலோ மனுஜ கூகெலோ

கூ1கெ3லோ மனுஜ கூ1கெ3லோ ||ப

ஸாக3ரஷயனனெ ஜனகெ1 தெ3ய்வவெந்து3 ||அ.ப

அச்யுதானந்த கோவிந்த மாதவ கிருஷ்ண
சச்சிதானந்தெ3ய்க சர்வோத்தம
ஸச்சரித ரங்க நாராயண வேத3
ப3ச்சிட்டவன கொந்த3 மத்ஸ்ய மூருதியெந்து ||1

நரஹரி முகுந்த நாராயணதேவ
பரமபுருஷ ஹரி ஹயவதன
ஸிரித3வ வாமன தா3மோத3ர கி3ரி த3ரிஸித
சுரபாலகூர்ம மூருதியெந்து ||2

புருஷோத்தம புண்யஸ்லோக புண்டரீக
வரத அபா1ர சத்கு3ண நிலய
முரமர்த்த3ன மஞ்சுபா3ஷண கேஷவ
நிர்மலதேவ பூ3வராஹ மூருதியெந்து ||3

நிக3மவந்தி3த வாரிஜனாப3 அனிருத்த3
அக3னாஷ அப்ராக்ருத ஷரீர
சுகு3ண ஸாகா1ர ஜகதத்யந்த பி4ன்ன
த்ரிகுணவந்தி3த நரம்ருக3ரூபனெந்து3 ||4

வடப1த்ரஷயன ஜகத3ந்தர்யாமி
க1டக1 முத்தினஹார கௌஸ்துப4விஹார
தடத்கோ1டி நிப4கா1ய பீதாம்ப3ரத4ர
நிடிலலோசன பா3லவடு1 மூருதியெந்து3 ||5

விஷ்ணு சங்கருஷண மதுசூதன ஸ்ரீ
கிருஷ்ண ப்ரத்3யும்ன ப்ரத2ம தெய்வவெ
ஜிஷ்ணு ஸாரதி2 ராம அச்யுதாதோக்ஷஜ
ஸ்ருஷ்டிகொ3டெ3ய பா4ர்க்கவ மூருதியெந்து ||6

இப4ராஜபரிபால இந்திரேயரஸ
நப4க3ங்கா3ஜனக ஜனார்த்தனனே
விபு4வே விஷ்வரூப விஷ்வனாடக ரு

ஷப[4] தத்தாத்ரேய ஸ்ரீராம மூருதியெந்து ||7

வைகுண்ட வாமன வாசுதேவ ரங்க
லோகேஷ நவனீதசோர ஜார
கோ[3]குலவாஸி கோ[3]வளாராய ஸ்ரீத[4]ர
ஏகமேவ ஸ்ரீகிருஷ்ண மூருதியெந்து ||8

ஹ்ருஷிகேஷ பரமாத்ம முக்தாமுக்தாஸ்ரய
அசுரப[4]ஞ்சன த்ரிவிக்ரம கபில
குஸுமஷரனய்ய ஷார்ங்கத[4]ரா சக்ரி
விஷஹர த[4]ன்வந்த்ரி பௌத்த[3] மூருதியெந்து[3] ||9

சர்வனாமக சர்வசேஷ்டக சர்வேஷ
சர்வமங்கள சர்வசாரபோ[4]க்த்ர
சர்வாதா[4]ரக சர்வகு[3]ணக[3]ள பரிபூர்ண
சர்வமூலாதா[4]ர கலி மூருதியெந்து ||10

ஈ பரி கூ[1]க[3]லு ஆபத்து பரிஹார
அபாரஜன்ம பெ[3]ம்பி[3]ட[3]த[3]லெ ஸப்த
த்[3]வீபாதி[4]ப நம்ம விஜயவிட்டலனெந்து
அபவர்க்க[3]த[3]ல்லிட்டு ஆனந்தபடி[3]ஸுவ ||11

(இந்தப் பாடலின் விளக்கம் அடுத்த இதழில் தொடரும்)...



தொடர்



**ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்**

**ஹரிகதாம்ருதசாரத்தில் பக்தியின் பார்வை**

டாக்டர். ஜெயலட்சுமி மங்களாமூர்த்தி

பக்தனின் தியானம் பூஜை என்றால், அதன் உச்ச நிலை, ஸ்ரீஹரி அனைத்து இடங்களிலும் நிறைந்திருக்கிறான் என்று நினைப்பதே.

சர்வ தேசவு புண்ய தேசவு
சர்வ காலவு பர்வ காலவு
சர்வ ஜீவரு தான பாத்ரரு மூரு லோகதொளு |
சர்வ மாதுகளெல்ல மந்த்ரவு
சர்வ கெலசகளெல்ல பூஜெயு
சர்வ வந்த்யன விமல மூர்த்தி த்யானவுள்ளவகெ || (10-4)

தியானோபாசனையானது, வியாப்தோபாசனையாக மாறுகிறது என்று ஜகன்னாததாசர் கூறுகிறார். எப்போதும் ஸ்ரீஹரியின் சிந்தனையிலேயே இருக்கும் பக்தனுக்கு, ஸ்ரீஹரி அனைத்து இடங்களிலும் இருப்பதாக தெரிகிறான். உலகத்தின் அனைத்து ஜீவராசிகளிடத்தும் வியாபித்து, அனைத்து செயல்களையும் நடத்துகிறான். அனைத்து ஜீவராசிகளுள் இருந்து, அவரவர்களின் தகுதிக்கேற்ப, அவர்களின் செயல்களுக்கு பொறுப்பு ஸ்ரீஹரியே என்று தெரிந்து உபாசனை செய்யவேண்டும். இத்தகையவரின் பூஜையும் வியாப்தோபாசனை எனப்படுகிறது.

வாரிஜ பவாண்டவெ சுமண்டப
மேருகிரி சிம்ஹாசனவு பா
கீரதியெ மஜ்ஜனவு திக்வஸ்த்ரகளு நுடி மந்த்ர |
பூருஹஜ பல புஷ்ப கந்த ச
மீர சசிரவி தீப பூ4ஷண
தாரகெக ளெந்தர்ப்பிசலு கைகொண்டு மன்னிசுவ
(விபூதி சந்தி ஸ்லோகம் #28)

ஜலஜனாபன மூர்த்தி மனதலி
நெலெகொளிஸி நிஸ்சல பகுதியலி
சளிபிசிலூ மளெ காளிகள நிந்திசதே நித்யதலி |
நெலெதஹிஹ கந்தவே சுகந்தவு
ஜலவே ரச ரூபவே சுதீபவு
எலரு சாமர ஷப்த வாத்யங்களர்ப்பிசலு ஒலிவ ||
(விபூதி சந்தி ஸ்லோகம் #13)

பதினான்கு உலகங்கள், நவாவரணங்கள் ஆகியவற்றுடன் கூடிய பிரம்மாண்டமே ஸ்ரீஹரிக்கு மண்டபமாகியிருக்கிறது. கங்கை முதலான ஆறுகளின் நீரே அபிஷேகமாகியிருக்கிறது. திசைகள் ஆடைகளாகியிருக்கின்றன. சூரிய-சந்திரரே ஒளி கொடுக்கும் விளக்குகள். நட்சத்திரங்களே அணிகலன்கள். வாயுவே விசிறி.

ப்ருத்வி-தத்வமே கந்தம். தேஜஸ்-தத்வமே தீபம். ஆகாச-தத்வமே கண்டா நாதம். விளையும் தான்யங்களே நைவேத்தியம். என்று தெரிந்து செய்யப்படும் பூஜையே பிம்போபாசனை மற்றும் வியாப்தோபாசனை என்கிறார் தாசர்.

வர்ணோபாசனையே பக்தி என்றால், வேதார்த்தங்களை அறிந்துகொள்வதே இதன் உச்சநிலை ஆகும்.

ஹரியெ பஞ்சாஷத்வரண சு
ஸ்வர உதாத்தனுதாத்த ப்ரசய
ஸ்வரித சந்தி விசர்க பிந்துகளொளகெ தத்வாச்ய
இருவ தத்தன்னாம ரூபக
ளரிதுபாசனெ கைவரிளெயொளு
சுரரெ சரி நரரல்ல அவராடுவுதெ வேதார்த்த
(ஜீவப்ரகரண சந்தி ஸ்லோகம் #1)

எழுத்து, ஸ்வரம், குரல், அசை, சொல் என அனைத்துமே ஸ்ரீஹரியின் ரூபங்களே ஆகும். 51 எழுத்துகளில், ஸ்வரங்களின் பகுதிகளான – உதாத்த, அனுதாத்த, ப்ரசய, ஸ்வரித, சந்தி, விசர்க, பிந்து – இவைகளில் ஸ்ரீஹரியின் சிறப்பு ரூபங்கள் உள்ளன. இந்த 51 மாத்ருகா வர்ணங்களும், அனைத்து வேதங்களில் நிலைத்திருக்கின்றன.

இந்த 51 எழுத்துக்களும் நம் உடலில் இருந்து, இவற்றில் இருக்கும் ஸ்ரீஹரியின் ரூபங்களை அறிந்துகொண்டால், நாம் பேசும் பேச்சுக்கள் அனைத்தும் மந்திரங்கள் எனக் கருதப்படுகின்றன.

வ்யாகரண பாரதமுகாதி அ
நேக சாஸ்திர புராண பாஷ்யா
நீககள கல்பிஸி மனோவாங்மய நெனிஸிகொம்ப
(பஞ்சதன்மாத்ர சந்தி ஸ்லோகம் #11)

ஷிரகளைதைதெரடு பாஹுக
ளெரடு பாதகளொந்து மத்யோ
தரதி ஷோபிப வாங்மனோமய னெனிஸி நித்யதலி ।
(பஞ்சதன்மாத்ர சந்தி ஸ்லோகம் #6)

பிராணனில் அந்தர்யாமியாக இருந்து, மனம் முதலிய இந்திரியங்களில் இருந்து, ஏழு தாதுகளில் இருந்து, அனைத்து நாடிகளிலும் இருந்து, தோஷங்கள் இல்லாத பரமாத்மா, அ-முதலான அனைத்து எழுத்துகளுக்கும் அவற்றை உச்சரிக்கும் சக்தியைக் கொடுக்கிறான். வேதங்கள் முதலான அனைத்து வாங்மயங்களில் அந்தர்யாமியாக இருந்து, எழுத்துக்களை உச்சரிக்கும் சக்தியைக் கொடுக்கிறான். இது ஸ்ரீஹரியின் நற்குணங்களில் ஒன்றாகும்.

எந்தவித பலன்களையும் எதிர்பார்க்காமல் செய்யப்படும் நற்காரியங்களே பக்தி எனில், ஸ்ரீஹரியின் கருணையைப் பெறுவதே அதன் உச்சநிலையாகும்.

சத்கர்ம தர்ம நி
ராஷெயிந்தலி மாடு கருணவ பேடு கொண்டாடு
(பஞ்சமஹாயக்ஞ சந்தி ஸ்லோகம் #28)

தந்தெ தாய்கள ப்ரீதிகோசுக2
நிந்த்யகர்மவ தொரெது விஹிதக
ளொந்து மீரத சாங்க கர்மகளாசரிசுவவரு |
வந்தனியராகி இளெயொளு தை
நந்தினதி தைஷிக தஹிக சுக2
திந்த பாள்வரு பஹுதிவஸதலி கீர்த்தியுதராகி
(பித்ருகண சந்தி ஸ்லோகம் #5)

தன்னவரு சத்ப4க்தி பூர்வகதிந்த மாடுதிஹ |
புண்யகர்மவ ஸ்வீகரிஸி கா
ருண்யசாகர சலஹுவனு
(பித்ருகண சந்தி ஸ்லோகம் #9)

வேதங்களில் சொல்லப்பட்டிருக்கும் விதி என்னவென்றால், விதிவிலக்குகளை அறிந்து செய்யப்படும் செயல்கள், நற்செயல்கள் எனப்படுகின்றன. இப்படி எந்தவித பலன்களையும் எதிர்பாராமல் செயல்களை செய்தால், ஸ்ரீஹரி அதிலிருந்து மகிழ்ச்சியடைகிறான். தேவகண, ரிஷிகண மற்றும் பித்ருகணங்களை திருப்திப்படுத்துவதற்கு, வேத அத்யயனம், யக்ஞங்கள் மற்றும் பித்ருக்கடன் எனப்படும் சிரார்த்தங்களை பக்திபூர்வகமாக செய்தால், ஸ்ரீஹரி தனது கருணையைக் காட்டுகிறான் என்று தாசர் தெரிவிக்கிறார். நாம் செய்யும் அனைத்து செயல்களையும் ஸ்ரீஹரிக்கு சமர்ப்பித்தால்,

ஸ்ரீஹரி அதனை மிகவும் மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொள்கிறான். இதனையே 'த்வந்த்வ கர்ம சமர்ப்பணே' என்று தாசர் குறிப்பிடுகிறார்.

அனுசிதோசிதகர்ம க்ருஷ்ணா
ர்ப்பணவெனலு கைகொண்டு தன்னர
மனெயொளிட்டானந்த படிசுவ மாதவானதர
(தத்தஸ்வாதந்த்ர்ய சந்தி ஸ்லோகம் #8)

கலிமலாபகனர்ச்சிசுவ ச
த்குலஜர குகர்மகளு தா நி
ஷ்கலுஷ கர்மகளாகி புருஷார்த்தகள கொடிதிஹவு
(தத்தஸ்வாதந்த்ர்ய சந்தி ஸ்லோகம் #10)

வினைப்பயனால் கெட்ட செயல்களை பக்தர்கள் செய்தாலும், அவற்றை ஸ்ரீஹரிக்கு அர்ப்பித்தால், அவற்றையும் சத்கர்மங்கள் என்றே நினைத்து, அவர்களுக்கு புருஷார்த்தங்களைக் கொடுப்பான் என்று தாசர் தெரிவிக்கிறார்.

சத்பக்தியே கயிறு என்றால், அதிலிருந்து விடுபடுவதே உச்ச நிலை எனப்படுகிறது.

சத்பக்தி பாஷதலி கட்டுவர பவகட்டு பிடிசுவ | (2-26)

ஸ்ரீஹரியின் நற்குணங்களையே எப்போதும் போற்றியவாறு, சாஸ்திரங்களில் சொல்லப்பட்டவாறு பூஜையை செய்து, சச்சிதானந்த ரூபனை, ஞானானந்தம் என்று அவனின் குண, ரூப, செயல்களை தியானத்தில் நினைக்கும் பக்தர்களின் ஜனன-மரணம் எனப்படும் கயிற்றினை விடுவித்து, அவர்களுக்கு சத்கதியை கொடுப்பான் என்கிறார் தாசர்.

அனுபவமே பக்தி என்றால், அனுபாவமே (உறுதி நிலை) இதன் உச்சநிலை எனப்படுகிறது.

சத்யசங்கல்பனு சதா எ
நித்துதெ புருஷார்த்தவெந்தரி
தத்யதிக சந்தோஷதிம் நெனெவுத்த புஞ்சிபுது |
நித்ய சுக2சம்பூர்ண பரமசு

ஹ்ருத்தம ஜகன்னாதவிட்டல
பத்திஸி பவாம்புதிய சித்சுக2வ்யக்தி கொடுதிப்ப
(நாமஸ்மரண சந்தி ஸ்லோகம் #33)

வாழ்க்கையில் சந்திக்கும் பிரச்னைகள், நோய் நொடிகள், மான அவமானங்கள், லாப இழப்புகள், ஜெயம் அபஜெயங்கள் ஆகியவற்றை ஸ்ரீஹரி கொடுத்தது என்று அப்படியே ஏற்றுக்கொண்டு, ஸ்ரீஹரியின் நினைப்புடனேயே அந்த கர்மங்களின் பலன்களை ஏற்றுக்கொள்வதே பக்தி எனப்படுகிறது. இத்தகைய பக்தர்களின் அனைத்து பிரச்னைகளையும், கஷ்டங்களையும் போக்கி, அவர்களுக்கு ஸ்வரூப சுகத்தையே ஸ்ரீஹரி கொடுக்கிறான் என்று தாசர் விளக்குகிறார்.

(தொடரும்).

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

### கல்கலி அவ்வா (1670-1760)

கலகலி அவ்வா அவர்களின் பல கீர்த்தனைகள் ஸ்ரீஹரியின் மகிமைகளையே விளக்குவதாக இருந்தாலும், சரஸ்வதி, லட்சுமி, கணபதியின் மேலும் சில கீதங்களை பாடியிருக்கிறார். கோலாட்ட பாடல்கள், பீகத பாடல்கள், கிருஷ்ண ஜன்ம பாடல்கள் ஆகியவை தீர்க்க கிருதிகளாக இருக்கின்றன. முக்யபிராணனின் அவதார த்ரயமான ஹனும, பீம, மத்வரைப் பற்றிய கீர்த்தனைகளையும் இயற்றியிருக்கிறார். புராணிக அம்சங்களுடன், அழகான சொற்களைக் கொண்டிருக்கும் இவரது கீர்த்தனைகள், அவ்வா அவர்களின் கிருதி-ரசனையின் திறமைக்கு சாட்சியாக இருக்கிறது. மொழியும் எளிமையாகவும், அழகாகவும் மனதிற்கு மகிழ்ச்சியைத் தருகிறது.

சில கீர்த்தனைகளின் சிறிய அறிமுகம்

1. கணபதி ஸ்துதி
ஸ்ரீகணராய ஸ்ரீகணராய ஸ்ரீகணராய
வந்திஸுவே நினகெ ஸ்ரீகணராய

ஆகாஷகபிமானியாகி ஸ்ரீகண்டனவர புத்ர

ஏகதந்தனெ விக்னேஷ | ஏகதந்தனெ விக்னேஷ நின்ன பாத
ஏகசித்ததலெ பலகொம்பெ வந்திஸுவெ

ஸுலபதி ருக்மிணிய கெலியபேகெனுதலெ
ஹலதரன தங்கி ஸுபத்ரெ | ஹலதரன தங்கி ஸுபத்ரெ மொதலிகெ
செலுவ கணபதிய நெனதளு

ஹஸ்தி மொகதவன மத்தாரு பூஜிஸிதரு
மத்தெ பரீக்ஷித மொதலாகி | மத்தெ பரீக்ஷித மொதல பூஜியெ மாடி
ப்ரத்யக்ஷ ராஜ்ய படெதனு

ஆனெய முகதவன மத்தாரு பூஜிஸிதரு
தானு மாந்தாதராய மொதலாகி தானு |
மாந்ததராய மொதலு பூஜெய மாடி
நானா ஸௌபாக்ய படெதனு

முத்து ராமேஷன பூஜிஸி ராவணன கெலிதனா
ம்யாலெ பாண்டவரு மொதலாகி ம்யாலெ
பாண்டவரு மொதலு பூஜெய மாடி
ஹீன கௌரவர கெலிதரு

இந்த கீர்த்தனையில் கலகலி அவ்வா ஆகாஷக்கபிமானியான, ஏகதந்த விக்னேஷனுக்கு, பிரியமான நெனெயக்கி, நிலைக்கடலை, தம்பிட்டு, வாழைப்பழம் ஆகியவற்றை நைவேத்தியம் செய்து வணங்குகிறார்.

சுபத்ரை, ருக்மிணியை வெல்வதற்கு முன்னர் கணபதியை பூஜித்தாள். பரீக்ஷித் மகாராஜா அரசை திரும்பப் பெறுவதற்கு முதலில் கணபதியை பூஜித்தான். கணபதியை பூஜிக்கும் மாந்தாதா, அனைத்து சௌபாக்யங்களைப் பெற்றாள். ராவணனைக் கொல்லும் முன்னர் ஸ்ரீராமன், கணபதிக்கு அக்ரபூஜை செய்தான்.

அப்படியே, பாண்டவர்களும் கணபனுக்கு அக்ரபூஜை செலுத்தி, கௌரவர்களை வென்றனர். இந்த கீர்த்தனையில் கல்கலி அவ்வா, ப்ரதம வந்த்யனான கணராயனை பக்தியுடன் வணங்குகிறார்.

2. சரஸ்வதி ஸ்துதி

பாலிஸெ சரஸ்வதி பாலிஸெ (ப)

பாலிஸெ நின்னய பாரிகெ பந்தேனு
காலகாலக்கெ நின்ன காலிகெரகுவெ பாலிஸெ (அப)

ஆதி பிரம்மன ராணியெ வேதக்கபிமானியெ
மொதகாயன குஷலளெ மொதகாயன குஷலளெ சரஸ்வதி
நீ தயமாடி மதிய கொடு

ஹொன்னவரெ ஹொஸகப்பு பென்னின ம்யாலின ஹெரளு
கின்னரி நின்ன பலகெய்ய கின்னரி
நின்ன பலகைய்யலி ஹிடகொண்டு கனிபா நம்ம வசனக்கெ

ஹரதி சரஸ்வதி ஸரிகெ ஸரபளியிட்டு
ஜரத ஸீரெயனெ நிரிதுட்டு
ஜரத ஸீரெயனெ நிரிதுட்டு பாரம்ம
மொரெ ராமேஷன அரமனெகெ

இந்தப் பாடலில் கலகலி அவ்வா, பிரம்மனின் ராணியான சரஸ்வதியை பல பெயர்களால் அழைத்து, தமக்கு சன்மதியை அருள்வாயாக என்று பிரார்த்தித்து, வணங்குகிறார்.

3. லட்சுமி ஸ்துதி

தேவி வரலட்சுமி பக்தர காய்தி
கருணதி வரவ நீடு ||ப

ஸிந்துஷயனன தயெ எந்தெந்து பிடதந்தெ
சந்ததி கருணெகெ இந்திரெ நமகெ

மந்தகமனெயரு தந்த மந்தார மல்லிகெ
கந்த குங்குமதிந்த சந்தாகி அர்ச்சிஸெ தேவி
மித்ரவிந்தாதிகளிந்த மத்தொம்மெ லகுமியெ
முத்து ரத்னத வஸ்த்ர வீள்யவ கொள்வதேவி

நகதர ராமேஷனு அகலதந்தெ நம்ம முகிதேவகரகள
நகுமுகத கௌரினீதேவி

இந்தப் பாடலில் கலகலி அவ்வா, ரமையை, மல்லிகை, சந்தனம், குங்குமங்களால் அர்ச்சித்து, ஸ்ரீஹரியின் கருணை தமக்கு

என்றென்றும் கிடைக்குமாறு அருள வேண்டும் என்று, பிரார்த்திக்கிறார். இந்தப் பாடல் மிகவும் அர்த்தபூர்ணமாக இருக்கிறது.

4. நதி ஸ்துதி

கங்கெ நினகோஸ்கர நானு நமோ எம்பெ
துங்கே என்ன பந்தவ கேளி கெலிஸெம்பெ ||ப

அச்யுதன நக தாகி பிச்சி
பிரம்மாண்டவு ஸ்வச்ச ஜலவாக ஸுரிதாவு
ஸ்வச்ச ஜலவாக ஸுரிதாவு
அஜநோடி உத்ஸாஹதி ஸுதிஸித ||

தந்தெய நகதிந்த பந்த ஜல
கண்டு மந்தஜாஸனு ஸ்துதிஸித
மந்தஜாஸனு ஸ்துதிஸித சரஸ்வதி
பந்து ஆருதிய பௌகோளா ||

விஷ்ணபதி எந்து இட்டரு நாமவ
திட்ட ராமேஷன மகளிகெ
திட்ட ராமேஷன மகளிகெ த்ருவராய
எஷ்டு பக்திந்த ஸ்துதிஸித ||

வாமன அவதாரத்தில் ஸ்ரீஹரியின் நகம், பிரம்மாண்டத்தின் கூரையில் தாக்கி, கங்கை உள்ளே வந்தாள். கங்கை வந்ததைக் கண்ட பிரம்மன், ஹனுமன், அவளை துதித்தனர். சரஸ்வதி ஆரத்தி எடுத்தாள். ஸ்ரீஹரியின் பாதத்திலிருந்து வந்த கங்கைக்கு ‘விஷ்ணுபதி’ என்று பெயர் வந்தது என்னும் விஷயத்தை, இந்த கீர்த்தனையில் சொல்லப்பட்டுள்ளது. இன்றைய நிலையில் இந்த கங்கா ஸ்துதி மிகவும் அர்த்தபூர்ணமாக இருக்கிறது.

5. ஸ்ரீஹரி ஸ்துதி

கேசவ நாராயண ஸ்ரீஷ மாதவ
சர்வேஷ கோவிந்த கெலிஸெந்து கோல
சர்வேஷ கோவிந்த கெலிஸெந்து விஷ்ணுவின
ஸோஸிலெ மொதலெ பலகொம்பெ கோலெ ||1

மதுசூதன த்ரிவிக்ரம விதிபித வாமன
சுதெ ஶ்ரீதர ஹ்ருஷிகேஷ கோல
சுதெ ஶ்ரீதர ஹ்ருஷிகேஷன நெனெதரெ
ஹதகானெ வரவ கொடுவோனு கோல ||2

பத்மனாப தாமோதர முத்து சங்கர்ஷண
வசுதேவ நம்ம கெலிசெந்து கோல
வசுதேவ நம்ம கெலிசெந்து ப்ரத்யும்ன
அனிருத்தர மொதலெ பலகொம்பெ கோல ||3

புருஷோத்தம அதோக்ஷஜ ஹருஷாகொ நாரசிம்ஹ
புருஷசூக்ததலெ ப்ரதிபாத்ய கோல
புருஷசூக்ததலெ அச்யுத
ஹருஷதி நம்ம கெலிஸெந்து கோல ||4
ஜனார்த்தன உபேந்த்ர கன மஹிமெ ஹரெ கிருஷ்ண
முனிஜன வந்த்ய ரமெயரஸ கோல
முனிஜன வந்த்ய ரமெயரஸு
நின்ன பாத நெனெதவ பந்த கெ3லிஸெந்து ||5

ஐந்து நுடிகள் இருக்கும் இந்த கீர்த்தனையில், கலகலி அவ்வா, ஶ்ரீஹரியை 24 நாமங்களால் வணங்கியிருக்கிறார். நாட்டுப்புற பண்ணில் இருக்கும், கோலாட்டத்தின் இந்த பாடலில், கலகலி அவ்வா, கோவிந்தனை வணங்கி, இஹலோகத்தில் தம்மை வெல்ல வைக்க வேண்டும் என்று பிரார்த்தனை செய்திருப்பது மனதை மயக்குகிறது.

(தொடரும்...)

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## 18. க்ரீடா விலாஸ ஸந்தி

| | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | 2 | | | | | 3 | | | | 33 | | |
| | | | | | | 25 | | | | 4 | | | | | |
| 39 | | 26 | | | | 5 | 34 | | | | | | | 27 | |
| | | 6 | | | | 7 | | | | | | | | | 28 |
| 8 | | | | | | | 29 | | | | | | 30 | 35 | |
| | 9 | | | | 10 | | | 11 | | | 36 | | | | |
| | | | 12 | | | | | | | | | | | | |
| | | | | | | | | | 31 | | | | | | |
| 13 | | 37 | | | | 40 | | | 14 | | | | | | |
| | | 32 | | | | | 15 | | | | | | | | |
| | | | 16 | | | | | | | | | 17 | | | |
| | 18 | | | | | | | 19 | | | | | | 38 | |
| | | | | 20 | | | | | | | | | | | |
| | | | | | | | | | | | 21 | 41 | | | |
| | 22 | | | | 42 | 23 | | 24 | | | | | | | |

குறுக்கெழுத்துப் போட்டிகளை வடிவமைத்துக் கொடுப்பவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி

குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam @ gmail.com / அல்லது 89044 58276 க்கு வாட்சப் செய்யலாம்.

**இடமிருந்து வலம்**: 1. ஜீரணித்துக் கொள்வது(3), 2. எங்கும் நிறைந்தவன்(4), 3 .பதினைந்து(7), 4.அழுக்கு(7), 5.பூமி(5), 6.நன்றாக பார்ப்பது(3) 7.அற்ப ஜீவர்கள்(4), 8.அதிகாரம்(4), 9.ஆகாரம்(3), 10.வஞ்சனை(3), 11.உவமை இல்லாதவன்(4), 12.சூரியன்(4), 13.இரு பக்ஷிகள்(6), 14.இரண்டாம் கால் பாகம்(6), 15.துஷ்டர்கள்(4), 16.அசைவது(3), 17.மாம்ஸம்(3), 18.ஞானிகளுக்கு தெரிபவன். கலைந்துள்ளது.(6), 19.ஓடாடுவது(3), 20.நாநூறு(5), 21.தேவலோக நதி
கங்கை(5), 22.எண்ணெய்(2), 23.பிணம்(3), 24.ஸர்வோத்தமன்(3).

**வலமிருந்து இடம்**:25.எறும்பு(3), 26.விரும்பு(3), 27.உலகஸுகம்(3), 28.இரவும் பகலும்(4), 29.இருபது(4), 30.தோல்வியே காணாதவன்(5), 31.உரிமையாளர்(4), 32.விளையாட்டு(3).

**மேலிருந்து கீழ்**: 2.வேறுபட்டவன்(4), 9.ப்ரம்ஹா(3), 12.ஐம்பத்தி இரண்டு(5), 14. மூன்று முக்த ஸ்தானம்(5), 18.ஆழ்ந்த உறக்கம்(4), 28.செய்யக் கூடாத செயல்(4), 33.பரந்தாமனின் தம்பி ஸ்ரீக்ருஷ்ணன்(7), 34.நன்றாக ஜீவித்திருப்பவன்(3), 35.தாமரை(6), 36.கொசு(4), 37.சோகம் இல்லாதவன்(4), 38.கடல்(3),

**கீழிருந்து மேல்**: 12.ஸிவன்(4), 17.லிங்க தேஹம் இல்லாதவன்(4), 23.குமதிகளின் ப்ரேரகன்(4), 39.தேவேந்திரன்(3), 40.மஹாராஜன்(4), 41.பேசுவது(3), 42.துளி(3).

அக்டோபர் 2021 மாதத்தின் ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டிக்கு சரியான பதில் எழுதி புத்தகப் பரிசினைப் பெறுபவர்கள் :

திருமதி. ஷாந்தி பத்மனாபன், திருநெல்வேலி, திருமதி. உஷா ரகூத்தமன், பெங்களூரு, திருமதி. ஜெயஸ்ரீ ராமசந்திரன், சென்னை. திருமதி. லலிதா, திருநெல்வேலி, திருமதி. கீதா ராமசந்திரன், திருநெல்வேலி, திருமதி. கிரிஜா ஜயதீர்த்தாச்சார், மனம்பூண்டி

தொடர்

## கன்னட கிரந்தங்கள் அறிமுகம்

### தத்வ சுவ்வாலி

(சென்ற இதழின் தொடர்ச்சி)

179 முதல் 189 வரையிலான பத்யங்களை 'தஸாவதார ஸ்தோத்திர' ரூபமாக தாஸர் அருளியுள்ளார். வேதங்களைக் காத்து ஹயக்ரீவன் எனும் ராக்ஷஸனைக் கொன்று, வைவஸ்வத மனுவிற்கு அருள்புரிந்த 'மச்சாவதாரம்', தேவ தைத்யர்கள் பாற்கடலைக் கடைந்தபோது மந்தரகிரியைத் தாங்கிப் பிடித்த 'கூர்மாவதாரம்', ஹிரண்யாக்ஷனைக் கொன்று பூமியைத் தூக்கி நிறுத்திய 'வராஹ அவதாரம்', பிரஹ்லாதன் பிரார்த்தனை செய்ய, கம்பத்திலிருந்து வெளிப்பட்டு காத்தருள் புரிந்த 'நரஸிம்ம அவதாரம்', பலியிடம் மூன்று அடி தானம் கேட்டு பூலோகம், மேல் லோகம் என அளந்து கங்கையைப் படைத்த 'வாமனாவதாரம்', துஷ்ட அஸுரர்களைக் கொன்று பூபாரத்தைக் குறைத்த 'பரசுராமாவதாரம்', தஸரதனுக்கு மகனாகி அவதரித்து தைத்யர்களை அழித்த 'ராமாவதாரம்', வஸுதேவர் தேவகி தம்பதியருக்கு மகனாகப் பிறந்து பூபாரத்தைக் குறைக்கும்படியாக தைத்யர்களை அழித்த 'கிருஷ்ணாவதாரம்', ஜினன் என்னும் தைத்யன் மற்றும் அவனைச் சேர்ந்தவர்களுக்கு துர்புத்தியை அளித்து, தேவதைகளுக்கு நல்லுபதேஸம் புரிந்த 'புத்தாவதாரம்', கலியின் தோஷத்தைப் பரிஹாரம் செய்யும் 'கல்கி அவதாரம்' என தஸாவதார ரூபங்களை, அவதார காரியங்களை வர்ணித்து "தயவாகோ தயவாகோ" என மீண்டும் மீண்டும் ப்ரார்த்தனை செய்துள்ளார் தாஸர்.

190 முதல் 216 வரையிலான பத்யங்களில் 'வெங்கடேஸ ஸ்தோத்திரம்' என்பதாக "ஷரணாகதர கல்பதருவெ வெங்கட தராதரனாத நின்ன சரணாப்ஜ | சரணாப்ஜயுகள ஸன்தருஷவனியோ எந்தெந்து ||" எனத் தொடங்கி வெங்கடேஸனின் மஹிமைகளைக் கூறும் விதமாக, பிரம்மதேவரின் தந்தையும், ஸ்வாமி புஷ்கரணியில் வாஸம் செய்பவனும், ஸத்ய ஸங்கல்பனும், தேவஷர்மாவிற்கு தரிஸனம் அளித்து அருள்புரிந்தவனும், ஸர்வோத்தமனுமான வெங்கடேஸனின் ரூபத்தை மனதிலும், நாமத்தை நாவிலும், நைவேத்தியத்தை உதரத்திலும், நிர்மால்யத்தை சிரத்திலும் தரிக்க ஸம்ஸார பயமில்லை எனவும், அனந்த ரூபங்களைக் கொண்ட வெங்கடேஸனின் அருளாலேயே த்ருடமான பக்தி சித்திக்கும் எனவும் கூறி,

பகவானிடத்தில் பிரார்த்தனை செய்யும் விதத்தில், நமக்கு பகவானின் பாத தரிஸனத்தையும், ஸஜ்ஜனர்களின் ஸங்கத்தையும், இடைவிடாத பகவத் ஸ்மரணையையும் வேண்டி, பகவான் ஸ்வதந்த்ரனாகவும், ஸர்வ கர்த்தனாகவும் இருப்பதை உணர்ந்த பிறகு நமக்கு கவலை எதற்கு ? எனவும் வினவி, அத்தகைய வெங்கடேஸனை பஞ்சரூப நாமங்களினாலும், தஸாவதார நாமங்களினாலும், விஸ்வாதி 8 நாமங்களினாலும், க்ருத்தோல்க, மஹோல்க, விரோல்க, த்யுல்க, ஸஹஸ்ரோல்க முதலான நாமங்களினாலும் துதித்து இப்பகுதியை நிறைவு செய்கிறார் தாஸர்.

217 முதல் 353 வரையிலான பத்யங்களில் தாஸர் 'ஸ்ரீநிவாஸ ஸ்தோத்திரம்' என்பதாக பகவானின் குணங்கள் மற்றும் மகிமைகளை வர்ணித்து, நமது பிரார்த்தனையை பகவானிடத்தில் முறையிடும் வகையில் அமைத்துள்ளார். "ஸ்ரீநிவாஸன போல்வ தீனவத்ஸலருண்டெ ஜகதொளு |ஜகதொளு இஹரெம்ப ஞானிகளுண்டெ அனுகால || " எனத் தொடங்கி, ஸ்ரீநிவாஸனைப் போல தீனவத்ஸலன் வேறொருவரும் இல்லை; அவன் பக்தர்களின் அபராதங்களை எண்ணுவதில்லை; தந்தை, தாய், நண்பன், குரு, புத்திரன் அனைத்துமாகவும் உள்ளவன்; பக்தர்களுக்கு அவனைப் போல் ஒரு ஸ்வாமி இல்லை; தேவதைகளாலும் ஞானிகளாலும் பூஜிக்கப்படுபவன்; அனைவருள்ளும் அந்தர்யாமியாக விளங்குபவன்; ஜீவர்களுக்கு அவரவர்களின் யோக்யதைக்குத் தகுந்தபடி கர்ம பலன்களை அளிப்பவன்; பிரம்மாதி தேவதைகளுள் இருந்து காரியங்களைச் செய்பவன் என்பதாக விவரித்து, மனதில் ஹரியின் சிந்தனை இருந்தால் எந்த ஆஸ்ரமத்தில் இருந்தாலும், துஷ்டர்களுடன் சகவாசம் செய்ய நேர்ந்தாலும் அவர்களை பாதிப்பதில்லை என்று விளக்கி பகவானை நினைக்கும்படியான கர்மங்களெல்லாம் புண்ணிய கர்மங்கள் எனவும், பகவானுக்கு சம்மதமில்லாத ஸ்வர்க லோகத்தைக் காட்டிலும் அவனுக்கு சம்மதமான நரக வாழ்க்கையே உத்தமம் எனவும் மனமுருகக் கூறி, பக்தர்களின் ஸஹவாஸத்தையும், பகவான் தான் ஒருவனே பூஜிக்கப்படுபவனும் பூஜையைச் செய்பவனுமாக உள்ளான் என்ற ஞானத்தையும் வேண்டி, பற்பல பிறவிகளில் ஜீவர்களைக் காப்பவனான ஸ்ரீ ஹரி அனைத்து ஜீவராசிகளுக்கும் அன்னமிடுபவன், நம்மைக் கைவிடுவதில்லை எனவும் விளக்கி, விசேஷமான மானசீக பூஜையை விளக்குவதாக, காணும் அனைத்தையும் பகவானின் பிரதிமை எனவும், மனம் வாக்கு தேகங்களினால் அனுவிக்கும் அனைத்தையும் ஸ்ரீ ஹரிக்கு சமர்ப்பணம் செய்வதாகவும் கூறி, மேலும் பூமியே பகவானுக்கு பீடம், ஆகாயமே குடை, நட்சத்திரங்களே தீபங்கள், மழையே

அபிஷேகம், மரங்களே சாமரம், கடலின் ஓசையே வாத்தியம், பாதாள லோகமே பாதுகை, ஸ்வேத த்வீபமே கிரீடம், வைகுண்டமே ஒட்டியானம், சந்திர சூரியனே ஆகாய தீபங்கள், நமது தேகத்தில் இந்திரிய ஸ்தானங்களே ஆலயம், விஷயங்களே பகவானுக்கு நாம் சமர்ப்பிக்கும் பூஜை என்பதாக மானசீக பூஜையை எப்போதும் செய்யும்படி அறிவுறுத்தும் தாஸர், முடிவில் சரணாகதி அடைந்தவர்களுக்கு அருள்பவனான ஸ்ரீ ஜகன்னாத விட்டலனிடம் காப்பாற்றும்படி வேண்டித் துதிக்கிறார் தாஸர்.

354 முதல் 380 வரையிலான பத்யங்களிலே 'மாயாவாத கண்டனம்' என்பதாக தாஸர், மாயாவாதத்திலே கூறப்பட்டுள்ள தத்துவ விரோதங்களைக் கண்டித்து, `பஞ்சபேதம்', 'தாரதம்யம்', 'ஜகத் ஸத்யம்' முதலான ஆச்சார்யரின் சித்தாந்தத்தில் உள்ள உண்மைப் பொருள்களைத் தாமே கேள்விகளை எழுப்பி, பதிலுரைத்து, பலவித உதாரணங்களைக் கூறி விளக்கியுள்ளார். ஜீவ ஈஸ்வர ஐக்கியத்தைக் கூறுபவர்களிடம், அதைக் கண்டித்து கேள்விகளை எழுப்பும் விதத்தில் தாஸர், "சிவனு நீனாதரே சிவராணி நினகேனு அவிவேகி மனுஜ ஈ மாது | ஈ மாது கேளிதரெ கவிஜனரு நகரெ கை ஹொடெது ||" என ஆரம்பித்து, நீயே சிவன் எனில், சிவனின் மனைவி உனக்கு என்னாக வேண்டும் ? அனைத்தும் ஒன்றெனில் மனைவி, தாய் மற்றும் சகோதரி ஒன்றெனக் கொள்வது முறையா ? பிம்பம், பிரதிபிம்பம் ஒன்றெனக் கொண்டால், பகவானுக்கும் துக்கம் முதலான தோஷங்கள் உண்டா ? பிரத்யக்ஷமான இந்த ஜகத்தை 'பொய்' என உரைப்பது தனது தாயை 'மலடி' என்று கூறுவதற்கு சமம்; ஸ்ரீ ஹரி குண பரிபூர்ணன் என்று கூறுவதில் மகிழ்ச்சி கொள்ளாதவன் மனித உருவில் உள்ள மிருகமே ஆவான்; ஸர்வ அபேதத்தைக் கூறுபவனுக்கு பசும் நெய்யும் மூக்குச் சளியும் சமமாகுமா? ஸ்ரீ ஹரியும் த்ருணமான ஜீவனும் சமானமாவது எவ்விதம்? ஸ்ரீஹரியை நிர்குணன் எனக் கூறுவது, அவனை நிந்திப்பது போல் ஆகாதா? எனப் பலவாறு கண்டித்து, "ஜகன்னாத விட்டலனே நான்" என்பவன் தனது தாய், தந்தை, சகோதரன், குரு, உறவினன் முதலான அனைவருக்குமே துரோகம் இழைத்தவன் ஆவான் என்பதை "மாத்ரு பித்ரு ப்ராத்ரு ஸக குரு பந்து காதகனு நீனு புஸியல்ல | புஸியல்ல ஸ்ரீ ஜகன்னாத விட்டலனே நானெம்பி ||" முதலான பத்யங்களினால் விளக்கியுள்ளார் தாஸர்.

381 முதல் 387 வரையிலான பத்யங்களில், 'ஸ்ரீ அக்னிதேவரின் ஸ்தோத்திரம்' என்பதாக தாஸர் "தேவமுக என்னய கராவலம்பனவித்து பாவகரிகொலிது பவதாப | பவதாப பரிஹரிஸி பாவகன ஜனக ப்ரதிதின ||" என ஆரம்பித்து பிரார்த்தனை செய்யும் விதத்தில், ப்ரதிதினமும் நம்மைக் காப்பாற்றுமாறும், கெட்ட புத்தியை நீக்கி, சத்கதி அடையும் மார்கத்தைக் காண்பித்து, மனவசனங்களினால் எழும் தோஷங்களைக் கவனிக்காமல் நம் மனதை ஸ்ரீ ஹரியிடத்தில் நிற்குமாறு செய்யவும், ஸ்ரீ ஜகன்னாத விட்டலனை துதிக்கும் பாக்கியம் இருக்கட்டும் என்று வணங்குவதாக "வீதி ஹோத்ரனே ஜகன்னாத விட்டலன ஸம்ப்ரீதி பூர்வகதி துதிஸிவ | துதிஸி ஹிக்குவ பாக்ய ஜிதவாகி இரலி எந்தெந்து ||" முதலான பத்யங்களினால் போற்றித் துதித்துள்ளார் தாஸர்.

388 முதல் 392 வரையிலான பத்யங்களில், இந்த கிரந்தத்திற்கு மங்கள பதமாக அமைத்து 'ஸுவ்வி பத' என்பதாகப் பாடியுள்ளார் தாஸர். "ஸுவ்வி ஸ்ரீதேவி ரமண ஸுவ்வி ஸர்பராஜ ஸயன ஸுவ்வி தைத்ய நிகரஹரண ஸுவ்வி நாராயண ||" என ஆரம்பித்து, 'ஸுவ்வி' என்ற சப்தத்தினால் "மங்களப்ரதனாக ஆகு" எனப் பொருள்படும் வகையில், பகவானிடத்தில் பக்தர்களுக்கு மங்களத்தையும், தைத்யர்களுக்கு நாஸத்தையும் செய்யும்படி வேண்டி, மங்கள சரிதனும், ருத்ர, இந்த்ராதிகளால் வணங்கப்படுபவனுமான பகவான், ப்ரம்ம, ருத்ராதி தேவதைகளை கூர்ம, மச்ச, மோஹினி முதலான ரூபங்களிலே காப்பாற்றிய ஸ்ரீ ஹரி, நமக்கு மங்களம் அருளட்டும் எனவும் பிரார்த்தனை செய்து, தஸாவதார ரூபங்களையும் வேண்டி, மங்கள சரிதனான, வேதங்களில் ஸ்தோத்திரம் செய்யப்படும் அனந்த கல்யாண குணங்கள் நிறைந்தவனும், தோஷ தூரனுமான ஸ்ரீ ஜகன்னாத விட்டலனை, நம்மையும் காப்பாற்றும்படி வேண்டி, "பாஹி நிகம நிகரஸ்தோத்ர லலிதகாத்ர மாம் பாஹி ஸுஜனஸ்தோமமித்ர தோஷ தூர ஸுகுண ஸம்தோஹ ஜகன்னாத விட்டல ஜய த்ரிதாமக ||" போன்ற பத்யங்களில் பாடி பூர்த்தி செய்கிறார் தாஸர்.

பகவானின் மகிமைகளை போற்றும் வகையிலும், பிரம்ம ருத்ராதி தேவதைகளை ஸ்தோத்திரம் செய்யும் வகையிலும், த்வைத சித்தாந்தத்தை பறைசாற்றும் வகையிலும் அமைந்த இத்தகைய உயரிய க்ரந்தத்தை தினமும் பாராயணம் செய்து, விஸேஷமான அர்த்தங்களைத் தெரிந்து கொண்டு ஸ்ரீ ஜகன்னாத தாஸரின் அந்தர்யாமியான ஸ்ரீ லக்ஷ்மி நரஸிம்மரின் அனுக்ரஹத்திற்குப் பாத்திரராவோமாக!

**S.லக்ஷ்மிபதிராஜா, சென்னை**

தொடர்

## ஸ்ரீவியாசராஜரைப் பற்றிய கட்டுரைகள்

### வாழ்க்கை வரலாறு

கிருஷ்ண தேவராயனோ மேலும் ஒரு அடி முன்னே சென்று, 'க்ருஷ்ணமஹிபாலேன த்ரிஸந்த்யம் குலதேவதேவ' என்று கவி கூறியதைப் போல, குலதெய்வத்தைப் போல மூன்று வேளையும் ஸ்ரீவியாசராயரை ஆராதித்திருந்தான். அச்யுத ராயனின் காலத்தில் போர்ச்சுகீசிய யாத்ரிகனான நூனிஜன – The king of Bisnaga is a Brahman. Everyday he hears the preaching of learning Brahman, who never married nor ever touched a woman - என்கிறான். இந்த வாக்கியங்கள், அரசன் வியாசராஜருக்கு எவ்வளவு மரியாதை செலுத்தினர் என்பதை தெளிவாக காட்டுகிறது. இவ்வளவெல்லாம் மரியாதை பெற்றிருந்த வியாசராயர் தம் சொந்த அனுகூலத்திற்காக எந்த பொருட்களையும் யாரிடமும் பெற்றதில்லை. மற்றும் அரசர்களே கொடுத்தபோது அதனை அனைவருக்கும் பிரித்துக் கொடுத்து, தம் வைராக்கியத்தை வெளிப்படுத்தினார்.

இதற்கான உதாரணம், கிருஷ்ணதேவராயன், ஸ்ரீவியாசராஜருக்கு ரத்ன அபிஷேகம் செய்த சந்தர்ப்பம் ஆகும். கவி இதனை மிகவும் அழகாக வர்ணிக்கிறார்.

அஹமஹமிகமேவ ஸ்வாமிபாதாரவிந்த
ப்ரணதவிபுதயூதை: ஸாலஹல்லோஹலஸ்ரீ: |
ப்ரணத குஷலவாத்யா ப்ராந்ததா வத்புரோதா:
க்ஷணம் அஜனி ஸபா ஸா கௌதுகேனேவ ஸ்ருஷ்டா ||

ஸ்ரீவியாசராஜர், தங்க சிம்மாசனத்தில் அமர்ந்த உடனேயே, பண்டிதர்கள் பிறகு க்ஷத்ரிய வீரர்கள், நான் முந்தி, நீ முந்தி என்று அவரை வணங்குவதற்கு வந்தனர். பிறகு, அரசன், தானே முத்து ரத்தினங்களால் அவருக்கு அபிஷேகம் செய்தான். பிறகு அபிஷேகத்தின் முத்து ரத்தினங்களை வியாசராஜர், எவ்வளவு முடியுமோ அவ்வளவு வித்வாம்சர்களுக்கு, பிராமணர்களுக்குக் கொடுத்து, மீதம் இருந்தவற்றை அங்கு வீற்றிருந்த பல அரசர்களுக்கு, அவர்களின் பிரதிநிதிகளுக்கு பகிர்ந்து கொடுத்துவிட்டார் என்கிறார் கவி. அதுமட்டுமல்லாமல், தர்மத்தைக் காப்பதற்காக அனேக

அத்யயன கேந்திரங்களை, அக்கிரகாரங்களை நிர்மாணித்தார் ஸ்ரீவியாசராஜர்.

வைஷ்ணவ மதத்தை பரப்புவதற்காகவே, ஸ்ரீவியாசராயர், விஜய நகரத்தின் குலதேவதையான விரூபாக்ஷனை மாற்றி, ஸ்ரீனிவாசனை குலதேவதையாக ஆக்கினார் என்று சில புத்திஜீவிகள் கூறிவந்தனர். இதனாலேயே, சைவ வைஷ்ணவ சண்டைகள் துவங்கி, கிருஷ்ணதேவராயன், போரில் தோற்று, விஜய நகர சாம்ராஜ்யம் அஸ்தமனம் ஆயிற்று என்று பொறாமையில், எவ்வித ஆதாரங்களும் இல்லாமல் குற்றம் சாட்டினர்.

தவறான சித்தாந்தத்தின், புத்தகங்களை படித்தால் மட்டும் கிருஷ்ணதேவ ராயனுக்குப் பிறகு, விஜய நகரம் வீழ்ந்தது என்னும் பிரமை வரலாம். கிருஷ்ணதேவ ராயனின் மரணத்திற்குப் பிறகும், சுமார் 100 ஆண்டுகாலம் விஜய நகர சாம்ராஜ்யம் ஆட்சியில் இருந்தது என்பது, சாதாரண ஆராய்ச்சியிலேயே தெரிந்து விடும் விஷயம் ஆகும். அடுத்து, மாத்வ யதிகள் யாரும் அவர்களின் குலதெய்வத்தை மாற்றவில்லை. வித்யாரண்யரே, ஹக்க புக்கர்களால் நிறுவப்பட்ட இந்த சாம்ராஜ்யம், 150 ஆண்டுகளுக்குப் பிறகு விழுந்துவிடும் என்று சொல்லியிருந்தார். பஞ்சாஷதுத்தரே ஷதே வம்ஷபூர்த்திர் பவிஷ்யதி – என்பது கேளதி ந்ருப விஜயகாவியத்தில் வரும் வித்யாரண்யரின் வாக்கு.

இப்படியாக பிறகான காலத்தில், மூலவம்ச தேவதையின் கேள்வியே வருவதில்லை. காலகிரமத்தில் சில சம்பவங்களால் அரசர்களிடையே உண்டான வைஷ்ணவ சிரத்தையே இந்த மாற்றத்திற்கு காரணம் ஆனது. சாளுவ நரசிம்மனின் காலத்தில், ராஜவம்சம் வைஷ்ணவ சிரத்தையை வளர்த்துக் கொண்டது என்பதற்கு அந்த அரசன், ஸ்ரீனிவாச தேவருக்கு கிரீட்த்தை சமர்ப்பித்த சம்பவமே சாட்சியாக இருக்கிறது. மற்றும் வைஷ்ணவ குருகளின் ஆளுமையை, அந்த சம காலத்து மற்ற மதத்தின் குருகள் யாரும் கொண்டிருக்கவில்லை என்பதும் காரணம் ஆகிறது.

நரஸ நாயகனின் ஆஸ்தானத்தில் வியாசராஜர் ராஜகுருகளாக இருந்தபோது, யாருடைய எதிர்ப்பும் இல்லை என்று இல்லை. வியாசராஜரை வெவ்வேறு பகுதிகளிலிருந்து வந்த வேறு மதத்தவர்கள் வாக்யார்த்தத்திற்காக அழைத்து வந்தனர். அந்த அனைத்து பண்டிதர்களின் ஆர்ப்பாட்டங்களைப் பார்த்து,

வியாசராஜரின் மகிமையை அறிந்திருந்தாலும், அரசனுக்கு பயம் வந்தது என்று சோமநாத கவி வர்ணிக்கிறார்.

வைதேஷிகானாம் ஸுதியாம் க்ஷிதீந்த்ர: தாத்ருக்விதாரபடீம் ஸமீக்ஷ்ய: |
தம் வியாஸயோகீஷிதுரானுபாவம் ஜானன்னபி த்ரஸ்த இமாபபாஷே ||

இந்த அனைத்து பண்டிதர்களுடன் வாதத்தில் வென்று வியாசராஜர், தம் இடத்தை அலங்கரித்தார். வியாசராஜரின் காலத்திற்கு முன்னரே நரஸ நாயகனின் காலத்தில், விரூபாக்ஷனுடன் விட்டலனும்கூட விஜய நகரத்தின் ஆதி தேவதையாக இருந்தான் என்று குமாரதூர்ஜட என்னும் கவி கிருஷ்ணதேவராய விஜயமு என்னும் காவியத்தில் இவ்வாறு வர்ணிக்கிறார்.

ஆக்ஷோணீரமணாக்ரகண்யுடு விரூபாக்ஷேஷ்வரஸ்வாமிகின் |
ரக்ஷா ஷிக்ஷகுடைன விட்டலுனகுன் ரஞ்சில்லு நித்யோத்ஸவம் ||

அடுத்து, அனந்தாசார்யர், தமது ப்ரபன்னாம்ருதம் என்னும் கிரந்தத்தில் எட்டூரு கிராமத்தின் ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தின் ந்ருஸிம்ஹாசார்யர், ஸ்ரீரங்காசார்ய என்னும் வித்வாம்சர்களுக்கு விரூபாக்ஷராஜனின் ஆஸ்தானத்தில் இருந்த மரியாதையினால், அந்த அரசன் வைஷ்ணவனாக மாறினான் என்று விவரிக்கின்றனர்.

இதையே ஆதாரமாக வைத்துக்கொண்டு, Rav. Haras என்பவர், The Aravidu dynasty of Vijayanagara என்னும் புத்தகத்தில், இதே அபிப்பிராயத்தை சொல்லியிருக்கிறார். விரூபாக்ஷனின் ஆட்சிக்காலம் வெறும் 11 ஆண்டுகளே. அந்த காலத்திலும் அந்த அரசன் ஆட்சியில் கவனம் செலுத்தாமல், அனைத்து செல்வங்களையும் இழந்தான் என்பதாக ப்ரெஞ்ச் யாத்ரிகனான நுனாஜ் எழுதியிருக்கிறார். ஆக, இந்த காலத்தில் சித்தாந்தம் மாறுவதற்கு சாத்தியம் இல்லை என்று Vaishnavism in Vijayanagar என்னும் புத்தகத்தில் B.A.Salatore என்னும் ஆராய்ச்சியாளர் எழுதியிருக்கிறார்.

வியாசராயரின் மகிமையை மேலும் விளக்கும் சோமநாத கவி, அவரின் அருளாலேயே விஜயநகரத்தின் அரசர்கள் அனைவரும் போரில் வென்று வந்தனர் என்று அனைவராலும் பேசப்பட்டது என்று

கவி வர்ணிக்கிறான். வியாசராஜருடைய பிரம்ம பலத்தினால், லௌகிக நடவடிக்கைகளால், தர்மத்தின்படி அந்த அரசு நிலையாக இருப்பதற்கு, அரசனுக்கு உதவியாக இருந்தது என்பது அந்த காவியத்திலிருந்து தெரிய வருகிறது.

மேலும் வியாசராஜரின் ஆளுமையின் விஷயத்தைப் பற்றி எவ்வளவு கூறினாலும், அது குறைவே. இந்த கவி அவரின் திறனை, ஆளுமையின் அறிவினை ஒரே ஸ்லோகத்தினால் வர்ணிக்கிறார்.

மான்யஸ்ய தஸ்ய மஹதோ மஹதாம் ஸகாஷே
ஷட்தர்ஷனான்யபி தராதரஸன்னிபானி |
வித்யாபுபுக்ஷித மதோ திஷணாமஹிம்னோ
ப்ராணாதி மாஹுதிதஷாம் ப்ரதமம் ப்ரஜக்மு: ||

மிகவும் பசியோடு இருக்கும் ஒரு மனிதன், உணவிற்கு முன்னர் எடுத்துக்கொள்ளும் பிராண அபானாதி ஆஹுதிகளைப் போல, ஷட்தர்ஷணங்கள் - வியாசராஜரின் வித்யா பசிக்கு பிராணாதி ஆஹுதிகளைப் போல ஆனது என்று கவி வர்ணிக்கிறார். இதிலிருந்து, அவரின் ஞானத்தின் ஆழத்தை நன்கு அறியலாம்.

இவ்வாறு வியாசராஜரின் அனுபம ஜீவன சரித்திரத்தை வர்ணிப்பதற்கு துவங்கினால், அது முடிவதேயில்லை. ஆனாலும், எனக்கு சாத்தியமான அளவிற்கு, வியாசராஜரின் அருளால், வரலாற்று ஆதாரங்களுடன், அவரது வாழ்க்கை வரலாற்றை இயற்றுவதற்கு முயன்றிருக்கிறேன். இதனால் வியாசராஜரின் அந்தர்யாமியாக இருக்கும் கிருஷ்ணன் ப்ரீதனாகட்டும் என்று வணங்கியவாறு இதனை முடிக்கிறேன். ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**வித்வான் ஸ்ரீநிதி ப்யாடி**

** அடுத்த இதழில் வேறொரு புதிய கட்டுரை துவங்கும் ***

(தொடரும்...)

**Subscription Renewal**

* தக்க சமயத்தில் உங்கள் ஹரிதாச விஜயம் சந்தாவினை ரென்யூ செய்து கொண்டு, பத்திரிக்கையை தொடர்ந்து பெறுமாறு பார்த்துக் கொள்ளவும்.
* பத்திரிக்கை பெறும் முகவரி மாறினால், அதனை எங்களுக்கு தெரியப்படுத்தவும்.

**தொடர்**

## கீசக வதெ – சிறு காவியம்

**ஶ்ரீவாதிராஜர்**

**ஈஷ கேளோ பரதே3ஷதி3ந்தொ3ப்3ப3ளு**
**கேஷ கட்டுவந்த வேஷதி3 ப3ந்த3ளு**
**ஸாஸிரமுக2த3 சேஷனீ ரூபவ**
**லேஸாகி3 தா வர்ணிஸலார**

**வாஸமாடு3வெனு மாஸ ஈராரெந்து3**
**க்3ராஸவ கொட்டென்ன போஷிஸெந்து3 நுடி3**
**தோ3ஸனு பேளலு மீஸெய திருஹுத்த**
**மீஸலெனகெ3ந்து3 தோஷிஸித3 ||3**

திக்விஜயத்திலிருந்து திரும்பி வந்த கீசகன், திரௌபதியைக் கண்டு, இவள் யார் என்று தன் அக்காவான ராணி சுதேஷ்ணையை கேட்க, அவள் அனைத்தையும் கூறுகிறாள். அப்போது தாசி ரூபத்தில் இருந்த அவள், தன் போகத்திற்கு ஏற்றவள் என்று நினைக்கிறான்.

ஈஷ – ஹே சமர்த்த கீசகனே. கேளோ – (இந்த சைரந்திரி இங்கு எப்படி வந்தாள் என்பதை சொல்கிறேன்) கேள். ஒப்பளு – ஒரு ஸ்த்ரீ. பரதேஷதிந்த – அன்ய தேசத்திலிருந்து. கேஷ கட்டுவந்த வேஷதி – சைரந்திரி (பிறரின் வீட்டில் இருந்து கந்த லேபன, முடி அலங்காராதி வேலைகளை செய்யத்தக்க தாசி) வேடத்தில் வந்தாள். ஸாஸிரமுகத – 1000 முகம் கொண்ட. சேஷ – சேஷதேவர். ஈ ரூபவ – இவளின் அழகான ரூபத்தை. தா – தான். லேஸாகி – முழுமையாக. வர்ணிஸலார – வர்ணனை செய்ய முடியாதவனாக ஆகிறான்.

மாஸ ஈராரு – ஓராண்டு காலம். வாஸ மாடுவெனு எந்து – உங்களிடம் வசிக்கிறேன் என்றும். க்ராஸகொட்டு – அன்னம் அளித்து. என்ன – என்னை பார்த்துக் கொள்ளுங்கள் என்று. நுடித – அவள் கூறிய. ஓஸனு – அனைத்தையும். பேளலு – கேட்டு. மீஸெய திருஹுத்த – மீசையை முறுக்கியவாறு. மீஸலு எனகெந்து – அந்த ஸைரந்திரி என் போகத்திற்கு தக்கவள் என்று. தோஷிஸித – மகிழ்ந்தான்.

** பீமன், பலபத்ரன், ஷல்யன், கீசகன் ஆகிய நால்வரும் பலசாலிகள். மற்றும் இதே கிரமத்தில் ஒருவரைவிட மற்றொருவர் வலிமையில் குறைந்தவர். கீசகன் அனைவரைவிட குறைந்தவன். கீசகனின் வலிமையின் உதவியால், விராடன் தன் சிம்மாசனத்தில் வீற்றிருந்தான். இதனை அறிந்த சுதேஷ்ணை, 'ஈஷ' என்று அவனை அழைக்கிறாள்.

** ருத்ராதி ஸர்வதேவானாம் மனோவாசாமகோசரா |
அனாதிதஸ்ச ஸர்வக்ஞா த்வத்ரிம்ஷல்லக்ஷணைர் யுதா ||
(ஸத்தத்வ ரத்ன மாலா).

ருத்ராதி தேவதைகளுக்கும்கூட பாரதிதேவி சிக்காத, குண பூர்ணள். சேஷ, கருட, ருத்ராதி தேவதைகளாலும்கூட முழுமையாக வர்ணிக்கப்பட முடியாதவள். அவர்களால் சிந்திக்க முடியாத அனந்த குணங்களைக் கொண்டவள். இவ்வாறு மகாமகிமைகளான சைரந்திரியைக் கண்ட சுதேஷ்ணை, அவளை வேதாதிகளால் வணங்கத்தக்க பூஜ்ய ஸ்த்ரி என்று ஊகித்தாள் என்று 'கேஷ கட்டுவந்த வேஷதி' என்னும் சொல் குறிக்கிறது.

**நாரி அக்கனல்லி ஸேரிகொண்டிஹளு**
**மோரெய நோட3லு பா4ரிகு3ணத3ந்தெ**
**தோருதலிதெ3 என்ன ஸேரித3 மேலனு**
**சாரி எனிஸுவெ மீரித்3த3க்கெ**
**வாரிக3ண்ணிலொந்து3 ஸாரி நோட3லெந்து3**
**பா3ரிபா3ரியாகெ மோரெ நோடு3த்திரெ**
**நீரெ ஆ க்ரூரன கோ4ரரூபக்கஞ்சி**
**மோரெ தோரதெ3 க3ம்பீ4ரதி3ரெ ||4**

நாரி – இந்தப் பெண் (ஸைரந்திரி). அக்கனல்லி – என் அக்காவான சுதேஷ்ணையிடம். ஸேரிகொண்டிஹளு – சேர்ந்திருக்கிறாள். மொரெய நோடலு – இவளின் முகத்தைப் பார்த்தால். பாரிகுணதந்தெ – அதிக குணங்களைக் கொண்டவளைப் போல. தோருதலிதெ – தெரிகிறது. என்ன ஸேரித மேலெ – என்னைச் சேர்ந்த பிறகு. மீரித்தக்கெ – அதிக சேவைக்கு. அனுசாரி எனிஸுவெ – யோக்யளாக செய்கிறேன் (என் ப்ரியளாக ஆவதற்குத் தேவையான செயல்களை செய்கிறேன்) – என்று கீசகன் சிந்தித்தான்.

வாரெகண்ணல்லி - கடைக்கண்ணினால். ஒந்து ஸாரி நோடலெந்து - ஒரு முறையாவது (தன்னை) பார்க்கட்டும் என்று. பாரிபாரியெ - திரும்பத் திரும்ப. ஆகெ மோரெ நோடுத்திரெ - திரௌபதியின் முகத்தை, கீசகன் பார்த்தாலும். நீரெ - அந்தப் பெண். ஆ க்ரூரன - அந்த துஷ்ட ஸ்வபாவ கீசகனின். கோர ரூபக்கஞ்சி - பயங்கரமான ரூபத்திற்கு பயந்து. மோரெ தோரதெ - தன் முகத்தை அவனுக்குக் காட்டாமல். கம்பீரதி இரெ - கம்பீரமாக இருக்க முயன்றாள்.

**அக்கனிகெ$^{3}$ பா$^{3}$சி ஹிக்$^{1}$கு$^{1}$வ ஸேவெகெ$^{3}$**
**புக்கட்டி அன்னக்கெ ஸிக்குவரே நீனு**
**சிக்க ப்ராயக்கென்ன பக்கக்கெ ப$^{3}$ந்த$^{3}$ரெ**
**ஸக்கரெது$^{3}$டி ஸவி த$^{3}$க்கிஸுவெ**

**ரக்கஸ நினகெ$^{3}$ த$^{3}$க்குவளே நானு**
**முக்கண்ணனாத$^{3}$ரூ லெக்கிஸத$^{3}$ பதி**
**க$^{4}$க்கனெ ப$^{3}$ந்த$^{3}$ரெ திக்கி நின்ன காய**
**தி$^{3}$க்கு தி$^{3}$க்கிகெ$^{3}$ ப$^{3}$லி இக்குவரோ ||5**

அக்கனிகெ - என் அக்காவிற்கு. பாசி ஹிக்குவ சேவெகெ - முடி அலங்காராதி சேவைக்காக. புக்கட்டெ அன்னக்கெ - அன்ன சேவை அல்லது வேறு இலவசமாக போடும் அன்னத்திற்கு. நீனு - உன்னைப் போல அழகான பெண். ஸிக்குவரே - சேர்ந்திருக்கலாமா? சிக்க ப்ராயக்கெ - உன் வயதிற்கு தக்கவாறு. என்ன பக்கக்கெ பந்தரெ - என் அருகில் வந்தால். (என்னுடையவள் ஆனால்). ஸக்கதெதுடி ஸவி - சுவையான (என் உதட்டுச் சுவையை). தக்கிஸுவெ - உனக்குக் கொடுக்கிறேன். (கீசகன் இத்தகைய கீழ்த்தரமான பேச்சினைப் பேச), திரௌபதி, ரக்கஸ - ஹே அரக்கனே. நானு - என்னைப் போன்றவள். நினகெ துக்குவளே - உனக்கு கிடைப்பாளா? (உன் வசம் ஆவாளா?). முக்கண்ணனாதரூ - த்ரி நேத்ரனான சிவனே ஆனாலும். லெக்கிஸத - கணக்கில் எடுக்காமல் (கவனிக்காமல்). பதி - என் கணவன். கக்கனெ பந்தரெ - தற்செயலாக வந்தால் (உன் கெட்ட நடவடிக்கைகளை அறிந்தால்). நின்ன காய - உன் தேகத்தை. திக்கி - கொன்று. திக்கு திக்கிகெ - அனைத்து திசைகளுக்கும். பலி இக்குவரோ - பலி கொடுப்பார் (உன் தேகத்தை, மாமிசம் தின்பவர்களுக்கு பலி கொடுத்துவிடுவார்).

**ப$^{4}$ண்ட$^{3}$கீசக என்னுத்$^{3}$த$^{3}$ண்ட$^{3}$தன கேளு**
**மண்டெ$^{3}$ ஹிக்குவளெந்து$^{3}$ கண்ட$^{3}$ கண்ட$^{3}$ ப$^{3}$ளி**
**புண்டு$^{3}$மாடு$^{3}$வரெ க$^{3}$ண்ட$^{3}$ர்க$^{1}$ண்ட$^{3}$ரெ தலெ**
**சண்ட$^{3}$னாடு$^{3}$வரோ க$^{2}$ண்டி$^{3}$ததி$^{3}$**

**மண்ட$^{3}$லாதி$^{4}$பன ஹெண்ட$^{3}$தி நீனம்ம**
**உண்ட$^{3}$மனெகெ$^{3}$ ஹகெகொ$^{3}$ண்ட$^{3}$ளென்னதி$^{3}$ரு**
**லண்ட$^{3}$னிகெ$^{3}$ பு$^{3}$த்$^{3}$தி$^{3}$ த$^{3}$ண்டி$^{3}$ஸி பேளதெ$^{3}$**
**ஹிண்டி$^{3}$கொள்ளதி$^{3}$ரு து$^{3}$ண்டு$^{3}$முக$^{2}$ ||6**

பண்ட கீசக - ஹே வெட்கம் கெட்ட கீசகனே. என்ன - என். உத்தண்டதன - சாமர்த்தியத்தை (ஆளுமையை). கேளு - கேள் (அறிந்து எச்சரிக்கையாக இரு). மண்டெ ஹிக்குவளெந்து - தலை வணங்கும் அல்ப ஸேவகி என்று. கண்ட கண்ட பளி - கண்டதையெல்லாம். புண்டுமாடுவரெ - மானத்தை எடுக்கலாமா? (இப்படி கெட்ட வழியில் நடக்கலாமா). கண்டர்க்கண்டரெ - (அப்படி செய்வதை) என் கணவர் பார்த்துவிட்டால். கண்டிததி - நிச்சயமாக. தலெ - உன் தலையை. சண்டனாடுவரு - கத்தரித்து, பந்தினைப் போல எறிவர்.

இவ்வாறு கீசனுக்கு புத்தி சொல்லி, திரௌபதி ராணி, ஸுதேஷ்ணைக்கு சொல்கிறாள். அம்ம - ஹே தாயே. நீனு - நீயாவது. மண்டலாதிபன ஹெண்டதி - அரசனின் மனைவி. உண்ட மனெகெ - இவ்வளவு காலம் அன்னத்திற்காக வந்த வீட்டிற்கு. ஹகெகொண்டளு - எதிரியானாள். என்னதிரு - என்று சொல்ல வேண்டாம். (உன் தம்பி கீசகனின் மேல் நான் உன்னிடம் சொல்லும் அவதூறினால், என் மேல் தவறாக கருதாதே). லண்டனிகெ - துர்மார்க்கியான (நிர்லஜ்ஜ - வெட்கம் கெட்ட) உன் தம்பிக்கு. தண்டிஸி - தண்டனை கொடுத்து (சன்மார்க்கத்தை உபதேசித்து). புத்தி பேளதெ - புத்தி சொல்லாமல் (பர ஸ்த்ரீயர்களில் விஷயத்தில் நடந்து கொள்ள வேண்டிய நல்ல மார்க்கத்தை சொல்லாமல்). துண்டுமுக - உன் அழகான முகத்தை. ஹிண்டி கொள்ளதிரு - அவதூறு கூறினாள் என்று கோபம் கொள்ளாதே.

** அதிகாரத்தினால் புத்தி சொல்வாயாக. கேட்கவில்லை யென்றால், தக்க தண்டனைக்கு ஆளாவாய் என்று சொல். ராஜனின் ஸ்தானமே கீசகனின் வலிமையை நம்பி இருக்கும்போது, எனக்கு எப்படி தைரியம் வரும்? என்று சொல்லாதே. துஷ்டனின் சகவாசத்தை விடு. உன்

ஸ்தானமானங்களைக் காப்பவர்கள் வேறு (ஸ்ரீஹரி வாயுகள்) என்பதை அறி.

**தரள நின்னய து$^3$ரளதனத$^3$**
**பெ$^3$ரள ஸன்னியெ க$^3$ரளவாயிது**
**ஸரள ஸூரெகெ$^3$ கொரள கொட$^3$த$^3$லீ**
**புரதொ$^3$ளிரதெ$^3$ தெரளின்ன**

**அரளமொக்$^3$கெ$^3$ய ஹெரளிக்$^3$ஹாகுத**
**குருளு தித்$^3$து$^3$வ தரளெய கண்டு$^3$**
**இருளு ஹக$^3$லு பா$^3$ரளு என்னுத**
**மருளுகொண்ட$^3$ரெ ப$^3$ருவளே ||7**

சைரந்திரியின் பேச்சினைக் கேட்டு, ஸுதேஷ்ணை கீசகனிடம் இவ்வாறு சொல்கிறாள். தரள – ஹே தம்பியே. நின்னய துரளதனத – உன் கெட்ட நடவடிக்கையினால். பெரளஸன்னெயே – (சைரந்திரியைக் கண்டு நீ செய்த) செயல்களை. கரளவாயிது – விஷயம் ஆயிற்று (உன் பிராணத்திற்கே அபாயம் ஆயிற்று). ஸரள ஸூரெகெ – வாள் முனைக்கு. கொரள கொடதலெ – (உன்) தலையைக் கொடுத்தாற் போல. ஈ புரதொளிரதெ – இந்த பட்டணத்தை விட்டு, இன்னு தெரளு – இப்போதே சென்றுவிடு. (ஸைரந்திரி இங்கு இருக்கும்வரை நீ செல்).

அரளுமொக்கெய – 'அரளமொக்கு' என்னும் ஆபரணத்தை அல்லது மல்லிகை மொட்டினை. ஹெரளிகெ ஹாகுத – கழுத்தில் போட்டுக் கொண்டு. குருளு தித்துவ – நெற்றியை சரிப்படுத்தி முகத்தை அலங்கரிக்கும். தரளெய கண்டு – பெண்களைக் கண்டு. இருளு ஹகலு – இரவும் பகலும் (நாள் முழுவதும்). பாரளு என்னுத்த – (என்னிடம்) வரவில்லை என்று. மருளுகொண்டரெ – ஆசைப்பட்டால். பருவளே – அவள் உன்னிடம் வருவாளா?. கண்டிப்பாக வரமாட்டாள்.

**( தொடரும் )...**

இந்த இதழைப் பற்றி தங்களின் பிற வாட்சப், மின்னஞ்சல் க்ரூப்களில் சொல்லி, மேலும் பல ஹரிபக்தர்கள் இந்த பயனுள்ள தகவல்களைப் பெறுவதற்கு உதவவும்.

ஆராதனை

## ஹரிதாசர்களின் சிந்தனைத் துளிகள்

### செய்ய வேண்டியவை / செய்யக் கூடாதவை

'தேன வினா த்ருணபமி ந சலதி' இது வேதவாக்கு. சர்வதந்த்ர ஸ்வதந்த்ரனான ஸ்ரீஹரியே அனைத்தையும் நடத்துபவன். 'ஒடெயா பாயிதெரியலாவு பாயிதெருவேவய்யா', 'ஒடெயா கொடலு உண்டு கொடதித்தரெ இல்ல' என்று ஒரு சுளாதியில் ஸ்ரீவிஜயதாசர் சொல்கிறார். இப்படி ஜீவனின் அ-ஸ்வதந்திரத்தை வர்ணிக்கிறார். மேலும் அவர் சொல்வது:

ஒடெயா பக்தரிகாகி பொம்மாண்ட புட்டிஸி
நடுவே தானே ஒந்து ரூபதல்லி
யடெபிடதலெ நிந்து சர்வ ஜீவிகளன்னு
ஜட ஒந்து தந்தித்து ஜனிஸுவ உபாய
ஒடனெ கல்பிஸி தானே ஔகிப்ப தொலகதலெ
கொடுவரு கெலவரு கெலவரு பிடிவரு
நுடி பேதகளிந்த குணிசுத்திப்ப மாயா
கடுகாரனொப்பனெ எல்லெல்லி பரிபூர்ணா
பிடனு பக்தரவஷ ஆபத்து பரலீஸா
ஹொடெ மக்கலிடலாவு தானெ ஆதெ மாடுவ
ஹுடுகனாகி கோபள்ளியொளகெ எல்ல
படெத கீபிகெய்ய நுடிஸி படிஸிகொண்ட
கடுமெச்சு ஈ தெய்வா கடெ மொதலில்லதெ
கடலொளகிப்பது ஒந்தே காணே
ஹடகவூ பவாப்திகெ விஜயவிட்டலரேய
ஒடகூடி சர்வவு பிடதெ மாடிசுவனு ||

இங்கு தாசர் ஜீவனின் அ-ஸ்வதந்த்ரத்தை விளக்குகிறார். இதற்கு முக்கிய காரணம் ஸ்ரீஹரியே. பாரபட்சம் பார்க்காமல் அனைத்து ஜீவர்களுக்கும் (சாத்விக, ராஜஸ, தாமஸ) அவரவர் தகுதிக்கேற்ப சாதனைகளை செய்வித்து சத்கதியைக் கொடுக்கிறார். ஸ்ரீஹரியின் ஸ்வாதந்த்ரயத்தை தாசர் ஒரே வாக்கியத்தில் இப்படி சொல்கிறார்.

ஆ எம்புது மொதலு ஹரினுடிஸிதனெந்து
காயதொளு திளியோ விஜயவிட்டல சுளிவா ||

இப்படி அ-ஸ்வதந்த்ரனான ஜீவன், ஸ்ரீஹரியிடம் என்ன கேட்கவேண்டும் என்பதையும் தாசரே சொல்கிறார்.

நின்னாதீனவாகி சகல வஸ்துகளலி |
என்னதெம்போதேனோ விஜயவிட்டல ஸ்வாமி ||

**கன்னடம்**

**அருஞ்சொற்பொருள்**

**கடினமான சொற்களின் அர்த்தங்கள்**

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

1. பக்ஷிபதி - கருடன். 2. பஞ்சபாண - மன்மதன். 3. பஞ்சநந்தன - மாருதி. 4. துர்வள - பரமபாபி. 5. துர்வினீத - வினயம் இல்லாதவன். 6. தினமணி - சூரியன். 7. திவ்யஜனகுரு - ப்ருஹஸ்பதி. 8. பரமகதி - நற்கதி. 9. பரிவெ - அறிவு / ஞானம். 10. பராமர்ஷ - உபசாரம்.

**வரவிருக்கும் புதிய புத்தகம்**

ஸ்ரீவிஜயதாசரின் ஆராதனையை ஒட்டி, அவரது வாழ்க்கை வரலாறு (200 பக்கங்கள்) மற்றும் அவரது 25 சுளாதிகள் - தமிழில் அர்த்த விளக்கங்களுடன் - (200 பக்கங்கள்) என இரு புத்தக செட் வரவிருக்கின்றன. ஹரிதாச சாகித்யத்தின் சிறந்த வகையான இத்தகைய சுளாதிகளை இயற்றிய, சுளாதி தாசர் என்றே அழைக்கப்படும் ஸ்ரீவிஜயதாசரின் வாணியை படிக்க இந்த புத்தகங்களை வாங்கிக் கொள்ளவும்.

**தொடர்**

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## ஸ்வகத ஸ்வாதந்த்ர்ய சந்தி - விடைகள்

| | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 வி | தி | ப | 19 தி | | 2 பூ | த | பா | வ | ன | | 20 க | | | 21 கு | |
| ஷ் | | | மி | | ஷ | | | | | ப | ம | | | த | |
| ணு | | 3 ப் | ர | ம | ண | | | | | 4 ல | ல | நெ | ய | ரு | |
| | | | | | க | | | 22 வி | | ல் | ப | | ன் | ம | 15 |
| | | | | 5 ஸ | ர | ஸி | ஜோ | த் | ப | வ | த் | | | | |
| 6 அ | னா | யா | 23 ஸ | | 28 உ | | | வ | | வ | ர | | | | |
| ம் | | 7 க் | ரோ | தி | | | 8 ஹெ | த் | து | த் | | | | | |
| 9 பு | த | ரு | வ | | | | | ஜ | | 10 ம | த் | ஸ | ர | ள | |
| தி | | 11 த | ர | ணி | | | | ன | | | | | த் | க | |
| | | | | 24 ஸ | | | ய | | | 12 மா | து | ளா | ந் | த | க |
| ன | ஸ | 25 ஸா | க | 13 பா | த | ரெ | ப | ஞ் | ச | | | | ரே | ந் | |
| | | த் | | தை | | | த | | ப | ட | கை | து | 16 ம | வ | |
| 14 த | ஸ | வி | த | 26 து | | | 29 வீ | | | 27 த | ணி | க | 17 அ | 30 த் | |
| | ம | க | | க் | | | | | | ரு | | | | | |
| | 31 தா | | ர | க | ஸ் | 18 பா | | | | ணி | | | | | |

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்

Haridasa Vijayam - Monthly

மலர் 3 ** டிசம்பர் 2021 ** இதழ் 1



ஸ்ரீவிஜயதாசர்

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 3 : இதழ் 1


| **நிர்வாக ஆசிரியர்** | **துணை ஆசிரியர்** |
|---|---|
| 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்<br>ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,<br>380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase, பெங்களூரு 560078<br>Ph.: 89044-58276.<br>haridasa.vijayam@gmail.com<br>jagannathakesava.blogspot.com | 'தாச சாகித்ய சேவா ரத்ன'<br>திரு.குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்<br><br>**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**<br>திரு. முரளிதர தாசரு,<br>திருமதி. நிர்மலா நரசிம்மன்,<br>திரு. லட்சுமிபதிராஜா,<br>திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ் |


ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்

**டிசம்பர் 1 முதல் 31 வரை, 2021**

Dec 1 : கார். கிரு.த்வாதசி - ஸ்ரீஉரகாத்ரிவாச விட்டலதாசர், சித்ரதுர்கா
Dec3 : கா.கி.சதுர்தசி - ஸ்ரீமுத்துமோகனவிட்டலதாசர், தொட்டபள்ளாபுர்
Dec 4 : கா. அமாவாசை - ஸ்ரீமஹிபதி தாசர், காகண்டிகி
Dec19 :மார்கசிர பௌர்ணமி - ஸ்ரீவித்யா பிரசன்ன தீர்த்தர், ஸோஸலே
Dec 25 : மா. கிருஷ்ண சஷ்டி - ஸ்ரீநரசிம்ம விட்டலதாசர், ப்யாகவட
Dec 31 : மா. கி. த்வாதசி - ஸ்ரீகுருகோவிந்த விட்டலதாசர், மைசூர்

# ஆசிரியர் பக்கம்

வரும் டிசம்பர் 2021 மாதத்தில், பல ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள் வருகின்றன. ஸ்ரீஜகன்னாததாசரின் தந்தையான ஸ்ரீநரசிம்ம விட்டலதாசரின் புண்ணிய தினம் 25ம் தேதியும்; ஸ்ரீமஹிபதி தாசரின் ஆராதனை 4ம் தேதியும் வருகின்றன. யதிகளாக இருந்தும் பற்பல அற்புத கன்னட சாகித்யங்களை இயற்றிய ஸ்ரீவித்யா பிரசன்ன தீர்த்தரின் ஆராதனை 19ம் தேதி வருகிறது. ஸ்ரீதந்தெமுத்து மோகனவிட்டல தாசரின் குருவான ஸ்ரீமுத்துமோகன விட்டலதாசரின் புண்ணிய தினம் 3ம் தேதியும்; அவருடைய சிஷ்யர்களான உரகாத்ரிவாஸ விட்டலதாசர் (1ம் தேதி) மற்றும் குருகோவிந்த விட்டலதாசரின் புண்ணிய தினம் 31ம் தேதியும் வருகின்றன. அந்தந்த நாட்களில் அவரவர்களின் சாதனை, போதனை, கிருதிகளை விசேஷமாக தியானம் செய்து, தன்யர் ஆவோமாக.

இந்த இதழில் ஸ்ரீவித்யா பிரசன்ன தீர்த்தரைப் பற்றிய ஒரு கட்டுரை வந்திருக்கிறது. ஹரிதாசினியர்களின் கட்டுரையில் கல்கலி அவ்வா அவர்களைத் தொடர்ந்து - ஓர்வாய் லட்சுமி தேவம்மா பற்றிய கட்டுரை துவங்குகிறது.

மேலும் புதிய தொடர்களாக : திரு.பன்னஞ்செ கோவிந்தாசார்யரின் - புரந்தரோபனிஷத், ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசரின் கிருதி சிந்தனை ஆகியவை வரவிருக்கின்றன.

ஆகவே, நமது பத்திரிக்கையை, தக்க சமயத்தில் சந்தா புதுப்பித்து, தொடர்ந்து பெற்று, நமது ஹரிதாச சாகித்யத்தின் சிறப்பினைப் பற்றி தெரிந்து கொள்ளுமாறு வேண்டிக் கொள்கிறேன். உங்கள் க்ரூப்களிலும் இத்தகவல்களை பகிர்ந்து கொள்ளலாம்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

தொடர்

## கேசவ நாமா

**20. கூகெலோ மனுஜ கூகெலோ- ஸ்ரீவிஜய தாசர்**

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)

இந்த கிருதியில் தசாவதாரம் மற்றும் அதனுடன் இன்னும் பற்பல அவதாரங்களை சிந்தித்தவாறு, கேசவாதி 24 ரூபங்களையும் சிந்தனை செய்திருக்கிறார் விஜயதாசர்.

ஸ்ரீஹரியின் மகிமைகளான சச்சிதானந்தத்வ, சர்வோத்தமத்வ, சச்சரித்வ, படைத்தலுக்கு காரணமான, அனைத்து பெயர்களையும் கொண்ட, அனைத்தையும் நடத்துபவனான, அனைத்தையும் நிறைவேற்றுபவனான, அனைத்தையும் ஏற்றுக்கொள்பவனான, அனைத்திற்கும் ஆதாரமான, அனைத்திற்கும் காரணனான, அனைத்து நற்குணங்களையும் பரிபூர்ணமாக கொண்டவனான ஸ்ரீஹரி என்று விஜயதாசர் பாடியிருக்கிறார்.

கூகெலோ மனுஜா கூகெலோ - கூகு என்றால் வரவேற்பு என்று அர்த்தம். எங்கே? என்றால் இதய கமலத்திற்கு. யாரை? என்றால் பரமாத்மனை. என்னவென்று? என்றால் சாகர சயனனே என்று அழைக்கவேண்டும். ஏன்? என்றால் அவனே ஆபத்தினை பரிகாரம் செய்பவன் மற்றும் பிறப்பு இறப்பு சுழற்சியை நிறுத்துபவன்.

**21. கோலு ஹாடு - ஸ்ரீமோகனதாசர்**

மோகனதாசரின் 'கோலு ஹாடு' ஹரிதாச சாகித்யத்தில் ஒரு தீர்க்க க்ருதி. 217 பத்யங்களால் ஆனது. நாட்டுப்புறப் பண்ணில் அமைந்த இந்தப் கிருதி, த்ரிபதி நுடியில் அமைந்திருக்கிறது. கோலெ கோலெ என்னும் சொற்கள் ஒவ்வொரு பத்யத்தில் காணப்படுகின்றன. இரண்டாம் வரியில் வந்த சொற்களே மறுபடி மூன்றாம் வரிகளில் வந்திருக்கின்றன.

மோகனதாசர் பகவந்தனின் கேசவாதி ரூபங்களின் மகாத்ம்யத்தை நிரூபித்தவாறு, இந்த அனைத்து ரூபங்களிலும் அபேத (வேறுபாடு இல்லாத தன்மை) சிந்தித்து, தியானித்து, உபாசனை செய்யவேண்டும் என்கிறார்.

ஈஷ பிரம்மரிகெ3 நியாமகனாகி3த்து3
போஷிசுத்திப்ப பரமாத்ம கோலெ
போஷிசுத்திப்ப பரமாத்மனாத ஸ்ரீ
கேஷவன மொதலெ ப3லகொ3ம்பெ3 கோலெ ||1

பிரம்ம, ருத்ர, லட்சுமிதேவியருக்கு நியாமகனாக இருப்பவன் கேசவன். உலகின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய ஆகியவற்றிற்கு முக்கிய காரணகர்த்தனும் சர்வோத்தமனுமாக இருக்கிறான். இத்தகைய ஸ்ரீகேசவன் நம்மை காப்பாற்றி அருளட்டும்.

நீரிகா3ஸ்ரயனாகி3 நீரொளு மலகி3ப்ப
நீரஜ நேத்ர நிக3மாத்ம கோலெ
நீரஜ நேத்ர நிக3மாத்மனாத ஸ்ரீ
நாராயணன்ன ப3லகொ3ம்பெ3 கோலெ ||2

பிரளய காலத்தில் இருக்கும் தண்ணீருக்கு காரணனாக, அதிலேயே படுத்திருந்து, யோக நித்திரையை செய்பவனான ஆதிமுலன் நாராயணன். அனைத்து வேதங்களால் புகழப்படுபவனும், தாமரைக் கண்ணனும், வேதாபிமானி லட்சுமிதேவியால் புகழப்படுபவனுமான நாராயண ரூபி பரமாத்மனே, உன் கருணை / அருள் எனக்குக் கிடைக்குமாறு செய்.

மாத4வ குலஜனெ ஸாதுக3ளரஸனெ
மாதேவிகாஸ்ரயனாகி3ப்ப கோலெ
மாதேவிகாஸ்ரயனாகி3 பா1லிஸுவ
மாதவன்ன மொதலெ ப3லகொ3ம்பெ3 கோலெ ||3

சந்திர வம்சத்தின் யதுகுலத்தில் பிறந்த ஸ்ரீகிருஷ்ணனே, மாதவரூபி பரமாத்மா. மா என்றால் ரமா. அவளின் கணவனே மாதவ. சாது சஜ்ஜனர்களுக்கு கருணை அளிக்கும் அரசனே மற்றும் அனைத்து ஜீவராசிகளுக்கும் புகலிடம் அளிக்கக்கூடியவனான மாதவனே, எனக்கும்கூட உன் அருளைக் கொடுத்து காப்பாற்று.

செந்த3தி3ந்த3 வேத3வ்ருந்த3 ப்ரதிபாத்3யனெ
இந்திராதேவி கருணனெ கோலெ
இந்திராதேவி கருணனாத கோ3
விந்தன மொதலெ ப3லகொ3ம்பெ3 கோலெ ||4

6 - ஹரிதாச விஜயம் - டிசம்பர் 2021

வேதங்களால் புகழப்படுபவன், வேதங்களில் இருப்பவன், வேதங்களின் சாரமானவன், கோவிந்தன், இந்திராதேவியின் கணவன். ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடிய கோவிந்தனே, நான் உன்னையே வணங்கியிருப்பேன்.

ஸ்ருஷ்டியொளகெ$^{3}$ல்ல வ்யாப்தனாகி$^{3}$ருதிப்ப
வைஷ்ணவ குலகெ திலகனெ கோலெ
வைஷ்ணவ குலகெ திலகனாத ஸ்ரீ
விஷ்ணுவின மொதலெ ப$^{3}$லகொ$^{3}$ம்பெ$^{3}$ கோலெ ||5

ஜீவ ஜடங்களால் நிறைந்திருக்கும் இந்த உலகின் ஸ்ருஷ்டிக்கு காரணமான ஸ்ரீவிஷ்ணுவை, ஹரிபக்தர்களுக்கு வைஷ்ணவ சமூகத்திற்கு தலைவனாக இருக்கும் விஷ்ணுவை நான் வணங்குகிறேன்.

அத$^{4}$மனாகித்த$^{3}$ந்த$^{2}$ அசுரன சம்ஹரிஸி
முத$^{3}$வ பே$^{3}$ரித$^{3}$னெ சுரரிகெ$^{3}$ கோலெ
முத$^{3}$வ பே$^{3}$ருத$^{3}$ சுரர பாலிஸுவந்த$^{2}$
மதுசூதனன்னு ப$^{3}$லகொ$^{3}$ம்பெ$^{3}$ கோலெ ||6

பகவந்தனின் அவதாரங்களின் நோக்கம் - துஷ்டர்களை கொல்வது, பக்தர்களை காப்பாற்றுவது ஆகும். தைத்யர்களுக்கு துக்கங்களைக் கொடுத்து, சஜ்ஜனர்களுக்கு சுகங்களைக் கொடுப்பவனான மதுசூதனனே, எனக்கு மகிழ்ச்சியைக் கொடுத்து காப்பாற்று.

சிக்க ப்ராஹ்மணனாகி ப$^{3}$லிய தா$^{3}$னவ பே$^{3}$டி$^{3}$
ஆக்ரமிஸிதனெ த்ரிலோகவ கோலெ
ஆக்ரமிஸி த்ரிலோகவனளித$^{3}$ த்ரி
விக்ரமன்ன மொதலெ ப$^{3}$லகொ$^{3}$ம்பெ$^{3}$ கோலெ ||7

மிகவும் அழகான வாமன ரூபத்தினை எடுத்து, பிரம்மசாரி ரூபத்தை தரித்து, பலியிடம் தானம் வேண்டி, மூன்று லோகங்களையும் ஆக்ரமித்து, த்ரிவிக்ரமனாக வளர்ந்த், பலிக்கு அருளியவாறு எனக்கு அருள்வாயாக.

பூமியொளகெ3 அதி ஸம்ப்4ரமனாகி3த்து3
காமிதார்த்த2ங்கள கரெவனெ கோலெ
காமிதார்த்த2ங்கள கரெது ப4க்தர பொரெவ
வாமனன்னு மொதலெ ப3லகொ3ம்பெ3 கோலெ ||8

சஜ்ஜனர்களின் விருப்பங்களை நிறைவேற்றும், பக்தர்களின் வேண்டுதல்களை மிகவும் விரைவாக நிறைவேற்றும் வாமன ரூபியே, நான் உன்னை வணங்குகிறேன். பக்தர்க்ளை காப்பாற்றும் உன் கருணையை என்னிடமும் காட்டு.

வேதாபி4மானிகெ3 ஸாதரவாகி3ப்ப
பௌ3த்த3 மூருதியெ ப4வதூ3ர கோலெ
பௌ3த்த3 மூருதியெ ப4வதூ3ரனாத ஸ்ரீ
ஸ்ரீத4ரன்ன மொத3லெ ப3லகொ3ம்பெ3 கோலெ ||9

வேதங்களுக்கு அபிமானியான ரமாதேவியுடனேயே எப்போதும் இருப்பவன் ஸ்ரீதரன். பிறப்பு இறப்பு சுழற்சியிலிருந்து பக்தர்களை காப்பாற்றுபவனாக இருக்கிறான் ஸ்ரீதரன். ஞானிரூபி. ஸ்ரீதேவிக்கு உன் இதயத்தில் இடம் கொடுத்திருக்கிறாய். என் இதயத்தின் பிம்பமூர்த்தியே, உன்னை நான் வணங்குகிறேன்.

ஸாகார மூ3ருதி சர்வேந்த்3ரிய நியாமக
நாகேஷ வந்த்ய நளினாக்ஷி கோலெ
நாகேஷ வந்த்ய நளினாக்ஷனாத ஹ்ரு
ஷிகேஷ ஹரிய ப3லகொ3ம்பெ3 கோலெ ||10

அனைத்து இந்திரியங்களின் தலைவனே, சர்வதந்த்ர ஸ்வதந்த்ரனான ஹ்ருஷிகேஷன், ஸ்வர்க்காதிபதியான இந்திரனுக்கும் தலைவனாக இருக்கிறான். அற்புத களங்கமற்ற உருவத்தைக் கொண்டவனான தாமரைக் கண்ணனான ஹ்ருஷிகேசனை தேவதைகள் அனைவரும் ஸ்துதிக்கின்றனர். நானும் உன்னை துதிக்குமாறு அருள்புரிவாயாக.

பது3ம ஸம்ப4விஸித பதுமினி வல்லப4
பது3ம பொக்கு1ளலி படெதவனெ கோலெ
பது3ம பொக்கு1ளலி படெது பாலிஸுவந்த2
பது3மனாபன முன்ன ப3லகொ3ம்பெ3 கோலெ ||11

தாமரையை தன் வயிற்றில் ஏந்தியவன். பத்மினி வல்லபவனான (ரமாதேவியின் தலைவன்), நாபிக் கமலத்திலிருந்து பிறந்த பிரம்மனை மகனாகப் பெற்று, அவரை காப்பாற்றும் பத்பனாப ரூபி பரமாத்மனை நான் வணங்குகிறேன்.

காமினி யஷோத[3] ஒரளெகெ[3] க[1]ட்டலு
ஶ்ரீமனோஹர ஸெளெதொய்ய கோலெ
ஶ்ரீமனோஹர ஸெளெது பாபவ களெத
தா[3]மோதரன்ன ப[3]லகொ[3]ம்பெ[3] கோலெ ||12

கிருஷ்ணனின் குறும்பைத் தாங்காமல் யசோதை, அவனை உரலில் கட்ட, மிகவும் அழகான தாமோதரன் உரலை இழுத்துக்கொண்டு போய், அர்ஜுன மரத்தை முறித்து, நளகூப மற்றும் மணிக்ரீவ என்னும் குபேரனின் மகன்களின் சாப விமோசனத்தை செய்தான். அப்படியே, தன் பக்தர்களின் பாவங்களையும் களைந்து, அவர்களின் பிறவிப்பயன்களிலிருந்து விமோசனம் அளிக்கும் தாமோதரனை நான் வணங்குகிறேன்.

கிங்கரர சித்த[1] துர்விஷயக்கெரக[3]லு
பங்கஜனாப[4] ஸெளெத[3]னெ கோலெ
பங்கஜனாப[4] ஸெளெது[3] தன்னல்லிடு3வ
சங்கர்ஷணன்ன ப[3]லகொ[3]ம்பெ[3] கோலெ ||13

மனோபிமானி ருத்ரதேவரின் அந்தர்யாமி ரூபமே சங்கர்ஷண. இவனின் அருள் இல்லாமல் வைராக்யம் பெறுவதற்கு சாத்தியமில்லை. பக்தர்களின் சித்தத்தை வசப்படுத்தி, அவர்களை கெட்ட வழியில் செல்லாதவாறு காப்பாற்றும் ரூபமே சங்கர்ஷண. தாமரைக் கண்ணனான சங்கர்ஷண, தன்னை சேவிக்கும் பக்தர்களின் புத்தியை தன்னிடம் வசப்படுத்தி, அவர்களின் கெட்ட சிந்தனைகளை தூரம் செய்து, அவர்களின் விருப்பங்களை நிறைவேற்றுகிறான். அத்தகைய சங்கர்ஷண ரூபி பகவந்தனை நான் வணங்குகிறேன்.

(தொடரும்)...

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

## ஹரிகதாம்ருதசாரத்தில் பக்தியின் பார்வை

டாக்டர். ஜெயலட்சுமி மங்களாமூர்த்தி

வித்திபீஜவ பூமியொளு நீ
ரெத்தி பெளெசித பௌசு ப்ராந்தகெ
கித்தி மெலுவந்ததலி லகுமீரமண லோககள
(கல்ப சாதனா சந்தி, ஸ்லோகம் #53)

எதை விதைக்கிறோமோ, அதுவே விளையும் என்ற சொலவடை ஒன்று உண்டு. பக்தன் தான் செய்யும் கர்மங்களுக்கேற்ப பலன்களைப் பெறுகிறான். தண்ணீரில் எரியும் கல், அலைகளை உண்டுபண்ணுவதைப் போல, நிலத்தில் விழும் ஒரு விதை மரமாக விளைவதைப் போல, செய்யப்படும் செயல்கள் பலன்களைத் தருகின்றன. உடலில் இருக்கும் கர்மேந்திரியங்கள், ஞானேந்திரியங்களினால், 24 தத்வங்களினால் செய்யப்படும் செயல்கள் அனைத்தும், ஸ்ரீஹரியைக் குறித்தே இருக்கும்போது, அவை நம் பந்தங்களிலிருந்து நம்மை விடுவிக்கின்றன.

அப்போது, அறுவடைக்குப் பிறகு பூமியை மறுபடி உழுது சீர்படுத்துவதைப் போல, ஸ்ரீஹரியின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய ஆகிய அஷ்டகர்த்ருத்வவும் நமக்கு நினைவுக்கு வருகின்றன. இந்த லிங்கதேகம் பங்கம் ஆவதற்கான விதையை பக்தன் விதைக்கிறான். ஸ்ரீஹரிக்கு அர்ப்பித்த சர்வோத்தமத்வ ஞானம், ஸ்ரீஹரியே ஸ்வதந்த்ர-கர்த்ரு என்னும் அறிவு, அவன் ஈசன் நாம் தாசன் என்னும் பாவம் ஆகியவையே இந்த லிங்கதேகம் பங்கம் ஆவதற்கான காரணங்கள் ஆகும்.

தீபம் என்பது பக்தி என்றால், அதிலிருந்து வரும் ஒளியே அதன் உச்சநிலை என்று தாசர் கூறுகிறார்.

தீபகளனனு சரிஸி தீப்தியு
வ்யாபிஸி மஹதிமிரவ களெது ப
ரோபகாரவ மாள்ப தெரதந்ததலி பரமாத்ம ।
(கல்ப சாதனா சந்தி, ஸ்லோகம் #48)

ஸ்ரீஹரியை ஒளிமயமானவன் என்று வணங்கவேண்டும். ஒரு விளக்கில் இருக்கும் திரி, எண்ணையைப் பொறுத்து அதன் ஒளி

வேறுபடுகிறது. அது போலவே, பிம்பரூபனான ஸ்ரீஹரி, அந்தந்த ஜீவரின் யோக்யதைக்கேற்ப, அவரவர்களின் பூஜைக்கேற்ப, பிரம்மன் முதலான அனைத்து தேவர்களில், சாதகர்களில், பிம்ப தரிசனம் ஒரே மாதிரி கொடுப்பதில்லை என்று தாசர் விவரிக்கிறார். பகவத் தரிசனத்தின் ஒளி, தரிசனத்தின் காலம் அனைத்தும் வேறுபடுகின்றது.

தாரதம்ய ஞானத்தின் அறிவு, அதனைப் பின்பற்றுதல் பக்தி என்றால், முக்தியின் வாசலை அடைவதே அதன் உச்சநிலையாகும்.

தாரதம்யஞான முக்தித்
வாரவெனிபுது பக்தஜனரிகெ
தோரி கேளி சுகாப்தியொளு லோலாடுவுது புதரு ।
(குணதாரதம்ய சந்தி ஸ்லோகம் 23)

தேவதைத்யர தாரதம்யவு
பாவமான மதானுகரிகிது
கேவலாவஷ்யகவு திளிவது சர்வகாலதலி ।
தாவஷிகி பாபாடவிகெ நவ
நாவெயெனிபுது பவசமுத்ரகெ
பாவடிகெ வைகுண்டலோககிதெந்து கரெசுவது ।।
(குணதாரதம்ய சந்தி ஸ்லோகம் 22)

தாரதம்யாரோஹணவ பரெ
தாரு படிசுவரவர லக்ஷ்மி
நாரசிம்ஹ சமஸ்த தேவகணாந்தராத்மகனு ।
பூரயிசுவ மனோரதங்களெ
காருணிக கைவல்யதாயக
தூரகைவ சமஸ்ததுரிதவ வீதபய ஷோக ।।
(ஆரோஹண தாரதம்ய சந்தி ஸ்லோகம் 16)

ப்ரணத காமதனங்க்ரி சந்தரு
ஷனதபேக்ஷெகளுள்ளவகெ நி
ச்சணிகெயெனிபுது ஜடமொதலு பிரம்மாந்ததரதமவு ।
மன வசனதிம் ஸ்மரிசுவர பவ
வனதி ஷோஷிஸி போகுவுது கா
ரணவெனிசுவுது ஞான பக்தி விரக்தி சம்பதகெ ।।

(ஆரோஹண தாரதம்ய சந்தி ஸ்லோகம் 17)

தாரதம்ய ஞானத்தினால் ஸ்ரீஹரியிடமிருந்து தொடங்கி தேவதா வகுப்பில் ஒவ்வொருவராக நினைப்பது சத்பக்தி எனப்படுகிறது. தேவதைகளின் நற்குணங்கள், வகுப்பு, சாதனைகளின் ஆண்டுகள், அம்சம், ஆவேசம், அவதாரங்களை அறிந்து உபாசிக்க வேண்டும். இதன்மூலம் மகிழ்ச்சியடையும் ஸ்ரீஹரி நான்குவித புருஷார்த்தங்களையே கொடுக்கிறான்.

அனுதினவனுக்ரமதொளவரோ
ஹணதரதமவ பக்திபூர்வக
நெனெவரிகெ தர்மார்த்த காமாதிகளு பலிசுவுது |
(அனுக்ரமணிகா அவரோஹண தாரதம்ய சந்தி ஸ்லோகம் 7)

பிரதிபிம்பர் செய்யும் உபாசனையே பக்தி எனப்படுகிறது.

மத்வ சித்தாந்தத்தின்படி ஜீவனின் நோக்கம் பிம்பசிந்தனை மற்றும் பிம்பதரிசனமே ஆகும். தீவிரமான பக்தியிருந்தாலும் ஒரே பிறவியில் இத்தகைய தரிசனத்தைப் பெறுவது சாத்தியமில்லை. முந்தைய பிறவியின் கர்மங்களின்படி இன்று இந்த ஞானம் வந்திருக்கிறது. இந்தப் பிறவியின் கர்மங்களின் பலன், முன்னர் எந்தப் பிறவியிலாவது நமக்குக் கிடைக்கும் என்கிற நம்பிக்கை வரவேண்டும். சாத்விக ராஜஸ தாமஸ என்ற மூவருக்கும் அவரவர்களின் இதயத்தில் பிம்பமூர்த்தியாகி ஸ்ரீஹரி நிலைத்திருக்கிறார். தான் ஸ்ரீஹரியின் பிரதிபிம்பன், கடல் நீரை எந்தப் பாத்திரத்தில் நிரப்பினாலும், அந்தப் பாத்திரம் முழுக்க நிரம்பிவிடுகிறது. அந்தந்த ஜீவர்களின் தகுதிக்கேற்ப, பிம்பன் என்னும் ஸ்ரீஹரி பலன்களைக் கொடுக்கிறான் என்று ஸ்ரீஜகன்னாததாசர் சொல்கிறார்.

ஏனு மாடுவ கர்மகள லகு
மி நிவாசனிகர்பிசனுச
ந்தான பூர்வகதிந்த சந்தேஹிசதே தினதினதி |
(விபூதி சந்தி ஸ்லோகம் 38)

மனிதன் ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு கணமும் செய்யும் செயல்கள் மனதால், உடலால், வாக்கினால் என மூன்று வகைப்படுகின்றன. இவற்றை புண்ணிய, பாவச் செயல்கள் என இரு

விதமாகப் பிரிக்கலாம். இச்செயல்களுக்கு தான் பொறுப்பல்ல; வினைப்பயனைப் பொறுத்து, ஸ்ரீஹரியே இதற்கு காரணமாகி அனைத்தையும் நடத்துகிறான் என்று அறிந்து, அத்தகைய செயல்களை ஸ்ரீஹரிக்கு உடனே அர்ப்பணிக்க வேண்டுமென்று தாசர் கூறுகிறார். இந்த உண்மையான ஞானத்தினால் சமர்ப்பிக்கப்பட்ட செயல்களை, ஸ்ரீஹரி ஏற்றுக்கொண்டு - பசுவானது எப்படி புல், நீரை ஏற்றுக்கொண்டு, நமக்கு சத்தான பாலைக் கொடுக்கிறதோ அதுபோல - பக்தர்களுக்கு அருள்கிறான் என்கிறார். அனுசந்தானம் என்றால் நம் உள்ளிருக்கும் ஸ்ரீஹரியைப் பற்றி சிந்திப்பது, பிரம்மாண்டத்தில் இருக்கும் ஸ்ரீஹரியின் சிந்தனை, அனைத்து ஜீவ, ஜடத்துக்குள் இருக்கும் ஸ்ரீஹரியை சிந்திப்பது ஆகும்.

நிருத புஞ்சிசுவன்ன யதுகுல
வரனிகவ தானகளு எந்தீ
பரி சமர்பணெகையெ கைகொண்டனுதினதி பொரெவ ||
(பஞ்சமகாயக்ஞ சந்தி ஸ்லோகம் 5)

உணுதுணுத மை மரெது கிருஷ்ணா
ர்ப்பணவெனலு கைகொம்பனர்பக
ஜனனிபோஜன சமயதலி கை ஒட்டுவந்ததலி ||
(போஜனரசவிபாக சந்தி ஸ்லோகம் 25)

சதத விஷயேந்திரியகளலி ப்ரவி
ததனெனிஸி ராஜிசுவ லகுமி
பதிகெ சர்வசமர்பணெயெ மஹபூஜெ சதுபாய ||
(விபூதி சந்தி ஸ்லோகம் 17)

மோட்சத்தை விரும்பும் அனைத்து ஜீவர்களின் விருப்பமும் - தர்ம, அர்த்த, காம, மோட்சம் என்னும் நான்கு புருஷார்த்தங்களைப் பெறுவதுதான். இவற்றை தன் முயற்சியிலேயே எப்படியாவது அடைகிறேன் என்று கர்வத்துடன் சொல்வது தவறு. ஸ்ரீமதாசார்யர் தனது கிருஷ்ணாம்ருத மஹார்ணவத்தில், புருஷார்த்தங்களைப் பெறுவதற்கு ஸ்ரீஹரியின் பூஜையே முக்கியம் என்று சொல்லியிருக்கிறார். நம் உடல், இந்திரியங்களில் ஸ்ரீஹரியை சிந்தித்து, மனதால், வாக்கினால், உடலால் செய்த அனைத்து செயல்களையும் ஸ்ரீஹரிக்கே சமர்ப்பிக்கவேண்டும். போஜனமும் ஒரு

யக்ஞும் எனப்படும். வைஸ்வானர சேவை எனப்படுகிறது. போலவே, கூடலும் ஒரு யக்ஞும் ஆகும். இவற்றிலிருந்து பெறப்படும் அனுபவம் உணவாகிறது. இவை அனைத்தையும் ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு கணமும் - சுதந்திரனான ஸ்ரீஹரிக்கு பாரதீஸ்வரனான முக்யபிராணரின் மூலம், சமர்ப்பிக்கவேண்டும். அப்படி செய்யவில்லையென்றால், எஜமானன் இல்லாத தோட்டத்து மரத்தின் பழங்களை திருடர்கள் எப்படி திருடிச் செல்வரோ, அது போல தைத்யர்கள் நாம் செய்த புண்ணியங்களை அபகரித்துச் செல்கின்றனர் என்று சொல்கிறார் தாசர்.

பக்தனுக்கு உலகத்தின் ஒவ்வொரு இடத்திலும் பக்தியே காணப்படுகிறது. அனைத்து ஆறுகளும் போய்ச் சேருவது கடலில் என்பதுபோல, பக்தி செய்யப்படும் விதங்கள் பல்வேறு இருந்தாலும், முக்கிய சிந்தனை ஸ்ரீஹரியின் தரிசனம் பெறுதலாக இருக்கவேண்டும். இதுவே முக்தி பெறும் நிலை எனப்படுகிறது. இப்படி பக்தி செய்தால், ஜீவாத்மா பரமாத்மாவின் தரிசனத்தைப் பெறுகிறது.

(அடுத்த இதழில் புதிய கட்டுரை தொடரும்).

## புதிய புத்தகங்கள்

ஹரிவாயுகுருகளின் அருளால், ஹரிபக்தர்களின் பொருளுதவியால், கடந்த 4 மாதங்களாக தொடர்ந்து புதிய புத்தகங்களை வெளியிட்டு வருகிறோம். தத்வ சுவ்வாலி, ஸ்ரீஜகன்னாத தாசரின் கட்டுரைகள், வைகுண்ட வர்ணனெ, 25 சுளாதிகள் என இதுவரை வந்திருக்கின்றன.

அடுத்து வரவிருக்கும் புத்தகங்கள் : குண்டகிரியெ, கன்னட தந்த்ரஸாரம், ஸ்ரீரகூத்தம தீர்த்தர், கீசக வதெ, கனகதாசர் ஆகியவை.

புத்தகங்களைப் பற்றிய தகவல்களை உடனுக்குடன் அறிய, நமது வாட்சப்பில் க்ரூப்பில் சேரலாம்.

இத்தகைய அரிய தமிழ்ப் புத்தகங்களை வாங்கிப் படித்து, மற்றவர்களுக்கும் இந்த்த் தகவல்களை பகிர்ந்து கொள்ளவும்.

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

**கல்கலி அவ்வா (1670-1760)**

கல்கலி அவ்வா அவர்களின் கீர்த்தனைகளில் நாட்டுப்புற பண்ணிற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது.

1. ஹத்தெண்டு ஸாலின பத்தாஸதங்கடி
பத்தத அருளு மொதலாகி | பத்தத அருளு மொதலாகி ஸக்கரி பொம்பெய
தந்திட்டு மாருவவரு கடிமெயில்ல ||

2. பாஜாரதொளகின்னு ராஜ ஸிம்ஹாஸன
ராஜா ரமேஷ குளிதல்லியே | ராஜ ரமேஷ குளிது பூஜெகொம்போ
மூர்ஜகவு முததிந்த ||

6. நிந்தா ஸ்துதி

ஸாகோரங்க அரஸுதன யாகோ யாகோ கோகுலத
கொல்லரு நகிஸி கல்லவ ஹிண்டி
காகு மாடித்து நினகெ பேகோ பேகோ ||

ருத்ர பிரம்மஹத்யாகார க்ஷுத்ர பலீந்த்ரனு
கத்தொய்து ஸுவர்ண முகுடவ
கத்தொய்து ஸுர்வர்ண முகுடவ பலராம
மத்யபானி எந்து நுடிதனு ||1

மாத்ருத்ரோஹிஷுக பித்ருத்ரோஹி ப்ரஹ்லாத
ப்ராத்ருத்ரோஹி விபீஷண
விபீஷண இவரு முக்ய பாத்ரரோ
நின்ன கருணகெ கருணகெ ||2

அரியதெலெ நின்ன எதெயலொத்த ப்ருகு ரிஷி
துருள ஷிஷுபால ஸபெயொளு
துருள ஷிஷுபாலன ஸபெயொளு
பைதத்துபரிபந்தே ராமேஷன மனஸிகெ மனஸிகெ ||3

ஹரிதாசினிகள், பரமாத்மனை வணங்குவதுடன், நிந்திக்கும் செயலையும் செய்தனர் என்பதற்கு இந்த கீர்த்தனையே ஒரு அழகான உதாரணமாக இருக்கிறது.

7. தேவவன

வனவ நோடோண பாரே பாரே
அல்லல்லிகெ ஸரோவர வனவ நோடோண பாரே பாரே ||ப

நீரமேலாடுவ பாரிவாளவ ஹிண்டு
எத்தரவாகி பெளெத அடகெய
எத்தரவாகி பெளெத அடிகெ தெங்கினமர
ஸ்ரீதேவி அரஸன வனவிதெ ||1

லோகநாயகஸ்வாமி ஆ கமலாக்ஷியரு
ஜீகுளி தும்பி ஜடத
ஜீகுளி தும்பி ஜடத ரங்கய்யா
ஓகுளியாடித வனவிது ||2

கனமேக ஷ்யாமன வனத மத்யதலி
புனுகின பெக்கஸ மொதலாகி
பெக்கஸ மொதலாகி கஸ்தூரி
கனம்ருக ஹிண்டு கடேயில்லா ||3

தோடபட்டிகளல்லி நீடாத ஹம்ஸகளு
ஆடவாடுத்திரலு ஹருஷதி
ஆடவாடுத்திரலு ஹருஷதி அல்லல்லெ
நீடாகி நலிவ நவிலு ஹிண்டு ||4

கப்பின தோடக்கெ ஹப்பித ஹந்தர
அப்பரதி பெளெத ஹலஸின
அப்பரதி பெளெத ஹலஸு தெங்கினமர
ருக்மிணி ராமேஷன வனவிது ||5

லோக நாயகனான ஸ்ரீகிருஷ்ணன், கோபியர்களுடன் விளையாடிய அந்த தோட்டத்தின் அழகினை வர்ணிக்கிறார். தேவ வனத்தில் காணப்படும் ஸரோவரம், பறவைகளின் கூட்டம், அன்னப்பறவை, மயில்கள் ஆகியவை கண்ணைப் பறிக்கின்றன. உயரமாக

வளர்ந்திருக்கும் பாக்கு மரங்கள், தென்னை மரங்கள் ஆகியவை தோட்டத்தின் அழகினை மேலும் கூட்டுகின்றன.

ஸ்ரீகிருஷ்ணன் தாமரை போன்ற கண்களைக் கொண்டவர்களுடன் ஜலக்ரீடை ஆடிய வனம் இது. புனுகு பூனைகள், கஸ்தூரி மான்களைக் கொண்டதாக இருக்கிறது இந்த வனம். இது ருக்மிணி கிருஷ்ணருக்கு மிகவும் பிடித்தமான வனம். இத்தகைய அழகான தேவவனத்தை பார்ப்போம் வாருங்கள் - என்று ஹரிதாஸி தன் தோழிகளை வரவேற்பது மனதை மயக்குகிறது.

அவ்வா அவர்களின் பாடல்களில் அலங்காரம், மெட்டு, எதுமை மோனை, உவமைகள் ஆகியவை மிகவும் அழகாக பொருந்தி வந்திருக்கின்றன.

சம்ஸ்கிருத வித்வாம்சர்களின் வீட்டுப் பெண் ஒருவர், அந்த கால சூழ்நிலையில், சமூக கட்டமைப்பில், பள்ளிப் படிப்பும் இல்லாமல், கன்னடத்தில் கீர்த்தனை சாகித்யங்களை இயற்றியது மிகவும் போற்றப்பட வேண்டியதே ஆகும். வட கர்னாடகத்தில் இன்றும் பல இடங்களில், அவ்வா அவர்களின் முய்யத ஹாடு மற்றும் ஸேதுபந்த பாடல்களை, பண்டிகை விரத நாட்களில் பாடும் சம்பிரதாயம் இருக்கிறது. தாச சாகித்யத்தில் இவருடைய கீர்த்தனைகளுக்கு ஒரு சிறப்பான இடம் உண்டு.

இப்போது கிடைத்திருக்கும் தகவல்களின்படி, அவ்வா அவர்கள் 1670-1760க்கு நடுவில் வாழ்ந்திருக்க வேண்டும் என்று தெரிகிறது. அவருடைய பாடல்களில் கிடைக்கும் தகவல்களின்படி அவருடைய பிறந்த நாள் 22.05.1670. சுமார் 100 ஆண்டுகள் வரை வாழ்ந்தார் என்றும் தெரிய வருகிறது. தன் கடைசி காலங்களில், அவ்வா, தன் முன்னோர் வாழ்ந்து வந்த ஷூர்ப்பாலி கிராமத்திலே வாழ்ந்து, அங்கேயே ஹரிபாதங்களை அடைந்தார் என்று அறிகிறோம். ஹரிதாச சாகித்யத்திற்கு மிகவும் விலைமதிப்பற்ற கீர்த்தனை சாகித்யத்தை காணிக்கையாக கொடுத்த கலகலி அவ்வா அவர்களுக்கு, நம் அனைவரின் நமஸ்காரங்களையும் சமர்ப்பணம் செய்வோம்.

***

## ஓர்வாய் லட்சுமி தேவம்மா (1865-1950)

தாச சாகித்யத்திற்கு தம்முடைய பங்கினைக் கொடுத்த ஹரிதாசினிகளில், பள்ளாரியின் ஓர்வாய் லட்சுமி தேவம்மா அவர்களின் பங்கு மிகவும் முக்கியமானது.

பள்ளாரியின் கொண்டாரு அன்றைய காலத்தில் ஒரு சிறிய சம்ஸ்தானமாக இருந்தது. கொண்டாருவில் திவானாக இருந்த லட்சுமி நாராயணர் (அச்சப்ப நாயகர்) மற்றும் கோதாவரி பாய் தம்பதிகளுக்கு 1865ம் ஆண்டில் பிறந்தவர் லட்சுமி தேவம்மா. அழகாக இருந்த அக்குழந்தை, தன்னுடைய மழலை லீலைகளால், பெற்றோர், உற்றார் உறவினர்களை மகிழ்ச்சியில் ஆழ்த்தியது. ஸ்ரீலட்சுமிதேவியுடன் கனவில் சம்பாஷணை செய்து வந்த, லட்சுமி தேவம்மா, பெயருக்கு ஏற்றாற்போல, லட்சுமியாகவே இருந்தார்.

தாய் மூலமாக, லட்சுமி தேவம்மாவிற்கு சம்பிரதாயமான பூஜை, புனஸ்காரங்கள், ஆசார விசார, நேம நிஷ்டைகள், பாடல்கள் என அனைத்தும் சொல்லிக் கொடுக்கப்பட்டன. தந்தையிடமிருந்து கன்னட மற்றும் சம்ஸ்கிருதத்தை படித்தார். கூர்மையான அறிவைக் கொண்டிருந்த லட்சுமி தேவம்மா, அனைத்து விஷயங்களையும் உடனடியாக கவனித்து, நினைவில் வைத்துக் கொண்டார். அந்த காலத்தில், புகழ்பெற்றிருந்த ஹரபனஹள்ளி பீமவ்வா அவர்களின் பாடல்களை லட்சுமி தேவம்மா, கற்றுக் கொண்டு பாடிக் கொண்டிருந்தார்.

5 வயதான லட்சுமிதேவிக்கு 11 வயதான தாய் மாமனான ஓர்வாய் மத்வராயருடன் திருமணம் நடந்தது. பெண் குழந்தைகளுக்கு தெரிய வேண்டிய அனைத்து கல்விகளையும் லட்சுமி தேவம்மா கற்றிருந்தார். ரங்கோலி வரைவதில், வீட்டு வேலைகள் செய்வதில், பாடல்களைப் பாடுவதில் தேர்ச்சி பெற்றிருந்தார். பலப்பங்களால் அவர் செய்த விக்ரகங்களை, இன்றைக்கும் மைசூர் மானஸ கங்கோத்ரி ம்யூசியத்தில் பார்க்கலாம். களிமண்ணால் பொம்மைகளை செய்யும் கலையும் இவருக்கு தெரிந்திருந்தது. பூஜை புனஸ்காரங்களை சிரத்தை கொண்டிருந்தார். மூட நம்பிக்கைகளின் விரோதியாக இருந்தார்.

(தொடரும்...)

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## 18.க்ரீடா விலாஸ ஸந்தி

| | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | 2 | | | | | 3 | | | | 33 | | |
| | | | | | | 25 | | | | 4 | | | | | |
| 39 | | 26 | | | | 5 | 34 | | | | | | | 27 | |
| | | 6 | | | | 7 | | | | | | | | | 28 |
| 8 | | | | | | | 29 | | | | | | 30 | 35 | |
| | 9 | | | | 10 | | | 11 | | | 36 | | | | |
| | | | 12 | | | | | | | | | | | | |
| | | | | | | | | | 31 | | | | | | |
| 13 | | 37 | | | | 40 | | | 14 | | | | | | |
| | | 32 | | | | | 15 | | | | | | | | |
| | | | 16 | | | | | | | | | 17 | | | |
| | 18 | | | | | | | 19 | | | | | | 38 | |
| | | | | 20 | | | | | | | | | | | |
| | | | | | | | | | | | 21 | 41 | | | |
| | 22 | | | | 42 | 23 | | 24 | | | | | | | |

குறுக்கெழுத்துப் போட்டிகளை வடிவமைத்துக் கொடுப்பவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி

குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam @ gmail.com / அல்லது 89044 58276 க்கு வாட்சப் செய்யலாம்.

**இடமிருந்து வலம்**: 1. ஜீரணித்துக் கொள்வது (3), 2. எங்கும் நிறைந்தவன் (4), 3. பதினைந்து (7), 4. அழுக்கு (7), 5. பூமி (5), 6. நன்றாக பார்ப்பது (3), 7. அற்ப ஜீவர்கள் (4), 8. அதிகாரம் (4), 9. ஆகாரம் (3), 10. வஞ்சனை (3), 11. உவமை இல்லாதவன் (4), 12. சூரியன் (4), 13. இரு பக்ஷிகள் (6), 14. இரண்டாம் கால்பாகம் (6), 15. துஷ்டர்கள் (4), 16. அசைவது (3), 17. மாம்ஸம் (3), 18. ஞானிகளுக்கு தெரிபவன். கலைந்துள்ளது.(6), 19. ஓடாடுவது (3), 20. நாநூறு (5), 21. தேவலோக நதி கங்கை (5), 22. எண்ணெய் (2), 23. பிணம் (3), 24. ஸர்வோத்தமன் (3).

**வலமிருந்து இடம்:** 25. எறும்பு (3), 26. விரும்பு (3), 27. உலக ஸுகம் (3), 28. இரவும் பகலும் (4), 29. இருபது (4), 30. தோல்வியே காணாதவன் (5), 31. உரிமையாளர் (4), 32. விளையாட்டு (3).

**மேலிருந்து கீழ்**: 2. வேறுபட்டவன் (4), 9. ப்ரம்ஹா (3), 12. ஐம்பத்தி இரண்டு (5), 14. மூன்று முக்தஸ்தானம் (5), 18. ஆழ்ந்த உறக்கம் (4), 28. செய்யக் கூடாத செயல் (4), 33. பரந்தாமனின் தம்பி ஸ்ரீக்ருஷ்ணன் (7), 34. நன்றாக ஜீவித்திருப்பவன் (3), 35. தாமரை (6), 36. கொசு (4), 37. சோகம் இல்லாதவன் (4), 38 .கடல் (3),

**கீழிருந்து மேல்:** 12. ஸிவன் (4), 17. லிங்க தேஹம் இல்லாதவன் (4), 23. குமதிகளின் ப்ரேரகன் (4), 39. தேவேந்திரன் (3), 40. மஹாராஜன் (4), 41. பேசுவது (3), 42. துளி (3).

நவம்பர் 2021 மாதத்தின் ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டிக்கு சரியான பதில் எழுதி புத்தகப் பரிசினைப் பெறுபவர்கள் :

1. திருமதி. ஷாந்தி பத்மனாபன், திருநெல்வேலி. 2. திருமதி. கீதா ராமசந்திரன், திருநெல்வேலி. 3. திருமதி. கிரிஜா ஜயதீர்த்தாச்சார். ஸ்ரீரங்கம்.

தொடர்

## ஸ்ரீவியாசராஜரைப் பற்றிய கட்டுரைகள்

## அந்தரங்கதலி ஹரிய காணதவ

அனேக பண்டிதர்கள் இன்றைக்கும்கூட தாச சாகித்யத்தை, கன்னட கிருதிகளை சிறிது குறைவான நிலையிலேயே பார்க்கின்றனர். ஸ்ரீமன் மத்வாசார்யரின் நேரடி சிஷ்யரான ஸ்ரீநரஹரி தீர்த்தரிடமிருந்து துவங்கி, ஸ்ரீஸ்ரீபாதராயர், ஸ்ரீவியாசராஜரே முதலான மகானுபாவர்கள் தாமே அனேக கிருதிகளை இயற்றியது மட்டுமல்லாமல், புரந்தரதாசர், கனகதாசர் முதலான அனேக கிருதிகாரர்களை தாச சாகித்யத்திற்குக் கொடுத்து, கன்னட பத, பத்ய, சுளாதி, முண்டிகைகளை இயற்றுவதற்கு காரணம் ஆயினர்.

ஸ்ரீவியாசராஜரின் வழிகாட்டுதலாலேயே, ஸ்ரீபுரந்தரதாசர் கர்னாடக சங்கீத பிதாமகர் எனப்படுகிறார் என்றால் அதில் தவறில்லை. தர்க்க தாண்டவ, நியாயாம்ருத, தாத்பர்ய சந்திரிகா முதலான கிரந்தங்கள் இயற்றியதுடன், ஸ்ரீவியாசராஜர் கன்னடத்திலும் பல அற்புத கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார். அவற்றில் புகழ் பெற்ற, மக்கள் ராகத்துடன் பாடக்கூடிய ஒரு பத்யம் - அந்தரங்கதலி ஹரிய காணதவ - ஆகும். அனைவரும் இதனை பாடுகிறார்களே தவிர, அர்த்தம் புரிந்து கொண்டார்களா என்றால் அது சந்தேகமே. அத்தகைய அர்த்தத்தினை இங்கு பார்ப்போம்.

அந்தரங்கதலி ஹரிய காணதவ ஹுட்டு குருடனோ

ஸ்ரீஹரி நம்மைப் படைக்கும்போது, பிராணிகளைப் போல இல்லாமல், அனைத்து இந்திரியங்களையும் கொடுத்து, அற்புதமான ஏற்பாட்டுடன், அழகான சரீரத்தையும் கொடுத்தான். அவன் கொடுத்த இந்திரிய தேகங்களை அவனின் பூஜைக்கு பயன்படுத்தினால் மட்டுமே அவை சார்த்தகம் ஆகின்றன. கண் இல்லாதவர்களை, அவர்கள் படும் பாட்டினை பார்த்தால் மட்டுமே, கண்களின் மகிமை புரிகிறது. இத்தகைய அற்புதமான கண்களைக் கொடுத்த பகவந்தனுக்கு...
நன்றியை சமர்ப்பணம் செய்வது எப்படி? பகவந்தனின் அனேக பிரதிமைகளை கண்களில் பார்த்துக் கொண்டு, நம் ‘அந்தரங்கதலி’ - அதாவது, இதய மண்டலத்தில் பரமாத்மனின் சிதானந்தாத்மகமான

பிரதிமையை பார்க்க வேண்டும். இவ்வாறு காணாதவன், பிறவிக் குருடனே ஆகிறான்.

ஸந்தத ஹரிகிருஷ்ண சரித கேளதவ ஜடமதி கிவுடனோ

காதுகளின் ஸ்ருஷ்டியும் அற்புதமே. அவற்றின் வேலை எவ்வளவு முக்கியம்?. ஆனால் நாம் அவற்றை பயன்படுத்துவது எப்படி? விஜயீந்திர ஸ்வாமிகள் சொல்வதைப் போல: அபி து வ்யபிசாரலோகவார்த்தா ஸ்ரவணாயைவ மஹாதரம் ப்ரயாத:

பிறரின் தேவையில்லாத பேச்சுக்களை கேட்பதிலேயே அதிக விருப்பத்தைக் கொண்டிருக்கிறோம். எந்த காதுகள் பகவந்தனின் கதைகளை கேட்பதில்லையோ, அவை மலைகளில் உள்ள குகைகளே ஆகும். நிரந்தரமாக ஸ்ரீஹரியின் கதைகளை கேட்கவேண்டும். வாழ்ந்திருப்பதற்கு சாட்சி - மூச்சு விடுவது அல்ல. ஹரி கதைகளை கேட்பதே ஆகும் -- என்பது ஆஞ்சனேயரின் வாக்கு. ஆகையால், காதுகளால் ஸ்வாமியின் சரிதைகளை கேட்காதவன், செவிடனுக்கு சமானம்.

குருவீர ஸகனாத கிருஷ்ணன முந்தெ குணியதவனெ குண்டனோ

கால்கள் இருப்பது ஸ்வாமியின் நர்த்தன சேவை செய்வதற்கே ஆகும். பலரின் எதிரில் இவ்வாறு செய்வதற்கு பலருக்கும் வெட்கம். மணமகன் வரவேற்பு என்றால், அங்கு இடம் பொருள் பால் என எதையும் பார்க்காமல் அனைவரும் நடனமாடி மகிழ்வார்கள். ஆனால், அதுவே பகவந்தனின் ஊர்வலம், புறப்பாடு என வந்தால், அங்கு நடனமாட வெட்கப்படுவார்கள். இவ்வாறு ஸ்வாமியின் எதிரில் பக்தி பரவசத்துடன் நடனமாடாதவன், உடல் ஊனமுற்றவனே ஆவான்.

நரஹரி சரணோதகவ தரிஸத ஷிர நாயுண்ட ஹெஞ்சு காணோ

ஸ்ரீமன் மத்வாசார்யரே கிருஷ்ணாம்ருத மஹார்ணவத்தில் சொல்லியிருப்பதைப் போல, கங்கை, பிரயாக, புஷ்கர, நைமிஷாரண்ய, குருக்ஷேத்ர முதலான அனேக புண்ய தீர்த்தங்களின் தண்ணீரை வணங்கினால் அவை நிதானமாக பாவங்களை களைகின்றன. ஆனால், விஷ்ணு பாதோதகம் மட்டும் நாம் தரித்த உடனேயே பாவங்களைப் போக்குகிறது - என்கிறார். இவ்வளவு புண்ணியத்தை தரக்கூடிய விஷ்ணு பாதோதகத்தை தலையில் தரிக்காமல்

இருந்தால், அத்தகைய தலை நாய் வாய் வைத்த ஹவிஸ் போல அபவித்ரம் ஆகிறது.

ஹருஷதிந்தலி நரஹரிய பூஜெய மாடதவனெ கை முருகனோ

ஸ்ரீஹரி நமக்கு கைகளைக் கொடுத்தது, கைப்பேசியை அல்லது லாப்-டாப்பை பயன்படுத்துவதற்கு மட்டுமல்ல. பாகவதம் சொல்வதைப் போல:

கரௌ ஹரேர்மந்திர மார்ஜ்ஜனாதிஷு

கைகளால் ஹரி கோயில்களை சுத்தம் செய்வதற்கும், சாலிகிராமங்களுக்கு தினமும் அபிஷேகம் செய்து, தக்க பூக்களால், துளசிகளால் பூஜிப்பதற்குமே கைகளை படைத்திருக்கிறான் பகவந்தன். அதை நாம் செய்யாவிட்டால், அவை கை இருந்தாலும் முடவனே ஆவான்.

ஸுரவர கிருஷ்ண ப்ரஸாதவல்லத ஊட ஸூகர போஜனவோ

எந்த பதார்த்தத்தை உண்ணும்போதும் பகவந்தனுக்கு அர்ப்பணம் செய்துவிட்டே உண்ண வேண்டும். போஜனத்தை கண்டிப்பாக நைவேத்தியம் செய்ய வேண்டும். அப்போதே, நம் நாக்கு சார்த்தகம் ஆகிறது. ஸ்வாமிக்கு அர்ப்பணம் செய்யாமல் உண்பது ‘புஞ்சதே தே த்வகம் பாபா:’ என்று சொல்வதைப் போல அவன், பாவத்தையே தின்கிறான். சுரோத்தமனான ஸ்ரீகிருஷ்ணனுக்கு அர்ப்பிக்கப்படாத உணவு, பன்றியின் உணவாகிறது.

அமரேஷ கிருஷ்ணகர்ப்பிதவல்லத கர்ம அஸதிய வ்ரதநேமவோ

தினமும் செய்யும் ஸந்த்யாவந்தனம், ஸ்வாமிபூஜை ஆகியவை, அவ்வப்போது செய்யும் யக்ஞ யாகாதிகளே முதலான கர்மங்கள் எவ்வளவு சிரத்தையுடன் செய்யப்படுகின்றன என்பதை பார்த்தால், அத்தகைய கர்மங்களை செய்து பாவத்தை சம்பாதிப்பதைவிட, அவற்றை செய்யாமல் இருப்பதே சிறந்தது என்று நினைக்கத் தோன்றுகிறது. பொருட்களில் அசுத்தி இருந்தால், அந்த கர்மங்கள் சுத்தம் ஆவதற்கு உபாயத்தை ஸ்ரீகிருஷ்ணனே சொல்லியிருக்கிறான். ‘கர்மஷுத்தி: மதர்ப்பணம்’. செய்த கர்மத்தை ஸ்வாமிக்கு

அர்ப்பிப்பதால் கர்மசுத்தி ஆகிறது. பெண்களுக்கு பதிவிரதமே பூஷணம். அது இல்லையென்றால், அனைத்து விரத நியமங்களும் வீண் ஆவதைப் போல, தேவதைகளுக்கு தலைவனான ஸ்ரீகிருஷ்ணனுக்கு அர்ப்பிக்கப்படாத கர்மங்கள் வீண் ஆகின்றன.

ரமெயரஸகெ ப்ரீதியில்லத விதரணெ ரண்டெ கொரள ஸூத்ரவோ

விதரணெ என்றால் தானம். தமக்குத் தேவையில்லாத பொருட்களை மற்றவர்களுக்கு தானம் செய்வதில் அனைவருக்கும் விருப்பமே. இந்த விஷயத்தில் அனைவரும் காடக உபநிஷத்தின் உத்தாலகரே ஆவர். குளிர் காலத்தில் கம்பளி, வெயில் காலத்தில் உதகும்பத்தின் அவசியம் இருக்கிறது. தேஷ கால பாத்திரங்களுக்கு தக்கதான தானம் கொடுக்க வேண்டும். இதனால் ஸ்வாமி மகிழ்கிறான். ஸ்வாமிக்கு ப்ரியரில்லாத நான்கு மக்களால் புகழப்படுவதற்காக செய்யும் தானத்தால் என்ன பலன்?

கமல நாபன பாடி பொகளத ஸங்கீத கார்த்தப ரோதனவோ

பள்ளிப் படிப்பு இவற்றுடன் பல பேர் மிகவும் கஷ்டப்பட்டு சங்கீதம் கற்றுக் கொள்கிறார்கள். சங்கிதா ஷாரதை நமக்கு அருள்வது ஒன்றும் சுலபமான விஷயம் அல்ல. அதன் மூலம் ஸ்வாமியின் ஸ்துதி நடக்க வேண்டும். அபரோக்ஷ ஞானிகளான ஹரிதாசர்கள் இயற்றிய பத பத்யங்களை பாட வேண்டும். இதை விட்டு திரைப்பட மற்றும் வேறு பாடல்களை பாடியவாறு வாழ்க்கையை கழித்தால், செல்வம், புகழினை பெறலாம். ஸ்வாமியின் ப்ரீதியை அல்ல. ஆகையால், ஸ்வாமியைப் பாடிப் புகழாத சங்கிதம், கழுதை கத்துவதற்கு சமமே ஆகிறது.

** **வித்வான். டா. தனஞ்சயாசார்யா**

**(தொடரும்...)**

**தொடர்**

## கீசக வதெ - சிறு காவியம்

**ஸ்ரீவாதிராஜர்**

**நிஷ்டெ ஸைரந்த்4ரிய த்3ருஷ்டிஸி நோட3லு**
**நஷ்டவாகு3வுது3 அஷ்டைஷ்வர்யவு**
**ப்4ரஷ்டனிகெ3 நானெஷ்டு பேளலின்ன**
**கட்டகடெ3கெ3 நீ கெ1ட்டெ கண்ட்3ய**

**ஸ்ருஷ்டிலி நன்னந்த2 க3ட்டிக3ன்யாரக்க**
**து3ஷ்டரெதெ3யனு மெட்டி ஸீளுவெனு**
**கு3ட்டிந்த3 நாரிய கொட்டு களுஹலு**
**பட்டத3 ராணியோலிட்டு கொம்பெ3 ||8**

நிஷ்டெ ஸைரந்திரிய - (சதாசாரத்தில்) திட நம்பிக்கை உள்ள சைரந்திரியை. த்ருஷ்டிஸி நோடலு - ஆசையுடன் பார்த்தால். அஷ்டைஸ்வர்யவு நஷ்டவாகுவுது - (அந்த மகாபாவத்திலிருந்து) அரசு, செல்வம், சேனை, யானை, குதிரை, குடை, சாமர, பல்லக்கு - இந்த எட்டு செல்வங்களும் நாசம் அடைகின்றன. ப்ரஷ்டனிகெ - நீதி கெட்ட உனக்கு. நானெஷ்டு பேளலி - நான் என்னவென்று புத்தி சொல்வது?. கட்டகடெகெ - (இந்த துஷ்ட ஆசையை பூர்ணமாக்கிக் கொள்வதற்கு முயற்சி செய்யாமல்), கடைசியில். நீ - நீ. கெட்டெ கண்ட்ய - கெட்டுப் போவாய், பார். எச்சரிக்கையாக இரு.

சுதேஷ்ணை இவ்வாறு சொல்ல, சைரந்திரியை அடையும் தன் நோக்கத்தை இவ்வாறு சொல்கிறான் கீசகன்.

அக்க - ஹே அக்கா. ஸ்ருஷ்டிலி - உலகில். நன்னந்த - எனக்கு சமமான. கட்டிகனாரு - வலிமையானவர் யார்? (யாரும் இல்லை). துஷ்டரெதெயனு மெட்டி - என் விரோதிகளின் இதயத்தை மிதித்து. ஸீளுவெனு - எறிகிறேன் (எனக்கு யாராலும் எந்த பிரச்னையும் வருவதில்லை. பயப்படாதே). நாரிய - இந்த பெண்ணை (ஸைரந்திரியை). குட்டிந்த - ரகசியமாக யாருக்கும் தெரியாமல். கொட்டுகளுஹலு - என்னிடம் அனுப்பினால். பட்டத ராணியொல் - பட்டத்து ராணியைப் போல (என் அந்தப்புர பெண்கள் அனைவரையும்

அவளின் தாசியாக ஆக்கி, அவளை முக்கியமானவளாக ஆக்கி). இட்டுகொம்பெ - வைத்துக் கொள்கிறேன்.

**கீசகனாடித$^{3}$ நீசனுடி$^{3}$ கேளி**
**நாசி பதியொளு ஸூசிஸ்பே$^{3}$கெந்து$^{3}$**
**யோசிஸி ஸும்மனெ ஈசெ ப$^{3}$ருதிரெ நி**
**ஷாசர கரவ சாசித$^{3}$னு**

**பா$^{3}$சி ஹிக்குவந்த$^{2}$ ப்ராசீனவேனிது$^{3}$**
**வாசனாடு$^{3}$ மீனலோசனெ என்னலு**
**ஆசரிஸி முந்து$^{3}$ தோ$^{1}$சதெ$^{3}$ க$^{2}$ளன**
**விசாரிஸிகோ ஸ்ரீசக்ரபாணி ||9**

5ம் நுடியில் நிரூபித்த கீசகனின் துஷ்ட பேச்சுகளைக் கேட்ட சைரந்திரியின் மனோபாவங்களை இந்த நுடியில் வர்ணிக்கிறார். கீசகனாடித - கீசகன் கூறிய. நீச நுடி - கெட்ட பேச்சுக்களைக் கேட்டு. நாசி - (வெட்கத்துடன்) தலை குனிந்து. பதியொளு - தன் கணவனுக்கு. ஸூசிஸபேகெந்து - தகுந்த நடவடிக்கைகளை எடுக்கச் சொல்ல வேண்டும் என்று. யோசிஸி - சிந்தித்து. ஸும்மனெ - 6ம் நுடியின் முதல் பாதியில் நிரூபித்ததைப் போல. தன் கணவனால் உயிரை விடுவாய் என்று சொல்லி. அவனுடன் வாதத்தை வளர்க்காமல். ஈசெ பருதிரெ - வேறு இடத்திற்கு (அவன் இல்லாத இடத்திற்கு) வந்தாள். நிஷாசர - அந்த அசுரன் (கீசகன்). கரவ - தன் கையை. சாசிதனு - தடுத்துப் பிடித்தான். அவளை தடுத்து இவ்வாறு கூறினான்.

பாசி ஹிக்குவந்த - தலை கூந்தலை சரிப்படுத்தி பின்னல் போடும் (இந்த சிறிய சேவையினால் வாழ்ந்து வரும்). பிராசீனவேனிது - உன் எந்த பிராரப்த கர்மத்தின் பலன் இதுவா? வாசனாடு - (ஹே சைரந்திரியே) பேசு. மீனலோசனெ - ஹே மீன்களைப் போல கண்களைக் கொண்டவளே. என்னலு முந்துதோரதெ - அடுத்து எதையும் செய்யப் பிடிக்காமல். ஸ்ரீசக்ரபாணி - ஹே சக்ர ஹஸ்த ஸ்ரீகிருஷ்ணா. யோசித்து செய்து. களன - இந்த துஷ்டனுக்கு. விசாரிஸிகோ - தண்டனையைக் கொடுப்பாயாக.

**பொடவிபதிக$^{3}$ள மட$^{3}$தி$^{3}$ நானாகி$^{3}$**
**ப$^{3}$ட$^{3}$தனவு ப$^{3}$ந்து$^{3}$ ஒட$^{3}$லிகி$^{3}$ல்லதெ$^{3}$**
**நாட$^{3}$ தொ$^{3}$ரெக$^{3}$ள பே$^{3}$டு$^{3}$வுதா$^{3}$யிது**
**மாடு$^{3}$வுதே$^{3}$னெந்து$^{3}$ நுடி$^{3}$த$^{3}$ளு**

**கேடி$^3$கெ$^3$ கீசக மாடி$^3$த$^3$ சேஷ்டெகெ$^3$**
**கட$^3$லஷாயி காபாட$^3$பே$^3$கென்னனு**
**ஆட$^3$லஞ்சிகேனு ஷடு$^3$ரஸான்னத$^3$**
**அடி$^3$கெ$^3$ ருசிய நோடு$^3$வரெ ||10**

சைரந்திரி, கீசகனின் கேள்விக்கு பதில் அளிக்கிறாள்.

பொடவிபதிகள மடதி நானாகி - நான் ராஜாதி ராஜர்களின் மனைவியாக இருந்து. படதனவு பந்து - சமய சந்தர்ப்பங்களால். ராஜ்ய, ஐஷ்வர்யாதிகளை இழந்து ஏழ்மை வந்துவிட. ஒடலிகெ இல்லதெ - வயிற்றிற்கு இல்லாமல். நாடதொரெகள - பிற நாட்டு அரசர்களை. பேடுவுதாயிது - அன்னத்திற்காக வேண்டும் நிலை வந்துவிட்டது. மாடுவுதேனு - தெய்வத்தின் முன் மனித முயற்சி எடுபடுமா? என்ன செய்வது?. எந்து நுடிதளு - என்று கேட்டாள் (மற்றும் தனக்குள் இவ்வாறு சொல்லிக் கொண்டாள்). கேடிகெ கீசக - துஷ்ட கீசகன் (தனக்கு வரும் விபத்தினை லட்சியம் செய்யாமல் இருக்கும் இவன்). மாடித சேஷ்டெகெ - செய்த கெட்ட நடவடிக்கைகளுக்கு. என்னனு - என்னை. கடலஷாயி - பத்பனாபனான (பாற்கடலில் படுத்திருப்பவனான) ஸ்ரீகிருஷ்னன். காபாடபேகு - (அவனை தண்டித்து) என்னை காப்பாற்ற வேண்டும். ஆடலு - இருப்பதை சொல்ல (ஸ்ரீபீமசேனனிடம் சொல்லி, கீசகனின் சம்ஹாரத்தை செய்வதற்கு). ஏனு அஞ்சிகெ - என்ன பயம்? (ராணியின் அறிவான பேச்சுகள் வீண் ஆனது). ஷடுரஸான்னத - ராணி நமக்கு கொடுத்துக் கொண்டிருக்கும் சுவையான ஷட்ரஸ அன்னத்தை. நோடுவரெ - கவனிக்க முடியுமா? அன்னத்திற்காக துஷ்ட கீசகனால் ஆகும் அவமானங்களை ஸ்ரீ பீமசேனனிடம் சொல்லாதிருப்பது எப்போதும் சரியல்ல. இவ்வாறு சிந்தித்த திரௌபதி, ஸ்ரீபீமசேனனிடம் வந்து, துஷ்ட கீசகனின் செயல்களை விவரித்து முறையிடுகிறாள்.

**நடு$^3$கு$^3$வ த்$^4$வனியலி பி$^3$டு$^3$த கண்ணீரனு**
**ஆடி$^3$த$^3$ மாதனு பா$^3$டி$^3$த$^3$ முக$^2$வனு**
**நோடி$^3$தா$^3$க்ஷண தொடெ$^3$து$^3$ நேத்ரவ**
**பி$^3$டு$^3$ பி$^3$டு$^3$ து$^3$க்க$^2$வ மாட$^3$தி$^3$ரு**

**மிடு3கி நின்னனு ஹிடி3த3 க2ளனனு**
**ப3டி3து3 யமனிகெ3 கொடு3வெ நோடீ3க3**
**தட3வ மாட3தெ3 கா3ட3தி3 போகு3 நீ**
**மாடி3த3 சிந்தெ கைகூ3டி3தெந்து3 ||11**

நடுகுவ த்வனியலி - நடுங்கும் குரலில். கண்ணீரனு பிடுத - கண்ணில் நீர் விட்டவாறு. ஆடித மாதனு - (திரௌபதி கீசகனின் தவறான பேச்சினை விவரித்து) கூறிய பேச்சுகளை. பாடித முகவனு - வாடிய முகத்தையும். நோடிதாக்ஷண - கண்ட உடனேயே. நேத்ரவ தொடெது - (பீமசேனன்). அவளின் கண்ணீரை துடைத்து. விடு விடு துக்கவ மாடதிரு - யோசனையை விடு. கவலைப்படாதே என்றான். நின்னனு மிடுகி - உன்னை நீதிகெட்ட பேச்சுக்களால் மனதை நோகடித்த. ஹிடித களனனு - கை பிடித்த துஷ்டனை. படிது - அடித்துக் கொன்று. யமனிகெ கொடுவெ - கொல்கிறேன். யமனிடம் அனுப்புகிறேன். நோடீக - சீக்கிரமாக இந்த காரியத்தைப் பார்ப்பாய். தட மாடதெ - நேரத்தை வீண் அடிக்காமல். காடதி போகு - வேகமாகச் செல். நீ மாடித சிந்தெ - உன் ஆலோசனை (இந்த துஷ்டனுக்கு தக்க தண்டனையை கொடுக்க வேண்டும் என்னும் உன் யோசனை). கைகூடிதெந்து - நல்லதாக ஆயிற்று. நீ போகு - திடமாக நம்பிக் கொண்டு. நான் சொல்வதைப் போல செய்பவளாக - நீ போ.

** சைரந்திரியை கீசகன் கை பிடித்து இழுக்க, அவளோ தப்பித்துச் செல்லும்போது, கோபம் கொண்டு அவளை காலினால் உதைத்த விஷயத்தையும் ஹேதி நாமக சூர்யனின் சேவகன், அவளை காப்பாற்றியதையும் பீமசேனன் அறிந்திருந்தான்.

** அந்த இரவில் ஆள் அரவமற்ற நாட்டியசாலையில் உன் ஆசையை நிறைவேற்றுவேன் என்று கீசகனுக்கு தெரிவித்து, நீயும் அந்த இடத்திற்கு போய் இரு என்று பீமசேனன் திரௌபதிக்கு சொல்லி, பயம் இல்லாமல் அந்த துஷ்டனிடம் செல் என்று சொல்கிறான்.

**மோஸமாடி3 போத3ளா ஷஷிமுகி2யிம்**
**தா3ஷெ பி3ட3தெ3 தா வ்யஸனகொ3ள்ளுத**
**பூ1ஷரதாபக்கெ கேஸரிக3ந்த4வ**
**தா3ஸியரிந்த3 பூஸிகொண்டு3**

**ஹாஸுமஞ்சத$^3$ல்லி பீ$^3$ஸிகொள்ளுதலி**
**கா$^4$ஸிபடு$^3$த்திரெ ஆ ஸமயத$^3$ல்லி**
**லேஸாகி$^3$ நின்னபி$^4$லாஷெ ஸல்லிஸுவெ**
**ஈஸு ஸம்ஷய பே$^3$ட$^3$ பா$^4$ஷெ கொட்டெ ||12**

ஸ்ரீபீமசேனனின் ஆணைக்கேற்ப கீசகனுக்கு தான் வருவதாக நம்பிக்கை கொடுக்கிறாள் சைரந்திரி. ஆ ஷஷிமுகி - அந்த சந்திரமுகி (ஸைரந்த்ரி). மோஸமாடி போதளு - ஏமாற்றி என் கையிலிருந்து தப்பினாள். எந்து - என்னும் காரணத்தினால். ஆஷெ பிடதெ - அவளை அடையும் ஆசையை விடாமல். தா - தான். வ்யஸனகொள்ளுத - துக்கப்பட்டவாறு. போஷர தாபக்கெ - புஷ்ப பாணத்தின் (மன்மதனின்) தாபத்தினால். அதனை பரிகரிப்பதற்காக. கேஸரி கந்தவ - கேசரி பரிமள சந்தனத்தை. தாஸியரிந்த - சேவகியர் மூலமாக. பூஸிகொண்டு - தேகத்தில் பூசிக்கொண்டு. ஹாஸுமஞ்சதல்லி - படுக்கையில். பீஸிகொள்ளுதலி - காற்று வீசிக்கொண்டு. காஸிபடுத்திரெ - கஷ்டப்பட்டவாறு இருக்க. ஆ ஸமயதல்லி - அப்போது. சைரந்திரி வந்து. லேஸாகி - எந்த நிர்ப்பந்தனத்திற்கும் ஆளாகாமல், நன்றாக. நின்னபிலாஷெ - உன் மன ஆசையை. ஸல்லிஸுவெ - நடத்துகிறேன். ஈஸு ஸம்ஷய பேட - இதில் சிறிதும் சந்தேகம் இல்லை. பாஷெ கொட்டெ - வாக்களிக்கிறேன். நான் குறிப்பிட்ட இடத்திற்கு கண்டிப்பாக இன்று இரவு வந்து சேர்கிறேன்.

**( தொடரும் )...**

**கன்னடம்**

**அருஞ்சொற்பொருள்**

**கடினமான சொற்களின் அர்த்தங்கள்**

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

1. உத்தமாங்க - தலை. 2. உபய - இரண்டு 3. உபய-ஸுக - இஹ/பர சுகங்கள் 4. உரககிரி - சேஷாசல 5. உதிதார்க்க - சூரியன் 6. உதுபவ - ஸ்ருஷ்டி 7. உபசய - வளர்வது 8. உததி - சமுத்திரம் 9. உதர - வயிறு 10. உன்னஹ - உற்சாகம்

தொடர்

**கன்னட கிரந்தங்கள் அறிமுகம்**

**ஸ்ரீவித்யா பிரசன்ன தீர்த்தரின் கட்டுரைகள்**

ஸ்ரீ மத் கிருஷ்ண பதாம்போஜ மானஸம் கவி புங்கவம்!
ஸ்ரீ மத் வித்யா ப்ரஸன்னாப்திம் குரும் வந்தே நிரந்தரம்!!

ஸ்ரீவித்யாபிரஸன்ன தீர்த்தர் வியாசராஜ மடப் பரம்பரையில் 37 வது பீடாதீஸராக அலங்கரித்த மஹனீயர். இவரது காலம் 1940 முதல் 1969 வரை ஆகும்(பீடத்தில் இருந்த காலம்). இவர் பூர்வா ஸ்ரமத்தில் வழக்கறிஞர் சமூக சேவகர், பல மொழிகளிலும் புலமை, ஸாஸ்திர ஞானம் என விளங்கியதோடு, பீடாதீஸராக அலங்கரித்ததுடன் ஹரிதாஸர் ஆகவும் பக்தி பிரச்சாரம் செய்த மஹா புருஷர். 'பிரஸன்ன' அங்கிதத்தில் கிருதிகளை ரசனை செய்து சமீபகாலத்தில் வாழ்ந்த ஸன்யாஸ தீக்ஷை பெற்ற ஹரி தாஸர் இவர். கிட்டத்தட்ட 30 வருடக்காலம் பீடத்தில் அமர்ந்து மூல கோபால கிருஷ்ணனை பூஜித்த மஹான். இவரது குரு ஸ்ரீவித்யா வாரிதி தீர்த்தர். இவரது ஆஸ்ரம சிஷ்யர் ஸ்ரீ வித்யா பயோநிதி தீர்த்தர். ஸ்ரீ ராகவேந்திர மடத்தின் ஸ்ரீ ஸுயமீந்திர தீர்த்தர், ஸ்ரீ ஸுஜயீந்திர தீர்த்தர், ஸ்ரீ பாதராஜ மடத்தின் ஸ்ரீ தயாநிதி தீர்த்தர், ஸ்ரீ ஸத்யநிதி தீர்த்தர் மற்றும் ஸ்ரீ உத்தராதி மடத்தின் ஸ்ரீ ஸத்யத்யான தீர்த்தர்' ஸ்ரீ ஸத்யாபிக்ஞ தீர்த்தர், ஸ்ரீ ஸத்யப்ரமோத தீர்த்தர் போன்றவர்களின் சமகாலத்தவர் இவர்.

பூர்வாஸ்ரமத்திலே இவரது பூர்வீகம் தமிழ்நாட்டிலே கோவை மாவட்டம் அவினாசிக்கு அருகில் உள்ள தெக்கலூர் என்பதாகும். இவரது மூதாதையர்கள் 19ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஸ்ரீ வித்யா காந்த தீர்த்தர் காலத்தில் ஸோஸலேவிற்கு இடம் பெயர்ந்தனர். இவரது பூர்வாஸ்ரம தாய் தந்தையர்கள் ஸ்ரீமதி ஸத்யபாமா மற்றும் ஸ்ரீ அஹோபிலாச்சார் (பின்னர் ஸ்ரீ வித்யா ரத்னாகர தீர்த்தராக பட்டம் ஏற்றவர்) தம்பதிகள் நாமக்கல் நரஸிம்மரைத் துதித்து சேவை புரிந்ததினால், பல பெண் குழந்தைகளுக்குப் பிறகு ஒரே மகனாகப் பிறந்தார். நரஸிம்மனின் அருளால் பிறந்தமையால் "வெங்கட நரஸிம்மா" என்று பெயர் வைத்தனர். பின்னாளில் இவர் தெக்கலூர் வெங்கட நரஸிம்மாச்சார் (அ) T.V . நரஸிம்மாச்சார் என்றே பிரஸித்தியாக விளங்கினார்.

ஸ்ரீவித்யா ஸிந்து தீர்த்தர் (அக்கிபேளே ஸ்வாமிகள்) காலத்தில் மடத்தின் செல்வங்களையெல்லாம், பஞ்சத்தைப் போக்க, தான மாக அளித்து விட்ட சூழ்நிலையில், இவரது காலத்திற்குப் பின் ஸ்ரீ வித்யா ஸமுத்ர தீர்த்தர் காலம் வரை மடமானது பணப் பற்றாக்குறையினால் கடினமான சூழ்நிலையைக் கடந்து வந்த காலம் அது.

ஸ்ரீவித்யா ஸமுத்திரத் தீர்த்தர் தனக்குப் பிறகு பீடத்தை அலங்கரிக்க மிகச்சிறந்த பாண்டித்தியம் பெற்று விளங்கிய ஸ்ரீ அஹோபிலாச்சாரைத் தேர்ந்தெடுத்து, ஸன்யாஸம் அளித்து "ஸ்ரீ வித்யா ரத்னாகர தீர்த்தர் "என நாமம் சூட்டினார். மடத்தின் நிலைமை அறிந்து' மைசூர் மகாராஜா வும் மடத்தின் நிர்வாகத்திற்கு ஆகும் செலவினை ஏற்று நடத்த ஒப்புக் கொண்டார். மடத்தின் முன்னேற்றத்திற்காக அப்போது பல தரப்பட்ட சேவைகளையாற்றிய மகனீயர் ஸ்ரீ வித்யா ரத்னாகர தீர்த்தர். உத்தராதி மடத்தின் ஸ்ரீ ஸத்ய த்யான தீர்த்தர் முதலானோர் மெச்சிய ஞானம் கொண்ட தபோசீலர் இவர்.

ஸ்ரீவித்யா ரத்னாகர தீர்த்தர் பூர்வாஸ்ரமத்தில் (அஹோபிலா ச்சார்) T.V. நரஸிம்மாச்சாரை ஸாஸ்திரத்தில் மிகச் சிறந்த நிபுணத்துவம் பெற வைக்க வேண்டும் என்ற இச்சை கொண்டி ருந்தார். அவர் ஸன்யாஸ ஆஸ்ரமம் ஏற்க, ஸ்ரீமதி ஸத்யபாமா அவர்கள் குடும்பப் பொறுப்பை ஏற்று நடத்தியதுடன் தனது மகனை வளர்க்கும் மிகப்பெரிய பொறுப்பும் அவருக்கு இருந்தது. இந்நிலையில், அவர் T.V. நரஸிம்மாச்சாரை லௌகிக கல்வி யிலும் மிகச் சிறந்ததாக தயார் செய்தார். ஆச்சார் பெங்களூரில் B.A Honors பட்டம் பெற்று, மேலும் படிப்பைத் தொடர்ந்து, சென்னையில் சட்டம் படித்து BA.B.L பட்டம் பெற்றார். மைசூரில் வழக்கறிஞராக பயிற்சி மேற்கொண்ட நரஸிம்மாச்சார், சிறிது காலம் திருப்பூர் மாவட்டத்தில் உள்ள தாராபுரத்தில் வழக்கறிஞராக பணியாற்றினார். மடத்தின் சட்ட ஆலோசகராக செயல்புரிந்து, மடத்தின் சில நில ஆக்கிரமிப்பு விவகாரங்களில் சட்ட ரீதியாக வெற்றி கண்டு, நிலங்களையும் சொத்துக்களையும் மீட்டு எடுக்க உதவி புரிந்தார்.

இந்நிலையில் ஸ்ரீவித்யா ரத்னாகர தீர்த்தர் பிருந்தாவனஸ்தர் ஆகும் முன், ஸ்ரீ வித்யா வாரிதி தீர்த்தரிடம் சூசனை அளித்து, T.V.

நரஸிம்மாச்சாரின் ஸ்வரூப யோக்கியதையை அறிந்து, அவரை ஸாஸ்திர பாடத்தில் சிறந்த வகையில் தயார் செய்யும்படி வழி வகைக் கூறி, உணர்த்தினார். குருவின் வழிகாட்டுதலின்படி நெடூர் கிருஷ்ணமூர்த்தி ஆச்சாரிடமும், வீரசோழபுரம் கிருஷ்ணா ச்சாரிடமும் ஸாஸ்திரப் பாடங்களை சிறப்பாகக் கற்றுத் தேர்ந்தார் நரஸிம்மாச்சார். அதே வேளையில் வியாஸராஜ மடத்தில் பல தரப்பட்ட நற்காரியங்களைப் புரிந்து வந்த ஸ்ரீ வித்யாவாரிதி தீர்த்தர், மூல கோபாலகிருஷ்ணனின் பூஜைக்காக தங்க மண்டபம், வெள்ளி மண்டபம், தங்கத் தொட்டில், பட்டாபி ராமனுக்கு தங்க கிரீடம், கவசம் முதலியவற்றை சமர்ப்பித்ததுடன், வியாஸராஜபுரத்தில் மடத்தை உருவாக்கி, 'வ்யாஸ யோகி சரித்திரம்' என்ற கிரந்தத்தின் ஆராய்ச்சிகளை விளக்குவித்தார். ஸ்ரீஹரிவாயுகுரு மஹனீயர்களின் ப்ரேரணை யினால், சூசனையாகி ஸ்ரீ வித்யா வாரிதி தீர்த்தர் 1935-ம் ஆண்டு T.V. நரஸிம்மாச்சாரியாருக்கு ஸன்யாஸம் அளித்து, 'ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்தர்' என்று நாமகரணம் செய்தார். பின்னர் பீடத்தை ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்தரிடம் ஒப்படைத்து 1939-ம் ஆண்டு பாத்ரபத மாஸ ஸுக்லபக்ஷ பஞ்சமியன்று ஸ்ரீரங்கத்தில் பிருந்தாவனஸ்தனார் ஸ்ரீ வித்யா வாரதி தீர்த்தர். ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்தர், தமது குருவிற்கு விஸேஷமாக வைபவங் களுடன் ஸமாராதனையை செய்து சேவை புரிந்தார்.

ஸ்ரீ வியாஸராஜ மடம் முக்கியமாக ஹரி தாஸ ஸாஹித்தி யத்திற்கு பெரும் பங்களிப்பை அளித்ததுடன், அத்தகைய தாஸ கான ஸேவை செய்பவர்களையும் விளக்குவிப்பதில் முக்கிய த்துவம் அளித்து வந்துள்ளது. ஸ்ரீ வியாஸராஜரிடம் இருந்து ஆரம்பித்து, ஸ்ரீ வித்யா காந்த தீர்த்தர், ஸ்ரீ வித்யா ரத்னாகர தீர்த்தர் வரை இத்தகைய சேவையை செய்து வந்ததை சரித்திரத்தில் காண முடிகிறது. அவ்வகையில் ஸ்ரீ மூல கோபால கிருஷ்ணனின் பரிபூர்ண அனுக்ரஹத்திற்குப் பாத்திரரான ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்தர் "பிரஸன்ன" என்று அங்கிதத்திலே (முத்ரையிலே) எத்தனையே க்ருதிகளை ரசனை செய்துள்ளார். ஸ்ரீ பாதராஜர், ஸ்ரீ வியாஸராஜர், ஸ்ரீ புரந்தரதாஸர் போல எந்தவொரு தலைப்பிலும் பலவித ராகங்களில் க்ருதி களை ரசனை செய்யும் திறமை உடையவராக விளங்கினார். ஸாஸ்திர விஷயங்களின் ஸாரத்துடன், பக்தி ரஸத்தையும் கலந்து மிக ரம்மியமான இசையில் அமைந்த பாடல்கள் இவருடையவை ஆகும். த்விபதி, சதுஷ்பதி, ஷட்பதி எனக் கடினமான இசை வகையிலும் கூட க்ருதிகளை படைத்துள்ளார். கன்னடத்தில்

அமைந்த படைப்புகள் பலவற்றுள் "பதரிகாஸ்ரம வர்ணனை," "வைகுண்ட வர்ணனை," "ஸுமத்வ விஜய ஸார ஸங்க்ரஹம்" போன்றவை மிக முக்கியமானதாகும். அவருடைய ஸாஹித்தியங்களில் "ஹுபேகே பரிமளத", "குனி குனி யெளொ பால கோபால", "ஜனும ஜனுமதலி" போன்றவை மிக பிரபலமானவை. குரு மஹனியர் ஸமஸ்க்ருதத்திலும் க்ருதிகளை வழங்கியவர். ஆங்கிலத்திலும் மிகச் சிறந்த புலமை வாய்ந்த இவர், புகழ் பெற்ற ஆங்கில எழுத்தாளர்களான ஷேக்ஸ்பியர், மில்டர், கெய்த் போன்றவர்களின் படைப்புகளாலும், ஸமஸ்க்ருதத்தில் காளிதாசனின் படைப்புகளாலும் ஈர்க்கப்பட்டு தனக்கென ஒரு பாங்கினை உருவாக்கி பலதரப்பட்ட மேடை நாடக படைப்புகளை அளித்துள்ளார். அவற்றில் சில கன்னடம் மற்றும் ஆங்கிலத்தில் கிடைக்கின்றன.

ஸ்வாமிகள் சமுதாய பிரச்சினைகளை நநோக்குவதிலும், சரி செய்வதிலும் முற்போக்கு சிந்தனையாளராக இருப்பினும், ஸம்பிரதாயங்களைக் கடைபிடிப்பதில் மிக கண்டிப்பாக இருந்தவர். ஸ்வாமிகளின் சமுதாயத் தொண்டும் ஞான காரியத்திற்கான சேவையும் அளவிட முடியாதது. அப்போதைய பேஜாவர் மடாதீசர் ஸ்ரீ விஸ்வேஸ தீர்த்த ஸ்ரீ பாதங்கள் உருவாக்கிய 'அகில பாரத மத்வ மஹா மண்டல' என்னும் மாத்வர்களை ஒருங்கிணைத்து ஸபைகளை அமைத்து தத்வ பிரசாரம் செய்யும் ஸத்காரியத்தில் , ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்தர் ஆரம்பம் முதலே, அவருடைய காலம் முழுவதும் வெவ்வேறு சபாக்களில் தலைமை பொறுப்பேற்று நடத்தியவர். இத்தகைய சபாக்களில் அவர் அளித்த சொற்பொழிவுகளின் தொகுப்பு கட்டுரைகளாக வெளிவந்துள்ளன. உதாரணத்திற்கு சென்னையில் தர்மபிரகாஷ் மண்டபத்தில் நடைபெற்ற சபாவில் மைசூர் மகாராஜா முதலியோர் கலந்து கொண்டு கௌரவித்தது குறிப்பிடத்தக்கது. ஸ்வாமிகள் வியாசராஜபுரத்தில் உள்ள சந்த்ரிகா குருகுலத்தில் பயிலும் வித்யார்த்திகளுக்கு இலவசமாக உணவு விடுதிகளை ஏற்படுத்திக் கொடுத்து ஸ்ரீ மடத்தின் மூலமாக மாபெரும் சேவையாற்றியுள்ளார். முக்கியமாக கிரந்த பிரசாரத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்ட குருமகனீயர் 'சந்த்ரிகா பதிப்பகம்' மூலமாக பல கிரந்தங்களை அச்சிட்டு வெளியிட்டுள்ளார். முக்கியமாக பரமகுருவான ஸ்ரீ வித்யா ரத்னாகர தீர்த்தரின் படைப்புகளைத் தொகுத்து வெளியிட்டதுடன் "பாஷ்ய தீபிகா" முதலான கிரந்தங்கள்

வெளிவர ஸ்ரீ மடத்தின் மூலம் பொருள் உதவியும் ஊக்குவிப்பும் நல்கியவர். 'தஸப்ரமதி தர்ஸன ப்ரகாசினி சபாவின்' மூலம் ஸத்காரியங்களை நடத்தி ஊக்குவித்தவர் ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்தர். தாம் பிருந்தாவனஸ்தராகும் காலம் நெருங்குவதை உணர்ந்து மடத்தின் சிஷ்யரான மிகச் சிறந்த பண்டிதரான ஸ்ரீ பூர்ணபோத ஆச்சாரைத் தேர்ந்தெடுத்து, 'ஸ்ரீ வித்யா பயோநிதி தீர்த்தர்' என்று நாமக்கரணம் செய்து ஸன்யாஸ தீக்ஷை வழங்கினார்.

ஸ்ரீ வித்யா பயோநிதி தீர்த்தர் பூர்வாஸ்ரமத்திலேயே ஸ்வாமி க ளிடத்தில் அத்யயனம் செய்தவர். விஸேஷமாக தஸ ப்ரகர ணங்கள், ஸூத்ர பாஷ்ய தீபிகா, ப்ரமாண பத்ததி, தத்வ பிரகாசிகா போன்றவற்றை கற்றுத் தேர்ந்தவர். பெங்களூரில் ஸ்ரீ வியாஸ ராஜ மடத்தின் திவானாகவும் ஸேவையாற்றியவர். அத்தகைய சிஷ்யருக்கு ஆஸ்ரமத்தை அளித்ததுடன், பீடத் தையும் ஒப்படைத்து, 1969-ம் ஆண்டு மார்கஸீர்ஷ மாஸ (மார்கழி) பௌர்ணமி தினத்தன்று ஸோஸலேவில் பிருந்தாவனஸ்தரா னார் ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்தர். இன்றும் தம்மை வேண்டும் பக்தர்களுக்கும், ஸேவை புரிவோருக்கும், ஞான, பக்தி, வைராக்கி யத்தையும், விஸேஷமான பாண்டித்தியத்தையும் அருள்பவரான, இத்தகைய மகனியரின் பாதம் பணிந்து போற்றுவோமாக !

**S.லக்ஷ்மிபதிராஜா, சென்னை**

**ஆராதனை**

## ஹரிதாசர்களின் சிந்தனைத் துளிகள்

**செய்யத் தக்கவை / செய்யக் கூடாதவை**

ஹரிய நெனெயத நரஜன்மவேகே நர
ஹரிய கொண்டாடத நாலிகெயேகே ||ப||

சத்யசௌசவில்லத ஆசாரவேகெ
நித்யனேமவில்லத ஜபதபவேகே
பக்திலி மாடத ஹரிபூஜெயேகே
உத்தமரில்லத சபெயு தானேகே ||1||

வேதத நோடத விப்ர தானேகே காதலரியத க்ஷத்ரியனேகே
க்ரோதத பிடத சன்யாஸி தானேகே

ஆதரவில்லத அம்ருதான்னவேகே ||2||

சாலதி ஹொளித சம்சாரவேகே பாலகரில்லத பாக்யவித்தேகே
வேளெகெ ஒதகத நண்டரித்தேகே, அனு
கூலவில்லத சதி சங்க தானேகே ||3||

மாதாபிதர பொரெயத மக்களேகே
மாது கேளத சோசகொடவெ தானேகே
நீதிநேமவில்லத கூட தானேகே அ
நாதனாத மேலே கோபவதேகே ||4||

அளிஸி அளிது போப மக்களித்தேகே
திளிது புத்திய பேளத குருவேகே
நளினநாப நம்ம புரந்தரவிட்டலன
செலுவ மூர்த்திய நோடத கண்களேகே ||5||
-- ஸ்ரீபுரந்தரதாசர்

பிறந்து வந்த மனிதன் தனதேயான வாழ்க்கையில் பல செயல்களை செய்கிறான். இது அவனின் கடமையும் ஆகிறது. அதனை அவன் கட்டாயம் செய்தே ஆகவேண்டும். அவரவர்களின் வர்ணம் மற்றும் ஆசிரமங்களுக்கேற்ப செயல்களை செய்து மேம்படவேண்டும். இப்படி அவரவர்கள் செய்ய வேண்டிய / செய்யக்கூடாத செயல்களின் பட்டியலை தாசர் தயார் செய்து கொடுத்திருக்கிறார். இங்கு சொல்லப்பட்டிருக்கும் ஒவ்வொரு செயலையும் பின்பற்றினால் வாழ்க்கை பரிசுத்தம் ஆகிறது. இதை பின்பற்றுவதற்கும் அவரே நமக்கு அருளவேண்டும் என்று அவரிடம் வேண்டுவோம்.

**Subscription Renewal**

தக்க சமயத்தில் உங்கள் ஹரிதாச விஜயம் சந்தாவினை ரென்யூ செய்து கொண்டு, பத்திரிக்கையை தொடர்ந்து பெறுமாறு பார்த்துக் கொள்ளவும்.

* பத்திரிக்கை பெறும் முகவரி மாறினால், அதனை எங்களுக்கு தெரியப்படுத்தவும்.

**தொடர்**

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### 17. ஸ்வகத ஸ்வாதந்த்ரிய ஸந்தி - விடைகள்

| | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 வி | தி | ப | 19 தி | | 2 பூ | த | பா | வ | ன | | 20 க | | | 21 கு | |
| ஷ் | | | மி | | ஷ | | | | | ப | ம | | | த | |
| ணு | | 3 ப் | ர | ம | ண | | | | | 4 ல | ல | நெ | ய | ரு | |
| | | | | | க | | | 22 வி | | ல் | ப | | ன் | ம | 15 கா |
| | | | | 5 ஸ | ர | ஸி | ஜோ | த் | ப | வ | த் | | | | |
| 6 அ | னா | யா | 23 ஸ | | 28 உ | | | வ | | வ | ர | | | | |
| ம் | | 7 க் | ரோ | தி | | | 8 ஹெ | த் | து | த் | | | | | |
| 9 பு | த | ரு | வ | | | | | ஜ | | 10 ம | த் | ஸ | ர | ள | |
| தி | | 11 த | ர | ணி | | | | ன | | | | | த் | க | |
| | | | | 24 ஸ | | | ய | | | 12 மா | து | ளா | ந் | த | க |
| ன | ஸ | 25 ஸா | க | 13 பா | த | ரெ | ப | ஞ் | ச | | | | ரே | ந் | |
| | | த் | | தை | | | த | | ப | ட | கை | து | 16 ம | வ | |
| 14 த | ஸ | வி | த | 26 து | | | 29 வீ | | | 27 த | ணி | க | 17 அ | 30 த் | |
| | ம | க | | க் | | | | | | ரு | | | | | |
| | 31 தா | | ர | க | ஸ் | 18 பா | | | | ணி | | | | | |

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 3 : இதழ் 2


| **நிர்வாக ஆசிரியர்** | **துணை ஆசிரியர்** |
|---|---|
| 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன் | 'தாச சாகித்ய சேவா ரத்ன' |
| ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ், | திரு.குரோம்பேட்டை R.ஸ்ரீதரன் |
| 380, 2A Main, 16th Cross, JP Nagar | **ஆசிரியர் குழு உறுப்பினர்கள்** |
| 4th Phase, பெங்களூரு 560078 | திரு. முரளிதர தாசரு, |
| Ph.: 89044-58276. | திருமதி. நிர்மலா நரசிம்மன், |
| haridasa.vijayam@gmail.com | திரு. லட்சுமிபதிராஜா, |
| jagannathakesava.blogspot.com | திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ் |


## ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்

**ஜனவரி 1 முதல் 31 வரை, 2022**

Jan2 : மார்கசீர்ஷ அமாவாசை - ஸ்ரீகுருஸ்ரீஷ விட்டலதாசர், கனககிரி
14 : புஷ்ய சுத்த த்வாதசி - கோரெபாள ஹனுமந்த ராயர், லிங்கசுகூர்
15 : புஷ்ய சுத்த த்ரயோதசி - ஹரபனஹள்ளி பீமவ்வா
24 : புஷ்ய பகுள சப்தமி - ஸ்ரீ நரஹரி தீர்த்தர், ஹம்பி
24 : புஷ் பகு சப்தமி - ஸ்ரீஅபினவபிராணேஷவிட்டலதாசர், லிங்கசுகூர்
25 : புஷ்ய பகுள அஷ்டமி - ஸ்ரீ கோபாலதாசர், உத்தனூர்
28 : புஷ்ய பகுள ஏகாதசி - ஸ்ரீ ரமாகாந்த விட்டல தாசர், பெங்களூரு

# ஆசிரியர் பக்கம்

ஹரிதாச சாகித்யத்தை துவக்கி வைத்தவர் என்று சொல்லப்படும் ஸ்ரீநரஹரி தீர்த்தர்; ஹரிதாச சாகித்யத்தின் மேரு கிருதியான ஹரிகதாம்ருதசாரம் வருவதற்கு முக்கிய காரணமாக இருந்தவரான ஸ்ரீகோபாலதாசர்; பரம்பரையில் வந்து 'ஹரிதாச தர்பண' என்னும் ஒரு அருமையான கிருதியை இயற்றியவரான ஸ்ரீரமாகாந்த விட்டல தாசர் ஆகியோர் புண்ணிய தினங்கள் இந்த ஜனவரி 2022ம் மாதத்தில் வருகின்றன.

ஏக்கர் கணக்கான தன் நிலங்களை விற்று, அரும்பாடுபட்டு, ஹரிதாசர்களின் கிருதிகள் அனைத்தையும் தன் சொந்த செலவில் பதிப்பிட்டு, நமக்கு இன்று கிடைத்திருக்கும் கிருதிகளுக்கு முக்கிய காரணரான கோரேபாள ஹனுமந்த ராயரின் நினைவு நாளும் இந்த மாதம் வருகிறது.

தாம் மட்டும் முக்திக்கான பாதையில் செல்லாமல், ஹரிபக்தர்கள் அனைவரும் சாதனைகளை செய்து, முக்தி வழியில் ஈடுபடவேண்டும் என்னும் உயர்ந்த நோக்கத்துடன் பாடுபட்ட / செயல்பட்ட ஹரிதாசர்களான இவர்களைப் பற்றி அறிந்து, இவர்களுடைய கிரந்தங்களைப் படித்து / கிருதிகளைப் பாடி, அதன் மூலம் பகவந்தனின் அருளைப் பெறுவோமாக.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

**கன்னடம்**

**அருஞ்சொற்பொருள்**

**கடினமான சொற்களின் அர்த்தங்கள்**

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

1. துந்தி - மனப்பூர்வகமாக 2. தும்பி - தேனி / வண்டு 3. துங்க - பெரிய / சிறந்த 4. துங்கவிக்ரம - பலசாலி 5. துப்யம் - உனக்கு 6. துரங்க - குதிரை 7. துரங்கப - கல்கி 8. மெத்த - தின்ற 9. மெரெஸு - வெளிப்படுத்து 10. மேகததி - மேகங்களின் கூட்டம்

தொடர்

## கேசவ நாமா

## 21. கோலு ஹாடு - ஸ்ரீமோகனதாசர்

(சென்ற இதழிலிருந்து தொடர்ச்சி)

**ஏஸு பிரம்மாண்டதொ$^3$ளு வாஸவகி$^3$ருதிப்ப**
**தா$^3$ஸ வர்க்க$^3$வனெ பொரெவனெ கோலெ**
**தா$^3$ஸ வர்க்க$^3$வனெ பொரெவனெ நம்ம ஸ்ரீ**
**வாஸுதேவன்ன ப$^3$லகொ$^3$ம்பெ$^3$ கோலெ ||14**

ஒவ்வொரு பிரம்ம கல்பத்திலும் ஒவ்வொரு பிரம்மாண்ட ஸ்ருஷ்டி ஆகிறது. பகவந்தனால் ஸ்ருஷ்டியான பிரம்மாண்டத்தின் உள்ளே & வெளியே வியாபித்திருக்கும் ரூபமே நாராயண ரூபம். மோட்சத்தைக் கொடுக்கும் அவனது இன்னொரு ரூபமே வாசுதேவ ரூபம். பகவந்தனின் அனைத்து நற்குணங்களையும் நினைத்தவாறு அவனையே பூஜித்திருக்கும் ஹரிதாச வர்க்கத்தினருக்கு அருளி மோட்சத்தைக் கொடுக்கக்கூடிய அத்தகைய வாசுதேவ ரூபத்தினை நான் வணங்குகிறேன்.

**முத்துமொக$^3$த தெ$^3$ய்வ அத்$^3$வைத மஹிமனெ**
**ஸத்$^3$வைஷ்ணவர பொரெவனெ கோலெ**
**ஸத்$^3$வைணவர பொரெவனெ அஜனய்ய**
**ப்ரத்$^3$யும்ன ஹரிய ப$^3$லகொ$^3$ம்பெ$^3$ கோலெ ||15**

ஸ்ரீஹரியின் ஒவ்வொரு ரூபமும் மிகவும் அழகானவை. அனைவரையும் ஈர்க்கக்கூடியவை. அபூர்வ மகிமைகளைக் கொண்டவை. 'மிகச்சிறந்த மகிமை'களைக் கொண்ட ஞானபிரதனான பிரத்யும்ன ரூபம், தன்னை வணங்குபவர்களை சத்வைஷ்ணவராக மாற்றி காப்பாற்றுகிறது. பிரம்மதேவரின் தந்தையான ஸ்ரீஹரியே, பிரத்யும்ன ரூபத்தினால் சத்வைஷ்ணவர்களை காப்பாற்றியதைப் போல எனக்கும் அருள்வாயாக.

**அனிமிஷ தை$^3$த்யர மனகெ$^3$ ஸிலுகதி$^3$ப்ப**
**ஸனகாதி வந்த்ய ஸகலேஷ கோலெ**
**ஸனகாதி வந்த்ய ஸகலேஷனாகிப்ப**

**அனிருத்த ஹரிய ப³லகொ³ம்பெ³ கோலெ ||16**

தேவ தேவதைகளின் மனதிற்கே எட்டாத மகாமகிமன் ஸ்ரீஹரி. பிரம்மதேவரின் மானச புத்ரர்களான சனகாதிகளால் வணங்கப்படுபவர். அனைத்து ஜீவ ஜடாத்மகமான இந்த உலகத்திற்கு தலைவனான அனிருத்த ரூபி ஸ்ரீஹரியை வணங்கினால், அவன் அனைவருக்கும் அருள்வான்.

**க்ஷராக்ஷரதொளு பரமோத்தமனாத**
**கரிராஜவரத கவிகே³ய கோலெ**
**கரிராஜவரத கவிகே³யனாத ஸ்ரீ**
**புருஷோத்தமன்ன ப³லகொ³ம்பெ³ கோலெ ||17**

பிரம்மதேவரிலிருந்து தொடங்கி, கிருமி வரையிலான அனைவரும் க்ஷர புருஷர்களே. மகாலட்சுமி மட்டுமே அக்ஷர புருஷள். இத்தகைய க்ஷர மற்றும் அக்ஷர புருஷர்களைவிட பரமோத்தமனே புருஷோத்தம ரூபி பரமாத்மன். கரிராஜனான கஜேந்திரனின் கூக்குரலுக்கு, கருட வாகனான ஸ்ரீஹரி வந்து அவனை காப்பாற்றி, கரிராஜ வரதன் என்று பெயர் பெற்றான். இத்தகைய புருஷோத்தமன், ஆதிகவி எனப்படும் பிரம்ம தேவராலும் வணங்கப்படுபவர்.

**அக்ஷயமூருதி மோக்ஷதாயக ஸ்வாமி**
**குக்ஷியொள் ஜக³வ ரக்ஷிப கோலெ**
**குக்ஷியொள் ஜக³வ ரக்ஷிப நம்ம**
**அதோக்ஷஜ ஹரிய ப³லகொ³ம்பெ³ கோலெ ||18**

பிரம்மாதி அனைத்து சேதனர்களும் தாரதம்யத்தின்படி ஏதோ ஒரு வகையில் அழிவு உள்ளவர்களே. ஆனால், ஸ்ரீஹரி எவ்விதத்திலும் நாசமில்லாதவனாகையால், அக்ஷயமூர்த்தி என்னும் பெயரைப் பெற்றார். வாயுதேவரின் பாதங்களைப் பற்றியவர்களுக்கு அருளி, அந்த ஜீவருக்கு மோட்சத்தைக் கொடுப்பவன் அதோக்ஷஜ ரூபி பரமாத்மன். பிரளய காலத்தில் தன் உதரத்தில் பிரம்மாண்டத்தை தரித்து, ஜகத்தினை ஸ்ருஷ்டித்து, காப்பாற்றும் ஸ்ரீஹரியே, உன்னை நான் வணங்குகிறேன்.

**க்ரூர க²ளனுத³ர ஸீளி ப்ரஹ்லாதன**
**காருண்யதிந்த காய்த³னெ கோலெ**
**காருண்யதிந்த காய்த³னெ நம்ம ஸ்ரீ**
**நாரஸிம்ஹன்ன ப³லகொ³ம்பெ³ கோலெ ||19**

பக்த பிரகலாதனின் மேல் இருந்த கருணையால் அவதரித்த ரூபமே நாரசிம்ஹ ரூபம். க்ரூரனான ஹிரண்யகசிபு தன் மகனான பிரகலாதனுக்கு தொந்தரவு கொடுத்தான். பூவுடன் சேர்ந்த நாரும் மணப்பது போல, ஹிரண்யகசிபு நரசிம்மர் கையாலேயே கொல்லப்பட்டு சாப விமோசனம் அடைந்தான். தான் அனைவரையும் விட சக்தி வாய்ந்தவன், அனைத்து இடங்களிலும் இருப்பவன், சர்வதந்த்ர ஸ்வதந்த்ர, அனைத்து ஜீவர்களின் பிம்பரூபியாக அனைவரையும் காப்பாற்றுபவன் என்று நிரூபித்த அவனின் கருணையை எப்படி புகழ்வேன், உனக்கு நமோ நமோ.

**சச்சிதானந்தனெ சகல குணபூர்ண**
**முசுகுந்தவரத முனினுத கோலெ**
**முசுகுந்தவரத முனினுதனாத3 ஸ்ரீ**
**அச்யுதன மொதலெ ப3லகொ3ம்பெ3 கோலெ ||20**

சத், சித், ஆனந்த சரீரமுள்ள அச்யுத, அனைத்து குணங்களால் பரிபூர்ணனாகி, எவ்வித தோஷங்களும் அற்றவனானவனே அச்யுதன். முசுகுந்த வரதனான ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியே அச்யுதன். இவனை முனிவர்கள் அனைவரும் வணங்கியவாறு அடிபணிகின்றனர்.

**து3ர்த3ர்ஷராகி3த்த3 க2ளர ஸமுதா3யவ**
**மர்த்த3ன மாடி3த3 மஹாமஹிம கோலெ**
**மர்த்த3ன மாடி3த3 மஹாமஹிமனாத ஜ**
**நார்த்தன மொத3லெ ப3லகொ3ம்பெ3 கோலெ ||21**

எந்தவொரு சக்தியினாலும் வெல்லப்பட முடியாதவர்களே துர்தர்ஷர்கள். இத்தகைய துஷ்ட சேதனர்களை கொல்லத்தக்கவனே ஜனார்த்தனன். துஷ்டர்களைக் கொன்று, தன் பக்தர்களை காப்பாற்றும் ஜனார்த்தனரூபி பரமாத்மனை அடிபணிந்து, வணங்கி, மகிழ்வேன் என்கிறார் மோகனதாசர்.

**இந்த்ரானுஜனாகி3 ஸ்வர்க்கதொ3ளிருதிப்ப**
**ஸாந்த்ரஸுக3வீவெ சுரரிகெ கோலெ**
**ஸாந்த்ரஸுக3வித்து ஸுரர பாலிஸுவ உ**
**பேந்த்ரன்ன மொதலெ ப3லகொ3ம்பெ3 கோலெ ||22**

ஸ்வர்க்காதிபதியான, சசியின் கணவனான, இந்திரனில் அந்தர்யாமியாக இருந்து, அவரை செல்வத்துடன் நடைபோடுமாறு செய்தவன் உபேந்திரரூபி ஸ்ரீஹரி. இவன் இந்திரனின் தம்பியும் ஆகும். தேவேந்திராந்தர்கத உபேந்திரன், அவரவர்களின் தகுதிக்கேற்ப இடையில்லா மகிழ்ச்சியைக் கொடுப்பவன். சுரர்களுக்கு அருளும் இத்தகைய ரூபியை நான் வணங்குகிறேன்.

**பரமபக்தர பாப பரிஹாரவனெ மாடி பரம பத³விய பாலிப கோலெ**
**பரம பத³விய பாலிப நம்ம ஸ்ரீ**
**ஹரியன்னெ மொதலெ ப³லகொ³ம்பெ³ கோலெ ||23**

பரமபக்தர்களின் பாவங்களை பரிகாரம் செய்பவனே ஸ்ரீஹரி. பாகவதோத்தமருக்கு பரமபதவியான மோட்சத்தைக் கொடுத்து அருள்பவனே ஸ்ரீஹரி. பிறப்பு இறப்பு சுழற்சியிலிருந்து நம்மை விடுவிக்கவல்ல ஒரேயொரு தெய்வமான ஸ்ரீஹரியை நான் வணங்குகிறேன்.

**சிஷ்டபாலக உத்க்ருஷ்ட ஞானானந்த**
**க்ருஷ்ணெய கஷ்ட பி³டி³ஸித கோலெ**
**கிருஷ்ணெய கஷ்ட பி³டி³ஸித நம்ம ஸ்ரீ**
**கிருஷ்ணன்ன மொதலெ ப³லகொ³ம்பெ³ கோலெ ||24**

துஷ்டர்களைக் கொன்று பக்தர்களைக் காப்பாற்றுவதற்கென்றே அவதரித்து வந்தவன் ஸ்ரீகிருஷ்ணன். ஒவ்வொரு நொடியும் பாண்டவர்களைக் காப்பாற்றி, கிருஷ்ணையின் மானத்தைக் காத்து அருளியவன் ஸ்ரீகிருஷ்ணன். கிருஷ்ணா என்றால் கஷ்டங்கள் அனைத்தும் பறந்துவிடும் என்பதுபோல அனைவரின் ஆராத்ய தெய்வமான ஸ்ரீகிருஷ்ணனின் அருள் அனைவருக்கும் கட்டாயம் தேவை. மோகனதாசரும் அவனின் அருளுக்காக மேற்கண்டவாறு பிரார்த்திக்கிறார்.

ஒவ்வொரு ஸ்லோகத்தின் நான்காம் நுடியில் 'பலகொம்பெ' என்று இருப்பதை பார்க்கிறோம். பலகொம்பெ என்றால் வணங்குதல், அடிபணிதல், பிரார்த்தனை என்று பொருள். ரத்த, மாமிசம், எலும்புகளால் கூடிய தேகமானது ஜீவிகளை பாதுகாக்கிறது. மொத்த ப்ரக்ருதியே ஜீவர்களை பாதுகாத்து அவர்களுக்கு உதவி புரிகிறது. அந்தந்த ரூபங்கள் நம்மை பாதுகாக்கின்றன என்று சொல்வதைப் போல தாசர் பாடியிருக்கிறார்.

(அடுத்த இதழில் புதிய பாடல் தொடரும்)...

தொடர்

# ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

## ஹரிகதாம்ருதசாரத்தில் சங்கீத அம்சங்கள்

14ம் நூற்றாண்டில் ராக தாளங்களுடன் இசையமைக்கப்பட்ட கன்னட ஹரிதாச பாடல்களை நாம் நரஹரி தீர்த்தரின் படைப்புகளில் காணலாம். அவரது படைப்புகள் மிகச்சிலவே கிடைத்துள்ளன. பின்னர் ஸ்ரீபாதராஜரிடமிருந்து துவங்கி வியாசராஜர், வாதிராஜர் என தாச பரம்பரை வளர்ந்தது. ஹரிதாசர்களான புரந்தரதாசர், கனகதாசர், பிரசன்ன வெங்கடதாசர், விஜயதாசர், கோபாலதாசர், ஜகன்னாததாசர் ஆகியவர்களின் சீரிய முயற்சியில் தொடர்ந்த தாச பரம்பரை இன்று வரை வளர்ந்து வந்திருக்கிறது. ஹரிதாச சாகித்யம் இசையுடன் இரண்டறக் கலந்து வளர்ந்தது. கன்னடத்திலும் வேறு மொழிகளிலும்கூட பக்தி சாகித்யங்கள் நிறைய வந்திருக்கின்றன. ஆனால், ஆன்மிகத்துடன் சாஸ்திரிய சங்கீதத்தின் அம்சங்களையும் சேர்த்துக் கொண்ட பக்திசாகித்யம் எது என்று கேட்டால் அது ஹரிதாசர்களின் படைப்புகள் மட்டுமே. புகழ் பெறாத அல்லது நமக்குத் தெரியாத ஹரிதாசர்கள் இன்னும் எவ்வளவோ பேர் இருக்கின்றனர். இதுவரை தெரிந்த ஹரிதாசர்களில், மிகச் சிறந்தவர் என்று சொன்னால் அது 18ம் நூற்றாண்டின் ஸ்ரீஜகன்னாததாசர் ஆவார்.

ஹரிபக்தரான ஸ்ரீநரசிம்மாசார் மற்றும் லட்சுமிபாய் தம்பதியினருக்கு, திருப்பதி ஸ்ரீனிவாசனின் அருளால் கிபி 1728ல் ஜூலை 23ம் தேதி கீலக நாம சம்வத்சரம் சிராவண சுத்த த்விதியையன்று பிறந்த குழந்தைக்கு ஸ்ரீனிவாசாசார்யர் என்று பெயரிட்டனர். ஸ்ரீமத் ஜயதீர்த்தரின் ‘ஸ்ரீமன் நியாயசுதா’ கிரந்தத்தைப் படித்து அறிஞரானார். இந்தப் புகழ் ஸ்ரீஹரி தனக்குக் கொடுத்தது என்பதை மறந்து, கர்வம் கொண்டு, சாஸ்திரம் படித்த அறிஞர்களுக்கு மட்டுமே மரியாதை கொடுத்து, கன்னடத்தில் ஸ்ரீஹரியைப் புகழ்ந்து பாடல்களைப் பாடிவரும் ஹரிதாசர்களைக் குறித்து குறைந்த / தாழ்ந்த அபிப்ராயத்தையே கொண்டிருந்தார். இந்த அபிப்ராயத்தினால், ஸ்ரீவிஜயதாசருக்கு செய்த அவமானத்தினால், வயிற்றுவலி வந்து சேர்ந்தது. அந்த வலியைத் தீர்ப்பதற்கும், இவருக்கு நீண்ட ஆயுளைக் கொடுப்பதற்கும், விஜயதாசரின் அருளும், கோபாலதாசரின்

கருணையும் இவருக்கு வேண்டியிருந்தது. அவர்களின் அருளினால் 'ஜகன்னாதவிட்டலா' என்னும் அங்கிதம் கிடைத்து, அதன் மூலம் கன்னடத்தில் பாடல்களை இயற்றலானார்.

ஹரிதாச சாகித்யமானது சங்கீதத்துடன் எப்படி ஒன்றியிருக்கிறது, இந்த இரண்டிற்குமான சம்பந்தம் எப்படி இருக்கிறது என்பதை விளக்கும் சிறு முயற்சியே இந்த கட்டுரை.

நாஹம் வஸாமி வைகுண்டே ந யோகி ஹ்ருதயே ரமௌ |
மத்பக்தா யத்ர காயந்தி தத்ர திஷ்டாமி நாரத ||

'வைகுண்டத்திலோ, யோகிகளின் இதயத்திலோ நான் இருப்பதில்லை. என் பக்தர்கள் எங்கு பாடுகின்றனரோ அங்கு தயாராக நின்றிருக்கிறேன், நாரதா' என்று ஸ்ரீஹரி சொல்கிறார். ஹரிதாசர்கள் ஹரிபக்தர்கள் ஆனதால், ஸ்ரீஹரியின் எந்தவொரு பேச்சை மீறாமல், அவன் மனம் கோணாமல், அவன் சொன்னதையே மிகவும் மகிழ்வுடன் செய்பவர்கள். போலவே அவனது நற்குணங்களை, மகிமைகளை புகழ்ந்து பாடுவதற்கு, அவனுக்கு மிகவும் பிடித்த சங்கீதத்தையே பயன்படுத்துவது என்று ஹரிதாசர்கள் தீர்மானித்தனர்.

ஜகன்னாததாசரின் பாடல்கள் ராகதாளங்களை தன்னுள்ளே அடக்கிக்கொண்டுள்ளன. ஏனென்றால் எந்த பாடலும் ராகதாளங்கள் இல்லாமல் பாடமுடியாது. இவரது மிகச்சிறந்த கிருதியான ஹரிகதாம்ருதசாரமானது பாமினி ஷட்பதியில் (தகிட தகதிமி) மிஸ்ரசாபு தாளத்திற்கு சரியாக உள்ளது. உகாபோகத்தைப் போலவும் பாடமுடிகிறது. தத்வங்கள், சித்தாந்தங்கள் இவற்றையே விளக்கும் ஜகன்னாததாசரின் பாடல்களில், சங்கீதத்தின் அம்சங்களையும் காணமுடியும். மனதிற்கான அமைதி, உடலின் ஆரோக்கியம் ஆகியவற்றிக்கு சங்கீதமே நல்ல தீர்வு என்று இன்றைய அறிவியல் ஒப்புக்கொள்கிறது. ஹரிகதாம்ருதசாரத்தை, மிஸ்ரசாபு தாளத்தில், ராகத்துடன் பாடும்போது பிராணாயாமம் செய்த பலன்கள் கிடைக்கின்றது. இது என்னுடைய சொந்த அனுபவத்திலிருந்து சொல்கிறேன்.

ஜகன்னாததாசரின் கிருதிகளில் இசை என்னும் அம்சத்தை எடுத்துக்கொண்டால், நவவிதபக்திகளில் கீர்த்தனை-பக்தியும் ஒன்று. ஸ்ரீஹரியின் குணங்களை, மகிமைகளை புகழ்ந்து பாடுவதே கீர்த்தனை. கீர்த்தனைகளை ராகத்துடன், தாளத்துடன் பாடும்போது

அதுவே சங்கீதமாகும். அன்பு, பக்தி ஆகிய உணர்ச்சிகளை சந்தத்துடன் கூறிய ஸ்வரங்களின் சங்கமத்தால் பாடுவதை ராகம் என்று அகராதி சொல்கிறது. ஸ்ரீஹரியிடம் பக்தி கொண்ட ஹரிதாசர்கள் 'வேதானாம் சாமவேதோஸ்மி' என்பதுபோல், வேதங்களையே ஆதாரமாகக் கொண்ட ஹரிதாசர்கள், சாமவேதமான சங்கீதத்தை அவர்களது பாடல்களுக்கு அடிப்படையாகக் கொண்டதில் எந்தவொரு வியப்பும் இல்லை.

ஆனால் பக்திக்கு வேண்டியது ராகமும் இல்லை. தாளமும் இல்லை. ஸ்ரீஹரியிடம் பக்தி மரியாதை மட்டுமே. பாடலுக்கு மயங்கி வேகமாக வரும் ஸ்ரீஹரியை சங்கீதம் - சாகித்யம் இவ்விரண்டின் மூலமாகவும் விரைவில் கண்டுகொள்ளும் திறமையுள்ளவர்கள் ஹரிதாசர்கள்.

பாடலைப் பாடும்போது ஸ்ருதிக்காக வைத்துக்கொண்டு இசைப்பதே தம்புரி எனப்படும். ஏகதாரே, ஏகநாத என்ற பெயருடன், ஒரே தந்தி கொண்ட தம்புரியை ஸ்ருதிக்காக வைத்துக் கொண்டிருந்தனர். பிறகு நான்கு தந்திகளை சேர்த்து ஒரு பெரிய கட்டையில் கட்டி, அதை தம்புரி என்று அழைத்து வந்தனர்.

குண்டு சுரைக்காய்க்கு சமஸ்கிருதத்தில் தம்புரி என்று ஒரு பெயர் உண்டு. அதுவே தம்புரா ஆகியிருக்கிறது என்று தும்புருவை தனது பாடல்களுக்குப் பயன்படுத்தியதால் அதை தம்புரி என்று அழைக்கலாயினர் என்று ஒரு பேச்சு உண்டு. மேலே சொன்னதுபோல், ஹரிதாசர்கள் நான்கு தந்திகளைக் கொண்ட தம்புரியை பயன்படுத்தினர் என்பது நமக்குத் தெரிந்ததே. ஹம்பியில், புரந்தர மண்டபத்தில் இருக்கும் புரந்தரதாசரின் சிலையின் கையில் இருப்பது நான்கு தந்திகளைக் கொண்ட தம்பூரியே ஆகும். இங்கு தம்புரியைப் பற்றி ஏன் சொல்கிறோம் என்றால், ஜகன்னாததாசரும் தமது பாடல்களைப் பாடும்போது தம்புரியைப் பயன்படுத்தி வந்தார் என்பதால். இவர் ஓவியம் வரைவதிலும் நிபுணராக இருந்தார் என்பது அவரது வாழ்க்கைச் சரிதத்தைப் படித்தால் நமக்குத் தெரிகிறது. அவரது தம்புரி மேலும் அவர் ஓவியங்களை வரைந்து வைத்திருந்தார் என்பதும் அந்த சரிதத்திலிருந்தே நமக்குத் தெரிகிறது.

ஹரிதாச சாகித்யம் தொடங்கிய காலத்திலிருந்து அவரது பாடல்கள் சங்கீதத்தின் மூலமாகவே வெளிப்பட்டிருக்கிறது. அந்தக் காலத்தில் பாமரர்களும் (பாடகர்கள் அல்லாதவர்கள்) பாடுவதற்கு ஏற்றவாறு சில ராகங்கள் இருந்தன. அவை 32 ராகங்கள் இருந்ததால், அவற்றை 'பத்தீஸ ராகங்கள்' என்று அழைத்து வந்தனர். அவையும் வெவ்வேறு சமூகங்களைச் சேர்ந்தவையாக இருந்தன. இந்த பத்தீஸ ராகங்களைத் தவிர, இன்னும் பல ராகங்களை, சூளாதிகளின் ஏழு தாளங்களை, சாபு தாளங்களை ஹரிதாசர்கள் பயன்படுத்தி வந்தனர். ஸ்ரீபாதராஜரிடமிருந்து துவங்கி விஜயதாசர் வரை, அவர்களது சில பாடல்களில் சில பத்தீஸ ராகங்களின் பெயர்களை சொல்லியிருக்கின்றனர். ஜகன்னாததாசரின் தமது பாடல்களில் பத்தீஸ ராகங்களைப் பயன்படுத்தி, மொத்தம் 23 ராகங்களின் பெயர்களை பயன்படுத்தியிருக்கிறார்.

| | | | |
|---|---|---|---|
| 1. நாட | 2. சங்கராபரணம் | 3. பஹாடி | 4. காம்போதி |
| 5. கமாஜ் | 6. பூபாள | 7. தோடி | 8. சாவேரி |
| 9. மத்யமாவதி | 10. தன்யாசி | 11. பைரவி | 12. பந்துவராளி |
| 13. வராளி | 14. ஸ்ரீ | 15. சௌராஷ்ட்ர | 16. சாரங்க |
| 17. ரேகுப்தி | 18. ஆரபி | 19. தேசி | 20. முராரி |
| 21. மாயா மாயவ கௌள | 22. நாத நாம க்ரியா | 23. தேவ காந்தாரி | |

ஜகன்னாததாசரின் ஒரு பாடல் 'மாலகௌஸ' என்னும் ராகத்தில் பாடப்படுகிறது. இது ஹிந்துஸ்தானி சாஸ்த்ரீய சங்கீதத்தின் ஒரு ராகத்தின் பெயரே மாலகௌஸ. இதற்கு சமானமாக, கர்னாடக சங்கீதத்தில் ஹிந்தோளம் என்று ஒரு ராகம் உள்ளது. மாளவகௌள ராகத்திற்கு மாயாமாளவகொள என்னும் பெயர் உண்டு. பதினாறாம் நூற்றாண்டில் புரந்தரதாசர் மாயவகௌளத்திற்கு ருஷப, பஞ்சமங்களை கொடுத்து வழிமுறைப்படுத்தினார். அதற்கு சுத்தஸ்வர-சப்தகங்களைச் சேர்த்து பயிற்சி பாடல்களைப் பாடுவதற்கு ஏற்றவாறு மாற்றினார். சங்கீத சாஸ்திர கிரந்தங்களை எழுதியவரான ராமாமாத்யன் அவர்கள் 'ராகாணம்-உத்தமோத்தம:' என்றும், 16ம் நூற்றாண்டின் பண்டரி-விட்டலன், ராஜராஜன் என்றும் மாளவகௌள ராகத்தை புகழ்ந்திருக்கின்றனர். இந்த ராகம், சுத்தஸ்வர-சப்தகங்களைக் கொண்டது, இன்றும் 15ம் மேளமாகி பாடப்பட்டு வருகிறது. ** By K. வாருணி ஜயதீர்த்தாச்சார் (தொடரும்)...

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

## ஓர்வாய் லட்சுமி தேவம்மா (1865-1950)

அவருடைய வீடு அன்னதான, வித்யா தானங்களின் கேந்திரமாக இருந்தது. சங்கீதம், ஹரிகதை, நாடகம் ஆகியவற்றிற்கு இவருடைய வீடு கதியாக இருந்தது. காலகிரமத்தில் லட்சுமிதேவம்மா ஒரு ஆண் குழந்தைக்கு தாய் ஆனார். ஆனால் சில காலத்திலேயே குழந்தையை இழக்க வேண்டியதாயிற்று. வம்சம் முன்னேறுவதற்காக, மத்வராயர், தமது தங்கையான பாக்யம்மாவின் கடைசி மகனான கிருஷ்ணமூர்த்தியை தத்து எடுத்துக் கொண்டார்.

வக்கீலாக இருந்த மத்வராயர், குத்தி'யில் வாழ்ந்ததால், லட்சுமிதேவி அனைவருக்கும் குத்தவா என்று அன்புடன் அழைக்கப்பட்டார். சிறிது காலத்திலேயே அவர்கள் ஆதவானிக்கு இடம் பெயர்ந்தனர். ஆதவானிக்கு 'யாதகிரி' என்னும் பெயரும் உண்டு. அன்று ஆதவானி, முஸ்லிம்களின் ஆட்சிக்குக் கீழ் இருந்தது. ஸ்ரீவியாசராஜரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஆஞ்சனேய ஸ்வாமியே இந்த இடத்தில் க்ஷேத்திர தேவதை. ஆதவானியின் ஆஞ்சனேயனுக்கு 'மங்கராய' என்று பெயர் உண்டு. இங்கு மங்கராயனின் திருவிழா மிகவும் புகழ்பெற்றது. அந்த ஊரின் இன்னொரு பழமையான கோயில் என்றால் அது 'மங்களாபுரத்தின் ஹனுமந்த கோயில்'.ஸ்ரீஹரிவாயுகுருகளின் சேவை என்றால், லட்சுமிதேவம்மா அவருக்கு மிகவும் உற்சாகமான விஷயம் ஆகும். உத்தராதி மடத்து ஸ்வாமிகளின் மற்றும் மந்திராலயத்தின் ஸ்ரீஸுஷீலேந்திர மற்றும் ஸுயமீந்திர ஸ்வாமிகளின் அருளும் இவருக்கு இருந்தது. வீட்டில் அவ்வப்போது மடாதீசர்களின் தரிசனம் மற்றும் வித்வத் கோஷ்டிகளும் நடந்து கொண்டிருந்தது.

ஆசுகவியான லட்சுமிதேவம்மா ஒரு முறை ஆராதனை சமயத்தில் ஸோதே மடத்திற்கு சென்றிருந்தார். அங்கு குவித்து வைக்கப்பட்டிருந்த காய்கறிகளைப் பற்றி உடனடியாக ஒரு பாடலை இயற்றினார். இந்த விஷயத்தை அறிந்த மடத்தின் ஸ்ரீகள், ஆசுகவியான லட்சுமிதேவம்மா மூலமாக இந்தப் பாடலை பாடவைத்து, மந்திராட்சதை கொடுத்து அவரை அருளினாராம்.

அவருடைய அந்தரங்கத்திலிருந்து சாகித்ய கங்கை பிரவாகமாக வந்து கொண்டிருந்தது என்பதற்கு இதுவே ஒரு தக்க உதாரணம் ஆகும்.

நின்ன தாஸர பிட்டனா பாளே காயோ
ஸண்ண மூருதி ஹரி நீ நிம்பே காயோ
மாரஜனகனெ ஆளித மாவன்ன காயோ
ஸாரி கரெதரெ நீ பாரெ காயோ
மாரஜனக நரஸிம்ஹ விட்டல நீ
மாடித்தெல்லவு எனகெ ஸமதெ காயோ

காய்கறிகளின் பெயரை குறியீடாக வைத்துக்கொண்டு 'நரசிம்ஹ விட்டலே ரக்ஷிஸு' என்று பிரார்த்தனை செய்வது மிகவும் அற்புதமான விஷயமாகும்.

லட்சுமிதேவம்மா தமது 52ம் வயதில், கணவனை இழந்தார். முதலிலேயே ஸ்ரீஹரி வாயுகுருகளின் சேவையில் ஈடுபட்டிருந்த இவருடைய மனம், இப்போது சகஜமாக ஆத்யாத்மத்திடம் வந்து சேர்ந்தது. கணவனின் மறைவுக்குப் பிறகு, பள்ளாரிக்கு வந்து சேர்ந்தார். பள்ளாரியில் பொற்கொல்லர்களின் வீதியில், தம் குலதெய்வமான லட்சுமி நரசிம்ம கோயிலை நிர்மாணம் செய்து, 1905ல் லட்சுமி நரசிம்மனின் சிலையை பிரதிஷ்டை செய்தார். அதே கோயிலில் ஹனுமந்தன் சிலையும், மிருத்திகா பிருந்தாவனமும் நிறுவப்பட்டது. இவ்வாறு ஒரே கோயிலில் ஸ்ரீஹரி, குரு, வாயுகள் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

கோயில் நிர்மாணம் செய்யப்பட்டபிறகு, இவரில் இருந்த பாடல் புனையும் திறன் மேலும் வளர்ந்தது, அமர்ந்தால், நின்றால், பார்த்தால், கேட்டது, பார்த்தது என அனைத்தும் காவியமயமானது. லட்சுமிதேவம்மா அவர்கள், திருப்பதி, மங்களகிரி, ஸ்ரீசைலம், உடுப்பி, ஸோதே முதலான க்ஷேத்திரங்களை தரிசனம் செய்து, அந்தந்த க்ஷேத்திர தேவதைகளைப் பற்றி பாடல்களைப் பாடியுள்ளார். இத்துடன், சுக்ரவாரத ஹாடு, ஷனிவாரத ஹாடு, மங்களகௌரி ஹாடு, ஸ்ரீகிருஷ்ணதான வ்ரதத்தின் ஹாடு, ராயர பாடல்கள், ஜலக்ரீடெ பாடல், ஸ்வர்ணகௌரி கதெ, ஸ்ரீ ஸத்ய நாராயண கதெ, ஸ்ரீகிருஷ்ண பாலலீலை ஆகிய கிருதிகளை இயற்றியதோடு மட்டுமல்லாமல், உடுப்பியில் ஸுதாமசரிதெ, கோகர்ண மஹாபலேஷ்வர ஸ்தோத்திர, ஸ்ரீஷைல மல்லிகார்ஜுன ஸ்தோத்ர, பாதாளகங்கா ஸ்தோத்ர,

வாதிராஜரின் பூதராஜரின் த்ரிவிக்ரமரின் ஸ்தோத்திரங்களையும் இயற்றியிருக்கிறார்.

இவர் பற்பல கீர்த்தனைகளை இயற்றியிருந்தாலும், இப்போது கிடைத்திருப்பவை 21 பாடல்கள் மற்றும் 11 தீர்க்க கிருதிகள் ஆகும். இவருடைய பாடல்களில் கடுமையான சொற்களும், தெலுங்கு மொழியின் சொற்களும் கலந்திருப்பதை பார்க்கலாம். வாய்மொழியாகவே இவருடைய பாடல்கள் பரப்பப்பட்டன. அன்றைய மக்களுக்கு, இவற்றை எழுதி பரப்ப வேண்டும் என்று சிந்தனை இருந்திருக்கவில்லை.

சில கிருதிகளின் விவரம்:

1. கொல்லதிய ஹாடு: பல்லவி, அனுபல்லவி, நுடி, வசனங்களைக் கொண்டது இது. கிருஷ்ணனை பார்ப்பதற்கு அலங்காரம் செய்துகொண்டு புறப்பட்ட கொல்லதியின் முகம் மின்னலைப் போல ஒளிர்ந்தது. மன்மதனின் வில்லினைப் போல, நட்சத்திரங்களுக்கு நடுவில் இருக்கும் சந்திரனைப் போல இருக்கிறான் என்னும் வர்ணனை அழகாக இருக்கிறது. அனைத்து அனைத்து கோபியர்களைவிட தான் ஸகி என்று தன்னை தானே வர்ணித்துக் கொள்கிறாள். பல உவமைகளுடன் தன் அழகினை தானே வர்ணித்துக் கொள்வது மிகவும் காவியமயமாக இருக்கிறது.

சந்தலாக்ஷிய முகவு மிஞ்சினந்த் ஹொளெயுதலி |
பஞ்சபாணனஸலகெ மிஞ்ஷாரி தோருதலி ம்யாலெ
தாரகிகளொளு பால சந்த்ரமனந்தெ |
பாலேர ஔளகெல்ல மேலாத ஸகி தானு
லீலெயிந்தலி ஹெஜ்ஜெ பாலெ தானிடுவாகெ ம்யாலெ
மல்லிகெ மொக்கு ஸாலாகி உதுருத...

மன்மதனின் வில்லைப் போல என்றால்: அரவிந்த, அஷோக, சூத, மல்லிகா, நீலோத்பல - என்னும் ஐந்து பூ-பாணங்களை ஏந்தியிருக்கும் மன்மதனின் வில் ஒளிர்வதைப் போல கொல்லதியின் முகம் ஒளிர்ந்து கொண்டிருந்தது என்பது சிந்தனை.

2. ராமதேவர ஹாடு: 82 நுடிகளைக் கொண்ட இந்த தீர்க்க ரசனையில் எதுகை மோனைகள் மிகவும் அழகாக பொருந்தியிருக்கின்றன. இந்த பாடல், கவியின் கவிதைத் திறனை எடுத்துக்காட்டும் கண்ணாடியாக இருக்கிறது. ஸ்ரீராமதேவர ஹாடு இவ்வாறு துவங்குகிறது.

கஜமுககணபன்னு பஜனெய மாடி
அஜபவஸுரரிகெ நமிஸுவெனு
த்ரிஜக மூருதி ஸிரிராமன்ன சரிதெயா
ஸிரிஜனரிகெல்லா அருஹுவெனு ||

துவக்கத்தில் கணபதி, பிரம்மா மற்றும் தேவதைகளை வணங்கி 'ஸ்ரீராமன சரிதெயனு ஹேளுவெ, ஸுஜனரெல்ல கேளி' என்று கதையை சொல்லிக் கொண்டு போகிறார். இதன் கதை இவ்வாறு உள்ளது:

ரிஷிகள் கூறியதற்கு ஏற்ப, கேஷவ பட்ட என்னும் பிராமணன், ஸ்ரீராமனின் கதையைக் கேட்டு, அவனை பூஜித்து, அவனின் கருணைக்கு பாத்திரன் ஆகி, செல்வந்தன் ஆனான். ஒரு முறை காசிக்குப் புறப்பட்ட கேஷவ பட்ட, ஸ்ரீராமனின் பூஜா கைங்கர்யத்தினை தன் மகனிடம் கொடுத்திருந்தான். தந்தையின் ஆணைப்படி மகன், ஸ்ரீராமனின் பூஜா காலத்தில், தாயை அழைத்தபோது, அவள் வராமல் உதாசீனம் செய்தாள். அதன் பலனாக அவர்கள் வீட்டில், செல்வம் மறைந்து, ஏழ்மை சூழ்கிறது. யாத்திரையிலிருந்து திரும்பி வந்த கேஷவ பட்ட, கண்ட தன் வீட்டின் நிலை இவ்வாறு இருந்தது.

உப்பரிகெ ஹோயித்து திப்பி குணியாயிது |
கப்பு காஸுகளெல்ல களெது ஹோயிது |
கப்பாயிது தேஹ கந்தி குந்தி |
ஹோயிது ஒப்பிது காஜின பளெயு கைய்யா ||

அதாவது, உப்பரிகை வீடு, மயானத்தைப் போல ஆனது. செல்வம் மறைந்து ஏழ்மை சூழ்ந்து, தேகம் குன்றிப் போனது. தங்க வளை இருந்த கையில், கண்ணாடி வளையல் இருந்தது. அதாவது, ஹரி க்ருபை தவறினால், வாழ்க்கையில் கஷ்டங்களின் மழையே வருகின்றன. ஆகையால், ஹரி க்ருபைக்காக, ஹரி ஸ்மரணை அவசியம் என்பது இங்கு சொல்லப்பட்டுள்ள செய்தி. இந்த கிருதியில்

எதுகை சந்தங்கள் அழகாக உள்ளன. கடைசியில், பலஸ்ருதி சொல்லி, சீதாராமருக்கு மங்களம் சொல்லியிருக்கிறார்.

3. திரௌபதி வஸ்த்ராபஹரண:

இந்த காவியத்தில் கவி, புதிய கற்பனையை புகுத்தியிருக்கிறார். கௌரவர்களின் ஆஸ்தானத்தில் வஸ்திர அபஹரணத்திற்கு ஆளான திரௌபதி, ஸ்ரீகிருஷ்ணனின் க்ருபையால், எல்லையற்ற ஆடைகளைப் பெற்று காப்பாற்றப்படுகிறாள். பிறகு, திரௌபதி, துஷ்ட துரியோதனனை சூதாட்டத்திற்கு அழைத்து, இழந்த செல்வங்கள் அனைத்தையும் திரும்பப் பெறுகிறாள் என்று சொல்லியிருப்பது, ஸ்த்ரீ சக்தியை தூக்கிப் பிடித்திருப்பதாக தெரிகிறது. இங்கு கவியின் கற்பனைத் திறன் நன்கு புலப்படுகிறது.

(தொடரும்...)

**தொடர்**

## ஸ்ரீவியாசராஜரைப் பற்றிய கட்டுரைகள்

### அந்தரங்கதலி ஹரிய காணதவ

**(சென்ற இதழிலிருந்து தொடர்கிறது).**

மமதெயிந்த கேஷவனிகெ நமஸ்கார மாடதவனெ ம்ருகவோ

யமன் தன் தூதர்களுக்கு இவ்வாறு ஆணையிட்டுள்ளான். சில கடமைகளை செய்யாதவர்களை மட்டும் நம் உலகிற்கு கொண்டு வாருங்கள் - என்றான். அவை எவை என்றால்:

ஜிஹ்வா ந வக்தி அகவத் குண நாமதேயம்
சேதஷ்ச ந ஸ்மரதி தச்சரணாரவிந்தம் |
கிருஷ்ணாய நோ நமதி யச்சிர ஏகதாsபி
தானானயத்வமஸதோsக்ருத விஷ்ணுக்ருத்யான் ||

யாருடைய நாக்கு, ஒரு முறையாவது, பகவந்தனின் குணங்களையோ, நாமங்களையோ உச்சரிக்கவில்லையோ; யாருடைய மனம் அவனின் பாத பத்மங்களை நினைக்கவில்லையோ; யார் தலை வணங்கி ஒரு முறையாவது கிருஷ்ணனுக்கு வணங்கவில்லையோ; அத்தகைய துஷ்டர்களை அழைத்து வாருங்கள் - என்றான். ஆண்கள்

அஷ்டாங்கங்களாலும், பெண்கள் பஞ்சாங்கங்களாலும் செய்யும் ஒரு நமஸ்காரம், 10 அஷ்வமேத யாகங்களைவிட அதிகமான பலன்களைக் கொடுப்பது. அவ்வளவு அஷ்வமேதங்களை செய்தவனும்கூட, புண்ணியம் குறைந்தபோது ஸ்வர்க்கத்திலிருந்து இறங்கியே ஆகவேண்டும். ஸ்வாமிக்கு நமஸ்காரம் செய்வதால், முக்தியையே அடைவதால் பூமிக்கு இறங்கும் சந்தர்ப்பமே இல்லை.

ஸுரதேனு இரலாகி ஷ்வானன பாலனு கரெது குடிய பேடவோ
கரிதுரகவு இரலாகி கெடஹுவந்த கத்தெயேரலி பேடவோ
ஓரெ ஹுட்டு மரணவ தொடெவ ஸுதெய பிட்டு ஸுரெய ஸேவிஸ பேடவோ
ப்ரம பதவீவ ஸிரிகிருஷ்ணனிரலாகி நரர ஸேவிஸ பேடவோ | எந்தெந்திகு

மனிதர்களுக்கு அவர்களின் வாழ்க்கையில் பற்பல பிரச்னைகள் வருகின்றன. அவற்றை தீர்ப்பதற்காக கண்டவர்களின் காலில் விழுந்து எழுகிறார்கள். 'பேடிதரெ என்ன ஒடெயன பேடுவெ' என்னும் தாஸ வாணியைப் போல, 'மா க்ருத: கஸ்யஸ்வித் தனம்' என்னும் வேத வாணியைப் போல, நடக்க வேண்டும். பகவந்தன் மகிழ்ந்து அருள்வதற்கு தயாரானால், அதனை பிடித்து வைப்பதற்கு நம்மால் சாத்தியமே இல்லை. ஆகையால், காமதேனுவின் பாலை குடிப்பதை விட்டு, நாய் பால் குடிக்கும் முயற்சியை செய்யக்கூடாது.

நம்மை தாங்கி நாம் செல்லுமிடத்திற்கு சரியாக கொண்டு சேர்க்கும், யானை, குதிரை ஆகிய வாகனங்களை விட்டு, எப்போது தள்ளிவிடுமோ என்று தெரியாத கழுதையின் மேல் யாராவது ஏறுவார்களா? பிறப்பு, இறப்பு, மூப்பு இவற்றை போக்கும் அமிர்தத்தை விட்டு, இந்த அனைத்திற்கும் காரணமான மதுவை யாராவது குடிப்பார்களா? அப்படி வெட்கத்தை விட்டு வேறு யாரை வணங்கி கேட்டுக் கொண்டாலும், அவர்கள்கூட மனம் மாறி வேண்டியதை கொடுத்தாலும் கொடுக்கலாம். ஆனால், தன் வீட்டையே கொடுப்பவர்கள் யார் இருக்கிறார்கள் இந்த உலகத்தில்?. தன் வீடான மோட்சத்தையே கொடுக்கும் ஸ்ரீகிருஷ்ணனை விட்டு, மனிதர்கள் மூன்று காசினை அலையவிட்டு கொடுக்கும் செல்வந்தனை நம்புகிறார்களே? என்பது இந்த தேவரநாமாவின் சாரம்.

(18ம் பக்கத்தில் தொடர்கிறது)...

தொடர்

# ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## 19. கர்ம விமோசன ஸந்தி

| | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | 29 | | 2 | | | | | | | | | 30 |
| | | | | | 3 | | | 31 | | | | | 21 | | |
| | | | | | | | | | | 5 | | | | | |
| 6 | | | | | | | | | | | | | | 22 | |
| | | | 23 | | 7 | | | 32 | | | | | | | |
| 8 | | | | | | | | 9 | | | 36 | | | | |
| 10 | | | | | 37 | | | 11 | | | | | | | |
| | | | | 24 | | | | 12 | | | | | | | |
| | | 13 | | 33 | | | | | | | | | | 25 | |
| | | | 14 | | | 38 | | | 34 | | | | 39 | | |
| 40 | | | | 26 | | | | 15 | | | | | | | |
| | | | | | | 16 | | | | | | | | 27 | |
| | | 35 | | | | | | | | | 28 | | | | |
| | | | | | | 17 | | | | | | | | | |
| 18 | | | 19 | | | | | | 20 | | | 41 | | | |

குறுக்கெழுத்துப் போட்டிகளை வடிவமைத்துக் கொடுப்பவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி

குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam @ gmail.com / அல்லது 89044 58276 க்கு வாட்சப் செய்யலாம்.

**இடமிருந்து வலம்:** 1.பாம்பின் உருவம் கொண்ட ஜயாபதி(5), 2.தாமரைக் கண்ணன்(6), 3. முக்ய ப்ராணருக்கு ஸ்வாமி யானவன் (4), 4.இந்த ஜன்மாவில் அனுபவிக்கும் முன் செய்த கர்மம்(5), 5. அனேக ஜன்மங்களில் செய்த எண்ணிலடங்கா கர்மம்(4), 6.தர்மங்களை அறிந்தவன்(5), 7.பாம்பின் வைரி கருடன்(5), 8.குழந்தை(3), 9.தேவலோக பசு(6), 10.மன்மதன்(7), 11.சூரியன்(2), 12.எல்லா ஜீவராசிகளின் ஆத்மாவினுள் உறையும் ரூபம்(6), 13.யாராலும் வெல்ல முடியாதவன்(5), 14.வயிறு(3), 15.தர்மமே உருவானவன்(5), 16.மேஹத்தை வாஹனமாக கொண்ட இந்திரன்(6), 17.ப்ரஹ்மா(6), 18.தந்தை(3), 19.மஹாராஜன்(4), 20.கள் நிரப்பி வைக்கும் மண்பானை(7).

**வலமிருந்து இடம்:** 9.சுலபமானவன்(3), 21.சாணம்(3), 22. பகவத் த்வேஷிகள் (5), 23.இந்த ஜன்மாவிலும் இதற்கு அடுத்து வரும் ஜன்மங்களிலும் செய்யும் கர்மம்(3), 24.வயிறு. வேறு பெயர்(3), 25.தவளை(4), 26.பெரும் பாம்பு(4), 27.அறிபவன்(3), 28.ஸ்ரீஹரியின் இந்த வில்லுக்கு ஸரஸ்வதி அபிமானி தேவதை(5).

**மேலிருந்துகீழ்:** 1.எங்கும் நிறைந்தவன்(4), 2.கருணைக் கடல்(3), 22.எண்ணெய் கம்பி(4), 23.பூஜ்யனான ஸ்ரீஹரி (3), 29.இலந்தைப் பழம் .கலைந்துள்ளது.(3), 30.ஸிவ ராத்ரி(9), 31.பெண் மீன்(3), 32.ப்ரஹ்லாதன் பலி போன்றவர்களால் துதிக்கப்பட்டவன்(7). 33.கோபத்தை வென்றவன்(5), 34.மனதைக் கவரும் அங்கங்களை உடையவன்(5), 35.நெருப்பு(3).

**கீழிருந்து மேல்**: 13.எந்த பலனையும் எதிர்பார்க்காதவன்(6), 18.தாய்(3), 36.எல்லாம் அறிந்தவன்(5), 37.அமாவாசை(3), 38.அறிவு(2), 39.தான், தனது என்ற அபிமானம் இல்லாதவன்(4), 40.தனக்குக் தானே ஸமமானவன்(5), 41.மூர்க்கர்கள்(4).

(15ம் பக்கத்திலிருந்து தொடர்கிறது)

இப்படியாக அனேக அர்த்தங்களைக் கொண்டுள்ள கிருதிகளை, ஸ்ரீவியாசதீர்த்தர் இயற்றியுள்ளார். ஸ்ரீகிருஷ்ணனின் வாக்கான கீதையின் சாரத்தை கன்னடத்தில் இவர் கொடுத்திருப்பது இன்னும் அற்புதம். வியாசராஜர் போன்ற ஆளுமை, கன்னடத்தில் கிருதிகளை இயற்றியிருப்பது, நம் அனைவரின் சௌபாக்கியமே ஆகும்.

****

## ஹரிதாச சாகித்யத்திற்கு வியாசராஜரின் பரிசு

**டாக்டர். மளகி ஆனந்ததீர்த்தாச்சார்யர்**

கர்னாடக சாம்ராஜ்யம் புகழின் உச்சியை அடைந்தது, ஸ்ரீகிருஷ்ண தேவராயரின் காலத்தில். ஆனால், அதனை காப்பாற்றி, போற்றி, பாதுகாத்து வந்த புகழ் ஸ்ரீவியாசராஜரையே சேர்கிறது. ஸ்ரீபிரம்மண்ய தீர்த்தரிடமிருந்து ஆசிரமம் பெற்று, ஸ்ரீஸ்ரீபாதராஜரிடமிருந்து அற்புத கல்வியைப் பெற்று, ஆசார்ய மத்வரின் ஸத்சித்தாந்தத்தை நிரந்தரமாக சஞ்சாரம் செய்தவாறு பிரசாரம் செய்த மகானுபாவர் இவர். இவர் வெறும் வியாஸதீர்த்தர் ஆகாமல், அழியும் நிலையிலிருந்த ஸ்ரீவிஜய நகர சாம்ராஜ்யத்தை ஆண்டு 'வியாஸராஜ' என்று புகழ் பெற்றார்.

பாமர மக்களுக்கும், வேத வேதாங்கங்களின் ரகசியம் புரிய வேண்டும் என்னும் நோக்கத்தில், ஆத்யாத்மிக பத்யங்களை கன்னடத்திலேயே இயற்றி, தாசகூடத்தை நிறுவு, வாதிராஜர், புரந்தரதாசர், கனகதாசர் முதலான ஹரிதாச ஆளுமைகளை தயார் செய்து, பக்தி பாகீரதியை நாடு முழுக்க பரவுமாறு செய்தார். வியாசராஜரின் குணத்தினால் ஈர்க்கப்பட்டு, அவருடைய சிஷ்யராக இருந்த ஸோமநாத கவி 'வியாஸயோகி சரித்திரம்' என்னும் சம்ஸ்கிருத கிரந்தத்தை இயற்றி அதில், அவருடைய வாழ்க்கை சரிதம் மற்றும் திக்விஜயத்தை மிகவும் அழகாக வர்ணித்திருக்கிறார். இவ்வாறு வியாஸகூட, தாஸகூட என்னும் இரண்டினையும் துவக்கியவராக, நியாயாம்ருத, சந்திரிகா, தர்க்கதாண்டவ முதலான அற்புத கிரந்தங்களையும் இயற்றினார். சந்திரிகா கிரந்தம் இயற்றியதால் 'சந்திரிகாசார்யர்' என்றே பெயர் பெற்றார்.

மானவ ஜென்மம் மிகவும் சிறந்ததாகும். ஜீவர்களுக்கு மானவ சரீரம் சுலபமாக கிடைப்பதில்லை. பகவந்தன் சாதனைக்காக இந்த தேகத்தை கருணித்திருக்கிறான். ஆகையாலேயே ஸ்ரீமதாசார்யர் இதனை 'ஸாதன ஷரீர' என்று அழைக்கிறார். சாதிப்பதற்கு தேகம் மற்றும் அதில் இந்திரியங்கள் வேண்டும். தேகத்தில் இருக்கும் இந்திரியங்களை எப்படி சரியாக பயன்படுத்துவது? என்பதெள ஒரு பத்யத்தில் ஸ்ரீவியாசராயர் இவ்வாறு கூறுகிறார்.

அந்தரங்கதலி ஹரிய காணதவ ஹுட்டு குருடனோ
ஸந்தத ஸிரிகிருஷ்ண சரிதெ கேளதவ ஜடமதி கிவுடனோ ||

பகவந்தனை காணாத கண்கள், ஜடமான கண்களே. ஆனால், இந்த ஜட கண்களால், பகவத் மூர்த்திகளை எவ்வளவு பார்த்தாலும் சாட்சாத்காரம் ஆவது இல்லை. புறக் கண்களை மூடி, அக கண்களால் ஹரியை பார்க்க வேண்டும். இதே விஷயத்தையே இந்த பத்யத்தில் சொல்கிறார். அந்தரங்கத்தில் என்றால் மனதில் என்று அர்த்தம். ஏனெனில், தியானத்திற்கு முக்கிய சாதனம் மனஸ். அங்கு பகவந்தனை கண்டாலே இந்த வாழ்க்கை சார்த்தகம். இல்லையெனில், கண் இருந்தாலும் அவன் குருடனே ஆகிறான்.

அப்படியே, பகவந்தன் இந்த தற்காலிகமான வாழ்க்கையில், கேட்பதற்கு இரு காதுகளை கொடுத்திருக்கிறான். 'ஸ்ரவணாத்தரதி பாபானி'. அதாவது, கேட்பதாலேயே பாவங்கள் அழிகின்றன. ஆனால், உலக செய்திகளை, அரட்டைகளை கேட்டால் அந்த பலன் கிடைப்பதில்லை. உலகின் அனைத்து செயல்களுக்கும் காரணனான ஸ்ரீகிருஷ்ணனின் மகிமையை கேட்பதற்கே, பகவந்தன் இரு காதுகளை கொடுத்திருக்கிறான். இதே அபிப்பிராயத்தையே ஸ்ரீமதாசார்யர் 'ததலம் பஹுலோக விசிந்தனயா ஸ்ரவணம் குரு மானஸ மீஷபதே' என்றிருக்கிறார்.

ப்ரத்யஹம் ப்ரத்யவேக்ஷீத நரஷ்சரிதமாத்மன: |
கிம் நு பஷுபிஸ்துல்யம் கிம் நு ஸுஜனைரிதி ||

நம்மை நாம் பார்த்துக் கொள்ளாத வரை, நமக்கு கதி இல்லை என்று சொல்லும் ஹனுமந்தனின் வாக்கினை ராமாயணத்தில் பார்க்கிறோம். அதற்கேற்ப, ஸ்ரீவியாசராயரும் இன்னொரு பத்யத்தில் சம்சாரத்தில் மெய் மறந்த நம்மை அடித்து எழுப்புகிறார்.

சே சே மனவே நாசத தனுவெ
நீசவ்ருத்திய பிட்டு நெனெ கண்ட்ய ஹரிய ||

மனோ ஹி ஹேது: ஸர்வேஷாம் இந்த்ரியாணாம் ப்ரவர்த்தனே - அதாவது, நம் அனைத்து இந்திரியங்களுக்கும் மனமே பிரதான காரணம். ஆகவே, ஸ்ரீவியாசராஜர் இந்த பத்யத்தில் நேரடியாக மனதிற்கு அறிவுரை கூறுகிறார். செல்லக்கூடாத இடத்திற்கு சென்று, பார்க்கக்கூடாதவற்றை பார்த்து, கேட்கக்கூடாதவற்றை கேட்டு, செய்யக்கூடாதவற்றை செய்து, பலரின் கை கால்களில் விழுந்து, நீச செயல்களை செய்தால், அது தகாத செயல் ஆகும்.

பண்ணதபலெயர மோஹக்கெ மருளாகி
மண்ணு தின்னதெ ஸ்மரனய்யன நோடா
காணத துதிய மாம்ஸவ மெலுத மச்சனு
ப்ராணவ பிடுவுது ||

சஞ்சல மனம் கொண்ட நரன், பெண், பொன்னிற்கு வேகமாக மாறிவிடுகிறான். பெண்ணின் ரூப லாவண்யத்திற்கு மனம் மயங்கி, ஸ்வாமி கொடுத்த அனைத்தையும் இழந்துவிட்டு, மண்ணைத் தின்னும் நிலை மட்டும் வேண்டாம்; ஸ்ரீகிருஷ்ணனை நினைத்து சுகமாக இருப்போம் - என்கிறார்.

அப்படியே நம் வாயின் சபலமும் சாதாரணமானதல்ல. நிஷித்த பதார்த்தங்களை தின்று, தேகம், மனம் இரண்டையும் கெடுத்துக் கொள்கிறோம். நாம் விரும்பும் விஷய பதார்த்தங்களின், தூண்டிலில் மாட்டியிருக்கும் மாமிச துண்டைப் போன்றது. அதற்கு ஆசைப்பட்டு, மீன் தன் உயிரையே விடுவதைப் போல நாமும் ஆகிறோம். இந்த பதார்த்தங்களை உண்டு, அதோகதிக்கு போவதைவிட, ஹரியின் நாமாம்ருதத்தை பானம் செய் - என்று மனதிற்கு அறிவுரை கூறுகிறார்.

இவ்வாறு ஸ்ரீவியாசராயர், வியாசசாகித்யம் மட்டுமல்லாமல், தாச சாகித்யத்தினாலும், சஜ்ஜனர்களுக்கு மிகப்பெரிய உபகாரங்களை செய்திருக்கிறார். இத்தகைய மகானுபாவரை நாம் சிந்திப்பதே நம் பாக்கியம். (அடுத்த இதழில் அடுத்த கட்டுரை வரும்).

***

**தொடர்**

## கீசக வதெ - சிறு காவியம்

**ஸ்ரீவாதிராஜர்**

**நளினமுகி2யிந்து1 பேளித3 மாதனு**
**கேளி ஹருஷவனு தாளித3னாக்ஷண**
**க2ளனு ஹொன்னின ஜாளிகெ3 கொட்டி**
**ந்னுளியத3லெ ரதிகேளிகா3கி3**

**காளக3த3 மனெயொளகெ3 பா3ரெந்து3**
**பேளித3 ஸுளுஹனு பேளனு பீ4மகெ3**
**கூ2ளன காயுவ ஸீளலு தக்கந்த2**
**வேளெ ப3ந்தெ1னுத தோள ஹொய்து ||13**

நளினமுகியு - அந்த தாமரை முகத்தவளான சைரந்திரி. இந்து பேளித மாதனு - இவ்வாறு கூறியதைக் கேட்டு. ஆ க்ஷண - உடனடியாக. களனு - துஷ்ட கீசகன். ஹருஷவனு தாளிதனு - மகிழ்ச்சியடைந்தான். ஹொன்னின ஜாளிகெ கொட்டு - தங்க வலையில் சிக்க வைத்து. இன்னுளிய தலெ - அதன் பிறகு அங்கு நிற்காமல். ரதிகேளிகாகி - அங்கசங்கத்திற்காக. காளகத மனெயொளகெ பாரெந்து - அன்றிரவு நாட்டியசாலைக்கு வருமாறு. பேளித - கீசகனுக்கு கூறிய. ஸுளுஹனு - குறிப்பினை. பீமகெ - பீமசேனனுக்கு. பேளலு - (திரௌபதி) கூறியபோது. கூளன காயவ - துஷ்ட கீசகனின் தேகத்தை. ஸீளனு - கிழிப்பதற்கு (கொல்வதற்கு). தக்கந்த - யோக்யமான. வேளெ - சமயம். பந்தெனுத - வந்தது என்று. தோள ஹொய்த - தோள் தட்டிக் கொண்டான் (உற்சாகம் அடைந்தான்).

**நாரி இன்னாவாக3 ப3ருவளோ எந்து3**
**தா3ரிய நோடு3வ சோரகீசகனு**
**தோரித3 டா2விலி ஸேருவ பே3க3னெ**
**ஊரொளகா3ரு அரியத3ந்தெ**

**க்ரூரனு மோஹிப தெரத3லெனகெ3**
**நாரிய ரூப ஷ்ருங்க3ரிஸு நீனெந்து3**
**வாரிஜமுகி2யள மோரெய நோட3லு**
**நீரெ த்3ரௌபதி3 தா நாசித3ளு ||14**

ஸ்ரீபீமசேனன் திரௌபதியிடம் ஏகாந்தத்தில் கூறுகிறான்.

நாரியு - அந்தப் பெண் (ஸைரந்திரி). இன்னு - திரும்ப. ஆவாக பருவளோ - எப்போது வருகிறாளோ. எந்து - என்று. தாரிய நோடுவ -

(அந்த இடத்திற்கு முதலிலேயே சென்று) காத்திருக்கும். சோரகீசகனு - கள்ளன் கீசகன். தோரித டாவிலி - திரௌபதி கூறிய இடத்தில். ஸேருவ - போய் சேர்கிறான். பேகனெ - ஆகையால், சீக்கிரமாக. ஊரொளகெ ஆரூ அரியதந்தெ - ஊரின் மக்களுக்கு தெரியாததைப் போல (யாருக்கும் தெரியாதவாறு நான் அங்கு சென்று சேருமாறு). மத்து க்ரூரனு மோஹிபதெரதலி - உக்ர கீசகன் என்னை மோகிக்குமாறு. எனகெ - எனக்கு. நாரிய ரூப ஷ்ருங்கரிஸு - ஸ்த்ரீ ரூபம் வருமாறு எனக்கு அலங்காரம் செய். எந்து - என்று சொல்லி. வாரிஜமுகியள - கமலமுகியான திரௌபதி. மோரெய நோடலு - முகத்தை (பீமசேனன்) பார்க்க. நீரெ திரௌபதி - அழகான திரௌபதி. தா - தான். நாசிதளு - வெட்கம் அடைந்தாள். புருஷ ஸ்ரேஷ்டனுக்கு பெண் வேடம் எப்படி போடுவது என்று வெட்கம் அடைந்தாள்.

**ப3ட்ட முக2கெ தானிட்டளு ஸாதி3ன**
**ப3ட்டனு பணியொளு இட்டு கண்ணு கப்பு |**
**ப1ட்டெ பீதாம்ப3ர உட்டுகோ நீனெந்து3**
**பு1ட்டாணிகுப்பஸ கொட்டளாக3**
**கட்டாணி முத்தனு கட்டெ தா கொரளிகெ3**
**க4ட்யாகி3 சின்னத3 பட்டி உடி3தா3ர**
**தி4ட்டனெ பெ3ரளிகெ3 இட்டளு உங்கு3ர**
**விட்டரத்3ருஷ்டியு தாகுவந்தெ ||15**

திரௌபதி வெட்கம் அடைந்தவாறு, கணவனின் ஆணைப்படி அவனுக்கு பெண்ணின் அலங்காரம் செய்கிறாள். பட்ட முககெ - விசாலமான முகத்திற்கு. பணெயொளு - நெற்றியில். ஸாதின பட்டனு - திலகத்தை. தானிட்டளு - திரௌபதி வைத்தாள். கண்ணுகப்பு - கம் மையினை. இட்டு - கண்ணிற்குத் தடவி. பட்டெ பீதாம்பர - ஜரிகை பீதாம்பரத்தை. உட்டுகோ நீனெந்து - நீங்களே கட்டிக் கொள்ளுங்கள் என்று சொல்லி. ஆக - அப்போது. புட்டாணி குப்பஸவ - சிறியதான ஒரு ரவிக்கையை. கொட்டளு - கொடுத்தாள்.

கட்டாணி முத்தனு - நல்ல முத்து மாலையை. தா - தானே. கொரளிகெ கட்டி - பீமசேனனின் கழுத்தில் அணிவித்து. சின்னத பட்டி உடிதார - தங்க ஒட்டியாணத்தை. கட்டி - பீதாம்பரத்தின் மேல் இடுப்பில் கட்டி. விட்டர - பரஸ்த்ரீகள் மேல் ஆசைப்படும் புருஷர்களின். த்ருஷ்டியு தாகுவந்தெ - பார்வை படுமாறு (அவர்கள்

ஆசைப்படுமாறு). திட்டனெ - உடனடியாக (அல்லது தைர்யதிந்த - வெட்கப்படாமல்). பெரளிகெ - பீமசேனனின் விரலுக்கு. இட்டளு உங்குர - மோதிரத்தை அணிவித்தாள்.

**முத்தின மூகு³தி கெத்தித³ வாலெயு**
**இத்தெர பு³கு³டி³யு நெத்திகெ³ அரளெலெ**
**சித்தத³ ர்யாக³டெ உத்தம க்யாதி³கெ³**
**வத்திலி ஷ்யாவந்திக்³ஹூவு கொ³ண்ட்³ய**
**ஹஸ்தக¹ட³க³வு மத்தெ சூட்³ய வங்கி¹**
**முத்தின ஹாரவு ரத்னத³ பத³கவு**
**ஆர்த்தி²லி நாரியு குத்திகை ஹாகலு**
**ஹஸ்தினியோ ஈகெ சித்தினியோ ||16**

திரௌபதி, ஸ்ரீபீமசேனின் அலங்காரத்தை செய்கிறாள்.

முத்தின மூகுதி - முத்து மூக்குத்தி. கெத்தித வாலெயு - அழகான தோடுகள். இத்தெர புகுடியு - இரு காதுகளில் ஆபரணங்கள். (மூக்கினில் மூக்குத்தி. காதுகளில் தோடு மற்றும் பிற ஆபரணங்கள், பெண்களின் சௌபாக்கியத்தைக் குறிக்கும் ஆபரணங்கள்). நெத்திகெ - உச்சி வகிட்டில் அணியும். சித்ரத க்யாகடெ - ராகடெ என்னும் ஆபரணம். உத்தம க்யாதிகெ - அந்த ராகடையின் கீழ் அணியும் தங்கமயமான. வத்திலி - அதற்கு ஏற்றவாறு. ஷ்யாவந்திக்ஹூவு - தங்க செவ்வந்தி பூ மற்றும். குண்ட்ய - தங்கமயமான கொண்டை.

ஹஸ்தகடகவு - கைக்கு வளையல்கள். மத்தெ - மற்றும். சோட்யவங்கி - மேல் கையில் தரிக்கும் வங்கிகள் (இவற்றை வைத்து). முத்து மாலை. முத்து சரங்கள். ரத்னத பதகவு - (அந்த சரத்தின் நடுவில் இருக்கும்) ரத்ன பதக்கத்துடன். அர்த்திலி - மரியாதையுடன். நாரியு - திரௌபதி. குத்திகை ஹாகலு - பீமசேனனின் கழுத்தில் போட. ஈகெ - ஸ்த்ரீ வேட பீமசேனன். ஹஸ்தினியோ சித்தினியோ - பெண் யானையா, தேவதையா என்று பார்ப்பவர்கள் வியப்படைந்தனர்.

** ஹஸ்தினி, சித்தினி, ஷங்கிணி, பத்மினி என்று பெண்கள் நான்கு விதம். அவற்றில் ஹஸ்தினி, சித்தினி வகையினர் அதிகம் ஈர்ப்பவர்கள். பத்மினி வகையினர் பாதிவ்ரத்யாதி நற்குணங்களைக் கொண்டவர்கள். இந்த நான்கு வகைப் பெண்களின் லட்சண விவரங்களை காம சாஸ்திரங்களிலிருந்து அறியலாம்.

**முடி3கெ3 மல்லிகெ3 முடி3ஸி ஸுகந்த**
**தொடெது தாம்பூ3ல மடி3ஸிகொடு3தலி**
**ப்ரௌட4ன ஸ்த்ரீரூப நோட3லு கூ2ளனு**
**கூட3தெ3 ப்ராணவ பி3ட3னெந்த3ளு**

**மாடித்3யோசனெ கைகூடி3து இந்தி3கெ3**
**நோடு3 ஆ கிருஷ்ணனு கூடி3த3 ஆடவ**
**மட3தி3 நீனென்ன ஒட3னெ பா3ரெந்து3**
**நடெ3த3னா க2ளன பி3டா3ரகெ ||17**

திரௌபதி, அலங்காரங்களை முடித்து மேலே போர்த்திக்கொள்ளும் அலங்காரத்தைப் பற்றி வர்ணிக்கிறார்.

முடிகெ - தலை முடிக்கு. மல்லிகெ முடிஸி - மல்லிகைப்பூவின் செண்டினை முடித்து. ஸுகந்த தொடெது - உடம்பிற்கு பரிமள சந்தனத்தை தடவி. தாம்பூல மடிஸி கொடுதலி - தாம்பூலத்தை மடித்து கையில் கொடுத்தவாறு. கூளனு - துஷ்ட கீசகன். ப்ரௌடன - புஷ்டனான பீமசேனனின். ஸ்த்ரீரூப நோடலு - ஸ்த்ரீ ரூபத்தைக் கண்டு. கூடதெ - அந்தப் பெண்ணை சேராமல். ப்ராணவ பிடனு - உயிர் விடுவதில்லை (கண்டிப்பாக சேர்கிறேன்). எந்தளு - என்னும் தன் ஆசையைக் கூறினாள்.

பீமசேனன், மாடித்யோசனெ - (ஸ்ரீகிருஷ்ணனின்) சங்கல்பம். இந்திகெ - இன்று. கைகூடிது - நிறைவேறுகிறது. மடதி - ஹே திரௌபதியே. ஆ கிருஷ்ணனு ஹொாடித ஆடவ நோடு - ஸ்ரீகிருஷ்ணன் நடத்தும் நாடகத்தைப் பார். (பார்ப்பதற்கு) நீ என்ன ஒடனெ பாரெந்து - நீ என்னுடன் அந்த நடன சாலைக்கு வா என்று கூறினான். ஆ களன பிடாரகெ - அந்த துஷ்டன் அழைக்கும் அந்த இடத்திற்கு. நடெதனு - புறப்பட்டான்.

**கீசகனின் சாதன பூர்த்தியை கவனித்து அவனின் வதம் இன்று நடக்கட்டும் என்று ஸ்ரீகிருஷ்ணன் சங்கல்பம் செய்து, பெண் வேடத்தில் என் மூலமாக நடத்தும் இந்த நாடகத்தை வந்து பார். என்கிறான் பீமசேனன் (ஸ்ரீஹரி தன்னில் நின்று தன் மூலம் கீசகனை கொல்கிறான் என்னும் திட நம்பிக்கை உள்ளவன் பீமசேனன்).

**இந்து3முக2த3 அரவிந்த3 நயனத3**
**மந்த3க3மனெயு ப3ந்த3ளு என்னுத**
**நந்த3ன தனயன கந்த3ன பா3தெ4கெ3**
**கந்தி3 குந்தி3 ப3ஹுனொந்தெ3னெந்த3**

**ஹிந்தி3னா ஸுக்ருததி3ந்த3லி நின்னொளா**
**நந்த3வாகி3ஹுது இந்தி3கெ3 கூடி3து**
**குந்த3ணதா3ப4ரண தந்தெ3 நினகா3கி3**
**சந்த3தி3ட்டு நீனந்த3வாகெ3 ||18**

நடனசாலையின் மஞ்சத்தில் பெண் வேடமணிந்த ஸ்ரீபீமசேனன் சென்று படுத்தபிறகு, கீசகன் அங்கு வந்து அவனுடன் பேசும் விதத்தை வர்ணிக்கிறது இந்த நுடி. இந்துமுகத - சந்திரனைப் போல ஒளிரும் முகம் கொண்ட. அரவிந்த நயனத - கமலத்தைப் போல விசாலமான கண்களைக் கொண்ட. மந்த கமனெயு - மெதுவாக அடி மேல் அடி வைத்து நடக்கும் பெண் (என் சைரந்திரி) வந்தாள். என்னுத - என்று மனதில் நினைத்தவாறு. நந்தன தனயன கந்தனபாதெகெ - ஸ்ரீகிருஷ்ணனின் புத்திரனான ப்ரத்யும்னனின் (மன்மதனின்) வசமாகி. கந்தி - தாபத்தினால் வாடி. குந்தி - வதங்கி. பஹு நொந்தெனு எந்த - இவ்வளவு நாள் மிகவும் கஷ்டப்பட்டேன், இப்போது அதன் பரிகார காலம் வந்திருக்கிறது என்று அறிந்தான்.

உள்ளே படுத்திருந்த பீமசேனனை சைரந்திரி என்று நினைத்து கீசகன் பேசுகிறான். முந்தைய சுக்ருததிந்தலி - என் பூர்வ புண்ணியத்தால், நின்னொளு - உன்னை சேர்ந்து. ஆனந்தவாகிஹுது - மகிழ்ச்சியுடன் இருப்பது. இந்திகெ கூடிது - இன்று பலித்தது. குந்தணதாபரண - தங்க, ரத்ன ஆபரணங்களை. நினகாகி - உனக்காக. தந்தெ - கொண்டு வந்திருக்கிறேன். சந்ததிட்டு - அவற்றினால் அலங்கரித்தவாறு. நீ - நீ. நந்தவாகி - மகிழ்ச்சி அடைவாயாக, சைரந்திரி. **(தொடரும்** )...

தொடர்

## கன்னட கிரந்தங்கள் அறிமுகம்

## கன்னட தந்த்ரஸார ஸங்க்ரஹம்

ஸ்ரீ வரதேந்திர தீர்த்தர் ஸ்ரீ ராகவேந்திர மடப் பரம்பரையில் பீடாதீஸராக அலங்கரித்த மஹனியர். ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தர் சூசனை அளித்தது போலவே, ஸ்ரீ ராகவேந்திரருக்குப் பிறகு 7வதாக பீடத்தில் அமர்ந்தவர். இவர் பூர்வாஸ்ரமத்தில் பலராமாசார்யாராக இருந்த போதே மிகப்பெரிய வித்வானாக விளங்கியவர். ஸ்ரீ வஸுதேந்திர தீர்த்தரிடத்தில் ஸ்ரீமன் ந்யாயஸுதா மற்றும் வ்யாஸத்ரய கிரந்தங்களைக் கற்றுத் தேர்ந்தவர். புகழ்பெற்ற ஸ்ரீ ஜகன்னாத தாஸருக்கு சிறுவயதில் அவர் ஸ்ரீநிவாஸாசார்யராக இருந்தபோதே, குருவாக இருந்து அனுக்ரஹம் புரிந்தவர். ஸ்ரீ வரதேந்திர தீர்த்தராக ஸன்யாஸ ஆஸ்ரமம் ஏற்று பாரத தேஸம் முழுக்க திக்விஜயம் செய்து, தத்வ பிரசாரம் செய்து, வாதங்களில் வென்று புனேவில் தாம் வாதத்தில் வென்றதினால் கிடைக்கப்பெற்ற இடத்திலேயே பின்னர் பிருந்தாவனஸ்தரானார். இதேபோல் இவர் பிருந்தாவனஸ்தரான பிறகும் கூட இவரது மஹிமையை பறைசாற்றும் வகையில், முன்பு ஸ்ரீ ப்ராணேஸ தாஸர் தானமாக அளித்த இடத்தில் (லிங்கஸுகூரில்) துளஸி செடியாகத் தோன்றி, அங்கு பின்னர் இவரின் ஸ்வப்ன பிருந்தாவனமும் அமைந்தது. தாஸ ஸாஹித்தியம் மற்றும் வியாஸ ஸாஹித்தியம் என இரண்டுக்குமே தமது பங்களிப்பை அளித்த மஹனீயர் இவர், ஸ்வாமிகள் சமஸ்கிருதத்தில் இயற்றிய 'தேவபூஜா பத்ததி' மிகப் பிரஸித்தி பெற்றதாகும். அந்த வகையில் ஸ்ரீ வரதேந்திர தீர்த்தர் ஸ்ரீமதானந்த தீர்த்தரின் தந்த்ரஸார ஸங்க்ரத்தையும், தமது குருவான ஸ்ரீ வஸுதேந்திர தீர்த்தரின் தந்த்ரஸார ஸங்க்ரஹத்தின் வ்யாக்யானத்தையும் அனுசரித்து, தமது சிஷ்யரான ஸ்ரீ ஜகன்னாத தாஸரின் வேண்டுகோளுக்கிணங்க, கன்னடத்தில் பாமரரும் அறியும் வண்ணம் இயற்றிய கிரந்தமே இந்த "கன்னட தந்த்ரஸார ஸங்க்ரஹம்" என்பதாகும்.

ஸ்ரீ வரதேந்திர தீர்த்தரின் 'கன்னட தந்த்ரஸார ஸங்க்ரஹம்' என்பது 29 பத்யங்களில் அமைந்தது ஆகும். பல்வேறு மந்திரங்கள், ஜெபிக்கும் முறை, க்ரியைகள், மகத்துவங்கள், சிலை வழிபாடு, கோயில் கட்டும்

முறை முதலான விஷயங்களை உரைக்கும் 'மூல தந்த்ரஸாரம்' என்பது பகவான் ஸ்ரீ ஹயக்ரீவர் ரூபி பரமாத்மாவினால் பிரம்ம தேவருக்கு உபதேஸிக்கப்பட்டது. அதை அனுசரித்து பாவி பிரம்மாவாகிய ஸ்ரீ வாயு பகவானின் அவதாரமாகிய ஸ்ரீமதானந்த தீர்த்தர் தாம் இயற்றிய 'தந்த்ரஸார ஸங்க்ரஹம்' என்ற ஸமஸ்க்ருத கிரந்தத்தில் 4 அத்தியாயங்களில் 402 ஸ்லோகங்களில் மேற்குறிப்பிடப்பட்டுள்ள விஷயங்களின் தொகுப்பை அளித்துள்ளார். இவற்றில் முதல் இரண்டு அத்தியாயங்களை அடிப்படையாகக் கொண்டு குறிப்பாக அஷ்ட மஹா மந்திரங்களைப் பற்றிய விளக்கங்களை பாமரரும் அறியும் வகையில் சரளமான கன்னட மொழியில் ஸ்ரீ வரதேந்திர தீர்த்தர் இயற்றியதுடன், அதற்கான பலஸ்ருதியையும் இங்கு குறிப்பிட்டுள்ளார்.

முதலில் பல்லவியில் தாமரைக் கண்ணனான ஸ்ரீஹரியையும், திருமகளையும் காக்கும்படி வேண்டி "பாஹி பங்கேருஹேக்ஷண ஸர்வகாமத பாஹி பத்மாலய நிகேதன ஸதா" எனத் தொடங்குகிறார் ஸ்ரீ வரதேந்திர தீர்த்தர்.

பத்யம் 1-ல் குரு மஹனீயர், "ஜயது சதுரானன பவேந்த்ராதி வினுத ஜயது சதுரானன ரமாவல்லபா | ஜயது ஸம்பூர்ண சித்ஸுகமுக ஸுகுண நிலய ஜயது ஜன்மாதி காரண தோஷஹா ||" என அமைத்து, நான்முகனான பிரம்மதேவன், சிவன், இந்திரன் போன்றவர்களால் வணங்கப்படுபவன் ஸ்ரீ ஹரி என விளக்கி, பிரதானமாக ஸ்ரீ ஹரியையும், இன்னும் பிற தெய்வங்களையும் தாரதம்ய கிரமத்தில் துதித்துப் பாடி, அதிலும் குறிப்பாக 'ஜயது' என்ற சப்தத்தை மீண்டும் மீண்டும் உபயோகித்து ஸ்தோத்திரம் செய்வதால் நமக்கும் அத்தகைய வெற்றியை ஈட்டும் கிரந்தமாக இது அமைகிறது என உணர்த்தியுள்ளார்.

2 & 3-ம் பத்யங்களில், மஹாலக்ஷ்மியின் ஸேவையை ஏற்று ஆனந்தமாக வீற்றிருக்கும் தமது தந்தையான ஸ்ரீஹரியை பிரம்மதேவர் வணங்கி, "எல்லா தேவதைகளைக் காட்டிலும் உத்தமன் யார் எனவும், அவன் எந்தெந்த சப்தங்களினால் துதிக்கப்படுகிறான் எனவும் எழுப்பிய கேள்விகளைப் பற்றி "ஆவ தேவோத்தமனு ஆவாவ குணகளிஹவாவாவ ஸப்தவாச்யாவரீதி" போன்ற பதங்களினால் விவரித்துள்ளார் ஸ்ரீ வரதேந்திர தீர்த்தர்.

4 முதல் 10 வரையிலான பத்யங்களில் ஸ்வாமிகள், ப்ரணவ மந்திரத்தைப் பற்றியும், ப்ரணவத்தில் 'இருந்து எழுத்துக்களும் (வர்ணங்களும்), சப்தங்களும் உருவாவதைப் பற்றியும் விரிவாக விளக்கியுள்ளார். 4.முதல் 6 வரையிலான பத்யங்களில் ப்ரணவத்தால் அறியப்படுபவன் தானே எனவும், தானே ஸர்வோத்தமன், அனந்த குணங்களைக் கொண்டவன் (நற்பண்புகள்) எனவும் கூறி, ஸ்ரீ ஹரி பிரம்ம தேவருக்கு உபதேஸம் செய்யும் விதமாக மேவும் தொடர்ந்து, 8 எழுத்துக்களைக் கொண்ட ப்ரணவத்தில் முறையே அகார, உகார ,மகார, நாத, பிந்து, கோஷ, ஷாந்த, அதிஷாந்த என்னும் வர்ணங்களும் (எழுத்துக்களும்), அவைகளுக்கு ப்ரதிபாத்ய தேவதையாக விஷ்ணுவாகிய தாமே அந்தந்த ரூபங்களில் முறையே விஸ்வ, தைஜஸ, ப்ராக்ஞ, துர்ய, ஆத்மா, அந்தராத்மா, பரமாத்மா மற்றும் ஞானாத்மா என விளங்குவதாகவும், வேதங்களில் ரிஷிகள் இந்த மந்திரத்தையே ஜபித்து, அதன் பலனாக தமது லோகமான வைகுண்டத்தை அடைவார்கள் எனவும், பகவான் உபதேஸம் செய்ததை "ஸாதரதி கேளின்னு அகார உகார மகார நாத பிந்து கோஷ ஷாந்தாதிஷாந்த | ஈ திவ்ய வர்ணதலி விஸ்வ தைஜஸ ப்ராக்ஞ மோதமய துர்யாத்ம அந்தராத்மா || பரமாத்மா ஞானாத்மனெம்பஷ்ட ரூபதிந்திருதிஹனு" போன்ற பதங்களினால் விளக்கியுள்ளார்.

7 முதல் 10 வரையிலான பத்யங்களில் ஸ்ரீ வரதேந்திர தீர்த்தர், ப்ரணவத்தில் உள்ள 8 எழுத்துக்களிலிருந்து இன்னும் பிற எழுத்துகள் உருவாவதைப் பற்றி பகவான் பிரம்மதேவருக்கு மேலும் விளக்கும் விதமாக, அகாரத்திலிருந்து 16 உயிர் எழுத்துக்களும் (ஸ்வர) அவற்றின் அபிமான தேவதைகளும் (ஹரியின் ரூபத்தில்) முறையே அ-அஜ, ஆ-ஆனந்த, இ-இந்திர, ஈ-ஈஸ, உ-உக்ர, ஊ-ஊர்ஜ, ரு-ருதம்பர, ரூ-ரூக, ல்ரு-ல்ருஸ, ல்ரூ-ல்ரூஜ, ஏ-ஏகாத்மா, ஐ-ஐர, ஓ-ஓஜப்ருத், ஔ-ஔரஸ, அம்-அம்ன:, அ:-அர்த்தகர்ப்ப: என்பன தோன்றின எனவும் விளக்கி, மேலும் மெய்யெழுத்துக்கள் (வ்யஞ்ஜன) உகார, மகார, நாத, பிந்து மற்றும் கோஷத்திலிருந்து முறையே க,ச,ட,த,ப என்னும் 5 பிரிவுகளாகவும், அவற்றில் பகவானின் ரூபங்களான தைஜஸ, ப்ராக்ஞ, துர்ய, ஆத்மா, அந்தராத்மா என்பன தோன்றின எனவும், சாந்தம் என்கிற வர்ணத்தால் ய,ர,ல,வ ஆகியவையும், அதிஷாந்தம் என்னும் வர்ணத்தால் ஷ1, ஷ2, ஸ, ஹ, ள என்னும் 5 எழுத்துக்களும் தோன்ற

(அபிவ்யக்தமாக), மெய்யெழுத்துக்கள் 25ம் உயிர் எழுத்துக்கள் 16ம் பிரணவத்தின் 8 எழுத்துக்களிலிருந்து இவ்விதமாக தோன்றின எனவும், இவையனைத்திற்கும் பிரத்யேகமாக ஸ்ரீ ஹரியின் ரூபங்கள் உண்டு எனவும் கூறி, பின்னர் பரமாத்மா மற்றும் ஞானாத்மா ரூபங்களிலிருந்து ஒன்பது உவமையற்ற ஸ்ரீ ஹரியின் ரூபங்கள் அபிவ்யக்தமாயின எனவும் "உம நாத பிந்து கோஷகளிந்த கசடதப விமலவர்க்ககளு புட்டிதவு ஐது |", "பஞ்சவிம்ஷதிரூப அபிவ்யக்தவாதவு விரிஞ்சி கேள் ஷாந்ததிம் யரலவகளு", "பரமாத்மா ஞானாத்ம ரூபதிந்தொம்பத்து நிருபமஸ்வமூர்த்திகளு ஷோபிஸிதவு |" போன்ற பதங்களினால் விளக்கியுள்ளார்.

10 & 11வது பத்யங்களில் நாராயண அஷ்டாக்ஷர (எட்டெழுத்து) மந்திரத்தைப் பற்றி விளக்கியுள்ள ஸ்ரீ வரதேந்திர தீர்த்தர், ஸ்ரீ ஹரி பிரம்மதேவருக்கு மேலும் உபதேஸம் அருளும் விதமாக, பிரணவத்தின் 8 வர்ணங்களில் (ஒலிச் சொற்கள்) இருந்து 'ஓம் நமோ நாராயணாய' என்னும் எட்டு எழுத்து மந்திரம் தோன்றியதாகவும், இந்த எழுத்துக்களுக்குரிய ஸ்ரீ ஹரியின் ரூபங்கள் முறையே விஷ்வ, தைஜஸ, ப்ராக்ஞ, துர்ய, ஆத்மா, அந்தராத்மா, பரமாத்மா மற்றும் ஞானாத்மா என்னும் பிரணவத்துக்குரிய 8 ப்ரதிபாத்ய ரூபங்களே என்பதையும் அழகாக விவரித்துள்ளார்.

12 & 13 வது பத்யங்களில் வ்யாஹ்ருதி மந்திரத்தை பற்றி விளக்கியுள்ள குரு மஹனீயர் பிரம்மதேவருக்கு ஸ்ரீ ஹரி மேலும் உபதேசம் செய்யும் விதமாக, பிரணவத்தின் நான்கு எழுத்துக்களில் இருந்து (அகாரம், உகாரம், மகாரம், நாதம்) முறையே உருவான "ஓம் பூ: ஓம் புவ: ஓம் ஸுவ: ஓம் பூர்புவஸ்ஸுவ:" என்னும் நான்கு வர்ணங்களே 'வ்யாஹ்ருதி மந்திரம்' எனப்படுவதாகும் என விளக்கி, இந்த வ்யாஹ்ருதி மந்திரத்தின் நான்கு வர்ணங்களுக்கு ப்ரதிபாத்ய ரூபங்கள்( ஸ்ரீ ஹரியின் ரூபங்கள்) முறையே அனிருத்த, பிரத்யும்ன, ஸங்கர்ஷண மற்றும் வாஸுதேவ என்பதாகும் என விளக்கியுள்ளார்.

13 முதல் 15 வரையிலான பத்யங்களில் ஸ்ரீ வரதேந்திர தீர்த்தர் 'ஓம் விஷ்ணவே நம:' என்னும் 6 எழுத்து மந்திரத்தையும், 'ஓம் நமோ பகவதே வாசுதேவாய' என்னும் 12 எழுத்து மந்திரத்தையும் பற்றி குறிப்பிட்டு, த்வாதஸாக்ஷர மந்திரத்தை பற்றி விளக்கும்படியாக நான்கு வ்யாஹ்ருதிகளில் ( பூ: - ஓம், புவ: - நமோ, ஸ்வ: (ஸுவ:) - பகவதே, பூர்புவஸ்வ: (ஸுவ) - வாஸுதேவாய) உள்ள ப்ரதிபாத்ய ரூபங்களே தலைகீழாக முறையே வாஸுதேவ, ஸங்கர்ஷண,

ப்ரத்யும்ன மற்றும் அனிருத்த என்பதாகவும், நான்கு வ்யாஹ்ருதிகளே வாஸுதேவ மந்திரத்தின் நான்கு பாதங்களை பிரதிபலிப்பதாகவும் விளக்கிக் கூறி, இந்த 12 எழுத்து மந்திரத்தில் ஒவ்வொரு எழுத்துக்களும் முறையே கேஸவ, நாராயண, மாதவ, கோவிந்த, விஷ்ணு, மதுஸூதன, த்ரிவிக்ரம, வாமன, ஸ்ரீதர, ஹ்ரிஷீகேஸ, பத்மநாப மற்றும் தாமோதர முதலான 12 நாமங்களையும் தியானிக்க வேண்டும் என்பதையும், "நிகமாதி மொதலு நால்வர்ணதிம் ஓம் நமோ பகவதே வாஸுதேவாய எம்ப | யுகள ஆரக்ஷராத்மக மந்த்ர ப்ரதிபாத்யனா பகவத் ரூபகள" போன்ற பதங்களினால் வர்ணித்துள்ளார்.

**S.லக்ஷ்மிபதிராஜா, சென்னை**

**ஆராதனை**

## ஹரிதாசர்களின் சிந்தனைத் துளிகள்

### ஸ்ரீநரஹரிதீர்த்தர்

சசீதா மூலராமார்சா கோஷே கஜபதே: ஸ்திதா |
யேனானீதா நமஸ்தஸ்மை ஸ்ரீமன் நரஹரி பிக்ஷவே ||

வேதாந்த இதிகாச உலகில் இறுதியான பாஷ்யகாரர், த்வைத சித்தாந்தத்தை மீண்டும் நிர்மாணித்த, வாயுதேவரின் மூன்றாம் அவதாரம் என்று புகழ்பெற்ற ஸ்ரீமதானந்த தீர்த்தரின் சாக்ஷாத் சிஷ்யர் ஸ்ரீ நரஹரிதீர்த்தர். ஸ்ரீபத்பனாப தீர்த்தருக்குப் பிறகு சர்வக்ஞபீடத்தில் அமர்ந்த முனிபுங்கவர். இவரது இயற்பெயர் ஷ்யாமா சாஸ்திரி. இன்றைய அசாம் பகுதியைச் சேர்ந்தவரான இவர், அன்று மிகவும் புகழ்பெற்ற அறிஞராக இருந்தார். ஸ்ரீமதானந்ததீர்த்தரிடமிருந்து சன்யாசம் ஸ்வீகரித்து, ஸ்ரீ நரஹரி தீர்த்தராக பெயர் பெற்று, 12 ஆண்டுகாலம் அரசராகவும் ஆட்சி புரிந்தார். குருகளின் ஆணைப்படி, கஜபதியின் கருவூலத்திலிருந்து ஸ்ரீமூலராமசீதா பிரதிமைகளைக் கொண்டு வந்து குருகளிடம் சமர்ப்பித்தார். இப்படியே சிம்மாசனத்தின் மீதும் அமர்ந்து, பிறகு அந்த இளவரசனுக்கு ஆட்சிபீடத்தைக் கொடுத்து, திரும்பி வந்தார்.

ஸ்ரீமதாசார்யரின் கீதா பாஷ்யம் மற்றும் யமக பாரதத்திற்கு உரை எழுதி, அவரின் தச-பிரகரண கிரந்தங்களுக்கும் விளக்கவுரை எழுதினார். பேசுமொழியான கன்னடத்தில் கிருதிகளை உரைநடை ரூபத்தில் இயற்றி, ஹரிதாச சாகித்யத்தின் மூலபுருஷர் என்று பெயர் பெற்றார். வெறும் நான்கு பாடல்கள் மட்டுமே தற்போது கிடைத்திருக்கிறது. நரஹரி, யதுகுலதிலக, ரகுபதி என்னும் அங்கிதங்களை பயன்படுத்தியிருக்கிறார். இவரது பாடல்களே கர்னாடக பக்திப் பாடல்களுக்கு முன்னோடி ஆயின.

இதுவரை கிடைத்துள்ள பாடல்கள்:

** திளகோ நின்னொளகெ நீனே மருளே ।
** இந்து மருளாதேனு நா இந்து மருளாதே ।
** எதுர்யாரோ குருவே சமர்யாரோ ।
** ஹரியே இது சரியே ।

இப்படி, ஸ்ரீமதாசார்யரின் சாக்ஷாத் சிஷ்யராகி, கிருதிகளை இயற்றி, ஹரிதாச சாகித்யத்திற்கு ஸ்ரீகாரம் (பிள்ளையார் சுழி எனலாம்) போட்ட மகாத்மர் ஸ்ரீ நரஹரி தீர்த்தர். இவரது வாழ்க்கையே மிகவும் சுவாரசியமானது. இவரது மூல பிருந்தாவனம், ஹம்பியில், சக்ர தீர்த்தத்தின் அருகில் உள்ளது.

**ஆராதனை**

## ஹரிதாசர்களின் சிந்தனைத் துளிகள்

**ஸ்ரீகோபால தாசர்**

பிறந்து வந்த ஜீவர்கள் சிந்திக்கவேண்டியவை என்ன என்பதை கோபாலதாசர் இங்கு ஒரு பட்டியலிட்டுக் கொடுத்திருக்கிறார். என் பிரச்னைகள் இவை. இவற்றிற்கு என்ன பரிகாரம்? இந்த வாழ்க்கையின் பயனைப் பெற, என்னைக் காப்பாற்று என்று வேண்டினார்.

போயித்தென்ன ஜனும வ்ருதாயுவாகி இன்னு
ந்யாயத மார்கவனு ஆயவளியதெ
பாயி முச்சிகொண்டு பஹு ஜன்மத துஷ்க்ருத
காயத சுகக்காகி கண்டவர ஹாரெயிஸி

பாயகாரிகெ தோரி க்ஷேத்ர வ்ருத்திகளிஸி
வாய ப்ரபஞ்சனாகி மதோன்மத்ததிந்தல்லின்னு
ஆயுஷ்யவ களெதெ அஞ்ஞானதனதல்லி
நாயி பதுகினந்தெ ஆயிதென்னது நோடு
தாயியு பஞ்சியல்லி பாயசூடவ பிட்டு
தாயிகரமனெ பீயூஷ உண்டந்தெ
நாயகனிரலு சதி ஆன்யாயக்கெ பித்து பர
நாயககெ பலு நாயஸ பட்டந்தெ
நோய தணிதெனய்ய சாயவாகுவரில்ல
காயோ லகுமிரமண தயதிந்தலி என்ன
காயத்ரி ப்ரதிபாத்ய கோபாலவிட்டல
மாயாரஹித சூத்ர தாரக ஜய ஜய ||
--ஸ்ரீகோபாலதாசர்

தனது பிறவி எப்படி வீணாயிற்று என்று பச்சாதாபத்துடன் ஸ்ரீஹரியிடம் சொல்லிக் கொள்கிறார். இந்த படாடோப உலகத்தில், கர்வத்துடன் திரிந்து, தற்காலிக விஷயங்களுக்காக ஏங்கி, நேரத்தை வீணடித்தேன். அஞ்ஞானத்துடன் நாயைப் போல் அலைந்திருந்தேன். இதுவரை இந்தப் பிறவியில் எதையும் சாதிக்கவில்லை. என் கதி என்ன? 'அன்யதா சரணம் நாஸ்தி, த்வமேவ சரணம் மம' என்று உன் காலில் விழுகிறேன். 'நோய தணிதேனய்யா' என்றார். நம் அனைவரின் பாடும் இதுவே ஆகும். அனைத்தையும் நடத்துபவன் நீயே, நீ நடத்துவதைப் போலவே நான் நடக்கிறேன். 'காயோ லகுமிரமண தயதிந்தலி என்ன' என்று சரணடைந்தார். இந்த ஆத்ம நிவேதனம் நமதாகவேண்டும். அப்போதே ஸ்ரீஹரியின் அருள் கிடைக்கும்.

***

## புத்தக வெளியீடுகள்

ஹரிவாயு குருகளின் அருளால், இதுவரை நம் பதிப்பகத்திலிருந்து 35 தமிழ்ப் புத்தகங்கள் வந்திருக்கின்றன. இவற்றில் இதுவரை வாங்கிப் படிக்காதவற்றை, ஸ்டாக் தீரும்முன் உடனடியாக வாங்கிப் படித்து பயன்பெறுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

**தொடர்**

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## க்ரீடா விலாஸ ஸந்தி - விடைகள்

| | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 ப | ச | ன | | 2 வி | ஷ் | ட | ர | | 3 ஜ | த | தி | க | 33 ஹ | த் | து |
| ர | | | | ல | பீ | 25 பி | | | | 4 க | ஸ் | ம | ல | | |
| 39 ஸு | ய | 26 | | க்ஷ | | 5 வ | 34 ஸு | ந் | த | ர | | ம் | த | 27 மோ | |
| | | 6 வீ | க்ஷ | ண | | 7 கு | ஜீ | வ | ரு | | | ஹ | ர | ஹ | 28 அ |
| 8 அ | மா | த் | ய | தி | ஸ | ம் | 29 வி | | த | ஜி | ரா | ப | 30 அ | 35 கோ | னு |
| | 9 அ | ஹ | ர | | 10 க | ப | ட | 11 நி | ரு | ப | 36 ம | | னு | ய | சி |
| | ப் | | 12 த் | யு | ம | ணி | | | | | ஸ | | ஜ | ஜா | த |
| | ஜ | | வி | | | ரு | ய | ட | 31 ஒ | | கா | ம் | | ப் | |
| 13 த் | வா | 37 ஸு | ப | ர் | ணா | 40 தா | | | 14 த் | வி | தி | ய | பா | த | |
| டா | ரீ | 32 க் | ஞ் | | | | 15 கூ | ள | ரி | கெ | | கா | | ன | |
| | | ள | 16 ச | ல | ன | | | | தா | | | 17 ஆ | மி | ஷ | |
| | 18 ஸு | ம் | க | ரி | ய | ன் | | 19 க | ம | ன | | ன | | 38 ஸி | |
| | ஷு | | | 20 ச | து | ர | ஸ | த | ன | | | ச | | ந் | |
| | ப் | | | | ந் | பே | | | | | 21 ஸ் | 41 வ | ர் | து | னி |
| | 22 தி | ல | | | 42 பி | 23 கு | ண | 24 ப | ரே | ஸ | | | | | |

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்

**Haridasa Vijayam - Monthly**

மலர் 3 ** பிப்ரவரி 2022 ** இதழ் 3



## ஸ்ரீபுரந்தரதாசர்

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 3 : இதழ் 3


| நிர்வாக ஆசிரியர் | துணை ஆசிரியர் |
|---|---|
| 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்<br>ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,<br>380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase, பெங்களூரு 560078<br>Ph.: 89044-58276.<br>haridasa.vijayam@gmail.com<br>jagannathakesava.blogspot.com | ' தாச சாகித்ய சேவா ரத்ன'<br>திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்<br><br>**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**<br>திரு. முரளிதர தாசரு,<br>திருமதி. நிர்மலா நரசிம்மன்,<br>திரு. லட்சுமிபதிராஜா,<br>திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ் |


## ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்

**பிப்ரவரி 1 முதல் 28 வரை, 2022**

Feb 1 : புஷ்ய அமாவாசை : ஸ்ரீபுரந்தரதாசர், ஹம்பி
Feb 28 : மாக பகுள த்ரயோதசி : மாதனூர் ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர், மாதனூர்

# ஆசிரியர் பக்கம்

நாரதரின் அம்சம் என்று சொல்லக்கூடிய ஸ்ரீபுரந்தரதாசரின் ஆராதனையுடன் இந்த பிப்ரவரி மாதம் துவங்குகிறது. 'தாஸரெந்தரே புரந்தரதாஸரய்யா' என்று ஸ்ரீவியாஸராயரால் புகழப்பட்டவர். தாசரின் கீர்த்தனைகளில் அடங்கியிருந்த புராண, பாரத, பாகவத குறியீடுகளைக் கண்டு, அவற்றை 'புரந்தர உபநிஷத்' என்றே புகழ்ந்து, கௌரவம் கொடுத்தார் ஸ்ரீவியாஸராயர். ஸ்ரீதாசரின் கிருதிகளில் மட்டுமல்ல, அவரது வாழ்க்கைச் சரிதமே, ஞான பக்தி வைராக்கியங்களின் எடுத்துக்காட்டாக இருக்கிறது என்பதை பார்க்கிறோம். அத்தகைய தாஸ ஸ்ரேஷ்டரின் புண்ணிய தினத்தில், அவரது வாழ்க்கைச் சரிதம், கிருதிகளைப் படித்து, அதன் அர்த்தங்களை, உள்-அர்த்தங்களை புரிந்துகொண்டு, அவர் உபதேசிப்பதைப் போல ஞான பக்தி வைராக்கியங்களைப் பெற்று, அந்த புரந்தரவிட்டலனின் தரிசனத்தைப் பெறுவதற்கு முயல்வோமாக.

நம் பப்ளிகேஷன்ஸ் சார்பாக, ஒவ்வொரு மாதமும் பல அரிய மத்வ சித்தாந்த / ஹரிதாச சாகித்ய புத்தகங்கள் தொடர்ந்து வந்துகொண்டிருக்கின்றன. அவற்றின் விவரங்களுக்கு நம்மை தொடர்பு கொள்ளவும். குறைந்த அளவிலேயே அச்சிட்டு வெளியிடுவதால், ஸ்டாக் தீர்வதற்குள் உங்கள் பிரதியை வாங்கிப் படித்து பயன்பெறுமாறு கேட்டுக் கொள்கிறோம்.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

**கன்னடம்**

**அருஞ்சொற்பொருள்**

**கடினமான சொற்களின் அர்த்தங்கள்**

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

1. கேஹ - வீடு / தேகம்; 2. த்ரிபுராரி - சிவன்; 3. த்ரிபுவன - மூன்று உலகங்கள் (பூமி, பாதாள, ஆகாஷ); 4. தௌத்ய - தூது; 5. த்ரௌணி - அஷ்வத்தாம; 6. த்யுனதி - கங்கை; 7. த்ரும - மரம்; 8. த்ருஹிண - பிரம்மா / சிவன். 9. த்ருஹிணாண்ட - பிரம்மாண்ட. 10. தவள - வெள்ளை / தூய்மையான

தொடர்

## கேசவ நாமா

### 22. திளிவது சஜ்ஜனரு - ஸ்ரீபிராணேஷதாசர்

திளிவது$^{3}$ சஜ்ஜனரு ஷிரி நிலய விதி$^{4}$கெ$^{3}$
தா வலிது$^{3}$ ஸரித$^{3}$ நுடி$^{3}$ திளிவது சஜ்ஜனரு ||ப

லட்சுமிரமணனான ஸ்ரீஹரி, பிரம்மனுக்கு தரிசனம் கொடுத்து உபதேசித்ததைப் போல, இந்த நுடிகளை சஜ்ஜனர்கள் புரிந்து கொள்ளவேண்டும் என்கிறார் ஸ்ரீ பிராணேஷ தாசர்.

மாத$^{4}$வனிப்பத்து நால்கு மூர்த்தி பஹு
போ$^{3}$த$^{4}$ர உக்தி மனகெ$^{1}$ தந்து$^{3}$
ஷோதி$^{3}$ஸி க்ரம உத்க்ரம பத்மாதி$^{3}$கெ$^{3}$
தா$^{3}$தி$^{3}$ அர்த்தஸாந்தர க்ரமவெம்புது ||1

மத்வாசார்யரின் தந்த்ரசாரத்தின்படி படித்து, மனப்பாடம் செய்து, அதைப் போலவே சங்க சக்ர கதா பத்மத்தின் கிரமங்களை, அந்த 24 மூர்த்திகளின் லட்சணங்களை அறியவேண்டும்.

கேஷவ விஷ்ணு கோவிந்த வாமன க்ரம
ஈஷ மது$^{4}$ரிபுர மாத$^{4}$வனு
தோ$^{3}$ஷஹ த்ரிவிக்ரம நாராயண
பாஸிசுதிஹ உத்க்ரம மூருதி எந்து$^{3}$ ||2

| கேசவ | விஷ்ணு | கோவிந்த | வாமன | கிரமம் |
|---|---|---|---|---|
| சங்கு | பத்ம | கதா | சக்ர | மேல் வலது கை |
| சக்ர | சங்கு | பத்ம | கதா | மேல் இடது கை |
| கதா | சக்கரம் | சங்கு | பத்ம | கீழ் இடது கை |
| பத்ம | கதா | சக்ர | சங்கு | கீழ் வலது கை |

| மதுசூதன | மாதவ | த்ரிவிக்ரம | நாராயண | கிரமம் |
|---|---|---|---|---|
| சங்கு | சக்கரம் | கதா | பத்ம | மேல் வலது கை |
| பத்ம | சங்கு | சக்கரம் | கதா | மேல் இடது கை |
| கதா | பத்ம | சங்கு | சக்கரம் | கீழ் இடது கை |
| சக்கரம் | கதா | பத்ம | சங்கு | கீழ் வலது கை |

சங்கருஷண அனிருத்தனு ஸ்ரீத4ர
பங்கஜனாப கஞ்சாதி$^{3}$ க்ரமா

பிங்கத தாமோத3ர புருஷோத்தம க
ளங்க ஹ்ருஷிகேஷ உபேந்த்ர கதா3தெ3ந்து3 ||3

| சங்கர்ஷண | அனிருத்த | ஶ்ரீதர | பத்பனாப | பத்மாதி கிரமம் |
|---|---|---|---|---|
| பத்ம | சங்கு | கதா | சக்கரம் | மேல் இடது கை |
| சக்கரம் | பத்ம | சங்கு | கதா | கீழ் இடது கை |
| கதா | சக்கரம் | பத்ம | சங்கு | கீழ் வலது கை |
| சங்கு | கதா | சக்கரம் | பத்ம | மேல் வலது கை |

| தாமோதர | புருஷோத்தம | ஹ்ருஷிகேஷ | உபேந்திர | கதாதி கிரம |
|---|---|---|---|---|
| கதா | சங்கு | பத்ம | சக்கரம் | மேல் இ. கை |
| சக்கரம் | கதா | சங்கு | பத்ம | கீழ் இ. கை |
| பத்ம | சக்கரம் | கதா | சங்கு | கீழ் வ. கை |
| சங்கு | பத்ம | சக்கரம் | கதா | மேல் வ. கை |

முனினுத வாசுதேவ அதோக்ஷஜ
மனஸிஜபித நரசிம்ஹ ஹரீ
அனக4ர்த்த4 க்ரம ப்ரத்யும்ன ஜனா
ர்த்தன அச்யுத க்ருஷ்ணனு ஸாந்தர க்ரம ||4

| வாசுதேவ | அதோக்ஷஜ | நாரசிம்ம | ஹரி | கிரமம் |
|---|---|---|---|---|
| சங்கு | கதா | பத்ம | சக்கரம் | மேல் வலது கை |
| சக்கரம் | சங்கு | கதா | பத்ம | மேல் இடது கை |
| பத்ம | சக்கரம் | சங்கு | கதா | கீழ் இடது கை |
| கதா | பத்ம | சக்கரம் | சங்கு | கீழ் வலது கை |

| ப்ரத்யும்ன | ஜனார்த்தன | அச்யுத | கிருஷ்ண | கிரம |
|---|---|---|---|---|
| சங்கு | சக்கரம் | பத்ம | கதா | மேல் வலது கை |
| கதா | சங்கு | சக்கரம் | பத்ம | மேல் இடது கை |
| பத்ம | கதா | சங்கு | சக்கரம் | கீழ் இடது கை |
| சக்கரம் | பத்ம | கதா | சங்கு | கீழ் வலது கை |

நீல க4னாங்க3ன ரவினிப4 இப்ப
த்னால்கு மூருதி லக்ஷணவு
ம்யாலின ப3ல கை3 மொத3லு கௌகெ3 கடி
கேளி ஷங்க2 ரவி க3த3 கஞ்ச கேஷவ ||5

சூரியபிரபையினால் கூடியிருக்கும், நீலவர்ணனான ஸ்ரீஹரியின் 24 ரூபங்களின் லட்சணங்களை, மேல்-வலது-கையிலிருந்து துவங்கி, மேல் இடது கை, கீழ் இடது கை, கீழ் வலது கை என்று முறையே சங்கு, சக்கரம், கதா, பத்மம் என்று சிந்திக்க வேண்டும் என்கிறார்.

கஞ்சக3த3 ரவித3ர த4ர நாராயண
வ்ருஜன ஹரவித3ர பத்3ம க3தா3
பு4ஜ மாத4வ க3த3 கஞ்சத3ர ரவி பூ4
மிஜ வல்லப4 கோவிந்த3 மூருதியெந்து3 ||6

புண்டரீகத3ர ரவிக3த3 விஷ்ணு ப்ர
சண்ட ஷங்க2 கஞ்ச3 க3த3 சக்ரா
அண்டஜவஹ மது4ரிபு க3த3 ரவித3ர
மண்டித பத்ம த்ரிவிக்ரம மூருதி ||7

அரிக3த3 கஞ்ச3 ஸு கம்பு3 வாமன ஸ்ரீ
த4ர ரவி க3த3த3ர பத்ம யுதா1
வர சக்ர ஜலஜத3ர க3த3 ஹ்ருஷீகப
பர கஞ்ச ரவிக3த3 ஷங்க2 பதுமனாபா4 ||8

த3ர க3த3 ரவி கஞ்ச3 தா3மோத3ர ஸங்
கருஷண ஷங்க2 கஞ்சாரி க3தா3
ஷரதி4ஜ ரவி பங்கஜக3த3 ஸந்த1த1
த4ரிஸிஹ மாயப வாசுதேவனெந்து3 ||9

த4ர சுக3த3 நைன அரி ப்ரத்3யும்னனு
து3ருளஹக3த3 கம்பு3 கஞ்ஜாரி
சுரபனிருத்த கமலதர க3த3 ரவி
த4ரிஸிஹ சர்வத3 புருஷோத்தமனெந்து ||10

க3த3 கம்பு3 சரண சரஸிஜதோக்ஷஜ
பது3ம க3தா3த3ர ரவி நரஹரி
உதஜாரித3ர கதாச்யுத ரவித4ர
க3த3 கமலாம்ஷ ஜனார்த்தன விபு4வெந்து ||11

கதா3சக்ரவிஷஜ ஷங்க2 உபேந்த்3ரனு
சுத3ருஷன கஞ்ச க3தா3த4ர ஹரி

யது[3]பதி கர நால்கரொளு க[3]தா[3] கமல
சுதருஷன விது[3]ப[4] பாஞ்சஜன்யவெந்து ||12

| # | மேல் வலது கை | மேல் இடது கை | கீழ் இடது கை | கீழ் வலது கை | ரூபங்கள் |
|---|---|---|---|---|---|
| 1 | சங்கு | சக்கரம் | கதா | பத்ம | கேசவ |
| 2 | பத்ம | கதா | சக்கரம் | சங்கு | நாராயண |
| 3 | சக்கரம் | சங்கு | பத்ம | கதா | மாதவ |
| 4 | கதா | பத்ம | சங்கு | சக்கரம் | கோவிந்த |
| 5 | பத்ம | சங்கு | சக்கரம் | கதா | விஷ்ணு |
| 6 | சங்கு | பத்ம | கதா | சக்கரம் | மதுசூதன |
| 7 | கதா | சக்கரம் | சங்கு | பத்ம | த்ரிவிக்ரம |
| 8 | சக்கரம் | கதா | பத்ம | சங்கு | வாமன |
| 9 | சக்கரம் | கதா | சங்கு | பத்ம | ஸ்ரீதர |
| 10 | சக்கரம் | பத்ம | சங்கு | கதா | ஹ்ருஷிகேச |
| 11 | பத்ம | சக்கரம் | கதா | சங்கு | பத்பனாப |
| 12 | சங்கு | கதா | சக்கரம் | பத்ம | தாமோதர |
| 13 | சங்கு | பத்ம | சக்கரம் | கதா | சங்கர்ஷண |
| 14 | சங்கு | சக்கரம் | பத்ம | கதா | வாசுதேவ |
| 15 | சங்கு | கதா | பத்ம | சக்கரம் | பிரத்யும்ன |
| 16 | கதா | சங்கு | பத்ம | சக்கரம் | அனிருத்த |
| 17 | பத்ம | சங்கு | கதா | சக்கரம் | புருஷோத்தம |
| 18 | கதா | சங்கு | சக்கரம் | பத்ம | அதோக்ஷஜ |
| 19 | பத்ம | கதா | சங்கு | சக்கரம் | நரசிம்ம |
| 20 | பத்ம | சக்கரம் | சங்கு | கதா | அச்யுத |
| 21 | சக்கரம் | சங்கு | கதா | பத்ம | ஜனார்த்தன |
| 22 | கதா | சக்கரம் | பத்ம | சங்கு | உபேந்திர |
| 23 | சக்கரம் | பத்ம | கதா | சங்கு | ஹரி |
| 24 | கதா | பத்ம | சக்கரம் | சங்கு | கிருஷ்ண |

(பக்கம் 15ல் தொடர்கிறது)...

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

## ஹரிகதாம்ருதசாரத்தில் சங்கீத அம்சங்கள்

யோகி பாரோ நீ த்யாகி பாரோ என்னும் பாடலை ஜகன்னாததாசர் ராகமாலிகையில் பாடியுள்ளார். ஏழு பத்திகள் உள்ள இந்தப் பாடலின் ஐந்தாவது பத்தியை மாயாமாயவகொள ராகத்தில் பாடியுள்ளார்.

மைசூரின் திரு N.மூர்த்திராயரின் தொகுப்பிலிருந்து இந்த தகவல்கள் தெரிய வருகின்றன. இதே பாடலின் இறுதிப் பத்திக்கு சுருடி ராகம் பாடப்பட்டிருக்கிறது. சங்கீதக் கச்சேரி செய்பவர்கள் மங்களம் பாடுவதற்கு சுருடி ராகத்தையே பயன்படுத்தும் பழக்கம் இருக்கிறது. சங்கீதம் அறிந்தவர்களுக்கு இந்த விஷயமும் தெரியும்.

தேவகாந்தார மற்றும் தேவகாந்தாரி ராகங்களை ஜகன்னாததாசர் தமது பாடல்களில் பயன்படுத்தியுள்ளார். தேவகாந்தாரம் என்பது மிகப் பழமையாக ஒரு ராகமாகும்.

லாலி கோவிந்த லாலி என்னும் பாடலில் ஸ்ரீபாதராஜர் ‘தேவகந்தர்வ பாடிதூகிதரு தேவகாந்தாரதிந்த’ என்று இந்த ராகத்தை பயன்படுத்தியிருக்கிறார்.

தேவகாந்தார ராகம் இன்றைய ஆபேரி ராகத்தை ஒத்திருக்கிறது. இதை கர்னாடக தேவகாந்தாரி என்றும் அழைக்கின்றனர். ஸ்ரீபுரந்தரதாசர் இயற்றிய ‘ஹசுகள கரெவ த்வனி’ என்னும் சுளாதிக்கு ஸ்ரீசுப்பராம தீட்சிதர் (1839-1906) இந்த ராகத்தை பயன்படுத்தியுள்ளார். தஞ்சாவூர் அரசனான துளஜேந்திரன் இதே ராகத்தை பாடியிருக்கிறார். சங்கீத விற்பன்னர் சென்னகேசவனய்ய அவர்கள் தமது பாடலை ‘ப்ராசீன தேவகாந்தாரி’ ராகத்திலேயே பாடியிருக்கிறார். ’ஸ்ரீனிகேதன பாலயமாம்’ என்னும் பாடலில் ஜகன்னாததாசர் தேவகாந்தார என்னும் ராகத்தை பயன்படுத்தியிருக்கிறார். இன்றைய கரகரப்ரிய ராகம், ஸ்ரீராகத்திற்கு அருகில் வருகிறது. அபேரி, ஆபேரி என்று தற்போது அழைக்கப்படும் இந்த ராகம் கரகரப்ரியா ராகத்திலிருந்தே பிறந்தது என்று சொல்கிறார்கள்.

தேவகாந்தாரி மிகப் பழமையான ராகமாகும். சாருகமகங்களைக் கொண்டிருக்கும் இந்த ராகத்தை, சத்குரு ஸ்ரீதியாகராஜர் (1767-1843) தமது மிகவும் புகழ்பெற்ற க்ஷீரசாகரசயன என்னும் பாடலில் பயன்படுத்தியிருக்கிறார். இந்த ராகம், தீரசங்கராபரண மேளமாக இன்றைக்கும் பாடப்பட்டு வருகிறது. ’நமோ நமோ கமலாலய’ என்ற பாடலில் ஜகன்னாததாசர் தேவகாந்தார ராகத்தை பயன்படுத்தியிருக்கிறார்.

பத்தீஸ ராகங்கள் அல்லாமல், மேலும் 34 ராகங்களை பாடியிருக்கின்றனர். தாசர்கள் தமது பாடல்களை வெவ்வேறு ராகங்களில் பாடியிருக்கலாம் அல்லது இசையமைத்திருக்கலாம் என்று ஊகிக்க வேண்டியிருக்கிறது. அவர்கள் அப்படி பாடிய ராகங்களை கீழே கொடுத்திருக்கிறோம்.

| | | | |
|---|---|---|---|
| 1. அடாணா | 2. தர்பார் | 3. புன்னாகவராளி | 4. குஞ்சாடி |
| 5. காபி | 6. பேகடா | 7. நவரோஜு | 8. கானட |
| 9. நீலாம்பரி | 10. கன்னட | 11. தேசி தோடி | 12. பீம்ப்ளாஸ் (ஆபேரி) |
| 13. வசந்த பைரவி | 14. மோஹன | 15. கல்யாணி | 16. பூர்வி |
| 17. கன்னட காம்போஜி | 18. த்விஜாவந்தி | 19. புன்னாக வராளி | 20. தனாசரி |
| 21. தேசிய தோடி | 22. பூப் (மோகனம்) | 23. பரஜு | 24. பிலஹரி |
| 25. பூர்வி கல்யாணி | 26. கேதார கௌள | 27. யமுனா கல்யாணி | 28. பீலு |
| 29. சுரபி | 30. ஆனந்த பைரவி | 31. தனாஸ்ரீ | 32. பெஹாக் |
| 33. அசாவேரி | 34. யதுகுல காம்போதி | | |

தாளங்களில் சுளாதி தாளங்களான த்ருவ, மட்ய, ரூபக, ஜம்பெ, த்ரிபுட, அட்ட, ஏக ஆகியவற்றை பயன்படுத்தியிருக்கின்றனர். மற்ற தாளங்களான ரூபக, ஆதி, சாபு தாளங்களையும் பயன்படுத்தியிருக்கின்றனர். யக்ஷகானத்தில் பயன்படுத்தும் ஏழு எழுத்துக்களைக் கொண்ட அஷ்டதாளம் 1929ல் உடுப்பியின் பாவஞ்சே குருராஜராவ் தொகுத்துள்ள ஜகன்னாததாசரின் பாடல்கள் (பாகம் 1) புத்தகத்தில் இருக்கும் ‘பாஹி பத்மதளாயதாம்பக’ என்னும் பாடலில் பயன்படுத்தியதாக தெரியவருகிறது. இது தகிட, தக, தீம் என்னும் ஏழு எழுத்துக்களால் ஆனது. யக்ஷகானத்தில் இதை த்ரிபுட என்றும் அழைக்கின்றனர். த்ரிவுட, த்ரிபுட, த்ரிவிடி, த்ரிபுடி என்று அனைத்தும் ஏழு எழுத்துக்களைக் கொண்ட தாளமே ஆகும். ஐந்து நடைகளில் ஒன்றான திஸ்ர– நடை ‘கோபாலதாசராய நின்னய பாத நா பொந்திதேனோ நிஸ்சய’ என்னும் பாடலில் பயன்படுத்தியிருக்கிறார். 1929ல் உடுப்பியின் பாவஞ்சே குருராஜராவ் தொகுத்துள்ள

ஜகன்னாததாசரின் பாடல்கள் (பாகம் 1) புத்தகத்தில் இந்த விவரம் தெரியவருகிறது. சுளாதி சப்த தாளத்தில் வரும் அட்ட-தாளத்திற்கு 14 எழுத்துகள் உள்ளன. அதை திஸ்ர-நடைக்கு பயன்படுத்தினால் ஒரு சுற்றுக்கு 10 எழுத்துகள் வருகின்றது. பொதுவாக நாம் இந்தப் பாடலை

கோ-பால-தா-ஸ-ரா-ய-நி-ன்னய-பாதா

என்று திஸ்ர நடையில் பாடுகிறோம். ஆனால், தாசர் பயன்படுத்தியிருக்கும் தாளம் கண்டசாபு. 10 எழுத்துகளை ஐந்து ஐந்தாகப் பிரித்து ஒரு சுற்றுற்கு ஐந்து என்று பயன்படுத்தப்படுகிறது. அப்படிப் பாடினால்,

கோ-பால-தா-சரா-யா-நி-ன்னய-பாத

(இதை பாடிக்காட்டினால் மட்டுமே புரிந்துகொள்ள முடியும்)

இதே விதத்தில் சங்கீதத்தின் அம்சங்களை ஜகன்னாததாசரின் பாடல்களில் பார்க்கலாம். இந்த அம்சங்களுக்கும் ஹரிதாச சாகித்யத்திற்குமான பிரிக்கமுடியாத சம்பந்தத்தையும் நாம் அறியமுடியும்.

**** By K. வாருணி ஜயதீர்த்தாச்சார்**

## ஸ்ரீஜகன்னாததாசரின் கிருதிகளின் சிறப்பு – ஒரு பார்வை - டாக்டர் லக்ஷ்மிகாந்த V. மோஹரீர

உலக சாகித்யம் கண்ட ஒரு மிகச்சிறந்த விஷயம் – தாச சாகித்யம். சாகித்யம் என்று சொல்லி, இசையின் மூலம், தத்வங்களை பரப்பியதே இதன் சிறப்பு / பெருமை. இத்தகைய சிறந்த சாகித்யத்தை மக்களின் மனதிற்கு அருகில் கொண்டுவருவதே இதன் நோக்கம். இத்துடன், ஸ்ரீஹரியைப் பற்றி விளக்குதல், வாழ்க்கையின் முக்கிய கடமைகளைப் பற்றி மக்களிடம் பரப்புதல் என அனைத்தையும் செய்ததன் பெருமை ஹரிதாசர்களையே சாரும். ஹரிதாசர்கள் தங்களின் அனுபவங்களையே எழுதி, பின்னர் வரும் சந்ததிகள் அதைப் படித்து தெரிந்துகொள்ளுமாறு செய்து வைத்திருக்கின்றனர். மத்வ சித்தாந்தத்தை மிகத் தெளிவாக எளிமையான கன்னடத்தில்

மொழிபெயர்த்து வைத்த ஒரு அற்புதமான சாகித்யம் தாச சாகித்யம். அதனாலேயே தாசர்களின் பாடல்களில், பக்தி சிந்தனையுடன், சமூக நீதியின் சிந்தனைகள் ஆகியவையும் காணப்படுகின்றன.

ராய்ச்சூர் ஜில்லா மான்வி தாலுக் பாக்யவட்டி கிராமத்தில், வாமனனாக அவதரித்து த்ரிவிக்ரமனாக வளர்ந்த ஸ்ரீஹரியைப் போல, மொத்த உலகத்தையும் தன்னுடைய காவியங்களினால் கட்டிப்போட்ட ஸ்ரீஜகன்னாததாசர் பிறந்தார்.

பிரம்மாண்டமே ஸ்ரீஹரியின் பூஜா மண்டபம், பூமண்டலமே பீடம், சூரிய-சந்திரரே தீபங்கள், ஆகாயமே குடை, மழையே மகா அபிஷேகம், மலைகளிலிருந்து வரும் சுகந்தமே சந்தனம், நிலங்களில் விளைந்த தானியங்களே நைவேத்தியம், மின்னலே மங்களாரத்தி, நட்சத்திர மண்டலமே லட்ச-தீபோற்சவம், இடியே மங்கல வாத்தியம்.

என்று கற்பனை செய்த ஜகன்னாததாசர், கன்னட சாகித்யத்தில் பிறந்து ஓங்கி வளர்ந்த த்ரிவிக்ரம ரூபம் என்று மிகவும் அழகாக வர்ணிக்கிறார் திரு.அருளுமல்லிகெ பார்த்தசாரதி அவர்கள்.ஹரிதாச சாகித்ய உலகத்தில், மிகவும் அற்புதமான கிருதிகளை இயற்றுவதற்காகப் பிறந்து அப்படியே செய்த பெருமை ஸ்ரீஜகன்னாததாசரையே சேரும். ஹரிதாச பிதாமகர் என்று போற்றப்படும் ஸ்ரீபுரந்தரதாசர் இவரது கனவில் வந்து சொன்னதைப் போல, விஜயதாசரின் ஆணையில் கோபாலதாசர் கொடுத்த 40 ஆண்டு கால ஆயுள் தானத்தைப் பெற்று, ஹரிதாசரானது ஜகன்னாததாசரின் புண்ணியமே ஆனாலும், அது கன்னடர்களின் புண்ணியமும் ஆயிற்று; அறிஞர்களின் பாக்கியமும் ஆயிற்று - என்கிறார் திரு.வியாசனகெரெ பிரபஞ்சனாசாரியர். புரந்தரதாசர், விஜயதாசர், கோபாலதாசர் மற்றும் ஜகன்னாததாசர் ஆகிய நால்வரை 'தாச சதுஷ்டயர்' என்றும் அவர் அழைக்கிறார். 'தாச சதுஷ்டயரில்' கடைசியானவர் ஜகன்னாததாசர் என்று பேலூர் கேசவதாஸ் அவர்கள் அபிப்ராயப்படுகிறார்.

ஸ்ரீஜகன்னாததாசர் இவ்வளவு பாடல்கள் இயற்றியிருக்கிறார் என்ற எண்ணிக்கை எங்கும் கிடைக்கவில்லை. தற்போது 195 பாடல்கள், 2 உகாபோகங்கள், 3 சுளாதிகள், 513 தத்வசுவ்வாலிகள் மற்றும் ஹரிகதாம்ருதசாரம் என்னும் 988 ஸ்லோகங்கள் கொண்ட காவியம் ஆகியவை கிடைத்திருக்கின்றன. தாசதீட்சை பெறுவதற்கு முன் அவர் இயற்றிய வரதேந்திர பஞ்சகம், சத்யபோத பஞ்சகம் - இவ்விரண்டும்

சம்ஸ்கிருத ஸ்லோகங்கள் – ஆகியவையும் கிடைத்துள்ளன. ஸ்ரீஸ்ரீபாதராஜரின் மத்வ நாமாவிற்கு இவர் இயற்றிய பல-ஸ்ருதி, கீர்த்தனைகள், குரு-ஸ்துதி, தேவதா-ஸ்துதி, தீர்த்த க்ஷேத்திர வர்ணனை என்பதாக அவர் இயற்றியவை நமக்குக் கிடைத்திருக்கின்றன – என்கிறார்.

இவை அனைத்தையும் இந்தக் கட்டுரையில் பார்ப்பது சாத்தியம் இல்லை. இவரது பாடல்களில் பக்தி பாவம், ஆத்ம நிவேதனம் ஆகியவை காணப்படுகின்றன. முதலாவதாக கணபதி ஸ்துதி இவ்வாறாக இருக்கிறது:

லம்போ$^3$த$^3$ர ரக்தா$^1$ம்ப$^4$ரத$^3$ர
அம்ப$^3$ராதீ$^3$ஷ்வர கௌ$^3$ரிகு$^1$மார |ப|

சிந்தூ$^3$ரவத$^3$னாரவிந்த$^3$ சுந்த$^3$ர விக்$^4$னா
கா$^1$ந்தகா$^1$ர ஷரச்சந்திர தீ$^3$ர ||

அனைத்து தடைகளையும் நீக்கும் விக்னேஸ்வரனைக் குறித்து இந்தப் பாடலில் பாடுகிறார். பெரிய தொந்தியை உடையவர், சிவப்பு நிற ஆடை உடுத்தியவர், பார்வதி – பரமேஸ்வரரின் மகன், சிவப்பு தாமரை மலர் போன்ற முகத்தைப் பெற்றவர், தடைகள் என்னும் இருட்டினை, சரத்ருதுவின் சந்திரனைப் போல விரட்டுபவர் என்று இந்தப் பாடலில் விக்னேஸ்வரனைப் பாடுகிறார். மூன்று பத்திகளில் இருக்கும் இந்தப் பாடலில் எதுகை மோனைகள் அற்புதமாக உள்ளன.

**(தொடரும்...)**



**தொடர்**

**கீசக வதெ – சிறு காவியம்**

**ஸ்ரீவாதிராஜர்**

**கு$^3$ல்லு மாட$^3$தி$^3$ரோ மெல்லனெ மாதாடோ$^3$**
**வல்லப$^4$ர்க்கண்ட$^3$ரெ ஹல்லுமுரிவரோ**

**ப[3]ல்லவ நினகெ[3] ஸல்லது[3] ஈ கார்ய**
**கெ[3]ல்லலரியெ கொல்லிஸிகொம்பெ[3]**

**சல்வெ கேளு நின்ன ஹுல்லெ க[3]ண்ண நோட[1]**
**கொல்வ பகெ[3]கெ[3] நா கெ[3]ல்லலாரெனெந்து[3]**
**க[3]ல்ல முத்[3]தி[3]ட்டு மையெல்லவ ஹுடு[3]கலு**
**கல்லெதெ[3]யல்லிரெ கு[2]ல்ல நொந்த[3] ||19**

இந்த மற்றும் அடுத்த 2 நுடிகளில், ஸ்ரீபீமசேன மற்றும் கீசகனின் பேச்சுவார்த்தை வர்ணிக்கப்பட்டுள்ளது. பீமசேனதேவர், திரௌபதிதேவியின் குரலைப் போலவே கீசகனுடன் பேசினான் என்பது, அவனின் சர்வ ஷக்தித்வத்தை குறிக்கிறது. குல்லுமாடதிரோ – சத்தம் போடாதே. மெல்லனெ மாதாடோ – மெதுவாக பேசு. வல்லபர் – என் கணவர்கள். கண்டரெ – இந்த நம் சந்திப்பினைக் கண்டால். ஹல்லு முரிவரோ – உன் பற்களை உடைப்பார்கள். பல்லவ – பரஸ்த்ரீ சங்கம் மிகப்பெரிய ஆபத்திற்கு காரணமாகிறது என்பதை அறிந்திருக்கும் ஹே கீசகனே. நினகெ ஸல்லது ஈ கார்ய – என்னுடன் சரசமாடும் இந்த செயல் உனக்கு நல்லதல்ல. அல்லது, பல்லவ – அனைத்தையும் அறிந்தவன். என் பதியு – பீமசேனன். கெல்லலரியெ – அவனை உன்னால் வெல்ல முடியாது. கொல்லிஸிகொம்பெ – அவனால் நீ கொல்லப்படுவாய். ஈ கார்ய – அவனுடன் போரிடுவதான இந்த செயல். நினகெ ஸல்லது – உன்னால் ஆகாது.

இவ்வாறு சொல்லும் பீமசேனனின் பேச்சுக்கு கீசகன் இவ்வாறு சொல்கிறான்.

செல்வெ – ஹே சுந்தரியே. கேளு – கேள். நின்ன ஹுல்லெ கண்ண நோட – உன் கடைக்கண் பார்வை. கொல்வ பகெகெ – என்னை கொல்லும் விதத்தை. நா கெல்லலாரெனு – என்னால் எதிர்க்க முடியவில்லை. எந்து – என்று சொல்லியவாறு. கல்லமத்திட்டு – தாடையை திருப்பி. அல்லது, ஹுல்லெகண்ண நோட கொல்வ பகெகெ – சபல பார்வையினால் என் பிராணனையே இழுக்கும் பார்வை உள்ள உனக்கு. நா கெல்லலாரெனெந்து – உன் கணவர்களை நான் வெல்ல மாட்டேன் என்று நினைக்கிறாயா? என்றவாறு, கல்லவ முத்திட்டு, மைய்யெல்லவ ஹுடுகலு – தேகத்தை தடவிக்கொண்டு. எதெயல்லி கல்லு இதெ – மார்பு கல்லினைப் போல திடமாக

இருக்கிறது என்று. குல்ல – துஷ்டன் கீசகன். நொந்த – வியப்படைந்தான்.

**நாரியோ நீனேனு மாரியோ இன்னொந்து3**
**பா3ரி எனகெ3 நின்ன மோரெ தோரிஸெந்து3**
**தீ4ரன ஸமீப பா3ரதெ3 ஓடு3வ**
**தா3ரிய நோடு3த்தலிரலாக3**

**பா3ரத3ந்த2 பரனாரேர மோஹிப**
**க்ரூரகெ3 ஈ ரூப கோ4ரவாகி3ஹுது3**
**ஸாரத3 மாதிது3 யாராத3ரேனீக3**
**மாரன தாபவ ஹாரிஸுவெ ||20**

நாரியோ நீனேனு மாரியோ – கல்லைப் போன்ற கடினமான தனங்களைத் தொட்டு வியப்படைந்த கீசகன், நீ பெண்ணா அல்லது ம்ருத்யு தேவதையா. இன்னொந்து பாரி – இன்னொரு முறை. எனகெ – எனக்கு. நின்ன மொரெ தோரிஸு – உன் முகத்தைக் காட்டு. எந்து – என்றவாறு. தீரன – பீமசேனனின். ஸமீப பாரதெ – அருகில் வராமல். ஓடுவ தாரிய நோடுத்திரலு – அங்கிருந்து ஓடுவதற்கு முயற்சிக்க. ஆக – கீசகனின் அந்த நிலையை அறிந்து. பாரதந்த பரனாரேரெ – ஒப்புக்கொள்ளாத பர ஸ்த்ரீயர்களை. மோஹிப – மோகிக்கும் (அடைய விரும்பும்). க்ரூரகெ – அந்தப் பெண்களின் மனதினை நோகடிக்கும். உக்ர ஸ்வபாவனுக்கு. ஈ ரூப – இந்த என் ரூபம். கோரமாகிஹுது – பயங்கரமாக இருக்கும். இது ஸாரத மாது – என் ரூபம் இத்தகையது என்பது உண்மையான பேச்சு. யாராதரேனு – நீ எத்தகையவனாக இருந்தால் என்ன? ஈக – இப்போது. மாரன தாபவ – உன் மன்மதனின் தாபத்தை. ஹாரிஸுவெ – இல்லாததாக ஆக்குகிறேன்.

** பீமசேனனின் ரூபம், யமதேவனைப் போல, பாபிகளுக்கு பயங்கரமானதாகவும், சஜ்ஜனர்களுக்கு அழகானதாகவும் இருக்கிறது.

**ஷுத்3த4 ஹெண்ணெந்து3 ப்ரஸித்3த4வாகி3தெ3 என்ன**
**வித்3யவ நினகீ3 ஸத்3யகெ தோருவெ**
**நித்3ரெ கெடு3வந்த2 பு3த்3தி4யு நின்னது3**
**ஸத்3து3 மாட3தெ3 முத்3தி3ஸென்ன**

**பு³த்³தி⁴வந்தெந்து³ வத்³தி³கெ³ ஹோக³லு**
**எத்³து³ ஸமீரஜ கு³த்³த³லு கீசக**
**பி³த்³த³னு பூ⁴மிலி கெ³த்³தெ³னுத அனி**
**ருத்³த⁴ன ஸ்மரிஸுதலெத்³த³ பீ⁴ம ||21**

ஷுத்த ஹெண்ணெந்து - நான் பரிசுத்த பெண் என்று, பிரசித்தவாகிதெ - ஞானிகள் அறிந்திருக்கின்றனர். என்ன வித்யவ - என் வித்யையை. நினகெ - உனக்கு. ஈ ஸத்யக்கெ - இந்த நொடியில். தோருவெ - காட்டுகிறேன். நித்ரெ கெடுவந்த - தூக்கம் வராதவாறு. புத்தி நின்னது - காமபீடிதமான மனம் உன்னுடையது.

(காமவசப்பட்டவர்களுக்கு தூக்கம் இல்லை. வெட்கம் இல்லை. பயம் இல்லை). ஸத்து மாடதெ - சத்தம் செய்யாமல். முத்திஸென்ன - என்னை கொஞ்சுவாயாக. (அடுத்து என்ன ஆயிற்று என்றால்). புத்திவந்தெ எந்து - நீ அறிவாளி என்று சொல்லி, (கீசகன்), வத்திகெ - அருகில் செல்ல. ஸமீரஜ - வாயுபுத்திரனான பீமசேனன். எத்து - (மஞ்சத்திலிருந்து) எழுந்து. குத்தலு - முஷ்டியினால் உதைக்க (கீசகனின் தலை மேல் குத்த). கீசக - கீசகன், வயிற்றில் தலை சிக்கி, இறந்தவனாக. பூமிலி பித்தனு - பூமியில் விழுந்தான். கெத்தெனு எனுத - தன் வேலை முடிந்தது என்று (கீசகனின் வதை ரூபத்திலான ஸ்ரீஹரி சேவை முடிந்தது என்று). அனிருத்தன ஸ்மரிஸுத - நீயே என்னில் நின்று செய்வித்த இந்த செயலால் மகிழ்வாயாக என்று ஸ்ரீகிருஷ்ணனை நினைத்தவாறு, பீம எத்த - கீழே விழுந்திருந்த கீசகனின் தேகத்தை உருட்டியவனாக, பீமன் எழுந்து புறப்பட்டான்.

** அனைத்து கலைகளிலும் வல்லவனான ஸ்ரீபீமசேனன், அந்த காலத்தில் துஷ்டர்களை அழிக்கும் பல பராக்கிரமங்களை (துஷ்டர்களுடன் சண்டை போடும் வித்யையை) வெளிப்படுத்துவான் என்னும் அர்த்தத்தை 'என்ன வித்யவ தோருவெ' என்ற வாக்கியத்தில் வெளிப்படுத்துகிறான் என்பதை அறிய வேண்டும்.

** பிற புருஷர்களின் ஸ்பர்ஷம் இல்லாத சுத்த ஸ்த்ரீ என்று நான் புகழ் பெற்றிருப்பதால், சத்தம் செய்யாமல், நான் சொல்வதையே செய் என்று திரௌபதியிடம், ஸ்ரீபீமசேனன் சொல்கிறான். அனைத்து ஜீவர்களுக்கும் பரபுருஷனான ஸ்ரீஹரியே பதி. ஜீவோத்தமனான ஸ்ரீபீமசேனன், தோஷதூரன் ஆகையால், 'ஷுத்தமான பெண்'. ஸ்ரீஹரியையே கணவனாகக் கொண்டவன். இவனுக்கு முக்தியில்

ஸ்த்ரீ ரூபத்தினால், பரமாத்மனின் அங்கசங்கத்தினால் ரதி-ஸௌக்யம் உண்டு (ப்ரு.பாஷ்ய). ஸ்ரீஹரியின் அங்கசங்கத்திற்குக் கூட, தகுதி பெற்றுள்ள சுத்த பெண் என்று பொருள்.

**கெட்ட கீசக தா கொட்ட லாஞ்ச$^2$னதி$^3$**
**பெ$^3$ட்டத$^3$ந்த$^2$ தே$^3$ஹ பி$^3$ட்ட நின்னவன**
**பட்டாகி$^3$ தோருவெ த்$^3$ருஷ்டிஸு என்னலு**
**ப்$^4$ரஷ்டன நோடு$^3$வுதே$^3$னெந்த$^3$ளு**

**கொட்ட பா$^4$ஷெயு ஈக$^3$ முட்டிது நினகெ$^3$**
**கிருஷ்ணன த$^3$யதி$^3$ கஷ்டவு ஹிங்கி$^3$து**
**பட்டணகீ ஸுத்$^3$தி$^3$ முட்டத$^3$ முஞ்செயெ**
**கு$^3$ட்டிலி போகு$^3$வெ த$^2$ட்டனெந்த$^3$ ||22**

கெட்ட கீசக – துஷ்டனான கீசகன். கொட்ட லாஞ்சனதி – நீ அவனுக்குக் கொடுத்த குறிப்பினைப் போல, உன் சங்கம் கிடைக்கிறது என்னும் உற்சாகத்தில் அங்கு வந்து. தா – தான். பெட்டதந்தெ – மலையைப் போன்ற தன் பெரிய அசுர உருவத்தை. பிட்டு – விட்டு; நின்னவன – உன்னுடன் சரசமாடுவதற்கு விரும்பிய அந்த துஷ்டனை. பட்டாகி தோருவெ – நன்றாக காட்டுகிறேன். த்ருஷ்டிஸு – அவனின் கதி என்னவாகிறது என்பதைப் பார். என்னலு – என்று பீமசேனன் கூற. பிரஷ்டன – அந்த பதிதனை, பாவி கீசகனை. நோடுவுதேனெந்தளு – திரௌபதி, பார்ப்பது ஏன் என்றாள்.

நினகெ கொட்ட பாஷெயு – அந்த துஷ்டனைக் கொன்று யமனிடம் அனுப்புகிறேன் என்று உனக்குக் கொடுத்த பேச்சு (உன் எதிரில் செய்த சபதம்). ஈக முட்டிது – இப்போது நிறைவேறியது. கிருஷ்ணன தயதி – ஸ்ரீகிருஷ்ணனின் அருளால். ஈ கஷ்டவு – இந்த துஷ்டனின் தொந்தரவினால் வரவேண்டிய மானபங்க ரூபமான பயம் – இந்த கஷ்டமான நிலை. ஹிங்கிது – நீங்கியது. (கிருஷ்ணனின் அருளாலேயே கொடுத்த வாக்கு இப்போது நிறைவேறியது). ஈ ஸுத்தி – கீசகனின் மரணத்தின் பேச்சு (தகவல்). பட்டணகெ முட்டத முஞ்செயெ – ஊரில் தெரிவதற்கு முன்னரே. குட்டிலி – ரகசியமாக, யாருக்கும் தெரியாமல். தட்டனெ போகுவெ – என் இருப்பிடமான சமையலறைக்கு செல்கிறேன். எந்த – என்று பீமசேனன் கூறினான்.

** காமரூபனான தைத்ய அசுரன் உக்ர ஸ்வரூபன். அத்தகையவர், மரண காலத்தில் தம் மூலரூபத்தையே அடைந்து, தேகதியாகம் செய்வர் என்பது சாஸ்திரத்தின்படியான விஷயம். பூதனி, த்ருணாவர்த்த ஆகிய தைத்யர்கள் ஸ்ரீகிருஷ்ணனால் கொல்லப்பட்டபோது, அவர்களின் மலை அளவிலான தேகங்களைக்

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | | | | | | 2 | | | | 26 |

கண்டு கோகுலத்து மக்கள் வியப்படைந்தனர் என்று பார்க்கிறோம்.

** ஸைரந்திரியின் நிமித்தத்தினால், அவளின் பதியான கந்தர்வனால், கீசகன் கொல்லப்பட்டான் என்று அறிந்த, கீசகனின் 105 தம்பிகள், கீசகனின் தேகத்துடன் சைரந்தியையும் தகனம் செய்வதற்காக அவளை சிறைப்படுத்தி அழைத்துச் செல்ல, ருத்ர தேவரிடமிருந்து யாராலும் வெல்லப்பட முடியாதவர்கள் என வரம் பெற்ற அவர்கள் அனைவரையும் ஸ்ரீபீமசேனன், தன் லீலையினால் கொன்று, திரௌபதியை விடுவித்து, இந்த செய்தி ஊரில் அனைவருக்கும் தெரிவதற்கு முன்னர், ஸ்மஷான மார்க்கத்தினால் வேகமாக வந்து, தன் இருப்பிடத்தை அடைகிறான். 'பட்டணகீ ஸூத்தி முட்டத முஞ்செயே' என்னும் வாக்கியம் இந்த விஷயத்தையே சொல்கிறது.

**( தொடரும் )...**

***

**(பக்கம் 5லிருந்து தொடர்கிறது)**

வர கா$^{3}$யத்ரி வர்ணமூர்த்திகளி
வரு ஸாத$^{3}$ரத$^{3}$லி தே$^{4}$னிபுது$^{3}$
நிருத சுகவிக$^{3}$ள மதவிது$^{3}$ த$^{3}$க்ஷிண
வர ப்ராணேஷ விட்டல ஸந்தெய்பனு ||13

காயத்ரி மந்திர அதிபதியான, கேசவாதி மூர்த்திகளின் லட்சணங்களை தியானிப்பது ஞானிகளின் விருப்பமாக இருக்கிறது. இதனால் பிராணேச விட்டலன் அருள்வான் என்கிறார். அக்னி மற்றும் ஸ்காந்த புராணங்களில் இந்த ஆயுதங்களின் தாரண கிரமங்கள் விளக்கப்பட்டுள்ளன.

**(அடுத்த இதழில் அடுத்த பாடல் தொடரும்)**

***



தொடர்

**ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி**

**20. குண தாரதம்ய ஸந்தி**

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | 17 | | | | | | | | 3 | | |
| 4 | | | | | 18 | | | 5 | | | | | |
| | | | 6 | 32 | | 7 | | | | | | | |
| | 33 | | | | | | | | | | 19 | | |
| | | | 8 | | 27 | | | | | | | 28 | 20 |
| 9 | | | | | | 10 | | | | | | | |
| | | | | | 29 | | | | | | | | |
| | | | | | | | | | 21 | | | | |
| 11 | | 30 | | | | | | 22 | 34 | | 12 | | |
| | | | 13 | | | | | 14 | | | | | |
| 35 | | 15 | | | | | | | | 31 | | | |
| | | | | | 23 | | 16 | | | | | | |
| | | | | | | | | | | | | | 24 |
| | | | | | 25 | | | 36 | | | | 37 | |

குறுக்கெழுத்துப் போட்டிகளை வடிவமைத்துக் கொடுப்பவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி

குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam @ gmail.com / அல்லது 89044 58276 க்கு வாட்சப் செய்யலாம்.

**இடமிருந்துவலம்:1.** எப்போதும் தோஷம் இல்லாதவன்(7), 2.அக்னியின் பத்னி(5), 3.,மலைகளின் எதிரியான இந்திரன்(3), 4.சேஷன்(4), 5.ஸ்வயம்புவ மனு மடதி(4), 6.ஸுரியன்(2), 7.ருத்ரன்(4), 8.விரோதிகள்(4), 9.வருண பத்னி(3),10.கீர்த்தி இல்லாத(5), 11.காலே அரைக் கால்(6), 12.இந்திரன்(3),

13.குறைவு(3), 14.வேதங்களின் மூலம் அறியப்படுபவன்(6), 15.நாம் சுவாசிக்கும் காற்றின் அபிமானி(6), குறைந்தவர்கள்(4).

**வலமிருந்து இடம்:** 2.யமனின் மனைவி(4), 17.இரட்டையர்கள்(4), 18.ஞானானந்த குணங்கள்(3), 19.தேவேந்திரனின் அரண்மனை(6), 20.பூமியில் பிறப்பது(6), 21.ஸமுத்ர ராஜனான வருணன்(3), 22.ஸோம பானத்திற்கு அருகதை உள்ள 85 தேவதைகள்(5), 23.தேவர்களின் கடைசி தேவதை(5), 24.கருடன்(2), 25.அக்னி(4).

**மேலிருந்து கீழ்:** 1.உவமையற்றவளான மஹாலக்ஷ்மி(5), 8.கலியின் பத்னி(4), 18.சந்திரன்(4), 26.வாயு புத்திரன் அனிருத்தனின் பத்னி(3), 27.அதி அதம தாமஸ ஜீவி(2), 28.பன்னிரண்டு(4), 29.உலகைத் தாங்குபவன் கலைந்துள்ளது.(3), 30.அடுத்த கல்பத்தில் ப்ரஹ்ம பதவிக்கு வருவதால் வாயு தேவர் இப்படி அழைக்கப்படுகிறார்(6), 31.பொய்(3),

**கீழிருந்துமேல்:** 5.விவஸ்வான் என்னும் சூரியனின் பத்னி(3) ,8அழிவில்லாதவன்(3), 20.அஸ்வினி தேவதைகளின் மனைவி(2), 32.லக்ஷ்மி நாராயணருக்கு மட்டும் உள்ள குணங்கள்(3), 33.சந்திரனின் மனைவி(3), 34.பூமியை ஆளும் சக்கரவர்த்திகள்(7), 35.தோஷமற்றவன்(4), 36.சூதாட்டம்(3), 37.உலகத்திற்கே நண்பனான மித்ரன் என்னும் ஸூரியன்(6).

**ஜனவரி-22 குறுக்கெழுத்துப் போட்டியில் பங்கேற்று புத்தகப் பரிசு பெறுபவர்கள்:**

1. திருமதி ஷாந்தி பத்மனாபன், திருநெல்வேலி. 2. திருமதி. உஷா ரகோத்தமன், பெங்களூரு. 3. திருமதி. கீதா ராமசந்திரன், திருநெல்வேலி 4. திருமதி. கிரிஜா ஜயதீர்த்தாச்சார், ஸ்ரீரங்கம்

தொடர்

**கன்னட ஹரிதாசினிகள்**

**ஓர்வாய் லட்சுமி தேவம்மா (1865-1950)**

4. தசாவதார பாடல்:

நாராயணனே நாராயணனே
நாராயணனே ஶ்ரீமன் நாராயண

ஸோமனளிது வேதவ தந்த்யோ ஆ மஹாகிரி பொத்து ராம
கார்முக ஹிரண்யகவளிது தரளன காய்து ஶ்ரீமன் நாராயண

கூஸின வேஷதி ஆ க்ஷத்ரியரா நாஷவ மாடிதெயோ
சேஷஷயனனே விபீஷணன நீகாய்து ஶ்ரீமன் நாராயண

அஷ்டவு ஸதியர நாரிவ்ரதவன்னு தட்டனெ
கெடிஸிதெயோ புட்ட தேஜியனேரி
நரசிம்ம விட்டல மூருதி நீ காய்து ஶ்ரீமன் நாராயண

5. ஜலக்ரீடை பாடலில் கோபியர்கள் வனத்தில் கண்ட பசு, பக்ஷிகளின், பூக்களின் வர்ணனை மிகவும் அழகான உள்ளது.

நோடித்யா ஸகீ கூடி ஆடுவ ம்ருககளா
ப்ருங்க கிளி ஸாரங்க மாதங்க, கூரங்க, ஷிங்ககளா நோடித்யா
ஷிஸ்திலி ஆடுவ கஸ்தூரி ம்ருககளு
ஜத்திலி ஸ்வரவெத்தி கூகுவோ கிளிகளு
தள தளிஸுவா மயூர பிககளு
ஜளபிஸி ஹாடுவா கோகில ஸ்வரகளு
கேதகி க்யாதகி கமல குஸும நோடித்யா
மருக மல்லிகெ இருவந்திகெ தவன
பரமபுருஷ நரசிம்ம விட்டலராயன
பாததூளியிந்த ஷோபிதவாகிதெ

6. கொல்லதி ஹாடு

கொல்லதி ஒருத்தி, ஶ்ரீகிருஷ்ணனின் ரூபத்தில் மயங்கி, அவனின் லீலைகளைக் கேட்டு அவனை பார்க்க விரும்புகிறாள். ஆனால் அவளுடைய அத்தை, தன் மருமகளை கிருஷ்ணன், தன் வசம் இழுத்துக் கொள்வான் என்னும் பயத்தினால் அவளை வெளியே விடுவதில்லை. கடைசியில் அந்த கோபி, அத்தையை எப்படியோ சமாளித்து, தன்னை அலங்கரித்துக்கொண்டு வீட்டை விட்டு வெளியேறுகிறாள். கவி அவளுடைய அழகினை அற்புதமாக வர்ணிப்பது இவ்வாறு இருக்கிறது.

ஷ்ருங்காரவாதளு நாரி கொல்லாதி ஸுந்தாரி ||ப

ஷ்ருங்காரவாதளு மங்களமுகியு |
அங்கனெ தானெ ஜடெகள பிகெயெ
சந்ததி ஜடெ பங்காரகள்ஹெணெயெ |மங்குருளுகளலி
சந்த்ர சூர்யரு ஹொளெயெ அங்கனெரங்கன முங்கை கிணியெ ||1

வாலி புகுடி வாரிஜாக்ஷியு இட்டு
தோரமுத்தின மூகுதியிட்டு
சாருகஞ்சுக பிகிபிகி தொட்டு
ஹாரபதகவு கொரளொளகிட்டு
ஜாரிஜாரிகெ பொகளுவுதெஷ்டு ||2

வஜ்ரத ஹஸ்த கடகவன்னிட்டு பர்ஜரி பீதாம்பரவுட்டு
கெஜ்ஜெ அந்திகெ பாததூளிட்டு
ஹெஜ்ஜெ ஹெஜ்ஜெகெ ஆ ஷப்தகளது
ஸஜ்ஜனப்ரிய நம்ம நரஸிம்ஹ விட்டலன
கொடுவெ த்வரிததி நடெகெம்புவ குட்டு ||3

வசன:
ஹலவு பரி ஷ்ருங்கரிஸி நிலுவ கன்னடி நோடி
நளினாக்ஷி கஸ்தூரி திலகவனு தா தீடி
கமலாக்ஷி கண்ணிகெ கப்புரேகெய மாடி
தர்ப்பணகெ ஸமனாத முகவன்னு தா நோடி
கர்பூர வீள்யவனு கையல்லி தா நீடி
வலியுதலி கோபாலு பெண்ணெயனு தா தெகெது
வலிது புட்டியொளிட்டு நலிது ஷிரதல்லிட்டு
நளினாக்ஷி நடெதந்தளா விததி

ஸர்வாலங்கார பூஷிதையான கோபி, மன்மதனின் மோகத்திற்கு இரையாகி, கந்து-ஜனகனை பார்ப்பதற்கு புறப்பட்ட கதையை விளக்குவது மிகவும் அற்புதமாக இருக்கிறது. வசன பாகத்தில் - நோடி, தேடி, மாடி, நீடி - என்று முடியும் வரிகளின் சந்தம் மிகவும் அழகாக உள்ளது.

லட்சுமி தேவம்மா, தனது ஒரு கீர்த்தனையில் 'நின்ன மெச்சிஸலெனகில்ல ஷக்தி கேளோ கன்ன மஹிம கொடெனகெ பக்தி இன்னு பேடுவெனு விரக்தி சென்னாகி பாலிஸோ முக்தி'. இங்கு

கவி பரமாத்மா நமக்கு சக்தி, பக்தி, விரக்தி கொடுத்து முக்தியும் அருளட்டும்' என்று பிரார்த்தனை செய்திருப்பது மனதை மயக்கும் விதமாக இருக்கிறது.

ஹரிதாஸைனி ஓர்வய் லட்சுமிதேவம்ம அவரின் கீர்த்தனைகள் – ப்ரக்ருதி வர்ணனைகள், எதுகை மோனை, புராணிக அம்சங்கள், மற்றும் அழகான சொற்கள் ஆகியவற்றைக் கொண்டிருக்கின்றன. த்ரிபதி, ரகளெ ஆகிய சந்தஸ்களால் கூடியிருக்கும் இவருடைய கீர்த்தனைகள், கவிஞரின் சாமர்த்தியத்திற்கு கண்ணாடியாக இருக்கிறது. லய பத்தமான சில பாடல்களுக்கு, ராகத்தை பொருத்தியிருப்பது, அவருடைய சங்கீத ஞானத்திற்கு சாட்சியாக இருக்கிறது. அவருடைய பாடல்களில் வரும், அன்றைய காலத்து புடவைகள், பக்ஷ்ய, போஜ்யங்களின் பெயர்கள், நம்மை ஈர்க்கின்றன.

புகழ் பெற்ற நாவலாசிரியரான ஏ.என்.கிருஷ்ண ராவ் அவர்கள், ஒரு நாள் அவருடைய ஊரில் நடந்த உபன்யாசத்தின் சந்தர்ப்பத்தில், லட்சுமிதேவம்ம அவர்களின் பாடல்களை புகழ்ந்து பேசினாராம். இது லட்சுமி தேவம்மா அவர்களின் கவித்திறனுக்கு சாட்சியாக இருக்கிறது.

இப்படியாக பக்தி கிருதிகளை இயற்றி, ஸ்ரீஹரிக்கு சேவை செய்த லட்சுமி தேவம்மா, தமது 85ம் வயதில் ஸ்ரீஹரிபாதம் அடைந்தார். அவருடைய தேகம் அழிந்தாலும், அவருடைய காவியம் நிரந்தரமாக நின்றிருக்கிறது. 'மானவனின் சேவையே மாதவனின் சேவை' என்று அறிந்திருந்த லட்சுமி தேவம்மா அவர்கள், எவ்வித எதிர்பார்ப்புகளும் இல்லாமல், ஜனசேவையை செய்து வந்தார். அவருடைய புகழ் மற்றும் சேவை மனோபாவம் ஆகியவை போற்றத்தக்கது மற்றும் பின்பற்றத்தக்கது.

***

## பாகம்மா (காலம் சுமார் 1700ம் ஆண்டு)

கலகலி அவ்வா அவர்களுடன் இருந்து, அவருடைய பாடல்களை எழுதி வைக்கும் புண்ணிய செயலில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டிருந்தார். அவருடைய சிஷ்யை. பாகம்மா (பிரயாகம்மா) தன் சில கிருதிகளை 'பாண்டுரங்க விட்டல' என்னும் அங்கிதத்தில் இயற்றியிருக்கிறார் என்று தெரிய வருகிறது. தமது சில கிருதிகளில்,

தம் குருகளின் வித்யை, வினய, பக்திகளை வர்ணித்திருக்கிறார். பாகம்மாவைப் பற்றி அதிக விவரங்கள் கிடைக்கவில்லை.

ஒரு முறை, அவ்வாவுடன் பாகம்மா வாரணாசிக்கு பயணம் செய்த நேரம். அங்கு இருந்தபோது காலரா நோயினால் அவஸ்தைப்பட்டாராம். அப்போது, அவ்வா அவர்களின் ஆணைப்படி, பாகவதத்தின் மூன்றாம் ஸ்கந்தத்தை கன்னட கிருதியாக இயற்றி, அதன் புண்ணிய பலனாக, நோயிலிருந்து விடுபட்டார் என்ற செய்தி கிடைக்கிறது. அந்த கிருதியில், பாகம்மா பக்ஷ்ய போஜ்யங்களின் வர்ணனைகளை மிகவும் அற்புதமாக விளக்கியிருக்கிறார் என்பதை பார்க்கிறோம்.

பாகம்மாவின் சில கிருதிகள் மிக ஆழமாக கருத்துக்களை தாங்கியிருக்கின்றன என்பதை பார்க்க முடிகிறது. இங்கு ஒரு சில உதாரணங்களை மட்டும் பார்க்கலாம்.

1. நீரபொத்தவனிகெ நீரஜ நேத்ரனிகெ
பாரபொத்தவனிகெ பாக்யவதிகெ
கோரெதாடெய நம்ம கோமலாவல்லிகெ
நாரஸிம்ஹ நம்ம நளிநாக்ஷிகெ
ஜய மங்களம் நித்ய ஶுப மங்களம் ||

2. பூமிய பேடிதகெ ஆ மஹாதேவகெ
பூபார தடெதவகெ பூதேவிகெ
ப்ரேமதிந்தலி பந்த ப்ரியரக்ஷக்னாத
பாண்டுரங்கவிட்டல ஶ்ரீருகுமாயிகெ
ஜயமங்களம் நித்ய ஶுப மங்களம் ||

இந்த கீர்த்தனையில், ஶ்ரீஹரியின் தசாவதாரங்களையும் அழகாக விளக்கி, லட்சுமி நாராயணர்கள் இருவருக்கும் மங்களம் பாடுகிறார்.

லட்சுமி துளஸியரின் பேச்சுவார்த்தை

லட்சுமி:
பண்டர மனெ முந்தெ பாகிலல்லிருவோளு
மண்டபவன்னே கட்டிஸி கொண்டோளு
ஹெண்டெ ஹெண்டெகளொளகெ வண்ட்யாகி பெளெயோளு
கண்டு துளஸிகு எனகு ஸரிபருவுதே ||

துளஸி:
தொட்டதொந்தர மனெ ஔகெ தானிருவோளு
அட்டபொட்டேனெ ஹாகிஸி கொம்போளு
துட்டு துட்டிகெ தானு ஒட்யாகி பெளெயுவளு
தட்டி லக்ஷ்மிகு எனகு ஸரி பருவுதே ||

லட்சுமி:
அடவெய ஔகெல்லா கிடவாகி பெளெவோளு
ஹூடுகர கையல்லி ஜிகடிஸி கொம்போளு
என்னொடெய பாண்டுரங்கன வனமாலெயாகோளு
ஹூடுகி துளஸிகு எனகு ஸரிபருவுதே ||

துளஸி:
காஸி கரகிஸீகொண்டு தானெ தானெம்புவளு
ஜோடிஸி பட்டன்ஹாகிஸி கொம்பளு
ராமராயரிகெல்ல கதனவனெ இக்குவளு
ஹீன லக்ஷ்மிகு எனகு ஸரி பருவுதே ||

இப்பரா கதனவனு தித்திட்ட ரகுபதி
முத்துரங்கய்ய பாண்டுரங்க விட்டல
முத்ரெயுங்குர கொட்டு முனிஸனெ
திளுஹித அக்கதங்கீரந்தே ஒந்தனே மாடித ||

ஷுப மங்களம் நித்ய ஜய மங்களம் ||

இந்த கிருதியில், லட்சுமி மற்றும் லட்சுமியின் ஒரு அம்சமே ஆன துளஸிக்கும் நடுவே ஆன பேச்சுவார்த்தையை மிகவும் அற்புதமாக விளக்குகிறார். இந்த கிருதி மிகவும் அர்த்தபூர்ணமாக இருக்கிறது. அவர்கள் இருவருக்குமிடையே ஆன சண்டையை, சமாதானம் செய்து, அவர்கள் இருவரையும் அக்கா தங்கையர்களாக இருக்குமாறு செய்த பாண்டுரங்கனின் மகிமை அபாரமானது. இந்தப் பாடலில், எதுகை, மோனையுடன், அழகான சொற்களை சேர்த்திருப்பது மிகவும் அருமையாக இருக்கிறது.

***

ஆராதனை

# ஸ்ரீபுரந்தரதாசரின்
# கத்யம்

அனந்தகோடி பிரம்மாண்ட நாயக; ரமாபிரம்மா ருத்ராதி வந்த்ய; பக்தவத்ஸல; பவரோக வைத்ய; ஷரணாகத வஜ்ர பஞ்சர; ஆபத்பாந்தவ; அனாதபந்தோ; அனிமித்த பந்தோ; பதித பாவன; மஹாரோக நிவாரண; மஹாதுரித நிவாரண; மஹாபய நிவாரண; மஹாப[3]ந்த[3] விமோசன; பயக்ருத் பய வினாஷன; க்ருபாவாரிதி; தேவ தேவோத்தம; தேவ ஷிகாமணி; கபட நாடக சூத்ரதார; நித்யரொளு நித்ய; சத்ய சங்கல்ப; முக்தாமுக்த நியாமக; மோக்ஷதர; ஸு-வைகுண்டபதி; வைகுண்ட விஹாரி; த்ரிதாவான்; த்ரிகுணவர்ஜித; ஜகஜ்ஜன்மாதி காரண; ஜகத்பதே; ஜகத் அத்யந்த பின்ன; ஜகதீஷ; ஜகத் உத்தார; ஜகத் ஸ்வாமி; ஜகத் விலக்ஷண; ஜகன்னாத; விஷ்வகுடும்பி; விராட்மூர்த்தி; ஹே மங்களாங்க; ஹே ஷுபாங்க; பரம மங்கள மூர்த்தி; கோமளாங்க; நீலமேகஷ்யாம; இந்துவதன; பஹுசுந்தர; இந்திரா வந்தித சரண; அன்னமயாதி ரூப; அனேக மந்த்ர ப்ரதிபாத்ய; சர்வ சார போக்த; அஷ்ட ஐஸ்வர்ய பிரதாத; ஓம்கார ஷப்த வாச்ய; விசிஷ்ட தாரதம்ய வாச்ய; அனந்தானந்த ஷப்த வாச்ய; அணு மஹத்ரூப; ஷங்க சக்ர பீதாம்பரதாரி; கமலாக்ஷ; கமலனாப; வைஜயந்தி வனமாலா ஷோபித; கௌஸ்துப பூஷித; சுவர்ண வர்ண நவரத்ன குண்டலதாரி; கஸ்தூரி ஸ்ரீகந்த லேபன; கருடாரூட ஷோபித; காமதேனு; ஸ்ரீவத்ஸலாஞ்சன; கல்பவ்ருக்ஷ; சிந்தாமணி; க்ஷீராப்தி சாயி; சேஷ சாயி; வடபத்ர சாயி; கக வாகன; தேஷகால குணாதீத; அனந்த பிரம்ம; அனந்த ஷக்தி; அனந்த மூர்த்தி; அனந்த கீர்த்தி; புராண புருஷோத்தம; அக்ரூர வரத; அம்பரீஷ வரத; நாரத வரத; பிரகலாத வரத; கஜேந்திர வரத; முசுகுந்த வரத; த்ருவ வரத; விபீஷண வரத; குலாலபீம சம்ரக்ஷக; புண்டரீக வரத; பராஷர வரத; பார்த்தசாரதி; பாபவிதூர; அரிஜன பிரசண்ட; ஜாணூரமல்ல முஷ்டிகாசுர மர்த்தன; காளிந்திகூலவன கண்டீரவ; மதன கோபால; வேணுகோபால; வேணுநாதப்ரிய; ஷோடஷ சஹஸ்ர கோபிகா ப்ரியர விலாஸ; அஹல்யா ஷாப விமோசன; த்ரௌபதி அபிமான ரக்ஷக; துஷ்டஜன மர்த்தன; சிஷ்ட ஜன பரிபாலன; முகுந்த

முராரே; கம்ஸாரே; அசுராரே; தைத்யகுல சம்ஹார; க்ஷாத்ர குலாந்தக; சோமகா சுராந்தக; ஹிரண்யாக்ஷ ஹிரண்யகசிபு சம்ஹார; ராவண கும்பகர்ண மர்த்தன; சிசுபால தந்தவக்ர ஷிரச்சேதன; ரகுகுலோத்பவ; தஷரத கௌசல்யா நந்தன; சிந்துர வரத; சீதாபதே; ஸ்ரீராமசந்திர; யதுகுலோத்பன்ன; யதுகுலோத்தாரி; யதுகுல திலக; யதுகுல ஸ்ரேஷ்ட; வசுதேவ தேவகி நந்தன; யஷோதா கந்த; வ்ருந்தாவன வாசி; கோபகுமார; கோகுல த்வாரகா வாச; கோவர்த்தனோத்தாரி; காலிய மர்த்தன; பூதனா பிராணாபஹாரி; ஷகடாசுர மர்த்தன; பாண்டவ பந்தோ; பாண்டவ பரிபால; பாண்டவ ப்ரிய; சுதாம சக; ருக்மிணி வல்லப; சத்யபாமா ப்ரிய; கோபிஜன ஜார; நவனீத சோர; கோபாலகிருஷ்ண; கங்கா ஜனக; ப்ரயாக மாதவ; காஷி பிந்து மாதவ; பம்பா பதி; குலுகுஞ்சி மாதவ; ராமேஸ்வர சேது மாதவ; பதரி நாராயண; ஸ்ரீ ரங்கனாத; வட்டி ஜகன்னாத; உடுபி ஸ்ரீ கிருஷ்ண; மேலுகோடெய செலுவராய; பேலூர சென்னிகராய; அஹோபல நரசிம்ஹ; பாண்டுரங்க விட்டல; ஸ்ரீஷைலவாச; அருணாசல நிலய; வ்ருஷபாசல விஹாரி; அனந்த சயன; தர்ப்ப சயன; கபில; ஹயக்ரீவ; தத்தாத்ரேய; சிம்ஷுமார; தன்வந்த்ரி; மம ஸ்வாமி; சர்வ ஸ்வாமி; ஜகதந்தர்யாமி; ஜகதீஷ; பிராணேஷ; த்விஜபணிப ம்ருணேஷ; ஸ்ரீரமண; பூரமண; துர்கா ரமண; லட்சுமிவெங்கடரமண; பாரதிரமண முக்ய பிராணாந்தர்கத; சீதாபதே; ஸ்ரீராமசந்திர; சாட்சாத் மன்மத மன்மத; ஹரிவிட்டல; புண்டரீக வரத; பாண்டுரங்க விட்டல; புரந்தர விட்டலா ||

****

வங்கிக் கணக்கில் சந்தா / புத்தகத்திற்காக பணம் செலுத்தினால், மறக்காமல் உங்கள் முகவரியை 89044 58276 எண்ணுக்கு வாட்சப் / SMS அல்லது haridasa.vijayam@gmail.comக்கு மின்னஞ்சல் அனுப்பவும்




**கன்னட கிரந்தங்கள் அறிமுகம்**

**கன்னட தந்த்ரஸார ஸங்க்ரஹம்**

16 & 17 வது பத்யங்களில், காயத்ரி மந்திரம் மற்றும் புருஷ ஸூக்தம் பற்றிய விளக்கங்களை அளித்துள்ளார் குரு மஹனீயர். 24 அக்ஷரங்களைக் கொண்ட காயத்ரி மந்திரமானது மூன்று முறை அஷ்டாக்ஷர மந்திரம் ( 3 x 8) மூன்று முறை வ்யாஹ்ருதி மந்திரம், இரண்டிரண்டு முறை ஆறெழுத்து மந்திரம் (6 x 2 x 2) மற்றும் கேஸவ முதல் ஸ்ரீ கிருஷ்ண வரையிலான 24 நாமங்கள் உள்ளடக்கியதாக த்யானிக்க வேண்டுமெனவும், மேலும் பகவான் புருஷ ஸூக்தத்தை பற்றி பிரம்ம தேவருக்கு உபதேஸிக்கும் விதத்தில், காயத்ரி மந்திரத்தின் மூன்று பாதங்களில் இருந்து மூன்று வர்க்கங்களை கொண்ட புருஷஸூக்தமும், புருஷஸூக்தத்தின் மூன்று வர்க்கங்களில் இருந்து ரிக், யஜூர், ஸாம என்னும் மூன்று வேதங்களும் உதயமாகி அவற்றில் இருந்து ப்ரஹ்மஸூத்ரம், மஹாபாரதம், பஞ்சராத்ர ஆகமம் போன்றவையும் தோன்றின என்பதாக ஸ்ரீ வரதேந்திர தீர்த்தர் இங்கு விவரித்துள்ளார்.

18 வது பத்யத்தில் 100 கோடி ஸ்லோகங்களைக் கொண்ட மூல ராமாயணம், 18 புராணங்கள், ஸ்ம்ருதிகளின் கூட்டம் மற்றும் வேத சம்பந்தமான சப்தங்கள் ஜனித்தன எனவும் இவை அனைத்திலும் போற்றப்படுபவன் தானே; இதில் சந்தேகம் வேண்டாம் என பகவானே பிரம்ம தேவருக்கு உபதேஸம் செய்துள்ளதை, "வைதிக ஸூக்த ஷப்த ஜனிஸிதவு ஸந்ததவாச்ய நானே ஸந்தேஹவில்ல" போன்ற பதங்களினால் விளக்கி உள்ளார் ஸ்ரீ வரதேந்திர தீர்த்தர்.

19 முதல் 21 வரையிலான பத்யங்களில் பகவான் தமது குணங்களை மஹிமைகளைத் தாமே பிரம்ம தேவருக்கு உபதேஸிக்கும் விதமாக, உதிக்கும் சூரியனை காட்டிலும் காந்தியுள்ளவனாகவும், ஞானம் ஆனந்தம் முதலான சிறந்த குணங்களை உடையவனாகவும், சக்கரம், சங்கு, கதை, தாமரை போன்றவற்றைத் தரித்தவனாகவும் விளங்கும் தானே தேவ தேவோத்தமன் எனவும், இவ்விதமாக தன்னை வணங்குபவர்களான ஸ்ரீதேவி பூதேவியின் நடுவில் க்ருத்தோல்க, விஸ்வ, கேஸவ மற்றும் மத்ஸ்ய போன்ற ரூபங்களில் விளங்குவதாகவும், பிரம்ம ஸேஷாதி தேவதைகள் தன்னை பக்தியுடன் வணங்குவதாகவும் கூறி, சங்கம், சக்ரம், வரமளிக்கும் முத்திரை, அபயஹஸ்தம் இவற்றுடன் கூடிய நான்கு கரங்களுடன் எட்டு ரூபங்களில் ஸர்வ ஆபரணங்களுடன், பிரணவ மந்திரத்தின் பிரதிபாத்யனாக நித்ய தத்வ விஷயமாக, முக்திக்குத் தகுதியுடைய

ஜீவர்களால் காணப்படுபவனாக உள்ளதாகவும் ஸ்ரீ வரதேந்திர தீர்த்தர் வர்ணித்துள்ளார்.

22 முதல் 24 வரையிலான பத்யங்களில் ஶ்ரீ வரதேந்திர தீர்த்தர், இதுவரை ஸீதாபதி ஶ்ரீ மூலராமச்சந்திரன் பிரம்ம தேவருக்கு செய்ததாக விளக்கியுள்ள ஓம்காரம், நாராயண அஷ்டாக்ஷரம், காயத்ரி, மாத்ருக வர்ணங்கள், புருஷ ஸுக்தம், ஆறெழுத்து விஷ்ணு மந்திரம், வாஸுதேவ த்வாதஸாக்ஷர மந்திரம் முதலான மந்திரங்களை வரிசைப்படுத்தி இதை பக்தியுடன் இடைவிடாமல் எப்போதும் படித்தால் பகவான் வேண்டியதை நல்குவான் எனப் பலனையும் எடுத்துக் கூறி, இந்தப் பாடலை தமது சிஷ்யரான ஶ்ரீ ஜகன்னாத தாஸர் பணிந்து வேண்டியதற்கிணங்க இயற்றியதாகவும் "ப்ரீதியிந்தலி நிரந்தரதலித படிஸெ ஸேஷாதபத்ரனு காமிதார்த்தவீவ ||", "ஜகன்னாததாஸ பாகி விக்ஞாபிஸலு கைகொண்டு பரமானுராகதலி பேளிதேவு தந்தரஸார ||" போன்ற பதங்களினால் விளக்கியுள்ளார்.

25 முதல் 27 வரையிலான பத்யங்களில் குரு மஹனீயர், இந்த கிரந்தத்தின் மகத்துவத்தையும், பல ஸ்ருதியையும் விளக்கும் வகையில், தமது குருவான ஶ்ரீ வஸுதேந்திர தீர்த்தரின் அருளால் இந்த கிரந்தம் பத்ய ரூபத்தில் இயற்றப்பட்டதாகவும், இதனை ரசிகத் தன்மை அற்றவர்கள் நிந்திப்பதால் குறையில்லை எனவும் கூறி, தர்மம், அர்த்தம், காமம் மற்றும் மோக்ஷம் என புருஷார்த்தங்களையும் நல்கும் நூலான இது, முதலில் ஶ்ரீ ராமச்சந்திரனே பிரம்ம தேவருக்கு அளித்தது எனவும், இதிலுள்ள எட்டு பெரும் மந்திங்களையும், அவற்றின் ரகசியங்களையும் அறிந்து பஜித்தால் அனைத்தும் சித்திக்கும் எனவும், இதனை எழுதிப் படித்து கேட்டு மகிழும் ஸஜ்ஜனர்களுக்கு ஶ்ரீ மூலராமன், ஶ்ரீ வேதவியாஸர் இம்மை மறுமை என இரண்டிலும் வேண்டிய அனைத்தையும் நல்குவார் என பலஸ்ருதியையும், ”வரதேந்த்ர முனிரசித ஈ தந்த்ரஸாரவனு பரெதோதி கேளி மோதிஸுவ ஜனர வரமூலராம வேதவ்யாஸரிஹபரதி கருணிபரு பேடிதிஷ்டார்த்தகளனு” போன்ற பதங்களினால் விவரித்துள்ளார்.

28 & 29வது பத்யங்களில் மங்களம் உரைத்து இந்த கிரந்தத்தை ஸமர்ப்பணம் செய்யும் வகையில், “ரமாபதியான, பிரம்மனின்

தந்தையான மத்வ முனிவரால் பூஜிக்கப்பட்ட மூலராமனுக்கு மங்களம்! சிவன், இந்திரன் முதலான தேவதைகளால் போற்றப்படும் ஸ்ரீ ஹரிக்கு மங்களம் |" எனப் போற்றித் துதித்து , 29 சரணங்களைக் கொண்ட தோஷமற்ற இந்த புஷ்ப மாலையை ஸ்ரீ மூலராமரின் திருவடிகளில் ஸமர்ப்பணம் செய்வதாகவும், இதனை ஞானிகள் தங்கள் சிரசில் பக்தியுடன் தரிக்கிறார்கள் எனவும், "இப்பத்தொம்பத்து பதகளெம்பதிவிமல புஷ்பமாலிகெ மூலராமனடிகெ |" அர்ப்பிஸிதேவீ ஸுமனதாமவனு தினதல்லி பப்பதிஹதே புத்ர மஸ்தகதள ||" போன்ற பதங்களினால் வர்ணித்து நிறைவு செய்துள்ளார் ஸ்ரீ வரதேந்திர தீர்த்தர்..

## கிருஷ்ண பால லீலெ - ஸ்ரீவாதிராஜர்

ஸ்ரீ மத்வமதப் பரம்பரையில் உடுப்பி அஷ்ட மடங்களில் ஸோதே மடத்தின் பீடாதீஸராக அலங்கரித்தவர் ஸ்ரீ வாதிராஜ தீர்த்தர். மத்வ ஸித்தாந்தத்தில் வியாஸ ஸாகித்தியம் மற்றும் தாஸ ஸாகித்யம் என இரண்டுக்குமே தமது பங்களிப்பை அளித்த மஹனீயர். பலதரப்பட்ட காவிய ஸ்தோத்திர டிப்பணி மற்றும் வியாக்யான கிரந்தங்களை இயற்றியதுடன் கன்னடத்திலும், துளு பாஷையிலும் 'ஹயவதன' முத்ரையிலே பலதரப்பட்ட க்ருதிகளையும் ரசனை செய்துள்ளார். ஸ்ரீ ஹரியின் லீலா வினோதங்களை தன்னுடைய கன்னட பதங்களிலே வர்ணித்திருக்கும் ஸ்ரீ வாதிராஜர், ஸ்ரீமத் பாகவதத்தில் உள்ள பகவானின் மஹிமைகளைப் பறை சாற்றும் பகுதிகளை 'லக்ஷ்மீ ஷோபானம்', 'கஜேந்திர மோக்ஷம்' போன்ற கிரந்தங்களில் வர்ணித்துள்ளார். அதுவும் குறிப்பாக ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் லீலைகளை வர்ணிக்கும் பாகவத தஸம ஸ்கந்தத்தின் பகுதிகளை ஸமஸ்கிருதத்தில் 'ருக்மணீஸ விஜயம்' என்ற காவிய கிரந்தமாக அளித்துள்ள ஸ்ரீ வாதிராஜர், கன்னடத்தில் விஸ்தாரமாக 'ஸ்ரீ கிருஷ்ண பால லீலே' என அருளி உள்ளார்.

ஸ்ரீ வாதிராஜர் அருளிய 'ஸ்ரீ கிருஷ்ணபால லீலே' என்பது 1421 பத்யங்களில் த்விபதியில் அமைந்த கன்னட கிரந்தமாகும். ஸ்ரீமத் பாகவதத்தின் தஸம ஸ்கந்தத்தில் பூர்வார்த்தத்தில் வர்ணிக்கப்பட்டுள்ள ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் லீலைகளை 910 பத்யங்களிலும், உத்தரார்த்தத்தில் குறிப்பிடப்பட்டுள்ள மஹிமைகளை 511 பத்யங்களிலிலும் ஸ்ரீ வாதிராஜர் அழகாக கன்னடத்தில், எந்தவொரு சரித்திரப் பகுதிகளையும் விட்டுவிடாமல், எளிமையாக,

சரளமாக, அளித்துள்ள விதம் ஆச்சரியப்படத்தக்க வகையில் உள்ளது. ஸமஸ்க்ருதம் அறியாத பாமரரும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில், கன்னடத்திலே ஸஜ்ஜனர்களின் மேல் கருணை கொண்டு இதனைப் படைத்துள்ளார் ராஜர்.

முதலில் பூர்வார்தத்தில் ஶ்ரீ வாதிராஜர் ஶ்ரீ ஹரியையும், முக்ய ப்ராணரையும் வேண்டித் துதித்து, ”கமலநாபன பாத கமலகளிகெ நமோ எம்பே, அமலமதிய கொடுவுதெந்து கமலெகெரகுவெ || வாயு ஹனும பீம ஶ்ரீமதானந்த தீர்த்தர பாத பத்மகளிகெரகுவெ பரமஹருஷதிந்தலி ||" எனத் தொடங்குகிறார்.

ஶ்ரீ வாதிராஜர் , பூர்வார்த்தப் பகுதியிலே 910 பத்யங்களில், பூமிதேவி மற்றும் தேவதைகளின் ப்ரார்த்தனைக்கு இணங்க பகவான் பூபாரத்தைக் குறைக்க, வஸுதேவ தேவகி தம்பதிகளுக்கு மகனாக அவதரித்ததையும், ஸேஷதேவர் முதற்கொண்டு அனைத்து தேவதைகளும், பகவானுக்கு சேவை புரிய அவதரித்த விதத்தையும், ஶ்ரீ கிருஷ்ண பரமாத்மா கோகுலத்தில் நந்தகோபர் யசோதா தம்பதிகளின் க்ரஹத்தில் வளர்ந்து பால லீலைகள் புரிந்ததையும், பூதனை, ஷகடாஸுரன், த்ருணாவர்த்தன், கேஷி முதலான ராக்ஷசர்களை பகவான் அழித்ததையும், மேலும் வெண்ணெய் திருடி, யசோதா தேவியிடம் கட்டுண்டு பால லீலைகள் புரிந்ததையும், குபேரனின் மக்களின் சாபத்தைக் களைந்ததையும் வர்ணித்து, காளிங்க நர்த்தனம், காட்டுத்தீயை பாணம் செய்தது, கோவர்த்தன கிரியைத் தாங்கி ரக்ஷணை புரிந்தது, ராஸக்ரீடை புரிந்து கோபிகா ஸ்த்ரிகளுக்கு ஆனந்தம் அளித்தது, அக்ரூரரின் அழைப்பின் பேரில் மதுரா பட்டணம் சென்று எதிர் கொண்டவர்களை வென்று, கம்ஸனை அழித்து, உக்ரஸேனருக்கு பட்டாபிஷேகம் செய்தது வரையிலான லீலைகளை மிக அழகாக வர்ணித்துள்ளார். (தொடரும்)

**S.லக்ஷ்மிபதிராஜா, சென்னை**

**ஹரிதாச விஜயம் பத்திரிக்கை சந்தா புதுப்பிக்க மறக்காதீர்கள்**




**ஹரிதாசர்களின் சிந்தனைத் துளிகள்**

**ஸ்ரீஹரியே - இதையே கொடு**

ஜீவன் இந்த உலகத்திலும், மறு உலகத்திலும் சத்கதியைப் பெறுவதற்கு, ஸ்ரீஹரியிடம் எதை வேண்டவேண்டுமென்று ஸ்ரீவாதிராஜர் ஒரு உகாபோகத்தில் விளக்குகிறார்.

நின்ன த்யானவ பக்திய கொடு - அன்யரலி விரக்தி கொடு
நின்ன நோடுவ யுக்திய கொடு - நின்ன பாடுவ பக்திய கொடு
நின்ஹத்தி பருவ சம்பத்திய கொடு
சித்ததி தத்வியாத க்ருத்யவ தோரோ
மத்தெ துதியலி எனகெ முக்திய கொடு
அத்தத்த மாடோ பவகத்தலெயெனகெ - முத்திதே ஹயவதன ||

இப்படியே ஹரிதாசர்களும் ஸ்ரீஹரியிடம் கேட்டுக்கொண்டதை, நாமும் பின்பற்றி நடப்போம். ஸ்ரீஹரி பக்தர்களுக்கு நண்பனைப் போல இருப்பான். அவனே ஆபத்பாந்தவன் ஆகையால் அவனிடம் வேண்டுவது என்றைக்கும் தப்பாகாது.

கொடு நின்ன த்யானவ மனசுத்தி மாடி -- ஸ்ரீபுரந்தரதாசர்

நின்ன ஜனர சங்க கொடு என்னந்தரங்க
கன்ன சுகுணாந்தரங்க மங்களாங்க || -- ஸ்ரீவிஜயதாசர்

காலகாலக்கெ நின்ன நாமத ஸ்மரணெயனு
நாலிகெகெ கொடுகண்ட்ய நாராயணனெ || -- ஸ்ரீவிஜயதாசர்

வாசுதேவ விட்டலன்ன தாசஜனர
லேசாகி சேவிசுவ பாக்யவனெ கொட எனகெ || -- ஸ்ரீகோபாலதாசர்

நின்ன த்யானவ கொடு என்ன தன்யவ மாடு
பன்னங்கசயன ஸ்ரீபுரந்தரவிட்டலா || -- ஸ்ரீபுரந்தரதாசர்

***

தொடர்

## ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர்

### 1. லய கீதை

டாக்டர். ஜயலட்சுமி மங்களாமூர்த்தி

**லயகீதை**

**ராக: தேவகாந்தார. தாள: ஆதி**

லய சதுஷ்டய ரஹிதனாத ஸ்ரீஹரி ப்ரீதி
லயத பயகெலிது முக்திய பதவிடுவ ரீதி
லய ப்ரகாரவ திளிவ ஸுஜனசிந்தன கீதெ
நயதி சிந்திஸலு ஸகதீ ஹரே ஹரே ||ப

காத்ராபிமானிகெ வீரயமானியலி லய
ரேதோபிமானிகெ அன்னாபிமானியலி லய
மத்தெ அன்னாபிமானிகெ தான்யமானியலி
ஆதகெ ப்ருத்விமானியொளு
தாத்ரிமானிகெ கந்ததபிமானியலி லய
மொத்த கந்தாபிமானிகெ ஜலத மானியலி
மத்தெ உதகத மானிகெ ரஸத மானியலி | ரஸ
பதிகெ தேஜோபதி ஹரே ஹரே ||1

அனளமானிகெ ரூப மானியலி
அஸூஸ்புரஷகாகாஷ மானியலி
ஆகாஷவனு ஷப்ததபிமானினி
கன ஷப்தமானிகெ தாமஸாஹங்காரரு
த்ரனலி லய ருத்ரங்கெ சேஷதேவரலி லய
பணிபனெ தைஜஸாஹங்கார ருத்ர புத்தி
ப்ராணதஷவிந்த்ரியகளிகெ லயவு ஹரே ஹரே ||2

சேஷனிகெ வாயுதேவரலி லய | மனோ
தஷேந்த்ரியேஷ தேவதெகளிகெ வைகாரிகத ருத்ர
வீஷனலி லய விஹங்காதிபதிகெ மஹத்தத்வாதீஷ
பிரம்மனலி லயவு
ஆ ஸரஸிஜோத்பவகெ காயத்ரி | ஸாவித்ரி |
ஸ்ரீஸரஸ்வதியல்லி லயவு
ஈ மூருமந்தீ ஸ்த்ரீயரிகெ
அர்த்த நாமக காயத்ரியலி லய
வாகிக்யாதார ஞான ஹரே ஹரே ||3

ஜீவாபிமானியஹ புன்னாமக பிரம்ம

தேவனலி லயவு ஆதகெ |கால வ்யஞ்சகத
தேவ பிரம்மனலி லய ஆதங்கெ |துதியல்லி
ஜீவ நாமக ஸ்ரீயலி லயவு
தேவலட்சுமீயளனொளிகெ |தேஹாந்தரியாமி
தேவ நாராயணன அங்க சிந்திஸபேகு |தேவ
தேவேஷ்வரகெ ஜீவாந்தர்யாமி பிம்பமூர்த்தியலி
ஐக்ய ஹரே ஹரே ||4

பிம்பமூருதி நாம அனிருத்த ஸதி தன்ன
பிம்பமூருதியனு வ்யாப்தமூருதியலி
இம்பாகி இக்கவனு சிந்திஸலிபேகு ப்ரதி
பிம்பராஹ ஜீவரெல்ல
பிம்ப ப்ரதிபிம்ப ஸ்வபாவவனு குரு முகதி
ஸம்ப்ரமதி கேளி ஆதரதி நைரந்தரதி
அம்புஜோத்பவ பிரஸன்ன வெங்கடனிருத்தனிகெ
வித்த ஷரீரார்ப்பிஸுவெ நா ஹரே ஹரே ||5

வேதங்கள், பிரம்மஸூத்ரங்கள், த்ரயீகள், உபநிஷத்கள், பாஷ்யங்கள், பஞ்சராத்ர, பாகவத, பாரத, ராமாயணாதி அனைத்து ஞானக் களஞ்சியங்கள், மத்வ ஸித்தாந்த, ஸர்வமூலங்கள், டீகை, டிப்பணிகள், அனைத்து ஹரிதாச சாகித்ய ஆகியவை அபாரமான ஞான நிதி எனப்படுகின்றன. முமுக்ஷுகளுக்கு ஸாதனையின் திவ்ய வழியைக் காட்டுகின்றன.

ஸ்ரீஹரி சர்வோத்தமத்வ, வாயு ஜீவோத்தமத்வ, ஜகத் ஸத்ய, ஆகிய ஸித்தாந்தங்களுடன் ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய ஆகிய பிரமேய பூர்ண விஷயங்களை ஹரிதாசர்கள், கீர்த்தனை, சுளாதி, உகாபோகங்கள், முண்டிகைகள், ஆகிய விதங்களில் நமக்கு இயற்றிக் கொடுத்திருக்கிறார்கள். ஸ்ரீவாதிராஜர், ஸ்ரீபுரந்தரதாசர், ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீபிரசன்னவெங்கட தாசர், ஹரபனஹள்ளி பீமவ்வா, ஸ்ரீஜகன்னாத தாசர், ஆகிய ஹரிதாசர்கள் இவற்றை இயற்றியிருக்கின்றனர். நாள் முழுவதும் செய்யக்கூடிய அனுசந்தானங்களுடன், காலையில் செய்ய வேண்டிய ஸ்ருஷ்டி சிந்தனை, மாலையில் செய்ய வேண்டிய லய சிந்தனை ஆகியவையும் இவர்கள் இயற்றியிருக்கின்றனர்.

அனைத்து புராணங்களிலும், ஸ்ருஷ்டியின் ரகசியத்தை விளக்கியிருக்கின்றனர். ஸ்ரீமத்வாசார்யர் - பஹுசித்ர ஜகத் பஹுதாகரணாத், பரஷக்திரனந்த குண: பரம:' என்கிறார்.

எண்ணிக்கையில் அடங்காத, அற்புதமான, அதி விசித்ரமும் ஆன உலகத்தை நிர்மாணம் செய்திருப்பதாலேயே பகவந்தன் மகாமகிமன் எனப்படுகிறான்.

லய சிந்தனைக்கு செல்லும் முன்னர், பகவந்தனின் அசிந்த்யாத்புத

| | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 வ் | யா | ள | ரூ | 29 ப | | 2 க | ஞ் | ஜ | த | ளா | க்ஷ | | | | 30 ந |

ஸ்ருஷ்டி கார்ய, வடபத்ரஷாயி முக்தர்களை தன் இதயத்தில் தரிப்பது, ஸூக்ஷ்ம ஸ்ருஷ்டி, பிரம்மாண்ட ஸ்ருஷ்டி, ஆத்ம ஸ்ருஷ்டி, பராதீனா விசேஷ வாப்தி ஸ்ருஷ்டி, மிஸ்ர ஸ்ருஷ்டி, கேவல ஸ்ருஷ்டி, வைக்ருத ஸ்ருஷ்டி, சர்வஜீவ ஸ்வரூப ஞானவ்யஞ்சக ஷக்தி, அவ்யாக்ருதாகாஷ, நித்ய எனப்படும் மஹாகால, வேத, தேஷ, ஜீவ, ப்ரக்ருதி, கர்மங்களைப் பற்றி, மஹாகால வாச்யன் எனப்படும் காலத்திற்கு பிம்பனான ஸ்ரீஹரியைப் பற்றி, ஜட ப்ரக்ருதியைப் பற்றி, ஸத்வ ரஜோ தமோ குணங்களைக் கொண்ட ஜீவர்கள் லய காலத்தில் ஒன்றுக்குள் ஒன்று அடங்கியிருக்கின்றன. மூல ஜடப்ரக்ருதி பரமாணு அளவில், மிகவும் சூக்ஷ்ம ரூபத்தில், பகவந்தனின் இதயத்தில் அடங்கியிருக்கின்றது. ஸ்ரீஹரி, ஜடப்ரக்ருதிக்கும் பிம்பன் எனப்படுகிறான். பரமாத்மன், அந்த பிந்துகளின் ஸாம்ய நிலையை விடுவித்து, விஷய நிலையைக் கொடுத்து, 24 தத்வங்களின் அறிமுகங்களை செய்வதே, ஸ்ருஷ்டி எனப்படுகிறது.

ஓம்கார பிரதிபாத்யன். அனந்தரூபாத்மகனான பரமாத்மனின் அனந்த ஷக்தி நித்யமானவை. அபௌருஷேயமான வேதங்கள், சொற்களில், அர்த்தத்தில் ஸ்ரீஹரிக்கே அதீனம் எனப்பட்டு நித்ய எனப்படுகின்றன.

**(தொடரும்...)**

ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப், அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்து சொல்லலாம்.

**தொடர்**



**ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி**

**19. கர்மவிமோசனஸந்தி விடைகள்**

| | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| யா | | | | ரீ | 3 ம | ரு | தீ | 31 ஸ | | | ய | ம | 21 கோ | | ந் |
| 4 ப் | ரா | ர | ப் | த | | ணி | | ப | | 5 ஸ | ஞ் | சி | த | | தி |
| 6 த | ர் | ம | வி | த் | | | | ரி | | ளி | வ | யா | த் | 22 தை | வா |
| | மி | கா | 23 ஆ | | 7 ஸ | ர் | ப | 32 அ | ரி | | ர் | | | ல | ஹ |
| 8 க | ந் | த | ர் | | ர் | ப | ல | 9 ஸு | ம | ன | 36 ஸ | தே | னு | தா | ன |
| 10 ம | த் | ஸ் | ய | கே | 37 த | ன | | 11 ர | வி | | | | ம | ரெ | ரா |
| ஸ | | ர | ட | 24 ஜ | | | | 12 அ | ந் | த | ரா | த் | ம | | த் |
| த | | 13 நி | ர் | 33 ஜி | த | ன | | ர் | | | ர | து | ர் | 25 த | ரி |
| மி | | | 14 உ | த | ர | 38 ஞா | | சி | 34 சா | | | | 39 நி | | |
| 40 ஸ | க | ர | ஹே | 26 ம | | | | 15 த | ர் | மா | த் | ம | | | |
| | | | | ன் | | 16 அ | ப் | ஜ | வா | ஹ | ன | ரு | த் | 27 ஞா | |
| னி | | 35 பா | | யு | | | ம் | க | ங் | ர | 28 சா | ஸ | | | |
| ன | | வ | | | | 17 ப | ர் | ம | க | ர் | ப | லி | | | |
| 18 ஜ | ன | க | 19 க்ஷே | ணி | ப | தி | | | 20 ம | த் | ய | 41 பா | ண் | ட | வ |

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்

Haridasa Vijayam - Monthly

மலர் 3 ** மார்ச் 2022 ** இதழ் 4



ஸ்ரீவியாஸராஜர்

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 3 : இதழ் 4


**நிர்வாக ஆசிரியர்**
'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276.
haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**
'தாச சாகித்ய சேவா ரத்ன'
திரு.குரோம்பேட்டை R.ஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**
திரு. முரளிதர தாசரு, திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா,
திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்


## ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்

## மார்ச் 1 முதல் 31 வரை, 2022

மார்ச் 2- மாக அமாவாசை - ஸ்ரீகுரு பிராணேஷ தாசர், லிங்கஸுகூர்

மார்ச் 21- பால்குண கிருஷ்ண த்ருதியை - ஸ்ரீவாதிராஜ தீர்த்தர், ஸோதெ

மார்ச் 22- பால்குண கிருஷ்ண சதுர்த்தி - ஸ்ரீவியாஸராஜ தீர்த்தர், நவபிருந்தாவன, ஹம்பி

# ஆசிரியர் பக்கம்

ஸ்ரீவாதிராஜர், ஸ்ரீவியாஸராஜர் முதலான ஹரிதாச சாகித்யத்திற்கு பெரும் பங்கு ஆற்றிய யதிகளின் மற்றும் ஸ்ரீஜகன்னாததாசரே முதலான பல ஹரிதாசர்களுக்கு ஆதரவாக இருந்த ஸ்ரீசத்யபோத தீர்த்தர் போன்ற மகான்கள் பலரின் ஆராதனை இந்த மார்ச் 2022 மாதத்தில் வருகின்றன.

ஸ்ரீவாதிராஜரின் கன்னட கிரந்தங்கள் பலவற்றை (வைகுண்ட வர்ணனெ, ஸ்வப்ன பத, குண்ட க்ரியெ, ஹரி சர்வோத்தம ஸார, கிருஷ்ண பாலலீலெ, ஸுந்தர காண்ட) தமிழில் வெளியிடும் பாக்கியத்தை அந்த ராஜரே நமக்கு அருளியிருக்கிறார். ராஜருடைய கன்னட கிரந்தங்கள் / தேவரநாமாக்களைப் பற்றிய பல ஆய்வு நூல்களும் கன்னடத்தில் உள்ளன. அவற்றையும் தமிழ் மாத்வர்களின் நலனுக்காக தமிழில் வெளியிடும் வாய்ப்பினையும் ராஜரே அருள வேண்டும் என்று வேண்டிக் கொள்கிறேன்.

ஹரிதாச சாகித்யத்தின் பரம்பரையையே தனியாக துவக்கிய ஸ்ரீவியாஸராஜரின், பகவத் கீதா ஸார கன்னட கிருதியை நம் பத்திரிக்கையிலேயே பார்த்தோம். ஸ்ரீபுரந்தரதாசரின் கிருதிகளை 'புரந்தர உபநிஷத்' என்று கொண்டாடிய ஸ்ரீவியாஸராஜரின் கிருதிகளையும் இந்த அவருடைய ஆராதனையின் பர்வ காலத்தில் பாடி, படித்து அவருடைய அருளைப் பெறுவோம்.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

**கன்னடம்**

**அருஞ்சொற்பொருள்**

**கடினமான சொற்களின் அர்த்தங்கள்**

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

1. மதனாரி - சிவன்; 2. மதன ஜனக - ஸ்ரீகிருஷ்ண 3. மதன பிதா - (காமனின் தந்தை) - விஷ்ணு. 4. மாம் பாஹி - என்னை அருள்வாயாக. 5. மாராட - வியாபாரம். 6. மாராரி - சிவன். 7. யஜன - யக்ஞ. 8. யந்த்ராரூட - விஷ்ணு 9. மோஹ - விபரீத ஞான. 10. மோன - மௌனம்.

தொடர்

## கேசவ நாமா

### 23. மங்களா ராகவ ஜானகிகெ - ஸ்ரீப்ராணேஷதாசர்

மங்கள ராகவ ஜானகிகெ
மங்கள க்ருஷ்ணகெ ருக்மிணிகெ
மங்கள ருஷப ஜயந்திகெ ஷோபானெ ||ப

வ்ருந்தாவன பதி கேஷவகெ, மந்தரத$^4$வ நாராயணகெ
இந்த்ரக்ருத்ய பரிஹர மாத$^4$வ கோவிந்தகெ ஸாகர
நந்தனிகெ தைத்ய நிக்ருந்த$^3$னிகெ அண்டஜ
ஷ்யந்த$^3$னிகா$^3$ருதியா பெ$^3$ளகீ$^3$ரெ ||1

விஷ்ணு மது$^4$ரிபு த்ரிவிக்ரமகெ ஸ்ருஷ்டிப வாமன ஸ்ரீத$^4$ரகெ
துஷ்டமத$^3$ ஹ்ருஷிகேஷ ப்ரஸித்$^3$த$^4$ சுவிட்டலகெ தேவோ
த்க்ருஷ்டளிகெ க$^1$னகோ$^1$ஸனுட்டளிகெ$^3$ விதி$^4$கொ$^3$ர
கொட்டளிகா$^3$ருதியா பெ$^3$ளகீ$^3$ரெ ||2

கஞ்சனாப தாமோதரகெ கஞ்சவரத சங்கருஷணகெ
குஞ்சரபாலக வாசுதேவ விஷ்ணுபுஞ்சனிகெ நித்ய நி
ரஞ்சனிகெ களகுலபஞ்சனிகெ குமத்யாம்
தாஞ்சனிகாருதியா பெ$^3$ளிகீ$^3$ரெ ||3

ப்ரத்யும்னகெ$^3$ அனிருத்த$^4$னிகெ$^3$ ஸித்த$^4$ரொடெய புருஷோத்தமனிகெ
ஷுத்த அதோக்ஷஜ நாரஸிம்ஹ ஸ்ரீபுத்$^3$த$^4$னிகெ ஸர்வத$^3$
இத்த$^3$ளிகெ தோஷ அப$^3$த்த$^3$லிகெ$^3$ கு$^1$ஸுத$^1$ன
கெ$^3$த்தளிகா$^3$ருதியா பெ$^3$ளகீ$^3$ரெ ||4

தந்தெ ஸ்ரீப்ராணேஷவிட்டலகெ வந்த்யாச்யுத ஜனார்த்தனிகெ
இந்த்ர ப்ரகாஷ உபேந்த்ரகெ ஹரி யதுனந்தனகெ பா$^4$க்யத$^3$
இந்திரெகெ ஜக$^3$க$^1$தி ஸுந்தரிகெ ஸரஸிஜ
மந்திரகா$^3$ருதியா பெ$^3$ளகீ$^3$ரெ ||5

ராகவனுடன் ஜானகி, கிருஷ்ணனுடன் ருக்மிணி, ருஷபனுடன் ஜயந்தி ஆகிய ரூபங்களுடன், ஸ்ரீஹரியின் 24 ரூபங்களுடன் எப்போதும் நிலைத்திருக்கும், மிகவும் அழகான ஸ்வரூபமுள்ள இந்திரைக்கு

சோபானே பாடியவாறு, பிராணேச விட்டல தாசர்

ஆரத்தியை காட்டுகிறார். கேசவாதி 24 ரூபங்களின் சிந்தனையை செய்தவாறு, அவனே பிம்பனான தந்தை பிராணேச விட்டலன் என்று அனுசந்தானம் செய்யவேண்டுமென்று தெரிவிக்கிறார்.

***

## 24. மங்கள விஷ்வவ்யாப்த

மங்கள விஷ்வவ்யாப்த விஷ்வபி4ன்னனிகெ
மங்கள சர்வனாம சர்வரூபனிகெ
மங்களானந்தா1 அனந்த மஹிமகெ
மங்கள வாயுவஹனகெ ஜகன்மாதகெ
மங்களவென்னி முத3தி3ந்த3 ||ப

கேஷவகெ ஸ்ரீதேவிகெ நாராயண லட்சுமிகெ
ஈஷ மாத4வகெ கமலெ பத3க3ளிகெ
தோஷஹ கோவிந்தனங்க்ரி பத்3மதேவிகெ
சேஷஷயன விஷ்ணுவிகெ பத்மினி தேவிகெ
மீசலாருதிய பெ3ளகீ3ரெ ||1

மது4ரிபுவிகெ கமலாலய பத3க3ளிகெ
விதி4னுத த்ரிவிக்ரமகெ ரம ஜனனிகெ
நதி3பித வாயுனனங்க்ரி வ்ருஷகபிகெ
புத4ஜனார்ச்சித ஸ்ரீத4ரகெ த4ன்யதே3விகெ
சுத3தியராருதிய பெ3ளகீ3ரெ ||2

ஹ்ருஷிகேஷனங்க்ரிகளிகெ மங்களதேவிகெ
ஜஷஜனாப புத்3தி4கெ தாமோதரிந்திரேகெ
விஷகண்டா2ர்ச்சித சங்கருஷண ஹரிணிகெ
அஸம வாசுதேவகெ தக்ஷிண தேவியங்க்ரிகெ
ஷஷிமுகி2யராருதியா பெ3ளகீ3ரெ ||3

அனகா4 ஸ்ரீப்ரத்யும்னகெ நித்யாயெம்ப3ளிகே
அனிருத்த4கெ ஆனந்ததேவி பத3க3ளிகெ
முனிகேய புருஷோத்தமங்கெ ஸதஸ்ரயளிகே
க4னனிபாதோக்ஷஜ தே3வாகெ3 ஷுபதேவிகெ
வனிதெயராருதியா பெ3ளகீ3ரெ ||4

நரசிம்ஹகெ யக்ஞளிகெ அச்யுத சஹதேவிகெ
வரத ஜனார்த்தன ஸௌகந்தி தேவியளிகெ
வர உபேந்திர சுந்தரிகெ ஹரிகெ வித்யதேவிகெ
கருணி கிருஷ்ண ப்ராணேஷவிட்டல சுஷீலெகெ
தருணியராருதியா பௌகீரெ ||5

உலகெங்கிலும் வியாபித்திருப்பவனும், அனைத்து பொருட்களிலும் நிலைத்திருப்பவனும், அனைத்து பெயர்களாலும் அழைக்கப்படுபவனும், அனந்த மகிமைகளைக் கொண்டவனும், வாயு வாகனனும், ஜகத் பிதனும், மங்களத்தைக் கொடுப்பவனுமான ஸ்ரீமன் நாராயணனே 24 ரூபங்களுக்காக அந்தந்த ரமா ரூபங்களினால் வியாப்தனாக இருக்கிறான் என்று அறிந்து உபாசனை செய்யவேண்டும். அவனே நம் இதயத்தில் வீற்றிருப்பவனான பிராணேச விட்டலன், அவனுக்கு இந்த ஆரத்தியை எடுக்கிறேன் என்று சொல்லி வணங்குகிறார் தாசர்.

***

## 25. ஸ்ரீகோபிசந்தன

ஸ்ரீகோபிசந்தன முத்[3]ரதா[3]ரண மஹாத்மெயனு
ஆபனிது ப[3]ரவெ கேள்வரு சுஜனரு ||ப

தருவாய த[4]ரிசுவுது புண்ட்ரக[3]ளு கேளெலகெ[3]
வரபணெகெ ஆதியலி கேஷவல்லே
சுரப நாராயணுத[3]ரதி[3] ஹ்ருதயத[3]ல்லி மா
வர கண்ட[2] தே[3]ஷத[3]ல்லி கோவிந்தனு ||18

ப[3]லபார்ஷ்வத[3]லி விஷ்ணுபு[4]ஜத[3]லி மது[3]சூத
ஸலெ ப[3]லத கண்ட[2]தலி த்ரிவிக்ரமா
லலனெ கேள் வாமபார்ஷ்வகெ[1] வாமனா பு[4]ஜகெ[1]
க[2]ளர ஸ்ரீத[4]ர கண்ட[2]தலி ஹ்ருஷிகேஷ ||19

ப்[1]ருஷ்டதலி கஞ்சனாப[4] ஷிரதி தாமோதரனு
இஷ்டெ த்வாதஷனாம ஸிதபக்ஷகெ
கிருஷ்ணபக்ஷதொளிவகெ[3] சங்கருஷணாதி ஸ்ரீ
கிருஷ்ண பரியந்த திளிவரு சுஜனரு ||20

ஷிவ சகலசாஸ்திரகள க1லிகெ1 கிரிஜெகெ3 பேள்வ
விவரிது ஆசரிப பாகவதரா
ப4வ ஷரதி4யிந்த கடி3கெ3த்தி பாலிஸுதிஹனு
கவிகே3ய ப்ராணேஷவிட்டல ஜஸ்ரா ||39

கோபிசந்தனம் மற்றும் பஞ்ச முத்திரைகளின் மகத்துவத்தைக் குறித்து, ருத்ர தேவர் தமது மனைவியான கிரிஜாவிற்கு, அனைத்து சாஸ்திரங்களின்படி விளக்கங்களைக் கூறினார் என்று பிராணேச தாசர் 39 நுடியுள்ள இந்த கிருதியில், கேசவ நாமத்தையும் பாடியிருக்கிறார். இதில் சொல்லியுள்ளபடி பின்பற்றும் பாகவதர்களை, பிறப்பு இறப்பு சுழற்சியிலிருந்து காக்கிறான் ஸ்ரீஹரி என்கிறார் தாசர்.

***

## 26. கேஷவ நாராயண

கேசவ நாராயண ஸ்ரீஷ மாத4வ
சர்வேஷ கோவிந்த கெ3லிஸெந்து கோல
சர்வேஷ கோவிந்த கெ3லிஸெந்து விஷ்ணுவின
ஸோஸிலெ மொத3லெ ப3லகொ3ம்பெ3 கோலெ ||1

மதுசூதன த்ரிவிக்ரம விதி4பித வாமன
சுத3தெ1 ஸ்ரீதர ஹ்ருஷிகேஷ கோல
சுத3தெ1 ஸ்ரீதர ஹ்ருஷிகேஷன நெனெத3ரெ
ஹத3கானெ வரவ கொடுவோனு கோல ||2

பத்மனாப தாமோதர முத்து3 சங்கர்ஷண
வசுதேவ நம்ம கெ3லிசெந்து கோல
வசுதேவ நம்ம கெ3லிசெந்து ப்ரத்யும்ன
அனிருத்தர மொத3லெ பலகொம்பெ கோல ||3

புருஷோத்தம அதோக்ஷஜ ஹருஷாகொ3 நாரசிம்ஹ
புருஷசூக்ததலெ ப்ரதிபாத்ய கோல
புருஷசூக்ததலெ அச்யுத
ஹருஷதி நம்ம கெ3லிஸெந்து கோல ||4

ஜனார்த்தன உபேந்த்ர க4ன மஹிமெ ஹரெ கிருஷ்ண
முனிஜன வந்த்ய ரமெயரஸ கோல

முனிஜன வந்த்ய ரமெயரஸு
நின்ன பாத நெனெதவ ப[1]ந்த[2] கெ[3]லிஸெந்து ||5

நாட்டுப்புற பண்ணில் நுடியில் கேசவ முதல் கிருஷ்ண வரையான 24 ரூபங்களை 'ரமெ அரச' என்னும் அங்கிதத்தில் கலகலி அப்பா அவர்கள் பாடியிருக்கிறார். புருஷஸூக்தத்தால் வர்ணிக்கப்படுபவனான, முனிவர்களால் வணங்கப்படுபவனான, ரமெயரஸனின் பாத ஸ்மரணையானது, முக்தி மார்க்கத்திற்கு நம்மை அழைத்துப் போகிறது. 'கெலிஸு' என்றால் ஜெயிக்க வை, சாதிக்க வை என்று பொருள். முக்தி மார்க்கத்தின் சாதனையில் வெற்றியை வேண்டுகிறார் தாசர்.

(தொடரும்)

***

**தொடர்**

## ஹரிதாசர்களின் சிந்தனைத் துளிகள்

### அனைத்துமான ஸ்ரீகிருஷ்ணன்

'ஹரிரேவ பரோ ஹரிரேவ குரு: ஹரிரேவ ஜகத் பித்ருமாத்ருகதி:' என்றார் த்வாதச ஸ்தோத்திரத்தில் ஸ்ரீமதாசார்யர். இதையே அனைத்து ஹரிதாசர்களும் தமது கிருதிகளில் சிறப்பாக வெளிப்படுத்தியிருக்கின்றனர்.

தந்தெயாகி தாயியாகி இந்திரேஷனெ எனகெ
பந்துவாகி பளகவாகி சிந்துஷயனனெ எனகெ
ஹிந்தாகி முந்தாகி முகுந்தனெ எனகெ
ஸ்வாமியாகி ப்ரேமியாகி ராமசந்த்ரனெ எனகெ
குருவாகி தெய்வவாகி தேவோத்தமனெ எனகெ
வித்யெயாகி புத்தியாகி வித்யாபதியெ எனகெ
திக்காகி தெசெயாகி ரக்தசாந்தக எனகெ
இஹவாகி பரவாகி ஸ்ரீகிருஷ்ண நம்ம பொரெவ || -- ஸ்ரீவியாசராஜர்

ஸ்ரீஹரியே அனைத்துமானவர் என்று புரந்தரதாசர் சொல்வது இப்படி.

நீனில்லத ஜனவில்ல, நீனில்லதெ கதியில்ல.
நின்னந்த தந்தெ எனகுண்டு நினகில்ல
நின்னந்த தாயி எனகுண்டு நினகில்ல
நின்னந்த தொரெயொப்ப எனகுண்டு நினகில்ல
நீனே பரதேசி நானே ஸ்வதேசி
நின்ன அரஸி லக்ஷ்மி எனகெ தாயியுண்டு
எனகித்த தாயி தந்தெ நினக்யாரு
தோரோ புரந்தரவிட்டலா || -- ஸ்ரீபுரந்தரதாசர்

தினமும் அனைவரும் சொல்லவேண்டிய ஸ்தோத்திரம்:

த்வமேவ மாதா ச பிதா த்வமேவ | த்வமேவ பந்துஸ்ச சகா த்வமேவ |
த்வமேவ வித்யா த்ரவிணம் த்வமேவ | த்வமேவ சர்வம் மம தேவதேவ ||

தாயி தந்தெயின்ன குரு தெய்வ நீனே கிருஷ்ண |
பாஹி பஞ்சாக்ஷர பரம புண்ய நீனே || -- ஸ்ரீபுரந்தரதாசர்

***



தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

ஸ்ரீஜகன்னாததாசரின் கிருதிகளின் சிறப்பு

- டாக்டர் லக்ஷ்மிகாந்த V. மோஹரீர

ஸ்ரீஹரியைக் குறித்து:

வ்யர்த்த1 க2ளெவரேனு கா1லவ ஹே ப்1ராணி நீனு
பார்த1சக2ன விமலவார்தே1
கீ1ர்த்தி1சதே3 கு1வார்தெ1யிந்த3
...
பு1த்ர ஜனனி ஜனக1 வித்த1
க1ர்ம ஜகன்னாதவிட்டல
பாத்1ரக1ர்ம க1ரணக்1ரியா
போ4க்த1னு மித்1ரனெந்த3ரியதே3

இந்தப் பாடலில், வீணாக நேரத்தைக் கழிக்காமல் ஸ்ரீஹரியைப் புகழ்ந்து பாடுங்கள் என்று மக்களை வேண்டுகிறார் தாசர். இதைப் போலவே இன்னொரு பாடலிலும், தாசரின் சமூக நலன் நன்றாக வெளிப்படுகிறது.

மத3-மத்ஸரவ பி3டத3தகா1
விதத சாதனவ மாட3லேனு
...
ஜ்யோதி1ஷ்டோ3ம மாட3லேனு லக்ஷ்ய
ஸ்ரீதுளசி அர்பிசலேனு
பூ4த1த3யவு இத்த3ரேனு, ஜக
ந்னாத விட்டலனங்க்ரி பொ1ந்தித்த3வரொளு

ஐந்து பத்திகள் கொண்ட இந்தப் பாடலில், நம் மனதில் நிரம்பியிருக்கும் அரி-ஷட்வர்கங்களை நீக்கி, நாம் ஜகன்னாதவிட்டலனை சேரவேண்டும் என்கிற கருத்தினைச் சொல்கிறார்.

ரங்க3 நின்ன கொ1ண்டா3டு3வ மங்களாத்மர
சங்க சுக இத்து கா1யோ க1ருணா சாக3ர |

இந்தப் பாடல் மிகவும் புகழ் பெற்றது. அனைவருக்கும் பிடித்தமானது. ‘எந்தாதோ, ஸ்ரீவைகுண்டவெந்ததோ’, ‘தாசோஹம் தவ தாசோஹம்’ ‘பிடியன்னு கைய’ என்று பல பாடல்களையும் இங்கே நினைவில் கொள்ளலாம்.

சிரிரமண த1வசரண தொ3ரகு1வுது3 ஹ்யாங்கி3ன்ன

பரமபாபிஷ்ட நானு

தன்னுடைய ஒவ்வொரு தவறினையும் தாசர் ஸ்ரீஹரியின் முன்வைத்து வேண்டுவது, இந்தப் பாடலின் சிறப்பு. சுய-அனுதாபத்தினால் இந்தப் பாடலை இயற்றியிருக்கிறார். இந்தப் பாடலின் இறுதியில்:

வித்த1 வித்த1வர பென்ஹித்து1 தூ3த1ர க3ளிஸி
குத்தி1கெய நா கொ1ல்லிதெ3 |
ஹத்து1 ஜனரென்ஹிணகெ3 நித்ய க1ல்ஹொடெயுதி1ரெ
ம்ருத்1யு தே3வதெ1யெனிஸிதெ3 பிடதெ3 ||

என்று தன்னுடைய கருத்தைச் சொல்வதற்கு தாசர் தயங்குவதேயில்லை.

‘ஸ்ரீஜகன்னாததாசரின் பாடல்களில் சுயபரிசோதனை’ என்னும் கட்டுரையில் திரு K.ஹயவதன புராணிகர் அவர்கள் இந்தப் பாடலைக் குறித்து எழுதியிருக்கிறார். சம்சார வாழ்க்கையைத் துறந்து பக்தி மார்க்கத்தில் சென்றபிறகு, அவர் மனதில் இருந்த குழப்பங்களைப் பற்றி தெளிவாக எழுதியிருக்கிறார் என்கிறார். இவை பிற சாமான்ய மக்களுக்கு அவர் விடுக்கும் ஒரு எச்சரிக்கை. சாதகர்கள் இவற்றைப் படித்துப் பார்த்து, தாம் செய்து வரும் தவறுகளை எண்ணி தமக்குத் தாமே விமர்சித்துக் கொள்ளவேண்டும். இதுபோல சுயபரிசோதனை செய்துகொள்வது ஹரிதாசர்களில் ஒரு சம்பிரதாயமாகவே ஆகியிருக்கிறது என்கிறார் ஆசிரியர்.

‘தாசோஹம் தவ தாசோஹம்’ என்னும் பாடலில் தாஸ்ய-பக்தியை வெளிக்காட்டியிருக்கிறார். ‘நின்ன சங்கல்பானுசார மாடோ என்ன சாகுவ தொரெயே மான்ய மானத நீனு’ என்னும் பாடலில், நவ வித பக்தியில் ஒன்றான ஆத்ம நிவேதனம் என்னும் விதத்தைக் குறித்து பாடியுள்ளார். ஐந்து வித பாவங்களில் ஒன்றான தாஸ்ய-பாவத்திற்கு இந்தப் பின்வரும் பாடல் சரியான விளக்கமாக இருக்கிறது.

தாசதாசர தாசனெந்து பி3டதே3
நீ சலஹோ என்னனிமது நின்ன
நா சேவிசுவெ க்ருபாஸிந்து எம்மனு
தாசிசதி3ரனிமித்த1 பந்து3

என்னும் பாடலில், ஸ்ரீஹரியின் அருளுக்காக ஏங்கிப் பாடியிருப்பதைக் காணலாம். டாக்டர்.T.N. நாகரத்னா அவர்கள், ஸ்ரீஹரியை ஒரு நண்பனாக வரித்து மனமுருகி பாடியிருக்கிறார் தாசர் என்கிறார். 46 பத்திகள் கொண்ட இந்தப் பாடல் ஒரு வெள்ளமாகப் பாய்ந்து வருகிறது என்கிறார்.

நின்ன தாசர தாசனெந்தாஹனோ
அன்னந்த அபராத அனுகால மாடுதிஹ

தாம் ஞானிகளை அவமானம் செய்தது, பிறரைக் கண்டு ஏளனம் செய்தது, தாசர்களை கேலி செய்தது என்று அனைத்து தவறுகளையும் பட்டியலிட்டு ஸ்ரீஹரியிடம் ஒப்படைக்கிறார். அதன்மூலம் தாமும் தாசர் ஆகவேண்டும் என்னும் தன்னுடைய வேண்டுகோளை வைக்கிறார்.

ஸ்ரீநிகேதன பாலயமாம் ஸ்ரீநிகேத[1]ன
...

பன்னகா[3]சலனிவாச ப்ர்ப[1]ன்ன வத்சல
பி[3]ன்னப[1] கே[1]ளு ஜகன்னாதவிட்டலா
த[4]ன்யன மாடோ ஷரண்ய ஷரணன

என்று வேண்டுகிறார்.

ராகவேந்திர ஸ்வாமிகளைக் குறித்து
யாகே[1] மூக[1]னாத்யோ குருவே நின்யாகே[1] மூக[1]னாத்யோ
லோகபாலக என்ன ஸாகு[1]வராரய்யா ஸ்ரீகர ராகவேந்திர

என்று தன்னுடைய அடிமனதில் இருப்பதை வெளிக்காட்டியிருக்கிறார். இந்தப் பாடலில் இறுதியில்:

நாத[2]னு நீ அனாத[2]னு நானய்யா
பாதகஹர ஜகன்னாதவிட்டலராயா
என்று என்னைப் போன்ற அநாதையைக் காப்பாற்றுபவன் நீயே என்று வேண்டியிருப்பதைப் பார்க்கலாம். ஸ்ரீஜகன்னாததாசர் இயற்றியிருக்கும் பாடல்களில் இருக்கும் அடிநாதத்தைக் கண்ட நாம், அடுத்து அவரின் சில சுளாதிகளைப் பற்றி பார்க்கலாம்.

துரிதவன குடாரி:

ஒருமுறை ஜகன்னாததாசர் தனது பயணத்தில் இருந்தார். வழியில் ஒரு வறிய பிராமணன் அவருடன் சேர்ந்து கொண்டார். தாசர் அவனை விசாரித்தபோது, ஏழ்மையில் இருப்பதையெல்லாம் இழந்து, மனைவி மக்களைவிட்டுப் பிரிந்து பொருள் தேடி வருகிறேன் என்றான். இந்த ஏழ்மையானது உனது வினைப்பயன் என்ற தாசர், அவனிடமிருந்த ஒரு தட்டினை விற்று, அதிலிருந்து வந்த பணத்தில் பானகம் செய்து, பிராமணர்களுக்குக் கொடுத்து, பின் துரிதவன குடாரி என்னும் சுளாதியை இயற்றி, இதை நீ 48 நாட்கள் படி. உனது விருப்பம் நிறைவேறும் என்றார். இந்த சுளாதியை, தாசரின் ஆசிர்வாதம் என்றே நினைத்த அந்த பிராமணன், அதை ஒருமனதுடன் படித்தான். அதனால், அருகில் இருந்த சுரபுர கிராமத்தில் ஒரு நல்ல வேலை கிடைத்து அதன் மூலம் முன்னேறினான்.

இந்த சுளாதியைக் குறித்து – இதில் நாம் வேண்டியதை நிறைவேற்றும் ஸ்ரீஹரியை மகிமையை கொண்டாடியிருக்கிறார். அனைத்து பிரச்னைகளையும் தீர்க்கவல்லவன் அவன். பிறப்பு இறப்புகளை நீக்குபவன். நினைத்த மாத்திரத்தில் பக்தர்களைக் காப்பாற்றும் கருணாசாலி. பக்தர்களிடம் வசிப்பவன். அனைத்து துஷ்டர்களையும் கொன்று, பக்தர்களின் மன விருப்பத்தை நிறைவேற்றுபவன். இதற்கு சாட்சி

பிரகலாதன், த்ரௌபதி, அஜமிளன் ஆகியோர். குழந்தையின் அழுகையை தாயானவள் எப்படி கண்டுகொள்கிறாளோ, அதுபோல பக்தர்களின் வேண்டுகோளினை ஸ்ரீஹரி ஏற்கிறான்.

'வரதராஜஷோபித' மற்றும் 'சுபத சுந்தரகாய' என்னும் வேறு இரு சுளாதிகளையும் ஜகன்னாததாசர் இயற்றியிருக்கிறார். டாக்டர். ஷீலாதாசர் 'இந்த மூன்று சுளாதிகளிலும் ஸ்ரீஹரியின் நற்குணங்கள், மகிமைகள், லீலைகள், சர்வ வியாப்தி, சர்வ ஸ்வதந்திர, தோஷங்கள் அற்ற தன்மை, பக்தர்களைக் காப்பாற்றுபவன் என அனைத்து சிறப்புகளையும் தாசர் விவரித்துள்ளார் என்கிறார்.

ஜகன்னாததாசர் 'அனகானெந்தொம்மெ' மற்றும் 'ஆருவந்திஸலேனு' என்ற இரு உகாபோகங்களை இயற்றியிருக்கிறார். அனகானெந்தொம்மெ என்னும் உகாபோகத்தில், உலகத்தைப் படைத்த பிரபுவை நமது உற்ற தோழன் என்கிறார். அதுபோலவே, ஆருவந்திஸலேனு என்பதில் கருணாமூர்த்தியான 'ஹே

பரமாத்மனே, நீயே என்னை காப்பாற்று' என்று வேண்டியதையும் பார்க்கலாம்.

**(தொடரும்...)**

**தொடர்**

## கீசக வதெ – சிறு காவியம்

**ஸ்ரீவாதிராஜர்**

**அரஸி நின்னொளு ஸரஸ பே$^3$கெம்ப$^3$**
**புருஷன ஜீவதொ$^3$ரஸெ கொந்தெ$^3$னு**
**ஹருஷதீ$^3$ புரத$^3$ அரஸு எம்மனு**
**இரிஸிகொண்டொ$^3$ந்து$^3$ வருஷவாயிது**

**பெ$^3$ரஸித$^3$ ஸ்னேஹக்கெ விரஸப$^3$ந்தெந்து$^3$**
**ஸரஸிஜாக்ஷியு கரெஸி நின்னொள**
**கி$^3$ரஸதி$^3$ரெ ஹயவத$^3$னன பத$^3$பத்$^3$ம**
**ஸ்மரிஸுத க$^3$தெ$^3$யனு த$^4$ரிஸுவெனு ||23**

அரசி – ஹே திரௌபதியே. நின்னொளு – உன்னுடன். ஸரஸ பேகெந்து – சரசமாட வேண்டும் என்று விரும்பிய. புருஷன – புருஷனை. ஜீவதொரெஸெ – உயிருடன். கொந்தெனு – கொன்றேன். மல்யுத்தம் செய்து கொன்றேன். அவனை ஏமாற்றி கொல்லவில்லை. ஈ புரத அரஸு – இந்த பட்டணத்து அரசன். ஹருஷதி – மகிழ்ச்சியுடன். எத்மனு – நம்மை. (திரௌபதி சஹித பஞ்ச பாண்டவர்களை). இரிஸிகொண்டு – தன்னுடன் வைத்துக் கொண்டு. ஒந்து வருஷவாயிது – ஓராண்டு காலம் ஆயிற்று (அஞ்ஞாத வாஸத்தின் ஓராண்டு காலம் முடிவதற்கு இன்னும் சில நாட்களே உள்ளன).

பெரஸித ஸ்னேஹக்கெ – (இவ்வளவு காலம்) சேர்ந்து இருந்ததால் வளர்ந்த நட்பிற்கு. விரஸபந்தெந்து – (உன் கணவர்கள் என்னும் கந்தர்வர்னால் உண்டாயிற்று என்று கீசகனின் வதையினால்) இப்போது விரோதம் வந்தது. ஸரஸிஜாக்ஷியு – ராணி சுதேஷ்ணை. கரெஸி – உன்னை

அழைத்து. நின்ன ஔகிரஸதிரெ – உன்னை தன் அந்தப்புரத்தில் என்றும் போல வேலைக்கு வைத்துக் கொள்ளாவிட்டால். ஹயவதனன - ஸ்ரீகிருஷ்ணனின் பதபத்ம ஸ்மரிஸுத – பாதகமலங்களை நினைத்தவாறு. கதெயனு – என் கதையை. தரிஸுவெனு – ஏந்துகிறேன்.

கீசகனின் வதம் ஆனபோது, அஞ்ஞாத வாசத்தின் காலம் முடிவதற்கு வெறும் 13 நாட்களே மீதம் இருந்தது. சுதேஷ்ணை, திரௌபதியை உடனடியாக வெளியே அனுப்பினால் (வேலைக்கு வைத்துக் கொள்ளாவிட்டால்), ஸ்ரீபீமசேனன் தன் கதையை ஏந்துவேன் என்று சொல்கிறான். அதாவது, திரௌபதி – இன்னும் 13 நாட்கள் மட்டும் உன்னிடம் இருப்பதற்கு அவகாசம் கொடு, பிறகு என்னை இரு என்றாலும், நான் இருப்பதில்லை – என்று சுதேஷ்ணையிடம் சொல்கிறாள்.

சுதேஷ்ணை அவளின் இஷ்டத்திற்கு எதிராக நடப்பதற்கு (அவளின் கணவர்கள் என்னும் கந்தர்வர்களின்) பயத்தினால் இதற்கு ஒப்புக் கொள்கிறாள். அஞ்ஞாத வாசத்தின் காலத்தை நன்றாக அறிந்த சர்வக்ஞனான ஸ்ரீபீமசேனன், கதையை தரித்து, அந்த காலத்திற்குள் வெளிப்பட்டு, அதன் மூலம் தர்மராஜனின் ஆணைப்படி, திரும்ப அரண்யவாஸ, அஞ்ஞாத வாஸங்களை அனுபவிக்க, துரியோதனனுக்கு அவகாசம் செய்து கொடுப்பவன் அல்ல. சர்வக்ஞளான திரௌபதியும், கதையை ஏந்துவேன் என்று கூறிய பீமசேனனின் பேச்சினைக் கேட்டு, உடனே வெளிப்பட்டு விடுவான் என்று பயப்படுவதைப் போல நடிக்கிறாள்.

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**

***

தொடர்

| | |
|---|---|
| | **கன்னட ஹரிதாசினிகள்** |
| | **சி.ரா.செல்லம்மா (1850-1950)** |

கிருஷ்ணா நதி தீரத்தில் இருக்கும் ஆந்திராவின் சிருகாபல்லி கிராமத்தின் ராமராயர் மற்றும் ஸீதம்ம தம்பதியர், வேலைக்காக கர்னாடகா வந்து தங்கினர். அவருடைய மகளே செல்லம்மா. இந்த விஷயத்தை செல்லம்மா தமது கிருதிகளில் சொல்லியிருக்கிறார். செல்லம்மாவின் வாழ்க்கையைப் பற்றிய அதிக தகவல்கள் கிடைக்கவில்லை. 'செல்லாம்பெ' என்னும் அங்கிதத்தினால் இயற்றப்பட்ட சில கீர்த்தனைகள் மட்டும் கிடைத்துள்ளன. அவற்றின் மூலம் அவரைப் பற்றி சில தகவல்கள் கிடைக்கின்றன.

செல்லம்மா அவர்களின் கிருதிகளில், ருக்மிணி பரிணய, ராஜகளாநிதி, பாரிஜாத அபஹரண, வைராக்ய மஞ்சரி, கீதலஹரி மற்றும் த்வாதஷ மஞ்சரி ஸ்தோத்திரம் – ஆகியவை முக்கியமானவை.

1. ருக்மிணி பரிணய: பாமினி ஷட்பதி நுடியில் உள்ள இந்த கிருதியில் தம் பெற்றோர் மற்றும் இடத்தின் விவரத்தைக் கொடுக்கிறார்.

நீதிகோவித ராமயார்யனு
க்யாதியல்லி லௌகிக விஹாரதி
வேதனாங்கிதவாகி கர்னாடகதியிருதிரலு
ஆதனங்கனெ ஸீதமாம்பெய
பூதகர்ப்பதொளுதிஸி கன்னெய
ரீதியானுதலிர்தளி செல்லாம்பெ தரெயொளகெ ||

'மஹாராணி பாலிகா பாடசாலையில்' செல்லம்மா, தான் ஆசிரியராக பணி புரிந்த விஷயத்தை 'ருக்மிணி பரிணய' என்னும் காவியத்தில் இவ்வாறு கூறுகிறார்.

வினுத மஹிஸூரராணியரஸ
த்வினுத பாலிக பாடஷாலெயொ
ளனுகதோபாத்யாயினி ஸ்ரீ செல்லமாம்பெயாத
மனதொளொதகித ஹருஷதலி நிஜ
ஜனரிகனுகூலிஸுவ தெரதலி
கனதி ரசிஸிதளிந்து ருக்மிணீதேவி பரிணயவ ||
ருக்மிணி பரிணய காவியத்தில் துவக்கத்தில் கணபதியை இவ்வாறு துதிக்கிறார்.

ஸ்ரீகஜானன நின்ன சரணகெ பாகி பேடுவெனெடருகளிக
ட்டாகி நீனெ நிந்து க்ருதியன்னு பேளிபது தொரெயெ
ஆகிஸை பேகிதனு பக்தர வாக்கோசரதேவி ருக்மிணி
நாகவேணிய பரிணயத ஷுபகலிதவஹ க்ருதிய ||

இந்த காவியம் எவ்வித தடைகளும் இன்றி, முழுமை பெறட்டும் என்று பக்தியுடன் கணபதியை பிரார்த்திக்கிறார். அடுத்து, லட்சுமியே பீஷ்மகனின் வீட்டில் ருக்மிணியாக அவதரித்த விஷயத்தை இவ்வாறு சொல்கிறார்.

ஸ்ரீ கமலே நிஜ ஸௌகுமார்யதி
லோகமோஹனவெனிப தேஹத
லா குவலயாதிபன மனெயலி பளெதளனுதினதி

ருக்மிணி திருமண வயதை எட்டியதும், தந்தையான பீஷ்மகன் அவளின் திருமணத்தைப் பற்றி சிந்திக்கும்போது, நாரதர் அதற்கு இவ்வாறு ஒரு தீர்வினைக் கொடுக்கிறார்.

சாரு ஸுந்தரெகிளெயளொப்புவ நீரஜாக்ஷனெ தக்கவனுஸ்ரீ
த்வாரகாபுரதொடெய கிருஷ்ணனெனுத்த பேளிதனு ||

ஆனால், ருக்மிணியின் அண்ணனான ருக்மனுக்கு நாரதரின் இந்த யோசனை பிடிக்கவில்லை. வீரர்களான பல பேரரசர்கள் இருக்கும்போது, இடையனான, வெண்ணெய் திருடுபவனுடன் சம்பந்தம் கொள்வது சரியல்ல என்பது ருக்மனின் அபிப்பிராயம்.

ஹெண்ணெ கெந்தவனாவபதி தரெ |
வெண்ணெ னாண்மரனேக ரிரலா
பெண்ணெகாரன பாந்தவ்யத பகெயொவ்யப்புவுதே நமகே ?

நாரதரின் அபிப்பிராயத்தைப் போல - வெண்ணெய் திருடுபவனான கிருஷ்ணனுக்கு ருக்மிணியைக் கொடுத்து திருமணம் செய்தால், அறிவாளிகள் நம்மை கேலி செய்வார்கள் - என்பது ருக்மனின் வாதம்.

**(18ம் பக்கத்தில் தொடர்கிறது)**

| தொடர் | **ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி** |
| --- | --- |
| | **21. ப்ருஹத் தாரதம்ய ஸந்தி** |

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | | 2 | | 36 | | | | | | 23 |
| 3 | | | | | | 4 | | | | | | | 24 |
| | 5 | | | | | | | 6 | 44 | | | | |
| | | | 7 | | | 8 | | | | 9 | 37 | | 38 |
| | | 25 | | | | 10 | | | | | | | |
| | 39 | | | 26 | | | | | | | | | |
| | | | | | | 27 | 11 | | 45 | | 12 | | |
| | 13 | | | | 46 | | | | 40 | 14 | | | |
| 41 | | | 15 | | | | 16 | | | | | 28 | |
| 17 | | | | | 18 | | | | | | | | 29 |
| | 42 | | | | 30 | | 31 | | | | 32 | 43 | |
| | | 19 | | | | 20 | | | | | | | |
| | | | | 21 | | | | | | | 47 | | 33 |
| | | | 34 | | 22 | | | | | | | | 35 |

| |
|---|
| குறுக்கெழுத்துப் போட்டிகளை வடிவமைத்துக் கொடுப்பவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி |
| குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam @ gmail.com / அல்லது 89044 58276 க்கு வாட்சப் செய்யலாம். |
| **பிப்ரவரி–22 குறுக்கெழுத்துப் போட்டியில் பங்கேற்று புத்தகப் பரிசு பெறுபவர்கள்:** 1. திருமதி. சாந்தி பத்மனாபன், திருநெல்வேலி 2. திருமதி. சந்திரா, கோவை. 3. திருமதி. ஜெயஸ்ரீ ராமசந்திரன், சென்னை. 4. திருமதி. லலிதா, திருநெல்வேலி 5. திருமதி. கீதா ராமசந்திரன், திருநெல்வேலி 6. திருமதி. கிரிஜா ஜயதீர்த்தாச்சார், ஸ்ரீரங்கம். |

**இடமிருந்துவலம்**:_1.ப்ரதான அக்னியின் மூத்த மகன்(4), 2.சந்திரனின் அவதாரம். வாலி புத்திரனும் ஆவான்(5), 3.தவளை(4), 4.விஷ்வே

தேவதைகளில் ஒருவர். உபபாண்டவர்களில் ஒருவரும் கூட(2), 5.சக்கரவர்த்தி(3), 6.மலைமகள்(3), 7.முதலை(3), 8.ஸப்தரிஷிகளில் ஒருவர். ப்ரஹ்ம தேவரின் நாபியில் உதித்தவர்(3), 9.முயல் சின்னத்தை தரித்திருக்கும் சந்திரன்(4), 10.வேடன்(3), 11.மங்கள ஸ்வரூப ருத்ரன்(4), 12.வயிறு(3), 13.புருஷ நாமக ப்ரஹ்மனின் மனைவி. ஸ்ருஷ்டிக்கு காரணமான ப்ரக்ருதி(4), 14.ஸ்வர்காதிபதி இந்திரன்(3), 15.உத்தம மன்வந்தரத்தில் இந்திர பதவியில் இருந்த ரூபம். யமனின் அவதாரங்களில் ஒன்று(5), 16.தைர்யம்(3), 17.இரண்டு(3), 18.பிறப்பது(4), 19.குறைந்தவர்கள்(3), 20.சூரியனின் அவதாரங்களில் ஒன்று. கொடை வள்ளலும் கூட. கலைந்துள்ளது.(4). 21.ப்ரஹஸ் பத்யாசாரியர்ன் அவதாரம். க்ருஷ்ணனுக்கு ப்ரியமானவன்(5), 22.தங்கம்(3).

**வலமிருந்துஇடம்:** 23.சூரியனின் அவதாரம். வாலியின் தம்பி(5), 24.யமதூதர்கள்(4), 25.பயங்கர மானவன்(3), 26.வாயு தேவரின் பெயர் . தேஹாபிமானம் அற்றவர் என்று பொருள்(4), 27.க்ஞானம்(4), 28.பூமி(2), 29.வடக்கு திக்கிற்கு அதிபதி(4), 30.துளஸி. லக்ஷ்மியின் ஆவேஸம் அதிகம்.(5), 31.மன்மத குமாரன் அனிருத்தன் என்று பொருள்(3), 32.பாடுபவன்(3), 33.இந்திரன். கலைந்துள்ளது.(3), 34.யமபுத்ரன். அர்ஜுனனிடம் இவரின் அம்ஸம் இருந்தது.(3), 35.விவஸ்வான் என்ற சூரியனின் மனைவி(3).

**மேலிருந்துகீழ்:** 1.வேதவ்யாஸர். வேறு பெயர்(5), 2.ஸ்ருஷ்டி செய்வதற்காக ஸ்ரீபரமாத்வாவை ஸ்தோஸ்தரம் செய்த ரூபம்(5), 9.கருட சேஷ தேவர்களின் ஜனனி(5), 31.வாமானா வதாரம்(4), 36.வருண புத்ரி, ஸமுத்ர மதன காலத்தில் பிறந்தவள்(5), 37.லக்ஷியம்(2), 38.நீல கண்டன்(5), 39.பூர்ண ப்ரக்ஞர்(6), 40.அதிதியின் புத்திரர்கள். பன்னிரண்டு பேர்(7), 41.ப்ரீயமானவள்(3), 42.பகலுக்கு அபிமானி(3), 43.வடபத்ரரூபம்(4).

**கீழிருந்துமேல்:** 16.ஸ்வர்க்க லோக சபை(4), 26.மலைப் பாம்பு(4), 33.அக்னி தேவனின் புத்திரர்களில் ஒருவர்(2), 34.தாமரையில் பிறந்த ப்ரஹ்மா(5), 7.இருட்டு(4), 41.வைத்தியர்(3), 44.ஸ்ரீராமனின் இரட்டைகுழந்தைகளில் ஒருவர்(3), 45.ஏகாதஸ ருத்ரர்களில் ஸ்ரேஷ்டமானவன்(3), 46.பூதேவி ரூபம்(4), 47.யுத்தத்தில் முதன்மையானவன்(5).

**(15ம் பக்கத்திலிருந்து தொடர்கிறது)**

தந்தை மற்றும் அண்ணனின் அபிப்பிராயங்களால் கவலைப்பட்ட ருக்மிணி, ஸ்ரீகிருஷ்ணனுக்கு ஒரு கடிதம் எழுதி, தம் குலகுரு மூலமாக எழுதி அனுப்புகிறாள்.

1. தப்பிதரெ ஸிரியாணெ கேளெய் | இப்புதினைதாரு தினகளு
தப்பதென்னனு வரிஸு தேவகீதேவி ஸுகுமாரா

2. ஸப்பெயெந்தெனுதென்ன மாதிகெ தப்பினடெதரெ நானு தரெயொள
கிப்ப பரி ஸடெயெந்து நுடிதளு தேவி ருக்மிணியு

காவியத்தின் இறுதி, ருக்மிணி கல்யாணத்துடன் முடிவு பெறுகிறது.

ஸாஹஸிகராதகில ராஜ ஸமூஹதலி முன்னடெது கிருஷ்ணனு
மோஹனாங்கியன்னெத்தி கொண்டோடிதனு நிஜபுரகெ
கடுரபஸதிந்தெத்தி ஸதியனு | ஒடனெ ஹாரித வைனதேயன
நுடிஸி நிஜவிஜயாங்க ஷங்கவனொத்திதனு ஷௌரி ||

பரம வீரர்களான பல அரசர்கள் முன்னிலையிலேயே, ஸ்ரீகிருஷ்ணன் ருக்மிணியை அபகரித்து துவாரகைக்கு சென்று, தன் சங்கினை ஊதுகிறான். பிறகு துவாரகையில் கிருஷ்ண ருக்மிணியரின் திருமணம் சிறப்புடன் நடைபெறுகிறது. 5 அத்தியாயங்களைக் கொண்ட இந்த ருக்மிணி பரிணய காவியம், மிகவும் அற்புதமான வர்ணனைகளைக் கொண்டுள்ளது. சுப முடிவையும் கொண்டுள்ளது.

அடுத்து, ஹளெ-கன்னட காவிய ரூபத்தில் இருக்கும் 'பாரிஜாத அபஹரண' ஒரு நாடக வடிவில் உள்ளது. சம்பிரதாயத்தைப் போல முதலில் ஸ்ரீஷ ஸ்துதி, நாந்தி பத்ய, நடிகர்களின் பிரவேசம், விஷயத்தைப் பற்றிய குறிப்புகள் என வரிசையாக வருகிறது.

ஸ்ரீஷனே பாஹி வாகீஷனுத சரித்ரனே
ஈஷவந்த்யனே கலாதீஷனே ஸுரேஷனெ
ஷ்ருங்காராஹார ஸர்வமங்களா ஸஹோதரா
அங்கஜபவ ஜனக விஹங்கம புஜங்கஷயன

ஸ்ரீஷனின் ஸ்துதி உடன் துவங்கும் இந்த நாடகத்தின் கதை படிப்படியாக வளர்கிறது. கிருஷ்ணனின் தூதர்கள் பாரிஜாதத்தைக் கேட்க, தேவேந்திரனின் அமராவதியின் தோட்டத்திற்கு சென்றபோது,

ஸ்ரீகிருஷ்ணனின் தூதருக்கும் தேவேந்திரனுக்கும் நடந்த பேச்சுவார்த்தை சுவாரசியமாக இருக்கிறது. 'பாரிஜாத அபஹரண' நாடகத்தின் இறுதியில் செல்லம்மா, மக்கள் விரும்பியவாறு தான் கன்னட மொழியில் இந்த கதையை இயற்றியிருக்கிறேன் என்று சொல்லி முடிக்கிறார்.

கந்த பத்ய

ஸுருசிரமாதீ கதெயனு ஸுதியரொலிவவோல் |
ஸரஸாக்யாக்ருதககளிம் தரணியொளீ செல்லமாம்பெ ரசிஸிதளெதனம் |
கர்ணாடக பாஷெயொளித வர்ணபத க்ரமதெ கெய்தெ நாடக ரசனா |
கர்னன யோக்யமிதப்போல் நாண்ணுடியம் ஸகல ராகனய ஸூசனெயிம் ||

இந்த நாடகத்தில் வரும் பத்யங்களுக்கு அங்கங்கு ராகங்களின் பெயர்களையும் சொல்லியிருப்பது ஒரு சிறப்பான விஷயம். பாரிஜாத அபஹரண நாடகத்தின் கடைசியில் செல்லம்மா

ஸ்துதி பரியுவுது கிருஷ்ணா உத்தம
நதி யாவ தாருணி யொளொப்புவதோ
பத்தனதல்ல வாகியு பொத்திஹுதா சிருகுபல்லி
எம்புவ பெஸரிம் பூபதி ராமார்யனெம்ப
புண்யாத்மககாம் ஈ பொடவியோள் புத்ரிய ரூபதி
ஜனிஸிதெனு ஸீதாயாம்பெய பஸிரோள்

என்று தம் பெற்றோரின் அறிமுகத்தையும், பிறந்த இடத்தையும் குறிப்பிடுகிறார்.

அடுத்து, ராஜகளாநிதி கிருதி, க்ருஹிணி தர்ம, பிறப்பு, சமூக, ஆத்யாத்ம, பாந்தவ்ய, ராஜவ்ருத்தி முதலான 16 விஷயங்களுடன் சேர்ந்து விளக்குவதாக இருக்கிறது.

ஆக மொத்தம், செல்லம்மா அவர்களின் கிருதிகள் அவருடைய சாகித்ய சக்தி, சங்கித திறன், வர்ணனை திறமை மற்றும் கற்பனை சக்திகளுக்கு சிறந்த எடுத்துக்காட்டாக உள்ளது. செல்லம்மாவின் மற்ற கிருதிகள் கிடைக்கவில்லை. ஆனால், இதுவரை கிடைத்திருக்கும் இவருடைய கிருதிகள் நடு கன்னடத்தில், நல்ல

எதுகை மோனை சந்தத்துடன், வித்வத் நிரம்பியும், அற்புதமாகவும் இருக்கிறது என தெரிய வருகிறது.

இவரது கிருதிகள் ஹரிதாச சாகித்யத்திற்கு அபூர்வமான பரிசாக இருக்கின்றன. செல்லம்மாவுக்கு இத்தகைய பரிசினைக் கொடுத்ததற்காக பக்தி பூர்வகமான வணக்கங்களை செலுத்துவோம்.

***

தொடர்

## ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர்

### 1. லய கீதை

டாக்டர். ஜயலட்சுமி மங்களாமூர்த்தி

துர்காதேவியரின் பிரார்த்தனை அல்லாது, ஜீவர்களின் ஸ்வரூப யோக்யதைக்கேற்ப அவருடைய அனாதி கர்மங்கள் நித்யமாக இருப்பவை. கருணாளுவான ஸ்ரீஹரி, ஸாதனையை செய்ய வைப்பவன். கர்ம ஷப்த வாச்யன், கர்ம ப்ரேரகன், விகர்ம நாஷகனான ஸ்ரீஹரி, கர்மத்திற்கு பிம்பம் எனப்படுபவன். மேலே பார்த்த விஷயங்கள் அனைத்தும், ஸ்ருஷ்டி சிந்தனையின் விஷயங்கள் ஆகும். இவற்றை சிந்தித்துக் கொண்டு, பிறகு லயசிந்தனையை செய்ய வேண்டும்.

ஸ்ருஷ்டி சிந்தனை – லய சிந்தனைகள் அற்புதமான வைஞானிக விஷயமாக இருக்கின்றன. பரஸ்பரம் ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டவை. ஸ்ரீபிரசன்ன வெங்கடதாசர், கீர்த்தனையின் துவக்கத்தில் இரு முக்கிய விஷயங்களை சொல்கிறார். பரமாத்மன் ஒருவனே ஸ்ருஷ்டியை மற்றும் லயத்தை செய்யத்தக்கவன். இது தன் பக்தர்களுக்கு அவன் காட்டும் கருணை.

பிரபஞ்சத்தின் சம்பந்தங்கள், அன்பு, அபிமானம், அந்த:கரணம் இருந்தால், அவை இந்த உலகின் பொருட்களையும், தன, தான்யாதிகளை, அந்த வஸ்து சம்பந்தமான ஞானத்தை கொடுக்கலாம். ஆனால், பரமாத்மன் ஒருவனே கர்மங்களை பரிகரித்து, சாதனை செய்வித்து, சத்கதியை கொடுக்கத் தக்கவன்.

ஸாதகனுக்கு வரும் சந்தேகம், பயம், அஞ்ஞானங்களை பரிகரிப்பவனும் அவனே என்று சொல்கிறார்.

லய சதுஷ்டய ரஹிதனாத ஶ்ரீஹரி ப்ரீதி
லயத பயகெலிது முக்திய பதவிடுவ ரீதி
லய ப்ரகாரவ திளிவ ஸுஜனசிந்தன கீதெ
நயதி சிந்திஸலு ஸகதீ ஹரே ஹரே ||ப

மோட்சத்தை விரும்புபவர்கள், சஜ்ஜனர்கள், ஆகியோர் லய பிரகாரத்தை அறிந்து அனுஸந்தானம் செய்தவாறு ஸாதனைகளை செய்தால், 'ஸுகதி' அடைவார்கள் என்று சொல்லியவாறு, தாசர், பரமாத்மனை லய சதுஷ்டய ரஹிதன் என்று அழைக்கிறார். ஶ்ரீஹரி நான்கு வித லயங்களுக்கும் சிக்குபவன் அல்ல. அவை இவ்வாறு:

1. நித்ய மனித-மான நாட்களில் செய்ய வேண்டிய லய சிந்தனை
2. மனு கல்பங்களில் ஸம்பவிக்கும் லய.
3. பிரம்மதேவரின் தின கல்பங்களில் சம்பவிக்கும் லய.
4. மற்றும் பிரம்மதேவரின் ஒரு மஹாகல்பத்தில் சம்பவிக்கும் லய.

இவ்வாறு ஞானிகள் நான்கு விதமான லய சிந்தனையின் விதங்களை சொல்கின்றனர். இவற்றையே தினபிரளயம் மற்றும் மஹாபிரளயம் என்றும் சொல்வர். சதுர்முக பிரம்மதேவரின் ஒவ்வொரு பகலின் கடைசியிலும் நடப்பது – தின பிரளயம் எனப்படுகிறது. பிரம்மதேவனின் ஆயுளின் கடைசி பகுதியில் நடக்கும் பிரளயம் – மஹா பிரளயம் எனப்படுகிறது. மஹா பிரளயத்தின் சமயத்தில் ஶ்ரீமன் நாராயணன் பூர்வ கல்பத்தில் பிரம்ம மானத்தினால் 50 ஆண்டுகள், புற பிரம்மாண்ட ஸ்ருஷ்டி, 37.5 ஆண்டுகளின் கடைசி நாட்களின் பகல் சமயத்தில்:

1. அந்த பகலிலிருந்து துவங்கி, ஒரு 100 ஆண்டுகள், மனுஷ்ய மானத்தினால் அனாவ்ருஷ்டி மற்றும் சர்வ பிராணி க்ஷயம் துவங்கும்.

2. மனித மானத்தின் 100 ஆண்டுகள் வரை, த்வாதச ஆதித்யர்கள் மிகவும் பயங்கரமான தேஜஸ்ஸினால் தகிக்க, பாதாளத்தில் இருந்த சேஷமுகத்திலிருந்து, ஸம்வ்ருதாக்னி வெளிப்பட்டு அனைத்தையும் தகிக்கத் துவங்கும்.

3. மனித மானத்தின் 100 ஆண்டுகள் வரை சண்டவாயு வீசியவாறு லயத்தை கொடுக்கும்.

4. மனித மானத்தின் 100 அண்டுகள் வரை, சம்வ்ருத மேகங்கள் மூலம் மழை வரத் துவங்கி, அனைத்தும் ஜலமயம் ஆகும்.

5. பஞ்சமஹா பூதங்கள், ப்ருத்வி முதலாக, அவ்யக்த தத்வத்தின் வரை (24 தத்வங்கள்) அனைத்தும் ஒன்றில் ஒன்று லயம் அடையும்.

6. அனைத்து தேவதைகளும், கருட, சேஷ மார்க்கத்தினால் லயம் அடைவர்.

7. பிரம்மசர்மஷிர; பட்டீ: ருத்ரேனூபுர: – என்னும் வசனத்திற்கேற்ப, ஶ்ரீநரசிம்மதேவர் பிரம்மதேவரின் சரீரத்தை தொப்பியாக ஆக்கிக்கொண்டு, ருத்ரதேவரின் சரீரத்தை கொலுஸாக ஆக்கிக் கொண்டு, சில காலம் நர்த்தனம் ஆடி, பிரம்மாண்டத்தை லயம் செய்கிறார். அவ்யாக்ருதத்தின் விரஜையில், பிரம்மாதிகள் ஸ்னானம் செய்வர். கர்மஜ தேவதைகளிலிருந்து துவங்கி, த்ருண ஜீவ வரை – முக்தியோக்ய ஜீவர்களுக்கு, பிரம்மாண்ட கதமான விரஜையில் ஸ்னான, லிங்க பங்கம் செய்து, உதரத்தில் வைத்துக்கொண்டு படுப்பான்.

ஶ்ரீலட்சுமிதேவியின் ரூபங்கள் ஒன்றில் ஒன்று ஐக்ய அடைந்தவாறு, ஶ்ரீரூப ஜலமாகி, பூதேவி வடபத்ரம் ஆகி, ஶ்ரீஹரி சிசுவாகி, துர்காதேவி இருட்டு ஆக, ஶ்ரீஹரி, யோக நித்திரை செய்கிறான்.

இவை அல்லாமல், யுகாந்தரங்களிலும், மனு கல்பங்களின் அந்த்யங்களிலும் நடக்கும் பிரளயங்களை அவாந்தர பிரளயங்கள் என்று சொல்கிறார்கள்.

அத்யாத்ம மாலா மற்றும் பிரகாஷ சம்ஹிதையில் சொல்லியிருப்பதைப் போல, தினமும் ஸ்ருஷ்டி சிந்தனையை, லய சிந்தனையை அனுசந்தானம் செய்வதால், ஶ்ரீஹரி, ஜன்ம மரணங்களின் பந்தனத்தை விடுவிக்கிறான் எனப்படுகிறது.
கருட மார்க்க : லயசிந்தனை:

1. வர்ணாசிரமத்தை பின்பற்றிய மனுஷ்யோத்தமர், நிரருதியை அடைகின்றனர். நிரருதி, அனைத்து பித்ருகளுடன், ப்ருது முதலான 100 ராஜர்களுடன், வைவஸ்வதாதி 12 மனுகளுடன் யமதர்மனிடம் சேர்கிறான்.

* யமதர்மன் ஸ்வாயம்புவ மனுவில் பிரவேசிக்கிறான்.
* ஸ்வாயம்புவ மனு, ஷதரூபாதேவியுடன் இந்திரதேவரில் பிரவேசம் (இந்திர மார்க்க) – இது முதலாவது.

2. 49 மருத்கணர்கள், பிரவாஹ வாயுவை சேர்ந்து அஹங்காரிக பிராணனில் பிரவேசிப்பார். அஹங்காரிக பிராண, இந்திரனில், இது இரண்டாம் மார்க்கம்.

3. ஸாத்ய கணங்களுடன் கணேஷன் ஆகாஷத்தில் இருக்கிறான்.
* மருத்கண, ருபுகண ஆகியோர் ப்ருத்வியை அடைகிறார்கள்.
* அக்னி புத்ரர் மற்றும் அனைத்து தேவதைகளும், அக்னியில் லயம் அடைகின்றனர். அக்னி ஆதித்யனில் லயம் அடைகிறான்.
* ஆகாஷ, ப்ருத்வி, ஆதித்யர், ப்ருஹஸ்பத்யாசார்யரில் லயம் அடைகிறார்கள்.
* ப்ருஹஸ்பத்யாசார்யர் தாராதேவி மூலமாக இந்திரதேவரில் லயம். இது மூன்றாம் மார்க்கம்.

4. அனைத்து ஷதோனஷதகோடி ரிஷிகள், 80 பேர் ரிஷிகள், மரீச்யாதி சப்த ரிஷிகள், ப்ருகு ரிஷிகள், நாரதர், தேவ ரிஷிகள், தக்ஷ பிரஜேஷ்வரனில் லயம் அடைகிறார்கள்.

* தக்ஷ பிரஜேஷ்வரன், ப்ரஸூதியுடன் சேர்ந்து, இந்திரதேவரில் லயம் அடைகிறார்கள். இது நான்காம் மார்க்கம்.

5. இந்திரதேவர் ஷசிதேவியுடன் சேர்ந்து ஸௌபர்ணிதேவியரில், ஜாம்புவதி ஆகியோருடன் லய அடைவார்.

6. ஸௌபர்ணிதேவியர் கருடதேவரில் லய அடைகிறார். இது கருட மார்க்க எனப்படுகிறது.

சேஷ மார்க்க: லய சிந்தனை:

1. இதில் ஒரே மார்க்க. மனுஷ்ய கந்தர்வர்கள் தேவ கந்தர்வர்களில், தேவ கந்தர்வர், அஜானஜ தேவதைகளில் என இவர்கள் குபேரனை அடைகிறார்கள்.
2. இவர்களுடன் குபேரன், வருணனின் அதீனன் ஆகிறான்.
3. வருணன் சந்திரனில் நுழைகிறான்.
4. சந்திரன், விஷ்வக்ஸேன ஜயாதிகளுடன் சேர்ந்து, அனிருத்தனில் நுழைகிறான்.
5. அனிருத்தன் ஸனகாதிகளுடன் சேர்ந்து காமதேவரின் அதீனன் ஆகிறான்.
6. காமதேவர் ரதிதேவியுடன் சேர்ந்து, வாருணிதேவியில் லயம் அடைகிறான். வாருணிதேவி, சேஷதேவரில் லயம் அடைகிறாள். இது சேஷ மார்க்க எனப்படுகிறது.

1. இவ்வாறு சேஷ கருடர் இருவரும் சரஸ்வதி தேவியில் லயம்.
2. சரஸ்வதி தேவி பிரம்மதேவரில்
3. பிரம்மதேவர் தேஜோமயரான லட்சுமிதேவியில்
4. ஸ்ரீலட்சுமிதேவி, ஸ்ரீஹரியின் அதி ஸாமீப்யத்தை அடைந்து லயம் அடைகிறார். இவ்வாறு ஸ்ரீஹரியின் வரைக்கும் சிந்தித்தவாறு, அனைத்து ஜாக்ரத நிலையைக் கொடுக்கக்கூடிய, வலது கண்ணில் இருக்கக்கூடிய விஷ்வனில் விஷ்வன், ஸ்வப்ன ப்ரேரகனான, கழுத்தில் இருக்கக்கூடிய தைஜஸனில் தைஜஸன், சுஷுப்தி (சுக) பிரதனான இதயத்தில் இருக்கக்கூடிய ஜீவாந்தர்யாமி (ப்ராக்ஞன்) ஹரியான பிம்பனில் ரூபங்களை ஐக்ய சிந்தனை செய்ய வேண்டும் என்று தாசர் சொல்கிறார்.

**(தொடரும்...)**

ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப், அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்து சொல்லலாம்.

வங்கிக் கணக்கில் சந்தா / புத்தகத்திற்காக பணம் செலுத்தினால், மறக்காமல் உங்கள் முகவரியை 89044 58276 எண்ணுக்கு வாட்சப் / SMS அல்லது haridasa.vijayam@gmail.comக்கு மின்னஞ்சல் அனுப்பவும்

தொடர்

**கன்னட கிரந்தங்கள் அறிமுகம்**

**கிருஷ்ண பால லீலெ - ஸ்ரீவாதிராஜர்**

பிறகு உத்தரார்த்தத்தில் ஸ்ரீ வாதிராஜர், "நந்தனா பாலிஸீத கந்த பாத பஜகர, வந்திஸி கொண்டாடுவே ஸ்ரீ ஹரிய சரிதெய || மங்கள மூரூதி மஹிமன ஒந்தொந்து குணகள, அம்புதி ஔகெள முழுகி பொகளலாரெவு ||" என ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் சரித்திரத்தை, ஒவ்வொரு குணங்களையும் புகழ்வதாகக் குறிப்பிட்டுத் தொடங்குகிறார்.

ஸ்ரீ வாதிராஜர் இந்த உத்தரார்த்தப் பகுதியில், 511 பத்யங்களில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா சாந்தீபனி ஆசாரியரின் ஆசிரமத்தில் குருகுல வாசம் பயின்றது, குருவின் மகனை யமலோகம் வரை சென்று மீட்டு வந்து குரு தக்ஷிணையாக அளித்தது, உத்தவனை கோகுலத்திற்கு அனுப்பி நலம் விசாரித்தது, ஜராஸந்தனை போரிலே வென்றது, ஷ்ருகால வாஸுதேவன், காலயவணன் முதலானவர்களை அழித்தது, ருக்மணியை மணந்தது, ஸத்ராஜித்தின் ஸ்யமந்தக மணியை மீட்டு ஜாம்பவானின் மகள் ஜாம்பவதியை மணந்தது, ஸத்யபாமாவை விவாஹம் புரிந்தது, நீளா, பத்ரா, மித்ரவிந்தா, காளிந்தி முதலானவர்களை மணந்தது, த்ரௌபதி ஸ்வயம்வரத்திற்குப் புறப்பட்ட பாண்டவர்களில், அர்ச்சுனனுக்கு தேவகந்தர்வன் விஸேஷமான அஸ்திரத்தை உபதேஸம் அளித்தது, பாண்டவர்கள் அக்ஷய பாத்திரம் பெற்று வனவாஸம் புரிய ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அங்கு அவர்களுக்கு ரக்ஷணை புரிந்தது, அர்ச்சுனன் ஸுபத்ரா விவாஹம், காண்டவ வன தஹனம், பாரிஜாதத்தை (வ்ருக்ஷத்தை) ஸத்யபாமாவிற்கு அளித்தது, நரகாஸுர வதம், நரகாஸுரனால் சிறையிலடைக்கப்பட்ட 16108 கன்னியரை விடுவித்து விவாஹம் புரிந்தது, ஸ்ரீ கிருஷ்ண ருக்மணியரின் ப்ரேம கலஹம், த்வாரகையில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா 16108 பத்னியருடன் நடத்தும் தாம்பத்திய வாழ்க்கையைக் கண்டு நாரதர் புகழ்தல், பாண்டவர்களின் ராஜஸூய யாகம், யாகத்தில் ஸ்ரீ கிருஷ்ணருக்கு செய்த அக்ர பூஜை, ஜராஸந்தனின் வதம், ஸாம்பன் லக்ஷணா விவாஹம், ப்ரத்யும்னின் விவாஹம், குசேல உபாக்யானம், அனிருத்தன் உஷா விவாஹம், ஸ்ரீ கிருஷ்ணர் புரிந்த அஸ்வமேத யாகம், பிராமண குழந்தைகளை அனந்தாஸனம் வரை சென்று மீட்டு வந்து அர்ச்சுனனை அக்னிப் பிரவேசம் செய்வதில் இருந்து காத்தது, ஸ்ரீ கிருஷ்ண ருக்மணியர்

செய்த தான தர்மம், தேவகி தன் மக்களுக்கு ஸத்கதி அளிக்க செய்த ப்ரார்த்தனை, தாயான தேவகிக்கும், ருக்மணி தேவியருக்கு ஸ்ரீ கிருஷ்ணன் தனது பால லீலைகளை காண்பித்து, அத்தகைய பிரதிமையை செய்து பூஜிப்பதற்காக ருக்மணிக்கு அளித்து, பின்னர் அதே பிரதிமை ஆச்சாரியர் ஸ்ரீ மத்வரால் உடுப்பியிலே பிரதிஷ்டை செய்யப்பட்டு பூஜிக்கப்படும் வரையிலான மூலகதைகள் என எல்லாவற்றையும் விஸ்தாரமாக வர்ணித்துள்ளார்.

மேலும் இதன் பலஸ்ருதியாக, "வாதிராஜரு மாடித பாலலீலே ஹேளி கேளிதவரிகெ ஸாயுஜ்ய முக்தி கொடுவ ஹயவதனனு !! என இந்த உயரிய கிரந்தத்தைப் பாராயணம் செய்பவருக்கும், ஸ்ரவணம் செய்பவருக்கும் ஸாயுஜ்ய முக்தியை ஸ்ரீ ஹயக்ரீவன் அளிக்கிறான் என ஸ்பஷ்டமாக எடுத்துக்கூறி பூர்த்தி செய்கிறார் ஸ்ரீவாதிராஜர்.

இத்தகைய உயரிய க்ரந்தத்தை தினமும் பாராயணம் செய்து, விஸேஷமான அர்த்தங்களைத் தெரிந்து கொண்டு ஸ்ரீவாதிராஜரின் அந்தர்யாமியான ஸ்ரீ ஹயக்ரீவரின் அனுக்ரஹத்திற்குப் பாத்திரராவோமாக !

## கீசக வதெ – ஸ்ரீவாதிராஜர்

ஸ்ரீ மத்வ மத பரம்பரையில் உடுப்பி அஷ்ட மடங்களில் ஸோதே மடத்தின் பீடாதீஸராக அலங்கரித்தவர் ஸ்ரீவாதிராஜ தீர்த்தர். மத்வ ஸித்தாந்தத்தில் வியாஸ ஸாஹித்யம் மற்றும் தாஸ ஸாஹித்யம் என இரண்டுக்குமே தமது பங்களிப்பை அளித்த மஹனீயர். பலதரப்பட்ட காவிய ஸ்தோத்திர டிப்பணி மற்றும் வியாக்கியான கிரந்தங்களை இயற்றியதுடன், கன்னடத்திலும் துளு பாஷையிலும் 'ஹயவதன' முத்ரையிலே பலதரப்பட்ட கிருதிகளையும் ரசனை செய்துள்ளார். ஸ்ரீ வாயு பகவானின் மகிமைகளை அவதார லீலைகளை தம்முடைய கன்னட பதங்களிலே வர்ணித்திருக்கும் ஸ்ரீ வாதிராஜர், ஸ்ரீ வாயு பகவானின் இரண்டாவது அவதாரமான ஸ்ரீ பீமஸேனரின் லீலைகளில் ஒன்றான ஸ்ரீ மஹா பாரத விராட பர்வத்தில் விவரிக்கப்பட்டுள்ள 'கீசக வதெ' கட்டத்தை வர்ணிக்கும் வகையில் கன்னடத்தில் அருளிய கிரந்தமே 'கீசக வதெ' என்பதாகும்.

ஸ்ரீ வாதிராஜ தீர்த்தரின் 'கீசக வதெ' என்பது 23 பத்யங்களில் கன்னடத்தில் அமைந்த கிரந்தம் ஆகும். பொதுவாக மஹாபாரத பிரவசனம் மற்றும் சிரவணம் முதலானவற்றை விராட பர்வத்திலிருந்து ஆரம்பிக்கும் ஸம்பிரதாயம் உள்ளது. குருவின் மூலமாகவே ஹரி பக்தி சித்திக்கும் என்கின்ற வகையில் த்ரைலோக்ய குருவான ஸ்ரீ முக்ய ப்ராணரின் அவதாரமான பீமஸேனரின் பராக்கிரமத்தை வர்ணிக்கும் விராட பர்வத்தில் உள்ள பகுதிகளை ஸ்ரீ வாதிராஜர் மிக எளிதாகக் காவிய ரசத்துடன் பாமரரும் அறியும் வண்ணம் இதனை ரசனை செய்துள்ளார். எவ்விதம் மாற்றான் மனைவியான சீதையை அபகரித்த ராவணன் ஸர்வோத்தமனான ஸ்ரீ ராமனால் மாண்டானோ, அது போல பாரதி தேவியின் அவதாரமான திரௌபதியின் மேல் மோஹம் கொண்ட கீசகன் ஜீவோத்தமரான பீமசேனரால் மாண்டு போனான் என்பதை விளக்கும் வகையில் இந்த 'கீசக வதே' அமைந்துள்ளது.

முதலில் பல்லவி மற்றும் அனுபல்லவி யில் "பீமஸேன காமினியாகலு", "பீமஸேன காமினியாகலு, ப்ரேமத ஸதிய காமிஸிதவன ஜாமராத்ரிகே ஸீளுவெனென்னுத ஸாமஜவரத்ன பாடுதலி" எனத் தொடங்கி த்ரௌபதியின் மேல் மோகம் கொண்ட கீசகனைக் கொல்வதற்காக, பீமஸேனன் இதையே ஸ்ரீ ஹரியின் பூஜை' என்ற அனுஸந்தானத்துடன் கஜேந்திர வரதனைத் துதித்து, ஸ்திரீ வேடம் பூண்டதாக ஸ்ரீவாதிராஜர் வர்ணித்து துவங்குகிறார்.

முதல் பத்யத்தில் யுதிஷ்டிரன் ஹஸ்தினாபுரத்தில் சூதாட்டம் ஆடி, சகுனியின் கபடத்தால் ராஜ்யத்தை இழந்து அர்ஜுனாதிகளுடன் சேர்ந்து ஸ்ரீ கிருஷ்ணரை தியானித்தவாறு 12 ஆண்டுகள் வனவாஸம் செய்து, ஓராண்டு அஞ்ஞாத வாஸத்தை செய்யும் பொருட்டு தமது ஸ்வரூபத்தை மறைத்துக்கொண்டு வேடங்களை தரித்து, விராடனின் தலைநகருக்குச் சென்று (மத்ஸ்ய தேஸம்) யதி வேடத்தில் மரியாதைகளை பெற்றுக் கொண்டு வந்ததையும், அரசனுடன் ராஜ போகங்களை போகித்தவாறு இருந்ததையும் "விஜய முக்யானுஜர ஒடகூடி புஜகஸாயிய பஜிஸித", "ராஜ்ய மத்ஸ்யனொளு போஜனவ மாடுத பூஜிஸி கொம்புது ஸோஜிகவு" எனக் கூறி விளக்குகிறார் ஸ்ரீவாதிராஜர்.

இரண்டாவது பத்யத்தில், பூஜ்யளான திரௌபதி தேவி நகரத்தின் கடைத் தெருவில் வந்து கொண்டிருந்தபோது, விராடனின் பத்னியான ராணி ஸுதேஷ்ணை, அவளின் ரூபத்தைக் கண்டு வியந்து,

மரியாதையுடன் அழைத்து விசாரிக்க, தான் அங்கு வரக் காரணங்களை த்ரௌபதி கூற, பூமியில் இவளுக்குச் சமமான அறிவாளி யாரும் இல்லை என அறிந்து, தனக்கு முடி அலங்காரங்களைச் செய்து சேவை செய்ய தன் அரண்மனைக்கு அழைத்துச் சென்றதை, "நீ எனகெ வேணி ஹாகென்னுத பாணி ஹிடிது கரெதந்தளாக" போன்ற பதங்களினால் விளக்கியுள்ளார் ஸ்ரீவாதிராஜர்.

மூன்றாவது பத்யத்தில் ஸ்ரீ வாதராஜர், திக்விஜயத்திலிருந்து திரும்பிவந்த கீசகன், த்ரௌபதியைக் கண்டு, யாரெனத் தனது அக்காவான ராணி ஸூதேஷ்ணையைக் கேட்க ராணியானவள் தனக்கு தாஸியாக சேவை செய்ய அவளை அழைத்து வந்திருப்பதாகவும், அவளின் அழகை1000 முகம் கொண்ட ஸேஷ தேவனாலும் வர்ணிக்க இயலாது எனவும் கூறி, மேலும் அவள் இங்கு ஓராண்டு காலம் வாஸம் செய்ய இருப்பதாகவும் சொல்லக் கேட்டு, கீசகன் மீசையை முறுக்கிக்கொண்டு அந்த ஸைரந்திரியே தனது போகத்திற்குத் தக்கவள் என மகிழ்ந்ததாக என விவரித்துள்ளார்.

4 முதல் 6 வரையிலான பத்யங்களில், கீசகன் தனது மோகத்தை த்ரௌபதியிடம் வெளிக்காட்டிய விதத்தையும், அதற்கு திரௌபதி எச்சரித்த விதத்தையும் விளக்கும் வகையில் ஸ்ரீ வாதிராஜர், கீசகன் தனது சகோதரியுடன் உள்ள இந்த ஸைரிந்திரியின் முகத்தைக் கண்டால் அதிக குணங்களைக் கொண்டவளைப் போலுள்ளதை அறிந்து, அவள் தன்னைச் சேர்ந்த பிறகு, தன்னை விரும்பும்படியாக செய்வதற்குத் தேவையான செயல்களை செய்வதாகவும் எண்ணி, த்ரௌபதியின் முகத்தை அவன் பார்த்தாலும், கீசகனின் பயங்கர முகத்திற்கு பயந்து (நடித்து) தன் முகத்தை அவனுக்கு காட்டாமல் கம்பீரமாக த்ரௌபதி இருந்ததையும், அப்போது கீசகன் த்ரௌபதியிடம் வெறும் உணவிற்காக தன் அக்காவிற்கு முடி அலங்கார ஸேவை செய்வதை விடுத்து, தன்னுடன் வருமாறு கீழ்த்தரமான வார்த்தைகளைப் பேச, அதற்கு பதிலளிக்கும் வகையில் தன்னைப் போன்ற நல்ல குணம் நிரம்பியவள் அவனுக்கு கிடைக்க மாட்டாள் எனவும், தனது கணவனுக்குத் தெரிய வந்தால், அவனைக் கொன்று அவனது தேகத்தை அனைத்து திக்குக்கும் பலி கொடுப்பார் எனவும் மிரட்டியதை "ரக்கஸ நினகெ தக்குவளே நானு

முக்கண்ணனாதரு லெக்கிஸத பதி கக்கென பந்தரெ திக்கி நின்ன காய திக்கு திக்கிகெ பலி இக்குவரோ" போன்ற பதங்களால் விளக்கி மேலும் த்ரௌபதி கீசகனுக்கு எச்சரிக்கை விடுத்ததைக் கூறும்படியாக, தனது கணவர் கண்டுகொண்டால் அவளின் தலையை கத்தரித்து பந்தாடுவார் எனவும் கூறி, ராணி ஸுதேக்ஷ்ணைக்கும் புத்தி உரைக்கும் விதத்தில் கீசகனுக்கு சரியான புத்தியை கூறும்படியும், அதிகாரத்தினால் பரஸ்த்ரீ விஷயத்தில் நடந்து கொள்ளும் விதத்தைக் கண்டிக்கும்படியும் வினவி, இல்லையேல் தண்டனைக்கு ஆளாகும்படி நேரிடும் எனவும் எச்சரித்து, கீசகனின் வலிமையை நம்பி இருப்பதால் அவனை எச்சரிக்க இயலாது எனக் கூறாமல், துஷ்டனின் சகவாசத்தை விடும்படி ராணிக்கு திரௌபதி புத்தி உரைத்ததையும் "லண்டனிகே புத்தி தண்டிஸி பேளதெ ஹிண்டிகொள்ளதிரு துண்டுமுக" போன்ற பத்யங்களினால் வர்ணித்துள்ளார். (தொடரும்)...

**S.லக்ஷ்மிபதிராஜா, சென்னை**

தொடர்

## ஹரிகதாம்ருதசார மஞ்சரி 360

**By ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர்**

ஆண்டில் வரும் 360 நாட்களுக்கு, நாளுக்கு ஒரு பத்யமாக, ஹரிகதாம்ருதசாரத்திலிருந்து 360 பத்யங்களை தேர்ந்தெடுத்து, அவற்றிற்கு ஒரு சிறு உரையை என் குருவான ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர் (திரு. ஹரதி பிரகலாதாச்சார்ய) எழுதியுள்ளார். அந்த புத்தகத்தின் பெயர் ‘ஹரிகதாம்ருதசார மஞ்சரி’. அந்த கன்னட புத்தகத்தின் தமிழாக்கத்தை இந்த இதழிலிருந்து துவங்கி வரிசையாக பார்ப்போம். பிறகு இது தமிழ்ப் புத்தகமாகவும் வரலாம். என் விரிவான முன்னுரை, குருவின் முன்னுரை ஆகியவை புத்தகமாக வரும்போது, அதில் வரும். தற்போது நேரடியாக 360 பத்யங்களில் தொடங்குவோம்.

ஹரிகதா$^{2}$ம்ருதசார கு$^{3}$ருக$^{3}$ள
கருணதிந்தா$^{3}$பநிது பே$^{1}$ளுவே
பரம ப$^{4}$கவத்$^{3}$ப$^{4}$க்தரித$^{3}$னாத$^{3}$ரதி$^{3}$ கேளுவுது$^{3}$||

1. ஶ்ரீரமணி க1ர க1மல பூஜித
சாருசரண ஸரோஜ பி3ரம்ம ஸ
மீர வாணி ப2ணீந்த்3ர வீந்த்3ர ப4வேந்த்3ர முக2 வினுத |
நீரஜ ப4வாண்டோ3த்3ய ஸ்தி2தி
காரணனே கை1வல்ய தா3யக
நாரஸிம்மனே நமிபே1 க1ருணிபுதெ3மகெ3 மங்க3ளவ |(1-1)

ஶ்ரீநரசிம்மனை ஸ்தோத்திரம் செய்யும் ஶ்ரீஜகன்னாததாசர், கிரமப்படி அவனை வணங்கவேண்டும் என்றும், ஏன் அப்படி செய்ய வேண்டும் என்ற கேள்வி வந்தால், அதற்கு பதிலாக இந்த பத்யத்தை இயற்றியிருக்கிறார். பகவந்தன், ரமா ஆதியாக பிரம்ம வாயு மற்றும் அனைத்து ருஜு கணஸ்தர், கருட சேஷ ருத்ரர், ஸௌபர்ணி வாருணி பார்வதி, ஆகிய அனைவராலும் வணங்கப்படுபவன்; மற்றும் அவரவர்களின் சாதனைக்குப் பிறகு மோட்சத்தையே கொடுக்கும் வாசுதேவ நாமக நரசிம்மனே ஆனதால், உனக்கு மங்களம் உண்டாகட்டும் என்று தாசர் பிரார்த்தனை செய்கிறார். இவ்வாறு தாரதம்யத்வேன பிரார்த்தனை செய்தால் நமக்கும் மங்களம் உண்டாகும் என்பது அபிப்பிராயம். இவ்வாறே சிஷ்டாசார, ஸதாசாரத்தின்படி வணங்க வேண்டும் என்று விதியை தாசர் முதலாம் பத்யத்தில் விளக்கியிருக்கிறார்.

2. ஆரு மூரெரடொ3ந்து3 ஸாவிர
மூரெரடு3 ஷத ஷ்வாஸ ஜபக3ள
மூருவித3 ஜீவரொளக3ப்ஜஜ கல்பபரியந்த |
தா1 ரசிஸி ஸாத்வரிகெ3 ஸுக2 ஸம்
ஸார மிஸ்ரரிக3த4ம ஜனரிக3
பார து3க்க2க3ளீவ கு3ருபவமான ஸலஹெம்ம ||(1-4)

ஆறு*மூரு = 18+2=20+1=21, 3*2=6 என்றால், 20+6=21,600 இவ்வளவு ஜபங்களை மூருவித ஜீவரு – ஸாத்விக, ராஜஸ, தாமஸ ஜீவராஷிகளில், பிரம்மகல்பத்தின் வரை எவ்வித பேதபாவமும் இல்லாமல் ஜபம் செய்து, ஸாத்விகர்களுக்கு சுகம், ராஜஸர்களுக்கு ஸம்சார சுகங்களையும், அதமர்களுக்கு அபாரமான துக்கங்களையும், குருகளான பவமானர் கொடுக்கிறார் ஆகையால், அவர் நம்மை காக்கட்டும் என்று பிரார்த்திக்கிறார்.

இந்த பத்யத்தில், ஜகத்குருகளான வாயுதேவரின் கர்த்ருத்வ என்ன என்பதை சொல்வதோடு மட்டுமல்லாமல், த்ரிவித ஜீவராசிகளிலும், தாம் எவ்வித பேத பாவங்கள் இன்றி 21,600 ஹம்ஸ மந்திரத்தை, பிரம்ம கல்ப வரை, அந்த ஜீவனுக்காக, அவனின் உத்தாரத்திற்காக செய்கிறார் என்னும் விஷயத்தை விளக்கியவாறு, அவர் சர்வக்ஞர் என்பதையும் அறிந்து, உபாசனை செய்ய வேண்டும் என்று சொல்கிறார். 'ஸ்வபாவோ ஜீவ ஏவச' என்பதைப் போல, அவரவர்களின் ஸ்வபாவத்திற்கேற்ப தாமே இருந்து ஜபம் செய்தாலும், அவரவர்களின் யோக்யதைக்கேற்ப ஸ்ரீஹரியிடமிருந்து பலன்களை பெற்றுத் தருகிறார். இதில் எவ்வித வேறுபாடுகளும், தாரதம்யமும் இல்லை. இத்தகைய முக்யபிராணனை நாம் கண்டிப்பாக வணங்க வேண்டும் என்பதை சொல்கிறார்.

ஆக மொத்தம், பகவந்தன் எப்படி விஷ்வவியாபியோ, அனந்த அவதாரியோ, அதைப் போல, பவமானனும்கூட அசிந்த்ய வியாப்தி உள்ளவனும், ஜீவர்களுக்கெல்லாம் அனைத்து காலங்களில் கதியைக் கொடுப்பவனும் ஆகிறான் என்னும் விஷயத்தை நமக்கு புரிய வைக்கிறார் தாசர்.

3. க[1]ருதிரமண ப்ரத்[3]யும்ன நந்த[3]னெ
சதுரவிம்ஷதி த[1]த்[1]வப[1]தி தே[3]
வதெக[3]ளிகெ[3] கு[3]ருவெனிஸுதிஹ மாருதன நிஜபத்னி |
ஸத[1]த[1] ஹரியலி கு[3]ருக[3]ளலி ஸ
த்ரதிய பாலிஸி பா[4]க[3]வத பா[4]
ரத[1] புராண ரஹஸ்ய த[1]த்வக[3]ளருபு[1] கருணத[3]லி ||(1-6)

க்ருதி (ரமா ரூப) பதியான பிரத்யும்னனின் மகனான பிரம்மதேவரே, வாயு தேவரே (இருவரும் சமம் என்னும் பாவம் கொள்ள வேண்டும்), 24 தத்வங்களுக்கு அபிமானி தேவதையும், வாயுதேவரின் நிஜ பத்னியும் (நியத பத்னி) ஆன பாரதிதேவியே, எப்போதும் உன் கணவனான வாயுதேவரில், கிருதியில் பரமாத்மனில், வெறும் ரதி மட்டுமல்ல, ஸத்ரதி – அதாவது விசேஷமான பக்தி வருமாறு செய்து, பாகவத, பாரத, ராமாயண, பஞ்சராத்ராகம மற்றும் வியாக்யான அனுவியாக்யானங்களின் அர்த்தங்களை, உள் அர்த்தங்களை, உன் கருணைப் பார்வையால் எனக்கு சொல்லிக் கொடு என்று பாரதிதேவியரை பிரார்த்தனை செய்கிறார்.

வேத உபநிஷத் புராணங்கள் ஆகியவற்றை படித்தால், அதனுடைய அர்த்தங்கள் உடனடியாக நமக்குப் புரியாது. அந்த அர்த்தங்கள் புரிய வேண்டுமெனில், அது பாரதிதேவியாலேயே ஆகவேண்டும் என்பதால், இந்த அபிமானி தேவதையை நினைக்காவிடில், அது நடக்காது. ஆகவே, இவளின் நிரந்தர ஸ்மரணை நமக்கு அவசியம். இதன்படியே, லட்சுமி, சரஸ்வதி, ஸௌபர்ணி, வாருணி, பார்வதி மற்றும் உஷை ஆகியோரையும் தாரதம்யத்வேன சிந்திக்க வேண்டும்.

4. க்ஷிதி$^{1}$யொளகெ மணிமந்த$^{1}$ மொத$^{3}$லா
த$^{3}$தி$^{1}$து$^{3}$ராத்$^{1}$மரு ஒந்த$^{3}$தி$^{4}$க விம்
ஷதி குபா$^{4}$ஷ்யவ ரசிஸெ நடுமனெயெம்ப$^{3}$ பி$^{3}$ராம்மணன |
ஸதிய ஜடரதொ$^{3}$ளவதரிஸி பா$^{4}$
ரதிரமண மத்$^{4}$வாபி$^{4}$தா$^{3}$னதி$^{3}$
சதுரத$^{3}$ஷ லோகத$^{3}$லி மெரெத$^{3}$ப்ரதிமகொ$^{3}$ந்திஸுவெ ||1-8)

இந்த பத்யத்தில் மத்வரின் அவதார காரியத்தின் காரண பாவத்தை தாசர் விளக்குகிறார். அவருடைய அவதாரத்திற்கு முன்பு, மணிமந்த முதலான பலர் அவதரித்து, அதாவது 21 பேர் பிறந்து, ஸ்ரீஹரியின் அபரதத்வத்தை நிறுவினர். அவர்கள் அனைவரையும் நிரகாரப்பதற்காக, நடுமனெ என்னும் குலத்தில், அதாவது, மத்யகேஹ – வேதவதி என்னும் தம்பதிகளில் 14 உலகத்தின் குருகளான முக்யபிராணரே மத்வராக அவதரித்திருக்கிறார் என்கிறார் தாசர்.

மத்வரின் அவதாரத்திற்கு முன்பு, பரதத்வ ஞானத்தினால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த சஜ்ஜனர்களை காப்பதற்கு மற்றும் 21 மதங்களை நிராகரிப்பதற்கும், இவர் அவதாரம் ஆயிற்று என்னும் கார்ய காரண பாவத்தை தாசர் தெளிவாக விளக்கியிருக்கிறார்.

(தொடரும்)

**Subscription Renewal - சந்தா புதுப்பித்தல்**

உங்களுக்கு வந்திருக்கும் பத்திரிக்கையின் பின்புறம், உங்கள் முகவரியின் முதல் வரியில் 'Apr-22' என்று ஒரு குறிப்பிட்ட மாதம் இருக்கும். அதுவே உங்கள் சந்தா முடியும் மாதம் ஆகும். அந்த மாதத்திற்குள் உங்கள் சந்தாவை புதுப்பித்துக் கொள்ளவும். நன்றி.

**தொடர்**

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## 20. குண தாரதம்ய ஸந்தி விடைகள்

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 நி | த் | ய | நி | ர் | ம | ல | ம | யா | 2 ஸ் | வா | ஹா | தே | 26 வி |
| ரு | ள | ம | 17 ய | தி | | | | ஞ் | | | 3 ந | க | ரா |
| 4 ப | ணி | ப | தி | ஜா | 18 ஸ | | | 5 ஸ | த | ரூ | பா | | ட் |
| ம | கி | | 6 ர | 32 வி | ஸா | 7 ம் | ரு | ட | ரு | | | | |
| ளு | 33 ரோ | | க்ஷ | | ங் | ய | ல | னா | ப | ர | 19 ஸூ | | ஷா |
| | | | 8 அ | ரி | 27 க | ளு | | பூ | தி | த் | ப | 28 த் | 20 உ |
| 9 ந | ளி | னி | ல | | லி | 10 அ | நா | க் | யா | த | | வி | |
| | | | க்ஷ் | | 29 கோ | | | | லா | | | ஷ | |
| ப | | | மி | | ர | | தி | ன | 21 வ | | | ட் | |
| 11 பா | த | 30 பா | தா | ர் | த | ர | ஸ | 22 ஸே | 34 கு | | 12 ஸூ | ர | ப |
| த | | வி | 13 ஹெ | ர | க | | | 14 நி | க | ம | வே | த் | ய |
| 35 தெ | | 15 ப் | ர | வ | ஹ | வா | யு | | | 31 ம் | | மி | |
| | ன் | ர | க | ஷ் | 23 பு | | 16 அ | த | ம | ரு | | ந் | |
| | | ம் | | | | | | யூ | | ஷ | | க | 24 க |
| | | ஹா | வ | த | 25 ஹூ | | | 36 த் | | | | 37 ஜ | |

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்

**Haridasa Vijayam - Monthly**

மலர் 3 ** ஏப்ரல் 2020 ** இதழ் 5



**ஸ்ரீ தந்தெமுத்து மோகன தாசர்**
**(பரமப்ரிய ஸ்ரீசுப்பராய தாசர்)**

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 3 : இதழ் 5


| நிர்வாக ஆசிரியர் | துணை ஆசிரியர் |
| --- | --- |
| 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்<br>ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,<br>380, 2A Main, 16th Cross, JP Nagar<br>4th Phase, பெங்களூரு 560078<br>Ph.: 89044-58276.<br>haridasa.vijayam@gmail.com<br>jagannathakesava.blogspot.com | ' தாச சாகித்ய சேவா ரத்ன'<br>திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்<br><br>**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**<br>திரு. முரளிதர தாசரு,<br>திருமதி. நிர்மலா நரசிம்மன்,<br>திரு. லட்சுமிபதிராஜா,<br>திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ் |


## ஆராதனை

**ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்**

**ஏப்ரல் 1 முதல் 30 வரை, 2022**

ஏப்ரல் 10 - சைத்ர சுத்த நவமி - ஸ்ரீ தந்தெமுத்து மோகன தாசர் (பரமப்ரிய ஸ்ரீசுப்பராய தாசர்), தேவராயனதுர்கா

# ஆசிரியர் பக்கம்

அனைவருக்கும் ஷுபக்ருத் நாம சம்வத்ஸரத்தின் புத்தாண்டு வாழ்த்துக்கள். ஹரிவாயுகுரு ஹரிதாசர்களின் அருள், கருணை அனைவருக்கும் கிடைக்கட்டும் என்று இந்த சமயத்தில் வேண்டிக் கொள்கிறோம்.

புத்தாண்டின் முதல் ஹரிதாச ஆராதனையாக, ஸ்ரீராம நவமியன்று, ஸ்ரீதந்தெமுத்து மோகனதாசரின் ஆராதனை வருகிறது. தும்கூர் தேவராயனதுர்கா மலைமேல் ஸ்ரீயோகா ஸ்ரீபோகா நரசிம்ம ஸ்வாமியின் தேவஸ்தானத்தின் அருகில், தாஸகூட கட்டிடத்தில் தாசரின் கட்டெ இருக்கிறது. அங்கு அவர் பிரதிஷ்டை செய்த ஸ்ரீசுந்தரேஷ முக்யபிராண தேவரின் ஆலயமும் உள்ளது. இந்த ஆண்டு ஆராதனையில் அனைவரும் பங்கேற்கலாம் என்றே நினைக்கிறேன். தகவல் அறிந்து கொண்டு, வாய்ப்பு உள்ளோர் இந்த ஆராதனையில் பங்கு பெற்று தாசரின் அருளைப் பெறலாம்.

தந்தெமுத்துமோகனதாசர் பற்றிய ஒரு புத்தகம் ஏற்கனவே வெளியிட்டிருக்கிறோம். அதில் அவருடைய வாழ்க்கை வரலாறு, அங்கிதப் பட்டியல், தாசர் இயற்றிய பாடல்கள், உகாபோகங்கள் ஆகியவை உள்ளன. 20ம் நூற்றாண்டின் முக்கியமான ஹரிதாஸ ரான இவரைப் பற்றிய இந்தப் புத்தகம் தேவைப்படுவோர் தொடர்பு கொள்ளவும்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

**மாதத்திற்கு ஒரு இலவச PDF புத்தகம்**

இதுவரை நாம் வெளியிட்ட அனைத்து இலவச PDF புத்தகங்களை download செய்து படிப்பதற்கு, இந்த தளத்திற்கு செல்லவும்.
https://archive.org/details/@sathya_narayanan

தொடர்

## கேசவ நாமா

### 27. பா வெங்கடரமணா – கலகலி அவ்வ

### 27. பா வெங்கடரமணா

பா3 வெங்கடரமணா பா4க்யத நிதி4யெ
சுரரிகெ நித்ய சுதெ4யெ ||ப

கேஷவ நாராயண லேஸு கொடு மாதவ
எல்ல கண்ட1க1வ பரிஹரிஸோ
எல்ல கண்டகவ பரிஹரிஸோ கோவிந்த
ஈ சமயதி கெ3லிஸெந்து ||1

விஷ்ணு மதுசூதன ஸ்ரேஷ்ட த்ரிவிக்ரம
துஷ்ட வாமன கெ3லிஸெந்து
துஷ்ட வாமன கெ3லிஸெந்து காலகாலகெ
எல்லரு கரவ முகி3வேவு ||2

ஸ்ரீதர ஹ்ருஷிகேஷ ஸாது பத்மனாப
முத3தி3 எனகெ வரகள
முத3தி3 எனகெ வரகள கொடுவந்த
தாமோதரகெ கரவ முகி3வேவு ||3

சங்கர்ஷண வாசுதேவ பங்கஜாக்ஷ ப்ரத்யும்ன
ஷங்கிஸதெ நமகெ வரகள
ஷங்கிஸதெ நமகெ வரகள கொடுவந்த
குங்குமாங்கித க4ன மஹிமனெ ||4

அனிருத்த புருஷோத்தம ஹருஷாகோ நரசிம்ஹ
புருஷசூக்ததி ப்ரதிபாத்ய
புருஷசூக்ததி ப்ரதிபாத்ய அச்யுத
ஹருஷதி நம்ம கெ3லிஸெந்து ||5

ஜனார்த்தன உபேந்திர ஜான்ஹவி ஜனகனெ
ஜனன ரஹிதனெ ஹரே கிருஷ்ண
ஜனன ரஹிதனெ ஹரே கிருஷ்ண வேதவ்யாஸ
வனஜனாபன மொதல பலகொம்பெ ||6

மச்ச கூர்ம வராஹ ஸ்வச்சாகு நாரசிம்ஹ
அச்ச ஸுஷீல ப3லிராய

அச்ச சுஷீல ப3லிகொ3லித3ந்த2
மச்சனேத்ரியர பலகொம்பெ ||7

பா4ர்க்க3வி ரகு4வீர ஷீக்4ரதி கெ3லிஸெந்து
ருக்மிணி பதிகெ3 நமோ யெம்பெ
ருக்மிணி பதிகெ3 நமோ யெம்பெ பௌத்த கல்கி
குக்க3தெ3 நமகெ வரகளு ||8

ஸ்ருஷ்டி ஸ்திதி லய லவகெ காரணவாத
ஜகத்பதி ஜான்ஹவி ஜனகனெ
ஜகத்பதி ஜான்ஹவி ஜனகனெ ராமேஷன
நகத4ரன மொத3ல பலகொம்பெ ||9

புருஷ சூக்தத்தால் வர்ணிக்கப்படுபவனும், ஸ்ருஷ்டி ஸ்திதி லயத்திற்கு காரணனானவனும், ஜான்ஹவி ஜனகனும், ஜகத்பதியும், பிறப்பு இறப்பு இல்லாதவனுமான வெங்கடரமணன் 'ராமேஷ' என்னும் அங்கிதத்தினால், தசாவதார மற்றும் கேசவாதி 24 ரூபங்களை சிந்தித்தவாறு, தம் துன்பங்களை பரிகரித்தவாறு, வரங்களைக் கொடுக்குமாறு வேண்டுகிறார் தாசர்.

## 28. ஜோகுளத கீர்த்தனெ

ஜோ ஜோ ஜோ ஜோ ஜோ
ஸ்ரீகிருஷ்ண பரமானந்த
கோபிய கந்த முகுந்த
ஜோ ஜோ ஜோ ஜோ ஜோ ||ப

கோபிய ஸ்ரீரமண நித்3ரெய மாடோ
ஸ்ரீஷ லட்சுமி நாராயண நித்3ரெய மாடோ
ஈஷ கமலேஷ மாத4வ நித்3ரெய மாடோ
கூ1ஸூ நித்ரெய மாடலெந்த3ளு கோபி ஜோஜோ ||46

நிமல பத்ம ரமண கோவிந்த மலகொ
அமித பத்மினி ரமண விஷ்ணு நீ மலகோ
கமலாலய ரமண மதுசூதன மலகோ
ஸுமனஸரொடெய மலகெ3ந்த3ளு கோபி ஜோஜோ |47

ஹசுளெ ரமாரமண த்ரிவிக்ரம மலகோ
ஹ்ருஷி க1பி1 ரமண வாமன நீ மலகோ
பிஸஜாக்ஷி த4னபதி ஸ்ரீத4ர மலகோ

குஸுமனாபனெ மலகெ[3]ந்த[3]ளு கோபி ஜோ ஜோ ||48
புத்தி[4] ரமண ஹ்ருஷிகேஷ மலகோ
பத்பனாப[4] யக்ஞ ரமண நீ மலகோ
முத்து[3] இந்திரெ ரமண தா[3]மோத[3]ர மலகோ
ருத்ராதி வந்த்யகெ[3] மலகெந்தளு கோபி ஜோ ஜோ ||49

ஹரதி ரமண சங்கர்ஷண மலகோ
ஹரிணிபதி வாசுதேவ நீ மலகோ
ஸ்மரண சத்யரமண ப்ரத்யும்ன மலகோ
கருணாபூர்ண மலகெ[3]ந்தளு கோபி ஜோ ஜோ ||50
நித்யதேவி ரமண அனிருத்த மலகோ
புருஷோத்தம நந்தனாதிக ரமண நீ மலகோ
மத்தெ[1] ப்ராக்ஞபதி அதோக்ஷஜ மலகோ
சத்ய சங்கல்ப மலகெந்தளு கோபி ஜோ ஜோ ||51

நரசிம்ஹ சக[2] ரமண ஸரஸாகி மலகோ
அரசு சுயக[3] ரமண அச்யுத மலகோ
வர்ஷகாலத[3]லெ ஜனார்த்தன மலகோ
க்ஷர க்ஷரோத்தம மலகெந்தளு கோபி ஜோ ஜோ ||52
ஸுலக்ஷணபதி ரமண உபேந்த்ர நீ மலகோ
ஸுலப ஸுயுக[3] ஸ்ரீரமண ஹரியெ நீ மலகோ
செல்வெ சுஷீலெ சுரதி[1] ரமண கிருஷ்ண மலகோ
லலனெயர ஸஹித மலகெந்தளு கோபி ஜோ ஜோ ||53

பந்த[3] முத்யைதியரிகெ அரிஸிண குங்கும கொட்டு
தந்த பாகிணக[3]ள தும்பி முந்திட்டு
தந்தெ ராமேஷகெ ரக்ஷவனிட்டு
ஆனந்தப[1]ட்டரு கோகுலதவரஷ்டு ஜோ ஜோ ||58

14 உலகங்களுக்கும் தலைவனான ஸ்ரீஹரிக்கு, 16 வித (ஷோடஷோபசார) பூஜைகளை சமர்ப்பிக்க வேண்டும். பரமாத்மனை விடியற் காலையில் உதய ராகத்தினால் எழுப்பி, இரவில் தாலாட்டு பாடி ஏகாந்த சேவையை சமர்ப்பிப்பது பூஜா விதானம் எனப்படுகிறது.

ஷயனோத்ஸவ பூஜை சமயத்தில் பாடும் 58 நுடிகளைக் கொண்ட 'ஜோகள கீர்த்தனை'யில் (தாலாட்டுப் பாட்டு), கல்கலி அவ்வ

அவர்கள் கிருஷ்ணனுக்கு மங்களஸ்னானம், ஜாதகர்ம, அலங்கார, தொட்டில் அலங்காரம், குண்டப்பா பூஜை, அத்தையினால் நாமகரணம் ஆகியவற்றை செய்து, தசாவதாரம், 24 லட்சுமி ரூபங்களினால் கேசவாதி ரூப சிந்தனை செய்து, கிருஷ்ணனுக்கு ரட்சை வைக்கும் ஒரு காட்சியையும் பாடியிருக்கிறார்.

## 29. ஹிடி கேசவ

வேத, புராண, உபநிஷத், ராமாயண, மகாபாரத, பாகவதம் ஆகியவற்றில் அடங்கியிருக்கும் தத்வங்களை கன்னடத்தில் மொழிபெயர்த்து, ஹரிதாச சாகித்யத்தில் கீர்த்தனைகள், சங்கீதத்துடன் தாள லயங்களுடன் கொடுத்து இயற்றப்பட்டிருக்கின்றன. தாள, தம்புரி, சலங்கை ஆகியவற்றுடன் பாடும் வழக்கம், கால காலமாக வளர்ந்து வந்து அதுவே சம்பிரதாயமாக ஆகியிருக்கிறது. கன்னட நுடிகளுக்கு மந்திரத்தின் மகிமையும், மாத்வ சமூகத்தின் ஆதரவும் பெருகியது.

பிறந்த குழந்தையை தொட்டிலில் போட்டு, ஆட்டியவாறு பாடி, ரக்ஷை வைப்பது ஒரு நிகழ்ச்சி. ஹரிதாசர்கள், தங்களை யசோதை என்று பாவித்து, பரமாத்மனை வாத்ஸல்ய பாவத்துடன் பாடி தூங்க வைத்தனர். தாய் தன் குழந்தையிடம் காட்டும் அக்கறை, அபிமானங்களை இந்த பாடலில் காணமுடியும். ஜோஜோ என்னும் குரலுக்கு குழந்தைகள் படுத்து உறங்குகின்றனர். ஆலயங்களில், மடங்களில், லாலி பாடல்களைப் பாடி பரமாத்மனை தூங்க வைக்கும் சம்பிரதாயம் இன்றும் உண்டு.

பீமேஷ கிருஷ்ண - அங்கிதரான ஹரபனஹல்லி பீமவ்வா அவரின் இந்த கிருதி 24 ரூபங்களைச் சொல்லும் ஜோஜோ பாடலாகும்.

ஹிடி$^{3}$ கேசவ கிருஷ்ண நாராயணர
கொடு$^{3}$ மாத$^{4}$வ கோவிந்த விஷ்ணுன்ன
கட$^{3}$ல ஷயனநாத$^{3}$ த$^{1}$க்கோ$^{1}$ மதுசூதனன
கடுபா$^{4}$க்யத$^{3}$லி தா$^{1}$ரெ த்ரிவிக்ரமன ஜோ ஜோ ||1
குழந்தையான கேசவ, கிருஷ்ண, நாராயணனையே பிடி. மாதவ, கோவிந்த, விஷ்ணுவுக்கு கொடுப்பதைக் கொடு. பாற்கடலில் படுத்திருப்பவனான, மதுசூதனனான த்ரிவிக்ரம குழந்தையை தூக்கிக் கொள் - இப்படியாக நம் வீட்டுக் குழந்தைகளை தூக்கிக் கொஞ்சும்போது அனுசந்தானம் செய்ய வேண்டும் என்கிறார்.

வாமன ஸ்ரீதர ஹ்ருஷிகேஷனன

கா[1]மிஸி நீ கொள்ளெ பத்மனாபன
தாமோதர ஸ்ரீ சங்கருஷணன
கோமலாங்கி[3] தா[1]ரெ வாஸுதேவன்ன ஜோ ஜோ ||2

வாமன, ஸ்ரீதர, ஹ்ருஷிகேஷ பெயருடைய நாமக குழந்தையை பக்தியுடன் கொஞ்சு. அவனே பத்பனாபன், தாமோதரன், சங்கருஷணன், வாசுதேவன்.

ப்ரத்யும்ன அனிருத்த புருஷோத்தமன
முத்து[3] அதோ[3]க்ஷஜ நாரசிம்ஹாச்யுதன
ஸத்[3]யோ ஜனார்த்தன கொண்டு[3] உபேந்த்[3]ரன்ன
ஸத்[3]ய தா[1]ரெ ஹரி பீ[4]மேஷ கிருஷ்ணன்ன ஜோ ஜோ ||3

ப்ரத்யும்ன, அனிருத்த, புருஷோத்தம, அதோக்ஷஜ, நாரசிம்ஹ, அச்யுத, ஜனார்த்தன, உபேந்திர, ஹரி, கிருஷ்ண ரூபி குழந்தையை கொஞ்சு, அவனே பிம்பனாத பீமேஷ கிருஷ்ணன்.

பீமவ்வாவின் இந்த கேசவ நாமத்தில் பிடி, கொடு, எடு, என்று பல தினப்படி பேசும் சொற்கள் பயன்படுத்தி, சகஜமான மொழியில் 24 ரூபங்களையும் நினைவு கூர்ந்திருக்கிறார்.

குழந்தையை தொட்டிலில் போடும் நிகழ்ச்சிக்கு ஏற்பவாறு பீமவ்வா அவர்கள், முதல் இரண்டு நுடிகளில் ஏழேழு ரூபங்களை சிந்தித்து, அடுத்த வரும் மூன்றாவது நுடியில் 10 ரூபங்களை சிந்தித்திருக்கிறார். 14 உலகங்களின் தலைவனான ஸ்ரீஹரியின் தசாவதாரங்களையும் இங்கு பாடியிருக்கிறார். ஜோ ஜோ என்னும் சொற்களே பல்லவியில் இருக்கிறது.

(தொடரும்)

ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப், அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்து சொல்லலாம்.

வங்கிக் கணக்கில் சந்தா / புத்தகத்திற்காக பணம் செலுத்தினால், மறக்காமல் உங்கள் முகவரியை 89044 58276 எண்ணுக்கு வாட்சப் / SMS அல்லது haridasa.vijayam@gmail.comக்கு மின்னஞ்சல் அனுப்பவும்

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

### ஸ்ரீஜகன்னாததாசரின் கிருதிகளின் சிறப்பு

- டாக்டர் லக்ஷ்மிகாந்த V. மோஹரீர

ஜகன்னாததாசரின் அடுத்த கிருதியாக 'பலவிது பாளுதக்கே'வைப் பார்ப்போம்.

தத்வங்களை விவரித்தவாறே, இந்தப் பிறவி எடுத்த பயனை விளக்கி, ஸ்ரீஹரியின் பற்பல மகிமைகளை விளக்கியுள்ளார். பார்த்த–சகனான கிருஷ்ணனின் குணங்களைப் பாடாமல், வாழ்க்கையை வீணாக்கலாமோ என்று கேட்கும் தாசர்,

ஸ்வோச்சித[1] கர்மக[3]ளாசரிசுத ப[3]லு
நீசரல்லிகே[3] போ[1]கி[3] யாசிசதே[3] - கேசரவாத
சராசர பந்தக மோசக நஹுதெந்து[3] யோசிசுதிப்புதே
என்று உபதேசம் செய்கிறார்.

'சிரி நிலயன குணகள திளிது பஜிசுவுதே' என்று நம் வாழ்க்கையின் முக்கிய வேலையை விளக்குகிறார். லட்சுமி நாராயணனின் பற்பல நற்குணங்களை அறிந்து, அதை பஜித்து வந்தால், நாம் இந்தப் பிறவி எடுத்ததற்கு சரியான பொருள் விளங்கும். இங்கு 'பலவிது பாளுதக்கே' என்று ஏன் சொன்னார் என்று சிறிது சிந்திக்க வேண்டும்.

சாதகர்கள் எந்தவித பலன்களையும் எதிர்பாராமல் செயல்களை செய்யவேண்டும் என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. பகவத்கீதையில் கிருஷ்ணன் 'கர்மண்யேவாதிகாரஸ்தே மா பலேஷு கதாசன' என்று பலன்களை எதிர்பார்க்கக்கூடாது என்கிறார். அப்படியென்றால், தாசர், 'பலவிது' என்று, பலனை எதிர்பார்க்கவும் என்கிறாரே?.

பலன்களில் மூன்று விதங்கள். 1. முக்யபல 2. முக்யாமுக்யபல மற்றும் 3. அமுக்யபல.

இதில் தாசர் சொல்வது முதலாவது ஆகும். எத்தகைய விரக்தியுடைய மனிதராகட்டும், அவருக்கு இருக்கவே வேண்டிய விருப்பம் என்றால் மோட்சம். இத்தகைய விருப்பம் இருந்தால், அது சரியே. இதையே தாசர் 'ஏனு பல்லெ ஹரிய நித்ய ஸ்துதிஸி கேளுவுது ஞான பக்தி கொடு' என்று விருப்பம் தெரிவித்திருக்கிறார்.

என்றால் ஞான பக்தி வைராக்கியத்தை கேட்டே ஆகவேண்டும். இதையே தாசர் 'குணகள திளிது பஜிசுவுதே' - அவனின் குணங்கள் தெரிந்தபிறகு, பஜிசுவுதே என்றால் வணங்குவது என்று பொருள். நாம் வாழ்க்கை முழுதும் வாழ்வதற்கு அவனின் குணங்களை தெரிந்துகொள்வதே பலன் அன்றி வேறொன்றுமில்லை.

அவனின் குணங்களைப் பற்றிய ஞானம் வரவேண்டுமெனில், நமது வாழ்க்கைமுறை எப்படி இருக்கவேண்டும்? ஸ்வோச்சித கர்மகளாசரிசுத பலு நீசரல்லிகே போகி யாசிசதே – என்று இருக்கவேண்டும். இதை வம்சிகிருஷ்ணா என்னும் அறிஞர் தமது பலவிது பாளுதக்கே என்னும் புத்தகத்தில் தெரிவிக்கிறார்.

<u>தத்வசுவ்வாலிகள்:</u>

மத்வ சித்தாந்த்தின் தத்வங்களை மிகசு சுலபமாக புரிந்துகொள்ள, எளிமையான சொற்களில், சந்தஸ்களில் தாசர் இயற்றியதே தத்வசுவ்வாலிகள். த்ரிபதி (மூன்று வரிகள்) நுடியில் உள்ள தாசரது தத்வசுவ்வாலிகள் மிகவும் அற்புதமானவை. தன்னுடைய மருமகளான கோபம்மாவிற்கு எப்போதும் மங்களம் உண்டாகட்டும் என்ற எண்ணத்துடன் தாசர் இவற்றை இயற்றியிருக்கிறார் என்ற நம்பிக்கை இருக்கிறது. தாசர் மொத்தம் 600 தத்வசுவ்வாலிகளை இயற்றியிருக்கிறார் என்கிறார் பேலூர் கேசவதாஸ் அவர்கள். டாக்டர். K.M.கிருஷ்ணராவ் அவர்களது ஆராய்ச்சியின் பேரில் 408 தத்வசுவ்வாலிகள் வெளிவந்திருக்கின்றன. இதில் கணபதி, நவக்கிரகங்கள், அக்னி, வாயு, ஹனும, பீம, மத்வ, துளசி, ருத்ர, ஸ்ரீ-பூ-துர்கா, ருக்மிணிவிலாஸ, ஸ்ரீகிருஷ்ணஸ்துதி, தசாவதாரங்களைப் பற்றிய வர்ணனை, வெங்கடேச ஸ்தோத்ரம் ஆகியவை உள்ளன. மேலும், வாழ்க்கைக்கான அபூர்வ தத்வங்களை இதில் விவரித்துள்ளார் தாசர்.

முதலில் விக்னேஸ்வரனின் வர்ணனை:
அம்பிகா1த1னய பூ4தா1ம்பராதி3ப1 சுரக1
தம்பசம்பூஜ்ய நிரவத்3ய | நிரவத்3ய நின்ன
பா1தா3ம்பு4ஜக3ளெம்ம சலஹலி ||

என்று வேண்டுகிறார். அதாவது, பார்வதி மற்றும் பரமேஸ்வரனின் மகனான நீ, நம் அனைவரையும் காப்பாற்று என்று இந்த

ஸ்லோகத்தில் வேண்டுகிறார் தாசர். எந்நேரமும் ஸ்ரீஹரியை வேண்டும், அர்ச்சிக்கும், வணங்கும் பாவம் உள்ளவர்கள் பாகவதர்கள். இத்தகையவர்கள் சேஷகிரி வாசனான ஸ்ரீனிவாசனை போற்றிப்புகழும் வழக்கம் உள்ளவர்கள்.

ஏனு க[1]ருணாநிதி[4]யோ ஸ்ரீனிதம்பினிரமண |
தா[1] நம்மனக[3]லி ஸைரிஸ |ஸைரிசத[3] க[1]ருணிய
நானெந்து து[1]தி[1]ஸி ஹிக்க[3]லி

பக்தர்கள் எந்நேரமும் ஸ்ரீஹரியை வணங்குவது சகஜம். அந்த வெங்கடேசன் எப்போதும் தன் பக்தர்களுடனேயே இருப்பவன். கருணாசாலி.

அச்சுயுத[1]னே நின்னந்த[1] ஹுச்சுதொ[3]ரெயனு கா[1]ணெ
கச்சி பையொத்த[1] பகு[3]த[1]ர |பகு[3]த[1]ரபராத[4]க[3]ள
து[1]ச்சகௌத[3]வர சலுஹிதே[3] ||

கச்சி பையொத்த பக்தர்கள் என்றால் – பழங்களை கடித்துக் கொடுத்த சபரி. ஒத்த பக்தன் – பிருகு மகரிஷி. ஹரிஹர பிரம்மனில் யார் சிறந்தவர் என்று பார்ப்பதற்கு வந்த பிருகு மகரிஷி, விஷ்ணு தனக்கு மரியாதை கொடுக்கவில்லை என்ற கோபத்தில் அவன் இதயத்தில் மிதித்தார். தன்னுடைய இதயத்தில் உதைத்ததால், பிருகுவிற்கு கால் வலிக்குமோ என்று அவரின் பாதபூஜை செய்தார் விஷ்ணு. தன் பக்தர்களின் தவறுகளை ஸ்ரீஹரி எப்போதும் மன்னிப்பான் அவர்களுக்கு அருள்வான் என்று ஸ்ரீஜகன்னாததாசர் விளக்குகிறார்.

இந்த தத்வசுவ்வாலியில் விளக்கியுள்ள பாத்திரங்களைப் பற்றி இன்னொரு இடத்தில் இவ்வாறு விளக்குகிறார். சபரி வேடர் குலத்தைச் சேர்ந்தவர். சீதையை ராவணன் அபகரித்துச் சென்றபிறகு, அவரைத் தேடியவாறு ராம லட்சுமணர் பம்பா தீரத்திற்கு வந்தபோது, தன்னுடைய ஆசிரமத்திற்கு வந்த அவர்களைப் பூஜித்து, பின் ராமனின் எதிரிலேயே அக்னிபிரவேசம் செய்து புண்ணியலோகத்திற்குச் சென்றாள் (ராமாயண ஆரண்ய காண்டம் 75).

சிசுபாலன் ஒரு அசுரன். யதுவம்சத்தில் பிறந்தவன். வசுதேவனின் தங்கையான சுபத்ரையில் பிறந்தவன். ராஜசூய யாகம் முடியும்போது பீஷ்ம க்ருபருக்கு அக்ரபூஜை செய்ததால், கோபம் கொண்ட சிசுபாலன் பீஷ்மரை திட்டினான். இதனால் கோபமடைந்த பீமன், சிசுபாலனைக்

கொல்வதற்குச் சென்றான். சிசுபாலன் கிருஷ்ணனை திட்டினான். கிருஷ்ணனால் சிசுபாலன் கொல்லப்பட்டான்.

ப்ருகு: ஒப்ப மஹர்ஷி. பிரம்மன ஹ்ருதயதிந்த ஜனிஸிதவ. ஈத ஸ்வாயம்புவ மன்வந்தரதவ (ஆதி 67) 12ல் சொல்லப்பட்டிருக்கிறது.

இப்படி ஹரிபக்தியை விளக்குவதன் மூலம், மத்வ சித்தாந்தத்தில் இருக்கும் தத்வங்களை தேர்ந்தெடுத்து, தாசர் இந்த தத்வசுவ்வாலிகளில் நிரப்பியிருக்கிறார்.

ஹரிகதாம்ருதசாரம்

ஹரிதாச சாகித்யத்தின் மிகச்சிறந்த கிருதியான ஹரிகதாம்ருதசாரம், ஸ்ரீஜகன்னாததாசரின் தோட்டத்திலிருந்து மலர்ந்த ஒரு நறுமணமிக்க மலர். இதன் நறுமணம் அனைத்து திசைகளிலும் பரவி , இந்த பூமியை அழகாக்குகிறது. ஒரு காவியத்தின் லட்சணங்களைக் கொண்ட இதைக் கேட்பவர்கள் அல்லது படிப்பவர்கள், சிதானந்த ஸ்வரூபனான ஸ்ரீஹரியின் கருணையைப் பெறுகிறார்கள் என்ற நம்பிக்கை இருக்கிறது. திவ்ய அமிர்தத்தை கிரந்த பாத்திரத்தில் பிடித்ததே ஹரிகதாம்ருதசாரம். பற்பல நற்குணங்களைப் படைத்த ஸ்ரீஹரியின் மகிமைகளைப் போற்றுவதற்காக தாசர் இயற்றிய இந்த கிரந்தத்தில் மொத்தம் 32 சந்திகள் 988 ஸ்லோகங்கள் உள்ளன.

இதன் சிறப்பினை உள்ளடகத்தினை போற்றி டாக்டர் அருளுமல்லிகெ பார்த்தசாரதி அவர்கள் எழுதிய கட்டுரையில் – ஸ்ரீஹரியின் திவ்ய சான்னித்யத்தை காவிய தத்வங்களில் இறக்கியவர் ஸ்ரீஜகன்னாததாசர், ஹரிகதாம்ருதசாரத்தைப் படிப்பவர்களை, தம்முடைய சிறப்புப் பார்வையால் திருத்தி, அச்சுதனைப் பற்றி அதிகம் தெரிவித்து, அவனைப் புகழுமாறு செய்தவர். அனைவருக்கும் புரியும்படியான மொழியில் மிக ஆழமான கருத்துகளை, சாஸ்திரங்கள் சொல்லிய அரிய விஷயங்களை விளக்கியவர் தாசர் என்று பின் வரும் பல-ஸ்ருதியில் மிகவும் அழகாக சொல்லப்பட்டிருக்கிறது – என்கிறார்.

ஜகன்னாததாசரை புகழின் உச்சிக்குக் கொண்டு சென்ற கிருதி ஹரிகதாம்ருதசாரம். அவரது சமஸ்கிருத பாண்டித்யத்துடன், வேத உபநிஷத்கள், தத்வங்கள் ஆகியவற்றை கன்னடத்தில் மிகவும்

அற்புதமாக எழுதியவர் ஜகன்னாததாசர் என்கிறார் டாக்டர். சுமனா யஜுர்வேதி அவர்கள்.

அற்புதமான தத்வங்கள் அடங்கிய கிரந்தங்கள் என்றாலும், இதில் காவியத்திற்கான லட்சணங்கள் அனைத்தும் உள்ளன என்கிறார் திரு.V.S.காந்தன் அவர்கள், தாம் எழுதிய புத்தகத்தில் தெரிவித்துள்ளார். அவர் மேலும் – காவியத்தைப் படிக்கும் ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடிய கிரந்தம் மட்டுமல்ல. இது பேரானந்தத்தைக் கொடுக்கக்கூடியது – என்கிறார்.

சாஸ்திரம் மற்றும் காவியம் இவ்விரண்டின் சங்கமமே ஹரிகதாம்ருதசாரம் என்பது அறிஞர்களின் அபிப்பிராயம். பண்டிதர், பாமரர்கள் என அனைவரையும் கவர்ந்திழுக்கும், மகிழ்ச்சியைக் கொடுக்கும் உத்தம கிரந்தம் இதுவே.

ஹரிகதாம்ருதசாரத்தின் எழுத்துகளின் சிறப்பினை கமலாபதிவிட்டல தாசர் பின்வருமாறு விளக்குகிறார்.

ஹ எனலு ஹரி ஒலியுவனு தா
ரி எனலு ரிக்தத்வ ஹரிசுவ
க எனலு க1த்த1லெய அஞ்ஞானவனு பரிஹரிப
தா எனலு ஸ்தா2பிசுவ ஞானவ
ம்ரு எனலு ம்ருதிஜனனவ பிடிசுவ
த எனலு ஹரி தன்ன மூர்திய தோருவனு நித்ய ||

என்று வர்ணித்திருக்கிறார்.

இந்த ஹரிகதாம்ருதசார கிரந்தத்தில் 32 சந்திகளில் 988 ஸ்லோகங்கள் உள்ளன. சில ஸ்லோகங்களை உதாரணங்களாக இங்கு பார்க்கலாம்.

ஸ்ரீஹரியின் அனந்தகல்யாண குணபரிபூர்ண நற்குணங்களை, அதன் மகிமைகளை, ஸ்ரீஜகன்னாததாசர் தனது ஹரிகதாம்ருதசாரத்தில் புகழ்ந்திருக்கிறார். இதைப் பற்றி திரு R.G.Gudi அவர்கள் இவ்வாறு தெரிவிக்கிறார். அனைத்து ஹரிதாசர்களும் ஹரிசர்வோத்தமத்வத்தைப் பற்றி பாடியிருக்கின்றனர்.

**(தொடரும்...)**

தொடர்



**கன்னட ஹரிதாசினிகள்**

**நாமகிரியம்மா (19ம் நூற்றாண்டின் முற்பகுதி)**

**நாமகிரியம்மா (19ம் நூற்றாண்டின் முற்பகுதி)**

1780-1855ம் ஆண்டுகளில் வாழ்ந்த கும்பகோண வெங்கடதாசர், சிக்கேரஹள்ளி திம்மண்ண தாசரிடமிருந்து 'பிரஸன்ன வெங்கட விட்டல' என்று அங்கிதம் பெற்று, தாமும் சில சிஷ்யர்களை சேர்த்துக் கொண்டார். அவருக்கு முக்கிய சிஷ்யர்கள் மூன்று பேர். அதில் முதலாம் சிஷ்யை நாமகிரியம்மா.

நாமகிரியம்மா, நாமக்கல்லைச் சேர்ந்தவர். அங்கு நாமகிரியம்மா என்னும் லட்சுமி ஸமேத நரசிம்ம மற்றும் பிராணதேவர் நிலைத்திருக்கின்றனர். அந்த ஸ்வாமியின் அருளால் பிறந்த குழந்தைக்கு நாமகிரியம்மா என்று பெயர் வைத்தனர்.

மைஸூரின் ஸ்ரீகுருகோவிந்த விட்டலதாசர் வெளியிட்ட ஸ்ரீஹரி பக்திவிஜய பாகம் 3 என்னும் புத்தகத்தில், நாமகிரியம்மாவின் வாழ்க்கையைப் பற்றிய குறிப்புகளும் உள்ளன.

நாமகிரியம்மா, மைஸூரின் கோட்டைக்கு உள்ளே ஒரு வீட்டில் இருந்தார் என்று தெரிய வருகிறது. அங்கிதம் கொடுத்த வெங்கட தாசரின் மனைவியே இவர், என்றும் சிலர் சொல்கின்றனர். ஆனால், இதைப் பற்றிய தெளிவான தகவல்கள் இல்லை. சிறு வயதில் திருமணம் ஆகி, விதவையும் ஆன இவர், சன்யாசினியாகவே வாழ்க்கையை நடத்தியவர்.

குரு வெங்கட தாசருடன், அவருடைய மூன்று சிஷ்யர்களும் தீர்த்தக் ஷேத்ர யாத்திரைக்கு கிளம்பினர். குருகளின் காலத்திற்குப் பிறகு நாமகிரியம்மா, ராமராயர் மற்றும் அவருடைய சிஷ்யர்களுடன் யாத்திரையில் பங்கு பெற்றார்.

நாமகிரியம்மாவின் இதுவரை கிடைத்திருக்கும் கிருதிகளின் சிறு குறிப்புகள்

குரு ஸ்துதி
ஏனு ஸுகவோ எந்தா ஸுகவோ (ப)
ஹரிய த்யான மாடுவர ஸங்க ஏனு ஸுகவோ (அப)

ப்ராக்ருத விஷயங்களொளகெ ப்ராவர்த்திஸரு ஹரி
ஸாகாரவாகுவ தூரிஸாரி நலிவாரோ ||1

என்ன தன்னதெம்ப ஸொல்லு ஒந்து ஹேளரோ
எல்ல லட்சுமி வல்லபனேனே எந்து ஒப்பிகொடுவரோ
ஒந்து ஹுல்லிகெ ஸத்தெனெம்போதரிது சரிஸோரோ ||2

தன்ன ஸதிஸுதர மமதெ தொரெது பிடுவரோ
ஞான மானவர கண்டரெ தம்ம ப்ராண கொடுவரோ
இந்த்ரியங்களெல்ல ஹரிய பாததல்லிடுவரோ
பத்ரபலதாயக 'குருபிரஸன்ன வெங்கடவிட்டல'னே கதி எம்போரோ ||3

தற்காலிக விஷயங்களில் ஈடுபாடு குறைந்து, தம் அனைத்தையும் ஸ்ரீஹரிக்கு சமர்ப்பித்தார் என்று நாமகிரியம்மா தம் குருகளைப் பற்றி இந்த கிருதியில் சொல்லியிருக்கிறார். இந்த கீர்த்தனையின் பல்லவி பாகம், ஸ்ரீகோபாலதாசரின் கீர்த்தனை ஒன்றைப் போலவே இருக்கிறது.

பஜனை நிகழ்ச்சிகள் இருந்த நாட்களில், ராமராயர் மற்றும் அனேக ஹரிதாசர்கள், சர்ச்சைக்காக, நாமகிரியம்மாவின் வீட்டில் சேர்வது வழக்கம். ஸாத்விகரான ஹரிதாசர்களும், ஞானிகளும் தம் வீட்டிற்கு வருவதால், தாம் புனிதம் அடைகிறோம் என்று நாமகிரியம்மா சிந்தித்தாராம்.

நாமகிரியம்மாவின் இன்னொரு கிருதி:

இல்லி அல்லி எல்லெல்லோ நின்ன செல்வரூபங்களு
எல்லா ஒந்தாகிதே (ப)

அன்னதொளகு நீனே அன்யரொளகு நீனே
புண்யபாபக்கெ பலவ கொடுவவ நீனே (1)
அணுரேணு த்ருணகாஷ்ட அஜ ஷிரி பர்யந்த
குணகணதொளு நீனே கோப்யஹைறரங்கதி நீனே (2)
அதிகார பரபிரம்ம ஆனந்த சின்மய
பவமானாந்தர்கத குருபிரஸன்ன வெங்கடவிட்டல நீனே (3)

ஸ்ரீஹரியின் சர்வோத்தமத்வத்தையும், அவனே சர்வாந்தர்யாமி என்பதை நாமகிரியம்மா இந்தப் பாடலில் விளக்குகிறார்.

தம் வாழ்க்கையை, ஸ்ரீஹரியின் சேவைக்காகவே வாழ்ந்த நாமகிரியம்மா அவர்கள், பிம்பதரிசனம் செய்தவாறு, யோக மார்க்கத்தில் தேகதியாகம் செய்தார் என்று தெரிய வருகிறது. அவருக்கு நம் நமஸ்காரங்களை செய்வோமாக.

## துருடகி திம்மம்ம (1728-1823)

ஹரிதாசினியர்களில், துருடகி திம்மம்மா, திருப்பதி திம்மப்பனின் பரம பக்தை. ராயசூர் ஜில்லா லிங்கஸுகூர் தாலூக்கின் துருடகி கிராமத்தில், வேத சாஸ்திர பண்டிதரான ஸ்ரீ நரசிம்மா என்பவருக்கு 1728ம் ஆண்டில் மகளாகப் பிறந்தார் திம்மம்மா. ஸ்ரீ நரசிம்மன், திருமலை திம்மப்பனின் பக்தரானதால், மகளுக்கு திம்மம்மா என்றே பெயர் வைத்தார். தந்தையிடமிருந்து புராணிக மற்றும் தார்மிக கிரந்தங்களின் பரிச்சயங்களைப் பெற்று, திம்மம்மா சிறந்த தெய்வ பக்தர் ஆனார். அன்றைய வழக்கப்படி திம்மம்மாவிற்கு எட்டாம் வயதில் திருமணம் ஆயிற்று. 10 வயதில் விதவையும் ஆனார். இதனால் மிகவும் கவலைப்பட்ட பெற்றோர், மகளை திம்மப்பனின் தரிசனத்திற்காக அடிக்கடி திருப்பதிக்கு அழைத்துச் சென்றனர். காலகிரமத்தில் திம்மம்மாவின் மனம், ஆத்யாத்மத்தின் பக்கம் திரும்பியது.

ஒரு முறை திருப்பதி திம்மப்பனின் தரிசனத்திற்கு அனைவரும் சென்றிருந்தபோது, ஹனுமந்தனின் சாட்சாத்காரத்தைப் பெற்றிருந்த ஸ்ரீகிரியப்பா அவரின் சந்திப்பு ஆயிற்று. பின் திடீரென்று திம்மம்மாவின் பெற்றோர் இவ்வுலகை நீத்தனர். அடுத்து, திம்மம்மா, துருடகியிலிருந்து ஹொன்னூர் பிராணதேவரின் ஆலயத்திற்கு வந்து அங்கு அருகில் தங்கினார். அங்கு ப்ராணதேவரின் சேவையை செய்து கொண்டிருந்தார் ஆகையால், வாக்ஸித்தி பெற்றார் திம்மம்மா. இவருடைய தரிசனத்தைப் பெறுவதற்காகவும், பிரவசனங்களைக் கேட்பதற்காகவும், மக்கள் திரள்திரளாக வந்து கொண்டிருந்தனர். திம்மம்மாவின் வாழ்க்கையில் நடந்து வந்த அதிசயங்களால், மக்கள் இவரை வாழும் தேவதை என்றே அழைத்தனர்.

மாருதி ஆலயத்தில் வாழ்க்கையை நடத்தி வந்த திம்மம்மா, அருகில் ஒரு கோஷாலையை நிர்மாணித்து, ஏழை குழந்தைகளுக்கு பால் கொடுக்கும் திட்டத்தை துவக்கினார். சமூக சேவையிலும் ஈடுபாடு கொண்டிருந்த திம்மம்மா, 'ஹோனூரேஷ' என்னும் அங்கிதத்தில் பல்வேறு பக்தி

கீர்த்தனைகளை இயற்றினார். இவற்றில் ஒரேயொரு கீர்த்தனை மட்டும் இப்போது கிடைத்திருக்கிறது. இந்தப் பாடலில், வாழ்க்கை சுகமாக இருக்க வேண்டுமென்றால், ஸ்ரீனிவாஸனின் ஸ்மரணை அவசியம் என்னும் விஷயத்தை தெளிவாக கூறியிருக்கிறார்.

ஸ்ரீனிவாஸனின் ஸ்துதி

ஸ்ரீனிவாஸன நெனெயிரோ ஸாயுவ தனக
நிஸ்சிந்தவாகி நிமகெ ஸிகுவுது நாக
ஸம்ஸாரத ஜஞ்ஞாட எல்லிய தனக
நன்னவரெம்புது ஸம்பத்து இருவ தனக
ஸத்யவு உளியுவுதா கொனெ தனக
பலமாத்ர ஸிகுவுது அனுக்ரஹத பளிக
பக்தியு குந்தது ஸ்ரத்தெ இருவ தனக
ஹொனூரேஷன தயவிரலி தேஹவிருவ தனக

பிராணதேவரின் கோயிலின் அருகில் இருக்கும் அந்த கிராமத்தின் எல்லையில் தன் தேகத்தை எரிக்க வேண்டும் என்றும், அங்கு வளரும் அரச மரமே தன் வாழ்க்கையின் செய்தி என்று சொல்லியிருந்தார் திம்மம்மா. அவர் கூறியதைப் போலவே, அவரை தகனம் செய்த இடத்தில், அரச மரம் ஒன்று வளர்ந்தது. அதன் அருகில் பிராணதேவரின் பிரதிஷ்டாபனையும் ஆகி, ஒவ்வொரு ஆண்டும் அங்கு திம்மம்மாவின் ஆராதனை சிறப்பாக நடந்து வருகிறது.

அரச மரம், மனிதர்களுக்கு நிழல், பசு பறவைகளுக்கு ஆதரவையும் அளிக்கிறது. மனிதர்களின் ஆரோக்கியத்திற்கும் அந்த மரம் பல்வேறு விதங்களில் உதவியாக இருக்கிறது. திம்மம்மாவின் சரீரத்தை தகனம் செய்த இடத்தில் வளர்ந்திருக்கும் அரச மரம் - நாம் அரச மரத்தினைப் போல, பரோபகாரிகளாக இருக்க வேண்டும். உடன், ஆத்யாத்மிக ஸாதனையினால் பகவந்தனின் அருளுக்கு பாத்திரர் ஆகவேண்டும்’ என்னும் செய்தியை விளக்குகிறது.

ஸ்ரீஹரியின் பரம பக்தளான துருடகி திம்மம்மா அவருக்கு நம் அனந்த நமஸ்காரங்களை செலுத்துவோம். **(தொடரும்)**

***

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## 22. ஸகல துரித நிவாரண ஸந்தி

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | | 2 | | | | | | | | 21 |
| 3 | | | | 4 | | | | | | | | | 22 |
| | | | | | | | | | | 23 | | | |
| 5 | | | 29 | | | 24 | | 37 | | | 6 | 30 | |
| | 7 | | | | 31 | | | 8 | | | | | |
| | 38 | | | 9 | | | | 32 | | | | | 25 |
| 33 | | | | 10 | | 11 | | | | | | 39 | |
| | | | | | | 26 | | | | | | 34 | 27 |
| | | | 12 | | | | 13 | | | 35 | | | |
| | 14 | | | 36 | | | | | | 15 | | | |
| | | 40 | | | | | 28 | | | | 16 | | |
| | 17 | | | | | | | | 18 | | | | |
| 41 | 19 | | | 20 | | | | | | | | | 42 |

குறுக்கெழுத்துப் போட்டிகளை வடிவமைத்துக் கொடுப்பவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி

குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam @ gmail.com / அல்லது 89044 58276 க்கு வாட்சப் செய்யலாம்.

**மார்ச்–22 குறுக்கெழுத்துப் போட்டியில் பங்கேற்று புத்தகப் பரிசு பெறுபவர்கள்: 1.** திருமதி. சாந்தி பத்மனாபன், திருநெல்வேலி. 2. திருமதி. சந்திரா, கோவை. 3. திருமதி. கீதா ராமசந்திரன், திருநெல்வேலி.

**இடமிருந்துவலம்:**1.பாண்டவர்களின்மனைவி(4), 2.பார்வை(5), 3.வாழை (3), 4.நீர் அல்லது ஆகாய கங்கை(2), 5.ப்ருக்ரிதியின் மூன்று குணங்களில் ஒன்று(3), 6.ஸர்ப்பம்(3), 7.க்ஞானத்தை அளிப்பவன்(4), 8.ஒவ்வொருவரின்னுள்ளும் இருப்பவன். கலைந்துள்ளது(5), 9.ஸேவகன்(4), 10.வைத்யன்(3), 11.சல்லடை(4), 12.பத்னி(2), 13.கரும்பு(3), 14.பகைவன்(3), 15.புல்(3), 16.கண்ணனின் நண்பன். கடைசி எழுத்து இல்லை(3), 17.தானசீலன்(4), 18.சமையல்செய்து.(3), 19.முயற்சி(3), 20.உடனே(4).

**வலமிருந்துஇடம்**: 18.ஸ்ரேஷ்டம்(4),21.மண்பானை(3), 22.பூமியில் இருக்கும் பரமாத்மா(4), 23.வேண்டுகோளுக்கு இணங்கி(6), 24.பரிகாஸம்(3), 25.ஒப்புதல் இல்லாத. கலைந்துள்ளது(5), 26.தேவதைகளில் ஸ்ரேஷ்டமானவன்(5), 27.ஐஸ்வர்யம் அளிப்பவன்(4), 28.மலை(4).

**மேலிருந்துகீழ்:**1.பாகன் என்னும் அஸுரனை கொன்ற இந்திரன்(5), 2.தேடி(3), 14.பெயர்(4), 21.ரொட்டி முதலான ஆஹாரத்திற்கு கஷ்டப்படுபவன்(4), 23.ஸமீபத்தில் இருப்பவன்(4), 26.வாயு பகவானுள் நிலைத்திருக்கும் ஸ்ரீஹரியின் ரூபம்(4), 29.கருடன்(4), 30.ஸ்திரப்படுத்துதல்(3), 31.பொய் இல்லாத அல்லது கபடமற்ற(6), 32.நீர்க்குமிழி(6), 33.பரமாத்மாவிற்கு கர்காச்சாரியார் இட்ட பெயர்(5), 34.ஆபரணம்(3), 35.கிரிமி போஜனம் என்ற ப்ரத்யேகமான நரகம்(5), 36.வெற்றியை அளிப்பவன்.கடைசி எழுத்து இல்லை(4).

**கீழிருந்துமேல்:**14.மேல் அமர்ந்து செல்வது(3), 16.குரு குலத்து அரசன்(4), 18.விருந்தாளிகள்(3), 37.ஸம்ஹாரம் செய்த(3), 38.விஷய ஸுகங்களை அனுபவிப்பவர்கள்(4), 39.மானத்தை காப்பவன்(3), 40.கிராமத்தை பரிபாலிக்கும் தலைவன்(4), 41.விருந்து(3), 42.துளிர்(4),

***

**Subscription Renewal - சந்தா புதுப்பித்தல்**

உங்களுக்கு வந்திருக்கும் பத்திரிக்கையின் பின்புறம், உங்கள் முகவரியின் முதல் வரியில் 'Apr-22' என்று ஒரு குறிப்பிட்ட மாதம் இருக்கும். அதுவே உங்கள் சந்தா முடியும் மாதம் ஆகும். அந்த மாதத்திற்குள் உங்கள் சந்தாவை புதுப்பித்துக் கொள்ளவும். நன்றி.

தொடர்

## ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர்

### 1. லய கீதை

டாக்டர். ஜயலட்சுமி மங்களாமூர்த்தி

ஸாதகர்கள் தினம்தோறும் இரவில் மற்றும் மரண சந்தர்ப்பத்தில் செய்ய வேண்டிய லய கிரமம்:

1. சரீராந்தர்கத ஆகாஷம், புற ஆகாஷத்தில் லய
2. ஷ்வாஸ வாயு, புற வாயுவில் லய
3. சரீரத்தின் உஷ்ணம், புற தேஜஸ்ஸில் லய
4. சரீரத்தின் த்ரவ்யம் அதாவது ரத்தம் முதலியன புற அபு (உதக) தத்வத்தில் லய
5. சரீரத்தின் ப்ருத்வி பாகம், புற ப்ருத்வியில் லய
6. சரீரத்தின் பேச்சு ஆகிய காரியங்களில் ஈடுபட்டிருக்கும் வாக் இந்திரியம், அக்னியின் கட்டுப்பாட்டில் இருக்கிறது என்று சிந்திப்பதே லய
7. சரீரத்தின் பாணி (கைகள்), தக்ஷனின் மூலம், இந்திரனின் கட்டுப்பாட்டில் உள்ளது என்று சிந்திப்பதே லய
8. சரீரத்தின் பாத இந்திரியக்கள், ஜயந்தனின் அதீனம் என்று சிந்திப்பது லய
9. சரீரத்தின் பாயு இந்திரியம், மித்ர நாமக சூரியனின் அதீனம் என்று சிந்திப்பது லய
10. சரீர குஹ்யேந்திரியம், ஸ்வாயம்பு மனுவின் அதீனம் என்று சிந்திப்பது லய
11. சரீரத்தின் த்வக், ஸ்பர்ஷ தன்மாத்ரங்கள் அஹங்காரிக பிராணனின் அதீனம் என்று சிந்திப்பது லய
12. சரீரத்தின் கண் மற்றும் ரூப தன்மாத்ரங்கள், சூரியனின் அதீனம் என்று சிந்திப்பது லய
13. சரீரத்தின் காது மற்றும் ஷப்த தன்மாத்ரம், திக்தேவதைகளின் அதீனம் என்று சிந்திப்பது லய
14. சரீரத்தின் நாக்கு மற்றும் ரஸ தன்மாத்ரம், வருணனின் அதீனம் என்று சிந்திப்பது லய
15. சரீரத்தின் க்ராண மற்றும் கந்த தன்மாத்ரம், அஷ்வினி தேவதைகளின் அதீனம் என்று சிந்திப்பது லய
16. சரீரத்தின் புத்தி தத்வ, ஸ்கந்த, இந்திர, உமா, பாரதிதேவியரின் அதீனம் என்று சிந்திப்பது லய

17. சரீரத்தின் மனஸ் (சந்த்ர) ருத்ரனின் அதீனம் என்று சிந்திப்பது லய

18. சரீரத்தின் அஹங்கார தத்வ, அதன் அபிமானிகளான கருட, சேஷ, ருத்ரர், மஹத் தத்வாபிமானிகளான பிரம்ம, வாயுவில் அவருடைய அதீனர் என்று சிந்திப்பது லய.

லய சிந்தனை செய்யும் ஸாதகர்களுக்கு வித்வாம்சர்கள் கூறும் விசேஷ குறிப்புகள்.

ஸ்ரீஹரி, ரமாதேவி மற்றும் பிராணதேவரைக் குறித்தான லயசிந்தனையின் விஷயங்களாக, ஞானிகள் கூறியது இவ்வாறு உள்ளது. பஞ்ச பூதாத்மகமான தேகத்தில் தத்வாபிமானி தேவதைகள் இருக்கின்ரனர். இவர்களில் 1. பரமாத்மனின் அம்சம். 2. ரமாதேவியரின் அம்சம் மற்றும் 3. முக்யபிராணதேவரின் அம்சங்கள் இருக்கின்றன. இந்த மூன்று கிரமங்களில் - முதலில் பகவந்தனின் அம்சங்களுக்கு, பிறகு ஸ்ரீலட்சுமிதேவியரின் அம்சங்களுக்கு மற்றும் முக்யபிராணரின் அம்சங்களுக்கு ஏகீபாவ லட்சண லயசிந்தனை செய்ய வேண்டும். தத்வ தேவதைகளுக்கு ஸ்வோத்தமரில் அதமருக்கு பிரவேசமே லய எனப்படுகிறது. பிறகு, தத்வங்களுக்கு காரியத்திற்கு காரணத்தில் ஏகீபாவ லட்சண லயசிந்தனை செய்ய வேண்டும். ஐந்து விதமாக லயசிந்தனை ஆகிறது.

1. பரமாத்மனின் அம்சங்களுக்கு லயசிந்தனை:

* ப்ருத்வி அபிமானி ஷனைஷ்சர அந்தர்கத பகவத் அம்சத்திற்கு, உதக அபிமானி வருணாந்தர்கத பகவத் அம்சத்தில் லய

* வருணாந்தர்கத பகவத் அம்சத்திற்கு, தேஜோபிமானி ஸூர்யாந்தர்கத பகவத் அம்சத்தில் லய;

* ஸூர்யாந்தர்கத பகவத் அம்சத்திற்கு, வாயு அபிமானி ப்ரவஹ பகவத் அம்சத்தில் லய;

* வாயு அந்தர்கத பகவத் அம்சத்திற்கு, ஆகாஷாபிமானி கணபதி அந்தர்கத பகவத் அம்சத்தில் லய.

* கணபத்யந்தர்கத பகவத் அம்சத்திற்கு அஹங்கார தத்வாபிமானி ருத்ராந்தர்கத பகவத் அம்சத்தில் லய.

* ருத்ராந்தர்கத பகவத் அம்சத்திற்கு மஹத் தத்வாபிமானி பிரம்மாந்தர்கத பகவத் அம்சத்தில் லய

* பிரம்மாந்தர்கத பகவத் அம்சத்திற்கு அவ்யக்த தத்வாபிமானி ரமாந்தர்கத பகவத் அம்சத்தில் ஏகீபாவ லக்ஷண லய

* அந்த அம்சத்தைக் கொண்ட பகவத் அம்சங்களுக்கு, வலது கண்ணில் இருக்கும் விஷ்வனால் ஏகீபாவ.

* விஷ்வனுக்கு தைஜஸனால் ஏகீபாவ சிந்தனையை செய்து, அந்த தைஜஸனுக்கு ஹ்ருதயாகாஷத்தில் இருக்கும் ப்ராக்ஞனால் ஐக்ய சிந்தனை செய்ய வேண்டும்.

2. லட்சுமிதேவியின் அம்சங்களுக்கு லயசிந்தனை:

* ப்ருத்வி அபிமானி ஷனைஸ்சராந்தர்கத ரமா அம்சத்திற்கு உதகாபிமானி வருணாந்தர்கத ரமா அம்சத்தில் லய.

* வருணாந்தர்கத ரமா அம்சத்திற்கு தேஜோபிமானி சூர்யாந்தர்கத ரமா அம்சத்தில் லய.

* ஸூர்யாந்தர்கத ரமா அம்சத்திற்கு ப்ரவஹ வாயு அந்தர்கத ரமா அம்சத்தில் லய

* ப்ரவஹ வாயு அந்தர்கத ரமா அம்சத்திற்கு கணபதி அந்தர்கத ரமா அம்சத்தில் லய

* கணபதி அந்தர்கத ரமா அம்சத்திற்கு அஹங்கார தத்வாபிமானி ருத்ராந்தர்கத ரமா அம்சத்தில் லய

* ருத்ராந்தர்கத ரமா அம்சத்திற்கு மஹத் தத்வாபிமானி பிரம்மாந்தர்கத ரமா அம்சத்தில் லய

* பிரம்மாந்தர்கத ரமா அம்சத்திற்கு அவ்யக்த தத்வாபிமானி ரமாதேவியில் ஏகீபாவ லட்சண லய.

* ரமா அம்சத்தைக் கொண்ட ரமா அம்சங்களுக்கு, வலது கண்ணில் இருக்கும் ஸ்ரீதேவியினால் ஏகீபாவ.

* ஸ்ரீதேவிக்கு கழுத்தில் இருக்கும் பூதேவியினால் ஏகீபாவ லய சிந்தனை.

* அந்த பூதேவிக்கு ஹ்ருதயாகாஷத்தில் இருக்கும் ப்ராக்ஞ பத்னி துர்காதேவியினால் ஐக்ய சிந்தனை.

* அந்த அம்சங்களுக்கு பகவத் அதீனத்வத்தை சிந்திப்பதே, லட்சுமிதேவியின் லய.

3. முக்யபிரண அம்சங்களுக்கு லய சிந்தனை:

* ப்ருத்வி அபிமானி ஷனைஷ்சர அந்தர்கத முக்யபிராண அம்சத்திற்கு, உதக அபிமானி வருணாந்தர்கத முக்யபிராண அம்சத்தில் லய

* வருணாந்தர்கத முக்யபிராண அம்சத்திற்கு, ஸூர்யாந்தர்கத முக்யபிராண அம்சத்தில் லய;

* ஸூர்யாந்தர்கத முக்யபிராண அம்சத்திற்கு, வாயு அபிமானி ப்ரவஹ அந்தர்கத முக்யபிராண அம்சத்தில் லய;

* பிரவஹ வாயு அந்தர்கத முக்யபிராண அம்சத்திற்கு, ஆகாஷாபிமானி கணபதி அந்தர்கத முக்யபிராண அம்சத்தில் லய.

* கணபத்யந்தர்கத முக்யபிராண அம்சத்திற்கு ருத்ராந்தர்கத முக்யபிராண அம்சத்தில் லய.

* ருத்ராந்தர்கத முக்யபிராண அம்சத்திற்கு, மஹத் தத்வாபிமானி பிரம்மாந்தர்கத முக்யபிராண அம்சத்தில் லய.

* இந்த முக்யபிராண அம்சங்களுக்கு துர்காத்மக ரமாத்வாரா பகவத் அதீனத்வ சிந்தனையே முக்யபிராணனின் லய.

ஸ்ரீபிரஸன்ன வெங்கட தாசர், தத்வதேவதா லயத்தை சொல்லியவாறு, ஒன்று மற்றும் இரண்டாம் நுடிகளில், தத்வங்களை, தன்மாத்ரங்களின் லயத்தை சொல்லியிருக்கிறார்.

இங்கு தாசர், ப்ருத்வி தன்மாத்ரா கந்தத்தை விளக்குகிறார். கந்த தன்மாத்ரத்திற்கு அபிமானிகள், ருத்ர புத்ர ஸமானவாயு; ருத்ர புத்ர ஸமானனுக்கு, அக்னியில் பிரவேசம். அக்னிக்கு ஸூரியனில்; ஸூரியனுக்கு பிருஹஸ்பதியில்; ப்ருஹஸ்பதிக்கு இந்திராதிகளின் மூலம், விஷ்ணுவில் ப்ரவேசம். வாயுபுத்ர ஸமானனுக்கு இந்திராதிகளின் மூலம், விஷ்ணுவில் பிரவேசம்.

அபு தன்மாத்ர ரஸ: இதற்கு அபிமானிகள், ருத்ர புத்ர உதான. ருத்ர புத்ரனுக்கு அக்னியில் பிரவேசம். அக்னிக்கு ஸூரியனில்; ஸூரியனுக்கு பிருஹஸ்பதியில்; ப்ருஹஸ்பதிக்கு இந்திராதிகளின் மூலம், விஷ்ணுவில் ப்ரவேசம். வாயுபுத்ரனுக்கு இந்திராதிகளின் மூலம், விஷ்ணுவில் லய.

தைஜஸ தன்மாத்ர ரூப: இதற்கு அபிமானிகள், ருத்ரபுத்ர வ்யான. ருத்ர புத்ர வ்யானனுக்கு, அக்னியில் லய. அக்னிக்கு ஸூரியனில்; ஸூரியனுக்கு பிருஹஸ்பதியில்; ப்ருஹஸ்பதிக்கு இந்திராதிகளின் மூலம், விஷ்ணுவில் ப்ரவேசம். வாயுபுத்ர வ்யானனுக்கு இந்திராதிகளின் மூலம், விஷ்ணுவில் லய. வாயுபுத்ர வியானனுக்கு இந்திராதிகள் மூலம் விஷ்ணுவில் லய.

ஆகாஷ தன்மாத்ரா ஷப்த: இதற்கு அபிமானி ருத்ரபுத்ர பிராண ப்ருஹஸ்பதிகள். ருத்ரபுத்ர அக்னியில், அக்னிக்கு ஸூரியனில்; ஸூரியனுக்கு பிருஹஸ்பதியில்; ப்ருஹஸ்பதிக்கு இந்திராதிகளின்

மூலம், விஷ்ணுவில் ப்ரவேசம். வாயுபுத்ர பிராணனுக்கு, இந்திராதிகளின் மூலம், விஷ்ணுவில் லய என்று அறிய வேண்டும்.

மூன்றாம் நுடியில் தாசர், சேஷனுக்கு வாயுதேவரில், குருடதேவருக்கு மஹத் தத்வாதிபதியான பிரம்மதேவரில் லய என்கிறார்.

பிரம்மதேவருக்கு காயத்ரி, ஸாவித்ரி, ஸ்ரீசரஸ்வதியில் லய. இந்த மூன்று பெண்களுக்கு, அர்த்த நாமக காயத்ரியில் லய என்று சொல்கிறார்.

நான்காம் நுடியில் தாசர், சதுர்முக பிரம்மதேவர் வரை சொல்லியவாறு, சதுர்முக பிரம்மதேவர், பும் நாமக பிரம்மதேவரில் லய; பும் நாமக பிரம்மதேவர் கால நாமக பிரம்மதேவரில் லய; கால நாமக பிரம்மதேவர், தம் தாயான லட்சுமிதேவியில் லய; லட்சுமிதேவி, அச்யுதனின் சமீபத்தில் லய என்று சொல்கிறார்.

கிருதியின் கடைசியின் பத்தியில், லய சிந்தனையை செய்யும் வழக்கத்தைக் கொண்ட ஸாதகர்கள், பிம்போஸானையை குருமுகேன உபதேசம் பெற்றுக் கொள்ள வேண்டும் என்கிறார்.

அம்புஜோதர பிரஸன்னவெங்கட அனிருத்தனிகெ
வித்த ஷரீ ரார்ப்பிஸுவெ நா ஹரே ஹரே

என்று இந்தப் பாடலை முடிக்கிறார்.

**(தொடரும்...)**

**கன்னடம்**

**அருஞ்சொற்பொருள்**

**கடினமான சொற்களின் அர்த்தங்கள்**

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

1. உம்மஹ - மகிழ்ச்சி; 2. உர - இதயம், மார்பு, சிறந்த; 3. உரகபந்தன - நாகபாஷம்; 4. உரகபாண - சர்ப்பாஸ்திரம்; 5. உருக்ரம - அதிகம், வீரம்; 6. ஊர்மி - அலை; 7. ஊர்வி - பூமி; 8. ஊளிக - சேவை, சரணாகதி. 9. ஏஸு - எவ்வளவு; 10. ஏஸேஸு – எவ்வளவோ.

தொடர்

**கன்னட கிரந்தங்கள் அறிமுகம்**

**கீசக வதெ - ஸ்ரீவாதிராஜர்**

7 மற்றும் 8 வது பத்யங்களில் ராணி ஸுதேஷ்ணை கீசகனுக்கு எச்சரிக்கை விடுத்து புத்திமதி கூறுவதையும், அதற்கு கீசகன் பதில் அளிக்கும் விதத்தையும் விளக்கும் வாதிராஜர், ஸுதேக்ஷ்ணை கீசகனிடம் எச்சரிக்கும் விதத்தில் அவன் செய்த காரியத்தினால் அவனின் உயிருக்கே ஆபத்து ஏற்படும்படி ஆனதாகவும் ஸைரந்திரி இனி வசப்படமாட்டாள், ஆதலால் ஊரை விட்டு வெளியேறுவது நன்று எனவும் கூறி, சதாசாரத்தில் நம்பிக்கை கொண்ட ஸைரந்திரியை தவறான கண்ணோட்டத்தில் நோக்கினால் அஷ்ட ஐஸ்வர்யங்களும் நாசமாகும், கெட்டுப்போவான் எனவும் புத்தியுரைக்க, அதற்கு பதிலளித்த கீசகன், உலகில் தனக்குச் சமமான வலிமையானவன் யாருமில்லை எனவும், எதிரிகளின் இதயத்தை மிதித்து எறியும் சக்தி கொண்ட தமக்கு பயமில்லை எனவும் கூறி, ஸைரந்திரியை யாரும் அறியாமல் ரகசியமாக தமது இடத்திற்கு அனுப்பினால், அவளை பட்டத்து ராணியாக அமர்த்தி, அனைவரையும் அவளுக்கு தாஸியாக மாற்றுவதாகவும் இறுமாப்புடன் கூறுவதையும்," நிஷ்டெ ஸைரந்த்ரிய த்ருஷ்டிஸி நோடலு நஷ்டவாகுவுது அஷ்டைஸ்வர்யவு", "குட்டிந்த நாரிய கொட்டு களுஹலு பட்டத ராணியோலிட்டு கொம்பெ" முதலான பதங்களினால் விளக்கியுள்ளார்.

9 மற்றும் 10 வது பத்யங்களில், கீசகனின் துஷ்ட பேச்சுக்களைக் கேட்ட ஸைரந்திரி, தனது கணவனால் அவன் உயிரை விட நேரிடும் என எச்சரிக்க, கீசகன் அவளைத் தடுத்து, கூந்தலை சரிசெய்யும் அவளின் தொழிலை இகழ்ந்து பேசியதையும், ஸைரந்திரி ஸ்ரீ கிருஷ்ணனைப் பிரார்த்தனை செய்து தாம் ராஜாதிராஜனின் மனைவியாக வாழ்ந்து ஏழ்மையின் காரணமாக பிறநாட்டு அரசர்களிடம் வேண்டும் நிலை வந்ததை பற்றிக் கூறி மன்னன் கீசகனால் ஏற்படும் அவமானத்தை பீமனிடம் சொல்லாதிருப்பது சரியல்ல என சிந்தித்து பீமனிடம் முறையிட்டதையும் ஸ்ரீவாதிராஜர் குறிப்பிட்டுள்ளார்.

11 முதல் 13 வரையிலான பத்யங்களில், நடுங்கும் குரலில் கண்ணீர் விட்டவாறு த்ரௌபதி பேசிய பேச்சுக்களையும் அவளின் வாடிய முகத்தையும் கண்டவுடனே பீமஸேனன் அவளின் கண்ணீரைத்

துடைத்து, ஆறுதல் கூறி, கெட்ட பேச்சுக்களால் அவளை நோகடித்த கீசகனை அடித்துக் கொன்று எமனிடம் அனுப்புவதாக தைரியம் அளித்து அனுப்பி வைத்ததை "மிடுகி நின்னனு ஹிடித களனனு படிது யமனிகெ கொடுவ நோடீக" போன்ற பதங்களால் விளக்கி, பின்னர் த்ரௌபதி பீமஸேனரின் ஆணைக்கிணங்க கீசகனுக்குத் தாம் அவனிடம் வருவதாக வாக்களித்ததையும், அதற்கு துஷ்ட கீசகன் அடைந்த மகிழ்ச்சியையும், த்ரௌபதி அன்றிரவு நாட்டிய சாலைக்கு கீசகனை வருமாறு அழைத்த செய்தியையும் பீமனுக்குச் சொல்ல, துஷ்ட கீசகனின் தேகத்தைக் கிழிப்பதற்கு சரியான சமயம் வந்ததாக பீமன் தோள்தட்டியதையும் ஸ்ரீவாதிராஜர் "கூளன காயவ ஸீளலு தக்கந்த வேளெ பந்தெனுத தோள ஹொய்து" முதலான பதங்களினால் வர்ணித்துள்ளார்.

14 முதல் 17 வரையிலான பத்யங்களில் பீமஸேனர் பெண் வேடம் பூண்டு நாட்டிய சாலைக்கு செல்லும் விதத்தைத் காவிய ரசத்துடன் வர்ணித்துள்ள ஸ்ரீ வாதிராஜர், ஸைரந்திரி எப்போது வருவாளோ என்றுகீசகன் அவ்விடத்தைச் சென்றடைய, அதே நேரத்தில் ஊரின் மக்கள் அறியாத வண்ணம், கீசகன் மோகிக்கும் வகையில் தனக்கு பெண் வேடமிட பீமஸேனர் கேட்க த்ரௌபதி வெட்கம் கொண்டதுடன், கணவரின் ஆணைப்படி பெண் வேடமிட பீமஸேனருக்கு நெற்றியில் திலகம், கண்ணுக்கு மை, ஜரிகை, பீதாம்பரம் ரவிக்கை முதலியவற்றை அளித்து மேலும் கழுத்தில் முத்து மாலையையும், இடுப்பில் ஒட்டியாணத்தையும், விரலில் மோதிரத்தையும், மூக்கில் மூக்குத்தியும், அழகான தங்கத் தோடுகளையும், தங்கமயமான கொண்டை, உச்சி வகிட்டில் ராகெடெயையும், கைக்கு வளையல்களையும், முத்துச்சரங்களையும் ரத்தின பதக்கங்களையும், த்ரௌபதி தேவி மரியாதையுடன் அணிவித்ததையும், மேலும் தலைக்கு மல்லிகை முடித்து, உடம்பிற்கு சந்தனம் பூசி, தாம்பூலத்தை மடித்து பீமசேனரிடம் கொடுக்க, ஸ்த்ரி வேடம் பூண்ட பீமஸேனர் ஸ்ரீ கிருஷ்ணரின் சங்கல்பம் ஈடேறப் போவதாகக் கூறி த்ரௌபதியுடன் நடன சாலைக்கு கிளம்பிய தையும் மிக அழகாக எடுத்தியம்பியுள்ளார்.

18 முதல் 20 வரையிலான பத்யங்களில் பீமஸேனருக்கும் கீசகனுக்குமிடையே நடந்த உரையாடல்களைக் குறிப்பிடும்

வகையில் ஸ்ரீ வாதிராஜர், பெண் வேடமிட்ட பீமஸேனர் நடன சாலைக்கு வர, கீசகன் பீமனை ஸைலந்திரி என நினைத்து தாபத்தினால் வாடிய தனக்கு பரிகாரம் ஏற்பட்டது எனவும் ஆபரணங்களை அளித்து அலங்கரித்து வருமாறும் கூற, த்ரௌபதியின் (ஸைரந்திரி) குரலில் பீமன் கீசகனிடம் மீண்டும் தனது கணவனால் ஆபத்து நேரிடும் என எச்சரித்தபோதும், காமவயப்பட்ட கீசகன் அதைப் பொருட்படுத்தாது பீமனை ஸ்பர்ஸம் செய்த மாத்திரத்தில் கல்லைப் போன்ற தேகத்தைக் கண்டு ஆச்சரியம் கொண்டு, பின்னர் பீமனின் முகத்தைப் பார்த்தவுடன் பயந்து ஓடியதையும், அதற்கு பதிலளித்த பீமன், பரஸ்திரியின் மேல் மோகம் கொண்டவர்களுக்கு தனது ரூபம் பயங்கரமானதாக இருக்கும் என எச்சரித்த தையும் "நாரியோ நீனேனு மாரியோ இன்னொந்து பாரி எனகெ நின்ன மோரெ தோரிஸெந்து", "பாரதந்த பரனாரேர மோஹிப க்ரூரகெ ஈ ரூப கோரவாகிஹுது" போன்ற பத்யங்களில் விளக்கி உள்ளார்.

21 முதல் 23 மூன்று வரையிலான பத்யங்களில், கீசக வத கட்டத்தை வர்ணித்து இந்தப் படைப்பை பூர்த்தி செய்திருக்கும் ஸ்ரீ வாதிராஜர், பீமஸேனர் மஞ்சத்தில் இருந்து எழுந்து, தனது முஷ்டியினால் கீசகனின் தலைமேல் குத்த அவனின் தலை வயிற்றின் சிக்கி கொடூரமாக இறந்ததையும் அதே நேரத்தில் பீமன் அனிருத்த ரூபி பரமாத்மாவை ஸ்மரித்துக் கொண்டு இதை சேவையாக பகவானே நடத்தியது என வேண்டி கீசகனின் தேகத்தை கீழே உருட்டி, பின்னர் த்ரௌபதியிடம் கீசகன் நிலையைக் காணும்படியும், அந்த துஷ்டனை எமலோகத்திற்கு அனுப்புவதாக அளித்த வாக்கை நிறைவேற்றியதாகவும், இனி ஸ்ரீ கிருஷ்ணனின் அருளால் கீசகனால் ஏற்பட்ட பயமில்லை எனவும், யாரும் பார்க்கும் முன் தான் சமையல் கட்டுக்கு செல்வதாகவும் கூறி, ஒருவேளை ராணியானவள் இதை அறிந்து, ஓராண்டு அஞ்ஞான வாஸம் முடிய இன்னும் சில நாட்களே உள்ள நிலையில் த்ரௌபதியை வெளியே அனுப்பினால் ஸ்ரீ ஹயவதனனைத் துதித்து கதையைத் தரிப்பதாக பீமஸேனர் உரைத்ததையும் "ஸமீரஜ குத்தலு கீசக பித்தனு பூமிலி", "ஹயவதனன பதபத்ம ஸ்மரிஸூத கதெயெனு தரிஸூவெனு" போன்ற பதங்களினால் வர்ணித்து ஸமர்ப்பணம் செய்துள்ளார்.
இத்தகைய உயரிய கிரந்தத்தை தினமும் பாராயணம் செய்து விசேஷமான அர்த்தங்களை தெரிந்து கொண்டு ஸ்ரீவாதிராஜரின் அந்தர்யாமியான ஸ்ரீ ஹயக்ரீவரின் அனுக்ரகத்திற்கு பாத்திரராவோமாக. (தொடரும்)... **S.லக்ஷ்மிபதிராஜா, சென்னை**

தொடர்

**ஹரிகதாம்ருதசார மஞ்சரி 360**

**By ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர்**

5. ப1ஞ்சபே4தாத்மக ப்ரபஞ்சகெ
பஞ்சரூபாத்மகனெ தை3வக
பஞ்சமுக2 சக்ராதிக3ளு கிங்கரரு ஸ்ரீஹரிகெ3 |
பஞ்சவிம்ஷதி த1த்வ தரதம
பஞ்சிகெக3ளனு பே1ள்த3 பா4வி வி
ரிஞ்சியெனிபானந்த3 தீர்த்தர நெனெவெனனுதி3னவு || (1-9)

இந்த பிரபஞ்சம் பஞ்ச பேதத்தினால் நிரம்பியுள்ளது. ஸ்ரீஹரி அவற்றில் பஞ்சரூபங்களால் அந்தர்யாமியாக இருக்கிறான். ரமா முதற்கொண்டு அனைவரும், ஸ்ரீஹரியின் கிங்கரர்களாக இருக்கின்றனர். 25 தத்வங்களை சொல்லி, அவற்றில் தாரதம்யம் இருக்கிறது என்னும் விஷயத்தை பா4வி-பிரம்மரான ஸ்ரீமன் மத்வாசார்யரே ஆன ஆனந்ததீர்த்தரை எப்போதும் சிந்திக்க வேண்டும் என்கிறார் தாசர்.

இந்த பத்யத்தின் கருத்து என்னவென்றால், ஆனந்ததீர்த்தரை ஏன் சிந்திக்க வேண்டும் என்றால், அவர் பா4வி-பிரம்மர். மற்றும் ஞானேந்திரிய, கர்மேந்திரிய, பஞ்சபூத மற்றும் பஞ்சதன்மாத்ர ரூபங்களில் ஐந்து-ஐந்து ரூபங்களால் தான் இருந்து + மனஸ் சேர்த்து என மொத்தம் 25 தத்வங்களினால் ஆன இந்த பௌதிக சரீரத்தில் தாரதம்யத்தினால் இருந்து, அதனை தமது த்வைத ஸித்தாந்தத்தில் விளக்கியிருக்கிறார். அங்கு ரமா முதற்கொண்டு அனைவரும் இவரை (ஸ்ரீஹரி) வணங்குகின்றனர் என்று உலகிற்கு விளக்கிய ஆனந்த தீர்த்தரை நாம் எப்போதும் நினைக்க வேண்டும் என்கிறார்.

6. க்ருத்திவாஸனெ ஹிந்தெ3 நீ நா
ல்வத்து1 க1ல்ப ஸமீரனலி ஸி
ஷ்யத்வ வஹிசகி2ளாக3 மார்த்தக3ளோதி3 ஜலதி4யொளு |
ஹத்து கல்பதி3 தபவகை3தா3
தி3த்யரொள கு3த்தமனெனிஸி புரு
ஷோத்தமன பரியங்க பத3வைதி3தெ3யோ மஹாதேவ ||(1-11)

ருத்ரரைக் குறித்தான இந்த பத்யத்தில், கிருத்தி – தோல் ஆடையை அணிந்துள்ள மகாதேவரே, முன்பு, 40 கல்ப காலங்களில், நீங்கள் பாரதீஷனை குருவாக ஏற்றுக்கொண்டு, அவரிடமிருந்து ஆகமங்களை அறிந்து, உப்புக் கடலில் 10 கல்ப ஸாதனை செய்து, சூர்யாதிகளுக்கு குரு என்று அழைக்கப்பட்டு, அடுத்து சேஷனின் பதவிக்கு வருபவராக, ஸ்ரீஹரிக்கு படுக்கையாக இருக்கப்போகும் மகாதேவனே, உன்னை வணங்குகிறேன் என்கிறார். அதாவது, ருத்ரரின் ஸ்தானத்திற்கு வரும் ஜீவராசிகள், 50 கல்ப சாதனை செய்த பின், சேஷபதவியை அடைந்து, அங்கு முக்தர் ஆகின்றனர் என்பது கருத்து.

7. ஸ்ரவண மனனானந்த$^3$வீவுது$^3$
ப$^4$வஜனித து$^3$க்க$^2$க$^3$ள க$^1$ளெவுது$^3$
விவித$^4$ போ$^4$க$^3$வ னிஹபரங்களலித்து ஸலஹுவுது$^3$ |
பு$^4$வனபாவன நெனிப லகுமி
த$^4$வன மங்க$^3$ள க$^1$தெ$^2$ய பரமோ
த்ஸவதி$^3$ கி$^1$விகொ$^3$ட்டாலிபுது$^3$ பூ$^4$ஸுரரு தி$^3$னதி$^3$னதி$^3$ ||(2-1)

நமக்கும் ஸ்ரீஹரியின் கிருபை கிடைக்கட்டும் என்னும் நோக்கத்தில், பரதத்வத்தை பற்பல உவமை, உவமேயங்களுடன் விளக்கியிருக்கிறார். பகவந்தனையே ஏன் சிந்திக்க / நினைக்க வேண்டும் என்னும் கேள்வி கேட்டு, அவனின் கதா ஸ்ரவணம் மட்டுமே மனதிற்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. நம் அனேக கஷ்டங்களை, துக்கங்களை அது போக்குகிறது. அனேக சுகங்களைக் கொடுக்கிறது. அதி பவித்ரனான லட்சுமிபதியின் மங்கள கதையை, ஹரிபக்தர்கள் மிகவும் உற்சாகத்துடன் கேட்டு மகிழவேண்டும் என்கிறார். பூமியில் பிறந்திருக்கும் பிராமணர்கள், விசேஷ ஸாதகர்கள் ஆகின்றனர். அவர்கள் கண்டிப்பாக ஹரிகதா ஸ்ரவணத்தை செய்ய வேண்டும் என்கிறார்.

8. மலகி$^3$ பரமாத$^3$ரதி$^3$ பாட$^3$லு
குளிது$^1$ கேளுவ குளிது$^1$ பாட$^3$லு
நிலுவ நிந்தரெ நலிவ நலித$^3$ரெ ஒலிவெ நிமகெ$^3$ம்ப$^3$ |
ஸுலப$^4$னோ ஹரி தன்னவரனர
க$^4$ளிகெ$^3$ பிட்டக$^3$லனோ ரமாத$^4$வன
ஒலிஸலரியதெ$^3$ பாமரரு ப$^3$ளலுவரு ப$^4$வதொ$^3$ளகெ$^3$ || (1-5)

இந்த பத்யத்தில், நமக்கு ஒரு நல்ல விஷயத்தை விளக்குகிறார். அதாவது, மானவரான, பாமரரான நாம், பகவந்தனை எப்படி மகிழ்விக்க

முடியும் என்பதையே அறியாமல் குழப்பத்தில் இருக்கிறோம். ஆனால், அது மிகவும் சுலபம். நாம் படுத்தபோது அவனை நினைத்தால், தானும் அருகில் அமர்ந்து கேட்கிறான். நாம் அமர்ந்து அவனை நினைத்தால், அவன் நின்று நம்மை கேட்கிறான். அதைப்போல, நாம் நின்று அவனை நினைத்தால், நம்மைச் சுற்றிலும் நடனமாடுகிறான். தரிசனமும் அளிக்கிறான். அதுமட்டுமல்ல, இவ்வாறாக அவனை நினைத்தால், அவன் நம்மை ஒரு நொடிகூட விட்டு விலகாமல் காக்கிறான். அத்தகைய சுலபமான பிரபு ஸ்ரீஹரி என்று சொல்லி, இத்தகையவனை நினைக்காமல், பாமரரான நாம் சம்சாரத்தில் ஏன் மூழ்கிக் கிடக்கிறோம்?. இதிலிருந்து (சம்சார சுழற்சியிலிருந்து) தப்பித்துக் கொள்ள நாம் ஏன் முயற்சி செய்வதில்லை என்றே தாசர் கேட்கிறார்.

9. மனதொ3ளகெ3 தானித்து3 மனவெ
ந்தெ3னிஸிகொம்ப3னு மனத3 வ்ருத்திக3
ளனுஸரிஸி போ4க3க3ளனீவனு த்ரிவித4 சேத1னக்கெ |
மனவனித்தரெ த1ன்னனீவனு
த1னுவ த3ண்டி3ஸி தி3னதி3னதி3 ஸா
த4னவ மாள்பரிகி3த்தபனு ஸ்வர்க்கா3தி3 போ4க3க3ள || (2-6)

இந்த பத்யத்தில் நமக்கு கிடைக்கும் ஸ்வர்க்காதிகளுக்கு நாமே பொறுப்பு. காரணம், நம் மனதினை அவனில் வைக்க வேண்டும் என்பதே கருத்து.அதாவது, நம் மனதில் அவனே இருக்கிறான். அதனால், அவனுக்கு மன என்று பெயர். மனதினை நாம் எங்கு, எப்படி வைக்கிறோமோ, அதற்கேற்ப பலன்களைக் கொடுக்கிறான். அந்த மனதினை அவனில் வைத்தால், பதிலாக தன்னையே கொடுக்கிறான். நம் இந்த தேகத்தை, சதாசாரத்தின்படி தண்டித்தால், அதாவது, விதி, விதிவிலக்குகளை அறிந்து, தினத்ரய ஆகிய ஏகாதசி த்வாதசி விரதங்களை அனுசரித்து, சாதனை செய்தால், ஸ்வர்க்காதி பலன்கள் கண்டிப்பாக கிடைக்கின்றன. [இல்லையெனில், நரகம் என்றுகூட சொல்ல வேண்டுமோ?].

நம் மனதினை, அதன் போக்கில் விட்டுவிடாமல், அதனை நம் கட்டுப்பாட்டில் வைத்தால், நற்பலன் கிடைக்கிறது. அதை விட்டு,

மனதின் சொல்படி நாம் சென்றால், கண்டிப்பாக நாம் கெடுகிறோம் என்கிறார் தாசர்.

10. ஒப்ப3னலி நிந்தா1டு3வனு ம
த்தொப்ப3னலி நோடு3வனு பே3டு3வ
நொப்ப3னலி நீடு3வனு மாதாடு3வனு பெ3ரகா3கி3 |
அப்ப3ரத3 ஹெத்தெ3ய்வனிவ ம
த்தொப்ப3ரனு லெக்கி1ஸனு லோகதொ3
ளொப்ப3னெ தா பா3த்4ய பா3த4கனாஹ நிர்பீ4த || (2-10)

நாம் செய்யும் அனைத்து செயல்களையும் பகவந்தனே செய்விக்கிறான். செயல்களை செய்விப்பது, பார்ப்பது, கொடுப்பது, விடுவது, பேசுவது ஆகிய அனைத்தையும் நரசிம்ம ஸ்வாமி, வேறு யாருடைய உதவியும் கேட்காமல் / எதிர்பார்க்காமல், தானே அவற்றை நடத்துபராக இருக்கிறார். செயல்களை செய்வித்து, அதற்காக யாருக்கும் பயப்படாமல் தைரியமாக அவற்றை செய்பவராக இருக்கிறார்.

யாருடைய பங்கும் இன்றி, தானே ஸ்வதந்த்ரனாக, ஜீவிகளின் அனைத்து த்வந்த்வ கர்மங்களையும் செய்பவராக இருக்கிறார் என்று நாம் அறிய வேண்டும் என்கிறார் தாசர்.

11. ஜனனியனு கா1ணதி3ஹ பா3லக
நெனெனெனெது3 ஹலபு3திரெ கத்தலெ
மனொயொளட3கி3த்த3வன நோடு3த நகு3த ஹருஷத3லி |
தனயனம்பி3கி3த3ப்பி ரம்பிஸி
கனனிகெய களெவந்தெ மதுசூ
த4னனு தன்னவரித்தெடெ3கெ3 ப3ந்தொ3த3கி ஸலஹுவனு ||(2-13)

வீட்டில் தாயைக் காணாத குழந்தை அழும்போது, தாய் சமாதானம் செய்வதற்காக சென்று, குழந்தையை தூக்கிக் கொண்டு, பால் கொடுத்து அதனை சிரிக்க வைக்கிறாள். அதைப் போலவே, ஸ்ரீஹரியை நாம் எந்த நிலையில் இருந்தாலும், நிரந்தரமாக நினைத்துக் கொண்டிருந்தால், அவனே வந்து நம்மை காக்கிறான். இந்த லௌகிக உதாரணத்தைக் கொடுத்து, பாரமார்த்திகத்திற்கு நம்மை இழுத்துச் செல்வதே தாசரின் சிறப்பாகும்.

12. இட்டிகல்லனு ப4குதியிந்த3லி

கொட்ட ப4குதகெ3 மெச்சி தன்னனெ
கொட்ட ப3ட3பிராமணன ஒப்1பிடியவலி க3கி1லார்த்த |
கெட்ட மாதுகளந்த3 சைத்3யன
பொட்டெயொளகிம்பி3ட்ட பா3ணத3
லிட்ட பீஷ்மனவ கு3ணகளெணிஸிதனெ கருணாளு ||(2-11)

பகவந்தனின் கருணை எத்தகையது என்பதை இரு உதாரணங்களைக் கொடுத்து விளக்குகிறார் தாசர். புண்டலீகனை காணைச் சென்ற விட்டலனை, புண்டலீகன் ஒரு செங்கல்லைக் கொடுத்து - இதில் நில், பெற்றோரின் சேவையை செய்துவிட்டு வருகிறேன் என்று செல்கிறான். விட்டலனும் அதுவரை அந்த செங்கல்லில் நின்றிருந்தானே?. அதைப்போல, சுதாமனின் கைப்பிடி அவலினை ஏற்றுக்கொண்டு, அவனுக்கு ஏராளமான செல்வத்தைக் கொடுத்தவனும் அவன்தானே?. கௌரவர்களின் சார்பில் நின்று பீஷ்மர் போர் புரிந்தாலும், ஸ்ரீகிருஷ்ணன் அவன் மேல் த்வேஷம் செய்யாமல், அவருக்கு தரிசனம் கொடுத்து அருளினான். ஸ்ரீஹரி இத்தகைய கருணா சாகரன் என்று வர்ணிக்கிறார் தாசர்.

13. பா3லகன கலபா4ஷெ ஜனனியு
கேளி சுக2படு3வந்தெ லகுமி
லோல ப4குதரு மாடு3திஹ ஸம்ஸ்துதிகெ3 ஹிக்3கு3வனு |
தாள தன்னவரல்லி மாடு3வ
ஹேளனவ ஹெத்தை3ய்வ விது3ரன
ஆலயதி3 பாலுண்டு3 கு3ருபன மானவனெ கொண்ட3 ||(2-14)

பகவந்தனிடம் நம்பிக்கை, பக்தி, அன்பு வைத்தால், அதற்கு பதிலாக தான் தனது அன்பினைக் கொடுக்கிறான். ஆனால், நம் அன்பினில் ஏதேனும் குறைவிருந்தால், அதற்கு தக்க பலன்களைக் கொடுக்கிறான் என்று இந்த பத்யத்தில் விளக்குகிறார். மக்களின் மழலைச் சொற்களை, தாய் கேட்டு மகிழ்கிறாள். கௌரவர்களை அவர்களுடைய அ-பக்திக்காக கொன்றான் என்றாலும், அவர்கள் பக்கம் இருந்த விதுரனின் வீட்டிற்குச் சென்று பால் குடித்தான் அல்லவா?. நாம் சரியாக இருந்தால், அவனும் அவனுடைய கருணையைக் கொடுக்கிறான். கெட்ட நடவடிக்கைகளைக் கண்டால், பகவந்தன் எத்தகைய பக்தன் ஆனாலும் அவனை சகிப்பதில்லை. அதாவது, ஹெத்தெய்வ = நரசிம்மன். தனது உக்ர ரூபத்தினால் அத்தகையவர்களை த்வம் செய்கிறான் என்கிறார் தாசர். (தொடரும்)

தொடர்

## ஹரிதாசர்களின் சிந்தனைத் துளிகள்

### அனைத்துமான ஸ்ரீகிருஷ்ணன்

ஹரிதாசர்கள் தொடர்ந்து பல்வேறு செய்திகளை தந்து கொண்டிருக்கின்றனர். மனிதனின் அனைத்து நிலைகளுக்கும் / பிரச்னைகளுக்கும் ஹரிதாசர்களின் செய்தி அருமருந்தாக செயல்பட்டு வருகிறது. தாம் மேம்பட்டு, மற்றவர்களையும் மேம்படுத்தி பக்தி செலுத்தினர். ஹரிதாசர்களின் பார்வை அனைத்து வர்க்கத்தவரும் பயன்படக்கூடியது. கேட்டால் மகிழ்ச்சி, பாடினால் மகிழ்ச்சி, அனுபவித்தால் மிகவும் மகிழ்ச்சி. அதையே பின்பற்றினால் அதைவிட மகிழ்ச்சி.

ஸ்ரவண மனகானந்த வீவுது
பவஜனித துக்கள களெவுது
விவித போககளிஹ பரங்களலித்து சலஹுவுது || -- ஸ்ரீஜகன்னாததாசர்

தூய்மையான நற்செய்திகளை தருவதற்கென்றே அவதரித்து வந்த மகாத்மா ஹரிதாசர்கள். கேட்பது, கேட்டு பின்பற்றுவது, பின்பற்றி அதையே நடைமுறைக்கு கொண்டுவருவது இறுதியில் ஸ்ரீஹரியின் வசமாவது என்பது நம் வழக்கமாக இருக்கவேண்டும். ஹரிதாசர்களின் செய்தியின் தொகுப்பினை அவரிடமிருந்தே கேட்போம்.

குரு முக்யவிரபேகு, ஹரிதெய்வவென்ன பேகு
பரி உபகார இரபேகு ப்ரதிக்ஷண
பரரு தன்னவரு சமரெந்து திளியபேகு
ஹிரிம ஹிக்கதெ தானஸ்வதந்த்ர நென்னபேகு
பரமாணு ஸ்தளதல்லி ஹரிவியாப்தனென்னபேகு
ஈ பரியலி திளிதரெ அவனே முக்தியோக்ய
சிரியரமண நம்ம கோபாலவிட்டலன்ன
கருணக்கெ பாத்ரனாதவனெ இதனரிவ ||
-- ஸ்ரீகோபால்தாசர்

ஹரிதாசர்களின் ஒவ்வொரு வசனமும், வாக்குகளும், நற்செய்திகளே. பகவந்தனில் பக்தி செய்வதற்கு இது ஒரு வழிகாட்டியாக இருக்கிறது. விஜயதாசரின் பொருள் பொதிந்த வார்த்தைகள் இவை:

ஜாலிஸபேகு ஜாலிஸபேகு ஜாலிஸபேகு
ஜாலகாரனாகி பாபஜாலங்கள கஸபோகுவந்தெ
ஜாலிஸபேகு ஜாலிஸி ஒள்ளெ வஸ்து சம்பாதிஸி
ஜாளிகெ சென்னாகி தும்பலு மாயா
ஜால விஜயவிட்டல சன்னிதியல்லி
ஜாளிகெயிட்டு ஜனன நெகபேகு ||

***

**ஸ்ரீ தந்தெமுத்துமோகன விட்டலதாசர் (1865–1940)**

முத்துமோஹனதாஸ கரகமல ஸஞ்சாதம்
வரகரிகிரி க்ஷேத்ரவாஸம் |
ந்ருஸிம்ஹ பாதாரவிந்தைக தாஸம்
தந்தெ முத்துமோஹனதாஸ வர்யம் பஜே ||

தாஸதீக்ஷெய பயஸி தாஸரிகெ காதரிஸி
தாஸனெந்தெனிஸலு தம்பூரி கரீதிஸித
தாஸஸ்ரேஷ்டராத தொட்டபள்ளாபுர வாஸி
தாஸரனுக்ரஹ படெது தாஸனெந்தெனிஸித
தந்தெமுத்து மோஹனவிட்டல தாஸரு
தன்ன தனு தொரெத ராமநவமியலி
தந்தெ மங்களாங்க ஹரிவிட்டல ஈஷ
தன்ன தாமவனித்த அனுக்ரஹிஸுதலி ||

***

**தொடர்**

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## 21. ப்ருஹத் தாரதம்ய ஸந்தி விடைகள்

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| [1]பா | வ | க | ன் | | [2]அ | ங் | [36]க | த | ன் | வ | ரீ | க் | [23]ஸு |
| [3]த | ர் | து | ர | | ம் | [4]கா | ம | | வ | ன | வ | யா | [24]ஜ் |
| ரா | [5]ஜ | ன | ப | ர | ப் | | லா | [6]ஸை | [44]ல | ஜா | ர் | | |
| ய | | | [7]ந | க | ர | [8]பு | ல | ஹ | | [9]ஸ | [37]ஸா | ங் | [38]க |
| ண | ஷ | [25]பீ | | ஜ | ணீ | [10]வ் | யா | த | ன் | ர | டி | | ரி |
| | [39]த | ரு | ம் | [26]அ | பி | | பா | | வ | ஸ் | | | கொ |
| ஜ | ஸ | | தி | ரு | ம் | [27]ஸ் | [11]ஸ | தா | [45]ஸி | வ | [12]உ | த | ர |
| ஷ | [13]ப் | ர | தா | னா | [46]கு | | யூ | | [40]ஆ | [14]தி | வி | ப | ள |
| [41]பே | ர | | [15]ஸ | த் | ய | ஜி | [16]த் | ரு | தி | | ணி | [28]க்ஷே | |
| [17]ய | ம | ள | வ | | [18]ஸ | ம் | ப | வ | த் | ன் | ர | பே | [29]கு |
| ள் | [42]தி | வ | ப | ம் | [30]ஜா | ர | [31]மா | | ய | ஞே | [32]க் | [43]பூ | |
| | ன | [19]ஊ | ன | ர் | | [20]க | ண | ன் | ர் | | ணா | ரூ | சி |
| | ப | | ளி | [21]உ | த் | த | வ | ன் | க | | [47]ர | ப | [33]ஸு |
| | ன் | ர | [34]ந | | [22]ஹா | ட | க | | ள் | | ஞா | ம் | [35]ஸ |

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்
Haridasa Vijayam - Monthly

மலர் 3 ** May 2022 ** இதழ் 6



மொதலகல்லு ஸ்ரீசேஷதாசர்

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 3 : இதழ் 6

**நிர்வாக ஆசிரியர்**
'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276.
haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**
' தாச சாகித்ய சேவா ரத்ன'
திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**
திரு. முரளிதர தாசரு,
திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா,
திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

## ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்

**மே 1 முதல் 31 வரை, 2022**

மே2 : வைசாக சுத்த த்விதியை - ஸ்ரீவேணுகோபால விட்டலதாசர், ஆதோனி
மே3: வை. சு. த்ருதியை - ஸ்ரீவிஜய ராமசந்திர விட்டலதாசர், மைசூரு
மே9: வை.சு. அஷ்டமி - ஸ்ரீமொதலகல்லு சேஷ தாசர்
மே10: வை.சு. நவமி - ஸ்ரீஷ்யாம சுந்தர தாசர், மான்வி
மே17: வைசாக பகுள த்விதியை - ஸ்ரீஜயேஷ விட்டல தாசர், மைசூரு
மே24: வை.ப. நவமி - ஸ்ரீவித்யா ரத்னாகர தீர்த்தர், ஸோஸலெ

# ஆசிரியர் பக்கம்

இந்த மாத ஆராதனா நாயகர்களைப் (உள்-அட்டை-2 பார்க்கவும்) பற்றி நாம் இன்னும் விரிவாக பார்க்க வேண்டியிருக்கிறது. ஒவ்வொருவரும் ஹரிதாச சாகித்யத்திற்கு அபாரமான சேவையை செய்திருக்கிறார்கள் என்பதை அறிகிறோம். இந்த இதழில் அவர்களது சரம ஸ்லோகங்கள் மட்டும் கொடுக்கப்பட்டுள்ளன. விரைவில் தனித்தனிப் புத்தகமாக தமிழில் வரவேண்டும், அதற்கு அருளவேண்டும் என்று அந்தந்த தாஸர்களையே வேண்டிக் கொள்கிறோம்.

ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது. சிறிது நேரம் எடுத்துக் கொண்டு, அதனை பதிலளிக்க, பலரும் முயற்சிக்க வேண்டும் என்று கேட்டு கொள்கிறேன்.

ஹரிதாச விஜயம் சந்தாவை மறக்காமல் புதுப்பித்துக் கொண்டு, பத்திரிக்கையை தொடர்ந்து பெற்றுக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேன். அதே போல, தொடர்ந்து வரும் புதுப் புத்தகங்கள், மீண்டும் அச்சிற்கு வரும் பழைய புத்தகங்கள் என பல தகவல்களுக்கு நம் வாட்சப் க்ரூப், ஃபேஸ்புக் க்ரூப் என ஏதாவது ஒரு இடத்தில் தொடர்பில் இருந்து, அந்த தகவல்களை பெற்றுக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேன். உங்களின் நண்பர், உறவினர் குழுவினரிடமும் இவற்றைப் பற்றி சொல்லலாம்.

ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர் எழுதிய 'மத்வ விஜய ஸார ஸங்க்ரஹ' கன்னட கிருதியின் தமிழ் அர்த்த விளக்கங்கள் 'www.dasa-sahitya.blogspot.in' என்னும் தளத்தில் தினம் ஒரு பத்யமாக வெளிவந்துக் கொண்டிருக்கிறது. அங்கு சென்று அதனை படிக்கவும் என்று கேட்டுக் கொள்கிறேன். ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

**மாதத்திற்கு ஒரு இலவச PDF புத்தகம்**

இதுவரை நாம் வெளியிட்ட அனைத்து இலவச PDF புத்தகங்களை download செய்து படிப்பதற்கு, இந்த தளத்திற்கு செல்லவும்.
https://archive.org/details/@sathya_narayanan

தொடர்

கேசவ நாமா

**30. நின்ன நோடி தன்யனாதேனு - யதுகிரியம்மா**

## 30. நின்ன நோடி தன்யனாதேனு

நின்ன நோடி[3] த[4]ன்யனாதேனு ஶ்ரீரங்கநாத ||ப

நின்ன நோடி த[4]ன்யனாதெ[3] பன்னக[3]ஷயன ரங்க
மன்னிஸி ரக்ஷிஸு என்ன முன்ன ஜன்ம பா[3]ரத[3]ந்தெ ||அப

பாம்புப் படுக்கையில் படுத்திருக்கும் ஸ்ரீரங்கநாதனின் தரிசனத்தைப் பெற்ற ஹரிதாசினி யதுகிரியம்மா அவர்கள் ‘நின்ன நோடி தன்யனாதேனு’ என்று தன் நன்றியைத் தெரிவித்தவாறு தன் வினைப்பயன்களைக் களைந்து, அடுத்த பிறவி என்று ஒன்று வராமலிக்குமாறு காப்பாற்று என்று வேண்டிக் கொள்கிறார்.

ஆசார்யரிகெ அபி[4]வந்தி[3]ஸி அஜனராணியன்னு ப[4]ஜிஸி
ஆர்ச சேஷஷயன லக்ஷ்மிகெ[1]ரகி[3] கேஷவ நிம்ம ஸ்துதிஸுவெ ||1

குருகளான மத்வாசார்யரை வணங்கி, பிரம்மனின் ராணி வேதாபிமானி சரஸ்வதியைப் பற்றி பாடி,, சேஷ சயனனான கேசவனைப் போற்றிப் பாடியிருக்கிறார்.

ஆதிஸ்ருஷ்டியல்லி ப்ரஹ்மன நாபி[4]கமலதல்லி ஸ்ருஷ்டிஸி
வேதஸாரவாத[3] ப்ரணவ ஓதி பே[1]ளித[3] நாராயண ||2

ஸ்ருஷ்டியில் முதலில் பிறந்த பிரம்மனை தன் நாபிக் கமலத்திலிருந்து ஸ்ருஷ்டித்து, அவருக்கு நான்கு வேதங்களின் சாரமான ‘ஓம்காரம் என்னும் பிரணவ மந்திரத்தை’ தெரிவித்தவன் நாராயணன்.

யிந்த அஜனு நிம்ம மூர்த்திகா[3]கி[3] த[1]பவ மாடெ[3]
அர்த்தியிந்த[3] ஒலிது[3] ப[3]ந்த[3] மது[4]வேரி மாத[4]வா ||3

நாராயணனின் தரிசனத்திற்காக அவனை வேண்டி, பிரம்மன் மிகுந்த பக்தியுடன் தவம் செய்தபோது, அவருக்கு மிகவும் அன்புடன் தரிசனம் அளித்த மதுவைரி மாதவன்.

ப்ரணவாகார விமானத$^{3}$ல்லி நால்கு வேத ஸ்ருங்கவிரலு
பரவாஸுதேவரிந்த ப$^{3}$ந்த$^{3}$ ஸ்ரீகோவிந்த ||4

மோட்சத்தைக் கொடுக்கும் வாசுதேவனே கோவிந்தன். நான்கு வேதங்கள் என்னும் தூண்கள் இருக்கும் பிரணாவாகார கோபுர விமானத்தில் வீற்றிருப்பவனே பரவாசுதேவன். அவனே கோவிந்தன். இருவருக்கும் ஐக்கிய சிந்தனை செய்யவேண்டும்.

ஸத்யலோகதல்லி நிந்து நித்ய பூஜெயனுக்ரஹிஸி
மத்தெ இக்ஷ்வாகுகொ$^{3}$லித$^{3}$ விஷ்வமூருதி விஷ்ணுவே ||5

சத்யலோகத்தில் தினமும் பிரம்மதேவனால் பூஜிக்கப்பட்டு வந்த ஸ்ரீரங்கனாதனின் மூர்த்தியானது, பரம்பரை பரம்பரையாக இக்ஷ்வாகு ராஜனுக்கு வந்தது. இவன், வைவஸ்வத மனுவின் மகன் மற்றும் சூர்ய வம்சத்து ராஜன். இந்த விஷ்வமூர்த்தியான விஷ்ணு, இக்ஷ்வாகு வம்சத்தில் வழிவழியாக வந்து, ஸ்ரீராமன் வரை வந்து, ஸ்ரீராமனிடமிருந்து பூஜிக்கப்பட்டது.

ஸரயு தமஸ தீ$^{1}$ர மத்யதி ஹரியெ நிம்மனிரிஸி தொரெயு
பரமபுருஷனிந்த பூஜெ க$_{3}$ரஹிஸித மது$_{4}$ஸூதன ||6

ஸரயு மற்றும் தமஸ தீரத்தின் நடுவே, தசரதன், ஸ்ரீராமனை அயோத்தியிலேயே இருக்குமாறு வேண்டினான். பரமபுருஷனான மதுசூதனன் ஸ்ரீராமன் தன் பூஜையை தானே ஏற்றுக்கொண்டான்.

ராஜ்யாபி$^{4}$ஷேக காலதல்லி ராமசந்த்ரரு ராக்ஷஸேந்த$^{3}$ரகெ$_{3}$ கொட$^{3}$லு
காவேரி மத$^{3}$யதி$^{3}$ நிந்து$^{3}$ த்ரிஜக$^{3}$வளெத$^{3}$ த்ரிவிக்ரம ||7

விபீஷணனின் பட்டாபிஷேக காலத்தில் ஸ்ரீரங்கனாதனின் மூர்த்தியை அவனுக்குக் கொடுக்க, அவனும் அதை இலங்கைக்குக் எடுத்துச் சென்று பூஜிக்கவேண்டும் என்று விரும்பிய ரங்கனாதனே த்ரிவிக்ரமன். அவனே ஸ்ரீரங்கத்தில் நடுவில் நிரந்தரமாக வீற்றிருக்கிறான்.

ப$^{2}$ல்கு$^{3}$ண மீன உத்தர ப$^{2}$ல்கு$^{3}$னீ நக்ஷத்ரதல்லி
பா$^{3}$லனாகி$^{3}$ சந்திர புஷ்கரிணி தீ$^{1}$ரதி$^{3}$ நிந்த$^{1}$ வாமன ||8

பால்குண மாதம், மீன ராசி, உத்தரா நட்சத்திரத்தன்று சிறுவன் வாமனன், சந்திர புஷ்கரிணி தீரத்தில் ஸ்ரீரங்கனாதனாக இருக்கிறான்.

6 - ஹரிதாச விஜயம் - மே 2022

த4ர்மவர்ம தொ3ரெயு தன்ன கன்னிகெயனு கொட3லு
ஜாமாதனெனிஸி க்3ரஹிஸி ஸ்ரீதேவி ஸஹித ஸ்ரீத4ர ||9

தர்மவர்மனின் மகளை பாணிகிரகணம் செய்த ஸ்ரீரங்கனாதன், அவனுக்கு மாப்பிள்ளையாக ஸ்ரீதேவி சகிதமாக இருக்கும் ஸ்ரீதரனாக இருக்கிறான்.

மளெயனிட்டு த்3வஜவ கட்டி ஸுரர கரெது3 யாகவ மாடி
யாத்ரா தானவ ஹ்ருதயவாஸ ஹ்ருஷிகேஷவ ||10

ஸ்ரீராமனின் ரதத்திற்கு கோவிதார த்வஜ, பாண த்வஜ, கபி த்வஜ, கருட த்வஜ என்று மொத்தம் நான்கு த்வஜங்கள் இருந்தன. (ஸ்ரீராமன் சிறு வயதில் தன் தந்தையின் ரதத்தில் ஏறு அமர்ந்திருந்ததால் அவரின் த்வஜமான கோவிதார த்வஜம் வந்தது. அந்த ரதத்திலிருந்து தாடகியைக் கொன்றதால் பாண த்வஜம் வந்தது. இந்திரனின் வஜ்ராயுதத்தை ராவணன் போரில் நாசம் செய்தபோது ஆஞ்சனேயனை த்வஜஸ்தானத்தில் அமரச் செய்திருந்ததால் கபி த்வஜம் வந்தது. ராவணனை போரில் கொல்வதற்கு கருடன் மேல் ஏறிச் சென்றதால் கருட த்வஜம் வந்தது).

சுரர்களை அழைத்து அஸ்வமேத யாகம் செய்து, அனைவரின் இதய கமலத்திலிருக்கும் ஹ்ருஷிகேசன், சீதையை (வேதவதி) மீட்பதற்காக ஒரு பயணியைப் போல புறப்பட்டான்.

வீர மருதி3னதி3 ஜடாஷோத4கர மண்டப1தி நிந்து3
(தீ4ர) முது3கிகொ3லிது3 த3த்4யானவ உண்ட3 ஸ்ரீபத்பனாப4 ||11

இன்னொரு நாள் (தேவதைகளின் நாளில்) ரிஷிகளின் மண்டபத்திற்கு வந்து, கிழவி பகுளாதேவிக்கு அருளி, அவர் கொடுத்த தயிர் சாதத்தை ஏற்றுக்கொண்ட ஸ்ரீனிவாசனே, பத்மனாபனாகவும் இருக்கிறான்.

நால்கு தி3வஸத3ல்லி நாக3வைரியன்னு ஏரி ப3ந்து3
கல்ப வ்ருக்ஷவு சர்வவாஹன ஏரித3 தா3மோத3ர ||12

நாக வைரியான கருடனின் மேல் ஏறி, நான்கு உலகங்களையும் சுற்றி வரும் தாமோதரன், சேஷாசலத்தில் வேண்டியவர்களின்

இஷ்டார்த்தங்களை நிறைவேற்றும் கல்பவிருட்சத்தைப் போல இருந்து, அவர்களின் சேவையை ஏற்றுக் கொள்கிறான்.

ஆரு திவஸத[3]லி வரியூரிகெ ஹோகி[3] நிம்ம
நாரிய சந்தெயிஸி மாலெ த[4]ரிஸித சங்கர்ஷண ||13

ஆறு ருதுக்களில் கரவீரபுரத்திற்கு சென்று லட்சுமிதேவியைக் கண்டு, அவரின் விருப்பப்படி வரமாலையை ஏற்றுக் கொண்டான், சங்கர்ஷணரூபி ஸ்ரீரங்கநாதன்.

தி[3]வஸத[3]ல்லி சூர்ணாபி[4]ஷேகவன்னு த[4]ரிஸி
நாரிமனெயல்லி நிந்து[3] வாஸவாத[3] வாஸுதேவ ||14

இன்னொரு முறை, சந்தனம், கற்பூரம் ஆகிய சுகந்த பொடியை பூசிக்கொண்டு, பாம்பு புற்றினில் நின்று வாசுதேவன் அங்கு வாசம் செய்தான். (சம்பத்து = ஸ்ரீலட்சுமி. சம்பத்தினை காப்பவன் சேஷன். அவர் வாசம் செய்யும் இடம் புற்று).

எல்லே கெரெகெ[3] ஹோகி[3] பூ[4]மியெல்ல நோடி[3] ஹருஷதி[3]ந்த[3]
அல்லெ தேஜியனேரி தே[1]ரினெது[3]ரெ பே[1]ரிபி[3]ட்ட[1] ப்ரத்யும்ன ||15

பூமியின் எல்லையான கடற்கரைக்குச் சென்று, அங்கிருந்து பூமியைப் பார்த்து, அந்த கணமே ரதத்திற்காகவும் காத்திருக்காமல், பூ-பிரதட்சிணை செய்யப் புறப்பட்டார், பிரத்யும்ன ரூபி ரங்கநாதன்.

பங்கு[3]ன்யத்தரவு ப[3]ரலு உங்கு[3]ரவனு பே[3]டி[3] தந்து[3]
அங்க[3]னேய பா[3]கி[3]லெயரெ ப்ரஸித்த[3]னாத[3] அனிருத்த ||16

மாப்பிள்ளையாகப் போ என்று பகுளாதேவியால் சொல்லப்பட்டு, தன்னுடைய திருமணத்திற்கான நிச்சயதார்த்தத்துக்கு தானே போய், பத்மாவதியின் கண்ணெதிரே, அனிருத்தனான ரங்கநாதன் தரிசனம் கொடுத்தான்.

ஸிந்து[4] ஷயனன ப[3]ரவ நோடி இந்து[3]முகி[2]யு கத[3]வ முச்சி
திந்த[3] ப[1]ஞ்சின ப்ரஹார ஹருஷதி[3]ந்த[3] புருஷோத்தம ||17

சிந்துசயனனான ஸ்ரீஹரியின் தரிசனத்தால், இந்து-முகியான பத்மாவதி, அவனை தன் கண்ணில் சிறை பிடித்துக்கொண்டாள். அவள் சமர்ப்பித்த அனைத்தையும் புருஷோத்தமரூபியான ரங்கநாதன் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டார்.

பத்னியொடனெ ப்ரேம கலஹ அர்த்தியிந்த$^{3}$ மாடுதிரலு விஷ்ணு
சித்தர வாக்யதி$^{3}$ந்த$^{3}$ அரஸிகே$^{3}$ரிதா$^{3}$ அதோக்ஷஜ ||18

சர்வோத்தமனான அதோக்ஷஜ ரூபியை, தன் மனைவியுடன் இருக்குமாறு தேவதைகள் வேண்டினர். விஷ்ணு, ஸ்ரீனிவாஸ, ரங்கநாத, அதோக்ஷஜ ரூபங்களில் அபேத சிந்தனை (அனைவரும் ஒன்றே) என்னும் சிந்தனையை செய்திருக்கிறார் தாசர்.

மந்தரோத்த$^{3}$ர தன்ன இந்தி$^{3}$ரெ ஸஹிதவாகி$^{3}$
ப$^{3}$ந்து$^{3}$ கோ$^{3}$ ரத$^{2}$வனேரி நால்கு பீ$^{3}$தி$^{3}$ மெரெத$^{3}$ நாரசிம்ஹ ||19

மந்தரோத்தர கோபாலனான ஸ்ரீனிவாசன் தன் மனைவியான பத்மாவதி சகிதமாக, ரதத்தில் ஏறி சேஷகிரியில் சாலைகளில் நரசிம்மனாக வலம் வந்தார்.

வாரிஜாக்ஷ ரத$^{2}$வனிளிது காவேரியல்லி தீர்த்த$^{2}$வித்து$^{1}$
த$^{3}$ர்ப்பணத$^{3}$ க்ருஹதி$^{3}$னிந்த$^{3}$ அர்த்தியிந்த$^{3}$ அச்யுத ||20

ரதத்தில் ஏறிய வாரிஜாக்ஷன், காவேரி தீரத்திற்கு வந்து, அந்த இடத்தை புண்ணிய க்ஷேத்திரமாக மாற்றி, காவேரியை புண்ணிய தீர்த்தமாக ஆக்கினார். (தன் மனைவியுடன், பக்தர்களின் விருப்பத்தைப் போல, ஹொளெய ரங்கனாக, பத்மரங்கனாக, காவேரி ரங்கனாக – அச்யுதன் நிலைத்து நின்றார்). பக்தர்களின் மனதிலும் மிகவும் மகிழ்ச்சியுடன் நிலைத்து நின்றார்.

ஹரிபாதோ$^{3}$த$^{3}$க ஸம காவேரி
விரஜா நதிய ஸ்னானவ மாடி
சந்திரபுஷ்கரிணி ஸ்னானவ மாடி
ரங்கவிட்டல ராயன நோடத..

கண்களித்யாதகோ காவேரி ரங்கன நோடதா.. என்கிறார் ஸ்ரீஸ்ரீபாதராயர். (தொடரும்)

வங்கிக் கணக்கில் சந்தா / புத்தகத்திற்காக பணம் செலுத்தினால், மறக்காமல் உங்கள் முகவரியை 89044 58276 எண்ணுக்கு வாட்சப் / SMS அல்லது haridasa.vijayam@gmail.comக்கு மின்னஞ்சல் அனுப்பவும்

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

### ஸ்ரீஜகன்னாததாசரின் கிருதிகளின் சிறப்பு

- டாக்டர் லக்ஷ்மிகாந்த V. மோஹரீர

அனைத்து ஹரிதாசர்களும் ஹரிசர்வோத்தமத்வத்தைப் பற்றி பாடியிருக்கின்றனர். ஹரிகதாம்ருதசாரத்தை இயற்றிய ஜகன்னாததா சருக்கோ அது மிகவும் உயர்ந்த தத்வமாகும். அதன்படியே ஹரிகதாம்ருதசாரத்தில், வேதம், உபநிஷத், பாகவத, பிரம்மசூத்ரம் ஆகியவற்றில் சொல்லப்பட்டிருக்கும் ஹரிசர்வோத்தமத்வத்தை விளக்கியதோடு, அதனுடன் சர்வ-வியாப்தித்வம், நற்குணங்களை விளக்குவது ஆகியவற்றையும் சொல்லியிருக்கிறார்.

ஹரிகதாம்ருதசாரத்தின் ஸ்லோகங்களின் உள்ளர்த்தத்தை இந்த சிந்தனையில் அணுக வேண்டும். இதன் முதல் சந்தியின் முதல் ஸ்லோகத்தில், தமது குலதெய்வமான ஸ்ரீநரசிம்மரை வேண்டுகிறார் தாசர்.

நீரஜப4வாண்டோ3த3ய ஸ்தி1தி1
கா1ரணனே கை1வல்ய தா3யக1
நாரசிம்ஹனே நமிபெ க1ருணிபு1தெ3மகெ3 மங்க3ளவ ||

படைத்தல் தொழிலை செய்யும் ஸ்ரீஹரியின் அருளை வேண்டும் இந்த ஸ்லோகத்தில், அவரை வணங்கி, மங்களத்தை அருளுமாறு கருணை காட்டவும் என்று கேட்கிறார்.

இதைப் போலவே, ஸ்ரீஹரியின் திவ்ய நாம மகிமைகளை அனைத்து ஸ்லோகங்களிலும் வர்ணித்திருக்கிறார் தாசர். ஸ்ரீஹரியின் கருணைகளை ’கருணா சந்தி’யில் மிகவும் அற்புதமாக விளக்கியிருக்கிறார்.

மலகி3 பரமாத3ரதி3 பா1ட3லு
கு1ளிது1 கே1ளுவ கு1ளிது1 பா1ட3லு
நிலுவ நிந்த1ரெ நலிவ நலித3ரே ஒலிவெ நிமகெம்ப |
சுலப3னோ ஹரி தன்னவரனர
க3ளிகெ3 பி3ட்ட1க3லனோ ரமாத4வ
னொலிசலரியதே3 பாமரரு ப3ளலுவரு ப4வதொ3ளகெ3 ||
(கருணா சந்தி ஸ்லோகம் #5)

பக்தர்கள் மிகவும் பக்தியுடன் படுத்துக்கொண்டே வேண்டினால், அமர்ந்து கேட்பான். அமர்ந்து பாடினால், நின்று கேட்பான். பக்தன் நின்று பாடினால், குதித்தவாறு கேட்பான். குதித்து நடனமாடி பாடினால், காட்சியளிப்பான். ஸ்ரீஹரியை அடைவது மிகவும் சுலபம். தனது பக்தர்களை ஒரு கணமும் விட்டு விலகாதவன். அத்தகைய லட்சுமிவல்லபனை அடைவதன் வழி தெரியாமல் பக்தர்கள் இந்த சம்சார சாகரத்தில் / பிறப்பு இறப்பு சுழற்சியில் சிக்கித் தவிக்கின்றனர் என்கிறார். இந்த ஸ்லோகத்தில் தாசர், ஸ்ரீஹரியின் கருணை மிகப் பெரியது என்று விளக்குகிறார். இந்த ஸ்லோகத்தின் உட்கருத்து இப்படியிருக்கிறது.

ஸ்ரீஹரியைப் பற்றி புகழ்ந்து பாடுவதற்கு, இடம் பொருள் நிலைமை இப்படி எதுவுமே பிரச்னையில்லை. கருணாமூர்த்தியான ஸ்ரீஹரி தன்னை பக்தியுடன் வணங்கியவர்களை எப்போதும் கைவிடமாட்டான். அவனின் பார்வையைப் பெறுவதன் வழி அறியாமல் மக்கள் ஒவ்வொரு பிறவியிலும் பரிதவிக்கின்றனர். அந்த ரகசியத்தைத் தெரிந்துகொண்டால், ஸ்ரீஹரி மிகவும் சுலபமாக நமக்குக் காட்சியளிப்பான்.

ஆசீன: பர்யடன்னர்ஸ்ன ஷயான: ப்ரதிபன் ப்ருவன் |
கானு சந்தத வாதானிகோவிந்த பரிரம்பித: ||

என்று பாகவதம் ஏழாம் ஸ்கந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. பிரகலாதனின் கதை. அமர்ந்திருக்கும்போது, நடக்கும்போது, சாப்பிடும்போதுகூட அவனுக்கு ஹரிஸ்மரணை இருந்தது. ஏகாந்த பக்தருக்கு எவ்வித நிர்ப்பந்தமும் இல்லை என்னும் பொருளும் இதில் உண்டு. கருணா சந்தியின் இன்னொரு ஸ்லோகத்தில் ஸ்ரீஹரியின் நற்குணங்களை இவ்வாறு விவரிக்கிறார்.

ஜக3வனெல்லவ நிர்மிஸுவ நா
ந்மொக3னொளகெ3 தா1னித்து3 சலஹுவ
க4க3னகே1சனொளித்து சம்ஹரிசுவனு லோக1க3ள |
ஸ்வக3தபே4த3விவர்ஜித1னு ச
ர்வக3 சதானந்தைக1 தே3ஹனு
ப3கெ3ப3கெ3ய நாமத3லி க1ரெசுவ ப4கு1த1ரனு பொ1ரெவ ||
(கருணா சந்தி ஸ்லோகம் #21)

நான்முகப் பிரம்மனுக்குள் இருந்து, ஸ்ரீஹரி இந்த உலகத்தைப் படைக்கிறான். ஸ்வகதபேத விவர்ஜிதனாக அனைத்து இடங்களிலும் இருக்கிறான். பற்பல பெயர்களால் அழைக்கப்பட்டு, பக்தர்களைக் காக்கிறான். இந்த ஸ்லோகத்தில் ஸ்ரீஹரி ஸ்வகதபேத விவர்ஜிதன் என்று தாசர் கூறுகிறார். இதற்கு ஆதாரமாக:

நிர்தோ4ஷ பூ1ர்ண கு3ணவிக்ரஹ ஆத்மதந்த்ரோ
நிஷ்சேதானாத்மக1 ஷரீர கு3ணைஸ்ச ஹீன: |
ஆனந்த மாத்1ரக1ர பா1த3 முகே1த1ராதி: சர்வத்ர ச
ஸ்வகதபேத விவர்ஜிதாத்மா || (தாத்பர்ய நிர்ணய 1-11)

தன் ரூபங்களாகட்டும், உறுப்புகளாகட்டும், குணங்களிலாகட்டும், இடம் பொருள் ஆகிய எந்தவித வேறுபாடுகளும் இல்லாமல் இருப்பவன் என்று எண்ணலாம். ஞானானந்தம் ஆகிய குணங்களும், அவனிடத்தில் இருந்து எவ்வித வேறுபாடுகளையும் கொண்டிருக்கவில்லை என்று பகவத்கீதையில் இவ்வாறு சொல்லப்பட்டிருக்கிறது.

சர்வத: பாணிபாதம் தத்சர்வதோऽக்ஷிஷிரோமுகம் |
சர்வத: ஸ்ருதிமல்லோகோ சர்வமாவ்ருத்ய திஷ்டதி ||
(பகவத் கீதை 13-14)

கருணா சந்தியில் சில ஸ்லோகங்களை, அதில் சொல்லப்பட்டிருக்கும் விஷயங்களை பார்த்தபிறகு, பிற சந்திகளைப் பார்ப்போம்.

உலகத்தின் அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கும் ஸ்ரீஹரியை, சம்சாரியானவன் தன் தினப்படி வேலைகளை செய்யும்போது, எந்நேரமும், நினைத்திருக்க வேண்டும் என்னும் விஷயத்தை இந்த கீழ்வரும் ஸ்லோகத்தில் விளக்குகிறார் தாசர்.

மக்க1ளாடிசுவாக3 மட3தி3யொ
ளக்க1ரதி3 நலிவாக3 ஹய ப1
ல்லக்கி க3ஜமொத3லாத3 வாஹனவேரி மெரவாக3 |
பிக்கு1வாக3 ஆக1ளிசுத1லி தே3
வக்கி1த1னயன நெனவுதி1ஹ நர
சிக்கனெமதூ3த1ரிகெ3 ஆவாவல்லி நோடி3த3ரு ||
(நாமஸ்மரண சந்தி ஸ்லோகம் 13)

குழந்தையை தாலாட்டும்போது, மனைவியுடன் அன்புடன் பேசும்போது, குதிரை, பல்லக்கு யானை ஆகிய வாகனங்களில்

போகும்போது, விக்கல் வந்தபோது, கொட்டாவி விடும்போது – அந்த தேவகியின் மகனான கிருஷ்ணனை நினைக்கும் மனிதன் என்றும் யமதூதர்களின் கைகளில் சிக்கி நரகத்திற்குப் போகமாட்டான் என்கிறார்.

இந்த ஸ்லோகத்திலிருந்து தெரியவரும் கருத்து என்னவென்றால், சம்சாரத்தில் மூழ்கியிருக்கும் ஒருவர், தனது குழந்தையை தாலாட்டுவதிலிருந்து, தூங்கப் போகும்வரை தான் செய்யும் அனைத்து செயல்களையும் ஸ்ரீஹரியின் குணங்களைப் பாடவேண்டியது கடமை என்கிறார். டாக்டர் K.M. கிருஷ்ணராயர் இதே விஷயத்தை - ஹரி நாமஸ்மரணையை எப்போது செய்தாலும் அதற்கு அதிக பலன் என்கிறார்.

‘சதா கிருஷ்ணஸ்ய கீர்த்தனம்’,
’கலியுகதி கானதி கேசவா எந்தரெ கைகூடுவனு ரங்கவிட்டலா’,
’புத்ராதீன் சும்பனேஸ்சைவ காலேசவேணு ஹஸ்தம் சஸ்மரேத் கிருஷ்ணமேவ சுசங்ககாலே ஸ்வஸ்த்ரீயஸ்சைவ நித்யம் கோபஸ்த்ரீணாம் பீனபயோதரம் த்ருவம்’.

குழந்தைகளைக் கொஞ்சும்போது வேணுகோபாலனை நினையுங்கள். மனைவியுடன் சேரும்போது, கோபிகா ஸ்த்ரீகளுடன் இருக்கும் கிருஷ்ணனை நினையுங்கள் என்று கருடபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது என்று தெரிவிக்கிறார். எப்போதும் ஸ்ரீஹரியின் நாமஸ்மரணை செய்தால், அவன் தரிசனம் கொடுக்கிறான் அதுமட்டுமல்லாமல் நரகம் கிடைப்பதில்லை என்னும் சிறந்த விஷயத்தை தெரிவிக்கிறார்.

பிறவி எடுத்து இப்பூமிக்கு வந்த மனிதன், எந்நேரமும் ஸ்ரீஹரியையே நினைக்க வேண்டும் என்று சொல்லும் தாசர், சம்சாரத்தில் இருக்கும் ஒருவர், சாதனாஜீவியாக இருக்க வேண்டும் என்கிறார்.

**(தொடரும்...)**

ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப், அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்து சொல்லலாம்.

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

## வெங்கடஸூப்பம்மா (1819–1899)

பொழுதுபோக்கிற்காக மனிதன் உருவாக்கிய பல நாட்டுப்புற கலைகளில், யக்ஷகானமும் ஒன்று. இது சாஸ்திரிய சங்கீதத்தின் அடிப்படையில் வளர்ந்து வந்திருக்கும் வழிமுறையாகும். யக்ஷகானத்தைப் பற்றி சொல்லும்போது, தட்சிண கன்னட பகுதியின், கும்பளே பகுதியைச் சேர்ந்த பார்த்திஸூப்பனை கண்டிப்பாக நினைக்க வேண்டும். யக்ஷ கானத்திற்கு புத்துணர்ச்சி ஊட்டி, அதனை மறுபடி மீட்டெடுத்து வளர்த்த பெருமை பார்த்திஸூப்பனையே சாரும். கணிபுரத்தில் (கும்பளெ) கோபாலகிருஷ்ண ஆலயத்தில், பூஜை சமயத்தில் சங்கீத சேவை செய்து கொண்டிருந்தார். ஸ்துதி பத்யங்களை, ஸ்ருதி, ராக, தாள பத்தமாக பாடுவதில் வல்லவராக இருந்தார்.

பார்த்திஸூப்பனின் தந்தை வெங்கடரமணய்யா. தாய் பார்வதி. பார்வதியின் மகனான ஸூப்ப, பார்த்திஸூப்ப என்று பெயர் பெற்றான். மடகேரியில் ஒரு பெண்ணை திருமணம் செய்து கொண்டான். வயதான காலத்தில் (1810ம் ஆண்டிலிருந்து) தன் மகளின் வீட்டில் வசித்து வந்தான். இந்த மகளின் மகளே வெங்கடஸூப்பம்மா. தன் தாத்தாவைப் போல, ஸங்கீத மற்றும் ஸாஹித்யங்களை இயற்றுவதில் வல்லவளாக இருந்த ஸூப்பியின் வரலாறு அதிகமாக புகழ் பெறவில்லை.

ஸூப்பி பிறந்தது சுமார் 1819ம் ஆண்டு. திருமணம் ஆகி, குழந்தை இல்லாத நிலையில், கணவனை இழந்தாள். தேவரநாமாக்களை இயற்றியவாறு, ஹரிதாஸினியாகி, ஹரிஸேவையில் ஈடுபட்டிருந்த ஸூப்பி, சுமார் 24 பாடல்களை (இதுவரை கிடைத்துள்ள) இயற்றியிருக்கிறார். கணபதி, சிவன், ஹரி, ஆகியோர்கள் மேல் பல கிருதிகள் மற்றும் நிந்தா ஸ்துதி, நிவேதனங்கள் இருக்கும் கிருதிகள் என இயற்றியிருக்கிறார்.

1. ஓம்காரேஷ்வரனின் கிருதி:

பாலிஸென்னனு பாலலோசன தேவா பரமேஷா பாவன
லீலா நித்யானந்த த்ரிபுவன மூல ஸர்வேஷா ||ப

தீர வீர உதார ஷரணோத்தார ரணஷூரா பராத்பர
பாராவார அபார ஸத்குண ஸாந்த்ர கம்பீரா மகாத்மக
க்ரூரமார குடார பரம ஷுபோர த்ரிஜகாதார ஷங்கர

கோர தைத்யவிதார பவ பரிஹார விஷ்வாகார பரதர ||1

காலகாலி கபால மால ஸுபால யதுபால தயார்ணவ
ஶ்ரீ லதாங்கி நிலோல ம்ருகமத பால ஸுசிர்மாலா திவாகஸ
பாலவினுத விஷால மஹிமனிராள நிஷ்சல கோரலீல பணிபதே
நீலவர்ண ஸுஷீல ஹரிவனமாலாவர ஹே நந்திகேஷவ ||2

ஈஷ தரணி விபாஸ பரமேஷ விஷ்வேஷா பணீஷ்வர
பூக்ஷ நிர்மல கோஸ அதி ம்ருது பாஷா பாரிதோஷ பதானத
க்லேஷ பாஷ வினாஷ ரஜதகிரீஷ கௌரீ விலாஸ புரஹர
தாஸி ஸுப்பி ஸுமோஷா மடிகெரெ வாஸ ஓம்காரேஷ மாருதி ||3

இந்த கீர்த்தனையில் வெங்கடஸுப்பி, மடகேரியில் உள்ள தன் பிறந்தவீட்டின் கிராம தேவதையான ஓம்காரேஷ்வரனைக் குறித்து பாடி, எனக்கு அருள்வாயாக என்று பிரார்த்திக்கிறார்.

2. கணபதி ஸ்துதி. ராகம்: நாதநாமக்ரியா

மங்களம் ஜயஜய கரிமுகதேவகெ மங்களம் ஜயஜயது ||ப
மங்களம் ஜயஜய விக்னேஷ்வரகெ மங்களம் ஜய ஜயது ||அப

நிருபம ஸத்குணபரிதனெனிபவர பிருதனு படெதிஹகே
தரணிகோடி ஷததேஜதி மெரெயுவ பரஷிவஸுத லம்போதரகெ ||1
ஸங்க்ரந்தன ஸுரஸங்குலபாலக பங்கஜயுகளனிகெ
வெங்கடஸுப்பி ஸுகிங்கரி ஸேவித ஷங்கரி மனதோஷணே ||3

கோடி சூர்ய பிரகாஷனாக ஒளிர்பவனான லம்போதரனுக்கு, ஜயகாரம் செய்வது இந்த கீர்த்தனையில் மிகவும் அழகாக வந்திருக்கிறது.

3. ஶ்ரீஹரி ஸ்துதி. ஆனந்தபைரவி ராகம்.

மரெய பேட தேவதேவனெ கோபாலா ஷரதிஸுதெய ரமண ஶ்ரீஹரே ||ப

நரன ஷிரவா உளுஹிபொரெதா கருணாபரண கோபபாலா
தருணதபன கோடி பாஸ பரமபுருஷ யாதவேஷ || அப

கமலநயன விமுக ஸுகுணனே கோவிந்தா
அமரனிசய ஸுபரி தோஷனே

கமலபாணபிதனே தேவா கமலகோமலித ஸுகாய
கமலனாப தவஸுபாத கமல நம்பிதவளனீக ||1

உரகநரன வரமுகுந்தனே பாவன்னா துரதிநிபுண நரகனாஷனே
உரகதரன ஸகனே ஈஷா உரகரிபு ஸுகமனதேவா
உரககிரிஸுதரே நிவேஷா உரகஷயன வெங்கடேஷா ||2

பரமநிகம விதித தேவனே கருடகமன துரித தூரவர உதாரனே
பரம ரதுன க்ருத கிரீட பரமதிலக ஷுப லலாட
பரம பகுத அம்பரீஷ வரத ஸுப்பி கவிய தோ1ஷ ||

ஸந்த லயத்துடன் இருக்கும் இந்த ஸ்ரீஹரி ஸ்துதி, மிகவும் அழகாக இயற்றப்பட்டிருக்கிறது. ஸூர்யகோடி பிரகாசம் உள்ள பரம புருஷனை, கமல நயன, கமல பாணபித, கமல கோமலித ஸுகாய, கமல நாப என்று லயத்துடன் கூடிய சொற்களால் வர்ணித்திருப்பது மிகவும் அற்புதமாக இருக்கிறது.

4. கோவி விரஹ கீதெ.

மந்தரதர கோவிந்தன தோரெ ஸுந்தர ஸகி ஷ்ருங்காரே ||ப
ஸிந்துஷயனா ஸுரவ்ருந்த நமித யதுனந்தன தேவன நீரே || அப

கந்திது முகவு முகுந்தன காணதெ நொந்தெனு விரஹதி காணே |
அந்தசந்த ஸ்ரீகந்த ஸுமஸ்துகளொந்து ஸொகஸதெலெ ஜாணே ||1
மாரன ஷர ஹதிகாரு கெய்துதெலெ நாரிஷிகாமணி போகி |
மாரமணன பதஸார ஸகொந்திஸி போரனெ களுஹெனகாகி ||2
ஷங்கசக்ரதர ஷங்கரஹித அகளங்கன அகலிரலாரெ
வெங்கடஸுப்பிஸு கிங்கரி ஸேவிப வெங்கடரமணனாதீரெ ||3

கோபியர்களின் இந்த விரஹ கீதை மனதைத் தொடுவதாக இருக்கிறது.

5. பார்வதி ஸ்துதி

பாலிபுதெனகெ விஷாலமதிய கிரி | பாலெயே ஸ்ரீ கௌரி ||ப
பாலிபுதீக விஷாலமதியனு லோலநயனெ ஸுரஜால ஸுபாலிதெ ||அப

கோரதுரித பரிஹரியே தவபத ஸாரஸகொந்திபெனோ
நாரதமுக முனிவர வினுத மணிஹாரதரணி குணஸார ஷுபோதயே ||1
மந்தகமனே பஹுஸுந்தரி ஷுபகரி குந்தரதரனெ தேவி

அந்ததிராஜிப கந்த குஸுமகள தந்தருபிஸி பகுதியிந்தலி பேடுவெ ||2
ஷங்கர ஹிதெ அகளங்க ஸுகுணயுதெ அங்குஷ தரமாதே
கங்கண முக்யாலங்கார மண்டிதெ வெங்கடஸுப்பி ஸுகிங்கரி ஸன்னுதே ||3

தனக்கு விசாலமான மதியை அருளி காக்க வேண்டும் என்று கிரிபாலையான கௌரியிடம் வேண்டிக் கொள்கிறார் ஹரிதாஸினியான வெங்கடஸுப்பம்மா.

6. ஸ்ரீஹரி ஸ்துதி

கந்து தாத கண்ண முந்தெ நிந்திர்த்தந்திதெ ||ப

ஜகத்பதி பாவன கௌஸ்துபாபரண நிகமவிதித சரண
ககபதி வாஹன துரித விதூர அகணித ஸுலலித ம்ருதுல ஷரீரா ||1
நாரீ முனி பூஜித தேவா பாலா உரகஷயன ஸ்ரீவக்ஷ
பரதர மூருதி பாவனஷீலா ஷரண ஸுபாலக ஹரிவனமாலா ||2
பங்கஜலோசன தானவ ஹரண ஷங்க சக்ரதர ஸாகர கருணா |
கிங்கரி ஸுப்பி ஸுஸேவித சரண ஷங்கர ஸன்னுத வெங்கடரமண ||3

ஸ்ரீபுரந்தரதாசரின் ‘கிருஷ்ணமூர்த்தி கண்ண முந்தெ நிந்திருவந்திதெ’ என்று பாடியதைப் போலவே, வெங்கடஸுப்பம்மாவின் இந்தப் பாடலும் இருக்கிறது.

தாத்தாவான பார்த்திஸுப்ப, யக்ஷகானத்திற்கு சேவை செய்தால், பேத்தியான வெங்கடஸுப்பி, தாஸ ஸாகித்யத்திற்கு மிகவும் அபூர்வமான சேவையை செய்திருக்கிறார். மிகவும் சமீபத்திலேயே, இவரது கீர்த்தனைகள் வெளிவந்து, ஹரிதாஸ ஸாகித்யத்தை விரும்பும் மக்களின் மனதை மயக்கியிருக்கின்றன. மேலும் அவரது பாடல்களைப் பற்றிய ஆராய்ச்சி நடக்கிறது.

ஹரிதாஸினியான வெங்கடஸுப்பம்மா அவர்களுக்கு நமஸ்காரங்களை செலுத்துவோம்.

அடுத்த இதழில் வேறொரு ஹரிதாஸினியின் விவரங்களை பார்ப்போம்.

***

## இந்த மாத ஆராதனைகள்

மே 2 : வைசாக சுத்த த்விதியை –

**ஸ்ரீ வேணுகோபால விட்டலதாசர் (1688–1768)**

வேணுகோபால தாஸார்ய விஜயராய ஸேவகம் |
வைராக்யாதி குணோபேதம் தம் வந்தே ஷக்தி புங்கவம் ||

விஜயதாஸரு அந்து பங்க நாமத திம்மண்ணனெந்தாக
ஆ ஜனுமத நெனெபு மூரு நாம மருகளிஸிதாக
நிஜதி நீனு வேணுகோபால விட்டலன தாஸனெந்தாக
அஜ ஜனக மங்களாங்க ஹரிவிட்டலன தாஸனெந்தாக
ஸுஜன திம்மண்ணதாஸ ஷக்தியலி ப்ரக்யாதனாதனாக ||

மே3: வைசாக சுத்த த்ருதியை

**ஸ்ரீ விஜயராமசந்திர விட்டலதாசர் (1819–1872)**

கங்காபித பதாப்ஜாளிம் கங்காதர ஸமப்ரபம் |
மங்களாங்க மஹிதேவம் மைஸூரு புரவாஸினம் ||
விட்டலோப பதோபேதம் விஜயராமசாந்திரம்
வைராக்ய ஞானமூர்த்திஞ்ச பஜேஹ பவதாரகம் ||

விஜயபூர்வ ராமசந்திர விட்டல பாதாப்ஜ ப்ருங்க
அஜஜனகங்க்ரிகள நிரந்தர பஜிப ஸஜ்ஜன ஸங்க
நிஜவாகி பயஸுத பஜிபர ஸேரிஸித மஹிம உத்துங்க
கஜவரத மங்களாங்க ஹரிவிட்டலன தயதி ஜயிஸித பவபங்க|

மே 24: வைசாக பகுள நவமி -

**ஸ்ரீவித்யா ரத்னாகர தீர்த்தர் (பட்ட : 1902-1915)**

துர்வாதி மத்த நாகேந்த்ர விதாரண ம்ருகாதிப: |
வித்யாரத்னாகர குரு: ஸன்னிதத்தாம் ஸதா ஹ்ருதி ||

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## 23. கல்ப ஸாதன ஸந்தி

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | | | | 2 | 34 | | | 3 | | |
| | | | | | | 27 | | | | 35 | 4 | 36 | |
| 5 | | 41 | | 6 | | | | 7 | | | | | 28 |
| 8 | | | | | | 29 | | | | | | | |
| 9 | | | | 37 | | 10 | | | | | 38 | | |
| | | 42 | | 11 | | | | | | 12 | | | |
| 13 | | | 39 | | | | | | 30 | | | | |
| | | 43 | | 14 | | | | | | | | 44 | 45 |
| | 15 | | | | | | 31 | | 16 | | | | |
| | 17 | | | 18 | | | | | | | 46 | 40 | |
| | | | | | | 32 | | 19 | | | | | |
| 20 | | | | | | | | | | 21 | | | |
| | 22 | | | | | | | 23 | | 24 | | 33 | 47 |
| | | 48 | | | 25 | | | 26 | | | | | |

குறுக்கெழுத்துப் போட்டிகளை வடிவமைத்துக் கொடுப்பவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி

குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam @ gmail.com / அல்லது 89044 58276 க்கு வாட்சப் செய்யலாம்.

**இடமிருந்து வலம்:** 1.ப்ரஸித்தி செய்தவர்(6), 2.விதைத்தல்(3), 3.தாகம்(3), 4.அன்ன(3), 5.சக்ரவர்த்தி(3), 6.பன்றி நாய் போன்ற இழிவான பிறவிகள்(3), 7.பூஜ்யர்கள்(3), 8.பிறகு அல்லது பின்பு(4), 9.ருத்ரர்(3), 10.தோஷம் அற்றவன்(5), 11.துக்கம் நீங்க பெற்றவர்கள்(8), 12.பரமாத்மாவின் வாஹனம்(3), 13.ஸம்ஹாரம் செய்தல்(3), 14. 162வது கல்பத்தின் ருஜு கணத்தவர்(3), 15.வசிக்கும் வீடு(3), 16.இவருடைய ஸாதனை காலம் 20 கல்பம். புதனின் தந்தை. கலைந்துள்ளது(5), 17.விஷய ஸுகங்கள்(3), 18.ப்ரஹ்மாவின் வேறு பெயர்(5), 19.ஸமமாக நடப்பவன்(6), 20.அஹங்காரம் அற்றவர்கள்(5), 21.நெற்றி. வேறு பெயர்(3), 22.சூரியன்(3), 23. 135வது கல்பத்தின் ருஜு கணத்தவர்(4), 24.சந்தோஷம்(2), 25.142வது கல்பத்தின் ருஜு கணத்தவர்(4). 26.தன் வஸத்தில் உள்ள(5).

**வலமிருந்து இடம்**: 23.ப்ரதிமை(4), 27.யோக்யதைக்கு ஏற்ற(4), 28.விழிப்பு(4), 29. 128வது கல்பத்தின் ருஜு கணத்தவர்(4), 30.காய்கறிகள்(5), 31.கடும் புகையை உட்கொண்டு இந்த பெயரில் இந்த்ர பதவியை அடைகிறார்கள்(5), 32.166வது கல்பத்தின் ருஜு கணத்தவர்(3), 33.க்ஞானம்(2).

**மேலிருந்து கீழ்:** 1.முடிவு(5), 13. 175வது கல்பத்தின் ருஜு கணத்தவர்(4), 19. நூறு வருடங்கள்(4), 20.இரவு(2), 30.வளர்ச்சி(4), 34.சூரியன். வேறு பெயர்(4), 35.ஐந்து தலைகள் உள்ளருத்ரர்(5), 36.தீயில் சுட்ட துணி(5), 37.பதினான்கு(5), 38.தோஷம்(4), 39.அற்பதமான கார்யம்(6), 40..பசி(2).

**கீழிருந்து மேல்:** 32.எட்டு நிமிடங்கள் (3), 41.நெற்றி.வேறு பெயர்(2), 42.ஆகாயத்தில் சஞ்சரிக்கும் பறவைகள்(2), 43.இரண்டு மாதம்(2), 44.வாயில்(3), 45.விரஜா நதியில் இந்த தேஹம் பங்கமடைகிறது(3), 6.பக்தியானது ஒரே மாதிரி இல்லாதவர்களை இப்படி அழைப்பர்(3), 47.எண்பது(3), 48.ஆமை(3).

***

தொடர்

## ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர்

### 2. மத்வமுனிகளின் வர்ணனை

டாக்டர் கே. கோகுல்நாத்

ஸ்ரீவிஜயதாசரைவிட மூத்தவரும், சம காலத்தவருமான ஸ்ரீபிரஸன்ன வெங்கட தாசர், 1680-1752ம் ஆண்டு காலத்தில் வாழ்ந்தவர். ஹரிதாஸ சதுஷ்டயர்களைப் போலவே, சாதனைகளை செய்து, அபரோக்ஷ ஞானிகள் என்றே புகழ்பெற்ற இவர், 700க்கும் அதிகமான கீர்த்தனைகளை மற்றும் அனேக தீர்க்க கிருதிகளையும் இயற்றியிருக்கிறார். நன்கு சூடான வெந்த வெல்லம் எப்படி நாக்கிற்கு அற்புதமான சுவையை தந்து, உடற்சோர்வை நீக்குகிறதோ, அப்படியே, பிரஸன்ன வெங்கட தாஸரின் பக்தி சாகித்யம், ஹரிபக்தர்களுக்கு அமிர்தமாக இனிக்கிறது. தத்வ ஞானத்தை விரும்புபவர்களுக்கு பிரமேயங்கள் நிறைந்த வாக்கியங்களின், சுவையான உணவைப் போல இருக்கிறது. தாஸரின் கிருதிகளில் பக்தி, சுய பரிசோதனை, ஹரி ஸ்துதி, தேவதா ஸ்துதிகள் ஆகியவை அதிகமாக காணப்படுவதைப் போல, ஜீவோத்தமர் எனப்படும் வாயுதேவரின் மற்றும் அவரின் அவதார ரூபங்களான ஹனும பீம மத்வ அவதாரங்களில் செய்த காரியங்களை பக்தியுடன் விவரித்திருக்கிறார். தாஸரின் மத்வ முனிகளின் சில ஸ்தோத்திரங்களின் சிறப்பு மற்றும் உள்ளடக்கத்தை பார்ப்பதே இந்த கட்டுரையின் முக்கிய நோக்கமென்றாலும், ஹனும மற்றும் பீமரின் மற்றும் மூலரூபமான வாயுதேவரின் விஷயங்கள், இவருடைய ஒரே கிருதியில் புகழ்ந்து பாடியிருப்பதை பார்ப்பதும் அவசியமாகும்.

ஸ்ரீவாயுதேவர், தனது மூலரூபத்தினால் அனைத்து சேதனர்களின் மூச்சு விடும் செயலை, ஹம்ஸ மந்திர ஜபத்தை செய்தவாறு, த்ரிவித ஜீவர்களுக்கு அவரவர்களின் ஜீவ ஸ்வரூபத்திற்கு ஏற்றவாறு, தத்வாபிமானி தேவதைகளுக்கு ப்ரேரணை செய்து, அதன் மூலம், ஸாத்விக, ராஜஸ, தாமஸ கர்மங்களை செய்வித்து, ஸாத்விகர்களுக்கு ஸாதனை முடிந்தபிறகு, அபரோக்ஷ ஞானத்தைப் பெறுவதற்கு தக்கவராக ஆக்கி, மற்றவர்களுக்கு அவரவர்களின் உலகங்களைப் பெறுமாறு செய்கிறார்.

த்ரேதாயுகத்தில், ஹனுமந்தனாக அவதரித்து, ‘தாஸோஹம் கோஸலேந்த்ரஸ்ய’ என்று கர்ஜனையுடன் ராமனின் சேவையை

செய்து, தன்யரான வாயுதேவர், த்வாபர யுகத்தில் பீமனாக அவதரித்து, ஸ்ரீஹரிக்கு உறுதுணையாக நின்று துஷ்ட நிக்ரஹ காரியத்தில் ஈடுபட்டு, முதன்மை பக்தர் (பக்தாக்ரேஸர்) எனப்பட்டார். கலியுகத்தில், மத்வாசார்யராக, வேதங்களின் உண்மையான அர்த்தம் என்ன என்பதை, 21 குமதங்களை நிராகரிப்பதன் மூலம், ஹரி ஸர்வோத்தமத்வ, பஞ்சபேத, வாயு ஜீவோத்தமத்வ, வேத அபௌருஷேயாதி தத்வங்களை நிரூபித்தார். ராமாயண, பாரதாதி கிரந்தங்களில் மேலாகத் தெரிய வரும் எதிர்மறை விஷயங்களை, தெளிவான பார்வையால் அலசி, புரிய வைத்தார். ஸ்ரீஹரி, ஸ்ருஷ்ட்யாதி அஷ்ட கர்த்ருத்வங்களைக் கொண்டவன் என்பதை புராண, இதிகாசங்களின் உதாரணங்களுடன் நிர்ணயம் செய்தார்.

ஆசார்ய மத்வரின் ஸாதனைகளை, பிரஸன்ன வெங்கட தாசர், மிகவும் அற்புதமாக கீர்த்தனைகளின் மூலம் விவரித்திருக்கிறார். ஸ்ரீமதானந்த தீர்த்தரைக் குறித்து, தாசர் இயற்றியிருக்கும் ஒன்பது கீர்த்தனைகள் இதுவரை கிடைத்துள்ளன.

வந்திஸிதரெ காவெ வரவெனீவெ - என்னும் கீர்த்தனையின் துவக்கத்திலேயே 'மத்வர்' மூல ரூபத்தில் வாயுதேவராக இருந்து, வாயு தேவர், சேஷ கருட ஈஷ்வரர்களைவிட மூத்த தேவதையாகி, அனைத்து தேவதைகளுக்கும் குருவாக இருந்து, ஜீவோத்தமராக இருந்தார் என்பதை தெளிவாக சொல்கிறார். மத்வாசார்யரின் கிரந்தங்களில் இருக்கும் வ்யாக்யானத்தின் ரீதியை, தாஸர் 'ஒந்தொந்து ஷ்ருதிஸ்ம்ருதிகெ பஹு அர்த்தகளன்னு ஹேளிருவரு' என்கிறார்.

எண்ணிக்கையினால் தத்வ விசாரங்களை விளக்குவதன் மூலம், கீர்த்தனையானது முண்டிகெயின் ஸ்வரூபத்தையும் கொண்டிருக்கிறது. உதாரணத்திற்கு: பாடலில் இரண்டாம் நுடி இவ்வாறு உள்ளது.

ஒந்தயிது ரிபுவர்க்க நிக்ரஹவ மாடிஸிதெ
ஒந்தாரு த்ரிகுணிஸித மதவ முரிதெ
ஒந்தேளு மதுவ காலலி மெட்டி ஹரிபுரகெ
ஒந்தெண்டு பகுதி பத தோர்தெ வைஷ்ணவரிகெ

ஒந்தயிது ரிபு = ஒந்து + ஐது = ஆறு ரிபுகளு. மனதின் ஆறு எதிரிகள். காம, க்ரோத, லோப, மோஹ, மத, மாத்ஸர்யங்களை எதிர்க்கும் சக்தியை ஸ்ரீமதானந்த தீர்த்தரிடம் யார் வேண்டிக் கொள்கிறார்களோ, அவர்களுக்கு அந்த சக்தி கிடைக்கிறது என்கிறார்.

ஒந்து+ஆறு = ஏழு * மூரு (த்ரிகுணிஸி - மூன்றாக பெருக்கி) - 21 மதங்கள். இவை எப்படி நல்வழியை காட்டுவதில்லை என்பதை விளக்கி, த்வைத வேதாந்தத்தை ஸ்ரீமத்வாசார்யர் நிறுவினார்.

ஒந்து + ஏழு = 8 மதுகள் - அன்ன மத, அர்த்த மத, ஸ்த்ரி மத, வித்யா மத, குல மத, ரூப மத, உத்யோக மத, யௌவன மத என்று உள்ள எட்டு மதங்களை வீழ்த்தும் சக்தி, ஸ்ரீமதானந்த தீர்த்தரின் பூஜையினால் கிடைக்கிறது.

ஒந்து + எட்டு = 9 பக்தி மார்க்கங்கள். ஸ்ரவண, கீர்த்தனம், ஸ்மரணம், பாத ஸேவனம், அர்ச்சனம், வந்தனம், தாஸ்யம், ஸக்யம், ஆத்ம நிவேதனம் - என்று ஒன்பது விதமான பக்திகள் இருக்கின்றன. இவற்றில் எந்தவொரு பக்தி விதத்தை பகவந்தனிடம் செய்தாலும், அது புண்யமான விஷயமே. இத்தகைய பக்திகளை செய்து, இவை ஹரிப்ரீதிகரமானவை என்று இங்கு சொல்லப்பட்டிருக்கிறது.

வாயுதேவர், பீமாவதாரத்தில் செய்த துஷ்ட ஸம்ஹார காரியங்கள் அனைத்தும் ஹரியின் ஆணைப்படியே, ஹரி ப்ரீதிக்காகவே செய்தவை என்று 'பளி பளரெ பல பீம பளரெ ஸத்குணதாம' என்னும் கீர்த்தனையில் தாஸர் பாடியிருக்கிறார். இந்த கீர்த்தனை, வீரத்தை பிரதிபலிக்கிறது. குருக்ஷேத்ரத்தின் போர்க்களத்தில், பீமன் தன் கதைக்கு, அதற்கு தக்கதான வேலையை கொடுத்தான் என்று வர்ணிக்கிறார். ஆனால், பீமன் துச்சாதனனின் இதயத்தை கிழித்து, ரத்தத்தைக் குடித்தான் என்று வர்ணிக்காமல் 'ஒடலின அருணஜல பீர்தந்தெ தோர்த்தெ' என்கிறார். இது ஒரு மிகவும் அபூர்வமான பிரயோகம். பீமசேனதேவருக்கு அரிஷட்வர்க்கங்களின் மேல் கட்டுப்பாடு இருந்தது. பழிவாங்கும் தன்மை இருந்திருக்கவில்லை. துச்சாதனனின் ரத்தத்தைக் குடித்து, அசுரர்களைப் போல அவன் குதிக்கவில்லை. உலகத்தின் பார்வையில், துஷ்டனின் ரத்தத்தைக் குடித்ததைப் போல நடித்து, அந்த துஷ்ட சம்ஹார காரியத்தை செய்தான் என்பதை 'கோவர்த்தனதரன அனுக்ஞவார்த்திகர்ப்பிஸிதெ' என்கிறார்.

மோட்சத்திற்கான வழியைக் காட்டிய ஜகத்குருகள் என்று தாஸர் ஸ்ரீமதானந்த தீர்த்தரை துதிக்கிறார். கண்ணுக்குத் தெரியாத ஜீவ-தேவ சம்பந்தத்தின் குண சக்திகளின் சிறப்புகளை, தாத்விகமாக விளக்குவதன் மூலம், ஸாதனைக்கான வழியைக் காட்டியவர் அவர். அனந்தானந்த

கோடி ஜீவர்களின் அந்தர்யாமியாக ஸர்வோத்தமனான ஸ்ரீஹரி, பிம்பரூபியாகி, அந்தந்த நாம, உருவ, அலங்காரங்களால் ஒளிர்ந்து இருக்கிறான். அந்த ஜீவாந்தர்கத பிம்பரூபத்தை பார்ப்பதே மனிதனின் வாழ்க்கையின் முக்கிய குறிக்கோளாக இருக்க வேண்டும் என்பதை மத்வாசார்யர் தார்க்கிகமாக விளக்கியிருக்கிறார். எதுவரை ஜீவாந்தர்கத பிம்ப மூர்த்தியின் பெயர் என்னவென்று தெரியவில்லையோ, அதுவரை, அனைத்து ஜீவர்களின் ஸாமான்ய பிம்பரூபி எனப்படும் ஹரியை பிம்பரூபி என்று அறிய வேண்டும் என்பதை, மத்வாசார்யர் 'பிம்பரூபௌ ஹரிரேவா' என்று சொல்லியிருக்கிறார். இதன் மூலம், மோட்சத்திற்கான வழியைக் காட்டியிருக்கிறார்.

ஸ்ரீமதானந்த தீர்த்தர், பிம்போபாஸனையின் முக்கியத்துவத்தை திரும்பத்திரும்ப வலியுறுத்தியிருந்தாலும், ஸாதகர்களின் வாழ்க்கையில், 'பிம்போபாஸனை' அவ்வளவு முக்கியத்துவத்தைப் பெறவில்லை. பிம்போபாஸனைக்கு மிக அதிக மதிப்பினைக் கொடுத்தவர்கள் ஹரிதாஸர்கள். எந்தவொரு கர்மத்தை, மானஸிக, தெய்ஹிக, தன பூர்வகமாக செய்தாலும், அதனை பிம்பரூபி பரமாத்மனுக்கு அர்ப்பணம் செய்துகொண்டு, ஹரிதாஸர்கள், தங்களின் சம்பிரதாயத்தை நிர்மாணம் செய்திருக்கின்றனர்.

வ்யாஸகூடத்தவர்களில் இவை இல்லை என்பதற்கில்லை. சாஸ்திர அத்யயனமோ, பாராயணமோ செய்தாலும், அந்த சமயத்தில் துவக்கத்தில் மற்றும் கடைசியில், 'ஹரி: ஓம்' என்று சொல்லும் சம்பிரதாயம் இருக்கிறது. கலசாதி பூஜைகளையும், விக்ரஹாதி பூஜைகளையும் செய்யும்போது, இதயத்தை தொட்டுக்கொண்டு, அந்த விக்ரகங்களில் ஸ்ரீஹரியின் ஸான்னித்யத்தை ஆவாஹனம் செய்யும் பழக்கம் வந்திருக்கிறது. இந்த சமயத்தில், அவர்கள் தங்களின் ஹ்ருதயாந்தர்கத பிம்பமூர்த்தியை அந்த விக்ரகங்களில் ஆவாஹனம் செய்து பூஜிக்கும் பழக்கம் இருந்தாலும், பல பேருக்கும் அங்கு 'ஹரி: ஓம்' என்று சொல்வதில், பிம்பமூர்த்தியான ஹரியின் பூஜையை செய்கிறோம், பிம்பரூப ஹரியை ஆவாகனம் செய்கிறோம் என்று அனுசந்தானம் செய்பவர்கள் மிகவும் குறைவே. இந்த செயல் மந்திரபூர்வகமாக நடக்கிறது.

அங்கிதம் பெற்றவர்களும், ஹரிதாஸ ஸம்பிரதாயத்தில் இருப்பவர்களும், இந்த விஷயத்தை அறிந்திருந்தாலும், பூஜைகளை, ஜப தபங்களை செய்யும் அனைத்து சமயங்களிலும் பிம்பரூபியின் சிந்தனை அவர்களுக்கு வருகிறது என்று சொல்வதற்கு இல்லை. ஆனால்,

‘ஸ்வரூபானந்தானுபவ விகஸவாகுவ ஞான த்ருஷ்டி’ - சாதகனுக்கு இருக்க வேண்டும் என்னும் விஷயத்தை, பிரஸன்ன வெங்கடதாஸர் கூறுகிறார்.

யார் ஸ்வரூபானந்த அனுபவமானது, தம் ஜீவாந்தர்கத பிம்ப மூருதியின் தரிசனத்தின் மூலம் கிடைக்கிறது என்று நினைத்து, பிம்ப பூஜை செய்கிறார்களோ அத்தகையவர்களுக்கு ‘கிவியல்லி ஸச்சாஸ்த்ர கேளுவ, த்யானமனனவ ஸாதிஸுவ, நவ பகுதிய பத’ த்தில் செல்லும் பாக்கியம் கிடைக்கிறது. ‘எதெகத்திகெயொளு மெரெவன’ என்றால், ஹ்ருதயாப்ஜ மண்டலத்தில் ஒளிர்ந்து கொண்டிருக்கும் பிம்பமூர்த்தியின் ‘ஸவிகுணங்களின் நிர்ணயவார்த்தெ’ யின் சிந்தனையில் மனம் மூழ்குகிறது - என்று தாஸர் மோட்சத்தின் வழியை, ஸ்ரீமதானந்த தீர்த்தரின் ஸாதனையின் வழியின் பின்னணியில், சாதகனுக்கு வழிகாட்டுகிறார்.

**(தொடரும்...)**

**கன்னடம்**

**அருஞ்சொற்பொருள்**

**கடினமான சொற்களின் அர்த்தங்கள்**

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

1. குடில - மோசம் / வஞ்சனை; 2. குடீர - குடிசை / வீடு; 3. குடார - கோடாலி; 4. குஜ - மரம் / கெட்ட புத்தி; 5. குள்ளிரு - அமர்வாயாக; 6. குஸும - பூ; 7. கேஸரி - சிங்கம்; 8. க்ஷோணி - பூமி / உலகம். 9. க்ஷேத்ர - சரீரம்; 10. ககேந்த்ர - கருடன்.

**ஏப்ரல்-2022 இதழில் வந்த ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டிக்கு சரியான விடை எழுதி புத்தகப் பரிசு பெறுபவர்கள்:**

**1. திருமதி. சந்திரா, கோவை. 2. திருமதி. கிரிஜா ஜயதீர்த்தாச்சார், ஸ்ரீரங்கம்**

தொடர்

## கன்னட கிரந்தங்கள் அறிமுகம்

## ஸ்ரீ வெங்கடேஸ பாரிஜாதம்

ஸ்ரீ அனந்தாத்ரி அனந்தாசாரியார்

ஸ்ரீ அனந்தாத்ரி அனந்தாசாரியார் 'அடவி ஆச்சார்' என்றே புகழ்பெற்ற மாதனூர் ஸ்ரீ விஷ்ணு தீர்த்தரின் சிஷ்யர் ஆவார். பௌகாகி ஜில்லா 'கோகாக்' என்ற ஊரிலே வெங்கடேஸ ஆலயத்தில் பகவானுக்கு கைங்கரியம் செய்து வந்தவர். பரம வைராக்கியசாலி. அனைத்தையும் கூட ஸத்பாத்திரர்களுக்கு தானம் செய்தவர். பகவானின் பூஜை பாட பிரவசனம் என்றே காலம் கழித்தவர். இவருடைய காலம் 1770 - 1840 ஆகும். ஸ்ரீ விஷ்ணு தீர்த்தரின் பரிபூரண அனுக்ரஹத்திற்கு பாத்திரரான ஸ்ரீ அனந்தாசாரியர் 'பிரஹ்லாத சரித்திரம்', 'துருவ சரித்திரம்', 'கிருஷ்ண சரித்திரம்''சிவ பாரிஜாத', 'கன்னட பஞ்சரத்ன', பராகுகள் மற்றும் கீர்த்தனைகள் என கன்னடத்தில் மத்வ ஸித்தாந்தத்தை அனுசரித்து பல படைப்புகளை அளித்தவர். அந்த வரிசையில் 12 புராணங்களில் உள்ள வெங்கடாசல மகாத்மியம், அதிலும் குறிப்பாக பவிஷ்யோத்தர புராணத்தில் விவரிக்கப்பட்டுள்ள பகவான் ஸ்ரீநிவாஸ பத்மாவதி கல்யாண வைபவத்தை வர்ணிக்கும் வகையில் கன்னடத்தில் அருளிய கிரந்தமே 'ஸ்ரீ வெங்கடேஸ பாரிஜாத' என்பதாகும். ஸ்ரீ ஸ்ரீநிவாஸனின் கல்யாண சரித்திரத்தை வெவ்வேறு காலகட்டங்களில் ஸ்ரீ வாதிராஜர் ஸ்ரீ புரந்தர தாஸர் போன்ற மகனீயர்கள் கன்னடத்தில் அருளிய உள்ளதை அனுசரித்து, ஸ்ரீ அனந்தாச்சாரியார் மிக அழகாக, எளிதாக, சற்று விளக்கமாக, காவிய நயத்துடன், பாமரரும் அறியும் வண்ணம் கன்னடத்தில் 10 அத்தியாயங்களில் இந்த 'ஸ்ரீ வெங்கடேஸ பாரிஜாத' என்னும் உயரிய படைப்பை இயற்றியுள்ளார்.

முதல் அத்யாயம்

ஸ்ரீ ஆனந்தாச்சாரியார் ஸ்ரீ லக்ஷ்மி ஸமேத ஸ்ரீ வேங்கடேஸனிடத்தில் நற்புத்தி வேண்டி ,பின்னர் ஜெய தீர்த்தர் முதலான யதிகள், ஐஜி ஆச்சாரின் ஸிஷ்யரும் தமது குருவுமான ஸ்ரீ விஷ்ணு தீர்த்தர் முதலானவர்களை வேண்டி பிரார்த்தித்து இந்த துதியைத் தொடங்குகிறார்.

முதலில் ப்ருகு முனிவர் மூன்று லோகங்களிலும் ஸர்வோத்தமன் யார் என பரிக்ஷை செய்யக் கிளம்பியதும், முதலில் ஸத்ய லோகத்திற்கு செல்ல அங்கே பிரம்மதேவர் தியானத்தில் அமர்ந்து ஏதும் பேசாமல்

கண்ணெடுத்தும் பாராமல் இருப்பதைக் கண்டு அங்கிருந்து புறப்பட்டு கைலாஸம் சென்றார். அங்கு பார்வதி தேவியுடன் சிவபெருமான் க்ரீடிப்பதைக் கண்டு ஒரு க்ஷணம் நிற்க, பார்வதி தேவி வெட்கம் கொண்டு சிவபெருமானிடம் பிருகு மகரிஷி வந்ததைத் தெரிவித்து விட்டு விடுமாறு கூற, சிவபெருமான் கண்கள் சிவக்க கோபம் கொண்டு, ப்ருகு மகரிஷியைத் தாக்குவதற்காகக் கிளம்பினார். அப்போது ப்ருகு மஹரிஷி பூலோகத்தில் லிங்க பூஜையே ஆகட்டும் என சாபம் அளித்து கடைசியாக வைகுண்டம் சென்றார்.

தன் பட்டத்து அரசியான மகாலக்ஷ்மி தேவியார் ஸேவை புரிய ஆதிஸேஷன் மேல் ஸயனித்திருக்கும் ஸ்ரீமந் நாராயணனைக் கண்டு கோபத்தினால் அவனது ஹ்ருதயத்தில் எட்டி உதைக்க, பகவான் சிறிதும் கோபம் கொள்ளாமல், மஹரிஷியின் பாதத்தைத் தனது தலையின் மேல் வைத்து வணங்கி, தன்னுடைய கடினமான ஹ்ருதயத்தை எட்டி உதைத்ததினால் அவரின் பாதம் வலித்ததோ எனக்கேட்டு, தன்னை எட்டி உதைத்ததற்கான காரணத்தையம் வினவினார். பின்னர் வெந்நீரினால் அவரது பாதத்தை அலம்பி அந்த ஜலத்தை ப்ரோக்ஷணை செய்து கொண்டார். அதைக்கண்ட ப்ருகு முனிவர் பூலோகம் வந்து பொறுமையின் சிகரமாக இருக்கும் 'ஸ்ரீ ஹரியே ஸர்வோத்தமன்' என்று ஸ்பஷ்டமாக கோஷம் செய்தார். நடந்தது எல்லாம் கண்ட ஸ்ரீ மஹாலக்ஷ்மி பகவானின் லீலா வினோதங்களை அறிந்து, அதை அனுசரிக்கும் விதமாக தாமும் கோபம் கொண்டது போல் நடித்து, தாம் கரவீரபுரம் செல்வதாகக் கூறி கலஹம் செய்து புறப்பட்டாள். ப்ராண அரசி இல்லாத வைகுண்டத்தில் தான் இருக்க போவதில்லை என்று கூறி, பகவான் ஸ்ரீநிவாஸனும் வைகுண்டத்தை விட்டு வேங்கடகிரிக்கு புறப்பட்டார். அங்கே புளிய மரத்தின் கீழ் உள்ள ஓர் புற்றில் வாசம் செய்தார்.

அப்போது ஸ்ரீமகாலக்ஷ்மிதேவி கோபிகா ஸ்திரீயாக உருவம் தரித்து, பிரம்ம தேவரைப் பசுவாகவும், ஸிவனைக் கன்றுக் குட்டியாகவும் செய்து கொண்டு சோளராஜனின் அரண்மனைக்கு வந்து ராணியிடம் பசுவையும் கன்றையும் அளித்து வெகுமதி பெற்றுச் சென்றாள். பசு ரூபத்தில் இருந்த பிரம்மதேவர் இரண்டாயிரம் பசுக்கள் உள்ள கூட்டத்தில் தானும் சேர்ந்து கொண்டு புல் மேய வெளியே செல்ல, நேராக வேங்கடகிரி சென்று, புற்றினுள் வாஸம் புரியும் இந்திரேஸனான ஸ்ரீ

ஹரிக்கு பாலை அபிஷேகம் செய்தார். இவ்விதம் நடந்து கொண்டிருக்க ராணியானவள் வந்த பசுவிடமிருந்து ஒருநாள் கூட பால் கிடைக்காமல் போன ஏமாற்றத்தில், கோபம் கொண்டு மாடு மேய்க்கும் இடையனிடம் இதற்கான காரணத்தைக் கேட்க, அவன் தான் ஒன்றும் அறியாமல் உள்ளதாக பதிலளித்தான். அவனுக்கு ராணி தண்டனை அளிக்கும் விதமாக தோல் நாரினால் பிணைக்கப்பட்ட சாட்டையினால் அடிக்க வைத்தாள். கோபம் கொண்ட இடையன் இதற்குக் காரணமான பசுவின் கள்ளத்தனத்தை கண்டுபிடிக்க எண்ணி, அந்த பசுவினைப் பின்தொடர்ந்து மலை ஏறிச் சென்றான். அங்கு பசு எப்போதும் போல புற்றில் பாலை அபிஷேகம் செய்யும் அக்காட்சியைக் கண்டு, கோபத்தினால் அதைக் கொல்ல எத்தனிக்கும் விதமாக கோடாரியை அப்பசுவின் கழுத்தில் குறி வைத்து வீச, அத்தனை வருட காலமாக புற்றினுள் வாசம் செய்த பகவான் ஸ்ரீநிவாஸன் எழுந்து அந்த அடியைத் தானே ஏற்றார். அந்த க்ஷணம் ஸ்ரீநிவாஸனின் தலையில் இருந்து ஏழு தாள மரம் (பனை மரம்) அளவிற்கு ரத்தமானது வெளியே பெருக்கெடுத்து ஓட, அதைக்கண்ட இடையன் அதிர்ச்சியடைந்து இறந்து போனான். பசுவானது இந்த நிகழ்ச்சியைக் கண்டு நேராக சோளராஜனிடம் சென்று முறையிட, அரசன் சேவகர்களுடன் அவ்விடம் சென்று ரத்தம் வழிந்தோடுவதையும், இடையன் இறந்து கிடப்பதையும் கண்டு பதறி, நடந்ததைப் பற்றி வினவினான், ஸ்ரீநிவாஸன் நடந்த அனைத்தையும் விவரித்து, இதற்கு காரணமான சோளராஜனுக்கு பிசாசு ஜென்மம் எடுக்க சாபமளிக்க, ராஜன் உடனே மூர்ச்சையடைந்து விழுந்தான். இரண்டு நாழிகை கழித்து விழித்தெழுந்து தனக்கு சாபமிட்ட காரணத்தைக் கேட்ட போது, பகவான் மோஹத்தை உண்டு பண்ணும் விதமாக, தான் பாபி எனவும், முன்கோபக்காரன் எனவும், நெற்றியிலே ஏற்பட்ட காயத்தினால் தெரியாமல் சாபம் அளித்ததாகவும் கூறி, மேலும் அவனை சமாதானம் செய்யும் விதமாக பேசலானான். முன்னால் ஆகாஸராஜன் பத்மாவதியை தனக்கு விவாஹம் செய்து தரப்போவதையும், அப்போது பல்வேறு ஆபரணங்களை சீர்வரிசையாக தரவிருப்பதையும், அவற்றில் அநேக ரத்தினங்கள் உள்ள கிரீடம் ஒன்றும் அடங்கும் என்றும், அதை ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் தான் அணியவிருப்பதாகவும், அப்போது ஒரு துளி கண்ணீர் வரும் அந்த நேரத்தில் ராஜனுக்கு ஆனந்தம் ஏற்படும் எனவும் பதிலுரைத்தார் .

பின்னர் பகவான் ஸ்ரீநிவாஸன் காயத்திற்கு மருந்து என்னவென்றறிய தேவகுரு பிரஹஸ்பதியை அழைத்தார். இந்திர லோகத்தில் இருந்து குருவானவர் எழுந்தருளி, பகவான் தன்னை அழைத்த காரணம் என்ன

என்று கேட்க, தனது காயத்திற்கான மருந்தைப் பற்றி தெரியப்படுத்த வேண்டும் என பகவான் வினவ, எருக்கன் காயின் பஞ்சைக் கொண்டு அத்திமரத்தின் பாலில் தோய்த்து காயத்தின் மேல் தடவி, வஸ்திரத்தை சுற்றிக்கொண்டு, தேனுடன் அன்னம் கலந்த உணவை பத்தியமாக சாப்பிட ரணம் குணமாகும் என பிரஹஸ்பதி பதிலுரைத்தார்.

பகவானும் பிரஹஸ்பதி கூறியபடி தனது தலைக்கு மருந்திட்டுக் கொண்டு அம்மலையின் மீது வஸித்திருந்தார். அப்பேர்ப்பட்ட அந்த வேங்கடகிரியிலே அந்த புற்றையே கௌஸல்யா தேவியாகவும், தேவகி தேவியாகவும், அதனருகே உள்ள புளிய மரத்தை தஸரதராகவும், வஸூதேவராகவும், ஸ்வாமி புஷ்கரணியையே ஸரயு நதியாகவும், யமுனா நதியாகவும், ஸேஷாசலத்தையே லக்ஷ்மணனாகவும் பலராமனாகவும், அங்குள்ள மிருக பக்ஷி களையே அயோத்தியாபுர வாஸிகளாகவும், கோபர் கோபிகா ஸ்திரீகளாகவும் எண்ணி தனது ராம கிருஷ்ண அவதாரங்களை நினைத்துக் கொண்டார். பிரம்மாதி தேவதைகள் வ்ருக்ஷ ரூபமாகவும், ரிஷிகள் மிருகம் முதலான ரூபங்களோடும், பித்ரு தேவதைகள் பக்ஷி ரூபங்களாகவும், யக்ஷ கின்னர கந்தர்வர்கள் கல் ரூபமாகவும் இருக்கின்றனர். பகவான் வைகுண்டத்தை விட்டு பூலோக வைகுண்டம் என்னும் ஆனந்தாத்ரி பர்வதத்தை அடைந்தார்.

இரண்டாம் அத்தியாயம்

பகவான் ஸ்ரீநிவாஸன் ஒருநாள் அருணோதயத்தில் எழுந்து பிரஹஸ்பதி ஆச்சாரியர் கூறிய அந்த மருந்துகளைத் தேடி வனத்திற்கு செல்ல, அங்கே பகவான் ஸ்ரீ பூவராஹன் கர்ஜனை செய்து கொண்டு வருவதைக் கண்டு பயம் கொண்டு (நடித்து) ஒளிந்து கொள்ள, ஸ்ரீ பூவராஹன் பகவான் ஸ்ரீநிவாஸனை இங்கு வந்ததன் காரணத்தைக் கேட்க, ஸ்ரீநிவாஸன் நடந்த அனைத்தையும் விவரித்தார். பரஸ்பரம் இருவரும் பேசிக் கொண்டனர்.

தான் இருப்பதற்கு ஸ்தலம் வேண்டுமென பகவான் ஸ்ரீநிவாஸன் ஸ்ரீ பூவராஹனிடம் வேண்டியதுடன், அதற்கு காணிக்கையாக தன்னைக் காண வரும் பக்தர்கள் அனைவரும் முதலில் ஸ்ரீ பூவராஹனின் தரிசனம், அபிஷேகம் நைவேத்யம் என செய்து சமர்ப்பித்த பின்னரே தன்னை தரிசிக்கக் கூடிய முறையையும் செய்து வைத்தார். (ஸ்ரீநிவாஸனும் ஸ்ரீ பூவராஹனும் ஒன்றே. பகவானின் ரூப ரூபங்களுக்குள் பேதமில்லை

என் அறிய வேண்டும்). தன்னுடைய காயத்திற்கு தேவையான பத்திய சமையலை செய்ய யாருமில்லை என ஸ்ரீநிவாஸன் கூற, ஸ்ரீ பூவராஹன் பகுளாதேவியை அனுப்பி வைத்தார். பகவான் ஸ்ரீநிவாஸனும் பகுளாதேவியின் சமையலை உண்டு கொண்டு வேங்கடகிரியில் வாசம் புரிந்து வந்தார். (தொடரும்)...

**S.லக்ஷ்மிபதிராஜா, சென்னை**

தொடர்

**ஹரிகதாம்ருதசார மஞ்சரி 360**

**By ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர்**

14. **ஏனு கருணாநிதி[4]யோ ஹரி ம**
**த்தேனு ப[4]க்தாதீ[3]னனோ இ**
**ந்னேனு ஈதன லீலெ இச்சாமாத்ரத[3]லி ஜக[3]வ |**
**தானெ ஸ்ருஜிசுவ பாலிசுவ நி**
**ர்வாண மொத[3]லாதகி[2]ல லோக**
**ஸ்தா[2]னத[3]லி மத்தவரனிட்டா[3]னந்த[3] ப[3]டிசுவனு** ||(2-16)

பகவந்தன் பரம கருணாளு. அவன் பக்த பராதீனன். தனது இச்சா மாத்திரத்தினால் உலகின், ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயங்களை, யாருடைய உதவியும் இன்றி தானே செய்கிறான். அவரவர்களின் தகுதிக்கேற்ப அவரவர்களுக்கு மகிழ்ச்சிகளைக் கொடுத்து காக்கிறான். ஸ்ருஷ்ட்யாதி அஷ்ட கர்த்ருத்வங்களையும் தானே செய்கிறான். ஜீவர்களின் தகுதிக்கேற்ப ஆனந்தாதி பலன்களைக் கொடுக்கிறான்.

15. **மனதொ[3]ளகெ[3] சுந்தர பதார்த்த[2]வ**
**நெனெது[3]கொ[1]டெ[3] கைகொ[1]ண்டு[3] ப[3]லு நூ**
**தன சுஷோபி[4]த[1] கந்த[4] சுரஸோபே[4]த[3] பலராசி |**
**த்யுனதி னிவஹகளந்தெ[1] கொட்டவ**
**ரனு சதா சந்தயிசுவனு ச**
**த்கு[3]ணவ க[1]த்த[3]வரக[4]வ க[1]தி[3]வனு அனக[4]னெந்தெ[3]னிஸி ||(2-22)**

மானசிகமாக ஸ்ரீஹரிபூஜையை செய்து, அவனுக்கு மிகச்சிறந்த பதார்த்தங்களை சமர்ப்பித்தால், அதற்கும்கூட தக்க பலன்களைக் கொடுக்கிறான் என்று தாசர் நிரூபிக்கிறார். எப்படியென்றால், மானசிகமாக அழகான பதார்த்தங்களை பார்த்தால் - அதாவது சந்தையில் நாம் பார்க்கும் பூ, பழம், காய்கள், கடைகளில் நாம் பார்க்கும் (உதாரணத்திற்கு) திராட்சை, பாதாம், கற்கண்டு ஆகியவற்றை

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணம் என்னும் சிந்தனையை நாம் வளர்த்துக் கொள்ள வேண்டும். இதைப் போலவே, மொத்த உலகில் வளர்ந்த அனைத்து தானியங்களை, பூ, துளசி ஆகியவற்றை, நதிகளில் பாயும் தண்ணீர் ஆகிய அனைத்தும் உனக்கு நைவேத்தியம் ஆகட்டும் என்று அனுசந்தானம் செய்தால், அப்படி செய்பவர்களை நன்றாக பார்த்துக் கொள்கிறான். அவர்களின் இந்த நற்குணங்களை ஏற்றுக் கொள்கிறான் என்கிறார். அவர்களுடைய பாவங்களை போக்குகிறான். அதாவது, இப்படியாக சிந்திப்பவர்களின் பாவங்களை தானே களைந்து, அவர்களை நற்குணங்களைக் கொண்டவர்களாக ஆக்குகிறான் என்கிறார். இதுவே உண்மையான சுலபமான பூஜை. இத்தகைய ஸ்ரீஹரியை விட கருணாளு வேறு யாராவது உலகில் உள்ளார்களா?.

16. **தந்தெதாய்களு தம்ம சிசுவிகெ3**
**ப3ந்த ப4யகள பரிஹரிஸி நிஜ**
**மந்தி3ரதி3 பே3டி3து3த3னித்தா1 த3ரிசுவந்த3த3லி |**
**ஹிந்தெ3முந்தெ3ட3ப3லதி3 ஒளஹொர**
**கிந்தி3ரேஷனு த1ன்னவர னெ**
**ந்தெந்து3 சலஹுவனாக3சத3 வோலெத்த3 நோடி3த3ரு ||24**

பற்பல உவமான, உவமேயங்களைக் கொடுத்து, பாரமார்த்திக விஷயங்களை புரியவைப்பதில் தாசர் மிகச்சிறந்தவர். அது எப்படியென்றால், மக்களுக்கு வரும் பயங்களை, பெற்றோர் எப்படி நிவாரணம் செய்கிறார்களோ, அதைப் போலவே, பூமி, வான், தண்ணீர் என அனைத்து இடங்களிலும் வாழும் பிராணிகளை, அவர்களின் முன் பின், உள்ளே வெளியே மேலே கீழே என அனைத்து இடங்களிலும் இருந்து, அவர்களுக்கு வரும் கஷ்டங்களை பரிகரிக்கிறான். அத்தகைய கருணாளு ஸ்ரீஹரி என்கிறார். இவையெல்லாம் அவனுடைய ஸ்மரணை நமக்கு இருந்தால்.

17. **க1ண்ணிகெ3வெயந்த3த3லி கை1 மை**
**தி1ண்ணிகொ3தகு3வ தெ1ரதி1 ப1ல்க3ளு**
**ப1ண்ணு ப4லகளனகிது ஜிஹ்வெகெ3 ரசவனீவந்தெ1 |**
**பு1ண்ய ப4லவீவந்த3த3லி நுடி3**
**வெண்ணி நாண்மாண்ட3தொ3ளு லக்ஷமண**
**நண்ணனொத3கு3வ ப4க்தரவசன கமரக3ணசஹித ||27**

இதுவும்கூட முந்தைய பத்யத்தைப் போலவே இருக்கிறது. கண்ணில் அழுக்கு விழுகிறது. அதற்கு, இரு கைகள் அந்த அழுக்கு வெளியேறும்வரை விடுவதில்லை அல்லவா? அதைப் போலவே, வாயில் போட்டுக்கொண்ட பொருள், நாக்கு, உள் நாக்கிற்கு கிடைக்குமாறு, பற்கள் உடனடியாக அதனை கடித்து சாற்றினை உள்ளே அனுப்புகிறது. அதைப் போல, ஸ்ரீஹரியின் சிந்தனை இருப்பவர்களுக்கு, எந்த விதமான கஷ்டங்கள் வந்தாலும், லட்சுமணனின் அண்ணன் வந்து உடனடியாக உதவி செய்கிறான் என்கிறார் தாசர்.

18. **புருஷரூபத்1ரய பு1ராத1ன**
**புருஷ புருஷோத்த1ம க்ஷராக்ஷர**
**புருஷபூஜிதபாத3 பூர்ணானந்த3 ஞானமய |**
**புருஷசூக்த1சுமேய தத்த**
**த்1 பு1ருஷஹ்ருத் புஷ்க3ர நிலய மஹ**
**புருஷ ஜாண்டந்த1ரதி3 ப3ஹிரதி3 வ்யாப்த1 நிர்லிப்த1 ||3-1)**

ஸ்ரீஹரியின் வியாப்தி எத்தகையது என்பதை கேள்வி கேட்டு, அதற்கு விடையாக, உலகில் நாம் காணும் புருஷ, ஸ்த்ரி, நபும்ஸக ஆகிய மூன்று வித ஜீவர்களில், தான் புருஷனாகவே இருந்து, அவரவர்களுக்கு புருஷத்வ, ஸ்த்ரீத்வ, நபும்ஸகத்வ ஆகியவற்றைக் கொடுக்கிறான். அவன் அனைத்து அக்ஷரங்களிலும் எந்த காலத்திலும் இருக்கிறான். எப்படி இருக்கிறான் என்றால், பூர்ணானந்தனாக, ஞானமயனாக, புருஷஸூக்தம் எப்படி புகழ்கிறதோ, அதைவிட அதிகமாக இருக்கிறான். பிரம்மாண்டத்தில் வியாபித்திருக்கிறான். உள்ளும், புறமும் வியாப்தனாக இருக்கிறான் என்று சிந்திக்க வேண்டும் என்கிறார்.

அவனுடைய வியாப்தியை அறிவதற்கு யாராலும் சாத்தியம் இல்லை. ஆனால், ஹரிஸர்வோத்தமத்வ ஞானம் வேண்டுபவர்களுக்கு மட்டும், இதனுடைய அவசியம் இருக்கிறது என்று அறியலாம். க்ஷரத்தில் அந்தர்யாமியாக, அக்ஷரனாக, வியாப்தனாக இருக்கிறான் என்கிறார்.

19. **வித்3யெ தா1னெந் தெனிஸிகொ1ம்ப3 னி**
**ருத்த4தே3வனு சர்வஜீவர**
**பு3த்தி4யொளு நெலெசித்து3 க்1ருதி1பதி1 பு3த்தி4யெனிசுவனு |**
**சித்தி4யெனிசுவ சங்கருஷண ப்ர**
**சித்த4னாமக வாசுதேவ ன**
**வத்3ய ரூப சதுஷ்டயக3ளித1வனெ ப1ண்டித1னு ||(3-6)**

பகவந்தனின் அபின்ன ரூபமான அனிருத்தன் வித்யைக்கு அதிகாரி. அதைப் போல, புத்திக்கு அதிகாரி க்ருதிபதி சங்கர்ஷணன். ஜீவர்களின் யோக்யதைக்கேற்ப, வாஸுதேவ நாமக இருந்து, அவர்களை காக்கிறான் என்பது அபிப்பிராயம். பஞ்சரூபங்களில், அனிருத்த க்ருதிபதி, சங்கர்ஷண மற்றும் வாசுதேவன், நம் புத்தி வித்யை, ஸித்திக்கு காரணராக இருக்கிறான் என்று யார் அறிகிறார்களோ, அறிவதற்கு முயல்கிறார்களோ, அவர்களே பண்டிதர்கள்.

20. **பா4ர்யரிந்தொ3டகூ3டி3 காரண**
**கார்ய வஸ்துகளல்லி ப்ரேரக**
**ப்ரேர்ய ரூபகளிந்த ப1ட1த1ந்து1கள வொலித்து3 ।**
**தூர்ய கிரணக3ளந்தெ1 தன்னய**
**வீர்யதிந்தலெ கொ1டு3த1 கொ1ளுதிஹ**
**நார்யரிகெ ஈதன விஹாரவு கோ3சரிபு1தே3னு ।।9**

புருஷ ஸ்த்ரீயர்களின் ஸம்போகாதி க்ரியைகளில் தானே ப்ரேர்ய ப்ரேரகனாக இருந்து, செயல்களை செய்வித்து, அவரவர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்து, அவர்களுக்கு சுகசந்தோஷத்தைக் கொடுக்கும் பகவந்தனின் செயல்கள் யாரால் புரிந்து கொள்ள முடியும்?. பகவந்தன் ஆனவன், மானவர்கள் செய்யும் த்வந்த்வ கர்மங்களில் தானே இருந்து, செய்வித்து அவர்களின் சுக துக்கங்களை அவரவர்களுக்கு கொடுத்து, தான் எதற்கும் சம்பந்தப்படாமல் நிர்லிப்தனாக இருக்கிறான். இதனை யாராலும் அறிவதற்கு சாத்தியம் இல்லை. இதுவே அவனுடைய வியாப்தித்வ என்கிறார் தாசர். (தைத்திரிய 3ம் வல்லியின் விஷயம் இது).

21. **ஜனக தன்னாத்மஜகெ3 வரபூ4**
**ஷண து3கூ1லவ தொ1டி3ஸி தா1 வ**
**ந்தனெய கைகொளுதவன ஹரசுத ஹருஷப1டுவந்தெ ।**
**வனருஹேக்ஷண பூஜ்ய பூஜக1**
**நெனெஸி பூ1ஜாஸாத4னபதா3**
**ர்த்த2னுதனகெ3 தா1னாகி3 ப2லகள3னீவ ப4ஜக1ரிகெ3 ।।(3-10)**

பண்டிகை, விரத நாட்களில், பெற்றோர் தமது பிள்ளைகளுக்கு புத்தாடைகளை தைத்து, அணிவித்து பார்த்து எப்படி மகிழ்கிறார்களோ, அதைப் போலவே, ஸர்வாதிகாரியான ஸ்ரீஹரி, தானே பூஜ்ய பூஜ்யகன் என்று அழைத்துக்கொண்டு, ஜீவர்களுக்குத் தேவையான அனைத்து

பூஜைப் பொருட்களையும், தன்னை பஜிப்பவர்களுக்கு தானே கொடுப்பவனாக இருக்கிறான் என்கிறார் தாஸர். அதாவது, அந்தந்த காலங்களில் அந்தந்த பூ, பழம், காய்கறி, தானியங்கள் என அனைத்தையும் நமக்காக விளைவித்துக் கொடுத்து, நமக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிறான். இதுவே அவனுடைய வியாப்தி என்று அறிய வேண்டும் என்கிறார் தாஸர்.

22. **ஸ்ருதிததிகளிகெ கோ3சரிசத3**
**பிரதிமஜா னந்தா3த்மனச்யுத**
**விதத விஷ்வாதா4ர வித்4யாதீ4ஷ விதி4ஜனக1 |**
**பிரதிதிவச சேதனரொளகெ ப்ரா**
**க்ருத புருஷனந்த3த3லி சஞ்சரி**
**சுத நியம்ய நியாமகனு தானாகி3 சந்தெய்ப ||(3-14)**

பகவந்தன், ஸ்ருதிகளில் எவ்வாறு புகழப்பட்டிருக்கிறானோ, அதைவிட அதிகமாக இருக்கிறான். அதாவது, அவன் ஞானானந்தமயி. அவன் அச்யுத, விஷ்வாதார, வித்யாதீஷ, விதிஜனகனாக இருக்கிறான். அனைத்து ஜீவகோடிகளில் அந்தந்த பெயர்களில், அந்தர்யாமியாக, அந்தந்த ரூபங்களில் இருந்து, அனைத்து சேதனர்களில் (84 லட்ச யோனிகளில்), ப்ராக்ருதனைப் போல இருந்து, அவனே ப்ரேரணை செய்து, அவனே நியாமகனாக இருந்து அனைவரையும் வழிநடத்துகிறான். இதுவே அவனுடைய விசேஷமான வ்யாப்தி ஆகும். (தொடரும்)

**தொடர்**

## ஹரிதாசர்களின் சிந்தனைத் துளிகள்

**தேவ – குரு வணக்கம்**

ஆசார்ய மத்வரின் சித்தாந்தத்தின் முக்கிய தத்வம் – தாரதம்யம். ஸ்ரீஹரியிடமிருந்து துவங்கி அனைத்து தேவதைகளையும், குரு பரம்பரையையும் தாரதம்யத்தின்படி வணங்குவது சாஸ்திரத்தில் சொல்லியபடியே ஆகும்.

யஸ்ய தேவே பராபக்திர்யதா தேவே ததா குரௌ ।
தஸ்யைவ கதிதாஹ்யர்தா: ப்ரகாஷந்தே மஹாத்மன: ॥

இந்த வழியில் தேவகுரு வணக்கத்தை ஹரிதாசர்கள் செய்து, நம்மையும் செய்யுமாறு கூறினர்.

விஷ்ணு சர்வோத்தமனு ப்ரக்ருதி க
னிஷ்டளெனிபள அனந்தகுண பர
மேஷ்டி பவனரு கடிமெ வாணீ பாரதிகதம ।
விஷ்ணுவஹன பணீந்த்ர ம்ருடரிகெ
க்ரிஷ்ண மஹிஷியரதம இவரொளு
ஸ்ரேஷ்டளெனிபளு ஜாம்பவதியாவேஷ பலதிந்த ॥
(29-1)

குரு மத்வராயரிகே நமோ நமோ ।
நம்ம குருமத்வ சந்ததிகே நமோ நமோ ॥

ஸ்ரீபாதராஜரிகெ குரு வியாசராஜரிகெ ।
குருவாதிராஜரிகெ நமோ நமோ ॥

ராகவேந்திர ராயரிகெ வைகுண்ட தாசரிகெ ।
புரந்தரதாசரிகெ நமோ நமோ ॥

குருவிஜயராயரிகெ பாகண்ண தாசரிகெ ।
ஸ்ரீரங்கவலித தாசரிகெ நமோ நமோ ॥

பரம வைராக்யசாலி திம்மண்ண தாசரிகெ ।
ஹுண்டேகார தாசரிகெ நமோ நமோ ॥

குருஸ்ரீசவிட்டலன பரம பக்தர சரண ।
சரசிஜ யுககளிகெ நமோ நமோ ॥
-- ஸ்ரீஸ்ரீசவிட்டலதாசர்

பாகஷாசன முக்ய சகல தி
வௌகசரிகபி நமிபெ ருஷிகளி
கேக சித்ததி பித்ருகளு கந்தர்வ க்ஷிதிபரிகெ ।
ஆ கமலனாபாதி யதிகள
நீககானமிசுவேனு பிடதெ ர
மாகளத்ரன தாசவர்கக்கெ நமிபெ அனவரதா ॥ (1-12)

ப்ருத்விமண்டல மத்யஸ்தா: பூர்ணபோத மதானுகா: ।
வைஷ்ணவா: விஷ்ணு ஹ்ருதயா: தான் நமஸ்தே குரூன் மம ॥

***

**தொடர்**

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## 22. ஸகல துரித நிவாரண ஸந்தி விடைகள்

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 பா | ஞ் | சா | லி | | 2 அ | வ | லோ | க | ன | | ட | ண் | 21 பா |
| 3 க | த | ளி | | 4 தொ | ரெ | | | ஸி | | ன் | த | ஸ் | 22 கு |
| ஸா | ரு | | | | ஸி | லி | லா | தி | க் | 23 உ | | | லி |
| 5 ஸ | த் | வ | 29 வை | க | ண | 24 அ | | 37 கா | | ப | 6 பு | 30 ஜ | க |
| ன் | 7 க் | ஞா | ன | த | 31 ம் | | | 8 வ் | ய | ஸ் | ன் | த | |
| | 38 போ | | தே | 9 ப் | ரு | த் | ய | 32 ஜ | ம | த | பி | ன | 25 அ |
| 33 | | | யா | 10 பே | ஷ | 11 ஜ | ல் | ல | டி | | | 39 மா | |
| க் | ட | ப | ஷ | ரி | ர | 26 ஸூ | | து | | த | தி | 34 பூ | 27 வி |
| ரு | ரூ | ம | 12 ஜா | யா | ஹி | சி | 13 க | ப் | பு | 35 ஒ | ப | ஷ | |
| ஷ | 14 ஆ | ரா | தி | 36 வி | த | ஷ | | ப | தி | 15 த் | ரு | ண | வ |
| ண | ஹ் | 40 கி | | ஜ | ரி | த் | 28 அ | ளே | தி | த | 16 கு | சே | ல |
| த | 17 வ | தா | ன் | ய | | ணி | ர | க் | 18 அ | ட் | டு | | ல் |
| 41 ஒ | 19 ய | த | ன | 20 த | ட் | ட | னே | | | டி | | | 42 ப |

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்
Haridasa Vijayam - Monthly

மலர் 3 ** June 2022 ** இதழ் 7



ஸ்ரீஸ்ரீபாதராஜர்

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 3 : இதழ் 7

**நிர்வாக ஆசிரியர்**
'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross, JP Nagar
4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276.
haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**
' தாச சாகித்ய சேவா ரத்ன'
திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**
திரு. முரளிதர தாசரு,
திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா,
திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

| ஆராதனை | **ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்** |
|---|---|
| | **ஜூன் 1 முதல் 30 வரை, 2022** |

ஜூன்4 : ஜேஷ்ட ஷுத்த பஞ்சமி - ஸ்ரீமோகனதாஸர், சிப்பகிரி
ஜூன்13: ஜேஷ்ட ஷுத்த சதுர்தசி - ஸ்ரீஸ்ரீபாதராஜர், முளபாகலு
ஜூன் 26: ஜேஷ்ட பகுள த்ரயோதசி - ஸ்ரீவிஜயீந்திர தீர்த்தர், கும்பகோணம்

## ஆசிரியர் பக்கம்

https://dasa-sahitya.blogspot.com என்னும் நம் தளத்தில், ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர் இயற்றிய 'மத்வ விஜய ஸார ஸங்க்ரஹ' கிருதியின் 65 பத்யங்களை ஒரு நாளைக்கு ஒரு பத்யமாக தமிழில் அர்த்த விளக்கங்களுடன், ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால் வெளியிட்டு முடித்தோம்.

அடுத்து, ஸ்ரீரமாகாந்த விட்டலதாஸர் இயற்றிய 'ஹரிதாஸ தர்பண' என்னும் 137 பத்யங்களைக் கொண்ட கிருதியின் உரை வரத் துவங்கியுள்ளது. தினமும் அந்த தளத்திற்குச் சென்று இதனை படித்து அனைவரும் பயனடைய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.
நன்றி. ஹரே ஸ்ரீனிவாஸா.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

## இந்த மாத ஆராதனைகள்

**ஸ்ரீஸ்ரீபாதராஜர் (1404-1502)**

காலே பலதி ஸுரத்ரும: சிந்தாமணி ரபியாசனே தாதாம் |
வர்ஷந்தி ஸகலமபீஷ்டம் தர்ஷன மாத்ராத் ஸ்ரீபாதராட்முனி: ||

ஸிரிகிருஷ்ண திவ்யபாதாப்ஜ சிந்தாலோல
வரஹேமவர்ண முனிபதிய ஸுகுமார |
குருதிலக ஸ்ரீபாதராய அமிதோத்தார
ஷரணஜன ஸுரதேனு பக்தமந்தார ||
பௌகாகெத்து ஸ்மரிஸிரோ ஸ்ரீபாதராஜர
களவள களெவரு ஒள்ளே கவள நீடுவரு |
பளி பந்து ப்ருந்தாவனகெ பளஸி மாடெ நமஸ்கார
முளபாகிலராஜரு மனஷுத்திகொளிஸுவரு |
ஹரிதாஸ ஸாஹித்யத வரபிதமஹரெனிஸி
ஹரி அரிவு ஸாமான்ய ஜனரலி மூடிஸி
பர மங்களாங்க ஹரிவிட்டலன த்யானிஸி
பரதத்வ திளிஸிதரு ஹரிதாஸெரெந்தெனிஸி ||

தொடர்

## கேசவ நாமா

### 30. நின்ன நோடி தன்யனாதேனு - யதுகிரியம்மா

(சென்ற இதழின் தொடர்ச்சி)

ஸப்த ஆவரணவெல்ல ஷப்$^{3}$த$^{3}$வில்லதெ$^{3}$ ஸ்துதி ப$^{3}$ந்து$^{3}$
ப$^{4}$க்த பா$^{4}$ஷ்யகாரரிகொ$^{3}$லித$^{3}$ து$^{3}$ஷ்டமர்த்த$^{3}$ன ஜனார்த்தன ||21

ஸ்ரீரங்க ஆலயம் ஏழு பிரகாரங்களால் சூழப்பட்டுள்ளது. ஈசான மூலையில் சந்திர புஷ்கரிணி சரோவரம் இருக்கிறது. ரங்கனாதன், நான்கு கரங்களுடன், சேஷனின் மேல் படுத்திருக்கிறார். ஐந்து தலையுடைய சேஷன், ஐந்து வேதங்களால் ரங்கநாதனை துதித்துக் கொண்டிருக்கிறார். நான்காம் பிரகாரத்தில் இருக்கும் 1,000 தூண்கள், சஹஸ்ரநாமத்தைக் குறிக்கின்றன. ஸ்ரீரங்க க்ஷேத்திரமானது, பிரம்மாண்டத்திற்கு சமானமானதாகும். இங்கிருக்கும் ஏழு பிரகாரங்களை, பிரம்மாண்டத்தின் ஏழு பிரகாரங்களுடன் ஒப்பிட்டு, அப்படியே பிரதட்சணம் செய்த பாஷ்யகாரரான, அந்தரங்க பக்தரான ஸ்ரீமன் மத்வாசார்யருக்கு, ஜனார்த்தனன் தரிசனம் அளித்தான்.

ப்ருத$^{2}$வியோள கா$^{3}$ஷ்சர்யவாத$^{3}$ ப்ரதியில்லத$^{3}$ பல்லக்கி$^{1}$யேரி
அதிஷயதி$^{3}$ந்த$^{3}$ ப$^{3}$ந்த$^{3}$ உரகஷயன உபேந்த்ர ||22

பூமியில் இருக்கும் பக்தர்களின் மனம், தேகங்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுப்பதற்கு, பாம்பின் மேல் படுத்திருக்கும் உபேந்திரன், ரதோத்ஸவத்தில், பிரம்மோத்ஸவத்தில் பல்லக்கியில் ஏறி வந்து அனைவருக்கும் அருளினார்.

அந்து$^{3}$ ஸூரர சந்ததி$^{3}$ந்த$^{3}$ மந்தி$^{3}$ரக்கெ களுஹி ரங்க$^{3}$
ப$^{3}$ந்து$^{3}$ ப$^{4}$க்தர பா$^{1}$வன பரிஹரிஸிதா$^{3}$ ஸ்ரீஹரி ||23

சப்த ஆவரணங்களில் தத்தம் பரிவாரங்களுடன் இருக்கும் பிரம்மாதி தேவதைகளால் வணங்கப்படும் ரங்கநாதனே, பக்தர்களை காப்பாற்றுபவனான ஸ்ரீஹரி. ஐந்து தலையுடைய சேஷன், ஞானேந்திரியங்களால் பகவந்தனை ஆராதிக்க வேண்டுமென்னும் தத்வத்தை போதிக்கிறார். ஸ்ரீதேவி பூதேவியர், பகவந்தனின் சர்வோத்தமத்வத்திற்கு சாட்சியாகி அவர் பாதங்களருகே அமர்ந்து சேவை செய்கின்றனர். பகவந்தனின் பாதத்தருகே சிரஞ்சீவியான

விபீஷணன் அமர்ந்து சேவை செய்கிறார். ராட்சர்களின் பாதாள உலகத்திலிருந்து துவங்கி, பூதேவியின் பூமியைத் தாண்டி, ஊர்த்வ உலகத்தையும் தாண்டிய மகாமகிமைகளைக் கொண்டவர் ஸ்ரீஹரி என்னும் தத்வத்தை நாம் இதிலிருந்து உணரலாம்.

அஷ்டு சரித்ரெயன்னு கேளி கட்டித$^{3}$ கங்கணவ பி$^{3}$ச்சி
ஸ்ரேஷ்டவாத$^{3}$ ஸ்தா$^{2}$னத$^{3}$ல்லி மந்த்ரி ஸஹித
நிந்த$^{3}$ ஸ்ரீகிருஷ்ண ||24

ராமாயண மற்றும் ஸ்ரீனிவாச கல்யாண் சரிதத்தைக் கேட்பதற்கு கட்டிக்கொண்ட கங்கணத்தை அவிழ்த்தான். மந்திரியான முக்யபிராணன் மற்றும் ஸ்ரீகிருஷ்ணனான ஸ்ரீரங்கநாதன், அனைத்திலும் உத்தமமான ஸ்தானத்தில் நின்று பக்தர்களை அருளி வருகிறார்.

தக்ஷிணரங்கெ$^{3}$யாகி$^{3}$ நிந்து$^{3}$ ப$^{4}$க்தன த்$^{4}$வீபவனு நோடுத$^{1}$
முக்திமார்க்க$^{3}$வன்னு தோரித$^{3}$ ப$^{4}$க்தவத்ஸல வெங்கடரங்க$^{3}$ ||25

தக்ஷிண கங்கையான காவேரியின் நடுவில் நின்று, பாரதத்தின் தெற்கில் இருக்கும் விபீஷணனின் இலங்கையை பார்த்தவாறு, வடக்கின் முக்திமார்க்கமான பதரியைக் காட்டியவாறு, பக்தவத்ஸலன் எனப்படும் வெங்கடரங்க இருக்கிறார்.

‘வெங்கடரங்கா’ என்னும் அங்கிதத்தைக் கொண்ட யதுகிரியம்மா அவர்கள் ராமாயணத்தின் சம்பவங்களுடன், ஸ்ரீனிவாச பத்மாவதி கல்யாணத்தை நினைத்தவாறு, கேசவாதி 24 ரூபங்களுடன், ரங்கநாதன், ஸ்ரீராம, ஸ்ரீநிவாச ரூபங்களின் சிந்தனையை செய்திருக்கிறார். தனக்கு மறுபிறவி வராமலிருக்க அருளுமாறு வேண்டியிருக்கிறார்.

## 31. ஜய ஜய ஸ்ரீஹரி

ஜய ஜய ஸ்ரீஹரி ஷௌரி ஜய ஜய மந்த$^{3}$ரதா$^{4}$ரி
ஜய ஜய ஸ்ரீமுரவைரி ஜய ஜய கம்ஸாரி ||ப

ஸ்ரீஹரியே ஷௌரி, மந்தரதாரி, முர-வைரி, கம்சாரி. துஷ்டர்களைக் கொல்லும் அவன் செயலுக்கும், பக்தர்களிடம் அவன் காட்டும் அன்பிற்கும் ஜயகாரம் போட்டு வணங்குகிறார்.

6 - ஹரிதாச விஜயம் – ஜூன் 2022

முத்தின மண்டபதி3 ரத்ன பீட2வனிரிஸி
அர்த்தி2லி பா3 ஹஸெகெ3ன்னுத கரெவரு முத்தெய்தெ3யருகளு ||1

முத்தினால் அலங்கரிக்கப்பட்ட மண்டபத்தில் ரத்ன பீடத்தில் வைத்து, ஸ்ரீகிருஷ்ணனை சுமங்கலிகள் பூஜையை ஏற்றுக்கொள்ள வா என்று வேண்டுகின்றனர்.

இந்திரெ ரமண பா3 கந்த3ர்ப்ப ஜனக பா3
சுந்த3ராங்க3னெ பா3 ஹஸெகெ3ன்னுதா சந்த3தி3 கரெத3ரு ||2

இந்திரெயின் கணவன் என்று மன்மதனின் கணவன் என்று, அழகிய வடிவன் என்று புகழ்ந்தவாறு ஸ்ரீஹரியை அவர்கள் வரவேற்றனர்.

கம்பு3 கந்த4ரெயெ பா3 அம்புஜமுகியெ பா3
சம்ப்4ரமத3லி பா3 ஹஸெகெ3ன்னுத கரெதரு அம்புஜ முகி2யரு ||3

சங்கு கழுத்தைக் கொண்டவனே, தாமரை போன்ற முகத்தைக் கொண்டவனே, உற்சாகத்துடன் மணைக்கு வருமாறு அம்புஜ முகியர்கள் (தாமரை போன்ற முகத்தைக் கொண்டவர்கள்) அழைக்கின்றனர்.

நாரி ருக்மிணி தேவி நாரத வந்த்3யனிகெ3
சாரு பரிமள அரிஷின குங்கும ஹாரவன ர்ப்பிசுத ||4

பெண்களால் வணங்கப்படுபவனான ஸ்ரீகிருஷ்ணனை, பெண்களில் சிறந்தவளான ருக்மிணி தேவி, மஞ்சள் குங்குமம் வைத்து, நறுமணத்துடனான மாலையை அணிவிக்கிறாள்.

பரிபரி குஸுமக3ள பத3க புஷ்பத3 மாலெ
பரமாத்மன கொரளிகெ3 ஹாகு1த1 அலங்கரிஸித3ளாக3 ||5

விதவிதமான நறுமணமுள்ள பூமாலைகளை பரமாத்மனின் கழுத்தில் அணிவித்து, அவரை அலங்கரிக்கிறாள்.

ஜய ஜய ஸ்ரீ கேஷவனெ ஜய ஜய நாராயணனெ
ஜய ஜய ஸ்ரீமாதவனெ ஜய ஜய கோவிந்த ||6
ஜய ஜய ஸ்ரீவிஷ்ணுஹரே ஜய ஜய ஸ்ரீ மதுஸூதனனெ
ஜய ஜய ஸ்ரீ த்ரிவிக்ரமனெ ஜய ஜய வாமனனெ ||7

ஜய ஜய ஸ்ரீ ஸ்ரீதரனே ஜய ஜய ஸ்ரீ ஹ்ருஷிகேஷ
ஜய ஜய ஸ்ரீ பத்பனாப ஜய ஜய தாமோதரனே ||8
ஜய ஜய சங்கர்ஷணனெ ஜய ஜய ஸ்ரீவாசுதேவ
ஜய ஜய ஸ்ரீப்ரத்யும்ன ஜய ஜய அனிருத்த ||9

ஜய ஜய ஸ்ரீ புருஷோத்தமனே ஜய ஜய ஸ்ரீ அதோக்ஷஜனே
ஜய ஜய ஸ்ரீ நாரசிம்ஹ ஜய ஜய அச்யுதனே ||10
ஜய ஜய ஸ்ரீஜனார்த்தனனே ஜய ஜய ஸ்ரீ உபேந்திர ஹரே
ஜய ஜய ஸ்ரீ ஹரி ஸ்ரீஷா ஜய ஜய ஸ்ரீ கிருஷ்ணா ||11

இந்து[1] தே[3]வன ஸ்துதிஸி ஸந்தஸதி[3] வீள்யவனு
கந்து பிதனிகெ[3] அர்ப்பிஸி முத[3]தி[3] வந்தி[3]ஸி ப[4]க்தியலி ||12

இப்படியாக ஸ்ரீகிருஷ்ணனை, கேசவாதி 24 ரூபங்களால் வணங்கியவாறு, மிகவும் மகிழ்ச்சியுடன் பரமாத்மனுக்கு வெற்றிலை பாக்குகளைக் கொடுத்து, பக்தியுடன் அவற்றை சமர்ப்பித்து, அவரை போற்றினர்.

கமலாக்ஷியரு கூடி[3] கனகதா[3]ரதி[1] பிடிது
கமலனாப விட்டல லட்சுமியரிகெ பெ[3]ளகி[3]த[3]ராக[3] ||13

தாமரை போன்ற கண்களை உடையவர்கள், லட்சுமி சமேத கமலனாபனுக்கு கனகத ஆரத்தியைக் காட்டி, அந்த காட்சியை தம் கண்களில் சிறைபிடித்து தாம் தன்யரானோம் என்று மகிழ்ச்சியடைந்தனர் என்றவாறு, ஜீவுபாய் அவர்கள் கேசவாதி 24 ரூபங்களுடன் ஸ்ரீஹரியை மணைக்கு வருமாறு அழைத்து, ருக்மிணி தேவி மூலமாக மஞ்சள், குங்குமம், சந்தனம், பூமாலைகளை அர்ப்பித்து, வெற்றிலை பாக்குகளைக் கொடுத்து, ஆரத்தியுடன் மங்களத்தை பாடியிருக்கிறார்.

## 32. ஜோ ஜோ ஜோ ஜோ லாலி

ஹரிதாச சாகித்ய விதங்களில் ஜோ ஜோ லாலி பதங்கள் ஒரு வகையானவை. தமது இஷ்ட தெய்வத்தை அல்லது பாலகிருஷ்ணனை தொட்டிலில் படுக்கவைத்து, ஜோஜோ லாலி பாடியவாறு அனைத்து ஹரிதாசர்களும் தம்மை யசோதை அல்லது கோபிகா ஸ்த்ரியர்களாக பாவித்து, மிகவும் பக்தியுடன் பாடி தன்யர் ஆகியிருக்கின்றனர். பரமாத்மனுக்கு நடக்கும் உற்சவங்களில்

தொட்டில் சேவையும் ஒன்றாகும். யதிகள் அனைவரும் தினந்தோறும் மாலையில் பரமாத்மனுக்கு தொட்டில் சேவை செய்கின்றனர்.

ஜோ ஜோ ஜோ ஜோ லாலி கோவிந்த
ஜோ ஜோ ஜோ ஜோ லாலி முகுந்த
ஜோ ஜோ ஜோ ஜோ லாலி ஆனந்த
ஜோ ஜோ ஜோ ஜோ லாலி கோ3பிய கந்த[3] ||ப

கோவிந்த, முகுந்த, ஆனந்த, கோபியரின் குழந்தைக்கு தேன் போன்ற மொழியில் லாலி பாடியிருக்கிறார்.

சென்னத தொட்டிகெ[3] ரன்னத[3] மலுகு[1]
கன்னடி ஹொளெவொ மேல்கட்டின பௌகு
ஸ்வர்ண மண்டபதி[3] ராஜிப திவ்ய ஹொளபு[1]
கன்யேரலங்கரிஸி நலியுவ கு[1]லுகு[1] ஜோ ஜோ ||1

தங்கத் தொட்டில். அதற்கு ரத்னத்தினால் குஞ்சலங்கள் கட்டப்பட்டுள்ளன. பார்த்தாலே கண்ணாடியைப் போல ஒளிர்கிறது. தங்க மண்டபத்தில் தங்கத் தொட்டிலை வைத்து அலங்கரித்த பெண்கள், மிகவும் அழகாக நடனமாடுகின்றனர்.

அரிஷின குங்கும கந்த[4] புஷ்பக[3]ளு
ஸரிஸிஜாக்ஷெகெ[3] முத்தின்ஹார பத[3]க[1]க[3]ளு
ஸுரரொடெ[3]யகெ[3] ப[1]ட்டெ பீதாம்ப[3]ரக[3]ளு
ஹருஷதிந்திரிஸி நலிவ ஸ்த்ரீயருகளு ஜோ ஜோ ||2

மஞ்சள், குங்குமம், சந்தனம், பூக்களால் தொட்டிலை அலங்கரித்து, பரமாத்மனுக்கு பட்டு பீதாம்பரம் அணிவித்து, முத்து மாலை, பதக்கங்களை சூட்டி, அலங்கரித்து, பெண்கள் மகிழ்ச்சியுடன் நடனமாடுகின்றனர். (தொடரும்)

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

## ஸ்ரீஜகன்னாததாசரின் கிருதிகளின் சிறப்பு

டாக்டர். லக்ஷ்மிகாந்த மோஹரீர

ஈ க1தா1ம்ருதபானசுக சுவி
வேகி1க3ளிக3ல்லத3லெ விஷயிக3
வியாகு1ல குசித்த1ரிகெ3 தொ3ரெவுதெ3 ஆவகா1லத3லி |
லோக1வார்த்தெ1ய பி3ட்டு1 இத3னவ
லோகிசுத1 மோதி3பரிகொ3லிது3 க்ரு1
பாகர ஜகன்னாதவிட்டல கா1ய்வ க1ருணதலி ||
(கல்பசாதன சந்தி ஸ்லோகம் #63)

இந்த உலகத்தில் இருக்கும் தற்காலிக விஷயங்களின் மேல் ஆசை உள்ளவர்களுக்கு இந்த அம்ருத பானத்தின் சுவை தெரியாது. இந்த உலகத்திற்கெல்லாம் நாயகனாக இருக்கும் ஸ்ரீஹரியின் கதையை விளக்கும் தத்வங்களை, கன்னடத்தில் மிகத் தெளிவாக சொல்லப்பட்டிருப்பதை படிப்பவர்களுக்கு மிகவும் மகிழ்ச்சி கிடைக்கும். அத்தகையவர்களை ஜகன்னாதவிட்டலன் கைவிடமாட்டான். சம்சார சாகரத்திலிருந்து (பிறப்பு, இறப்பு, சுகம், துக்கம், நோய், மோகம், ஏழ்மை) விடுவிப்பான் என்று ஸ்ரீஹரியின் கருணையை விளக்குகிறார்.

சம்சாரத்தில் இருக்கும் அனைவரும், ஸ்ரீஹரியை எந்நேரமும் நினைத்தவாறு இருக்கவேண்டும் என்றும், தற்காலிக விஷயத்திற்கு அடிமையாகாமல் இருக்கவேண்டும் என்ற சிந்தனையை இந்த ஸ்லோகத்தில் தெரிவிக்கிறார் தாசர்.

ஒரடு புத்தி3ய பி3ட்டு1 லௌகி1க1
ஹரடெ1க3ள நீடா3டி3 கா1ஞ்சன
பரட லோஷ்டா1தி3க3ளு சமவெந்த3ரிது1 நித்யத3லி |
புரட கர்பா3ண்டோ3த3ரனு ச
த் புருஷனெந்தெ3 நிஸ்யெல்லரொளகி
த்து3ருடு1 க1ர்மவ மாள்பனெந்த3டி3க3டி3கெ3 னெனெயுதி1ரு ||
(நாமஸ்மரண சந்தி ஸ்லோகம் 30)

கெட்ட புத்திகளை விட்டு, வீண் அரட்டைகளை தவிர்த்து, மண், தங்கம், கல் என்று அனைத்துமே சமம் என்று நினைத்து, ஸ்ரீஹரியே

புருஷோத்தமன் என்று நினைத்து, அனைத்து செயல்களையும் அதாவது சிறந்த மற்றும் கெட்ட விஷயங்களையும் அவனே செய்கிறான் என்று நினைக்கவேண்டும் என்று சொல்கிறார். டாக்டர் K.M.கிருஷ்ணராயர் சொல்வதாவது - கெட்ட விஷயங்களை விட்டு, அழியும் செல்வத்தின் மேல் ஆசையை விட்டு, பிரம்மாண்டத்தையே வயிற்றில் வைத்துக் கொண்டிருக்கும் ஸ்ரீஹரியே சர்வோத்தமன் என்று திடமாக நம்பி, அனைத்து செயல்களுக்கும் ஸ்ரீஹரியே காரணம் என்று நினைத்து அவனையே நினைத்திருக்க வேண்டும். ஹரி நாமஸ்மரணையினால் பலன் உண்டு. இது ஒரு நல்ல சாதனையும்கூட என்கிறார்.

எப்போதும் ஸ்ரீஹரியை நினைத்திருக்க வேண்டும் என்னும் தாசரின் வாக்கியம் விஷ்ணு சர்வோத்தமத்வத்தை நிறுவுகிறது. இதற்கு வேதத்தில் காணப்படும் வசனங்கள் இவ்வாறு உள்ளன:

அக்னிர்வைதேவா நாமவதோ விஷ்ணு பரம: |
ததந்தரா சர்வா தேவதா: ||
(ஐதரேய புராண 1-1)

ஸ விஷ்ணுராஹ ஹி
த[1]ம் ப்ரம்ஹேற த்வாசக்ஷதே[1]
வைவீ மீமாம்ஸாசூத்ரகளு

பரப்பிரம்மன் என்றால் அது ஸ்ரீவிஷ்ணுவே என்று ஸ்ரீமதாசார்யர் தமது பாஷ்யத்தில் ‘பிரம்மஷப்தஸ்ச ஏவ’ (பிரம்மசூத்ர பாஷ்யம் 1-1-1) என்கிறார். ஸ்ரீஹரியின் பற்பல செயல்களை ஹரிகதாம்ருதசாரத்தில் பற்பல சந்திகளில் தாசர், மிகவும் அழகாக விவரித்துள்ளார்.

முடிவுரை:

தாச சாகித்ய உலகத்தில் ஒரு துருவ நட்சத்திரத்தைப் போல ஜொலித்து, பற்பல அற்புத செயல்களைப் புரிந்து, கூடவே விலைமதிப்பற்ற பாடல்கள் / காவியங்களை இயற்றி, சமுதாயத்திற்குப் பயன்படும் விதத்தில் பல சாதனைகளைப் புரிந்த ஸ்ரீஜகன்னாததாசருக்கு நமது வணக்கங்கள். இவரது கீர்த்தனைகள் என்னும் கங்கை இந்த உலகில் என்றும் பாயட்டும். ***

# ஹரிகதாம்ருதசாரத்தில் தேவதா-வர்ணனை

## டாக்டர் சகுந்தலா ஷெட்டி, ராய்ச்சூர்

மத்வ சித்தாந்தத்தை பண்டிதர் முதல் பாமரர் வரை அறியுமாறு, அனுபவிக்குமாறு, அபரோக்ஷ ஞானிகளான தாசவர்யரான ஸ்ரீநரஹரி தீர்த்தரிலிருந்து துவங்கி ஸ்ரீபாதராஜர் மற்றும் ஸ்ரீவியாசராஜர் காலத்திலிருந்து, ஸ்ரீஹரியைக் குறித்து கன்னடத்தில் பாடல்களை இயற்றி தாச பரம்பரையை, தத்வபிரசாரத்திற்கு பயன்படுத்தினர். ஸ்ரீபுரந்தரதாசர், கனகதாசர் முதலான தாசஸ்ரேஷ்டர்கள் ஸ்ரீமன் நாராயண தரிசனத்தை செய்தவாறு ஸ்ரீஹரியின் ஸ்வரூபத்தை சாதாரண மக்களுக்குக் காட்டினர். 18ம் நூற்றாண்டில் ஸ்ரீவிஜயதாசரும் அவருக்குப் பிறகு ஜகன்னாததாசர் பிறந்தார்.

மான்வியின் ப்யாகவாட கிராமத்தில் ஸ்ரீனிவாசராக பிறந்து, வேதவேதாங்கங்களின் சாரத்தை ஹரிகதாம்ருதசாரத்தில் எழுதியிருக்கிறார். தர்மத்தின் அடிப்படையில், இந்த உலகத்தைக் காப்பதற்கு, ஹரிகதாம்ருத என்னும் அக்ஷய பாத்திரத்தில், பாவத்தைப் போக்கும் சர்வோத்தமனான ஸ்ரீமன் நாராயணனின் கதை என்னும் அம்ருதத்தின் சாரத்தைக் கேட்டாலே போதுமானது. இது மோட்சத்திற்கு முக்கிய சாதனமாகும். இந்த அக்ஷய பாத்திரம் தினமும் புதிய விஷயங்களைக் கொடுத்தவாறு இருக்கிறது.

ஹரிகதாம்ருதசார குருகள
கருணதிந்தாபனிது பேளுவே
பரம பகவத்பக்தரிதனாதரதி கேளுவுது

என்று ஸ்ரீஹரியை வணங்கும் அனைத்து தேவதைகளும் விஷ்ணு பக்தர்களும் இந்த கிருதியை கேட்கவேண்டும் என்று ஜகன்னாததாசர் வணங்கிக் கேட்டுக்கொண்டு, முதலில் அவரது இஷ்ட- தேவரான ஸ்ரீநரசிம்மதேவரை வணங்குகிறார்.

ஸ்ரீ நாராயணனுக்கு மனைவியாக இருக்கும் லட்சுமிதேவியின் தாமரை போன்ற கரங்களினால் எப்போதும் பூஜை பெற்றுக்கொள்ளும் மற்றும் ஸ்ரீஹரியின் சேவையிலேயே இருக்கும் மற்றும் பிரளய காலத்தில் சுத்த-லட்சும்யாத்மக ஸ்ரீ லட்சுமியிடமிருந்து வணங்கப்பெற்று, ஆனந்தமாக வீற்றிருப்பார். நான்முகப் பிரம்மன், வாயுதேவர், சரஸ்வதி பாரதியர், கருடதேவர், சேஷதேவர், பார்வதி-

பதியான ருத்ரதேவர் - இவர்களிலிருந்து துவங்கி அனைவராலும் வணங்கப்படுபவன். பிரம்மாண்டத்தின் படைத்தல், காத்தல், அழித்தல், கட்டுப்படுத்துதல், ஞானம், அஞ்ஞானம், பந்தம், மோட்சம் ஆகியவற்றைச் செய்யும் கமலநாபனான நரசிம்மனே – ஸ்ரீபரமாத்மனே, எல்லா தேவதைகளினாலும் வணங்கப்படும் ஸ்ரீமன் நாராயணனை வணங்கியவாறு லட்சுமியை வணங்குகிறார். ஸ்ரீமன் நாராயணனின் பாதசேவை செய்யும் லட்சுமிதேவி ஸ்ரீஹரியின் குணங்கள், புதிய புதிய விஷயங்களைப் பார்த்தவாறு மிகவும் மகிழ்ச்சியடைகிறார். மூன்று குணங்களுக்கும் அபிமானியான, மகாலட்சுமி, தினமும் நம்மை காப்பாற்றட்டும் என்று லட்சுமிதேவியை வர்ணிக்கிறார்.

தேவதைகளில் சிறந்தவரான ஜீவோத்தமரான பிரம்மதேவரைக் குறித்து தாசர் வேண்டுகிறார்.

நிருபமானந்தா3த்மப4வ நி
ர்ஜரசபா4ஸம்ஸேவ்ய ருஜுக3ண
த3ரசே ஸத்1வப்1ரசுர வாணிமுக2ஸரோஜேன |
க3ருட சேஷ சஷாங்க1த3ளசே
க1ரர ஜனக1 ஜக3த்கு3ரவே த்1வ
ச்சரணக3ளிக3பிவந்திசுவே பா1லிபு1து ஸன்மதிய ||
(மங்களாசரண சந்தி ஸ்லோகம் #3)

ஜீவகோடிகளில் ஒப்பிடுவதற்கு உவமையே இல்லாதவர், தோஷங்களே இல்லாதவர், எப்போதும் ஆனந்தமாக இருப்பவர், ருத்ரதேவரே முதலான அனைத்து தேவதைகளும் வணங்கக்கூடியவர், அறியாமை இல்லாமல், தவறான பாதையில் செல்லாமல் ஸ்ரீஹரியையே வணங்கும் 200 ருஜு கணஸ்தர்களில் பிரம்ம பதவிக்கு யோக்யராகி அவர்களில் முதன்மையானவர், நற்குணங்களைக் கொண்டவர், மஹத்தத்வாத்மக (சாத்விக) சரீரம் உள்ளவர், சரஸ்வதியின் முக-கமலங்களுக்கு சூரியனானவர், தமது கிரணங்களால் சரஸ்வதிதேவியின் முகத்தை மலரச் செய்பவர், கருட சேஷ ருத்ரர்களுக்கு தந்தையானவர், ஜகத்குரு எனப்படும் பிரம்மனின் பாதங்களில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்குகிறார்.

பிரம்மனுக்கு சமமான இன்னொரு தேவதையான வாயுதேவரைப் பற்றி தாசர் விளக்குகிறார். ஜீவர்களின் ஸ்தூல-தேகத்தில் இருந்து அவர்களின் சைதன்யத்திற்கு வாயுதேவர் காரணமாகிறார். மூச்சை உள்ளிழுப்பது ஸ்வாசம் (ஸ); மூச்சுக் காற்றை வெளிவிடுவது உச்ஸ்வாசம் (ஹம்). இத ஸ்வாச – உச்ஸ்வாசத்தை அனைத்து ஜீவர்களுக்குள்ளும் நின்று 21,600 முறை செய்பவர். இதையே ஹம்ஸ மந்திரம் என்கிறோம். சாத்விகர்களுக்கு சுகம், ராஜஸருக்கு மிஸ்ர-சுகம், தாமசருக்கு துக்கம் – இந்த மூன்று விதமான ஹம்ஸ மந்திரத்தைச் செய்கிறார். முக்தி யோக்யம் உள்ள சாத்விகர்களுக்கு, உயிர் பிரியும்போது, வைகுண்ட சுகம், அதமர்களுக்கு அபார துக்கத்தையும் கொடுப்பவர். உலகத்தில் ஜீவோத்தமரான வாயுதேவரை, நமக்கு நல்ல ஞானத்தைக் கொடுத்து அருள்வாயாக என்று வேண்டிக் கொள்கிறார்.

**(தொடரும்...)**

**கன்னடம்**

**அருஞ்சொற்பொருள்**

**கடினமான சொற்களின் அர்த்தங்கள்**

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

1. கள - போர்க்களம்; 2. களத்ர - மனைவி; 3. களவள - கவலை; 4. காஞ்சனகிரி - ஸுவர்ணகிரி / மேரு பர்வதம்; 5. கர்மி - மோசக்காரன்; 6. கல்யாண - மங்கள; 7. காந்தார - காடு; 8. காக புத்தி - துஷ்ட புத்தி; 9. கார்முக - வில்; 10. கார்த்தஸ்வர - தங்கம்.

**மே-2022 இதழில் வந்த ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டிக்கு சரியான விடை எழுதி புத்தகப் பரிசு பெறுபவர்கள்:**

**1. திருமதி. சந்திரா, கோவை; 2. திருமதி. கீதா ராமசந்திரன், திருநெல்வேலி; 3. திருமதி. கிரிஜா ஜெயதீர்த்தாச்சார், ஸ்ரீரங்கம்**

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

## யதுகிரியம்மா - 1820 - 1908

பெங்களூரின் காட்டன்பேட்டில் பிறந்து வளர்ந்தவர் யதுகிரியம்மா. பெரிய குடும்பத்தில் பிறந்த இவர், பெரிய குடும்பத்தின் மருமகளாகச் சென்றார். இவருக்கு இரு மகள்கள் இருந்தார்கள் என தெரிய வருகிறது. யதுகிரியம்மா பள்ளிக்குச் சென்று படித்தவர் என்பதற்கு ஆதாரங்கள் இல்லை. தானாகவே அனைத்தையும் படித்துப் புரிந்து கொண்டவர் இவர். கன்னட, தமிழ், தெலுகு ஆகிய மொழிகளை அறிந்தவராக இருந்தார் என்பது தெரிய வருகிறது.

வைஷ்ணவ ஸம்பிரதாயஸ்தரான இவர், நாலாயிர திவ்ய பிரபந்தங்களை பாடிக் கொண்டிருந்தார் என்றும், திருப்பாவை, விஷ்ணு சஹஸ்ர நாமம், முகுந்த மாலா ஸ்தோத்திரம் ஆகிய பல ஸ்தோத்திரங்களையும் மனப்பாடமாக கொண்டிருந்தார் என்றும் தெரிய வருகிறது. இதிலிருந்து அவரது நினைவுத்திறன் அபாரமாக இருந்தது என்பதை அறிகிறோம்.

சிறு வயதில் அவர் கேட்டு வளர்ந்த பிரவசனங்கள், கீர்த்தனைகள், யதுகிரியம்மா கீர்த்தனைகளை இயற்றுவதற்கு காரணமாக இருந்தது. அருகில் இருந்த ராமர் கோயிலே இவரது கார்யக்ஷேத்திரமாக இருந்தது. சுப சந்தர்ப்பங்களில், யதுகிரியம்மாவை சபைகளுக்கு அழைத்து, பாட வைத்தனர் என்னும் விஷயம், சமூகத்தில் அவர் மிகவும் பிடித்தமானவராக இருந்தார் என்பதை தெளிவுபடுத்துகிறது. அவர் பாடிக்கொண்டிருந்த கீர்த்தனைகள் மற்றும் ஸம்பிரதாய பாடல்கள் பலருக்கு வாய்ப்பாடமாக வந்தது.

கிருதிகளின் சேவை

ஞான பக்தி வைராக்கியங்களின் த்ரிவேணி சங்கமமாக இருந்த யதுகிரியம்மா சுமார் 52 கீர்த்தனைகளையும், ராமாயண, பாகவத ஆகிய தீர்க்க கிருதிகளை இயற்றியுள்ளார். முத்து வெங்கட, வெங்கடகிருஷ்ண, ஸ்ரீனிவாச, வெங்கடரமண, யதுகிரிவாஸ, கரிகிரிவாஸ ஆகிய திருப்பதி ஸ்ரீனிவாஸனின் பெயரின் அங்கிதங்களை வைத்துக் கொண்டு இவற்றை இயற்றியிருக்கிறார். அங்கிதம் கொடுத்த குரு யார் என்று

தெரியவில்லை. இவர் த்விபதி, த்ரிபதி, சௌபதி ஆகிய வகைகளில், எதுகை மோனைகளுடன் இருக்குமாறு கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார். சரளமான மொழி. மகிழ்ச்சியைக் கொடுப்பதாக இவரது கீர்த்தனைகளை, கொப்பல் வெங்கடரமணாசார்யர், 1904ம் ஆண்டில் லோகார்ப்பணை செய்தார்.

சில கிருதிகளின் அறிமுகம்

1. விஷ்ணுவின் பாதங்களின் ஸ்துதி:

கண்டு தன்யனாதேனோ ஸ்ரீ புருஷோத்தம
புண்டரீகாக்ஷ விஷ்ணுபாதவ, மதனனய்யன பாதவ,
முக்தியன்னு கொடுவ பாதவ, தீரதி நிந்த பாதவ

இந்தப் பாடல், கயா க்ஷேத்திரத்தின் ஸ்ரீவிஷ்ணுவின் பாதங்களை துதிக்கும் கீர்த்தனையாக இருக்கிறது. பல்குனி நதி தீரத்தில் நின்ற ஸ்ரீ ஹரியின் பாதங்களின் வர்ணனை மிகவும் அழகாக இருக்கிறது.

2. ஸ்ரீஹரியின் ஸ்தோத்திரங்களின் ஸ்துதி:

கண்ணரெ நோடென்ன கருணாகடாக்ஷதி
இந்திராரமண அரவிந்த நேத்ரதலி ||ப

கௌஸல்யாதேவிகெ மோஹ படிஸித நேத்ர
தஷரதனிகெ திவ்யப்ராண நேத்ர
ஷஷிமுக ஸீதெய பிடதெ நோடுவ நேத்ர
ஷஷிரவி காந்திகெ ஸமனாத நேத்ர ||1

பார்வதி ரமணன மோஹபடிஸித நேத்ர
அஸுரரு மோஹிஸி ப்ரமிஸித நேத்ர
பத்மினி ரூபினலி மக்னவாகிஹ நேத்ர
ஸ்ரீநிவாஸனே நிம்ம கருணா நேத்ர ||2

பத்மினியைப் பார்த்துக் கொண்டிருக்கும் நேத்திரங்களைக் கொண்ட ஸ்ரீஹரி, பவித்ரமான தன் நேத்ரங்களால் தம்மை பார்க்க வேண்டும் என்று ஹரிதாஸினி யதுகிரியம்மா வேண்டுகிறார். சில புராண விஷயங்களை குறிப்பிடும் இந்த கீர்த்தனை மிகவும் அழகாக உள்ளது.

3. லட்சுமி ஸ்துதி

ஸ்ரீவேதநாயகி ஆஸ்ரித ஜனபாலகி
ஸ்ரீவேதநாயகி ஜய ஜயா ||ப

நீனே ரங்கன ராணி நீனே பங்கஜ பாணி
நீனே பன்னகவேணி நீனே மதுர வாணி ||1

நீனே கமலவாஸே நீனே ஸஜ்ஜனபோஷே
நீனே பவபயனாஷே நீனே ஹரிஸந்தோஷே ||2

நீனே லோகமாதே நீனே ஜகத்ப்ரக்யாதே
நீனே காமிததாதெ நீனே ரங்ககெ ஸோதே ||3

இந்த கீர்த்தனையில், நம்பிய பக்தர்களை காக்கும் வேதநாயகியை, ரங்கனின் ராணி, பங்கஜபாணி, பன்னகவேணி, மதுரவாணி, லோகமாதெ, ஜகத்ப்ரக்யாதெ, காமிததாதெ என்று பலவிதமாக வணங்கி லட்சுமிக்கு ஜயகாரம் கூறுகிறார் ஹரிதாஸினி.

4. கோதாதேவியின் நீராஜனம்

நீராடவ நோடிதெ
நீரஜாக்ஷண ராணி கோதாதேவிய
ஸ்ரீவில்லிபுத்தூர ஸ்ரீ துளஸிவனதல்லி ||ப

ஸ்ரீவிஷ்ணு சித்தரா புத்ரியெந்தெனிஸி
ஸுபுத்ரியெந்தெனிஸி ஸ்ரீதேவி தானுதிஸெ பேக |
தீவ்ர ஹருஷதிந்த பௌயுத்தலித்தாளெ
மகர ஸங்க்ராந்தீலி மந்தரோத்தார ஸஹித |
சொக்க பல்லக்கி ஏரி மெரவணிகெயலி பந்து ஹருஷதிந்த |
வெங்கடகிருஷ்ண எடதலி குளிதாளு ||

பெரியாழ்வாரின் மகள் கோதாதேவி ஸ்ரீவைஷ்ணவ ஆழ்வார்களின் பரம்பரையில் வந்தவர். ஆண்டாள் என்பது கோதாதேவியின் இன்னொரு பெயர். கோதாதேவியால் இயற்றப்பட்ட திருப்பாவை, மார்கழி மாதத்தில், 30 நாட்களும் தினமும் படிக்கக்கூடிய சம்பிரதாயம் இருக்கிறது. நாட்டுப்பண் நுடியில் 17 நுடிகளைக் கொண்ட இந்தப் பாடலில்

ஆண்டாளின் வாழ்க்கை, ஆபரணங்கள், ஆடைகள், நீரஜாக்ஷனின் ராணி நீராடும் சம்பிரமத்தைப் பற்றிய விவரங்கள் உள்ளன.

5. ஆத்ம நிவேதனம்.

ஸாரவாத ஸம்ஸாரவ பாருகாணுவுதெந்திகோ ரங்கய்யா |
கோரஸம்ஸார ஸாகரவ தாடுவுதக்கெ தாரி தோரிஸோ ரங்கய்யா ||ப

கோர அஹங்காரவ பிட்டு நின்னய பாத ஸேருவுதெந்திகோ ||அப

காமக்ரோத லோப மோஹங்களனெல்லா தூர மாடுவுதெந்திகெ ரங்கய்யா
டம்பாஸூயெ அவித்யா ஸம்பந்தவ பிட்டு பிடுவுதெந்திகெ ||1

ஆஷாபாஷ பஹுக்லேஷங்களனெ நாஷ மாடுவுதெந்திகோ ரங்கய்யா
வாஸுதேவனெ நிம்ம பாதாரவிந்ததொளு வாஸவாகுவுதெந்திகோ ||2

ஸுகதுக்க மானாபமானங்களனெல்ல நமம மாடுவுதெந்திகோ ரங்கய்யா
லாபாலாபவு ஷீதோஷ்ணங்கள ஸமன மாடுவுதெந்திகோ ||3

கெட்ட நுடிய நிஷ்டர வாக்யங்கள பிட்டு பிடுவுதெந்திகோ ரங்கய்யா
கிருஷ்ணமூர்த்தி நிம்ம புட்ட பாதகளன்னு தட்டனெ ஸேரிஸய்யா ||4

கோரஸம்ஸார ஸாகரவ தாடுவுதக்கெ தாரி தோரிஸோ எனகெ ரங்கய்யா
ஸ்ரீ ஸ்ரீனிவாஸனெ நிம்ம பாதாரவிந்ததா பக்தி நாமவனு கொடிஸய்யா ||5

இந்த கீர்த்தனையில் - நிஸ்ஸாரமான பவ ஸாகரத்தை தாண்டும் வழியை காட்ட வேண்டும். ஹரியின் ஸாமீபத்தை கொடுக்க வேண்டும் என்றும் ஸ்ரீஹரியிடம் வேண்டிக் கொள்கிறார் ஹரிதாஸினி.

க்ஷேத்ர தர்ஷன கிருதிகள்

வாகன வசதிகள் இல்லாத அந்த காலத்தில், யதுகிரியம்மா, வடக்கில் பதரியிலிருந்து, தெற்கில் ராமேஸ்வரம் வரைக்கும் பாதயாத்திரை செய்திருக்கிறார். இவர் தரிசனம் செய்த ஸ்ரீ க்ஷேத்திரங்களில் தமிழ் நாட்டில் உள்ள காஞ்சிபுரமும் ஒன்று ஆகும்.

(தொடரும்)

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## 24. பிம்போபாஸன ஸந்தி

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 30 | | | | | | | | | 2 | 31 | | |
| | | | | 3 | | | | | | | | | |
| 4 | | | 5 | | | | | | | 23 | | | 24 |
| | 6 | | | 7 | | | | | 36 | | 25 | 26 | |
| | 8 | | | | | | 9 | | | | | | |
| | 37 | | 32 | | | 38 | | | 10 | | | | |
| 11 | | | | | 12 | | | | 13 | | | 14 | |
| 15 | | | | | | 27 | 32 | 34 | 39 | | 40 | | |
| | | 28 | | 16 | | | | | | | | | 35 |
| | | | | | 41 | | | 17 | | 18 | | | |
| | 19 | | | | | | | | | 29 | | 42 | |
| | | | | | | | | 20 | | | | | |
| 21 | | | | 43 | 44 | | | | 45 | 22 | | | |

குறுக்கெழுத்துப் போட்டிகளை வடிவமைத்துக் கொடுப்பவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி

குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam @ gmail.com / அல்லது 89044 58276 க்கு வாட்சப் செய்யலாம்.

**இடமிருந்துவலம்:**.1.ஸ்ருஷ்டிக்கு வராதவர்கள்(6), 2.தலை(4), 3.இரண்டு கால்(4), 4.ஜனன மரணம் அற்றவன்(4), 5.சூர்யன்(3), 6.மீன்(3), 7.ஆகாரமே உண்ணாத ரூபம்(4), 8.அசையும் பொருட்கள்(5). 9.யாராலும் வெல்ல முடியாதவன்(4), 10.கொடியை உடையவன்(3), 11.காற்றில்லாத(4), 12.மூங்கில்(3), 13.நரகம்(3), 14.ஊமை(2), 15.வீடு(2), 16.பிள்ளைகளால் உண்டாகும் க்லேஷம்(5), 17.கழைக் கூத்தாடி(3), 18.செவிடன்(3), 19.கொண்டாடப்படுபவன்(4), 20.குடை(5), 21.கீரிடத்தின் மேல் அணியும் துராயி. கலைந்துள்ளது (3), 22.உணவைக் கொடுப்பவன்.கலைந்துள்ளது(4).

**வலமிருந்து இடம்:** 2.வயிற்றெரிச்சல்(4), 12.சமூகம்(3), 20.சந்தோஷம்(4), 23.ஆனந்த மயமான அவயங்களுடன் கூடியவன்(4), 24.அசையாதவை(3), 25.பக்ஷிகள்(3), 26.யானை(3), 27.யக்ஞத்தில் ஹவிஸ்ஸை ஸ்வீகரிப்பவன்(2), 28.பீடிக்கப்பட்ட(3), 29.இளமை(4).

**மேலிருந்துகீழ்:**4.காடு(3), 9.தோள்(3), 11.வீடு–வேறு பெயர்(4), 19.தாக்ஷசண்யம்(3), 20.ஆசை(2), 24.மோக்ஷ ஸ்தானம்(5), 30..ராம க்ருஷ்ணாதி ரூபங்கள்(4), 31.லிங்க ஸரீரத்திற்கு கவசம் போன்றது இந்த தேஹம்(3), 32.குறுக்கும் நெடுக்கும்(5), 33.ஒரு விஷயத்தில் உண்டாகும் துக்கம்(3), 34.கயிறு(2) 35.மற்றவர்கள் கண்ணில் படாமல் மறைந்திருப்பது(5).

**கீழிருந்துமேல்:**7.பிள்ளைகள்(4), 9.ஸதாகாலம். கலைந்துள்ளது.(5), 18.லக்ஷ்மி- வேறு பெயர்(4), 19.ருத்ரன்(3), 24.பாபங்கள் அற்றவன்(3), 35.ஸேவகன்(3), 36.உறை(3), 37.ஸம்ஸார அவஸ்தையில் உள்ள ஜீவர்களுக்கு பிம்ப ரூபியாக இருக்கும் பரமாத்மா(3), 38.ஆகாரம் உண்ணும் சல ப்ராணிகள். கலைந்துள்ளது(3), 39.லக்ஷ்மி தேவி – வேறு பெயர்(4), 40.நிழல்(2), 41.தேவ குரு ப்ரஹஸ்பதியின் அவதாரம்(5), 42.பரவி இருப்பது(3), 43.அறிகுறி. முதல் எழுத்து இல்லை(4), 44.வெய்யில்(3), 45.வஞ்சனை(4).

ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப், அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்து சொல்லலாம்.

தொடர்

## ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர்

### 2. மத்வமுனிகளின் வர்ணனை

டாக்டர் கே. கோகுல்நாத்

ஸ்ரீமதானந்த தீர்த்தரின் ஸ்தோத்திரம் என்றால், அவரில் இருக்கும் அவரின் மூலரூபத்தில் இருக்கும் குணங்களின் வெளிப்படு எனலாம். இவர் வாயுதேவரின் அவதாரராக இருப்பதால், வாயு தத்வத்தின் அற்புத குணராஷிகளில் சிலவற்றை மட்டும் ஸ்மரணைக்குக் கொண்டு வந்து அந்த குணங்களை கீர்த்தனைகளில் வர்ணித்திருக்கிறார். 'ஷரணு ஷுபாமலகாய ருஜுகணா' என்னும் கீர்த்தனையில் ஸ்வரூபபூதமான குணங்களின் வர்ணனை இருக்கிறது. தாஸர், மத்வரை 'ருஜுகணாபரண' என்கிறார். அதாவது, ருஜுகண என்னும் ஜீவராஷிக்கு அலங்காரமாக இருக்கிறார் என்கிறார். சாஸ்திரங்களின்படி 200 ருஜுகணஸ்தர்கள் இருக்கின்றனர். இவர்கள், காலகாலத்திற்கு ஸாதனைகளை செய்தவாறு, வாயு பட்டத்தையும், பிறகு பிரம்ம பட்டத்தையும் அடையும் ஜீவர்கள் ஆவர். மத்வர் வாயுவின் அவதாரமாக, த்ரேதா மற்றும் த்வாபர யுகங்களில் ஹனும, பீமனாக ஸ்ரீஹரியின் சேவையை ப்ரத்யட்சமாக செய்து, கலியுகத்தில் வேதங்கள், பிரம்மஸூத்ர, புராணாதிகளில் எவ்வாறு ஹரிஸர்வோத்தமத்வ, வாயு ஜீவோத்தமத்வ, பஞ்சபேதங்கள், நவ வித பக்தியினால் அபரோக்ஷ ஞானத்தை அடையும் விதம், வேத அபௌருஷேயத்வ, ஜீவர்களின் ஸ்வரூப பூதமான ஆனந்தத்தை முக்தியில் எப்படி அடைகின்றனர் என்னும் விஷயங்களை, பிற குமத தத்வங்களை நிராகரணம் செய்வதுடன் விளக்கி, ஸாதகர்களுக்கு ருஜு மார்க்கத்தை காட்டினார். ஆகையால் இவரை 'ருஜுகணாபரண' என்கிறார்.

'ஹரிகுணகணவாரிதி மக்ன' ரான இவர் 'ஷுக்லருதிர நிர்லிப்த' ர் என்கிறார். வாயுதேவர் எந்தவொரு யுகத்தில் அவதாரம் செய்தாலும், அவருக்கு கர்ப்பவாஸத்தின் துக்கம் இல்லை. ஆகையால், அவரை 'ஷுக்ல ருதிர நிர்லிப்த' என்கிறார். ஜாதாபரோக்ஷிகளான இவரில் கலி ப்ரவேஷம் என்பது எந்த காலங்களிலும் இல்லை. ஆகையால், ஸ்ரீஹரியாக்ஞைக்கு எதிராக எந்த ஒரு சந்தர்ப்பத்திலும் இவர் நடப்பதில்லை. ருதரர் முதலான தேவதைகளுக்கு, இத்தகைய சில சந்தர்ப்பங்கள் இருக்கலாம். வாயு தேவருக்கு ஞானதிரோதான என்பது என்றும் இல்லை. ஸ்ரீஹரியின் குணகணங்கள் அனைத்தும் அவருடைய

புத்தியில் எப்போதும் இருந்து கொண்டே இருக்கிறது. தாஸர் அவரை ‘ஆக்ஞுஜனோத்தார’ என்று அழைக்கிறார். ஸாத்விக ஜனர்கள் அக்ஞராக இருந்து, அவர்களுக்கு ஸ்ரீஹரியின் குணகணங்களை அறிந்து உபாஸனை செய்வதற்கு தேவையான அனைத்தையும் மற்ற தத்வாபிமானி தேவதைகளின் மூலம் ப்ரேரணை செய்யும் குணஸ்ரேஷ்டர் இவர்.

ஜீவர்களின் உத்தாரகராக ஆகவேண்டுமெனில், வாயுதேவரின் அருள் கண்டிப்பாக தேவை. ஜீவோத்தமரான இவர், அனைத்து ஜீவகோடிகளுக்கு குருகளாக இருக்கிறார். அகையால், தாஸர் இவரை ‘கைவல்யதாயகப்ரத’ என்கிறார். ஏனெனில், ஜீவர்களின் ஸாதனை முழுமையடைந்து, ஸ்ரீஹரியின் பிம்பாபரோக்ஷத்தைப் பெற்று, ஒரு ஜீவன் உத்தாரம் ஆனபிறகு, வாயுதேவர் அந்த ஜீவனின் ஸாதனைகளை ஸ்ரீஹரிக்கு சமர்ப்பித்து, அந்த ஜீவனுக்கு ‘மோக்ஷத்தைக் கொடு’ என்று ஸ்ரீஹரியிடம் கைகுவித்து வேண்டியபிறகு, அந்த ஜீவனுக்கு விரஜா நதியில் ஸ்னானம் கிடைத்து, லிங்க தேகம் களைந்து போய், வைகுண்ட பிரவேஷம் ஸாத்தியமாகிறது.

பிரஸன்ன வெங்கட தாசரின் ஒவ்வொரு கிருதியும், த்வைத ஸித்தாந்தத்திற்கு ஏற்பவே இருக்கிறது. அவரது பத பிரயோகங்களில் முக்கிய பிரமேயங்கள் நிரம்பியிருக்கின்றன. வாயுதேவரே ஹனும பீம மத்வராக அவதரித்து, பக்தியை பரப்பி, துஷ்டர்களை அழித்து, ஹரி ஸர்வோத்தம என்னும் தத்வம், உலகிலிருந்து மறைந்திருந்த சந்தர்ப்பத்தில் அதனை மறுபடி நிறுவுவதன் மூலம், ஹரிஸேவை செய்தார் என்னும் விஷயத்தை- ஒரே கீர்த்தனையில் மூன்று அவதாரக்ளின் ஸாதனைகளை விளக்குவதாக, பல கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார். இதற்கு ஒரு தக்க உதாரணம் ‘என்ன பாலிஸு பரமகாய ரகுரன்ன ராமன ப்ரிய’ என்னும் கிருதி. மூன்று நுடிகளில் மூன்று அவதாரங்களின் முக்கிய அம்சங்களை தொகுத்திருப்பதன் மூலம், வாயுதேவரின் அவதாரத்ரய விஷயங்களை விளக்கியிருக்கிறார்.

அஞ்சனி ஆத்மதலி பந்து காமன பாத விடிதெ, கடல லங்கிஸிதெ கோஷ்பததி -- என்னும் முதல் நுடியில், வாயு ஜீவோத்தம தத்வத்தை குறிப்பிடுகிறார். இலங்கைக்கு செல்வதற்கு, கடலைத் தாண்டும் சக்தி யாருக்கு இருக்கிறது என்று கபி ஸேனை யோசித்துக் கொண்டிருக்கும்போது, ஹனுமந்தன், தன்னால் இது முடியும் என்று கூறவில்லை. ஏனெனில், உண்மையான வித்யாவந்தர்கள் / சக்திவந்தர்கள், தங்களின் சாமர்த்தியத்தைப் பற்றி தாங்களே

கூறுவதில்லை. நிறைகுடம் தளும்பாது என்று சொல்வதைப் போல, அவர்கள் எப்போதும் அமைதியாக இருக்கின்றனர்.

ஹனுமந்தன் ஒருவனே கடலைத் தாண்டும் சக்தியைப் பெற்றிருக்கிறான் என்பதை சுக்ரீவாதிகள் நிச்சயித்து, அந்த வேலையை ஹனுமந்தனுக்கே ஒப்படைத்தனர். ஒரு பசுவானது ஒரு காலடி எடுத்து வைப்பது எவ்வளவு சுலபமோ, அவ்வளவே சுலபமாக ஹனுமந்தன் கடலைத் தாண்டி இலங்கைக்குச் சென்றாராம். வாயு தேவர், ஜீவோத்தமராக இருந்ததாலேயே அவருக்கு அந்த சாமர்த்தியம் இருந்தது என்னும் கருத்து 'கோஷ்பதடி லங்கிஸிதெ' என்னும் வாக்கியத்தில் இருக்கிறது. ப்ரபஞ்சத்தின் கோடிக்கணக்கான ஜீவராசிகளில் மற்றும் தத்வாபிமானி தேவதைகளுக்கு நாயகராக இருந்து, ஸர்வ ஜீவர்களுக்கு ஷ்வாஸ உச்வாஸங்களை செய்விக்கும் சக்தி, வாயுதேவரில் இருக்கிறது என்றபின், ஒரு கடலைத் தாண்டுவது அவருக்கு மிகவும் சுலபமான செயலே ஆகும் என்பதே தாஸர் சொல்ல வரும் செய்தி ஆகும்.

ஸ்ரீவாயுதேவர் 200 ருஜுகணஸ்தர்களில் ஒருவர் ஆவார். இந்த கல்பத்தில் ஸாதனைகளை முடித்து, அடுத்த பிரம்ம கல்பத்தில் பிரம்ம பதவியை அடைகிரார். இவர் இந்த உலகத்தில் அவதரித்தபோது, அவருக்கு கர்ப்பவாஸத்தின் துக்கம் இல்லை. 32 மஹாபுருஷ லட்சணங்களையும் கொண்டிருந்தார். 'ஸ்ரீமாருதனு தன்னய த்ருதீயாவதாரதிம் த்வாத்ரிம்ஷத் லக்ஷணான்விதானாகி ருஜுகணத கோத்ரதல்லிஸெது' என்று ப்ரஸன்ன வெங்கட தாசர், மத்வாசார்யரை அவருடைய மூலரூபத்தை ஸ்தோத்திரம் செய்கிறார். தோள்கள், கண்கள், கன்னங்கள், மூக்கு மற்றும் மார்பு விரிந்தும்; தோல், தலைமுடி, விரல்கள், பற்கள், விரல் முட்டிகள் ஆகியவை சூக்ஷ்மமாகவும்; உள்ளங்கை, உள்ளங்கால், கடைக்கண்கள், தாடை, நாக்கு, கீழ் உதடு, நகங்கள் ஆகியவை சிவப்பாகவும்; வயிறு, நெற்றி, தோள்கள், கை மற்றும் முகம் உப்பியவாறும், நெற்றி, இடுப்பு, மார்பு ஆகியவை விஸ்தாரமாகவும்; கழுத்து, முழங்கால் ஆகியவை குறுகலாகவும், குரல், நாபி ஆகியவை கம்பீரமாகவும் இருப்பது மஹாபுருஷர்களின் லட்சணமாக இருக்கின்றன.

த்வாத்ரிம்ஷல்லக்ஷணை: ஸம்யக் யுக்தா வாயுத்வ யோககா
நியமேனைவ விஷ்ணோஸ்து ப்ராதுர்பாவா விசேஷத: ||

என்று ப்ருஹத் பாஷ்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

ப்ரஸன்ன வெங்கட தாஸர், ஸ்ரீவாயுதேவரை 'மாதரிஷ்வ - ஸுகதீர்த்த - தஷப்ரமதி - ஸூத்ர நாமகர் - என்று போற்றுகிறார். இவற்றில் 'ஸுகதீர்த்த' என்பது ஆனந்ததீர்த்த பதத்தின் சமானமான சொல்லே ஆகும். ஸ்வரூபபூதமான சுகத்தை, மகிழ்ச்சியைப் பெறும் விதத்தை தெரிவிக்கும் தத்வவாதத்தை ஸ்ரீமதானந்த தீர்த்தர் கூறியதால், அவரை 'ஸுகதீர்த்த' என்று அழைக்கிறோம்.

வாயுதேவரை 'மாதரிஷ்வ' என்று அழைக்கிறோம். ஏனெனில், ஆத்மாந்தர்கதராக அந்தந்த ஜீவர்களின் கர்மங்களுக்கேற்ப, அவரவர்களால் எந்தெந்த கர்மங்கள் நடக்கவேண்டுமோ அவை அப்படியே நடக்குமாறு, ஹரியின் ஆணைப்படி செய்யும் வாயுதேவரின் ரூபத்திற்கு 'மாதரிஷ்வ' என்று பெயர். இதைப்போல ஜீவனுக்கும், தேகத்திற்கும் சம்பந்தம் இருக்குமாறு செய்யும் வாயுதேவரின் ரூபத்திற்கு 'ஸூத்ர' என்று பெயர். எதுவரை உடம்பில் மூச்சு இருக்கிறதோ, அதுவரை மட்டுமே, தேகத்தில் ஜீவன் இருக்கிறான். எப்படி ஒரு கயிறின் இரு முனைகள் இருவேறு பொருட்களின் சம்பந்தத்தைப் பெறுகின்றதோ, அப்படி, ஜீவன், தேகத்தில் இருக்குமாறு வாயுதேவர் மூச்சு விடும் செயல்களை செய்வித்து, தேகத்திற்கும், பிராணனுக்கும் சம்பந்தம் விட்டுப் போகாமல் பார்த்துக் கொள்கிறார் ஆகையால் அவரை 'ஸூத்ர நாமக' என்கிறார்கள்.

பவமானாபிதோ வாயு: | உத்தமானாம் ஷரீ கத: ||
ஸ்வரூபேந்த்ரிய தேஹேஷு மாதரிஷ்வாபிதானத: ||
ஸ்தூல தேஹ கதஸ்யோபி | முக்யப்ராணாபிதோஹிச: ||
தத்தேலிங்க ஷரீரஸ்த: ஸூத்ர நாமா மஹாப்ரபு: ||

என்று ஸ்ரீ நரஹரி தீர்த்தர் 'தாத்பர்ய தீபிகா' வில் இந்த விஷயத்தை சொல்லியிருக்கிறார்.

பிம்பரூபியான பரமாத்ம, அந்தந்த ஜீவர்களின் ஸ்வரூப மற்றும் கர்மங்களுக்கேற்ப செய்ய வேண்டிய செயல்கள் அப்படியே ஆகுமாறு 'பவமான நாமக வாயுதேவருக்கு ப்ரேரணை செய்து, அனைத்து கார்யங்களையும் செய்விக்கிறான் என்று ப்ரகாஷ ஸம்ஹிதையில் இவ்வாறு சொல்லப்பட்டிருக்கிறது.

பவமானாபிதோ வாயு: | ஜீவானாஞ்ச ஸ்வரூப: ||
தத்வ்தேவாபிதானேன | தத்வ கார்யாணி நித்யஷ: ||
குர்வன் பிம்ப இவாதேவோ | ஹரே ராக்ஷானு ஸாரத: ||

பவமானர் உலகிற்கு ப்ராண ரூபத்தில் இருக்கிறார். தவிர, உலகத்தின் அனைத்து ஸாத்விக ஜீவர்களுக்கும் பரமகுரு ஆகிறார். எந்தவொரு கக்ஷையின் ஜீவர்களுக்கு, அந்த கக்ஷைக்கு மேலே இருப்பவர்கள் 'நீதகுரு' ஆகிறார். அவரின் மேல் உள்ள கக்ஷையில் இருப்பவர்கள் அனைவரும் குருகளே. இந்த வகுப்பில் ஜீவோத்தமரான வாயுதேவர் அனைத்து ஸாத்விக ஜீவர்களுக்கும் பரமகுரு எனப்பட்டு அவருடைய ப்ரேரணையினாலேயெ ஸத்ஸாதனைகள் ஆகின்றன. ஆகையாலேயே, விஜயதாஸர்:

குருவே நித்ய குருவே குருவே லக்ஷண குருவே
குருவே ஷாந்த குருவே குருவே என்ன குருவே
குருகளிகெ குருவே குரு ராஜவர்யா
குருகுலோத்துங்க குரு ஷிரோமணி
குருதாத நம்ம விஜயவிட்டலன்ன
குரு லகு மூர்த்திய குரு எணிப குருவெ ||

என்று பாடியிருக்கிறார். (தொடரும்...)

தொடர்

## கன்னட கிரந்தங்கள் அறிமுகம்

## ஸ்ரீ வெங்கடேஸ பாரிஜாதம்

ஸ்ரீ அனந்தாத்ரி அனந்தாசாரியார்

**மூன்றாம் அத்தியாயம்**

பகவான் ஸ்ரீநிவாஸனுடன் பத்மாவதியின் சந்திப்பைப் பற்றி கூறும் பகுதியாக இது அமைந்துள்ளது. சந்திர வம்ஸத்தில் ஸுதர்மா என்ற ராஜனுக்கு ஆகாஸராஜன் மற்றும் தோண்டைமான் ராஜன் என இரு புதல்வர்கள். ஆகாஸராஜன் தேவகுருவான பிரஹஸ்பதியிடம் தனக்கு மக்கள் இல்லை எனத் தனது கவலையைத் தெரிவித்து, மக்கள் இல்லையேல் ராஜ்ஜியம் ஸம்பத்து என அனைத்தும் வீண்; குழந்தைகள் மூலமாகவே பண்டிகைகள் கோலாகலமாகிறது; அத்தகைய குழந்தைகள் தமக்கு வேண்டும் என வேண்ட, தேவகுரு பக்தியுடன் புத்ர காமேஷ்டி யாகம் செய்ய மார்க்கத்தை அருளினார். அப்போது ஆகாஸராஜன் யாகம் செய்யும் இடத்தை சுத்தப்படுத்தும் நோக்கத்தில் தங்கக் கலப்பையைக் கொண்டு பூமியை உழும்போது, ஸுந்தரியான பெண் குழந்தை கிடைக்கப்

பெற்றாள். ஆகாஸவாணியின்படி அவளைத் தனது மகளாக ஏற்றுக் கொண்டான். அவளுக்கு 'பத்மாவதி' என்றே பெயர் சூட்டினான். பின்னர் ராஜனுக்கு ஆண் மகவு ஒன்றும் பிறக்க 'வஸுதான' என்று பெயர் வைத்தான்.

இத்தகைய ஸுந்தரியான தன்னுடைய மகளுக்கு சரியான வரம் வேண்டும் எனக் காத்திருந்தான் ஆகாஸராஜன். ஒருநாள் பத்மாவதி தன் தோழியருடன் நந்தவனத்திற்குச் செல்ல தந்தையான ஆகாஸராஜனிடம் அனுமதி பெற்றாள். கண்ணாடியின் முன் அமர்ந்து ஆபரணங்கள் அணிந்து திலகமிட்டு, அலங்காரம் செய்து கொண்டாள். பின்னர் தன் தோழியருடன் அரண்மனையிலிருந்து கிளம்பி நந்த வனத்திற்கு வர, அங்கே வனதேவதை தோன்றி அவளின் தாய் தந்தை யார் என வினவ, பத்மாவதியும் தனது தாய் தந்தையர் ஆகாஸராஜன் மற்றும் தரணி தேவி; தமையன் வஸுதான; தனது சித்தப்பா தோண்டமான் ராஜா; தம்முடைய தாய் வீடு நாராயணபுரம் எனவும், முன்னால் தமக்கு அமையப் போகும் அத்தை வீடு என்னவென்று அறியவில்லை எனவும் பதில் உரைக்கும் நேரத்தில் அந்தரங்கத்தில் ஆனந்தாத்ரீஸனே தனக்கு கணவனாக வர வேண்டும் எனவும் வேண்டிக் கொண்டாள். தனது தோழியருடன் பத்மாவதி புஷ்பங்களை பறிப்பதில் கவனம் செலுத்த, அங்கே நாரத மஹரிஷி வருகை புரிந்தார். அவரிடம் பத்மாவதி தமது தோழிகள் மூலமாக யார் என விசாரித்தாள். தான் ஸ்ரீஹரியின் பேரன் நாரத மகரிஷி எனத் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டு, பத்மாவதியின் கைரேகைகளை பார்த்து அவளின் ஸாமுத்ரிகா லக்ஷணங்களை வர்ணனை செய்து, அந்த லக்ஷணங்களைக் கொண்டு ஸ்ரீ ரமேஸனான பகவான் ஸ்ரீநிவாஸனே அவளுக்கு பதியாக அமைவார் எனக் கூறிச் சென்றார்.

**<u>நான்காம் அத்தியாயம்</u>**

மிருகங்களின் வேட்டைக்காகக் கிளம்பிப பகவான் ஸ்ரீநிவாஸன் தன்னை அலங்கரித்துக் கொள்ளும் விதமாக ஊர்த்வ புண்ட்ரம், குங்குமம், கந்தம், அழகான வஸ்திரங்கள், கண்டத்தில் ஆபரணம், 18 முலம் வேஷ்டி, பீதாம்பரம், மோதிரம் போன்றவற்றை அணிந்து, கட்கம் முதலான ஆயுதங்களைத் தரித்து, அதிஸுந்தரமான குதிரையின் மேலேறி புறப்பட்டார். வனத்தில் உள்ள மிருகங்களை வேட்டையாடிக் கொண்டே யானை ஒன்றைக் கண்டு அதனை விரட்டியடி செல்ல, ஓரிடத்தில் யானையானது ஓட முடியாமல் மண்டியிட்டு துதிக்கையைத் தூக்கி

கர்ஜனை செய்து வணங்கியது. ஓடிவந்த யானையைக் கண்ட பத்மாவதியுடன் வந்த தோழிகள் நடுங்கி ஒதுங்க, யானை பகவான் ஸ்ரீநிவாஸனை வணங்கி காட்டுக்குள் சென்றது. குதிரையின் மேலேறி வருபவர் யார் என பத்மாவதி, தன் தோழிகளிடம் விசாரிக்கும்படி கூறினாள். தோழிகளும் பகவான் ஸ்ரீநிவாஸனிடத்தில் விசாரிக்க, ஸ்ரீநிவாஸன் தாம் சந்திர குலத்தைச் சேர்ந்தவன்; வஸுதேவர் தேவகி தனது தாய் தந்தையர்கள்; பலராமன் உடன் பிறந்தவன்; பாண்டவர்கள் தமது சொந்தக்காரர்கள்; ஸுபத்ரை தனது தங்கை; அர்ஜுனன் தனது மைத்துனன் எனக் கூறி தன்னை 'கிருஷ்ணா' என அனைவரும் அழைப்பர் என விளக்கினார். அதற்கு பதிலாக பத்மாவதியும் தன்னைப்பற்றிக் கூறுவதாக தான் அத்ரி கோத்திரத்தைச் சேர்ந்தவள்; ஆகாஸராஜன் தரணி தேவி தமது தாய் தந்தையர்கள்; தோண்டமான் ராஜா தனது சித்தப்பா; வஸுதான தனது சகோதரன் எனவும் கூறித் தான் கமலத்தில் இருந்து வந்தவள் என்றெல்லாம் விவரித்தாள். பின்னர் பகவான் ஸ்ரீநிவாஸன் லீலைகள் புரியும் விதத்தில் ஹாஸ்யம் செய்ய, பத்மாவதியும் பகவானின் லீலைகளை அனுசரித்து தானும் கோபம் கொண்டவாறு காண்பித்துக் கொண்டு பதிலுரைத்தாள். உடன் வந்த தோழிகள் கல்லால் அடிக்க குதிரையானது பூமியில் விழுந்தது. பகவான் ஸ்ரீநிவாஸன் நாடகம் புரியும் விதத்தில் ஏமாற்றம் அடைந்ததாகத் தன்னை காண்பித்துக் கொண்டு, ஸேஷாசல மலைக்குச் சென்று யாரிடமும் பேசாமல் வஸ்திரத்தால் முகத்தை மூடி போர்த்தி படுத்துக் கொண்டான்.

**ஐந்தாம் அத்தியாயம்**

பத்மநாபனான பகவான் ஸ்ரீநிவாஸனைக் கண்டதை ஸ்மரணை செய்து கொண்டு, மூர்ச்சையானாள் ஸ்ரீ பத்மாவதி. பின்னர் சுதாகரித்துக் கொண்டு தோழிகளுடன் அரண்மனையை வந்தடைந்தாள். தாயான தரணி தேவி பத்மாவதியைக் கண்ட மாத்திரத்தில் அவளது முகம் வாடியதை உணர்ந்து எங்கு சென்று வந்தாளென வினவி, அவளுக்கு உடலில் ஜுரம் அடிப்பதைக் கண்டு பயந்து கொண்டு ஆகாஸராஜனிடம் தெரியப்படுத்தினாள். ராஜனும் பல வைத்தியர்களை அழைத்து பார்த்ததில், சிலர் பித்தம் தலைக்கு ஏறியது எனவும், சிலர் பூதபலியை செய்ய வேண்டும் எனவும், சிலர் கிரஹங்களின் உபாதை எனவும் பலவாறு கூற, ஆகாஸராஜன் மிகுந்த வருத்தம் அடைந்து தன் குல

குருவான பிரஹஸ்பதியை அழைக்க, அவர் சிவனுக்கு (அகஸ்தீஸ்வரர்) அபிஷேகம் செய்ய கவலைகள் அனைத்தும் விலகும் என உபாயம் கூறிச் சென்றார். ஆகாஸராஜன் விசேஷமான பூஜைகளுக்கு ஏற்பாடுகளை செய்தான்.

அதே நேரத்தில் பகவான் ஸ்ரீநிவாஸன் கவலையுடன் யாருடனும் பேசாமலும், முகத்தைக் காண்பிக்காமலும் படுத்திருக்க, பகுளாதேவி ஸ்ரீநிவாஸனின் மச்ச முதலான அவதார ரூபங்களைப் புகழ்ந்து பாடி, பலவித பதார்த்தங்களைத் தயார் செய்து வைத்திருப்பதாகக் கூறி, போஜனம் செய்ய வருமாறு அழைத்தாள். ஆனால் எவ்வித பதிலையும் அளிக்காமல், முகத்தை நன்றாக போர்த்திக்கொண்டு கவலையுடன் படுத்திருந்த பகவான் ஸ்ரீநிவாஸனைக் கண்டு மேலும் பேசலானாள். இவ்விதம் படுத்திருப்பதற்கு காரணம் "தலைவலியா ? வனத்தில் கண்ட புலியின் மேல் பயமா ? பால் நெய் சர்க்கரை கலந்த சாதம் ஏன் உண்ணவில்லை ? பரம புண்ணியவதி யார் இந்த நிலைக்கு ஆளாக்கினர் ?" என பல்வேறு காரணங்களை வினவி, ஸ்ரீநிவாஸனின் பாவத்தை அனுசரித்து நடந்து கொள்வதாகவும் கூறினாள்.

தனது துக்கத்தை பரிஹாரம் செய்யுமாறு கேட்டுக் கொண்ட பகவான் ஸ்ரீநிவாஸன், பகுளாதேவியிடம் நீனே தாய்; தந்தை; அண்ணன்; தாய்மாமன்; உத்தவன்; அக்ரூரன்; கஜேந்திரன்; பிரகலாதன்; துருவன்; அர்ஜுனன்; திரௌபதி தேவி என்றெல்லாம் கூறிப் புகழ்ந்து, வனத்தில் நடந்ததை எல்லாம் கூறி, பத்மாவதியைப் பற்றியும் அவளின் அழகையும் வர்ணித்து, புண்ணியம் இருந்தால் அந்தப் பெண்ணே தனக்கு கிடைப்பாள் எனவும் கூறி வருத்தப்பட்டார். தன்னுடைய விவாஹ காரியத்தை செய்யுமாறு பகுளா தேவியிடம் கேட்டுக்கொண்டார்.

பகுளாதேவி பகவான் ஸ்ரீநிவாஸனிடம் அவள் யார் என வினவ, ஸ்ரீநிவாஸனும் பத்மாவதியைப் பற்றிக் கூறி, மேலும் ராமாவதார காலத்தில் அக்னி பகவானிடத்தில் இருந்த வேதவதியை (மாய ஸீதையை / ப்ரதி க்ருதியை) மந்தமதி கொண்ட ராவணன் கடத்திச் செல்ல, அதுவரை நிஜ சீதை கைலாஸத்தில் பூஜையை ஏற்றுக் கொண்டு இருந்தாள். யுத்தம் முடிந்து ஸ்ரீராமபிரான் ஸீதா தேவியை லோக விடம்பனத்திற்காக அக்னிப்பிரவேசம் செய்யச் சொல்ல, அக்னியில் இருந்து மாய ஸீதை மற்றும் நிஜ ஸீதை என இருவரும் வெளிவந்தனர், யார் இவர்கள் எனக் கேட்ட ஸ்ரீ ராமபிரானுக்கு பதிலுரைத்த நிஜ ஸீதா தேவி, இவள் தான் வேதவதி; அசோகவனத்தில் இருந்து கஷ்டங்களை அனுபவித்தவள் எனக் கூறி இவளை விவாஹம் செய்து கொள்ள

வேண்டும் என வேண்டினாள். அதற்கு பதில் உரைத்த ஸ்ரீராமச்சந்திர மூர்த்தி, இந்த ஒரு அவதாரத்தில் தான் ஏகபத்தினி விரதத்தை அனுசரிப்பதால் அவளை விவாஹம் செய்து கொள்ள இயலாது எனவும், தான் ஸ்ரீ வேங்கடேஸனாக அவதரிக்கும் வேளையில், இவள் பத்மாவதியாக அவதரித்துத் தன்னை அடைவாள் எனவும் வாக்களித்த கட்டங்களையெல்லாம் பகுளாதேவியிடம் விளக்கிக் கூறினார். பகவான் ஸ்ரீநிவாஸன் மேலும் தன்னுடைய விவாஹ காரியத்தை செய்யுமாறு பகுளாதேவியிடம் கேட்டுக் கொண்டு, அதற்கான மார்க்கத்தையும் காண்பிக்கும் விதத்தில், பகுளாதேவிக்கு அந்த க்ஷணமே ஒரு குதிரையை ஸ்ருஷ்டி செய்து, அதன் மீது ஏறி அமர்ந்தபடி, மலையிலிருந்து கீழே சென்று கபிலேஸ்வரரை தரிசனம் செய்து வேண்டி, பிறகு ஸுகபிரம்ம ரிஷிகளின் ஆஸ்ரமத்திற்குச் சென்று வணங்கி, அதன் பிறகு பத்ம ஸரோவர தீரத்திலுள்ள ராமகிருஷ்ணரை பூஜித்து, கடைசியாக அரண்மனைக்குச் சென்று விவாஹ பேச்சை நடத்தினால் சென்ற காரியம் பலிதமாகும் என விவரித்தார் பகவான் ஸ்ரீநிவாஸன். (தொடரும்)...

**S.லக்ஷ்மிபதிராஜா, சென்னை**

| தொடர் | **ஹரிகதாம்ருதசார மஞ்சரி 360** |
| --- | --- |
| | **By ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர்** |

23. **தோ$^{1}$த$^{3}$கனு தானாகி$^{3}$ மனமொத$^{3}$**
**லாத$^{3}$ கரணதொளித்து$^{3}$ விஷயவ**
**நைது$^{3}$வனு நிஜபூர்ண சுக$^{2}$மய க்ராஹ்ய க்ராஹகனு |**
**வேத$^{3}$வேத்$^{3}$யனு திளியத$^{3}$வனோ**
**பாதி$^{3}$ பு$^{4}$ஞ்சிஸுதெல்லரொளகா$^{3}$**
**ஹ்லாத$^{3}$ ப$^{3}$டு$^{3}$வனு ப$^{4}$க்தவத்ஸல பா$^{4}$க்யஸம்ப$^{1}$ன்ன ||(3-16)**

பகவந்தன், பாக்ய ஸம்பன்னன், அவன் பக்தவத்ஸலன். அனைத்து ஜீவ கோடிக்கும் மகிழ்ச்சியை உண்டுபண்ணுபவனாக இருக்கிறான். ஏனெனில், தோதகன் என்றால், அறிந்தும் அறியாதவனைப் போல அனைவருக்குள்ளும் இருந்து, விஷயாதிகளை தான் எடுத்துக் கொண்டு, நிஜ சுகத்தை அவரவர்களுக்குக் கொடுக்கிறான். அதாவது, மனிதனின் அனைத்து செயல்களையும், தானே செய்து, செய்வித்து, ஜீவர்களுக்கு,

நானே (ஜீவனே) செய்கிறென் என்னும் அஹங்காரத்தைக் கொடுத்து, தான் நிர்லிப்தனாக இருக்கிறான்.

24. **ப1வி ஹரின்மணி வித்3ருமத1 ச**
**ச்சவிக3ளந்த3தி3 ராஜிசுத1 மா**
**த்4வ நிரந்தர தேவ தானவ மானவரொளித்து ।**
**த்ரிவிதகு3ண கர்ம ஸ்வபா4வவ**
**பவனமுக தேவாந்தராத்மக1**
**திவஸ திவஸதி வ்யக்த1மாடு3த1 அவரொளித்து3ணிப1 ||(3-18)**

பகவந்தன் பவி - இந்திரனின் வஜ்ராயுதத்தைப் போல; வித்ரும - பவளம் போல, தேவ மானவ என அனைவரிலும் இருந்து, த்ரிகுண கர்மங்களால், முக்யபிராணனின் மூலம், அவரவர்களின் யோக்யதைக்கேற்ப அவர்களில் இருந்து, அனைத்து செயல்களையும் செய்வித்து அவர்களை காக்கிறான் என்னும் அம்சத்தை அறிய வேண்டும் என்கிறார். அதாவது, ஜீவர்களின் ஸ்வபாவத்திற்கேற்ப, செயல்கள் நடந்தாலும், அவன் மட்டும் பவளம், வஜ்ராயுதத்தைப் போல, பட்டும் படாதவாறு இருக்கிறான். இதுவே அவனுடைய வ்யாப்தி என்பதை அறிந்து கொள்ள வேண்டும் என்கிறார் தாஸர்.

25. **தே3வ மானவ தா3னவரு யெ**
**ந்தீ3வத3தி3 ஆவாக3 இப்ப1ரு**
**மூவரொளகி3வகி3ல்ல ஸ்னோஹோதா3ஸீன த்3வேஷ ।**
**ஜீவ ரதி4காரானுசாரத**
**லீவ சுக2 சம்சார து3க்கவ**
**தானுணதெ அவரவரிகு3ணிசுவ நிர்க3தாஷனனு ||(3-20)**

பகவந்தனின் ஆளுமையை விளக்க முற்பட்ட தாஸர், தேவதைகள், மானவர் மற்றும் தைத்யாதிகளில் தான் இருந்து, அவரவர்களுக்கு சுக துக்காதிகளையும், நட்பு, வெறுப்பு ஆகியவற்றை அவரவர்களின் அதிகார (யோக்யதைக்கேற்ப) ஸுகதுக்காதிகளை கொடுக்கிறான். தான் எதற்கும் சம்பந்தப்படாமல் இருக்கிறான் (நிர்லிப்தனாக). நம் நம் கர்மங்களுக்கேற்ப நாம் செய்த செயல்களுக்கு தக்க பலன்களை நமக்குக் கொடுக்கிறானே தவிர, அவனுக்கு அதில் சம்பந்தமில்லை.

26. **த1ப்த1லோஹவு நோள்ப1 ஜனரிகெ3**
**சப்த1ஜிஹ்வன தெ1ரதி3 தோர்1பு1து3**
**லுப்த1பா1வக1 லோஹ கா1ம்பு3து3 பூ1ர்வதோ3பா1தி3 ।**
**ஸப்த1வாஹன நிகி2ல ஜனரோ**

**ள் வியாப்தனாதுத3ரிந்த3 சர்வரு**
**ஆப்த1ராகி3ஹரெல்ல கா1லதி3 ஹித1வ கை1கொ1ண்டு3 ||)3-22)**

இரும்பை கொதிக்க வைக்கும்போது பார்க்கும் மனிதர்களுக்கு அது சேஷனின் நாக்கினைப் போல சிவப்பாக தெரிகிறது. பிறகு, அதனை தண்ணீரில் அல்லது சிறிது நேரத்திற்குப் பிறகு மறுபடி பார்த்தால், அது தன் பழைய நிலையை அடைகிறது அல்லவா? அதைப் போலவே, பகவந்தன், நம் தேகத்தில் இருக்கும் வரை நம் செயல்கள் நடக்கின்றன. அவன் வெளியேறிவிட்டான் என்றால், நாம் இரும்பினைப் போல ஜடமாக ஆகிவிடுகிறோம். அதாவது, நம் அனைத்து சுக துக்க செயல்கள் - அவன் நம் தேகத்தில் இருக்கும்வரை மட்டுமே. அவன் வெளியேறினால், நாம் பிணம் ஆகிறோம் அல்லவா?

27. **வாரித3னு மளெகெ3ரெயெ பெளெதி3ஹ**
**பூ4ருஹங்க3ள சித்ரப2லரஸ**
**பே3ரே பே3ரிப்ப1ந்தெ1 ப3ஹுவித4 ஜீவரொளகி3த்து3 |**
**மாரமணனவரவர யோக்யதெ1**
**மீரத3லெ கு3ண க1ர்மக1ள அனு**
**சார நடெசுவ தே3வனிகெ3 வைஷம்ய வெல்லிஹுதோ3 ||(3-23)**

ஓம் வைஷ்யம்ய நைர்குண்யாத் ஓம் என்பது பிரம்மஸூத்ரம். பகவந்தனுக்கு எந்த த்வேஷங்களும் இல்லை என்பதை இந்த ஸூத்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த பத்யத்தில் தாஸர் அதையே சொல்லி நமக்குப் புரிய வைக்கிறார். அதாவது, பூமி என்பது ஒன்றே. ஆனால், விதைத்த விதைக்கேற்ப மரம், செடி, கொடி, பூ, பழம் ஆகியவை வளர்கின்றன. அதைப் போல, பகவந்தன், பற்பல ஜீவர்களில் தானே அந்தர்யாமியாக இருந்து, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப பலன்களைக் கொடுக்கிறான். ஒருவருக்கு ஒரு மாதிரி, இன்னொருவருக்கு இன்னொரு மாதிரியாக பலன்கள் கிடைப்பதில்லை. இதுவே அவனுடைய வ்யாப்தி.

28. **பொ1ந்தி3கொ1ண்டி3ஹ சர்வரொளு ச**
**ம்ப3ந்த வாக3தெ சக1லக1ர்மவ**
**ரந்த3த3லி தா1 மாடி மாடிஸி தத்ப2லக3ளுணதெ3 |**
**கு1ந்த3தெ3 அணு மஹத்தெ1னிப க3ட1**
**மந்தி3ரதி3 சர்வத்ர து1ம்பி3ஹ**

**பா3ந்த3ளத3 தெ1ரனந்தெ1 இருதிப்பனு ரமாரமண ||(3-26)**

பகவந்தனின் வ்யாப்தி, ஸர்வகர்மங்களில், கர்மத்தின் உள்ளே இருந்து, அனைத்து ஜீவர்களில் செய்வித்து, தான் அதற்கு சம்பந்தப்படாதவாறு இருக்கிறான். அந்த கர்மத்தின் பலன்களை தான் ஏற்றுக் கொள்ளாமல், ஆகாஷ வ்யாப்தி எப்படி இருக்கிறதோ, அதைப் போலவே தான் அணு மஹத்தினில் அனைத்து இடங்களிலும், ரமா ஸமேத, இருந்து, அகோசரனாக இருக்கிறான். அதாவது, கர்மத்தில் தானே இருந்து, தானே கர்மங்களை செய்வித்து, தான் அனைத்து இடங்களிலும் இருந்தாலும், பலன்களை தான் உண்ணாமல், ரமாஸமேதனான ஸ்ரீஹரி அவற்றை ஜீவராஷிகளுக்கு உண்விக்கிறான் என்கிறார் தாசர்.

29. **மளல மனெகளமாடி3 மக்களு**
**கெலவு காலதொ3ளாடி3 மோத3தி3**
**து1ளிது3 கெ1டிசுவ தெ1ரதி3 லகு1மீரமண லோககள |**
**ஹலவு பகெயலி நிர்மிசுவ, நி**
**ஸ்சலனு தானாகி3த்து3 சலஹுவ**
**எலருணிய வோல் னுங்குவவகெல்லிஹுதோ3 சுக2து3க்க ||)3-28)**

மக்கள் மணலில் விளையாடி, தானே கட்டி பார்த்து மகிழ்ந்து, பிறகு அதை தானே கலைத்து (உடைத்து) ஓடிப் போகின்றனர். இப்படி செய்ததால் அவர்களுக்கு துக்கம் இல்லை. அதைப் பொல, பகவந்தன், தானே ஸ்ருஷ்டித்த இந்த உலகினை தானே நிர்மாணித்து, தானே அதனை லயம் செய்கிறான். இதனால் அவனுக்கு எந்த வித லாபமோ நஷ்டமோ இல்லை. இத்தகைய வ்யாப்தித்வ உள்ளவன் என்று பகவந்தனை அறிய வேண்டும் என்கிறார் தாசர்.

30. **எல்லரொளு தானிப்ப தன்னொள**
**கெ3ல்லரனு த3ரிசிஹனு அப்ரதி1**
**மல்ல மன்மதஜனக ஜக3தா3த்யந்த3 மத்3யகள |**
**ப3ல்ல, ப4ஹுகு3ணப3ரித தா3னவ**
**தல்லண ஜகன்னாதவிட்டல**
**சொல்லனாலிஸி ஸ்தம்பதிந்தலி பந்த பகு1தனிகெ3 ||(3-32)**

பகவந்தன், தான் அனைத்து ஜீவகோடிகளில் இருக்கிறான். தானே படைத்த ஜீவர்களை தனக்குள்ளேயே லயம் செய்கிறான். அத்தகைய மஹான் புருஷனன் ஆனாலும், தான் மன்மத ஜனகனாக, உலகின் அனைத்திற்கும் இவனே பொறுப்பேற்கிறான். குணபூர்ணனாக,

த்வேஷிகளுக்கு க்ரூரியாக, ஸஜ்ஜனர்களுக்கு உத்தார கர்த்ருவாகி, எப்படியெனில் ‘ஸம்ப்ரமதிந்தலி பகுதனிகெ’ பிரகலாதனுக்காக அவனின் பிரார்த்தனைக்கேற்ப, துஷ்டனான அவனின் தந்தையை சம்ஹரிப்பதற்காக வந்ததைப் போல.

தந்தை + மகனுக்காக, ஜடமான கம்பத்திலிருந்து வந்த சேதனர், பகவந்தன். ஜடகம்பத்திலிருந்து சேதனனாக வெளிவந்து, ஜீவத்வயரான தந்தையைக் கொல்வதற்கு, பிரகலாதனின் பிரார்த்தனையை ஏற்று, இவன் தன் பக்தன் என்று உலகிற்கு காட்டுவதற்கு; அதாவது, ஜீவ ஜீவ பேத, ஜட பரமாத்ம பேத, ஜட ஜீவ பேத, ஜீவ பரமாத்ம பேத என்பதை காட்டுவதற்கு; அதாவது, பஞ்சபேத மற்றும் ஸப்தம ஸ்கந்த விஷயத்தை இந்த பத்யங்களில் விளக்கியுள்ளார் தாஸர். இதுவே நவரஸங்களின் குணங்களை மீறிய இன்னொரு ரஸம் ‘பக்திரஸம்’ . இதுவே தாஸ ஸாகித்யத்தின் ருசி.

31. **வனஜஜாண்ட$^{3}$தொ$^{3}$ளுள்ளகி$^{2}$ல சே**
**தனரு பு$^{4}$ஞ்ஜிப சதுரவித$^{4}$ போ$^{4}$**
**ஜன பதா$^{3}$ர்த்த$^{2}$தி$^{3}$ சதுரவித$^{4}$ ரஸரூப தா$^{1}$னாகி$^{3}$ |**
**மனகெ$^{1}$ ப$^{3}$ந்துத$^{3}$னுண்டுணிஸி சம்**
**ஹனனகு$^{1}$ப$^{1}$சய க$^{1}$ரணகா$^{1}$ன**
**ந்த$^{3}$னிமேஷரிகா$^{3}$த்ம ப்ரதர்ஷன சுக$^{2}$வனீவ ஹரி ||(4-1)**

உலகில் இருக்கும் 84,00,000 யோனிகளுக்கு தேவையான உணவினை பகவந்தன், வெவ்வேறு ஆகாரங்களை, வெவ்வேறு வகைகளில் வைத்து, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப, அவற்றை அவர்களுக்கு போய்ச் சேருமாறு செய்து, அவர்களுக்கு தேக ஆனந்தத்தைக் கொடுத்து, சுகத்தைக் கொடுக்கிறான் என்கிறார் தாஸர்.

(தொடரும்)

**ஆராதனை**

## ஹரிதாசர்களின் சிந்தனைத் துளிகள்

## ஸ்ரீமோகனதாசர்

மோஹபய துக்காதி தூரம் லோஹலோஷ்ட சமீக்ஷணம் |
மாஹிதாங்க்ரி சரோஜ ப்ருங்கம் மோஹனார்ய குரும் பஜே ||

விஜயதாசருக்குப் பிறகு ஹரிதாச பரம்பரையை முன்னெடுத்தவர்களில் மோகனதாசரும் ஒருவர். விஜயதாசரின் வளர்ப்பு மகன், செல்ல மகன் தவிர ப்ரிய சிஷ்யனும் ஆகி, உயிர் இருக்கும்வரை குருவின் சேவையைச் செய்த மகான். மோகனவிட்டல அங்கிதத்தில் பற்பல பாடல்களை இயற்றி சாகித்யத்தை வளர்த்தார். 217 பத்திகளுடைய தாசரின் தீர்க்க க்ருதி - கோலு ஹாடு - பல அற்புத விஷயங்களை உள்ளடக்கி புகழ்பெற்றிருக்கிறது. பின்வந்த ஹரிதாச பரம்பரையினர் இவரை பக்தியுடன் வணங்கி தன்யர் ஆகியிருக்கின்றனர். 'யுக்தியல்லி மோஹன்னா' என்று பெயர் பெற்ற தாசர், தம் வளர்ப்புத் தந்தை - குருவான விஜயதாசரை பற்பல பாடல்களில் புகழ்ந்துள்ளார். பலருக்கு தாசதீட்சையைக் கொடுத்து பரம்பரையை வளர்த்தார். இன்னும் இவரின் பரம்பரையினர், விஜயதாசர கட்டெயில் அவரது சேவையை செய்து வருகின்றனர். இவரின் காலம் கிபி 1728-1815.

மோகனதாசரைக் குறித்து பாடிய பிராணேசதாசரின் பாடல்.

பாஹி பாஹி பாஹி குரு |குரு
மோஹன ராய பாஹி பாஹி ||ப||
பாஹி பாஹி குருமோஹன சிந்தூர
ஸ்ரீஹரி பாத பங்கேருஹ பஜக ||அப||
நவவித பகுதியிந்து சரபளிகளொளு
நவனவ ரூபதி நலிவ சுதீர ||1||
பதுமனாபன த்யானவ மதவேரி
பதோபதிகெ ஹரிபதாவகாஹே ||2||
விஜயதாசர பதரஜவ தரிசி நீ
ரஜ ப்ராணேச விட்டலனிரிசிதி ||3||

இவரது சுமார் 80 பாடல்கள் கிடைத்திருக்கின்றன. அவற்றில் சில தத்வங்கள் நிறைந்த நீண்ட பாடல்கள் ஆகும். ஸ்ரீவிஜயதாசர் கட்டெயில் சுமார் 60 ஆண்டுகள், கோபாலகிருஷ்ணனை பூஜித்த தன்யர். இவரது கட்டெயும் அங்கேயே இருப்பது சிறப்பு. பல க்ஷேத்திரங்களை தரிசித்து, தாச தர்மத்தை பரப்பினார். தீர விட்டலர் - அலவபோதர தத்வனெலெ எந்தே பரிசுதலி இருள்ஹகலு நித்ய ஸ்மரிஸி - என்றால், பிராணேச தாசர் - நவவித பகுதியிந்து சரபளிகளொளு, நவ நவ ரூபதி நலிவ சுதீரா - என்று வர்ணிக்கிறார்.

***

## இந்த மாத ஆராதனைகள்

**ஸ்ரீவிஜயீந்திர தீர்த்தர் (1505–1595)**

பக்தானாம் மானஸாம்போஜ பானவே காமதேனவே |
நமதாம் கல்பதரவே ஜயீந்திர குரவே நம: ||

கும்பகோணதி நெலெஸிஹரம்ம விஜயீந்திர தீர்த்தரு
ஷம்புபிதன பெத்தவன இம்பு தோருவரம்ம
சந்திரிகார்யர சிஷ்யரு எனிஸி
ஸுரேந்திரரிம் பீட படெதரம்ம
பந்தவரொந்திகெ வாதிஸி ஸ்பர்திஸி
அஜேய விஜயீந்த்ரரெனிஸிஹரம்ம
ஸ்ரேஷ்ட மங்களாங்க ஹரிவிட்டலன
நிஷ்டெலி பஹுகால பூஜிஸிதரம்ம
ஜ்யேஷ்ட கிருஷ்ண த்ரயோதஷி ஷுபதின
இஷ்டு தெய்வராமன ஸேரிதரம்ம ||
***

## அறிவிப்பு

* கொரோனா காலத்திற்குப் பிறகு, காகிதம் & ப்ரிண்டிங் கட்டணங்கள் மிகவும் அதிகமாகி விட்டதால், ஹரிதாச விஜயம் பத்திரிக்கையின் சந்தா தொகையை ஏற்றவேண்டிய நிலை வந்துள்ளது.
* நமது மற்ற புத்தகங்களைப் போல, ஹரிதாச விஜயம் மாத பத்திரிக்கையும் ப்ரிண்டிங் செலவினை மட்டுமே பெற்றுக்கொண்டு வெளியிடப்படுவதாகும். ஆனால், அதுவுமே தற்போது கடுமையான விலையேற்றம் அடைந்துள்ளது.
* எனவே, விரைவில் புதிய சந்தா கட்டணங்களின் அறிவிப்பு வரும். அனைவரும் தொடர்ந்து பத்திரிக்கைக்கான ஆதரவினை அளிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

**நன்றி ஹரே ஸ்ரீனிவாஸா**

**தொடர்**

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### 23. கல்பஸாதன ஸந்தி விடைகள்

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| [1]ப் | ர | வ | ர் | த | க | | [2]பி | [34]த் | தி | | [3]பி | பா | ஸ |
| ரா | | ணெ | த | ப் | லு | [27]க் | | யு | | [35]ஜ | [4]ஓ | [36]த | ன |
| [5]ந் | ரு | [41]ப | | [6]கு | யோ | னி | | [7]ம | ஹி | த | ர | க் | [28]ஜா |
| [8]த | ரு | வா | ய | ர் | வீ | [29]ஸு | | ணி | | லெ | | த | |
| [9]ம் | ரு | ட | | [37]த் | | [10]அ | ன | வ | த் | ய | [38]வ் | ப | |
| | | [42]கே | | [11]வி | மு | க் | த | து | க் | [12]க | ரு | ட | க |
| [13]ஸ | தெ | து | [39]சி | ஸ | ன | ச | ஸே | ப | [30]உ | | ஜி | வா | ங் |
| தா | | [43]ரு | த் | [14]ப் | ரா | ண | | | ப | | ன | [44]க | [45]லி |
| ர | [15]ஆ | கா | ர | த | ந் | ர | [31]பு | | [16]ச | ந் | ன் | தி | ர |
| த | [17]வை | ஷி | க | [18]ஸ | த | த் | ரு | தி | ய | | [46]சி | [40]க்ஷு | |
| | | | ர் | க | ர | [32]மா | | [19]ஸ | ம | வ | ர் | த் | தி |
| [20]நி | ர் | ம | ம | ரு | | | | தா | | [21]ல | லா | ட | ஸீ |
| ஸி | [22]அ | ர் | க | | க | தீ | ர | [23]ப் | ர | [24]மோ | த | [33]போ | [47]அ |
| | | [48]கூ | | | [25]சா | ரு | ப | [26]த | ன் | னொ | ஸ | த | |

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்
Haridasa Vijayam - Monthly

மலர் 3 ** July 2022 ** இதழ் 8



ஸ்ரீவரதேந்திர தீர்த்தர்

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 3 : இதழ் 8


| **நிர்வாக ஆசிரியர்** | **துணை ஆசிரியர்** |
|---|---|
| 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்<br>ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,<br>380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase, பெங்களூரு 560078<br>Ph.: 89044-58276.<br>haridasa.vijayam@gmail.com<br>jagannathakesava.blogspot.com | ' தாச சாகித்ய சேவா ரத்ன'<br>திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்<br><br>**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**<br>திரு. முரளிதர தாசரு,<br>திருமதி. நிர்மலா நரசிம்மன்,<br>திரு. லட்சுமிபதிராஜா,<br>திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ் |


**ஆராதனை**

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்
## ஜூலை 1 முதல் 31 வரை, 2022

ஜூலை 5 - ஆஷாட சுத்த சஷ்டி - ஸ்ரீவரதேந்திர தீர்த்தர், புனே
10 - ஆ சு ஏகாதசி - ஸ்ரீஸ்ரீத விட்டல தாஸர், கர்ஜிகி
13 - ஆ பௌர்ணமி - ஸ்ரீபிரஸன்ன ஸ்ரீனிவாஸ தாஸர், கோவை
21 - ஆ பகுள அஷ்டமி - ஸ்ரீதந்தெ வெங்கடேஷ விட்டலதாஸர், சித்ரதுர்கா
26 - ஆ ப த்ரயோதசி - ஸ்ரீகர்பர நரஹரி தாஸர், கர்பர
31 - சிராவண சுத்த த்ருதியை - ஸ்ரீஇபராமபுரத அப்பாவரு, இபராமபுர

## ஆசிரியர் பக்கம்

சென்ற இதழில் கூறியிருந்ததைப் போல, கொரோனா காலத்திற்குப் பிறகு ஹரிதாச விஜயம் பத்திரிக்கை ப்ரிண்டிங் செலவுகள் மிகவும் அதிகமாகி இருப்பதாலும், சந்தா தொகையில் மட்டுமே பத்திரிக்கை வெளிவருவதாலும், இனி சந்தா ஆண்டுக்கு ரூ.300 என ஆகிறது. அனைவரும் தங்களின் தொடர்ந்த ஆதரவை கொடுக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

வழக்கம்போல அனைத்து தொடர்களும் வந்து கொண்டிருக்கின்றன. இவை முடிந்தபின், ஹரிவாயு குருகளின் ஹரிதாஸர்களின் அருளால், மேலும் புதிய பகுதிகள் வருவதற்கு தயாராக உள்ளன எனவும் அனைவரும் இதனை படித்து, பாதுகாத்து, மற்றவர்களுக்கும் தகவல்களை அறிமுகம் செய்ய வேண்டும் என்பது என் விருப்பம்.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

**கன்னடம்**

**அருஞ்சொற்பொருள்**

**கடினமான சொற்களின் அர்த்தங்கள்**

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

1. பிரிது - பெரியது; 2. பிள்ளங்கோவி - புல்லாங்குழல்; 3. பீததனுஜ - ஹிரண்யாக்ஷ / ஹிரண்யகசிபு; 4. பாஷ்ய - விளக்கம்; 5. பாண்டெ - பாத்திரம்; 6. பவபந்தன - சம்சார பந்தனம்; 7. பூதேஷ - சிவன்; 8. பூப - அரசன்; 9. முக்தேஷ - நாராயண; 10. முக்யகதி - முக்தி

**ஜூன்-2022 இதழில் வந்த ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டிக்கு சரியான விடை எழுதி புத்தகப் பரிசு பெறுபவர்கள்:**

1. திருமதி. சந்திரா, கோவை 2. திருமதி. கீதா ராமசந்திரன், திருநெல்வேலி 3. திருமதி கிரிஜா ஜயதீர்த்தாச்சார், ஸ்ரீரங்கம்

தொடர்

## கேசவ நாமா

## 32. ஜோ ஜோ ஜோ ஜோ லாலி – ஜீவுபாய்

(சென்ற இதழின் தொடர்ச்சி)

முத்தெய்தெயரெல்ல ப³ந்து³ நெரெத³ரு
உத்தம ஸ்வர்க்க³ கலஷவ பூஜிஸுவரு
சித்தஜ னய்யன எத்திகொண்டி³ஹரு
மத்தெ தொட்டிலொளிட்டு ஜோகு³ளவ ஹாடி³த³ரு ஜோஜோ ||3

சுமங்கலிகள் கலச பூஜையை செய்து, பரமாத்மனை எடுத்துக்கொண்டு, தொட்டிலில் படுக்க வைத்து லாலி பாடுகின்றனர். இது அவர்களுக்கு ஸ்வர்க்க சுகத்திற்கு சமானமானதாகும்.

கலசத்தில் பகவந்தனின் 100 ரூபங்கள், ப்ருஹதி சஹஸ்ர ரூபங்களை நினைத்தவாறு, கலசத்தில் இருக்கும் அனைத்து ரூபங்களையும் ஸ்வர்க்கத்திலிருந்து இறங்கி வந்த கிருஷ்ண ரூபி குழந்தையில் கண்டு உபாசனை செய்தனர் கோபிகா ஸ்த்ரியர்கள்.

கேஷவனன்னு தன்னி நாராயணன்ன
அஸலி மாத⁴வ கோவிந்தனன்ன
ஸாஸிர நாமத விஷ்ணு மதுசூதனன்ன
ஸோஸிலி த்ரிவிக்ரம வாமனன்ன ஜோ ஜோ ||4

ஸ்ரத்தெ³யலி ஸ்ரீத⁴ர ஹ்ருஷிகேஷன்ன
பத்மனாபன கொ¹ள்ளி தாமோத³ரன்ன
ஷுத்த மனதி³ சங்கர்ஷண வாசுதேவனன்ன
ப்ரத்யும்னனு த¹ன்னி அனிருத்தனன்ன ஜோ ஜோ ||5

புருஷோத்தமன கொ¹ள்ளி அதோக்ஷஜன்ன
நாரசிம்ஹன த¹ன்னி அச்யுதனன்ன
ஸரஸதி ஜனார்த்த³ன உபேந்த்ரனன்ன
ஹருஷதிந்தலி கொள்ளி ஹரி ஸ்ரீகிருஷ்ணனன்ன ஜோ ஜோ ||6

ஹேகெ³ந்து³ தூ¹கு³த¹ ஜோகு³ள ஹாடி³
நாக³வேணியரு ஸம்ப்ரமதி³ந்த³ கூடி³

ஆக$^{3}$ கமலனாப விட்டலன்ன நோடி
பே$^{3}$க$^{3}$ ரக்ஷிகளனித்தரு த்$^{1}$வரெ மாடி$^{3}$ ஜோ ஜோ ||7

கேசவாதி 24 ரூபங்களால், கமலனாப விட்டலனான ஸ்ரீகிருஷ்ணனை தூங்கவைத்து, குழந்தைக்கு ரட்சையை இட்டு, கோபிகா ஸ்த்ரீயர்கள் கொண்டாடினர் என்றவாறு ஜீவுபாய் அவர்கள் 24 ரூபி பரமாத்மனுக்கு லாலி பாடுகிறார்.

## 33. ராதா கிருஷ்ண முராரி - கிருஷ்ண விட்டலதாசர்

ராதா$^{4}$ கிருஷ்ண முராரி ஜய ஜய
வேதவேத்யனே விஷ்ணு ஜய ஜய
மோத$^{3}$தீர்த்த$^{2}$ சுவந்த்ய ஜய ஜய
மாத$^{4}$வா மதுசூதனா ||ப

முராரியான, ராதா சமேதனான கிருஷ்ணனே வேதங்களால் புகழப்படுபவன். அவனுக்கு, மோத தீர்த்தரால் (ஸ்ரீமத்வர்) வணங்கப்படும் மாதவ, மதுசூதன, விஷ்ணுவிற்கு மங்களம் உண்டாகட்டும்.

ஸ்ரீதரா ப்ரத்யும்னா ஜய ஜய கோ$^{3}$த$^{4}$ரா ஸ்ரீமத்ஸ்யா ஜய ஜய
பூ$^{4}$த$^{0}$ராத$^{3}$ர கூர்ம ஜய ஜய பூ$^{4}$த$^{4}$வ தாமோதரா ||1

பூதேவியின் கணவனான தாமோதரனே, ஸ்ரீதர, ப்ரத்யும்ன, கோபால, மத்ஸ்ய, கூர்ம, வராக ரூபியான பரமாத்மனே உனது எல்லா ரூபங்களுக்கும் மங்களம் உண்டாகட்டும்.

நாரசிம்ஹ உபேந்த்ர ஜய ஜய சாரு வாமன போ$^{1}$ர ஜய ஜய
ஸ்ரீ த்ரிவிக்ரம வீர ஜய ஜய பா$^{4}$ர்க்க$^{3}$வா த்விஜ போஷகா ||2

பிரம்மாண்டத்தை காப்பாற்றுபவனான பரசுராமன், நரசிம்ம, உபேந்திர, வாமன, த்ரிவிக்ரம ரூபங்களுக்கு மங்களம் உண்டாகட்டும்.

ராம லோகோத்தா$^{3}$ர ஜய ஜய ஸாம வாசுதேவ ஜய ஜய
தீமதாம்வர பு$^{3}$த்த$^{3}$ ஜய ஜய ஸ்ரீமனோஹர கல்கி கலி வைரி ||3

கலி வைரியான கல்கியே, உலகத்தை காப்பவனான ராமனே, சாமவேத ப்ரியனான வாசுதேவனே. ஞானரூபி புத்தனே உனக்கு மங்களம் உண்டாகட்டும்.

ஈஷ ரஸ அனிருத்த ஜய ஜய தோஷ ஹர சங்கர்ஷண ஜய ஜய
ஸ்ரீஷ ஹரி ஹ்ருஷிகேஷ ஜய ஜய கேஷவா நாராயண ||4

ஸ்ரீஷனான ஈசனே கேசவா, நாராயண, அனிருத்த, தோஷங்களை பரிகரிப்பவனான சங்கர்ஷண, ஹரி, ஹ்ருஷிகேஷ உனக்கு மங்களம் உண்டாகட்டும்.

பா[3]தராயண த[3]த்த[1] ஜய ஜய வேத அச்யுத கபில ஜய ஜய
மத்[3]வகுரு மஹிதாஸ ஜய ஜய பத்மனாப அதோக்ஷஜ ||5

இதராதேவியின் மகனான மஹிதாஸ (ஐதரேய) பாதராயண, தத்த, அச்யுத, கபில, பத்மனாப, அதோக்ஷஜ உனக்கு மங்களம் உண்டாகட்டும்.

ஸ்ரீஜனார்த்தன ருஷப ஜய ஜய நைஜதேஜானந்த ஜய ஜய
வாஜிவத[3]ன இம் இந்த்ர ஜய ஜய ராஜ ப[4]குதர போ[4]ஜ சுரராஜ ||6

சுரர்களின் அரசனே, பக்தர்களுக்கு வேண்டப்பட்டவனே, ஜனார்த்தன, ரிஷப, அனந்த, ஹயவதன, இம்-இந்திரனே, உனக்கு மங்களம் உண்டாகட்டும்.

யக்ஞ அஜ தன்வந்த்ரி ஜய ஜய ப்ருத்வி கர்ப்ப[4] முகுந்த ஜய ஜய
சின்ன போ[3]த[4]க ஹம்ஸ ஜய ஜய சிம்சுமார சுமோஹினி ||7

அஜாதி ரூபியே, யக்ஞ நாமகனே, தன்வந்திரி, வாமன, முகுந்த, ஹம்ஸ, சிம்சுமார, மோகினி ரூபியான உனக்கு மங்களம் உண்டாகட்டும்.

பாண்டுரங்க விடோ[2]ப[3] ஜய ஜய துண்டவத்ஸல வரத[3] ஜய ஜய
க[3]ண்டு[3]க[3]லி திம்மப்ப ஜய ஜய ரங்கனாத பராத்யனந்தனெ ||8

பக்தர்களின் வரதனான பாண்டுரங்க விட்டலனே, புருஷோத்தமனான திம்மப்பனே, ரங்கநாதனே, உனக்கு மங்களம் உண்டாகட்டும்.

விஷ்வ தெய்ஜஸ ப்ராக்ஞ ஜயஜய ஷஷ்வதே[3]கனே து[1]ரிய ஜயஜய
ஸ்ரீஷ ஸ்ரீகிருஷ்ண விட்டல ஜய ஜய கோவிந்தா புருஷோத்தமா ||9

விஷ்வ, தெய்ஜஸ, ப்ராக்ஞ, துரிய நாமகனே, கோவிந்தனான உனது எல்லா ரூபங்களுக்கும் ஒன்றே ஆகியிருக்கின்றன. உனக்கு வெற்றி உண்டாகட்டும்.

மத்ஸ்யாதி 10 ரூபங்கள், கேசவாதி 24 ரூபங்கள், அஜாதி 51 ரூபங்கள், விஷ்வாதி 1000 ரூபங்கள், பராதி அனேக ரூபங்கள், ஆகிய பல்வேறு ரூபங்களில் அபேத சிந்தனை செய்தவாறு, இந்த அனைத்து ரூபங்களுக்கும் மங்களம் உண்டாகட்டும் என்று கிருஷ்ண விட்டல தாசர் பாடியிருக்கிறார்.

ஜய என்று 60 முறை பாடியிருக்கும் தாசர், யார் ஸ்ரீஹரிக்கு ஜய என்கிறார்களோ, அவருக்கு எப்போதும் ஜயமே உண்டாகும் என்னும் சிந்தனையை / செய்தியைக் கொடுக்கிறார். 60 என்றால் 60 ஆண்டுகள். அதாவது 60 ஆண்டுகளில் ஒவ்வொரு நாளும் ஸ்ரீஹரிக்கு மங்களத்தை வேண்ட வேண்டுமென்னும் தாசரின் அபிப்பிராயத்தை அறிய வேண்டும்.

## 34. ராம கோவிந்த ஹரி

ராம கோவிந்த ஹரி கிருஷ்ண கோவிந்த
கிருஷ்ண கோவிந்த ஹரி ராம கோவிந்த ||ப

ராம ராம கிருஷ்ண கிருஷ்ண - கிருஷ்ண கிருஷ்ண ராம ராம
ராம கிருஷ்ண ராம ராம - கிருஷ்ண ராம கிருஷ்ண கிருஷ்ண ||அப

மத்ஸ்ய கூர்ம பூ$^{4}$வராஹ - ஜெய் ஜெய் வாமன
நாரசிம்ஹ த்ரிவிக்ரம - ஷரணு உபேந்திர ||1
ஸ்ரீஷ விஷ்ணு புத்த கல்கி - ப்$^{4}$ருகு$^{3}$ஜ ஜயேஷ
வாசுதேவ ஹ்ருஷிகேஷ - கேஷவாச்யுத ||2

பத்மனாப அதோக்ஷஜ - அனிருத்த ஸ்ரீத$^{4}$ர
வேதவியாச கபில த$^{3}$த்த - மதுசூதன ||3
விஷ்வ தெய்ஜஸ ப்ராக்ஞ து$^{1}$ர்ய - பிரம்மதா$^{4}$ம
ப்$^{1}$ருத்$^{1}$னி க$^{3}$ர்ப்ப$^{4}$ மஹிதாஸ - புருஷோத்தம ||4

அஜப$^{1}$ர ஸ்ரீனிவாஸ - ஸாஸிரானந்த
வாஜிவதன சிம்ஷுமார - ஸச்சிதானந்த ||5
நாராயண ஜனார்த்தன - ஹம்ஸ ப்ரத்யும்ன
தாமோதர யக்ஞ ருஷப - தேவ மாதவ ||6

அப்ப உரகாத்ரி வாஸ - வெங்கடேஷ
அப்ரமேய ரங்கனாத - பாண்டுரங்க ||7
ஸத்யவ்யக்த ஸத்யனேத்ர - ஸத்யபர பி[4]ன்ன
நித்ய த்ருப்த ஸத்யதா[3]த[1] - புருஷ மஹாம்ஷ ||8

லக்ஷ்மி ரமண கிருஷ்ணவிட்டல - முக்தராஸ்ரய
லக்ஷ்ய மாடெ[3] முக்தி கொடு[3]வ - பக்தவத்ஸல ||9

ராம, கிருஷ்ண அவதாரத்திற்கும், கேசவாதி ரூபங்களுக்கும், கோவிந்த ஹரிரூபங்களுக்கும் அபேத சிந்தனையை பல்லவியில் சொல்லியிருக்கிறார். ராம கிருஷ்ண நாமங்கள் தாரக நாமங்கள் என்று பலமுறை இந்த பாடலில் நினைத்திருக்கிறார்.

கேசவாதி ரூபங்கள், மத்ஸ்யாதி ரூபங்கள், வேதவியாஸ, கபில, தத்த, விஷ்வ, தெய்ஜஸ, ப்ராக்ஞ, துரிய, ப்ருஷ்னிகர்ப்ப, மஹிதாஸ, அஜ, பர, ஸ்ரீனிவாஸ, ஹயவதன, சிம்சுமார, ஹம்ஸ, யக்ஞ, ருஷப, அப்ரமேய, ரங்கநாத, பாண்டுரங்க, சத்ய, புருஷ என இந்த அனைத்து ரூபங்களின் சிந்தனையை செய்திருக்கிறார் தாசர்.

இந்த அனைத்து ரூபங்களினாலும் பரமாத்மன் சத்யன், சத்யபரன், நித்யத்ருப்தன், ஞானத்தை வழங்குபவன், மஹாம்ஷன் ஆகியிருக்கிறான். பக்தவத்ஸலனும் முக்தர்களுக்கு அடைக்கலம் கொடுப்பவனுமான லட்சுமி ரமணனான கிருஷ்ண விட்டலனை நினைத்து வணங்கினால் முக்தி கிடைக்கும் என்கிறார்.

'ப்ருகுஜ ஜயேஷ' என்னும் சொல்லால் ப்ருகு + ஜ = ப்ருகுவின் மகளான லட்சுமியே ஜயாரூபி. ஜய + ஈஷ = ஜயாதேவியின் பதியே சங்கர்ஷண. பரமாத்மனைப் போல ரமாதேவியும் பரமாத்மனின் அனந்த ரூபங்களுக்கேற்ப தானும் அனந்த ரூபங்களை அவனது ஆணைக்கேற்ப ஏற்றிருக்கிறார் என்று கூறுகிறார் தாசர்.

(தொடரும்)

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

### ஹரிகதாம்ருதசாரத்தில் தேவதா-வர்ணனை

டாக்டர் சகுந்தலா ஷெட்டி, ராய்ச்சூர்

நாராயணரின் ஸ்தோத்திரத்தை செய்ய உதவுமாறு சரஸ்வதிதேவியை தாசர் வேண்டுகிறார். நான்முகப் பிரம்மனின் மனைவியானவர், தேவர்களின் சமூகத்திற்கு அபிமானியானவர், கைகளில் வீணை தரித்து, உலகத்திற்கு தாய் என்று அழைத்துக் கொள்பவர், லட்சுமியின் கணவனான நாராயணனை வணங்குவதற்கு சுத்தமான களங்கமற்ற புத்தியைக் கொடுத்து, நம் முகத்தில் எப்போதும் நின்று நிலைத்திருக்குமாறு சரஸ்வதிதேவியை பக்தியுடன் வேண்டிக்கொள்கிறார் தாசர்.

பிறகு பாரதிதேவியை வணங்குகிறார் தாசர். நாராயணனின் மகளாகி, வாயுதேவரின் மனைவியாகி, மிகவும் ரகசியமான ஸ்ரீஹரி தத்வங்களை அஞ்ஞானிகளான நமக்கு விளக்கவேண்டும் என்று வேண்டுகிறார். பாதராயணரான வேதவியாசரை வேண்டிக் கேட்டுக்கொள்வதாவது.

வேத[3]பீ[1]ட[2] விரிஞ்சி ப[4]வ ச
க்ராதி[3]சுர விக்ஞானதா[3]யக[1]
மோத[3] சின்மயகா[3]த்ர லோக[1]பவித்ர சுசரித்[1]ர |
சேத பே[4]த விஷாத[3] கு[1]டிலா
ந்தாதி[3] மத்[3]ய விதூ[3]ர ஆதா[3]
நாதி கா[1]ரண பா[3]த[3]ராயண பா[1]ஹி சத்[1]ராண || (1-7)

வேதங்களை பீடமாகக் (ஆசனமாகக்) கொண்டவரான, பாதராயண என்று அழைக்கப்படும் வேதவியாஸரூபியான ஸ்ரீஹரியே, உன் புகழ் பாடுவதற்கு எனக்கு சக்தியைக் கொடுத்து எனக்கு அருள்வாயாக என்று ஸ்ரீஜகன்னாததாசர் வேண்டுகிறார்.

ஸ்ரீவாயுதேவரின் அவதாரமான ஸ்ரீமத்வாசார்யரை வேண்டி வர்ணிக்கிறார். பரத-கண்டத்தில் மணிமந்தன் முதலான தைத்யன், ஹரித்வேஷிகள் பிறந்தனர். ஹரிசர்வோத்தமத்வம் என்னும் தத்வத்திற்கு எதிராக, பல குபாஷ்யங்கள் எழுதியபோது, மத்யகேஹபட்டர் மற்றும் வேதவதி ஆகிய பிராமண தம்பதியினருக்கு, பாரதிரமணரான வாயுதேவர் பிறந்து, மத்வாசாரியர்

என்று பெயர் பெற்று, 14 லோகங்களையும் வென்று புகழ்பெற்று, 21 குபாஷ்யங்களை நிராகரித்து, ஹரிசர்வோத்தமத்வம் என்னும் சித்தாந்தத்தை நிறுவிய மத்வாசாரியருக்கு சாஷ்டாங்க நமஸ்காரங்களை செய்வேன் என்று ஜகன்னாததாசர் வணங்குகிறார்.

உமாவின் கணவரான மஹேஸ்வரனை வணங்கும் ஸ்ரீஜகன்னாததாசர், ஸ்ரீஹரியின் இருப்பை அற்புதமாக வர்ணிக்கிறார். பார்வதிதேவியின் மனதை மகிழ்விப்பவர், உலகத்தின் அழித்தல் தொழிலை செய்பவர், யானைத் தோலை உடையாக அணிந்தவர், மன்மதனை தனது மூன்றாவது கண்ணினால் அழித்தவர், கைலாச மலையில் வசிப்பவர், தன் இடது கண்ணில் சந்திரனைப் போன்ற அமைதியைக் கொண்டவர், சூரியனைப் போன்ற தேஜஸ்ஸினை தனது வலது கண்ணில் கொண்டவர். உமாபதியானவர் வேண்டியவர்களுக்கு வேண்டிய இஷ்டார்த்தங்களை எப்போதும் கொடுக்கிறார்.

ஸ்ரீஹரியின் பக்தரான நமக்கு மங்களத்தை செல்வத்தைக் கொடுக்கவேண்டுமென்று வேண்டுகிறார். பின்னர் இந்திராதி தேவதைகளை வணங்கி, யதிகளான ஸ்ரீபத்பனாப தீர்த்தர், ஸ்ரீஅக்ஷோப்ய தீர்த்தர், ஸ்ரீடீகாசார்யரு, ஸ்ரீபாதராஜரு, ஸ்ரீவியாசராஜர், ஸ்ரீவாதிராஜர், ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள், ஸ்ரீபிரக்ஞாதீர்த்தர் ஆகிய யதி-ஸ்ரேஷ்டர்களையும் தாசகூட சமூகத்தில் ஸ்ரீபுரந்தரதாசர், ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீபாகண்ணதாசர் ஆகியவர்களை வணங்குகிறார்.

ஸ்ரீஜகன்னாததாசர் தேவதைகள் மட்டுமே வர்ணிக்காமல், அனைத்து உலகத்தையும் படைத்த ஸ்ரீஹரி படைத்த ஜீவர்கள், ஜடபொருட்கள் என அனைத்தையும் தன் வயிற்றில் வைத்து, அனைத்து இடங்களிலும் வியாபித்தவனாக, பிம்ப-க்ரியை மூலமாக இந்திரியங்களின் வியாபாரங்களை நடத்துகிறார் – என்கிறார். அதாவது, அனைவரிடத்திலும் அனைத்திலும் ஸ்ரீஹரியே வியாபித்திருக்கிறார்.

சேத1னாசேத1ன விலக்ஷண
நூத1ன பதா3ர்த்த1க3ளொளகெ3 ப3லு
நூத1னதி3சுந்த3ரகெ1 சுந்த3ர ரசக்கே1 ரசரூப1 |
ஜாத1ரூபோ1த3ர ப4வாத்யரொ

ளாத3த1பி1ரதி1ம ப்1ரபா4வ த3
ராத1லதொ3ளெம்மொட3னெ ஆடு3த1லிப்ப1 நம்மப்ப1 || (2-13)

ஸ்ரீஹரியின் அம்சம் நம்முள் இருப்பதனால், ஜீவிகளான மக்களை தந்தை-தாயின் ரூபத்தில் நின்று அனைத்து நேரங்களிலும் காக்கிறார் என்கிறார் தாசர். நமது கர்வம், அஹம், பாவகர்மங்களை தூர ஓட்டுவதற்கு, ஞான, பக்தி, வைராக்யகம் என்னும் மந்திரங்களை உச்சரித்து, ஜீவர்களின் தேகத்தில் நுழைந்து, வைகுண்டத்திற்கு அழைத்துப் போவதற்குக் காத்திருக்கிறார் ஸ்ரீஹரி என்கிறார் தாசர்.

ஒட3ல நெளலந்தத3லி ஹரிநம்
மொட3னெ தி1ருகு3வ நொந்த3ரெக்1ஷண
பி3டதெ3 பெ3ம்ப3லனாகி3 ப3க்தா1தீ3னனெந்தெ3னிஸி |
த1டெ3வ து3ரித1வ்க3க3ள கா1மத3
கொ1டுவ சக1லேஷ்ட1க3ள சந்த1த1
நடெ3வ நம்மந்த3த3லி நவசுவிசேஷ சன்மஹிம || (2-25)

ஸ்ரீஹரி நம்முடனேயே பிம்பரூபியாக இருக்கிறார் என்றால், நம் நிழலானது நம்முடனே இருந்தாலும் நமது செயல்களுக்கு எப்படி அதற்கு தொடர்பில்லையோ அப்படி பிம்பக்ரியை என்பது மட்டும் உண்டு. பிரதிபிம்பக்ரியை என்பது கிடையாது. அதாவது பிம்பரூபி ஸ்ரீஹரி ஸ்வரூப யோக்யதைக்கு தக்கவாறு செயல்களைச் செய்தால் ஜீவனான பிரதிபிம்பன் அதையே செய்கிறான் என்றும் ஸ்ரீஹரி, பக்தனுக்குக் கட்டுப்பட்டவன் என்றும் சொல்கிறார். மேலும் சரீரத்தின் ஒவ்வொரு உறுப்புகளிலும் ஸ்ரீஹரியின் ரூபத்தைப் போல எந்தவொரு பலன்களையும் எதிர்பார்க்காமல், கண்களை இமை காப்பதுபோல், பற்கள் பொருட்களைக் கடித்து நாக்கிற்குக் கொடுப்பதைப்போல், ஸ்ரீஹரியும் எந்தவொரு பலனையும் எதிர்பார்க்காமல் பிரதிபிம்பனான பக்தர்களுக்கு அருள்கிறார் என்று ஸ்ரீஹரி எப்போதும் நம்மைக் காப்பாற்றுவதை சொல்லியவாறு, ஸ்ரீஜகன்னாததாசர் ஸ்ரீஹரியின் அவதாரங்களை வர்ணிக்கிறார்.

மீன கூர்ம வராஹ நரப1
ஞ்சானனாது1லஷௌர்ய வாமன
ரேணுகா1த்மஜ ராவணாரி நிஷாசரத்வம்ஸி |
தே3னுகா1சுரமத1ன த்1ரிபு1ரவ
ஹானிகை1சித3 நிபு1ண க1லிமுக1
தா3னவர சம்ஹரிஸி த4ர்மதி3 கா1ய்த3 சுஜரஜன || (2-30)

ஸ்ரீஹரியானவர் மத்ஸ்யாவதாரம் எடுத்து, வேதங்களைக் காப்பாற்றினார். கூர்மாவதாரத்தினால் மந்தரமலையை தன் முதுகில் தாங்கிப் பிடித்தார். வராகாவதாரத்தினால் பூமியைக் காப்பாற்றினார். சிம்மரூபியான நரசிம்மாவதாரம், வாமனாவதாரத்தினால், த்ரிவிக்ரமரூபத்தினால் பாகீரதியைக் கொண்டு வந்து, ரேணுகாவின் மகனாக பரசுராமனாக அவதரித்து, அசுரர்களான ராவண, கும்பகர்ண, கர, தூஷணர்களைக் கொல்பவனாக, த்ரிபுராசுரர்களை ருத்ரதேவர் மூலமாக அழிப்பவனாக, இப்படி ராம, கிருஷ்ண, புத்த மற்றும் கல்கி அவதாரங்களை ஸ்ரீஹரி எடுத்தார் என்று ஜகன்னாததாசர் கூறுகிறார்.

பிரம்மாண்டத்தைப் படைத்த ஸ்ரீஹரியானவர் நான்கு யுகங்களில் அவதாரம் எடுத்தார். க்ருதயுகத்தில் மத்ஸ்ய, கூர்ம, வராக, நரசிம்ம அவதாரங்களையும்; த்ரேதாயுகத்தில் வாமன, பரசுராம, ராம அவதாரங்களையும்; த்வாபரயுகத்தில் கிருஷ்ண, த்வாபர மற்றும் கலியுக சந்தியில் பௌத்தாவதாரமும் ; மற்றும் இந்த கலியுகத்தின் இறுதியில் கல்கி; என்று பத்து துஷ்டர்களைக் கொல்வதற்காக பத்து அவதாரங்களை எடுக்கிறேன் என்று ஹரிகதாம்ருதசாரத்தில் ஸ்ரீஹரியின் ஸ்வரூபத்தை அனைத்து சந்திகளிலும் பஞ்சபூதங்களில், பஞ்சகோஷகளில், பிரம்மாண்டத்தில் என அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கும் ஸ்ரீஹரியானவர் சர்வோத்தமனாக இருக்கிறார் என்று விளக்கும் ஹரிகதாம்ருதசார கிரந்தமானது கன்னட ஹரிதாச சாகித்யத்தின் உச்ச கிரந்தமாகக் கருதப்படுகிறது. பாமினி ஷட்பதியில் இயற்றப்பட்டுள்ள இந்த கிரந்தத்தில் ஸ்ரீஹரியிடம் காட்டும் பக்தியின் சிறப்பினை விளக்குகிறது. மத்வமதத்தின் ரகசியங்களை எடுத்துரைக்கும், ஸ்ரீஹரியின் கதாம்ருதத்தின் சாரத்தை விளக்குகிறது.

ஸ்ரீஹரியைப் பற்றி நமக்கு விளக்கியவாறு பஞ்சபூதங்கள், பஞ்சகோஷங்கள், பஞ்சேந்திரியங்கள், பிரம்மாண்டம் என அனைத்தைப் பற்றி சொல்லும்போதும், ஸ்ரீஹரி ஒவ்வொரு தேவதைகளின் ரூபத்தில் அவதரித்ததை விளக்கும்போதும், ஸ்ரீஜகன்னாததாசர் ஒரு கற்றறிந்த பண்டிதர், ஞானிகள் என தெரியவருகிறது. ஹரிகதாம்ருதசாரத்தில் ஸ்ரீஹரியின் ரூபங்கள் மிக அழகாக விளக்கப்பட்டிருப்பது தாச சாகித்யத்தில் வேறெங்கும் காணமுடியாததாகும்.

(இந்த கட்டுரை இத்துடன் முடிந்தது).

***

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்
## யதுகிரியம்மா - 1820 - 1908

(சென்ற இதழின் தொடர்ச்சி)

(6) காஞ்சி வரதராஜரின் ஸ்துதி

கரிகிரிவாஸ வரதராஜ கரிகிவாஸ ||ப

கரிகிரி வாஸனெ துரித வினாஷனெ |
ஸுரமுனி போஷனெ பவரோக நாஷனெ ||அப

அஜன யாகதலி யக்ஞகுண்டதலி உதிஸி பந்தெ
(பஜக) பக்தரிகெ வரகள கொடுதலெ வரத
ராஜனெம்போ பிருது ஹொத்திஹ தேவ ||1

சதுர ஹஸ்ததலி கை பிடிது
திவ்யவாத ஷங்கசக்ரகதெயலி
மாயாபாஷவன்னெல்ல கத்தரிஸி
நிம்ம பாதவ ஸேரிஸு என்ன சித்தஜ ஜனக ||3

பவ பிஸிலினலி பளலி பந்தெ தாபத்ரயதல்லி
நிம்ம சரண பங்கஜவெம்போ அதபத்ரத நெரள
ஸேரிஸென்னய தாப தூர மாடிஸோ தேவ ||6

விந்த்யாரண்யதலி பக்தரு கரெயெ பந்தெ பேகதலி
இந்திரெ ஸஹிதாலெ தீர்த்தவ க்ரஹிஸி பக்தர கரெ
தந்து கரிகிரியலி நிந்த வரதராஜ கரிகிவாஸ ||8

பிரம்மனின் யக்ஞ குண்டத்திலிருந்து வந்த வரதராஜன், தன் சங்கு சக்ர கதைகளால் பக்தர்களை காக்கிறான் என்று, அவருக்கு வரம் கொடுக்கிறான். பவதாபத்தில் வென்று நொந்திருக்கும் யதுகிரியம்ம வரதாயகனான ஸ்ரீ ஹரியின் சரணாரவிந்தங்களில் சரணடைகிறேன்.

7. கங்கா ஸ்துதி

மங்களம் ஜயது பாகீரதிகெ
ஜயமங்களா யமுனெ ஸரஸ்வதிகெ ||ப

வாமன ரூபிலி தானவ பேடி

14 - ஹரிதாச விஜயம் – ஜூலை 2022

ப்ரேமதிம் பாதவ மேலக்கெ நீடலு
நேமதிம் தடெது பிரம்மண்டதிந்த
ஸம்மானதிந்த பொரடுபந்த தேவிகெ ||1

ஶ்ரீஹரிய பாததலி உத்பவிஸித கங்கேகெ
ஹரன ஷிரதல்லி வாஸவாதவளிகெ
பரதி பகீரத தபவ மாடலு தரணிகெ
இளிதுபந்த தேவிகெ ||2

பகீரதன பதவிடிது பேடி பந்த
பாகீரதி எம்போ ஹெஸருபொத்து அவன
பாகிகளிகெ மோக்ஷவன்னித்து ஹருஷதி
யோகிகளு ஸ்துதிப கங்காதேவிகெ ||3

பிரம்மா ரிஷியாபவன மாடி பிடுவாக
ஜான்ஹவி எனிஸிதெ ஜகதொளகெ
ஜனரிகெ ஜனன மரண கொடதெ பிடிஸி
ஜாணதனதி முக்தி கொடுவவளிகெ ||4

(த்ருடதி) பலபாகதி பாகீரதி பருதிரெ
யெடத பாகதலி யமுனெ பருதிரலு
நடுவெ சரஸ்வதி த்ரிவேணியெந்தெனிஸி
பொடவிகதிகயாகி மெரெயுவ தேவிகெ ||5

பந்து பாகீரதீகெ வந்தனெகள மாடி
தந்து புஷ்பவ துளஸி க்ஷீரவனு
சந்ததிம் பூஜெமாடி வேணி மாதவகெ
அந்து வந்திஸிதவரிகெ ||6

ஸ்ருஷ்டிய மேலுள்ள ஜனரெல்லரு பந்து
முட்டி முளுகி பூஜிஸிதவர
இஷ்டார்த்தகளனு கொடுவெனெந்தெனுதலெ
திட்ட வெங்கடன பாத தோருவளு ||7

இந்த கீதையில் கங்கை ‘ஸ்ரீ ஹரியின் பாதத்திலிருந்து தோன்றினாள். பகீரதனின் முயற்சியால் பூமிக்கு வந்து பாகிரதி ஆனாள். ஹரனின் தலையில் ஏறினாள். ஜன்ஹு ரிஷியின் காதிலிருந்து வெளியே வந்த

கங்கை, ஜான்ஹவி ஆனாள். பிரயாக க்ஷேத்திரத்தில் யமுனை, சரஸ்வதி உடன் சேர்ந்து, த்ரிவேணி சங்கமம் ஆனாள். இத்தகைய சிறந்த கங்கையை பூஜித்து வணங்கினால், அவருக்கு ஜனன மரணங்களின் பயம் இல்லை. பக்தர்களுக்கு இஷ்டார்த்தங்களைக் கொடுத்து, ஸ்ரீஹரியின் சரணாரவிந்தங்களை காட்டுகிறாள் - என்று யதுகிரியம்மா கங்கைக்கு சம்பந்தப்பட்ட அனைத்து சம்பவங்களையும் மிகவும் அழகாக விளக்கி, கங்கைக்கு மங்களம் பாடியிருப்பது மிகவும் அழகாக இருக்கிறது.

8. உடுப்பி ஸ்ரீகிருஷ்ணனின் ஸ்துதி

த்ருஷ்டி இத்யாதகெ உடுபி கிருஷ்ணன்ன நோடத ||ப

கோபியர பூஜெ க்ரஹிஸி கோபி சந்தன ஸஹிதவாகி
வ்யாபாரவ ஹடகீலி பந்த ஸ்ரீபதிய நோடத ||1

கல்ல ஸதிய மாடி காளிங்க ஷிரத மேலெ நாட்யவனாடி
துருள ஷகடனன்னு துளித வரத வெங்கடக்ருஷ்ணன நோடத ||11

யதுகிரியம்மா, உடுப்பீல் ஸ்ரீகிருஷ்ணனின் தரிசனம் செய்தபோது, இயற்றிய கீர்த்தனை இது. மத்வராயருக்கு தரிசனம் அளித்து, பத்மனாப புரத்தில் நிலைத்த, அஷ்டமடத்தின் யதிகளால் பூஜை ஏற்றுக் கொண்ட கடகோலு கிருஷ்ணனை, 11 நுடிகளில் பாடியிருக்கும் இந்த கீர்த்தனை மிகவும் அழகாக இருக்கிறது. த்ரேதாயுகத்தில் ஒரு சாபத்தின் விளைவால் பாறையாக இருந்த அகலிகைக்கு, ஸ்ரீ ராமனாக அவதரித்து, சாபவிமோசனம் கொடுத்த; த்வாபர யுகத்தில், காளிங்கனின் தலை மேல் நாட்டியமாடிய ஸ்ரீகிருஷ்ணனை, ஸ்ரீஹரியை காணாதா கண்கள் இருந்தும் என்ன பலன் என்கிறார் யதுகிரியம்மா. இந்த கீர்த்தனை ஸ்ரீபாதராயரின் ‘கண்களித்யாதகோ காவேரி ரங்கன நோடத’ என்னும் கிருதியை நினைவுபடுத்துகிறது எனலாம்.

9. மேலுகோடெ

யதுகிரிய வாஸ நாராயண யதுகிரியவாஸ ||ப
யதுகிரிவாஸனே புதஜன போஷனெ
மதமுக ஷிக்ஷனெ பதுமதளாக்ஷனெ ||அப

மாண்ட்யாவின் மேலுகோடெ - ஸ்ரீவைஷ்ணவரின் திவ்ய க்ஷேத்திரம் ஆகும். மேலுகோடெ யதுஷைல, வேதாத்ரி, தக்ஷிணபதரி என்று புகழ் பெற்றிருக்கிறது. அங்கு நிலைத்திருக்கும் திருநாராயணனை,

வணங்கியிருக்கும் கிருதி இது. 5 நுடிகள் உள்ள இந்த கீர்த்தனையில், ஸ்ரீஹரியின் தசாவதாரங்களை விவரித்து, பல குறிப்புகளால் நாராயணனை வணங்குகிறார்.

10. ஸ்ருங்கேரி சாரதைக்கு மங்களம்

மங்களம் ஸ்ரீ சரஸ்வதி தேவிகெ
ஜயமங்களம் சரஸிஜோத்பவனரஸிகெ ||ப

இந்த கீர்த்தனையில் ஆத்ம நிவேதனை பாவத்தினால், சர்வாபரண பூஷிதையான சரஸிஜோத்பவனின் மனைவியான ஸ்ருங்கேரி சாரதைக்கு வெற்றியையும், மங்களத்தையும் பாடுகிறார் யதுகிரியம்மா.

ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் நடக்கும் பற்பல உற்சவங்களையும் மற்றும் பற்பல சேவைகளைப் பற்றி யதுகிரியம்மா சுமார் 22 கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார். ஒவ்வொரு மாதமும் ஸ்ரீரங்கத்தில் நடக்கும் உற்சவத்தின் சிறப்புகளின் விவரணைகளை இந்த கீழ்க்கண்ட பாடலில் தொகுத்திருக்கிறார்.

(தொடரும்)

## தினம் ஒரு பத்யம்

https://dasa-sahitya.blogspot.com என்னும் நம் தளத்தில் வந்து முடிந்த ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர் இயற்றிய ‘மத்வ விஜய ஸார ஸங்க்ரஹ’ உரையைத் தொடர்ந்து, தற்போது தினமும் ஒரு பத்யமாக ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர் இயற்றிய ‘ஹரிதாஸ தர்பண’ என்னும் கிருதி, தமிழில் அர்த்த விளக்கங்களுடன் வந்து கொண்டிருக்கிறது. அனைவரும் தினமும் அந்த தளத்திற்குச் சென்று இதனை படித்து பயனடைய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். நன்றி. ஹரே ஸ்ரீனிவாஸா.

## இந்த மாத ஆராதனைகள்

**ஸ்ரீ ஸ்ரீதவிட்டல தாசர் (1740-1820)**

பலஸ்துதி ப்ரவக்தாரம் ஜகன்னாதார்ய ஸேவகம் |
ஸ்ரீகிருஷ்ண ஸத்பக்தம் வந்தே ஸ்ரீ ஸ்ரீதவிட்டலம் ||

அங்கனெய ஸங்கதலி ரங்கனனு மரெது
ரங்க ஒலித தாஸர அனுக்ரஹதி எச்செத்து
துங்க ஹரிகதாம்ருதஸாரகெ பரெது பலஸ்துதி
மங்களாங்க ஹரிவிட்டலன மெரெஸிதரு ஹொத்து

**ஸ்ரீகார்பர நரஹரி விட்டலதாசர் (1896-1979)**
கார்பரேஷ க்ருபாபாத்ரம் கிரியாசார்ய நாமகம்
மௌனத்யான ஸதாஸத்த வந்தே ந்ருஹரி ஸேவகம் ||

கொப்பர கிரியாசார்யர ஜீவன
அப்ப ஸ்ரீ நரஹரி பக்தியிந்த பாவன
தப்பதெ வ்யாஸ தாஸஸாஹித்ய தத்யயன
ஒப்பவாகி ரசிஸித நூராரு கீர்த்தன
கார்பர நரஹரி விட்டலாங்கித த்யான
கோப்ய மங்களாங்க ஹரிவிட்டலன அதீன ||

**ஸ்ரீ இபராமபுரத அப்பாவரு (1789-1869)**
பாரதீஷ பதத்வந்த்வ ஸாரஸ ப்ரமராயிதம் |
ஸூரவத்காந்தி ஸம்பன்னம் கிருஷ்ணாசார்ய குரும் பஜே ||

பஹு ஸஜ்ஜனரிகெ ஸன்மார்க்கதோரி அனுக்ரஹிஸிதரு
அஹர்னிஷி பஞ்சமுகி ப்ராணதேவர பூஜிஸிதரு
இஹலோகதி மூரனே கக்ஷத ருஜுகளெந்தெனிஸிதரு
மஹித மங்களாங்க ஹரிவிட்டலன பஜகரு அப்பாவரு ||

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### 25. ஆரோஹண தாரதம்ய ஸந்தி

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | 25 | | ■ | 2 | | 26 | 27 | | | | | 16 |
| | ■ | 3 | | | | | | | | | | | |
| | | | | 17 | ■ | | | | | 38 | 39 | | |
| | 4 | | | ■ | 28 | | ■ | ■ | 40 | 29 | ■ | 41 | 42 |
| | | 18 | 30 | 5 | | 43 | | | 6 | | | | ■ |
| 7 | | | | 31 | | | | | | | | | 19 |
| | ■ | ■ | | | 8 | | | | | ■ | 44 | ■ | |
| | 32 | ■ | | | ■ | ■ | | | 33 | 20 | | | 21 |
| | | 34 | ■ | 9 | | 35 | | | | ■ | ■ | 36 | |
| 37 | | | | 22 | | | 10 | | | | | 23 | ■ |
| | | | 11 | | | | | 24 | | ■ | ■ | | ■ |
| | 12 | | | 13 | | 14 | | 15 | | | | | ■ |

| |
|---|
| குறுக்கெழுத்துப் போட்டிகளை வடிவமைத்துக் கொடுப்பவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி |
| குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam @ gmail.com / அல்லது 89044 58276 க்கு வாட்சப் செய்யலாம். |
| ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப், அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்து சொல்லலாம். |

**இடமிருந்து வலம்:**1.அக்னி(4), 2.ஸத்கர்மங்களைசெய்பவர்கள்(5), 3.நட்சத்ரங்களின் அதிபதி(4), 4.ப்ரஹ்மனின் உள்ளங்கையில் பிறந்தவன்(3), 5.இந்திரனின் யானை(5), 6.தக்ஷ ப்ரதாபதியின் மனைவி(4), 7.தேவதைகளில் ப்ரஸித்தி அடையாத தேவதைகள்(10), 8.யது வம்ஸத்தின் ராஜரிஷி(5), 9.அபிமன்யு, உத்திரையின் புத்திரன்(4), 10.மேகாபிமானி, கலைந்துள்ளது.(3), 11.ஸமுத்திரம்(4), 12.புத்திரன்(4), 13.ஜலாபிமானி(3), 14.ஸ்ரீஹரி(3), 15.நூறுகோடி(4).

**வலமிருந்து இடம்:** 10.காமனின் வில்(4), 16.சுக்ராச்சாரியார்(5), 17.ப்ரவஹ வாயுவின் மனைவி(4), 18.நீரில் உதித்த தாமரை(3), 19.ஸப்த ரிஷிகளில் ஒருவர்(3), 20.ஆதித்தியர்களில் ஒருவர்(4), 21.சந்திர வம்ஸத்து காதி ராஜனின் மகன். முதல் பாதி(3), 22.க்ருத யுகத்தின் இறுதியில் சதுர்முக ப்ரஹ்மனின் மானஸ புத்திரன்(5), 23.ப்ருகு புத்திரன்(4), 24.மனைவி(3).

**மேலிருந்துகீழ்:** 1.நல்ல மணம்(4), 6.வேனனின் மகன்(3), 7.ஆக்னேய திக்கின் அபிமானி(5), 18.பேச்சு(2), 19.க்ராணேந்திரிய அபிமானி(4), 25.சலனமற்ற சுத்தஜட
வஸ்துக்கள்(4), 26.ஸ்வாயம்புவ மன்வந்தரத்தில் ப்ரஹ்மனின் மானஸ புத்திரன்(3), 27.பக்ஷிகளில் ஸ்ரேஷ்டமான கருடன்.(3), 28.பஞ்க கன்னிகைகளில் ஒருவர்(2), 29.சூரியன்(3), 30.புலிகள்(4), 31.சக்ரவர்த்தி(4), 32.க்ஞானிகள்(4), 33.ஸ்வர்க்க லோகத்து நதி(4), 34.முகம்(3), 35.மனுஷ சக்ரவர்த்திகள். கலைந்துள்ளது.(4), 36. ஏணி. கடைசி எழுத்து இல்லை(4) 37.நரகலோகாதிபதி(3).

**கீழிருந்துமேல்:** 7.வெள்ளாடு(2), 38.ப்ரஹ்மாவின் ஹ்ருதயத்திலிருந்து ஜனித்தவன்(3), 39.கோகுலம்(3), 40.ப்ராஹ்மணர்கள்(4), 41.திக்பாலகர்(4), 42.கங்கா(4), 43.இஷ்வாகு வம்ஸத்தின் குல புரோகிதர்(5), 44.க்ருஷ்ணன் – வேறு பெயர்(2).

தொடர்

## ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர்

### 2. மத்வமுனிகளின் வர்ணனை

டாக்டர் கே. கோகுல்நாத்

**(சென்ற இதழின் தொடர்ச்சி)**

ஸ்ரீமதானந்த தீர்த்தர் பிரம்மஸூத்ரங்களுக்கு புதிய வ்யாக்யாத்தைக் கொடுத்து, மொத்தம் 37 கிரந்தங்களை சம்ஸ்கிருதத்தில் இயற்றி, 21 முந்தைய ஸித்தாந்தங்கள் எப்படி தவறாக இருக்கின்றன என்பதை நிர்ணயம் செய்து, அந்த ஸித்தாந்தங்களை நிராகரித்து, த்வைத வேதாந்தத்தை ப்ரதிஷ்டை செய்தார். தம் ஸித்தாந்தத்திற்கு 'தத்வவாத' என்று நாமகரணம் செய்தார். ஆஸேது ஹிமாசல பர்யந்தமாக சஞ்சாரம் செய்து, அன்றைய வித்வாம்ஸர்களுடன் வாதம் செய்து, தம் ஸித்தாந்தத்தை நிறுவினார். இதனை ஒப்புக் கொண்ட பல வித்வாம்ஸர்கள் மற்றும் லட்சக்கணக்கான மக்கள், இவருடைய ஸிஷ்யரும், பின்பற்றுபவர்களும் ஆயினர்.

ஸ்ரீஹரி ஒருவனே ஸர்வோத்தமன். லட்சுமிதேவி நித்ய முக்தள்; ஸ்ரீஹரியுடனேயே எப்போதும் இருப்பவள். பிரம்மாதி சேதனர் ஸாதனையினால் மோட்சத்தை அடைகிறார்கள். ப்ரபஞ்சத்தில் இருக்கும் ஜீவ ஜட பரமாத்மருக்கு ஐந்து விதமான பேதங்கள் உண்டு. ஜீவனோ, ஜடமோ அவை ஒன்றல்ல. குண, சக்தி, ஸ்வரூபங்களால் வேறுபட்டவை. வேத அபௌருஷேயமானது. அனந்தானந்த எண்ணிக்கையில் இருக்கும் வேதங்கள் நித்யமானவை. அவற்றிற்கு நாசம் இல்லை. ஸாதனையின் காலம் ஜீவ ஜீவர்களுக்கு வெவ்வேறாக இருக்கிறது. ஹரிபக்தியினால் மட்டுமே அபரோக்ஷம் சாத்தியம் ஆகிறது. ஹரித்வேஷத்னால் நரகம் கிடைக்கிறது.

ஜீவர்கள் அஸ்வதந்த்ரர். ஜீவர்களின் ஸ்வரூப, கர்மங்களுக்கு ஏற்ப தத்வாபிமானி தேவதைகள் ப்ரேரணை செய்து, அனைத்து கர்மங்களையும் நடத்துகின்றனர். ஜீவனுக்கு சிறிது ஸ்வதந்த்ரமும் இல்லை. ஸ்ருஷ்டி லயங்களை, ஸ்ரீஹரியே பிரம்ம ருத்ரர்களில் நின்று, அவர்களுக்கு சக்தியைக் கொடுத்து, காரியங்களை நடத்துகிறார். ஸ்திதி காரியங்களை விஷ்ணுவே நிர்வாகம் செய்கிறார்.

ஸத்ய, ந்யாய, பிரமாணம், பரோபகாரம், பஜனை, பூஜை, த்யானம், தானம், ஸத்கர்ம ஆசரணை, ஸ்ரீஹரி கதா ஸ்ரவணம், ஸர்வகர்ம ஸமர்ப்பணைகளால் ஸத் ஸாதனை ஆகிறது. அனைத்து ஜீவர்களின் ஜீவாந்தர்கத பிம்பரூபி ஹரியின் பூஜையை அனுசந்தான பூர்வகமாக செய்வதே சாதனைக்கு வழியாகும். ப்ரதிபலன்களை எதிர்பார்க்காமல் அனைவருக்கும் உதவி செய்வது, இவற்றை தகுதிக்கேற்ப செய்து, அவர்களிடமிருந்து எந்தவொரு ப்ரதிபலன்களிஅயும் எதிர்பார்க்காமல், அவற்றை பிம்பரூபி ஸ்ரீஹரிக்கு கர்ம சமர்ப்பணம் செய்வதே ஸத்ஸாதனை ஆகும். இதுவே ஸ்ரீஹரிக்கு பிடித்தமானது என்னும் விஷயம் இவருடைய கிரந்தங்களில் இருக்கிறது.

மத்வாசர்யரின் கிரந்தங்களை 'ஸர்வமூல' என்று அழைக்கிறோம். இந்த விஷயங்களையே, ஸ்ரீபிரஸன்ன வெங்கடதாஸர், தம்முடைய கிருதிகளில் பற்பல விதங்களாக விளக்கி, சம்ஸ்கிருதம் அறியாதவர்களுக்காக ஸாதனைக்கான வழியை காட்டியிருக்கிறார். ஸ்ரீமதானந்த தீர்த்தரின் ஜீவன ஸாதனையை ஸ்ரீபிரஸன்ன வேங்கட தாஸர் 'வந்திஸிதரெ காவெ வரவனீவெ' என்னும் கீர்த்தனையில் அப்படியே தொகுத்திருக்கிறார்.

***

**3. ஸ்ரீபிரஸன்ன வெங்கடதாஸர் இயற்றிய கிருதியான 'த்வந்த்வவே வஸந்த ஹப்ப' வில், ஆத்யாத்மிக மற்றும் ஸமூக சிந்தனைகளைப் பற்றிய தகவல்கள்**

-- டாக்டர். ரேகா காகண்டகி

த்வந்த்வவே வஸந்தத ஹப்ப - 29 நுடிகளைக் கொண்ட தீர்க்க கிருதியாகும். பாகல்கோடெயின், புகழ்பெற்ற திருவிழாவான ஹோளி ஹப்பத்தைப் பற்றி, ஸ்ரீபிரஸன்ன வெங்கட தாஸர் இயற்றிய அபூர்வமான கிருதி இது. இந்த ஹோளி ஹப்ப இன்றைக்கும் அந்த பகுதியில் மிகவும் சிறப்புடன் நடந்து வருகிறது. நாட்டின் எந்தப் பகுதியிலும்கூட இத்தகைய சிறப்பான திருவிழா நடப்பதில்லை என்றும்கூட சொல்கிறார்கள். இதில் பின்பற்றப்படும் செயல்கள்கூட தாஸரின் காலத்திலிருந்து இன்று வரை அதே முறையில் நடந்து வருகிறது என்பதை பார்க்க முடிகிறது.

இது அந்தப் பகுதியில் நடைபெறும் விழாவாக இருந்தாலும்கூட, தாஸர் அதில் ஆத்யாத்மிக தத்வத்தை ஒப்பிட்டுப் பார்க்கிறார். அதனுடன், சமூக

வாழ்க்கையின் லாப நஷ்டங்களை விவரிக்கிறார். சமூக நலன்களைப் பற்றி, சமூக முன்னேற்றத்தைப் பற்றி விளக்குகிறார். இவை அனைத்தும், அந்த திருவிழாவை கொண்டாடும் வழிமுறைகளிலேயே அடங்கியிருக்கின்றன.

ஸ்ரீபிரஸன்ன வெங்கடதாஸரின் முதலாம் நுடியில், துவக்கத்திலேயே 'ஹோளி ஹப்பவன்னாசரிஸிதிர்யா' , 'ஆத்யாத்மிக ரத்னமாலா' என்று சொல்லி, 29 நுடிகளில் இதனை இயற்றியிருக்கிறார்.

இந்த திருவிழாவின் பின்னணி:

'ஹோளி ஹுண்ணமி' என்றால், காமத்தை சுடும் பண்டிகை. இது தர்ம சாஸ்திரங்களில் இல்லையென்றாலும், பௌராணிகமான ஒரு பின்னணியைக் கொண்டது. ஹோளிகா என்னும் அரக்கி, கெட்ட செயல்களை செய்தவாறு, உலக மக்களை துன்புறுத்தி வந்தாள். அதனை சகிக்காத தேவதைகள், பகவந்தனிடம் முறையிட, ஸ்வாமி, பால்குண மாத பௌர்ணமியன்று அவளைக் கொன்றார். அதற்காகவே அந்த பௌர்ணமிக்கு 'காமன ஹுண்ணமி' என்று பெயர் வந்தது. தேவதைகள் இந்த அரக்கியின் உடலை சுட்டு, அந்த சாம்பலை தரித்தார்களாம். இதுவே மூல கதை என்று சொல்கிறார்கள். காம தஹனத்தைப் பற்றி பல்வேறு கதைகளும் இருக்கின்றன.

ருத்ரதேவர் தவம் செய்யும்போது, காமதேவன் தன் பாணங்களை விட்டு, அவருடைய தவத்தினை கலைத்தான். அதற்காக ஈஷ்வரன் தன் மூன்றாம் கண்களை திறந்து, அவனை சுட்டுப் பொசுக்கினார். இதுவே 'காமதஹன' என்னும் கதை என்றும் சொல்லப்படுகிறது. ஆக மொத்தம், எந்த கதையாக இருக்கட்டும், இதற்குள் தத்வ, அந்தப் பகுதியின் திருவிழாயின் பின்னணியில், மனிதன் தனக்குள் இருகும் விருப்பங்களை சுடுவது, நான், எனது, என்னும் விஷயங்களை சுடுவது, ஆத்யாத்மிகத்தையும், தத்வ சித்தாந்தத்தின் அனைத்து உள் அர்த்தங்களையும் தாஸரின் இந்த சிறப்பான கீர்த்தனையில் பார்க்கலாம்.

இதனை கொண்டாடும் பத்ததி இவ்வாறாக இருக்கிறது. தர்ம சாஸ்திரகாரர்கள் 'துண்டா (போளிகா) ராக்ஷஸி ப்ரீத்யர்த்தம் தத்பீடா பரிஹாரர்த்தம் ஹோளிகா பூஜனம் கரிஷ்யே' என்று சங்கல்பம் செய்ய வேண்டும். அங்களத்தில் கட்டைகளை அடுக்கி அதற்கு நெருப்பு வைத்து,

அங்கு, அஸ்மாபி: பய ஸந்த்ரஸ்த்யை: க்ருதா த்வம் ஹோலிகே யத: | அதஸ்த்வாம் பூஜயிஷ்யாமி பூதே பூதிப்ரதா போ ||. இந்த பூஜா மந்திரத்தால் ஹோலிகா தேவதையை (பூர்ணசந்திர) ஷோடஷ உபசாரத்தினால் பூஜிக்க வேண்டும். ராக்ஷோக்ன சூக்தத்தை சொல்லி, பஜனை செய்து, அக்னி பிரதட்சிணை செய்து, அக்னியை விசர்ஜனம் செய்ய வேண்டும். ஹோலிகா தஹனத்தை சூர்ய அஸ்தமனம் ஆனபிறகே செய்ய வேண்டும். பகலில் எப்போதும் செய்யக்கூடாது.

பௌர்ணமியன்று அனைத்து விதமான கட்டைகளை வாங்க வேண்டும். அக்னி பிரதிஷ்டையை செய்து, ரக்ஷோக்ன மந்திரங்களின் மூலம், அக்னியில் ஹோமம் செய்து, ஹோலிகா ராட்சசியின் மேல் (ஹோளிகெ அல்லது அவளது படத்தை அக்னியின் போட்டு) அதன் மேல் கட்டைகளை அடுக வேண்டும். ஹோளி எரிந்து கொண்டிருக்கும்போது, இதற்கு கீத, ந்ருத்ய வாத்யங்களால் உற்சவம் செய்ய வேண்டும். இந்த ஹோளிகா ராட்சசி பிரகலாதனுக்கு பயம் காட்டியவள். ஆகையால், கீதம் முதலான மங்கள வைபவத்தால் அவளை எரிக்கின்றனர். சில மக்களின் அபிப்பிராயம் என்னவெனில், அன்று காமதஹனோத்ஸவத்தை செய்ய வேண்டும் என்பது. ஈஷ்வரன் தன் தவத்தை கலைப்பதற்காக வந்த மன்மதனை எரித்த நினைவுக்காக இன்று காமதகன உற்சவத்தை செய்கின்றனர். -- நாரத புராணம்.

அடுத்த நாள், அந்த அக்னியில் கடலைப்பருப்பு போட்டு வேக வைத்து, அதனை உண்ணும் பழக்கம் மற்றும் அன்று சமையலுக்கு நெருப்பினை இந்த அக்னியின் கங்கிலிருந்தே எடுப்பதும் ஒரு பழக்கம் ஆகும். அடுத்த நாள், அந்த ஹோலிகா பஸ்மத்தை அனைவருக்கும் கொடுத்து, தாமும் இட்டுக் கொள்ள வேண்டும். நதிக்குச் சென்று, ஸ்னான ஸந்த்யாவந்தனைகளை செய்து, அன்று அனைவரும் வண்ணம் பூசிக் கொள்வதும் ஒரு வழக்கம். அனைவரின் வீட்டிலும் போளி, பக்ஷ்யங்களை செய்து உண்கின்றனர். இப்படியாக பண்டிகையை கொண்டாடுவதால், அடுத்து எவ்வித கஷ்டங்களும் வருவதில்லை. துக்கங்கள், கஷ்டங்கள் விலகி, ஊரில் அமைதி நிலவுகிறது என்னும் நம்பிக்கையும் இருக்கிறது.

உலக நன்மைக்காக செய்யப்படும் இந்த ஹோளி ஹப்பத்தை ஸ்ரீபிரஸன்ன வெங்கடதாஸர், சமூக மற்றும் ஆத்யாத்மிக அம்சங்களில் வர்ணித்திருக்கிறார். அந்த கிருதியை இங்கு விளக்கமாக பார்க்கலாம்.

**(தொடரும்...)**

தொடர்

## கன்னட கிரந்தங்கள் அறிமுகம்

## ஸ்ரீ வெங்கடேஸ பாரிஜாதம்

ஸ்ரீ அனந்தாத்ரி அனந்தாசாரியார்

**ஆறாம் அத்தியாயம்**

பகவான் ஸ்ரீநிவாஸன் குறவஞ்சியாக உருவெடுத்தக் கதையைக் கூறுவதாக இது அமைந்துள்ளது. பகவான் ஸ்ரீநிவாஸன் தன்னுடைய காரியத்தைத் தானே செய்வதாலேயே பூர்த்தியடையும் என எண்ணி, குறவஞ்சி ரூபம் கொண்டு பிரம்ம தேவரை 6 மாதக் குழந்தையாகவும், ருத்ர பகவானைப் பிரம்பாகவும், பிரம்மாண்டத்தை கூடையாகவும் செய்து கொண்டார். அதில் நவதானியங்களை நிரப்பி, பின்னர் தன்னை தயார் செய்து கொள்ளும் வகையில், புடவை உடுத்தி, கஸ்தூரி திலகமிட்டு, ஹார பதக்கம், மணி மாலைகள், தங்கமணி முதலானவைகளை அணிந்து கொண்டு குழந்தையை இடுப்பிலும் கையில் பிரம்பையும் பிடித்து நடந்து நாராயணபுரம் வந்தடைந்தார்.

அதேநேரத்தில் பத்மாவதி ஸ்ரீநிவாஸனைக் கண்டு வந்ததிலிருந்து விரஹத்தில் காம ஜ்வரத்தினால் பாதிக்கப்பட்டு ஸயனித்து இருந்தாள். அவளின் நிலை கண்டு வருந்திய ராணியும், தோழியர்களும் என்ன செய்வது என்று எண்ணியிருக்க, பிறகு வீடு வீடாகச் சென்று குறவஞ்சி பேசிய வார்த்தைகளைக் கேட்டு அவளை அரண்மனைக்கு அழைத்து வந்தனர். குறவஞ்சி ராணி அளித்த பால் அன்னத்தை குழந்தைக்கு ஆகாரமாக ஊட்ட, குழந்தையான பிரம்ம தேவர் அதற்கு மறுத்தபோது, குறவஞ்சி இக்குழந்தை தன்னுடைய மிச்சத்தை மட்டுமே (நைவேத்யம்) உண்ணும் என்று கூறி, தான் உண்டு தன்னுடைய ஸ்தன்ய பாலைக் குடிப்பதனால் அவன் திருப்தி அடைவான் என்றும் கூறினாள்.

அனைத்து க்ஷேத்திரங்கள், நதிகள், தேவதைகளை பிரார்த்தனை செய்து த்யானம் செய்தாள் குறவஞ்சி. பின்னர் தாம்பூலம் தரித்து குறி சொல்ல ஆரம்பித்தாள். பத்மாவதியின் இந்நிலைக்கு காரணம் அவள் பரம புருஷனைக் கண்டு காமத்தினால் அவளுக்கு உண்டான விரஹ ஜ்வரமே இது எனவும், அவளை பகவான் ஸ்ரீநிவாஸனுக்கே விவாஹம் செய்து கொடுத்துவிடுமாறும் கூறினாள். அதைக்கேட்டு குதூகலத்துடன் அங்கு வந்த பத்மாவதியின் கையைப் பிடித்து ரேகைகளைக் கண்டு நாரதர்

கூறிய அதே வார்த்தைகளையே கூறும் விதத்தில், அவளின் ஸாமுத்திரிகா லட்சணத்தைக் கொண்டு பலனை கூறலானாள். முன்னால் பன்னகாசலத்தில் இருந்து ஒருவள் பெண் கேட்டு வருவாள்; நன்றாக வரன் பற்றி கூறுவார் எனவும் விளக்கினாள். மலையில் வாஸம் புரியும் பகவான் ஸ்ரீநிவாஸனுக்கு பத்மாவதியைக் கொடுத்து விவாஹம் செய்ய அவள் சௌக்கியம் அடைவாள் என்றும், இல்லையேல் மரணம் உண்டு எனவும் கூறி, தான் கொடிய வார்த்தைகளை கூறுவதாக எண்ண வேண்டாம் எனவும், இது சத்தியமான வாக்கு என்றும் உரைத்தாள்.

அதன் பிறகு பாகவத பஞ்சம ஸ்கந்தத்தில் விவரிக்கப்பட்டுள்ள பூகோள வர்ணனை பற்றி குறவஞ்சி உரைப்பதாக அனந்தாச்சாரியர் இங்கே விஸ்தாரமாக விவரித்துள்ளார். பிரம்மாண்டத்தைத் தாங்கும் ஸேஷ பகவான் அதைத் தாங்கும் வாயு கூர்மம், மூல கூர்மம், ஏழு லோகங்கள், ஸப்த த்வீபங்கள் என வர்ணித்து அதன் பிறகு ஜம்பூத்வீபம் அதில் அடங்கிய பாரத வர்ஷம், பரத கண்டம் அதில் உள்ள பல்வேறு நதிகள், தீர்த்தங்கள், தேஸங்கள் போன்றவற்றை குறவஞ்சி வர்ணிக்க, தரணி தேவி சந்தோஷமடைந்து வழியனுப்பி வைத்தாள். குறவஞ்சி குழந்தையை தூக்கிக் கொண்டு ஆனந்தாத்ரி நோக்கி கிளம்பினாள்.

### பலஸ்ருதி:

குறவஞ்சி ரூபத்தில் பகவான் நிகழ்த்திய லீலைகளை பக்தியுடன் கேட்பவர்களுக்கு பகவான் ஸ்ரீநிவாஸன் கோரமான சங்கடங்களை பரிகாரம் செய்து, சுப காரியங்களை செய்யும் பாக்கியத்தை அருளி, ப்ரேரகனாகி நற்காரியங்களைச் செய்து செய்விக்கிறார் என பலஸ்ருதியானது விவரிக்கப்பட்டுள்ளது.

### ஏழாம் அத்தியாயம்

குறவஞ்சியை வழியனுப்பிய பிறகு ராணி தரணி தேவி ஏகாந்தத்தில் அமர்ந்து பத்மாவதியிடம் அவளின் மனதைப் பற்றி அறிய வினவ, ஸ்ரீநிவாஸனே தனக்கு பதியாக வேண்டுமென இச்சை கொண்டுள்ளதாக பத்மாவதி ஸ்பஷ்டமாக உரைத்தாள்.

அந்நேரத்தில் பகுளாதேவி தன்னை ஸேஷாசலவாஸி பகவான் ஸ்ரீநிவாஸனின் தாய் தானென்று அறிமுகப்படுத்திக்கொள்ள, ராணி அவளை வரவேற்று ஆஸனம் அளித்து உபசாரம் செய்தாள். இருவருக்கும் பரஸ்பர சம்பாஷணை நடந்தது. பகுளாதேவி வரனின் தகவல்களைப் பரிமாறும் வகையில், வரனின் பெயர் ஸ்ரீ கிருஷ்ணன்;

தேவகி வஸுதேவர் தாய் தந்தையர்கள்; சந்திர குலத்தில், வஸிஷ்ட கோத்திரத்தில், ஸ்ரவண நட்சத்திரத்தில் பிறந்தவன்; கோடி மன்மதனின் ரூப ஸௌந்தர்யம் உடையவன் ; 25 வயது நிரம்பியவன் என்றெல்லாம் விவரித்தாள். அதனைக் கேட்ட ராணி தரணி தேவியும், சந்தோஷம் அடைந்து நர நாராயண க்ஷேத்திரத்தில் இருந்து வந்த குறவஞ்சி ஒருவள் ஜ்வரத்தில் இருந்த மகளின் தற்போதைய நிலைக்குக் காரணத்தைக் கூறி வனத்திலே நடந்த விஷயங்களை ஏற்கனவே கூறிச் சென்றதைப் பற்றி உரைத்தாள்.

ராஜா ஆகாஸராஜன் தனது குலகுரு பிரஹஸ்பதி ஆசார்யரை அழைத்து விவரத்தைக் கூறி, விவாஹத்திற்கான அனுமதி பெற்றார். குரு பிரஹஸ்பதியின் அறிவுரைக்கிணங்க ஸுகபிரம்ம மஹரிஷிக்கு ஸ்ரீநிவாஸன் பத்மாவதியின் விவாஹத்தைப் பற்றித் தெரிவிக்க தமது தம்பியான தோண்டமான் ராஜன் மூலமாக பத்திரத்தை எழுதி அனுப்பினார். செய்தியைக் கேட்ட மாத்திரத்தில் ஸுகபிரம்ம மகரிஷி மிகுந்த ஆனந்தத்துடன் கமண்டலத்தை உடைத்தும், துளஸி மாலையைத் துண்டித்தும், கிருஷ்ணாஜினத்தை கிழித்தும் ஆனந்த நர்த்தனம் ஆடினார். பின்னர் ரிஷிகளுக்கு லக்ஷணமான அலங்காரங்களை செய்து கொண்டு துளஸி மணி மாலை, கிருஷ்ணாஜினத்தினாலான சட்டையை அணிந்து கொண்டு அரண்மனையை வந்தடைந்தார். ஆகாஸராஜன் ஸுகபிரம்ம மகரிஷியிடம் பத்மாவதியின் விவாஹத்தைப் பற்றி மீண்டும் நேரிலே தெரிவித்து ஆசியை வேண்ட, ஸுகபிரம்ம மகரிஷி ஆகாஸராஜனிடம் அவனது குலம் உத்தாரமானது என்றும், தன்யனான் என்றும், ஸ்ரீநிவாஸன் மருமகனான பிறகு வேறு என்ன பாக்கியம் வேண்டும் என்றும் கூறி இனி தடை ஏதும் செய்யாமல் விவாஹ காரியங்களை உடனே துவங்கும்படி அறிவுறுத்தினார்.

பிரஹஸ்பதி ஆச்சார்யர் ஸ்ரீநிவாஸனுக்கும் பத்மாவதிக்கும் இடையே கோத்திரம், நட்சத்திரம், யோனி, யோகம் முதலான பொருத்தங்களைக் கண்டு விவாஹத்திற்கான ஒப்புதல் அளித்தார். ஆகாஸராஜன் ஆனந்த பாஷ்பம் பொங்க பகவான் ஸ்ரீநிவாஸனுக்குத் தன் மகளை கொடுப்பதாக நிச்சயம் செய்து, வைஸாக ஸுத்த தஸமி தினம் ஸுக்ரவாரம் அன்று கன்யாதானத்தை ஸ்வீகரித்து விவாஹம் செய்து கொள்ள வரவேற்று

பத்திரம் எழுதி ஸுகபிரம்ம மகரிஷியிடம் பக்தியுடன் கொடுத்தனுப்பினான்.

இதற்கிடையில் பகுளாதேவி பகவான் ஸ்ரீநிவாஸன் உள்ள இடத்திற்கு திரும்பி வர, அவளிடம் தனது விவாஹ காரியத்திற்காக செய்த சேவையை புகழ்ந்து பாராட்டி நன்றி தெரிவித்தார். அதற்கு பதிலளித்த பகுளாதேவி, தன்னுடையதான காரியம் அங்கு ஒன்றுமில்லை எனவும், தெய்வ யோகத்தினால் தர்மதேவி ஒருவள் தகவல் அனைத்தையும் முதலிலேயே கூறிச் சென்றிருந்தாகவும் தெரிவித்தாள். அந்நேரத்தில் ஸுகபிரம்ம மகரிஷி வருவதைக் கண்டு பகவான் சந்தோஷமடைந்து, ஆகாஸராஜன் கொடுத்தனுப்பிய பத்திரத்தைப் படித்து ஆனந்தம் கொண்டு, கன்னிகையை பாணிக்ரஹணம் செய்வதாக ஒப்புதல் அளித்து பதில் கடிதம் கொடுத்து அனுப்பினார்.

### பலஸ்ருதி:

இந்த அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ள பகவானின் லீலைகளைக் கேட்பதனால் ஸுப செய்திகள் கிட்டும் என பலஸ்ருதியானது விவரிக்கப்பட்டுள்ளது.

## எட்டாம் அத்தியாயம்

இந்திரேஸன் மோஹத்தை உண்டு பண்ணும் விதமாக, பந்துக்கள் யாரும் இல்லாமல் செய்யும் விவாஹத்தில் எந்த ஒரு சந்தோசமும் இருப்பதில்லை என்றும் ப்ரீதியுடன் ஜனங்கள் குழந்தைகள் விவாஹத்தில் கலந்து கொள்வதே அழகு என்றும், தனக்கு பந்துக்கள் யாரும் இல்லையே என்றும் கூறலானான். அதற்கு பதிலளித்த பகுளாதேவி 'விஸ்வ குடும்பி' என்றே பெயர் பெற்ற பகவான் ஸ்ரீநிவாஸனுக்கு பிரம்மா, ருத்ரன் முதலான தேவதைகள் அனைவருமே பந்துக்கள், எல்லோரும் அழைக்கப்பட வேண்டும் என்று கூற, பகவான் மனதில் நினைத்த மாத்திரத்திலேயே கருடன் அங்கு எழுந்தருளினார். பகவான் ஸ்ரீநிவாஸன் பரிவார ஸஹிதமாக அனைவரும் தனது விவாஹத்திற்கு வரவேண்டுமென பத்திரத்தை கொடுத்தனுப்ப, கருட பகவானும் ஸத்யலோகம் மற்றும் கைலாஸம் சென்று பிரம்மா மற்றும் சிவன் முதலானவர்களுக்கு தெரியப்படுத்தினார். (தொடரும்)...

**S.லக்ஷ்மிபதிராஜா, சென்னை**

தொடர்

**ஹரிகதாம்ருதசார மஞ்சரி 360**

**By ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர்**

32. **நீட[3]த[3]ந்த[3]த[3]லிப்ப லிங்க[3]க்கெ**
**ஷோடஷாத்மக[1] ரஸவிபா[4]க[3]வ**
**மாடி[3] ஷோட[3]ஷகலெக[3]ளிகெ[3] உபசயக[3]ளனெ கொடு[3]த |**
**க்ரோட[3]னெப்பத்தெரடு[3] ஸாவிர**
**நாடி[3]க[3]த[1] தே[3]வதெக[3]ளொளகி[3]**
**த்தா[3]டுதா[1] நந்தா[3]த்ம சரிஸுவ லோக[1]தொ[3]ளு தா[1]னு ||(4-2)**

நீடதந்ததி என்றால் பறவைகள் வசிப்பதற்கு ஆக்கிக் கொண்ட கூடு. ஜீவனின் மேல் இருக்கும் லிங்க சரீரத்திற்கு 16 ரஸங்களை வெவ்வேறாக செய்து 16 கலைகளுக்கு - அதாவது, ஞானேந்திரியங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5, பஞ்சதன்மாத்ரங்கள் 5 மற்றும் மனஸ் 1 - என 16 கலைகள், தேகத்தை காத்தவாறு, தேகத்தில் இருக்கும் 72,000 நாடிகளில் உள்ள தத்வாபிமானிகளின் உள்ளே இருந்து, மகிழ்ச்சியை அனைத்து ஜீவராசிகளுக்கும் கொடுக்கின்றன.

**33. ஆரு ரஸ ஸத்வாதி[3] பே[4]த[3]தி[3]**
**ஆரு மூராகி[3]ஹவு ஸாரா**
**ஸார நீதா[1]னீத[1] க[2]ண்டாக[2]ண்ட[3] சித்ப்ரசுர |**
**ஈரதி[4]க எப்பத்து ஸாவிர**
**மாரமணன ரஸாக்[2]யரூப ஷ**
**ரீரத[3]லி போ[4]ஜ்ய ஸுபதா[3]ர்த்த[2]தி[3] தி[1]ளிது[3] பு[3]ஞ்ஜிபுது[3] ||(4-4)**

ரஸங்கள் ஆறு. குணங்கள் மூன்று. ஆக, 6 * 3 = 18 ரூபங்களால் தான் ஷுத்த ஸாரத்தை முக்தி யோக்யர்களுக்கும், ஸாத்விக ஸாரமான அஸாரத்தை தமோகுண யோக்யருக்கும், தாமஸ ரஸத்தினை ரஜோகுணத்தவர்களுக்கும் பகிர்ந்த் கொடுக்கிறான். இவை 72,000 நாடிகளின் உள்ளே ரஸாக்ய ரூப தானாகி, தத்வாச்ய, தத்பின்ன, அதந்தர்யாமியாகி, இருக்கிறான் என்று அறிந்து, உணவினை உண்ண வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர்.

34. **க்ஷீரக[3]த ரஸரூபக[3]ளு மு**
**ந்நூரு மேலைவத்து நாலகு**

**சாரு க்4ருதக3த ரூபக3ளு இப்பத்தரொம்ப3த்து ।**
**ஸார கு3ட3தொ3ளகை3துv ஸாவிர**
**னூர ஒந்து3 ஸுரூப த்3விஸஹ**
**ஸ்ராரெரடுv ஷத பஞ்சவிம்ஷதி ரூப ப2லக3ளலி ||(4-5)**

பாலில் 354, நெய்யில் 29, வெல்லத்தில் 5101, பழங்களில் 2825, ரூபங்களில் ஸ்ரீஹரி இருக்கிறான் என்று அறிய வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர். ஆக மொத்தம், 8309 பகவத் ரூபங்களை, போஜன பதார்த்தங்களில் சிந்திக்க வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர்.

35. **நிருபமானந்தா3த்3ம ஹரி ஸ**
**ங்கருஷண ப்ரத்3யும்ன ரூபதி3**
**லிருதிஹனு போ4க்த்ருக3ளொளகெ3 தச்சக்தித3னு எனிஸி ।**
**கரெஸுவனு நாராயணனிரு**
**த்தெ3ரடு3 நாமதிv போ4ஜ்யவஸ்துக3**
**நிருத த1ர்ப1கனாகி3 த்ருப்தியனீவ சேதனகெ ||(4-8)**

அபாரமான ஆனந்தத்தைக் கொண்டவன் யாரோ, அவன் நிருபமானந்தன். அவனே ஸ்ரீஹரி. இவன் ஸங்கர்ஷண, ப்ரத்யும்ன ரூபத்தினால் ஆகாரத்தை உண்பவர்களிலும், நாராயண, அனிருத்த ரூபத்தினால், ஸ்வீகரிக்கும் பதார்த்தங்களிலும் இருந்து, தான் தர்பக - போஸ்ட்மேனாக இருந்து, அந்த அனைத்து சேதனர்களுக்கு திருப்தி / மகிழ்ச்சியைக் கொடுக்கிறான். அதாவது, பகவந்தன், உணவு உண்பவர்களில் அந்தர்யாமியாக இருந்தும், உண்ணும் பதார்த்தங்களில் இரு ரூபங்களில் அந்தர்யாமியாக இருந்தும், தான் மட்டும் எதிலும் பட்டும் படாதவாறு இருக்கிறான்ன் என்று அறிந்து, அவனின் ஸர்வோத்தமத்வத்தை அறிய வேண்டும் என்கிறார்.

36. **அக3ணிதாத்ம ஸுபோ4ஜன பதா3**
**ர்த்த2கள ஒளகெ3 அகண்ட3னொந்தொ3**
**ந்த3க3ளி னொளனந் தாம்ஷதி3ந்த3லி க2ண்ட3னெந்தெ3னிஸி ।**
**ஜக3தி3 ஜீவர த்ருப்திபடி3ஸுவ**
**ஸ்வக3தபே4த3 விவர்ஜிதன இ**
**ப்ப3கெ3ய ரூபவனரிது பு4ஞ்சிஸி அர்ப்பிஸவனடி3கெ3 ||(4-11)**

ஸ்ரீஹரி அனந்த குணங்களைக் கொண்டவன். நாம் உண்ணும் போஜன பதார்த்தங்களில் தான் ஒவ்வொரு பருக்கையிலும், அனந்த தத்வங்களால் இருக்கிறான். அவன் ‘கண்ட’ மும் ஆகிறான்.

‘அகண்ட’ மும் ஆகிறான். கண்டாகண்டனும் அவனே. அன்ன பாத்திரத்தில் ‘அகண்டமாகவும்’, அன்னத்தின் பருக்கைகளில் ‘அகண்டமாகவும்’ இருந்து அனந்தனாக இருக்கிறான் என்று அறிந்து உணவினை உண்ண வேண்டும். உலகில் அனைத்து ஜீவர்களையும் திருப்தி அடையச் செய்கிறான். ஆகையால், அவன் ஸ்வகதபேத விவர்ஜிதன் என்று அழைக்கப்படுகிறான் என்று அறிந்து, அனைத்தையும் அவனுக்கு சமர்ப்பிக்க வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர்.

37. **ஆரெரடு$^3$ ஸாவிரத$^3$ மேலி**
**ந்னூர ஐவத்தொந்து$^3$ ரூபதி$^3$**
**ஸாரபோ$^3$க்த னிருத்த$^3$தே$^3$வனு அன்னமயனெனிப ।**
**மூரெரடு$^3$வரெ ஸாவிரத$^3$ மே**
**ல் மூரதி$^3$க$^1$ நால்வத்து ரூபதி$^3$**
**தோ$^1$ருதி$^1$ஹ ப்ரத்$^3$யும்ன ஜக$^3$தொ$^3$ளு ப்ராணமயனாகி$^3$ ।।(4-13)**

8251 ரூபங்களால் ஸாரபோக்த அனிருத்த நாமகனாக, அன்னமயனாகி, 5543 ரூபங்களால் ப்ரத்யும்ன நாமகனாகி ப்ராணமயனாகி, நம் அனைவரையும் காக்கிறான் என்று தாஸர் கூறுகிறார். அன்னமயனாக அனிருத்த ரூபத்தினாலும், ப்ராணமயனாகி ப்ரத்யும்ன ரூபத்தினாலும், தான் 13794 ரூபங்களால் இந்த நம் தேகத்தை காக்கிறான் என்று அறிய வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர். இதையே மேலும் விளக்கியவாறு, ஸ்ரீஹரி நம் தேகத்தில் 5,62,107 ரூபங்களில் மனோமயனாகி, 4374 ரூபத்தினால் விக்ஞானமயனாகி, 5125 ரூபத்தினால் ஆனந்தமயனாகி, இந்த மொத்தமான 585,400 ரூபங்களால் இந்த ஐந்து கோஷங்களில் இருந்து, செயல்களை செய்தவாறு இருக்கிறான்.

38. **மூரு ஸாவிரத$^3$ர்த்தஷத மே**
**லீரதி$^4$க$^1$ ரூபக$^3$ள த$^4$ரிஸி ஷ**
**ரீரதொ$^3$ள கா$^3$னந்த$^3$மய நாராயாணாஹ்வயனு ।**
**ஈரெரடு$^3$ ஸாவிரத$^3$மேல் மு**
**ந்னூருஐது$^3$ ஸுரூபதி$^3$ந்த$^3$லி**
**பா$^4$ரதீஷனொளிப்ப நவனீதஸ்த$^2$ க்$^4$ருத$^1$த$^3$ந்தெ ।।(4-18)**

அடுத்து தாஸர், பிராணதேவரைக் குறித்து, இந்த பத்யத்த்ல் வெண்ணையில் நெய் எப்படி இருக்கிறதோ, அதைப் போலவே, 4305 ரூபங்களில் அனிருத்த நாமகனாகி அதிலும் இருக்கிறான் என்றும், 3052

ரூபங்களால் நாராயண நாமகனாக ஆனந்த ஷப்த வாச்யனாக இருக்கிறான் என்றும் கூறுகிறார். அதாவது,

அன்னமய கோஷத்தில் 101 ரூப ப்ராண (வாயுரூப) இதில் ஹரிரூப அனிருத்த;
ப்ராணமய கோஷத்தில் 513 ரூப அபான (வாயுரூப) இதில் ஹரிரூப ப்ரத்யும்ன;
மனோமய கோஷத்தில் 55 ரூப வ்யான (வாயுரூப) இதில் ஹரிரூப ஸங்கர்ஷண;
விக்ஞானமய கோஷத்தில் 584 ரூப உதான (வாயுரூப) இதில் ஹரிரூப வாஸுதேவ;
ஆனந்தமய கோஷத்தில் 3052 ரூப ஸமான (வாயுரூப) இதில் ஹரிரூப நாராயண;
என்று இருவரும் இந்த தேகத்தில் இருக்கிறார்கள் என்று அறிய வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர்.

39. **அபு$^3$ஜஜாண்டோ$^3$த$^3$ரனு விபி$^1$னதி$^3$**
**ஷபvரியெஞ்சலனுண்ட$^3$ கோ$^3$கு$^1$ல**
**த$^3$ப$^3$லெயர னொலிஸித$^3$னு ரிஷிபத்னியரு கொட்டன்ன |**
**ஸுபு$^4$ஜ தா பு$^4$ஞ்சிஸித ஸ்வரமண**
**குபு$^3$ஜெக$^3$ந்த$^4$கெ$^3$ ஒலித$^3$ முனிக$^3$ண**
**விபு$^3$த$^4$ஸேவித பி$^3$டு$^3$வனெ நாவித்த கர்மப$^2$ல ||(4-24)**

மொத்த உலகங்களை தாங்கியிருக்கும் அல்லது ஆள்பவனான ஸ்ரீஹரி, ஷபரியின் எச்சிலை உண்டான். கோபிகா ஸ்த்ரீயர்கள் செய்த பக்தியை ஏற்று, ரிஷி பத்னியர்கள் கொடுத்த அன்னத்தை ஏற்றுக் கொண்டான். குபுஜெ கொடுத்த சந்தனத்தை ஏற்றுக் கொண்டு, அவளை திருமணம் செய்தான். ஞானிகளால் வணங்கப்படுபவனான ஸ்ரீஹரி, நம் பக்திக்கு, சமர்ப்பித்த கர்மத்திற்கு தக்கவாறு பலன்களைக் கொடுப்பவனாக இருக்கிறான்.

40. **ஈபரியொளச்யுதன தத்த**
**த்ரூப தன்னாமக$^3$ள ஸலெ நா**
**நா பதா$^3$ர்த்த$^2$தி$^3$ நெனெனெனெது$^3$ பு$^4$ஞ்சிஸுத$^1$லிரு விஷய |**
**ப்ராபக ஸ்தாபக நியாமக**
**வ்யாபகனு யெந்த$^3$ரிது நீ நி**
**ர்லேபனாகி$^3$ரு புண்யபாபகvளர்ப்பி ஸவனடிகெ$^3$ ||29**

நாம் கூறியதைப் போல, ச்யுதி இல்லாதவனான அச்யுதனை தத்தத் ரூப, தத்தத் நாமங்களால் அதாவது, அனைத்து பதார்த்தங்களில் எப்போதும் நினைத்து ஏற்றுக் கொள். அனைத்திலும், அந்தந்த பெயர்களில், அந்தந்த ரூபங்களில், அதற்குள் அந்தர்யாமியாக இருக்கிறான் என்று சிந்தித்து, நான் செய்கிறேன் என்னும் கர்வத்தை கொள்ளாமல், த்வந்த்வ கர்மங்களையும் அவனுடைய பாதங்களில் சமர்ப்பிக்க வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர்.

(தொடரும்)

**ஆராதனை**

## ஹரிதாசர்களின் சிந்தனைத் துளிகள்

## மதங்களில் சிறந்தது மத்வமதம்

ஸ்ரீமதாசார்யரைப் பின்பற்றி வரும் ஹரிதாசர்களின் ஒருமித்த குரல் – 'மத்வமதவே மதவு'. அதற்கே புரந்தரர் 'மத்வமதத சித்தாந்தத பத்ததி பிடபேடி பிட்டு கெடபேடி' என்றார். இதற்குத் தக்க ஹரிதாசர்களின் சில பதங்களை பார்க்கலாம்.

ஸ்ரீவிஜயதாசர்:
மத்வமதவே மதவு சகல ஸ்ருதி சம்மதவு
மத்வேசனா ஸ்மரணெ குலகோடி உத்தார
மத்வராயர பகுதி மாடே முகுதி
மத்வராயன தாசனாதவனே நிர்தோஷ ||

ஸ்ரீமோகனதாசர்:
மத்வராயர பாக்ய எந்ததோ வர்ணிசலு
சுத்த சத்வாத்மகவாத சரீரவு
அத்வைத மதவெந்து அரண்யவ பொக்கு
வித்வம்ச மாடி வாதிகளனெ கெத்து
பத்ததி தப்பதந்தெ மதவனுத்தரிஸி ||

மததொளு மத்வமத விரததொளு ஹரிதின
கதெயொளு பாககவதவென்னி கோலெ |
கதெயொளு பாகவதவென்னி இதரந்தெ
ப்ரதிமெயோள் விஷ்ணு ப்ரதிமெயென்னி கோலே ||

ஸ்ரீபுரந்தரதாசர்:
தெய்வவில்லவு விஷ்வ ஜீவ கர்த்ருகவெம்ப
தெய்வ ஹீனரு துர்மதத குருகள
தெய்வவுண்டு ஜகக்கெ கர்த்ருவெம்ப ப்ரமா
நவளியொளரஸ பூர்ணப்ரக்ஞரிகெணெயே ||

மததொளகெ ஒள்ளெ மதத மத்வமத |
ரகுபதி பூஜா விதானக்கெ பாவனமதவு ||

வேத சாஸ்த்ரகளிந்த மாயிகள கண்டிஸி
சாதிஸி ஹரியே சர்வோத்தமனெந்தெந்து
மோத பரிதவாத திவ்யசாஸ்த்ரவ மாடித
மோததீர்த்த புரந்தரவிட்டலன தாச ||

ஸ்ரீஸ்ரீபாதராஜர்:
சாரமத்வ சாஸ்த்ர போததெ குரு
தாரதம்ய ஞான புட்டதந்தெ ||
ஸ்ரீரங்கவிட்டலன பஜிஸதெ முந்தெ
பரமகதியு தூரகொள்ளதந்தெ ||

புரந்தரதாசர்:
ஈ மஹியொளகெ குருகளெனிஸபரெல்ல நம்ம
ஸ்ரீமதாசார்ய குருசிகாமணிகெ சரியே ||

மத்வமதக்கின்னு சரியுண்டே ப்ர
சித்த வைகுண்டகிந்ததிக மத்துண்டே ||

ஸ்ரீவியாசதத்வக்ஞர்:
ஆனந்ததீர்த்தர மத பரம |
அனந்த சாதன திளி கண்ட்யா மனவே ||

ஸ்ரீவியாசராஜர்:
ஹரியே சர்வோத்தம ராணிலகுமி பொம்ம
ஹரி இந்த்ராத்யகிளரு தவ சேவகரு
வரதாரதம்ய பஞ்சபேத சத்யவெந்து
நெரெ பேளுவ வாயுமதத சுக்ஞானவ ||

ஜன்மவெத்தி மத்வமதத அனுசரிஸி நடெயிரோ |
சும்மனதி சிரிகிருஷ்ண தன்ன லோக கொடுவனோ ||

ஸ்ரீவாதிராஜர்:
வர மத்வசாஸ்த்ரவே சகல சாஸ்த்ராதிகவெந்து |
ஷிரவரிது முந்திரிசலோ ||
ஏக விம்ஷதி குபாஷ்யவ ஜரிதெயோ குருமத்வமுனிராயா ||

புரந்தரதாசர்:
ஹரி ஸ்ரவண கீர்த்தன ஹரி நாமஸ்மரண
ஹரிபாதசேவன ஹரிபூஜெ வந்தன
ஹரிதாச சக்யத்வ ஹரிகெ ஆத்மார்ப்பணெ
ஹரிபக்தியோ முக்தி பத தத்வ
புரந்தரவிட்டலனெ பரமாத்ம சித்த
வரமத்வமத ஸ்ருதியோள் பிரசித்த ||

ஸ்ரீவாதிராஜர்:
நின்ன மதவே வேதசாஸ்திரகள சம்மதவு
நின்ன மதவே இஹ பரக்கெ சாதனவு
பன்னங்கசயன ஸ்ரீஹயவதன தாசரொளு
நின்ன போலுவருண்டே மத்வமுனிராய ||

ஸ்ரீவிஜயதாசர்:
ப்ராணகதி பந்தரு மத்வமத பிடிதிரி |
ப்ராணத்ருது நாம நம்ம விஜயவிட்டலகர்ப்பிஸி ||

***

ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப், அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்து சொல்லலாம்.

வங்கிக் கணக்கில் சந்தா / புத்தகத்திற்காக பணம் செலுத்தினால், மறக்காமல் உங்கள் முகவரியை 89044 58276 எண்ணுக்கு வாட்சப் / SMS அல்லது haridasa.vijayam@gmail.comக்கு மின்னஞ்சல் அனுப்பவும்

**தொடர்**

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### 24 – பிம்போபாஸன ஸந்தி விடைகள்

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1அ | 30 ஸ் | ரு | ஜ் | ய | ர் | | ர | ஸ | த் | 2ம | 31 ஸ் | த | க |
| | வா | | | 3த் | வி | ப | த | | ச | | தூ | | ன |
| 4அ | ம் | ரு | 5த | ப | ன | | வ | ய | வ | 23 ஸா | ல | ச | 24 அ |
| ட | 6 ஸ | ப | ர | 7அ | ன | ஸ | ன | | 36க | ப | 25 வி | 26த் | ப |
| வி | 8ஜ | ங் | க | ம | ம் | ன | 09 அ | ஜி | த | ன் | | | வ |
| | 37 தை | | 32ஓ | | ன் | 38 ஸா | ம் | | 10 கே | த | ன | | ர் |
| 11நி | ர் | வா | த | ரா | 12வ | ம் | ஸ | | 13நி | ர | ய | 14 மூ | க |
| 15 கே | ஹ | | ப் | | த | 27 ஹே | 33ஈ | 34கு | 39 ஸ்ரீ | வ | 40 சா | | னு |
| த | கி | 28 ஸோ | ரோ | 16பு | த் | ரே | ஷ | ண | | ரா | | ஹி | 35 அ |
| ன் | னா | | த | ம் | 41உ | | ண | 17 டொ | ம் | 18ப | தி | ர | ச் |
| | 19பி | ரீ | டி | த | ப | | ம் | ன | வ | 29 | | 42 ஹ | சி |
| | டெ | | | கே | த | லா | ஹ் | 20 ஆ | த | ப | த் | ர | ன் |
| 21து | ய | ர் | | 43ங் | 44 ஆ | | | ஸே | 45 கை | 22 அ | ன் | த | ன |

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்
Haridasa Vijayam - Monthly

மலர் 3 ** August 2022 ** இதழ் 9



ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள்
மூல பிருந்தாவனம், மந்திராலயம்

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 3 : இதழ் 9

| நிர்வாக ஆசிரியர் | துணை ஆசிரியர் |
|---|---|
| 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்<br>ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,<br>380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase, பெங்களூரு 560078<br>Ph.: 89044-58276.<br>haridasa.vijayam@gmail.com<br>jagannathakesava.blogspot.com | ' தாச சாகித்ய சேவா ரத்ன'<br>திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்<br><br>**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**<br>திரு. முரளிதர தாசரு,<br>திருமதி. நிர்மலா நரசிம்மன்,<br>திரு. லட்சுமிபதிராஜா,<br>திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ் |

**ஆராதனை**

**ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்**

**ஆகஸ்ட் 1 முதல் 31 வரை, 2022**

ஆகஸ்ட் 2 : ஸ்ராவண ஷுத்த பஞ்சமி - ஹரிதாஸினி ஹெளவனகட்டெ கிரியம்மா
ஆக. 9 : ஸ்ரா. ஷு. த்வாதசி - ஸ்ரீ ஸ்ரீவர விட்டல தாஸர், தார்வாட்
ஆக. 13 : ஸ்ரா. பகுள த்விதீயா - ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள், மந்த்ராலய
ஆக. 19 : ஸ்ரா. பகுள அஷ்டமி - ஸ்ரீவ்யாஸ தத்வக்ஞ தீர்த்தர், வேணிஸோமபுர

## ஆசிரியர் பக்கம்

கலியுக காமதேனு கல்பவ்ருக்ஷமான, உலகில் அனைத்து ஹரிபக்தர்களின் மனதிலும், வாக்குகளிலும் நிறைந்து அனைவருக்கும் அவர்களது இஷ்டார்த்தங்களை வழங்கி வருபவரான மந்திராலய பிரபுவான ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் ஆராதனை இந்த ஆகஸ்ட் மாதம் வந்திருக்கிறது. அவரின் வாழ்க்கை வரலாறு, அவரது கிரந்தங்கள், அவரைப் பற்றிய ஹரிதாஸர்களின் கிருதிகள் ஆகிய அனைத்தையும் படித்து, பாடி, ஸ்ரீராயரின் அருளைப் பெறுவதற்கு முயல்வோமாக.

ஸ்ரீகுரு ஜகன்னாததாஸர் இயற்றிய கன்னட ஸ்ரீராகவேந்திர விஜயம் - தமிழில் அர்த்த விளக்கங்களுடன் - தற்போது எமது யூட்யூப் சேனல் - **Jagannatha Kesava** - வில் வந்து கொண்டிருக்கிறது. ஸ்ரீதாஸரின் கிருதியின் வாயிலாக, ஸ்ரீராயரின் மகிமைகளைக் கேட்டு அனைவரும் மகிழவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

**கன்னடம்**

**அருஞ்சொற்பொருள்**

**கடினமான சொற்களின் அர்த்தங்கள்**

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

1. நாகப - இந்திரன்; 2. நாகஜ - தேவதை; 3. நரஸாரதி - அர்ஜுனனின் ஸாரதி - ஸ்ரீகிருஷ்ணன்; 4. நப - ஆகாயம்; 5. நிவிஷ்ட - கூடிய / சேர்ந்த; 6. நீரெ - பெண் / அழகான; 7. நீரினகிரி - ஹிமவத் பர்வத; 8. ந்ரு - மனிதன் / நரன்; 9. ந்ருபல - நரமாமிசம்; 10. நுத - வணங்கப்படும் / போற்றப்படும்.

தொடர்

**கேசவ நாமா**

**35. விஷ்வேஷ வெங்கடேச**

விஷ்வேஷ வெங்கடேச - விஷ்வாதி பரரூபி
ஸ்ரீவிஷ்ணு பரபிரம்ம - நமோ நமோ ||ப

இந்த உலகிற்கு காரணனான, உலகத்தில் அனைத்து இடங்களிலும் இருக்கும், விஷ்ணுவே பரபிரம்மனாக இருக்கிறான். வேம் என்றால் பாவம். கட என்றால் நாசம் செய்பவன். ஈச என்றால் தலைவன். மக்களின் பாவங்களை நாசம் செய்பவனான, பிரபுவான வெங்கடேசனே உனக்கு நமோ நமோ.

விஷ்வாத்ம ஸ்ரீகுரு - விஷ்வான்ன அன்னத[3]
விஷ்சஸ்த[2] ஸ்ரீகிருஷ்ண - நமோ நமோ ||அப

உலகத்தில் அனைத்து ஜீவராசிகளுக்குள்ளும் அந்தர்யாமியாக இருப்பவனே. கு என்றால் இருளை. ரு என்றால் பரிகரிப்பவன் யாரோ அவரே குரு என்று சொல்வது போல, அஞ்ஞானத்தினால் சுக்ஞானத்தின் ஒளியைக் காட்டும் ஞானியான ஸ்ரீகுருவாக இருக்கிறாய்.

‘விஷ்வான்ன அன்னத’ - பரமாத்மன், மனஸ், வாக், பிராண, அன்ன, பலி, ஹோம, க்ஷீர என்னும் ஏழு அன்னங்களை நிர்மாணித்து, அவற்றில் மனஸ், வாக், பிராண, என்னும் மூன்று அன்னங்களை தானே நியமித்திருக்கிறான். இந்த ஏழு வித அன்னங்களை கொடுப்பவனும், ஜீவருக்கு அன்ன ரூபனும் அவனாகவே இருக்கிறான்.

கேஷவ மாதவா - கோவிந்த அச்யுத
வாசுதேவானந்த - நாராயண ||1

சுகத்தையும், ஞானத்தையும் கொடுப்பவன் கேசவன். ஆனந்தத்தை தரக்கூடிய மாதவன். வேதங்களில் புகழப்படுபவன் கோவிந்தன். அழிவில்லாத அச்யுதன், மோட்சத்தைக் கொடுக்கக்கூடியவனான வாசுதேவன். இந்த ஐந்து ரூபங்களிலிருந்து அபேதமானவனே (வேறுபாடு இல்லாதவனே) மூலரூபி நாராயணன்.

கோத[4]ரா ஸ்ரீகரா - ஸ்ரீமத்ஸ்ய கச்சப
ஷுத்தனந்தா[3]த்மக - நாரசிம்ஹ ||2

பசுக்களை ரட்சிக்கும், செல்வத்தைக் கொண்டிருக்கும், பக்தர்களுக்கு செல்வங்களைக் கொடுக்கும் ஸ்ரீகரன். மத்ஸ்யாவதாரி, கச்சபாவதாரி, நாரசிம்ஹாவதாரி ரூபனான உனக்கு நமோ நமோ.

ஸ்ரீத[4]ர வாமனா - ப்ரத்யும்ன ஹ்ருஷிகேஷ
ஆத்யந்த வர்ஜித - த்ரிவிக்ரமா ||3

ஸ்ரீதேவியை வக்ஷஸ்தலத்தில் தரித்திருக்கும், இந்திரனை காப்பாற்றுவதற்காக யக்ஞத்தில் வாமனனாக வந்து த்ரிவிக்ரமனாக வளர்ந்த, ஞானப்ரதரூபி ப்ரத்யும்ன, இந்திரியங்களை நிர்வகிக்கும் ஹ்ருஷிகேஷ, பிறப்பு இறப்பு சுழற்சிகள் இல்லாத உனக்கு நமோ நமோ.

பா[4]ர்க்க[3]வா ராகவா - ஸ்ரீகிருஷ்ண உபேந்த்ர
யோகே[3]ஷ புத்த கல்கி ஜனார்த்தன ||4

சுக்ஞானத்தைக் கொடுக்கும் உபேந்திரன். துர்ஜனர்களைக் கொல்பவனான ஜனார்த்தனன். சனகாதி யோகிகளுக்கும் தலைவனான யோகேஷன். பார்கவா, ராகவா, கிருஷ்ண, புத்த, கல்கி அவதாரங்களுக்கு நமோ நமோ.

பத்மாக்ஷ பத்மனாப - ஸ்ரீமதுசூதன
பத்மேஷ அனிருத்த - சங்கர்ஷண ||5

பத்ம+அக்ஷ = பத்மாக்ஷ. தாமரைக் கண்ணனான, பத்மா + ஈஷ = பத்மேஷ, லட்சுமிக்கு ஈசனானவன். ஸ்ருஷ்டிக்கு குறியீடான தாமரையை நாபியில் கொண்டிருக்கும் பத்பனாப, மதுசூதன, அனிருத்த, சங்கர்ஷணாதி ரூபங்களுக்கு நமோ நமோ.

தாமோதர த[3]த்த[1] - கபில சிம்சுமார
பூ[4]மா அதோக்ஷஜ - ஸீமா ஷூன்ய ||6

சாங்க்ய தத்வத்தை போதித்த கபிலனே, அத்ரி மற்றும் அனுசூயையிடம் பிறந்த தத்தாத்ரேயனே, ஜ்யோதிஷ் சக்கரத்திற்கு ஆதாரமாக இருக்கும் சிம்சுமாரனே, உலகங்களை உதரத்தில் தரித்திருப்பவன் மற்றும் யசோதையால் தன் வயிற்றில் கயிற்றால் கட்டப்பட்ட தாமோதரனே, ஷூன்ய நாமகனான பகவந்தன், ப்ருத்வி

மற்றும் அந்தரிக்ஷத்தை தரித்திருக்கும், அதோக்ஷஜனே, உன்னுடைய இந்த அனைத்து ரூபங்களுக்கும் நமோ நமோ.

ஸ்ரீவிஷ்ணு ஹரியக்ஞ - தன்வந்த்ரி மஹிதாஸ
ஸ்ரீவந்த்ய கிருஷ்ண விட்டல பராஷர ||7

ஸ்வாயம்புவ மனுவை அரக்கர்களிடமிருந்து காப்பாற்றிய ரூபமே யக்ஞ. அமிர்தத்தைக் கொண்டு வந்த ரூபமே தன்வந்திரி. பாஞ்ச ராத்ர ஆகமத்தை இயற்றிய ரூபமே மஹிதாஸ. அனைத்து இடங்களிலும் வியாப்தனாக இருப்பதால் விஷ்ணு. அனைத்து யக்ஞங்களிலும் பாகத்தைப் பெற்றுக் கொள்வதால் ஹரி எனப்படுகிறாய். பராசரர் மூலமாக சத்யவதி தேவியிடம் அவதரித்த ரூபமே வேதவியாசர். இங்கு சொன்ன அனைத்து ரூபங்களுக்கும் கிருஷ்ணவிட்டல தாசர், நமோ நமோ என்கிறார். அனைத்து ரூபங்களும் ஸ்ரீலட்சுமி சமேதனாக வணங்கப்படும் ரூபங்களாக இருக்கின்றன.

24 ரூபங்கள், தசாவதாரங்கள் அல்லாது தத்த, கபில, சிம்சுமார, யக்ஞ, தன்வந்த்ரி, மஹிதாஸ, வேதவியாச ஆகிய பல அவதார ரூபங்கள், அவனிடமே ஏகைக பாவத்தைப் பெற்று, அவனுக்கும் அவனின் அவதாரங்களும் வேறுபாடு இல்லை என்று தெரிவித்திருக்கிறார். (ரூபரூபங்களில் ஐக்கிய பாவத்தை செய்யவேண்டும் என்பதே தாசரின் அபிப்பிராயமாக இருக்கிறது).

***

## 36. ஷரணு ஷரணு

ஷரணு ஷரணு கிருஷ்ண கிருஷ்ண ஷரணு ஷரணு ராம ராம
ஷரணு ஷரணு ஸ்ரீனிவாஸ ஷரணு ஷரணு ஸ்ரீஹரே ||ப

த்ரேதா யுகத்து ஸ்ரீராமனே, த்வாபர யுகத்து ஸ்ரீகிருஷ்ணனே மற்றும் கலியுகத்து ஸ்ரீனிவாஸனே, ஸ்ரீஹரியே என்று அவனிடம் தன்னை ரட்சிக்குமாறு வேண்டுகிறார் தாசர்.

குரு சுப$^4$க்தி நீடி$^3$ எனகெ வரிஸி ஷுத்த$^3$ தா$^3$ஸனெந்து
கருண தோரோ கேஷவ அனந்தரூபியே ||அப

குருவின் அருளாலேயே சுத்த தாசனாவதைப் போல, அனந்த ரூபியான கேசவனே எனக்கு குருவின் அருளைப் பெற்றுத் தா.

லேஸினிந்த[3] பிரம்மஷிவர ப்ரேரிசுத்த[1] ஜக[3]வ பொரெவெ
தாசனெந்து மொரெய ஹொக்கெ காயோ கேஷவா ||1

பிரம்ம, சிவனின் அந்தர்யாமியாக நின்று, தானே ஸ்ருஷ்டி, லய கர்மங்களை செய்து, இந்த உலகத்தைக் காப்பாற்றிக் கொண்டிருக்கும் கேசவனே, நான் உன் தாசன் என்று வேண்டிக் கொள்கிறேன். எனக்கு அருள்புரிவாயாக.

வாரி நிலய தோ[3]ஷதூ[3]ர பூர்ணகாம முக்தரீஷ
பாரரஹித சுகு[3]ண ஷரதி[4] நாராயண ||2

பாற்கடலில் படுத்திருக்கும் நாராயணனே, நீ தோஷங்கள் அற்றவன். நீ பூர்ணகாமன். முக்திக்கு காரணமானவன். பாவங்கள் இல்லாதவன். சுகுணன். உனக்கு என் வணக்கங்கள்.

வேதமாதெ ஸ்ருதி சுகீ[3]தெ வேதமானி லட்சுமிரமண
ஆதி மத்ய அந்த்ய ஷூன்ய ஷரணு மாதவ ||3

வேதமாதெயான ஸ்ருதிகளை பாடும், வேதாபிமானியான லட்சுமிதேவிக்கு தலைவனான மாதவனே, நீ துவக்கம், முடிவு, நடு இல்லாதவனாக இருக்கிறாய். உனக்கு என் வணக்கங்கள்.

வேத வேத்ய வேத வினுத வேதஸார வேதப[3]ல்ல
ஸாது[4] ப்ராப்ய வேதபா[1]ல ஷரணு கோவிந்த ||4

வேதங்களாலேயே அறியப்படுபவன். வேதங்களை காப்பாற்றுபவன். வேதங்களின் அர்த்தமானவன். வேதங்களை அறிந்த

சஜ்ஜனர்களால் வணங்கப்படுபவனான கோவிந்தனுக்கு என் வணக்கங்கள்.

விஷ்வஜனக விஷ்வபா[1]ல விஷ்வவ்யாப்த விஷ்வபோ[4]க்த
விஷ்வ ஜோதி விஷ்வப[3]லனெ ஷரணு விஷ்ணுவெ ||5

உலகத்தின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயத்திற்கு காரணனான, உலகத்தில் அனைத்து இடங்களிலும் பரவியிருக்கும், பிரளய காலத்தில்

உலகத்தை விழுங்குபவன், உலகத்தை தன் கட்டுப்பாட்டிலேயே வைத்துக் கொண்டிருப்பவனாகிய விஷ்ணுவிற்கு என் வணக்கங்கள்.

ஆதிதைத்யரன்னு கொந்து மேதினிய பொரெத தேவ
பா[3]தெ[4] ஹரிஸு மூருவித[4]த[3] மதுசூதன ||6

ஆதி தைத்யர்களான மது, கைடபர்களைக் கொன்று உலகத்தை காப்பாற்றிய, ஆதிபூத, ஆதிதெய்விக, ஆத்யாத்மிக என்னும் மூன்று விதமான என் துயர்களை பரிகரிக்கும் மதுசூதனனுக்கு என் வணக்கங்கள்.

லோக த்ரயவ நளெத[3]னேக ஏக நினகெ[3] ஸாடி[1]யாரு
ஜோகெ[1]யிந்த[3] ஸாகபே[3]கு த்ரிவிக்ரம ||7

மூன்று உலகங்களையும் அளப்பவனாகிய த்ரிவிக்ரமன் நீ ஒருவனே, உனக்கு நீ ஒருவனே சமம். வேறு யாரும் இல்லை. மூன்று காலங்களிலும் என்னை காப்பாற்று.

ஸூமஹளித[3] காந்திதா[4]ம நேமதிந்த ப[3]லிய காய்தெ
ஹேம ஜ்யோதி பூர்ணசுகி[2]யெ ஷரணு வாமன ||8

சந்திரனின் ஒளியைவிட அதிகமான ஒளியைக் கொண்டவனே, கொடுப்பேன் என்று சொல்லி தானத்தைக் கொடுக்காத பலியைக் கூட காப்பாற்றி வரத்தைக் கொடுத்த, ஹேமஜ்யோதி ஸ்வரூபியான பூர்ணசுகியான வாமன ரூபியே உனக்கு என் வணக்கங்கள்.

பொம்ம ஷிவர கு[1]ணிஸி ஆள்வ அம்ம ப்ரக்ருதியன்னு த[4]ரிஸி
சும்மகே[3]னெ ஜக[3]வ கா[1]வெ ஷரணு ஸ்ரீத[4]ர ||9

பிரம்மா, சிவன் இவர்களின் அந்தர்யாமியாகி அவரை வழிநடத்தும் மற்றும் பிரகிருதியின் அபிமானி தேவதையான லட்சுமி தேவியின் தலைவனாக இந்த உலகத்தை காப்பாற்றும் ஸ்ரீதர மூர்த்திக்கு வணக்கங்கள். (தொடரும்)

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

### ஜகன்னாத தாசரின் சுளாதிகள்

டா.ஷீலாதாஸ், ராய்ச்சூர்

ஜலஜேஷ்ட நிபாகாரம் ஜகதீஷ பதாஸ்ரயம்
ஜகதீதல விக்யாதம் ஜகன்னாத குரும்பஜே ||
தாசவர்யம் தயாயுக்தம் தூரீக்ருத துராஷிஷம்
ஹரிகதாம்ருத வக்தாரம் ஜகன்னாத குரும்பஜே ||

ஜகன்னாததாசர், தாச சதுஷ்டயர்களில் நான்காமவர். தாச சாகித்யத்தில் துருவ நட்சத்திரத்தைப் போல ஒளிர்பவர். தாசரின் வாழ்க்கை அற்புதமானது. பண்டிதர்கள், பாமரர்கள் என அனைவரும் இவரது சாகித்யங்களைப் படித்து இவரைப் போற்றுகின்றனர். இவரின் கிருதிகள் அறிவை வளர்ப்பதுடன், மனதின் மகிழ்ச்சிக்கும் காரணமாக இருக்கின்றன. ஜகன்னாததாசர், கீர்த்தனை, உகாபோக, சுளாதி, தத்வசுவ்வாலிகளுடன் ஹரிகதாம்ருதசார என்னும் உத்தமமான கிரந்தத்தையும் இயற்றியிருக்கிறார். இவரின் கிருதிகள் வெல்ல அச்சினைப் போல வெவ்வேறு வடிவங்களில் இருந்தாலும், சுவை ஒரு போலவே இருக்கின்றன. இவரின் அனைத்து கிருதிகளும், ஸ்ரீமதானந்த தீர்த்தர் நிறுவிய த்வைத சித்தாந்தத்தின் சாரத்தையே பிரதிபலிக்கின்றன.

மிகச்சிறந்த பண்டிதரான ஸ்ரீனிவாசாசார்யர், ஹரிதாசரானது, ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீகோபாலதாசர் ஆகியோரின் அருளால் என்பது நாம் அறிந்ததே. 'சுதா ஓதி பத ஹாடு' என்னும் பழமொழியானது 'பத ஹாடி சுதா ஓது' என்று சொல்லும்படியாக இவரது கிருதிகள் இருந்தன. இவரின் கன்னட கிரந்தத்திற்கு சம்ஸ்கிருதத்தில் டீகை (உரை) வந்திருப்பதே இதற்கு சாட்சி. 'ஜகன்னாதவிட்டலா' என்னும் அங்கிதத்தில் 2 உகாபோகங்கள், 3 சுளாதிகள், கீர்த்தனைகள், ஹரிகதாம்ருதசாரம், தத்வசுவ்வாலிகளை இவர் இயற்றியிருக்கிறார்.

சுளாதிகள் ஹரிதாச சாகித்யத்தின் மிகச்சிறந்த ஒரு வகையாகும். ஒரு சுளாதியானது 100 கீர்த்தனைகளுக்கு சமம் என்று சொல்வது வழக்கமாக இருக்கிறது. சப்த தாளங்களுடன் கூடிய சுளாதிகளை ஸ்ரீபாதராயர் முதன்முதலாக இயற்றினார். த்ருவ தாளத்தில் துவங்கி ஏழு தாளங்களும் ஒரே பாடலில் வருமாறு வடிவமைத்தார். இதுவே சப்த தாளங்கள் என்றால் அது சுளாதி தாளங்கள் என்று அடையாளம்

காணும் அளவிற்கு வளர்ந்தன. கர்னாடக சங்கீதத்தில் பாடப்படும் விதமும் இதுவே. ஆனால் காலப்போக்கில் இன்று அவை பாடப்படும் நடைகள் மாறிவிட்டன.

ஸ்ரீபாதராயரில் துவங்கி, ஸ்ரீவியாசராயர், ஸ்ரீவாதிராஜர், ஸ்ரீபுரந்தரதாசர் என பலரும் சுளாதி இயற்றியிருந்தாலும், ஸ்ரீவிஜயதாசரையே 'சுளாதி தாசர்' என்று அழைக்கின்றனர். மிக அதிக எண்ணிக்கையில் சுளாதியை இவர் இயற்றியிருப்பதே காரணம். பின்னர் வந்த அனைத்து ஹரிதாசர்களும், இவரது கிருதிகளின் பாதிப்பிலேயே சுளாதிகளை இயற்றினர் என்பதால், இவரை 'சுளாதி தாசர்' என்று அழைப்பது மிகவும் பொருத்தமானதாகும்.

ஸ்ரீஜகன்னாததாசர், ஸ்ரீவிஜயதாசரின் அருளால் ஹரிதாசரானவர். விஜயதாசரைப் போலவே இவரும் மந்திர துல்யமான 3 சுளாதிகளை இயற்றியிருக்கிறார்.

1. துரிதவன குடாரி

துரிதவன குடாரி என்னும் சுளாதி – ஏழு தாளங்களையும் ஒரு ஜதியையும் கொண்டிருக்கிறது. ஒரு ஏழை பிராமணனுக்கு அவனின் ஏழ்மையைப் போக்குவதற்கு ஜகன்னாததாசர் இயற்றிய அற்புத சுளாதி இது. அந்த பிராமணன், தாசருடனேயே அவரது பயணத்தில் பங்கு கொண்டிருந்தான். ஒரு நாள் மிகவும் வருத்தத்துடன் இருந்தவனைப் பார்த்து தாசர் என்னவென்று கேட்டார். தான் மிகவும் ஏழை என்றும், மனைவி மக்களுக்கு உணவு வழங்கக்கூட தன்னிடம் பணம் இல்லையென்றும், அதற்கே தாசருடனேயே பயணம் செய்வதாகவும் அவன் சொன்னான். அப்படி வந்தால், தினமும் ரொட்டி கிடைக்கிறது என்பதால் வருகிறேன் என்றான்.

தாசர் அவனை தீர்க்கமாகப் பார்த்து – 'நீ உன் ஏழு பிறவிகளிலும் தானம் செய்யவில்லை. அதற்காகவே உனக்கு இந்த கதி வந்திருக்கிறது' என்றார். 'இப்போது உன்னிடம் ஏதாவது இருந்தால், அதை தானம் செய்' - என்றார். அதற்கு அவன் – 'தற்போது என்னிடம் எதுவுமே இல்லை. ஒரே ஒரு சொம்பு இருக்கிறது. அதை உங்களுக்கு தானம் செய்கிறேன்' - என்று கொடுத்தான். அதற்கு தாசர் அவனிடம், அந்த சொம்பினை விற்று சர்க்கரை வாங்கி வருமாறு கூறினார்.

அந்த சர்க்கரையினால் பானகம் செய்து, அதை அவனுக்குக் குடிக்கக் கொடுத்து, தினமும் பாராயணத்திற்காக ஒரு சுளாதியை இயற்றிக் கொடுத்தார்.

அதன்படியே அந்த பிராமணன், அங்கிருந்த மாருதி ஆலயத்திற்கு தினமும் வஸ்திரத்தில் நீர் கொண்டு வந்து அபிஷேகம் செய்து, பாராயணம் செய்தவாறு இருந்தான். அந்தப் பக்கத்தில் அப்போது சுரபுர சம்ஸ்தானத்து அதிபதி வெங்கடப்ப நாயக் பயணம் செய்து கொண்டிருந்தார். வழியில் அவருக்கு ஒரு கடிதம் வருகிறது. அதை இந்த பிராமணனிடம் கொடுத்து படிக்கச் சொல்கிறார். அந்த பிராமணனின் நிலையைக் கண்டு, அவனுக்கு அரசில் ஒரு வேலையைக் கொடுக்கிறார். பின், அந்த பிராமணன், அதிகாரம் செல்வம் ஆகியவற்றைப் பெற்று நல்ல நிலையை அடைகிறான். ஆனால் அப்போதும் அவர் சுளாதி பாராயணத்தை நிறுத்தவில்லை. அத்தகைய சிறப்பு வாய்ந்த சுளாதியாக இது இருக்கிறது.

இதனால் இன்றைக்கும் பக்தர்கள் பஞ்ச ரத்ன சுளாதியுடன் இந்த சுளாதியையும் பாராயணம் செய்கிறார்கள். இதை ‘ஆபத்து பரிஹார சுளாதி’ என்று அழைக்கிறார்கள்.

துரிதவன குடாரி துர்ஜன குலவைரி
ஷரணாகத வஜ்ர பஞ்சர குஞ்சர
வரசம்ரக்ஷக ஜன்ம மரண ரஹித மஹித
பரம கருணாசிந்து பக்தபந்து
ஸ்வரத ஸ்வதந்த்ர ஜகத்பரித சித்சுகபூர்ண
ஹரியே க்ஷராக்ஷர புருஷோத்தம

என்று பகவந்தனை வணங்குகிறார். பக்த ரக்ஷகனான, பக்த வத்ஸலனான ஸ்ரீஹரியே, இந்த பக்தனை காப்பாற்று. இது வரை நீ பற்பல பக்தர்களைக் காப்பாற்றியிருக்கிறாய். அர்ஜுனனுக்கு சாரதியாக இருந்திருக்கிறாய். அஜாமிளனுக்கு முக்தியைக் கொடுத்தாய். அது போலவே இந்த ஏழை பிராமணனையும் காப்பாற்று என்று வேண்டுகிறார் தாசர். உன்னை வேண்டாமல் வேறு ஒருவரை வேண்டுவதற்கு சாத்தியமில்லை. மூன்று உலகங்களின் தலைவனே, இந்த பக்தன் தன்னை மாருதியின் வழியாக காப்பாற்றுமாறு வேண்டிக் கொண்டிருக்கிறான்.

நீ முன்னர், தந்தையால் கொடுமைப்படுத்தப்பட்ட பிரகலாதனை காப்பாற்றினாய். தேவதைகளுக்கு வந்த பயத்தைப் போக்கினாய். திரௌபதிக்கு முடிவில்லா ஆடையை வழங்கி காப்பாற்றினாய். கோபிகா ஸ்த்ரீகளை காத்தாய். போரில் பாண்டவர்களுக்கு வெற்றியைக் கொடுத்தாய். பரிக்ஷித்திற்கு உதவினாய். இப்படி பல நல்ல செயல்களை செய்த உன்னால், ஒரு சாதாரண பக்தரை காப்பாற்றுவது அசாத்தியமா? நீ உதவி செய்வதற்கு வேறு யார் தடை செய்வர்?

சாட்சாத் மகாலட்சுமியே உனக்குக் கட்டுப்பட்டவள். தேச காலங்கள் நீ வசிப்பதற்கு ஏற்ற இடங்கள் எனப்படுகின்றன. பகவந்தனே, நீயே சர்வகர்த்தன். முன்னர், நீ ஒரு கிருமியை அரசனாக்கினாய். உன் சாதனைக்கு ஈடு இணையே கிடையாது. உன்னை வர்ணிப்பதற்கு சாத்தியமேயில்லை. என்னை உதாசீனம் செய்யாதே என்று வேண்டுகிறார் தாசர்.

உன் எண்ணிக்கையற்ற மகிமைகளை ரமா பிரம்மாதி தேவதைகளும்கூட முழுவதுமாக அறியமாட்டார்கள். அப்படியிருக்கையில், ஒரு சாதாரண ஜீவியான என்னால் அவற்றை அறிவதற்கு சாத்தியமேயில்லை. நீ கருணாளு. எனக்குத் தெரிந்தவரை நான் உன்னை துதித்து வணங்குகிறேன்.

குழந்தையின் மழலைப் பேச்சினை தாய் கேலி செய்யமாட்டாள். அதைப் போல நீயும் என்னை ஏற்றுக்கொள். பூமி, ஆகாய, பாதாளம் என அனைத்திடங்களிலும் நிலைத்திருக்கும் ஹரியே, தூணிலிருந்து வந்து சிறுவனை காப்பாற்றியதைப் போல உன் பக்தனை காப்பாற்று. லட்சுமி முதற்கொண்டு அனைவரும் உனக்கு கட்டுப்பட்டவர்களே. உன் பேச்சை லட்சுமிதேவி என்றும் மீறமாட்டாள். இந்த பிராமணனுக்கு செல்வத்தை, ஞானத்தை அருள்வாயாக.

2. 'வரத வரத சோபிபர வரதாயக' என்னும் சுளாதி ஸ்ரீஹரியே முக்தர் அமுக்தர்களுக்கு தலைவன் என்னும் விஷயத்தை சொல்கிறது. வேதாதி சாஸ்திரங்கள் பகவந்தனை வரத / காமத என்று துதிக்கின்றன. ஹரிதாச சாகித்யம், ஹரி சர்வோத்தமத்தை எளிமையாக சொல்கிறது. அந்த ஹரி சர்வோத்தமத்வத்தை அறியவேண்டுமெனில், ஜீவன் தன் ஸ்வரூப ஞானத்தை

அறியவேண்டும். சாதனை செய்யவேண்டும். உபாசனை செய்யவேண்டும். உபாசனையில் இரு விதங்கள் - அக & புற.

அக சாதனைக்கு சுளாதிகளே சிறந்த வழிகாட்டிகள். குணபூர்ணனான ஸ்ரீஹரியை அறிவதற்கு உண்மையான தத்வத்தின் பக்கம் செல்ல வேண்டும். உண்மையான ஞானம் என்றால், சராசர ஸ்ருஷ்டிக்கு காரணனான, தலைவனான பகவந்தனை அறிய வேண்டுமெனில், நற்சிந்தனையுடன் ஞானம் வேண்டும். இந்த சுத்தமான ஞானத்தின் பின்னணியிலேயே பிம்போபாசனை சாத்தியம் ஆகும். அனைத்து ஜீவர்களிலும் ஜீவ ரூபியாக நிலைத்திருப்பவனே பிம்பன். இந்த தேகம் பிரதிபிம்பம்.

அனைத்து பிராணிகளிலும் பிம்பரூபி பரமாத்மா நிலைத்திருந்தாலும், அவற்றின் மனஸ், இந்திரியங்களுக்கேற்ப அவை வெவ்வேறாக தெரிகிறது. வடிவமில்லா தண்ணீர், வெவ்வேறு வகையான பாத்திரங்களில் நிரப்பினால், அந்தந்த வடிவங்களை எடுப்பது போல, பகவந்தனும் வெவ்வேறாக இருக்கிறான். பிம்பன் ஸ்வதந்த்ரன். ப்ரதிபிம்பன் அஸ்வதந்த்ரன். பிம்பனில் வாயு அந்தர்கதனாக இருக்கிறான். 24 தத்வாபிமானி தேவதைகள் பிம்பனில் அந்தர்கதராக இருந்து, பிம்பனின் ஆணைக்கேற்ப செயல்களை செய்கின்றனர்.

கரணனாமகனாகி இந்திரியகளொளு மானி
சுரரொளி நெலெசித்து விவித விஷயங்கள
நெரவினொளகித்து நின்ன ரூபவ
பெரெஸி அரியகொடதெ விஹரிசுதிப்ப
குரி மாடி ஜீவர புண்யபாபகளிகெ
நிரய ஸ்வர்க்களிவெ லீலெயிந்த
பரிபூர்ண காம ஈ சம்ஸாரதொளெம்ம
திருகிஸி நீ க்ரீடெயாடுதிப்பெ
விரஜனாமக ஜகன்னாதவிட்டல நிஜ
கருணி கைபிடிதெம்மனுத்தரிஸபேகு

என்று பிம்பக்ரியைகளைக் குறித்து சொல்கிறார் தாசர். இப்படியாக, கரண நாமகனான பரமாத்மனை நினைத்தவாறு, சம்சாரத்தில் இருந்தாலும், நரகத்தில் இருந்தாலும் ஜீவன் முக்தராகுவர் என்று குறிப்பிடுகிறார்.

கன்ன மஹிமனெ நின்ன அனுஸ்ருத உள்ளவ
மனுஜனாகலி மத்தெ தனுஜனாகலி த்ரிபு
வனதொளு மான்யனோ அனுமான இதக்கில்ல ப்ரத
ர்த்தன நாமக ஜகன்னாதவிட்டலன ப்ரஹ்லாத வைரோச
ந நிருருதி விபீஷணகெ ஒலிதந்தெ காயோ

என்னும் சொற்களே உண்மை. பரமாத்மனே அனைவரையும் கட்டுப்படுத்துபவன். முக்தாமுக்தர்கள் அனைவரும் அவனின் சேவகர்களே. அவனின் ஆணையின்படியே அனைத்து நடக்கின்றன. அனைவரின் உள்ளே இருந்தும் அனைத்தையும் செய்பவன் அவனே என்கிற நற்சிந்தனையுடன் உபாசனை செய்வதே பிம்போபாசனை ஆகும். (தொடரும்)

## தினம் ஒரு பத்யம்

https://dasa-sahitya.blogspot.com என்னும் நம் தளத்தில் வந்து முடிந்த ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர் இயற்றிய 'மத்வ விஜய ஸார ஸங்க்ரஹ' உரையைத் தொடர்ந்து, தற்போது தினமும் ஒரு பத்யமாக ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர் இயற்றிய 'ஹரிதாஸ தர்பண' என்னும் கிருதி, தமிழில் அர்த்த விளக்கங்களுடன் வந்து கொண்டிருக்கிறது. அனைவரும் தினமும் அந்த தளத்திற்குச் சென்று இதனை படித்து பயனடைய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

**ஜூலை-2022 இதழில் வந்த ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டிக்கு சரியான விடை எழுதி புத்தகப் பரிசு பெறுபவர்கள்:**
**1. திருமதி. சாந்தி பத்மனாபன், திருநெல்வேலி 2. திருமதி. கிரிஜா ஜயதீர்த்தாச்சார், ஸ்ரீரங்கம்**

## சந்தா புதுப்பித்தல்

ஹரிதாச விஜயம் பத்திரிக்கைக்கான உங்கள் சந்தாவை தக்க சமயத்தில் புதுப்பித்து, பத்திரிக்கையை தவறாமல் பெற்றுக் கொண்டு, ஹரிதாச சாகித்ய தகவல்களை தொடர்ந்து பெற்றுக் கொள்ளவும்.

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

## யதுகிரியம்மா - 1820 - 1908

(சென்ற இதழின் தொடர்ச்சி)

**11. ஶ்ரீரங்க க்ஷேத்திர மஹாத்ம்யம்**

ஶ்ரீ ரங்கவாஸிகளு ஏனு ஸுக்ருதிகளோ ||ப

ஸ்ராவண மாஸதி பவித்ரோத்ஸவு
பாத்ரபததல்லி லட்சுமி கோலுவு
பார்வடெயு ஆஷ்வீஜ மாஸதி
உய்யாலெயுத்ஸவவு கார்த்திக மாஸதி
கௌஷிக க்ருத்திகா தீபா

மார்கஷிர மாஸதி பவித்ர கொட்டிகோத்ஸவ
புஷ்ய மாஸதி புனர்வஸு ரதவு
மாக மாஸதலி தெப்போத்ஸவ ஸம்ப்ரமவு
பால்குண மாஸதலி பங்குனோத்ஸவனோள்பரு

புஷ்ப ஸேவெயு சைத்ர மாஸதி சித்ர ரதவு
வைஷாக மாஸதலி வஸந்தோத்ஸவ
ஜ்யேஷ்ட மாஸதலி ஜேஷ்டாபிஷேகவு
ஆஷாட மாஸதி காவேரி வைபோகவு

தேஷாந்த்ரதொளகித்து வாஸுதேவன ஸ்மரிஸெ
நாஷவாகுவுதவர பாப ராஷிகளு
தேஷவாஸிகளன்னு இன்னேனு பேளலி பிடதெ
வாஸுகி ஷயன வெங்கடரங்கன நோள்பரு ||

இந்த கீர்த்தனையில், ஆண்டு முழுவதும் உற்சவம் நடக்கும் ஶ்ரீ ரங்க க்ஷேத்திரத்தில் வசிப்பவர்கள் பாக்யசாலிகள். அங்கு ஶ்ரீரங்கனை வணங்கி, நினைத்தால், அனைத்து பாவங்களும் நிவாரணம் ஆகிறது, என்று சொல்லி ஶ்ரீரங்க க்ஷேத்திரத்தின் மகாத்ம்யத்தை விளக்குகிறார் ஹரிதாஸினி யதுகிரியம்மா.

ஒவ்வொரு உற்சவத்திற்கும் வெவ்வேறு பாடல்களை இவர் இயற்றியிருக்கிறார். ‘ஆள்வாரரிகெ ஓலெ பரெதானெ ஆளுகள கையிலித்து பொரெதானெ’ என்று கிருத்திகா உற்சவத்தைப் பற்றி பாடும்

இந்தப் பாடலில், ஸ்ரீரங்கன் எழுதிய கடிதத்தை, ஸ்வாமியின் சன்னிதியில் அந்த கடிதத்தை நம்மாழ்வாருக்கு படித்துக் காட்டுவதாக இருக்கும் இந்தப் பாடலில், பிரபந்தத்தை ஆடிப் பாடும் விதிகளை விளக்குகிறார். இதில் பங்குபெறுபவர்களை 'அரையர்' என்கின்றனர்.

உற்சவங்களில் பயன்படுத்தப்படும் 'அரையர்' என்னும் சொல் மிகவும் விசேஷமானது. அரையர் சேவை என்பது வைஷ்ணவ ஆலயங்களில் நடக்கும் மிகவும் சிறந்த சேவையாகும். நாலாயிர திவ்ய பிரபந்தங்களை ராகத்துடன் பாடி நடனம் ஆடுபவர்களை 'அரையர்' என்கிறார்கள்.

திருவல்லிக்கேணியில் இருக்கும் பார்த்தசாரதியை 26 நுடிகளில் இவர் வணங்கியிருப்பது மிகவும் அற்புதமாக இருக்கிறது. ஏனெனில், பார்த்தசாரதியாகி, தன் குடும்பத்துடன் பூஜை ஏற்றுக் கொள்ளும் ஒரேயொரு க்ஷேத்திரம் என்றால், அது இந்த க்ஷேத்திரம் மட்டுமே.

பெரியதான இந்த கீர்த்தனையில் இரு சரணங்களை மட்டும் பார்ப்போம்.

பார்த்தஸாரதி நிம்ம ஸேவெய மாடி ஸார்த்தகவாதேனு ||ப

பார்த்திபுருஷனெ நிம்ம கீர்த்தியு கொண்டாடலெனகெ
ஷக்திய விஸ்தரிஸெனகெ யுக்திய ||அப

பலதி ருக்மிணி பலராம ப்ரத்யும்ன அனிருத்த ஸஹிதலெ
எடதி ஸாத்யகி பஞ்சமூர்த்திகள நடுவெ பார்த்தஸாரதி
யெடபலதி ஸ்ரீ தேவி பூதேவி ||16

பாததி கேஷவ ஸேவெயனு மாடி அனாதி பாபவ களெதெனோ
வேதமூருதி வெங்கடகிருஷ்ணனெ பாதவன்னு தோரிஸு
நிம்ம பாதவ தோரிஸு ||21

பார்த்தஸாரதியான ஸ்ரீகிருஷ்ணன், திருவல்லிக்கேணி க்ஷேத்திரத்தில் நின்றிருக்கிறான். ருக்மிணி ஸ்வயம்வரத்த்ன் சந்தர்ப்பத்தில் ருக்மிணியை ரதத்தில் அமர்த்திக்கொண்டு போகும்போது, இடது வலது பக்கங்களில் பலராம, ப்ரத்யும்ன, அனிருத்த, ஸாத்யகி ஆகியோர் இருந்தனர். அப்படியே இங்கேயும், ருக்மிணி, பலராம, ஸாத்யகி ஆகியோர் பார்த்தஸாரதியுடன் இருந்து, ஸ்ரீகிருஷ்ணனின் மகன் ப்ரத்யும்னன் மற்றும் பேரன் அனிருத்தனும் உடன் இருக்கிறார்கள்.

கலியுகத்தில் ஸ்ரீதேவி பூதேவியர்களுடன் வெங்கடகிருஷ்ணனாக இருக்கும் பார்த்தஸாரதியின் பாத தரிசனம் செய்யும் விருப்பம் யதுகிரியம்மாவிற்கு இருக்கிறது.

யதுகிரியம்மாவின் தீர்க்க கிருதிகள்

1. பாகவத ஸங்க்ரஹ : 12 ஸ்கந்தங்களில், 1163 நுடிகளை இந்த கிருதி கொண்டிருக்கிறது.

2. ஸ்ரீராம த்யான சரித்ரெ: மொத்த ராமாயணத்தினை 101 த்வி-பதங்களில் (இரு வரிகள் கொண்ட பத்யம்) கீர்த்தனை ரூபத்தில் இயற்றியிருக்கிறார். இதனுடன், 'ஸ்ரீ மத் ராமாயணத மங்களம்' என்னும் 55 நுடிகள் இருக்கின்றன.

ஆகமொத்தம், யதுகிரியமா அவர்களின் சாகித்யம், கன்னட சாகித்யத்தின் செல்வம் எனலாம். அன்று யதுகிரியம்மாவின் பாடல்கள் இல்லாமல் எந்தவொரு சுப காரியங்களும் நடந்திருக்கவில்லை என்பதாக, மக்களுக்கு இவை மிகவும் பிடித்தமாக இருந்தது.

இவருடைய பேரன் பேத்திகள் இவருடைய கீர்த்தனைகளை எழுதி வைத்திருந்தால், இவை நமக்குக் கிடைத்திருக்கின்றன. யதுகிரியம்மாவின் வாழ்வு அனைவருக்கும் ஒரு தக்க உதாரணமாக இருக்கிறது மற்றும் அவருடைய சாகித்யம் அற்புத வித்வத்தினை கொண்டிருக்கிறது என வேண்டும்.

அகலிஸதிரு என்னனு நின்ன பிட்டகலிஸதிரு
வாஸவ மாடிஸில்லி ரங்கய்யா காஸிய படிஸதெ
அனாயஸத மரணவன்னித்து எனகெ வாசுதேவனெ
நிம்ம பாதவாஸவ மாடிஸு

என்று ஸ்ரீஹரியிடம் பிரார்த்தனை செய்த கவிதாயினி யதுகிரியம்மா அவர்கள், கீர்த்தனைகளின் மூலம் ஸ்ரீஹரியின் உபாசனை செய்து, 80 ஆண்டுகள் காலம் அர்த்தமுள்ள வாழ்க்கை வாழ்ந்து, 1908ம் ஆண்டு ஸ்ரீஹரிபாதம் அடைந்தார். அவருக்கு நம்முடைய நமனங்களை செலுத்துவோம்.

*அடுத்த இதழில் வேறொரு ஹரிதாஸினியின் கட்டுரை வெளியாகும் *

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### 26. அவரோஹண தாரதம்ய ஸந்தி

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 21 | 22 | | 2 | | | | | 17 | | | | 23 |
| | | | | 24 | | 25 | 3 | | | | | | |
| | | 4 | | | | | | | | | | | |
| 5 | | | | | | 6 | | | | | | 26 | |
| 29 | | | 7 | | 8 | | | | | | | | 18 |
| 9 | | 10 | | | | | 27 | 28 | | | | | |
| | 11 | | | | | | 19 | | | | | | 20 |
| | 12 | | 29 | | | | 13 | | | | | | |
| 14 | | 30 | | | 31 | | | | | | | | |
| | | | 15 | | | | | | | | | | |
| | 32 | | | 33 | 16 | | | | 34 | | 35 | | |

குறுக்கெழுத்துப் போட்டிகளை வடிவமைத்துக் கொடுப்பவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி

குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam @ gmail.com / அல்லது 89044 58276 க்கு வாட்சப் செய்யலாம்.

ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப், அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்து சொல்லலாம்.

**இடமிருந்துவலம்:**1.இந்திரன்(4), 2.கருட பத்னி(4), 3.பத்னி(7), 4.மன்மதனின் புத்திரன்(6), 5.ப்ரஹ்ம ருத்ராதிகளின் நியாமகன்(3), 6.ஸமுத்ர ராஜன்(4), 7.மகன்(2), 8.நாரத வீணை(3), 9.குபேரன்(3), 10.ஸேஷ(3), 11.தேவதைகள் கலைந்துள்ளது.(5), 12.சந்திரன்(2), 13.வாயவ்ய திக்கின் அபிமானி இந்த வாயு(4), 14.மஹாலக்ஷ்மி(4), 15.அக்னி(3), 16.ஜலாபிமானி தேவதை(3).

**வலமிருந்துஇடம்:** 17.சந்திரனின் மனைவி(3), 18.சூரியன். கடைசி எழுத்து இல்லை(6), 19.வாயு தேவர்(3), 20.ஷண்மஹிஷியரில் ஒருவர்(4).

**மேலிருந்துகீழ்:** 4.சக்கரவர்த்திகள்(5), 13.த்வக் இந்த்ரியத்தின் அபிமானி(4), 21.ப்ரஹ்மா(5), 22.இந்த்ரனின் மனைவி(2), 23.ரிஷிகள்(4), 24.அக்னி(4), 25.அக்னி – வேறு பெயர்(4), 26.ஸ்வாயம்புவ மனுவின் பத்னி ஸதரூபா தேவி(3), 27.கருடன்(2), 28.ஈஸான்ய திக்கின் அபிமானி தேவதை(4), 29.ஸரஸ்வதி(2).

**கீழிருந்துமேல்:** 29.ஸேஷ பத்னி(3), 30.தர்ம தேவதை(2), 31.நந்த கோகுலம்(4),32.ஷண்மஹிஷியரில் ஒருவர்(3), 33.தங்கம்(3), 34.தோன்றுவது(4), 35.ஷண்மஹிஷியரில் ஒருவர்(6).

## இந்த மாத ஆராதனைகள்

**ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள் (1598-1671)**

பூஜ்யாய ராகவேந்திராய ஸத்யதர்ம ரதாயச |
பஜதாம் கல்பவ்ருக்ஷாய நமதாம் காமதேனவே ||

கலியுகத கல்பதரு காமதேனு ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகளு
ஒலியுத கரெதல்லிகெ ஹோகி கரெதரு ஈப்ஸித பலகளு
நலினலிது பாடி பஜிஸுவ ஏகாந்த பக்தர துஷ்க்ருத்யகள
பலிதரோககள பஞ்சிதன கிவுட ஹெளவ மூகருகள
பலபொந்தி மங்களாங்க ஹரிவிட்டலன களெவரு குருகளு ||

தொடர்

## ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர்

## 3. த்வந்த்வவே வஸந்த ஹப்ப

டாக்டர். ரேகா காகண்டகி

த்வந்த்வமே வஸந்தத்தின் விழா என்னும் கிருதியை ஸ்ரீபிரஸன்ன வெங்கடதாஸர் எப்படி பற்பல இடங்களிலிருந்து உவமைகளை கொடுத்து, இதன் சிறப்பினை விளக்கியிருக்கிறார் என்பதற்கு ஒரு அபூர்வமான உதாரணமாக இருக்கிறது என்கிறார் ஆராய்ச்சியாளரான திரு. ஆனந்த ஜஞ்சரவாட என்பவர். இன்னொரு ஆராய்ச்சியாளரான திரு. கிருஷ்ண கொல்ஹார குல்கர்ணி அவர்கள் இந்த கிருதியை, ஸ்ரீபிரஸன்ன வெங்கடதாசரின் மிகவும் முக்கியமான கிருதி என்கிறார். தாஸர் வாழ்ந்த காலத்தில் பாகலகோடெயின் 'ஹோளிகா விழா' மிகவும் சிறப்பாக கொண்டாடப்பட்டிருப்பதை, தாஸர் பார்த்திருக்கக் கூடும். அந்த இடத்தின் வண்ணம், வாத்தியங்கள், காம தகனம், என அனைத்தையும் கவனமாக பார்த்திருக்கிறர். ஹோளிகா விழா என்பது ஒரு விதத்தில் உலகிற்கு நீதியை போதிக்கும் விழா ஆகும்.

கோரேபாள ஹனுமந்தராயரின் கிருதியில், இந்த கீர்த்தனை ஆத்யாத்மிக அனுபவத்தைக் கொண்டிருக்கிறது. ஒவ்வொரு சொல்லிலும் தத்வ ஸித்தாங்களின் அழகு அடங்கியிருக்கிறது. அதில் வரும் ஒவ்வொரு செயலும், ஆத்யாத்மிக சிந்தனைக்கு வழிகாட்டியாக இருக்கிறது என்கிறார். த்வந்த்வ என்பதற்கு, ஜீவாத்ம பரமாத்வாவின் பேதத்தை மட்டும் குறிப்பிடாமல், முக்தி மார்க்கத்தின் வழி எது என்பதையும் காட்டியிருக்கிறார். 'தேஹாக்ய பட்டணதல்லி ஒன்பத்து பாகிலு' என்றால், நவவித பக்தியின் உள் அர்த்தத்தை விடுவிடுத்துக் கூறியிருக்கிறார். இந்த ஹோளிகா விழாவை கொண்டாடுவதில் பற்பல விதமான செயல்களை சொல்லி, அவை ஒவ்வொன்றினையும் தம்மதே ஆன விதத்தில் அதன் அர்த்தங்களை விளக்கியிருக்கிறார். இதனை ஆத்யாத்மிக ரீதியிலேயே அர்த்தம் கொடுத்து விளக்கியிருக்கிறார்.

கிருஷ்ண கொல்ஹார குல்கர்ணி அவர்களின் கட்டுரையில் 'த்வந்த்வ பண்டிகையின் மூலமே, தாஸர் ஆத்யாத்மிக அபூர்வ விஷயங்களை அது எப்படி உள்ளே அடக்கிக் கொண்டிருக்கிறது என்பதை விவரிக்கிறார்.

ஐஞ்சரவாட அவரின் கட்டுரையில், தாஸர், இந்த பண்டிகையை விளக்கியவாறே, நம் மனதினை எப்படி சாதனை மார்க்கத்திற்கு கொண்டு வரவேண்டும் என்னும் அர்த்தபூர்ணமான விவரணையை கொடுத்திருக்கிறார். இந்த கிருதி ஒன்றே ஆனாலும், இந்த கட்டுரையாளர்கள் மூவரும், வெவ்வேறு சிந்தனைகளால் மற்றும் தாஸரின் ஆத்யாத்மிக சிந்தனையின் வழிக்கு நம்மை அழைத்துச் செல்கிறார்கள்.

பாகலகோடெயில் கொண்டாடப்படும் ஹோளிகா விழாவின் பின்னணி இவ்வாறு இருக்கிறது.

பால்குண மாத உத்தராயண வந்துவிட்டால் போதும், பாகலகோடெயில் ஹோளி ஹுண்ணமி மிகவும் விமரிசையாக நடக்கும். வட கர்னாடகத்தின் எந்த ஜில்லாவிலும், ஊர்களிலும், இவ்வாறு இந்த விழா நடப்பது என்பது அசாத்தியம். நாக பஞ்சமி, தீபாவளி ஆகிய பண்டிகைகள் சிறப்பாக நடந்தாலும், ஹோளி ஹுண்ணமியின் சிறப்பு, அந்த களை ஆகியவை வேறு எதற்கும் வருவதில்லை. பால்குண வரும் நாட்களுக்கு முன்னரே, அதாவது, மாக அமாவாசை அன்றே, அங்கங்கு வாத்திய இசைகள் கேட்கத் துவங்குகின்றன. ஹோளி ஹுண்ணமியின் காமனை சுடுவதற்காக, சிறுவர்கள் அனைவரும் சேர்ந்து, அவரவர்களின் வீட்டிற்குத் தெரியாமல், கட்டை, உடைந்து போன கதவு, ஜன்னல் ஆகியவற்றை துண்டு துண்டாக்கி, ஏதாவது ஒரு வீட்டின் மாடியில் ஒளித்து வைத்துவிடுவர்.

காமனை சுடும் இரவில், நடு இரவு வேளையில், பெரியவர்கள் அனைவரும் சேர்ந்து காமனை எரிக்கும் நிகழ்ச்சியில் கலந்து கொள்கின்றனர். இப்படியாக, காமனை எரித்தபின், அங்கு எரிந்து கிடக்கும் கட்டை, கங்கு ஆகியவற்றை ஒரு பாத்திரத்தில் எடுத்துக்கொண்டு வந்து, சமையலுக்கு அதையே பயன்படுத்துகின்றனர். அதே சாம்பலை பூசிக்கொண்டு அனைவரும் இதனை கொண்டாடுகின்றனர். அடுத்த நாள் முதல், ஐந்து நாட்கள் வரை, வண்ணம் பூசி விளையாடுகின்றனர். பின்னர், நதிக்குச் சென்று ஸ்னானம் செய்து வரும் பத்ததி இருக்கிறது. பிறகு அங்கு மெரெவணிகெ (ஊர்வலம்) நடத்துவதும் உண்டு.

இதுவே பாகலகோடெயில் அனாதி காலத்திலிருந்து நடந்து வரும் ஹோளி ஹப்ப' வின் நடைமுறை ஆகும். இது அந்த பகுதியின் கலாச்சாரத்தை விளக்குவதான பண்டிகை. இதில் புராண அம்சங்கள் மறைந்திருந்தாலும், சாஸ்திர ரீதியாகவே இதனை கொண்டாடினாலும்,

சமூக நலன் விஷயங்களும் இதில் அடங்கியிருக்கின்றன என்பதை பார்க்கிறோம்.

இந்த அனைத்து விஷயங்களும், அதாவது, சமூக நலன், புராண விஷயங்கள், சாஸ்திர விஷயங்கள் என இந்த அனைத்தும், ஸ்ரீபிரஸன்ன வெங்கட தாஸரின் இந்த கிருதியில் எப்படி அடங்கியிருக்கின்றன என்பதை பார்க்கலாம்.

த்வந்த்வவே வஸந்த ஹப்ப
த்வந்த்வவே இஹபர ஹப்ப ||ப

த்வந்த்வ - என்றால், ஒரே மாதிரியான இரு பதங்களை சேர்த்தாலும், எதிர்மறையான அர்த்தத்தையே கொடுப்பதாக இருக்கும் சொல், மற்றும் இது மாதிரியான நீதி என்னும் அர்த்தத்தையும் கொடுக்கும். இஹ-பர, சுக-துக்க, பாப-புண்ய, கஷ்ட-சுக, ஜீவாத்ம-பரமாத்ம என்பது போல ஆகும். இதில் இருக்கும் சிறப்பு என்னவென்றால், இரு எதிர்மறை அர்த்தங்களைக் கொடுத்தாலும், ஒன்றினை விட்டு இன்னொன்று இல்லை. பிரஸன்ன வெங்கட தாஸரின் இந்த தீர்க்க கிருதியில் த்வந்த்வ என்னும் சொல் பல்வேறு உள் அர்த்தங்களை கொடுக்கிறது.

தாஸர் இந்த த்வந்த்வ சொல்லினை, வஸந்த ஹப்பவின் கொண்டாட்டத்தின் மூலம் நமக்கு விளக்குகிறார். ஹோளி ஹுண்ணமி (வஸந்தத்தின் விழா) என்பது வட கர்னாடகத்தில் பாகலகோடெயில் (தாஸர் பிறந்து வளர்ந்த ஊர்) நடக்கும் அந்த பகுதியின் விழா. இன்றைக்கும்கூட, இந்த ஹோளி ஹப்ப, அதே முக்கியத்துவத்தைக் கொண்டிருக்கிறது மற்றும் விமரிசையாக நடந்து கொண்டு வருகிறது என்பதை பார்க்கிறோம்.

தாஸரின் இந்த கிருதியில், பிராந்திய, ஸம்பிரதாயிக, தாத்விக, சமூக விஷயங்கள் என இந்த அனைத்தையும் மிகச் சிறப்பாக விவரித்திருப்பதை பார்க்கலாம். இந்த பல்லவியிலேயே தாஸர், மனிதனானவன், தாமரை இலை மேல் உள்ள தண்ணீர் போல வைராக்கியத்துடன் இருக்க வேண்டும் என்கிறார்.

த்வந்த்வாம்ருத க்ஷேம | அபய வஸந்த
த்வந்த்வ ஜீவேஷ்வர திளிதவ ஷாந்த

த்வந்த்வ நடெ நுடி பல்லவ ஷாந்த
த்வந்த்வரியதவன கதிய வஸந்த ||1

இரண்டாம் மூன்றாம் நுடியில் ஜீவ ஈஷ, நடை நுடி ஆகியவற்றை ஒன்றுக்கொன்று பொருத்துவதாக இருக்கிறது. இஹ பரங்களில் சம பாவத்தினால் வாழ்ந்தால், அதுவே அமிர்தத்தைப் போல இருக்கிறது என்கிறார் தாஸர். ஜீவ ஈஷ்வரர்களின் பேதத்தை அறிந்தவன், வாக்கு - செயல்களின் விஷயத்தை அறிந்தவன், இத்தகைய த்வந்த்வத்தை அறிந்தவன், அதாவது சொல்வதைப் போல செய்பவன், அவனே உண்மையான ஸந்த (ஸாது) ஆகிறான். ஜீவ ஈஷ்வர பேதமானது பஞ்சபேதத்தின் ஸாரம். இதனை அறிந்து வாழ்பவனின் வாழ்க்கை, வஸந்த ஹப்பவைப் போல இருக்கிறது என்கிறார் ஸ்ரீதாஸர்.

மனிதன் என்பவன், வாக்கு செயல்களில் சமமாக இருக்க வேண்டும். சுக துக்கங்களை சமமாக பாவித்து நடக்க வேண்டும். 'ஸமதுக்க ஸுக ஸ்வஸ்த: ஸமலோஷ்சாஷ்ம காஞ்சன:' என்று பகவந்தன் சொல்லும் அம்சத்தை அனுசரிக்க வேண்டும் என்கிறார். இது நம் மனநிலையைக்கூட சமமாக வைக்கிறது. தாஸர் இப்படியாக பஞ்சபேதத்தின் ஸாரத்தையும், ஸதசாரத்தின் அம்சங்களையும் இங்கு விவரித்திருக்கிறார்.

த்வந்த்வ ஷீதோஷ்ண ஸமானவ கண்டு
த்வந்த்வ நிந்தாஸ்துதி ஸரியிட்டுகொண்டு
த்வந்த்வ மானவ ஹிடிதரெ பண்டு
த்வந்த்வ பக்ஷிகள பகெய கேளிகொண்டு ||2

சீதோஷ்ண என்பது கால மாற்றம் ஏற்படும்போது நடப்பது. அதனை சமமாக பார் என்றால், மனிதனின் உள் ஆத்மா மிகவும் திடமாக இருக்க வேண்டும் என்று அர்த்தம். அதாவது, அந்த இரண்டினையும் தேகத்தில் சரியாக பொருத்திக் கொள்ள வேண்டும் என்று அர்த்தம். புற பௌதிக தேகத்தைப் போலவே, உள் மனதின் நிலையும் இருக்க வேண்டும். அதைப் போல, வேறொருவர் செய்யும் திட்டு, பாராட்டுதல்களை ஒரே மாதிரியாக பாவிக்கும் நிலை இருக்க வேண்டும் என்கிறார். இந்த நுடியின் 3-4 வரிகளில், தேகம் என்னும் மரத்தில் இரு வித பறவைகள் இருக்கின்றன. ஒன்று ஜீவாத்ம, இன்னொன்று பரமாத்ம. இந்த இரண்டினையும் மனிதன் அறிந்திருக்க வேண்டும். புரந்தரதாஸரின் பதத்தின்படி 'ஹண்ணு திந்த ஹக்கி படவாகெய்தெ (ஜீவாத்மா); ஹண்ணு தின்னத ஹக்கி பலவாகெய்தெ (பரமாத்மா)'. இது

பஞ்சபேதத்தின் தத்வத்தின் அறிவு. இதனை அறிந்து நடப்பவனுக்கு, நித்ய வஸந்த ஹப்ப என்கிறார் தாஸர். அனைத்தையும், அனைவரையும், சமபாவத்தினால் பார்ப்பவன், சதாசாரியாகி சமூகத்திற்கு நல்லதையே செய்கிறான்.

**(தொடரும்...)**

## இந்த மாத ஆராதனைகள்

**ஸ்ரீ வ்யாஸ தத்வக்ஞ தீர்த்தர் - (1704-1800)**
**(ஸ்ரீ ஐஜி வெங்கடரமணாசார்ய)**

ப்ரகடீக்ருத டீகோக்திர் மகடீக்ருத மாயிராட் |
சகத்ராத் வ்யாஸதத்வக்ஞ: மஸ்கரீந்த்ர க்ருபாம் மயி ||

வந்தேஹம் வ்யாஸதத்வக்ஞம் நிந்திதாகில துர்மதிம் |
வந்திதாகில ஸத்வ்ருந்தம் நந்தஸூனு பதார்ச்சகம் ||
துர்வாதி வதனாம்போஜா ஸர்வ கர்வாபஹம் ஸதா |
ஐஜி வெங்கடராமார்யாஷ்சர்ய ஸூர்ய மஹம் பஜே ||
ஐஜி ராமார்ய ஹ்ருத்பத்ம ஸூர்ய பிம்பஸ்திதம் மம |
வாஸுதேவம் ஸதா ஸேவே தத்வமார்க்க ப்ரபாஸகம் ||

**ஸ்ரீ ஹௌவனகட்டே கிரியம்மா (1712–1779)**
ரங்கனாத பதாஸக்தம் ரங்கனாதஸ்ய கிங்கரீ |
கிரியம்மாபிதம் வந்தே ஞான வைராக்ய ஸித்தயே ||

ரங்கனாத தேவன கிங்கரி ரங்கனாத பாதாஸக்தெ
அங்கனெ தன்ன ஹ்ருதாயாங்கனதி ரங்கன காணுவ பக்தெ
அங்களதி சித்ரிஸுவ ரங்கோலியலி அனுரக்தெ
ஹிங்கதெ பக்தர பங்கள நிவாரிஸுவ ஸஷக்தெ
பங்கார ஷ்ருங்கார ஸம்ஸார போகதலி விரக்தெ
மங்களாங்க ஹரிவிட்டலன பக்தர ஸங்க ஸம்யுக்தெ
துங்கெ உத்துங்கெ ஸாத்வி கிரியம்மா ஜீவன்முக்தெ ||

தொடர்

## கன்னட கிரந்தங்கள் அறிமுகம்

## ஸ்ரீ வெங்கடேஸ பாரிஜாதம்

ஸ்ரீ அனந்தாத்ரி அனந்தாசாரியார்

பிரம்மதேவர் பரிவாரங்களுடன் கிளம்பி வந்து பகவான் ஸ்ரீநிவாஸனை நமஸ்கரித்தார். நந்தி வாஹனனான ஸிவனும் பார்வதி, ஷண்முகன் உடன் கூடி ஸேஷாசலம் வந்து சேர்ந்தார். அக்னி, எமன், வருணன், வாயு, சந்திரன், ஸுர்யன் போன்றவர்களும் மன்மதன் ரதிதேவியுடனும் அங்கே எழுந்தருளினர். கௌதமர், காஸ்யபர், வஸிஷ்டர், விஸ்வாமித்திரர் போன்ற ரிஷிகளும் அங்கே வந்தடைந்தனர். கந்தர்வர்கள், அப்ஸரா ஸ்திரீகள் போன்றோரும் வந்தனர்.

பகவான் அனைவரிடமும் விவாஹ ஸங்கல்பத்தைப் பற்றித் தெரிவித்தார். விஸ்வகர்மா அங்கே சபையை நிர்மாணம் செய்ய, பகவான் ஸ்ரீநிவாஸன் அவரை ஆகாஸராஜனின் நாராயணபுரம் சென்று விவாஹத்திற்கான ஸபா மண்டபத்தை நிர்மாணம் செய்யப் பணித்தார். அஷ்டவர்க்கம் முதலான காரியங்களை பகவான் செய்து முடித்தார். மேலும் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பொறுப்புகளை ஒப்படைத்தார். புரோஹித காரியங்களை வஸிஷ்டருக்கும், அனைவரையும் அழைத்து வரும் காரியத்தையும் ஸன்மானம் அளித்தலையும் ஷண்முகனுக்கும், அனைவரையும் வரவேற்று ஆஸனம் அளித்து அமர்த்தும் வேலையை மன்மதனுக்கும், வஸ்திரங்கள் அளிக்கும் காரியத்தை குபேரனுக்கும், வெளிச்சம் ஏற்படுத்தித் தரும் காரியத்தை சந்திரனுக்கும், ஜல ஸௌகரியம் ஏற்படுத்தித் தருவதை வருணனுக்கும், அறுசுவை உணவு தயார் செய்யும் காரியத்தை அக்னிக்கும், துஷ்டர்களுக்கு தண்டனையும்,ஸிஷ்டர்களுக்கு ஸன்மானமும் அளிக்கும் காரியத்தை எமனுக்கும் ஒப்படைத்தார்.

முன்னால் மங்கள ஸ்நானம் செய்ய கிளம்பிய பகவான் ஸ்ரீநிவாஸன், மகாலக்ஷ்மியை நினைத்துக் கொண்டு, லக்ஷ்மி இல்லாமல் இந்த வைபவம் கிடையாது எனக் கவலையுடன் கூறினார். ஸூரியனை அழைத்து கரவீரபுரம் சென்று ஸ்ரீ ஹரியின் உடல்நிலை கவலைக்கிடமாக உள்ளதாகத் தெரிவித்து மஹாலக்ஷ்மியை அழைத்து வருமாறு கூற, ஸூரியனும் நாடகமாடும் வகையில், கண்களில் நீர் தளும்ப அழுதுகொண்டே மஹாலக்ஷ்மி இருக்குமிடம் சென்று செய்தியை சொல்லி அழைத்து வந்தான். பகவான் ஸ்ரீநிவாஸனும் நாடகமாடும் வகையில் சிவபெருமானின் தோள்களின் மீது இடது கையையும்,

பிரம்மதேவரின் தோள்களின் மீது வலது கையையும் போட்டுக்கொண்டு நடக்க முடியாதவரைப் போல நிதானமாக நடந்து வந்தார். அனைத்தும் பகவானின் லீலைகள் என அறிந்த மகாலக்ஷ்மியும் துக்கப்படுவது போல் நடித்தாள். மகாலக்ஷ்மியை ஆலிங்கனம் செய்து கொண்ட பகவான் ஸ்ரீநிவாஸன் நடந்த அனைத்து விஷயங்களையும் கூறி, திரேதாயுகத்தில் ஸீதாவாக இருந்தபோது அளித்த வாக்குறுதியை நிறைவேற்றவே இப்போது பத்மாவதியாக அவதரித்த வேதவதியை விவாகம் செய்ய இருப்பதாகக் கூற, மகாலக்ஷ்மியும் மகிழ்ச்சியுடன் பகவானின் கையைப்பிடித்து விவாகத்தைத் தடையின்றி நிகழ்த்துமாறு கேட்டுக் கொண்டாள்.

பலஸ்ருதி:
பகவானின் விவாஹ காரியத்தின் அங்கமான லீலைகளை கேட்பதனாலேயே அஷ்ட ஐஸ்வரியம் ஸித்திக்கும் என்றும், பல்வேறு விக்னங்களும் பரிகாரமாகும் என்றும் இந்த அத்தியாயத்திற்கான பலஸ்ருதி விவரக்கப்பட்டுள்ளது.

ஒன்பதாம் அத்தியாயம்

விவாஹத்திற்கான கலைகட்ட ஆரம்பித்தது. ஸரஸ்வதி தேவி முதலான அனைவரும் ஸ்ருங்காரம் செய்து கொண்டனர். பகவான் ஸ்ரீநிவாஸன் தனது லீலா வினோதங்களைத் தொடரும் வகையில் தனக்கு மங்கள ஸ்நானம் (அப்யங்க ஸ்நானம்) செய்விக்க யாருமில்லை; ஆசீர்வதித்து ஆரத்தி எடுக்க பெரியவர்கள் யாருமில்லை; அக்கறையுடன் மூலிகைகளைப் பூசி ஸ்நானம் செய்விக்க அக்கா தங்கையரும் யாருமில்லை; தாய் சகோதரிகள் எனத் தனக்கு யாரும் இல்லை எனக் கூறியதைக் கேட்டு பதில் அளித்த பிரம்மதேவர், பகவானுக்கு ஜீவராஸிகளைப் போல பிறப்பு என்பதே இல்லை என்ற நிலையில், தாய் தந்தையர் உடன்பிறந்தவர்கள் இருப்பது எங்கனம் என்ற ஸாஸ்திர வசனங்களைக் கூறி எப்போதும் உடன் உறையும் இந்திரா தேவியே இதைச் செய்ய வேண்டும் என்றும் வேண்டிக் கொண்டார். பகவான் ஸ்ரீநிவாஸனின் கடைக்கண் பார்வையிலேயே அவரின் பாவத்தை அறிந்த ஸ்ரீ மஹாலக்ஷ்மி தேவி ஸ்ரீநிவாஸனுக்கு குங்குமம் இட்டு ஆரத்தி எடுத்து தைலம் தேய்த்து மங்கள ஸ்நானம் செய்வித்தார். பின்னர் வஸ்திரத்தால் துடைத்து, பீதாம்பரம் போன்றவற்றை அளித்து, பார்வதி தேவி கொண்டு வந்த தூபத்தை கேஸத்திலே காண்பித்து, சிகையைக் கட்டி மகிழ்ந்தார்.

பகவான் ஸ்ரீநிவாஸன் மஹாலக்ஷ்மியின் கையைப் பிடித்தவாறு முன்னால் நடந்தார். ஸரஸ்வதி, பார்வதி, ஸஸிதேவி போன்றோர் சாமரம், பத்ரம், கண்ணாடி போன்றவற்றைக் கொடுத்து உபசாரம் செய்தனர். பகுளாதேவியும் மஹாலக்ஷ்மியும் பகவானுக்கு குங்குமமிட குபேரன் அளித்த ஆபரணங்களை அணிந்து, கண்ணாடியின் முன் அமர்ந்து சரி செய்து கொண்டார்.

பகவான் ஸ்ரீநிவாஸன் ரிஷிகளுக்கும், தாயார் பகளாதேவிக்கும் நமஸ்காரம் செய்து மஹாலக்ஷ்மியுடன் புண்யாஹவசனத்திற்கு அமர, வஸிஷ்ட மகரிஷி புண்யாஹவசனத்தை க்ரமமாக செய்வித்தார். தேவதைகள் வஸ்திரங்கள் வழங்க, ஸுமங்கலிகள் ஆரத்தி எடுத்த பின்னர், தனது குலதெய்வமான ஸமீ விருட்சத்திற்கு பூஜைகள் செய்தார் பகவான் ஸ்ரீநிவாஸன். தரணி தேவியுடன் கூடிய ஸ்ரீவராஹ ஸ்வாமியை விவாஹத்திற்கு வரும்படி முறைப்படி அழைப்பு விடுத்தார் ஸ்ரீநிவாஸன். அனைவரையும் நாராயணபுரத்திற்கு விவாஹத்திற்கு கிளம்பத் தயாராகும்படி கேட்டுக் கொண்டார். அப்போது பிரம்ம தேவர் புண்யாஹவசனம், குலதெய்வ ஸ்தாபனம் போன்றவற்றை செய்த பிறகு உபவாஸமாக செல்லுதல் சரியல்ல, சிறிய குழந்தைகள், பெண்கள், புண்ணிய ஸீலர்கள், முனிவர்கள் ஆகியோர் சாப்பிடாமல் செல்வது இயலாது என்றுரைத்தார். பகவானும் அதை ஏற்றுக் கொண்டாலும், மோஹம் உண்டாக்கும்படி இத்தனை பேருக்கும் அன்னமிட செலவுக்கு பொருள் இல்லையே எனக் கூறலானார். ருத்ர பகவானும் பகவானின் லீலா வினோதங்களை அனுசரிக்கும் விதமாக, விவாஹம் செய்வதற்கும், வீடுகள் கட்டுவதற்கும் கடன் வாங்குவது தவறில்லை எனக் கூறி குபேரனிடம் கடனைப் பெற்று விவாஹ வைபவத்தை நடத்தலாம் எனக்கூற, பகவான் ஸ்ரீநிவாஸனும் குபேரனை அழைத்து கலியுகம் முடியும் வரை வட்டியும், பிறகு அசலும் செலுத்துவதாக முறைப்படி கடன் பத்திரம் எழுதி, வைஸாக ஸுத்த ஸப்தமியன்று கையெழுத்திட, பிரம்ம தேவரும் சிவபெருமானும், அஸ்வத்த விருட்சமும் ஸாக்ஷியாக இருந்து கையெழுத்திட்டனர்.

பகவான் ஸ்ரீநிவாஸன் அக்னி பகவானை அழைத்து அனைவருக்கும் அன்னம் தயார் செய்யக் கூற, அக்னி பகவான் அன்னம் பரமான்னம், பக்ஷணங்கள் எனப் பல விதமாக சமைப்பதற்கு பாத்திரங்கள் இல்லை எனக் கூறினான். அதற்குக் கடிந்து கொள்ளும் வகையில் பதிலுரைத்தத பகவான் ஸ்ரீநிவாஸன், அவரவர்கள் தங்களின் காரியமெனில் கையில் இருப்பதைக் கொண்டும் செய்து முடிக்கும் நிலையில், பகவத்

காரியத்தில் காரணம் சொல்வது சரியல்ல எனக்கூறி, அதற்கான மார்க்கத்தையும் கூறலானார். அதன்படி ஸ்வாமி புஷ்கரணியில் அன்னத்தையும், பாபநாஸினியில் பருப்பையும், ஆகாஸ கங்கையில் பரமான்னத்தையும், கும்ப தீர்த்தத்தில் நெய்யையும், பாண்டு தீர்த்தத்தில் பக்ஷணங்களையும் தயார் செய்து நிரப்பும்படி அனுக்கிரகம் புரிய, அக்னி பகவானும் அவ்விதமே செய்து முடித்தார். சமையல் எல்லாம் தயாராகி இருக்க பகவான் ஸ்ரீநிவாஸன் அகோபில நரசிம்மருக்கு நைவேத்யம் செய்ய சொல்லி, நைவேத்ய பதார்த்தங்களை அனைவருக்கும் பரிமாற பகவான் ஸ்ரீநிவாஸன் முன்வந்து கிருஷ்ணார்ப்பணம் கூறி பந்தியை முறைப்படி தொடங்கி வைத்தார். போஜனம் ஆனபிறகு அனைவருக்கும் தாம்பூலம் தக்ஷணை அளித்து த்ருப்திபடுத்த, அனைவரும் விவாஹத்திற்கு கிளம்பத் தயாரானார்கள்.

பலஸ்ருதி:

ஸ்ரீநிவாஸ கல்யாண வைபவத்தில் இந்த ஒரு அத்தியாயத்தை ஸ்ரவணம் செய்வதன் பலனாக புருஷோத்தமனின் தயை ஸித்திக்கும். காரியங்களுக்கு ஸகாயம், ஜன பலம் அளித்து பக்தர்களை பகவான் காக்கிறான் என்பதாக பலஸ்ருதி விவரக்கப்பட்டுள்ளது.

பத்தாம் அத்தியாயம்

கருடவாஹனத்தில் பகவான் ஸ்ரீ நிவாஸன், ஹம்ஸ வாகனத்தில் பிரம்ம தேவர், நந்தி வாகனத்தில் ருத்ர தேவர் என அனைவரும் அவரவர் வாகனங்களில் பத்தினியர் ஸமேதமாக புறப்பட, முன்னே பிரம்மதேவர் பின்னால் ஷண்முகன் இடம் வலமாக வாயு பகவான் மற்றும் ருத்ர பகவான் என புடைசூழ, நடுவிலே பகவான் ஸ்ரீநிவாஸன் செல்ல, பகுளா தேவி இன்னும் பிற தேவதைகள் அனைவரும் பின் செல்ல மங்கள வாத்தியம் முழங்க, ஆகாஸராஜனின் பட்டிணம் நோக்கிக் கிளம்பினர். எள் விழும் அளவிற்குக் கூட இடமில்லை எனும் வகையில் முப்பத்து முக்கோடி தேவர்களும் வைபவத்துடன் பர்வதத்தில் இருந்து கிளம்பி ஊர்வலமாகச் சென்றனர்.

வழியில் ஸுகபிரம்ம முனிவரின் ஆஸ்ரமம் வர, பகவான் ஸ்ரீநிவாஸன் உள்ளே சென்று அவருக்கு அனுக்ரஹம் புரிய, ஸுகபிரம்ம ரிஷி ஸ்ரீநிவாஸனை போஜனம் செய்ய பிரார்த்தனை செய்தார். ஆனால் அனைவருக்கும் போஜனம் செய்விக்காத நிலையில் தான் மட்டும் உண்பது சரியல்ல என நினைத்து ஸ்ரீநிவாஸன் முதலில் மறுத்தாலும்,

ஸுகபிரம்ம ரிஷியின் பிரார்த்தனைக்கு இணங்க ப்ரீதியுடன் போஜனம் செய்தார். நித்ய த்ருப்தனான பகவான் ஸுகபிரம்ம ரிஷி அளித்த போஜன பதார்த்தங்களை உண்டு திருப்தி அடைந்த மாத்திரத்தில், பிரம்மா, ருத்ரன் முதலான தேவதைகள், ஸனகாதி முனிவர்கள் அனைவரும் தாமும் உண்டதைப் போல் திருப்தி அடைந்தனர். ராத்திரியில் அங்கேயே தங்கி நித்ரை செய்து, அதிகாலையிலேயே ஸ்நானம் செய்து கிளம்பி ஆகாஸராஜனின் பட்டணத்தை அடைந்தனர்.

ஆகாஸராஜன் வைபவத்துடன் தம் பட்டிணத்தை அடைந்த பகவான் ஸ்ரீநிவாஸனையும், மகாலக்ஷ்மி, பிரம்மா, ருத்ரன் முதலான தேவதைகளையும் வரவேற்று பகவான் ஸ்ரீநிவாஸனுக்கு வஸ்திரம், ஆபரணங்கள் போன்றவற்றை அளித்து, தன்னுடைய கௌரவத்தை செலுத்தி 'வர பூஜை' செய்தான். தோண்டமான் ராஜன் வந்திருந்த அனைவருக்கும் விருந்து தயார் செய்து பரிமாறச் செய்து கௌரவித்தான்.

மறுநாள் வைஸாக ஸுத்த தஸமி, விவாஹ தினத்தன்று பகவான் ஸ்ரீநிவாஸன் அதிகாலையிலேயே மங்கள ஸ்நானம் செய்து, வஸிஷ்ட மகரிஷியை அழைத்து, தம் வீட்டு வழக்கப்படி மாப்பிள்ளை வீட்டில் தானும், மஹாலக்ஷ்மி தேவியாரும், தன் மகனான பிரம்மதேவரும், பகுளாதேவியும், புரோஹிதராக வஸிஷ்டர் முதலானவர்களும் உபவாசம் இருக்க வேண்டும், அதேபோல் பெண் வீட்டில் ஆகாஸராஜன், அவர் மனைவி தரணி தேவி, பத்மாவதி, புரோஹிதர் மற்றும் தோண்டமான் ராஜன் முதலானவர்களும் உபவாசம் இருக்க வேண்டும் என்று கூறி அனுப்பினார். ஸாயங்கால வேலையில் அனைவரும் விவாஹத்திற்கு ஸித்தமாக, பகவான் ஸ்ரீநிவாஸன் விவாஹ மண்டபத்திற்கு எழுந்தருளினார். பிரஹஸ்பதி ஆச்சாரியர் கூறியபடி தரணி தேவியும், ஸுகாஸினிகளுடன் சேர்ந்து பகவான் ஸ்ரீநிவாஸனுக்கு பூஜைகளை செய்தாள். ஆகாஸராஜன் பகவான் ஸ்ரீநிவாஸனின் பாதத்தை அலம்பி அந்த தீர்த்தத்தை ப்ரோக்ஷணை செய்துகொண்டு, மதுபர்க்கம் முதலானவற்றை அளித்து பூஜைகள் புரிந்தான். விவாஹ கன்னிகையான பத்மாவதியை அழைத்து வர, பட்டு வஸ்திரத்தைக் கொண்டு மறைத்து 'ஸாவதான' என்று மங்களாஷ்டகம் பாடி விஸேஷ ஸம்பிரதாயங்கள் நடந்தேறின. மந்திராக்ஷதையை பரஸ்பரம் பகவான் ஸ்ரீநிவாஸனும் பத்மாவதியும் பரிமாறிக் கொண்டனர். (தொடரும்)...

**S.லக்ஷ்மிபதிராஜா, சென்னை**

தொடர்

**ஹரிகதாம்ருதசார மஞ்சரி 360**

**By ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர்**

41. **ஸ்ரீதருணி வல்லப4ன பரம வி**
**பூ4திரூபவ கண்ட3கண்ட3**
**ல்லிதெரதி3 சிந்திஸுத மனத3லி நோடு3 ஸம்ப்4ரமதி3 |**
**நீத ஸாதா3ரண விஸேஷ ஸ**
**ஜாதி நைஜாஹிதவு ஸஹஜ வி**
**ஜாதி க2ண்டா3க2ண்ட3 ப3கெ3க3ளனரிது பு3த4ரிந்த3 ||(5-1)**

லட்சுமி ஸமேதனான ஸ்ரீஹரியை, பார்க்கும் அனைத்து இடங்களிலும் பார்த்து மகிழ்வாயாக. அவனுடைய செயல்கள் அற்புதமானவை. அணுவில், மஹத்தான பொருட்களில், தானே அனேக அம்சங்களில் இருக்கிறான். இதனை அறிவது கஷ்டம். ஆனால், பண்டிதர்கள் மூலமாக அறிந்து சிந்திக்க வேண்டும் என்கிறார். ஒரு பருக்கையில் தன்னதேயான ரூபத்தினால் இருக்கிறான். அன்ன பாத்திரத்தில் இருக்கும் அன்னத்திலும் அதே ரூபத்தினால், வேறுபாடு இன்றியும், அன்னம் செய்த பாத்திரத்திலும்கூட கண்டாகண்ட ரூபத்தினால் இருப்பதை சிந்திக்க வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர்.

இன்னொரு உதாரணம்: சாம்பாரில் பல பொருட்களை சேர்த்து சமைக்கிறோம். அது சுவையாக இருக்கிறது என்று குடிப்பதும் உண்டு. மூலத்தில் அந்தர்யாமியாக இருந்து, அதில் சேர்க்கப்படும் பொருட்களிலும் அந்தந்த பெயர்களில், அதில் அந்தர்யாமியாக பல ரூபங்களைக் கொண்டு இருக்கிறான் என்று அறிய வேண்டும் என்கிறார்.

42. **ப்ரதிமெ ஷாலக்3ராம கோ3ப்4யா**
**க3த அதிதி ஸ்ரீதுளஸி பிப்பல**
**யதி வனஸ்த2 க்4ருஹஸ்த2 வடு யஜமான ஸ்வபர ஜன |**
**ப்ருதி2வி ஜல ஷிகி2 பவன தாரா**
**பத2 நவக்3ரஹ யோக3 கரண ப4**
**திதி2 ஸிதாஸிதபக்ஷ ஸங்க்ரம அவனதி3ஷ்டான ||(5-3)**

மேற்சொன்ன உதாரணங்களைப் போல, இந்த பத்யத்தில், நாம் இந்த உலகில் பார்க்கும், ஸ்ரீஹரியின் பற்பல சிலைகள், பற்பல

சாலிகிராமங்கள், பசு, பிராமணர்கள், யதிகள், துளஸி, ஆல மரம், கிருஹஸ்தர், ரிஷிகள், வடு, வீட்டு எஜமானர், பூமி, தண்ணீர், நதி, நட்சத்திர, திதி, யோக, கரணங்களுடன், சுக்ல கிருஷ்ண பட்சங்கள், ஸங்க்ரமண ஆகிய எதையெல்லாம் பார்க்கிறோமோ, அனுபவிக்கிறோமோ இவை அனைத்தும் பகவந்தனுடையதே. அவனே இந்த அனைத்திலும் அந்தர்யாமியாக இருக்கிறான். அந்தந்த பெயரால் அழைக்கப்பட்டு, தானே அங்கு இருக்கிறான் என்று சொல்கிறார் தாஸர். அடுத்த பல பத்யங்களிலும் அனேக உதாரணங்களைக் கொடுத்து, பகவந்தன் அங்கெல்லாம் இருக்கிறான் என்று கூறுகிறார்.

43. **ஜலஜநாப4ன மூர்த்தி மனத3லி**
**நெலெகொ3ளிஸி நிஸ்சல ப4கு3தியலி**
**சளி பி3ஸிலு மளெ கா3ளிக3ள நிந்தி3ஸதெ நித்யத3லி |**
**நெலதொ3ளிஹ க3ந்த4வெ ஸுக2ந்த4வு**
**ஜலவெ ரஸ ரூபவே ஸுதீ3பவு**
**எலரு சாமர ஷப்3த வாத்3ய க3ளர்ப்பிஸலு ஒலிவ ||(5-13)**

அனந்தனான ஸ்ரீஹரியை மனதில் திடமாக ஸ்தாபித்து, அமல பக்திகளால், மழை, காற்று, வெயில் ஆகியவற்றை திட்டாமல், அந்தந்த மாதங்களில் வரும் (பூ, பழம், காய்கறி) பதார்த்தங்களும், பூமியில் இருக்கும் ரூபரஸங்களாலேயே, வீசும் காற்று, குடிக்கும் தண்ணீர், சூரியன், சந்திரன், நட்சத்த்திரங்களே, ஸ்ரீஹரிக்கு தூப தீப என்று அனுசந்தானம் செய்துகொண்டு சமர்ப்பித்தால், ஸ்ரீஹரி மகிழ்கிறான் என்கிறார்.

அதாவது, நாம் காணும், உலகின் அனைத்து செயல்களும் நம்முடையதல்ல. பகவந்தனுடையதே என்னும் ஞானம் நம்மில் இருந்தால், ஸ்ரீஹரியின் தரிசனம் சீக்கிரம் ஆகிறது என்கிறார். இத்தகைய சிந்தனைகளை கேட்க, படிக்க நன்றாக இருக்கிறது. ஆனால், அதனை நம் பழக்கத்தில் கொண்டு வருவது மிகவும் கஷ்டம். ஆனாலும் நாம் இதனை விடக்கூடாது. செய்தவாறே இருக்க வேண்டும். பசி, தாகம், சோர்வு ஆகியவை வந்தாலும், பகவந்தனை விடாமல் சிந்திக்க வேண்டும். இதுவே ஸாதனை. இதுவே உண்மையான வைஷ்ணவ தீக்ஷை.

44. **சதுரவித4 புருஷார்த்த2 படெ3வரெ**
**சதுரத3ஷ லோகக3ள மத்4யதொ3**
**ளிதரு பாயக3ளில்ல நோடலு ஸகலஷாஸ்திரத3லி |**
**ஸதத விஷயேந்தி3ரயக3ளலி ப்ரவி**

**ததனெனிஸி ராஜிஸுவ லகுமி**
**பதிகெ[3] ஸர்வஸமர்ப்பணெய மஹபூஜெ ஸது[3]பாய ||(5-17)**

எந்த வித உபகரணங்களும் இன்றி, செய்யத்தக்க மஹாபூஜை எது என்று கேட்டால், தாஸர் அதற்கு விடையாக, சதுர்வித பல புருஷார்த்தங்கள் மற்றும் பாரமார்த்திக பார்வையினால் அதனை அடைய வேண்டுமெனில், அனைத்து சாஸ்திரங்களிலும் சொல்லியிருப்பதைப் போல, தற்காலிக சுகங்களில் / விஷயங்களில் ஈடுபடாமல், அனைத்து செயல்களையும் மானஸிகமாக ஸ்ரீஹரிக்கு அர்ப்பணம் செய்தால், அதுவே மஹாபூஜை. இதுவே சரியான உபாயம் என்கிறார் ஸ்ரீதாஸர். இதனுடன், இந்த்ரியங்களில், அவனே நின்று செயல்களை செய்து செய்விக்கிறான் என்னும் அனுசந்தானம் மிகவும் முக்கியமான ஒன்றாகும்.

45**. மாதரிஷ்வனு தே[3]ஹரத[2]தொ[3]ளு**
**ஸுதனாகி[3]ஹ ஸர்வகாலதி[3]**
**ஸ்ரீதருணி வல்லப[4] ரதிகனெந்தரிது[3] நித்யத[3]லி |**
**ப்ரீதியிந்த[3]லி போஷிஸுத வா**
**தாதபாதி[3]க[3]ளிந்த[3] அவிரத**
**ஈ தனுவினொளு மமதெ பி[3]ட்டிஹனவனெ மஹயோகி[3] ||(5-25)**

நமக்கு எது சாத்தியம் இல்லையோ, அதனை சாத்தியப்படுத்தும்போது அதுவே மஹாபூஜை என்கிறார் மானவி தாஸர். அது எப்படி என்றால், நம் இந்த தேகம் என்னும் ரதத்தில் அனைத்து காலங்களிலும் முக்யபிராணர் தேரோட்டியாக இருக்கிறார். அங்கு அந்தர்யாமியாகி, தருணிவல்லபனான ஸ்ரீஹரி அமர்ந்திருக்கிறான் என்று எப்போதும் அறிந்து, அவனை அன்புடன் சிந்தித்து, வணங்கினால், நமக்கு இந்த தேகத்தின் மேல் உள்ள கர்வம் குறைகிறது. அவனே மஹாயோகி என்கிறார்.

அதாவது, முக்யபிராணாந்தர்கதனான ஸ்ரீஹரி அவனே இந்த தேகத்தில் இருந்து, நம் அனைத்து செயல்களையும் செய்விக்கிறான். இந்த தேகம் என்னுடையதல்ல என்னும் அபிமானத்தை விடுவதற்கு முயன்றால், அவனே மஹாயோகி என்கிறார்.

46. **பி3ம்ப3ரெனிபரு ஸ்வோத்தமரு ப்ரதி**
**பி3ம்ப3ரெனிபரு ஸ்வாவரரு ப்ரதி**
**பி3ம்ப பிம்பக3ளொளகெ3 கேவல பிvம்ப3 ஹரியெந்து3 ।**
**ஸம்ப்4ரமதி3 பாடுதலி நோடு3த**
**உம்பு3டுவுதி3டுவுதுv கொடு3வுதெ3**
**ல் லம்புɜஜாம்ப3கனங்க்4ரி பூஜெக3ளெந்து3 நலிதா3டு3 ||(5-35)**

உத்தமர்கள் அதமர்களுக்கு பிம்ப என்று அறி. அதமர்கள் அவர்களை விட உயர்ந்தவர்களுக்கு ப்ரதிபிம்பனாக இருக்கிறார்கள். ஆனால், அனைவரிலும் ஸ்ரீஹரியே பிம்பனாக இருக்கிறான். மற்ற அனைவரும் ஸ்ரீஹரிக்கு பிரதிபிம்பரே ஆகியிருக்கிறார்கள் என்று அறிந்து, நீ பார்க்கும், கொடுக்கும், பேசும், உண்ணும், கொடுக்கும் அனைத்து செயல்களும் (த்வந்த்வ கர்மங்களில்) அவனுடையதே என்னும் அனுசந்தானம் செய். அதுவே அவனின் மஹாபூஜை என்று அறி என்கிறார் ஸ்ரீதாஸர்.

செய்யும் அனைத்து கர்மங்களில் அவனே இருக்கிறான். அவன் செய்வித்தால், நாம் செய்கிறோம். இல்லையெனில் இல்லை. அவனை நம்பி, அவனே கர்த்ரு என்று அறி என்கிறார். நாம் அஸ்வதந்த்ரர் என்று அறிந்து, பிம்பன் செய்வதைப் போல செய்கிறோம் என்னும் ஞானம் இருக்க வேண்டும். வரவேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர். அனைத்து கர்மங்களில் அவனுடைய சிந்தனை இருக்க வேண்டும் என்கிறார்.

47. **ஏனு மாடு3வ கர்மக3ள லகு**
**மி நிவாஸனி க3ர்ப்பிஸ னுஸ**
**ந்தா3ன பூர்வகதி3ந்த3 ஸந்தே3ஹிஸதெ3 தி3னதி3னதி3 ।**
**மானநிதி4 கைகொண்டு3 ஸுக2வி**
**த்தா3னத3ர ஸந்தெய்ப த்ருணஜல**
**தே4னு தானுண்டனவரத பால்க3ரெவ தெரனந்தெ ||(5-38)**

எவ்வித சந்தேகங்களுக்கு இன்றி, செய்த கர்மங்கள் அனைத்தையும், ஸ்ரீனிவாஸனின் பாதாரவிந்தங்களில் அர்ப்பித்துவிடு. எவ்வித பலன்களையும் எதிர்பார்க்காமல் நம் அனைத்திற்கும் அதிபதியான அவன் நமக்கு சுகத்தையே கொடுக்கிறான். எப்போதும் நமக்கு வரும் கஷ்டங்களிலிருந்து நம்மை காக்கிறான். எப்படியெனில், தெருவினில் கிடந்த புல் ஆகியவற்றை தின்ற பசு, நமக்கு பால் கொடுக்கிறது. அப்படியே, ஸ்ரீஹரியும் என்று அறிவாயாக என்கிறார். அதாவது, செய்யும் செயல்களை அவனுக்கு சமர்ப்பித்தால், அவன் நமக்கு அமிர்தத்தையே கொடுக்கிறான்.

48. **பரி இடா3 வத்ஸரனு ஸம்வ**
**த்ஸர தொ3ளனிருத்தா3தி3 ரூபவ**
**த4ரிஸி பா4ர்ஹஸ்பத்ய ஸௌரப4 சாந்த்3ரமனு எனிஸி |**
**இருதிஹ ஜகன்னாத2விட்டல**
**ஸ்மரிஸுப3வரனு ஸந்தயிஸுவனு**
**உருபராக்ரமனுசித ஸாத4னெ யோக்3யதெயனரிது ||(5-40)**

பகவந்தன், அனைத்து ஜீவராசிகளின் யோக்யதைகளை அறிந்து, அவர்களுக்கு ஏற்பதான தக்க சாதனைகளை செய்விக்கிறான். ஆனால், அவன் கேட்பது நம் மனதினை மட்டுமே. எவ்வித சந்தேகங்களும் இன்றி, அவனை நினைத்து, செய்த அனைத்து கர்மங்களையும் அவனுக்கு அர்ப்பித்து, நிரந்தரமாக அவனுடைய சிந்தனையிலேயே இருந்தால், ஜகன்னாதவிட்டலன் நம்மை காக்கிறான் என்கிறார்.

49. **ஜனனி பித பூ4 வாரித3ம்ப3ர**
**வெனிப பஞ்சாக்3னியலி நாரா**
**யணன த்ரிம்ஷதி1 மூர்த்திக3ள வ்யாபார வ்யாப்திக3ள**
**நெனெது3 திவஸக3ளெம்ப3 ஸமிதெ4க3**
**ளனு நிரந்தர ஹோமிஸுத பா**
**வனகெ பாவனனெனிப பரமன பே3டு3 பரமஸுக2 ||(6-1)**

ப்ருத்வி, அபு, தேஜ, வாயு, ஆகாஷங்களில் பகவந்தன் 33 ரூபங்களில் இருந்து செயல்களை செய்கிறான் என்று நாம் அறிந்து, நாளின் 24 மணி நேரங்கள் நீயே கொடுத்தது என்று அவனுக்கே அதனை ஹோமமம் செய்தவாறு, அவனையே பரமஸுக என்னும் இஷ்டார்த்தங்கள் என்று வேண்டு என்கிறார். (தொடரும்)

ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப், அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்து சொல்லலாம்.

வங்கிக் கணக்கில் சந்தா / புத்தகத்திற்காக பணம் செலுத்தினால், மறக்காமல் உங்கள் முகவரியை 89044 58276 எண்ணுக்கு வாட்சப் / SMS அல்லது haridasa.vijayam@gmail.comக்கு மின்னஞ்சல் அனுப்பவும்

**தொடர்**

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### 25. ஆரோஹண தாரதம்ய ஸந்தி விடைகள்

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 ஸு | ரா | 25 ஸ் | யா | | 2 க | ர் | 26 ம | 27 க | ரு | கு | ஜ | தி | 16 தி |
| வா | | 3 தா | ர | கே | ஸ | ட | ரீ | க | வ | ரு | ர | ரு | ர |
| ஸ | ஹி | வ | ரா | 17 ப் | | ஷ் | சி | ப | தே | 38 ப் | 39 வ் | ர | கீ |
| னெ | 4 க் | ர | து | | 28 தா | ஸி | | | 40 பூ | 29 த | | 41 நி | 42 பா |
| ஜ | ரி | 18 வா | 30 வ் | 5 ஜ | ரா | 43 வ | த | ம் | 6 ப் | ர | ஸு | தி | |
| 7 அ | னா | க் | யா | 31 த | அ | னி | மி | ஷ | ரு | ணி | ரி | த் | 19 அ |
| ம | | | க் | ர | 8 ஸ | ஸி | பி | ந் | து | | 44 செ | | ஸ் |
| ரா | 32 கோ | | ர | ணீ | | | ன் | ர | 33 த் | 20 மி | வா | ஸ் | 21 வி |
| ஸ் | வி | 34 ஆ | | 9 ப | ரீ | 35 க்ஷி | த் | தி | யு | | | 36 நி | னி |
| 37 ய | த | ஸ் | ல | 22 பு | ம் | ரு | 10 க | ப | ன | வ | ய | 23 ச் | |
| ம | ர் | ய | 11 வா | ரி | நி | தி | ர | 24 ஹ | தி | | | ச | |
| ன் | 12 ஆ | த் | ம | 13 ஜ | ல | 14 ப | ரே | 15 | த | கோ | டி | ணி | |

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்
**Haridasa Vijayam - Monthly**

மலர் 3 ** September 2022 ** இதழ் 10



ஸ்ரீபிரஸன்ன வெங்கட தாஸர்

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 3 : இதழ் 10

**நிர்வாக ஆசிரியர்**
'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross, JP Nagar
4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276.
haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**
' தாச சாகித்ய சேவா ரத்ன'
திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**
திரு. முரளிதர தாசரு,
திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா,
திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

ஆராதனை

**ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்**

**செப்டம்பர் 1 முதல் 30 வரை, 2022**

1st: பாத்ரபத சுத்த பஞ்சமி - ஹஸிக்யாளு ஸ்ரீ கோவிந்த தாஸரு
4th: பா. சு. அஷ்டமி - ஸ்ரீஸ்ரீஷ பிராணேஷ தாஸரு
4th: பா. சு. நவமி - ஸ்ரீஜகன்னாததாஸரு, மானவி
6th: பா. சு. ஏகாதசி - ஸ்ரீபிரஸன்ன வெங்கடதாஸர், பாகல்கோடெ
7th: பா. சு. த்வாதசி - ஸ்ரீகமலேஷ விட்டல தாஸர், சுரபுர
9th: பா. சு. சதுர்தசி - பாகெபல்லி ஸ்ரீசேஷ தாஸர்,
27th: ஆஸ்விஜ சுத்த த்விதியை - ஸ்ரீஆனந்த விட்டல தாஸர், லிங்கஸுகூர்
28th: ஆ. சு. த்ருதீயை - ஸ்ரீவரதேஷ விட்டல தாஸர், லிங்கஸுகூர்

# ஆசிரியர் பக்கம்

செப்டம்பர் மாத முழுக்கவே பல ஹரிதாஸர்களின் புண்ணிய தினங்கள் வருகின்றன. முன் அட்டையில் விவரங்களை பார்க்கவும். ஹரி கதாம்ருதஸாரத்தை நமக்கு அருளிய ஸ்ரீஜகன்னாததாஸர், பாகவத 10ம் ஸ்கந்தத்தை கிருதி வடிவில் இயற்றிக் கொடுத்த ஸ்ரீபிரஸன்ன வெங்கடதாஸர் ஆகியோருடன் இன்னும் பல ஹரிதாஸர்களின் புண்ணிய தினங்கள் வருகின்றன. நமக்கு ஞான பக்தி வைராக்கியங் களுக்கான வழியைக் காட்டி அருளிய ப்ராத: ஸ்மரணீயர்களான இத்தகைய ஹரிதாஸர்களை அவரவர் புண்ணிய தினங்களில் சிறப்பாக நினைவுகூர்ந்து, அவர்களின் அருளைப் பெறுவோமாக.

நமது 'Jagannatha Kesava' யூட்யூப் சேனலில் ஸ்ரீகுருஜகன்னாத தாஸரின் கன்னட ஸ்ரீராகவேந்திர விஜயத்தின் தமிழ் விளக்கங்களை கேட்டிருப்பீர்கள். தற்போது ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தரின் கன்னட மத்வ விஜய ஸார ஸங்க்ரஹத்தின் தமிழ் விளக்கங்கள் வந்து கொண்டிருக் கின்றன. அந்த சேனலுக்கு சப்ஸ்க்ரைப் செய்து அந்த தொடரை அனைவரும் கேட்கலாம்.

நமது blog 'https://dasa-sahitya.blogspot.com/'வில் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர் இயற்றிய ஹரிதாஸ தர்பண என்னும் அற்புத கிருதியின் தமிழ் விளக்கங்கள் தினம் ஒரு பத்யமாக வந்து கொண்டிருக்கின்றன. அதையும் அனைவரும் படித்து மகிழ வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

**கன்னடம்**

**அருஞ்சொற்பொருள்**

**கடினமான சொற்களின் அர்த்தங்கள்**

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

1. பம்பாலய - ஹம்பி. 2. தாத - பிரம்மன். 3. தாதபித - ஸ்ரீஹரி. 4. சித்தஜ - மன்மதன். 5. கமலாக்ஷ - விஷ்ணு 6. ஸ்ருத்யர்த்த - வேதங்களின் அர்த்தம் 7. ஸ்ரீகண்டசாப - சிவ தனுஸு. 8. ஸ்ரீதருணி - லட்சுமி; 9. ஸ்ரீத - ஸ்ரீஹரி / குபேரன். 10. ஷௌரி - கிருஷ்ணன்.

தொடர்

## கேசவ நாமா

### 36. ஷரணு ஷரணு

கரணவாத1த3ல்லி நிந்து1 கரணகார்யகளன்னு நடி3ஸி
கரண பதிக3ளன்னு பொரெவெ ஹ்ருஷிகேஷனெ ||10

தத்வாபிமானிகளில் இருந்து, ஞானேந்திரிய மற்றும் கர்மேந்திரியங்களின் மூலம் காரியங்களை நிறைவேற்றும், முக்யபிராணாந்தர்கத ஹ்ருஷிகேஷனே நீ தத்வாபிமானிகளை காப்பாற்றிக் கொண்டிருக்கிறாய்.

சொக்கவிதி4ய ஹாகெ3 ஜக3வ கு1க்ஷியல்லி படெ3த தே3வ
அக்ஷரேட்3ய ஷரதி4ஷயன பத்மனாப4னே ||11

லட்சுமியினாலும் வணங்கப்படும், உலகத்தை தன் உதரத்தில் வைத்துக் கொண்டிருக்கும், பாற்கடலில் படுத்திருப்பவனான பத்பனாப ஸ்வாமியே, நீயே தேவதேவனாக இருக்கிறாய்.

உத3ரத3ல்லி ஜக3வ பொத்து1 ஸத3ரதி3ந்த3 ஒப்பி1கொண்டெ3
உத3ரத3ல்லி ரஜ்ஜு பந்த4 தாமோதர ||12

உதரத்தில் உலகத்தையே வைத்துக் கொண்டிருப்பாய், ஆனாலும் யசோதாதேவியால் உன் உதரத்தை ஒரு கயிற்றினால் கட்டிக்கொண்டு, தாமோதரன் எனப்பட்டாய்.

ப4க்தஜனர பா1ப1 ஸெளெவ ஷக்தப்ரலய ஸ்துதிகெ3ய்வ தே3வ
முக்திதா3த விஷ்வகுக்ஷி வாசுதேவனே ||13

தன் ஈர்ப்பு சக்தியால் பக்தர்களின் பாவத்தைப் போக்குகிறாய். மேலும் பிரளய காலத்தில் அனைவராலும் போற்றப்பட்டு, சங்கர்ஷணன் எனப்படுகிறாய். உலகத்தையே தன் வயிற்றில் அடக்கிக்கொண்டு, முக்தியை கொடுக்கக்கூடிய வாசுதேவ எனப்படுகிறாய்.

மேரெயிரத கா1ந்திமயனெ ஸேரி பா4ஸ கொடுவெ ரவிகெ3
பே3ரி ஞான ப்4ராந்தி ஹரிஸு ப்ரத்யும்னனே ||14

அபாரமான ஒளி பொருந்திய பிரத்யும்னனே, உன் ஒளியாலேயே சூரியன் அதிக ஒளியைப் பெறுகிறான். உன் ஞானத்தைக் கொடுத்து என் மனக்குழப்பத்தை நீக்கு.

நீனிரோத காணெ எந்து[3] நீனெ ஸிகு[3]வெ ப[4]க்தி ப[3]லிகெ[3]
நானு மூட[4] க்ருபண க்ஷமிஸு அனிருத்தனே ||15

உன் இருப்பு கண்ணுக்குத் தெரியாவிட்டாலும், பக்திக்கு நீ சிக்குவாய் அனிருத்தனே, மூடன் மற்றும் கஞ்சனான என் தவறுகளை மன்னிப்பாயாக.

க்ஷரரு ஜீவராசி எல்ல க்ஷர விருத்த லட்சுமி தானு
வரனு பி[4]ன்ன உப[4]யரிந்த புருஷோத்தம ||16

ஜீவராசிகளெல்லாம் க்ஷரர்கள், லட்சுமிதேவி அக்ஷரள். க்ஷராக்ஷரர்களிடமிருந்து வேறுபட்டு உத்தமனாக இருப்பதால், புருஷோத்தமன் எனப்படுகிறாய்.

கரணக[3]ளிகெ[3] ஸிகு[3]வனல்ல கரணக[3]ளல்லி பே[4]த[3]வில்ல
கரண ஜயவ ஸித்திஸெனகெ அதோ[4]க்ஷஜ ||17

வெளிப்புற இந்திரியங்களுக்கு தென்படாதவனே, இந்திரியங்களில் எவ்வித பேதங்களும் இல்லாத அதோக்ஷஜனே. என் மனதை, அனைத்து இந்திரியங்களை என் கட்டுப்பாட்டிலேயே இருக்குமாறு அருள் புரிவாயாக.

தோ[3]ஷரஹித முக்திரீஷ நாஷரஹித லட்சுமி ரமண
ஈஷபி[3]ம்ப[3] ஜீவஹ்ருஸ்த[2] நாரசிம்ஹனே ||18

ஜீவர்களின் இதயத்தில் இருப்பவனும், தோஷங்கள் அற்றவனும், நாசம் இல்லாதவனும், முக்தர்களின் தலைவனுமாக இருக்கிறான், லட்சுமியின் தலைவனான நரசிம்மன்.

ச்யுதிவிதூர ஸத்ய மஹிம ஸதத ஜீவரொடனெ வித[1]த[1]
ஸ்துதிஸெ நின்ன ஷக்தி நீடோ ஷரணு அச்யுத ||19

சத்ய மகிமையுள்ள, அழிவில்லாத அச்யுதனே, நீ ஜீவர்களில் வசிக்கிறாய். உன்னைப் போற்றி வணங்குவதற்கு சக்தியைக் கொடு. நான் உன்னை சரணடைகிறேன்.

ஸ்ருஷ்டிகெய்து ஜக[3]வ லயிபெ[1] துஷ்டத[3]மன சிஷ்டவரத[3]
ஹுட்டு ஸாவு கட்டு பி[3]டி[3]ஸொ ஸ்ரீஜனார்த்தன ||20

உலகின் ஸ்ருஷ்டி, லயத்தின் காரணனான ஜனார்த்தனன், துஷ்டர்களை நாசம் செய்பவன், பக்தர்களுக்கு அருள்பவனான நீ, என்னை இந்த பிறப்பு இறப்பு சுழற்சியிலிருந்து விடுவிப்பாயாக.

இந்த்ரனனுஜ நிஜ மஹேந்த்ர தந்தெ சுக[2]வ திவிஜனகெ[1]
வந்த்ய வந்த்ய வந்திசுவெனு ஸ்ரீ உபேந்திரனே ||21

இந்திரனின் தம்பியாக, தேவதைகளால் வணங்கப்படும், தேவேந்திரனுக்கு பதவி சுகத்தைக் கொடுக்கும், உபேந்திரனே உனக்கு வணக்கங்கள்.

யக்ஞபோ[4]க்த மனுவ பொரெதெ[3] ப[4]க்னகெ[3]யிஸி தோஷவென்ன
ஞான நீடோ சுக்ஞனெனிஸு வாஜிவத[3]ன ஷரணு ஸ்ரீஹரே ||22

யக்ஞ ரூபத்தினால் ஸ்வாயம்புவ மனுவை காப்பாற்றினாய். மனு குலத்தவனான என் தோஷங்களைக் களைந்து கருணையுடன் ஞானத்தைக் கொடுத்து, ஞானி ஆக்கு. ஹயவதனனே உனக்கு என் நமஸ்காரங்கள்.

நித்ய கீர்த்தி விப[4]வமூர்த்தி ப[4]க்தமனவ பா[1]ப[1] ஸெளெவெ
ரிக்த நானு ஸர்வ வித[4]தி[3] காயோ ஸ்ரீகிருஷ்ணா ||23

பக்தர்களின் மனதிலுள்ள் பாவங்களை களையும் ஸ்ரீகிருஷ்ணனே, உன் மகிமை சத்யமானது மற்றும் நிரந்தரமானது. நான் அனைத்து விதங்களிலும் அற்பன். என்னை காப்பாற்று.

ஸர்வஷப்த[3] வாச்ய ஸ்ரீகிருஷ்ண விட்டலன்னு நெனெயெ
ஸர்வ சுக[2]க[3]ளித்து காவ ஜிஷ்ணு தெரதி[3] ஸத்யஹோ ||24

அனைத்து சொற்களாலும் அழைக்கப்படும் ஸ்ரீகிருஷ்ண விட்டலனை வணங்கினால், அர்ஜுனனுக்கு அனைத்துவித சுகங்களையும் கொடுத்து காப்பாற்றியதைப் போல அனைவரையும் காப்பாற்றுவான். இது உண்மையான வாக்காகும் என்கிறார் கிருஷ்ண விட்டல தாசர்.

***

## 37. கூஸினல்லி பாலகிருஷ்ண

கூஸினல்லி பாலகிருஷ்ண கேஷார்ய புத்ரனல்லி
வாஸ மாடி ஸதத மனவ போஷிசுவனு ||1
தருணியல்லி மாத[4]வவிருவ ஷரணரொளகெ வாசுதேவ
நரிது தோ[1]ஷிசுவுது ஸதத ஹருஷதிந்தலே ||2

மகள மஹிளெ தனுவிலிருவ அக[3]ணிதாத்ம கோவிந்த
மகளொளிருவ வாசுதேவ க[2]க[3]வரேண்யனு ||3
மித்ரனல்லி முகுந்த பத்னி சோதரனிருத்த
தா[4]த்ரி தி[3]விஜ நாராயணனு வஸ்தி மாடிஹனு ||4

சுரபி[4]யலி விஷ்ணுரூபி துரக[3]த[3]ல்லி வாமனாத்ம
இருவ சங்கர்ஷணாக்[2]ய சரம ஜாதியலி ||5
க்ஷத்ரியரல்லி ஜனார்த்தனனு நித்ய தைத்ய ப்ரத்யும்ன
ப்4ருத்யரல்லி மஹிதாஸ க்[1]ருத்ய நடெ[3]ஸுவா ||6
மஹிஷியல்லி உபேந்த்ர க[3]ஜதல்லி சக்ரபாணி
பெ[3]க்கினல்லி விஷ்வரூப ஸதத திளிவுது ||7
இருவெயல்லி த்ரிவிக்ரமனு இருவ ஷுனக[1] பூ[4]தபா[4]வன
சர்வரொளகெ அனந்தரூப ஹரி நிவாஸிப ||8

நித்யதலி ஹரியு ஹீகெ சித்தவிட்டு லக்ஷணீயு
வர்த்திஸுதலி யதுவரேண்யன பத்னியாத[3]ளு ||9
பரமபுருஷனமல ரூப ஸ்மரிசுதலெ போ[1]ஷ்யரல்லி
தொரெது[3] கர்மலேப ஷிரிய ஹொரந்து[3]வா ||10

நந்தஸுதன திளிது போ[1]ஷ்ய வ்ருந்த[3]த[3]ல்லி போ[4]க[3] நீடி[3]
இந்திரேஷ நமகெ மோக்ஷானந்த[3] கொடுவனு ||11

ஸ்ரீஹரியின் இந்த பல்வேறு ரூபங்களைக் கண்டு மகிழ்ச்சியும் வியப்பும் கொண்ட மகாலட்சுமி யதுவரேண்யரின் மனைவியானார்.

## 38. லட்சுமி லீலாம்ருத

வாசுதேவகெ[3] மாயா ஸ்ரீசங்கருஷ்ண
கா[3]ஸகி[2] ஜயயெம்பிரா ஷாந்திகனிருத்த
கீ[3]ஷ ப்ரத்யும்ன சுவாஸி க்ருதிதேவி ||84

ஸிரி கேஷவாங்கன ஷர நிலயக$^{3}$ லட்சுமி
ஸரஸிஜெ மாத$^{4}$வக$^{3}$ரஸி பத்மாதேவி
பரம கோவிந்தகெ ஸரஸி காமினி விஷ்ணு
ஹருஷ மது$^{4}$வாணி ஸரஸிஜாஸ்யா ||85

ரமெயு த்ரிவிக்ரம ப்ரமத$^{3}$ வ்ருஷாகபி
ப்ரமத வடுகெ$^{3}$ த$^{4}$ன்ய ப்ரமத$^{3}$ ஸ்ரீதரனிகெ
ப்ரமத ஹ்ருஷிகபிக$^{3}$மல மங்கள பு$^{3}$த்தி$^{3}$
ப்ரமதெ$^{3}$யு பது$^{3}$மனாப$^{4}$கெ$^{3}$ தேவி ||86

தாமோதரகெ ப்ரியெ காமினிந்தி$^{3}$ரெ தேவி
ஷ்யாம ஹிரண்யயெ காம சங்கருஷண
பா$^{4}$மினி த$^{3}$க்ஷிணி வாசுதேவகெ நித்ய
ஆ மஹா ப்ரத்யும்ன காமினியு ||87

நித்யானிருத்தன பத்னியானந்த$^{3}$ புரு
ஷோத்தம ப்ரியெ சதாஸ்ரயா தோக்ஷஜ
கு$^{3}$த்தம ஷுப$^{4}$தேவி மத்தெயக்ஞெயு
மத்யமக$^{3}$கெ$^{3}$ ஸகி$^{2}$ அச்யுதனிகெ ஸகி$^{2}$யு ||88

முத்து$^{3}$ ஸௌக$^{3}$ந்தி$^{4}$ ஜனார்த்தனனோ பேந்த்ரகெ$^{3}$
ஹ்ருத்ய சுந்த$^{3}$ரி ஹரிகெ$^{3}$ வித்யாதேவி நிஜ
ஹ்ருத்யளாதி$^{3}$யெ ஸுஷீலெ க்ருஷ்ணனிகெ
ப$^{4}$த்$^{3}$ர ஸங்கா$^{1}$யஸீ பத்ம ச$^{1}$ர்மாத்மகெ$^{1}$யெ ||89

ஸுந்தர ஸௌபா$^{4}$க்ய மந்திர த$^{1}$ட$^{1}$து$^{1}$தி$^{1}$
கொ$^{3}$ந்தெ$^{3}$ ப4லவ நீடோ$^{3}$ ப$^{3}$ந்தா$^{3}$ரெ மனஸிகெ$^{3}$
இந்திரேஷன ஸகி$^{2}$ நந்தபா$^{3}$லன வத$^{3}$ நிந்து$^{3}$
மண்டல தோரெ சந்த்ரமுகி2 ||109

'லட்சுமி லீலாம்ருத' இது ஒரு ஷதக சாகித்யம். 'பே$^{1}$ளுவே நின்னய மஹிமெக$^{3}$ள, பாலகிருஷ்ணன ஹ்ருதயாலயதொளகி$^{3}$ட்டு' என்னும் பல்லவியுடன் துவங்கி, 'இந்திரேஷன சகி$^{2}$ நந்தபாலனெ வதனிந்து$^{3}$ மண்டல தோரெ சந்த்ரமுகி' என்று கிருஷ்ணனின் தரிசன பாக்கியத்தை லட்சுமி தேவியில் பிரார்த்திக்கிறார்.

(தொடரும்)

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

### ஜகன்னாத தாசரின் சுளாதிகள்

டா.ஷீலாதாஸ், ராய்ச்சூர்

(சென்ற இதழிலிருந்து தொடர்கிறது)

3. ஷுபத சுந்தரகாய:

ஷுபத சுந்தரகாய என்னும் சுளாதியில் ஐந்து தாளம் ஒரு ஜதி இருக்கிறது. இது பிரார்த்தனை வடிவத்தில் இருக்கும் சுளாதியாகும். பகவந்தன் சுப செயல்களை செய்பவனாக இருக்கிறான். மங்களத்தை உண்டு பண்ணுவராக இருக்கிறான். விகாரங்கள் இல்லாதவனாக இருக்கிறான். மூன்று குணங்களையும் கொண்டவனாக இருக்கிறான். இத்தகைய பற்பல விருதுகளை உடையவனே, உன் பக்தர்களை காப்பாற்று என்று வேண்டுகிறார் தாசர்.

ஆதிதெய்விக, ஆதிபௌதிக, ஆத்யாத்மிக மூன்று துன்பங்களின் மனிதர்கள் உழல்கின்றனர். இந்த துன்பங்களிலிருந்து என்னை கரையேற்று என்று வேண்டுவதே பிரார்த்தனை.

ப்ரதி ப்ரதி கல்பஸ்த ப்ரதி ஜீவரிகெ
ப்ரதி ப்ரதி யுககளல்லி ப்ரதி ப்ரதி தேஹக்கெ
க்ருத கர்மகளரிது பித ஜனனி ப்ராத
சதி சுத மந்தாத இதர ஜனரொளகித்து
கதி தப்பலிகொடவெ ஒப்பொப்பரொளகெ
ஹிதவனெ புட்டிஸி போஷ்யபோஷகனெனிஸி
ப்ரததிஜாண்டபொரெவெ நிர்வ்யாஜதி நிருத

இன்னும் என்னை காப்பாற்றுவதற்கு அசாத்தியமா? விதி-பித நீ இருக்கும்போது நிதி-பித என்று வேறு யாரிடமும் போய் நான் வேண்ட மாட்டேன் என்கிறார். ஜீவர்களின் வினைப்பயன்களுக்கேற்ப அவர்களுக்கு பலன்கள் கிடைக்கின்றன. ஆகையால் நான் வேறு யாரிடமும் போய் கெஞ்ச மாட்டேன். என் தெய்வம் நீயே என்று தன் இஷ்ட தெய்வத்திடம் பிரார்த்திக்கிறார். இந்த வாக்கியங்களால், ஹரி சர்வோத்தமத்வம் மட்டுமல்ல, பக்தவத்ஸல குணமும் தெரிய வருகிறது.

இந்த சுளாதியில் ஈஷாவாஸ்ய, உபநிஷத் வாக்கியங்களை மேற்கோள் காட்டி, வாசுதேவனே, ஜீவராசிகளுக்குள் நீ இருந்து, சுக துக்கங்களைக்

கொடுக்கிறாய் என்று அனைத்து சராசர ஸ்ருஷ்டியை, பரமாத்மன் எல்லா இடங்களிலும் நிலைத்திருப்பதை அறிவதே பக்தனின், ஞானியின் லட்சணம் என்று குறிப்பிடுகிறார்.

இந்தக் கட்டுரையில் பார்த்த மூன்று சுளாதிகளிலும் ஹரி சர்வோத்தமத்வ, சர்வ ஸ்வதந்த்ர, சர்வ வியாப்த, சர்வ நியாமக என்னும் விஷயங்கள், பாகவத, மகாபாரத விஷயங்கள் / சம்பவங்கள் என அனைத்தும் உள்ளன. உடன் சாகித்ய விஷயங்களான சந்தம், அலங்காரங்களும் உள்ளன. ஜகன்னாததாசரின் சாகித்யமானது மிகப்பெரிய கடலைப் போன்ற ஆழமானதும், விசாலமானதுமாகும்.

***

## போஜனரசவிபாக சந்தி

**திருமதி.** ரேகா பதகி, பெங்களூர்

ஹரிகதாம்ருதசார குருகள
கருணதிந்தா பனிது பேளுவே
பரம பகவத் பக்தரிதனாதரதி பேளுவுது.

ஜகன்னாததாசர், ஸ்ரீஹரியின் பரிபூரண அருளைப் பெற்றவர் என்பது அவரது சரித்திரத்திலிருந்தே தெரிகிறது. அனைத்து சாஸ்திரங்களையும் நன்றாகக் கற்றறிந்த ஸ்ரீனிவாசாசார்யரே, விஜயதாசரின் சிஷ்யராகி பிறகு அவரின் அறிவுரைப்படி பண்டரிபுரத்தில் பீமா நதிக்கரையில் குளிக்கும்போது 'ஸ்ரீஜகன்னாதவிட்டலா' என்னும் அங்கிதத்தை பாண்டுரங்கனிடமிருந்தே பெற்றார். பற்பல பாடல்களை இயற்றி தத்வசுவ்வாலி, சுளாதி, ஹரிகதாம்ருதசாரத்தை இயற்றி ஸ்ரீஹரியை புகழ்ந்து பாடினார். அவரின் ஹரிகதாம்ருதசாரம் கன்னட ஹரிதாச சாகித்யத்தின் சிறந்த காவியமாகும்.

முன்னர் ஸ்ரீனிவாசாசார்யராக இருந்தபோது, தீராத வயிற்றுவலியால் அவதிப்பட்டபோது, ஸ்ரீவிஜயதாசரின் அறிவுரைப்படி ஸ்ரீகோபாலதாசரிடமிருந்து 40 ஆண்டுகள் ஆயுள்தானத்தைப் பெற்றார். அப்படிக் கிடைத்த ஆயுளை ஜகன்னாத்தாசர் ஆனபிறகு முழுவதுமாக சரியாகப் பயன்படுத்திக்கொண்டார்.

தாச சதுஷ்டயர்களில் நான்காமவரான ஸ்ரீஜகன்னாததாசர், ஹரிகதாம்ருதசாரத்தில் முதலில் மங்களாசரண சந்தியில் தாரதம்யத்தின்படி ஸ்ரீலட்சுமிநரசிம்மதேவரை வணங்குகிறார். உலகத்தைக் கட்டிக்காக்கும் ஸ்ரீஹரியின் கருணையை அதன் சிறப்பை 2ம் சந்தியான கருணா சந்தியில் விளக்குகிறார். மூன்றாம் சந்தியான வியாப்தி சந்தியில் ஸ்ரீஹரியின் வியாப்தியின் சிறப்புகளை விளக்குகிறார். நான்காவது சந்தியே போஜனரசவிபாக சந்தி. இதில் தாசராயர், போஜனம் என்றால் என்ன, போஜன பொருட்களில் சிந்திக்கவேண்டிய ஸ்ரீஹரியின் ரூபங்களை, அவற்றில் இருக்கும் சுவையின் சிறப்புகளை விளக்குகிறார்.

போஜனகிரியை என்பது ஒரு யக்ஞம். இந்த யக்ஞத்தை ஸ்ரீஹரியின் ப்ரீத்யர்த்தமாகி, அவனை நினைத்து உண்ணும் விதத்தை, அவற்றினுள் இருக்கும் ஸ்ரீஹரியின் ரூபங்களை - இவை அனைத்தையும் சொல்லிக் கொடுக்கிறார். பிரம்மாண்டத்தில் இருக்கும் அனைத்து ஜீவராசிகளும் உண்ணும் உணவுப் பொருட்கள் நான்கு விதமாக இருக்கின்றன. அவை: காத்ய (திடப்பொருட்கள்), பேய (திரவப் பொருட்கள்), போஷ்ய (பாயசம் முதலான) மற்றும் லேஹ்ய (ஊறுகாய் போன்றன).

போஜன பொருட்களில் மற்றும் நைவேத்தியத்திற்கு வைக்கப்படும் பொருட்களில் இருக்கும் தத்வாபிமானி தேவதைகளுக்கு ஸ்ரீஹரியே காரணம் (தலைவன்) என்னும் ஞானம் மிகவும் அவசியம். பஞ்ச ஞானேந்திரங்கள், பஞ்ச கர்மேந்திரியங்கள், பஞ்ச தன்மாத்ரா மற்றும் ஒரு மனது என மொத்தம் 16 கலைகளினால் ஆகியது இந்த லிங்கதேகம். ஸ்ரீஹரி, 16 ரசங்களை பிரித்து, அவற்றை வளர்த்து நம் உடலில் இருக்கும் 72,000 நாடிகளில் இருக்கும் தத்வாபிமானி தேவதைகளுக்கு தலைவனாக இருக்கிறார்.

உதாரணத்திற்கு, இனிப்புப் பொருட்களில் இந்திரன் மற்றும் வாசுதேவ ரூபி ஸ்ரீஹரி இருக்கிறார். உப்பில் (salt) நிரருதி மற்றும் ஜனார்த்தன ரூபி ஸ்ரீஹரி இருக்கிறார். புளிப்பு பொருட்களில் பார்வதி மற்றும் தாமோதர ரூபி ஸ்ரீஹரி இருக்கிறார். காரப் பொருட்களில் இருக்கும் தக்ஷ பிரஜாபதியில் நரசிம்ம ரூபத்தில் இருந்து நிலைத்திருக்கிறார் ஸ்ரீஹரி.

சத்வ, ரஜ, தமஸ் ஆகிய மூன்று குணங்கள். 6 சுவைகள். இவை சேர்ந்து 6*3=18 சுவைகள் ஆகின்றன. சுவை, இனிமை, மணம், சுத்தம்

என்று 4 குணங்களைச் சேர்த்தால் = 18*4 = 72 சுவைகள் ஆகின்றன. ஒவ்வொன்றிலும் ஸ்ரீஹரியின் விஸ்வாதி 1000 நாமங்கள் உள்ளன. ஆகமொத்தம் 72,000 ஸ்ரீஹரியின் ரூபங்கள். நம் உடலின் வலது பாகத்தில் உள்ள 36,000 நாடிகளில் நாராயண ரூபங்கள். இடது பாகத்தில் உள்ள 36,000 நாடிகளில் ஸ்ரீஹரியின் நாராயணி ரூபங்கள். இப்படி ப்ருஹதி என்னும் ரூபத்தினால் நம் உடலில் இரவும் பகலும் வியாபித்திருக்கும் ஸ்ரீஹரி, போஜன பொருட்களிலும் இருக்கிறார் என்று தெரிந்து, அப்பொருட்களை உண்ணவேண்டும்.

பாலில் விஷத என்னும் 354 ரூபத்தில்,
தயிரில் ஸ்திர என்னும் 29 ரூபத்தில்,
வெல்லத்தில் தீக்ஷ்ண என்னும் 5101 ரூபத்தில்
பழச்சாற்றில் நிரஹர என்னும் 2825 ரூபத்தில் என மொத்தம் 8309 ரூபங்களில், நம் தேகத்தில் இருக்கும் தத்வாபிமானி தேவதைகளில் முக்யபிராணாந்தர்கதனாக இருந்து, ஸ்ரீஹரி ஞானிகளுக்கு தரிசனம் அளிக்கிறார். (அங்கானாம் வாமதோ கதி: என்னும் எண்-கணித-விதிப்படி அந்தந்த சுவைகளின் எண்ணிக்கையை கவனிக்கலாம்).

உதாரணத்திற்கு:
விஷத = பால், பாலில்
வி=4; ஷ=5; த=3. 453 என வருகிறது. ஆனால் மேலே கூறிய விதிப்படி 354 எனக் கொள்ளவேண்டும்.

ஸ்ரீஹரி கபில ரூபியான கண்களில் இருந்து, பார்க்கிறார். மூக்கில் நரசிம்ம ரூபத்தில் இருந்து நுகர்கிறார். வாயில் பரசுராம ரூபத்தில் இருந்து நைவேத்தியப் பொருட்களை உண்கிறார். நாக்கினில் மத்ஸ்ய ரூபத்தில் இருந்து சுவைக்கிறார். பற்களில் ஹம்ஸ ரூபத்தில் இருந்து கடிக்கிறார். வாக்கினில் காயத்ரி ப்ரதிபாத்யனாக இருந்து ஹயக்ரீவ ரூபத்தினால் பேசுகிறார். உணவுப் பொருட்களில் மொத்தமாகவும், ஒவ்வொரு சிறு பொருட்களிலும் கண்டரூபத்தில் ஸ்ரீஹரியை சிந்தித்து அந்தப் பொருட்களை ஸ்ரீஹரிக்கு அர்ப்பணிக்க வேண்டும்.

அன்னத்தில் வாசுதேவன், பக்ஷ்யங்களில் சங்கர்ஷணர், பாயசத்தில் பிரத்யும்னன், நெய்யில் அனிருத்தன், பருப்பில் ஸ்ரீகிருஷ்ணன், காய்கறிகளில் உபேந்திரன் மற்றும் அனைத்திலும் மூலரூபமான

நாராயணன் இருக்கிறார் என்று சிந்தித்து அனைத்தையும் ஸ்ரீஹரிக்கு அர்ப்பிக்க வேண்டும். இப்படியாக நினைத்து உணவை உண்பவரே மகாஞானி ஆவார். பெரிய யாகங்களை செய்த பலன்களைப் பெறுகிறார். நோய் நொடியில்லாமல் வாழ்பவராகிறார்.

தேகத்தில் இருக்கும் பஞ்ச-கோஷங்களின் விவரம், அவற்றில் அந்தர்யாமியாக இருக்கும் ஸ்ரீஹரியின் ரூபங்களைப் பற்றி விவரிக்கிறார் தாசர். அன்னமய கோஷத்தில் இருக்கும் அனிருத்த ரூபங்கள் 8251. பிராணமய கோஷத்தில் இருக்கும் பிரத்யும்ன ரூபங்கள் 5543. மனோமய கோஷத்தில் இருக்கும் சங்கர்ஷண ரூபங்கள் 562107. விக்ஞானமய கோஷத்தில் இருக்கும் வாசுதேவ ரூபங்கள் 4374. ஆனந்தமய கோஷத்தில் இருக்கும் நாராயண ரூபங்கள் 5125 ஆகும்.

பிரம்மாண்டம் மற்றும் சரீரத்தின் பஞ்ச-கோஷத்தில் இருக்கும் ஸ்ரீஹரியின் மொத்த ரூபங்கள் பின்வருமாறு. ஆனந்தமய கோஷத்தில் இருக்கும் ஸ்ரீஹரியின் ரூபங்கள் 5125 + 3052 = 8177. மொத்தம் 16529 ரூபங்கள் ஆகின்றன. பிரம்மாண்டம் மற்றும் சரீரத்தின் பிராணமய-கோஷத்தில், உண்பவர்களிடம் இருக்கும் ஸ்ரீஹரியின் மொத்த ரூபங்கள் – 5543 + 513 = 6056 பிரத்யும்ன ரூபங்கள். மனோமய கோஷத்தில் இருக்கும் மொத்த சங்கர்ஷண ரூபங்கள் – 562107 + 55 = 562162 ரூபங்கள் ஆகும். வரங்களை கொடுப்பவனான வாசுதேவ ரூபங்கள், விக்ஞானமய கோஷத்தில் மொத்தம் 4374 + 584 = 4958 ரூபங்கள். அன்னமய கோஷத்தில் இருக்கும் அனிருத்த ரூபங்கள் மொத்தம் 8251 + 101 = 8352 ரூபங்கள் ஆகும். இந்த ஐந்து கோஷத்திலும் இருக்கும் மொத்த ரூபங்கள் 589,705 ஆகும்.

ஸ்ரீஹரி, நாடிகளில் பிராணாதி பஞ்சரூபங்களில் சங்கர்ஷண ரூபத்தில் இருக்கிறார். சுஷும்னா நாடியில் உதானத்தில் 535 ரூபத்தில் வாசுதேவ ரூபத்தில் இருக்கிறார். வாயுதேவரில் அந்தர்யாமியாக, அனைத்து நாடிகளிலும் 53 ரூபத்தில் அனிருத்த ரூபத்தில் இருக்கிறார். பிங்களா நாடியில் அபானனில் 511 ரூபத்தில் பிரத்யும்ன ரூபத்தில் இருக்கிறார். அனைத்து நாடிகளிலும் உள்ள வியானனில் 55 ரூபத்தில், நாபியைச் சுற்றி இருக்கும் நாடிகளில் சமானனில் 557 ரூபத்தில் நாராயண ரூபத்தில் இருக்கிறார். ஆக மொத்தம், பஞ்சமுக்யபிராணரிடம் 1711 ரூபத்தினால் ஸ்ரீஹரி நிலைத்திருக்கிறார். (தொடரும்)

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

## ரங்கம்மா (19ம் நூற்றாண்டின் முற்பகுதி)

தாஸ ஸாகித்ய பிரபஞ்சத்தில் மிகவும் முக்யஸ்தரான ஸ்ரீவிஜயதாஸரின் வளர்ப்பு மகன் மற்றும் மூன்றாம் நேரடி சிஷ்யரான ஸ்ரீமோகனதாஸரின் சிஷ்ய பரம்பரையில் வருபவர் கும்பகோண பிரஸன்ன வெங்கடவிட்டலதாஸர். இவரிடமிருந்து அங்கிதம் பெற்றவர் ஸ்ரீவிஜய ராமசந்திர விட்டல தாஸர். இவருடைய சிஷ்யர்களில் ஒருவரே ரங்கம்மா.

நஞ்சன்கூட்டின் அருகில் இருக்கும் குண்ட்லுஹொளெ அருகில் ஒரு வீட்டில் ரங்கம்மா வசித்து வந்தார். அவருடைய மகன் ராகண்ணா. அவருடைய சம்சாரத்தில் சுகமே இருந்திருக்கவில்லை. ஆகவே, ரங்கம்மாவின் மனம், ஆத்யாத்மிகத்தின் பால் நாட்டம் கொண்டது. நிரந்தரமாக ஹரி த்யானத்தில் ஈடுபட்டிருந்தார். தாயைப் பின்பற்றி மகனும் அவ்வாறே இருந்தார். தாஸன் ஆகவேண்டுமெனில் பூர்வ ஜென்மத்தின் புண்ணியம் இருக்கவேண்டும். அந்த புண்ணியம் கிடைத்தபோது, அந்த ஜீவிக்கு பரமானந்தம் உண்டாகி ஹரிதாஸன் ஆகிறான்.

ஒரு நாள் ஸ்ரீவிஜயராமசந்திர விட்டல தாஸர் (ராமராயர்), தம் சிஷ்யர்களுடன் நஞ்சன்கூட்டிற்கு வந்தார். அங்கு ரங்கம்மாவிற்கு, தாஸர், ‘பாலகிருஷ்ண’ என்னும் அங்கிதம் கொடுத்து, ஸ்தோத்திரங்களை இயற்றுமாறு கூறினார். குருகளின் ஆணை, ஆசிர்வாதங்களுடன், ரங்கம்மா அவருக்கு, ஸ்ரீஹரியின் அருளும் இருந்தது.

ரங்கம்மா பள்ளிக்குச் சென்று கற்றவர் இல்லையென்றாலும், அவளால் இயற்றப்பட்ட ஸ்தோத்திரங்கள் பக்திபூர்ணமாகவும், பாவபூர்ணமாகவும் இருக்கின்றன. பண்டிதர்களும் வியக்கும்படியான ஸாஹித்ய ரசனை இவருடையது. ஸந்தர்களின் விஷயங்களை அறிய வேண்டுமெனில், ஸந்தர்களின் ஸத்குணங்களும், நம்மில் விவேகமும் இருக்க வேண்டும். ரங்கம்மா அவர்கள் கடைசி காலம் வரைக்கும் குருபக்தியைக் கொண்டிருந்து, நற்குணங்களையும் பெற்று, ஸம்பிரதாயங்களை பின்பற்றி, பாலகிருஷ்ணனின் ஆராதனையையே செய்து வந்தார்.

இதுவரை கிடைத்துள்ள அவருடைய சில கிருதிகளின் அறிமுகத்தை பார்ப்போம்.

லௌகிகத்தில் சஜ்ஜனர்களை காத்து, துஷ்டர்களை தண்டித்து, சஜ்ஜனர்கள் பரமாத்மனின் ஆணையைப் பெற்று பூலோகத்தில் அவதரிக்கின்றனர். அவர்களில் ரங்கம்மாவின் குருகளும் ஒருவர். ரங்கம்மா தம் குருகளை 15 சரணங்களில் துதித்து, 16ம் சரணத்தில் பலஸ்ருதியை இயற்றியிருக்கிறார். அதில் 3 சரணங்களை மட்டும் இங்கு பார்ப்போம்.

1.ஈ தரெயம்யாலவதரிஸி பஹுஜீவரனு
பொரெவெ எந்தெம்போ தீக்ஷெயா நீ தரிஸி
மருததேவன பாத நிருதலாராதிஸுத
பரிபரிய க்ரீடெயிந்த பால்ய களெதா
8. காமினியரொடனித்து காமவனெ ஜெயிஸிதனு
ஹேமலோஷ்டகள ஸமனாகி திளிதா
காமதேனுவினந்தெ காமிதார்த்தவனெரெத
ஈ மஹாத்மரிகெ ஸரி உண்டே ஜகதீ
10. ராமார்யரா சரிதெ ப்ரேமதிந்தலெ கேளி
காமிதார்த்தகளு கை ஸேரி பஹுவு
பூமிஜாபதி பாலகிருஷ்ண தன்னய திவ்ய
தாமதொளகிட்டு ஸலஹுவனு பிடதெ

ஜயேஷ விட்டலதாஸர் மற்றும் ரங்கம்மா இருவரும், ஸ்ரீவிஜயராமசந்திர விட்டல தாஸரின் சிஷ்யர்கள். ஜயேஷ விட்டலதாஸர் தம் குருகளை 211 சரணங்களால் புகழ்ந்திருக்கிறார். அதில் ஸ்ரீவிஜயராமசந்திர தாஸரின் சிஷ்யர்கள் அனைவரையும் தனித்தனியாக வெவ்வேறு நுடிகளில் பாடியிருக்கிறார். அதில் ரங்கம்மா அவர்களை 43-44ம் நுடிகளில் பாடியிருக்கிறார்.

குருகளான விஜயராமசந்திர விட்டலதாஸர் மைசூரில் இருக்கும் தம் வீட்டில் தெய்வாதீனர் ஆனபோது (1872), அவருடைய மூத்த சிஷ்யரான குரு விஜயராமசந்திரரும் மற்றும் ரங்கம்மா இருவரும் அவருடைய சரமகீதையை இயற்றியிருக்கின்றனர்.

பாலகிருஷ்ண அங்கிதரான ரங்கம்மா, தன் குருகளுக்கு 5 நுடிகளில் சரமகீதை பாடியிருப்பது அற்புதமாக இருக்கிறது. சரமகீதையின் சில நுடிகள் இவ்வாறு உள்ளன.

இந்தா ப்ரபுவரன இன்னெந்து காம்பெவெ மானினி
ஸுந்தர ஷிரோமணி நம்மந்தரங்கத ஒடெயனே ||ப

தப்தகாஞ்சன ஸன்னிப தா வ்யாப்தனாகி ஸலஹுவா
ஆப்தனல்லவேனே நமகனந்த ஜன்மதிந்தலீ
ஹிந்து முந்து நிந்து பொரெவ ஸுந்தரகெ அதி ஸுந்தர
தந்தெ பாலகிருஷ்ணன பாதாரவிந்தகளிகெ மதுகரா

ஜயேஷ விட்டலதாஸர் தம்முடைய குருகளின் ஆராதனையை மூன்று நாட்கள் வரை சிறப்பாக செய்து வந்தார் என்பதை அறிகிறோம். ரங்கம்மா குருகளுடன் ஒவ்வொரு ஆண்டும் தீர்த்த யாத்திரை செய்து வந்தார். குருகளின் நிர்யாணத்தின் பிறகு, ஸ்ரீஜயேஷ விட்டலதாஸருடன் அந்த யாத்திரை நடந்து வந்தது.

ரங்கம்மா அவருடைய திருப்பதியின் யாத்திரை காலத்தில் நடந்த ஒரு சிறப்பு சம்பவம் இவ்வாறு இருக்கிறது. ஒரு முறை திம்மப்பனின் பிரம்மோத்ஸவத்திற்கு ஸ்ரீஜயேஷ விட்டலதாஸர் மற்றும் அவருடைய பக்தர்களுடன் ரங்கம்மா சென்றிருந்தார். அப்போது ரதமானது வழியில் நின்றுவிட்டது. மறுபடி அங்கிருந்து நகரவேயில்லை. அப்போது ரங்கமா அவர்கள், ஜயேஷ விட்டலர் கேட்டுக் கொண்டதற்கேற்ப, 'பரவொல்லெ யாகோ பார்கவி வல்லபா ஸரஸிஜாஸன முக்ய கிரீஷ அமரேந்திரஸுத' என்று காம்போதி ராகத்தில் ஒரு கீர்த்தனையை இயற்றினார். அப்போது ரதம் முன்னே நகர்ந்ததாம். இந்த சம்பவத்தினால், ரங்கம்மா அவர்களுக்கு ஸ்ரீஹரியின் குருகளில் இருந்த அந்தரங்க பக்தியின் பிரபாவத்தை நாம் காணலாம்.

ஸ்ரீஜயேஷ விட்டலதாஸர் மைஸூரில் சப்-டிவிஷனல் ஆபீஸராக இருந்தார். ஒருமுறை மைஸூரின் திவானராக இருந்த, கிருஷ்ணமூர்த்தி அவருடன் ஜயேஷ விட்டலர், நஞ்சன்கூட்டின் தேவாலயத்திற்கு வந்தார். அப்போது ரங்கம்மா அவரை பார்க்கும் நோக்கத்தில், திவானுடன் வந்து, அவரை சந்தித்தாராம். திவான் அவர்கள் ரங்கம்மாவை நமஸ்கரித்தபோது, அவர் ஆசிர்வாதம் செய்வதாக ஒரு பாடலை உடனடியாக பாடினாராம்.

மூன்று நுடிகளைக் கொண்ட அந்த பாடலின் சில வரிகள் இவ்வாறு.

ஜயவாகலய்யா நினகெ ||ப
ஜயலக்ஷ்மீ அரஸ பெம்பலனாகிரலி ஸதா

3. அன்னதானவு ஸதா மான்ய தானவு க்ஷேத்ர
கன்யாதானவ மாடு நீ
நின்ன கண்டவரிகெ ப்ரீதியாகுதிரலி
சென்னகோவ்கள ராம பாலகிருஷ்ணன தயதி

ஸ்ரீமஹாலட்சுமி ஸ்துதி

காயெ என்ன கமலாலயே கருணதி ||ப
காயெ என்ன கமலாலயே கருணதி
காயஜ ஜனனி உபாயவனரியெனெ ||அப

அஜன மாதெ அகில ஸுரார்ச்சித
த்ரிஜகதார ஹரியந்த சுஷோபிதெ
மாயெ ஷாந்தி ஜய க்ருதி ருக்மிணி
ஷிவி தோயஜாக்ஷன அர்த்தாங்கினி
கிருஷ்ணவேணி ஸ்ருஷ்டி ஸ்திதி காரணெ
பாலகிருஷ்ணன தோரெ அனிஷ்ட நிவாரணெ

இந்த கீர்த்தனையில் அஜன மாதையும் (பிரம்மனின் தாய்), காமன ஜனனியும், தோயஜாக்ஷனின் அர்த்தாங்கினியும் ஆன லட்சுமியில் ரங்கம்மா தமக்கு பாலகிருஷ்ணனின் தரிசனத்தை செய்து கொடுக்குமாறு மற்றும் கஷ்டங்களை போக்கி, தம்மை காக்க வேண்டும் என்றும் பிரார்த்தனை செய்வதாகவும் பாடியிருக்கிறார்.

ரங்கம்மாவின் குடும்பத்தவர்களின் விவரமோ, அவருடைய பிறப்பு மரணம் ஆகிய விவரங்களோ, நமக்கு இதுவரை தெரியவில்லை. கட்டெமனெ ஜயேத விட்டலதாஸரின் ஸம காலத்தவராக இருந்த இவருடைய காலம், 19ம் நூற்றாண்டின் முற்பகுதி என்று அறியலாம். ஜயேஷ விட்டலதாஸரின் காலம் 1850-1932. ரங்கமா அவர்கள் சுமார் 75 ஆண்டு காலம் வாழ்ந்திருந்தார் என்று தெரிய வருகிறது. ஆஷு கவியாகவும், ஹரிதாஸினியாகவும் வாழ்ந்திருந்த ரங்கம்மா அவர்களுக்கு நாம் அனந்தானந்த நமஸ்காரங்களை செலுத்துவோமாக.

(அடுத்த இதழில் வேறொரு ஹரிதாஸினியின் வரலாற்றினை பார்ப்போம்)

***

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## 27. அனுக்ரமணிகாதாரதம்ய ஸந்தி

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | 17 | | | 2 | | | | | 18 |
| | 3 | | | 4 | | | | | 19 | |
| | | | | | 5 | | | | | |
| 6 | | | | 7 | | | | | | |
| | | | | | 8 | | | | | |
| 9 | | | | 10 | | | | | | |
| | 20 | | | 11 | | | | | 13 | |
| | | | 14 | | | | | | 15 | |
| | | 21 | | | | | | 16 | | |
| 12 | | | | | | | | | | |

குறுக்கெழுத்துப் போட்டிகளை வடிவமைத்துக் கொடுப்பவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி

குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam @ gmail.com / அல்லது 89044 58276 க்கு வாட்சப் செய்யலாம்.

ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப், அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்து சொல்லலாம்.

**இடமிருந்து வலம்**: 1.புத்திசாலிகள்(4), 2.அறிய முடியாதவன்(4), 3.பூமி(3), 4.சரண் அடைந்தவர்கள்(4), 5.ஆல இலை(5), 6.ஸ்வர்க்கத்தில் இருக்கும் பசு(4), 7.ஸேஷ ஸதஸ்கர்கள் 85 பேரில் இவர் தாழ்ந்த கக்ஷத்தை சேர்ந்தவர்(6), 8.வேண்டியதை கொடுக்க வல்ல மரம்(5), 9.தாத்வீக தேவதா கணத்தில் ஒருவர். கடைசி எழுத்து இல்லை(4), 10.பவித்ரமான மஹிமை உள்ளவன்(6), 11.அக்ஷரங்கள்(3), 12.ருத்ரன்(5).

**வலமிருந்து இடம்**:13.தங்கமயமான இறக்கைகளை கொண்ட கருடன்(4), 14.யானை(3), 15.காதுகள் அற்றவை. கலைந்துள்ளது(5), 16.வடக்கு திசை அபிமானி தேவதை(4),

**மேலிருந்து கீழ்**:2.மோக்ஷம்(5), 17.இருப்பிடம்(2), 18.ப்ரஹ்மா(6), 19.அப்ராக்ருதமான குணங்கள் உள்ளவன்(2).

**கீழிருந்து மேல்**:6.ஷண்மகிஷியரில் ஒருவர்(4),16.அனந்த கல்யாண குண பூர்ணன்(5), 20.அபீஷ்டங்களை கொடுக்கும் ரத்னம்(5), 21.பார்வதி(4).

**ஆகஸ்ட் 2022 இதழில் வந்த குறுக்கெழுத்துப் போட்டியில் சரியான விடை எழுதி புத்தகப் பரிசு பெறுபவர்கள்:**

1. திருமதி. சாந்தி பத்மனாபன், திருநெல்வேலி. 2. திருமதி. சந்திரா, கோவை 3. திருமதி. உஷா ரகூத்தமன், பெங்களூரு 4. திருமதி. ஜெயஸ்ரீ ராமசந்திரன், சென்னை 5. திருமதி. பிரேமா குருராஜன், பொள்ளாச்சி 6. திருமதி. லலிதா, திருநெல்வேலி 7. திருமதி. பானுமதி, கோவை 8. திருமதி. கீதா ராமசந்திரன், திருநெல்வேலி 9. திருமதி. கிரிஜா ஜெயதீர்த்தாச்சார், ஸ்ரீரங்கம்.

வங்கிக் கணக்கில் சந்தா / புத்தகத்திற்காக பணம் செலுத்தினால், மறக்காமல் உங்கள் முகவரியை 89044 58276 எண்ணுக்கு வாட்சப் / SMS அல்லது haridasa.vijayam@gmail.comக்கு மின்னஞ்சல் அனுப்பவும்

தொடர்

## ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர்

## 3. த்வந்த்வவே வஸந்த ஹப்ப

டாக்டர். ரேகா காகண்டகி

பால்குண பௌர்ணமி பந்தீதிளிகெ
பாலகரெல்ல நெரெவுஹொந்து களிகெ
ஹோளிய நாடுவ ஸம்ப்ரமதொளகெ
காளகெ பேடிரோ நிம்ம நிம்மொளகெ ||3

பால்குண பௌர்ணமி காலமானது வஸந்து ருதுவின் காலம். உலகில் மாற்றங்கள் வருவதான தினம். பழையதை போக்கிக் கொண்டு, புதியவற்றையும், பசுமையானதையும் வளர்க்கும் காலம். இத்தகைய சமயத்திலேயே, பாலகர்கள் அனைவரும் ஒன்று சேருங்கள் என்கிறார்.

ஆத்யாத்மிக அம்சங்களை கவனிக்கும்போது, பாலகர்கள் அனைவரும் என்பது, தேகத்தில் இருக்கும் தத்வாபிமானி தேவதைகள் என்று கொள்ளலாம். இவர்கள் அனைவரும் பகவந்தனின் மக்கள். அனைத்து தத்வாபிமானி தேவதைகள் ஒன்றாக மனிதனின் உள்ளே இருக்கும் துஷ்ட சக்திகளை எரித்து, அவனின் மனதினை சுத்தம் செய்யுங்கள் என்று இதன் செய்தி ஆகும்.

சமூக அம்சங்களை கவனிக்கும்போது 'பாலகரெல்லரு நெரெவுதொந்து களிகெ' என்பது, அனைவரும் சேர்வது, ஒற்றுமையை காட்டுகிறது. ஒற்றுமையில் பலம் இருக்கிறது. அந்த பலத்தினால் துஷ்டர்களை எதிர்த்து, அவர்களை எரியுங்கள் (வெல்லுங்கள்). சமூக முன்னேற்றத்திற்கு ஒற்றுமையாக இருக்க வேண்டியது அவசியம். இந்த சமூக முன்னேற்றத்திற்கு, பிறகு இந்த நாட்டின் மக்கள் ஆகப்போகும் இந்த பாலகர்களே சரியானவர்கள் என்னும் அர்த்தம் இங்கு தென்படுகிறது. அதற்கே தாஸர்:

ஹோளியனாடுவ ஸம்ப்ரமதொளகெ
காளக பேடிரோ நிம்ம நிம்மொளகெ ||

என்று ஒற்றுமையின் மந்திரத்தை சொல்கீறார். ஹோளியனாடுவ ஸம்ப்ரம என்றால், வண்ணம் பூசி ஆடுவது. மனிதனில் இருக்கும் அஞ்ஞானத்தின் வேஷத்தை போக்கிக் கொள்வது. அனைத்து

வேற்றுமைகளையும் போக்கிக் கொண்டு, மனிதர்கள் அனைவரும் ஒன்றாக வேண்டும் என்பது தாஸரின் அபிப்பிராயம்.

அஜெய்க்ய ப்ரதிபத ஹிந்தாததிந்த
ஸுக்ஞான த்விதியகெ தோருவ சந்த்ர
வக்கொடிகெளெயரொம்மததிந்த
லக்கிகாரரு முந்தெ நடெவுதெ செந்த ||4

இந்த பத்தியில் மறுபடி தத்வ விஷயங்கள், ஜீவ ஜீவேஷ்வர பேதத்தை அறியும் வழியை தாஸர் காட்டியிருக்கிறார். அஞ்ஞானியானவன், ஜீவாத்மா பரமாத்மனின் ஐக்யத்தை சிந்திக்கிறான். ஆனால், அந்த உபதேசம் தற்போது சரியல்லதாக ஆயிற்று. இங்கு த்விதீய சந்திரனின் உதாரணத்தைக் கொடுத்தது ஏன் என்றால், அந்த சந்திரன், அனைவருக்கும் ஞானத்தின் ஒளியை கொடுப்பவனான சந்திரன். அந்த வெளிச்சம் ஜீவ பரமாத்மனின் பேதத்தை அறிவதாகும். இத்தகைய ஞானத்தைப் பெற்றுக்கொண்டு, அனைவரும் ஒன்றுகூடி சேர்ந்து இருப்பதே ஆனந்தத்தின் ஹப்ப. அனைத்து தத்வாபிமானி தேவதைகள் ஒன்றுகூடி நடந்தால், எந்த துஷ்ட சிந்தனைகளும் மனிதனுக்கு வருவதில்லை.

பக்தியெம்ப புரதல்லி ஒம்பத்து பீதி வி
ரக்தரம்ஹ்வஸ பிரம்மத்ஹாதிலி யெய்தி
வ்யக்தவாகுவ வஸ்து ஓதிகெ ஓதி
ரிக்தத நுடிகளே தமஸின ஹாதி ||5

இந்த பௌதிக தேகம் என்பதே ஒரு பட்டணத்தைப் போல இருக்கிறது என்கிறார் தாஸர். ஒன்பது பீதியிலி என்பது நவவித பக்தியின் மார்க்கத்தை குறிக்கிறது. இது பௌதிகமாக ஒன்பது இந்திரியங்களையும் குறிக்கிறது எனலாம். ஒன்பது இந்திரியங்கள் நவவித பக்திக்கு காரணமாக இருக்கிறது. ஸ்ரவண (காது); கீர்த்தன (நாக்கு); மனன (த்யானம்), ஆகிய இவை மனதிற்கு சேர்ந்தது. வணங்குதல் என்பது இந்த அனைத்து இந்திரியங்களையும் சேர்த்து செய்வது ஆகும். இந்த அனைத்தையும் சேர்த்துக்கொண்டு, வைராக்கியத்தை கொண்டு, பரமாத்மனை சேரும் வழியை பிடிக்க வேண்டும். ஆனால், இதனை தெரியாமல் இருப்பது, தமஸ்ஸிற்கான வழியாகும்.

இத்தகைய தமஸ்ஸிற்கான துர்மார்க்கத்தை வழியை பிடிக்காமல் பக்தி என்னும் பட்டணத்தில் வசித்திருங்கள் என்கிறார் ஸ்ரீதாஸர். இங்கும் கூட

உலக நியதியின், ஸதாசாரத்தின் அம்சங்கள் தெரிய வருகின்றன. மனிதன் ஆனவன், இந்திரியங்களுக்கு வசம் ஆகாமல், இந்திரியங்களை தன் கட்டுப்பாட்டில் வைத்துக் கொள்ள வேண்டும். இது வைராக்கியத்தின் மார்க்கத்தை குறிக்கிறது. இவ்வாறாக, அனைத்து அங்கங்களையும் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும் என்று ஸதாசாரத்தின் செய்தி சொல்கிறது.

தினபதி அடகிரெ மலகதெ எத்து
மனெயவரனு எச்சரிஸி பேடி ஸத்து
நெனெ நவ விஷய கோடெ ஏருத்த பித்து
மனெ மனோவர்த்தெய குருளனெ கத்து ||6

தாஸா் மிகவும் அற்புதமாக, லௌகிக நடவடிக்கைகளை ஆத்யாத்மிக அர்த்தம் வருமாறு வர்ணித்துக் கொண்டிருக்கிறார். அந்த பிரதேசங்களில், ஹோளி ஹுண்ணமி விழாவானது அருகில் வந்தபோது, காமனை சுடுவதற்காக மரக்கட்டைகளை, கிளைகளை வெட்டுவது பழக்கமாக இருக்கிறது. அனைவரின் வீடுகளிலிருந்தும் இவ்வாறு அவற்றை வெட்டி ஒரு இடத்தில் வைக்கின்றனர். இது அங்கு உள்ளவர்களின் பழக்கம் என்றால், தாஸர், இங்கு கொடுக்கும் அர்த்தத்தில் ஆத்யாத்மிக அர்த்தத்துடன் ஸமூக அர்த்தத்தையும் சேர்த்து சொல்கிறார்.

ஸாதகன் ஆனவன், தன் ஸாதனையின் த்யானத்தில் ஈடுபட்டிருக்கிறான். சத்தம் போட்டு அவனை தொந்தரவு செய்யாதீர்கள். மனெயவரு என்றால் இங்கு, மனுஷ்யனின் உள்ளே இருக்கும் அசுரர்கள். அத்தகையவர்களை எழுப்பாமல், விஷய வாஸனைக்கு பலி ஆகாமல், அதனை தாண்டி, பகவந்தனைக் காணும் வழியைத் தேடுங்கள் என்கிறார். தூக்கத்தில் பாதி ஆயுள் சென்று விடுகிறது. தற்காலிக விஷயத்தில் ஆசைப்பட்டு, இரவில் பொழுதைக் கழிக்க வேண்டாம். அஞ்ஞானம் என்னும் இருட்டிலிருந்து விழித்துக் கொள் என்று மனிதனின் அந்தராத்மனை எச்சரிக்கிறார் ஸ்ரீதாஸர். மனெ / மனோவார்த்தெ என்பது, பௌதிக தேகம் மற்றும் அதில் இருக்கும் மனஸ். இந்த இரண்டினையும், துராசார்களின் சேவையில் ஈடுபடுத்த வேண்டாம். இந்த அனைத்து ஆசைகளையும் வெட்டி, அதற்கு நெருப்பு வை, சுடு, என்பதே தாஸரின் செய்தி / அறிவுரை ஆகும்.

ஹாருவ கேரிய ஹோகபேடி கேளி
பேரூரவர பிட்டுபிடி தூரதல்லி

தூருவரொடனாட துர்தேஷெ பலவு வஸ்து
தோருவ மனிஸர ஸங்கவே கெலுவு ||7

ஹாருவ கேரிய ஹோகபேடி என்பது, ஸாதகர்களின் அருகில் செல்லாதீர்கள் (அவர்களை தொந்தரவு செய்யாதீர்கள்) அதாவது பகவந்தனின் பக்தர்களை சீண்டுவது, பாவ செயல். வேறு ஊர்களிலிருந்து வந்தவர்களை விட்டுவிடுங்கள். துராசாரிகளின், துர்மார்க்கிகளின் சங்கத்தில் சேராதிருங்கள். இப்படி அவர்களுடன் சேர்ந்தால், நாம் மேம்படுவதற்கான (உத்தாரம் ஆவது) வழி நமக்கு கிடைப்பதில்லை. வஸ்து தோருவ என்றால், பரமாத்மனை காட்டுபவர்களின் ஸங்கத்தினை செய்தால் நமக்கு வெற்றி. இதே விஷயத்தினை தாஸர்,

ஸங்கவாகலி ஸாது ஸங்கவாகலி
ஸங்கதிந்த லிங்க தேஹ பங்கவாகலி
என்னும் ஸதாசாரத்தின் நடவடிக்கைகளைப் பற்றி கூறியிருக்கிறார்.

தூளி நீருரி காளி பயலொளகாடி
மேலெ மூருரியொளு மதிகுந்தபேடி |
ஹாளு துர்கர கேரியொளகெ நிஷ்பலவு
ஜாலகாரர கேரிகெ ஹொக்கரெ பலவு ||8

முதல் வரி, பஞ்சபூதங்களைப் பற்றி சொல்கிறது. நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாஷ இந்த பஞ்சபூதங்களையும் சார்ந்தே மனிதன் பிறக்கிறான். இந்த பஞ்சபூதங்களிலேயே கடைசியில் சேர்கிறான். இந்த நடுவில் இருக்கும் வாழ்க்கையில் அவை அனைத்தையும் பரிசுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும் என்பது தாஸரின் தத்வம். ‘மூருரியொளு மதிகுந்தபேடி’ என்பது ஆதிபௌதிக, ஆதிதெய்விக, ஆத்யாத்மிக ஆகும். தனக்குள் ஆகும் செயல்களால் உண்டாகும் தாபங்கள் - ஆத்யாத்மிக; இயற்கை சீற்றங்கள் போன்ற எதிர்பாரா செயல்கலால் உண்டாகும் தாபங்கள் - ஆதிதெய்விக; பூத அல்லது பிற ஜீவ ஜந்துக்களால் உண்டாகும் தாபங்கள் - ஆதிபௌதிக. இந்த மூன்றினால் கவலப்படாமல் மயங்காமல் இருங்கள் என்ரு மனிதர்களில் ஆத்ம ஸ்திரத் தன்மை பற்றி உபதேசம் செய்கிறார்.

தாஸரின் பார்வையில் துர்கரு என்றால் மனிதன் தன்னில் தானே செய்யும் பாப கர்மங்கள். மேல் வர்க்கத்தில் பிறந்திருந்தாலும், அவன் செய்யும் குகர்மங்கள் (கெட்ட செயல்கள்) அவனை துருகராக ஆக்குகிறது. அதையே தாஸர் இத்தகைய துஷ்ட கர்மங்களை செய்யும்

துராலோசனைகளை உங்களில் கொண்டு வராதீர்கள். இல்லையெனில், நீங்கள் என்ன ஸாதனை செய்தாலும் அதற்கு தக்க பலன்கள் கிடைப்பதில்லை என்கிறார். மனிதன், எப்போதும் ஸதாசாரியாக வாழ வேண்டும் என்பது இதன் அர்த்தம்.

ஹிஞ்சாத ஹிரியர மாதிலி நடெது
வஞ்சக மொவ்வர ஸங்கவ கடெது
மஞ்சுவமன்யர ப்ரீதிய படெது
ஸஞ்சிதாரப்திகமிய பாவவொடெது ||9

மனிதனானவன், அனுபவப்பட்டவர்களின் பேச்சிலிருந்து வாழ்க்கையை நடத்தும் வழியினை கண்டு கொள்கிறான். அந்த வழியை காண வேண்டுமெனில், உன்னை நீ அறிய வேண்டும். அந்த அறிவு வர வேண்டுமெனில், முதலில் உனக்குள் இருக்கும் அந்த மூவரின் சங்கத்தை துறப்பாயாக / விடுப்பாயாக. மனஸ், வாக்கு, தேகம் - இந்த மூன்று த்ரிகரண ஷுத்தியையும் செய்து கொள்ள வேண்டும் என்பது தாஸரின் தத்வோபதேசம் ஆகும்.

**(தொடரும்...)**

தொடர்

## கன்னட கிரந்தங்கள் அறிமுகம்

## ஸ்ரீ வெங்கடேஸ பாரிஜாதம்

ஸ்ரீ அனந்தாத்ரி அனந்தாசாரியார்

வஸிஷ்டரும் வது வரர்களின் கோத்திரம், குலம் போன்றவற்றை பரஸ்பரம் கூறி ஆகாஸராஜனுக்கு பத்மாவதியை கன்னிகாதானம் செய்து கொடுக்க ஸங்கல்பம் செய்து வைத்தார். ஆகாஸராஜன் பத்மாவதியின் கையை பகவான் ஸ்ரீநிவாஸனின் கைகளில் வைத்து, ஸுத்தமான தீர்த்த ஜலத்தை விட்டு கன்னிகாதானம் செய்து கொடுத்தான். அப்போது வஜ்ர கிரீடம், கண்ட பூஷணம், கங்கணம், ஹாரங்கள் என பலவிதமான காணிக்கைகளை அளித்தான். மந்திரங்கள் முழங்க, பகவான் ஸ்ரீநிவாஸனும் பத்மாவதியும் கங்கண பூஜை செய்து பரஸ்பரம் கங்கண தாரம் அணிந்தனர். பகவான் ஸ்ரீநிவாஸன் லோகத்திற்கு சௌபாக்கியம் அளிக்கும் மாங்கல்யத்தை பத்மாவதியின் கழுத்திலே கட்டினார். விவாஹ விதிகளை அனுசரித்து லாஜ ஹோமம் முதலான சடங்குகளை செய்து முடித்தார். அதன் பிறகு அனைவருக்கும்

ம்ருஷ்டான்ன போஜனத்தை செய்வித்தான் ஆகாஸராஜன். பகவான் ஸ்ரீநிவாஸன் பத்மாவதியுடனும் பந்து ஜனங்களுடன் 'பூம' எனப்படும் விஸேஷ பந்தியில் அமர்ந்தனர். விவாஹத்தின் அங்கமாக ஸம்பிரதாயமாக முன்னால் பலவற்றையும் பகவான் ஸ்ரீநிவாஸனும் பத்மாவதியும் வஸிஷ்டரின் வழிநடத்தலில் செய்து லீலைகள் புரிந்தனர். ஸ்ரீநிவாஸனும் பத்மாவதியும் ஹாஸ்யமாக பரஸ்பரம் பேசிக்கொள்ள 'உருட்டாணி' வைபவம் இனிதே நடந்தது. மகாலக்ஷ்மியும் ஸ்ரீநிவாஸனுக்கு சந்தனம் பூசி, பரிமளமான மாலைகள் அணிவித்து அலங்காரம் செய்து வந்தனம் செய்தாள். ஸுமங்கலிகள் ஸ்ரீநிவாஸனின் திவ்ய மங்கள சரித்திரத்தைப் பாடி 'ஜெய ஜெய' கோஷம் முழங்க ஆரத்தி எடுத்தனர். ஆகாஸராஜன் விமரிசையாக நாகவல்லி என்னும் சடங்கை செய்து மகளை ஒப்படைத்து சதுரங்க ஸைன்யத்தையும் கொடுத்து வழியனுப்பி வைத்தான். நாகவேணியான பத்மாவதியுடன் நாக ஸயனனான பகவான் ஸ்ரீநிவாஸன் நாககிரியான வேங்கடாத்ரி பர்வதத்திற்கு புறப்பட்டான்.

பலஸ்ருதி:
வேங்கடாத்ரிவாசனின் இந்த திவ்ய சரித்திரத்தை பக்தியுடன் கேட்பதினால் எவ்வளவோ பலன்கள் உண்டு. கஷ்டங்கள் தூரமாகும்; விவாகம் நடந்தேறும்; ஸந்தான பாக்கியம் கிட்டும்; துஷ்ட கிரஹங்களின் உபாதைகள் பரிகாரமாகும்; இஷ்டார்த்தங்கள் அனைத்தும் நிறைவேறும்; தன ஸம்பத்து கிட்டும்; பகவான் ஸ்ரீநிவாஸன் அபீஷ்டத்தை அளித்தருளி முக்தியையும் அளிக்கிறான்.

இவ்விதம் ஆனந்தாத்ரியில் நித்ய வாசம் புரியும் ஸ்ரீ வேங்கடேஸன் எப்போதும் தமது சித்தத்தில் இருந்து காரியங்களை செய்து செய்வித்து பக்தியுடன் இந்த புருஷோத்தமனின் மகிமைகளை 10 அத்தியாயங்களாக எழுத வைத்துள்ளான் எனப் போற்றி துதித்து அனந்தாசாரியார் வெங்கடேஸ பாரிஜாத கிரந்தத்தை பூர்த்தி செய்துள்ளார். இத்தகைய உயரிய கிரந்தத்தின் அர்த்தங்களை தெரிந்து கொண்டு அனுதினமும் பாராயணம் செய்து ஸ்ரீ வேங்கடேஸனின் அனுக்ரஹத்திற்கு பாத்திரராவோமாக !!

**S.லக்ஷ்மிபதிராஜா, சென்னை**

தொடர்

**ஹரிகதாம்ருதசார மஞ்சரி 360**

**By ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர்**

50. **ஐது$^{3}$ வித$^{3}$த$^{3}$க்னியலி மரெயதெ$^{3}$**
**ஐது$^{3}$ ரூபாத்மகன இப்ப**
**த்தைது ரூபகளனுதினதி நெனெவரிகெ ஜனுமகள ।**
**ஐதிஸனு நளினாக்ஷ ரணதொ$^{3}$ளு**
**மைது$^{3}$னன காய்த$^{3}$ந்தெ ஸலஹுவ**
**வைத$^{3}$வகெ$^{3}$ க$^{3}$தியித்த ப$^{4}$யஹர ப$^{4}$க்தவத்ஸலனு ||7**

நம் தேகத்தில் ஐந்து அக்னிகள் இருந்து, அதில் அந்தர்யாமியாக அவனே ஐந்து ரூபங்களில் இருந்து, 24 பேர் தத்வாபிமானி தேவதைகள், ஒரு மனம் என மொத்தம் 25 ரூபங்களால் நம்மில் இருந்து நம் அனைத்து காரியங்களையும் நிர்வகிக்கிறான் என்று அறிந்து, அவனை உபாசனை செய்தால்; போர்க்களத்தில் அர்ஜுனனை எப்படி ஸ்ரீகிருஷ்னன் காத்தானோ, அதைப் போலவே நம்மையும் காக்கிறான். இந்த விஷயத்தில் நம்பிக்கை இல்லாதவர்களுக்கு கெட்ட கதியே ஆகிறது. எவ்வித சந்தேகங்களும் இன்று, பக்தவத்ஸலனான பகவந்தனை நம்பு என்கிறார் ஸ்ரீதாஸர்.

நம் தேகத்தில் ஸ்ரீஹரி, அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாஸுதேவ மற்றும் நாராயண ரூபத்தினால் தேகத்தில் இருக்கும் அக்னி அந்தர்யாமியாக இருந்து, நம்மை காக்கிறான் என்னும் ஞானத்தை பெற்றால், அர்ஜுனனை எப்படி காத்தானோ, அதைப் போல நம்மையும் காக்கிறான்.

**51. தலெயொளிஹ நாராயணனு க$^{3}$**
**ண்டலடி$^{3}$ ஒட$^{3}$லொளு வாஸுதேவனு**
**ப$^{3}$லத$^{3}$லிஹ ப்ரத்$^{3}$யும்ன எட$^{3}$பா$^{4}$க தொளக$^{3}$னிருத்த$^{4}$ ।**
**கௌகினங்கதி$^{3}$ ஸங்கருஷணன**
**திளிது$^{3}$ ஈபரி ஸகலதேஹக$^{3}$**
**ளொளகெv பஞ்சாத்மகன ரூபவ நோடு$^{3}$ கொண்டா$^{3}$டு$^{3}$ ||(6-16)**

இந்த பத்யத்தில் பகவந்தனின் ஐந்து ரூபங்க்ள் இந்த தேகத்தில் இருக்கின்றன. இதனை பார்த்து கொண்டாடவேண்டும் என்று நமக்கு

சொல்கிறார் ஸ்ரீதாஸர். அவை எப்படி என்று கேட்டால், அதற்கு விடையாக, நம் தலையில் நாராயணன், கழுத்தின் கீழ் உடலில் வாஸுதேவன், வயிற்றில் வலது பாகத்தில் பிரத்யும்னன், இடது பாகத்தில் அனிருத்தன். வயிற்றுக்குக் கீழே ஸங்கர்ஷணன் இருக்கிறான் என்று அனுசந்தானம் செய்து அவனின் ஐந்து ரூபங்களை சிந்திக்க வேண்டும் என்கிறார்.

அதாவது, நம் தேகத்தில் ஸ்ரீஹரி அனிருத்த, பிரத்யும்ன, வாஸுதேவ, நாராயண, சங்கர்ஷணனாக இருக்கிறான். இதனை அறிந்து சிந்திக்க வேண்டும். அப்போதே நமக்கான உத்தாரம் சாத்தியம் என்கிறார். இப்படியாக ஐந்து ரூபங்களை சிந்திப்பவர்களுக்கு விதி விதிவிலக்குகள் என்று எதுவும் இல்லை என்கிறார்.

**52. வாஸுதே$^{3}$வனிருத்த$^{3}$ ரூபதி$^{3}$ பும்ஷ**
**ரீர தொ$^{3}$ளிஹனு ஸர்வத$^{3}$**
**ஸ்த்ரீ ஷரீரதொ$^{3}$ளிஹனு ஸங்கருஷணனு ப்ரத்$^{3}$யும்ன |**
**த்$^{3}$வாஸுபர்ணா ஸ்ருதி வினுத ஸ**
**ர்வாஸு நிலய நாராயணன ஸது$^{3}$**
**பாஸனெய கை$^{3}$வவரு ஜீவன்முக்தரெனிஸுவரு ||(6-30)**

மனிதர்களில் பகவந்தன் எப்படி இருக்கிறான் என்று இங்கு கேள்வி கேட்கும் தாஸர், வாஸுதேவ அனிருத்த ரூபத்தினால் புருஷர்களிலும், ஸங்கர்ஷண பிரத்யும்னனாக ஸ்த்ரீயர்களிலும் இருக்கிறான் என்று அறிவாயாக. ‘த்வாஸுபர்ணாஸயுஜா ஸகாயா’ என்னும் ஸ்ருதி சொல்வதைப் போல இருக்கிறான். இப்படியாக அறிந்து உபாசனை செய்தால், அது ஸத் உபாஸனை. அப்படி செய்பவரே ஜீவன் முக்தர் என்கிறார்.

மறுபடி பிறப்பிற்கு வராத இடத்தினை அவர் பெறுகிறார். த்வாஸுபர்ணா என்னும் ஸ்ருதியானது: ஒரு மரத்தில் 2 பட்சிகள் அமர்ந்திருக்கின்றன. ஒரு பட்சியானது பழங்களைத் தின்று திடமாக இருக்கிறது. இன்னொரு பறவை எதையும் தின்னாமல் அமர்ந்திருக்கிறது. இந்த இரு பறவைகள் எவை என்றால், ஜீவாத்மா மற்றும் பரமாத்மா. ஜீவனுக்கு எல்லாம் வேண்டும். ஆகவே அது அனைத்தையும் தின்று உடலை வளர்க்கிறது. இன்னொரு பட்சிக்கு பரமாத்மாவிற்கு எதுவும் தேவையில்லை. அது எதையும் தின்னவில்லை. இவர்கள் இருவருக்கும் பேதத்தை அறிய வேண்டும். அதுவே ஸத் உபாஸனை. இதுவே வைஷ்ணவ தீக்ஷை.

**53. மூலரூபனு மனதொ3ளிஹ ஸ்ரவ**
**நாலியொளகி3ஹ மத்ஸ்ய கூர்மனு**
**கோலரூபனு த்வக்3ரசன தொளகி3ப்ப நரசிம்ஹ ।**
**பா3லவடு வாமனனு நாஸிக**
**நாளதொ3ளு வத3னத3லி பா4ர்க்க3வ**
**வாலிப4ஞ்ஜன ஹஸ்ததொ3ளு பாத3த3லி ஸ்ரீகிருஷ்ண ||(6-34)**

மூலரூபத்தில் இருக்கும் நாராயண ரூபம் மனதில் இருக்கிறான். இரு காதுகளில் மத்ஸ்ய கூர்மனாக இருக்கிறான். நாக்கினில் நரஸிம்ஹ; மூக்கினில் வாமன; வாயில் பரசுராம; கைகளில் ஸ்ரீராமன் மற்றும் பாதங்களில் ஸ்ரீகிருஷ்ணன் இருக்கிறான் என்று அறிய வேண்டும் என்கிறார். நம் தேகத்தின் முக்கிய அவயவங்களில் ஸ்ரீஹரி அனேக ரூபத்தினால் இருக்கிறான் என்று அறிந்து சிந்திக்க வேண்டும் என்பதே தாஸரின் அபிப்பிராயமாக இருக்கிறது.

**54. ஜினவிமோஹக பு3த்த4பாயுக3**
**த3னுஜமர்த்த3ன கல்கி மேட்4ரதி**
**இனிது த3ஷரூபகள த3ஷகரணங்க3ளலி திளிது3 ।**
**அனுப4விப விஷயக3ள க்ருஷ்ணா**
**ர்ப்பண வெனலு கைகொம்ப3 வ்ருஜினா**
**ர்த்தன வரஜகன்னாத2 விட்டல விஷ்வவியாபகனு ||(6-35)**

நம் இந்த தேகத்தின் 10 இந்திரியங்களில் பகவந்தன் இருக்கிறான். ஆனால் ஜின - மஹாவீர, புத்த ஆகியோர் இவ்விதமாக உபாசனை செய்வதில்லை. ஆகையால், கல்கி அவதாரத்தினால் அவர்களை த்வம்சம் செய்கிறான் என்னும் விஷயத்தை சிந்தித்து, விஷயங்களில் ஈடுபாட்டினை குறைத்து, அவனை சிந்தித்தால், ஸ்ரீகிருஷ்ணனிடமிருந்து வேறுபாடு இல்லாத ஜகன்னாத விட்டலன் நம்மை காக்கிறான் என்கிறார்.

**55. பூ4 ஸலில ஷிகி2 பவன பூ4தா**
**காஷ தொ3ளகை3தை3து3 தன்மா**
**த்ரா ஸஹித ஒந்ததி4க பஞ்சாஷத் வரணவேத்3ய ।**
**ஈ ஷரீரதி3 வ்யாபிஸித்து3 ஸு**
**ராஸுரரிகெ3 நிரந்தரத3லி ஸு**
**கா2 ஸுக2ப்ரத3னாகி3 ஆடு3வ த்3வேஷிபர பி3டு3வ ||(7-1)**

பஞ்சபூதங்கள் - 5; பஞ்ச தன்மாத்ரங்கள் 5; 5+5=10 ரூபங்களால் தேகங்களில் இருந்து, மொத்தமாக 25 ரூபங்களில்; மற்றும் பஞ்சாஷத் வர்ண - 51 எழுத்துக்களில் அதாவது இவ்வளவு ரூபங்களில் தானே அந்தந்த வர்ண ரூபங்களால் இருந்து, நம்பியவர்களுக்கு அருள்கிறான். நம்பிக்கை இல்லாதவர்களுக்கு (த்வேஷம் செய்பவர்களுக்கு) த்வேஷத்தையே கொடுத்து அவரவர்களின் யோக்யதைக்கேற்ப ஸாதனை செய்விக்கிறான் என்கிறார் ஸ்ரீதாஸர்.

**56. ப்ரணவ ப்ரதிபாத்[3]ய த்ரிநாமதி[3]**
**தனுவினொளு த்ரிஸ்தா[2]னக[3] னிரு**
**த்த[4]னு த்ரிபஞ்சக ஏகவிம்ஷதி சதுரவிம்ஷதிக**
**நெனிஸி எப்பத்தெரடு[3] ஸாவிர**
**இனிது நாடிக[3]ளொளு நியாமிஸு**
**தின கப[4]ஸ்திக[3] லோகதொ[3]ளு சர்வத்ர பெ[3]ளகு[3]வனு ||(7-2)**

ஓம்கார ப்ரதிபாத்யனான (அல்லது ஓம்காரத்தினாலேயே வணங்கப்படுபவனான) ஸ்ரீஹரி, அகார இகார மகாரத்தில் இந்த தேகத்தில் இருக்கும் லிங்க தேகத்தின் 10 இந்திரியங்களில் + 5 மாத்ரைகளில் அதாவது, மொத்தம் த்ரிபஞ்சக 15 ரூபங்களில் இருக்கிறான். அனிருத்த தேகத்தின் 10 இந்திரியங்களில் 5 மாத்ரைகளில் 5 பூதங்களில் + 1 மனஸ் என மொத்தம் 21 ரூபங்களில் இருக்கிறான் என்று அறிய வேண்டும். ஸ்தூல தேகத்தின் 24 தத்வங்களில் 24 ரூபங்களில் ஸத்வ - விஷ்வ; ரஜ - தைஜஸ; தம: - ப்ராக்ஞ இந்த 3 ரூபங்களால் 24 அதிகமாக என்றால் 24*3 = 72 ரூபங்கள் ஆகின்றன. இவற்றை, ப்ருஹதி ஸஹஸ்ர ப்ரதிபாத்ய 1000 ரூபங்களால் பெருக்கினால் 72,000 நாடிகளில் இருந்து நியமனம் செய்கிறான் என்று அறி.

வலது பாகத்தில் 36,000 புருஷ நாடிகளும், இடது பாகத்தில் 36,000 ஸ்த்ரி ரூபங்களும், மொத்தம் 72,000 நாடிகளால் ஆனது இந்த சரீரம். ஒரு சம்வத்ஸரத்திற்கு 360 நாட்கள். இரவு + பகல் என 360+360=720 ரூபங்கள். ப்ருஹதி சஹஸ்ரத்தினால் 1000 என இதை பெருக்கினால் 72,000 வருகிறது. இவ்வளவு நாடிகளில் 72,000 ரூபங்கள் இருக்கிறது என்பதை அறிய வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர். இது ஸ்தூல தேகத்தின் விவரம் ஆகும்.

**57. ஈ ஷரீர சதுஷ்டயக[3]ளொளு**
**கோஷதா[4]துக[3] பா[4]ரதிப ப்ரா**
**ணேஷ னிப்பத்தொந்து[3] ஸாவிரதா[3]ரு நூரெனிப |**

**ஷ்வாஸரூபக ஹம்ஸ பா$^{4}$ஸ்கர**
**பே$^{4}$ஷரொளகி$^{3}$த்த$^{3}$வர கைபிடி$^{3}$**
**தீ ஸரோஜ ப$^{4}$வாண்ட$^{3}$தொ$^{3}$ளு ஸர்வத்ர தும்பி$^{3}$ஹனு ||(7-5)**

இந்த பத்யத்தில் தாஸர் ஹம்ஸ நாமக ஸ்ரீஹரியை பஞ்சகோஷ, ஸப்த தாதுகளில் முக்ய பிராணாந்தர்கதனாக நான்கு சரீரங்களில் வெவ்வேறு 21600 ஹம்ஸ மந்த்ர ஜபங்க்ளை செய்கிறான் என்கிறார். வலது பக்கத்தில் சந்திரன் நம் மூக்கில் இருக்கிறான். இடது பாகத்தில் மூக்கின் ரந்த்ரத்தில் அபிமானியாகி இவர்கள் இருவராலும், பிராணதேவர், ஷ்வாஸ ஜபத்தினை செய்விக்கிறார். இவனே பிரம்மாண்டத்திலும் நிறைந்து வ்யாபித்திருக்கிறான் என்று அறிவாயாக என்கிறார்.

**58. த்ருணமொத$^{3}$லு பிரஹ்மாந்த ஜீவர**
**தனுக$^{3}$ள த்ரயக$^{3}$ளலி நாரா**
**யணன ஸாவிரதை$^{3}$து$^{3}$ நூரிப்பத்து மேலாரு |**
**க$^{3}$ணனெ மாள்பரு பு$^{3}$த$^{4}$ரு ரூபவ**
**க்$^{4}$ருணிய சூர்யாதி$^{3}$த்ய நாமக$^{3}$**
**ளனுதி$^{3}$னதி$^{3}$ ஜபிசுவரிகீவாரோக்$^{3}$ய ஸம்பத$^{3}$வ ||(7-8)**

இந்த பத்யத்தில் த்ருணத்திலிருந்து பிரம்மாண்டத்தில் இருக்கும் அனைத்து ஜீவகோடிகளில் க்ருணியில் ஆதிபௌதிக, ஆதிதெய்வ, ஆத்யாத்ம ஆகியவற்றில் மொத்தம் 1526 ரூபங்களில் இருந்து, செயல்களை செய்விக்கிறான் என்பதை குருகளிடமிருந்து அறிந்து, சூர்ய உபாசனை செய்து ஆரோக்யவந்தனாக இருக்க வேண்டும் என்று தாஸர் கூறுகிறார்.

ஆரோக்யவந்தனாக இரு என்றால், சூர்யாந்தர்கதனான பாரதிபதி, நம் சரீரத்தில் 21,600 ஹம்ஸ மந்திரங்களை செய்கிறான் என்று அறிந்து, நீனும் ஜபம் செய்தால் ஆரோக்யவந்தன் ஆகிறாய் என்கிறார்.

(தொடரும்)

## இந்த மாத ஆராதனைகள்

**ஸ்ரீஷ ப்ராணேஷ விட்டலதாசர் (1807-1892)**
(ஸ்ரீ ராமதாஸர்)

ஈஷ கதா ப்ரவக்தாரம் ராகவேந்திர குரோ: ப்ரியம் |
தாஸவர்யம் தயாயுக்தம் ராமதாஸ குரும் பஜே ||

**ஸ்ரீஜகன்னாததாசர் (1728-1809)**
ஜலஜேஷ்ட நிபாகாரம் ஜகதீஷ பதாஸ்ரயம் |
ஜகதீதல விக்யாதம் ஜகன்னாத குரும்பஜே ||

மானவி ஆசார்யரு ஸ்ரீனிவாஸாசார்யரு
ஞானி வேதஷாஸ்திராதிகளலி பானுகோடி ப்ரகாஷரு
மௌனி ஸ்ரீவிஜயதாஸரனு ஹீனரெந்து பகெதரு
தீனராகி உதரத தீவ்ரபேனெ அனுபவிஸிதரு
தேனுபால தாஸரிந்த ஆயுராரோக்ய படெதரு
ஸானுராகதி ஜகன்னாதவிட்டலன தாஸானு தாஸராதரு
பானுகோடிதேஜ மங்களாங்க ஹரிவிட்டலன சிந்தகரு ||

**ஸ்ரீபிரஸன்னவெங்கட தாசர் (1680-1750)**
ஸ்ரீஷாத்ப்ராப்த ஸுவிக்ஞானம் ஸ்ரீஷைல நிரதம் ஸதா |
பிரஸன்ன வெங்கடார்யோமே பூயாத் ஸர்வார்த்த ஸித்தயே ||

அத்திகெய பிருநுடிகளிந்த நொந்து பெந்து
ஹத்தி வெங்கடகிரி வெங்கடன முந்தெ நிந்து
குத்திகெயு பிகியெ ப்ரார்த்தனெய மாடலந்து
பித்திஹ பீஜாக்ஷர பிரஸன்ன வெங்கடனெந்து
மத்தெ ஹரிதாஸரெனிஸி ஹிந்திருகி பந்து
பக்திலி கன்னட பதபத்ய ரசனெகெய்து
யுக்திலி ஸ்ரீ மங்களாங்க ஹரிவிட்டலனெந்து
முக்தராதரு பாத்ரபத ஷுத்த த்வாதஷியந்து ||

**ஸ்ரீகமலேஷ விட்டலதாசர் (1780)**
(ஸ்ரீ ஆனந்ததாசர்)

ஸ்ரீராகவேந்திர பாதாப்ஜ மதுபாயித மானஸம் |
ஆனந்ததாஸ மீடேஹம் தேவபட்டண வாஸினம் ||

**ஸ்ரீ ஆனந்த விட்டலதாசர் (1869–1918)**
(ஸ்ரீ குல்கர்ணி ராமராயர்)

தாஸவர்ய குலோத்பன்னம் வரதேந்த்ரார்ச்சகம் ஸதா |
ஆனந்தவிட்டலம் வந்தே ஸ்வாமிராயார்ய சாத்ரகம் ||

**ஸ்ரீ வரதேஷ விட்டலதாசர் (1885–1918)**
விஜயராய தௌஹித்ரம் ப்ராணேஷ தாஸ ப்ரௌபாத்ர: |
குருகன்னாத தாஸ சிஷ்யார்ய வரதேஷதாஸ குரும் பஜே ||

***

தொடர்

**ஹரிதாஸர்களின் சிந்தனைத் துளிகள்**

**ஸ்ரீகுருப்யோ நம:**

சதத கணநாத சித்தியனீவ கார்யதலி
மதி ப்ரேரிசுவளு பார்வதிதேவி மு
குதி பதகெ மனவீவ மஹருத்ரதேவரு ப
குதி தாயகளு சிரி பாரதி தேவியு
குதி சாஸ்த்ரகளல்லி வனஜசம்பவனரஸி
சத்கர்மகள நடெஸி சுக்ஞான மதியித்து
மத்தெ பாலிசுவ நம்ம பவமானனு
சித்ததலி ஆனந்த சுகவனீவளு ரமா ப
குத ஜனரொடெய நம்ம புரந்தரவிட்டலனு
சதத இவரலி நிந்து க்ருதிய நடெசுவனு ||
--ஸ்ரீபுரந்தரதாசர்

ஸ்ரீபுரந்தரதாசர் ஆரோகண கிரமத்தில் அழகாக சுருக்கமாக மத்வ மதத்தின் தாரதம்யத்தை விளக்கும் உகாபோகம் இது. ஜீவர்களை ஸ்ருஷ்டிக்கு கொண்டு வந்த ஸ்ரீஹரியே அனைவரின் நிலைக்கும் கதிக்கும் காரணன். உத்தம ஜீவர்களில் இருந்து, சத்கர்மங்களை செய்பவனும் அவனே. நம் கர்மங்களை பெற்று, அதற்கேற்ப பலன்களைக் கொடுக்கிறான்.

த்வைத சித்தாந்தத்தின் தாரதம்யத்தை விளக்கும் இந்த ஸ்லோகத்தை தினமும் பாராயணம் செய்யவேண்டும். கணநாத (வினாயக) 18ம் வகுப்பில் வரும் தேவதை. பார்வதி – 7ம் வகுப்பு. ருத்ரதேவர் – 5ம் வகுப்பு. பாரதி மற்றும் சரஸ்வதி தேவியர் – 4ம் வகுப்பு. பவமானர் – 3ம் வகுப்பு. ரமாதேவி – 2ம் வகுப்பு. பிறகான முதலாம் இடம் சர்வோத்தமனான ஸ்ரீபுரந்தரவிட்டலனான நாராயணனுடையதாகும்.

ஹரியே சர்வோத்தம ஹரியே பரதேவதெ
ஹரி சர்வ விஷ்வமயம் ஜகத் ||

தினந்தோறும் பூஜை நேரத்தில் படிக்கவேண்டும் என்று தாரதம்யத்திற்கேற்ப ஸ்தோத்திரம் செய்தார் ஸ்ரீமதாசார்யர், இன்றும் பல மடங்களில் இந்த பத்ததி இருக்கிறது. 'சோத்தமா: குரவ: ப்ரோக்தா:' என்பது போல எந்த ஆசிரமத்தில் இருந்தாலும், உத்தமர்கள் குரு ஸ்தானத்தில் இருக்கிறார்கள் என்று அறிய வேண்டும். அவர்களுக்கு மரியாதை அளிக்கவேண்டும்.

ப்ருத்வி மண்டலமத்யஸ்தா: பூர்ணபோத மதானுகா: |
வைஷ்ணவா: விஷ்ணுஹ்ருதயா: தான் நமஸ்தே குரூன்மம ||

***

## சஜ்ஜனர்களை பகைத்தல் கூடாது

அனைவரும் அறியவேண்டிய ஒரு முக்கிய விஷயத்தை ஸ்ரீவிஜயதாசர் சொல்கிறார். பரம்பரையில், தேவரபூஜையின் துவக்கத்தில் அனைவரும் சொல்லும் மந்திரம் இது. 'வைஷ்ணவ த்வேஷஹேதோன்மே பஸ்மசாத் குரு மாதவ'. என்றைக்கும் வைஷ்ணவரை த்வேஷிக்கக் கூடாது. அப்படியும் தவறி நாம் இதை

செய்துவிட்டால், என்னை மன்னித்துவிடு ஸ்ரீஹரியே என்று கேட்கவேண்டும். இதைப் பற்றி தாசர் கூறுவது இது.

வாசுதேவன நிஜ தாசன்ன மன்னிசதெ
த்வேஷ மாடிதவன க்லேஷக்கெ கடெ இல்ல
தேஷதொளகெ இதனெ எச்சித்து நடெதரெ
ஏசேசு ஜன்மக்கெயள்ளினிது கேடில்ல
லேசாகி திளிவது சித்தாந்த பல்லவரு ||

மேலும், வைஷ்ணவரை த்வேஷம் செய்யாதவர்களை ஸ்ரீஹரி மன்னிப்பான் என்கிறார். மன்னித்து, அனைத்து நலன்களையும் அளிப்பான் என்கிறார்.

பூசுரனங்க்ரிய ரேணு தரிஸித மா
நீசலு ஷங்கிஸ ஷங்கிஸ எந்திகு
தோஷ அவகில்ல அவர பொந்தி இத்த
தாசனாகலி பேகு பவனமததொளித்து
ஈ சௌபாக்யவன்னு தூரகிதவன புண்ய ||

இதிலிருந்து தெரிவது என்னவெனில், என்றும் ஒரு சதாசாரியை, ஸ்ரீமதாசார்யரின் மதத்தைப் பின்பற்றுபவரை, ஹரிநாம கீர்த்தனைகளை பாடுபவரை திட்டக்கூடாது, அவரை எதிர்க்கலாகாது. இது தவறு என்கிறார். சரியாகச் சொல்வதென்றால், சதாசாரிகளை, பீடாதிபதிகளை தவறான கண்ணோட்டத்தில் பார்ப்பது, திட்டுவது என்று பார்க்கிறோம். இது ஸ்ரீஹரிக்கு பிடித்தமான வேலை இல்லை, இதற்கு தக்க தண்டனை உண்டு என்று கூறுகிறார்.

ஞானிகளுக்கு செய்யும் துரோகத்திற்கு சத்கதி கிடைக்காததே தண்டனை என்று சாஸ்திரங்கள் சொல்கின்றன. மனதால், உடலால், செயலால் என்றும் ஞானிகளுக்கு, உத்தமர்களுக்கு துரோகம், தவறு இழைக்கக்கூடாது. தவறாக நடந்துகொண்டவர்களைப் பற்றி இதிகாசங்களில் பல உதாரணங்களைப் பார்க்கலாம். ஞானிகளின், உத்தமர்களின் சேவையை முடியும் மட்டில் செய்யவேண்டும்.

***

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### 26. அவரோஹணதாரதம்ய ஸந்தி விடைகள்

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 ஸு | 21 வா | 22 ஸ | வ | 2 செ | | ர | ணி | ஹி | 17 ரோ | | | | 23 |
| | ரி | சி | | 24 க் | | 25 ஹு | 3 அ | ர் | த் | தா | ங் | கி | னி |
| ஸ | ஜா | 4 அ | னி | ரு | த் | த | ன் | | | | | | ஜ |
| 5 கே | ஸ | வ | | ஸா | | 6 வ | ரு | ண | ன் | | | 26 மா | ர் |
| 29 ம | ன | னி | 7 ஸு | னு | 8 ம | ஹ | தி | ர | த் | மி | ஜ | ன | 18 வ |
| 9 த | ன | 10 ப | ணி | ப | ஜ | | 27 வீ | 28 ரு | | | த | வி | |
| | 11 நி | ர் | ரு | ஜ | ர | மீ | 19 ஸ | த் | | தி | ந் | ளி | 20 கா |
| | 12 ஸே | ம | 29 வா | | வ் | | 13 ப் | ர | வ | ஹ | வி | | |
| 14 நா | ரா | 30 ய | ணி | க | 31 கோ | | ரா | ர் | ப | | ர | | |
| | த் | | 15 அ | ன | ல | | ண | | ம் | | த் | | |
| | 32 ப | | | 33 க | 16 பு | த | ன் | | 34 ஸ | | 35 மி | | |

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 3 : இதழ் 11


| **நிர்வாக ஆசிரியர்** | **துணை ஆசிரியர்** |
|---|---|
| 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்<br>ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,<br>380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase, பெங்களூரு 560078<br>Ph.: 89044-58276.<br>haridasa.vijayam@gmail.com<br>jagannathakesava.blogspot.com | 'தாச சாகித்ய சேவா ரத்ன'<br>திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்<br><br>**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**<br>திரு. முரளிதர தாசரு,<br>திருமதி. நிர்மலா நரசிம்மன்,<br>திரு. லட்சுமிபதிராஜா,<br>திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ் |


ஆராதனை

**ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்**

**அக்டோபர் 1 முதல் 31 வரை, 2022**

அக். 2 - ஆஸ்விஜ சுத்த சப்தமி - ஸ்ரீப்ராணேஷ தாஸர், லிங்கசுகூர்

அக். 4 - ஆஸ். சுத். நவமி - இபராமபுர ஸ்ரீஅப்பாவரு ஜயந்தி, இபராமபுர

அக். 5 - ஆஸ். சுத். தசமி - ஸ்ரீமத்வ ஜயந்தி

அக். 10 - ஆஸ். பகுள. பிரதமை - ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர், கெளதாள

# ஆசிரியர் பக்கம்

ஏகவிம்ஷதி மதப்ரவர்த்தக கா
குமாய்க3ள குஹகயுக்தி நி
ராகரிஸி ஸர்வோத்தமனு ஹரியெந்து3 ஸ்தா2பிஸித3 |
ஸ்ரீகளத்ரனஸத3ன த்3விஜப பி
நாகிஸன்னுத மஹிம பரம க்ரு
பாகடாக்ஷதி3 நோடு3 மத்4வாசார்ய கு3ருவர்ய ||1

என்று ஸ்ரீஜகன்னாததாஸர் ஹரிகதாம்ருதஸாரத்தில் சொல்லியடி, குருவர்யரான ஸ்ரீமன் மத்வாசார்யரின் ஜெயந்தி விழா இந்த அக்டோபர் மாதத்தில் வருகிறது. தினம்தோறும், ஒவ்வொரு நொடியும் நினைக்கத் தக்கவரான நம் மூல குருகளை, அன்றைய தினம் சிறப்பாக நினைத்து, ஆராதனை செய்ய வேண்டியது அவசியமாகும். மத்வ விஜயம், மத்வ விஜய ஸார ஸங்க்ரஹ, வாயுஸ்துதி, மத்வ நாமா - என்று பாராயணம் செய்து தன்யர் ஆவோம்.

கூடவே ஸ்ரீராயரின் அத்யந்த பக்தர்களான இபராமபுரத்து ஸ்ரீஅப்பாவரு, ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர் மற்றும் ஸ்ரீஜகன்னாத தாஸரின் சிஷ்யரான ஸ்ரீப்ராணேஷ தாஸர் ஆகியோரின் ஆராதனை நாட்களும் வருகின்றன. அந்தந்த நாட்களிலும் அவரவர்களை தியானம் செய்து, அந்த ஹரிதாஸர்கள் மற்றும் அவர்கள் அந்தர்யாமியான பகவந்தனின் அருளை வேண்டுவோமாக.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

**கன்னடம்**

**அருஞ்சொற்பொருள்**

**கடினமான சொற்களின் அர்த்தங்கள்**

**தாச சாகித்யத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்கள்

1. த்ரிவிதபாப – பாதக, உபபாதக, மஹாபாதக; 2. தோயஜ – தாமரை; 3. துரகக்ரீவ – ஹயவதனரூப ஸ்ரீஹரி; 4. தேஜி – குதிரை; 5. நிஷ்டை – சிரத்தை; 6. நீருபதி – வருணன்; 7. நிர்லிப்த – சம்பந்தப்படாமல்; 8. களகளிஸு – சிரி; 9. கல்போக்த – சாஸ்திரங்களின்படி; 10. உத்தீர்ண – தேர்ச்சி.

தொடர்

## கேசவ நாமா

### 39. ஸாயுத சதுர்விம்ஷதி விஷ்ணுரூப ஸ்தோத்திரம்

தந்திரசாரத்தின் முதலாம் அத்தியாயத்தில் 24 முதல் 27 வரையிலான ஸ்லோகங்களில், ஸ்ரீஹரியின் 24 ரூபங்களில் எந்தெந்த ரூபங்களில் எந்தெந்த கைகளில் எந்தெந்த ஆயுதங்கள் இருக்கின்றன என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதைப் பற்றிய விவரங்கள் பஞ்சராத்ர ஆகமங்களிலும் இருக்கிறது என்பதை அறியலாம்.

ப$^{3}$லத$^{3}$ அஜானுக$^{1}$ர மொத$^{3}$லு ப்ரதக்ஷிணதி
ஸலில ஜாதி$^{3}$த$^{4}$ர ரமாபதே நமஸ்தே ||ப
பகவந்தனின் வலது முழங்காலின் அருகில் இருக்கும் கீழ் கையிலிருந்து துவங்கி, மேல் வலது கை, மேல் இடது கை, கீழ் இடது கை என்று பிரதட்சிணமாக பத்மாதி ஆயுதங்களை தரித்திருக்கும் ரமாபதிக்கு நமஸ்காரங்கள்.

அடுத்து வரும் பத்யங்களில் மேலே சொல்லப்பட்டிருக்கும் கிரமத்திலேயே பிரதட்சிணாகாரமாக ஆயுதங்கள் இருக்கிறதென்று அறிய வேண்டும்.

அரவிந்த ஷங்க$^{2}$ சுதர்ஷன கௌமோதகி
த$^{4}$ர நமோ கேஷவ ஸ்ரீஷ ப்ரம்ஹேஷ ||1
கமல, சங்கு, சுதர்ஷன சக்கரம், கௌமோதகி கதை என்று தரித்திருக்கும் பிரம்மனின் தலைவன், ஸ்ரீஷ கேஷவனாக இருக்கிறான்.

த$^{3}$ராம்பு$^{3}$ஜ க$^{3}$தா சக்ரத$^{4}$ர ஸ்ரீஷ நமோ
நாராயண தோஷ தூர குணபூர்ண ||2
தரா, அம்புஜ, கதா, சக்கிரத்தை தரித்திருக்கும் ஸ்ரீஷ தோஷங்கள் அற்றவனாக, குணங்கள் நிரம்பியவனாக, நாராயணன் இருக்கிறான்.

கௌமோதகீ சக்ரத$^{4}$ர கமல ஹஸ்தனே
நமோ மாத$^{4}$வ லக்ஷ்மீ ரமண மாம் பாஹி ||3
சக்ர கௌமோதகீ ப்ரபுல்ல அரவிந்த
ஷங்க$^{2}$த$^{4}$ர கோவிந்த நமோ வேதவேத்ய ||4

க[3]தா[3] ஸரோருஹ ஷங்க சக்ரதர விஷ்ணோ
மோத[3]மய சர்வத்ர ப[3]ஹிரந்தர்யாப்த ||5
சஹஸ்ரார ஷ[2]ங்காப்ஜ க[3]தாத[4]ர நமஸ்தே
பாஹி மதுசூதன மஹார்ஹ ஹயசீர்ஷ ||6

அம்பு[3]ஜ கதாசக்ர ஷங்கே த்ரிவிக்ரமனே
புஷ்பஜார்ச்சித த்ரிபத[3] நமோ விஷ்வரூப ||7
ஷங்காரி கௌமோதகீ பத்ம ஹஸ்தனே
மங்கள சுஸௌந்தர்ய வாமன நமஸ்தே ||8

இந்தீவராரி க[3]தா[3] ஷங்கீ நமஸ்தே
ஶ்ரீதர ஸதா நமோ ஶ்ரீவத்ஸ பாஹி ||9
கதாசக்ர பத்மதரா ஹஸ்த ஹ்ருஷிகேஷ
இந்த்ரிய நியாமக தேவதேவேஷ ||10

ஷங்காப்ஜரி கதாதர பத்மனாப
அகளங்க மஹிம ஜகஜ்ஜன்மாதி கர்த்த ||11
கமலதர கௌமோதகீ சக்ரீ ஈஷ
தாமோதர தேவ சுக்ஞானதா[3]த ||12

கௌமோதகீ ஷங்க அஜ்ஜாரி பாணின்
மம பாபஹர சங்கர்ஷண ஜயேஷ ||13
கதா ஷங்க சக்ராப்ஜ ஹஸ்த மாயேஷ
சதா நமோளாளுகடரி வாசுதேவ ||14

ரதாங்க கம்பு கதா கமலதர ப்ரத்யும்ன
க்ருதிதேவி ரமண நமோ பா[4]ஸ்வ மத்[3] ஹ்ருதயே ||15
ரதாங்க கதா கம்புகமல ஹஸ்த நமோ
ஷாந்தீஷ அனிருத்த ஷரணு மாம் பாஹி ||16

அரிகமல ஷங்க கதாதர புருஷோத்தம
க்ஷரா க்ஷரோத்தம புருஷ ஸ்வதந்த்ர நமோ பாஹி ||17
பத்ம கதாஷங்காரிதர அதோக்ஷஜ நமோ
மோத[3]மய கபிலபா[4]மன ட[3]ரக விஷ்ச ||18

சக்ராப்ஜ கதா ஷங்க பக்த ரக்தக நமோ
ஸதானந்த சின்மய அனக[4] அவிகா[1]ரி ||19
அப்ஜாரி ஷங்க கதாதர ஜனார்த்தன நமோ
அஜித அஜ ஸம்ஸார ப[3]ந்த[4] ஹர சுக[2]தா[3] ||20

6 - ஹரிதாச விஜயம் – அக்டோபர் 2022

தர கதா அரி அப்ஜதர உபேந்திர நமோ
இந்த்ரானுஜனே பிரம்மருத்ராதி வந்த்ய ||21
தர சுதர்ஷன கமல கௌமோதகி பிடித
ஹரி ஶ்ரீய:பதி அபயவரதனே ஷரணு ||22

ஷங்க கௌமோதகீ அப்ஜாரி தர கிருஷ்ண
சுக[2] க்ஞான சேஷ்டாரூப நமோ ஶ்ரீஷ ||23
மத்வ ஹ்ருத்வனஜஸ்ய சதுர்விம்ஷதி ரூப
உத்தாம பரமார்த்த ஹரி ஶ்ரீஷ ஷரணு ||24

மத்ஸ்ய கூர்ம க்ரோட நரசிம்ஹ வடு ரேணு
காத்மஜ ஶ்ரீராம க்ருஷ்ண ஷிஷு கல்கி ||25
ஆனந்த சின்மய அனந்தரூபனே நமோ
வனஜப[4]வ பித ஶ்ரீபிரசன்ன ஶ்ரீனிவாஸனே நமோ ||26

| # | வலது கீழ் கை | வலது மேல் கை | இடது மேல் கை | இடது கீழ் கை | ரூபங்கள் |
|---|---|---|---|---|---|
| 1 | அரவிந்த | சங்கு | சுதர்ஷன | கௌ மோதகி | கேசவ |
| 2 | தரா | அம்புஜ | கதா | சக்ர | நாராயண |
| 3 | கௌமோ தகி | சக்ர | தரா | கமல | மாதவ |
| 4 | சக்ர | கௌமோ தகி | அரவிந்த | சங்கு | கோவிந்த |
| 5 | கதா | சரோரு ஹ | சங்கு | சக்ர | விஷ்ணு |
| 6 | சஹஸ்ரா ர | சங்கு | அப்ஜ | கதா | மதுசூதன |
| 7 | அம்புஜ | கதா | சக்ர | சங்கு | த்ரிவிக்ரம |
| 8 | சங்கு | ஆரி | கௌமோ தகி | பத்ம | வாமன |
| 9 | இந்தீவர | ஆரி | கதா | சங்கு | ஶ்ரீதர |
| 10 | கதா | சக்ர | பத்ம | தரா | ஹ்ருஷிகே ஷ |
| 11 | சங்கு | அப்ஜ | ஆரி | கதா | பத்பனாப |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 12 | கமல | தரா | கௌமோதகி | சக்ர | தாமோதர |
| 13 | கௌமோதகி | சங்கு | அப்ஜ | ஆரி | சங்கர்ஷண |
| 14 | கதா | சங்கு | சக்ர | அப்ஜ | வாசுதேவ |
| 15 | ரதாங்க | கம்பு | கதா | கமல | பிரத்யும்ன |
| 16 | ரதாங்க | கதா | கம்பு | கமல | அனிருத்த |
| 17 | ஆரி | கமல | சங்கு | கதா | புருஷோத்தம |
| 18 | பத்ம | கதா | சங்கு | ஆரி | அதோக்ஷஜ |
| 19 | சக்ர | அப்ஜ | கதா | சங்கு | நாரசிம்ம |
| 20 | கதா | கமல | சக்ர | சங்கு | அச்யுத |
| 21 | அப்ஜ | ஆரி | சங்கு | கதா | ஜனார்த்தன |
| 22 | தர | கதா | ஆரி | அப்ஜ | உபேந்திர |
| 23 | தர | சுதர்ஷன | கமல | கௌ மோதகி | ஹரி |
| 24 | சங்கு | கௌமோதகி | அப்ஜ | ஆரி | கிருஷ்ண |

மத்வரின் இதயத்தில் அந்தர்யாமியாக இருக்கும் 24 ரூபங்களே, ஸ்ரீஷனான ஹரி என்னும் சிந்தனையுடன் சரணடைந்திருக்கிறார்.

தசாவதாரங்கள், 24 ரூபங்கள் ஆகியன அவனது அபின்ன (வேறுபாடு இல்லாத) அனந்த ரூபங்களே என்று நினைத்தவாறு, பிரம்மனின் தந்தையே தன் பிம்பமூர்த்தியான, பிரசன்ன ஸ்ரீனிவாசர் என்று வணங்கியிருக்கிறார் தாசர்.

## 40. ஸருவத படிஸிரோ

ஸருவத[3] படி[2]ஸிரோ சதுரவிம்ஷதி நாம
ஸிரி விரிஞ்சாதிக[3]ளிகெ[3] ப்ரியகர நாம ||ப

கேஷவ நாராயண மாதவ கோவிந்தன
ஸ்ரீஷ விஷ்ணு மதுசூதன த்ரிவிக்ரமன ||1
வாமன ஸ்ரீதர ஹ்ருஷிகேஷ பதுமனாப
தாமோதர சங்கருஷண வாசுதேவன ||2
ப்ரத்யும்ன அனிருத்த புருஷோத்தம தேவன
அதோக்ஷஜ நாரசிம்ஹ அச்யுதராயன ||3
ஜனார்த்தன உபேந்திர ஹரி ஸ்ரீகிருஷ்ண ஸ்வாமிய

ஜனன மரண ரஹிதனாத ஸ்ரீனிவாஸன ||4
ஈ மஹா நாமங்க³ள ப்ரேமதி³ம் பாட³லு
காமிதார்த்தவீவ ஸ்ரீரங்கேஷ விட்டலா ||5

ரங்கேச விட்டல தாசர் தமது இந்த பாடலில், ஸ்ரீ, பிரம்ம முதலானவர்களுக்கு பிரியமான 24 நாமங்களை படித்தால், பிறப்பு இறப்பு சுழற்சி விலகும் என்கிறார்.

## 41. ஜய ஜய வெங்கட நாயக

ஜய ஜய வெங்கட நாயக ஜய ஜய
ஜய ஜய லட்சுமி ரமண ஜய
பயபரிஹர ஷுப³ நாமதேய ஜய
ஜய விப⁴வ ப்ரதசரித ஜய ||ப

ஜய ஜய கேஷவ நாராயண ஜய
ஜய மாத⁴வ கோவிந்த ஜய
ஜய விஷ்ணுவெ மதுசூதன த்ரிவிக்ரம
ஜய வாமன ஜய ஸ்ரீதர ஜய ||1
ஜய ஜய ஹ்ருஷிகேஷ பத்பனாப ஜய
ஜய தாமோதர சங்கர்ஷண ஜய
ஜய வாசுதேவனெ ஜய ப்ரத்யும்னனே
ஜயானிருத்த புருஷோத்தம ஜய ||2
ஜய ஜயாதோக்ஷஜ நாரசிம்ஹ ஜய
ஜய ஜயாச்யுத ஜய ஜனார்த்தன
ஜய ஜயோபேந்த்ரனெ ஜய ஹரே ஸ்ரீகிருஷ்ண
ஜய திருபதி வெங்கடரமண ||3

ஓம் பூதனாஜீவித ஹராய நம: ||
திருபதி வெங்கடரமண என்னும் அங்கிதத்தால் திம்மப்ப தாசர் 24 நாமங்களை ஜயகோஷத்துடன் பாடியிருக்கிறார். இது ஒரு மங்கள பதம். பூதனா அரக்கியைக் கொன்றவனான ஸ்ரீகிருஷ்ணனுக்கும், கேசவாதி 24 நாமங்களுக்கும் திருப்பதி க்ஷேத்திரத்தின் வெங்கட ரமணனுக்கும், தமது பிம்பரூபத்திற்கும் ஐக்கிய சிந்தனை செய்திருக்கிறார்.

(தொடரும்)

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

### ஜகன்னாத தாசரின் சுளாதிகள்

டா.ஷீலாதாஸ், ராய்ச்சூர்

(சென்ற இதழிலிருந்து தொடர்கிறது)

பித்ருதேவதைகளின் விவரங்களைப் பற்றி தெரிவிக்கிறார். பித்ருபிதாமஹர்களின் வரிசையில், 8 வசுக்கள், 11 ருத்ரர்கள், 12 ஆதித்யர்கள் என மொத்தம் 8+11+12=31 தேவதைகள் ஆகின்றது. பித்ரு, பிதாமஹ, பிரபிதாமஹ என்று மூவரிலும் அனிருத்த ரூபம் இருக்கிறது ஆகவே 31*3 = 93 ரூபங்கள் ஆகின்றது. இதற்கு த்ரினவதி என்று பெயர். இந்த த்ரினவதி ஸ்வரூபனான அனிருத்த ரூபி ஸ்ரீஹரி 'எஜமானன்' என்ற பெயரில் அன்னம், யமன், சந்திரன் ஆகிய தேவதைகளின் மூலம் பித்ருதேவதைகளுக்கு அன்னவாசனனாக இருந்து அன்னம் என்று அழைத்துக் கொள்கிறான். ஷண்ணவதி நாமக ஸ்ரீஹரி 96 ரூபங்களினால் வசு, ருத்ர, ஆதித்யர்களில் நின்று பக்தர்களின் பித்ருதேவதை கணத்திற்கு பரமானந்தத்தைக் கொடுத்து காப்பாற்றுவான்.

பிரம்மாதி ஜீவர்களை காக்கும் குதப என்னும் பெயர் கொண்ட ஸ்ரீஹரி, அ முதல் க்ஷ வரை 51 எழுத்துக்களில் வியாபித்து 24 தத்வங்களில் கேசவாதி 24 ரூபங்களினால் இருந்து த்வக்-முதலான 7 தாதுகளில் அனிருத்தன் முதலான 5 ரூபங்களில் நின்று, வசிஷ்ட மற்றும் ஹம்ஸ நாமகனாக 2 ரூபங்களில் – மொத்தம் 7 ரூபங்களில் நின்று அனிருத்த நாமக ஸ்ரீஹரி, அனைத்து ஜீவர்களையும் காக்கிறார். நமது வாழ்நாளில் ஹரி நாமஸ்மரணையினால், உண்ணும் பொருட்களில் இருக்கும் ஸ்ரீஹரியின் ரூபங்களையும் சிந்தித்து, ஒவ்வொரு கவளம் உண்ணும்போதும் கிருஷ்ணார்ப்பணம் என்று சொல்லி, போஜனம் என்னும் யக்ஞத்தைச் செய்தால், குழந்தையானது தனது தாய் கொடுக்கும் உணவினை கை நீட்டி வாங்குவதைப் போல, ஸ்ரீஹரியும் வாங்குவார் என்கிறார்.

நெருப்பானது எப்படி தன்னுள் போடும் அனைத்தையும் எந்தவித பேதமும் இல்லாமல் எரித்து, அப்படி எரிப்பதனால் தனக்கு எந்த உருவ மாறுபாடும் இல்லாமல் இருக்கிறதோ அதுபோல, ஸ்ரீஹரியானவர் ஜீவர்கள் செய்யும் செயல்களினால் தான் எந்தவித மாறுபாடும் பெறாமல் ஜீவர்கள் அர்ப்பிப்பதை ஏற்றுக்கொள்கிறார்.

ஸ்வாக்யரசத்தை மட்டுமே தான் ஸ்வீகரிப்பதால் அந்த ரசாக்ய ரூபங்கள் எப்போதும் மங்களஸவரூபமாகவே இருக்கின்றன. அனைத்து பொருட்களிலும் தத்ரூப, ததாகார, தத்வாச்ய மற்றும் தன் நாமகனாக இருக்கும் ஸ்ரீஹரியின் ரூபங்களை நினைத்தவாறு அப்பொருட்களை பயன்படுத்தவும் என்ற நற்செய்தியை சொல்கிறார் தாசர். தாமரை இலைத் தண்ணீர் போல, சாதகர்கள் வாழ்க்கையில் பற்றற்று அனைத்தையும் (த்வந்த்வ கர்மங்கள் – பாவ / புண்ணியங்கள்) மங்களரூபங்களைக் கொண்ட ஸ்ரீஹரியின் பாதங்களுக்கு அர்ப்பிக்கவேண்டும் என்று தெரிவிக்கிறார்.

அன்னமயாதி கோஷ-கத-ரூபங்கள் 585,400 ரூபங்கள் மற்றும் அன்னமயாதி கோஷங்களில் 4305 ரூபங்கள் என மொத்தம் 589,705 ரூபங்கள் எடுத்து, உணவு உண்பவர்களிடம் போக்த்ரு நாமகனாக இருக்கிறார் ஸ்ரீஹரி. உணவுப் பொருட்களில் போஜ்ய நாமகனாக இருந்து, இந்த தேகத்தில் தலை முதல் கால் வரை அனைத்து இடங்களிலும் வியாபித்து ஜீவர்களை அனைத்து நேரங்களிலும் காக்கிறார். இப்படியாக விளக்கி இந்த சந்தியின் சாரத்தை, இறுதி ஸ்லோகத்தில் சொல்லி, தனது பிம்பமூர்த்தியான ஸ்ரீஜகன்னாத விட்டலனுக்கு இந்த சந்தியை அர்ப்பிக்கிறார் ஜகன்னாததாசர்.

இந்த சந்தியின் சாரம் எனப்படும் இந்த கடைசி ஸ்லோகத்தை தினந்தோறும் அனைவரும் படிக்கவேண்டும்

ஐது3 லட்செம்பத்த1ரொம்ப
த்1தா1த3 ஸாவிரதே3ளு னூர்மே
லைது3ரூப1வ த3ரிஸி போ4க்த்ருக3 போ4ஜ்யனெந்தெ3னிஸி |
ஸ்ரீத4ரா துர்காரமண பா1
தா3தி3 ஷிரப1ரியந்த1 வியாபி1ஸி
கா1து3கொ1ண்டி3ஹ ஸந்த1த1 ஜகன்னாதவிட்டலனு ||

## ஜகன்னாததாசர்: காவிய நடைக்கு சாஸ்திர நடையின் மேற்பூச்சு - by Prof. A.V. நாவட

12ம் நூற்றாண்டின் சிவசரணரின் வசனங்கள் மற்றும் 13ம் நூற்றாண்டிலிருந்து இன்று வரையிலான ஹரிதாசர்களின் இனிய

பாடல்கள் கன்னட சாகித்யத்தின் தியானசீல (சிறு-பாடல்கள்) என்று சொல்லப்படுகின்றன. மொழியை கையாளுவதில் புதுவகையான முறைகளைக் கொண்டு, பரம தேவ ரகசியங்களை சொல்லப் புறப்பட்டபோதே, மனிதனின் கற்பனைத்திறன், அனுபவம் வளர்ந்தது. ஸ்ரீபாதராஜரிடமிருந்து துவங்கி, கனக, புரந்தர, கோபாலதாச, விஜயதாசர் மூலமாக வளர்ந்து, ஜகன்னாததாசரின் பாடல்களில், தத்வசுவ்வாலிகளில், ஹரிகதாம்ருதசார கிரந்தத்தில் இத்தகைய மொழியின் வளர்ச்சியினைக் காணமுடியும்.

ஜகன்னாததாசரின் மிகச்சிறந்த கிரந்தம் ஹரிகதாம்ருதசாரம். அவரது பாடல்களில் கடவுள் பக்தி, மத்வ சித்தாந்தம் ஆகியவற்றைக் காணலாம். அவரின் மனதை ஆட்கொண்ட தெய்வங்கள் என்றால் அது பண்டரிபுரத்தின் விட்டலன் மற்றும் திருப்பதியின் ஸ்ரீனிவாசன்.

விட்டலய்யா, விட்டலய்யா, தடித்கோடிநிபகாய ஜகன்னாதவிட்டலய்யா என்று துவங்கியது விட்டலனின் பாடல். 'எந்து காம்பேனோ பாண்டுரங்க மூருதிய இந்துபாகநிவாஸ நரன சாரதிய' என்றும் பிறகு 'கண்டே பண்டரிராயன' என்று விட்டலனைக் கண்ட திருப்தியில் பாடுகிறார். எல்லா தாசர்களின் பாடல்களில் பார்ப்பதைப்போல, பக்தன் & ஸ்ரீஹரியின் நடுவில் இருக்கும் சம்பந்தத்தை மிக அழகாக தனது பற்பல பாடல்களில் விளக்குகிறார். தான் ஸ்ரீஹரியின் தாசன் என்னும் கருத்தே அவரின் அனைத்து பாடல்களின் அடிநாதமாக இருக்கிறது. 'தாசோஹம் தவ தாசோஹம்' என்று ஒரு பாடலில் சொன்னால், 'பாஹி பாஹி' என்று இன்னொரு பாடலில் பாடுகிறார். 'துஷ்டரின் சங்கதிந்த கெட்டு, மன்மதன பாணதிந்த சஞ்சலாக்ஷியர சஞ்சிகொளகாகி ம்ருத்யுபதத்த சாகிதெ' (துஷ்டரின் நட்பினால் கெட்டு, மன்மதனின் பாணத்தினால் மனம் சஞ்சலப்பட்டு, மரணத்தின் வாயிலை நோக்கினேன்) என்று பக்தன் ஒருவரின் பச்சாதாபத்தை இவரது பாடல்களில் பார்க்கலாம். 'லௌகிகாசெய பிடிஸி நின்ன தாசனெனிஸி சலஹோ ஜகன்னாத' என்று ஸ்ரீஹரியிடம் வேண்டுகிறார்.

அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கும் ஸ்ரீஹரியின் நற்குணங்களை மிக அழகாக சரளமான மொழியில் விவரிக்கிறார். சூரிய சந்திரரே தீபம், மழையே குளியல், உலகமே ஆடை, விளையும் தானியங்கள் அனைத்தும் நைவேத்தியம், பளபளக்கும் மின்னல் கற்பூர ஆரத்தி என்று அறிந்து பூஜிக்கவேண்டும் என்று மிக சுலபமான ஹரிபூஜையை அற்புதமாக விளக்குகிறார்.

உவமைகள், உருவகங்கள் ஆகியவற்றை ஜகன்னாததாசர் நன்றாகப் பயன்படுத்தியிருக்கிறார். 'கிட்டகட்டித கப்பிணதந்தெ கிட்ட கல்மஷத கோபதி பித்து' என்றும் 'ரதுன தொரகிதல்லா எனகொந்து ரதுன தொரகிதல்லா' என்று தான் ஸ்ரீஹரியின் அருளுக்குப் பாத்திரமானதை சொல்லி மகிழ்கிறார்.

மத்வாசாரியரின் சர்வமூல கிரந்தங்களை நன்கு கற்றறிந்து, அவற்றின் சாரத்தை தன் பாடல்களில் பயன்படுத்தியிருக்கிறார். ஸ்ரீஹரி சர்வோத்தமத்வம், ஜகத்சத்யத்வம், ஹரி சர்வவியாப்தித்வம் ஆகிய தத்வங்களை தமது பாடல்களில் மேற்கோள் காட்டி நிரூபித்திருக்கிறார். ஸ்ரீஹரி தன் பக்தர்களின் தலைவனாக இருக்கிறார். அப்படிப்பவரை எந்நேரமும் நினைக்கவேண்டும் என்பதே ஜகன்னாததாசரின் வேண்டுகோள். உலகத்தில் இருக்கும் அனைத்து பொருட்களிலும் – அணு முதல் மலை வரை – ஸ்ரீஹரி நிலைத்திருக்கிறார் என்று உபநிஷத் சொல்கின்றது. மோட்சத்தை அருள்பவன் ஸ்ரீஹரியே என்று சம்ஸ்கிருத தத்வகிரந்தங்கள் சொல்கின்றன. இவற்றையே சரளமான கன்னடத்தில் ஜகன்னாததாசர் மிகவும் சிறப்பாக சொல்லியிருக்கிறார்.

எல்லெல்லி நோடி[3] மத்
தல்லெல்லி நெலெஸிஹனு
ப[3]ல்லித[3]னு பா[4]க்யவந்த நம்பி[3]த[3]வரி |
க[3]ல்லதின்னொலிய ப்[4]ராந்த மானவர
நோல்ப நிஸ்சய மஹந்த[1]ரொடெய கைவல்யதாயககெ இந்த[4] ப[1]ந்த[4] ||

பேச்சு வழக்கில் இருந்த மொழியில், சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கும் அரிய கருத்துகளை மொழிபெயர்த்ததில் தாசரின் சாமர்த்தியம், சிறப்பு போற்றத்தக்கது. கடோபநிஷத்தின் வாக்கியம் 'அனோரணீயான் மஹதோ மஹியான்', சாந்தோக்ய உபநிஷத்தின் வாக்கியம் 'ஏஷ ம ஆத்மாந்த ஹ்ருதயேணீமான் ' ஆகிய தத்வங்களை ஜகன்னாததாசர் கீழ்க்கண்டவாறு சொல்கிறார்.

(தொடரும்)

உங்கள் ஹரிதாச விஜயம் சந்தா முடிவடையும் மாதத்தினை தெரிந்து கொண்டு, அதற்கு முன்னரே அந்த சந்தாவை புதுப்பித்துக் கொள்ளவும்.

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

### நாடகர ஷாந்தி பாய் (1860-1901)

ஷிவமொக்கா ஜில்லா ஸாகரகொப்ப' வில் வக்கீலாக இருந்த வெங்கடேஷய்யா அவர்களின் மகளே ஷாந்திபாய். சங்கீத மற்றும் பிற கலைகளில் ஈடுபாடு கொண்டிருந்த ஷாந்தி பாய்க்கு, அவரின் தந்தையே குரு. கிருஷ்ணராவ் என்பவருடன் ஷாந்திபாய்க்கு திருமணம் ஆனது. ஷாந்திபாய், விட்டலனின் மற்றும் தத்தாத்ரேயனின் உபாஸகராக இருந்தார். கன்னட மற்றும் மராத்தி மொழிகளில் பக்தி கீர்த்தனைகளை இவர் இயற்றியிருந்தார். மராத்தி அபங்குகளையும் இவர் இயற்றியிருக்கிறார். ஆனால் அவை இதுவரை கிடைக்கவில்லை. ஹளெ கன்னட சொற்கள் நிரம்பிய இவரது கீர்த்தனைகள் மிகவும் உத்தமமாக இருக்கின்றன. இவை சுலபமாக புரிந்து கொள்ளக்கூடியதாக இல்லை. ஷாந்த, ஷாந்தி, குரு என்னும் அங்கிதங்களைக் கொண்டிருக்கின்றன. ஆனால், இவரது அங்கித உபதேச குரு யார் என்று தெரியவில்லை. ஷாந்தி பாயின் சில கீர்த்தனைகளை பார்க்கலாம்.

**1. ஸ்ரீஹரிக்கு ஆரத்தி**

ஆரதி பெளகுவெ கூடதலி மங்களாரதி நோடுவெ நோடதலி
தீர ஸ்ரீ குரு மஹாதாரக பிரம்மன ஆரதி நோடுவெ நோடதலி ||ப

கங்கெ யமுனெகள ஸங்கமதி பிந்து அங்க ஸங்க ரஹிதாங்கனதெ
மங்களாங்க திவ்யாங்க பூஜெய மாடி ரங்கமண்டப பாண்டுரங்கனிகெ ||1

ஈடே பிங்களகள ஜோடுகூடி மூடுரவி ஷஷி ஸூடி மத்விருவாக்னி
கூடினோளாடுவ ஜீவன விசாரோன்மூர்த்திகெ ||2

ஆரு சக்ரகள மீறி முந்தணஸண்ண தாரி ஹிடிது ஹிந்தகெ நடெது
தோருவ பரிபூர்ண தாரக பிரம்மன ஸேரி நிர்பயலா சித்ரூபகெ ||3

அந்தர்யாமி பூர்ணாந்தரதி நிஸ்சிந்த மூர்த்தி ஹ்ருதயாந்தரதி
ஸந்த ஸாது நிஜ ஷாந்தி பாலிப குரு சிந்தெ ரஹித நிஸ்சிந்ததலி ||4

இந்த கீர்த்தனையில் கவி, கங்கை யமுனையரின் சங்கமத்தில் நீந்தி, சின்மய மூர்த்தி பாண்டுரங்கனுக்கு திவ்யாங்க பூஜை செய்து, ஆரதி எடுக்கும் முறை மிகவும் அற்புதமாக இருக்கிறது.

மனிதனின் தேகத்தில் இருக்கும் சிறப்பு நாடிகளான ஈடா, பிங்களா ஆகியவற்றின் நடுவே பாய்ந்து செல்லும் ஸுஷும்னா நாடியானது, முதுகின் கீழிருந்து நெற்றி வரை செல்கிறது. யோகியானவன் 6 சக்ரங்களை அடக்கி, ஸஹஸ்ரார தளம் வரை ஏறியபோது, அவனுக்கு பரமானந்தம் உண்டாகிறது.

**2. கோபி கிருஷ்ணரின் பேச்சுவார்த்தை**

கோபி: வேணுகோபால நிம்ம ஜாணதனவ பிடு பிடு
காணதர்மனெய ஸேரி த்ராண பலஹரணவ மாடுவே ஜாண ||வேணு

கிருஷ்ண: அக்ஷியொளகெ நின்ன ஸாக்ஷியாகிருவெ
ஈக்ஷிஸலரியெ நீ குக்ஷிதும்பிருவெ ||வேணு

கோபி: ஆரு பாகிலு நீகி சோரகண்டியொள் போகி
ஏரிமேலண துதியொள் ஸாரி ஸகல த்வனிகள மாடுவெ ||வேணு

கிருஷ்ண: மனுமுனிஜனரெல்ல வினயதிம் பிடிது
கனஸுக படுவரு மனதொளகரிது ||வேணு

கோபி: அகம ஸஞ்சித போக ஸம்ஸாரவன்னெல்லா
நீகிஸுவெ நீனவரா யோகீஜரெனிஸிதெல்லா ||வேணு

கிருஷ்ண: நிமிஷ மாத்ரதி ஸுகவ மனதே ஸ்மரிஸி
ஆமம கனானந்த ரமிஸு ஸ்வஸுகதி ||வேணு

கோபி: கண்ண ஸன்னெய மாடி அன்யர்மன் மனெகளல்யோடி
பெண்ணெ பாலு மொஸரு ஸுரிது பன்னணெ மாதுகளனாடுவெ ||வேணு

கிருஷ்ண: தொரெயாகிருவெ நானு திருதுண்ணலரியெ
பெரெது என்னொளு நீனு அரிவினிந்தரியெ ||வேணு

கோபி: கந்துபிதனெ நின்ன ப்ராந்தி ஹத்திது எனகெ
ஸந்தஸதொளு நிஜ ஷாந்தி பாலிப குருவர ||வேணு

கோபி மற்றும் கிருஷ்ணரின் பேச்சுவார்த்தை போன்றிருக்கும் இந்த கீர்த்தனையில், யோக சாஸ்திரத்தின் பாடத்தினை சூக்ஷ்மமாக சொல்லியிருக்கிறார். இங்கு கிருஷ்ணன் யோக சாஸ்திரத்தை

போதிக்கும் குருவாகவும், கோபி யோக சாஸ்திரத்தை படிக்கும் சிஷ்யையாகவும் இருக்கின்றனர். கிருஷ்ணனை கோபி, யோக மார்க்கத்தில் பார்க்கும் முறை மிகவும் அற்புதமாக இருக்கிறது. ஷாந்திபாய் அவருடைய சில கீர்த்தனைகளில் யோக சாஸ்திரத்தின் சிந்தனையை காண முடிகிறது.

**3. ஷாரதா ஸ்துதி**

வாரிஜ நேத்ரிய ஷாரதெ ஸ்ரீமுக
தோருவதென்னய பார பராத்பரெ ||ப

மயூரவாஹினி காயுவுதென்ன பாத
சித்கன நிஜதாயுவ நீடுவ

பாலெய பாக்யவிஷாலெய நவகுஸும
மாலெய கானவிலோலெ வாகீஷ்வரி

செந்ததொளென்ன ஸானந்தவ பாலிப
மந்தமதிய தித்தி ஸுந்தர முகியெ நீ

நம்பிகெ ஹொந்திஹனெம்புவ பக்தர
இம்புகளனெ கொட்டு பெம்பலகிர்ப்பளெ

கந்துபிரம்மன ராணி அந்தரிக்ஷணெ வாணி
ஷாந்தி ஸத்குருபத ஸந்தஸகாரிணி

வாரிஜ நேத்ரி, மயூர வாஹினி, பிரம்மன ராணி, கான விலோலெ - என ஷாரதையை ஹரிதாஸினி ஷாந்திபாய், தன்னுடைய மந்த புத்தியை திருத்தி, ஞானத்தைக் கொடுப்பாயாக என்று பிரார்த்திப்பது அர்த்தபூர்ணமாக இருக்கிறது.

**4. ஷிவ ஸ்துதி**

கிடைத்திருக்கும் ஷாந்தி பாயின் 27 கீர்த்தனைகளில் 3, சிவ ஸ்துதியாக இருக்கிறது. மூன்று கீர்த்தனைகளியும் சம்ஸ்கிருத வார்த்தைகளைக் கொண்டிருப்பது, அவரது சம்ஸ்கிருத மொழித் திறமையை காட்டுகிறது.

ஷங்கரனே ஸௌக்யதாதா ஸங்கட நிவாரணா ஷிவ ||ப

தனுமனகாதாரனாகி கனபரானந்தார்த்த

வினயதிந்த நோடலக்ஷ சினுமயாத்மனே நீ

சித்விலாஸ ஜகவிதெல்லா அத்வயானந்தாக்யனே
ஸித்தனாகி தோருத்திருவ சித்ரூபார்த்தனெ நீ

வாங்மன கோசரனே ஸங்கரஹித ஸ்வப்ரகாஷ
மங்களாத்ம ஜ்யோதிர்மய கங்காதரனே நீ

அந்தரானந்தாத்ம ஞான ஸந்த ஸாது ஸாத்யனே
ஷாந்திபதவனித்த குரு ஷாந்த ரூபனே நீ

இந்த கீர்த்தனையில், பல காரணப் பெயர்களால் சிவனை ஹரிதாஸினி ஷாந்திபாய் துதிக்கிறார்.

ஷாந்திபாய் அவருடைய 27 கீர்த்தனைகள் மட்டுமே இதுவரை கிடைத்திருக்கின்றன. அவை வித்வத் பூர்ணமாகவும், பக்தி பிரதானமான கீர்த்தனைகளாகவும், நம் மனதினை ஈர்ப்பதாகவும் உள்ளன. தாஸ ஸாகித்யத்திற்கு இவருடைய கிருதிகளானவை விலைமதிப்பற்ற பரிசுகளாக இருக்கின்றன. இத்தகைய அற்புத ஹரிதாஸினியை நாமும் பக்திபூர்வகமாக வணங்குவோம்.

(அடுத்த இதழில் வேறொரு ஹரிதாஸினியைப் பற்றி பார்ப்போம்).

***

## இந்த மாத ஆராதனைகள்

**ஸ்ரீபிராணேஷ தாசர் (1736-1822)**

பிராணபதி பதத்வந்த்வம் பங்கஜாஸக்த மானஸம் |
க்ஷமாதிகுண ஸம்பன்னம் ஸ்ரீ பிராணேஷ குரும் பஜே ||

திருகப்பனவர குவர வாஸி லிங்கஸகூரு
குருவரதேந்த்ர தீர்த்தர அந்தரங்கபக்தரு |
குரு மானவீவாஸரிந்த அங்கித படெதரு
வர மங்களாங்க ஹரிவிட்டலன பாத பஜகரு ||

**ஸ்ரீ இபராமபுரத அப்பாவரு (1789–1869)**

பாரதீஷ பதத்வந்த்வ ஸாரஸ ப்ரமராயிதம் |
ஸூரவத்காந்தி ஸம்பன்னம் கிருஷ்ணாசார்ய குரும் பஜே ||

பஹு ஸஜ்ஜனரிகெ ஸன்மார்க்கதோரி அனுக்ரஹிஸிதரு
அஹர்னிஷி பஞ்சமுகி ப்ராணதேவர பூஜிஸிதரு
இஹலோகதி மூரனே கக்ஷத ருஜுகளெந்தெனிஸிதரு
மஹித மங்களாங்க ஹரிவிட்டலன பஜகரு அப்பாவரு ||

**ஸ்ரீகுரு ஜகன்னாத விட்டலதாசர் (1841–1918)**

குரு பூர்வ ஜகன்னாத தாஸாஸ்யமித தேஜஸ: |
தஸ்ய பாதாப்ஜ ஸம்பூத ரஜாம்ஸி ஷிரஸாவஹே ||

ஒந்தின கனஸினலி அப்பா ஹாகு அண்ணனவர தர்ஷன
அந்தெ அனு நயதி அண்ணனவரிந்த பாட பிரவசன
தந்தெ குருகோபால விட்டலதாஸரிந்த அங்கித ப்ரதான
முந்தெ குரு ஜகன்னாத விட்டலனெந்து அபிதான
திந்த ஸ்துதிஸிஹரு தேவ மங்களாங்க ஹரி விட்டலன ||

## ஸ்ரீமத்வ ஜெயந்தி

அஸம மூவத்தெரடு$^{3}$ லக்ஷண
**ஶிஶு ஶ**ரீரவ பொக்கனாக்ஷண
பி$^{3}$ஸூட$^{1}$னா பரஜீவவனு அஸூபதியு தா ஹொரகெ$^{3}$ **|**
அஸூரநிகரகெ$^{1}$ கே$^{2}$த$^{3}$ ஸு$^{2}$கஸந்
தஸவு ஸஜ்ஜனததிகெ$^{3}$ ஈ பரி
ஸூஸமயவிதெ$^{3}$ம்பு$^{3}$த$^{3}$ நுடி$^{3}$யிது$^{3}$ தே$^{3}$வது$^{3}$ந்து$^{3}$பி$^{4}$யு **||6**
(ஸ்ரீவித்யா ப்ரஸன்ன தீர்த்தர் இயற்றிய ஸ்ரீமத்வ விஜய ஸார ஸங்க்ரஹ #6)

| |
|---|
| ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ் சார்பாக இதுவரை வந்திருக்கும் அனைத்து புத்தகங்களையும் வாங்கி விட்டீர்களா? |

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## 28 – விக்னேஸ்வர ஸ்தோத்ர ஸந்தி

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 25 | | | | 2 | | | | | | | |
| | | | 16 | | | | | 26 | | | 17 | |
| | | | | 3 | 27 | | | | 28 | | | |
| 29 | | 4 | | | | 18 | | | | | | |
| | | | 19 | | | | 5 | | | | | 20 |
| | | | | | 21 | 6 | | | | | | |
| 7 | | | | 8 | | | | | | 9 | | |
| | | | 10 | | | | | | | | | |
| | 11 | | | | 30 | 12 | | | | 31 | | |
| 13 | | | | | | | | 22 | | | | |
| 32 | | | 33 | | | 23 | | | | | | 24 |
| | | 34 | 14 | | | | | 15 | | | 35 | |

குறுக்கெழுத்துப் போட்டிகளை வடிவமைத்துக் கொடுப்பவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி

**இடமிருந்துவலம்:** 1.வியாதி(3), 2.ருக்மணியின் புதல்வன்(6), 3.தாழ்ந்தவன் அல்லாதவன்(5), 4.முகம்(4), 5.முக்தி(5), 6.இணைவது(3), 7.குபேரன்(3), 8.இறப்பு(3), 9.மகன்(3), 10.மிகவும் கருணை உள்ளவன்(5), 11.முறம்(3), 12.பீமன்(5), 13.மன்மதன்(5), 14.பருத்த வயிறு(4), 15.இடுப்பு(2).

**வலமிருந்துஇடம்:** 16.வண்டு(4), 17.ஜயித்த(3), 18.உருவம்(3), 19.ப்ரகாஸம் (4), 20.ஸுரியன் கலைந்துள்ளது(3), 21.இருபத்தி ஒன்று(6), 22.மனைவி(3), 23.நீசஜன்மம்(3), 24.பார்வதியின் மகன்(6).

**மேலிருந்துகீழ்:**2.தங்கம்(4), 5.முதன்மையானவன்(4), 12.கவலை(4), 17.க்ஞானிகள்(5), 25.மூடஜனங்கள்(3), 26.வேண்டுகோள்(4), 27.இந்த்ரியம்(3), 28.தோஷமற்றவன்(6).

**கீழிருந்துமேல்:**11.தேவர்கள்(4), 19.இந்திரன்(3), 20.பாதம்(4), 29.கொழுக்கட்டை(3), 30.ஊமை(3), 31.கணபதியின் நிறம்(6), 32.தாமரை(3), 33.த்ருப்தி அளிப்பவன்(4), 34.கர்வத்தினால் உன்மத்தவரானவர்கள் கலைந்துள்ளது(5), 35.ருத்ரன்(3).

| |
|---|
| குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam @ gmail.com / அல்லது 89044 58276 க்கு வாட்சப் செய்யலாம். |
| ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப், அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்து சொல்லலாம். |

**செப்டம்பர் 2022 இதழில் வந்த குறுக்கெழுத்துப் போட்டியில் சரியான விடை எழுதி புத்தகப் பரிசு பெறுபவர்கள்:** திருமதி. ஷாந்தி பத்மனாபன், திருநெல்வேலி, திருமதி. சந்திரா, கோவை, திருமதி. லலிதா, திருநெல்வேலி, திருமதி. கீதா ராமசந்திரன், திருநெல்வேலி, திருமதி. கிரிஜா ஜயதீர்த்தாச்சார், ஸ்ரீரங்கம், திருமதி. லீலா ரங்கவிட்டல், சென்னை, திருமதி. லதா நரசிம்ம மூர்த்தி, திருப்பரங்குன்றம்.

தொடர்

## ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர்

## 3. த்வந்த்வவே வஸந்த ஹப்ப

டாக்டர். ரேகா காகண்டகி

முச்சிட்ட கதவெரடு முரி ஹோய்து
இச்செ மூரெம்ப நாயிகள ஜிஹ்வெ கொய்து
பெச்சதெ மனெ மனெ மெல்லனெ ஹோகிரண்ண
ஸச்சித கோரஸ ஸூர்யாதிரண்ண ||10

மூடி வைத்த கதவுகள் இரண்டு என்பது இரு காதுகள் ஆகும். கண் மற்றும் காதுகளை திறந்து பகவந்தனின் சங்கீர்த்தனையை செய்து, அவனுடைய மகிமைகளை கேளுங்கள் என்கிறார். நிரந்தரமான கேட்டல் - கீர்த்தனை ஆகியவற்றால், மனிதனின் அக விருப்பங்கள், மூன்று நாய்கள் எனப்படுகின்றன. அதாவது ‘ஈஷண த்ரய’ - பெண், மண், பொன் ஆகியவற்றின் மேல் உள்ள ஆசை. இந்த மூன்று விருப்பங்களையும் துற. மனம் நம் கட்டுப்பாட்டில் இருந்தால், எந்த கஷ்டங்களையும் நம்மை பாதிக்காது என்னும் ஆத்யாத்ம அறிவினை தெரிவிக்கிறார் ஸ்ரீதாஸர்.

ஸச்சித கோரஸ ஸூர்யாதிரண்ண - சாஸ்திரங்களின் சுவையை சுவைத்து, எங்கு ஞானம் கிடைக்கிறதோ, அதனை அடையுங்கள். ஞானம் என்பது பால் போன்றதாகும். மனிதனின் அகத்தில் இருக்கும் அனைத்து கசடுகளையும் எடுத்துப் போடும் திவ்யரஸ என்பது இதன் பொருள். இது மனிதனின் அனைத்து கஷ்ட சிந்தனைகளையும் பரிகரிக்கும் வழியாகவே இருக்கிறது.

ஏகாதிபதியாக்ஞ அபயவு பேகு
நால்கு ஜாவின ராத்ரி நலுவிரபேகு |
போககள்ளார்வர மெட்யாடபேகு
பூகாந்தகெ ஸேவியொப்பிஸபேகு ||11

உலகத்தை காக்கும் ஏகாதிபதி - பகவந்தன் ஒருவனே. அந்த ஸ்ரீஹரியின் அருள் கிடைக்க வேண்டுமெனில், விடியலில் எழுந்து அவனை நினைக்க வேண்டும். நிரந்தரமாக அவனின் ஸ்மரணையை செய்ய வேண்டும் என்பது தாஸரின் செய்தி. ஹரிஸ்மரணையானது, மனிதனில் இருக்கும்படியான அரிஷட் வர்கங்களை விலக்குகிறது.

காமனை சுடுவதற்காக சேகரித்திருக்கும் கட்டைகளை திருடர்கள் திருடிச் செல்லாதவாறு தடுக்க வேண்டும். அதற்காக, விடியலில் எழுந்து அவற்றை காக்க வேண்டும். இங்கு காமனை சுடும் செயல் முக்கியம். அதற்காக தேவையான பொருட்களை காப்பது முக்கியம்.

ரமணனொல்லதெ ஆர்வர ஸங்கவிடிது
ரமிஸுவ புத்தி ஜாரியகட்டிவிடிது
அமித வைராக்ய ஹக்கதி கட்டி
ஸ்ரீரமணனங்க்ரி வொப்பிஸலு கார்யகட்டி ||12

ரமண என்று புத்தியை சொல்கிறார். அரிஷட் வர்கங்களுக்கு வசமான மனதினை, வைராக்கியம் என்னும் கயிறு கொண்டு கட்டுங்கள். பாப மார்க்கத்தில் செல்லும்படியான மனதினை கட்டி, ஹரசரணங்களில் வையுங்கள் என்கிறார். இதில் உள்ள சமூக கருத்துக்களை பார்த்தால், குடும்ப நீதி தெரிய வருகிறது. வீட்டுப் பெண் ஆனவள், தன் ரமணனின் விருப்பத்திற்கு எதிராக நடக்கிறாள். அவளை மறுபடி சரியான வழிக்கு கொண்டு வரவேண்டும். இல்லையெனில் குடும்பத்தின் நலன் கெடுகிறது. இதனால் சமூக நலனை கெடுக்காதீர்கள் என்னும் செய்தியும் இதில் இருக்கிறது என்பதை அறிய வேண்டும்.

எல்லெல்லி ஞானாதி விஷய ஜேளுகளு
எல்லெல்லி நிர்ஜல ஸ்ம்ருதி பாவிகளு |
எல்லி நிரய நாக காரி மிட்டிகளு
இவன்னெல்ல தப்பிஸி ஞான பௌதிங்களொளு ||13

இரவு நேரம் என்றால் அஞ்ஞானத்திற்கான வழியாகும். அது இருட்டுக்கான வழி. ‘நீரில்லத பாவி’ என்றால், சம்சாரம் என்னும் சாகரத்தில் விழுந்திருக்கிறாய் என்று ஸ்ரீதாஸர் எச்சரிக்கிறார். அங்கு விஷய ஆசைகள் என்னும் பாம்பு, தேள் ஆகிய விஷ ஜந்துக்கள் இருக்கின்றன. அவை அனைத்தையும் தாண்டிக்கொண்டு, ஞான என்னும் உதயத்திற்கு வா என்கிறார். ஆத்யாத்மிக மார்க்கத்திற்கு வரும் வழியைக் காட்டி, ஸ்ரீதாஸர் மறுபடி இந்த பண்டிகை பற்றிய விஷயத்திற்கும் வருகிறர்.

அந்த பகுதியில் காமனின் பண்டிகையில் இரவு, நள்ளிரவு என்று பார்க்காமல் மக்கள் சுற்றிக் கொண்டே இருக்கின்றனர். தம் விறகுக் கட்டைகளை காப்பதற்காக இவ்வாறு ஜாகரணை செய்கிறார்கள். தண்ணீர் இல்லாத பாழும் கிணறுகள் அந்த இருட்டில் நமக்குத் தெரிவதில்லை.

அந்த கிணற்றில் இருக்கும் விஷ சர்ப்பங்கள் உங்களை கடித்துவிடும். அதற்காக வெளிச்சம் (விடியல்) வரும்வரை காத்திருங்கள் என்னும் செய்தியும் இங்கு காணலாம். லௌகிக சிந்தனையினால், அலௌகிகத்தின் பால் அனைவரையும் ஸ்ரீதாஸர் இழுத்துக் கொண்டு சென்றிருக்கிறார்.

வேஷ்யெவரிது தத்வ ஸந்தியவொலிது
ஸோளிகார்ஹெண்ட கை ஸெரெவிடிது
காலாக்ய தளவார நாளிகெ கொட்டு
மேளத கெளெயரு ஸந்தோஷ பட்டு ||14

காலத்தின் அறிவினைப் பெற்றுக்கொண்டு, தத்வஞானத்தின் பால் நாம் செல்ல வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர். இங்கு சந்தேகம் மற்றும் விபரீத ஞானம் என்னும் இரு சுழிகளின் சங்கமம் இருக்கிறது. அது மனிதனையே அழித்துவிடுவதாக இருக்கிறது. அவற்றை உங்களை வசம் ஆக்கிக் கொண்டு, தூர விலக்குங்கள். தளவார என்னும் ஊரினை சுத்தம் செய்யுங்கள். உங்கள் மனம் என்னும் தளவாரனுக்கு கொடுத்து, அந்தரங்கத்தினை சுத்தம் செய்து கொள்ளுங்கள் என்கிறார். உங்களில் அஞ்ஞானம் விலகிவிட்டது என்பதை நினைத்து மகிழ்ச்சி அடையுங்கள். இந்த தத்வத்தின் மூலம் ஸுக்ஞானத்தின் வழியை காட்டியிருக்கிறார் ஸ்ரீதாஸர்.

எம்பத்னால்கு லக்ஷாகார ஹோகுதா
டொம்பி இல்லதெ பந்த பன்னபடுதா |
கும்பினி ஸுரகுல பூமிகெ பந்து
டம்ப மண்டலதலி குருளு ஹோயிரி இந்து ||15

84 லட்ச யோனிகளின் கர்ப்பவாஸத்தை அடைந்து பின் இங்கு வந்தது இந்த ஜீவன். அதையே தாஸர், 84 லக்ஷாகார என்கிறார். பிறக்கும் போதும், இறக்கும் போதும் வெறும் கையுடனே வந்து போகும் மனிதனுக்கு எதற்கு தண்டம்? என்று கேட்கிறார். அனைத்தும் பகவந்தன் கொடுத்தது என்னும் தத்வத்தை பிடித்து வாழுங்கள். உங்களில் இருக்கும் டம்பாசாரம், படாடோபம், ஆடம்பரம் ஆகியவற்றை சுடுங்கள்.

ராக மத்ஸரகூடி தர குருள நோட்டெ
பூ ககன ஹொந்துவ காமன கட்டி

யோகவாகிருவ ஹுபின க்ஷேத்ரதல்லி
ம்யாகெ விக்ஞானாக்னி ஹாகபேகல்லி ||16

கோபம், பொறாமை, விஷய ஆசைகள், விருப்பங்கள் ஆகியவற்றிற்கு ... உவமையாக கொடுத்திருக்கிறார் ஸ்ரீதாஸர். பூமியிலிருந்து ஆகாயத்திற்கு ஏறுகிறது மனிதனின் ஆசைகள். இவற்றை மனதினை அடக்கி கட்டுங்கள் என்று சொல்லி, வைராக்கியத்தின் வழிக்கு கொண்டு செல்கிறார் ஸ்ரீதாஸர். அதற்கு மேலும் அடுத்த ஸாதனை என்ன என்றால், மனதினை யோக சக்தியினால் கட்டுவது என்கிறார். ஆக்ஞா சக்ரத்தில் ப்ராண சக்தியைக் கொண்டு வந்து நிறுத்தி, பகவந்தனின் ஸ்வரூபத்தை அறியுங்கள். விக்ஞான என்பதை அபரோக்ஷ ஞானம் என்று சொல்கிறார். இது தாஸரின் ஆத்யாத்மிக சிந்தனையாகும். இங்கு ஆத்யாத்மிக ஸாதகருக்கு ஸாதனையின் மார்க்கத்தின் செய்தியை சொல்கிறார்.

லோப ஹோளிகெயு ஹோளகி துப்பஸவிது
லாபகெ குணியலு வேத்ரரு ஹொய்து |
ஷோபன ரஸ பொப்பியு ஸாதுவிண்டு
த்ரிபுவன பதி காமனய்யன தண்டு ||17

மனிதனின் அரிஷட் வர்க்கத்தில் ஒன்றான லோப (ஆசை). இது அதிகமானால், அதுவே பேராசை ஆகிவிடுகிறது. மனதின் இந்த இரண்டு எதிரிகளையும் (போளிக்கு உவமையாக இவற்றை சொல்கிறார்), நெய் ஊற்றி, விரக்தி என்னும் அக்னியில் போட்டு சுடுங்கள்.

உத்தர கர்னாடகத்தில், இந்த ஹோளி ஹப்ப நாளன்று, ஹோளிகைக்கு நெய் ஊற்றி, காமனின் அக்னியில் அர்ப்பிக்கின்றனர். இதன் அர்த்தம், மனதின் அனைத்து கெட்ட சிந்தனைகளை, விருப்பங்களை அக்னியில் சமர்ப்பித்து விட்டேன் என்பதாகும். தாஸர் இதனை ஆத்யாத்மிக அர்த்தத்தில் சொல்லியிருப்பதை நாம் காணலாம்.

இத்தகைய பவித்ரமான அக்னியின் தரிசனத்திற்கு ஸாது - ஸந்தர்கள் வந்து பரமாத்மனின் குணங்களை செய்கின்றனர் என்று தாஸர் குறிப்பால் உணர்த்துகிறார். (தொடரும்)

வங்கிக் கணக்கில் சந்தா / புத்தகத்திற்காக பணம் செலுத்தினால், மறக்காமல் உங்கள் முகவரியை 89044 58276 எண்ணுக்கு வாட்சப் / SMS அல்லது haridasa.vijayam@gmail.comக்கு மின்னஞ்சல் அனுப்பவும்

தொடர்

**கன்னட கிரந்தங்கள் அறிமுகம்**

**பலவிது பாள்துதகெ**

## ஸ்ரீ ஜகன்னாத தாஸரின் பலவிது பாள்துதகெ (அணு ஹரிகதாம்ருத ஸாரம்)

ஸ்ரீ ஜகன்னாத தாஸர் அஷ்டதாஸர்களில் ஒருவராக போற்றப்படுபவர். இவர் தாஸ தீக்ஷை பெறுவதற்கு முன்பே ஸ்ரீஸ்ரீநிவாஸ ஆச்சாரியராக இருந்தபோது ஸமஸ்க்ருதத்தில் மாபெரும் புலமை பெற்று ஸ்ரீமன் ந்யாய ஸுதா கிரந்தத்திற்கு பாட பிரவசனங்களை இடைவிடாது செய்து வந்தவர். மூலரூபத்தில் கர்மஜ தேவதையான தாஸர், ஸ்ரீ விஜய தாஸரின் ஆணைக்கிணங்க ஸ்ரீ கோபால தாஸர் மூலமாக 40 வருட ஆயுட்காலத்தைத் தானமாக பெற்று, பண்டரிபுரத்தில் சந்திரபாகா நதிக்கரையில் பகவானே இவருக்கு 'ஜகன்னாத விட்டல' என்னும் அங்கிதத்தை அளிக்க, தமது மீதமுள்ள ஆயுட்காலம் முழுவதையுமே தாஸமார்கத்தில், கன்னடத்தில் பல க்ருதிகளை ரசனை செய்வதிலேயே கழித்தவர். தாஸரின் உயரிய படைப்பே 'கன்னட ந்யாய ஸுதா' எனப் போற்றப்படுகின்ற மேரு க்ருதியான 'ஸ்ரீமத் ஹரிகதாம்ருத ஸாரம்' ஆகும். தத்வங்களின் தொகுப்பை த்ரிவிக்ரம ரூபமாக ஹரிகதாம்ருத ஸாரத்தில் இயற்றியுள்ளதை, சுருக்கமாக ஸங்க்ரஹம் செய்து வாமனரூபமாக 'அணு ஹரிகதாம்ருத ஸாரம்' என்றே புகழப்படுகின்ற 'பலவிது பாள்துதகெ' என்னும் கன்னட கிரந்தமாக அருளியுள்ளார்.

ஹரிகதாம்ருத ஸாரத்தின் ஸாரமாக கருதப்படுகின்ற, 'பலவிது பாள்துதகெ' 27 பத்யங்களில் அமைந்தது. தாஸர் பல்லவியில் ஸ்ரீ நிவாஸனின் குணங்களை (மஹிமைகளை), ஒவ்வொரு குணமும் அனந்தம் என அறிந்து வணங்குவதெ, வாழ்க்கை வாழ்வதற்கான முக்கிய பலன். இதுவே வாழ்க்கையை அர்த்தமாக்கிக் கொள்ளும் முறை என்னும் வகையில் "பலவிது பாள்துதகெ ஸிரி நிலயன குணகள திளிது பஜிஸுவதெ" என அமைத்துப் பாடியுள்ளார்.

1 முதல் 3 வரையிலான பத்யங்களில் கர்மங்களைச் செய்யும் விதத்தைப் பற்றிக் கூறும் விதமாக, அவரவர்கள் தங்களது வர்ணம் மற்றும் ஆஸ்ரமத்திற்கேற்ப செய்ய வேண்டிய கர்மங்களைச் செய்தவாறு,

துர்ஜனங்களிடம் சென்று வேண்டாமல், நம்மை ஸம்ஸார பந்தத்தில் ஈடுபடுத்துபவனும், காப்பாற்றுபவனும், கருடவாஹனனாகிய ஸ்ரீஹரியே என்று நினைப்பதும், பலனை எதிர்பார்க்காமல் பக்தியை செய்து, தாரதம்யத்தை சரியாக அறிந்து, ஸ்ரீஹரியின் சரணங்களை பூஜித்து, ஸ்ரீஹரியின் ப்ரீதியை மட்டும் வேண்டி, தற்காலிக ஸுகங்களான காமம் முதலானவைகளில் விழாமல், ஸ்ரீ ஹரியின் இச்சையால் நமக்கு கிடைத்தவற்றைக் கொண்டு திருப்தி அடைவதும், மனம், வாக்கு செயல்களினால் தினப்படி அனுபவிக்கும் விஷயங்களை பாரதீ ரமண முக்ய ப்ராணாந்தர்கத ஸ்ரீ ஹரிக்கு ஸமர்பித்து, தம்மை ஸ்ரீ ஹரியின் தாஸன் என்று தெரிவித்து (அறிந்து) மகிழ்வதுமே இந்த வாழ்க்கைக்கான உண்மையான அர்த்தம் என்பதை, "ஸ்வோசித கர்மகளாசரிஸுத பலு நீசரல்லிகெ போகி யாசிஸதெ, "நிச்சஸுபகுதியொள் அச்சுதனங்க்ரிகளர்ச்சிஸி மெச்சிஸு தெச்சரதி,""மனோவாக் காயதனுபவிஸுவ தினதினதி விஷயஸாதனகளனு அனிலாந்தர்கத வனருஹ தனலோசனகர்ப்பிஸி" போன்ற பதங்களினால் விளக்கியுள்ளார் தாஸர்.

4 முதல் 6 வரையிலான பத்யங்களில் தாஸர் ஸ்ரீ ஹரியின் ஸர்வோத்தமத்வத்தையும், ஸ்வதந்த்ர தத்துவத்தையும் உணரும் அவசியத்தைப் பற்றி கூறும் வகையில், இந்திரன் முதலான தேவர்கள் மற்றும் அஸுரர்களின் சமூகத்திற்கு வாஸுதேவனே ஸுப மற்றும் அஸுப பலன்களைக் கொடுப்பவன், சேதன மற்றும் அசேதனங்களால் நிரம்பிய இந்த ஜகத்திற்கு ஸ்ரீ கேசவனே ஸ்வாமி, ஜீவர்கள் அனைவரும் அஸ்வதந்திரர்கள் போன்ற விஷயங்களின் ஞானமும், பஞ்ச பேதங்களைக் கொண்ட இந்த உலகம் உண்மையானது, வாமன ரூபி ஸ்ரீ ஹரிக்கு பிரம்மன் முதலானவர்கள் நடமாடும் பிரதிமைகள், ப்ரக்ருதி முதலியவை நடமாடாத பிரதிமைகள் என்ற உண்மையை அறிந்து எப்போதும் சிரித்த முகத்தை உடையவனாக இருப்பதும், ஓராண்டில் இருக்கும் 5 ருதுக்களில் (ஹேமந்த & சிசிரருதுக்களை ஒன்றாகக் கொண்டு), ஐந்துவித அக்னிகளில் ஸ்ரீ ஹரியின் ஐந்து ரூபங்களைச் சிந்தித்து, பஞ்ச மஹாயக்ஞத்தை செய்து பவித்ரனாகி, பத்து இந்திரியங்களில் பஞ்ச ரூபியான ஸ்ரீ நாராயணனை அறிந்து கொள்வதே இந்த வாழ்க்கைக்கான அர்த்தம் என்பதை "ஈ ஸமஸ்த ஜககீஸ கேசவ", விரிஞ்சிபவமுகரு பலி வஞ்சககெ ஸஞ்சல ப்ரதிமெ அஸஞ்சல ப்ரக்ருதியு", "பஞ்ச ருதுகளிலி பஞ்சாக்னிகளலி பஞ்சபஞ்ச ரூபவதிளிது பஞ்சஸு ஸம்ஸ்காராஞ்சதனாகி" முதலான பதங்களினால் விளக்கியுள்ளார்.

7 முதல் 9 வரையிலான பத்யங்களில் ஸ்ரீ ஹரியின் நிர்மால்யம், ப்ரஸாதம், முக்கியமாக ஸ்ரீ ஹரி பக்தர்களுடனான (ஸத்ஸங்கம்) ஸஹவாஸம் மற்றும் ஹரி பக்தர்களுக்கு செய்யும் சேவையின் முக்கியத்துவத்தை விளக்கும் தாஸர், மனதில் ஸ்ரீ ஹரியின் ரூபங்கள், முகத்தில் ஸ்ரீ ஹரியின் நாமங்கள், உதரத்தில் ஸ்ரீ ஹரிக்கு ஸமர்ப்பிக்கப்பட்ட நைவேத்ய ப்ரஸாதம், தலையில் (சிரஸில்) பதஜல நிர்மால்யம் (பாதோதகம்) மற்றும் நிர்மால்யம் (துளஸி, கந்தம்) போன்றவற்றை தரித்து, ஞானிகளின் வீட்டு நிலைப்படியில் நின்று வணங்குவதும், விஷ்ணு பக்தர்களுடன் தீர்த்த யாத்திரைகளை செய்து, பிரம்மனின் தந்தையான ஸ்ரீ ஹரியின் நற்குணங்களைக் கேட்டு மகிழ்ந்து எல்லையற்ற மகிழ்ச்சியுடன் மெய்மறந்து ஸத்கதியை (அதிக சாதனை செய்யும் தேஹத்தை) பெறுவதும், ஹம்ஸவில் தொடங்கி ஸ்ரீ ஹரியின் 18 ரூபங்கள் வரை, அவர்களின் நிலையை அறிந்து தினமும் பக்தியுடன் பூஜிக்கும் சிறந்த ஹரி பக்தரின் பாத தூளியை தேகத்தில் தரித்து சந்தேகங்கள் அற்ற உண்மையான ஞானம் உள்ளவனாக ஆகுவதுமே இந்த வாழ்க்கையின் பயன் என்பதை "ஹ்ருதயதி ரூபவு வதனதி நாமவு உதரதி நைவேத்யவு சிரதி பதஜல நிர்மால்யவனே தரிஸி", "பாத்ரர ஸங்கட யாத்ரெய சரிஸூத", "கோவிதர ஸதன ஹெக்கதவ காயுவுதே", "மஹாபுருஷர பத பாம்ஸூவ தரிஸி" போன்ற பதங்களினால் விளக்கியுள்ளார்.

10 மற்றும் 11வது பத்யங்களில் காயத்ரி மந்திரம் மற்றும் பகவானின் நாமஸங்கீர்த்தனத்தை செய்யும் விதத்தைக் கூறும் வகையில்,ஸர்வோத்தமனான ஸ்ரீ ஹரியின் ஸ்வரூபத்தை ப்ரதிபலிக்கும் காயத்ரி மந்திரத்தின் 4 பாதங்களின் விவரங்களை அறிந்து பிறகு ஆறு விதங்களாக இருக்கும் காயத்ரி ரூபத்தை தினமும் பக்தியுடன் தியானித்திருப்பதும், தழுதழுத்த குரலுடன் கண்ணீர் நிரம்பிய கண்களுடன் புன்னகைத்த முகத்துடன் மயிர்க்கூச்செரியும்படி மிகவும் மகிழ்ச்சியுடன் ஆடியவாறு சதுர்முக பிரம்மனின் தந்தையைப் புகழ்ந்து மகிழ்வதுமே இவ்வாழ்க்கை வாழ்வதற்கான அர்த்தம் என்பதாக "வர காயத்ரி நாமக ஹரிகீ ரெரடங்க்ரிகள விவரவ திளிது", "பிகித கண்டதிம் த்ருக்பாஷ்பகளிம் நகெ மொகதிம் ரோமகளொகெது மிகெ ஸந்தோஷதிம் நெகெதாடுத" போன்ற பதங்களினால் விவரித்துள்ளார் தாஸர்.

12 மற்றும் 13வது பத்யங்களில்,ஸுகம் துக்கம் எனப் பாராது கர்மானுஷ்டங்களை ஸ்ரீ ஹரிக்கு ஸமர்ப்பணம் செய்யும் விதத்தை குறிப்பிடும் தாஸர், கிரஹஸ்த கர்மங்களை சோர்வடையாமல் மிகவும் உற்சாகத்துடன் செய்து கொண்டு, அனைத்து உலகங்களிலும் பூஜிக்கப்படும் ஸ்ரீ ஹரியின் வேலை இதுவே என்ற பாவத்துடனும் மகிழ்ச்சியுடனும் தினமும் மனதினாலேயே ஸமர்ப்பணம் செய்து கொண்டு, ஸுக துக்கங்கள் ஸ்ரீ ஹரிக்கு கட்டுப்பட்டவை, ரமா பிரம்மா ருத்திரன் முதலான தேவதைகளும் ஸ்ரீ ஹரியினை ஆஸ்ரயித்து இருப்பவர்கள், ஸ்ரீ ஹரியின் அருள் இல்லாமல் மூச்சு விடும் சக்தி கூட அவர்களுக்கு இல்லை என்பதை அறிவதே இந்த வாழ்க்கையின் அர்த்தம் என்பதை "க்ருஹ கர்மவ பேஸரதலெ பரமோத்ஸஹதலி மாடுத மூர்ஜகத மஹிதன ஸேவெயிதெயெனுதலி", "க்லேஸானந்தகளு ஈஸாதீன" போன்ற பதங்களினால் விளக்கி உள்ளார்.

14 முதல் 16 வரையிலான பத்யங்களில் பகவானின் அனந்தானந்த ரூபங்களை சிந்தனை செய்யும் வகையில், பரமாத்மாவுக்கு நிச்சயமாக இரண்டு ரூபங்கள் அவற்றில் 'பர' மற்றும் 'அபர' என்பன அனைத்து வஸ்துக்களிலும் உள்ளன என்றும், 'ஸ்திரி' மற்றும் 'புருஷ' என்னும் ரூபங்களினால் இந்த பிரமாண்டத்தை வியாபித்துள்ளான் என்றும் அறிந்து, ஸ்ரீ ஹரியின் ஒவ்வொரு ரூபத்திலும் அனந்த ரூபங்கள், அனந்த குணங்களுடன் கூடி இறந்த, நிகழ், எதிர் காலங்கள் என அனைத்துக் காலங்களிலும் வேதங்களால் புகழப்படும் ஸ்ரீ ஹரிக்கு சமமானவர்கள் யாரும் இல்லை என்றும் அறிந்து, 'அ' முதல் 'க்ஷ' வரையிலான 51 வர்ணங்களும் ஸ்வதந்திரனான ஸ்ரீ ஹரியின் மகிமைகளை விளக்கும் அவனின் பெயர்கள் என்றும், ரமா பிரம்மா ருத்ரர் முதலான தேவதைகளும் கூட ஸ்ரீ ஹரியை முழுமையாக அறிய மாட்டார்கள் என்றும் அறிந்து கீர்த்தனம் செய்வதே வாழ்க்கைக்கான அர்த்தம் என்பதாக "ஆ பரமாத்மகெ ரூபத்வயவு பராபர தத்வகளு", "ஏகோத்தர பஞ்சாஷத் வர்ணகள ஏகாத்மன நாமங்களிகு", "ஒந்து ரூபதொள் அனந்த ரூபவு ஒந்துப்பவு குணகண ஸஹித" முதலான பதங்களினால் தாஸர் விளக்கியுள்ளார்... (தொடரும்)

**S.லக்ஷ்மிபதிராஜா, சென்னை**

தொடர்

## ஹரிகதாம்ருதசார மஞ்சரி 360

By ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர்

**59. ஏகபஞ்சாஷத் வரணக$^3$த**
**மாகளத்ரனு சர்வரொளக$^3$**
**வ்யாக்ருதா காஷாந்த வ்யாபிஸி நிக$^3$மததி$^1$க$^3$ளனு |**
**வ்யாகரண பா$^4$ரதமுகா$^2$தி அ**
**நேக சாஸ்திர புராண பா$^4$ஷ்யா**
**நீகக$^3$ள கல்பிஸி மனோவாங்மய நெனிஸிகொம்ப$^3$ ||(7-11)**

51 வர்ணமாலையில் ப்ரதிபாத்யனான ஸ்ரீஹரி, அனைவரிலும் அவ்யாக்ருத ஆகாஷத்தில் வ்யாபித்து, வேதங்களின் சமூகத்தினால், வ்யாகரணங்களின் சமூகங்களினால், பாரத இத்யாதி ப்ருஹத் கிரந்தங்களுக்கு ப்ரதிபாத்யனாகி, அப்ராக்ருத விஷயங்களை அறிவதற்கு ப்ராக்ருதனாகி, மனோவாக்ஞன் என்று அழைத்துக் கொள்கிறான். அஜாதி வாச்யனாகி அனைத்து இடங்களிலும் இருக்கிறான். இதுவே உண்மையான உபாஸனை. ஷப்த என்றால் த்வனி. ஸ்வரகள் - ஜட. சேதனர்களில் வருணனாக இருந்து (வர்ணவாச்ய) வ்யாப்தனாக இருக்கிறான் என்கிறார்.

**60. ஜ்வரனொளிப்பத்தேளு ஹரனொள**
**கிருவனிப்பத்தெண்டு ரூபதி$^3$**
**எரடு$^3$ ஸாவிரதெ$^3$ண்டு நூரிப்பத்த$^1$ ஏளெனிப |**
**ஜ்வரஹராஹ்வய நாரசிம்ஹன**
**ஸ்மரணெ மாத்ரதி$^3$ து$^3$ரித$^1$ராஷிக$^3$**
**ளிரதெ போபுவு த$^4$ரணிபிம்ப$^3$வ கண்ட$^3$ ஹிமத$^3$ந்தெ ||(7-16)**

ஜ்வரத்தி = 27 ரூபங்களாலும், ஹரனல்லி = 28 ரூபங்களாலும் ஜ்வர+ஹ்ராஹ்வய என்றால் 2827 ரூபங்களால் ந்ருஸிம்ஹன் இருக்கிறான் என்று ஸங்க்யா ஷாஸ்திரத்தினால் (எண்ணிக்கை சாஸ்திரம்) அறிந்து, ந்ருஸிம்ஹனை சிந்தனை செய்தால், நம் அனாதி காலத்தின் நோய் தீர்கிறது. எப்படியெனில், சூரிய ஒளி வந்த உடனேயே பனித்துளிகள் எப்படி அழிகின்றனவோ, ஸ்ரீஹரி ந்ருஸிம்ஹனின் சிந்தனையை செய்த உடனேயே, கஷ்டங்கள், பாவங்கள்

மட்டுமல்லாமல், நோய்களின் தாபங்களும் நம்மை அண்டுவதில்லை என்கிறார் ஸ்ரீதாஸர்.

**61. நூருவருஷக்கெ தி3வஸ மூவ**
**த்தாரு ஸாவிரவஹவு நாடி ஷ**
**ரீரதொளகி3னிதிஹவு ஸ்த்ரீ பும் பே4த3தvலி ஹரிய**
**ஈரதி4க வெப்பத்துசாவிர**
**மூருதிக3ளனு நெனெது3 ஸர்வா**
**தா4ரகன ஸர்வத்ர பூஜிஸு பூர்ணனெந்த3ரிது ||(7-19)**

மனிதனின் ஆயுள் 100 ஆண்டுகள் (ஆண்டிற்கு 360 நாட்கள் 360x100 = 36,000. ஆக, 36,000 பகல்கள் மற்றும் 36,000 இரவுகள் என்றால் மொத்தம் 72,000. இந்த எண்ணிக்கையில் ஸ்ரீஹரி இந்த சரீரத்தில் உள்ள நாடிகளில் இருக்கிறான் என்று அறி. இப்படியாக ஸ்த்ரி புருஷ நபும்ஸகர்களில் இதே மாதிரியே இருக்கிறான் என்று அறிந்து, ஸர்வாதாரனை அனைத்து இடங்களிலும் அறிந்து பூஜிக்க வேண்டும். அவனே பூர்ணன் என்றும் அறிய வேண்டும் என்கிறார்.

**62. மணிக3ளொளகி3ஹ ஸூத்ரதvந்த3தி3**
**ப்ரணவபாத்3யனு சேதனா சே**
**தன ஜக3த்தினொளனு தி3னதொளாடுவனு சுக2பூர்ண |**
**த3ணிவிகெயு இவகி3ல்ல பஹுகா**
**ருணிகனந்தானந்த ஜீவர**
**க3ணதொளேகாஷம்ஷ ரூபதிv நிந்து நியமிஸுவ ||(7-28)**

ஜபமாலைக்கு அது கட்டப்பட்டுள்ள கயிறே ஆதாரம். அதன் உதவியுடன் அந்த மாலை நன்றாக தெரிகிறது. அதன்படியே, உலகின் அனைத்து சேதன, அசேதனர்களில் ஸ்ரீஹரி இருக்கிறான். இவனுக்கு எவ்விதமான சோர்வு, தூக்கம் ஆகியவை இல்லை. அனைத்து ஜீவ கோடிகளில் அவனே பிம்பனாக இருந்தாலும், அதனால் இவனுக்கு எவ்விதமான பயனும் இல்லை. ஏனெனில், அவன் நித்ய ஸுகபூர்ணன் என்று அறிவாயாக என்கிறார் ஸ்ரீதாஸர்.

**63. ஜீவஜீவர பே4த3 ஜட3ஜட3**
**ஜீவஜட3 ஜட3ஜீவரிந்த3லி**
**ஸ்ரீவரனு அத்யந்தபி4ன்ன விலக்ஷணனு லகுமி**
**மூவரிந்த3லி பதுமஜாண்ட3தி3**
**தா விலக்ஷணளெ னிசுதிப்பளு**

**ஸாவதி⁴கஸம ஷூன்யளெந்த³ரிதீர்வரனு ப⁴ஜிஸு ||(7-29)**

இங்கு ஸ்ரீதாஸர் ஸ்ரீமத்வரின் முக்கியமான ஸித்தாந்த கருத்தினை விவரிக்கிறார். ஜீவ ஜீவ பேத, ஜட ஜட பேத, ஜீவ ஜட பேத, ஜட பரமாத்ம பேத, ஜீவ பரமாத்ம பேத. இதிலிருந்து பரமாத்மனின் மிகவும் வேறுபட்டவன் என்றே அறிய வேண்டும். இந்த மூவரிடமிருந்து ஸ்ரீலட்சுமி மிகவும் வேறுபட்டவளாக இருந்து, குணத்தினால் சரிசமானமே இல்லாமல், வேறுபட்டிருக்கிறாள் என்பதை அறிய வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர். இவ்வாறாக அறிந்து உபாஸனை செய்ய வேண்டும் என்கிறார். இதுவே வைஷ்ணவ தீக்ஷை ஆகும்.

**64. ஆதி³தேயரு திளியதி³ஹ கு³ண**
**வேத³மானிக³ளெ ந்தெ³னிப வா**
**ண்யாதி³க³ளு ப³ல்லரவரரியத³ கு³ணகvணங்களனு |**
**வேத³ ப³ல்லனு பொ³ம்மனரியத³**
**கா³த⁴கு³ணக³ள லகுமி ப³ல்லளு**
**ஸ்ரீத⁴ரொப்ப³னுபாஸ்ய ஸத்கு³ணபூர்ண ஹரியெந்து³ ||(7-30)**

பகவந்தனின் நற்குணங்களை, ரமாதேவியிலிருந்து தொடங்கி அனைவரும் அவரவர் யோக்யதைக்கேற்ப அறிந்திருக்கின்றனரே தவிர, யாரும் முழுமையாக அறிந்தவர்கள் அல்லர் என்கிறார். அதிதி புத்திரர்களான தேவதைகள் அறியாத விஷயங்களை (ஸ்ரீஹரியின் குணங்களை) சரஸ்வதி பாரதியர் அறிந்திருக்கின்றனர். இவர்கள் இருவரும் அறியாத விஷயங்களை பிரம்மன் அறிகிறான். பிரம்மன் அறியாத குணங்களை லட்சுமி அறிகிறாள். ஸ்ரீதரனான ரமாதேவியை தரித்த, அவளிடமிருந்து மிகவும் வேறுபட்டவனான பகவந்தன் என்றே அவனை அறிந்து, உபாஸனை செய்ய வேண்டும். அவள் கூட அவ்வாறே நினைத்து, ஸ்ரீஹரியை வணங்குகிறாள் என்றே அறிய வேண்டும்.

**65. ப்ரளய ஜலதி³யொளுள்ள நாவெயு**
**ஹொலபு³கா³ணதெ³ ஸுத்துவந்த³தி³**
**ஜலருஹேக்ஷண அமல கு³ண ரூபக³ள சிந்திஸுத |**
**நெலெயகா³ணதெ³ மஹலகுமி ஸ**
**ஞ்சலவனைதி³ஹ எல்ப ஜீவரி**
**க³ளவடு³வ தே³னிவன மஹிமெகvளீ ஜக³த்ரயதி³ ||(7-32)**

பகவந்தனின் மகிமை, குணம் ஆகியவற்றை அறிவதற்கு யாராலும் சாத்தியம் இல்லை. அதற்கு ஸ்ரீதாஸர் ஒரு நல்ல உபாயத்தை சொல்கிறார். பிரளய ஜலத்தின் சுழற்சியில் சிக்கிய படகு, முன்னேற முடியாமல் அங்கேயே சுற்றுகிறது. அதைப் போல, பகவந்தனின் சேவையே எப்போதும் செய்து கொண்டிருப்பவளான மகாலட்சுமிக்கு அவனை அறிவதற்கு சாத்தியம் இல்லாதபோது, அல்ப ஜீவர்களான நமக்கு அது எப்படி அறிய முடியும்?. (முடியாது என்கிறார் ஸ்ரீதாஸர்). அதாவது, ஸ்ரீஹரியின் மகிமைகளை ரமா ஆதியாக யாராலும் அறிவதற்கு சாத்தியம் இல்லை. அதற்காக, அவனுடைய குண சிந்தனையை விடுவதாகவும் இல்லை. நிரந்தரமாக அவற்றை செய்து கொண்டே இருக்க வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர்.

**66. ஸ்ரீனிகேதன ஸாத்வதாம்பதி**
**ஞானக$^3$ம்ய க$^3$யாசுரார்த்த$^4$ன**
**மௌனிகுலஸன்மான்ய மானத$^3$ மாதுலத்$^4$வம்ஸி |**
**தீ$^3$னஜனமந்தா$^3$ர மது$^4$ரிபு**
**ப்ராணத$^3$ ஜகன்னாத$^2$விட்டல**
**தானெ க$^3$தியெந்த$^3$னுதிvனதி$^3$ நம்பி$^3$த$^3$வரனு பொரெவ ||(7-33)**

பகவந்தனின் அர்ச்சனை எப்படி என்றால், அவன் செய்த செயல்களை நினைத்தால் போதும். அவன் நம்மை காக்கிறான். எப்படி யெனில், அவனுடைய குணங்களை அறிந்து உபாசனை செய்வது ஒரு விதம். இன்னொரு விதம் என்ன என்றால், அவனை ஞானத்தினால் மட்டும் அறிவதற்கு முயற்சி செய்வது. 1. மனதிற்கு மட்டுமே தெரிபவன். 2. அவன் ஸ்ரீநிகேதன் 3. கயாசுர மர்த்தன செய்தவன். 4. முனிகுலத்தவர்களால் ஸ்தோத்திரம் செய்யப்படுபவன் 5. மது தைத்யனை கொன்றவன் 6. தாய் மாமனை கொன்றவன்; தன்னை வணங்குபவர்களை அருள்பவன் ஜகன்னாத விட்டலன் 7. அவனே கதி என்று யார் நம்புகிறார்களோ, அவர்களை அருள்கிறான் என்கிறார் ஸ்ரீதாஸர்.

**67. பாத$^3$மானி ஜயந்தனொளகெ$^3$ ஸு**
**மேத$^4$ நாமகனிப்ப த$^3$க்ஷிண**
**பாத$^3$த$^3$ங்கு$^3$டத$^3$ல்லி பவனனு பா$^4$ரப்$^4$ருத்$^3$ரூப |**
**காது$^3$கொண்டி$^3$ஹ டங்கி தரமொத$^3$**
**லாத$^3$னாமதி$^3$ ஸந்தி$^4$க$^3$ளலீ**
**ரைது$^3$ ரூபத$^3$லித்து ஸந்தத நடெது$^3$ நடெஸுதலி ||(8-1)**

நமது அனைத்து அங்கங்களில் பகவந்தனின் வ்யாப்தித்வம் , தத்வாபிமானி தேவதைகளின் மூலமாக எப்படி இருக்கிறான் என்பதை மாத்ருகா சந்தியின் 32 பத்யங்க்ளில் வர்ணித்திருக்கிறார் ஸ்ரீதாஸர். என்ன? எப்படி? ஏன்? என்றால், இதற்கு பதில் மிகவும் கஷ்டம். ஆனாலும்கூட, நாம் தத்வஞானத்தை பரதத்வ என்கிறோம். வேதாந்தம் என்கிறோம். தத்வராஷி என்கிறோம். யதார்த்த ஞானம் என்கிறோம். இவ்வாறு பற்பல சொற்களால் அதனை வர்ணிக்கிறோம். இது மிகவும் ஆழமானதும், ரகசியமானதும் ஆகும். ஆனால், யாருக்கு இதைப் பற்றி அறிய வேண்டும் என்று ஆசை, விருப்பம், உற்சாகம், இஷ்டம், அன்பு, ப்ரேமம், நம்பிக்கை ஆகியவை இருக்கிறதோ, அத்தகையவர்களுக்கு மட்டும் இது இஷ்டமாகிறது.

நம் தேகத்தில் ஆதாரமானது நம் கால்கள். காலில் பாதம். பாதங்களில் 10 விரல்கள். என தாஸர் துவங்கி, மொத்த தேகத்தினை பகவந்தன் எப்படி நிர்மாணம் செய்திருக்கிறான். அங்கு தத்வாபிமானிகளின் வேலை என்ன? அவர்களில் அந்தர்யாமியான வாயு, ரமாதேவியரின் வேலை என்ன?. அவர்களில் தானே இருந்து அவர்கள் அனைவரில் செய்விக்கும் செயல்களும்கூட அவனுடையதே என்னும் திடமான ஞானம் வராதவரை, நமக்கு அவன் ஸர்வோத்தமன் என்னும் ஞானம் வருவதில்லை. ஆனாலும்கூட அவரவர்களின் யோக்யதைக்கேற்ப இவை கிடைக்கட்டும் என்று இந்த கிரந்தத்தின் மூலம் ஸ்ரீதாஸர் வெளிப்படுத்தியிருக்கிறார். குறைந்த பட்சம், இதாவது படித்து அறிந்தால், பகவந்தனின் அருள் கிடைக்கலாம் என்பது தாஸரின் அபிப்பிராயம்.

பாதத்தில், வலது பாகத்தில், இந்திரனின் மகன் ஜயந்தன் (தத்வாபிமானி) இருக்கிறான். இடதில் ருத்ராந்தர்னத ஸுமேத. யக்ஞ நாமக பரமாத்மன் இருக்கிறான். வலது பாகத்தின் ஸந்தி (விரல்களில் ஸந்திகளில் ட1, ட2, ட3, ட4, ண ஆகிய 5 ரூபங்கள் இருக்கின்றன. அதன்படியே இடது பாகத்திலும், நிரந்தரமாக ஜீவர்களை நடத்துமாறு செய்விக்கிறான் என்கிறார். இதைப் போலவே, கசடதப ஆகிய ரூபங்களை அறிய வேண்டும் என்கிறார். இதைப் போல்வே தேகத்தில் இருக்கும் அனைத்து உறுப்புகளையும் அதில் உள்ள தத்வாபிமானி தேவதைகளையும் வர்ணிக்கிறார் ஸ்ரீதாஸர். (தொடரும்)

தொடர்

## ஹரிதாஸர்களின் சிந்தனைத் துளிகள்

## ஜீவனின் அஸ்தித்வம்

ஹரிதாச சாகித்யத்தில் ஜீவனின் குணதர்மங்களைப் பற்றி பற்பல விவரணைகள் வந்துள்ளன. சிலவற்றை பார்ப்போம்.

அல்பசக்தி: அசார்வக்ஞ பாரதந்த்ர்ய அபூர்ணதா |
உபஜீவகத்வம் ஜீவத்வம் ஈஷத்வம் தத்விபர்யய: || -- கீதா தாத்பர்ய

இதையே ஜகன்னாததாசர், தமது ஹரிகதாம்ருதசாரத்தில்:
அஸ்வதந்த்ரனு ஜீவ ஹரிஸ
ர்வஸ்வதந்த்ரனு நித்யசுகமய
நிஸ்ஸ்வபத்தல்பக்ஞ சக்த சதுக்க நிர்விண்ண |
ஹ்ரஸ்வதேஹி சனாத ஜீவனு
விஷ்வவியாபக கர்த்ரு பிரம்ம ச
ரஸ்வதீஷாத்யமரனுத ஹரியெந்து கொண்டாடு || (11-3)

ஜீவ - பிரம்மரில் பற்பல எதிரெதிர் தர்மங்கள் இருக்கின்றன. அதற்கே 'ஜீவோ அல்பஷக்தி: அசார்வக்ஞ:' என்று வேதம் சொல்கிறது. ஜீவனின் அஸ்தித்வம் (இருப்பு) மற்றும் தேகத்தில் இருக்கும் வகையை தெரிவிப்பது இப்படி. 'அணுர்ஹேஷா ஆத்மா'. இதை ஜகன்னாததாசர் விளக்குவது இப்படி:

குதுரெபாலத கொனெய கூதல
துதி விபாகவ மாடி ஷதவித
அதரொளொந்தனு நூரு பாகவ மாடலெந்திஹுதோ |
விதி பவாதி சமஸ்ததிவிஜர
மொதலுமாடி த்ருணாந்த ஜீவரொ
ளதிகன்யூனதெ இல்லவெந்திகு ஜீவ பரமாணு || (9-7)

இவ்வளவு சூக்ஷமமான ஜீவி, ஒரு அணுவைவிடவும் சிறியதாக இருக்கிறது என்று ஸ்ரீமதாசார்யர் தெரிவிக்கிறார்.

பரமாணுப்ரதேஷேஷ்வபி ஹைனந்தா: ப்ரணிராஷய: |
சூக்ஷ்மத்வாதீஷக்யைவ ஸ்தூலா அபி ஹி சம்ஸ்திதா: ||

இத்தகைய ஜீவி, தேகத்தில் எங்கு இருக்கிறது என்பதை தாசர்:

மத்ய நாடிய மத்யதல்லி ஹ்ரு
த்பத்மமூலதி மூலபதி பத
பத்ம மூலதலிப்ப பவனன பாதமூலதலி |
பொத்திகொண்டிஹ ஜீவ லிங்கனி
ருத்ததேஹ விசிஷ்டனாகி க
பர்தி மொதலாதமரரெல்லரு காதுகொண்டிஹரு || (9-19)

***

**தற்போது நமது Blogல் தினம் ஒரு பத்யமாக வந்து கொண்டிருப்பது : https://dasa-sahitya.blogspot.com/**

ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸரின் ஹரிதாஸ தர்பண
* மொத்தம் 137 பத்யங்களைக் கொண்ட கிருதி
* தற்போது 120 பத்யங்கள் வரை வந்திருக்கிறது
* ஹரிதாஸ ஸாகித்யத்தின் மிகவும் முக்கியமான கிருதி இது.
* ஆகவே, மேற்கண்ட linkல் சென்று அனைவரும் இந்த அற்புத கிருதியை படிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

**தற்போது நமது Youtube channel - Jagannatha Kesava -வில் வந்து கொண்டிருக்கும் தொடர்.**

* ஸ்ரீஹரிகதாம்ருதஸாரத்தின் பல-ஸ்ருதிகளின் அர்த்த விளக்கங்கள் - தமிழில்.
* ஸ்ரீதவிட்டல தாஸரின் பல-ஸ்ருதியை தொடர்ந்து வேறு சில ஹரிதாஸர்களின் பல-ஸ்ருதிகளின் அர்த்தங்கள், விளக்கப் பட்டு வருகின்றன.
* அனைவரும் மேற்சொன்ன சேனலுக்கு subscribe செய்து இந்த தொடரையும், இதுவரை வந்த தொடர்களையும் கேட்குமாறு வேண்டிக் கொள்கிறேன்.

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## 27. அனுக்ரமணிகாதாரதம்ய ஸந்தி விடைகள்

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 தீ | ம் | 17 தா | ம் | | 2 அ | கோ | ச | ர | | 18 தா |
| ந் | 3 கோ | ம | தி | 4 ஆ | ப | ன் | ன | | 19 கெள | ம |
| ளீ | ணி | | | | 5 வ | ட | ப | ர் | ண | ர |
| 6 கா | ம | தே | னு | 7 ப | ர் | ஜ | ன் | ய | ன் | ஸ |
| | தா | | | | 8 க | ல் | ப | த | ரு | ப |
| 9 இ | ந் | தி | ர | 10 பா | வ | ன | ச | ரி | த | வ |
| | 20 சி | வ | | 11 அ | ர் | ண | ர் | ப | 13 சு | |
| | ஜ | ம | 14 ஸா | | ன | ஹ்ரீ | ர் | ண | 15 க | |
| | | 21 ஹை | | | ன் | ர | பே | 16 கு | | |
| 12 வ் | யோ | ம | கே | ஸ | | | | | | |

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்
Haridasa Vijayam - Monthly

மலர் 3 ** November 2022 ** இதழ் 12



ஸ்ரீவிஜயதாஸர்

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள 'திளிது' பஜிஸுவுதே

மலர் 3 : இதழ் 12

| நிர்வாக ஆசிரியர் | துணை ஆசிரியர் |
| --- | --- |
| 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்<br>ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,<br>380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase, பெங்களூரு 560078<br>Ph.: 89044-58276.<br>haridasa.vijayam@gmail.com<br>jagannathakesava.blogspot.com | 'தாச சாகித்ய சேவா ரத்ன'<br>திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்<br><br>**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**<br>திரு. முரளிதர தாசரு,<br>திருமதி. நிர்மலா நரசிம்மன்,<br>திரு. லட்சுமிபதிராஜா,<br>திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ் |

**ஆராதனை**

**ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்**

**நவம்பர் 1 முதல் 30 வரை, 2022**

நவ. 3 : கார்த்திக சுத்த தசமி - ஸ்ரீவிஜயதாஸர், சிப்பகிரி / சிக்கலபரவி
நவ. 7 : கார்.சு. சதுர்தசி - ஸ்ரீவரத விட்டல தாஸர், கௌதள
நவ 11 : ஸ்ரீகனகதாஸர் ஜெயந்தி
நவ.21 : கார். பகுள த்வாதசி - ஸ்ரீஉரகாத்ரி வாஸ விட்டல தாஸர், சித்ரதுர்கா
நவ.22 : கார். பகுள சதுர்தசி - ஸ்ரீமுத்து மோகன தாஸர், தொட்டபள்ளாபுர
நவ.23 : கார்த்திக அமாவாசை - ஸ்ரீமஹிபதி தாஸர், காகண்டிகி

# ஆசிரியர் பக்கம்

ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால் மற்றும் நம் குழு நண்பர்களின் உதவியுடன், நமது ஹரிதாச விஜயம் மாத பத்திரிகை துவங்கி இது 36வது இதழ் ஆகும். மூன்று ஆண்டுகள் முடிவடைந்தன. இந்த மூன்று ஆண்டுகளில், கன்னட ஹரிதாச சாகித்யத்தைப் பற்றிய பற்பல தொடர்கள், தகவல்கள் ஆகியவை தமிழில் கொடுக்க முடிந்ததில் மகிழ்ச்சி. இதுவரை இந்த பத்திரிக்கைக்கு ஆதரவு, ஊக்கம் அளித்துவந்த அனைவருக்கும் எமது நன்றிகள்.

இதில் மேலும் புதிய தொடர்கள் பல வரவிருக்கின்றன. பத்திரிக்கையின் பழைய இதழ்கள் தேவைப்படுவோர் கேட்கவும். துவக்கத்தில் வந்த இதழ்கள், நமது archive தளத்திலும் PDFஆக கிடைக்கின்றன.

தினமும் அப்டேட் ஆகும் நமது blog தளத்தையும், புதிய உரைத் தொடர்கள் வருவதான நமது யூட்யூப் சேனலையும் சப்ஸ்க்ரைப் செய்து, அந்த தகவல்களையும் அனைவரும் கேட்டு அறியவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

வெளியிடுவதற்கான புத்தகங்கள் பல தயாராக இருந்தாலும், அச்சடித்த புத்தகங்களை வைப்பதற்கான இடம் இல்லாததால், அவற்றை அச்சிட்டு வெளியிடுவதில் சிறிது தாமதம் ஏற்பட்டுள்ளது. ஸ்ரீஹரியின் அருளால் விரைவில் இடப் பிரச்னை தீர்ந்து, மறுபடி புத்தகங்கள் வரவேண்டும் என்று பகவந்தனை வேண்டிக் கொள்கிறேன்.

ஆரம்பத்தில் மூன்று ஆண்டுகளுக்கு சந்தா கட்டியவர்களுக்கு இந்த இதழுடன் அது முடிவடைகிறது. உடனடியாக, உங்கள் சந்தாவினை புதுப்பித்து, அடுத்த மாத இதழினை பெற்றுக் கொள்ளவும்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

தொடர்

## கேசவ நாமா

## 42. லட்சுமி ப்ரிய கிருஷ்ண

லட்சுமிப்ரிய கிருஷ்ண லட்சுமிப்ரிய கிருஷ்ண
லட்சுமிப்ரிய ஸத்யபா[4]மா ப்ரிய ||ப

கோவிந்த முனிவந்த்யதே[3]வ கேஷவயோகி
பா[4]வாகோ[3]சர சர்வரூப ஸ்ரீகிருஷ்ண ||1
பரமபாவன நித்யவரத தாமோதர
அரவிந்த லோசன ஸ்ரீபத்பனாப ||2

நாராயணா தோக்ஷஜானந்த பரிபூர்ண
ஸ்ரீராக[4]வோபேந்த்ர சங்கர்ஷணாக்[2]ய ||3
அனிருத்த ப்ரத்யும்ன மாத[4]வ ஸ்ரீவிஷ்ணு
தனுஜ மர்த்தன திவ்யரூப நாரசிம்ஹ ||4

வாமன ஸ்ரீதர ஹ்ருஷிகேஷ ஸ்ரீஹரே
காமித ப[2]லத ஜனார்த்தன ராம ||5
வாசுதேவாச்யுத வசுதேவ நந்தன
வாசுகி ஷயன த்ரிவிக்ரம பீ4ம ||6

மதுசூதனானந்த க[4]ன புருஷோத்தம
பு[3]தவந்த்ய திருபதி வெங்கடரமண ||7

ஓம் துலஸிதா[4]ம பூ[4]ஷணாய நம:

மூன்று குணங்களுக்கும் அபிமானியான மகாலட்சுமி மற்றும் சத்யபாமா இருவருக்கும் ப்ரியமானவனாக ஸ்ரீகிருஷ்ணன் இருக்கிறான். ஞானிகளால் / முனிவர்களால் வணங்கப்படுபவன், திருப்பதி வெங்கடரமணனே கீதோபதேசத்தை வழங்கியவன். லட்சுமிதேவிக்கு அனைத்து ரூபங்களும் ப்ரியமானவையே. இந்திரா தாமோதரனே, துளசிப்ரிய ஸ்ரீகிருஷ்ணன். ஸ்ரீதுளசியில் இருக்கும் 5317 பகவத் ரூபங்களை திம்மப்ப தாசர் வணங்குகிறார்.

***

**43. ஸ்ரீவெங்கடேஷ ஷட்குணதாம**

ஸ்ரீவெங்கடேஷ ஷட்கு[3]ணதா[3]ம ஸ்ரீவெங்கடேஷ

ஸ்ரீவெங்கடேஷ ஸதா[3]னந்த விக்ரஹ பா[1]வனகீர்த்தி பரமேஷ
கேஷவ பிரம்மாதி[3]காய நாராயண ||ப

ஸ்ரீஷ கோவிந்த கோவர்த்த[4]னோத்தா[4]ர விஷ்ணோ ||1
மதுசூதனாமித மஹிம த்ரிவிக்ரம
பு[3]த[3]வந்த்ய வாமன ப[4]யஹர ஸ்ரீதர ||2

ஹ்ருஷிகேஷ நிஜ ஜன ஹ்ருத் கஞ்சஸ்திர பா[4]னோ
விஷயரஹித பத்மனாப தாமோதர ||3
சங்கர்ஷண வாசுதேவ சனாதன
பங்கஜ நேத்ர பாவக முக்ய ப்ரத்யும்ன ||4

அனிருத்த புருஷோத்தமயாதி காரணலோக
ஜனகாதோக்ஷஜ ஜீவசுக[2] ஷுத்த[3] நரசிம்ஹ ||5
அச்யுதானந்த ஜனார்த்தனாமித்ர ரூப
சச்சித்ரூபோபேந்த்ர சர்வேஷ ஸ்ரீஹரே ||6

ஸ்ரீகிருஷ்ண ருக்மிணி சத்யபாமாத[4]வ
ஏகரூபாவ்யமானேக ஷக்த்யாத்மக ||7
க்லேஷ திமிர ஹரகோ[1]டி[1] நாமாத்மக
கோஷ ப[1]ஞ்சக[1] தூ[3]ர கோ[1]ஷ ப்ரவர்த்தக ||8

திருபதீதி[1]க்2யாத[1] தி[3]வ்ய க்ஷேத்ரோத்3ப[4]வ
சுரத[1]ரு வெங்கட த[4]ரணீத[4]ராதீஷ ||9

செல்வம், ஞானம், புகழ், வைராக்கியம், தைரியம் ஆகிய நற்குணங்களைக் கொண்ட ஸ்ரீஹரி வெங்கடேச, ஆனந்த ஸ்வரூபி. ஜீவர்களின் தலைவனின் அனந்த நாமஸ்மரணையினால் அஞ்ஞானம் விலகுகிறது. ருக்மிணி சத்யபாமா ஆகியவர்களுக்கு பதியான ஸ்ரீகிருஷ்ணனின் 24 ரூபங்களையும், பூவராகன், வெங்கடேசனையும் சிந்தனை செய்திருக்கிறார் தாசர்.

***

6 - ஹரிதாச விஜயம் – நவம்பர் 2022

## 44. ராம பாரோ

ராம பா[3]ரோ பரந்தா[4]ம பா[3]ரோ
கோமலாங்க[3] ரவி கு[1]லாப்[3]தி[3] ஸோம பா[3]ரோ ||ப

கேஷவ நாராயண மாத[4]வ கோவிந்த பா[3]ரோ
தாஷரதி[1] த[3]யாஸமுத்[3]ர பே[3]க[3] பா[3]ரோ ||1
விஷ்ணு மதுசூதன த்ரிவிக்ரம வாமன பாரோ
ஷிஷ்ட ஜனர தாயி தந்தெ[3] ஸ்வாமி பாரோ ||2

ஶ்ரீத[4]ர ஹ்ருஷிகேஷ பத்பனாப பாரோ
ஆதி[3] மத்யாந்தரஹித ஷௌரி பாரோ ||3
தாமோதர சங்கர்ஷண வாசுதேவ பாரோ
காம கமலஜ குஷலவ கங்காஜனக பாரோ ||4

ப்ரத்யும்ன அனிருத்த புருஷோத்தம பாரோ
முத்து[3] பாத[3]ஸேவெ கொட்டு பாலிஸ பாரோ ||5

அதோக்ஷஜ ஶ்ரீநாரசிம்ஹ அச்யுத பாரோ
அத[3]மனு ஆர்த்த[1]னு வந்தி[3]பர ப[1]தி[1]தோத்தார பாரோ ||6

ஜனார்த்தன உபேந்திர ஹரி ஶ்ரீகிருஷ்ண பாரோ
அனாத[2] பா[1]லகா[1] ஆபத் பா[4]ந்த[4]வ அக[4]ஹர பாரோ ||7
குருவர துலசீராம ஸ்வரூப பூ[4]ப பாரோ
த[4]ர ரங்கஸ்வாமிதா[3]ஸ ஜீவோத்3தா[4]ர பாரோ ||8
சூரிய குலம் என்னும் சமுத்திரத்தில் சந்திரனைப் போல அவதரித்த ஶ்ரீராமனை தம் இதய மண்டத்திற்கு வருமாறு அழைக்கிறார்.

கோமலாங்க, தாஷரதெ, தயாசமுத்திர, ஞானிகளின் தலைவன், ஆதி மத்ய அந்த்ய இல்லாதவன், ஜீவோத்தார என்று பல்வேறு பெயர்களில் ஶ்ரீராமனை வர்ணிக்கிறார்.

மன்மதனின் தந்தை, பிரம்மனின் தந்தையான ஶ்ரீராமன், 24 ரூபங்களை எடுத்திருக்கிறார் என்றும், தம் குருகளான துளசிராமரின் மற்றும் ரங்கனாதனுக்கு, தான் தாசன் என்கிறார். ‘முத்து பாதசேவெ’ என்று சொல்லி, ஶ்ரீஹரிக்கு ஷோடஷோபசார பூஜையுடன் மானஸபூஜையை செய்திருக்கிறார்.

## 45. அப்ஜ பவ பித

அப்$^{3}$ஜ ப$^{4}$வ பித மத்குர்வந்தர்யாமி ஸலஹய்ய
குப்$^{3}$ஜ மூருதியாத குருகோவிந்த விட்டலய்ய ||ப
என் குரு அந்தர்யாமியான பிரம்மனின் தந்தையே, என்னைக் காப்பாற்று. குப்ஜ தேஹ (வாமன) உருவம் கொண்ட குருகோவிந்த விட்டலனே, என்னைக் காப்பாற்று.

ஈஷ தந்தெ வெங்கடேஷ விட்டலன தாஸ ஸஹவாஸ
தோஷராஷிய நாஷகெ$^{3}$யிஸிது$^{3}$ ஸ்ரீஷ கேஷவனே ||1
தந்தெ வெங்கடேச விட்டலனின் கருணையால் என் தோஷங்கள் அகன்றிருக்கின்றன, ஹே கேசவ.

மரண ஸமயதி சரண புஷ்கர ப$^{4}$ஜிஸித அஜமிளன
கருணதிந்தலி பொரெதவோல் என்ன மனகெ$^{1}$ பா நாராயண ||2
தன் மரண சமயத்தில் உன்னை நினைத்த அஜாமிளனுக்கு அருளியதைப் போல, என் இறுதிக் காலத்திலும், என் மனதில் உன் நினைவை கருணிப்பாயாக நாராயணா.

பே$^{4}$த$^{3}$ மதவெம்ப$^{3}$ப்தி$^{4}$யலி உதிஸிதே$^{3}$னு காணய்ய
மத்வபதி மத்பா$^{4}$ர நின்னது ஸலஹோ மாத$^{4}$வனே ||3
பஞ்சபேத மதத்தில் பிறந்திருப்பதால், என்னைக் காப்பாற்றும் பொறுப்பு உன்னுடையது. என்னைக் காப்பாற்று மத்வபதியான மாதவனே.

கோ$^{3}$விதா$^{3}$ம்பதி கோ$^{3}$ப$^{1}$பா$^{1}$லக ஸ்ரீஷ கோவிந்த
மாவ கம்ஸன கொந்த$^{3}$ ஸிரி கோவிந்த ஸலஹய்ய ||4
பசுக்களைக் காப்பவனான, கம்சனைக் கொன்றவனான, கோவிந்தனே என்னைக் காப்பாற்று.

ஜிஷ்ணு சக$^{2}$ ஸிரிகிருஷ்ண பே$^{3}$டு$^{3}$வெ கஷ்ட பி$^{3}$டி$^{3}$ஸய்ய
வ்ருஷ்ணிகுல ஸம்பன்ன பாவன விஷ்ணு மூருதியெ ||5
யதுகுலத்தில் உதித்தவனே, விஷ்ணுவே, உன்னை வேண்டுவேன், என் கஷ்டங்களை போக்குவாயாக.

வேதக$^{3}$ம்ய தயா பயோநிதி ஸாது வந்திதனெ
மோத$^{3}$தி$^{3}$ம் தவ பாத பூஜிபெ பாலிஸை மதுசூதன ||6

வேதங்களில் புகழப்படுபவன், கருணைக் கடல், சாதுக்களால் வணங்கப்படுபவனுமான மதுசூதனனே, பக்தியுடன் உன் சரணங்களைப் பற்றி பூஜிக்கிறேன், என்னைக் காப்பாற்று.

ஸவெது[3] போகுவ காய மமதெலி கட்டி தர்மாத்ம
ப[4]வத ப[3]வணெய பி[3]டி[3]ஸுவுது ப[3]லிவரத த்ரிவிக்ரம ||7

பலிக்கு அருளியவனே, அழிந்து போகும் இந்த சரீரத்தை சம்சாரம் என்னும் பந்தனத்தில் கட்டி வைத்திருப்பவனே. என்னை இந்த பந்தனத்திலிருந்து விடுவி, த்ரிவிக்ரம.

விமல ஸத்கல்யாண குண நிஸ்ஸீம சுக்ஞான
அமராரியத[4]ர கெடி[3]ஸி உளிஸிதெ ஶ்ரீல வாமன ||8

பவித்ரமானவன், சத்கல்யாண குணபூர்ணன், சுக்ஞானங்களைக் கொண்டவனுமான நீ, பலியின் அஸ்வமேத யாகத்தைக் கெடுத்து, தேவதைகளை காப்பாற்றிய வாமனனே.

ஹ்ருதயஷோபித மோத[3]மய மத்வாந்தராத்மகனே
ஆதிமூருதி ஸாது[3] வந்தி[3]த காயோ ஶ்ரீதரனே ||9

மத்வரின் இதயத்தில் இருப்பவனே, ஆனந்தமயனே, ஆதிமூருதியே, சாது வந்திதனே, ஶ்ரீதரனே எனக்கு அருள்வாயாக.

(தொடரும்)

**தற்போது நமது Blogல் தினம் ஒரு பத்யமாக வந்து கொண்டிருப்பது : https://dasa-sahitya.blogspot.com/**

* ஶ்ரீப்ரஸன்ன ஶ்ரீனிவாஸ தாஸர் இயற்றிய - விஷ்ணு சஹஸ்ரநாம பாஷ்ய - கன்னட பத்யங்கள். இதன் அர்த்த விளக்கங்கள் - தமிழில்.
* 1000 நாமங்களுக்கு, (4 வரிகளைக் கொண்ட) 1000 கன்னட பத்யங்களை பாஷ்ய ரூபமாக இயற்றிக் கொடுத்திருக்கிறார் தாஸர்.
* தினமும் 2-3 பத்யங்களின், தமிழ் விளக்கங்களை நமது மேற்கண்ட blogல் படிக்கலாம்.

ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ் சார்பாக இதுவரை வந்திருக்கும் அனைத்து புத்தகங்களையும் வாங்கி வீட்டீர்களா?

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

### ஜகன்னாத தாசரின் சுளாதிகள்

டா.ஷீலாதாஸ், ராய்ச்சூர்

(சென்ற இதழிலிருந்து தொடர்கிறது)

அணுவினொளக[3]ணுஹனு க[4]னகெ கனதரனஹனு
அணுமஹத்விலக்ஷண கல்யாண குணஞான
க[4]னலக்ஷண சம்பூர்ண
மனமுட்டி கரெயலாக்ஷண பந்தொ[3]த[3]கி
கு[1]ணிவ லக்ஷ்மீவக்ஷன அனபேக்ஷன

ஸ்ரீஹரியை அனபேக்ஷன் (எதையும் விரும்பாதவன் / கேட்காதவன்) என்று சொல்லியிருப்பது மிகவும் நன்று. அவர் ஸ்வரமணன். அவருக்கு எதற்கும் இன்னொருவரின் உதவி / தேவை கிடையாது. எந்த பொருள் மேலும் அவருக்கு ஆசை / பற்று இல்லை. எதனாலும் அவருக்கு எந்தவொரு பிரயோஜனமும் இல்லை. எதற்கும் ஆசைப்படுபவர் இல்லை. இப்படி ஒரே சொல்லில் பற்பல அர்த்தங்களை பொதித்து வைத்திருப்பது ஜகன்னாததாசரின் திறன்.

உதாரணத்திற்கு:
பிராதேஷ மாத்ரஸ்தி[4]த[1] ஸ்ரீதேவியரஸ க[1]ன
கோத[3]ராத்யமரவ்ராத[1] ஸஹித மஹ
தாதி ப்[1]ருத்வ்யாந்த பூ[4]ததொளு நெலெஸி
காதுகொண்டிஹ விதா[4]த[1] அண்ட[3]த்ரித[3]
ஷாதி[4]ப[1]ன சுத[1]ன சுத[1] ஸ்வரத[1]

மத்வமதத்தின் தத்வங்களை கன்னடத்தில் மொழிபெயர்த்து விளக்குவதில் ஜகன்னாததாசர் வெற்றி கண்டிருக்கிறார். பாடல்களில் கேட்டிருக்கும் சில குறிச்சொற்களுக்கு, அவர் தனது ஹரிகதாம்ருதசாரத்தில் மிகவும் விளக்கமாக பதிலளித்திருக்கிறார். 'பிரணவ பிரதிபாத்ய பிரஹ்லாத வரத' என்னும் பாடலில் வரும் 'பிரணவ பிரதிபாத்ய' என்னும் சொல்லை ஹரிகதாம்ருதசாரத்தில் விளக்கியுள்ளார்.

ப்ரணத காமதனங்க்ரி ஸந்த[3]ரு
ஷன தபேக்ஷெக[3] ளுள்ளவகெ நி
ச்சணிகெ யெனிபுது ஜட[3]மொதலு பி[3]ரம்மாந்த[1] த[1]ரத[1]மவு ।

10 - ஹரிதாச விஜயம் – நவம்பர் 2022

மன வசனதிம் ஸ்மரிசுவர ப4வ
வனதி4 ஷோஷிஸி போ1குவுது கா
ரணவெனிசுவுது ஞான ப4க்தி விரக்தி சம்பதகெ ||
(ஆரோகண தாரதம்ய சந்தி ஸ்லோகம் #17)

ப்ரணதகாமத ப4க்தசிந்தா
மணி மணிமயாபரண பூஷித
க்ருணி கு3ணத்ரய தோஷவர்ஜித கஹன சன்மஹிம |
எணிஸ ப4க்தர தோஷகள கு
ம்பினிஜெயாண்ம ஷரண்ய ராமா
ர்ப்பணவெனலு கைகொண்ட ஷபரிய பலவ பரமாப்த ||
(கர்மவிமோசன சந்தி ஸ்லோகம் #33)

ஸ்ரீஜகன்னாததாசரின் படைப்புகளிலிருந்து அவரது புலமையின், அறிவின் ஆழத்தைத் தெரிந்துகொள்ளலாம். ஸ்ரீமதானந்ததீர்த்தரின் கிரந்தங்கள் அனைத்தையும் இவர் கரைத்துக் குடித்தவர் என்று புலனாகிறது. கடோபநிஷத், ஸ்வேதாஸ்வரரின் உபநிஷத், ஸ்ரீமன் நாராயணோபநிஷத், பாகவதம், நான்கு வேதங்கள், ப்ருஹதாரண்யக உபநிஷத் என இந்த அனைத்தும் அவருக்கு அத்துப்படி.

கனக, புரந்தரரைப் போல ஜகன்னாததாசரின் பாடல்களில், தர்க்கம், நீதி, நியாயம் என்ற விஷயங்கள் காணப்படுவதில்லை. சம்சாரிக / தற்காலிக சுகங்களுக்காக இந்திரியங்களின் வசம் ஆகிவிடாதே. பயம் இல்லாமல் ஸ்ரீஹரியைக் குறித்துப் பாடு என்று சொல்லி, பக்தரின் கடமைகளை எடுத்துரைக்கிறார்.

நாராயண தன்னாராதிபரிகெ தூ3ரகை3வ து3ரித1
காருணிக கைவல்யதாயக தோருவ ஸர்வஜித
ஹாரைஸதிரல்ப சுக2க3ள நரகத்வாரகளனு நிருத
ஸூரிகளனு ஸம்ஸேவிஸு முக்தித்4வாரவஹுது சதத

போலித்தனமாக செய்யப்படும் செயல்களை ஜகன்னாததாசர் ஒப்புவதில்லை. ஆத்ம-சுத்தி இல்லாமல் செய்யப்படும் செயல்கள், தேவையான பலன்களைக் கொடுப்பதில்லை என்கிறார். 'வேத சாஸ்திரங்களைப் படித்தென்ன, கங்கா கோதாவரி நதிகளில் குளித்தால் என்ன, புனித காரியங்களைச் செய்தால் என்ன,

விஷ்ணுபாதத்தின் பிண்டம் வைத்தால் என்ன, மோட்சத்தை வேண்டி பல ஹோமங்களை செய்தால் என்ன, லட்ச துளசி அர்ச்சனை செய்தால் என்ன?' என்று நேராக கேள்விகளைக் கேட்கிறார்.

'சாகித டங்குர யமனு' என்னும் பாடலானது, 18ம் நூற்றாண்டின் ஆண்களின் பார்வையில் பெண்களைப் பற்றிய இழிவான அபிப்ராயத்தை தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. பெண்களை அன்றைய ஆண்கள் காணும் விதத்தைப் பார்த்தால், அந்தப் பெண்களின் நிலை மிகவும் பரிதாபமாக இருந்தது என்று தெரிகிறது. 'பாபிகளனெளெதந்து நரகதொளிடிரெந்து' என்று சொல்கின்றனர். ஸ்ரீஜகன்னாததாசரின் ஆளுமைக்கு இந்தப் பாடல் ஒரு கருப்புப்புள்ளி என்றால் அது மிகையாகாது. அந்தக் காலத்தில் பிராமணப் பெண்கள் ஆண்களின் அடிமைகளாகவே இருந்தனர் எனலாம். அவர்களுக்கு சுயமரியாதையோ, தன்னம்பிக்கையோ இருக்கவில்லை என்று சொல்கிறார்.

ஹொத்தாரெ எம்ம ப$^{1}$தி$^{1}$கெ$^{3}$ எரக$^{3}$த$^{3}$வள
ம்ருத்திகெ சௌச மாடதெ இப்பள
ப$^{3}$த்த$^{1}$லெ கு$^{1}$ளிது$^{1}$ மைதொளெவவள, நாதி$^{3}$னி
அத்தெமாவன பைவவளெளெது த$^{1}$ன்னிரோ |

திலகாயுத$^{4}$வ பி$^{3}$ட்டு குங்குமயிடுவள
பௌகாவ கா$^{1}$லக்கு$^{1}$ மலகி$^{3}$ப்பவள
மலின வஸ்த்ரதி ப$^{1}$திய ப$^{3}$ளிகெ$^{3}$ போ$^{1}$கோ$^{3}$ள
க$^{1}$லஹகா$^{1}$ரிய பி$^{1}$டி$^{3}$தெ$^{3}$ளெது$^{3}$ த$^{1}$ன்னிரோ |

க$^{3}$ண்ட$^{3}$ நிர்த$^{4}$னிகனெந்த$^{3}$ப$^{1}$மான மாள்பள
உண்ட சேஷான்னவனுணிஸுவவள
கொண்ட மாதுகளிந்த களவலகொ$^{3}$ளிப$^{1}$ள
மண்டெகூதலு பிடிதெளெது தன்னிரோ |

மீசலு மடி என்னதெ பக்ஷிஸுவவள ஸ
கேசியரொடனெ கெ$^{3}$ளெதன மாள்பள
தாஸெரெந்தலி பா$^{1}$கபா$^{1}$த்ரெ முட்டிஸுவவள
பார்ஷகளிந்தலி கட்டி எளெது தன்னிரி |

அந்தக் காலத்தின் ஆண்கள் நியமித்த விதிகளை ஜகன்னாததாசர் ஏன் இப்படி புகழ்ந்து பாடியிருக்கிறார் என்பது தெரியவில்லை. ஆனால்,

ஒரு பெண் என்பவள் எப்படியிருக்கவேண்டும், எப்படியிருந்தால் அவளை ஆண்கள் மணம் செய்து கொள்வர் என்று பின்வருமாறு பாடியிருக்கிறார்.

அரிஷின குங்கும புஷ்பாஞ்சன வஸ்த்ரா
ப$^{4}$ரண பூ$^{4}$ஷிதளாகி பதியொடனெ
ஸரஸவாடுவ சுக$^{2}$ ஹரிகெ அர்பி$^{1}$ஸி
ஹருஷதொளிப்பள முட்ட$^{1}$தெ$^{3}$ ப$^{3}$ன்னிரோ

பா$^{3}$லக$^{1}$ரனு தொ$^{1}$ட்டிலொளகி$^{3}$ட்டு$^{1}$ தூ$^{1}$கு$^{3}$த$^{1}$
பா$^{1}$லெரெவுத பீ$^{3}$ஸூத்த$^{1}$ கு$^{1}$ட்டுத்த
ஆலயதொளு கெலஸகள மாடுத்த லக்ஷ்மி
லோலன குணவ பாடுவர முட்டதெ ப$^{3}$ன்னிரோ ।

அபாரமான மகிமையுள்ள ஜகன்னாதவிட்டலனை அல்லும்பகலும் போற்றிப் பாடும் பக்தர்களை வாருங்கள் என்று இரு கை கூப்பி வரவேற்பதின் மூலம் ஸ்ரீஹரியின் பக்தர்களின் பெருமையைப் போற்றுகிறார்.

’கொளலேனு புண்யவ மாடி கிருஷ்ணன கரவன்னைதிதோ’ இது ஜகன்னாததாசரின் மிகவும் அற்புதமான பாடல். கிருஷ்ணனின் அருகிலேயே குழலானது எப்போதும் இருப்பதால், அவரின் மனைவியருக்குக் கூட பொறாமை உண்டாயிற்றாம். அந்த குழலானது என்ன புண்ணியம் செய்ததோ என்கிறார்.

ஹரிகதாம்ருதசாரத்திற்குப் பிறகு ஜகன்னாததாசரின் அடுத்த புகழ்பெற்ற கிருதி எதுவென்றால் – தத்வசுவ்வாலி. தத்வவிசாரங்களின் முக்கியத்துவத்தை ஹரிகதாம்ருதசாரம் எடுத்துரைத்தால்; தத்வசுவ்வாலியானது த்ரிபதி சந்தஸ்ஸில் அவற்றை நிரூபிக்கும் விதமாக மிகவும் சரளமாக எடுத்துரைக்கிறது. சிறுமிகள் பாடும் ‘சுவ்வி’ நுடியில் தத்வசுவ்வாலி இயற்றப்பட்டிருக்கிறது. தத்வசுவ்வாலி பற்றி கிடைத்திருக்கும் கையெழுத்துப் பிரதிகளில் இவை சுவ்வி என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. ஸ்ரீவாதிராஜர் பிருதின சுவ்வாலி என்னும் பாடலை இயற்றியிருக்கிறார்.

(தொடரும்)

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

### அரணி ஸீதாபாய் (1875-1971)

மேலூரின் ஸ்ரீபரீட்சித்ராவ் மற்றும் ஸ்ரீமதி கங்காபாய் அவர்களின் ஒரே மகள் ஸீதாபாய். இவருக்கு 7வது வயதிலேயே அரணி ராமாராவ் உடன் திருமணம் முடிந்தது. ஆனால், 10வது வயதிலேயே கணவனை இழந்து, அந்தக் கால சம்பிரதாயத்திற்கேற்ப மடி உடுத்தி, ஸ்ரீஹரியின் சேவையில் ஈடுபட்டார். ஸ்ரீனிவாஸனின் பக்தையான ஸீதாபாய், தம்மிடம் இருந்த ஸ்ரீனிவாஸனின் விக்ரகத்திற்கு தினமும் விதிப்படி பூஜை செய்துவந்தார்.

ஸீதாபாய் அங்கிதம் பெற்ற சுவையான கதை

1934ம் ஆண்டில் ஸீதாபாய், தீர்த்தயாத்திரை செய்தவாறு, கரிகிரி க்ஷேத்திரத்திற்கு (தேவராயன துர்கா) வந்தார். அங்கு தாஸகூட சபா மந்திரத்தின் அறை ஒன்றில், இவர் தம் ஸ்வாமியை வைத்து பூஜை செய்து கொண்டிருந்தார். அப்போதே ஸ்ரீதந்தெமுத்து மோகன விட்டல தாஸர், இவரைப் பார்த்து இவருக்கு 'ஷர்வாதிவந்த்ய விட்டல' என்று அங்கிதம் அளித்து ஆசிர்வதித்தார். அன்று ஸீதாபாய், தம் ஸ்ரீனிவாஸனுக்கு, குருகள் மூலமாகவே பூஜை செய்வித்தார். அன்று நடந்த சம்பவமானது, அனைவரையும் வியப்பில் ஆழ்த்தியது. குருகள், ஸ்ரீனிவாஸனுக்கு, ஷுத்தோதக நீரினால் அபிஷேகம் செய்தால், அது கீழே வரும்போது கேசரி வண்ணத்தில், நறுமணத்துடன் வந்தது. அனைவரும் வியந்தனர். இதன் ரகசியத்தை, ஸ்ரீனிவாஸன் தானே கூறுவதாக, ஸீதாபாய் அவர்கள் ஒரு தேவரநாமாவை இயற்றியுள்ளார்.

அடுத்து, தெய்வ அனுக்கிரகத்தால், பல தீர்த்த க்ஷேத்திரங்களுக்கு ஸீதாபாய் சென்று தரிசனம் செய்தார். பக்தர்களின் வேண்டுகோளுக்கு இணங்க, பலரின் வீடுகளுக்குச் சென்று, ஸ்ரீனிவாஸனுக்கு பூஜை செலுத்து வந்தார். பள்ளிக்குச் சென்று படித்தவரே இல்லை என்றாலும், ஸீதாபாய், ஸ்ரீஹரி வாயு குருகளின் அருளால், பல்வேறு கீர்த்தனைகளை இயற்றி வந்தார். ஆனால், இவருடைய ஒரே ஒரு கீர்த்தனை மட்டுமே இதுவரை கிடைத்துள்ளது.

பெங்களூரில் இருந்த போஸ்ட் மாஸ்டர் ஸ்ரீ கே. நாகராஜராவ் அவர்கள் ஸீதாபாயின் வம்சத்தவர். அவருடைய வீட்டில் மற்றும் பல பக்தர்களின் வீடுகளில், ஸ்ரீனிவாஸன் தன் பூஜையை வைபவத்துடன் ஏற்றுக்

கொண்டிருந்தார். இந்த சமயத்தில், அந்த ஸ்ரீனிவாஸ விக்கிரகத்திற்கு, பல்வேறு ஆபரணங்களை அணிவித்ததாக தெரிய வருகிறது.

ஸ்ரீனிவாஸனின் பூஜையில் ஈடுபட்டிருந்த ஸீதாபாய் அவர்களுக்கு, ஸ்ரீஹரி பிரத்யட்சம் ஆகி, எழுத வைத்த தேவரநாமாவை இங்கு கொடுத்திருக்கிறோம்.

மானுனீ மணி கேளெ மாதவராய நானே பந்தெனே
த்யானிஸி ஸ்வப்னதலி நோடித பரியலி ஞான கொடுவெனே

ஷோடஷ உபசாரதிந்த மாடு பூஜெய அனுதினா
நோடு மனதலி என்ன ரூபவ மாடு பக்திலி வந்தனா

தீபவே ஸுக்ஞானவென்னுத அஞ்ஞானகெண்டவம் மாடிஸி
கோப ரூபவ மாடு மனதலி ஸ்ரீ பதியு நானெந்தர்ப்பிஸி

கர்த்ரு கார்யகளிகெ நித்ய நானெந்தரிது நீ
நித்ய மாடுவ கர்மகளனு ஹஸ்தவெத்தி ஸமர்ப்பிஸோ

நின்னவனு நானெந்த மேலே இன்னு யோசிஸபேடவே
மன்னிஸுவுது என்ன மாதனு என்ன பாதத ஸாக்ஷியே

ஸுக்ருத துஷ்க்ருத பலகளெரடு தினதினதி எனகர்ப்பிஸு
நக்ரஹர த்ரிவிக்ரமனு எந்து அஷ்டபுஷ்ட ஸமர்ப்பிஸோ

துஷ்டஜனர நுடிகளஷ்டனு அர்ப்பிஸென்னய பாதகெ
ஒந்திஷ்டு கூட க்லேஷபடதெ கிருஷ்ணகதி எந்து தின களீ

வெங்கடன நிஜடஹஸி எந்து பிங்கதிந்தலி திருகு நீ
கொங்குமதிகள மாதனெணிஸதெ நித்யங்கெயிந்தலி பாளு நீ

நினகெ அங்கிதவன்னு கொட்டவனென்ன பரியங்கதாஸனே
முன்ன மாடித ஸுக்ருத பலவிது இன்னு மரெயலி பேடவே

அஷ்டம ஸ்த்ரீயர ஸஹித நின்னொளகெ நானிருவெனே
முட்டி பூஜிஸு என்ன பாதவ அஷ்டு க்லேஷவ களெவெனே
அன்ன வஸ்த்ரத சிந்தெ மனதலி இன்னு யோசிஸபேடவே
என்ன ஸ்வாமி ஷர்வாதி வந்த்ய விட்டலானெந்து பஜிஸு நீ

அரணி ஸீதாபாய் அவர்களிடம் ஸ்ரீஸ்ரீனிவாஸன் கூறிய திவ்ய செய்தி இவ்வாறு இருக்கிறது.

கல்யாணாத்புதகாத்ராய காமிதார்த்த ப்ரதாயினே |
ஸ்ரீமத்வேங்கட நாதாய ஸ்ரீனிவாஸாய மங்களம் ||
ஷரணாிகாகி நிர்ஜனர ஒலக பிட்டு
உரகாத்ரியலி நிந்த விஜயவிட்டல வெங்கட ||

ஸ்ரீனிவாஸ மூர்த்தி இட்ட ஆக்ஞாபத்ர (ஆணை) விவரம் இவ்வாறு :

நான் என் அவதார காரியத்தினை செய்யும்போது, என் பரமபக்தனான தொண்டமான ராஜன், மிகவும் பக்தியுடன் ‘ஹே ஷங்கசக்ரதர ப்ராதேஷ மூர்த்தியே, நீ என்னுடன் பேசுவதை நிறுத்தியிருக்கிறாய். ஆகையால், உன்னுடைய ஒரு சிலா ரூபத்தை எனக்கு கொடுத்து அருள்வாயாக’ என்று பிரார்த்தனை செய்தார். அவரின் இஷ்டப்படியே, அந்த சமயத்தில் நான் பக்த வாத்ஸல்யத்தினால் ஒரு பிரதிமை ரூபமாக வந்தேன். அவனின் மகன், பேரன் என அனைவரையும் அதனை பூஜித்து, பின் தேவாலயத்தில் வைத்தனர். பின் ஸ்ரீவ்யாஸராஜர், அதற்கு பூஜை செய்தார். அதன் அவரது சிஷ்யர்கள் என்னை எடுத்துக் கொண்டு சென்று பூஜித்தனர். ஒரு காலத்தில் என்னை ஒருவரிடம் காசுக்கு விற்றுவிட்டனர். அந்த கடைக்காரர், என்னை பலவிதமாக பூஜித்தார். அப்படியே அவர்களது வம்சத்தில் பூஜையை பெற்றுக்கொண்டு, பின்னர் இவள் (ஸீதாபாய்) சென்ற பிறவியில் என்னை பூஜித்த காரணத்தால், அவளிடம் வந்து சேர்ந்து, பூஜையை ஏற்றுக் கொள்கிறேன். -- ஸ்ரீனிவாஸமூர்த்தி.

அரணி ஸீதாபாய் அவர்களின் பேரனான செஞ்சி ஸ்ரீதரராவ் (ஸ்ரீவிபுதப்ரிய விட்டல தாஸர்) அவர்கள் கண்ட ஸ்ரீனிவாஸ தேவரின் மகிமைகள் / அனுபவங்கள்:

அரணி ஸீதாபாய் அவர்கள் பூஜித்து வந்த ஸ்ரீஸ்ரீனிவாஸ தேவர், பற்பல மகிமைகளை காட்டியிருக்கிறார். அதில் எனக்குத் தெரிந்த சில மகிமைகளை மற்றும் அனுபவங்களை இங்கு சொல்கிறேன்.

ஸ்ரீனிவாஸன், வீட்டிற்கு வந்த சமயத்தில், ஸீதாபாய் அவர்களின் கணவரான ஸ்ரீராமராவ் அவர்கள் அதனை பூஜித்து வந்தார். அவருக்குப் பிறகு பாட்டி பூஜை செய்தார். ஆனால், அப்போது தீர்த்தம் வந்திருக்கவில்லை. ஒரு முறை, அந்த விக்கிரகத்தை, ஸ்ரீதந்தெ முத்து

மோகன விட்டல தாஸர் பூஜை செய்தபோது, தாஸர், பாட்டிக்கு அங்கிதம் அளித்து, ஸ்ரீனிவாஸனை பூஜை செய்து, பாட்டிக்கு ஆசிர்வாதம் அளித்துக் கொடுத்தார். அன்றிலிருந்து, ஸ்ரீனிவாஸனுக்கு, ஷுத்தோதகம் அபிஷேகம் செய்தால், அந்த தண்ணீர், கேசரி வண்ணத்தினால் கூடிய தீர்த்தமாக வந்தது. அன்றிலிருந்து ஸ்ரீனிவாஸனின் மகிமை நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே வந்தது.

பாட்டி இருக்கும்போது, ஸ்ரீனிவாஸன் தினமும் பாட்டியின் கனவில் வந்து பேசுவது வழக்கமாக இருந்ததாம். பல்வேறு பக்தர்கள் தங்களின் கஷ்டங்களுக்காக பாட்டியிடம் வந்து முறையிடும்போது, அவற்றை பாட்டி ஸ்ரீனிவாஸனின் வேண்டும்போது, அதற்கான தீர்வுகள் இருந்தால் அது என்ன என்றும், இல்லையென்றால் என்ன வழி என்றும் ஸ்ரீனிவாஸன் கூறிக் கொண்டிருந்தானாம். பாட்டி, தினமும் மாலையில், ஸ்ரீனிவாஸனுக்கு தொட்டில் பூஜை செய்து லாலி பாடி தூங்க வைப்பது வழக்கமாம். அடுத்த நாள், காலையில் ஸ்ரீனிவாஸனின் உத்தரீயத்தில், உத்தத்தி, பாதாம், திராட்சை, கற்கண்டு ஆகிய பிரஸாதங்கள் தோன்றினவாம். அவற்றை பாட்டி பக்தர்களுக்கு கொடுத்து வந்தாராம். இதைத் தவிர, பூஜையறையில் நிரப்பி வைத்த அனைத்து பாத்திரங்களின் நீரும், கேசரி தீர்த்தமாக மாறியிருக்குமாம்.

ஒரு முறை ஸ்ரீனிவாஸ பிரதிமை, தேவபெட்டியில் இருந்திருக்கவில்லை. பிறகு திடீரென்று அதில் தோன்றியதாம். அப்போது பாட்டி, 'ஸ்ரீனிவாஸா. என்னை விட்டு எங்கே போயிருந்தாய்? எனக்கு மிகவும் கஷ்டம் ஆனது. இனி என்னை விட்டு எங்கும் செல்லாதே' என்றார். அதைப் போலவே, அதன் பிறகு, ஸ்ரீனிவாஸனின் பிரதிமை காணாமல் போகவேயில்லை.

ஒரு முறை, கேஸரி வண்ண தீர்த்தம் வரவில்லை. செஞ்சி பாபுராயர், மிகவும் பயந்துவிட்டார். பாட்டி உடனே அவரிடம் 'பாபு, இன்று ஏகாதசி. ஆகவே கேசரி தீர்த்தம் வரவில்லை' என்றார். அப்போதே எங்களுக்கெல்லாம் நிம்மதி ஆனது. ஸீதாபாய் இறைவன் அடி சேர்ந்தபின், அந்த கேசரி தீர்த்தம் எப்போதும் வரவேயில்லை.

அந்த ஸ்ரீனிவாஸனை, தம் வீட்டிற்கு அழைத்து, கல்யாணம் செய்வித்தால், அந்த பக்தர்களின் விருப்பங்கள் அனைத்தும் நிறைவேறி

வந்தன. இதற்கு இன்று வரை, பல்வேறு உதாரணங்களை, ஸீதாபாயின் வம்சத்தவர் மெய்சிலிர்த்து கூறுவதை பார்க்கலாம்.

ஸ்ரீனிவாஸனின் அருளுக்கு பாத்திரரான அரணி ஸீதாபாய் 96 ஆண்டுகள் வாழ்ந்து 1971ம் ஆண்டில் இறைவன் அடி சேர்ந்தார். அவர் பூஜித்து வந்த ஸ்ரீனிவாஸனின் விக்கிரகம் இப்போது முளுபாகலிலிருந்து 40 கிமி தூரம் இருக்கும் புங்கனூரில் ஸீதாபாய் அவர்களின் உறவினர்களின் வீட்டில் இருக்கிறது. ஹரிதாஸினி அரணி ஸீதாபாய் அவர்களுக்கு நம் நமஸ்காரங்களை செலுத்துவோம்.

(அடுத்த இதழில் வேறொரு ஹரிதாஸினியைப் பற்றி பார்ப்போம்).

***

## இந்த மாத ஆராதனைகள்

**ஸ்ரீ உரகாத்ரிவாஸ விட்டலதாசர் (1871–1964)**

சக்ராப்ஜ மண்டல ஸ்தம் தம் சக்ரபாணிம்ப்ரபு ஸதா |
யோடபஜத் ஸ்ரீனிவாஸாக்யம் தம் வந்தே தாஸபுங்கவம் ||

பஜனெ ஸ்ரீனிவாஸராயர மனெதெய்வ வெங்கடேஷ |
விஜயராயரிந்த ஸ்வப்ன ஸூசித ஸ்ரீ வெங்கடேஷ |
விஜய ராகவ மங்களாங்க ஹரிவிட்டல ஸர்வேஷ
ஸுஜனபாலக உரகாத்ரி வாஸ விட்டல ஜகதீஷ ||

**ஸ்ரீமஹிபதி தாசர் (1640–1705)**

தாஸமார்க்க மனுஸ்ருத்யம் தத்யாஜ்யயோ குரு: |
ஸோமேபூயாத் ஸுவித்யாய மஹிபத்யாபிதோ பிரபு: ||

போக ஸம்ஸாரதி மதுவெ மக்கள படெதரு
யோக மார்க்க ஹிடிது த்யாகியாகி மெரெது
ஹோகி காகண்டிகியலி விராகியாகி நிந்து
ராகதி கவன கட்டி குரு மஹிமெ ஸாரிதரு
போகி ஷயன மங்களாங்கஹரி விட்டலன
ஜாகர ஜாகர நெனெது ஹரிபாத ஸேரிதரு ||

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## 28 – அணுதாரதம்யஸந்தி ஸந்தி

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | | | 26 | | 2 | | | 27 | | |
| | | | | 3 | | | 28 | | | | | | |
| | | 17 | 4 | | | | | | | | | | |
| | 34 | | | 5 | | | | 6 | | 35 | | | |
| 7 | | | | 36 | | 29 | | | 8 | | | | 18 |
| | 30 | | 19 | | | | | | | | | 20 | |
| | | | 9 | | | | | 37 | | 21 | 31 | | |
| | | | | 22 | | | | 23 | | 10 | | | |
| | | | | 11 | | | | | | | | | |
| | | 38 | | 12 | | | | | | | | | |
| 13 | | | | 32 | | | | | | | | 33 | 39 |
| | | | | | | 40 | 41 | | | | | | |
| | | | | | | | | | | 24 | | | |
| | | | 25 | | | | | | | | | | |
| 14 | 42 | | | | | 15 | | | 43 | 44 | 16 | | |

குறுக்கெழுத்துப் போட்டிகளை வடிவமைத்துக் கொடுப்பவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி

குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam @ gmail.com / அல்லது 89044 58276 க்கு வாட்சப் செய்யலாம்.

ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப், அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்து சொல்லலாம்.

**இடமிருந்துவலம்:** 1.லக்ஷ்மி பூமியின் பெயர்(5), 2.உத்தான பாதனின் அண்ணன்(6), 3.ஸேஷன்(5), 4.சந்திரனின் மகன். ஒரு கிழமை.(3), 5.மரம்(3), 6.சுக்ராசாரியார்(2), 7.அக்னி தேவனின் மனைவி(5), 8.ப்ரதான திக்குகளின் மத்தியில் இருக்கும் மூலை(2), 9.சந்திரன். கலைந்துள்ளது.(5), 10.க்ரோதம்(4), 11.பதினொன்று ருத்ரர்கள்(4), 12.கணபதியை விட உயர்ந்த மனு(5), 13.ப்ருகு ரிஷியின் மகன். கடைசி எழுத்து இல்லை(4), 14.இவர்கள் எட்டு பேர்(5),15.ப்ரஹ்ம தேவர் இந்த குணமுடைய ஜீவர்களில் இருக்கிறார்(4), 16.ஸதரூப தேவியின் வேறு பெயர்(3).

**வலமிருந்துஇடம்:** 10.எண்பது(3), 17.உத்தான பாதனின் மகன்(3), 18.மிகவும் கெட்டிக்காரன்(4), 19.யதுவம்ஸத்து ராஜரிஷி. கடைசி எழுத்து இல்லை(4), 20.அஸ்வினி தேவதைகளில் ஒருவர்(4), 21.ஷண்மகிஷியரில் ஒருவர்.(5), 22.மீதி உள்ளவர்கள்(4), 23.சூர்யன். வேறு பெயர்(4), 24.அழுக்கு(4), 25.சூர்யன். வேறு பெயர்(4).

**மேலிருந்துகீழ்:**1.கருடன்(4), 2.முதலான(4), 10.கலியின் மனைவி(4), 26.பின்னால்(3), 27.கங்காதிபதி(4), 28 கங்கை(4), 29.பதினைந்து(6), 30.பித்ரு கணத்தவர் மூன்று பேர்(6), 31.அனிருத்தன்(6), 32.சந்திர வம்ஸத்து அரசன்(4), 33.நித்ய ஸம்ஸாரிகளின் அபிமானி. கடைசி எழுத்து இல்லை(5)

**கீழிருந்துமேல்:** 13.உத்தமம்(4), 18.ஹிரண்ய கசிபுவின் மகன்(5), 20.ப்ரஹ்ம புத்திரர்(4), 22.அஸ்வினி தேவதைகளின் மனைவி(4), 34.திக்தேவதை. கலைந்துள்ளது(4), 35.பூமி(4), 36.குபேரன்(5), 37.பரமாத்மா இதன் மேல் பள்ளி கொண்டிருக்கிறார். கடைசி எழுத்து இல்லை(4), 38.ப்ரதான வாயு(3), 39.ருத்ரன்(6), 40.பன்னிரண்டு பேர்.கலைந்துள்ளது.(4), 41.பொதை(3), 42.தேவ முகம்(5), 43.குறைந்தவள்(5), 44.கர்மாபிமானி தேவதை. கடைசி எழுத்து இல்லை(4).

தொடர்

## ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர்

## 3. த்வந்த்வவே வஸந்த ஹப்ப

டாக்டர். ரேகா காகண்டகி

ஸ்வர்துனி ஜனகன குணகண கீர்த்தனெ
ஊர்த்வ ஸ்வரதி ஹாடி ஹொகளுவ அர்த்தி |
நிர்தூம ஜ்வாலியு பௌகலி ஸ்துதி
துர்தேஹிகள கிவிதாரிய கித்தி ||18

மனிதனில் இருக்கும் அனைத்து அரிஷட்வர்க்கங்களையும், காமனின் அக்னிக்கு இரையாக போட்டபின், பகவந்தனின் சிந்தனையை செய்யும் சிறப்பு செயலை சொல்கிறார். நாத்திகர்கள்கூட ஆத்திகர்களாக மாறிவிடுமாறு, கங்காஜனகனின் கீர்த்தனையை பாடுங்கள் என்கிறார்.

அவித்யா காம்ய கர்மத ஹோளி ஸுட்டு
ஹ்யாவின மைய பூதிய மாடி பிட்டு |
கோவிதர சாதுர்யக்கெ ஒடம்பட்டு சி
த்பாவ மந்திரத பிரம்மகெ லக்ஷ்யவிட்டு ||19

அவித்யா என்பது அஞ்ஞானத்தின் குறியீடு. காம்ய கர்ம, விருப்பங்கள் என இந்த மூன்றினால் செய்த ஹோளியை சுடுங்கள் என்கிறார். இந்த மூன்றும் மனிதனின் உள்ளே இருக்கும் எதிரிகள். இவற்றை சுட்டு, பின் ஞானிகளுடன் சேர்ந்து, ஹரி ஸர்வோத்தமத்வத்தை அறியும் வழியினை பிடியுங்கள். இது தத்வஞானம் அறியாதவர்களுக்கு ஸ்ரீதாஸர் கொடுக்கும் செய்தி ஆகும்.

ஹங்கேரி பேரு வ்ருக்ஷ மூல முகிதுர்
த்வாங்ககெ ஸுத்துவ ஜாணர பிடிது |
ஹங்கு முத்தின மூகுதிய ஹெண்ணவிடிது
ஷ்ருங்கார சேஷ்டெய மாடிரோ ஜடது ||20

மனதிற்குள் வேர் விட்டிருந்த ஆசை விருப்பங்களின் வேரினை பிய்த்து எறிந்து, வைராக்கியம் என்னும் பெண்ணினை ஈர்த்து, அதனுடன் ஷ்ருங்கார சேஷ்டைகளை செய்யுங்கள் என்று ஸ்ரீதாஸர் இங்கு கூறுகிறார்.

பௌகின ஜாவதலி பூதி செல்லாடி
கெளெயரு நெரெதொந்து தாண நோடி |
ஜலஜாக்ஷனுத்யமத அங்கடியல்லி |
நலிவ ஸ்வானந்ததூட பேடிகொள்ளி ||21

காமனை சுட்டு, அடுத்த நாள் விடியலில் அதன் விபூதியை ஒருவருக்கொருவர் பூசிக்கொண்டு ஆடும் ஆட்டம் அந்த ஊரின் விசேஷ பத்ததியாகும். மனிதனின் விஷய ஆசைகள் சுட்டபின், அந்த பவித்ரமான பூதியை பூசிக்கொண்டு துஷ்ட சக்திகள் சூழாதவாறு காத்துக் கொள்ளுங்கள் என்கிறார். இத்தகைய பவித்ரம், மட்டற்ற மகிழ்ச்சியை உருவாக்குகிறது. பரமாத்மனின் கடையில் இருக்கும் ஞான, பக்தி, வைராக்கியத்தினை பெற்றுக் கொண்டு, திவ்ய ஆனந்தத்தை அனுபவியுங்கள் என்னும் செய்தி இங்கு தெளிவாக தெரிய வருகிறது.

திரு திருகி பளிது நீவிந்து
ஹரிய மை பெவரின ஹொளெயல்லி மிந்து
தர தர ஹதினாரு வர்ணகளிந்த
தருண தருணியரந்தெ ஹொளெவுது செந்த ||22

இவ்வாறு சாம்பலை தடவிக் கொண்ட பின்னர், அனைவரும் நதிக்குச் சென்று, ஸ்னானம் செய்து, பரிசுத்தம் ஆவது இந்த ஆட்டத்தின் கிரமம். இங்கு தாஸர் 'திருதிருகி பளிது நீவிந்து' என்பதை திரும்பத்திரும்ப ஜனன மரணத்தின் நடுவிலான சம்சாரத்தில் நொந்து வெந்திருப்பீர்கள். இதிலிருந்து முக்தி ஆகவேண்டும் என்றால், 'ஹரியின் தேக வியர்வையில் மூழ்கி வாருஙள்' என்கிறார். அதாவது - விரஜா நதி. அதில் குளித்தால், உங்களுக்கு முக்தி கிடைக்கிறது. நிரந்தரமான யௌவனத்தை அடையும் பாக்கியம் கிடைக்கிறது. மனிதன் பிடிக்கவேண்டிய உண்மையான வழி இதுவே என்னும் உபதேசத்தை செய்கிறார்.

ஆனந்தமய வாஸுதேவன கண்டு
ஆனந்தபுரதி பக்திய நெலெகொண்டு |
ஆனந்ததீர்த்த குரு க்ருபெயிந்த
ஸ்வானந்ததோகுளியாடுவ சந்த ||23

சென்ற நுடிகளில் தாஸர், மனிதன் பிறந்தபின் சம்சாரத்தில் சிக்கி தவிக்கும் அனைத்து நிலைகளையும் கூறியிருந்தார். அவனின் குணங்கள், குற்றங்களை காட்டி விளக்கினார். அவற்றிலிருந்து தாண்டி

வரும் வழியையும் குறிப்பிட்டிருந்தார். இவ்வளவும் ஆனபின், மனிதன் பக்குவம் அடைந்தபின், பகவந்தனின் ஸ்வரூபத்தினை கண்டு மகிழ்ச்சி அடைவதைப் பற்றியும் கூறினார். அனைத்து தத்வ சித்தாந்தங்களின் ஞானத்தைப் பெற்ற பின், ஆனந்த தீர்த்தரின் க்ருபை எப்போதும் உன் மேல் இருக்கிறது. அது பரமானந்தத்தைக் கொடுக்கிறது. அத்தகைய ஆனந்தத்தின் ஆட்டத்தை ஆடு என்கிறார்.

ஈ வித ஆத்யாத்ம ஹோளிய பேத
பாவுக ஜனரிகெ பரமால்ஹாத
தேவ ரிஷி குல தெய்வ முகுந்த
காமனு கருணாப்தி கேளி கோவிந்த ||24

இது நாட்டில் ஒரு பகுதியின் பண்டிகையாக இருந்தாலும், இதில் விசேஷமான ஞானத்தைக் கொடுத்து, ஆத்யாத்மிக அர்த்தத்தை இந்த கீர்த்தனை முழுக்கவே விளக்கியவாறு, ஸ்ரீதாஸர் நமக்கு புரிய வைக்கிறார். அடுத்த நான்கு நுடிகளில், தசாவதாரத்தின் ஸ்தோத்திரம் செய்தவாறு, ஹோளி பண்டிகையின் காரணத்தினை சொல்கிறார்.

வேதவ தந்து ஹயாஸ்யன ஹோளி
பூதர தரிஸிதமரு கார்ய கேளி |
மேதினி தரலட்டாதவனொம்மெ ஹோளி ப்ர
ஹ்லாத நிஷ்டெகெ உதஸித கேளி ||25

இந்த நுடியில் வராக அவதாரம், கூர்ம அவதாரம், மத்ஸ்யாவதாரம், நரசிம்ம அவதாரங்களை வர்ணனை செய்திருக்கிறார் ஸ்ரீதாஸர்.

நானெம்போ தானவேந்த்ரன மத ஹோளி
ஹீனரிகாகி கோடலி ஹொாத்த கேளி |
ஜானகி தந்த தஷாஸ்யன ஹோளி
மானினியராள்த விடம்பன கேளி ||26

இந்த பத்யத்தில் முறையே வாமன, பரசுராம, ராம, கிருஷ்ண அவதாரங்களை ஸ்ரீதாஸர் விளக்கியிருக்கிறார் என்பதை பார்க்கிறோம்.

ஸன்மார்க்கவிடித களன மதி ஹோளி
உன்மத்த கலிய நரஸிகொந்த கேளி
சின்மயமூர்த்தி பூபாரவ ஹோளி

ஜன்மிஸி பஹறதெல்ல மோஹன ||27

இந்த பத்யத்தில் முதல் வரியில் பௌத்த அவதாரத்தையும், இரண்டாம் வரியில் கல்கி அவதாரத்தையும் ஸ்ரீதாஸர் வர்ணனை செய்திருக்கிறார்.

துஷ்ட சக்திகளால் நிரம்பிய பூமியின் பாரத்தை இறக்க, பகவந்தன் அவதரித்து வந்த 10 அவதாரங்களின் வர்ணனைகள் மிகவும் சிறப்புமிக்கதாக இருக்கின்றன.

அனந்த துரித ராஷிகளன்னு ஹோளி
அனந்த ஸுகவீவ நெனெதரெ கேளி |
அனந்த அனவத்ய குணபரிபூர்ண
அனந்தாத்புத கர்மதீன தயார்ணா ||28

ஹோளி பண்டிகை என்பது வெறும் காமனை சுடுவது மட்டுமல்ல, காமனில் அடங்கியிருக்கும் அனந்த கஷ்டங்களையும் சுடும் ஹோளி பண்டிகை என்று விளக்கும் ஸ்ரீதாஸர், அத்தகைய கஷ்டங்களை பரிகரிக்கும் பகவந்தனை நினை என்கிறார். இத்தகைய ஆத்யாத்மிக அர்த்தம் கொண்ட ஹோளி ஆடினால், எப்போதும் பகவந்தன், உன்னை காப்பான் என்னும் தத்வ போதனை, இந்த கீர்த்தனையில் தெரிய வருகிறது.

சௌபதிய ரத்னமாலிய மாடி பாட
ஸ்ரீ பிரஸன்ன வெங்கட கிடிரூப கிருஷ்ண
ஈ பரியலி ஹோளிமாடி பக்தரு
தா பாலிஸுவ புருஷ வரிஷ்டா ||29

இது வெறும் கீர்த்தனை அல்ல. நான்கு வரிகளால் ஆன ரத்னமாலை என்று இதன் தாத்விக சிறப்பினை விளக்குகிறார். பரம்பரையாக வந்த இந்த ஹோளி பண்டிகையை, தாஸரின் ஆத்யாத்மிக பாவனை நிரம்பி, அவருடைய சிறப்பினை காட்டுகிறது. இதில் விசேஷம் என்னவென்றால், தாஸரின் காலத்திலிருந்து நடந்து வரும் இந்த ஹோளி பண்டிகை, இன்றைக்கும் இதே பத்ததியிலேயே நடந்து கொண்டு வருகிறது. பிரஸன்ன வெங்கட தாஸரின் இந்த கீர்த்தனையானது, ஜீவாத்ம பரமாத்மா (த்வந்த்வ) என்னும் பேதத்தின் ஸித்தாந்தத்தின் சாரமாக தெரிய வருகிறது. சமூக நலனும், பற்பல நீதி போதனைகளும்கூட இதில் நாம் பார்க்கலாம். (அடுத்த இதழில் புதிய கட்டுரை துவங்கும்).

*** (தொடரும்)

தொடர்

**கன்னட கிரந்தங்கள் அறிமுகம்**

**பலவிது பாள்துதகெ**

## ஸ்ரீ ஜகன்னாத தாஸரின் பலவிது பாள்துதகெ
## (அணு ஹரிகதாம்ருத ஸாரம்)

17வது பத்யத்தில் தாஸர், ஸ்ரீ ஹரியின் கதைகளைக் கேட்கும் பொழுது மிகவும் உற்சாகத்துடன் மெய் மறந்து மகிழ்ச்சியுடன் ஆனந்தக் கண்ணீருடன் உத்தமமான ஸ்ரீ ஹரியின் தரிஸனத்தை மிகவும் விரும்பி இரவும் பகலும் விஷய ஆசைகளைத் துறந்து வாழ்வதே இவ்வாழ்க்கைக்கான அர்த்தம் என்பதை "ஹரிகதெ பரமாதரதலி கேளுத மரெது தனுவ ஸுக ஸுரியுதலி" முதலான பதங்களினால் குறிப்பிட்டுள்ளார்.

18 முதல் 21 வரையிலான பத்யங்களில் பகவான் ஸ்ரீஹரி பஞ்ச பூதங்கள், பஞ்சதன்மாத்திரைகள், இந்திரியங்கள் முதலியவைகளில் கொண்டுள்ள ரூபங்கள் மற்றும் புரியும் காரியங்களை சிந்தனை செய்யும் வகையில் தாஸர், ஸப்தம் முதலான தன்மாத்திரைகள் மற்றும் இந்திரியங்களில் அவற்றின் நடவடிக்கைகளை நடத்துபவனான முக்யப்ராணாந்தர்கத வாஸுதேவன்தான் அனைத்து விஷயங்களையும், உட்கொள்கிறான் என்பதையும், மூன்று லோகங்களிலும் உள்ள நிலம், நீர், ஆகாயத்தில் சஞ்சரிக்கும் பிராணிகளிலும், அதிசயப்படும் பலவிதமான மிகவும் சாமர்த்தியசாலியான ஸ்ரீ ஹரியின் 'நைஜ' நாமக சிறப்பு ரூபத்தை சிந்தித்து பூஜித்து எப்போதும் இருப்பதும், பூமியில் இருக்கும் பரமாணுகளை முழுமையாக எண்ணுவது கூட சாத்தியம் ஆனால் மாதவனின் ஆனந்தாதி குணங்களை அனாதி காலத்திலிருந்து எண்ணி முடிப்பது சாத்தியமே இல்லை என அறிந்து பாடுவதும், ப்ரக்ருதியில் இருந்து அனைத்து தர்மங்களின், க்ஷணம் முதல் அனைத்து கால அளவுகளின் பெயர்களைக் கொண்ட ஸ்ரீ ஹரி, வேதாதி ஆகமங்கள், அகராதி எழுத்துக்கள், உலகில் உள்ள பரமாணுக்கள், கடலில் உள்ள உயிரினங்கள் ஆகிய அனைத்திலும், காடு, மலை ஆகிய அனைத்திலும் அரணிக் கட்டையில் மறைந்திருக்கும் நெருப்பு போல மறைந்து இருக்கிறான் என்பதையும் அறிந்து கொள்வதே இந்த வாழ்க்கை வாழ்வதற்கான அர்த்தம் என்பதை "விஷயேந்த்ரிகளலி ததபிமானி ஸுமனசரொளு நிந்து நியாமிஸித", "மேதினி பரமாணாம்பு கணங்கள

நைத பஹுது பரிகணனெயனு மாதவனானந்தாதி குணங்கள நாதிகாலதலி அகணித வெம்புதே", "குணகாலாஹ்வய ஆகமார்ண கும்பிணி பரமாண்வாம்புதிகளலி வனகிரி நதி மொதலாததரொரள கிம்தன கதபாவகனந்திஹ நெம்புதே" போன்ற பதங்களினால் விவரித்துள்ளார்.

22 மற்றும் 23ம் பத்யங்களில் தாஸர், பகவான் ஜீவர்களுடன் அனாதி காலத்திலிருந்து அனந்த காலம் வரை ரக்ஷிப்பதைக் குறிப்பிடும் வகையில், எரிதழலில் நெருப்பு இருப்பதைப் போல், அனிருத்தனான ஸ்ரீ ஹரி ஜீவர்களில் ஒவ்வொரு கணமும் விட்டு விலகாமல் 'ஏகோ நாராயண ஆஸித்" முதலான வேத மந்திரங்களினால் 'ஸர்வோத்தமன்' என்று புகழப்படும் மகிமைகளை அறிவதும், இமைகள் கண்களை விட்டு விலகாமல் இருப்பதைப் போல அழிவில்லாதவனாக புருஷ நாமக ஸ்ரீ ஹரி எவ்வித எதிர்பார்ப்பும் இன்றி தன் வயிற்றில் பிரம்ம, ருத்ராதி தேவதைகளைத் தன் கருணா பார்வையினால் ரக்ஷிக்கிறான் என்றும் அறிந்து அவனை வணங்குவதே இப்பிறப்பின் பயன் என்பதாக, "அனலங்கார னொள்ளித்தோ பாதியொள் அனிருத்தனு சேதனரொளகெ க்ஷணபிட்டகலதெ", "பக்ஷ்மகளக்ஷிகள கலத லிப்பந்தெ அக்ஷர புருஷ" முதலான பதங்களினால் வர்ணிக்கிறார் தாஸர்.

பத்யம் 24ல் பகவத் பக்தர்களுக்கு செய்யும் சேவையின் முக்கியத்துவத்தை மீண்டும் வலியுறுத்தும் தாஸர், ஒருவன் தன்னை ஸ்ரீ மத்வ அவதாரத்தின் சங்கத்தைச் சேர்ந்தவன் (விஷ்ணு பக்தன்) என்று உணர்ந்து சொல்லிக் கொண்டு, ஸுஜீவிகளான ஞானிகளின் வீடுகளில் மரியாதையுடனும், பக்தியுடனும் பழகியவாறு அவர்களுடன் சேர்ந்து ஸ்ரீ ஹரியின் மஹிமைகளை, கதைகளைக் கேட்டவாறு சிறந்தவனாகுவதே இந்த வாழ்க்கையின் பலன் என்பதை, "ஸத்யவி ஜனர பவனங்களலி ஸஞ்சரிஸுத ஸுகதா ஸ்ரவண மாடுதலி ப்ரவரனாகுவுதெ" போன்ற பதங்களினால் விளக்கியுள்ளார்.

25 மற்றும் 26 பத்யங்களில் ஸ்ரீஹரியே கார்ய, காரண கர்த்தா மற்றும் ஸ்ருஷ்டி, லய கர்த்தா என்பதைக் கூறும் வகையில் தாஸர், காரண காரியங்கள் அனைத்திலும் நிறைந்திருக்கும் ஸ்ரீ ஹரி அம்ஸ, ஆவேஸ, விஹித, ஸஹஜ, ப்ரேரக, ப்ரேர்ய மற்றும் பல ரூபங்களில் பல நாமங்களினால் அழைக்கப்படுவனாக அனைத்து இடங்களிலும் ஏற்றத் தாழ்வுகள் (பேதங்கள்) இல்லாமல் உள்ளான் என்று அறிவதும், வேத, புராண, இதிஹாஸங்களிலிருந்து தினமும் ஸ்ரீமன் நாராயணனின் மஹிமைகளை பக்தியுடன் பாடியவாறு க்ருதிபதி ப்ரத்யும்ன நாமக ஸ்ரீ

ஹரியே ஸ்ருஷ்டி ஸ்திதி லய காரணன் என்றும், இதர தேவதைகள் ஸ்வதந்திரமாக செய்பவர்கள் அல்ல என்றும் அறிவதே, இப்பிறப்பின் பயன் என்பதை "கார்ய காரணாந்தர்கத", "ப்ரேரக ப்ரேர்யாஹ்வய ஸர்வத்ர விகார வில்லதலெ", "க்ருதிபதி ஸ்ருஷ்டி ஸ்திதி லய காரண" போன்ற பதங்களினால் குறிப்பிட்டுள்ளார்.

கடைசியாக 27வது பத்யத்தில் ஸேஷாசலம் என்னும் பரம பவித்ரமான க்ஷேத்திரத்தில் வாஸம் புரியும் பரம பவித்ரமான சரித்திரத்தைக் கொண்டவனான கல்யாணாதி நற்குணங்களைக் கொண்டவனான, அனைவரையும் மேம்படுத்தும், ஸுந்தரனான, ஸ்வதந்திரன், ஸர்வோத்தமன் ஸ்ரீஹரி ஜகன்னாத விட்டலன் ஒருவன் அல்லதே வேறு ஒருவர் இல்லை என்று அறிந்து வாழ்வதே இந்த வாழ்க்கை வாழ்வதன் அர்த்தம் என்பதை "பாவன்ன சரித ஸத்குண பரிதஜன்ய ஜனக லாவண்யனேக நிதி ஜகன்னாத விட்டல" போன்ற பதங்களினால் வர்ணித்துள்ளார் தாஸர்.

பகவானின் மகிமைகளை போற்றும் வகையிலும், த்வைத சித்தாந்தத்தை பறைசாற்றும் வகையிலும் அமைந்த இத்தகைய உயரிய க்ரந்தத்தை தினமும் பாராயணம் செய்து, விஸேஷமான அர்த்தங்களைத் தெரிந்து கொண்டு ஸ்ரீ ஜகன்னாத தாஸரின் அந்தர்யாமியான ஸ்ரீ லக்ஷ்மி நரஸிம்மரின் அனுக்ரஹத்திற்குப் பாத்திரராவோமாக!

ஸ்ரீ கிருஷ்ணார்பணமஸ்து !! **S.லக்ஷ்மிபதிராஜா, சென்னை**

**YouTube Channel - Jagannatha Kesava**

* மேற்கண்ட நமது யூட்யூப் சேனலில் வரவிருக்கும் தொடர் - ஸ்ரீஜகன்னாத தாஸரின் கிருதி - பாண்டுரங்க பாரிஜாத - தமிழ் அர்த்த விளக்கங்களுடன்.

* இதனைத் தொடர்ந்து வரவிருப்பது - ஸ்ரீரமா காந்த விட்டல தாஸரின் அற்புதமான கிருதி - ஹரிதாஸ தர்பண.

* நமது சேனலுக்கு சப்ஸ்க்ரைப் செய்து, ஏற்கனவே உள்ள + வரவிருக்கும் தொடர்களையும், அனைவரும் கேட்டு, நம் ஹரிதாஸ ஸாகித்யத்தின் சிறப்பினை அறிய வேண்டும் என்று விரும்பி கேட்டுக் கொள்கிறேன்.

தொடர்

**ஹரிகதாம்ருதசார மஞ்சரி 360**

**By ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர்**

**68. ஹ்ருத$^3$ய தொ$^3$ளகி$^3$ஹூதஷ்டத$^3$ள கம**
**லத$^3$ரொளகெ$^3$ ப்ராதே$^3$ஷ நாமக**
**நுதி$^3$த பா$^4$ஸ்கரனந்தெ தோர்பனு பி$^3$ம்ப$^3$னெந்தெ$^3$னிஸி |**
**பது$^3$ம சக்ர ஸுஷங்க$^2$ ஸுக$^2$தா$^3$**
**ங்தகடக முகுடாங்கு$^3$லீயக**
**பத$^3$க கௌஸ்துப$^3$ஹார க்$^3$ரைவெயாதி$^3$ பூ$^4$ஷிதனு ||(8-6)**

அடுத்து, ஸ்ரீதாஸர், ஹ்ருதயத்தின் உள்ளே எப்படி இருக்கிறது? என்பதை சொல்வதற்கு முயற்சி செய்கிறார். நம் இதயத்தில் 8 தள கமலம் இருக்கிறது. அதில் ப்ராதேஷ நாமகனான பகவந்தன், உதய சூரியனைப் போல, சங்கு, சக்ர, கதா, பத்ம என்னும் 10 விரல்களை தரித்திருக்கிறான். அவன் அபாரமான விலைமதிப்பற்ற ஆபரணங்களை தரித்திருக்கிறான் என்பதை அறிவாயாக. முத்து, ரத்ன, தங்க மாலைகளை தரித்திருக்கிறான் என்று அறியவேண்டும் என்கிறார்.

அதாவது, பரமாத்மன் மிகவும் ஒளிர்பவனாகவும், லட்சும்யாத்மகமான ஆபரணங்களால் அலங்கரிக்கபட்டிருக்கிறான் என்பதையும் அறிய வேண்டும். இவ்வாறாக சிந்தித்தால், நம்மில் அவனது இருப்பின் அறிவு அதிகமாகிக் கொண்டே போகிறது.

**69. நெலெஸிஹரு தி$^3$க்தே$^3$வதெக$^3$ளி**
**க்கெலதி கர்ணங்க$^3$ளலி தீர்த்த**
**ங்க$^3$ளிகெ$^3$ மானிக$^3$ளாத$^3$ ஸுரநதி$^3$முக்$^2$ய நிர்ஜரரு**
**ப$^3$லத$^3$ கிவியலி இருதிஹரு பா$^3$**
**ம்பொ$^3$ளெய ஜனக த்ரிவிக்ரமனு நி**
**ர்மலினரனு மாடு$^3$வனு ஈபரி சிந்திஸுவ ஜனர ||(8-12)**

நம் காதில் தேவதைகள் இடது வலது பாகங்களில் இருக்கின்றனர். அங்கு கிழக்கில் ப்ராணாதிகள். தெற்கில் யமராஜன். மேற்கில் வருணன். வடக்கில் சந்திர, குபேரர்கள் இருக்கின்றனர் என்று அறிந்து, இடா நாடியானது, தொப்புளின் இடது வலது பாகங்களில் பாய்கிறது என்றும் அறிய வேண்டும். காதுகளில் தீர்த்த அபிமானி தேவதைகள் இருந்து, அங்கு தேவதைகளின் அந்தர்யாமி ரமா த்ரிவிக்ரமர் இருக்கிறார்கள்

என்று அறிந்தால், அப்படி அறிபவர்களை ஸ்ரீஹரி நிர்மலமாக ஆக்குகிறான் என்கிறார் ஸ்ரீதாஸர்.

**70. ரோமக$^3$ளொளு வஸந்த த்ரிககு**
**த்தா$^3$ம முக$^2$தொளக$^3$க்$^3$னி பா$^4$ர்க$^3$வ**
**தாமரஸ ப$^4$வ வாஸுதே$^3$வரு மஸ்தகதொ$^3$ளிஹரு ।**
**ஈ மனதொ$^3$ளிஹ விஷ்ணு ஷிக$^2$தொ$^3$ளு**
**மாமஹேஸ்வர நாரஸிம்ஹ**
**ஸ்வாமி தன்னனுதி$^3$னதி$^3$ நெனெவரபம்ருத்யு பரிஹரிப ||(8-16)**

மனிதனுக்கு எதோ ஒரு வழியில் துர்மரணம் வந்தே தீர்கிறது. இதிலிருந்து எப்படி தப்பிப்பது என்று கேள்வி கேட்கும் தாஸர், இந்த சரணத்தில் இப்படியாக நீ அனுசந்தானம் செய்தால், அந்த துர்மரணம் வருவதில்லை என்கிறார். அது என வழி?. ரோமங்களில் வஸந்த நாமக ஸ்ரீஹரி. முகத்தில் அக்னி (பார்க்கவ / பரசுராம). தலையில் வாஸுதேவன். மனதில் விஷ்ணு. ஷிகையில் ருத்ராந்தர்கத ந்ருஸிம்ஹன் இருக்கிறான் என்று அறிவாயாக என்கிறார். இவ்வாறாக அறிந்து, அனுசந்தானம் செய்தால், துர்மரணம் பரிகாரம் ஆகிறது என்கிறார்.

**71. ஆம்னயப்ரதிபாத்$^3$ய ஸ்ரீப்ர**
**த்$^3$யும்ன தே$^3$வனு தே$^3$ஹதொ$^3$ளகெ$^3$ ஸு**
**ஷும்னதீடா$^3$ பிங்க$^3$ள$^3$தி$^3$ விஷ்வாதி$^3$ ரூபத$^3$லி ।**
**நிர்மலாத்மனு வாணி வாயு ச**
**துர்முக$^2$ ரொளித்த$^3$கி$^2$ல ஜீவர**
**கர்ம கு$^3$ணவனுஸரிஸி நடெ$^3$வனு விஷ்வவ்யாபக$^1$னு ||(8-20)**

வேதங்களுக்கு, ப்ரத்யும்னன் எப்படி ப்ரதிபாத்யனாக இருக்கிறானோ, அதைப் போலவே, நம் இந்த தேகத்தின் உள்ளே, இட, பிங்கள, ஸுஷும்னா நாடிகளில் விஷ்வ என்னும் நாமத்தினால் பரிசுத்தனாக இருக்கிறான். அங்கு உள்ளே, பிரம்மா, சரஸ்வதி, பாரதியர் காரியங்களை செய்துகொண்டு, ஜீவர்களில் இருந்து, ஸ்வபாவ மற்றும் கர்மங்களுக்கு ஏற்பவாறு, அவர்களில் செயல்களை செய்கிறான்.

**72. அமித மஹிமனபார கு$^3$ணக$^3$ள**
**ஸமித வர்ணாத்மக ஸ்ருதி ஸ்ம்ருதி**

**க3மிஸலாப1வெ தத3பி4மானிக3ளெந் தெ3னிஸிகொம்ப3 |**
**க1மலஸம்ப4வ ப4வ ஸுரேந்த்3ரா**
**த்3யமரரனுதி3ன திளியலரியரு**
**ஸ்வமஹிமெக3ளா த்3யந்த மத்4யக3ளரிவ ஸர்வக்3ஞ ||(8-30)**

பகவந்தனின் மகிமைகள் / குணங்கள் அபாரம். இதனை அறிவதற்கு, பிரம்மாதி தேவதைகளுக்கும் சாத்தியம் இல்லை. ஸ்ருதி, ஸ்ம்ருதிகளில் சொல்லபட்டிருக்கும் குணங்கள் மட்டுமே அவனிடம் இருக்கின்றன என்றும் அறியக்கூடாது. பிரம்மாதி தேவதைகள் அவரவர்களின் யோக்யதைக்கேற்ப, பகவந்தனை அறிந்திருக்கிறார்களே தவிர, அவர்களுக்கும் அவன் முழுமையாக தெரிவதில்லை. தன் ஆதி அந்த்யத்தை அவன் யாருக்கும் சொல்லாமல், ஸர்வக்ஞ, ஸர்வோத்தமனாக இருக்கிறான்.

**73. தே3வதே3வேஷன ஸுமூர்த்தி க**
**ளேவரக3ளொளக3னவரத ஸ**
**ம்பா4விஸுத பூஜிஸுத நோடு3த ஸுகி2ஸுதிரு பி3ட3தெ3 |**
**ஸ்ரீவர ஜகன்னாத2விட்டல**
**தா ஒலிது3 காருண்யத3லி ப4வ**
**நோவ பரிஹரிஸுவனு ப்ரவித1த1 பதிதபாவனனு ||(8-32)**

பக்தர்களின் பிரார்த்தனைகளை நிறைவேற்றும் பகவந்தன், நம்மை உத்தாரம் செய்வதற்காக, அவனின் அனந்த மூர்த்திகளை எப்போதும் ஸ்மரணை செய்து, மானசிக பூஜை செய்தவாறு, பார்த்தவாறு, மகிழ்ச்சியுடன் இருப்பவர்களை, ஜகன்னாத விட்டலன், தரிசனம் அளித்து, அபார கருணையுடன் நம் இந்த சம்சார சமுத்திரத்திலிருந்து காப்பாற்றுகிறான் என்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

**74. ஹரியெ பஞ்சாஷத்3வரண ஸு**
**ஸ்வர உதா3த்த1னுதா3த்த ப்ரசய**
**ஸ்வரித ஸந்தி4 விஸர்க3 பி3ந்து3க3ளொளகெ3 தத்3வாச்ய |**
**இருவ தத்தன்னாம ரூபக3**
**ளரிதுபாஸனெ கை3வரிளெயொளு**
**ஸுரரெ ஸரி நரரல்ல அவராடு3வுதெ3 வேதா3ர்த்த2 ||(9-1)**

அக்ஷரமாலையில் இருக்கும் 51 வர்ணங்களில் அனைத்து வர்ணங்களின் வாச்யனும் அவனே ஆகிறான். இந்த அக்ஷர மாலை, வேத உபநிஷத், காவியங்களில் அந்தந்த சந்தர்ப்பங்களுக்கு ஏற்றவாறு வந்திருக்கிறது.

இவற்றில் இருக்கும் ஸ்வர, வர்ண, உதாத்த, விஸர்க்க, பிந்து என அனைத்தியும் சரியாக அறிந்து, எப்படி சொல்ல வேண்டுமோ, அதைப்போலவே உச்சரித்தால் அவர்கள் தேவதைகள் ஆகின்றனர். அவர்கள் நரர்கள் அல்ல. அத்தகையவர்கள் சொல்வது அனைத்துமே வேதார்த்தங்களே ஆகும் என்று சொல்லி, அங்கும் ஸ்ரீஹரியே வாச்யனாக, தத் பின்னனாக, ததந்தர்யாமியாக இருக்கிறான் என்று நாம் அறிய வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர்.

**75. த$^{3}$ஹிக தை$^{3}$ஷிக காலிக த்ரய**
**க$^{3}$ஹன கர்மக$^{3}$ளுண்டு இத$^{3}$ரொளு**
**விஹித கர்மக$^{3}$ளரிது நிஷ்காமகனு நீனாகி$^{3}$ |**
**ப்$^{3}$ருஹதி நாமக பா$^{4}$ரதீஷன**
**மஹித ரூபவ நெனெது$^{3}$ மனத$^{3}$லி**
**அஹரஹர் ப$^{3}$க$^{3}$வந்தக$^{3}$ர்ப்பிஸு பரமப$^{4}$கு$^{3}$தி$^{1}$யலி ||(9-4)**

இந்த பத்யம் மிகவும் எளிமையாக இருக்கிறது. ஆனால் இதன் பின்னர் உள்ள அர்த்தங்கள் ஏராளமானவை. நமக்கு விதிக்கப்பட்ட கர்மங்களை நாம் செய்ய வேண்டும் என்கிறார். அதாவது, விதி, விதிவிலக்குகளை அறிந்து, அதற்கேற்ப அவற்றை எந்தவொரு பலன்களையும் எதிர்பார்க்காமல், ப்ருஹதி நாமக ஸ்ரீஹரியின், ப்ருஹதி ப்ரதிபாத்ய முக்ய பிராணாந்தர்கதர் இருவரும் நமக்குள் நின்று, தினமும், ஒவ்வொரு நொடியும் நம் ஆயுள் முழுமையாக நடத்துகின்றனர் என்று நினைத்து, எப்போதும் மிகவும் மகிழ்ச்சியுடன், பக்தியுடன் அவற்றை அவனுக்கே அர்ப்பிக்க வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர்.

நாம் செய்யும் பாவ, புண்ய கர்மங்கள் மூன்று விதங்களில் செய்கிறோம். நித்ய கர்ம, நைமித்திக கர்ம, தீர்த்த க்ஷேத்திரங்களில் செய்யத்தக்க கர்மங்கள். கால சம்பந்தமான இந்த காரியங்களில் பல்வேறு விதங்களில் தோஷங்கள் ஆகின்றன. இந்த செயல்களை செய்யும்போது, அவற்றை ஸ்ரீஹரியே செய்விக்கிறான் என்று அவனுடைய ஸ்மரணையுடன் செய்து, ப்ருஹதி நாமக ஸ்ரீஹரியே ஸர்வகர்தா, காரயித்ரா என்று அனுசந்தானம் இருக்க வேண்டும் என்கிறார். இவ்வாறாக, செய்யும் கர்மங்களில் அஹரஹ - ஒவ்வொரு நொடியும் ஏகமேவ ஸ்ரீஹரிக்கு முக்ய பிராணரின் மூலம் அவற்றை சமர்ப்பிக்க வேண்டும் என்கிறார். (இதுவே கர்மாசரணையின் கிரமம்).

**76. புருஷ நாமக சர்வஜீவரொ**
**ளிருவ தே3ஹாகா1ர ரூபதி3**
**கரண நிய்யாமக ஹ்ருஷீகப னிந்த்ரியங்க3ளலி |**
**துரிய நாமக விஷ்வ தா ஹ**
**ந்னெரடு3 பெ3ரளுளிது3த்தமாங்க3தி3**
**எரட3தி4க1 எப்பத்துஸாவிர நாடிக3ளொளிப்ப ||(9-10)**

பகவந்தன் புருஷ நாமகன். எப்படியெனில், புருஷர்களில், ஸ்த்ரியர்களில், நபும்ஸகர்களில் புருஷனாகவே இருக்கிறான் ஆகையால், அந்தந்த ஜீவராசிகள், அவர்களின் தேகத்தினால் எப்படி இருக்கிறார்களோ அதைப் போலவே இருக்கிறான். ஸ்தூல தேகத்தில் $7^2$,000 நாடிகளில் அந்தர்யாமியாக ‘விஷ்வ’ என்று அழைக்கப்படுகிறான். அதாவது, அவன் தேகத்தில் நாடிகளில் முழுமையாக வ்யாபித்து இருக்கிறான் என்று அறியவேண்டும் என்று கூறுகிறார்.

**77. க3ருட ஸேஷ ப4வாதி நாமவ**
**த4ரிஸி பவன ஸ்வரூப தே3ஹதி3**
**கரண நிய்யாமகனு தானாகி3ப்ப ஹரியந்தெ1 |**
**ஸரஸிஜாஸன வாணி பா4ரதி**
**ப4ரதனிந்தொ3ட3கூ3டி3 லிங்க3த3**
**லிருதிஹரு மிக்காதி3 தே1யரிகி3ல்லவாஸ்தா2ன ||(9-12)**

நம் இந்த தேகத்தில் 24 பேர் தத்வாபிமானி தேவதைகள் இருக்கின்றனர். அதிலும் விசேஷமாக இடது பாகத்தில் கருட சேஷாதிகள் உள்ளனர். வலது பாகத்தில் பாரதி பரதாதிகள் இருக்கின்றனர். ஆனால், லிங்க சரீர அல்லது $7^2$,000 நாடிகளில் பிரவேசம் என்பது, வாயு பாரதியர்களுக்கு மட்டுமே தவிர, கருட சேஷருக்கு இல்லை என்கிறார். இதிலிருந்து, கருட சேஷர்களைவிட வாயுதேவரின் நிலை அதிகம் என்பதை அறிய வேண்டும் என்கிறார். வாயுதேவரும் பகவந்தனுடன், நியாமகனாக இருக்கிறான் என்று அறி என்கிறார் ஸ்ரீதாஸர். (ஆனாலும், ஸ்ரீஹரியின் தாஸராகவே இருந்து, ஜீவர்களில் செயல்களை செய்கிறார் என்று அறிய வேண்டும்). இவ்வாறாக, மஹாலட்சுமி கூட பகவந்தனுடன் இருக்கிறாள் என்று சிந்திக்க வேண்டும் என்று அடுத்த பத்யத்தில் கூறுகிறார்.

(தொடரும்)

## இந்த மாத ஆராதனைகள்

**ஸ்ரீவிஜயதாசர் (1682-1755)**
அஞ்ஞான திமிரச்சேதம் புத்தி ஸம்பத் பிரதாயகம் |
விக்ஞானம் விமலம் ஷாந்தம் விஜயாக்ய குரும்பஜே ||

விஜயராயர பாத நிஜவாகி நம்பலு
அஜனபித தானெ ஒலிவ
த்விஜகேதனன குணவ வ்ரஜவ கொண்டாடுவ
ஸுஜன மந்தாரனீத
வி எந்து நுடியலு விஷய லம்படதூர
ஜ எந்து நுடியலு ஜனன ஹானி
ய எந்து கொண்டாடெ யமபடரு ஓடுவரு
ராய எந்தேனலு ஹரிகாய்வ வரவீவ ||
விஜயப்ரபு பாதயுகள வனஜ பஜிஸுவெ
விஜயஸகன தோரிரெந்து நிஜதி பேடுவெ |
அஜருத்ரதேவரிகிந்த கஜவரதனே
நிஜதி ஸ்ரேஷ்டதமனெந்து ஈ ஜகக்கெ ஸாரிதெ
ஹுக்கியனித்த சாகிராயகெ கருணெ தோரிஸிதெ
பக்கி பேடித ஸ்த்ரீயள மனெலி போஜன மாடிதெ
ஹிக்கிலி மங்களாங்க ஹரிவிட்டலன ஒலிஸிதெ
பக்கி பக்கி விஜயவிட்டலகெ மனதி நமிஸிதெ ||

***

தொடர்

**ஹரிதாஸர்களின் சிந்தனைத் துளிகள்**

**மத்வ சித்தாந்தத்தின் சாரம்**

மத்வ சித்தாந்தத்தின் சாரத்தை ஸ்ரீபுரந்தரதாசர் இந்த பாடலில் தொகுத்து நமக்கு மிகப்பெரிய உதவியை

செய்திருக்கிறார். அனைவரும் தினமும் படிக்கவேண்டிய இந்தப் பாடலை பார்ப்போம்.

ராகம்: சௌராஷ்ட்ர. தாளம்: ஜம்பே

சத்ய ஜகதிது பஞ்ச பேதவு நித்ய ஸ்ரீகோவிந்தன
க்ருத்யவரிது தாரதம்யதி கிருஷ்ண நதிகெந்து சாரிரை ||ப||

ஜீவ ஈசக்கெ பேத சர்வஸ்வ ஜீவ ஜீவக்கெ பேதவு
ஜீவ ஜட ஜட ஜடக்கெ பேதவு ஜீவ ஜட பரமாத்மகே ||1||
மானுஷோத்தமரதிக க்ஷிதிபரு மனுஜ தேவ கந்தர்வரு
ஜான பிதரஜானரு கர்மரு உக்த சேஷ சதஸ்தரு ||2||

கணப மித்ரனு சப்தரிஷிகளு வன்ஹி நாரத வருணரு
இனஜகெ சம சந்திர சூர்யரு மனுசுதெய ஹெச்சு ப்ரவஹனு ||3||
தக்ஷ சம அனிருத்த குரு சசி ரதி ஸ்வயம்புவ ரார்வரு
கக்ஷ ப்ராணனிகிந்த காமனு கிஞ்சிததிகனு இந்த்ரனு ||4||

தேவேந்திரனிகிந்த மஹாருத்ர சம சேஷ கருடரு
கேவல ருத்ர சேஷ கருடக்கெ தேவி பாரதி சரஸ்வதி ||5||
வாயுவிகெ சமரில்ல ஜகதொளு வாயுதேவரே பிரம்மரு
வாயு பிரம்மகெ கோடி குணதிந்ததிக ஷக்தளு ஸ்ரீரமா ||6||

அனந்தகுணதிம் லகுமிகதிகனு ஸ்ரீபுரந்தரவிட்டலனு
கன சமரு இவகில்ல ஜகதொளு ஹனும ஹ்ருத்பத்ம வாசிகே ||7||

ஸ்ரீமதாசார்யர் நிறுவிய சித்தாந்தத்தில் முக்கியமான தத்வம் ஹரியின் ஸ்வதந்த்ரய, பஞ்சபேத மற்றும் தேவதா தாரதம்ய. இவை இந்தப் பாடலில் விளக்கப்பட்டுள்ளன.

ஆரோகண தாரதம்ய கிரமத்தில், சுருக்கமாக பாடியிருப்பது, தாசர் அனைவருக்கும் செய்த உதவியாகும். இந்தப் பாடலை அனைவரும் தினமும் பாடவேண்டும்.

ஸ்ரீமதாசார்யரின் சித்தாந்தத்தை பரப்புவதற்கென்றே அவதரித்த ஸ்ரீபுரந்தரதாசர் ஒரு மகாபுருஷர். மிகவும் அழகாக இவர் இயற்றியுள்ள இந்தப் பாடலை அனைவரும் மனனம் செய்து தினமும் பாராயணம் செய்யவேண்டும்.

***

**அக்டோபர் 2022 இதழில் வந்த குறுக்கெழுத்துப் போட்டியில் சரியான விடை எழுதி புத்தகப் பரிசு பெறுபவர்கள்:** திருமதி. ஷாந்தி பத்மனாபன், திருநெல்வேலி; திருமதி. சந்திரா, கோவை; திருமதி. உஷா ரகோத்தமன், பெங்களூரு; திருமதி. ஜெயஸ்ரீ ராமசந்திரன், சென்னை; திருமதி. லலிதா, திருநெல்வேலி; திருமதி. கீதா ராமசந்திரன், திருநெல்வேலி, திருமதி. கிரிஜா ஜயதீர்த்தாச்சார், ஸ்ரீரங்கம், திருமதி. லீலா ரங்கவிட்டல், சென்னை, திருமதி. லதா நரசிம்ம மூர்த்தி, திருப்பரங்குன்றம்.

## நவம்பர் 11 – ஸ்ரீகனகதாஸர் ஜெயந்தி

**ஸ்ரீகனகதாசர் (1508–1606)**

யமாம்ஷஸ்ய பராபக்த்யா ஸுப்ரஸன்ன ஹரிம் ஸ்வயம் |
யஸ்யாசார்யோ வியாஸராய: தம் வந்தே கனகாபிதம் ||

கனகதாஸர கதெய கேளலு ஸுகப்ரத
கனககிரி திம்மப்ப தானெ பந்தொலித
கனகஸிரி ஸம்பத்து காளகதி களெயலு
கனஸினலி கரெதவ கரபிடிது பொரெத
கனக்ருதி முண்டிகெ விபுதர தலெ தூகிஸலு
அனக மங்களாங்க ஹரிவிட்டல லீலெகள தோரித

***

**தொடர்**

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### 28. விக்னேஷ்வர ஸந்தி விடைகள்

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 ஆ | 25 ம | ய | | | 2 சா | ரு | தே | ஷ் | ண | ன் | | |
| க | ங் | ரு | 16 ப் | | மி | | | 26 பி | த | ஜி | 17 வி | ரி |
| த | கு | | ர | 3 நோ | 27 க | னீ | ய | ன் | 28 அ | | வே | க் |
| 29 மோ | | 4 வ | க் | த் | ர | 18 கா | | ன | ன | ண | கி | ங் |
| ப | னி | ன் | 19 ஸ | | ண | | 5 அ | ப | வ | ர் | க | 20 அ |
| தி | ஸ | ம் | வி | க | 21 ஏ | 6 ல | க் | ன | த் | வ | ள் | |
| 7 த | ன | ப | | 8 ம் | ரு | தி | ர | | ய | 9 த | னு | ஜ |
| | ம | ட | 10 க | டு | க | ரு | ணி | | ன் | க் | | |
| ன | 11 ஸு | ர் | ப | | 30 மூ | 12 வ் | ரு | கோ | த | 31 ர | | |
| 13 க | ந் | த | ர் | ப | | யா | ர் | 22 பா | | | கி | |
| 32 கோ | | த் | 33 த | னி | யோ | 23 கு | ய | ன | த | கி | னா | 24 மை |
| | | 34 உ | 14 ஹோ | ரொ | ட | ல | | 15 க | டி | | 35 பி | |

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 4 : இதழ் 1


| நிர்வாக ஆசிரியர் | துணை ஆசிரியர் |
|---|---|
| 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன் | ' தாச சாகித்ய சேவா ரத்ன' |
| ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ், | திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன் |
| 380, 2A Main, 16th Cross, JP Nagar | **ஆசிரியர் குழு உறுப்பினர்கள்** |
| 4th Phase, பெங்களூரு 560078 | திரு. முரளிதர தாசரு, |
| Ph.: 89044-58276. | திருமதி. நிர்மலா நரசிம்மன், |
| haridasa.vijayam@gmail.com | திரு. லட்சுமிபதிராஜா, |
| jagannathakesava.blogspot.com | திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ் |


## ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்
## டிசம்பர் 1 முதல் 31 வரை, 2022

டிசம்பர் 8 : மார்கசீர்ஷ பௌர்ணமி - ஸ்ரீவித்யா ப்ரஸன்ன தீர்த்தர், ஸோஸலெ

டிச 14 : மா. பகுள சஷ்டி - ஸ்ரீநரசிம்ம விட்டல தாஸர், ப்யாகவாட

டிச 20 : மா. ப. த்வாதசி - ஸ்ரீகுருகோவிந்த விட்டல தாஸர், மைஸூரு

டிச 23 : மா. அமாவாசை - ஸ்ரீகுரு ஸ்ரீஷ விட்டல தாஸர், கனககிரி

# ஆசிரியர் பக்கம்

வேதாந்த ஸாம்ராஜ்யத்தில் பீடாதிபதியாக இருந்தாலும், கன்னட ஹரிதாஸ ஸாகித்யத்திற்கு அற்புதமான பங்களிப்பினை செய்தவரான ஸ்ரீவித்யா ப்ரஸன்ன தீர்த்தரின் ஆராதனை நாள் டிசம்பர் 8. ஸ்வாமிகளின் மத்வவிஜய ஸார ஸங்க்ரஹ கிருதியை, அதற்கு முன்னர் அவரது நாடகங்கள் மற்றும் கட்டுரைத் தொகுப்பினை வெளியிட்டிருக்கிறோம். மேலும் அவரது கிருதிகளைப் பற்றிய புத்தகங்களை வெளியிட அருளுமாறு குருகளிடமே வேண்டிக் கொள்கிறோம்.

ஸ்ரீஜகன்னாத தாஸரின் தந்தையான ஸ்ரீநரசிம்ம விட்டல தாஸரின் ஆராதனை டிசம்பர் 14 மற்றும் பற்பல அற்புத கீர்த்தனைகளை நமக்கு அளித்த ஸ்ரீகுரு ஸ்ரீஷ விட்டல தாஸரின் ஆராதனை டிசம்பர் 23ல் வருகிறது.

மற்றும் 20ம் நூற்றாண்டின் தலைசிறந்த ஹரிதாஸரான, நமது பரமகுருகளான, ஸ்ரீகுருகோவிந்த விட்டல தாஸரின் ஆராதனை டிசம்பர் 20ம் தேதி வருகிறது. 250+க்கும் மேற்பட்ட அங்கித உபதேசங்கள், 750க்கும் மேற்பட்ட தேவரநாமாக்களை இயற்றிய ஸ்ரீதாஸர், ஸ்ரீமதாசார்யர் இயற்றிய தஷோபனிஷத் பாஷ்யங்களை அப்படியே த்ரிபதி / ஷட்பதி பத்யங்களில் கன்னடத்தில் அற்புதமாக கிருதி வடிவமாக இயற்றி நமக்கு பேரருள் செய்திருக்கிறார். இந்த மிகப்பெரிய வேலையை தமிழில் மொழிபெயர்த்து சிறிது சிறிதாக அடுத்த ஆண்டில் வெளியிட வேண்டும் என்று சங்கல்பம் ஆகியிருக்கிறது. ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால் அது நடைபெற வேண்டும் என்று வேண்டிக் கொள்கிறோம்.

எக்காலங்களிலும் நினைக்க வேண்டிய இந்த ஹரிதாஸர்களை, அவரவர்களின் ஆராதனை நாட்களில் சிறப்பாக நினைத்து வேண்டிக் கொள்வோம்.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

தொடர்

## கேசவ நாமா

## 45. அப்ஜ பவ பித

ஆஸுரப[4]ஞ்சன பி[3]ஸஜ ப[4]வபித ஈஷ சர்வேஷா
ஒஸெது பே[3]டு[3]வெ க[1]ஸரு கர்மவ ஹரிஸொ ஹ்ருஷிகேஷ ||10

பிரம்மனின் தந்தையான சர்வேஷனே, தைத்யர்களைக் கொன்றவனே, உன்னை வணங்குவேன். என் வினைப்பயன்களை அறுத்து, எனக்கு அருள்வாயாக ஹே ஹ்ருஷிகேஷனே.

ப[3]த்த[3]ஜீவன அப[3]த்த[3] மாட[3]லு தி[1]த்தி[3] ஸ்ருஜிஸிதெயோ
ஸத்குருவெ மத் பொ[1]த்தி[3]கெய களெ பத்மனாபனே ||11

சம்சாரத்தில் மூழ்கியுள்ள ஜீவர்களை, அதிலிருந்து மீட்டு அருள்வாயாக, சத்குருவான பத்பனாபனே.

ப்ரேமபூர்ணனே ஸாமஸன்னுத சிரிமனோஹர
தா[4]மத்ரய சுத்ராம வந்தி[3]த பாலிஸை தாமோதர ||12

பிரேமபூர்ணனே, சாமகானத்தால் வணங்கப்படுபவனே, தாம-த்ரயனே, லட்சுமியின் தலைவனே, தேவேந்திரனால் வணங்கப்படும் தாமோதரனே எனக்கு அருள்வாயாக.

பங்கஜாஸன வினுத என்ன மன ப[1]ங்க[1] களெயய்யா
வெங்கடா பி[3]ருதா[3]ங்க ஜய ஜய சங்கருஷண ||13

பிரம்மனால் வணங்கப்படும், என் மனதின் பாவங்களைப் போக்கும், வெங்கடா ரூபத்திலிருந்து அபின்னனான (வேறுபாடு இல்லாத) சங்கர்ஷண ரூபியே, உனக்கு ஜய ஜய (மங்களம் உண்டாகட்டும்).

வாஸவாதி[3] த்விஜேஷ பூஜ்யனெ விஷ்வ வ்யாபகனே
ஸ்ரீஷ ஸத்[3]மனெ வாசுதேவனெ போஷிஸை பரமாத்மனே ||14

இந்திர, கருடர்களால் பூஜிக்கப்படும், விஷ்வவ்யாபக, வாசுதேவ பரமாத்மனே, என்னைக் காப்பாற்று.

முத்து மோகன ஹ்ருத்யுனினனவத்ய நிரவத்ய
ஸத்[3]யத[3]லி அபன்ன பாலனெ பொரெயோ பிரத்யும்ன ||15

முத்து மோகனரூபியான பிரத்யும்னரூபியான பரமாத்மனே, அடைக்கலம் புகுந்தவர்களை காப்பாற்றுபவனே, உன்னையே நம்பியிருக்கிறேன், அருள்வாயாக.

அனக[4] நின்னய சரணகெருகு[3]வெ கு[3]ணவனதி பொரெயய்ய
மனவ ஹர்னிஸி நிலிஸை நின்னல்லி அனிருத்த ||16

நற்குணங்கள் நிரம்பியவனே, தோஷங்கள் அற்றவனே, உன் பாதங்களைப் பற்றுவேன். அனிருத்த மூருதியே, எப்போதும் என் மனம் உன்னிலேயே இருக்குமாறு அருள்வாயாக.

கரிவரனு தவசரண ஸரிஸிஜ நம்பி[3] மொரெயிடலு
கரத சக்ரதி த[1]ரிது[3] நக்ரன பிஸூட[1] தொ[3]ரெ புருஷோத்தம ||17

கஜேந்திர யானை உன்னை சரணடைய (உன் சுதர்சன சக்கரத்தால்) முதலையைக் கொன்று அவனைக் காப்பாற்றியதைப் போல, என்னையும் காப்பாற்றுவாயாக புருஷோத்தமா.

நிதி[4] ப[4]வாதி[3] சுரேந்த்ர வந்தித பாஹி பத்மாக்ஷ
ப[3]தி[3]க[3] நீயன த[3]ணிப[1]ரே த[3]ர சக்ரத[4]ர அதோக்ஷஜ ||18

சங்கு சக்கரத்தை தரித்திருப்பவனே. தாமரைக் கண் உள்ளவனே, பிரம்ம, ருத்ர, இந்திராதிகளால் வணங்கப்படுபவனே, அதோக்ஷஜ மூர்த்தியே, உன்னை சரணடைந்தவர்களை காப்பாற்று.

தரள கரெயலு ப[4]ரதி கம்ப[3]தி ப[3]ந்த[3] த்ரிபதாஹ்வ
துருள ஹிரண்யன தரிது[3] ப[4]க்தன ஸலஹித்யோ நரசிம்ஹனே ||19

பிரகலாதன் அழைத்தவுடன் உடனடியாக தூணிலிருந்து வெளிப்பட்டு ‘த்ரிபதாஹ்ய’ என்னும் பெயருள்ள நீ, நரசிம்ம ரூபத்தினால் ஹிரண்யகனைக் கொன்று பக்தனை காப்பாற்றினாய்.

நிச்சதவ ஸச்சரிதெயனு உச்சரிஸி பொரெயய்ய
மச்சகச்சப ரூபி அச்யுத ஸலஹோ ச்யுதிதூ[3]ர ||20

மத்ஸ்ய, கூர்மரூபியான அச்யுதனே, எப்போதும் உன் சரிதத்தையே இடைவிடாமல் பாடுமாறு எனக்கு அருள்வாயாக.

ஸானுகூலவு சகல சாதன நின்ன ப[4]ஜிசுவகெ
ஞானகம்ய அனாதிரோக[3]வ நீகோ[3] நீ ஜனார்த்தன ||21

இந்த சாதனை சரீரத்தில் அனைத்து அனுகூலங்களையும் செய்திருக்கும், ஞானங்களைக் கொடுப்பவனான ஜனார்த்தனனே, அனாதியான அஞ்ஞானத்தை பரிகரிப்பாயாக.

ஸாந்த்ர நீலவ மேக[4]வர்ணனே காயோ க்ருபாஸாந்த்ர
சந்த்ர ரவி ஸ்மர கோடி சுந்தர பாஹி உபேந்திர ||22

சூர்ய, சந்திர, மன்மதன் ஆகியோரைவிட கோடி மடங்கு ஒளி பொருந்திய / அழகான நீல வர்ணனான, உபேந்திரனே என்னைக் காப்பாற்று.

மரதி[3] எஞ்சலி ஸவிது ஷபரிய காய்தெ முரவைரி
த்வரதி[3] த்வத்பத[3] வனஜ காம்பு[3]வ ஹதனருஹு ஶ்ரீஹரி ||23

முரவைரியான ஶ்ரீஹரியே ராமனாக, ஷபரி கொடுத்த பழத்தை சுவைத்து, அவளுக்கு அருளியதைப் போல, எனக்கு உன் பாதங்களைக் காணும் வழியை சீக்கிரமாக காட்டுவாயாக.

ஜிஷ்ணு சக[2] சிஷ்டேஷ்ட பரிஹரிசய்ய மத்ருஷ்ணா
க்ருஷ்ணெக[3] க்ஷய வஸனதா[3]தனெ காயோ ஶ்ரீகிருஷ்ண ||24

அர்ஜுனனின் நண்பனே, பக்தர்களின் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றுபவனே, திரௌபதிக்கு அக்ஷய வஸ்திரத்தைக் கொடுத்தவனே, ஶ்ரீகிருஷ்ணனே, என் ஆசைகளைப் போக்கு.

நிருத நின்னய சரண புஷ்கர மது[4]பனெனிஸய்ய
ஸ்மரிபரக[4] பரிஹரிப குருகோவிந்தவிட்டலய்யா ||25

பாவங்களைப் பரிகரிக்கும் குருகோவிந்த விட்டலனே, எப்போதும் உன் சரண கமலங்களை நினைத்திருக்குமாறு அருள்வாயாக என்று கேசவாதி ரூபங்களின் சிந்தனை செய்கிறார் தாசர்.

## 46. ஶ்ரீ கேஷவ சுரசேவ்ய

ஶ்ரீகேஷவ சுரசேவ்ய நமோ ஶ்ரீகர ஜாஜேஷ நமோ ||ப

சுரர்களால் வணங்கப்படும் ஜாஜேஷ - ஜாஜி = ஹம்ஸ பறவை. பிரம்மனின் வாகனம். அவருக்கு ஈசன் ஜாஜேஷன். அத்தகைய ஸ்ரீகரனான உனக்கு வணக்கங்கள்.

நாராயண ஸ்ரீநாத[2] நமோ நாரதாதி முனிவந்த்[3]ய நமோ ||1

தத்வங்களால் விளக்கப்படக்கூடியவனே நாராயணனே ஸ்ரீநாதன். ரிஷி நாரதர்களால் வணங்கப்படக்கூடியவன்.

மாத[4]வ மங்கள நாம நமோ பூ[4]தே[3]வி பயனாஷ நமோ ||2

ரமாதேவிக்கு தலைவனான மாதவனே; வராகரூபத்தினால் பூதேவியை தன் கக்ஷையில் (வகுப்பில்) சேர்த்த நீ, பயங்களை பரிகரிப்பவன்.

போ[4]கி[3]ஷயன கோவிந்த நமோ பா[4]க[3]வதப்ரிய போ[4]க[3] நமோ ||3

சேஷ சயனனான விஷ்ணுவே, கோவிந்தனாக இருக்கிறான். 18 புராணங்களில் ஒன்றான பாகவதத்தில் வரும் அனைத்து ஹரிபக்தர்களால் வணங்கப்படுபவன்.

ஜக[3]பரிபாலக விஷ்ணு நமோ க[2]க[3]வாஹன குணபூர்ண நமோ ||4

உலகத்தைப் படைத்தவன், நற்குணங்கள் நிறைந்தவன், கருட வாகனனுமான விஷ்ணுவிற்கு என் நமஸ்காரங்கள்.

மது[4]சூதன மத்ப்ராண நமோ விதி[4]ஷிவ ரிஷிக[3]ண ஸ்துத்யநமோ ||5

பிரம்ம ருத்ர ரிஷிகளால் வணங்கப்படுபவன். என் பிராணனான மதுசூதனனுக்கு என் வணக்கங்கள்.

வாமன மூருதி ஸ்வாமி நமோ பீமானுஜப்ரிய நிக[3]ம நமோ ||6

பீமானுர்ஜனர்களின் ப்ரியமான வேதங்களுக்கு அபிமானியான வாமன மூர்த்திக்கு என் வணக்கங்கள்.

த்ரிவிக்ரம ஸ்ரீவக்ஷ நமோ பவித்ர ப[2]லத[3] ஷ்யாம நமோ ||7

ஸ்ரீயை தன் வக்ஷஸ்தலத்தில் வைத்திருப்பவன், ஷ்யாம சுந்தரனான, பலன்களைக் கொடுப்பவனான, த்ரிவிக்ரமனுக்கு என் நமனங்கள்.

ஸ்ரீத[4]ர தேவானுத நமோ ஆதார மூருதி அமித நமோ ||8

அனைவரைவிட அதிகமான அழகு, ஞானம், வீரம், செல்வம் ஆகிய வற்றைப் பெற்றிருப்பவன், தேவர்களால் வணங்கப்படக்கூடியவனான ஸ்ரீதரனுக்கு என் வணக்கங்கள்.

ஹ்ருஷிகேஷ ஹ்ருத்வாஸிநமோ பஷுபதி பாவன புண்ய நமோ||9

மனோபிமானினியான பசுபதியை புனிதனாக்குபவன்; அனைவரின் இதயத்தில் வசிப்பவனான ஹ்ருஷிகேசனுக்கு நமோ நமோ.

பத்பனாப[4] பரமாத்ம நமோ ஷுத்த ஸத்வ ருசி ரூப நமோ ||10

72,000 ரூபங்களைப் பெற்றிருக்கும் பரமாத்மனே பத்பனாபனே உனக்கு வணக்கங்கள். 3 குணங்கள் x 6 ரசங்கள் x 4 ரச குணங்கள் x 1000 ரூபங்கள் = 72,000. (ஸுசிர, ருசிர, சுகந்த, ஷுசி என்பதே 4 ரசகுணங்கள் ஆகும்).

தாமோத[3]ர தை[3]த்யாரி நமோ காம ஜனக கரிவரத[3] நமோ ||11

மன்மதனின் தந்தை, கஜேந்திரனை காப்பாற்றியவன், தைத்யர்களைக் கொல்பவனான தாமோதரனுக்கு என் வணக்கங்கள்.

(தொடரும்)

**தற்போது நமது Blogல் தினம் ஒரு பத்யமாக வந்து கொண்டிருப்பது : https://dasa-sahitya.blogspot.com/**

* ஸ்ரீப்ரஸன்ன ஸ்ரீனிவாஸ தாஸர் இயற்றிய - விஷ்ணு சஹஸ்ரநாம பாஷ்ய - கன்னட பத்யங்கள். இதன் அர்த்த விளக்கங்கள் - தமிழில்.
* 1000 நாமங்களுக்கு, (4 வரிகளைக் கொண்ட) 1000 கன்னட பத்யங்களை பாஷ்ய ரூபமாக இயற்றிக் கொடுத்திருக்கிறார் தாஸர்.
* தினமும் 3 பத்யங்களின், தமிழ் விளக்கங்களை நமது மேற்கண்ட blogல் படிக்கலாம்.

ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ் சார்பாக இதுவரை வந்திருக்கும் அனைத்து புத்தகங்களையும் வாங்கி விட்டீர்களா?

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

### காவிய நடைக்கு சாஸ்திர நடையின் மேற்பூச்சு

**Prof. A.V. நாவட**

தத்வசுவ்வாலி என்னும் பெயரே சொல்வதுபோல், தத்வங்களை விளக்குவதே இந்தப் பாடலின் நோக்கம். ஆனால் இதை சிறுமிகளுக்காக / பெண்களுக்காக இயற்றியிருக்க வேண்டும். ஏனென்றால், ஹரிகதாம்ருதசாரத்தில் கண்ட இவரது கவித்திறனானது, அந்த மொழித்திறனானது இங்கு காணப்படவில்லை. 'தோல் உரித்த வாழைப்பழம்' போல மிகவும் அழகாக, சரளமாக, 'அணோரணீயான் மஹதோ மஹீயான்' என்னும் கடோபநிஷத்தின் மறைபொருளானது தத்வசுவ்வாலியில் பேசப்பட்டிருக்கிறது.

அணுவிகணுதரனாகி க$^{4}$னகெ$^{1}$ க$^{4}$னத$^{1}$ரனாகி
அணுமஹத்து$^{1}$க$^{3}$ள தெ$^{3}$ஸெயிந்த |தெ$^{3}$ஸெயிந்த$^{3}$ நீ
விலக்ஷண னெனெஸி கொ$^{1}$ம்பி$^{3}$ ஸ்ருதியொளு

ஸ்ரீஹரி மற்றும் அவரின் பக்தர்களின் சம்பந்தம் அத்வைத, விசிஷ்டாத்வைதங்களில் விதவிதமாகப் பேசப்பட்டிருக்கின்றன. த்வைத சித்தாந்தத்தைப் பின்பற்றுபவரான ஜகன்னாததாசர், த்ரிபதி என்னும் மூன்று வரிகளில் இதை அடக்கியதைப் பார்க்கும்போது, சாஸ்திரங்களை மிகவும் எளிமையாக சொல்லும் திறன் படைத்தவர் என்பது புலனாகிறது.

ஜகது$^{3}$த$^{3}$ர நீனாகி ஜகதொ$^{3}$ளகெ$^{3}$ நீனிப்பெ
ஜகதி ஜீவரனு ஸ்ருஜிஸுவி |ஸ்ருஜிஸி ஜீவரொளித்து
ஜகதன்யனெந்து கரெஸுவி

மேலோட்டமாகப் பார்க்கும்போது மிகவும் எளிமையாகக் காணும் த்ரிபதியில், த்வைத சித்தாந்தம் எப்படி அடக்கப்பட்டிருக்கிறது என்பதை டாக்டர்.R.G.குடி அவர்கள் இப்படியாக விளக்குகிறார். ஸ்ரீஹரியே படைப்பாற்றலாக மாற்றம் கொள்வார் என்று சொல்லும் அத்வைத சித்தாந்தமும், 'இந்த உலகத்திற்கு ஸ்ரீஹரியே உபாதான-காரணம் (material cause)' என்னும் விசிஷ்டாத்வைத மதத்தின் சித்தாந்தமும் சரியல்ல என்பதை இங்கு 'ஜகதன்ய' என்னும் சொல்லின் மூலம் விளக்கியிருக்கிறார். ஆகவே, ஸ்ரீஹரியானவர் இந்த உலகத்திற்கு நிமித்த-காரணம் (efficient cause - அவரே

அனைத்தையும் படைக்கிறார்) என்று நிரூபித்து, உலகத்திலிருந்து அவர் தனியாக விலகி இருக்கிறார் என்கிறார். இதுவே த்வைத சித்தாந்தத்தின் கருத்து என்கிறார். (R.G.குடியின் தாசசாகித்ய ஒரு சித்தாந்ததைப் பற்றி ஆராய்ச்சி. பக்கம் 308. 1995).

ஜகன்னாததாசரின் பாடல்கள், தத்வசுவ்வாலி மற்றும் ஹரிகதாம்ருதசாரம் என்று இந்த மூன்றிலும் சில சமயம் ஒரே விஷயங்கள் பேசப்பட்டிருக்கின்றன. இந்த மூன்றினையும் படிப்பவர்கள் கற்றறிந்தவராக, த்வைத சித்தாந்தத்தைத் தெரிந்தவராக இருக்கவேண்டும். பாடல்கள் மக்களின் நடுவே ஆடிப்பாடி பரப்புவதற்கு ஏற்றவையாகும். இப்படியாக த்வைத சித்தாந்தத்தை மக்களிடம் கொண்டுபோய் சேர்ப்பதற்கு தத்வசுவ்வாலிகளை நன்றாகப் பயன்படுத்திக்கொண்டார்.

இவரின் படைப்புகளில் ஹரிகதாம்ருதசாரம் மிகவும் முக்கியமானதாகும். த்வைத சித்தாந்தத்தின் களஞ்சியம் என்று அதை அழைக்கின்றனர். சரளமான கன்னடத்தில், பாமினி ஷட்பதி என்னும் நுடியில், த்வைத சித்தாந்தத்தின் அனைத்து தத்வங்களும் இங்கு சொல்லப்பட்டிருக்கின்றன. அனைத்து விஷயங்களும் அடங்கியிருக்கும் இந்த காவியத்திற்கு பற்பல உரைகள் வந்திருக்கின்றன. சமஸ்கிருதத்திலும் இதற்கான உரை வந்திருப்பது மிகவும் சிறப்பு.

இந்த காவியத்தின் சிறப்பினைப் பற்றி டாக்டர். K.M.கிருஷ்ணராயர் இவ்வாறு தெரிவிக்கிறார். சமஸ்கிருத மொழித்திறமை, சம்பிரதாயம், சித்தாந்தத்தின் ரகசியங்களைப் பற்றிய தெளிவான அறிவு, ஸ்ரீஹரியிடம் சுத்தமான பக்தி, அபரோக்ஷஞானம் ஆகிய பல சிறந்த தகுதிகளைப் பெற்றிருந்த ஸ்ரீஜகன்னாததாசர், ஹரிதாச பரம்பரையை பிரகாசமாக வளர்த்தெடுத்தார். த்வைத சித்தாந்தத்தின் ரகசியங்களை மிகவும் ஆணித்தரமாக எடுத்துரைக்கும் திறன், அறிவு இவற்றுடன் எளிமையாக சொல்லும் தாசர் 'விஷால ஹ்ருதயத ரசயோகி' (பரந்த மனம் கொண்டவர், விற்பன்னர்) என்கிறார்.
(கிருஷ்ணராவ் ஸ்ரீஹரிகதாம்ருதசார சௌரப, பக்கம் 4. 2009).

ஹரிகதாம்ருதசாரத்தின் முக்கிய நோக்கம் ஹரிசர்வோத்தமத்வத்தை நிலைநாட்டுதல். அதற்கான விளக்கங்களுக்கு, நாம் அன்றாட

வாழ்க்கையில் பயன்படுத்தும் உதாரணங்களையே தாசர் மேற்கோள் காட்டுகிறார். அதுமட்டுமல்லாமல் தமது பாடல்களில், அவர் பொதுவாக பயன்படுத்தும் சமஸ்கிருத மொழியைவிட்டு சரளமான கன்னடத்தையே பயன்படுத்திருப்பதை கவனிக்கவேண்டும். அனைத்து ஜீவர்களிலும் ஸ்ரீஹரியானவர் நிலைத்திருந்தாலும், அந்த ஜீவன் மூலமாகவே அனைத்து செயல்களையும் செய்து முடித்தாலும், அந்த செயல்கள் மூலம் கிடைக்கும் நல்ல / கெட்ட பலன்கள், பாவ / புண்ணியங்கள் எதுவும் ஸ்ரீஹரிக்குப் போய் சேர்வதில்லை என்பதை ஜகன்னாததாசர் கீழ்க்கண்ட ஸ்லோகத்தில் விளக்கியிருக்கிறார்.

கா1த3க1ப்பிண ஹிடி3து3 ப3டி3யலு
வேத3னெயு லோஹக3ளிக3ல்லதெ3
ஆதுதே1னை அனலகா3வ்யதெ ஏனமாடித3ரு ।
ஆதிதே3வனு சர்வஜீவர
கா1து கொண்டிஹனொளஹொரகெ3 து:
க்கா2திக3ளு சம்பந்தவாகுவவேனு சின்மயகெ3 ||
(கருணா சந்தி ஸ்லோகம் #27)

இங்கு இரும்பிற்கு விழும் அடியானது அதன் முந்தைய கர்ம பலன் ஆகும். ஸ்ரீஹரிக்கும் இதற்கும் சம்பந்தம் இல்லை. இதை திரு K.M.கிருஷ்ணராயர் ஒரு உதாரணத்துடன் விளக்குகிறார். சிறைச்சாலையில் இருக்கும் கைதிகள், அந்த அதிகாரி சொல்வதைப் போல நடக்கவேண்டும்தானே? தண்டனை கைதிகளுக்குதான், அதிகாரிகளுக்கல்ல. இருவரும் ஒரே இடத்தில் (சிறைச்சாலை) இருந்தாலும், அவரவர் தகுதி, இடம் இதற்கேற்ப அவர்களின் அனுபவங்கள் வேறுபடுகின்றன. (கிருஷ்ணராவ், ஹரிகதாம்ருதசாரம், பக்கம் 52). ஸ்ரீஹரி நெருப்பைப் போல நம்முள் இருக்கிறார். கர்மபலன் கண்டிப்பாக அனைவருக்கும் உண்டு.

மத்வசாஸ்திர பண்டிதர், சம்ஸ்கிருத மொழியில் விற்பன்னரான ஜகன்னாததாசர் கன்னட மொழியை ‘கலுஷத பாஷே’ (கலங்கலான மொழி) என்று அழைத்தாலும், அந்த கன்னடத்திலேயே இந்த கிரந்தத்தை எழுதியதன் மூலம், கன்னடர்களின் பெருமதிப்பைப் பெற்றார்.

அப்படியே பிறகு 18ம் நூற்றாண்டில் வந்த ஜகன்னாததாசர், சம்ஸ்கிருதத்தில் மட்டுமே சொல்லமுடிகின்ற அரிய விஷயங்களை, தமது தத்வசுவ்வாலி மற்றும் ஹரிகதாம்ருதசாரம் மூலம்

கன்னடத்தில் மிகத் திறமையாக இயற்றினார். இதற்கே நான் - ஜகன்னாததாசர் கன்னட மொழிக்கு சம்ஸ்கிருத மொழியின் மேற்பூச்சு / அலங்காரம் செய்தார் - என்கிறேன்.

***

# சுற்றுச்சூழல் பாதுகாப்பு - ஸ்ரீனிவாச சிரனூர்கர்

கன்னட சாகித்யத்தில் மிகவும் முக்கியமான பங்கு வகிக்கும் ஹரிதாச சாகித்யத்தை பக்த- பகவந்தனின் சம்பந்தப்பட்ட விஷயங்கள் மட்டுமே என்று பார்த்தது மற்றும் கொண்டாடியதே அதிகம். ஹரிதாசர்கள் அனைவரும் ஸ்ரீமத்வாசார்யர் நிறுவிய தத்வவாதம், த்வைத சித்தாந்த, பஞ்ச-பேத, ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு தங்கள் கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார்கள் என்பது நிஜம். அப்படி சொல்வதால், தாச சாகித்யத்தை வெறும் பக்த- பகவந்தனின் மற்றும் சம்பிரதாயமான விஷயங்களைப் பேசும் விஷயம் என்னும் ஒரு கட்டத்தில் அடைக்கத் தேவையில்லை.

தாசர்களின் கிருதிகளை கீர்த்தனை என்று பொதுவாக சொல்கிறோம். கீர்த்தனை என்றால் புகழ்ச்சி, ஸ்துதி, பாடுவது, என்று சில அர்த்தங்களை சொல்லலாம். கீர்த்தனை என்பது இறைவனைக் குறித்துப் பாடும் பாடல். தேவரநாம என்றும் சொல்லலாம்.

அப்படியெனில், கீர்த்தனைகளின் சாரம் இறைவன், பரமாத்மன், ஸ்ரீஹரி என்றால், ஹரிதாசர்கள் வெறும் பகவந்தனின் குணகானங்களை மட்டுமே பாடி தங்கள் சாகித்யங்களை வளர்த்தனரா? இதுமட்டும் செய்தால் கன்னட சாகித்யம் வளர்ந்து வருவதற்கு சாத்தியமா? என்றெல்லாம் கேள்விகள் எழுகின்றன. உண்மையில் பார்க்கப் போனால், ஹரிதாசர்கள் இவற்றைத் தவிர பல்வேறு இதர விஷயங்களைப் பற்றியும் பாடியிருக்கின்றனர்.

(தொடரும்)

ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப், அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்து சொல்லலாம்.

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

## ஸரஸாபாய் (1882-1984)

கோலார், கௌடகெரெயில், பாஸூ ஹனுமந்தராவ் மற்றும் காவேரிபாய் அவர்களின் மகளே ஸரஸாபாய். 6 அக்கா தங்கையர், 3 அண்ணன் தம்பியர் உடன் பெரிய குடும்பத்தில் 1882ம் ஆண்டில் பிறந்தவர் ஸரஸாபாய். இவருக்கு பள்ளிப் படிப்பு சரிவர கிடைக்கவில்லை. பெண் குழந்தைகளை படிக்க வைக்கும் பழக்கமும் அப்போது இருந்திருக்கவில்லை. இவர் சித்ரதுர்காவின் கிரிமினல் வக்கீலாக இருந்த கிருஷ்ணராயரின் மூன்றாவது மனைவியாக வாழ்க்கைப்பட்டார். இவருக்கு 5 ஆண் மற்றும் 3 பெண் குழந்தைகளும் பிறந்தனர்.

இதன் பிறகு, ஆண்டு 1934ல் இவரது கணவர் இறைவனடி சேர்ந்தார். இதனால் மனம் நொந்த ஸரஸாபாய் அவர்களின் மனம், ஆத்யாத்மத்தின் பால் சென்றது. அதிக நேரத்தை தாஸகூட மற்றும் ஹரி பஜனா மண்டலிகளின் தொடர்பிலேயே கழித்தார்.

தேவராயனதுர்காவில் இருந்தவரான தந்தெமுத்து மோகனவிட்டல தாஸரின் அருளுக்கு பாத்திரராகி, அவரிடமே 'ரமாவல்லப விட்டல' என்னும் அங்கிதத்தைப் பெற்று கீர்த்தனைகளை இயற்றத் துவங்கினார். ஆத்யாத்ம சிந்தனை மற்றும் வேலைகள் அதிகமான காரணத்தால், அவர் இயற்றிய கிருதிகளின் எண்ணிக்கை குறைவாக இருந்திருக்கலாம் என்று தோன்றுகிறது. இது வரை ஹரிதாஸினி ஸரஸாபாய் அவர்கள் இயற்றியதாக கிடைத்துள்ள கீர்த்தனைகள் 16 மட்டுமே. கணபதி, சிவ, ஹரி, லட்சுமி, ஆஞ்சனேயர் ஆகிய தேவ தேவியர்களின் ஸ்துதி, குருராயரின் ஸ்துதி மற்றும் குரு ஸ்துதியை இயற்றியிருக்கிறார்.

ஸரஸாபாய் அவர்களின் கீர்த்தனைகளின் நடை, மிகவும் எளிமை மற்றும் அற்புதம். அவை புராண அம்சங்களைக் கொண்டு பக்தியையே பிரதானமாக கொண்டிருக்கின்றன. அவற்றிலிருந்து சில கீர்த்தனைகளை இங்கு பார்ப்போம்.

**1. குருகளின் பாத வர்ணனை:**

எந்தா பாதவ கண்டேனா எந்தா பாதவ கண்டெ ||ப
காந்தெ ஸ்ரீ லகுமிய காந்தனன்னு நோடி நர்த்தன மாடித பாத ||அப

கொட்டு அங்கிதவன்னு மனஸிட்டு நோடதெ களெத

கெட்டவள மேலெ ஸிட்டுமாடதலென்ன
த்ருஷ்டிய கொட்டினகெ மத்து அங்கிதவித்த ||1

ரமாவல்லப விட்டலன்ன ஸ்மரணெயனிருத
மாடுவ வரகள பாலிஸி பரமானுக்ரஹ
வித்த கருணாளுவாத ஈ குருகள பாத ||2

லட்சுமிகாந்தனைக் கண்டு நர்த்தனம் ஆடிய, மற்றும் தமக்கு அங்கிதம் அளித்து அருளிய குருகளின் பவித்ரமான பாதங்களைக் கண்டு ஹரிதாஸினி ஸரஸாபாய் அவர்கள் தம் மகிழ்ச்சியை வெளிப்படுத்துகிறார்.

**2. கணபதி ஸ்துதி**
கஜவதன நின்ன சரணகெ நமிஸுவெ ||ப
அஜன அய்யன நாம மரெயதெ நுதிஸெய் ||அப

ஜகன்னாததாஸரிகெ குருவு நீனெந்தெனிஸி
ஜகதொளகெ ஹரிகதாம்ருதஸார ஸுரிஸிதெ ||

ஜகன்னாததாஸரின் குரு கோபாலதாசர். அவர் கணபதியின் அம்சமாக கருதப்படுகிறார். அவரே ஸ்ரீஜகன்னாததாஸருக்கு தம் ஆயுளின் 40 ஆண்டுகளை தானம் செய்து, ஹரிகதாம்ருதஸார கிரந்தம் எழுத வைத்தார் என்னும் விஷயத்தை இங்கு விளக்கியிருக்கிறார் ஹரிதாஸினி.

**3. ருத்ரஸ்துதி**
ஶம்புஶங்கரனே நினகொந்திஸி பேடுவெ
பிம்பதல்லிருவ மமஸ்வாமி தோரெய் ||ப

ருத்ரதேவனே மனஶுத்திய நீ மாடி
ஶ்ரத்தெயிந்தலி அனிருத்தன தோரெய் ||1
ஸித்தகுணகளொடெய உத்தரிஸென்ன
ஹத்துவாஹன ப்ரத்யும்னன தோரெய் ||2
நந்திவாஹன நினகொந்திஸி பேடுவெ
பந்தன பிடிஸி கோவிந்தன தோரெய் ||3
ரமாவல்லப விட்டலனாமன அனுகால நுடிவந்தெ வரகள நீ நீடெய் ||7

அனிருத்த, பிரத்யும்ன, கோவிந்த ஆகிய ஸ்ரீஹரியின் பற்பல ரூபங்களை எனக்கு தரிசனம் செய்விப்பாயாக என்று ருத்ரதேவரை துதிக்கிறார் ஹரிதாஸினி.

**4. லட்சுமி ஸ்துதி**

ஏனு பாக்யவோ லகுமி தாயி நின்னது |
ஸானுராகதி ஹரிய ஸேவிஸுதலிருவி ||ப

கங்கணவு நீனாகி ஹரிகெ புஜகீர்த்தி நீனாகி
ஶங்கு சக்ரகதா பத்ம நீனாகி ஶங்கெ இல்லதெ
கிங்கரளு நீனாகி ஹரிஸேவெகெ
பங்கஜனாபன்ன ஸேவிஸுதலிருவி ||1

அக்ஷரளு நீனாகி ஹரிய வக்ஷஸ்தளவனே ஸேரி
ஈக்ஷிஸுத ஹரிய பரம ஸந்தோஷதிந்த
லக்ஷகோடி கோடி பிரம்மாண்ட ரூபதல்லிருவ
பக்ஷிவாஹனன நோடி பெரகாகுதலிருவி ||2

ராமனா ஸதியாகி ப்ரேமதிந்தலி
ஈக காமனய்யன காருண்யதிந்த
ரமாவல்லப விட்டலன தொடெய மேலெ
குளிது ஸ்வாமிகெ ஸதியாகி ஸேவிஸுதலிருவி ||3

**5. குருராயர ஸ்துதி**

வ்ருந்தாவனதொடெய ஸ்வாமி மந்த்ராலய நிலய
சந்ததி பந்து தருஶனவித்தரு ஸ்வாமி யதிராய ||ப

மூடமதியு நானு என்ன காட நித்ரெயலி
மாடுத பூஜெய எனகானந்த படிஸிதரு ||1
கரி ராஜவரதா குருராஜரிகொலிது
பரமபக்தர மந்திரதி எனகானந்தபடிஸிதரு ||2

துங்காதீரதலி தாவு சந்ததி நிந்து
மங்கள ராயன பூஜெயமாடி எனகானந்த படிஸிதரு ||3
ராம பூஜெய மாடி ராமத்யானதி நிரந்தர
ரமாவல்லப விட்டலன பஜிஸுவ ப்ரியரிவரு ||4

இந்தப் பாடலில் ஹரிதாஸினியானவர், மந்திராலயத்தின் குருவரர் தமக்கு கனவில் ஸ்ரீராமபூஜையை செய்து, அவரின் தரிசன பாக்கியத்தை அளித்தார் என்று தமது மகிழ்ச்சியை வெளிப்படுத்தியிருக்கிறார்.

மைஸூர் ஸ்ரீகுருகோவிந்த விட்டல தாஸரின் வீட்டில் நடந்த ஒரு அற்புதமான சம்பவம்.

1956ம் ஆண்டில் ஸ்ரீகுருகோவிந்த விட்டல தாஸரின் வீட்டில், ஸ்ரீபுரந்தர தாஸரின் ஆராதனையின் சந்தர்ப்பம். அங்கு ஞான யக்ஞத்தை தலைமை தாங்கி நடத்தியவர் ஸ்ரீஸாகரகட்டே ஸ்வாமிகள். அவர் தேவபூஜை செய்து வந்தபோது, ஸ்ரீவேதவ்யாஸ விக்ரகம் ஓரிரு நொடிகள் நர்த்தனம் ஆடியதைப் போல தெரிந்தது. இந்த அற்புதத்தை அங்கு இருந்தவர்கள் பலரும் கண்ணாரக் கண்டு மகிழ்ந்தனர். அப்போது அங்கிருந்த ஹரிதாஸினி ஸரஸாபாய் அவர்களும் பரவசமடைந்து, உடனடியாக ஒரு கவிதையை இயற்றினார். அது இவ்வாறாக இருக்கிறது.

**6. ஸ்ரீஹரி ஸ்துதி**

ஹரிகுணித நம்ம ஹரிகுணிதா ||ப

ஹரிதாஸருகளு நெரெதிஹ ஸபெயல்லி
ஹரிதாஸருகள பஜனெய ஸமயதி ||அப

அதி பகுதியிந்த பதித பாவனன பூஜெ
அதி ஸந்தோஷதி மாடுவ ஸமயதி ||1
அந்திகெ கிருகெஜ்ஜெ சந்ததிந்தலி தரிஸி
கோவிந்த தாஸர மந்திரதொளகெ ||2

புரந்தரதாஸர ஆராதனெய தின
புரதொளகெல்லெல்லு மெரெயுவ தினதலி ||3
யதிகளீர்வரு பந்து அதி ஸம்ப்ரமதலி
கதிகொடுவோ ‘ரமாவல்லப விட்டல’ பூஜெய தினதி ||4

ஸ்ரீஹரியை ஸாக்ஷாத்காரம் செய்த சமயத்தில், ஹரிதாஸினி ஸரஸாபாய் அவர்கள் இந்தப் பாடலை பாடி, பக்தர்களின் மனதில் மகிழ்ச்சியை அளித்தார்.

**7. ப்ராணதேவரின் ஸ்துதி**

ஸந்தெய பிதனூரு ஹனுமந்த என்ன அந்தரங்கதலி |
ஹரிய தோரு ஹனுமந்த ||

என்று 5 நுடிகளைக் கொண்ட பாடலில், ஸந்தெபிதனூரு ஹனுமந்தனின் ஸ்துதி கீதையில், ப்ராணதேவர், த்ரேதாயுகத்தில் ஹனுமந்தனாக ராமனை வணங்கி, த்வாபர யுகத்தில் குந்தியின் மகன் பீமனாக ஸ்ரீ கிருஷ்ணனை வணங்கி, கலியுகத்தில் மத்வாசார்யராக அவதரித்து உடுப்பி கிருஷ்ணனின் சேவையை செய்தார் - என்னும் புராணிக விஷயங்களை பாடியிருக்கிறார் ஹரிதாஸினி ஸரஸாபாய் அவர்கள்.

எப்போதும் பகவன் நாம கீர்த்தனையில், புராண ஸ்ரவண பிரவசன நிகழ்ச்சிகளில், ஹரிகதாம்ருதஸார பாராயணத்தில் ஈடுபட்டிருந்த ஹரிதாஸினி ஸரஸாபாய் அவர்கள் நீண்ட அர்த்தமுள்ள வாழ்க்கையை வாழ்ந்து, 5 தலைமுறைகளை தன் கண்களால் கண்டு, ஆண்டு 1984ல், மைஸூரு குருகோவிந்த விட்டல தாஸரின் வீட்டில் தெய்வாதீனம் அடைந்தார். அவருக்கு நம் நமஸ்காரங்களை செலுத்துவோம்.

(அடுத்த இதழில் வேறொரு ஹரிதாஸினியைப் பற்றி பார்ப்போம்).

***

## இந்த மாத ஆராதனைகள்

**ஸ்ரீ குருகோவிந்த விட்டலதாசர் (1894–1983)**

ஸகல ஷாஸ்த்ரார்த்த ஸார ஞான சித்ரலேகன தத்பரானாம் |
குருகோவிந்த தாஸார்யானாம் நித்ய நௌமி ஸதாம் முதே ||

கோடுபளெ வம்ஷத குருகோவிந்த தாஸார்யரு
மாடிதரு அத்யயன ஸஞ்சரிஸி ஊரூரு
கூடார்த்தகளனரித வேத ஷாஸ்திரகள பல்லவரு
மோடி மாடி பக்தர பக்தி மார்க்கக்கெளெதிஹரு
ஈடு இல்லதெ பத பத்ய ஸூளாதிகள ரசிஸிஹரு
பேடி பந்தவரிகெ அங்கிதவனு ப்ரஸாதிஸிஹரு
ரூடிப மங்களாங்க ஹரிவிட்டலன பாத பஜிபரு
பேடன்னே குருகோவிந்த விட்டலகர்ப்பிஸிஹரு ||

***

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## 30 – தைத்ய தாரதம்ய ஸந்தி

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | | 2 | | | | | | | |
| 22 | | 12 | | | | | | | | | 13 | |
| | | 3 | | | | | | | | | | |
| | 14 | 27 | | | | | | 15 | | 28 | | |
| | | 4 | 23 | | 5 | | | | 24 | | | |
| | | | | | 16 | 25 | | 29 | | | | |
| | 26 | | 17 | | | | 6 | | | 7 | | 30 |
| 8 | | | | | | | | | 18 | | | |
| | | | 9 | | | | | | | 31 | | 19 |
| | | | 32 | 20 | | | | | | 21 | | |
| | 10 | | | | 33 | | 11 | | | | | |

குறுக்கெழுத்துப் போட்டிகளை வடிவமைத்துக் கொடுப்பவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி

குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam @ gmail.com / அல்லது 89044 58276 க்கு வாட்சப் செய்யலாம்.

இடமிருந்து வலம்: 1.ராமனின் வேறு பெயர்(4), 2.பூமாதேவியின் மகன்(6), 3. கலியுகத்தில் ஸங்கரனாக பிறந்தவன்(6), 4.ஸம்பரனை விட ஆறு அவகுணம் குறைந்தவன்(4), 5.இவன் பெயரில் ஒரு ஹரி பக்தனும் மற்றும் ஒரு தைத்யனும் உள்ளனர்(3). 6.அக்னி(4), 7.ஸால்வ தேஸ ராஜர்களில் ஒருவர்(3), 8.கலிபத்னி.முதல் எழுத்து இல்லை(3), 9.கம்ஸனை விட 100 அவகுணம் குறைந்தவன்(3), 10.நெருஞ்சிமுள்(6), 11.ஜராஸந்தனுக்கு சமமானவன்(6).

வலமிருந்து இடம்:12.தைத்யன்(3), 13.இந்திரன்(5), 14.தலைமுடி(2), 15.கர்ணனும் இவனும் சரிசமம்(5). 16.நமுசியை விட மூன்று அவகுணம் குறைந்தவன்(3), 17.காலநேமியே இந்த அஸுரனாக பிறந்தான்(4), 18.கேஸியை விட பதினொன்று அவகுணம் குறைந்தவன்(6), 19.மணிமந்தனை விட பத்து அவகுணங்கள் குறைந்தவன். ஸ்ரீக்ருஷ்ணரால் ஸம்ஹரிக்கப் பட்டவன்(4), 20.இவர்கள் விரஜாநதி ஸ்நானத்தால் லிங்கதேஹத்தி லிருந்து விடுவிக்கப்படுகிறார்கள்(5). 21.கீசகனை ஸம்ஹாரம் செய்தவர், பஞ்சபாண்டவகளில் ஒருவர்(5).

மேலிருந்து கீழ்: 2.பாணனை விட பத்து அவகுணம் குறைந்தவன். கடைசி எழுத்து இல்லை.(2),13.இந்த அஸுரனே கீசகனாக(5), 14.ஹயக்ரீவ எனும் அஸுரனின் அவதாரம்(2), 22.விப்ரசித்தியே இந்த அஸுரனாக பிறந்தான்(6), 23.கைடப என்ற அஸுரனே இந்த அஸுரனாக பிறந்தான்(3), 24.நமுசி மற்றும் பாகனுக்கு சமமானவன்(4), 25.ருக்மியை விட நூறு அவகுணம் குறைந்தவன்(5), 26.கௌரவர்களின் தாய்மாமன்(3).

கீழிருந்து மேல்: 27.ஸிவனின் வேறுபெயர்(4),28.ஸம்பரனை விட ஆறு அவகுணம் குறைந்தவன்(4).29.ப்ருகு ரிஷியின் மகள். கலைந்து ள்ளது.(4), 30.மஹாஸுரன் மற்றும் கிர்மீரனுக்கு ஸமமானவன்(5). 31.ஹிரண்யாக்ஷனை ஸம்ஹரித்த பரமாத்மாவின் பெயர்(5), 32.கேஸியும் இந்த அஸுரனும் ஸமம். க்ருஷ்ணனால் கொல்லப் பட்டான். பின்பாதி இல்லை(3). 33.மஹாஸுரனுக்கு ஸமமானவன்(5).

**ஹரிதாச விஜயம் ஆண்டுச் சந்தா தற்போது ரூ.300.**

தொடர்

## ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர்

## 4. ஹரிதின இந்த[2] ஹரிதின

டாக்டர். ஸுபாஷ் காகண்டகி

### ஏகாதசி உபவாஸத்தின் மகத்துவத்தை சொல்லும் கீர்த்தனையின் விளக்கம்

ஸ்ரீமத்வாசார்யர் தம் ஸ்ரீகிருஷ்ணாம்ருத மஹார்ணவ கிரந்தத்தில் - இந்த மனிதப்பிறவியானது மிகச் சிறந்தது. அதனை வீணடிக்கக்கூடாது - என்னும் செய்தியை இந்த ஸ்லோகத்தில் சொல்கிறார் என்பதை பார்க்கலாம்.

யாவத் ஸ்வாஸ்ம்யம் ஷரீரேஷு கரணேஷு ச பாடவம் |
தாவதர்ச்சய கோவிந்தம் ஆயுஷ்யம் ஸார்த்தகங்குரு ||152

எதுவரை இந்த சரீரமானது நோய் நொடிகள் இல்லாமல், அனைத்து இந்திரியங்களைக் கொண்டு சரிவர இருக்கிறதோ, அதுவரை உன்னை பகவத் ஆராதனையில் ஈடுபடுத்திக் கொள். உன் சாதனையை செய். இல்லையெனில், பிறகு அதை நினைத்து கவலைப்பட வேண்டியிருக்கும் - என்று மேலோட்டமாக அர்த்தத்தை புரிந்து கொள்ளலாம். இதன் இன்னொரு செய்தியே - பகவந்தன் அருளிய நர ஜன்மம் இது ஸாதனை ஸரீரம் ஆகும். துஷ்டர்களின் கெட்ட சகவாசத்திலிருந்து தூர இருந்து, கண் முதலான ஞானேந்திரியங்கள், கை கால் முதலான கர்மேந்திரியங் கள் ஆகியவற்றை சரியாக வைத்துக் கொண்டால், பால்ய அவஸ்தை யிலிருந்தே பகவத் பூஜாதிகளை செய்தவாறு, இஹ பர லோகங்களில் நலனை பெறமுடியும். வயதான பின், அந்த சாதனைகளை நான் செய்வேன் என்று இருந்துவிட்டால், நோய் நொடிகளால் தாக்கப்பட்டு, அப்போது எதுவுமே செய்ய முடியாமல், அப்போதே செய்யவில்லையே என்று கவலைப்பட வேண்டியிருக்கும் - என்னும் அபூர்வமான செய்தி இருக்கிறது.

இந்த்ரியங்கள் சரியாக வேலை செய்யும்போது, இந்திர்யங்களின் தத்வாபிமானி தேவதைகளுக்கு ஸ்வாமியான ஸ்ரீஹரியை தியானம் செய். இந்திரியங்கள் பிரச்னை செய்யும்போது உனக்கு பகவந்தனை நினைப்பதற்கும் சாத்தியம் ஆகாது. லௌகிக விஷயங்கள் விஷத்தைப்

போல. அவற்றைப் பற்றி சிந்திப்பதற்கு பதில், ஸ்ரீஹரியை நினை. ஸாதனை செய்து இந்த சம்சார பந்தனத்திலிருந்து விடுதலை பெறு. லௌகிக சுகங்கள் தற்காலிகமானவை. பிறகு துக்கத்தையே அவை கொடுக்கின்றன. ஆகையால், அவற்றைப் பற்றி அதிக கவலை கொள்ளாமல், அந்த சமயத்தை பகவந்தனின் சிந்தனையில் பயன் படுத்திக் கொண்டால், உனக்கு நிரந்தர சுகத்திற்கான வழி கிடைக்கிறது - என்று சொல்லி விளக்குகிறார் ஸ்ரீமதானந்த தீர்த்தர்.

இதையே அடுத்து 15-16ம் நூற்றாண்டில் வந்த ஸ்ரீபுரந்தரதாஸர், ப்ராக்ருத கன்னட மொழியில் - மானவ ஜன்ம தொட்டது இத ஹானி மாடலு பேடி ஹுச்சப்பகளிரா - என்று உபதேசம் செய்திருக்கிறார் என்பதையும் அறிகிறோம்.

இந்த ஸாதனா சரீரத்தை கட்டுப்படுத்தி, மனதினை பகவந்தனின் சிந்தனையில் வைப்பது என்பது எப்படி? என்னும் கேள்விக்கு, ஸ்ருதி சாஸ்திரங்கள், புராணங்களில் கொடுக்கப்பட்டுள்ள பல ஸூத்ரங்களில் முக்கியமானவையே ‘ஏகாதசி விரதம்’ . 15 நாட்களுக்கு ஒரு முறை ஒரு குறிப்பிட்ட நாளில் தண்ணீர், ஆகாரம் இன்றி செய்யப்படும் உபவாச விரதம் இது. கிருஷ்ணாம்ருத மஹார்ணவ கிரந்தத்தில் ஏகாதசி உபவசத்தைப் பற்றி, உபவாசம் செய்யும் காலத்தைப் பற்றி, அதனால் கிடைக்கும் பலன்களைப் பற்றி மிகவும் விளக்கமாக பற்பல பிரமாணங்க ளுடன் விளக்கியிருக்கிறார்.

இதையே ஸ்ரீப்ரஸன்ன வெங்கட தாஸர் ‘ஹரிதின இந்த ஹரிதின’ என்னும் கீர்த்தனையில், தமதே ஆன நடையில், மிகச்சிறப்பாக, அனைவரின் மனதினை மயக்குமாறு, உபதேச ரூபாத்மகமான செய்தியை கொடுத்திருக்கிறார். அவருடைய 9 நுடிகளின் இந்த கீர்த்தனையின் ஒவ்வொரு நுடிகளில் இருக்கும் செய்தியையும், கருத்தினையும் இங்கு பார்ப்போம்.

ஹரிதி$^{3}$ன இந்த$^{2}$ ஹரிதி$^{3}$ன ||ப

ஹரிதி$^{3}$ன மஹிமெ ஹொக$^{3}$ளலகா$^{3}$த$^{4}$
பரம பா$^{4}$க$^{3}$வதராசரணெகா$^{3}$ஹ்லாத$^{3}$
து$^{3}$ரித து$^{3}$ஷ்க்ருத பர்வதகெ வஜ்ரவாத$^{3}$
மருத ஸத்வ்ரதகெல்ல ஷிரோரத்னவாத$^{3}$ ||அப

22 - ஹரிதாச  விஜயம்  –  டிசம்பர்  2022

ப4க்திகெ3 மொத3லு விரக்தி பீ4ஜவெம்ப3
ஸகல தபதொ3ளெல்ல மேலெனிஸிகொம்ப3
முக2கோடிக3தி4க ப2ல ஸ்தி2ர ஸ்தம்ப4
முக்தி ஸோபான விதா4னத்வவெம்ப3 ||1

த்வக் சர்ம அஸ்தி மஜ்ஜ மாம்ஸ ருதி4ர
யுக்த ஸப்த தா4துக3ளிஹ ஷரீர
நக2 கேஷ கப2 ஸ்வேத3 மல மூத்ராக3ர ஈ
நிகி2ள பாவன மாடு3வ நிராஹார ||2

வர விப்ர க்ஷத்ரிய வைஷ்ய ஷூத்3ர ஜனரு
தரள யௌவன வ்ருத்3த4 நாரியரு
கிராத புலஸ்த்யாந்த்ர ஹொண ஜாதியவரு
ஹரிவ்ரத மாத்ரதி முக்தியைது3வரு ||3

த்3விஜ கோ3வத4 ந்ருபரனு கொந்த3 பாப
நிஜகு3ரு ஸதியர ஸங்க3த3 பாப
அஜலபானத3 தி3னது3ண்ட மஹாபாப
நிஜனாஷ மோக்ஷ ப்ராப்திய ஸத்யலாப4 ||4

யாமினியலி அனிமிஷத ஜாக3ரவு
ஸ்ரீமத் பா4க3வத ஸ்ரவண கீ3தா பட2ண
ப்ரேமவாரிதி4லி முளகி3 ஸங்கீர்த்தனெயு
தா4மத்ரயத3 ஸுக2கிதே3 காரணவு ||5

அர்த்த4கோடி தீர்த்த2ஸ்னானவெல்ல அ
ஜஸ்ரப்ரயாக3 காஷி வாஸவெல்ல ஸ
ஹஸ்ர கோடி பூ4ப்ரத3க்ஷிணெயில்ல
ஸுஸ்ரத்தெ ஸஹ ஜாக3ரகெ ஸரியல்ல ||6

பஞ்சமஹா பாப ப்ரபாபவவகெ3
வஞ்சக பிஷுன ஜனர பாபவவகெ3
மிஞ்சுவ க்ஷேத்ரத3லி பாபவவகெ3
பஞ்சக வ்ருத பெத்த வ்ருத உல்லங்கி4பகெ3 ||7

ஸர்ப்பஷயனகெ3 நிராஜனவெத்தி நோடி3
உபவாஸதி3 ப4க3வஜ்ஜன ந்ருத்யவாடி3

சப்பாளிக்குத த3ண்டி3கெ3 முட்டி பாடி3
தப்பெ நாயி நரக ப2ல கைகொடி3 ||8

ஸ்ருதி பஞ்சராத்ராக3மவு ஸாருதிவெ
யதி மத்வராயருகுதி பேளுதிவெ
க்ருத ப்ரஸன்ன வெங்கடகிருஷ்ண மதவெ
க்ஷிதிபதி ஸூரரதிஷயத3 ஸத்வ்ரதவெ ||9

இந்த 9 நுடியின் கீர்த்தனையில் தாஸர் ஏகாதசி உபவாஸத்தின் மகிமையை சொல்வது மட்டுமல்லாமல், இந்த விரதத்தின் பின்னணியாக இதில் அடங்கியிருக்கும் தார்மிக, ஆத்யாத்மிக மற்றும் விக்ஞான அம்சங்களையும் சுருக்கமாக இங்கு சொல்லியிருக்கிறார். இங்கு ஏகாதசி தினத்தை 'ஹரிதின' என்கிறார். அதாவது, ஸ்ரீஹரிக்கு ப்ரியமான நாள். ஹரியை மகிழ்ச்சிப்படுத்த தகுதியான நாள் என்று சொல்கிறார். இது பகவந்தனுக்கு மிகவும் ப்ரியமான நாள் என்றால் அது கண்டிப்பாக விசேஷமான நாளாகவே இருக்க வேண்டும்.

'ஹரிதின இந்த ஹரிதின' என்னும் பல்லவியிலிருந்து துவங்கும் இந்த கீர்த்தனையில் இது ஒன்றும் சாதாரணமான நாள் அல்ல, ஸாதனைக்கு மிகுந்த மகிமை பொருந்திய நாள் என்று பல்லவியிலேயே சொல்கிறார்.

ஹரிதி3ன மஹிமெ ஹொாக3ளலகா3த4
பரம பா4க3வதராசரணெகா3ஹ்லாத3
து3ரித து3ஷ்க்ருத பர்வதகெ வஜ்ரவாத3
மருத ஸத்வ்ரதகெல்ல ஷிரோரத்னவாத3 ||அப

இந்த அனுபல்லவியில் ஒவ்வொரு வரியின் உள் அர்த்தத்தையும் புரிந்து கொள்ள முயல்வோம்.

முதலாம் வரியில் உள்ள 'அகாத' என்னும் ஒரு சொல்லில், தாஸர், ஸ்ரீமதானந்த தீர்த்தர் ஸ்ரீகிருஷ்ணாம்ருத மஹார்ணவத்தின் ஸ்லோகம் 204 - 217 வரையிலான சாரத்தை அப்படியே கொடுத்துவிட்டார் என்பதை அறியலாம். உதாரணத்திற்கு:

அஸ்வமேத ஸஹஸ்ராணி வாஜபேயாயுதானி ச |
ஏகாதஷ்யுபவாஸஸ்ய கலாம் நார்ஹதி ஷோடஷீம் || 205

ஆயிரக்கணக்கான அஸ்வமேத யாகங்களும், நூற்றுக்கணக்கான வாஜபேய யாகங்களும் கூட ஏகாதசி உபவாஸத்தின் 16ன் ஒரு

அம்சத்திற்கும்கூட ஈடாகாது - என்று சொல்லி, அடுத்து ஸ்லோகம் 206ல், ஏகாதசி உபவாஸம் செய்வதால் வரும் புண்ணியங்கள், நூற்றுக்கணக்கான பிறவிகளில் செய்த பாவங்களின் ராசியை அக்னியைப் போல சுட்டு பஸ்மம் ஆக்குகிறது - என்கிறார்.

நைத்ருஷம் பாவனம் கிஞ்சின் நராணாம் புவி வித்யதே |
யாத்ருஷம் பத்மனாபஸ்ய தினம் பாதக ஹானிதம் || 207

என்று சொல்லி, பூலோகத்தில் மனிதர்களின் அனைத்து பாவங்களும் அழியக்கூடிய மற்றும் பவித்ரமான நாள் என்றால், அது ஏகாதசி மட்டுமே. இதற்கு சமமானது வேறொன்று இல்லை. வேறு அனைத்து காரியங்களை செய்வதைவிட, ஏகாதசியே, செய்த பாவங்கள் அனைத்தையும் அழிக்கிறது - என்னும் ஏகாதசியின் மகிமையை சொல்கிறார்.

(தொடரும்)

**YouTube Channel - Jagannatha Kesava**

* மேற்கண்ட நமது யூட்யூப் சேனலில் தற்போது வந்துகொண்டிருக்கும் தொடர் - ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸரின் – ஹரிதாஸ தர்பண – தமிழ் அர்த்த விளக்கங்களுடன்.
* இதனைத் தொடர்ந்து வரவிருப்பது - ஸ்ரீப்ராணேஷ தாஸரின் – கன்னட ஸ்ரீஹரி வாயுஸ்துதி
* நமது சேனலுக்கு சப்ஸ்க்ரைப் செய்து, ஏற்கனவே உள்ள + வரவிருக்கும் தொடர்களையும், அனைவரும் கேட்டு, நம் ஹரிதாஸ ஸாகித்யத்தின் சிறப்பினை அறிய வேண்டும் என்று விரும்பி கேட்டுக் கொள்கிறேன்.

## இந்த மாத ஆராதனைகள்

ஸ்ரீவித்யா ப்ரஸன்ன தீர்த்தர் (பட்ட : 1940–1969)

ஸ்ரீமத் க்ருஷ்ண பதாம்போஜ மானஸம் கவிபுங்கவம் |
ஸ்ரீமத் வித்யா ப்ரஸன்னாப்திம் குரும் வந்தே நிரந்தரம் ||

***

தொடர்

## ஹரிகதாம்ருதசார மஞ்சரி 360

By ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர்

**78. ருத்3ரமொத3லாதமரரிகெ3 அனி**
**ருத்த தே3ஹவெ மனெயெனிஸுவுது**
**இத்3து3 கெலஸவ மாட3ரல்லிந்தி3த்த ஸ்தூ2லத3லி |**
**க்ருத்த4கி2ல தி3விஜரு பரஸ்பர**
**ஸ்பர்த்தெ4யிந்த3லி த்3வந்த்3வகர்ம ஸ**
**ம்ருத்தி4க3ளனாசரிஸுவரு ப்ராணேஷனாக்ஞெயலி ||(9-15)**

ருத்ரதேவரை மட்டும் குறிப்பிட விரும்பிய ஸ்ரீதாஸர், அனிருத்த தேகத்தில் ருத்ரரே முதலானவர்கள் இருந்து, ஸ்வாமி செய்யும் த்வந்த்வ செயல்களை பிராணேஷனின் ஆணையினாலேயே இவர்கள் நம்மில் செய்கின்றனர் என்று அறி என்கிறார்.

**79. ஸுத்ரநாமக ப்ராணபதி கா3**
**யத்ரி ஸம்ப்ரதிபாத்3யனாகி3**
**கா3த்ரதொ3ளு நெலெஸிரலு திளியதெ3 கண்ட3கண்ட3ல்லி |**
**தா4த்ரியொளு ஸஞ்சரிஸி புத்ர க**
**ளத்ர ஸஹிதனுதி3னதி3 தீர்த்த2**
**க்ஷேத்ர யாத்ரெய மாடி3தே3வு எந்தெ3னுத ஹிக்கு3வரு ||25**

ப்ராணபதியான காயத்ரி ப்ரதிபாத்ய ஸவித்ர நாமக லட்சுமி நாராயணர்கள் இருவரும், நம் இந்த தேகத்தில் இருக்கிறார்கள் என்பதை அறியாமல், நாம் பற்பல ஊர்களுக்கு சென்றும், உற்றார் உறவினர்களுடனும் சுற்றுப்பயணமும் செய்கிறோம். கண்டகண்ட தீர்த்தங்களில் நாம் ஏன் மூழ்கி எழ வேண்டும்?. இவ்வாறெல்லாம் செய்யாமல், அந்த பகவந்தன், நம் இதயத்திலேயே இருக்கிறான் என்று அறிந்து, காயத்ரி மந்த்ர ஜபத்தை தினமும் விடாமல் செய்தால், நாம் மேம்படுகிறோம் அல்லவா?. இதனை முதலில் அறிந்து, அதன் படி செய்வாயாக என்கிறார் ஸ்ரீதாஸர். தியானம் செய்யாதவன் வேறு எதை செய்தாலும் பலன் இல்லை. அதிலும் நம் இந்த தேகத்தில் பகவந்தன், அந்தர்யாமியாக இருக்கிறான் என்று அறியாமல் இருப்பதில் எவ்வித பலனும் இல்லை என்கிறார்.

**80. ஸப்ததா4துக3 ளொளஹொரகெ3 ஸ**
**ந்தப்த லோஹக3தக்னியந்த3தி3**

**ஸப்த ஸாமக$^3$னிப்பனன்னமயாதி$^3$ கோ$^1$ஷதொ$^3$ளு ।**
**லிப்தனாகதெ$^3$ தத்ததா$^3$ஹ்வய**
**க்லுப்த போ$^4$க$^3$வ கொடுத$^3$ ஸ்வப்ன ஸு**
**ஷுப்தி ஜாக்$^3$ரதெயீவ தைஜஸ ப்ராக்ஞ விஷ்வாக்$^2$ய ।।28**

நம் தேகத்தில் ஏழு தாதுக்கள் இருக்கின்றன. அவை ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டு இருக்கின்றன. அவற்றை காட்டுவதற்கு முடிவதில்லை. ஆனால், அனுபவிப்பதற்கு தக்கதாகும். அதாவது, அன்னமய, ப்ராணமய, மனோமய, விக்ஞானமய மற்றும் ஆனந்தமயனாக இருந்து, ஸாமவேத்ய ப்ரதிபாத்யனான ஸ்ரீஹரி, கொதிக்கும் இரும்பினைப் போல, தேஜோமயனாக இருக்கிறான். அதாவது, த்வக், சர்ம, மாம்ஸ, ருதிர, மேதஸ், மஜ்ஜா, அஸ்தி ஆகிய ரூபங்களில் இருக்கிறான். இவற்றிற்கு சமானமாக. 1. நிதன. 2. ஹிங்கார 3. ஆதி 4. உத்கீத 5. ப்ரஸ்தாவ 6. ப்ரதிஹார 7. உபத்ரவ என்னும் 7 ரூபங்களில் இருந்து, ஜீவனின் செயல்களை நடத்துகிறான் என்று அறி என்று ஸ்ரீதாஸர் உபதேசம் செய்கிறார்.

**81. ஈபரிய தே$^3$ஹதொ$^3$ளு ப$^4$க$^3$வ**
**த்ரூபக$^3$ள மரெயதெ$^3$லெ மனதி$^3$ ப**
**தே$^3$ பதே$^3$ ப$^4$கு$^3$தியலி ஸ்மரிஸுதலிப்ப ப$^4$குதரனு ।**
**கோ$^3$பதி ஜகன்னாதவிட்டல ஸ**
**மீபக$^3$னு தானாகி$^3$ ஸந்தத**
**தா பரோக்ஷவ நீடி$^3$ பொரெவனு எல்லகாலத$^3$லி ।।31**

இங்கு நாம் சொல்லியிருப்பதைப் போல, நம் தேகத்தில் இருக்கும் பகவந்தனின் ரூபங்களை நம் யோக்யதைக்கேற்ப அறிந்து, அவனை மறக்காமல், ஒவ்வொரு நொடியும் பக்தியுடன் நினைக்கும் பக்தர்களை, ஸாதகர்களை, கோபதியான ஸ்ரீகிருஷ்ணாபின்ன ஜகன்னாத விட்டலன், அவரிடமே எப்போதும் இருந்து, அவர்களை காக்கிறான் என்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

**82. ஆவ பரபொ$^3$ம்மனதி விமலா**
**ங்கவப$^3$த்த$^3$ரு எந்தெ$^3$னிப ரா**
**ஜீவ ப$^4$வமொத$^3$லா த$^3$மரரனுதி$^3$னதி$^3$ ஹரிபத$^3$வ ।**
**சேவிபரிக$^3$னுகூல ரல்லதெ$^3$**
**தாவு இவரனு கெடி$^3$ஸப$^3$ல்லரே**

**ஸ்ரீவிலாஸாஸ்பத$^{3}$ன தா$^{3}$ஸரிகு$^{3}$ண்டே அபஜயவு ||1**

பிரம்மனின் தந்தையான ஸ்ரீஹரியை, யார் நிரந்தரமாக தாரதம்யத்தின்படி வணங்குகிறார்களோ அவர்களுக்கு அமங்களங்கள் வருவதற்கு சாத்தியமே இல்லை. தோல்விகூட அவர்களுக்கு வருவதில்லை. ஆகையால், தாரதம்ய ஞானத்தினால் பிம்பனான ஸ்ரீஹரியின் தாஸன் நான் என்று நினைத்தவாறு இருக்கும் ஹரிதாஸர்களுக்கு வெற்றி உண்டாகிறது என்கிறார் ஸ்ரீதாஸர்.

**83. சர்வதே$^{3}$ஷவு புண்யதே$^{3}$ஷவு**
**சர்வகாலவு புண்யகாலவு**
**சர்வஜீவரு தா$^{3}$னபாத்ரரு மூரு லோகதொ$^{3}$ளு |**
**சர்வமாதுக$^{3}$ளெல்ல மந்த்ரவு**
**சர்வகெலஸக$^{3}$ளெல்ல பூஜெயு**
**ஷர்வவந்த்யன விமலமூர்த்தி த்$^{3}$யானவுள்ளவகெ$^{3}$ ||4**

ருத்ரதேவர் மனோ நியாமகர். ருத்ரர் ஸ்ரீஹரியின் தாஸர். இத்தகையவரால் வணங்கப்படும் ஸ்ரீஹரியை நாம் நினைப்பதற்கு கால நேரங்கள் எதுவும் கிடையாது. அனைத்து தேசங்களும், காலங்களும் பர்வ காலங்களே. மூன்று உலகங்களில் இருப்பவர்களான ருத்ர, பிரம்ம மற்றும் ஹரி, அனைத்து ஜீவர்களில் அந்தர்யாமியாகவே இருக்கிறார்கள் ஆகையால், அனைவரும் தானபாத்ரரே ஆகியிருக்கிறார்கள் என்று அறிபவர்களின் பேச்சுக்கள் அனைத்தும் வேத வாக்கியங்கள், மந்த்ர துல்யம் என்று அறிய வேண்டும். அவர்கள் செய்யும் ஸத்காரியங்கள் அனைத்தும் ஸ்ரீஹரியின் பூஜையே என்னும் சிந்தனை யாரில் இருக்கிறதோ, அவர்கள் எப்போதும் நிர்மலமாகவே இருக்கிறார்கள். அதாவது, இத்தகைய அனுசந்தானத்தை வளர்த்துக் கொண்டாலே ஒருவருக்கு நிர்மலத்வம் அல்லது பாவித்ர்யம் வருகிறது என்று அர்த்தம்.

**84. மூரு கோடியமேலெ ஷோபி$^{4}$ப**
**ஈரதி$^{4}$க எப்பத்து ஸாவிர**
**மாருதாந்தர்யாமி மாத$^{4}$வ ப்ரதிதி$^{3}$வஸத$^{3}$ல்லி |**
**தா ரமிஸுதிஹனெந்து$^{3}$ திளிதி$^{3}$ஹ**
**ஸூரிக$^{3}$ளெ தேவதெக$^{3}$ளவர ஷ**
**ரீரக$^{3}$ளெ ஸுக்ஷேத்ர அவரர்ச்சனெயெ ஹரிபூஜெ ||6**

மாதவனான ஸ்ரீஹரி, 3 கோடி 70 ஆயிர ரூபங்களால் பாரதிரமண முக்யபிராணாந்தர்கதனாக, தினமும் நம் தேகத்தில் இருந்து,

செயல்களை செய்கிறான் என்று அறிந்து, யார் இவ்வாறாக நினைக்கிறார்களோ, அவர்களுடைய தேகம் க்ஷேத்திரம் எனப்படுகிறது. அவருடைய சிந்தனையே ஹரிபூஜை. அவர்களின் அர்ச்சனையே ஹரிபூஜை என்கிறார் ஸ்ரீதாஸர். அத்தகையவரே பண்டிதர் ஆவார்.

**85. நானு நன்னது3 எம்ப3 ஜட3மதி**
**மானவனு தி3னதி3னதி3 மாடு3வ**
**ஸ்னான ஜப தே3வார்ச்சனெயெ மொத3லாத3 கர்மக3ள ।**
**தா3னவரு ஸெளெதொ3ய்வரல்லதெ3**
**ஸ்ரீனிவாஸனு ஸ்வீகரிஸ ம**
**த்தானெ பக்வ கபித்த2ப2ல ப4க்ஷிஸித3வோலஹுது ||13**

நான், என்னுடையது என்னும் கர்வத்தால் யாரொருவன் தன் செயல்களை செய்கிறானோ (உதாரணம்; ஸ்னானம், ஜபம், தீர்த்த யாத்திரை ஆகியவற்றை), அவற்றை தைத்யர்கள் ஏற்றுக் கொள்கின்றனரே தவிர, பகவந்தனான ஸ்ரீஹரி அவற்றை ஏற்றுக் கொள்வதில்லை. அதாவது, த்வந்த்வ கர்மங்களையும் செய்யும்போது பகவந்தன் செய்வித்தது, அவனுடைய ப்ரீதிக்காகவே இதனை செய்திருக்கிறோம். இதற்கு நான் அதிகாரி அல்ல. பகவந்தனே க்ர்த்ரு என்னும் அனுசந்தானம் இருக்க வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர்.

**86. பு3த்தி3 வித்3யாபலதி3 பேளித3**
**ஷுத்த3 காவ்யவித3ல்ல தத்வ ஸு**
**பத்த3திகளனு திளித3 மானவனல்ல பு3த3ரிந்த3 ।**
**மத்4வவல்லப4 தானெ ஹ்ருதயதொ3**
**ளித்து3 நுடித3ந்த3த3லி நுடிதெ3ன**
**பத்த4க3ள நோட3த3லெ கிவிகொட்டாலிபுது3 பு3த4ரு ||18**

இந்த பத்யத்தில், ஸ்ரீஜகன்னாததாஸர் தமது கர்வத்தை தாமே கண்டித்துக் கொள்கிறார். அது எப்படியெனில், இந்த காவியமானது சுத்தமானதல்ல. எனக்கு எந்தவொரு விஷயமும் தெரியாது. நான் யாரிடமிருந்தும் எதையும் கற்கவில்லை. ஆனால், மத்வரின் அந்தர்யாமியான ஸ்ரீவேதவ்யாஸர் என் இதயத்தில் நின்று, கூறியதை நான் இங்கு கூறியிருக்கிறேன். இதில் தவறுகள் ஏதாவது வந்தால், அதனை யாரும் கவனத்தில் கொள்ளக் கூடாது என்று பிரார்த்தனை செய்கிறார்.

**87. க2க3வரத்4வஜனங்க்4ரி ப4கு3திய**
**ப3கெ3யனரியத3 மானவரிகி3து3**
**ஒக3டினந்த3தி3 தோருதிப்புது3 எல்ல காலத3லி |**
**த்ரிகு3ண வர்ஜிதனமல கு3ணக3ள**
**பொக3ளி ஹிக்கு3வ பா4க3வதரிகெ3**
**மிகெ3 ப4கு3தி விக்ஞான ஸுக2வித்தவரரக்ஷிபுது3 ||20**

கருடத்வஜனான லட்சுமி நாராயணனை பூஜிக்காத மனிதனுக்கு (மற்றும் அனாதிகாரிகளுக்கு, நவவித த்வேஷிகளுக்கு), இந்த கிரந்தமானது புரிவதில்லை. குழப்பத்தையே தருகிறது. ஆனால், குணபரிபூர்ணனான, நிர்தோஷனானவன் ஸ்ரீஹரி என்று யார் அறிகிறார்களோ, அத்தகையவர்களுக்கு ஸ்ரீஹரியானவன் பக்தி, ஞான, சுகங்களை அளித்து காக்கிறான் என்று பலஸ்ருதியாக இங்கு கூறியிருக்கிறார் ஸ்ரீதாஸர்.

(தொடரும்)

## இந்த மாத ஆராதனைகள்

ஸ்ரீ குருஸ்ரீஷ விட்டலதாசர் (1740-1846)

குருஸ்ரேஷ மஹம் வந்தே குரு தத்வ விபோதகம் |
குணாஷயம் குணாதீதம் பாவயந்தம் மஹாமதிம் ||

பரமகுரு ஜகன்னாததாஸர அனுக்ரஹகெ பாத்ரரு
குருவர்ய ஹுண்டெகார தாஸரிந்த அங்கித படெதரு
குரு ஸ்ரீஷவிட்டலன தாஸரெனிஸி மஹிமெ தோரிதரு
வரமங்களாங்க ஹரிவிட்டலன மஹிமெ பாடிதரு ||

**நவம்பர் 2022 இதழில் வந்த குறுக்கெழுத்துப் போட்டியில் சரியான விடை எழுதி புத்தகப் பரிசு பெறுபவர்கள்:** திருமதி. ஷாந்தி பத்மனாபன், திருநெல்வேலி; திருமதி. சந்திரா, கோவை; திருமதி. உஷா ரகோத்தமன், பெங்களூரு; திருமதி. ஜெயஸ்ரீ ராமசந்திரன், சென்னை; திருமதி. லலிதா, திருநெல்வேலி; திருமதி. கீதா ராம சந்திரன், திருநெல்வேலி, திருமதி. கிரிஜா ஜயதீர்த்தாச்சார், ஸ்ரீரங்கம், திருமதி. லீலா ரங்கவிட்டல், சென்னை, திருமதி. லதா நரசிம்ம மூர்த்தி, திருப்பரங்குன்றம், திருமதி. கீதா கோபண்ணா, பெங்களூரு

தொடர்

**ஸ்ரீராகவேந்திர விஜயம்**
**ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர் இயற்றியது**

# ஸ்ரீகுரு ஜகன்னாததாஸர்
# (கோஸிகி தாஸர் – 1837 – 1918)

குரு பூர்வ ஜகன்னாத தாஸாஸ்யமித தேஜஸ: |
தஸ்ய பாதாப்ஜ ஸம்பூத ரஜாம்ஸி ஷிரஸாவஹே ||

ஒந்தின கனஸினலி அப்பா ஹாகு அண்ணனவர தர்ஷன
அந்தெ அனு நயதி அண்ணனவரிந்த பாட பிரவசன
தந்தெ குருகோபால விட்டலதாஸரிந்த அங்கித ப்ரதான
முந்தெ குரு ஜகன்னாத விட்டலனெந்து அபிதான
திந்த ஸ்துதிஸிஹரு தேவ மங்களாங்க ஹரி விட்டலன ||

## சந்தி - 1

**சந்தி 1ன் விஷய சுருக்கம்:**
ஸ்ரீஅப்பண்ணாசார்யரின் ஸ்ரீராகவேந்திர ஸ்தோத்திரத்தின் தமிழாக்கமாகவே இந்த முதல் சந்தி இருக்கிறது. அதில் உள்ள பல விஷயங்களை இங்கு சொல்லி, ஸ்ரீராயரின் மகிமைகளை விளக்கி, பிரார்த்தனை ரூபமாக இந்த ஸ்ரீராகவேந்திர விஜயத்தை துவக்குகிறார் ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர்.

**ராக4வேந்தி3ரர விஜய பேளுவெ**
**ராக4வேந்தி3ரர கருண ப3லத3லி**
**ராக4வேந்திரர ப4குதராத3வரித3னு கேளுவுது3 ||**

ராகவேந்திரர விஜய பேளுவெ - ஸ்ரீராகவேந்திரரின் வரலாற்றினை / மகிமைகளை கூறுவேன்; ராகவேந்திரர கருண பலதலி – ஸ்ரீராகவேந்திர ரின் அருளாலேயே; ராகவேந்திரர பகுதராதவரு - ஸ்ரீராகவேந்திரரின் பக்தர்கள் அனைவரும்; இதனு கேளுவுது - இதனை கேளுங்கள்.

ஹரிகதாம்ருதஸார பல்லவியைப் போலவே இங்கும் மூன்று வரிகளில் ஒரு பல்லவியைக் கொடுத்துள்ளார் ஸ்ரீதாஸர். இதனை ஒவ்வொரு சந்தியின் துவக்கத்திலும், முடிவிலும் சொல்வது வழக்கமாக உள்ளது.

ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் மகிமைகளை நான் கூறுகிறேன். அது அவருடைய அருளாலேயே கூறுகிறேன். ஸ்வாமிகளின் பக்தர்கள் அனைவரும் இதனை கேளுங்கள்.

**ஸ்ரீரமண ஸிரிதே$^3$வி பொ$^3$ம்ம ஸ**
**மீர வாணி பா$^4$ரதி விப**
**நூருத$^3$ஶமுக$^2$ உரக$^3$பூ$^4$ஷண ராணியர பத$^3$கெ**
**ஸாரி நமனவ மாடி$^3$ ப$^4$க்த்யனு**
**ஸார கு$^3$ருவர ராக$^4$வேந்தி$^3$ரரு**
**தா$^3$ர விஜயவ பேள்வெ ஸுஜனரு கேளி மோதி$^3$பது$^3$ ||1**

ஸ்ரீரமண - ஸ்ரீஹரி; ஸிரிதேவி - ஸ்ரீலட்சுமிதேவி; பொம்ம - பிரம்ம; ஸமீர - வாயு; வாணி பாரதி - சரஸ்வதி பாரதியர்; விப - கருட; நூருதஶமுக - 100*10 = 1000 முகங்களைக் கொண்ட சேஷதேவர்; உரகபூஷண - ருத்ரர்; ராணியர - இந்த மூவரின் மனைவியரின் (முறையே - ஸௌபர்ணி, வாருணி, பார்வதி) ; பதகெ - பாதங்களில்; ஸாரி நமனவ மாடி - விழுந்து வணங்கி; பக்த்யனுஸார - மிகுந்த பக்தியுடன்; குருவர ராகவேந்திரர - சிறந்த குருவான ஸ்ரீராயரின்; உதார விஜயவ - அபாரமான மகிமைகளை; பேள்வெ - கூறுகிறேன்; ஸுஜனரு - ஸஜ்ஜனர்கள் (ஸ்ரீராயரின் பக்தர்கள்); கேளி மோதிபது - (மகிழ்ச்சியுடன்) கேட்டு இதனை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

ஸ்ரீஹரியிலிருந்து துவங்கி தாரதம்யத்தில் தேவதைகளை வணங்கியவாறு, இந்த கிருதியை துவக்குகிறார் ஸ்ரீதாஸர்.

ஸ்ரீஹரி, ஸ்ரீலட்சுமிதேவி, பிரம்மன், வாயு, சரஸ்வதி பாரதி, கருட, சேஷ, ருத்ர, பின் அவர்களது மனைவியரான ஸௌபர்ணி, வாருணி, பார்வதி ஆகியோரின் பாதங்களில் விழுந்து வணங்கி, மிகுந்த பக்தியுடன் ஸ்ரீராயரின் அபாரமான மகிமைகளை கூறுகிறேன். ஸஜ்ஜனர்கள் இதனை மகிழ்ச்சியுடன் கேட்டு ஏற்றுக் கொள்ள வேண்டும்.

ஹரிகதாம்ருதஸாரத்தில் முதல் பத்யத்தைப் போலவே இதுவும் உள்ளது என்பதை அறியலாம்.

ஶ்ரீரமணிகர கமல பூஜித
சாருசரண சரோஜ பிரம்ம ச
மீர வாணி பணீந்திர வீந்த்ர பவேந்த்ர முக வினுத |

**க4ன்ன கு3ணக3னரன்ன நிலயா**
**பன்னபால விஶால மஹிமா**
**என்ன யோக்3யதெ திளிது3 திளிஸித3 தன்ன மஹமஹிமெ**
**முன்ன பேளெலோ எந்து3 அப4யவ**
**க4ன்ன க்ருபெயலி நீடி3 க்ருதியனு**
**என்ன மனத3லி நிந்து பேளித3 தெரதி3 பேளிதெ3னு ||2**

கன்ன - அனைத்து / சிறந்த ; குணகனரன்ன நிலயா - மிகச் சிறந்த குணங்களின் இருப்பிடமான; ஆபன்னபால பக்தர்களை காப்பவன்; விஶால மஹிமா - அபாரமான மகிமைகளைக் கொண்டவரான (ஶ்ரீராயர்); என்ன யோக்யதெ திளிது - என்னுடைய தகுதியை தான் அறிந்து; திளிஸித - எனக்கும் அறிய வைத்தார்; முன்ன - அடுத்து; தன்ன மஹமஹிமெ - தன்னுடைய மகிமைகளை; பேளெலொ எந்து - சொல்வாயாக என்று; கன்ன க்ருபெயலி - அற்புதமான கருணையால்; அபயவ நீடி - எனக்கு அபயம் அளித்து; க்ருதியனு - இந்த ஶ்ரீராகவேந்திர விஜயம் என்னும் கிருதியை; என்ன மனதலி நிந்து - என் மனதில் நின்று; பேளித தெரதி - அவரே கூறியதைப் போலவே; பேளிதெனு - கூறுகிறேன்.

ஶ்ரீகுரு ஜகன்னாத தாஸரின் வாழ்க்கையில் பார்த்தபடி, ஶ்ரீராயரே இவருக்கு கனவில் வந்து உபதேசம் / பாடங்களை சொல்லியிருக்கிறார். அதையே இங்கு ஶ்ரீதாஸர் விளக்குகிறார்.

அனைத்து மிகச் சிறந்த குணங்களின் இருப்பிடமான, பக்தர்களை காப்பவரான, அபாரமான மகிமைகளைக் கொண்டவரான ஶ்ரீராயர், என்னுடைய தகுதியை தான் அறிந்து, எனக்கும் அறிய வைத்தார். அடுத்து, தன்னுடைய மகிமைகளை மக்களுக்கு / தன் பக்தர்களுக்கு சொல்வாயாக என்று தன்னுடைய அற்புதமான கருணையால் எனக்கு அபயம் அளித்து, இந்த ஶ்ரீராகவேந்திர விஜயம் என்னும் கிருதியை, என் மனதில் நின்று, அவரே கூறியதைப் போல, நான் கூறுகிறேன்.

**வேத3 ஶாஸ்த்ர புராண கதெக3ள**
**நோதி3 கேள்த3வனல்ல தத்வத3**

**ஹாதி$^{3}$ திளித$^{3}$வனல்ல பு$^{3}$த$^{3}$ ஜனஸங்க$^{3}$ மொத$^{3}$லில்ல**
**மோத$^{3}$ தீர்த்த$^{2}$ பதா$^{3}$ப்$^{3}$ஜமது$^{3}$கர**
**ராத$^{3}$ ஸ்ரீகு$^{3}$ரு ராக$^{4}$வேந்தி$^{3}$ரர**
**பாத$^{3}$ பத்$^{3}$மபராக$^{3}$ லேஶத$^{3}$ ஸ்பர்ஶ மாத்ரத$^{3}$லி ||3**

வேத ஶாஸ்த்ர புராண கதெகளனு - வேத, சாஸ்திர, புராண கதைகளை; ஓதி கேள்தவனல்ல - நான் படித்து / கேட்டவன் இல்லை; தத்வத ஹாதி - தத்வங்களின் வழியை (ரகசியங்களை); திளிதவனல்ல - அறிந்தவன் அல்ல; புத ஜனஸங்க - அறிஞர்களின் நட்பு; மொதலில்ல - முதலிலிருந்தே எனக்கு இருந்ததில்லை; மோத தீர்த்த - ஸ்ரீமதானந்த தீர்த்தரின்; பதாப்ஜ மதுகரராத - பாதம் என்னும் மலரை தேனியைப் போலவே சுற்றி வருபவரான; ஸ்ரீகுரு ராகவேந்திரர - ஸ்ரீகுரு ராயரின்; பாத பத்மபராக - பாத பத்மங்களின் தூளியை; லேஶத ஸ்பர்ஶ மாத்ரதலி - லேசாக தொட்டதாலேயே.. (அடுத்த பத்தியில் தொடர்கிறது).

ஸ்ரீதாஸரின் வாழ்க்கை வரலாற்றின்படி, அவரது சுமார் 20-22 வயது வரை அவர் எதையும் கற்று அறிந்தவர் இல்லை என்று தெரிகிறது. அவரது தந்தையான ஸ்ரீவெங்கடகிரி ஆச்சார் ஒரு சிறந்த பண்டிதராக இருந்தாலும், நமது ஸ்ரீதாஸர் அவரிடமிருந்து எதையும் கற்கவில்லை. அதையே இந்த இரு பத்யங்களில் விளக்குகிறார்.

வேத சாஸ்திர புராண கதைகளை நான் படித்து அறிந்தவன் அல்ல. தத்வங்களின் வழிகளை / அதன் ரகசியங்களை அறிந்தவன் அல்ல. அறிஞர்களின் நட்பு முதலிலிருந்தே எனக்கு இருந்ததில்லை. ஸ்ரீமதானந்த தீர்த்தரின் பாதம் என்னும் மலரை, தேனியைப் போலவே சுற்றி வருபவரான ஸ்ரீகுரு ராயரின் பாத பத்மங்களின் துளியை லேசாக தொட்டதாலேயே.. (அடுத்த பத்யத்தில் தொடர்கிறது).

(தொடரும்)

தொடர்

**ஹரிதாஸர்களின் சிந்தனைத் துளிகள்**

**இந்திரியங்கள் உன் வசமாகட்டும்**

இங்கு மோகனதாசர் மனிதனின் நிலையை விளக்குவது மிகவும் அழகாக இருக்கிறது. இவரது வாக்குகள் அவரது குரு மற்றும் தந்தைக்கு சமானரான ஸ்ரீவிஜயதாசரின் வாக்குகளே ஆகிறது. நமது

இந்திரியங்கள் நமது வசத்தில் ஏன் / எப்படி இல்லை என்று ஒரு சுளாதியில் விளக்குகிறார்.

ஸ்ரோத்ரர நின்ன கதெ கேளலொல்லர பர
மாதுரதிந்த துர்மார்த்தி கேளுதலிதெ
நீதுர நின்ன மூர்த்திய நோடதலெ காடி
கார்தியரனு மனதிணெய நோடதலிதெ
காதுர நின்ன தாசர தப்பதெ கா
மாதுரதிந்த கண்டவர தப்புத்தலிதெ
பூத பதார்தவ புஞ்சிசலெ ஜிஹ்வெ
பாதகர மத்யன்ன கோருதலிதெ
ஸ்ரீதுளசி அக்ராணிசதலெ மூகு
பாலெ பசித கூகந்த கொடுதலிதெ
யாதரிந்து நின்ன மனகெ ஒப்பனெ தேவ
கோதி கொரவரிகெ நில்கந்தாயித்து
ஜ்யோதிர்மய நம்ம மோகனவிட்டல ஜெ
ந்னாடு சலஹிதரெ கதியாவுது எனகெ || --ஸ்ரீமோகனதாசர்

மனிதனின் இந்திரியங்கள் தற்காலிக விஷயங்களுக்கு அடிமையாகி, அரிஷட் வர்கங்கள் எனும் காமம் முதலிய பாவங்களுக்கு எப்படி ஈர்க்கப்படுகின்றன என்பதை விவரித்து, மோகனவிட்டலனிடம் சரணடையுமாறு வேண்டுகிறார். இவரது குருவான விஜயதாசரின் வாக்கு இப்படி:

காயா தண்டிஸி நின்ன காணலாரெனோ என்ன |
காயதொளகெ மெரெயோ விஜயவிட்டல தொரெயெ ||

இதற்கே ஸ்ரீபுரந்தரதாசர் 'இந்திரியங்கள சுலப நெச்சரிது கண்ட்யா' என்றார்.

ஸ்ரீமதாசார்யர் 'சஞ்சலோயம் மனோ மினோ' என்றதுபோல, மிகவும் சஞ்சலமான மனதை கட்டுப்படுத்துவது கடினம். ஸ்ரீகிருஷ்ணன் சொன்னது போல, பயிற்சி, முயற்சிகளாலேயே இது சாத்தியம். இதற்கும் ஸ்ரீஹரியின் விருப்பம் இருக்கவேண்டும்.

***

**தொடர்**

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### 29. அணு தாரதம்ய விடைகள்

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 ப் | ர | க் | ரு | தி | | 26 பி | | 2 ப் | ரி | ய | 27 வ | ர | த |
| ல | தி | | | 3 ப | ணீ | ந் | 28 த் | ர | | ல | ரு | | லா |
| வ | ரு | 17 த் | 4 பு | த | ன் | தெ | யு | மு | | வ | ண | ர் | ஹ |
| க | 34 நி | | | 5 த் | ரு | ம | ந | 6 க | வி | 35 கு | ன் | த | ர |
| 7 ஸ் | வா | ஹா | தே | 36 வி | | 29 ஜ | தி | ன | 8 கோ | ண | வீ | ர | 18 ப் |
| ந் | 30 பி | ஸி | 19 ஸ | தே | | த | | ன் | ய | த் | ஸ | 20 நா | ன் |
| | த் | 9 நி | தி | ஷா | ப | தி | வ | 37 ப | ம் | 21 ஜா | 31 கா | | ண |
| ட | ரு | த | க் | 22 உ | ர | க | வா | 23 தி | ஸீ | 10 அ | ம | ரு | ஷ |
| ஷ் | த் | ர | | 11 ஏ | கா | த | ஸ | | | ல | ன | | பூ |
| ரே | ர | 38 ப | | 12 கா | ப | ஸ | ம | னு | | கு | கு | | ஹி |
| 13 ஸ் | ய | வ | ன | 32 ந | | வா | ல் | | ள் | மி | வ | 33 பு | 39 அ |
| | ஸ் | | | ஹு | | 40 த் | 41 கு | | ட | ர | ர | ர | |
| | னா | | | ஷ | | | ல | ம | ஷ் | 24 க | | ஞ் | |
| ணி | ம | யு | 25 த் | ன் | | | | | னி | ஷ் | | ஜ | |
| 14 வ | 42 ஸு | க் | க | ள் | | 15 ஸா | த் | வீ | 43 க | 44 பு | 16 மா | ன | வி |

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்
Haridasa Vijayam - Monthly

மலர் 4 ** January 2023 ** இதழ் 2



ஸ்ரீபுரந்தரதாஸர்

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 4 : இதழ் 2

**நிர்வாக ஆசிரியர்**
'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross, JP Nagar
4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276.
haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**
' தாச சாகித்ய சேவா ரத்ன'
திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**
திரு. முரளிதர தாசரு,
திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா,
திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

## ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்

## ஜனவரி 1 முதல் 31 வரை, 2023

ஜன 3 - புஷ்ய சுத்த த்வாதசி - கோரேபாள ஹனுமந்த ராயர், லிங்கஸுகூர்
4 - பு. சு. த்ரயோதசி - ஹரப்பனஹள்ளி பீமவ்வா
14 - பு. பகுள சப்தமி - ஸ்ரீநரஹரி தீர்த்தர், ஹம்பி
14 - பு. ப. சப்தமி - ஸ்ரீஅபினவ ப்ராணேஷ விட்டல தாஸர், லிங்கஸுகூர்
18 - பு. ப. ஏகாதசி - ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர், பெங்களூரு
21 - பு. அமாவாசை - ஸ்ரீபுரந்தரதாஸர், ஹம்பி
29 - மாக சுத்த அஷ்டமி - ஸ்ரீககவரத்வஜ விட்டல தாஸர், பெங்களூரு

# ஆசிரியர் பக்கம்

ஹரிதாச விஜயத்தில் இன்னும் 1-2 இதழ்களுடன் கேசவ நாமா, குறுக்கெழுத்துப் போட்டி ஆகிய தொடர்கள் முடியப் போகின்றன. அவற்றிற்கு பதிலாக, ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால், மேலும் புதிய தொடர்கள் வரவிருக்கின்றன. அனைவரும் இந்த தொடர்களை தொடர்ந்து படித்து வருமாறு கேட்டுக் கொள்கிறேன்.

இந்த ஜனவரி 2023 மாதத்தில், ஸ்ரீ நரஹரி தீர்த்தர், ஸ்ரீபுரந்தரதாஸரில் துவங்கி, இந்த நூற்றாண்டின் ஹரிதாஸரான ஸ்ரீககவரத்வஜ விட்டல தாஸர் வரை பலரது ஆராதனை நாட்கள் வருகின்றன. ஹரிதாஸ ஸாகித்யத்தின் மூலமாக அனைத்து இடங்களிலும் பக்தி மார்க்கத்தை பரப்பிய இந்த ஹரிதாஸர்களைப் பற்றி, அந்தந்த நாட்களில் விசேஷமாக நினைத்துக் கொள்வோம்.

சில மாதங்களுக்குப் பிறகு, மறுபடி இந்த ஸ்ரீபுரந்தரதாஸரின் ஆராதனையிலிருந்து, ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால் புதிய புத்தகங்கள் அச்சிடப்பட்டு வெளிவரவிருக்கின்றன. அனைவரும் இந்த புத்தகங்களை வாங்கிப் படித்து மேலும் புத்தகங்கள் வருவதற்கு தக்க ஆதரவு அளிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

**டிசம்பர் 2022 இதழில் வந்த குறுக்கெழுத்துப் போட்டியில் சரியான விடை எழுதி புத்தகப் பரிசு பெறுபவர்கள்:** திருமதி. ஷாந்தி பத்மனாபன், திருநெல்வேலி; திருமதி. சந்திரா, கோவை; திருமதி. உஷா ரகோத்தமன், பெங்களூரு; திருமதி. ஜெயஸ்ரீ ராமசந்திரன், சென்னை; திருமதி. லலிதா, திருநெல்வேலி; திருமதி. கீதா ராம சந்திரன், திருநெல்வேலி, திருமதி. கிரிஜா ஜயதீர்த்தாச்சார், ஸ்ரீரங்கம், திருமதி. லீலா ரங்கவிட்டல், சென்னை, திருமதி. லதா நரசிம்ம மூர்த்தி, திருப்பரங்குன்றம்.

தொடர்

## கேசவ நாமா

### 46. ஸ்ரீ கேஷவ சுரசேவ்ய

சங்கர்ஷண சேஷாந்த நமோ ஷங்க சக்ர க$^{3}$தா$^{3}$பாணி நமோ ||12

சேஷனின் அந்தர்கதனான, சங்கு, சக்கர, கதா ஆகியவற்றை தரித்த சங்கர்ஷண மூர்த்திக்கு என் நமஸ்காரங்கள்.

வாசுதேவ வைகுண்ட நமோ பூ$^{4}$சுர பூஜித பாத நமோ ||13

பிரம்மஞானத்தின் அறிவைப் பெற்ற, பிராமணர்களால் பூஜிக்கப்படும், ஞானம் மற்றும் ஆனந்தம் என்னும் பாதபத்மங்களைக் கொண்ட வாசுதேவனே, வைகுண்ட நாமத்தைக் கொண்ட பரமாத்மா அவனுக்கு என் வணக்கங்கள்.

பரம புருஷ ப்ரத்யும்ன நமோ ஷரணாகத ஜனதோஷ நமோ ||14

சரணாகதி அடைந்தவர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுக்கும் பரமபுருஷனே ப்ரத்யும்னனே.

அகி$^{2}$லேஷானிருத்த நமோ சுக$^{2}$தா$^{3}$தா பரபிரம்ம நமோ ||15

பிரம்மாண்டத்தின் தலைவனான, சுகத்தைக் கொடுப்பவனான, பரபிரம்மனே அனிருத்தனே, உனக்கு நமோ நமோ.

புருஷோத்தம பத்மாக்ஷ நமோ ஸரஸிஜ பூ$^{4}$வபித ஸத்யநமோ ||16

பிரம்ம ருத்ரர்களின் பிதனே, பத்மாக்ஷ உள்ள புருஷோத்தமனே, க்ஷராக்ஷரர்களால் பூஜிக்கப்படும் அவனே, ஸத்ய, அவனின் சங்கல்பமும் ஸத்ய. அவனுக்கு என் நமஸ்காரங்கள்.

அதோக்ஷஜனத ரக்ஷ நமோ அத்$^{3}$புத மஹிமாதி$^{4}$க்ய நமோ ||17

அபாரமான மகிமைகளைக் கொண்ட அதோக்ஷஜனுக்கு என் வணக்கங்கள்.

ஸ்ரீலட்சுமி நரசிம்ஹ நமோ பா$^{3}$லக ப$^{4}$க்தப்ரீத நமோ ||18

சிறுவன் பிரகலாதனின் பக்திக்கு தரிசனமளித்த லட்சுமி நரசிம்மனே, உனக்கு நமோ நமோ.

அச்யுத ஸச்சாரித்ர நமோ நிஸ்சல நிர்மல சித்த நமோ ||19

எக்காலத்திலும் இருப்பவன், நிர்மல சித்தன், நல்ல சரிதங்களைக் கொண்டவனும், அழிவில்லாதனுமான உனக்கு என் வணக்கங்கள்.

ஜனார்த்தன ஜக[3]தீ[3]ஷ நமோ தினேஷ கோடி ப்ரகாஷ நமோ ||20

கோடி சூரியர்களைவிட அதிக ஒளியுடைவனான, ஜகதீஷனான ஜனார்த்தனனுக்கு என் வணக்கங்கள்.

உபேந்த்ர விஷ்வ வ்யாப்த நமோ உபமாரஹித உதாரி நமோ||21

எதனாலும், எந்த காரணத்தாலும் ஒப்புமை செய்யமுடியாத, அவரைப் போல இன்னொருவர் இல்லாத, உலகத்தில் அனைத்து இடங்களிலும் வியாபித்திருப்பவனுமான உபேந்திரனுக்கு என் வணக்கங்கள்.

ஶ்ரீஹரி சகல ஸ்வரூப நமோ ஸாஹஸ ரஹித சுகார்ய நமோ ||22

சாஹஸ ரஹிதனான, நற்காரியங்களையே செய்பவனான, அனைத்து ஜீவராசிகளின் ஸ்வரூபோத்தாரகனான ஶ்ரீஹரிக்கு நமோ நமோ.

ஶ்ரீகிருஷ்ண பரந்தா[4]ம நமோ ஸாகார மோக்ஷ ப்ரதா[3]த நமோ ||23

மோட்சத்தைக் கொடுப்பவனான, பரந்தாமத்தில் வசிப்பவனுமான ஶ்ரீகிருஷ்ணனுக்கு வணக்கங்கள்.

ஜயமங்கள ஶ்ரீரங்க நமோ ஜயமங்களம் ப[4]வப[4]ங்க[3] நமோ ||24

அனைவரையும் சம்சார சாகரத்திலிருந்து விடுபட வைப்பவனான ஶ்ரீரங்கனுக்கு மங்களம் உண்டாகட்டும். ஶ்ரீரங்க அங்கிதத்தை உடைய ஷாமஷர்ம தாசர், 24 ரூபங்களை 'நமோ நமோ' என்று போற்றுகிறார்.

***

## 47. தய மாடோ ஶ்ரீகிருஷ்ண

த3ய மாடோ3 ஶ்ரீகிருஷ்ண - த3ய மாடோ3 ||ப

த[3]ய மாடோ[3] ஜய விஜய ப்ரிய

த3ய மாடோ3 ஸன்மனி ம்ருது3ஹ்ருத3ய ||அப

ஸ்ரீகிருஷ்ண கருணாகரனின் வைகுண்டத்தின் த்வார பாலகரான ஜய விஜயருக்கு அருளியதைப் போல நம்மையும் அருளுங்கள்.

ஸ்ரீஷ நீ க்ஷீராம்பு3ராஷி வாஷியாகி3ரலாகி3 வா
கீ3ஷாத்3யரு ப3ஹு க்லேஷவன ஸூரல
தீ4ஷ லாலிஸிதெ3 கேஷவ மூர்த்தி ||1

ஸ்ரீஷனான கேசவனே, சேஷ சயனனே, பாற்கடலில் வசிப்பவனே, பிரம்மாதி தேவதைகளுக்கு தைத்யர்களால் உண்டான துக்கங்களை உன்னிடம் முறையிட, அவற்றைக் களைந்து அவர்களை காத்தாய்.

தா4ருணி பா4ரவ களெவ காரண தேவகிய கு
மார யது குலோத்தா4ரனாகி3 அவ
தாரவ த4ரிஸித நாராயணனே ||2

நாராயணனே, பூமியின் பாரத்தைக் குறைக்கும் வேலைக்காக வசுதேவ தேவகியின் மகனாக யதுகுலத்தில் அவதரித்தாய்.

ஸாது3 வசுதேவ தேவ கீ தை4ர்ய தூளிருவந்தெ
போதி4ஸி நிஜரூபாதி4காரரிகெ
ஸாதி4ஸி தோரித3 மாத4வராய ||3

மாதவன், வசுதேவ தேவகியருக்கு தைரியத்தைக் கொடுத்து, அவருக்கு தன் மூலரூபத்தைக் காட்டினாய்.

கந்த3னாகி3 வசுதே3வ நிந்த3 யமுனெய தா3டி1
ப3ந்து3 கோ3குலதி3 நிந்து3 யஷோதா
நந்தனனாத முகுந்த கோவிந்த ||4

முகுந்த, கோவிந்தன், ஒரு குழந்தையாக, வசுதேவனுடன் பாயும் யமுனையைக் கடந்து, கோகுலத்தை சேர்ந்து, யசோதா நந்தனனாக ஆனாய்.

வ்ருஷ்ணேரு தொட்டிலொளிட்டு கிருஷ்ண ஜோயெந்து பாடி3த3ரு
ஜிஷ்ணு வினுத வர்த்தி4ஷ்ணு க3ரிஷ்ணு ஸ
ஹிஷ்ணு ஸதா ப்ரபா4 விஷ்ணு விஷ்ணுவெ ||5

யதுவம்சத்து பெண்கள் தங்கத் தொட்டிலில் கிருஷ்ணனை படுக்கவைத்து, லாலி பாடினர். அர்ஜுனனால் வணங்கப்படுபவனான, அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கும், பூர்ணனும், சாஸ்வத ஸ்வரூபியுமான விஷ்ணுவாக இருக்கிறாய்.

மது[4]வாகி பூ[1]தனி ப[3]ந்து[3] அதி[4]க விஷத[3] மொலெயனொடெ[3]
வித[4]வனரிஸித[3]வள வதி[4]ஸி ஷகடாசுர
நித[4]னவகொ[3]ளிஸித[3] மதுசூதனனே ||6

மது தைத்யனைக் கொன்றதால் மதுசூதனன் என்று பெயர் பெற்றாய். ஸ்ரீகிருஷ்ணனே, கம்சனால் அனுப்பப்பட்ட, மிகவும் அழகான ரூபத்தில் வந்த பூதனி என்னும் அரக்கியை, முலைப்பால் குடிப்பதைப் போல உயிரையே எடுத்தாய். வண்டியின் ரூபத்தில் வந்த ஷகடாசுரனை காலில் எட்டி உதைத்து கொன்றாய்.

வக்ரிப[1] த்ருணாவர்த்தன விக்ரம கெ[3]லிது[3] நீ பா[3]
ல க்ரீடெ[3]யொளு த[1]க்[1]ர த[3]தி[4] க்[4]ருத[1]
வாக்ரமிஸிதெயோ த்ரிவிக்ரம தேவ ||7

சூறாவளிக் காற்றின் ரூபத்தில் வந்த த்ருணாவக்த்ரனின் பராக்ரமத்தை அழித்து அவனை வென்று, வெண்ணெய், தயிர், நெய், மோர்களை ஆகியவற்றை வெளிப்படுத்தி, த்ரிவிக்ரமனானாய். (பால் = ஞானம். தயிர் = சக்தி. வெண்ணெய் = இச்சை. நெய் = பலன் (மோட்சம்).

ஸோமன ப[1]ண்ணெந்து பிடி[3]து[3] நீ மண்ண மெத்[3]து[3] தாயிகெ[3]
ப்ரேமதி[3] த்ரிபு[4]வதா[4]மவ பா[3]யொளு
கா[1]மிஸி தோரித[3] வாமன மூர்த்தி ||8

சந்திரனை பழம் என்று நினைத்து பிடித்து மக்களை மயக்கிய மற்றும் மண்ணைத் தின்று தாய்க்கு வாயில் பிரம்மாண்டத்தையே காட்டிய கிருஷ்ணனே, சிறிய குழந்தை வடிவிலான வாமனனே. (தொடரும்)

ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப், அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்து சொல்லலாம்.

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

**சுற்றுச்சூழல் பாதுகாப்பு**

**ஸ்ரீனிவாஸ சிரனூர்கர்**

பாக்யவட்ட என்னும் இடத்தின் பாக்கியம் – ஸ்ரீனிவாசாச்சாரியார்

ஹரிதாச பரம்பரையில் ராய்ச்சூர் ஜில்லா மான்வி தாலுக பாக்யவட்ட கிராமத்தினரான ஜகன்னாததாசர் புகழ்பெற்றிருப்பதற்கு ஒன்றிக்கு மேற்பட்ட காரணம் இருக்கிறது. அவரது இயற்பெயர் ஸ்ரீனிவாச. வைதிக சாகித்யங்களைப் படித்து, மிகப்பெரிய அறிஞரான ஸ்ரீனிவாச பின்னர் ஸ்ரீனிவாசாச்சார் என்றே அழைக்கப்பட்டார். புலமையில் அவரை வெல்வது மிகக் கடினமாக இருந்தது. சமஸ்கிருதத்தில் பண்டிதர். அவரது புலமை பற்றிய கர்வம் எப்படியிருந்தது என்றால், அவருக்கு கன்னட மொழியின் மேல் வெறுப்பு மற்றும் புறக்கணிப்பு வரத்துவங்கியது.

ஹரிதாசர்களில் சிறந்தவரான, அவரது சமகாலத்திய விஜயதாசரை அவமானம், கேலி செய்தார் ஸ்ரீனிவாசாச்சார்யார். விஜயதாசர் கன்னடத்தில் பாடல்களை இயற்றுபவர். ஆகையால் அவர்மேல் ஒரு வெறுப்பு மற்றும் கன்னட ஹரிதாசர்கள் சமஸ்கிருதத்தில் இருக்கும் சாஸ்திரங்களை கற்காமல், அவற்றை புறக்கணிக்கின்றனர் என்னும் எண்ணமும் ஸ்ரீனிவாசாச்சாருக்கு இருந்தது. இந்த எண்ணம் அவருள் தீவிரமாக வளரத் துவங்கியது.

ஆனால், அபரோக்ஷ ஞானிகளாகிருந்த ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீனிவாசாச்சாரியருக்குள் இருந்த உண்மையான ஜீவனைக் கண்டுகொண்டார். அவருக்கு இருந்த அபாரமான அறிவுத்திறனை விஜயதாசர் அறிந்திருந்தார். அந்த அறிவை ஸ்ரீனிவாசாச்சார்யருக்குத் தெரியப்படுத்தவுதே விஜயதாசரின் வேலையாக இருந்தது. அவர் மூலமாக சமூகத்திற்கு ஒரு மிகப்பெரிய உதவி / வேலை ஆகவேண்டுமென்றும் ஒரு காவியத்தை அவர் இயற்றவேண்டியது இருந்தது என்றும் விஜயதாசர் அறிந்தார். ஆனால், அத்தகைய சாதனை புரிவதற்குத் தடையாக இருந்தது அவரிடமிருந்த தான் என்ற உயர்வு மனப்பான்மை. இதனாலேயே, அவர் ஒரு கடுமையான

நோய்க்கு ஆளானார். மருத்துவ உலகில் இதை மனோதத்துவ வியாதி என்கின்றனர்.

இந்த நோயிலிருந்து குணமடைவதற்காக இறுதியில் ஸ்ரீனிவாசாச்சார், விஜயதாசரிடமே வந்து சரணடைய வேண்டியதாயிற்று. விஜயதாசர், ஜகன்னாததாசரை தனது சிஷ்யரான கோபாலதாசரிடம் அனுப்பினார். சிறந்த ஞானியான கோபாலதாசர், தமது குருவின் ஆணைப்படி, சிறந்த சிகிச்சையைக் கொடுத்து, ஸ்ரீனிவாசாச்சாரியருக்கு இருந்த நோயை குணப்படுத்தினார். ஸ்ரீனிவாசாச்சார்யருக்கு மறு ஜென்மம் வந்தது போலாயிற்று. அவரது அகக்கண்களும் திறந்தன. விஜயதாசர் மற்றும் கோபாலதாசரின் மகிமைகள் அவருக்கு கண்கூடாகத் தெரிந்தது. தன்னையும் மற்றவர்களையும் சரியாகத் தெரிந்துகொண்ட ஸ்ரீனிவாசாச்சார்யர், பண்டரிபுரத்துக்குச் சென்று பாண்டுரங்கனின் தரிசனத்தைப் பெற்றார். அங்கு அவருக்கு, ஜகன்னாதவிட்டலா என்னும் அங்கிதமும் தாசதீட்சையும் கிடைத்தது.

அங்கிருந்தே ஜகன்னாததாசரின் கன்னட சாகித்ய ஸ்ருஷ்டி அங்கிருந்தே தொடங்கியது. கீர்த்தனைகள், பதங்கள், காவியம், தத்வசுவ்வாலி என அனைத்தையும் இயற்றினார். கன்னடத்தில் காவியங்களை இயற்றினார். அந்த காவியங்களில் காணப்படும்

சமஸ்கிருதத்தின் ஆளுமையை யாராலும் கண்டுகொள்ள முடியும். தனது கர்வம் அடங்கியபிறகு, தனது அறிவினை திறனை சாதாரண மக்களுக்கும் பயன்படும்படி, தன ஞானத்தை கன்னடத்தில் காவியங்களை இயற்றுவதில் நேரத்தை செலவிட்டார். அவரது ஹரிகதாம்ருதசாரத்தில் காணப்படும் அவரது சத்வ, ஞானம், புலமை ஆகியவற்றிற்கு இன்றுவரை ஈடாக வேறொரு கிரந்தம் வரவில்லை என்று சொன்னால் அது மிகையாகாது.

சுற்றுச்சூழல் பாதுகாப்பு:

மற்ற ஹரிதாசர்களின் பாடல்களைப் போலவே ஜகன்னாததாசரின் பாடல்களிலும், ஸ்ரீஹரி ஸ்மரணை, ஹரிபூஜை மற்றும் கீர்த்தனை ஆகியவை காணப்படுகின்றன. ஆனால் அவரை வெறும் பாடல்களை இயற்றியவர் என்று சொன்னால் அது தவறாகும். அவரது பாடல்களில் பக்தியே பிரதானமாக காணப்பட்டாலும், அவற்றில் அறிவியல் பார்வை, சமுதாய முன்னேற்றத்திற்கான

வழிகள், சூழ்நிலை மாற்றம் ஆகியவையும் காணப்படுகின்றன. அவற்றைக் கண்டுகொள்ளும்படியான மனது, பார்வை, முயற்சி நமக்கு வேண்டும் – அவ்வளவே. இத்தகைய பார்வையில் அவரது பாடலான 'ஶ்ரீரமண தவசரண' பாடலைப் பார்த்தால், அது மிகவும் சிறந்த பாடல் என்று தெரியவரும். அறிவியலைக் கண்டுபிடித்தவர்கள் என்று சொல்லிக் கொள்ளும் மனித இனம், தனது சுயநலத்திற்காக தொடர்ந்து உலகில் இருக்கும் சுற்றுச்சூழலைக் கெடுப்பதுடன், அதை அழித்தும் வருகிறான். சுற்றுச்சூழலின் மேல் நடக்கும் இத்தகைய தாக்குதல், இறுதியில் உலக அழிவிற்கே காரணமாகிறது. இப்படி வேகமாக நடக்கும் தாக்குதலினால், நாம் முன்னர் இருந்த நிலைக்குத் திரும்பிப் போவது சாத்தியமே இல்லையோ என்று நினைக்கும் அளவிற்கு வந்துவிட்டோம்.

இத்தகைய தூய்மைக்கேடு என்பது ஒரு பேசுபொருளாகவே இல்லாத காலத்தில், அதாவது சுமார் 230 ஆண்டுகளுக்கு முன்னரே அதைப் பற்றிப் பேசி எச்சரிக்கை அளித்த ஜகன்னாததாசரைக் கண்டு வியக்கவே வேண்டியிருக்கிறது. ஜகன்னாததாசரின் காலம் கிபி 1728 முதல் 1809 ஆகும். என்றால் 18ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இருந்த சூழ்நிலைகளை அவர் நன்றாக அறிந்திருந்தார். அந்த காலகட்டத்தில் இந்தியாவில் தொழிற்சாலைகள் மிகக் குறைவே. அதுவும் சுற்றுச்சூழலை அழிக்கும்படியான தொழிற்சாலைகள் இல்லவே இல்லை. அன்றைய அரசாங்கத்திலும், சமுதாயத்திலும், சுற்றுச்சூழல் பாதுகாப்பு என்னும்படியான துறையோ பேச்சோ இருந்திருக்கவில்லை. ஆனால் ஜகன்னாததாசரின் கற்பனைத்திறனை அவரது இந்தப் பாடலில் நாம் பார்த்து வியக்கவேண்டியிருக்கிறது.

'சிரி ரமண தவ சரண' என்னும் இந்தப் பாடலின் முதல் நுடியில், சூழ்நிலையை நாசமாக்கும் அன்றைய நிலைமையை குறிப்பால் உணர்த்துகிறது. மற்றும் அது எத்தகைய பாவத்தைத் தரும் செயல் என்றும் நமக்கு அறிவுறுத்துகிறார். சுமார் 230 ஆண்டுகளுக்கு முன் ஜகன்னாததாசர், சொல்லும் சுற்றுச்சூழல் பாதுகாப்பு என்னும் விஷயம், இன்றைய 21ம் நூற்றாண்டில் மிகத் தீவிரமாக விவாதிக்கபட்டு வருகிறது என்றால், அவரது இந்தப் பாடலின் சிறப்பினை தெரிந்துகொள்ளலாம்.

சிரி ரமண தவ சரண தொரகுவுது
ஹ்யாங்கின்னு பரம பாபிஷ்ட நானு

நரஹரியே நின்ன நாமஸ்மரணெ மாடதெ நரகக்கெ குரியாதேனோ

கெரெ பாவி தேவ மந்திரங்களன்னு கெடஹி ந ஹிரிதாகி மனெ கட்டிதெ
நெரெ நடெவ மார்க்கதலி அரெவடிகெகளனு தரதரனெ பிச்சி தந்தெ
பரம சம்ப்ரமதிந்த அரளிய மர கடிஸி கொரெஸி பாகில மாடிதெ
பரமந்திரவ முகிஸி ஹருஷசித்ரவ பரெஸி பரிபரிய சௌக்ய சுரிதெ மரெதெ

இப்படியாக ஜகன்னாததாசர் பாவகர்மங்களைப் பற்றி ஏன் விரிவாகச் சொல்கிறார்?

மக்கள் வெறும் அரச மரத்தை மட்டும் வெட்டினார்களா என்ன? வீட்டைக் கட்டுவதற்காக, பூஜை சாமான்கள், வீட்டு உபயோகப் பொருட்கள் என பலவற்றிற்கும் மரங்களை வெட்டுவது பொதுவாக நாம் அறிந்ததே. ஆனால் வேறு மரங்களை வெட்டுவதற்கு மறுப்பு தெரிவிக்காத தாசர், வெறும் அரச மரத்தை வெட்டுவதற்கு மட்டும் ஏன் எதிர்க்கிறார்?

தன்னுடைய சுயநலத்திற்காக மரங்களை வெட்டும் மனிதர்கள், அதன் மூலம் சுற்றுச்சூழலையே கெடுக்கின்றனர் என்று குறிப்பால் உணர்த்தும் சொல்லும் தாசர், அதன் உள் அர்த்தங்களை மற்றும் மர்மங்களை விவரிக்கவில்லை. ஒரு மிகப்பெரிய அரசமரம் நின்று வாழ்வதற்கு காரணம் அதன் ஒரு சிறிய விதை. அத்தகைய ஒரு சிறிய விதையில், இவ்வளவு பெரிய மரம் வருவதற்கு எப்படி சாத்தியம் என்னும் கேள்வி அனைவருக்கும் வருவது சகஜம். அதனை அறியவேண்டுமெனில் நாம் தத்வ சாஸ்திரம், ஆன்மிகத்தின் பால் செல்லவேண்டும்.

பிராணவாயு:

சுமார் 394 லட்சத்துக்கும் மேற்பட்ட தாவர வகைகள் உள்ளன என்று அந்தத் துறையில் உள்ள வல்லுனர்கள் சொல்கின்றனர். அவை அனைத்தையும் விட்டுவிட்டு, வெறும் அரச மரத்திற்காக மட்டும் ஜகன்னாததாசர் பாடியது, அழிந்துவிடுமோ என்று பயந்ததற்கு என்ன காரணம்? காரணம் அறிவியல் சார்ந்தது. அறிவியல் அவ்வளவாக

பரவியிருக்காத சுமார் 250 ஆண்டுகளுக்கு முன்னரே தாசர் அதனை சரியாக புரிந்துகொண்டிருந்தார் என்று தெரிகிறது. எல்லா மரங்களைவிடவும் அதிகமான

பிராணவாயுவினை அரசமரம் வெளியிடுகிறது. அதாவது ஒரு மணி நேரத்திற்கு ஒரு அரசமரமானது 3750 கிலோ பிராணவாயுவினை வெளியிடுகிறது என்று தாவரவியல் அறிஞர்கள் சொல்கின்றனர். இதில் இன்னொரு விசேஷமும் உண்டு. பிற மரங்கள் அனைத்தும் காலையில் மட்டும் பிராணவாயுவினை வெளியேற்றினால், அரசமரமானது பகல் இரவு என அனைத்து நேரங்களிலும் பிராணவாயுவினை மட்டும் வெளியேற்றுகிறது என்று சொல்லப்படுகிறது.

ஆனால், அரச மரத்தின் சிறப்புகள் நம் முன்னோர்களுக்கு ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னரே தெரிந்திருக்கவில்லையா? பாரதத்தின் சமூக, தார்மிக சூழ்நிலையில் எந்தவொரு மரத்திற்கும் இல்லாத சிறப்பு, முக்கியத்துவம் அரச மரத்திற்கு இருப்பதைப் பார்க்கிறோம். கிராமங்களில் அனுமப்பனின் கோயில், கணபதியின் கோயில்கள் அரசமரத்தடியில் நிர்மாணித்திருப்பதை பார்க்கலாம். ஆண்கள், பெண்கள், வயதானவர் என்று அனைவரும் காலை வேளைகளில் அரச மரத்தினை சுற்றி வருவதை பார்க்கிறோம் அல்லவா? அப்படி ஏன் செய்ய வேண்டும்? வாரிசு இல்லாத பெண்கள், காலையில் அரச மரத்தினை சுற்றி, அதற்கு பூஜை செய்வது காலம் காலமாக இருக்கும் பழக்கங்களில் ஒன்று. (தொடரும்)

**தற்போது நமது Blogல் தினம் ஒரு பத்யமாக வந்து கொண்டிருப்பது : https://dasa-sahitya.blogspot.com/**

* ஸ்ரீப்ரஸன்ன ஸ்ரீனிவாஸ தாஸர் இயற்றிய - விஷ்ணு சஹஸ்ரநாம பாஷ்ய - கன்னட பத்யங்கள். இதன் அர்த்த விளக்கங்கள் - தமிழில்.
* 1000 நாமங்களுக்கு, (4 வரிகளைக் கொண்ட) 1000 கன்னட பத்யங்களை பாஷ்ய ரூபமாக இயற்றிக் கொடுத்திருக்கிறார் தாஸர்.
* தினமும் 3 பத்யங்களின், தமிழ் விளக்கங்களை நமது மேற்கண்ட blogல் படிக்கலாம்.

தொடர்

**ஸ்ரீராகவேந்திர விஜயம்**

**ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர் இயற்றியது**

**க்ருதிய மாடு$^3$வ ஶகுதி புட்டிது**
**மதிய மாந்த்$^3$யவு தானே போயிது**
**யதனவில்லதெ$^3$ ஸகல வேத$^3$க$^3$ளர்த்த$^2$ திளிதி$^3$ஹது$^3$**
**பதிதபாவனராத$^3$ கு$^3$ருக$^3$ள**
**அதுளமஹிமெயவனாவ ப$^3$ல்லனு**
**மதிமதாம்வர பு$^3$த$^4$ரிக$^3$ஸத$^3$ள நரர பாடே$^3$னு ||4**

க்ருதிய மாடுவ - இந்த கிருதியை இயற்றும்; ஶகுதி புட்டிது - சக்தி கிடைத்தது; மதிய மாந்த்யவு - புத்திக்கு வந்த கெட்ட மயக்கங்கள்; தானே போயிது - தானே விலகியது; யதனவில்லதெ - எவ்வித முயற்சியும் இல்லாமல்; ஸகல வேதகளர்த்த - அனைத்து வேதங்களின் அர்த்தமும்; திளிதிஹது - எனக்கு தெரிந்தது; பதிதபாவனராத - பக்தர்களை காப்பவரான; குருகள - ஸ்ரீராயரின்; அதுளமஹிமெய - அற்புத மகிமைகளை; ஆவ பல்லனு - யாருக்குதான் தெரியும்? ; மதிமதாம்வர - நல்ல அறிவுக் கூர்மை உள்ள; புதரிகெ - ஞானிகளுக்கு; அஸதள - மட்டுமே இது புரியக்கூடியது; நரர பாடேனு - (என்னை போன்ற) சாதாரண பாமர மனிதனின் பாடு என்ன?

அந்த ஸ்ரீராயரின் அருளாலேயே இந்த அனைத்தும் நடக்கிறது என்று ஸ்ரீராயரிடம் தனக்கு உள்ள பக்தியை / சரணாகதியை காட்டுகிறார்.

(ஸ்ரீராயரின் அருளாலேயே) இந்த கிருதியை இயற்றும் சக்தி எனக்கு கிடைத்தது. எனக்கு வந்த கெட்ட மயக்கங்கள் விலகியது. எவ்வித முயற்சியும் இல்லாமல், அனைத்து வேதங்களின் அர்த்தமும் எனக்கு தெரிந்தது. பக்தர்களை காப்பவரான ஸ்ரீராயரின் அற்புத மகிமைகளை யார்தான் அறிவர்?. நல்ல அறிவுக் கூர்மை உள்ள ஞானிகளுக்கு மட்டுமே இது புரியக்கூடியது. அப்படியிருக்கையில், என்னைப் போன்ற சாதாரண பாமர மனிதனின் பாடுதான் என்ன?

**பரஸு ஸோகலு லோஹ ஹேமவு**
**அரஸு முட்டலு தா$^3$ஸி ரம்பெ$^3$யு**
**ஸரஸ கு$^3$ருக$^3$ள பாத$^3$தூ$^3$ளிய ஸ்பரிஶ மாத்ரத$^3$லி**
**பரம பாமரனாத$^3$ நரனூ**
**ஹரன தெரத$^3$லி ஞானயெய்து$^3$வ**

**து$^{3}$ரிதராஶிய தூ$^{3}$ரமாடு$^{3}$வ து$^{3}$ரிதவனதா$^{3}$வ ||5**

பரஸு ஸோகலு - பரசுவை தேய்த்தால்; லோஹ - இரும்பு; ஹேமவு - தங்கம் ஆகிறது; அரஸு முட்டலு - ஒரு அரசனானவன் தொட்டால்; தாஸி - ஒரு சாதாரண பணிப்பெண்; ரம்பெயு - ரம்பை ஆகிறாள்; ஸரஸ - அன்பான; குருகள பாததூளிய - குருகளின் பாததூளியை; ஸ்பரிஸ மாத்ரதலி - தொட்ட உடனேயே; பரம பாமரனாத நரனு - மிகவும் பாமரனான மனிதன்; ஹரன தெரதலி - பரம வைஷ்ணவரான ருத்ரதேவரைப் போல; ஞானயெய்துவ - ஞானம் பெறுகிறான்; துரிதராஸிய - கஷ்டங்களின் கும்பலை; தூரமாடுவ - விலக்கும்படியான; துரிதவனதாவ - பெரும் காட்டுத் தீயைப் போன்றது;

பரசுவை தேய்த்தால், இரும்புகூட தங்கம் ஆகிறது. ஒரு அரசனானவன் தொட்டால், தாஸிகூட ரம்பை ஆகிறாள். அன்பான குருகளின் பாததூளியை தொட்ட உடனேயே, மிகவும் பாமரனான மனிதன், பரம வைஷ்ணவரான ருத்ரதேவரைப் போல ஞானம் பெறுகிறான். கஷ்டங்களின் கும்பலை விலக்கும்படியான பெரும் காட்டுத் தீயைப் போன்றது (ஸ்ரீராயரின் கருணை) ஆகும்.

* பரசு என்னும் ஒரு திரவம் / பவுடர். இதனை ரசவாதம் என்கின்றனர். ஆங்கிலத்தில் philosopher's stone எனலாம். இதன் மூலம் இரும்பினை தங்கம் ஆக்கும் ஆராய்ச்சியில் உள்ளவர்களை alchemists என்கிறார்கள்.
* த்ரிவக்ரையான குப்ஜையை ஸ்ரீகிருஷ்ணன் தொட்டவுடன், அவள் ரம்பையைப் போல ஆகிறாள். இதையே இந்த பத்யத்தில் சொல்லியிருப்பதற்கு உதாரணமாகக் கொள்ளலாம்.

**ஆவ கு$^{3}$ருக$^{3}$ள பாத$^{3}$தோயதி$^{3}$**
**தே$^{3}$வ நதி$^{3}$ மொத$^{3}$லாத$^{3}$ தீர்த்த$^{2}$க$^{3}$**
**ளாவ காலத$^{3}$லிந்த$^{3}$ தாவெ பெ$^{3}$ரெது நிந்தி$^{1}$ஹவோ**
**ஸ்ரீவரனு தா சக்ரரூபதி$^{3}$**
**ஜீவரோத்தம ப்ராண தே$^{3}$வனு**
**ஸாவிராஸ்யனெ ராயரெந்தூ$^{3}$ ஸூரரு நிந்தி$^{1}$ஹரு ||6**

ஆவ குருகள - எந்த குருகளின்; பாததோயதி - பாதோதகத்தில்; தேவ நதி - கங்கை; மொதலாத தீர்த்தகளு - முதலான நதிகள்; ஆவ காலதிந்த - அனைத்து காலங்களிலும்; தாவெ பெரெது நிந்திஹவோ - தாமாகவே

வந்து சன்னிதானம் கொண்டிருக்கின்றனவோ (அவ்வளவு பவித்ரமானது இந்த பாதோதகம்); அந்த இடத்தில் (பிருந்தாவனத்தில்); ஸ்ரீவரனு தா சக்ரரூபதி - ஸ்ரீஹரியானவன், தன் ஒரு அம்சத்திலும்; ஜீவரோத்தம ப்ராண தேவனு - ஜீவரோத்தமரான ப்ராண தேவர்; ஸாவிராஸ்யனெ - ஆயிரம் தலைகளைக் கொண்ட சேஷதேவர் போன்ற ; ராயரெந்தூ - அவர்களின் ஆவேசமே இவரில் இருக்கிறது என்று; ஸுரரு நிந்திஹரு - பல தேவதைகள் இங்கு இருக்கின்றனர்;

எந்த குருகளின் பாதோதகத்தில், கங்கை முதலான நதிகள், அனைத்து காலங்களிலும் தாமாகவே வந்து சன்னிதானம் கொண்டிருக்கின்றனவோ, (இந்த பாதோதகம் அவ்வளவு பவித்ரமானது என்று கூறுகிறார்); அந்த இடத்தில் (பிருந்தாவனத்தில்), ஸ்ரீஹரியானவர், தன் ஒரு அம்சத்திலும் (சக்ர ரூபத்தில்), ஜீவோத்தமரான ஸ்ரீபிராண தேவர் மற்றும் ஆயிரம் தலைகளைக் கொண்ட ஸ்ரீசேஷதேவரின் ஆவேசம் இருக்கிறது என்று நாம் அறிகிறோம். இவ்வாறு பல தேவதைகள் இங்கு இருக்கின்றனர்.

ஸ்ரீராகவேந்திர ஸ்தோத்திரத்தில் வரும் இந்த வரிகளின் கன்னட விளக்கமாகவே இந்த பத்யம் இருக்கிறது என்று அறியலாம்.

யத் பாதோதக ஸஞ்சய ஸுர நதி முக்யா பகாஸாதிதா
ஸங்க்யானுத்தம புண்ய ஸங்க விலஸத் ப்ரக்யாத புண்யாவஹ:

**அலவ போத4 ஸுதீர்த்த2 முனிக3ளு**
**ஹலவு காலதி3 நிந்து ஜனரக4**
**வளிது3 கீருதியித்து லோகதி3 க்2யாதி மாடி3ஹரு**
**ஸுலப4 ஸாத்4யனு தன்ன ஜனரிகெ3**
**ப2லக3ளீவனு ஸர்வ ஜனரிகெ3**
**ஒலியனீதனு எந்தி3கா3த3ரு மந்த3பா4க்3யரிகெ3 ||7**

அலவ போத - ஸ்ரீமன் மத்வாசார்யர்; ஸுதீர்த்த முனிகளு - மற்றும் (ஸ்ரீராயர் மட பரம்பரையில் இவருக்கு முன் வந்த) அனைத்து யதிகளும் ; ஹலவு காலதி நிந்து - பல காலமாக இந்த பிருந்தாவனத்தில் சன்னிதானம் கொண்டு; ஜனரகவளிது - மக்களின் கஷ்டங்களைப் (பாவங்களை) போக்கினர்; கீருதியித்து - அவர்களுக்கு ஞானத்தைக் கொடுத்து; லோகதி க்யாதி மாடிஹரு - உலகில் புகழைக் கொடுத்தனர்; தன்ன ஜனரிகெ - தன் பக்தர்களுக்கு; ஸுலப ஸாத்யனு - ஸ்ரீராயரானவர், மிகவும் சுலபமாக வரம் அளிப்பவர்; ஸர்வ ஜனரிகெ - தன்னை நம்பி

வணங்குபவர்களும் அனைவருக்கும்; பலகளீவனு - நற்பலன்களைக் கொடுக்கிறார்; மந்தபாக்யரிகெ - ஆனால், தன்னை நம்பாதவர்களுக்கு / சேவை செய்யாதவர்களுக்கு; எந்திகாதரு - என்றுமே; ஒலியனீதனு - இவர் தரிசனம் அளிப்பதில்லை / அருள்வதில்லை.

ஸ்ரீராயரின் பிருந்தாவனத்தில் ஸ்ரீஹரி, வாயுதேவர் முதலான பல தேவதைகள் இருக்கின்றனர் என்பதை பார்த்தோம். அதைப் போலவே, ஸ்ரீமன் மத்வாசார்யர் மற்றும் ஸ்ரீராயர் மட பரம்பரையில் ஸ்ரீராயருக்கு முன் வந்த அனைத்து யதிகளின் சன்னிதானமும் இருக்கின்றன என்பதை இங்கு விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

ஸ்ரீமன் மத்வாசார்யர் மற்றும் (ஸ்ரீராயர் மடத்து பரம்பரையில் இவருக்கு முன் வந்த) அனைத்து யதிகளும் பல காலமாக இந்த பிருந்தாவனத்தில் சன்னிதானம் கொண்டு மக்களின் கஷ்டங்களைப் (பாவங்களை) போக்கினர். அத்தகைய ஸ்ரீராயரின் பக்தர்களுக்கு ஞானத்தைக் கொடுத்து, உலகில் புகழைக் கொடுத்தனர். ஸ்ரீராயரானவர், தன் பக்தர்களுக்கு மிகவும் சுலபமாக வரம் அளிப்பவர். தன்னை நம்பி வணங்குபவர்களு நற்பலன்களைக் கொடுக்கிறார். ஆனால், தன்னை நம்பாதவர்களுக்கு / சேவை செய்யாதவர்களுக்கு, என்றுமே இவர் தரிசனம் அளிப்பதில்லை / அருள்வதில்லை.

**ஈதனொலியலு ப்ராணனொலிவனு**
**வாதனொலியலு ஹரியு ஒலிவா**
**ஈத ஸகலகெ முக்[2]ய காரணனாகி[3] இருதிப்ப**
**ஈதனே ப[3]லவந்த லோகதி[3]**
**ஈதனே மஹாதாத ஜனரிகெ[3]**
**ஈதனங்க்[4]ரி ஸரோஜ காமிதப[2]லகெ காரணவு ||8**

ஈதனொலியலு - இத்தகைய ஸ்ரீராயர் மகிழ்ந்தால் (அருளினால்); ப்ராணனொலிவனு - முக்ய ப்ராண தேவர் மகிழ்கிறார் (அருள்கிறார்); வாதனொலியலு - ப்ராணதேவர் மகிழ்ந்தால் (அருளினால்); ஹரியு ஒலிவா - ஸ்ரீஹரி அருள்கிறான்; ஈத ஸகலகெ - இவரே (ஸ்ரீராயரே) அனைத்திற்கும்; முக்ய காரணனாகி இருதிப்ப - முக்கிய காரணமாக இருக்கிறார்; ஈதனே பலவந்த லோகதி - இவரே உலகில் சிறந்த ஆளுமை கொண்டவர் (இவரே கதி என்று நம்பினவர்களுக்கு அருள்கிறார்); ஈதனே மஹாதாத ஜனரிகெ - இவரே மக்களுக்கு மிகச்சிறந்த குருவாக

இருக்கிறார்; ஈதனங்க்ரி ஸரோஜ - இவருடைய பாத கமலங்களே; காமிதபலகெ காரணவு - விரும்பிய பலன்களைப் பெறுவதற்கான காரணம் ஆகும்;

குருகளின் அருள் இருந்தால், பகவந்தனின் அருள் சுலபமாக கிடைக்கும் என்னும் விஷயத்தை இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீகுரு ஜகன்னாததாஸர்.

இத்தகைய ஸ்ரீராயர் மகிழ்ந்தால் (அருளினால்), முக்ய ப்ராண தேவர் மகிழ்கிறார் (அருள்கிறார்). ப்ராணதேவர் மகிழ்ந்தால் (அருளினால்), ஸ்ரீஹரி அருள்கிறான். இவரே (ஸ்ரீராயரே) அனைத்திற்கும் முக்கிய காரணமாக இருக்கிறார். இவரே உலகில் சிறந்த ஆளுமை கொண்டவர் (இவரே கதி என்று நம்பினவர்களுக்கு அருள்கிறார்). இவரே மக்களுக்கு மிகச்சிறந்த குருவாக இருக்கிறார். இவருடைய பாத கமலங்களே, விரும்பிய பலன்களைப் பெறுவதற்கான காரணம் ஆகும்.

இதே விஷயத்தை விளக்கும்படியான பல்வேறு ஹரிதாஸர்களின் பாடல்களும் உள்ளன.

* ஹனுமன மதவே ஹரிய மதவோ, ஹரிய மதவே ஹனுமன மதவோ
* நம்பி கெட்டவரில்லவோ, குருகள நம்பதெ கெட்டரெ கெடலி

(தொடரும்)

**YouTube Channel - Jagannatha Kesava**

* மேற்கண்ட நமது யூட்யூப் சேனலில் தற்போது வரவிருக்கும் தொடர் – ஸ்ரீபிராணேஷ தாஸர் இயற்றிய கன்னட ஹரிவாயு ஸ்துதி. – தமிழ் அர்த்த விளக்கங்களுடன்.
* நமது சேனலுக்கு சப்ஸ்க்ரைப் செய்து, ஏற்கனவே உள்ள + வரவிருக்கும் தொடர்களையும், அனைவரும் கேட்டு, நம் ஹரிதாஸ ஸாகித்யத்தின் சிறப்பினை அறிய வேண்டும் என்று விரும்பி கேட்டுக் கொள்கிறேன்.

ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ் சார்பாக இதுவரை வந்திருக்கும் அனைத்து புத்தகங்களையும் வாங்கி விட்டீர்களா?

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## 31 – நைவேத்ய ப்ரகரண ஸந்தி

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 27 | 28 | | | 2 | | | | 29 | | 30 | | |
| | | | | | | | | | | 20 | | | |
| | | | 34 | 3 | | | | | | | | 35 | |
| | | | | | 4 | | | | | | | | |
| | | | | | 5 | | | | | 6 | | 31 | |
| 7 | | | | 8 | | 9 | | | | | | | |
| | | 21 | | | | | | 10 | | | | | |
| | | 11 | | | | | 12 | | 36 | | | | 22 |
| 13 | | | 14 | | | | | | | | | 23 | |
| | | 15 | | | | | | | | | | | |
| 16 | 32 | | | | | 33 | | | | | | | 24 |
| 17 | | | | | | | 25 | | | | | 26 | |
| 18 | | | | 19 | | | | | | | | | |

| |
|---|
| குறுக்கெழுத்துப் போட்டிகளை வடிவமைத்துக் கொடுப்பவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி |
| குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam @ gmail.com / அல்லது 89044 58276 க்கு வாட்சப் செய்யலாம். |

**இடமிருந்துவலம்:** 1.ஸாக்ஷி ரூபத்தில் உள்ளவன்(4), 2.தேரோட்டி(3), 3.நைவேத்ய ரூபங்களில் ஒன்று. சாப்பிடும் கலயங்கள்(10), 4.நைவேத்யம் மேல் மூடும் இலையின் அந்தர்யாமி ரூபம். கலைந்துள்ளது.(6), 5.வெந்த பருப்பு வகையின் அபிமானி தேவதை(4), 6.பரமான்னம்(4), 7.இந்த பதார்த்தத்தின் அபிமானி தேவதை சதுர்முகன்(4), 8.அறுசுவையில் ஒன்று. இது இல்லா பண்டம் குப்பையிலே என்பது பழமொழி(3), 9.புனிதமாக்கும் நிவேதன செயலின் அபிமானி தேவதை. கர்மாபிமானி தேவதையும் கூட.(5) ,10.புளிப்பில்லாத பொருட்களின் அபிமானி தேவதை. லயத்தின் அதிபதி(4), 11.எரிபொருளின் அபிமானி தேவதை(5), 12.நெய்யின் அபிமானி தேவதை(3), 13.இந்த பதார்த்தத்தின் அந்தர்யாமி பகவத் ரூபம் வாமனன்(3), 14.இனிப்பு பானங்களின் அபிமானி தேவதை(4), 15.இந்த போஜன ரூபத்தின் அபிமானி தேவதை ப்ராணன்(7), 16.நெய்யின் அந்தர்யாமி பகவத் ரூபம்(5), 17.ப்ரஹ்மாவின் அந்தர்கதனான ஸ்ரீஹரி இப்படி அழைக்கப்பட்டான்(3), 18.கோஸம்பரியுடன் கூடிய பதார்த்தம்(3), 19.போஜன போகத்தின் அபிமானி தேவதை(7)

**வலமிருந்துஇடம்:** 5.துஷ்டர்களின் வைரி(4) ,20.இந்த பொருளின் அபிமானி தேவதை தக்ஷ ப்ராஜாபதி. கலைந்துள்ளது(4), 21.குடிநீரின் அபிமானி தேவதை(3), 22.இந்த பதார்த்தின் அபிமானி தேவதை ஸரஸ்வதி(2), 23.பாத்ர பாலக போஜன ரூபத்தின் பகவத் ரூபம்(5),24.கோஸம்பரியின் அபிமானி தேவதை.கலைந்துள்ளது.(6),
25.ஆழ்ந்த நித்திரை(4) ,26.நைவேத்ய திரையின் பகவத் ரூபம்(5)

**மேலிருந்துகீழ்:** 1.இந்த பதார்த்த்திற்கு சந்திரன் அபிமானி தேவதை(4), 2.ஸ்வப்ன அவஸ்தை(4), 7.கடுகு, ஏலக்காய் போன்ற பொருட்களுக்கு அபிமானி தேவதை(5), 8.பழரசங்களின் பகவத் ரூபம்(6), 22.வெற்றிலையின் அபிமானி தேவதை(4), 27.பிறப்பற்றவன்(3), 28.பாலின் அபிமானி தேவதை(5), 29.இனிப்பு பொருட்களுக்கு அபிமானி தேவதை(5), 30.இந்த பொருளின் பகவத் ரூபம் புருஷோத்தமன்(6), 31.இந்த பொருளின் அபிமானி தேவதை அக்னி(8), 32.ப்ரஹ்மாண்டம்(3), 33.பாயாஸத்தின் பகவத் ரூபம். கடைசி இரண்டு எழுத்து இல்லை(3).

**கீழிருந்துமேல்:** 25.முக்தர்களுக்கு காணக் கிடைப்பவன்(4), 34.தேஹத்தின் ஆகார விவஹாரங்களுக்கு துணை புரிபவன்(3), 35.சாதுர்மாஸத்தில் இந்த பொருளை ராயர் மடத்தில் மட்டும் உபயோகப்படுத்துவர்(3), 36.கீரை வகைகளுக்கு அபிமானி தேவதை(4).

தொடர்

**கன்னட ஹரிதாசினிகள்**

**ராதாபாய் (1889-1976)**

ராதாபாய் அவர்கள் ஆந்திராவின் மதனபள்ளியின், அனந்தராயர் மற்றும் இந்திராபாய் தம்பதிகளின் மகளாக 1889ம் ஆண்டில் பிறந்தவர். பங்காபுர குலத்தை சேர்ந்த இவர், புகழ்பெற்றவரான நவரத்ன ராமராயரின் உறவினர் ஆவார்.

கடப்பாவில் ஓவர்சியர் ஆக வேலையில் இருந்த பள்ளாரி ஜில்லா ஹரபனஹள்ளியை சேர்ந்தவரான ஸ்ரீனிவாஸராயருடன் திருமணம் ஆகி, ராதாபாய் தம் 15ம் வயதில் திருமண வாழ்வில் நுழைந்தார். இந்த தம்பதிக்கு 6 பேர் பெண் குழந்தைகள் மற்றும் 3 பேர் ஆண் குழந்தைகள் பிறந்தனர்.

தெய்வ பக்தரும், மேதாவிகளும் ஆன ராதாபாய், சங்கீதம், கன்னட மற்றும் ஸம்ஸ்க்ருத மொழிகளில் தக்க பாண்டித்யத்தை கொண்டிருந்தார். வீட்டு மருத்துவத்தில் வல்லுனராக இருந்தார். கைவினைப் பொருட்களான பொம்மைகளை செய்வதில் மற்றும் களிமண்ணால் பொம்மைகளை செய்வதில் சிறந்தவராக இருந்தார். திருமணம், பூணல் போன்ற நிகழ்ச்சிகளுக்கு தேவையான அலங்காரப் பொருட்களை முதன்முதலில் அறிமுகப்படுத்தியவர் இவர் என்றே சொல்லலாம். சர்க்கரைப் பாகில் பல்வேறு பொம்மைகளை, பழங்களை, பக்ஷ்யங்களை, தயாரிக்கும் கலையில் தேர்ச்சி பெற்றிருந்தார். இவை அனைத்தையும் மற்றவர்களுக்கும் கற்றுக் கொடுத்து இந்த கலைகளை பரவச் செய்தார்.

ராதாபாய் அவரின் மகன் எம்.எஸ். அச்யுதராயர், வேளாண்மைத் துறையில் வேலை செய்து வந்தார். அவருடைய மனைவி வனஜாபாய் அவர்கள், ராதாபாய் அவர்களின் வாழ்க்கை மற்றும் சாகித்யத்தைப் பற்றி பல அரிய தகவல்களை கொடுத்திருக்கிறார். அவருடைய இன்னொரு மகன், கோலார் சுரங்கத்தில் வேலை செய்து வந்தார்.

வாழ்க்கையில் பல ஏற்றத் தாழ்வுகளை கண்ட ராதாபாய் அவர்கள் தமது 87 ஆண்டு நீண்ட வாழ்க்கையில், கனவில் தெய்வ ப்ரேரணை ஆகி,

கீர்த்தனைகளை இயற்றத் துவங்கினார். பல்வேறு கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார் என்றாலும், ‘வெங்கடவிட்டல’ மற்றும் ‘ராகவேந்திர’ அங்கிதத்தில் இயற்றிய 35 கீர்த்தனைகள் மட்டும் தற்போது கிடைத்துள்ளன.

கிடைத்திருக்கும் பாடல்களின்படி ராதாபாய் அவர்கள், ஸ்ரீஹரியின், வாயுவின் அவதார த்ரயர்கள், மற்றும் மந்திராலய பிரபுகளின் மேல் ஸ்துதி பாடல்களை இயற்றியிருக்கிறார் என்று தெரியவருகிறது. இவருடைய கீர்த்தனைகளின் மொழி சரளமாகவும், பள்ளாரியின் வட்டார மொழியினாலும் கூடியிருக்கிறது. ஹரி ஸர்வோத்தம, வாயு ஜீவோத்தம என்னும் மத்வ ஸம்பிரதாயத்திற்கு ஏற்ப கீர்த்தனைகளை இவர் இயற்றியிருக்கிறார்.

ஹௌவனகட்டே கிரியம்மா, ஹரபனஹள்ளி பீமவ்வா, ஓர்வாய் லட்சுமிதேவம்மா ஆகியோரின் கீர்த்தனைகளால் ஈர்க்கப்பட்டு ராதாபாய் அவர்கள் கீர்த்தனைகளை இயற்றியிருக்கலாம் என்று சொல்லலாம். அவருடைய கீர்த்தனைகள் ஞான பக்தி வைராக்கியங்களால் கூடியிருக்கின்றன. அவருடைய சில பாடல்களை மட்டும் பார்க்கலாம்.

1. ஸ்ரீநிவாஸனின் ஸ்துதி

பக்தவத்ஸல ஸ்வாமி பய நிவாரண தேவ
பரதிந்த பந்துத்யாகெ பேளய்ய ||ப

ஹத்தாவதார எத்தி பேஸத்து நீ மத்தெ நீனில்லி பந்திஹெயா |
எத்த போதரு ஸ்வாமி பிடதெ நின்ன பென்ஹத்தி பருவரு கண்டெயா ||8

28 நுடிகள் உள்ள இந்த கீர்த்தனையில், ஸ்ரீஹரி தசாவதாரம் எடுத்து, லட்சுமியை காணாமல் அவளை தேடியவாறு பூமிக்கு வந்து, சேஷகிரியில் நின்று, பக்தர்களை காக்கிறான் என்னும் விஷயத்தை விளக்கியிருக்கிறார்.

நமோ நமோ வெங்கடேஷ நமோ நமோ திருமலேஷா
நமோ நமோ ஜகதீஷா நமோ நமோ ஸர்வேஷா

லட்சுமியை தேடியவாறு, பூமிக்கு வந்து சேஷகிரியில் நின்ற திருமலேஷனை ஹரிதாஸினியான ராதாபாய், இந்த பாடலில் பக்தியுடன் வணங்கி அவனுக்கு தம் நமஸ்காரங்களை செலுத்துகிறார்.

ராதாபாய் அவர்கள் பள்ளிப் படிப்பு இல்லாதவர் ஆனாலும், அற்புத காவிய நடையில் கீர்த்தனைகளை இயற்றும் திறன் பெற்றிருந்தார். அன்றைய பெண் குழந்தைகளுக்கு, வீடே பள்ளியாகவும், சமையல் அறையே வித்யாப்யாஸத்தின் இடமாகவும் இருந்தது. ராதாபாய் தம் பாடல்களின் மூலம் பரமாத்மனை நவவித பக்திகளால் ஆராதனை செய்கிறார்.

திருப்பதி வெங்கடரமணனை, 5 பாடல்களில் வணங்கியிருக்கிறா். அவற்றில் ஒன்று, 10 சரணங்களைக் கொண்டுள்ளது.

ஸ்ரீனிவாஸ கல்யாண

ஆனெ பந்திதம்ம மரி ஆனெ பந்திதம்மா ||ப
கிங்கரரிகெ பந்த ஸங்கட களெவா ஸ்ரீ வெங்கட ரமணனெம்பானெ ||அப

ஸிரியில்லதெ இரரலாரெனெந்த ஆதுரதலி தரெகிளிதானே
பததொளகெல்லா ஹுடுக்யானெ வல்லீகதொளு அடக்யானே ||1

பகுளமாதெய கரெதானெ ஸகல வ்ருத்தாந்தவ திளிஸ்யானே
பேகதி ஹோகி பாரெந்தானெ மௌனதிந்தலி மலக்யானே ||2

மாதெ பருவுத கண்டானெ முததிந்தலி எத்து குளிதானே
தந்த ஷுபவார்த்தெய கேள்யானே மந்தஹாஸதிந்த நலிதானே ||3

பந்துகளெல்லர கரிஸ்யானெ முந்தெ மாடிகொண்டு நடெஸ்யானே
மருமகனாகி நிந்தானே பதுமாவதி கை பிடிதானெ ||4

ஜயஜயவெந்தரு ஸூரபிரம்மாதிகளு வாணி பார்வதியரு
ஜயஜயவெந்தரு ககனதி அமரரு மதுமகள மேலெ பூமளெ கரெதரு ||5

மங்களவென்னிரி பத்மினி அரஸகெ பன்னகஷயனகெ
மங்களவென்னிரி பரம கல்யாணகெ
மங்களவென்னிரி ஸ்ரீ வெங்கடவிட்டலகெ
மங்களா ஜய மங்களா ||6

இந்தப் பாடலில் ராதாபாய், லட்சுமியை ஸ்ரீ ஹரி தேடிக் கொண்டு வைகுண்டத்திலிருந்து பூலோகத்திற்கு வந்து, பத்மாவதியை திருமணம் செய்த விதத்தை 10 சரணங்களில் தொகுத்து அழகாக பாடியிருக்கிறார்.

அடக்யானே, கட்யானெ, கைபிடிதானே, தணிதானே, குளிதானெ, நலிதானெ என்னும் சந்தத்துடன் வட்டார மொழிச் சொற்கள் சரளமாக வந்திருப்பது கவனிக்கத்தக்கது.

ஸ்ரீனிவாஸனுக்கு லாலி பாடல்

தூகிரெ ரங்கன்ன தூகிரெ கிருஷ்ணன்ன
தூகிரெ வேணுகோபலன்ன ||ப

தூகிரெ அளகிரி அப்ப திம்மப்பன்ன
தூகிரெ கனகாத்ரி வெங்கடனா
பாலகடலொளு ஆலதெலெய ம்யாலெ
பாலானு மலக்யானெ தூகிரெ ||அப

கஞ்சதளாக்ஷன்ன கமனீய காத்ரன்ன கமலாக்ஷியரெல்ல தூகிரெ
காமினியருட்ட ஸீரெகளனெ கத்து கடஹால்த மரனேரிதவன்னா ||1

தஷரத தனுஜன்ன தனுஜ ஸம்ஹாரன்ன
வனஜாக்ஷியரெல்லா தூகிரம்மா
தஷரதன மடதி தரணிஸுதெய தந்த
பவமானனுத ராமசந்திரன்னா ||2

கிங்கரரிகெ பந்த ஸங்கட களெவன்ன
வெங்கடரமணன்ன தூகிரே
பிங்காதிந்தலி பந்து பெட்டதொள் நிந்திஹ
வெங்கட விட்டலன தூகிரெ ||3

இந்த கீர்த்தனையில், பாலகிருஷ்ணனின் ஸௌந்தர்யத்தையும், பால லீலைகளையும் ஸ்ரீஹரியின் மகிமைகளையும் அற்புதமாக வர்ணித்து, அவனுக்கு லாலி பாடியிருப்பது சிறப்பாக இருக்கிறது.

குரு ராகவேந்திரரின் ஸ்துதி

மந்திராலயத்தின் ஸ்ரீ குருராகவேந்திரரின் பக்தரான இவர், ராயரின் மேல் 22 கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார். அவற்றில் ஒன்றினை மட்டும் பார்ப்போம்.

ஸ்ரீ குருராஜர ஸேவிஸிரோ

தண்டகமண்டல பிடிது நிந்திஹ ஹஸ்த

பூமண்டலவே திருகி பந்திஹ ஹஸ்த
பிடதெ பகுதரா ஸலஹுவா ஹஸ்தா
பக்திலி மனுஜர எத்தி ஸலஹுவா ஹஸ்தா
மத்தெ பூஸுரரிகெல்லா
அபயவீயுவ ஹஸ்தா ||1

முக்தி மார்க்கக்கெ தாரி தோருதிஹ ஹஸ்த
சித்தஜனய்யன நெனெது மனதல்லி நலியுவ ஹஸ்த
பூதப்ரேதகளன்னெல்ல ஓடிஸுதிஹ ஹஸ்த
ஸகல வ்யாதிகள ஹரிஸி ரக்ஷிப ஹஸ்த
ஸுஜனர உத்தார கெய்யுவ ஹஸ்த
ஸருவரா ஷிரிபதியா கொண்டாடுவ ஹஸ்தா ||2

கனஸலி பந்து கண்ணபொரெ தெகெதிஹ ஹஸ்த
முததல்லி மகுவிகெ மாத கலிஸித ஹஸ்த
ரஸதி முளுகி ஜீவ களெத கந்தகெ
ஜீவ களெ தும்பித ஹஸ்த
பரமபாவன ஸ்ரீ குருராஜர ஹஸ்த ||3

ஜகவெல்ல நோடெ ப்ரக்யாதி படெதிஹ ஹஸ்த
நகுத மந்த்ராலயதொளு பந்து நிந்திஹ ஹஸ்த
அகணித மஹிமெ தோரி மெரெயுதிஹா ஹஸ்த
ஸரிகாணெ தரெயொளு ஸ்ரீ ராகவேந்திர திவ்ய ஹஸ்த ||4

இந்தப் பாடலில் ஸ்ரீகுருராயரின் ஹஸ்தத்த்ன் மகிமைகளை நிரூபித்திருப்பது அபாரமாக இருக்கிறது. இங்கு ஹஸ்த என்னும் சொல், 20 முறை வந்திருக்கிறது.

ஸாத்விகரும், ஸதாசார சம்பன்னரும், ஸம்ப்ரதாயஸ்தரும் ஆன பள்ளாரி ராதாபாய், ஹரிதாஸ ஸாகித்யத்திற்கு கீர்த்தன ஸாகித்யம் போன்றதான விலைமதிப்பற்ற காணிக்கையை கொடுத்து, 1976ம் ஆண்டில், தமது 87ம் வயதில் ஸ்ரீஹரியின் பாதங்களை சேர்ந்தார். அவருக்கு நம் நமஸ்காரங்களை செலுத்துவோம்.

(அடுத்த இதழில் வேறொரு ஹரிதாஸினியைப் பற்றி பார்ப்போம்).

***

தொடர்

## ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர்

## 4. ஹரிதின இந்த[2] ஹரிதின

டாக்டர். ஸுபாஷ் காகண்டகி

அடுத்த ஸ்லோகமான 209ல் - மனிதனின் 11 இந்திரியங்களான ஆறு ஞானேந்திரியங்கள், கண், காது, மூக்கு, நாக்கு, சர்ம மற்றும் மனஸ் - மற்றும் ஐந்து கர்மேந்திரியங்களான வாய், கை, கால், பாயு, உபஸ்த - என இந்த அனைத்து இந்திரியங்களாலும் நித்யமாக செய்யும் அனைத்து பாவங்களும் ஏகாதசியின் உபவாஸத்தினால் அழிகின்றன என்று விரதத்தின் மகிமையை சொல்கிறார்.

ஏகாதசியின் மகிமைகள் இவ்வளவு அபாரமாக இருப்பதால், இதனை ‘ஹொகளலு அகாத’ (புகழவே முடியாத) என்கிறார் ஸ்ரீதாஸர்.

இந்த விரதமானது பாகவதர்களின் ஆசரணையின் முதல் மைல்கல் போல, அவர்களின் ஸாதனைக்கு முக்கியமான ஸோபானமாக இருக்கிறது. இந்த விரதம் பரம பாகவதர்களுக்கு கட்டாயமாக இருக்கிறது. இந்திரன் முன்னர் பர்வதங்களுக்கு இருந்த இறக்கைகளை தன் வஜ்ராயுதத்தினால் கத்தரித்து போட்டான். அதைப் போல, ஏகாதசி விரதத்தை செய்யும் மனிதனின் கஷ்டங்கள் என்னும் மலைகள், அந்த விரதத்தின் பலன்களால் துண்டாகி விழுகின்றன. மத்வ மதத்தின் தத்வ ஸித்தாந்தத்திற்கு கிரீடமாக இருக்கும் ஹரி தினத்தின் மகிமை மிகவும் சிறப்பானது என்று அனுபல்லவியின் மற்ற மூன்று வரிகளில் கூறியிருக்கிறார் ஸ்ரீதாஸர்.

ப4க்திகெ3 மொத3லு விரக்தி பீ4ஜவெம்ப3
ஸகல தபதொ3ளெல்ல மேலெனிஸிகொம்ப3
முக2கோடிக3தி4க ப2ல ஸ்தி2ர ஸ்தம்ப4
முக்தி ஸோபான விதா4னத்வவெம்ப3 ||1

பக்தி விரக்தி அனைத்து தவங்களைவிட மஹா சிறந்தது இந்த ஏகாதசி விரதம். கோடி யக்ஞங்களைவிட அதிக பலன்களை கொடுக்கிறது. முக்தியின் ஸோபானத்திற்கு ஸ்திரமான ஸ்தம்பமாக நிச்சயமான வழியாக இருக்கிறது - என்று விரதத்தின் மகிமையை சொல்லியிருக்கிறார்.

அடுத்த 2ம் நுடியில், ஸ்ரீதாஸர் ஆத்யாத்மிக மகிமையுடன் வைக்ஞானிக உண்மையையும் விளக்கியிருக்கிறார் என்பதை பார்க்கலாம்.

த்வக் சர்ம அஸ்தி மஜ்ஜ மாம்ஸ ருதி4ர
யுக்த ஸப்த தா4துக3ளிஹ ஷரீர
நக2 கேஷ கப2 ஸ்வேத3 மல மூத்ராக3ர ஈ
நிகி2ள பாவன மாடு3வ நிராஹார ||2

ஸப்த தாதுகளான த்வக், சர்ம, அஸ்தி, மஜ்ஜ, மாம்ஸ, ருதிர, மேதஸ் ஆகியவற்றால் கூடிய இந்த சரீரத்தில் உற்பத்தியாகும் நகம், முடி, கபம், மல, மூத்ராதி கல்மஷங்களை கழுவி சுத்தம் செய்யும் ஒரு வகையான சிகிச்சையே, நிராகாரமான உபவாஸம் - என்கிறார்.

மனிதனின் தேகத்தில் தினமும் பல்வேறு ஜீவகோஷங்கள் பிறக்கின்றன / இறக்கின்றன. ஸத்த ஜீவ கோஷங்கள் தோன்றி பல்வேறு நோய்களுக்கு காரணங்கள் ஆகின்ரன. இந்த ஸத்த ஜீவ கோஷங்களை அழிப்பதற்கு நம் ரிஷிமுனிகள் கண்டுகொண்ட தார்மிக க்ரியையே ஏகாதசி விரதம் ஆகும்.

மிக சமீபத்தில், இதைப் பற்றி ஆராய்ச்சி செய்து, நோபல் பரிசு பெற்ற Yoshinori Ohsumi என்னும் ஜப்பான் ஆராய்ச்சியாளர் தன் Self Eating Cells என்னும் ஆராய்ச்சி கட்டுரையில் இப்படியான குறிப்பினை எழுதியிருக்கிறார் என்பதை அறியலாம்.

'நாம் பட்டினி கிடக்கும்போது, நம் உடலில் உள்ள செல்கள், ப்ரோட்டீன்களை மற்றும் தேவையற்ற பொருட்களை உடைத்து அவற்றை சக்திக்காக பயன்படுத்திக் கொள்கின்றன. வரக்கூடிய வைரஸ், பேக்டீரியா ஆகியவற்றை அழிப்பதற்கு செல்கள் autophagy என்னும் ஒரு செயலை செய்கின்றன. தொற்று நோய்கள், நரம்பு சம்பந்தப்பட்ட பிரச்னைகள், மூப்பு ஆகிய பிரச்னைகள்கூட இத்தகைய பட்டினி மூலமாக நடக்கும் செயல்களால் தடுக்கப்படுகின்றன' .

உபவாஸத்தை ஒரு நோக்கமாக வைத்துக் கொண்டு, இந்த விஞ்ஞானி செய்த இந்த ஆராய்ச்சியின் அனைத்து அம்சங்களும், ப்ரஸன்ன வெங்கட தாஸரின் இந்த 'ஹரிதின' கீர்த்தனைக்கு அப்படியே பொருந்துகின்றன என்று பார்க்கலாம். ஹரிதாஸர்கள் இந்த ஹரிதினத்தின் மகிமையை சொல்வதில் ஆத்யாத்மிக சிந்தனைகளை பயன்படுத்தியிருப்பதைப்

போல, மனிதனின் பௌதிக தேகத்தில் இருப்பதான அனைத்து கசடுகள் சுத்தமாகும் விதங்களையும் நிரூபணம் செய்திருக்கின்றனர்.

இன்னும் இத்தகைய வைக்ஞானிக மகிமைகளைக் கொண்ட ஏகாதசியின் உபவாசத்தினை, பௌர்ணமி அல்லது அமாவாசை ஆன பிறகு வரும் 11ம் நாளே ஏன் செய்ய வேண்டும்?. வேறு ஏதாவது ஒரு நாளில் செய்தால், அதன் பலன் வராதா என்னும் கேள்வி பலரின் மனதில் இருக்கலாம்.

இதற்கு, ஸ்ரீமதாசார்யர், தமது ஸ்ரீகிருஷ்ணாம்ருத மஹார்ணவ ஸ்லோக 156லிருந்து 182 வரை மிகவும் நீளமாக, பல்வேறு சாஸ்திரங்களின் பிரமேயங்களுடன் மேற்கோள் காட்டியவாறு, பஞ்சாங்கங்களின் திதிகளுக்கு ஏற்ப எந்த விதமாக ஏகாதசி விரத தினத்தை நிர்ணயம் செய்ய வேண்டும் என்று சொல்லியிருக்கிறார். அதில் சிறிது வேறுபாடு செய்து, ஏகாதசி விரதத்தை வேறு நாட்களில் செய்தால் அதனால் ஆகும் நஷ்டம் என்ன என்பதை பல்வேறு புராண சம்பவங்களை மேற்கோள் காட்டி சொல்லியிருக்கிறார்.

ஏகாதசி அன்றே உபவாசம் ஏன் செய்ய வேண்டும் என்பதற்கு ஒரு விஞ்ஞான ரீதியான காரணமும் தெரிய வருகிறது.

வான்வெளி சாஸ்திரத்தின்படி, சந்திரன் பூமியை சுற்றி வரும்போது, 24 மணி நேரத்தில், 12 டிகிரிகள் சுற்றி வருகிறான். இதையே ஒரு திதி என்கிறோம். இவ்வாறு பௌர்ணமி அல்லது அமாவாசை தினத்திலிருந்து 10 நாட்களின் காலத்தில் (தசமி), 120 டிகிரிகளை சந்திரன் சுற்றி வருகிறான். அதாவது, சந்திரன் 120 டிகிரி வந்து, 132 டிகிரியின் கோணத்தில் இருக்கிறான். அந்த சமயத்தில், பூமியின் மேல் சந்திரனின் ஈர்ப்பு அதிகரிக்கிறது. இந்த சமயத்தில், சந்திரனின் ஈர்ப்பு சக்தி, பூமியின் மேலும், தண்ணீர் நிலைகளின் மேலும் அதிகரிக்கிறது. சந்திரனின் இந்த காலத்தில், தண்ணீர், நிலம், காற்று, நெருப்பு, ஆகாயம் என்னும் பஞ்சபூதங்களால் ஆன இந்த மானவ சரீரத்தின் மேலும் மாற்றத்தினை உண்டுபண்ணுகிறது. மானவனின் ஜீர்ண சக்திகள் இந்த சமயத்தில் வேறுபாடு அடைகிறது. இவ்வாறாக, தக்க காலங்களில் செய்யப்படும் ஏகாதசியன்று, உபவாசம் செய்வதால், மனிதனின் ஆரோக்கியம் வளர்கிறது. அன்று உணவு உண்டால், சந்திரனின் சக்திக்கு ஆளான ஜீர்ண அங்கங்களால் அஜீர்ண சம்பந்தமான நிலைகள் வந்து, ஆரோக்கியம் பாதிக்கப்படும் வாய்ப்புகள் உள்ளன - என்கிறார்கள் விஞ்ஞானிகள் / ஆராய்ச்சியாளர்கள்.

பௌர்ணமியன்று சந்திரனின் ஈர்ப்பு சக்தி, கடலில் பெரிய அலைகளை உருவாகி வருவதை ஒப்புக் கொண்டால், ஜீர்ணாங்கங்களின் மேலும் சந்திரனின் பிரபாவம் இருக்கிறது என்பதை ஒப்புக் கொண்டே ஆகவேண்டும். ஏகாதசி அன்று, தூங்காமல் ஜாகரணை செய்தால், உபவாசம் மற்றும் ஜாகரணை இந்த இரண்டினால், தேகத்தில் உஷ்ணம் அதிகரிக்கிறது. இந்த அதி உஷ்ணத்தினால் தேகத்தில் இருக்கும் ரோக அணுக்கள் அழிந்து, ஆரோக்கியம் மேம்படுகிறது - என்பது சிலரின் ஆராய்ச்சி.

இவ்வாறான வைக்ஞானிக மற்றும் சாஸ்திர புராணங்களில் கூறியிருக்கும்படி, ஏகாதசி விரத மகிமையை கவனித்தால், இதனை ஒரு தக்க நாளிலேயே செய்வதால், பௌதிக மற்றும் ஆத்யாத்மிக பிரயோஜனங்கள் நமக்குத் தெரிகின்றன. இவை அனைத்தையும் அறிந்து நம் முன்னோர்கள் ஏகாதசி விரதத்திற்கு ஒரு தார்மிக ஸ்வரூபத்தை கொடுத்து, பாப புண்யத்தின் பிரக்ஞையை வளர்த்து, அனைவரும் இதனை பின்பற்ற வேண்டும் என்னும் சம்பிரதாயத்தினை உருவாக்கிக் கொடுத்தனர் என்பது கவனிக்க வேண்டிய அம்சம் ஆகும்.

மேலும், ஏகாதசி விரதத்தினை யார் யார் செய்ய வேண்டும் என்பதை கவனித்தால்: ஸ்ரீமதானந்த தீர்த்தர் ஸ்ரீகிருஷ்ணாம்ருத மஹார்ணவத்தில் இவ்வாறு சொல்கிறார்.

பிரம்மசாரி க்ருஹஸ்தோ வா வானப்ரஸ்தோ யதிஸ்ததா |
பிராம்ஹண: க்ஷத்ரியோ விஷ்ய: ஷூத்ரோ பர்த்ருமதி ததா ||186
அபர்த்ருகா ததான்யேவா (ச) ஸூத வைதேஹிகாதய: |
ஏகாதஷ்யாம் ந புஞ்சீத பக்ஷயோருபயோரபி ||187

பிரம்மசாரி, க்ருஹஸ்த, வானப்ரஸ்தர் மற்றும் சன்யாசி, பிராமண, க்ஷத்ரிய, வைஷ்ய மற்றும் நான்காம் வர்ணத்தவர்கள், சுமங்கலிகள், கைம்பெண்கள் என அனைவரும்கூட கிருஷ்ண சுக்ல பக்ஷங்களில் இருக்கும் ஏகாதசியன்று உணவு உண்ணக்கூடாது என்கிறார்.

இதன் ஸாரத்தையே தாஸர் 3ம் நுடியில், அனைவருக்கும் அர்த்தம் ஆகுமாறு கூறுகிறார்.

(தொடரும்)

தொடர்

**ஹரிகதாம்ருதசார மஞ்சரி 360**

**By ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர்**

**88. சச்சிதானந்தா3த்ம பி3ரம்ம க**
**ரார்ச்சிதங்க்4ரி ஸரோஜ ஸுமனஸ**
**ப்ரோச்ச ஸன்மங்களத மத்4வாந்த: கரணரூட4 |**
**அச்யுத ஜகன்னாத2விட்டல**
**நிச்சனெச்சித ஜனர பி3ட3 கா**
**ட்3கி3ச்சனுண்டு3 அரண்யதொளு கோ3 கோ3பரனு காய்த3 ||(10-25)**

பகவந்தனின் உண்மையான பூஜை என்னவென்றால், அவனுடைய குணங்களை நினைப்பது. இவ்வாறாக இந்த சரணத்தில் அவனை ஸத்+சித்+ஆனந்த+ஆத்ம = சச்சிதானந்த. இவனை பூஜிக்கும் தகுதி யாருக்கு இருக்கிறது? என்றால் பிரம்ம வாயுகளுக்கு மட்டுமே. அதாவது, இவனை மத்வாந்த கரணரூட என்றால், மிகவும் மகிழ்ச்சி. இவன் அழிவு இல்லாதவன். இவனே பிம்பனாக அனைவரின் இதயத்தில் இருக்கிறான். நிஸ்சல பக்தியினால் இவனை நம்பி நினைத்தால், பசுக்களை, கோபாலகர்களை எப்படி காட்டுத்தீயை விழுங்கி ஸ்ரீகிருஷ்ணன் காப்பாற்றினானோ, அதைப் போலவே நம்மையும் காப்பாற்றுகிறான் என்கிறார் ஸ்ரீஜகன்னாததாஸர்.

**89. பாது3கெய கண்டக ஸிகதமொத3**
**லாது3வனுதி3ன பா3தி4ஸவு ஏ**
**காத3ஷேந்த்ரியக3ளலி பி3ட3தெ3 ஹ்ருஷீகபன மூர்த்தி |**
**ஸாத3ரதி3 நெனெவவரு ஏனப**
**ராத4க3ள மாடித3ரு ஸரியே நி**
**ரோத3கை3ஸவு மோக்ஷமார்க3கெ து3ரிதராஷிக3ளு ||(11-1)**

நாம் அணியும் செருப்பு, ஷூ ஆகியவை நம்மை கல், முள் ஆகியவை குத்தாமல் நம் தேகத்தை காக்கின்றன. அதைப் போல, பகவந்தனின் மூர்த்திகளை எப்போதும் நினைப்பவர்களுக்கு, அவர்கள் எந்த தவறுகளை செய்தாலும், அதனை மன்னித்து மோட்சத்திற்கு அழைத்துக் கொள்கிறான் என்கிறார்.

**90. அஸ்வதந்த்ரனு ஜீவ ஹரி ஸ**
**ர்வஸ்வதந்த்ரனு நித்ய ஸுக2மய**
**நிஸ்ஸ்வபத்த3ல்பக்3ளு ஷக்த ஸது3க்க நிர்விண்ண |**

**ஹ்ரஸ்வதே3ஹி ஸனாத ஜீவனு**
**விஷ்வ வ்யாபக கர்த்ரு பி3ரம்ம ஸ**
**ரஸ்வதீஷாத்3யமரனுத ஹரியெந்து3 கொண்டா3டு3 ||(11-3)**

இந்த சரணத்தில் ஜீவ மறும் பரமாத்மனுக்கு இருக்கும் வேறுபாட்டினை சொல்கிறார். ஜீவன் - அஸ்வதந்த்ரன், அல்பஷக்த், அல்பக்ஞ, துக்கத்திற்கு ஆளாகுபவன். அனாதி. ஆனால், ஸ்ரீஹரியோ - ஸ்வதந்த்ரன், நித்ய சுகமயி, அனாதி, விஷ்வவ்யாபக, இவனே கர்த்ரு, இவனை பிரம்ம சரஸ்வதிர் முதலாக அனைவரும் ஸ்ரீஹரியையே கொண்டாடுகின்றனர். ஆகையால், நாம் கூட அவனையே நம்ப வேண்டும். அவன் ஈஷன். நாம் அவனுடைய தாஸர்கள் என்னும் சிந்தனை இருக்க வேண்டும்.

**91. இஷ்டபோ4க்ய பதா3ர்த்த2தொ3ளு ஷிபி1**
**விஷ்ட நாமதி3 ஸர்வஜீவர**
**துஷ்டி ப3டி3ஸுவ தி3னதி3னதி3 ஸந்துஷ்ட தானாகி3 |**
**கோ1ஷ்டதொ3ளு நெலெஸித்து3 ரஸமய**
**புஷ்டியைதி3ஸு திந்த்3ரியக3ளொளு**
**ப்ரேஷ்டனாகி3த்தெ3ல்ல விஷயக3ளும்ப திளிஸத3லெ ||(11-9)**

தேகத்தில் உள்ளே இருந்து பகவந்தன் எப்படி செயல்களை செய்கிறான் என்பதை தாஸர் இங்கு விளக்குகிறார். நாம் இஷ்டப்பட்டு தின்னும் பதார்த்தங்களில் தான் இருந்து, தின்றபின் மகிழ்ச்சிப்படுத்துகிறான். அவன் நித்யத்ருப்தன் ஆகையால், அவனுக்கு இதிலிருந்து எதுவும் ஆகவேண்டியது இல்லை. எவ்வித லாபமோ நஷ்டமோ இல்லை. ஆனால், நாம் ஏற்றுக் கொள்ளும் ஆகாரத்தில் இருக்கும் ரஸங்களை பற்பல விபாகங்களை செய்து, மொத்தம் இருக்கும் 72,000 நாடிகளுக்கு பிரித்துக் கொடுத்து நம் அனைத்து இந்திரியங்களும் தக்க வேலை செய்யுமாறு செய்கிறான். இத்தகைய வேலை நமக்கு அர்த்தம் ஆவதில்லை. தெரிவதற்கும் சாத்தியம் இல்லை. அதாவது நமக்கு தெரியாமல், தெரிவிக்காமல் நாம் உண்டதை ஜீர்ணம் முதலான பல்வேறு செயல்களை செய்விக்கிறான் என்பதை அறிந்து, அத்தகைய பகவந்தனின் காருண்யத்தினை நினைப்பாயாக என்கிறார் ஸ்ரீதாஸர்.

**92. மனவெ மொத3லாதி3ந்த்3ரியக3ளொள**
**க3னிலதே3வனு ஷுசியெனெஸிகொ**
**ண்ட3னவரத நெலெஸிப்ப ஷுசிஷத்தோ4த னெந்தெ3னிஸி |**

**தனுவினொளகி3ப்பனு ஸதா3 வா**
**மன ஹ்ருஷிகேஷாக்2ய ரூபதி3**
**அனுப4வகெ தந்தீ3வ விஷயஜ ஸுக2வ ஜீவரிகெ3 ||(11-12)**

இந்த சரணத்தில் தாஸர் மனதில் மற்றும் தேஹேந்திரியங்களில் வாயுதேவர் ஷுசி என்று அழைத்துக் கொண்டு நம் தேகத்தில் நிலைத்து, பஞ்சேந்திரியங்கள் மூலமாக நடக்கும் அனைத்து சுக துக்கங்களையும் அனுபவத்திற்கு ஸ்ரீவாமன மற்றும் ஹ்ருஷிகேஷ ரூப த்வயர் முக்ய ப்ராணாந்தர்கதனாகி ஜீவனுக்கு கொண்டு கொடுக்கின்றனர் என்கிறார் ஸ்ரீதாஸர்.

**93. கே2சரரு பூ4சரரு வாரி னி**
**ஷாசரரொளித்த3வர கர்மக3**
**ளாசரிஸுவனு க4ன மஹிம பரமல்பனோபா1தி3 |**
**கோ3சரிஸனு ப3ஹு ப்ரகாரா**
**லோசனெய மாடி3த3ரு மனஸிகெ3**
**கீசகாரியப்ரீய கவிஜனகே3ய மஹராய ||(11-18)**

பகவந்தனின் செயல்கள் எத்தகையது?. யாருக்கும் அதனை அறிவதற்கு சாத்தியம் இல்லை. எப்படியெனில், பூ, ஸலில, ககன மார்க்கத்தில் வ்யாபித்திருக்கும் அனைத்து ஜீவ கோடிகளையும் எப்படி காக்கிறான் என்னும் கேள்வி என்றாவது ஒரு நாள் நம் மனதில் வருகிறது அல்லவா?. மனதில் எவ்வளவு சிந்தித்தாலும் அதனை அறிய முடியாது. ஆனாலும்கூட தாஸர் ஒரு கிரமத்தை சொல்லி, த்வந்த்வ கர்மங்களையும் செய்யும் நாம், அவன் மகா மகிமைகளைக் கொண்டவன் என்று அறிந்து, அவனை நினைக்க வேண்டும். கீசகனைக் கொன்ற பீமனின் ப்ரியன், ஞானிகளுக்கு மிகவும் வேண்டப்பட்டவன். அதாவது, ஞானகம்யனான ஸ்ரீஹரியை அறிவதற்கு முயற்சி செய்தால், அவனும் அவனின் செயல்களும் தெரிய வரும். இல்லையெனில் இல்லை என்கிறார் ஸ்ரீதாஸர்.

**94. ஒந்தெ3 கோ3த்ர ப்ரவர ஸந்த்4யா**
**வந்த3னெக3ளனு மாடி3 ப்ராந்தகெ**
**தந்தெ3 தனயரு பே3ரே தம்மய பெஸருகொ3ம்ப3ந்தெ |**
**ஒந்தெ3 தே3ஹதொ3ளித்து3 நிந்த்3யா**
**நிந்த்3ய கர்மவ மாடி3 மாடி3ஸி**
**இந்தி3ரேஷனு ஸர்வஜீவரொ ளீஷனெனிஸுவனு ||(11-19)**

ஒரே கோத்திரத்தைக் கொண்டவர்கள் எவ்வளவு பேர் இருந்தாலும் அவர்கள் அனைவரும் வெவ்வேறு. அவர்களுடைய பெயர்களை சொல்லி, ப்ரவரம் சொல்லி, நமஸ்காரம் செய்வதாக பகவந்தன் ஒரே தேகத்தில் இருந்து அனைத்து கர்மங்களையும் அனைவர் மூலமாகவும் செய்விக்கிறான். ஆனால், அவனுக்கு எவ்வித சுக துக்கங்களும் இல்லை. ஆனால், அனைவருக்குள்ளும் இருந்து கர்மங்களை செய்வித்து, அந்தந்த பலன்களை தான் ஏற்றுக் கொள்ளாமல், அவரவர்களுக்கே கொடுக்கிறான். இது உண்மையான அவனுடைய ஸ்வதந்த்ர செயல் ஆகும் என்பதை அறிய வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர்.

**95. ஸ்தள ஜலாத்3ரிக3ளல்லி ஜனிஸுவ**
**ப2ல ஸுபுஷ்ப ஸுக3ந்த3ரஸ ஸ்ரீ**
**துளஸி மொத3லாத3கி2ல பூஜாஸாத3ன பதா3ர்த்த4 |**
**ஹலவு ப3கெ3யிந்த3ர்ப்பிஸுத பா3**
**ம்பொ3ளெய ஜனககெ3 நித்ய நித்யதி3**
**திளிவரிது வ்யதிரேக பூஜெக3ளெந்து3 கோவித3ரு ||(11-24)**

பூஜை செய்யும் மனம் இருந்து, பூஜா பொருட்கள் இல்லை என்றபோது, யோசிக்காமல், உலகில் பூ, ஸலில, ககன மார்க்கத்தில் நாம் காண்பதான வெவ்வேறு பூ, பழ, துளஸிகளை ஸ்ரீஹரிக்கு அர்ப்பிக்க வேண்டும் யோக்யமானதை மட்டும் - தினமும் அனுசந்தானத்துடன் சமர்ப்பிக்க வேண்டும். இதனை ‘வ்யதிரேக பூஜை’ என்கிறார்கள். கண்ட கண்டதை கமலனாபனுக்கு அர்ப்பிக்க வேண்டும் என்கிறார் ஸ்ரீதஸர். இவ்வாறு பூஜா பதார்த்தங்கள் இல்லாவிடாலும், நம் மனதில் அவனின் சிந்தனையை எப்போதும் கொண்டிருக்க வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர். அதனை இன்றிலிருந்து நாம் அனைவரும் துவக்க வேண்டும் அல்லவா?. இதுவே ஸாதனையின் வழி ஆகும்.

**96. வாரிஜாஸன வாயு வீந்த்3ர உ**
**மாரமண நாகே1ஷ ஸ்மரஹ**
**ங்காரிக1 ப்ராணாதி3க3ளு புருஷர கலேவரதி3 |**
**தோரிகொளத3னிருத்3த4 தோ3ஷவி**
**தூ3ர நாராயணனரூப ஷ**
**ரீர மானிக3ளாகி3 ப4ஜிஸுத ஸுக2வ கொடு3திஹரு ||(11-28)**

ஸ்ரீதாஸரின் அபிப்பிராயத்தில் நமக்கு சுகம் வேண்டாம். இவ்வாறு கிடைக்கிறதா? என்று கேட்டால், அவர் கொடுக்கும் பதில் இவ்வாறு இருக்கிறது. நம் இந்த பௌதிக தேகத்தில் பிரம்மவாயு, இந்திர, கருட, சேஷ, ருத்ராதிகள், அஹங்காரிக பிராணதேவர் நம் இந்த தேகத்தில் இருந்து அங்கு அந்தர்யாமியாக இருந்து, தோஷதூரனான நாராயண மற்றும் அனிருத்தன் இருந்து, சரீராபிமானியாக இருக்கிறார்கள் என்று நம்பி, அவர்களை நினைத்தால் அதுவே உண்மையாக சுகம்.

தேகத்தின் இடது பாகத்தில் கருட சேஷ ருத்ர இந்திர அஹங்காரிக பிராணர்கள் இருக்கின்றனர். தேகத்தின் வலது பாகத்தில் பிரம்ம வாயு சரஸ்வதி பாரதியர் இருக்கின்றனர் என்று அறிய வேண்டும் என்கிறார். நம் தேகம் முழுக்க தத்வாபிமானி தேவதைகள் இருக்கின்றனர். அவர்கள் இந்த தேகத்தில் ரத்தம், மேதஸ், எலும்பு என அனைத்து இடங்களிலும் அந்தர்யாமியாக இருக்கிறார்கள் என்பதை அறிய வேண்டும். இவர்களையே நாம் தத்வாபிமானி தேவதைகள் என்கிறோம். இவர்களாலேயே இந்த தேகத்தின் செயல்கள் நடக்கின்றன.

(தொடரும்)

## இந்த மாத ஆராதனைகள்

**ஸ்ரீ நரஹரி தீர்த்தர் (1324 – 1333)**

ஸ ஸீதா மூலராமார்ச்சா கோஷே கஜபதே: ஸ்திதா |
யேனானீதா நமஸ்தஸ்மை ஸ்ரீமன் ந்ருஹரிபிக்ஷவே ||
பூதேவிபரமாஸக்தோ ரக்வீஷ பதமானஸ: |
ந்ருஹர்யாக்ய குருர்பூயாத் அஸ்மதிஷ்டார்த்த ஸித்தயே ||

**கோரேபாள ஹனுமந்த ராயரு**

ஸ்ரீமந்தம் தாஸஸாஹித்யம் ஸர்வதோபி ப்ரவர்த்தயன் |
ஸர்வந்த த்யாஜ யோதீமான வந்தேதம் ஸுந்தராபிதம் ||

ஹனுமந்தராயரு கோரெ பாளு நிவாஸி
தனுமனதனதிந்த ஸ்ரீஹரியனு ஸேவிஸி
தின தின ஹிந்தின ஹரிதாஸ ஸாஹித்ய ஸங்க்ரஹிஸி
தினகரனந்தெ பௌகிதரு க்ரந்தகள ப்ரகடிஸி
தனுஜாரி மங்களாங்க ஹரிவிட்டலன ஸேவிஸி
அனுதின ஸாஹித்ய ஸேவெ மாடிதரு ஸுந்தரரெனிஸி ||

**ஸ்ரீபுரந்தரதாசர் (1484–1564)**

மன்மனோபீஷ்டவரதம் ஸர்வாபீஷ்ட பலப்ரதம் |
புரந்தர குரும் வந்தே தாஸஸ்ரேஷ்டம் தயாநிதிம் ||

**ஸ்ரீ ஹரபனஹள்ளி பீமவ்வா (1822–1903)**

நாரதாதாப்த ஸத்போதா ஸாத்வீம் ஸாஹித்யகாரிணி |
பீமேஷ கிருஷ்ணம் நிரதம் வந்தே பீமத்வ மாதரம் ||

ஹரபனஹள்ளி அவ்வ கமலாக்ஷி கிருஷ்ணவ்வ
நிரக்ஷர குக்ஷியாகி ரசிஸிதெ பஹு காவ்ய ||
வர மங்களாங்க ஹரிவிட்டலன பாந்தவ்ய
நிரந்தர ஒதகிஸி பொரெயெ நம்மவ்வ ||

**ஸ்ரீஅபினவ ப்ராணேஷ விட்டலதாசர் (1903–1978)**

அர்ச்சகம் வரதேந்த்ராணாம் ஷ்யாம ஸுந்தரமாஸ்ரிதம் |
அபினவ ப்ராணேஷாக்யம் தாஸவர்யம் நமாம்யஹம் ||

ஜகன்னாததாஸர ஷிஷ்ய ப்ராணேஷ தாஸர
மகனமொம்மக அபினவ பிராணேஷ தாஸர
பகெபகெய கீர்த்தனெ ஸுளாதியு அபார
அக ஹரிவுது ஸத்ய நாராயண தேவர
ஸொகஸாத ஸுளாதி ஹுண்ணிமெ படிஸுவர
மிகெ தாப துக்க தும்மான கஷ்ட பரிஹார

**ஸ்ரீககவரத்வஜ விட்டல தாசர் (1950-2022)**

ஸீதார்யஜீவனாதர்ஷம் கீதாசார்யோக்தி பாலகம் |
க்யாதம் ககத்வஜன்யஸ்த சேதஸம் நௌமி ஸத்குரும் ||
குருஸத்க்ருபயா பூதம் குருஸேவாதுரந்தரம் |
ககாரூடகுரும் வந்தே பாஹி ந: ஸர்வஜன்மனி ||

**தொடர்**

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### 30. தைத்ய தாரதம்ய ஸந்தி விடைகள்

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| [1]தா | ஸ | ர | தி | | [2]ந | ர | கா | ஸு | ர | ன் | | |
| [22]ஜ | னு | [12]த | | | மு | | ன | ஸ | ஸா | க | [13]பா | |
| ரா | | [3]ம | ணி | ம | ந் | த | ன் | க | | ச | ணா | வி |
| ஸ | [14]கே | [27]ஸே | | ன் | ண | ர் | க | [15]வி | | [28]கீ | ஸு | ன் |
| ந் | ஸி | [4]ஹி | [23]டி | ம் | [5]பா | ண | ன் | ர் | [24]இ | பி | ர | த |
| த | | | பி | தா | [16]வா | [25]ம | | [29]பா | ல் | ரூ | ன் | த |
| ன் | [26]ஸ | ம் | [17]க | | ன் | ஹா | [6]ஹு | த | வ | [7]ஹ | ம் | [30]ஸ |
| [8]ல | கு | மி | ணா | ன் | ர | ஸு | ணா | வ | [18]ல | ரா | | |
| | ணி | | [9]ரு | க் | மீ | ர | | | ன் | [31]வ | ல் | [19]ஸா |
| ர் | க | வி | [32]த் | [20]ஸா | ர் | ன் | ன | ஸே | ம | [21]பீ | | |
| | [10]ஜா | லி | நெ | க் | [33]கி | லு | [11]வ் | ரு | ஷ | ஸே | ன | ன் |

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்
Haridasa Vijayam - Monthly

மலர் 4 ** February 2023 ** இதழ் 3



ஸ்ரீமன் மத்வாசார்யர்

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 4 : இதழ் 3


| நிர்வாக ஆசிரியர் | துணை ஆசிரியர் |
| --- | --- |
| 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்<br>ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,<br>380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase, பெங்களூரு 560078<br>Ph.: 89044-58276.<br>haridasa.vijayam@gmail.com<br>jagannathakesava.blogspot.com | ' தாச சாகித்ய சேவா ரத்ன'<br>திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்<br><br>**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**<br>திரு. முரளிதர தாசரு,<br>திருமதி. நிர்மலா நரசிம்மன்,<br>திரு. லட்சுமிபதிராஜா,<br>திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ் |


**ஆராதனை**

**ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்**

**பிப்ரவரி 1 முதல் 28 வரை, 2023**

பிப் 20 : மாக அமாவாசை - ஸ்ரீகுரு ப்ராணேஷ விட்டல தாஸர், லிங்கஸுகூர்

# ஆசிரியர் பக்கம்

இந்த இதழுடன் 32 சந்திகளைக் கொண்ட ஹரிகதாம்ருதஸாரத்தின், குறுக்கெழுத்துப் போட்டிகள் முடிவடைகின்றன. 32 இதழ்களாக தொடர்ந்து இதனை தயார் செய்து கொடுத்த திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி அவர்களுக்கு நமது சிறப்பு நன்றிகள். மிகவும் அற்புதமாக அவர் வடிவமைத்துக் கொடுத்ததை, பலரும் தொடர்ந்து முயற்சி செய்து பதில்களையும் கொடுத்து வந்துள்ளனர். 31 சந்திகள் வரையில் 160 சரியான விடைகள் வந்துள்ளன. அவர்களுக்கு 160 புத்தகப் பரிசுகள் கொடுக்கப்பட்டுள்ளன. இதே குறுக்கெழுத்துப் போட்டியை தொகுத்து, ஒரு தனி புத்தகமாகக் கொண்டு வரும் சிந்தனையும் இருக்கிறது. அப்படி வந்தால், அனைவரும் அதனை வாங்கி, திரும்பத்திரும்ப இந்த குறுக்கெழுத்தினை விடைகளுக்காக முயற்சி செய்து பார்க்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

ஒரு சிறிய இடைவெளிக்குப் பிறகு, ஹரிவாயு குருகளின் அருளால், இந்த உத்தராயணத்தில் இருந்து, மறுபடி புதிய புத்தகங்களை வெளி யிடத் துவங்கியுள்ளோம். பல புதிய புத்தகங்கள் வரவிருக்கின்றன. இதைப் பற்றிய தகவல்களை அறிய, வாட்சப்பில் அல்லது ஃபேஸ்புக்கில் நம்முடன் தொடர்பில் இருக்கவும். ஹரிதாஸ ஸாகித்யத்தின் அரிதான புத்தகங்கள் அனைத்தையும் வாங்கிப் படிக்கவும். புத்தகங்களுக்கான Sponsorsம் தேவைப்படுகிறார்கள். முடிந்தால், அதற்கும் உதவலாம்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்**

**ஜனவரி 2022 இதழில் வந்த குறுக்கெழுத்துப் போட்டியில் சரியான விடை எழுதி புத்தகப் பரிசு பெறுபவர்கள்:**. திருமதி. ஷாந்தி பத்மனாபன், திருநெல்வேலி; திருமதி. சந்திரா, கோவை; திருமதி. உஷா ரகோத்தமன், பெங்களூரு; திருமதி. லலிதா, திருநெல்வேலி; திருமதி. கீதா ராமசந்திரன், திருநெல்வேலி, திருமதி. கிரிஜா ஜயதீர்த்தாச்சார், ஸ்ரீரங்கம், திருமதி. லீலா ரங்கவிட்டல், சென்னை.

தொடர்

## கேசவ நாமா

### 46. ஸ்ரீ கேஷவ சுரசேவ்ய

து3ருளதனவ கண்டு3 நின்ன நரஸி ஒரளிகெ3 ப3ந்தி4ஸெ
ஒரளலி மத்தி1ய மரன கெ1ட3ஹி கா3ந்த
ருவர ஷாப1வ த1ரித3 ஸ்ரீத4ரனெ ||9

பாலகிருஷ்ணனை யசோதை உரலில் கட்டிப் போட்டபோது, அந்த உரலையே இழுத்துப்போய் இரு மரங்களை சாய்த்து, சாபத்தில் இருந்த நளகூபர் மற்றும் மணிக்ரீவர்களை விமோசனம் செய்த ஸ்ரீதரன் நீயே.

பா4சுர ப்3ருந்தாவன நீ ஸேரி வத்ஸப3கன அ
கா4ஸுர மொத3லாத3 ஸுரகோ1டி1ய
நாஷகெ3ய்த3 ஹ்ருஷிகேஷ ரமேஷ ||10

ஸ்ரீகிருஷ்ணன் ஆடிக்கொண்டிருந்தபோது கருவின் ரூபத்தில் வந்த வத்ஸாசுரன், கொக்கு வடிவத்தில் வந்த பகாசுரன், வலிமையான அகாசுரன் முதலான தைத்யர்களைக் கொன்ற பாலகிருஷ்ணனான ஹ்ருஷிகேசனே ரமேஷனாக இருக்கிறாய்.

பத்3மாக்ஷ கோ3ப1 கோ3ரூப1 பத்மஜகா3கி3 நீ த4ரிஸி
ஸத்மர வர ஹ்ருத்பத்மவ நொலிஸிதெ
பத்மப4வசுத பத்மனாபனே ||11

நாபி கமலத்தில் இருக்கும் பிரம்மனால் வணங்கப்படும் பத்பனாபனே, பிரம்மனின் பிரார்த்தனையின்படி, தாமரைக் கண்ணனாக, பசு, கோபியர்களைக் காத்தாய். வேதங்களில் புகழப்படும், கோபாலகிருஷ்னன், பிரம்மாதி தேவதா வர்க்கத்தினரால் வணங்கப்படும் நீ அனைவருக்கும் பிம்பமூர்த்தியாக இருக்கிறாய்.

தரிது3 தே4னகன கா1ளி உரக3ன க3ர்வ பி3டி3ஸி
உரிய நுங்கி3 ப3லதி3ந்த3 ப்ரலம்பா3
சுரனனு கொ1லிஸித3 வர தாமோதர ||12

கழுதை ரூபத்தில் வந்த தேனுகாசுரனைக் கொன்றாய். காளிங்க சர்ப்பத்தின் கர்வத்தைப் போக்கினாய். காட்டுத்தீயை விழுங்கினாய். பிரலம்பாசுரனைக் கொன்ற தாமோதர நாமகனான ஸ்ரீகிருஷ்ணன் நீயே.

தருணீர வஸ்த்ரக[3]ளப ஹரிஸி யக்ஞான்னவனுண்டு[3]
கி[3]ரியன்னெத்தி ஸுத வருனாலயதொள
கிரலு த[1]ந்த[3] சங்கருஷண ஷௌரீ ||13

சங்கர்ஷணனான நீ, கோபிகா ஸ்த்ரீயரின் வஸ்த்ர அபஹரணத்தை செய்தாய். ரிஷி பத்னியர் கொடுத்த அன்னத்தை ஏற்றுக் கொண்டாய். சிறு விரலினால் கோவர்த்தன மலையை தூக்கிப் பிடித்து, கோபாலகர்களை, பசுக்களை காத்தாய். சாந்தீபனி குருவிடம் அவரது புத்திரனை ஒப்படைத்தாய்.

தாஸராத[3] கோபரிகெ[3] பா[4]ஸுர வைகுண்டவ தோரி
ராஸ க்ரீடாயாஸவ ஸதியர
லேஸனெ ஸலஹித வாசுதேவனெ ||14

ஹே வாசுதேவனே, தாசரான கோபர்களுக்கு மோட்சத்தைக் கொடுத்தாய். கோபிகா ஸ்த்ரீயர்களுடன் ராசக்கிரீடை ஆடினாய். அவர்களின் கஷ்டத்தை சகிக்க முடியாத வாசுதேவன் நீ.

வித்யாத[4]ரனிகெ[3] மோக்ஷ ஹ்ருத்யரிந்தலித்து[1] நீனா
பே[4]த்ய வ்ருஷாசுரவத்ய கேஷியர
வத்[3]யர மாடித[3] ப்ரத்யும்னனே நீ ||15

ஹே பிரத்யும்னனே, வ்ருஷப ரூபத்தில் வந்த வ்ருஷபாசுரனை, குதிரை ரூபத்தில் வந்த கேஷி தைத்யனைக் கொன்றாய். வித்யாதரன் உன்னை சரணடைய அவனுக்கு முக்தியைக் கொடுத்து அருளினாய்.

த[4]னுவின ஹப்ப[3]கெ[1] மது[4]ரெ கி[3]னிது[1] ப[3]ருதல க்ரூரனிகெ[3]
க[4]ன விஷ்வாத்மக சினுமய ரூபவ
வனதி[4]யோள் தோரித[3] அனிருத்தனே நீ ||16

வில் போட்டிக்காக பலராமன், கிருஷ்ணன் இருவரையும் மதுராவிற்கு அழைத்துவர கம்சன், அக்ரூரரை கோகுலத்திற்கு அனுப்பினான். அக்ரூரனின் பக்திக்கு மெச்சி, யமுனா நதியின் நீரிலேயே அவருக்கு தரிசனம் அளித்த அனிருத்தன் நீயே.

வரிஸி ரஜகன குப்ஜெயனந்த வரிஸி பி3ல்லு முரிது3 மத்தெ
கரிய கெ3லிது3 மல்லர மர்த்தி3ஸி சம்
ஹரிஸிதெ கம்ஸன புருஷோத்தமனே ||17

மடி ஆடைகளைக் கொடுக்க மறுத்த ரஜகனை அழித்து, குப்ஜையின் தொட்ட மாத்திரத்திலேயே அப்ஸரையாக்கினாய். கம்சனின் அரண்மனையில் இருந்த வில்லினை முறித்தாய். குவலயாபீடம் என்னும் மத யானையை கொன்றாய். சாணூர, முஷ்டிக என்னும் இரு மல்லர்களை வென்றாய். மாமன் கம்சனையும் கொன்ற புருஷோத்தமன் நீயே.

ரக்ஷிஸி உக்ரசேனன பேக்ஷெயிம் தந்தெ3 தாய்க3ள த
த் க்ஷண பந்த4 விமோக்ஷர மாடித3
பக்ஷிவாஹனா தோக்ஷஜ ரங்க ||18

தாத்தாவான உக்ரசேனனை சிறையிலிருந்து விடுவித்து யதுவம்சத்தின் பட்டத்தைக் கட்டி, வசுதேவ தேவகியரை சிறையிலிருந்து விடுதலை அளித்த, கருட வாகனனான அதோக்ஷஜன் நீயே.

கு3ருவாத3 ஸாந்தீ3பரல்லி வர வித்4யாப்யாஸவ மாடி
ஜரெய மகன ஸங்க3ரதி3 ஷ்ருகா3லன
பரிப4வகொ3ளிஸிதெ நரஸிம்ஹனே நீ ||19

பலராம கிருஷ்ணன் (ஆவந்தீ பட்டணத்தில்) சாந்தீபனி ஆசார்யரிடம் படித்து, (ஜரா என்னும் அரக்கியின் மகனான) ஜராசந்தனை பீமசேனன் மூலமாக கொல்ல வைத்து, ஷ்ருகால வாசுதேவனை, சுதர்சன சக்கரத்தினால் கொன்ற நரசிம்ஹன் நீயே.

அதுல முசுகுந்தனிந்த3 ஹத1வகொ3ளிஸிரெ காலயவனன
மதி2ஸி ந்ருபர ஸந்த1தி1ய ருக்மிணிகெ
பதியாதெ3லெ அச்யுத பரமேஷ ||20

விஷ்ணு பக்தனான முசுகுந்தன் மூலமாக காலயவனனைக் கொன்றாய். பரமேஷனான, அச்யுதனான, ஸ்ரீகிருஷ்ணன் சிசுபால, ருக்மி முதலான அரசர்களை தோற்கடித்து ருக்மிணியை கரம் பிடித்தாய்.

வர்த்தி4ஸி க4ண்டா கர்ணன மர்த்தி4ஸி பௌண்ட்ரகாக்2யன
ஸாத்4ய ஸத்யபாமா த்யரனாளித
ஹ்ருத்3ய மூர்த்தி ஜனார்த்தன தேவ ||21

கண்டா கர்ணனுக்கு அருளி, பௌண்ட்ரக வாசுதேவனை தன் சக்கரத்தினால் கொன்று, சத்யபாமா தேவி ஆகியவர்களை மணம் புரிந்த ஜனார்த்தனன் நீயே.

யுர நரகர ஸம்ஹரி ஸெரடெ3ண்டு1 ஸாவிர ஸ்த்ரி
யர பரிணய கை3த3ரு தோ3ஷரொளு
ஸுர குசுமவெ னபஹரிஹிஸுபேந்த்ர ||22

நரகாசுரனைக் கொன்று, 16000 கன்யையரை விடுவித்து, அவர்கள் அனைவரையும் மகிழ்ச்சிப்படுத்திய, தேவலோகத்திலிருந்து பாரிஜாதத்தைக் கொண்டு வந்த, உபேந்திரன் நீயே.

ஸுரமுனிகெ விஷ்வரூபவ நெரெதோரி த3ந்தவக்த்ரா
ஸுர ஷிஶுபா1லர த3ரிது3 பா3ணனனு
கரக3ளனுரெ ஸம்ஹரிஸித ஹரியு ||23

சுரமுனி நாரதருக்கு விஸ்வரூபத்தைக் காட்டி, தந்தவக்த்ர, சிசுபால, பாணாசுரர்களைக் கொன்ற, ஸ்ரீகிருஷ்ணனான ஸ்ரீஹரி நீயே.

ஹரனாகி ஸ்த்ரியாகி ப4ஸ்மா
ஸுரன கெ3லிது3 ப்4ருகு3விகொ3லிது3
நரனிகெ ஸாரதி2 ஹருஷதொ3ளாகி3யெ
துர1க3வ நடெ3ஸித3 ஸுரவர கிருஷ்ண ||24

ருத்ர தேவரின் பிரார்த்தனையின்படி, மோகினி ரூபத்தை எடுத்து பஸ்மாசுரனைக் கொன்றாய். ப்ருகு முனிவருக்கு தரிசனம் அளித்தாய். பார்த்தனுக்கு சாரதியாகி கீதோபதேசம் செய்து, வெற்றியைக் கொடுத்த, விஜயசாரதி கிருஷ்ணனே, எனக்கு அருள் புரிவாயாக.

ஏனெந்து ப3ண்ணிபெ நின்ன வாசுகீ ஷனிக3பே4த்3ய
வாஸவனுத வர வாசுதேவ ஸ்ரீனி
வாஸன கா2த்3ரிபுரீஷ ந்ருசிம்ஹனெ ||25

ஸ்ரீனிவாசனே, வாசுகீஷனே, வாசுதேவனே, நான் உன்னை எப்படி வர்ணிக்கட்டும்? உன் கிருபா கடாக்ஷத்தால் எனக்கு அருள்புரிந்து, என்னைக் காப்பாற்று என்றவாறு கவி திப்பணார்யர் கேசவ நாம மூலமாக கிருஷ்ணாவதாரியான காத்ரிபுரீசனுக்கு இந்த கிருதியை சமர்ப்பிக்கிறார்.

பாகவத பத்தாம் ஸ்கந்தத்தின் கதையை, அதன் சாரத்தை, நமக்கு எடுத்துச் சொல்லும் கேசவ நாம. இந்த அனைத்து செயல்களும், பிம்பரூபியான பரமாத்மாவினாலேயே என்று நினைக்க வேண்டும்.

***

(தொடரும்)

**தற்போது நமது Blogல் தினம் ஒரு பத்யமாக வந்து கொண்டிருப்பது : https://dasa-sahitya.blogspot.com/**

* ஸ்ரீப்ரஸன்ன ஸ்ரீனிவாஸ தாஸர் இயற்றிய - விஷ்ணு சஹஸ்ரநாம பாஷ்ய - கன்னட பத்யங்கள். இதன் அர்த்த விளக்கங்கள் - தமிழில்.
* 1000 நாமங்களுக்கு, (4 வரிகளைக் கொண்ட) 1000 கன்னட பத்யங்களை பாஷ்ய ரூபமாக இயற்றிக் கொடுத்திருக்கிறார் தாஸர்.
* தினமும் 3 பத்யங்களின், தமிழ் விளக்கங்களை நமது மேற்கண்ட blogல் படிக்கலாம்.

## இந்த மாத ஆராதனைகள்

**ஸ்ரீகுருபிராணேஷ விட்டலதாசர் (1785–1860)**
(ஸ்ரீ வெங்கட தாசர்)

குருபக்திமதாம் ஸ்ரேஷ்டம் குருபாதாவலம்பினம் |
குரோபதிஷ்ட மார்க்கஸ்தம் குருப்ராணேஷ மாஸ்ரயே ||

ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப், அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்து சொல்லலாம்.

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

### சுற்றுச்சூழல் பாதுகாப்பு

ஸ்ரீனிவாஸ சிரனூர்கர்

மருத்துவ சிறப்புகள்:

தார்மிக, ஆத்யாத்மிக மற்றும் ஆன்மிக இதிகாசங்களின்படி அரச மரத்திற்கு இருக்கும் பல்வேறு சிறப்புகள் வேறெந்த மரத்திற்கும் இல்லை. ஆனால், அதனால் மட்டுமே அந்த மரமானது இவ்வளவு காலம் தப்பித்து நிலைத்திருந்ததா? ஐந்தாம் வேதம் என்று பெயர் பெற்ற பாரதத்தில், மிகப்பழமையான மருத்துவ முறை - ஆயுர்வேதம் மற்றும் இன்னும் பிற மருத்துவ நூல்களில் அரச மரத்தைப் பற்றி, அதன் சிறப்பான மருத்துவ குணங்களைப் பற்றி மிகத் தெளிவாக எழுதப்பட்டுள்ளது.

அரச மரத்தின் இலை, கிளை, வேர், தண்டு, பழம் ஆகிய அனைத்துமே நோய்களைத் தீர்க்கும் குணங்களைப் பெற்றிருக்கிறது. சளி, ரத்தசோகை, வாந்தி, பித்தம், தாகம், இருமல், ஆகிய பல்வேறு நோய்களின் பிரச்னைகளின் தீர்வுகளில் அரச மரத்தின் பங்கு இருந்திருக்கிறது. சாதாரண ஜுரத்திலிருந்து கொடிய நோய் எனப்படும் தொழு நோய் வரைக்குமான பல்வேறு நோய்களின் தீர்வுகளில், அரச மரத்தின் ஏதோவொரு பாகம் பயன்பட்டிருக்கிறது. போலவே, அரசமரமானது மனிதனுக்குத் தேவையான பிராண வாயுவைக் கொடுப்பதால், அதனை ஜீவவ்ருக்ஷ (Life Tree) என்றும், மருத்துவ குணங்கள் நிரம்பியதால், வைத்யமர (Medicinal Tree) என்று அழைக்கின்றனர். அது மட்டுமல்லாமல் இதனை, 'ஞான மரம்', 'ஸ்ருஷ்டி மரம்' என்றெல்லாம் புராணங்களில் அழைக்கப்பட்டிருப்பதை பார்க்கிறோம்.

தார்மிக - ஆத்யாத்மிக - இதிகாச மகிமைகள்:

பாரதீய பண்பாட்டில், கலாசாரத்தில் அரச மரமாது தெய்வீகமானது என்றே போற்றப்பட்டு வந்துள்ளது. நம் தர்ம சாஸ்திரங்களில், அரச மரத்தின் கிளைகளை வெட்டுபவர்களுக்கும் தண்டனை கிடைக்கும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ரிக்வேதத்தில், ஸ்ருதி, சம்ஹிதை மட்டுமல்லாமல் சாணக்யரின் அர்த்தசாஸ்திர கிரந்தத்திலும் அரச மரத்தின் புனிதத்தன்மையை விளக்கியிருப்பதை பார்க்க முடிகிறது.

10 - ஹரிதாச விஜயம் – பிப்ரவரி 2023

பகவான் ஸ்ரீகிருஷ்ணன், அரச மரத்தை அழிவில்லாத மரம் என்கிறார். பகவத்கீதை 10-26ம் ஸ்லோகத்தில் ஸ்ரீகிருஷ்ணன் இப்படியாக சொல்கிறார்.

அஷ்வத்த: சர்வவ்ருக்ஷாணாம் தேவர்ஷீணாம் ச நாரத: |
கந்தர்வாணாம் சித்ரரத: சித்தானாம் கபிலோ முனி: ||

எல்லா மரங்களிலும் அரச மரமாகவும், தேவரிஷிகளில் நாரதமுனியாகவும், கந்தர்வர்களில் சித்ரரதனாகவும், சாதகர்களில் கபில முனியாகவும் நான் இருக்கிறேன்.

ஸ்கந்த புராணத்தில் அரச மரத்து மகிமைகள் மிகவும் அற்புதமாக விளக்கப்பட்டுள்ளன.

மூலேவிஷ்ணு: ஸ்திதோனித்யம் ஸ்கந்தே கேஷவ ஏவச |
நாராயணாஸ்து ஷாகாஸு ப்ரதேஷு பகவான் ஹரி: ||
கலேச்யோதோன சந்தேஹ: சர்வ தேவை: சமன்வித: |
சவாவ விஷ்ணுத்ருமே ஏவ மூர்தாமஹாபி: சேவித புண்யமூல: |
யஸ்யாஸ்ரய: பாப சஹஸ்ர ஹந்தா பவேன்மாணாம் காமது கோகுணாட்ய: ||

அரச மரத்து வேர்களில் விஷ்ணு, தண்டில் கேசவன், கிளைகளில் நாராயணன், இலைகளில் ஸ்ரீஹரி மற்றும் பழங்களில் அனைத்து தேவதைகளுடன் அச்யுதன் எப்போதும் இருக்கிறார். மகாத்மர்கள் இந்த மரத்தில் சிறப்பினை அறிந்து இதற்கு சேவை செய்கின்றனர். இதன் நற்குணங்கள், சிறப்புகள் அனைத்தும் சேர்ந்து மனிதர்களின் ஆயிரக்கணக்கான பாவங்களைக் களையும் சக்தியை பெற்றிருக்கின்றன.

பாரதத்தின் பண்டைய வைதிக சாஸ்திரங்களில் அரச மரத்தின் குறிப்பு, சிறப்பு ஆகியன விளக்கப்பட்டிருப்பதை பார்க்கலாம். வேதங்களில் மிகப் பழமையான ரிக் வேதத்தில் அரச மரமானது பிரம்மாண்டத்தின் குறியீடு என்று சொல்லப்பட்டிருக்கிறது. ‘ஆயிரம் கிளைகளைக் கொண்ட மரம்’ என்று வர்ணித்திருக்கின்றனர். அதர்வண வேதத்தில் தேவதைகளின் நிரந்தர வசிப்பிடம் அரச மரம் என்று

சொல்லபப்பட்டிருக்கிறது. இதனை ஸ்வர்க்கத்தில் விளையும் மரம் என்று வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

உபநிஷத்களில், அரச மரத்து பழங்களை, தேகம் மற்றும் ஆத்மா இவற்றின் நடுவில் இருக்கும் வித்தியாசத்தை விளக்கும் வண்ணம் இருப்பதாக சொல்லியிருக்கின்றனர். தேகமானது பழத்தின் வெளிப்புறமாக இருந்தால், அதற்குள் இருக்கும் விதை, ஆத்ம ஸ்வரூபம் எனப்படுகிறது. வெறும் தோலினை உண்டால் அதன் சுவையை கொஞ்சமாக உணரலாம். ஆனால், ஆத்மஞானம் கிடைப்பதில்லை. ஆத்மஞானம் நிறைந்திருப்பது விதைகளில். நாம் தேகத்தையே விதை என்று நம்பி, அதையே சுவையாக இருக்கிறது என்று சொல்லி, அந்த தேகத்துக்குள் இருக்கும் ஆத்மனை கண்டுபிடிப்பதேயில்லை. அதற்கே ஆத்மஞானம் கிடைப்பது மிகவும் கடினமான செயலாகும் என்கின்றனர்.

பௌத்தருக்கும் பவித்ரமான அஸ்வத்த (அரச மரம்):

வேத காலத்திலிருந்தே அரச மரத்திற்கு ஒரு பவித்ரமான இடம் இருப்பதால் அது இந்து தர்மத்தின் தவிர்க்க முடியாத ஒரு அங்கமாகவே இருக்கிறது. ஆனால், அத்தகைய அரச மரத்தை பௌத்த மதத்தவரும்கூட பவித்ரமாக கருதுகின்றனர் என்பது ஒரு அருமையான செய்தி.

சுமார் 6ம் நூற்றண்டில், பௌத்தனின் காலத்தில் சில மரங்கள், தேவதைகள் அல்லது சேதனர்களின் இருப்பிடம் எனக் கருதப்பட்டு, அதனால் அவை பவித்ரமாக கருதப்பட்டன. சித்தார்த்தனே தியானத்திற்காக அமர்ந்து போதியைப் பெறுவதற்கு, அரச மரத்து நிழலையே விரும்பினார். அவருக்கு போதி மரத்திற்குக் கீழ் அமர்ந்தபோது, ஞானோதயம் வந்ததால் அவர் கௌதம புத்தன் ஆனார். புத்தனைவிட பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே புனிதத்தன்மையைப் பெற்றிருந்தது அந்த மரம். அவருக்குப் பிறகு பௌத்தர்கள், அரச மரத்தை, போதி மரம் என்று அழைக்கத் துவங்கினர்.

இந்து தர்மத்தில் இந்து பண்பாட்டில் அரச மரம் மிகவும் பவித்ரமானது என்று கருதப்படும் சிந்தனை, அப்படியே பௌத்த மதத்திற்கும் பரவியது என்னும் வரலாற்று உண்மையை ஆய்வாளர்

திரு.ஏ.எல்.பாஷம் அவர்கள் தமது 'The wonder that was India' என்னும் புத்தகத்தில் சொல்லியிருக்கிறார்.

பகவான் புத்தனே சொல்லும் விஷயம் இது. 'யார் அரச மரத்தை பாதுகாத்து வளர்க்கின்றரோ, அவர் என்னையே பூஜித்த பாக்கியத்தைப் பெறுகின்றனர்'. சித்தார்த்தன் தனது தியானத்திற்காக, தவத்திற்காக தேர்ந்தெடுத்தது அரச மரத்தையேதானே? அதுவே சிறந்த மரம் என்பதால் அவர் அதையே ஆய்ந்து தேர்ந்தெடுத்திருக்கிறார் என்பதில் சந்தேகமேயில்லை. அரச மரத்தின் கீழ் அமர்ந்து செய்த நீண்ட தவத்தினாலேயே சித்தார்த்தனுக்கு ஞானோதயம் ஆனது. அவர் மிகப்பெரிய அறிஞன் ஆனார். அவரால் நிறுவப்பட்ட பௌத்தமதம் பற்பல நாடுகளுக்குப் பரவியது. சித்தார்த்தன் புத்தனாக மாறிய நிகழ்ச்சியில், அரச மரத்திற்கு முக்கிய பங்கு இல்லையா என்ன?

ஸ்ரீபாதராஜர் நட்ட மரங்கள்:

யதிவரேண்யரான ஸ்ரீபாதராயர், தமது சுற்றுப்பயணங்களில் பல இடங்களில் அரச மரங்களை நட்ட சம்பவங்கள் தெரிய வந்துள்ளது. ஸ்ரீபாதராயர், ஸ்ரீவிஜயதாசரின் பிறந்த இடமான, ராய்ச்சூர் ஜில்லா மானவி தாலுக்கா துங்கபத்ரா நதிக்கரையில் சிக்கலபரவையில் அரச மரத்தை நட்டு வைத்தார். அந்த மரத்தை இன்றும் பூஜித்து வருகின்றனர். அவர் அங்கு ஸ்ரீ நரசிம்மரின் விக்ரகத்தை நிர்மாணித்து அதனுடன் அரச மரத்தையும் நட்டார். பிரம்ம அஸ்வத்த, விதுர அஸ்வத்த என்று ஸ்ரீபாதராயர் நட்டு வைத்த மரங்களால், சிக்கலபரவி தீர்த்த க்ஷேத்திரம் ஆனது. மக்கள், அஸ்வத்த நரசிம்ம ஸ்வாமிக்கு பக்தியுடன் சேவை செய்து தங்களது இஷ்டார்த்தங்களை நிறைவேற்றிக் கொள்கின்றனர். நரசிம்மரின் கோயில் மற்றும் அரச மரத்திற்கு 'விஜயதாசர கட்டெ' என்று மக்கள் பக்தியுடன் அழைக்கின்றனர்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த அரச மரத்தை வெட்டுவது எத்தகைய பாவமான செயல் என்பதை ஜகன்னாததாசர் எச்சரிக்கை விடுத்தவாறு, அதனை தொடர்ந்து வளர்த்து, பாதுகாத்து வரவேண்டும் என்று சொல்கிறார். (கடைசி பக்கத்தில் தொடர்கிறது)

தொடர்

**ஸ்ரீராகவேந்திர விஜயம்**

**ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர் இயற்றியது**

**ராயரங்க்4ரி ஸுதோய கணக3ளு**
**காயத3லி ஸல்லக்3னவாக3லு**
**ஹேயகுஷ்ட ப4க3ந்த4ராதி3 ஸமஸ்த வ்யாதி4க3ளு**
**மாய மயபூ4தாதி3 பா3த4வ**
**பாய தானே பொம்ப3போபத3 (பொந்தி3போபத3)**
**ஜேய தன்னய ஷக்தியிந்த3லி கார்ய மாடு3வனு ||9**

ராயரங்க்ரி ஸுதோய கணகளு - ஸ்ரீராயரின் பாதோதகத்தின் துளிகள்; காயதலி ஸல்லக்னவாகலு - நம் தேகத்தில் பட்டால்; ஹேயகுஷ்ட பகந்தராதி - கொடுமையான குஷ்டம், மூலம் போன்ற; ஸமஸ்த வ்யாதிகளு - அனைத்து நோய்களும்; மாய மய - மறைந்து போகின்றன; பூதாதி பாதவ - பூத, பிசாசு போன்றவற்றின்; அபாய தானே - கஷ்டங்கள் தானாகவே; பொந்திபோபத - விலகிப் போகின்றன; ஜேய - எஜமானன் (அந்த மனிதன்); தன்னய ஷக்தியிந்தலி - தானாகவே (யாரொருவரின் உதவி இல்லாமல்); கார்ய மாடுவனு - செயல்களை செய்யத் துவங்குகிறான்.

ஸ்ரீராயரின் பாதோதகத்தின் மகிமைகளை இந்த பத்யத்தில் விளக்கியிருக்கிறார் ஸ்ரீதாஸர்.

ஸ்ரீராயரின் பாதோதகத்தின் துளிகள், நம் தேகத்தில் பட்டால் கொடுமையான குஷ்டம், மூலம் போன்ற அனைத்து நோய்களும் மறைந்து போகின்றன. பூத, பிசாசு போன்றவற்றின் கஷ்டங்கள் தானாகவே விலகிப் போகின்றன. அந்த மனிதன், தானாகவே (யாரொருவரின் உதவி இல்லாமல்), தன் செயல்களை செய்யத் துவங்குகிறான்.

ஸ்ரீராகவேந்திர ஸ்தோத்திரத்தில் இதற்கான பல ஆதாரங்கள் உள்ளன.
* ஸ்ரீராகவேந்திர ஸகல ப்ரதாதா ஸ்வபாத கஞ்சத்வய பக்தி மத்ப்ய: |
* தஸ்ய குஷ்டாதி ரோகாணாம் நிவ்ருத்தி ஸ்த்வரயா பவேத் ||

**த்3ருஷ்டியெம்ப3 ஸுவஜ்ரதி3ந்ததி3**
**பெ3ட்டத3ந்திஹ பாபராஶிய**
**அட்டிக3ளிஸுவ தூ3ரதே3ஶகெ3 துரித க3ஜஸிம்ஹ**
**முட்டி தனபத3 ஸேவெமாட3லு**

**இஷ்ட காமித ஸித்$^{3}$தி$^{4}$ நீடு$^{3}$வ**
**கஷ்டகோடிய ஸுட்டு பி$^{3}$டு$^{3}$வனு ஸர்வகாலத$^{3}$லி ||10**

த்ருஷ்டியெம்ப - ஸ்ரீராயர், அருட்பார்வை என்னும் தன்னுடைய; ஸுவஜ்ரதிந்ததி - பலமான ஆயுதத்தினால்; பெட்டதந்திஹ - மலையைப் போல உள்ளதான; பாபராஸிய - பாவங்களின் மூட்டைகளை; துரித - வேகமாக; தூரதேஷகெ - வெகு தூரமாக; அட்டிகளிஸுவ - ஓட்டி துரத்திவிடுகிறார்; கஜஸிம்ஹ - யானையைப் போல / சிங்கத்தைப் போன்றவர் இவர்; தனபத - ஸ்ரீராயரின் தேகத்தை, பாதங்களை; முட்டி - தொட்டு; ஸேவெமாடலு - சேவை செய்தால்; இஷ்ட காமித - நாம் விரும்பியவற்றை; ஸித்தி நீடுவ - அருள்கிறார்; கஷ்டகோடிய - ஏராளமான கஷ்டங்களை; ஸுட்டு பிடுவனு - சுட்டுப் பொசுக்குகிறார்; ஸர்வகாலதலி - அனைத்து காலங்களிலும் (எப்போதும்);

ஸ்ரீராயரின் அருட்பார்வை நம் மேல் விழுந்தால் என்ன ஆகிறது என்பதை இந்த பத்யத்தில் விளக்கியுள்ளார் ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர்.

ஸ்ரீராயர், அருட்பார்வை என்னும் தன்னுடைய பலமான ஆயுதத்தினால், மலையைப் போன்றதான பாவங்களின் மூட்டைகளை வேகமாக, வெகு தூரமாக ஓட்டி துரத்திவிடுகிறார். யானையைப் போல / சிங்கத்தைப் போன்றவர் இவர். ஸ்ரீராயரின் தேகத்தை தொட்டு சேவை செய்தால், நாம் விரும்பியவற்றை அருள்கிறார். ஏராளமான கஷ்டங்களை சுட்டுப் பொசுக்குகிறார்.

* ஸ்ரீராகவேந்திர ஸ்தோத்திரத்தில் இதற்கான பல ஆதாரங்கள் உள்ளன.
அந்தோபி திவ்யத்ருஷ்டி: ஸ்யாத் ஏடமூகோ஽ப் வாக்பதி: |

* கஜகேஸரியாக ஸ்ரீராயர் இருக்கிறார் என்பதை ஸ்ரீவ்யாஸதீர்த்தரின் சரம ஸ்லோகத்திலேயே நாம் பார்க்கிறோம்.
அர்த்தி கல்பித கல்போயம் ப்ரத்யர்த்தி கஜகேஸரி |
வ்யாஸ தீர்த்த குருர்பூயாத் அஸ்மத் இஷ்டார்த்த ஸித்தயே ||

**இந்து$^{3}$ ஸூர்யக்$^{3}$ரஹண பர்வவு**
**ப$^{3}$ந்த$^{3}$ காலதி$^{3}$ நேம பூர்வக**
**பொந்திதா$^{3}$ஸனத$^{3}$ல்லி குளிதஷ்டோத்தராவர்த்தி**
**ஒந்தெ$^{3}$ மனத$^{3}$லி மாடெ$^{3}$ கு$^{3}$ருவர**

**நந்த[3]த[3]லி ஸகலார்த்த[2] ஸித்தி[3]ய**
**தந்து[3]கொடு[3]வனு தன்ன ஸேவக ஜனர ஸந்ததிகெ[3] ||11**

இந்து ஸூர்யக்ரஹண பர்வவு - சந்திர / சூரிய கிரகண பர்வ காலங்கள்; பந்த காலதி - வந்த காலத்தில்; நேம பூர்வக - விதிப்படி; பொந்திதாஸனதல்லி - ஒரு தக்க ஆசனத்தில்; குளிது - அமர்ந்து; அஷ்டோத்தராவர்த்தி - 108 முறை; ஒந்தெ மனதலி மாடெ - ஒரே மனதுடன் (கவனத்துடன்) செய்தால்; குருவர - குருவரனானவர்; நந்ததலி - மிக்க மகிழ்ச்சியுடன்; தன்ன ஸேவக ஜனர ஸந்ததிகெ - தன்னுடைய சேவையை செய்பவரின் வம்சத்திற்கு; ஸகலார்த்த ஸித்திய - அனைத்து விதமான சுகங்களையும்; தந்துகொடுவனு - கொடுக்கிறார்.

சந்திர / சூரிய கிரகண பர்வ காலங்களில், விதிப்படி ஒரு தக்க ஆசனத்தில் அமர்ந்து, ஓம் ஸ்ரீராகவேந்திராய நம: என்னும் நாம மந்திர ஜபத்தினை, 108 முறை ஒரே மனதுடன் செய்தால், குருவரனானவர், மிக்க மகிழ்ச்சியுடன் தன்னுடைய சேவையை செய்பவர்களின் வம்சத்திற்கு, அனைத்து விதமான சுகங்களையும் கொடுக்கிறார்.

ஸ்ரீராகவேந்திர ஸ்தோத்திரத்தில் இதற்கான ஆதார வரிகள் இவ்வாறு:
ஸோம ஸூர்யோ பராகேச புஷ்யார்க்காதி ஸமாகமே
யோனுத்தம மிதம் ஸ்தோத்ரம் அஷ்டோத்தர ஷதம் ஜபேத்
பூத ப்ரேத பிஷாசாதி பீடா தஸ்ய ந ஜாயதே ||

**தனயரில்லத[3] ஜனகெ ஸுதரனு**
**மனியு மானினி வ்ருத்தி க்ஷேத்ரவு**
**கனக த[4]ன ஸந்தான ஸம்பது இனிதெ ப[2]லக[3]ளனு**
**ஜன ஸமூஹகெ இத்து தோஷதி[3]**
**வினயபூர்வக ஸலிஸி காவனு**
**அனுபமோபம சரித ஸத்கு[3]ண ப[4]ரித யதினாத[2] ||12**

தனயரில்லத ஜனகெ ஸுதரனு - மக்கள் இல்லாதவர்களுக்கு வாரிசினையும்; மனியு - வீடு; மானினி - மனைவி; வ்ருத்தி க்ஷேத்ரவு - வேலை செய்ய ஒரு இடம்; கனக - தங்கம்; தன - செல்வம்; ஸந்தான - வாரிசு; ஸம்பது - செல்வம்; இனிதெ பலகளனு - ஆகிய பலன்களை; ஜன ஸமூஹகெ - மக்களுக்கு (தன் பக்தர்களுக்கு) ; தோஷதி - மகிழ்ச்சியுடன்; இத்து - அருளி; வினயபூர்வக - மரியாதைகளுடன்; ஸலிஸி - வழங்கி; காவனு - காக்கிறான்; அனுபமோபம சரித - யாருடனும் ஒப்ப முடியாத

சரித்திரத்தைக் கொண்டவரான; ஸத்குண பரித - நற்குணங்கள் நிரம்பியவரான; யதினாத - யதிகளில் சிறந்தவரான ஸ்ரீராயர்.

ஸ்ரீராயரின் மகிமைகளை தொடர்ந்து இந்த பத்யத்தில் விளக்கியுள்ளார் ஸ்ரீதாஸர்.

மக்கள் இல்லாதவர்களுக்கு வாரிசு; வீடு, மனைவி, வேலை செய்ய ஒரு இடம், தங்கம், செல்வம், வாரிசு, செல்வம் ஆகிய பலன்களை, தன் பக்தர்களுக்கு மகிழ்ச்சியுடன், மரியாதைகளுடன் வழங்கி காக்கிறார் ஸ்ரீராயர். இவர் யாருடனும் ஒப்ப முடியாத சரித்திரத்தைக் கொண்டவரான, நற்குணங்கள் நிரம்பியவரான, யதிகளில் சிறந்தவராக இருக்கிறார்.

ஸந்தான ஸம்பத் பரிஶுத்த பக்தி
விக்ஞான வாக்தேஹ ஸுபாடவாதீன் தத்வா ।
என்று ஸ்ரீராகவேந்திர ஸ்தோத்திர வரிகள் இதற்கு ஆதாரமாக உள்ளன.

**ஶாபானுக்$^3$ரஹ ஶக்தனொப்$^3$ப$^3$னு**
**லோபவாக$^3$து$^3$ நுடி$^3$த$^3$ வாக்யவு**
**வ்யாபகனு தானாகி$^3$ இப்பனு ஸர்வகாலத$^3$லி**
**கோபவில்லவோ ஞானமய ஸுக$^2$**
**ரூப ஸந்தத ஸாது$^3$வர்த்தியு**
**பாப நாஶக கவிகுலோத்தம புண்யமய காய ||13**

ஶாபானுக்$^3$ரஹ ஶக்தனொப்$^3$ப$^3$னு - இவர் சாபங்களை போக்கி, அருள் புரியத் தக்கவர்; லோபவாகது நுடித வாக்யவு - இவர் கூறிய வார்த்தைகள் வீண் ஆகாது (பலிக்காமல் போகாது); வ்யாபகனு - பகவந்தனின் அருளால் அனைத்தையும் செய்யத் தக்கவர்; தானாகி இப்பனு ஸர்வகாலதலி - அனைத்து காலங்களிலும் எல்லா இடங்களிலும் இருப்பவர்; கோபவில்லவோ - இவருக்கு கோபம் என்பதே கிடையாது; ஞானமய - ஞானமே வடிவானவர்; ஸுக ரூப - பார்க்க ஸுக ஸ்வரூபமுடையவர்; ஸந்தத ஸாதுவர்த்தியு - எப்போதும் அற்புதமான சரித்திரத்தைக் கொண்டவர்; பாப நாஸக - நம்முடைய பாவங்களை போக்கத் தக்கவர்; கவிகுலோத்தம - பரிமள போன்றதான பல அற்புதமான கிரந்தங்களை படைத்தவர்; புண்மய காய - புண்ணியத்தின் ஸ்வரூபமான தேகத்தையே கொண்டவர்.

ஸ்ரீராயரின் ஸ்வரூப தேக வர்ணனை இவ்வாறு உள்ளது.

ஸ்ரீராயர், சாபங்களை போக்கி அருள் புரிபவர். இவர் கூறிய வார்த்தைகள் வீண் ஆகாது (பலிக்காமல் போகாது). பகவந்தனின் அருளால் அனைத்தையும் செய்யத் தக்கவர். அனைத்து காலங்களிலும் எல்லா இடங்களிலும் இருப்பவர். இவருக்கு கோபம் என்பதே கிடையாது. ஞான வடிவானவர். ஸுக ஸ்வரூபி. அற்புத சரித்திரத்தைக் கொண்டவர். நம்முடைய பாவங்களை போக்கத்தக்கவர். பரிமள முதலான பல அற்புத கிரந்தங்களை படைத்தவர். புண்ய ஸ்வரூப தேகம் கொண்டவர்.

ஷாபானுக்ரஹ ஷக்தோன்யோ ராகவேந்திரான்ன வித்யதே - என்று ஸ்ரீராகவேந்திர ஸ்தோத்திரம் சொல்கிறது.

ஸ்ரீகமலேஷ விட்டலதாஸர் இயற்றிய துங்கா தீர விராஜம் என்னும் கீர்த்தனையில்:

மங்களகர மந்திராலய வாஸம், ஷ்ருங்கானானன விலாஸித ஹாஸம்;
கரத்ருத தண்ட கமண்டலு மாலம், சுருசிர சேலம் த்ருதமணி மாலம்;
நிருபம சுந்தர காய சுஷீலம், வர கமலேஷார்ப்பித நிஜ ஸகலம்

என்று ஸ்ரீராயரின் தேக வர்ணனையை செய்திருக்கிறார் என்பதை பார்க்கிறோம். (தொடரும்)

**YouTube Channel - Jagannatha Kesava**

* மேற்கண்ட நமது யூட்யூப் சேனலில் தற்போது வரவிருக்கும் தொடர் – ஸ்ரீகனகதாஸர் இயற்றிய – ராமதான்ய சரித்ரெ – தமிழ் அர்த்த விளக்கங்களுடன்.
* நமது சேனலுக்கு சப்ஸ்க்ரைப் செய்து, ஏற்கனவே உள்ள + வரவிருக்கும் தொடர்களையும், அனைவரும் கேட்டு, நம் ஹரிதாஸ ஸாகித்யத்தின் சிறப்பினை அறிய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ் சார்பாக இதுவரை வந்திருக்கும் அனைத்து புத்தகங்களையும் வாங்கி வீட்டீர்களா?

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## 32. தேவதா தாரதம்ய ஸந்தி

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 32 | | | | 2 | 33 | | 3 | | | | | 34 | |
| | | | 22 | | 4 | | | | | | | | | 23 |
| | | 24 | | | 35 | 5 | | | | | 46 | | | |
| 36 | 37 | 25 | | 47 | | | 26 | | | | | 27 | | |
| | | | | 28 | | | | | 6 | | 38 | | | |
| | | 7 | | | 8 | | | | | | | | | |
| 9 | | | | | 10 | | | | 48 | | | | | |
| | 11 | | | | | 12 | | | | 49 | | 39 | | 40 |
| 13 | | 14 | | | | | | 50 | | | | | 51 | |
| | | | 15 | | 41 | | | | | | | 29 | | |
| 42 | 43 | | | | | | | | 52 | | | | | |
| | | | | 30 | | | 16 | | | | | 44 | | |
| | | | | | 17 | | | | 18 | 45 | | | 53 | |
| | 19 | | | | | 31 | | | | | | | | |
| | | | 20 | | | | 54 | | 21 | | | | | |

குறுக்கெழுத்துப் போட்டிகளை வடிவமைத்துக் கொடுப்பவர் : திருமதி. பத்மா பாண்டுரங்கன், திருநெல்வேலி

குறுக்கெழுத்துப் போட்டிக்கான விடைகளை haridasa.vijayam @ gmail.com / அல்லது 89044 58276 க்கு வாட்சப் செய்யலாம்.

**இடமிருந்து வலம்:**1.எண்ணிலடங்கா குணங்களால் நிறைந்தவன்(4), 2.முடியின் அடியில்(4), 3.மேகாபிமானி.கலைந்துள்ளது.(5) 4.யமன்(5), 5.4ம் கக்ஷையில் வரும் தேவதை. கலைவாணி, கலைந்துள்ளது(5), 6.இந்திரனின் பத்னி(4), 7.அஷ்டமஹிஷியரில் ஒருவர்(4), 8.ஸுரியன்(4), 9.மேகம்(3), 10.கடல்(3), 11.ஜலாபிமானி(3), 12.அக்னியின் பத்னி. பித்ரு தேவதை(3), 13.தொடை(2), 14.நெற்றி(2), 15.ஸங்கு(3), 16.முதல் ருஜு கணத்தவரின் பெயர்(3), 17.கண்(3), 18.விரைவில் ஸந்தோஷமடைபவர்.(4) 19.2ம் கக்ஷ தேவதை ஸ்ரீ....(2),20.தேவதைகளின் குரு(6), 21.ப்ரஹ்மாவின் வேறு பெயர்(5).

**வலமிருந்து இடம்:**5.நட்பு பாவத்துடன் ஸ்ரீஹரியை உபாஸனை செய்ததால் மித்ரவிந்தா இப்படி அழைக்கப் பட்டாள்(3), 6.மெதுவாக நகர்வது(2), 10.ஸேஷனின் பத்னி(3), 15.5வதுகக்ஷ தேவதை.வேதா பிமானி(4). 20.ப்ரவஹ வாயு பத்னி(4),22.தென்மேற்கு திக்கின் அதிபதி,.கலைந்துள்ளது(4), 23.உப்பு(3), 24.தேவகுரு பத்னி(2), 25.க்ருஷ்ணனின் தாய். கலைந்துள்ளது(3), 26.ராஜ மார்க்கத்தின் கர்மஜ தேவதைகளில் ஒருவர்(2), 27.நீரில் மலர்ந்ததாமரை(4), 28.விரூபமான நெற்றிக்கண் உடையவன்(4), 29.குபேரனின் ரகஸிய ஸேவகர்கள்(7), 30.98வது ருஜூ கணத்தவர்(5), 31.சந்திரன்(4).

**மேலிருந்து கீழ்:**11.தங்கம்(3), 23.27 லக்ஷணங்கள் உடைய அஷ்ட மஹிஷியரில் ஒருவர்(5), 32.அஹங்காரிக ப்ராணன் இப்படி அழைக்கப்பட்டான்(4), 33.வசந்த காலம்(5) 34.12ம் கக்ஷ தேவதை. 12 ஆதித்யர்களில் ஒருவர்(5), 35.தோலாடை அணிந்த ஸிவன்(6), 36.நட்சத்திரங்களின் தலைவன்(3), 37.குபேரன்(4), 38.விஷ்வகர்மா(5), 39.15ம் கக்ஷயில் வரும் மூவரில் முதல்வர்(3). 40.வாய் குழறிய வார்த்தை(5), 41.புலோமன் என்னும் அஸுரனின் மகள்.இந்திர பத்னியும் கூட(3),42.19ம் கக்ஷகர்மஜ தேவதை(3), 43.ஸ்வயம்புவ மனுவின் முதல் மகன்.கலைந்துள்ளது.கடைசி இரண்டு எழுத்து இல்லை(5),44.ஜீவாபிமானி(2),45.மத்வரின் த்வைத வாதம்(3).

**கீழிருந்து மேல்:**14.சந்திரனின் வேறு பெயர்(3),20.பூத,ப்ரேத,பிசாசி ஜீவ கூட்டம்.கலைந்துள்ளது(6),27.ஸமுத்ரராஜன்(4),36.நாபிக் கமலம்(4),45.கருடனின் பத்னி,கடைசி எழுத்து இல்லை(3), 46.நோய்(3),47..யமதேவனின் பத்னி(4),48.இரண்டாயிரம்(6), 49.சந்திர னின் மனைவி(3),50.மின்னல்(4),51.பாதமானி(5),52.கோவர்த்தன மலையை தாங்கிய ஸ்ரீஹரி(4),53.பார்வதி(5),54.ஸர்ப உடல் கொண்டவர்கள்(7).

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

### கமலாக்ஷம்மா -= (1896-1980)

கமலாக்ஷம்மா அவர்களின் பெற்றோர் - ஸ்ரீனிவாஸ உபாத்யாய மற்றும் பீமரதி பாய். ஸ்ரீமதி பீமரதி பாய் அவர்களின் குடும்பம் துவக்கத்தில் அம்பலபாடியில் இருந்து, பின்னர் கார்கள அருகில் உள கல்மட சூர்ய நாராயண ஆலயத்தின் அருகில் வந்து தங்கினர். இதனால் இவர்கள் கல்மட உபாத்யாய குடும்பம் என்று பெயர் பெற்றனர்.

கமலாக்ஷம்மா இரண்டாம் வகுப்பு வரையே படித்தார். அன்றைய வழக்கப்படி, நரசிம்ம உபாத்யாய என்பவருடன் இவருக்கு பால்ய திருமணம் நடைபெற்றது. பரமாத்மனின் நித்ய பூஜை மற்றும் பஜனைகளில் ஈடுபாடு கொண்டிருந்த, கமலாக்ஷி, உடனுக்குடன் கவிதைகளை (ஆஸுகவி) இயற்றுவதில் தேர்ச்சி பெற்றிருந்தார்.

ஏதோ ஒரு பிரச்னையில் இவர்களின் சொத்துக்கள் கரைந்துவிட, கமலாக் ஷம்மா தம்பதிகள் கார்கள மஹாகாளி மடத்தில் 5 ஆண்டுகளும், புத்திகெ மடத்தில் 20 ஆண்டுகளும் வசித்தனர். திருமண வாழ்க்கையில் இவருக்கு 6 பெண் குழந்தைகளும், 1 ஆண் குழந்தையும் பிறந்தனர்.

கமலாக்ஷி மற்றும் நரஸிம்ம உபாத்யாய இவர்களின் மகனான வ்யாஸகிருஷ்ண உபாத்யாய, கார்களத்தில் ஸங்கீத வித்வாம்ஸகராகி, பாடகராகி மற்றும் வயலின் இசையை கற்றுக் கொடுப்பவராகவும் இருந்து, தம்முடையதே ஆன ஒரு பாடசாலையை நிறுவினார். பின்னர், அவருடைய மகனான பிரதீப உபாத்யாய அவரும், அந்த சங்கீத கலாசாலையை நடத்திக் கொண்டு வருகிறார் என்பதை கேள்விப்படுகிறோம்.

கணவர் கொடுத்த உற்சாகத்தினால், கமலாக்ஷி அவர்கள், பல்வேறு சம்பிராதயமான பாடல்களையும், கீர்த்தனைகளையும், இயற்றி பாடி வந்தாராம். திருமணம், உபநயனம் ஆகிய சுப நிகழ்ச்சிகளில் இவர் அந்த சமயத்திலேயே உடனடியாக தக்க பாடல்களை இயற்றி பாடுவது வழக்கமாக இருந்தது. கணவரை இழந்தபின், கமலாக்ஷி அவர்கள் மகன் வ்யாஸகிருஷ்ண மற்றும் மருமகள் பத்மாவதி அவர்களுடன் கார்களத்திற்கு வந்து சேர்ந்தார்.

கமலாக்ஷி அவர்கள் சுமார் 185 பாடல்களை இயற்றியுள்ளார். கணபதி ஸ்துதி, குரு ஸ்துதி, முக்யபிராண ஸ்துதி போன்ற தேவதா ஸ்துதிகள், யுகாதி, ப்ரதம ஏகாதசி, கோகுலாஷ்டமி, தீபாவளி போன்ற விரதங்களைப் பற்றியும் சம்பிரதாயமான பாடல்களை இயற்றியிருக்கிறார். இவை அனைத்தையும் அவரது மருமகளான பத்மாவதிபாய் அவர்கள் 1960ம் ஆண்டில் ஒரு புத்தகமாக வெளியிட்டார். ஆனால் அந்த புத்தக பிரதிகள் தற்போது கிடைக்கவில்லை. ஹரிதாஸினி கமலாக்ஷி அவர்களின் சில கீர்த்தனைகளை இங்கு பார்ப்போம்.

மத்வாசார்யரின் ஸ்துதி
ராக : சக்ரவாக. தாள : ஆதி

மத்வகுரு மத்வகுரு உத்தரிஸுத பொரெ மத்வகுரு ||ப

மோஹினியள மாயாஜாலகெ ஸிலுகுத தீனர
தெரதலி தொளலுவரனு பொரெ ||1

பரிபரி நின்னொளு ஸெரகொட்டி பேடுவெ
ஸர்வர கஷ்டவ பரிஹரிஸுத பொரெ ||2

ஸ்ரீனிவாஸன ஸத த்யானிப தெரதலி
ஸானுராகதி பௌ ப்ரேமதிந்தலி பொரெ ||3

இந்த கீர்த்தனையில், ஹரிதாஸினி கமலாக்ஷம்மா அவர்கள், பல்வேறு விதமாக ஸ்ரீமன் மத்வாசார்யரை போற்றியிருப்பது அருமையாக இருக்கிறது.

ஸ்ரீவ்யாஸபூஜை
ராக : ஸௌராஷ்ட்ர தாளம் : ஆதி

மங்களாரதி சந்ததி பௌகிரெ மங்களாரதி தீப ||ப

நதிய தடதி ஜனிஸி ஹரிய சரண ஸ்மரிஸி
பதரியொளு நிந்த ஸதமல ரூபனிகெ ||1

கந்தர்ப்ப ஜனகன சந்ததி த்யானிஸுத
மந்தஜனர பொரெவ ஸுந்தர ரூபனிகெ ||2

வேதஷாஸ்த்ரகளனு மோததிந்த ரசிஸி
வாதிகளன்னு கெத்த வேதவ்யாஸ முனிகெ ||3

குமத்கள கண்டிஸுத ஸுமதவா போதிஸுத
நிருத ஹரிய சரண பிடதெ த்யானிஸுவகெ ||4

சேஷாசல வாஸ ஸ்ரீ ஸ்ரீனிவாஸன ஸ்மரிஸி
க்லேஷகளனெ களெது போஷிஸுவ முனிகெ ||5

இந்த கீர்த்தனையில், நதிக்கரையில் பிறந்து, ஸ்ரீஹரியை சிந்தித்தவாறு, வேதங்களையும் இயற்றிய ஸ்ரீவேதவ்யாஸரை, கமலாக்ஷம்மா பக்தியுடன் வணங்கியிருக்கிறார்.

ஸுப்ரமண்ய ஸ்துதி
ராக : ரிதிகௌளை தாளம் : ஆதி

பாரோ நீ ஸுப்ரமண்ய ஷரணரனெல்லா பொரெயுவ குணபரிபூர்ண
பரிபரியொளு நின்ன ஸ்மரிஸி ஸேவிஸுவர துரிதகளெல்லவ பரிஹரிஸுவ தொரெ ||ப

ஹுத்ததி ஷோபிஸுத மூலஸ்தானதி உத்ஸாஹவனெ தோருத
அர்த்தியிந்தலி பந்த பக்தர மனத அபீஷ்டவ ஸலிஸுவ உத்தம புருஷனெ ||1

வைபவதொளு மெரெயுத பாலகியொளு பந்து
ரதவனேருத பஜகரெல்லர மன புளகிதகொளிஸுத்த
அகவ களெது ஹரிபதவ தோருவ தீர ||2

குமார நின்னய தயதி ஷரணரெல்ல குமாரதாரெ
யொளு மிந்து ஹருஷதி நின்னனு ஸ்மரிஸி ஸேவெயகெய்வ
ஷரணர துரிதவ களெயுவ நரஹரி ||3

ஷண்முககுஹனெ நின்ன தயதொளெல்லரு ரம்யவாகிஹ
குஹெபொக்கு மாயாந்தகாரதி ஸிலுகி முந்தரிது பஹு
திவ்ய ஜ்யோதிய கண்டு ஹருஷ படுவரய்ய ||4

வாஸுகி ராஜ நீனு ஸ்ரீ ஹரிஹாஸிகெயாகுத்தலீ லேஸாகி
ஹரியன்னு ஸேவிஸுத்தலி பததாஸ்ரயவனு
பேட்வதாஸர பொரெயலு ||5

பரமபுண்ய க்ஷேத்ரதி ஹருஷதிந்த நரஹரியனெ கூடுத

வரயதிகள கூடி பரிபரிஷோபிப |
பரமபுருஷ நின்ன ஷரணெந்து பேடுவெ ||6

ஹருஷதிந்தலி பந்தெனு ஸ்வாமியே நின்ன
தருஷனவனெகொண்டெனு
வரஸ்ரீனிவாஸன ஸ்மரிஸி ஸ்வாமிய பாத
கருணதி நீடெந்து வினயதி பேடுவெ ||7

இந்த கீர்த்தனையில் பல்வேறு பௌராணிக அம்சங்களின் மூலம், ஹரிதாஸினி கமலாக்ஷம்மா ஸுப்ரமண்யனை பாடியிருப்பது மிகவும் அற்புதமாக இருக்கிறது.

வாழ்க்கையில் இன்பத்தைவிட அதிகமான துன்பத்தையே அனுபவித்தவரான கமலாக்ஷம்மா - ஹுட்டிஸித ஸ்வாமி தா ஹொடெகாரனாகிரலு கெட்யாகி ஸலஹுவனு, இதகெ ஸம்ஷயவில்லா - என்று ஸ்ரீகனகதாஸர் பாடியிருப்பதைப் போல, தம் வீட்டு தெய்வமான ஸ்ரீனிவாஸனை நம்பி 'ஸ்ரீனிவாஸ' என்னும் அங்கிதத்தினால் கீர்த்தனைகளை இயற்றி, பாடி, வாழ்ந்து வந்தார். அவர் தம் மனதின் சிந்தனைகளை கீர்த்தனைகளின் மூலம் பாடி, அவற்றை தம் குலதெய்வத்திற்கு சமர்ப்பணம் செய்து, 84 ஆண்டு காலம் ஸார்த்தக வாழ்க்கை வாழ்ந்து, 1980ம் ஆண்டில் ஸ்ரீஹரிபதம் அடைந்தார்.

(அடுத்த இதழில் வேறொரு ஹரிதாஸினியைப் பற்றி பார்ப்போம்).

***

தொடர்

## ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர்

## 4. ஹரிதின இந்த$^2$ ஹரிதின

டாக்டர். ஸுபாஷ் காகண்டகி

வர விப்ர க்ஷத்ரிய வைஷ்ய ஷூத்3ர ஜனரு
தரள யௌவன வ்ருத்3த4 நாரியரு
கிராத புலஸ்த்யாந்த்ர ஹொாண ஜாதியவரு
ஹரிவ்ரத மாத்ரதி முக்தியைது3வரு ||3

எவ்வித ஜாதி பேதங்களும் இல்லாமல் - பிராமண, க்ஷத்ரிய, வைஷ்ய மற்றும் ஷூத்ர மற்றும் சிறுவர்கள், வாலிபர்கள், வயதானவர்கள் என அனைவரும், ஹரிதினத்தன்று சுத்தமான ஆசரணையை செய்ய வேண்டும் - என்கிறார். மேலும் அவர்கள் எந்த ஜாதியினராகவும்

இருக்கட்டும், இந்த ஹரிதினத்தை பின்பற்றுவதால், இதன் மூலம் முக்தியை அடைகின்றனர் என்று ஸ்ரீதாஸர் சொல்வது, அவருடைய ஸமத்வ பாவத்தினை காட்டுகிறது.

மேலும், ஏகாதசியன்று உணவினை உண்டால், அதனால் வரும் பாவங்களின் விவரங்களை மிகவும் விளக்கமாக, ஸ்ரீமதானந்த தீர்த்தர், பல்வேறு வேதங்களை மேற்கோள் காட்டி விளக்கியிருக்கிறார்.

அன்னம் நிவேதயேன்மஹ்யம் ப்ராப்தே மத்வாஸரே ஷுபே |
தஸ்யாபி நரக ப்ராப்தி: கிம் புனர்போஜனே க்ருதே ||211

ஷுபதினமான ஏகாதசியன்று எனக்கு அன்னத்தை சமர்ப்பிப்பவனுக்கு நரகம் கிடைக்கிறது. இதன் மூலம் அன்று உணவு உண்டவனுக்கு நரகம் நிச்சயம் - என்று ஸ்ரீவ்யாஸர் சொல்கிறார்.

ஸபிரம்மஹா ஸ கோக்னஷ்சஸ்தேனஸ்ஸ (ஸ ஸ்தேனோ) குருதல்பக:
ஏகாதஷ்யாம் து புஞ்சான: பக்ஷயோருபயோராபி ||212

கிருஷ்ண சுக்ல பக்ஷங்களில் வரும் ஏகாதசியன்று உணவு உண்பவனுக்கு பிரம்மஹத்யா, திருட்டு, குருபத்னி கமன ஆகிய அனைத்து பாவங்களும் வருகின்றன என்று ஸ்ரீவேதவ்யாஸர் கூறுகிறார்.

வரம் ஸ்வமாத்ருகமம் வரம் கோமாம்ஸ பக்ஷணம் |
வரம் ஹத்யா ஸுராபானமேகாதஷ்யாந்து போஜனம் ||213

கோ பிராமண ஹத்யை, மத்யபான ஆகியவற்றால் வரும் பாவங்களைவிட அதிக பாவம், ஏகாதசியன்று உணவு உண்டால் வருகிறது என்று மிகக் கடுமையான வார்த்தைகளில் ஸ்ரீவேதவ்யாஸர் கூறியிருக்கிறார். அப்படியே ஸ்லோகம் 214-215ல் இவ்வாறு வருகிறது. ஏகாதசியன்று உண்பவர்கள் மிகவும் கீழான மக்கள். அத்தகையவர்களின் முகத்தை பார்த்தால், நமக்கே பாவம் வருகிறது. இந்த பூமியில் பிரம்மஹத்யா முதலான மகா பாவங்களின் அபிமானிகளான அசுரர்கள், ஏகாதசியன்று அன்னத்தில் இருப்பதால், அன்று அன்னாதிகளை உண்டால், அந்த பாவங்கள் நம்மை சேர்கின்றன - என்று சொல்லி, ஏகாதசியின் மகிமையை சொல்கிறார்.

அப்படியே ருக்மாங்க ராஜனைப் பற்றி சொல்லியவாறு: யார் 8 வயதிற்கு மேல், 80 வயதிற்குள் இருப்பவர்கள் ஏகாதசியன்று உணவு உண்கிறார்களோ, அவர்கள் மகா பாபிகள். தந்தை, மக்கள், மனைவி, உறவினர், என யாராவது இருக்கட்டும் ஏகாதசியன்ரு உணவு உண்டால், திருடனுக்கு கிடைக்கும் தண்டனையே அவர்களுக்கு கிடைக்கிறது - என்று சொல்லி, ஏகாதசியின் மகிமையை சொல்கிறார்.

இதன் ஸாரத்தையே, ஸ்ரீதாஸர் 4ம் நுடியில் தம் சிறப்பான வார்த்தைகளில் சொல்கிறார்.

த்3விஜ கோ3வத4 ந்ருபரனு கொந்த3 பாப
நிஜகு3ரு ஸதியர ஸங்க3த3 பாப
அஜலபானத3 தி3னது3ண்ட மஹாபாப
நிஜனாஷ மோக்ஷ ப்ராப்திய ஸத்யலாப4 ||4

பிரம்மஹத்யா, கோ-வதை ஆகிய கெட்ட செயல்களால் வரும் பாவங்கள், ஏகாதசி உபவாசத்தினால் அழிந்து மோட்சம் கிடைக்கிறது என்று ஏகாதசியின் மகிமையை சொல்லி, அனைவரும் இந்த விரதத்தை செய்ய வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர்.

யாமினியலி அனிமிஷத ஜாக3ரவு
ஸ்ரீமத் பா4க3வத ஸ்ரவண கீ3தா பட2ண
ப்ரேமவாரிதி4லி முளகி3 ஸங்கீர்த்தனெயு
தா4மத்ரயத3 ஸுக2கிதே3 காரணவு ||5

இரவு முதல் விடியலில் பிராம்ஹி முஹூர்த்தம் வரை, ஹரிதினத்தில், ஹரி நாமஸ்மரணை செய்தவாறு, ஜாகரணை செய்து, பாகவத ஸ்ரவண, கீதை ஸ்ரவண ஆகியவற்றை செய்தால், மூன்று உலகத்தின் சுக ஸாதனைக்கு காரணம் ஆகிறது - என்கிறார்.

ந காஷி ந கயா கங்கா ந ரேவா ந ச்ஹ கௌதமி |
ந சாபி ஷௌரவம் க்ஷேத்ரம் ஸமா பூப பரேர்த்தினாம் || 204

பவித்ர க்ஷேத்திரங்களான காசி, கயை, கங்கை, நர்மதா, கோதாவரி நதிகளோ, குருக்ஷேத்ரமோ இங்கு வசித்து, ஸ்னான, பானாதி, ஜப தபங்களால் கிடைக்கும் புண்ணியம் ஏகாதசி உபவாஸம் செய்வதால் கிடைக்கிறது.

அர்த்த4கோடி தீர்த்த2ஸ்னானவெல்ல அ
ஜஸ்ரப்ரயாக3 காஷி வாஸவெல்ல ஸ
ஹஸ்ர கோடி பூ4ப்ரத3க்ஷிணெயில்ல
ஸுஸ்ரத்தெ ஸஹ ஜாக3ரகெ ஸரியல்ல ||6

அரை கோடி தீர்த்த ஸ்னானத்தின் பலன், பதரி, ப்ரயாக, காசி முதலான புண்ய க்ஷேத்திரங்களில் வசிப்பதன் பலன், சஹஸ்ரகோடி பூமி பிரதட்சிணை ஆகிய அனைத்தும் ஏகாதசியன்று உபவாசம் செய்து அன்று செய்யும் ஜாகரணைக்கு சமானம் இல்லை.

பஞ்சமஹா பாப ப்ரபாபவவகெ3
வஞ்சக பிஷுன ஜனர பாபவவகெ3
மிஞ்சுவ க்ஷேத்ரத3லி பாபவவகெ3
பஞ்சக வ்ருத பெத்த வ்ருத உல்லங்கி4பகெ3 ||7

ஏகாதசி விரதத்தை செய்யாதவனுக்கு, பஞ்ச மஹா பாதகங்களை செய்த பாவம், மோசம் / வஞ்சனை செய்த பாவம் ஆகியவை வருகின்றன - என்று சொல்லி, ஏகாதசியை விட்டுவிடாதீர்கள் என்கிறார்.

ஸர்ப்பஷயனகெ3 நிராஜனவெத்தி நோடி3
உபவாஸதி3 ப4க3வஜ்ஜன ந்ருத்யவாடி3
சப்பாளிக்குத த3ண்டி3கெ3 முட்டி பாடி3
தப்பெ நாயி நரக ப2ல கைகொடி3 ||8

ஸர்ப்ப ஷயன ஸ்ரீஹரியை, தூப தீபங்களால் பூஜியுங்கள். நிர்ஜல உபவாசத்தினால் அனைத்து பாகவதர்களும் சேர்ந்து ந்ருத்யம் செய்யுங்கள். ஜாகரணை செய்யவும். இவ்வாறு செய்தால், நரகம் தப்பி, செய்த விரதத்தின் பலன் கிடைக்கிறது. ஏகாதசியன்று முழு நாளும் பகவந்தனின் தியானம், கதா ஸ்ரவணம், மனன, ஜப தப ஸங்கீர்த்தனைகளில் மனம் இருக்க வேண்டும் என்கிறார்.

ஸ்ருதி பஞ்சராத்ராக3மவு ஸாருதிவெ
யதி மத்வராயருகுதி பேளுதிவெ
க்ருத ப்ரஸன்ன வெங்கடகிருஷ்ண மதவெ
க்ஷிதிபதி ஸுரரதிஷயத3 ஸத்வ்ரதவெ ||9

ஸ்ருதி, வேத, புராணங்கள், ஆகமங்கள் சொல்கின்றன; யதி மத்வராயரின் கிரந்தங்கள் சொல்கின்றன; கர்துவான ப்ரஸன்ன வெங்கட கிருஷ்ணனின் மதமே, என்பதான இந்த ஸத் விரதமே இந்த ஹரிதினம் என்று சொல்லி இந்த கிருதியை முடிக்கிறார் ஸ்ரீதாஸர்.

இந்த 9 நுடிகளில் தாஸர் சாஸ்திரங்களில் விவரித்த ஏகாதசியின் மகிமையின் அம்சங்களை தொகுத்து, ஹரிதினத்தின் மகிமை மற்றும் அதனால் ஆகும் பலன்களை, சாமான்யருக்கும் நன்றாகப் புரியுமாறு கன்னட நுடிகளில் விவரித்து, எவ்வித ஜாதி பேதங்களும் இன்றி, அனைத்து வர்க்கத்தவர்களும் இந்த விரதத்தின் ஆசரணையை செய்ய வேண்டும் என்கிறார். ஸ்ரீபுரந்தரதாஸர் கூறியதைப் போல, 'மானவ ஜன்ம தொட்டது, இத ஹானி மாடலு பேடி ஹுச்சப்பகளிரா' என்பதை மறுபடி நன்றாக விளக்கியிருக்கிறார் ஸ்ரீபிரஸன்ன வெங்கட தாஸர்.

இத்துடன் இந்த கட்டுரை முடிந்தது. அடுத்த இதழில் ஸ்ரீபிரஸன்ன வெங்கட தாஸரைப் பற்றிய வேறொரு கட்டுரையை பார்க்கலாம்.

(தொடரும்)

***

தொடர்

## ஹரிகதாம்ருதசார மஞ்சரி 360

**By ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர்**

**97. ஆவ க்ஷேத்ரகெ போத3ரேனி**
**ந்னாவ தீர்த்த2தி3 முளுக3லேனி**
**ந்னாவ ஜப தப ஹோம தா3னவ மாடி3 ப2லவேனு |**
**ஸ்ரீவர ஜகன்னாத2விட்டல ஈ**
**வித4தி3 ஸ்தா2வரதி3 ஜங்க3ம**
**ஜீவரொளு பரிபூர்ண நெந்த3ரியதி3ஹ மானவனு ||(11-32)**

மனிதன், பசு, பறவை ஆகிய சராசரங்கள் அனைத்திலும் ஜகன்னாத விட்டலனான பகவந்தன் இருக்கிறான் என்று அறியாமல், அனுஸந்தானம் செய்யாமல், நாம் எந்த தீர்த்த க்ஷேத்திர தரிசனம் செய்தாலும், எந்த தீர்த்த யாத்திரைக்கு சென்றாலும், எவ்வளவு ஜப தபங்களை செய்தாலும், எவ்வளவு தான தர்மங்களை செய்தாலும் அவற்றால் எவ்வித பலனும் இல்லை என்கிறார் ஸ்ரீதாஸர்.

**98. வாஸுதே3வனு ப்ராணமுக2 த**
**த்வேஷரிந்த3லி ஸேவெ கை1கொ1ளு**

**தீ ஷரீரதொ3ளிப்ப மூவத்தாரு ஸாஹஸ்ர |**
**ஈ ஸுனாடிக3ளொளகெ3 ஸ்ரீ பூ4**
**மி ஸமேத விஹாரகை3வ ப**
**ரேஷனமல ஸுமூர்த்திக3ள சிந்திஸுத ஹிக்கு3திரு ||(12-1)**

லட்சுமிபதியான வாசுதேவன் தத்வேஷா் மற்றும் முக்யபிரணனில் அந்தர்யாமியாக இருந்து, நம் இந்த சரீரத்தில் 36,000 நாடிகளில் ஸ்ரீ பூ ஸமேதமாக இருந்து செயல்களை செய்விக்கிறான் என்று அறிந்து அவனை நினைக்க வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர்.

36,000 நாடி (இரவு & இடது). 36,000 நாடி (காலை & வலது). ஆக மொத்தம் 72,000 நாடிகள் உள்ள இந்த சரீரத்தில் ஸ்ரீ பூ துர்கா சமேதனான வாசுதேவன் முக்யபிராணாந்தர்கத மற்றும் தத்வேஷ்வர அந்தர்யாமியாக இருந்து நம் தினப்படி செயல்களை செய்விக்கிறான் என்று அறிய வேண்டும் என்கிறார். நம் மனதில் பட வேண்டும் என்பதற்காக வெவ்வேறு விதமாக இதையே சொல்கிறாரே தவிர, இதில் புனராவ்ருத்தி தோஷங்கள் இல்லை என்று அறிய வேண்டும்.

**99. சரணக3ளொளிஹ நாடிக3ளு ஹ**
**ந்னெரடுஸாவிர மத்3யதே3ஹதொ3**
**ளிருதிஹவு ஹதி3னால்கு பாஹுக3ளொளகெ3 ஈரெரடு |**
**ஷிரதொ3ளாரு ஸஹஸ்ர சிந்திஸி**
**இருளு ஹக3லபி4மானி தி3விஜர**
**நரிதுபாஸனெ கை3வரிளெயொளு ஸ்வர்க்க3வாஸிக3ளு ||(12-2)**

நம் இந்த ப்ராக்ருத சரீரத்தில் நாடிகள் எப்படி அடங்கியிருக்கின்றன என்பதை இந்த பத்யத்தில் விளக்கியிருக்கிறார். சரணத்தில் 12,000. தேகத்தில் 14,000. 2 தோள்களில் 4000; தலையில் 6000 நாடிகள் இருக்கின்றன என்று அறிந்து, பகலுக்கு முக்யபிராணரும், இரவிற்கு பாரதிதேவியரும் இருக்கிறார்கள் என்று உபாசனை செய்து சிந்தித்டால், அத்தகையவர்களுக்கு ஸ்வர்க்க ப்ராப்தி ஆகிறது என்கிறார் ஸ்ரீதாஸர்.

**100. மணிக3ளொளகி3ஹ ஸுத்ரத3ந்த3திv**
**ப்ரணவபாத்3யனு சேதனா சே**
**தன ஜக3த்தினொளனு தி3னதொளாடுவனு சுக2பூர்ண |**
**த3ணிவிகெயு இவகி3ல்ல ப3ஹுகா**

**ருணிகனந்தானந்த ஜீவர**
**க3ணதொ3ளேகாஷம்ஷ ரூபதி3 நிந்து நியமிஸுவ || (12-7)**

கயிற்றால் கட்டப்பட்ட முத்து மாலையை அணிந்தபோது, முகத்திற்கு அழகு கூடுகிறது அல்லவா?. அதைப்போலவே, ப்ரணவ ப்ரதிபாத்யனான ஸ்ரீஹரி, தான் படைத்த அனைத்து சேதனர்களில் இருந்து அவரவர்களின் யோக்யதைக்கேற்ப அவர்களை காத்து, அவரவர்களின் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றி, அங்கங்கு சிதானந்தைக - அதாவது, அணுவிற்கு அணுவாக, மஹத்திற்கு மஹத்தாக இருந்து காப்பாற்றுகிறான். ஆனால், தன் முழுமையாக சக்தி, தன் முழுமையான ரூபத்தை காட்டிக் கொள்ளாமல், எவ்வளவு தேவையோ அவ்வளவே காட்டிக் கொள்கிறான். இதனால் அவனுக்கு எவ்விதமான கஷ்ட நஷ்டங்களும் இல்லை.

**101. ஸூரிக3ளு சித்தைஸுவுது3 பா4**
**கீ3ரதியெ மொத3லாத3 தீர்த்த2க3**
**ளீரதி3க வெப்பத்து ஸாவிர நாடி3யொளகி3ஹவு |**
**ஈ ரஹஸ்யவனல்ப ஜனரிகெ3**
**தோரி பேளதெ3 நாடி3நதி3யொளு**
**தீ4ரரனுதி3ன மஜ்ஜனவ மாடு3தலெ ஸுகி2ஸுவரு ||(12-9)**

இந்த பத்யத்தில் இரு விஷயங்களை சொல்லும் தாஸர், முதலில் ஞானிகள் எப்படி இருக்கிறார்கள் என்றால், இந்த நம் தேகத்தில் இருக்கும் 72,000 நாடிகளை நதிகள் என்று அறிந்து, பகவந்தனுக்கு ஸ்னானம் பிறகு நாம் ஸ்னானம் செய்கிறோம் என்றும், அடுத்து, இந்த 72,000 நாடிகளை பாகிரத்யாதி நதி என்றும் அறிந்து, ஸ்னானம் செய்கிறார்கள் என்றும் சொல்லி, இது ரகசியமான விஷயம் என்பதை அறிந்து சுகமாக இருக்கிறார்கள் என்கிறார். அதாவது, நமக்கு அந்தரங்க சுத்திக்கு சுகம் வேண்டுமென்றால், இப்படியான அனுஸந்தானம் செய்ய வேண்டும் என்று உபதேசம் செய்கிறார்.

**102. துந்தி3விடி3தா3ஷிரத3 பர்ய**
**ந்தொந்தெ3 வ்யாபிஸி இஹுது3 தாவரெ**
**கந்த3னிஹனத3ரொளகெ3 அத3கீரைது3 ஷாகெ2க3ளு |**
**ஒந்த3தி4க தஷகரணக3ளு ஸ**
**ம்ப3ந்த4 கை3தி3ஹவல்லி ரவி சஷி**
**ஸிந்து நாஸத்யாதி3க3ளு நெலெகொண்டி3ஹரு ஸதத ||(12-12)**

நம் தேகத்தில் காலிலிருந்து தலை வரை, வ்யாபித்திருப்பது ஸுஷும்னா நாடி. இங்கு பிரம்மா / வாயுதேவர் வ்யாபித்திருக்கின்றனர், இந்த ஸுஷும்னா நாடிகளுக்கு பல்வேறு கிளைகள் இருக்கின்றன. இவை மொத்த தேகத்திலும் வ்யாபித்திருக்கின்றன. இங்கு சூர்ய சந்திர வருணாதி தேவதைகள், அஷ்வினி தேவதைகளே முதலானவர்கள் இருந்து செயல்களை செய்கின்றனர் என்பதை அறிவாயாக என்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர். அதாவது, கருட சேஷ ருத்ராதிகளுடன், சூர்ய சந்திராதிகளும்கூட அதிதேவதை, ப்ரத்யதிதேவதைகளைப் போல இருந்து, இந்த சரீரத்தை காக்கிறார்கள் என்று அறிவாயாக என்கிறார் ஸ்ரீதாஸர்.

**103. பொக்களடி3விடி3தொந்தெ3 நாடி3யு**
**ஸுக்கத3லெ தா4ராளரூபதி3**
**ஸிக்கிஹுது3 நடு3தே3ஹதொ3ளகெ3 ஸுஷும்ன நாமத3லி |**
**ரக்கசரனொள பொக3கொ3ட3தெ3 த3ஷ**
**தி3க்கினொளகெ3 ஸமீரதே3வனு**
**லெக்கிஸதெ3 மத்தொ3ப்பரனு ஸஞ்சரிப தே3ஹதொ3ளு ||(12-13)**

ஜீவோத்தமத்வ ஞானம் இல்லாமல் 'ஜீவோத்தம' என்று கூவினால் அதனால் எவ்வித பலனும் இல்லை. அப்படியெனில், என்ன செய்ய வேண்டும் என்றால், பகவந்தனின் கர்த்ருத்வத்தை நன்றாக அறிய வேண்டும். அதற்கு இந்த பத்யத்தில் பதில் சொல்கிறார். நம் தேகத்தில் 72,000 நாடிகளுக்கு ஆதார ஸ்தம்பமான ஸுஷும்னா நாடி இருக்கிறது. இது மொத்த தேகத்தையே வ்யாபித்திருக்கிறது. இந்த நாடிகளில் பகவந்தனுடன் பிராணதேவரும் வசிக்கிறார். தேகம் முழுவதும், அனைத்து நாடிகளும், அனைத்து இண்டு இடுக்குகளிலும், இவர் ஒருவருக்கு மட்டுமே நுழைவு. வேறு யாருக்கும் (கலி முதலானவர்களுக்கு) நுழைவு இல்லை. இவ்வாறாக, இவர் ஜீவோத்தமர் என்று அழைத்துக் கொள்கிறார் என்பதை அறிந்து, அவரின் செயல்களை அறியவேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர்.

**104. ஜலட குக்குட கே2ட ஜீவர**
**கலெவரக3ளொளகி3த்து3 காணிஸி**
**கொளதெ3 தத்தத்3ரூப தன்னாமத3லி கரெஸுதலி |**
**ஜலருஹேக்ஷண விவித4 கர்ம**
**ங்க3ள நிரந்தர மாடி3 மாடி3ஸி**

**ப$^{2}$லக$^{3}$ளுண்ணதெ$^{3}$ ஸஞ்சரிஸுவனு நித்யஸுக$^{2}$பூர்ண ||(12-17)**

தண்ணீரில் வசிக்கும், வானில் பறக்கும் ஜீவர்களில், பூமியில் வசிக்கும் ஜீவர்களில் என இந்த அனைத்து பிராணிகளில் அந்தந்த ரூபம், அந்தந்த பெயர்களில், அப்படியே அழைக்கப்பட்டு, அந்தந்த பிராணிகளில் இருந்துகொண்டு என்ன செய்ய வேண்டுமோ, அந்த அனைத்து த்வந்த செயல்களையும் தானே செய்து, அந்த பலன்களை அவர்களுக்கு கொடுத்து, தான் நிர்லிப்தனாக சுகபூர்ணனாக இருப்பதே, ஸர்வோத்தமத்வத்தின் குணம். இதனை நன்றாக அறிந்து, என்னைப் போலவே பிறர்களும் என்பதை அறியவேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர்.

**105. அன்னத$^{3}$ன்னாத$^{3}$ன்னமய ஸ்வய**
**மன்ன பி$^{3}$ரம்மாத்யகி$^{2}$ல சேதன**
**கன்ன கல்பகனாஹன நிருத்தா$^{4}$தி$^{3}$ ரூபத$^{3}$லி |**
**அன்யரன பேக்ஷிஸதெ$^{3}$ கு$^{3}$ணகா**
**ருண்யஸாக$^{3}$ர ஸ்ருஷ்டிஸுவனு ஹி**
**ரண்ய க$^{3}$ர்ப்பனொளித்து$^{3}$ பாலிஸுவனு ஜக$^{3}$த்ரயவ ||(12-24)**

பகவந்தன் தானே ஸ்வதந்த்ரனாக உலகினை நடத்தக் கூடியவனாக இருந்தாலும், சிலருக்கு சில பொறுப்புகளை கொடுத்து, அவர்கள் மூலமாக செய்வித்து, அவர்களுக்கு அந்த பலன்களை கொடுத்து (புகழ் ஆகியவை) தான் நிர்லிப்தனாக இருக்கிறான் என்று அறிவதே ஸர்வோத்தமத்வ ஞானம். இதன்படி, இந்த பத்யத்தில் ஒவ்வொரு ஜீவராஷிக்கும் அன்னம் அவசியம். ஆகையால், பகவந்தன் ஜீவிகளின் ஸ்ருஷ்டிக்கு முன்பு முதலில் அந்தந்த அன்னமய ஸ்ருஷ்டி செய்து பிறகு ஜீவகோடிகளை படைக்கிறான். இதுவே அவனது விதி. அதைப் போல, அந்தந்த பிராணிகளுக்குத் தேவையான ஆகாரங்களை கொடுப்பவன் ஆகையால், பகவந்தனே அன்ன. அவனே அன்னாத.

அன்னாத என்றால் ஹோம, யாகங்களில், நைவேத்யங்களில் அர்ப்பிக்கப்படும் அன்னம், பழங்கள். அங்கு அக்னி அந்தர்யாமி. அவனே அவற்றை ஏற்றுக் கொள்வதால் அவன் அன்னாத. அங்கு அனிருத்தாதி ரூபத்தினால் முக்யபிராணனின் மூலம் மொத்த உலகத்தையும் காக்கிறான் என்பதை அறிவாயாக என்கிறார் ஸ்ரீதாஸர்.

அனிருத்த ரூபத்தினால் படைக்கிறான். விஷ்ணு ரூபத்தினால் காக்கிறான். ஸங்கர்ஷண ரூபத்தினால் அன்ன ஷப்த வாச்யனாக இருந்து அவனே அன்னமய ஆகிறான். இந்த ஸந்தியில் சுமார் 25க்கும் அதிகமான

பத்யங்கள் இதே விஷயத்தை வெவ்வேறு விதமாக சொல்வதற்கு தாஸர் முயல்கிறார். (தொடரும்)

தொடர்

## ஹரிதாஸர்களின் சிந்தனைத் துளிகள்

## மன்னித்து காப்பாற்று

மனிதனின் வாழ்க்கையில் பலமுறை தான் செய்வது சரியா தவறா என்ற குழப்பத்தில் மூழ்குகிறான். இப்படியிருக்கையில் முந்தைய பிறவியின் நினைவுகள் சாத்தியமா? இதற்கெல்லாம் காரணம், ஜீவனின் அனந்தகால தோஷங்கள் நிறைந்த செயல்களே. இதற்கும் மூலகாரணம் ஸ்ரீஹரியை மறந்தது. அவனின் மகிமைகளை அறியாதது. 'ஆதத்தாயித்து இன்னாதரு ஒள்ளே புத்திகலியோ பிராணி' என்றதுபோல ஸ்ரீஹரியிடம் தன்னை அர்ப்பித்துக்கொண்டு இந்த சம்சார சாகரத்தை தாண்டுவதற்கு முயற்சி செய் என்றார் தாசர். ஸ்ரீஹரியிடம் அர்ப்பித்துக் கொள்ளும் வழியை தெரிவித்தார். இது ஆத்ம நிவேதனமே ஆகிறது.

அனந்த காலதல்லி நின்ன நானரியதெ பவகளல்லி பந்தேனோ
அனந்த காலதல்லி நின்னவனெனிஸதெ மூருகனாதேனோ
அனந்த காலதல்லி நின்ன சரண ரதியில்லதெ நொந்தேனோ
அனந்த காலதல்லி ஆதாவ புண்யதிந்த பந்து இந்து
நின்னவனெனிஸிதெ அதாவ புண்யரிந்தலென்ன மன
நின்னல்லெரகிதோ நோயதந்தெ
என்ன பொரெது பாலிஸோ தீனனாத ஸ்ரீரங்கவிட்டலா ||
-- ஸ்ரீஸ்ரீபாதராஜர்

இதுவே அனைவரின் வேண்டுதல் ஆகவேண்டும். ஜீவன் எப்படி அனாதியோ அப்படியே ஜீவனின் பந்தங்களும் அனாதியே. ஜீவன் நித்யம் ஆனாலும், இந்த சம்சாரத்திற்கு முக்தி என்பது இருக்கிறது. சுகதுக்கங்கள் நிறைந்த இந்த சம்சார சாகரத்திலிருந்து தப்பிப்பதே உண்மையான மகிழ்ச்சி. 'முக்திதஸ்து ஜனார்த்தன:' என்றது போல அவனே ஜீவனை ஏற்றுக்கொள்ள வேண்டும். அதற்கே ஸ்ரீஹரியிடம் நம் அனைத்தையும் சமர்ப்பிக்கவேண்டும்.

நான் தோஷி உன் தாசன் என்பதுடன், நீ நிர்தோஷன் மற்றும் கருணாமயி ஈசன் என்று சொல்லி, இந்த உகாபோகத்தில் ராஜர் நமக்கு சொல்லித் தருகிறார். இப்படியெல்லாம் சொல்லி, பிறகு இறுதியில் , என்னை காப்பாற்றி அருள்வாயாக தீனநாதனே என்று வேண்டும் வழியை சொல்கிறார்.

ஸ்ரீஹரியிடம் வேண்டிக்கொள்ளும் வழியை தெரியப்படுத்துகிறார். 'அன்யதா சரணம் நாஸ்தி த்வமேவ சரணம் மம' என்று வேண்டுவதே, 'நான் உன் ஆதினத்தில்' என்று சொல்வதாக இருக்கிறது.

ஒரு இடத்தில் கனகதாசர் 'ஸ்வாமி நின்ன தாசர தாசர தாசர தாசய்யா நானு' என்று ஸ்ரீஹரியிடம் வேண்டிக்கொள்கிறார். மேலும்:

கோவிந்த சலஹென்ன குமுதலோசன நின்ன
சேவகரடிய சேவகனய்ய கோவிந்தா ||

என்று கோவிந்தனிடம் வேண்டுகிறார். தாசரின் முக்கிய நோக்கம், தான் செய்த தவறுகளை ஸ்ரீஹரியிடம் சமர்ப்பித்து, நல்வழியில் செல்வதற்கு வேதங்கள் புகழக்கூடிய கோவிந்தனை வேண்டுகிறார். கூடவே நம்மில் இருக்கும் தோஷங்களை ஸ்ரீஹரியிடம் ஒப்பிப்பது இப்படியாக இருக்கிறது.

மனவென்ன மாத கேளது காணோ கோவிந்த
மனவ கெல்லுவ பகெ எனகில்ல கோவிந்த
பினுகு புத்திகளன்னு பிடிசய்யா கோவிந்தா
நெனஹு நின்னளகிட்டு சலஹய்யா கோவிந்தா
துர்விஷய வாசனெய பிடிஸோ கோவிந்தா
குத்ஸித கெட்டதனவ பிடிஸோ கோவிந்தா
சதா நின்ன கன ஸ்மரணெய கொடோ கோவிந்தா
-- ஸ்ரீகனகதாசர்

இப்படி தோஷியான என்னை நிர்தோஷியான கோவிந்தன் காப்பாற்றட்டும் என்று முறையிடுகிறார். மனது தூய்மையாகாத வரை, உடல் தூய்மையாகாது. இதில் இஷ்டார்த்தங்கள் எப்படி கிடைக்கும்? அனைத்திற்கும் மூலகாரணமான ஸ்ரீஹரியின் நாமஸ்மரணை எப்போதும் இருக்கட்டும் என்று கேட்கிறார்.

பரமாத்மனு நீனு பாமரனு நானு
அணுரேணு த்ருணகளல்லி பரிபூர்ண நீனு
க்ஷண க்ஷணக்கெ அவகுண குகர்மி நானு
ஸ்மரிஸி நின்னய நாம பதுகுவவ நானு ||

ஈச ஜீவரின் வேறுபாட்டினை தெளிவுபடுத்திய தாசர், ஸ்ரீஹரியை நினைத்து வாழ்வது ஒன்றே சத்கதிக்கு வழி என்று சொல்லி விளக்குகிறார். ஸ்ரீஹரியிடம் நிவேதித்துக் கொள்வதை 'ஆத்ம நிவேதனம்' என்கின்றனர். நவ வித பக்திகளில் இதுவும் ஒன்றானது.

***

**(10ம் பக்கத்தின் தொடர்ச்சி)**

அரச மரத்தில் ஏராளமான மூலிகைகள் இருக்கின்றன. ஆகையால் அவற்றை பாதுகாத்து காப்பாற்றி வாருங்கள் என்று பழைய காலத்தில் சொல்லியிருந்தால், எவ்வளவு பேர் அதை கவனமாக செய்திருப்பார்களோ? ஆனால், அந்த அரச மரத்தில் தேவதைகள் இருக்கின்றனர் என்றெல்லாம் சொல்லி, அதற்கு ஒரு தார்மிக சிந்தனையைக் கொடுத்திருப்பதாலேயே பல்வேறு ஆண்டுகளாக அரச மரத்துப் பூஜைகள் நடந்து கொண்டு வருகின்றன. எப்படியாவது செய்து இவற்றை காப்பற்று விடவேண்டும் என்கிற எண்ணமே நம் பண்டைய மக்கள் இப்படி செய்திருக்கின்றனர். அவர்களின் சிந்தனை, யோசனை ஆகியவற்றின் பலன்களை காலமே சொல்கிறது.

ஹரிதாசர்கள் தமது கீர்த்தனைகள், பத, தத்வசுவ்வாலி, சுளாதி, உகாபோகம், முண்டிகெ ஆகியவற்றின் மூலமாக இத்தகைய தார்மிக பழக்கவழக்கங்களை தொடர்ந்து சொல்லிக் கொண்டு வந்திருக்கின்றனர்.

பரம சம்பிரமதிந்த அரளிய மர கடிஸி கொடிஸி பாகிலமாடிதெ.. என்று ஜகன்னாததாசர் பாடி வருத்தப்பட்டிருக்கிறார். இதனால் தம் காலத்தில் சுற்றுப்புற சூழலைப் பற்றி கவலைப்பட்டிருக்கிறார் என்று தெரிய வருகிறது. அவரது இந்த பாடலை, இன்றைய சூழ்நிலையில் இன்னும் பாடி பரப்புவதற்கு நிறைய சந்தர்ப்பம் உண்டு. ஏரியைச் சுற்றிய வாழ்க்கை: (தொடரும்)

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

### 31. நைவேத்ய ப்ரகரண ஸந்தி விடைகள்

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1அ | 27 ந | 28 ஸ | ன | | 2 ஸு | த | னு | | 29 இ | | 30 பெ | கு | |
| ன் | கு | ர | ஸ | | தை | | து | ளு | ந் | 20 | ரு | டு | |
| ன | ல | ஸ் | 34 ஸா | 3 போ | ஜ | ன | பா | த் | தி | ர | ங் | 35 க | ள் |
| ம் | | வ | | | 4 ஸ | ன | த் | கு | ர | மா | கா | | |
| | | தி | ரா | ளா | 5 க | ரு | ட | ன் | ன் | 6 பா | ய | 31 ச | ம் |
| 7 ம | ண் | டி | கை | 8 உ | ப் | 9 பு | ஷ் | க | ர | ன் | ம் | மை | |
| ன் | த | 21 பு | | பே | | | | 10 ரு | த் | ர | ன் | ய | |
| ம | | 11 வ | ஸ | ந் | த | ன் | 12 ல | க்ஷ் | 36 மி | | | ல் | 22 பா |
| 13 த | யி | ர் | 14 ர | தி | தே | வி | ட | ன் | த | ந் | ன | 23 அ | கீ |
| ன் | | 15 ப | ழ | ர | ஸ | ங் | க | ள் | | | | டு | ர |
| 16 கோ | 32 வி | ந் | த | ன் | | 33 நா | ர | ப | ஸ் | ஹ | ர | ப் | 24 தி |
| 17 வை | ரா | ஜ | | ய | ஞ் | ரா | 25 ப் | பி | ரு | ஷ | ரு | 26 பு | |
| 18 ச | ட் | னி | | 19 மு | க் | ய | ப் | ரா | ண | ன் | | | |

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே
மலர் 4 : இதழ் 4

| நிர்வாக ஆசிரியர் | துணை ஆசிரியர் |
|---|---|
| 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்<br>ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,<br>380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase, பெங்களூரு 560078<br>Ph.: 89044-58276.<br>haridasa.vijayam@gmail.com<br>jagannathakesava.blogspot.com | 'தாச சாகித்ய சேவா ரத்ன'<br>திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்<br><br>**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**<br>திரு. முரளிதர தாசரு,<br>திருமதி. நிர்மலா நரசிம்மன்,<br>திரு. லட்சுமிபதிராஜா,<br>திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ் |

## ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்

**மார்ச் 1 முதல் 31 வரை, 2023**

மார்ச் 10 - பால்குண பகுள த்ருதீயா – ஸ்ரீவாதிராஜர், ஸோதெ
மார்ச் 11 - பால்குண பகுள சதுர்த்தி - ஸ்ரீவ்யாஸராஜர், ஹம்பி
மார்ச் 30 - சைத்ர சுத்த நவமி - ஸ்ரீதந்தெமுத்து மோகன தாஸர், தேவராயனதுர்கா

# ஆசிரியர் பக்கம்

ஹரிதாச விஜயம் முதல் இதழிலிருந்தே தொடர்ந்து வந்த ‘கேசவ நாமா’ தொடர் இந்த இதழுடன் முடிவடைகிறது. ஹரிகதாம்ருத ஸாரம் குறுக்கெழுத்துப் போட்டி சென்ற இதழில் முடிவடைந்தது என்பதையும் பார்த்தோம். இந்த பக்கங்களில் மேலும் புதிய தொடர்கள் வரவிருக்கின்றன. பத்திரிக்கையை தொடர்ந்து படித்து, உங்கள் குடும்ப, நண்ப, க்ரூப்களில் இதைப் பற்றி பகிர்ந்து கொள்ளவும்.

ஹரிதாச சாகித்ய ப்ரவர்த்தகர்கள் (உருவாக்கி வளர்த்தெடுத்தவர்கள்) என்று கூறப்படும் ஸ்ரீவ்யாஸராஜர் மற்றும் ஸ்ரீவாதிராஜர் - இருவரின் ஆராதனையும் இந்த மாதம் வருகிறது. அவர்கள் துவக்கி வைத்த பரம்பரையானது, இன்று வரை தொடர்ந்து வந்து, மத்வ சித்தாந்த கருத்துகளை மிகவும் எளிதான வகையில், பத, பத்ய, ஸுளாதி போன்ற வகைகளில் - மக்களிடம் சென்று சேர்ந்து, பக்தி மார்க்கத்தை மிகச் சிறப்பாக வளர்த்திருக்கிறது என்பதையும் பார்க்கிறோம். ஆகவே, இதற்கு காரணமான இந்த யதி த்வயர்களின் ஆராதனை நாட்களில் அவர்களைப் பற்றி, அவர்களின் கிருதிகளைப் பற்றி மேலும் அறிந்து, அவர்களை வணங்குவோமாக.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்**

**பிப்ரவரி 2022 இதழில் வந்த குறுக்கெழுத்துப் போட்டியில் சரியான விடை எழுதி புத்தகப் பரிசு பெறுபவர்கள்:..**

திருமதி. ஷாந்தி பத்மனாபன், திருநெல்வேலி; திருமதி. உஷா ரகோத்தமன், பெங்களூரு; திருமதி. லலிதா, திருநெல்வேலி; திருமதி. கீதா ராமசந்திரன், திருநெல்வேலி, திருமதி. கிரிஜா ஜயதீர்த்தாச்சார், ஸ்ரீரங்கம், திருமதி. பிரேமா குருராஜன், பொள்ளாச்சி.

தொடர்

**கேசவ நாமா**

## 48. ஹனுமத் விலாஸ

ஸ்ரீராமனே சாட்சாத் பரமாத்மன் என்று அறிந்த ஞானி அனுமந்தன். ஸ்ரீராமசந்திரனை கேசவாதி 24 ரூபங்களால் ஸ்தோத்திரம் செய்த நிகழ்ச்சியை ‘காத்ரி ந்ருஸிம்ஹ’ அங்கிதத்தைப் பெற்றவரான திப்பணார்ய கவி, ஸ்ரீஹனுமத் விலாஸத்தில் ‘ரகளெ’ என்னும் வகையில் இயற்றியிருக்கிறார். பக்தி சாகித்யம் நிரம்பிய யக்ஷகான கிருதி இது.

இரு வரிகள் கொண்ட இந்த ரகளை வகையில், எதுகை, மோனை மற்றும் வரிகளின் இறுதியில் ’ஜய ஜய’ என்னும் சொற்களை காணமுடியும்.

ஸ்ரீமத் ரகு4குல நாமக ஜய ஜய
காமித ஷுப4ப2லதா3யக ஜய ஜய||ப

பரமாத்மா ஹரி கேஷவ ஜய ஜய
பரிஹரிஸை ப4வ க்லேஷவ ஜய ஜய ||1
கருணாகர நாராயண ஜய ஜய
வரத நிக3ம பாராயண ஜய ஜய ||2

ப4க்தஜனப்ரிய மாத4வ ஜய ஜய
முக்த ஜனாஸ்ரய பூ4த4வ ஜய ஜய ||3
மன்மத2பித கோவிந்தனெ ஜய ஜய
சின்மய ரூபானந்த3னே ஜய ஜய ||4

விஷ்வாதீஷ்வர விஷ்ணுவெ ஜய ஜய
விஷ்வாவன வர்த்தி4ஷ்ணுவெ ஜய ஜய ||5
சுஜனஸ்துத மது4சூதன ஜய ஜய
த்ரிஜகத்பதி சுரமோத3ன ஜய ஜய ||6

விதி4ப4வ வந்த்ய த்ரிவிக்ரம ஜய ஜய
அதி4க பு4ஜப3ல பராக்ரம ஜய ஜய ||7
வனஜத3ளாம்ப3க வாமன ஜய ஜய

வன நிதிதல்பக நாமனே ஜய ஜய ||8

ஸ்ரீ நாமக சுஸ்ரீதர ஜய ஜய
பூ$^{4}$நாயக சுரபூ$^{4}$த$^{4}$ர ஜய ஜய ||9
இந்து$^{3}$முக$^{2}$னெ ஹ்ருஷிகேஷனெ ஜய ஜய
குந்தரத$^{3}$ன ஜகதீ$^{3}$ஷனெ ஜய ஜய ||10

நக$^{3}$த$^{4}$ரனே பத்பனாப$^{4}$னே ஜய ஜய
சுகுணனெ தோ$^{3}$ர்வத$^{3}$ளாப$^{4}$னெ ஜய ஜய ||11
முனிஜனனுத தாமோதர ஜய ஜய
வினமிதப$^{4}$வ்ய சஹோத$^{3}$ர ஜய ஜய ||12

ஸவனாவன சங்கர்ஷண ஜய ஜய
கவிஜன சிந்தா$^{1}$க$^{1}$ர்ஷண ஜய ஜய ||13
வாசுதேவ பரமேஷ்வர ஜய ஜய
வாசுகி ஷயனனெ ஸ்ரீஷ்வர ஜய ஜய ||14

பாலிஸு என்ன ப்ரத்யும்னனெ ஜய ஜய
பாலிஸி திந்த்ரத்யும்னன ஜய ஜய ||15
சகலாத்மக அனிருத்தனெ ஜய ஜய
ப$^{4}$குதர பாபனிருத்தனெ ஜய ஜய ||16

பக்ஷிகமன புருஷோத்தம ஜய ஜய
ரக்ஷிஸு ஹரிசர்வோத்தம ஜய ஜய ||17
வனஜோத$^{3}$ரனெ அதோ$^{4}$க்ஷஜ ஜய ஜய
அனக$^{4}$னெ ஸுரரிபு சிக்ஷனெ ஜய ஜய ||18

கருணிஸு லக்ஷ்மி ந்ருசிம்ஹனெ ஜய ஜய
ஷரணு பராகு$^{1}$ ந்ருசிம்ஹனெ ஜய ஜய ||19
பாலிஸு பி$^{3}$ன்னப$^{1}$வச்யுத ஜய ஜய
பாலிபுதெம்மனு மெச்சுத ஜய ஜய ||20

மொரெய ஹொக்கெனு ஜனார்த்தன ஜய ஜய
மரெயதெ$^{3}$ பொரெ முரமர்த்த$^{3}$ன ஜய ஜய ||21
பண்ணிஸலரியேனு பேந்திரனே ஜய ஜய
சிண்ணனு நா கு$^{3}$ணஸாந்த்ரனெ ஜய ஜய ||22

தந்தெ தாயி நீனே ஹரி ஜய ஜய
ப$^{3}$ந்து$^{4}$ப$^{3}$ளக$^{3}$ நீனே ஜய ஜய ||23

நம்பிதெ பொரெயை கிருஷ்ணனெ ஜய ஜய
பெ3ம்பி3ட3பே3டா3 சுகிருஷ்ணனே ஜய ஜய ||24

மங்களமஹிம ரகூ4த்வஹ ஜய ஜய
மங்கள க2க3பதிவாஹன ஜய ஜய ||25
மங்கள ஜலத3 ஸமாங்க3னெ ஜய ஜய
மங்கள கா2த்ரி3 ந்ருசிம்க3னெ ஜய ஜய ||26

இந்து1 சதுர்விம்ஷதி நாமக3ளிந்த3லு
ஸந்தஸதி3ந்த3லி ஹனுமந்த ப4க்தியொளு ||27
ராமன து1தி1ஸித ஈ ஜய ரகளெய
ப்ரேமதி பேளித கேளிதவர த3ய ||28

தி3ந்த3லி மரெயதெ3 மாருதனணுகனு
சந்த3தி3 பரமானந்த3தி3 பொரெவனு ||29
இந்த பத்யத்தில்:

கேசவ - க்லேஷவ
நாராயண - பாராயண
பக்தஜன - முக்தஜன
மாத4வ - பூ4த4வ
சூத3ன - மோத3ன
ஸ்ரீநாமக - பூ4நாமக
ஸ்ரீத4ர - பூ4த4ர
சங்கர்ஷண - ஆகர்ஷண
புருஷோத்தமனு - சர்வோத்தமனு
அச்யுத - மெச்சுத
ஹரி - ஸரி
கிருஷ்ண - கிருஷ்ட

என்னும் சந்த சொற்கள் நிரம்பியுள்ளன.
கருணாகர, பக்தஜனப்ரிய, முக்தஜனாஸ்ரய, மன்மதபித, சின்மயரூப, ஸுஜனஸ்துத, த்ரிஜத்பதி, வனநிதி தல்பக (ஷரதிசயன), சுகுண, முனிஜன நுத, ஸகலாத்மக என்று பல்வேறு பெயர்களில் ஸ்ரீராமசந்திரனை துதித்திருக்கிறார். பிறப்பு இறப்பு சுழற்சியை பரிகரிப்பவனே கேசவன். வேதங்களால் மட்டுமே நாராயணனை

அறிவது சாத்தியம். மன்மத பிதனான கோவிந்தனே விஷ்ணுவாக இருக்கிறான். த்ரிவிக்ரமனின் மிகச்சிறந்த தோள் வலிமைக்கு ஜயஜய என்றவாறு கேசவாதி நாமங்களுக்கு 108 முறை ஜயகாரம் செய்திருக்கிறார் தாசர்.

ஸ்ரீராமனை துதிக்கும் இந்த 'ஜய ரகளெ'யை பக்தியுடன் சொல்பவர்களுக்கு, கேட்பவர்களுக்கு, ஹனுமந்தன் அருள் புரிவான் என்கிறார் தாசர். அனைத்து ஜீவர்களையும் ஸ்ருஷ்டித்து காப்பாற்றுபவனுக்கு ஜயஜய. முக்யபிராணனால் வணங்கப்படுபவனுக்கு ஜய. ஈஷ - தாஸ சம்பந்தத்தினால் 'ஜய ஜய' என்னும் மங்கள ஸ்துதியாக இது இருக்கிறது.

**இந்த பகுதியுடன் கேசவ நாமா தொடர் முடிவடைந்தது.**

***

**தற்போது நமது Blogல் தினம் ஒரு பத்யமாக வந்து கொண்டிருப்பது : https://dasa-sahitya.blogspot.com/**

* ஸ்ரீப்ரஸன்ன ஸ்ரீனிவாஸ தாஸர் இயற்றிய - விஷ்ணு சஹஸ்ரநாம பாஷ்ய - கன்னட பத்யங்கள். இதன் அர்த்த விளக்கங்கள் - தமிழில்.
* 1000 நாமங்களுக்கு, (4 வரிகளைக் கொண்ட) 1000 கன்னட பத்யங்களை பாஷ்ய ரூபமாக இயற்றிக் கொடுத்திருக்கிறார் தாஸர்.
* தினமும் 3 பத்யங்களின், தமிழ் விளக்கங்களை நமது மேற்கண்ட blogல் படிக்கலாம்.

**YouTube Channel - Jagannatha Kesava**

* மேற்கண்ட நமது யூட்யூப் சேனலில் தற்போது வந்துகொண்டிருக்கும் தொடர் – ஸ்ரீமதி கிருஷ்ணாபாய் என்பவர் இயற்றிய 153 பத்யங்களைக் கொண்ட தீர்க்க கிருதி – மைஸூரு ஸ்ரீஸுப்பராய தாஸரின் சரித்திரம் (ஸ்ரீகோபால ஒடெயரு – பிடி ஸன்யாஸி) – தமிழ் அர்த்த விளக்கங்களுடன்.
* நமது சேனலுக்கு சப்ஸ்க்ரைப் செய்து, ஏற்கனவே உள்ள + வரவிருக்கும் தொடர்களையும், அனைவரும் கேட்டு, நம் ஹரிதாஸ ஸாகித்யத்தின் சிறப்பினை அறிய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

### சுற்றுச்சூழல் பாதுகாப்பு

**ஸ்ரீனிவாஸ சிரனூர்கர்**

அரச மரத்தை அழித்தால் ஆகும் சுற்றுப்புற சூழலைப் போலவே, நீர் நிலைகளின் மேல் மனிதன் செய்யும் அராஜக ஆக்ரமிப்புகளால் உண்டாகும் கேடுகளை ஜகன்னாததாசர் இந்த பாடலின் மூலம் பாடியிருக்கிறார்.

கெரெபாவி தேவாலயவ கெடிஸி திவ்ய
ஹிரிதாகி மனெ கட்டிதெ

என்னும் வரிகளில் நீர்நிலைகளை பாதுகாக்க வேண்டும் என்னும் அவரது சிந்தனை தெரியவருகிறது.

ஒருமுறை நாரதர், யுதிஷ்டிரனைப் பார்க்க வந்தபோது, பரஸ்பர உபசாரங்களுக்குப் பிறகு, அவர் கேட்ட முதல் கேள்வி இதுவே. 'உன் அரசாட்சியில், நீர் நிலைகளில் தண்ணீர் நிரம்பியிருக்கின்றனவா? மக்கள் நிம்மதியுடன் வாழ்ந்து கொண்டிருக்கின்றனரா?'

இதிலிருந்து மிகப் பழங்காலத்திலும் ஏரியின் முக்கியத்துவம் எப்படி இருந்தது என்று தெரிய வருகிறது. ஏரிக்கும், கிராமத்து வாழ்க்கைக்கும் நேரடியான தவிர்க்க முடியாத சம்பந்தம் உண்டு. உண்மையாக சொல்லப்போனால், கிராமத்து வாழ்க்கை, ஏரியைச் சுற்றியே இருந்தது. அந்த கிராமத்தின் செல்வ, தார்மிக, ஆன்மிக, பண்பாட்டின் அடையாளமாக அங்கிருந்த ஏரி இருந்தது. கிராமத்து மக்கள் தங்களின் தினப்படி தேவைக்காக சார்ந்திருக்கும் நீர்நிலை என்றால் அது ஏரியே. ஏரியானது நிறைந்திருப்பதைக் காணும்போது உண்டாகும் மகிழ்ச்சியானது, வேறு எந்த விஷயத்தையும் விட மேலானது என்றால் மிகையல்ல. அப்போது சுமங்கலியர், ஏரிக்கு முறதபாயண (முறத்தால் வெற்றிலை பாக்கு தாம்பூலம் கொடுப்பது) கொடுக்கின்றனர். ஏரியில் சாட்சாத் பாகிரதி தேவியையே பார்க்கின்றனர். தெப்ப உற்சவம், லட்ச தீபோத்ஸவ ஆகிய விழாக்களை எடுக்கின்றனர்.

ஏரி நிரம்பி அதில் நீர் இருக்கும் வரைக்கும், மக்களின் நிம்மதிக்கு, மகிழ்ச்சிக்கு, ஆரவாரத்திற்கு எந்தவித தடையும் இல்லை. ஒருவேளை ஏரி வறண்டு போனால் இந்த நிம்மதியும் தொலைந்து போய்விடுகிறது. மக்கள், பறவை முதலான உயிரினங்களுக்கு குடிநீர் பிரச்னை. சுற்றிலும் உள்ள நிலங்களும் காய்ந்து போகின்றன. இதனால், உணவுப் பஞ்சம் கூட ஏற்படலாம். வறட்சி நிலவும்படியான சந்தர்ப்பம் வந்துவிடும். மக்களாவது சிறிது தூரம் நடந்தோ, மாட்டு வண்டியிலோ போய் குடிநீர்த் தேவைகளை பூர்த்தி செய்துகொள்ளலாம். விலங்குகள் பிழைப்பது எப்படி? பசு முதலான விலங்குகளுக்கு நீர்த் தேவையை பூர்த்தி செய்வது எப்படி? இதன் விளைவு பண்ணைப் பொருட்களின் உற்பத்தி குறைந்துவிடும். இதன் விளைவு கிராம வேலைவாய்ப்பு, வாழ்க்கை இவை அனைத்துமே பாதிப்படையும் சூழ்நிலை.

ஒரு ஏரி வாழ்வதால் என்னவெல்லாம் பயன் இருக்கிறது என்றும், ஒரு ஏரி அழிவதால் என்ன பிரச்னைகள் வரலாம் என்பதையும் பார்த்தோம். இதையே ஸ்ரீபுரந்தரதாசர் தமது ஒரு கிருதியில் மிகவும் அழகாக சொல்லியிருக்கிறார்.

கெரெய நீரனு கெரெகெ செல்லி
வரவ படெதவரந்தெ காணிரோ

ஏரி என்பது கிராமத்தினருக்கு இறைவன் கொடுத்த வரம். ஏரியைக் கட்டுவது, அதை பாதுகாப்பது, ஆகியன அந்தக் கால அரசாட்சியின் முக்கிய வேலையாகும். இதற்காக அந்தக் கால அரசர்கள் மானியங்களை வழங்கி வந்தனர். கன்னட வழியில், நரபலி கொடுத்தாவது ஏரியைக் கட்டுவது என்பது மிகவும் விசேஷமான செயலாக இருந்து வந்தது.

குழந்தையை கொஞ்சும்போது ‘கெரெயம் கட்டிஸு, பாவியம் தோடிஸு’ (ஏரியைக் கட்டு, கிணற்றைத் தோண்டு) என்று கொஞ்சுவது அன்றைய கன்னட மக்களின் வழக்கமாக இருந்தது. இதை கவி ஆண்டைய்யா மிகவும் அழகாக வர்ணிக்கிறார்.

பலவும் நாலகெயுள்ளவம் பகெவுண்டெந்தும் பண்ணிசல்காரனா
நெலனம் மத்தின மானிசர் பொகளலேனம் பல்லரேம்போந்து ப
ல்லுலியம் நெட்டனெதாள்ளு கன்னட மெனிப்பா நாடு செல்வாயுத்தா
மெ

ல்லலரிம் பொர்கொளங்களிம் கெரெகளிம் காலுர்களிம் கெய்களிம்

மெதுவாக வீசும் காற்றைக் கொண்ட நிலம், குளங்களில் ஏரிகளில் மலர்ந்த தாமரை மலர்கள், தும்பி மொய்க்கும் பூக்கள், பச்சைப் பசேலென்ற நிலங்கள் இவற்றைப் பார்க்கும் கண்களுக்கு மிகவும் மகிழ்ச்சி. இத்தகைய சூழ்நிலையை வர்ணிப்பதற்கு ஆயிரம் பாக்கள் பாடினாலும் போதுமா? போதாது.

கவி ஆண்டைய்யனின் காலம் சுமார் 1225 அதாவது 13ம் நூற்றாண்டில் குளம், ஏரிகளால் நிறைந்த பகுதியாக இருந்தது கர்னாடகா பகுதி. ஏரியின் பயன்களைப் பற்றி தனியாக சொல்லவேண்டியதில்லை. சில அறிஞர்களின் வாக்கின்படி, நீர் நிறைந்த ஒரு ஏரியின் சுற்றுப்புறங்களில் சுமார் 200 வகையான மூலிகைச் செடிகள் வளருமாம். அவற்றை யாரும் வளர்க்கவேண்டியதில்லை. அந்த ஏரியே அவற்றிற்கு காரணம். அவற்றில் ஆயுர்வேதத்திற்கு பயன்படும் மூலிகைகளும் பல இருக்கும். அதாவது, நீர் நிரம்பிய ஏரி, மக்களின் ஆரோக்கியத்திற்கும் காரணமாக இருக்கிறது. மேலும், நீரில் வாழும் பிராணிகளுக்கும் உதவியாக இருந்து, அதை நம்பி வாழும் மீனவர்களுக்கும் பேருதவியாக இருக்கிறது.

கிராமத்து வாழ்க்கையில் கிணறும் ஒரு தவிர்க்கமுடியாத அங்கமாக இருக்கிறது. நம் ப்ழைய தர்மங்களில், கிணறுகளை மூடுவேண்டும் என்று சொல்லவில்லை. ஒருவர் நிலத்தை விற்றுவிட்டபிறகும், அதில் இருந்த கிணற்று நீரினை மட்டும் பயன்படுத்திக் கொள்ளலாம் என்றும் வழக்கம் இருந்தது.

கிணற்றின் அவசியத்தை புரந்தரதாசர் தமது 'யாரிகெ யாருண்டு எரவின சம்சார' என்னும் பாடலில் பாடியுள்ளார். அந்த கிணற்றை பிரதிமா ருபத்தில் வர்ணித்துப் பாடியுள்ளார்.

யாரிகெ யாருண்டு எரவின சம்சார
நீர மேலணகுள்ளெ நிஜவல்ல ஹரியெ
பாயாரிது எந்து ஜாவி நீரிகெ போவே
பாவிலி ஜல பத்தி பரிதாய்து ஹரியே

முன்பு ஒரு காலத்தில் அரசர்கள் கட்டிய ஏரிகளே இன்றும் இருக்கின்றன. இன்றைய காலங்களில் புதிதாக ஏரிகளை கட்டும் பேச்சு / எண்ணமே யாருக்கும் இல்லை. இருக்கும் ஏரிகளை காப்பாற்றுவதற்கே வழியில்லை. வளர்ந்து வரும் நாகரிகத்தினால், இருக்கும் ஏரிகள் வரைமுறையற்று ஆக்ரமிப்புக்கு உள்ளாகி இருக்கின்றன.

கர்னாடகத்தின் தலைநகரான பெங்களூரில், முன்பு 54 ஏரிகள் இருந்தன. அவற்றில் தற்போது மீந்திருப்பவை வெறும் 4-5 மட்டுமே. அவையும் என்று அழியும் என்கிற நிலையிலேயே இருக்கின்றன. வளர்ந்து வரும் பெங்களூரின் மக்கட்தொகைக்கு, இந்த ஏரிகளிலிருந்து வரும் தண்ணீர் போதுமானதாக இல்லை. அதற்கே, பல கோடி ரூபாய்கள் செலவழித்து, தண்ணீரை வரவழைக்கின்றனர்.

நம் நாட்டில் ஐந்து லட்சத்திற்கும் அதிகமான ஏரிகள் உள்ளன. அவற்றின் பராமரிப்பிற்காக 10,000 கோடிகளுக்கும் அதிகமான ரூபாய்கள் செலவழிக்கப் படுகின்றன. ஆனால் பல ஏரிகளில் குப்பைகளே இருப்பதால், அந்த ஏரிகளின் வயது குறைந்து கொண்டே போகின்றன. அவற்றிற்கு நீர் வரும் பாதைகளும் ஆக்ரமிக்கப்படுவதால், நீர்வரத்தும் குறைந்து போகின்றன. இதனால் சுமார் 40 லட்ச ஹெக்டேர் நிலங்கள் பாசனத்திற்கு நீர் கிடைப்பதில்லை.

நகர விரிவாக்கம், மக்கட்தொகை பெருக்கம் போன்றவற்றால் பல ஏரிகள் தற்போதே அழிந்து விட்டன (வரலாற்றில் இடம் பெற்றுவிட்டன). ஏரி, குளங்கள் நிரம்பினால், ஊரில் உள்ள கிணறுகளிலும் நீர்மட்டம் அதிகரிக்கும். ஏனெனில், ஏரிகள், நீர்மட்டத்தினை பாதுகாப்பதில் முக்கிய பங்காற்றுகின்றன.

சுமார் 250 ஆண்டுகளுக்கு முன், மக்களின் வாழ்வு இயற்கையை சார்ந்து இருந்தபோதே, சில விஷக்கிருமிகளால் செய்யப்பட்ட அரளி மர அழிப்பு, ஏரி குளங்களின் அழிப்பு ஆகியவற்றைக் கண்டு நொந்த ஜகன்னாததாசர், இயற்கையைப் பாதுகாப்பதின் முக்கியத்துவத்தைக் குறித்து எழுதியிருக்கிறார்.

ஜகன்னாததாசரின் இயற்கை / சுற்றுச்சூழல் குறித்த எண்ணமானது, வெறும் அவரது காலத்து நிகழ்வுகளைக் குறித்து இல்லாமல், எதிர்கால பிரச்னைகளை கணித்து, கவலைப்பட்டே

சொல்லியிருக்கிறார் என்பதை கவனிக்க வேண்டும். அவரின் காலத்தில், சிறிய அளவாக இருந்த காடு, மரங்களின் அழிப்பு, இன்றைய காலகட்டத்தில் தினந்தோறும் நடக்கும் சாதாரண நிகழ்வாக ஆகிப்போனதை பார்க்கிறோம். அப்படியெனில், ஜகன்னாததாசர் எதிர்காலத்தில் சுமார் 250 ஆண்டுகளுக்குப் பிறகான நிகழ்வுகளை அன்றே கணித்திருக்கிறார் என்பதை அறிகிறோம். இதிலிருந்து, இயற்கை / சுற்றுச்சூழல் மேல் அவருக்கு இருந்த ஈடுபாட்டினை அறிந்து கொள்ள முடியும்.

(இந்த கட்டுரை இத்துடன் முடிந்தது. அடுத்த இதழில் வேறொரு ஹரிகதாம்ருதஸார கட்டுரையை பார்க்கலாம்)

***

| தொடர் | **ஸ்ரீராகவேந்திர விஜயம்** |
| --- | --- |
| | **ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர் இயற்றியது** |

**பூ$^{4}$த ப்ரேத பிஶாசி யக்ஷிணி**
**பீ$^{4}$தி ப$^{3}$ட$^{3}$கர பீ$^{4}$தி பி$^{3}$டி$^{3}$ஸீ**
**மாதெயந்த$^{3}$தி$^{3}$ பொரெவ ஸந்தத பீ$^{4}$திவர்ஜிதனு**
**தா$^{3}$த என்னய மாது லாலிஸோ**
**யாதகீ தெர மாட$^{3}$்யோ குருவர**
**போத நா நினக$^{3}$ல்லெ யதிகுலனாத$^{2}$ ஸர்வக்ஞ ||14**

பூத ப்ரேத பிஸாசி யக்ஷிணி - ஆகிய; பீதி படகர - கெட்ட நடவடிக்கைகளின்; பீதி பிடிஸி - பயத்தினை விலக்கி; மாதெயந்ததி பொரெவ - ஒரு தாயைப் போல காக்கிறார்; ஸந்தத பீதிவர்ஜிதனு - எப்போதும் எவ்வித பயமும் இல்லாதவர்; தாத என்னய மாது லாலிஸோ - தந்தையே, என்னுடைய வேண்டுதல்களைக் கேள்; யாதகீ தெர மாட்யோ - எதற்காக இவ்வாறு செய்தாய்? குருவர - குருவரனே; போத நா நினகல்லெ - நான் உன் மகன் அல்லவா?; யதிகுல நாத - யதிகளில் சிறந்தவரே; ஸர்வக்ஞ - அனைத்தும் அறிந்தவரே.

ஸ்ரீராயரின் மகிமைகளை மேலும் விவரிக்கிறார் ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர்.

பூத, ப்ரேத, பிசாசு, யக்ஷிணி ஆகிய கெட்ட நடவடிக்கைகளின் பயத்தினை விலக்கி, ஸ்ரீராயரானவர், நம்மை ஒரு தாய் போல காக்கிறார். அவர் எப்போதும் எவ்வித பயமும் இல்லாதவர். தந்தையே, என்னுடைய வேண்டுதல்களைக் கேட்பாயாக. நான் உன் மகன் அல்லவா? ஏன் இவ்வாறு செய்தாய்? யதிகளில் சிறந்தவரே. அனைத்தும் அறிந்தவரே.

* யோऽனுத்தமமிதம் ஸ்தோத்ரமஷ்டோத்தரஷதம் ஜபேத் |
பூதப்ரேத பிஷாசாதி பீடா தஸ்ய ந ஜாயதே ||27
என்று ஸ்ரீராகவேந்திர ஸ்தோத்திரத்தில் பூத, ப்ரேத பயங்களை போக்குபவர் என்று ஸ்ரீஅப்பண்ணாசார்யர் சொல்லியிருக்கிறார்.

* ஸ்ரீதாஸரின் அங்கித உபதேசத்தின் முந்தைய சமயத்தில் நடந்த விஷயங்களை இங்கு குறிப்பிடுகிறார் என்று சிந்திக்கலாம். ஏன் என்னை இவ்வாறு மதி கெட்டவனாக இருக்கச் செய்தாய்? ஏன் எனக்கு விரைவில் அருளாமல், அப்படி நேரத்தை வீண் அடிக்கச் செய்தாய்? என்றவாறு பல கேள்விகளை இங்கு கேட்டிருக்கிறார்.

**மாத பித ஸூத ப்$^{3}$ராத்ரு பா$^{4}$ந்த$^{3}$வ**
**தூ$^{3}$த ஸதிகு$^{3}$ரு நாத$^{2}$ க$^{3}$தி மதி**
**நீத ஸக$^{2}$ முக$^{2}$வ்ராத ஸந்தத எனகெ$^{3}$ நீனய்ய**
**பூ$^{4}$திதா$^{3}$யக ஸர்வலோகதி$^{3}$**
**க்$^{2}$யாத கு$^{3}$ருபவமான வந்தி$^{3}$த**
**தா$^{3}$த கு$^{3}$ருஜக$^{3}$ன்னாத$^{2}$ விட்டலன ப்ரீதி படெ$^{3}$தி$^{3}$ருவி ||15**

மாத பித ஸூத ப்ராத்ரு பாந்தவ - தாய், தந்தை, மகன், சகோதரன், உறவினர்; தூத ஸதிகுரு நாத - தூதன், மனைவி, குரு, தலைவன்; கதி மதி நீத ஸக - கதி, புத்தி, வழி, நண்பன்; முக - முகம்; வ்ராத - குழு (கூட்டம்); ஸந்தத எனகெ நீனய்ய - எனக்கு என்றுமே நீங்கள்தான்; பூதிதாயக - செல்வத்தைக் கொடுப்பவரே; ஸர்வலோகதி - அனைத்து உலகங்களுக்கும்; க்யாத குரு - புகழ்பெற்ற குருவான / ஜகத்குருவான; குருபவமான - ஸ்ரீமுக்ய பிராணர்; வந்தித - வணங்குபவரான; தாத குருஜகன்னாத விட்டலன - தந்தையான ஸ்ரீகுரு ஜகன்னாத விட்டலனின்; ப்ரீடி படெதிருவி - அருளை / நீங்கள் பெற்றிருக்கிறீர்கள்.

ஸ்ரீராயரே தனக்கு (நமக்கு) அனைத்தும் என்று இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

தாய், தந்தை, மகன், சகோதரன், உறவினர், தூதன், மனைவி, குரு, தலைவன், கதி, புத்தி, வழி, நண்பன், முகம், குழு (கூட்டம்) என அனைத்தும் - எனக்கு என்றுமே நீங்கள்தான்.. செல்வத்தைக் கொடுப்பவரே, அனைத்து உலகங்களுக்கும் புகழ்பெற்ற குருவான / ஜகத்குருவான ஸ்ரீமுக்ய பிராணர் வணங்குபவரான, தந்தையான ஸ்ரீகுரு ஜகன்னாத விட்டலனின் அருளை / அன்பினை நீங்கள் பெற்றிருக்கிறீர்கள்.

மாதா ந்ருஸிம்ஹஸ்ச பிதா ந்ருஸிம்ஹோ
ப்ராதா ந்ருஸிம்ஹஸ்ச ஸகா ந்ருஸிம்ஹோ
வித்யா ந்ருஸிம்ஹோ த்ரவிணம் ந்ருஸிம்ஹோ
ஸ்வாமி ந்ருஸிம்ஹோ ஸகலம் நரசிம்ம:
என்று நரசிம்ம ஸ்வாமியை கொண்டாடுவதைப் போலவே இங்கும் ஸ்ரீராயரை வணங்கியிருக்கிறார் என்று அறியலாம்.

ஹரிரேவ பரோ ஹரிரேவ குருர்
ஹரிரேவ ஜகத் பித்ரு மாத்ரு கதி:
என்று ஸ்ரீமதாசார்யர் த்வாதச ஸ்தோத்திரத்தில் சொல்லியிருக்கிறார்.

ஹனும நம்ம தாயி தந்தெ பீம நம்ம பந்து பளக
ஆனந்த தீர்த்தரு நம்ம கதி கோத்ரவய்யா
என்று ஹரிதாஸர்களும் இதே அனுசந்தானத்தில் பல பாடல்களை பாடியிருக்கின்றனர்.

## சந்தி - 2

**சந்தி 2ன் விஷய சுருக்கம்**

பிரகலாத சரித்திரம். பூதேவியின் வேண்டுகோளின்படி பிரம்மன் ஸ்ரீஹரியை வேண்டுதல், ஸ்ரீஹரி தான் அவதாரம் எடுப்பதாக வாக்களித்தல், சங்குகர்ணனை முன்னதாக அனுப்புதல், பிரகலாதனின் அவதாரம், பின் அவருடைய வேண்டுதலின்படி நரசிம்ம அவதாரம், ஹிரண்யகசிபுவின் வதம், பிரகலாதரின் அரசாட்சியின் சிறப்புகள், அவருடைய பொன்மொழிகள் / உபதேசங்கள், பின் தாஸரின் பிரார்த்தனை ஸ்லோகங்கள் என இந்த சந்தியில் மொத்தம் 32 பத்யங்கள் உள்ளன.

**ராக$^4$வேந்தி$^3$ரர விஜய பேளுவெ**
**ராக$^4$வேந்தி$^3$ரர கருண ப$^3$லத$^3$லி**
**ராக$^4$வேந்தி$^3$ரர ப$^4$குதராத$^3$வரித$^3$னு கேளுவுது$^3$ ||**

**ஆதி$^3$யுக$^3$த$^3$லி தரணி மானினி**
**ஆதி$^3$ தை$^3$த்யர பா$^3$தெ$^4$ தாளதெ$^3$**
**வேத$^3$னங்க$^4$ரிய ஸார்து$^3$ தன்னய வ்யஸன பேளித$^3$ளு**
**ஆதி$^3$கவி சதுராஸ்யனீபரி**
**மேதி$^3$னீ ஸ்ரம வசன லாலிஸி**
**பா$^3$தெ$^4$ பரிஹர மாள்பெனெந்து$^3$ நுடி$^3$து$^3$ தா நடெ$^3$த$^3$ ||1**

ஆதியுகதலி - க்ருத யுகத்தில் (ஸத்ய யுகத்தில்); தரணி மானினி - தரணி தேவி; ஆதி தைத்யர பாதெ தாளதெ - ஹிரண்யாக்ஷ / ஹிரண்யகசிபு என்னும் தைத்யர்களின் தொந்தரவினை பொறுக்காமல்; வேதனங்க்ரிய ஸார்து - பிரம்மனை வணங்கி; தன்னய வ்யஸன பேளிதளு - தன்னுடைய பிரச்னைகளை கூறினாள்; ஆதிகவி சதுராஸ்யனு - ஆதிகவியான சதுர்முகன்; ஈபடி - இவ்வாறாக கூறிய; மேதினீ ஸ்ரம வசன லாலிஸி - அவளுடைய கஷ்டமான சொற்களை கேட்டுக் கொண்டு; பாதெ - அவளுடைய கஷ்டங்களை; பரிஹர மாள்பெனெந்து - பரிகாரம் செய்கிறேன் என்று; நுடிது தா நடெத - சொல்லி, தான் புறப்பட்டுச் சென்றான்.
ஸ்ரீபிரகலாத சரித்திரத்தின் கதையை க்ருத யுகத்தில் துவக்குகிறார் ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர்.

க்ருத யுகத்தில் (ஸத்ய யுகத்தில்), தரணிதேவியானவர், ஹிரண்யாக்ஷ / ஹிரண்யகசிபு ஆகிய தைத்யர்களின் தொந்தரவினை பொறுக்காமல், பிரம்மனை வணங்கி, தன்னுடைய பிரச்னைகளை கூறினாள். ஆதிகவியான சதுர்முகன், இவ்வாறாக கூறிய பூமாதேவியின் கஷ்டமான சொற்களை கேட்டுக் கொண்டு, அவளுடைய கஷ்டங்களை பரிகாரம் செய்கிறேன் என்று சொல்லி, தான் புறப்பட்டுச் சென்றான்.

தரணிதேவி - 25ம் கக்ஷையின் வருபவர். இவரில் ஸ்ரீலட்சுமி தேவியின் அம்சம் உள்ளது. இவரே ஸ்ரீலட்சுமிதேவி என்று நினைக்கக் கூடாது.

**ஶ்வேத தி$^3$வியனு ஸார்து$^3$ லகுமி ஸ**
**மேத ஹரியனு துதிஸி பூ$^4$மிய**
**பீ$^4$தி தா பரிஹரஸோகோ$^3$ஸுக$^3$ ஹரிய பெ$^3$ஸகொ$^3$ண்ட$^3$**
**நாத$^2$! தி$^3$திஜர பா$^4$ரவதிஶய**

**கா⁴திபரு தாவாரோ திளியேனு**
**தாத! நீ பரிஹார மாடி³ பீ⁴தி பி³டி³ஸுவது³ ||2**

ஶ்வேத திவியனு ஸார்து - ஷ்வேத த்வீபத்தை அடைந்து; லகுமி ஸமேத ஹரியனு - லட்சுமி ஸமேதனான ஸ்ரீஹரியை; துதிஸி - வணங்கி; பூமிய பீதி - பூமாதேவியின் பிரச்னைகளை; தா பரிஹரஸோகோஸுக - பரிகாரம் செய்ய வேண்டும் என்று; ஹரிய பெஸகொண்ட - ஸ்ரீஹரியை இவ்வாறு வேண்டிக் கொண்டார்; நாத - தலைவனான ஸ்ரீமன் நாராயணனே. திதிஜர பாரவதிஶய - அசுரர்களின் தொந்தரவு மிகவும் அதிகமாக இருக்கிறது; காதிபரு தாவாரோ திளியேனு - இதனை யாரால் பரிகரிக்க முடியும் என்று தெரியவில்லை; தாத - என் தந்தையே; நீ பரிஹார மாடி - நீ இதனை பரிகாரம் செய்து; பீதி பிடிஸுவது - பூமியின் / எங்களின் பயத்தினை போக்குவாயாக.

ஸ்ரீஹரியிடம் பிரம்மதேவரின் பிரார்த்தனையை இந்த பத்யத்தில் சொல்கிறார் ஸ்ரீதாஸர்.
பிரம்மதேவர் அங்கிருந்து ஸ்ரீஹரியின் இருப்பிடமான ஷ்வேத த்வீபத்தை அடைந்து, லட்சுமி ஸமேதனான ஸ்ரீஹரியை வணங்கி, பூமாதேவியின் பிரச்னைகளை பரிகாரம் செய்ய வேண்டும் என்று வேண்டிக் கொண்டார். ஸ்ரீமன் நாராயணனே, அசுரர்களின் தொந்தரவு மிகவும் அதிகமாக இருக்கிறது. இதனை யாரால் பரிகரிக்க முடியும் என்று தெரியவில்லை. என் தந்தையே, நீ இதனை பரிகாரம் செய்து எங்களின் பயத்தினை போக்குவாயாக.

(தொடரும்)

**ஸ்ரீவ்யாஸராஜர் / ஸ்ரீவாதிராஜர் ஆராதனை**

ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால், நமது குருகளான ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாஸர் நடத்தும் இந்த ஆராதனைகள், வேலூர் நவபிருந்தாவன க்ஷேத்திரத்தில் அந்த ஆராதனை நாட்களில் நடைபெறவிருக்கின்றன. உபன்யாம், ஹோமம், தேவரநாமா பாடல்கள் என பல நிகழ்ச்சிகள் நடைபெறவிருக்கின்றன. அனைவரும் அங்கு வந்து அந்த ஆராதனை நிகழ்ச்சியில் கலந்துகொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

## ஜயலட்சுமி மங்களா மூர்த்தி (1952 - )

ராய்ச்சூர் ஜில்லா, தேவதுர்கா தாலுகா, கொப்பர கிராமம் என்பது, கர்னாடகாவில் மிகவும் புகழ் பெற்ற இதிகாச, புராண, தார்மிக க் ஷேத்திரம் ஆகும். இங்கிருந்த ஸ்ரீ லட்சுமி நரசிம்ம தேவாலயத்தின் அர்ச்சகர் - கிரியாச்சார். ‘கார்பர நரஹரி’ என்னும் அங்கிதத்தால் அனேக கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார்.

கிரியாசார்யரின் மகனான கார்பர ஜயாசார்யர் மற்றும் லலிதாபாய் இவர்களின் மகளாக ஜயலட்சுமி அவர்கள் 1952ம் ஆண்டில் பிறந்தார். இவருக்கு இரு சகோதரர்கள். இரு சகோதரிகள். மெட்ரிக் தேர்வு முடித்தபின், ஜயலட்சுமி அவர்களுக்கு, மங்களாமூர்த்தி குடும்பத்தை சேர்ந்தவரான ஸ்ரீ கிருஷ்ணாசார்யருடன் 1967ம் ஆண்டு திருமணம் நடந்தது. இந்த தம்பதிகளுக்கு நான்கு பேர் மக்கள் பிறந்தனர். குழந்தைகள் பிறந்தபின், ஜயலட்சுமி அவர்கள் 1975யிலிருந்து 1996 வரை மேற்படிப்பு படித்து, குல்பர்கா பல்கலைக்கழகத்தில் பி.ஹெச்.டி முடித்தார். பின்னர், இவர், ராய்ச்சூரில், SSRG பெண்கள் கல்லூரியில் கன்னடத் துறை பேராசிரியராக பணிபுரிந்து, அதிலிருந்து ஓய்வு பெற்றார்.

தன்னுடைய தாத்தாவான கார்பர நரஹரி கிரியாச்சாரிடமிருந்து, ஜயலட்சுமி அவர்கள் ‘ஸ்ரீகிருஷ்ண’ மந்திரத்தை உபதேசம் பெற்றார். பின், அவருக்கு ஹரிதாஸினி ஆகவேண்டும் என்னும் ஆசையும் வந்தது. அப்படியே ஒரு நாள் கனவில் தெய்வாதீனமாக ‘நரசிம்ம விட்டலா’ என்னும் அங்கிதமும் கிடைத்தது. தன் தாத்தாவையே தன் குருகளாக நினைத்து, 1984ம் ஆண்டிலிருந்து ‘நரசிம்ம விட்டலா’ என்னும் அங்கிதத்தில் நூற்றுக்கணக்கான கீர்த்தனைகளையும், உகாபோகங்களையும் இயற்றியிருக்கிறார். தாஸ ஸாகித்யத்தைப் பற்றி தென்னிந்தியாவில் பல்வேறு நகரங்களில் 400க்கும் மேற்பட்ட உபன்யாசங்களை செய்திருக்கிறார். புராணங்கள், பகவத்கீதை, ஹரிகதம்ருதஸாரம், ஆகியவற்றையே தன் மூச்சாக கருதி வந்தார். 40க்கும் மேற்பட்ட கட்டுரைகளை பல்வேறு பத்திரிக்கைகளில் எழுதியிருக்கிறார்.

**இவரது சொந்த புத்தகங்கள்:**

1. கர்னாடகத்தின் முக்கிய ஹரிதாஸர்கள் - 1994.
2. கார்பர க்ஷேத்திர மகிமை - 1999
3. ஹரபனஹள்ளி பீமவ்வா - 1999
4. குல்பர்காவை சேர்ந்த ஹரிதாஸர்கள் - 2004
5. ஸ்ரீகோபாலதாஸர் - 2004.

**இவர் தொகுத்த புத்தகங்கள்;**

1. லகுமீஷ கீர்த்தன மஞ்சரி - 1995
2. ஸ்ரீமத் ஸுதாசார்ய கீர்த்தன மஞ்சரி - 1997
3. ஸ்ரீவரதேந்த்ர தீர்த்தரின் ஸுளாதிகள் - 1997
4. ஹரபனஹள்ளி பீமவ்வாவின் பதங்கள் -1998
5. ஸமக்ர தாஸ ஸாகித்ய தொகுப்பு - 2006
6. ஹரிதாஸர்கள் இயற்றிய பயலாட்டங்கள் - 2006
7. ஸ்ரீகார்பர லட்சுமி நரசிம்ம ஸ்வாமியின் மங்களாஷ்டகம் - 2010

ஜயலட்சுமி அவர்கள், பி.ஹெச்.டி பட்டம் பெற்றபிறகு, கர்னாடகாவின் பல்வேறு நிறுவனங்களால் / கல்வி அமைப்புகளால் பாராட்டப்பட்டிருக்கிறார். வானொலியில் பல்வேறு உபன்யாசங்களை செய்திருக்கிறார். மொத்தத்தில், டாக்டர். ஜயலட்சுமி மங்களாமூர்த்தியின் பெயர் கர்னாடகாவின் மக்களின் இதயத்தில் இருக்கிறது என்றே சொல்லலாம்.

**கீர்த்தன ஸாகித்ய**

தேவதா கக்ஷையில் கணபதி, முக்யபிராண, லட்சுமி, துளஸி, ஸ்ரீஹரி, ஸத்ய நாராயண ஆகிய தேவதேவியர்களை தம்முடைய கீர்த்தனையில் பாடியிருக்கிறார் ஹரிதாஸினி ஜயலட்சுமி. யதி கக்ஷையில் ஸ்ரீஸுஷமீந்திர தீர்த்தர், ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் மற்றும் ஸ்ரீவாதிராஜர் ஆகியோர் மேலும், ஹரிதாஸர்களில் ஸ்ரீகிரியாசார், இபராமபுர அப்பாவரு, ஷ்யாமஸுந்தர தாஸர், கோபாலதாஸர், ஸ்ரீஷ தாஸர் ஆகியோர் மேல் கீர்த்தனைகளை இவர் இயற்றியிருக்கிறார்.

இவருடைய சில கிருதிகளை பார்ப்போம்.

**1. உகாபோக**

பி3ரம்மபுரவிது3 ஈ தே3ஹ பர பி3ரம்ம மூருதி நெலஸிருவ
ஸத்யமூருதிய நித்ய ஸன்னிதி3யல்லி எத்திபிடி3தி3ருவ ஹ்ருத்புஷ்கரவ |
ஒத்திப3ஹ கண்டகவ கித்தி களெயொகெ3து3 அத்தித்த ஔ ஹொரகெ3 சித்ப்ரகாஶனு
ஸிரி நரஸிம்ஹ விட்டலனு பொளெவனு ஹ்ருத3யாகாஶத3 ஆகாஶ நாமகனு ||

**2. ஸத்ய நாராயண ஸ்வாமியின் ஆரதி பாடல்**

முத்தின ஆருதி ப4க்திலி பெ3ளகு3வெ ஸத்ய நாராயண தே3வனிகெ3
உத்தம வ்ரதவனு த4ரெயல்லி பி3த்தித3 ஸர்வோத்தம ஸ்ரீஹரிகெ3
மங்க3ளமஹிமன ப்ரஸாதவனுபேக்ஷிஸெ | துங்க3த்4வஜனனு ஸலஹித3கெ3 |
ஹிங்கி3ஸி ப4குதர து3ரிதவ பொரெயுவ | நரஸிம்ஹ விட்டல ஸ்ரீஹரிகெ3 ||

**3. ஸ்ரீஷ்யாம ஸுந்தர தாஸர் மேலான கிருதி**

வர்துலாசார்ய ரெந்தெ3னிஸுத த4ரெயொளு
ஹரிப4க்தி ஸுதத்வக3ள பி3த்தரிஸுதலி |
ஹரிகதாம்ருத ஸார பேளுத ஸுஜனரிகெ3
வர கவிக3ளெனிஸித3 கா4ஸெகொ3ளிப
அகுராஶிக3ளியுவவோ |
ஸ்ரீஶன ஒலுமெயு ஸ்திர வாகு3வுத3ய்யா ||

என்று ஸ்ரீஷ்யாம ஸுந்தர தாஸரை ஹரிதாஸினி 5 நுடிகளில் போற்றிப் பாடியுள்ளார்.

**4. ஸ்ரீஹனுமந்த தேவரின் ஸ்துதி**

ப3ளிரெ ப3ளிரெ ஹனுமா ப3ளிரெ ப3ளிரெ ஹனுமா ஹனுமா |ப
நின்னொடெ3யனல்லி த்3ருடஞான ப4குதி கொடு3 ||அப

ஜக3தொ3ளு நிம்மய மஹிமெ அபார
பாமர நானெந்து3 ப3ண்ணிபெனய்யா |
ஸ்ரீஹரி ப்ரேமத3 குவரரு நீனு
ஸ்ரீ ராமனல்லி ரதி இத்து பாலிஸய்யா ||[1]

20 - ஹரிதாச விஜயம் – மார்ச் 2023

கலியு நிக்3ரஹிஸித3 பீ4ம ப3லாட்4யனெ
ஸவரிதெ3 கௌ3ரவ து3ருளரன |
கருணாகர ஸிரி கிருஷ்ணன த3யெயு
நிருத தொ3ரெயுவந்தெ நீ க்ருபெ மாடோ3 ||2
நின்ஹொரதின்னு காயுவராரய்யா ஸலஹு
த3யதி3ந்த3 ஸர்வக்ஞ மூருதி |
மத்4வ ஸுஶாஸ்த்ரதி3 ஸாத4னெ மாடி3ஸோ
நரஸிம்ஹ விட்டலன தோரிஸு கு3ருவெ ||3

**5. ஸ்ரீலட்சுமிதேவி ஸ்துதி**

அம்மா எனகெ3 நீ அனுக்3ரஹ மாடெ3 |
ஸும்மனஸர தாயி கருணதி3 நோடெ3 ||ப

பொ3ம்ம ப4வாதி3க3ள கடெக3ண்ணீலி ஸ்ருஷ்டிஸுவி |
நினகெ3ணெ யாரம்ம அக்ஷர புருஷளெ ||அப

தே3ஶகாலக3ளிந்த3 ஸமளெனிஸுத ஹரிகெ3
ஸ்ரீஶன ப்ரீதிய ஸதியு நீனம்ம |
கு3ணபூர்ணன பாத3 ஸ்மரிஸுத்த அனுக்ஷண
கு3ணக3ளிந்த3 நீ அமரளெனிஸுவி ||1

ஸ்ரீபூ4 து3ர்கா3 ரூபக3ளிந்த3
ஸ்ரீ ஹரிய ஸேவிஸுவி ப3கெ3ப3கெ3யிந்த3
ஸாத்விக ராஜஸ தாமஸ வர்க்க3த3லி
ஶ்வேத, கெம்பு, நீல வர்ணதி3 ஸ்தி2தளெ ||2

ஏஸேஸு ரூபவ ஹரி தானு தாளுவ
ஆஸாஸு ரூபவ த4ரிஸுவி தே3வி |
ஸ்ரீஹரி ஸங்கல்பவ முன்னவெ திளியுத
மோத3வ ப3டி3ஸுவி பாத3 ஆராத3களெ ||3

ஏஸேஸு ஜனுமக3ள தா3டி ப3ந்தி3ஹெனோ
முந்தே3ஸு யோனிக3ளோ கொ3த்தில்லா தாயி |
இந்தீ3க்ஷணவெ நரஸிம்ஹ விட்டலனொடனெ
ஹ்ருன்மந்திரத3லி நீனு த3ருஶன நீடெ3 ||4

**6. ஸ்ரீதன்வந்திரி ஸ்துதி**

த$^3$யவிரலி த$^3$யவிரலி த$^3$ன்வந்திரியெ |
வித$^3$வித$^3$த$^3$ தாபத$^3$லி கடுனொந்தெ$^3$ தே$^3$வா ||ப

ஆதி$^3$பௌ$^3$திகத$^3$ல்லி ஆதி$^3$தெ$^3$ய்விகத$^3$ல்லி
ஆத்$^3$யாத்மனு நீனெ ஏகாத்மனெ |
அச்யுதானந்த$^3$ கோ$^3$விந்த$^3$ நின்னய நாம
ஸ்வச்ச மனத$^3$லி ஸ்துதிப பா$^4$க்$^3$ய கொடு$^3$ தந்தெ$^3$ ||1

தே$^3$ஹவிது$^3$ நீனிருவ ஆகா$^3$ரவெந்து$^3$
ஆத்மதீ$^3$பவ பெ$^3$ளகி$^3$ கை முகி$^3$வெனோ |
போ$^4$க$^3$தா$^3$ஸெய நீகி$^3$ வைராக்$^3$ய பா$^4$வத$^3$லி
பா$^3$கி$^3$ ஸ்துதிஸுவ பா$^4$க்$^3$ய நீட$^3$ய்யா தந்தெ$^3$ ||2

ப$^4$குதி ஜலத$^3$லி நின்ன பத$^3$தோயஜ தொளெவெ
முகுதி மங்க$^3$லவீயோ ஸர்வாத்மனெ |
ப$^4$குத வத்ஸல ஸ்ரீ நரஸிம்ஹ விட்டலனெ
ஶகுதராரய்யா நின்ஹொரது தந்தெ$^3$ ||3

இப்படியாக ஹரிதாஸினி ஜயட்சுமி மங்களாமூர்த்தி அவர்கள், ஸ்ரீஹரியின் சேவையே தாஸ ஸேவை என்று நினைத்து, இன்றும் பல்வேறு கட்டுரைகளை எழுதுவது, உபன்யாசம் செய்வது, பாடல்களை இயற்றுவது என்று இத்தகைய செயல்களில் ஈடுபட்டிருக்கிறார். முக்யபிராணாந்தர்கதனான ஸ்ரீஹரி, அவருக்கு அனைத்து வித மங்களங்களையும் கொடுத்து அருளட்டும் என்று வேண்டிக் கொள்வோமாக.

(அடுத்த இதழில் வேறொரு ஹரிதாஸினியைப் பற்றி பார்ப்போம்).

***

தொடர்

## ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர்

டாக்டர். N.G.விஜயலட்சுமி.

**அம்பெ சும்பிஸு நினகெ முகுதி ரூபம்பெ**
**என்னும் தேவரநாமாவின் அர்த்த விளக்கம்**
**எழுதியவர் : டாக்டர். N.G.விஜயலட்சுமி.**

அம்பெ[3] சும்பி[3]ஸு நினகெ[3] முகுதி ரூபம்பெ[3]
என்னும் தேவரநாமாவின் அர்த்த விளக்கம்

பாகல்கோடெயின் ஸ்ரீப்ரஸன்ன வெங்கட தாஸரின் ஸாகித்யம் அபாரமாக இருக்கிறது. தாரதம்யமாக அவர் பல்வேறு கிருதிகளை இயற்றியிருக்கிறார். அவரது அனைத்து கீர்த்தனையின் ஸாகித்யமும் வெவ்வேறாக இருக்கிறது. மிகவும் சிறப்பாக இருக்கிறது. அவை அனைத்திலும் ஆத்யாத்மிக கருத்துகள் அற்புதமாக பரவியிருக்கின்றன. மிகச் சிறிய சொற்களில் பல்வேறு அர்த்தங்கள் அடங்கியிருக்கின்றன. 'அம்பெ[3] சும்பி[3]ஸு நினகெ[3] முகுதி ரூபெம்பெ[3]' என்னும் பல்லவியில் துவங்கும் கிருதியானது இத்தகைய அற்புத கிருதிகளில் ஒன்று. இதில் 11 நுடிகள் இருக்கின்றன. இந்த தேவரநாமாவில் அடங்கியிருக்கும் தத்வ சிந்தனையை இங்கு பார்ப்போம்.

அம்பெ[3] சும்பிஸு நினகெ[3] முகுதி ரூபம்பே[3] ||ப

வைகுண்ட[2] நக[3]ரத[3]ல்லி அனந்தாஸனத[3]ல்லி
ஸ்ரீகர ஷ்வேதத்[3]வீப[3]ல்லி முக்த களாப ||1

ஸ்வானந்த[3]தொ[3]குளியாட ஸுர ரிஷிக[3]ள கூட[1]
நானா ராஷிக[3]ளல்லல்லி ஸ்த்ரி பும்ஸரொப்பினலி ||2

ஆனந்த[3]மயது[3]த்[3]யான வ்ருக்ஷத[3]ல்லி ஸன்ஸ்தானா
ஞானேஷ்வர்ய நீதா[3]ன பி[3]ட[3]து[3]ம்ப[3] ஸ்வாத்[3]வான்ன ||3

குந்தா[3]ம்பு[3]ஜ மந்தா[3]ரா மந்த[3] மந்த[3] மோத[3] ஈரா
ஸுந்த[3]ரேர கா[3]த்ரா ஸாராத்[3]விரேப[2] ஜங்காரா ||4

தேஜோமய ஸ்வரூப முக்தி ஜீவ சமூபா

ராஜீவ பி3ம்பா3ரூப நானா ஜாதி கலாப ||5

எம்ப3த்து நால்கு லக்ஷ ப்ரதிபி3ம்ப3க்கெ ப்ரத்யக்ஷ
பி3ம்பா3னந்தா3னந்தாத்ம ஸ்ரீ ஹரியே ஏகாத்ம ||6

ஆ சதுராஸ்ய த்ருணாந்த நீசோச்ச பா4வனாந்தா
தா சதுர்வித4 முக்திஹெச்யாடீ1 ஸதா3 பு4க்தி ||7

ப்ராகா3பரோக்ஷ காலா ப4க்தியோக3த3 ப2லா
ஈக3 ஆனந்தோ3ன்னாஹ ஸவியாகி3 உம்ப3 பா4ஹ ||8

ரிக்3 யஜு:ஸ்ஸாமாகா3னா அபவர்க்கதி3 கோ4ஷணா
யக்ஞேஷா நாரேயணா முக்த வர்க3ர வ்யக்2யான ||9

சதுர்பு4ஜாங்க3 ரூபா முக்த ஜாதி சமூப
ஸோத்தமரல்லி ப4க்தி முக்தவ்ராதகாஸக்தி ||10

கைவல்யத3 ஸௌபா4க்3ய ப3ல்லனேவே யோக்3யா
பூ4வைகுண்ட2 நிவாஸா ப்ரஸன்வேங்கடேஷா ||11

பல்லவியில் அம்பெ சும்பிஸு என்று இரு பதங்கள் இருக்கின்றன. அம்பெ என்றால் தாய். அம்மா. நம் அனைவரின் தாய் - லட்சுமிதேவி. லட்சுமிதேவி தன் கணவரான ஸ்ரீமன் நாராயணனை கட்டி முத்தமிடுகிறாள். எப்போது இவ்வாறு செய்கிறாள்?. புராண கதைகளில் சொல்லியிருப்பதைப் போல, பிரளய காலத்தில். பிரளய என்றவுடன், ஸ்ரீவாதிராஜரின் கிருதி - வைகுண்ட வர்ணனெ நினைவுக்கு வருகிறது. லய ஸந்தியில் பகவந்தன் தான் படைத்த அனைத்தையும், தின்று விடுகிறான். லய என்றால் பகவந்தனுக்கு சுவையான உணவு. உபநிஷத்கள் பிரம்ம ஸூத்ரங்கள் லயத்தினை போஜனம் என்று அழைக்கிறது என்று சொல்கிறார்கள்.

ஹிந்தெ பொம்மன ஸ்ருஜிஸி அவனங்கவாகலே
திந்தரெ துத்து குந்துவுது |
எந்துதுஸீனவ மாடித ஸ்ரீகிருஷ்ண
இந்து புஞ்சிஸி தீகுதிர்த ||11-31

பொம்மன அங்க என்றால், சதுர்முக பிரம்மனின் சரீரம். அதாவது, பிரம்மாண்டம். இந்த பிரம்மாண்டத்தை - ஆகலே என்றால் படைத்த

சமயத்திலேயே உண்டால், உண்பதன் அளவு குறைவாகிறது என்று சிந்தித்த பகவந்தன், லயகாலம் வரும்வரை காத்திருக்கிறாராம்.

ஐதரேய உபநிஷத்தின் வாக்கியம் : ஸ ஐக்ஷத யதி ஹ வாவ இதனபீமம்ஸ்யே கனிsன்னம் கரிஷ்யே இதி ||

14 உலகங்களைக் கொண்ட பிரம்மாண்டத்தை படைத்த உடன், அவற்றை உண்டால், அளவு குறைவாகிறது. இனி அடுத்து, சதுர்முக பிரம்ம தேவரால் அளவிட முடியாத ஜீவர்கள் படைப்பிற்கு வரவேண்டும். அந்த 14 உலகங்களும் தேவ, தானவ, மானவ, பசு, பக்ஷி, மிருகம், பாம்புகள், பர்வதங்கள் ஆகியவற்றால் நிரம்ப வேண்டும். அனைவரும் அவரவர்களின் யோக்யதைக்கேற்ப ஸாதனைகளை நிறைவேற்றிக் கொள்ள வேண்டும். இவ்வாறு அனைத்து ஜீவிகளும் பரிபக்வ நிலையை அடைய வேண்டும். அப்போது அவர்களை உண்டால், சுவையான உணவு கிடைக்கிறது என்று ஸ்ரீஹரி சிந்தித்தான் என்று ஞானிகள் கூறுகின்றனர்.

ஸப்த த்வீபங்களில் இருக்கும் அனைத்து விதமான தான்யங்கள், பழம், காய்கள், மிருகங்கள், பறவைகள், மானவர்கள் முதற்கொண்டு அனைத்து விதமான பிராணிகள், ஸப்த சாகரங்களில் வசிக்கும் பிராணிகள் என இவை அனைத்தும் சேர்து, ஸ்ரீஹரிக்கு சுவையான துத்து (கைப்பிடி உணவு) ஆகிறது. பிராமண, க்ஷத்ரிய என அனைத்து வித ஜீவர்களின் தேகங்கள், பகவந்தனுக்கு துத்து ஆகின்றன. மது கைடபர் என்னும் இரு அசுரர்களின் மேதஸ்ஸிலிருந்து, இந்த பூமி நன்றாக வளர்ந்தது. ஆகவே பூமிக்கு, மேதினி என்னும் பெயர் வந்தது. இந்த பூமியே பகவந்தனுக்கு சுவையான உணவு ஆனது என்று காடக உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த சமையலை சாட்சாத் லட்சுமிதேவியே தயார் செய்கிறாள்.

இதே விஷயத்தை ஸ்ரீவாதிராஜ ஸ்வாமிகள், வைகுண்ட வர்ணனெ லய ஸந்தியில் இவ்வாறு கூறியிருக்கிறார்.

ஏளு ஸாக3ரதொ3ளு தும்பிர்த3 ஜீவர
ஜாலங்க3ளிகெ3 லெக்கவில்ல
ஸாலாகி3 வனவனதி3 சஞ்சரிஸுவ ம்ருக3க3ள
நோவனாரு ப3ண்ணிபரு ||2

லட்சுமிதேவி, தானே பிரளய ஜலம், சுற்றியிருக்கும் இருட்டு, ஆல இலை, ஸ்ரீஹரியின் தேகத்தின் மேல் இருந்த அனைத்து ஆபரணங்கள் என அனைத்தும் ஆகி, அனைத்து இடங்களிலும் வ்யாபித்து, தானே ஸ்ரீஹரிக்கு துத்தினை (கைப்பிடி உணவினை) கொடுக்கிறாள். மிகவும் பசியினால் வாடியவன், மிகச் சிறந்த விருந்தினை கண்டதைப் போல, அந்த உணவினை ஸ்ரீஹரியானவன், தன் பிரம்மாண்ட அகலமான வாயினை மிகவும் பெரியதாக திறந்து, ஒரே கைப்பிடியில் அவற்றை விழுங்கி விடுகிறான். அப்போது வாயுதேவர், தன்னுடைய தந்தைக்கு சோர்வு ஆகக்கூடாது என்று, காற்று வீசுகிறார். சாப்பாட்டின் நடுநடுவே தண்ணீர் குடிப்பதற்கு சுத்தமான கடல் நீரையே பயன்படுத்தினான். உணவு உண்டபின், அதே தண்ணீரினால் ஆபோஷனம் எடுத்துக்கொண்டு ஆசமனம் செய்தான். இவ்வளவு தின்றால், அஜீர்ணம் ஆவது சகஜம்தானே? அப்படி ஆகக்கூடாது என்றே, லட்சுமிதேவி கஷாயம் செய்து கொடுக்கிறாளாம். அந்த கஷாயத்தை குடித்து முடித்த பகவந்தன், தன் மனைவியுடன் ஓய்வெடுக்க விரும்புகிறான்.

ஐதரேய உபநிஷத்தில், காடக உபநிஷத்தில் வந்திருக்கும் இந்த பிரளய போஜனத்தின் விஷயங்களை, ஸ்ரீவாதிராஜர், பூகோள வர்ணனையிலும் கூட அழகான வர்ணித்திருக்கிறார்.

யஸ்ய பிரம்ம ச க்ஷத்ரம் சோ பே பவத ஓதன: |
இதி ஷ்ருதே ரஸங்க்யாத பிரம்மணாம் சக்ரவர்த்தினாம் ||
மனுஷ்ய பஷு பக்ஷ்யாதி ஜீவானாஞ்ச திவௌகஸாம் |
ஸர்பாணாம் தானவானாம் ச யக்ஷ கந்தர்வ ஜன்மனாம் ||

பகவந்தன் இரு நோக்கங்களை வைத்துக் கொண்டு, லயம் செய்தான் என்ரு சொல்கிறார். முதலாவது - சுவையான உணவு. இரண்டாவது, தன் அனாதி காலத்தின் மனைவியான லட்சுமிதேவி உடன் தனிமையில் சரஸம் ஸல்லாபம் செய்வது.

வயிறு நிறைய உண்ட ஸ்ரீஹரி, படுத்துக் கொண்டு, லட்சுமிதேவியின் முகத்தை பார்த்து, அவளை பேச வைக்கிறான். லட்சுமிதேவி லயத்தில், தன் கணவனுடன் தனிமையில் இருக்கும்போது பெண்களுக்கே உரித்தான வெட்கத்துடன் மௌனமாக இருக்கிறாள். லயத்திற்கு முன்னர், தேவானு தேவதைகள் அனைவரும், ஸ்ரீஹரியின் அங்காங்கங்களில் சேர்ந்திருக்கிறார்கள். அப்படியிருக்கையில், இப்போது ரமாதேவி அவனை எப்படி ஆலிங்கனம் செய்ய சாத்தியம்?. இவ்வாறு ஸ்ரீலட்சுமிதேவியின் மன சஞ்சலத்தை புரிந்து கொண்ட ஸ்ரீஹரி,

தேவதைகள் அனைவரையும், தன் உதரத்தில் அடக்கி வைக்கிறான். அனைவருக்கும் தூக்கம் வரவழைக்கிறான். அப்போது எவ்வித கவலையும் இன்றி, லட்சுமிதேவி நாராயணனிடம் வருகிறாள்.

இதையே ஸ்ரீவாதிராஜர் அற்புதமாக வர்ணிக்கிறார். பிரளய காலத்தின் ரமா நாராயணரின் விஹார காலத்தில் சந்திர இருக்கவில்லை. வெளிச்சம் இருக்கவில்லை. குயில்களின் பாடலும் இருக்கவில்லை. மகாலட்சுமியின் முகமே சந்திரன். எங்கெங்கும் பரவிய அவளது சிரிப்பே வெளிச்சம். கிளி போன்ற அவளது பேச்சே குயில் பாட்டு போல இருந்தது. தன் கணவனுக்கு தானே இவ்வாறு அனைத்து வைபவங்களையும் காட்டினாள். தன் கண் பார்வையினால் அம்புஜாக்ஷனுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தாள்.

(தொடரும்)

***

| தொடர் | **ஹரிகதாம்ருதசார மஞ்சரி 360** |
|---|---|
| | **By ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர்** |

**106. ஹலவு ப$^{3}$கெ$^{3}$யலி ஹரிய மனத$^{3}$லி**
**ஒலிஸி நில்லிஸி ஏனு மாடு$^{3}$வ**
**கெலஸக$^{3}$ளு அவனங்க்$^{4}$ரி பூஜெக$^{3}$ளெந்து$^{3}$ நெனெவுதிரு |**
**ஹலத$^{4}$ரானுஜ தானெ ஸர்வ**
**ஸ்த$^{2}$லக$^{3}$ளலி நெலெஸித்து$^{3}$ நிஸ்ச**
**ஞ்சல ப$^{4}$கு$^{3}$தி ஸுக்$^{3}$ஞான பா$^{4}$க்$^{3}$யவ கொட்டு ஸந்தெயிப ||(12-28)**

ஸாதனா மார்க்கம் பற்பல விதங்களாக இருக்கின்றன. அவனை ஏதாவது ஒரு வழியில் மகிழ்வித்து, இதயத்தில் நிறுத்திக் கொள்ள முயன்றாலும், நாம் செய்யும் அனைத்து கர்மங்களிலும், ஸ்ரீராமன் தானே இருந்து, அனைத்தையும் செய்விக்கிறான் என்று அனுசந்தானம் செய்ய வேண்டும். அப்படி செய்தால், அவனே நமக்கு நல்ல ஞானம், பக்தி ஆகியவற்றை கொடுத்து காக்கிறான் என்கிறர் மான்வி தாஸரான ஸ்ரீஜகன்னாத தாஸர்.

**107. மூரதி4கவெம்ப4த்து ஸஹஸ்ரை**
**நூரயிப்பத்தெனிப ரூபதி3**
**தோருதிப்ப தி3வா னிஷாதி4பரொளகெ3 நித்யத3லி |**
**பா4ரதி ப்ராணரொளகி3த்து3 நி**
**வாரிஸுத ப4குதர து3ரித ஹீ**
**ங்கார நித4ன ப்ரத2மரூபதி3 பித்ருக3ள பொரெவ ||(12-37)**

83,520 ரூபங்களால் பகல் இரவுகளில் அந்தர்யாமியாக, முக்யப்ராணனில் இருந்து, வஸு, ருத்ர, ஆதித்யரில் ப்ரத்யும்ன, ஸங்கர்ஷண, வாஸுதேவ ரூபங்களால் பித்ரு தேவதைகளை காக்கிறான் என்கிறார் ஸ்ரீதாஸர். பக்தர்களையும் அவனே காக்கிறான்.

**108. ஸ்ரீவிரிஞ்சாத்3யமரக3ண ஸம்**
**ஸேவிதாங்க்4ரி ஸரோஜனீ ஜட3**
**ஜீவராஷிக3ளொள ஹொரகெ3 நெலெஸித்து3 நித்யத3லி |**
**ஸாவகாஷனு எனிஸி தன்ன க**
**ளேவரத3ல்லிம்பி3ட்டு ஸலஹுவ**
**தே3வதே3வகிரமண தா3னவஹரண ஜிதமரண ||(12-41)**

பகவந்தனின் கர்த்ருத்வ எத்தகையது என்றால், ஸ்ரீதாஸர், அதற்கு விடையாக - இந்த சரீரத்தில், அனைத்து பிராணிகளில் உள்ளேயும், வெளியேயும், பிரம்மாதிகளால் வணங்கப்படும் ஸ்ரீகிருஷ்ணன், தினமும் இருந்து (அந்த ஜீவனின் ஆயுள் இருக்கும் வரை), அந்தர்யாமியாக இருந்து, தைத்யர்களை சம்ஹரித்து, அனைவரையும் காக்கிறான் என்கிறார்.

**109. மாஸ ஒந்த3கெ ப்ரதி தி3வஸத3லி**
**ஷ்வாஸக3ளஹவு அஷ்ட சத்வா**
**ரிம்ஷதி ஸஹஸ்ராதி4கா1ரு ஸுலக்ஷ ஸங்க்2யெயலி |**
**ஹம்ஸ நாமக ஹரிய ஷோட3ஷ**
**ஈ ஷதாப்3த3தி3 ப4ஜிஸெ ஒலிவ த3**
**யா ஸமுத்3ர குசேலகொ3லித3ந்த3த3லி தி3னதி3னதி3 ||(12-42)**

பரமாப்தரான ப்ராணதேவர் செய்யும் ஹம்ஸ மந்திரத்தின் ஒரு எண்ணிக்கையை காட்டி - அதாவது, ஒரு நாளைக்கு 21,600 மந்திரம் * 30 நாட்களுக்கு 6,48,000 மந்திரங்களை என ஒரு மாதத்திற்கு ஜெபிக்கிறார். (எவ்வித சோர்வும் / ஆயாசமும் / வெறுப்பும் இன்றி). அதனை அறிந்து, நாம் அதையே ஸ்ரீஹரிக்கு தினமும் சமர்ப்பித்தால், குசேலனுக்கு எப்படி

ஸ்ரீஹரி அருளினானோ, அதைப் போலவே நம்மையும் காக்கிறான் என்கிறார் ஸ்ரீதாஸர். நாமும்கூட அதைப் போல ஹம்ஸ மந்திர ஜபத்தை செய்ய வேண்டும் என்று ஸ்ரீதாஸர் கூறுகிறார். இதுவே வைஷ்ணவ தர்மம்.

**110. ஸ்ரீத4வ ஜகன்னாத2 விட்டல**
**தா த3யதி3 வத3னதொ3ளு நுடிதோ3**
**பாதி3யலி நா நுடி3தெ3னல்லதெ3 கே1ளி பு3த4ஜனரு |**
**ஸாது4லிங்க3 ப்ரத3ருஷகரு நி**
**ஷேதி4ஸிதரேனஹுது3 என்னப**
**ராத4வேனித3ரொளகெ3 பேள்வுது3 திளித3 கோவித3ரு ||(12-45)**

இந்த சரணத்தில் தம் அஹங்காரத்தை கண்டனம் செய்து கொள்ளும் ஜகன்னாத தாஸர், இந்த கிருதியை ஜகன்னாத விட்டலன் எப்படி சொல்லியிருக்கிறானோ, அதைப் போலவே நானும் சொல்லியிருக்கிறேன். துர்ஜனர்கள் இந்த கிரந்தத்தை புறக்கணித்தால், அதில் என்னுடைய தவறு எதுவும் இல்லை. அப்படி ஏதேனும் அபராதம் இருந்தால் சொல்லுங்கள் - என்கிறார் ஸ்ரீதாஸர்.

**111. மக்களாடி3ஸுவாக3 மட3தி3யொ**
**ளக்கரதி3 நலிவாக3 ஹய ப**
**ல்லக்கி க3ஜமொத3லாத3 வாஹனவேரி மெரெவாக3 |**
**பி3க்குவாக3 ஆகளிஸுதலி தே3**
**வக்கிதனயன நெனெவுதிஹ நர**
**ஸிக்கனெம தூ3தரிகெ3 ஆவாவல்லி நோடி3த3ரு ||(13-1)**

இந்த சரணத்தில், தினமும் நம் நடவடிக்கைகளில் யார் ஸ்ரீஹரியின் ஸ்மரணையை எப்போதும் செய்து, தான் செய்யும் அனைத்து, த்வந்த்வ கர்மங்களை அவனுக்கு சமர்ப்பிக்கிறார்களோ, அத்தகையவர்கள் எமனின் தூதர்களுக்கு சிக்குவதில்லை என்கிறார். அதற்கு லௌகிகத்தின் சில உதாரணங்களை கொடுக்கிறார். சிறு குழந்தைகளுடன் விளையாடும்போது, மனைவி / கணவனுடன் பேசும்போது, வண்டிகளில் செல்லும்போது என பல்வேறு சமயங்களில், ஸ்ரீஹரியின் ஸ்ரீகிருஷ்ணனின் ஸ்மரணை செய்தால், அவர்கள் எமனிடம் செல்வதில்லை என்கிறார்.

**112. மலகு3வாக3லி ஏளுவாக3லி**
**குளிது மாதாடு3தலி மனெயொளு**
**கெலஸக3ள மாடு3தலி மைதொளெவாக3 மெலுவாக3 |**
**கலுஷதூ3ரன ஸகலடா2விலி**
**திளியெ தத்தன்னாம ரூபதி3**
**ப3ளியலிப்பனு ஒந்த3ரெக்ஷண பி3ட்டலக3லனவர ||(13-2)**

இந்த சரணத்தில்கூட தோஷதூரனான ஸ்ரீஹரியை அனைத்து இடங்களில், அவன் இருக்கிறான் என்பதை நினைத்தால், அவன் அவர்களிடமே இருக்கிறான். ஒரு நொடியும்கூட அவர்களை விட்டு விலகுவதில்லை என்று கண்டிப்பாக சொல்கிறார். அதாவது, மனிதர்களின் தினப்படி செயல்களான படுப்பது, எழுந்திருப்பது, பேசுவது, வீட்டு வேலைகளை செய்வது, ஸ்னானம் செய்யும்போது, உண்ணும்போது என அனைத்து செயல்களை செய்யும்போதும், தவறாமல் ஹரி ஸ்மரணை செய்யுங்கள் என்கிறார்.

**113. தே3வ க3ங்கெ3 யொளுள்ளவகெ3 து3ரி**
**தாவளிக3ளுண்டெ விசாரிஸெ**
**பா1வுக3ள ப4யவுண்டெ விஹகா3தி2பன மந்தி3ரதி3 |**
**ஜீவ கர்த்ருத்வவனு மரெது3 ப**
**ராவரேஷனெ கர்த்ருவெந்த3ரி**
**தா3வ கர்மவ மாடி3த3ரு லேபிஸவு கர்மக3ளு ||(13-7)**

தினமும் கங்கா ஸ்னானம் செய்பவர்களுக்கு, பாவம் இல்லை. கருடத்வஜ நாமகனின் அல்லது கருடனின் ஸ்மரணை செய்தால், பாம்பின் பயம் இல்லை. அதைப் போலவே, ஜீவர்களான நாம் கர்த்ருகள் இல்லை. பரா - லட்சுமி தேவிக்கு தலைவனான பகவந்தனே அனைத்தையும் செய்து செய்விக்கிறான் என்பதை அறிந்து, கர்மங்களை செய்தால், அத்தகையவர்களுக்கு எந்தவித பாவ கர்மங்களும் வருவதில்லை. அல்லது, புண்ணிய கர்மங்களையே செய்பவர்களுக்கு பாவம் வருவதில்லை, கர்மங்கள் அண்டுவதில்லை என்கிறார் ஸ்ரீதாஸர்.

**114. கெண்ட3 காணதெ3 முட்டித3ரு ஸரி**
**கண்டு3 முட்டலு த3ஹிஸதிப்புதெ3**
**புண்ட3ரிகத3லாயதா3க்ஷன விமலபத3பத்3ம**
**ப3ண்டு3ணிக3ளெந்தெ3னிப ப4குதர**
**ஹிண்டு3 நோடி3த3 மாத்ரத3லி தனு**
**தி3ண்டு3 கெ3ட3திஹ நரன பாவனமாள்புதா3க்ஷணதி3 ||12**

சாதாரணமான கன்னட மொழி ஞானம் உள்ளவர்கள் இந்த பத்யத்தை படித்தால் சுலபமாகவே இது புரிந்துவிடுகிறது. இதற்கு எவ்வித விளக்கமும் தேவையில்லை. ஆனால், தாஸர் இங்கு என்ன சொல்ல வந்திருக்கிறார் என்றால், கெண்ட (கங்கு) இதனை நாம் பார்த்து தொட்டாலும், பார்க்காமல் தொட்டாலும் அது சுடுகிறது. அதுவே அதன் புத்தி / ஸ்வபாவம். ஆனால், புண்டரீகாக்ஷனின் நாமத்தை, பாதபத்மத்தை நிரந்தரமாக கொண்டாடிக் கொண்டிருப்பவர்களை பார்த்த உடனேயே நம் பாவங்கள் அனைத்தும் ஓடிப் போகின்றன. அதாவது, பகவத் பக்தர்களின் ஸங்கத்திலேயே இருக்க வேண்டும். அவனின் வசன, உபதேசங்கள் கங்கினைப் போல இருந்து, நம் பாவங்களை சுட்டுப் பொசுக்குகிறது என்று சொல்கிறார் ஸ்ரீதாஸர்.

**115. ஸ்ரீலகுமிவல்லப4னு ஹ்ருத்கீ1**
**லாலஜதொ3ளித்த3கி2ல சேதன**
**ஜாலவனு மோஹிஸுவ த்ரிகு3ணதி3 ப3த்தரனு மாடி3 |**
**ஸ்தூ2ல கர்மதி3 ரதர மாடி3 ஸ்வ**
**லீலெக3ள திளிஸத3லெ ப4வதி3 கு**
**லால சக்ரத3 தெரதி3 திருகி3ஸுதிஹனு மானவர ||16**

லட்சுமிபதியான பகவந்தன் செய்திருக்கும் பெரிய மோசம் என்னவென்றால், அது நமக்குத் தெரியாமல் செய்து, மோஹம் என்னும் பாஷத்தினால் நம்மை கட்டிப் போட்டு ஸாதனை செய்ய வேண்டும் என்கிறான். அதாவது, அனைத்து சேதனர்களில் தான் இருந்து, நமக்கு விஷய பதார்த்தங்களில் மோகத்தை கொடுத்து, நம்மை ஸாத்விக, ராஜஸ,தாமஸ குணங்களில் கட்டிப் போட்டு, இந்த ஸ்தூல ஷரீரத்தை கொடுத்து, அதனை அதில் வைத்து, தன்னுடைய லீலை நாடகத்தை காட்டிக் கொள்ளாமல், எப்படி ஒரு குயவன் தன் சக்கரத்தை சுற்றி, மண் பானைகளை செய்கிறானோ, அப்படியே நம்மை சம்சார சக்கரத்தில் கட்டிப் போடுகிறான். அதாவது, ஸ்ரீஹரியின் நாமஸ்மரணையினால் மட்டுமே இதனை விடுவிடுத்துக் கொள்ளும் முயற்சியை செய் என்கிறார் ஸ்ரீதாஸர். (தொடரும்)

ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப், அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்து சொல்லலாம்.

## இந்த மாத ஆராதனைகள்

**ஸ்ரீவாதிராஜர் (1480-1600)**
தபோ வித்யாவிரக்த்யாதி ஸத்குணௌ காகரானஹம் |
வாதிராஜ குரூன் வந்தே ஹயக்ரீவ பதாஸ்ரயான் ||

வாகீஷதீர்த்தர கரகமல ஸஞ்சாத
யோகி குருராஜ ஹயக்ரீவ தூத |
ராகதி பஜிபர ஸானுராகதி நிருத
ரோக நிவாரிஸி பீதி களெவாத |
ஹூவின கரெயலி அரளித பூவராஹ
பாவி மருதர அவதாரி எனிஸிஹ |
தா விராகியாகி வாதிஸி ஜயிஸிஹ
கோவிதரலி மஹா கோவிதனெனிஸிஹ ||
நூரிப்பத்து வர்ஷ தீர்க்காயு எனிஸி
தரெய ஜனர ஹித கார்ய பயஸி
வர மங்களாங்கஹரி விட்டலன ஸேவிஸி
தரெய தொரெதரு உஸிராட நடெஸி ||

**ஸ்ரீவியாஸராஜர் (1447-1539)**
அர்த்திகல்பித கல்போயம் ப்ரத்யர்த்தி கஜ கேஸரி |
வியாஸதீர்த்த குருர்பூயாத் அஸ்மதிஷ்டார்த்த ஸித்தயே ||

ஸாஸிரஜிஹ்வெகளுள்ள சேஷனே கொண்டாடபேகு
வியாஸமுனிராயர ஸன்யாஸதிரவ |
ஹகலிருளென்னதெ ஆவாக ஸ்ரீஹரி பதபத்ம
யுகளவனர்ச்சிஸி பகுதியிந்த
ரகுபதி ஜனக பிரம்மண்யதீர்த்தர குவர

அந்து பிரம்மண்யதீர்த்தர கரஸஞ்சாத
பரபிரம்மனர்ச்சிஸிதெ த்வாதஷ வர்ஷ ஸதத
பிருந்தாவனதி கோபியந்தெ பந்து பஹு
அந்ததி ந்யாயாம்ருத கடெது

சந்ததி தாண்டவ நருத்யவகெய்து அந்து
சந்திரிகெயலி ஸிரிகிருஷ்ணன பெரெதெ
தந்தெ மங்களாங்கஹரி விட்டலன பாத
குந்தில்லதெ பஜிஸித யதி க்ருபாஸிந்து ||

**ஸ்ரீ தந்தெமுத்துமோகன விட்டலதாசர் (1865–1940)**

முத்துமோஹனதாஸ கரகமல ஸஞ்சாதம்
வரகரிகிரி க்ஷேத்ரவாஸம் |
ந்ருஸிம்ஹ பாதாரவிந்தைக தாஸம்
தந்தெ முத்துமோஹனதாஸ வர்யம் பஜே ||

தாஸதீக்ஷெய பயஸி தாஸரிகெ காதரிஸி
தாஸனெந்தெனிஸலு தம்பூரி கரீதிஸித
தாஸஸ்ரேஷ்டராத தொட்டபள்ளாபுர வாஸி
தாஸரனுக்ரஹ படெது தாஸனெந்தெனிஸித
தந்தெமுத்து மோஹனவிட்டல தாஸரு
தன்ன தனு தொரெத ராமநவமியலி
தந்தெ மங்களாங்க ஹரிவிட்டல ஈஷ
தன்ன தாமவனித்த அனுக்ரஹிஸுதலி ||

| தொடர் | ஹரிதாஸர்களின் சிந்தனைத் துளிகள் |
| --- | --- |
| | ரக்ஷா கவசம் |

சஜ்ஜர்களின் பாதுகாப்பிற்காக ஸ்ரீவிஜயதாசர் இயற்றிக் கொடுத்துள்ள உகாபோகம் அனைவரும் தினமும் படிக்கக்கூடியது.

ஒந்து கையல்லி கட்க ஒந்து கையல்லி ஹலகெ
அந்தவாகி பிடிது தினா ராத்ரியல்லி
பந்து பதியல்லி நித்ய பாராஸனாகி
ஹிந்து முந்துபத்ரவாகதந்தெ
இந்திரேரமண காயுத்தலிரெ எனகாகி
பந்தனகளில்ல தன்ய தன்ய

கந்தர்ப்பனய்ய சிரிவிஜயவிட்டலரேய
எந்தெந்திகாபத்து பரலீசனோ ||

இந்த உகாபோகத்திற்கான பின்புலம் ஒன்று உண்டு. ஸ்ரீகோபாலதாசர் ஒரு முறை உடுப்பி யாத்திரைக்கு புறப்பட்டபோது, முன்னர் அவருக்கு வரவிருந்த பிரச்னைகளைக் கண்டுகொண்ட ஸ்ரீவிஜயதாசர், தமது சிஷ்யருக்கு அன்புடன் எழுதிக் கொடுத்த உகாபோகம் இது. உலகில் பிரச்னைகள் இல்லாதவரே இல்லை. ஆகவே அனைவரும் படிக்கவே வேண்டிய ஹரி ஸ்தோத்திரம் இதுவாகும்.

இங்கு தாசர், கந்தர்ப்பனய்யா என்றது அனிருத்தரூபி ஸ்ரீஹரியை. அனைத்து காலங்களிலும் அனைவரையும் காப்பவன் அவனே. இந்த மூர்த்தியின் ஆயுதங்கள் - சக்ர, சங்கு, வாள் மற்றும் கேடயம்.

உடுப்பி கிருஷ்ணன தருஷனக்கெ அனுஞெயனு கொடபேகெனுதலெ
தடவியாதகெனுதலி ஹரிஸ்துதிய மாடிகொடுத போகிபாரெந்தனு ||
-- தந்தெ கோபாலவிட்டலதாசர்

நம்பிய பக்தர்களின் பிரச்னைகளை தீர்த்து, இஷ்டங்களைக் கொடுக்கும் மந்திர-துல்யமான உகாபோகம் இதுவாகியிருக்கிறது.

‘ஸரக்ஷதா ரக்ஷதி யோ ஹி கர்பே’ என்றதுபோல ஸ்ரீஹரி பிம்பரூபியாக நமக்குள், காலரூபியாக வெளியிலும் இருந்து, எப்போதும் ஜீவர்களை காப்பாற்றுகிறான். ஆனால், அத்தகைய ஆபத்பாந்தவனான ஸ்ரீஹரியை நினைத்து, அழைக்கும் வேலை நமதாக வேண்டும். அப்போது ‘எட பலதி ஹிந்தெ முந்தித்து ரக்ஷிசுவ’ என்பது நிஜமான பொருளைத் தரும்.

தொடர்

**ஹரிதாஸர்களின் சிந்தனைத் துளிகள்**

**நினைவு இருந்தால் போதும்**

பாபகஞ்சேனோ சந்தாபகஞ்சேனோ நானு
பாபி ஜனர பலு கோபகஞ்சேனோ நானு
ஆபத்தினஞ்சேனோ யமன பாஷகஞ்சேனோ
ஷாபகஞ்சேனோ அன்யர பாடமாடெனோ
தாபசரிகொலித ஸ்ரீபதி ஹயவதனன

பாதபதுமத நெனஹொந்தித்தரெ சாகு || --ஸ்ரீவாதிராஜர்

'ஸ்மரணெயொந்தே சாலதே கோவிந்தன' என்றதுபோல, ஸ்ரீவாதிராஜர், ஸ்ரீஹரியின் சிந்தனை எப்போதும் நம்மில் இருந்தால், உலகத்தில் எதற்கும் பயப்படத் தேவையில்லை என்று திடமாக சொல்கிறார். 'ஸ்மரணாதேவ முச்யதே சர்வகல்பிஷ்டை:' என்பது போல, எங்கும் நிறைந்திருக்கும் ஸ்ரீஹரி, அழைத்தவுடன் வந்து காப்பாற்றுவான். இது வெறும் வாக்கியமாக இல்லாமல், ராஜருக்கு அனுபவத்திற்கும் வந்துள்ளது. அதாவது, ஸ்ரீஹரியிடம் திடமான பக்தி வைத்து, உடன் நம்பிக்கையும் வைத்திருந்தார் என்று அனைவரும் அறிவோம். ஸ்ரீஹரியை எப்படி காணவேண்டும் என்றால்:

ஹரி சகுண சாகார சகல சுரரொடெய நி
ர்ஜரரெல்ல ஹரிய கிங்கரரெந்தரியபேகு
மரண ஜனன தோஷகளிகதி தூரதரனெனிப
ஸ்மரணெ சந்தத பேகு துராசார பிடபேகு
சிரிஹயவதன சேஷகிரி அரசன
ஸ்மரணெயித்ததனு சம்சார ஜயவனுத்தரிசுவ ||--ஸ்ரீவாதிராஜர்

ஸ்ரீஹரியின் ஸ்வரூபத்தை அறிந்து, அனைவரும் ஸ்ரீஹரியின் சேவகர்கள், பிறப்பு இறப்பு இல்லாத சர்வஸ்வாமி அவர், இவரின் நிரந்தர ஸ்மரணை சம்சார பந்தத்தை நீக்குகிறது என அறியவேண்டும். இவனிடம் வேண்ட வேண்டியது:

கைவல்யவனீவ நம்ம ஸ்ரீவல்லபன கையிந்த
நீவெல்லக்ஷுத்ரவ பேடி காவிலன போலதிரி
சாவில்லத முகுதி பதவ பேடிகொள்ளிரோ
நோவில்லதந்தெ சுகிசபல்ல கோவிதரெல்லரு
போவில்லனய்ய வெங்கடபதி ஹயவதனய்ய ப
தவல்லதன்யத்ர தாவல்லி பயதப்பது || -- ஸ்ரீவாதிராஜர்

***

தொடர்

## ஹரிகதாம்ருதசார குறுக்கெழுத்துப் போட்டி

## 32. தேவதா தாரதம்ய ஸந்தி விடைகள்

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 ஸ | 32 கு | ண | ன் | ல | 2 ரோ | 33 ம | கூ | 3 ப | ர் | ஜ | ய | ன் | 34 வி | |
| ர | ரு | தி | 22 நி | ம | 4 ஔ | து | ம் | ப | ர | | ம | ண | வ | 23 ல |
| ம | ரா | 24 தா | | யா | 35 க் | 5 ஸ | ர | வ | ஸ் | தி | 46 ஆ | ரு | ஸ் | க்ஷ |
| 36 தா | 37 ய | 25 ஸே | | 47 ஸ் | ரு | ம | 26 தூ | | ஹ | ரு | ன | 27 வ | வா | ண |
| ரே | க்ஷ | பா | ரு | 28 வி | த் | ய | | னை | 6 ஸ | ஸி | 38 தே | வி | ன் | தே |
| ஸ | ப | 7 கா | ளி | ந் | 8 தி | ன | ம | னி | வி | னி | வ | | த | வி |
| 9 மு | தி | ர | ணி | ரு | 10 வா | ரா | ஸி | மி | 48 த் | கி | ஸி | | ந் | |
| | 11 பு | த | ன் | | ஸா | 12 ஸ் | வ | தா | ர | 49 ரோ | ல் | 39 ப் | ய | 40 தொ |
| 13 ஊ | ரு | 14 ப | ணெ | | | | ள் | 50 செ | த | | பி | ரு | 51 ஜ | த |
| ன் | ட | ரு | 15 க | ம் | 41 பு | ள் | க | ர் | க | ய | ஹ் | 29 கு | ம | லு |
| 42 அ | 43 ப் | | ண | | லோ | | ர் | | 52 ந | ர் | | | த் | நு |
| ர் | ய | வ் | த | 30 லா | பி | | 16 க | ல் | கி | ப | | 44 ஸே | கா | டி |
| சி | ரி | | ம | | 17 லோ | ச | ன | | 18 ஆ | 45 ஸு | தோ | ஷ | 53 ந | |
| | 19 ர | மா | ர | க | ஸா | 31 நி | ன் | | | போ | | | | |
| ஹி | வ | ரா | 20 ப் | ர | ஹ | ஸ் | 54 ப | தி | 21 ஸ | த | த் | ரு | தி | |

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்
Haridasa Vijayam - Monthly

மலர் 4 ** April 2023 ** இதழ் 5



மொதலகல்லு ஸ்ரீ ஶேஷ தாஸர்

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 4 : இதழ் 5

**நிர்வாக ஆசிரியர்**
'ஜகன்னாத கேசவ'
சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ
பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross, JP Nagar
4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276.
haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**
' தாச சாகித்ய சேவா ரத்ன'
திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**
திரு. முரளிதர தாசரு,
திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா,
திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

## ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்

## ஏப்ரல் 1 முதல் 30 வரை, 2023

ஏப் 22 : வைசாக சுத்த த்விதியை - ஸ்ரீவேணுகோபால விட்டல தாஸர், அதோனி
ஏப் 23 : வைசாக சுத்த த்ருதியை - ஸ்ரீவிஜயராமசந்திர தாஸர், மைஸூரு
ஏப் 28 : வைசாக சுத்த அஷ்டமி - மொதலகல்லு ஸ்ரீஶேஷ தாஸர்
ஏப்ரல் 29 : வைசாக சுத்த நவமி - ஸ்ரீஷ்யாம ஸுந்தர தாஸர், மானவி

# ஆசிரியர் பக்கம்

இந்த இதழிலிருந்து இரு புதிய தொடர்கள் துவங்கியிருக்கின்றன. முதலாவது, ஆராய்ச்சியாளர் திரு.ஜி. வரதராஜ ராவ் அவர்கள் எழுதிய 'ஹரிதாஸ ஸாகித்ய ஸார' என்னும் மிகப்பெரிய ஆராய்ச்சி நூலின் மொழிபெயர்ப்பு. இந்த புத்தகத்தின் முன்னுரையை அந்த கட்டுரையின் துவக்கத்திலேயே கொடுத்திருக்கிறோம். அனைவரும் கண்டிப்பாக படிக்க வேண்டிய கட்டுரைத் தொகுப்பு / புத்தகம் இது.

அடுத்த புதிய தொடர், ஸ்ரீகனகதாஸர் பற்றிய கட்டுரைகள். இந்தப் புத்தகத்தை எழுதியவர் திரு.வ்யாஸனகெரெ ப்ரபஞ்சனாசார்யர். ஸ்ரீகனகதாஸரின் வாழ்க்கைச் சரிதம், அவரது கிருதிகளைப் பற்றிய பார்வை என பல சிறுசிறு கட்டுரைகள் இந்தப் புத்தகத்தில் உள்ளன. அவற்றை ஒவ்வொன்றாக இந்த இதழிலிருந்து பார்ப்போம்.

கேசவ நாமா மற்றும் ஹரிகதாம்ருதஸார குறுக்கெழுத்து புதிர் ஆகிய தொடர்கள் முடிந்த நிலையில் இந்தத் தொடர்கள் துவங்கியிருக்கின்றன. வழக்கம்போல, பிற தொடர்களும் இந்த இதழில் உள்ளன.

ஏப்ரல் மாதத்தில் நான்கு ஹரிதாஸர்களின் ஆராதனை நாட்கள் வந்திருக்கின்றன. அவர்களின் சரம ஸ்லோகங்களும் கொடுத்திருக்கிறோம். அந்தந்த ஆராதனை நாட்களில், அவரவர்களின் ஸ்லோகங்கள், கீர்த்தனைகள், அவர்களின் வரலாறு ஆகியவற்றை படித்து / பாடி, அவர்களையும், அவர்களின் அந்தர்யாமியான பகவந்தனின் அருளையும் வேண்டிக் கொள்வோமாக.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

**ஹரிதாச விஜயம் மாதப் பத்திரிக்கை ஆண்டுச் சந்தா ரூ.300/-**

தொடர்

## ஸ்ரீராகவேந்திர விஜயம்

## ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர் இயற்றியது

**புருட லோசன ஸ்வர்ண கஶிபு**
**உருடு தை$^{3}$த்யரு ஸர்வ ஜனரன**
**சரட ஹாரிஸி ஸகல லோககெ து$^{4}$க்க$^{2}$ கொடு$^{3}$திஹரு**
**உருடு மாதுக$^{3}$ளல்ல ஶிரத$^{3}$லி**
**கரத$^{3}$ ஸம்புட மாடி$^{3}$ பே$^{3}$டு$^{3}$வெ**
**ஜடர தைத்யர தரிது$^{3}$ பூ$^{4}$மிகெ$^{3}$ ஸுக$^{2}$வ நீடெ$^{3}$ந்தெ$^{3}$ ||3**

புருட லோசன - ஹிரண்யாக்ஷ; ஸ்வர்ண கஶிபு - ஹிரண்யகசிபு; உருடு தைத்யரு - கடுமையான தைத்யர்கள்; ஸர்வ ஜனரன - அனைத்து மக்களையும்; சரட ஹாரிஸி - கஷ்டப்படுத்தி; ஸகல லோகக்கெ துக்க கொடுதிஹரு - கஷ்டத்தை கொடுத்து வருகின்றனர். உருடு மாதுகளல்ல - நான் சொல்வது எதுவும் பொய் / கற்பனை அல்ல; ஶிரதலி கரத ஸம்புட மாடி பேடுவெ - தலை மேல் கை குவித்து வேண்டிக் கொள்கிறேன்; ஜடர தைத்யர தரிது - இந்த கெட்ட தைத்யர்களை அழித்து; பூமிகெ ஸுகவ நீடெந்தெ - பூமிக்கு சுகத்தை அருள்வாயாக, என்னும் பிரம்மனின் வேண்டுகோளை கேட்டு (அடுத்த பத்யத்தில் தொடர்கிறது)

பிரம்மதேவரின் பிரார்த்தனை மேலும் இந்த பத்யத்தில் தொடர்கிறது.

ஹிரண்யாக்ஷ, ஹிரண்யகசிபு என்னும் இரு கடுமையான தைத்யர்கள், அனைத்து மக்களையும் கஷ்டப்படுத்தி, துக்கம் கொடுத்து வருகின்றனர். நான் சொல்வது எதுவும் பொய் / கற்பனை இல்லை. என் தலை மேல் கை குவித்து வேண்டிக் கொள்கிறேன். இந்த கெட்ட தைத்யர்களை அழித்து, இந்த பூமிக்கு சுகத்தை / அமைதியை அருள்வாயாக. என்று பிரம்மன் கேட்க...

**சதுரவத$^{3}$னன வசன கேளீ**
**சதுர பு$^{4}$ஜ தானாத$^{3}$ ஹரியு**
**சதுர தனத$^{3}$லி நானெ ஸம்ஹர மாள்பெ சதுராஸ்ய**
**த்$^{4}$ருததி$^{3}$ நடெ$^{3}$யலோ நின்ன ஸ்தா$^{2}$னகெ**
**யதன மாடு$^{3}$வெ ஷீக்$^{4}$ரவாகி$^{3}$**
**ஜதன மாட$^{3}$லோயன்ன வசனவு எந்தி$^{3}$குஸியல்ல ||4**

சதுரவதனன வசன கேளி - பிரம்மனின் வேண்டுகோளினை கேட்டு; சதுர் புஜ தானாத ஹரியு - சதுர்புஜனான ஸ்ரீஹரி; நானெ - (அவர்களை) நானே; சதுர தனதலி - மிகவும் புத்திசாலித்தனத்துடன்; ஸம்ஹர மாள்பெ - அவர்களை அழிப்பேன்; சதுராஸ்ய - ஹே பிரம்மனே; த்ருததி - கவலைப்படாமல்; நின்ன ஸ்தானகெ - உன் இடத்திற்கு; நடெயலோ - நடப்பாயாக; ஷீக்ரவாகி - வெகு விரைவில்; யதன மாடுவெ - இதற்கான நடவடிக்கைகளை எடுப்பேன்; ஐதன மாடலோ - சந்தேகப்படாதே; என வசனவு - என் வாக்கு; எந்திகுஸியல்ல - என்றும் பொய்க்காது; (ஸத்ய ஸங்கல்ப);

பிரம்மனின் வேண்டுகோளினைக் கேட்டு, பகவந்தன் சொல்வது இந்த பத்யத்தில் உள்ளது.

பிரம்மனின் வேண்டுகோளினைக் கேட்டு, சதுர்புஜனான ஸ்ரீஹரி இவ்வாறு கூறுகிறார். அத்தகைய துஷ்டர்களை, மிகவும் புத்திசாலித்தனத்துடன், நானே அழிப்பேன். ஹே பிரம்மனே, நீ கவலைப்படாமல் உன் இடத்திற்கு செல்வாயாக. வெகு விரைவில் இதற்கான நடவடிக்கைகளை நான் எடுப்பேன். இதில் சந்தேகம் வேண்டாம். என் வாக்கு என்றைக்கும் பொய்க்காது (நான் ஸத்ய ஸங்கல்பன்).

பரித்ராணாய ஸாதூனாம் வினாஷாய ச துஷ்க்ருதாம் |
தர்ம ஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே ||
என்று ஸ்ரீகிருஷ்ணன் பகவத் கீதையில் சொல்லியபடி, கெட்டவர்களை அழிக்க, தர்மத்தை நிலை நாட்ட, ஸ்ரீஹரி தான் அவ்வப்போது அவதாரம் எடுப்பேன் என்று கூறியிருக்கிறார். அதையே இங்கும் சொல்கிறார் என்று எண்ண வேண்டும்.

**தானெ அவதர மாடோ$^3$கோ$^3$ஸுக$^3$**
**ஏனு நெவனவ மாட$^3$லெந்து$^3$**
**நான யோசனமாடி$^3$ யுகுதிய தெகெ$^3$த ஹரி தானு**
**ஸானு ராக$^3$தி$^3$ ஸேவெ மாடு$^3$த**
**தீ$^4$னதொ$^3$ளகி$^3$ருதிப்ப விஷ்வ**
**க்ஸேன நாமக வாயுபுத்ரனு ஶேஷனவதார ||5**

தானெ அவதர மாடோகோஸுக - தானே அவதாரம் செய்வதற்காக; ஏனு நெவெனவ - என்ன காரணத்தை; மாடலெந்து - சொல்லலாம் என்று; நான யோசனமாடி - பற்பல யோசனைகளை செய்து; யுகுதிய தெகெத ஹரி

தானு - ஸ்ரீஹரி ஒரு தக்க வழியை தேர்ந்தெடுத்தான்; ஸானு ராகதி - எப்போதும்; ஸேவெ மாடுத - செய்து கொண்டு வரும்; தீனதொளகிருதிப்ப - பக்தராக இருப்பவரான; விஷ்வக்ஸேன நாமக வாயுபுத்ரனு - விஷ்வக்ஸேன என்னும் வாயுபுத்திரன்; ஶேஷனவதார - இவரில் சேஷனின் ஆவேசமும் இருந்தது; (அடுத்த பத்யத்தில் தொடர்கிறது).

தானே அவதாரம் செய்வதற்காக, என்ன காரணத்தை சொல்லலாம் என்று பற்பல யோசனைகளை செய்து, ஸ்ரீஹரி ஒரு தக்க வழியினை தேர்ந்தெடுத்தான். எப்போதும் தனக்கு சேவை செய்பவரும், பக்தருமான, வாயுபுத்திரனின் மகனான விஷ்வக்ஸேனனை அழைத்து... (இவரில் சேஷனின் ஆவேசமும் இருந்தது).

* ஸ்ரீஹரி ஸ்வரமணன் ஆகிறார். எந்த செயலை செய்வதற்கும் அவருக்கு யாருடைய உதவியும் தேவைப்படுவதில்லை. ஆனால், ஒரு நாடகத்திற்காக, இவ்வாறு சிந்திக்கிறார் எனலாம்.
* விஷ்வக்ஸேனனும் சங்குகர்ணனும் ஒருவரே என்று அறிய வேண்டும். இவருக்கே முன்னர் பிரம்மதேவர் கொடுத்த சாபம் இருந்தது. அந்த சாபத்தை தற்போது அனுபவிக்க வேண்டும் என்பதற்காக, ஸ்ரீஹரி அவரை பூலோகத்திற்கு அனுப்புகிறார்.

**எந்தி3கா3த3ரு நின்னொளிப்பெனு**
**நந்த3த3லெ நா பஞ்ச ரூபதி3**
**குந்த3த3லெ தா மினுகு3திப்பது3 ப்ராணநாவேஶ**
**பொந்தி3 ஶோபி4தனாகி3 ஈ புர**
**தி3ந்த3 ஜாக்3ரதி3 பூ4மிதளகே**
**இந்து3 நீ நடெ3யெந்து3 ஸ்ரீஹரி நுடி3த3 தூ3தனிகெ3 ||6**

எந்திகாதரு நின்னொளிப்பெனு - நான் எப்போதும் உன்னில் இருப்பேன்; நந்ததலெ - குறையாமல் (விலகாமல்); நா பஞ்ச ரூபதி - நான் அனிருத்தாதி பஞ்ச ரூபத்தில்; குந்ததலெ தா - என்றைக்கும் குறையாமல்; மினிகுதிப்பனு - ஒளிர்ந்து கொண்டிருக்கும்; ப்ராணநாவேஶ - பிராணதேவரின் ஆவேசம் இருக்கும்; பொந்தி - இவற்றை அடக்கிக் கொண்டு; ஶோபிதனாகி - ஒளி பொருந்தியவாறு; ஈ புரதிந்த - இந்த உலகிலிருந்து; ஜாக்ரதி - பத்திரமாக; பூமிதளகெ - பூமிக்கு; இந்து நீ நடெயெந்து - இன்று நீ நடப்பாயாக என்று; தூதனிகெ - தன் தூதனுக்கு; ஸ்ரீஹரி நுடித - ஸ்ரீஹரி கூறினான்;

அந்த விஷ்வக்ஸேனனிடம் ஸ்ரீஹரி இவ்வாறு கூறுகிறார்.

நான் எப்போதும், அனிருத்தாதி பஞ்ச ரூபத்தில் உன்னில் இருப்பேன். என்றைக்கும் குறையாமல் பிராணதேவரின் ஆவேசமும் உன்னில் இருக்கும். இவற்றை வைத்துக்கொண்டு, நீ பூமிக்கு இன்று செல்வாயாக என்கிறார்.

**ஸ்வாமி லாலிஸோ நின்ன ஶுபதம**
**தா4ம ஶிரி வைகுண்ட2தி3ந்த3லி**
**ஆ மஹத்தர து3க்க2 நீடு3வ லோக நானொல்லெ |**
**ஸ்ரீ மனோஹர தூ3தனொசனவ**
**ஸீமவில்லதெ3 எனகெ3 நுடி3த3தி**
**தாமஸாத்மக தை3த்ய குலத3ல்லி ஜனிஸு போகெ3ந்த3 ||7**

அந்த தேவதை இவ்வாறு சொல்கிறார். ஸ்வாமி லாலிஸோ - ஹே ஸ்வாமியே, கேள்; நின்ன ஶுபதம தாம - உன் சுபங்களை தரக்கூடிய இருப்பிடமான; ஶிரி வைகுண்டதிந்தலி - ஸ்ரீவைகுண்டத்திலிருந்து; ஆ - அந்த; மஹத்தர துக்க நீடுவ - அதிகமான துக்கத்தை தரக்கூடியதான; லோக நானொல்லெ - உலகிற்கு (பூலோகத்திற்கு) நான் போக மாட்டேன்); ஸ்ரீமனோஹர - ஸ்ரீஹரியானவர்; தூதனொசனவ - தூதனின் வசனத்தை (கேட்ட ஸ்ரீஹரி, இவ்வாறு கூறுகிறார்); அதி தாமஸாத்மக தைத்ய குலதல்லி - மிகவும் தாமஸாத்மகமான தைத்ய குலத்தில்; ஜனிஸு - பிறப்பாயாக; ஸீமவில்லதெ எனகெ நுடித - எல்லையில்லாமல் (தொடர்ந்து) என்னை புகழ்வாயாக; போகெந்த - (என்று) கூறினார்.

ஸ்ரீஹரியின் ஆணையைக் கேட்ட விஷ்வக்ஸேனன் (சங்குகர்ணன்) இவ்வாறு கூறுகிறார். ஹே ஸ்வாமியே கேள். சுபங்களை தரக்கூடிய உன்னுடைய இருப்பிடமான ஸ்ரீவைகுண்டத்திலிருந்து, அந்த அதிகமான துக்கங்களை தரக்கூடிய் உலகிற்கு (பூலோகத்திற்கு) நான் செல்ல மாட்டேன். இதனைக் கேட்ட ஸ்ரீஹரி இவ்வாறு கூறுகிறார். மிகவும் தாமஸாத்மகமான தைத்ய குலத்தில் பிறப்பாயாக. அப்படி பிறந்தாலும், நீ தொடர்ந்து என்னை புகழ்வாயாக. இப்போது செல் - என்றார்.

**என்ன ஶாபத3லிந்த3 நீ த்வர**
**முன்ன புட்டெலோ தை3த்யராக்3ரணி**
**ஸ்வன்ன கஶிபுன த4ர்மஸதியள ஜட2ர மந்தி3ரதி3**
**நின்னகோ3ஸுக3 நானெ நரம்ருக3**
**க4ன்ன ரூபவ தாளி அஸுரன**

**சென்னவாகீ$^{3}$ ஸதெ$^{3}$து$^{3}$ லோகதீ$^{3}$ கீர்த்தி நினகி$^{3}$ப்பெ ||8**

ஸ்ரீஹரி அந்த தேவதையிடம் இவ்வாறு கூறுகிறார். என்ன ஶாபதலிந்த - என்னுடைய சாபத்தின் பலனாக; நீ த்வர முன்ன - வெகு விரைவில் (சீக்கிரமாக); தைத்யராக்ரணி ஸ்வன்ன கஸிபுன - தைத்யர்களில் முதன்மையானவனான ஹிரண்யகசிபுவின்; தர்மஸதியள - மனைவியின் (கயாது); ஜடர மந்திரதி - வயிற்றில்; புட்டெலோ - சென்று பிறப்பாயாக; நின்னகோஸுக - உனக்காக (உனக்கு அருள்வதற்காக); நானெ - நானே; நரம்ருக கன்ன ரூபவ தாளி - ஸ்ரீ நரசிம்மனாக சிறப்பான அவதாரத்தை எடுத்து; அஸுரன - அந்த ஹிரண்யகசிபுவை; சென்னவகி ஸதெது - நன்றாக வதம் செய்து; லோகதி - உலகத்தில்; கீர்த்தி நினகிப்பெ - உனக்கு புகழினைத் தருவேன்.

ஸ்ரீஹரி தொடர்ந்து இவ்வாறு கூறுகிறார். என்னுடைய சாபத்தின் பலனாக நீ சீக்கிரமாக சென்று, தைத்யர்களில் முதமையானவனான ஹிரண்யகசிபுவின் மனைவியின் வயிற்றில் பிறப்பாயாக. உனக்காக (உன்னை அருள்வதற்காக) நானே ஸ்ரீ நரசிம்ம அவதாரம் எடுத்து, அந்த ஹிரண்யகசிபுவை வதம் செய்து, உலகத்தில் உனக்கு புகழினைத் தருவேன்.

* நாரஸிம்ஹனெம்போ தேவனு என்னும் கீர்த்தனையில் ஸ்ரீபுரந்தரதாஸர் இவ்வாறு ஒரு பத்தியில் சொகிறார்.
நவமாஸகளு தும்பலு கயாது ஆக புத்ர ரத்னவன்னு படெதளு
நாமகரணவன்னு மாடி விப்ரரன்னு கரெஸி பேக
தைத்ய தன்ன சுதனிகெ பிரகலாதனெந்து கரெஸிதனு

* பிரகலாதனின் அழைப்பிற்கு நான் வந்தேன்; அசுரர்களை வதம் செய்தேன் -- என்று சொல்லி, ஹிரண்யகசிபுவின் வதத்தின் கீர்த்தியை உனக்கு தருகிறேன் என்றார் ஸ்ரீஹரி. (தொடரும்)

***

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

### நாட்டுப்புற பண்களின் அம்சங்கள்

**திருமதி. சி.எஸ். அருணா காந்தனவர**

பதனரிது நுடியலும் நுடி
துதனரிதாரயலு மார்பரா நாடவர்கள் |
சதுரர் நிஜதிம் குரிதோ
ததெயும் காவ்ய ப்ரயோக பரிணத மதிகள் ||

கர்னாடகத்து கிராமிய அல்லது நாட்டுப்புற மக்களின் லட்சணங்களை, கவிராஜ மார்க்க இப்படியாக வர்ணித்திருக்கிறார். கிராமத்து மக்கள், தாம் என்ன பேசுகிறோம் என்பதை நன்றாக தெரிந்து அதன்படி பேசுகின்றனர். அறிவாளிகளான அவர்கள், படிக்காதவர்களாக இருந்தாலும், காவியங்களை இயற்ற வல்லவர்களாக இருந்தனர் என்கிறார். அப்படி அவர்கள் இயற்றிய நாட்டுப்புற பாடல்கள், வாய்வழியே பரவி, இன்றுவரை நமக்குக் கிடைக்கிறது. எளிமையான எதுகை, மோனையில் இயற்றப்பட்ட அத்தகைய பாடல்கள், கிராமத்து பெண்களின் வாய்களில் நாட்டியமாடியவாறு இருந்தன. கிராமத்து மக்கள் இத்தகைய பாடல்களைப் பாடியவாறு, வயல் வேலைகளை செய்து, தங்கள் பன்றி, ஆடு, மாடுகளை மேய்ப்பவர்களாகவும் இருந்தனர். குத்தி, அரைக்கும்போது பாடும் பாடல்கள், சோபானே பாடல்கள், லாவணிகள் என பல்வேறு விதமான பாடல்கள் நம்மிடையே இன்றும் இருக்கின்றன.

ஆன்மிக விஷயங்கள், கோயில், மடங்களிலேயே தங்கிவிட்ட போது, அவை பொது மக்களுக்கும் போய் சேரவேண்டும் என்ற நிலை வந்தது. இதைக் கண்ட மஹனீயர்கள் அதனை பாடல்களில் வழியில் மக்களிடையே கொண்டு போய் சேர்த்தனர். ஹரிதாச பரம்பரை துவங்கி, ஒவ்வொருவரின் வீட்டிலும் பரவி, பக்தியின் பிரவாகம் தொடங்கியது. இப்படி பிறந்து வளர்ந்த ஹரிதாச சாகித்யத்திற்கும், நாட்டுப்புற பண்ணிற்கும் நெருங்கிய சம்பந்தம் இருக்கிறது.

ஸ்ரீஜகன்னாததாசரின் சாகித்யங்களில் காணப்படும் நாட்டுப்புற அம்சங்களை இந்தக் கட்டுரையில் எடுத்துக் காட்டுகிறேன். குக்கிராமமான பாக்யவாடத்தில் பிறந்திருந்தாலும், தன் சிறு வயதை ஸ்ரீனிவாசாசார்யர், மந்திராலயத்தில் ஸ்ரீமடத்தில், சம்ஸ்கிருத சூழ்நிலையிலேயே கழித்தார். மிகச்சிறந்த அறிஞரான அவர்,

மானவியில் தங்கி, பாட பிரவசங்களில் நேரத்தை செலவழித்தாலும், சாதாரண மக்களின் அருகில் / நெருக்கத்தில் இருக்கவில்லை. பின், ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீகோபாலதாசரின் அருளால், ஜகன்னாததாசர் ஆனார். லௌகிக ஞான, அனுபவங்களைப் பெற்று, சாதாரண மக்களுடன் நெருங்கிப் பழகி, வாழ்க்கையை நடத்தினார். அவரிடமிருந்த ஆன்மிக ஞானமானது, கன்னட மொழியில் சரளமாக பொங்கி வழிந்தது. மிகச்சிறந்த சாகித்யம் எனப்படும் ஜகன்னாததாசரின் கிருதிகளில் அங்கங்கு நாட்டுப்புற அம்சங்கள் காணப்படுகின்றன.

நாட்டுப்புற அல்லது கிராமிய மொழியை அவர் தமது கிருதிகளில் அவர் முழுமையாக பயன்படுத்தாவிட்டாலும், சில சிறந்த கிராமிய சொற்பிரயோகங்களை அவர் பயன்படுத்தியிருப்பதைக் காணலாம். கிராமத்து மக்களின் நடவடிக்கைகள், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றை அவரது பதங்களில் பார்க்கலாம்.

ஸ்ரீஜகன்னாததாசரின் மகனான தாமோதரன், எதிர்பாராத மரணத்தை அடைந்ததால், மருமகள் கோபம்ம, கைம்பெண் வாழ்க்கையை நடத்த வேண்டியதாயிற்று. அவருக்காக சுமார் 700 நுடிகளைக் கொண்ட பாராயண கிரந்தமான தத்வ சுவ்வாலியை, தாசர் இயற்றினார். இது நாட்டுப்புற வகையில், த்ரிபதி (மூன்று வரிகள்) சந்தஸ்ஸில் இருக்கிறது. இதில் 454 நுடிகள் இன்று கிடைக்கின்றன. இது கோபம்மாவுக்கு மட்டுமல்லாமல், ஆன்மிக அறிவிற்காக, மோட்சத்தை அடைவதற்கான வழியாக இருக்கிறது. இந்த கிரந்தத்தின் ஒரு நுடி இப்படி இருக்கிறது.

பூதனாதன குணவ ப்ராத: காலதலெத்து
ப்ரீதி பூர்வகதி படிசுவ | வர ஜக
ந்னாத விட்டலனு சலஹுவ || (தத்வசுவ்வாலி)

நாட்டுப்புறப் பாடலின் மெட்டிலிருக்கும் சிறப்பினை ஒத்திருக்கும் இந்தப் பாடலில், ஜகன்னாத விட்டலனை நினைக்கும்போது, இதேபோன்றதொரு இன்னொரு பாடலும் நினைவுக்கு வருகிறது.

பௌகாக நானெத்து யார்யார நெனெயலி
எள்ளு ஜேகிரி பௌவந்த | பூதாய்ன
எத்தொந்து களிகெ நெனெதேன ||

என்று எழுந்தவுடன் பூதேவியை நினைத்தவாறு, தம்முடைய தினப்படி வேலையைத் துவக்குகிறார். இப்படி கிராமத்திய வாழ்க்கையினை நாட்டுப்புறப் பாடல்களில் சிறப்பாக வெளிப்படுவதைக் காணலாம்.

‘தவரூர தாரியல்லி கல்லில்ல முள்ளில்ல. சாசிவெயஷ்டு மரளில்ல’. பிறந்தவீட்டினை விரும்பும் பெண்களை, அங்கு வரச்சொல்லும்போது, கணவனை விட்டு எப்படி வரமுடியும் என்று கவலைப்படுகின்றனர். அவளின் தாம்பத்யம் எவ்வளவு அன்னியோன்யமாக உள்ளது என்று சொல்கிறார்.

ஹச்சடத பதராக அச்ச மல்லிகெ ஹூவ
பிச்சி நன மைலி சுரிவந்த |ராயன
பிட்டிங்க பரலே ஹடதவ்வ ||

இத்தகைய சிருங்கார பாவத்தை தாசரின் ருக்மிணி விலாசத்தில் காணலாம்.

ஹே ராஜ கன்னிகெ பூரமண நானல்ல
வாரிதியொளகித்து பதுகுவ |வகெ மருளாதி
நாரதன நுடிகெ நளினாக்ஷி || (தத்வசுவ்வாலி)

என்று ருக்மிணியை கேலி பேசிய ஸ்ரீகிருஷ்ணன், தன்னைப் போல் செல்வந்தனைக் கண்டு மயங்கியவளே லட்சுமி என்கிறான். அதைக் கேட்டு பொறுக்காத ருக்மிணி பின்வருமாறு பதிலளிக்கிறாள்.

ஈ மாத கேளி கை சாமரவனீடாடி
பூமிகொரகிதளு புகிலெந்து |புலகிதா
காமினிய கண்ட கமலாக்ஷ || (தத்வசுவ்வாலி)

இப்படி பொய்க் கோபத்தைக் காட்டிய மனைவியை, ஸ்ரீஹரி எப்படி சமாதானப்படுத்துகிறான் என்றால்,

கங்கெட்டளெந்து தன்னங்கனெய பிகிதப்பி |
மங்குருள தித்தி முத்திஸி |மாதாட்த
கங்களஸ்ருகள ஒரெசுத்த || (தத்வசுவ்வாலி)

சலிகெ மாதின பகெய திளியதலெ ஹீகெ சம்
சலவன்னைதுவரெ சபலாக்ஷி |ஏளெந்து
தலெய மேலிட்டு கர பத்ம || (தத்வசுவ்வாலி)

வேடிக்கைக்காக மட்டுமே தான் இப்படிச் சொன்னதாக ஸ்ரீஹரி சொன்னதும், சமாதானமடைந்த ருக்மிணி மறுபடி மகிழ்ச்சியுடன் அவனின் பாதம் பணிகிறாள்.

ஜகதேக மாதெ கை முகிது லஜ்ஜெயலாக
முகுளு நகெ சூஸி மாதாடி |தளு பதிய
மோகவ நோடுதலி நளினாக்ஷி || (தத்வசுவ்வாலி)

இப்படி ருக்மிணி விலாசத்தை, நாட்டுப்புறக் கதைகள் பயன்படுத்தப்படும் த்ரிபதி நுடியில், அனைவருக்கும் புரியுமாறு மிகவும் எளிமையாக விளக்கியிருக்கிறார், ஸ்ரீஜகன்னாததாசர். வாரிதி, நளிநாக்ஷி, காமினி, கமலாக்ஷி, கங்களஷ்ரு, கரபம்ம – இத்தகைய பெயர்கள் கிராமங்களில் பட்டப்பெயர்களாக பயன்படுத்தப்படுகின்றன. தன்னைக் காப்பாற்றுபவனை நேசித்தல், உச்சி முகர்ந்து கொஞ்சுதல், ஆசையுடன் பேசுதல், புன்முறுவல் பூத்தல் – என்கிற வாக்கியங்கள் கிராமத்து மக்களிடையே பிரபலமாக இருக்கின்றன. இது தெள்ளத்தெளிவாக நாட்டுப்புறப் பாணியில் இருந்தாலும், இதிலேயே அற்புதமான கருத்துகளை விளக்கியிருக்கிறார் ஸ்ரீஜகன்னாததாசர்.

நாட்டுப்புற இலக்கியங்களில் தூளாக்குதல், வீசுதல் என்னும் சொற்கள் பயன்பாட்டில் உள்ளன. வீசும் முறத்தில் உள்ளவை காலியானாலும், அவர்கள் பாடும் பாடல்கள் எப்போதும் தீர்வதில்லை என்பது அவர்களின் பெருமையை பறைசாற்றுகிறது.

இவற்றை தினப்படி வேலைகளாக்கிக் கொண்டு, தாம் சொல்லவந்த தத்வங்களை மிக எளிமையாக வெளிப்படுத்தியிருக்கிறார் ஸ்ரீஜகன்னாததாசர்.

அஞ்ஞானவெம்போ தான்ய ஒரளிகெ ஹாகி
சுஞ்ஞானவெம்போ ஒனகேலி |பாபகள
நுக்கு மாடிதேயோ களிக்யாகெ || (தத்வசுவ்வாலி) (தொடரும்)

ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப் அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்துச் சொல்லலாம்.

தொடர்

## ஹரிகதாம்ருதசார மஞ்சரி 360

By ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர்

**116. வேத3 ஸாஸ்திர விசாரகை3து3 நி**
**ஷேத4 கர்மவ தொரெது3 நித்யதி3**
**ஸாது4 கர்மவ மாள்பரிகெ3 ஸ்வர்க்கா3தி3 ஸுக2வீவ |**
**ஜதிஸுவ பாபிக3ள நிரயவ**
**கே2த மோத3 மனுஷ்யரிகெ3 து3**
**ர்வாதி3 க3ளிக3ந்த4ந்த1மதி3 மஹது3க்கக3ணனுணிப ||(13-17)**

விதி நிஷேதங்களை தெரிவிக்கும் ஸ்ரீதாஸர், இந்த சரணத்தில் வேத சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளவற்றை அப்படியே பின்பற்ற வேண்டும். இவ்வாறு செய்வதால், ஸ்வர்க்காதிபதியின் உலகத்தில் நமக்கு பிரவேசம் உண்டு. அதனை பின்பற்றாமல் விட்டுவிட்டு, இதில் சந்தேகம் கொள்ளும் துர்வாதிகளுக்கு (மனிதர்களுக்கு) அந்தம்தமஸ்ஸே கிடைக்கிறது, அவர்களுக்கு மிகப்பெரிய துக்கமே கிடைக்கிறது என்கிறார் ஸ்ரீதாஸர். அதாவது, இந்த நாமஸ்மரணை சந்தியில் சொல்லப்பட்டிருக்கும் விதிகளை, சரியான முறையில், நம் யோக்யதைக்கேற்ப நடத்தினால், ஸ்வர்க்காதி உலகம் கிடைக்கும், இதனை புறக்கணித்தால் அந்தம்தமஸ் கிடைக்கும் என்கிறார்.

**117. க4னக3தனு தானாகி3 நாரா**
**யணனு தன்னாமத3லி கரெஸுவ**
**வனத3 க3ர்ப்போ4த3கதி3 நெலெஸிஹ வாஸுதே3வாக்2ய |**
**த்4வனி ஸிடி3லு ஸங்கர்ஷணனு மி**
**ஞ்சினொளு ஸ்ரீப்ரத்3யும்ன வ்ருஷ்டிய**
**ஹனிக3ளொள க3னிருத்த3னிப்பனு வர்ஷனெந்தெ3னிஸி ||(13-23)**

மேகத்தில் நாராயணனும், நீர் கொண்ட கார்மேகத்தில் வாஸுதேவனும், இடிகளில் சங்கர்ஷண நாமகனும், மின்னல்களில் ஸ்ரீ பிரத்யும்னனும், மழைத்துளிகளில் அனிருத்தனும் இருந்து, உலகிற்கு மழையை கொண்டு வருகிறான் ஆகையால், இப்படியான மழையை வருஷ என்று அழைக்கிறோம் என்கிறார். மழையானது வெறுமனே விழுவதில்லை. அதில் அந்தர்யாமியாக வாசுதேவ, சங்கர்ஷண, ப்ரத்யும்ன, மற்றும் அனிருத்தனாக 5 ரூபங்களில் தானே

இருந்து, தத்வாபிமானிகளின் மூலம், உலகிற்கு மழையை பொழிய வைக்கிறான் என்று அறிய வேண்டும் என்கிறார்.

**118. தே$^3$வ ரிஷி பித்ருக$^3$ளு கா$^3$யக**
**தே$^3$வ நர நர த$^3$னுஜ கோ$^3$ஜ க$^2$**
**ராவி மொத$^3$லாத$^3$கி$^2$ல சேதனபோ$^4$க்$^3$ய ரஸக$^3$ளனு |**
**யாவத$^3$வயவ க$^3$ளொளகி$^3$த்து$^3$ ர**
**மாவரனு ஸ்வீகரிப யாவ**
**ஜ்ஜீவ க$^3$ணக்கெ ஸ்வயோக்$^3$ய ரஸக$^3$ளனீய நெந்தெ$^3$ந்து$^3$ ||(13-29)**

ஸாதகர்களான மானவர்கள் தினப்படி செய்யும் பிரம்மயக்ஞாதிகளில் கொடுக்கும் தேவ ரிஷி பித்ரு தர்ப்பணாதிகளை தான் ஏற்றுக் கொண்டு, அவரவர்களுக்கு தக்கதான ரஸங்களை அந்தந்த ஜீவர்கள் எங்கு இருந்தாலும், அவர்களுக்கு தான், ஸ்வாக்ய ரஸத்தினை மட்டும் ஏற்றுக்கொண்டு, ப்ரஸாதத்தின் ரூபத்தில் அவரவர்களுக்கு ரஸரூபத்தில் ஆகாரத்தை கொடுக்கிறான் என்று அறிய வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர். இதுவே அவனுடைய ஸ்வாதந்த்ர்யம். அதாவது, பிரம்ம யக்ஞம், தில தர்ப்பணம், சிரார்த்தம் முதலான பித்ரு காரியங்களில், நீங்கள் இங்கு எதனை சமர்ப்பணம் செய்கிறீர்களோ, ஸ்ரீஹரி அதில் இருக்கும் ஸ்வாக்ய ரஸத்தினை ஏற்றுக்கொண்டு, அந்தந்த ஜீவர்களுக்கு அவரவர்களின் யோக்யதைக்கேற்ப அவற்றை கொடுக்கிறான் என்று அறிய வேண்டும் என்று சொல்லியவாறு, மேற்கூறிய எந்த வேலைகளியும் வீண் அல்ல, அந்தந்த செயல்களை செய்தே ஆகவேண்டும் என்கிறார்.

**119. ஹரிகதா஽ம்ருத ஸாரவிது$^3$ ஸ**
**ந்தரு ஸதா$^3$ சித்தயிஸுவுது$^3$ நி**
**ஷ்டுரிக$^3$ளிகெ$^3$ பிஷுனரி க$^3$யோக்$^3$யரிகி$^3$த$^3$னு பேளத$^3$லெ |**
**நிருத ஸத்$^3$ப$^4$க்தியலி ப$^4$க$^3$வ**
**ச்சரிதெக$^3$ள கொண்டா$^3$டி$^3$ ஹிக்கு$^3$வ**
**பரம ப$^4$கவத்$^3$தாஸரிகெ$^3$ திளிஸுவுது$^3$ ஈ ரஹஸ்ய ||(13-32)**

இந்த கிரந்தத்தினை, பகவத் தாஸர்களுக்கு (அதிகாரிகளுக்கு) மட்டுமே இந்த ரகசிய விஷயத்தை (இஷ்டப்படுபவர்களுக்கு மட்டும்) சொல்ல வேண்டும் என்கிறார். அயோக்யர்களுக்கு,

நிராஸக்தர்களுக்கு, அபிமானம் இல்லாதவர்களுக்கு இதனை சொல்லக்கூடாது. இதற்கு காரணம் இது ரகசிய விஷயம்.

**120. ஸத்யஸங்கல்பனு ஸதா$^3$ ஏ**
**நித்துதெ$^3$ புருஷார்த்தவெந்த$^3$ரி**
**த$^3$த்யதி$^4$க ஸந்தோஷதி$^3$ம் நெனெவுத்த பு$^4$ஞ்சிபுது$^3$ ।**
**நித்ய ஸுக$^2$ஸம்பூர்ண பரமஸு**
**ஹ்ருத்தம ஜகன்னாத$^2$விட்டல**
**ப$^3$த்திஸி ப$^4$வாம்பு$^3$தி$^4$ய சித்ஸுக$^2$வ்யக்தி கொடு$^3$திப்ப ||(13-33)**

பகவந்தன் ஸத்ய ஸங்கல்பன். அவன் எந்த காலத்திற்கு எதை கொடுக்கிறானோ, அதனையே மகிழ்ச்சியுடன் நாம் ஏற்றுக் கொள்ள வேண்டும். நித்ய ஸுகியான ஸ்ரீஹரி, ஜகன்னாத விட்டலனை இப்படியாக நினைத்தால், சம்சாரம் என்னும் இந்த கடலினை தாண்டி, அவரவர்களின் யோக்யதைகேற்ப ஸ்வரூப சுகத்தினை கொடுக்கிறான். இவ்வாறாக ஹரி நாமஸ்மரணையை நிரந்தரமாக செய்ய வேண்டும் என்னும் செய்தியை / உபதேசத்தினை செய்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

**121. க்ருதிரமண ப்ரத்$^3$யும்ன வஸுதே$^3$**
**வதெக$^3$ள அஹங்கார த்ரயதொ$^3$ளு**
**சதுரவிம்ஷதி ரூபதி$^3$ந்த$^3$லி போ$^4$ஜ்யனெனிஸுவனு ।**
**ஹுதவஹாக்ஷாந்தர்க$^3$த ஜயா**
**பதியு தானெ மூரதி$^4$க த்ரிம்**
**ஷதி ஸுரூபதி$^3$ போ$^3$க்த்ரு எனிஸுவ போ$^3$க்த்ருக$^3$ளொளித்து$^3$ ||(14-1)**

க்ருதிபதியான ப்ரத்யும்ன நாமக ஸ்ரீஹரி, வஸுகணர் என்னும் 8 மக்களின் அஹங்காரிகராகி, வைகாரிக, தைஜஸ, தாமஸ பேதத்தினால் 8*3=24 ரூபங்களில் இருந்து, போஜன பதார்த்தங்களில் இருந்து போஜ்யன் எனப்படுகிறான். பித்ருகளில் இருக்கும் ருத்ரகணத்தில், அக்னி அந்தர்யாமி ஜயாபதி சங்கர்ஷணன் 11*3=33 ரூபங்களில் இருந்து, அன்னத்தை போக்த்ருகளில் இருக்கிறான். போக்த்ரு என்றால், அவனே ஏற்றுக் கொள்கிறான் என்று அறி என்கிறார் ஸ்ரீதாஸர். அதாவது, உண்ணும் அன்னங்களில் 24 ரூபத்தினால் ப்ரத்யும்ன நாமகனாக, உண்பவர்களில் 33 ரூபங்களால் இருக்கிறான் என்று அறிந்தால், அதுவே நாம் செய்யத்தக்க ஸாதனை என்கிறார் ஸ்ரீதாஸர்.

**122. ஸ்வவஷ நாராயணனு தா ஷ**
**ண்ணவதி நாமதி[3] கரெஸுதலி வஸு**
**ஷிவ தி[3]வாகர கர்த்ரு கர்ம க்ரியெக[3]ளொளகி[3]த்து[3] |**
**நெனவவில்லதெ[3] நித்யத[3]லி த**
**ந்னவரு மாடு[3]வ ஸேவெகை[3]கொ**
**ண்ட[3]வர பித்ருக[3]ளிகீ[3]வ நந்தா[3]னந்த[3] ஸுக[2]க[3]ளனு ||(14-3)**

ஸ்வ=ஸ்வதந்த்ரனான வஷ = யாருக்கும் வசமாகாதவன். அதாவது, ஸ்வதந்த்ரனான பகவந்த நாராயணன் 96 என்று அழைத்துக்கொண்டு, அதாவது, வசு = 8*3=24, சிவ = 11*3=33, திவாகர 'சூர்ய' = ஆதித்ய 12*3=36, என 24+33+36=93 ரூபங்களில், ப்ரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ ரூபங்களால், கத்ரு, கர்ம, க்ரியெ என இந்த 3 கர்மங்களால் அதாவது 93+3=96 ரூபங்களில், தினம்தோறும் ஜீவிகள் செய்யும் சேவைகளை மூல நாராயணன் ஏற்றுக் கொண்டு, பித்ருகளுக்கு அனந்தானந்த சுகத்தை கொடுக்கிறான். அதாவது, பித்ருகளின் (தந்தை தாய்களுக்காக நாம் செய்யும் சிராா்த்தாதி மற்றும் மற்ற எந்தவொரு பெயரில் செய்யும் செயல்களும்), சிரார்த்த கர்மங்களையும், ஒரு ஆண்டில் 96 சிரார்த்த தினங்களை செய்ய வேண்டும். அதனை யார்யார் எப்படி செய்தாலும், அதனை மூல நாராயணன் தான் ஏற்றுக்கொண்டு, அவரவர்களின் பித்ருகளுக்கு ஆகாரமாக பிரித்துக் கொடுக்கிறார் என்று அறிய வேண்டும். அதாவது, இங்கு நீங்கள் அவர்களின் பெயரில் செய்யும் எதுவும் வீண் ஆவதில்லை. மேலும் இவற்றை நிரந்தரமாக செய்ய வேண்டும் என்னும் விதியையும் ஸ்ரீதாஸர் குறிப்பிடுகிறார்.

**123. ஸூஜி கரத[3]லி பிடி[3]து[3] ஸமரவ**
**நா ஜயிஸுவெனு எம்ப[3] நரன**
**ந்தீ[3] ஜக[3]த்தினொளுள்ள அஞ்ஞானிக[3]ளு நித்யத[3]லி |**
**ஸ்ரீஜகத்பதி சரணயுக[3]ள ஸ**
**ரோஜ ப[4]க்தி ஞானபூர்வக**
**பூஜிஸதெ[3] த[3]ர்மார்த்த[4] காமவ ப[3]யஸி ப[3]ளலுவரு ||(14-16)**

போர்க்களத்தில் குண்டூசியை பிடித்துக்கொண்டு, எதிரிகளை நான் கொல்வேன் என்றால், அது எவ்வளவு நகைச்சுவையான விஷயமோ, அதைப் போல, பகவந்தனை ஞான, பக்தி, வைராக்கியத்தினால், அனுசந்தானத்துடன் பூஜை செய்யாமல், நமக்கு சதுர்வித பல

புருஷார்த்தங்கள் எப்படி கிடைக்கும்?. அதாவது, பலன்களை எதிர்ப்பார்க்காமல் பகவந்தனை, ஞான பக்தி வைராக்கியத்துடன் சிந்திக்க வேண்டும் என்று விதியை இங்கு விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

**124. எரடு3 வித3த3லி லோகதொ3ளு ஜீ**
**வருக3ளிப்பரு ஸந்தத க்ஷரா**
**க்ஷர விலிங்க3 ஸலிங்க3 ஸ்ருஜ்யாஸ்ருஜ்ய பே4த3த3லி |**
**கரெஸுவுது3 ஜட3 ப்ரக்ருதி ப்ரணவா**
**க்ஷர மஹத்தனு காலனாமதி3**
**ஹரிஸஹித பே4த3கள பஞ்சக ஸ்மரிஸு ஸர்வத்ர ||(14-23)**

பகவந்தன், வாயுதேவர், ருஜு கணஸ்தர் அனைவரும் பஞ்சகப்ரியர்கள். அது எப்படியெனில், உலகத்தில் ஜீவர்கள் இரு விதம். 1. க்ஷர 2. அக்ஷர (அழிவில்லாத ஸ்ரீஹரி & ரமாதேவி). விலிங்க = விரஜா ஸ்னானத்திற்குப் பிறகு லிங்க தேக நாசம் உள்ளவர்கள். ஸலிங்க = லிங்கதேக முக்தர்கள். ஸ்ருஷ்டிக்கு வந்தவர்கள், ஸ்ருஷ்டிக்கு வராதவர்கள் என்னும் பேதம் இருக்கிறது என்று அறிந்து, இந்த அனைத்து செயல்களையும் ஸ்ரீஹரியே நடத்துகிறான் என்று அறி என்பதே ஸ்ரீதாஸரின் செய்தி ஆகும்.

**125. ஜீவ ஜீவர பே4த3 ஜட3 ஜட3**
**பே4த3 ஜீவ ஜட3க3ளபே4த3 பரமனு**
**ஜீவ ஜட3 ஸுவிலக்ஷணனு எந்த3ரிது நித்யத3லி |**
**ஈ விரிஞ்ச்யாண்ட3த3லி எல்லா**
**டாவினலி திளிதை3து3 பே4த3 க**
**லேவரதொ3ளரிதச்யுதன பத3வைது3 ஷீக்ரத3லி ||(14-24)**

ஸ்ரீதாஸர், நேரடியாக மத்வரின் சித்தாந்தத்தினை சொல்லி, இதனாலேயே அச்யுதனின் பாதங்களை சேர்வாயாக என்று சொல்கிறார். அது என்ன என்றால், ஜீவ ஜீவ பேதம், ஜட ஜட பேதம், ஜீவ ஜட பேதம், ஜட பரமாத்ம பேதம், ஜீவ பரமாத்ம பேதம். இந்த உலகின் அனைத்து இடங்களிலும், இப்படியான பஞ்சகத்தினாலேயே இருக்கிறான் என்று அறிவாயாக என்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

(தொடரும்)

## இந்த மாத ஆராதனைகள்

**ஸ்ரீ மொதலகல்லு சேஷதாசர் (1817–1885)**

ஸ்ரீஷாங்க்ரி ஸேவகம் நித்யம் பூஸுராக்ர குலோத்பவம் |
ஸ்ரீ ஸமீரபதாஸக்தம் சேஷதாஸ குரும் பஜே ||

ஆதி ஷிலா க்ஷேத்வாஸி ஸ்ரீ சேஷதாஸரு
அதே தேவகிதனய ஸ்ரீகிருஷ்ண ஸகனாம்ஷரு
மோததீர்த்தார்யரலி எத்தாகி க்ரந்தகள ஹொத்தரு
வாதீ டிகெ ரசிஸி ஜயதீர்த்தரெனிஸிதரு
ஈ தரெ மேலெ வைகுண்டவாஸரே திம்மண்ணதாஸரு
மாதவ மங்களாங்க ஹரிவிட்டலன பாதஸேவகரு ||

**ஸ்ரீ ஷ்யாமஸுந்தர விட்டலதாசர் (1903–1956)**

ஸ்ரீ ஜகன்னாத தாஸார்ய க்ருபா பாத்ர மஹோதயம்
ஷ்யாமஸுந்தர நாமானம் வந்தே வைராக்ய ஸித்தயே ||

ஷ்யாமஸுந்தர தாஸரே மானவிய குண்டாசார்யரு
நேம நிஷ்டெயிந்தலி குருகளாஷீர்வாத படெதரு
தீமந்த ஸிரிகோவிந்த தாஸர அனுக்ரஹவ படெதரு
யாமினி ஸ்வப்னதி மானவிதாஸரு அங்கிதவ நீடிதரு
ஸ்ரீ மங்களாங்க ஹரிவிட்டலன க்ருபெகெ பாத்ரராதரு
ஷ்யாமஸுந்தர விட்டலன குணிஸி தணிஸெ மெரெதரு ||

**தற்போது நமது Blogல் தினம் ஒரு பத்யமாக வந்து கொண்டிருப்பது : https://dasa-sahitya.blogspot.com/**

* ஸ்ரீப்ரஸன்ன ஸ்ரீனிவாஸ தாஸர் இயற்றிய - விஷ்ணு சஹஸ்ரநாம பாஷ்ய - கன்னட பத்யங்கள். இதன் அர்த்த விளக்கங்கள் - தமிழில்.
* 1000 நாமங்களுக்கு, (4 வரிகளைக் கொண்ட) 1000 கன்னட பத்யங்களை பாஷ்ய ரூபமாக இயற்றிக் கொடுத்திருக்கிறார் தாஸர்.
* தினமும் 3 பத்யங்களின், தமிழ் விளக்கங்களை நமது மேற்கண்ட blogல் படிக்கலாம்.

| தொடர் | கன்னட ஹரிதாசினிகள் |
| --- | --- |
| | **ஜயலட்சுமி மங்களா மூர்த்தி** (1952 - ) |

தர்மபுரி ராமராவ் மற்றும் ஜானகிபாய் தம்பதிகளில் மகள் பத்மாவதி. இவர் 5 அல்லது 6ம் வகுப்பு படிக்கும்போது, அத்தை மகனான செஞ்சி பாபுராவ் அவர்களுடன் திருமணம் ஆயிற்று. புகுந்த வீட்டில் ஸுந்தராபாய் என்ற பெயர் கிடைத்தது. இந்த தம்பதிகளுக்கு, 3 ஆண் குழந்தைகள் மற்றும் 5 பெண் குழந்தைகள் பிறந்தனர். செஞ்சி பாபுராவ் அவர்கள் குடும்பத்துடன் பெங்களூருக்கு வந்து தங்கியிருந்தபோது, தந்தெமுத்து மோகனவிட்டல தாஸர் எதேச்சையாக பெங்களூருக்கு வர, குருகள் செஞ்சி பாபுராவ் அவர்களுக்கு ‘ஸீதாராம விட்டல’ என்றும், ஸுந்தராபாய் அவர்களுக்கு ‘மங்களாத்மக ராமவிட்டல’ என்றும் அங்கிதம் அளித்து அருளினார். ஸுந்தராபாய் அவர்களுக்கு ஸ்ரீஜகன்னாததாஸரின் ஹரிகதாம்ருதஸாரம் மனப்பாடம் ஆகியிருந்தது. ஸ்ரீஸத்யத்யான தீர்த்தர் மற்றும் தாஸராயரின் அருளால், ஸாத்விக ஜீவனத்தை பின்பற்றி வந்தார்.

ஸுந்தராபாய் அவர்கள் பற்பல தேவரநாமாக்களை இயற்றியிருந்தாலும், தற்போது 4 மட்டுமே கிடைத்திருக்கிறது. அவற்றை இங்கு பார்ப்போம்.

**1. குரு ஸ்துதி**

கு3ருவரேண்ய நிம்ம சரண கமலக3ளிகெரகி3 வந்தி3ஸுவெ ||ப
பரமப்ரியரெந்து3 பி3ருது3 பொத்தி3ருவந்த |
வர தந்தெ3 முத்3து3 மோஹன விட்டலனே ||அப

க3ருட3க3மன கோ3விந்த3 வரதனா சரணவ தோருவிரீ |
பரம ப4க்தரிகெ3 கரெது3 அங்கிதவித்து வர வைகுண்டக்கெ தா3ரி தோருவிரி ||1

த4ரெயொளுமெரெயுவ கரிகி3ரி க்ஷேத்ரதி3 நிருதவாஸிஸுதலி |
ஸாரதத்வவ பேளுதலி ஸம்ஸார து3க்க2வ களெயுவிரீ ||2

ஷ்ருங்கா3ரவனத3லி பொங்கொ3ளலூதி3 கோ3பாங்க3னெயர ஸஹ மெரெத3வனா |
க3ங்கா3ஜனக துங்க3விக்ரம மங்க3ளாத்மக ராம விட்டலன தோருவிரி ||3

* இந்தப் பாடலில் ஹரிதாஸினி ஸுந்தராபாய், தமக்கு அங்கிதம் வழங்கிய தந்தெமுத்து மோகன விட்டல தாஸரை வணங்கியிருக்கிறார்.

கரிகிரி க்ஷேத்திரத்தில் நிலைத்து, ஸ்ரீஹரியின் மகிமைகளை போதித்தவாறு, சிஷ்யர்களுக்கு ஸம்ஸார ஸாகரத்திலிருந்து தப்பிக்கும் வழியை காட்டி, கங்காஜனகனின் தரிசனத்தை செய்விக்கும் மகான் குருகளுக்கு, ஸுந்தராபாய் தம் நமஸ்காரங்களை செய்விக்கிறார்.

**2. ஸ்ரீ ஹரிஸ்துதி**

கருணாஸாக[3]ர ஸ்ரீ ஹரியே | நீனு த்வரிததி[3] ப[3]ந்து[3] காபாடெ[3]ன்ன தொ[3]ரெயெ |
மாரனய்யனே ஸ்ரீ கிருஷ்ண |
பரமானந்த[3] முகுந்த[3] கோ[3]பிய கந்தா[3] | வாரிஜனாப[4] கோவிந்த[3] |
விஷ்வரூபவ தோரி காபாடெ[3]ன்ன முன்னா ||1

பரம பாவனமூர்த்தி நின்னா |
நாமஸ்மரணெய கருணிஸோ வரமோஹன்னா |
கரிகி[3]ரி லட்சுமி நரஸிம்ஹ | உரக[3] ஷயனானெ ஷரணெம்பெ முன்னா ||2

பக்ஷிக[3]மன லட்சுமி ரமண | தங்கி[3]க[3]க்ஷய அம்ப[3]ரவ கொட்யோ நீ கருணா |
ஸ்ருஷ்டியொளகெ[3] இந்தாஷ்சர்யவ கண்ட[3]ரியெவு மங்க[3]ளாத்மக ராம விட்டலன்னா ||3

* இந்தப் பாடலில் ஹரிதாஸினி, ஸ்ரீஹரியை பல்வேறு மகிமைகளை சொல்லி புகழ்ந்திருக்கிறார்.

**3. ஸ்ரீ லட்சுமி ஸ்துதி**

கமலமுகி[2]யே நீ கேளெ
நீரஜ நேத்ரே கோமலாங்க[3]ன தோரே ||ப
கமலபாணியெ நின்ன பாத[3] ப[3]த்மக[3]ளிகெ[3]
நமிஸி நா பேடு[3]வே ஸுமனஸ த[3]ள நேத்ரே ||அப

சாரு ஸுந்த[3]ரவத[3]னே | ஸ்ரீ ஹரிய வக்ஷஸ்த[2]ளதி[3] ஸத[3]னே |
நாரத[3] வந்தி[3]தளெ நவனீத சோரன |
தீ[4]ர க[3]ம்பீ[4]ரன ரூபவ தோரின்னு ||1

அம்ப[3]ரத[3]ல்ஹாருவ க[2]க[3]வாஹனன நம்பி[3]தெ[3]னம்ம தாயி |
அம்பு[4]ஜனாப[4]ன பி[3]ம்ப[3]ரூபவன்னு ஸம்ப்[4]ரமதி[3]ந்த[3]லி தோரி ஸந்தோஷதி[3] ||2

க3ஜக3ஜ ஸரோவரதி து3க்க2தி3னொந்து3
பு4ஜக3 ஷயனன மொரெ இடெ3 ஜக3வன்னுத்3த4ரிஸுவ
மங்க3ளாத்மகராம விட்டல நகுத3லி ஸலஹித3 நிஜரூப தோரின்னு ||3

* தாமரை முகம் கொண்டவளான, தாமரையை ஏந்தியவளான, தாமரைக் கண்களைக் கொண்டவளான, லட்சுமிதேவியை ஹரிதாஸினி வணங்குகிறார். கஜராஜனை காத்த, உலக நாயகனான, மங்களாத்மன் ஆன ஸ்ரீஹரியின் தரிசனத்திற்காக விரும்பி, சக்தி-த்ரயர்களில் ஒருவரான ஸ்ரீலட்சுமியிடம் வேண்டிக் கொள்கிறார் ஹரிதாஸினி.

**4. ஸ்ரீ ஆஞ்சனேய ஸ்துதி**

ஸ்ரீ மத் ஆஞ்சனேயா ப4க்தர ப்ரேமதி3ந்த3 பொரிவா ||ப
ராம நாமவனு பாவன மாடு3வ காமிதார்த்த2க3ள கொட்டு மன்னிஸுவ ||அப

ராமன ஆக்3ஞெயிந்த3 கட3லஹாரி லங்கெகெ3 ஸேரி |
ராமமுத்3ரிகெய பூ4மிஜஸுதெகி3த்து | க்ஷேமவ திளிஹி பாத3கெரகி3 நிந்தா ||1

ப4கன பா4தெ3யன்னு தாளதெ3 ப3ளலுதலிரெ ஜனரு
ப4கன ஸீளி பீ4ம ப3ண்டி3 அன்னவனுண்டு3 ஸுக2வகொ3ளிஸி தா ஜனக3ள ஸலஹித3 ||2

ஹரியாக்3ஞெயிந்த3 த4ரெயலி தா ப3ந்து3
தாரதம்ய பஞ்சபேத3ருஹுத்த ஸிரிமங்க3ளாத்மக ராம விட்டலனே பரனெந்து3 ||3

* ஸ்ரீவாயுதேவரின் மூன்று அவதாரங்களான, ஹனும, பீம, மத்வ ஆகியோரின் பாடல் இது. அவர்கள்ன் சிறப்பினை வர்ணித்தவாறு மிகவும் அழகாக பாடியுள்ளார் ஹரிதாஸினி.

தன் கணவரை இழந்தபின், ஹரிதாஸினி ஸுந்தராபாய் தன் மக்களுடன் பெங்களூரில் இருந்து, 2002ம் ஆண்டு ஹரிபாதம் அடைந்தார். ஹரிஸேவை, குருஸேவையினை செய்து ஹரிதாஸ ஸாகித்யத்திற்கு தன் பங்களிப்பினை கொடுத்த ஹரிதாஸினியை நாமும் நினைத்து வணங்குவோமாக.

(அடுத்த இதழில் வேறொரு ஹரிதாஸினியைப் பற்றி பார்ப்போம்).

***

**தொடர்**

## ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர்

**டாக்டர். N.G.விஜயலட்சுமி.**

### அம்பெ சும்பிஸு நினகெ முகுதி ரூபம்பெ
### என்னும் தேவரநாமாவின் அர்த்த விளக்கம்

**எழுதியவர் : டாக்டர். N.G.விஜயலட்சுமி.**

அஸாவேகார்ண விபூதே மாயாவடதலே புமான் |
ஜகத் ஸ்வஜடரே பிப்ரத் தஸ்மின் ஷேதே ஜனார்தன: ||
(விஷ்ணு புராணம்)

லட்சுமி ரூபத்தின் வடபத்ரத்தின் மேலே, ஜகதுதரனான ஜனார்த்தனன் படுத்திருக்கிறான். அப்போது மஹாலட்சுமி, ஒரு முறை துர்க்கையாகி, இன்னொரு முறை பூதேவியாகி, இன்னொரு முறை ஸ்ரீதேவியாகி ஸ்ரீஹரியை அணைத்துக் கொள்கிறாள். இன்னொரு முறை, இரண்டிரண்டு ரூபமாக ஸ்ரீஹரியின் இரு புறங்களிலும் அவனை கட்டிக் கொள்கிறாள். அவளின் மகிமைகளை நம்மால் வர்ணிக்கவும் முடியாது.

இவளப்பிகொம்ப[3] ஹரிய வக்ஷத[3] க[3]ந்த[4]
அவளூரோஜதி[3] தோருதிஹுது[3]
அவள சும்பிஸிதா[3]க[3] பதிய த[3]ந்தத[3] கா[4]ய
அவளத[4]ரத[3]லொப்புதிஹுது[3] ||(2-3 வைகுண்ட வர்ணனெ)

இந்த சம்பவத்தை ஸ்ரீபிரஸன்ன வெங்கட தாஸர், அம்பெ சும்பிஸு என்னும் இரு சொற்களில் அடக்கியிருக்கிறார். இதிலிருந்து நமக்குத் தெரிய வரும் தத்வங்களை, ஸ்ரீமத்வாசார்யர் மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தில் இவ்வாறு கூறியிருக்கிறார்.

1. பிரளய காலத்தில் நாராயணன் ஒருவனே இருக்கிறான். அவன் அனந்த குணஸாகரன். அப்ரமேயன். பிரம்மாதி தேவதைகளைவிட உத்தமமான, லட்சுமிதேவியைவிட உத்தமன். ஆகையாலேயே ஸ்ரீஹரி ஸர்வோத்தமன்.

2. நாராயணனுடன் மகாலட்சுமிதேவி ஒருவளே இருப்பதால் மற்றும் நாராயணனை அலங்கரித்துக் கொண்டிருப்பதால், பிரம்மாதி தேவதைகளைவிடவும் மகாலட்சுமிதேவியர் சிறந்தவர்கள் ஆகின்றனர்.

3. நாராயணனை அலங்கரித்துக் கொண்டிருப்பதால், அந்த ஆனந்த சுகம், மஹாலட்சுமிதேவிக்கு மட்டுமே இருக்கிறதே தவிர, நாராயணனுக்கு இல்லை. ஏனெனில், அவன் ஸ்வரமணன்.

ஹரி ஸர்வோத்தமன் என்னும் முதலாம் தத்வத்தினை ஸத்ய ஜகதிது பஞ்ச பேதவு நித்ய ஸ்ரீ கோவிந்தன, க்ருத்யவரிது தாரதம்யதி கிருஷ்ணனதிகெந்து ஸாரிரை என்னும் பாடலில் ஸ்ரீபுரந்தரதாஸர் தெளிவாக விளக்கியிருக்கிறார். வாயு பிரம்மகெ கோடி குணதிந்த அதிக ஷக்தளு ஸ்ரீரமா, அனந்த குணதிம் லகுமிகதிகனு ஸ்ரீபுரந்தரவிட்டலனு - என்று முடிக்கிறார்.

இந்தீ தத்வவே ஸ்ருஷ்டிகெ மொதலு
காந்தெயரப்பிகொண்டிப்ப ஸ்ரீகிருஷ்ண தானே
அந்தவில்ல ஸ்வரூபவில்ல விரூபனல்ல
ஆனந்த மூருதி ஸிரி ஹயவதன
என்று ஸ்ரீவாதிராஜர் தெளிவாக இதையே பாடியிருக்கிறார்.

ஸ்ரீவிஜயதாஸர் தமது ஒரு சுளாதியில், லய ப்ரகரணத்தை சுருக்கமாக இவ்வாறு வர்ணனை செய்திருக்கிறார்.
ஷூன்ய நாமகனாகி ஹரி வடதெலெயல்லி
ஸண்ணவனோபாதி பொம்மாண்ட நாமக
கன்யாரதுனவாத ஸ்ரீயாலங்கனெயிந்த
தன்னிச்செயிந்தலெ தானு பவடிஸித்ய ||

இன்னொரு சுளாதியின் துவக்கத்தில் இவ்வாறு சொல்கிறார்.
ஷூன்ய நாமகனாகி மலகுவ மஹதெய்வ
கன்யாஷிரோமணி லகுமிகெ க்ருபெயிந்த
உன்னதவாகித்த ஸௌபாக்யவ கொட்டு
தன்னிச்செயிந்த க்ரீடெமாடுவ ||

பிரளய ஜலத்தில், பகவந்தன், ஆல இலையின் மேல் சிறிய குழந்தையாக படுத்திருந்தான் என்று சொல்கிறார். அந்த குழந்தை, 7 கோடி யோஜனை உயரம் (42 கோடி மைல் அல்லது 8 கோடி

கிலோமீட்டர்) இருந்ததாம். தொட்டில் போன்றதாக இருந்த அந்த ஆல இலையின் விஸ்தீர்ணம் 50 கோடி யோஜனை இருந்ததாம்.

பொம்மாதிகளனு அவ்யாக்ருதத விரஜெயலி
முளுகிஸி லிங்க ஷரீர பங்கவனு மாடி
உதரதொளிட்டுகொண்டு ப்ரளயோதகவு ஸிரியாகெ
பூதேவி வடபத்ரவாகெ ஏளுகோடி யோஜனமித பாலகனாகி
துர்கெ தம வ்யாபிஸி ஆலதெலெ மேலெ
குருபுரந்தரவிட்டல பவடிஸலு --
என்று ஸ்ரீபுரந்தரதாஸர் தமது சுளாதியில் இதனை வர்ணிக்கிறார்.

அந்த சிறிய குழந்தை படுத்திருந்ததை, அழகாக வர்ணிக்கிறார்.

கராரவந்தேன பதாரவிந்தம் முகாரவிந்தேன விநிவேஷயந்தம் |
வடஸ்ய பத்ரஸ்ய புடே ஷயானம் பாலம் முகுந்தம் மனஸா ஸ்மராமி ||

ப்ரளய காலத்தில், ஸ்ருஷ்ட்யாதி செயல்கள் இல்லாதவனைப் போல தெரிவதால், ஸ்ரீஹரிக்கு ஷூன்ய என்று பெயர். ஷம் என்றால், பாவங்களை அழிப்பவன் என்று பொருள். ஆகையாலேயே பாப பரிஹாரகனான ஸ்ரீஹரிக்கு ஷூன்ய என்று பெயர் வந்தது.

வைகுண்ட வர்ணனையின் முதல் சந்தி மோட்ச சந்தியில் வைகுண்ட ப்ராப்தியே பரம முக்தி என்று சொல்லியிருக்கிறார். சாட்சாத் நாராயணன் இருக்கும் வைகுண்டத்திற்கு ஒரு முறை செல்வதே மோட்சம். வைகுண்ட என்றால் என்றைக்கும் நாசம் இல்லாதது. வைகுண்ட லோகம், லட்சுமி ஸ்வரூபம் ஆகும். முமுக் ஷுகளுக்கு முக்தியை கொடுப்பதற்கு சிபாரிசு செய்பவள் லட்சுமிதேவி. ஸ்ரீபிரஸன்ன வெங்கட தாஸரின் வாக்கினில் சொல்வதானால், லட்சுமிதேவியே முக்திரூபள் (முகுதி ரூபம்பெ). ஸ்ரீவிஜயதாஸரின் வாக்கினில் சொல்ல வேண்டுமென்றால் – நித்ய முக்தளு பொம்ம வாயு முந்தாத ஸுரரிகெ முக்திய கொடுவளு – லட்சுமிதேவி ஈஷாவஷளு.

ஸ்ரீபிரஸன்ன வெங்கட தாஸர் முதலாம் நுடியில் இவ்வாறு சொல்கிறார்.

வைகுண்ட நகரதல்லி அனந்தாஸனதல்லி
ஸ்ரீகர ஷ்வேதத்வீபதல்லி முக்த களாப ||1

முக்தி நகரங்கள் மூன்று. வைகுண்ட நகரத்தில், அனந்தாஸனத்தில், மற்றும் ஸ்ரீகர ஷ்வேதத்வீபத்தில் முக்தர்கள் மகிழ்ச்சியுடன் சஞ்சரிக்கின்றனர். பிரம்மாண்டத்தில் அனைத்திற்கும் மேலாக இருக்கும் உலகம், பிரம்மனின் உலகம் ஸத்யலோகம். இதற்கும் மேல் இருப்பது வைகுண்ட.

பிரம்ம லோககதாதூர்த்வம் யத்புரம் சக்ரபாணின: |
கோவிந்த பக்தி மஹதாம் நராணாஞ்ச ந ஸம்ஷய: ||

முக்தியை அடையத்தக்க ஜீவர்கள் இந்த வைகுண்டத்தில் இருந்து நித்ய சுகத்தை அடைகிறார்கள். இதில் சந்தேகமே இல்லை என்பது வேதவ்யாஸரின் வாக்கியம்.

நதத்பாஸயதே ஸூர்யோ ந ஷஷாங்கோ ந பாவக: |
யட்கத்வா ந விவர்தந்தே தத்தாம பரமம் மம ||

என்பது பகவத்கீதையில் உள்ள ஸ்ரீகிருஷ்ணனின் வசனம். பஞ்ச ராத்ர ஆகம, காடக உபநிஷத், வராஹபுராண, ஆகியவற்றில் வைகுண்டத்தின் வர்ணனைகள் இருக்கின்றன. வைகுண்ட உலகத்தின் உயரம் 8,12,50,00,000 யோஜனை அளவு என்று சொல்கின்றனர். ஒரு யோஜனை என்றால் 12 மைல்.

வைகுண்டத்திற்கு ஈடான 12 ஸ்தானங்கள் பூலோகத்திற்கு நேராகவே இருக்கின்றன என்று சொல்கின்றனர். வடக்கில், பிரம்மாண்ட கர்ப்போதகம், மலை அளவில் இருக்கிறது. ஒரு லட்ச யோஜனை உயரத்தில் இருக்கிறது. இதன் மேல் அனந்தாசனம் இருக்கிறது. பூலோகத்தின் புஷ்கர த்வீப மற்றும் ஷால்மல த்வீபங்களின் நடுவே இருக்கும் பாற்கடலில் 1.5 லட்ச யோஜனை உயரம் இது மலை அளவில் உள்ளது. இதன் மேல் ஷ்வேதத்வீபம் இருக்கிறது.

(தொடரும்)

***

தொடர்

# ஹரிதாஸ ஸாகித்ய ஸார

திரு ஜி. வரதராஜ ராவ்

ஹரிதாஸ ஸாகித்ய ஸார என்பது ஒரு மிகச்சிறந்த ஆராய்ச்சி நூல். எழுதியவர் திரு.ஜி. வரதராஜ ராவ். 20ம் நூற்றாண்டில் வாழ்ந்த இவர், 12 அத்தியாயங்கள் கொண்ட இந்த மிகப் பெரிய நூலை எழுதி, ஹரிதாஸ ஸாகித்யத்தின் ஒரு முழுமையான தொகுப்பாக இதனை வெளியிட்டுள்ளார். ஹரிதாஸ ஸாகித்யத்தின் பின்னணி, அபரோக்ஷ அனுபவம், புராணங்களின் குறிப்புகள், ஹரிதாஸ ஸாகித்யத்தின் வகைகள் என பல்வேறு தலைப்புகளில் 550+ பக்கங்கள் கொண்ட இந்த புத்தகத்தை, ஹரிதாஸ ஸாகித்யத்தில் ஈடுபாடு கொண்டவர்கள் அனைவரும் கண்டிப்பாக படிக்க வேண்டும். இதன் மொழிபெயர்ப்பினை நம் ஹரிதாச விஜயத்தில், இந்த இதழிலிருந்து தொடர்ந்து பார்ப்போம். முதல் அத்தியாயத்தின் பெயர் - வரலாற்றுப் பின்னணி.

## வரலாற்றுப் பின்னணி

இந்திய ஆன்மிக இதிகாஸத்தில் கர்னாடகத்தின் பங்கு முக்கியமானது. வைதிக தர்மத்தின் மறுமலர்ச்சிக்கு வித்திட்ட ஸ்ரீசங்கராசார்யர், ஸ்ரீராமானுஜாசார்யர், ஸ்ரீமத்வாசார்யர் என்னும் மூவரும், வியாக்யானங்கள் எழுதி, தத்தம் சித்தாந்தங்களை பரப்புவதற்கு கர்னாடகத்தை தங்களின் முக்கிய கேந்திரமாக ஆக்கிக் கொண்டார்கள் என்பது கவனிக்க வேண்டிய செய்தி.

காலடியில் பிறந்து, நர்மதா நதிக்கரையில் சன்யாசத்தைப் பெற்று, காஷ்மீரில் தமது அத்வைத சித்தாந்தத்தை நிலை நாட்டிய ஸ்ரீசங்கராசார்யர் (ஆண்டு 788-820), தமது மடங்களில் ஒன்றை ஸ்ருங்கேரியில் நிறுவியது ஒரு முக்கியமான செயல். தமிழ்நாட்டிலேயே பிறந்து வளர்ந்த ஸ்ரீராமானுஜாசார்யர் (1017-1137), அந்த நாட்டின் சைவ மதத்தினரான சோழர்கள் அவரை துன்புறுத்தத் துவங்க, ஆசார்யர் கர்னாடகத்திற்கு வந்து, இங்கு தங்கியது மட்டுமல்லாமல், அப்போது அரசனாக இருந்த ஹோய்ஸள விஷ்ணுவர்மனின்

ஆதரவினைப் பெற்று பல ஆண்டுகள் இங்கேயே இருந்து தமது மதத்தினை பிரசாரம் செய்தார். ஸ்ரீமத்வாசார்யர் (1238-1317) கன்னட நாட்டின் பாஜக க்ஷேத்திரத்தில் பிறந்து, காலாந்தரத்தில் தமது சர்வமூல கிரந்தங்களின் மூலம் த்வைத சித்தாந்தத்தை ஸ்திரமான அஸ்திவாரத்தின் மேல் நிறுத்தி, அதனை வளர்ப்பதற்கு உடுப்பியில் ஸ்ரீ கிருஷ்ணனின் ஆலயத்தை நிறுவி, அதனை பூஜிப்பதற்காக அஷ்ட மடங்களை ஏற்பாடு செய்து தம் அருமை பெருமையை என்றைக்கும் நினைவில் வைக்குமாறு செய்தார்.

ஆன்மிக வெள்ளத்தை தடுத்து, அதன் போக்கினையே நிறுத்தப் பார்த்த, வட நாட்டில் தோன்றிய நாத்திக மதத்தை எதிர்த்து, ஆன்மிகத்தை மறுபடி வளர்த்த புகழ் இந்த மூவரையே சேரும். கர்னாடகத்தில் ஒரு காலத்தில் பௌத்த மதமும் பரவியிருந்தது என்று இன்றைய ஆராய்ச்சியாளர்கள் சொல்லும் செய்தியாகும். ஜைன மதத்தவரோ, இந்தப் பகுதி மக்களின், அரசர்களின் ஆதரவினைப் பெற்று வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பதை நாம் பார்க்கிறோம்.

வேத உபநிஷத்களில் அடங்கியிருக்கும் ஞானத்தை காப்பாற்றிய ஆசார்யர்கள், தமது சித்தாந்தத்தை பரப்புவதற்கு சம்ஸ்கிருதத்தையே எடுத்துக் கொண்டனர். பௌத்தர் மற்றும் ஜைனர்கள் மக்களியே பேசுமொழியாக இருந்த பாளி மொழியை தமது சித்தாந்தத்தை பரப்புவதற்காக எடுத்துக் கொண்டனர். வேத உபநிஷத்களின் காலங்களிலிருந்தே பக்தியின் மேன்மை அனைவருக்கும் தெரிந்திருந்தாலும், அதையே முக்கிய நோக்கமாக வைத்து பக்தி பரம்பரையை வளர்த்த பெருமை தென்னிந்தியாவையே சேரும். ‘உத்பன்னா த்ராவிடே ஸாஹம் பக்தி வ்ருத்திம் கர்ணாடகே கதா க்வசித் க்வசித் மஹாராஷ்ட்ரே குர்ஜரே ஜீர்ணதாம் கதா’ என்னும் புகழ்பெற்ற பழமொழியை கவனித்தால் நாம் சொல்ல வந்த விஷயம் புரியும்.

சுமார் 10ம் நூற்றாண்டில், தமிழ் நாட்டில் சைவ மற்றும் வைஷ்ணவ பக்தர்கள், தமிழில் பக்திக்கு முக்கிய இடத்தைக் கொடுத்தனர். ஜாதி, மத, குல, கோத்திர, பால் வேறுபாடுகள் எதுவும் இல்லாமல், வெறும் தங்களின் அனுபவத்தின் மேல் பாடிய நாயன்மார்கள் மற்றும் ஆழ்வார்கள், இந்த திசையில் பயணித்தது மிகவும் அற்புதமான விஷயமாகும். விசிஷ்டாத்வைதத்தை நிறுவிய ஸ்ரீராமானுஜாசார்யர், சம்ஸ்கிருத கிரந்தங்களுக்கு எவ்வளவு முக்கியத்துவம் கொடுத்தாரோ, ஆழ்வார்களின் தமிழ் பிரபந்தங்களுக்கும் அவ்வளவே முக்கியத்துவத்தைக் கொடுத்தார். நாதமுனிகளிடமிருந்து துவங்கி அந்த

பரம்பரையில் வந்தவர்கள் பாடிய தமிழ் பிரபந்தங்களை, திராவிட வேதம் என்று அழைப்பதற்கு அந்த ஆசார்யார் தயங்கவில்லை.

சுமார் 12ம் நூற்றாண்டின் காலத்தில், கர்னாடகத்தில் தோன்றிய வீரசைவ மதத்தவர், சைவ மதத்து நாயன்மார்களைப் போலவே, தாமும் தாய்மொழியான கன்னடத்தின் மூலம் தம் மடத்தின் தத்வங்களை பிரசாரம் செய்யத் துவங்கினர். அவர்களின் தொடர்ச்சியான முயற்சிகளால், கர்னாடகம், வீரசைவ மதத்தின் முக்கிய கேந்திரமாக ஆனதுடன், கன்னட மொழிக்கு புதிய வகையான ‘வசன சாகித்யமும்’ கிடைத்தது. புரட்சிகரமான வசனகாரர்களைப் போலவே, சம்பிரதாயத்தைப் பின்பற்றிய ஹரிதாஸர்கள், 15ம் நூற்றாண்டிலிருந்து துவங்கி, ஸ்ரீமத்வாசார்யார் நிறுவிய த்வைத சித்தாந்தத்தை, தமது அபரோக்ஷ அனுபவத்துடன் சேர்த்து, சங்கீதத்தை அடிப்படையாகக் கொண்டு, கீர்த்தனை, ஸுளாதி, உகாபோக, வ்ருத்த நாம ஆகிய பல வகைகளின் மூலம் வெளிச்சத்திற்குக் கொண்டு வந்தனர்.

ஆழ்வார்களின் வைஷ்ணவ பக்தியில் வெளிப்பட்ட எவ்வளவோ விஷயங்கள் மேற்கண்ட கீர்த்தனைகளிலும் நன்கு புலப்படுகின்றன. தமிழ்நாட்டில் ஒரே சமயத்தில் பாய்ந்தோடிய ஹரி-ஹர பக்தியானது, கர்னாடகத்தில் இரு வேறு காலங்களில் அதே வேகத்தில் பாய்ந்தோடியதை கவனிக்கலாம்.

கர்னாடகத்தை அடுத்து மகாராஷ்டிரத்தில் இதே வைஷ்ணவ பக்தியானது, 13ம் நூற்றாண்டின் ஞானதேவ் (1275-1296) அவர்களின் அபங்கங்களில் தொடங்கி, நாமதேவ (1270-1350), குயவனான தோர, தோட்டக்காரரான ஸாமவதா, பொற்கொல்லரான நரஹரி, சோகா, ஜனாபாய், ஸேனா மற்றும் நர்த்தகியான கனோபாத்ர ஆகியோரின் முயற்சியால் வெளிச்சத்திற்கு வந்தது. 16ம் நூற்றாண்டினைச் சேர்ந்த ஏகனாத (1533-1599) மற்றும் துகாராம் (1597-1650) ஆகியோரின் காலத்தில் விட்டல பக்தி தன் உச்சத்தை அடைந்தது எனலாம். இந்த சந்தர்களின் பரம்பரையில் 17ம் நூற்றாண்டில் வாழ்ந்த ராமதாசரையே (1608-1681) கடைசியானவர் என்று சொல்லலாம். மகாராஷ்டிரத்தில் இப்படியாக மத்ய காலத்தில் வந்த பழக்கத்தைக் கண்டே, மேலே சொன்ன ஸ்லோகத்தில் ‘க்வசித் க்வசித்’ என்று சேர்த்திருக்கிறார்கள் என்று தோன்றுகிறது.

மகாராஷ்டிரத்தின் வடபகுதியில் இருக்கும் குஜராத்தில் இருந்த பக்தி பரம்பரையில் நரசிம்ம மேஹ்தா என்பவர் புகழ் பெற்றவர். புகழ் பெற்ற கிருஷ்ண பக்தையான மீராபாய் (1492-1546) என்பவர், ராஜஸ்தானில் பிறந்து வளர்ந்து வ்ருந்தாவன மற்றும் த்வாரகையில் வெளிச்சத்திற்கு வந்திருப்பதால், அவரையும் சாஹித்ய சந்த பரம்பரையில் சேர்த்திருப்பது வழக்கத்தில் இருக்கிறது.

தென்னிந்தியாவின் பக்தி பரம்பரையை பார்த்ததில், தமிழ் நாட்டில் இந்த பரம்பரை மிகவும் பழங்காலத்தில் துவங்கி, கன்னட நாட்டில் தொடர்ந்து, மகாராஷ்டிரத்தில் பின் வளர்ந்து, ராஜஸ்தானில் ஒரு நிறுத்தத்திற்கு வந்ததைப் போல தெரிகிறது. வடநாட்டில் இருக்கும் பக்தி பரம்பரைகள், ஏதோவொரு விதத்தில் தென்னிந்தியாவின் பரம்பரைகளுடன் தொடர்பில் இருந்து வளர்ந்திருக்கிறது என்பதை பார்க்க முடியும்.

புஷ்டி மார்க்கத்தை துவக்கியவரான ஸ்ரீவல்லபாசார்யரின் (1477-1531) பெற்றோர் ஆந்திராவைச் சேர்ந்தவர்கள். அவர்கள் பிறகு காசியில் வசித்தனர். வல்லபாசார்யர் வைஷ்ணவ தத்வத்தையே பின்பற்றி தம் பக்தி பரம்பரையை துவக்கினார். வைதிக கர்மானுஷ்டாங்களை பின்பற்றாமல் பகவந்தனின் அருளுக்கு பாத்திரர் ஆகமுடியும் என்றும், ஸ்ரீகிருஷ்ணனுக்கு அனன்ய சரணாகதி அடைவதே பக்தியின் பரம இலக்கு என்பதும் வல்லபாசார்யரின் நம்பிக்கை. வல்லபாசார்யர், உணர்ச்சி, அன்பு, காதல், நட்பு, கோபம், பாசம் மற்றும் துக்கம் ஆகிய ஏழு கட்டங்களில் ஸ்ரீகிருஷ்ண பக்தியை அடையமுடியும் என்று சொல்கிறார்.

வட இந்தியாவிற்கு சென்று தங்கிய இந்த ஆந்திர பிராமணரால் துவக்கப்பட்ட புஷ்டி மார்க்கம், அந்தப் பகுதி மக்களிடம் நன்மதிப்பைப் பெற்றது. இந்த பரம்பரையில், மனிதன் சன்யாசம் பெறவேண்டும் என்கிற கட்டாயம் இல்லை என்றும், ஸ்ரீகிருஷ்ணனின் தாசனாக பாகவத தர்மத்தில் நம்பிக்கை வைத்து அதனை பின்பற்றினால் போதும் என்றும் சொல்லப்படுகிறது. ஸ்ரீவல்லபாசார்யரின் மகனான விட்டலநாதனால் இந்த புஷ்டி மார்க்கம் மேலும் வளர்ந்ததோடு மட்டுமல்லாமல், ஸ்ரீகிருஷ்ணனுடன் அவனின் காதலியான ராதையின் ஆராதனை செய்வதும் துவங்கியது.

ஸ்ரீவல்லபாசார்யர் முதலில் துவக்கிய பாசம் என்னும் பக்தியானது, அவரது சமகாலத்தியவரான வங்காளத்தின் சைதன்ய பரம்பரையில் மிகவும் புகழ்பெற்றிருந்தது. மேற்கு வங்காளத்திலேயே பிறந்து வளர்ந்த சைதன்ய பிரபு (1485-1533), முதன்முதலில் வாசுதேவ ஸார்வபௌம

என்பவர் பழக்கத்திற்குக் கொண்டு வந்த நவ்ய நியாய என்னும் தர்க்க பத்ததியில் தேர்ச்சியைப் பெற்றிருந்தாலும், பின்னர் மாதவேந்திர பூரியின் சிஷ்யரான ஈஷ்வர பூரியின் ஆளுமையில் மயங்கி, தன் வைஷ்ணவ பரம்பரையை பலமான அஸ்திவாரத்தின் மேல் நிறுவினார்.

சைதன்யரின் பக்தி பரம்பரையை மெச்சிய பலர் அவரை பின்பற்றத் துவங்கினர். அவரை கௌராங்க என்றும் அழைக்கலாயினர். அவரின் கிருஷ்ண பக்தியின் சிறப்பினைக் கண்ட அந்த கால மக்கள், அவரை கிருஷ்ண அவதாரம் என்றும் கருதினர். ராதே கிருஷ்ணரின் காதலுக்கு முக்கியத்துவம் கொடுத்த இந்த பக்தி பரம்பரை, தானே எந்தவொரு கிரந்தத்தை இயற்றவில்லை எனினும், அவரைப் பின்பற்றியவர்களில் முக்கியமானவரான ரூப கோஸ்வாமி, ஸனாதன கோஸ்வாமி, ஜீவ கோஸ்வாமி ஆகியோர், தம் குருவின் தத்வபோதனையை விளக்கி பல கிரந்தங்களை இயற்றினர்.

தெய்வபக்தியை ஒரு தனியான உணர்ச்சி என்று சொல்லி, அதில், அமைதி, தாஸ்ய, நட்பு, மதுர மற்றும் வாத்ஸல்ய என்று அதில் ஐந்து வித வித்தியாசங்கள் உள்ளன என்று சாஸ்திரத்திற்கு ஏற்ப விளக்கியிருப்பதை காணலாம்.

ஸ்ரீவ்யாஸராயர், வங்காளத்தின் நவ்ய நியாய தர்க்க பத்ததியை கண்டித்ததோடு மட்டுமல்லாமல், அவர் சைதன்ய பிரபுவின் மேல் தன் ஆளுமையை செலுத்தினார் என்றும் தெரிய வருகிறது. இதற்கு முன்னரே, வட இந்தியாவில் தமது பயணத்தை செய்து வந்த ஸ்ரீராமானுஜாசார்யரின் ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தம், சைதன்ய பரம்பரையினரின் மேலும் தனது ஆளுமையை செலுத்தியிருந்தது என்றும், இந்த இருவரும் பூரியின் ஜகன்னாததேவரிடம் காட்டிய பக்தியைப் பார்த்தால் தெரிகிறது.

வட நாட்டின் மற்ற சந்த பரம்பரையிரான: கபீர் (1398-1518), தாது (1544-1603), மீரா (1492-1546), ஸூரதாஸ் (1479-1584), மற்றும் துளஸிதாஸ் (1511-1637) - ஆகியோரின் வாழ்க்கை வரலாற்றை கவனித்துப் பார்த்தால், இவர்கள் அனைவரும் ஏதோவொரு விதத்தில் தென்னிந்தியாவின் பக்தி பரம்பரையினரால் ஈர்க்கப்பட்டிருக்கின்றனர் என புரியும். (தொடரும்)

***

தொடர்

## கனகதாஸர்

திரு.வ்யாஸனகெரெ ப்ரபஞ்சனாசார்யர்

### ஸந்த - கவி - பக்தர் கனகதாஸர்

ஹரிதாஸ ஸாகித்யத்தை அற்புதமாக வளர்த்தெடுத்தவர்களில் ஸ்ரீகனகதாஸரும் ஒருவர். தாஸராக, கவிகளாக, அனுபாவிகளாக ஸ்ரீகனகதாஸர் இந்த ஸாகித்யத்திற்கு செய்திருக்கும் சேவை, அளித்திருக்கும் பங்கு அபூர்வமானது.

ஸாகித்யத்தின் நடையில், சங்கீதத்தின் வழியாக தத்வ பிரசாரம் செய்தது ஹரிதாஸ ஸாகித்யத்தின் சிறப்பாகும். சங்கீதத்தினால் காதுக்கு இனிமையாகவும், ஸாஹித்யத்தினால் இதயத்தை தொடும்படியாகவும், தத்வ விஷயங்களை சொல்வதில், புத்தியை வளர்ப்பதாகவும் இருப்பதான அபூர்வமான சிறப்பு இதற்கு இருக்கிறது. வாழ்க்கையின் குறிக்கோள் ஆத்யாத்ம சிந்தனையே என்னும் ரகசியத்தை, பாமர மக்களும் அறியுமாறு செய்ததே இதன் ஸாதனையாகும். ஜகத்துடன், ஜகன்னாதனின் சிந்தனையும், வாழ்க்கையின் முக்கியமான அங்கமே என்னும் சாஸ்திர சிந்தனையை, விதம்விதமான உதாரணங்களால் மனதினை தொடுமாறு சொல்லும் இதன் வழிமுறையானது அற்புதமானது மற்றும் சிறப்பானது. லௌகிக வாழ்க்கையிலிருந்து, தெய்வத்தின் பால் மக்களை இழுப்பதிலும் இது வெற்றியை கண்டிருக்கிறது. சங்கீதத்தினால் பாமரர்களையும் இழுக்கும் இந்த ஸாகித்யம், விஷய அடர்த்தியினால் பண்டிதர்களுக்கும் பிடித்தமானதாகவே இருக்கிறது. ஆத்யாத்ம என்பது ஸமாஜத்தை நோக்கி இருப்பதே என்னும் கீதையின் செய்தியையே இது பறைசாற்றுகிறது. சமூகத்தின் அனைத்து வகையான மக்களுக்கும், பகவந்தனின் வீட்டின் கதவுகள் திறந்தேயிருக்கின்றன என்னும் ஆத்யாத்ம ரகசியத்தை சொல்வதில், இது முதன்மையான இடத்தை பெற்றிருக்கிறது. மத்வ ஸித்தாந்தத்தை பின்பற்றுவதால், அதன் மொழிபெயர்ப்பு என்றே சொல்ல வேண்டும். அதாவது, தாஸ ஸாகித்யமானது, ஸர்வமூல கிரந்தங்களின் கன்னட மொழியின் டிப்பணி ஸாகித்யமே ஆகும்.

உலகில், அதிலும் நம் பாரத பூமியில் பிறந்து வளர்ந்த பக்தி பரம்பரைகள் பல. அவற்றில் பலவற்றிற்கு சித்தாந்த பின்னணி இருப்பதில்லை. தம்

உணர்ச்சிகளை மட்டுமே ஆதரித்து, அதன் மூலம் வெளிவந்த கிருதிகளையே அவை மக்களிடையே கொண்டு வந்தன. சில பக்தி பரம்பரைகள், ஸ்ரீராம, ஸ்ரீகிருஷ்ண ஆகிய மகாவிஷ்ணுவின் ரூபத்தினை ஆராதிக்கும் வைஷ்ணவ பரம்பரைகள் என்றால், வேறு சில, சைவ முதலான பரம்பரைகளை பின்பற்றின. அவற்றிலும் பெரும்பாலும் பல, மூல கிரந்தங்களை தொடாமல், தத்தம் கற்பனைகளையே கீர்த்தனைகளாக வெளிபடுத்தின. ஆனால், கர்னாடகத்தின் ஹரிதாஸ ஸாகித்யம், மத்வ ஸித்தாந்தத்தின் கன்னட மொழிபெயர்ப்பாக வந்த ஸாகித்யம் ஆகும்.

சைவ பக்தி பரம்பரையானது, அந்தந்த பரம்பரையின் தேவதைகளைத் தவிர மற்ற தேவதைகளைப் பற்றி, அவர்களுடைய மகிமைகளைப் பற்றி விளக்கும்படியான கிருதிகளை அளிக்கவில்லை. விஷ்ணுவின் மகிமைகளைப் பற்றி மட்டுமே விளக்கும் ஆழ்வார்களின் ப்ரபந்தங்கள்கூட இப்படியே இருக்கின்றன. ஆனால், ஹரிதாஸ ஸாகித்யமானது இவற்றிலிருந்து மிகவும் வேறுபட்டு இருக்கிறது. மகாவிஷ்ணுவின் ஸர்வோத்தமத்வத்தையே முக்கியமாக இது விளக்குவதாக இருந்தாலும், சிவ, துர்க்கை, கணபதி ஆகிய மற்ற அனைத்து தேவதைகளின், புராணங்களில் கூறப்பட்ட மகிமைகளை விளக்குவதாக இருக்கிறது. இதனால், மற்ற தேவதைகளின் ஆராதகர்களுக்கும்கூட ஹரிதாஸ ஸாகித்யம் பிடிப்பது போல் ஆகிவிட்டது. இப்படியாகவே, சமூகத்தின் அனைத்து மக்களிடமும் இந்த ஹரிதாஸ ஸாகித்யமானது சென்று சேர காரணம் ஆகிவிட்டது.

ஹரிதாஸர்களின் சூழல்கூட எல்லையற்றதாக ஆகிவிட்டது. வசனகாரர்களின் வ்யாப்தி, சைவ சித்தாந்தத்திற்கு உட்பட்டும், ஆழ்வார்களின் வ்யாப்தி வைஷ்ணவ சித்தாந்தத்திற்கு உட்பட்டும் ஒரு எல்லை கொண்டதாக ஆயிற்று. ஆனால், ஹரிதாஸர்கள், மொத்த பாரதத்தையே சஞ்சரித்தனர். வைஷ்ணவ க்ஷேத்திரங்களைப் போல, சைவ முதலான மற்ற தேவதா க்ஷேத்திரங்களையும்கூட தரிசனம் செய்தனர். அங்கிருந்த தேவதைகளைக் குறித்து த்வைத சித்தாந்தத்தின்படி, அபாரமான ஸ்தோத்திரங்களை இயற்றினர். இதனால், அந்தந்த க்ஷேத்திரங்களில் இருந்த தேவதைகளின் மகிமைகள் மக்களுக்கு சரியாக புரிந்தது. அந்தந்த க்ஷேத்திரங்களின் மஹாத்ம்யமும்கூட அனைவருக்கும் புரியத் தொடங்கியது. ஹரிதாஸ

ஸாகித்யமானது, இப்படியாக மற்ற அனைத்து பக்தி ஸாகித்யங்களைவிட வேறுபட்டதாக இருக்கிறது. ஸ்தள புராணங்களின் மகிமைகளை விளக்குவதான ஸ்கந்த முதலான புராணங்களின் சிறப்பினி ஹரிதாஸ ஸாகித்யம் விளக்குகிறது என்பது கவனிக்க வேண்டிய விஷயம்.

க்ஷேத்திரங்களைப் போல, நதிகளே முதலான புண்ய தீர்த்தங்களின் வர்ணனை மற்ற பக்தி பரம்பரைகளில் சொல்லப்பட்டிருப்பது மிகவும் குறைவே ஆகும். ஆனால், கங்கை, யமுனை முதலான நதிகளைக் கொண்டதான, பரத கண்டத்தின் மகிமையை பிரமாணத்துடன் (தக்க ஆதாரங்களின்படி) விளக்கிய செயல் ஹரிதாஸ ஸாகித்யத்தினாலேயே நடந்திருக்கிறது. இதுவும்கூட ஹரிதாஸ ஸாகித்யத்தினை மற்ற பக்தி ஸாகித்யத்யங்களைவிட வேறுபட்டது என்று சொல்வதற்கு ஒரு நல்ல காரணம் ஆகும்.

ஸ்ரீஹரியின் ஸ்ரீகிருஷ்ண, ஸ்ரீராம முதலான சில ரூபங்களையும் விசேஷமாக ஆராதனை செய்யும் சில பக்தி பரம்பரைகள் மத்ஸ்ய, கூர்ம, நரசிம்ம முதலான மற்ற பகவத் அவதாரங்களையும் குறித்த கிருதிகளை கொண்டிருக்கவில்லை. ஹரிதாஸ ஸாகித்யம் அப்படியல்ல. ஸ்ரீஹரியின் அனைத்து ரூபங்களையும் சமானமாக வணங்கியவாறு அவற்றின் ஒற்றுமையை (அனைத்தும் ஒன்றே என்பதை) நிறுவுகிறது. கிருஷ்ண, ஹயவதன, கேசவ முதலான ரூபங்களின் ஆராதகரான ஸ்ரீவ்யாஸராஜர், ஸ்ரீவாதிராஜர், ஸ்ரீகனகதாஸர், ஸ்ரீஹரியின் அனைத்து ரூபங்களையும் ஒன்றே என்று சொல்லி வர்ணிப்பதே இதற்கான விளக்கம் ஆகும்.

ஸ்ரீஹரியைப் போல, அவனுடைய பக்தர்களான த்ருவ, பிரகலாதன் ஆகியவர்களையும் பாடிப் புகழ்ந்திருப்பது, ஹரிதாஸ ஸாகித்யத்தின் இன்னொரு பெருமை. இதிலும்கூட, மற்ற பக்தி ஸாகித்யத்தின் பங்கு மிகவும் குறைவானதாகவே இருக்கிறது.

உலகத்தின் ஸ்ருஷ்டி ஆகியவற்றைப் பற்றி மற்ற பக்தி ஸாகித்யங்களில் அதிகமாக காணப்படுவதில்லை. ஹரிதாஸ ஸாகித்யத்தில் இவற்றைப் பற்றி அனேக புத்தகங்கள் எழுதக்கூடிய அளவிற்கு விஷயங்கள் உள்ளன என்பதை நாம் கவனிக்கலாம்.

விரத, உபவாஸங்களைக் குறித்த விஷயங்களைப் பற்றியும் மற்ற பக்தி ஸாகித்யங்களில் மிகக்குறைந்த கிருதிகளே உள்ளன. ஆனால்,

ஹரிதாஸ ஸாகித்யம் பற்பல விரதங்களைப் பற்றி, அதிலும் ஏகாதசி போன்றதான மகாவிரதங்களைப் பற்றி கொடுத்திருக்கும் விஷயம் அபூர்வமானது என்று சொல்ல வேண்டும்.

இவ்வாறு பல்வேறு காரணங்களால், ஹரிதாஸ ஸாகித்யம் மற்ற அனைத்து பக்தி பரம்பரையின் ஸாகித்யங்களைவிட சிறந்ததான ஒரு இடத்தைப் பெற்றிருக்கிறது.

த்வைத ஸித்தாந்தத்தின் ப்ரவர்த்தகரான ஸ்ரீமத்வாசார்யரின் த்வாதச ஸ்தோத்திர, கிருஷ்ணாம்ருத மஹார்ணவ முதலான கிருதிகள், ஹரிதாஸ ஸாகித்யத்திற்கு மூலகாரணம் என்று சொல்லலாம். கன்னடத்தில்கூட அவர் கிருதிகளை இயற்றியிருக்கிறார் என்று சொல்கிறார்கள். தற்போதைக்கு, கன்னடத்தில் ஹரிதாஸ ஸாகித்யத்தில் கிடைத்திருக்கும் மிகவும் பழமையான கிருதிகள் என்றால், ஸ்ரீமத்வாசார்யரின் சாட்சத் சிஷ்யர்களில் ஒருவரான ஸ்ரீநரஹரி தீர்த்தரின் கிருதிகளே ஆகும். பிறகு வந்தவர்களில் முக்கியமான ஹரிதாஸர்கள் என்றால், அது ஸ்ரீஸ்ரீபாதராஜர், ஸ்ரீவ்யாஸராஜர், ஸ்ரீவாதிராஜர், ஸ்ரீபுரந்தரதாஸர், ஸ்ரீகனகதாஸர், ஸ்ரீவிஜயதாஸர், ஸ்ரீப்ரஸன்ன வேங்கடதாஸர், ஸ்ரீகோபாலதாஸர் மற்றும் ஸ்ரீஜகன்னாத தாஸர் ஆகியோர் ஆவர். இவர்களில், ஸ்ரீகனகதாஸர் ஒரு சிறப்பான இடத்தை பெற்றிருக்கிறார்.

(தொடரும்)

***

**YouTube Channel - Jagannatha Kesava**

* மேற்கண்ட நமது யூட்யூப் சேனலில் தற்போது வந்துகொண்டிருக்கும் தொடர் – ஸ்ரீமதி கிருஷ்ணாபாய் என்பவர் இயற்றிய 153 பத்யங்களைக் கொண்ட தீர்க்க கிருதி – மைஸூரு ஸ்ரீஸுப்பராய தாஸரின் சரித்திரம் (ஸ்ரீகோபால ஒடெயரு – பிடி ஸன்யாஸி) – தமிழ் அர்த்த விளக்கங்களுடன்.
* நமது சேனலுக்கு சப்ஸ்க்ரைப் செய்து, ஏற்கனவே உள்ள + வரவிருக்கும் தொடர்களையும், அனைவரும் கேட்டு, நம் ஹரிதாஸ ஸாகித்யத்தின் சிறப்பினை அறிய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

## இந்த மாத ஆராதனைகள்

**ஸ்ரீ வேணுகோபால விட்டலதாசர் (1688-1768)**

வேணுகோபால தாஸார்ய விஜயராய ஸேவகம் |
வைராக்யாதி குணோபேதம் தம் வந்தே ஷக்தி புங்கவம் ||

விஜயதாஸரு அந்து பங்க நாமத திம்மண்ணனெந்தாக
ஆ ஜனுமத நெனெபு மூரு நாம மருகளிஸிதாக
நிஜதி நீனு வேணுகோபால விட்டலன தாஸனெந்தாக
அஜ ஜனக மங்களாங்க ஹரிவிட்டலன தாஸனெந்தாக
ஸுஜன திம்மண்ணதாஸ ஷக்தியலி ப்ரக்யாதனாதனாக ||

**ஸ்ரீ விஜயராமசந்திர விட்டலதாசர் (1819-1872)**

கங்காபித பதாப்ஜாளிம் கங்காதர ஸமப்ரபம் |
மங்களாங்க மஹிதேவம் மைஸூரு புரவாஸினம் ||
விட்டலோப பதோபேதம் விஜயராமசாந்திரம்
வைராக்ய ஞானமூர்த்திஞ்ச பஜேஹ பவதாரகம் ||

விஜயபூர்வ ராமசந்திர விட்டல பாதாப்ஜ ப்ருங்க
அஜஜனகங்க்ரிகள நிரந்தர பஜிப ஸஜ்ஜன ஸங்க
நிஜவாகி பயஸுத பஜிபர ஸேரிஸித மஹிம உத்துங்க
கஜவரத மங்களாங்க ஹரிவிட்டலன தயதி ஜயிஸித பவபங்க|

**முக்கியமான வேண்டுகோள்**

உங்கள் ஹரிதாச விஜயம் சந்தா காலம் முடிவடையும் மாதத்தை தெரிந்து கொள்ளவும். அது முடியும் முன்னரே, புதுப்பித்துக் கொண்டு, நம் பத்திரிக்கையை தொடர்ந்து பெற்றுக் கொள்ளவும். நன்றி. ஹரே ஸ்ரீநிவாஸா.

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 4 : இதழ் 6

**நிர்வாக ஆசிரியர்**
'ஜகன்னாத கேசவ'
சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ
பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross, JP Nagar
4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276.
haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**
' தாச சாகித்ய சேவா ரத்ன'
திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**
திரு. முரளிதர தாசரு,
திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா,
திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

**ஆராதனை**

**ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்**
**மே 1 முதல் 31 வரை, 2023**

மே 7 : வைசாக பகுள த்விதியை - ஸ்ரீஜயேஷ விட்டல தாஸர், மைஸூரு
மே 13 : வைசாக பகுள நவமி - ஸ்ரீவித்யா ரத்னாகர தீர்த்தர், ஸோஸலெ
மே 25 : ஜேஷ்ட சுத்த சஷ்டி - ஸ்ரீமோகனதாஸர், சிப்பகிரி

# ஆசிரியர் பக்கம்

ஸ்ரீஹரி வாயு குருகளின் அருளால், ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸரின் கன்னட ஸ்ரீராகவேந்திர விஜயம் புத்தகம் வெளியாகி பலரை சென்று சேர்ந்திருக்கிறது. ஆகவே ஹரிதாச விஜயத்தில் வந்து கொண்டிருக்கும் அந்த தொடரை, இரண்டாம் சந்தி முடிந்தவுடன் நிறுத்தி விடலாம் என்று நினைக்கிறேன். அந்த பக்கங்களில் வேறு புதிய தகவல்கள் வரலாம்.

இரு முக்கியமான தொடர்கள் வந்து கொண்டிருக்கின்றன. ஸ்ரீகனகதாஸர் பற்றிய கட்டுரைகள் மற்றும் ஹரிதாஸ ஸாகித்யத்தின் அகராதி எனப்படும் ஹரிதாஸ ஸாகித்ய ஸார என்னும் தொடர். இதனை அனைவரும் தொடர்ந்து படித்து, பின்னர் புத்தகமாக வரும்போது அதனை வாங்கிப் படிக்குமாறும் கேட்டுக் கொள்கிறேன்.

ஸ்ரீநரசிம்ம ஜயந்தி வரும் மாதமான இந்த இதழில் நரசிம்ம அவதாரம் பற்றிய பகுதியே (ராகவேந்திர விஜயம்) வந்திருப்பது மிகச் சிறப்பானது. ஆராதனை வரும் ஹரிதாஸர்களின் சரம ஸ்லோகங்களும் பின் அட்டையில் கொடுக்கப்பட்டுள்ளது. அந்தந்த நாட்களில் அந்தந்த ஹரிதாஸர்களை நினைத்து, அவர்களின் கிருதிகளின் மூலம், ஹரி வாயு குருகளின் அருளைப் பெற முயல்வோம்.

மேலும் தொடர்ந்து பல புதிய புத்தகங்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. அவை வெளிவருவதற்கு ஸ்பான்ஸர்ஸ் தேவை. உங்களால் முடிந்தால் உதவவும். வெளிவந்த புத்தகங்களையும் வாங்கிப் படித்து, பிறருக்கும் கொடுத்து உதவவும்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

**ஹரிதாச விஜயம் மாதப் பத்திரிக்கை ஆண்டுச் சந்தா ரூ.300/-**

| தொடர் | ஸ்ரீராகவேந்திர விஜயம் |
|---|---|
| | ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர் இயற்றியது |

**அந்த$^3$ ஸ்ரீஹரி நுடி$^3$ய மனகெ**
**தந்து$^3$ விஷ்வக்ஸேன மொத$^3$லே**
**ப$^3$ந்து$^3$ ஜனிஸித$^3$னஸுர நிஜ ஸதியுத$^3$ர தே$^3$ஶத$^3$லி**
**தந்தெ$^3$ ஸம்ப்$^3$ரமதி$^3$ந்த$^3$ தன்னய**
**கந்த$^3$னனு தா ஊரு தே$^3$ஶதி$^3$**
**தந்து$^3$ கூடி$^3$ஸி கேள்த$^3$ ஸுரரொளகா$^3$வனுத்தமனு ||9**

அந்த ஸ்ரீஹரி நுடிய - என்று கூறிய ஸ்ரீஹரியின் வாக்கினை; மனகெ தந்து - மனதில் நினைத்தவாறு; விஷ்வக்ஸேன - விஷ்வக்ஸேன தேவதை; மொதலெ பந்து - உடனடியாக வந்து; அஸுர நிஜ ஸதியுதர தேஶதலி - ஹிரண்யகசிபுவின் மனைவியின் வயிற்றில்; ஜனிஸித - பிறந்தான்; தந்தெ - தந்தையான ஹிரண்யகசிபு; ஸம்ப்ரமதிந்த - மிகவும் விமரிசையுடன்; தன்னய கந்தனனு - தன் மகனை; தா ஊரு தேஶதி - தன் தொடையில்; தந்து கூடிஸி - வரவழைத்து அமர்த்திக் கொண்டு; ஸுரரொளகெ - தேவதைகளில்; ஆவனுத்தமனு - யார் உத்தமன்; கேள்த - என்று கேட்டான்.

ஸ்ரீஹரியின் ஆணையை ஏற்று, விஷ்வக்ஸேன தேவதை உடனடியாக பூலோகத்திற்கு வந்து, ஹிரண்யகசிபுவின் மனைவியான கயாதுவின் வயிற்றில் பிரகலாதனாக பிறந்தான். (பிரகலாத ஜனனம் ஆகி, தற்போது அவனுக்கு ஐந்து வயது ஆகிறது). அப்போது தந்தையான ஹிரண்யகசிபு, மிகவும் மகிழ்ச்சியுடன் / விமரிசையுடன், தன் மகனை தன் தொடையில் அமர்த்திக் கொண்டு, தேவதைகளில் யார் உத்தமன்? யார் சிறந்தவர்? என்று கேட்கிறான்.

* நாரஸிம்ஹனெம்போ தேவனு என்னும் கீர்த்தனையில் ஸ்ரீபுரந்தரதாஸர் இவ்வாறு ஒரு பத்தியில் சொகிறார்.
ஓம் நம சிவாய எனுதலி அசுர தன்ன ஸுதன பரெது தோரு யென்னலு
நரஹரிய நாமவன்னு நகுனகுதலி பரெயுதிரலு
யெடத தொடெய மேலித்த ஷிஶுவ படிது தரெகெ நொக்கிதனு

**வாரிஜாஸன விஷ்ணு பஶுபதி**
**மூரு ஜனரொளகா3வனுத்தம**
**தீ4ர நீ பேளெனகெ3யெனுதலி தானெ பெ3ஸகொ3ண்ட3**
**ஸூரி தா ப்ரஹ்லாத நுடி3த3னு**
**நாராயணன உளிது3 ஸுரரொளு**
**ஆரு உத்தமரில்லவெந்தி3கு3 ஹரியெ உத்தமனு ||10**

வாரிஜாஸன - பிரம்ம; விஷ்ணு - ஸ்ரீஹரி; பஶுபதி - சிவன் ; மூரு ஜனரொளகாவனுத்தம - இந்த மூவரில் யார் உத்தமன்; தீர நீ பேளெனகெ - மகனே, நீ எனக்குச் சொல்; எனுதலி - என்று சொல்ல; தானெ பெஸகொண்ட - தானே ஒரு முடிவுக்கு வந்த; ப்ரஹ்லாத நுடிதனு - ப்ரகலாதன் இவ்வாறு கூறினான்; நாராயணன உளிது - ஸ்ரீமன் நாராயணனைத் தவிர; ஸுரரொளு - தேவதைகளில்; ஆரு உத்தமரில்ல - வேறு யாரும் உத்தமர்கள் இல்லை; எந்திகு ஹரியெ உத்தமனு - என்றைக்கும் ஸ்ரீஹரியே உத்தமன்.

ஹிரண்யகசிபு தன் மகனிடம் இவ்வாறு கேட்கிறான். பிரம்ம, ஸ்ரீஹரி, சிவன் இந்த மூவரில் யார் சிறந்தவர்?. மகனே, நீ எனக்குச் சொல். அதற்கு பிரகலாதன் இவ்வாறு கூறினான். ஸ்ரீமன் நாராயணனைத் தவிர, தேவதைகளில் வேறு யாரும் உத்தமர்கள் இல்லை. என்றைக்கும் ஸ்ரீஹரியே உத்தமனாக இருக்கிறான்.

**ஸர்வகு3ண க3ண பூர்ண ஸர்வக3**
**ஸர்வபாலக தே3வ ஸர்வக3**
**ஸர்வரந்தர்யாமி தானெ ஸ்வதந்த்ர பரிபூர்ண**
**ஷர்வ மொத3லாத3 மரரெல்லரு**
**ஸர்வகாலதி3 ஹரியதீ3னரு**
**ஸர்வலோகக்கெ ஸார்வபௌ4மனு லகுமி வல்லப4னு ||11**

ஸர்வகுண கண பூர்ண - அனைத்து குணங்களையும் பூரணமாக கொண்டவன்; ஸர்வக - அனைத்து இடங்களிலும் இருப்பவன்; ஸர்வபாலக - அனைவரையும் காப்பவன்; தேவ - ஸ்வாமி; ஸர்வக ஸர்வரந்தர்யாமி - அனைவருக்குள்ளும் இருப்பவன்; தானே ஸ்வதந்த்ர - ஸ்வதந்த்ரன், ஸ்வரமணன்; பரிபூர்ண - பரிபூர்ணன்; ஷர்வ மொதலாத - இந்திரன் முதலான; அமரரெல்லரு - தேவதைகள் அனைவரும்; ஸர்வகாலதி ஹரியதீனரு - எப்போதும் ஹரிக்கு அதீனமானவர்கள்; லகுமி வல்லபனு - ஸ்ரீலட்சுமியின் பதியானவன்; ஸர்வலோகக்கெ

ஸார்வபௌமனு - அனைத்து உலகங்களுக்கும் மங்களத்தைக் கொடுப்பவனாக இருக்கிறான்.

பிரகலாதன் மேலும் ஸ்ரீஹரியின் மகிமைகளை இவ்வாறு விளக்குகிறான்.

ஸ்ரீஹரியானவன், அனைத்து குணங்களையும் முழுமையாகக் கொண்டிருக்கிறான். அவன் அனைத்து இடங்களிலும் இருக்கிறான். அனைவரையும் காக்கிறான். அனைவருக்கும் ஸ்வாமியாக, அனைவரிலும் அந்தர்யாமியாக அவனே இருக்கிறான். அவனே ஸ்வதந்த்ரன், ஸ்வரமணன், பரிபூர்ணன். இந்திரன் முதலான தேவதைகள் அனைவரும் எப்போதும் ஸ்ரீஹரியின் அதீனரே ஆகின்றனர். ஸ்ரீலட்சுமியின் பதியானவன், அனைத்து உலகங்களுக்கும் மங்களத்தை கொடுப்பவனாக இருக்கிறான்.

**ஸுதன மாதனு கேளி தை³த்யர**
**பதியு கோபதி³ தோரிஸனலு**
**விததனாஹரி ஸர்வதே³ஶதி³ இருவ நோடெ³ந்தா³**
**பதித தை³த்யனு கம்ப³ தோரீ**
**யதன பூர்வக ப³டி³யலாக்ஷண**
**ஸ்ரிதன வசனவ ஸத்யமாடு³வெனெந்து³ தா ப³ந்த³ ||12**

ஸுதன மாதனு கேளி - மகனான பிரகலாதனின் பேச்சினைக் கேட்டு; தைத்யர பதியு - அசுரர்களின் தலைவனானவன்; கோபதி தோரிஸனலு - கோபத்துடன், அந்த ஹரியை காட்டு என்று சொல்ல; விததனாஹரி - அனைத்து உலகங்களிலும் இருப்பவனான ஹரி; ஸர்வதேஷதி இருவ - அனைத்து இடங்களிலும் இருக்கிறான்; நோடெந்தா - பார் என்றான்; பதித தைத்யனு - கெட்டவனான அந்த அசுரன்; கம்ப தோரி - ஒரு கம்பத்தை காட்டி; யதன பூர்வக - மிகவும் பலமாக; படியலாக்ஷண - அந்த கம்பத்தை அடிக்க, அதே நொடியில்; ஸ்ரிதன வசனவ - தன் பக்தனின் வசனத்தை; ஸத்யமாடுவெனெந்து - உண்மை ஆக்குவேன் என்று சொல்லி; தா பந்த - ஸ்ரீஹரி தானே வந்தான்.

ஸ்ரீ நரசிம்ம அவதாரம் நடப்பதை விளக்கும் பத்யம் இது.

மகனான பிரகலாதனின் பேச்சினைக் கேட்டு, அசுரர்களின் தலைவனான ஹிரண்யகசிபு, கோபத்துடன், அந்த ஹரியைக் காட்டு என்று சொல்ல, பிரகலாதனோ - அனைத்து உலகங்களிலும் இருப்பவனான ஸ்ரீஹரி, அனைத்து இடங்களிலும் இருக்கிறான் பார் என்றான். கெட்டவனான அந்த அசுரன், ஒரு கம்பத்தைக் காட்டி மிகவும் பலமாக அடிக்க, அதே நொடியில் - தன் பக்தனின் வசனத்தை உண்மை ஆக்குவேன் என்று சொல்லி, ஸ்ரீஹரி நரசிம்ம ரூபமாக அங்கு தோன்றினான்.

* நாரஸிம்ஹனெம்போ தேவனு என்னும் கீர்த்தனையில் ஸ்ரீபுரந்தரதாஸர், நரசிம்ம அவதாரம் நடந்த விவரத்தினை இரு பத்திகளில் சொகிறார்.

நின்ன தேவ இத்த எடெயனு தோரு யெனுத
பிதனு தன்னு சுதன கோரலு
என்ன தேவ இல்லதந்த எடெகளுண்டெ லோகதல்லி
கம்பதல்லு இருவனெந்து கைய முகிது தோர்தனாங்க

வரகம்பவன்னு ஒதெயலு நரஹரியு உக்ர கோபவன்னு தாளித
கடகடெம்ப த்வனிய மாடி நககளிந்த பிடிது ஒத்தி
கருள பகெது மாலெ ஹாகி கந்த பக்தனப்பிகொண்ட

* பக்தனின் வசனத்தை உண்மை ஆக்குவதற்காக ஸ்ரீஹரி, நரசிம்ம ரூபமாக வந்தான் என்பதை சொல்வதான பாகவத ஸ்லோகம் இது.
ஸத்யம் விதாதும் நிஜ ப்ருத்ய பாஷிதம்
வ்யாப்திஞ்ச பூதேஷ்வகிலேஷு சாத்மன: |
அத்ருஷ்யதாத் அத்யத்புத ரூபமுத்வஹன்
ஸ்தம்பே ஸபாயாம் ந ம்ருகம் ந மானுஷம் ||

**நரம்ருகா$^3$க்ருதி தாளி து$^3$ருளன**
**கருளு ப$^3$கி$^3$தா$^3$ நாரஸிம்ஹனு**
**தருள நின்னனு பொரெத$^3$னாக$^3$லெ கருணவாரிதி$^4$யு**
**ஸரள என்னனு காயோ ப$^4$வதொ$^3$ளு**
**மருளமதி நானாகி$^3$ ஸந்தத**
**இருளு ஹக$^3$லொந்தா$^3$கி$^3$ பரிபரிமாள்பெ து$^3$ஷ்கர்ம ||13**

நரம்ருகாக்ருதி தாளி - நர, மிருக என்னும் இரு உருவத்தையும் தாங்கி; துருளன கருளு பகிதா - அந்த தைத்யனின் குடலை கிழித்தான்; நாரஸிம்ஹன் - நரசிம்மன்; தருள நின்னனு பொரெதனு - சிறுவனான

பிரகலாதனை காத்தான்; ஆகலே கருணவாரிதியு - கருணையே வடிவானவன், உன்னுடைய சொல்லினை உண்மையாக்குவதற்காக கம்பத்திலிருந்து வந்து உன்னை காத்தான்; ஸரள என்னனு காயோ - என்னை மேலும் தொடர்ந்து காப்பாயாக; பவதொளு - சம்சாரம் என்னும் இந்த சாகரத்தில்; மருளமதி நானாகி - மந்த மதியான நான் கஷ்டப்பட்டு விழுந்து கிடக்கிறேன்; ஸந்தத இருளு ஹகலு - இரவும் பகலும் எப்போதுமாக (தொடர்ந்து); பரிபரிமாள்பெ துஷ்கர்ம - எப்போதும் கெட்ட செயல்களை செய்து கொண்டிருக்கிறேன்.

ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர், பிரகலாத ராஜரிடம் செய்யும் பிரார்த்தனை வடிவமாக இந்த பத்யம் இருக்கிறது. இதுவே நமது பிரார்த்தனையாகவும் இருக்க வேண்டும்.

நர மிருக என்னும் இரு உருவங்களையும் தாங்கி, ஸ்ரீ நரசிம்மன், அந்த தைத்யனின் குடலை கிழித்தான். சிறுவனான பிரகலாதனை காத்தான். அந்த கருணையே வடிவானவன், பக்தனான பிரகதலாதனின் வசனத்தை காப்பதற்காக, கம்பத்திலிருந்து வந்து உன்னை காத்தான். என்னையும் தொடர்ந்து நீ காப்பாயாக. சம்சாரம் என்னும் இந்த சாகரத்தில் மந்தமதியான நான் கஷ்டப்பட்டு விழுந்து கிடக்கிறேன். இரவும் பகலும் எப்போதுமாக தொடர்ந்து கெட்ட செயல்களையே செய்து கொண்டிருக்கிறேன்.

(தொடரும்)...

***

**YouTube Channel - Jagannatha Kesava**

* மேற்கண்ட நமது யூட்யூப் சேனலில் தற்போது வந்துகொண்டிருக்கும் தொடர் – ஹரிதாஸினி அம்பாபாய் (அங்கிதம் : கோபாலகிருஷ்ண விட்டலா) அவர்கள் இயற்றிய ஸ்ரீகிருஷ்ண பால லீலெ ஜோகுள – 389 பத்யங்களைக் கொண்ட தீர்க்க கிருதி – தமிழ் அர்த்த விளக்கங்களுடன்.

* நமது சேனலுக்கு சப்ஸ்க்ரைப் செய்து, ஏற்கனவே உள்ள + வரவிருக்கும் தொடர்களையும், அனைவரும் கேட்டு, நம் ஹரிதாஸ ஸாகித்யத்தின் சிறப்பினை அறிய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

**நாட்டுப்புற பண்களின் அம்சங்கள்**

**திருமதி. சி.எஸ். அருணா காந்தனவர**

தத்வசுவ்வாலியில் மட்டுமல்லா, ஹரிகதாம்ருதசாரத்தில் இத்தகைய தினப்படி கிராமத்து வேலைகளைப் பற்றி ஓரிரு இடங்களில் தாசர் கூறியிருக்கிறார்.

குட்டி கொயிதுதனட்டு இட்டுத
சுட்டு கொட்டுத முட்டலக ஹி
த்திட்டு மாள்புது விட்டலுண்டுச்சிஷ்ட சஜ்ஜனர
பிட்டு தன்னய ஹொட்டெகோசுக2
தட்டனுணுதிஹ கெட்ட மனுஜர
கட்டி ஒய்தெம பட்டண தொளொத்தட்ட லிடுதிஹரு ||
(சகல துரித நிவாரண சந்தி #28)

குட்டு என்றால் சமையல் செய் என்று பொருள். ஓரிடத்தில் அல்லது ஒரு மூலையில் எதையும் லட்சியம் செய்யாமல் என்ற இன்னொரு பொருளும் இதில் உள்ளது. இது கிராமத்து பேச்சுவழக்காகும். இன்னொரு நுடியில் ‘கரட்டி வ்ருஹிகளொளிப்ப தண்டுல கடெகெ தெகெவந்தெ’ என்று வருகிறது. கரட்டி என்றால் அம்மிக்கல். வ்ரீஹி என்றால் கோதுமை. தண்டுல என்றால் அரிசி. சமஸ்கிருதச் சொற்கள் இதில் வந்திருந்தாலும், கிராமத்து வழக்குமொழியிலேயே பாடல் உள்ளது.

வீட்டு வேலைகளான குட்டுவது, வீசுவது என்று சொல்வது மட்டுமல்லாமல், கிராமத்து நடைமுறைகளையும் பார்த்தவரான ஸ்ரீஜகன்னாததாசர் தம் காவியங்களில் அவற்றை பயன்படுத்தியிருக்கிறார். கிராமங்களில் பெரும்பாலும் மக்கள் விவசாயத்தை மேற்கொள்கின்றனர். அவர்களுடன் தச்சர், மண்பாண்டங்கள் செய்பவர் ஆகியோரும் இருக்கின்றனர். இவர்களைப் பற்றியும் தாசர் ஹரிகதாம்ருதசாரத்தில் சில இடங்களில் சொல்லியிருக்கிறார்.

பித்தி பீஜவ பூமியொளு நீ
ரெத்தி பெளெசித பெளஸு ப்ராந்தகெ
கித்து மெலுவந்ததலி லக்ஷ்மீரமண லோககள ||

தோடிகனு பூமியொளு பீஜவ
நாடபேகெந்தெனுத ஹிததலி
மோடியிம் நீரெத்தி சசிகள சந்தயிசுவந்தெ ||

ஒடெயரித்த வனஸ்த பலகள
படிது திம்புவருண்டெ கண்டரெ
ஹொடெது பிசுடுவரெம்ப பயதிம் நோடலஞ்சுவரு ||

கிணற்றிலிருந்து நீரை எடுத்து, தோட்டத்தில் இறைக்கும் பணியைப் பற்றியும் தாசர் சொல்லியிருக்கிறார். இன்றைய காலகட்டங்களில் இவை காணக்கிடைப்பதில்லை. விவசாயம் செய்வது, பொருட்களை ஓரிடத்திலிருந்து வேறொரு இடத்திற்குக் கொண்டு செல்வது, அவற்றை பறவைகள் மேயாமல் காப்பது போன்ற வேலைகளைப் பற்றியும் தாசர் விளக்கியிருக்கிறார். இன்னும் சில கிராமத்து வேலைகளைப் பற்றி இவ்வாறு சொல்லியிருக்கிறார் தாசர்.

காத கப்பிண ஹிடிது படியலு
வேதனெயு லோஹகளிகல்லவெ
ஆயுதேனை அனலகா வ்யதெ ஏனு மாடிதரு ||

கிட்டகட்டித லோஹ பாவக
சுட்டு விங்கட மாடுவந்தெ க
ரட்ட வ்ரிஹிகளொளிப்ப தண்டுல கடெகெ தெகெவந்தெ ||

காத காஞ்சனதொளகெ ஷோபிப
ஆதிதேவாஸ்யன தெரதி ல
க்ஷ்மீதவனு ப்ரதிதினதி சாலக்ராமதொளகிப்ப ||

தப்த லோஹவு நோள்ப ஜனரிகெ
சப்த ஜிஹ்வன தெரதி தோர்புது
லுப்த பாவக லோஹ காம்புது பூர்வதோபாதி ||

கிராமத்து வேலைகளை மிக அருகில் இருந்து பார்த்தவரான ஸ்ரீஜகன்னாததாசர், மண்பாண்டம் செய்பவர், இரும்பைக் காய்ச்சி அதிலிருந்து வேறு பொருட்களைச் செய்பவர் என இவர்களைப் பற்றி சொல்லி, அதன் மூலம் சித்தாந்தத்தை எப்படி விளக்கினார் என்று பார்த்தோம். அதேபோல், மண்பாண்டங்களை நெருப்பில் சுட்டால்

மட்டுமே அந்த வேலை முடிகிறது என்றும், அதை விட்டு அவற்றை வெயிலில் காய வைத்தால் முடியாது என்பதையும் சொல்கிறார்.

கெசர கடகள மாடி பேஸகெ
பிஸிலொளிட்டொணகிஸிதரது கன
ரசவ தும்பலு பஹுதெ சர்வ ஸ்வதந்த்ர தானெம்ப ||

பசுபனரரேனேனு மாள்பா
நஷன தான ஸ்னான கர்மக
ளொசரி போபவு பரிதெ தேஹாயாஸவனெ கொட்டு ||

கிராமத்து வாழ்க்கை என்றால், வெறும் சுகமாக இருக்கும் என்று சொல்லமுடியாது. அங்கும் துக்கங்களை அனுபவித்து வாழும் மனிதர்கள் உள்ளனர். மனிதன் தன் தேவைகளுக்காக கடன் வாங்குவதுண்டு. அந்த கடனை திருப்பிக் கொடுக்கும் வழிகளில் ஒன்று - அவர்களிடம் அடிமையாக வேலை செய்வது. 20ம் நூற்றாண்டில் அரசாங்கத்தால், இந்த அடிமைத்தனம் நீக்கப்படும் வரை, முன்பு இந்தப் பழக்கம் கிராமங்களில் இருந்து வந்தது. செல்வந்தர்களின் வீடுகளில் வேலைக்காரர்களாக பலர் இருப்பதைக் காணலாம். இந்த அடிமைத்தனத்தைக் கண்ட தாசர், அதனை தன் பாடல்களில் சொல்லியிருக்கிறார். ‘ரங்க நின்ன கொண்டாடுவ மங்களாத்மர’ என்னும் பாட்டில் ‘ஹெண்டத்தி மக்களு நின்ன தொண்டரெம்புவரு’ என்று பகவந்தனுக்கு அர்ப்பணம் செய்யும் மனோபாவத்தில் பாடியிருக்கிறார்.

ஒருவரின் தேவைகள் நிறைவேறாதபோது, மற்றொருவரின் மேல் அவர் கோபம் கொள்வது உண்டு. இத்தகைய சந்தர்ப்பங்களில் இறைவனிடம் முறையிட வேண்டியதுதான் ஒரே வழி. தாசர் தமது ஒரு பாடலில் இந்த சூழ்நிலையைப் பற்றி பாடியிருக்கிறார். ‘மாதர பய ஸ்ரீநாதன பரம சுப்ரீதிய படெதவகெ’ என்னும் பாடலில் ‘துசுமுசுகுட்டுவ சதி சுதரிந்தலி ஹசகெட்டிதேனோ’ என்கிறார். ‘துசுமுசுகுட்டுவ’ என்னும் சொற்பிரயோகம், கிராமத்து பேச்சு வழக்கில் மிகச் சாதாரணமாக பயன்படுத்துவதாகும்.

கிராமத்து மக்கள் ஏழ்மையில் இருப்பவர்கள் என்பது அனைவரும் அறிந்ததே. ஹரிதாசர்களும் ஏழ்மையில் உழன்றிருக்கின்றனர் என்பதை பல ஹரிதாசர்களின் சரித்திரத்தில் பார்க்கலாம். அவரது பாடல்களிலும் அந்த சூழல் பிரதிபலித்திருப்பதைப் பார்க்கலாம்.

ஒந்து கேணோடலன்னகாகி அல்ப
மந்த பாக்யர மனெகெ போகி தைன்ய
திந்த சத்கர்மகள னேகி கந்தி
குந்திதேனோ சலஹோ லேசாகி ||

சில ஸ்லோகங்களின் மூலம் கிராமத்து வாழ்க்கை எவ்வளவு எளிமையானது என்பதைப் பார்த்தோம். ‘கேணு’ என்னும் ஒரு பாடல், கிராமத்து வாழ்க்கையை சிறப்பாக விளக்குகிறது.

தத்வசுவ்வாலியில் ஒரு ஸ்லோகத்தில், ஏழ்மையை விளக்கும் காட்சி ஒன்று மிகவும் யதார்த்தமாக விளக்கப்பட்டிருக்கிறது.

நடெனுடிகளபராத ஒடெய நீனெணிஸிதரெ
படவ நானெந்து பதுகாலோ | கருணாளு
கடெபேள்வதெந்தூ பவதிந்த || (தத்வசுவ்வாலி)

இங்கு ‘பவதிந்த’ என்னும் ஒரு சொல்லை விட்டுவிட்டால், மற்ற சொற்கள் அனைத்துமே நாட்டுப்புறச் சொற்களே ஆகும்.

கர்னாடகத்தில் எங்குமே காணப்படாத நடவடிக்கைகள், ராய்ச்சூர் மாவட்டத்தில் மட்டுமே காணப்படுவதாக இருக்கின்றன. இந்த மாவட்டத்தில் யாரையாவது அழைக்கும்போது பன்மையில் அழைப்பது மிகக்குறைவு. அனைவரையும் ஒருமையிலேயே அழைத்துப் பேசுவது இவர்களது வழக்கம். அப்படி ஒருமையில் கூப்பிடும்போது அதில் உள்ள பாசம், நட்பு ஆகியவை வெளியாட்களுக்கு சரியாகப் புரியாது. கிராமத்தில் ஒரு சாதாரண ஆள், அந்த கிராமத்து தலைவனைப் பார்த்து ‘என்னப்பா எப்படி இருக்கே?’ என்றோ ‘என்னப்பா கௌடா, நலமா?’ என்றால், அந்தப் பெரியவரோ, தலைவரோ, அவனை தவறாக நினைப்பதேயில்லை. அமைதியாகவே பேசத் துவங்குவார்கள்.

’ஒடெய நீனெனிஸிதரெ, பதுகாலோ’ என்று ஒருமையில் பேசுவது, ‘களன்னில்லி காணுத்தேவெயே ஹொரது ஒடெயரே நீவெணிஸிதரெ’ என்று சொல்வதாகட்டும், ‘படவ நானெந்து பதுகபேகே’ என்று சொல்வதாகட்டும், பன்மையில் அழைப்பதை பார்க்கவே முடியாது. இறைவனையும் ஒருமையில் அழைத்துப் பாடுவதன் மூலம்,

அவனுடன் இருக்கும் நெருக்கத்தையே அது குறிக்கிறது என்று நாம் அறிவோம்.

ஏஸேஸு ஜன்மதலி தாசனு நினகய்ய
ஈஷ நீனெம்போது நுடிசித்த |வாகிரலு
தாசீன மாடோது உசிதல்லோ || (தத்வசுவ்வாலி)

மேற்கண்ட நுடியை மேலே சொன்ன வழியிலேயே பார்க்கலாம். இங்கு 'ஏஸேஸு' என்னும் நாட்டுப்புற சொல்லை பயன்படுத்தியிருப்பதை பார்க்கலாம். 'எஷ்டெஷ்டு' என்னும் இன்னொரு சொல் பொருள் சரியாக இருந்தாலும், இங்கு பொருந்தி வருவதில்லை. 'ஏசு ஜனும பந்தரேனு தாசனல்லவேனு நானு' என்னும் கனகதாசரின் பாடல் வரிகளும் இதையே குறிக்கின்றன.

(தொடரும்)

****

**தற்போது நமது Blogல்**
**தினம் ஒரு பத்யமாக வந்து கொண்டிருப்பது :**
**https://dasa-sahitya.blogspot.com/**

* ஸ்ரீப்ரஸன்ன ஸ்ரீனிவாஸ தாஸர் இயற்றிய - விஷ்ணு சஹஸ்ரநாம பாஷ்ய - கன்னட பத்யங்கள். இதன் அர்த்த விளக்கங்கள் - தமிழில்.
* 1000 நாமங்களுக்கு, (4 வரிகளைக் கொண்ட) 1000 கன்னட பத்யங்களை பாஷ்ய ரூபமாக இயற்றிக் கொடுத்திருக்கிறார் தாஸர்.
* தினமும் 3 பத்யங்களின், தமிழ் விளக்கங்களை நமது மேற்கண்ட blogல் படிக்கலாம்.

**புதிய புத்தகங்கள்**

ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால், பல புதிய புத்தகங்கள் தற்போது வரத் துவங்கியுள்ளன. உங்கள் பிரதிக்கு இன்றே தொடர்பு கொள்ளவும். இத்தகைய அரிய புத்தகங்கள் வெளிவருவதற்கு ஸ்பான்ஸர்களும் தேவை.. முடிந்தவர்கள் உதவலாம். நன்றி. ஹரே ஸ்ரீனிவாஸா.

தொடர்

**ஹரிகதாம்ருதசார மஞ்சரி 360**

**By ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர்**

**126. ரஸவிஸேஷ தொ$^3$ளதி விமலஸித**
**வஸன தோயிஸி அக்$^3$னியொளகி$^3$டெ$^3$**
**பஸரிஸுவுது$^3$ ப்ரகாஷ நஸுகுந்த$^3$த$^3$லெ ஸர்வத்ர |**
**த்ரிஷிர தூ$^3$ஷணவைரி ப$^4$க்தி ஸு**
**ரஸதி தோய்த$^3$ மஹாத்மரனு பா$^3$**
**தி$^4$ஸவு ப$^4$வதொ$^3$ளகி$^3$த்த$^3$ரு ஸரியெ து$^3$ரித ராஷிக$^3$ளு ||(14-28)**

அக்னியால் சுட முடியாத ரஸத்தில் நனைக்கப்பட்ட ஒரு துணியை அக்னியில் இட்டால், அது சுடாமல் அப்படியே இருக்கிறது. காரணம், அந்த ரஸமானது, துணியை அக்னி சுடாமல் காக்கிறது. அதைப் போல, ஹரிபக்தி உள்ள மானவருக்கு அவன் செய்யும் பக்தியே அவனை காக்கிறது. அதாவது, ஹரிபக்தி உள்ளவனை ஸ்ரீஹரி காக்கிறான் என்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

**127. கோ$^3$கனத$^3$ ஸக$^2$னுதய கூ$^3$கவ**
**லோகனகெ ஸொாக$^3$ஸதி$^3$ரெ பா$^4$ஸ்கர**
**தா களங்கனெ க்ருதிப ஜகன்னாத$^2$னித$^3$ரொளிரெ |**
**ஸ்வீகரிஸி ஸுக$^2$பட$^3$லரியத$^3$ வி**
**வேகிக$^3$ளு நிந்தி$^3$ஸித$^3$ரேனஹு**
**தீ$^3$கவித்$^1$வவ கே$^1$ளி ஸுக$^2$படதிஹரெ கோவித$^3$ரு ||(14-30)**

கோகனத – தாமரைப்பூ மலர்வதற்கு சூரியன் வேண்டும். அவன் வந்தவுடன் பூ மலர்கிறது. ஆனால், அதே சூரியன் வந்தபோது, ஆந்தைகள் தூங்குகின்றன. அப்படியென்றால், சூரியன் வரவேண்டாமா?. அதாவது, இந்த ஹரிகதாம்ருதஸார கிருதிக்கு ஸ்ரீஹரி பக்தர்கள் ஏற்றுக் கொண்டு மகிழ்ந்தால், அவிவேகிகள் இதனை ஏற்றுக் கொள்ளாமல் புறக்கணிக்கிறார்கள். ஆனால், கோவிதர்கள் இதனை ஏற்றுக் கொண்டு சுகப்படுகிறார்கள் அல்லவா?. ஹரிகதாம்ருதஸாரம் என்பது, கன்னட கிரந்தம் என்று அவிவேகிகள் இதனை புறக்கணித்தால், விவேகிகள், ஸாது ஸஜ்ஜனர்கள் இதனை ஏற்றுக் கொண்டு சுகப்படுகிறார்கள். அதன் மூலம், பகவந்தனின் பக்தி செய்கிறார்கள் அல்லவா? – என்கிறார் ஸ்ரீதாஸர்.

**128. சேதனா சேதனக3ளலி கு3ரு**
**மாதரிஷ்வாந்தர்க3த ஜக3**
**ந்னாத2விட்டல நிரந்தரதி3 வ்யாபிஸி திளிஸிகொளதெ3 |**
**காதரவ புட்டிஸி விஷயத3லி**
**யாதுதா3னர மோஹிஸுவ நி**
**ர்பீ3த நித்யானந்த3மய நிர்தோ3ஷ நிரவத்3ய ||(14-31)**

சேதன, அசேதன இந்த இரண்டிலும், முக்யப்ராணாந்தர்கத ஜகன்னாத விட்டலன் இருந்து, யாருக்கும் தெரியாமல், தெரிவிக்காமல், தான் நித்யானந்தனாகி, நிர்பீதனாகி, நிர்தோஷியான ஸ்ரீஹரி, கம்பீரனாகி இருக்கிறான் என்று அறியுங்கள் என்கிறார் ஸ்ரீதாஸர்.

**129. பா4ரதீஸனு க4ளிகெ3யொளு மு**
**ந்னூரு அரவத்துஸிரு ஜபக3ள**
**தா ரசிஸுவனு ஸர்வஜீவரொளித்து3 பே3ஸரதெ3 |**
**காருணிகனவரவர ஸாத4ன**
**பூரயிஸி பூ4 ஸ்வர்க3 நரகவ**
**ஸேரிஸுவ ஸர்வக்3ஞ ஸகலேஷ்ட ப்ரதா3யகனு ||(15-1)**

முக்யப்ராண தேவர், ஒவ்வொரு ஜீவகோடியில் வந்து ஒரு நாழிகைக்கு 360 ஜபங்களை, எவ்வித சோர்வும் இன்றி செய்து, அவரவர்களுடைய கர்ம ஸாதனை, யோக்யதைகளுக்கு ஏற்ப, ஸ்வர்க்க, நரக, பிறவி ஆகியவற்றில் அவர்களை இடுகிறார். காரணம், அவர் கூட, ஸ்ரீஹரியின் விருப்பத்தின்படி, ஸர்வக்ஞனாகி அவரவர்களின் இஷ்டங்களை கொடுப்பவனாக இருக்கிறான் என்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர். ஒரு நாழிகை என்றால் 24 நிமிடங்கள். அதில் 360 ஜபங்களை செய்கிறார் என்று பொருள். 'ஹம்ஸ:ஸோஹம் ஸ்வாஹா' என்னும் ஸ்தோத்திரத்தையே ஜெபிக்கிறார் என்பதை அறிய வேண்டும்.

**130. தாஸிகொ3ம்பை3னூரு ஷ்வாஸோ**
**ஸ்வாஸக3ள நடெ3ஸுதலி சேதன**
**ராஷியொளு ஹக3லிருளு ஜாக்3ருதனாகி3 நித்யத3லி |**
**ஈ ஸுமனஸோத்தம்ஸ லேஷா**
**யாஸவில்லதெ3 போஷிஸுத மூ**
**லேஷனங்க்3ரி ஸரோஜ மூலத3லிப்ப காணிஸதெ3 ||(15-2)**

ஒரு மணி நேரத்திற்கு 900 ஷ்வாஸ உச்வாஸங்களை, முக்யப்ராண தேவர், தொடர்ந்து இரவும் பகலுமாக, அனைத்து ஜீவர்களிலும், எவ்வித சோர்வும் இன்றி செய்கிறார். அனைத்து ஜீவர்களையும் காத்தவாறு, மூலேஷனின் பாதங்களில் (மூலரூபி நாராயணன்) இருந்து ஜெபித்து, யாருக்கும் தெரியாமல் தம் செயல்களை அவர் செய்கிறார் என்று அறிய வேண்டும். ஜீவோத்தமரின் சாதனை, யாருக்கும் தெரியாமல் செய்வதாகும். அதைப் போல, நீயும்கூட, வாயுவை தியானம் செய்து, யாருக்கும் தெரியாமல், உன்னுடைய ஸாதனைகளை செய் என்று தாஸர் குறிப்பிடுகிறார்.

**131. ஒந்து$^3$ தி$^3$னதொ$^3$ளக$^3$னிலனிப்ப**
**த்தொந்து$^3$ ஸாவிரதா$^3$ருனூரு மு**
**குந்த$^3$னாக்யதி$^3$ மாடி$^3$ மாடி$^3$ஸி லோகக$^3$ள பொரெவ**
**நெந்து$^3$ பவனன பொக$^3$ளுதிரு எ**
**ந்தெ$^3$ந்து$^3$ மரெயதெ ஈ மஹிமெ ஸ**
**ங்க்$^3$ரந்தனாத்$^3$யரிகு$^3$ண்டெ நோட$^3$லு ஸர்வகாலத$^3$லி ||(15-4)**

இந்த சரணத்தில் தாஸர், பவன – முக்யப்ராணன் நம் அனைவரின் ஜீவகோடியில் ஒரு நாளைக்கு 21,600 ஹம்ஸ மந்திரத்தை ஜெபம் செய்து, உலகத்தில் இருக்கும் அனைவரையும் காப்பாற்றுகிறான் என்று சொல்லி, அவனை எப்போதும் நாம் மறக்காமல் புகழ்ந்து கொண்டிரு, நினைத்துக் கொண்டிரு என்று சொல்லி, இந்த வாய்ப்பினை ஸ்ரீஹரியானவன், இந்திராதி எந்த தேவதைகளுக்கும்கூட கொடுக்கவில்லை என்பதை அறிவாயாக என்கிறார். இங்கு தாரதம்யத்தைப் பற்றி அறிய வேண்டும்.

**132. இனிதுபாஸனெ ஸர்வஜீவரொ**
**ளனிலதே$^3$வனு மாடு$^3$திரெ சி**
**ந்தனெய மாட$^3$தெ$^3$ கண்ட$^3$னீரொளு முளுகி$^3$ நித்யத$^3$லி |**
**மனெயொளகெ$^3$ க்ருஷ்ணாஜினாத்$^3$யா**
**ஸனதி$^3$ குளிது விஸிஷ்ட ப$^3$ஹுஸ**
**ஜ்ஜனனெனிஸி ஜபமணிக$^3$ளெணிஸித$^3$ரேனு பே$^3$ஸரதெ$^3$ ||(15-8)**

கிருஷ்ணாஞ்சனங்களை அணிந்து கொண்டு, ஸஜ்ஜனர்களைப் போல காட்டிக் கொண்டு, எப்போதும் ஜபம் செய்தால், எதுவும் பலன் இல்லை. அப்படியெனில், என்ன செய்ய வேண்டும் என்றால்,

முக்யப்ராண தேவரின் ஜபத்துடன், அவர் செய்து கொண்டுருக்கும் செயல்களைப் பற்றி அறிய வேண்டும். நம் நலனுக்காகவே அவர் தொடர்ந்து ஹம்ஸ மந்திர ஜெபத்தினை செய்கிறார் என்பதை அறியாமல், கண்ட கண்ட நீரில் தினமும் ஸ்னானம் செய்து ஜபம் செய்து என்ன பலன்?. எந்த வித பலனும் இல்லை என்கிறார் ஸ்ரீதாஸர்.

**133. ஜாலிதொப்பல ஜாவிக$^{3}$ளு மெ**
**த்$^{3}$தா$^{3}$லயதி$^{3}$ ஸ்வேச்சானுஸாரதி$^{3}$**
**பாலு க$^{3}$ரெவந்த$^{3}$த$^{3}$லி லகுமீரமண தன்னவர |**
**கீளுகர்மவ ஸ்வீகரிஸி த**
**ந்னாலயதொ$^{3}$ளிட்டவர பொரெவ க்ரு**
**பாளு காமத$^{3}$ கைரவத$^{3}$ளஷ்யாம ஸ்ரீராம ||(15-10)**

சாலையின் ஓரத்தில் விளைந்திருக்கும் செடி, கொடிகளை அங்கு மேயும் ஆடு, செம்மறி ஆடுகள் தின்று, பின் வீட்டிற்கு திரும்பி வந்து பால் கொடுக்கின்றன. அதைப் போல, லட்சுமி ரமணனான ஸ்ரீராமன், தன் பக்தர்களுக்கு வேண்டுமோ, வேண்டாமோ, கர்மங்களை செய்து, ஸ்ரீஹரிக்கு அதனை சமர்ப்பிப்பவர்களுக்கு, க்ருபாளுவான, நீலமேக ஷ்யாமனான ஸ்ரீராமன் அதனை ஏற்றுக் கொள்கிறான் என்கிறார் ஸ்ரீதாஸர்.

**134. தீ$^{3}$ப கரத$^{3}$லி பிடிது$^{3}$ காணதெ$^{3}$**
**கூபதொ$^{3}$ளு பி$^{3}$த்த$^{3}$ந்தெ வேத$^{3}$ ம**
**ஹோபனிஷத$^{3}$ர்த்த$^{2}$க$^{3}$ள நித்யதி$^{3}$ பேளுவவரெல்ல |**
**ஸ்ரீ பவனமுக$^{2}$ வினுதனமல ஸு**
**ரூபக$^{3}$ள வ்யாபார திளியதெ$^{3}$**
**பாப புண்யகெ ஜீவகர்த்ரு அகர்த்ரு ஹரியெந்து$^{3}$ ||(15-12)**

கையில் தீபத்தை வைத்துக் கொண்டே, வழியில் இருக்கும் பள்ளத்தை பார்க்காமல், அதில் சென்று விழுவதைப் போல, மஹா உபநிஷத்களை படித்து, அதன் சரியான அர்த்தங்களை சொல்லாமல், தெரியாமல், மற்றும் முக்யப்ராணன் மூலமாக ஸ்தோத்திரம் செய்து கொள்ளும் பகவந்தனின் செயல்களை அறியாமல் பாப புண்யத்திற்கு ஜீவனே கர்த்ரு, பகவந்தன் இல்லை என்று சொல்பவர்களுக்கு என்ன சொல்வது சாத்தியம் ஆகும்?. எதுவும் சொல்வதற்கு இல்லை என்று பொருள்.

**135. அனிலதே$^3$வனு வாங்மனோமய**
**நெனெஸி பாவக வருண ஸங்க**
**ந்த$^3$ன முகா$^2$த்$^3$யரொளித்து$^3$ ப$^4$க$^3$வத்$^3$ரூப கு$^3$ணக$^3$ளனு |**
**நெனெனெனெது$^3$ உச்சரிஸுதலி ந**
**ம்மனு ஸதா$^3$ ஸந்தயிஸுவனு ஸ**
**ந்முனி க$^3$ணாராதி$^4$த பதா$^3$ம்பு$^4$ஜ கோ$^3$ஜ ஸுரராஜ ||(15-13)**

ஹனுமந்தனின் வ்யக்தித்வத்தை சொல்ல வந்த ஸ்ரீதாஸர், அவர், வாங்மனோ ஞானத்தினால் ஸ்ரீஹரியை நன்றாக அறிந்து, தான் கருட சேஷ ருத்ர, இந்திராதிகளில் ப்ரேரணை செய்து, அவனை நினைக்குமாறு செய்கிறான். ஆகையால், நம்மைக் கூட அவன் காக்கிறான். சுக்ஞானத்தை கொடுப்பவன் அவனே. தேவதைகளுக்கெல்லாம் தலைவன் ஆகி, அவர்களையும், நம்மையும் காக்கிறான் என்கிறார். (ஜீவோத்தமத்வ ஞானத்திற்கு இது தேவை).

(தொடரும்)

***

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

## அம்மாளு அம்மாள் (1909–2011)

கும்பகோண வில்லபுரம் கிராமத்தை சேர்ந்த பரிகல்லில் ஸ்ரீலட்சுமி நரஸிம்ம ஆலயம் இருக்கிறது. பால்ய திருமணம் நடைபெற்று வந்ததான அந்த காலத்தில், மூன்று வயதான அந்த ஊரைச் சேர்ந்த அம்மாள் என்னும் சிறுமிக்கு 11 வயதன ஒரு சிறுவனுடன் திருமணம் ஆனது. ஆனால், அம்மாள், புகுந்த வீட்டிற்குச் செல்லும் வேளையில், அவருடைய கணவன் ஹரிபதம் அடைந்தார். கணவன் இறந்து, மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு, அந்த சிறுமி 'மடி' ஆனார். பின்னர், ஆத்யாத்மத்தின் பாலும் ஈர்க்கப்பட்டார்.

அம்மாள், தினமும் காலையில் ஸ்ரீலட்சுமி நரஸிம்ம ஆலயத்திற்குச் சென்று ஸ்ரீஹரி த்யானத்திலேயே காலத்தை கழித்து வந்தார். பசி எடுத்தால், ஒரு வாழைப்பழம் மற்றும் ஒரு டம்ளர் பால் - இவ்வளவே உண்டார். அவர் தன் $^1$5ம் வயதிலிருந்து வாழ்ந்த 102 வயது வரைக்கும் -

இதுவே அவருடைய தினப்படி ஆகாரமாக இருந்தது. ரிஷி முனிவர்களின் தவத்தைவிட சிறந்த தவம் இது. ஆலயமே அவருடைய இருப்பிடமாக ஆனது. இவருடைய நாடிகளில், ஸ்ரீநரஸிம்மனே முழுவதுமாக ஆக்ரமித்திருந்தான். அப்படியே இவருடைய பக்தியை மெச்சி, ஒரு நாள் இவருக்கு 'அம்மாள் ப்ரிய' என்னும் அங்கிதத்தை ஸ்ரீ நரஸிம்மனே அருள, அன்றிலிருந்து இவர் கிருதிகளை இயற்றத் துவங்கினார்.

சுமார் 3,000க்கும் மேற்பட்ட பாடல்களை அம்மாள் தம்முடைய அங்கிதத்தினால் இயற்றியிருக்கிறார் என்று தெரிய வருகிறது. அதில் பல்வேறு பாடல்கள் தற்போது கிடைத்திருப்பதும், அவை வாட்சப், ஈமெயில் முதலான ஊடகங்களின் மூலம் மக்களிடையே தற்போது பரவி வருகிறது என்பதும் மகிழ்ச்சியான செய்தியாகும். இவரது வாழ்க்கைச் சரிதம், பாடல்கள் ஆகியவற்றைப் பற்றி தனி புத்தகமே வரவேண்டியிருக்கும். நாம் இங்கு ஓரிரண்டு கிருதிகளை மட்டும் பார்ப்போம்.

**1. ஸ்ரீ புரந்தரதாஸர். ராகம். பிலஹரி. ஆதி தாள**

இந்த2 புரந்த3ர தா3ஸரு இரலிக்கெ நமகு3 நிமகு3
கந்தெ பொந்தெ3க3ள மாதுக3ள்யாதகெ ||ப

யாசித3 விப்ரன ஹோகு3 ஹோகெ3ந்து3
தோசி மூகுதி தன்னது3 எந்து3
அசல மனதி3 ஞான வைராக்3ய ஹொந்து3
ஸூஜி கூடி3ல்லத3 தா3னவதந்து3 ||1

ஸதி ஸஹித ஹம்பி க்ஷேத்ரக்கெ ப3ந்து3
யதி வ்யாஸராஜரே கு3ரு எந்து3
ஜதிவதெ3 ஸுளாதி3 பாடு3வெனெந்து3
ஸித்3தி4காந்தன தன்னவர்கெ3 எந்து3 ||2

ப4ண்டா3ர பொ3க்கஸ விட்டலனே எந்து3
பாண்டு3ரங்க3னே நமகெ3 க3தியெந்து3
பண்டரபுரவே வாஸபே3கெந்து3
பாண்ட3வ தூ3த 'அம்மாள் ப்ரியனே' எந்து3 ||3

* புரந்தரதாஸரின் கதையை மிகவும் அழகாக வர்ணித்து, பின்னர் அவரை திருத்திய பாண்டுரங்கனே நமக்கும் கதி என்றவாறு அந்த பாண்டுரங்கனிடம் சரணடைகிறார் ஹரிதாஸினி.

**2. ஸ்ரீ நரஸிம்ம ஸ்வாமியின் ஸ்துதி**

கண்டெ3 கண்டெ3 நானிந்து3 | கண்ணாரெ மனத3ல்லி |
அஹோப3ல க்ஷேத்ரத3 பூ4மண்ட3லதொ3ளு அஹோப3ல க்ஷேத்ரவ ||ப

தந்தெ3யிந்த3 அதி தொந்த3ரெ படு3த்தித்3த3 |
கந்த3ன பெ3ன்ன ஹிந்தெ3 திருகி3த3னா ||அப

காடு3 காடு3 கி3ட3மர கண்டெ3 | கூடு3 கூடு3க3ள குஹெகள கண்டெ3 |
ஜோடு3 ஜோடு3 ம்ருக3க3ள கண்டெ3 | பாடி3த3ரு பவித்ர த3ர்ப்பெ4ய கண்டெ3 ||1

மேலு கௌகெ3 மத்4ய தளுரு | காலக்ரமவ தோருவ மூரு ||
வாலக3 ப4க்தரு பே3டு3வ தாரு | ஜ்வாலா நரஸிம்ஹகெ3 எணெ மத்தாரு ||2

நாரத3 தும்பு3ரு கா3னவ கண்டெ3 | ஸுரரு ஸுரிஸுவ ஹூ ஹனி கண்டெ3 |
வீர ஜடாத4ர முனிக3ள கண்டெ3 | பா4ரவஹிஸி அம்மாள் ப்ரியன கண்டெ3 ||3

* ஹரிதாஸினி, பக்த பிரகலாதனை காத்த நரசிம்மனின் ஸாக்ஷாத்காரத்தை பெற்றவர். அத்தகைய நரஸிம்மனின் க்ஷேத்திரமான அஹோபலத்தின் சிறப்பினை இங்கு மிகவும் அழகாக வர்ணித்திருக்கிறார்.

ஹரிதாஸினி அம்மாள் அவருடைய கீர்த்தனைகள் அபாரமானவை. அவை புத்தகமாக, தொகுப்புகளாக அனைத்து மொழிகளிலும் வந்து அனைவரின் வீடுகளையும் சென்று அடையவேண்டும் என்பது நம் அனைவரின் விருப்பம் ஆகும்.

(அடுத்த இதழில் வேறொரு ஹரிதாஸினியைப் பற்றி பார்ப்போம்)

***

ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப் அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்துச் சொல்லலாம்.

தொடர்

## ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர்

டாக்டர். N.G.விஜயலட்சுமி.

### அம்பெ சும்பிஸு நினகெ முகுதி ரூபம்பெ
### என்னும் தேவரநாமாவின் அர்த்த விளக்கம்
### எழுதியவர் : டாக்டர். N.G.விஜயலட்சுமி.

வைகுண்டத்தின் வர்ணனையை செய்ய வேண்டும் என்றால், ஹரிதாஸர்களுக்கு மிகவும் பிடிக்கும். உடனே அவர்களுக்கு உற்சாகம் மற்றும் மகிழ்ச்சி வந்துவிடும். ஸ்ரீவாதிராஜர் வைகுண்ட வர்ணனை கிரந்தத்தில் இவ்வாறு கூறுகிறார்.

வைகுண்ட[2]வெம்ப ஹரிய லோக பொ[3]ம்மன
லோகக்கிந்த மேலிஹுது[3]
ஷோகரஹிதராத[3] ஸித்த[3]ஸாத்[3]யரல்லி
பே[3]காத[3] ஸுக[2]வனுணுதிஹரு ||7

லக்ஷ யோஜனத[3] மேலிக்கு அனந்தாஸன
லக்ஷ்மீஷனிஹ ஷ்வேதத்[3]வீப
லக்ஷவைவத்து, வைகுண்ட[2] இப்பத்தைது[3]
லக்ஷ ஷோட[3]ஷ கோடியல்லிஹுது[3] ||8

பிரம்மகல்பத்தின் பிரளயத்திலும் இந்த வைகுண்டம் அழியாமல் அப்படியே இருக்கிறது. இதனை ‘அனர்க்ய ரத்ன’ என்று அழைக்கிறார்கள். இந்த உலகத்தில் ரத்ன, முத்து, தங்கம், வைரம், வைடூர்யம் ஆகியவையே நிரம்பியிருக்கின்றன. இவை அனைத்தும் அப்ராக்ருத பொருட்கள். அனைத்தும் லட்சுமிதெவியின் ரூபங்களே ஆகும். ஸ்ரீஹரியை வணங்குவதற்காக அங்கு அனைத்துமாக ஆகி இருக்கிறாள். இந்த விஷயத்தையே ஸ்ரீவாதிராஜர் வைகுண்ட வர்ணனையில் விளக்கியிருக்கிறார்.

ரன்ன கெத்திஸித[3] சின்னதொளு கோடி
மன்மத[2]னய்யன புரிகெ
தன்மத்[4]யத[3]லி அயோத்[4]யவெம்ப[3] நக[3]ரி ஸு
வர்ண கோ[3]புருதொலொப்பிஹவு ||1
ஸிரிதே[3]வி தானெ முரஹரன பட்டணதொ[3]ளு
பரிபரிய மனெய ரூபத[3]ல்லி

மிரிமிரனெ மிஞ்சுவளு ஹச்சப்ரக்ருதியிந்த3
விரசித க்3ருஹக3ளொப்பிஹவு ||2

அனர்க்4யரதுன மந்தி3ரக3ளொளுப்பரிகெ3க3ள
ப3ண்ணிஸலென்னளவல்ல
ரத்னத3 த்4வார ப்ராகார காந்திகெ3
தன்ன லோடு3வுத3ந்த4கார ||1

மன்மத ஜனகனான ஸ்ரீஹரியின் வைகுண்டம், ஏழு தங்கக் கோட்டைகளால் ஒளிர்கிறது. அந்த கோட்டைகளின் நடுவே அயோத்யா நகரம். அங்கு ரமா ரமணன் இருக்கிறான். அபாரமாக ஒளிரும் ஸ்ரீதேவியே அங்கு இருப்பதால் அங்கு இருட்டிற்கு வாய்ப்பே இல்லை. உள்புறத்தில் இருக்கும் கோட்டையை சுற்றிலும், ஸ்ரீஹரியின் தேக வியர்வையின் ரூபத்தில் வெளிவந்த லட்சுமிதேவி, விரஜா நதி என்று அழைக்கப்பட்டு தண்ணீர் ரூபத்தில் பாய்கிறாள்.

பிரம்மாண்டதொளகெ அரிஸி நோடலு நம்மூரே வாஸி |
ரம்மெயரஸனு ஸதா வாஸிப ஸும்மானதி தானு ||

என்று ஸ்ரீபுரந்தரதாஸர் வைகுண்டத்தின் அழகினை ஒரு பாடலில் வர்ணிக்கிறார். ‘ஜனன மரணவில்ல, அல்லி உணுவ துக்கவில்ல, அனுஜ தனுஜரு அல்லில்ல, அனுமானத ஸொல்லே இல்ல நித்ரெயு அல்லில்ல, ரோக உபத்ரவலில்ல, க்ஷுத்ர ஜனங்களு அல்லில்ல, ஸமுத்ர ஷயன பல்ல. ஸாது ஜனர கூடெ மோக்ஷக்கெ ஸாதனெகள மாடெ, மாதவ புரந்தர விட்டலராயனு ஆதரிஸுவனல்லி’ .

ஒந்தே கூகளதெ வைகுண்ட
ஸந்தேஹவில்லவோ ஸாது ஸஜனரிகெ ||

என்று ஸ்ரீபுரந்தரதாஸர் இன்னொரு பாடலில் அது நமக்கு மிகவும் அருகில் இருக்கிறது என்று குறிப்பிடுகிறார்.

அப்ப நாராயணனனிப்பந்த அரமனெ
அப்ராக்ருதத வைகுண்ட கோலெ |
அப்ராக்ருதத வைகுண்டவெம்போ3து3
ஸ்வப்ராகாஷத பரமாத்ம கோலெ ||95

ஸூத்த விரஜாநதி மத்தெ ஆனந்தவன
சித்தஜனய்யனரமனெ கோலெ |
சித்தஜனய்யனரமனெஹெம்போது
உத்தமோத்தம வைகுண்ட[2] கோலெ ||96

பச்செ நீலவைடூர்ய நிச்சளவஜ்ர
அச்சமாணிகத அளவட்டு கோலெ |
அச்சமாணிகத அளவட்டு ஹரிபுர
அச்சுதனிப்ப அரமனெ கோலெ ||97

ஸிரிதேவி தா முரஹரன பட்டணதல்லி
விரஜியெந்தெந்து கரெஸோளு கோலெ |
விரஜியெந்தெந்து கரெஸி வைகுண்டக்கெ
ப1ரிக4ரூபதலி மெரெவளு கோலெ ||98

உத்தராதி நால்கு தத்தளிசுவ த்[4]வார
முத்து மாணிக்ய நவரத்ன கோலெ |
முத்து மாணிக்ய நவரத்ன முல்லிய
எத்தி மேல்கட்டி பி[3]கிதிவெ கோலெ ||99

'அவன புரகெ போத ஜனரு ஒம்மெ கன்ன திருகரவரு' என்று ஒரே வரியில் ஸ்ரீகோபாலதாஸர், வைகுண்டத்தின் மகிமையை சொல்லியிருக்கிறார்.

ஸ்ரீஜகன்னாததாஸர், தமது ஒரு கீர்த்தனையில் ஸ்ரீவைகுண்டத்தின் அழகான வர்ணனையை நம் மனதில் நன்றாக பதியுமாறு சொல்லியிருக்கிறார்.

எந்தத்தோ ஸ்ரீவைகுண்ட எந்தத்தோ ||ப

எந்தத்தோ வைகுண்டாரமண அல்லி
கந்துபிதன தேஹ கிரண ஆத
ரந்தரங்க ஹேமாபரண
காந்திகந்து நாசித ரவி அருணா
ஆஹா நந்த காலதல்லி ஸந்தத துதிபர்க்கெ
ப்ராந்தக்கெ நால்கு நிஷ்சிந்த முக்திய ஸ்தான ||1

பாலஸாகர மத்யெகோடி ஔ
கேளுஸூத்தினாகார தாடி தள

24 - ஹரிதாச விஜயம் – மே 2023

மேளதவரு மூரு கோடி நாம
பேள்வ காயகர கலாடி
ஆஹா ஷீல முனிகளு கந்தர்வரு யக்ஷரு
மேலெ ஜீவன்முக்தருகளிப்ப ஹரிபுர ||2

ஹேம ப்ரகாரத புரவு அல்லி
ஆ மஹா பீதி ஷ்ருங்காரவு நோடெ
காமதேனு கல்பதருவு
பலு ரமணீயகவாத இரவு
ஆஹா ஸ்ரீமூருதி எந்து வேதாந்த ஷ்ருதி ஸாரெ
ஆ மஹா முக்தரு ஸேரிப்ப ஹரிபுர ||3

ஸுத்தலு ஸனகாதி முனியு
திவ்ய நர்த்தன காயன த்வனியு
வ்ருஷ்டி சம்பக ஜாஜி ஹனியு அல்லி
அஷ்டம சத்ரீயர மனெயு ஆஹா
நித்யாவியோகினி ஒப்பத்த பாத ஸம்
பத்திகீஷன ஸர்வோத்தமனா க்ருஹ ||4

தள தளிஸுவ திவ்ய த்வாரா அல்லி
ஹொளெவந்த ரங்கமந்திர முத்தி நெளெகள கொஞ்சல பார
ஹேம துளஸீஸரத ஷ்ருங்கார ஆஹா
ஹொளெவ மாணிக்த மண்டபத மத்யதொள்மெரெவ
செலுவ ஜகன்னாத விட்டலன நிஜஸ்தான ||5

இதுவரை பார்த்த அனைத்து ஹரிதாஸர்களின் வைகுண்ட வர்ணனையை, ஸ்ரீப்ரஸன்ன வெங்கட தாஸர், இரு பாதங்கள் இருக்கும் முதலாம் நுடியில் மிகவும் அர்த்தபூர்வகமாக விளக்கியிருக்கிறார்.

அடுத்து, இரண்டாம் நுடியின் அர்த்தத்தை புரிந்து கொள்ள முயல்வோம்.

ஸ்வானந்ததொகுளியாட ஸுர ரிஷிகள கூட
நானா ராஷிகளல்லல்லி ஸ்த்ரி பும்ஸரொப்பினலி ||2

நித்யானந்தத்தை சுவைக்கும் முக்தர்களின் நிலையை, கதியை ஸ்ரீவாதிராஜர் வைகுண்ட வர்ணனையில் வர்ணித்திருக்கிறார்.

விரஜையை தாண்டிய பட்டணத்தில், முக்தர்கள், விரிஞ்சாதி ஸுரர்கள், மானவர், தரு, பக்ஷிகள் முதலான பற்பல ஜாதியவர்கள் இருக்கிறார்கள். ஸ்ரீப்ரஸன்ன வெங்கட தாஸர் கூறுவதைப் போல, ரிஷிகளும் அங்கு இருக்கின்றனர். ஜடமான லிங்க சரீரத்தை இழந்து, வெறும் ஞானானந்தாத்மகமான ஸ்வரூப சரீரம் உள்ள முக்த ஜீவர்கள், அங்கு இருக்கின்றனர். அவர்களிலும், பிராம்மணாதி ஜாதிகள் இருக்கின்றன. பசு, பக்ஷி, செடி, பூச்சி முதலன ஜீவர்களும் உண்டு. இந்த அனைத்து ஜாதிகளும் ஸ்வரூப பூதமானவையே தவிர, கர்ம நிமித்தமாக வந்தவை அல்ல. சிறியவர்கள், மூத்தவர்களை மரியாதை கொடுத்து கௌரவிக்கின்றனர். அவர்களில் இருக்கும் பகவந்தனை கண்டு அவரை வணங்குகின்றனர். பூஜிக்கின்றனர். முக்தரான ஸ்த்ரி புருஷர்கள் விதம் விதமான போகங்களை அனுபவிக்கின்றனர். ஸ்வானந்தத்தையே அவர்கள் பெறுகின்றனர்.

(தொடரும்)

***

தொடர்

## ஹரிதாஸ ஸாகித்ய ஸார

**திரு ஜி. வரதராஜ ராவ்**

ஹரிதாஸ ஸாகித்ய ஸார என்பது ஒரு மிகச்சிறந்த ஆராய்ச்சி நூல். எழுதியவர் திரு.ஜி. வரதராஜ ராவ். 20ம் நூற்றாண்டில் வாழ்ந்த இவர், 12 அத்தியாயங்கள் கொண்ட இந்த மிகப் பெரிய நூலை எழுதி, ஹரிதாஸ ஸாகித்யத்தின் ஒரு முழுமையான தொகுப்பாக இதனை வெளியிட்டுள்ளார். ஹரிதாஸ ஸாகித்யத்தின் பின்னணி, அபரோக்ஷ அனுபவம், புராணங்களின் குறிப்புகள், ஹரிதாஸ ஸாகித்யத்தின் வகைகள் என பல்வேறு தலைப்புகளில் 550+ பக்கங்கள் கொண்ட இந்த புத்தகத்தை, ஹரிதாஸ ஸாகித்யத்தில் ஈடுபாடு கொண்டவர்கள் அனைவரும் கண்டிப்பாக படிக்க வேண்டும். இதன் மொழிபெயர்ப்பினை நம் ஹரிதாச விஜயத்தில், இந்த இதழிலிருந்து தொடர்ந்து பார்ப்போம். முதல் அத்தியாயத்தின் பெயர் - வரலாற்றுப் பின்னணி.

## வரலாற்றுப் பின்னணி

கபீர் தனது குருவாக ஏற்றுக்கொண்ட ராமானந்தர் (1400-1470), அலகாபாத்தில் பிறந்து, காசியில் விஸிஷ்டாத்வைதத்தைப் பின்பற்றியவர். இவர், ஸம்பிரதாய பிராமணர்களைப் போல ஜாதி கட்டுப்பாடுகளில் விழாமல் அனைவரையும் சமான பாவத்துடன் கண்டவர். இவரின் சிஷ்யர்களில் கபீர் மற்றும் பீபா என்னும் ராஜபுத் ஆகியோர் முக்கியமானவர்கள். ராமானந்தர் தமது தத்வங்களை தமது தாய்மொழியில் சொல்லியிருப்பது இன்னொரு முக்கியமான விஷயம். அப்படியே இவரது சிஷ்யரான கபீரும், இந்து மற்றும் முஸ்லிம் இருவரின் நன்மதிப்பையும் பெற்றவர் ஆவார். வட இந்தியாவின் சந்த பரம்பரையில் கபீரின் இடம் மிகவும் முக்கியமானது.

இந்தி சாகித்யத்தில் புகழ் பெற்றவரும், ராமசரித மானஸ் இயற்றியவரும், மிகச்சிறந்த ராமபக்தருமான துளசிதாசரும்கூட ராமானந்தர் மூலமாகவே ஈர்க்கப்பட்டார் என்று தெரிய வருகிறது. இவருடைய காவியத்திற்கு மனம் மயங்காதவரே இல்லை. புஷ்டி மார்க்கத்தை துவக்கியவரான வல்லபாசார்யரின் மகனான விட்டல நாதனை பின்பற்றியவர் சூர்தாஸ். ஞானம் மற்றும் பக்திக்கு இருக்கும் வித்தியாசத்தை, உத்தவ மற்றும் கோபியர்களின் பக்தி அனுஸந்தானத்தின் வித்தியாசத்தைக் காட்டி விளக்கினார் இவர். சண்டிதாஸ, வித்யாபதி (ஆண்டு 1350-1450) மற்றும் மீராபாய் ஆகியோரில் காணப்படும் ராதா கிருஷ்ண ப்ரேமத்தின் தத்வமானது, ஜயதேவனின் (19ம் நூற்றாண்டு) கீத கோவிந்தத்தில் காணப்பட்டாலும், நிம்பார்க்க (1192) மற்றும் வல்லபாசார்யர் விளக்கிய மதுர பாவத்தின் மகிமையையும் இது விளக்குகிறது என்பதை பார்க்கலாம்.

இந்த அனைத்து விஷயங்களையும் கவனித்தவர்களுக்கு, வைதிக தர்மத்தின் மறுமலர்ச்சிக்குக் காரணர்களான ஆசார்ய த்ரயர்களின் தத்வங்களும் மற்றும் தென் இந்தியாவின் பக்தி பரம்பரைகளும், அந்தந்த காலகட்டங்களில், வட இந்தியாவின் ஆன்மிக இதிகாசத்தின் மேல் எத்தகைய விளைவினை ஏற்படுத்தியிருக்கின்றன என்பதை அறியலாம்.

ஒட்டு மொத்த இந்தியாவின் பார்வையில், பக்தி பரம்பரைகளின் தோற்றம், வளர்ச்சி மற்றும் சிறப்பினை கவனித்தால், அது தமிழ்நாட்டில் 10ம் நூற்றாண்டிலேயே துவக்கம் கண்டு, 12-15 நூற்றாண்டுகளில்

கர்னாடகத்தில் வளர்ந்து, படிப்படியே மகாராஷ்டிரா மற்றும் குஜராத் பகுதிகளில் பரவி, 15ம் நூற்றாண்டின் இறுதியில் அனைத்து இடங்களிலும் மிகச்சிறப்பாக பரவி, சீரும் சிறப்புமாக இருந்தது என்பதை காணலாம்.

கர்னாடகத்தில் காணப்படும் வீரசைவ மதத்தின் பரம்பரைக்கு அத்வைத தத்வமே அடிப்படை என்றால், ஹரிதாஸர்களின் பக்தி பரம்பரைக்கு, ஸ்ரீமத்வாசார்யரின் த்வைத சித்தாந்தமே அடிப்படை. வைஷ்ணவ பக்தியை பரப்பியதில், கர்னாடகத்தின் ஹரிதாஸர்களுக்கும், மகாராஷ்டிரத்தின் ஸந்தர்களுக்கும், பண்டரிபுரத்தின் பாண்டுரங்கனே ஆராத்ய தெய்வம் என்றாலும், கன்னட தாஸர்கள் த்வைதத்தையும்; மகாராஷ்டிரத்தின் ஸந்தர்கள் அத்வைதத்தையும் பின்பற்றினர் என்பதை அறிகிறோம். ஸ்ரீவைஷ்ணவர்களின் விஸிஷ்டாத்வைதத்தை பின்பற்றிய ராமானந்த, வல்லபாசார்யர், நிம்பார்க்க ஆகியோர் அவற்றில் அங்கங்கு சிறிது மாற்றத்தை ஏற்படுத்திக் கொண்டு, ஷுத்தாத்வைத, பேதாபேத - என்னும் புதிய வழியினை துவக்கி பின்பற்றினர். பாகவத மதத்தவர்களில் உருவ வழிபாடு அதிகமாக காணப்படுகிறது. வட இந்திய பக்தி பரம்பரையில், ராதா கிருஷ்ணர்களின் ப்ரேமத்தின் சிறப்பு மிகவும் போற்றப்படுகிறது.

தமிழ்நாட்டின் ஆழ்வார்களின் பிரபந்தங்கள் ஸ்ரீராமானுஜாசார்யரின் விஸிஷ்டாத்வைத தத்வத்தை விளக்குகின்றன. ஸ்ரீவைஷ்ணவர்கள் அவற்றினை வேத உபநிஷத்களுக்கு சமானமாக பாவித்து, அவற்றை திராவிட ப்ரபந்தங்கள் என்றே அழைத்து கௌரவிக்கின்றனர் என்பது கவனிக்கவேண்டிய செய்தி. வேத உபநிஷத்கள் மற்றும் மற்ற ஆன்மிக கிரந்தங்களில் வந்திருக்கும் முக்கிய அம்சங்கள் அனைத்தும் கன்னட ஹரிதாச கிருதிகளில் வந்திருந்தாலும், அவற்றை த்வைத சித்தாந்தத்தின் பிரதிபலிப்பு என்றே சொல்ல வேண்டும்.

ஸ்ரீமதானந்த தீர்த்தர் தம் சித்தாந்தத்தில் ஈஷ - தாஸ பாவத்திற்கு முதல் இடம் கொடுத்திருப்பதால், இந்த கன்னடத்தின் கிருதிகளில், பகவந்தனின் ஆராதனையையும், ஹரிதாஸ்யத்தின் சிறப்பினையும் தெளிவாகக் காண்கிறோம். ஸ்ரீசங்கராசார்யரின் அத்வைத தத்வத்தில் பக்தி ஒரு சாதனமாகவே சொல்லப்பட்டிருப்பதால், அந்த மதத்தைப் பின்பற்றிய கன்னடர்கள் யாரும் அந்தக் காலத்தில் பக்தியை வெளிப்படுத்துவதான கிருதிகளை இயற்றியதாக இன்று வரை எனக்கு தகவல்கள் கிடைக்கவில்லை.

ஸ்ரீராமானுஜாசார்யரின் மதத்தைப் பின்பற்றும் கன்னடர்கள், தமிழையே தங்களின் தாய் மொழியாக ஏற்றுக் கொண்டதால், விஸிஷ்டாத்வைத தத்வத்தை கன்னடத்தில் பிரசாரம் செய்யும் வேலையை அவர்கள் செய்யவில்லை. ஸ்ரீமத்வாசார்யர் பக்திக்கு முக்கிய இடம் கொடுத்து, த்வாதஸ ஸ்தோத்திரம் முதலான கிருதிகளில் ஹரியின் மகிமையையும், த்வைத த்ருஷ்டியையும் சம்ஸ்கிருதத்தில் விளக்கினார்.

ஸ்ரீமத்வாசார்யரின் இந்த புதிய ஸித்தாந்தம் பண்டிதர்களால் புகழப்பட்ட காலத்தில், அதாவது இரண்டு நூற்றாண்டுகளுக்குப் பிறகு, கன்னடிகரான ஸ்ரீபாதராஜர் கன்னடத்தில் கீர்த்தனைகளை இயற்றும் செயலை துவக்கினார். அவருடைய முயற்சியினால் ஹரிதாஸ சாகித்யத்தின் தோற்றம் உண்டானது. அவரே இந்த சிறந்த சாகித்யத்தின் பல்வித வகைகளை இயற்றி, அடுத்து வருபவர்களுக்கு ஒரு வழிகாட்டியாக இருந்தார். ஸ்ரீபாதராஜர் துவக்கி வைத்த இந்த கீர்த்தன கைங்கர்யத்தை ஸ்ரீவ்யாஸராஜர், ஸ்ரீவாதிராஜர் ஆகிய யதி த்வயரும், புரந்தரதாசர், கனகதாசர் முதலான ஹரிதாஸர்களும் தொடர்ந்து வளர்த்தனர்.

15ம் நூற்றாண்டில் மொத்த பாரதத்திலேயே பக்தி பரம்பரை வளரத் துவங்கிவிட்டதால், ஸ்ரீபாதராஜரின் இந்த முயற்சி மிகக் குறுகிய காலத்திலேயே தக்க பலன்களைக் கொடுக்க ஆரம்பித்து விட்டது எனலாம்.

(அடுத்த இதழில் அடுத்த அத்தியாயம் துவங்கும்)

(தொடரும்)

***

நாமவே காயுவுது நாமவே உளிபுது
நாமவே சர்வபவித்ர மாடுவுது
நாமவெ கன துரித சம்ஹார மாடுவுது
நாமவெ நெனவங்கெ வஜ்ராங்கியப்புது
நாமவெ சகல பக்தி ஸ்தோமவ பாலிஸுது
நாமவெ நிந்தல்லி குளிதல்லி மஹாபாக்ய
நாமபொந்து நெனெயெ விஜயவிட்டலன
தாமவெ ஆகுவுது தடெயதெ நமகெல்லா || -- ஸ்ரீவிஜயதாசர்

தொடர்

## கனகதாஸர்

திரு.வ்யாஸனகெரெ ப்ரபஞ்சனாசார்யர்

### ஸ்ரீகனகதாஸரின் சிறப்பு

ஸ்ரீகனகதாஸருடைய அபாரமான ஸாதனை மற்றும் ஆளுமை. ஹரிதாஸர்களில் மூத்த இடத்தில் இருப்பவர்களில் ஒருவர். பிராமணர் அல்லாத இவர் மாத்வ பிராமண வர்க்கத்திற்கு அற்புத பங்கினை அளித்த ஞானி வரேண்யர் எனப்படுகிறார். குருபராக பிறந்த இவர், அடுத்து அரசனாகும் பாக்கியத்தையும் அடைந்தார். இள வயதிலேயே ஒரு முறை, கனவில் வந்த குறிப்பின்படி, ஏராளமான செல்வத்தைப் பெற்று, திம்மப்ப என்னும் பெயர் கொண்ட இவர் கனகப்ப ஆனார். திருப்பதியின் திம்மப்பனின் கருணையால், திம்மப்ப எனப்பட்டால், தங்கம் கிடைத்ததால் கனகப்ப ஆனார். திம்மப்ப ஸ்ரீஹரி என்றால், கனகத்தின் அபிமானி தேவதை - மகாலட்சுமி. அதாவது, ஸ்ரீலட்சுமி நாராயணர் இருவரின் அருளும் இவருக்கு கிடைத்தது. அரசன் ஆனபோது உத்தம அரசாட்சியால் மக்களின் அன்பும் இவருக்கு கிடைத்தது. அப்போது ஒரு முறை எதிரிகளுடன் நடந்த போரில், இவருக்கு விழுந்த அடியால், இவரது சிந்தனையே மாறிப்போனது. தாஸன் ஆகு என்று ஸ்ரீஹரியே ஆணையிட்டான். இதன் பின் நடந்தது அற்புத வரலாறு.

அரஸனாக, கவியாக, ஸந்தனாக, ஹரிதாஸனாகி, ஸ்ரீகனகதாஸர் அபூர்வமான ஆளுமை எனப்படுகிறார். கனகத்தின் தாஸர்களாக உலகத்து மக்கள் அனைவரும் இருப்பதை நாம் பார்க்கிறோம். ஆனால், கனகத்தின் தாஸ்யத்தை விட்டு, ஹரிதாஸர் ஆன பெருமை நம் கனகதாஸருடையது. ஸ்ரீபுரந்தரதாஸர், நவகோடியை விட்டு நாராயணனை பிடித்தால், ஸ்ரீகனகதாஸர், கனகத்தை விட்டு அதன் அதிபதியான ஸ்ரீஹரியின் தாஸர் ஆனார். ஸ்ரீகனகதாஸரின் கிருதிகளில் பெரும்பாலானவை, மத்வர்களின் தினப்படி சொல்வதான பஜனைக்கான கிருதிகளாகவே இருக்கின்றன. அவர் இயற்றிய கேசவ நாமா, மாத்வருக்கு, அதிலும் பெண்களுக்கு மந்த்ரதுல்யமாகவே இருக்கிறது. ஹரிதாஸ ஸாகித்யத்தில் பல்வேறு கேசவ நாமாக்கள் இருந்தாலும், ஸ்ரீகனகதாஸரின் இந்த கேசவ நாமாவிற்கே முதல் இடம். நடை, தத்வ, பக்தி முதலான அனைத்து காரணங்களுக்கும் தகுந்த உதாரணம் என்றால் அது இந்த கேசவ நாமாவே ஆகும். இதனை படிப்பதால், அபார ஸித்தியினை அடைந்த பல்வேறு மக்களை இன்றும் நாம் காணலாம்.

ஸ்ரீகனகதாஸர் தாஸர்களில் கவிஞர். கவிஞர்களில் தாஸர். பம்பா முதலானவர்கள் மஹாகவி எனப்பட்டாலும், தாஸர் என்னும் பெருமையை அவர்கள் பெறவில்லை. ஹரிதாஸர்கள் ஸந்தர்கள் என்று சொல்லப்பட்டாலும், அவர்களை கவிஞர்கள் என்று பொதுவாக சொல்வதில்லை. ஆனால், ஸ்ரீகனகதாஸர் இந்த இரு வரிசைகளிலும் வருகிறார் என்பது விசேஷமான விஷயம். துவக்க காலத்தில் அவர் போர்க்களத்தில் நின்று போரிடும் ஒரு வீரனாக இருந்தவர், பிறகு, மோஹன தரங்கிணி போன்றதான கிருதிகளை இயற்றத்தக்க கவி ஆனார். ஆயுதங்களை தாங்கி போரிட்ட அவர், பின்னர் சாஸ்திர தத்வங்களை பாடத்தக்க ஞானிகளும் ஆனார். பம்பா முதலானவர்கள் எவ்வளவு மஹாகவிகளே ஆனாலும், தினப்படியாக மக்கள் பாடத்தக்க பாடல்களை அவர்கள் இயற்றியிருந்தாலும், அவர்களின் கிருதிகள் தாஸர்களின் பஜனைகளில் சேரவில்லை. சங்கீதகாரர்களால் அவை பாடப்படுவதும் இல்லை.

ஆனால், ஸ்ரீகனகதாஸர் அப்படியல்ல. அவர் இயற்றிய கிருதிகள் பஜனையிலும் சேர்ந்திருக்கிறது, ஸாஹித்யத்திலும் சேர்ந்திருக்கின்றன. ஸங்கீதத்திலும் சேர்ந்திருக்கின்றன. முன்னர் அபாரமான செல்வந்தராக இருந்த இவர், பிறகு ஹரிதாஸர்களில் முன்னர் நவகோடி நாராயணனாக இருந்து பின்னர் ‘தாஸர் என்றால் அவரே’ எனப்பட்டவரான ஸ்ரீபுரந்தரதாஸரை ஒப்பிடும் வாழ்க்கை கனகதாஸருடையது. ஸ்ரீபுரந்தரதாஸரைப் போலவே ஸ்ரீகனகதாஸரும் லௌகிகத்திலிருந்து அலௌகிகத்தின் பால் முழுமையாக சென்ற ஸந்தர் என்பது கவனிக்க வேண்டிய விஷயமாகும். பம்பா, குமாரவ்யாஸ, குமாரவால்மிகி, லக் ஷ்மீஷ ஆகிய மஹாகவிகளுக்கும் கிடைக்காத மக்களின் அன்பு, ஸ்ரீகனகதாஸருக்கு கிடைத்தது என்பது அவருடைய அபாரமான அபூர்வமான ஸாதனையின் குறியீடு.

தாஸர்களில் கீர்த்தனைகளுக்கு ஸ்ரீபுரந்தரதாஸர் புகழ் பெற்றவர் என்றால், ஸ்ரீவிஜயதாஸர் சுளாதி தாஸர் என்றே அழைக்கப்படுகிறார். ஸ்ரீகனகதாஸரோ முண்டிகெ தாஸர் என்று பெயர் பெற்றிருக்கிறார். ஸ்ரீவ்யாஸராஜர், ஸ்ரீபுரந்தரதாஸரின் கிருதிகளை ‘புரந்தரோபனிஷத்’ என்று பெயர் சூட்டியது நாம் அறிந்ததே. இது ஸ்ரீபுரந்தரதாஸரின் உடன் இருந்தவரான, ஸ்ரீவ்யாஸராஜரின் சிஷ்யரும் ஆன ஸந்த ஸ்ரீகனகதாஸரின் கிருதிகளுக்கும் கூட பொருத்தியவாறு அவருடைய

கிருதிகளை நாம் ‘கனகோபனிஷத்’ என்று அழைக்கலாம். ஹரிதாஸ ஸாகித்யத்தையே இவ்வாறு, கன்னட உபநிஷத் என்று சொல்லலாம்.

ஸ்ரீகனகதாஸர் கர்னாடகத்தின் முக்கிய ஹரிதாஸர்களில் ஒருவர். ஞான யோகிகளில் ஸனக முனிகளைப் போல, கர்ம யோகிகளில் ஜனக ராஜனைப் போல, ஹரிதாஸர்களில் ஸ்ரீகனகதாஸர் எனலாம். காகிநெலெ, பாட, விஜயநகர, திருப்பதி மற்றும் உடுப்பி ஆகியவை இவருடைய கார்ய க்ஷேத்திரங்களாக இருந்தன.

ஸ்ரீகனகதாஸரின் துவக்க காலத்தில் அவரிடம் கனக, செல்வங்கள் ஏராளமாக இருந்தன. அப்போது பகவந்தனே அவர் தன் தாஸன் ஆகவேண்டும் என்று அழைத்தாலும், அவர் அதனை கவனிக்கவில்லை. பிறகு இன்னொரு முறை அழைத்ததும், அப்போதே அவருக்கு அது தெரிந்தது. கனகநாயகர் எனப்பட்ட திம்மப்ப நாயகர், தம் செல்வங்கள் அனைத்தையும் துறந்து ஸ்ரீகனகதாஸர் ஆனார். தம் வாழ்க்கையில் மறுபடி செல்வங்களுக்கு அடிமையாகாமல் வாழ்ந்து வந்தார். அதாவது, பகவந்தனை ஆராதனை செய்து வாழ்வதே உண்மையான வாழ்க்கை என்று அதன்படியே வாழ்ந்தார். பகவந்தனை ‘ஈஷ’ என்று அறிந்த அவருக்கு வந்த தன்யதை கனகநாயகராக இருந்திந்தபோது அவருக்கு என்றுமே வந்ததில்லை. பதுகிதெனு பதுகெனு பவ எனகெ ஹிங்கிது | பதுமனாபன பாததொலுமெ எனகாயிது - என்கிறார்.

இவ்வாறு கனகத்தின் தாஸ்யத்தை இழந்து, பகவந்தனின் தாஸ்யத்தை அடைந்ததே ஸ்ரீகனகதாஸரின் வாழ்க்கையின் முக்கிய அர்த்தம். கனகதாஸர் முதலில் எதுவும் அறியாதவராக இருந்தார். ஹரிதாஸர் ஆனபிறகே அவர் கவிகளாகவும் ஆனார் என்று சிலர் சொல்கின்றனர். ஆனால், ஸ்ரீகனகதாஸரின் முக்கிய கிருதிகளில் ஒன்றான ‘மோஹன தரங்கிணி’ யிலிருந்து தெரிய வருவது என்னவென்றால், அவர் ஹரிதாஸர் ஆவதற்கு முன்னரே மஹாகவிகளாக இருந்தார். சிறந்த பண்டிதராக இருந்தார். அவருடைய மோஹன தரங்கிணி ஒரு மிகச்சிறந்ததான மஹாகாவியம் ஆகும். அது அவர் ஹரிதாஸ தீக்ஷையை பெறும் முன்னர் இயற்றிய கிருதி ஆகும். அப்போது அவருக்கு ராமானுஜாசார்யரிடம் இருந்த பக்தி இந்த காவியத்திலிருந்து புலப்படுகிறது.

ஹரிதாஸர்களின் பரம தத்வங்களில், ஹரி ஸர்வோத்தமத்வத்தைப் போல, வாயு ஜீவோத்தமத்வமும் ஒன்று. அவர்களுக்கு ஸ்ரீமன் மத்வாசார்யரே முக்கிய குருகள். ஸ்ரீமத்வரின் பெயரையே சொல்லாத

மோஹன தரங்கிணி, இவருடைய ஹரிதாஸர் ஆகும் முன்னரான கிருதி என்பது இதிலிருந்து தெரிகிறது. கனகதாசர் ஹரிதாஸர் ஆனபிறகு, ஸ்ரீமத்வரின் பரம குருத்வத்தை முழுமையாக ஒப்புக் கொண்டதற்கு 'பரமபதவீவ குருமுக்யப்ராண' 'அந்தம்தமஸ்ஸு மத்தின்யாரிகெ' ஆகிய கிருதிகளே சாட்சியாக இருக்கின்றன. ஹரிதாஸ ஸாகித்யத்தின் இன்னொரு லட்சணங்கள் எனப்படுபவை - பகவத் பக்தி, விஷய விரக்தி ஆகியவை. ஆனால், மோஹன தரங்கிணியில் பக்தி ரஸத்தைவிட ஷ்ருங்கார ரஸமே அதிகமாக காணப்படுகிரது. இந்த காரணத்தினாலும் அது அவருடைய துவக்க கால கிருதி என்று சொல்லலாம். இப்படியாக ஷ்ருங்கார ரஸம் மிகுந்த காவியத்தை இயற்றிய ஸ்ரீகனகதாஸர், பின்னர் வைராக்கியத்தின் பால் ஈர்க்கப்பட்டு ஞான, பக்தி, வைராக்கியத்துடன் பற்பல கீர்த்தனைகளை இயற்றினார்.

ஸோஸலெயின் ஸ்ரீவ்யாஸராஜர் மற்றும் ஸோதெயின் ஸ்ரீவாதிராஜர், பாட' த்தின் ஸ்ரீகனகதாஸரின் வாழ்க்கையை மாற்றியமைத்ததில் முக்கிய பங்கு வகித்த மஹனீயர்கள் என்று சொல்லலாம். இதில் ஸ்ரீவாதிராஜரும், ஸ்ரீவ்யாஸராஜரின் சிஷ்யர் என்பதை கவனிக்க வேண்டும். ஸ்ரீவ்யாஸராஜர் தம் மிகச்சிறந்த ஆளுமையினால், த்வைத வேதாந்த இதிகாசத்தில், முனித்ரயர்கள் எனப்படுபவர்களில் ஒருவராக இருக்கிறார். தம்முடைய பாண்டித்யத்தினால், பரவாதிகளுக்கு சிம்ம சொப்பனமாக, ஞானத்தை விரும்புபவர்களுக்கு காமதேனுவைப் போல அருள் புரிந்து வாழ்ந்த மகான். ஸ்ரீவிஜயீந்த்ர தீர்த்தர் போன்றதான வ்யாஸ ஸாகித்ய ஆளுமைகளையும், ஸ்ரீபுரந்தரதாஸர் போன்ற தாஸ வரேண்யர்களையும் அருளிய கீர்த்தியை கொண்டவரான இவரின் கருணையைப் பெற்றவரான ஸ்ரீகனகதாஸரும் ஒருவர் என்பதை நாம் பார்க்க வேண்டும். நான்காம் வர்ணத்தவர் ஒருவர் ஹரிதாஸர் ஆகி, பக்தி சாகித்யங்களை இயற்றி பரப்பியதில் ஸ்ரீவ்யாஸராஜருடைய பாத்திரம் மிகவும் அஸாதாரணமானது. ஸ்ரீகனகதாஸருக்கு தாஸ தீக்ஷை அளித்த குருகளாக மட்டும் இல்லாமல், ஸ்ரீகனகதாஸரின் மகிமைகளை சமூகத்திற்கு வெளிக்காட்டிய மஹனீயரும் ஆகி, ஸ்ரீவ்யாஸராஜர் வகித்த பாத்திரம் மிகவும் முக்கியமானதாகும்.

(தொடரும்)

***

தொடர்

## ஹரிதாஸர்களின் சிந்தனைத் துளிகள்

### இத்தகையவரே மூர்க்கர்

ப்ரஷ்டராதரு மனுஜரு
அஷ்டமத கர்வதலி ஹரிஸ்மரணெயனு மரெது ||

மூர்க்கராதரு ஜனரு லோகதொளகெ |
ஏகதெய்வன பிட்டு காகு தெய்வவ பஜிஸி ||

படெத ஜனனியனு பெய்யுவனு ப்ரஷ்ட
ஒண்டயலி ஹெண்டதிய பிடுவாதனெ மூர்க்க
படவரிகெ கொட்ட நுடி நடெசதவ ப்ரஷ்ட
நெண்டரிகெ சாலவனு கொடுவாத மூர்க்க
சௌரிதின விரதவனாசரிசதவனதி ப்ரஷ்ட
மடதி ஹுட்டித மனெயொளிருவவனு மூர்க்க
தந்த்ரவனு அரியதெ மந்த்ர மாடுவ ப்ரஷ்ட
படதனவு பந்தாக பைதுகொம்புவ மூர்க்க
மந்த்ரவில்லத விப்ரனதி ப்ரஷ்ட
த்ருட பக்தியில்லதவ கடு மூர்க்கனய்ய
அந்தரவனரியதெ நுடிதவனு ப்ரஷ்ட
சத்கருவின தாய ஹால கரெவவ மூர்க்க
ஹரிசரித்ரகள ஜரிதாடுவவ ப்ரஷ்ட
ராமநாமவ நம்பி பஜிசதித்தவ மூர்க்க
ஹரிய ஷரணர நோடி நிந்திசுவ ப்ரஷ்ட
ஹேமவனு களிஸி உணதவனு மூர்க்க
குருஹிரியர பாதக்கெகரதவ ப்ரஷ்ட
உண்டனுனெகொரடன்னு பகெவாதனெ மூர்க்க
ஹரிநாமவனு தினத ஸ்மரிசராதனு ப்ரஷ்ட
கொண்டே மாதனு கேளி குணிவவனு மூர்க்க
கருணவில்லதவ விப்ரனவ ப்ரஷ்ட || --ஸ்ரீபுரந்தரதாசர்

இங்கு சொல்லிய ஒவ்வொரு விஷயமும் மிகவும் அற்புதமானவை. இவற்றை பின்பற்றுவது, சிந்தனை எப்போதும் இருக்கவேண்டியது. நாம் என்றும் மூர்க்க, பிரஷ்டனாக

இல்லாதிருக்க முயல்வோம். அப்போது மட்டுமே ஸ்ரீஹரிக்கு அருகில் செல்லமுடியும். குடும்பத்தில் / சமூகத்திலும் நற்பெயர் பெறமுடியும்.

***

## உண்மையான ஸ்னானம்

ஸ்னான மாடிரய்யா ஞானதீர்த்தல்லி
நானு நீனெம்ப அஹங்காரவ பிட்டு ||ப||

தன்னொளு தானே திளிததொந்து ஸ்னான
அன்யாயகாரி களெதரொந்து ஸ்னான
அன்யாயவாடதித்ததொந்து ஸ்னான
சென்னாகி ஹரிய நெனெதரொந்து ஸ்னான ||1||

பரசதிய பயசதித்தரெ ஒந்து ஸ்னான
பர நிந்தெ மாடதித்தரெ ஒந்து ஸ்னான
பர த்ரவ்ய அபஹரிசதிரெ ஒந்து ஸ்னான
பரதத்வ திளிதுகொண்டரே ஒந்து ஸ்னான ||2||

தந்தெதாயிகள சேவெ ஒந்து ஸ்னான
முந்தின மார்க திளிதரொந்து ஸ்னான
பந்தனவனு பிடிசிதரொந்து ஸ்னான
சந்திஸி திளிதுகொண்டரே சேது ஸ்னான ||3||

அத்தெமாவன சேவே ஒந்து ஸ்னான
பர்தன மாது கேளுவுதொந்து ஸ்னான
க்ஷேத்ரபாத்ர சஹவாச ஒந்து ஸ்னான
பார்த்தசாரதி நிம்ம த்யாஅவே ஸ்னான ||4||

வேதசாஸ்திரகள ஓதிதரொந்து ஸ்னான
பேதாபேத திளிதரொந்து ஸ்னான
சாது சஜ்ஜனர சங்க ஒந்து ஸ்னான
புரந்தரவிட்டலன த்யானவே ஸ்னான ||5||

---

**ஸ்ரீ ஜயேஷ விட்டலதாசர் (1850–1932)**
(ஸ்ரீ அட்டாஜி வெங்கடராயர்)

ஜயேஷ விட்டலம் தாஸம் இபராம குரோ: ப்ரியம் |
ஸ்ரீகிருஷ்ணபத ஸத்பக்தம் வந்தே ஸுக்ஞான ஸித்தயே ||

இந்துமௌளி பதாப்ஜாளிம் மந்த ஸஜ்ஜன தாரகம் |
இந்த்ரகாம ஸமாபாஸம் ஸுந்தராங்க ஸமன்விதம் ||
விஜயோபதோபேதம் அஜஜாத ஸுதாக்யஜம் |
ஸ்ரீஜயேஷேதி தாஸாக்யம் பஜே வைராக்யஷாலினம் ||

**ஸ்ரீவித்யா ரத்னாகர தீர்த்தர் (பட்ட : 1902-1915)**
துர்வாதி மத்த நாகேந்த்ர விதாரண ம்ருகாதிப: |
வித்யாரத்னாகர குரு: ஸன்னிதத்தாம் ஸதா ஹ்ருதி ||

**ஸ்ரீமோகனதாசர் (1730–1805)**
மோஹ பய துக்காதி தூரம் லோஹ லோஷ்ட ஸமீக்ஷணம் |
மாஹிதாங்க்ரி ஸரோஜ ப்ருங்கம் மோஹனார்ய குரும் பஜே||

சிப்பஷைல குரோ:புத்ரம் குருபக்தி பராயணம் |
வந்தே வைராக்ய ஸம்ப்ராத்யே
மோஹனார்யம் ஸுமோஹகம் ||
மோஹனதாஸகுரு ஸ்ரீகுரு தாஸகுரு
மோஹ மத மத்ஸர களெவ தாஸகுரு |
குரு விஜயதாஸர கடு மோஹதகந்த
குரு க்ருபெயிந்தலி சிரஞ்சீவிகானந்த |
மரணிஸி குருவிந்த ஜீவன படெத
மருத ஷாஸ்திரவனு யுக்தியலி பரெத |
மங்கள ரூபி மோஹன விட்டலன பாடித
மங்களாங்க ஹரிவிட்டலனெ பரனெந்த ||

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்
Haridasa Vijayam - Monthly

மலர் 4 ** June 2023 ** இதழ் 7



ஸ்ரீவிஜயீந்த்ர தீர்த்தர்

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே
மலர் 4 : இதழ் 7

| நிர்வாக ஆசிரியர் | துணை ஆசிரியர் |
| --- | --- |
| 'ஜகன்னாத கேசவ'<br>சத்ய நாராயணன்<br>ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,<br>380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase, பெங்களூரு 560078<br>Ph.: 89044-58276.<br>haridasa.vijayam@gmail.com<br>jagannathakesava.blogspot.com | ' தாச சாகித்ய சேவா ரத்ன'<br>திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்<br><br>**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**<br>திரு. முரளிதர தாசரு,<br>திருமதி. நிர்மலா நரசிம்மன்,<br>திரு. லட்சுமிபதிராஜா,<br>திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ் |

ஆராதனை

**ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்**
**ஜூன் 1 முதல் 30 வரை, 2023**

ஜூன் 3 : ஜேஷ்ட சுத்த த்வாதசி - ஸ்ரீஸ்ரீபாதராஜர், முளுபாகல்
ஜூன் 16: ஜேஷ்ட சுத்த த்ரயோதசி - ஸ்ரீவிஜயீந்த்ர தீர்த்தர், கும்பகோணம்
ஜூன் 24: ஆஷாட சுத்த சஷ்டி - ஸ்ரீவரதேந்திர தீர்த்தர், புனே
ஜூன் 29: ஆஷாட சுத்த ஏகாதசி - ஸ்ரீஸ்ரீத விட்டல தாஸர், கர்ஜிகி

# ஆசிரியர் பக்கம்

ஹரிதாஸ ஸாகித்யத்திற்கு மிகச் சிறந்த பங்கினை அளித்த மூன்று யதிகளின் ஆராதனைகள் இந்த ஜூன் மாதம் வருகிறது. கன்னடத்தில் பத, பத்யங்களை முதன்முதலில் இயற்றியவர் என கருதப்படும் ஸ்ரீஸ்ரீபாதராஜர், சில சுளாதிகளை (இதுவரை கிடைத்த) இயற்றியவரான ஸ்ரீவிஜயீந்த்ர தீர்த்தர், கன்னட தந்த்ரஸார ஸங்க்ரஹத்தினை இயற்றியதோடு, ஸ்ரீஜகன்னாத தாஸர், ஸ்ரீப்ராணேஷ தாஸர் ஆகியோரின் குருவாக இருந்தவரான ஸ்ரீவரதேந்த்ர தீர்த்தரே அவர்கள்.

இத்தகைய மஹனீர்யர்களுடன், ஸ்ரீஜகன்னாத தாஸரின் சிஷ்யரான ஸ்ரீஸ்ரீத விட்டலரின் புண்ய தினமும் வருகிறது. அந்தந்த நாட்களில், ஹரிதாஸ ஸாகித்யத்திற்கு அந்த மகான்களின் பங்கினை நினைத்து / படித்து / அதன் உள் அர்த்தங்களை உணர்ந்து, அவர்களின் அந்தர்யாமியான பகவந்தனின் அருளைப் பெறுவோமாக.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

**YouTube Channel - Jagannatha Kesava**

⁎ மேற்கண்ட நமது யூட்யூப் சேனலில் தற்போது வந்துகொண்டிருக்கும் தொடர் - ஹரிதாஸினி அம்பாபாய் (அங்கிதம் : கோபாலகிருஷ்ண விட்டலா) அவர்கள் இயற்றிய ஸ்ரீகிருஷ்ண பால லீலெ ஜோகுள - 389 பத்யங்களைக் கொண்ட தீர்க்க கிருதி - தமிழ் அர்த்த விளக்கங்களுடன்.

⁎ நமது சேனலுக்கு சப்ஸ்க்ரைப் செய்து, ஏற்கனவே உள்ள + வரவிருக்கும் தொடர்களையும், அனைவரும் கேட்டு, நம் ஹரிதாஸ ஸாகித்யத்தின் சிறப்பினை அறிய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

தொடர்

**ஸ்ரீராகவேந்திர விஜயம்**

**ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர் இயற்றியது**

**ஆ யுக3தி3 ப்ரஹ்லாத நாமக**
**ராயனெனிஸீ ஹரிய ப4ஜிஸீ**
**தோயநிதி4 பரிவஸன மண்ட3லவாள்தெ3 ஹரிப4லதி3**
**ராயகுலத3லி ஸார்வபௌ4மன**
**ஜேய மஹிமனு ஸதத ஜக3த்3ல**
**மேய தி3ஷணனுயெந்து3 ஸுரமுனி மாட்3த3னுபதே3ஶ ||14**

ஆ யுகதி - அந்த க்ருத யுகத்தில்; ப்ரஹ்லாத நாமக ராயனெனிஸி - பிரகலாத ராஜன் என்னும் பெயரில்; ஹரிய பஜிஸி - ஸ்ரீஹரியை வணங்கியவாறு; ஹரிபலதி - அந்த ஸ்ரீஹரியின் அருளாலேயே; தோயநிதி பரிவஸன மண்டலவாள்தெ - கடல் நீரால் சூழப்பட்டுள்ள மண்டலத்தை (பூமண்டலத்தை) ஆண்டாய்; ராயகுலதலி ஸார்வபௌமன - அரசர்களில் மிகப்பெரிய அரசனாகி; அஜேய மஹிமனு - யாராலும் வெல்லப்பட முடியாத வீரனாகி; ஸதத ஜகதல - எப்போதும் அனைத்து உலகங்களிலும்; அமேய - எண்ணப்படமுடியாத அளவிலான; திஷணனுயெந்து - ஞானத்தைக் கொண்டவனாக ஆவாய்; ஸுரமுனி மாட்தனுபதேஶ - என்று ஸுரமுனிகளான நாரதர், பிரகலாதன் கயாதுவின் கர்ப்பத்தில் இருந்தபோதே உபதேசம் செய்திருந்தார்.

நாரதர் செய்த உபதேசத்தினை இங்கு விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

முன்பு, கிருத யுகத்தில், பிரகலாத ராஜன் என்னும் பெயரில் ஸ்ரீஹரியை வணங்கியவாறு, அந்த ஸ்ரீஹரியின் அருளாலேயே, நீ இந்த பூமண்டலத்தை ஆண்டாய். அரசர்களில் மிகப்பெரிய அரசனாகி, யாராலும் வெல்லப்பட முடியாத வீரனாகி, எப்போதும் அனைத்து உலகங்களிலும் அபாரமான ஞானத்தைக் கொண்டவனாக ஆவாய் என்று இந்த பிரகலாதன் கயாதுவின் கர்ப்பத்தில் இருந்தபோதே ஸுரமுனிகளான நாரதர் உபதேசம் செய்திருந்தார்.

**க3ர்ப்ப4த3லெ பரதத்வ பத்3த4தி**
**நிர்ப்ப4யதி3 நீ திளிது3 ஆவெ**
**த3ர்ப்பி4 ரமணனெ ஸர்வருத்தமனெந்து3 ஸ்தா2பிஸிதெ3**

**து4ர்ப4கா3தி3கவாத3வகெ3 ஸம்**
**த3ர்ப்ப4வாகோ3தெ3 நின்ன ஸேவா**
**நிர்ப்ப4ராக3து3 நின்ன ஜனரிகெ3 ஸுல4பவாகி3ஹதோ3 ||15**

கர்ப்பதலெ - நீ கர்ப்பத்தில் இருந்தபோதே; பரதத்வ பத்ததி - பகவந்தனைப் பற்றிய ஞானத்தை (தத்வ ஞானத்தை); நிர்ப்பயதி நீ திளிது - எவ்வித பயமும் (சந்தேகமும்) இன்றி நீ அறிந்து; வைதர்ப்பி ரமணனெ - விதர்ப்ப ராஜனின் மகளான ருக்மிணியின் ரமணனே (ஸ்ரீகிருஷ்ணனே); ஸர்வருத்தமனெந்து - ஸர்வோத்தமன் என்று; ஸ்தாபிஸிதெ - நீ நிறுவினாய்; துர்பகாதிகவாதவகெ - பாவங்கள் அதிகம் உள்ளவர்களுக்கு (அசுரர்களுக்கு / ஹிரண்யகசிபுவிற்கு); நின்ன ஸேவா - உன்னுடைய இந்த ஞானம்; ஸந்தர்ப்பவாகோதெ - புரியுமா?; நிர்ப்பராகது - முழுமையாக புரியாது; நின்ன ஜனரிகெ - உன்னுடைய பக்தர்களுக்கு (உன்னை சேர்ந்தவர்களுக்கு); ஸுலபவாகிஹதோ - இது மிகவும் சுலபமாக புரியக்கூடியதாகும்.

பிரகலாதராஜரை ஸ்ரீதாஸர் கொண்டாடுவதாக இருக்கிறது இந்த பத்யம்.

நீ கர்ப்பத்தில் இருந்தபோதே, பகவந்தனைப் பற்றிய தத்வ ஞானத்தை, யதார்த்த ஞானத்தை அறிந்து, ஸ்ரீகிருஷ்ணனே ஸர்வோத்தமன் என்று நிறுவினாய். பாவங்கள் அதிகம் உள்ளவர்களுக்கு, உன்னுடைய இந்த ஞானம் புரியுமா? புரியாது. உன்னுடைய பக்தர்களுக்கு மட்டும் இது மிகவும் சுலபமாக புரியக்கூடியதாகும்.

**தி3திஜ பா3லரிகெ3ல்ல தத்வதி3**
**மதிய புட்டிஸி நித்யத3லி ஸ்ரீ**
**பதியெ ஸர்வோத்தமனுயெம்பீ3 ஞான போ3தி4ஸிதெ3**
**இதர விஷய விரக்தி புட்டிது**
**மதி விசாராஸக்தராத3ரு**
**ஸிதனஸுதரு பேள்து3தெ3ல்லனு மனகெ தரலில்ல ||16**

திதிஜ பாலரிகெல்ல - திதியின் மக்களான அனைத்து அசுரர்களுக்கும்; தத்வதி - நல்ல தத்வத்துடனான; மதிய புட்டிஸி - அறிவினை ஊட்டி / கொடுத்து; நித்யதலி - எப்போதும் / எக்காலத்திலும்; ஸ்ரீபதியே ஸர்வோத்தமனு - ஸ்ரீஹரியே சர்வோத்தமன்; எம்பீ ஞான போதிஸிதெ - என்னும் ஞானத்தை உபதேசம் செய்தாய்; இதர விஷய விரக்தி புட்டிது - (அந்த ஞானத்தைப் பெற்றதால்) மற்ற லௌகீக விஷயங்களில் விரக்தி பிறந்தது; மதி விசாராஸக்தராதரு - மேலும் மேலும் ஞானத்தைப்

பெறக்கூடியவர்கள் ஆனார்கள்; ஸிதனஸுதரு - சுக்ராசார்யரின் மக்கள் (ஷுண்ட & அமர்க); பேள்துதெல்லனு - கூறிய பாடங்களை / உபதேசங்களை; மனகெ தரலில்ல - அந்த பாலகர்கள் படிக்கவில்லை / ஏற்றுக் கொள்ளவில்லை.

திதியின் மக்களான அனைத்து அசுரர்களுக்கும் நல்ல தத்வத்துடனான அறிவினை ஊட்டி, எப்போதும் ஸ்ரீஹரியே ஸர்வோத்தமன் என்னும் ஞானத்தை நீ உபதேசம் செய்தாய். ஆகையால், அவர்களுக்கு மற்ற லௌகிக விஷயங்களில் விரக்தி பிறந்தது. மேலும் மேலும் ஞானத்தைப் பெறக்கூடியவர்கள் ஆனார்கள். சுக்ராசார்யரின் மக்களான (ஷுண்ட & அமர்க) இருவரும் கூறிய பாடங்களை / உபதேசங்களை அந்த பாலகர்கள் படிக்கவில்லை / ஏற்றுக் கொள்ளவில்லை.

*ஸிதனஸுதரு - ஸித என்றால் வெண்மை, அதாவது ஷுக்ர. ஷுக்ர ஸுதரு என்றால் சுக்ராசார்யரின் மக்களான ஷுண்ட & அமர்க இருவர்.
* ஸ்ரீஹரியே ஸர்வோத்தமன் என்றும், அவனுக்கு நாம் செய்ய வேண்டிய நவவித பக்திகளையும் பிரகலாதராஜர் அனைவருக்கும் உபதேசம் செய்தார்.
சிரவணம் கீர்த்தனம் விஷ்ணோ: ஸ்மரணம் பாத ஸேவனம் |
அர்ச்சனம் வந்தனம் தாஸ்யம் சக்யம் ஆத்ம நிவேதனம் ச ||

**நின்ன மதவனுஸரிஸி பா$^{3}$லரு**
**க$^{4}$ன்ன போ$^{3}$த$^{4}$ ஸுப$^{4}$க்தி படெ$^{3}$த$^{3}$ரு**
**த$^{4}$ன்யராத$^{3}$ரு ஹரிய ப$^{4}$குதருயெனிஸி தாவந்து$^{3}$**
**நின்ன மஹிமெகெ$^{3}$ நமன மாடு$^{3}$வெ**
**என்ன பாலிஸோ ப$^{4}$வதி$^{3}$ பரிபரி**
**ப$^{3}$ன்ன படுவெனோ தா$^{3}$ரிகாணதெ$^{3}$ நின்ன நம்பி$^{3}$தெ$^{3}$னோ ||17**

நின்ன மதவனுஸரிஸி - நீ கூறிய ஹரி ஸர்வோத்தம என்னும் மதத்தையே பின்பற்றி; பாலரு - அந்த சிறுவர்கள் / மாணவர்கள்; தாவந்து - அவர்கள் அன்று; கன்ன போத - சிறப்பான ஞானம்; ஸுபக்தி படெதரு - நல்ல திடமான பக்தியைப் பெற்றனர்; ஹரிய பகுதருயெனிஸி - ஸ்ரீஹரியின் பக்தர்கள் என்று சொல்லிக்கொண்டு; தன்யராதரு - தான் தன்யர் ஆயினர்; நின்ன மஹிமெகெ நமன மாடுவ - உன் மகிமைக்கு நான் வணங்குகிறேன்; என்ன பாலிஸோ - என்னை காப்பாற்றுவாயாக / அருள்வாயாக; பவதி பரிபரி - இந்த சம்சார சாகரத்தில் விதம்விதமாக;

பன்ன படுவெனோ - கஷ்டப்படுகிறேன்; தாரிகாணதெ - வழி தெரியாமல்; நின்ன நம்பிதெனோ - உன்னையே நம்பியிருக்கிறேன்.

பிரகலாதராஜரைக் குறித்தான தாஸரின் பிரார்த்தனை வடிவமாக இந்த பத்யம் தொடர்கிறது.

நீ கூறிய ஹரி ஸர்வோத்தம என்னும் மதத்தையே பின்பற்றி, அந்த சிறுவர்கள் அன்று சிறப்பான ஞானத்தைப் பெற்றனர். ஸ்ரீஹரியின் பக்தர்கள் என்று சொல்லிக்கொண்டு தன்யர் ஆயினர். அத்தகைய உன் மகிமைக்கு நான் வணங்குகிறேன். என்னை காப்பாற்றுவாயாக. இந்த சம்சார சாகரத்தில் விழுந்து விதம்விதமாக கஷ்டப்படுகிறேன். இதிலிருந்து வெளியில் வரும் வழி தெரியாமல் உன்னையே நம்பியிருக்கிறேன்.

**பரம பாவன ரூபி நீனு**
**ஹரிய ஶாபதி$^{3}$ அஸுரபா$^{4}$வவ**
**த$^{4}$ரிஸி தை$^{3}$த்யனுயெனிஸிகொண்டெ$^{3}$யோ ஸுரவரோத்தமனு**
**ஹரிகெ$^{3}$ ஹாஸிகெ$^{3}$யாத$^{3}$ காரண**
**ஹரிவிபூ$^{4}$திய ஸன்னிதா$^{3}$னவு**
**நிருத நின்னலி பேர்ச்சி மெரெவரு மருதனொட$^{3}$கூடி$^{3}$ ||18**

பரம பாவன ரூபி நீனு - மிகவும் பவித்ரமான ரூபம் நீ; ஹரிய ஶாபதி - ஸ்ரீஹரியின் சாபத்தினால்; அசுரபாவவ தரிஸி - அசுர பிறவியை எடுத்து; தைத்யனுயெனிஸி கொண்டெயோ - உன்னை தைத்யன் என்று சொல்லிக் கொண்டாய்; ஸுரவரோத்தமனு - ஸுரர்களில் நீயே உத்தமன்; ஹரிகெ ஹாஸிகெயாத காரண - ஸ்ரீஹரிக்கு படுக்கை ஆன காரணத்தினால்; ஹரி விபூதிய ஸன்னிதானவு - ஸ்ரீஹரியின் விபூதி சன்னிதானம் (சேஷன் அம்சம்); நிருத - எப்போதும்; நின்னலி பேர்ச்சி - உன்னில் நிலைத்திருந்து; மருதனொடகூடி - வாயுதேவரின் ஆவேசம் கூட சேர்ந்து; மெரெவரு - உன்னில் நிரம்பியிருக்கிறது.

மிகவும் பவித்ரமான ரூபம் நீ. ஸ்ரீஹரியின் சாபத்தினால் அசுர பிறவியை எடுத்து உன்னை தைத்யன் என்று சொல்லிக் கொண்டாய். ஸுரர்களில் நீயே உத்தமனாக இருக்கிறாய். ஸ்ரீஹரிக்கு படுக்கையான சேஷனின் அம்சமும், வாயுதேவரின் ஆவேசமும் உன்னில் நிரம்பியிருக்கிறது.
விஷ்வக்ஸேனனுக்கு ஸ்ரீஹரி அளித்த வாக்கினையே இங்கு ஸ்ரீதாஸர் மறுபடி கூறி வணங்குகிறார் என்று அறிய வேண்டும். (தொடரும்)...

***

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

### நாட்டுப்புற பண்களின் அம்சங்கள்

**திருமதி. சி.எஸ். அருணா காந்தனவர**

கிராமத்து மக்களின் இன்னொரு சிறப்பான பழக்கம் என்னவென்றால், எதையும் நேரடியாக சொல்வது. பெரியவர்கள் ஏதேனும் தவறு செய்தால், அதை எடுத்துச் சொல்வதற்கோ, கண்டிப்பதற்கோ அவர்கள் தயங்குவதேயில்லை. இத்தகைய ஒரு உதாரணத்தை ஸ்ரீஜகன்னாததாசரின் தத்வசுவ்வாலியில் நாம் காணலாம்.

அச்சுத நின்னந்த ஹுச்சு தொரெகள காணெ
கச்சி பைதொத்தா பகுதார | அபராதகள
துச்சகைதவரா சலஹேதி || (தத்வசுவ்வாலி)

இன்னொரு நுடியில் தாசர், பகவந்தனைக் குறித்து :

இது நினகெ தர்மவே இந்திரேஷ
பதிக நீனாகித்து பீதி படிஸு

என்று நேரடியாகக் குறிப்பிடுகிறார்.

கிராமத்து மக்களிடம் எந்தவொரு விஷயமும் ரகசியமாக இருப்பதில்லை. எப்படியாவது அந்த விஷயம் அனைவரிடமும் பரவிவிடும். அதைப் போலவே, நல்ல செயல்கள் புரிந்தவர்களைப் பற்றியும் தகவல் எப்படியாவது எல்லா இடங்களுக்கும் பரவிவிடும். இத்தகைய குணங்களைப் பற்றி தாசர் ஒரு பாடலில் பாடுகிறார்.

வீரன் ஆனாலும் பார்த்தனுக்கு சாரதி ஆனது, வெண்ணெய் திருடியது, கோபியர்களை சேர்ந்தது என்ற ஸ்ரீகிருஷ்ணனின் லீலைகளை 'பேரய்யா, ஹேளய்யா' என்ற நாட்டுப்புற சொற்களைக் கொண்டு பாடியிருக்கிறார் தாசர். இறுதியாக:

பீதிரஹித ஜகன்னாத விட்டலனே அ
த்புத மஹிமனெந்து ஹேளல்யா நானு ||

என்று முடிக்கும்போது தாசர் ஜகன்னாதவிட்டலனை புகழ்ந்திருக்கிறார் என்று தெரிய வருகிறது. சிறியவர்கள் ஏதாவது

தவறு செய்திருக்கிறார்கள் என்று தெரிய வரும்போது, பெரியவர்கள், அதை மற்றவர் முன் சொல்லிவிடவா என்று அவர்களை பயமுறுத்துவார்கள். அதே வகையை இங்கேயும் பார்க்கமுடிகிறது.

‘கந்தன கொடு சிவனே’ என்றும் ‘மக்களிரலவ்வா மனி தும்ப’ என்று வேண்டுகிறாள். ‘மக்களாடவே சந்த மனெய பாகில

முந்தெ’ என்றும் ‘கூசு கந்தய்ய ஔஹொரகெ ஆடிதரெ பீசணிகெ காளி சுளிதாவு’ என்றும் குழந்தைகளைக் குறித்து பல்வேறு வரிகளை, நாட்டுப்புற சாகித்யத்தில் பார்க்கிறோம். அதுபோலவே, ஸ்ரீஜகன்னாததாசரும் ஹரிகதாம்ருதசாரத்தில் குழந்தைகளின் விளையாட்டு உதாரணங்களைக் கொடுத்து சித்தாந்தத்தை விவரிக்கும் விதம் இப்படியாக இருக்கிறது.

கோலு குதுரெய மாடி ஆடுவ
பாலகர தெரதந்தெ லக்ஷ்மீ
லோல ஸ்வாதந்த்ர்ய குணவ ப்ரம்மாத்யைரொளகிட்டு ||

குழந்தைகளுக்காக பல்வேறு விளையாட்டுப் பொருட்களைக் கொண்டு வந்து கொடுக்கும் வசதி இல்லை என்றும், அதனால், தாத்தா பாட்டியின் கைத்தடியையே குதிரையாக நினைத்து விளையாடும் குழந்தைகளை கிராமத்தில் நாம் காணலாம்.

மளெயு நீரோணியலி பரியலு
பளசரூரொளகித்த ஜனரா
ஜலவு ஹெத்தொரெகூடெ மஜ்ஜன பான கைதுவரு ||

சாலை அல்லது தெரு என்பதற்கு பதில் ‘ஓணி’ என்ற கிராமிய சொல்லை பயன்படுத்திய தாசர், அந்த ஓணியில் ஓடும் மழை நீரை பார்த்திருக்கிறார். மழை நின்றபிறகு அங்கங்கு தேங்கி நிற்கும் மணலில் வீடு கட்டி சிறுவர்கள் விளையாடுவதையும் தாசர் பார்த்திருக்கிறார். இதையெல்லாம் தம்முடைய கிரந்தத்தில் இப்படியாக விவரித்திருக்கிறார்.

மளல மனெகள மாடி மக்களு
கெலவு காலதலாடி மோததி
துளிது கெடிசுவ தெரதி லகுமிரமண வல்லபனு ||

சிறுவர்கள் நீச்சல் பழகும்போது பூசணி (அல்லது பரங்கிக்காய்) கட்டிக்கொண்டு பழகுவதை கிராமங்களில் பார்க்கலாம். இதையே தாசர் ‘ஈஸுவ காயியந்ததி முளுககொடதெ பவாப்தி தாடிசுவ’ என்று தாம் சொல்ல வந்த விஷயத்திற்கு உதாரணம் தருகிறார்.

யாருக்காவது உடல்நலம் கெட்டால், கிராமங்களில் அதற்காக மருந்துகளை தயார் செய்து கொடுக்கும் நாட்டு வைத்தியர்களைக் காணலாம். ஆயுர்வேதத்தில், கிராமங்களில் கிடைக்கும் பொருட்களை வைத்து மூலிகைகளால் நோய்களுக்கு தீர்வினைக் கொடுக்கும் வழக்கமும் உண்டு. இந்த இரண்டு விஷயங்களையும் ஸ்ரீஜகன்னாததாசர் தமது கிரந்தங்களில் உதாரணங்களாகக் காட்டியிருக்கிறார்.

ஆயுர்வேதத்தை அறிந்திருக்கும் தாசர், நாடி பிரகரண சந்தியில், மனித உடலில் 36,000 நாடிகள் இருக்கின்றன என்னும் உண்மையை கொடுக்கிறார். அது போலவே, மூச்சினை நடத்தும் (நிகழ்த்தும்) வாயுதேவரைப் பற்றியும் தாசர், இப்படியாக சொல்கிறார்.

தாஸிகொம்பைனூரு ஸ்வாஸோ
ச்வாஸகள நடெசுதலி சேதன
ராசியொளு ஹகலிருளு ஜாக்ரதனாகி நித்யதலி ||
(ஹரிகதாம்ருதசாரம்)

தாஸிகொம்பைனூரு ஸ்வாஸ ஜபகள மாடி
பேசரதெ நம்ம சலஹுவி | ஸ்ரீ பார
தீஷ நின்னடிகெ ஷரணெம்பெ || (தத்வசுவ்வாலி)
(தத்வ சுவ்வாலி)

ஆயுர்வேதத்துடன் நாட்டு வைத்தியமும் தாசருக்கு தெரிந்திருக்கிறது என்பதற்கு இந்த சில நுடிகளே சாட்சி.

அடவியொளு பித்ததலெ பௌதிஹ
கிடத மூலிகெ சகல ஜீவர
ஒடலொளிப்பாமயவ பரிஹர கைசுவந்ததலி ||

கர்ப்பிணி ஸ்த்ரீயுண்ட போஜன
கர்ப்பகத சிசு உம்ப தெரதலி

நிர்பயனு தானுண்டுணிசுவனு சர்வ ஜீவரிகெ ||

வ்யாதியிம்பீடித சிசுவிகெ கு
டோதகவனெரெததகெ ஔஷத
தேனு குடிசுவ தாயியோபாதியலி சர்வக்ஞ ||

யோகியெளஷத பத்யதிந்த நி
ரோகி எனிசுவ தெரதி ஸ்ரீம
த்பாகவத சுஸ்ரவணகைது பவாக்யரோகவனு ||

மனிதனுக்கு நோய் தீவிரமடைந்து புத்தி கெட்டுப் போகும் நிலை வரும்போது, சம்பந்தமில்லாமல் பேசத் துவங்குகின்றார்கள். கிராமத்தினர் அப்போது அவருக்கு பேய் பிடித்திருக்கிறது என்று சொல்வது வழக்கம்.

பூத சோகித மானவரு பஹு
மாதனாடுவ தெரதி மஹத
த்பூத விஷ்ண்வாவேஷதிந்தலி வர்திபுது ஜகவு ||

மேலே சொன்னதுபோல், பேய் பிடித்த மனிதர்கள் எப்படி பேசுவார்கள் என்னும் உதாரணத்தை, தான் சொல்ல வந்த விஷயத்தை நிரூபிப்பதற்காக தாசர் மிக அழகாக கையாண்டிருக்கிறார்.

கிராமத்தினர் அணியும் ஆடை அணிகலன்கள் தனித்துவம் வாய்ந்தவை. இன்று அவற்றின் பெயர்களை மட்டும் நாம் இலக்கியங்களில் காணமுடியுமே தவிர, நேரில் காண்பது கடினம். தத்வசுவ்வாலியில்:

பாதாள பாதுகெ விதாத்ரு லோகவெ முகுட
ஸ்வேத த்வீபவெ நினகெ ஒட்யாண |வைகுண்ட
ஆதபத்ரவனெ நினகீவ || (தத்வசுவ்வாலி)

ஒட்டியாணம் என்னும் ஆபரணத்தின் விவரம் இதில் காணலாம். இடுப்பில் கட்டும் இந்த ஆபரணத்தை, தங்கம் அல்லது வெள்ளியில் செய்து கட்டிக்கொள்வர். மேகலை, காஞ்சிதாம என்ற பெயர்களிலும் அழைக்கப்படும் இந்த ஆபரணம் ஒரு காலத்தில் அனைவரும் அணிந்திருந்தனர். இன்றோ அது காணக்கிடைக்காதது.

பாதுகை என்று ஒரு சொல்லை இங்கு பயன்படுத்தியிருக்கிறார். பாதுகை அல்லது பாதரட்சை என்றும் அழைக்கலாம். இதை கிராமங்களில், மெட்டு, கால்மரி, கெர என்றும் அழைக்கின்றனர். பழைய கன்னடத்தில் ஜோடு என்று இதற்குப் பெயர்.

இதையெல்லாம் தவிர, இன்னொரு பெயரான 'சம்மாளிகெ' என்னும் நாட்டுப்புறப் பெயரை தாசர் பயன்படுத்தியிருக்கிறார்.

ஜாலி நெக்கிலு க்ஷுத்ரஷிலெ பரி
கால புருஷன பாதிபவு ச
சம்மாளெகெய மெட்டிதவகுண்டே கண்டககள பய ||

நாட்டுப்புறப் பாடல்களில் மங்கல பாடல்கள் ஏகப்பட்டது உள்ளன. திருமணம் முதலான நிகழ்ச்சிகளில் இவை பாடப்படுவது வழக்கம். ஜகன்னாததாசரும் இதே போல் ஒரு நாட்டுப்புற மங்கலப் பாடலைப் பாடியுள்ளார்.

நமோ நமோ ரமெ கமல சம்பவெ
ஹிமனகஜாரமண சம்மதெ
தமரிபு ஷத சமசன்னிபெ இப
கமனெ இந்திரெ ஷோபானே ||

என்று தொடங்கும் 6 நுடிகளைக் கொண்ட இந்த பாடலில் அங்கங்கு ஹேளல பங்கார, ஹஸிய ஜகுலிகெ, அந்திகி, குசகுப்பஸ என்னும் கிராமிய சொற்கள் நிறைந்திருப்பதைக் காணலாம்.

(தொடரும்)

****

## புதிய புத்தகங்கள்

ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால், பல புதிய புத்தகங்கள் தற்போது வரத் துவங்கியுள்ளன. உங்கள் பிரதிக்கு இன்றே தொடர்பு கொள்ளவும். இத்தகைய அரிய புத்தகங்கள் வெளிவருவதற்கு ஸ்பான்ஸர்களும் தேவை.. முடிந்தவர்கள் உதவலாம். நன்றி. ஹரே ஸ்ரீனிவாஸா.

தொடர்

**ஹரிகதாம்ருதசார மஞ்சரி 360**

**By ஶ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர்**

**136. க3ருட3 ஶேஷ மரேந்த்3ர முக2 பு**
**ஷ்கரனெ கடெ3யாகி3ப்பகி2ல நி**
**ர்ஜரரு ஊர்த்4வத்3வாரக3த பா4ரதி உதா3னனொளு**
**மெரெவ மாயாவாஸுதே3வன**
**பரம மங்க3லவயவக3ள ம**
**ந்தி3ரவனைதி3 ஸதா3 முகுந்த3ன நோடி3 ஸுகி2ஸுவரு ||(15-20)**

நம் இந்த தேகத்தில், கருட சேஷ ருத்ரகளிலிருந்து துவங்கி, புஷ்கரனின் வரை, அனைவரும் இருந்து, ஊர்த்வமுகமாக பாரதிபதி முக்யப்ராண மாயா வாஸுதேவன் பரம மங்களகரனாகி நம் அனைத்து அவயவங்களில் இருந்து பார்த்து, மகிழ்ச்சி அடைவதைப் போல, முக்யப்ராணன் செய்கிறான் மற்றும் அவர்களுக்கெல்லாம் சுகத்தை கொடுக்கிறான் என்கிறார். இந்த விஷயத்தை நாம் அனுபவித்தே உணர வேண்டும். இதனை வெளிப்படுத்தவும் / சொல்லவும் முடியாது. தேகத்திற்குள், தத்வாபிமானிகள் மூலம், ப்ராண நாதன் செய்யும் செயல்கள் அவர்களுக்கெல்லாம் மகிழ்ச்சியை கொடுக்கின்றன என்கிறார்.

**137. பெ3ளகி3த்3ஹூஜியு நோள்பரிகெ3 த2ள**
**த2ளிஸுதலி கங்கொ3ளிஸுவந்த3தி3**
**தொளெது3 தே3ஹவ நாம முத்3ரெக3ளிந்த3லங்கரிஸி |**
**ஒலிஸி நித்ய குதர்க்க யுக்திக3**
**ளலவ போ4த4ர ஷாஸ்த்ர மர்மவ**
**திளியதி3ஹ நர ப3ரிதெ3 இத3ரொளு ஷங்கிஸித3ரேனு ||(15-22)**

மத்வ சாஸ்திரத்தின் உள் அர்த்தத்தை சரியாக புரிந்து கொள்ளாமல், வெறும் ஸ்னானம் செய்து தேக அலங்காரத்திற்கு முத்திரை, நாமங்களை தரித்தேன் என்றால், அதில் எவ்வித பலனும் இல்லை. அதாவது நன்றாக கழுவப்பட்ட சொம்பு பளபளவென்று ஒளிர்கிறதால் என்ன பலன்?. அதைப் போலவே, குதர்க்கத்தினால் விஷயத்தை அறிவதற்கு சாத்தியம் இல்லை. சாஸ்திரத்தில் சந்தேகம் கொண்டால் பலன் இல்லை. அதற்குப் பதில், மத்வ சாஸ்திரத்தின் மர்மத்தை அறிவதற்கு முயற்சி செய்தால் மட்டுமே அதனை அறிவதற்கு

சாத்தியம். மத்வ சாஸ்திரத்தை நன்றாக கவனத்துடன் படித்தால் மட்டுமே, அது அர்த்தம் ஆகிறது. தவிர, அப்படியே அறிவதற்கு சாத்தியம் இல்லை என்கிறார்.

**138. ஜனனி ஸௌஷ்ட பதா3ர்த்த2க3ள போ4**
**ஜனவ மாட3லு க3ர்ப்ப4க3த ஷிஷு**
**தி3னதி3னதி3 அபி4வ்ருத்தி3 ஐது3வ தெரதி3 ஜீவரிகெ3 ।**
**வனஜனாப4னு ஸர்வரஸ உ**
**ண்டு3ணிஸி ஸம்ரக்ஷிஸுவ ஜான்ஹவி**
**ஜனக ஜன்மாத்யகி2ல தோ3ஷவிதூ3ர க3ம்பீ4ர ||(15-25)**

கங்கையை தன் அங்குஷ்டத்தில் படைத்தவனான, தோஷ தூரனான, பிறப்பு இறப்பு இல்லாதவனான பகவந்தன், தாயின் கர்ப்பத்தில் இருந்து கொண்டு, குழந்தையானது எப்படி தன் தாய் தின்ற பதார்த்தங்களை தின்கிறதோ; பகவந்தன் எப்படி தாய் + சிசு இந்த இரண்டினையும் காக்கிறானோ, அதைப் போல, நம்மையும் காக்கிறான் என்று சொல்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர். இதைப் போலவே உலகத்தையும் அவன் காக்கிறான் என்று அறிவாயாக.

**139. த்3யுனதி3யாத்3யந்தவனு காணதெ3**
**மனுஜனேகத்ரத3லி தா ம**
**ஜ்ஜனவகை3து3 ஸமஸ்த தோ3ஷதி3 முக்தனஹதெரதி3 ।**
**அனக4ன மலானந்தனந்த ஸு**
**கு3ணக3ளொளகொ3ந்தெ3 கு3ணத3 உபா**
**ஸனவகை3வ மஹாத்ம த4ன்ய க்ருதார்த்தனெனிஸுவனு ||(15-27)**

கங்கையானது எங்கு பிறக்கிறது என்று தெரியவில்லை. எங்கு சென்று சேர்கிறது என்றும் தெரியவில்லை. ஆனாலும், மனிதர்களான நாம், நடுவில் அதில் ஸ்னானம் செய்து, கங்கா ஸ்னானம் ஆயிற்று, தோஷங்கள் போயிற்று என்று எப்படி மகிழ்ச்சி அடைகிறோமோ, அதன்படி பகவந்தனின் குணங்களை தினம்தோறும் அறிந்து நினைத்தால், அதுவே சரியான உபாஸனை. அத்தகைய மானவன் க்ருதார்த்தன் ஆகிறான் என்கிறார் ஸ்ரீதாஸர். இப்படி செய்வதே பூஜை எனப்படுகிறது. இதுவே சாட்சாத்காரத்திற்கான வழி. அப்படி செய்பவர்களே மகாத்மர் என்கிறார்.

**140. லலனெயிந்3தொ3ட3கூடி3 சைலக3**
**ளொளகெ3 ஓதப்ரோத ரூபதி3**
**நெலெஸிஹனு சதுராத்மக ஜக3ன்னாத2 விட்டலனு ।**
**சளி பி3ஸிலு மளெ கா3ளியெந்த3ரெ**
**க4ளிகெ3 பி3ட3த3லெ காவனெந்த3ரி**
**தி3ளெயொளர்ச்சிஸுதிரு ஸதா3 ஸர்வாந்தராத்மகன ।।(15-29)**

பகவந்தனின் பூஜைக்கு காலத்தின் அளவு இல்லை. அனைத்து காலங்களிலும் அவனை பூஜிக்கலாம். ஜகன்னாத விட்டலன், தன் மனைவியுடன் எப்போதும் இருக்கிறான் என்பதை அறிந்து கொண்டு, குளிர், வெயில், மழை, காற்று ஆகியவற்றை மறந்து (புறக்கணித்து), ஸர்வாந்தர்யாமியான வனை எப்போதும் நினைத்துக் கொண்டிரு என்கிறார் ஸ்ரீதாஸர்.

**141. ஈ தி3வெளகஸரந்தெ1 கலிமொத3**
**லாத3 தை3த்யரு ஸர்வதே3ஹதி3**
**தோத3கரு தாவாகி3 வ்யாபாரக3ள மாடு3வரு ।**
**வேத4னந்த3தி3 கலியஹங்கா**
**ராதி3 பாத4ம மது4 குகைட1ப4**
**க்ரோதி4 ஷம்ப3ரமுக2ரு மனஸிகெ3 ஸ்வாமி யெனிஸுவரு ।।(16-2)**

நம் இந்த தேகத்தில், திவௌகஸர் – சூர்யாதி தத்வாபிமானி தேவதைகள் எப்படி இருக்கிறார்களோ, அதைப் போல, கலியாதி தைத்யர்களும் இருக்கின்றனர். இவர்களும் தம் செயல்களை செய்கின்றனர். இவர்கள் அனைவரும் ஸ்ரீஹரியை எதுவும் செய்ய முடியாமல், அவன் மட்டுமே ஸ்வாமி, இந்த தேகத்தில் அவன் இருக்கிறான் என்று எண்ணும் அறிவு நமக்கு இருக்கட்டும் என்று போதிக்கிறார் ஸ்ரீதாஸர். அதாவது, நம் தேகத்தில் எவ்வளவு பேர் தேவர்கள் இருக்கிறார்களோ, அதே எண்ணிக்கையில் தைத்யர்களும் இருக்கின்றனர். நாம் தர்ம காரியத்தை செய்யாதவாறு, ஸாதனை செய்யாதவாறு, துர்புத்தியை கொடுக்குமாறு செய்கின்றனர். ஆனால், இவற்றிலிருந்து தப்பிக்கும் முறை என்னவென்றால், நாம் செய்யும் அனைத்து காரியங்களையும் முக்யப்ராணாந்தர்கத ஸ்வாமி ஸ்ரீஹரிக்கு அர்ப்பிப்பது ஒன்றே நம் கடமையாகும்.

**142. அக3ணித ஸ்வாதந்த்ரியவ நா**
**ல்ப3கெ3 விபா4க3வ மாடி3 ஒந்த3னு**
**தெகெ3து த3ஷவித3கெ3ய்ஸி பாதோ3னபஞ்ச ப்ராணனலி ।**

**மொக$^3$ சதுஷ்டயனொளு ஸபாதை$^3$**
**து$^3$கு$^3$ண விரிஸித$^3$ மத்தெ த$^3$ஷவித$^3$**
**யுக$^3$ள கு$^3$ணவனு மாடி$^3$ எரடு$^3$ ஸதா$^3$ஷிவ னொளிட்ட ||(16-4)**

பகவந்தன் தன் ஸ்வாதந்த்ர்யத்தை எப்படி மற்றவர்களில் வைத்து, ஜீவிகளை நடத்துகிறான் என்பதை இந்த சரணத்தில் சொல்கிறார் ஸ்ரீதாஸர். ஸ்ரீஹரி உடையது, எல்லையற்ற குணங்கள். ஆனால், அதில் சிறிதளவு மட்டும் ஜீவர்களுக்கு கொடுத்து, மற்ற அனைத்து ஸார்வபௌமத்வத்தை தன்னில் வைத்துக் கொண்டிருக்கிறான். தன் இந்த உலகத்தில் செயல்களை செய்வதற்காக தான் சிறிது குணங்களை எடுத்து, 4 பாகங்களாக ஆகி, அதில் ஒரு பாக குணத்தை 10 பாகமாக செய்து, அதில் 4 பாகங்களை முக்யப்ராணரில், 5 பாகத்தை பிரம்மனில் வைத்து மிச்சம் இருக்கும் 1 பாகத்தை 10 பாகங்கள் ஆக்கி, ஸதாசிவனில் 2 குணங்களை வைத்து, மற்ற 8 பாகங்களை தத்வாபிமானி தேவதைகளுக்கு பிரித்துக் கொடுத்தான் என்கிறார் ஸ்ரீதாஸர்.

**143. ஈ வித$^4$தி$^3$ ஸ்வாதந்த்ரியத்வவ**
**தே$^3$வ மானவ தா$^3$னவரொளு ர**
**மா வினோதி$^3$ விபா$^4$க$^3$ மாடி$^3$ட்டல்லெ ரமிஸுவனு |**
**மூவரொளகி$^3$த்த$^3$வர கர்மவ**
**தா விகாரவ கை$^3$ஸத$^3$லெ க**
**ல்பாவஸானகெ கொடு$^3$வனாயாஸ வரவர க$^3$திய ||(16-6)**

இப்படியாக பகவந்தன், தன் ஸ்வாதந்த்ர்யத்தை தேவதைகளில், அசுரர்களில் வைத்து, தான் இந்த தேகத்தில் (சேதனர்களில்) இருந்துகொண்டு, அவரவர்கள் செய்யும் கர்மங்களுக்கு அவர்களையே பொறுப்பாக ஆக்கி, இறுதிக் காலத்தில், அவரவர்களுக்கு யோக்யதைக்கேற்ப கதியை கொடுக்கிறன். தான் மட்டும் எதிலும் சம்பந்தப்படாமல் இருக்கிறான். ஆனால், கர்மத்தின் பலன்களை ஜீவர்களே உண்ண வேண்டும் என்பதை அறிவாயாக.

**144. இந்த்$^3$ரியக$^3$ளிம் மாள்ப கர்ம**
**த்$^3$வந்த்$^3$வக$^3$ள தனக$^3$ர்ப்பிஸலு கோ$^3$**
**விந்த$^3$ புண்யவ கொண்டு$^3$ பாபவ ப$^4$ஸ்மவனெ மாள்ப |**
**இந்தி$^3$ரேஷனு ப$^4$க்தஜனரனு**

**நிந்தி3ஸுவ ரொளகி3ப்ப புண்யவ**
**தந்து3 தன்னவகீ3வ பாபக3ளவரி கு3ணிஸுவனு ||(16-8)**

நம் ஞானேந்த்ரிய, கர்மேந்த்ரியங்களினால், மனதினால் ஆகும் த்வந்த்வ கர்மங்களை எவ்வித சந்தேகமும் இன்றி, கோவிந்தனுக்கு அர்ப்பணம் செய்தால், பகவந்தன் நம் பாவங்களை பஸ்மம் ஆக்கிவிடுகிறான். ஆனால், பகவந்தனுக்கு ஏன் அர்ப்பணம் செய்ய வேண்டும் என்று அவநம்பிக்கை கொண்டால் மற்றும் பகவந்தனின் பக்தர்களை திட்டியவாறு இருந்தால், அவர்கள் செய்த புண்ணியங்களை ஸஜ்ஜனர்களுக்கு, பக்தர்களுக்கு பிரித்துக் கொடுத்து விடுகிறான். அதாவது, அவர்கள் செய்த பாவங்களை துஷ்டர்களுக்கு கொடுத்து விடுகிறான். இதிலிருந்து அறிவது என்னவென்றால், யாருக்கும் ஸ்வாதந்த்ர்யம் இல்லை. அதனை பகவந்தன் யாருக்கும் கொடுக்கவில்லை. ஆனால், நாம் ஸத்கர்ம ஆசரணையில் இருந்து, செய்யும் த்வந்த்வ கர்மங்களையும் ஸ்ரீஹரிக்கு அர்ப்பிக்க வேண்டும் என்று சொல்கிறார் ஸ்ரீதாஸர். (தொடரும்)

**தற்போது நமது Blogல்**
**தினம் ஒரு பத்யமாக வந்து கொண்டிருப்பது :**
**https://dasa-sahitya.blogspot.com/**

* ஸ்ரீப்ரஸன்ன ஸ்ரீனிவாஸ தாஸர் இயற்றிய - விஷ்ணு சஹஸ்ரநாம பாஷ்ய - கன்னட பத்யங்கள். இதன் அர்த்த விளக்கங்கள் - தமிழில்.
* 1000 நாமங்களுக்கு, (4 வரிகளைக் கொண்ட) 1000 கன்னட பத்யங்களை பாஷ்ய ரூபமாக இயற்றிக் கொடுத்திருக்கிறார் தாஸர்.
* தினமும் 3 பத்யங்களின், தமிழ் விளக்கங்களை நமது மேற்கண்ட blogல் படிக்கலாம்.

ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப் அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்துச் சொல்லலாம்.

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

## B. ஜெயம்மா (1945 - )

பெங்களூரு குடிபண்டெ வாஸுதேவராவ் மற்றும் யஷோதாம்ம தம்பதிகளுக்கு மகளாக ஜயம்மா அவர்கள் 02.01.1945ம் ஆண்டு பிறந்தார். பின், பள்ளிக் கல்வி முடித்து, M.A. B.Ed ஆகிய மேற்படிப்பையும் முடித்தவரான ஜெயம்மா அவர்களின் திருமணம், அரசு வேலையில் இருந்த ராமராயர் அவருடன் நடந்தது. இவர்களுக்கு குருப்ரஸாத் மற்றும் லதா என்னும் வாரிசுகளும் பிறந்தனர்.

ஜயம்மா அவர்களுக்கு 'ப்ராணேஷ கேசவ' என்னும் அங்கிதமும், அவருடைய கணவரான ராமராயருக்கு 'ரங்க நரஸிம்ஹ கேஷவ' என்னும் அங்கிதமும், ஜாம்பவதிப்ரிய விட்டல தாஸர் என்னும் குருவின் மூலம் கிடைத்தது. தங்களின் வேலைகளிலிருந்து ஓய்வு பெற்ற தம்பதிகள், தொடர்ச்சியாக ஹரிவாயுகுருகளின் ஸேவையினையும், ஹரிதாஸர்களில், பக்தியை கொண்டவர்களாக, நிரந்தரமாக புராண பிரவசனங்களின் ஸ்ரவணம், ஹரிகதாம்ருதஸார படிப்பது, கேட்பது ஆகியவற்றில் ஈடுபட்டிருக்கின்றனர்.

**திருமதி ஜெயம்மா அவர்கள் தொகுத்த புத்தகங்கள்:**

1. ஹரிதாஸர்களின் கிருதிகளில் தசாவதாரம் (2007): பல்வேறு ஹரிதாஸர்களால் இயற்றப்பட்ட ஸ்ரீஹரியின் தசாவதார கிருதிகளை இந்த புத்தகத்தில் தொகுத்திருக்கிறார்.

2. ஹரிதாஸர்களின் கிருதிகளில் கேசவ நாமா (2013): பல்வேறு ஹரிதாஸர்களால் இயற்றப்பட்ட ஸ்ரீஹரியின் 24 மூர்த்திகளின் கிருதிகள் இந்த புத்தகத்தில் தொகுக்கப்பட்டிருக்கிறது. 22க்கும் மேற்பட்ட ஹரிதாஸர்களின் சுமார் 50 பாடல்களை இந்தப் புத்தகத்தில் காணலாம்.

3. தாஸ ஸாகித்ய விஸிஷ்ட கோஷ (அகராதி) என்னும் புத்தகம் 2013ம் ஆண்டு, TTD Trust மூலமாக வெளியிடப்பட்டது.

4. தபோநிதி விஷ்வ வந்த்ய ஸ்ரீவித்யாமான்ய தீர்த்தர் என்னும் இவரது புத்தகம் 2014ம் ஆண்டில், உடுப்பி பலிமாரு மடத்தினவரால் வெளியிடப்பட்டது.

5. ஹரிதாஸர்களின் கிருதிகளில் ஸ்ரீனிவாஸனின் வர்ணனை : என்னும் தொகுப்பில் பல்வேறு ஹரிதாஸர்களின் ஸ்ரீனிவாஸனின் வர்ணனையை எப்படி செய்திருக்கின்றனர் என்பதை அழகாக தொகுத்திருக்கிறார் ஹரிதாஸினி.

6.ஹரிதாஸர்களின் கிருதிகளில் ஸ்ரீமத் பாகவத: அகில கர்னாடக தத்வஞான ப்ரதிஷ்டான மற்றும் ஹரிதாஸ ஸாகித்ய மஹாவித்யாலயத்தின் மூலம் கொடுக்கப்படும் 'புரந்தர ப்ரஷஸ்தி' என்னும் விருதிற்காக எழுதப்பட்ட இந்த புத்தகத்தில், பல்வேறு ஹரிதாஸர்கள் இயற்றிய பாகவத கிருதிகளை தொகுத்திருக்கிறார். வெளிவந்த ஆண்டு 1914.

ஹரிதாஸினி இயற்றிய உகாபோகங்கள்:

1. மனவெம்ப$^3$ மர்கட ப$^3$லு பா$^3$தெ$^3$ப$^3$டி$^3$ஸூதிதெ$^3$
ப்ராணேஶ கேஶவனே நீ த$^3$யமாடி$^3$ ஸலஹோ

2. வாமனரூபி த$^3$ஶாவதாரியே
நின்ன அனந்த ரூபத$^3$ பாத$^3$ ஸ்மரணெ
எனகி$^3$த்து ஸலஹோ ப்ராணேஶ கேஶவனே.

3. கம்ஸ ஜனகன பந்த$^4$னத$^3$ல்லிரிஸித$^3$
கம்ஸாரி ஜனகன ப$^3$ந்த$^3$னவ பி$^3$டிஸிதந்தெ$^3$
ப்ராணேஶ கேஶவனே என்ன ப$^3$ந்த$^4$னவ பி$^3$டி$^3$ஸய்யா

4. அம்பி$^3$க$^3$னு நீனே ஸ்ரீஹரி சுக்காணியு நின்னதே$^3$ ஸ்ரீகிருஷ்ண
ப$^4$வ கட$^3$லிகெ$^3$ ஹரிகோலாகி$^3$ பாருமாடோ$^3$ ப்ராணேஶ கேஶவ
நா நின்ன தா$^3$ஸானுதா$^3$ஸ க்ருபெ மாடோ$^3$ ரமாமாத$^4$வனே.

திருமதி ஜெயம்மா அவர்கள் செய்த ஸாதனைக்கு கிடைத்த விருதுகள் / பட்டங்கள்:

1. 2006ம் ஆண்டு - ஹரிதாஸ ஸாஹித்ய பூஷண
2. 2008ம் ஆண்டு ஹரிதாஸ ஸாஹித்ய ரத்ன
3. 2010ம் ஆண்டு ஹரிதாஸ ஸாஹித்ய விஷாரத

4. 2012ம் ஆண்டு மத்வஸ்ரீ
5. 2013ம் ஆண்டு M.Philக்கு சமானமான விருது.

இவ்வாறாக பல்வேறு புத்தகங்களை தொகுத்து, தொடர்ந்து ஹரிதாஸ ஸேவையில் ஈடுபட்டிருக்கும் ஹரிதாஸினி ஜெயம்மா அவர்கள் மேன்மேலும் இவ்வாறு ஹரி சேவையினை செய்ய வேண்டும் என்று ஹரிவாயு குருகளின் பிரார்த்தனை செய்வோம்.

(அடுத்த இதழில் வேறொரு ஹரிதாஸினியைப் பற்றி பார்ப்போம்)

***

## தொடர்

## ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர்

**டாக்டர். N.G.விஜயலட்சுமி.**

ஸ்ரீலோலனாக்[3]ஞெயிந்த[3] ஸத்யாதி[3] லோகக[3]ளல்லி
நெலெஸிர்த[3] ஸாரூப்யத[3] முக்தரிகு[3]
ஆலஸ்ய ஹஸி த்ருஷெ கால கர்மத[3] கோ
டலெக[3]ளொம்மவு க[3]ட[3] ||9

தி[3]வ்ய போ[4]க[3]ங்க[3]ள லீலெயிந்து[3]ம்ப[3]ரு
தி[3]வ்ய கீ[3]தவ பாடு[3]வரு
க[3]ந்த4 பரிமளக[3]ள பூ[4]ஸுவரு
தி[3]வ்ய நரனாரியரல்லி ||1

ஜ்யோதிர்மயவாத[3] ஹெண்ணுக[3]ண்டு[3]க[3]ள ப்ரா
க்ருத தே[3]ஹங்க[3]ளல்லிஹவு
ப்ரீதியிந்தொ[3]ம்மொம்மெ அத[3]ரொளு பொக்கு நானா
க்ருதியல்லி ஸுகி[2]ஸுவரு ||2

இங்கு நாம் ஒரு விஷயத்தை கவனிக்க வேண்டும். இந்த இஹ லோகத்தில் நைவரும் வயிறு நிரப்புவதற்காக, உணவு உண்கின்றனர். தம் செல்வத்தை காட்டுவதற்காக, விலை உயர்ந்த ஆடைகளை அணிகின்றனர். ஆசை, காமம், க்ரோதங்களுக்கு அடிமையாகி, பாவ கர்மங்களை செய்தவாறு, சம்சார பந்தனத்தை விட முடியாமல் மறுபடி அதற்கே கட்டுப்படுகிறார்கள். ஆனால், முக்த லோகத்தில்

அனைத்தையும் ஸ்ரீஹரி ப்ரீத்யார்த்தமாக செய்கின்றனர். கர்ம பந்தனத்திலிருந்து முக்தராகி, முக்தமான ஆனந்தத்தை அனுபவிக்கின்றனர். முக்தர்கள் ஸ்ரீஹரியில் பக்தியை விரும்புகின்றனர். அதை விட்டு சுகத்தை அவர்கள் விரும்புவதில்லை. ஆனாலும், பகவந்தன் அவர்களுக்கு சுகத்தையே தருகிறான்.

நித்யத்ருப்தனு க்ருதக்ருத்யனச்யுத க[3]ட[3]
முக்தரெல்ல ப்ரகாமரு க[3]ட[3]
இந்தி[1]வராட[1]வ அந்த ஸ்ருதிபத[2]வனா
வ்யர்த்தவ மாட[3]த[3]வ ஜாண ||4

என்கிறார் ஸ்ரீவாதிராஜர்.

இதே விஷயத்தை ஸ்ரீமோகனதாஸர், தம் கோலு ஹாடு பாடலில் 104ம் பத்தியிலிருந்து 111ம் பத்தி வரை விளக்கியிருக்கிறார். முக்தியில் அனைவரும் சுகிகள், யஷஸ்விகள், செல்வந்தர்கள் ஆவர். அவர்களில் காமம், க்ரோத, ஆகியவை இருப்பதில்லை. சுகமாக இருக்கின்றனர்.

ஸ்ரீகோபாலதாஸர், முக்தர்களின் நிலையை, தம்முடைய பாணியில் சுளாதி ஒன்றில் இவ்வாறு பாடுகிறார்.

முக்திலி இப்பரு பிடதெந்தெந்து மத்தெ
த்ரிகுணாத்மக லிங்கரஹிதராகி |
சித் ஸ்வரூபதிந்தலீ ஸஞ்சரிசுத்த மத்தெ ஸகார
அங்காபரண பூஷித
வஸ்த்ர மாலிகெ கந்த பரிமளதி எத்தி பிடிது
ஷங்க சக்ர ஆயுத தரிஸி |
நித்ய ஆனந்த ஆனந்த அனுபோகிஸுத்த அத்யந்தாபேத
எல்ல ஸ்வரூப பூதவின்ன |
எத்தலாதர நித்யவெம்புதில்ல | சித்தஷுத்தரெ எல்ல சஞ்சலீரிஷகளில்ல
|
மத்தெ கமல புத்தி மாந்த்யவில்ல |
பத்னி உள்ளவரு கெலரு பத்னி ரஹிதரு கெலரு
அத்யந்த ஸுகிகளன்யபேக்ஷவில்ல |
பத்னிவுள்ளவரு தம்ம ஸாதியரிந்தலி க்ரீடெ
நித்ய மாள்பரு நீதவாகி இன்னு |
பத்னி ரஹிதராதவரு அத்யந்த ஸ்வரூப சித்தினிந்தேவே
தஜ்ஜன்ய ஸுக |

மத்தெ ஆகது ரேதோஸ்கலனெ, முக்தரிகெ அபிவ்யக்த தஜ்ஜன்யானந்தா
சித்தினொளகெ நித்ய வொதகிஸுவனந்த கோபாலவிட்டல
உத்தம புருஷ பிம்பனாகி இத்து ||

மேலும் ஸ்ரீகோபாலதாஸர் இவ்வாறு கூறுகிறார். முக்தர்கள் பழங்களை, சுவையான சாறுகளை ஏற்கின்றனர். ஆனால், அது பசியினால் அல்ல. அவற்றை ஏற்றுக் கொள்வதால், அவர்களுக்கு ஸ்வரூபானந்தம் ஆகிறது. அவர்கள் பழங்களை விரும்புவதில்லை. வ்ருக்ஷ ரூப ஜீவர்கள், பழங்களின் ரூபத்தில் உண்ணத்தக்க ஜீவர்களிடம் தாமாகவே வந்து கொடுக்கின்றனர். ஸ்ரீஹரியை தரிசனம் செய்து, ஆனந்தப்பட வேண்டும் எனப்து அந்த வ்ருக்ஷ ஜீவர்களின் விருப்பம். பசி, தூக்கம், ஆகிய இந்திரியங்களால் ஆகும் சுக அனுபவங்கள் அனைத்தும் ஆனந்தமயம்.

அடுத்து, மூன்றாம் நுடியில் ஸ்ரீதாஸர், எந்தெந்த விஷயங்களை வர்ணிக்கிறார் என்பதை பார்க்கலாம்.

ஆனந்தமயதுத்யான வ்ருக்ஷதல்லி ஸன்ஸ்தானா
ஞானேஷ்வர்ய நீதான பிடதும்ப ஸ்வாத்வான்ன ||3

முக்தி நகரமான வைகுண்டத்திலும், தோட்டங்கள், மரங்கள், செடி கொடிகள் ஆகியவை இருக்கின்றன என்று சொல்கிறார்.

முக்தர போ$^{4}$க$^{3}$க்கெ தக்க ப$^{2}$லங்க$^{3}$ள
ஹொத்து ஹொத்திலி கொடு$^{3}$திப்ப
நித்யாப்ராக்ருதவாத$^{3}$ சித்ர வ்ருக்ஷக$^{3}$ளல்லி
ஸுத்தமுத்தலொப்பிஹவு ||3

முக்தர்களின் போகத்திற்கு தக்கதான சின்மயமான பழங்களை தாங்கி, தக்க நேரத்தில் கொடுக்கும் அப்ராக்ருத சின்மய அழகான மரங்கள் அங்கு எல்லா இடங்களிலும் நிறைந்திருந்தன என்று ஸ்ரீவாதிராஜர் இந்த பத்யத்தில் தெளிவாக கூறுகிறார்.

பண்டித ஹயவதன புராணிக் அவர்கள், தமது வைகுண்ட வர்ணனை உரையில் விஷ்ணு ரஹஸ்ய ஸ்லோகங்களை உதாரணம் கொடுத்திருக்கிறார்.

ஸ்வேச்சயா பரிமாணானி யதாகார மனேக தா |

தேஷாம் தேஹேஷு ஜாயந்தே நேச்சாபங்க கதாசன |
யதா யதைவ முக்தேச்சா பலம் புஷ்பாதிகம் ததா |
ஸத்வதோ ஜாயதே ஷீக்ரம் இச்சாந்தே தத்ர லீயதே |
தரங்கா இவ தோயேஷு ததாத்மானோபி தல்லயா: |

நித்ய நிர்து3க்க2 ஸுக2 ஸ்வரூபராகி3
ஸுத்த ஸுளிவரு லீலெயல்லி
நித்யாப்ராக்ருத ப2லங்க3ளு அவர்க்கெ3 ஸுக2வ
நித்து முன்னினந்த3த3ல்லிஹவு ||4

பழ ரூபத்தினால் வரும் சேதனர்கள் நித்ய நிர்துக்கராகி, சுக ஸ்வரூபராகி இருந்து, முக்தர்களின் சுற்றிலும் லீலையினால் பொழிகின்றனர்.

குரு புரந்தரதாஸர் தம் ஒரு சுளாதியில் வைகுண்டத்தின் வனங்களைப் பற்றி இவ்வாறு சொல்கிறார்.

அல்லி வனகளுண்டு அப்ராக்ருதவாத
பலபுஷ்பகளிந்த லொப்புது |
பக்ஷி ஜாதிகளு அதி விலக்ஷணவாத முகுதரு
தம்ம ஜாதிகளல்லி ஸமுதாயதிந்த ஸாமகாயனவன்னு
ஷிகி ஷிகி ஷப்ததிம் ரஞ்சிஸுவ நுடிகளு
முக்தரு பந்து ஜல க்ரீடெயம் மாடி குளிகுளிது ஸுகிபரு
இந்த ஸுக பேகாதரெ நிஜகுணவ பிட்டு பரலோக ஸுகவீவ
குருபுரந்தர விட்டலன பஜிஸுவ ||

ஸ்ரீமோகனதாஸரின் கோலு ஹாடு பதம் இவ்வாறு:

அல்லில்ல த்ருண வருக்ஷ அச்சீத்யாபே4த்3யவு
ப3ல்ல சஜ்ஜனர புண்யப2ல கோலெ |
ப3ல்ல சஜ்ஜனர புண்யப2ல கோலெ
அல்லி நாஷங்களில்லவு கோலெ ||112

வைகுண்டத்தில் இருக்கும் ஒவ்வொரு வஸ்துவும் அப்ராக்ருத்மானவையே. சுத்த ஸாத்விகமானவை. என்றும் அவை நாசம் அடைவதில்லை. முக்தர்கள் பழ, புஷ்பாதிகளை எடுத்துக் கொண்டாலும், மேலும் அவை எவ்வித மாற்றங்களும் இன்றி யதாஸ்திதியை கொண்டே ஒளிர்கின்றன. யோக்யதைக்கேற்ப அனைத்து ஜீவிகளும் பூர்ணானந்தத்தினை அடைகின்றனர்.

இவ்வாறாக, ஸ்ரீவாதிராஜர், குருபுரந்தரதாஸர், மற்றும் ஸ்ரீகோபாலதாஸர் தத்தம் கீர்த்தனைகளில் கூறிய விஷயங்களை, ஸ்ரீப்ரஸன்ன வெங்கட தாஸரின் இந்த கீர்த்தனையின் மூன்றாம் நுடியில் நாம் காணலாம். அடுத்து நான்காம் நுடியை பார்ப்போம்.

குந்தாம்புஜ மந்தாரா மந்த மந்த மோத ஈரா
ஸுந்தரேர காத்ரா ஸாராத்விரேப ஜங்காரா ||4

ஈரா என்றால் வாயுதேவர். சுகமான காற்றினை அளிப்பவர். முக்தியில் முக்தர்கள் வாயுதேவரின் அருளால் மந்தமாருதனால் நித்யானந்த சுகத்தை அனுபவிக்கின்றனர். முக்தியில் விஷய பதார்த்த போகங்களை எப்படி அனுபவிக்கின்றனர் என்பதை ஸ்ரீஹரிவாயு ஸ்துதியில் இவ்வாறாக சொல்லியிருக்கின்றனர்.

ஆனந்தான் மந்தமந்தா தததிஹி மருத: குந்தமந்தார நந்த்யா
வர்த்தாமோதான் ததானா ம்ருதுபதமுதிதோத் கீதகை: ஸுந்தரீணாம் |
வ்ருந்தைராவந்த்ய முக்தேந்த்வஹி மகு மதனா ஹீந்த்ர தேவேந்திர ஸேவ்யே
மௌகுந்தே மந்திரேஸ்மின் அவிரதமுதயன் மோதினாம் தேவதேவ ||10

மெதுவாக வீசும் தென்றல் காற்றானது, பாரிஜாத, மந்தார புஷ்பங்களின் மேல் சென்று வீசி, அவற்றில் இருக்கும் சுகந்தத்தினை ஏந்தி, முக்தர்களுக்கு சுகத்தை கொடுக்கின்றன. அந்த விஷ்ணு லோகத்தில் இந்து (சந்திரன்), அஹிமகு (சூரியன்), மதனா (மன்மத), அஹீந்த்ர (சேஷ), தேவேந்த்ர (இந்த்ர) ஆகியோர், இனிமையான குரலில் பாடுபவர்களான பெண்களால் புகழப்பட்டவாறு, சுகமாக சஞ்சரிக்கின்றனர். நிரந்தர அபிவ்யக்த ஸ்வரூபானந்தத்தை அனுபவிக்கின்றனர். இப்படியாக முகுந்தனின் மந்திரமான வைகுண்டத்தில் முக்தரான தேவதைகள் அனைவரும் எப்போதும் மகிழ்ச்சியில் திகழ்கின்றனர்.

(தொடரும்)

***

தொடர்

## ஹரிதாஸ ஸாகித்ய ஸார

திரு ஜி. வரதராஜ ராவ்

### ஹரிதாஸ ஸாகித்யத்தின் பொற்காலம்

ஹரிதாஸ ஸாகித்யத்தை திரு.R.S.பஞ்சமுகி அவர்கள் நான்கு காலகட்டங்களாக பிரிக்க வேண்டும் என்று சொல்கிறார். ஸ்ரீமத்வாசார்யரும், அவரது சிஷ்யரான ஸ்ரீ நரஹரி தீர்த்தர், ஸ்ரீ ஜயதீர்த்தர் 12-13ம் நூற்றாண்டில் ஹரிபக்தி, உபாசனை, ஹரிதாஸ்யம் ஆகியவற்றை பேசு மொழியின் வசனங்களால் மக்களுக்கு உபதேசித்து வந்தனர். இது முதலாம் கட்டம் எனப்படுகிறது. ஸ்ரீபாதராயரிலிருந்து துவங்கி ஸ்ரீகனகதாஸரின் காலம் வரைக்கும் இரண்டாம் கட்டம் எனப்படுகிறது. ஸ்ரீவிஜயதாஸர் மற்றும் அவரின் சிஷ்ய பரம்பரையின் காலத்தை மூன்றாம் கட்டம் என்றும் அறியவேண்டும். ஸ்ரீப்ராணேஷ தாஸரிலிருந்து துவங்கி அடுத்து வந்த ஹரிதாஸர்கள் அனைவரும் நான்காம் கட்டத்தை சேர்ந்தவர்கள் என்று குறிப்பிடுகிறார்.

ஸ்ரீமத்வாசார்யர் இயற்றியிருக்கும் 'த்வாதச ஸ்தோத்திரம்' கிரந்தமே கர்னாடகத்தில் தாஸகூடத்தின் விதையை விதைத்திருக்கும் பத்யமாக இருக்கிறது என்றும், அவர் இயற்றியிருக்கும் துளு கீதங்கள் அந்த பரம்பரைக்கு ஆதாரமாக இருந்திருக்கலாம் என்றும், ஸ்ரீமத்வரின் சமகாலத்தவரான ஸ்ரீ நரஹரி தீர்த்தர் எழுதியிருக்கலாம் என்று நினைக்க வேண்டிய சில கீர்த்தனைகளே இந்த ஸாகித்யத்தின் முதல் முயற்சிகள் என்று சொல்ல வேண்டியதாகிறது என்பதாலும், இந்த காலகட்டத்தை முதல் காலகட்டம் என்று திரு.பஞ்சமுகி அவர்கள் சொல்கிறார்.

ஆனால், இதனை ஆராய்ந்தால், ஸ்ரீமத்வாசார்யரின் த்வாதச ஸ்தோத்திரத்தை, அவரது இதயத்தில் இருக்கும் ஹரிபக்தி, ஸ்தோத்திரமாக வெளிப்பட்டு, அதி உத்தமமான சம்ஸ்கிருத ஸ்தோத்திரங்களாக வந்திருக்கின்றன என்று சொல்லலாமே தவிர, அதனை கன்னட ஹரிதாஸ ஸாகித்யத்தின் ஒரு வகை என்று சொல்ல முடியாது. அவரது இந்த அற்புதமான ஹரிபக்தி, ஹரிதாஸ ஸாகித்ய இயற்றுதலுக்கு ஒரு முன்னோடி என்று சொல்வதில் எந்தத் தடையும் இல்லை.

இரண்டாவதாக, அவர் இயற்றியிருக்கலாம் என்று சொல்லப்படும் துளு கீதங்கள் இதுவரை வாய்வழியாகவும்கூட வரவில்லை. ஸ்ரீவாதிராஜர் துளு மொழியில் இயற்றியிருக்கும் தசாவதார ஸ்துதியை விட்டால்,

இதில் இதுவரை வேறு கிரந்தங்கள் இருக்கின்றன என்று நான் பார்த்தவரையில் தெரியவில்லை.

ஸ்ரீ நரஹரி தீர்த்தரின் கன்னட கீர்த்தனைகள் பற்றிய பல்வேறு சந்தேகங்களும் இன்னும் தீர்க்கப்படாமல் உள்ளன. இந்த அனைத்து காரணங்களால், இந்த முதலாம் கட்டத்தை பிரிப்பது தேவையற்றதாக இருக்கிறது.

இதிகாசத்தின் அடிப்படையில் பார்த்தால், ஹரிதாஸ ஸாகித்யத்தின் துவக்கம் மற்றும் பர்வ-யுகம் ஸ்ரீபாதராஜரிடமிருந்தே துவங்கியது என்று சொல்ல வேண்டும். திரு.R.S.பஞ்சமுகி அவர்கள் எதை இரண்டாவது கட்டம் என்று சொல்கிறாரோ, அதனை ஹரிதாஸ ஸாகித்யத்தின் முதலாம் கட்டம் என்று சொல்ல வேண்டும். இதன் பிறகு வரும் ஹரிதாஸ ஸாகித்யத்தின் வளர்ச்சியை, இரு கட்டங்களாக பிரிப்பதற்கு பதில், ஒரே கட்டமாக பார்ப்பதே வரலாற்று ரீதியில் சரியாக இருக்கக்கூடும்.

ஸ்ரீபாதராஜரின் பரம்பரையில் ஹரிதாஸ ஸாகித்யத்தில் நடந்த மிகப்பெரிய செயல்களால், அது பர்வ யுகம் மட்டுமல்லாமல், ஸுவர்ண யுகம் என்று அழைக்கப்பட வேண்டும். அந்த காலத்தில் இயற்றப்பட்ட கிருதிகளிலிருந்து இந்தப் பெயர் பொருத்தமாக இருக்கும். விஜய நகர சாம்ராஜ்யத்தின் காலத்தில் ஹரிதாஸ ஸாகித்யம் நன்றாக வளர்ந்து, பிறகு அந்த சாம்ராஜ்யத்தின் இறங்குமுகத்தில் ஹரிதாஸ ஸாகித்யமும் வளர்ச்சி குன்றியது.

சில ஆண்டுகள் வரை மறைந்திருந்து ஓடிய இந்த ஹரிதாஸ ஸாகித்ய பெருங்கடல், ஸ்ரீவிஜயதாஸரின் வரவால் மறுபடி ஓடத் துவங்கி, ஒளிரத் துவங்கியது என்பதை நாம் பார்க்கலாம். ஆகையால், இந்த இரண்டாம் காலத்தை ஹரிதாஸ ஸாகித்யத்தின் மறுமலர்ச்சி காலம் என்று சொல்லலாம். இந்தக் கட்டுரையில் முதலில் வந்த பொற்காலத்தை பார்ப்போம்.

நம:ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாஸயோகினே |
நம: புரந்தரரார்யாய விஜயார்யாய தே நம: ||

என்னும் ஸ்லோகத்தில் ஸ்ரீபாதராஜருக்கு (1404-1502) கொடுக்கப்பட்டிருக்கும் இடத்தைப் பார்த்தால், அவர் ஹரிதாஸ ஸாகித்யத்திற்கு எப்படி ஒரு துருவ நட்சத்திரமாக, வழிகாட்டியாக இருக்கிறார் என்பதை, அவரது கிருதிகளின் மூலம் நாம் அறியலாம். ஸ்ரீமத்வாசார்யரின் முக்கிய சிஷ்யரான ஸ்ரீபத்மனாப தீர்த்தரின் பரம்பரையில் வந்த ஸ்ரீபாதராஜரின் வாழ்க்கை மிகவும் அற்புதமானதாகும்.

அவரின் இயற்பெயர் லட்சுமி நாராயண. நற்குலத்தில் பிறந்தவரான இவர், சென்னபட்டண தாலுகா அப்பூரின் ஸ்ரீபுருஷோத்தம தீர்த்தரின் விருப்பத்தில் ஸ்ரீரங்கத்தின் ஸ்ரீ ஸ்வர்ணவர்ண தீர்த்தரின் சிஷ்யராகி, அவரின் அருளால் சன்யாசத்தை ஏற்று, பல ஆண்டுகள் ஸ்ரீரங்கத்திலேயே வசித்தார். இவரது வித்யாகுரு - ஸ்ரீவிபுதேந்திர தீர்த்தர்.

சிறு வயதிலேயே வேதாந்த கல்வியில் சிறந்து விளங்கிய இவரை, உத்தராதி மடத்து பரம்பரையில் வந்த ஸ்ரீரகுநாத தீர்த்தர், புகழ்ந்து மெச்சி ‘ஸ்ரீபாதராஜ’ என்னும் பட்டத்தைக் கொடுத்தார். அன்றிலிருந்து ஸ்ரீலட்சுமி நாராயண யதிகள், ஸ்ரீபாதராஜர் என்றே அழைக்கப்பட்டார். ஸ்ரீபாதராஜர் தம் ஆசிரம குருகளான ஸ்ரீ ஸ்வர்ணவர்ண தீர்த்தர், ஸ்ரீரங்கத்தில் பிருந்தாவனஸ்தர் ஆனபிறகு, விஜய நகரத்தின் கீழ் வந்த முளபாகிலுக்கு வந்து தங்கினார். அன்றிலிருந்து அவரது மடம் ஸ்ரீபாதராஜ மடம் என்றே பெயர் பெற்றதோடு மட்டுமல்லாமல், மத்வ சித்தாந்தத்தை கற்க விரும்புபவர்களுக்கு தக்க ஒரு பாடசாலையாகவே விளங்கியது. அப்பூரின் ஸ்ரீபிரம்மண்ய தீர்த்தரின் உத்தராதிகாரிகளான ஸ்ரீவ்யாஸராஜர் போன்ற மகாமேதாவிகள் ஸ்ரீபாதராஜரின் சிஷ்யரில் ஒருவர் என்று சொன்ன பிறகு, இந்த சம்ஸ்தானத்தின் மதிப்பைப் பற்றி சொல்ல வேண்டியதேயில்லை.

ஸ்ரீபாதராஜரின் மகிமை பற்பல விதங்களில் வளர்ந்து வருவதைக் கண்ட, கேட்டறிந்த, ஸாளுவ வம்சத்தின் நரசிம்மன், அப்போது சந்திரகிரியில் விஜய நகரத்தின் அதீனத்தில் இருந்தான். அவனுக்கு ஸ்ரீபாதராஜரிடம் அபாரமான பக்தி, சிரத்தைகள் இருந்தன. ஸாளுவ நரசிம்மனின் காலத்தில் துவங்கிய இந்த ராஜ மரியாதை, ஸ்ரீபாதராஜரின் வாழ்க்கையில் தொடர்ந்து நடந்து வந்தது.

அப்பூரில் பிறந்து வளர்ந்து, ஸ்ரீரங்கத்தில் சன்யாச தீக்ஷையைப் பெற்று, நரசிம்ம தீர்த்த, நரசிம்ம வன போன்ற பவித்ர இடங்களைக் கொண்ட முளபாகிலில் தங்கிய ஸ்ரீபாதராஜரின் புகழ் நாடு முழுவதும் பரவியது.

அவரின் ஆன்மீக வாழ்க்கை, தினந்தோறும் படிப்படியாக வளர்ந்தது. இத்தகைய யதிவரேண்யர் தம் பூஜா காலத்தில், விதிப்படி தமது பூஜைகளை செய்து, பகவந்தனிடம் தமது பக்தியை தெரிவிக்கும் விதத்தில், கன்னடத்தில் கீர்த்தனைகளை இயற்றி, அவற்றை ஸ்ரீஹரிக்கு சமர்ப்பிக்கத் துவங்கினார்.

இந்த செயலானது அந்த காலத்திற்கு ஒரு மிகப்பெரிய புரட்சி என்றே சொல்லலாம். காலில் சலங்கை கட்டிக்கொண்டு தம்பூரியை மீட்டியவாறு, நர்த்தன சேவையை செய்தவாறு, கீர்த்தனைகளை பாடிக் கொண்டிருந்தார் என்று கேள்விப்படுகிறோம். சன்யாசியானவர் இப்படியாக தம் பக்தர்களுடன் பஜனை செய்வதென்றால், அது ஒரு மிகவும் அபூர்வமான சம்பவமே ஆகும். தூய்மையான இந்த ஹரிபக்தியின் வெளிப்பாடே, கன்னட ஹரிதாஸ ஸாகித்ய இயற்றுதலுக்கு துவக்கப் புள்ளி ஆயிற்று.

ஸ்ரீபாதராஜரின் இந்த புதிய செயலுக்கு, அவரது ஹரிபக்தி மிகவும் முக்கியமான காரணம் என்று சொல்வதில் எவ்வித சந்தேகமும் இல்லை. ஆனால், தமது ஹ்ருதயானுபவத்தை கன்னடத்திலேயே வெளிப்படுத்த வேண்டும் என்னும் அவரது விருப்பத்திற்குப் பின்னால் ஏதேனும் ஒரு காரணம் இருக்கவேண்டுமே என்னும் கேள்வி நம்மில் எழாமல் இல்லை.

15ம் நூற்றாண்டில் இப்படியான செயல் நடைபெறுகிறது என்பது ஒரு வரலாற்று நிகழ்வே ஆகும். 9ம் நூற்றாண்டின் சமயத்திலேயே தமிழ்நாட்டில் வைஷ்ணவ பக்தியை பரப்பிய ஆழ்வார்களின் பிரபந்தங்கள் புகழ் பெற்றிருந்தன. அது மட்டுமல்லாமல், ஸ்ரீராமானுஜாசார்யர் அவற்றை சம்ஸ்கிருத கிரந்தங்களுக்கு சமமாகவே வைத்து கௌரவித்தார். அதே தமிழ்நாட்டில் நாயன்மார்களின் தமிழ் கிருதிகளும் சைவ பக்தியின் முக்கிய பிரசார உத்தியாக இருந்தன.

கன்னட நாட்டிலும் 12ம் நூற்றாண்டில் வசன யுகம் பரவி இருந்தது. இந்த சமயத்தில், ஸ்ரீமத்வாசார்யர் நிறுவிய தத்வவாதமானது, வேரூன்றியதோடு மட்டுமல்லாமல், ஸ்ரீஜயதீர்த்தர் போன்ற ஞானிகளின் மூலம் ஆசார்யரின் கிரந்தங்களுக்கு டீகை, டிப்பணிகள் ஆகியவையும் சம்ஸ்கிருதத்தில் வந்தன.

தமிழ்நாட்டில் பல்லாண்டுகள் வசித்திருந்த ஸ்ரீபாதராஜருக்கு, ஆழ்வார்களின் பிரபந்தங்களில் இருந்த பக்தி, பேசுமொழியின் மேல் அவர்களுக்கு இருந்த ப்ரியம் ஆகியவை பிடித்திருந்தன என்பதை நம்மால் ஊகிக்க முடிகிறது. அப்படியே கன்னட நாட்டில் ஆன்மிக விஷயங்களை கன்னடத்திலேயே விளக்கிய வசனகாரர்களின் திறனும் அவரின் மனதை மகிழ்வித்திருந்தன என்று சொல்ல வேண்டும். இந்த இரண்டுடன், தம் ஆசார்யரின் சித்தாந்தத்தை சம்ஸ்கிருதம் அறியாத மாத்வ மக்களுக்கு சொல்ல வேண்டும் என்று அவர் விரும்பினார். ஆகையால், அவர் பூஜையின் சமயத்தில் ஆத்ம நிவேதனை செய்வதற்காக அவர் இயற்றிய இந்த கிருதிகளின் கடல், படிப்படியாக வளர்ந்து, மத்வ சித்தாந்தத்தின் தத்வங்கள் மற்றும் ஸ்ரீமத் பாகவதத்தின் சாரங்களை அறிந்து சொல்லும் அக்ஷயமாகவும் விளங்கியது.

(தொடரும்)

***

**தொடர்**

## ஸ்ரீகனகதாஸர்

**திரு.வ்யாஸனகெரெ ப்ரபஞ்சனாசார்யர்**

ஸ்ரீகனகதாஸருக்கு அருளிய இன்னொரு மஹனீயர் - ஸோதெயின் ஸ்ரீவாதிராஜர், பிராமணர் இல்லாத ஒருவரை உடுப்பிக்கு வரவழைத்து, ஸ்ரீகிருஷ்ணனின் சேவைக்கு சந்தர்ப்பம் கொடுத்ததில் ஸ்ரீவாதிராஜரின் பங்கு முக்கியமானது. உடுப்பிக்கு வந்து செல்பவர்களின் எண்ணிக்கை மிகவும் அதிகமானது. ஆனால், அப்படி வருபவர்களில் ஸ்ரீகனகதாஸரைப் போல உடுப்பியில் வரலாறு படைத்த ஆளுமைகள் மிகவும் குறைவு. உடுப்பியில் ‘கனகன கிண்டி’ என்பது அனைவரும் அறிந்த விஷயமாகும். ஸ்ரீகனகதாஸர் உடுப்பியில் தங்கியிருந்த தகவல்கள் பல்வேறு ஆவணங்களிலிருந்து தெரிய வருகிறது. யுக்தி மல்லிகா போன்ற அமரக்ருதியை இயற்றிய ஸ்ரீவாதிராஜரின் புத்திக்கு அப்ராமணரான ஸ்ரீகனகதாஸரின் நிர்மல பகவத்பக்தியை அடையாளம் காணும் சக்தி இருந்தத்தின் எவ்வித ஆச்சரியமும் இல்லை.

இவ்வாறு இரு யதிராஜர்களின் நடுவே, தம்முடைய வாழ்க்கையை நடத்திவந்த ஸ்ரீகனகதாஸர், மக்கள் வாழ நினைக்கும் ஒரு ஆதர்ச வாழ்க்கையை வாழ்ந்தார். ஸ்ரீவ்யாஸராஜர் மற்றும் ஸ்ரீவாதிராஜர் இருவரும் முறையே ‘ஸ்ரீகிருஷ்ண’ ‘ஹயவதன’ என்னும் அங்கிதத்தினால் நூற்றுக்கணக்கான கிருதிகளை இயற்றிய சிறந்த

ஹரிதாஸர்களாக போற்றப்படுகின்றனர். இவர்களைப் போல, ஸ்ரீகனகதாஸரின் கிருதிகளில் விட்டல என்னும் குறிப்பு இருகும் ‘ஆதிகேசவ’ என்னும் இஷ்டதெய்வத்தின் பெயர் இருப்பதை நாம் காண்கிறோம். இந்த இருவரும் ராஜர்கள் என்றால் ஸ்ரீகனகதாஸர் தாஸர். அனால் இந்த மூவரும் ஹரிதாஸர்கள்கூட ஆகிறார்கள்.

உடுப்பியின் ஸ்ரீகிருஷ்ணன், ஸ்ரீகனகதாஸருக்கு தரிசனம் அளித்தான் என்பது வரலாறு. ஸ்ரீகிருஷ்ணனை அவர் இருந்த இடத்திலிருந்தே கண்டது ஸ்ரீகனகதாஸரின் மகிமை. இது ஒரு அர்த்தத்தின் ஸ்ரீபகவத்கீதை உபதேசம் செய்த, நிஷ்காம கர்மத்தின் வடிவவே ஆகும். ‘ஸ்வே ஸ்வே கர்மண்யபிரத: ஸித்திம் விந்ததி மானவ:’ (18-45). தனக்குள் விஷய ஆசைகளை நிரப்பிக் கொண்டிருப்பவர்கள், எங்கு சென்றாலும், அங்கு பகவந்தன் தெரிய மாட்டான். மனதில் பகவந்தனின் சிந்தனை இருந்தால், நாம் இருந்த இடத்திலேயே அவனுடைய தரிசனம் சாத்தியம் என்பது இங்கு சொல்லப்பட்டிருக்கும் தத்வம்.

ஸ்ரீகனகதாஸருக்கு மனதில் காம, க்ரோத ஆகிய திரைகள் இருந்திருக்கவில்லை. எதிரில் ஒரு கல் சுவர் மட்டுமே தடையாக இருந்தது. ஆகவே அவருக்கு ஸ்ரீகிருஷ்ணனின் தரிசனம் கிடைத்தது. நமக்கோ, கல் சுவர்களைவிட அதிகமாக, மனதில் காமாதிகளின் திரையே தடையாக இருக்கின்றன. அதற்கே, பகவந்தன் நமக்குத் தெரிவதில்லை. நம் கண்ணெதிரில் ஸ்ரீகிருஷ்ணன் இருந்தாலும், மனதின் எதிரில் விஷயங்களே தெரிகின்றன. அவருக்கு எதிரில் சுவர் இருந்தாலும், உள்ளே பகவந்தனுடைய சிந்தனையே நிரம்பியிருந்தது. ஆகையால், நாம் ஸ்வாமியை பார்க்காமல் இருப்பதில் எவ்வித வியப்பும் இல்லை. அவர் ஸ்வாமியை பார்த்திருப்பதில் எவ்வித ஆச்சரியம் இல்லை.

கன்னட ஸாகித்யத்தில் ஸ்ரீகனகதாஸருடைய பங்கு எப்படியோ, அப்படியே ஹரிதாஸ ஸாகித்யத்திலும். ஸ்ரீபுரந்தரதாஸரைப் போலவே இவரது பங்கும் அளப்பரியது. அதிலும், சமூக வளர்ச்சி / மேம்பாடு ஆகிய விஷயங்களை சொல்லும், நீதி போதனை செய்யும் கிருதிகளை இயற்றுவதிலும் ஸ்ரீகனகதாஸர், ஸ்ரீபுரந்தரதாஸரைப் போலவே அதிக பங்கினை வகித்திருக்கிறார்.

ஹரிதாஸர்களில் ஸ்ரீகனகதாஸர், தனித்து தெரிகிறார். நரஹரி தீர்த்தரில் தொடங்கி, இன்றைய தாஸர்களின் வரையிலான அனைத்து ஹரிதாஸர்களும் கூட கவிகளாக தங்களை அடையாளம் காட்டிக்

கொண்டவர்கள் இல்லை. அவர்களின் கிருதிகளில், காவிய அம்சங்கள் இருப்பது உண்மையென்றாலும், காவியமே இயற்ற வேண்டும் என்னும் நோக்கத்தினை அவர்கள் கொண்டிருக்கவில்லை.

தாஸ ஸாகித்யத்தின் மேரு கிருதியான ஸ்ரீஹரிகதாம்ருதஸாரம் கூட, பக்தியை அடக்கிய சாஸ்திர கிருதியே தவிர, மஹாகாவியம் என்ற இலக்கணத்தில் அதனை சேர்க்க முடிவதில்லை. ஆனால், ஸ்ரீகனகதாஸர் முதலில் சிறந்த கவிகளாகவே இருந்தார். அவருடைய மோஹன தரங்கிணியே அவருடைய காவிய திறனுக்கு தக்க கண்ணாடியாக இருக்கிறது. அதனை ஒப்பிடும்படியாக வேறொரு காவிய கிருதி, ஹரிதாஸ ஸாகித்யத்திலேயே வேறொன்று இல்லை.

ஸ்ரீவாதிராஜரின், ஸ்வப்னபத, குண்டக்ரியெ, வைகுண்ட வர்ணனெ, லட்சுமி ஷோபானெ, ஆகியவற்றில் காவிய அம்சங்கள் கண்டு வந்தாலும், அவையும் சாஸ்திர கிருதிகளே ஆகின்றன. காவிய கிருதிகள் என்று சொல்ல முடிவதில்லை.

ஸ்ரீகனகதாஸர், ஸ்ரீபுரந்தர தாஸரைப் போல, வாக்யேய காரர் என்று பெயர் பெற்றவரல்ல. அவருடைய கிருதிகளை, சங்கீதகாரர்கள், ராக தாளங்களுடன் பாடுவதற்கு சாத்தியம் இருக்கிறது என்றாலும், ஸ்ரீகனகதாஸர், அவற்றை சங்கீதத்திற்காக இயற்றினார் என்று சொல்வதற்கில்லை. ஸ்ரீபுரந்தரதாஸரைப் போல, மாயாமாயவகௌள முதலான ராகங்களின்படி ஸ்ரீகனகதாஸர் கிருதிகளை இயற்றவில்லை. மற்ற ஹரிதாஸர்களின் கிருதிகள் எப்படி நேரடி காவ்ய கிருதிகள் இல்லையோ, அப்படியே ஸ்ரீகனகதாஸரின் கிருதிகள், நேரடி சங்கீத கிருதிகள் இல்லை. ஆனால், ஹரிதாஸ ஸாகித்யத்திற்கு ஸ்ரீகனகதாஸர் அளித்த பரிசுகளான கிருதிகள், அவற்றின் கருத்துக்களில் ஸ்ரீபுரந்தரதாஸரின் கிருதிகளுக்கு சரிசமானமாகவே இருக்கின்றன.

## ஸ்ரீகனகதாஸரின் காலம்

ஸ்ரீகனகதாஸரின் காலத்தைப் பற்றி 1508–1606 (ஸ்ரீசேஷாசார்யரின் புத்தகத்தில்); 1485–1565 (பெடகேரி கிருஷ்ண ஷர்மா); 1480–1570 (டாக்டர். பி.பி. தேஸாய்) என்னும் மூன்று வித தகவல்கள் நமக்குக் கிடைக்கின்றன.

இவற்றில் 1508-1606 என்னும் தகவலையே அதிகம் பேர் சரியாக இருக்கிறது என்று கருதுகின்றனர். ‘கர்னாடக விஷ்வகோஷ’ த்தில் சொல்லியபடியும், அரசு ஆவணங்களிலும் இந்த ஆண்டுகளே பதிவாகி இருக்கின்றன. ஆனால், இது சரி என்று தோன்றுவதில்லை. ஸ்ரீவ்யாஸராஜர் ஸ்ரீவ்யாஸ ஸமுத்திரத்தை நிர்மாணம் செய்யும் காலத்திலேயே, ஸ்ரீகனகதாஸர் அவரிடம் வந்து கோண மந்திரத்தை உபதேசம் பெற்றார் என்பது அனைவரும் ஒப்புக் கொள்ளும் விஷயம். அந்த வ்யாஸ ஸமுத்திரத்தின் நிர்மாண காலம் 1526 என்றால், 1508ல் பிறந்த ஸ்ரீகனகதாஸருக்கு அப்போது வரும் 18 வயதே ஆகியிருக்கும். இன்னொரு விஷயம், ஸ்ரீகனகதாஸர், ஸ்ரீவ்யாஸராஜரை சந்தித்த போது, அவருக்கு திருமணம் ஆகியிருந்து, ஒரு குழந்தை இருந்து, அவர்கள் இருவரும் இறந்தும் போயிருந்தனர். மோகன தரங்கிணி போன்ற கிருதிகளை ஸ்ரீகனகதாஸர் ஏற்கனவே இயற்றியிருந்தார். எதிரிகளுடன் அவர் சில போர்களில் போர் புரிந்திருந்தார். ஆக, 18 வயதிற்குள் இவ்வளவும் நடந்திருக்க சாத்தியம் இல்லை என்பதால், இந்த 1508-1606 ஆண்டுகளை நாம் ஒப்புக் கொள்வது சரியாக இருக்காது.

ஆகவே, மேலே சொல்லப்பட்ட வ்யாஸ ஸமுத்திரத்தின் நிர்மாண காலத்தில், ஸ்ரீகனகதாஸருக்கு குறைந்த பட்சம் 35 வயது ஆகியிருக்கலாம் என்று எண்ணினால், அவர் பிறந்த ஆண்டு 1490க்கு சமீபத்தில் என்று சொல்ல வேண்டியிருக்கும். ஸ்ரீபுரந்தரதாஸரின் ஜனன காலம்கூட சுமார் 1484 என்று வித்வாம்ஸர்கள் நிர்ணயம் செய்திருக்கின்றனர். ஸ்ரீவாதிராஜ ஸ்வாமிகளின் ஜனன காலம் 1481 என்பது நிச்சயம். இந்த பின்னணியில் ஸ்ரீகனகதாஸரின் காலத்தை இவ்வாறு நிர்ணயம் செய்தால், மற்ற மூவரின் காலத்திலிருந்து அதிக வித்தியாசம் இல்லை என்று ஆகிறது.

ஸ்ரீகனகதாஸரின் காலத்தைப் பற்றி சரியான ஆதாரம் எங்கும் கிடைக்கவில்லை. ஸ்ரீவ்யாஸராஜரின் சிஷ்யரான அவர், ஸ்ரீவாதிராஜர், ஸ்ரீபுரந்தரதாஸர் ஆகிய மஹனீயர்களின் சமகாலத்தவர் என்னும் பின்னணியில் அவருடைய காலம் 16ம் நூற்றாண்டு என்பது நிச்சயம். தம் மோஹன தரங்கிணி கிருதியில் குமாரவ்யாஸ, குமார வால்மிகி ஆகியோரின் குறிப்பு இருப்பதால் அவர், அவர்களின் பிந்தைய காலத்தவர் என்பதும் நிச்சயம் ஆகிறது. மோஹன தரங்கியில் இருப்பதான, த்வாரகையின் வர்ணனை முதலான வர்ணனைகள், விஜய நகரத்தின்

வைபவத்தின் குறிப்புகளை கொண்டிருப்பதால், அவர் கிருஷ்ண தேவராயரின் காலத்தவர் என்று சொல்ல வேண்டும்.

ஸ்ரீகனகதாஸரின் சரித்திரம் - என்னும் புத்தகத்தில் ஸ்ரீகனகதாஸரின் ஜனன காலத்தின் நிர்ணயம் இவ்வாறு வந்திருக்கிறது. "இவ்விதமாக சரியான ஷாலிவாஹன சக 1235 ஆனந்த நாம சம்வத்ஸர கார்த்திக பகுள ததிகெ குருவாஸர இந்த ஷுப முஹூர்த்த ஷுப யோக ஷுப கரண ஷுப தாரெயில், நற்பெண்மணியின் கர்ப்பத்தில் திவாகரனந்தப்பா ஒரு சுபுத்திரனை பெற்றான்" .. (தொடரும்)

***

## இந்த மாத ஆராதனைகள்

**ஸ்ரீவிஜயீந்திர தீர்த்தர் (1505-1595)**

பக்தானாம் மானஸாம்போஜ பானவே காமதேனவே |
நமதாம் கல்பதரவே ஜயீந்திர குரவே நம: ||

கும்பகோணதி நெலெஸிஹரம்ம விஜயீந்திர தீர்த்தரு
ஷம்புபிதன பெத்தவன இம்பு தோருவரம்ம
சந்திரிகார்யர சிஷ்யரு எனிஸி
ஸுரேந்திரரிம் பீட படெதரம்ம
பந்தவரொந்திகெ வாதிஸி ஸ்பர்திஸி
அஜேய விஜயீந்த்ரரெனிஸிஹரம்ம
ஸ்ரேஷ்ட மங்களாங்க ஹரிவிட்டலன
நிஷ்டெலி பஹுகால பூஜிஸிதரம்ம
ஜ்யேஷ்ட கிருஷ்ண த்ரயோதஷி ஷுபதின
இஷ்டு தெய்வராமன ஸேரிதரம்ம ||

**ஸ்ரீவரதேந்த்ர தீர்த்தர் (1761-1785)**

வாதே[3] விஜயஷீலாய வரதா[3]ய வரார்தி[4]னாம்
வதா[3]ன்ய ஜனஸிம்ஹாய வரதே[3]ந்த்ராய தே[1] நம: ||

**தொடர்**

## ஹரிதாஸர்களின் சிந்தனைத் துளிகள்

### அற்புத சக்தி

ஸ்ரீஹரியின் எண்ணிப்பார்க்க முடியாத அற்புத சக்தியினை தாசர் தமது எளிமையான சொற்களினால் புகழ்கிறார். ஸ்வகதபேத விவர்ஜிதனான ஸ்ரீஹரியின் மகிமைகளை பிரம்ம ருத்ராதிகளும் முழுமையாக அறியமுடியாது.

அணுவாகபல்ல ப்ருஹத்தாகபல்ல
அணு மஹத்தெரடொந்தாக பல்ல
ரூபவாகபல்ல அரூபவாக பல்ல
ரூப அரூப எரடொந்தாக பல்ல
வியக்தனாக பல்ல அவ்யக்தனாக பல்ல
வியக்த அவ்யக்த எரடொந்தாக பல்ல
அகடனகடனசக்த அசிந்த்யாத்புத மஹிமெ
ஸ்வகதபேதவிவர்ஜித புரந்தரவிட்டலா || --ஸ்ரீபுரந்தரதாசர்

இதே சுளாதியில் மேலும் தாசர் சொல்வது:
மோத தக்ஷிண பக்ஷ ப்ரமோத உத்தர பக்ஷ
ஆனந்த அதும ஆ நக ஆ பாத
அப்ராக்ருத விக்ரஹ நம்ம புரந்தரவிட்டலா ஆனந்த ஆதும ||

க்ரீடகோசுக அவரவர கதி நீடலோசுக தேஹகள
கொட்டாடுவனு ஸ்வெச்செயலி || --ஸ்ரீஜகன்னாததாசர்

ஸ்ரீஹரியின் மகிமைகள் எண்ணிப் பார்க்கமுடியாதது. ஸ்ரீஹரி 'கர்த்தும் அகர்த்தும் அன்யதாகர்த்துமபி சமர்த்த:' என்று தனித்திருப்பவன். ஆகமங்களிலிருந்து உண்மையான ஞானத்தைப் பெற்று மேம்படுவது, அவனின் அருளைப் பெறுவது மட்டுமே நம் கடமையாகும்.

## இந்த மாத ஆராதனைகள்

**ஸ்ரீஸ்ரீபாதராஜர் (1404-1502)**
காலே பலதி ஸுரத்ரும: சிந்தாமணி ரபியாசனே தாதாம் |
வர்ஷந்தி ஸகலமபீஷ்டம் தர்ஷன மாத்ராத் ஸ்ரீபாதராட்முனி: ||

ஸிரிகிருஷ்ண திவ்யபாதாப்ஜ சிந்தாலோல
வரஹேமவர்ண முனிபதிய ஸுகுமார |
குருதிலக ஸ்ரீபாதராய அமிதோத்தார
ஷரணஜன ஸுரதேனு பக்தமந்தார ||
பௌகாகெத்து ஸ்மரிஸிரோ ஸ்ரீபாதராஜர
களவள களெவரு ஒள்ளே கவள நீடுவரு |
பளி பந்து ப்ருந்தாவனகெ பளஸி மாடெ நமஸ்கார
முளபாகிலராஜரு மனஷுத்திகொளிஸுவரு |
ஹரிதாஸ ஸாஹித்யத வரபிதமஹரெனிஸி
ஹரி அரிவு ஸாமான்ய ஜனரலி மூடிஸி
பர மங்களாங்க ஹரிவிட்டலன த்யானிஸி
பரதத்வ திளிஸிதரு ஹரிதாஸெரெந்தெனிஸி ||

**ஸ்ரீ ஸ்ரீதவிட்டல தாசர் (1740-1820)**
பலஸ்துதி ப்ரவக்தாரம் ஜகன்னாதார்ய ஸேவகம் |
ஸ்ரீகிருஷ்ண ஸத்பக்தம் வந்தே ஸ்ரீ ஸ்ரீதவிட்டலம் ||

அங்கனெய ஸங்கதலி ரங்கனனு மரெது
ரங்க ஒலித தாஸர அனுக்ரஹதி எச்செத்து
துங்க ஹரிகதாம்ருதஸாரகெ பரெது பலஸ்துதி
மங்களாங்க ஹரிவிட்டலன மெரெஸிதரு ஹொத்து

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 4 : இதழ் 8

**நிர்வாக ஆசிரியர்**
'ஜகன்னாத கேசவ'
சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ
பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross, JP Nagar
4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276.
haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**
' தாச சாகித்ய சேவா ரத்ன'
திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**
திரு. முரளிதர தாசரு,
திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா,
திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

## ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்

## ஜூலை 1 முதல் 31 வரை, 2023

ஜூலை 3 : ஆஷாட பௌர்ணமி - ஸ்ரீப்ரஸன்ன ஸ்ரீனிவாஸ தாஸர், கோவை

ஜூலை 10: ஆஷாட பகுள அஷ்டமி - ஸ்ரீதந்தெ வெங்கடேஷ விட்டல தாஸர், சித்ரதுர்கா

ஜூலை 15: ஆஷாட பகுள த்ரயோதசி - ஸ்ரீகர்பர நரஹரி தாஸர்

(அதிக சிராவண மாதம் வருவதால், ஆராதனைகள் அடுத்த நிஜ சிராவண மாதத்தில் வரும்).

# ஆசிரியர் பக்கம்

ஜூலை மாதத்தின் பிற்பகுதியில், 'அதிக சிராவண' மாதம் வருவதால், சிராவண மாதத்தில் வருவதான ஹரிதாஸர்களின் ஆராதனைகள், அடுத்த 'நிஜ சிராவண' மாதத்தில் வருகின்றன.

இந்த மாதத்தில் வரும் இன்னொரு முக்கியமான நாள் - ஜூலை 7ம் தேதி - ஸ்ரீடீகாராயர் எனப்படுபவரான ஸ்ரீஜயதீர்த்தரின் ஆராதனை. ஸ்ரீவ்யாஸராஜர், ஸ்ரீவாதிராஜர், ஸ்ரீரகூத்தம தீர்த்தர், ஸ்ரீவிஜயீந்த்ர தீர்த்தர், ஸ்ரீராகவேந்த்ர ஸ்வாமிகளே முதலான பல யதிவரேண்யர் களால் ஸ்தோத்திரம் செய்யப்பட்டவர். ஸ்ரீவ்யாஸராஜரே முதலான பற்பல ஹரிதாஸர்களால் போற்றிப் பாடப்பட்டவர். அத்தகைய மஹனீயரின் ஆராதனை நாளில், அவரைப் போற்றி பாடப்பட்ட ஹரிதாஸர்களின் கிருதிகளை படித்து / பாடி / கேட்டு, ஸ்ரீடீகாராயரின் ஆளுமையை அறிந்து, அவரை வணங்குவோம்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

***

**ஜயராய ஜயராய - ஸ்ரீ வாதி$^{3}$ராஜர்**

**ஜயராய ஜயராய ||ப||**

**ஜயராய நின்ன த$^{3}$யவுள்ள ஜனரிகெ$^{3}$**
**ஜயவித்து ஜக$^{3}$தொ$^{3}$ளு ப$^{4}$யபரிஹரிஸுவ ||அ.ப||**

**கு$^{2}$ல்லராத$^{3}$ மாய்க$^{3}$ள ஹல்லு முரிது$^{3}$**
**வல்லப$^{4}$ ஜக$^{3}$கெ ஸ்ரீநல்லனெந்த$^{3}$ருஹிதி$^{3}$ ||1||**

**மத்$^{4}$வராயர மத ஶுத்$^{3}$த$^{4}$ஶரதி$^{4}$யொளு**
**உத்$^{3}$ப$^{4}$விஸித$^{3}$ கு$^{3}$ரு ஸித்$^{3}$தா$^{4}$ந்தஸ்தாபக ||2||**

**ஸிரிஹயவத$^{3}$னன சரணகமலவனு**
**ப$^{4}$ரதி$^{3}$ ப$^{4}$ஜிஸுவர து$^{3}$ரிதக$^{4}$ள ஹரிஸுவ ||3||**

தொடர்

**ஸ்ரீராகவேந்திர விஜயம்**

**ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர் இயற்றியது**

**ப்ராணனிஹ பிரஹ்லாத³னொளகெ³ அ**
**பான நிஹ ஸஹ்லாத³னொளு தா**
**வ்யானனிஹ கல்ஹாத³னொளுதான நிந்திஹனு**
**தா³னவாக்³ரணி ஹ்லாத³னொளு ஸ**
**மான தானனுஹ்லாத³னொளகீ³**
**ஸ்ரீனிவாஸன ப்ராண ப⁴ஜிஸுவ பஞ்சரூபத³லி ||19**

ப்ராணனிஹ பிரஹ்லாதனொளகெ - பிரகலாதனில் பிராணன் இருக்கிறார்; அபான நிஹ ஸஹ்லாதனொளு - ஸஹ்லாதனுக்குள் அபான இருக்கிறார்; தா வ்யானனிஹ கல்ஹாதனொளு - கல்ஹாதனுக்குள் வ்யானன் இருக்கிறார்; உதான நிந்திஹனு தானவாக்ரணி ஹ்லாதனொளு - தானவர்களில் சிறந்தவனான ஹ்லாதனில் உதானன் இருக்கிறார்; ஸமான தானு அனுஹ்லாதனொளகு - அனுஹ்லாதனில் ஸமானன் இருக்கிறார்; ப்ராண - இந்த அனைத்து பிராணர்களும்; ஸ்ரீனிவாஸன - ஸ்ரீஹரியை; பஞ்சரூபதலி - ஐந்து ரூபங்களில்; பஜிஸுவ - பஜிக்கிறார்கள்.

பிரகலாதன் உடன் பிறந்தவர்களில் வாயுதேவரின் ஆவேசம் இருக்கும் விஷயத்தினை இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

பிரகலாதனில் பிராணன் இருக்கிறார்;
ஸஹ்லாதனில் அபானன் இருக்கிறார்;
கல்ஹாதனில் வ்யானன் இருக்கிறார்;
அஹ்லாதனில் உதானன் இருக்கிறார்;
அனுஹ்லாதனில் ஸமானன் இருக்கிறார்.
இந்த ஐந்து பிராணர்களும், ஸ்ரீஹரியை, அனிருத்தாதி ஐந்து ரூபங்களில் வணங்குகிறார்கள்.

**ஐவரொளு ஹரி வாயு கருணவு**
**ஈ விதா⁴னதி³ பேர்ச்சி இருவுது³**
**ஆவ ஜன்மத³ புண்யப²லவோ ஆரிக³ளவல்ல**
**தே³வ தே³வனு நின்னதீ⁴னனு**

**ஆவ காலகு தொலக$^{3}$னாதனு**
**ஸேவகாக்$^{3}$ரணி தெரதி$^{3}$ நிம்மனு காது$^{3}$கொண்டி$^{3}$ஹனு ||20**

ஐவரொளு - இந்த பிரகலாதன் முதலான ஐந்து சகோதரர்களில், ஹரி வாயு கருணவு - ஹரி வாயுகளின் கருணையானது; ஈ விதானதி பேர்ச்சி இருவுது - இப்படியாக நிலைத்திருக்கிறது; ஆவ ஜன்மத புண்யபலவோ - இந்த கருணையானது எந்த பிறவியின் புண்ணிய பலனோ; ஆரிகளவல்ல - யாருக்கும் தெரியவில்லை; தேவ தேவனு நின்னதீனனு - ஸ்ரீஹரியானவன் உன் அதீனனாகவே இருக்கிறான்; ஆவ காலகு தொலகனு - எந்த காலத்திலும் உன்னை விடமாட்டான்; ஆதனு ஸேவகாக்ரணி தெரதி - சேவகர்களில் முதன்மையானவனைப் போல, அவன்; நிம்மனு - உன்னை; காதுகொண்டிஹனு - காக்கிறான்.

இந்த பிரகலாதராஜரின் சகோதர்களில் ஸ்ரீஹரியின் கருணை எப்படி இருக்கிறது என்பதை இங்கு விளக்குகிறார் ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர்.

இந்த பிரகலாதன் முதலான ஐந்து சகோதரர்களில் ஹரி வாயுகளின் கருணையானது இப்படியாக நிலைத்திருக்கிறது. இந்த கருணையானது, எந்த பிறவியின் புண்ய பலனோ யாருக்கும் தெரியாது. ஹே பிரகலாதராஜரே. ஸ்ரீஹரியானவன், உன் அதீனனாகவே இருக்கிறான். எந்த காலத்திலும் உன்னை விடமாட்டான். தலைமைச் சேவகன் போல அவன் உன்னை காக்கிறான்.

ஸ்ரீஹரியானவர் தன் பக்தர்களை எப்படி காக்கிறார் என்பதை ஸ்ரீஜகன்னாததாஸர், ஹரிகதாம்ருதஸாரத்தில் இவ்வாறு கூறியிருக்கிறார்.

ஹிந்தெமுந்தெடபலதி ஔஹொர
கிந்திரேஷனு தன்னவர னெ
ந்தெந்து சலஹுவனாகசத வோலெத்த நோடிதரு ||24

**லகுமி நின்னனு எத்திதோரலு**
**ஸகல ஸுரவரரெல்ல நோட$^{3}$லு**
**ப$^{4}$க்தவத்ஸலனாத$^{3}$ நரஹரி நினகெ$^{3}$ வஶனாகெ$^{3}$**
**வ்யகுதவாயிது நின்ன மஹிமெயு**
**நிகி$^{2}$ள ஸுரவரரெல்ல பொக$^{3}$ளலு**
**ப$^{4}$குதி பூர்வக கரெத$^{3}$ராக$^{3}$லெ குஸுமவ்ருஷ்டியனு ||21**

லகுமி நின்னனு எத்திதோரலு - (ஸ்ரீ நரசிம்மன் யாருக்கும் சமாதானம் / சாந்தம் ஆகாதபோது), லட்சுமிதேவி உன்னை முன்னே சென்று ஸ்ரீ நரசிம்மனை சாந்தப்படுத்துமாறு கேட்டுக் கொண்டபோது, ஸகல ஸுரவரரெல்ல நோடலு - அனைத்து தேவதைகளும் பார்க்கையில்; பக்தவத்ஸலனாத நரஹரி - பக்தவத்ஸலனான ஸ்ரீ நரசிம்மன், நினகெ வஶனாகெ - உனக்கு வசம் ஆனான்; வ்யகுதவாயிது நின்ன மஹிமெயு - அப்போது அனைவருக்கும் உன் மகிமை தெரிந்தது; நிகிள ஸுரவரரெல்ல பொகளலு - அங்கிருந்த அனைத்து தேவதைகளும் உன்னைப் புகழ்ந்தனர்; பகுதி பூர்வக - பக்தியுடன்; குஸும வ்ருஷ்டியனு - புஷ்ப வ்ருஷ்டியை; ஆகலெ - அப்போதே; கரெதரு - பொழிந்தனர்.

ஸ்ரீபிரகலாதராஜரை, தேவதைகள் அனைவரும் புகழ்ந்த விதத்தினை இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

ஸ்ரீநரசிம்மன் யாருக்கும் சமாதானம் / சாந்தம் ஆகாதபோது, லட்சுமிதேவியானவர் உன்னை முன்னே சென்று, அவரை சாந்தப்படுத்துமாறு கேட்டுக்கொண்டார். அனைத்து தேவதைகளும் பார்க்கையில், பக்தவத்ஸலனான ஸ்ரீஹரி, உன் வசம் ஆனான். அப்போதே உன் மகிமை அனைவருக்கும் புரிந்தது. அங்கிருந்த தேவதைகள் அனைவரும் உன்னைப் புகழ்ந்தனர். பக்தியுடன் உன் மேல் புஷ்ப வ்ருஷ்டியினை பொழிந்தனர்.

* இதனால் லட்சுமிதேவியைவிட / தேவதைகளைவிட, பிரகலாதன் சிறந்தவர் என்று அர்த்தம் அல்ல. இது அவர்கள் செய்த நாடகமே என்பதை அறிய வேண்டும்.
* பிரகலாதராஜரை தேவதைகள் புகழ்ந்தனர் என்பதை, அவரது அவதாரங்களான ஸ்ரீவ்யாஸராஜர், ஸ்ரீராயர் ஆகியோருக்கும் பொருத்திப் பார்த்து, அவர்களின் மகிமைகளை புரிந்து கொள்ள வேண்டும்.

**தே3வ து3ந்து3பி3 வாத்4ய நப4தலி**
**தீவிதாக3லெ தி3விஜரெல்லரு**
**பா4விஸீ பரி ஜயது ஜயஜயவெனுத நிந்திஹரு**
**ஈ வஸுமதி தளகெ நரவர**
**தே3வ பட்யவக3ட்டி ராஜ்யவ**
**ஓவிஸுவதுயெந்து3 ஸுரகு3ரு பொ3ம்ம பேளித3னு ||22**

நபதலி - ஆகாயத்தில்; தேவ துந்துபி வாத்ய- தேவ துந்துபி வாத்தியங்கள்: தீவிது - ஒலித்தன / கேட்டன; ஆகலெ - அப்போதே; திவிஜரெல்லரு - தேவதைகள் அனைவரும்; ஈ பரி பாவிஸி - (உன்னை புகழ்ந்தவாறு) அந்த சிந்தனையை செய்தவாறு; ஜயது ஜயஜயவெனுத - ஜய ஜய என்றவாறு; நிந்திஹரு - நின்றனர்; ஈ வஸுமதி தளகெ - இந்த பூமண்டலத்தில்; நரவர தேவ - சக்ரவர்த்தியாக; பட்யவகட்டி - பட்டாபிஷேகம் செய்து; ராஜ்யவ ஓவிஸுவதுயெந்து - அரசாட்சி செய்ய வேண்டும் என்று; ஸுரகுரு பொம்ம - தேவதைகளின் தலைவரான பிரம்மதேவர்; பேளிதனு - கூறினார்.

தேவதைகள் பிரகலாதராஜரை போற்றிய விதம் மேலும் இந்த பத்யத்தில் தொடர்கிறது.

ஆகாயத்தில் தேவ துந்துபி வாத்தியங்கள் ஒலித்தன. அப்போதே தேவதைகள் அனைவரும் உன்னைப் புகழ்ந்தவாறு, ஜய ஜய என்றவாறு நின்றனர். இந்த பூமண்டலத்தில் சக்ரவர்த்தியாக உனக்கு பட்டாபிஷேகம் செய்து நீயே அரசாட்சி செய்ய வேண்டும் என்று தேவதைகளின் தலைவரான பிரம்மதேவர் கூறினார்.

இதே காட்சியை ஸ்ரீபுரந்தரதாஸர் - நாரஸிம்ஹனெம்போ தேவனு என்னும் கீர்த்தனையில் இவ்வாறு கூறியுள்ளார்.

அந்தரிக்ஷதல்லி அமரரு நோடி ஆக புஷ்பவ்ருஷ்யன்னெ கரெதரு
அஜன படெத தேவி பந்து தொடெய மேலெ குளிதிரலு
அமரபதியரெல்லர நோடி அஞ்சபேடெந்த அபயவித்த ||
நாரஸிம்ஹனெம்போ தேவனு
நம்பிதந்த ஜனரிகெல்ல வரவ கொடுவனு

**ராய ராஜ்யவ மாடு$^3$திரல**
**ந்யாயவில்லதெ$^3$ ஸர்வஜனரு**
**ந்யாய மார்க்க$^3$தி$^3$ நடெ$^3$த$^3$ராக$^3$லெ ராஜனாக்$^3$யத$^3$லி**
**மாய ட$^2$க்கு ட$^2$வளி மஸிக$^3$ள**
**பாய மொத$^3$லாகி$^3$ப்ப தோ$^3$ஷவு**
**தோய ஜாதன உருபு ஜனரலி ஜனிஸதா$^3$புரதி$^3$ ||23**

ராய ராஜ்யவ மாடுதிரலு - ஸ்ரீபிரகலாதராஜர் அரசாட்சி செய்யும்போது; ஸர்வஜனரு - அனைத்து மக்களும்; ராஜனாக்யதலி - அரசனின் ஆணைப்படி; அநியாயவில்லதெ - அநியாய மார்க்கத்தில் செல்லாமல்;

ந்யாய மார்க்கதி - நியாயமான வழியில்; நடெதராகலெ - நடந்தனர்; மாய - மாய மந்திரக்காரர்களின்; டக்கு டவளி மஸிகள - பயன்படுத்தும் மை ஆகியவற்றின்; அபாய - அபாயம்; மொதலாகிப்ப தோஷவு - ஆகிய தோஷங்கள் அனைத்தும்; தோய ஜாதன - பிரம்மதேவனின்; உருபு ஜனரலி - செலுத்தப்படும் மக்களில் (அவரின் அருள் பெற்ற மக்களுக்கு); ஜனிஸது - வராது; ஆ புரதி - அந்த நகரத்து மக்களில் இவை எவ்வித பாதிப்பினையும் ஏற்படுத்தாது.

ஸ்ரீபிரகலாதராஜரின் அரசாட்சியின் சிறப்பினை இங்கு விளக்குகிறார் ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர்.

ஸ்ரீபிரகலாதராஜர் அரசாட்சி செய்யும்போது, அனைத்து மக்களும் அநியாய மார்க்கத்தில் செல்லாமல், அரசனின் ஆணைப்படி, நியாய வழியிலேயே நடந்தனர். மாய மந்திரக்காரர்கள் பயன்படுத்தும் மை ஆகியவற்றின் அபாயம் ஆகிய தோஷங்கள் எவையும், பிரம்மதேவனின் அருள் பெற்ற மக்களுக்கு வராது. அந்த நகர மக்களுக்கு இவை எவ்வித பாதிப்பினையும் ஏற்படுத்தாது.

இந்த பத்யத்தில் வரும் ‘டக்கு டவளி’ என்பதான பதத்தினை ஸ்ரீகுருகோவிந்த விட்டலதாஸர் தனது கோவிந்தாஷ்டகம் என்னும் கிருதியில் இவ்வாறு பாடியிருக்கிறார்.

ஹ்ருத்க$^{3}$த தமனாஷ கோவிந்த | என்ன
ஹ்ருத்கு$^{3}$ஹதொ$^{3}$ளு தோரோ கோவிந்த ||ப
ட$^{2}$க்கு ட$^{2}$வளிகார கோவிந்த | நம்ம
ட$^{2}$க்கிஸி ஹாகதி$^{3}$ரோ கோவிந்த ||

நீ மோசக்காரர்களைவிட பெரிய மோசக்காரன். (நிந்தா ஸ்துதி). எங்கள் பிரார்த்தனைகளை ஏற்றுக் கொள்வாயாக., எங்களை தவறான பாதையில் செலுத்திவிடாதே / அனுப்பிவிடாதே கோவிந்தனே.

(தொடரும்)...

ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப் அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்துச் சொல்லலாம்.

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

**நாட்டுப்புற பண்களின் அம்சங்கள்**

**திருமதி. சி.எஸ். அருணா காந்தனவர**

குடிசைகள் மற்றும் பசுக்கள் மேயும் விளைநிலங்களே அதிகமாக இருக்கும் கிராமங்களில் அடிக்கடி வயல்களில், புற்கட்டுகள் தீக்கிரையாகும் காட்சிகள் காணக்கிடைக்கலாம். இதையே தாசர் 'தூல ராஷியொளனல பொக்கந்தெ' என்கிறார். அதாவது, புற்கட்டுகள் தீக்கிரையாவது போல என்று உதாரணத்தைக் கொடுக்கிறார்.

ஹரிதாச சாகித்யத்தில் சரணாகத தத்துவம், ஆத்ம நிவேதனம் போன்றவற்றை பல்வேறு இடங்களில் பார்க்கலாம். பகவந்தனை ஒரு நொடி மறப்பதுகூட பல்வேறு பாவங்களுக்கு சமம் அல்லது ஏற்கனவே செய்திருக்கும் புண்ணியத்தை அழிக்கும் செயலாகும் என்று நம்புபவர்கள் ஹரிதாசர்கள். இப்படி மறத்தலுக்கு பிராயச்சித்தம் என்றால், ஆத்ம நிவேதனம் அல்லது மன்னிப்பு கேட்டல். இந்த மறத்தல் எந்தெந்த பாவங்களுக்கு வழிவகுக்கிறது என்பதை சொல்லும் பாடல் 'சிரி ரமண தவ சரண தொரகுவது ஹ்யாங்கின்னு பரம பாபிஷ்ட நானு' என்னும் பாடல்.

இந்தப் பாடலில், கிராமத்தினரின் நடவடிக்கைகள் பலவற்றை இந்த கீழ்க்கண்ட பத்திகளில் காணலாம்.

காகு புத்திகளிந்த குடுகுடி நசிபுடி
ஹாகி பங்கிய சேதிதெ |
லோக நிந்திதனாகி பாபக்கெ கைஹச்சி அ
நேக ஜோஜுகளாடிதே பிடதெ ||

வித்தவித்தவர பென்ஹத்தி தூதர களுஹி
குத்திகெய நா கொய்சிதெ |
ஹத்து ஜனரென்ஹணக்கெ நித்ய கல்ஹொடெயுதிரெ
ம்ருத்யு தேவதெயெனெஸிதெ பிடதெ ||

எந்நேரமும் சீட்டாட்டத்தில் ஈடுபட்டிருப்போரை கிராமத்தில் இன்றும் பார்க்கலாம். கிராமங்களின் தேசம் எனப்படும் பாரதத்தில், கிராமங்களே அரசாங்க முடிவுகளில் முக்கிய இடங்களை வகிக்கின்றன. கிராமங்களில் நாம் இன்று காணும் பல பிரச்னைகளை சுமார் 250 ஆண்டுகளுக்கு முன்னரே ஸ்ரீஜகன்னாததாசர் தம் பல

பாடல்களில் சொல்லியிருப்பதைப் பார்த்தால், கிராமங்களின் நிலை அன்றும் இதே போலவே இருந்தது என்று தெரிய வருகிறது. இத்தகைய பிரச்னைகளை களைவது தம் கடமை என்று அறிந்து, பல ஹரிதாசர்கள், தங்கள் காவிய, கிரந்தங்களின் மூலமாக அவற்றை பாடியிருக்கிறார்கள் என்றும் அறிகிறோம்.

'சேஷபர்யங்கஷயன விஷயதபிலாஷெ பரிஹரிஸி காயோ' என்னு பாடலில் தாசர், சஞ்சலப்படும் மனதினை மன்னிக்குமாறு பகவந்தனிடம் முறையிடுகிறார்.

பகவந்த நின்ன குணவ வர்ணிசதெ
பகவதியரவயவகளா
சொகஸினிந்தலி வர்ணிஸி என்ன நா
லகெ எரடு மாடிகொண்டே ||

இதில் 'நாலிகெ எரடு மாடிகொண்டு' என்று சொல்லியிருப்பதை கவனிக்கவேண்டும். ஓரிடத்தில் ஆன்மிக விஷயங்கள் இன்னொரு இடத்தில் தினப்படி லௌகிக விஷயங்கள் என இரு வகையான நடைகளின் நிலைமைகளையும் கவனித்து என்னைக் காப்பாற்று என்பதே ஜகன்னாததாசரின் கோரிக்கை.

கோள் மூட்டுபவர்கள் / வீண் அரட்டை அடிப்பவர்களை இரு நாக்குகளினால் பேசுபவர்கள் என்கிறார் தாசர். இன்று ஒரு பேச்சு நாளை ஓர் பேச்சு என்று இருப்பவர்களிடம் நம்பிக்கை வைக்கக்கூடாது. மகாகவி குமாரவியாச தனது விதுரநீதி நூலில் சஜ்ஜனர்களைக் குறித்து – 'சஜ்ஜனர்கள் இரு விதமாக பேசமாட்டார்கள்' என்று சொல்லியிருப்பதை இங்கு கவனிக்கலாம்.

அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கும் ஸ்ரீஹரியின் சன்னிதானம் கிராமங்களில் மிகவும் விசேஷமாக இருக்கிறது என்பது ஹரிகதாம்ருதசாரத்தில் ஒரு ஸ்லோகத்தில் தாசர் விளக்குகிறார்.

கிராமபனொளக்ரணி எனிஸுவனு
க்ராமணி எனிசுவனு ஜனரொளு
க்ராமப க்ராமகளொளகெ ஸ்ரீமான்யனெனிசுவனு ||

ஸ்ரீமனோரம தானெ யோக

க்ஷேம நாமகனாகி சலஹுவ
ஈ மஹிமெ மிக்காத தேவரிகுண்டே லோகதொளு ||

தாசசாகித்யத்திற்கும் நாட்டுப்புற பாடல்களுக்கும் மிக நெருங்கிய தொடர்பு இருப்பது நிஜம். ஆனால், ஜகன்னாததாசர் சமஸ்கிருதத்தில் சிறந்த அறிஞர் என்று அறியப்படுபவர். ஆனால் இத்தகையவரின் கிருதிகளில், கிராமத்து நாட்டுப்புறப் பாடல்களை தேடி ஒரு கட்டுரை எழுதவும் என்று டாக்டர். ஷீலாதாஸ் அவர்கள் கேட்டுக்கொண்டபோது, மறுபேச்சில்லாமல் ஒப்புக்கொண்டேன். ஏனென்றால் நாட்டுப்புறத்தின் த்ரிபதி நுடியில் இயற்றப்பட்டுள்ள தத்வசுவ்வாலியிலிருந்து ஓரிரு விஷயங்களைக் கற்றுக்கொண்டு அதைப் பற்றி எழுதலாமே என்கிற காரணம்தான். ஆனால், இத்தகைய நோக்கத்துடன் படிக்கத் துவங்கியபோது, மேன்மேலும் பற்பல விஷயங்கள் கிடைத்து இந்த கட்டுரை மிகப் பெரியதாக வளர்ந்துவிட்டது.

ஸ்ரீஜகன்னாததாசரின் சாகித்யம் மற்றும் நாட்டுப்புற இலக்கியங்களை ஒப்பிட்டுப் பார்த்தால், மாமரத்திற்கும் குயிலுக்கும் எப்படி தொடர்பு ஏற்பட்டது என்னும் பழமொழியே நினைவுக்கு வருகிறது. ஆனால் நாட்டுப்புற பாடல்கள் என்னும்போது, அவர்களின் வாழ்க்கைமுறை, தொழில்கள், தினப்படி வேலைகள் என்னும் பற்பல விஷயங்கள் இருக்கின்றன என்றும் அவற்றைப் பற்றியும் சிந்தித்து ஸ்ரீஜகன்னாததாசர் அவற்றை எப்படி விளக்கியிருக்கிறார் என்பதை நான் இங்கு விளக்க முயன்றிருக்கிறேன்.

சொல்லவந்த கருத்துகளுக்கு இந்த கட்டுரை எவ்வளவு அருகில் இருக்கிறது என்று மட்டுமே இந்த கட்டுரை படித்தால் புரியுமே தவிர ஸ்ரீஜகன்னாததாசரின் சாகித்யத்தின் அழகினையோ, பக்தியின் ஆழத்தையோ, சித்தாந்தத்தின் விளக்கங்களையோ எதிர்பார்த்து வந்தவர்களுக்கு இந்தக் கட்டுரையில் பதில் இல்லை.

ஜகன்னாததாச சம்புட என்னும் ஒரு தொகுப்பிற்காக என்னிடமிருந்து ஒரு கட்டுரையை கேட்டவர்களுக்கு சரியான ஒரு கட்டுரையைக் கொடுத்திருக்கிறேன் என்னும் நம்பிக்கை எனக்கு இருக்கிறது. மேலும் இதன் மூலம், ஸ்ரீஜகன்னாததாசருக்கு சேவை செய்யும் பாக்கியம் கிட்டியதற்கு மிகுந்த மகிழ்ச்சியடைகிறேன்.

(அடுத்த இதழில், இந்தத் தொடரில் புதிய கட்டுரை துவங்கும்).

| தொடர் | ஹரிகதாம்ருதசார மஞ்சரி 360 |
|---|---|
| | By ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர் |

**145. ஹொாத்து ஹொாத்திகெ3 பாபகர்ம ப்ர**
**வர்த்தகர நிந்திஸதெ3 தனகி3**
**நு3த்தமர கு3ண கர்மக3ள கொண்டா3ட3த3லெ இப்ப |**
**மர்த்யரிகெ3 கோ3 பி3ராஹ்மண ஸ்த்ரி**
**ஹத்ய மொத3லாத3கி2ல தோ3ஷக3**
**ளித்தபனு ஸந்தே3ஹப3ட3 ஸல்லகி2ல ஷாஸ்திரமத ||(17-9)**

எந்த ஜீவன் உலகத்தில் பாப கர்மத்தை செய்து கொண்டிருக்கிறானோ, அவர்களை திட்டி, யார்யார் உத்தம ஸாத்விகரோ அவர்களை புகழாமல் இருந்தால், அவர்களுக்கு நரகாதி தோஷங்கள் கிடைக்கின்றன என்கிறார் ஸ்ரீதாஸர். இதில் சந்தேகமே இல்லை. இது சாஸ்திரத்தில் சொல்லப்பட்டுள்ள விஷயம் என்கிறார்.

அதாவது, சாஸ்திர ஞானம் இல்லாத ஜீவர்களின் (மனிதர்கள்) சங்கம் என்பது நரகத்தையே பெற்றுத் தரும் என்றும், சாஸ்திர ஞானம் உள்ள ஜீவர்கள் இருந்தால், அவர்களின் சங்கத்தைப் பெற்றுக் கொண்டு இரு. இது சாஸ்திரத்திற்கு எதிரானது அல்ல என்கிறார்.

**146. திமிர தரணிக3ளேக தே3ஷதி3**
**ஸமனிஸிப்பவெ எந்தி3கா3த3ரு**
**ப்4ரமண சளி பி3ஸிலஞ்சிகெக3 ளுண்டேனு பர்வதக்கெ |**
**அமித ஜீவரொளித்து3 லகுமி**
**ரமண வ்யாபாரக3ள மாடு3வ**
**க1மலபத்ர ஸரோவரக3ளொளகி3ப்ப தெரனந்தெ ||(17-12)**

தாமரை மலர்கள் எப்படி தண்ணீரில் பட்டும் படாமலும் இருக்கிறதோ, அதைப் போல, பகவந்தன் அனைத்து ஜீவர்களில் இருந்து, அவர்கள் அனுபவிக்கும் குளிர், வெயில், மழை, காற்று ஆகியவற்றிலிருந்து அவர்களை காப்பாற்றுகிறான். சூரியன் மற்றும் இருட்டு இந்த இரண்டும் எப்படி ஒரே இடத்தில் இருப்பதற்கு சாத்தியம் இல்லையோ, அதைப் போல தான் சேர்ந்தும் சேராமலுமாக

இருக்கிறான். இதுவே அவனின் உண்மையான செயல் என்கிறார் ஸ்ரீதாஸர்.

**147. இனிது விஷ்ணு ரஹஸ்யதொ$^{3}$ளு ப்$^{4}$ருகு$^{3}$**
**முனிப இந்த்$^{3}$ரத்$^{3}$யும்ன க$^{3}$ருபிது**
**த$^{3}$னு பு$^{3}$த$^{4}$ரு கேளுவுது$^{3}$ நித்யதி$^{3}$ மத்ஸரவபி$^{3}$ட்டு ।**
**அனுசிதோக்திக$^{3}$ளித்$^{3}$த$^{3}$ரேயு ஸரி**
**க$^{3}$ணனெ மாட$^{3}$தி$^{3}$ரெந்து$^{3}$ வித்$^{3}$வ**
**ஜ்ஜனகெ விக்ஞாபனெய மாடு$^{3}$வெ வினயபூர்வகதி$^{3}$ ||(17-14)**

ஸஜ்ஜனர்களுக்கு இதன் மூலம் என்னுடைய வேண்டுகோள் என்னவென்றால், இங்கு நான் எழுதியிருக்கும் விஷயம் விஷ்ணு ரஹஸ்யம் ஆகும். ப்ருகு ரிஷிகள் இந்த்ரத்யும்னனுக்கு உபதேசம் செய்கிறார். அதையே நான் கன்னட மொழியில் சொல்லியிருக்கிறேன். இதை பின்பற்றலாமா இல்லையா என்ற பேச்சுக்கே இடம் இல்லை. அனைத்தும் சரியாகவே இருக்கிறது என்றே அறியுங்கள் என்று அனைவரிடமும் பிரார்த்திக்கிறார் ஸ்ரீதாஸர்.

**148. வீதப$^{4}$ய விஷ்வேஷ விதி$^{4}$பித**
**மாதுலாந்தக மத்$^{4}$வவல்லப$^{4}$**
**பூ$^{4}$த பா$^{4}$வனனந்த$^{1}$ பா$^{4}$ஸ்கர தேஜ மஹராஜ ।**
**கௌ$^{3}$தமர மட$^{3}$தி$^{3}$யனு காய்த$^{3}$ அ**
**நாத$^{2}$ரக்ஷக கு$^{3}$ருதம ஜக$^{3}$**
**ன்னாத$^{2}$விட்டல தன்ன நம்பி$^{3}$த$^{3}$ ப$^{4}$குதரனு பொரெவ ||(17-15)**

பகவந்தனின் நற்குணங்களை சிந்தித்தால் அதுவே பூஜை. அதற்காக இந்த பத்யத்தில் பயம் இல்லாதவனான, உலகிற்கு ஈசனாக இருப்பவனான, பிரம்மனின் தந்தையான, தாய் மாமனை கொன்றவனான, மத்வரின் ஹ்ருத் கமல நிவாஸியான, சூர்ய ப்ரபை உள்ள அரசர்களுக்கெல்லாம் அரசனான, அகல்யையை காத்து (பாப பரிகாரம் செய்த) ஜகன்னாத விட்டலனே கதி என்று நம்பிதவர்களை எப்போதும் காப்பவன் ஸ்ரீஹரியே ஆகும். பகவந்தனின் குணங்களை போற்றுகிறார். நம்மை காக்கிறான் என்கிறார். இதுவே அவனுடைய நிஜமான பூஜை.

**149. காருணிக ஹரி தன்னொளிப்ப அ**
**பார ஸ்வாதந்த்ரிய கு$^{3}$ணதி$^{3}$ நா**

**நூரு தெகெ$^{3}$து$^{3}$ ஸபாத$^{3}$ ஆரொந்த$^{3}$தி$^{4}$க அரவத்து |**
**நாரிகி$^{3}$த்து த்$^{3}$வி ஷோடஷாதி$^{4}$க**
**னூரு பாத$^{3}$த்ரயவ தன்ன ஷ**
**ரீரதொ$^{3}$ளகீ$^{3}$பரி விபா$^{3}$க$^{3}$வ மாட்$^{3}$த$^{3}$ த்ரிபதா$^{3}$ஹ்வ ||(18-1)**

த்ரிபதாஹ்வ – 3 பாதங்களால் பூமியை த்ரிவிக்ரமனான ஸ்ரீஹரி தன்னில் இருக்கும் குணங்களில் 400 எடுத்து, அதில் 67 குணங்களை தன் மனைவிக்குக் கொடுத்து, 132 ரூபங்களை வைத்து தான் நடவடிக்கைகளை செய்கிறான். அதாவது, அவளுக்கும் முழுமையான ஸ்வதந்த்ரத்தை கொடுக்காமல், தானே ஜீவர்களின் சரீரத்தில் இருந்து செயல்களை செய்விக்கிறான் என்று அறிவாயாக என்கிறார் ஸ்ரீதாஸர்.

**150. அவனிப ஸ்வாமித்வ த$^{4}$ர்மவ**
**ஸ்வவஷமாத்$^{3}$யரிதித்து தா ம**
**த்தவர முக$^{2}$த$^{3}$லி ராஜகார்யவ மாடி$^{3}$ஸுவ தெரதி$^{3}$ |**
**கவிபி$^{3}$ரீடித தன்ன கலெக$^{3}$ள**
**தி$^{3}$விஜ தா$^{3}$னவ மானவரொளி**
**ட்டவிரத கு$^{3}$ணத்ரயஜக$^{3}$ர்மவ மாடி$^{3}$ மாடி$^{3}$ஸுவ ||(18-4)**

அரசன் தன் அதிகாரத்தின் கடமைகளை வேறொருவரிடம் ஒப்படைத்து, அவரவர்களுக்கு தக்க பொறுப்புகளை கொடுத்து, செயல்களை செய்வித்து தான் தலைவன் என்று சொல்லிக் கொண்டு இருப்பதைப் போல, பகவந்தன் அனைவருக்கும் ஸ்வாமியாகி, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப கடமைகளை செய்து, செய்விக்கிறான் என்று அறிவாயாக என்று உபதேசம் செய்கிறார் ஸ்ரீதாஸர். அனைத்து செயல்களையும் தத்வாபிமானி தேவதைகளின் மூலமே செய்விக்கிறான் என்று பொருள்.

**151. புண்யபாபவனீதெரதி$^{3}$ கா**
**ருண்யஸாக$^{3}$ர தே$^{3}$வ தா$^{3}$னவ**
**மானவரொளிட்டவர ப$^{2}$ல வ்யத்யாஸவனெ மாடி$^{3}$ |**
**ப$^{3}$ன்னப$^{3}$டிஸுவ ப$^{4}$க்திஹீனர**
**ஸன்னுத ஸுக$^{2}$ர்மப$^{2}$ல தெகெ$^{3}$து$^{3}$ ப்ர**
**பன்னரிகெ$^{3}$ கொட்டவர ஸுக$^{2}$படிஸுவனு ஸுபுஜாஹ்வ ||(18-5)**

பகவந்தனுக்கு ஸுபுஜாஹ்வ என்று பெயர். அதாவது, ஜீவர்கள் செய்யும் கர்மங்களுக்கேற்ப பலன்களை கொடுப்பவன் ஆகையால் அவனுக்கு இந்த பெயர். அதாவது, ஜீவ கோடிகள் செய்யும் பாவ புண்யங்களுக்கு பலன்களை பிரித்துக் கொடுத்து, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப பலன்களை அவர்களுக்குக் கொடுக்கிறான். அதனால், சுகம் வருமாறு செய்கிறான் என்று அறிவாயாக. இந்த செயலானது வேறு யாருக்கும் செய்வதற்கு சாத்தியம் இல்லை. நம் ஊகத்திற்கும் சிக்காத விஷயம் இது. அதாவது, பகவந்தனுக்கு பகவந்தன் மட்டுமே சமம். வேறு யாரும் இல்லை. இதுவே அவனுடைய ஸர்வோத்தமத்வ குணம்.

**152. ஏண லாஞ்சன நமலகிரண க்ர**
**மேண வ்ருத்தி3யனெய்தி3 லோகர**
**காணகொட3தி3ஹ கத்தலெய ப4ங்கி3ஸுவ தெரனந்தெ |**
**வைனதேயாம்ஸக2ன மூர்த்தி**
**த்3யான உள்ள மஹாத்மரிகெ3 ஸு**
**க்ஞான ப4க்த்யாதிக3ளு வர்த்தி4ஸி ஸுக2வ கொடு3திஹவு ||(18-7)**

வைனதேயாம்ஸ = வைனதேயனின் மகனான கருடன். தான் தாங்கிக் கொண்டு செல்லும் ஸ்ரீகரனை யார் தியானம் செய்கிறார்களோ, அவர்களுக்கு ஞான பக்திகள் வளர்கின்றன. அவர்கள் மஹாத்மர் எனப்படுகிறார்கள். ஏனெனில், முழு நிலவு வந்தால் இருட்டானது தானே விலகுவதைப் போல ஆகிறதே, அதைப் போல,ஸ்ரீகரனை த்யானம் செய்பவர்களுக்கு நம் அஞ்ஞானம் போகிறது என்று அறிவாயாக என்கிறார் ஸ்ரீதாஸர்.

**153. அன்னத3ன்னாத3ன்ன நாமக**
**முன்னெ பேள்த3 ப்ரகார ஜீவரொ**
**ளன்னரூப ப்ரவேஷகை3தவரவர வ்யாபார |**
**ப3ன்னப3ட3த3லெ மாடி3 மாடி3ஸி**
**த3ன்யரிவரஹுதெ3ந்தெ3னிஸி த்ரை**
**கு3ண்யவர்ஜித தத்த3தா3ஹ்வயனாகி3 கரெஸுவனு ||(18-9)**

த்ரைகுண – ஸத்வ ரஜஸ் தமஸ் குணங்கள் அற்றவன் ஸ்ரீஹரி. ஆகையால், இவனை அன்ன = ஆகாரம்; அன்னத – அன்னம் கொடுப்பவன்; அன்னாதன்ன – உண்பவன் ; என இப்படியாக ஜீவர்கள் உட்கொள்ளும் பதார்த்தங்கள் அவனே ஆகியிருந்து அவனே த்வந்த்வ செயல்களையும் தத்வாபிமானி தேவதைகள் மூலம் செய்து

செய்வித்து, புண்ய பாவங்களையும் கொடுப்பவன் ஆகிறான். அந்தந்த பெயர்களால் அழைத்துக் கொள்பவனும் அவனே ஆகிறான் என்று அறிவாயாக என்று சொல்கிறார் ஸ்ரீதாஸர்.

**154. தோடிக3னு பூ4மியொளு பீ3ஜவ**
**நாடபே3கெந்தெ3னுத ஹிதத3லி**
**மோடெயிம் நீரெத்தி ஸஸிக3ள ஸந்தயிஸுவந்தெ ।**
**பாடுப3ட3த3லெ ஜக3தி3 ஜீவர**
**கோ4டகாஸ்யனு ஸ்ருஜிஸி யோக்3யதெ**
**தா3டகொ3ட3த3லெ ஸலஹுதிப்பனு ஸர்வகாலத3லி ।।(18-12)**

விவசாயிகள், தான் உழுத பூமியில், பிறகு அதிலிருந்து வரும் பலன்களை உண்பதற்காக, தற்போது விதையை விதைக்கிறான். அதைப் போல, பகவந்தன் மொத்தமான பிரம்மாண்டத்தில் ஜீவர்களை பிறக்கச்செய்து, அவரவர்களின் யோக்யதைகளுக்கேற்ப, ஸம்ஸாரத்திலிருந்து அவர்கள் வெளியேறாதவாறு செய்து, அனைத்து காலங்களிலும் அனைவரையும் காக்கிறான் என்று அறிய வேண்டும்.

**155. பூ4மியொளு ஜலவிரெ த்ருஷார்த்தனு**
**தா மரெது மொக3வெத்தி எண்தெ3ஸெ**
**வ்யோம மண்ட3லதொ3ளகெ3 காணதெ3 ஹுடுகுவந்த3த3லி ।**
**ஸ்ரீமனோரம ஸர்வரந்த**
**ர்யாமியாகி3ரெ திளியத3னுதி3ன**
**ப்4ராமகரு ப4ஜிஸுவரு ப4கு3தி1யொளன்ய தே3வதெய ।।(18-13)**

தண்ணீர் தாகத்தினை தீர்த்துக் கொள்ள, பூமியில் தண்ணீரை தேடினால் கிடைக்கும் அல்லவா? அதை விட்டு, ஆகாயத்தில் தேடினால் எப்படி கிடைக்கும்?. மனக் கலக்கத்தினால் தேவதைகளை வணங்காமல், நமக்கு ஸர்வாந்தர்யாமியான ஸ்ரீஹரியையே நம்ப வேண்டும். இத்தகைய சுத்தமான ஸாத்விகமான வழியை தாஸர் நமக்கு காட்டிக் கொடுக்கிறார்.

(தொடரும்)

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

### பாகம்மா (1700)

கலகலி அவ்வா அவர்களுடன் இருந்து, அவருடைய பாடல்களை எழுதி வைக்கும் புண்ணிய செயலில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டிருந்தார். அவருடைய சிஷ்யை. பாகம்மா (பிரயாகம்மா) தன் சில கிருதிகளை 'பாண்டுரங்க விட்டல' என்னும் அங்கிதத்தில் இயற்றியிருக்கிறார் என்று தெரிய வருகிறது. தமது சில கிருதிகளில், தம் குருகளின் வித்யை, வினய, பக்திகளை வர்ணித்திருக்கிறார். பாகம்மாவைப் பற்றி அதிக விவரங்கள் கிடைக்கவில்லை.

ஒரு முறை, அவ்வாவுடன் பாகம்மா வாரணாசிக்கு பயணம் செய்த நேரம். அங்கு இருந்தபோது காலரா நோயினால் அவஸ்தைப் பட்டாராம். அப்போது, அவ்வா அவர்களின் ஆணைப்படி, பாகவதத்தின் மூன்றாம் ஸ்கந்தத்தை கன்னட கிருதியாக இயற்றி, அதன் புண்ணிய பலனாக, நோயிலிருந்து விடுபட்டார் என்ற செய்தி கிடைக்கிறது. அந்த கிருதியில், பாகம்மா பக்ஷ்ய போஜ்யங்களின் வர்ணனைகளை மிகவும் அற்புதமாக விளக்கியிருக்கிறார் என்பதை பார்க்கிறோம்.

பாகம்மாவின் சில கிருதிகள் மிக ஆழமாக கருத்துக்களை கொண்டிருக்கின்றன என்பதை பார்க்க முடிகிறது. இங்கு ஒரு சில உதாரணங்களை மட்டும் பார்க்கலாம்.

1. நீரபொத்தவனிகெ$^{3}$ நீரஜ நேத்ரனிகெ$^{3}$
பா$^{3}$ரபொத்தவனிகெ$^{3}$ பா$^{4}$க்$^{3}$யவதிகெ$^{3}$
கோ$^{4}$ரெதா$^{3}$டெ$^{3}$ய நம்ம கோமலாவல்லிகெ$^{3}$
நாரஸிம்ஹ நம்ம நளிநாக்ஷிகெ$^{3}$
ஜய மங்களம் நித்ய ஶுப$^{3}$ மங்க$^{3}$ளம் ||

2. பூ$^{4}$மிய பே$^{3}$டி$^{3}$த$^{3}$கெ ஆ மஹாதே$^{3}$வகெ$^{3}$
பூ$^{4}$பா$^{4}$ர தடெ$^{3}$த$^{3}$வகெ$^{3}$ பூ$^{4}$தே$^{3}$விகெ$^{3}$
ப்ரேமதி$^{3}$ந்த$^{3}$லி ப$^{3}$ந்த$^{3}$ ப்ரிய ரக்ஷக்னாத$^{3}$
பாண்டு$^{3}$ரங்க$^{3}$விட்டல ஶ்ரீருகுமாயிகெ$^{3}$
ஜயமங்களம் நித்ய ஶுப$^{4}$ மங்க$^{3}$ளம் ||

இந்த கீர்த்தனையில், ஸ்ரீஹரியின் தசாவதாரங்களையும் அழகாக விளக்கி, லட்சுமி நாராயணர்கள் இருவருக்கும் மங்களம் பாடுகிறார்.

**லட்சுமி துளஸியரின் பேச்சுவார்த்தை**

லட்சுமி:
ப3ண்டர மனெ முந்தெ3 பா3கிலல்லிருவோளு
மண்டபவன்னே கட்டிஸி கொண்டோ3ளு
ஹெண்டெ3 ஹெண்டெ3க3ளொளகெ3 வண்ட்யாகி3 பெ3ளெயோளு
கண்டு3 துளஸிகுv எனகு3 ஸரிப3ருவுதே3 ||

துளஸி:
தொ3ட்டதொந்த3ர மனெ ஒளகெ3 தானிருவோளு
அட்டபொட்டேனெ ஹாகிஸி கொம்போ3ளு
து3ட்டு து3ட்டிகெ தானு ஒட்3யாகி3 பெ3ளெயுவளு
தட்டி லக்ஷ்மிகு3 எனகு ஸரி ப3ருவுதே3 ||

லட்சுமி:
அட3வெய ஒளகெvல்லா கி3ட3வாகி3 பெ3ளெவோளு
ஹுடு3கvர கையல்லி ஜிக3டி3ஸி கொம்போ3ளு
என்னொடெ3ய பாண்டுரங்க3ன வனமாலெயாகோ3ளு
ஹுடு3கி3 துளஸிகு3 எனகு3 ஸரிப3ருவுதே3 ||

துளஸி:
ராஸி கரகி3ஸீகொண்டு3 தானெ தானெம்பு3வளு
ஜோடி3ஸி பட்டன்ஹாகிஸி கொம்ப3ளு
ராமராயரிகெ3ல்ல கத3னவனெ இக்3கு3வளு
ஹீன லக்ஷ்மிகு3 எனகு3 ஸரி ப3ருவுதே3 ||

இப்3ப3ரா கத3னவனு தித்3தி3ட்ட ரகு4பதி
முத்3து3ரங்க3ய்ய பாண்டுரங்க3 விட்டல
முத்3ரெயுங்கு3ர கொட்டு முனிஸனெ
திளுஹித3 அக்கதங்கீ3ரந்தே ஒந்த3னே மாடி3த3 ||

ஶுப4 மங்க3ளம் நித்ய ஜய மங்க3ளம் ||

இந்த கிருதியில், லட்சுமி மற்றும் லட்சுமியின் ஒரு அம்சமே ஆன துளஸிக்கும் நடுவே ஆன பேச்சுவார்த்தையை மிகவும் அற்புதமாக விளக்குகிறார். இந்த கிருதி மிகவும் அர்த்தபூர்ணமாக இருக்கிறது. அவர்கள் இருவருக்குமிடையே ஆன சண்டையை, சமாதானம் செய்து, அவர்கள் இருவரையும் அக்கா தங்கையர்களாக இருக்குமாறு செய்த பாண்டுரங்கனின் மகிமை அபாரமானது. இந்தப் பாடலில், எதுகை, மோனையுடன், அழகான சொற்களை சேர்த்திருப்பது மிகவும் அருமையாக இருக்கிறது.

(அடுத்த இதழில் வேறொரு ஹரிதாஸினியைப் பற்றி பார்ப்போம்)

***

| தொடர் | ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர் |
|---|---|
| | டாக்டர். N.G.விஜயலட்சுமி. |

ஸ்ரீவாதிராஜர், வைகுண்ட வர்ணனையில் இதை கூறியிருக்கிறார்.

குந்த$^{3}$ மந்த$^{3}$ர மல்லிகெ$^{3}$ நந்த்$^{3}$யாவர்த்தர
விந்த$^{3}$ க$^{3}$ளெஸெவ ஸெளரப$^{4}$த$^{3}$
க$^{3}$ந்த$^{4}$வாஹனல்லி பீ$^{3}$ஸெ முக்தரிகெ$^{3}$ நித்யா
னந்த$^{3}$த$^{3}$ ஸுக$^{2}$வீவ ||1

சந்த$^{3}$னத$^{3}$ ரஸவ பூஸித$^{3}$வன மையொளு
ஹொந்தி$^{3}$த$^{3}$ மொத$^{3}$லாஷைத்யவனெ
மந்த$^{3}$ மாருத ப$^{3}$ந்து$^{3}$ வ்யக்தவ மாடி$^{3}$ப்ப
சந்த$^{3}$த$^{3}$ முக்தர போ$^{4}$க$^{3}$ங்க$^{3}$ளிகே$^{3}$ ||2

மத்த நர்த்தனத$^{3}$ந்தெ ஸந்தோஷ ந்ருபகெ$^{3}$
ப்$^{4}$ருத்யன கைலாகி$^{3}$னந்தெ
முக்தர லீலெக$^{3}$ளப்பந்தெ ஹரிய
சித்ர சரித்ரன லீலெக$^{3}$ளு ||3

நித்யத்ருப்தனு க்ருதக்ருத்யனச்யுத க$^{3}$ட$^{3}$
முக்தரெல்ல ப்ரகாமரு க$^{3}$ட$^{3}$
இந்திவராடவ அந்த ஸ்ருதிபத$^{2}$வனா
வ்யர்த்தவ மாட$^{3}$த$^{3}$வ ஜாண ||4

ஸ்ரீஹரி மற்றும் முக்தர்கள் இருவரும் பூர்ணானந்தர்கள் மற்றும் ஆப்தகாமர்கள். இது ஸ்ருதி சொல்வது. ஆனாலும், அவர்கள் போகிக்கின்றனர். இந்த இரு விஷயமும் முரணாக இருக்கிறது. ஏனெனில், பூர்ணானந்தர் / ஆப்தகாமர்கள் எதையும் போகிப்பதில்லை. விஷய போகம் என்பது வெறும் லீலை. இத்தகைய விஷய போகங்களால் இவர்களுக்கு ஆகவேண்டியது எதுவும் இல்லை என்று அறிய வேண்டும். இதையே பிரம்மதர்க்க சொல்கிறது என்கிறார்.

பூர்ணானந்த ஸ்வரூபஸ்ய க்ரீடா போகோ ந ஜான்யதா |
யதாதித்யஸ்ய தீபேன ந விசேஷோஸ்தி கஷ்சன ||

ஸ்ரீப்ரஸன்ன வெங்கட தாஸர் தம் இந்த கீர்த்தனையின் நான்காம் நுடியில் ஸ்ரீத்ரிவிக்ரம பண்டிதாசார்யர் இயற்றிய ஸ்ரீஹரிவாயுஸ்துதியின் 10ம் பத்யத்தின் அர்த்தத்தினையே விளக்கியிருக்கிறார் என்பதை நாம் பார்க்கலாம். அடுத்து 5 மற்றும் 6ம் பத்யங்களில் ஸ்ரீதாஸர் என்ன சொல்ல வருகிறார் என்பதை பார்க்கலாம்.

தேஜோமய ஸ்வரூப முக்தி ஜீவ சமூபா
ராஜீவ பிம்பாரூப நானா ஜாதி கலாப ||5

முக்தியில் முக்தர்கள் அனைவரும் தேஜோமய ரூபத்தை கொண்டிருக்கின்றனர். ஸ்ரீகோபாலதாஸர் தமது சுளாதியில் கூறியிருப்பதைப் போல சித் ஸ்வரூபத்தினாலேயே சஞ்சரிக்கின்றனர். ஸ்வரூப தேகங்களினாலேயே போகங்களை அனுபவிக்கின்றனர். ஸ்ரீஹரியின் ப்ரேரணைக்கேற்ப சுத்த சத்வ சரீரங்களை தரிக்கின்றனர். ஜீவன் அஸ்வதந்த்ரன். ஸ்ரீஹரி மட்டுமே ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரன். அஞ்ஞான காரியங்களான கர்மங்கள் என்னும் பாவங்களை களைந்து, பகவந்தன் அவர்களுக்கு எப்போதும் தெரிகிறான். நிரந்தர தரிசன சுகத்தை கொடுக்கிறான். ஸ்ரீவாதிராஜர் இவ்வாறு கூறுகிறார்.

ஹரிபுரதொ3ளகி3ப்ப ஸகல முக்தருக3ள
இரவ ப3ண்ணிஸி பொக3ளுவ
ஸர்வே நந்த3ந்தீத்யாதி3 யெம்ப3ர்த்த2வனெ
வரெவெனு கேளி ஸஜ்ஜனரு ||2

ஹ்ருத3யத3 பாபவ தொ3ளெவனவ நீவு
பது3மனாப4னெ முக்தருக3ள
குது3ரெயந்தெ குணிவ கண்ணெ கோ3சரனாகி3
ஒத3கி3ஸி கொடு3வ ஸுகா2தி3க3ள ||3

ராஜீவ லோசனனான ஸ்ரீஹரி பிம்ப ரூபனாக காட்டிக் கொள்கிறான். தான் பிம்ப ரூபனாக இருந்து, அனைத்து விதமான ப்ரதிபிம்பர்களால் ஸ்துத்யனாக இருக்கிறான்.

எம்பத்து நால்கு லக்ஷ ப்ரதிபிம்பக்கெ ப்ரத்யக்ஷ |
பிம்பானந்தானந்தாத்ம ஸ்ரீஹரியே ஏகாத்ம ||6

84 லட்ச யோனிகளில் ஜீவராஷிகள் பிறந்து வந்திருக்கின்றன என்று சொல்கிறோம். இதற்கு பிரமாணமாக, ஸ்ருதி புராணங்களில் மற்றும் ஹரிதாஸர்களின் கிருதிகளில் அனேக குறியீடுகள் இருக்கின்றன.

ஸ்ரீபுரந்தரதாஸர் ஒரு ஸுளாதியில் இவ்வாறு சொல்கிறார் - எம்பத்து நால்கு லக்ஷ யோனி முகங்களல்லி புட்டி புட்டி | ஹொந்தி ஹொந்தி பளலிதெனய்யா.

ஏஸு காயங்கள களெது எம்பத்னால்கு லட்ச ஜீவ ராஷியன்னு தாடி பந்த ஈ ஷரீர தானல்ல தன்னதல்ல ஆஸெ தரவல்ல முந்தெ பாஹோதல்ல - என்று ஸ்ரீகனகதாஸர் ஜீவனானவன் பெறும் அனேக தேகங்களைப் பற்றி குறிப்புகளை சொல்கிறார்.

இந்த அனந்தானந்தாத்ம ஜீவராசிகளின் இதயத்தில் நிலைத்திருந்து, பிம்ப எனப்படுகிறான். ஸ்ரீஹரி பிம்ப, ஜீவ ராசிகள் அனைத்தும் ஸ்ரீஹரியின் ப்ரதிபிம்பர்கள். இந்த அனைத்து ஜீவராசிகளும் - அதாவது, சதுர்முக பிரம்மாதி அனைத்து ஜீவராசிகளுக்கும் பகவந்தனே பிம்பரூபி - ஏகாத்ம ஆகியிருக்கிறான்.

பிம்பரெனிபரு ஸ்வோத்தமரு ப்ரதி
பிம்பரெனிபரு ஸ்வாவவரு ப்ரதி
பிம்ப பிம்பகளொளகெ கேவல பிம்ப ஹரி

என்று அறிய வேண்டும் என்று ஸ்ரீஜகன்னாத தாஸர், ஹரிகதாம்ருதஸாரத்தில் கூறியிருக்கிறார்.

ஆ சதுராஸ்ய த்ருணாந்த நீசோத்த பாவனாந்தா
தா சதுர்வித முக்தி ஹெச்யாபி ஸத புக்தி ||7

‘கரவ முகித முக்யபிராண’ என்னும் தேவர நாமாவில், முக்யபிராண தேவர் கரங்களை வணங்குவதன் பின்னால் இருக்கும் விசேஷ காரணத்தை ஸ்ரீபுரந்தரதாஸர் கூறுகிறார். இங்கு மட்டுமே பேதம், அங்கு அனைவரும் ஒன்றே என கூறும் கெட்ட மதத்தவர்களை பிடித்து அவர்களின் பற்களை உடைக்கிறேன் என்று ஹனுமந்ததேவர் கைகளை குவிக்கிறார். இந்த உலகத்தில் மட்டுமே பேதம் மற்றும் தாரதம்யம் இருக்கிறது என்று அறிய வேண்டாம். முக்தியிலும் கூட நீசோச்ச பாவம் இருக்கிறது என்பதை ஸ்ரீபுரந்தரதாஸர் இந்த ஒரு பாடலில் தெளிவாக கூறியிருக்கிறார்.

ஸ்ரீவிஜயதாஸர், தமது ஸம்க்ஷிப்த ப்ரளய ஸுளாதியில் முக்தியில் இருக்கும் பஞ்ச பேதத்தைப் பற்றி கூறுகிறார்.

முக்திலி பஞ்ச பேதஜட ஜீவ பரமாத்ம ஷக்தி ஈஷா கோடி கணனெ நித்ய
முக்தளு பொம்ம வாயு முந்தாத ஸூரரிகெ முக்திய கொடுவளு ஈஷாவஷளு |
முக்தாமுக்தர ஒடெய வைகுண்ட நாமக ஷக்தனொப்பனு காணோ த்ரிலோகக்கெ |
பக்தி யோக்யதெ அரிது பவஹரிஸி சதுரவித முக்திலி ஸுகவீவ ஸுந்தராங்க |
ஸூக்தாதிகளிகெ நிலுகனு மூலாவதாராபின்ன ரக்ததிவர்ண ராஜீவலோசன ஷுக்ல |
ரக்த ரஹித பூர்ணேந்து வதன வ்யக்தாவ்யக்த வ்யாபார அசிந்த மஹாமஹிம |
பக்தவத்ஸல கருணிஸர்வ ஸாராபோக்தனு ஆதி மத்யாந்தரஹித வ |
மௌக்திகஹார ரதுனாதி பூஷண உக்த தாரதம்ய தத்வகெ தூர தூர |
ரிக்தரிகதி ப்ரிய ஸ்ரீபூ துர்கா பதி விரக்தர மனோவாஸ விஜயவிட்டல என்ன
உக்திகெ ஸஹாயவாகு தாஸர ப்ரிய ||

ஸ்ரீமோகனதாஸரும் கூட தன் கோலு ஹாடு கிருதியில் பஞ்சபேத மற்றும் தாரதம்யத்தைப் பற்றி கூறியிருக்கிறார்.

அல்லி பஞ்சவித தாரதம்யகளுண்டு அல்லி நீசோச்ச பாவவு கோலெ |
அல்லி நீசோச்ச பாவவு முக்தரு பல்ல ஹிரியரு பஜிஸோரு கோலெ ||113

உச்சரு என்றால் நற்குணங்களைக் கொண்டவர்கள். நீசர் என்றால் குணங்களை குறைவாகக் கொண்டவர்கள். இந்த நீசோச்ச பாவம் என்பது மூன்று வித ஜீவர்களிலும் இருக்கிறது என்று ஸ்ருதி புராணங்கள் கூறுகின்றன.

* முக்தியோக்ய ஜீவர்களில் சதுர்முக பிரம்மதேவர் மற்றும் வாயுதேவர் மிகவும் பிரபலமானவர்கள். அந்த குழுவின் த்ருண ஜீவர்கள், துர்பலர்கள் ஆவர். 2. நித்ய ஸம்ஸாரிகளான ஜீவர்களில் நாயக ஸ்தானத்தில் இருப்பவர்கள் மிகவும் பிரபலமானவர்கள். த்ருண ஜீவர்கள் மிகவும் துர்பலர்கள். 3. தமோ யோக்யரான ஜீவர்களில் மிகவும் பிரபலமானவர்கள் அதமாதமனான கலி மற்றும் மிகவும் துர்பல ஜீவ த்ருண ஜீவனான முள்மரம்.

நீச என்றால் துர்பல என்னும் அர்த்தம் இல்லை. கீழானவர்கள் என்று அர்த்தம். தேவதைகளில் மிகவும் அதிக ஸாத்விக குணங்களை கொண்டவர்கள் சதுர்முக பிரம்ம தேவர் என்றால், மிகவும் அதிக துஷ்ட குணம் கொண்டவன் நீசனாதவன் கலி. சதுர்முக பிரம்ம தேவரின் குணங்களை ஹரிகதாம்ருதஸாரத்தில் இவ்வாறு வர்ணித்திருக்கிறார்.

கமலஸம்பவ ஸர்வரொளகு
த்தம நெனிஸுவனு எல்லகாலதி
விமல பக்தி ஞான வைராக்யாதி குணதிந்த |
ஸமபி அதிகவிவர்ஜிதன குண
ரமெய முகதிந்தரிது நித்யதி
த்யுமணி கோடிகளந்தெ காம்பனு பிம்பரூபவனு ||(23-36)

(தொடரும்)

***

தொடர்

## ஹரிதாஸ ஸாகித்ய ஸார

திரு ஜி. வரதராஜ ராவ்

### ஹரிதாஸ ஸாகித்யத்தின் பொற்காலம்

ஸ்ரீபாதராஜர் கன்னடத்தில் கீர்த்தனைகளை இயற்றிய அதே காலகட்டத்தில், தெலுங்கில் அன்னமாசார்யர் (1424-1503) கீர்த்தனைகளும் வழக்கில் இருந்தன. ஹரிதாஸ ஸாகித்யத்தில் ஸ்ரீபாதராஜர் பயன்படுத்தியிருக்கும் கீர்த்தனை, ஸுளாதி, உகாபோக, வ்ருத்த நாம, தண்டக ஆகிய பல்வேறு வகைகளுக்கு எந்தெந்த திசைகளிலிருந்து அவருக்கு ப்ரேரணை வந்தது என்று சங்கீதகாரர்கள் ஆராய வேண்டியிருக்கிறது.

ஹரிதாஸ ஸாகித்யத்திற்கு துவக்கப்புள்ளி போட்ட மகானுபாவராகையால் அதற்கு ஸ்ரீபாதராஜரின் பங்கு என்ன என்பதை சொல்வதற்கு ஒரு சிறிய உதாரணம் கொடுக்கப்படுகிறது. யதிஸ்ரேஷ்டரான அவர் ஹரிதாஸ்யத்தை எப்படி சாதித்தார் என்பதை அவரது சொந்தக்கதை போன்றே இருக்கும்படியான பல கிருதிகளை காணலாம்.

அன்னந்த காலதல்லி நின்ன நானரியதெ பவகளலி பந்தெனோ
அன்னந்த காலதல்லி நின்னவனெனிஸதெ மூருகனாதெனோ
அன்னந்த காலதல்லி நின்ன சரணரதியில்லதெ நொந்தேனோ
அன்னந்த காலதல்லி அதாவ புண்யதிந்த பந்து இந்து
நின்னவனெனிஸிதெ அதாவ புண்யதிந்தலென்ன மன
நின்னல்லெரகிது நோயதந்தெ
என்ன பொரெது லாலிஸு தீனனாத ஸ்ரீரங்கவிட்டலா

என்னும் பேச்சினைக் கேட்டால், அவரின் இதயக்குரலை யாராக இருந்தாலும் ஊகிக்க முடியும். 'இட்டாங்கே இருவேனோ ஹரியே என்ன தொரெயே' 'பாலொளகத்து நீரொளகத்து ஹரி நா நின்ன நம்பிதேனோ' 'நா நினகேனு பேடுவுதில்ல என்ன ஹ்ருதய மண்டபதொளு நெலெஸிரு ஹரியே' என்னும் ஒவ்வொரு நுடியிலும் ஹரிபக்தனின் கூக்குரல் எப்படி வெளிப்படுகிறது என்பதை நாம் காணமுடிகிறது. ஸ்ரீபாதராஜர் சொல்லும் அந்த ஹரிதாஸனின் நிலையை, அவரின் ஆத்ம நிவேதனத்தை வெளிப்படுத்தும் ஒரு கிருதியாகவே இவற்றை நாம் பார்க்க வேண்டியிருக்கிறது.

ஹரி நாராயணனெந்து கரதெத்தி முகிதொம்மெ மெய்
மரெது நடிஸலில்ல கிருஷ்ண
ஹரிஸ்மரணெ ஸ்மரிஸி ஸிரிதுளஸி புஷ்பவனு
கரவெத்தி நீடலில்ல கிருஷ்ண
ஸர்வக்ஞராயரு விரசிஸித கிரந்தவனு
தருஷனவெ மாடலில்ல கிருஷ்ண
ஸ்மரிஸலாரத பாப ஸ்மரணெபூர்வகமாடி
ஸ்திரபாரனாதெனல்லோ கிருஷ்ண

ஹரிதாஸர்கள் இவ்வாறு மெய்மறந்து, நடனம் ஆடியவாறு, பகவந்தனிடம் முறையிட வேண்டும் என்பதையே இங்கு சொல்லியிருக்கிறார் என்பதை நாம் கவனிக்க வேண்டும். எந்த பத்ததிக்கு அவர் காரணமோ, அந்த பத்ததியின் ரீதி நீதிகளை இங்கு சொல்லி, தாம் அதனை பின்பற்றமுடியவில்லையே என்று சுயபச்சாதாபம் கொள்கிறார். இத்தகைய ஆத்ம அனுஸந்தானத்தின் பல கிருதிகள், நமக்கு அவருடைய அந்தரங்கதத்தின் அறிமுகத்தினை செய்கிறது. இவை மட்டுமல்லாமல், ஸ்ரீமத்வாசார்யரின் அவதார த்ரயத்தைக் குறித்த மத்வநாம கிருதி மிகவும் புகழ்பெற்றது. 'ரங்கவிட்டல' என்னும் அங்கிதத்தில், ஸ்ரீகிருஷ்ணனின் பாலலீலை, வேணுகீதத்தின் சிறப்பு, கோபியர்களின் அந்தரங்கத்தையே எடுத்துக் காட்டும் ப்ரமரகீதை

ஆகியவற்றை விளக்கும்படியாக அவர் இயற்றியிருக்கும் கிருதிகள், ஸ்ரீமத் பாகவதத்தின் சாரத்தையே நமக்கு காட்டுகின்றன.

கண்களித்யாதகோ காவேரி ரங்கன நோடத - என்னும் அற்புத கீர்த்தனை, ஸ்ரீரங்கத்தில் இருக்கும் ரங்கநாதனின் வைபவத்தை விளக்குகிறது என்றால், 'ரங்கநாதன நோடுவ பன்னி, ஸ்ரீரங்கன திவ்ய விமானதல்லிஹன' என்னும் வேறொரு கீர்த்தனை அவர் ஸ்வாமியைக் கண்ட ஆனந்தத்தை பகிர்ந்து கொள்ள அனைவரையும் அழைப்பதாக இருக்கிறது. பற்பல ஆண்டுகள் ஸ்ரீரங்கத்திலேயே இருந்து, அந்த க்ஷேத்திரத்தின் சிறப்பினை அனுபவித்த ஸ்ரீபாதராஜர், இவ்வாறு மெய் மறப்பது என்பது சரியான விஷயமே ஆகும். திருப்பதிக்கு மிக அருகிலேயே தங்கியிருந்த ஸ்ரீபாதராயர் 'ஹரே வெங்கடஷைலவல்லப பொரெயபேகு என்ன' என்று ஆத்ம சமர்ப்பணம் செய்து கொள்ளும் அவருடைய வேண்டுதலும்கூட அற்புதமானது.

ரங்கா மனெகெ பாரோ க்ருபாங்க
ஸ்ரீரங்கரங்க கலுஷ விபங்க கருட துரங்க
நவமோஹனாங்க ஸ்ரீரங்க

என்று தம் அந்தரங்கத்தையே அவனுக்காக திறந்து வைத்து, அவன் வந்தபோது தாம் எப்படி எப்படி உபசாரம் செய்கிறார் என்று சொல்வது மிகச் சிறப்பானதாகும். ஸ்ரீபாதராயரின் கிருதிகளில் தெரிய வரும் பக்தி, சரளம், எளிமை ஆகியவை தாஸ ஸாகித்யத்தின் சரியான பயன்பாடாக இருக்கிறது. அவருடைய நடை, ஆளுமை, ஆன்மிக அறிவு ஆகியவை கவனிக்கப்பட வேண்டியவை. ஸ்ரீவ்யாஸராஜர், ஸ்ரீபாதராஜரைக் குறித்து சொல்லும்போது -

ஹரிபதாம்புஜப்ருங்க, பரமதாஹி விஹங்க
பரமஸுகுணாந்தரங்க, பவதுரித பங்க
ஷரணகீர்த்திதரங்க, ஷத்ருதிமித பதங்க,
ஷரணுஷுப சரிதாங்க, ஷட்சாஸ்திரஸங்க

என்று கொண்டாடியிருக்கும் நுடிகளில் மற்றும் ஸ்ரீவாதிராஜரின்

ஸ்ரீபாதராயர திவ்ய ஸ்ரீபாதவ பஜிஸுவெ
வாக்வஜ்ரகளிந்த மாயாவாதிகளெல்லர பாயி

பீகவிக்கி முத்ரிஸித பிங்ககள பிடிஸுவ
வ்யாஸராயரிகெ வித்யாப்யாஸவ மாடிஸுவ
தாஸர நாமகளிந்த லேஸுலேஸெந்தெனிஸி கொம்ப

என்னும் புகழ் மாலையாகட்டும், அவை எவ்வளவு அர்த்தபூர்ணமாக உள்ளது என்பது, அவருடைய அற்புத கிருதிகளால் தெளிவாகிறது. 98 ஆண்டுகள் வாழ்ந்த ஸ்ரீபாதராஜர், தம் நீண்ட வாழ்க்கையில் அனேக தார்மிக காரியங்களை நடத்தி, இறுதியில் முளுபாகிலில் இருக்கும் நரசிம்ம வனத்தில் வ்ருந்தாவனஸ்தர் ஆனார்.

ஸ்ரீபாதராஜரின் சிஷ்யஸ்ரேஷ்டரான ஸ்ரீவ்யாஸராஜர் (1447-1539) கூட, தம் குருகள் காட்டிக் கொடுத்த இந்த வழியையே பின்பற்றினார். பன்னூரில் பிறந்து, வளர்ந்து, ஸ்ரீபிரம்மண்ய தீர்த்தரின் தலைமையில் ஸ்ரீவ்யாஸ தீர்த்தர் என்னும் ஆசிரம நாமத்தைப் பெற்று, காஞ்சிபுரத்தில் ஷட்தர்ஷனத்தில் தேர்ந்து, அதன் பிறகு ஸ்ரீபாதராஜர் இருந்த முளுபாகிலிலேயே த்வைத சித்தாந்தத்தில் அறிஞர் ஆகி, விஜயநகரத்தின் பரம்பரையிலேயே மிகச்சிறந்தவர் என்று பெயர் பெற்றவரான ஸ்ரீ கிருஷ்ணதேவ ராயரின் ராஜகுரு எனப்பட்ட இந்த மகானின் வாழ்க்கை முழுவதும் மிகவும் போற்றத்தக்கது.

ஸ்ரீவ்யாஸதீர்த்தர் இயற்றியிருக்கும் நியாயாம்ருத, சந்திரிகா மற்றும் தர்க்க தாண்டவ என்னும் சித்தாந்த கிரந்தங்கள் வேதாந்த சாம்ராஜ்யத்தில் என்றும் ஒளிர்ந்து கொண்டிருப்பவை. ஸ்ரீவ்யாஸதீர்த்தரின் பிரபாவம், வட இந்தியாவிலும் பரவி, சைதன்ய மார்க்கத்தவர்களுக்கும் வழிகாட்டியாக இருந்தது என்பதைப் பார்க்கும்போது, அவருடைய ஆன்மிக திக்விஜயத்தை வர்ணிப்பதற்கு வார்த்தையே இல்லை எனலாம்.

இத்தகைய தத்வஞானிகள், ஸ்ரீபாதராஜரைப் போலவே கன்னடத்தில் கீர்த்தனை, சுளாதி மற்றும் உகாபோகங்களை இயற்றி, ஹரிதாஸ ஸாகித்யத்திற்கு அபாரமான பெருமையை சேர்த்தார். ஸ்ரீவ்யாஸராஜர் தம் ஆராத்ய தேவதையான ஸ்ரீகோபாலகிருஷ்ணனின் ப்ரீத்யர்த்தமாக ‘ஸ்ரீகிருஷ்ண’ என்னும் அங்கிதத்தில் தம் கிருதிகளை இயற்றினார். ஸ்ரீவ்யாஸராஜரின் கிருதிகளை நாம் பார்த்தோமேயானால், அவற்றில் ஸ்ரீகிருஷ்ண மற்றும் ஸ்ரீகிருஷ்ணனின் சான்னித்யத்தால் பரம பவித்ரம் எனப்பட்ட கோகுலத்தின் அழகான காட்சி வர்ணிக்கப்பட்டுள்ளதை பார்க்கலாம்.

ஆளித நீனு நின்னாளு நானு
தந்தெ நீனு நின்ன கந்த நானு
ஷரண்ய நீனு நின்ன தயகெ பாதுர நானு
நோவ நோடின்னு காவரில்லெந்து ஸ்ரீகிருஷ்ண
என்னனு காயபேகை தந்தெ

என்று ஹரிதாஸ்யத்தை ஏற்றுக்கொண்ட ஸ்ரீவ்யாஸராஜர், பகவந்தனை பற்பல விதமாக வணங்கியிருக்கிறார். தம் லோப, தோஷங்கள் அனைத்தையும் பகவந்தனிடம் சமர்ப்பித்துக் கொண்டு, பகவந்தனின் காருண்ய மழை தன் மேல் பொழிந்தால், தன் ராஜஸ புத்தி அழியும் என்றும்; பரமாத்மனின் ஸ்ரீமூர்த்தி ஒளிர்ந்தால் தன் தாமஸ புத்தி அடங்கும் என்றும்; பரமாத்மனின் பாத ஸ்பர்ஷத்தினால் தன் மேல் இருக்கும் பிரச்னைகள், அகலிகை சாப விமோசனம் பெற்றதைப் போல, தீரும் என்றும்; சொல்கிறார்.

நின்னிந்த நின்ன தாஸரே மிகிலோ கிருஷ்ணா - என்று ஸ்வாமியின் பக்தபராதீனதையை, தெய்வ பக்தர்களான பீஷ்ம, தர்மராஜ, பார்த்த, பலி, கோபியர் ஆகியோர் எப்படி அவனை தம் வசப்படுத்தினர் என்னும் கதைகளை உதாரணம் கொடுத்து விளக்குகிறார்.

அத்தகைய ஹரிதாஸரின் சௌபாக்கியத்தை சொல்லி, அதன் மூலம் தாமும் எப்படி புனீதர் ஆனார் என்பதை 'என்னல்லி ஹொரந்திப்ப நின்னனரியதந்தெ நின்ன தோரிதரெனகெ நின்ன தாஸரு ஸ்ரீகிருஷ்ணா' என்று சொல்லி மகிழ்கிறார். 'ரங்கய்ய மனெகெ பந்தரெ அந்தரங்கதி குடிகட்டி குணிவெ நா' என்று சொல்லி பெருமைப்படும் ஸ்ரீவ்யாஸராயர் தம் இஷ்டார்த்தம் நிறைவேறுவதாக சொல்லி, மகிழ்ச்சியை வெளிப்படுத்துகிறார். (தொடரும்)

***

**கீழ்க்கண்ட வழிகளில் எங்களுடன் இணைந்து,**
**அனைத்து தகவல்களையும் பெற்றுக் கொள்ளவும்**

Facebook ID : haridasa.vijayam // Twitter ID : haridaasa //
Youtube Channel : Jagannatha Kesava //
Whatsapp Groupல் இணைவதற்கு தொடர்பு கொள்ளவும்

தொடர்

## ஸ்ரீகனகதாஸர்

**திரு.வ்யாஸனகெரெ ப்ரபஞ்சனாசார்யர்**

போலவே, 'சில ஸத்புருஷர்களின் கதைகள்' என்னும் புத்தகத்தில் வந்திருப்பதைப் போல, கனகதாஸரின் பிறப்பின் விவரம் இவ்வாறு:

ஆனந்த வத்ஸரதி மானிதத கார்த்திகதி
மானிதனு பஹுள ததிகெய திதியொளு |
தானுதிஸிதனு மகனு தானி குருவாரதொளு
மானவரு ஹொகளுதிரெ ஸம்ப்ரமதொளு ||

இந்த இரண்டு குறிப்புகளிலிருந்து தெரிவதைப் போல, ஸ்ரீகனகதாஸர் பிறந்த சம்வத்ஸரம் - ஆனந்த. திதி - கார்த்திக பகுள திருதியை. நாள் - வியாழக்கிழமை. இந்த ஆதாரங்களினால், ஸ்ரீகனகதாஸர் பிறந்த ஆண்டு 1484 என்று ஆகிறது.

அடுத்து ஸ்ரீகனகதாஸர் இவ்வுலகை நீத்த காலம். இதைப் பற்றி 'ஸ்ரீகனகதாஸரின் வ்ருந்தாவன' என்று அழைக்கப்படுவதான, ஜயபுரத்தில் இருக்கும், ராணா ப்ரதாப ஸிம்ஹ மஹாராஜனால் நிர்மாணம் செய்யப்பட்டது எனப்படும், நினைவு மண்டலம், அபூர்வ ஆவணமாக இருக்கிறது. ராணா ப்ரதாப ஸிம்ஹனின் காலம் 1540 - 1597. ஸ்ரீகனகதாஸரின் மறைவின் செய்தியைக் கேட்டு, தனக்கு அவர் மேல் இருந்த மரியாதையின் குறியீடாக, ராணா ப்ரதாப ஸிம்ஹன் 'கனக வ்ருந்தாவன' என்னும் விருந்தாவனம் ஒன்றினை கட்டினான் என்று சொல்லப்படுகிறது. இதன்படி, ஸ்ரீகனகதாஸர் மறைந்த ஆண்டு, 1597க்கு முன்னர் என்று அறியலாம். ஸ்ரீகனகதாஸரின் மொத்த வாழ்க்கைக் காலம் 90 ஆண்டுகளுக்கும் மேல் என்பதை பல இடங்களிலிருந்து அறிகிறோம். இவற்றின்படி அவரது காலம் ஆண்டு 1484 - 1574 என்று நிச்சயம் செய்யலாம்.

இந்த காலமானது, மேலுகோடெ செலுவ நாராயணனின் ரதோத்ஸவத்தைப் பற்றி ஸ்ரீகனகதாஸர் இயற்றியிருக்கும் இந்த குறிப்பிற்கு, சரியாகவே பொருந்துகிறது.

ஸகல ஜனரு காணுதிரலு
விக்ருதி வத்ஸர சைத்ர த்விதீயேகாதஷியொளு |

30 - ஹரிதாச விஜயம் – ஜூலை 2023

ப்ரகடிதா ஷுக்ரவாரதொளு தன்ன
பகுதரிகுத்ஸாஹ ஸந்த்ய காலதொளு ||
(கைய தோரித பகெய, அம்மம்ம யாதவகிரி கல்யாணி நீனு)

இது ஆண்டு 1530 மார்ச் 25 வெள்ளிக்கிழமைக்கு சரியாக பொருந்துகிறது. அப்போது, ஸ்ரீகனகதாஸர் சுமார் 40 வயது கொண்டவராக இருந்தால், என்பதால், அவரது மேற்சொன்ன இறுதிக்காலமும் சரியாக இருக்கிறது என்பதை அறிய வேண்டும்.

மோஹன தரங்கிணியில் வருவதான, அனிருத்தனின் ஜனன காலத்தை சொல்லும் இந்த கீழ்க்கண்ட பத்யம் கூட அவரது கால நிர்ணயத்திற்கு ஒரு ஆதாரமாக இருக்கிறது.

ஆனந்த சம்வத்ஸர மாக ஷுத்த ந
வீன பஞ்சமி ரவிவார
பானு உதயத ஸ்வாதிய நக்ஷத்ரதெ
தானுதிஸித கண்டு மகனு ||

இது 15.2.1495 ஆண்டின் ஞாயிறு, ஸ்வாதி நட்சத்திரத்திற்கு பொருந்துகிறது. இது ஸ்ரீகனகதாஸரின் ஜனன காலத்திற்கு சரியாக இருக்கிறது என்பது பலரின் ஊகம். இதை வைத்தே அவரது காலத்தை பலரும் நிர்ணயம் செய்திருக்கின்றனர்.

ஸ்ரீகனகதாஸர், ஸ்ரீவ்யாஸராஜரை சந்தித்து, அவரிடம் உபதேசம் பெறும் முன்னரே, மோஹன தரங்கிணி கிருதியை இயற்றிவிட்டார் என்பதற்கு, அந்த கிருதியில் உள்ள ராமானுஜாசார்யர் மற்றும் தாதாசார்யரின் ஸ்துதிகளே ஆதாரம். மற்றும் ஸ்ரீவ்யாஸராஜரின் ஸ்துதிகள் அதில் காணப்படவில்லை. மேலும், அவரது பார்வை, ஆத்யாத்மத்தின் பால் அதிகமாக திரும்பவில்லை. ஸ்ருங்கார ரஸம் அதிகமாக காணப்படும் இந்த கிருதியில், வைராக்கியத்தின் குறிப்பு காணப்படவில்லை. ஆகவே, இந்த கிருதி, ஸ்ரீவாதிராஜரின் மற்றும் அவரது ருக்மிணீஷ விஜயத்தின் அறிமுகம் கிடைத்த சமயத்தில் இயற்றப்பட்டதாக இருக்கலாம். ஏனெனில், இந்த கிருதி (மோகின தரங்கிணி), ருக்மிணீஷ விஜயத்தின் தொடர்ச்சியாக வரும் பாகத்தைப் போலவே இருக்கிறது என்பதையும் பார்க்கிறோம்.

ஸ்ரீகனகதாஸர், ஸ்ரீவ்யாஸராஜரிடமிருந்து உபதேசம் பெற்றது, வ்யாஸ ஸமுத்ரத்தின் நிர்மாணத்தின் காலத்தில் என்பது அனைவரும் அறிந்ததாகும். ‘குருபனிகேனு மந்த்ரவோ கோணமந்த்ர’ என்னும் ஸ்ரீவ்யாஸராஜரின் வாக்கின்படி, ஸ்ரீகனகதாஸருக்கு, கோண என்னும் சொல்லே மந்திரமாக ஆனது. அதையே அவர் மிகுந்த பக்தியுடன் தொடர்ந்து ஜபம் செய்தபோது, யமதேவரின் கோணமே ப்ரத்யட்சம் ஆனது. அந்த கோணத்தின் உதவியைப் பெற்று, வ்யாஸ ஸமுத்ரத்தின் ஓட்டத்திற்கு தடையாக இருந்த பெரிய பாறையை ஸ்ரீகனகதாஸர் நகர்த்தினார் என்பதையும் நான் படித்திருக்கிறோம். இதற்கான சாட்சியாக, இன்றும்கூட வ்யாஸ ஸமுத்ரத்தின் பகுதியில் ஒரு பெரிய பாறையானது அந்த நீரோட்டத்தை இழுத்து மாற்றியிருப்பதாக பார்க்கிறோம். அந்த பகுதிக்கு ‘கோணன தூபு3’ என்னும் பெயரே இன்றும் இருக்கிறது. இந்த வ்யாஸ ஸமுத்ரத்தின் காலம் சுமார் 1526 என்று அறிஞர்கள் சொல்கின்றனர். அந்த சமயத்திலேயே, ஸ்ரீகனகதாஸர் விரக்தி கொண்டு, அவரிடம் வந்திருக்கலாம். அதற்கு முன்னரே, அவர் மோகன தரங்கிணி போன்ற பல கிருதிகளை இயற்றிருந்தார். அதாவது, அவரது வயது அப்போது 35க்கு குறைவாக இருக்க சாத்தியம் இல்லை. ஆக, அவரது பிறப்பு ஆண்டு சுமார் 1490 சமீபத்தில் இருக்கலாம் என்று சொல்ல வேண்டும். அவர் 98 ஆண்டுகள் பூர்ண ஆயுளைக் கொண்டிருந்தால் என்னும் நம்பிக்கையின்படி, அவருடைய இறுதிக்காலம் 1588 என்று இருந்தால், பிறந்த ஆண்டு 1490 என்று சொல்ல வேண்டும்.

இங்கு இன்னொரு முக்கியமான விஷயத்தை கவனிக்க வேண்டும். ஸ்ரீகனகதாஸருக்கு, விஜய நகரத்தின் அரசர்களிடமிருந்து, அதிலும், ஸ்ரீகிருஷ்ண தேவராயனிடமிருந்து பங்காபுர பிரதேசத்தின், ராணுவ பொறுப்பு அதிகாரி என ஒரு பதவி கிடைத்திருந்தது. ஸ்ரீகிருஷ்ண தேவராயரின் காலம் 1509-1529. ஸ்ரீகனகதாஸரின் பிறப்பு ஆண்டு, தற்போது பலரும் சொல்வதைப் போல 1508 என்று எடுத்துக் கொண்டால், கிருஷ்ண தேவராயரின் ஆட்சி வந்தபோது, அவர் 1 வயது குழந்தை. ஆட்சி முடியும்போது அவர் 21 வயது இளைஞர். அந்த வயதில், அவருக்கு அதிகாரி பதவி கிடைத்தது, என்பதெல்லாம் முடியாத விஷயம் ஆகும். மேலும், மோகன தரங்கிணியில், அவர் கிருஷ்ணின் த்வாரகையின் வைபவத்தை விளக்கியிருப்பது, அவர் கிருஷ்ண தேவராயரின் காலத்தின் விஜய நகரத்தின் வைபவத்தைப் பார்த்தே என்பது நாம் அறிய வேண்டும். மேலும், ஸ்ரீகிருஷ்ண தேவராயனின் ஆட்சிக் காலத்தில், சுமார் 1520ம் ஆண்டு வாக்கில், ஸ்ரீகனகதாஸர் அரசருடன் தொடர்பில் இருந்தார்

என்று இருப்பதால், மேற்சொன்ன கணக்கின்படி, அந்த சமயத்தில் அவருக்கு 10-12 வயதே ஆகியிருக்கும். இந்த அனைத்து ஆதாரங்களின்படி, ஸ்ரீகனகதாஸரின் பிறந்த ஆண்டினை 1508 என்று சொல்வது சரியல்ல என்பது நம் வாதம்.

ஸ்ரீவ்யாஸராஜரின் காலம் 1447 - 1539. ஸ்ரீபுரந்தரதாஸர், ஸ்ரீவ்யாஸராஜரின் சிஷ்யத்வத்தை வகித்ததும் கூட ஏறக்குறைய அதே காலத்திலேயே. இதனால், புரந்தர, கனகர் இருவரும்கூட ஒரு சமயத்தில், ஸ்ரீவ்யாஸராஜரின் அருகில் இருந்து, அவரிடமிருந்து பற்பல விதங்களில், தத்வ ரகசியங்களை அறிந்திருக்கிறார்கள். சுமார் 14 ஆண்டுகள் வரை, ஸ்ரீவ்யாஸராஜர் உடன் இருந்த நீண்ட காலம், இவர்களின் வாழ்க்கையில் ஒரு பர்வகாலம். ஸ்ரீவ்யாஸராஜரின் காலத்திற்குப் பிறகு, ஸ்ரீகனகதாஸர், மற்ற இடங்களுக்கு, விசேஷமாக திருப்பதி முதலான இடங்களுக்கு சென்று வந்திருக்கிறார் என்பதை அறிகிறோம்.

ஸ்ரீவாதிராஜ ஸ்வாமிகளின் 2ம் பர்யாய காலத்தில், ஸ்ரீகனகதாஸர் பல ஆண்டுகள் வரை உடுப்பியில் நிலைத்திருந்தார் என்பதாக படிக்கிறோம். அந்த காலத்திலேயே அவர், விசேஷமான பக்தியினால் ஸ்ரீகிருஷ்ணனின் அருளைப் பெற்றார். அதன் சாட்சியாகவே, இன்றும் உடுப்பியில் கனகன கிண்டி இருக்கிறது. அதன் நேர் எதிரில், ஸ்ரீகனகதாஸரின் குடீர என்னும் பெயர் கொண்ட இடம், அவரது இருப்பிடமாக இருந்தது. இன்றும்கூட அந்த இடம் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

ஸ்ரீகனகதாஸர், தம் கடைசி நாட்களில், அவருடைய முக்கிய கார்ய க்ஷேத்திரமான காகிநெலெயில் கழித்தார். அந்த காலத்தில், அவர் கதரமண்டலகி போன்ற அக்கம்பக்கத்து இடங்களுக்கு சென்று வந்து கொண்டிருந்தார். ஸ்ரீகனகதாஸருக்கும், மாத்வர்களுக்கும் இருக்கும் இன்னொரு சம்பந்தம் என்னவென்று பார்த்தால், காகிநெலெ ஆதிகேசவனின் தேவஸ்தானத்தில், இருப்பதான ஒரு மாத்வ யதிகளின் பிருந்தாவனம். அவர், ஸ்ரீராஜவந்த்ய தீர்த்தர் என்று பெயர் கொண்ட, பண்டாரகெரெ மடத்தின் பரம்பரையில் வந்த யதிகள். அத்தகைய ஒரு மாத்வ யதிகளின் பிருந்தாவனம், அந்த கோயிலில் இருக்கிறது என்றால், அவர் அந்த ஊரில் பல காலம் தங்கியிருந்து, அந்த ஊர் மக்களின் மரியாதை, நம்பிக்கைகளைப் பெற்றிருக்கலாம் என்றும் நாம் நினைக்க வேண்டும். (தொடரும்)

தொடர்

## ஹரிதாஸர்களின் சிந்தனைத் துளிகள்

### ஸ்ரீடீகாராயரின் ஆராதனை

மித்யா சித்தாந்த துர்வாந்த வித்வம்ஸன விசக்ஷண:
ஜயதீர்த்தாக்ய தரணி: பாஸதாம் நோ ஹ்ருதம்பரே ||

மாத்வ பரம்பரயில் ஸ்ரீமதாசார்யருக்குப் பிறகு ஒரு முக்கிய இடத்தை ஸ்ரீஜயதீர்த்தருக்கு கொடுத்து கௌரவித்திருக்கின்றனர். இதற்கு ஆதாரம் என்றால்:

ஸ்ரீமத்வ: கல்பவ்ருக்ஷஸ்து ஜயார்யா: காமது:ஸ்ம்ருத: || -- ஸ்ரீமுஷ்ணமஹாத்ம்ய

ஸ்ரீவியாசராஜர், ஸ்ரீஜயதீர்த்தரை மிகுந்த மரியாதையுடன் புகழ்ந்திருப்பது:

வர்ணிஸலளவே குணசாந்த்ரன |
கர்ணஜனக கோடி தேஜ
ஸ்ரீஷஜபஜக ஜயமுனீந்த்ரன ||

மத்வ சாஸ்திர துக்த நிதிய |புத்தியெம்ப மந்தரகிரிய |
ஷுத்த சூத்ரநேத்ரதிந்த |பத்தவமாடி பிடிது கடெது |
ஷுத்த யுகுதி சுதெய தெகெதன |சிஷ்யஜனகெ
ஷ்ரத்தெயிந்தலதனு எரெதன |க்ரோததிந்த
க்ருத்தவாதி தைத்யர கெலிதன |ஜயமுனீந்த்ரன ||

ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீஜயதீர்த்தரை புகழ்ந்து பாடியிருப்பதாவது:

சாரி பஜிஸிரோ டீகாராய ரங்க்ரிய |
கோரபாதகம்புதிய தூதமாள்பன ||
ஜயெந்து நுடியலு ஜயஷீலனாகுவ
ய எந்து நுடியலு யமனஞ்சுவ
தீ எந்து நுடிதரெ திமிரபாதக ஹானி
ர்த்த எந்து நுடிதரெ தாபத்ரய பரிஹார ||

மற்றும்:
எந்திகாதரு ஒம்மெ கொனெ நாலிகெயிந்த
பிந்து மாத்ரவு நெனெயெ

மந்த மதியாதரு அஞ்ஞான நாஸவு
சந்தேஹவில்லவு ஆவாவ காலக்கெ

வியாச தாச சாகித்யத்தில், ஸ்ரீடீகாராயரை போற்றிப் புகழாதவர்கள் யாருமில்லை. ஸ்ரீமதாசார்யரின் கிரந்தங்களுக்கு டீகை, வியாக்யான எழுதுவதற்கென்றே அவதாரம் எடுத்து வந்த மகாத்மா் இவர். ஆசார்யரின் அனுவியாக்யானத்திற்கு விரிவாக எழுதிய உத்தம கிரந்தம் – ஸ்ரீமன் நியாயசுதா. மொத்தம் எழுதிய கிரந்தங்கள் 18 டீகா மற்றும் 3 ஸ்வதந்த்ர கிரந்தங்கள். கன்னடத்தில் கிருதிகள் இயற்றியிருக்கிறார் எனத் தெரிகிறது. அன்றிலிருந்து இன்றுவரை 'சர்வமான்ய டீகாகாரர்' என்று பரம்பரை இவரை புகழ்கிறது. ஸ்ரீவித்யாதிராஜருக்கு பீடம் அளித்து, மலகேட'வில் பிருந்தாவனஸ்தராகி, நம்பிய பக்தர்களுக்கு அருளி வருகிறார்.

**ஜய ஜய ஜய ஜய ஜயராயா**
**ஸ்ரீ வ்யாஸராஜர்**
**ராக$^3$: ஆரபி$^4$ - ஆதி$^3$தாள**

**ஜய ஜய ஜய ஜய ஜயராயா**
**த$^3$யதி$^3$ம் பாலிஸோ மஹராய நீ**
**த$^3$யதி$^3$ம் பாலிஸோ மஹராய ||ப||**

**ப்ரதிஜன்மதி$^3$ த்வச்சரணத$^3$லி ஸத்$^3$ -**
**ரதியனித்து காயோ கருணத$^3$லி**
**ஸன்மதிவந்த$^1$ரலிடொ$^3$ நிருதத$^3$லி -**
**அதிப$^3$ல ஹ்ருத்$^3$க$^3$ததமவளிது$^3$**
**உன்னதியனெ கொடு$^3$ ஸன்னுத மஹமஹிமா ||1||**

**அச்யுதபாதா$^3$ம்பு$^3$ஜப்$^4$ருங்க$^3$ -**
**நின்னர்சனெயனு கொடோ$^3$ கோமலாங்க$^3$ -**
**த்வச்சரிதெய தோரோ கு$^3$ணபாங்கா$^3$ -**
**ப்ரச்யுததூ$^3$ஷண**
**ஸச்சித்$^3$பூ$^4$ஷண மெச்சிபெ நா நின்ன முனிதுங்கா$^3$ ||2||**

**வ்ருந்தா$^3$ரகவ்ருந்தா$^3$ராத்$^4$ய**
**அந்த$^4$க$^3$ந்த விது$^4$ர குஜனாபா$^3$த்$^4$ய**
**நந்த$^3$தீர்த$^2$ர மதபோ$^3$த்$^4$ய - ஸுந்த$^3$ரதாண்ட$^3$வ**
**நிந்தி$^3$ஹ ஸ்ரீக்ருஷ்ணனா வந்தி$^3$ப**
**ஸத்கு$^3$ரு நிரவத்$^3$ய ||3||**

***

**ஸ்ரீகார்பர நரஹரி விட்டலதாசர் (1896-1979)**

கார்பரேஷ க்ருபாபாத்ரம் கிரியாசார்ய நாமகம்
மௌனத்யான ஸதாஸத்த வந்தே ந்ருஹரி ஸேவகம் ||

கொப்பர கிரியாசார்யர ஜீவன
அப்ப ஸ்ரீ நரஹரி பக்தியிந்த பாவன
தப்பதெ வ்யாஸ தாஸஸாஹித்ய தத்யயன
ஒப்பவாகி ரசிஸித நூராரு கீர்த்தன
கார்பர நரஹரி விட்டலாங்கித த்யான
கோப்ய மங்களாங்க ஹரிவிட்டலன அதீன ||

***

**YouTube Channel - Jagannatha Kesava**

* மேற்கண்ட நமது யூட்யூப் சேனலில் ஜூன் மாதத்தில் தொடங்கிய புதிய உரைத்தொடர் - ஸ்ரீஷ்யாம ஸுந்தர விட்டல தாஸர் இயற்றிய ஸ்ரீஸத்ய நாராயண விரத கதை - கன்னட பத்யத்தின் அர்த்த விளக்கங்கள்.

* இதனைத் தொடர்ந்து வரவிருப்பது, ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர் இயற்றிய கன்னட கிருதிகள் சில.

* மேற்கண்ட நமது சேனலுக்கு சப்ஸ்க்ரைப் செய்து, ஏற்கனவே உள்ள + வரவிருக்கும் தொடர்களையும், அனைவரும் கேட்டு, நம் ஹரிதாஸ ஸாகித்யத்தின் சிறப்பினை அறிய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்
Haridasa Vijayam - Monthly

மலர் 4 ** Aug 2023 ** இதழ் 9



இபராமபுர ஸ்ரீஅப்பாவரு

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே
மலர் 4 : இதழ் 9

| நிர்வாக ஆசிரியர் | துணை ஆசிரியர் |
| --- | --- |
| 'ஜகன்னாத கேசவ'<br>சத்ய நாராயணன்<br>ஜகன்னாத கேசவ<br>பப்ளிகேஷன்ஸ்,<br>380, 2A Main, 16th Cross, JP Nagar<br>4th Phase, பெங்களூரு 560078<br>Ph.: 89044-58276.<br>haridasa.vijayam@gmail.com<br>jagannathakesava.blogspot.com | ' தாச சாகித்ய சேவா ரத்ன'<br>திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்<br><br>**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**<br>திரு. முரளிதர தாசரு,<br>திருமதி. நிர்மலா நரசிம்மன்,<br>திரு. லட்சுமிபதிராஜா,<br>திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ் |

**ஆராதனை**

**ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்**
**ஆகஸ்ட் 1 முதல் 31 வரை, 2023**

ஆகஸ்ட் 19 - சிராவண சுத்த த்ருதியை - இபராமபுர அப்பாவரு
ஆகஸ்ட் 21 - சிராவண சுத்த பஞ்சமி - ஹெளவனகட்டெ கிரியம்மா, கொமரனஹள்ளி
ஆகஸ்ட் 28 - சிராவண சுத்த துவாதசி - ஸ்ரீவர விட்டல தாஸர், தார்வாட்

## ஆசிரியர் பக்கம்

ஆகஸ்ட் 2023 மாதத்தின் முதல் பாதியில் அதிக மாதம் வந்திருக்கிறது. பூஜை, புனஸ்காரங்கள், தான, தர்மங்கள் என அனைத்து ஸத்காரியங்களையும் செய்யத்தக்க பர்வ காலம் இது. இத்தகைய பர்வ காலத்தில், நம்மால் முடிந்த அளவிற்கு, புத்தக தானத்தையும் அளித்து, ஹரிதாஸர்களின், ஹரிதாஸ ஸாகித்யத்தின் சிறந்த / அரிய புத்தகங்கள் அனைவருக்கும் சென்று சேருமாறு செய்வோம். அதிக மாதத்திற்காக சிறப்பு தள்ளுபடியும், கூடுதல் பரிசு புத்தகங்களைப் பற்றிய அறிவிப்பும் வரவிருக்கிறது. இந்த விவரங்களுக்கு வாட்சப்பில் தொடர்பு கொள்ளவும்.

அதிக மாதம் வந்திருப்பதால், சிராவண மாதத்தில் வரும் ஹரிதாஸர்களின் ஆராதனைகள் அனைத்தும் ‘நிஜ’ மாதத்தில் செய்வதாக வருகின்றன. அதன் பகுதியாக இந்த மாதம் வரும் ஹரிதாஸர்களின் ஆராதனை விவரங்கள் உள் அட்டையில் இருக்கிறது. அந்தந்த நாட்களில் அந்த ஹரிதாஸர்களின் சரம ஸ்லோகங்களை / மகிமைகளை / கிருதிகளை படித்து, அவர் அந்தர்யாமியான பகவந்தனின் அருளைப் பெறுவோமாக.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்**

***

ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப் அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்துச் சொல்லலாம்.

**கீழ்க்கண்ட வழிகளில் எங்களுடன் இணைந்து,**
**அனைத்து தகவல்களையும் பெற்றுக் கொள்ளவும்**

Facebook ID : haridasa.vijayam // Twitter ID : haridaasa //
Youtube Channel : Jagannatha Kesava //
Whatsapp Groupல் இணைவதற்கு தொடர்பு கொள்ளவும்

தொடர்

**ஸ்ரீராகவேந்திர விஜயம்**

**ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர் இயற்றியது**

**ராஜ்யகார்யவ ப4ரதி3 மாடு3த**
**வாஜி மேத4த3 ஶதக பூர்த்திஸி**
**ராஜ ராஜர தேஜோ நிதி4 தானெனிஸி ராஜிஸித3**
**மாஜத3லெ ஸ்ரீஹரிய பத3யுக3**
**பூஜெ மாடி3த3 புண்யப2லதி3 வி**
**ராஜமான மஹானுபா4வனு லோக மூரரலி ||24**

ராஜகார்யவ பரதி மாடுத - அரசாட்சியை செவ்வனே செய்தவாறு; ஶதக - நூறு; வாஜி மேதத - அஷ்வ மேத யாகத்தினை; பூர்த்திஸி - செய்து முடித்து; ராஜ ராஜர - சக்ரவர்த்திகளில்; தேஜோ நிதி - வீரன்; தானெனிஸி ராஜிஸித - தானே என்று சொல்லி, அரசாட்சி செய்தான்; மாஜதலெ - அப்போதும் தவறாமல்; ஸ்ரீஹரிய பதயுக - ஸ்ரீஹரியின் பாதங்களை; பூஜெ மாடித - பூஜை செய்த; புண்யபலதி - புண்ணியங்களின் பலனால்; மஹானுபாவனு - மஹானுபாவனான பிரகலாத ராஜர்; லோக மூரரலி - மூன்று உலகங்களிலும்; ராஜமான - சிறப்பாக அரசாட்சி செய்தார்.

ஸ்ரீபிரகலாத ராஜரின் அரசாட்சியின் சிறப்பு மேலும் தொடர்கிறது.

அரசாட்சியை செவ்வனே செய்தவாறு, நூறு அஷ்வமேத யாகத்தினை செய்து முடித்து, சக்ரவர்த்திகளில் சிறந்தவன் என்று சொல்லி, அரசாட்சி செய்தார். ஸ்ரீஹரியின் பாதங்களை பூஜை செய்த புண்ணியங்களின் பலனால், மஹானுபாவனான பிரகலாத ராஜர், மூன்று உலகங்களிலும் சிறப்பாக அரசாட்சி செய்தார்.

**ஸாது4 ஜனததி போஷ ஶுப4தம**
**வாத3 த்4ருத நிஜ வேஷ ஸந்தத**
**மோத3மய ஸத்கார்ய நிர்ஜித தோ4ஷ கு3ணபூ4ஷா**
**பாத ப4ஜிஸலு இச்செ பூர்த்திப**
**னாதி காலத3லிந்த3 ஜனகெ**
**போ3த4ஸுக2 மொத3லாத3 வித3வித3 பூர்ணப2ல நீட்3த3 ||25**

ஸாது ஜனத்தி போஷ - ஸஜ்ஜனர்களை / ரிஷி முனிவர்களை உபசரிப்பவனே / காப்பவன்; ஶுபதமவாத த்ருத நிஜ வேஷ - சுபகரமான, திடமான தேகம் கொண்டவன்; ஸந்தத மோதமய ஸத்கார்ய - எப்போதும் மகிழ்ச்சியை தரக்கூடிய நற்செயல்களை செய்பவன்; நிர்ஜித தோஷ - தோஷங்கள் அனைத்தையும் வென்றவன்; குணபூஷா - நற்குணங்களால் அலங்கரிக்கப்பட்டவன்; பாத பஜிஸலு - உன்னை யார் வணங்குகிறார்களோ / உன் பாதங்களை யார் பஜிக்கிறார்களோ; இச்செ பூர்த்திப - அவர்களுடைய விருப்பங்களை நிறைவேற்றுகிறாய்; அனாதி காலதலிந்த - எப்போதுமே; ஜனகெ - உன் மக்களுக்கு; போதஸுக - சிறப்பான சுகங்கள்; மொதலாத - முதலான; விதவித பூர்ணபல நீட்த - பற்பல முழுமையான சுகங்களை / பலன்களை கொடுக்கிறாய்.

ஸ்ரீபிரகலாத ராஜரைக் குறித்தான பிரார்த்தனை ஸ்லோகமாக இது இருக்கிறது.

ஸஜ்ஜனர்களை ரிஷி முனிவர்களை உபசரிப்பவனே / காப்பவனே. சுபகரமான திடமான தேகம் கொண்டவனே. எப்போதும் மகிழ்ச்சியை தரக்கூடிய நற்செயல்களை செய்பவனே. எவ்வித தோஷங்களும் அற்றவனே. நற்குணங்களைக் கொண்டவனே. உன்னை யார் வணங்குகிறார்களோ, உன் பாதங்களை யார் பஜிக்கிறார்களோ, அவர்களுடைய விருப்பங்களை நீ நிறைவேற்றுவாய். எப்போதும் உன் மக்களுக்கு (பக்தர்களுக்கு) சிறப்பான சுகங்கள் முதலான பற்பல முழுமையான சுகங்களை / பலன்களைக் கொடுக்கிறாய்.

இதே சிறப்புகளை / பிரார்த்தனைகளை ஸ்ரீவ்யாஸராஜருக்கும் / ஸ்ரீராயருக்கும் பொருத்தி பார்த்துக் கொள்ளலாம்.

**தி$^3$திஜரெல்லரு நின்ன கோ$^3$வின**
**ஸூதனமாடீ$^3$ ஸர்வரஸக$^3$ள**
**மிதியுயில்லதெ$^3$ த$^4$ரெய கோ$^3$வின மாடி$^3$ கரெஸித$^3$ரு**
**ரதுன ஹேம ஸுமௌக்திகாவளி**
**ததிய ஸந்ததயெய்தி$^3$ போ$^4$க$^3$தி$^3$**
**விததராத$^3$ரு நின்ன கருணவயெந்து1 வர்ணிஸலி ||26**

திதிஜரெல்லரு - அசுரர்கள் அனைவரும்; தரெய கோவின மாடி - பூமாதேவியை பசுவாக ஆக்கி; நின்ன கோவின ஸூதனமாடி - உன்னை கன்றுக்குட்டியாக ஆக்கி; மிதியுயில்லதெ - எவ்வித எல்லையும் இன்றி (அபாரமாக); ஸர்வரஸகள - அனைத்து ரஸங்களையும் (பால் / ஞானம்);

கரெஸிதரு - கறந்தனர் (பெற்றனர்); ரதுன ஹேம சுமௌக்திக ஆவளி ததிய - ரத்ன, தங்க, முத்துக்களின் வரிசை போன்றதான (மிகச் சிறந்த); போகதி - போகங்களை; ஸந்ததயெய்தி - எப்போதும் பெற்று; விததராதரு - தன்யர் ஆயினர்; நின்ன கருணவயெந்து வர்ணிஸலி - உன் கருணையை நான் எவ்வாறு வர்ணிப்பேன்? (வர்ணிப்பது சாத்தியம் இல்லை).

பிரகலாதராஜரின் பொன்மொழிகள் / உபதேசங்கள் ஆகியவற்றின் மகிமைகளை இங்கு போற்றுகிறார் ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர்.

அசுரர்கள் அனைவரும் பூமாதேவியை பசுவாக ஆக்கி, உன்னை கன்றுக்குட்டியாக ஆக்கி, எவ்வித எல்லைகளும் இன்றி, உன்னிடமிருந்து அனைத்து ரஸங்களையும் (ஞானம்) கறந்தனர். ரத்ன, தங்க, முத்துக்களின் வரிசை போன்றதான மிகச் சிறந்த போகங்களை எப்போதும் பெற்று தன்யர் ஆயினர். உன் கருணையை நான் எவ்வாறு வர்ணிப்பேன்? (அப்படி வர்ணிப்பதே சாத்தியம் இல்லை).

ஸ்ரீபிரகலாத ராஜரின் உபதேசங்கள் மிகவும் புகழ் பெற்றவை. பாகவதத்தில் இவை விளக்கப்பட்டுள்ளன. சில குறிப்புகளை மட்டும் இங்கு பார்ப்போம். இவற்றை மிகவும் அற்புதமாக உபதேசம் செய்திருக்கிறார் ஸ்ரீபிரகலாத ராஜர்.
* நவவித பக்தி முறைகள்
* காம கிரோதங்களை விடுங்கள்
* ஐஹிக பதார்த்தங்கள் அனைத்தும் தற்காலிகமே
* விஷய சுகங்களில் ஈடுபாடு தேவையில்லை
* ஸ்ரீஹரியின் உபாஸனை மிகவும் சுலபம்

**நின்ன நம்பி3த3 ஜனகெ ந்யூனதி**
**இன்னு தா3வித4தி3ந்த3 பா3ரது3**
**உன்ன தாகோ3து3 நிகி2ள பா4க்3யவு மிதியுயில்லத3லெ**
**க4ன்ன நின்னய பாத3யுக3ளவ**
**மன்னத3லெ நா ப4ஜிபெ ஸர்வத3**
**என்ன பாலிஸுயெந்து3 ப்ரார்த்தனெ மாடி3 பே3டு3வெனு ||27**

நின்ன நம்பித ஜனகெ - உன் பக்தர்களுக்கு / மக்களுக்கு; ந்யூனதி - எவ்வித குறைகளும்; இன்னு தாவிததிந்த பாரது - இன்னும் எவ்விதத்திலும் வராது; உன்ன தாகோது - அவர்களுக்கு நல்லதே நடக்கிறது; நிகிள

பாக்யவு - அபாரமான பாக்கியங்கள்; மிதியுயில்லதலெ - எவ்வித எல்லைகளும் இன்றி கிடைக்கிறது; கன்ன - சிறந்தவனே; நின்னய பாதயுகளவ - உன்னுடைய பாதங்களை; மன்னதலெ - இடைவிடாமல்; நா பஜிபெ - நான் வணங்குவேன்; ஸர்வத - எப்போதும்; என்ன பாலிஸுயெந்து - என்னை காப்பாற்று / எனக்கு அருள்வாயாக என்று; ப்ரார்த்தனெ மாடி - பிரார்த்தனை செய்து; பேடுவேனு - வேண்டிக் கொள்வேன்.

ஸ்ரீபிரகலாதராஜரைக் குறித்தான பிரார்த்தனையை செய்கிறார் ஸ்ரீதாஸர்.

உன் பக்தர்களுக்கு எவ்வித குறைகளும், எவ்விதங்களிலும் வராது. அவர்களுக்கு நல்லதே நடக்கிறது. அபாரமான பாக்கியங்கள் அவர்களுக்கு எவ்வித எல்லைகளும் இன்றி கிடைக்கிறது. சிறந்தவனே, உன்னுடைய பாதங்களை இடைவிடாமல் நான் வணங்குவேன். எப்போதும் என்னை காப்பாற்று / எனக்கு அருள்வாயாக என்று பிரார்த்தனை செய்கிறேன்.

**கோ3வு பங்கதி3 மக்3னவாகி3ரெ**
**காவ நரனனு காணதீ3பரி**
**தா4வி ஶ்யாக3லெ ப3ப்ப நரனிகெ3 உஸரலுத3னவனு**
**பா4வி ஶாக்ஷண வ்யஸன களெயதெ3**
**தீவி கொண்டத3ரல்லி முளுகி3ஸெ**
**கோ3வு மாடு3வவேனு தே3வனெ நீனே பா3லக3னு ||28**

கோவு - பசுவானது; பங்கதி மக்னவாகிரெ - சேற்றில் மாட்டிக் கொண்டிருந்தால்; காவ நரனனு - அதனை காப்பாற்றுபவனான மனிதனை; காணதெ - காணாமல் தவிக்க; தாவிஸி - பாய்ந்து; ஆகலே - அப்போதே உடனடியாக; பப்ப நரனிகெ - வரும் மனிதனுக்காக; உஸரலு - காத்திருக்க; அதனவனு - வந்த அவன், அந்த பசுவை; பாவிஸி - பார்த்து கவலைப்பட்டு; ஆக்ஷண - உடனடியாக; வ்யஸன களெயதெ - அதன் துயரத்தை போக்காமல்; தீவி கொண்டதரல்லி - எங்கு இருக்கிறதோ, அதிலேயே (சேற்றிலேயே); முளுகிஸெ - மூழ்கடித்தால்; கோவு மாடுவவேனு - அந்த பசு என்னதான் செய்யும்? தேவனே - ஸ்வாமியே; நீயே பாலகனு - நீயே காப்பவன்;

ஸ்ரீஹரியைக் குறித்தான ஸ்ரீதாஸரின் பிரார்த்தனை இங்கிருந்து இந்த சந்தி முடியும்வரை நடக்கிறது. ஈஷ தாஸ பாவத்தினை, பகவந்தனின்

பக்தவத்ஸல என்னும் குணத்தை குறிப்பிடும்படியாக இந்த பத்யங்கள் இருக்கின்றன.

பசுவானது சேற்றில் மாட்டிக் கொண்டிருந்தால் அதனை காப்பாற்றுபவனான மனிதனை காணாமல் தவிக்க, அவனுக்காக காத்திருக்க, அப்போது அங்கு வரும் அந்த மனிதன், உடனடியாக அதன் துயரத்தை போக்காமல், அந்த பசு எங்கு இருக்கிறதோ (சேற்றில்), அதிலேயே அதனை மூழ்கடித்தால், அந்த பசு என்னதான் செய்யும்? ஸ்வாமியே, நீயே என்னை காப்பவன்.

* சம்சார ஸாகரத்திலிருந்து காப்பவனான பகவந்தன், தன்னை காக்காமல், மறுபடி இதிலேயே மூழ்கடித்தால், நான் என்னதான் செய்வது என்று வேண்டுவதாக இந்த பத்யம் இருக்கிறது.

* தீவி கொண்டதரல்லி - என்னும் சொல்லினை, ஹரிகதாம்ருதஸாரத்தில் ஸ்ரீஜகன்னாததாஸர் ஒரு இடத்தில் பயன்படுத்தியிருக்கிறார் என்பதை பார்க்கிறோம்.

தீவிகொண்டி[3]ஹவல்லி மஜ்ஜ க
லேவரதி[3] அங்கு[3]லிய பர்வத[3]
டா[2]வினலி முன்னூரு அரவத்தெனிப த்ரிஸ்த[2]ளதி[3] |
(ஜீவப்ரகரண சந்தி 9-29)

(தொடரும்)...

**YouTube Channel - Jagannatha Kesava**

* மேற்கண்ட நமது யூட்யூப் சேனலில் ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸரின் வெங்கடேஷ ஸ்தவராஜ, லட்சுமி ஸ்தவராஜ கிருதிகளைத் தொடர்ந்து, தற்போது தாஸரின் 'லட்சுமி ஹ்ருதய' வின் தமிழ் அர்த்த விளக்கங்கள் வந்து கொண்டிருக்கிறது.

* மேற்கண்ட நமது சேனலுக்கு சப்ஸ்க்ரைப் செய்து, ஏற்கனவே உள்ள + வரவிருக்கும் தொடர்களையும், அனைவரும் கேட்டு, நம் ஹரிதாஸ ஸாகித்யத்தின் சிறப்பினை அறிய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

### ஞான பக்தி வைராக்கியம்

**திருமதி. சுதா நரசிங்கராவ் தேஷ்பாண்டே**

ஹரிதாச சாகித்யம் மிகப்பழமையானது. புகழ்பெற்றது. வியாச சாகித்யத்தை கன்னட மொழியில் சரளமாக, எளிமையாக பாமர மக்களுக்கும், பெண்களுக்கும், சிறுவர்களுக்கும் போய்ச் சேருமாறு செய்தவர்கள் ஹரிதாசர்கள். த்வைத சித்தாந்தத்தின் தத்வங்களை முன்வைத்துக்கொண்டு, இதுவே மோட்சத்திற்கான சரியான வழி என்பதை சஜ்ஜனர்களுக்கு சொன்னவர்கள் ஹரிதாசர்கள். ஸ்ரீமதாசார்யரின் சித்தாந்தம் என்னும் சூரியப்பிரபையை, ஸ்ரீஜயதீர்த்தர், ஸ்ரீபாதராஜர், ஸ்ரீவியாசராஜர் ஆகிய யதிகள் மற்றும் ஸ்ரீபுரந்தரதாசர், ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீகனகதாசர், ஸ்ரீகோபாலதாசர், ஸ்ரீஜகன்னாததாசர் ஆகியோர் வளர்த்தவாறு, தத்வஞானத்தின் ஒளியை பரப்பினர்.

இத்தகைய மகான்களின் சாகித்யமானது இன்றும் ஞான பக்தியை அனைவருக்கும் பரப்பி வருகிறது. பிறப்பிற்கு வரும் அனைத்து ஜீவர்களும் சுகத்தையே நாடி அதற்கான வழியைத் தேடி, தான் வேண்டாமலிருந்தாலும் வரும் துக்கம், கஷ்டம் ஆகியவற்றை அனுபவித்து, சம்சாரத்தில் சிக்கி சுழல்கிறான். இச்சிறையிலிருந்து தப்பிக்கும் வழியைத் தேடியவாறு, நிரந்தர சுகத்திற்கான வழியைக் கண்டுபிடிக்க முயலும்போது, ஒரு நல்ல குரு கிடைத்தால் ஹரிபாதங்களைச் சேர்கிறான். இல்லையென்றால் அந்தந்தமஸ்ஸினைச் சேர்கிறான். அனைத்து ஜீவர்களை பிறப்பிற்குக் கொண்டு வரும் நோக்கமே இதுவாகும். ஸ்ரீஹரி செய்யும் எந்தக் காரியமும், காரணம் இல்லாமல் இல்லை. அதில் ஸ்ருஷ்டி என்பது ஒரு சிறந்த ஞானக்கிரியை ஆகும். வேதங்களாலும் விளக்கமுடியாதவன், பற்பல நற்குணங்களைக் கொண்டவன் ஸ்ரீஹரி.

ஹரிதாச சாகித்யத்தின் சிறந்த கிருதி ஹரிகதாம்ருதசாரம். பாமினி ஷட்பதி நுடியில் 32 சந்திகளில் 988 ஸ்லோகங்களில் இயற்றப்பட்டது. ஒரு காவியத்திற்கு இருக்கவேண்டிய லட்சணங்கள் நான்கும் (விஷய, சம்பந்த, ப்ரயோஜன, அதிகார) இதில் உள்ளன. விஜயதாசருக்குச் செய்த துரோகத்தினால் வந்த நோயினை, அவரது சிஷ்யரான கோபாலதாசரின் உதவியால் தீர்த்து, ஆயுள் தானத்தைப் பெற்று, அதனை வீண்டிக்காமல், பாண்டுரங்கனிடமிருந்து

ஜகன்னாதவிட்டலா என்னும் அங்கிதம் பெற்று, பின் பற்பல கிருதிகளை இயற்றினார்.

ஸ்ரீவரதேந்திர தீர்த்தரிடம் 12 ஆண்டுகள் வேதங்களைப் படித்த இவர் மிகப்பெரிய சமஸ்கிருத பண்டிதர் ஆனாலும், கன்னடத்தில் ஹரிகதாம்ருதசாரத்தை இயற்றி, வேதம் படிக்கும் அதிகாரம் இல்லாத பெண்களுக்கு மற்றும் சம்ஸ்கிருதம் தெரியாவதர்களுக்கு மிகப்பெரிய உதவியைச் செய்திருக்கிறார். தத்வஞானத்துடன் பக்தி மார்க்கத்தையும், வைராக்கியத்தையும் காட்டும் ஹரிகதாம்ருதசாரம், முக்தியோக்யருக்கு மட்டுமே புரியக்கூடியதாகும். சிறந்த உதாரண / ஆதாரங்களுடன் ஹரி குருகளின் மகிமைகளை வர்ணிப்பதோடு மட்டுமல்லாமல், முக்திக்கு இது மிகச்சிறந்த வழிகாட்டி (ஸ்ரீதவிட்டலர் தனது பல-ஸ்ருதியில் சொல்வதைப்போல), இதிலுள்ள ஒவ்வொரு ஸ்லோகமும் நமது அகத்தில் ஸ்ரீஹரியின் சிந்தனையைக் கொடுப்பதாகும்.

சஜ்ஜனர்களுக்கு வாழ்க்கையே கொடுமை (விலக்கவேண்டியது). ஞான பக்தியே சாதனை. முக்தியே இலக்கு. முக்திக்கு ஸ்ரீஹரியின் அருளே காரணம். ஹரியின் அருளுக்கு பூஜையே வழி. ஞான-பக்தி-வைராக்யங்கள் ஜீவனுக்கு இந்தப் பாதையில் செல்வதற்கு உதவுபவை. சிறந்த சஜ்ஜனர்களுக்கு (பிரம்மதேவருக்கு) இது தானாகவே அமைந்திருப்பதால், வாயுதேவர் மூலமாக ஞானம், அவரது நிஜ பத்னியான பாரதிதேவியரின் மூலமாக பக்தி அவர் இருவரின் மூலமாக வைராக்ய, ஸ்ரீஹரியின் விஷயத்தில் உண்மையான ஞானம், திடமான பக்தி மற்றும் ஸ்ரீஹரி பக்தர்களிடம் தாரதம்யத்தின்படி வழிபாட்டினைச் செய்து வைராக்கியத்தைப் பெறவேண்டும். வெல்லத்துண்டினை எந்தப் பக்கத்திலிருந்து உடைத்துத் தின்றாலும் இனிப்பே – அதுபோல, இந்த கிரந்தத்தின் அனைத்து ஸ்லோகங்களும் ஞான பக்தி வைராக்கியத்தினால் நிரம்பி, சாதகருக்கு சாதனைக்கான வழிகாட்டியாக இருக்கிறது. இந்தக் கிரந்தத்தின் முதல் ஸ்லோகத்திலேயே இந்த மூன்றினையும் நாம் பார்க்கமுடியும். ஹரிகதாம்ருதசாரம் ஞானம் என்றால், குருகள கருணதிந்த ஈ பனிது பேளுவே என்பது வைராக்கியம் எனவும், பரம பகவத்பக்தரு ஆதரதி கேளுவுது என்பது பக்தி ஆகும்.

இந்த மூன்றையும் தனித்தனியாகப் பிரித்துப் பார்ப்பதைவிட இவற்றை ஒன்றாகச் சேர்த்துப் பார்ப்பது நல்லது. ஏனென்றால் இவை ஒன்றுக்கொன்று துணை மற்றும் ஒன்றுக்குள் ஒன்று இருந்து வளர்ந்த வெவ்வேறு வழிகள். ஞானத்தை அறியவேண்டும்; பக்தி வளரவேண்டும். அப்போது வைராக்கியம் வரும். இப்படியான உண்மையான பக்தி மூலம், திடமான வைராக்கிய ஞானத்தை தெரிந்து கொண்டால், ஸ்ரீஹரி-பக்தி விஷயத்தில் எந்தவொரு பிரச்னையும் வருவதில்லை. மனது தெளிந்து ஹரியின் பிம்பம் தெரியும்; அதனால் பக்தி அதிகமாகிறது மற்றும் சிறந்த வைராக்கியம் வருகிறது.

ஞானம் என்றால் என்ன? பக்தி வைராக்கியங்களை சாஸ்திரத்தில் எப்படி சொல்லியிருக்கிறார்கள் என்பதை சிறிது பார்ப்போம். 'ந ஹி ஞானேன சத்ருஷம்' என்று ஞானத்தைவிட வேறொன்றும் அதிகம் இல்லை. அதாவது படைப்பிற்குக் காரணமான ஸ்ரீஹரியே சர்வோத்தமன் என்று அறிவதே ஞானம். அவனின் நட்பே பக்தி, பக்தியினால் முக்தி.

மாஹாத்ம்ய ஞான பூர்வஸ்து சுத்ருட: சர்வோதோதீக: |
ஸ்னேஹோ பக்தித ப்ரோக்த: தயா முக்திர்னபான்யதா || (பாஷ்ய)

இந்த வாக்கியம், ஞான பக்தி வைராக்கியங்களை நிரூபிக்கிறது. ஒவ்வொரு ஜீவனும் மூன்று குணங்களையும் பெற்று, அதற்குத் தகுந்தாற்போல் ஞானத்தைப் பெற்றிருக்கிறான். அது என்னவென்றால், அஞ்ஞானம், சந்தேகம் மற்றும் தவறான ஞானம். இவை ஸ்ரீஹரியின் வழிகாட்டலின்படி நீங்குகின்றன. சந்தேகம் - ஸ்ரீஹரி இருக்கிறானோ இல்லையோ என்னும் அவநம்பிக்கை. இதனால் ஞான, பக்திகளின் திடம் குறைகிறது. தவறான ஞானம் - நானே தேவன் என்று நினைப்பது. இத்தகைய அஞ்ஞானங்கள் நாசமானால் நமக்கு உண்மையான ஞானம் வரும். இந்த அஞ்ஞானத்தை ஸ்ரீஹரி நாசம் செய்யும் விதத்தை தாசர் இப்படியாக விவரிக்கிறார்.

ஐத3வித்3யெக3ளொளகெ3 இஹ நா
கா3தி3க3ளதி4ஷ்டானத3லி லகு1
மீத4வனு க்1ருத்தோ3ல்க1 மொதலாதை3து3 ரூப1க3ள |
தா த்4ரிசி சஜ்ஜனரவித்3யெய
ச்சேதிசுவ தா1மசரிக3ஞா
நாதிக3ள கொ1ட்டவரவர சாதனவ மாடி3சுவ ||

(பஞ்சமகாயக்ஞ சந்தி ஸ்லோகம் 13)

தம, மோஹ, மஹாமோஹ, தாமிஸ்ர, அந்தம்தாமிஸ்ர என்பது ஐந்து தோஷங்கள் / அஞ்ஞானங்கள் ஆகும். இவற்றை ஸ்ரீஹரி, க்ருத்தோல்க முதலான ஐந்து ரூபங்களாலும், வாயுதேவர் நாகாதி ஐந்து ரூபங்களாலும், சாத்விகர்களின் அஞ்ஞானத்தை அழித்து, அவர்களின் சாதனைக்கு வழிவகுக்கிறார். தமோ குணங்களுக்கு அவர்களின் தமோ சாதனையை நடத்துவதற்கு முன்னர், ஞானம் கிடைக்க வேண்டுமெனில், அஞ்ஞானம் போகவேண்டும். ஞானத்தை கொடுப்பவர் வாயுதேவர். அவரே ஜகத்குரு ஆனவர். ஸ்ரீஹரியின் முக்கியமான பிரதிபிம்பரான இவர் மகிழ்ந்தால், ஸ்ரீஹரியும் மகிழ்வார். அப்போதே பக்தர்களுக்கு பக்தி, முக்தி. கலியுகத்தில் கலியின் பிரபாவம் அதிகரித்து, தத்வசூரியன் மறைந்தபோது, சஜ்ஜனர்களைக் காப்பாற்றுவதற்காக, 21 குபாஷ்யங்களை கண்டிக்க, மத்வராக மத்யகேஹ பட்டரிடம் அவதரித்தார்.

க்ஷிதி1யொளகெ3 மணிமந்த1மொத3லா
த3தி1து3ராத்1மரு ஒந்த3தி3க1 விம்
சதி1 கு1பாஷ்யவ ரசிஸே நடுமனெயெம்ப பிராம்மணன |
சதிய ஜடரதொளவத3ரிஸி பா4
ரதிரமண மத்வாபிதானதி
சதுரதச லோக1தொளு மெரெத3ப்ரதி1மகொ3ந்திஸுவே ||
(மங்களாசரண சந்தி ஸ்லோகம் 8)

ஸ்ரீஹரியே சர்வோத்தமன். ஜீவிகள் அவனின் தாசர்கள். தாரதம்ய, பஞ்சபேத, ஜகத் சத்ய, முக்தியிலும் தாரதம்யம் என்று அனைத்து தத்வங்களையும் சரியான ஆதாரங்களுடன் விளக்கி, தத்வஞானத்தை சஜ்ஜனர்களிடம் கொண்டு சேர்த்தார் மத்வர். பின்னர் வந்த தாச சாகித்யத்தின் அனைத்து படைப்புகளும், இவற்றையே அடிப்படையாகக் கொண்டு, சஜ்ஜனர்களுக்கு ஹரிபுரத்தின் வழியைக் காட்டின. தாரதம்ய ஞானத்தினால் ஹரி சர்வோத்தம மற்றும் மற்றவர்களின் நீசத்வம் தெரிகின்றது. இது ஒரு வரிசையாகும். ஒவ்வொரு படிக்கட்டாக ஏறி மோட்சம் என்னும் இறுதிப்படியை எட்டவேண்டும். சைதன்ய சக்தியைக் கொடுத்த ஸ்ரீஹரி, லிங்க தேகத்திற்குள் ஜீவனை அமர்த்தி, இதன் மூலம் அந்த ஜீவனின் வளர்ச்சிக்கு வழி செய்து கொடுத்தார். ஆகையால், அவரை

நன்றியுணர்ச்சியுடன் நினைத்து, நிரந்தரமான பக்தி, அந்த பக்தியினால் விரக்தி, விரக்தியினால் ஞானம், ஞானத்தினால் மறுபடி பக்தி என்று நிரந்தரமாக சாதனை-சக்கரத்தை உருட்டவேண்டும். நோக்கம் நிறைவேறும்வரை இப்படியே இருந்து நடந்துகொள்ள வேண்டும்.

தாரதம்யத்திற்கு ஹரிகதாம்ருதசாரத்தில் தாசர் அதிக முக்கியத்துவம் கொடுத்திருக்கிறார். 8 சந்திகளில் தேவதா தாரதம்யத்தையும், 1 சந்தியில் தைத்ய தாரதம்யத்தையும் விவரித்திருக்கிறார். இந்த தாரதம்யம் என்றால் என்ன? அதன் சிறப்பு என்ன? என்றால் அது சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கும் ஏற்பாடு. படைப்புத் தொழில் துவங்கும் முன்னரே இருக்கும் இந்த ஏற்பாடு, முக்தியிலும் இருக்கிறது. இந்த தாரதம்ய ஞானம் சாதகர்களுக்கு மிகவும் அவசியமானதாகும் ஏனென்றால் இது தெரிந்தாலே முக்தி.

(தொடரும்)

**தற்போது நமது Blogல்**
**தினம் ஒரு பத்யமாக வந்து கொண்டிருப்பது :**
**https://dasa-sahitya.blogspot.com/**

* ஸ்ரீப்ரஸன்ன ஸ்ரீனிவாஸ தாஸர் இயற்றிய - விஷ்ணு சஹஸ்ரநாம பாஷ்ய - கன்னட பத்யங்கள். இதன் அர்த்த விளக்கங்கள் - தமிழில்.
* 1000 நாமங்களுக்கு, (4 வரிகளைக் கொண்ட) 1000 கன்னட பத்யங்களை பாஷ்ய ரூபமாக இயற்றிக் கொடுத்திருக்கிறார் தாஸர்.
* தினமும் 3 பத்யங்களின், தமிழ் விளக்கங்களை நமது மேற்கண்ட blogல் படிக்கலாம்.

**புதிய புத்தகங்கள்**

ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால், பல புதிய புத்தகங்கள் தற்போது வரத் துவங்கியுள்ளன. உங்கள் பிரதிக்கு இன்றே தொடர்பு கொள்ளவும். இத்தகைய அரிய புத்தகங்கள் வெளிவருவதற்கு ஸ்பான்ஸர்களும் தேவை.. முடிந்தவர்கள் உதவலாம். நன்றி. ஹரே ஸ்ரீனிவாஸா.

தொடர்

**ஹரிகதாம்ருதசார மஞ்சரி 360**

**By ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர்**

**156. வ்யாதி4யிம் பீடி3த ஸிஷுவிகெ3 கு3**
**டோத3க3வனெரெதகெ3 ஔஷத3**
**தேது3 குடி3ஸுவ தாயியோபாதி3யலி ஸர்வக்ஞ |**
**பா3த3ராயண ப4குதஜனகெ ப்ர**
**ஸாத3 ரூபகனாகி3 பா4க3வ**
**தாதி3யலி பேளித3ரு த4ர்மாதிக3ளெ ப2லவெந்து3 ||(18-15)**

நோயினால் வாடும் குழந்தைக்கு மருந்து கொடுப்பதற்காக, தாய், முதலில் சர்க்கரையை வாயில் ஊட்டி, பின்னர் கசப்பான மருந்தினை கொடுக்கிறாள். அதைப்போலவே, பாதராயண தேவரானவர், நமக்கு ப்ரஸாத ரூபத்தில் பாகவதாதி கிரந்தத்தில் சொல்லியிருப்பதைப் போல நடந்து கொள்ளுங்கள் என்று சொல்லி, அதுவே தர்மம், அதையே பின்பற்றுங்கள். அப்போதே தக்க பலன்கள் கிடைக்கும் என்று கூறுகிறார் ஸ்ரீதாஸர்.

**157. கெஸரக4டக3ல மாடி3 பே3ஸிகெ3**
**பி3ஸிலொளிட்டொ ணகி3ஸித3ரது3 க4ன**
**ரஸவ தும்ப3லு ப3ஹுதெ3 ஸர்வ ஸ்வதந்த்ர தானெம்ப3**
**பஷுப நரனேனெனு மாள்ப அ**
**நஷன தா3ன ஸ்னான கர்மக3**
**ளொஸரிபோபுவு ப3ரிதெ3 தே3ஹாயாஸவனெ கொட்டு ||(18-17)**

பச்சைப் பானையை செய்து, அதனை வெயிலில் காய வைத்து, அதில் தண்ணீரை ஊற்றி வைக்க முடியுமா? (முடியாது). அந்த தண்ணீர் வெளியேறிவிடும். அதைப் போல, இந்த தேகத்திலிருந்து செய்த ஸ்னான, ஜப, தப, ஸாதனங்கள் அனைத்தும், நானே ஸ்வ தந்த்ரமாக செய்கிறேன் என்று செய்தால், அந்த புண்ணிய கர்மங்கள் அனைத்தும் அந்த பானைத் தண்ணீர் போல, வெளியேறிவிடும்.

**158. பூ4தலாதி4பனாக்ஞ தா4ரக**
**தூ3தரிகெ3 ஸேவானுஸாரதி3**
**வேதனவ கொட்டவர ஸந்தோஷ படிஸுவ தெரதி3 |**

**மாதரிஷ்வப்ரியனு பரம**
**ப்ரீதிபூர்வக ஸத்கு3ணங்க3ள**
**கா3த2கர ஸந்தோஷ ப3டி3ஸுவனிஹ பரங்க3ளலி ||(18-26)**

மனிதர்கள் ஒரு இடத்தில் வேலை செய்யும்போது, எஜமானன் அவர்களுக்கு சம்பளம் ஆகியவற்றை கொடுத்து காக்கிறான். அது அவர்களுக்கு மகிழ்ச்சியை கொடுக்கிறது. அதைப்போல, முக்ய ப்ராணாந்தர்கதனான ஸ்ரீஹரியின் குணங்களை எப்போதும் காதகர – ஸ்தோத்திரம் செய்பவர்களுக்கு இஹ/பர ஸுகங்களைக் கொடுத்து காக்கிறான்.

**159. தீ3ப தி3வத3லி கண்ட3ராத3டெ3**
**லோபகை3ஸுவராக்ஷண ஹரி ஸ**
**மீபத3ல்லிரெ நந்த3னாம ஸுனந்த3வெனிஸுவுது |**
**ஔபசாரிகவல்ல ஸுஜனர**
**பாபகர்மவு புண்யவெனிபுது3**
**பாபிக3ள ஸத்புண்யகர்மவு பாபவெனிஸுவுது3 ||(18-27)**

எவ்வித அலங்காரங்களும் இன்றி, ஸ்ரீஜகன்னாததாஸர், நேரடியாக ஒரு விஷயத்தை சொல்கிறார். அது என்னவென்றால், பகலில் சூரிய ஒளி பிரகாசமாக இருக்கிறது. ஆனால், அதே ஒளி, இரவில் இருப்ப தில்லை. தீபத்தின் உதவி காலையில் தேவைப்படுவதில்லை. இரவில் மட்டுமே தீபம் தேவைப்படுகிறது. அது போலவே, பகவந்தன் நம் அருகிலேயே இருந்து, ஸஜ்ஜனர்களின் பாவங்களை பாவிகளுக்கு பகிர்ந்து கொடுத்து, துர்ஜனர்களின் புண்ணியங்களை ஸஜ்ஜனர் களுக்கு பகிர்ந்து கொடுக்கிறான். இது ஒரு ரகசியமான விஷயம் ஆகும். ஒரு தக்க குருவின் மூலமாகவே இதனை அறிய வேண்டும்.

**160. காரக க்ரிய த்3ரவ்ய விப்4ரம**
**மூருவித4 ஜீவரிகெ3 ப3ஹு ஸம்**
**ஸாரகி3வு காரணவெனிஸுவவு எல்லகாலத3லி |**
**தூ3ர ஓடி3ஸி ப்4ராமகத்ரய**
**மாரிகொ3ளகா3க3த3லெ ஸர்வா**
**தா4ரகன சிந்திஸுதலிரு ஸர்வத்ர மரெயத3லெ ||(16-29)**

மூன்று விதமான ப்ரமைகள், மனிதனை சுற்றிக் கொண்டு, நம்மை மூன்று வித குணம் உள்ளவராகி ஆக்கி, யமபுரத்திற்கு அழைத்துக் கொண்டு செல்ல முயற்சி செய்கின்றன. ஆனால், ஸர்வாதாரகனான ஸ்ரீஹரியை

ஸர்வோத்தம என்று மறக்காமல் சிந்தித்துக் கொண்டிருந்தால், இந்த ஆறிலிருந்து விடுதலை என்பது சாத்தியம். ஆகையால், விடாமல் நினைப்பாயாக என்று ஆணையிடுகிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

1. காரக ப்ரமை - இந்திரியங்கள் என்னுடைய அதீனத்தில் உள்ளன. 2. க்ரியா ப்ரமை - அனைத்தும் என்னாலேயே ஆகின்றன. 3. த்ரவ்ய ப்ரமை - இந்த சரீரம் என்னுடையதே. இந்த சம்பாதனை செய்தவை அனைத்தும் என்னுடையதே என்னும் இந்த மூன்று வித ப்ரமை. இதே போல, ப்ராமக த்ரயங்கள்: 1. இந்த தேகம் என்னுடையதே என்னும் ப்ரமை 2. இந்த மனைவி / கணவன் என்னுடையவன். இந்த மக்கள் என்னுடையவர்கள் என்னும் ப்ரமை 3. நானே கர்த்ரு என்னும் 3 வித ப்ரமை நம்மை அந்தம்தமஸ்ஸிற்கு அழைத்துக் கொண்டு போகின்றன என்று எச்சரிக்கிறார் ஸ்ரீதாஸர்.

**161. யுக்திமாதுக3ளல்ல ஸ்ருதி ஸ்ம்ரு**
**த்யுக்த மாதுக3ளிவு விசாரிஸெ**
**முக்திகி3வு ஸோபானவெனிபவு ப்ரதிபதீபத3வு ।**
**ப4க்திபூர்வக படி2ஸுவவரிகெ3**
**வ்யக்திகொடு3வ ஸ்வரூபஸுக2 ப்ரவி**
**வித்தரனு மாடு3வனு ப4வப4யதி3ந்த3 ப4ஹுரூப ।।(16-31)**

இந்த பத்யங்கள் ஏதோவொரு யுக்தியினால் சொல்லப்பட்ட பேச்சுக்கள் அல்ல. ஸ்ருதி ஸ்ம்ருதி சம்மதமானவை. இந்த வழியில் நடந்தால் முக்தி கிடைக்கின்றன. இதனை பக்தியுடன் படித்தால், நம்மை ஸம்ஸார என்னும் கடலிலிருந்து தாண்டச் செய்து, ஸ்வரூப சுகத்தை கொடுக்கிறான். நம் தேகத்திலேயே இருக்கும் அவனின் ரூபத்தை நிச்சயமாக காட்டிக் கொடுக்கிறான் என்று ஸ்ரீதாஸர் சொல்கிறார்.

**162. பா4ஸ்கரன மண்ட3லவ கண்டு3 ந**
**மஸ்கரிஸி மோதி3ஸதெ3 த்3வேஷதி3**
**தஸ்கரனு நிந்தி3ஸலு குந்த3ஹுதெ3 தி3வாகரகெ3 ।**
**ஸம்ஸ்க்ருத வித3ல்லெந்து3 குஹக தி**
**ரஸ்கரிஸலேனஹுது ப4க்திபு**
**ரஸ்கரதி3 கேள்வரிகெ3 ஒலிவனு புஷ்கராக்ஷஸதா3 ।।(16-35)**

இந்த காவியம் சம்ஸ்க்ருதம் அல்ல. கன்னட மொழியில் இருப்பது என்று யாராவது கூறினால், எதுவும் கவலையில்லை. உதாரணம்: சூரியனைப் பார்த்து திருடன் சாபம் கொடுத்தால், அதனால் சூரியனுக்கு ஏதாவது தொந்தரவு வருமா?. வராது. அதைப் போல, ப்ராக்ருத மொழி என்று கீழான புத்தியினால் இதனை புறக்கணிக்காமல், இந்த கிரந்த அத்யயனத்தை செய்யுங்கள், அப்போதே ஸ்ரீஹரி எவ்வித குறைகளும் இல்லாமல் உங்களை அருள்வான் என்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

**163. வேத[3]சாஸ்திர ஸயுக்தி க்[3]ரந்த2க[3]**
**ளோதி[3] கேள்த[3]வனல்ல ஸந்தத**
**ஸாது[4]க[3]ள ஸஹவாஸ ஸல்லாபக[3]ளு மொத[3]லில்ல |**
**மோத[3] தீர்த்தா[2]ர்யர மதானுக[3]**
**ராத[3]வர கருணத[3]லி பேள்தெ[3] ர**
**மாத[4]வ ஜகன்னாத[2]விட்டல திளிஸிது[3]த[3]ரொளகெ[3] ||(16-37)**

ஸ்ரீஜகன்னாத தாஸர், இந்த பத்யத்தில் தமது கர்வத்தை விலக்கிக் கொண்டு, நான் வேத சாஸ்திர அத்யயனம் செய்தவன் அல்ல. புராணாதி கதைகளை கேட்டவன் அல்ல. ஸாது ஸஜ்ஜனர்களின் சகவாசம் இல்லாமல் இருந்தேன். ஆனால், மத்வரின் மதத்தின் பிறந்ததற்கு, அவருடைய கருணையால் இந்த கிரந்தத்தை இயற்றியிருக்கிறேன். பிம்பனான ஸ்ரீஹரி ஜகன்னாத விட்டலனே கூறியதை அப்படியே எழுதியிருக்கிறேன் - என்கிறார். இது ஒரு விதமான ஆத்ம நிவேதனை எனலாம்.

மானவி தாஸரின் சிஷ்யரான ஸ்ரீப்ராணேஷ தாஸர் கூட, தம் குருகள் இயற்றிய கிரந்தத்திற்கு தாஸராக இருந்து, எப்போதும் மனனம், சிந்தனை ஆகியவற்றை செய்து வந்தார் என்பது லிங்கஸுகூர் மக்கள் அனைவருக்கும் தெரிந்த விஷயம் ஆகும். இவருடைய இன்னொரு சிஷ்யர்: ஸ்ரீஷ விட்டல தாஸர். இவருக்கும் கூட ப்ராணேஷ தாஸரைப் போலவே, ஸ்ரீஜகன்னாத தாஸரிடம் அத்யந்த பக்தியை கொண்டிருந்தார். ஸ்ரீஷ விட்டல தாஸரின் சிஷ்யரான குருஸ்ரீஷ விட்டல தாஸர், கம்ப்லி என்னும் ஊரைச் சேர்ந்தவர். இவர், தண்ணீரையே நெய்யாக மாற்றியவர். இவர், பரம்பரையாக வந்த ஹரிகதாம்ருதஸாரத்தை, தன் கைப்பட எழுதி 'ஷுத்த பாடமாக' எழுதி வைத்திருந்தார் என்று சொல்கிறார்கள். இவருடைய பிரதியை வைத்துக் கொண்டே, பஞ்சரத்ன ப்ரகாஷிகா நிறுவனத்தார் (ஸ்ரீகோரேபாள ஹனுமந்தராயர்) ஹரிதகருதாம்ருதஸார கிரந்தத்தை வெளியிட்டனர். (தொடரும்)

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

**துருடகி திம்மம்ம (1728-1823)**

ஹரிதாசினியர்களில், துருடகி திம்மம்மா, திருப்பதி திம்மப்பனின் பரம பக்தை. ராயசூர் ஜில்லா லிங்கஸுகூர் தாலூக்கின் துருடகி கிராமத்தில், வேத சாஸ்திர பண்டிதரான ஸ்ரீ நரசிம்மா என்பவருக்கு 1728ம் ஆண்டில் மகளாகப் பிறந்தார் திம்மம்மா. ஸ்ரீ நரசிம்மன், திருமலை திம்மப்பனின் பக்தரானதால், மகளுக்கு திம்மம்மா என்றே பெயர் வைத்தார். தந்தையிடமிருந்து புராணிக மற்றும் தார்மிக கிரந்தங்களின் பரிச்சயங்களைப் பெற்று, திம்மம்மா சிறந்த தெய்வ பக்தர் ஆனார். அன்றைய வழக்கப்படி திம்மம்மாவிற்கு எட்டாம் வயதில் திருமணம் ஆயிற்று. 10 வயதில் விதவையும் ஆனார். இதனால் மிகவும் கவலைப்பட்ட பெற்றோர், மகளை திம்மப்பனின் தரிசனத்திற்காக அடிக்கடி திருப்பதிக்கு அழைத்துச் சென்றனர். காலகிரமத்தில் திம்மம்மாவின் மனம், ஆத்யாத்மத்தின் பக்கம் திரும்பியது.

ஒரு முறை திருப்பதி திம்மப்பனின் தரிசனத்திற்கு அனைவரும் சென்றிருந்தபோது, ஹனுமந்தனின் சாட்சாத்காரத்தைப் பெற்றிருந்த ஸ்ரீகிரியப்பா அவரின் சந்திப்பு ஆயிற்று. பின் திடீரென்று திம்மம்மாவின் பெற்றோர் இவ்வுலகை நீத்தனர். அடுத்து, திம்மம்மா, துருடகியிலிருந்து ஹொன்னூர் பிராணதேவரின் ஆலயத்திற்கு வந்து அங்கு அருகில் தங்கினார். அங்கு ப்ராணதேவரின் சேவையை செய்து கொண்டிருந்தார் ஆகையால், வாக்ஸித்தி பெற்றார் திம்மம்மா. இவருடைய தரிசனத்தைப் பெறுவதற்காகவும், பிரவசனங்களைக் கேட்பதற்காகவும், மக்கள் திரள்திரளாக வந்து கொண்டிருந்தனர். திம்மம்மாவின் வாழ்க்கையில் நடந்து வந்த அதிசயங்களால், மக்கள் இவரை வாழும் தேவதை என்றே அழைத்தனர்.

மாருதி ஆலயத்தில் வாழ்க்கையை நடத்தி வந்த திம்மம்மா, அருகில் ஒரு கோஷாலையை நிர்மாணித்து, ஏழை குழந்தைகளுக்கு பால் கொடுக்கும் திட்டத்தை துவக்கினார். சமூக சேவையிலும் ஈடுபாடு கொண்டிருந்த திம்மம்மா, 'ஹோனூரேஷ' என்னும் அங்கிதத்தில் பல்வேறு பக்தி கீர்த்தனைகளை இயற்றினார். இவற்றில் ஒரேயொரு கீர்த்தனை மட்டும் இப்போது கிடைத்திருக்கிறது. இந்தப் பாடலில், வாழ்க்கை சுகமாக இருக்க

வேண்டுமென்றால், ஸ்ரீனிவாஸனின் ஸ்மரணை அவசியம் என்னும் விஷயத்தை தெளிவாக கூறியிருக்கிறார்.

**ஸ்ரீனிவாஸனின் ஸ்துதி**

ஸ்ரீனிவாஸன நெனெயிரோ ஸாயுவ தனக
நிஸ்சிந்தவாகி$^{3}$ நிமகெ$^{3}$ ஸிகு$^{3}$வுது$^{3}$ நாக$^{1}$
ஸம்ஸாரத$^{3}$ ஜஞ்ஞாட எல்லிய தனக
நன்னவரெம்பு$^{3}$து$^{3}$ ஸம்பத்து இருவ தனக
ஸத்யவு உளியுவுதா$^{3}$ கொனெ தனக
ப$^{2}$லமாத்ர ஸிகு$^{3}$வுது$^{3}$ அனுக்$^{3}$ரஹத$^{3}$ ப$^{3}$ளிக
ப$^{4}$க்தியு குந்த$^{3}$து$^{3}$ ஸ்ரத்$^{3}$தெ$^{4}$ இருவ தனக
ஹொனூரேஶன த$^{3}$யவிரலி தே$^{3}$ஹவிருவ தனக

பிராணதேவரின் கோயிலின் அருகில் இருக்கும் அந்த கிராமத்தின் எல்லையில் தன் தேகத்தை எரிக்க வேண்டும் என்றும், அங்கு வளரும் அரச மரமே தன் வாழ்க்கையின் செய்தி என்று சொல்லியிருந்தார் திம்மம்மா. அவர் கூறியதைப் போலவே, அவரை தகனம் செய்த இடத்தில், அரச மரம் ஒன்று வளர்ந்தது. அதன் அருகில் பிராணதேவரின் பிரதிஷ்டாபனையும் ஆகி, ஒவ்வொரு ஆண்டும் அங்கு திம்மம்மாவின் ஆராதனை சிறப்பாக நடந்து வருகிறது.

அரச மரம், மனிதர்களுக்கு நிழல், பசு பறவைகளுக்கு ஆதரவையும் அளிக்கிறது. மனிதர்களின் ஆரோக்கியத்திற்கும் அந்த மரம் பல்வேறு விதங்களில் உதவியாக இருக்கிறது. திம்மம்மாவின் சரீரத்தை தகனம் செய்த இடத்தில் வளர்ந்திருக்கும் அரச மரம் - நாம் அரச மரத்தினைப் போல, பரோபகாரிகளாக இருக்க வேண்டும். உடன், ஆத்யாத்மிக ஸாதனையினால் பகவந்தனின் அருளுக்கு பாத்திரர் ஆகவேண்டும்' என்னும் செய்தியை விளக்குகிறது.

ஸ்ரீஹரியின் பரம பக்தளான துருடகி திம்மம்மா அவருக்கு நம் அனந்த நமஸ்காரங்களை செலுத்துவோம்.

(அடுத்த இதழில் வேறொரு ஹரிதாஸினியைப் பற்றி பார்ப்போம்).

***

தொடர்

## ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர்

டாக்டர். N.G.விஜயலட்சுமி.

அதைப்போலவே கலியின் துஷ்ட குணங்களையும் ஹரிகதாம்ருத ஸாரத்தில் இவ்வாறு வர்ணிக்கின்றனர்.

இவன போலுவ பாபிஜீவரு
புவன மூரரொளில்ல நோடலு
நவவித த்வேஷகளிகாகரனெனிஸி கொளுதிப்ப |
பவரதொளு பங்காரதொளு நட
யுவதி த்யூதா பேய ம்ருஷதலி
கவிஸி மோஹிஸி கெடிஸுவனு எந்தரிது த்யஜிஸுவுது ||(20-20)

நான்கு வித மோட்சங்கள் இருக்கின்றன என்று சொல்கின்றனர். ஸாயுஜ்ய, ஸாலோக்ய, ஸாமீப்ய மற்றும் ஸாரூப்ய. ஐந்தாம் முக்தியும் இருக்கிறது என்கின்றனர். அது ஸாரிஷ்டி. இது பிரம்மதேவருக்கு மட்டும் சேர்ந்ததாகும். ஆக, முக்த ஜீவர்களுக்கு நான்கு வித முக்திகளே இருக்கின்றன. லிங்க தேகம் பங்கம் ஆனபின், அவரவரக்ளின் யோக்யதைக்கேற்ப முக்தி கிடைக்கிறது.

ஸாயுஜ்ய ஸாலோக்ய ஸாமீப ஸாரூப்ய ஈ யந்த
சதுர்வித முக்தியொளு |
ஹேய லிங்க தேஹ போத மேலவரவர
ஸ்வயோக்யதெயிந்தொப்புவரு கட || (வைகுண்ட வர்ணனெ பத்ய 107)

ஸாயுஜ்ய மிகவும் சிறந்ததான மோட்சம் என்று சொல்கின்றனர். அது தேவதைகளுக்கு மட்டுமே சேர்ந்தது. ஸ்ரீகாந்தனின் அங்கத்தை தொட்டுக் கொண்டிருப்பதே ஸாயுஜ்ய முக்தி. மூத்த தேவதைகளே ஸாயுஜ்யத்திற்கு அருகதை உள்ளவர்கள் என்கிறார் ஸ்ரீவாதிராஜர். முக்தரான பிரம்மதேவரே முதலான மூத்த (உயர்ந்த) தாத்விக தேவதைகள் வைக்குண்டத்தில் வாஸுதேவனின் அங்காங்கங்களில் அவரவர்களின் யோக்யதைக்கேற்ப ஸ்தானங்களை பெறுகின்றனர். அந்த தேவனின் செயல்களைக் கண்டு மற்ற முக்தர்களைவிட அதிக ஆனந்தத்தை பெறுகின்றனர். பவிஷ்யோத்தர புராணங்களில் இந்த விஷயங்கள் வர்ணிக்கப்பட்டுள்ளது என்று சொல்கிறார்கள்.

இவர்கள் அனைவரும் ஸ்ரீஹரியின் கைகளிலிருந்தே எடுத்துக் கொள்கிறார்கள். அவனின் கண்களாலேயே பார்க்கிறார்கள். அவனின் காலினாலேயே நடக்கிறார்கள். இந்த விதமான் நிலை, ஸாயுஜ்ய முக்தர்களுக்கு மட்டும் ஸ்ரீஹரியின் விசேஷ கருணையால் மற்றும் விசேஷ உருவத்தினால் கிடைக்கின்றன.

ஸர்வோத்தமனான நாராயணனின் தேகத்தை அடைந்து, ஸாயுஜ்ய முக்தர்கள் அங்கு இருக்கும் போகங்களையும் அனுபவிக்கின்றனர். அதாவது, அவர்களே விஷ்ணு ஆவதில்லை. விஷ்ணுவிற்கென்று இருப்பதான லக்ஷ்ம்யாத்மக வஸ்துகளையும் அவர்கள் என்றும் பயன்படுத்துவதில்லை. தம் ஸ்வரூப யோக்யமான ஆனந்தத்தை மட்டும் அவர்கள் அடைகின்றனர். அவர்கள் அனைவரும் விஷ்ணுவின் பக்தர்கள். தாஸர்கள். பரமாத்ம மற்றும் ஜீவர்களின் நடுவே பேதம் இருந்தே இருக்கிறது. ஸ்ரீஹரியின் அங்கங்களில் கதியாக இருப்பதே தேவதைகளுக்கு கிடைப்பதான ஸாயுஜ்ய முக்தி. ஸாயுஜ்ய என்றால், பரபிரம்மனில் ஐக்யம் அடைவது என்று பலர் சொல்வதுண்டு. ஆனால், வ்யாகரண சாஸ்திரத்தின்படி, ஸாயுஜ்ய சொல்லில் இருக்கும் ஸாஜ் என்னும் வேர்ச்சொல்லுக்கு யோக என்று அர்த்தம். யோக என்றால் ஸம்பந்தம். அதாவது ஒன்று, இன்னொன்றினை சேர்ந்திருப்பது ஆகும்.

ஸ்ருஷ்டிக்கு வந்தபோது எந்தெந்த தேவதைகள், ஸ்ரீஹரியின் எந்தெந்த அங்கங்களிலிருந்து வந்தனரோ, முக்தர்கள் ஆனபின், அந்தந்த தேவதைகள் அதே அதே அங்கங்களை போய் சேர்கின்றனர் என்று சொல்கிறார்கள். உதாரணத்திற்கு, ஸ்ருஷ்டிக்கு வந்தபோது சூர்யாதி தத்வாபிமானி தேவதைகள், ஸ்ரீஹரியின் கண்களில் பிரந்து, அங்கேயே இருந்து, அவற்றையே உபாஸனை செய்து, முக்தர்கள் ஆன பின், அதே கண்களில் நிலைத்திருக்கின்றனர். அதைப்போலவே கைகள், பாதங்கள் ஆகியவை.

மற்றவர்களுக்கு, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப ஸாலோக்யாதிகள். அடுத்தது ஸாமீப்ய. அடுத்தது ஸாரூப்ய. இந்த முறையில், லிங்க பங்க அடைந்த முக்தர்களுக்கு கிடைக்கின்றன என்று வைகுண்ட வர்ணனை, முதல் ஸந்தியான மோட்ச ஸந்தியில் ஸ்ரீவாதிராஜர் விளக்கியிருக்கிறார்.

ஸாலோக்ய ஹரிய லோகதொளகிப்புது ஆ லோகத ஹத்திர ஸூத்த முத்த

பால ஸாகரதல்லி ஸுகிஸுவ ஜீவர பாலிகெ ஸாமீப்ய முக்டி காணிரோ || (வைகுண்ட வர்ணனெ, 111)

ஸ்ரீஹரியின் உலகங்களில் அங்கங்கு இருந்து கொண்டு எப்போதும் பகவந்தனின் தரிசனாதிகளால் மகிழ்ச்சி அடைவது ஸாலோக்ய முக்தி. ஸாலோக்ய என்றால், முக்தனும் மற்றும் ஹரியும் ஒரே உலகத்தில் இருப்பது. ஸாமீப்ய என்றால், விஷ்ணு உலகத்தின் அருகில் இருந்து, மகிழ்ச்சி கொள்வது என்றும் ஒரு அர்த்தம் இருக்கிறது. ஷ்வேதத்வீபத்தின் அக்கம்பக்கத்து பாற்கடலில், அனந்தாஸனத்தின் அக்கம்பக்க இடங்களில் மற்றும் வைகுண்டத்தின் அக்கம்பக்க உலகங்களில் சில முக்தர்கள் இருந்து, ஆனந்தத்தை அனுபவிக்கின்றனர். இதுவே அந்த முக்தர்களுக்கான ஸாமீப்ய முக்தி. சில ஆராய்ச்சியாளர்கள் ஸாமீப்ய என்றால், விஷ்ணு உலகங்களில், பகவந்தனின் அருகில் இருப்பது என்று சொல்கின்றனர். ஆனால், பகவந்தனின் அத:புர என்றால், அயோத்யை. இங்கு, அருகில் அல்லது தூரத்தில் என்னும் பேச்சே இல்லை. ஆகையால், பகவந்தனின் அந்தப்புரத்தின் வெளியே, அருகிலேயே இருப்பது ஸாமீப்ய என்று அறிய வேண்டும்.

ஸ்ரீவத்ஸ கௌஸ்துப4 ஹொரதாகி3 ஹரியந்தெ
ஆவாக3 கரசதுஷ்டயத3ல்லி
பாவன சக்ராதி3க3ள த4ரிஸி கொண்டா3டு3வ முக்த
ஜீவரிகெ3 ஸாரூப்ய ஸிரி காணிரோ ||6

ஸாரூப்யவெம்பு3 ஸகலரிகு3 ஸரியெந்து3
மூரு முகுதியிந்த3ஹொரகி3ப்பரு |
ஸாரூப்ய முக்தரெந்து3 பிரியரு கரெவரு
பே3ரெ பே3ரவரிகி3ரவு க3ட3 ||7

பகவந்தனுக்கு மட்டுமே உரித்தான ஸ்ரீவத்ஸ, கௌஸ்துப, கருட வாகன, சேஷஷயன ஆகியவற்றை விட்டு, சங்கு சக்ரங்கள், நீலாம்பர, பீதாம்பர ஆகியவற்றை தரித்து, ஹரி ஸேவா தரிசனத்தினால் மகிழ்ச்சியை அனுபவித்தவாறு, ஹரியின் ஸாரூப்யத்தை அடைந்திருப்பதே கடைசியான ஸாரூப்ய முக்தி. ஸாரூப்ய என்பது அனைத்து முக்தர்களும் உண்டு என்று சொல்கின்றனர். அதாவது, ஸ்ரீமன் நாராயணனைப் போல சதுர்புஜங்களை கொண்டிருக்கின்றனர் மற்றும்

அவற்றில் சங்கு, சக்ர, கதை மற்றும் பத்மங்களை கொண்டிருக்கின்றனர். ஸாரூப்ய முக்தி கொண்டிருப்பவர்கள், முதல் மூன்று வித முக்தி, ஸாயுஜ்ய, ஸாலோக்ய மற்றும் ஸாமீப்யத்திலிருந்து வெளியே இருக்கின்றனர். ஸத்யலோகாதிபதிகளிலும் கூட ஸாரூப்ய முக்தர்கள் இருக்கின்றனர் என்று சொல்கிறார்.

இவ்வாறாக, ஸ்ரீஹரி, ஜீவர்களின் யோக்யதைகளுக்கேற்ப, ஸாயுஜ்ய, ஸாலோக்ய, ஸாமீப்ய மற்றும் ஸாரூப்யாதி ஸ்தானஙக்ளில் அவர்களை வைத்து மகிழ்ச்சிப்படுத்துகிறான்.

இவர்களில் இன்னொரு விசேஷம் இருக்கிறது. பிரம்மாதி தத்வாபிமானி தேவதைகள் ஸாயுஜ்யாதி நான்கு வித முக்தி சுகத்தை அனுபவிக்கின்றனர். அதாத்விக தேவதைகள் என்றால், கர்மஜ தேவதைகள், ஸாயுஜ்ய முக்தியை விட்டு மற்ற மூன்று முக்திகளின் ஆனந்தத்தை அனுபவிக்கின்றனர். கர்மஜ தேவதைகளைவிட கீழான தேவதைகள், ஸாலோக்ய மற்றும் ஸாரூப்ய முக்தி சுகத்தை அனுபவிக்கின்றனர். மற்ற தேவதைகள் சதுர்புஜத்தைக் கொண்டு, ஸாரூப்ய முக்தி சுகத்தை மட்டும் அனுபவிக்கின்றனர்.

ஸ்ரீகுருபுரந்தர தாஸர், தம் ஒரு ஸுளாதியில் இந்த நான்கு மற்றும் இன்னொரு - மொத்தம் ஐந்து வித முக்திகளைப் பற்றி இவ்வாறு கூறியிருக்கிறார்.

ஸாயுஜ்ய ஸாலோக்ய ஸாமீப்ய ஸாரூப்ய ஸாரிஷ்டியங்களு
யோக்ய ஜீவரிகெ ஆ லோகதலிப்புது |
ஸாலோக்யவெம்புது பட்டணத ஸமீபதல்லிப்புது
ஸாமீப்யவெம்புது ஷங்க சக்ர கதெ பத்துமதரராகி ஸர்வரு |
ஸாரூப்யவெம்புது முக்தி ஸமவு
ஹரியு வாயுகளல்லி தத்வாபிமானி தேவதெகளிகெ
ஸாயுஜ்யவெம்ப முகுதியு ஹரி ஸர்வாங்கதி இப்புது சதுர்முககெ |
ஸாரிஷ்டி எம்புது பஞ்ச வித முகுதி எம்புது
ரிஷி மனுஜோத்தமரு சதுர்முகனிந்த கூடி
ஸ்ரீவாஸுதேவ ஷ்வேதத்வீபவாச ஸந்தருஷனதிந்த
இத்தாவரககள பிட்டு ஸமுதாயதிந்த க்ரமபாகவாகி
சதுர்முகனிந்த நாரத பரியந்த இப்ப அவரகவனீகெ |
முகுதராதரு மனுஜோத்தமரிந்த மொதலாகி த்ருண ஜீவரிந்த கடெயாகி
ஜீவாச்சாதகவெந்து பேரிப்புது |

ஜீவாச்சாதகவனு ஸம்ஹரிஸெ பரமாச்சாதக கடெ கடெகொத்தி முகுதர மாடுவெ |
அனாதிகாலதி முகுதிதாயக குருபுரந்தர விட்டல ஆலோகதல்லிப்புது ||42

ஸ்ரீமோகனதாஸர் தமது கோலு ஹாடு கிருதியில் இந்த ஐந்து வித முக்தியைப் பற்றி இவ்வாறு கூறியிருக்கிறார்.

ஸாரூப்ய ஸாலோக்ய ஸாமீப்ய ஸாயுஜ்ய
ஸாரிஷ்டி பஞ்சவித முக்தி கோலெ |
ஸாரிஷ்டி எம்போது விரிஞ்சியொப்பகெ ஈரெரடு
முக்தி இதரரிகெ கோலெ ||113 (தொடரும்)

***

தொடர்

## ஹரிதாஸ ஸாகித்ய ஸார

**திரு ஜி. வரதராஜ ராவ்**

### ஹரிதாஸ ஸாகித்யத்தின் பொற்காலம்

பாடித மாவு பல்லவிஸிது, பிஸிலு பெளுதிங்களாயிது, ஹாவு ந்யாவளவாயிது, தாவானள தம்பாயிது - என்று விதம்விதமாக வர்ணிக்கிறார். ஸ்வாமியின் க்ருபா கடாக்ஷத்தினால் அப்ரியமான வஸ்துகளும் ப்ரியமானது என்ற பிறகு, அது ஒரு அற்புதமான மாற்றமே ஆகும். ஸ்ரீகிருஷ்ணன் ஓடாடிய வ்ருந்தாவனம் என்றால் ஸ்ரீவ்யாஸராஜருக்கு மிகவும் இஷ்டம். கோப, கோபியர் என்றால் எங்கும் இல்லாத அக்கறை. கோபியர்களின் மகிழ்ச்சி, பக்தி, விருப்பங்களை விதம்விதமாக வர்ணிக்கிறார். வ்ருந்தாவனத்திற்கு முன் வந்திருக்கும் அந்த கோபியர்கள் தங்களுக்குள் பேசிக்கொள்வதை மிகவும் விளக்கமாக வர்ணிக்கிறார். கிருஷ்ணனின் வேணுகானத்திற்கு செடி, கொடிகள் மயங்கின, திடமான மலையே கரைந்து போனது என்னும் கற்பனை அற்புதமானதாகும்.

ஸ்ரீகிருஷ்ணன் தரித்திருக்கும் வனமாலையின் கிரணங்களின் ஒளி வானவில் எனப்பட்டால், அவனின் பீதாம்பரத்தின் ஒளி மின்னலைப் போல ஒளிர்கிறதாம். மதுரமான குழல் ஓசை, கர்ஜனை போல ஒலிக்கிறதாம். நீலமேகஷ்யாம என்னும் பெயருக்குத் தக்கவாறு, அந்த

பரமாத்மனையே மேகம் என்று நினைத்து, ஜாதக பட்சி நடனமாடியது என்பது, ஸ்ரீவ்யாஸராயரின் வர்ணனை ஆகும்.

இப்படியாக ஸ்ரீவ்யாஸராஜரின் கன்னட கிருதிகள் மிகவும் மகிழ்ச்சியைக் கொடுத்து, ஸாகித்யத்தின் அற்புத உதாரணங்களாக இருக்கின்றன. தமது சம்ஸ்கிருத கிரந்தங்களால் ஸ்ரீவ்யாஸராஜர், சாஸ்திர உலகில் எவ்வளவு உயரத்தை தொட்டாரோ, கன்னட கிருதிகளால் ஹரிதாஸ ஸாகித்ய க்ஷேத்திரத்திலும் அவ்வளவே பெருமையைப் பெற்றார் என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை.

ஸ்ரீவ்யாஸராஜர், தாம் மட்டும் மேம்பட்டால் போதும் என்று நினைத்தவர் அல்ல. தம் குருகளான ஸ்ரீபாதராஜர் துவக்கி வைத்த இந்த கீர்த்தன கைங்கர்யத்திற்கு ஒரு தக்க ஏற்பாட்டினை செய்ய வேண்டும் என்று நிச்சயித்து, ஹரிதாஸரின் ஒரு பரம்பரையையே நிர்மாணித்தார். ஏனெனில், ஸ்ரீபுரந்தரதாஸர், ஸ்ரீகனகதாஸர் முதலான புகழ்பெற்ற ஹரிதாஸர்கள், ஸ்ரீவ்யாஸராயரின் அருளுக்கு பாத்திரராகி, இந்த சேவையை மேற்கொண்டனர் என்பதற்கு பிரத்யட்சமான மற்றும் பரோக்ஷமான பிரமாணங்கள் உள்ளன.

ஸ்ரீவ்யாஸராயரிடமிருந்து 'புரந்தரவிட்டலா' என்னும் அங்கிதத்தை தான் பெற்றதாக ஸ்ரீபுரந்தரதாஸர், தமது குருகளைப் பற்றிய ஒரு ஸுளாதியில் தெளிவாக தெரிவித்துள்ளார். ஸ்ரீவ்யாஸராயரின் சரண தரிசனத்தால் தாம் மற்றும் தம் குலமே பவித்ரம் ஆனதோடு மட்டுமல்லாமல், அதன் மூலம் 'ஸ்ரீஷன்ன பஜிஸுவுதகதிகாரி நானாதே' என்று ஆணித்தரமாக கூறியுள்ளார். இந்த ஸுளாதியில் ஸ்ரீதாஸர், ஸ்ரீவ்யாஸராயரின் மகிமையை மனப்பூர்வமாக கொண்டாடி, கடைசியில் 'குருவியாஸராயர சரணவெனகெ கதி, புரந்தர விட்டலன அரிதெ இவரிந்த' என்று சொல்லி, தன்யர் ஆகியிருக்கிறார்.

இதே ஸ்ரீவ்யாஸராஜர், ஸ்ரீகனகதாஸரை சிஷ்யராக ஏற்றுக்கொண்டு, அவர்மேல் தம் அபாரமான நம்பிக்கையை வைக்க, அப்போது அதனை சகிக்க முடியாத சில சிஷ்யர்கள் எப்படி நடந்து கொண்டார்கள் என்பதை ஸ்ரீபுரந்தரதாஸர் தமது ஒரு கீர்த்தனையில் சொல்லியிருக்கிறார். ஸ்ரீவ்யாஸராஜர், ஸ்ரீபுரந்தரதாஸரின் அபாரமான செயல்களையும், ஹரிதாஸ்யத்தையும் மெச்சி 'தாஸரெந்தரெ புரந்தரதாஸரய்யா' என்னும் அவரை பாராட்டி, மற்ற ஹரிதாஸர்களின் அவகுணங்களை கண்டித்து,

நீதியெல்லவனரிது நிகமவேத்யன நித்ய
வாதஸுதனல்லிஹன வர்ணிஸுதலி
கீத நர்த்தனதிந்த கிருஷ்ணன பூஜிஸுவ
பூதாத்ம புரந்தரதாஸரிவரய்யா

என்று சொல்லியிருப்பதைப் பார்த்தால், அவரது தலைமையில் ஒரு ஹரிதாஸர்களின் குழுவே அப்போது இருந்தனர் என்பதை அறிய முடியும். இந்த சமகாலத்திய பிரமாணங்களால், ஸ்ரீவ்யாஸராஜரே 'ஹரிதாஸ கூட' த்தை துவக்கியவர் என்பதையும் அறியலாம். ஸ்ரீபுரந்தரதாஸர் மற்றும் ஸ்ரீகனகதாஸர் இவர்களின் ஒளியால், மற்ற எந்த ஹரிதாஸர்களின் பெயர்களும் இன்று நமக்கு கிடைக்கவில்லை என்றுதான் ஊகிக்க வேண்டும்.

ஸ்ரீவ்யாஸராஜர், தமது வித்யா குருகளை 'மஹிமெ ஸாலதெ, இஷ்டே மஹிமெ ஸாலதெ' என்று புகழ்ந்து, ஸ்ரீபாதராஜரின் வாழ்க்கையில் நடந்த அற்புத மகிமைகளை வர்ணித்தால், அவர் தம் சிஷ்ய வரேண்யரான ஸ்ரீவ்யாஸராஜரை

ஸாஸிர ஜிஹ்வெகளுள்ள சேஷனெ
கொண்டாடபேகு வியாஸமுனிராயர ஸன்யாஸதிரவ

என்று மனப்பூர்வகமாக புகழ்ந்து, அவர் செய்த புண்ய கார்யங்கள் மற்றும் பக்தி கைங்கர்யங்களை நிரூபித்திருக்கிறார். ஹரிதாஸ ஸாகித்யத்தின் வளர்ச்சிக்கு இப்படியான குரு சிஷ்யர்களின் பரஸ்பர புகழ்ச்சி, அபிமானங்கள் மிகவும் உறுதுணையாக இருந்தன என்பது மகிழ்ச்சிகரமான செய்தி. ஸ்ரீவ்யாஸராஜருக்குப் பிறகு, அவருடைய சம்ஸ்தானத்திற்கு ஸ்ரீவ்யாஸராயர மடம் என்னும் பெயர் வழக்கில் வந்ததைக் கண்டால், அவருடைய சாதனை, ஸித்திகள் எவ்வளவு என்பதை அறியமுடியும். ஸ்ரீவ்யாஸராயரின் பரம்பரையில் இந்த கீர்த்தனை கைங்கர்யம் எப்படி வளர்ந்து வந்தது என்பதற்கு இப்போது 20ம் நூற்றாண்டில் வாழ்ந்த ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர் அனேக கீர்த்தனைகளை இயற்றியிருப்பது ஒரு உதாரணமாக இருக்கிறது.

ஹரிதாஸ ஸாகித்ய க்ஷேத்திரத்தில் இந்த யதிவர்யரின் பரம்பரையில் காணப்படும் இன்னொரு மகிமர் யாரென்றால், ஸ்ரீவாதிராஜர் (1480-1600). உடுப்பியின் அஷ்ட மடங்களின் அன்றைய யதி பரம்பரையில் வேறு

யாரும் இவரைப் போல, கீர்த்தன கைங்கர்யத்தை செய்திருக்கிறார்கள் என்பதற்கு இதுவரை சான்றுகள் இல்லை. இந்த பார்வையில், ஸ்ரீவாதிராஜரின் இந்த சேவா தீக்ஷை மிகச் சிறந்ததே ஆகும்.

ஸ்ரீவாதிராஜர் சில காலம் ஸ்ரீவ்யாஸராயரிடம் இருந்ததால், இது அவர் கண்ட இரு யதிகளின் கீர்த்தனை கைங்கர்யத்தைப் பார்த்து அதிலிருந்து அவர் அடைந்த ஊக்கமாக இருக்கலாம் என்று ஊகிக்கலாம். ஸ்ரீவாதிராஜர் சம்ஸ்கிருதத்தில் இயற்றியிருக்கும் யுக்தி மல்லிகா, சரஸ பாரதிவிலாஸ, ருக்மிணிஷ விஜய, தீர்த்த பிரபந்த மற்றும் பல்வேறு ஸ்தோத்திரங்கள் சாஸ்திர மற்றும் ஸாகித்யங்களின் பார்வையில் அற்புதமானவை. உடுப்பிக்கு அருகில் இருக்கும் கும்பாஸியில் பிறந்து, வளர்ந்து அன்றைய ஸோதெ மடத்து ஸ்ரீவாகீஷ தீர்த்தரின் அருளுக்குப் பாத்திரராகி, தம் பூர்வாசிரம பெயரான வராக என்னும் பெயருக்கு ஏற்ப, ஸ்ரீவாதிராஜ தீர்த்தர் என்னும் ஆசிரம நாமத்தைப் பெற்று, தம் சிறிய வயதிலேயே வேதாந்த சாம்ராஜ்யத்தில் மிகவும் சிறந்தவர் என்னும் பெயரைப் பெற்றார். ஸ்ரீபாதராஜர், ஸோதெ சம்ஸ்தானத்தின் பீடத்திற்கு வந்த உடனேயே, அனேக சீரமைப்பு காரியங்களை செய்தார்.

உடுப்பியில் இன்றும் நடந்து வந்துகொண்டிருக்கும் இரு ஆண்டுகளின் பர்யாய பத்ததியை இவரே துவக்கியவர். சொந்த மதத்தவர்களின் அபிமான மரியாதைகளைப் பெற்றது மட்டுமல்லாமல், பிற மதத்தவர்களின் கௌரவங்களையும் பெற்றார். ஒதுக்கி வைக்கப்பட்டவர்களான கோடேஷ்வர்களின் பிராமணர்கள், பொற்கொல்லர்கள் ஆகிய பலருக்கு தம் மடத்தின் தீக்ஷையைக் கொடுத்து அருளிய மகான் இவர். இப்படியே சாரஸ்வத மதத்தின் சில பிரிவினரும்கூட இவரிடமிருந்து சக்ராங்கிதத்தைப் பெற்று, மாத்வ சம்பிரதாயத்தினை பின்பற்றுபவர்கள் ஆயினர்.

ஸ்ரீபாதராஜர் மற்றும் ஸ்ரீவ்யாஸராஜர்களைப் போலவே, ஸ்ரீவாதிராஜரும்கூட அன்றைய விஜய நகர அரசரிடமிருந்து மரியாதைகளைப் பெற்று, 'பிரஸங்காபரண தீர்த்தர்' என்னும் விருதினைப் பெற்றார். ஸோதெயின் சிற்றரசனாக இருந்த அரசப்ப நாயகனுக்கு வந்த ஆபத்தினை பரிகரித்தார் ஆகையால், அவன் ஸ்ரீவாதிராஜருக்கு பற்பல விதமான ராஜ மரியாதைகளை வழங்கி கௌரவித்தான். அவன் தானமாகக் கொடுத்த ஸோதெயில் த்ரிவிக்ரம தேவரே முதலான பல தேவதைகளின் கோயிலை கட்டி, பஞ்ச வ்ருந்தாவனங்களை நிர்மாணித்து, என்றைக்கும் அது பவித்ர தீர்த்தக் ஷேத்திரங்களில் ஒன்றாக இருக்குமாறு செய்த பெருமை

ஸ்ரீவாதிராஜரையே சேர்ந்தது. தம் 120 ஆண்டுகளின் நீண்ட ஆயுளில், ஐந்து பர்யாயங்களில், கடைசியானதை இந்த பவித்ர க்ஷேத்திரத்தில் நிறைவேற்றி, பின் அங்கேயே வ்ருந்தாவன பிரவேசம் செய்த மகாமகிமர் இவர்.

ஸ்ரீவாதிராஜரின் மொத்த வாழ்க்கையை பார்த்தால் அவர் எப்போதும் மாற்றத்தை விரும்பியவர் என்பது தெரிகிறது. இத்தகைய யதிவரேண்யருக்கு, அவரது சிறிய வயதிலேயே, ஸ்ரீபாதராஜர், ஸ்ரீவ்யாஸராஜர் போன்ற சிறந்தவர்களின் நட்பு, தொடர்புகள் இருந்தது என்பது ஒரு மகாயோகம் என்றே சொல்ல வேண்டும். அத்தகைய ஆளுமைகளால் ஈர்க்கப்பட்டு இவரும் கன்னட கீர்த்தனைகளை இயற்றியது சரியான விஷயமே ஆகும்.

ஸ்ரீவாதிராஜ தீர்த்தர், கன்னட ஹரிதாஸ ஸாகித்யத்திற்கு செய்திருக்கும் சேவையானது, அவர் சம்ஸ்மிருத சாஸ்திர ஸாகித்யத்திற்கு செய்திருக்கும் சேவையைப் போன்றே மிகச் சிறந்ததாகும். சுயசிந்தனை, சுயபரிசோதனைகளைக் குறித்த சில கிருதிகளில், அவருடைய அந்தரங்கத்தின் சிந்தனை நமக்கு தெரிய வருகிறது. தம் இஷ்ட தேவதையான ‘ஹயவதன’ என்னும் அங்கிதத்தில் கிருதிகளை இயற்றியிருக்கிறார். அனைத்து வித்யைகளையும் கற்றவராக, பிரதிவாதிகளுக்கு சிம்ம சொப்பனமான விளங்கிய ஸ்ரீவாதிராஜர், வித்யா கர்வத்தை கண்டித்து இவ்வாறு எழுதியுள்ளது மிகவும் ருசிகரமாக உள்ளது.

ஓதுவெனு வித்யெகள ஓதனத பயகெயலி
ஸாது ஷாஸ்த்ரகள மரெது தொரெது
காமதேனு தர்க்கவ்யாகரண பலதிந்த
பீதிபீதியலி சரிஸி அரஸி

என்னும் வெளிப்படையான வாக்குகளை பார்த்தால், அவர் பாண்டித்யத்தின் சிறப்பிற்கு மயங்காமல் எப்படி விழிப்புடன் இருந்தார் என்பதை கவனிக்கலாம். பரமாத்மனை ஒரு மனதுடன் அவர் எப்படி வணங்குகிறார் என்பதை இந்த கீழ்க்கண்ட உகாபோகத்தில் பார்க்கலாம்.

நின்ன த்யானத ஷக்திய கொடோ / அன்யரலி விரக்திய கொடோ
நின்ன நோடுவ யுக்திய கொடோ / நின்ன பாடுவ பக்திய கொடோ

நின்ஹத்தெ பருவ ஸம்பத்திய கொடோ
சித்ததி தத்வத க்ருத்யவ கொடோ
மத்தெ துதியலி எனகெ முக்திய கொடோ
அத்தத்த மாடோ பவ கத்தலெயெனகெ / முத்திதெ ஹயவதன

ஸ்ரீவாதிராஜ தீர்த்தரின் ஆளுமையில் விளங்கும் அனைத்து லட்சணங்களுக்கும் இந்த சிறிய உகாபோகம் நல்ல கைவிளக்காக இருக்கிறது எனலாம். பால சன்யாசிகளான அவருக்கு சிறிய வயதிலிருந்தே பகவத் தியானம் என்பது ஸ்வாபாவிகமாக இருந்து, விரக்தியை அடைவதற்கு சாத்தியமானது. அவருடைய கிருதிகளில் முகுடமாக இருக்கிறது என்று சொல்லக்கூடிய 'யுக்தி மல்லிகா' வை பார்த்தால், 'நின்ன நோடுவ யுக்திய கொடோ' என்னும் அவருடைய பிரார்த்தனை சரியாக பொருந்துகிறது எனலாம்.

(தொடரும்)

***

| தொடர் | ஸ்ரீகனகதாஸர் |
| --- | --- |
| | திரு.வ்யாஸனகெரெ ப்ரபஞ்சனாசார்யர் |

6 ஸ்ரீகனகதாஸரின் வாழ்க்கை

ஸ்ரீகனகதாஸரின் சில கிருதிகளில் அவரது வாழ்க்கைக் குறிப்பினை நாம் பார்க்கலாம். அவரைப் பற்றி இயற்றப்பட்ட கிருதிகளின் எண்ணிக்கை 50க்கும் மேல் இருக்கின்றன. அவருடைய வாழ்க்கை விவரிக்கும் நாடகங்கள் 7 இருக்கின்றன.

ஹரி நின்ன பரமார்த்த நிருததிந்தலி எனகெ
தொரெயதீ குருபாத ஹரியெ ||ப

குருமந்த்ர மூல ஸத்குரு மூர்த்தி நீனாகி
கரெய ஸேரிஸிதென்ன ஹரியே ||அப

தொரெதனவ பிடிஸி ஸுஸ்திர மார்க்க தோரிஸிதெ
நரமாத்ரதவனெனதெ ஹரியெ
கருவதெல்லிஹெனெம்புதரிதென்ன நின்ன தா
ஸரிகெ மாரிதெயோ ஹரியெ
துரதல்லி நால்கு ஸாவிரனில்லதெனதெஸெகெ

30 - ஹரிதாச விஜயம் – ஆகஸ்ட் 2023

பரிஹரிஸிதெயெலோ ஸ்ரீஹரியெ
பரபலவ நோடிதரெ உரிதுரிது பீள்வ மன
ஸெரெ ஹாகி நிலிஸிதெயோ ஹரியே ||1

கனக தளதலி பந்து கலெதனெந்தரெ பௌஜு
கனகுமனகாகுவுது ஹரியெ
த்வனிமுகார்ப்பட மனஸிகானந்தபப்ப து
ர்குணவனெல்லவ களெதெ ஹரியெ
மனஸினொளகெரடில்ல மததானெ மேல்கடிவ
மனவ ஹிம்மெட்டிஸிதெ ஹரியெ
மொனெகார தணியெம்ப தைர்யவ பிடிஸி ஸேவ
கன மாடிஸிதெயோ ஹரியெ ||2

ஷரதிஷுக்யாதி பௌருஷ லோப பஹுஜனர
உருவீஷரன்னு கைபிடிதெ ஹரியெ
மரெவு தாமஸ அஹங்கார துர்மதியெம்ப
துரிதவனு ஹொரடிஸிதெ ஹரியெ
பரம மூர்க்கனு நின்ன அரிவித்த தாஸரிகெ
ஷரணெனத ராஜஸவோ ஹரியே
ஸிரி பிடிஸி ஹரியெ ஹரஸுரரிகளவல்லதிஹ
ஸ்மரணெ ஜிஹ்வெகெ பரெதெயோ ஹரியே ||3

மொதலு நின்னுபதேஷ ஸதரு மாடதெ திருகு
வுதனெல்ல உதுரிஸிதெ ஹரியெ
இது ரஹஸ்யவு எந்து ஹிதவு தோரிது இந்து
பதவ ஜயிஸிதெ நானு ஹரியெ
மதவெல்ல பிடிஸி ஸம்ஸ்ம்ருது ரூபவனு தரிஸி
ஹ்ருதயதலி நீனித்தெ ஹரியெ
முததி நின்னய நாம ஸதரதோரிது எனகெ
பதுகிதெனு பதுகிதெனு ஹரியெ ||4

ஸ்வாரி ஹொரடரெ சத்ர பேரியு நகாரிகளு
போரெம்ப பொங்கஹளெ ஹரியெ
தீர ராஹுதராண்ய பரிவாரலங்கார
பாரவனு தெகெதெயோ தோரிதெ ஹரியெ
நீர ஸங்கவ பிட்டு ஆணி முத்தாத க்ரியெ

ஸேரிஸிதெனோ நின்ன பாத ஹரியெ
ஆரிகஞ்செனோ நானு அதிகபுரி காகினெலெ
யாதிகேஷவராய ஹரியெ ||5

***

ஸாலதெ நின்னதொந்து திவ்ய நாம - அ
கால ம்ருத்யுவின கண்டலகாண ஹரியெ ||ப

ரணதொளகெ தேஹவ கண்டதுண்டவ மாடி
ரணவனுத்தரிஸி மரணவ தோரிதெ
ப்ரணவகோசரனாகி லீலெயிந்தலி பந்து
ஹெணகெ ப்ராணவனு தந்தித்த மஹாதுமனே ||1

தொந்திகொண்டென்ன பென்னலோஸருவ ரோஹிதகெ
அந்த்யமுக க்ரஹகளனு களசி பிஸுடெ
திந்த்ரிணி மரதடி உரக கச்சி ஒரகிரலு
மந்த்ரிஸி மனெகெ களுஹித கருடகமனனெ ||2

தம்ம ஹவணனரியதெ கர்வபிஷாசிகளு
எம்ம மனெயொடெவந்தெ கல்லலிட்டு
ஹெம்மக்களனு கரெது பந்திஸி ஒய்யலு
பிரம்மஜட்டிகன ஷிர ஹரிதெ நரஹரியெ ||3

க்ஷீண தேஹவ பிடுவெனெந்து பாடம்பட்டு
த்ராணதலி கரள தைலவ ஸேவிஸெ
வேணு கொரளிகெ இக்கி எவெயு அட்டதாக
த்ராணனித்ராண ஸத்ராணதலி ஜய ஜய ||4

ஓதி கேளிதரிதெ கதெயாகுதிதெ தூர
ஆதி மூருதி காகினெலெயாதி கேஷவனெ
ஹோத ஜீவனகெ வைத்யன ஸ்மரணெயன்னிட்டு
வாதகுண பிடிஸி தாஸன மாடிகொண்டெயோ ||5

மேற்கண்ட இரு பாடல்களும், அவருடைய சொந்த வாழ்க்கையைப் பற்றியதாகவே இருக்கின்றன என்பதை பார்க்கிறோம். அவர் முதலில் செல்வந்தராக இருந்தது, அதில் அவர் பெருமை கொண்டது, எதிரிகளைக் கண்டால் எரிந்து விழுந்தது, எதிரிகளை சண்டையிட்டு அழித்தது, அவருடைய நண்பர்களுக்கு / அவரை சேர்ந்தவர்களுக்கு மகிழ்ச்சியை

கொடுத்தது, படைத்தலைவர் என்னும் பதவிக்கு வந்தது, ஸ்ரீஹரி அவரை (தாஸன் ஆவாயாக) என்று பல முறை எச்சரித்தது, ஆனாலும் அதைப் பற்றி அவர் கவனம் அளிக்காதது, அவர் வெளியில் கிளம்பும்போது, சத்ர, பேரி, நகாரிகள் ஆகியவை முழங்கியது என்று பல்வேறு விஷயங்கள் மேலே உள்ள முதல் பாடலிலிருந்து தெரிய வருகிறது. வெறும் நீர்த்துளியைப் போல இருந்த கனகரின் வாழ்க்கை, பிறகு விலைமதிப்பற்ற முத்து போல ஆனது என்னும் விவரமும் அதில் உள்ளது.

இரண்டாம் பாடலில், எதிரிகளுடன் நடந்த போரில் அவருக்கு மரண பயம் காட்டியதான அடி விழுந்தது, உடம்பு முழுவதும் ரத்தம் வழிண்டஹ்து, ஒரு மா மரத்தின் அடியில் இவரை பாம்பு கடிதத்து, பூமியில் மயக்கத்தில் விழுந்திருந்தபோது, அவருக்கு பகவந்தன் காட்டிக் கொண்டு, தன் ஸ்மரணையை அவருக்குக் கொடுத்து, வந்த பயங்கரமான ஆபத்தினை பரிகரித்தது, அவரை காத்தது ஆகிய விவரங்கள் உள்ளன. இவை அனைத்தும்கூட ஸ்ரீஹரியின் அபாரமான கருணையின் பல ஸ்ருதியாகவே உள்ளன. குரு மந்திரத்தின் யோகத்தை அருளி, அவரை உத்தாரம் செய்தது, ஸ்ரீஹரியின் அபாரமான மகிமை என்பது - இந்த இரண்டு பாடல்களில் கருத்தாக நாம் பார்க்க வேண்டும்.

மோகன தரங்கிணியில் வரும் அனேக யுத்த வர்ணனைகள், கனகதாஸர் தாமே போரிட்ட சந்தர்ப்பங்களின் வர்ணனைகளாகவே இருக்கின்றன என்பது போல தோன்றுகிறது. இவ்வாறு ஸ்ரீகனகதாஸரின் வாழ்க்கை என்பது, ஹரிதாஸர்களிலேயே மிகவும் வேறுபட்டதாக இருக்கிறது என்பதை பார்க்கிறோம். ஹரிதாஸ சாகித்யத்திற்கு ஸ்ரீகாரம் போட்டவர் என்று சொல்லப்படும் ஸ்ரீ நரஹரி தீர்த்தரைத் தவிர, வேறு எந்த ஹரிதாஸரும், தம் வாழ்க்கையில் நேரடியாக போர்க்களத்தில் இறங்கி போரிட்டதாக எங்கும் சொல்லப்படவில்லை. சம்சாரத்தில் இருந்ததுடன், போர்க்களத்தில் போரிட்டதான அவரது வாழ்க்கை குறிப்புகள் அவரது பல்வேறு கிருதிகளிலிருந்து தெரிய வருகின்றன.

ஸ்ரீகனகதாஸரின் தந்தை பீரப்பா. தாய் பச்சம்மா. பாட கிராமத்தில் பிறந்தார். பீரப்பா, அந்த காலத்தில் பாட மற்றும் பங்காபுர பகுதிகளின் 78 கிராமங்களின் படைத்தலைவராக இருந்தார். வெகு காலம் வாரிசு இல்லாமல் இருந்த அவர், திருப்பதி ஸ்ரீனிவாஸனின் சேவை செய்து, அதன் பலனாக கிடைத்த புத்திரனே ஸ்ரீகனகதாஸர். ஸ்ரீகனகரின்

இயற்பெயர் திம்மப்ப. திம்மப்ப தனது சிறிய வயதிலிருந்தே, தந்தையின் வேலைக்கேற்ப, அதற்குத் தேவையான, குஸ்தி, கத்திச் சண்டை, குதிரை ஏற்றம், வேட்டையாடுதல் முதலான பல்வேறு வித்யைகளை கற்று தேர்ந்தான். மற்றும் அதற்கு தக்கதான அவரது கட்டுமஸ்தான தேகம், பல்வேறு லட்சணங்களை கொண்டிருந்தது. நல்ல வீரனாக அவர் வளர்ந்ததால் 'கனக தளதலி கலெதனெந்தரெ பௌஜு கனகுமனகாகுவுது ஹரியெ (கனகன் நுழைந்தால், போரின் சூழலே மாறும் நிலை ஆனது) என்னும் பேச்சு இருந்தது. தம் மகனை ஒரு மிகப்பெரிய படைத் தளபதியாக ஆக்கும் கனவினை பெற்றோர் கொண்டிருந்தனர். இவ்வாறாக யுத்தக் கலைகளில் தேர்ச்சி பெற்றிருந்த திம்மப்ப, அத்துடன் ராமாயண, மகாபாரத, ஹரிவம்ஷ, பாகவத முதலான புராண கதைகளையும் கேட்டு வந்தான்.

அந்த காலங்களில், கிராமப் பகுதிகளில், ஹரிகதை முதலான நிகழ்ச்சிகளால் ராமாயணம் முதலான புராண கதைகளை சொல்வது வழக்கமாக இருந்தது. விசேஷ திறமைகளை கொண்டிருந்த திம்மப்ப, அவற்றை கேட்டே அனைத்தையும் மனனம் செய்திருந்தான். கன்னட மொழியை மிகவும் சிறப்பாக கற்றிருந்தான் என்று தெரிய வருகிறது. குமாரவ்யாஸ பாரத மற்றும் குமார வால்மீகியின் தொரவெ ராமாயண கிருதிகளை கற்றான். மோகன தரங்கிணியின் வரும் குறிப்புகள் இதனை மேலும் தெளிவுபடுத்துகிறது. நமக்கு இதுவரை கிடைத்திருக்கும் சில சம்ஸ்கிருத கீர்த்தனைகள் மற்றும் சில நாட்டுப்புற கன்னட கீர்த்தனைகள் மூலம் அவரது அபாரமான சம்ஸ்கிருத பாண்டித்யத்தையும் நமக்கு விளக்குகின்றன.

திம்மப்பனின் சிறு வயதிலேயே, தந்தையை இழந்தார். தாயிடம் வளர்ந்த திம்மப்ப, தன் தந்தையின் உத்தராதிகாரியாகி, படைத் தளபதியாக ஆனார். அவருக்கான ஒரு சேனை இருந்தது. எதிரிகளின் இதயம் நடுங்குமாறு குதிரையில் ஏறி போர் புரிந்தார். அந்த சமயத்தில், ஏதோ ஒரு காரணமாக ஒரு இடத்தில் பூமியை தோண்டியபோது, ஏழு பெரிய மரத்தொட்டிகளில் தங்கப் புதையல் அவருக்கு கிடைத்தது. அந்த பணத்தினை, அவர், கோயில், சத்திரங்களின் ஜீர்ணோத்தார, ஏரி, கிணறுகளின் நிர்மாணம் ஆகிய ஸத்காரியங்களுக்கு பயன்படுத்தி, மக்களின் அன்பிற்கு பாத்திரமானார். இதனால் அவருக்கு 'கனக நாயக' என்றே பெயர் பெற்றார். (தொடரும்)

தொடர்

## ஹரிதாஸர்களின் சிந்தனைத் துளிகள்

### ஸ்ரீடீகாராயரின் ஆராதனை

தங்களின் சத்கர்மங்களை செய்தவாறு, மற்றவர்களுக்கும் நல்வழியைக் காட்டியவர்கள் உலகத்தில் பலர் உள். ஆனால் அனைவரும் தாங்கள் செய்யும் நற்காரியங்களில் எப்போதும் 'நாஹம் கர்த்தா அஹம் கர்த்தா' என்று சிந்தித்து அர்ப்பிக்கும் வழியினை, பிம்ப-பிரதிபிம்ப சிந்தனையை, ஸ்ரீஹரியின் ரூபங்களில் ஐக்ய சிந்தனையை செய்யவேண்டும். இப்படியான சிந்தனை இருந்தால் மட்டுமே செய்யும் நற்காரியங்களுக்கு அர்த்தம் பிறக்கிறது.

நின்ன ஞானவந்தனெந்து இன்னு ஞான சம்பாதிசுவெ
நின்ன தோஷதூரனெந்து என்ன தோஷங்கள
நின்ன குணபூர்ணனெந்து குணவந்தனாகுவெ
நின்ன சுக பூர்ணனெந்து சந்தோஷிந்தலிருவெ
நின்ன பலபூர்ணனெந்து பலதந்தனாகுவெ
நின்ன ஜனன மரண ரஹிதனெந்தெந்து கொண்டாடி
முன்னெ தரெயமேலே என்ன ஜனன களெவெ
நின்ன ஜாரவந்தனெந்து என்ன ஜாரத்வகளெவெ
நின்ன கம்சாரி எந்தெந்து என்ன சம்சார நீகுவெ
நின்ன தனுஜமர்தனவெந்து என்ன அங்கள கெல்லுவெ
நின்ன பக்தவத்ஸலனெந்து இன்னு பக்தி சம்பாதிசுவெ
நின்ன கருனாளெந்தெந்து என்ன கரண சுத்தனாகுவெ
நின்ன தொத்திகெ தொண்டனாகி நின்ன ப்ருத்யனாகுவெ
நின்னவர மனெமுந்தெ குன்னி ஆகி அனிருவெ
நின்ன தீர்த்தப்ரசாத நின்ன எஞ்சலுகளுண்டு
நின்ன பேடி நின்ன காடி நின்ன ஹாடி ஹாரெயிஸி
என்ன தினகள களெவெ முன்ன க்லுப்தபரியந்தர
புண்யவொ பாபவோ என்னிந்த மாடிசோகார்ய
முன்ன ஏனிதகெ பலவோ நினகெ நீனே பல்லெய்ய
இன்னு நா ஒந்து பல்லெனு நின்னனெ கதி எம்போது
சின்னுமய மூருதி கோபாலவிட்டலரேய
தன்யனாகுவெ கேளு நின்னவர பளிவிடிது || --ஸ்ரீகோபாலதாசர்

மிகவும் அடர்ந்த பொருள் பொதிந்த இந்த கிருதி, ஈச-தாச, உன்னுடையது-என்னுடையது என்னும் தத்வங்களை அடக்கி, நம் நற்சிந்தனை எப்படி இருக்கவேண்டும் என்று சொல்வதாக இருக்கிறது. ஸ்ரீஹரியின் நற்குணங்களைப் பாடி அவனின் பிரதிபிம்பரான நம்மில், அவனின் அருளினால் சிறிது நற்குணங்கள் வரட்டும் என்று வேண்டுகிறார். அவனை வணங்கி மேம்படும் வழியினை நமக்கு எடுத்துக் காட்டுகிறார் தாசர்.

## இந்த மாத ஆராதனைகள்

**ஸ்ரீ இபராமபுரத அப்பாவரு (1789-1869)**

பாரதீஷ பதத்வந்த்வ ஸாரஸ ப்ரமராயிதம் |
ஸூரவத்காந்தி ஸம்பன்னம் கிருஷ்ணாசார்ய குரும் பஜே ||

பஹு ஸஜ்ஜனரிகெ ஸன்மார்க்கதோரி அனுக்ரஹிஸிதரு
அஹர்னிஷி பஞ்சமுகி ப்ராணதேவர பூஜிஸிதரு
இஹலோகதி மூரனே கக்ஷத ருஜுகளெந்தெனிஸிதரு
மஹித மங்களாங்க ஹரிவிட்டலன பஜகரு அப்பாவரு ||

**ஸ்ரீ ஹெளவனகட்டே கிரியம்மா (1712-1779)**

ரங்கனாத பதாஸக்தம் ரங்கனாதஸ்ய கிங்கரீ |
கிரியம்மாபிதம் வந்தே ஞான வைராக்ய ஸித்தயே ||

ரங்கனாத தேவன கிங்கரி ரங்கனாத பாதாஸக்தெ
அங்கனெ தன்ன ஹ்ருதாயாங்கனதி ரங்கன காணுவ பக்தெ
அங்களதி சித்ரிஸுவ ரங்கோலியலி அனுரக்தெ
ஹிங்கதெ பக்தர பங்ககள நிவாரிஸுவ ஸஷக்தெ
பங்கார ஷ்ருங்கார ஸம்ஸார போகதலி விரக்தெ
மங்களாங்க ஹரிவிட்டலன பக்தர ஸங்க ஸம்யுக்தெ
துங்கெ உத்துங்கெ ஸாத்வி கிரியம்மா ஜீவன்முக்தெ ||

***

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்
Haridasa Vijayam - Monthly

மலர் 4 ** Sept 2023 ** இதழ் 10



ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள்

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 4 : இதழ் 10

**நிர்வாக ஆசிரியர்**
'ஜகன்னாத கேசவ'
சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross, JP Nagar
4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276.
haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**
' தாச சாகித்ய சேவா ரத்ன'
திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**
திரு. முரளிதர தாசரு,
திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா,
திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

## ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்
## செப்டம்பர் 1 முதல் 30 வரை, 2023

Sep1 : ஸ்ரா கிரு த்விதியை - ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள், மந்திராலயம்
Sep7 : ஸ்ரா கிரு அஷ்டமி - ஸ்ரீவ்யாஸ தத்வக்ஞ தீர்த்தர், வேணிஸோமபுர
Sep19: பாத்ரபத சுத்த பஞ்சமி - ஹஸிக்யாளு ஸ்ரீகோவிந்த தாஸர்
Sep22: பாத் சு அஷ்டமி - ஸ்ரீஷ ப்ராணேஷ விட்டல தாஸர், லிங்கஸுகூர்
Sep23: பாத்ரபத சுத்த நவமி - ஸ்ரீஜகன்னாத தாசர், மானவி
Sep25: பாத்ரபத சுத்த ஏகாதசி - ஸ்ரீப்ரஸன்ன வெங்கட தாஸர், பாதாமி
Sep26: பாத்ரபத சுத்த த்வாதசி - ஸ்ரீகமலேஷ விட்டல தாஸர், ஸுரபுர
Sep28: பாத்ரபத சுத்த சதுர்தசி - பாகெபல்லி ஸ்ரீசேஷதாஸர்

# ஆசிரியர் பக்கம்

செப்டம்பர் 2023 மாதம் முழுவதுமே ஹரிதாஸர்களின் ஆராதனை மாதம் என்றே சொல்லும் அளவிற்கு இருக்கிறது என்பதை பார்க்கிறோம். கலியுக கல்பவ்ருக்ஷ, காமதேனு ஆன, ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள், ஹரிகதாம்ருதஸாரம் இயற்றிய ஸ்ரீஜகன்னாத தாஸர், ஸ்ரீப்ரஸன்ன வெங்கட தாஸர் என பற்பல ஹரிதாஸர்களின் ஆராதனைகள் இந்த மாதத்தில் வருகிறது. அந்தந்த நாட்களில், அந்தந்த ஹரிதாஸர்களை சிந்தித்து, அவர்களுடைய கிருதிகள், காவியங்கள், பத, பத்யங்களை படித்து, பாடி, அவற்றில் உள்ள தத்வங்களை அறிந்து, அதன் மூலம் பகவந்தனின் அருள் கிடைக்குமாறு பிரார்த்தனை செய்வோமாக.

வாட்சப் தகவலில் சொன்னதைப் போல, காகித / ப்ரிண்டிங் செலவுகள் மிகவும் அதிகமாகிப் போனதால், சந்தாவும் மிகவும் குறைவாகிப் போனதால், ஹரிதாச விஜயம் மாதப் பத்திரிக்கை நடத்துவது, மிகவும் சிரமமாகிவிட்டது. ஆகவே, நவம்பர் 2023ம் இதழுடன் (நம் 4ம் ஆண்டு நிறைவு இதழ்), இந்தப் பத்திரிக்கை நின்றுவிடும். இதுவரை ஆதரவு அளித்து, தொடர்ந்து படித்து, கருத்துக்களை கூறிவந்த அனைவருக்கும் அனந்தானந்த நமஸ்காரங்கள். நன்றிகள்.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

***

* நமது Jagannatha Kesava Youtube Channelல் தற்போது வந்து கொண்டிருக்கும் தொடர் - ஸ்ரீகனகதாஸர் இயற்றிய நள சரித்ரெ.
* நமது blog - dasa-sahitya.blogspot.in ல் தற்போது வந்துகொண்டிருக்கும் தொடர் - ஸ்ரீப்ரஸன்ன ஸ்ரீனிவாஸ தாஸர் இயற்றிய - விஷ்ணு சஹஸ்ரநாம பாஷ்ய - கன்னட பத்யங்கள். இதன் அர்த்த விளக்கங்கள் - தமிழில்.
* இந்த இரண்டையும் தொடர்ந்து படித்து, கேட்டுக் கொண்டு வரவும். நன்றி. ஹரே ஸ்ரீனிவாஸா.

ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப் அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்துச் சொல்லலாம்.

| தொடர் | ஸ்ரீராகவேந்திர விஜயம் |
| --- | --- |
| | ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர் இயற்றியது |

**ஸ்வாதி வ்ருஷ்டிகெ[3] பா[3]யி தெரெதி[3]ஹ**
**சாதகாஸ்யதொ[3]ளக்[3]னி கண ஜீ**
**மூத நாத[2]னு கரெயலாக்ஷண அத[3]ர தப்பேனோ**
**நீத கு[3]ருவர நீனே என்னனு**
**ப்ரீதிபூர்வக பாலிஸெந்தெ[3]டெ[3]**
**மாது லாலிஸதி[3]ரலு என்னய யதனவேனித[3]கெ ||29**

ஸ்வாதி வ்ருஷ்டிகெ - ஸ்வாதி நட்சத்திரத்தின் மழைக்கு; பாயி தெரதிஹ - வாய் திறக்கும்; சாதகாஸ்யதொளு - சாதக பக்ஷியின் வாயில்; அக்னி கண - நெருப்பினை; ஜீமூத நாதனு - பகவந்தன் ஆனவன்; கரெயலாக்ஷண - வைத்தால்; அதர தப்பேனோ - இதில் அதன் தவறு என்ன?; நீத குருவர - சிறந்த குருவான; நீனே என்னனு - நீயே என்னை; ப்ரீதிபூர்வக - மிகவும் அன்புடன்; பாலிஸி - என்னை காத்து; எந்தெடெ மாது லாலிஸதிரலு - என்னுடைய எல்லா (அர்த்தமற்ற) பேச்சினையும் பொருட்படுத்தாமல் விட; என்னய யதனவேனிதகெ - இதில் என் முயற்சி என்ன இருக்கிறது? (எதுவும் இல்லை).

ஸ்வாதி நட்சத்திரத்தின் மழைக்கு வாய் திறக்கும் சாதக பக்ஷியின் வாயில் பகவந்தன் நெருப்பினை வைத்தால், அதில் அந்த பறவையின் தவறு என்ன?. சிறந்த குருவான நீயே என்னை மிகவும் அன்புடன் காத்து, என்னுடைய அர்த்தமற்ற பேச்சினை பொருட்படுத்தாமல் இருந்தால், இதில் என்னுடைய தவறு / முயற்சி என்ன? (எதுவும் இல்லை).

* ஸ்வாதி நட்சத்திரத்திலேயே முதல் தூய்மையான மழை வரும் என்ற நம்பிக்கை. அந்த மழைக்காக சாதக பறவை காத்திருக்கும் என்றும் சொல்கிறோம்.
* இதில் ஜீவர்களின் அஸ்வதந்த்ரத்தையும், பகவந்தன் ஒருவனே ஸ்வதந்த்ரன், ஸர்வோத்தமன் மற்றும் அனைத்தையும் செய்து செய்விப்பவன் என்னும் கருத்துகளையும் விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

**ஜனனி தனயகெ[3] விஷவ நீட[3]லு**
**ஜனக தனயர மாரிகொள்ளலு**

**ஜனப வ்ருத்தி க்ஷேத்ர களெத$^3$ரெ ஆரிகு$^3$ஸருவுது$^3$**
**க$^4$ன ஷிரோமணி நீனெ என்னனு**
**மனகெ தாரதெ$^3$ தூ$^3$ர நோட$^3$லு**
**இனதெ ஸ்ரமவனு களெது$^3$ பாலிபராரோ பேளனெகெ$^3$ ||30**

ஜனனி தனயகெ விஷவ நீடலு - தாயானவள் தன் குழந்தைக்கு விஷம் கொடுத்தால்; ஜனக தனயர மாரிகொள்ளலு - தந்தையானவன் தன் மக்களை விற்றுவிட்டால்; ஜனப - ஒரு அரசனானவன்; வ்ருத்தி க்ஷேத்ர - தன் நாட்டினை; களெதரெ - விற்றுவிட்டால்; ஆருகுஸருவது - (அவர்கள்) யாரிடம் போய் சொல்வது?; கன ஷிரோமணி - சிறந்த ஸர்வோத்தமனான; நீனெ என்னனு - நீயே என்னை; மனகெ தாரதெ - மனதில் நினைத்துக் கொள்ளாமல்; தூர நோடலு - வேறு புறம் பார்த்தால்; இனதெ - இவ்வளவு (அதிகமாக உள்ள) ; ஸ்ரமவனு களெது - என் கஷ்டங்களை போக்கி; பாலிபராரோ - என்னை காப்பாற்றுபவர்கள் யார் இருக்கிறார்கள்?; பேளனெகெ - (என்று) எனக்கு சொல்வாயாக.

காப்பாற்ற வேண்டிய பகவந்தனே நம்மை கஷ்டப்படுத்தினால், நாம் யாரிடம் சென்று முறையிடுவது?. நாம் அஸ்வதந்த்ரர் ஆயிற்றே என்று ஸ்ரீஹரியிடம் பிரார்த்தனை செய்கிறார் ஸ்ரீதாஸர்.

தாயானவள் தன் குழந்தைக்கு விஷம் கொடுத்தால், தந்தையானவன் தன் மக்களை தானே விற்றுவிட்டால், ஒரு அரசனானவன் தன் நாட்டினை எதிரிகளுக்கு விற்றுவிட்டால், பாதிக்கப்பட்டவர்கள் யாரிடம் போய் முறையிடுவது?. சிறந்த ஸர்வோத்தமனான நீயே என்னை மனதில் நினைத்துக் கொள்ளாமல், வேறு புறம் பார்த்தால், இவ்வளவு அதிகமாக உள்ள என் கஷ்டங்களை போக்கி என்னை காப்பாற்றுபவர்கள் யார் இருக்கிறார்கள்?. நீயே சொல்.

**நினகெ$^3$ தப்பது$^3$ என்ன காய்வது$^3$**
**எனகெ$^3$ தப்பது$^3$ நின்ன ப$^4$ஜிஸோது$^3$**
**ஜனும ஜனுமகெ ஸித்$^3$த$^4$வெந்தி$^3$கு$^3$ புஸிய மாதல்ல**
**கனஸிலாத$^3$ரு அன்யதே$^3$வர**
**நெனஸெனெந்தி$^3$கு$^3$ நின்ன பத$^3$யுக$^3$**
**வனஜவல்லதெ$^3$ பெரதெ எனகே$^3$னுண்டோ ஸர்வக்ஞ ||31**

நினகெ தப்பது என்ன காய்வது - என்னைக் காப்பது உன் கடமையாகும்; எனகெ தப்பது நின்ன பஜிஸோது - உன்னை வணங்குவது என் கடமையாகும்; ஜனும ஜனுமகெ - அனைத்து பிறவிகளுக்கும்;

ஸித்தவெந்திகு - இதுவே நிச்சயமான வழியாகும்; புஸிய மாதல்ல - இது பொய் அல்ல; கனஸிலாதரு - என் கனவில் கூட; அன்யதேவர - வேறு தெய்வங்களை; நெனஸெனெந்திகு - என்றைக்கும் நான் நினைக்க மாட்டேன்; நின்ன பதயுக வ்னஜவல்லதெ - உன் பாதங்கள் என்னும் தாமரையைத் தவிர; பெரதெ - அதற்கு மாற்றாக; எனகேனுண்டோ - எனக்கு என்ன இருக்கிறது?; ஸர்வக்ஞ - ஸர்வக்ஞனே.

பகவந்தன் மற்றும் பக்தனிடையே இருக்கும் உறவினை, இங்கு உரிமையுடன் நிலை நாட்டுகிறார் ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர்.

என்னைக் காப்பது உன் கடமையாகும். உன்னை வணங்குவது என் கடமையாகும். அனைத்து பிறவிகளுக்கும் இதுவே நிச்சயமான வழியாகும். இது பொய் அல்ல. என் கனவில் கூட வேறு தெய்வங்களை என்றைக்கும் நான் நினைக்க மாட்டேன். உன் பாதங்கள் என்னும் தாமரையைத் தவிர, எனக்கு வேறு கதி என்ன இருக்கிறது?.

எனகு ஆணெ ரங்கா நினகு ஆணே
எனகு நினகு இப்பரிகு நின்ன பக்தராணே
என்னும் பாடல் முழுக்க இவ்வாறே உரிமையுடன் பகவந்தனிடம் முறையிட்டிக்கிறார் ஸ்ரீபுரந்தரதாஸர். அதையே இங்கு நம் ஸ்ரீதாஸரும் பின்பற்றியிருக்கிறார்.

**பீ$^{4}$திகொ$^{3}$ளிஸெளவ ப$^{4}$வத$^{3}$ தாபகெ**
**பீ$^{4}$தனாதெ$^{3}$னோ என்ன பாலிஸோ**
**பூ$^{4}$த நாத$^{2}$னு ப$^{4}$வதி$^{3}$ தொளலுவ என்ன பாடே$^{3}$னு**
**பூ$^{4}$தத$^{3}$யபரனாத$^{3}$ காரண**
**பூ$^{4}$தி நீ எனகி$^{3}$த்து ப$^{4}$வப$^{4}$ய**
**பீ$^{4}$தி பரிஹர மாடோ$^{3}$ கு$^{3}$ரு ஜகன்னாத$^{2}$விட்டலனெ ||32**

பீதிகொளிஸெளவ - பயமுறுத்தி நம்மை இழுக்கும்; பவத தாபகெ - சம்சார சுழற்சிக்கு; பீதனாதெனோ - நான் பயப்படுகிறேன்; என்ன பாலிஸோ - என்னை காப்பாற்றுவாயாக; பூத நாதனு - தேவர்களின் தலைவனே; பவதி தொளலுவ என்ன பாடேனு - இதில் மூழ்கி கஷ்டப்படும் என் பாடு என்ன?; பூததயபரனாத காரண - அனைத்து பிராணிகளிடமும் நீ கருணை காட்டுவதால்; பூதி - வரம்; நீ எனகித்து - நீ எனக்கு அளித்து; பவபய பீதி -

சம்சார சாகரத்தின் பயத்தினை; பரிஹர மாடோ - பரிகாரம் செய்வாயாக; குரு ஜகன்னாத விட்டலனெ - ஹே குரு ஜகன்னாத விட்டலனே.

இந்த சந்தியின் கடைசி பத்யத்தில் தனது பிம்பரூபியிடம் பிரார்த்தனை செய்து முடித்து வைக்கிறார் ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர்.

பயமுறுத்தி நம்மை இழுக்கும் சம்சார சுழற்சிக்கு நான் பயப்படுகிறேன். என்னை காப்பாற்றுவாயாக. தேவர்களின் தலைவனே. இதில் மூழ்கி கஷ்டப்படும் என் பாடு என்ன?. அனைத்து பிராணிகளிடமும் நீ கருணை காட்டுவதால், எனக்கும் நீ வரம் அளித்து சம்சார சாகரத்தின் பயத்தினை பரிகாரம் செய்வாயாக, ஹே குருஜகன்னாத விட்டலனே.

(தொடரும்)...

| தொடர் | **ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்** |
|---|---|
| | **ஞான பக்தி வைராக்கியம்** |

**திருமதி. சுதா நரசிங்கராவ் தேஷ்பாண்டே**

தாரதம்யஞான முக்தி
த்3வாரவெனிபு1து ப4க்தஜனரிகெ3
தோ1ரி பே1ளி சுகா1ப்தியொளு லோலாடுவுது புத3ரு ।
க்1ரூரமானவரிகி3து க1ர்ணக1
டோரவெனிபுது நித்1யத3லி அதி4
காரிக3ளிகித3னருபு1வுது துஸ்த1ர்கி1க3ள பிட்டு ।।
(குணதாரதம்ய சந்தி ஸ்லோகம் 23)

இந்த தாரதம்ய வரிசையில் மேல் உச்சத்தில் ஸ்ரீஹரி பிறகு லட்சுமிதேவி பின்னர் பிரம்மா வாயு என்று தொடர்ந்து, ஸ்ரீஹரியைப் பற்றிய அறிவு, பக்தி என அனைத்தும் குறைந்துகொண்டே வருகிறது. லட்சுமிதேவிக்குத் தெரிந்த அளவிற்கு ஸ்ரீஹரியைப் பற்றி பிரம்மா வாயுவிற்கு தெரிவதில்லை. உலகத்திற்கு ஸ்ரீஹரியின் குண ரூபங்களை தெரிவித்தவாறு, தாம் எப்போதும் அவரைக் குறித்து பூஜித்தவாறு, செய்யும் செயல்கள் அனைத்தையும் அவருக்கே அர்ப்பித்தவாறு இருக்கின்றனர்.

மாத1ரிஷ்வ பிரம்மரு ஜக3
ந்மாதேக3 த3மாதீ3ன ரெனிபரு
ஸ்ரீத1ருணிவல்லப4னு ஈர்வரொளாவகா1லதலி ।

8 - ஹரிதாச விஜயம் – செப்டம்பர் 2023

நீத1ப4க்தி ஞான ப3ல ரூ
பா1திஷயதிந்தித்து1 சேத1ன
சேத1னக3ளொளு வியாப்1தனெனிசுவ தத்ததாஹ்வயதி3 ||
(ப்ருஹத்தாரதம்ய சந்தி ஸ்லோகம் 8)

இவர்களில் இப்படியாக நிலைத்திருக்கும் ஸ்ரீஹரி, பின்னர் ஜீவர்களில், ஜடப் பொருட்களில் அவரவர் தகுதிக்கேற்ப நிலைத்திருக்கிறார் என்று அறியவேண்டும். பிரம்மவாயு ஆகியோர் கலி ஆகியவரில்கூட இருக்கின்றனர். அப்படி இருந்தாலும், பிரம்மாவாயுகளின் ஞானம் எப்போதும் குறைவது இல்லை. பிரம்மாவாயு, தத்வாபிமானி, இந்திரியாபிமானி தேவதைகள் அனைவரும் ஸ்ரீஹரியின் ஆணைப்படியே அனைவரின் உள்ளும் இருந்து செயல்களை செய்விப்பர் ஆகையால் அவர்களுக்கு எந்தவித பாவங்களும் வந்து சேர்வதில்லை.

க1லியெ மொத3லாத3கி2ல தா3னவ
ரொளகெ3 பிரம்மப4வாதி3 தே3வ
ர்க3ளு நியாமக1ராகி3 ஹரியாஞெயலி அவரவர |
க1லுஷக1ர்மவ மாடி மாடிசி
ஜலருஹேக்ஷணக3ர்பிசுத1 நி
ஸ்சல சுப4க்தி ஞானபூர்ணரு சுகி2பரவரொளகெ ||
(சர்வப்ரதீக சந்தி ஸ்லோகம் 9)

ஆவ ஜீவரொளித்த3ரெனி
ந்னாவ க1ர்மவ மாட3லெனி
ந்னாவ குண ரூபகளுபாசனெ மாடலெனவரு |
கா1வனய்யன பரமசத்க1ரு
ணாவலோக1ன ப4லதி சலிசுவ
தே3வதெ1க3ளனு முட்டலாபவெ பாபகர்மகளு ||
(சர்வப்ரதீக சந்தி ஸ்லோகம் 10)

மேலும் கலி முதலான தைத்யர்கள், ஹரி த்வேஷிகள், ஹரிபக்தர்களுக்கு தொந்தரவு கொடுப்பவர்கள், நானே கடவுள் என்பவர்கள் ஆகியோர்களுக்கு, பிராணதேவர் அவரவர்களில் இருந்து இந்த துர்புத்தியை கொடுக்கிறார். மேலும், நித்ய சம்சாரிகளுக்கு

தெளிவற்ற ஞானத்தையும், முக்தியோக்யர்களுக்கு பக்தி, ஞானத்தையும் கொடுக்கிறார்.

பிராணதே[3]வனு த்ரிவித[3]ரொளகெ[3] ப்ர
வீண தா[1]னெந்தெ[3]னிஸி அதிகா
ரானுசாரதி க[1]ர்மகள தா[1] மாடி மாடிசுவ |
ஞான பக்தி சுரரிகெ மிஸ்ர
ஞான மத்யமஜீவரிகெ[3] அ
ஞ்ஞான மோஹ த்வேஷகள தைத்யரிகெ கொ[1]டுதி[1]ப்ப ||
(அணுதாரதம்ய சந்தி ஸ்லோகம் 15)

1. அஜானஜாதி தேவகந்தர்வர்கள் பரத கண்டத்தில் 100 பிறவிகள் எடுத்து கர்மங்களைச் செய்து, 10,000 பிறவிகளில் நல்ல அறிவினைப் பெற்று, 300 பிறவிகளில் ஸ்ரீஹரியிடம் பக்தி செய்து, ஸ்வரூபத்தில் பிம்பரூபியைக் காண்பர். இவர்கள் ஞானயோகிகள் எனப்படுவர்.

2. அவரவர்களின் தகுதிக்கேற்ப பிராணதேவர் ஞான பக்திகளை வழங்குகிறார்.

3. ஏழுவித ஜீவகணங்கள் பல்வேறு தேகங்களைப் பெற்று, பிறகு பிராமணராகப் பிறந்து ஹம்ஸ-உபாசனை மற்றும் வியாப்த-உபாசனை செய்தவாறு, தம் ஸ்வரூபத்திலேயே அதாவது தம் இதயத்திலேயே ஸ்ரீஹரியைக் கண்டு மகிழ்வதே பிம்பாபரோக்ஷ. இந்த பிம்பாபரோக்ஷம் பெறுவதற்கு முன்னர் ஜீவிகள், புழு, பூச்சி, பசு, பறவை, மனுஷ்யோத்தமர், சக்ரவர்த்தி மற்றும் மனுஷ்ய-கந்தர்வர் ஆகியவர்களாகப் பிறந்து, ஈனமான யோனிகளில் பிறந்து, பிறகு மனிதப் பிறவியைப் பெற்று, ஞானத்தினால் செயல்களைச் செய்து (1000 பிறவிகள்), அவற்றை ஸ்ரீஹரிக்கு அர்ப்பிப்பார்கள். பிறகு 10 பிறவியில் உத்தம பக்தி செய்து, உபாசனா முறையில் அதாவது, மனைவி, மக்கள், பெற்றோர் இவர்களிடம் காட்டுவதை விட அதிகமான பிரியம் ஸ்ரீஹரியிடம் காட்டி, விரக்தியைப் பெற்று, பிம்பாபரோக்ஷம் பெற்று, ஜீவன் முக்தியைப் பெறுவர். அதையே தாசராயர்,

ஹீன கர்மக[3]ளிந்த பஹுவித[4]
யோனியலி சஞ்சரிஸி ப்[1]ராந்த[1]கெ[1]
மானுஷத்வவனைதி சர்வோத்தமனு ஹரி எம்ப |
ஞான பக்திகளிந்த வேதோ[3]

க்தா$^{1}$னுசார சஹஸ்ர ஜனுமதி$^{3}$
ந்யூன கர்மவ மாடி ஹரிகர்பிசித நந்த$^{1}$ரதி$^{3}$ ||
(அபரோக்ஷதாரதம்ய சந்தி ஸ்லோகம் 5)

இப்படி ஹரிவாயுகளின் அருளினால், முக்தியோக்யர்களான ஜீவிகள், தாரதம்ய ஞானத்துடன், தடையில்லாத பக்தியுடன், விஷயஞானம் பக்தியுடன், ஸ்ரீஹரியின் அருளைப் பெறுவர்.

ப்ரணத$^{1}$ கா$^{1}$மத$^{3}$னங்க்$^{4}$ரி சந்த$^{3}$ரு
ஷன த$^{3}$பேக்ஷிக$^{3}$ளுள்ளவகெ$^{3}$ நிஸ்
சணிகெ$^{1}$னெயெனிபுது ஜட$^{3}$ மொத$^{3}$லு பிரம்ஹாந்த த$^{1}$ரத$^{1}$மவு |
மன வசனதி$^{3}$ம் ஸ்மரிசுவர ப$^{4}$வ
வனதி$^{3}$ ஷோஷிஸி போ$^{1}$கு$^{3}$வுது$^{3}$ கா$^{1}$
ரணவெனிசுவுது ஞான பக்தி விரக்தி சம்பத$^{3}$கெ$^{1}$ ||
(ஆரோகண தாரதம்ய சந்தி ஸ்லோகம் #17)

இப்படியாக ஞானத்தைப் பெறும் ஜீவிகளுக்கு, ஸ்ரீஹரியின் குண ரூப மகிமைகளின் சிறப்புகளை மேன்மேலும் அறிவதால் பக்தி வளர்கிறது. அஷ்ட–கர்த்ருத்வ செயல்களை சரியாகச் செய்து வரும் ஸ்ரீஹரியை வணங்குவதற்கு ஒரு வழிமுறை இருக்கிறது. அதுவே ஜீவ–ஈச பாவம் மற்றும் பஞ்சபேத ஞானம். ஸ்ரீஹரி, ஜீவர்கள், ஜடப் பொருட்கள் இவர்களைவிட வேறுபட்டவன். அவனே ஈசன். மற்றவர்கள் அனைவரும் அவனது தாசர்கள். மூன்று உலகங்களையும் படைத்தவன், காப்பவன் அவனே. அனைத்து குணங்களையும் முழுவதுமாகப் பெற்றிருப்பவன் அவனே. நாம் அவனின் கீழ் இருப்பவர்கள். நாம் சுதந்திரம் இல்லாதவர்கள், அவன் ஒருவனே சுதந்திரன் என்னும் நினைப்பு வைத்துக்கொண்டு, அவனை நம் அகக்கண்களினால் பார்த்தவாறு இருக்கவேண்டும்.

விஸ்வம்பர ரூபி பரமாத்மா நம் கண்களில் இருந்து, ஸ்தூல பொருட்களின் தரிசத்தைத் தருகிறான். ஹரியின் இந்த ரூபத்தை வணங்கும் கணபதி, அந்த ஸ்ரீஹரியின் சாரூப்ய மோட்சத்தை அடைந்து, ஞான பக்திகளைக் கொடுத்து, நமக்கு வரும் துன்பங்களைப் போக்குபவனாக இருக்கிறான். அதனால், தாசராயர் கணபதியை:

பஞ்சபேத ஞானவருபு வி
ரிஞ்சிஜனகன தோரு மனதலி
வாஞ்சிதப்ரத ஒலுமெயிந்தலி தாசனெந்தரிது |
பஞ்சபக்த்ரன த[1]னய ப[4]வதொளு
வஞ்சிசதெ சந்தைஸு, விஷயதி
சஞ்சரிசதந்ததலி மாடு மனாதி க[1]ரணக[3]ள ||
(ஸ்ரீவிக்னேஸ்வர ஸ்தோத்ர சந்தி ஸ்லோகம் 16)

மோட்சத்திற்கான பாதையில் செல்லும்போது வரக்கூடிய தடைகளை விலக்கி, நம் அகக்கண்களைத் திறந்து, விரக்தியைக் கொடுக்க உதவும் கணபதியின் கருணை நமக்கு வேண்டும் என்று அவரை வேண்டுகிறார் தாசர்.

ரக்த[1]வாஸத்[3]வய விபூ[4]ஷண
உக்தி[1] லாலிஸு பரமப[4]க[3]வ
த் பக்தவர ப[4]வ்யாத்ம பா[4]க[3]வதா[1]தி[3] சாஸ்திரத[3]லி |
சக்த[1]வாக[3]லி மனவு விஷய வி
ரக்தி[1]பாலிஸு வித்வதா[3]த்ய வி
முக்த னெந்தெனிசென்ன ப[4]வப[4]யதிந்த அனுதி[3]னதி[3] ||
(ஸ்ரீவிக்னேஸ்வர ஸ்தோத்ர சந்தி ஸ்லோகம் 11)

அறிவு, கல்வி, பலம், பரிசுத்த பக்தி, விரக்தி ஆகியவற்றைக் கொண்டவரான கணபதியை, நமக்கும் இவை அனைத்தையும் விரைவாக அருள்வாயாக என்று கேட்க வேண்டும். சாதனைக்கு பக்தியே வழி என்றும் இது ஒன்பது வகைப்படும் என்றும் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. கேட்பது, பேசுவது, நினைப்பது, வணங்குவது, போற்றுவது, அர்ச்சிப்பது, பணிவிடை செய்வது, நட்பு கொள்வது, தன்னையே சமர்ப்பிப்பது என்பதே ஒன்பது வித பக்தியாகும். கேட்பது என்றால் காதினால் வெறும் கேட்பது மட்டுமல்ல. காதில் கேட்டதை, மனதில் இருத்தி, அதன்மூலம் பக்தி செய்வது என்று பொருள். அப்படிச் செய்தால் மகிழ்ச்சி பெருகும். துக்கம் குறையும்.

(தொடரும்)

தொடர்

**ஹரிகதாம்ருதசார மஞ்சரி 360**

**By ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர்**

**164. முக்தபி3ம்ப3னு துரிய ஜீவ**
**ந்முக்தபி3ம்ப3னு விஷ்வ ப4வஸம்**
**ஸக்தபி3ம்ப3னு தைஜஸனு அஸ்ருஜ்யரிகெ3 ப்ராக்3ஞ ।**
**ஷக்தனாத3ரு ஸரியே ஸர்வோ**
**த்ரிக்த மஹிமனு து3க்க2 ஸுக2க3ள**
**வ்யக்த மாடு3தலிப்ப கல்பாந்த்யத3லி ப3ப்பரிகெ3 ।।(24-1)**

ஜீவனை ஸ்ருஷ்டிக்கு கொண்டு வருவதற்கு முன்னர், மற்றும் ஸ்ருஷ்டிக்கு கொண்டு வந்தபின், என இருவித பொறுப்புகளும் ஸ்ரீஹரி உடையதே. அவன் மனது வைத்தால், ஜீவருக்கு ஸாதனை, பிம்ப அபரோக்ஷம் ஆகியவை கிடைக்கும். இதனையே ஸ்ரீதாஸர் புரிய வைக்க முயல்கிறார். பிம்பன் யாரென்று தெரிந்தால், அவருக்கு முக்தி யோக்யதை கொடுத்து, கனவில் தைஜஸ ரூபியாகி தரிசனம் அளிக்கிறான். ஸ்ருஷ்டிக்கு வராத ஜீவர்களை அஸ்ருஜ்ய என்கிறான். அவர்களைக்கூட ஸ்ருஷ்டிக்குக் கொண்டு வந்து, சுக துக்கங்களை கொடுத்து, கல்பாந்தரத்தில் உத்தாரம் செய்பவன் ஸ்ரீஹரியே ஆகிறான்.

**165. பூ4தி3யொள க3டகி3ப்பனலனோ**
**பாதி3 சேதன ப்ரக்ருதியொளு அ**
**ந்னாத3 அன்னாஹ்வயதி3 கரெஸுவ பி3ரம்ம ஷிவ ரூபி ।**
**ஓத3னப்ரத3 விஷ்ணு பரமா**
**ஹ்லாத3 நீவுத3 த்ருப்திப3டி3ஸுவ**
**கா3த4 மஹிமன சித்ரகர்மவனாவ ப3ண்ணிஸுவ ।।(24-3)**

கங்குக்குள் நெருப்பு இருப்பது நமக்குத் தெரியாது. அதைப் போல, பகவந்தன் தான் சிவ, பிரம்ம, விஷ்ணு ரூபங்களில், ப்ரக்ருதியில் யாருக்கும் தெரியாத வகையில், அன்ன, அன்னதா என்று அழைத்துக் கொண்டு, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப த்ருப்திப்படுத்தும் இவனுடைய அற்புத மகிமை – யாரால்தான் அறிவதற்கு சாத்தியம்?. அவ்யக்தனாகவே இந்த அனைத்து செயல்களையும் ஜீவனில், ப்ரக்ருதியில் நடத்திக் கொண்டிருக்கிறான் என்பதை நாம் அறிய

வேண்டும். அவனுடைய மகிமை அறிவதற்கு யாராலும் சாத்தியம் இல்லை என்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

**166. ஈ ஷரீரக3 புருஷ த்ரிகு3ணதி3**
**ஸ்ரீஸஹித தானித்து3 ஜீவரி**
**கா3ஸெ லோபா4க்ஞான மத3 மத்ஸர குமோஹ க்ஷுத |**
**ஹாஸ ஹருஷ ஸுஷுப்தி ஸ்வப்ன பி1**
**பா1ஸ ஜாக்3ருதி ஜன்ம ஸ்தி2தி ம்ருதி**
**தோ3ஷ புண்ய ஜயாபஜய த்3வந்த்3வக3ள கல்பிஸித3 ||(24-7)**

இந்த சரீரத்தில் பகவந்தன் தான், லட்சுமி ஸமேதனாக இருந்து, த்ரிகுணங்களால் கூடி, ஜீவர்களுக்கு த்வந்த்வ விருப்பங்களைக் கொடுத்து பார்த்துக் கொண்டிருக்கிறான். இவை சுக துக்க, ஜய அபஜெய, ஆசை லோப, மத மத்ஸர, ஜாக்ருதி ஸ்வப்ன, ஜன்ம மரண ஆகியவை ஆகும். இவற்றை அவன் ஜீவனில் வைத்திருந்தாலும், பிம்பாபரோக்ஷத்தை ஜீவர்கள் அடைய வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர்.

**167. ஸாஷனாஹ்வய ஸ்த்ரி புருஷரொளு**
**வாஸவாகி3ஹனெந்த3ரிது3 வி**
**ஷ்வாஸபூர்வக ப4ஜிஸி தோஷி2ஸி ஸ்வாவரோத்தமர |**
**க்லேஷனாஷன அசலக3ளொளு ப்ர**
**காஷிஸுதலிஹனஷன ரூபோ**
**பாஸனவ மாள்பரிகெ3 தோர்ப்பனு தன்ன நிஜரூப ||(24-9)**

பகவந்தன் யாருக்கு தன் தரிசனத்தை அளிக்கிறான் என்று கேட்டுக் கொள்ளும் தாஸர், தானே பதில் அளிக்கிறர். பகவந்தன், ஸ்த்ரீ, புருஷ, ஜட மற்றும் நபும்ஸகர்களில் இருக்கிறான் என்று அறிந்து வணங்க வேண்டும். தன்னை விட அறிந்தவர்களை கௌரவித்தால், அத்தகையவரின் துன்பங்களை விலக்கி, தன் ரூபத்தை அவர்களுக்கு காட்டுகிறான் என்கிறார்.

**168. ஈ ஸமஸ்த ஜக3த்து ஈஷா**
**வாஸ்யவெனிபுது3 கார்யரூபனு**
**நாஷவாத3ரு நித்யவெ ஸரி காரண ப்ரக்ருதி**
**ஸ்ரீஷகெ3 ஜட3ப்ரதிமெயெனிபுது3**
**மாஸதொ3ம்மெகு3 ஸன்னிதா4னவு**
**வாஸவாகி3ஹ நித்ய ஷாலக்3ராமதோ3பாதி3 ||(24-13)**

24 தத்வங்களால் கூடிய இந்த ஜகத், முன்னர், தற்போது மற்றும் அடுத்து என என்றைக்கும் பகவந்தனுக்கு யோக்யமானது. நித்யமானது. இது, அவனுக்கு ஜட ப்ரதிமை ஆகும். எப்படியெனில், ஸாலிகிராமத்தில் எப்படி அவன் நித்ய ஸன்னித்தானம் கொண்டிருக்கிறானோ, அதைப் போல, இந்த ப்ரக்ருதியும்கூட நித்யமானது. அதைப் போல ஜீவனும்கூட நித்யம் என்று அறிய வேண்டும் (அனாதி என்று அறிய வேண்டும்).

**169. ஏகமேவாத்2விதிய ரூப அ**
**நேக ஜீவரொளித்து3 தா ப்ர**
**த்யேக கர்மவ மாடி3 மோஹிஸுதிப்ப திளிஸத3லெ |**
**மூக வதி4ராந்தா4தி3 நாமதி3**
**ஈ களேவரதொ3ளகெ3 கரெஸுவ**
**மாகலத்ரன லௌகிக மஹாமஹிமெ கே3னெம்பெ3 ||(24-14)**

பின்ன பின்ன ஜீவ பின்ன பின்ன கர்ம – என்பதைப் போல, பகவந்தன் ஒருவனே. ஆனாலும், ஒவ்வொரு ஜீவ கோடிகளிலும் வெவ்வேறாக இருந்து, பற்பல கர்மங்களையும் (அவரவர்களின் யோக்யதைக்கேற்ப) தான் செய்வித்து, சுக துக்காதிகளை, அவரவர்களுக்குக் கொடுத்து, அதன் அறிவு நமக்கு வராதவாறு செய்து, தான் தெரிந்தும் தெரியாததைப் போல இருந்து, இந்த தேகத்தில் செயல்களை செய்து கொண்டிருக்கும் அவனுடைய மகிமைகளை அறிவதற்கு நம்மால் ஸாத்தியமா என்று கேட்கிறார் ஸ்ரீதாஸர்.

**170. ஆஹித ப்ரதிமெக3ளெனிஸுவவு**
**தே3ஹ கே3ஹாபத்ய ஸதி த4ன**
**லோஹ காஷ்ட ஷிலா ம்ருதாத்3மகவாத3 த்4ரவ்யக3ளு |**
**ஸ்நேஹத3லி பரமாத்ம எனகி3**
**த்தீஹ நெந்த3ரித3னுதி3னதி3 ஸ**
**ம்மோஹ கொளகா3க3த3லெ பூஜிஸு ஸர்வ நாமகன ||(24-16)**

பகவந்தனால் கொடுக்கப்பட்ட ஜகத்தின் அனைத்து பதார்த்தங்களில் (த்ரவ்யங்களில்) உதாரணத்திற்கு – ப்ரதிமைகள், ஜகத், தன, இரும்பு, மரச்சிலை ஆகியவற்றின் பரமாத்மன் அந்தர்யாமியாகி, அந்தந்தப் பெயரில், அந்தந்த ரூபமாக இருக்கிறான் என்று அனுஸந்தானம்

செய்து, அவனை பூஜிக்க வேண்டும் என்று விதியை சொல்கிறார் ஸ்ரீதாஸர்.

**171. மாத4வன பூஜார்த2வாகி3 நி**
**ஷே2த4 கர்மவ மாடி3 த4னஸ**
**ம்பாதி3ஸலு ஸத்புண்ய கர்மக3ளெனிஸி கொளுதிஹவு |**
**ஸ்வோத3ரம்ப4ரணார்த்த நித்யதி3**
**ஸாது3கர்மவ மாடி3த3ரு ஸரி**
**ஐது3வனு தே3ஹாந்தரவ ஸந்தே3ஹ வினிதில்ல ||(24-23)**

பகவந்தனின் பூஜை என்று நினைத்து நாம் சம்பாதித்த பண, திரவியங்கள், புண்ணியத்திற்கு சாதனம் ஆகின்றன. உயிருக்கு ஆபத்து வந்தபோது, ஸத்கர்மங்களை செய்யாது இருந்தால், நிஷேஷ கர்மங்களை செய்தாலும்கூட, அது ஸத்புண்யமே ஆகிறது. அதாவது, 10 பேருக்கு கெட்டதாக இருந்து, தன் ஒருவனுக்கு மட்டும் சுகமாக இருக்குமானால், அந்த செயலை செய்யக்கூடாது. அதே 10 பேருக்கு நல்லது ஆகுமாறு இருந்து, தனக்கு கெட்டதாக இருக்கும் என்றால், அத்தகைய செயல்களை செய்யலாம் அது புண்ணியமே ஆகிறது.

**172. அட3வியொளு பி3த்தத3லெ பெ3ளெதி3ஹ**
**கி3ட3த3 மூலிகெ ஸகலஜீவர**
**ஒடலொளிப்பாமயவ பரிஹர கை3ஸூவந்த3த3லி |**
**ஜடஜஸம்ப4வ ஜனக த்ரிஜக**
**த்3தொ3டெ3ய ஸந்தெயிஸெனலு அவரி**
**த்தெ3டெ3கெ3 பந்தொ3த3கு3வனு ப4க்தர பி3டெ3ய மீரதெ3லெ ||(24-25)**

காட்டில் விளைந்திருக்கும் மரம் செடி கொடிகள் ஆகியவற்றை விதைத்தது யார்?. காப்பது யார்?. அதைப் போலவே, மொத்த உலகின் அனைத்து செயல்களையும் தன் வயிற்றில் வைத்துக் கொண்டு, காக்கிறான் பகவந்தன். மூன்று உலகங்களின் தலைவனான ஒரு ஸ்ரீஹரியை, திருப்திப்படுத்தினால், அவன், தானே பக்தர்கள் இருக்கும் இடத்திற்கு வந்து, அவர்களுடைய பேச்சினை மீறாமல் அவர்களை காக்கிறான் என்று சொல்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

(தொடரும்)

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

### திருமதி. விஜயலட்சுமி ராகவேந்திராசார்ய (1940)

ஹரிதாஸ பரம்பரையில், புகழ்பெற்ற கல்லூரி பேராசிரியையாக வேலை பார்த்து, பல்வேறு விருதுகளை / பட்டங்களை பெற்ற ஹரிதாஸினிகளில் திருமதி. விஜயலட்சுமியும் ஒருவர்.

ஷிவமொக்காவில், கிருஷ்ணமூர்த்தி மற்றும் கிருஷ்ணவேணி தம்பதிகளுக்கு மகளாக பிறந்தார். விஜயலட்சுமி அவர்கள், B.Sc, B.Ed, M.A. Ph.D ஆகிய படிப்புகளை படித்து, ஒரு கல்லூரியில் பேராசிரியையாக வேலை பார்த்தார். இவருக்கு அரசு வேலையில் இருந்த ராகவேந்திராசார்ய என்பவருடன் திருமணம் ஆகி, வித்யா என்னும் ஒரு மகளும் இருக்கிறார்.

ஹரிதாஸ ஸாகித்யத்தில் ஈடுபாடு கொண்டிருந்த திருமதி.விஜயலட்சுமி அவர்கள், மைஸூர் ஸ்ரீகுருகோவிந்த விட்டல தாஸரின் சிஷ்யரான, மாண்ட்யாவின் ஸ்ரீவராஹஹரி விட்டல தாஸரிடமிருந்து 'மங்களாங்க ஹரிவிட்டலா' என்னும் அங்கிதத்தினை 1999ம் ஆண்டு பெற்றார். கீர்த்தனைகளை இயற்றத் துவங்கினார்.

மத்வ ஸம்பிரதாயத்தின் 'கன்னட கிருஷ்ண காவ்ய' மற்றும் வல்லப ஸம்பிரதாயத்தின் 'ஹிந்தி கிருஷ்ண காவ்ய' இந்த இரண்டினையும் ஒப்பிட்டு ஒரு ஆராய்ச்சி கட்டுரை எழுதி, அதற்கு பெங்களூரு பல்கலைக்கழகத்திடமிருந்து Ph.D பட்டம் பெற்றார். பல்வேறு மடங்களில் நடைபெறும் ஹரிதாஸ ஸாகித்ய கூட்டங்களில் பங்கு பெற்று பேசுவதுடன், சிறு குழந்தைகளுக்கு ஸாகித்யத்தினை கற்றுக் கொடுத்தும் வருகிறார்.

ஹரிதாஸினியான திருமதி. விஜயலட்சுமி 'மங்களாங்கஹரி விட்டல' என்னும் அங்கிதத்தில் சுமார் 300 கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார். 15க்கும் மேற்பட்ட புத்தகங்களையும் வெளியிட்டுள்ளார். 'ஹரிதாஸ ஸாகித்ய பூஷண' 'ஹரிதாஸ ஸாகித்ய ரத்ன' என்னும் பட்டங்களையும் பெற்றுள்ளார்.

**1. பாண்டுரங்கனின் ஸ்துதி**

இட்டிகல்ல மேலெ நிந்த3 தி3ட்ட பண்ட3ரிவிட்டலா
கெ3ட்டியாகி3 ரட்டெ பிடி3து3 தட்டனெ காயோ விட்டலா ||ப
பி3ட்ட ஹ்யாங்கெ3 இரலி பாபவ நட்டுவ பாத3வ விட்டல
கட்டிஹ ப4வ கட்டுக3ளனு குட்டி பி3டி3ஸோ விட்டலா ||அப

* இந்த கிருதியில் எதுகை, மோனைகள் மிகவும் அழகாக பொருந்தி வந்துள்ளது.

**2. ஸ்ரீஹரியின் பாதங்களின் ஸ்துதி**

பாத3 தோரோ பாபக3ளிவ பாத3 தோரோ ||ப
வேத3 பொக3ளுவ மோத3 நீடு3வ பாத3 தோரோ ||அப

ஹக3லிருளென்னதெ3 ரமெயு ஸேவிப பாத3வ தோரோ
க2க3ராஜன ஹெக3லொளு ஶோபி3ப பாத3 தோரோ
மக3னாகி3 மூர் ஹெஜ்ஜெ பூ4மிய ஆளெத3 பாத3 தோரோ
உகு3ரினிந்த3லி க3க3ன சேதி3ஸித3 பாத3 தோரோ ||1

கருணெயிந்த3லி க3ல்ல ஹெண்ண மாடி3த3 பாத3 தோரோ
ப4ரதனிகி3த்த பாது3கெ மெட்டித3 பாத3 தோரோ
ப4ரத்வாஜாஶ்ரம பாவனகொ3ளிஸித3 பாத3 தோரோ
துரதி3 வைரிகா3கி3 தரணி மெட்டினிந்த3 பாத3 தோரோ ||2

ஶகடன ப3டி3து3 புடி3புடி3 மாடி3த3 பாத3 தோரோ
தக தகனெந்து3 ப2ணி மேலே குணித3 பாத3 தோரோ
குகர்மி குருபன உருளிஸி பீ3ளிஸித3 பாத3 தோரோ
முகுதிதா3யக மங்க3ளாங்க3 ஹரிவிட்டல பாத3 தோரோ ||3

**3. ஸ்ரீ ராம ஸ்துதி**

ப3ந்த3 சந்த்3ர ராமசந்த்3ர ப3ந்த3 நோடெ3 ராணி ||ப
சந்த3த3 ஸீதெயொந்தி3கெ3 ப3ந்த3 நோடெ3 ||அப

பா3லராமயாக3 ரக்ஷிஸி ப3ந்த3 நோடெ3
பா3ளுகொட்டு கல்லு ப3ண்டெ3கெ3 ப3ந்த3 நோடெ3
பி3ல்லு முரிது3 பூ4மிஜெ ஸஹித ப3ந்த3 நோடெ3
பி3ல்லு ஹிடி3து3 பா4ர்க்க3வன்னெ கெ3லித3 நோடெ3 ||1

தந்தெ3 மாது கேளி வனதி3 நிந்த3 நோடெ3
தரதெ3 மாயா ம்ருக3த3 ஹிந்தெ3 ஹோத3 நோடெ3

தருணி களெத3ளெந்து3 ஹூடுகி3 தந்த3 ப3ந்த3 நோடெ3
தரணிஸுதன ஸசிவன ஶீள்த3 நோடெ3 ||2

மங்க3கு3ங்கு3ர நீடி3 மணிய கண்ட3 நோடெ3
மங்க3க3ளொட3னெ லங்காதி4பன கொந்த3 நோடெ3
மங்க3ளாங்கி3யொட3னெ புரகெ ப3ந்த3 நோடெ3
மங்க3ளாங்க3 ஹரிவிட்டல தா ப3ந்த3 நோடெ3 ||3

* பாலகாண்டத்திலிருந்து துவங்கி ராமாயண கதையை மிகவும் அழகாக ஹரிதாஸினி விஜயலட்சுமி அவர்கள் பாடியிருக்கிறார்கள் என்பதை இந்த கீர்த்தனையில் பார்க்கலாம்.

**4. ஸ்ரீனிவாஸ கிருதி**
ஶரணு ஶரணு தே3வ ஸ்ரீனிவாஸ | கருணதி3ந்த3லி காயோ வெங்கடேஶ ||ப
மொரெய ஹொக்கிருவெ நா நின்ன தா3ஸ |
த்வரிததி3ந்த3லி மாடு3 அக4னாஶ ||அப

நின்ன பாத3கெ நித்ய நா நமிஸுவெ | என்னபராத3 பி3ன்னயிஸுவெ |
க4ன்ன மஹிம நின்னன்னே பே3டு3வெ | மன்னிஸெந்து3 நின்னன்னெ ஸ்துதிஸுவெ ||1

ஹெஜ்ஜெ ஹெஜ்ஜெ நமஸ்கார ஹாகி நானு | ஸஜ்ஜெகெ சித்ரான்ன பரமான்ன |
கஜ்ஜாய கடுபு3 நைவேத்3யவனு | ஸஜ்ஜாகி3 ப4க்தியிந்த3 நீடு3வெனு ||2

தப்பு காணிகெ கப்ப கொடு3வெனெந்து3 | ஒப்பிஸி ஹரகெ நீடு3வெ நிந்து3 |
அப்ப மங்க3ளாங்க3 ஹரிவிட்டல ப3ந்து3 | தப்பு ஒப்புக3ளன்னு எணிஸதி3ரெந்து3 ||3

* இந்தப் பாடலில் ஹரிதாஸினி விஜயலட்சுமி, வெங்கடேசனின் பாதங்களில் விழுந்து வணங்கி, ஹெஜ்ஜெ நமஸ்காரம் செய்து, தான் செய்த அபராதங்களை கருணையுடன் மன்னித்து அருளவேண்டும் என்பதாக பிரார்த்தனை செய்கிறார்.

**5**. அங்கத3 மேலெ பி3ங்கதி3 குளித |
பங்கஜபாணி ஸ்ரீ லட்சுமிய ஸஹித ||ப

ஶங்கராதி3 வந்த்3ய ஹயக்3ரீவ மூருதி |
ஶங்கெயில்லதெ3 ப3ந்த3 ஞானானந்த3 ||அப

நிர்மல ஸ்படிக ஆஶாக்ருதி தே3வ | த4ர்ம மோக்ஷத3 ப்ரதீக தே3வ |
சர்மசக்ஷுவிகெ3 ஆகோ3சரனு இவ | து3ர்க3ணவ தோரிஸி ஸன்மார்க்க3 தோருவ ||1

வேத3 ஸ்வரூப வேத3 ப்ரதிபாத்3ய | மோத3 ஷரீர அச்சேத்3ய அபே4த்3ய |
வாதி3ராஜர ஹொரண நைவேத்3ய | ஸாத3ரதி3 உண்ட3 முனி ஜன வந்த்3ய ||2

அங்க3னெ ஸஹித அலௌகிக ஶரீர தா4ரி | ஆக3ஸவெ ஶிர விஶ்வ ஶரீரி |
யோகா3ஸனதி3 குளிதஹ ரக்கஸாரி | மங்க3ளாங்க3 ஹரி விட்டல அக4ஹாரி ||3

* லட்சுமி உடனான ஶ்ரீஹரியை வணங்கியிருப்பது மிகவும் அழகாக இருக்கிறது. வானையே தலையாகக் கொண்டவன் ஶ்ரீஹரி. விஸ்வரூபி. யோகாஸனத்தில் அமர்ந்திருக்கும் பரம யோகி.

**6. ஶ்ரீ கணபதி ஸ்துதி**

பாரோ க3ணநாயக நம்ம மனெகெ3
கோரி கை முகி3வெ அடி3க3டி3கெ3 ||ப

த்3வாரத3 ப3ளி நில்லு அரெக3ளிகெ3
ஆரதி பெ3ளகு3வெ அடி3க3ளிகெ3 ||அப

அலங்கரிஸித3 ஆ மண்டப நோடு3
நலினலியுதலி ப3ந்து3 கூடு3
ஜலதி3ந்த3 ஹாடோ3 ப4க்தர நோடோ3
நலிவிந்த3 பே3டி3த3 வர நீடு3 ||1

சக்குலி கோடு3ப3ளெ முச்சோரெ
அக்கரதி3 கொடு3வ உடு3கோ3ரெ
சிக்க சிக்க மக்கள ஜயகார
லெக்க ஹாகி மாடு3வ நமஸ்கார ||2

21 கடுபு3 மோத3கவு துப்ப
பாயஸ நினகெ3 அர்ப்பிதவு
அப்ப மங்க3ளாங்க3 ஹரி விட்டல த3யவு

தப்பதெ³ கருணிஸு அனுதி³னவு ||3

இவ்வாறாக, ஹரிதாஸ ஸாகித்யத்திற்கு அற்புதமான கீர்த்தனை ஸாகித்யங்களை காணிக்கையாக கொடுத்திருக்கும் ஹரிதாஸினி திருமதி விஜயலட்சுமி அவர்களுக்கு ஸ்ரீஹரி, ஆயுள் ஆரோக்ய ஐஸ்வர்யங்களைக் கொடுத்து அருளட்டும் என்று வேண்டிக் கொள்வோம்.

(அடுத்த இதழில் வேறொரு ஹரிதாஸினியைப் பற்றி பார்ப்போம்).

***

**தொடர்**

## ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர்

**டாக்டர். N.G.விஜயலட்சுமி.**

ஸத்யலோகாதிபதிகளிலும் கூட ஸாரூப்ய முக்தர்கள் இருக்கின்றனர் என்று சொல்கிறார்.

இவ்வாறாக, ஸ்ரீஹரி, ஜீவர்களின் யோக்யதைகளுக்கேற்ப, ஸாயுஜ்ய, ஸாலோக்ய, ஸாமீப்ய மற்றும் ஸாரூப்யாதி ஸ்தானங்க்ளில் அவர்களை வைத்து மகிழ்ச்சிப்படுத்துகிறான்.

இவர்களில் இன்னொரு விசேஷம் இருக்கிறது. பிரம்மாதி தத்வாபிமானி தேவதைகள் ஸாயுஜ்யாதி நான்கு வித முக்தி சுகத்தை அனுபவிக்கின்றனர். அதாத்விக தேவதைகள் என்றால், கர்மஜ தேவதைகள், ஸாயுஜ்ய முக்தியை விட்டு மற்ற மூன்று முக்திகளின் ஆனந்தத்தை அனுபவிக்கின்றனர். கர்மஜ தேவதைகளைவிட கீழான தேவதைகள், ஸாலோக்ய மற்றும் ஸாரூப்ய முக்தி சுகத்தை அனுபவிக்கின்றனர். மற்ற தேவதைகள் சதுர்புஜத்தைக் கொண்டு, ஸாரூப்ய முக்தி சுகத்தை மட்டும் அனுபவிக்கின்றனர்.

ஸ்ரீகுருபுரந்தர தாஸர், தம் ஒரு ஸுளாதியில் இந்த நான்கு மற்றும் இன்னொரு - மொத்தம் ஐந்து வித முக்திகளைப் பற்றி இவ்வாறு கூறியிருக்கிறார்.

ஸாயுஜ்ய ஸாலோக்ய ஸாமீப்ய ஸாரூப்ய ஸாரிஷ்டியங்களு

யோக்ய ஜீவரிகெ ஆ லோகதலிப்புது |
ஸாலோக்யவெம்புது பட்டணத ஸமீபதல்லிப்புது
ஸாமீப்யவெம்புது ஷங்க சக்ர கதெ பத்துமதரராகி ஸர்வரு |
ஸாரூப்யவெம்புது முக்தி ஸமவு
ஹரியு வாயுகளல்லி தத்வாபிமானி தேவதெகளிகெ
ஸாயுஜ்யவெம்ப முகுதியு ஹரி ஸர்வாங்கதி இப்புது சதுர்முககெ |
ஸாரிஷ்டி எம்புது பஞ்ச வித முகுதி எம்புது
ரிஷி மனுஜோத்தமரு சதுர்முகனிந்த கூடி
ஸ்ரீவாஸுதேவ ஷ்வேதத்வீபவாச ஸந்தருஷனதிந்த
இத்தாவரககள பிட்டு ஸமுதாயதிந்த க்ரமபாகவாகி
சதுர்முகனிந்த நாரத பரியந்த இப்ப அவரகவனிகெ |
முகுதராதரு மனுஜோத்தமரிந்த மொதலாகி த்ருண ஜீவரிந்த கடெயாகி
ஜீவாச்சாதகவெந்து பேரிப்புது |
ஜீவாச்சாதகவனு ஸம்ஹரிஸெ பரமாச்சாதக கடெ கடெகொத்தி முகுதர மாடுவெ |
அனாதிகாலதி முகுதிதாயக குருபுரந்தர விட்டல ஆலோகதல்லிப்புது ||42

ஸ்ரீமோகனதாஸர் தமது கோலு ஹாடு கிருதியில் இந்த ஐந்து வித முக்தியைப் பற்றி இவ்வாறு கூறியிருக்கிறார்.

ஸாரூப்ய ஸாலோக்ய ஸாமீப்ய ஸாயுஜ்ய
ஸாரிஷ்டி பஞ்சவித முக்தி கோலெ |
ஸாரிஷ்டி எம்போது விரிஞ்சியொப்பகெ ஈரெரடு
முக்தி இதரரிகெ கோலெ ||113

ஸ்ரீப்ரஸன்ன வெங்கட தாஸர், இந்த 7ம் நுடியில் பற்பல விஷயங்களை அடக்கியிருக்கிறார். நீசோச்ச என்னும் சொல்லினால், ஸ்ரீமதாசார்யரின் முக்கிய தத்வங்களான தாரதம்ய, நீசோச்ச விஷயங்களை தெரிந்து கொள்ளலாம். அது மட்டுமல்லாமல், நான்கு வித முக்திகள் மற்றும் அங்கு அனுபவிக்கும் முக்தர்களின் சுகத்தையும், ஸ்ரீவாதிராஜர், ஸ்ரீவிஜயதாஸர், ஸ்ரீகுருபுரந்தரதாஸர், ஸ்ரீமோகனதாஸர் ஆகியோர் தத்தம் கிருதிகளில் என்ன வர்ணித்திருக்கிறார்களோ அந்த அனைத்து விஷயங்களின் ஸாரத்தையும் இந்த ஏழாம் நுடியில் நாம் பார்க்கலாம். அடுத்து 8 மற்றும் 0ம் நுடிகளில் ஸ்ரீதாஸர் என்ன சொல்லியிருக்கிறார் என்பதை பார்க்கலாம்.

ப்ராகாபரோக்ஷ காலா பக்தியோகத பலா
ஈக ஆனந்தோன்னாஹ ஸவியாகி உம்ப பாஹ ||8

அபரோக்ஷ காலத்தில் முக்தர்கள் வெறும் ஆனந்தத்தை அனுபவிக்கின்றனர். அது ஒன்றே அவர்களின் விருப்பம். முக்தரான திவ்ய ஆண் பெண்கள், லீலையினால், திவ்யமான சுகானுபவத்தை அடைவர். அவை வெறும் ஸ்வரூப சுகானுபவம் ஆகும். அவர்களுக்கு புற அந்த:கரணங்கள் இல்லை ஆகையால், ஆனந்தம் பெறுவதற்கு போக பதார்த்தங்கள் தேவையில்லை. ஞானஜ்யோதி ஸ்வரூபரான முக்த ஸ்த்ரி புருஷர்கள் தாம் விரும்பியபோதெல்லாம், விரும்பிய ப்ராக்ருத தேகங்களை பெற்று சஞ்சரிக்கின்றனர். இங்கு ப்ராக்ருத என்றால், ஷுத்த ஸத்வ நிர்மிதமான தேவ கந்தர்வாதி நானா சரீரங்களை பெற்று, அந்த சரீரங்களால் திவ்ய போகங்களையும் அனுபவித்தவாறு சுகப்படுகின்றனர். முக்தர்களுக்கு விஷய போக தோஷம் இல்லை என்று சொல்கின்றனர். ஏனெனில், விரும்பிய அனைத்து பதார்த்தங்களும் நினைத்த நொடியில் கிடைத்துவிடுகின்றன. விரும்பிய பதார்த்தங்கள் கிடைக்கவில்லை என்றால், துக்கம் உண்டாகிறது. முக்தர்களுக்கு இத்தகைய துக்கம் இல்லவேயில்லை - எப்போதும் ஆனந்தமே.

ரிக் யஜு:ஸ்ஸாமாகானா அபவர்க்கதி கோஷணா
யக்ஞேஷா நாரேயணா முக்த வர்கர வ்யக்யான ||9

வைகுண்ட வர்ணனெ கிரந்தத்தின் முதல் ஸந்தி மோக்ஷ ஸந்தி. இதில் ஶ்ரீவாதிராஜர் இவ்வாறு சொல்கிறார்.

ஒப்$^{3}$ப$^{3}$ பி$^{3}$ரம்மனு ரிக் வாக்$^{3}$யவ போஷி$^{2}$ஸுவ க$^{3}$ட$^{3}$ ம
த்தொப்$^{3}$ப$^{3}$ கா$^{3}$யத்ர ஸாமவனு
உப்$^{3}$பி$^{3}$த$^{3}$ மனதி$^{3}$ந்த$^{3}$ கா$^{3}$னவ மாடு$^{3}$த்த
ஒப்$^{3}$ப$^{3}$ பி$^{3}$ரம்மனு புராணக$^{3}$ள ||5

அப்$^{3}$ஜனாப$^{4}$ன புரதி$^{3}$ ஓது$^{3}$திப்பனு க$^{3}$ட$^{3}$
மத்தொப்$^{3}$ப$^{3}$ ஶ்ரீஹரிய மூர்த்தியனெ
அப்$^{3}$ப$^{3}$ரதி$^{3}$ந்த$^{3}$ நெனெது$^{3}$ ஸுகி$^{2}$ஸுவ க$^{3}$ட$^{3}$
ஒப்$^{3}$ப$^{3}$ பி$^{3}$ரம்மனு ஸோமரஸவ ||6

அப்$^{3}$ஜனாப$^{4}$னிக$^{3}$க்$^{3}$னி முக$^{2}$தி$^{3}$ கொடு$^{3}$வ க$^{3}$ட$^{3}$ ம
த்தொப்$^{3}$ப$^{3}$ பி$^{3}$ரம்மனு பூஜிஸுவ க$^{3}$ட$^{3}$
ஸர்ப்ப தே$^{3}$வருக$^{3}$ளீபரியல்லி நரஹரிய
க$^{3}$ர்ப்ப$^{3}$வாஸத$^{3}$ல்லிஹரு க$^{3}$ட$^{3}$ ||7

இந்தனந்த பி$^{3}$ரம்மாத்$^{4}$யரு வைகுண்ட$^{2}$த$^{3}$ல்லி
அந்தரந்தரத$^{3}$லிஹரெந்து$^{3}$
மந்த்ரக$^{3}$ளே கொண்டா$^{3}$டு$^{3}$தலிவெயத$^{3}$ரிந்த$^{3}$ ஶ்ரீ
காந்தன புரிய நெனெவெ ||8

இதே மாதிரியாக, வைகுண்டத்தில் அனாதி காலத்திலிருந்து முக்தர்கள், ஸ்ரீஹரியை வணங்கியவாறு வந்திருக்கும் அனந்த பிரம்மர்கள், அனந்த சேஷ கருடர்கள், அனந்த இந்திரர்கள் ஆகியோர் தாரதம்யத்தினால் இருப்பார்கள்.

ஸ்ரீமோகனதாஸர், இதே விஷயத்தை தம் கோலு ஹாடு கிருதியில் இவ்வாறு சொல்லியிருக்கிறார்.

ஒப்ப பிரம்மனு தேவதார்ச்சனெ மாடுவ
ஒப்ப பிரம்மனு அக்னிஹோத்ரவ கோலெ |
ஒப்ப பிரம்மனு அக்னிஹோத்ர மாடுத்திரெ
ஒப்ப பிரம்மனு பேள்வ புராண கோலெ ||

ஸ்ரீஹரியின் தாமமான வைகுண்டம், அனேக முக்த பிரம்மர்களால் வணங்கப்பட்டு வருகிறது என்று சொல்கிறார். ஒப்ப பிரம்மன், ரிக்வேத மந்திரங்களையும், இன்னொரு பிரமன் காயத்ரி என்னும் ஸாம வேதத்தின் பாகத்தையும், இன்னொரு பிரம்மன் புராணத்தை படித்துக் கொண்டும் இருக்கின்றனர். அதைப் போலவே, ஸமஸ்த முக்த பிரம்மர், ஏதோவொரு விதத்தில் ஸ்ரீஹரியை பக்தியுடன் வணங்கி மிக்க மகிழ்ச்சி கொள்கின்றனர். ஒரு பிரம்மன், யக்ஞ நாமகனான ஸ்ரீஹரியின் மூர்த்தியை மிகவும் பக்தியுடன் நினைத்து மகிழ்ச்சி கொள்கிறான். இன்னொரு பிரம்மன், யக்ஞத்தின் ஒரு பாகமான ஸோமாஹுதியை அக்னி முகத்தினால், அப்ஜநாமனுக்கு அதாவது பத்மனாபனுக்கு கொடுக்கிறான். இன்னொரு பிரம்மன், யக்ஞ நாமக ஸ்ரீஹரியின் மூர்த்தியை பூஜிக்கிறான். இவ்வாறே, கருட சேஷாதி தேவதைகள் அனைவரும் ஸ்ரீஹரியை வணங்கியவாறு, அவனின் கர்ப்பத்தில் நலமாக வசிக்கின்றனர். முன்னர் கூறியதைப் போல, ஸ்ரீஹரியின் அங்களத்தில் நிலைத்து, ஸாயுஜ்ய பதவியை அடைந்து சுகப்படுகின்றனர்.

முக்தர்கள் முன்னர் ஸம்ஸார அவஸ்தையில் இருந்தபோது, விதியினால் ப்ரேரணை செய்யப்பட்டு, வெறும் பகவத் ப்ரீதிக்காக பற்பல யக்ஞ யாகாதிகளை செய்திருக்கின்றனர். அந்த ஸம்ஸ்காரத்தில் பலத்தினால் முக்தியிலும்கூட யக்ஞ யாகாதிகளை செய்தவாறே

இருக்கின்றனர். ஆனால், இங்கு எந்தவித சோர்வும் அவர்களுக்கு இருப்பதில்லை. உடன், பகவந்தனின் விசேஷ ப்ரீதி அபாரமாக இருக்கிறது. முக்தர்கள் விதி நிஷேதங்களுக்கு கட்டுப்படுவதில்லை. ஆகையால், சில சமயங்களில் யக்ஞ யாகாதிகளை செய்வதில்லை. இதனால் அவர்களுக்கு பகவந்தனிடம் பக்தியோ அல்லது முக்தி சுகமோ அது குறைவதில்லை. ஏனெனில், முக்தியில் செய்யும் யக்ஞ யாகாதிகள் அடுத்த பலனுக்கு சாதனம் அல்ல. முன்னர் செய்த சாதனையின் பலன் ஆகும். இதற்கான ஸ்ருதி வாக்கியம் இவ்வாறு இருக்கிறது.

அப்யாஸ பாடவாத் ஸ்னேஹாத் ஆஸ்ரமத்வாதுபாஸனா |
பக்திஷ்ச ஸுகரூபைவ முக்தானாம் ந து ஸாதனம் ||43

இதனால், முக்தி என்றால், பக்தியின் ஸாம்ராஜ்ய என்று சொல்லலாம். முக்தர்களின் அனைத்து காரியங்களும் ஸ்ரீஹரியின் சேவா ரூபமாகவே இருக்கின்றன. அங்கு பக்தியே ஒளிர்கிறது.

இதையே ஸ்ரீவிஜயதாஸர் இவ்வாறு கேட்கிறார்.

பகுதி ஸுகவோ ரங்க முகுதி ஸுகவோ
யுகுதிவந்தரெல்ல ஹேளி ||ப

பகுதி மாடித ப்ரஹ்லாத முக்தியன்னு படெதுகொண்ட
முகுதி பேடித த்ருவராய யுகுதியிந்த ஹரியகண்ட ||1
பகுதி மாடித அஜாமிளனு அந்த்யதல்லி ஹரிய கண்ட
முகுதி பேடித கரிராஜ துரிதகளனு களெதுகொண்ட ||2
பகுதி முகுதிதாத நம்ம லகுமியரஸ விஜயவிட்டல
ஷகுதனெனுத திளிது நித்ய பகுதியிந்த பஜனெ மாடிரோ ||3

சதுர்புஜாங்க ரூபா முக்த ஜாதி சமூப
ஸோத்தமரல்லி பக்தி முக்தவ்ராதகாஸக்தி ||10 (தொடரும்)

***

**கீழ்க்கண்ட வழிகளில் எங்களுடன் இணைந்து,**
**அனைத்து தகவல்களையும் பெற்றுக் கொள்ளவும்**
Facebook ID : haridasa.vijayam // Twitter ID : haridaasa //
Youtube Channel : Jagannatha Kesava //
Whatsapp Groupல் இணைவதற்கு தொடர்பு கொள்ளவும்

தொடர்

## ஹரிதாஸ ஸாகித்ய ஸார

திரு ஜி. வரதராஜ ராவ்

### ஹரிதாஸ ஸாகித்யத்தின் பொற்காலம்

அவர் செய்த பக்தியின் பலனே, அவர் நமக்காக விட்டுச் சென்றிருக்கும் நூற்றுக்கணக்கான கன்னட பாடல்கள். தாமாகவே விருந்தாவன பிரவேசம் செய்தவர் ஆகையால், 'நின்ஹத்தெ பருவ சம்பத்திய கொடோ' என்னும் கோரிக்கையும் நிறைவேறியுள்ளது எனலாம். மாத்வ தத்வத்தை சரியாக நிறுவியவர்களில் ஒருவரான அவரில், தத்வஞான என்பது நிரம்பி வழிந்தது.

ஸ்ரீவாதிராஜர் போன்ற யதிகளுக்கு எதிலும் குறை இருந்ததில்லை. ஆனாலும், அவர் தம் ஒரு கீர்த்தனையில் 'ஸகல ஸாதனவெனகெ கைஸேரிது, முகுதிய மாதிகெ பாரத தனவு' என்று சொல்லியிருக்கிறார். இது மற்றவர்களின் பிரச்னைகளுக்காக அவர் பாடியது என்று சொல்ல வேண்டும். கடைசியில் 'ஓதிதெனு எல்லண்ண கல்லண்ண எனுதலி ஸ்வாத்யாயவு எனகெ பகடெ பஞ்சி, ஸாதிஸித பரிய தனவன்னு கூட்ஹ்யாகி மோதி ஹயவதன நா நின்ன மரெதெ' என்று நொந்து கொண்டிருப்பதை கவனித்தால், இது மற்றவர்களுக்காகவே என்பது சரியாக புரிகிறது.

ஸ்ரீவாதிராஜர், தமது நிரந்தரமான ஸாதனையினால், தம் ஆராத்ய தெய்வமான ஹயக்ரீவ ஸ்வாமியின் பூர்ண அனுக்கிரகத்திற்கு பாத்திரர் ஆகியிருந்தார். தினமும், ஹயக்ரீவ ஸ்வாமி, அவருக்கு தரிசனம் அளித்திருந்தார் என்பதை 'குதுரெ பந்திதெ, செலுவ குதிரெ பந்திதெ, வாதிராஜகெ முததி ஞான பகுதி கொடுவ' என்று மகிழ்ச்சியுடன் பாடியிருக்கும் கீர்த்தனையே சாட்சி எனலாம். இந்த அற்புதமான, தெய்வீகமான குதிரைக்கு, கடிவாளங்கள் இல்லை. இது வெல்லம், கடலை மெல்லும் குதிரை. புல் தின்னும் குதிரை இல்லை. இந்த குதிரையை கண்டாலே, ஸ்ரீவாதிராஜருக்கு பயங்கரமான பாசம். அதன் காட்சி தெரியும்போதே 'ஆவ கடெயிந்த பந்தெ வாஜிவதனனெ' என்று தன்னை மறந்து பாடுவார். அதனுடன் பலவிதமான பேச்சுவார்த்தை நடத்தி, 'ப்ருத்ய வாதிராஜ முனிய ஸலஹெ பந்தெய?' என்று நட்புடன் மகிழ்ச்சி அடைவார்.

ஸ்ரீவாதிராஜர் இயற்றியிருக்கும் ஸ்துதிமாலைகள் ஒன்றைவிட ஒன்று அற்புதமானவை. 'ஆர்யன்ன யோகதுர்யன்ன பஜிஸி, வர்யன்ன

மத்வாசார்யன்ன' என்று ஸ்ரீமத்வாசார்யரை வாய் நிறைய கொண்டாடி வணங்கினால், டீகாசார்யர் என்று புகழ் பெற்ற ஸ்ரீஜயதீர்த்தரை 'பளிரெ, நிம்மய குண வர்ணிஸளவெ ஜலதிஸம கம்பீர ஜயதீர்த்தவர்ய' என்று மெச்சி, அவர் ஸாதித்த அனைத்து மஹத் காரியங்களையும் நினைவுபடுத்துகிறார். 'மத்வராயரெம்புது மத்தொந்து ரூபதல்லி இத்து நுடிதந்ததலி ஸித்தாந்தவனு நீ உத்தரிஸி லோகதலி அத்வைத மததவர உத்யோகதிந்த பலு முக்தரனு மாடிதெ' என்னும் நுடியில், ஸ்ரீஜயதீர்த்தரை, ஸ்ரீமத்வாசார்யரே இன்னொரு முறை ரூபம் ஏற்று வந்தாரோ என்பதைப் போல சொல்லியிருப்பது கவனிக்க வேண்டிய விஷயம். மற்ற யதிவர்யரில், ஸ்ரீபாதராஜரையும், ஸ்ரீவ்யாஸராஜரையும், அபாரமான பக்தியினால் வணங்கி, தம் நன்றியினை தெரிவித்துக் கொண்டிருக்கிறார்.

தம் சம காலத்து ஹரிதாஸர்களில், ஸ்ரீவாதிராஜர், பேலூர் ஸ்ரீவைகுண்ட தாஸரைக் குறித்து இயற்றியிருக்கும் இரு கீர்த்தனைகள், அவருடைய பரந்த மனப்பான்மையை காட்டுகிறது. 'தாஸோத்தம நீனே, ஸ்ரீவைகுண்ட தாஸோத்தம நீனே' என்று புகழ்ந்து, அவர் பாலகோபாலனை தரிசனம் பெற்றது, தம் அருகில் வரச்செய்து, துடையின் மேல் அமர்த்தி எப்படி கொஞ்சினார் என்பதை விளக்குகிறார். வேத சாஸ்திரங்களை அறிந்த அத்தகையவரின் எச்சில் கூட பவித்ரம் என்று சொல்லி 'எஞ்சலென்னலிபஹுதெ மனுஜரிதனு அகவன தனஞ்சய ஸுவைகுண்டதாஸர வதனத கணவ' என்று புகழ்கிறார். 'வர வைகுண்ட தாஸோத்தம எனகெ ஹரிய தோரிஸி பரமதன்யன மாடித' என்னும் ஸ்ரீவாதிராஜரின் நுடிகளில் அவருடைய பக்தி மட்டுமல்லாமல், ஸ்ரீவைகுண்ட தாஸரின் ஆளுமையும் கூட தெரிகிறது.

ஸ்ரீவாதிராஜரின் கீர்த்தனை சாம்ராஜ்யம் மிகவும் விஸ்தாரமானது. ஸ்ரீகிருஷ்ணனின் மகிமைகளை விதம்விதமாக விளக்கியிருக்கிறார். 'லோகபரிதனோ ரங்கடனேக பரிதனோ' என்று சொல்வதில், அவர் அந்த ஸ்வாமியை எப்படி பக்தி பாவத்துடன் கண்டிருக்கிறார் என்பதை நாம் அறியலாம். ஸ்ரீவிஷ்ணுவின் தசாவதாரங்களையும் பற்பல விதமக வர்ணித்திருக்கிறார். அனைத்து கீர்த்தனைகளிலும் ஸ்ரீவாதிராஜரின் வாக்விலாஸத்தை நாம் கவனிக்கலாம்.

ஸ்ரீபாதராஜர் மற்றும் ஸ்ரீவ்யாஸராயரைப் போலவே, ஸ்ரீவாதிராஜரும், வெறும் ஆத்ம நிவேதனை பக்தியை வெளிப்படுத்துவதில் திருப்தி

அடையாமல், சரளமான நுடிகளில் (மெட்டுகள்), ரகசியமான /ஆழமான சாஸ்திர சங்கதிகளை, அனைவரும் அறிவதற்காக எடுத்திருக்கும் முயற்சி மிகவும் சிறப்பானது. ஸ்ரீமன் நாராயணன், ஸ்ருஷ்டியை செய்து, எப்படி தானே அதன் ஸ்திதி, லயங்களுக்கும் காரணன் ஆகிறான் என்னும் தத்வத்தை மிகவும் சுவாரசியமாக நிரூபித்தார். ஸ்ரீகிருஷ்ணனின் மொத்த வாழ்க்கையையும் தீர்க்கமான ஒரு கிருதியில் பாடி கொண்டாடினார். மக்களுக்கு பிடித்ததான த்ரிபதி நுடியில், சாஸ்திர சம்மதமான பல்வேறு விஷயங்களை மிகவும் அனாயாசமாக பாடினார்.

குண்ட க்ரியெ, ஸ்வப்னபத, ஹரிஸர்வோத்தமஸார, முதலான கிருதிகள், வேதாந்த விஷயங்களையே முழுவதுமாக சொல்கிறது. பீமஸேன பாமினியாதனு - என்று கீசக வதையை பாடினார். இந்த க்ருதியில் ஸ்ரீவாதிராஜரின் கவிதை இயற்றும் திறனை நாம் கவனிக்கலாம். ஸ்ரீவாதிராஜரின் இத்தகைய முயற்சிகளால், ஹரிதாஸ ஸாகித்யத்திற்கு ஒரு புதிய மலர்ச்சி உண்டானது என்று சொல்லலாம். அவருக்கு தனக்காக மட்டுமே பயன்பட்டிருந்த ஹரிதாஸ ஸாகித்யத்தின் சிறப்பு, இப்போது மத்வ ஸித்தாந்தத்தை சாஸ்திர ரீதியாக விளக்கும் வழியாகவும் மாறியது ஒரு அபாரமான விஷயம் ஆகும். சாஸ்திர கிரந்தங்கள், புத்தி ப்ரதானமாக இருந்து, மிகவும் கடினமான நடையை கொண்டிருந்தால், ஸ்ரீவாதிராஜரின் இந்த க்ருதிகள், மிகவும் எளிமையான கன்னடம் மற்றும் சரளமான நடை ஆகியவற்றுடன், அனைவரின் மனதைத் தொடுமாறு இருக்கிறது.

ஸ்ரீவாதிராஜர், தம் க்ருதி ரசனையில் இன்னும் ஒரு படி முன்னேறி, ‘வைகுண்ட வர்ணனெ’ என்பதான ஸ்வதந்த்ரமான, சாஸ்திர விஷயங்களையே உள்ளடக்கிய க்ருதிகளை இயற்றினார். ‘லட்சுமி ஷோபானெ’ என்னும் இன்னொரு க்ருதியும், சாஸ்திர மற்றும் சாகித்ய அம்சங்களின் இனிமையான இணைப்பாக இருக்கிறது. ஸ்ரீவாதிராஜர் சொல்லிக் கொடுத்த இந்த சிறப்பான பயன்பாடுகளே, அடுத்து ஸ்ரீவிஜயதாஸர் முதலான மற்ற ஹரிதாஸர்களுக்கு ஒரு நல்ல வழிகாட்டுதலாக இருந்தது.

முக்கியமாக, ஹரிதாஸ ஸாகித்யத்தின் இந்த துவக்க காலத்தில், ஸ்ரீபாதராஜர், ஸ்ரீவ்யாஸராஜர் மற்றும் ஸ்ரீவாதிராஜர் ஆகிய மூவரும் மேற்கொண்ட இந்த கீர்த்தன கைங்கர்யம், அடுத்து வந்தவர்களுக்கு மிகச்சிறந்த ஆதாரமாக இருந்தது எனலாம். இந்த யதி த்ரயர்களை, ஹரிதாஸ ஸாகித்யத்தின் வளர்ச்சிக்கான பாதையில் ‘ரத்ன-த்ரயர்’ என்றே நாம் அழைக்கலாம்.

ஸ்ரீவாதிராஜர் போற்றிப் பாடியிருக்கும் ஸ்ரீவைகுண்ட தாஸர் (ஆண்டு 1560), இதே காலகட்டத்தில் வாழ்ந்த இன்னொரு சிறந்த ஹரிதாஸர் ஆவார். இவரைப் பற்றிய மேலதிக தகவல்களோ, இவர் இயற்றிய கீர்த்தனைகளோ அதிகமாக நமக்குக் கிடைக்கவில்லை. இவர் ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தை சேர்ந்தவர் என்றும், பேலூர் சென்னகேஷவனின் பரம பக்தர் என்பது மட்டும் தெரிய வருகிறது. மற்ற ஹரிதாஸர்களைப் போல, இவர் தீர்த்தக்ஷேத்திர யாத்திரைகளை மேற்கொள்ளாமல், பேலூரின் சென்னகேஷவனின் பரமானுக்கிரகத்தைப் பெற்று, எப்போதும் அங்கேயே ஸ்வாமியின் தியானத்தில் ஈடுபட்டிருந்தார். இவருடைய பக்திக்கு மெச்சிய சென்னகேசவன், இவருடைய இஷ்டார்த்தங்களை நிறைவேற்றினான். இவர் அர்ஜுன அம்சர் ஆகையால், இவர் விரும்பியதைப் போல, ஸ்ரீகிருஷ்ணன், பாலகோபாலனாகி காட்டிக் கொண்டான், என்று ஸ்ரீவாதிராஜரின் கிருதியிலிருந்து தெரிய வருகிறது.

யதிவரேண்யரான ஸ்ரீவாதிராஜர், தாஸ வரேண்யரான ஸ்ரீவைகுண்ட தாஸரை பார்க்க விரும்பி, பேலூக்கு வந்தபோது ஒரு சுவாரசியமான சம்பவம் நடந்தது என்று, ஸ்ரீவைகுண்ட தாஸர் இயற்றிய ஒரு கீர்த்தனையிலிருந்து தெரிய வருகிறது. ஸ்ரீவைகுண்ட தாஸர், குழந்தை கிருஷ்ணனை தன் துடையில் படுக்க வைத்து கொஞ்சிக் கொண்டிருக்கையில், அங்கே நுழைந்த ஸ்ரீவாதிராஜர், அந்தக் காட்சியைக் கண்டு மகிழ்ந்தார். பின்னர், அந்தக் குழந்தை யார் என்று கேட்க, அதற்கு ஸ்ரீவைகுண்ட தாஸர், 'மகுவு காணய்ய மாயத மகுவு காணய்யா, ஸுகுண வாதிராஜனே மூஜகவ தன்ன உதரதொளிட்ட' குழந்தை என்று ஸ்ரீவாதிராஜருக்கு சொல்லி, ஸ்ரீகிருஷ்ணனின் மொத்த பாலலீலையையும் கீர்த்தனை ரூபத்தில் பாடினார். கடைசி நுடியில்:

ஷ்ருதிகோசரனச்யுதன பாவனாதி மூர்த்தி
ரதிபதிபிதனம் சேஷதேவாராத்யனு
க்ஷிதிகதிக வேலாபுரபதி வைகுண்ட கேஷவனு
யதியெ நீ நோடலு ஷரணாகதன தொடெய மேலே குளித

என்று தம் மனோதர்மத்திற்கு ஏற்ப, அனைத்தையும் விளக்கினார். இத்தகையவரின் தரிசனத்தால் மகிழ்ந்த ஸ்ரீவாதிராஜர், ஸ்ரீவைகுண்ட தாஸரைக் குறித்து இயற்றிய இரு கீர்த்தனைகளும் மிகவும் அற்புதமானவையே ஆகும். (தொடரும்)

தொடர்

**ஸ்ரீகனகதாஸர்**

**திரு.வ்யாஸனகெரெ ப்ரபஞ்சனாசார்யர்**

**6 ஸ்ரீகனகதாஸரின் வாழ்க்கை**

அந்த காலத்து வழக்கப்படி கனகனுக்கு சிறு வயதிலேயே திருமணம் நடைபெற்றது. ஒரு மகனும் பிறந்தான். தம்பதிகளில் இருந்த அன்யோன்யத்திற்கு குறியீடாக, கணவன் மனைவிக்கு விளக்குவதாக, மோஹன தரங்கிணியில், கதை இருப்பது கவனிக்க வேண்டிய விஷயம். அந்த கிருதியில் கணவன் மனைவியை மத்வல்லபே என்றும் மனைவி கணவனை மன்மனோநாத என்றும் அழைப்பதை காணலாம். மோஹன தரங்கிணியில் வரும் அவளுடைய ரூப வர்ணனை, கனகதாஸரின் மனைவியின் உருவ வர்ணனை என்றும் கூட நாம் புரிந்து கொள்ளலாம். இதிலிருந்து அறிவதைப் போல, அவள் மிகவும் அழகானவள் மற்றும் குணவதி. இதைத் தவிர அந்தப் பெண்மணியைப் பற்றி வேறு எந்த தகவலும், வேறு எந்த இடங்களிலிருந்தும் நமக்குத் தெரிய வருவதில்லை.

ஆனால், கனக நாயகனின் தாம்பத்யம், அதிக காலம் நடந்ததாக தெரியவில்லை. குழந்தை இன்னும் சிறு வயதில் இருந்தபோதே, அவருடைய மனைவி இறந்தார் என்று சொல்லப்படுகிறது. அதன் பின், அந்த குழந்தையும் சில நாட்களில் இறந்து விட்டது. அடுத்து அவருடைய தாயும் இறந்தார். இப்படியாக, ஸ்ரீகனகதாஸரின் சம்சாரிக வாழ்க்கை பல துன்பங்கள் இடையே நகர்ந்தது. அந்த சமயத்திலேயே இவருடைய மனதில், வைராக்ய பாவம் குடிகொண்டது. ஆனாலும், சமூகத்திற்காக, மக்களுக்காக அவர் அதிகாரத்தில் இருந்து வந்தார். ஒரு புறம் கடமை, மறு புறம் வைராக்ய பாவம். இந்த இரண்டின் நடுவில் அவருக்கு அவ்வப்போது தாஸன் ஆகுமாறு, அவருடைய ஆராத்ய தெய்வமான ஸ்ரீஹரியிடமிருந்து குறிப்பு வந்து கொண்டிருந்தது.

அதைப் பற்றி நன்றாக சிந்திக்கும் முன்னரே, எதிரிகளின் படையெடுப்பு நடந்தது. கனக நாயக, கடுமையாக போர் புரியத் துவங்கினார். மிகச் சிறந்த வீரனாக இருந்தாலும், எதிரிகளின் வஞ்சனையினால், கனகனுக்கு போரில் வெல்ல முடியவில்லை. 10 நாட்கள் நடந்த போரில், தன் சைன்யங்கள் அதிகமாக இறந்து விழுந்ததைக் கண்டார். ஆனாலும் போரிட்டுக் கொண்டிருக்க, எதிரி, அவர் பின்னால் வந்து கத்தியால் குத்தி,

கீழே தள்ளி விட்டார். வெங்கடா வெங்கடா என்று கூவியவாறு கீழே விழுந்த கனகனுக்கு, 'என்னை வந்து பார். என் சேவகன் ஆகு' என்று வேங்கடவன் தரிசனம் அளித்து கூறினான். அது காகினெலெ ஆதிகேசவனே ஆவான்.

உடனடியாக கனக நாயகன், தன் அரசு வேலையை விட்டார். ஆத்ம உத்தாரத்திற்கான வழியை தேடினார். அவருடைய புகழ் பெற்ற பாடலான 'தாஸனாகு பவபாஷ நீடு' என்பது இதையே சொல்கிறது என்பதை பார்க்கலாம். ஸ்ரீஹரியின் ஆணையை கனக நாயகர் ஏற்றுக் கொண்டார். அதன் பலனாகவே, அவர் உடம்பு முழுக்க இருந்திருந்த விழுப்புண்கள் உடனடியாக விலகின. பூர்ண ஆரோக்கியம் அவருக்கு வந்தது. இவ்வாறு கனக நாயக, ஸ்ரீகனகதாஸராக மாற்றம் கண்டார்.

இவர் முன்னர் பல முறை விஜய நகரத்திற்கு சென்றிருந்தபோது, அப்போது அங்கு கண்டிருந்த ஸ்ரீவ்யாஸராஜரையே, தற்போது தன்னுடைய ஆத்மோத்தாரக குருவாக கண்டார். உடனே அவரிடமே சென்றார். அவருடைய கருணைக்கு பாத்திரம் ஆனார். கனகதாஸ என்னும் பெயரை அர்த்தமுள்ளதாக ஆக்கிக் கொண்டார். அவருடைய அந்தரங்க சிஷ்யர்களில் ஒருவராக பல காலங்கள் இருந்தார். தினமும் படிப்படியாக கனகதாஸரின் அத்யாத்ம ஞானம், நம் ஊகத்திற்கும் மீறியதாக வளர்ந்து வந்தது.

அன்றிலிருந்து ஸ்ரீகனகதாஸரின் வாழ்க்கை முழுவதுமாக மாறியது. போர் வாழ்க்கை, அதன் விழுப்புண்கள் அனைத்தும் மறைந்தன. ஸ்ரீவ்யாஸராஜரிடம் இருந்து, ஆத்யாத்மத்தின் ரகசியங்களை அறிந்து கொண்டார். எப்போதும் ஹரிஸ்மரணையிலேயே இருந்தார். அவரது அனுபவங்கள் அனைத்தும் பத்யங்களாக வெளியே வந்தன. கண்ட விஷயங்கள் அனைத்திலும், ஆத்யாத்மத்தையே கண்டவாறு, மக்களுக்கு அதன் மகிமையை விவரிக்கத் தொடங்கினார். ஆத்யாத்மத்தை மறைந்து, வெறும் பௌதிக சுகத்தை அடைந்து கொண்டிருந்த மக்களைப் பற்றி அவருக்கு பரிதாபம் வந்தது. அத்தகையவர்களை நல்வழிக்கு கொண்டு வரவேண்டும் என்று பற்பல விதமான கிருதிகளை இயற்றத் தொடங்கினார்.

குருகளிடம் ஸ்ரவணம், உடன் இருந்தவர்களிடம் சர்ச்சை / விவாதம், மற்ற நேரங்களில் மனனம் மற்றும் தியானம் ஆகியவையே அவருடைய

நித்ய வழக்கமாக ஆனது. குருகளின் அனுமதியைப் பெற்று, அவ்வப்போது தீர்த்தயாத்திரையையும் மேற்கொண்டார். மக்களுக்கு உபதேசம் செய்தார். அபாரமான எண்ணிக்கையில், மக்கள், அவருடைய கிருதி, ஆக்ருதி மற்றும் நடவடிக்கைகளை பார்த்து / கவனித்து, அவர் மேல் சிறந்த மரியாதைகளை செலுத்தினர்.

***

**7. ஸ்ரீகனகதாஸரின் இனம்**

ஸ்ரீகனகதாஸரின் இனத்தைப் பற்றி பல்வேறு ஆராய்ச்சிகள் நடந்துள்ளன. அவர் வேடன் / குருபன் (இடையன்) என்று இருவேறு ஆராய்ச்சியாளர்கள் சொல்கின்றனர். ஆனால், இதுவரை நடந்த ஆராய்ச்சியில், பெரும்பாலும் பலரும் அவர் ஒரு இடையர் என்பதையே ஒப்புக் கொள்கின்றனர். 'நானு குருப' என்னும் கீர்த்தனை, இந்த கனகதாஸர் நம்மவர் என்று இன்றைய குருபர்கள் சொல்வது, ஸ்ரீவ்யாஸராஜர், அவரைக் குறித்து 'குருபனிகேனு மந்த்ரவோ கோணமந்த்ர' என்று சொல்லியிருப்பதான வாக்கு மற்றும் பல்வேறு கிரந்தங்களில் அவ்வாறே வந்திருப்பதைப் பார்த்து அப்படி அறியலாம்.

ஸ்ரீகனகதாஸர் நாயக என்னும் இனத்தை சேர்ந்தவர் என்று சொல்பவர்களுக்கு, கனக நாயக என்னும் அவருடைய பெயர் முக்கிய ஆதாரமாக இருக்கிறது. ஆனால், அது அவருடைய வேலைக்காகவும், பதவிக்காகவுமே வந்த பெயர் என்று சொல்வது மிகப் பொருத்தமாக உள்ளது. ஜாதியினால் குருபனாகவும், அதிகாரத்தினால் நாயகனாகவும் இருந்தது அவருடைய சிறப்பு. இந்த பத்யமானது, அவருடைய ஜாதியை குறிக்கிறது என்று சொல்ல முடியாது. மேலும், இதனால் அவருடைய ஜாதியைப் பற்றியதான சந்தேகங்களும் பரிகாரம் ஆகின்றன என்பதை அறியலாம்.

பாவன பதுக தனகரி எந்தானோ
பாவன பதுக தனகரி எந்தானய்யா
குருபனெந்து தா கரெயிஸிகொண்டானோ
குருபனெந்து தா கரெயிஸிகொண்டானய்யா ||

குருபனெந்தரெ பரி குருபனல்லோ
நரகுரிகள காயுவ குருபனய்யா
கம்பளி மஹிமா திளிதவனோ
கம்பளி மஹிமா திளிதவனய்யா ||

ஸாவிர கவனகள கட்டித குருபனோ
ஸாவிர கவனகள கட்டித குருபனய்யா
கனககிரிய ஹெஸரு ஸ்திர மாடிதனோ
கனககிரிய ஹெஸரு ஸ்திர மாடிதனய்யா ||

****

குருபன மஹிமா திளிஸ்யானோ
குருபன மஹிமா திளிஸ்யானய்யா
தாள தம்பூரி பாரிஸுத திரிக்யானோ
அல்லிகில்லிகெ இதொந்து ஸந்தி ஸந்திகேளபள் முந்த்ஹோளோ

****

ஹாலுமதத கனகதாஸனு ஸாலு மதகள திளிதவனு
ஸாலு மதகள திளித்ஹேளிதன ஸாகு மாடபேகு ஜாதிகளனு |
ஒந்து மத ஹிடித்ஹேளிதனோ மானவ மதவ திளிதவனு
மானவ மதவ திளித்ஹேளிதன பௌகினெ இல்ல ஜாதியனு |

**

குருபனெந்தரோ கனகதாஸ மஹாபஹாதூரா
திளிஸிதான ஸரவரிகெல்ல தேவரிருவ களா ||

**

கன்னட நாடின சென்னிக கவிவர
கனகதாஸ குருபனு கேளு
கனகதாஸ குருபனு கேளு
கேளிதக்காகி நம்மீ குல மேலு ||

***

குருபர குலதல்லீக புட்டிதெ
எனகெ ஈ ஜன்மதலி முகுதி எந்தெம்பெ
என்னும் ஸ்ரீகனகதாஸரின் உகாபோகத்தில் உள்ளபடி, அவர் குருப ஜாதியை சேர்ந்தவரே என்பதை அறியலாம்.

***

நாவு குருபரு நம்ம தேவரு பீரய்யா - என்னும் ஸ்ரீகனகதாஸரின் கிருதியின்படி, அவர் தெளிவாக தம்மை குருபர் என்று சொல்லிக் கொண்டிருப்பதை பார்க்கலாம்.

ஸ்ரீவ்யாஸராஜரைக் குறித்து பாடிய தம்முடைய கிருதி ஒன்றில், ஸ்ரீகனகதாஸர் தம்மை குருப குலத்தின் பிறந்தவன் என்று அழைத்துக் கொண்டிருப்பதையும் நாம் பார்க்கலாம்.

வ்யாஸமுனிராய ஸன்யாஸகுல ரதுன மன
தாஸெ ஸலிஸுத ஸலஹு தாஸனனு குருவே ||
ஈ தரெயொளீக குருபர குலதி ஜனிஸிதேனு
ஒதிதவ நானல்ல ஷாஸ்த்ரகளனு
பாத கமலவ நம்பி ப்ரார்த்திஸுவெ பஹுமூட
நாவென்ன கை பிடதெ ஸலஹு ஸேவகன || (தொடரும்)

***

## இந்த மாத ஆராதனைகள்

**ஸ்ரீ ஹஸிக்யாளு கோவிந்த விட்டலதாசர் (1891-1919)**

கோவிந்தாங்க்ரி யுகாஸக்தம் கோஸுராளிஸு ஸன்னுதம் |
கோஜாதாரி ஸுதாம்ஷம் கோவிந்ததாஸம் பஜேனிஷம் ||

தாஸரெம்ப உத்தமவாத மனெதனதி ஜனிஸி
வாஸ மாடுத அஸ்கிஹாளலி தாஸோத்தமரெனிஸி
தாஸரந்தெ தாளதம்பூரி ஹிடிது ஊரூரு ஸஞ்சரிஸி
தாஸராகலு பந்த ஸுஜீவிகளிகெ அங்கித ப்ரஸாதிஸி
வாஸவ வந்தித மங்களாங்க ஹரிவிட்டலன பஜிஸி
தாஸபத ரசிஸிதரு அபிமன்யு அம்ஷ எனிஸி ||

**ஸ்ரீஷ பிராணேஷ விட்டலதாசர் (1807-1892)**

(ஸ்ரீ ராமதாஸர்)

ஈஷ கதா ப்ரவக்தாரம் ராகவேந்திர குரோ: ப்ரியம் |
தாஸவர்யம் தயாயுக்தம் ராமதாஸ குரும் பஜே ||

**ஸ்ரீஜகன்னாததாசர் (1728-1809)**

ஜலஜேஷ்ட நிபாகாரம் ஜகதீஷ பதாஸ்ரயம் |
ஜகதீதல விக்யாதம் ஜகன்னாத குரும்பஜே ||

மானவி ஆசார்யரு ஸ்ரீனிவாஸாசார்யரு
ஞானி வேதஷாஸ்திராதிகளலி பானுகோடி ப்ரகாஷரு
மௌனி ஸ்ரீவிஜயதாஸரனு ஹீனரெந்து பகெதரு
தீனராகி உதரத தீவ்ரபேனெ அனுபவிஸிதரு
தேனுபால தாஸரிந்த ஆயுராரோக்ய படெதரு
ஸானுராகதி ஜகன்னாதவிட்டலன தாஸானு தாஸராதரு
பானுகோடிதேஜ மங்களாங்க ஹரிவிட்டலன சிந்தகரு ||

**ஸ்ரீபிரஸன்னவெங்கட தாசர் (1680–1750)**

ஸ்ரீஷாத்ப்ராப்த ஸுவிக்ஞானம் ஸ்ரீஷைல நிரதம் ஸதா |
பிரஸன்ன வெங்கடார்யோமே பூயாத் ஸர்வார்த்த ஸித்தயே ||

அத்திகெய பிருநுடிகளிந்த நொந்து பெந்து
ஹத்தி வெங்கடகிரி வெங்கடன முந்தெ நிந்து
குத்திகெயு பிகியெ ப்ரார்த்தனெய மாடலந்து
பித்திஹ பீஜாக்ஷர பிரஸன்ன வெங்கடனெந்து
மத்தெ ஹரிதாஸரெனிஸி ஹிந்திருகி பந்து
பக்திலி கன்னட பதபத்ய ரசனெகெய்து
யுக்திலி ஸ்ரீ மங்களாங்க ஹரிவிட்டலனெந்து
முக்தராதரு பாத்ரபத ஷுத்த த்வாதஷியந்து ||

**ஸ்ரீகமலேஷ விட்டலதாசர் (1780)**

(ஸ்ரீ ஆனந்ததாசர்)
ஸ்ரீராகவேந்திர பாதாப்ஜ மதுபாயித மானஸம் |
ஆனந்ததாஸ மீடேஹம் தேவபட்டண வாஸினம் ||

**ஶ்ரீராகவேந்திர ஸ்வாமிகள் (1598–1671)**

பூஜ்யாய ராகவேந்திராய ஸத்யதர்ம ரதாயச |
பஜதாம் கல்பவ்ருக்ஷாய நமதாம் காமதேனவே ||

கலியுகத கல்பதரு காமதேனு ஶ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகளு
ஒலியுத கரெதல்லிகெ ஹோகி கரெதரு ஈப்ஸித பலகளு
நலினலிது பாடி பஜிஸுவ ஏகாந்த பக்தர துஷ்க்ருத்யகள
பலிதரோககள பஞ்சிதன கிவுட ஹௌவ மூகருகள
பலபொந்தி மங்களாங்க ஹரிவிட்டலன களெவரு குருகளு ||

**ஶ்ரீ வ்யாஸ தத்வக்ஞ தீர்த்தர் - (1704-1800)**
**(ஶ்ரீ ஐஜி வெங்கடரமணாசார்ய)**

ப்ரகடீக்ருத டீகோக்திர் மகடீக்ருத மாயிராட் |
சகத்ராத் வ்யாஸதத்வக்ஞ: மஸ்கரீந்த்ர க்ருபாம் மயி ||

வந்தேஹம் வ்யாஸதத்வக்ஞம் நிந்திதாகில துர்மதிம் |
வந்திதாகில ஸத்வ்ருந்தம் நந்தஸூனு பதார்ச்சகம் ||

துர்வாதி வதனாம்போஜா ஸர்வ கர்வாபஹம் ஸதா |
ஐஜி வெங்கடராமார்யாஷ்சர்ய ஸூர்ய மஹம் பஜே ||

ஐஜி ராமார்ய ஹ்ருத்பத்ம ஸூர்ய பிம்பஸ்திதம் மம |
வாஸுதேவம் ஸதா ஸேவே தத்வமார்க்க ப்ரபாஸகம் ||

***

# ஹரிதாச விஜயம்

மாத இதழ்
Haridasa Vijayam - Monthly

மலர் 4 ** அக்டோபர் 2023 ** இதழ் 11




ஸ்ரீமன் மத்வாசார்யர்

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 4 : இதழ் 11


**நிர்வாக ஆசிரியர்**
'ஜகன்னாத கேசவ'
சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ
பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross, JP Nagar
4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276.
haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**
' தாச சாகித்ய சேவா ரத்ன'
திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**
திரு. முரளிதர தாசரு,
திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா,
திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்


## ஆராதனை

## ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்

**அக்டோபர் 1 முதல் 31 வரை, 2023**

Oct 16: ஆஸ்வீஜ சுத்த த்விதியை - ஸ்ரீஆனந்த விட்டல தாஸர், லிங்கஸுகூர்

Oct 17: ஆஸ்வீஜ சுத்த த்ருதியை - ஸ்ரீவரதேஷ விட்டல தாஸர், லிங்கஸுகூர்

Oct 21: ஆஸ்வீஜ சுத்த சப்தமி - ஸ்ரீப்ராணேஷ தாஸர், லிங்கஸுகூர்

Oct 23: ஆஸ்வீஜ சுத்த நவமி - இபராமபுர ஸ்ரீஅப்பாவர ஜயந்தி

Oct 24: ஆஸ்வீஜ சுத்த தசமி - ஸ்ரீமத்வ ஜயந்தி

Oct 29: ஆஸ்வீஜ பகுள பிரதமை - ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர், கௌதாள

# ஆசிரியர் பக்கம்

காகித & அச்சிடும் செலவுகளின் தொடர்ச்சியான விலையேற்றத்தினால், ஹரிதாச விஜயம் மாதப் பத்திரிக்கை - அடுத்த நவம்பர் 2023 இதழுடன் நிறுத்தப்படுகிறது என்பதை வாட்சப்பில் பார்த்திருப்பீர்கள். பக்கங்களை குறைப்பது, காகித தரத்தினை குறைப்பது, சந்தா தொகை அதிகம் ஆக்குவது, மாதாந்திரம் என்று இல்லாமல் 2-3 மாதங்களுக்கு ஒரு முறை வெளியிடுவது என பல்வேறு ஆப்ஷன்களை ஆராய்ந்தாலும், அது எதுவுமே சரியாகாமல் இந்த முடிவு எடுக்கப்பட்டுள்ளது.

ஹரிவாயு குருகளின் ஹரிதாஸர்களின் அருளாலேயே 4 ஆண்டுகள் தொடர்ந்து இந்த பத்திரிக்கை வர முடிந்திருக்கிறது. தொடர்ந்து ஆதரவு கொடுத்த அனைவருக்கும் நன்றி. சந்தா பாக்கி இருப்பவர்களுக்கு அதற்கு பதிலாக நமது புத்தகங்களை அனுப்பி வைக்கிறேன். நன்றி. ஹரே ஸ்ரீனிவாஸா.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

***

* நமது Jagannatha Kesava Youtube Channelல் தற்போது வந்து கொண்டிருக்கும் தொடர் - ஸ்ரீகனகதாஸர் இயற்றிய நள சரித்ரெ.
* நமது blog - dasa-sahitya.blogspot.in ல் தற்போது வந்துகொண்டிருக்கும் தொடர் - ஸ்ரீப்ரஸன்ன ஸ்ரீனிவாஸ தாஸர் இயற்றிய - விஷ்ணு சஹஸ்ரநாம பாஷ்ய - கன்னட பத்யங்கள். இதன் அர்த்த விளக்கங்கள் - தமிழில்.
* இந்த இரண்டையும் தொடர்ந்து படித்து, கேட்டுக் கொண்டு வரவும். நன்றி. ஹரே ஸ்ரீனிவாஸா.

ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப் அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்துச் சொல்லலாம்.

தொடர்

## ஸ்ரீலட்சுமி ஸ்தவராஜ

**ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர் இயற்றியது**

**ஹரியரஸி ஸிரி நீனே ஸர்வத[3]**
**ஹரிய வக்ஷஸ்தல நிவாஸினி**
**ஹரிய த[3]க்ஷிண தொடெ[3]யொளொப்புத காலதே[3]ஶத[3]லி**
**ஹரிய ஸஹிததி[3] ஹர்யனுக்[3]ஞதி[3]**
**ஹரிய ஸேவா நிருதகெ[3]ய்யுத**
**ஹரிய பத[3]க்கெ நீடி[3] ஸுகி[2]ஸுவ ஶிரியெ வந்தி[3]பெனு ||1**

ஹரியரஸி ஸிரி நீனே ஸர்வத - ஸ்ரீஹரியின் நியத பத்னியான ஸ்ரீ நீயே; ஹரிய வக்ஷஸ்தல நிவாஸினி - ஸ்ரீஹரியின் மார்பில் வசிப்பவளே; ஹரிய தக்ஷிண தொடெயொளுப்புத காலதேஷதலி - அனைத்து கால, தேசங்களிலும், ஸ்ரீஹரியின் இடது தொடையின் மேல் அமர்ந்திருப்பவளே; ஹரிய ஸஹிததி - எப்போதும் ஸ்ரீஹரியுடனேயே இருந்து (அவனை விட்டுப் பிரியாமல்); ஹர்யனுக்ஞதி - ஸ்ரீஹரியின் ஆணைப்படியே; ஹரிய ஸேவா நிருதகெய்யுத - எப்போதும் ஸ்ரீஹரியின் சேவையையே செய்தவாறு; ஹரிய பதகெ நீடி ஸுகிஸுவ - ஸ்ரீஹரியின் பாதங்களிலேயே அந்த ஸேவையை சமர்ப்பித்தவாறு, மகிழ்ச்சியடையும்; ஷிரியே வந்திபெனு - ஸ்ரீலட்சுமிதேவியே உன்னை நான் வணங்குகிறேன்.

ஸ்ரீஹரியின் நியத பத்னியான ஸ்ரீ நீயே. ஸ்ரீஹரியின் மார்பில் வசிப்பவளே, அனைத்து கால, தேசங்களிலும், ஸ்ரீஹரியின் இடது தொடையின் மேல் அமர்ந்திருப்பவளே; எப்போதும் ஸ்ரீஹரியுடனேயே இருந்து (அவனை விட்டுப் பிரியாமல்), ஸ்ரீஹரியின் ஆணைப்படியே, எப்போதும் ஸ்ரீஹரியின் சேவையையே செய்தவாறு, ஸ்ரீஹரியின் பாதங்களிலேயே அந்த ஸேவையை சமர்ப்பித்தவாறு, மகிழ்ச்சியடையும் ஸ்ரீலட்சுமிதேவியே, உன்னை நான் வணங்குகிறேன்.

**ஹரிய கருணதி[3] ஸரஸிஜாண்ட[3]வ**
**ஹரிய ஸஹிததி[3] ஹரிய தெரத[3]லி**
**ஹரிய மனக[1]தி[1] ப்ரீதிகோ[3]ஸுக[3] ஸ்ருஷ்டிஸ்தி[2]தி லயவ**
**ஹரிய சித்தனுகூலமாடு[3]த**
**ஹரிய ஸங்கல்பானுஸாரதி[3]**

**ஹரியனுக்$^{3}$ரஹ படெ$^{3}$த்$^{3}$ நின்னனு ஸ்துதிபெனனவரத ||2**

ஹரிய கருணதி - ஸ்ரீஹரியின் கருணையாலேயே; ஸரஸிஜாண்டவ - இந்த பிரம்மாண்டத்தினை; ஹரிய ஸஹிததி - ஸ்ரீஹரியுடனேயே சேர்ந்து; ஹரிய தெரதலி - ஸ்ரீஹரி கூறியபடி (அவன் செய்வதைப் போலவே); ஹரிய மனகதி ப்ரீதிகோஸுக - ஸ்ரீஹரியின் மனம் மிகவும் மகிழ்ச்சி அடையும்படியாக; ஸ்ருஷ்டிஸ்திதி லயவ - ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய ஆகிய செயல்களை; ஹரிய சித்தனுகூலமாடுத - ஸ்ரீஹரியின் சித்தத்திற்கு அனுகூலமாக செய்தவாறு; ஹரிய ஸங்கல்பானுஸாரதி - ஸ்ரீஹரி தான் செய்த சங்கல்பத்தை நிறைவேற்றும்படியாக; ஹரியனுக்ரஹ படெத - ஸ்ரீஹரியின் அருளைப் பெற்றவளான; நின்னனு - ஸ்ரீலட்சுமிதேவியே, உன்னை; ஸ்துதிபெனனவரத - எப்போதும் நான் வணங்குகிறேன்.

ஸ்ரீஹரியின் கருணையாலேயே, இந்த பிரம்மாண்டத்தினை, ஸ்ரீஹரியுடனேயே சேர்ந்து, ஸ்ரீஹரி கூறியபடி (அவன் செய்வதைப் போலவே), ஸ்ரீஹரியின் மனம் மிகவும் மகிழ்ச்சி அடையும்படியாக, ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய ஆகிய செயல்களை, ஸ்ரீஹரியின் சித்தத்திற்கு அனுகூலமாக செய்தவாறு, ஸ்ரீஹரி தான் செய்த சங்கல்பத்தை நிறைவேற்றும்படியாக, ஸ்ரீஹரியின் அருளைப் பெற்றவளான ஸ்ரீலட்சுமிதேவியே, உன்னை, எப்போதும் நான் வணங்குகிறேன்.

**ஹரிய ரமணியெ ஹரிய ஞானவ**
**ஹரிய பத$^{3}$யுக$^{3}$ ப$^{4}$க்தி பாலிஸி**
**ஹரிய ஸஹிததி$^{3}$ நின்ன ரூபவ என்ன மனத$^{3}$ல்லி**
**ஹரிய வல்லபெ$^{4}$ தோரெ ஸந்தத**
**ஹரிய மன ஸங்கல்பத$^{3}$ந்தே**
**ஹரிய மூருதி நெனஹனித்து பொரெயெ மஜ்ஜனனீ ||3**

ஹரிய ரமணியெ - ஸ்ரீஹரியின் மனைவியே; ஹரிய ஞானவ - ஸ்ரீஹரியின் ஞானத்தை (மற்றும்); ஹரிய பதயுக - ஸ்ரீஹரியின் பாதங்களைப் பற்றியதான; பக்தி பாலிஸி - பக்தியை (எனக்கு) அருளியவாறு; ஹரிய ஸஹிததி - ஸ்ரீஹரி உடன்; நின்ன ரூபவ என்ன மனதல்லி - உன் ரூபத்தையும் என்னுடைய மனதில்; ஹரிய வல்லபெ தோரெ ஸந்தத - எப்போதும் காட்டுவாயாக, லட்சுமிதேவியே; ஹரிய மன ஸங்கல்பதந்தெ - ஸ்ரீஹரி செய்த சங்கல்பத்திற்கேற்ப; ஹரிய மூருதி நெனஹனித்து - ஸ்ரீஹரியின் பிம்பமூர்த்தியை எனக்கு தரிசனம் அளித்து; பொரெயெ மஜ்ஜனனி - என்னை அருள்வாயாக, என் தாயே.

ஸ்ரீஹரியின் மனைவியே, ஸ்ரீஹரியின் ஞானத்தை (மற்றும்), ஸ்ரீஹரியின் பாதங்களைப் பற்றியதான பக்தியை (எனக்கு) அருளியவாறு, ஸ்ரீஹரி உடன், உன் ரூபத்தையும் என்னுடைய மனதில் எப்போதும் காட்டுவாயாக, லட்சுமிதேவியே. ஸ்ரீஹரி செய்த சங்கல்பத்திற்கேற்ப, ஸ்ரீஹரியின் பிம்பமூர்த்தியை எனக்கு தரிசனம் அளித்து, என்னை அருள்வாயாக, என் தாயே.

**ஹரிய ஹ்ருத[3]யத[3]லித்த தெரத[3]லி**
**ஶிரியெ என்னய ஸத[3]ன மத்[4]யதி[3]**
**ஹரிய ஸஹிததி[3] நீனெ நெலஸீ ஸர்வகாலத[3]லி**
**ஹரிய நின்னய ஸேவெ கோ[3]ஸுக[3]**
**பரம நின்ன விபூ[4]தி ஸஹிததி[3]**
**ஹரி விபூ[4]திஜ ஸகல பா[4]க்[3]யவனித்து பொரெயென்ன ||4**

ஹரிய ஹ்ருதயதலித்த தெரதலி - எப்படி நீ ஸ்ரீஹரியின் மார்பில் வசிக்கிறாயோ, அதைப் போலவே; ஷிரியே - ஸ்ரீலட்சுமிதேவியே; என்னய ஸதன மத்யதி - என்னுடைய வீட்டில் (மனதில்); ஹரிய ஸஹிததி - ஸ்ரீஹரியுடன்; நீனே நெலஸி ஸர்வகாலதலி - எப்போதும் நிலைத்திருந்து; ஹரிய நின்னய ஸேவெ கோஸுக - ஸ்ரீஹரிக்கு சேவை செய்வதற்காக; பரம நின்ன விபூதி ஸஹிததி - உன்னுடைய சிறப்பான ரூபத்துடன்; ஹரி விபூதிஜ - ஸ்ரீஹரியின் சிறப்பான; ஸகல பாக்யவனித்து பொரெயென்ன - அனைத்து பாக்கியங்களையும் கொடுத்து, என்னை காப்பாயாக.

எப்படி நீ ஸ்ரீஹரியின் மார்பில் வசிக்கிறாயோ, அதைப் போலவே, ஹே ஸ்ரீலட்சுமி தேவியே, என்னுடைய வீட்டில் (மனதில்), ஸ்ரீஹரியுடன் எப்போதும் நிலைத்திருந்து, ஸ்ரீஹரிக்கு சேவை செய்வதற்காக, உன்னுடைய சிறப்பான ரூபத்துடன், ஸ்ரீஹரியின் சிறப்பான அனைத்து பாக்கியங்களையும் கொடுத்து, என்னை காப்பாயாக.

**ஹரிய மானினி ஸகல ஸம்பத[3]**
**ஹரிய ப்ரேமதி[3]யித்து நீனே**
**ஹரிய ஸேவெய கெ[3]ய்ஸி என்னனு பொரெயெ மஜ்ஜனனி |**
**ஹரிய ஸஹிததி[3] நீனெ ஸந்தத**
**பெ[3]ரெது மனெயலி ஸ்வர்ண வ்ருஷ்டிய**
**கரெது[3] பா[4]க்[3]யவனித்து என்னனு பொரெயெ ஶிரிதே[3]வி ||5**

ஹரிய மானினி - ஸ்ரீஹரியின் இல்லத்தரசியே; ஸகல ஸம்பத - அனைத்து செல்வங்களையும் கொண்டவளே; ஹரிய ப்ரேமதியித்து - ஸ்ரீஹரியின் மேல் எனக்கு பக்தியை கொடுத்து; நீனே ஹரிய ஸேவெய கெய்ஸி - ஸ்ரீஹரியின் சேவையினை என் மூலம் செய்வித்து; என்னனு பொரெயெ மஜ்ஜனனி - என் தாயே, எனக்கு அருள்வாயாக; ஹரிய ஸஹிததி - ஸ்ரீஹரி உடன்; மனெயலி ஸந்தத நீயே பெரெது - நீயே என் வீட்டில் எப்போதும் நிலைத்திருந்து; ஸ்வர்ணவ்ருஷ்டிய கரெது - தங்க மழையை பெய்வித்து; பாக்யவனித்து - அனைத்து பாக்கியங்களையும் எனக்கு அளித்து; என்னனு பொரெயெ ஷிரிதேவி - ஸ்ரீதேவியே, என்னை அருள்வாயாக.

ஸ்ரீஹரியின் இல்லத்தரசியே, அனைத்து செல்வங்களையும் கொண்டவளே, ஸ்ரீஹரியின் மேல் எனக்கு பக்தியை கொடுத்து, ஸ்ரீஹரியின் சேவையினை என் மூலம் செய்வித்து, என் தாயே, எனக்கு அருள்வாயாக. ஸ்ரீஹரி உடன் நீயே என் வீட்டில் எப்போதும் நிலைத்திருந்து, தங்க மழையை பெய்வித்து, அனைத்து பாக்கியங்களையும் எனக்கு அளித்து, ஸ்ரீதேவியே, என்னை அருள்வாயாக.

**ஹரிய ஸஹ வைகுண்ட2லோகதி3**
**இருவ தெரத3லி என்ன ஸத3னதி3**
**ஹரிய ஸஹிதத3லித்3து3 மங்க3ள கார்ய தி3னதி3னதி3**
**ஹரிய தத்வவிசார நின்னய**
**ஹரிய மஹிமெயனருஹி ஸந்தத**
**ஹரிய ப4க்தரஸங்க3த3லி ஹரிதா3ஸனெனிஸென்ன ||6**

ஹரிய ஸஹ வைகுண்ட லோகதி - ஸ்ரீஹரியுடன் நீ எப்போதும் வைகுண்டத்தில்; இருவ தெரதலி - இருப்பதைப் போல; என்ன ஸதனதி - என் வீட்டிலும்; ஹரிய ஸஹிததலித்து - ஸ்ரீஹரி உடனேயே எப்போதும் இருந்து; தினதினதி மங்கள கார்ய - தினம்தோறும் பல விதமான மங்கள காரியங்களையும்; ஹரிய தத்வவிசார - ஸ்ரீஹரியின் தத்வத்தைப் பற்றியும்; நின்னய, ஹரிய மஹிமெயனருஹி - உன்னுடைய மற்றும் ஸ்ரீஹரியின் மகிமைகளையும் விளக்கி; ஸந்தத - எப்போதும்; ஹரிய பக்தரஸங்கதலி - ஸ்ரீஹரியின் பக்தர்களின் ஸங்கத்தில்; ஹரிதாஸனெனிஸென்ன - என்னை இருக்கச் செய்து, என்னை ஹரிதாஸன் என்று ஆக்குவாயாக.

ஸ்ரீஹரியுடன் நீ எப்போதும் வைகுண்டத்தில் இருப்பதைப் போல, என் வீட்டிலும், ஸ்ரீஹரி உடனேயே எப்போதும் இருந்து, தினம்தோறும் பல விதமான மங்கள காரியங்களையும், ஸ்ரீஹரியின் தத்வத்தைப் பற்றியும், உன்னுடைய மற்றும் ஸ்ரீஹரியின் மகிமைகளையும் விளக்கி, எப்போதும், ஸ்ரீஹரியின் பக்தர்களின் ஸங்கத்தில் என்னை இருக்கச் செய்து, என்னை ஹரிதாஸன் என்று ஆக்குவாயாக.

**ஹரியு ஜனகனு ஜனனி நீனே**
**ஶிரியனித்து பாலிஸெந்தெ$^{3}$னு**
**ஹரிய மந்தி$^{3}$ரவெனிப என்னய ஹ்ருத$^{3}$ய மத்$^{4}$யத$^{3}$லி |**
**ஹரிய கூட்$^{3}$யனுதி$^{3}$னதி$^{3}$ நின்னய**
**ஹரிய ரூபவ தோரி பா$^{4}$க்$^{3}$யவ**
**கரதி$^{3}$ நீடி$^{3}$ பரியலென்னனு பொரெயெ ஶிரிதே$^{3}$வி ||7**

ஹரியு ஜனகனு ஜனனி நீனே - ஸ்ரீஹரியே என் தந்தை. நீயே என் தாய்; ஷிரியனித்து பாலிஸெந்தெனு - எனக்கு தக்க செல்வங்களை அருளி, காப்பாயாக; ஹரிய மந்திரவெனிப - ஸ்ரீஹரியின் இருப்பிடம் எனப்படுவதான; என்னய ஹ்ருதய மத்யதலி - என்னுடைய இதயத்தில்; ஹரிய கூட்யனுதினதி - ஸ்ரீஹரியுடன் தினம்தோறும்; நின்னய, ஹரிய ரூபவ தோரி - உன்னுடைய மற்றும் ஸ்ரீஹரியின் ரூபத்தைக் காட்டி; பாக்யவ கரதி நீடி - அனைத்து பாக்கியங்களையும் எனக்கு அருளி; ஈ பரியலென்னனு - இவ்வாறாக; பொரெயெ ஷிரிதேவி - என்னை அருள்வாயாக, ஸ்ரீதேவியே.

ஸ்ரீஹரியே என் தந்தை. நீயே என் தாய். எனக்கு தக்க செல்வங்களை அருளி, காப்பாயாக. ஸ்ரீஹரியின் இருப்பிடம் எனப்படுவதான, என்னுடைய இதயத்தில், ஸ்ரீஹரியுடன் தினம்தோறும், உன்னுடைய மற்றும் ஸ்ரீஹரியின் ரூபத்தைக் காட்டி, அனைத்து பாக்கியங்களையும் எனக்கு அருளி, இவ்வாறாக; என்னை அருள்வாயாக, ஸ்ரீதேவியே.

(தொடரும்)

**நவம்பர் 2023 - ஹரிதாச விஜயம் மாதப் பத்திரிக்கையின் கடைசி இதழ் ஆகும்.**

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

### ஞான பக்தி வைராக்கியம்

**திருமதி. சுதா நரசிங்கராவ் தேஷ்பாண்டே**

ஸ்ரவண மனனானந்தவீவுது3
ப4வஜனித துக்க2க3ள க1ளெவுது
விவித3 போ4க3வனிஹ பரங்களலித்து1 சலஹுவுது3 |
பு3வன பா1வனனெனிப லகு1மி
த3வன மங்க3ள கதெ1ய பரமோ
த்சவதி கி1விகொட்டாலிபுது3 பூ4சுரரு தினதினதி ||
(கருணா சந்தி ஸ்லோகம் 1)

இப்படி கேட்டு, பேசி வந்த அறிவினால், பக்தியின் ஒவ்வொரு படிக்கட்டுகளாக ஏறி, திட மனதுடன், ஹரியின் உபாசனையை செய்யவேண்டும். உபாசனையினால் ஸ்ரீஹரியை நினைப்பவர்களுக்கு பக்தர்கள் என்று பெயர். ஸ்ரீஹரியும் அவர்களின் பக்திக்கு மெச்சி, அவர்களுக்கே தான் கட்டுப்படுவேன் என்று உலகிற்கு காட்டுகிறான்.

மூன்று உலகங்களுக்கும் தலைவனான ஸ்ரீஹரி, பக்தர்களின் கட்டுப்பாட்டிலா? அது எப்படி என்பதையே தாசர் பல்வேறு உதாரணங்களுடன் விளக்குகிறார்.

இட்டி1க1ல்லனு ப4கு1தி1யிந்த3லி
கொ1ட்ட1 ப4கு1த1க3 மெச்சி த1ன்னனெ
கொ1ட்ட1 ப3ட3பி3ராமணன ஒப்பி1டி3 அவலிககி2லார்த்த |
கெ1ட்டமாது1க3ளந்த3 சைத்யன
பொட்டெ1யொளகி3ம்பி3ட்ட1 பா3ணத3
லிட்ட பீ4ஷ்மனவகு3ணக3ளிசித3னெ கருணாளு ||
(கருணா சந்தி ஸ்லோகம் 11)

ஜனப மெச்சித3ரீவ த4ன வா
ஹன விபூ4ஷண வசன பூ4மிய
த1னு மனக3ளித்தா1த3ரிபருண்டேனு லோக1தொ3ளு |
அனவரத1 நெனெவவரனந்தா1
சனவே மொத3லாதா3லயதொ3ளி
ட்டணுக3னந்த3தி3 அவர வசனாகு3வ மஹாமஹிம ||
(கருணா சந்தி ஸ்லோகம் 17)

ஒடல நெளலந்த3த3லி ஹரி ந
ம்மொடனெ தி1ருகு3வனொந்த3ரெக்ஷண
பிடதெ பெ3ம்ப3லனாகி3 ப4க்தா1தீ3னனெந்தெ3னிஸி |
த1டெவ து3ரிதெள1க3க3ள கா1மத3
கொ1டுவ சக1லேஷ்டக3ள சந்தத1
நடெவ நம்மந்த3த3லி நவசுவிசே1ஷ சன்மஹிம ||
(கருணா சந்தி ஸ்லோகம் 25)

தன் பக்தர்கள் செய்த தவறுகள் அனைத்தையும் மன்னித்து, கருணைக்கடலான ஸ்ரீஹரி தன் பக்தர்களை எப்படி காக்கிறான்? மற்றும் தனக்குப் பிடித்தவர்களை எப்படி காப்பாற்றுகிறான் என்பதை சகலதுரிதநிவாரண சந்தியில் விளக்குகிறார்.

குசேலனின் அவலை மகிழ்ச்சியுடன் பெற்றுக்கொண்டு அவருக்கு செல்வத்தை அளித்தான். பாஞ்சாலிக்கு முடிவில்லா ஆடையை அருளினான். ஹிரண்யகசிபுவைக் கொன்று, பக்த பிரகலாதனுக்கு அருளினான். தேவசர்மா என்னும் பிராமணனுக்கு உதவினான். துரோண, பீஷ்ம, கிருபர் ஆகியோர் கௌரவர்களின் பக்கம் நின்று, தன்னை எதிர்த்தாலும் அவர்களுக்கு நற்கதி காட்டினான். இந்திரனின் தவறினை மன்னித்தான். பலியிடமிருந்து தானத்தைப் பெற்றான். கோகுலத்து கோபியர்களுக்கு அருளினான். விதுரன் வீட்டில் உண்டான். இப்படி பக்தவத்சலனான ஸ்ரீஹரியை, நாம் ஏதோ ஒரு வகையில் பூஜித்து வணங்கி அவனின் கருணைப் பார்வையில் விழமுடியும் என்று மேற்கண்ட உதாரணங்களினால் விளக்குகிறார் தாசர்.

பி3ட்டி1க3ள நெவதி3ந்த3லாக3லி
ஹொட்டெ1கோ3சுக1வாத3ராக3லி
கெ1ட்டரோக3 ப்ரயுக்த1வாக3லி அணக1திந்தொ1ம்மெ |
நிட்டுசிரினிம் பாய்தெரெது ஹரி
விட்டலா சலஹெந்தெ3னலு கை
கொ1ட்டு1 கா1வ க்1ருபா1லு சந்த1த1 த1ன்ன ப4க்த1ரனு ||
(பக்தாபராத சஹிஷ்ணு சந்தி ஸ்லோகம் 14)

இப்படி ஸ்ரீஹரியின் அருளைப் பெற்ற மனிதனின் பிறவியே சிறந்தது. ஸ்ரீஹரியின் அருள் மட்டும் இருந்தால், வேறு செல்வங்கள் நம்மிடம்

இல்லாவிட்டாலும், அவை இருப்பது போன்றே ஆகும். ஆகையால், ஞானத்தால் அவனை அறிந்து, பக்தியினால் வேண்டி, அவனின் கருணையைப் பெறவேண்டும். ஸ்ரீஹரியின் கருணையும் அவரே விருப்பப்பட்டால் மட்டுமே நமக்குக் கிடைக்கும். அந்த கருணை இல்லையென்றால், ஜடமான இந்த உடல் இருந்தும் ஒரு பயனும் இல்லை. அனைத்திற்கும் காரணனான அவனே, அனைத்து இந்திரியங்களையும் கட்டுப்படுத்துபவன், நடத்துபவன், அனைவருக்குள்ளும் நின்று, அவரவர்களின் தகுதிக்கேற்ப அனைத்து செயல்களையும் நடத்துகிறான்.

பக்தியின் ஒரு வகையான சக்ய (நண்பன்) பாவத்தைக் காட்டிய அர்ஜுனனுக்கு, போர்க்களத்தில் கீதோபதேசம் செய்து, அவனின் மனதில் நிறைந்திருந்த துக்கம், பச்சாதாபம், சந்தேகம், கர்வம் ஆகியவற்றை நீக்கி, போரில் அவனுக்கு தேரோட்டி, தர்மத்தை நிலைநாட்டி, அதர்மத்தை அழித்தான்.

விஜய சாரதி[2]யெந்து[3] க[3]ருட[3]
த்வஜன மூர்த்தி[1]ய ப[4]க்தி[1] பூ[1]ர்வக[1]
ப[4]ஜிசுதி[1]ப்ப[1] மஹாத்[1]மரிகெ[3] சர்வத்ரத[3]லி ஒலிது[3] |
விஜயத[3]னு தா[1]னாகி[3] சலஹுவ
பு[4]ஜக[3]பூ[4]ஷண பூ[1]ஜ்ய சரணா
ம்பு[4]ஜ விபூ[4]தி[1]த[3] பு[4]வன மோஹனரூப நிர்லேப[1] ||
(பக்தாபராத சஹிஷ்ணு சந்தி ஸ்லோகம் 25)

யாருக்கு ஸ்ரீஹரி கருணை காட்டுவான்? யாரின் சாதனை முழுமையடைகிறது? யாருக்கு எப்போது எதைக் கொடுப்பான்? இவை அனைத்திற்கும் பதில் அவனுக்கு மட்டுமே தெரியும். அவனின் கருணையைப் பெற்றவர்கள் மட்டுமே நற்கதியைப் பெறுவார்கள் – இது நிச்சயம். எத்தகைய பிறவியில் இருந்தாலும், ஸ்ரீஹரியின் குணம், ரூபம், செயல்களை தன் புத்தி / இந்திரியங்களில் நிலைநிறுத்தி வேண்டினால், அவர்களுக்கு அருள்வான் என்பதற்கு மற்றவர்களைக் கொன்றுவந்த வால்மீகியின் கதையே சிறந்த உதாரணம்.

ஏனு க[1]ருணவோ தன்னவரலி த
யானிதி[4]கெ[3] சத்ப[4]க்தஜனரதி[1]
ஹீனக[1]ர்மவ மாடித[3]ரு சரி ஸ்வீக[1]ரிஸி பொரெவ |
பிராண ஹிம்சக[1] லுப்த[4]க[1]கெ[3] சு

க்ஞான பக்திக[3]ளித்து தசரத
சூனு வால்மிகி ரிஷிய மாடித பரமகருணாளு ||
(பக்தாபராத சஹிஷ்ணு சந்தி ஸ்லோகம் 31)

ஆகையால் ஸ்ரீஹரியிடம் தற்காலிக சுகங்களை வேண்டாமல், அவனின் பாத-பக்தியினை வேண்டி, நம் வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக்கிக் கொள்வோம் என்கிறார் தாசர்.

க்ஷோணிப[1]தி[1] சுத[1]னெனிஸி கை[1] து
க்கா[2]ணிகொ[1]ட்டு[1]வ தெ[1]ரதி[3] சுமனச
தேனு மனெயொளகி[3]ரலு கோ[3]மய ப[3]யசுவந்தத[3]லி |
வேணுகானப்ரியன அஹிக சு
கா[2]னுப[4]வ பெட[3]த[3]லெ லகுமி
பிராணநாதன பாதப[4]கு[1]தி[1]ய பே[3]டு கொண்டா[3]டு[3] ||
(கர்மவிமோசன சந்தி ஸ்லோகம் 20)

ஞான ஞேய ஞாத்ருவெம்பபி
தானதி[1]ம்பு[3]த்த[3] வியாதி[4]க[3]ளதி[3]
ஷ்டானத[3]லி நெலெசித்து[3] க[1]ரெசுவ த[1]த்த[1]தா[3]க்வயதி[3] |
பா[4]னுமண்டலக ப்ரதர்ஷக[1]
தா[1]னெனலு வசனாகு[3]வனு சுக[2]
சௌனகா[1]தி முனீந்த்ர ஹ்ருதயாகாஷ க[3]தசந்திர ||
(கர்மவிமோசன சந்தி ஸ்லோகம் 21)

என்று அழைத்து ஸ்ரீஹரியை பக்தியுடன் பஜிப்பவர்களுக்கு தரிசனம் அளித்து, கை கொடுத்து காப்பாற்றுவான். இந்த பக்தியில் இரு விதங்கள் உண்டு. ஒன்று ஸகாம என்றால் இன்னொன்று நிஷ்காம. ஒரு முறை ஸ்ரீஹரியினிடம் மனதைக் கொடுத்தால், பிற விஷயங்களின் மேல் இருக்கும் ஆசை குறைந்து கொண்டே போகிறது. பசித்தவன் உணவைத் தின்றால், ஒவ்வொரு கவளத்திற்கும் பசி குறைந்து கொண்டே போகும்.

மேலும் உடலுக்கு வலு, மனதிற்கு ஆனந்தம் எப்படி ஆகிறதோ அது போல, ஸ்ரீஹரியிடம் சரணடைந்த ஜீவன், ஞானத்தினால் ஆனந்தம், பக்தியினால் சுகம், விரக்தியினால் பரமானந்தத்தை அடைகிறான்.

(தொடரும்)

தொடர்

**ஹரிகதாம்ருதசார மஞ்சரி 360**

**By ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர்**

**173. ஸ்ரீனிகேதன தன்னவர தே3**
**ஹானு பந்தி4க3ளந்தெ அவ்யவ**
**தா4னத3லி நெலெஸிப்ப ஸர்வத3 ஸகலகாமத3னு |**
**ஏனு கொட்டுத3 பு4ஞ்சிஸுத ம**
**த்தானெயந்த3தி3 ஸஞ்சரிஸு ம**
**த்தேனு பே3ட3தெ3 ப4ஜிஸுதிரு அவனங்க்4ரி க1மலக3ள ||(24-26)**

நம் அனைவரின் அனைத்து விருப்பங்களையும் நிறைவேற்றுபவன் ஸ்ரீஹரி. அவன் ஸ்ரீனிகேதனன். நம் தேக சம்பந்தத்தினால், நம் ஆயுள் முடியும்வரை நம்மில் இருந்து, ஆசை விருப்பங்களை நிறைவேற்றுபவன் ஆகையால், அவன் காமதனாக, நாம் எதை விரும்பி ஏற்றுக் கொண்டாலும், அதனை அவனே கொடுத்தது என்று அனுஸந்தானம் செய்து, அதனை அவனுக்கே அர்ப்பணம் செய்ய வேண்டும் என்கிறார். மதம் கொண்ட யானை எப்படி காட்டில் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறதோ, அதைப் போலவே, நீ அவனின் ஸ்மரணையுடன் அவன் கொடுத்ததை அவனுக்கு சமர்ப்பித்து பின் ஏற்றுக் கொள் என்கிறார். இங்கு கவனிக்க வேண்டிய விஷயம், நமக்கு சுகம் வந்தபோது, அவனை நாம் மறக்கிறோம். கஷ்டம் வரும்போது அவனை நினைக்கிறோம். அப்படி செய்யக்கூடாது. சுக துக்கம் என்னும் இரண்டினையும் அவனின் பாதாரவிந்தங்களுக்கு ஸ்மரணை பூர்வகமாக அர்ப்பிக்க வேண்டும் என்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

**174. ப்ரணவ காரண கார்ய ப்ரதிபா**
**த்3யனு பராத்பர சேதனா சே**
**தன விலக்ஷணனந்த ஸத்கல்யாண கு3ணபூர்ண |**
**அனுபமனுபாஸித கு3ணோத3தி4**
**அனக4னஜிதனனந்த நிஷ்கி**
**ஞ்சன ஜனப்ரிய நிர்விகார நிராஸ்ரயாவ்யக்த ||(24-30)**

பகவந்தனின் குணங்களை சொல்லும் இந்த பத்யத்தில், ப்ரணவ மந்த்ர ப்ரதிபாத்யன் ஸ்ரீஹரி. அவன் சேதன, அசேதனங்களில் தானே இருந்து, விலக்ஷணனாக இருக்கிறான். அனந்த கல்யாண

குணபரிபூர்ணனும், உவமைக்கு சிக்காதவனுமாக அவன் இருக்கிறான். லட்சுமிதேவியின் உபாஸனைக்கும் சிக்காதவனாக, தோஷங்கள் அற்றவனாக, அஜிதனாக (யாராலும் தோற்கடிக்கப்பட முடியாதவனாக), பக்தர்களுக்கு தேவையானவனாக, நிர்விகாரனாக, அவரவர்களின் யோக்யதைக்கேற்ப வெளிப்படுகிறான் என்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

**175. கோ3பபீ4ய ப4வாந்த4 காரகெ**
**தீ3ப ஒத3க3லு ஸகலஸுக2ஸத3**
**நோபரிக்3ருஹ வெனிஸுதலிப்பது3 ஹரிகதா2ம்ருதவு ।**
**கோ3பதி ஜக3ன்னாத2விட்ட2ல ஸ**
**மீபத3லி நெலெஸித்து3 ப4க்தர**
**நாபவர்க3ர மாடு3வனு மஹது3க்க ப4வதி3ந்த3 ।।31**

ஸம்ஸார சாகரத்தை தாண்டுவதற்கு இந்த ஹரிகதாம்ருதம் ஒரு வழிகாட்டியாக, ஸ்ரீகிருஷ்ணனின் அருள் மிகவும் தேவை. பசுக்களை காத்த அந்த ஜகன்னாத விட்டலன், நம் அருகிலேயே இருந்து பக்தர்களின் (நம் அனைவரின்) துக்கங்களை விலக்கி, காக்கிறான் என்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

**176. ஸ்ரீத4ரா து3ர்கா3 மனோரம**
**வேத3முக2 ஸுமனஸ க3ணஸமா**
**ராதி3த பதா3ம்போ4ஜ ஜக3த3ந்தர் ப3ஹிர்வ்யாப்த ।**
**கோ3த4ர ப2ணிவராதபத்ர நி**
**ஷே2த4தூ3ர விசித்ரகர்ம ஸு**
**போ4த4 ஸுக2மயகா3த்ர பரமபவித்ர ஸுசரித்ர ।।1**

பகவந்தன் ஸ்ரீதரனாக, துர்கா ரமணனாக மனோஹரனாக வேதங்களால் போற்றப்படுகிறான். பிரம்மாண்டத்தின் அனைத்து இடங்களிலும் இருந்து, நம் உள்ளும் புறமும் வ்யாபித்திருக்கிறான். பசுக்களை விரும்புபவன். கோ என்றால் பூமி. அதனை தரித்தவன் சேஷன். பாம்பினையே அவனின் படுக்கை ஆக்கி, குடையாக ஆக்கிக் கொண்டவன். இத்தகையவனின் சேவை சுகத்தையே தரக்கூடியது. பரமபவித்ர மற்றும் அவனுடைய கதை சுகமயம் ஆகும்.

**177. நித்ய நிர்மல நிக[3]மவேத்[3]யோ**
**த்பத்தி ஸ்தி[2]தி லய தோ[3]ஷவர்ஜித**
**ஸ்துத்ய பூஜ்ய ப்ரஸித்[3]த[4] முக்தாமுக்த க[3]ணஸேவ்ய |**
**ஸத்யகாம ஷரண்ய ஷாஸ்வத**
**ப்[4]ருத்யவத்ஸல ப[4]ய நிவாரண**
**அத்யதி[4]க ஸம்ப்ரியதம ஜக[3]ன்னாத[2] மாம் பாஹி ||2**

ஜகன்னாதனான ஸ்ரீஹரியின் குணங்களை கூறும் தாஸர், அவன் நித்ய ஷுத்தனாக இருக்கிறான். இவனை வேதத்தினால் மட்டுமே அறிவதற்கு சாத்தியம். இவனுக்கு ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயாதிகள் சம்பந்தப்படவில்லை. (அவன் பத்தனாகவில்லை). நாம் அவனை வணங்குவதற்கு மட்டுமே நம்மால் முடியும். நம் அனைவரின் விருப்பங்களையும் அவன் தீர்க்கிறான். இவனின் தரிசனமே முக்தி. இவனுக்கு சரணாகதர் ஆனவர்களை இவன் காக்கிறான். நம்ம் அனைவரின் பயத்தினை விலக்குபவனான, பக்தபராதீனனான இவனுக்கு நமஸ்கரிக்கிறேன். இத்தகையவனுக்கு நாம் நமஸ்காரம் செய்ய வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர்.

**178. பரமபுருஷன ரூப கு[3]ணவனு**
**ஸரிஸி காம்ப[3]ளு ப்ரவஹத[3]ந்த[3]தி[3]**
**நிருபமளு நிர்து[3]ஷ்ட ஸுக[2]ஸம்பூர்ண ளெனிஸுவளு |**
**ஹரிகெ[3] தா[4]மத்ரயவெனிஸி ஆ**
**ப[4]ரண வஸனாயுத[4]க[3]ளாகி[3]**
**த்[3]த[3]ரிக[3]ளனு ஸம்ஹரிஸுவளு அக்ஷரளெனிஸிகொண்டு[3] ||3**

இங்கு ரமாதேவியை வணங்கும் ஸ்ரீதாஸர், அவள் அக்ஷரளாக இருக்கிறாள் ( நாம் க்ஷரர்). இவள் பகவந்தனின் ரூப குணங்களை நன்றாக (முழுமையாக அல்ல) அறிந்தவள். ஷுத்தளாக இருக்கிறாள். பூர்ண சுகமயளாக, ஸ்ரீஹரியுடன் அனந்தாஸன, ஷ்வேத த்வீப, வைகுண்ட ஆகிய இடங்களில் மட்டுமல்லாமல், ஸ்ரீஹரி தரித்த அனைத்து ஆபரணாதி வஸ்துக்களிலும் இதே ரூபமே இருக்கிறது என்று அறிந்தால், நம் அனைத்து எதிரிகளையும் நாம் விலக்குகிறோம். ஆகையால், இவரை அக்ஷர என்கிறார்கள் என்று கூறுகிறார் ஸ்ரீதாஸர்.

**179. க[1]மலஸம்ப[4]வ பவனரீர்வரு**
**ஸமரு ஸமவர்த்திக[3]ளு ருத்[3]ரா**
**த்[3]யமர க[3]ணஸேவிதரு அபரபி[3]ரம்ம நாமகரு |**

**யமளரிகெ3 மஹலகுமி தானு**
**த்தமளு கோடி ஸஜாதிகு3ணதி3**
**ந்த3மித ஸுவிஜாத்ய த4மரெனிபரு பி3ரம்ம வாயுக3ளு ||5**

இந்த பத்யத்தில் ஸ்ரீஜகன்னாத தாஸர், பிரம்ம வாயுகளை சிந்திக்கிறார். பிரம்ம வாயு இருவரும் ஸமர் என்று அறிந்து, ருத்ராதிகளால் வணங்கப்படும் குருகளாக இருக்கின்றனர். பகவந்தனுக்குப் பிறகு இவரே (அமுக்கியமாக) முக்கியமானவர். இவர்கள் இருவரைவிட (பிரம்ம வாயுகளைவிட), ரமாதேவி 1000 குணங்களால் உத்தமளாக இருக்கிறார். ரமாதேவியைவிட இவர்கள் இருவரும் அனந்த ஞான மற்றும் குணங்களால் அதமராக இருக்கிறார் என்று அறிய வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர்.

**180. பதிக3ளிந்த3 ஸரஸ்வதி பா4**
**ரதிக3ளத3மரு நூருகு3ணபரி**
**மித விஜாத்3யவரரு ப3ல ஞானாதி3 கு3ணதி3ந்த3 |**
**அதிஷயளு வாக்தே3வி ஸ்ரீபா4**
**ரதிகெ3 பத3த3 ப்ரயுக்த விதி4மா**
**ருதரவோல் சிந்திபரு ஸத்ப4க்தியலி கோவித3ரு ||6**

பிரம்ம வாயுகளின் பத்னியரான ஸரஸ்வதி, பாரதியர் தம் கணவர்களைவிட, ஞான பலத்தினால் 100 குணம் குறைவாக இருக்கின்றனர். பக்தியில், பக்தியில், ஆனந்தத்தில், ஞானத்தில் சரஸ்வதி பாரதியர் இருவரும் சமரே ஆனாலும், அதிகார ஸ்தானத்தினால் ஒரு கல்ப மட்டும் சரஸ்வதி அதிகமானவர் என்று அறிய வேண்டும்.

**181. க2க3ப ப2ணிபதி ம்ருட3ரு ஸம வா**
**ணிகெ3 ஷதகு3ணாவரரு மூவரு**
**மிகி3லெனிஸுவனு ஸேஷ பத3தி3ந்த3லி த்ரியம்ப3ககெ3 |**
**நக3த4ரன ஷண்மஹிஷியரு ப**
**ன்னக3 விபூ4ஷணகை3து3 மேனகெ**
**மக3ளு வாருணி ஸௌபரணிக3ளி க3தி4கவெரடு3 கு3ண ||7**

கருட, சேஷ, ருத்ரர் மூவரும் சமம் என்று அறிந்து, இவர் சரஸ்வதி பாரதியரைவிட 100 குணத்தால் குறைவாக இருக்கின்றனர். மற்றும்

ஸௌபர்ணி, வாருணி, பார்வதியரைவிட, ஷண்மஹிஷியர் 2 குணத்தால் அதிகமாக இருக்கிறர்கள் என்று அறிய வேண்டும். அதாவது, கருட சேஷ, ருத்ரர்களின் மனைவியரான ஸௌபர்ணி, வாருணி, பார்வதியர்கள், ஷண்மஹிஷியர்களைவிட 2 குணங்கள் குறைவானவர்கள் என்று அறிய வேண்டும்.

**182. க$^{3}$ருட$^{3}$ ஸேஷ மஹேஷரிகெ$^{3}$ ஸௌ**
**பரணி வாருணி பார்வதியு மூ**
**வரு தஷாத$^{3}$ம வாருணிகெ$^{3}$ கடி$^{3}$மெயெனிபளு கௌ$^{3}$ரி ।**
**ஹரனமட$^{3}$தி$^{3}$கெ$^{3}$ ஹத்துகு$^{3}$ணத$^{3}$லி**
**ஸூரப காமரு கடி$^{3}$மெ இந்த்$^{3}$ரகெ$^{3}$**
**கொரதெயெனிஸுவ மன்மத$^{2}$னு பத$^{3}$தி$^{3}$ந்த$^{3}$ ஆவாக$^{3}$ ।।8**

கருட சேஷ ருத்ரர் தம் மனைவியரைவிட (ஸௌபர்ணி, வாருணி, பார்வதியை விட), 10 குணங்களால் உத்தமராக இருக்கின்றனர். ஸௌபர்ணியரைவிட இந்த்ர காமர் 10 குணத்தால் குறைவு என்று அறிய வேண்டும். பதவியானால் காம இந்திரர்களைவிட அதிகமாக இருந்தாலும், தாரதம்யத்தில் இந்திரன், அனுபவத்தினால் பெரியவர் என்று அறிய வேண்டும் என்கிறார்.

**183. ஈரய்து$^{3}$ கு$^{3}$ண கடி$^{3}$மெயாஹ**
**ங்காரிக ப்ராணனு மனோஜ ந**
**காரிக$^{3}$ளிக$^{3}$னிருத்$^{3}$த$^{4}$ ரதி மனு த$^{3}$க்ஷ கு$^{3}$ரு சசியு ।**
**ஆரு ஜன ஸம ப்ராணனிந்த$^{3}$லி**
**ஹௌரபெனிபரு ஹத்து கு$^{3}$ணத$^{3}$லி**
**மாரஜாத்$^{3}$யரிகை$^{3}$து$^{3}$ கு$^{3}$ணதி$^{3}$ந்த$^{3}$த$^{3}$ம ப்ரவஹாக்ய ।।9**

அஹங்காராதி ப்ராணன் 5 குணத்தினால் தன் மேல் இருப்பவர்களைவிட குறைவு. அனிருத்த, ரவி, மனு, தக்ஷ, குரு மற்றும் ஷசி – இந்த ஆறு பேரும் அஹங்காரிக ப்ராணனைவிட 10 குணத்தால் குறைவு என்று அறிவாயாக. இந்த ஆறு பேரைவிட ப்ரவஹ நாமக வாயுதேவர் – 5 குணத்தால் அதமராக இருக்கிறார் என்று அறிய வேண்டும் என்கிறார். (தொடரும்)

**இதுவரை வந்த நம் புத்தக வெளியீடுகளை**
**வாங்கிவிட்டீர்களா?**

தொடர்

## கன்னட ஹரிதாசினிகள்

### திருமதி. T.N நாகரத்னா (1945 – )

தும்கூரு நாகஷர்ம மற்றும் ஹொன்னடிகெ ராஜலட்சுமி அவர்களின் மகளான டி.என். நாகரத்னா 1945ம் ஆண்டில் மத்யபிரதேச மாநிலத்தில் பிறந்தார். இவருக்கு சுமார் 3 வயது ஆகும்போது இவர் குடும்பம் ஷிவமொக்கா வந்து சேர்ந்தது. இங்கே அவர் தமது BA படிப்பு முடிக்கும்வரை தங்கியிருந்தார். சிறு வயதிலிருந்தே சங்கீதம் கற்றுக்கொண்டு அதில் நன்றாக பயிற்சி பெற்றிருந்தார். 1965ம் ஆண்டில் BA படிப்பினை முடித்தார். பிறகு அவர் மைஸூருக்கு வந்து அங்கு பல்கலைக்கழகத்தில் 1967ம் ஆண்டில் கன்னட MA படிப்பினை முடித்தார். இந்த இரண்டு பட்டங்களிலும் அவர் தங்கப் பதக்கம் வென்றார் என்பது குறிப்பிடத்தக்கது.

1971ம் ஆண்டு திரு.N.V.குருராஜ் அவருடன் திருமணம் நடந்தது. அதன் பிறகு அவருக்கு பிரதிபா என்னும் மகளும், வாஸுதேவ என்னும் மகனும் பிறந்தனர். படிப்பதில் ஈடுபாடு கொண்டிருந்தவரான நாகரத்னா, மானஸ கங்கோத்ரி கன்னட அத்யயன நிறுவனத்தில், டாக்டர். வரதராஜராவ் அவருடைய வழிகாட்டுதலில் அவரது ஆராய்ச்சிக்கு உதவியாக தன்னுடைய வேலையை துவக்கினார்.

**ஹரிதாஸ ஸாகித்ய சேவைக்கு கிடைத்த பரிசுகள் / விருதுகள்:**

ஹரிதாஸ பரம்பரையை சேர்ந்தவரான திருமதி. நாகரத்னா, 20 புத்தகங்கள் மற்றும் 100க்கும் மேற்பட்ட கட்டுரைகளை எழுதியுள்ளார். அவருடைய ‘ஸ்ரீபாதராயரின் கிருதிகள்’ என்னும் புத்தகத்திற்கு 1980ம் ஆண்டில் ராஜ்ய ஸாகித்ய அகாதமியின் விருது கிடைத்தது. குழந்தைகளுக்காக இவர் எழுதிய ‘ஹை ஹை குதிரை’ அனைவராலும் விரும்பும் புத்தகமாக உள்ளது. 1975ம் ஆண்டில் டாக்டர். வரதராஜராவ் அவரின் வழிகாட்டுதலில் இவர் இயற்றிய ‘ஹரிதாஸர்களின் பக்தி ஸ்வரூப’ என்னும் புத்தகத்திற்கு, மைஸூர் பல்கலைக்கழகம் இவருக்கு P.hd பட்டம் வழங்கி கௌரவித்தது. டாக்டரேட் பட்டம் பெற்ற முதல் பெண் என்னும் பெருமையும் இவருக்கு வந்து சேர்ந்தது.

ஹரிதாஸ ஸாகித்யத்திற்கு இவர் செய்த மிகச்சிறந்த பணிகளை பாராட்டும் விதமாக இவருக்கு 'ஹரிதாஸ வித்வன்மணி' மற்றும் 'ஹரிதாஸ ஸாஹித்ய ஷிரோமணி' ஆகிய பட்டங்களும் வழங்கப்பட்டுள்ளன.

கர்னாடக அரசு மேற்கொண்ட, ஸமக்ர தாஸ ஸாகித்ய புத்தகங்களை வெளியிடும் பணியில், இவரும் அரும்பணி ஆற்றியுள்ளார். இவறைத் தவிர, இவர் பல்வேறு நாடகங்களையும் எழுதி இயக்கியுள்ளார். பல்வேறு நிறுவனங்களிலிருந்து, பல்வேறு பரிசு / விருதுகளையும் திருமதி. நாகரத்னா அவர்கள் பெற்றுள்ளார்.

**இவரது கிருதிகள்:**

முளுபாகிலு ஸ்ரீபாதராஜ மடத்தின் அழைப்பின் பேரில், ஒரு ஹரிதாஸ ஸாகித்ய நிகழ்ச்சிக்காக, இவர் அங்கு சென்றிருந்தபோது, 'ஸிரிகங்காஜனக' என்னும் அங்கிதம் திருமதி. நாகரத்னாவிற்கு கிடைத்தது. அன்றிலிருந்து, ஸ்ரீபாதராஜரின் அருளால், இவர் 'ஸிரி கங்கா ஜனக' என்னும் அங்கிதத்தில் பல்வேறு கீர்த்தனைகளை இயற்றத் துவங்கினார். 'ஸிரி கங்கா ஜனக கீர்த்தனைகளின் தொகுப்பு' என்னும் புத்தகத்தில் இவரது 99 தேவர நாமாக்களும், 5 உகாபோகங்களும் வந்திருக்கின்றன. இவரது கிருதிகளில் சிலவற்றை இங்கு பார்ப்போம்.

1. ஏஸு ஸுக$^{2}$வோ ஹரியே எந்த ஸொப$^{3}$கோ$^{3}$
மானவ ஜனுமவிது$^{3}$ ஈ நின்ன ஸ்ருஷ்டி ||ப

கோகிலெய கூகு$^{3}$ மாவின சிகு$^{3}$ரு
மாகி$^{3}$ய சளி மாக$^{3}$த$^{3}$ மல்லிகெ$^{3}$
ஆக$^{3}$ஸத$^{3}$ கடு$^{3}$நீலி நக்ஷத்ர மிஞ்சுக$^{3}$ளு
ஸொக$^{3}$யிஸுவ ஸூர்ய சந்த்$^{3}$ரரு ||1

நீனித்த அவனி நீனித்த அப்பு
நீனித்த பவன நீனித்த பாவக
நீனித்த அவகாஶ நீனித்த ஜனும
நீனித்த காயவிது$^{3}$ நின்ன ப்ரஸாத$^{3}$ ||2

ஹுணஸெந்து$^{3}$ ஹுளி உப்பு ஒரகு$^{3}$
மெணஸின கார கஹி ஸிஹி மொக$^{3}$ரு
க$^{3}$ணனெயில்லத$^{3}$ ஸொப$^{3}$கு$^{3}$ கம்பனெய சிகு$^{3}$ரு
எணிஸிதொ$^{3}$டெ$^{3}$ ஸிரிக$^{3}$ங்கா$^{3}$ஜனக நீனித்த ஜக$^{3}$வு ||3

20 - ஹரிதாச விஜயம் – அக்டோபர் 2023

**2. ஸ்ரீஹரியின் தசாவதாரத்தைப் பற்றிய ஒரு பாடல்.**

ஆவமோடி3ய மாடி3த3 நின கா3வ ஹாடனு ஹாடி3த3 ||ப
தா3னவாந்தக மானினி அபி4மான காய்து3 ஆ கா3ருடி3க3 ||அப

ரெப்பெ மிடு3கி3ஸுவ சிப்பு ஹொத்திஹ கப்பு மை கடு3 உக்3ரனு
அப்பட வடுவேஷதா4ரி தா தப்பதெ3 தாய்த1லெ கடி3த3வ ||1

ஜடெய குடில யோசிஸி நடிஸித3
சடுல ஹயவனு ஏரிதோர்த3
தி3டவு அவனு ஆராவ செலுவ ||2

அங்க3னெயே நீ ப3யஸி நிந்தெ3ஹெ ஸிரி
க3ங்கா3ஜனக ஸங்க3 ஸுக2
மங்க3ளாங்கி3யே மாரஜனனியே
ஹிங்க3த3 பத3வி படெ3வெனெனுவெ ||3

3. யாகெ ஹலுபு3விரி ஹெண்ணுஹெத்தெவெந்து3
ஸாகு மாடி3ரி நிம்ம ப்ரலாபவன்னு ||

பே3கு க3ண்டெ3ம்ப பே3கு3தி3யன்னு
லோகலோகரிகாகி3 ஹிடிதி3ஹிரேனு ||அப

மமதெய மாதெ டா3க்டரு ஆக்டரு, கண்ட3க்டரு
ஸமதெய இன்ஸ்பெக்டரு டை3ரக்டரு
ஸுமதி ஸுகு3ணெ ஸம்பன்னெ மக3ளிரலு
நிமகே3கெ நெனெகு3தி3 மக3ன சிந்தெ |1

மாடு3விரி அமெரிகெகெ3 மக3ன ரவானெ |
நீடு3விரி எல்லத3கு ஹஸிரு நிஶானெ
கேடி3க3னு கையத்தி ஹேளுவனு குட்-பை |
பே3டு3வனு நிம்மெல்ல ஸம்பத்து பை பை ||2

முதி3தனத3 ஆஸரெகெ மக3ள மரெஹோகு3விரி |
ஸத3ரவல்லவெ நிமகெ3 மக3ளு அளிய
இது3வெ இந்தி3ன தாய்தந்தெ3யர ப4வணெ
அத3னோடி3 முஸி முஸி நகு3வ ஸிரிக3ங்கா3 ஜனக ||3

பெண்ணைப் பெற்றதற்காக ஏன் வருத்தப்படுகிறீர்கள்?. உங்கள் பையன் பெரியவன் ஆனதும், வெளி நாட்டுக்குப் போய்விடுவான். பிறகு உங்களை பார்த்துக் கொள்ளப் போவது உங்கள் பெண்ணே என்பதாக இந்தப் பாடலில் பெண் குழந்தைகளின் சிறப்பினை விளக்கியுள்ளார் ஹரிதாஸினி. கூடவே, பற்பல ஆங்கிலச் சொற்கள் டாக்டர், கண்டக்டர் என பயன்படுத்தியிருப்பதும் மிகவும் அழகாக வந்திருக்கிறது.

4. மல்லிகைப் பூவை பார்க்கும்போதெல்லாம், அவற்றை ஸ்ரீஹரியின் பாதங்களுக்கு சமர்ப்பிக்க வேண்டும் என்று நாகரத்னா அவர்கள் விரும்புகிறார். அப்படிப்பட்ட மல்லிகையின் ஜன்மம் ஸார்த்தகம் ஆயிற்று என்று இங்கு பாடுகிறார்.

அரளு அரளு மல்லிகெ3 நீனு |
அரளி கம்ப ஸூஸு ||ப
ஸுருளி ப3ள்ளிலி அரளி நிந்திஹ தரளெ ஆஹ
பி3ரிது3 பி3ங்கவ தாளிஹெ ||அப

ஹஸிரு சப்பரத3 மேலெ மொஸரு செல்லித3 ரீதி ஆஹா
ஹெஸரெ சந்த3 நின்ன உஸிரு மகரந்த3 ||1

ஸுத்து ஸுத்தினலி அரளினிந்த க3த்து கு3லாபி3ய க3ம்மத்து ஆஹ
பி3த்து கண்ணு ப3ந்து3 ஜேனு எத்த திருகு3வெ தலெயெத்து ||2

நில்லு தரளெ ஒல்லெ என்னதி3ரு கு4ல்லு கு4லுகெனெ தெரளி ஆஹ |
புல்லலோசன ஸிரிக3ங்கா3ஜனக ப3ல்லவ அவன பாத3 ஸேரு நிஸ்சய ||3

5. ஹஸிவாகு3திதெ3 எனகெ வஸுதீ4ஶனெ | ப3ஸவளிது3 ப3ளலி பெ3ண்டா3கு3திஹெ ||ப
ஹுஸியல்லவோ நின்னாணெ | ஶேஷ ஶயன ஸ்ரீஶ ஸர்வேஶ ||அப

நின்ன ஸ்ரவணவெம்ப3 கேஸரிபா3து | நின்ன நெனஹின ப3காளபா3து |
நின்ன கீர்த்தனெய காராபா3து | நின்னர்ச்சனெய கர்ஜிகாயி நெனெனெனெது3||1

நின்ன நாமாம்ருதவ குடி3ய ப3யஸி | என்ன துடி பா3யி ஒணகு3திவெ |
முன்ன முன்னீரிந்தெ3த்3து3 பா3ரோ |
நின்ன நாமாம்ருதத3 ஸவிய தோரோ ||2

அன்னவனுண்டு3ண்டு3 ஜட்3டு3க3ட்டிதெ3 நாலகெ3 |

நன்ன கையடு3கெ3 ருசிஸலொல்லது3 நனகெ3 |
பன்னகா3சலவாஸ ஸிரிக3ங்கா3 ஜனக தொ3ரெயெ |
நின்ன அரிவெம்ப3 பரமான்னவ பி3ட3தெ3 ப3டி3ஸோ ||3

* இந்தப் பாடலில் ஹரிதாஸினி, ஸ்ரீஹரியின் அர்ச்சனையை சுவையான சிற்றுண்டிகளின் பெயர்களுடன் ஒப்பிட்டு அழகாக வர்ணித்திருக்கிறார்.

**6. துங்கா ஸ்துதி**

துங்கெ3ய ஸலிலத3 மங்க3ள தரங்க3 ரங்கே3ருதலிதெ3 கெம்பாகி3 ||ப
முளுகு3வ ஸூர்யன கிரணக3ளெல்லவு களகளிஸுதலிவெ ரங்கா3கி3 ||அப

ஶரதி4ய நெனபலி குணியுத ஹாரி | பரிதி4ய ஹிக்3கி3ஸி நலியுத ஸேரி |
கு3ருவதி3 ஹிக்3கு3தெ முன்னுக்கெ நாரி | ஸரஸதி3 ஸாக3ர ஸந்தி4ஸெ மீரி ||1

ஸிரிக3ங்கா3ஜனக குவரி மனோஹரி | பரிபரி ஸம்ப்4ரம ஸடக3ர தாளி
பரி பரிதோ3டு3த ஸாக3ர ஸேருவ | ஸரஸவ நோடி3ரி ப3ன்னிரி எல்ல ||

* சூர்ய அஸ்தமனம் ஆகும் சமயத்தில், துங்கையின் நீரில் அந்த சிவப்பு வண்ணத்தைப் பார்த்து, அந்த காட்சியில் தன் மனதை பறிகொடுக்கிறார். அந்த துங்கையானது கடலில் கலக்கும் காட்சியை காண்பதற்கு ஹரிதாஸினி தம் தோழிகளை அழைக்கிறார் என்பதாக இந்த கிருதி இருக்கிறது.

இவ்வாறு சரளமான மொழிகளிலும், அபாரமான கருத்துகளையும் கொண்டதாக இவரது கிருதிகள் இருக்கின்றன. ஹரிதாஸினி நாகரத்னா அவர்கள், தற்போதும், ஹரிதாஸ ஸாகித்யத்தின் செயல்களில், பாடல்களை தொகுப்பது, இயற்றுவது, கட்டுரைகளை / புத்தகங்களை எழுதுவது என்று இதன் மூலம் ஹரிகுருகளின் சேவையை தொடர்ந்து செய்து கொண்டு வருகிறார். வேலையிலிருந்து ஓய்வு பெற்றுவிட்டாலும், அவரது ஹரிதாஸ சேவை தொடர்ந்து கொண்டிருப்பது கவனிக்கத்தக்க விஷயம் ஆகும். ஹரிதாஸ ஸாகித்யத்திற்கு இவர் மேன்மேலும் அபாரமான பங்களிப்பு செய்ய வேண்டும் என்று, ஹரிவாயு குருகளிடம் வேண்டிக் கொள்வோமாக.

** இத்துடன் இந்த தொடர் முடிந்தது **

***

தொடர்

## ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர்

டாக்டர். N.G.விஜயலட்சுமி.

முன்னர் பார்த்ததைப் போல, அனைத்து முக்தர்களும் சதுர்புஜங்களைக் கொண்டு ஸ்வரூபானந்தத்தை பெற்றிருக்கின்றனர். அவர்களுக்கு சதுர்புஜங்களில் சங்கு, சக்ர, கதா, பத்மங்களையும் பகவந்தன் அளித்திருக்கிறான். ஆனால், தன்னுடையதே ஆன, கௌஸ்துப ஸ்ரீவத்ஸ கருடவாஹன சேஷ வாஹனங்களை அவர்களுக்கு கொடுப்பதில்லை. அங்கு எந்தவிதமான பொறாமை, கர்வம் ஆகிய அரிஷட் வர்க்கங்களும் யாரிடமும் இருப்பதில்லை. அதர்ம ஆசரணைகளும் இருப்பதில்லை. ஏனெனில், அவர்களுக்கு ஆனந்தத்தைத் தவிர வேறு எந்த விருப்பமும் இருப்பதில்லை. அவர்கள் விரும்பிய பொருட்கள் அனாயாசமாக கிடைத்துவிடுவதால், எதுவும் கிடைக்கவில்லை என்னும் சிந்தனையே இருப்பதில்லை. ஒருவருக்கொருவர் உதவி செய்து கொண்டிருக்கின்றனர். ஒருவருக்கொருவர் அன்புடன் செயல்களை செய்கின்றனர். பரஸ்பரம் கௌரவ மரியாதைகளை செலுத்திக் கொள்கின்றனர். சிறியவர்கள் பெரியவர்களை பக்தியுடன் வணங்குகின்றனர். அனைவருக்கும் ஞானானந்தாத்மகமான ஸ்வரூப சரீரங்களே இருப்பதான முக்தர்களில், பிராமணாதி ஜாதிகளும் உண்டு மற்றும் பசு, பக்ஷி, மரம், செடி, கொடி ஆகிய ஜீவர்களும் உண்டு. இந்த ஜீவர்கள் முக்தியிலும் கூட அஸ்வதந்த்ரர்கள் ஆவர். அவர்களின் உள் இருக்கத்தக்க பிம்ப ரூபியின் செயல்களாலேயே முக்த ஜீவர்களின் க்ரியைகள் நடக்கின்றன. அவரவர்களின் யோக்யதைக்கேற்ப ரமா நாராயணர்கள் அனுபவிக்கும் சுகங்கள் ப்ரதிபிம்பத்தின்படி அவரவர்களுக்கு கிடைக்கின்றன.

ஸ்ரீவாதிராஜர் இவ்வாறு கூறுகிறார்.
ஹரிபுரதொ3ளகி3ப்ப ஸகல முக்தருக3ள
இரவ ப3ண்ணிஸி பொக3ளுவ
ஸர்வே நந்த3ந்தீத்யாதி3 யெம்ப3ர்த்த2வனெ
வரெவெனு கேளி ஸஜ்ஜனரு ||2

ஹ்ருத3யத3 பாபவ தொ3ளெவனவ நீவு
பது3மனாப4னெ முக்தருக3ள
குது3ரெயந்தெ குணிவ கண்ணெ கோ3சரனாகி3
ஒத3கி3ஸி கொடு3வ ஸுகா2தி3க3ள ||3

அஞ்ஞான காரியங்களான கர்மங்கள் என்னும் பாவங்களை களைந்து, முக்தி சுகத்தை அருளும் பகவந்தன், அங்கு எப்போதும் தன் தரிசன சுகத்தை அருள்கிறான். குதிரையின் வேகத்தில் அவர்கள் நினைக்கும் விஷயங்களை அவர்களுக்கு கொண்டு வந்து கொடுக்கிறான்.

கைவல்யத ஸௌபாக்ய பல்லனேவே யோக்யா
பூவைகுண்ட நிவாஸா ப்ரஸன்வேங்கடேஷா ||11

கைவல்ய என்றால் மோட்சம். மோட்ச சுகத்தை அறிந்தவனே வல்லவன். கிருஷ்ணனின் பாத சேவையே கைவல்ய என்கிறார் ஸ்ரீவாதிராஜர். பகவந்தனுடன் இருந்தாலும், பகவந்தனைப் போல வேஷ பூஷணங்கள் இருந்தாலும், மற்றும் அவனின் அங்கங்களில் சேர்ந்திருந்தாலும், அந்த ஜீவி, பகவந்தன் ஆவதில்லை.

அல்லி கிருஷ்ணன பாத$^{3}$ஸேவெயே கைவல்ய
வல்லதெ$^{3}$ அவலைக்ய ஸல்ல
எல்லரு ப$^{3}$ல்லரு ஹரிய பே$^{4}$த$^{3}$
வல்லதெ$^{3}$ இல்லவெம்பு$^{3}$த$^{3}$னு ||6

இவ்வாறாக அறிந்தவனே உண்மையான யோக்ய மனிதன். முக்தி ஒரு ஸௌபாக்கியம். அனேக ஜன்மங்களின் ஸாதனையினால் மட்டுமே முக்தி கிடைக்கும். சுலபமாக கிடைப்பது இல்லை.

திருப்பதியின் வெங்கடேசன் தன் ஒரு கையினால் பூமியை காட்டியவாறு, இதே பூவைகுண்டன் என்று சொல்கிறான். திருப்பதி பூவைகுண்டமான பிறகு, அந்த பகவந்தன் வெங்கடேசனே ஸ்ரீமன் நாராயணன். முக்தியை அருள்பவன். திருப்பதியில் தேவானு தேவதைகள் அனைவரும் மரம், செடி, கொடி, குளம், அருவி, தீர்த்த ஆகிய ரூபங்களில் வந்து நிலைத்திருக்கிறார்கள் என்று நம்பிக்கை.

கிரி ராஜ சித்த உதார ஜீய என்னும் கிருதியில் -
தருஜாதி ம்ருக பக்திகளாகார மொதலாத ரூபதி |
ஸுரரு கின்னரரு தம்ம பரிவார ஒடகூடி நின்ன
சரணாராதனெ மாடித விஸ்தார ஈ பகெ ஷ்ருங்கார
தொரெதன டீவிகெ தரணி மண்டலதி ஸரிகாணெனோ
ஹே திருபதி வெங்கட

என்று ஸ்ரீவிஜயதாஸர் வர்ணிக்கிறார். சமீபத்திய ஹரிதாஸரான, ஸ்ரீஉரகாத்ரி விட்டல தாஸர்,

ஸூர கின்னரர தரு ஷிலா லதாகார
தவ பரிவாரகெல்ல ஷரணு |
ஷுக பிக நாத ஜேங்கார ஸ்வர ஷப்த
வாச்ய தவ ஷரணு
என்று வர்ணிக்கிறார்.

இன்னொரு கிருதியில்:

பரிபரி முக்த ஜீவர்களு இல்லி பரிவார
தரு லதெ ஷிலெகளு இன்னு
விரஜெ மொதலாத ஸர்வதீர்த்தவு
ஸ்வாமிதீர்த்தவு மோக்ஷ தாத்ருவு |
ஸிரி விரிஞ்சி ஈர பவ ஷக்ராதினுத
உரகாத்ரிவாஸ விட்டல ஜகதீஷனே ||

என்று கொண்டாடுகிறார். மற்றும் ஸ்ரீவிஜயதாஸர் - நோடிதெ திருவெங்கடேஷன - என்னும் தேவர நாமாவில்:

ந ஸுந்தர ஞான தீர்த்த ஆனந்த
கனக முக்த வைகுண்ட வெங்கட
ந வராஹ வைராக்ய நீல ர தனு சந்த்ரனு வர தர்ம
நாராயண பகுதி ஸ்ரீகாந்தி பிரம்மா
ருண வ்ருஷப ஷ்ருதி கருட ஸர்ப்ப
ஜனக பூஜித ஸூர சுதானந்த
இனிது பெஸருள்ள புஷ்கராத்ரிய
எந்து திருப்பதியே முக்த வைகுண்ட ||

என்று பாடியிருக்கிறார்.

இத்தகைய பூவைகுண்ட நிவாஸியான வெங்கடேஷ்ன், பாகல்கோடெ வெங்கண்ணனுக்கு தரிசனம் அளித்திருக்கிறான். அவர் 'ப்ரஸன்னவெங்கட' தாஸராகி பற்பல கிருதிகளை இயற்றியிருக்கிறார். அதில் ஒன்றாக 'அம்பெ சும்பிஸு நினகெ மூகுதி ரூபம்பெ' என்று தொடங்கும் இந்த கிருதியில், மொத்தம் 11 நுடிகள் இருக்கின்றன. இது நம்மில் இருப்பதான 11 இந்திரியங்களை குறிக்கின்றன. 5 கர்மேந்திரியங்கள், 5 ஞானேந்த்ரியங்கள் மற்றும் 1 மனஸ் - இவற்றின்

மூலமாக பகவந்தனை வணங்கு, பூஜை செய், அவனுடைய கிருபையை பெறுவாயாக என்று குறிப்பால் உணர்த்துகிறார். இன்னொரி விஷயம், 11 என்றால், ஏகாதஷ ருத்ரர். ஸ்ரீப்ரஸன்ன வெங்கடதாஸர், ருத்ராம்ச ஸம்பூதர் என்று அறியப்படுகிறார். ருத்ரதேவ என்றால், லயகர்தா. ஆனால், ஸங்கர்ஷண தேவர், ருத்ரரில் நின்று, ருத்ரதேவராகி லயத்தை செய்கிறார். ருத்ரதேவர் ஸங்கர்ஷண தேவரின் உபாஸகர். ஆக, இந்த கிருதியில், ஸ்ரீதாஸர், வைகுண்ட வர்ணனையில் வர்ணிக்கப்பட்டிருக்கும் லய ஸந்தி மற்றும் ஸ்ருஷ்டி ஸந்தியின் விஷயங்களை 11 நுடிகளில் விளக்கியிருக்கிறார். மோட்ச ஸந்தியின் 140 நுடிகளின் விஷயங்களை மற்றும் லய ஸந்தியின் 55 நுடிகளின் விஷயங்களின் இந்த 11 நுடிகளில் அடக்கியிருக்கிறார் ஸ்ரீதாஸர் என்பது இன்னொரு சிறப்பான விஷயம்.

இந்த கிருதியில் சந்தஸ், அலங்கார, ஷப்தாலங்கார, எதுகை, மோனை ஆகியை அனைத்து நுடிகளில் தெரிய வருகிறது. இரண்டாம் எழுத்தில் ஸந்தம் அனைத்து வரிகளிலும் வந்தால், கடைசி எழுத்தின் ஸந்தம் சில வரிகளில் வருகிறது. இந்த கிருதி த்விபதி (இரு வரிகள்) வகையில் இருக்கிறது என்று சொல்லலாம். இங்கு இருக்கும் ரஸத்தைப் பற்றி சொல்வதானால், இங்கு இருப்பது முக்தியின் ஆனந்த ரஸம். அம்பே சும்புஸூ என்பதில், ஷ்ருங்கார ரஸம் இருக்கிறது.

முக்தி மற்றும் முக்தர்களின் வர்ணனை ஆகியவற்றை கொண்டிருப்பதால், இதனை ஆத்யாத்மிக வர்ணனை கிருதி என்று சொல்லலாம்.

** இத்துடன் இந்த கட்டுரை முடிந்தது **

***

தொடர்

## ஹரிதாஸ ஸாகித்ய ஸார

திரு ஜி. வரதராஜ ராவ்

### ஹரிதாஸ ஸாகித்யத்தின் பொற்காலம்

இதைப் போலவே, 'பண்டனாகி பாகில காயுவெ, வைகுண்ட ஸ்ரீஹரிய தாஸர மனெய' என்று ஸ்ரீகனகதாஸர் இயற்றியிருக்கும் கீர்த்தனை, ஸ்ரீவைகுண்ட தாஸரையே சொல்கிறது எனலாம். ஸ்ரீகனகதாஸர் சில காலம், பேலூரில் தங்கியிருந்தார் என்றும், அப்போது ஸ்ரீவைகுண்ட தாஸரின் சம்பந்தம் ஆகி, அவருடைய சேவையை செய்து கொண்டிருந்தார் என்றும், தாம் அங்கு இருந்த நினைவுக்காக, இந்த கீர்த்தனையை இயற்றினார் என்றும் சொல்கிறார்கள். காலத்தின்படி பார்த்தாலும், இருவரும் சமகாலத்தவரே ஆகையால், ஸ்ரீகனகதாஸரின் நடையிலேயே இந்தப் பாடலும் இருப்பதால், இதனை மேற்கூறியவாறே நம்பலாம்.

ஸ்ரீஅச்யுதவிட்டலதாஸர் என்னும் ஒருவர், ஸ்ரீவைகுண்ட தாஸருக்கு அவமானம் செய்தார் என்றும், அதனால் அவருக்கு கண் பார்வை பறிபோனது என்றும், பிறது, ஸ்ரீவைகுண்டதாஸர், தம் ஸ்வாமியை வேண்டி அவருக்கு அருளினார் என்றும், அச்யுதவிட்டலா என்னும் அங்கிதத்தைக் கொண்ட ஒரு தேவர நாமாவிலிருந்து தெரிய வருகிறது. ஆகமொத்தம், ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தை சேர்ந்த ஒருவர், ஹரிதாஸர் எனப்பட்டு, இவ்வாறு அனைவராலும் போற்றப்பட்டிருந்தார் என்னும் செய்தியே அற்புதமாக இருக்கிறது. அவர் இயற்றிய தேவர நாமாக்கள் மேலும் நமக்குக் கிடைத்தால், அவரைப் பற்றிய மேலதிக தகவல்கள் கிடைக்கலாம்.

ஸ்ரீபாதராஜர் நட்ட ஹரிதாஸ ஸாகித்யத்தின் விதை, ஸ்ரீவ்யாஸராஜரின் முயற்சிகளால் முளை விட்டு, ஸ்ரீவாதிராஜரின் க்ருபா கடாக்ஷத்தினால் பல கிளைகளை விட்டு வளரும் நேரத்தில், சரியாக, ஸ்ரீபுரந்தரதாஸர் மற்றும் ஸ்ரீகனகதாஸர் போன்றவர்களான மஹனீயர்களின் நுழைவும் இருந்தது. விஜய நகரத்தில் ரத்ன வியாபாரியாக இருந்த ஸ்ரீனிவாஸா நாயகர், ஸ்ரீவ்யாஸராஜரிடமிருந்து அங்கிதம் பெற்று, ஸ்ரீபுரந்தரதாஸர் என்று புகழ் பெற்றது அனைவரும் அறிந்ததே. ஸ்ரீபுரந்தரதாஸரின் (ஆண்டு 1484-1564) முந்தைய வாழ்க்கை விவரங்கள், அவரது கீர்த்தனைகள் மூலமே தெரிய வருகின்றன. அவருடைய மனைவி மூலமாகவே அவருக்கு ஞானோதயம் ஆயிற்று என்பதில் சந்தேகமே இல்லை 'ஆதத்தெல்லா ஒளிதே ஆயித்து. நம்ம ஸ்ரீதரன ஸேவெ மாடலு ஸாதன

ஸம்பத்தாயித்து' என்று பாடி, தம் கர்வம், மமகாரம் ஆகியவற்றை விலக்கி, தம் மனதினை, வைராக்கியத்தின்பால் நகர்த்திய மனைவியை வாய் நிறைய கொண்டாடியிருப்பதே இதற்கு சாட்சி. மேலும் 'வ்யாபார நமகாயிது, ஸ்ரீபதி பாதாரவிந்த சேவெயெம்ப வ்யாபார நமகாயிது' என்று இன்னொரு கீர்த்தனையில், தாம் முன்னர் லௌகிகமாக வ்யாபாரங்களை செய்து வந்ததையும், தற்போது, பரமாத்மனின் பரமபக்தராகி, செய்து கொண்டிருக்கும் கீர்த்தனைகள் இயற்றுவது போன்றதான செயலுக்கும் உள்ள ஒப்பீடுகளை தாமே செய்கிறார்.

அவருடைய இந்த ஹரிபக்தி ஸாதனையின் ஒவ்வொரு கட்டங்களையும், அவர் இயற்றியிருக்கும் கீர்த்தனை, உகாபோகங்களில் நாம் விசேஷமாக காணலாம். மேலே பார்த்த யதித்ரயர்கள் போட்ட பாதையானது, ஸ்ரீபுரந்தரதாஸருக்கு மிகவும் உதவிகரமாக இருந்தது. அந்தப் பாதையிலேயே சென்ற அவர், தம் மிகச்சிறந்த பக்தியினால் ஹரிதாஸ ஸாகித்ய ப்ரபஞ்சத்தின் முகுடமணியாக திகழ்ந்தார்.

ஸ்ரீபுரந்தரதாஸரின் இதயத்தில் தோன்றிய கருத்துக்கள், அவருடைய திளிகன்னட (எளிமையான கன்னடத்தில்) நுடிகளில் எப்படி வெளிவந்தன என்பதை ஒன்றிரண்டு உதாரணங்களைக் கொண்டு இங்கே பார்க்கலாம். ஸ்ரீபுரந்தரதாஸர் தம் மனமாற்றம் ஆன அடுத்த நொடியிலேயே, தம் அனைத்து செல்வங்களையும், 'ஸ்ரீகிருஷ்ணார்ப்பண' என்று அர்ப்பணம் செய்து, விரக்தர் ஆனாலும், அவருடைய அந்தரங்கத்தின் அர்ப்பணமோ அவ்வளவு சுலபமாக இல்லை.

மனெயெம்ப ஆஸெயு என்ன முந்துகெடிஸுதிதெ
மனெவாருதியு என்ன பங்கபடிஸுதிதெ
ஸுதராஸெயு என்ன தைன்யபடிஸுதிதெ
இனிதாஸெயுளிது புத்தி நின்னல்லி நிலுவந்தெ
மாடோ ஸ்ரீபுரந்தர விட்டலா

என்று தம் மனதினை தாமே ஆராய்ந்து, அதற்காக, வருந்தி, புலம்பி, பரமாத்மனை முறையிடுகிறார். அவனுடைய அருள் கிடைக்க தாமதம் ஆகையில் 'ஆரு பதுகிதரய்யா ஹரி நின்ன நம்பி, தோரு ஈ ஜகதொளகெ ஒப்பரனு காணே' என்று கெட்டியாக இடிக்கிறார். பக்தனின் இந்த வேண்டுகோளை தாங்காமல், பகவந்தன் அவனுக்கு தன் தரிசனத்தை

அளிக்க, அப்போது ஸ்ரீதாஸர் மகிழ்ந்து ‘பதுகிதெனு, பதுகிதெனு பவ ஹிங்கிது. பதுமனாபன பாததொலுமெ எனகாய்து’ என்று பாடுகிறார்.

நம்பி கெட்டவரில்லவோ ரங்கய்யான, நம்பதெ கெட்டரே கெடலி’ என்று முன்னர் பாடியதை மாற்றி பாடினார். இவ்வாறாக, ஸ்ரீபுரந்தரதாஸரின் வாழ்க்கை, பரிபக்குவமாகி, அவருடைய ஹரிதாஸ கைங்கர்யம் சார்த்தகம் ஆயிற்று. ஆத்மஷுத்தி, ஆத்ம உத்தாரங்களை அடைந்த ஸ்ரீதாஸர், லோக கல்யாணத்திற்காக ஆயிரக்கணக்கான கீர்த்தனைகளை இயற்றினார். மத்வ மதத்தின் அருமை பெருமைகளை மட்டுமல்லாமல், வேத உபநிஷத், ராமாயண, மஹாபாரத, ஸ்ரீமத் பாகவதங்களின் ஸாரங்கள் அனைத்தையும் மக்களுக்கு தெளிவான கன்னடத்தில், மிகவும் எளிமையாக போதித்தார்.

ஸ்ரீபுரந்தரதாஸரின் பார்வை, வெறும் தர்மபோதனைக்கு மட்டுமே என்று இல்லாமல், ஸாத்விக ஜீவனத்தின் நடைமுறைகளையெல்லாம் விளக்கி, மனித சமுதாயத்திற்கு அவை எப்படி பொருந்தும் என்பதை, பல்வேறு கீர்த்தனைகள் மூலம் விளக்கினார். இவ்வாறாக அவரது கீர்த்தனைகள், ஹரிதாஸ ஸாகித்யத்தின் சிறப்பினை மேலும் பல்வேறு இடங்களுக்கு பரப்பியது. ஸ்ரீபுரந்தரதாஸருக்கு அங்கிதத்தை கொடுத்த ஸ்ரீவ்யாஸராஜருக்கும், அவரது இந்த கீர்த்தனை செல்வங்களைப் பார்த்து மட்டற்ற மகிழ்ச்சி உண்டாக ‘தாஸரெந்தரெ புரந்தரதாஸரய்யா’ என்று அவருடைய ஆளுமையை மெச்சி கொண்டாடினார். ஸ்ரீதாஸரின் க்ருதி தொகுப்பினை ‘புரந்தரோபனிஷத்’ என்று கௌரவித்தார். கர்னாடக சங்கீதத்தின் அத்யயனத்திற்கு, ஸ்ரீபுரந்தரதாஸர் காட்டியிருக்கும் வழியும்கூட மிகவும் முக்கியமானதாகும். மொத்தத்தில் ஹரிதாஸர்களில் ஸ்ரீபுரந்தரதாஸர் மிகவும் முக்கியமானவர் எனப்பட்டார். அவருடைய கீர்த்தனைகள், தர்ம, ஸாகித்ய மற்றும் ஸங்கீதங்களின் த்ரிவேணி சங்கமம் என்று அழைக்கப்பட்டு அனைவராலும் மிகவும் பிரியத்துடன் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

ஸ்ரீபுரந்தரதாஸரின் திவ்ய ப்ரபையில் அவருடைய சமகாலத்தவராக இருந்த மற்ற சில ஹரிதாஸர்களின் பெயர்களே மறைந்துவிட, ஸ்ரீவ்யாஸராஜரின் அருளைப் பெற்றவரான ஸ்ரீகனகதாஸரின் பெயர் மட்டும் மறைந்துவிடாமல் இன்று வரை வந்திருக்கிறது. ஆனால், இவர்கள் இருவரிலும் நாம் பார்க்கும் ஒரு வித்தியாசம் என்னவென்றால், ஸ்ரீகனகதாஸர் வெறும் கீர்த்தனைகளை இயற்றுபவராக இருக்காமல், ஒரு கவிஞர் என்று அழைக்கப்படும் முக்கிய இடத்தை பெற்றிருக்கிறார். கீர்த்தனைகளை மட்டுமே கவனித்தால், எண்ணிக்கையில்

ஸ்ரீபுரந்தரதாஸருடையதே அதிகமாக இருக்கிறது. ஸ்ரீபுரந்தரதாஸரில் தெரியும் விஷய ஞான, பார்வை, சிறப்புகளை, ஸ்ரீகனகதாஸரின் கீர்த்தனைகளில் நாம் பார்க்க முடிவதில்லை. ஆனால், ஸ்ரீகனகதாஸரின் கீர்த்தனைகளில் நாம் பார்க்கும் துணிச்சல் / தைரியம், அவருடைய நடையில் நமக்குத் தெரியும் கூர்மை / தீவிரம், அவர் இயற்றியிருக்கும் முண்டிகைகளில் நாம் பார்க்கும் ஆழமான அர்த்தங்கள் ஆகிய குணங்கள், ஹரிதாஸ ஸாகித்யத்திற்கு சிறப்பான ஒரு இடத்தை அளிக்கிறது. இத்தகைய ஹரிதாஸ ஸ்ரேஷ்டரின் வாழ்க்கையும்கூட நாம் அறிய வேண்டியதாகும்.

தார்வாட ஜில்லாவில் இருக்கும் காகினெலெ என்னும் இடத்தில், ஸ்ரீகனகதாஸர் (1508-1606), ஒரு வசதியான குடும்பத்தில் பிறந்து வாழ்ந்தார். இவருடைய தந்தை அந்த காலத்தில் அரசனிடம் போர்வீரராக வேலை பார்த்து வந்தார். இவருக்கு பல காலம் குழந்தைகளே இல்லாததால், குல தெய்வமான திருப்பதி திம்மப்பனை வேண்டினர். ஸ்வாமியின் அருளால் பின்னர் ஒரு ஆண் குழந்தை பிறக்க, அதற்கு திம்மப்பா என்றே பெயர் வைத்தனர். தந்தையைப் போலவே மகனும், மிகவும் தைரியத்துடன் வளர்ந்தார். சில நாட்களில் தந்தை இறந்துவிட, மகன் திம்மப்பா தந்தையின் வேலையை ஏற்றார். தெய்வ அருளால், திம்மப்பனுக்கு ஒரு புதையல் கிடைக்க, அதில் இருந்த தங்க நாணயங்களைக் கொண்டு, தம் ஊரின் கேசவ தேவாலயத்தின் ஜீர்ணோத்தாரத்தினை செய்தார். இதனால் மக்களின் அபிமானத்தைப் பெற்றார்.

இதற்கு நடுவில், திம்மப்பனின் கனவில், திருப்பதி ஸ்ரீனிவாஸன் தோன்றி, தன் சேவைக்காக சங்கல்பம் செய்யுமாறு கூறினான். வேலையில் கவனத்துடன் இருந்த திம்மப்பா, அந்த கனவினை பொருட்படுத்தவில்லை. பின்னர் ஒரு நாள் நடந்த போரில், திம்மப்பன் அடிபட்டி, மயக்கமடைந்து, கீழே விழுந்து கிடந்தார். அப்போது அங்கு ஸ்வாமியே வந்து அவருக்கு உதவியாக அனுபவம் கிடைத்தது. உடனே திம்மப்பாவிற்கு, தைஹிக பலத்தைவிட, தெய்வ பலமே சிறந்தது என்று தோன்றி, உடனே அனைத்தையும் துறந்து, பரம விரக்தர் ஆனார்.

(தொடரும்)

தொடர்

# ஸ்ரீகனகதாஸர்

**திரு.வ்யாஸனகெரெ ப்ரபஞ்சனாசார்யர்**

## 8. ஸ்ரீகனகதாஸரின் வித்வத்

ஸ்ரீகனகதாஸருக்கு இளமையில் சரியான கல்வி கிடைக்கவில்லை என்று பலரும் சொல்ல கேட்டிருக்கலாம். அதற்கு அவருடைய மோஹன தரங்கிணியின் ஒரு வாக்கியம் ஆதாரமாக காட்டுகின்றனர்.

பரெஹவ திளிபேடெனுதென்ன நொஸலொளு
பரெத நால்மொகனதரிந்தெ
பரெஹவனரியெ நா பதவிட்டு கடிததொள்
பரெது மாடித கைதியல்ல || 1-21

ஆனால், உண்மையில் அப்படி இல்லை என்று நினைக்கிறோம். அவருடைய இந்த க்ருதியில் மற்றும் மற்ற கிருதிகளில், கீர்த்தனைகளில் தெரியவரும் அபாரமான நடை மற்றும் மிகச்சிறந்த கருத்துக்கள், அவர் நல்ல கல்வியை கற்றிருந்தார் என்று செய்தியை சொல்கிறது. அதே மோகன தரங்கிணியில் அடுத்து வரும் வேறு பத்யங்கள், அவர் மிகச்சிறந்த வித்வத் பெற்றிருந்தார் என்பதை பார்க்கிறோம்.

அதரிந்தெ வர்ணதோஷங்களு பரம ஸம்
பதவித்து க்ருதிகில்லவெந்து
புதராம்னாயஷாஸ்த்ரார்த்தவ திளிது நா
நித பேள்வெ கேளாயதாக்ஷி || (1/31)

பெனகனோ நினகீ மதியனித்தவ பிரம்ம
ஜனகனோ வர ஸரஸ்வதியோ
ஸனக ஸனந்தாத்யரோ மேள்கதெ பேளு
கனகதாஸோத்தம தனகெ || (1/37)

மோகன தரங்கிணியில் வரும் குமாரவ்யாஸ, குமார வால்மிகிகளின் மேற்கோள்கள், ஸ்ரீகனகதாஸர் அந்த இருவரின் கிரந்தங்களையும் அத்யயனம் செய்திருக்கிறார் என்பதற்கு சாட்சி.

உரகாலபெஸர்வடெதவன மத்ஸ்யோ
தரஜாதெ யாத்மஸம்பவன
வரபுராணங்கள கன்னடிஸித கவி
வரர கொண்டாடுவெ முததி || (11/17)

அதைப் போல, அங்கு வரும் அனேக வர்ணனைகளில் அவருக்கு காவிய, புராணங்களைப் பற்றி அபாரமான ஞானம் இருந்ததற்கு ஆதாரமாக இருக்கிறது. 'அபுத்ரஸ்ய கதிர்நாஸ்தி' என்னும் பேச்சுக்கள் அவருடைய சாஸ்திர அறிவுக்கு மிகச்சிறந்த உதாரணமாக இருக்கிறது.

நாட்டுப்புற பாடல்களில், ஸ்ரீகனகதாஸர், குருகளில் கல்வி கற்ற விவரம் தெளிவாக சொல்லப்பட்டுள்ளது.

ஸாலிய மனிகவன களிஸ்யாரு
ஸாலிய மனிகவன களிச்யாரய்யா ||
குருகள கண்டு ஹிரிஹிரி ஹிக்யானோ
குருகள கண்டு ஹிரிஹிரி ஹிக்யானய்யா
அக்ஷரவித்யா ஸரஸர கலிதானோ
அக்ஷரவித்யா ஸரஸர கலிதானய்யா ||

அப்படி கற்றது மட்டுமல்லாமல், சிறு வயதிலேயே அனேக பாடல்கள் அவர் இயற்றிய விவரம், இத்தகைய நாட்டுப்புற பாடல்களில் கிடைக்கிறது. அத்தகைய பாடல்களின் எண்ணிக்கை ஆயிரம் இருக்கலாம் என்னும்போது, ஸ்ரீகனகதாஸரின் க்ருதி ரசனை என்பது மிகவும் அற்புதமாக இருந்தது என்னும் அம்சம் கவனிக்க வேண்டியதாகும். ஆகையால், இந்த பின்னணியில் தமக்கு படிப்பு இல்லை என்று சொல்வது, அவருடைய அடக்கத்தன்மையையே காட்டுகிறது என்று அறிய வேண்டும். சம்ஸ்கிருத மற்றும் கன்னட சாகித்யங்களில் இந்த விதமான வினயம், ஞானிகளில் அனேக இடங்களில் வந்திருக்கிறது என்பதை பார்க்கிறோம். வெறும் வித்வத்தினால் மட்டும் அவரது கிருதிகள் இயற்றப்படவில்லை. ஆனால், பகவந்தனின் மற்றும் முன்னோர்களின் அருளாலேயே அவற்றிக்கு முக்கிய காரணம் என்னும் இன்னொரு செய்தியையும் அத்தகைய பேச்சுக்கள் விளக்குகின்றன என்பதை நாம் கவனிக்க வேண்டும்.

***

**9. ஸ்ரீகனகதாஸரின் முக்கிய கார்ய க்ஷேத்திரங்கள் மற்றும் அவர் தரிசித்த முக்கிய க்ஷேத்திரங்கள்**

எப்போதும் சஞ்சாரத்தில் இருப்பது, ஹரிதாஸர்களின் வாழ்க்கை விதியாக இருந்தது. தீர்த்த க்ஷேத்ரங்களை தரிசித்து, அங்கு இருக்கும்

பகவன் மூர்த்தியை ஆராதனை செய்து, வாழ்க்கையை சார்த்தகம் செய்து கொள்ளும் வழி அது. அதே சமயத்தில், அந்த பகவன் மூர்த்திகளின் மகிமைகளை கொண்டாடியவாறு, லௌகிகத்தில் மூழ்கி ஆத்யாத்மத்திலிருந்து தூரமாக விலகியிருக்கும் மக்களின் மனதினை, அதே ஆத்யாத்மத்தின் பால் இழுக்கும் நோக்கமும் அதில் இருந்தது. ஹரிதாஸர்களின் சஞ்சாரம், மக்களின் பக்தியை அதிகப்படுத்தும் நோக்கத்திலேயே இருந்தது.

மிகவும் அதிகமாக சஞ்சாரம் செய்த ஹரிதாஸர்களின், ஸ்ரீகனகதாஸரும் ஒருவர். கர்னாடக, தமிழ்நாடு, ஆந்திரா ஆகிய தென் இந்தியாவின் பகுதிகள் மட்டுமல்லாமல், வட இந்தியாவில் மதுரா, த்வாரகை, ஜெய்ப்பூர் ஆகியவற்றையும் அவர் தரிசனம் செய்தார். சஞ்சாரம் என்பது சுலபம் இல்லாத அந்த காலகட்டத்தில் கூட, அவர், மிகவும் தூரமான இடங்களுக்குச் சென்று, தத்வபிரசார காரியங்களில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டிருந்தார் என்பது சிறிய வேலை இல்லை. ‘ஸ்ரீகனகதாஸரின் பிருந்தாவனம்’ இன்றும் ஜெய்ப்பூரில் பாதுகாப்பாக உள்ளது என்னும் விஷயம் அவருடைய அபூர்வமான தத்வ பிரசாரத்தின் தீக்ஷைக்கு மிகப்பெரிய சாட்சியாக இருக்கிறது. மிகச்சிறந்த உடல் நலம், பல மொழிகளை அறிந்த திறன் மற்றும் சமூகத்தைப் பற்றிய ஞானம் ஆகியவற்றை அவர் கொண்டிருக்கிறார் என்பதை தெளிவுபடுத்துகிறது.

காகினெலெ, பாட, கதரமண்டலகி, திருப்பதி, உடுப்பி, பேலூரு, ஸ்ரீரங்கம், ஸ்ரீரங்கபட்டணம், ஹம்பி, மேலுகோடெ, பங்காபுர, திருக்கோயிலூர், பிளிகிரி ரங்கன பெட்ட, ஆகியவை ஸ்ரீகனகதாஸர் தரிசித்த முக்கிய க்ஷேத்திரங்கள். மிகவும் முக்கியமாக காகினெலெ, ஹம்பி, உடுப்பி மற்றும் திருப்பதி அவருடைய மிகவும் முக்கிய காரிய க்ஷேத்திரங்களாக இருந்தன. உடுப்பியின் அருகில் பாஜக க்ஷேத்ர வடபாண்டேஷ்வர, ஸுப்ரமண்ய, தர்மஸ்தள, பாகமண்டல, கொல்லூரு, ஷிரஸி, பீளகி, ஸோதெ, இக்கேரி, கௌதி மற்றும் ஹானகல், முளுரு, மதனப்பள்ளி, முத்தித்தி, கந்தகூரு, கனககிரி, அஹோபல, கயா, காஞ்சி, நிஷதபுரி, த்வாரகை, மதுரா, ப்ருந்தாவன, கோகுல, ஜகன்னாதபுரி, ராமேஸ்வர, தர்ப்பசயன, அனந்தசயன, சுப்ரமண்ய, ராமகிரி, மத்தூரு, நஞ்சனகூடு ஆகியவையும் இவர் தரிசனம் செய்த பிற க்ஷேத்திரங்கள் ஆகும்.

மற்ற ஹரிதாஸர்களும்கூட சஞ்சாரம் செய்திருந்தாலும், ஸ்ரீகனகதாஸரின் ஸஞ்சாரம், ஸ்ரீபுரந்தரதாஸர் சஞ்சாரம் செய்ததைப் போலவே மிகவும் விஸ்தாரம் ஆனது. அதைவிட முக்கியமான விஷயம், அவர் சஞ்சரித்த க்ஷேத்திரங்களில், அவரைப் பற்றியதான

நினைவுச்சின்னங்கள் இன்னும் இருப்பது. இது ஸ்ரீகனகதாஸருக்கு அந்த ஊர் மக்கள் கொடுத்த சிறந்த கௌரவத்தை விளக்குவதாகக் கொள்ளலாம். (தொடரும்)

## இந்த மாத ஆராதனைகள்

**ஸ்ரீ மத்வாசார்யர் (1199–1278 / 1238–1317)**

ப்ரதமோ ஹனுமன் நாம த்விதீயோ பீம ஏவ ச |
பூர்ணபிரக்ஞ த்ருதீயஸ்து பகவத் கார்ய ஸாதக: ||

ஹனும பீம மத்வமுனிய நெனெது பதுகிரோ |
அனுமானங்களில்லதலெ மனோபீஷ்டங்கள கொடுவ ||

பாலிஸு பவமான பரதர குருவே
பாலிஸு பின்னபத ஜீவாத்மர பிரபுவே
காலகாலகெ ஷ்வாஸோச்வாஸ மாடிஸுவ
காலதி ஹரிஸ்மரணெ நீடெந்து பேடுவெ
இந்திராபதி ஹரி ஸர்வோத்தமனெந்து
அந்தவாத ஈ ஜகத்து ஸத்யவு எந்து
செந்தாகி தாரதம்ய பஞ்சபேத உண்டெந்தா
நந்ததி மங்களாங்க ஹரிவிட்டலகர்ப்பிஸித ||

**ஸ்ரீகுரு ஜகன்னாத விட்டலதாசர் (1841–1918)**

குரு பூர்வ ஜகன்னாத தாஸாஸ்யமித தேஜஸ: |
தஸ்ய பாதாப்ஜ ஸம்பூத ரஜாம்ஸி ஷிரஸாவஹே ||

ஒந்தின கனஸினலி அப்பா ஹாகு அண்ணனவர தர்ஷன
அந்தெ அனு நயதி அண்ணனவரிந்த பாட பிரவசன
தந்தெ குருகோபால விட்டலதாஸரிந்த அங்கித ப்ரதான
முந்தெ குரு ஜகன்னாத விட்டலனெந்து அபிதான
திந்த ஸ்துதிஸிஹரு தேவ மங்களாங்க ஹரி விட்டலன ||

**ஸ்ரீ ஆனந்த விட்டலதாசர் (1869-1918)**
(ஸ்ரீ குல்கர்ணி ராமராயர்)

தாஸவர்ய குலோத்பன்னம் வரதேந்த்ரார்ச்சகம் ஸதா |
ஆனந்தவிட்டலம் வந்தே ஸ்வாமிராயார்ய சாத்ரகம் ||

**ஸ்ரீ வரதேஷ விட்டலதாசர் (1885-1918)**
விஜயராய தௌஹித்ரம் ப்ராணேஷ தாஸ ப்ரௌபாத்ர: |
குருகன்னாத தாஸ சிஷ்யார்ய வரதேஷதாஸ குரும் பஜே ||

வரதேந்திரதீர்த்த ஸ்ரீபாதர அந்தரங்க பக்தனீஷ
குரு ஜகன்னாததாஸர பரமானுக்ரஹ பாத்ர
ஹரிதாஸ ப்ராணேஷ தாஸார்யர மொம்மக ஈத
இருளு ஹகலு ஹம்பலிஸி ஹரிதாஸரெனிஸிதாத
ஸந்தெகெல்லூருவாஸி விஜய குரு தௌஹித்ர
அந்திம ஸமயதலி குருவர்யர ஸ்தோத்ர
கந்துபித மங்களாங்க ஹரிவிட்டலன காத்ர
சிந்திஸுத நடெதரு முகிஸி தம்ம பாத்ர ||

**ஸ்ரீபிராணேஷ தாசர் (1736-1822)**
பிராணபதி பதத்வந்த்வம் பங்கஜாஸக்த மானஸம் |
க்ஷமாதிகுண ஸம்பன்னம் ஸ்ரீ பிராணேஷ குரும் பஜே ||

திருகப்பனவர குவர வாஸி லிங்கஸகூரு
குருவரதேந்த்ர தீர்த்தர அந்தரங்கபக்தரு |
குரு மானவீவாஸரிந்த அங்கித படெதரு
வர மங்களாங்க ஹரிவிட்டலன பாத பஜகரு ||

***

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே

மலர் 4 : இதழ் 12

**நிர்வாக ஆசிரியர்**
'ஜகன்னாத கேசவ'
சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ
பப்ளிகேஷன்ஸ்,
380, 2A Main, 16th Cross, JP Nagar
4th Phase, பெங்களூரு 560078
Ph.: 89044-58276.
haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**துணை ஆசிரியர்**
' தாச சாகித்ய சேவா ரத்ன'
திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்

**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**
திரு. முரளிதர தாசரு,
திருமதி. நிர்மலா நரசிம்மன்,
திரு. லட்சுமிபதிராஜா,
திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ்

ஆராதனை

**ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்**

**நவம்பர் 1 முதல் 30 வரை, 2023**

Nov 22 : கார்த்திக சுத்த தசமி - ஸ்ரீவிஜயதாஸர், சிப்பகிரி / சீகலபரவி

Nov 26 : கார்த்திக சுத்த சதுர்தசி - ஸ்ரீவரத விட்டல தாஸர், கௌதாள

# நன்றி நன்றி நன்றி!!

இதுவே இந்த ஹரிதாச விஜயம் மாத பத்திரிக்கையின் கடைசி இதழ் ஆகும். இந்த நான்கு ஆண்டு பயணத்தில், நம்முடன் இணைந்து பயணித்து, ஆதரவு அளித்த அனைவருக்கும் எங்களின் மனமார்ந்த நன்றிகள். இந்த பத்திரிக்கையை துவக்க, முதன்முதலில் தைரியம் அளித்தது கிரோம்பேட்டை திரு.ஸ்ரீதரன் ஐயா அவர்களே. அவருடன் நம் குழுவின் மற்ற நண்பர்களான திருமதி. நிர்மலா நரசிம்மன், திரு.முரளிதர தாஸர், திரு.லட்சுமிபதிராஜா மற்றும் திரு.ஸ்ரீனிவாஸன் ப்ராணேஷ் ஆகியோர் அளித்த உற்சாகத்தினால் இந்த பத்திரிக்கை வரத்துவங்கியது.

ஹரிவாயுகுருகளின் அருளால், ஸ்ரீஸ்ரீஸத்யாத்ம தீர்த்தரின் ஆசிர்வாதம் பெற்று, துவங்கிய இந்த பத்திரிக்கை துவங்கிய சில மாதங்களிலேயே கொரோனா வந்தது. அதனால் இரு மாதங்கள் பத்திரிக்கை வருவதும் தடைபட்டது. ஆனாலும், அதன் பிறகு எவ்வித தடைகளும் இன்றி, ஒவ்வொரு மாதமும் இந்த இதழ் இதுவரை வருவதற்கு ஹரிவாயு குருகளின் அருளே காரணம்.

வாட்சப், ஃபேஸ்புக், ஈமெயில் ஆகியவற்றில் விளம்பரங்கள்; மற்றும் திருக்கோயிலூர், ஸ்ரீரங்கம், கும்பகோணம், சென்னை போன்ற இடங்களில், பல்வேறு சந்தர்ப்பங்களில், சுமார் 10,000 எண்ணிக்கையில் நோட்டீஸ்கள் அச்சடித்து, இந்த பத்திரிக்கையைப் பற்றி அனைவருக்கும் தெரியப்படுத்தியிருந்தாலும், ஒரு சமயத்தில் 400 சந்தாதாரர்கள் வரை வந்ததே நமது உச்சபட்ச எண்ணிக்கை ஆகும். நமது பத்திரிக்கையில் வந்ததான, அங்கங்கு தென்பட்டதான எழுத்துப் பிழைகள், ஷ1, ஷ2 ஆகியற்றை சரியாக குறிப்பிடாதது போன்றதான காரணங்களால் தாங்கள் சந்தா புதுப்பிப்பதில்லை என்றும் சிலர் கூறினர். வேறு பலரின் காரணம் தெரியவில்லை. இவ்வாறாக அந்த எண்ணிக்கை குறைந்துகொண்டே வந்தது.

பத்திரிக்கையின் ஓராண்டு சந்தா ரூ.200 இருந்த காலத்தில், பலர் ரூ.150/160 என்றே கொடுத்து இவ்வளவுதான் முடியும் என்றிருந்தனர்.

அதுவே ரூ.300 ஆனபோது, வேறு சிலர் ரூ.200/250 மட்டுமே கொடுத்து சந்தா கட்டினர். ஏற்கனவே இந்த தொகை மிகவும் குறைவு என்று இருந்த சமயத்தில், இவ்வாறு நமக்கு கிடைத்த தொகையும் குறைவாகவே இருந்தது. (அதே சமயம், ரூ.200 / ரூ.300க்கு, ரூ.250 / ரூ.350 என அதிகமாக கொடுத்தவர்களும் சிலர் இருந்தனர்). எப்படியிருந்தாலும், மக்களுக்கு ஹரிதாஸ ஸாகித்யம் சென்று சேர வேண்டும் என்ற நோக்கத்திற்காகவே இந்த பத்திரிக்கை தொடர்ந்து நடந்தும் வந்தது.

புத்தகங்கள் அச்சிட்டு வெளியாவதைவிட, மாதாமாதம் ஹரிதாச விஜயம் பத்திரிக்கையை அச்சிட்டு வெளியிட்டதும், ஒரு அபாரமான அனுபவமாகவே இருந்தது. இந்த சமயத்தில் நடந்த இனிமையான சம்பவங்கள், நண்பர்கள் பகிர்ந்து கொண்ட விஷயங்கள் என பல விஷயங்களை ஒரு தனிப் புத்தகமாகவே போடலாம்.

ஒவ்வொரு மாதமும் பலரும் ஆவலுடன் எதிர்பார்த்து, மிகவும் உற்சாகத்துடன் பங்கேற்று பதில் அளித்த பகுதி ‘ஹரிகதாம்ருதஸார குறுக்கெழுத்துப் புதிர்கள்’ . இதனை வடிவமைத்து கொடுத்த திருமதி. பத்மா பாண்டுரங்கன் அவர்களுக்கு எமது மனமார்ந்த நன்றிகள். 32 சந்திகளுக்கும் சேர்த்து சுமார் 160+ பதில்கள் நமக்கு கிடைத்தன. அவர்கள் அனைவருக்கும் புத்தகப் பரிசுகளும் வழங்கப்பட்டன.

நமது பரமகுருவான ஸ்ரீகுருகோவிந்த விட்டலதாஸர் அவர்கள் (சுமார் 50 ஆண்டுகளுக்கு முன்) நடத்திய மாதப் பத்திரிக்கையின் பெயர் ஹரிதாஸ தீபிகா. அவரது குருவான ஸ்ரீதந்தெமுத்து மோகன விட்டலதாஸர் அவர்கள் (சுமார் 100 ஆண்டுகளுக்கு முன்) நடத்திய மாதப் பத்திரிக்கையின் பெயர் பாரமார்த்த சந்த்ரோதய. இந்த இரண்டுமே குறைவான சந்தாதாரர்கள், அச்சடிக்க அதிகமான விலை என்னும் காரணங்களாலேயே சில ஆண்டுகளில் நின்று போயின என்று நம் குருகளின் மூலமாக அறிகிறோம். அதே காரணங்களாலேயே ஹரிதாச விஜயமும் நின்று போகிறது என்பது ஸ்ரீஹரியின் இச்சையே ஆகும்.

இந்த பத்திரிக்கையின் இதழ்களை 'bind' செய்து, பாதுகாப்பாக வைத்திருப்பவர்களும் சிலர் இருக்கின்றனர் என்பதை அறியும்போது மகிழ்ச்சியாக இருந்தது. இவ்வாறு ஆர்வத்துடன் படித்து, பாதுகாத்து, உற்சாகம் அளித்த அனைவருக்கும் என் மனமார்ந்த நன்றிகள். அனைவரும் ஹரி வாயு குருகளின் ஹரிதாஸர்களின் அருள் நிரந்தரமாக இருக்கட்டும் என்று பிரார்த்தனை செய்கிறேன்.

நமது வாட்சப் க்ரூப், யூட்யூப் சேனல், ஃபேஸ்புக் பக்கம், ட்விட்டர் பக்கம் ஆகியவை தொடர்ந்து இயங்கும். ஆகவே, அடுத்தடுத்து வரவிருக்கும் ஆராதனைகள், புத்தகங்களைப் பற்றிய விவரங்களை அங்கு பார்க்கலாம்.

த்வத் ஆக்ஞயா, த்வத் ப்ரஸாதாத், த்வத் ப்ரேரணயா, த்வத் ப்ரீத்யர்த்தம் என்று சொல்லியிருப்பதைப் போல, ஸ்ரீஹரி வாயு குருகளின் அருளால் நடந்து வந்த இந்த சேவையை, அவனுக்கே சமர்ப்பணம் செய்து முடித்து வைக்கிறேன். குர்வந்தர்கத பாரதிரமண முக்யப்ராணாந்தர்கத ஸ்ரீஜகன்னாத கேசவ ப்ரீயதாம். ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**
**பெங்களூரு**

* நமது Jagannatha Kesava Youtube Channelல் தற்போது வந்து கொண்டிருக்கும் தொடர் - ஸ்ரீகனகதாஸர் இயற்றிய நள சரித்ரெ.
* நமது blog - dasa-sahitya.blogspot.in ல் தற்போது வந்துகொண்டிருக்கும் தொடர் - ஸ்ரீப்ரஸன்ன ஸ்ரீனிவாஸ தாஸர் இயற்றிய - விஷ்ணு சஹஸ்ரநாம பாஷ்ய - கன்னட பத்யங்கள். இதன் அர்த்த விளக்கங்கள் - தமிழில்.
* இந்த இரண்டையும் தொடர்ந்து படித்து, கேட்டுக் கொண்டு வரவும். நன்றி. ஹரே ஸ்ரீனிவாஸா.

ஹரிதாச விஜயம் இதழைப் பற்றிய தங்களின் மேலான கருத்துகளை மின்னஞ்சல், வாட்சப் அல்லது தொலைபேசியில் எங்களை அழைத்துச் சொல்லலாம்.

தொடர்

## ஸ்ரீலட்சுமி ஸ்தவராஜ

### ஸ்ரீகுரு ஜகன்னாத தாஸர் இயற்றியது

**ஹரிய பத$^3$ஸஞ்சாதவாதா$^3$**
**த$^4$ரணீமண்ட$^3$ல ஶிரியெ நினகே$^3$**
**அரஸனாகி$^3$ஹ ஹரியகூடி$^3$ நிதி$^4$ய நீட$^3$ம்ம |**
**ஹரிய கருணதி$^3$ பா$^4$க்$^3$ய நீடு$^3$வ**
**பரம ஶகுதியு நினகெ$^3$ இருவுது$^3$**
**கருணதி$^3$ந்த$^3$லி நோடி$^3$ பா$^4$க்$^3$யவனித்து பொரெயம்ம ||8**

ஹரிய பதஸஞ்சாதவாதா - ஸ்ரீஹரியின் பாதங்களில் வணங்குபவளான; தரணீ மண்டல ஷிரியெ - பூதேவியே, ஸ்ரீலட்சுமிதேவியே; அரஸனாகிஹ ஹரியகூடி - உன் தலைவனான ஸ்ரீஹரியுடன் சேர்ந்து; நிதிய நீடம்ம - செல்வத்தை அருள்வாயாக; ஹரிய கருணதி பாக்ய நீடுவ - ஸ்ரீஹரியின் அருளாலேயே நீ உன் பக்தர்களுக்கு அருளும்; பரம ஷகுதியு நினகெ இருவுது - சக்தி உனக்கு இருக்கிறது; கருணதிந்தலி நோடி - என்னை கருணையுடன் பார்த்து; பாக்யவனித்து பொரெயம்ம - என் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றி, அருள்வாயாக.

ஸ்ரீஹரியின் பாதங்களில் வணங்குபவளான பூதேவியே, ஸ்ரீலட்சுமிதேவியே, உன் தலைவனான ஸ்ரீஹரியுடன் சேர்ந்து, செல்வத்தை அருள்வாயாக. ஸ்ரீஹரியின் அருளாலேயே, உன் பக்தர்களுக்கு அருளும் சக்தி உனக்கு இருக்கிறது. என்னை கருணையுடன் பார்த்து, என் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றி, அருள்வாயாக.

**ஹரிகெ$^3$ அரஸீ எனிப நின்னனு**
**ஸரஸிஜாஸன ருத்ரஶக்ரரு**
**பரம ப$^4$குதி ஞான பூர்வக ப$^4$ஜிஸி நிஜக$^3$திய**
**த்வரதி$^3$ ஸேரித$^3$ ஶ்ருதியவார்த்தெய**
**கரணதி$^3$ந்த$^3$ரிதீக$^3$ நின்னய**
**சரணகமலவ மனதி$^3$ஸந்தத ப$^4$ஜிபெ கல்யாணி ||9**

ஹரிகெ அரஸீ எனிப நின்னனு - ஸ்ரீஹரியின் நியத பத்னி எனப்படும் உன்னை; ஸரஸிஜாஸன - தாமரையில் அமர்ந்திருப்பவரான

பிரம்மதேவர்; ருத்ரஷக்ரரு - ருத்ர, இந்திரர்கள், ஆகியோர்; பரம பகுதி ஞான பூர்வக பஜிஸி - யதார்த்த ஞான, பக்தி உடனாக பூஜித்து; நிஜகதிய த்வரதி ஸேரித - அவர்கள் மோட்சத்தை அடைந்தார்கள் என்னும்; ஷ்ருதிவார்த்தெய - ஸ்ருதி வாக்கியத்தை; கரணதிந்தரீதிக - என்னுடைய ஞான இந்திரியங்களால் அறிந்து; நின்னய சரணகமலவ - உன்னுடைய சரண கமலங்களை; மனதி ஸந்தத பஜிபெ கல்யாணி - ஹே கல்யாணியே, என் மனதில் எப்போதும் வணங்கிக் கொண்டிருப்பேன்.

ஸ்ரீஹரியின் நியத பத்னி எனப்படும் உன்னை, தாமரையில் அமர்ந்திருப்பவரான பிரம்மதேவர், ருத்ர, இந்திரர்கள், ஆகியோர், யதார்த்த ஞான, பக்தி உடனாக பூஜித்து, அவர்கள் மோட்சத்தை அடைந்தார்கள் என்னும் ஸ்ருதி வாக்கியத்தை, என்னுடைய ஞான இந்திரியங்களால் அறிந்து, ஹே கல்யாணியே, உன்னுடைய சரண கமலங்களை என் மனதில் எப்போதும் வணங்கிக் கொண்டிருப்பேன்.

**மாத4வ மனப்ரேம மானினி**
**ஸாத3ரதி3 ஸௌபா4க்3ய த4னக3ள**
**யாத3வேஶ ஸுதா4மத்3விஜவரகி3த்த தெரத3ந்தெ**
**மோத3 மனத3லி ஸாந்த்3ர ஸுக2மய**
**போ3த4ப4குதி விரகுதி பாலிஸி**
**வேத3க3ம்யன ப4ஜனெ மாடி3ஸு வேத3கபி4மானி ||10**

மாதவன மனப்ரேம மானினி - பகவந்தனின் மனதுக்கு உகந்தவளான ஸ்ரீலட்சுமிதேவியே; ஸௌபாக்ய தனகள - உன்னுடைய அருட் செல்வங்களை; ஸாதரதி - மிகவும் பக்தி, மரியாதைகளுடன்; யாதவேஷ - யாதவர்களின் தலைவனான ஸ்ரீகிருஷ்ணன்; ஸுதாம த்விஜவரகித்த தெரதந்தெ - தன் நண்பனான ஸுதாமனுக்கு அருளியதைப் போல; ஸாந்த்ர ஸுகமய - அபாரமான, ஸுகமயமான; போதபகுதி விரகுதி - ஞான, பக்தி, விரக்தி; பாலிஸி - ஆகியவற்றை அருளி; வேதகம்யன பஜனெ மாடிஸு - வேதங்களால் போற்றப்படுபவனான பகவந்தனின் பஜனையை செய்விப்பாயாக; வேதகபிமானி - வேதங்களுக்கு அபிமானினியான ஸ்ரீலட்சுமிதேவியே.

பகவந்தனின் மனதுக்கு உகந்தவளான ஸ்ரீலட்சுமிதேவியே, உன்னுடைய அருட் செல்வங்களை, மிகவும் பக்தி, மரியாதைகளுடன், யாதவர்களின் தலைவனான ஸ்ரீகிருஷ்ணன், தன் நண்பனான ஸுதாமனுக்கு அருளியதைப் போல, அபாரமான, ஸுகமயமான, ஞான, பக்தி, விரக்தி ஆகியவற்றை அருளி, வேதங்களால் போற்றப்படுபவனான பகவந்தனின்

பஜனையை செய்விப்பாயாக. ஹே வேதங்களுக்கு அபிமானினியான ஸ்ரீலட்சுமிதேவியே.

**உதி3தபா4ஸ்கர கோடிபா4ஸளெ**
**பி3து3ரமண்ட3ல ஜைப வத3னெயெ**
**மத3னமூருதி கோடினிப4 லாவண்யபூரிதளே**
**பது3ம நயனளே நாஸ சம்பக**
**பி4து3ரப2லக1 ஸுபா2ல குந்தள**
**மத3னகார்முக புப்3பு3யுக3ளவு கருணயுக3 ஶோபெ4 ||11**

உதிதபாஸ்கர கோடிபாஸளெ - உதய சூரியனைப் போல கோடி மடங்கு ஒளி பொருந்தியவளே; பிதுர மண்டல ஜைப வதனெயெ - மின்னல் வீசும் வான்வெளியை ஜெயிப்பதான முகத்தைக் கொண்டவளே; மதனமூருதி - அழகான மூர்த்தியைக் கொண்டவளே; கோடினிப லாவண்யபூரிதளே - கோடி மின்னல்களைப் போல ஒளிர்பவளே; பதும நயனளே - தாமரைக் கண்களைக் கொண்டவளே; நாஸசம்பக - சம்பக மலர்களைப் போன்ற மூக்கினைக் கொண்டவளே; பிதுர பலக - மென்மையான (உள்ளங்கை) கைகளைக் கொண்டவளே: ஸுபால குந்தள - அழகான நெற்றியில் வந்து விழுவதான முன் சடைகள்; மதனகார்முக - அழகான சிரிப்பினைக் கொண்டவளே; புப்புயுகளவு - உன்னுடைய இரு புருவங்கள்; கருணயுக ஷோபெ - கருணையைக் காட்டுகிறதே, மங்களங்களை அருள்பவளே.

உதய சூரியனைப் போல கோடி மடங்கு ஒளி பொருந்தியவளே, மின்னல் வீசும் வான்வெளியை ஜெயிப்பதான முகத்தைக் கொண்டவளே, அழகான மூர்த்தியைக் கொண்டவளே, கோடி மின்னல்களைப் போல ஒளிர்பவளே, தாமரைக் கண்களைக் கொண்டவளே, சம்பக மலர்களைப் போன்ற மூக்கினைக் கொண்டவளே, மென்மையான (உள்ளங்கை) கைகளைக் கொண்டவளே, அழகான நெற்றியில் வந்து விழுவதான முன் சடைகள் மற்றும் அழகான சிரிப்பினைக் கொண்டவளே, உன்னுடைய இரு புருவங்கள் கருணையைக் காட்டுகிறதே, மங்களங்களை அருள்பவளே.

**கத3பு கன்னடி3 குமுத3 குட்மல**
**ரத3னபங்க்தியு ரக்த ஓஷ்டவு**
**சதுரெயானன மந்த3ஹாஸவு சந்த்ரசந்த்3ரிகெயு**
**உத3ய தாம்ரலலாட ஶோபி4தெ**
**ஒத3கி3 ராஜிப ப்4ருங்க3குந்தளெ**

**உத$^3$க பி$^3$ந்து$^3$க$^3$ளெம்போ$^3$ பைதலெ முத்து ராஜிதளெ ||12**

கதபு கன்னடி - உன்னுடைய கன்னங்கள் கண்ணாடியைப் போல ஒளிர்கின்றன; குமுத குட்மல - தாமரை மொட்டுக்களைப் போல உள்ளதான; ரதனபங்க்தியு - ரத்னங்களின் வரிசைகளைப் போன்றதான (பற்கள்); ரக்த ஓஷ்டவு - ரத்தச் சிவப்பான உதடுகள்; சதுரெயானன மந்தஹாஸவு - அனைத்தும் அறிந்தவளின் மந்தகாசச் சிரிப்பானது; சந்த்ர சந்த்ரிகெயு - நிலவொளியைப் போல பளீரென்று இருக்கிறது; உதய தாம்ர லலாட - உதய சூரியனைப் போன்றதான நெற்றி; ஷோபிதெ - அழகானவளே; ஒதகி ராஜிப ப்ருங்க குந்தளெ - நன்கு வளர்ந்த குவளை மலர் போல இருப்பவளே; உதக பிந்துகளெம்போ - தண்ணீர் துளிகளைப் போன்றதான; பைதலே முத்து ராஜிதளெ - வரிசையான பற்களைக் கொண்டு வீற்றிருப்பவளே.

உன்னுடைய கன்னங்கள் கண்ணாடியைப் போல ஒளிர்கின்றன. தாமரை மொட்டுக்களைப் போல உள்ளதான, ரத்னங்களின் வரிசைகளைப் போன்றதான (பற்கள்), ரத்தச் சிவப்பான உதடுகள், அனைத்தும் அறிந்தவளின் மந்தகாசச் சிரிப்பானது, நிலவொளியைப் போல பளீரென்று இருக்கிறது. உதய சூரியனைப் போன்றதான நெற்றியைக் கொண்டவளே, அழகானவளே, நன்கு வளர்ந்த குவளை மலர் போல இருப்பவளே, தண்ணீர் துளிகளைப் போன்றதான, வரிசையான பற்களைக் கொண்டு வீற்றிருப்பவளே.

**முத்$^3$து$^3$ சுப$^3$கவு கம்பு$^3$ கந்த$^4$ர**
**பொத்$^3$து$^3$கொண்டி$^3$ஹ பா$^3$ஹுத்$^3$வந்த்$^3$வவு**
**எத்$^3$து$^3$ தோருத கரிய கரதெர தாவெ ஶோபி$^4$பவு**
**முத்$^3$ர ரத்னாங்கு$^3$ளிய ஸங்க$^4$தி$^3$**
**போதி$^3$த$^3$ ஹஸ்தத்வயவு ஶோபி$^4$ப**
**பத்$^3$மகட்மக$^3$ளெனிஸி ஸேவகக$^3$ப$^4$ய நீடு$^3$வவு ||13**

முத்து சுபகவு - அழகான கன்னங்கள்; கம்பு கந்தர - சங்கு கழுத்து; பொத்துகொண்டிஹ - இதனை தாங்கியிருக்கும்; பாஹுத்வந்த்வவு - இரு தோள்கள்; எத்து தோருத - நன்றாக எடுத்துக் காட்டும்; கரிய கரதெர தாவே ஷோபிபவோ - வலிமையாக கரங்கள் மிகவும் அழகாக இருக்கின்றன; முத்ர ரத்னாங்குளிய - அழகான ரத்தினங்களால் ஆன மோதிரங்களை அணிந்ததான; போதித ஹஸ்தத்வயவு - இரு கரங்கள்; ஷோபிப - ஒளிர்கின்றன; பத்மகட்மகளெனிஸி - தாமரைத் தண்டுகளைப் போல

இருந்து; ஸேவககபய நீடுவவு - உன் பக்தர்களுக்கு அபயங்களை அளிக்கிறது.

அழகான கன்னங்கள், சங்கு கழுத்து, இதனை தாங்கியிருக்கும், இரு தோள்களை நன்றாக எடுத்துக் காட்டும் வலிமையாக கரங்கள் மிகவும் அழகாக இருக்கின்றன. அழகான ரத்தினங்களால் ஆன மோதிரங்களை அணிந்ததான இரு கரங்கள் ஒளிர்கின்றன. தாமரைத் தண்டுகளைப் போல இருந்து, உன் பக்தர்களுக்கு அபயங்களை அளிக்கிறது.

**ப4க்தஜனததி ப்ரேமவாரிதெ4**
**ப4க்தஜன ஹ்ருத் பத்3மவாஸினி**
**ப4க்தஜனதா3ரித்3ர்ய ஹாரியெ நமிபெ நனவரத**
**லகுமி க்ரமுக ஸுகண்ட2த3லி ஸ்ரீ**
**ரேக2 ஸோபி4தெ நித்ய நித்யதி3**
**முகுத ஹாராவளி ஸுஸோபி4தெ பரமமங்க3ளளெ ||14**

பக்தஜனததி ப்ரேமவாரிதெ - பக்தர்களுக்கு அன்பினை (அருளை) வாரி வழங்கும் கடலே; பக்தஜன ஹ்ருத்பத்மவாஸினி - பக்தர்களின் இதய கமலத்தில் வசிப்பவளே; பக்தஜன தாரித்ர்ய ஹாரியெ - பக்தர்களின் ஏழ்மையை போக்குபவளே; நமிபெனனவரத - உன்னை எப்போதும் வணங்குகிறேன்; லகுமி க்ரமுக ஸுகண்டதலி - பாக்கு மரத்தைப் போல வெண்மையாக இருக்கும் கழுத்தில்; ஸ்ரீரேக ஷோபிதெ - ரேகைகள் அழகாக ஒளிர்கின்றன; நித்ய நித்யதி - எப்போதும்; முகுத ஹாராவளி - மலர்ந்த மலர் மாலைகளை அணிந்தவளே; ஸுஷோபிதெ பரம மங்களே - மங்களங்களை அருள்பவளே.

பக்தர்களுக்கு அன்பினை (அருளை) வாரி வழங்கும் கடலே, பக்தர்களின் இதய கமலத்தில் வசிப்பவளே. பக்தர்களின் ஏழ்மையை போக்குபவளே. உன்னை எப்போதும் வணங்குகிறேன். பாக்கு மரத்தைப் போல வெண்மையாக இருக்கும் கழுத்தில், ரேகைகள் அழகாக ஒளிர்கின்றன. எப்போதும், மலர்ந்த மலர் மாலைகளை அணிந்தவளே, மங்களங்களை அருள்பவளே.

**நின்னதா3ஸன மாடெ3 லகுமியெ**
**க4ன்னதர ஸௌபா4க்3ய ஸம்பத3**
**சென்னவாகி3 நீடி3 என்னய ஸத3னதொ3ளகி3த்து3**

**நின்ன பதியொட3கூ3டி3 தி3னதி3ன**
**என்ன கையலி பூஜெ கொ3ள்ளுத**
**நின்ன ரூபவ தோரி பாலிஸு பால ஸாக3ரஜெ ||15**

நின்னதாஸன மாடெ லகுமியெ - ஸ்ரீலட்சுமிதேவியே, உன்னுடைய தாஸனை (பின்வருமாறு) ஆக்குவாயாக; கன்னதர ஸௌபாக்ய ஸம்பத - அபாரமான செல்வங்களைக் கொண்டவனாக; சென்னவாகி நீடி - அந்த செல்வங்களை அளித்து; என்னய ஸதனதொளகித்து - என்னுடைய வீட்டில் (மனதில்) எப்போதும் இருந்து; நின்ன பதியொடகூடி - உன்னுடைய கணவனான ஸ்ரீஹரியுடன் எப்போதும் இருந்து; தினதின - எப்போதும்; என்ன கையலி பூஜெ கொள்ளுத - என்னிடம் பூஜையை பெற்றுக்கொண்டு; நின்ன ரூபவ தோரி - உன்னுடைய தரிசனத்தை அளித்து; பாலிஸு பாலஸாகரஜெ - பாற்கடலில் தோன்றியவளே, என்னை அருள்வாயாக.

ஸ்ரீலட்சுமிதேவியே, உன்னுடைய தாஸனை (பின்வருமாறு) ஆக்குவாயாக. அபாரமான செல்வங்களைக் கொண்டவனாக, அந்த செல்வங்களை அளித்து, என்னுடைய வீட்டில் (மனதில்) எப்போதும் இருந்து, உன்னுடைய கணவனான ஸ்ரீஹரியுடன் எப்போதும் இருந்து, எப்போதும் என்னிடம் பூஜையை பெற்றுக்கொண்டு, உன்னுடைய தரிசனத்தை அளித்து, பாற்கடலில் தோன்றியவளே, என்னை அருள்வாயாக.

**மாதெ நின்னய ஜடர கமல ஸு**
**ஜாதனாகி3ஹ ஸுதன தெரத3லி**
**ப்ரீதிபூர்வக பா4க்3ய நிதி4க3ளனித்து நித்யத3லி**
**நீத ப4குதி ஞான பூர்வக**
**தா3த கு3ரு ஜக3ன்னாத2 விட்டலன**
**ப்ரீதிகொ3ளிஸுவ பா4க்3ய பாலிஸி பொரெயெ நீயென்ன ||16**

மாதெ - தாயே; நின்னய ஜடர கமல ஸுஜாதனாகிஹ ஸுதன தெரதலி - உன்னுடைய தாமரை வயிற்றிலிருந்து பிறந்தவனான மகனைப் போல; ப்ரீதிபூர்வக பாக்ய நிதிகளனித்து - (என்னை நினைத்து) அன்புடன், பாக்கியங்களை அருளி; நித்யதலி - எப்போதும்; நீத பகுதி ஞான பூர்வக - அபாரமான பக்தி, ஞானங்களுடன்; தாத குரு ஜகன்னாத விட்டலன - தந்தையான குரு ஜகன்னாத விட்டலனின்; ப்ரீதிகொளிஸுவ பாக்ய பாலிஸி - அன்பினைப் பெறும் வழியினை அருளி; பொரெயெ நீயென்ன - என்னை அருள்வாயாக.

தாயே, உன்னுடைய தாமரை வயிற்றிலிருந்து பிறந்தவனான மகனைப் போல (என்னை நினைத்து), அன்புடன், பாக்கியங்களை அருளி, எப்போதும், அபாரமான பக்தி, ஞானங்களுடன்; தந்தையான குரு ஜகன்னாத விட்டலனின், அன்பினைப் பெறும் வழியினை அருளி, என்னை அருள்வாயாக.

***

தொடர்

## ஹரிகதாம்ருதசார கட்டுரைகள்

### ஞான பக்தி வைராக்கியம்

**திருமதி. சுதா நரசிங்கராவ் தேஷ்பாண்டே**

உபாசனா வழியை குருகளிடமிருந்து பெறவேண்டும். ஆனால் வைராக்கியம் பெறமுடியாது. அதற்கு ஸ்ரீஹரியின் அருள் அவசியம். ஜீவிகளில் யோக்யதை மற்றும் விஷயங்களில் விரக்தி இருக்கவேண்டும். இது வேண்டுமென்றால், வாழ்க்கை என்பது ஒரு மாயை / துறக்கவேண்டியது என்னும் அறிவு மனதில் பிறக்கவேண்டும். நான், எனது என்னும் எண்ணங்கள் ஒழியவேண்டும்.

மனதில் தோன்றும் விஷயங்களை ஜெயிக்க வேண்டுமெனில் ருத்ர தேவரின் கருணை அவசியம். அனைத்து இந்திரியங்களும், புற விஷயங்களைப் பார்ப்பதால், அவற்றை அனுபவிக்கும் ஆசை அதிகரிக்கிறது. இந்திரியங்கள் மனதின் கீழ் வருவதால், மனோபிமானியான ருத்ரதேவரை வணங்கி, நம் மனதை ஸ்ரீஹரியின் பாதங்களில் இருக்குமாறு செய் என்று வேண்டிக் கொள்ளவேண்டும்.

ருத்ரதேவர் பரமவைஷ்ணவர் மற்றும் விரக்திசாலி ஆவார். வைராக்கியத்தைப் பெற்ற பற்பல பாகவதோத்தமர்களின் சரித்திரம் பாகவதத்தில் சொல்லப் பட்டிருக்கிறது. பிரம்மதேவரின் ஆணைப்படி, சம்சார வாழ்க்கையை ஏற்று, மொத்த பூமண்டலத்தையே அரசாட்சி புரிந்த ப்ரியவ்ரத ராஜன், தன்னுடைய அனைத்தையும் துறந்து, ஹரிப்ரியன் ஆனான். விஷய விரக்தி வருவதற்கு தாசர், கணபதியை இவ்வாறு வேண்டுகிறார்.

நமோ நமோ குருவர்ய விபுதோ3
த்தம விவர்ஜித1னித்ர கல்ப
த்ருமனெனிப ப4ஜக1ரிகெ3 பஹுகு3ணப4ரித1 சுபசரித1 |

உமேயனந்தன பரிஹரிசஹ
ம்மமதெ புத்த வியாதி3ந்தி3ரியக3ளா
க்1ரமிஸி த1ணிசுத1லிஹவு ப4வதொ3ளகா1வகா1லதலி ||
(ஸ்ரீவிக்னேஸ்வர ஸ்தோத்ர சந்தி ஸ்லோகம் 18)

ஞான பக்தி விரக்தியானது அனைவரைவிட ப்ரம்ம வாயுகளுக்கு அதிகம் - ஆனால் லட்சுமிதேவியைவிட குறைவு. ஸ்ரீஹரியின் அருளால், இவர்கள் இருவரும் ரமாதேவியிடமிருந்து ஸ்ரீஹரியின் நற்குணங்களைப் பற்றி அறிந்து, அவனை பூஜித்து விரக்தி அடைகின்றனர். இதனை தாசர் இவ்வாறு நிரூபிக்கிறார்.

க1மலசம்ப4வ சர்வரொளகு3
த்தம னெனிசுவனு எல்லகா1லதி3
விமல பக்தி ஞான வைராக்3யதி கு3ணதி3ந்த3 |
சமபி அதிகவிவர்ஜிதன கு3ண
ரமெய முக2தி3ந்த3ரிது1 நித்யதி
த்யுமணி கோடி1க3ளந்தெ1 கா1ம்பனு பிம்பரூபவனு ||
(அபரோக்ஷ தாரதம்ய சந்தி ஸ்லோகம் 36)

ஞான பக்த்யாத்ய கி2லகு3ண சது
ரானனனொளிப்ப1ந்தெ1 முக்2ய
ப்ராணனலி சிந்தி1புது3 யத்கி1ஞ்சித்கொ1ரதெ1யாகி3 |
ந்யூன ருஜுக3ண ஜீவரல்லி க்1ர
மேணவ்ருத்தி1 ஞான ப4குதி1 ச
மான பா4ரதி வாணிக3ளலி ப1த3ப்ரயுக்த1தி3க1 ||
(அபரோக்ஷ தாரதம்ய சந்தி ஸ்லோகம் 37)

ஜகத்குரு என்று அழைக்கப்படும் வாயுதேவரின் விசேஷ அருளினால் ஞான பக்தி வைராக்கியங்களைப் பெற்ற பிற தேவதைகள், தங்கள் தாரதம்யத்திற்கேற்ப ஸ்ரீஹரியை வணங்கி, சாதனை செய்துகொள்வர். பிரம்மனுடன் விரஜா நதியைத் தாண்டி முக்தி உலகத்திற்குப் பயணம் மேற்கொள்வர். தேவதைகள், சிரபித்ருகள், சக்ரவர்த்திகள், ரிஷிகள் மற்றும் மானுஷோத்தமர்கள் என இந்த ஐந்து வித ஜீவர்கள் முக்தியோக்யர்கள் என்று அழைக்கப்பட்டு, ஸ்ரீஹரியின் பிம்ப தரிஸனத்தைப் பெறுவார்கள் என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

இத்தகைய சிறப்பினை பெறவேண்டுமெனில் ஹரிபாதங்களில் பக்தி, வேறு விஷயங்களில் விரக்தி, உலக விஷயங்களிலிருந்து விடுதலை என வரவேண்டும். இவை வந்தாலே ஜீவர்கள் மோட்ச மார்க்கத்திற்குப் போகிறார்கள். உலக விஷயங்களில் ஈர்ப்பானது, நான் எனது என்பதாலேயே வருகிறது . செய்யும் செயல்கள் அனைத்தும் நானே செய்கிறேன் என்றும், என்னாலே அனைத்தும் நடக்கின்றன என்று எண்ணி, சம்சாரத்தில் மூழ்கிவிடுகிறான் ஜீவன். இத்தகைய சிந்தனையால், செய்யும் செயல்களிலிருந்து பலன் கிடைப்பதில்லை. அதனால் மறுபடி இன்னொரு தேகம் கிடைத்து மறுபடி சம்சாரத்திலேயே வந்து விடுகின்றனர் ஜீவர்கள். செய்யும் செயல்களிலிருந்து விடுதலை பெற்றாலே முக்தி. இதற்கு என்ன வழி என்றால்:

நிர்மலனு நீனாகி3 க1ர்ம வி
க1ர்மக3ளனு நிரந்த1ரத3லி சு
த4ர்ம நாமக3க3ர்பிசுத1 நிஷ்க3லுஷ நீனாகு3 |
பர்மக1ர்பன ஜனக1 த3யத3லி
து3ர்மதி1க3ளனு கொ1ட3தெ3 த1ன்னய
ஹர்ம்ய தொ3ளகி3ட்டெ1ல்ல கா1லதி3 கா1வ க்1ருபெயிந்த3 ||
(கர்மவிமோசன சந்தி ஸ்லோகம் 13)

நான் எனது என்ற எண்ணங்கள் போகவேண்டுமென்றால், ஸ்ரீஹரியின் அற்புதமான இந்த செயலை அனைவரும் அறியவேண்டும் என்பதையே தாசர் இவ்வாறு கூறிகிறார்.

த்1ரிவித3 கு3ணமய தே3ஹ ஜீவகெ3
கவசதந்ததி தொ1டி3ஸி க1ர்ம
ப்ரவஹதொ3ளு சஞ்சாரமாடிசுதி1ப்ப ஜீவரன |
க1விஸி மாயாரமண மோஹவ
ப4வகெ1 கா1ரணனாகு3வனு சம்
ஸ்ரவண மனனவ மாள்பரிகெ3 மோசக1னெனிசுதி1ப்ப ||
(பிம்பாபரோக்ஷ சந்தி ஸ்லோகம் #8)

நமது பிறவிக்குக் காரணனான ஸ்ரீஹரி, தத்வாபிமானி தேவதைகளுடன் தானும் நம் உடலில் நிலைத்து, செயல்களை செய்விக்கிறான். தீர்மானிப்பவனும் அவனே. இந்த உடல் ஜடம்.

சுதந்திரமாக எந்தவொரு செயலும் இதனால் செய்யமுடியாது என்னும் அறிவே விரக்திக்குக் காரணம். பக்திக்கு காரணம். அப்போது இந்த உடலின் மேல் இருக்கும் கர்வம் மாயமாகிறது.

மாத1ரிஸ்வனு தே3ஹரத1தொ3ளு
சூத1னாகி3ஹ சர்வகா1லதி3
ஸ்ரீத1ருணிவல்லப4 ரதி1க1னெந்த3ரிது3 நித்1யத3லி |
ப்ரீதி1யிந்த3லி போஷிசுத1 வா
தா1த1பா1தி1க3ளிந்த3 அவிரத1
ஈ த1னுவினொளு மமதெ1 பி3ட்டிஹனவனே மஹயோகி3 ||
(விபூதி சந்தி ஸ்லோகம் #25)

நானே அனைத்தையும் செய்கிறேன் என்று நினைத்து நாம் என்ன செயல்களைச் செய்தாலும் அதிலிருந்து எவ்வித பலன்களும் வருவதில்லை. அத்தகைய செயல்கள் ஸ்ரீஹரிக்கு பிடிப்பதில்லை. ஆகையால், இவ்விஷயம் அறிந்தவர்கள், தாம் செய்யும் அனைத்து செயல்களையும் ஸ்ரீஹரிக்கு அர்ப்பிக்கிறார்கள்.

ஆனால் திடமான ஞான பக்தி இல்லாதவர்கள் இந்த விஷயத்தை அறியாமல் போவதால், மறு உலகில் அவர்கள் எவ்வாறு இருப்பார்கள் என்று தாசர் விளக்குகிறார்.

நானு நன்னது3 எம்ப3 ஜட2மதி1
மானவனு தி3னதி3னதி3 மாடு3வ
ஸ்னான ஜப தேவார்ச்சனெயெ மொதலாத க1ர்மக3ள |
தா3னவரு செளெதொய்வரல்லதே3
ஸ்ரீனிவாசனு ஸ்வீகரிச ம
த்தா1னெ பக்க க1பித்த1 ப2ல ப4க்ஷிஸிதவோலஹுது ||
(சர்வப்ரதீக சந்தி ஸ்லோகம் #13)

ஏனு கே1ளித3ரேனு நோடித3
ரேனு ஓதி3த3ரேனு பே1ளித3
ரேனு பா1டி3த3ரேனு மாடிதரேனு தினதினதி |
ஸ்ரீனிவாசன ஞான கர்மதி
சானுராகதி நெனெது தத்த
த்ஸ்தானதலி தத்ரூப தன்னாமகன ஸ்மரிசதவ ||
(சர்வப்ரதீக சந்தி ஸ்லோகம் #17)

இந்த தேகத்தின் மீது பாசத்தை விடுவது, மற்ற விஷயங்களில் விரக்தி பெறுவது என்பது சுலபமான விஷயம் அல்ல. இந்த சம்சாரமானது தற்காலிகமானது என்று தோன்ற வேண்டுமெனில், அதற்கு மனோதிடம் வேண்டும். நமது இந்திரியங்கள் அனைத்தும் வெளியில் இருப்பதனால், விரக்தி வருவது கடினமே. கண்ணினால் பார்ப்பதை மனம் விரும்புகிறது. சுகமடைய வேண்டுமென்று ஆசை வருகிறது. அது எப்போதும் தன்னுடையதே ஆகவேண்டுமென்று பேராசை வருகிறது. அது தன்னுடையது ஆகவில்லையெனில் கோபம், கோபத்தினால் புத்தி நாசம். ஆக, நம்முடைய நாசத்திற்கு நாமே காரணனாகிறோம். இதற்கு தீர்வு என்ன? இந்த சம்சார மாயையை எப்படி தாண்டுவது என்னும் சுலபமான வழியை தாசர் இந்த ஸ்லோகத்தின் மூலம் நமக்குத் தெரிவிக்கிறார்.

ஒரடு பு3த்தி3ய பி3ட்டு1 லௌகி1க1
ஹரடெக3ளனீடா3டி3 காஞ்சன
பரட லோஷ்டாதிக3ளு சமவெந்த3ரிது1 நித்யத3லி |
புரட கர்பா3ண்டோ3த3ரனு ச
த் புருஷனெந்தெனிஸ் யெல்லரொளகி3
த்துருடு3 க1ர்மவ மாள்பனெந்தடிக3டிகெ3 நெனெயுதி1ரு ||
(நாமஸ்மரண சந்தி ஸ்லோகம் 30)

இந்திரியங்களினால் நாம் செய்யும் செயல்கள் அனைத்தையும், நமது மனதில் இருக்கும் எட்டு தள தாமரையில் ஒவ்வொரு இதழிலும் இருந்துகொண்டு ஸ்ரீஹரி அனைத்து கர்மங்களையும் செய்விக்கிறான். ஆனால் அந்த செயல்களை அவனுக்கே சமர்ப்பணம் செய்து, இதய நடுவில் இருக்கும் ஸ்ரீஹரியை நினைக்கும்போது, விரக்தி உண்டாகிறது.

அஷ்ட கர்த்ருத்வங்களுக்கும் ஸ்ரீஹரியே காரணம். அவன் மனது வைத்தாலே நம்மை முக்திக்கு அழைத்துப் போவான். ஆனால் இந்த மனது, நம்மை இந்த சம்சாரத்தில் ஏன் கட்டிப் போடுகிறது? பாவ புண்ணியங்களை ஏன் செய்ய வைக்கிறது? என்ற கேள்வியைக் கேட்கலாம். ஸ்ரீஹரிக்கு இத்தகைய சாமர்த்தியம் இருந்தாலும், அவன் அனைவரையும் பாகுபாடின்றியே பார்க்கிறான்.

***

தொடர்

## ஹரிதாஸ ஸாகித்ய ஸார

திரு ஜி. வரதராஜ ராவ்

### ஹரிதாஸ ஸாகித்யத்தின் பொற்காலம்

ஸ்ரீகனகதாஸர், பிறப்பில், குருபரா அல்லது வேட்டைக்காரரா என்னும் ஆராய்ச்சி இன்றும் ஆராய்ச்சியாளர்களால் செய்யப்பட்டு வருகிறது. ஆனால், ஒரு பிரதேசத்தின் அதிகாரியாக, ராஜனின் சார்பில் போர் புரிந்த சந்தர்ப்பத்தை கண்டால், அவர் போர்வீரராக இருந்தார் என்பதும், அதன் பின், ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தை சேர்ந்தவராக இருண்டஹர் என்றும் தெரிகிறது. கனகதாஸர் தம் 'மோஹன தரங்கிணி' யில் ஸ்ரீராமானுஜாசார்யர் மற்றும் ஸ்ரீதாதாசார்யரை கொண்டாடியிருப்பதே இதற்கு ஆதாரம் ஆகும். கீர்த்தனை ஒன்றில், தமது சமகாலத்தவரான, தாதாசார்யரை, போற்றிப் பாடியிருக்கும் உதாரணம் இருக்கிறது.

திம்மப்ப நாயகர், விரக்தரான சில காலத்திலேயே, வைஷ்ணவ யதிகளான ஸ்ரீவ்யாஸராஜரின் அருளுக்கு பாத்ஹ்டிரர் ஆனது எதுவும் அதிசயமில்லை. சம்ஸ்கார பலத்தினால் ஹரிபக்தராக இருந்த திம்மப்ப நாயகருக்கு, புதையல் பணம் கிடைத்ததிலிருந்து, மக்கள் அவரை கனகப்ப என்று அழைத்து வந்தனர். அவர் ஸ்ரீவ்யாஸராஜரின் அருளைப் பெற்று, ஹரிதாஸரின் கூடத்தில் சேர்ந்தபின், கனகதாஸ என்னும் பெயர் வந்தது. ஸ்ரீகனகதாஸர் பரமஞானி என்பதையும், இதனை ஸ்ரீவ்யாஸராஜர் தமது சிஷ்யர்களுக்கு பல்வேறு விதங்களாக விளக்கினார் என்பதாக பல கதைகள் உள்ளன. ஸ்ரீகனகதாஸரின் சமகாலத்தவரான ஸ்ரீபுரந்தரதாஸர், தமது ஒரு கீர்த்தனையில் 'கனகதாஸன மேலே தயமாடலு வ்யாஸமுனி மடதவரெல்ல தூரிகொம்புவரோ' என்று பாடியிருப்பதே இதற்கு சாட்சியாகும். இந்த கீர்த்தனையில் சொல்லப்பட்டிருக்கும், வாழைப்பத சம்பவம், மிகவும் ஆழமான அர்த்தத்தைக் கொண்டிருக்கிறது. 'இவகெ நாடெல்ல ஹூடுகிதரு ஈடார காணெ' என்று ஸ்ரீவ்யாஸராஜர் புகழ்ந்திருப்பதும் நாம் பார்க்கிறோம்.

ஸ்ரீகனகதாஸர், தமது கீர்த்தனைகளில், பாடதாதி கேசவ / காகினெலெ ஆதிகேசவ என்னும் அங்கிதங்களை பயன்படுத்தியிருப்பதை பார்த்தால், அவர் ஸ்ரீபுரந்தரதாஸரைப் போல, ஸ்ரீவ்யாஸராஜரிடமிருந்து எந்த அங்கிதத்தையும் பெறாமல், தம் ஆத்யாத்ம தேவதையின் பெயரையே வைத்துக் கொண்டார் என்று தெரிகிறது. எண்ணிக்கையில் அதிகமான கீர்த்தனைகளை ஸ்ரீகனகதாஸர் இயற்றியிருக்கா விட்டாலும், அவரது

மனோதர்மத்தை புரிந்துகொள்வதற்கு தக்கதான கிருதிகளை அவர் இயற்றியிருக்கிறார்.

பிறப்பால் வைதிக தர்மத்தை சேராத அவரை, மக்கள் பல்வேறு பிரச்னைக்கு உள்ளாக்கியிருக்க வேண்டும். ஆகவே, குலத்தைப் பற்றி கேள்வி வரும்போது, அவருடைய மனம் மிகவும் சஞ்சலப்படுகிறது. ‘குலகுலகுலவெந்து ஹொடெதாடதிரி நிம்ம குலத நெலெயனேனாதரு பல்லிரா’ என்று பலமாகக் கேட்டு, ‘ஜலவே ஸகல குலக்கெ தாயியல்லதெ, ஆ ஜலத குலவனேனாதரு பல்லிரா’ என்று கேட்கிறார். ‘ஹரியே ஸர்வோத்தம, ஹரியே ஸர்வேஷ்வர, ஹரிமயவெல்லவெனுத திளிது ஸிரிகாகினெலெ ஆதிகேசவ ராயன சரண கமலவனு கீர்த்திஸுவவனெ குலஜ’ என்று தெளிவுபடுத்துகிறார்.

ஸ்ரீகனகதாஸர் ஸ்வபாவத: மிகவும் தைரியமானவர். ‘அஹுதாதரஹுதென்னி அல்லவாதரல்லவென்னி பஹுஜனரு நெரெ திளி பேளி மத்திதனு’ என்னும் கீர்த்தனையில் மனிதர்களின் அவகுணங்களை ஒரு பட்டியலாக கொடுத்திருக்கிறார்.

ஸ்ரீகனகதாஸரின் கீர்த்தனைகளில் அவரது கோபம் / துணிவு தெரிந்தாலும், அவரது இதயம் மிகவும் அமைதியானது / தூய்மையானது என்பதை பார்க்கிறோம். ஏனெனில், தாம் பின்பற்றும் ஹரிதாஸ வ்ருத்தியில் அவருக்கு அபாரமான கௌரவம் இருக்கிறது. ‘தாஸதாஸர மனெய தாஸானுதாஸ நானு’ என்று மிகவும் பணிவுடன் சொல்கிறார். ‘தாஸனாகு பவ பாஷ நீகு விசேஷனாகு’ என்னும் கீர்த்தனையில், தாஸ்யத்தின் பெருமையை தூக்கிப் பிடிக்கிறார். ‘பண்டனாகி பாகில காயுவெ - ஹரி வைகுண்ட தாஸர மனெய’ என்னும் கீர்த்தனையை பார்த்தால், அதுவே அவரது ஸ்வபாவம் எனலாம். ‘தனு நின்னது ஜீவன நின்னது ரங்க அனுதினதலி பாஹ்ய ஸுக துக்க நின்னதய்யா’ என்று ஸர்வ அர்ப்பண பாவத்துடன் ஸ்வாமியில் வேண்டிக் கொண்டு ‘ந்யாயதி கனகனொடெய ஆதிகேஷவராய நீனல்லதெ நரரு ஸ்வதந்த்ரரெ’ என்று தம்முடைய பராதீனத்வத்தை சொல்கிறார்.

ஸ்ரீகனகதாஸர் துவக்கத்தில் மிகவும் கஷ்டப்பட்டு பின்னர் வெற்றியாளர் ஆனதால், அவர், ‘தல்லணிஸதிரு கண்ட்யா தாளு மனவே, எல்லரனு ஸலஹுவனு இதக்கெ ஸம்ஷயவில்லா’ என்று அனைவருக்கும் நல்வார்த்தையை சொல்கிறார். சேதனாசேதன வஸ்துக்கள் அனைத்தும்

பரமாத்மனின் அருளால் பிறந்து, வாழ்ந்து கொண்டிருப்பதை சொல்லி, நமக்கும் ஒரு நம்பிக்கையை ஊட்டுகிறார்.

ஸ்ரீகனகதாஸரின் முண்டிகைகளோ, அவருடைய ஞானத்தின் உச்சத்தையே காட்டுகின்றன. ஸ்ரீபுரந்தரதாஸர், பகவந்தனின் அருளால் எப்படி ஒரு உன்னத சிறந்த இடத்தை பிடித்தாரோ, அப்படியே, ஸ்ரீகனகதாஸர் கூட, தம் புரட்சி மற்றும் துணிவான வார்த்தைகளால் ஒரு சிறந்த ஆளுமையாக இருக்கிறார். இங்கு அவருடைய கீர்த்தனைகளில் சிலவற்றையே பார்த்திருக்கிறோம். இவற்றைப் போலவே, அவரது காவியங்களும் மிகவும் சிறப்பானவை மற்றும் ஆழமான அர்த்தங்கள் நிரம்பியவை.

ஹரிதாஸ ஸாகித்யத்தின் பொற்காலத்தை மொத்தமாக பார்த்தால், அதில் வரும் ஹரிதாஸர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவு. ஸ்ரீபாதராஜர், ஸ்ரீவ்யாஸராஜர், ஸ்ரீவாதிராஜர் என்னும் மூவரும், மூன்று ரத்தினங்களைப் போல, இந்த பத்ததிக்கு பலமான அஸ்திவாரத்தினை போட்டிருக்கிறார்கள் எனலாம். பிறகு, பகவத் பக்தரான, பேலூர் ஸ்ரீவைகுண்ட தாஸர் அவருடைய பெயர் மட்டுமே தெரிய வருகிறதே தவிர, அவருடைய கிருதிகள் வெகு சிலது மட்டுமே கிடைத்திருக்கின்றன.

இந்த பொற்காலத்தின் கருவூலத்தை ஒளியூட்டிய புகழ் அனைத்தும் ஸ்ரீபுரந்தரதாஸருக்கே சேர்கிறது. இதன் பிறகு, இந்த யுகத்தின் (பொற்காலத்தின்) இன்னொரு பெருமை மிக்க குரல், ஸ்ரீகனகதாஸருக்கு. ஸ்ரீபாதராஜர் மற்றும் ஸ்ரீவ்யாஸராஜரின் கிருதிகளில், அவர்களது அந்தரங்க ஆசை, விருப்பம் மற்றும் நோக்கங்கள் ஆகியவையே விசேஷமாக வந்திருந்தால், ஸ்ரீவாதிராஜர், இந்த கீர்த்தன ஊடகத்தினை, சாஸ்திர விஷயங்களை எளிமையாக கூறுவதற்காக பயன்படுத்தியது என்பது மிகப்பெரிய ஸாதனை என்று சொல்ல வேண்டும்.

ஹரிதாஸ ஸாகித்யத்தின் துவக்க காலத்திலேயே, அதன் இரு முகங்களையும் நாம் பார்க்கிறோம். அந்தந்த ஹரிதாஸர்களின் இதய அனுபவத்தின் வெளிப்பாடுகளே அதிகமாக வந்து கொண்டிருந்தாலும்; ஸ்ரீமத்வாசார்யரும் அவருடைய பரம்பரையினரும் தத்தம் கிரந்தங்களில் நிர்ணயம் செய்த, சாஸ்திர ஞானத்தின் விஷயம், இந்த சமயத்திலேயே வெளிவரத் துவங்கியது என்பது மிகவும் அற்புதமான விஷயம் ஆகும். ஸாகித்ய மற்றும் சாஸ்திரங்கள் இரண்டும் ஒன்றுக்கொன்று சேர்ந்து

கொண்டு, அனைவருக்கும் பிடித்தமாக இருந்து, இரண்டுமே வளர்ந்து வந்தது என்பது மிகவும் புகழப்பட வேண்டிய விஷயம் ஆகும்.

*** இத்துடன் இந்த அத்தியாயம் முடிந்தது ***

***

தொடர்

**ஹரிகதாம்ருதசார மஞ்சரி 360**

**By ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர்**

**184. கு$^3$ணத்$^3$வயதி$^3$ம் கடி$^3$மெ ப்ரவஹகெ$^3$**
**இன ஷஷாங்க யம ஸ்வயம்பு$^4$வ**
**மனுமட$^3$தி ஷதரூப நால்வரு பாத$^3$ பாதா$^3$ர்த்$^3$த$^4$ |**
**வனதி$^4$ நீச பதா$^3$ர்த்$^3$த$^4$ நாரத$^3$**
**முனிகெ$^3$ ப்ருக்$^3$வக்$^3$னி ப்ரஸூதிக$^3$**
**ளெனிஸுவரு பாதா$^3$ர்த்$^3$த$^4$ கு$^3$ணதி$^3$ந்த$^3$ த$^4$மரஹுதெ$^3$ந்து$^3$ ||10**

49 மருத்கணத்தில் சேர்ந்த ப்ரவஹ வாயுவைவிட சூரியன், சந்திரன், ஸ்வாயம்புவ மனுவின் மனைவி ஷதரூபாதேவி, யம இந்த நால்வரும் 2 குணங்களால் குறைவானவர்கள். சூரியாதிகளைவிட பாத பாதார்த்த (கால் பாகம் மற்றும் அதில் அரை பாகம்) குறைவானவர்கள். வருணன் = வருணனைவிட அரை பாகம் குணத்தால் நாரதர் குறைவானவர். நாரத முனிவரைவிட ப்ருகு ரிஷிகள், அக்னி, தக்ஷ ப்ரஜாபதியின் மனைவியான ப்ரஸூதி இவர்கள் மூவரும் அரைக்கால் பாகம் குறைவானவர்கள்.

குறிப்பு: இந்த கால், அர்த்த ஆகிய பாகங்களின் எண்ணிக்கை, நம்மை சிறிது குழப்பும்படியாக இருந்தாலும், யதாயோக்யமாக இதனை அறிந்து, சிந்திக்க வேண்டிய முக்கியம். இந்த விஷயங்கள் அனைத்தும் கல்பாந்தர ஸாதனையினால் வருவதான குணங்கள். இவர்கள் அனைவரும் மோட்சாதிகாரிகளாக இருந்தாலும், நமக்கு மோட்சத்திற்கு அருள் புரிபவராக இருந்தாலும், இவர்கள் அனைவரின் ஸ்மரணை முக்கியம் என்று தாஸர் நமக்கு விளக்குகிறார். அடுத்து, அனேக புராணங்களில், இந்த அனேக தேவதைகள் பகவந்தனின்

ஆணைக்கேற்ப உச்ச, நீச என்றே அவதரிக்கின்றனர். அதனை நாம் முழுமையாக அறிவது கஷ்டம். ஆனால், மத்வரின் அபிப்பிராயத்தில் - அம்ஷ, ஆவேஷ ஆகியவற்றை தாங்கி வந்தபோது, உச்ச, நீச ஆகியவை உதவியாக இருக்கிறது. அதனை நாம் கவனிக்க வேண்டும் - அவ்வளவே. இதுவே உண்மையான அர்த்தத்தில் தாரதம்ய ஆகிறது.

**185. ஹுதவஹகெ3 த்3வி கு3ணாத4மரு விதி4**
**ஸுதமரீச்யாதி3க3ளு வைவ**
**ஸ்வதனு விஷ்வாமித்ரனிகெ3 கிஞ்சித் கு3ணாத4மனு ।**
**வ்ரதிவர ஜக3ன்மித்ர வரனி**
**ர்ருதியு ப்ராவஹி தாரரிகெ3 கி**
**ஞ்சிது கு3ணாத4ம த4னப விஷ்வக் ஸேனரெனிஸுவரு ।।11**

அக்னியைவிட, பிரம்மபுத்திரர் ஆன மரீசி ஆகியோர் (அத்ரி, அங்கிரஸ, புலஸ்த்ய, புலஹ, க்ரது, வசிஷ்ட) ஆகிய ஏழு பேரும் மற்றும் வைவஸ்வதரும், விஸ்வாமித்ர ரிஷிகள் ஆகியோர் இரு குணங்கள் குறைவு. சூர்ய நிரருதி, ப்ராவஹி வாயுபத்னி, தாரா, ப்ருஹஸ்பத்யாசார்யரின் பத்னி இந்த நால்வரும் மரீசி ஆகியோரைவிட குறைவு குணம் கொண்டவர்கள். இந்த நால்வருக்கு 17ம் கக்ஷையின் குபேரன், கணபதி ஆகியோர் சிறிது குறைவு என்று அறிந்து உபாசிக்க வேண்டும் என்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

**186. த4னப விஷ்வக்ஸேன கௌ3ரி**
**தனயரிகெ3 உக்தேதரரு ஸம**
**ரெனிஸுவரு எம்ப3த்தயிது3 ஜன ஸேஷஷதரெந்து3 ।**
**தி4னபராரேளதி4க நால்வ**
**த்தனிலரேள்வ ஸுருத்3ரரீரை**
**த3னிது விஷ்வேதே3வ த்4யாவாஷ்வினி ருபு4 ப்ருத்2வி ।।12**

குபேர, விக்னேஷ, விஷ்வக்ஸேன இவர்களுக்கு இந்த கீழ்க்கண்டவர்கள் அனைவரும் சமம் என்று அறிய வேண்டும். அவர்கள் யார் என்றால்; தினபர் - 6 ஸூரியர்கள், மருத்தரு - 47 பேர்; வஸுகள் 7 பேர்; ருத்ரர் - 10 பேர்; விஷ்வே தேவதைகள் - 10 பேர்; ருபு கணம் - 1; அஷ்வினிகள் - 2; பித்ருகண - 1; தரணி - 1; என மொத்தம் 85 பேர் சேஷஷதஸ்தர்கள் என்று அறிய வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர்.

**187. இவரிகி$^{3}$ந்தலி கொரதெ எனிபரு**
**ச்யவன ஸனகாதி$^{3}$க$^{3}$ளு பாவக**
**கவி உசத்$^{2}$ய ஜயந்த கஷ்யப மனுக$^{3}$ளேகத$^{3}$ஷ ।**
**த்$^{4}$ருவ நஹுஷ ஷஷபி$^{3}$ந்து$^{3}$ ஹைஹய**
**த$^{3}$வுஷ்யந்தி விரோசனன நிஜ**
**குவர ப$^{3}$லிமொத$^{3}$லாத$^{3}$ ஸப்தேந்த்$^{3}$ரரு ககுத்ஸ்த$^{2}$ க$^{3}$ய ||13**

சென்ற பத்யத்தில் பார்த்த 18ம் கக்ஷையின் தேவதைகளைவிட ஜவனரு, ஸனகாதிகள் (3), அக்னி புத்ர, பாவகர், உசித்ய ரிஷிகள், பாதாபிமானி ஜயந்த, கஷ்யபர் ஏழு பேர், மனுகள். அவர்கள் அனைவரைவிட குறைவு குணம் உள்ளவர்கள் என்று அறிய வேண்டும். அது மட்டுமல்லாமல், த்ருவ, நஹுஷ, ஷஷி, பிந்துராஜ, ஹைஹயராஜ (காத்யவீர்யார்ஜுன), துஷ்யந்தனின் மகன் பரதன், குகுத்ஸ ராஜன், பலி இவர்கள் அனைவரும் அவர்களைவிட குணத்தில் குறைவு. மற்றும் 19ம் கக்ஷையில் வரும் கர்மஜ தேவதைகள் என்று அறி என்கிறார் ஸ்ரீதாஸர்.

**188. ப்ருது$^{2}$ ப$^{4}$ரத மாந்தா$^{4}$த ப்ரீயா**
**வ்ரத மருத ப்ரஹ்லாத$^{3}$ ஸுபரி**
**க்ஷித ஹரிஸ்சந்தி$^{3}$ராம் ப$^{3}$ரீஷோத்தானபாத$^{3}$ முக$^{2}$**
**ஷத ஸுபுண்ய ஸ்லோகரு க$^{3}$தா$^{3}$**
**ப்$^{4}$ருதக$^{3}$தி$^{4}$ஷ்டா$^{2}$னரு ஸுப்ரீயா**
**வ்ரதகெ$^{3}$ த்$^{3}$விகு$^{3}$ணாத$^{4}$மரு கர்மஜரெந்து$^{3}$ கரெஸுவரு ||14**

முன்னர் பார்த்த தேவதைகளைவிட இங்கு சொல்லிருக்கும் 19ம் கக்ஷையில் வரும் ப்ருது, பரத, மாந்தாத, ப்ரியம்வ்ரத, ப்ரகலாத, பரீக்ஷித, ஹரிசந்திர, அம்பரீஷ, உத்தானபாத, இவர்கள் அனைவரும் கர்மஜ தேவதைகள் ஆனாலும் இவர்கள் மொத்தம் 100 பேர் புண்யஷாலிகள் கதா, கௌமோதகி, ஏந்திய ஸ்ரீவிஷ்ணுவின் ஆவேசம் உள்ளவர்கள் (நளினி சங்ஞா முதலான 7 பேர்கள்) 2 குணங்களால் குறைவானவர்கள் என்று அறிய வேண்டும்.

**189. நளினி ஸங்ஞா ரோஹிணி ஷ்யா**
**மல விராட் பர்ஜன்யரத$^{4}$மரு**
**எலரு மித்ரனமட$^{3}$தி$^{3}$ த்$^{3}$வி கு$^{3}$ணாத$^{4}$மளு பா$^{3}$ம்பொ$^{3}$ளெகெ$^{3}$ ।**
**ஜலமய பு$^{3}$தா$^{4}$த$^{4}$மனு த்$^{3}$வி கு$^{3}$ணதி$^{3}$**

**கௌகெ3னிஸுவளுஷா ஷனைஸ்சர**
**ரிளெயு ஈரு கு3ணாத4ம ருஷாதே3வி தெ3ஷெயிந்த3 ||15**

நளினி – கங்கா மாதெ, ஸங்ஞா, வருண பத்னி ஷ்யாமல – யம பத்னி, ரோஹிணி – சந்த்ரபத்னி, உஷா – அனிருத்தனின் பத்னி, 6 பேர் சூர்யர் (பர்ஜன்ய நாமகர்), கர்மஜ தேவதைகள். இவர்கள் 2 குணங்களால் குறைவாக இருக்கின்றனர். அக்னியின் மனைவி ஸ்வாஹா தேவி, 2 குணங்களால் குறைவாக இருக்கிறார். தண்ணீரின் அபிமானி புதன் 2 குணங்களால் குறைவு. இந்த புதனுக்கு உஷாதேவி, 2 குணங்களால் குறைவு என்று அறிய வேண்டும் என்கிறார்.

**190. எரடு கு3ண கர்மாதி4பதி பு**
**ஷ்கர கடி3மெ ஆஜானதி3விஜரு**
**சிரபித்ருக3ளிந்து3த்தமரு கிங்கரரு புஷ்கரகெ3 |**
**ஸூரபனாலய கா3யகோத்தம**
**ரெரடயிது3 கு3ணதி3ந்த3த4ம து**
**ம்பு3ரகெ3 ஸம ஷதகோடி ருஷிக3ளு நூருஜனருளிது3 ||16**

கர்மாபிமானி புஷ்கரன் 2 குணத்தினால் முந்தையவர்களைவிட குறைவு என்கிறார். அஜானஜ தேவதைகள் புஷ்கரனைவிட 2 குணம் குறைவு. இவர்களைவிட சிரபித்ருகள் குறைவு. காயகோத்தரரான தும்புரு ஆகியொர் 10 குணங்களால் குறைவு ஆகின்றனர். நவகோடி ரிஷிகள் ப்ருகு முதலானோர் 10 பேர் + கர்மஜ தேவதைகள் 90 பேர் இவர்களைத் தவிர – மற்றவர்கள் சமமாக இருக்கின்றனர்.

தாரதம்யத்தில் இவர்கள் அனைவரும் இங்கு சொல்லப்பட்டிருக்கும் சாதனைகளை செய்திருப்பவர்கள். ஸாதனை செய்வதற்கு இவர்களின் பின்னால் இன்னும் பலர் இருக்கின்றனர். இவ்வாறு, அவர்கள் அனைவரும் ஸாதனிக்கு யோக்யராகி அடுத்தடுத்த இடத்திற்கு வருகிறார்கள். ஆனால், இவர்கள் அனைவரும் எண்ணிக்கையில் அதிகமாக இருந்து, அவர்கள் அனைவரும் அந்தந்த இடத்திற்கு தக்க இடத்திற்கு வருகிறார்கள் என்று நினைப்பது தவறு அல்ல. ஆனால், இவ்வாறு அறிவதிலும் கூட பலரின் அபிப்பிராயங்கள் வெவ்வேறாக இருக்கின்றன.

இவர்கள் அனைவரும் அபரோக்ஷ ஞானிகளே ஆகியிருக்கின்றனர். அனைவரும் சிறிதும் கூட தவறாமல், தங்களின் கடமைகளை சரிவர

செய்து கொண்டிருக்கின்றனர். ஆகையால், இவர்கள் அனைவரையும் சாபம் பெற்றவர்கள் வேண்டுவதை அப்படியே கொடுப்பவர்களாக இருக்கின்றனர். ஆகையால், இவர்கள் அனைவரையும் தினமும் நாம் பிரார்த்தனை செய்ய வேண்டும். இது ஸாதகனின் கடமை ஆகும்.

**191. அவரவர பத்னியரு அப்ஸர**
**யுவதியரு ஸம உத்தமரனுளி**
**த$^{3}$வரரெனிபரு மனுஜ க$^{3}$ந்த$^{3}$ர்வரு த்$^{3}$வி ஷட்கு$^{3}$ணதி$^{3}$ |**
**குவலயாதி$^{4}$பரீரயிது$^{3}$ கு$^{3}$ண**
**அவனிபஸ்த்ரீயரு த$^{3}$ஷோத்தர**
**நவதி கு$^{3}$ணதி$^{3}$ந்த$^{3}$த$^{4}$ம ரெனிபரு மானுஷோத்தமரு ||17**

முன்னர் பார்த்த ரிஷி பத்னியர், சிர பித்ருகளின் பத்னியர், அப்ஸர பெண்கள் அனைவரும் சமமாக இருக்கின்றனர். இவர்களைத் தவிர மானுஷ கந்தர்வர்கள் 12 குணங்களால் குறைவு. மனித அரசர்கள் மற்றும் அவர்கள் மனைவியர் – ஐந்து குணங்களால் குறைவு. நர சக்ரவர்த்திகள் 100 குணங்களால் குறைவு. மானுஷோத்தமர்கள் 100 குணத்தால் குறைவு.

**192. தமஸு ஸாத்விகரெனிஸி கொம்ப$^{3}$ரு**
**அமிதனாக்$^{2}$யாத ஸுரக$^{3}$ணவிது$^{3}$**
**தமஸு ராஜஸரெனிஸி கொம்ப$^{3}$ரு தை$^{3}$த்யஸமுதா$^{3}$ய |**
**தமஸு தாமஸ கலி புரந்த்$^{3}$ரியு**
**அமித து$^{3}$ர்கு$^{3}$ணபூர்ண ஸர்வா**
**த$^{4}$மரொளத$^{4}$மாத$^{4}$ம து$^{3}$ராத்மனு கலி எனிஸிகொம்ப$^{3}$ ||19**

தேவதைகள் இவ்வாறாக எப்படி குணத்தினால் உத்தம, அதம என்று அறிந்தோமோ, அதைப் போலவே தைத்யர்களில் உத்தம, அதம என்று இருக்கிறார்கள். அதுவும் கூட குண தாரதம்யத்தினால் ஆகிறது என்று அறிய வேண்டும். புகழ்பெறாத அசுரர்கள், அனாக்யாத தேவதைகளைப் போல இருக்கிறார்கள். இவர்கள் தம:ஸாத்விகர்கள், மற்றும் தைத்ய ஸமுதாயத்தில் (திதி மக்கள்), தமஸ் ராஜஸர் எனப்படுகிறார்கள். கலி தைத்யாதிகள் தமஸு தாமஸர் எனப்படுகிறார்கள் என்று சொல்கிறார்கள். அதாவது, அவர்கள் மிகவும் கெட்ட துர்குணங்களால் கூடிய கலி ஆகியோர் துராத்மராக இருக்கிறார்கள்.

**193. இவன போளுவ பாபிஜீவரு**
**பு$^{4}$வன மூரரொளில்ல நோட$^{3}$லு**
**நவவித$^{4}$ த்$^{3}$வேஷக$^{3}$ளிகா$^{3}$க$^{3}$ரனெனிஸி கொளுதிப்ப |**
**ப$^{3}$வரதொளு ப$^{4}$ங்கா$^{3}$ரதொ$^{3}$ளு நட**
**யுவதி த்$^{3}$யூதா பேய ம்ருஷதொ$^{3}$ளு**
**கவிஸி மோஹிஸி கெடி$^{3}$ஸுவனு எந்த$^{3}$ரிது த்யஜிஸுவுது$^{3}$ ||20**

இந்த பத்யத்தில் சொல்லியிருப்பவர்களை நாம் விலக்க வேண்டும் என்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர். காரணம், இவர்களில் கலி ஆவேசம் இருக்கிறது என்கிறார். இவர்கள் அனைவரும் பாபி ஜீவர்கள், நவவித த்வேஷிகள். பவர - போரில்; பங்கார - தங்கத்தில்; நட - நடனம் ஆடும் வேசிகளில், த்யூதா - சூதாட்டம் ஆடுபவர்களில்; அபேய - நடுவில், ம்ருஷ - பொய் பேசுபவர்களில், கவிஸி - வ்யாப்தனாக இருந்து மோகத்தை கெடுக்கிறான். ஆகையால், இந்த மேலே கூறியவர்கள் அனைவரையும் விட வேண்டும் என்கிறார். இவை அனைத்தும் ஸாதனா த்ருஷ்டியினால் ஆகிறது.

**194. மானுஷோத்தமரனு பிடி$^{3}$து$^{3}$ சது**
**ரானனாந்த$^{3}$ ஷதோத்தமத்வ க்ர**
**மேண சிந்திப ப$^{4}$குதரிகெ$^{3}$ சதுரவித$^{4}$ புருஷார்த்த$^{2}$ |**
**ஸ்ரீநிதி$^{4}$ ஜகன்னாத$^{2}$விட்ட$^{2}$ல**
**தானெ ஒலிதீ$^{3}$வனு நிரந்தர**
**ஸானுராக$^{3}$தி$^{3}$ படிஸுவுது$^{3}$ ப்ராக்ஞரித$^{3}$ மரெயத$^{3}$லெ ||29**

இந்த குண தாரதம்யத்தில் மானுஷோத்தமரில் துவங்கி, பிரம்ம தேவர் வரை இவ்வாறு சிந்திப்பவர்களை, சதுர்வித பலபுருஷார்க்தங்கள் கிடைக்கிறது என்றும், ஸ்ரீஜகன்னாத விட்டலன் தானே தரிசனம் அளிக்கிறான் என்று கூறுகிறார். ஆகையால், இவற்றை தினமும் படிக்க வேண்டும் என்று அறிந்து ஞானிகள், ஸாதகர்கள் படிக்க வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர்.

****

தொடர்

## ஸ்ரீகனகதாஸர்

திரு.வ்யாஸனகெரெ ப்ரபஞ்சனாசார்யர்

1. காகிநெலெ

காகிநெலெயாதிகேஷவ தேவாலயத்தில் ஆதிகேஷவ மூர்த்தியுடன் லட்சுமி நரஸிம்ம மூர்த்தியின் தேவாலயமும் இருக்கிறது. முன்னர் இங்கு ஸ்ரீ லட்சுமி நரசிம்ம ஸ்வாமி ஆலயம் மட்டுமே இருந்தது. அதன் பின், ஸ்ரீகனகதாஸர், பாட' விலிருந்து கொண்டு வந்த ஆதிகேஷவ மூர்த்தியை பிரதிஷ்டை செய்தார். அந்த ப்ரதிஷ்டாபன காரியம் நடந்தது, அவரது குருவர்யரான ஸ்ரீவ்யாஸராஜரால் என்று சொல்லப்படுகிறது. அந்த ஆதிகேஷவ மூர்த்தி சுமார் 1.5 அடி உயரமாக இருக்கிறது. இந்த தேவாயலத்தின் அருகில், மகாலட்சுமி மற்றும் கருடனின் விக்ரகமும் இருக்கிறது. இந்த தேவாலயத்தின் முன்னர் இருக்கும் ஒரு கட்டெயின் மேல் அமர்ந்து, ஸ்ரீகனகதாசர் மக்களுக்கு ஆத்யாத்மிக தத்வங்களை உபதேசம் செய்தார் என்று சொல்லப்படுகிறது.

பற்பல நூற்றாண்டுகளுக்கு முன் நடந்த இந்த சம்பவங்களை, பல ஆதாரங்கள் மிகவும் அற்புதமாக வர்ணித்திருக்கின்றன. இந்த வர்ணனையினால், இது ஸ்ரீகனகதாஸரின் க்ஷேத்திரம் என்று அறியப்பட்டு, அடுத்தடுத்து பக்தி க்ஷேத்திரமாக உருவெடுத்து வந்திருக்கிறது. மலர்ந்த தாமரை போன்றதான கடல் அலைகள், பற்பல பூக்கள் மலர்ந்து விளங்கும் தோட்டங்கள், பற்பல தங்கும் இடங்கள், வ்யாபாரிகள், அங்கும் இங்குமான பல தேவாலயங்கள் என இன்று காகினெலெ மிகவும் அழகான இடமாக வளர்ந்திருக்கிறது.

காகினெலெயின் வர்ணனை ஒரு ஆதாரத்தில் இவ்வாறு உள்ளது.

ஸிரினெலெ குணத நெலெ பா
ஸுரகீர்த்தினெலெ விவேகவிபவத நெலெ வி
ஸ்தரிப ஜயவதுகெ நெலெமனெ
கரவெஸெகும் காகினெலெ தரித்ரீதளதொள் |

நவனிதியம் பளஞ்ச்ஹலெவ பெர்கெரெ செல்விடிதிர்தனந்தனம்
நிருபமமாகி கத்தலிஸுதிப்பலெவள்ளி மடல்து ரஞ்சிபா

ஸூரகியனாக நாககுஸுமங்கள புஷ்பலதாக்ருஹம் ஸவி
ஸ்தரவெஸெதொப்பெ காகினெலெ ஷோபெகெ தாய்னெலெயாகி
ரஞ்சிகும் ||

தளிதாம்போஜஸரோவர ப்ரததியிந்துத்யான ஸந்தோஹதிம்
பளபாரான்விதரம்யஷாளிவனதிம் நீளாப்ர ஸூந்தஸம்
குளதிம் ஸூத்தித பூர்ணவாரிபரிகாவிப்ராஜியிம் தீர்க்கிகா
வளியிம் கண்கெஸெதிந்து காகினெலெ நித்யானீகதிந்தொப்புகம் ||

பளஸித கோடி ஷூத்ரனிகேதனதிந்த குணகானிவாட ஸங்
குளத விளாஸதிம் த்விஜனிவாஸகதம்பகதிம் வணிக்ருஹா
வளியினுதாத்ததேவபப்வனங்கள திந்திணியிம் ஷோபெயம்
தெளெது பொதள்து காகினெலெ ஸந்ததமிந்தெஸெதொப்பி தோருகும் ||

காகினெலெ, கும்னூரு மற்றும் இங்களகொந்தி ஆகிய மூன்று ஊர்களும் ஒரு முக்கோண ரூபத்தில் சிறிதே தூர வித்தியாசத்தில் இருக்கின்றன. இந்த அனைத்து ஊர்களிலும் / பகுதிகளும் குருபர்கள் மிகப்பெரிய அளவில் வசிக்கின்றனர்.

2. சன்னாபுர
சன்னாபுரத்தை சன்னபட்டண என்று அந்த காலத்தில் அழைத்தனர் என்று தெரிய வருகிறது. முதலில், இங்கு இருக்கும் சென்னகேஷவனையே, ஸ்ரீகனகதாஸர் ஆராதனை செய்து வந்தார் என்பதாக அறிகிறோம். இங்கிருந்த மூர்த்திகளை காப்பாற்ற / பாதுகாக்கப்பதற்காக, ஸ்ரீகனகதாஸர் இங்களகொந்தியில் சென்று அவற்றை ஸ்தாபனை செய்தார் என்பது நம்பிக்கை.

3. கும்மூரு
காகினெலெயிலிருந்து 3 கிமீ தூரத்தில் இந்த ஊர் உள்ளது. இங்கு ஸ்ரீகனகதாஸர் வந்து சென்ற , திம்மகேஷவ தேவஸ்தானம் இருக்கிறது. இங்கு அவர் சில காலம் வசித்தார் என்பதாகவும் அறிகிறோம். இங்கிருக்கும் மூர்த்தி சுயம்பு வடிவமாகும். உற்சவ மூர்த்திகள் - பஞ்சலோகத்தில் ஆனது. இந்த ஊர் மக்கள் - தங்களை தாஸரின் வம்சத்தவர் என்று சொல்லிக் கொள்கின்றனர். ஸ்ரீகனகதாஸர், இந்த திம்மகேஷவ தேவஸ்தானத்திற்கு அளித்த சுமார் 10 ஏக்கர் நிலம், இந்த வம்சத்தவரிடம் இருக்கிறது. ஸ்ரீகனகதாஸர் பயன்படுத்தியதாக சொல்லப்படும் ஒரு வலம்புரி சங்கு, ஜாங்கடெ, கோபாள புட்டி ஆகியவை இங்கு இருக்கிறது.

4. பாட

ஹாவேரி ஜில்லா, ஷிக்காவி தாலூகாவில் பாட கிராமம் இருக்கிறது. பழைய பாட என்பதான இன்னொரு கிராமமும் அங்கு உள்ளது. பாட ஸ்ரீகனகதாஸரின் பிறந்த ஊர். இங்கு ஒரு பழங்கால கோயில் ஒன்று இருக்கிறது. ஸ்ரீகனகதாஸரின் பாடல்களில் வருவதான 'பாடதாதி கேஷவ' என்று அவர் சொல்லியிருப்பதால், இது கேசவனின் கோயில் என்று அனைவரும் சொல்கின்றனர்.

5. பங்காபுர

பாடவிற்கு மிகவும் அருகில் இருக்கும் ஊர் பங்காபுர. இதற்கு வங்கபுர, வங்காபுர, வெங்கபுர என்பதான பல பெயர்கள் இருக்கின்றன. ஸ்ரீகனகதாஸர் பாடியிருக்கும் ஸ்ரீ நரசிம்ம தேவஸ்தானம் இந்த ஊரில் இருக்கிறது. அவரது சில பாடல்களில் வரும் 'பங்காபுரத கேஷவ' என்னும் பெயரில் இருக்கும் கேசவ மூர்த்தி கோயிலும் இந்த ஊரில் இருக்கிறது.

விஜயநகரத்தின் திருமலராயரின் காலத்தின் ஆவணம் ஒன்று பங்காபுரத்தில் கிடைத்தது. அதில் ஸ்ரீரகுநிதி தீர்த்தர் என்னும் வைஷ்ணவ யதிகளின் குறிப்பு தெரிய வருகிறது. அதில் 'உடுப்பியில் ஸ்ரீகிருஷ்ண தேவருக்கும் ஸ்ரீமத்பரமஹம்ஸனான வாதிராஜ தீர்த்த ஸ்ரீபாதங்களவருக்கும் பங்காபுரத்தின் ஸ்ரீரகு நிதி தீர்த்த ஸ்ரீபாதங்களவருகும் சமர்ப்பித்த அக்ரஹாரத்தின் தானம்' என்னும் குறிப்பு அதில் உள்ளது. இதிலிருந்தே, ஸ்ரீஸோதே மடத்தின் ஸ்ரீவாதிராஜ தீர்த்தரின் சமகாலத்தவராக இருந்தவர் ஸ்ரீரகுநிதி தீர்த்தர், அந்த காலத்தில் புகழ் பெற்ற வைஷ்ணவ யதிகளாக இருந்தார் என்று தெரிய வருகிறது. அந்த காலத்தில் பண்டாரகெரெ மடத்தின் யதிகளாக இருந்த ஸ்ரீராஜவந்த்ய தீர்த்தரின் பிருந்தாவனம் காகினெலெயில் இருந்ததும் கூட குறிப்பிடப்பட வேண்டிய விஷயம் ஆகும்.

6. கதரமண்டலகி

ஹாவேரி ஜில்லா ப்யாடகி தாலூகாவின் கிராமம் கதருமண்டலகி. இங்கிருக்கும் ஹனுமந்தனின் மூர்த்திக்கு, காந்தேஷ என்று பெயர். ஒரு முறை ஸ்ரீனிவாஸனின் தரிசனத்திற்காக, திருப்பதிக்கு சென்றிருந்த ஸ்ரீகனகதாஸருக்கு தரிசன பாக்கியம் கிடைக்காதபோது, அதற்கு காரணம் அவர் காந்தேஷனின் தரிசனம் செய்யாமல் வந்ததே என்று அறிந்து, அவர் கதருமண்டலகிக்கு வந்து, காந்தேஷனின் தரிசனம் பெற்று, மறுபடி

திருப்பதிக்கு சென்றபோது, தேவரின் தரிசன பாக்கியம் கிடைத்தது என்று சொல்வதுண்டு.

ஸ்ரீகனகதாஸரின் வயதான காலத்தில் திருப்பதி யாத்திரை செய்ய முடியாமல் போனபோது அவருக்கு கிடைத்த ஒரு அசரீரி வாணிக்கேற்ப, கதருமண்டலகியில் ஒரு இடத்தில் ஸ்ரீனிவாஸனின் மூர்த்தி ஒன்று கிடைத்து, அங்கேயே திம்மப்பனின் தரிசனம் செய்யும் பாக்கியம் அவருக்கு கிடைத்தது. கதருமண்டலகி ஹனுமந்தனைக் குறித்து ஸ்ரீகனகதாஸர் இயற்றிய கிருதிகளும் நமக்கு கிடைத்துள்ளன. அவர் தம்முடைய மோஹன தரங்கிணி காவியத்தை இயற்றியது இந்த காந்தேஷனின் சன்னிதானத்திலேயே என்று சொல்வதுண்டு. இந்த சன்னிதியிலேயே, அந்த கிருதியின் கையெழுத்துப் பிரதி கிடைத்துள்ளது. அந்த மூர்த்திக்கு நித்ய பூஜையும் நடைபெறுவது உண்டு. ஸ்ரீகனகதாஸருக்கு வந்த ஒரு நோய் இந்த மூர்த்தியின் சேவையினால் தீர்ந்தது என்று தெரிய வருகிறது. ஸ்ரீகனகதாஸரின் கீர்த்தனை ஒன்றில் இந்த குறிப்பு உள்ளது. இந்த காந்தேஷனின் தேவஸ்தானத்தின் வலது பக்கத்தில், ஸ்ரீகனகதாஸரின் தேவாலயம் ஒன்று நிர்மாணம் செய்யப்பட்டுள்ளது.

7. மாதேவபுர

மாதேவபுர என்பது மாண்ட்யா ஜில்லா ஸ்ரீரங்கபட்டண தாலூகின் காவேரி நதிக்கரையில் இருக்கும் ஒரு கிராமம். ஸ்ரீகனகதாஸர், திருப்பதி யாத்திரைக்கு புறப்பட்டபோது, இந்த கிராமத்தை தோனியில் கடக்கும்போது, படகோட்டிகள் அவரை அவமானம் செய்து இங்கு இறக்கிவிட்டனராம். அப்போது ஸ்ரீகனகதாஸர் 'ஸாவிர களிஸிதரு ஸஞ்செகெ லயவாகலி நள்ளிகுள்ளியந்தெ மக்களாகலி' என்று சாபம் கொடுத்தார். அங்கு ஒரு தோட்டத்தில் ஒரு வாழையிலை கேட்டபோது, அவனும்கூட அவரை அவமானம் செய்தானாம். அப்போது அவர் அவனுக்கும் 'பாளெ பெளெதரு பல கொடதே இரலி' என்று சாபம் கொடுத்தாராம். அந்த சாபத்தின் காரணமாக இன்றைக்கும்கூட அங்கு வாழை மரம் இருந்தாலும், அது பழம் கொடுப்பதில்லையாம். அந்த பிரதேசத்தில் நதியின் நடுவில் ஒரு பாறையில் அதில் கைகள், கால்களின் அடையாளம் இருக்கிறது. அது ஸ்ரீகனகதாஸருடையது என்று சொல்வதுண்டு. இன்றைக்கும் அந்த ஊர் மக்கள் அதனை பக்தியுடன் வணங்கி பூஜிக்கிறார்கள்.

8. கனகாபுர

ஸ்ரீகனகதாஸர் இந்த ஊரில் டொள்ளு என்னும் வாத்தியத்தை இசைத்தார் என்றும், அவருடைய மகிமையினால் இந்த ஊரில் அபாரமான மழை பெய்தது என்றும், அதற்காகவே இந்த ஊர் கனகாபுர என்று பெயர் பெற்றது என்னும் சொல்வதுண்டு.

9. பண்டரபுர

ஸ்ரீகனகதாஸர், பண்டரிபுரத்தைக்கூட தரிசனம் செய்தார் என்று சொல்வதுண்டு. தேவஸ்தானத்தின் முக்கிய த்வாரத்தின் எதிரில் ‘கனகதாஸரின் கட்டெ’ என்று இருப்பது, அவருடைய அடையாளத்திற்காக சமீப காலம் வரை இருந்தது என்பதை அறிகிறோம்.

10. ஸ்ரீரங்கபட்டண

ஸ்ரீகனகதாஸர் தரிசனம் செய்த முக்கிய க்ஷேத்திரங்களில் ஸ்ரீரங்கபட்டண ஒன்று. யாகெ நீனில்லி பவடிஸிதெ ஹரியெ - ஜகதேக விக்யாத பஸ்சிமரங்கதாம - என்னும் கீர்த்தனை, ஸ்ரீஹரியின் தசாவதாரத்தின் வர்ணணையை செய்தவாறு, அவன் படுத்திருக்கும் காரணத்தை விதம்விதமாக வர்ணிக்கும் கிருதியாக இருக்கிறது. அதன் கடைசி நுடியில்:

இன்னெஷ்டு கால நீனில்லி மலகித்தரு
நின்னனெப்பிஸுவரொப்பரனு நா காணெ

என்னும் வாக்கினில் தெரியவரும் விஷயம் மிகவும் அபூர்வமானது. பற்பல அர்த்தங்களை அடக்கியிருக்கும் இந்த வரிகளில் வெளிவந்திருக்கும் ஸ்ரீகனகதாஸரின் காவ்ய மற்றும் அனுபவ த்ருஷ்டி, நம்மால் வர்ணிக்கவே முடியாததாக இருக்கிறது.

11. திருப்பதி

ஸ்ரீகனகதாஸருக்கு மிகவும் பிடித்தமான க்ஷேத்திரம் - திருப்பதி. அவருடைய பிறப்பிற்கு காரணமான திருப்பதியின் திம்மப்ப நிலைத்திருக்கும் க்ஷேத்திரம். தம் வாழ்க்கை காலங்களில், திருப்பதி திம்மப்பனின் தரிசனத்தை பெறுவது அவருடைய முக்கிய கடமையாக இருந்தது. அப்போதெல்லாம் நடந்த சம்பவங்கள் / மகிமைகள் அனைத்தும் ஆவணப்படுத்தப்பட்டுள்ளன. தமது கடைசி காலங்களிலும்

கூட ஒருமுறை அவர் திருப்பதிக்கு சென்று தரிசனம் செய்து வந்தார் என்பது தெரிய வருகிறது. தம் அதிகாரத்தின் கேந்த்ர ஸ்தானமாக இருந்த, ஸ்ரீவிஜய நகரத்தின் அரசருக்கு மிகவும் பிடித்த க்ஷேத்திரம் மற்றும் அங்கு இருக்கும் ஸ்ரீனிவாஸன் தம் குருகளான ஸ்ரீவ்யாஸராஜரால் 12 ஆண்டுகள் வரை பூஜிக்கப்பட்ட ஸ்வயம்வ்யக்த க்ஷேத்திர ஸ்வாமி என்னும் காரணத்தால், ஸ்ரீகனகதாஸருக்கு வாழ்க்கை முழுவதும், திருப்பதியின் தொடர்பு இருந்து வந்தது என்பதை கவனிக்க வேண்டும்.

12. பேலூரு

ஸ்ரீகனகதாஸரின் முக்கிய க்ஷேத்திரங்களில் காகினெலெ, உடுப்பி, திருப்பதிகளை போல இருப்பதான இன்னொரு க்ஷேத்திரம் பேலூரு. தன் அபூர்வ சிற்பங்களால் உலகப் புகழ் பெற்றிருக்கும் பேலூரு அன்றிலிருந்தே வைஷ்ணவ க்ஷேத்திரமாக இருந்தது. ஸ்ரீமத்வாசார்யரின் சாட்சாத் சிஷ்யரான ஸ்ரீபத்மனாப தீர்த்தர், பல ஆண்டுகள் இங்கு நிலைத்திருந்தார் என்பது அங்கு இருக்கும் பல ஆவணங்களிலிருந்து தெரிய வருகிறது. புகழ் பெற்ற பல ஹரிதாஸர்கள், பேலூரை வந்து தரிசனம் செய்திருக்கிறார்கள் என்றும் அறிகிறோம். ஸ்ரீவாதிராஜருக்கும், ஸ்ரீபுரந்தரதாஸருக்கும் மிகவும் பிடித்தமான இடம் பேலூரு. ஸ்ரீகனகதாஸரோ அங்கு அனேக ஆண்டுகள் வரை நிலைத்திருந்தார். அவருடைய ஹரிபக்திஸார என்னும் புகழ்பெற்ற கிருதி மற்றும் ஈஷ நின்ன சரண பஜனெ என்னும் கேசவ நாமா, நளசரித்ரெ ஆகிய அனைத்தும், அவர் இங்கு இருந்தபோதே இயற்றப்பட்ட கிருதிகள் ஆகும். பேலூரில் இருந்த ஸ்ரீவைகுண்ட தாஸர் என்பவருடன் ஸ்ரீகனகதாஸர் விசேஷ நட்பினை கொண்டிருந்தார். வரபுர, ஸுரபுர, பேலூரு ஆகிய அனேக பெயர்களால் இந்த பேலூரு அழைக்கப்பட்டு வந்தது.

13. வேறு சில க்ஷேத்திரங்கள்

* ஸ்ரீகனகதாஸர் தரிசனம் செய்த க்ஷேத்திரங்களில் ஒன்று - சென்னபட்டணத்தின் அருகில் கண்வ நதியின் தீரத்தில் மளூரு.
* கதருமண்டலகி - அவரது இளமையிலிருந்து அவருக்கு மிகவும் பிடித்த க்ஷேத்திரத்தில் ஒன்று
* கனககிரி - நரசிம்ம ஸ்வாமி, ஸ்ரீகனகதாஸர் விரும்பி ஆராதனை செய்த மூர்த்திகளில் ஒன்று
* ஸ்ரீரங்கபட்டண
* உடுப்பி

* விஜய நகரம். பற்பல ஆண்டுகள் வரை ஸ்ரீகனகதாஸர் வசித்த இடம் இதுவே.
* திருப்பதி. அவருடைய பிறப்பிற்கு காரணமான க்ஷேத்திரம்.
* ஜமகண்டி, மங்களூரு, கனகபுர, ஹாவேரி, கனகனூரு, கனகனஹள்ளி, பாண்டவபுர, கனகொப்ப, கதக், பெங்களூரு என்னும் பற்பல ஊர்கள் அவர் சென்று வந்திருக்கிறார் என்று தெரிய வருகிறது.

**இத்துடன் இந்த அத்தியாயம் முடிந்தது **

---

**தொடர்**

## ஹரிதாஸர்களின் சிந்தனை குறிப்புகள்

## துளஸி விவாகம்

மன: பிரசாத ஜனனி சுகசௌபாக்யவர்த்தினி |
ஆதிம் வியாதிம் ச ஹர ஹே துளசி த்வாம் நமாம்யஹம் ||

இன்று மாலை துளசி தாமோதரனின் விவாக மகோத்ஸவம். தாமோதரனின் ப்ரீத்யர்த்தமாக பிரபோதோத்ஸவம் மற்றும் விவாகம். விதிபூர்வகமாக, ஷோடஷோபசார பூஜாதிகளை செய்யவேண்டும். தாமோதர ஸ்தோத்திரம், மங்களாஷ்டகங்களை சொல்லவேண்டும். கங்கை, பசு, துளசி ஆகியவை நம் சம்பிரதாயத்தின் முக்கிய அடையாளங்கள். இவற்றை வணங்குவது போற்றுவது நம்மை மேம்படுத்துவதற்கு முக்கிய காரணங்கள் ஆகும். துளசியைப் பற்றி வியாச தாச சாகித்யத்தில் மிகவும் புகழ்ந்திருக்கின்றனர். ஹரிதாசர்களின் ஓரிரண்டு கிருதிகளைப் பார்க்கலாம்.

புரந்தரதாசர்:
ஹரிகெ அர்பிஸித துளசி நிர்மால்யவ
கொரளொளு தரிஸி கர்ணதொளிட்டரெ |
துரிதராஷிகளெல்ல அஞ்செ ஓடுவவு ஸ்ரீ
ஹரியு தன்னவரெந்து கை பிடிவ ||

பசுவைப் போல, துளசியும் முழுவதும் சர்வதேவ மயம். சர்வதீர்த்த மயம். துளசியை வணங்கி, ஸ்ரீஹரிக்கு அர்ப்பித்தால், அதனால் நம் துக்கங்கள் நீங்கி, நித்ய சுகம் கிடைக்கும்.

விஜயதாசர்:
துளசி இல்லத சதன ஹொலெ மாதிகர சதன
துளசி இல்லத பீதி நரககௌசுவ ஹாதி
துளசி இல்லத தீர்த்தவெந்தித்தரு வ்யர்த்த துளசி பலு ப்ராதான்யவு ।
துளசி மிஸ்ரிதவாத நைவேத்ய கதிசாத்ய
துளசி தரிஸித தேஹ பரமசார்த்தகவய்ய
துளசி தள ஹரிகெ அர்பிஸிதவன புண்யக்கெ நெலெய நா காணெனய்யா ॥

ஜகன்னாததாசர்:
துளசி நின்னடிகெ நா தலெபாகி பின்னைபே
கலுஷ கர்மகள எணிசதெ ।எணிஸெ சம்சார
ஜலதியிந்தெம்ம கடெஹாய்ஸு ।
கலுஷவர்ஜிதெ நின்ன தளகளிந்தலி லக்ஷ்மி
நீலயனங்க்ரிகள பூஜிப ।பூஜிபரிகெ பரமமங்
கலத பதவித்து சலஹுவி ।

யன்மூலே சர்வதீர்த்தானி யன்மத்யே சர்வதேவதா: ।
யதக்ரே சர்வவேதாஸ்ச துளசி த்வாம் நமாம்யஹம் ॥

பாபானி யானி ரவிசூனு படிஸ்திதானி
கோப்ராம்ஹபால பித்ருசேவன தர்ஷனேன
நஷ்யந்தி தானி துளசீவன தர்சனேன
கோகோடிதான சத்ருஷம் பலமாப்னுவந்தி ॥

***

## ஹரி நாமமே நம்மைக் காப்பாற்றும்.

வியாச தாச சாகித்யத்தில் வைக்கப்படும் முக்கியமான விஷயம் என்னவென்றால் ஸ்ரீஹரியின் மாகாத்ம்ய ஞானம். ஹரிதாசர்கள் இன்னும் ஒரு படி மேலே போய் 'நீன்யாகோ நின்ன ஹங்க்யாகோ ; நின்ன நாமத பலவொந்தித்தரே சாகோ' என்றனர். ஸ்ரீஹரியின் நாமத்தின் மகிமை இவ்வாறு இருக்கிறது.

நாமவெ காய்வுது நாமவெ உணிபுது
நாமவெ சர்வத்ர பவித்ர மாடுவுது
நாமவெ கன துரித சம்ஹார மாடுவுது
நாமவெ நெனவங்கெ வஜ்ராங்கியாகிப்புது

நாமவெ கண்டல்லி நிந்தல்லி மஹாபாக்ய
நாம ஒந்து நடியெ விஜயவிட்டல நின்ன
தாமவாகுவுதய்யா தடியதெ நமகெல்லா ‖ -- ஸ்ரீவிஜயதாசர்

ஸ்ரீமதாசார்யர், தமது கிருஷ்ணாம்ருத மஹார்ணவத்தில், ஸ்ரீஹரியின் நாமத்தின் மகிமையை சொல்லும்போது:

ஆர்தா விஷண்ணாஸ் ஷிதிலாம்ஸ்ச பீதா: கோரேஷுச வியாதிஷு வர்த்தமானா: |
சங்கீர்த்ய நாராயண சப்த மாத்ரம் விமுக்த துக்கா: சுகினோ பவந்து ‖

துக்கத்தில் விழுந்து கஷ்டப்பட்டு, அதற்கான தீர்வு கிடைக்காதபோதும், எந்தவித துயரத்தில் இருந்தாலும், நாராயண நாமோச்சாரணை நம்மை காப்பாற்றும்.

கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண எந்து மூருபாரி நெனெயிரோ |
சந்துஷ்டனாகி முக்தி கொட்டு மிக்க பார ஹொருவனொ ‖ -- ஸ்ரீவியாசராஜர்

ஹரிபதவ நெனெவங்கே நரகத பயவில்ல |
பாவன மாடுவுது நாமாம்ருதரஸ பாவன மாடுவுது ‖ -- ஸ்ரீவாதிராஜர்

நாம சங்கீர்த்தனெ அனுதின மாள்பகெ நரக பயகளுண்டே – ஸ்ரீபுரந்தரதாசர்

ஹரியன்னெ நெனெதவ நெரயவ கெத்தவ |
ஹரியன்னெ நெதெதவ நெரய பித்தவ ‖ -- ஸ்ரீகோபாலதாசர்

மொத்தமாக பார்த்தால், ஹரிதாச சாகித்யத்தின் நோக்கம் ஹரி நாமஸ்மரணையே. காரணம், அறிவுள்ளவன் என்று நினைக்கப்படும் மனிதனை, எந்தக் காலத்திலும் காப்பாற்றுவது ஹரி நாமம் ஒன்றே. இதை பிரகலாதன், த்ருவன் ஆகிய பல சுஜீவிகள் செய்து காட்டிய உதாரணங்களை பார்த்திருக்கிறோம்.

****

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா


நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாச யோகினே |
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம: ||

# "ஹரிதாச விஜயம்"

ஸிரி நிலயன குணகள '**திளிது**' பஜிஸுவுதே
மலர் 4 : இதழ் 12



| நிர்வாக ஆசிரியர் | துணை ஆசிரியர் |
|---|---|
| 'ஜகன்னாத கேசவ'<br>சத்ய நாராயணன்<br>ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்,<br>380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase, பெங்களூரு 560078<br>Ph.: 89044-58276.<br>haridasa.vijayam@gmail.com<br>jagannathakesava.blogspot.com | ' தாச சாகித்ய சேவா ரத்ன'<br>திரு.குரோம்பேட்டை Rஸ்ரீதரன்<br><br>**ஆசிரியர் குழு உறுப்பினர்கள்**<br>திரு. முரளிதர தாசரு,<br>திருமதி. நிர்மலா நரசிம்மன்,<br>திரு. லட்சுமிபதிராஜா,<br>திரு. ஸ்ரீனிவாசன் பிராணேஷ் |


ஆராதனை

**ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள்**

**நவம்பர் 1 முதல் 30 வரை, 2023**

Nov 22 : கார்த்திக சுத்த தசமி - ஸ்ரீவிஜயதாஸர், சிப்பகிரி / சீகலபரவி

Nov 26 : கார்த்திக சுத்த சதுர்தசி - ஸ்ரீவரத விட்டல தாஸர், கௌதாள

## இந்த மாத ஆராதனைகள்

**ஸ்ரீவிஜயதாசர் (1682-1755)**

அஞ்ஞான திமிரச்சேதம் புத்தி ஸம்பத் பிரதாயகம் |
விக்ஞானம் விமலம் ஷாந்தம் விஜயாக்ய குரும்பஜே ||

விஜயராயர பாத நிஜவாகி நம்பலு
அஜனபித தானெ ஒலிவ
த்விஜகேதனன குணவ வ்ரஜவ கொண்டாடுவ
ஸுஜன மந்தாரனீத
வி எந்து நுடியலு விஷய லம்படதூர
ஜ எந்து நுடியலு ஜனன ஹானி
ய எந்து கொண்டாடெ யமபடரு ஓடுவரு
ராய எந்தேனலு ஹரிகாய்வ வரவீவ ||
விஜயப்ரபு பாதயுகள வனஜ பஜிஸுவெ
விஜயஸகன தோரிரெந்து நிஜதி பேடுவெ |
அஜருத்ரதேவரிகிந்த கஜவரதனே
நிஜதி ஸ்ரேஷ்டதமனெந்து ஈ ஜகக்கெ ஸாரிதெ
ஹுக்கியனித்த சாகிராயகெ கருணெ தோரிஸிதெ
பக்கி பேடித ஸ்த்ரீயள மனெலி போஜன மாடிதெ
ஹிக்கிலி மங்களாங்க ஹரிவிட்டலன ஒலிஸிதெ
பக்கி பக்கி விஜயவிட்டலகெ மனதி நமிஸிதெ ||

***

